# SAPTARISHI NADI

(KANYA LAGNAM)

EDITED BY

SRI C. G. RAJAN, B.A.,
Retired Tahsildar

AND

SRI T. CHANDRASEKHAR
Kaumaranadi Astrologer

Government Oriental Manuscripts Library,
Madras.

1961

Price Rs. 31-50

# INTRODUCTION

The public are perhaps aware of the fact that the Government of Madras have launched upon a scheme of publication of rare manuscripts treasured in two premier institutions of this State, namely, the Madras Government Oriental Manuscripts Library, Madras, and the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore. Financial help has also been extended to Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, Madras, for similar purpose. Though the publication of rare manuscripts was started as early as 1909 by this library, only 12 works were taken up for publication till 1942. Of these, the printing of three works has not yet been completed.

Only in the year 1949-50 a regular scheme for the publication of manuscripts was prepared and accepted by the Government of Madras under the *Madras Government Oriental Series*. This scheme included the manuscripts in all the South Indian Languages in which there are manuscripts in the library. Till now 158 manuscripts in different languages have been printed. Of these, 35 manuscripts are from Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore, and 3 from Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar. In addition, 4 manuscripts, 3 from this library and one from Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, are in the press.

All the manuscripts under the Madras Government Oriental Series were edited by various scholars drawn from different learned institutions. The publication of manuscripts under the Madras Government Oriental Manuscripts Series was resumed in the year 1950-51. All the manuscripts published under this series before 1942 were in Sanskrit. But since 1950-51 the manuscripts in other languages also were included. These are edited by the Curator with the assistance of the Pandits in rhe respective languages. Till now 60 works have been printed including 51 works since 1951.

The Government of India also have decided upon a programme of printing rare and useful manuscripts in the different languages of India. For this purpose the Ministry of Scientific Research and Cultural Affairs have come forward with grants-in-aid for some of the manuscripts libraries maintained by the State Governments and also for certain reputed private libraries. In the year 1959-60 the

Government of Madras in G. O. No. 81859 E6/59-15 Education dated 5th January, 1960 sanctioned the publication of the following seven manuscripts.

1. Tanippadarrirattu.
2. Keraladesa Varalaru.
3. Kattabomman Varalaru.
4. Kalambakakkottu.
5. Uttara Ramayana Natakam.
6. Yapparumkalam.
7. Palamolittirattu.

Of these the last one was dropped as it was found to contain a large number of colloquial terms. The printing of the other six manuscripts has been completed in the Madras Government Oriental Manuscripts Series as numbers 55, 56, 67, 68, 69 and 66.

During the year 1960-61 the Government of Madras have sanctioned in Memorandum No. 47522-E6/60-9 Education dated 30—12—60 and in G. O. No. 2749 Education dated 31—12—60 the publication of the following manuscripts.

TAMIL.

1. Sivapuranaditottiramanjari.
2. Tiruvoymoli-Ittupravesa Sangraham.
3. Vedalakkathai.
4. Homer's Iliad.
5. Saptarishi Nadi—Kanya Lagnam.
6. Kunrakkudi Kumaran Peril Kirtanaigal.
7. Divya Prabanda Akaradi.

PERSIAN.

8. Tarikh-i-Hafeesullakhani.
9. Bahare-i-Azamzahe.
10. Sawanihat-i-Mumtaz.

SANSKRIT.

11. Nyayaratna Dipavali.
12. Nyayasara.
13. Stotrarnavam.
14. Brahmasiddhi.

## CATALOGUES.

15. Triennial Catalogue of Tamil Mss Vol. 12.
16. do do do 13.
17. Descriptive catalogue of Marathi Mss. Vol. 3.

The Government of India will be contributing 50% of the cost for the printing of the above works, which has to be completed by the end of March, 1961. With the exception of Brahmasiddhi in Sanskrit and the Catalogue of the Marathi manuscripts, the other works may be printed before the end of the financial year. Except the catalogues and Stotrarnava in Sanskrit, all the other works have been edited by outside scholars and hence they have been issued under the Madras Government Oriental Series as numbers 166 to 177. Stotrarnavam in Sanskrit is edited by the Curator himself under the Madras Government Oriental Manuscripts Series as No. 70.

The Government of Madras have constituted an Expert Committee for each South Indian Language in which there are manuscripts in the Government Oriental Manuscripts Library, for the purpose of selecting rare and important manuscripts for publication in the Madras Government Oriental Series. Till now the following number of manuscripts have been published in different languages.

| | |
|---|---|
| Tamil | —34 |
| Sanskrit | —23 |
| Telugu | —20 |
| Malayalam | —20 |
| Kannada | —14 |
| Persian | — 8 |
| Arabic | — 1 |

Under the same series the number of works published from the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore is as follows.

| | |
|---|---|
| Tamil | —12 |
| Sanskrit | —10 |
| Telugu | — 5 |
| Marathi | — 6 |

The Dr. V. Swaminatha Iyer Library, Adyar has published under this series three Tamil works.

An Editorial Committee has been formed under the orders of the Director of Public Instruction, Madras, for selecting manuscripts in different South Indian Languages for publication in the Madras Government Oriental Manuscripts Series. The number of manuscripts published by this Library in this series is as follows.

| | | |
|---|---|---|
| Tamil | ... | 21 |
| Sanskrit | ... | 18 |
| Telegu | ... | 7 |
| Malayalam | .. | 9 |
| Kannada | ... | 7 |
| Marathi | .. | 2 |
| Persian | ... | 3 |

All the manuscripts in this series are edited by by Curator of this library with the help of the staff in different languages except the Stotrarnavam that is edited by the Curator himself.

(Description of the manuscript)

The present edition Saptarisinadi (Kanya lagnam) is based on a single palm-leaf manuscript preserved in this library, described under R. No. 305. Some of the folios of the volume are 15 x $1\frac{1}{4}$ inches in size while others are 20 x $\frac{1}{2}$ inches. The work has 217 folios with 6-15 lines on a page. This was purchased in the year 1914-1915 from Sri Krishnaswami Pillai of George Town, Madras. This volume contains 92 horoscopes in Kanya Lagnam.

Some of the manuscripts taken up for publication are represented by single copies in the library and consequently the mistakes that are found in them could not be corrected by collating them with other copies. The editors have, however, tried their best to suggest correct readings. The wrong readings are given in round brackets. When different readings are found, they have been given in the foot-note except in the case of a few books in which the correct readings have been given in the foot-note or incorporated in the text itself in square brackets.

The Government of India and the Government of Madras have to be thanked for financing the entire scheme of publication although there is a drive for economy in all the departments. My thanks are due to the members of the Expert Committee and the Editorial Committee who spared no pains in selecting the manuscripts for publication. I have also to thank the various Editors,

who are experts in their own field, for readily consenting to edit the manuscripts and see them through the press. The various Presses that have co-operated in printing the manuscripts in the best manner possible also deserve my thanks for the patience exhibited by them in carrying out the corrections made in the proofs.

It is hoped that the Government of India will be continuing their financial grant to this library year after year for undertaking the printing of other manuscripts.

MADRAS,
*21st February 1961.*

T. CHANDRASEKHARAN,
*Curator,*
*Govt. Oriental Manuscripts Library.*

ஸ்ரீ

# முன்னுரை

கடவுள் ஆதிகாலத்தில் பிரம்ம தேவனுக்கு வேதங்கள் அனைத்தையும் உபதேசம் செய்து அவற்றின் மூலமாக உலக மக்கள் நன்மை தீமைகளை உணர்ந்து கடைப்பிடிக்க வழி காட்டியதாகச் சான்றோர் கூறுகின்றனர். வேதத்தின் உட்பொருளை நமக்கு நன்கு உணர்த்த இதிகாஸம் புராணம் முதலிய நூல்களை வால்மீகி, வியாஸர் முதலியோர் வாயிலாக கடவுளே வெளியிட்டதாக சான்றோர் கருதுவர். அவ்வேதங்களின் கருத்துக்களைப் பின்பற்றியே தமிழ் நாட்டில் ஆழ்வார்கள், நாயன்மார்கள், ஆசாரியர்கள் முதலிய அடியவர்கள் தோன்றி வேத ரகசியங்களைத் தமிழ் பாடல்களாக வெளியிட்டனர்.

இங்ஙனம் சிறப்பு வாய்ந்த வேதத்துக்குச் சோதிட சாஸ்திரமும் ஒரு அங்கமாகக் கூறப்பட்டுள்ளது. இந்த சாஸ்திரங்களில் நவக்கிரகங்களின் நிலைகள் நன்கு ஆராயப்பட்டு, வெவ்வேறு கிரக நிலைகள் இருப்பின் உள்ள பலாபலன்கள் கூறப்பட்டு இருக்கும். பல முனிவர்களால் வட மொழியிலும் தமிழிலும் எழுதப்பட்ட பல நூல்கள் உள்ளன. அவைகளில் சில வசனமாகவும் சில பாட்டுக்களாகவும் உள்ளன. இராமாயணம், மகாபாரதம் முதலிய நூல்களைப் படிப்பதால் தெய்வபக்தி ஏற்பட்டு, இம்மைக்கும் மறுமைக்கும் வேண்டிய வழிகளும், நமக்குப் புலப்படுவன போல் இந்தச் சோதிட நூலில் கூறப்பட்டுள்ள விவரங்கள் பல நம் தினசரி வாழ்க்கைக்குப் பயன்படுவனவாக இருக்கின்றன, சாதாரண மனிதன் அறிந்தோ அறியாமலோ என்னென்ன நல்வினைகள் செய்கிறான் என்பதும் அவைகளின் பயன்கள் என்ன வென்பதும், தீமைகள் எவையெவை என்பதும் அவற்றால் மனித குலம் அடையும் தீங்குகள் என்ன என்பதும் இந்த நூல்கள் கூறுகின்றன. இந்நூல்களைப் படித்து நாம் தினசரி வாழ்க்கையை நல்வழியில் திருத்த இவை பயன்படுகின்றன

ஜ்யோதிஷம் (Astrology) என்பது ஆகாயத்தில் ஜோதியாய் நமக்குப் புலப்படுகின்ற அண்டங்களால் உண்டாகின்ற நன்மை துன்மைகளைப் பற்றி முந்தியாகவே தெரிவிக்கின்ற ஓர் சாஸ்திரமாகும். இந்தச் சாஸ்திரம் வான சாஸ்திரத்தை (Astronomy) அடிப்படையாகவுடையதாகும், இந்த வான சாஸ்திரம் நட்சத்திரங்கள், கிரகங்கள், தூமகேதுக்கள், முதலியவற்றின் உருவத்தையும், அளவையும், இவை எந்த உலோகங்களால் உண்டாக்கப்பட்டிருக்கின்றன வென்பதையும் தெரிவிப்பதுடன், கிரகங்கள் எவ்விதமாக அசைகின்றன என்பதையும், அப்படி அசைவதற்குக் காரணத்தையும், அந்தக் காரணத்தைக் கொண்டு நமக்குத் தேவையான ஓர் காலத்தில் கிரகங்கள் ஆகாயத்தில் எவ்விடத்தில் இருக்கும் என்பதை அறியும் மார்க்கத்தையும், கிரஹணங்கள் சம்பவிக்கும் காலத்தையும் தெரிவிக்கும். ஆனால் இந்தச் சாஸ்திரம் நட்சத்திரங்கள், கிரகங்கள், தூம கேதுக்கள் முதலியவற்றால் இந்தப் பூமண்டலத்திலுள்ள ஜீவப் பிராணிகளுக்குச் சம்பவிக்கும் நன்மை துன்மைகளைப் பற்றி ஒன்றும் தெரிவிக்கின்றதில்லை. வான சாஸ்திரம் விஞ்ஞான சாஸ்திரங்களில் மிகவும் புராதனமான சாஸ்திரம் என்று மனிதனுடைய மனதின் அபிவிருத்தி சம்மந்தமான சரித்திரத்திலிருந்து விளங்குகின்ற ஓர் உண்மையாகும். ஆகாயத்தில் அதிசயமாகவும் வியக்

கத்தக்கதாகவும் நேரிடுகின்ற சர்பவங்களாகிய கிரஹணங்கள், வால் நட்சத்திரங்கள், தூமகேதுக்கள் ஆகிய இவை பிரபஞ்சத்தின் அல்லது கடவுளின் கோபத்தை முன்னதாகவே தெரிவிக்கின்ற அறிகுறிகள் என்ற அபிப்பிராயம் நீடூழி காலமாக ஜனங்களிடத்தில் இருந்து கொண்டிருக்கின்றது. மனிதர்களுடைய அல்லது சாம்ராஜ்யங்களினுடைய (of empires) பாக்கியங்களும், செல்வங்களும், விதிகளும், ஆகாயத்திலுள்ள அண்டங்களாகிய நட்சத்திரங்கள், கிரகங்கள், ஆகிய இவற்றின் நிலைமைகள், ஸ்தானங்கள், சலனங்கள், இவை ஒன்றுக் கொன்றைப் பார்த்துக் கொள்ளும் திருஷ்டி என்ற பார்வை (aspects) இவை ஒன்றின் பேரில் மற்றொன்று செலுத்திக் கொள்ளும் பிரபாவம், அதிகாரம் (mutual influences) இவற்றிற்குள் அப்போதுக்கப்போது ஏற்படுகின்ற வடிவம், உருவம், தோற்றம் யோகம், (configuration) ஆகிய இவற்றைத் தழுவி அநுசரித்து இருக்கின்றன என்ற ஓர் உறுதியான கொள்கை எல்லா தேச ஜனங்களிடத்திலும் இருந்து கொண்டு வந்திருப்பதாகத் தேச சரித்திரங்களின் மிகவும் பூர்வீகமான சாதனம், பதிவு, குறிப்பு (earliest records) முதலியனவற்றிலிருந்து புலப்படுகின்றது. ஆகாயத்திலுள்ள அண்டங்களாகிய நட்சத்திரங்கள் கிரகங்கள் முதலியவற்றால் மானிடர்களுக்கு ஏற்படக் கூடிய பலிதங்கள் காரிய சித்த பலாபலன்கள் (effects) ஆகிய இவை சம்மந்தப்பட்ட வரையிலும் இவ்வண்டங்கள் மானிடர்களுடன் சம்மந்தப்படுத்த வேண்டும் என்ற அவாவானது வான சாஸ்திரத்தின் அபிவிருத்திக்கு மூலாதாரமான காரணமாக விருந்து வந்திருக்கின்றது. இக்காரணத்தின் பொருட்டே ஜோதிட சாஸ்திரத்தை வான சாஸ்திரத்தின் வளர்ப்புத் தாய் (foster-mother) என்றும், தாதி, கைத்தாய் (nursing-mother) என்றும் அடிக்கடி சொல்லுகின்ற ஓர் வழக்கம் உண்டாகி விருக்கின்றது. ஜோதிடமும் வான சாஸ்திரமும், இவ்விரண்டின் அபிவிருத்திக்கு அத்தியாவசியமான கணித சாஸ்திரமும் (mathematics), விஞ்ஞான சகோதரிகள் (Sister-Sciences) என்று வழங்கப்பட்டு வருகின்றன. இம்மூன்று சாஸ்திரங்களும் எப்போதும் திருமூர்த்திகளைப் போல ஒன்றாகவே புழங்கி வருகின்றன. ஆகையால் நியூடன் (Newton), கெப்லர் (Kepler), ஆகிய இவர்களைப் போன்ற புத்தி நுட்பம், சாமர்த்தியம் (mental calibre) உள்ள மிகவும் சிறந்த விஞ்ஞானிகள் (eminent scientists) ஏககாலத்தில் பெரும்பாலும் கணிதர்கள் வான சாஸ்திரிகள், ஜோதிடர்கள் ஆகிய இவர்களின் திரட்டு பிண்டம் அல்லது கதம்பங்களாக (conglomeration or congery or mass) இருந்து வந்திருக்கின்றார்கள்.

2: ஜோதிட சாஸ்திரம் தற்கால நிலையில் பெரும்பாலும் அநுபவத்தினால் ஏற்படுத்தப்பட்ட சாஸ்திரமாகும் (Empirical System). இது வைத்திய சாஸ்திரம் (Medical Science), ராஜ்ய நிர்வாக தந்திர சாஸ்திரம் (Political Science) இல்லோம்பும் முறை பொருள் நூல் (Economics) ஆகிய இவற்றைப் போன்ற ஓர் சாஸ்திரம் ஆகும். இது ஓர் பூர்வீகமான சாஸ்திரமாகும். இந்தியருடைய வேதங்களில் வான சாஸ்திரமும் ஜோதிட சாஸ்திரமும் ஜோதிட சாஸ்திரம் என்ற பொதுப் பெயரால் குறிக்கப்பட்டிருக்கின்றன. இவை வேதங்களின் அங்கமாகக் காணப்பட்டிருக்கின்றன. ஜோதிட சாஸ்திரம் அதர்வண வேதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.. இது

இராமாயண காலத்திலும் மஹாபாரத காலத்திலும் உபயோகப் படுத்தப்பட்டு வந்திருக்கின்றது என்று இராமாயணத்திலும் மஹாபாரதத்திலிருந்தும் நன்ருகத் தெரிய வருகின்றது.

3. ஜோதிட சாஸ்திரத்தைப் பற்றி அதிகமாவது, அல்லது ஒன்றுமே கூட தெரியாத ஜோதிட சாஸ்திரத்தின் விரோதிகள் அல்லது எதிரிடைபாளர்கள் இந்தச் சாஸ்திரத்தைக் கொடுந் திட்டுதல் அல்லது கொடும்பழி கூறுதல் (Vituperation), கண்டனை செய்தல் (Tirade) அல்லது மும்முரமாக எதிர்த்தல் அல்லது தாக்குதல் (Onslanghts) ஆகிய இவற்றில் யாதொரு கட்டுப்பாடில்லாமலும் தடையில்லாமலும் பிரவேசிக்கின்ருர்கள் (Freely indulge). மேலும் இவர்கள் யாதொரு கால வரையில்லாமல் சதாகாலமும் (In and out of season) ஜோதிட சாஸ்திரம் ஒரு மோசம் அல்லது சூது (Fake) என்றும், ஒரு மாயவித்தை அல்லது ஜாலம் (Hocus-pocus) என்றும் ஒரு ஏய்ப்பு (Hoax) என்றும் சொல்லுகின்ருர்கள். மேலும் மோசக்காரர்கள் (bheats) அல்லது வேஷம் போடுகின்றவர்கள் (Masqueraders) ஆகிய இவர்கள் தங்களுடைய சுய நலத்தைத் தவிற வேறே ஒன்றையும் கவனியாமல் சீக்கிரம் எதையும் நம்பி ஏமாறக் கூடிய ஜனங்களை ஏமாற்றி விடுவதற்காகவே ஏற்படுத்தப்பட்ட சாஸ்திரம் ஜோதிட சாஸ்திரமாகும் என்று சில ஜோதிட சாஸ்திர விரோதிகள் வாதிக்கின்ருர்கள். ஜோதிட சாஸ்திரம் பொய்யானதாகவாவது, அல்லது இதில் யாதொரு உண்மையும் இல்லாமலாவது இருந்தால் சாமான்ய ஜனங்களும் (Masses), வாசித்தறிந்தவர்களும், வித்தையில் பண்பட்டு நல்ல பயிற்சியுள்ளவர்களும் (edueated and cultured persons) நீடூழி காலத்திலிருந்து இந்தச் சாஸ்திரத்தில் யாதொரு கவர்ச்சி மோகம், பிரமை (Fascination) ஆகிய இவற்றை உடையவர்களாக இருந்திருக்க மாட்டார்கள்; மேலும் எல்லா தேசத்தாரைச் சேர்ந்த மேதாவிகளான கணித சாஸ்திரிகளும் (Mathematicians) விஞ்ஞானிகளும் (Scientistis), அரசியல் தந்திரிகளும் (Politieians), வைத்தியர்களும் (Surgeons), பாதிரிகளும், புரோகிதர்களும் (Priests) சரித்திரக்காரர்களும்(Historians), எக்காலத்திலும் இந்த ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கையை உடையவர்களாக இருந்திருக்க மாட்டார்கள். இவ்வுலக விஷயங்களைப் பற்றியும் இதர உலக விஷயங்களைப் பற்றியும் ஜோதிட விரோதிகளை விட அதிகமாகத் தெரிந்தவர்களாகிய மிகவும் கீர்த்தி பெற்ற, சிறந்த, இந்து தேசத்திய பழைய காலத்து மஹரிஷிகளும் (Sages), ஞான திருஷ்டிக்காரர்களும் (Seers) ஜோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கை யுடையவர்களாக விருந்து மானிடர்களின் நன்மையைக் கருதி ஜோதிட சாஸ்திரத்தின் தத்துவங்களையும், கொள்கைகளையும், விதிகளையும், ஏற்படுத்தி இவற்றைத் தங்களுடைய காலத்தவர்களுக்கும், பிற்காலத்தவர்களுக்கும் உபயோகப் படும்படியாய்ச் செய்து விட்டுப் போய் இருக்க மாட்டார்கள். ஜோதிட சாஸ்திரத்தில் யாதொரு உண்மையும் இரா விட்டால், இது இராமாயணம் மஹாபாரதம், ஆகிய இவற்றின் காலங்களிலிருந்து அநேக நூற்ருண்டு கணக்கான காலங்களாகப் பழக்கத்திலிருந்து கொண்டு, நாளாக நாளாக அதிகக் கீர்த்தியுடனும் பிரகாசத்துடன் விருத்தியுடனும் நாளது வரையிலும் நமக்கு வந்திருக்காமல் இது எப்பொழுதோ க்ஷீண தசையை யடைந்து மாண்டு அழிந்து இழிவுடன் புதைக்கப்பட்டிருக்கும். இவ்விதமாக இது

அழிந்து போகாமல் இருப்பதே இதனுடைய உண்மைக்கு மிகவும் வலிவான ஓர் ஆதாரமாகவும், காரணமாகவும் இருக்கின்றது.

4. ஜோதிட சான்திரம் பலவிதமான பாகங்களாகப் பிரிக்கப்படும். இந்தப் பல பாகங்களில் பலபாக ஜோதிடம் என்பது (Judicial Astrology) சேர்ந்ததாகும். இந்தப் பலபாக ஜோதிடத்தில் கூட இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று சாதாரண ஜோதிடம் அல்லது ஹோரா சாஸ்திரம் என்று சொல்லப்படும். மற்ருென்று நாடி ஜோதிடம் என்ற நாடி சாஸ்திரம் என்று சொல்லப்படும்.

இந்தச் சோதிட நூலில் ஒரு பிரிவு தமிழில் நாடி நூலாக இருந்து வருகிறது. இவை மும்மூர்த்திகளின் நாயகிகளாகிய இலக்குமி, பார்வதி, சரஸ்வதி இவர்களின் முன்னிலையில் ரிஷிகள் கூறுவதாக எழுதப்பட்டுள்ளன. அவைகளில் சில சந்திர கலாநாடி, நந்தி நாடி பார்க்கவநாடி. ஸப்தரிஷிநாடி சுக்கிர நாடி, கௌமாரநாடி,காகபுயண்டர் நாடி, கௌசிக நாடி அகத்திய நாடி முதலிய பல தமிழிலும் வடமொழியிலும் உள்ளன. இந்த நூல்கள் இவ்வுலகில் உள்ள நம்மவர்களின் நன்மைக்காக எழுதப்பட்டுள்ளன எனலாம். ஏனெனில் நாம் செய்யும் தீவினைகளை அகற்றவும் நல்வினைகளை அதிகமாக்கவும் இந்நூல்கள் கூறப்பட்டிருக்கலாம். இப்பேற்பட்ட பல நூல்களில் ஒன்ருகிய

## ஸப்தரிஷி நாடி

என்னும் பெயர் கொண்ட இந்நூல் மேற்கூறப்பட்டவைகளில் ஒன்ருக உள்ளது. இஃது தற்காலத்தில் அநேகவிதமான நாடி சாஸ்திரங்கள் புழக்கத்திலிருந்து வருகின்றது, இவற்றில் மிகவும் முக்கியமானவற்றில் இந்த சப்தரிஷிநாடி (என்ற சப்தரிஷி வாக்கியம்) ஒன்ருகும். பரமேஸ்வரருடைய மனைவியாகிய பார்வதியம்மனின் அக்கிராசனத்தின் கீழ் நடத்தப்பட்ட சப்தரிஷிகளின் ஜோதிட சாஸ்திர கொலுவில் சப்தரிஷிகளாலும் பார்வதியம்மையாராலும் இந்தச் சப்பதரிஷிநாடி உண்டாக்கப்பட்டதாகும். அக்கிராசனுதிபதியாகிய பார்வதியம்மையார் ஒருவருடைய ஜாதகத்தின் கிரக நிலையையும், லக்கினத்தையும் சப்தரிஷிகளுக்கு எடுத்துச் சொல்லி இவர்களைப் பலாபலன்களைச் சொல்லும்படியாகக் கேட்கின்ருர். இவ்விதமாகப் பார்வதியம்மையார் கேட்டவுடன் ஒரு ரிஷி பலன் சொல்லவாரம்பித்து, மேல் மேலும் பலாபலன்களைச் சொல்லிக் கொண்டே போகின்ருர். ஜாதகருடைய மனைவியின் ஆயுள் அல்லது இவருக்கு ஆண் குழந்தை பிறத்தல் அல்லது இவருடைய ஆயுள் அல்லது இன்னும் சில விஷயங்கள் ஆகிய இவற்றைப் பற்றி அபிப்பிராயப் பேதம் ஏற்படுவதற்குச் சந்தர்ப்பம் உண்டாகும்போது இந்த அபிப்பிராய பேதத்தையோ, அல்லது சந்தேகத்தையோயுடைய ரிஷியானவர் பலாபலன்களைச் சொல்லிக் கொண்டே போகின்ற ரிஷியைத் தடுத்துக் கேள்விகளைக் கேட்கின்ருர். இதன்பேரில் ரிஷிகளுக்குள் வாக்குவாதம் நடக்கின்றது. இந்த வாக்குவாதத்தில் இதர ரிஷிகளில் ஒன்று அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட ரிஷிகள் கூட கலந்துகொள்ளுகின்ருர்கள். இவர்கள் தங்கள் தங்களுடைய அபிப்பிராயங்களைத் தகுந்த காரணங்களுடன் சொல்லி வாதாடுகின்ருர்கள், கடைசியாகச்

சந்தேகமான விஷயத்தைப் பற்றி எல்லா ரிஷிகளுஞ் சேர்ந்து ஒரு தீர்மானத்திற்கு வருகின்றார்கள். இவர்கள் ஒருவிதமான தீர்மானத்திற்கும் வராமல் முடிவில்லாமல் வாதாடிக் கொண்டே யிருந்தால் பார்வதி யம்மை யார் இந்த வாக்குவாதத்திற் பிரவேசித்துத் தன்னுடைய அபிப்பிராயத்தைக் கடைசித்தீர்மான மாகச் சொல்லி இந்த வாதத்தை நிறுத்தி விடுகின்றார்.

5. இந்த உலகத்தில் ஒரு மனிதர் தன்னுடைய பூர்வஜன்மத்தில் அல்லது இந்த ஜன்மத்தில் செய்த கர்மத்திற்கு தகுந்தபடியாகவே சுகத்தை யும் கஷ்டத்தையும் அநுபவிக்கின்றார். ஒரு மனிதர் இரண்டு மனைவிமார் களை அல்லது ஒரு மனைவியையும் ஒரு வைப்பாட்டியையும் அடைவது, ஒரு மனிதர் தனக்குப் புத்திரர்கள், சகோதரர்கள், பிதுரார்ஜித சொத்துக்கள் ஆகிய இவை இல்லாம லிருப்பது, ஒரு மனிதர் தன்னுடைய மிகவும் இளம் பிராய வயதிலேயே தன்னுடைய மாதாவை இழந்துவிடுவது, ஒரு மனிதர் தனக்கு ஒரு குடும்பம், வீடு இலலாமல் ஒரு பைத்தியக்காரரைப் போலவும் நாடோடியைப் போலவும், பிச்சைக்காரனைப் போலவும் அங்கும் இங்கும் ஓடி அலைந்து திரிவதும், ஒரு மனிதர் மிகவும் குரூரமான பயங்கரமான ரோகத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதும், இவற்றைப் போன்ற இன்னம் பலவிதமான கஷ்டங்களும் ஆகிய இவை எல்லாம் இந்தச் சப்த ரிஷி நாடியில் ஒருவருக்குத் தான் பெரும்பாலும் முன்ஜன்மத்தில் செய்த அல்லது அடையப்பட்ட கர்மா, அல்லது பாபம், அல்லது தோஷம் அல்லது சாபம் ஆகிய இவற்றின் பயனாகவும், சிறும்பாலும் இந்த ஜன்மத்தில் கடந்து போன வருஷங்களில் தான்செய்த அல்லது அடையப்பட்ட கர்மா அல்லது பாபம், அல்லது தோஷம், அல்லது சாபம் ஆகிய இவற்றின் பயனாகவும் உண்டாகின்றன என்றே சொல்லி யிருக்கின்றது. ஒரு மனிதர் தன்னுடைய முன்ஜன்மத்தில் பாபங்களைச் செய்து சாபங்களை அடைந்த பயனாக அதே ஜன்மத்திலேயே தன்னுடைய வாழ்நாளின் கடைசி காலத்தில் கொஞ்சமாகக் கஷ்டத்தை அடைந்துவிட்டுத் தன்னுடைய தற்கால ஜன்மத்தில் அதிகமான கஷ்டங்களை அநுபவிக்கின்றார் என்று இந்தச் சப்தரிஷி நாடியிலிருந்து சுத்த மாகத் தெரிய வருகின்றது.

6. மேலும் நம்முடைய தேசத்தாரின் கௌரவமும் மகிமையுமான (glory of our nation) பழைய காலத்திய வித்தையையும் ஞானத்தையும் (culture and learning) காப்பாற்றுவதில் அக்கறை எடுத்துக் கொண்டிருக் கின்ற, தாயாள குணத்தையும் தரும குணத்தையு முடைய தற்கால அரசியல், பொதுமக்களுடைய பணத்தை மதிப்பிடத் தகுந்த அளவிற்கு நன் மார்க்கத்தில் பொதுநன்மைக்காகச் செலவுசெய்து அச்சிடப்பட்டு வருகின்ற இந்தச் சப்தரிஷி நாடி, நீதிமார்க்கங்களையும், தர்ம மார்க்கங்களையும், தெய்வ வழிபாடுகளையும் ஜனங்களுக்குப் போதிக்கும் விஷயத்தில் மிகவும் உபயோ கமான ஒரு சாஸ்திரம் என்று கருதுவதற்குச் சிறிதளவு கூட சந்தேகமே கிடையாது. சாதாரண பாமர ஜனங்களுக்குக் கூட இந்த நாடி ஒருவித தர்மசாஸ்திர, நீதிசாஸ்திர நூலாகி இவர்களைச் சீர்திருத்தஞ் செய்கின்ற ஒரு அரிய பெரிய கருவி அல்லது சாதனம் (a great moral reformer) ஆகும். இவ்விதமாக இந்த நாடி உலகத்திலுள்ள எல்லோருக்கும் போதனா விருத்தி சம்மந்தமான மதிப்பை யுடையதாகும்; இதன் விஷயமாகச் சர்க்காரால்

செலவு செய்யப்பட்ட பணம் நல்ல மார்க்கத்திலும் மேன்மையான ஒரு நல்லவிதமாகவும், சகல ஜனங்களுடைய அபிவிருத்திக்காகவும் செலவு செய்ததாகவே கருதப்படுவதற்கு யாதொரு சந்தேகமுங் கிடையாது என்று திண்ணமாகவும், உறுதியாகவும் சொல்லக்கூடும். இந்தச் செலவை யும் ஐந்து வருஷ சீர்திருத்தத் திட்டம் (Five Year Plan) என்ற விஷயு நோக்கத்திலேயே கூட செலவு செய்ததாகக் கருதுவதற்கு இடந்தரும். அச் சிடுவதற்கு லாயக்கான கிரந்தங்களில் இந்த நாடி சாஸ்திரத்தைத் தேர்ந் தெடுத்த கனவான்களும், சீமான்களும் (gentlemen), இந்தச் சப்தரிஷி நாடி யைப் பதிப்பிடுவதற்காகத் தகுந்த பதிப்பாசிரியர்களைத் தேர்ந்தெடுப்பதை யும், தடுக்கக் கூடிய பிழைகள் கூடியமட்டும் இராமல் அச்சிடுவதையும், தன்னுடைய பலவிதமான, பொறுப்புள்ள, கஷ்டமான அலுவல்களுக் குள்ளே, ஒரு சிறந்த அலுவலாகக் கருதி, அதிக சிரத்தையையும், ஊக்கத் தையும் செலுத்திய கியூரேடர் ஸ்ரீ T. சந்திரசேகர தீட்சிதர், எம்.எ.,எல்.டி,. (Curator, Sri T. Chandrasekara Dikshitar, M.A., L.T.,) அவர்கள், இதில் சம்மந்தப்பட்ட இன்னும் பெரிய மேல் அதிகாரிகள் முதலியோரும் விசேஷ நன்றி பாராட்டப்படத் தக்கவர்களாக விருக்கின்றார்கள். இவ்வித மாக இவர்களைப் பாராட்ட, இந்த நூலால் அதிக நன்மையை அடையப் போகின்ற பொது ஜனங்களும் கடமைப் பட்டிருக்கின்றார்களே யாகும். இந்தப் பொதுஜன உபகாரிகள் நீண்ட ஆயுளை உடையவர்களாகி இது போன்ற சற்காரியங்களை மேன் மேலும் அதிகமாகச் செய்வதுடன், இவர்கள் தங்களுடைய வாணாட்களுக்குப் பிறகுகூட அழியாத கீர்த்தியை யும், பெயரையும், நீடூழிகாலம் உடையவர்களாகவும் இருக்கக் கடவுள் அருள் செய்வார் என்று பிரார்த்திக்கப்படுகின்றது. மிகவும் சிறந்த மதிப் புள்ள இந்தச் சப்தரிஷி நாடி நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய அதிகார் கனவான்களின் கூட்டத்திற்கும் (coterie of official gentlemen), ஜோதிட சாஸ்திரத்தின் பூர்வீகமான சிறிந்த கர்த்தர்களுக்கும், சப்தரிஷிகளுக்கும் எங்களுடைய அன்பார்ந்த வந்தனத்தையும் நமஸ்காரத்தையும் (Salutation) தாழ்மையுடன் இதனுல் நாங்கள் தெரிவிக்கிறோம்.

இந்த நூலுக்கு உரை எழுதுதல் அச்சு சரிபார்த்தல், பிழை திருத்து தல் முதலியவைகளுக்கு பெரும்துணை புரிந்த, நண்பர் வழுத்தூர் ஸ்ரீ V. ரங்கனுதன் அவர்கட்டு மிக்க கடப்பாடுடையோம். எங்கள் மனமுவந்த நன்றியை உரித்தாக்குகிறோம்.

மிகவும் குறுகிய காலத்தில் சிறப்புற இந்த நூலை அச்சியற்றித் தந்த இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸுக்கு எங்கள் அன்பார்ந்த நன்றியைச் செலுத்து கிறோம்.

C. G. ராஜன்.
(என்ற C. கோவிந்தராஜன்)
Prof. T. சந்திரசேகர்,
கௌமாரநாடி சோதிடர்.

சென்னை, 1961ஆ-ம் ஸ்ரீ பிப்ரவரி மீ 27உ
(சகம் 1882-ஆம் ஸ்ரீ, பால்குன மீ 8உ)

## முக்கியமான விவரங்கள்.

இப்பூவுலகில் நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் பலன் உண்டு. அவை நற்காரியங்களாகின் அவற்றிற்கு நற்பலனும், அறிந்தோ அறியாமலோ தீவினைகள் செய்தால் அவற்றிற்குத் தக்க தீங்குகளும் ஏற்படுகின்றன. சிலவற்றிற்கு இப்பிறவியிலேயே பலன் தோன்றுகிறது. சில நன்மை தீமைகளுக்கு நமக்கு ஏற்படும் அடுத்தபிறவியிலும் பயன் ஏற்படுகிறது. அதேபோல் மனிதர்கள் முற்பிறவியில் செய்த நற்செயல்களுக்கும் தீச் செயல்கட்கும் அடுத்த பிறவியில் பலன் ஏற்படுகிறது என்று இந்நூலில் சொல்லப்படுகிறது. அவற்றில் சிலவற்றைக் கீழே கொடுத்திருக்கிறோம்.

உதாரணமாக. உயர் பிறவிக்குக் காரணம் கீழே குறிப்பிட்ட சில நற்செயல்களால் இப்பிறவியிலோ அல்லது முற்பிறவியிலோ தாழ்ந்த குலம் இருப்பின் அடுத்து ஏற்படும் பிறவியில் குலம் உயர்கிறது.

"...... அன்னவ ணந்தியத்தில் அயன்பூசை புரியு மீசர் மன்னருக்கு அருச்சித் தேத்தி மணிவிளக்கு அவறுமிட்டான் உன்னத வானைக் கோவில் உத்தமன் தீபம் வைத்தான்" சிவபெருமானுக்குப் பூசைகள் புரிந்து, தீபமிட்டு, விநாயகனுக்கும் தீபம் வைத்து வழிபட்டதாகிய நற்செயலால் ஒருவனுக்கு பிறக்கும் குலம் உயர்கிறது

இதேபோல் நல்லெண்ணத்துடன் யாத்திரைகள் செய்து தெய்வபக்தியுடனிருந்து, சேதுவுக்குச் சென்று புண்ணியநதியில் நீராடல், திருமாலுக்கு பணிவிடைகள் செய்தல், பஜனை முதலியன செய்தல் இவைகளைப்போல் பல நற்செயல்களாக கருதப்பட்டன

| | | | | |
|---|---|---|---|---|
| ஜாதகம் | 49 | — | 18. | |
| | 49 | — | 34 | |
| | 50 | — | 26 | |
| | 51 | — | 26 | |
| | 66 | — | 16 | |
| | 54 | — | 25 | 28 |
| | 55 | — | 24 | |
| | 59 | — | 32 | 33 |
| | 61 | — | 21 | |
| | 62 | — | 24 | |
| | 63 | — | 16 | |
| | 64 | — | 33 | 34 |
| | 80 | — | 35 | |
| | 81 | — | 28 | |

இதேபோல் தீச்செயல்கள் இப்பிறவியிலோ முற்பிறவியிலோ செய்த தன் பயனுக தாழ்வான குலத்தில் பிறவி ஏற்படுகிறது. அவைகளாவன: தன் குலாசாரப்படி நடந்து வராததாலும், அந்தணனுயின் வேதங்கள் சரிவர

ஓதாமல் இருந்து வந்தாலும், விரத அநுஷ்டாரங்கள் சரிவர செய்யாததாலும் அடுத்த பிறவியில் குலத்தாழ்வு ஏற்படுகிறது.

ஜாதகம் 49 — 44
51 — 31
61 — 9

வேற்று ஜாதிப்பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்ததால் குலம் தாழ்வானது

58 — 36

பெண்ணுக்கு கணவன் சொல்லை மீறி நடந்தலால் குலம் தாழ்வானது

ஜாதகம் 63 — 15

இதுபோல் இன்னும் பல காரணங்கள் கூறப்படுகின்றன.

இவை தவிர சிற்சில தீச்செயல்களால் சகோதர தோஷம், புத்திர தோஷம், உடல் நலம் குன்றுதல், அற்ப ஆயுள், முதலியன ஏற்படுகின்றன.

## புத்திர தோஷம் ஏற்பட : தீச் செயல்கள்

1. பசித்து வந்த ஏழைக் குழந்தைக்கு பாலோ உணவோ அளித்து வராமல், கடுமையான வார்த்தைகள் சொல்லி ஏழையை விரட்டுதல் மிக மிகக் கொடியதாகவும் பிறக்கும் குழந்தைகட்குத் தோஷம் ஏற்படுவதாகவும் சொல்லப்படுகிறது.

ஜாதகம் 48 — 24
75 — 23
80 — 22

இதேபோல் கடையில் மஞ்சள் சீப்பு, குங்குமம் முதலியன வாங்கி அதற்குரிய பணம் தராது ஏமாற்றியதால் கடைக்காரன் சாபமிட, அதனுல் கைம்மையும் (அப்பிறவியிலேயே) அடுத்த பிறவியில் புத்திர தோஷமும் ஏற்படுகிறது.

ஜாதகம் 65—15, 16, 17

கீழ் ஜாதி பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்துவிட்டு நீராடாமல் கோயிலுக்குச் சென்றதால் புத்திர தோஷம் ஏற்பட்டது.

ஜாதகம் 80 — 31, 52 — 18

வீட்டில் வெகுநாட்களாக இருந்த குலதெய்வத்தை தொழாமல் இருந்ததால் புத்திர தோஷம் ஏற்பட்டது.

ஜாதகம் 48 — 18, 75 — 25, 26

அந்தணப் பெண்ணுடன் பலவந்தமாகப் புணர்தல்

ஜாதகம் 48 — 26 55 — 18,
73 — 20

கன்னுக்குப் பால்விடவில்லை முழுவதும் கரந்தது. 73—15, 75 — 29
இவைகளால் புத்திர தோஷம் ஏற்படுவதாக இந்நூலில் கூறப்பட்டுள்ளன,

## புத்திர தோஷம் ஏற்பட—கிரகநிலை

மேற் கூறப்பட்ட புத்திர தோஷம் ஏற்படத் தக்கவாறு ஜாதகனுடைய பிறந்தகால கிரக நிலையும் அமைவதாகச் சொல்லப்படுகிறது. அவ்விதக் கிரக நிலையைக் கீழே யுள்ள உதாரணங்கள் கூறும்.

1. புத்திர ஸ்தானத்தை சனி பார்த்தாலும்

ஜாதகம் 51 — 21

2. ஐந்தினில் புதன், செய், கேது, அலரியுமிருப்பதால் (புத்திர ஸ்தானத்தில், கருமாதிபதியாகிய புதன் 3, 8ஆம் இடத்துக்குரிய செவ்வாய், விரயஸ்தானதிபதியாகிய சூரியன் இவர்கள் ஒன்றுகூடி இருப்பதால்).

52 — 15

3. ஐந்தினில் ராகு மன்னன், அஞ்சோனுறில்

ஜாதகம் 55 — 16

புத்திர ஸ்தானத்துக்குரிய கிரகம் (ஈண்டு சனி) ஆருமிடத்தில் இருந்ததாலும் ராகு இருப்பதாலும் புத்திர தோஷமுண்டு.

ஜாதகம் 63—22 : 64—23

4. சனியும 5ல் தங்க, சனி புத்திர ஸ்தானாதிபதியாகி, புத்திர ஸ்தானத்திலேயே இருந்தாலும்.

ஜாதகம் 64 — 23

5. புத்திர ஸ்தானத்தில் சூரியனும், அவ்விடத்துக்குரியவன் ஆருமிடத்தில் இருக்க.

ஜாதகம் 66 — 19

6. புத்திர ஸ்தானத்துக்குரியவன் (சனி) கேதுவுன்கூடி அவ்வீட்டிற்கு பனிரண்டில் இருப்பதாலும், செவ்வாய் புத்திர ஸ்தானத்தைப் பார்ப்பதாலும்.

ஜாதகம் 49 — 28

5. நிதி குரு 5ல் நீச்சம் நீலனும் 4-இல் தங்க

ஜாதகம் 71 — 24; 75 — 21

புத்திர ஸ்தானத்தில் குரு நீச்சனுக விருப்பதாலும் அவ்வீட்டிற்குரியவன் (சனி) அவ்விடத்துக்கு, பன்னிரண்டாமிடத்தில் (லக்கினத்திலிருந்து 4ல்) இருப்பதாலும்

6. துன்மையாய் புகரு மஞ்சில் சூரியன் கூடி நிற்க. சுக்கிரன் புத்திர ஸ்தானத்தில் சூரியன் (பனிரண்டாமிடத்துக்குரியவன்) கூடி இருப்பதாலும்,

ஜாதகம் 73 — 14 : 75 — 21

புத்திர ஸ்தானத்தில் செவ்வாயிருக்க.

ஜாதகம் 78 — 15

7. புத்திர ஸ்தானத்தில் கேது இருக்க, செவ்வாயும் சனியும் புத்திர ஸ்தானத்தைப் பார்ப்பதாலும் புத்திர தோஷம் ஏற்படுவதாகச் சொல்லப்படுகிறது.

ஜாதகம் 80 — 17

## களத்திர தோஷம் தீவினைகள்

வேற்றுப் பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்ததை கணவன் பார்த்து விலக்கியவளை காப்பாற்ருமல் கைவிட்டதால் களத்திர தோஷம், சகோதர தோஷம் புத்திர தோஷம் ஏற்பட்டது

91 — 28

கைம் பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்து கருவழிந்தது

67 — 41 42

அந்தணருக்குத் திருமண விஷயத்தில் தீமை செய்து திருமங்கல்யத்துக்காக கொடுத்த பொன்னைத் திருடியது—களத்திர தோஷம், பார்வைக் குறைவு

68 — 27

## களத்திர தோஷம் ஏற்படத் தீவினைகளாவன :

1. குழந்தையின் பசிக்கு உணவு தரமறுத்து அடித்துத் துரத்துதல்
ஜாதகம் 48 — 25

2. பெண் மீது காணுத குற்றம்கூறி தகாத வார்த்தை சொல்லுதல்
ஜாதகம் 72 — 29 74, 17, 75, 14

3. விதவையுடன் சிற்றின்பம் அநுபவித்து கருவழித்தது.
ஜாதகம் 73 — 20

4. அந்தணப் பெண்ணுடன் சிறிறின்பம் அநுபவித்தது.

## இருமனைவியர் ஏற்பட கிரகநிலை

1. ஏழாமிடத்தில் கேது இருந்து அவ்விடத்தைச் சனி பார்ப்பதால் இருமனைவியர்;
ஜாதகம் 50 — 14

2. ஏழில் கேதுவும் சந்திரன் ஆருமிடத்திலும் இருக்க
ஜாதகம் 51 — 17; 63 : 19

3. ஏழாம் வீட்டுக்குரியவன் எட்டாம் வீட்டிலும் அல்லது சரராசியில் இருப்பினும்
ஜாதகம் 52 — 15 — 16
53 — 20
58 — 15
82 — 21

ஏழாம் வீட்டில் ராகு இருக்க இருமனைவியர்

65 — 22

4. களத்திர காரகனுகிய சுக்கிரன் விரயத்தில் (12ஆம் இடத்தில் இருக்க)

62 — 28

5. ஏழாம் விட்டுக்குரியவன் சர ராசியிலும், கும்பஸ்தானதுக்குரியவர் நீச்சம் பெற்றிருந்தாலும்

82 — 21

6. இரண்டாம் வீட்டில் ராகு, (கேது) இருக்க

58 : 15

மேற் கூறப்பட்ட கிரக நிலையிருப்பினும் வேறு மற்ற கிரகங்களின் நிலையால் மனைவி ஒருத்தியே என்று கீழ்க்கண்டுள்ள ஜாதகங்களில் கூறப்பட்டுள்ளன. குரு ஏழாம் விட்டுக்குரியவனுகி லக்கினத்தில் இருப்பதாலும் மனைவி ஒருத்தியே

ஜாதகம் 50 — 15

2ல் (குடும்பஸ்தானத்தில்) குரு இருப்பதாலும் களத்திர தோஷம் ஏற்படக் கூடிய கிரகநிலை யிருந்தபோதிலும் மனைவி ஒருத்தியே ஏற்படுவாள்

ஜாதகம் 67 — 29

## சகோதரதோஷம் ஏற்பட கிரகநிலை

3ஆம் இடத்தில் (சகோதரஸ்தானத்தில்) சனி இருக்க சகோதரனுல் துன்பம் நேரும்

ஜாதகம் 52 — 33 — 34
62 — 12

6ஆம் இடத்தில் ராகு இருக்க சகோதர தோஷம் 3ஆம் இடத்துக்குரியவள். செவ்வாயாகி ராகுவுடன் ஜன்மம் தங்க.

ஜாதகம் 63 — 12

லக்கினத்தில் சனி, சேய், சூரியன் தங்க

ஜாதகம் 65 — 11

செவ்வாய் விரயத்தில், குரு அஞ்சில் நீசம் பெற்று சனி நாலில் தங்க.

71 — 16
ஜாதகம் 74 — 11

ராகு, சந்திரன் பன்னிரண்டாமிடத்தில் இருக்க சனியும் பார்க்க

77 — 6

இம்மாதிரி கிரக நிலையிருப்பின் சகோதர தோஷம் ஏற்படுவதாகக் கூறப்பட்டிருக்கிறது: அதற்கு அனுகுணமாக சில தீவினைகளும் சொல்லப்பட்டிருக்கின்றது. அவற்றில் சில சகோதரனுக்குரிய பாகம் தராததால் சகோதர தோஷம் ஏற்பட்டது

| | | | |
|---|---|---|---|
| ஜாதகம் | 52 — 19 | 71 — 7 | 77 — 7 |
| | 62 — 32 | 75 — 7 | 81 — 24 |

அன்னியமாது மீது அடாத நிந்தை வார்த்தைகள் சொல்லுவதால்

59 — 9 74 — 17 71 — 25
72 — 29 75 — 14

கணவனுடைய சகோதரி மீது அடாத வார்த்தை சொல்லல்

ஜாதகம் 62 — 16

மனைவியின் சகோதரியுடன் (விதவை) சிற்றின்பம் அநுபவித்துக்கரு வழித்தல்

## யோகம்மேற்படக் கிரகநிலை :

தர்மகர்மாதிகளாகிய (லக்கினத்துக்கு 9-ஆமிடம் பத்தாமிடத்துக்கு உரிய கிரகங்கள்) ஒன்பதாமிடத்தில் தங்கியிருப்பதாலும்; தர்ம கர்மாதிபதிகள் பத்திலிருக்க

86—44 : 59—16

குரு ஆட்சிபலம் பெற்றும், கேது பத்தில் இருக்க, புதன் சூரியன் ஒன்றுக இருக்க,

60—25

சுக்கிரன் புதன் ஒன்றுக இருக்க

68—17 : 71—30

புதன், சுக்கிரன் கூடி ஐந்தாமிடத்தில் இருக்க பல புண்ணிய நதியில் நீராடுதல், செல்வம் சேருதல், நினைத்த காரியங்கள் கைகூடுதல் கீர்த்தி. சேது செல்லல் இவை ஏற்படும்.

73—36

குரு, சனி உச்சமாகவும், அங்காரகன் சுக்கிரன் ஆட்சி பலம் பெற்று ஈர்கு ஆறில் தங்க, யோகம் ஏற்படும்.

வேசி யோகம் 74—28

ராகு பத்திலும், சனி ஏழாமிடத்தில், புதன் ஐந்தாமிடத்திலும் இருக்க பாஸ்கரயோகம், வாசியோகம். சூரியனுக்குப் பனிரண்டில் சுக்கிரனிருக்க சிங்கயோகம் சந்திரனுக்குப் பத்தில் குருவிருக்க, 77—25

புதன், செவ்வாய், சனி இம்மூன்று கிரகங்களும் இடம் மாறி பரிவர்த்தனையாக இருப்பின் மாருதி யோகம் ஏற்படும்.

புதன் நாலாமிடத்திலும் சந்திரன் ஆட்சிபலம் பெற்றதாலும் குருவிருக்குமிடத்துக்குப் பத்தில் சூரியன் இருப்பதால் பதும யோகம், வீணை யோகம் ;

84 — 27

ஒப்புடன் தர்மகர்மன் ஒன்றுக சன்மம் தங்க புதன், சந்திரன் உச்சமாக

தர்மகர்மாதி யொன்றுய் நாலில் தங்க சூரியன் இருக்குமிடத்துக்கு பனிரண்டில் சுக்கிரன் இருக்க வேசியோகம், குருவிற்கு நாலில் சந்திரன் இருக்க கேசரியோகம்

68—17 : 77—25

சூரியனும் புதனும் சேர்ந்து இருபதாலும் அங்காரகன் 4-ஆம் இடத்தில் இருப்பதாலும் ராசயோகம் ஏற்படும்.

92 — 16

## தந்தைக்கு யோகமேற்பட கிரகநிலை

இவை தவிர ஜாதகனுடைய தந்தைக்கு ஏற்படும் யோகங்கள் சில கிரகநிலையால் ஏற்படுவதாக இந்தச் சோதிட நூலில் சொல்லப்படுகிறது.

புந்தியும், புகரும் ஐந்தில் பொருந்திய பலத்தால் யோகம்

64 — 27

மந்திரி (குரு) தனக்குப் பத்தில் மதி (சந்திரன்) இருக்கவும் தந்தையின் ஸ்தானமாகிய 9-ஆம் இடத்திற்குப் பத்தில் குரு இருப்பதால் தந்தைக்கு யோகம்

64 — 29

## ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் ஏற்பட கிரகநிலை

ஒன்பதுக்கு (பிதுர் ஸ்தானத்துக்கு) ஆறும் இடத்தில் ராகு இருக்க தந்தைக்குச் சகோதர தோஷம்

59 — 7

சனி ஏழாமிடத்திலும், புதன், சூரியனுடன் 12-ஆம் இடத்தில் இருக்க தந்தைக்குச் சகோதரதோஷம்

60 — 4

தந்தைதானத்தோன் (9-ஆம் இடத்துக்குரியவன்) நீசம் பெற்று அங்காரகனுடன் சேர்ந்து இருக்க தந்தைக்குச் சகோதர தோஷம் ஏற்படும்.

72 — 4

(9-ஆம் இடத்துக்குரிய) சுக்கிரன் லாப ஸ்தாபனத்தில் இருக்க, தந்தைக்குச் சகோதர தோஷம்.

75 — 6

சனியும் கேதுவும் ஆறுமிடத்திலும், புதன் பனிரண்டாமிடத்திலும் இருக்க தந்தைக்குச் சகோதர தோஷம் ஏற்படும்.

ராகு செவ்வாய், சனி இலாபஸ்தானமாகிய பதினோராமிடத்தில் இருப்பதால் தந்தைக்குச் சகோதர தோஷம்

88 — 6

குரு இரண்டாமிடத்திலும் அங்காரகன் நீச்சமாக இருப்பதால் தந்தைக்குச் சகோதர தோஷம்

69 — 7

68 — 7

தாய்க்குச் சகோதர தோஷம் ஆறும் வீட்டுக்குரியவன் (சனி) நீச்சமாகவும் அவ்வீட்டை அங்காரகன் பார்ப்பதாலும் தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது.

## தந்தை தன் புத்திரனுக்குக் கருமம் செய்தல்:

பத்தாமிடத்தில் (கரும ஸ்தானத்தில்) அங்காரகன், கேது கூடி இருந்து அவ்வீட்டுக் குரிய புதன் விரய ஸ்தானத்தில் இருப்பதால், தந்தை பிள்ளைக்கு கருமம் செய்வான்.

48 — 10

## சில கிரகநிலையின் பலன்கள்

ஏழாம் வீட்டுக்குரியவன் உச்சபலம் பெற்று குரு ஏழாமிடத்தைப் பார்த் தாலும், மனைவி ஒருத்தியே. நாலாமிடத்தில் சுக்கிரன், புதன் சேர்க்கை யாலும், சனி, புதன் மாறி இருப்பதாலும் மனைவி ஒருத்தியே;

51 — 18

புதனிருக்கு மிடத்துக்கு இரண்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, சனிக்குப் பத்தில் சந்திரன் இருப்பதாலும் வேறு தோஷங்களிலிருப்பினும் மனைவி ஒருவளே.

52 — 16

லக்னத்தில் குரு இருக்க என்ன நோய் வந்தபோதிலும் தீரும்,

83 — 39

குருவிருக்கு மிடத்துக்கு ஆறில் சந்திரன் இருக்க சகடை தோஷமும் ஆனால் விரயத்தில் சந்திரன் இருந்தால் சகடை தோஷ நிவர்த்தியும் சொல் லப்பட்டிருக்கின்றது.

இலக்கினத்துக்கு ஆறுமிடத்தில் சனியிருக்க மேகரோகம் ஏற்படும்.

ராகுவுடன் குரு சேர்ந்து நாலில் இருக்க நோயுற்ற மனைவி வாய்ப்பாள்.

72 — 15

பத்தாம் வீட்டுக்குரியவன் நாலில் இருப்பதாலும் சந்திரனுக்குப் பத்தில் குரு இருப்பதாலும் நீண்ட வயது உண்டு.

84 — 37

குரு பத்தில் இருப்பதால் தன் புத்திரனால் கருமம் நேரும். அதனால், புத்திர தோஷம் இல்லை.

90 — 26

சுக்கிரன் (பிதுர் ஸ்தானாதிபதி விரய ஸ்தானத்தில் 12-ஆம் இடத்தில் இருக்க கேது இரண்டில் இருக்கும்போது தந்தையின் ஆர்ச்சிதங்கள் காணான்.

92 — 15

## நல்வினை

துன்புற்றவருக்கு மருந்து கொடுத்து அந்த நோயைத் தீர்த்த புண்ணி யத்தால் புத்திர விருத்தி

67 — 24

காராம் பசுவின் பாலைத் திருமாலுக்குக் கொடுத்ததால் புத்திர விருத்தி ஏற்பட்டது.

87 — 26

## சில தீவினைகளால் ஏற்படும் பலன்களாவன :

நகை முதலியன அபகரித்தால் அவைகளை மறுபிறவியில் திருப்பித் தருவதற்குப் பதிலாக அபிமான மனைவியாக வாய்ப்பாள்.

83 — 32   69—8   62 — 39

மாரியம்மன் கோவில் புஷ்பத்தைக் காலால் மிதித்ததால் கால் ஊனம் கண் மலர் திருடியதால் கண் குருடாகியது.

பொன், பணம் முதலியன தருவதாகச் சொல்லி, பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்துப் பிறகு தராமல் ஏமாற்றியதால் அடுத்த பிறவியில் இருதாரம் ஏற்படுவாள்.

58 — 19

சகோதரதோஷம் ஏற்படும்

68 — 8

## தந்தையாஸ்தி கிடைக்காதது

ஏழைகளின் பொருளை அபகரித்தால் பிதுரார்ஜித சொத்து கிடைக்காமல் போகும். தங்கி இருக்க வீடு கிடைக்காது. மனைவியின் இல்லத்தில் வாசம் ஏற்படும்.

ஜா 50 — 21   70 — 31
72 — 19 — 21
73 — 19

சிற்றின்பம் அநுபவித்து நீராடாமல் கோயிலுக்குச் சென்றதால் யோகம் குறையும். கடன் துன்பம் விளையும்

80 — 31

பசுவை யடித்த தோஷத்தால் அடுத்த பிறவியில் கால் ஊனமாகும்

63 — 8

அசுத்தமான காலத்தில் (மாதவிடாய் காலத்தில்) ஆற்றைக் கடந்த தோஷத்தால் அடுத்த பிறவியில் கால் ஊனமாகியது.

81 — 19 — 20

பந்தியில் சாப்பாடு போடும்போது வஞ்சனை செய்ததால் கை கால்கள் ஊனமாகியது

81 — 20

முனி வசித்து வந்த மரத்தை வெட்டியதால் தந்தையின் ஆஸ்தி, வீடு, நிலம் கிடைக்காதது.

81 — 14 — 15

பசுவை யடித்ததால் குன்ம வியாதி ஏற்பட்டது.

50 — 23

பட்சியை வதைத்த தோஷத்தால் கைகால்கள் ஊனமாயின.

ஜா 49 — 12
77 — 12

நந்தி மேல் அதிக பாரம் நடத்தினன். தோஷமேற்பட்டது

ஜா 72 — 21

பூனையை பிடித்துக் கொன்றதால் மேக ரோகம் ஏற்பட்டது.

ஜா 55 — 25
90 — 28

வீட்டில் உள்ள நல்லபாம்பை அடித்துக் கொன்றதால் சர்ப்பதோஷம் ஏற்பட்டது.

52 — 19 55 — 12
83 — 22 88 — 40 — 41

அந்தணருக்குக் கணக்கில் மோசம் செய்ததால் சகோதர தோஷம் ஏற்பட்டு, தாயும் ஆதியில் இறந்து, குறையுள்ள குடும்பம் ஏற்பட்டு அவ மதிப்பு கடன் தொல்லை முதலியன ஏற்படும். குலநாசம்.

65—26 66—5—6 58—21

தாய்க்கு இடஞ்சல் செய்ததால் வீட்டில் சதா துன்பம் ஏற்படும். அடுத்த பிறவியில் தாய் ஆதி காலத்திலேயே மரணமடைவாள்.

ஜா 58—22—24

மருந்து கொடுத்து அதனல் வேற்றுப் புருஷனுடன் சிற்றின்பம் அனுப விக்கச் செய்ததால் சயரோகம் ஏற்படும்.

67 — 24

மருந்துடன் விஷத்தைக் கொடுத்துக் கொன்றது சகோதர தோஷம் ஏற்படும்;

67 — 24

தாசியுடன் நட்பாக இருந்து, சிற்றின்பம் அநுபவித்து பிறகு அவ ளுடைய பொருள், நகை முதலியன கவர்தல் அடுத்தடுத்து ஏற்படும் பிறவியில் சகோதர தோஷம், களத்திர தோஷம் முதலியன ஏற்படும்

67 — 28

தாசி இரண்டாம் மனைவியாக வாய்ப்பாள்

67 — 31

அந்தணன் ஒருவன் ஒருவனிடம் பொருளைக் கொடுத்து விட்டுச் சென்று மரணமடைந்தான். அவன் மனைவி கேட்கும்போது இல்லை என்று சத்தியம் செய்ததால் இருதாய், சகோதர தோஷம், புத்திரதோஷம் ஏற்பட்டது.

83 — 30

இப்பிறவியில் மோசம் செய்து பொருள் கவர்ந்தவள் அடுத்தப் பிறவி யில் இரண்டாம் மனைவியாக வருவாள்.

பசிக்கு உணவு அளிக்க வேண்டி வந்த ஒரு ஏழையைப் பலவந்தத் தால் புணர்ந்து கற்பழித்ததாலும் அவளுக்கு பணம், சேலை கொடுப்பதாகக் கூறி ஆசை வார்த்தை சொல்லி பிறகு தராது ஏமாற்றியதால் புத்திர தோஷம் ஏற்பட்டது.

88 — 8 85 — 24

அந்தணன் தாகத்துக்கு நீர்மோர் வேண்ட நீராகாரத்தை (அன்னத்துக்குமேல் இருக்கும் ஜலத்தை) மோர் என்று கூறி கொடுத்ததால் சகோதர தோஷம் புத்திரதோஷம் ஏற்படும்.

87 — 23

புத்திர தோஷம்

அந்தணனுக்கு திருமணத்துக்கு மங்கலியம் தருவதாகக் கூறி பிறகு தராது ஏமாற்றியது.

88 — 10

கைம் பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்து அவளுக்குக் கருவு தங்கி அதை யழிக்க மருந்து கொடுத்து அதனால் கைம் பெண் இறத்தல்

90 — 28

88 — 39

அந்தணனுக்கு இல்லாத வார்த்தை சொன்னதால்

88 — 39

குருவின் புத்திரி மீது மையல் கொண்டு பொருள் அவளுக்குக் கொடுத்து சிற்றின்பம் அனுபவித்ததால் புத்திர தோஷம்.

89 — 16

சகோதர தோஷம்

சனி கேது ஆறில் இருப்பதால் சனி, சந்திரன் சகோதர ஸ்தானத்தில் இருக்க

68 — 19

சனியுடன் சகோதர ஸ்தானத்துக்குரிய செவ்வாய் நீச்சமாக இருப்பதால்

88 — 20

சகோதர ஸ்தானத்தில் சூரியனும், செவ்வாய் நாலாமிடத்திலும் இருக்க முன் பின் தோன்றும் குழந்தைகள் நிலையா

90 — 13

சகடை தோஷம்

குருவுக்கு ஆறில் சனி இருப்பதால் சகடை தோஷம்

92 — 33

சனி, சுக்கிரன் சந்திரன் மூன்றும் இலக்கினத்துக்கு மூன்றுமிடத்தில் இருக்க தந்தைக்கு இரு மனைவியர் ஏற்படுவர்

80 — 7

சூரியன், புதன் ஒன்பதாமிடத்திலும் சந்திரன் குரு ஆறுமிடத்திலும் இருக்க தந்தைக்கு கால் ஊனம் ஏற்படும். ஆறுமிடத்தில் ராகு இருக்க பலவிதமான வழக்குகளும், விரோதமும் ஏற்படும் ஆனல் அவைகள் சாதகமான முறையில் முடியும்.

சுக்கிரன் விரயஸ்தானத்தில் இருந்து சனி பார்த்தால் தந்தைக்கு பிதுரார்ஜித சொத்து கிடைக்காது.

83 — 10

சனி, சூரியன் புத்திர ஸ்தானத்தில் இருக்க முதலிரு குழந்தைகட்கு தோஷம்

84 — 22

ஐந்தாமிடத்துக்குரியவன் விரயஸ்தானமாகிய பனிரண்டாமிடத்தில் இருக்கவும், அப்புத்திரஸ்தானத்தை அங்காரகன் பார்ப்பதால் புத்திர தோஷம்

86 — 21

புத்திர ஸ்தானமாகிய ஐந்தாமிடத்தில் புதன் சுக்கிரன் கேது தங்கி, அவ்விடத்தை செவ்வாயும் சனியும் பார்ப்பதால் புத்திர தோஷம் ஏற்படும்

87 — 31

புத்திர ஸ்தானத்தில் கேது இருக்க அவ்வீட்டுக்குரிய சனியுடன் ராகு சேர்ந்து புத்திர ஸ்தானத்தைப் பார்ப்பதால்

88 — 36

புத்திர ஸ்தானத்தில் குருவும் ராகும் இருப்பதால்

89 — 15

புத்திர ஸ்தானத்துக்குரிய சனி நீச்சம்பெற்று எட்டாமிடத்தில் (மறைவு ஸ்தானத்தில்) இருப்பதால் தோஷமுண்டு

90 — 26

புத்திர கருமம்

ராகு புத்திரஸ்தானத்தில் இருப்பதாலும் அதை சனி பார்ப்பதாலும் புத்திர தோஷம்

பத்தாம் வீட்டுக்குரியவன் உச்சமாகி யிருப்பதால் புத்திரனுல் கருமம் செய்யப்படும்

92 — 34

குரு புத்திரஸ்தானத்தைப் பார்ப்பதாலும் புத்திரனுல் கருமம் செய்யப்படும்

70 — 19

ஏழாம் வீட்டுக்குரியவன் எட்டிலும் இரண்டாம் வீட்டில் அங்காரகனும் இருப்பதால் தாரம் இரண்டு

84 — 20

ஏழாம் வீட்டுக்குரியவன் அவ்வீட்டுக்கு இரண்டாமிடத்திலும் நாலில் புதனும் சந்திரன் ஆட்சி பலம் பெற்றதாலும் ஒரு மனைவியே எனல்

81 — 21

67 — 35

குரு ஏழாம் வீட்டுக்குரியவனுகி 9 ஆம் இடத்தில் இருக்க சத்தான மாது உண்டு. புதன், ராகு ஏழில் இருக்க பொருந்தாத தாரம். அங்காரகன் பார்ப்பதால் மனைவிக்கு தீர்க்க ஆயுள் இல்லை.

67 — 35

ஏழாம் வீட்டுக்குரியவன் இரண்டாமிடத்திலும் இரண்டாம் வீட்டுக் குரியவன் எட்டாமிடத்திலும் இருக்க களத்திர தோஷம்

68 — 22

1. சங்கரிக்குச் சரும சாந்திகள் செய்து தங்கத்தகட்டில் பீஜாக்ஷரத்தை எழுதி, பூஜையில் வைத்து, ஆயிரம் தடவை ஜபித்துத் தகட்டை அணிந்து குருவாரம், சுக்கிர வாரம் இவைகளில் நோன்பு இருப்பாராகில் புத்திர தோஷம் விலகும். மனைவியும் தானுமாக, திருப்பரங்குன்றம் சென்று, ஆறுமுகனுக்கு அர்ச்சித்து துதித்து 100 பரதேசிகட்கு அன்னமளித்து, கல்லால் சர்ப்பம்போல் அடித்து அரசமரத்தின் கீழ் பிரதிஷ்டை செய்து, சஷ்டி விரதம் ஏற்று நடந்தால்—புத்திர தோஷம் விலகும்

ஜாதகம் 48 — 21; 52 — 21 — 22

3. திருவண்ணாமலைக்குச் சென்று, அங்குள்ள தீர்த்தத்தில் நீராடி, அருணாசலேச்வரருக்குப் பூசைகள் புரிந்து, துதித்து, கிரிவலம் வந்து, பத்து பரதேசிகட்கு அன்னம் அளித்து சஷ்டி விரத்ம் ஏற்க.

4. அருக தேவனுக்கு அர்ச்சித்து, அபிஷேகம் முதலியன செய்து, பூசித்து, சுக்ல அஷ்டமி விரதம் கொள்ள;

## சாந்திகள்

புத்திர தோஷம், களத்திர தோஷம் முதலியன நீங்குவதற்குச் சில சாந்திகள் கூறப்பட்டுள்ளன. அவைகளாவன ;—

முனியைத் தொழுது வணங்காத தோஷத்தால் புத்திர தோஷம் ஏற்பட்டது. அது நீங்க சக்தியின் பீஜாட்கரத்தைத் தங்கத் தட்டில் வரைந்து சக்தியின் முன்பு பூஜைவைத்து, ஆயிரம் தடவை பீஜாட் கரத்தை ஜபித்து, பிறகு அணிந்து, சுக்கிரவார நோன்பு இருக்க (துவாதசியின்று) தோஷம் நீங்கும்

75 — 31, 32
48 — 21, 22
91 — 24

பூனையை அடித்துக்கொன்ற தோஷத்துக்கு துலா மாதத்தில் அருக தேவனுக்கு அபிஷேகம் செய்து சதுர்தசி விரதம் ஏற்று இருப்பாராகில் தோஷம் விலகும்

ஜாதகம் 55 —22 26

களத்திர தோஷம் நீங்க சேதுவுக்கு மனைவியுடன் சென்று, நீராடி, ராமலிங்கத்துக்குப் பூசை செய்து, தானம் செய்தால் சுக்கிரவார நோன்பு இருக்க. தோஷம் விலகும் ;

87 — 38
53 — 6

சர்ப்ப தோஷம் நீங்க மாயூரத்துக்கு மனைவியுடன் சென்று அந்த ஊரிலுள்ள காவிரிக் கரையில் உள்ள சர்ப்பசிலைக்கு ஒருவாரம் பிரதட்சினம் அபிஷேகம் முதலியன செய்து வலம் வந்து, சர்ப்ப உரு ஒன்று வெள்ளியால் செய்து அந்தணருக்கு அளித்து, பரதேசிகட்கு அன்னமளித்து சஷ்டி ஏகாதசி நோன்பு இருக்க ;

88 — 42
83 — 24

திருப்பனையூருக்குச் சென்று அங்குள்ள சிவபெருமானுக்கு அபிஷேகம் அர்ச்சனைகள் செய்து, துதித்து சமாராதனை செய்தால் நீங்கும்;

89 -- 19

## புத்திர தோஷம் தீங்க

மனைவியுடன் திருப்போரூர் சென்று நீராடி, முருகனுக்கு அருச்சனை செய்து துதித்து, இருபத்தோரு அந்தண குலத்தவருக்கு சந்தர்ப்பணை செய்து அது முதல் சஷ்டி விரதம் இருக்க;

90 — 32

மாரியம்மன் கோவிலில் நாகத்தைப்போல் சிலை வைத்து பிரதிஷ்டை செய்து, விளக்கேற்றினல் கர்ப்ப தோஷம் நீங்கி புத்திர விருத்தி;

70 — 24

சில தீங்குகளுக்கு இந்நூலில் சாந்தியே கூறப்படவில்லை.

பசுவை அடித்து அதன் காலை ஒடித்தது, தாய் தந்தையருக்குத் துன்பம் விளைவித்தது. மனைவியின் பேச்சைக்கேட்டுத் தந்தையை விட்டைவிட்டுத் துரத்தியது

மாரியம்மனுக்கு பூஜை செய்த புஷ்பத்தை (அவமதித்து) மிதித்தது.

65 — 9

குழந்தையின் பசிக்கு உணவு, பால் முதலியன தர மறுத்துத் திட்டி அனுப்புவது

85 — 13

கடைசியில் மஞ்சள் புஷ்பம், குங்குமம் முதலியன வாங்கி அதற்குரிய பணம் தராது ஏமாற்றுதல் இவைகளைப்போன்ற பல தீங்குகட்கு இந்த ஜோதிடநூலில் சாந்தி கூறப்படாததுடன். அப்பிறவியிலேயே இவைகட்குப் பலனும் கிடைக்கும். அடுத்த பிறவியிலும் தொடரும்.

## இலக்கினம் முதலிய பனிரண்டு இடங்களுக்கும் வேறு பெயர்கள்

| | | |
|---|---|---|
| 1. | இலக்கினம் | பதி, உயிர், தலம், சரீரஸ்தானம். |
| 2. | இரண்டாமிடம் (ஈண்டு), துலாம் | குடும்பஸ்தானம், நேத்திர ஸ்தானம், தனஸ்தானம் |
| 3. | மூன்றுமிடம் (ஈண்டு) விருச்சிகம் | சகோதர ஸ்தானம், தைரிய ஸ்தானம் |
| 4. | நான்காமிடம் (ஈண்டு) தனுசு | வித்தை, சுகம், போஜனம், தாய், கிருகம், வாகனம் |
| 5. | ஐந்தாமிடம் (ஈண்டு) மகரம் | புத்திர ஸ்தானம் பூர்வ புண்ணிய ஸ்தானம், மாமன் |
| 6. | ஆறுமிடம் (ஈண்டு) கும்பம் | (மறைவு ஸ்தானம்) கடன் ரோகம், சத்துரு ஸ்தானம் |
| 7. | ஏழாமிடம் (ஈண்டு) மீனம் | களத்திர ஸ்தானம், போகஸ்தானம் |
| 8. | எட்டாமிடம் (ஈண்டு) மேஷம் | ஆயுள் ஸ்தானம் |
| 9. | ஒன்பதாமிடம் (ஈண்டு) ரிஷபம் | பிதுர் ஸ்தானம் பாக்கிய ஸ்தானம் |
| 10. | பத்தாமிடம் (ஈண்டு) மிதுனம் | கருமஸ்தானம், உத்தியோகம், ஜீவனம் |
| 11. | பதினோராமிடம் (ஈண்டு) கடகம்) | லாபஸ்தானம் மூத்த சகோதர ஸ்தானம் |
| 12. | பன்னிரண்டாமிடம் (ஈண்டு) சிம்மம் | விரய ஸ்தானம் சயனம் யாத்திரை முதலியன |

## இந்த ஸப்தரிஷி நாடியின் வியாக்கியானத்தில் உபயோகப்படுத்தப்பட்ட ஜோதிட சாஸ்திர கிரந்தங்களின் ஜாபிதா!

1. காளிதாஸரின் ஜாதக சந்திரிகை—சம்ஸ்கிருதத்தில்
2. வைத்திய நாத தீக்ஷிதரின் ஜாதக பாரிஜாதம்—சம்ஸ்கிருதத்தில்
3. மந்திரேஸ்வரருடைய பலதீபிகை—சமஸ்கிருதத்தில்
4. கல்யாணவர்மாவின் சாராவளி—சமஸ்கிருதத்தில்
5. ஸம்புஹோரா பிரகாசா—சமஸ்கிருதத்தில்
6. வராஹ மிஹிரருடைய பிருஹத் ஜாதகம்—சம்ஸ்கிருதத்தில்
7. பாரசர மஹரிஷியின் பிருஹத் பாரசர ஹோரை—சம்ஸ்கிருதத்தில்
8. கீரனூர் நடராஜரின் ஜாதகாலங்காரம்—தமிழில்
9. துய்ய கேரளம்—தமிழில்
10. அகஸ்தியரின் மணிகண்ட கேரளம்—தமிழில்
11. ஜாதக சிந்தாமணி—தமிழில்
12. குமாரசாமியம்—தமிழில்
13. சந்திர காவியம்—தமிழில்
14. தாண்டவமாலை—தமிழில்
15. ஜோதிடக் களஞ்சியம்—தமிழில் முதலியன.

*குறிப்பு :—மேற்கண்ட புத்தகங்களில் பலவிதமான பதிப்புகள் இருப்பதால் நமது வியாக்கியானத்தில் கொடுத்துள்ள சுலோகங்களின் நம்பரையும் அல்லது பாடல்களின் நம்பரையும், இவற்றிற்கு முந்தி பிந்தியுள்ள இரண்டொரு நம்பர்களையும் பார்க்க நம்மால் மேற்கோள்களாக அல்லது ஆதாரமாகக் கொடுக்கப்பட்ட சுலோகங்களும் அல்லது பாடல்களும் காணப்படும்.

## இந்நூலில் வரும் நவக்கிரகங்களின் வேறு பெயர்கள்

சூரியன் :— ரவி, பான், பானு, பரிதி, கதிர், வெய்யோன், புரவியோன் உதயன், வெய்யவன், செங்கதிர்.

சந்திரன் :— மதி, பிறை, திங்கள், கலை, அம்புலி, இந்து.

செவ்வாய் :—மங்கலன், பார்மகன், குசன், சேய், குகன், பூமகன் நிலமகன், செந்தீ, அலரி, ஆரல், வக்கிரன்.

புதன் :— மால், புலவன், கூரியன், பாகன், பண்டிதன்.

குரு :— பொன்னேன், பொன், மறை, ஆகமன், மாதவன், சிகண்டி வேதியன், கனகன், வேந்தன், மந்திரி, அந்தணன் மன்னவன், சுரர்குரு,

சுக்கிரன் :— புகர், வெள்ளி, சல்லியன், கவி, நீர்புகர் சலக்கோளு, கவி மகன். அசுரசர் மந்திரி, பரசுரன்.

சனி :— பங்கு, காரி, விதி, மந்தன், கரியவன், மைந்தன், நீலன்.

ராகு :— அதிகபர், உரகன், பணி, கயறு, புயங்கன் கொடுவிஷம் கரும்பாம்பு, அரவு, ஆதிசேடன், நாகம், சேடன்.

கேது :— சிகி, ஞானி, நீத்தோன் செம்பாம்பு பங்கயப் பகையோன். அதிதி

## மேஷம் முதலிய பனிரண்டு ராசிகளுக்கும் வேறு பெயர்கள் இந்நூலில் கூறப்படுபவை

மேஷம் :—

ரிஷபம் :— நந்தி, சேல்.

மிதுனம் :— மகளிர், வீணை.

கடகம் :— வண்டி, நண்டு.

சிம்மம் :— சீயம், அரி, சிங்கம்

கன்னி :— அரிவை, மாதை, பெண், மங்கை, பாவை, மாது

துலாம் :— தூக்கம், துலை, கோல்

விருச்சிகம் :— தேள், தெருக்கால்

தனுசு :— மேரு, வில்லு, சாபம்

மகரம் :— மான், கலை.

கும்பம் :— சாடி, சால்

மீனம் :— கெண்டை

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 5 | மதன்மதனே | மன்மதனே |
| 5 | கடைசிவரி | கடகம் | சிம்மம் |
| 32 | 10 | பெண் | பொன் |
| 35 | குறிப்பில் | ... | சுக்கிர |
| | | ... | புத |
| 38 | 3 | திருவண்ணுமலே | திரிகோணமலே |
| 43 | குறிப்பு | சூர்யாஸ்தமனத்தில் | சூர்யோதயத்துக்கு முன்பு 3-மணிக்கு |
| 50 | 17 | நாளில் | நாலில் |
| 61 | 32 | கடவுளின்றி | கடனின்றி |
| 74 | 27 | ஜாதகருடைய | ஜாதகனுடைய தந்தையின் |
| 75 | 24 | தந்தையின் | ............ |
| 82 | 3 | 4 | 2 |
| 86 | 21 | மாதரிவிடம் | மாதரிடம் |
| 89 | 8 | வம்சம் | வாசம் |
| 95 | 2 | 3 | 1 |
| | 3 | 2 | 3 |
| | 4 | 3 | 2 |
| 109 | 5 | 2 | 9 |
| 126 | 21 | தந்தை | தந்தையின் சகோதரன் |
| 127 | 18 | மரவேலே | செக்கு ஆட்டும் வாணியத் தொழில் |
| 137 | 35 | 4 | லக்கினம் |
| 167 | 18 | ஜாதகனுடைய | + தந்தையின் |
| 170 | 19 | காஞ்சீபுரத்தில் | திருவானேக் காவில் |
| 225 | சக்கரத்தில் கன்னியாராசியில் | ...... | லக்கினம் |
| 346 | 6 | மரணம் | மணம் |
| 361 | 10 | சகோதரிக்கு | தாய்க்கு |
| 385 | 27 | யடைந்த | யடையாத |
| 389 | 19 | முதல் | நான்காம் |
| 430 | 6 | மனேவியால் | தாயினுல் |
| 444 | 23 | இருர் | இருவர் |
| 448 | 8 | அருணன் | அருணன் |

# விஷய அட்டவணை

# சப்தரிஷி நாடி

## கன்யா லக்னம்

## ஜாதகங்களின் சக்கரங்களின் அட்டவணை

குறிப்பு எழுத்துக்கள் :—சூரி - சூரியன். சந் - சந்திரன். அங் - அங்காரகன். புத — புதன். சுக் - சுக்கிரன். ரா - ராகு. கே — கேது. மே - மேஷம். ரிஷ - ரிஷபம். மிது - மிதுனம். கட — கடகம். சிம் - சிம்மம். கன் - கன்னி. துல - துலாம். விரு - விருச்சிகம். தனு - தனுசு. மக - மகரம். கும் - கும்பம். மீன - மீனம்.

| வரிசை நெம்பர் (1) | பக்கம் நெம்பர் (2) | சூரியன் (3) | சந்திரன் (4) | அங்காரகன் (5) | புதன் (6) | குரு (7) | சுக்கிரன் (8) | சனி (9) | ராகு (10) | கேது (11) | மொத்த பாடல்கள் (12) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | ஓராவது வால்யூம் (பாகம் 1) | | | | | | |
| 1 | 1 | மே | மிது | மீன | மே | சிம் | மே | ரிஷ | கன் | மீன | 51 |
| 2 | 23 | சிம் | மே | மிது | சிம் | ரிஷ | கன் | மே | விரு | ரிஷ | 53 |
| 3 | 42 | விரு | தனு | துல | தனு | மக | விரு | சனி | மக | கட | 58 |

| வரிசை நெம்பர் | பக்கம் நெம்பர் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு | கேது | மொத்தப் பாடல்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) |
| 4 | 64 | ரிஷ | தனு | கட | மே | தனு | மே | துல | துல | மே | 41 |
| 5 | 81 | கட | விரு | கட | கட | விரு | மிது | கும் | கும் | சிம் | 35 |
| 6 | 96 | சிம் | விரு | விரு | கன் | விரு | கன் | கட | கட | மக | 36 |
| 7 | 111 | மிது | கன் | சிம் | மிது | சிம் | ரிஷ | விரு | மக | கட | 44 |
| 8 | 128 | மிது | மக | சிம் | ரிஷ | தனு | ரிஷ | கன் | துல | மே | 45 |
| 9 | 146 | கன் | கும் | கன் | கன் | மக | கன் | கும் | மக | கட | 50 |
| 10 | 165 | மக | மக | விரு | தனு | கும் | கும் | கன் | ரிஷ | விரு | 25 |
| 11 | 175 | ரிஷ | மிது | மீன | மே | கன் | மிது | விரு | தனு | மிது | 45 |
| 12 | 191 | கட | மீன | மீன | கட | மிது | மிது | கன் | மீன | கன் | 46 |
| 13 | 209 | கன் | ரிஷ | சிம் | துல | துல | சிம் | கட | கட | மக | 34 |
| 14 | 222 | மே | விரு | மே | மீன | கட | மீன | தனு | ரிஷ | விரு | 32 |
| 15 | 234 | மக | விரு | ரிஷ | மக | சிம் | மீன | விரு | மக | கட | 34 |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 16 | 248 | சிம் | விரு | தனு | கன் | துல | சிம் | மக | மீன | கன் | 39 |
| 17 | 265 | சிம் | கன் | சிம் | கன் | மக | கட | மீன | மக | கட | 51 |
| 18 | 284 | மீன | கும் | கன் | மீன | மீன | கும் | மிது | மே | துல | 38 |
| 19 | 300 | கன் | துல | சிம் | கன் | மே | கட | கட | மீன | கன் | 41 |
| 20 | 318 | மக | கட | கும் | மக | துல | கும் | மிது | சிம் | கும் | 28 |
| 21 | 333 | மே | தனு | கட | ரிஷ | சிம் | ரிஷ | மீன | கட | மக | 41 |
| 22 | 349 | ரிஷ | கும் | மிது | ரிஷ | மே | மிது | கன் | மே | துல | 42 |
| 23 | 367 | துல | கன் | மக | துல | துல | துல | மக | மீன | கன் | 51 |
| 24 | 386 | சிம் | மீன | சிம் | சிம் | மிது | துல | கும் | கட | மக | 48 |
| 25 | 404 | கட | மே | ரிஷ | சிம் | கன் | கன் | விரு | தனு | மிது | 32 |
| 26 | 419 | மக | விரு | சிம் | மக | தனு | தனு | தனு | விரு | ரிஷ | 30 |
| 27 | 435 | கட | விரு | கன் | மிது | தனு | சிம் | தனு | துல | மே | 37 |
| 28 | 450 | விரு | துல | மக | தனு | ரிஷ | துல | கும் | சிம் | கும் | 32 |
| 29 | 465 | மே | கன் | மே | மே | துல | ரிஷ | மிது | சிம் | கும் | 44 |
| 30 | 486 | சிம் | கும் | துல | கட | கன் | கட | மிது | சிம் | கும் | 37 |
| 31 | 500 | மீன | தனு | மீன | கும் | மக | கும் | மக | துல | மே | 41 |

| வரிசை நெம்பர் | பக்கம் நெம்பர் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு | கேது | மொத்தப் பாடல்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) |
| 32 | 518 | கன் | மிது | விரு | கன் | கும் | சிம் | மக | கன் | மீன | 40 |
| 33 | 537 | மீன | மிது | மக | கும் | ரிஷ | கும் | துல | மீன | கன் | 33 |
| 34 | 553 | சிம் | சிம் | கட | கட | துல | கன் | கட | கட | மக | 38. |
| 35 | 572 | கட | மே | மே | சிம் | கும் | கன் | மீன | மக | கட | 33 |
| 36 | 588 | மிது | மக | கன் | மிது | மீன | சிம் | மக | கன் | மீன | 38 |
| 37 | 605 | மிது | கன் | சிம் | மிது | துல | ரிஷ | விரு | தனு | மிது | 40 |
| 38 | 623 | கன் | சிம் | மக | சிம் | மே | கட | கன் | மே | துல | 35 |
| 39* | 639 | மே | விரு | மே | மே | துல | மிது | மிது | சிம் | கும் | 34 |
| 40 | 655 | கட | மீன | கன் | கட | கட | மிது | ரிஷ | கன் | மீன | 40 |
| 41 | 673 | மக | ரிஷ | கும் | மக | தனு | கும் | கட | மிது | தனு | 40 |
| 42 | 688 | தனு | மிது | மீன | மக | விரு | மக | மக | மீன | கன் | 45 |
| 43 | 706 | தனு | துல | சிம் | விரு | கன் | மக | மிது | சிம் | கும் | 31. |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 44 | 719 | சிம் | கட | கட | கட | துல | கன் | கட | கட | மக | 45 |
| 45 | 737 | ரிஷ | தனு | கட | மிது | மிது | கட | துல | கும் | சிம் | 35 |
| 46 | 751 | விரு | மீன | மக | விரு | ரிஷ | துல | மக | சிம் | கும் | 40 |
| 47 | 768 | துல | கட | துல | துல | கட | கன் | துல | கும் | சிம் | 41 |

## இரண்டாவது வால்யூம் (பாகம்)

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 48 | 1 | கன் | கன் | மிது | சிம் | கன் | துல | விரு | தனு | மிது | 33 |
| 49 | 13 | மிது | மக | கன் | மிது | மிது | சிம் | தனு | மிது | தனு | 51 |
| 50 | 31 | கன் | தனுசு | கட | துல | கன் | விரு | மிது | கன் | மீன | 35 |
| 51 | 43 | மீன | மிது | மக | மே | கும் | மே | மீன | மக | கட | 37 |
| 52 | 58 | மக | சிம் | மக | மக | மே | கும் | விரு | கட | மக | 37 |
| 53 | 72 | மே | சிம் | ரிஷ | மே | மிது | மீன | கட | கும் | சிம் | 30 |
| 54 | 82 | மிது | கும் | மிது | மிது | கும் | ரிஷ | சிம் | ரிஷ | விரு | 33 |
| 55 | 94 | கன் | கும் | கன் | கன் | மக | கன் | கும் | மக | கட | 39 |
| 56 | 109 | கன் | கும் | கன் | கன் | மக | கன் | கும் | மக | கட | 40 |

| வரிசை நெம்பர் (1) | பக்கம் நெம்பர் (2) | சூரியன் (3) | சந்திரன் (4) | அங்காரகன் (5) | புதன் (6) | குரு (7) | சுக்கிரன் (8) | சனி (9) | ராகு (10) | கேது (11) | மொத்தப் பாடல்கள் (11) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 57 | 124 | ரிஷ | ரிஷ | மக | ரிஷ | தனு | ரிஷ | கும் | கும் | சிம் | 33 |
| 58 | 137 | சிம் | சிம் | மக | சிம் | மே | மிது | கன் | மே | துல | 42 |
| 59 | 152 | ரிஷ | கன் | மே | ரிஷ | மிது | ரிஷ | ரிஷ | துல | மே | 35 |
| 60 | 165 | சிம் | கட | கன் | சிம் | தனு | கன் | தனு | தனு | மிது | 28 |
| 61 | 175 | சிம் | ரிஷ | மீன | கன் | கன் | கன் | மீன | ரிஷ | விரு | 28 |
| 62 | 185 | சிம் | சிம் | கன் | சிம் | துல | சிம் | விரு | தனு | மிது | 41 |
| 63 | 199 | ரிஷ | கும் | கன் | ரிஷ | கும் | மிது | மக | கன் | மீன | 32 |
| 64 | 212 | மக | விரு | கன் | மக | கும் | மக | மக | கன் | மீன | 35 |
| 65 | 225 | கன் | மக | கன் | கன் | ரிஷ | துல | கன் | மீன | கன் | 34 |
| 66 | 237 | மக | சிம் | கும் | தனு | ரிஷ | தனு | கும் | சிம் | கும் | 29 |
| 67 | 248 | கும் | ரிஷ | தனு | மீன | ரிஷ | மக | துல | மீன | கன் | 49 |

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 68 | 264 | ரிஷ | விரு | கட | மே | துல | மே | விரு | தனு | மிது | 35 |
| 69 | 277 | தனு | மே | துல | விரு | துல | விரு | மக | மே | துல | 32 |
| 70 | 289 | கன் | கன் | கன் | கன் | கன் | சிம் | விரு | மக | கட | 40 |
| 71 | 303 | துல | ரிஷ | சிம் | கன் | மக | கன் | தனு | துல | மே | 34 |
| 72 | 316 | துல | மீன | கன் | துல | தனு | கன் | சிம் | தனு | மிது | 37 |
| 73 | 330 | மக | சிம் | தனு | மக | தனு | மக | துல | கன் | மீன | 38 |
| 74 | 344 | விரு | துல | விரு | விரு | கட | துல | துல | கும் | சிம் | 32 |
| 75 | 356 | சிம் | மே | விரு | சிம் | சிம் | கட | தனு | மே | துல | 37 |
| 76 | 370 | தனு | சிம் | விரு | மக | சிம் | விரு | மீன | மிது | தனு | 33 |
| 77 | 383 | கன் | சிம் | தனு | கன் | ரிஷ | சிம் | கும் | சிம் | கும் | 28 |
| 78 | 398 | ரிஷ | விரு | மக | மே | மீன | மிது | கன் | மே | துல | 36 |
| 79 | 412 | ரிஷ | துல | ரிஷ | மே | கட | மே | தனு | ரிஷ | விரு | 34 |
| 80 | 425 | கன் | விரு | துல | கன் | ரிஷ | விரு | விரு | கட | மக | 43 |
| 81 | 440 | கட | மிது | ரிஷ | கட | மிது | கட | ரிஷ | துல | மே | 40 |
| 82 | 457 | விரு | தனு | துல | துல | கட | கன் | துல | கும் | சிம் | 40 |

| வரிசை நெம்பர் | பக்கம் நெம்பர் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு | கேது | மொத்தப் பாடல்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) |
| 83 | 472 | கன் | துல | துல | கன் | கன் | சிம் | விரு | மக | கட | 43 |
| 84 | 488 | மக | கட | துல | தனு | மே | கும் | மக | சிம் | கும் | 38 |
| 85 | 503 | ரிஷ | மீன | துல | மே | மே | மே | கும் | சிம் | கும் | 36 |
| 86 | 516 | மிது | மிது | மிது | மிது | கும் | மிது | சிம் | ரிஷ | விரு | 47 |
| 87 | 531 | கும் | கன் | கட | மக | மீன | மக | விரு | கட | மக | 46 |
| 88 | 548 | சிம் | மிது | கட | கன் | துல | கட | கட | கட | மக | 48 |
| 89 | 566 | மீன | விரு | துல | மீன | மக | கும் | மீன | மக | கட | 42 |
| 90 | 583 | விரு | மீன | விரு | துல | மிது | தனு | மே | துல | மே | 36 |
| 91 | 596 | விரு | மே | தனு | துல | தனு | தனு | தனு | துல | மே | 42 |
| 92 | 612 | கன் | மக | தனு | கன் | சிம் | சிம் | மக | மே | துல | 37 |

குறிப்பு:—*இந்த 39-ஆவது ஜாதகம் விஷயமாக 639-ஆவது பக்கத்திலுள்ள இராசிச் சக்கரத்திலுள்ள கிரகங்களை 39-ஆவது ஜாதகத்தில் இங்கு கண்டுள்ள பிரகாரம் மாற்றிக் கொள்ளவும். இது அனுஷம் 1-ஆம் பாதம் சனிதசை ஞு14—9—0

†இந்த 51-ஆவது ஜாதகத்திற்கு லக்கினம் மகரம் ஆகும், கன்னியல்ல. வால்யூம் நெ. 2-ல் 50-வது பக்கத்தில் 17, 18-ஆவது பாடல்களின் அர்த்தத்திலுள்ள மீனம், கும்பம், துலாம், தனுசு என்பவற்றை முறையே கடகம், மிதுனம், கும்பம், மேஷம் என்று வாசிக்கவும். மேலும் இங்கு 18-ஆவது பாடலின் அர்த்தத்தில் இவையல்லாமல் என்றதின் பிறகு "சனியும் குருவும் பரிவர்த்தனையாகி" என்ற பலங்களைச் சேர்த்து வாசிக்கவும்.

# ஸப்தரிஷி நாடி

---

## கன்னியாலக்னம்

### ஜாதகம் 1.

#### ஜனனகால கிரக நிலை.

1. [1]பரிதி [2]மால் [3]வெள்ளி மேடம் [4]பங்குமே [5]நந்தியாக,
[6]அரியினில் குருவும் புக்க [7]ஆரலும் கேது மீனம்
[8]தெரிவையில் [9]கயிறு மாகச் சந்திரன் [10]விணை யாக
நிரையவே கன்னி சென்ம நின்றதால் பலன்சொல்
[வீரே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சூரியனும் புதனும் சுக்கிரனும் மேஷத்திலும், சனி ரிஷபத்திலும், குரு சிம்மத்திலும், அங்காரகனும் கேதுவும் மீனத்திலும், ராகு கன்னியிலும், சந்திரன் மிதுனத்திலும், இருந்தால் பலா பலன்களைச் சொல்லுவீர்களே! என்று,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| அங்காரகன் கேது | சூரியன் புதன் சுக்கிரன் | சனி | சந்திரன் |
| | இராசி சக்கரம் | | |
| | | | குரு |
| | | | லக்கினம் ராகு |

திருவாதிரை 3-ஆம் பாதம், ராகு திசை ஞூ 4-08-00.

குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கரகிரக நிலை பொருத்த முடையதாகும் :-மேஷத்தில் ராகுவும், ரிஷபத்தில் குருவும் சுக்கிரனும், மிதுனத்தில் சூரியனும், கன்னியில் புதனும் சனியும், துலாத்தில் கேதுவும், கும்பத்தில் சந்திரனும் அங்காரகனும் ஆகும். புதனும் சுக்கிரனும் அஸ்தங்கதம் அடைந்திருக்கிறார்கள்.

---

1. சூரியன்.
2. புதன்.
3. சுக்கிரன்.
4. சனி.
5. ரிஷபம்.
6. சிம்மம்.
7. அங்காரகன்.
8. கன்னி.
9. ராகு.
10. மிதுனம்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. அம்மனும் கே(ழ்க்)கும் போது அத்திரி முனிவர்
[சொல்வார்
செம்மையாய் ஆண்பால் சென்மம் செனித்தயில்
[கீழ்மேல் வீதி
நன்மையாய்த் தெற்கு வாசல் நவிலுவோம் மேற்கில்
[மாரி
வண்மையாய்க் குண்ட முண்டு வடமேல்பால்
[கணேசன் மாரி .

(2) பார்வதியம்மையார் ஸப்த ரிஷிகளைப் பார்த்துக் கேட்கும்போது அத்திரி மகரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை செழுமையான ஆண் குழந்தையாகும். இந்த ஜாதகர் பிறந்த தெரு கிழக்கு மேற்குத் தெருவாகும். பிறந்த வீட்டின் வாசற்படி தெற்கில் இருக்கும். மேற்கில் மாரியம்மன் கோயில் இருக்கும். வளமான ஒரு நல்ல குளம் உண்டு. வடமேற்குத் திக்கில் ஒரு விநாயகர் கோயிலும் ஒரு மாரியம்மன் கோயிலும் இருக்கும்.

3. மீனத்தில் ஈசன் காளி விருத்தியாம் கோஷ்ட முண்டு
ஆனதோர் குணக்கி லேதான் அரிகோவில் நிற்கு
[மென்றோம்
மானமாய்த் தெற்கில் ஒடை வயல்களும் தங்கு
[மென்றோம்
பான்மையாய்ச் சிற்றூர் தன்னில் பாலகன் கங்கை
[வம்சம் ;

3. மீனம் என்ற வடக்குத் திக்கில் ஒரு சிவபெருமான் கோயிலும் ஒரு காளியம்மன் கோயிலும் விருத்தி யடைந்துகொண்டிருக்கும். ஒரு மாட்டுத் தொழுவமும் கோயிலும் கூட உண்டு. ஓர் பெருமாள் கோவில் கிழக்கில் இருக்கும் என்று சொல்லுகின்றோம். தெற்கில் ஒரு ஓடையும் பயிரிடும் நிலங்களும் இருக்கும் என்று சொல்லுகின்றோம். செழிப்பான ஒரு சிறிய கிராமத்தில் ஜாதகர் வேளாள குலத்தில்;

4. உதிப்பனும் இவனின் யோகம் உருந்தந்தை தாயின்
[யோகம்
மதித்திட துணைவர் யோகம் வரும்புத்திர களத்திர
[யோகம்
கதியிலா முன்பின் சென்மம் சாற்றுவோம் நவக்கோ
[ளாய்ந்து
அதிகமாய்த் தவங்கள் செய்யு மம்மையே யிந்நூல்
[தன்னில்,

4. பிறப்பார். அதிகமாகத் தவங்களைச் செய்து கொண்டே யிருக்கின்ற பார்வதியம்மையாரே ! ஜாதகருடைய யோகம், தகப்பனுருடைய யோகம் தாயாருடைய யோகம், கூடப் பிறந்தவர்களுடைய யோகம், மனைவியின் யோகம், சந்ததிகளின் யோகம், இவர்களுடைய முன் ஜன்மம், பின் ஜன்மம், ஆகிய இவற்றை நவக்கிரகங்களை ஆராய்ந்து பார்த்து இந்தச் சாஸ்திரத்தில் சொல்லப் போகின்றோம்.

## ஜாதகருடைய தகப்பனுரின் குணுதிசயங்கள் முதலியன

5. தந்தையின் துணைவர் தன்னைச் சாற்றுவோம்
[பதினொன் றுகும்
சொந்தமாய் ஆண்பால் ரெண்டு தோகையும் மூன்று
[தீர்க்கம்
நொந்திடும் மற்ற தெல்லாம் நுவலுவோம் பிதா
[குணத்தைச்
சந்தத மொடிசல் தேகி தானவன் சிவந்த மேனி.

5. ஜாதகருடைய தகப்பனுருடன் பிறந்தவர்கள் பதினொரு பேர்கள் என்று சொல்லுகின்றோம். இவர்களில் இரண்டு ஆண்களும் மூன்று பெண்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாவர். மற்றவர்களெல்லாம் சீக்கிரம் இறந்துபோய்விடுவார்கள். இனிமேல் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் எப்போதும் நீண்டு மெலிந்திருக்கும்படியான தேகத்தை யுடையவர். இவர் சிகப்பு நிறமுள்ளவர்.

6. மனமது கவடு மில்லான் மர்மவான் யூகை யுள்ளான்
சினமிலான் அடக்க முள்ளான் சித்திர வீடு செய்வன்
கனமுடன் வாழ்வா னுகும் கல்வியு முள்ளா னென்றோம்
இனங்களால் பெருமை யுள்ளான் இவன்தாயால்
[சீவிப் பானும்.

6. ஜாதகருடைய தகப்பனுர் கள்ளம், கபடு, வஞ்சனையில்லாத மனத்தை யுடையவர். மனத்தில் ரகசியத்தை உடையவர். இவர் நுட்பமான புத்தியை யுடையவர், கோபமில்லாதவர், பொருமையை யுடையவர். இவர் அழகான வீட்டைக் கட்டுவார். பெருமையுடனும் கௌரவத்துடனும் வாழ்ந்து வருவார். இவர் படித்தவராகவும் இருப்பார் என்று சொல்லுகின்றோம். இவர் தன்னுடைய பந்துக்களால் கௌரவமாகப் பாராட்டப்பட்டவராகும். இவர் தன்னுடைய தாயார் உதவியால் ஜீவனஞ் செய்வார்.

குறிப்பு:—ஜாதகருடைய தகப்பனுருக்கு ஜீவனம்:—பிதிரு லக்கினம் ஒன்பதாவது பாவமாகிய ரிஷபம் ஆகும். இதற்கு ஜீவனஸ்தானமாகிய பத்தாவது வீடாகிய கும்பம் ஆகும். இந்தக் கும்பராசியைப் பதினொராவது பாவத்திற்கு (அஃதாவது லாபபாவத்திற்கு)

உரிய குரு ரிஷபத்திற்கு மாதிருஸ்தானமாகிய சிம்மராசியி லிருந்து பார்க்கின்றார். மேலும், சந்திர லக்கினரீதியாய்ப் பிதிருஸ்தானமாகிய (ஒன்பதாவது பாவமாகிய) கும்பம் பிதிரு லக்கினமாகும். இதற்கு ஜீவன பாவமாகிய (பத்தாவது பாவ மாகிய) விருச்சிகத்தைக் கும்ப லக்கினத்திற்கு மாதிரு பாவ மாகிய (நான்காவது பாவமாகிய) ரிஷபத்தில் சனி இருந்து பார்க்கின்றார். பத்தாம் பாவத்திற்கு (அஃதாவது ஜீவனபாவத் திற்கு)க் காரகர்கள் குரு, சனி, சூரியன், புதன் ஆகும். குருவும் சனியும் மேற்சொல்லியபடி மாதிரு ஸ்தானங்களில் இருப்பதால் ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய தாயார் மூலமாக ஜீவனஞ் செய்வார்.

7. தந்தையின் ஆஸ்தி தன்னைத் தானவ னடையா னாகும்
பந்தமாய் மாம னாஸ்தி பருகிடு மிவனுக் கேதான்
நொந்திடும் பேரைக் காப்பன் நுவலுப தேசம் [கொள்வன்
சந்ததம் பித்த தேகி தாட்சணியன் கிரிஷி செய்வன்

7. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய தகப்பனாரின் சொத்துக் களை அடைய மாட்டார். இவருக்குத் தன்னுடைய மாமனாரின் சொத்துக்கள் வந்து சேரும். இவர் ஏழையாக விருப்பவர்களைக் காப்பாற்றுவார். இவர் பெரியோர்களிடத்திலும் மஹான்களிடத்திலும் உபதேசம் பெற்றுக் கொள் வார். இவர் எப்போதும் பித்த குணமுள்ள தேகத்தை யுடையவர், தயா குணமுள்ளவர். இவர் பயிர் தொழிலைச் செய்பவராவர்.

குறிப்பு :—வியாக்கியானம்: லக்கின ரீதியாய்ப் பிதிரு ஸ்தானமாகிய ஒன்பதாவது வீட்டில் சனி இருக்கின்றார். ஒன்பதிற் குடைய சுக்கிரன் எட்டில் அஸ்தமன மடைந்து மறைந்திருக்கின்றார். பிதிருகாரகனாகிய சூரியன் எட்டில் மறைந்திருக்கின்றார். பத்திற் குடைய புதன் எட்டில் மறைந்தும் அஸ்தமடைந்தும் இருக்கின்றார். ஆகையால் ஜாதகருடைய தகப்பனுக்குப் பிதிர் சொத்து கிடையாது. பிதாவுக்கு மாமனார் ஸ்தானம் பதினோராம் வீடாகிய கடகம் ஆகும். இதற்குரிய சந்திரன் பிதாவுக்குத் குத் தன ஸ்தானமும் ஜாதகருடைய லக்கினத்திற்குப் பத்தாவது ஸ்தானமும் ஆகிய மிதுனத்தில் இருக்கின்றார்: ஆகையால் பிதாவுக்குத் தனனுடைய மாமனாரின் (அஃதாவது மனைவியின் தகப்பனாரின்) சொத்து வந்து சேரும். ஆகையால் சுருக்க மாகப் பதினோராம் பாவாதிபதி பத்தாவதுபாவத்தில் இருந்தால் பிதாவிற்குத் தன் மாமனார் சொத்து கிடைக்கும்:

8. மூலச்சூ டுடைய னாகும் முன்கோபம் பின்பு சாந்தம்
ஞாலம்மேல் நல்லோ னவன் நற்புத்திர ருடைய னாகும்
மாலவன் பத்தி பூண்பன் மறுமொழி யதிகம் கூறான்
சாலவே தந்திர வாதி சத்தியே மேலுங் கேளே.

8. ஜாதகருடைய தகப்பனர் மூலச்சூட்டு ரோக முடையவர். முன் கோப முள்ளவர். ஆனால் உடனே சாந்தத்தை யடைபவர். இவர் பூமி யில் நல்லவராக விருப்பார். இவர் நல்ல புத்திரர்களை யுடையவர். இவர் மஹாவிஷ்ணுவின்மேல் பக்தியுடையவர், இவர் அதிகமாக பதில் சொல்ல மாட்டார். இவர் மிகவும் தந்திரமான குணமுடையவர் பார்வதி யம்மையாரே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக்கேட்பீராக.

9. சொன்ன சொல் கேழ்பானுகும் துருசையு முடைய [னென்றேம்
கன்னியர் மோக வானும் கரமதில் சங்கு சக்கரம்
தன்னிலே ரேகை யுள்ளான் சாந்தவான் மாமி ரெண்டு
பன்னுமிக் குணத் தானுக்குப் பாலக னிரண்டாம் [சென்மம்.

9. ஜாதகருடைய தகப்பனர் பிறர் சொல்லுகின்ற வார்த்தைகளைக் கேட்டு அவர்கள் சொல்லுகின்ற பிரகாரம் நடந்து கொள்ளுவார். இவர் கெட்ட ஆசையை யுடையவர் என்று சொல்லுகின்றேம். இவர் இளம் பெண்களின்பேரில் மையல் என்ற காம ஆசையை உடையவராவர். இவருடைய உள்ளங்கையில் சங்கு சக்கர ரேகைகள் உண்டு; இவர் சாந்தமான குணத்தை யுடையவர். இவருக்கு இரண்டு மாமியார்கள் உண்டு; அஃதாவது இவருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு. இப்படிப்பட்ட குண குணங்களையுடையவருக்கு இந்த ஜாதகர் இரண்டாவது குழந்தையாக.

குறிப்பு :—ஜாதகருடைய பிதிருலக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்குக் களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீடாகிய விருச்சிகத்தைச் சனி பார்க்கின்றார், களத்திரஸ்தானாதிபதி யாகிய அங்காரகன் லக்கினத்திற்குப் பதினென்றில் கேதுவுடன் கூடியிருக்கின்றார். ரிஷப லக்கினத்திற்கு இரண்டில் மூன்றுக்குடைய சந்திரன் இருக்கின்றார். சுக்கிரன் ரிஷபத்திற்குப் பன்னிரண்டில் அஸ்தமடைந்து மறைந்திருக் கின்றார். இரண்டிற்குடைய புதன் பன்னிரண்டில் மறைந்து அஸ்தமன மடைந்திருக்கின்றார். ரிஷப லக்கினத்திற்கு இரண் டாவது தார ஸ்தானமாகிய ஒன்பதாவது விட்டிற்குடைய சனி லக்கின சம்மந்தத்தை அடைந்திருக்கின்றார். ஆகையால் ஜாதக ருடைய தகப்பனருக்கு இரு தார யோக அமைப்பு அதிக மாக விருக்கின்றது.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

10. உதிப்பனே யிவனே யென்றேம் உரைக்கிறே மிவன் [குணத்தை
விதிக்கிறேம் சிவந்த மெய்யன் விளைபுலம் விருத்தி [செய்வன்

ததி நெல் பால் யிஷ்டம் கொள்வன் சரசவான் கல்வி
[மானும்
நதிபல தீர்த்தம் தோய்வன் நவிலுவான் சிலேடை யாக.

10. இந்த ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இனிமேல் இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சிவப்பான தேகத்தை யுடையவர் என்று சொல்லுகின்றோம். இவர் பயிரிடக்கூடிய நிலங்களைப் பயிரிட்டு ஜீவிப்பார். இவர் தயிர், நெய், பால் இவற்றின் மேல் விருப்பம் உடையவர். இவர் இனிமையாகவும் பரிகாசமாகவும் சந்தோஷமாகவும் பேசுவார். இவர் வாசித்தவராவர். இவர் அநேக தெய்வ ஸ்தலங்களுக்குச் சென்று அங்குள்ள தீர்த்தங்களில் (அஃதாவது நதி குளங்களில்) ஸ்நானஞ் செய்வார். இவர் ஒரு பதத்திற்கு இரண்டு அர்த்தங்கள் ஏற்படும்படி, சாமர்த்தியமாகவும் தந்திரமாகவும் பேசுவார்.

11. போசன சுகிய னாகும் புண்ணிய மனத்த னென்றோம்
நேசங்கள் அதிகம் கொள்வன் நீழ்நில விருத்தி
[செய்வன்
பாச பந்தங்க ளுள்ளான் பத்தினி நேய னவன்
காசுகள் சேர்ப்பா னாகும் கனத்தவன் சினேகம்
[செய்வன்.

11. ஜாதகர் நல்ல சாப்பாட்டைச் சாப்பிட்டுச் சுகத்தை அனுபவிப்பார். இவர் அறம், நல்வினை முதலியவற்றைச் செய்ய விருப்பமுள்ள தூய்மையான நல்ல மனத்தை யுடையவர் என்று சொல்லுகின்றோம். இவர் அநேகம் பேர்களுடன் சினேகஞ் செய்து கொள்ளுவார், நிலங்களைப் பயிரிட்டு விருத்தி செய்து ஜீவிப்பார். இவர் ஜனங்களிடத்திலும் பந்துக்களிடத்திலும் ஆசையுடையவர். இவர் தன்னுடைய மனைவியின்மேல் ஆசை யுடையவர். இவரைத் தன் மனைவியும் விரும்புவாள். இவர் பணத்தைச் சேர்த்து வைப்பார். இவர் பெரிய மனிதர்களுடைய சினேகத்தை உடையவர்.

12. பால் விருத்தி யுடையனாகும் பலருக்கும் உதவி செய்வன்
சீலவான் இள மனத்தன் சீக்கிரம் கோப முண்டு
காலிகள் விருத்தி யாகும் காலாள்க ளுடைய னாகும்
வேலனைப் பயின்ற மாதே வித்தகி கேட் டிடாயே.

12. ஜாதருக்கு ஆடுமாடுகள் விருத்தியாகும். இவர் அநேகருக்கு உதவியாக விருப்பார். உபகாரஞ் செய்வார். இவர் பரிசுத்தமாக விருப்பார். இளகிய மனத்தையுடையவர். இவருக்கு கோபம் சீக்கிரத்தில் வந்துவிடும். இவருக்கு கால் நடைகள் விருத்தியாகும். இவர் காலால் நடந்து செல்லுகின்ற வேலையாட்களை உடையவர். ஆறுமுகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருடைய சகோதரர்கள் (சகோதரபாவம்)

13. இவனுட துணைவர் தன்னை யியம் புவோம் மூத்தோர்
[காணும்
அவனியில் யிளையோர் உண்டு ஆணது ஒன்று தீர்க்கம்
நவனியில் மற்ற தெல்லாம் நசித்திடு மென்று
[சொன்னோம்
கவனமாய் யிளையோன் சேதி கழறுவோம் கேளு மம்மா.

13. ஜாதகருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், இவருக்கு மூத்த சகோதரர்கள் கிடையாது. இவருக்கு இளைய சகோதரங்கள் உண்டு. ஒரு சகோதரர் நீண்ட ஆயுளை உடையவராக இருப்பார். மற்றச் சகோதரர்கள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இளைய சகோதருடைய விஷயங்களை நாங்கள் ஜாக்கிரதையாகச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

குறிப்பு :—ஜாதகருக்கு மூத்த சகோதரர் கிடையாது என்ற விஷயம்:— மூத்தோர் ஸ்தானம் பதினோராவது பாவமாகிய கடகம் ஆகும். இதற்குரிய சந்திரன் தன் வீட்டிற்குப் பன்னிரண்டில் மறைந்து இருக்கின்றார். பதினொன்றைச் சனி, ராகு பார்க்கின்றார்கள். அங்காரகன் சந்திரனைப் பார்க்கின்றார். மூத்த ஆண் சகோதர காரகனாகிய குரு பன்னிரண்டில் மறைந்து இருக்கிறார். சனி மூன்றாவது பாவத்தைப் பார்ப்பது மூத்த சகோதரனுக்கும் இளைய சகோதரனுக்கும் தோஷத்தை உண்டு பண்ணும். சகோதர காரகனாகிய அங்காரகன் கேதுவுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் மூத்த சகோதர விஷயமாக அதிக தோஷம் இருக்கின்றது. இளைய சகோதர ஸ்தானம் மூன்றாவது பாவமாகிய விருச்சிகம் ஆகும். இதைச் சனியும் ராகுவும் பார்க்கின்றார்கள். அங்காரகன் மூன்றிற்குடையவராகிக் கேதுவுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் இளைய சகோதர விஷயமாகக் கூட தோஷங்கள் இருக்கின்றன. ஆனால் சந்திரனுக்கு இளைய சகோதர ஸ்தானமாகிய சிம்மத்தில் குரு இருக்கின்றார். சிம்மத்திற்குடைய சூரியன் சந்திரனுக்குப் பதினொன்றில் உச்சமாகிச் சுக்கிரன் புதனுடன் கூடி இருக்கின்றார். இவை நல்ல அம்சங்களாகும். ஆகையால் ஓர் இளைய சகோதரன் உண்டு என்று சொல்லி இருக்கின்றார். சனி மூன்றும் பாவத்தில் இருக்கும் (அல்லது பார்க்கும்) விஷயமாக சம்புஹோரா பிரகாச என்ற புத்தகத்தில் ஆறுவது அத்தியாயத்தில் 58-ஆவது சுலோகத்தைப் பார்க்கவும். இதில் முன்னும் பின்னும் பிறந்த சகோதரர்களுக்குத் தோஷம் என்று சொல்லியிருக்கின்றது.

14. புத்திமான் சிவந்த மெய்யன் பூஷணம் சேர்ப்பா னுகும்
சித்தமே மர்ம முள்ளான் சிலேடையாய் வார்த்தை
[சொல்வன்
வித்தையு முடைய னுவன் விளம்புவான் கட்டு வார்த்தை
அத்தையால் பெருமையுள்ளான் அவர்கட்கு முரிமை
[செய்வன்

14. ஜாதகருடைய இளைய சகோதரர் அறிவுள்ளவராவர், சிவப்பான தேகத்தை யுடையவர். ஆபரணங்களைச் சேர்த்து வைப்பார், தன்னுடைய மனத்தில் ரகசியத்தை யுடையவராவர். ஒரு பதத்திற்கு இரண்டு அர்த்தங்கள் இருக்கும்படியாகவும் சாமர்த்தியமாகவும் தந்திரமாகவும் பேசுவார். இவர் தன்னுடைய அத்தையால் மேன்மையையும் கௌரவத்தையும் உடையவரவர். இவர் தன்னுடைய அத்தையாருக்குத் தன்னுடைய கடமையைச் செய்வார், சுதந்தரத்தைக் கொடுப்பார்.

15. சுகி பொசிப்புடைய னுகும் துருசையு மில்லா னுகும்
பகைவரைச் செயிப்பா னுகும் பால்தயிர் பிரிய முள்ளான்
செகமதில் புகழு முள்ளான் சிலசில ஞானம் சொல்வன்
வகையான பூமி சேர்ப்பன் மறுமொழி யதிகம் சொல்வன்.

15. ஜாதகருடைய இளைய சகோதரர் சுகமான நல்ல போஜனத்தை உண்பவராவர். இவர் கெட்ட ஆசையை யுடையவரல்லர். இவர் தன்னுடைய எதிரிகளை ஜயித்து விடுவார். பால், தயிர் ஆகிய இவற்றின்மேல் ஆசையுடையவரார். இவர் பூமியில் கீர்த்தியும் நல்ல பெயரும் உள்ளவர், சிறிது தெய்வ வழி பாட்டில் ஈடுபட்டவர், சில ஞானமார்க்கமான அறிவுள்ள வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் சிறந்த நிலங்களைச் சேர்த்து வைப்பார். இவர் பதில் அதிகமாக விருக்கும்படி பேசுவார்.

16. மனையவள் ஒன்றே யென்றோம் வரைகிறோம் புத்திர
[பாகம்
கனமுட னுண்பால் ரெண்டு கன்னிகை ஒன்றே யாகும்
அனையவே மூன்றும் தீர்க்கம் அவனுக்கும் வயது பூர்ணம்
இணையிலா செல்வ முள்ளான் இவனுக்கு மேலாய்
[வாழ்வன்.

16. ஜாதகருடைய இளைய சகோதரருக்கு ஒரே மனைவி என்று சொல்லுகின்றோம். இவருக்குப் புத்திரர்கள் விஷயமாய் இனிமேல் சொல்லப் போகின்றோம். இவருக்கு இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறக்கும். இந்த மூன்று சந்ததிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவருக்கு நீண்ட ஆயுளுண்டு. இவருக்கு நிகரில்லாத சொத்துக்கள் உண்டு. இவர் ஜாதகருக்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார்.

17. *பாக்கிய முடைய னுகும் பந்துவுக் கதிப னுகும்*
*யோக்கிய னுகி வாழ்வன் உறுதியான் கோபி யாவன்*
*நீக்குவான் அல்ப்பர் தன்னை நிமிஷத்தில் கோபி யாவன்*
*சீக்கிர நடையு முள்ளான் செல்வியே மேலுங் கேளே.*

17. ஜாதகருடைய இளைய சகோதரர் செல்வமுடையவராவர். இவர் தன்னுடைய பந்துக்களுக்கு அதிகாரியாக (எஜமானனுக) விருப்பான். இவர் நல்ல நடவடிக்கையும் ஆச்சாரமும் உடையவராக விருந்து வாழ்வார். நிலையான வார்த்தைகளையுடையவர், கோபமுடையவர், இவர் தகுதியற்றவர்களையும் கெட்டவர்களையும் விலக்கிடுவார். இவருக்குச் சீக்கிரத்தில் கோபமுண்டாகும். இவர் வேகமாகநடக்கக் கூடியவர். பார்வதியம்மையாரே ! நாங்கள் இன்னம் சொல்லப்போகின்றதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணுதிசயங்களும் :-

18. *சாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மீரெண் பானில்*
*மேதினில் வடகீழ் தன்னில் வித்தகி வருவா ளாகும்*
*போதவே யவள் குணத்தையும் போற்றுவோம் சிவந்த [மேனி*
*சூதுக னுள்ளா ளாகும் துருசான நடையு மாவள்.*

18. ஜாதகருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகின்ரேும். இவருக்குப் பதினெட்டாவது வயதில் வடகிழக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து வாய்ப்பாள். இவளுடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லு கின்ரேும். இவள் சிகப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள் இவள் கள்ளம் கபடம் உள்ள மனத்தையுடையவள். இவள் வேகமாக நடப்பவளாவள்.

குறிப்பு:—விவாக காலம்:—ஜாதகருக்கு வயது ஷ 17-04-00 முதல் வயது ஷ 18-03-06 வரையிலும் குருதசையில் அங்காரக புக்தி நடக்கின்றது. குரு களத்திர ஸ்தானமாகிய ஏழாம் வீட்டிற்கும் சுப ஸ்தானமாகிய நான்காம் வீட்டிற்கும் உடையவர். அங்காரகன் களத்திர ஸ்தானத்தில் இருக்கின்ருர். ஆகையால் குரு தசையில் அங்காரக புக்தியில் பதினெட்டாவது வயதில் விவாகம் சொல்லப்பட்டிருக்கின்றது. குரு வடகிழக்குத் திக்குக்கு அதிபதி. ஆகையால் மனைவி வடகிழக்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லியிருக்கின்றது. லக்னுதிபதியாகிய புதன் ஏழாவது பாவத்திற்கு அருகில் இருப்பதால் பால்ய விவாக அமைப்பு இருக்கின்றது. விவாக கால பருவத்தைப்பற்றி ஜாதக தத்வம் 3-வது தத்வம், சப்தம விவேகம், 125-வது 126-வது சுலோகங்களைப் பார்க்கவும். ஜாதக பாரிஜாதம் 14-வது அத்தியாயம் 29-வது சுலோகத்தையும் பார்க்கவும்.

19. சினமது கொஞ்ச முள்ளாள் தேவிநன் நடக்கை
[யுள்ளாள்
இணையிலா யோகசாலி இவள் மத்திய வயது முள்ளாள்
அணையவே யிரண்டா மாது அணுகிடு மிவனுக்கே தான்
கனமுடன் முனிவர் சொல்ல காதலி கேழ்க்க லுற்றாள்.

19. ஜாதகருடைய மனைவி சிறிது கோபமுடையவள். இவள் நல்ல நடவடிக்கையையுடையவள். இவள் நிகரில்லாத யோகத்தை யுடையவள். இவள் மத்தியமான ஆயுளை உடையவள். ஜாதகருக்கு இரண்டாவது மனைவி வந்து சம்பவிப்பாள் என்று ரிஷியானவர் உறுதியாகச் சொல்லவே பார்வதியம்மையார் பின்வருமாறு கேட்கின்றார்.

20. என்ன காரணத் தினாலே யிவனுக்குத் தாரம் ரெண்டு
சொன் னீர்கள் விபரமாகச் சொல்லுவீர் முனியே
[யென்றாள்
மன்னிய ஏழில் கேது மங்கல னிவர்கள் நின்றும்
துன்னிய யேழோன் தானும் சுகமிலா விரயம் துய்க்க;

21. ஜாதகருக்கு எவ்விதக் காரணங்களால் இரண்டு மனைவிமார் கள் ஏற்படுவார்கள் என்று சொன்னீர்கள்? இதை விவரமாகச் சொல்லு வீர்கள் என்று ரிஷிகளைப் பார்த்து பார்வதியம்மையார் கேட்கின்றார். லக்கினத்திற்கு ஏழாவது பாவத்தில் கேதுவும் அங்காரகனுமாகிய இவர்கள் இருப்பதாலும், ஏழாவது பாவத்திற்குடையவரான (குருவும்) விரயம் என்ற பன்னிரண்டாவது பாவத்தில் பலமில்லாமல் இருப்பதாலும்;

குறிப்பு:—இரு தார விஷயம்:—களத்திரகாரகனும் குடும்பாதிபதியு மான சுக்கிரன் எட்டாவது பாவத்தில் மறைந்து சூரியனுடன் கூடி அஸ்தமனமடைந்து பலவீனமாகவிருக்கின்றார். மேலும், ஒன்பதாமிடம் இரண்டாவது களத்திர ஸ்தானமாகும். இரண்டாவது களத்திர ஸ்தானாதிபதியான சுக்கிரனுக்கு லக்கினாதிபதியான புதனுடைய சம்பந்தம் ஏற்பட்டதால் இரண் டாவது தார யோக அமைப்பு ஏற்பட்டிருக்கின்றது.

21. ஓதினேன் தாரம் ரெண்டு உத்தமன் தனக்குமே தான்
மேதினில் முதல் மாதுந்தான் விருத்தியோ நசிக்குமோ
[சொல்
கோதிலா முதல் மாதுக்குக் குழவிகள் உதிக்குமே தான்
சூதினால் கெர்ப்ப நோய் சுந்தரி மரண மெய்தும்.

21. ஜாதகருக்கு இரண்டு தாரங்கள் வாய்க்கும் என்று சொன்னேன் என்று முனிவர் பதில் அளித்தார். முதலாவது மனைவிக்குக் குழந்தைகள் உண்டாகி விருத்தியாவார்களா அல்லது இறந்துவிடுவார்களா என்பதைச்

சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, முனிவர் பதில் சொல்லுகின்ஞர். முதலாவது மனைவி கர்ப்ப ரோகத்தினுல் பீடிக்கப்பட்டு இறந்து போய்விடுவாள் என்ருர் முனிவர்.

22. எந்தக் காலத்திலே தான் இவளுக்கு மரணம் சொன்னீர்
முந்தவே கூறு மென்ன மொழிகுவார் அத்திரி தானும்
இந்தவார் மன்ன னுக்கு யிருபத்து யேழு ஆண்டில்
வந்தவள் மரண மாகி மறுமனை உடனே சேர்வள்.

22. ஜாதகருக்கு எத்தனையாவது வயதில் இவருடைய மனைவி இறந்து போய்விடுவாள் என்று சொன்னீர்; இதைச் சீக்கிரமாகச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கவே, அத்திரி முனிவர் சொல்லுகின்ஞர். ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் முதலாவது மனைவியாக வாய்த்த ஸ்திரீ இறந்துவிடுவாள். இரண்டாவது மனைவி உடனே சீக்கிரத்தில் ஜாதகருடன் சேர்வாள்.

குறிப்பு:—ஜாதகருடைய முதல் மனைவியின் மரண காலம்:—ஜாதகருக்கு வயது 26௵-04மீ-12நாள் முதல் வயது 27௵-5மீ-21 நாள் வரையில் சனி தசையில் கேது புக்தி நடக்கின்றது. கேது ஏழிலும் சனி ஒன்பதிலும் இருக்கின்ருர்கள். ஆகையால் சனி தசையில் கேது புக்தியில் முதல் மனைவியின் மரணத்தைச் சொல்லி இருக்கின்ருர். ஏழாவது வீடு முதல் மனைவி ஸ்தானமும் ஒன்பதாவது வீடு இரண்டாவது மனைவி ஸ்தானமும் ஆகும். இது விஷயமாக உத்திரகாலாமிருதம் 4-வது அத்தியாயம் 38-ஆவது சுலோகத்தைப் பார்க்கவும்.

23. தாரமே யிரண்டு யென்ற சங்கையைச் சொல்லு மென்ன
கூறுவோ மிரண்டோ னெட்டில் குருவுமே பார்த்த [தாலே
விரியன் முன் சென்மத்தில் மேவிற்று அந்தத் தோஷம்
தீரமாய்ச் சொல்லு மென்ன செப்புவார் முனிவர் தானே.

23. ஜாதகருக்கு இரண்டு தாரங்கள் நேரிடுவார்கள் என்று முனிவர் சொல்லவே, இதற்குக் காரணத்தையும் ஊழ்வினையையும் சொவ்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, முனிவர் பதில் சொல்லுகின்ருர். இரண்டிற்குடையவராகிய சுக்கிரன் எட்டாவது பாவத்தில் இருந்து கொண்டு குருவால் பார்க்கப்பட்டதால் ஜாதகருடைய முன் ஜென்மத்தில் தோஷம் ஏற்பட்டது என்ருர் முனிவர். அநதத் தோஷத்தின் விவரத்தைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கவே, முனிவர் பதில் சொல்லுகின்ருர்.

## ஜாதகருடைய முன் ஜன்மம்

24. முன்னவ னிவனின் சென்மம் மொழிகிரேும் தவளை [யுத்திரம்
தன்னிலே பேரூர் தன்னில் தானவன் வன்னிய வம்சம்

இன்னவ னுதித்தா னென்ரேம் யெழில் பெரு மனையா
[ளுண்டாய்
அன்னவன் பிடாரி மாரி அவர்களைப் பூசை செய்து.

24. ஜாதகருடைய முன் ஜென்மத்தைப்பற்றிச் சொல்லுகின்ரேம். தவளை பூஜை செய்து முக்தியைப் பெற்றதும் வடக்குத் திக்கிலுள்ளதுமான ஒரு பெரிய பட்டணத்தில் ஜாதகர் தன் முன் ஜன்மத்தில் ஒரு வாணிப ருடைய குலத்தில் பிறந்தார் என்று சொல்லுகின்ரேம். இவர் மனைவியை உடையவராகவிருந்து, பிடாரியம்மன், மாரியம்மன் ஆகிய இந்தத் தேவதை களைப் பூஜை செய்து கொண்டு,

25. பம்பு சூனியங்கள் கற்றும் பசாசுவை விலக்கு வானும்
இன்பமாய்க் கழிப்பு போக்கு இவனுமே செய்து வந்தும்
நன்மை கீர்த்தி பெற்று நாயகன் வாழு நாளில்
துன்மையாய் வந்த ஊழை சொல்லுவேன் கேளு மம்மா.

25. ஜாதகர் சூன்யம் வைக்கும் மந்திர வித்தைகளைக் கற்றுக் கொண்டு, பேய் பிசாசுகளை ஓட்டிக் கொண்டிருந்தார். மேலும் கழிப்பு வைத்தல் முதலிய மாந்திரிக வேலைகளைச் செய்து வந்தார். இவ்விதமாக ஜாதகர் புகழையும் பெருமையையும் அடைந்து வாழ்ந்து கொண்டிருக் கின்ற காலத்தில், கெடுதியாக இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றேன். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

26. அன்னகர் மறையோன் புத்திரி அவள் பேரில் மோகம்
[கொண்டு
உன்னத வார்த்தை கூற உரைத்தற் கிசையா ளாகி
இன்னவள் பேரிலே தான் யேவினன் கருப்பன் தன்னை
மன்னிய அவளுக்கே தான் வாதைகள் மெத்த
[உண்டாய்.

26. அந்தப் பட்டணத்திலுள்ள ஒரு பிராமணருடைய பெண்ணின் பேரில் மையல் என்ற காம ஆசையை ஜாதகர் உடையவராகி, அவளிடத்தில் வார்த்தைகளை யாடினர். அவள் இவருடைய வார்த்தைகளுக்குச் சம்மதிக் காமலிருந்ததால் இவர் அவள்மேல் குட்டிச்சாத்தான் என்ற ஒரு தேவ தையை ஏவி விட்டார். அதனுல் அவளுக்கு அதிகமான உபத்திரவங் களும் கஷ்டங்களும் நேரிட்டன.

27. சாதங்கள் வெறுப் புண்டாகிச் சத்தியு மாண்டா
[ளென்ரேம்
ஓதினேன் அந்தத் நோஷம் உரைந்தது யவனுக்கே
[தான்

மேதினில் யின்ன மொன்று விளம்புவோம் மனையாள்
[தங்கை
கோதிலா கய ரிழந்த கோதையைப் போகம் துய்த்தான்.

27. இவள் போஜனத்தின் பேரில் வெறுப்பை யடைந்து சாப்பிடாம லிருந்து இறந்து விட்டாள் என்று சொல்லுகின்றோம். இந்தத் தோஷமானது ஜாதகரை வந்து அடைந்தது என்று சொல்லுகின்றோம். மேலும் இன்னொரு தோஷமும் வந்து சம்பவித்தது என்று சொல்லுகின்றோம். ஜாதகர், விதவை யாயுள்ள தன்னுடைய மனைவியின் சகோதரியைக் கூடிப் போகத்தை அனுபவித்தார்.

28. அதினாலே கருவு தங்கி அதற்குமே அவிழ்தமீய
விதியினால் மாண்டா ளென்றோம் மேவிற்று அந்தத்
[தோஷம்
சதியினால் யிரண்டு தோஷம் தங்கிற்று அந்தியத்தில்
பதியதை விட்டு நீங்கி பலவித தலங்கள் சென்று;

28. அதனால் இவளுக்குக் கர்ப்பம் நேரிட்டது. இதற்காக இவளுக்கு ஜாதகர் மருந்து கொடுக்கவே, இவள் தன்னுடைய தலைவிதிப் பிரகாரம் இறந்து விட்டாள் என்று சொல்லுகின்றோம். இந்தத் தோஷங்கூட ஜாதகரை வந்தடைந்தது. ஜாதகருக்குத் தன்னுடைய முன் ஜென்மத்தின் கடைசி காலத்தில் இவ்விரண்டு தோஷங்களும் வந்து சம்பவித்தன. அதனால் இவர் தன்னுடைய ஊரை விட்டுவிட்டு அனேக தெய்வ ஸ்தலங்களுக்குப்போய்

29. வறுமைகள் மிகவே கொண்டு மரணமே யாகியே தான்
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனே
[யென்றோம்
அறைகிறோ மிச் சென்மதத்தில் அந்த தோர்
[தோஷத்தாலே
உறைந்திடு மனையாள் ரெண்டு உத்தமி கேட் டிடாயே.

29. ஜாதகர் அனேக கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அனுபவித்து, இறந்து, பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் இந்த ஜாதகர் என்று சொல்லுகின்றோம். ஆகையால் முன் ஜன்மத்து இரண்டு தோஷங்களாலே இந்த ஜன்மத்தில் ஜாதகருக்கு இரண்டு தாரங்கள் வாய்ப்பார்கள் என்று சொல்லுகின்றோம். பார்வதியம்மையாரே ! கேட்பீராக.

30. பாவங்கள் தீர வேண்டி பகருவாய்ச் சாந்தி ஒன்று
ஆவலா யேது செய்தாலும் அம்மனை யிரண்டே யாகும்
தாவிய மிரண்டா மாது சந்ததி சொல்வேன் கேளாய்
சேவலங் கொடியோன் தன்னைச் சேயனாய் வளர்த்த
[தாயே.

30. இந்தத் தோஷங்களை நிவர்த்தி செய்வதற்காகத் தகுந்த ஒரு சாந்திபரிகாரத்தைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார். எவ்விதமானப் பரிகாரங்களைச் செய்த போதிலும் அந்தத் தோஷங்கள் நிவர்த்தியாகாமல் ஜாதகருக்கு இரண்டு தாரங்கள் உண்டாகிவிடும் என்று முனிவர் சொன்னார். இரண்டாவது மனைவிக்கு உண்டாகும் குழந்தைகளைப்பற்றிச் சொல்லுகின்றேன், சேவற்கொடியை உடையவராகிய முருகப் பெருமானைப் பிள்ளையாகப் பெற்றெடுத்து வளர்த்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருக்குச் சந்ததிகள் (புத்திர பாவம்) தாயார் குணாதிசயங்கள்

31. பாலக னண்பால ரெண்டு பரிவுள கன்னி மூன்று
ஞாலமேல் விருத்தி யென்றோம் நவிலுவோம் தாய்
[குணத்தைக்
கோலமாய் சிவந்த மேனி குத்திரம் பேசா ளாகும்
சீலமு முடையா ளாகும் சிந்தையும் வெகுளி யாமே.

31. ஜாதகருக்கு (இரண்டாவது மனைவியிடம்) இரண்டு ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் பிறந்து விருத்தியாவார்கள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். தாயார் சிவப்பான தேகத்தையுடையவள். இவள் குரூரமானதும் கடுமையானதும் பொய்யானதும் வஞ்சகமானதுமான வார்த்தைகளைச் சொல்ல மாட்டாள். இவள் ஆசாரமும் நல்லொழுக்கமும் சுத்தமும் உடையவளாவள். இவளுடைய எண்ணமானது குற்றமுள்ளதாகும்.

32. குடும் பத்தை ஆதரிப்பள் குலவிடும் பித்த வாயு
அடவுடன் பொறுமை யுண்டு அன்புள்ள மனத்த ளாகும்
விடம்போலே நிந்தை யுண்டு மேதினில் மாதுர் ரெண்டு
திடமான குடும்பி யாவள் திருத்தமாய் வார்த்தை
[சொல்வாள்.

32. ஜாதகருடைய தாயார் தன்னுடைய குடும்பத்தைக் காப்பாற்றுவாள். இவளுக்குப் பித்த வாயு ரோக முண்டு. இவள் பொறுமையையுடையவளாவள். இவள் விசுவாசமுள்ள நல்ல மனத்தை யுடையவளாவள். இவள் விஷத்தைப் போன்ற கெட்ட பழியை யுடையவள். இவளுக்கு இரண்டு தாய்மார்கள் உண்டு. இவள் வலிவான பெருமையுள்ள குடும்பத்தையுடையவளாவள். இவள் சுத்தமாகவும் அழகாகவும் வார்த்தைகளைச் சொல்லுவாள்.

குறிப்பு:—தாயாருக்கு இரண்டு தாய்மார்கள் விஷயம் :—ஜாதகருக்கு மாதிருஸ்தானம் நான்காவது வீடாகிய தனுசு. தனுர்லக்கினத்திற்கு

மாதிரு ஸ்தானம் நான்காவது வீடாகிய மீனம் ஆகும். இந்த மீனத்தில் அங்காரகனும் கேதுவும் இருப்பது தோஷமாகும். மேலும் மீனத்திற்குடைய குரு மீனத்திற்கு ஆறுவது வீட்டில் மறைந்திருப்பதும் தோஷமாகும். ஆகையால் ஜாதகருடைய தாயாருக்குத் தாய்த்தோஷம் இருக்கின்றது. இதனுல், ஜாதக ருடைய தாயாருக்கு இரண்டு தாய்மார்கள் இருக்கும் அமைப்பு இருக்கின்றது.

33. அவளுட துணைவர் தன்னை அறைகிறேு மாண் பா
[லொன்று
நவனியில் கன்னி காணும் நாயகன் தனக்குப் புத்திரர்
பவமுள முன்னூழ் தன்றல் பருகாது யிவனுக்கே தான்
தவசியே யிரண்டிலே தான் சாற்றுவோ மாமன் சேதி.

33. ஜாதகருடைய தாயோடு கூடப் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லு கின்றேம். தாயாருக்கு ஒரு சகோதரன் உண்டு. சகோதரி கிடையாது. இந்தச் சகோதரனுக்கு முன் ஜன்மத்தின் ஊழ்வினையால் புத்திரன் கிடை யாது, பார்வதியம்மையே! ஜாதகரின் அம்மானுடைய விஷயங்களைப் பற்றி இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேம்.

குறிப்பு:— ஜாதகருடைய அம்மானுக்குப் புத்திரனில்லாத விஷயம்:— ஜாதகருடைய அம்மான் ஸ்தானம் ஐந்தாவது வீடாகிய மகரம் ஆகும். இந்த மகரலக்கினத்திற்குப் புத்திர ஸ்தானமாகிய அஃதாவது ஐந்தாவது பாவமாகிய ரிஷபத்தில் சனி இருப்பது— புத்திர தோஷத்தை உண்டு பண்ணும். ரிஷபத்திற்குரிய சுக்கிரன் மேஷத்தில் சூரியனுடன் கூடியும் புதனுடன் கூடியும் அஸ்தமன அடைந்திருப்பது புத்திர தோஷத்தை உண்டு பண்ணும். மகரத்திற்கு எட்டில் புத்திரகாரனுகிய குரு மறைநதிருப்பதும் புத்திர தோஷத்தை உண்டுபண்ணும். ஆகையால் ஜாதகருடைய அம்மானுக்கு அதிக புத்திர தோஷம் இருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மம்

34. அன்னையின் முன் சென் மத்தை அறைகுறேம்
[தொண்டை நாட்டில்
பண்ணிய பேரூர் தன்னில் பாவையும் கௌரி வம்சம்
இன்னவ ளுதித்தா ளென்றேம் இவளுக்கு மதலை
[யுண்டாய்
தன்னிலே குடும்பி யாகித் தன்வரன் செட்டு செய்து.

34. ஜாதகருடைய தாயாரின் முன் ஜன்மத்தைப் பற்றி இனி சொல்லு கின்றேம். இவள் தொண்டை நாடு என்று சொல்லப்பட்ட ஒரு நாட்டிலுள்ள

ஒரு பெரிய கிராமத்தில் கௌரி என்ற வேளாள குலத்தில் முன் ஜன்மத்தில் பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். இவளுக்குப் பிள்ளைகள் பிறந்து இவள் குடும்பமுள்ளவளாகி வாழ்ந்தாள். இவளுடைய புருஷனுடைய வியாபாரத்தைச் செய்து கொண்டு,

35. பலருக்கும் நல்லோ ளாகிப் பஞ்சை மேலிரக்க முண்டாய்
குலவிய மாலின் பத்தி கொண்டுமே வறுமை யின்றி
நிலமையாய் வாழ்ந்து பின்பு நிமலியும் பேதி யாலே
உலகினில் மரண மாகி உறைந்தன ரிவளே யென்றோம்.

35. இவள் அநேகருக்கு நல்லவளாகவிருந்து ஏழைகளின்மேல் அன்பும் பட்சாதாபமும் உள்ளவளாகி, விஷ்ணு பக்தியை உடையவளாகி, தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாமல் நல்ல ஒரே நிலையில் இருந்து கொண்டு, பிறகு இவள் பேதியால் இறந்து இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகின்றோம்.

## தாயாருடைய பின்ஜன்மம்

36. இச்சென்மம் தன்னிலே தான் இவளுமே தரித்திர [மில்லாள்
உச்சித மறு சென்மத்தை உரைக்கிறோம் காஞ்சி [மேல்பால்
அச்சுதன் தலத்திலே தான் அவளுமே பிர்ம வம்சம்
மிச்சமா யுதிப்பா ளென்றோம் வேணது சுகமு முள்ளாய்.

36. ஜாதகருடைய தாயார் இந்த ஜன்மத்தில் வறுமையையும் கஷ்டங்களையும் அனுபவிக்க மாட்டாள். இவளுடைய பின்ஜென்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவள் காஞ்சீபுரத்திற்கு மேற்கில் ஒரு விஷ்ணு ஸ்தலத்தில் பிராமணர் குலத்தில் மறுஜன்மத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். இவள் அநேக சுகங்களை அநுபவித்து ;

## ஜாதகருடைய தகப்பனாரின் முன்ஜன்மம்

37. வருகுவா ளிவளே யென்றோம் வரைகிறோம் தந்தை [சென்மம்
உரைகுறோம் வள்ளூர் தன்னில் உயர்குல மறையோன் [வம்சம்
பெருமையாய் உதித்து மேலும் பூமியு மதிக முண்டாய்.
திருமகள் விலாசம் பூண்டு செல்வியு மதலை யுண்டாய்

37. இவள் வாழ்வாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் நாங்கள் சொல்லுகின்றோம். இவர்

வள்ளூர் என்ற திருவள்ளூரில் உயர்ந்த குலமாகிய பிராமணர் குலத்தில் ஒரு கௌரவமான குடும்பத்தில் பிறந்து, அதிகமான நிலங்களையுடையவராகி லக்ஷ்மீகடாக்ஷத்தை அடைந்து, மனைவி மக்களை உடையவராகி;

38. அன்னிய பாஷை கற்று அரசரால் பெருமை பூண்டு
மன்னிய அதிகா ரங்கள் மைந்தனுங் கொண்டு வந்து
உன்னித பொருளும் சேர்த்து உத்தமன் கீர்த்தி யாகி
தன்னிலே வாழ்ந்து பின்பு சண்டன் தன்பதிக்குச்
[சென்ருன்.

38. அன்னிய பாஷை என்ற ஆங்கில பாஷையைப் படித்து, தேர்ச்சி யடைந்து, அரசாங்கத்தில் மதிப்புடைய உத்தியோகத்தில் அமர்ந்து தன்னுடைய உத்தியோக அதிகாரங்களைச் செலுத்திக் கொண்டு, அதிகமான சொத்துக்களைச் சேகரித்து, பெருமையுடனும் புகழுடனும் வாழ்ந்து, பிறகு இறந்து எம பட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

39. கஞ்சனுல் வரையப் பட்டுக் காளையு மிச்சென் மத்தில்
மிஞ்சியே உதித்தா னென்ருேம் வித்தகி கேழ்க்க
[லுற்ருள்
தஞ்சமாய் முன் சென்மத்தில் சார்ந்தனன் பிரம வம்சம்
வஞ்சனை யாக யிங்கு வந்த காரணங் ளென்ன

39, ஜாதகருடைய தகப்பனுர் பிறகு பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். இதன் பிறகு பார்வதியம்மையார் பின்வருமாறு கேட்கின்ருர். இவர் முன் ஜன்மத்தில் பிராமண குலத்தில் பிறந்தும் இந்த ஜன்மத்தில் முன் குலத்திற்குத் தாழ்ந்த குலத்தில் பிறக்க வேண்டிய காரணங்கள் என்ன ?

## ஜாதகருடைய தகப்பனுரின் பின்ஜன்மம்

40. மறைகளை விரும்பானுகி மானிலம் பொருள் மேல்
[இச்சை
உறைந்த தால் இச் சென்மத்தில் உதித்தனன் கங்கை
[வம்சம்
திறமையாய்ப் பின் சென்மத்தைச் செப்புவோம் சேது
[தன்னில்
நிறைந்திடு வைசிய சேயாய் நிமலனு முதிப்பா
[னென்ருேம்.

40. ஜாதகருடைய தகப்பனுர் வேதங்களை விரும்பாதவராக விருந்து கொண்டு, பணம், நிலம் ஆகிய இவற்றின் பேரில் அதிக ஆசையை உடையவராக விருந்தால் இந்த ஜன்மத்தில் கங்கை வம்சம் என்ற வேளாள

குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சேதுஸ்தலத்தில் செல்வமுள்ள ஒரு வைசிய ஜாதிக் குழந்தையாய்ப் பிறப்பார் என்று சொல்லுகின்றோம்.

41. செட்டுக ளதிகஞ் செய்து தேவியும் மதலை யுண்டாய்
மட்டில்லாக் கீர்த்தி பெற்று வருவோர்க்கு மன்ன மீந்து
துட்டமாங் குணங்க ளின்றிச் சுந்திரன் வாழ்வா னாகும்
கட்டமாய்த் தவங்கள் செய்யுங் காதலி கேட் டிடாயே.

41. ஜாதகருடைய தகப்பனார் வியாபாரங்களை அதிகமாகச் செய்து கொண்டு, மனைவியையும் குழந்தைகளையும் உடையவராகி, அளவில்லாத பெருமையையும் புகழையும் அடைந்து, தன்னிடத்திற்கு வருகின்றவர்களுக்குச் சாப்பாடு போட்டு, கெட்ட குணங்களில்லாமல் வாழ்வார். தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருடைய யோகபாவம்

42. சாதகன் யோகச் செய்கை சாற்றுவோம் கிரிஷி
[யுள்ளான்
மேதினில் புகழு முள்ளான் வேண்டிய பணிகள்
[சேர்ப்பன்
மாத வர்க்கன்ப னாகும் மாலின்மேல் பக்தி கொள்வன்
சூதிலான் திருப்பணியுஞ் செய்வன் சுத்தநன் மனத்தா
னென்றோம்.

42. ஜாதகருடைய யோகங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவர் பயிரிடுந் தொழிலையுடையவர். இவர் பூமியில் பெருமையும் கௌரவமும் உடையவர். இவர் தனக்குத் தேவையான அநேக ஆபரணங்களைச் சேர்த்து வைப்பார். இவர் முனிவர்களுக்குப் பிரியமுள்ளவர். விஷ்ணுவின் மேல் பக்தியும் விசுவாசமும் உடையவர். இவர் கள்ளம், கபடு, வஞ்சனை இல்லாதவர். கோயில் வேலைகளையும் திவ்வியத் தொண்டுகளையும் செய்வார். பரிசுத்தமான நல்ல மனத்தையும் உடையவர் என்று சொல்லுகின்றோம்.

43. சல்லிய மில்லா னாகும் சகலரு மெச்ச வாழ்வன்
இல்லை யென் றுரைக்க மாட்டான் யெதிரியை
[நசிக்கச் செய்வன்
சொல்லுமே நெறி யுள்ளோனும் சுகமுளான் பூமி
[யுள்ளான்
இல்லறம் நீங்கா னாகும் ஈகையு முடைய னென்றோம்.

43. ஜாதகர் கடன்படமாட்டார். எல்லோரும் கொண்டாடும்படியாகவும், புகழும்படியாகவும், துதிக்கும்படியாகவும் நல்ல நிலைமையில் இருந்து வாழ்வார். இவர் தன்னிடம் உதவிக்காக வருபவர்களுக்கு இல்லை என்று

சொல்லமாட்டார். தன்னுடைய விரோதியை நாசமடையும்படிச் செய்துவிடுவார். இவர் தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் நடந்துகொள்ளும் திறமையை யுடையவர். சுகங்களை அநுபவிப்பார். நிலங்களை உடையவராவர், இல்லற தர்மத்தைக் கைவிடாமல் நடத்திவருவார். இவர் தயை, தாட்சிண்யம், ஈகைக் குணம் ஆகிய இவற்றை யுடையவர் என்று சொல்லுகின்றோம்.

44. பிறைபோல செல்வ முண்டு பூமியால் செட்டு செய்வன்
தரை மிகத் தேட வல்லன் தங்கிடு மடிமை யாள்கள்
குறையிலா வாழ்வா னுகும் கூறின மொழி குன்ருது
அறந்தனை வளர்க்கும் மாதே அம்பிகை யாளே கேளாய்.

44. ஜாதகருக்கு வளர்பிறை சந்திரன் விருத்தியாகிக் கொண்டிருப்பது போலவே செல்வமும் விருத்தியாகிக்கொண்டே வரும். இவர் இந்தப் பூமியில் வியாபாரத்தைச் செய்வார். இவர் அதிகமான நிலங்களைச் சேர்த்து வைக்கும் சக்தியை யுடையவர். இவருக்கு வேலையாட்கள் இருந்து கொண்டே யிருப்பார்கள். இவர் யாதொரு கஷ்டங்கள் இல்லாமல் வாழ்ந்து கொண்டிருப்பார். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப்போகா. தர்மத்தைக் கைவிடாமல் விருத்தி செய்துகொண்டே யிருக்கின்ற பார்வதியம்மையாரே! ஈச்வரியே! கேட்பீராக.

## தாய் தந்தையர்களின் மரண காலம்

45. தந்தையின் மரண காலம் சாற்றுவோம் முப்பான் [ரெண்டில்
பந்தமாய்த் தேளின் மாதம் பகருவோம் தெண்ட [முண்டு
பிந்திய மாதுருக்கும் பேசுவோ மதின் மே லெட்டும்
சந்ததம் கும்ப மாதம் சாற்றுவோ மார கங்கள்.

45. ஜாதகருடைய தகப்பனுர் இறந்துபோகுங் காலத்தைப் பற்றி இனிச் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் தேளின் மாதம் என்ற விருச்சிக மாதமாகிய கார்த்திகை மாதத்தில் இவருடைய தகப்பனுர் இறந்துவிடுவார். இதற்குப் பிறகு எட்டு வருடங்கள் கழித்துக் கும்ப மாதம் என்ற மாசி மாதத்தில் ஜாதகருடைய தாயார் இறந்துவிடுவாள் என்று சொல்லுகின்றோம்.

குறிப்பு:—ஜாதகருடைய தகப்பனுர் மரண விஷயம்:—ஜாதகருக்கு 32-ஆவது வயதில் கார்த்திகை மாதத்தில் சனி தசையில் சூரிய புக்தி நடக்கின்றது. இந்தச் சனி பிதிரு ஸ்தானமாகிய ஒன்பதாவது வீடாகிய ரிஷபத்தில் இருக்கின்றுர். ஆகையால் இவருக்குப் பிதாவைக் கொல்ல அதிகாரம் இருக்கின்றது. பிதிரு லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷபத்திற்கு எட்டாம் வீட்டுக்

காரராகிய குருவிருக்கும் சிம்ம ராசிக்கு அதிபதி சூரியன் ஆகும். லக்கினுதிபதியாகிய சுக்கிரனுடன் கூடிய கிரகங்களாகிய சூரியன் புதன் இவர்களில் (அசுவினி மூன்றில் உள்ள) சூரியன்தான் (பரணி இரண்டிலுள்ள) புதனைவிட சுக்கிரனுக்கு அருகில் இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம், எட்டாம் பாவம், பன்னிரண்டாவது, இருபதாவது பாடல்கள் பிரகாரம், சூரியனுக்கு மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கின்றது. ஜாதகபாரிஜாதம், பதினைன்காம் அத்தியாயம், அறுபதாவது சுலோகத்தின் பின் பாகத்தையும் பார்க்கவும். ஆகையால் சனி தசையில் சூரிய புக்தியில் ஜாதகருடைய பிதாவுக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக்கிறது. புலிப்பாணி மகாமுனிவர் செய்த "சோதிடம் முந்நூறு" என்ற புத்தகத்தில் 95-ம் பாடலைச் சூரியன் விஷயமாகப் பார்க்கவும்.

மாதுர்மாரக விஷயம்:—ஜாதகருக்கு நாற்பதாவது (32+8=40) வயதில் மாசி மாதத்தில் புத தசையில் புத புக்தி நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குப் புதன் ஏழிற்குடைய பெரிய மாரகன் ஆகின்றார். ஆகையால் புதன் தாயாருக்கு மாரகம் செய்ய அமைப்பு உடையவராக விருக்கின்றார். ஜாதக சந்திரிகை ஆயுர்தாயப் பிரகரணம் இருபத்திரண்டாவது சுலோகத்தைப் பார்க்கவும்.

## ஜாதகருடைய மரண காலம்

46. இன்னவன் மரண காலம் இயம்புவோம் [அறுபான் மூன்றில்
உன்னித மகர மாதம் உயர் பக்கம் துவாதசி
கன்னலின் சூலையாலே காதலன் மரண மாவன்
பின்வரும் சென்மம் தன்னைப் பேசுவோம் இவனுக்கே [தான்

46. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு அறுபத்து மூன்றுவது வயதில் மகரமாதம் என்ற தை மாதத்தில் உயர்பக்கம் என்ற வளர்பிறையில் துவாதசி திதியில் சூலை நோயால் மரணம் நேரிடும். இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம்.

குறிப்பு:—ஜாதகருடைய மரணகால விஷயம்:—ஜாதகருக்கு அறுபத்து மூன்றுவது வயதில் தை மாதத்தில் கேது தசையில் புதபுக்தி நடக்கின்றது. கேது, லக்கினத்திற்கு ஏழில், எட்டிற்குடைய அங்காரகனுடன் கூடி இருக்கின்றார். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரமும், ஜாதக சந்திரிகை ஆயுர்தாயப் பிரகரணம் இருபத்திரண்டாவது சுலோகம் பிரகாரமும் கேது ஜாதகருக்கு

மாரகஞ் செய்யும் அமைப்பு உடையவராகவும் இருக்கின்றார். புதன் எட்டில் இருப்பதால் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அதிகாரம் பெற்றவராக விருக்கின்றார். ஆகாயால் ஜாதகருக்குக் கேது தசையில் புதபுக்தியில் மாரகஞ் சொல்லப்பட்டிருக் கின்றது.

## ஜாதகருடைய பின்ஜன்மம்

47. தானவன் காஞ்சி தன்னில் சதுர்மறை குலத்திலே தான்
மானமாய் உதிப்பா னுகும் வரசனுல் சீவிப்பா னும்
தேன்மொழி மனைவி யுண்டாய் சேயர்கள் விருத்தி யாகி
ஈன மில்லாமல் வாழ்வன் யீஸ்வரி கேட் டிடாயே.

47. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் காஞ்சிபுரத்தில் பிராமணர் குலத்தில் பிறப்பார். இவர் அரசனுடைய உதவியால், அஃதாவது அரசாங்க வேலையினுல் ஜீவனஞ் செய்வார். இவருக்கு மனைவியும் பிள்ளைகளும் உண்டாகிக் குறைவில்லாமல் சுகமாக வாழ்ந்து வருவார். பார்வதியம்மை யாரே! கேட்பீராக.

48. அவனுட குடும்பச் சேதி அறைகுவீர் முனியே
[யென்றுள்
நவனியில் யீரேன் பான்மேல் நாயகன் குடும்பம் வேரும்
பவமுள மன வெறுப்பால் பாகங்கள் பிரியு மென்ரேம்
கவனமாய் யிரண்டிலே தான் கழறுவோம் விபர மாக.

48. ஜாதகருடைய குடும்பம் விஷயமாக, இனிமேல், முனிவரே! சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார். ஜாதகருக்குப் பதினெட் டாவது வயதிற்குப் பிறகு குடும்பம் பிரிந்து போகும். மனக்கஷ்டத்தால் பாகப்பிரிவினை ஏற்பட்டுவிடும் என்று சொல்லுகின்ரேம். இதன் விவரத்தை இரண்டாவது பாகத்தில் மறக்காமல் சொல்லுகின்ரேம்.

49. உதித்திடு காலம் தன்னில் உயர் ராகு திசை இருப்பும்
மதித்திட ஆண்டு னன்கு வருந்திங்க ளெட்டதாகும்
சதியிலா பலனைச் சொல்வேன் சாதகன் தனக்கு
[நோயாம்
பதியினில் சுபமு முண்டு பாலகர் விருத்தி யென்ரேம்.

49. ஜாதகருடைய ஜனன காலத்தில் இராகு தசையில் இருப்பு நான்கு வருஷங்களும் எட்டு மாதங்களும் ஆகும். இக்காலத்தில் நடக்கும் பலனைச் சொல்லுகின்ரேம். ஜாதகருக்கு வியாதி உண்டாகும். குடும்பத் தில் சுபகாரியங்கள் நடைபெறும். குழந்தைகள் பிறந்து வளருவார்கள். ஜாதகர் விருத்தியை யடைவார்.

50. பூமியும் கொஞ்சம் சேரும் புகலுவோம் பந்து சூதம்
தீமையும் அணு கிடாது சிலசில தானிய முண்டு
நேமியில் சுகமு முண்டு நினைத்தது முடியு மென்றோம்
காமனை யெரித்தோன் தேவி கழறுவோம் விபரம்
[ரெண்டில்

50. ஜாதகருடைய குடும்பத்திற்குச் சிறிது நிலங்கள் வந்துசேரும். பந்துக்களில் மரணம் ஏற்படும். கஷ்டங்கள் நேரிடா. கொஞ்சம் தானிய வருவாயுமுண்டு. இவருக்கும் இவர் குடும்பத்தாருக்கும் சுகம் உண்டாகும். நினைத்த காரியங்கள் கூடிவந்து நிறைவேறும். மன்மதனை எறித்துவிட்ட சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! இரண்டாவது பாகத்தில் விவரமாக நாங்கள் சொல்லுகின்றோம்.

51. குருதசை காலம் தன்னில் குலத்துளோர் மெச்ச
[வாழ்வன்
திருமனை கிருகம் செய்வன் செய்நிலம் சேர்ப்பா னுகும்
பெருமையாய்த் துணைவர் விருத்தி புக்கிடும் மனக் களிப்பு
நிரையவே தானியம் சேரும் நிகழ்த்துவோ விபரம்
[ரெண்டில்

51. குருதசை நடக்கின்ற காலத்தில் ஜாதகர் தன்னுடைய குலத்தைச் சேர்ந்தவர்கள் புகழும்படியாக மேன்மையாகவிருந்து வாழ்வார். இவர் அழகிய ஒரு வீட்டைக் கட்டுவார். பயிரிடும் நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார். இவருக்குச் சகோதரர்கள் உற்பத்தியாகி விருத்தியாகிக் கொண்டு வருவார்கள். இவருக்கு மனத்தில் சந்தோஷம் ஏற்படும். தானிய வகைகள் அதிகமாக வந்து சேரும். இதற்கு மேற்பட்ட விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம்.

# ஜாதகம் 2

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதி சனி [2]ஆடதாக [3]மால் [4]ரவி [5]துங்கமாக
நிதிகுரு கேது [6]நந்தி நிற் [7]புகர் [8]நீச்ச மாக
சதியிலா [9]கயர் [10]தேளில் சென்மமு [11]பெண்ண தாக
விதியினால் கிரகம் நின்றால் விளம்புவீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சந்திரனும் சனியும் மேஷத்திலும், புதனும் சூரியனும் சிம்மத்திலும் குருவும் கேதுவும் ரிஷபத்திலும், சுக்கிரன் தன் நீசஸ்தானமாகிய கன்னியிலும், ராகு விருச்சிகத்திலும், இருந்து இவ் விதமாகக் கிரகங்கள் ஜாதகருடைய விதியால் அமைக்கப் பட்டால் பலாபலன்களைச் சொல்லுவீர்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் சனி | குரு கேது | அங்காரகன் |
| | இராசி சக்கரம் | | |
| | | | சூரியன் புதன் |
| | ராகு | | லக்கினம் சுக்கிரன் |

பரணி 2-ஆம் பாதம். சுக்கிர தசை இரு 11—2—0.

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப்பின் வரும் அம்சைச்சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:— கடகத்தில் கேதுவும், சிம்மத்தில் சனியும், கன்னியில் சந்திரனும், துலாத்தில் அங்காரகனும், தனுசில் சூரியனும் புதனும், மகரத்தில் சுக்கிரனும் ராகுவும், கும்பத்தில் குருவும் ஆகும். புதனும் சுக்கிரனும் அஸ்தங்கதம் அடைந்திருக்கின்றார்கள்.

---

1. சந்திரன்.
2. மேஷம்.
3. புதன்.
4. சூரியன்.
5. சிம்மம்.
6. ரிஷபம்.
7. சுக்கிரன்.
8. கன்னி.
9. ராகு.
10. விருச்சிகம்.
11. கன்னி.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. கோமளி கேழ்க்கும் போது குருமுனி கூறு கின்றார்
நேமியில் ஆண்பால் சென்மம் நிகரில்லம் கீழ்மேல் வீதி
காமியே தெற்கு வாடை கணேசனு மாரி தெற்கில்
வாமியே கிழக்கில் யீசன் மாகாளி அருகில் தங்கும்.

2. பார்வதி அம்மையார் கேட்கும்போது குருமுனி என்ற வசிஷ்டர் சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீட்டின் தெரு கிழக்கு மேற்குத் தெருவாகும். வீடு தென்வாடையில் இருக்கும் விநாயகர் கோயிலும் மாரியம்மன் கோயிலும் தென் திக்கில் இருக்கும் சிவபெருமானுடைய கோயில் கிழக்குத் திக்கில் இருக்கும். சமீபத்தில் பெரிய காளியம்மன் கோயில் இருக்கும்.

3. மாயவ னருகில் நின்று மறைந்திடும் சிற்றூர் தன்னில்
நேயமாய்க் கெட்டி வீட்டில் நிகர்தந்தை யில்லம் [தன்னில்
ஆயவே யிந்தப் பாலன் அவனுமே உதிப்பா னாகும்
தாயமாம் குணத்தினாளே சொல்லுவோம் பலனை [யாங்கள்.

3. விஷ்ணுவின் கோயில் அருகில் இருக்கும். இவ்விதமான அடையாளங்கள் உள்ள சிறப்பில்லாத ஒரு சிறிய கிராமத்தில் தகப்பனாருடைய ஒரு பலமான வீட்டில் இந்த ஜாதகர் பிறப்பார். உபகாரஞ் செய்கின்ற குணத்தையுடைய பார்வதியம்மையே! பலாபலன்களை நாங்கள் இனிமேல் சொல்லுகின்றோம்.

## தகப்பனாரின் சகோதரர்களும் குணாதிசயங்களும்

4. தந்தையின் துணைவர் தன்னைச் சாற்றுவோ மெழுவ [ராகும்
நொந்திடும் சிலது தானும் நுவலுவோம் பிதா [குணத்தைச்
சாந்தத மொடிசல் தேகி தயாளமா மனத்த னாகும்
பந்தமால் நிறத்த னாகும் பாரினில் கீர்த்தியுள்ளான்.

4. ஜாதகரின் தகப்பனாருடன் பிறந்தவர்கள் ஏழு பேர் என்று சொல்லுகின்றோம். இவர்களில் சிலர் சீக்கிரம் இறந்துவிடுவார்கள். இனிமேல் தகப்பனாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் எப்பொழுதும் இளைத்து நீண்டிருக்கும் தேகமுடையவர். தயாளமான குணத்தையுடையவர். மஹாவிஷ்ணுவின் நிறத்தைப் போன்ற நிறத்தையுடையவர். இவர் பூமியில் பெருமையையும் புகழையும் உடையவராவர்.

5. யூகைவான் கலவி மானும் உருதியா மனத்த னுகும்
பாகமாய்ப் பேச வல்லன் பந்துவு மெச்ச வாழ்வன்
யோகவான் பலபேர் நேயன் உத்தமர்நேசம் கொள்வன்
தியாகியாம் கிரிஷிசெய்வன் செயம் செய்வனெடுத்த
[வேலை.

5. ஜாதகருடைய தகப்பனுர் ஆராய்ச்சி செய்யும் தன்மையுள்ள நுட்ப மான அறிவை உடையவர், வாசித்தவர். திடமானதும் நிலையானதுமான மனத்தையுடையவர். இவர் பக்குவமாகவும் தந்திரமாகவும் பேசுகின்ற திறமையையுடையவர். பந்துக்கள் போற்றும்படியாகவும் புகழும்படியாகவும் இருந்து வாழ்வார். இவர் யோகசாலியாவர். அநேகருக்கு நண்பராக விருப்பார், நல்லவர்களுடைய சினேகிதத்தை அடைவார். இவர் கொடை யாளியாக விருப்பார். பயிர்வேலையைச் செய்வார். தான் ஆரம்பித்த காரியத்தை நல்லபடியாகப் பூர்த்தி செய்துவிடுவார்.

6. தோத்திரப் பிரிய னுகும் துருசையு மில்லான் நல்லன்
பாத்திர மறிய வல்லன் பந்துவுக் கினிய னுகும்
ஏத்தவர்க் குதவு வானும் யிகபர மாலின் பத்தி
நாத்திசை நல்லோ னுவன் நயம் படக் கூறுவானும்.

6. ஜாதகருடைய தகப்பனுர், தன்னைப் பிறர் புகழ்ந்து பேசுவதை விரும்புவார். கெட்ட ஆசையை யுடையவரல்லர். நல்ல குணங்களை யுடை யவர். இவர், பிறர் நல்லவர்கள் கெட்டவர்கள் என்று பகுத்தறியும் புத்தியை யுடையவர். பந்துக்களுக்கு இஷ்டமானவராக விருப்பார். இவர் தன்னைத் துதித்தவர்களுக்கும் வணங்கினவர்களுக்கும் உபகாரத்தைச் செய்வார். இஹலோக பரலோக அநுபவத்தையுடைய மகாவிஷ்ணுவின்மேல் அன்பு டையவர். இவர் எல்லாவிடங்களிலும் நல்லவராகவிருப்பார். இனிமை யாகவும் பிறர் இவரை விரும்பும்படியாகவும் நல்லபடியே பேசுவார்.

7. பித்தமாம் மூலச் சூடு பெருகிடு மிவனுக்கே தான்
குத்தமாம் தோளிலே தான் கூறுவான் கட்டு வார்த்தை
பத்திமான் சித்திர வீடு பாலிப்பான் வேர தாக
நித்தமும் சுகி பொசிப்பன் நிமலியே மேலும் கேளே.

7. ஜாதகருடைய தகப்பனுர் பித்தரோகமும் மூலச்சூட்டு வியாதியும் உடையவராவர். இவருக்குத் தோளில் ஒரு தோஷம்—ஊனம் உண்டு. பழ மொழிகளையும் புனைந்த வார்த்தைகளையுஞ் சொல்லுவார். இவர் தெய்வங் களிடத்திலும் பெரியோர்களிடத்திலும் அன்புள்ளவர், அழகிய ஒரு வீட்டை வேருக் கட்டி அநுபவிப்பார். இவர் தினந்தோறும் இன்பமான நல்ல போஜ னங்களைச் சாப்பிட்டுச் சுகங்களை அனுபவிப்பார். பார்வதியம்மையே! நாங்கள் இன்னமும் சொல்லப்போவதைக் கேட்பீராக,

8. யோசனை பலவுஞ் செய்வன் உருமாலின் பூசை [செய்வன்
தாசி தாசர்களு முள்ளான் சகோதிர ரொருமை யில்லான்
காசி மேலாசை யுள்ளான் கபடுளான் கோபம் கொஞ்சம்
வாசமாம் கல்வி யுள்ளான் பிரபந்த கேழ்வி யாமே.

8. ஜாதகருடைய தகப்பனுர் அநேக விதமான யோசனைகளைச் செய்து கொண்டேயிருப்பார். திருமாலைப் பூஜை செய்வார். இவர் ஆண் பெண் வேலைக்காரர்களை யுடையவர். தன்னுடைய சகோதரர்களுடன் ஒற்றுமை யாக விருக்கமாட்டார். இவர் பணத்தில் அதிக ஆசையையுடையவர். கள்ளம் வஞ்சனை இவற்றையுடைய மனத்தையுடையவர், இவருக்குக் கொஞ்சம் கோபம் உண்டு. இவர் கல்வி அறிவையுடையவர். பிரபந்த பிரசங் கங்களைக் கேட்பார். 031,1A K1 415

## ஜாதகருடைய சகோதரர்கள் (சகோதரபாவம்)

9. இக்குண முடையோ னுக்கு இவனுமே இரண்டாம் [சென்மம்
தொக்கவே யுதிப்பா ஞகும் துணைவர்கள் இல்லை [யென்ருேம்
மிக்கவே முனிவர் கூற விளம்புவா ரம்மன் தானும்
தொக்கவே துணைவர் சேதி சொல்லுவாய் விபர மாக.

9. இவ்விதமான குணதிசயங்களை உடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் இரண்டாவது குழந்தையாகப் பிறப்பார். இவருக்குச் சகோதரர்கள் இல்லை என்று சொல்லுகின்ருேம். இவ்விதமாக வசிஷ்ட முனிவர் சொல்லவே பார்வதியம்மையார் கேட்கின்ருர். இவருடன் கூடப்பிறந்தவர்களின் விஷயங்களைப்பற்றி விபரமாகச் சொல்லுவீர்.

10. கயரது முன்றில் நிற்க அங்காரகன் அதற்கு யெட்டில் [நிற்க
வியமாகும் துணைவர் தானும் விருதரும் சொல்லுகின்ருர்
நயமான குருவும் நாலோனுகியே நவ மிருந்து
தயவுள துணைவர் வீட்டை தானவர் பார்த்த தாலே.

10. கயிறு என்ற ராகு (சகோதரபாவமாகிய) மூன்ருவது பாவத்தில் இருப்பதாலும், (மூன்றிற்குடைய) அங்காரகன் மூன்றிற்கு எட்டாமிடத்தில் (மறைவு ஸ்தானத்தில்) இருப்பதாலும் சகோதரர்கள் இறந்துவிடுவார்கள். இவ்விதமாக வசிஷ்டர் சொல்லவே விரத ரிஷி மறுத்துச் சொல்லுகின்ருர். சுபரான குரு நான்காவது பாவாதிபதியாகி ஒன்பதாவது பாவத்தில் இருந்து கொண்டு சகோதரபாவமாகிய மூன்ருவது வீட்டைப் பார்ப்பதாலும் ;

11; எப்படி யில்லை யென்றீர் யியம்புவேன் கேளு மம்மா
தப்பித னுலோன் தானும் தனக்காரில் சிகியும் சேர
மெய்ப்புட னுதித்த போது விளங்காது யென்று
[சொன்னேம்
செப்புவேன் தனிய னுகச் செல்வனும் வாழ்வா னுமே.

11. எவ்விதமாகத் துணைவர்கள் இல்லை என்று சொல்லுகின்றீர்? இதற்கு வசிஷ்டர் பதில் சொல்லுகின்றுர். பார்வதியம்மையே ! கேட்பீராக. தோஷத்தை (மறைவை) அடைந்த நான்காம் வீட்டிற்குடையவராகிய குரு, தன் வீட்டிற்கு ஆறுவது வீடாகிய ரிஷபத்தில் (மறைந்துவிட்டு) சிகி என்ற கேதுவுடன் கூடியிருப்பதால் துணைவர்கள் பிறந்தபோதிலும் விருத்தியாக மாட்டார்கள். சீக்கிரம் இறந்துவிடுவார்கள் என்று சொன்னேம். ஆகையால் ஜாதகர் ஒண்டியாகவிருந்துகொண்டு வாழ்வார் என்று சொல்லுகின்றேன்.

குறிப்பு :—ஒரு பாவத்திற்கு ஆறு, எட்டு, பன்னிரண்டாம் வீடு (6-8-12ம் வீடு) இந்தப் பாவத்திற்குத் துஸ்ஸ்தானம் அல்லது மறைவு ஸ்தானம் என்று சொல்லப்படும். ஒரு பாவாதிபதி தன் பாவத்திற்கு ஆறு, எட்டு, பன்னிரண்டாவது பாவத்தில் (துஸ்ஸ்தானத்தில்) இருந்தால் இந்தப் பாவம் பூராகவும் நாசத்தையடையும். இது விஷயமாக உத்தரகாலாமிருதம் என்ற புத்தகம் நான்காவது அத்தியாயம் ஆறுவது சுலோகத்தைப் பார்க்கவும். பலதீபிகை என்ற புத்தகம் பதினைந்தாவது அத்தியாயம் மூன்றுவது நான்காவது சுலோகங்களைப் பார்க்கவும்.

## ஜாதகருடையருடைய குணுதிசயங்கள்

12. இவன் குணம் சென்னிரத்தான் யீகை வான் ஒடிசல்
[தேகி
தவசிகள் உறவு கொள்வன் சந்தேக மனத்த னுகும்
அவனுக்குமுன் கோபம் கொஞ்சம் ஆள்காரருடைய
[னுகும்
நவனியில் கபடு மில்லான் நாயகி விருப்ப னுமே.

12. ஜாதகர் சிவந்த நிறத்தையுடையவர். பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவர். நீண்டு மெலிந்திருக்கின்ற தேகத்தையுடையவர். இவர் தவங்களைச் செய்கின்ற சந்நியாசிகள் பெரியோர்கள் ஆகிய இவர்களுடைய சினேகத்தை யுடையவர். இவர் சந்தேகமுமுள்ள மனத்தையுடையவர். இவர் சிறிது முன்கோப முடையவர். வேலைக்காரர்களையுடையவர் இவர் கள்ளம், வஞ்சனை, கபடம் ஆகிய இவற்றை யுடையவரல்லர். தன் மனைவியின்மேல் ஆசையை யுடையவர். மனைவியும் இவர்மேல் ஆசையை யுடையவள்.

13. சீலவான் கல்விமானும் சிறுத்தவர்க் குதவு வானும்
காலத்தை யறிவா னுகும் கணக்கினில் சமர்த்த னுகும்
ஞாலம்மேல் பெருமை யுள்ளான் நளினமாய் வார்த்தை
[கூர்வன்
கோலமாய்த் தந்தை யாஸ்தி குலவியே விருத்தி
[செய்வன்.

13. ஜாதகர் நல்ல ஆச்சாரத்தையும் சுத்தமான தேகத்தையும் உடையவர். வாசித்தவராவர். ஏழைகளுக்கும் நொந்துபோனவர்களுக்கும் உபகாரத்தைச் செய்பவராவர். இவர் அப்போதுக்கப்போதுள்ள கால நிர்வாகத்தை அறிந்து நடந்துகொள்பவராவர். கணக்குப் போடுவதில் கெட்டிக்காரராவார். இவர் பூமியும், கீர்த்தியும் கௌரமும் உடையவர், இனிமையாகவும் நயமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார், இவருக்குத் தன் தகப்பனுருடைய சொத்து கிடைக்கும், இதை இவர் விருத்தியாக்குவார்.

14. தானமும் தருமம் செய்வன் சர்சன ருறவு கொள்வன்
ஈனமாம் குணங்க ளில்லான் யெதிரியை வசியம்
[செய்வன்
மாணமாய் வாழ்வா னுகும் வண்டி வாகன முள்ளான்
வானவர் பத்தி பூண்பன் வாக்குகள் தப்பா னுமே.

14. ஜாதகர் தானம் தருமம் ஆகிய இவற்றைச் செய்வார். நல்லவர்களுடைய சினேகத்தை யடைவார். இவர் தாழ்ந்த கெட்ட குணங்களையுடையவரல்லர், தன்னுடைய விரோதியைத் தன் பக்கம் இருக்கும்படியாகக் கைவசம் செய்துகொள்வார். இவர் கௌரவத்துடனும் பெருமையுடனும் வாழ்வார். வண்டி முதலிய வாகனங்களை உடையவராவர். இவர் தேவர், சந்நியாசிகள், பெரியோர்கள் ஆகிய இவர்களின்மேல் அன்புடையவராவர். தான் சொல்லிய வார்த்தைகளைத் தவருமல் காப்பாற்றுவார்.

15. பதநடை கமல ரேகை பாருகள் விருத்தி செய்வன்
இதமான வசன முள்ளான் யெதிரியை வசியம் செய்வன்
நதிபல தீர்த்தம் தோய்வன் நவதானிய விருத்தி
[செய்வன்
ததிநெய் பாலிஷ்ட முள்ளான் தந்தைக்கு மேலாய்
[வாழ்வன்.

15. ஜாதகர் நடக்கின்ற காலில் தாமரை ரேகையையுடையவர். நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். இவர் இனிப்பானதும் நயமானதுமான வார்த்தைகளை உபயோகப் படுத்துவார், விரோதிகளைத் தன் பக்கம் இருக்கும்படியாகக் கைவசம் செய்துகொள்ளுவார். இவர் அநேக தெய்விகமான ஸ்தலங்களுக்குப் போய் அங்குள்ள நதி, குளம் முதலியவற்றில் ஸ்நா

னஞ் செய்வார், நவதான்யங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். இவர் தயிர், நெய், பால் ஆகிய இவற்றின்மேல் அதிக ஆசையை யுடையவர். தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

16. இன்னவன் மணத்தின் காலம் யீராறு ஆண்டு தன்னில்
கன்னிகை வடகீழ் தன்னில் காதலி வருவா ளாகும்
அன்னம் போல் நடையு முள்ளாள் அழகுளாள் அன்ன
[மீவள்
பின்னமில் லாத தேகம் பேசுவோ மேலுங் கேளே.

16. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இருவக்குப் பன்னிரண்டாவது வயதில் விவாகம் நடக்கும். மனைவி வடகிழக்குத் திக்கிலிருந்து வருவாள். இவள் அன்னப்பட்சியைப் போன்ற அழகான நடையை யுடையவள். அழகுள்ளவள். சாப்பாட்டை விருப்பத்துடன் போடுவாள். இவள் அவயவத்தில் யாதொரு பங்கமும் இல்லாத தேகத்தை யுடையவள். இன்னும் அதிகமாகச் சொல்லுகின்றோம், கேட்பீராக.

குறிப்பு:—விவாக காலம்:-சுக்கிரன் ஒன்பதாவது பாவத்திற்குடையவர். இவர் லக்கினத்தில் இருந்துகொண்டு களத்திர ஸ்தானமாகிய ஏழாவது பாவத்தைப் பார்க்கின்றார். மேலும், இவர் களத்திர சம்பந்தமான இரண்டாவது பாவத்திற்குடையவர். இவருடைய தசை பன்னிரண்டாவது வயதில் முடிவுபெருகிறது. ஜாதக பாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஒன்பதாவது பாவாதிபதியாகிய சுக்கிரன் தன் தசையில் விவாகஞ் செய்துவைக்கும் அதிகாரமுடையவர். குரு சுக்கிரனுக்கு ஏழிற்குடையவர். குருவினுடைய திக்கு ஈசான்யம் என்ற வடகிழக்குத் திக்கு ஆகும். சி. ஜி. ராஜனுடைய ஜாதக கணிதம் இரண்டாம் பாகம் என்ற ஜாதகம் பலாபலன் நிர்ணயம் என்ற புத்தகம். 103 ஏழாவது பாவம், 93-ஆவது அயிட்டத்தில் சொல்லியுள்ளபடி "சுக்கிரனிலிருந்து 7-ஆவது பாவத்திற்குரிய கிரகத்தின் திக்கிலிருந்து மனைவி நேரிடும்." ஆகையால் குருவின் திக்காகிய வடகிழக்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள் என்று இங்குச் சொல்லியிருக்கின்றது. கிரகங்களின் திக்கு விஷயமாக ஜாதக அலங்காரம் 658-ஆவது பாடலைப் பார்க்கவும்.

17. தேவதா பக்தி யுள்ளாள் சிறுத்தவர் தம்மைக் காப்பள்
மேவிய வாய்வு தேகி வித்தகி அதிர்ஷ்ட சாலி
நாவது சுகமு முள்ளாள் நாயகன் பட்ச முள்ளாள்
பாவ மில்லாத நெஞ்சம் பந்துவுக் கினிய ளாவள்.

17. ஜாதகருடைய மனைவி தெய்வங்களின்மேல் அன்புள்ளவள். ஏழைகளையும் நொந்துபோனவர்களையும் காப்பாற்றுவாள். இவள் வாயு சம்மந்தமான பெருந்தேகத்தை யுடையவள். யோகமுள்ளவளாகவிருப்பாள். இவள் இனிமையான வார்த்தைகளைச் சொல்லக்கூடியவள். இவளிடத்தில் இவளுடைய புருஷன் அன்புடையவராகவிருப்பார். இவள் கெட்ட எண்ணங்களில்லாத மனத்தையுடையவள். பந்துக்கள் இவளை விரும்புவார்கள்.

18. குருமுனி யிவ்வார் சொல்ல கோமளி கேழ்க்க லுற்றாள்
திருமண மெந்திடத்தில் செய்குவான் சொல்லு மென்ன
அரைகு முத்திரத்தில் அரி மால் தன்னிலே தான்
உரமுடன் செய்வா னுகும் உத்தமி கேட் டிடாயே.

18. இவ்விதமாக குருமுனிவராகிய வசிஷ்டர் சொல்லவே பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகருக்கு விவாகம் எந்த விடத்தில் நடக்கும் என்பதைச் சொல்லுவீரென்று கேட்க, வடக்குத் திக்கிலுள்ள ஒரு விஷ்ணு கோயிலில் கலியாணம் வைபவத்துடன் நடக்கும் பார்வதியம்மையே! கேட்பீராக என்று வசிஷ்டர் பதில் சொல்லுகின்றார்.

19. காரணம் யாது யென்ன கர்மத்தோ னதற்கு மூன்றில்
நீர் புகர் நீச்சமாக நீலனும் இரண்டைப் பார்க்க
கூறினே மதினாலே தான் குலத்தினி லில்லா செய்கை
மாறியே செய்த தென்ன வரைகுவீர் முனியே யென்றாள்.

19. இதற்குக் காரணம் என்னவென்று பார்வதியம்மையார் கேட்க, வசிஷ்டர் பதில் சொல்லுகின்றார். கர்மாதிபதி (என்ற பத்திற்குடைய) புதன் பத்திற்கு மூன்றாவது வீடாகிய பன்னிரண்டாவது வீட்டில் இருப்பதாலும், (குடும்பஸ்தானம் என்ற இரண்டிற்குடைய) சுக்கிரன் தனக்கு நீச வீடாகிய கன்னியில் (லக்கினத்தில்) இருப்பதாலும், நீலன் என்ற சனி இரண்டாவது வீட்டைப் பார்ப்பதாலும் நான் சொன்னேன் என்றார் வசிஷ்டர். இதற்குக் குலாசாரப்படி நடத்தாமல் வேறுவிதமாகச் செய்ததற்குக் காரணத்தைச் சொல்லுவீர் முனிவரே! என்று பார்வதியம்மையார் கேட்டார்.

20. புகர் திசை தன்னிலேதான் புனிதற்குப் பிணியும் கண்டு
தகமையாய் முன்னோர் தானும் சாத்தனார் மாயோன் [பக்கல்
வகையுடன் பிணியும் நீங்கி வந்திட அவர்பால் சென்று
உகமையாய் மண முடிப்பான் உத்தமி கேட்டிடாயே.

20. புகர் என்ற சுக்கிர தசையில் ஜாதகருக்கு ஒரு வியாதி சம்பவிக்க இதனை விலக்குவதற்காக இவருடைய பந்துக்களாகிய முன்னோர்கள் (தாய் தகப்பன்மார்) மகாவிஷ்ணுவின் கோயிலுக்குப் போய் (உன் சன்னிதியில் விவாகஞ் செய்து வைக்கின்றோம், வியாதி நீங்கவேண்டும் என்று பிரார்த்

தனை செய்துகொள்ளவே) அவ்விதமாகவே நோயும் நிவிர்த்தியாகி விட்டது. இதனால் விஷ்ணு கோயிலுக்குப் போய் (அவர் சன்னிதியில்) விவாகத்தை நடத்தி வைப்பார்கள், பார்வதியம்மையாரே ! கேட்பீராக.

## ஜாதகருக்குச் சந்ததிகள் (புத்திரபாவம்)

21. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் பலத்தைக் [காணோம்
அத்திரி சொல்லு கின்றார் அவனுக்குச் சுதர்கள் [தோஷம்
சுத்திய வினைக ளென்ன சொல்லுவீர் யென்று கேட்க
பத்திய அஞ்சோ னெட்டில் பகை நீசமாகியே தான்.

21. ஜாதகருக்குச் சந்ததியைப் பற்றிச் சொல்லுகின்றோம். சந்ததி உண்டாவதற்கு யாதொரு பலமும் இல்லை. இவ்விதம் வசிஷ்டர் சொல்ல, அத்திரி மகரிஷி தடுத்துக் கேட்கின்றார். ஜாதகருக்குப் புத்திர தோஷம் உண்டாவதற்குக் காரணங்கள் என்ன ? அவற்றைச் சொல்லுவீர். இவ்விதம் அத்திரி முனிவர் கேட்கவே, வசிஷ்டர் பதில் சொல்லுகின்றார். (புத்திர ஸ்தானமாகிய) ஐந்தாவது வீட்டிற்குடையவராகிய சனி எட்டில் (மறைந்து) நீச ராசியாகிய மேஷத்தில் கெட்டவராக இருப்பதாலும் ;

குறிப்பு :—*சனிக்கு மேஷத்தில் இருபதாவது பாகை பரம நீசம். மீதி பாகம் சாதாரண நீசமாகும். மேஷம் சனிக்குப் பகை ராசி யல்ல. ஆகையால் இங்கு பகை என்ற பதத்திற்கு கெட்டவராகவிருக்கின்றார் என்று அர்த்தங்கொள்ளுவது பொருத்தமுடையதாகும்.

22. ஆரலு மைந்தைப் பாக்க ஆகையால் மதலை தோஷம்
கூறுவார் புயண்டர் தானும் குரு வைந்தைப் [பார்த்தாலே
நேரிடும் மதலை யென்றோம் மென்குரு உடனே கேது
சீருட னிருப்ப தாலே செப்புவோம் முன்னூழ் தன்னால்.

22. ஆரல் என்ற அங்காரகன் (புத்திர ஸ்தானமாகிய) ஐந்தாவது வீட்டைப் பார்ப்பதாலும் புத்திரதோஷம் ஏற்பட்டிருக்கின்றது என்று வசிஷ்டர் பதில் சொன்னார். இதன்மேல் புயண்டர் (புஜண்டர்) மறுத்துச் சொல்லுகின்றார். (புத்திரகாரகராகிய) குரு ஐந்தாவது பாவத்தைப் பார்த்ததாலே பிள்ளை உண்டு என்று சொல்லுகின்றேன் என்றார். இதற்கு வசிஷ்டர் சொல்லுகின்றார். இந்தக் குருவுடனே கேது இருப்பதால் முன் ஜன்மத்திய ஊழ்வினைப் பயனாக ;

23. புத்திர தோஷ மாகும் புகலுவீ ரந்தச் சேதி
சித்தமாய்ச் சொல்லு கின்றேன் திருவேலங் காட்டுக் [கீழ்பால்

வித்தகி பேரூர் தன்னில் மேவியே கர்ண வம்சம்
உத்தம னுதித்துப் பின்பு உயர்கிராம கணக்கு வேலே.

23. புத்திரதோஷம் உண்டாகும். இதன்மேல் இந்தத் தோஷ விவரத்தைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கவே, வசிஷ்டர் பதில் சொல்லுகின்ருர். திருவாலங்காட்டிற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் கணக்கர் (கருணீகர்) குலத்தில் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் பிறந்து மேன்மையான கிராமக்கர்ணம் வேலேயை;

24. பார்த்துமே மனேவி மைந்தர் பாரினில் வாழு நாளில்
சாத்துவோம் வந்த ஊழைச் சதிருட னேழை யோர்க்கு
வேத் தொரு பூமிதன்னே விடுகிறேன் யென்று சொல்லிச்
சூத்திர தனமும் பெற்றுச் சுந்திரன் யேது செய்தான்.

24. செய்துகொண்டு மனேவியையும் பிள்ளைகளேயும் உடையவராகி வாழ்கின்ற, காலத்தில் ஜாதகருக்கு வந்து சம்பவித்த வினையைச் சொல்லுகின்றேன். ஏழைகளுக்கு நிலங்களே அடமானஞ் செய்கின்றேன் என்று சொல்லி, அவர்களிடமிருந்து பணத்தை (லஞ்சமாகப்) பெற்றுக்கொண்டு இந்த ஜாதகர் பின்னுல் என்ன செய்தார் என்பதைச் சொல்லுகின்றேன்.

25. மற்ருெரு தனவான் பக்கல் வரைந்தன னதனேத் தானும்
உத்தோ ரேழை தானும் உரைத்தனர் மன வெறுப்பால்
புத்திர ரற்று மேலும் பூமியில் துணேவ ரின்றி
நித்தியம் வறுமை பூண்டு நேமியில் வாழ்வா யென்று.

25. இன்னொரு பணக்காரன்மேல் அந்த நிலத்தைக் கணக்கில் ஜாதகர் எழுதிவிட்டார். அதன்பேரில் ஏழைகள் மனம் நொந்து வருத்தத்தால் பின்வருமாறு சொல்லுகின்ருர்கள்.—“புத்திரர்கள் இறந்தும், சகோதரர்கள் தன்னுடன் இல்லாமலும், எப்போதும் தரித்திரத்தையும் கஷ்டத்தையும் அனுபவித்துக்கொண்டு பூமியில் வாழக் கடவாய்” என்று கணக்கராகிய ஜாதகரரைப் பார்த்துச் சொல்லி;

26. பலவித நிந்தையாகப் பகர்ந்தனர் யேழை தானும்
குவ்விய அச்சென் மத்தில் குழவிகள் மரண மாகி
உலகினில் வறுமை பூண்டு உரைந்து பின் அந்தியத்தில்
பலவித தலங்கள் சென்று பாரினில் உள்ளூர் மீண்டு.

26. இன்னும் அநேகவிதமான குற்றங்களேச் சாட்டி அந்த ஏழைகள் சபித்தார்கள். முன் ஜன்மத்தில் ஜாதகருக்குக் குழந்தைகள் இறந்துவிட்டார்கள். ஜாதகர் தரித்திரத்தையும் கஷ்டங்களேயும் அனுபவித்துத் தன் காலத்தைக் கழித்து, தன்னுடைய கடைசி காலத்தில் அநேக தெய்விக ஸ்தலங்களுக்குப் போய், பிறகு தன்னுடைய கிராமத்திற்குத் திரும்பி வந்து

27. காரக ரோகத் தாலே காவலன் மரண மாகி
சிரிய மரலியின் பக்கல் சென்றுமே நரகம் புக்கி
மாரியே கஞ்சன் தன்னுல் வரிய யிக்குலத்தில் வந்தான்
கூறுவோம் முன்னூழ் தன்னுல் குழவிகள் தோஷ மாமே.

27. காரக வியாதியால் ஜாதகர் இறந்து, யமனிடம் சென்று பிறகு நரகத்தையடைந்து, பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் இந்தக் குலத்தில் வந்து பிறந்தார். முன் ஜன்மத்திய ஊழ்வினைப் பயனுக ஜாதகருக்கு புத்திரதோஷம் உண்டு என்று சொல்லுகின்ருேம்.

28. உதிக்கினும் விரையமாகும் உரைக்கிருேம் சாந்தி
[யொன்று
சதமுடன் வள்ளுர் சென்று சகஸ்திர அர்ச்சனை செய்து
அதிதிகட் கன்ன மீந்து அவனுமே உள்ளூர் சென்று
பதியினில் யேகா தசி பாலகன் விரதம் கொண்டால்.

28. குழந்தைகள் ஒரு சமயம் பிறந்தாலும் அவைகள் இறந்துவிடும். இதற்கு ஒரு பரிகாரத்தைச் சொல்லுகின்ருேம். ஜாதகர் வள்ளுர் என்ற திருவள்ளுர் ஸ்தலத்திற்குப்போய், ஆயிரம் அர்ச்சனையைச் செய்து, பரதேசிகளுக்குச் சாப்பாடுபோட்டுப் பிறகு தன் கிராமத்திற்குத் திரும்பிப்போய் ஏகாதசி விரதத்தை அனுஷ்டித்து வந்தால்

29. செனித்திடும் சுதர்களும் தான் தேவியும் தீர்க்க மாகும்
கனிவுடன் செய்யா ளுகில் காளைகள் தோஷ முண்டு
அனையவே செய்வா ளுகில் ஆணது இரண்டு விருத்தி
வனிதையு மவ்வா ருகும் வரைகிருே மிவனுக் கேதான்.

29. ஜாதகருச்குக் குழந்தைகள்பிறக்கும். இவருடைய மனைவியும் நீண்ட ஆயுளையுடையவளாக விருப்பாள். ஜாதகர் ஆவலுடனும் மனப்பூர்த்தியுடனும் இந்தச் சாந்தியைச் செய்யாவிட்டால் குழந்தைகளுக்குத் தோஷம் உண்டாகும். இந்தச் சாந்தியை ஜாதகர் செய்வாராகில் இரண்டு பிள்ளைகள் பிறந்து விருத்தியடைவார்கள் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகருடைய தாயாரின் குணுதிசயங்கள்

30. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிருேம் சிவந்த மேனி
மேதினில் ஓடிசல் தேகி விளங்கிடும் பித்தச் சூடு
சூதிலாள் மர்ம முள்ளாள் சொல்லுமுன் கோபம்
[கொஞ்சம்
பேதக மெண்ணு ளாகும் பெரும்பொரு ளிச்சை யுள்ளாள்

30. ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்களைப் பற்றி நாங்கள் சொல்லுகின்ருேம். இவள் சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள். இவள்

நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவள், இவளுக்குப் பித்தச்சூட்டு ரோகம் உண்டு. இவள் கபடம் வஞ்சனை ஆகிய இவற்றை யுடையவளல்ல. ரகசிய மான மணத்தை யுடையவள், இவளுக்குச் சொல்லுவதற்கு முன்னமே கோபம் கொஞ்சம் உண்டாகும். இவள் தவறுன எண்ணங்களையுடையவ ளல்ல. அதிக செல்வத்தின்பேரில் ஆசையுடையவள்.

31. நடையது துருசு முள்ளாள் நாயகன் மனம்போ
[லுள்ளாள்
இடையினில் வாயு ரோகி யீகையு முடைய ளாகும்
அடவுடன் துணைவர் தன்னை அரைகிறே மாற தாகும்
தடை யுண்டு சிலறு தானும் சதமாகு மாண்பா
[லொன்று.

31. ஜாதகருடைய தாயார் குற்றமான தவறுன நடவடிக்கையையுடை யவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல நடந்து கொள்ளுவாள். இவளுக்கு இடுப்பில் வாயு ரோகமுண்டு. பிறருக்குக் கொடுக்குங் குணத்தையுடையவள். இவளுடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவளுக்கு ஆறு சகோதரங்கள் உண்டு. இவற்றில் சிலர் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். இவளுக்கு ஒரு சகோதரன் உண்டு.

## ஜாதகருடைய தாயாரின் முன்ஜன்மம்

32. பெண்ணது அவ்வார் தீர்க்கம் பேசுவோ மிவள்முன்
[சென்மம்
அண்ணல் காளாத்தி கீழ் பால் அணுகிய பேரூர் தன்னில்
விண்ணுளோர் போற்று வேத விப்பிர குல முதித்து
யெண்ணுமே மதலை யுண்டாய் இவள் வரன் சகிதமாக.

32. ஜாதகருடைய தாயாருக்கு ஒரு சகோதரி நீண்ட ஆயுளையுடைய வள். தாயாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பெருமை யுள்ள ஸ்ரீகாளஹஸ்திக்குக் கிழக்கிலும் அருகிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் தெய்வலோகத்தார் பெருமையுடன் பாராட்டுகின்ற வேதங்களை ஓதுகின்ற பிராமணர் ஜாதியில் பிறந்து, குழந்தைகளையுடையவளாகிப், புருஷனுடன்;

33. மடந் தனில் வருவோருக்கு மங்கையும் விலைக்கு அன்னம்
அடவுட னளித்து வந்தாள் அதிலோரு சங்கை கேளாய்
திடமிலா யேழை ஓர்ஞள் சேய்க்குமே அன்னம் கேட்க
விடம் போலே சீரியே தான் மெல்லியு மில்லை யென்றுள்.

33. ஒரு மடத்தில் வசித்துக்கொண்டு அவ்விடம் வருகின்றவர்களுக் குப் பணத்திற்குச் சாப்பாட்டை விற்றுக்கொண்டிருந்தாள். இங்கே நடந்த ஒரு சம்பவத்தைச் சொல்லுகிறேன், கேட்பீராக. வலுவில்லாத ஓர் ஏழை தன்னுடைய குழந்தைக்குச் சாதம் கேட்கப் பாம்பைப் போலக் கோபங் கொண்டு ஜாதகரின் தாயார் சாதம் இல்லையென்று சொல்லிவிட்டாள்,

34. ஆகையால் அந்த யேழை அவர் பசி நோயினுலே
சோகமாய்ச் சொல்லு கின்ருர் சுதர்களும் தோஷ
[முண்டாய்
தோகையும் மறு சென்மத்தில் தோன்றியும் சுதர்க ளற்று
பாகமாய் வாழ்வாய் யென்று பஞ்சையும் சொல்லி
[யேதான்,

34. அதன்மேல் அந்த ஏழை பசியின் கொடுமையால் இளைத்துக் களைத்துப் போய்ப் பின்வருமாறு ஜாதகருடைய தாயாரைப் பார்த்துச் சொல்லுகின்ருர். உன் பிள்ளைகள் இந்த ஜன்மத்தில் இறந்துபோயும்-"உன்னுடைய பின் ஜன்மத்திலும்கூட உனக்குப் பிள்ளைகள் இல்லாமலும் நீ வாழக் கடவாய்" என்று இந்த ஏழையும் சொல்லிவிட்டு ;

35. நடந்தன ரவடம் விட்டு நவின்ற சொல் இவளைப் பற்றி
தொடர்ந்துமே வறுமை யுண்டாய்த் தெக்ஷணம்
[தலங்கள் யாவும்
அடவுடன் தீர்த்தம் தோய்ந்து அவளுமே உள்ளூர்
[சென்று
உடனேதான் வரனின் முன்னே உத்தமி மரண மாகி.

35. அந்த மடத்தைவிட்டுப் போய்விட்டார். இவர் சொல்லிய சாபம் ஜாதகருடைய தாயாரை வந்து அடைந்தது. இவள் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் முன் ஜன்மத்திலேயே அனுபவித்து தென்திசையிலுள்ள எல்லா தெய்வீக ஸ்தலங்களுக்குப் போய் அங்குள்ள குளம், நதிகளில் ஸ்னானஞ் செய்து, மறுபடியும் தன் கிராமத்திற்குத் திரும்பிப் போய்ச் சீக்கிரத்தில் தன் புருஷனுக்கு முன்னே இறந்து ;

36. கூத்தனுல் வாதைப் பட்டுக் குறைதலை கஞ்சன் தன்னுல்
வித்தன ளிக் குலத்தில் விளம்புவோர் மதலை தோஷம்
சாத்தினுர் முனிவ ரிவ்வார் செயமுனி கேழ்க லுற்ருர்
போத்து யிம் மதலை தானும் பிழைத்த காரணங்க ளென்ன,

36. ஜாதகருடைய தாயார் எமனுல் கஷ்டங்களை அடைந்து, குறைந்த நிலைகளையுடைய பிரமதேவனுல் இந்த ஜன்மத்தில் இக்குலத்தில் வந்து பிறந்தாள். ஆகையால் புத்திர தோஷத்தைச் சொல்லுகின்ரேம் என்று முனிவர் இவ்வாறு சொன்னுர். இதன்மேல் ஜெயமுனிவர் கேட்கின்ருர். இந்த ஜாதகர் மாத்திரம் பிழைத்திருப்பதற்குக் காரணங்கள் என்ன ?

37. சொல்லுவேன் பாலோ னுக்குச் சுரகுரு ஒன்பா னேற
வெல்லுவான் எமனையே தான் மேதினில் வயது தீர்க்கம்
அல்லலும் அணுகா தாகும் அம்மணி கேட்க லுற்ருள்
வில்லினுக் குடை யோனுக்கு வியத்தினில் மதியும் நிற்க.

37. இதன்மேல் வசிஷ்டர் பதில் சொல்லுகின்றார். ஜாதகருக்குச் சுரகுரு என்ற குருகிரகம் லக்கினத்திற்கு ஒன்பதாவது பாவத்தில் இருப்பதால் (அஃதாவது ஒன்பதில் இருந்து லக்கினத்தைப் பார்ப்பதாலும் ஆயுள் ஸ்தானமாகிய மூன்றாவது வீட்டைப் பார்ப்பதாலும்) ஜாதகர் எமனை ஜெயித்துவிடுவார். இவருக்கு ஆயுள் நீண்டிருக்கும். இவருக்குக் கஷ்டங்கள் நேரிடாமலிருக்கும். இதன்மேல் பார்வதியம்மையார் பின்வருமாறு கேட்கின்றார். வில்லு என்ற தனுசிற்கு உடையவராகிய குருவிற்கு வியம் என்ற பன்னிரண்டாவது வீட்டில் மதி என்ற சந்திரன் இருப்பதால் ;

38. எப்படி வயது தீர்க்கம் இயம்பினீர் முனியே சொல்லாய்
ஒப்புடன் லக்கினத்தில் உயர் புகரிருப்பதாலே
செப்பினேம் தீர்கமாக சாதக சுரிதிலே தான்
மெய்ப்புடன் எட்டாம் பாக விளம்பினேம் அதிலே பாரும்.

38. எவ்விதமாக ஜாதகருக்கு ஆயுள் நீண்டிருக்கும் என்று சொல்லுகின்றீர் ? முனிவரே ! சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, வசிஷ்டர் பதில் சொல்லுகின்றார். லக்கின பாவத்தில் நல்லவராகிய புகர் என்ற சுக்கிரன் இருப்பதால் ஜாதகருக்கு வயது நீண்டிருக்கும் என்று சொன்னேம் என்றார் வசிஷ்டர். ஜாதக சாஸ்திரத்தில் எட்டாம் பாவ பிரகாரம் சொன்னேம். அதில் பார்க்கவும், அம்மையாரே !

## ஜாதகருடைய தாயாரின் பின்ஜன்மம்

39. மாதுரு பின் சென் மத்தை வரைகிறோம் காஞ்சி
[தன்னில்
ஓதுவேன் பிரம்ம வம்சம் முதித்துமே பெருமை யுண்டாய்
பாதக மன மில்லாமல் பாரினில் வாழ்வா ளாகும்
போதக வானைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

39. ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவள் காஞ்சீபுரத்தில் பிராமண குலத்தில் பிறந்து கௌரவமுண்டாகி, கெட்ட மனத்தையுடையவளாக வில்லாமல் பூமியில் வாழ்வாள் என்றோம். இளம்பிராயமுள்ள யானை முகத்தையுடைய விநாயகரைப் பெற்றெடுத்தப் புண்ணியவதியாகிய பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மம்

40. தந்தையின் முன் சென்மத்தைச் சாற்றுவோம் பெலியின்
[பக்கல்
பந்தமாய்ப் பேரூர் தன்னில் பாலன் கோவைசி வம்சம்
முந்திய தனங்கள் பெற்று முயற்சியாய் வணிபம் செய்து
சிந்தையில் கலக்க முற்று சேயர்க ளில்லானாகி.

40. ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவர் மஹாபலிபுரத்திற்கு அருகில் உள்ள செழிப்பான ஒரு பெரிய கிராமத்தில், கோவைசிய குலத்திற் பிறந்து பெருமையான செல்வத்தையடைந்து, வியாபாரத்தைச் சிரத்தையாகச் செய்துகொண்டு, பிள்ளைகள் இல்லாதவராகி, அதனால் மனத்தில் கஷ்டங்களையடைந்து ;

41. அரங்கமா நகரம் சென்று அண்ணலுக் கர்ச்சித் தேத்தி
பெருமையாய்ச் சேதுக் கேகி பிஞ்சகன் தனைத் துதித்து
இருவினை தன்னைப் போக்கி எனக்குமே சுத னளிப்பாய்
உரிமையாய்க் கேட்கும் போது உரைப் பார்கள்
[அசரீரியாக,

41. ஸ்ரீரங்கம் என்ற ஒரு பெரிய பட்டினத்திற்குப் போய், சிவபெருமானைப் பூசித்து, என்னுடைய இந்த ஜன்மத்திய பாவங்களையும் முன்ஜன்மத்திய பாவங்களையும் விலக்கி, எனக்குப் பிள்ளைப்பேற்றைக் கொடுப்பீர் என்று ஆவலாய்க் கேட்கும்போது, அசரீரியாகச் சிவபெருமான் பதில்சொல்லுவார்.

42. இச் சென்மம் தன்னி லேதான் இலகாது மதலை தானும்
உச்சித மருசென் மத்தில் உதித்திடு மதலை தானும்
நச்சுபோல் அசரீரி வாக்கு நல்கினர் பெரியோர் தானும்
மிச்சமாய் மன வெறுப்பால் வீரியன் உள்ளூர் சென்றான்.

42. இந்த ஜன்மத்தில் உனக்குப் பிள்ளை கிடையாது. உன்னுடைய அடுத்த ஜன்மத்தில் உனக்குப் பிள்ளை உண்டாகும் என்று விஷம்போல அசரீரியான வார்த்தைகளைச் சிவபெருமான் சொல்லியருளினார். அதனால் ஜாதகருடைய தகப்பனார் மனக் கஷ்டப்பட்டுக்கொண்டு தன் ஊருக்குத் திரும்பிப் போய்விட்டார்.

## ஜாதகரின் தகப்பனாருடைய பின் ஜன்மம்

43. மதலையின் சோபத் தாலே மன்னனும் மரண மாகி
நதிகுல மிச் சென் மத்தில் நாயக னுதித்தா னென்றோம்
வதிபன் தன் பின் சென்மத்தை வரைகிறோம் அரங்கம்
[தன்னில்
சதியிலா பிரம சேயாய்த் தானவ னுதிப்பா னென்றோம்.

43. ஜாதகருடைய தகப்பனார் பிள்ளையில்லாதக் குறையினாலே இறந்து, இந்த ஜன்மத்தில் கங்கை குலத்தில் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இனிமேல் இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் ஸ்ரீரங்கம் என்ற க்ஷேத்திரத்தில் குற்றமில்லாத பிராமண குலத்துப் பிள்ளையாகப் பிறப்பார் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய தாய் தகப்பனுர்களின் மரணகாலம்

44. இவர்கள் தம் காலம் சொல்வேன் எழில் முப்பானுலீ
[ரெண்டில்
அவனியில் தனுசு திங்கள் அந்த நாள் தந்தை கெண்டம்
நவனியில் அதற்கு மேலே நாற்பது ஆண்டு தன்னில்
சிவனிட பாதம் தன்னில் செல்குவாள் மாதர்தானே.

44. ஜாதகருடைய தாய் தகப்பனுர்களுடைய மரணகாலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில் தனுசு திங்கள் என்ற மார்கழி மாதத்தில் தகப்பனுர் இறந்துவிடுவார். இதற்குப் பிறகு ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் இவருடைய தாயார் இறந்து சிவலோகப் பதவியை யுடைவாள்.

குறிப்பு :—*ஜாதகருடைய தகப்பனுரின் மரணகாலம் :—ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில் ராகு திசையில் குருபுத்தி நடக்கின்றது. பிதிரு லக்கினம், ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இராகு பிதிரு லக்னுதிபதியாகிய சுக்கிரனைப் பதினேராவது பார்வை யுடன் பார்க்கின். பிதிரு லக்னத்திற்கு எட்டாவது பாவாதிபதி யாகிய குருவைப் பார்க்கின்ருர். பிதிரு ஸ்தானத்திற்கு மாரக ஸ்தானமாகிய ஏழாவது வீட்டில் இருக்கின்ருர். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் 12-வது, 20-வது பாடல்கள் பிரகாரமும், ஜாதக சந்திரிகை ஆயுர்தாயப் பிரகரணம் இருபத்திரண்டாவது சுலோகம் பிரகாரமும் ராகுவுக்கும் மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கின்றது. ரிஷப லக்னத்திற்கு எட்டிற்குடைய குருமாரகராகின்ருர். ஜாதக சந்திரிகை 46-வது சுலோகத்தைப் பார்க்கவும். ஆகையால் குரு, தன் புத்தியில் மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராக விருக்கின்ருர், *மாதிரு மாரகம் ;—ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் ராகு தசையில் சனிபுக்தி நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். மாதிரு லக்கினுதிபதியாகிய குருவை ராகு பார்த்திருக்கின்ருர். ஆகையால் துய்ய கேரளம் 12-வது 20-வது பாடல்கள் பிரகாரம் தாயாரை மாரகஞ்செய்ய ராகுவுக்கு அதிகாரம் இருக்கின்றது. சனி எட்டிற்குடை சந்திரனுடன் கூடி இருக்கின்ருர். சந்திரன் மாதிர்காரகன். ஆகையால் துய்யகேரளம் 12-20-வது பாடல்கள் பிரகாரம் சனிக்கு தாயாரை மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலம்

45. இன்னவன் மரண காலம் இயம்புவோ அறுபா னைந்தில்
உன்னித தேளின் மாதம் உயர் பக்கம் நவமி தன்னில்
கன்னலில் சூலை யாலே கழறுவோம் மார கங்கள்
தன்னிலே யளவு சொல்வார் செந்தீயு மெட்டோ னுகி,

45. ஜாதகருடைய மரண காலத்தைப்பற்றி இனிச் சொல்லுகின்றோம். இவருக்கு அறுபத்தைந்தாவது வயதில் தேள் என்ற விருச்சிக மாதமாகிய கார்த்திகை மாதத்தில் வளர்பிறை நவமி திதியில் சூலை நோயாலே ஜாதகர் இறந்துவிடுவார் என்று சொல்லுகின்றோம். இந்த வயதை வசிஷ்டர் சொல்லவே, செந்தீயும் என்ற அங்காரகன் எட்டாம் விட்டிற்குடையவராகி

46. தசமத்தி லிருக்க அந்தச் சேயின்தன் காலம் தன்னில்
அசை வுண்டு சாதகர்க்கு அம்மொழி வதிஷ்டர் கேட்டு
சேர்ந்து
இசைக்குரு குரு வேழோனுகி இவருடன் மோக்ஷம்
வசையிலா திருப்ப தாலே அவர் திசை கண்ட மென்
[றோம்.

46. பத்தாவது வீட்டில் இருப்பதாலே இந்த அங்காரகனுடைய தசை காலத்தில் (அஃதாவது வயது ஷூ 34-2-00க்கு மேல் வயது ஷூ 41-2-00க்குள்) ஜாதகர் இறந்துவிடுவார் என்று ஒரு ரிஷி சொன்னர். இதை வசிஷ்டர் கேட்டுத் தடுத்து பதில் சொல்லுகின்றார். குரு ஏழாவது வீட்டிற்குடையவராகிய இவருடன் மோக்ஷகாரகனுகிய கேது சேர்ந்திருப்பதால் குரு தசையில் மரணம் நேரிடும் என்று சொன்னேம்.

குறிப்பு:—குரு தசையில் மாரக விஷயம் :—கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் அங்காரகன், குரு, சந்திரன் இவர்கள் மாரகாதிபர்கள். குருமாரக ஸ்தானமாகிய ஏழிற்குடையவராக விருக்கின்றார். ஆகையால் குரு தசையில் மாரகம் அறுபத்தைந்து வருஷத்தில் சொல்லப் பட்டிருக்கின்றது. இக் காலத்தில் சந்திர புக்தியும் அங்காரக புக்தியும் நடக்கின்றன. அங்காரகன் மாரக ஸ்தானமாகிய எட்டிற்குடையவர். ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றாவது சுலோகம் பிரகாரமும் தாண்டவ மாலையில் இருபத்திரண்டாவது பாடல் பிரகாரமும் மாரக ஸ்தானுதிபதியைவிட அந்த மாரக ஸ்தானத்திலிருக்கின்றவராகிய சந்திரன் தன் புத்தியில் மாரகஞ் செய்ய அதிக பலமுடையவராவர்.

## ஜாதகருடைய பின்ஜன்மம்

47. பின் சென்மம் வள்ளுர் தன்னில் பிராமண குலமுதித்து
மன்னிய அரசர் பக்கல் வதிகார மிகவே கொண்டு
தன்னிலே வாழ்வா னுகும் சாற்றின மொழி குன்ருது
கந்தனைப் பெற்ற மாதே கழறுவோம் யோகச் சேதி

47. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் வள்ளுர் என்ற திருவள்ளுரில் பிராமண குலத்தில் பிறந்து அரசாங்கத்தில் ஒரு அதிகாரமான வேலையில் அமர்ந்து வாழ்வார். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! இனி மேல் யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

48. பூமியும் விருத்தி செய்வன் புராண நூல் கேழ்ப்பா னுகும்
நேமியில் நல்லோ னுவன் நிதானமாய் வார்த்தை
[கூர்வன்
தாமத குணத்தா னுகும் தயவு ளான் பாக்கிய வானும்
தீமையை வீழ்ப் பானுகும் திருப்பணி வேலை செய்வன்.

48. ஜாதகர் நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை அதிகப்படுத்துவார். இவர் புராணம் முதலிய நூல்களைப் படிப்பதைக் கேட்பார். இவர் பூமியில் நற்குண நற்செய்கைகளையுடைய நல்லவராக விருப்பார். இவர் சாந்தமாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் நிதானமான குணத்தையுடையவர், பிறருக்கு உதவி செய்யுங் குணத்தையுடையவர், உதவி செய்யும் மனத்தையுமுடையவர். செல்வமுள்ளவர், இவர் கெடுதிகளை நசிக்கச் செய்வார். கோயில்களில் வேலையும் தொண்டுகளும் செய்வார்.

49. அவசர முடைய னுவன் ஆள்கள் விருத்தி யுள்ளான்
நவனியில் பெருமை யுள்ளான் நளினமாய்ப் பேச
[வல்லன்
தவசிகள் உறவு கொள்வன் தன் தெய்வ பூசை
[செய்வன்.
சிவனிட பாகத் தாளே செல்வனுய் வாழ்வா னென்றோம்.

49. ஜாதகர் அவசரப்படுகின்ற குணத்தையுடையவர், வேலையாட்களை உடையவர். இவர் பூமியில் கீர்த்தியும் புகழும் உள்ளவர். இனிமையாகவும் நயப்பாகவும் பேசுவார். இவர் தவங்களைச் செய்கின்றவர்களுடைய சினேகத்தை உடையவராவர். தன்னுடைய கடவுளைப் பூஜை செய்வார். பரமசிவனுடைய இடது பாகத்தையுடைய பார்வதியம்மையே! ஜாதகர் தனவந்தராக விருந்துகொண்டு வாழ்வார் என்று சொல்லுகின்றோம்.

50. பாலகன் செனிக்கும் காலை பளிங்கு தன் திசை
[யிலேதான்
கோலமாய்ப் பதினே ருண்டும் குறித்தனம் திங்கள்
[ரண்டும்
ஏலவே சாத கர்க்கு யிடறுக ளதிக முண்டு
மாலினுல் வெல்வா னுகும் மனையினில் கலக முண்டே

50. ஜாதகர் பிறந்த காலத்தில் பளிங்கு என்ற சுக்கிரன் தசையில் பதினேரு வருஷமும் இரண்டு மாதங்களும் இருப்பு ஆகும். இக்காலத்தில் ஜாதகருக்கு அநேகவித துன்பங்களும் உண்டாகும். இவற்றை விஷ்ணுவின் சகாயத்தினுல் போக்கடித்து விடுவார். இவருடைய குடும்பத்தில் கலகங்கள் நேரிடும்,

51. தந்தைக்கு ரோகம் வாய்க்கும் சதுஷ் பாதம் விரைய
[மாகும்
சிந்தையும் கலக்க முண்டு சில சில விரயம் நேரும்
சொந்த தோர் மனிதர் நாசம் சொல்லுவோ மிவனுக்கே
[தான்
எந்தையே விபர மாக யியம்புவோ மிரண்டிலேதான்

51. ஜாதகருடைய தகப்பனுருக்கு நோயுண்டாகும். நாற்கால் ஜீவன்கள் இறந்துவிடும். மனத்தினில் பலவிதமான கஷ்டங்கள் நேரிடும். சிறிது விரையங்கள் ஏற்படும். சொந்த பந்துக்கள் இறந்து விடுவார்கள். இவ்விதமான பலாபலன்களை நாங்கள் ஜாதகருக்குச் சொல்லுகின்றோம். எங்கள் தாயாகிய பார்வதியம்மையே! இன்னும் விவரமாக இரண்டாவது பாகத்தில் நாங்கள் சொல்லுகின்றோம்.

52. பானு தசைக்கு..................தான் செய்வன்
தேன்மொழியாள் பாரி வரும் செய் நிலமும்
மேன்மையதாய் தந்தைவர்க்க நாசமுறும் சல்லியங்கள்
[நேர்ந்து விடும்
எந்திடமும் தான் பெருமையாம்.

52. பானு என்ற சூரிய தசையின் பலாபலன்களைச் சொல்லுகின்றேன். (சுக்கிர தசையில் விவாகமான இளம்) பாரியை இந்தத் தசையில் வயதை அடைந்து ஜாதகரின் வீட்டிற்கு வந்து ஜாதகருடன் வாழ்வாள். பயிரிடக் கூடிய நிலங்கள் நல்ல பலனைக் கொடுக்கும். தகப்பனுருடைய பந்துக்கள் நாசமடைவார்கள்—இறந்துவிடுவார்கள். கடன்கள் ஏற்படும். எவ்விடத்திலும் பெருமை உண்டாகும்.

53. பெருமை யுண்டு பந்து பகை பித்த நலியாய் நீங்கும்
திருமகளும் வாசமுறும் செப்பினோம் வறுமையிலான்
தெய்வபத்தி ஓங்கும் செயமாகும் நினைத்த
[தெல்லாம்
ஐய மில்லா யிரண்டில் சொல்வே னதிகமாக.

53. ஜாதகருக்குப் புகழும் கீர்த்தியுமுண்டு, பந்துக்களுடைய விரோதம் நேரிடும். பித்தவியாதி கண்டு நிவர்த்தியாகும். தன் வீட்டில் லக்ஷ்மி வந்து வாசஞ் செய்வாள். ஜாதகர் தரித்திரமும் கஷ்டங்களும் இல்லாதவர், இவருக்கு தெய்வ பக்தியும் அன்பும் அதிகமிருக்கும். நினைத்த காரியங்கள் எல்லாம் கைக்கூடும். இன்னும் அதிகமாக இரண்டாவது பாகத்தில் சந்தேகமில்லாமல் சொல்லுகின்றேன்.

———

# ஜாதகம் 3

## ஜனனகால கிரகநிலை

1. [1]மந்திரி ராகு [2]மானில் [3]மங்கலன் [4]கோல தாக
[5]புந்தியு [6]மதியும் [7]வில்லில் [8]புகர் [9]பானு [10]தேளதாக
[11]மைந்தனு மீனமாக [12]வண்டியில் [13]சிகியு நிற்க
வந்தவன் சென்மம் கன்னி வரைகுவீர் பலனைத் தானே,

1. கன்னியா லக்கினமாகிக் குருவும் ராகுவும் மகரத்திலும், அங்காரகன் துலாத்திலும், புதனும் சந்திரனும் தனுசிலும், சுக்கிரனும் சூரியனும் விருச்சிகத்திலும், சனி மீனத்திலும், கடகத்தில் கேதுவும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்தால் பிறந்த ஜாதகருக்குப் பலாபலன்களைச் சொல்லுவீர்கள் என்று;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| | இராசி சக்கரம் | | கேது |
| குரு ராகு | | | |
| சந்திரன் புதன் | சூரியன் சுக்கிரன் | அங்காரகன் | லக்கினம் |

பூராடம் 1-ஆம் பாதம் சுக்கிர தசை
ஷ 17—11—0

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடைய தாகும்: மேஷத்தில் புதனும் குருவும், ரிஷபத்தில் சனியும் ராகுவும், சிம்மத்திற் சந்திரனும், துலாத்திற் சூரியனும், விருச்சிகத்திற் கேதுவும், தனுசிற் சுக்கிரனும், மீனத்தில் அங்காரகனும், ஆகும். சுக்கிரன் அஸ்தமனமாகி இருக்கின்றார். சனி வக்கிரகதியில் இருக்கின்றார்.

1. குரு.
2. மகரம்.
3. அங்காரகன்.
4. துலாம்.
5. புதன்.
6. சந்திரன்.
7. தனுசு.
8. சுக்கிரன்.
9. சூரியன்.
10. விருச்சிகம்.
11. சனி.
12. கடகம்.
13. கேது.

2. கோமளி கேட்கும் போது குரு முனி கூறுகின்றார்
நேமியில் ஆண் பால் சென்மம் நிகர் இல்லம் வடதென்
[வீதி
தாமத மேற்கு வாசல் சங்கரன் மாயோன் காளி
தீமை யில்லாத மாரி செப்புவோ முத்திர த்தில்.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது, குருமுனி என்ற வசிஷ்ட மகரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்கு வாசற்படியை உடையதாகவிருக்கும். சிவபெருமான், மகாவிஷ்ணு, காளியம்மன், மாரியம்மன் ஆகிய இவர்களுடைய கோயில்கள் வடக்குத் திக்கில் இருக்கும் என்று சொல்லுகின்றோம்.

3. சோலையும் துரவு குண்டம் சூழ்ந்திடும் சிற்றூர் தன்னில்
ஞாலம்மேல் பிரம்ம வம்சம் நாயகன் அதிப னாகும்
கோல மாய்த் தந்தை மாதுர் குழவிகள் துணைவர் பாரி
சீலமாய் முன் பின் சென்மம் செப்புவே னிந்நூல்
[தன்னில்

3, சோலைகளும் தோட்டங்களும் கிணறுகளும் அதிகமாகவுள்ள ஒரு சிறிய கிராமத்தில் பிராமணர் குலத்தில் சிறந்த குழந்தையாக இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய தகப்பனார், தாயார், குழந்தைகள், சகோதரங்கள், மனைவி, முன்ஜன்மம், பின்ஜன்மம் ஆகிய இவற்றை இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றேன்.

## ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்கள்

4. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த
[மேனி
சந்ததம் ஒடிசல் தேதி சன்மார்க்கன் பொறுமை
[யுள்ளான்
வந்தவர்க் கன்ன மீவன் வாசர்கள் இஷ்டம் கொள்வன்
நொந்திடும் பேரைக் காப்பன் நுவலுப தேசம்
[கொள்வன்.

4. ஜாதகருடைய தகப்பனாரின் குணாதிசயங்களைப் பற்றி இனிச் சொல்லுகின்றோம். இவர் சிவப்பான நிறமுள்ள தேகத்தையுடையவர். நல்லொழுக்கமும் ஞானமார்க்கமும் உள்ளவர், சாந்த குணமுள்ளவர். இவர் தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாடு போடுவார். அரசர்களுடைய இனேகத்தையுடையவர். இவர் ஏழைகளையும் தரித்திரர்களையும் காப்பாற்றுவார். பெரியோர்களிடத்தில் உபதேசத்தைப் பெற்றுக்கொள்ளுவார்.

5. அதிகார முடைய ஞுகும் யாவர்க்கு நல்லோ ஞுவன்
சதியிலா மனத்த ஞுகும் சர்ச்சனர் உறவு கொள்வன்
நிதியதைச் செய்வன் நிகர் பூமி விரையம் செய்வன்
ததி நெய் பாலிஷ்டம் கொள்வன் தைரிய மனத்த
[னென்றேம்.

5. ஜாதகருடைய தகப்பஞர் அதிகாரங்களை யுடையவராவர், எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். இவர் கெடுதியில்லாத மனத்தை யுடையவராவர். நல்லவர்களுடைய சினேகத்தையுடையவராவர். இவர் ஆபரணங்களைச் செய்வார். நிலங்களை விற்று விடுவார். இவர், தயிர் நெய் பால் ஆகிய இவற்றில் ஆசையுள்ளவர். தைரியமான, பயமில்லாத மனத்தை யுடையவராவர்.

6. யூகை வான் சுகி பொசிப்பன் உண்மையாம் மனத்
[தஞுகும்
தோகையர் மோக வாஞும் சொல்லது தவரு ஞுகும்
ஆகவே பித்த தேக அனுகிடும் வாத ரோகி
பாகமாய்க் கிராமச் செட்டு பாலகன் செய்வா ஞுமே.

6. ஜாதகருடைய தகப்பஞர் ஆராய்ச்சியைச் செய்யும் நுட்பமான புத்தியை யுடையவர். சுகமாக நல்ல போஜனங்களைச் சாப்பிடக் கூடியவர். உண்மையாக நினைக்கின்ற நடந்து கொள்ளுகின்ற மனத்தை யுடையவராவர். இவர் பெண்களின்மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகாமல் நடந்து கொள்ளுபவராவர். இவர் பித்தமான குணத்தை யுடைய தேகத்தை யுடையவர். இவருக்கு வாதநோய் வரும். இவர் நல்லபடியே தன்னுடைய கிராம வியாபாரத்தைச் செய்வார்.

7. ஆலய பத்தி மாஞும் அரசன் பூசை செய்வாஞுகும்
சீலமாம் புதன் ரேகை செறிந்திடும் கரத்திலே தான்
ஆலம் போல் பகைவருக்கு அண்ணலும் கெருட ஞுவன்
வேலனைப் பயின்ற மாதே விளம்புவோம் மேலும் கேளே.

7. ஜாதகருடைய தகப்பஞர் கோயில்களின்மேலும் ஆசையுடையவராகி அங்குள்ள தெய்வங்களுக்குத் தொண்டு செய்வார். சிவ பெருமானைப் பூஜை செய்பவராகும். இவருடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகை உண்டு. இவர் பாம்பைப்போன்ற விஷத்தையுடைய எதிரிகளுக்கு கருடனைப் போன்ற வைரியாக விருப்பார். ஆறுமுகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! நாங்கள் இன்னும் அதிகமாகச் சொல்லப் போவதைக் கேட்பீராக.

8. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவோ மறுவ ருகும்
தன்னிலே இரண்டு தீர்க்கம் சாற்றிஞே மிவனுக்கே
[தான்

அன்னவர் வேருய்ச் செல்வர் ஆகிய குணத் தானுக்கு
உன்னித மாகவே தான் உதிப்பஞ மென்று
[சொன்ஞேம்.

8. ஜாதகரின் தகப்பஞருடைய சகோதரர்கள் ஆறு பேர் ஆகும். இவர்களில் இருவர்தாம் நீண்ட ஆயுளை யுடையவராவர் என்று சொல்லு கின்ருேம். இவ்விருவரும் வேருகப் போய் ஜீவிப்பார்கள். இப்படிப்பட்ட குணகுணங்களை யுடைய தகப்பஞருக்கு இந்த ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகருடைய குஞதிசயங்கள்

9. சாதகர் நிறம் குணத்தைச் சாற்றுவோம் ஒடிசல் தேகி
நீதியாய் சிவந்த மேனி நிகர்பித்த தேகி யாவன்
வேதனை யொருவர்க் கெண்ணுன் வித்தையு முடைய
[ஞகும்
கோதிலா அரசர் இஷ்டன் கூறுவோம் மேலுங் கேளே.

9. இனிமேல் ஜாதகருடைய நிறத்தையும் குஞதிசயங்களைப் பற்றியும் சொல்லுகின்ருேம். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். சிவப் 'பான நிறமுடைய தேகத்தை யுடையவராவர், பித்தமான குணத்தையுடைய தேகத்தை யுடையவர். இவர் யாருக்கும் கெடுதிகளை நினைக்க மாட்டார். இவர் வாசித்தவராக விருப்பார். இவர் குற்றமில்லாத அரசர்களுக்கு இஷ்டமானவராகப் பிரியமுள்ளவராக விருப்பார், இன்னம் அதிகமாகச் சொல்லுகின்ருேம் கேட்பீராக.

10. மனமது கபடு மில்லான் மறைகளை அதிகம் கொள்ளான்
தனமது பின்ஞ லுள்ளான் தைரியன் எவர்க்கும்
[நண்பன்
சினமது மில்லா ஞகும் சேயிழைப் பிரிய ஞவன்
இனமது பகையு முள்ளான் ஈகைவா னென்று
[சொன்ஞேம்.

10. ஜாதகர் கள்ளம், வஞ்சனை முதலியவற்றை யில்லாத மனத்தை 'யுடையவராவர் வேத சாஸ்திரங்களை அதிகமாகப் படிக்க மாட்டார். இவர் தன்னுடைய வாழ்க்கையின் பிற்காலத்தில் செல்வத்தை யுடையவராவர், 'தைரியமான, பயப்படாத, மனத்தை யுடையவராவர், எல்லோருக்கு இஷ்ட மானவராக விருப்பார். இவர் கோபமில்லாதவராவர். ஸ்திரீகளின்மேல் ஆசையை யுடையவராவர். பெண்களும் இவரிடத்தில் ஆசையை யுடைய வராவர். இவர் தன்னுடைய பந்துக்களின் விரோதத்தை யுடையவராவர். பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவராவர் என்று சொல்லு கின்ருேம்.

11. அரசரை வசியம் கொள்வன் அன்புள மனத்த னுகும்
திறமையாய் வார்த்தை சொல்வன் சேயிழை தன்னுல்
[யோகம்
பெருமலர்க் கினிய னுகும் புருதனம் சேர்ப்பா னுகும்
துருசான நடையு முள்ளான் துணைவரை ஆதரிப் பன்.

11. ஜாதகர் அரசர்களைத்தன் பக்கமாக விருக்கும்படியாகக் கைவசஞ் செய்து கொள்ளுவார். பிறர் மேல் ஆசையை யுடைய நல்ல மனத்தை யுடையவராகும். சாமர்த்தியமாகப் பேசுந் திறமையை யுடையவர். இவருக்குத் தன்னுடைய மனைவியால் யோக முண்டாகும். இவர் புஷ்பங்களில் பிரிய முள்ளவர். பழைய தனத்தைச் சேர்த்து வைப்பார். கெட்ட நடவடிக்கையை யுடையவராவர், தன்னுடன் பிறந்தவர்களைக் காப்பாற்றுவார்.

12. கிராமாதி காரம் செய்வன் கீர்த்திமான் பல பேர் நேயன்
தராதரம் அறிய வல்லன் தாக்ஷண்ணியன் கல்வி மானும்
துரா சையு மில்லா னுகும் சுகப் பொசிப் புடைய
[னென்றோம்
கரமதில் சுழியு முண்டு கனதனம் பின்னு லுள்ளான்.

12. ஜாதகர் கிராம அதிகாரம் உள்ள வேலையைச் செய்வார். புகழும் பெருமையும் உடையவராவர். அநேகருக்கு இஷ்டமானவராக விருப்பார். இவர் உயர்வு தாழ்வு நல்லது கெட்டது ஆகிய இவற்றை அறிந்து நடந்து கொள்ளும் திறமையை யுடையவராவர். பிறருக்கு உதவி செய்யுங் குணத்தை யுடையவர். வாசித்தவராவர். இவர் கெட்ட ஆசையை யுடையவரல்லர். சுகமான நல்ல சாப்பாட்டைச் சாப்பிடுபவராவர் என்று சொல்லுகின்றோம். இவருடைய உள்ளங்கையில் சுழி (சக்கர) ரேகை யுண்டு. தன்னுடைய பிற்காலத்தில் பெரிய தனத்தைச் சேர்த்து வைப்பார்.

13. சித்திர வீடு செய்வன் சொல்லது செல்லு மென்றோம்
நத்திஞேர்க் குதவு வானும் நாதனுர் பக்தி பூண்பன்
சுற்றத்தார் மெச்ச வாழ்வன் சொல்லது செல்லு
[மென்றோம்
சித்தச னொப்ப தாகும் சிறப்பை குடும்பி யாவன்.

13. ஜாதகர் சித்திரங்களையுடைய அழகான வீட்டைக் கட்டுவார். பரிசுத்தமான தேகத்தை யுடையவர். பிறருக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் தன்னிடம் வந்தவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். கடவுளின்மேல் ஆசையுடையவராய் அவருக்குத் தொண்டு செய்வார். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைப் போற்றும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவருடைய வார்த்தைகள் செல்வாக்கு உடையவனவாக விருக்கும். இவர் சித்தசன் என்ற மன்மதனுக்குச் சமானமான அழகுடையவர், மேன்மையும் பெருமையும் உள்ள குடும்பஸ்தராக விருப்பார்.

14. கோரையாம் தந்த முள்ளான் கூறுவோம் பூர்வ பூமி
ஞால மேல் நல்கு மென்றோம் நற்றந்தை மேலாய்
[வாழ்வன்
தீரமா மனத்த னாகும் சிந்தையும் கபடு மில்லான்
வேலனை யீன்ற மாதே விளம்பின மொழி குன்றாது.

14. ஜாதகர் கோரைப் பற்களை யுடையவர். இவருடைய பிதிரார்ஜித நிலங்கள் விருத்தியாகு மென்று சொல்லுகின்றோம். தந்தைக்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் பயப்படாத, திடமான மனத்தையுடைய வர். தன்னுடைய மனத்தில் கள்ளம், வஞ்சனை முதலியவற்றை யுடையவ ரல்லர். முருகனைப் பெற்ற பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலா பலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

குறிப்பு:—தந்தை மேலாய் வாழ்வன் என்ற விஷயம் :—சந்திரனுக்குப் பன்னிரண்டில் சூரியன் இருப்பதால் ஜாதகர் தன் தகப்பனுருக்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார். ஜாதகாலங்காரம் என்ற தமிழ் புத்தகம் 441–ஆவது பாடலாகிய "தேவர்களமுத சந்திரன் முதலாய்.........புத்திரர்க்கென்றறிந்திடுமே" என்ற பாடலை வாசிக்கவும். அஃதாவது, சந்திரன் முதல் சூரியன் இருக்கின்ற விடம் வரையிலும் உள்ளத் தொகையை மூன்றால் வகுக்க, மிச்சம் ஒன்று ஆனால் ஜாதகர் தகப்பனுக்குத் தாழ்ந்த அந்தஸ்திலும், இரண்டானால் சமமான அந்தஸ்திலும், மூன்றானால் அதிகமான அந்தஸ்திலும் இருந்து வாழ்வார். இங்கு மிச்சம் பூஜ்யம் வந்தால் மூன்று என்று வைத்துக் கொள்ளவும்.

## ஜாதகருடைய சகோதரர்கள் (சகோதரபாவம்)

15. இவனுட துணைவர் தன்னை யியம்பு வோம் ஆண்பால்
[ஒன்று
அவனியில் கன்னி யவ்வா றுரைகிறோம் தீர்க்க மாக
நவனியில் யிரண்டு பேரும் நாயக னிளையோ னாகும்
கவன மாய் அவன் தன் சேதி கழறு வோம் கேளு மம்மா.

15. இனிமேல் ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவ்விரண்டு பேர்களும் ஜாதகருக்கு இளையவர்களாவார்கள். இளைய சகோதரனுடைய விஷயங்களைக் கியாபகத் துடன் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

16. புத்திமான் யூகை சர்லி புரவலர் நேசம் கொள்வன்
சித்தமே மர்ம முள்ளான் சிலேடையாய்ச் சொல்வா
[னாகும்

வித்தையு முடையா னாகும் விளைபுலம் விருத்தி செய்வன்
அத்தியைப் பெற்ற மாதே அறைகுவோம் மேலுங் கேளே.

16. ஜாதகருடைய இளைய சகோதரர் அறிவுடையவர். ஆராய்ச்சி செய்யுந் தன்மையுள்ள புத்திசாலி. அரசர்களுடைய சினேகத்தை யுடையவர். இரகசியமான மனத்தை யுடையவர். ஒரு வார்த்தைக்கு இரண்டு அர்த்தங்கள் ஏற்படும்படியாகத் தந்திரமாகப் பேசுவார். இவர் வாசித்தவராவர், பயிரிடும் நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை அதிகமாக்குவார். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! நாங்கள் இன்னும் அதிகமாகச் சொல்லுகின்றோம். அவற்றைக் கேட்பீராக!

17. சென்னிறம் ஒடிச்ச லுள்ளான் சித்தினி சாதி யாவன்
பன்னுமுன் கோபி யாவன் பாரினில் நல்லோ னவன்
மன்மத னொப்பா னாகும் மாடுகள் விருத்தி யுள்ளான்
உன்னித நடையு மாவன் உறுதியா மனத்த
[னென்றோம்.

17. ஜாதகருடைய இளைய சகோதரர் சிவப்பு நிறத்தை யுடையவர், நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். சித்தினி ஜாதி* என்ற ஒருவித ஜாதியைச் சேர்ந்தவர். இவர் முன் கோபத்தை யுடையவர். பூமியில் நல்லவராக விருப்பார். இவர் மன்மதனைப் போல அழகான தேகத்தை யுடையவர், ஆடு மாடுகளை விருத்தியாக்குவார். இவர் அழகான நடை நொடி பாவனைகளை யுடையவர். திடமான மனத்தை யுடையவராவர் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—சித்தினி ஜாதி:—இது விஷயமாய் சாமுத்திரிகா லக்ஷணம் என்ற புத்தகம் இரண்டாவது பாகம், 71-ஆவது பக்கத்தைப் பார்க்கவும். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவர் மழ மழப்பான அழகிய தேகத்தையுடையவர். மானைப் போன்ற கண்களையும், தாமரையைப் போன்ற முகத்தையும், யானையைப் போன்ற கம்பீரமான நடையையும், அதிக சுபமான தொனியையும் உடையவர்.

18 தந்திர வாதி யாகும் தன் பந்தைச் சேரானாகும்
இந்திரன் போலே வாழ்வன் இவனுடன் கூடி வாழ்வன்
பந்தமாய்ப் புத்திர பாகம் பகருவோ மாண்பா லொன்று
சந்ததகம் பெண் பால் ரெண்டு தாரமு மொன்று
[சொன்னோம்.

18. ஜாதகருடைய சகோதரர் பக்குவமாகவும் சாமர்த்தியமாகவும் பிறரிடத்தில் நடந்து கொள்ளுபவராவர். தன்னுடைய பந்துக்களிடத்தில் நெருங்கி சேர்ந்திருக்க மாட்டார். தேவேந்திரனைப் போலே வாழ்வார்,

இவர் ஜாதகருடன் கூடி வாழ்வார் இவருக்குச் சந்ததிகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு பிள்ளையும் இரண்டு பெண்களும் உண்டு. இவருக்கு ஒரே ஒரு மனைவி என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய விவாககாலமும் மனைவியின் குணாதிசயங்களும்

19. வயதுமே தீர்க்க மாகும் மங்கையின் சேதி தன்னை
நயமுடன் இரண்டில் சொல்வேன் நாயகன் மணத்தின் [காலம்
பயமிலா பதினே ழாண்டு பாவையும் தக்ஷி ணத்தில்
தயவுடன் வருவா ளாகும் சத்தியின் குணத்தைக் [கேளாய்.

19. ஜாதகரின் சகோதரருடைய மனைவி நீண்ட ஆயுளை உடையவள். இவளுடைய மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவருக்குப் பதினேழாவது வயதில்* மனைவி தெற்குத் திக்கில் இருந்து வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். கேட்பீராக.

*குறிப்பு:—விவாககால விஷயம்: ஜாதகருக்கு வயது ௵ 17—11—00 வரையிலும் சுக்கிர தசை நடக்கின்றது. சுக்கிரன் ஒன்பதிற்குடையவர். மேலும் இவர் குடும்பாதிபதியும் களத்திரக் காரகனுமாக விருக்கின்றார். ஜாதக பாரி ஜாதம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம், ஒன்பதிற் குடையவராகிய சுக்கிரன் விவாகஞ் செய்து வைக்க அதிகாரம் உடையவராக விருக்கின்றார். புத புக்தி வயது ௵ 10—9—0 வரையிலும் நடக்கின்றது. இந்தச் சுலோகப் பிரகாரம் புதன் பத்திற் குடையவராக விருப்பதால் விவாகஞ் செய்து வைக்க அமைப்பு உடையவராக விருக்கின்றார். ஆகையால் சுக்கிர தசையில் புத புக்தியில் பதினேழாவது வயதில் விவாகம் நடைபெற அமைப்பு உண்டு,

20, அன்னம் போல் நடையு முள்ளாள் ஆளனுக் கினிய [ளாகும்.
கன்னென மொழியு முள்ளாள் காதலி அதிர்ஷ்ட சாலி
இன்னவள் சீல முள்ளாள் யாவர்க்கு நல்லோ ளாவள்
தன்னிலே பொறுமை யுண்டு தர்மமாம் குணத்த ளாகும்.

20. ஜாதகருடைய மனைவியானவள் அன்னப் பறவையைப் போல் அழகான நடையை யுடையவள், இவள் தன்னுடைய புருஷனுக்கு

இஷ்டமானவளாவள், இவள் சர்க்கரையைப் போன்ற இனிப்பான சொற்களை யுடையுவள், இவள் யோகசாலியாக விருப்பாள் இவள் சாந்தமான குணத்தை யுடையவள், தானதர்மங்களைச் செய்கின்ற குணத்தையும் மனத்தை யுடையவளாகும்.

21. அற்பரை உறவு கொள்ளாள் அன்னங்கள் போட [வல்லாள்
பற்பலர் மெச்ச வாழ்வள் பகையது மனதில் வையாள்
கற்பினி லுடையா ளாகும் கனத்த தோர் புத்தி மானும்
துர்க்குண மில்லா ளென்றோம் துருசான கோபி யாவள்.

21. ஜாதகருடைய மனைவி இழிவானவர்களுடனும், தாழ்ந்த குணமுடையவர்களுடனும் சிநேகஞ் செய்ய மாட்டாள். பிறருக்குச் சாப்பாட்டைப் போடுஞ் சக்தியுள்ளவள். இவள் தன்னை அநேகர் புகழும்படியாகவும் கொண்டாடும்படியாகவும் வாழ்வாள். தன்னுடைய மனத்தில் விரோதத்தை யுடையவளல்லள். இவள் கற்புடையவளாவள். மேன்மையான அறிவை யுடையவளாவள். இவள் கெட்ட குணங்களையுடையவளல்லள் என்று சொல்லுகிறோம். இவள் கோபமுடையவளாக விருப்பாள்.

22. முனிவ ரிவ்விதமாய்க் கூற மொழிகுவா ளம்மன் தானும்
இனிமையாய் மணங்கள தானும் எந்திடம் நடக்கும் [சொல்வாய்க்
கனமுள குடும்பந் தன்னில் கந்தனு மிருப்ப தாலும்
அனையவே ஏழில் காரி அணுகிய தாலே யம்மா.

22. வசிஷ்ட மகரிஷி இவ்வாறு சொல்ல, பார்வதியம்மையார் இவரைக் கேட்கின்றார். ஜாதகருக்கு விவாகம் எந்த இடத்தில் நடக்கும் என்பதைச் சொல்லுவீர். குடும்பம் என்ற இரண்டாவது வீட்டில் கந்தன் என்ற அங்காரகன் இருப்பதாலும், ஏழாவது வீட்டில் காரி என்ற சனி இருப்பதாலும் பார்வதியம்மையாரே !

23. தென்திசை மாதுர் வர்க்கம் க்ஷேத்திரம் தன்னி லேதான்
இன்னவன் மணங்கள் கூடும் ஏது காரணத்தி னாலே
தன் னுடைய வீட்டி லேதான் சாருத காரணத்தை
முன்னமே சொல்லு மென்ன மொழிகிறார் முனிவர் [தானே.

23. ஜாதகருக்கு, தெற்குத் திக்கில் தன்னுடைய தாயாருடைய பாத்தியத்தில் சம்மந்தப்பட்ட இடத்தில் இவருடைய கலியாணம் நடைபெறும். எந்தக் காரணத்தினால் விவாகம் தன்னுடைய வீட்டில் நடைபெறாது என்பதை உடனே சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, வசிஷ்டமகரிஷி பதில் சொல்லுகின்றார்.

24, பந்துவு ஞாதி யோரும் பகையாகி யிருப்பா ரென்றோம்
எந்ததோர் காரணத் தாலே யியம்பினீர் முனியே
[யென்றாள்
அன்னையால் வந்ததீம்பு அணுகிடும் பிறர் தேசத்தில்
உன்னித மணங்கள் செய்வன் உத்தமி கேட்டி டாயே.

24. ஜாதகருடைய பந்துக்களும், பங்காளிகளும் இவருடைய குடும்பத்தாருடன் விரோதமுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். இவ்விதமாக விருப்பதற்குக் காரணம் என்ன வென்று பார்வதியம்மையார் முனிவரைக் கேட்டார். இந்தப் பகை தாயாருடைய செய்கையால் வந்து நேரிட்டது. ஆகையால் விவாகம் அன்னியருடைய கிராமத்தில் நடைபெறும். பார்வதியம்மையே ! கேட்பீராக என்று வசிஷ்டரிஷி பதில் சொல்லுகின்றார்.

25. உத்தமி தன்னால் நேர்ந்த உற்றதோர் பகையைச்
[சொல்லாய்
பத்தினி குணத்தைச் சொல்வேன் பஞ்சையில் யிரக்க
[முண்டு
சுத்தமா மனது முள்ளாள் சீலமும் பொறுமை யுண்டு
வித்தகி நற் குணத்தாள் வீணப வாத முள்ளாள்.

25. ஜாதகருடைய தாயாரால் ஏற்பட்ட விரோதத்தின் விவரத்தைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்க, வசிஷ்ட ரிஷி தாயாருடைய குணதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன் என்றார். இவள் ஏழைகளிடத்தில் தயாள குணமுள்ளவள். இவள் நல்ல மனத்தை யுடையவளாவள், சுத்தமும் நற்குணமும் நல்லொழுக்கமு முடையவள். சாந்தமான குணத்தை யுடையவள். இவள் நல்ல குணங்களை யுடையவள். ஆனால் வீணான குற்றங்கள் சாட்டப்பட்டவளாவாள்.

26. நிந்தையு முடைய ளாகும் நிதானமாய் வார்த்தை
[சொல்வள்
பந்து விரோத முண்டு பரிவுடன் அன்ன மீவள்
சந்ததகம் சிவந்த மேனி தரளம் போல் தந்த முள்ளாள்
விந்தையாய் நடையு மாவள் மேலவர் பக்தி கொள்வள்.

26. ஜாதகருடைய தாயார் அபவாதங்களை யுடையவளாவள், இவள் சாந்தமாகப் பேசுவாள், இவள் பந்துக்களினுடைய விரோதத்தை யுடையவள், பிறருக்கு ஆசையுடன் சாப்பாட்டைப் போடுவாள். இவள் சிவப்பான நிறத்தையுடைய தேகத்தை யுடையவள். இவளுடைய பற்கள் முத்தைப் போல வெளுப்பாகவும் அழகாகவு மிருக்கும். இவள் மெச்சத்தக்க நடையையுடையவள். பெரியோர்களிடத்திலும் வானோர்களிடத்திலும் அன்புள்ளவளாவள்.

27. அவளுடைய தாய் குடும்பம் அழிந்திடும் யென்று
[சொன்னோம்
நவனியில் சிலர்கள் நிந்தை நவின்றனர் சங்கை யாலே
அவனியோர் பகைய தாகும் அதிகமாம் விரோத முண்டு
பவமுள இவள் முன் சென்மம் பகருவோம் கேளுமம்மா.

27. ஜாதகருடைய தாயாரின் தாயார் குடும்பம் நசித்துப் போய்விடும் என்று சொல்லுகின்றோம். சிலர் இவர்களுடைய குடும்பத்தைப் பற்றிக் குற்றங்களைச் சாட்டி இருக்கின்றூர். பந்துக்கள் விரோதமுடையவர்களாக விருப்பார்கள். அதிகமான பகையாளிகளாக விருப்பார்கள். ஜாதகருடைய தாயாரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம், பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருடைய தாயாரின் முன்ஜன்மம்

28. தில்லையில் பிரம்ம சேயாய்ச் செனித்துமே மதலை யின்றி
வல்லியும் வரனுங் கூட வளமுள தலங்கள் சென்று
நல்லதோர் சேது புக்கி நற்றீர்த்தம் தோய்ந்துமே தான்
அல்லலை அகற்று கின்ற அரிலிங்கம் அர்ச்சித் தேத்தி

28. ஜாதகருடைய தாயார், சிதம்பரத்தில் பிராமணர் குலத்தில் பிறந்து குழந்தை யில்லாமல், தானும் தன் புருஷனும் மேன்மையான சிறந்த தெய்வீகமான ஸ்தலங்களுக்குப் போயும், சேது என்ற நல்ல ஸ்தலத்திற்குப் போய் அங்கு ஸ்நானஞ் செய்தும், கஷ்டங்களையும் முன் வினையையும் நீக்குகின்ற சிவலிங்கச் சொருபமானச் சிவபெருமானுக்கு அர்ச்சனை முதலிய தொண்டுகளைச் செய்தும்.

29. அங்கொரு மடத்தில் சேர்ந்தார் ஆளனு மனைவி யோடு
பொங்கமாய் இருக்கும் காலை பேசுவோ மூழி தானே
மங்கையும் வேசி தானும் வந்தனள் அந் திடத்தில்
இங்கித வார்த்தை சொல்லி இவள்வரன் அவள் பால்
[செல்ல.

29. பிறகு அங்கேயுள்ள ஒரு மடத்திற்குத் தானும் தன் புருஷனுமாகப் போய்ச் சேர்ந்தார்கள். இவ்விடத்தில் சந்தோஷமாக விருக்கும் போது, சம்பவித்த வினையைச் சொல்லுகின்றோம். ஒரு தாசி ஸ்திரீ இந்த விடத்திற்கு வந்து சேர்ந்தாள். ஜாதகருடைய தாயாரின் (முன் ஜன்மத்திய) புருஷன் இனிமையான வார்த்தைகளைப் பேசி அந்த தாசியினிடம் போனூர்.

30. இன்னவள் சங்கை யுற்று இயம்புவாள் கோப மாக
பன்னிய பல வாருகப் பாவையை யேச லுற்ருள்

அன்னவள் தாசி தானும் அவள் மனம் வெறுப்
[புண்டாகி
உன்னத சாபம் சொல்வாள் உத்தமி கேட் டிடாயே.

30. ஜாதகருடைய தாயார் சந்தேகப்பட்டுக் கோபமாகச் சொல்லு கின்ருள். இவள் பலவித தூஷணமாக இந்தத் தாசியைப் பார்த்துச் சொன்னுள். இதன் மேல் இந்தச் தாசியானவள் மனத்தில் கஷ்டங்களை யடைந்து சாபத்தைக் கொடுத்தாள், பார்வதியம்மையே ! கேட்பீராக.

31. மற்ருெரு சென்மம் தோன்றி மதலைகள் உள்ளா ளாகி
உற்றதோர் காலம் தன்னில் உன் வரன் மரணமாகி
சுற்றத்தார் பகையு மாகி சிலசில நிந்தை யாகி
குற்றங்கள் அனந்த மாக கூறவும் துணைவர் யின்றி

31. "நீ மறு ஜன்மத்தை அடைந்து, குழந்தைகளை யுடையவளாகி, உன்னுடைய புருஷன் (உனக்கு முன்னே) இறந்து, உன்னுடைய பந்துக் களின் விரோதத்தை யடைந்து, உன்மேல் சிற்சில பழிகளும் அபவாதங் களும் ஏற்பட்டு, கூடப் பிறந்தவர்கள் இல்லாமல் ;

32. வாழ்குவாய் யென்று சொல்லி வேசியும் சொல்லிக்
[கொண்டே
தாழ்வான மனத்த ளாகித் தடத்தினில் செல்ல லுற்ருள்
சூழ்ந்தது அந்தத் தோஷம் தோகையைப் பற்றின தால்
ஆழியில் அச் சென்மத்தில் அவளுக்குச் சுதர்க ளின்றி.

32. வாழக் கடவாய்'. என்று வேசியானவள் சொல்லிக் கொண்டே நொந்த மனத்தை யுடையவளாகி அந்த மடத்தில் போக வாரம்பித்தாள். இந்தத் தாசியினுடைய சாபம் ஜாதகருடைய தாயாரை வந்து அனுயகிதால் இவள் முன் ஜன்மத்தில் தனக்குப் பிள்ளைகள் இல்லாமல் ;

33. வரனுக்கு முன்னே மாண்டு வந்தன ளிவளே
[யென்ருேம்
அறைகிருே மிச் சென்மத்தில் அவ்வேசி சாபம் தானும்
உறைந்தது என்று சொன்ேனும் உறன் முறை பகைய
[தாலே
திரு மணம் அன்னிய தேசம் செய்குவர் ளிவளே
[யென்ருேம்.

33. தன்னுடைய புருஷனுக்கு முன்னே இறந்து இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ருேம். ஆகையால் இவளுக்கு இந்த ஜன்மத்தில் அந்த வேசியின் சாபம் வந்து சம்பவித்தது

என்று சொல்லுகின்றோம். இவளுடைய சுற்றத்தார்களின் பகையால் இவள் வேறொரு கிராமத்தில் இவளுடைய பிள்ளையின் (அஃதாவது இந்த ஜாதகரின்) விவாகத்தை நடத்தி வைப்பாள் என்று சொல்லுகின்றோம்.

34. சாதகன் தனக்குப் புத்திரர் சாற்று மாண் பலத்தைக் [காணோம்
மேதினில் பெண்பால் ரெண்டு விருத்தியா மிவனுக்கே [தான்
மாதவர் சொல்லும் போது வதிஷ்டரைக் கேழ்க்க [லுற்றார்
தீதுகள் ஆண் பாலுக்குச் செப்பினீர் இந்தச் சேதி.

34. ஜாதகருக்கு ஆண் குழந்தைகள் பிறப்பதற்கு யாதொரு வலிவு மில்லை. இவருக்கு இரண்டு பெண்கள் பிறந்து விருத்தி யடையவார்கள். இவ்விதமாக வசிஷ்டரிஷி சொல்லும் போது, பார்வதியம்மையார், வசிஷ்டரைக் கேட்கின்றார். ஆண் குழந்தைகளுக்குக் கெடுதியைச் சொன்னீரே, இது விஷயமாக;

35. ஏது காரணத்தி னாலே யியம் பினீர் முனியே யென்றாள்
ஓதுவேன் அஞ்சில் ராகு உறைந்துமே அஷ்ட [மத்தோன்
கோதிலா பார்த்த தாலே குறித்தன மந்தச் சங்கை
பாதகன் முன் சென்மத்தில் பண்ணின தோஷத் தாலே.

35. என்ன காரணத்தினால் இவ்விதமாகச் சொன்னீர் முனிவரே! என்று பார்வதியம்மையார் கேட்க முனிவர் பதில் சொலுகின்றார். ஐந்தாமிடத்தில் இராகு இருப்பதாலும், எட்டாம் வீட்டிற்குடையவராகிய அங்காரகன் (நான்காவது பார்வையுடன்) இந்த ஐந்தாவது வீட்டைப் பார்ப்பதாலும் இந்தத் தோஷத்தைச் சொன்னோம் என்றார் முனிவர். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் செய்த பாவங்களினாலே

குறிப்பு:—புத்திரகாரனாகிய குரு, ஐந்தில் மகரத்தில் நீசமாகி, இராகுவுடன் கூடியிருப்பது தோஷமாகும். ஒரு பாவகாரகன் தன்னுடைய பாவத்திலே இருப்பது அந்தப் பாவத்திற்கு தோஷத்தை விளைவிக்கும்—அஃதாவது புத்திர பாவத்திற்குக் காரகராகிய குரு, புத்திர பாவத்திலேயே இருப்பது புத்திர தோஷத்தை விளைவிக்கும். இது விஷயமாகப் பல தீபிகை பதினைந்தாவது அத்தியாயம் இருபத்தாறுவது சுலோகத்தை வாசிக்கவும். கீரனூர் நடராஜருடைய ஜாதகாலங்காரம் ஐந்நூற்றுத் தொண்ணூறுவது (590) பாடலை (இராகுவும் குருவும் ஐந்திலிருக்கும் விஷயமாக)ப் பார்க்கவும்.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

36. சுதர்களு மில்லை யென்றோம் சுந்திரன் முன்னூழ் செய்த
விதங்கள் சொல்லு மென்ன விளம்புவார் முனிவர் [தானும்
வதிபனும் முன் சென்மத்தில் மாபெலி நகரிலே தான்
சதியிலா சைவ சேயாய்த் தானவ் னுதித்தா னென்றோம்.

36. பிள்ளைகள் கிடையா என்று சொன்னோம். ஜாதகர் முன் ஜன்மத்தில் செய்த பாபங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, வசிஷ்டமகரிஷி பதில் சொல்லுகின்றார். இவர் தன்னுடைய முன் ஜன்மத்தில் மஹாபலி புரத்தில் சைவகுலத்தில் ஆணாகப் பிறந்தார் என்று சொல்லுகின்றோம்.

37. உதித்துமே பெருமை யுண்டாய் உயர் பூமி விசேஷ மாக
பதியினில் திருவு முண்டாய் பாக்கிய முள்ளோ னாகிச்
சுதர்களும் விருத்தி யாகிச் சுகமுடன் வாழுந் நாளில்
விதியினால் வந்த ஊழை விளம்புவோம் கேளு மம்மா.

37. ஜாதகர் பிறந்து புகழுடையவராகி மேன்மையான சிறந்த நிலங்களை அதிகமாக உடையவராகிச் செல்வத்தையும் இதர பாக்கியங்களையும் உடையவராகிப் பிள்ளைகளும் பிறந்து வளர்ந்து கொண்டு, எல்லா சௌக்கியங்களுடனும் வாழ்கின்ற காலத்தில் தலை விதியால் வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

38. இல்லத்தில் ஓர் நாள் தன்னில் யிலகிற்று மனையின் [நாகம்
வல்லவன் அதனைக் கண்டு வாட்டினான் கழியி னாலே
நல்லதோர் பணியும் சூலாய் நமபுரம் சென்ற தென்றோம்
புல்கிற்று அந்தத் தோஷம் புகலுவோம் இன்ன [மொன்று.

38. ஜாதகருடைய வீட்டில் வசித்துக் கொண்டிருந்த ஒரு மனை நாகப் பாம்பு தன்னிடத்தை விட்டு வெளியே வந்தது. இதை ஜாதகர் பார்த்து ஒரு தடியால் இதனை அடித்தார். கர்ப்பமாயிருந்த இந்த நாகப்பாம்பு சினையுடன் இறந்து எம பட்டணத்திற்குப் போய் விட்டது என்று சொல்லுகின்றோம். இந்தத் தோஷம் ஜாதகரை வந்து அடைந்தது. மேலும் இன்னொரு பாபத்தையும் சொல்லுகின்றோம்.

39. மறைகுல மாது தன்னை மைந்தனும் காதல் கொண்டு
விரைவினில் கள்ள போக மெய்தின னிதுவே யின்றி.
உறைந்தது இரு தோஷந் தான் உத்தமன் [அந்தியத்தில்
பெரு நதி சேது புக்கிப் புண்ணிய தலங்கள் சென்று.

39. பிராமண குலத்திற் பிறந்த ஒரு ஸ்திரீயின்மேல் ஜாதகர் மையல் என்ற காம ஆசையை யுடையவராகித் திருட்டுத்தனமாக அவளு டன் சம்போகஞ் செய்தார். இது ஒரு தோஷமாயிற்று. இவ்விதமாக இரண்டு தோஷங்கள் நேர்ந்து விட்டன. ஜாதகர் தன்னுடைய கடைசி காலத்தில் பெரிய நதிகளையுடைய தெய்வ ஸ்தலங்களுக்கும் சேது என்ற ஸ்தலத் திற்கும் இன்னும் சில ஸ்தலங்களுக்கும் சென்றும்,

40. தானங்கள் பலவு மீந்து தன்னூரில் தாகப் பந்தல்
ஊன மில்லாமல் வைத்து உத்தமன் மரண மாகி
ஆனதோர் கஞ்சன் தன்னால் அவனுமே வரையப் பட்டு
மானமா யிக் குலத்தில் வந்தவ னிவனே யென்றோம்.

40. பலவிதமான தானதர்மங்களை ஜாதகர் செய்தும், தன்னுடைய கிராமத்தில் ஒரு தண்ணீர்ப் பந்தல் வைத்துப் பிறகு இறந்து போய், பிரம தேவனால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் இந்தக் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம்.

41. இந்ததோர் சென்மம் தன்னில் யிலகிற்று முன்னாழ் [தோஷம்
பந்தமாய் முனிவர் கூற பராசரும் கேழ்க்க லுற்றார்
சந்ததம் முன் சென்மத்தில் சைவமா யுதித்தா னென்றீர்
பிந்திய சென்மம் தன்னில் பேசினீர் மறையோ னாக.

41. ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் முன் ஜன்மத்திய தோஷங்கள் வந்து சம்பவித்தன என்று வசிஷ்ட மகரிஷி சொல்லவே பராசர மகரிஷியா னவர் கேட்கின்றார். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சைவ குலத்திற் பிறந்தார் என்று சொன்னீரே; ஆனால் இந்த ஜன்மத்தில் பிராமணர் குலத்திற் பிறந்தார் என்று சொன்னீரே.

42. வந்த காரணங்கள் சொல்வீர் மறை முனி சொல்லு [கின்றார்
முந்திய சென்மம் தன்னில் முயற்சியாய்ச் சேது தீர்த்தம்
சந்ததம் தாகப் பந்தல் தானவன் செய்த லாலும்
இந்த தோர் சென்மம் தன்னில் யிலகினான் மறையோ [னாக.

42. இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று பராசர முனிவர் கேட்டார். இதற்கு வசிஷ்டர் பதில் சொல்லுகின்றார். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சேது ஸ்தலத்திற்குப் போய் அங்குள்ள புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்ததாலும், தண்ணீர் பந்தலை வைத்ததாலும் இவற்றின் பயனாக ஜாதகர் இந்த ஜன்மத்தில் பிராமணராக வந்து பிறந்திருக் கின்றார்.

43. இவ்வித புண்ணி யத்தால் யிலகாதே முன்னூழ் தானும்
திவ்விய யிவனுக்குச் செனனமே உயர்வ தாகும்
செவ்விய நாக தோஷம் விலகாது யவனுக்கே தான்
பவ்வமாய்த் தோஷம் தீர பகருவோம் சாந்தி யொன்று.

43. இவ்விதமான புண்ணியங்களினுல் ஜாதகருக்கு முன் ஜன்மத்திய பாவங்கள் வந்து சம்பவிக்க மாட்டா. இவருக்கு உயர்வான ஜன்மம் கிடைக்கும். நாகப்பாம்பைக் கொன்ற தோஷம் இவரை விட்டு நீங்காது என்று சொன்னேம். இந்தத்தோஷம் நிவர்த்தியாவதற்கு ஓர் பரிகாரத்தைச் சொல்லுகின்றேம்.

44. அன்னகர் உத்தி ரத்தில் அழகிய தடாகம் பக்கல்
முந்திய அரசு நிற்கும் முயற்சியா யருகிலே தான்
சந்ததம் சிலையில் நாகம் தான் பிரதிட்டை செய்து வந்து
வந்து பின் ஆண் பால் தோன்றில் வரைந்திட்டோம்
[வயது தீர்க்கம்.

44. இவர் பிறந்த கிராமத்தின் வடக்குத் திக்கில் ஒரு நல்ல அழகான குளத்தின் பக்கத்தில் ஓர் அரச மரம் இருக்கும். இதன் சமீபத்தில் முயற்சி செய்து நாகப்பாம்பு சிலையொன்றைப் பிரதிஷ்டை செய்த பிறகு, இதன் பயனுக ஆண் குழந்தை ஜாதகருக்குப் பிறந்தால், இந்தக் குழந்தை நீண்ட வயதை யுடையதாக விருக்கும் என்று சொல்லுகின்றேம்.

45. சொற்படிச் செய்யா னுகில் துலங்காது சுதர்க ளாண்பால்
சொற்படிச் செய்வா னுகில் தோன்றிடும் ஆண்பா
[லொன்று
மெய்யுடன் பெண் பால் ரெண்டு விருத்தியா மிவனுக்கே
[தான்
அப்பணி சடை யோன் தேவி அருளிய மொழி குன்றுது.

45. நாங்கள் சொல்லிய பிரகாரம் ஜாதகர் சாந்தியைச் செய்யா விட்டால் ஆண் குழந்தை உண்டாகாது. நாங்கள் சொல்லியபடிச் செய்தால் ஓர் ஆண் குழந்தை பிறக்கும். மேலும் இரண்டு பெண்களும் பிறந்து விருத்தியை அடையும். நாகத்தைத் தன்னுடைய ஜடையில் தரித்துள்ள சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

46. தந்தையின் முன் சென்மத்தைச் சாற்றுவோம் பரங்
[குன்றத்தில்
வந்த செங்குந்த வம்சம் மரபினி லுதித்து மேலும்

சந்ததம் தனங்கள் பெற்றுச் சண்முகர்க் கடுமை பூண்டு
சொந்தமாய் ரதமும் செய்து சோலை பூஞ் செடியும்
[வைத்து.

46. ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவர் திருப்பறங் குன்றம் என்ற திவ்விய ஸ்தலத்தில் செங்குந்தர் குலத்தில் பிறந்து, செல்வத்தை, யடைந்து, முருகக் கடவுளுக்கு அடிமையாகித், தொண்டுகளைச் செய்து, தன்னுடைய சொந்த பணத்தினாலே ஒரு ரதத்தைச் செய்து வைத்ததுமன்றி, அழகிய நந்தனவனங்களையும் பூந்தோட்டங்களையும் ஏற்படுத்தி,

47. வருவோர்க்கு அன்ன மீந்து மாநில நல்லோ னாகி
பெரும் பொருளிலே சுவர் வைத்து பிழைகளு மில்லா
[தாகி
அறைகிறோ மந்தி யத்தில் அனாயாச மரண மாகி
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனின் தந்தை.

47. கோயிலுக்கு வருபவர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டு, இந்தப் பூமியில் (ஜாதகருடைய தகப்பனார்) நல்லவராக விருந்து, அதிக பணத்தைச் செலவு செய்து ஓர் மதில் சுவரைக் கட்டி, குற்றங்களையும் பாவங்களையும் செய்யாதவராக விருந்து வாழ்ந்து, தன்னுடைய கடைசி காலத்தில் பாதை படாமல் சீக்கிரத்தில் இறந்து, பிரமதேவரால்பிரமலிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார்.

## ஜாதகரின் தகப்பனாருடைய பின் ஜன்மம்

48. பின் சென்மம் காசி தன்னில் பேசினோ மிக் குலத்தில்
அன்புட னுதிப்பா னாகும் அரனையே பூசை செய்து
துன்ப மில்லாமல் வாழ்ந்து செல்லுவான் தேவ னாக
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழி குன்றாது.

48. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய மறு ஜன்மத்தில் காசி க்ஷேத்திரத்தில் பிராமணர் வம்சத்திற் போய்ப் பிறப்பார். சிவ பெருமானைப் பின் ஜன்மத்தில் பூஜை செய்து வழிப்பட்டுக் கஷ்டங்கள் இல்லாமல் வாழ்ந்து, பிறகு இறந்து, தேவராகப் போய் விடுவார். முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் ஒன்றுந் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தந்தை தாயார் மரண காலம்

49. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மொன்பா
[னாண்டில்
சந்ததம். ஆனி மாதம் சாற்றினோம் கெண்டம் தானே

*பிந்திய அன்னைக்கே தான் பேசுவோ முப்பா னுலில்*
*முந்திய கன்னி மாதம் மொழிந் திட்டோம் மாரகங்கள்*

49. ஜாதகருடைய தகப்பனுரின் மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு ஒன்பதாவது வயதில் ஆனி மாதத்தில் தன்னுடைய தகப்பனுர் இறந்துவிடுவார். தாயார் பின்னுல் ஜாதகருக்கு முப்பத்தினுன்காவது வயதில் *கன்னி மாதம் என்ற புரட்டாசி மாதத்தில் இறந்துவிடுவாள் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—பிதுர் மரணகாலம் :—ஜாதகருக்கு ஒன்பதாவது வயதில் சுக்கிர தசையில் ராகு புக்தியும் குரு புக்தியும் நடக்கின்றன. பிதுர் லக்கினமாகிய ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் பிதுர் லக்கின மாகும். இதற்குரிய சுக்கிரன் சூரியனுடன் கூடி அஸ்த மடைந்திருப்பது பிதுர் தோஷமாகும். ரிஷபத்தை அங்காரகன் எட்டாவது பார்வையாகப் பார்ப்பது பிதுர் தோஷமாகும். ரிஷபத்தைச் சனி மூன்ருவது பார்வையாகப் பார்ப்பது பிதுர்தோஷ மாகும். சூரியன் ஏழாவது பார்வையாகப் பார்ப்பது பிதுர் தோஷமாகும். கேது பதினேராவது பார்வையுடன் பார்ப்பது பிதுர் தோஷமாகும். பிதுர் ஸ்தானத்திற்கு ஆயுள் ஸ்தானுதிபதி யாகிய குரு ராகுவுடன் கூடி நீசமடைந்திருப்பது பிதாவுக்கு ஆயுள் குறைவை உண்டாக்கும். குரு ரிஷபத்திற்கு அட்டமாதி பதியாகி ரிஷபத்தையே பார்ப்பது பிதுருக்கு ஆயுள் குறைவை உண்டுபண்ணும். ஆகையால் பிதுருக்கு அதிக தோஷம் இருக்கின்றது. சுக்கிரன் பிதுர் லக்னத்திற்கு ஆறுக்குடையவ ராகி ஏழாவது வீட்டில் இருப்பதால் பிதுருக்கு மாரகஞ் செய்ய சுக்கிரனுக்கு அதிகாரம் இருக்கின்றது. ஜாதக சந்திரிகை இருபத்திரண்டாவது நாற்பத்தாருவது சுலோகத்தையும் குமார சாமியம் மகா திசைப்படலம் நான்காவது பாடலையும் இங்கு வாசிக்கவும். ஆகையால் சுக்கிரன் பிதுருக்கு மாரகாதிபதி யாகின்ருர். சுக்கிர நாடி பிரகாரம் (லக்கின பாவாதிபதி தவிர) ஒரு பாவாதிபதியின் தசையில் அந்த பாவம் சம்மந்தப்பட்ட மனிதருக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது. (அஃதாவது ஒன்பதாவது பாவாதிபதியின் தசையில் ஒன்பதாவது பாவ மனிதராகிய பிதுருக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக்கிறது. ஆகையால் சுக்கிரன் தன் தசையில் பிதுருக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடைவராக விருக்கின்ருர். ராகு பிதுர் லக்னுதிபதி யாகிய சுக்கிரனைப் பதினேராம் பார்வையுடன் பார்க்கின்ருர். ரிஷபத்திற்கு எட்டிற்குடைய குருவுடன் கூடியும் இருக்கின்ருர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்களின் பிரகாரம், ராகுவிற்குத் தன் புத்தியில் பிதுருக்கு மாரகஞ் செய்ய அதிகாரம் இருக்கின்றது. ஆனுல் ஜாதகருக்கு ஆனி மாதத்தில் வயது சுமார் எட்டு வருஷமும் ஏழு மாதமும் நடக்கும். அப்போது ராகு புக்தி போய், குருபுக்தி

நடக்கும். குரு ரிஷபத்திற்கு எட்டிற்குடையவராய் நீசத்தை யடைந்து பலவினமாக விருக்கின்றார். ஆகையால் ஜாதக சந்திரிகை நாற்பதாவது சுலோகம், துய்ய கேரளம் எட்டாம் பாவம் பதினுன்காவது பாடல் பிரகாரம் இராகுவைவிட குரு விற்குத் தன் புக்தியில் பிதுர் மாரகஞ் செய்ய அதிக அதிகார மிருக்கின்றது.

*மாதுர் மாரக விஷயம்:—ஜாதகருக்கு முப்பத்து நான்காவது வயதில் புரட்டாசி மாதத்தில் சந்திர தசையில் சூரிய புத்தி நடக்கின்றது. நான்காவது பாவகாரகராகிய சந்திரன், நான்காவது பாவத்திலேயே யிருப்பதால் சுக்கிரநாடி பிரகாரம் சந்திரன் மாதுருக்கு மாரகஞ் செய்ய அதிகாரம் பெற்றிருக் கின்றார். இவர் மாதுர் லக்னமாகிய தனுசிற்கு அஷ்டமாதிபதி யாக விருப்பதால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பதினுன்கா வது பாடல் பிரகாரம் மாரகம் செய்ய அதிகாரமுடையவராக விருக்கின்றார். மேலும், இவர் கர்மாதிபதியாகிய புதனுடன் கூடியிருக்கின்றார். தனுர் லக்னத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோக பிரகாரம் சுக்கிரன் மாரகர். சுக்கிர னுடன் சம்பந்தப்பட்ட சூரியன் ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றாவது சுலோக பிரகாரம் மாரகஞ் செய்ய அதிக பலமுள்ளவராகின்றார். ஆகையால் சந்திர தசையில் சூரிய புக்தியில் மாதுருக்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

50. *சாதகன் மரண காலம் சாற்றுவோ மன்பா ளுலில்*
*கோதிலா தனுசு மாதம் கூறிய பருவம் தன்னில்*
*மேதினில் சூலையாலே வித்தக னுடலம் வாடும்*
*தீதிலா பின் சென்மத்தைச் செப்புவோம் கேளு மம்மா.*

50. ஜாதகருடைய மரணகாலத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின் றேம். இவர் ஐம்பத்து நான்காவது வயதில் *தனுசு மாதம் என்ற மார்கழி மாதத்தில், பௌர்ணமி திதி தினத்தில் சூலைநோயால் இறந்துபோய் இவ ருடைய தேகம் அழிந்துபோகும். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றேம், பார்வதியம்மையாரே! கேட்பீராக.

குறிப்பு:—*ஜாதகருடைய மரணகாலம்:—ஜாதகருக்கு ஐம்பத்து நான்காவது வயதில் மார்கழி மாதத்தில் வயது சுமார் 53 வஷ ஒரு மாதம் ஆகின்றது. அப்போது ராகு தசையில் சுக்கிர புக்தி நடக்கின் றது. ஜாதக சந்திரிகை ஐம்பத்தினுன்காவது சுலோக பிரகா ரம் ஏழிற்குடைய குருமாரகராகின்றார். இவர் மேலும் நீசமாக விருக்கின்றார். ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றாவது சுலோ கம் பிரகாரம் குருவுடன் சம்மந்தப்பட்ட ராகு, குருவை

விட மாரகஞ்செய்ய, அதிக பலமுடையவராக விருக்கின்றுர். கன்னியா லக்னத்திற்கு இரண்டாவது வீட்டிற்குடையவராகிய சுக்கிரன், ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றுவது சுலோக் பிரகாரம் மாரகராகின்றுர். ஆனுல் ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகத்தில் சுக்கிரன் கொல்லமாட்டார் என்று சொல்லி இருக்கின்றது. ஆயினும் இங்கு சுக்கிரன் சூரிய னுடன் கூடி அஸ்தமன அடைந்திருப்பதால் மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றுர். ஆகையால் ஜாதகருக்கு இராகு தசையில் சுக்கிர புக்தியில் மாரகஞ் சொல்லப்பட்டிருக் கின்றது.

51. ஓதுரு தலத்து மேல்பால் உறைந்திடும் பேரூர் தன்னில்
போதவே யிக் குலத்தில் பிறந்துமே அரசு செய்து
மேதினில் துரகம் யானே வீர நர வாகனங்கள்
நீதியாய்ப் பெருவா னென்ருேம் நிமலியே மேலுங்
[கேளே.

51. வேதங்களை ஓதுகின்ற சிதம்பரம் என்ற ஸ்தலத்திற்கு மேற்கி லுள்ள ஒரு பெரிய கிராமத்தில் பிராமணர் குலத்தில் ஜாதகர் மறுஜன்மத்தில் பிறந்து, அரசாட்சி அதிகாரங்களைச் செலுத்தி குதிரை, யானே போர்வீரர் கள், நரவாகனங்கள் ஆகிய இவற்றை அடைவார் என்று சொல்லுகின்ருேம்; பார்வதியம்மையாரே! நாங்கள் இன்னும் அதிகமாகச் சொல்லப் போவ தைக் கேட்பீராக.

## ஜாதகருடைய யோகபாகம்

52. இன்னவன் யோகச் செய்கை யியம்புவோம் கேளும்
[தாயே
அன்னவன் பதினே ழாண்டு அதுமுதல் மரண மட்டும்
தன்னிலே அரசு செய்வன் சகல பாக்கிய முள்ளான்
உன்னித பெருமை யுள்ளான் உத்தமி கேட் டிடாயே.

52. ஜாதகருடைய யோகங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகின் ருேம். பார்வதியம்மையே! கேட்பீராக. ஜாதகருக்குப் பதினேழாவது வயது முதல் தான் இறந்து போகின்றவரையிலும் இவர் அரசாட்சி செய்வார். எல்லாச் செல்வங்களையும் இவர் உடையவராவர். இவர் அதிக கீர்த்தியை யும் புகழையும் உடையவராவர், பார்வதியம்மையே! கேட்பீராக.

53. மூவேழு ஆண்டு தன்னில் முயற்சியாய்ச் கிருகம்
[செய்வன்
தாவிய பேரைக் காப்பன் சகலரை வசியம் செய்வன்
மேவிய விருபா னேழில் விளங்கிடு நிதி நிட்சேபம்
ஆவலாயப் பூர்வ பூமி அவனுமே சேர்ப்பா னென்ருேம்.

53. ஜாதகர் தனக்கு இருபத்தோராவது வயதில் தன்னுடைய சொந்த முயற்சியால், ஒரு வீட்டைக் கட்டுவார். தன்னிடம் உதவிக்காக வருபவர்களை இவர் காப்பாற்றுவார். எல்லோரும் தன் பக்கமாகவிருக்கும்படி இவர் கைவசப்படுத்திக் கொள்ளுவார். இவர் தனக்கு இருபத்தேழாவது வயதில் செல்வம், புதையல் ஆகிய இவற்றை அடைவார். இவர் தன்னுடைய பெரியோர்களுடைய நிலங்களைச் சேகரித்து வைப்பார் என்று சொல்லுகின்றோம்.



54. அதற்குமே சல்லிய மில்லானுன் யாவர்க்கும் சகாய [னுவன்
மதியினில் திருவும் வாசம் பந்துவு மேலாய் வாழ்வன்
நிதமுமே தர்ம சிந்தை நேர்ந்திடு மென்று சொன்னோம்
ததிநெய் பால் குறைவு மில்லான் சத்தியே மேலுங் [கேளே.

54. இந்தக் காலத்திற்குப் பிறகு, ஜாதகர் கடன் இல்லாதவராவார். இவர் எல்லோருக்கும் உபகாரஞ் செய்வார். மதி என்ற சந்திர தசையில் இவருடைய வீட்டில் லக்ஷ்மி வந்து வாழ்வாள். இவர் தன்னுடைய பந்துக்களின் அந்தஸ்திற்கு அதிகமான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் எப்போதும் தர்மத்தைச் செய்கின்ற எண்ணமுடையவராக விருப்பார் என்று சொல்லுகின்றோம். இவர் தயிர், நெய், பால் ஆகிய இவற்றைக் குறைவில்லாமல் அனுபவிப்பார். பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் அதிமாகச் சொல்லப்போவதைக் கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய பின் ஜன்மம்

55. மாதுரு பின்சென் மத்தை வரைகிறோம் காஞ்சி தன்னில்
தீதிலா யிக்குலத்தில் செனிப்பா ளாம் பெருமை யுள்ளாள்
மாதவர் சொல்லும் போது மங்கையும் கேழ்க்க லுற்றாள்
மேதினில் இச்சென் மத்தில் வேணது விபரம் [சொன்னீர்.

55. ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவள், காஞ்சீபுரத்தில், பிராமணர் குலத்தில் போய்ப் பிறப்பாள். இவள் மேன்மையாக விருப்பாள். இவ்விதமாக வசிஷ்டர் மகரிஷி சொல்லும்போது, பார்வதியம்மையார் தடுத்துக் கேட்கின்றார். இந்த ஜன்மத்தில் தாயாரைப் பற்றி அனேக விஷயங்களைச் சொல்லியிருக்கின்றீர்.

56. ஆகையால் மறு பிறப்பு அருமறை குலமே யென்றீர்
ஓதுவீர் அந்தச் சங்கை உத்தமி தெய்வ பக்தி
மேதினில் பூண்டா ளென்றோம் விளம்பினோ மதனாலே [தான்
பூதல மனந்தோன் தங்கை புண்ணிய வதியே கேளாய்.

56. ஆகையால் ஜாதகருடைய தாயார் தன்னுடைய பின் ஜன்மத்தில் எவ்விதமாகப் பிராமணர் ஜாதியில் பிறப்பாள் என்று சொன்னீர்? இதை விவரமாகச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் முனிவரைப் பார்த்துக் கேட்டார். ஜாதகருடைய தாயார் தெய்வ பக்தியையுடையவளாக இந்தப் பூமியில் வாழ்ந்துவந்தாள். அதனுல் இவள் பிராமண குலத்திற் பிறப்பாள் என்று சொன்னேம். பூமியைத் தன் காலால் அளந்த மகாவிஷ்ணுவின் தங்கையாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

57. பிறந்த சேய் செனன காலம் புகர்தசை ஒருபா னேழும்
சிறந்திடு பதினேர் திங்கள் செப்புவோம் பலனை [யாங்கள்
விரையங்கள் அதிக முண்டு வீரிய தந்தை கண்டம்
உறன் முறைபகைய தாகும் உயர் குடும்பமலேச்ச [லென்றேம்.

57. ஜாதகர் பிறந்த காலத்தில் புகர் என்ற சுக்கிரனுடைய தசையில் இருப்பு பதினேழு வருஷங்களும், பதினெரு மாதங்களும் ஆகும். இந்த தசையின் பலாபலன்களைச் சொல்லுகின்றேம். ஜாதகருடைய குடும்பத்தில் அதிகமான செலவுகள் உண்டு. ஜாதகருடைய தகப்பனர் இறந்துவிடுவார். பந்துக்கள் விரோதிகளாக மாறிவிடுவார்கள். குடும்பத்தில் பலவித அலேச்சல்களும் கஷ்டங்களும் நேரிடும்.

58. மணமுண்டு மன்னர் பேட்டி வந்திடு மதி காரங்கள்
கனமுடன் சல்லிய நேரும் கலக்கமா மனது முண்டு
அனையவே துணைவர் விருத்தி அவனுக்குத் தேக [நோயாம்
பிணையாகும் நினைத்த தெல்லாம் பேசுவோம் விபரம் [ரெண்டில்.

58. ஜாதகருக்கு இந்தச் சுக்கிர தசையில் விவாகம் நடக்கும். அரசர்களுடைய பேட்டி என்ற முகதரிசனம் ஏற்படும். அரசாங்க உத்தியோக அதிகாரங்கள் உண்டாகும். பெருத்த கடன்களும் ஏற்படும், ஜாதகருடைய மனத்திலும் குடும்பத்தாருடைய மனத்திலும் கஷ்டங்களும் துன்பங்களும் உண்டாகும். ஜாதகருக்குச் சகோதரர்கள் பிறந்து விருத்தியடைவார்கள். சகோதரனுக்கு வியாதி உண்டாகும். ஜாதகர் தான் நினைத்த விஷயங்கள் எல்லாம் விரோதமாக நடைபெறும். இனிமேல் விவரங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேம்.

—C. G. R.

# ஜாதகம் 4.

## ஜனனகால கிரகநிலை

**1.** [1]மதி குரு [2]மேறு வாக [3]மந்தனும் ராகு [4]தூக்கம்
புதன் [5]புகர் கேது மேடம் [6]பரிதியும் [7]நந்தி யாக
[8]குருதியும் [9]வண்டி யாகக் கூறுவோம் ஜென்மம் கன்னி
இவ்வித கோளும் நின்ருல் யியம்பு வீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்ம லக்னமாகிச், சந்திரனும் குருவும் தனுசிலும், சனியும் ராகுவும் துலாத்திலும், புதனும் சுக்கிரனும் கேதுவும் மேஷத்திலும், சூரியன் ரிஷபத்திலும், அங்காரகன் கடகத்திலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்து இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | புதன் சுக்கிரன் கேது | சூரியன் | |
| | இராசி சக்கரம் | | அங்காரகன் |
| | | | |
| குரு சந்திரன் | | சனி ராகு | லக்கினம் |

மூலம் 1–ஆம் பாதம். கேது தசை ஷ 6—7—00.

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும் :- மேஷத்தில் சந்திரனும், மிதுனத்தில் கேதுவும், கடகத்தில் அங்காரகனும் குருவும், சிம்மத்தில் புதனும், துலாத்தில் சுக்கிரனும், விருச்சிகத்தில் சனியும், தனுசில் ராகுவும், மகரத்தில் சூரியனும் ஆகும்.

---

1. சந்திரன்.
2. தனுசு.
3. சனி.
4. துலாம்.
5. சுக்கிரன்.
6. சூரியன்.
7. ரிஷபம்.
8. அங்காரகன்.
9. கடகம்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பார்வதி கேழ்க்கும் போது பராசரும் பகர லுற்றுர்
சீர்புகல் ஆண் பால் சென்மம் செப்புவோம் பிறந்த
[யில்லம்
கூறுவோம் கீழ் மேல் வீதி கூரவாசி தன் வாடை யாகும்
மாரியும் மாயோன் தென்மேல் வரைகிருேம் கிழக்கில்
[தந்தி.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது, பராசர மகரிஷி சொல்லுகின்ருர். ஜனனமான குழந்தை ஆண் ஆகும். குழந்தை பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்ருேம். வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்குவாடையில் இருக்கும். மாரியம்மன் கோயிலும் மகாவிஷ்ணுவின் கோயிலும் தென் மேற்குத் திக்கிலும், கிழக்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயிலும் இருக்கும் என்று சொல்லுகின்ருேம்.

3. சிங்க வாகனத்தாள் ஈசன் சத்தியும் கூருன் கோஷ்டம்
தங்கிடும் மேற்கிலே தான் தடாகமும் சோலையு முண்டு
மங்கையே கூரை யில்லம் வருகுவா னிரண்டாம்
[சென்மம்
பொங்கமாய்க் கங்கை வம்சம் பிறப்பனே யவனே
[யென்ருேம்.

3. காளியம்மன் கோயிலும் சிவபெருமானின் கோயிலும் பார்வதியம்மையின் கோயிலும், ஒரு குளமும், ஒரு தோப்பும் மேற்குத் திக்கில் இருக்கும். பார்வதியம்மையே! ஒரு கூரை வீட்டில் ஜாதகர் இரண்டாவது பிறவியாகப் பிறப்பார். இவர் வேளாள குலத்தில் பிறப்பார் என்று சொல்லுகின்ருேம்.

4. இன்னவன் செனன யோகம் எழில் பெரு மன்னை
[யோகம்
மன்னிய முன்னுல் சென்மம் வகுத்திடு மிவன்பிற்
[சென்மம்
தன்னிலே சகோதர யோகம் சாற்றுவோம் களத்திர
[யோகம்
அன்னையே நூலில் ஆய்ந்து அரைகிருேம் கேளு மம்மா.

4. ஜாதகருடைய ஜனன காலத்திய யோகம், முன் ஜன்மம், ஜாதகருடைய மறு ஜன்மம், இவருடைய சகோதரர்களின் யோகம், மனைவியின் யோகம் ஆகிய இவற்றை இந்தச் சாஸ்திரத்தில் ஆராய்ச்சி செய்து சொல்லுகின்ருேம்; பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய தகப்பனாரின் குணாதிசயங்கள்

5. தந்தை குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த மேனி
எந்தையே சம தேகத்தன் யீகைவான் பெருமை
[யுள்ளான்
சந்ததம் கிருஷி செய்வன் தன் மனம் கபடு முள்ளான்
பந்தமாய் மனைவி பட்சன் பாருகள் விருத்தி செய்வன்.

5. ஜாதகருடைய தகப்பனாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். தகப்பனார் சிவப்பான நிறத்தை யுடைய தேகத்தை யுடையவர். இவர் சமமான அளவுள்ள தேகத்தை யுடையவர். அஃதாவது, நடுத்தரமான தேகத்தை யுடையவர். இவர் பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவர். கீர்த்தியும் மேன்மையும் உடையவர். இவர் எப்போதும் பயிர்த் தொழிலைச் செய்வார். இவர் வஞ்சனை, கள்ளம் இவற்றையுடைய மனத்தை யுடையவர். இவர் தன்னுடைய மனைவியின்மேல் ஆசையை யுடையவர். பயிரிடும் நிலங்களை விருத்தியாக்குவார்.

6. துணைவர்க்குப் பகையே யாவன் சொல்லதுண்டுரமி
[முள்ளான்
அணையவே பித்தச் சூடு அறைந்தன மிவனுக்கே தான்
தனிகனும் சமமாம் யோகம் சஞ்சல மனத்த னாகும்
பிணையான வார்த்தை சொல்வன் பிஞ்சகன் விருப்ப
[மில்லான்.

6. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய சகோதரர்களுக்கு விரோதியாக விருப்பார், இவர் உண்மையும் பொய்யும் கலந்து பேசுவார். இவருடைய தேகம் பித்தச் சூட்டு குணமுள்ள தேகமாகும். இவர் பொருளுடையவர், நடுத்தரமான யோகத்தை யுடையவர், கஷ்டங்களுடைய மனத்தை யுடையவர். இவர் கட்டு வார்த்தைகளை, அஃதாவது உண்மையும் பொய்யும் கலந்துள்ள வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் சிவபெருமானிடம் அன்பில்லாதவராவர்.

## ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரபாவம்

7. அவனுட துணைவர் தன்னை அரைகிறோம் கேளு மம்மா
நவனியில் ஆண்பால் மூன்று நாயகி தீர்க்க மெய்தும்
பவமுள யிக் குணத் தானுக்குப் பாலக னுதிப்பா
[னென்றோம்
கவனமா யவன்தன் சேதி கழறுவோம் கேளு மம்மா.

7. ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக. மூன்று சகோதரர்கள் நீண்ட

வயதுள்ளவர்களாக விருப்பார்கள். பார்வதியம்மையே! இவ்விதமான குணாதிசயங்களை யுடைய தகப்பனுருக்கு, ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகருடைய விஷயங்களைப் பற்றி ஜாக்கிரதையாய்ச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

8. மன்னவன் சிவந்த மேனி மருவிடும் சம தேகத்தன்
நன்னய தியாகி யாவன் நாட்டினில் நிந்தை யுள்ளான்
கண்ணிய மில்லான் மேலும் கிருத்தியங்கள் அதிகம்
[செய்வன்
அன்னிய ஸ்த்ரீகள் மோகன் அல்ப வஸ்துகளு மிஷ்டன்.

8. ஜாதகர் சிவப்பான நிறமுடைய தேகத்தை யுடையவர். சமமான நடுத்தரமான அளவுள்ள தேகத்தை யுடையவர். இவர் பிறருக்குக் கொடுக்கின்ற ஒரு நல்ல கொடையாளியாக விருப்பார். பூமியில் அபவாதத்தை யுடையவராவர். இவர் மேன்மையை யுடையவரல்ல, அநேக காரியங்களையும் வேலைகளையுஞ் சடங்குகளையுஞ் செய்வார். இவர் பிறருடைய ஸ்திரீகளின்மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவர். அற்பமான வஸ்துக்கள் அஃதாவது மாமிசம் முதலியவற்றின்மேல் பிரியமுள்ளவர்.

9. சீலமு மில்லா னுகும் சிந்தையும் வர்ம மில்லான்
ஞாலம் மேல் கிரிஷி செய்வன் நல்கிடும் கன்னி ரோகம்
ஆலமாம் பந்து வுக்கு அல்பரை உறவு கொள்வன்
வேலன் தன் முப்பா னேழு வயதுக்கு மேலே யோகம்

9. ஜாதகர் சுத்தமும் நல்லொழுக்கமும் இல்லாதவராவர். வைராக்கியமான மனத்தையுடையவரல்லர், இவர் பூமியில் நிலங்களைப் பயிரிடும் வேலையைச் செய்வார். இவருக்குப் பெண்கள் வியாதி என்ற மேக ரோகம் வந்து சம்பவிக்கும். இவர் தன்னுடைய பந்துக்களுக்குப் பாம்பின் விஷத்தைப் போல இஷ்டமில்லாதவராக விரோதியாக விருப்பார். கீழ் மக்களையும் ஈனர்களையும் சிநேகஞ் செய்து கொள்ளுவார். இவருக்கு முப்பத்தேழு வயதிற்கு மேல் நல்ல காலம் உண்டாகும்.

10. ஏழை மே லிரக்க முள்ளான் இன்பமாய் வார்த்தை
[சொல்வன்
ஆழியில் செல்வ முள்ளான் அவ னலங்கார மில்லான்
வாழ்புவி தன்னிலே தான் வரைகுவார் சிலேடை யாக
தாழ்வுகள் மத்தி யத்தில் சார்ந்திடு மென்று சொன்னோம்.

10. ஜாதகர் ஏழை ஜனங்களிடத்தில் இரக்கமுள்ளவராவர். இவர் இனிப்பான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் கடலால் சூழப்

பட்ட இவ்வுலகத்தில் தன முடையவராவர். இவர் அழகாக விருக்கும்படியாய்ச் அலங்கரித்துக் கொள்ள மாட்டார். இவர் தான் சொல்லுகின்ற பதங்களுக்கு இரண்டு அர்த்தங்கள் ஏற்படும் படியாய் அலங்காரமாகவும் சாமர்த்தியமாகவும் பேசுவார். இவருக்கு நடுவயதில் அகௌரவமும் அபகீர்த்தியும் உண்டாகும் என்று சொன்னோம்.

**11.** கரமதில் கத்திரி ரேகை கனத்திடு சுழியு முள்ளான்
விரைவினில் நடக்க வல்லன் விளைபுலம் விரயம் [செய்வன்
பதியது புதிதாய்ச் செய்வன் பத்தினி ஒருத்தி யாகும்
சிரமதில் சுழியு முள்ளான் தேய்ந்திடும் தந்தம் தானே.

11. ஜாதகருடைய உள்ளங்கையில் கத்திரிரேகை என்ற ஒருவித கெட்ட ரேகை உண்டு. இவர் ஒரு பெரிய சுழியையுமுடையவர். இவர் வேகமாக நடக்குஞ் சக்தியை யுடையவர். பயிரிடும் நிலங்களை விற்றுவிடுவார். இவர் ஒரு புதிய வீட்டைக் கட்டுவார், இவருக்கு ஒரே ஒரு மனைவியுண்டு. இவருக்குத் தலையில் ஒரு சுழியுமிருக்கும். இவருக்குப் பற்கள் தேய்ந்து சொத்தையாகப் போய் விடும்.

## ஜாதருடைய சகோதரர்கள் (சகோதரர்பாவம்)

**12.** இவனுடைய துணைவர் தன்னை யியம்புவோ மாண் பால் [ரெண்டு
அவனியில் கன்னி யவ்வா றரைகிறோ தீர்க்க மாக
நவனியில் துணைவி மார்கள் நற்றபசிகள் போல் வாழ்வர்
பவமுள சுகமு மில்லார் பாரினில் சிறையாய் வாழ்வர்.

12. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். சகோதரிகள் தவத்தைச் செய்கின்றவர்களைப் போல் (சந்நியாசிகளைப் போல, பண்டாரச்சிகளைப் போல) அதிகமாக வெளியே தென்படாமல் உள்ளேயே சிறைச்சாலையிலிருப்பது போலவே யிருந்து கொண்டு யாதொரு சுகங்களையும் அனுபவிக்காமல் தங்கள் காலங்களைக் கழித்து விடுவார்கள்.

**13.** ஆண் துணை யிளையோன் சேதி அறைகிறோம் ரோகி [யாவன்
மான் விழி மார்கள் தன்னால் வந்திடும் மேக ரோகம்
பேணுவோம் மனையாள் ஒன்று பேசுவோம் அதுவும் [தீதாம்
வீண் சிறை யாகு வானும் விளங்காது மதலை [யென்றோம்

13. ஜாதகருடைய சகோதரர்களில் ஒரு இளைய சகோதரனுடைய விஷயங்களைச் சொல்லுகின்றோம். இவர் நோயாளியாக விருப்பார். இவருக்கு மானின் கண்களைப் போன்ற அழகான கண்களுடைய ஸ்திரீகளால் மேக ரோகம் வந்து சம்பவித்துவிடும். இவருக்கு மனைவி ஒன்றேயாகும், இவளும் சீக்கிரம் இறந்து விடுவாள். இந்தச் சகோதரன் வெளியே அதிகமாகத் தோற்றமல் உள்ளேயே சிறையில் இருப்பது போல விருப்பார், இவருக்குச் சந்ததி கிடையாது என்று சொல்லுகின்றோம்.

14. சுக மிலான் அலைச்ச லுள்ளர்ன் சொல்லுவோ [மவன்பின் வந்தோன்
தகைமையாய் மனைவி ஒன்று சார்ந்திடும் குழவி யில்லான்
வகையாக உதித்தாலுந் தான் மரித்திடு மென்று [சொன்னோம்
பகையாவர் வேருய்ச் செல்வர் பார்வதி கேட்டிடாயே.

14. ஜாதகருடைய இளைய சகோதரன் சௌக்கியங்களில்லாதவராக விருப்பார். இவர் கஷ்டங்களை யுடையவராவர். இந்த இளைய சகோதரனுக்கு அடுத்த இளைய சகோதரருடைய விஷங்களைச் சொல்லுகின்றோம். ஜாதகருடைய இந்த இரண்டாவது இளைய சகோதரனுக்கு மனைவி ஒன்றேயாகும். இவருக்குக் குழந்தை கிடையாது. ஒரு சமயம் குழந்தை பிறந்தாலும் அது சீக்கிரத்தில் இறந்து போய்விடும் என்று சொல்லுகின்றோம். சகோதரர்கள், ஜாதகருக்கு விரோதிகளாக விருந்து வேறே தனியாக விருந்து வாழ்வார்கள், பார்வதியம்மையே! கேட்பீராக.

15. இப்படி முனிவர் கூற ஈஸ்வரி கேழ்க்க லுற்ருள்
செப்பினீர் சாதகன் தன் துணைவர்கள் சேதி தன்னைத்
தப்பிதம் வந்ததென்ன சாற்றுவீர் முனியே யென்ருள்
ஒப்புடன் மூன்றேன் தானும் உரைந்திடும் நீச்ச மாக

15. இவ்விதமாகப் பராசர மகரிஷி சொல்லவே, பார்வதியம்மையார் கேட்கின்றார். ஜாதகருடைய கூடப் பிறந்தவர்களின் விஷயங்களை இவ்விதமாகச் சொன்னீரே, இவ்வாருகக் குற்றங்கள் நேருவதற்குக் காரணங்கள் என்ன என்பதைச் சொல்லுவீர் முனிவரே! என்று பார்வதியம்மையார் கேட்டார். இதற்குப் பராசரர் பதில் சொல்லுகின்றார். (சகோதரஸ்தானமாகிய) மூன்றும் வீட்டிற்குடையவராகிய (அங்காரன்) கடகராசியாகிய தன்னுடைய நீசராசியிலிருப்பதாலும்,

16, ஆறினுக் குடையோன் காரி அவனுமே பார்த்த தாலே
வீருது துணைவர் தானும் வித்தகி கேழ்க்க லுற்ருள்
கூறின துணைவ ருக்கு குழவிகள் யில்லை யென்றீர்
சீரிய கருமம் தானும் செய்குவார் யார்தான் சொல்வாய்.

16. ஆறுவது வீட்டிற்குடைய காரி என்ற சனி அங்காரகனைப் (பத்தாவது பார்வையுடன்) பார்ப்பதாலும் சகோதரங்கள் விளங்க மாட்டார்கள் விருத்தியை யடைய மாட்டார். இதன் மேல் பார்வதியம்மையார் கேட்க வாரம்பித்தார். சகோதரர்களுக்குக் குழந்தைகள் இல்லை என்று சொன்னீரே ! இவர்களுக்கு யார் கர்மஞ் செய்வார்கள் என்பதைப் பற்றிச் சொல்லுவீர், என்று பார்வதியம்மையார் கேட்டார்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்கள்

17. இவனுமே உருமம் செய்வன் யியம்புவார் மணத்தின் [காலம்
அவனியில் இருபான் ரெண்டில் அக் கன்னி [உத்திரத்தில்
பவமுன அவள் குணத்தைப் பகருவோ மிரு நிறத்தள்
நவனியில் அடக்க முள்ளாள் நற்புத்தி கோபம் [கொஞ்சம்.

17. ஜாதகர் தன்னுடைய இளைய சகோதரர்களுக்குக் கர்ம காரியங்களைச் செய்வார். இதன் பிறகு ஜாதகருடைய காலத்தைப் பற்றிப் பாரசர முனிவர் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயதில்* வடக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் சிவப்பும் கருப்பும் ஆகிய இவ்விரண்டு நிறங்களும் கலந்த நிறமாகிய மானிறமான தேகத்தை யுடையவள். இவள் அமைதியாக விருக்கப்பட்டவள். நல்ல புத்தியை யுடையவள். சிறிது கோபத்தை யுடையவளாவள்.

குறிப்பு :—ஜாதகருடைய விவாக காலம்:—ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயதில் சுக்கிர தசையில் சனி புக்தி நடக்கின்றது. சுக்கிரன் ஒன்பதாவது பாவத்திற்குடையவராக விருப்பதால் ஜாதகபாரி ஜாதகம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம் ஒன்பதாவது பாவத்திற்குரிய சுக்கிரன் விவாகஞ் செய்துவைக்க அதிகாரம் முடையவராகவிருக்கின்றார். சனி குடும்ப ஸ்தானத்தில் போக காரகனாகிய இராகுவுடன் கூடிக் குடும்பாதிபதியும் களத்திரகாரனாகிய சுக்கிரனையும் பார்த்துக் கொண்டும், களத்திர ஸ்தானாதிபதியாகிய குருவையும் பார்ப்பதால், தன் புக்தியில் விவாகஞ் செய்து வைக்க அதிகாரமுடையவராக விருக்கின்றார்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

18. வரனுக்கு நேய முள்ளாள் மறு மொழி அதிகம் கூர்வள்
உரைக்குறோம் புத்திர பாகம் உத்தமி தனக்குமே தான்

நிறையவே ஆண் பால் ரெண்டு நேரிழை மூன்று மாகும்
குறைவிலா ஐந்தும் தீர்க்கம் கூறின மொழி தப்பாது.

18: இவள் தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவளாக விருப்பாள். இவள் பதில் அதிகமாகச் சொல்லுவாள். இவளுக்குச் சந்ததிகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். இரண்டு ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் உண்டாகும். இவ்வைந்து குழந்தைகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தயாருடைய குணதிசயங்கள்

19. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறோம் சிவந்த மேனி
கோதிலா ஒடிசல் தேதி கோபமும் பின்பு சாந்தம்
சூதிலாள் கபடு முண்டு சேயர்மே லாசை யுள்ளாள்
பாதக மனத்த ளாகும் பகருவோம் சொல்ப ரோகி.

19. ஜாதகருடைய தாயாரின் குணதிசயங்களைப் பற்றி இனிமேல் நாங்கள் சொல்லுகின்றோம். இவள் சிவப்பு நிறமான தேகத்தை யுடையவள். இவள் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவள், இவளுக்கு முன்னே கோபம் வரும். உடனே சாந்தம் ஏற்படும். இவள் சூதான நடத்தையை யுடையவளல்லள், இவள் வஞ்சனை கள்ளம் ஆகிய இவற்றை யுடைய மனத்தை யுடையவள் இவள் குழந்தைகளின் மேல் ஆசையை யுடையவள். இவள் குற்றமான மனத்தை யுடையவள், இவள் சிறிது நோயாளியாக விருப்பாள்.

## ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மம்

20. அவளுட துணைவர் தானும் அறையவே பலத்தைக் [காணோம்
நவனியில் அவள் குடும்பம் நசித்திடு மென்று [சொன்னோம்
பவமுள பூர்வ சென்மம் பகருவோம் இவளுக்கே தான்
தவமுள பேரைக் காக்கும் தயாபரி மேலும் கேளே.

20. ஜாதகரின் தாயாருடைய சகோதரர்கள் விஷயமாகச் சொல்ல பாதொரு பலமும் இல்லை. இவளுடைய குடும்பம் அழிந்து போய் விடும் என்று சொல்லுகின்றோம். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். தவங்களைச் செய்கின்றவர்களைக் காப்பாற்று கின்ற வரும் கிருபையை யுடையவருமாகிய பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் அதிகமாகச் சொல்லப் போவதைக் கேட்பீராக.

குறிப்பு :—தாயாரின் சகோதர விஷயம்:-ஜாதகரின் தாயாருடைய லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குச் சகோதர ஸ்தானம் மூன்ருவது வீடாகிய கும்பம் ஆகும். இதற்குடைய சனி துலாத்தில் உச்சமாக விருந்த போதிலும் ராகுவுடன் கூடி அஷ்டமாதிபதி யாகிய புதன் பார்வையை யடைந்திருக்கின்ருர். இது தோஷமாகும். மேலும், சகோதர ஸ்தானமாகிய கும்பத்தையும் குடும்ப ஸ்தானமாகிய மகரத்தையும் அங்காரகன் விரையாதிபதியாகிப் பார்க்கின்ருர். இதுவும் தோஷமாகும். ஆகையால் ஜாதகரின் தாயாருடைய சகோதரர்களுக்குத் தோஷம் இருக்கின்றது. இவளுடைய தாய் வழி குடும்பத்திற்கும் தோஷம் இருக்கின்றது. இது விஷயமாய் பல தீபிகை பதினைந்தாவது அத்தியாயம் இருபத்தி இரண்டாவது, மூன்ருவது நான்காவது சுலோகங்களை வாசிக்கவும்.

21. மாதுரு முன் சென்மத்தை வழுத்துவோம் தொண்டை [நாட்டில்
மேதினில் ஆயர் வம்சம் விளங்கின ளிவளே யென்ரேம்
கோதிலா மதலை யுண்டாய்க் குலாவியே வரனின் கூட
பூதல மீதிலே தான் பொருந்தியே வாழு நாளில்,

21. ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம். இவள் தொண்டை மண்டலத்தில் யாதவருடைய குலத்தில் தன்னுடைய முன் ஜன்மத்தில் பிறந்தாள் என்று சொல்லுகின்ரேம். இவள் குற்றமிலாத குழந்தைகளை யுடையவளாகித் தன்னுடைய புருஷனுடன் கூடி இன்பமாய் வாழ்ந்து கொண்டிருக்கின்ற காலத்தில்.

22. வந்த ஊழ் தன்னைச் சொல்வேன் அரனுட பூசைக் காக
முந்தியே மேதி பாலை முன் பணம் வாங்கிக் கொண்டு
தந்தனள் இதுவு மன்றி தன் வீட்டில் வந்து வாசம் [செய்யும்
பந்தமாய்ப் பட்சி தன்னைப் பாவையும் கொன்று [விட்டாள்

22. இவளுக்கு வந்து சம்பவித்த வினையைப் பற்றிச் சொல்லுகின்றேன். சிவபெருமானுடைய பூஜைக்காக இவள் பசும்பாலின் கிரயத்தை முன்னமே பெற்றுக் கொண்டு எருமைப் பாலைக் கொடுத்தாள். இந்தச் செய்கையுமல்லாமல் இவள் தன்னுடைய வீட்டில் வசித்துக் கொண்டிருக்கும் ஒரு பறவையைக் கொன்றுவிட்டாள்.

23. செத்ததோர் பட்சிக்கே தான் சேயர்கள் அதிக முண்டாய்
உற்றதோர் கூடு தன்னில் உறைந்தது யிரைகள் யின்றி
சத்தியே மாண்ட தென்ரேம் சார்ந்தது யிரண்டு தோஷம்
வித்தகி மதலை யின்றி விளங்கியே வள்ளூர் சென்ருள்.

23. இறந்து போய் விட்ட பறவைக்கு அநேக குஞ்சுகள் கூண்டில் இருந்தன. இவை ஆகாரமில்லாமல் கூண்டிலேயே இறந்து விட்டன என்று, பார்வதியம்மையே! சொல்லுகின்ருேம். இவ்விரண்டு தோஷங்களும் இவளை ஜீவந்தடைந்தன. இவள், அதனுல், குழந்தைகள் (முன் ஜன்மத்தில்) இல்லாமல் வள்ளூர் என்ற திருவள்ளூருக்குப் போனுள்.

24. சில காலம் சென்றுமே தான் சேயர்கள் யில்லா ளாகி
நலமிலா மரண மாகி நரகத்தில் சின்னுள் நின்று
குலவியே யிச் சென்மத்தில் கோதையும் கங்கை வம்சம்
உலகினில் உதித்தா ளென்ருேம் உத்தமி கேழ்க்க
[லுற்ருள்.

24. அவ்விடத்தில் சில காலம் இருந்து குழந்தைகள் இல்லாதவளாகி இறந்து நரகத்திற்குப் போய் அவ்விடத்தில் கொஞ்ச காலம் இருந்து, பிறகு இந்த ஜன்மத்தில் இவள் வேளாளர் குலத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகின்ருேம். இவ்விதமாகப் பராசர மகரிஷி சொல்லவே பார்வதியம்மையார் கேட்க வாரம்பித்தார்.

25. அந்த தோர் தோஷத் தாலே அணுகின துன்ப மென்ன
எந்தையே சொல்லு கின்றேன் இப்பட்சி தோஷத்
[தாலே
சந்ததம் துணைவர் யீனம் தன் குலம் யீன மாகும்
பந்த மாய்ப் பாலின் தோஷம் பகருவோம் கேளு மம்மா.

25. முன் ஜன்மத்திய இரண்டு தோஷங்களால் நேரிட்ட கெடுதிகள் என்ன என்று பார்வதியம்மையார் கேட்கவே, என் தாயாராகிய பார்வதியம்மையே! சொல்லுகின்றேன் என்ருர் பராசரமகரிஷி. இந்தப் பறவைகளின் தோஷத்தாலே இவளுக்குச் சகோதர தோஷம் ஏற்படும். இவளுடைய (தாய் வழி) குடும்பம் நாசமாகும். எருமைப் பாலைக் கொடுத்தத் தோஷத்தினுல் உண்டாகும் கெடுதியைச் சொல்லுகின்ருேம். பார்வதியம்மையே! கேட்பீராக.

26. புத்திரர் தனக்குக் குற்றம் பொருந்திய மதலை காணுர்
சித்தர்கள் போலே புத்திரர் சிறை யிருப்பார்க
[ளென்ருேம்
வித்தகி கேழ்க்க லுற்ருள் வீரியன் தனக்குப் புத்திரர்
பெத்திடு வாணு மென்றீர்பேசுவீ ரந்தச் சங்கை.

26. ஜாதகருடைய தாயாரின் இளைய குமாரர்கள் இருவருக்கும் குழந்தைகள் இடையா. இந்த இரண்டு குமாரர்களும் சந்நியாசிகளைப் போலவும், தபசிகளைப் போலவும் சிறைச் சாலையில் இருப்பது போலவும் வெளியே அதிகமாகத் தென்படாமல் இருப்பார்கள் என்று நாம் முன்னமே சொல்லியிருக்கின்ருேம். இவ்விதமாகப் பராசர முனிவர் சொல்லவே,

பார்வதியம்மையார் கேட்க வாரம்பித்தார். ஜாதகருக்கு மாத்திரம் புத்திரர்கள் உண்டு என்று சொன்னீரே! இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர்.

27. காரியு முச்ச மாகக் கனகனு மாட்சி யாக
தேறியே யிருப்ப தாலே சேயர்க்குத் தோஷ மில்லை
வீரியன் நிந்தை யுள்ளான் வீணப வாத முள்ளான்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

27. காரி என்ற சனி (புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது வீட்டிற் குடையவராகி) உச்சமாக விருப்பதாலும் கனகன் என்ற குரு (புத்திரகாரனாகி) ஆட்சி வீடு என்ற தன் சொந்த வீடாகிய தனுசில் இருப்பதாலும் ஜாதகருடைய புத்திரர்களுக்குத் தோஷம் கிடையாது. ஆனால் ஜாதகர் பழிகளையும் வீணன அபவாதங்களையுமுடையவராவர். ஆறுமுகங்களுடைய ஷண்முகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

குறிப்பு:—புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது வீட்டை அங்காரகன் பார்த்திருக்கின்றார். இந்த அங்காரகன் புத்திர ஸ்தானாதிபதியாகிய சனியையும் பார்த்திருக்கின்றார். ஆனால் அங்காரகன் சந்திர லக்கினத்திற்குப் புத்திரஸ்தானாதி பதியாகின்றார்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம், தகப்பனாரின் முன் ஜன்மம்

28. மாதுரு பின் சென்மத்தை வழுத்துவோம் அருணை [நாட்டில்
மேதினி லிக் குலத்தில் விளங்குவா ளிவவே யென்றோம்
ஓதுவேன் தந்தை பூர்வம் உரைக்குறோம் காஞ்சி [தன்னில்
தீதிலா வன்னிய வம்சம் செனித்துமே கிருஷி செய்து.

28. ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் இதே வேளாளர் ஜாதியிற் போய் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருடைய தகப்பனாரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் காஞ்சிவரத்தில் குற்றமில்லாத ஒரு வன்னியர் குலத்தில் முன் ஜன்மத்தில் பிறந்து பயிர் வேலையைச் செய்து கொண்டு

## ஜாதகரின் தகப்பனாருடைய பின்ஜன்மம்

29. முருகன் தன் ஆலயத்தில் முயற்சியாய் தீபம் பார்த்து
சிறுமையாய்க் குடும்பியாகிச் சென்றனன் மறலி பக்கல்

பிரமனுல் வரைப் பட்டுப் பிறந்தன னிவனே யென்ருேம்
அறைகிருே மிவன் பின்சென்மம் ஆலங்காட் டதிலே
[தான்

29. முருகருடைய கோயிலிற்குச் சென்று அங்குள்ள ஒரு தீபத்தைச் சிரத்தையாகப் பார்த்துத் தரிசனஞ் செய்து கொண்டு ஒரு சிறிய ஏழைக் குடும்பஸ்தராக வாழ்ந்து இறந்து எமனிடத்திற்குச் சென்ருர். பிறகு இவர் பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந்தார் என்று சொல்லுகின்ருேம். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவர் ஆலங்காடு என்ற திருவாலங்காடு க்ஷேத்திரத்தில்;

## ஜாதகருடைய முன் ஜன்மம்

30. செட்டிகள் குல முதித்துச் செழிப்புள குடும்பி யாகி
இட்டம் போல் சுகங்கள் உண்டாய் யிவனுமே வாழ்வா
[ருகும்
மட்டிலா சாதகர்க்கு வரைகிருே முன்னூழ் தன்னை
அட்டதிக் கெங்கும் போற்றும் அருணையின் உத்திரத்தில்.

30. செட்டியார் ஜாதியில் பிறந்து ஒரு வளமான குடும்பஸ்தராகித் தன்னுடைய இஷ்டம் போல எல்லா சுகங்களையும் அனுபவித்து வாழ்வார் என்று சொல்லுகின்ருேம். ஜாதகருடைய முன் ஜன்மத்தின் வினையை இனிமேல் சொல்லுகின்ருேம். எட்டுத் திக்குகளிலும் பெருமையுடன் புகழப்படுகின்ற அருணை என்ற அருணசலமாகிய திருவண்ணமலை க்ஷேத்திரத்திற்கு வடக்கில்;

31. பேருரில் கௌரி வம்சம் பிறந்துமே செட்டு செய்து
தீரமா மனைவி புத்திரர் சிறப்பான குடும்பி யாகி
வீரியன் வாழு நாளில் வந்தஊழ் தன்னைச் சொல்வேன்
கூரிய பெரியோர் ஓர்ருள் குணம் கெட்டு மது பொசித்து.

31. ஒரு பெரிய கிராமத்தில் வேளாளர் குலத்திற்.பிறந்து வியாபாரத்தைச் செய்து கொண்டு மனைவியையும் சந்ததிகளையும் உடையவராகிக் கௌரவத்துடனும் மேன்மையுடனும் உள்ள ஒரு குடும்பஸ்தராக விருந்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த வினையைச் சொல்லுகின்றேன். ஒரு பெரியவர் தன்னுடைய குணம் கெட்டுப் போய் ஒரு நாள் கள்ளைக் குடித்து விட்டு;

32. இன்னவன் பக்கல் சென்று இன்பமாய் அன்னம் கேழ்க்க
மன்னவன் கோபம் கொண்டு வைதனன் அதிக மாகப்
பன்னுமப் பெரியோர் தானும் பகருவார் மன வெறுப்பால்
உன்னித மறுசென் மத்தில் உலகினில் நிந்தை யாகி.

32. ஜாதகரிடம் போய் ஆசையாய்ச் சாதம் கொடு என்று கேட்க, ஜாதகர் கோபத்தை யடைந்து அவரை அதிகமாகத் திட்டி விட்டார். அதன் மேல் அந்தப் பெரியோர் மனத்தில் கஷ்டத்தை யடைந்து ஜாதகரைப் பார்த்துச் சொல்லுகின்றார். உன்னுடைய பின் ஜன்மத்தில் நீ பூமியில் அதிக அபவாதங்களை யடைந்து;

**33.** குற்றமாய் சிலர்கள் சொல்ல குலங்களும் நசித்து மேலும்
வித்தகன் துணைவர் தானும் விளங்காமல் போகு மென்று
பத்திமான் சொல்லியே தான் பக்கலில் சென்று
[னென்றோம்
உத்தமன் மரண மாகி உரைந்தனன் யிக் குலத்தில்.

33. சிலர் உன் மேல் குற்றங்களையும் பழிகளையும் சாட்டவும், உன் குலம் நசித்துப் போகவும், உன்னுடைய சகோதரர்கள் விருத்தியாகாமல் அழிந்து போகவும் வேண்டுமென்று ஜாதகரைப் பார்த்து இந்தப் பக்தியை யுடைய பெரியோர் சொல்லிவிட்டு ஒரு பக்கமாகப் போய் விட்டார் என்று சொல்லுகின்றோம். அதன் மேல் ஜாதகர் இறந்து இந்த ஜன்மத்தில் இந்த ஜாதியில் வந்து பிறந்திருக்கின்றார்.

**34.** இந்ததோர் சென்மம் தன்னில் யிலகிற்று அதிதி சாபம்
முந்திய சொல்லைப் போலே முய்த்திடு மென்று
[சொன்னோம்
அந்ததோர் சாபம் தீர அறைகுவீர் கிரிகை யொன்று
எந்தச் சாந்திகள் செய்தாலும் யிலகாது தோஷம்
[தானே,

34. ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் இந்தப் பெரியோருடைய சாபம் வந்து சம்பவித்தது. முன் ஜன்மத்தில் இந்தப் பெரியோர் சொல்லிச் சபித்த பிரகாரம் இந்த ஜன்மத்தில் நடக்கும் என்று சொல்லுகின்றோம். இந்தச் சாபத்தை நிவர்த்தி செய்ய ஒரு சாந்தியைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் பராசர ரிஷியைக் கேட்கவே, எவ்விதமான சாந்திகளைச் செய்த போதிலும் அந்தச் சாபம் ஜாதகரை விட்டு நீங்காது என்று முனிவர் சொல்லி விட்டார்.

## தாய்தந்தையர்களின் மரணகாலமும் ஜாதகருடைய மரணகாலமும்

**35.** தந்தையின் மரண காலம் சாற்றுவோ முப்பா னறில்
எந்தையே அதின்மேல் மூன்று யெய்துவோம் மாதுர்
[கெண்டம்
இந்தவார் சாத கர்க்கு யியம்புவோம் அறுபான் ரெண்டில்
பந்தமாய்த் தனுசு மாதம் பஞ்சமி வளர் பக்கத்தில்.

35. ஜாதகரின் தகப்பனுருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லு கின்றோம். தகப்பனுர் ஜாதகருக்கு முப்பத்தாருவது* வயதில் இறந்து விடுவார். இதற்கு மேல் மூன்று வருஷம் கழித்து தாயார் இறந்து போய் விடுவாள்.† ஜாதகர் தனக்கு அறுபத்திரண்டாவது வயதில்* தனுசு மாதம் என்ற மார்கழி மாதத்தில் வளர்பிறையில் பஞ்சமிதிதி யுள்ள தினத்தில்.

*குறிப்பு:—பிதிருமரணகாலம்:-ஜாதகருக்கு வயது முப்பத்தாறில் சந்திர தசை யில் இராகு, குரு புக்திகள் நடக்கின்றது. ரிஷப லக்கினம் பிதுர் லக்கினமாகும். இந்த லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகப் பிரகாரம் சந்திரனும் குருவும் மாரக ராகின்றுர்கள். மேலும் துய்யகேரளம் எட்டாம் பாவம் பன்னி ரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் எட்டிற்குடையவ ராகிய குருவுடன் சம்மந்தப்பட்ட சந்திரன் பிதாவுக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றுர். ரிஷப லக்கினத்திற்கு எட்டிற்குடையவராகிய குரு மாரகராகின்றுர். ஆகையால் சந்திர தசையில் குரு புக்தியில் பிதுருக்கு மாரகம் சொல்லப் பட்டிருக்கின்றது.

†குறிப்பு:—தாயார் மரண காலம்:-மாதுருக்கு முப்பத் தொன்பதாவது வயதில் மரணம் சொல்லி யிருக்கின்றது. அப்போது சந்திர தசையில் சனி புக்தியும் புதன் புக்தியும் நடக்கின்றன. நான் காவது வீடாகிய தனுசு மாதுரு லக்கினமாகும். சந்திரன் அஷ்டமாதிபதியாகி லக்கிஞதிபதியாகிய குருவுடன் கூடி யிருப்பதால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம், சந்திரன் மாதுருவை மார கஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றுர். சுக்கிர நாடி பிரகாரமும் பலதீபிகை பதினைந்தாவது அத்தியாயம் இருபத்தா றுவது சுலோகப் பிரகாரமும் மாதுர் காரகனுகிய சந்திரன் மாதுரு பாவத்தில் இருப்பதால் தன் தசையில் மாதுருக்கு மார கஞ் செய்ய அதிகார முடையவராகின்றுர். சிலர் அபிப்பிராயப் படி தனுர் லக்கினத்திற்குச் சனி மாரகாதிபதியாகின்றுர். இவர் மாதுரு ஸ்தானத்தைப் பார்க்கின்றுர். குடும்பஸ்தானத் தில் இருக்கின்றுர். மாதுரு ஸ்தானத்திற்கு லக்கிஞதிபதியாகிய குருவையும், அஷ்டமாதிபதியாகிய சந்திரனையும் பார்பதால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது, பதினைன் காவது, இருபதாவது பாடல்கள் பிரகாரம் (புதனைவிட) சனி மாதுருக்குத் தன் புக்தியில் மாரகஞ் செய்ய அதிக அதிகார முடையவராக விருக்கின்றுர். தனுர் லக்கினத்திற்குச் சனி கொல்லுவார் என்றும் கொல்ல மாட்டார் என்றும் பலகிரந்தங் களில் வித்தியாசமாகச் சொல்லி யிருக்கின்றது. ஆனுல் இங்கு சனி ராகுவுடன் கூடி பாபயோகத்தை அடைந்திருப் பதால் கொல்லுவார்.

*குறிப்பு :—ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது வயதில் மார்கழி மாதத்தில் இராகு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. கன்னியாலக்கினத்திற்குச் சிலரது அபிப்பிராயப்படி சுக்கிரன் மாரகர். சுக்கிரன் இரண்டிற்குடையவராகி லக்கினுதிபதியாகிய புதனுடன் கூடி எட்டில் இருந்து கொண்டு கேது சனி இவர்கள் சம்பந்தப் பார்வையால் பாப யோகம் அடைந்திருக்கின்ருர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம், பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் மாரகனுகின்ருர். ராகு சுக்கிரனுடைய விட்டில் இருப்பதால் சுக்கிரனே விட ராகு, ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகப் பிரகாரம் மாரகம் செய்ய அதிகமான அதிகாரத்தை யுடையவராக விருக்கின்ருர். ஆகையால் இராகு தசையில் சுக்கிர புக்தியில் ஜாதகருக்கு மாரகஞ். சொல்லப்பட்டிருக்கின்றது. கன்னியா லக்கினத்திற்குச் சுக்கிரன் கொல்லான் என்று சில கிரந்தங்களில் சொல்லியிருந்த போதிலும், சுக்கிரன் எட்டில் இருந்து கொண்டு கேதுவுடன் கூடி சனியின் பார்வையையுமடைந்திருப்பதாலும் சத்துருவாகிய குருவால் பார்க்கப்பட்டிருப்பதாலும் பாப யோகத்தை அடைந்திருக்கின்ருர். ஆகையால் இவர் கொல்லும் அதிகாரத்தை யுடையவராகின்ருர்.

## ஜாதகருடைய மறுஜன்மமும், மனைவியின் மரணகாலமும்

36. மரணமே யாகியே தான் மறுசென்மம் விருஞ்சி கீழ்பால்
திறமுள பேரூர் தன்னில் தனவைசிய குல முதித்து
பெருமையு முடைய ஞகிப் பூமியில் வாழ்வா ஞகும்
திருமகள் மனையா ளுக்குச் செப்புவோ மிவன் பின்
[கொண்டம்.

36. இறந்து போய்த் தன்னுடைய பின் ஜன்மத்தில் விரிஞ்சிபுரத்திற்குக் கிழக்கேயுள்ள வளமான ஒரு பெரிய கிராமத்தில் செல்வமுள்ள ஒரு வைசியருடைய ஜாதியில் பிறந்து, கௌரவமும் மேன்மையும் உள்ளவராக வாழ்வார். ஜாதகருடைய மனைவிக்கு இவருக்குப் பிறகு மரணம் நேரிடும் என்று சொல்லுகின்ரேம்.

## ஜாதகருடைய யோகபாவம்

37. இன்னவன் யோகச் செய்கை யியம்புவோம் செனனம்
[தொட்டு
அன்னவன் இருப தாண்டும் அறைகிரேம் சமமாம்
[யோகம்

தன்னிலே அதின் மேலாகச் சாற்றுவோ மொருபா
[னேழும்
பன்னிய பலன் குறைச்சல் பகைவரும் சல்லிய
[முண்டாம்.

37. ஜாதகருடைய யோக விஷயங்களைப் பற்றி இனிமேல் சொல்லு கின்றோம். இவருக்கு ஜனனகாலம் முதற்கொண்டு இருபது வயதுவரை யிலும் யோகம் சமமாக விருக்கும். இதற்கு மேல் பதினேழு வருஷங்கள் வரைபலன் குறைவுபடும். விரோதங்கள் ஏற்படும். கடன் உண்டாகும்.

38. கலகமும் சுகமும் குறைச்சல் கனத்ததோர் குடும்பம்
[வேறு
நலமில்லை அதின் மேலாக நாட்டுவோம் மரண மட்டும்
பலவித லாபம் நேரும் பாருளோர் வசிய மாகும்
பிலமிலா ரொணங்கள் நீங்கும் பூமியும் பெருக்க
[முண்டாம்.

38. குடும்பத்தில் சண்டைச் சச்சரவுகளும் ஏற்படும். சுகங்கள் குறை வுபடும். பெரிய குடும்பமானது பிரிந்து வெவ்வேருகப் போய் விடும், யாதொரு நன்மையும் இல்லை. இதற்கு மேல் ஜாதகருடைய மரண காலம் வரையிலும் பற்பல வழிகளில் லாபம் கிடைக்கும். பூமியிலுள்ளோர்கள் ஜாதகருக்கு அநுகூலமாக விருப்பார்கள், கடன்கள் நிவர்த்தியாகி விடும், நிலங்கள் அதிகமாகும். நல்ல பலனைக் கொடுக்கும்.

39. சகலமும் நன்மை யாகும் சகோதர ளொருமை யாகும்
தகமையாய்ப் பூமி சேரும் சதுஷ்பாதம் விருத்தி
[யென்றோம்
பகையவ ருறவே யாவர் பாலர்கள் விருத்தி யாகும்
கெசமுக வானைப் பெற்ற தேவியே கேட் டிடாயே.

39. எல்லாக் காரியங்களும் அநுகூலமாகும். சகோதரர்கள் ஒற்று மையாக விருப்பார்கள், நிலங்கள் கிடைக்கும், கால் நடைகள் அதிகப்படும் என்று சொல்லுகின்றோம். விரோதிகள் சிநேகிதர்களாக மாறி விடுவார் கள். சந்ததிகள் விருத்தியை யடைவார்கள். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே ! கேட்பீராக.

40. நாயகன் செனன காலம் ஞானத்தோன் திசை யிருப்பு
நேயமாய் ஆண்டு ஆறும் நிகர் திங்க ளேழதாகும்
தாய்தந்தை தனக்கும் ரோகம் சாதங்கள் குறைவு நேரும்
மாயுமே கன்று காலி மங்கையே மேலுங் கேளே.

40. ஜாதகர் பிறக்குங் காலத்தில் கேது மகா தசையில் இருப்பு ஆறு வருஷங்களும், ஏழு மாதங்களும் ஆகும். இக்காலத்தில் தாயார் தகப்பு

ஞர் இவர்களுக்கு வியாதிகள் ஏற்படும். சாப்பாடு வகையறுக்கள் குறைந்துவிடும். ஆடு மாடுகள் இறந்து விடும். பார்வதியம்மையாரே! நாங்கள் இன்னம் சொல்லப் போவதை கேட்பீராக.

41. பூமியும் பலிதம் நேரும் போற்றுவோம் துணைவர் விருத்தி
தீமைகள் வந்து நீங்கும் சென உபகார மாகும்
தாமத குணங்க ளாகும் தன்மனை கலகம் வேரும்
நேமியில் யிரண்டிலே தான் நிகழ்த்துவோம் விபரமாக.

41. நிலங்கள் நல்ல பலனைத் தரும். சகோதரர்கள் விருத்தியை யடைவார்கள். கெடுதிகள் நேரிட்டு, உடனே நிவர்த்தியாகிவிடும். ஜனங்களுடைய உதவிகள் ஏற்படும். குடும்பத்தாருடைய குணங்கள் நிதானமாகவும் நடுத்தரமாகவும் இருக்கும். குடும்பத்தில் சண்டைச் சச்சரவுகள் ஏற்பட்டுக் குடும்பம் பிரிந்து போகும். மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். —C. G. R.

---

# ஜாதகம் 5.

## ஜனனகால கிரக நிலை

1. [1]மதி குரு [2]தேளதாக [3]மைந்தனும் ராகு [4]சாடி
[5]உதையன் [6]சேய் புதனும் [7]நண்டில் [8]ஒரு கண்ணேன்
[[9]வீணையாக
[10]அதிதியும் [11]சீய மாக அணுகிய கன்னி சென்மம்
இது பலன் புகலு மென்று யீஸ்வரி கேழ்க்க லுற்ருள்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும் குருவும் விருச்சிகத்திலும், சனியும் ராகுவும் கும்பத்திலும், சூரியனும் அங்காரகனும் புதனும் கடகத்திலும், சுக்கிரன் மிதுனத்திலும், கேது சிம்மத்திலும் இருந்து. இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்து இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்க வாரம் பித்தார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | சுக்கிரன் |
| சனி ராகு | இராசி சக்கரம் | | சூரியன் புதன் அங்காரகன் |
| | | | கேது |
| | சந்திரன் குரு | | லக்கினம் |

கேட்டை 1-ஆம் பாதம புதன் தசை
இரு 14—0—0

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும். மிதுனத்திற் சுக்கிரனும் ராகுவும், கடகத்திற் குருவும், விருச்சிகத்தில் சூரியனும் சனியும். தனுசிற் சந்திரனும். அங்காரகனும், புதனும், கேதுவும் ஆகும். அங்காரகனும் புதனும் அஸ்தமன மடைந்திருக்கின்ருர்கள். குருவும் சனியும் வக்கிர கதியிலிருக்கின்ருர்கள்.

---

1. சந்திரன்.
2. விருச்சிகம்.
3. சனி.
4. கும்பம்.
5. சூரியன்.
6. அங்காரகன்.
7. கடகம்.
8. சுக்கிரன்.
9. மிதுனம்.
10. கேது.
11. சிம்மம்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. அத்திரி புகலுகின்ருர் ஆணது சென்ம மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாசல் கீழ்மேல் வீதி
சத்தி மாகாளி வாய்வு சங்கரன் கோஷ்டம் பாழாம்
சித்தசன் தந்தை தந்தி செப்புவோ மேல்பா லாகும்.

2. அத்திரி ரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆணுகும். இக் குழந்தை பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேன். வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு வாசலை யுடையதாகும். ஈஸ்வரியம்மன் கோயிலும் பெரிய காளியம்மன் கோயிலும் வடமேற்குத் திக்கில் இருக்கும். இந்தத் திக்கிலிருக்கும் சிவபெருமானுடைய கோயில் பாழடைந்து இருக்கும். மன்மதனுடைய தந்தையாகிய மகாவிஷ்ணுவின் கோயிலும் விநாயகருடைய கோயிலும் மேற்கே இருக்கும் என்று சொல்லுகின்ருேம்.

3. சிர மற்ருேன் தென்மே லாகும் துர்க்கையும் வடகீழாகும்
மரு வின சிறு ஊர் தன்னில் வடுகர்தன் குலமே யாகும்
திரு மகன் சேஷ்டனுக செப்புவோம் தாயே யாங்கள்
பிறக்கும் சேய் குடும்பச் சேதி பேசுவோ மினி மேலாக.

3. முருகக் கடவுளின் கோயில் தென் மேற்குத் திக்கிலிருக்கும். பார்வதியம்மன் கோவில் வடக்கிழக்குத் திக்கிலிருக்கும். இப்படிப்பட்ட அடையாளங்களுள்ள ஓர் சிறிய கிராமத்தில் தெலுங்கருடைய ஜாதியில் ஜாதகர் பிறந்தவராவர். இவர் ஜேஷ்ட குமாரனுகப் பிறந்தவர் என்று நாங்கள் சொல்லுகின்ருேம். பார்வதியம்மையே! இனிமேல் ஜாதகருடைய குடும்பத்தின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சரசமாய் [வார்த்தை யுண்டு
விந்தையாய்ப் பேசு வானும் விவேகியாம் மெவர்க்கு [நண்பன்
வந்தவர்க் கன்ன மீவன் மானிலம் உணச்சல் நீட்சி
தந்தனம் செலவு செய்வன் சல்லிய பாதை யேற்பன்

4. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றி சொல்லுகின்றேன். இவர் இனிப்பான வார்த்தைகளை உபயோகப்படுத்துவார். இன்பமாய்ப் பேசுவார். பிறர் ஆச்சரியப்படும்படியாய் அதிசயமாகப் பேசுவார். இவர் புத்தியை யுடைய அறிவாளியாகும். எல்லோருக்கும் சிநேகிதராக விருப்பார். இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் மெலிந்து நீண்டிருக்கும் தேகத்தை யுடையவர். தன்னுடைய பணத்தைச் செலவு செய்து விடுவார். இவர் கடன் படுவார்.

5. ஒருவர் சொல் தடுக்காளுகும் ஒண்டொடி தனக்கு
[யிஷ்டன்
தரையது விரையம் செய்வன் தந்தைக்குத் தாழ்வாய்
[வாழ்வன்
குறையென்ருேர்க் குதவி செய்வன் குடம்ராசி அனுட
[ளில்
வருகுவான் இரு சொல்லாகும் மாத்தாளை வெல்வா
[ளுகும்.

5. ஜாதகருடைய தகப்பஞர் ஒருவர் பேசும் போது அவரைத் தடுத்துப் பேச மாட்டார். இவர் நிலங்களையும் மனைகளையும் விற்றுவிடுவார். தன்னுடைய தகப்பஞரின் அஸ்தஸ்திற்குக் கீழ்பட்ட அந்தஸ்திலிருந்து வாழ்வார். கஷ்டங்களை அனுபவிக்கின்ருேம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். குடம் என்ற கும்பராசி லக்கினத்தில் அனுடம் நாள் என்ற அனுஷ நட்சத்திரத்தில் பிறந்தவராவர். இவர் நல்லதும் கெட்டதும் உண்மையும் பொய்யுங் கலந்து பேசுவார். இவர் தன்னுடைய எதிரியை ஜெயித்து விடுவார்.

6. கரமதில் கத்திரி ரேகை கஞ்சமாம் ரேகை யுண்டு
பெருமையாய்க் குடும்பம் பூர்வம் பூமியால் சீவிப் பாளும்
சிறுமைகள் அந்தம் நேரும் செய்நன்றி மறவா ளுகும்
மருவிடும் நாபி சூடு மனமது கிலேச மந்தம்.

6. ஜாதகருடைய தகப்பஞர் தன்னுடைய உள்ளங் கையில் கத்திரி ரேகை என்ற ஒருவித கெட்ட ரேகையை யுடையவராவர். இவர் கமல ரேகையையும் உடையவராவர். இவர் தன்னுடைய முற்காலத்தில் கௌரவமான குடும்பத்தை யுடையவராவர். நிலங்களை வைத்துக் கொண்டு அவற்ருல் ஜீவனஞ் செய்வார். இவருடைய கடைசி காலத்தில் கஷ்டங்களையும் வறுமையையும் அனுபவிப்பார். இவர் தனக்குப் பிறர் செய்த உதவியை மறக்காதவராவர். இவருக்குத் தொப்புளில் சூட்டுரோகமுண்டு. இவருடைய மனம் கஷ்டத்தை அடைந்து இருக்கும்.

7. அன்னையு மிரண்டு மாகும் அணுகிய பின் தாய்க்
[கின்ேனன்
தன்துணை ஆண்பால் ரெண்டு சத்திய மொன்றே
[திர்க்கம்
இன்னவன் பின்பு வேருய் யேகுவா னென்று
[சொல்வோம்
பொன்னினல் பகையுமாகும் பொருந்திடுமென்று
[சொல்லே.

7. ஜாதகருடைய தகப்பனுர் இரண்டு தாய்மார்களையுடையவராவர். இவர் இரண்டாவது தாயாருக்குப் பிறந்தவராவர். அஃதாவது இவருடைய தாயார் இவருடைய தகப்பனுருக்கு இரண்டாவது மனைவியாகும். இவருக்கு இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள், இவர் பிறகு இவர்களை விட்டுப் பிரிந்துப் போய் விடுவார். என்று சொல்லுகின்றேம். பணத்தால் விரோதங்கள் ஏற்படும் என்று சொல்லுகின்றேம்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

8. சொல்லிட்ட குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
புல்குவோ னிவன் குணத்தைப் புயபல முடைய னுகும்
வெல்லும் சொல் சமமாம் கல்வி மேதினி தன்னில்
[உய்வன்
அல்லல்கள் மத்தில் நேறும் அவனிகள் விரையம்
[கொஞ்சம்.

8. இங்குச் சொல்லப்பட்ட குணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவர் தோள் வலிவை யுடையவராவர். இவருடைய வார்த்தைகள் செலாவணி உடையனவாக விருக்கும். இவர் நடுத்தரமான படிப்புடையவர். இதனுடன் இவர் பூமியில் ஜீவிப்பார். இவருக்கு மத்திய வயதில் கஷ்டங்கள் உண்டாகும். நிலங்களில் சிலவற்றை விற்று விடுவார்.

9. மால் பத்தி கொஞ்ச முண்டு வருவோரை யாதா ரிப்பன்
பால் தயிர் பிரியனுகும் பதர்வார்த்தை கொஞ்ச முண்டு
நீலிமார் யிஷ்டம் கொள்வன் நெஞ்சது யிரக்க னுவன்
ஞாலங்கள் பின்னுல் சேர்ப்பன் நார்க்கால் விருத்தி

9. ஜாதகர் மகா விஷ்ணுவிடத்தில் சிறிது அன்புடையவர், இவர் தன்னிடம் உதவிக்காக வருபவர்களைக் காப்பாற்றுவார். இவர் பால், தயிர் இவற்றின்மேல் ஆசையுடையவராவர். சிறிது அவசரப் பட்டுப் பேசுவார். இவர் ஸ்திரீகளிடத்தில் பிரியமாக விருப்பார். சிறிது தயாளமான குணமுடையவராவர். இவர் நிலங்களைப் பிற்காலத்தில் சேர்த்து வைப்பார். ஆடுமாடுகள் விருத்தியடையும்.

10. இன்னவன் செங்கை தன்னில் யிலகிடும் ருத்திரரேகை
பொன்னது முன் சேர்க்காணும் பொருந்தும் பின்தனமு
[மென்றேம்
அன்னியர் பகையு மத்தில் அதிகமாய் நேரு மென்றேம்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட் டிடாயே.

10. ஜாதகருடைய உள்ளங்கையில் ருத்திர ரேகை யுண்டு. இவர் தனத்தைத் தன்னுடைய முற்காலத்தில் சேர்த்து வைக்க மாட்டார். ஆனால் பிற்காலத்தில் பணத்தைச் சேர்த்து வைப்பார் என்று சொல்லுகின்றோம். இவருக்கு நடுவயதில் சில அயலாருடைய விரோதம் அதிகமாக ஏற்படும் என்று சொல்லுகின்றோம். சர்க்கரையைப் போல இனிப்பான வார்த்தைகளையுடைய பார்வதியம்மையே! கேட்பீராக.

11. எந்தக் காலத்தில் துன்பம் யெய்திடும் விபரம் சொல்வாய்
நிந்தையாய்ப் புகரின் காலம் நிள்பணி புத்தி தன்னில்
சிந்தையும் கலக்க மெய்தும் செம்பொன்னும் விரயமாகும்
தந்தைனுள் பூமி சேதம் தைரிய மில்லா தாகும்.

11. ஜாதகருக்கு எந்தக் காலத்தில் கஷ்டங்கள் உண்டாகும். இதை விவரமாகச் சொல்லுவீர். கெடுதியான புகர் என்ற சுக்கிர தசையில் பணி என்ற ராகு புக்தியில்* மனதிற்குக் கஷ்டங்கள் ஏற்படும், தனம் விரையமாகும். இவருடைய தகப்பனாரின் நிலங்கள் நஷ்டமாகிப் போய்விடும், இவர் தைரியத்துடன் இருக்காமல் பயந்து கொண்டிருப்பார்.

குறிப்பு :—ஜாதகருக்கு வயது ௵ 28-02-00 முதல் ௵ 31-02-00 வரையிலும் சுக்கிர தசையில் ராகுபுக்தி நடக்கும்.

12. ஏது காரணத்தினாலே யிவன் பூமி விரையம் சொன்னீர்
ஓதுவீர் அந்தச் சங்கை உடுபதி நீச்ச மாக
தீதாகச் சேயு நீச்சம் தசமத்தோன் கூடி நிற்க
மேதினி விரயம் சொன்னோம் வெற்றியே யடையா
[னாகும்.

12. எந்தக் காரணத்தினால் ஜாதகருக்கு நிலங்கள் விரையாமாகிப் போய்விடும் என்று சொன்னீர், அந்த விஷயத்தைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, அத்திரிரிஷி பதில் சொல்லுகின்றார். உடு என்ற நட்சத்திரங்களுக்கு அதிபதியாகிய சந்திரன் விருச்சிக ராசியில் நீசமாகி விருப்பதாலும், கெட்டவராகிய சேய் என்ற அங்காரகன் கடக ராசியில் நீசமாக விருப்பதாலும், இவருடன் பத்திற்குடையவரான புதன் கூடி யிருப்பதாலும் நிலங்கள் விரயமாகிப் போய்விடும் என்று சொன்னோம். ஜாதகர் ஜயம் முதலிய நல்லதை அடைய மாட்டார்.

13. பிருகுமே புகலு கின்றார் பொன்னவன் சேயைப்
[பார்த்தும்
அரவுமே ஆறில் தங்க அதனுடன் காரி சேர
மருவாரை வெல் வானாகும் மானிலம் விருத்தியுண்டு
தரையினால் பூர்வ பொன்னும் சார்ந்திடும் பால னுக்கு.

13. இதற்குப் பிருகு மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்றார். பொன்னவன் என்ற குரு சேய் என்ற அங்காரகனைப் பார்ப்பதாலும் அரவு

என்ற ராகு ஆறில் இருப்பதாலும், இதனுடன் காரி என்ற சனி சேர்ந்திருப்பதாலும்* ஜாதகர் எதிரிகளை ஜயித்து விடுவார். பயிரிடும் நிலங்களை விருத்தியாக்குவார், இவருக்குப் பூமியிலிருந்து புராதனமான தனமும் கிடைக்கும், அஃதாவது புதையல் பணம் கிடைக்கும்.

குறிப்பு :—ஆருவது பாவத்தில் பாபக் கிரகங்களாகிய சனியும் ராகுவும் இருப்பதைப் பற்றிக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரத்தில் ஆருவது பாவத்திலுள்ள மூன்ருவது நான்காவது ஐந்தாவது (631, 632, 633-ஆவது) பாடல்களை வாசிக்கவும்.

14. காரணம் யாது யென்ன கருமத்தோன் லாப மாகித்
தீரமாய்த் தனபாக்கி யத்தோன் தசமத்தில் யிருப்ப தாலே
கூறினேம் காலம் சொல்வாய் குருடன் தன் திசையிலே [தான்
மா மறையோன் புக்தி அந்தத்தில் நேரு மென்ரேம்.

14. இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, பிருகு மகரிஷி சொல்லுகின்ருர். கருமத்தோன் என்ற பத்திற்குடையவராகிய புதன் லாபம் என்ற பதினொன்றில் இருப்பதாலும், தன பாக்கியத்தோன் என்ற இரண்டாவது ஒன்பதாவது வீடுகளுக்குடையவராகிய சுக்கிரன் தசமம் என்ற பத்திலிருப்பதாலும் இவ்விதமாகச் சொன்னேம். இதன் மேல் இந்தப் பலன்கள் நடக்குங் காலத்தைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்க, பிருகு மகரிஷி பதில் சொல்லுகின்ருர். குருடன் என்ற சுக்கிரனுடைய தசையில் மாமறையோன் என்ற குருவினுடைய புக்தியின் கடைசியில்* இவ்விதப் பலன் நடக்கும்.

*குறிப்பு:—ஜாதகருக்கு வயது ௵ 31-02-00 முதல் ௵ 33-10-00 வரையிலும் சுக்கிர தசையில் குரு புக்தி நடக்கும்.

15. தந்தை நாள் பூமிதானும் சல்லியத் தாலே நீங்கி
பிந்தியும் நேரு மென்ரேம் பொன் சனி புந்திகாலம்
அந்ததோர் விபரம் யாவும் அறிவிப்போம் பின் பாகத்தில்
தந்தியை வளர்த்த யெங்கள் தயாபரி கேட் டிடாயே.

15. ஜாதகருக்குப் பிதுரார்ஜித நிலங்கள் கடனுல் விலகி மறுபடியும் இவருக்கு பொன் என்ற குரு, சனி, புந்தி என்ற புதன் ஆகிய இவர்களுடைய புக்தி காலங்களில்* வந்து சேரும் என்று சொல்லுகின்ரேம். இந்த விஷயங்களின் விவரங்களைப் பற்றி இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ரேம். யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்று வளர்த்த எங்கள்பேரில் கிருபை யுடையவராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—ஜாதகருக்குச் சுக்கிர தசையில் குரு, சனி, புதன் இவர்களுடைய புக்திகள் வயது ௵ 31-02-00 முதல் ௵ 39-10-00 வரையிலும் நடக்கும.

## ஜாதகருடைய சகோதரபாவமும் விவாக காலமும்

16. தன்துணை ஆண்பால் ரெண்டு தங்கிடும் தீர்க்க மாகக்
கன்னிகை தோன்றும் தீதாம் கழறுவோம் பின்பால் சேதி
இன்னவன் மணத்தின் காலம் பியம்புவோம் யிருபா
[றுறில்
அன்னவள் உள்ளூர் நேரும் அறைகிறே மவள்
[குணத்தை

16. ஜாதகருக்கு இரண்டு சகோதரர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். ஒரு சகோதரி பிறந்து சீக்கிரம் இறந்து போய் விடுவாள். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னால் சொல்லுகின்றோம். இவருக்கு விவாகம் நேரிடுகின்ற காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இருபத்தாறுவது வயதில் மனைவி தன்னுடைய கிராமத்திலிருந்தே வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

குறிப்பு :—விவாக காலம் :—ஜாதகருக்கு இருபத்தாறுவது வயதில் சுக்கிர தசையில் சூரிய சந்திர புக்திகள் நடக்கின்றன. சுக்கிரன் குடும்பாதிபதியும் களத்திரகாரகனுமாகி ஒன்பதாவது பாவத்திற்குடையவராக விருப்பதால் ஜாதக பாரி ஜாதகம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம் (ஒன்பதிற்குடையவராகிய) சுக்கிரன் விவாகஞ் செய்து வைக்க அதிகார முடையவராகின்றார். மேலும் இதே சுலோகத்தின் கடைசி வரி பிரகாரம் ஏழிற்குடையவராகிய குருவுடன் சம்மந்தப்பட்ட சந்திரன் தன் புக்தியில் விவாகஞ் செய்து வைக்க அதிகாரம் உடையவராகின்றார். சூரியனுக்கு இவ்வித அதிகாரமில்லை.

## ஜாதகரின் மனைவியின் குணாதிசயங்கள்

17. பாலிகை மாஞ் சிவப்பள் பதரினில் செல்லா ளாகும்
சீலமும் கொஞ்சமுண்டு சிந்தையு மருமமுண்டு
ஆலம்போல் கோபம் கொஞ்சம் அடாவடி தன்னில்
[செல்லாள்
ஏலவே சமபோகத் தாள் யிடருன புத்தி யில்லாள்.

17. ஜாதகருடைய மனைவி மாந்துளிரைப் போன்ற ஒருவிதமான சிவப்பு நிறத்தை யுடையவள். அற்பமான விஷயங்களில் பிரவேசிக்க மாட்டாள். இவள் கொஞ்சம் சுத்தமும் நல்லொழுக்கமும் உடையவளாவள். தன்னுடைய மனத்திலும் நெஞ்சிலும் சிறிது இரகசியமுடையவளாவள்,

இவளுக்குப் பாம்பைப் போலச் சிறிது கோபம் வரும். முரட்டுத்தனமான விஷயங்களில் புத்தியில்லாமல் பிரவேசிக்க மாட்டாள். இவள் தடுத்தரமான போகத்தை யுடையவள். கெட்ட புத்தியை யுடையவளல்லள்.

18. மங்கை பாட்டாளி யாகும் மாரன்தன் மனதுக்
[கேத்தோள்
சங்கையாம் மனத்த ளாகும் சார்ந்திடும் பித்த தேகி
நங்கையும் வந்த பின்பு நல்கிடும் சல்லி யத்தை
அங்கவள் வயது தீர்க்கம் அம்பிகை யாளே கேளாய்.

18. ஜாதகருடைய மனைவி கஷ்டப்பட்டு வேலை செய்பவளாவள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுபவளாகும். இவள் சிறிது அச்சமுள்ள மனத்தை யுடையவள். பித்த குணமுள்ள தேகத்தை யுடையவள். இவள் ஜாதகருடைய வீட்டிற்கு வந்த பிறகு கடன்கள் ஏற்படும். இவள் நீண்ட வயதை யுடையவள், பார்வதியம்மையே! கேட்பீரா.

## ஜாதகருடைய புத்திரபாவம்

19. சுதர்களு மெழுவர் தோன்றும் சோர்வுறும் சிலது தானும்
சதமுடன் ஆண்பால் ரெண்டு சத்திமார் மூவராறும்
முதல் சுதர் கன்னி தோன்றும் முடவனின் பலத்தினாலே
பதரது மூன்று ஆறும் பகருவோம் பால னுக்கு.

19. ஜாதகருக்கு ஏழு குழந்தைகள் பிறப்பார்கள். இவற்றில் சில குழந்தைகள் இறந்து விடும். இரண்டு ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் நிலைத்திருக்கும். முதலாவது குழந்தை பெண்ணாகும். இது முடவன் என்ற சனியினுடைய வலிவால் நேரும். மூன்றாவது குழந்தையும் ஆறாவது குழந்தையும் சீக்கிரத்தில் இறந்துவிடும் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

20. சாதகன் பூர்வம் சொல்வேன் தக்கோலம் அருகில்
[உத்திரம்
மேதினில் சிறுஊர் தன்னில் விளங்கினான் ரெட்டி வம்சம
மாதுவு மாதலே யுண்டாய் மானிலம் கிருஷி செய்து
காதியு மில்லா தாகிக் கௌரவ குடும்ப மின்றி.

20. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் தக்கோலத்திற்குச் சமீபத்தில் வடக்கிழக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் ரெட்டியாருடைய குலத்திற் பிறந்தார். இவர் மனைவி மக்களை யுடைய

வராகி, பயிரிடும் வேலையைச் செய்து கொண்டு, கௌரவமில்லாதவராகியும் மேன்மையான குடும்பமில்லாதவராகியும்;

## ஜாதகருடைய யோகபாவம்

21. அரமின்றி மரண மாகி அயனுமே வரையப் பட்டு
வருகுவா னிந்தப் பாலன் வரைகிறோ மிவ்னின் யோகம்
தரையினால் சீவிப்பா னும் சல்லிய பாதை முன்னால்
பெருமையும் புகழும் பின்னால் பெருவனு மென்று
[சொல்வோம்.

21. தர்மங்கள் செய்யாதவராகியும் வாழ்ந்து, பிறகு இறந்து, பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இவர் பூமியினால் ஜீவனஞ் செய்வார். இவர் தன்னுடைய வயதின் முன் பாகத்தில் கடன் உபத்திரவமுடையவராவர். தன்னுடைய வயதின் பின் பாகத்தில் கீர்த்தியையும் கௌரவத்தையும் அடைவார் என்று சொல்லுகின்றோம்.

22. முப்பது மூன்றுண் டின்மேல் விளம்புவோம் யோகம்
[தானும்
செப்புவீர் விபரம் தன்னைச் செங்கதிர் தனக் கீருரில்
ஒப்புடன் புகரும் நிற்க உரைக்கிறோம் வேசி யோகம்
அப்பலன் தனமும் பூமி அடைகுவான் விசேஷ மாக.

22. ஜாதகருக்கு முப்பத்து மூன்றுவது வயதிற்குமேல் யோகம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, அத்திரி ரிஷி சொல்லுகின்றார். செங்கதிர் என்ற சூரியனுக்குப் பன்னிரண்டில் புகர் என்ற சுக்கிரன் இருப்பதால் வேசி யோகம்* என்ற ஒருவித யோகம் உண்டு. அதன் பலனாக ஜாதகர் அதிகமான செல்வத்தையும் நிலங்களையும் அடைவார்.

*குறிப்பு :—வேசி யோகம்:—சூரியனுக்குப் பன்னிரண்டில் சுக்கிரன் முதலியவர் இருப்பது வேசி யோகம் ஆகும். இது விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதககாலங்காரம் 277-ஆவது பாடல், தமிழ் ஜாதக சிந்தாமணி 2050 ஆவது பாடல், ஜாதக பாரி ஜாதகம் ஏழாவது அத்தியாயம் 121-ஆவது சுலோகம், ஜாதகசார தீபிகை ஐம்பத்தோராவது அத்தியாயம் முதலாவது சுலோகம், பல தீபிகை ஆருவது அத்தியாயம் எட்டாவது சுலோகம், ஆகிய இவற்றை வாசிக்கவும்.

23. பிறந்த ஞள்முத லாயாகப் பிரபல மிருபா ஞண்டும்
குறைந்திடும் அதின்மேல் செல்வம் கூறுவோம் முப்பான்
[ரெண்டும்
தரை பொருள் சேத மெய்தும் சத்துரு பகையு மாகும்
மருவிடும் சல்லிய பாதை மன துக்கம் யான தாலும்.

23. ஜாதகர் பிறந்தது முதற்கொண்டு இருபது வருஷம் வரையிலும், செல்வமும் சம்பத்துக்களும் குறைவுபடும். இதற்குப் பிறகு முப்பத்திரண்டு வயது வரையிலும் நிலங்கள் விரயமாகி விடும். சத்துருக்களும் விரோதங் களும் உண்டாகும். கடன் உபத்திரவம் ஏற்படும். மனத்திற்குத் துன்பங் கள் அதிகம் நேரிடும்.

24. அதற்கு மேல் மரண மட்டும் அம்புலி போலே செல்வம்
நிதிபூமி சேரு மென்ருேம் நேர் பகை நாச மாகும்
சதியுளோர் யுறவே யாகும் சதுர்பாதம் காலாள் விருத்தி
பதி செய்தல் திருவு மோங்கும் பார்வதி கேட் டிடாயே.

24. ஜாதகருக்கு முப்பத்திரண்டு வயதிற்கு மேலே தன்னுடைய மரண காலம் வரையிலும், செல்வம் வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் விருத்தியடையும். தனம் நிலங்கள் ஆகிய இவை வந்து சேரும் என்று சொல்லுகின்ருேம். நேருக்கு நேரான விரோதிகள் நாசமடைவார்கள். கெடுதியை நினைப்பவர்கள் சினேகிதராகமாறுவார்கள், ஆடுமாடுகளும் கால் வேலைக்காரர்களும் அதிகமாவார்கள். ஜாதகர் ஒரு வீட்டைக் கட்டுவார். செல்வமும் சம்பத்துக்களும் அதிகரிக்கும். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

25. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அல்பமாம்
[கோப முண்டு
தன்னுட லிரு சிகப்பள் சாந்தமும் உடையா ளாகும்
மன்னவன் மனதுக் கேத்தோள் வரு வோரை
[ஆதரிப்பள்
எந்நேரம் கவலை யுண்டு இடரான புத்தி யில்லாள்.

25. ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவளுக்குச் சிறிது கோபம் வரும். இவள் தேகம் சிவப்பும் கறுப்பும் ஆகிய இவ்விரண்டு நிறங்கள் கலந்த மாநிறமாகவிருக்கும். இவள் அமைதியையும் பொறுமையையும் உடையவளாவள். இவள் ஜாதகரு டைய தன் கணவனுடைய மனத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுவாள். இவள் தன்னிடத்திற்கு உதவிக்காக வருபவரைக் காப்பாற்றுவாள். இவளுக்கு சதாகாலமும் மனத்தில் சஞ்சலம் இருந்து கொண்டேவிருக்கும். கெட்ட புத்தியை யுடையவளல்லள்,

## தாயாருடைய சகோதரர்களும் முன்ஜன்மமும்

26. இல்லமு மேல்பா லாகும் இவள் துணை ஆண்பா
[லொன்று
வல்லியு மவ்வார் தீர்க்கம் வரைகிறே மிவளின் பூர்வம்
அல்லலை விலக்கு கின்ற அருணைக்கு மேல் பாலாக
புல்கினுள் சிறுவூர் தன்னில் பூவைசிய குலத்திலே தான்.

26. ஜாதகரின் தாயாருடைய வீடு மேற்குத் திக்கில் இருக்கும். இவளுக்கு ஒரு சகோதரனும் ஓர் சகோதரியும் நீண்ட வயதுடையவர்களாக விருப்பார்கள். இவளுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். கஷ்டங்களை நிவர்த்தி செய்கின்ற அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை ஸ்தலத்திற்கு மேற்கே ஒரு சிறிய கிராமத்தில் பூவைசியர் ஜாதியில் பிறந்தாள்.

27. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி வாழு நாளில்
பகையதைப் புகலக் கேண்மோ பஞ்சையா மாது பேரில்
தகமையாய் நிந்தை சொல்ல தையலும் மனது வாடி
மிருபகை சொன்ன பாவி மேவு பின் சென்மம் தன்னில்.

27. ஜாதகருடைய தாயார் சௌக்கியமுள்ள ஒரு நல்ல குடும்பமுள்ளவளாக வாழுகின்ற காலத்தில் இவளுக்கு வந்து நேர்ந்த துன்பத்தைச் சொல்லுகின்றேன். கேட்பீராக. ஓர் ஏழையாகிய ஸ்திரீயின்மேல் வீண் அபவாதத்தைச் சாட்ட இவள் தன்னுடைய மனத்தில் கஷ்டத்தை யடைந்து " என்மேல் அதிகமான விரோத வார்த்தைகளைச் சொல்லிய பாபியாகிய உனக்கு மறுஜன்மத்தில் ;

28. என்னைபோல் சுதர் பெண்ணின்றி யீன்றதோர் சுதரில்
[பாதி
துன்மையாய்க் காலனுடு சேருமே யிதுவு மன்றி
பொன்பணி அதிக மின்றிப் பூமியில் வாழ்வா யென்றுள்
கன்னிக்கு அந்தச் சாபம் கலந்தது யென்று
[சொன்னோம்.

28. என்னைப் போல உனக்கு பிள்ளை, பெண் இல்லாமல், நீ பெற்ற குழந்தைகளில் பாதி குழந்தைகள் இறந்து விடவேண்டும். இதுவுமல்லாமல் பணம் ஆபரணம் ஆகிய இவை அதிகமாக வில்லாமல் நீ பூமியில் வாழக் கடவது " என்று சபித்தான். ஆகையால் ஜாதகருடைய தாயாருக்கு இந்தச் சாபம் வந்து சம்பவித்தது என்று சொன்னோம்.

29. மாதுவு மரண மாகி மால்மகன் வரையப் பட்டு
காதலி யிக் குலத்தில் வந்தன ளென்று சொல்வோம்

தீதாக யேழை சாபம் சேர்ந்திடு சுதர்பெண் தோஷம்
போதன மில்லா ளாகும் பிறந்த சேய் பாதி நஷ்டம்.

29. ஜாதகருடைய தாயார் முன் ஜன்மத்தில் இறந்து விஷ்ணுவின் மகனுகிய பிரமதேவரால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்தத் தெலுங்கர் குலத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லு கின்ருேம். ஏழை ஸ்திரீயினுடைய கெட்ட சாபம் இவளை வந்து அடையும். ஆண் பெண் குழந்தைகள் இறந்து விடும். இவள் அதிகமான தனமில்லாத வளாவள். தனக்குப் பிறந்த குழந்தைகளில் பாதி சீக்கிரம் இறந்து போய் விடும்.

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம், தகப்பனுருடைய முன்ஜன்மம்

30. மறுசென்மம் கலிங்கு தன்னில் வருகுவாள் யிக் [குலத்தில்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வதி வாழ்வா ளாகும்
உரைகிருேம் தந்தை பூர்வம் உயர்வான அரங்கம் [தென்பால்
பெருஊரில் வைசிய சேயாய்ப் பிறந்துமே செட்டு [செய்து.

30. ஜாதகருடைய தாயார் தன்னுடைய பின் ஜன்மத்தில் கலிங்க தேசத்தில் இந்த தெலுங்கர் குலத்திற் போய்ப் பிறப்பாள், லக்ஷ்மியுனுடைய கடாக்ஷத்தை அடைந்து செல்வவதியாக விருந்து இவள் வாழ்வாள். ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். மேன்மை பொருந்திய அரங்கம் என்ற ஸ்ரீரங்கம் என்ற திவ்யக்ஷேத்திரத் திற்குத் தெற்கேயுள்ள ஓர் பெரிய கிராமத்தில் வைசியருடைய குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து, வியாபாரத்தைச் செய்து கொண்டு.

## ஜாதகருடைய தகப்பனுரின் மறுஜன்மம்

31. பலருக்கும் நல்லோ ளுகிப் பகவானின் பக்தி பூண்டு
குலவினுன் கால ளுடு குறைதலை வரையப் பட்டு
தலைவனும் உதித்தா னென்ருேம் சாற்றுவோ மிவன்பின் [சென்மம்
அலைகடல் ஓரமாக அறுமுகன் போரூர் தன்னில்,

31. ஜாதகருடைய தகப்பனுர் அநேகருக்கு நல்லவராகவிருந்து கொண்டு, கடவுளின் மேல் அன்புடையவராகி இறந்து எமபட்டணத் திற்குச் சென்று பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். இவருடைய

மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஆறுமுகக் கடவுளின் ஸ்தல மாகிய போரூர் என்ற திருப்போரூரில் சமுத்திரக்கரை ஓரமாக.

32. உதிப்பனும் சைவ சேயாய் உரைப்பீர்கள் கரும காலம்
சத முடன் முப்பாறுறில் தந்தைக்குக் கொண்ட
[மெய்தும்
அதுகாலம் புகரின் சக்கரம் ஆதித்தன் மகன் பொசிப்பில்
விதியது முடியு மென்றோம் விளம்பின மொழி குன்றாது

32. சைவராகப் பிறப்பார். தகப்பனுருக்கு மரண காலத்தைப் பற்றி இனிமேல் சொல்லுவீர்கள் என்று கேட்கவே, அத்திரி சொல்லுகின்றார். ஜாதகருக்கு முப்பத்தாறுவது வயதில்* தகப்பனுருக்கு மரணம் நேரிடும். அப்போது புகரின் சக்கரம் என்ற சுக்கிர தசையில் ஆதித்தன் மகன் பொசிப்பு என்ற சனியினுடைய புக்தி நடக்கும். அப்போது தகப்பனுரு டைய ஆயுள் முடிவு பெறும் என்று சொல்லுகின்றோம். நாங்கள் சொல்லிய பலன் தவறிப் போகாமல் நடக்கும்.

*குறிப்பு :—பிதுர் மாரகம்:—ஜாதகருக்கு வயது ௵33-10-00 முதல் வயது ௵ 37-00-00 வரையிலும் சுக்கிர தசையில் சனி புக்தி நடக்கின்றது. பிதுர்லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை. நாற்பத்தாறுவது சுலோகம் பிரகாரமும் (பிருஹத் பராசரஹோரை, சந்திர காவியம், தாண்டமாலை முதலிய கிரந்தங்கள் பிரகாரமும்) சுக்கிரன் மாரகாதிபதியாகின்றார். சுக்கிரநாடி பிரகாரமும் சுக்கிரன் பிதுர்பாவத்திற்குரியவராக விருப்பதால் தன் தசையில் பிதுரைக் கொல்ல அதிகாரமுடையவராகின்றார். மேலும் சுக்கிரன் கர்மஸ்தானமாகிய பத்தாவது பாவத்தில் இருக்கின்றார். மேலும் ரிஷபலக்கினத்திற்கு எட்டிற்குடையவராகிய குருவைச் சனி பத்தாம் பார்வையுடன் பார்க்கின்றார். துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது பதினுன்காவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் சனிக்குத் தன் புக்தியில் பிதுருக்கும்மாரகஞ் செய்ய அதிகாரமிருக்கின்றது. (துய்ய கேரளம் என்ற தமிழ் புத்தகம் பெரும்பாலும் ஜாதக பாரி ஜாதத்தை அநுசரித்து எழுதப்பட்ட கிரந்தம் ஆகும்.)

33. பிருகுமே தடுத்துச் சொல்வார் புனிதனுக்கு கிருபா
[னேழில்
வருகுமே தந்தை கொண்டம் மறலியைக் காண லுறும்
திருகிலா நாற்ப தாண்டில் செப்புவோம் அன்னை
[கெண்டம்
பெரு வயிறேனைப் பெற்றப் புண்ணியசாலி கேளாய்.

33. இவ்விதமாக அத்திரி ரிஷி சொல்லவே, பிருகு மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் தகப்பனுருக்குக்

கெண்டம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். அப்போது தகப்பனுருக்கு எமதரிசனம் கிடைக்கும்.* தாயாருக்கு ஜாதகருடைய நாற்பதாவது வயதில் மரணம் நேரிடும் என்றும் சொல்லுகின்றோம். பெரிய வயிற்றை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் புண்ணியசாலியாகிய பார்வதி யம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—பிதுர் கெண்டம்:—இங்கு பிருகு ரிஷி ஜாதகருக்கு இருபத்தேழா வது வயதில் பிதுருவுக்கு எமதரிசனம் கிடைக்க நேரிடும் என்று சொன்னுரே தவிர பிதுர் இறந்து விடுவார் என்று வெளிப் படையாகச் சொல்லவில்லை. பிருகு ரிஷியை அத்திரி ரிஷி யாவது வேறே யாருமாவது தடுத்துப் பதில் சொல்லவில்லை. இதைக் கவனிக்கவும். ஜாதகருக்கு இருபத்தேழாவது வயது முடிகிற வரையிலும் சுக்கிர தசையில் சந்திரபுக்தி நடக் கின்றது. ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் ரிஷப லக்கினத்திற்குச் சந்திரன்கூட மாரகாதிபதி யாகின்ருர். இவர் எட்டிற் குடையவராகிய குருவுடன் கூடி யிருக்கின்ருர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது பதினுன்காவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் சந்திரன் மாரகஞ்செய்ய அதிகாரமுடையவராகின்ருர். மேலே, முன்பு சொல்லிய காரணத்தினுல் சனியும் மாரகரா கின்ருர். இவ்விருவரில் யாருக்கு அதிக அதிகாரம் இருக் கின்றதென்று கவனிப்போம். ஜாதக சந்திரிகை இருபத்தேழா வது சுலோகம் பிரகாரமும் இருபத்து மூன்ருவது சுலோகம் பிரகாரமும் சந்திரனுடன் சம்மந்தப்பட்ட (அஃதாவது சந்திரனைப் பார்த்த) கிரகமாகிய சனி அதிக வலிவுடையவராவர். தாண்டவ மாலை இருபத்திரண்டாவது, இருபத்தாருவது பாடல்களைப் பார்க்கவும். மேலும், சூரியனும் சுக்கிரனும் வலிவாகவிருக் கின்ருர்கள். பிதுர் ஸ்தானத்தைக் குரு பார்த்திருக்கின்ருர். ஆகையால் பிதுருக்கு வயது தீர்க்கம்.

குறிப்பு :—மாதுர்மாரகம்: ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் சுக்கிர தசையில் புதன் புக்தி நடக்கின்றது மாதுர் லக்கினம் நான்கா வது வீடாகிய தனுசு ஆகும். இதற்கு ஜாதக சந்திரிகை முதலிய கிரந்தங்கள் பிரகாரம் சுக்கிரனும் புதனும் மாரகர்கள். மேலும், சுக்கிரன் ஏழிலும், புதன் எட்டிலும் இருக்கின்ருர்கள். ஆகையால் சுக்கிர தசையில் புத புக்தியில் தாயாருக்கு மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலமும் பின்ஜன்மமும்

34. *மைந்தனுக் கெழுபான் மூன்றில் விருச்சிக மாதம்*
*[தன்னில்*
*பிந்தின பக்கம் தன்னில் பஞ்சமி திதியிலே தான்*

இந்தவ னுடலம் யேகும் யியம்புவோ மிவன்பின்
[சென்மம்
முந்தின தலத்திலே தான் மூதிப்பனும் செங்குந்த
[வம்சம்,

34. ஜாதகருக்கு எழுபத்து மூன்ருவது வயதில் விருச்சிக மாதம் என்ற கார்த்திகை மாதத்தில் தேய் பிறையில் பஞ்சமி திதி தினத்தில் இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும். அஃதாவது இவர் இறந்து விடுவார்* இனிமேல் இவருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்ருேம். முந்தின ஸ்தலமாகிய சிதம்பரம் என்ற க்ஷேத்திரத்தில் செங்குந்தருடைய ஜாதியில் ஜாதகர் பிறப்பார்.

*குறிப்பு :—ஜாதகருடைய மரண காலம்:-ஜாதகருக்கு வயது எழுபத்து மூன்றில் ராகு தசையில் புதன் புக்தி நடக்கின்றது. ராகு சனியினுடைய வீட்டில் சனியுடன் கூடியிருக்கின்ருர். ஆகையால் ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரம் சனியினுடைய பலனை ராகு கொடுக்கவேண்டும். சனி ஆருவது வீட்டிலிருக்கின்ருர், இவர் எட்டாவது பாவத்தைப் பார்க்கின்ருர் ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது பதினுன்காவது இருபதாவது பாடல்கள் பிரகாரமும் குமாரசாமீயம் மகாதசைப் படலம் நான்காவது பாடல் பிரகாரமும் ஆறில் இருக்கும் சனி மாரகராகின்ருர். இவருடன் கூடிய ராகு தசை ஏழாவது தசையாக வருவதால் இந்தக் கிரனூர் நடராஜருடைய ஜாதகாலங்காரம் 975-ஆவது பாடல் பிரகாரம் ராகு மாரகராகின்ருர். ராகு எட்டையும் பார்த்திருக்கின்ருர். புதன் எட்டிற்குடைய அங்காரகனுடன் கூடியிருப்பதால் துய்ய கேரளம் பிரகாரம் மாரக ராகின்ருர். ஆகையால் ஜாதகருக்கு ராகு தசையில் புதபுக்தியில் மாரகம் நேரிட அமைப்பு இருக்கின்றது.

35. இன்னவன் செனிக்கும் காலே யீட்டினுள் முதல்
[பாதத்தில்
புந்தியின் திசையிருப்பு புகலுவோ மிரே ழாண்டும்
வந்தவன் தனக்கு ரோகம் வளவுமே பாக மூன்ருய்
பிந்துணை விருத்தி யுண்டு பொரிந்திடும் சிலது
[யென்ருேம்.
(மற்ற சங்கதி யிரண்டில் சொல்வோம்)

35. ஜாதகர் பிறக்கும் போது ஈட்டி நாள் என்ற கேட்டை நக்ஷத்திரத்தில் முதல் பாதம் ஆகும். இதற்குரிய புந்தி என்ற புத தசையில் இருப்பு நின்ற வருஷம் பதினுன்கு என்று சொல்லுவோம். ஜாதகருக்கு இக்காலத்தில் வியாதி உண்டாகும். இவருடைய குடும்பம் மூன்று பாகங்களாகப் பிரிந்து போய் விடும். இவருக்கு இளைய சகோதரர்கள் உண்டாவார்கள். இவற்றில் சிலர் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்ருேம். மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ருேம். —C. G. R,

# ஜாதகம் 6

## ஜனனகால கிரகநிலை

1. [1]பிறை [2]குசன் குருவும்[3] தேளில் பின் [4]சிகி [5]மானதாக
[6]கரியவன் ராகு [7]நண்டு [8]கதிரவன் [9]சீய மாக
நரை [10]புகர் புதனும் கன்னி நல்கிய சென்மம் மாது
உறைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்க லுற்ருள்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும், அங்காரகனும், குருவும் விருச்சிகத்திலும், கேது மகரத்திலும், சனியும் ராகுவும் கடகத்திலும், சூரியன் சிம்மத்திலும், சுக்கிரனும் புதனும் கன்னியிலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்தால் பலாபலன்களைச் சொல்லுவீரென்று பார்வதி யம்மையார் கேட்கவாரம்பித்தார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | சனி ராகு |
| கேது | | | சூரியன் |
| | சந்திரன் அங்காரகன் குரு | | லக்கினம் புதன் சுக்கிரன் |

அனுஷம் 4-ஆம் பாதம். சனி தசை ஷு 3—06—00.

குறிப்பு:—இந்த ராசிசக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும். மேஷத்தில் சுக்கிரனும், ரிஷிபத்தில் புதனும், சிம்மத்தில் ராகுவும், கன்னியில் குருவும், துலாத்தில் அங்காரகனும், விருச்சிகத்தில் சந்திரனும், தனுசில் சூரியனும், கும்பத்தில் சனியும் கேதுவும் ஆகும்.

---

1. சந்திரன்.
2. அங்காரகன்.
3. விருச்சிகம்.
4. கேது.
5. மகரம்.
6. சனி.
7. கடகம்.
8. சூரியன்.
9. சிம்மம்.
10. சுக்கிரன்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பிருகுமே புகலு கின்ரூர் பிறந்திடு மாண் பால் சென்மம்
வருகுவான் மாதுர் யில்லம் வடவாசல் கீழ்மேல் வீதி
சிறுஊராம் தந்தை யில்லம் செப்புவோம் வடகீழ் [தன்னில்
அறுநாழி கடிகை தூரம் அறைகிரேம் வட தென்வீதி.

2. பிருகுமகாரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் ஆகும். ஜாதகர் தன்னுடைய தாயாருடைய வீட்டில் பிறந்தார். இந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு வாயிலை யுடையதாகும். பிறந்த கிராமம் ஒரு சிறிய கிராமமாகும். இவருடைய தகப்பனருடைய வீட்டைப் பற்றிச் சொல்லுகின்ரேம். இஃது இவ்வூருக்கு வடகிழக்குத் திக்கில் ஆறு நாழிகை வழி தூரத்தில் வடக்குத் தெற்குத் தெருவில் இருக்கிறது என்று சொல்லுகின்ரேம்.

3. வாசலும் மேல் நோக்கம் மாகாளி யீசன் கோஷ்டம்
பேசுவோம் வடகீழாகும் பெருமாளின் கோஷ்டம் வாய்வு
பாசமாய் மாரி தென்மேல் பகருவோம் சிறு ஊராகும்
மாசிலா வடுகர் வர்க்கம் வருகுவான் மூன்ரும் சென்மம்.

3. ஜாதகர் பிறந்த வீட்டின் வாயில் மேற்குத் திக்கைப் பார்த்து இருக்கும். காளியம்மன் கோயிலும் சிவபெருமானின் கோயிலும் வடகிழக்குத் திக்கிலிருக்கும். மகாவிஷ்ணுவின் கோயில் வடமேற்குத் திக்கில் இருக்கும். பிறந்த கிராமம் சிறிய கிராமமாகும். ஜாதகர் மூன்ருவது குழந்தையாகத் தெலுங்கர் ஜாதியில் வந்து பிறப்பார்.

## ஜாதகருடைய தகப்பனரின் சகோதரபாவம்

4. வந்தவன் யோகச் சேதி வரைகிரே மினிமே லாக
தந்தையின் துணை ஆண் ஒன்று சாற்றுவோம் [தீர்க்கமாக
விந்தையாய்க் கன்னி யைந்து மேவிடும் சிலது சேதம்
பிந்திய துணை ஆணுகப் பேசுவோ மவன் குணத்தை.

4. ஜாதகருடைய யோக விஷயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகின்ரேம். இவருடைய தகப்பனருக்குச் சகோதரர் ஒருவராகும். இந்தச் சகோதரர் நீண்ட வயதை யுடையவர். தகப்பனருக்குச் சகோதரிகள் ஐந்து பேர் ஆகும். இவர்களில் சிலர் சீக்கிரம் இறந்து போய்விடுவார்கள். தகப்பனருக்கு இளைய சகோதரர் ஆணுகும். இந்தச் சகோதரருடைய குணங்களைப் பற்றிச் சொல்லுகின்ரேம்.

5. இருநிற முணச்சல் தேகி யீகைவான் கிருஷி செய்வன்
மருமவான் மாடு விருத்தி மனைவி யாலவ மானத்தன்

தரையது விருத்தி செய்வன் சந்ததி ஆண்பால் தோஷம்
அரிவையர் யிரண்டு தீர்க்கம் அனுகாது மற்ற
[தெல்லாம்.

5. தகப்பனாரின் இளைய சகோதரர் ஒல்லியான, மெலிந்த தேகத்தை யுடையவர், பிறருக்குக் கொடுக்கும் தாயாள குணத்தை யுடையவர். பயிர்த் தொழிலைச் செய்து ஜீவிப்பார். இவர் தன்னுடைய மனத்தில் ரகசியத்தை யுடையவர், இவருக்கு மாடுகள் விருத்தியாகும். இவருக்குத் தன்னுடைய மனைவியால் அபகீர்த்தியும் இழிவும் நேரிடும். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தானிய வகையருக்களை அதிகப்படுத்துவார். இவருக்கு ஆண் குழந்தை தோஷமுண்டு. இரண்டு பெண்கள் நீண்ட வயதுடையவர்களாக விருப்பார் கள், மற்றக் குழந்தைகள் எல்லாம் சீக்கிரம் இறந்து போய்விடும்.

6. பின்சில நாள்கள் சென்று பிரிதலாம் குடும்ப மென்றோம்
தன்னகர் விட்டு நீங்கும் தரணியை செலவு செய்வன்
எந்த காலத்தில் வேருய் யெய்துவான் விபரம்
[சொல்வாய்
மன்னிய மூவைந் தாண்டில் வேருவன் யென்று
[சொல்வோம்.

6, தகப்பனாரின் இளைய சகோதரர் சிறிய காலம் கழித்துக் குடும்பத்தை விட்டுப் பிரிந்து வேருகப் போய் ஜீவிப்பார் என்று சொல்லு கின்றோம். இவர் பிறகு தன்னுடைய கிராமத்தை விட்டு விட்டு வெளி யூருக்குப் போய் விடுவார். இவர் தன்னுடைய நிலங்களை விற்று விடுவார். இவர் எந்தக் காலத்தில் பிரிந்து வேருகப் போய் விடுவார் என்பதை விவர மாகச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கின்றார். இதற்குப் பதினைந்தாவது வயதில் பிரிந்து போய் விடுவார் என்று பிருகு மகரிஷி பதில் சொல்லுகின்றார்.

7. மறுநகர் செல்வா னென்றீர் வரைகுவீர் காலம் தன்னை
இருபது ஒன்று ஆண்டுள் யேகுவான் குடகு தன்னில்
தரை யது யிவனுக்குச் சார்ந்திடும் நிதியி னாலே
உரைக்கிறோம் பின் பால் சேதி உத்தமி கேட்டிடாயே.

7. தகப்பனாரின் இளைய சகோதரர் வேறு கிராமத்திற்குப் போய் விடு வார் என்று சொன்னீரே, இவ்விதமாகப் போய் விடுகின்ற காலத்தைச் சொல்லுவீர். இருபத்தோரு வயதிற்குள்ளே இவர் குடகு தேசத்திற்குப் போய் விடுவார். இவர் இவ்விதமாக வெளியூருக்குப் போய் விடவே இவ ருடைய நிலங்களைத் தகப்பனார் தனத்தைக் கொடுத்து வாங்கிக் கொள்ளு வார்*. பின்னால் மற்ற விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம் பார்வதியம் மையாரே ! கேட்பீராக.

*குறிப்பு:—இளைய சகோதரர் குடகிற்குப் போய்த் தனத்தைக் கொடுத்து நிலங்களை வாங்குவார் என்பதை விட தகப்பனார் பணத்தைக் கொடுத்து நிலங்களை வாங்கி விடுவார் என்பது பொருத்த முடையதாகும் பிதுர்லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்கு மூன்றில் சனி ராகு இருப்பது பிதுர் சகோதரர்களுக்குத் தோஷமாகும். ரிஷபத்திற்கு குடும்ப ஸ்தான மாகிய மிதுனத்தை அங்காரகன், ரிஷபத்திற்கு விரயாதிபதி பதியாகிப் பார்ப்பது குடும்ப தோஷத்தை யுண்டு பண்ணும். குடும்பாதிபாகிய புதன் ஆறுக்குடைய சுக்கிரனுடன் கூடி யிருப்பது குடும்ப தோஷத்தை விளைவிக்கும். ஆகையால் இளைய சகோதரர் கஷ்டத்துடன் வெளியூருக்குப் போக நேரிடும்.

8. தந்தையின் சேதி சொல்வேன் சகலர்க்கு நல்லோ
[னவன்
முந்துமால் பத்தி கொஞ்சம் மொழியது சுகமே யாகும்
சிந்தையு நல்ல தாகும் சீக்கிர நடையு மாவன்
விந்தையாய் வார்த்தை சொல்வன் வீண் வம்பில்
[செல்லானாகும்.

8. ஜாதகரின் தகப்பனாருடைய. குணாதிசயங்களையும் விஷயங்களை யும் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். முதலில் இவர் மகாவிஷ்ணுவின்மேல் சிறிது அன்புடையவராக விருப்பார். இவர் இன்பமாக வார்த்தைகளை உபயோகித்துப் பேசுவார். இவர் நல்ல மனத்தையும் எண்ணத்தையு முடையவராவர், சீக்கிரமாகவும் விரைவாகவும் நடப்பார். இவர் பிறர் ஆச்சரியப்படும் படியாகவும் வியப்படையும்படியாகவும் பேசுவார். வீணான சண்டை சச்சரவுகளில் தலையிடமாட்டார்.

9. தரணியால் உயர்வா னாகும் சதுஷ்பாதம் விருத்தியல் பம்
இருநிற முணச்சல் தேகி இடரென்றோர்க் குதவி
[செய்வன்
கரை மனம் ஈகை யாளன் காகுத்தன் நாம முள்ளோன்
பொரை சொல்லான் புயபலத்தன் புண்ணிய வதியே
[கேளாய்.

9. ஜாதகருடைய தகப்பனார் நிலங்களால் ஜீவனஞ் செய்வார். இவருக்கு ஆடுமாடுகளின் விருத்தி குறைவாக விருக்கும். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள மாநிறமுள்ள தேகத்தையும் ஒல்லியான மெலிந்த தேகத்தையுமுடையவர். கஷ்டப்படுகின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு இவர் உபகாரத்தைச் செய்வார். இவர் இளகிய மனத்தை யுடையவர், பிறருக்குக் கொடுக்கும்படியான தயாள குணத்தை யுடையவர். இவருக்கு ஸ்ரீராமபிரானின் பெயருண்டு. இவர் பிறர்மேல் குற்றத்தைச்

சொல்ல மாட்டார். இவர் தோள் வலியை யுடையவர். புண்ணியசாலியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

10. இன்னெறி யுடையா னுக்கு யிப்பால னுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைக் கேண்மோ அரிநிற முணச்சல் [தேகி
பின்ன மில்லாதா னாகும் பொய்யது புகலா னாகும்
அன்னையும் சுக மில்லாதான் ஆதியில் குடும்ப மலைச்சல்.

10. இதுவரையிலும் சொல்லப்பட்ட குணங்களை யுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களைக் கேட்பீராக. இவர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய ஒருவித நீலமேகவர்ணமுடைய தேகத்தை யுடையவர். ஒல்லியான மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் யாதொரு அவயக் குறைவு மில்லாதவராவர், இவர் பொய் சொல்ல மாட்டார். இவர் தாயாருடைய சுகங்களை* உடையவரல்லர், முதலில் இவருடைய குடும்பத்திற்குக் கஷ்டங்கள் ஏற்படும்.

*குறிப்பு:—தாயார் சுகம் இல்லை என்ற விஷயம்:—மாதுர்ஸ்தானமாகிய நான்கிற்குடைய குரு தன் வீட்டிற்குப் பன்னிரண்டிலும் லக்கினத்திற்கு மூன்றிலும் மறைந்து விட்டு அஷ்டமாதிபதியாகிய அங்காரனுடன் கூடியிருப்பது தாய்க்குத் தோஷமாகும். மாதுர் காரகனாகிய சந்திரன் மூன்றில் நீச்சமடைந்து அஷ்டமாதிபதியாகிய அங்காரனுடன் கூடி யிருப்பது மாதுருக்குத் தோஷமாகும்.

11. வித்தையும் சமம தாகும் வேரூரில் சிலநாள் வாசம்
அத்தை பால் அணுகி வாழ்வன் அவசர மனத்த னாமே
சித்தமே கரப்பு மில்லான் தீர மில்லாத நெஞ்சம்
நத்தினோர்க் குதவி செய்வன் நாற்காலி விருத்தி யுண்டு.

11. ஜாதகருக்குப் படிப்பு நடுத்தரமானதாகும். இவர் அயல் கிராமத்தில் சில காலம் வாசஞ்செய்வார். இவர் தன்னுடைய அத்தையிடஞ்சென்று அவளிடமிருந்து வாழ்வார். இவர் அவசரமான மனத்தையும் குணத்தையும் உடையவராவர். இவர் தன்னுடைய நெஞ்சில் யாதொரு தோஷம், கபடம், இல்லாதவராவர், இவர் தைரியமில்லாத மனத்தையுடையவர். இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்கு உபகாரஞ்செய்வார். இவருக்கு ஆடுமாடுகள் விருத்தியாகும்.

12. தன்துணை முன் பெண் ரெண்டு தங்கிடும் பின்னோர் [காணான்
என்ன காரணத்தினாலே யெய்தாது துணை பின் [னெறீர்

அன்னையும் ஓர் பட்சத்துள் அந்தக நாட்டை காண்பாள்
பின்னை வேரன்னை சேர்வள் புகலொணு சுதர்கள்
[தானே:

12. ஜாதகருக்கு மூத்த சகோதரிகள் இருவராகும். இவருக்கு இளைய சகோதரர்கள் கிடையா. எந்தக் காரணத்தினுல் இளைய சகோதரர்கள் கிடையா என்று சொன்னீர். ஜாதகருடைய தாயார் ஒரு பட்சமாகிய சுமார் பதினைந்து நாளுக்குள்ளே எமனுடைய பட்டணத்திற்குப் போய் விடுவாள். அஃதாவது இறந்து விடுவாள்*. ஜாதகருக்கு இரண்டாவது தாயார் வந்து நேரிடுவாள். ஆகையால் ஜாதகருக்குப் பின் துணைவர்கள் இல்லை.

*குறிப்பு ;—இரண்டு தாயார் விஷயம் :—பிதுர் லக்கினம் ஒன்பதாமிடமாகிய ரிஷபமாகும். இதற்கு முதல் தாரவீடு ஏழாவது வீடாகிய விருச்சிகமும் இரண்டாவது தார வீடு ஒன்பதாவது வீடாகிய மகரமும் ஆகும். பிதுர் லக்கினுதிபதியாகிய சுக்கிரனை இரண்டாவது தார அதிபதியாகிய மகரத்திற்குடைய சனி மூன்ருவது பார்வையுடன் பார்ப்பது பிதுருக்கு இரண்டாவது தாரயோகமாக இருக்கின்றது. மேலும் முதல் தார வீடாகிய விருச்சிகத்திற்குடைய (ஏழாவது வீட்டிற்குடைய) அங்காரகன் லாபாதிபதியும் அஷ்டமாதிபதியுமாகிய குருவுடன் கூடி ரிஷப லக்கினத்திற்கு ஏழாவது கேந்திரத்தில் பலவான்களாக விருக்கின்ருர்கள். ஆகையால் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் அறுநூற்றெண்பத்தொன்பதாவது (689) பாடல் பிரகாரமும், தில்லை நாயகர் செய்த தமிழ் ஜாதக சிந்தாமணியில் தொள்ளாயிரத்தெண்பத்து நான்காவது (984) பாடல் பிரகாரமும் தகப்பனுருக்கு ஒன்றிற்கு மேற்பட்ட தாரயோகம் இருக்கின்றது. இப்பாடல்கள் ஏழு பதினென்றிற்குடையவர்களின் சம்மந்தத்தைப் பற்றித் தெரிவிக்கின்ற பாடல்களாகும். மேலும், சுக்கிரன் நீசமாகிச், சனி ராகுவால் பார்க்கப்பட்டிருக்கின்ருர். மேலும் இங்கு பத்தாவது செய்யுளின் குறிப்பையும் வாசிக்கவும்.

13. ஆகிலும் இவன் முன்னுலே அம்பிகை மார்கள் ரெண்டு
பாகமாய்ப் புகன்ருேம் தாயே பருகாது ஒருபெண்ணும்
[தான்
ஏகுமே காலனுடு யெழில் மணம் புரிந்துமே தான்
சாகாது ஒரு பெண்ணுந் தான் சாற்றுவோ மவள்
[குணத்தை.

13. இவ்விதமாக விருந்தபோதிலும் ஜாதகருக்கு முன்னே பிறந்தவர்கள் இரண்டு சகோதரிகள் என்றும் சொல்லி யிருக்கின்ருேம். பார்வதியம்மையே! இவரிருவரில் ஒரு சகோதரியானவள், தனக்கு விவாகம் நடந்த பிறகு எமபட்டணம் போய்ச் சேர்ந்து விடுவாள். அஃதாவது இறந்து போய்

விடுவாள். இன்னொரு சகோதரி சீக்கிரம் இறந்து போக மாட்டாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் மூத்தசகோதரியின் குணாதிசயங்கள்

14. புத்திமான் வறுமை காணாள் புருடனு மேல் பால் நேரும்
சத்திக்குச் சுதர்பெண் மூன்று தங்கிடும் ஆண்பால்
[ரெண்டு
இத்தகை தீர்க்க மெய்தும் யிடரிலா வாழ்வா ளாகும்
வித்தகன் செனித்த ஊரில் மேவுவான் சிலனாள் தானும்.

14. ஜாதகரின் மூத்த சகோதரி ஒருத்தி கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அனுபவிக்க மாட்டாள், இவளுக்குப் புருஷன் மேற்குத் திக்கிலிருந்து வருவார். இவளுக்கு மூன்று பெண்களும் இரண்டு பிள்ளைகளும் நீண்ட வயதுள்ளவர்களாக விருப்பார்கள். இவள் கஷ்டங்கள் இல்லாமல்வாழ்வாள். ஜாதகர் தான் பிறந்த கிராமத்தில் சிறிது காலம்வாசஞ் செய்வார்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

15. மங்களம் மூவைந் தாண்டில் மருவிடும் மேல்பாலாகி
அங்கவன் தந்தை வர்க்கம் அணுகிடும் குணத்தைச்
[சொல்வேன்
தங்கமா மனத்த ளாகும் தோழன் தன் மனதுக்
[கேத்தோள்
பொங்கிய குடும்ப மேற்பள் பொய்யது புகலா ளாமே.

15. ஜாதகருக்குப் பதினைந்தாவது வயதில் மேற்குத் திக்கிலிருந்தும் தன் தகப்பனாருடைய பந்துவர்க்கத்திலிருந்தும் மனைவி வந்து நேரிடுவாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் உயர்ந்த மேன்மையான மனத்தை யுடையவளாவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போலிருப்பவளாவள். இவள் கௌரவமான குடும்பத்தை யுடையவளாவள், இவள் பொய்யைச் சொல்ல மாட்டாள்.

16. வறுமையெப் போதும் காணாள் மாந்தளிர் மேனி யாகும்
பெரும்புத்தி யடக்க முண்டு பிறர்குற்றம் புகலா ளாகும்
குறை யென்றோர்க் குதவி செய்வள் கோபமும் கொஞ்ச
[முண்டு
திருமக ளொப்ப தாகும் தேவிக்கு வயது தீர்க்கம்.

16. ஜாதகருடைய மனைவி கஷ்டங்களையும் தரித்திரத்தையும் ஒரு காலத்திலும் அநுபவிக்க மாட்டாள். இவள் மாந்துளிரைப் போன்ற ஒருவித சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவள். இவள் பெரிய கனத்த அறிவை

யுடையவள். அமைதியுடையவள். அன்னியர்களின் மேல் குற்றங்களைச் சாட்டமாட்டாள். இவள் கஷ்டப்படுகின்றேம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள், இவளுக்குக்கோபம் சிறிது வரும். இவள் லக்ஷிமியைப் போல விருப்பாள், இவள் நீண்ட வயதை யுடையவளாகும்.

## ஜாதகருடைய சந்ததிகள் (புத்திரபாவம்)

17. புத்திரர் பிறவா தாகும் பிறக்கினும் தீதே யாகும்
குத்ததைப் புகலுமென்ன குழவியின் தானம் தன்னில்
வித்தகர் கேது தங்க வெய்யவன் மகனும் பார்க்க
இத்தகை பலத்தி னுலே யிவனுக்குச் சுதர்கள் தோஷம்.

17. ஜாதகருக்குக் குழந்தைகள் பிறக்கமாட்டா. ஒரு சமயம் குழந்தைகள் பிறந்தாலும் இவை சீக்கிரத்தில் இறந்துவிடும். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீரென்று கேட்கவே, பிருகு மகரிஷி பதில் சொல்லுகின்றுர். புத்திரஸ்தானமாகிய ஐந்தாவது வீட்டில் கேது இருப்பதாலும், வெய்யவன் மகன் என்ற சனியும் இவ்வீட்டைப் பார்ப்பதாலும் ஜாதகருக்குச் சந்ததி தோஷம்* இருக்கின்றது.

*குறிப்பு :—புத்திரதோஷ விவரம் :—புத்திரகாரகராகிய குருவும் அஷ்டமாதிபதியாகிய அங்காரகனுடன் கூடி மூன்றில் மறைந்திருப்பதும் ஒரு புத்திரதோஷமாகும்.

## ஜாதகருடைய பூர்வ ஜன்மம்

18. இதுவன்றிப் பூர்வம் தன்னில் யிவன் சில கொடுமை [செய்தான்
அதுனுலே சிலது தோஷம் அவ்வினை புகல்வீ ரய்யா
வதிபன் முன் சென்மம் சொல்வேன் மலைநாட்டில் கர்ண [சேயாய்
சதியாக உதித்துப் பின்னேன் தன்குலத் தொழிலும் [செய்து.

18. இந்தத் தோஷங்களுமல்லாமல் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சில கெடுதிகளைச் செய்தார். அதனுல் சில தோஷங்கள் நேரிட்டன. இந்தத் தோஷங்களைச் சொல்லுவீரென்று கேட்கவே, பிருகு மஹரிஷி சொல்லுகின்றுர். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் மலைதேசத்தில் கருணீகர் குலத்தில் ஆணுகப் பிறந்து, இவர் தன்னுடைய குலத்துத் தொழிலைச் செய்து கொண்டு,

19. வரும்கால் வினையைச் சொல்வேன் வளமிலா யேழை [யோர்பால்
பொருளதைப் பெற்றுக்கொண்டு பூமியைத் தாரே [னென்று

குறைசெய்தரன் யேழை யோர்க்குக் கூறுவார் சாபம்
[தானும்
திருகுகள் செய்த பாவி செனிக்கும் பின் சென்மம்
[தன்னில்,

19. ஜாதகர் வாழுகின்ற காலத்தில் இவருக்குச் சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன். செழுமையாயில்லாத ஏழை மக்களுக்கு நிலங்களைக் கொடுக்கின்றேன் என்று சொல்லி அவர்களிடமிருந்து ஜாதகர் பணத்தை வாங்கிக் கொண்டு அவர்களுக்குக் கெடுதியைச் செய்து விட்டார். அதன்மேல் இந்த ஏழை ஜனங்கள் சாபத்தைக் கொடுக்கின்றார்கள். "கெடுதியையும் சூழ்ச்சியையும் செய்த பாபிக்குப் பின் ஜன்மத்தில்,

20. ஆதியில் அன்னை மாண்டு அண்ணன் தம்பிகளு மின்றி
தீதாகும் குடும்பம் தானும் சிலநாள் வனவா சங்கள்
வேதனை மனத்த னும் விளங்காது சுதர்கள் தாமும்
சாதித்தார் யேழை யோர்கள் சார்ந்தது அந்தச் சாபம்.

20. முற்காலத்தில் தன்னுடைய தாயார் இறந்தும், அண்ணன் தம்பிகளுமில்லாமலும், குடும்பம் நாசமாகியும், கொஞ்ச காலம் வனவாசத்தைப் போன்ற வாசஞ்செய்தும், தன்னுடைய மனத்தில் துன்பங்களையுடையவராகவும், புத்திரர்கள் பிறக்காமலுமிருந்து வாழக்கடவது" என்று அந்த ஏழை ஜனங்கள் ஜாதகருக்குச் சாபம் கொடுத்தார்கள். இந்தச் சாபம் ஜாதகரை வந்தடைந்தது.

21. இன்னமும் சிலபேர்கள் சாபம் யெய்திற்று பால னுக்குப்
பின்னையும் வேறு ஒன்று புகலுவோம் தாயே கேளும்
தன்னில்லம் நாகம் வாசம் சண்டன்தன் பதித்குச்
[சேர்த்தான்
சொன்னனே அது ஓர் தோஷம் சுந்தரி கேட் டிடாயே.

21. ஜாதகருக்கு இன்னும் சிலருடைய சாபங்களும் வந்து சம்பவித்தன. இன்னொரு தோஷத்தையுஞ் சொல்லுகின்றோம். எங்கள் தாயாகிய பார்வதியம்மையே! கேட்பீராக. தன்னுடைய வீட்டில் ஒரு நாகப் பாம்பு வாசஞ்செய்து கொண்டிருந்தது. ஜாதகர் இதை இறக்கும்படியாகச் செய்து இதை எமபட்டணத்திற்கு அனுப்பி விட்டார். இதுவும் ஒரு தோஷம் என்று சொல்லுகின்றேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

22. மந்தனு மரண மாகி மால்மகன் வரையப் பட்டு
இந்ததோர் குல முதிப்பான் யெய்திடும் யேழை சாபம்
தன் சுதர் தோஷ மெய்தும் தாய் சுக மில்லானுகும்
சிந்தையு கலக்க மாகிச் சிலனாள்கள் வன வாசங்கள்;

22. ஜாதகர் தன் முன் ஜனத்தில் இறந்து, பிறகு பிரமதேவரால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் இந்த வடுகர் குலத்தில் வந்து பிறப்பார். ஏழை ஜனங்களுடைய சாபம் இவருக்கு வந்து சம்பவிக்கும். இதனால் சந்ததிகளுக்குத் தோஷமுண்டாகும். இவர் தாயாருடைய சுகத்தை அநுபவிக்க மாட்டார். இவர் மனத்தில் துன்பங்களை அடைந்து சிறிது காலம் வனவாசத்தைப் போன்ற வாசம்,

23. நேரிடும் பால னுக்கு நிகழ்த்துவோம் கிரியை யொன்று
மாரனும் மனைவி யோடு வளநாடு தனக்குச் சென்று
காரண வஸ்துவான கண்ணனுக் கர்ச்சித் தேற்றி
தேரின மறையோர் யேழு பேருக்கு அன்ன மீந்து.

23. இவருக்கு உண்டாகும். இதற்கு ஒரு சாந்தியைச் சொல்லு கின்றோம். ஜாதகர் தன்னுடைய மனைவியுடன் வள நாட்டிற்குப் போய்க் காப்பாற்றுகின்ற கடவுளாகிய மகாவிஷ்ணுவிற்கு அர்ச்சனை முதலிய வற்றைச் செய்து தொழுது, முதிர்ந்த ஏழு பிராமணர்களுக்குச் சாப் பாட்டைப் போட்டு ;

24. விடம் கெந்தம் புஷ்பம் பொன்னும் வேதியர் தனக்கு [யீந்து
அடியதை யிருவர் போற்றி அவரவர்க்கால் ஆசீர் பெற்று
தடமதைச் சேர்ந்து பின்னோர் தலையற்ற மாரிக்கே தான்
திடமதாய்த் தீபம் ஒன்று செலுத்துவார் மூவாண்டு [மட்டும்.

24. வாசனைத் திரவியம், புஷ்பம், பணம் ஆகிய இவற்றை இந்தப் பிராமணர்களுக்குக் கொடுத்து அவர்களுடைய காலடியில் வீழ்ந்து அவர் களைத் துதித்து அவர்களுடைய ஆசீர்வாதத்தையும் வாழ்த்தையும் அடைந்து பிறகு தன் கிராமத்திற்குத் திரும்பி வந்து சிலையில்லாத மாரியம்மன் கோயி லில் மூன்று வருஷ காலம் வரையிலும் நிலையாக ஒரு விளக்கை ஏற்படுத்தி ஏற்றிக் கொண்டு வரவேண்டும்.

25. சொற்படிச் செய்வாராகில் தோன்றிடும் ஆண்பால் [ஒன்று
மைப்படிப் பெண்பால் ரெண்டு வரைகிறோம் தீர்க்க மாக
சொற்படிச் செய்யானாகில் சுதர் தோன்றா தோன்றில் [தீதாம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழி குன்றாது.

25. ஜாதகர் நாங்கள் சொல்லியபடிச் சாந்தியைச் செய்தால் ஓர் ஆண் குழந்தை பிறக்கும். இரண்டு பெண் குழந்தைகளும் பிறக்கும். இந்த மூன்று குழந்தைகளும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். நாங்கள் சொல்லிய பிரகாரம் சாந்தியை ஜாதகர் செய்யா

விட்டால் குழந்தைகள் பிறக்கா. ஒரு சமயம் பிறந்தாலும் சீக்கிரம் இறந்து விடும். பாம்பைத் தன் ஜடையில் தரித்துள்ள சிவபெருமானுடைய மனைவி யாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடைபெறும்.

## ஜாதகருடைய யோகபாவம்

26. இன்னவன் யோகச் சேதி யியம்புவோ மினி மேலாக
அன்னையின் துணைவன் தன்னால் அணுகிடும் தனமும் [பூமி
பொன்னது சேர்ப்பா னாகும் தரையது விருத்தி செய்வன்
தன்னினத்த வர்க்கு மேலாய்த் தானவன் வாழ்வா [னாகும்.

26. இனிமேல் ஜாதகருடைய யோகத்தைப் பற்றிச் சொல்லுகின் ரேம். இவருக்குத் தன்னுடைய தாயாரின் சகோதரனால் செல்வமும் நிலங்களும் கிடைக்கும். இவர் தனத்தைச் சம்பாதித்துச் சேர்த்து வைப் பார். நிலங்களைப் பயிரிட்டு தானியவகையருக்களை அதிகப்படுத்துவார். இவர் தன்னுடைய பந்துக்களைவிட அதிகமான அந்தஸ்திலிருந்து வாழ்பவ ராவர்.

27. இருபது ஆண்டு மேலாய் இருப்பிடம் சேர்வா னாகும்
தரையது விருத்தி செய்வன் சதுஷ்பாதம் சேர்வ தாகும்
பரைபள்ளு அதிகம் சேர்ப்பன் பல சகாயங்கள் செய்வன்
திருமகள் அருளு மோங்கும் தேவியால் பெருமை [யேற்பன்.

27. ஜாதகர் தனக்கு இருபதாவது வயதிற்குப் பிறகு தன்னுடைய தகப்பனார் ஊருக்குப் போய்ச் சேர்வார். இவர் நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். ஆடுமாடுகள் இவருக்கு வந்து சேரும். ஆள் படை களையும் வாத்தியங்களையும் ஜாதகர் அதிகமாகச் சேர்த்து வைப்பார். இவர் அநேகவிதமான உபகாரங்களைச் செய்வார். இவருக்கு லக்ஷ்மீ கடாக்ஷம் அதிகப்படும், இவர் தன்னுடைய மனைவியால் கௌரவத்தை யடைவார்.

28. சல்லிய பாதை யில்லான் தரணியில் பெருமை காணான்
நல்லவ னாகி வாழ்வன் நல்கிடும் யிருஊர் பூமி
சொல்லதைக் காப்பா னாகும் தொடுத்ததை வெல்வா [னாகும்
அல்லலை அகற்று மெங்கள் ஆத்தும தாயே கேளாய்.

28. ஜாதகர் கடனால் துன்ப மடைய மாட்டார். பூமியில் இவருக்குப் புகழில்லை. இவர் நல்லவராக விருந்து வாழ்வார், இவருக்கு இரண்டு கிராமங்களில் நிலங்கள் கிடைக்கும். இவர் தான் சொன்ன வார்த்தைகளைத்

தவருமல் நிறைவேற்றுவார். தான் செய்ய எடுத்த காரியங்களை முடித்து ஜயிப்பராவர். எங்கள் கஷ்டங்களைப் போக்கடித்து எங்களுடைய ஆத்து மாவைப் போல எங்களுக்குப் பிரியமான வரும் தாயாரைப் போன்ற வரு மாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

29. மாதிரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடையா
[ளாகும்
சூதிலாள் பொறுமை யுண்டு துணைவர்கள் ஆண்பா
[லுண்டு
ஓதுவேன் சிலது பின்னுல் ஒங்கியே யென்று
[சொல்வோம்
வேதனை யெண்ணு ளாகும் விளம்புவோ மிவள் முன்
[சென்மம்.

29. ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவள் மாந்தளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிவப்பு நிறத்தை யுடையவளாவள். இவள் கள்ளம், வஞ்சனை, கபடம் ஆகிய இவற்றை யுடையவளல்லள். இவள் சாந்தமானவள். இவளுக்கு சகோதரர் கள் உண்டு. இவர்களில் சிலர் இளைய சகோதரராவார். இவர்கள் வளமாக வும் ஆயுளை யுடையவர்களாகவும் இருப்பார்கள் என்று சொல்லுகின்றேன். இவள் யாருக்கும் தீங்குகளை நினைக்கமாட்டாள். இவளுடைய முன் ஜன் மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

30. கொங்கு நாட தனிலேதான் குதித்தனள் கோதையும்
[செக்கான் வமிசம்
தீங்கிலா யுதித்து மேலும் செல்வங்க ளதிக முண்டாய்
அங்கவள் பவ மில்லாமல் அந்தக ஞடைடைந்து
பாங்கியு முதித்தா ளென்றேம் பகருவோ மிவள் பின்
[சென்மம்,

30. ஜாதகருடைய தாயார் கொங்கு நாட்டில் செக்காடும் வைசிய குலத்தில் பிறந்தாள். இவள் அதிக செல்வமுள்ளவளாக விருந்தும், பாதொரு பாவமுஞ் செய்யாமலிருந்தும் பிறகு எம பட்டணத்திற்குச் சென்று பிறகு இவள் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லு கின்றேம். இனிமேல் இவளுடைய பின்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றேம்.

## ஜாதகருடைய தாயாரின் மறுஜன்மமும் தகப்பனாரின் முன்ஜன்மமும்

31. பிரிதிவு தலத்திலே தான் பிறப்பளாம் செங்குந்த வம்சம்
உரைகிறோம் தந்தை பூர்வம் உயர் பாண்டி நாட்டிலே
[தான்
மரவர் தன்குல முதித்து மானிலம் கிருஷி செய்து
வருகிற நாளிலே தான் மருவின வினையைக் கேண்மோ.

31. ஜாதகருடைய தாயார் பிருதிவி ஸ்தலம் என்ற காஞ்சீபுரத்தில் செங்குந்தருடைய குலத்திற்கு போய்ப் பிறப்பாள். இனிமேல் ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். மேன்மை தங்கிய பாண்டி தேசத்தில் மறவர் ஜாதியில் பிறந்து பெரிய நிலங்களைப் பயிரிட்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீராக.

32, அன்னிய மாது போகம் அவனுமே துய்த்து யின்னேன்
பொன்னதைத் தராமல் சென்றான் புகலுவாள் மாது
[சாபம்
குன்னன மொழியைச் சொல்லிக் காசுமே தராப் பாவி
பின்வரும் சென்மம் தன்னில் பேதையர் யிருவ ராமே;

32. ஜாதகருடைய தகப்பனார் ஓர் அன்னிய ஸ்திரீயிடத்தில் சம்போகஞ் செய்து விட்டுப் பிறகு பணத்தை அவளுக்குக் கொடுக்காமல் போய் விட்டார். அதன்மேல் அந்த ஸ்திரீ சாபத்தைக் கொடுக்கின்றாள். "சக்கரையைப் போன்ற இனிப்பான வார்த்தைகளைச் சொல்லிவிட்டுப் பணத்தைக் கொடுக்காமல் போய்விட்ட பாபியாகிய நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் இரண்டு மனைவிமார்களை யுடையவராகி;

33. அல்லலாய் வாழ்வாய் யென்றாள் அணுகிற்று அந்தச்
[சாபம்
வல்லவன் அந்தி யத்தில் வாய்வினால் கால்கள் சோர்ந்து
சல்லிய பாதை யுண்டாய்ச் சண்டன்தன் பதிக்குச்
[சென்று
புல்கினு னிக் குலத்தில் பேதைய ரிருவ ராகும்.

33. கஷ்டங்களுடன் வாழக்கடவது" என்று சபித்தாள். அந்தச் சாபம் தகப்பனாரை வந்து அடைந்தது. இவர் தன்னுடைய முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் வாயு ரோகத்தினால் கால்கள் சோர்வடைந்தும் கடன் உபத்திரவம் ஏற்பட்டும் இறந்து எம பட்டணத்திற்குப் போய் இந்த ஜன்மத்தில் இந்த வடுகர் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார். ஆகையால் இவருக்கு மனைவிமார்கள் இரண்டு பேராகும்.

## ஜாதகருடைய தகப்பனாரின் மரணகாலமும் பின்ஜன்மமும், ஜாதகரின் மரணகாலமும்

34. இருநான்கு ஆண்டு தன்னில் யேகுவான் கால னூடு
வருசென்மம் பட்சி தன்னில் வருகுவான் ரெட்டி வம்சம்
அறுபது ரெண்டு ஆண்டில் ஆனி மாதத்திலே தான்
திருமக னுடலம் வாடும் செயமுனி தடுத்துச் சொல்வார்.

34. ஜாதகருடைய தகப்பனார் ஜாதகருக்கு எட்டாவது வயதில்* இறந்து எம பட்டணம் போய்ச் சேருவார். இவர் தன்னுடைய பின் ஜன்மத்தில் திருக்கழுக்குன்றத்தில் ரெட்டியாருடைய குலத்திற் போய்ப் பிறப்பார். ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது வயதில் ஆனி மாதத்தில்* ஜாதகர் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய் விடும். இப்படி பிருகு மஹரிஷி சொல்லும் போது ஜய முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார்.

*குறிப்பு:—பிதிரு மாரகம்:—ஜாதகருக்கு வயது எட்டில் புதன் தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்குச் சுக்கிரன் ஜாதக சந்திரிகை நாற்பத்தாறுவது சுலோகப் பிரகாரம் மாரகனாகின்றார். சுக்கிரனுடன் சம்பந்தப்பட்ட புதன் ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றுவது சுலோகப் பிரகாரம் அதிக மாரக ராகின்றார். மேலும், துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் லக்கினாதிபதியாகிய சுக்கிரனுடன் சம்பந்தப்பட்ட புதன் மாரகராகின்றார். புதன் பத்திற்குடைய கர்மாதிபதியுமாகின்றார். ஆகையால் புத தசையில் சுக்கிர புக்தியில் பிதாவுக்கு மாரகஞ் சொல்லியிருக்கின்றது. ஜாதகருக்கு வயது அறுபத்திரண்டில் சந்திர தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகம் பிரகாரம் கன்னியா லக்கினத்திற்குச் சந்திரன் மாரகராகின்றார். துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல் பிரகாரம் எட்டிற்குடைய அங்காரகனுடன் கூடிய சந்திரன் மாரக ராகின்றார். இதே பாடல்கள் பிரகாரம் லக்கினாதிபதியாகிய புதனுடன் கூடிய சுக்கிரன் மாரகனாகின்றார். சுக்கிரன் கொல்லான் என்று சில கிரந்தங்களில் சொல்லியிருந்த போதிலும், இவர் நீசமடைந்து சனி ராகு ஆகிய பாபர்களால் பார்க்கப்பட்டுத் தோஷத்தை அடைந்திருப்பதால் கொல்லுவார்.

35. இது மத்தில் சாதகர்க்கு யெய் தாதோ மாரகங்ள்
வரும் வினை அனேகமாக மாரியால் நீரால் நேரும்
பெரும் சுரம் இவ்விதத்தால் பேசுவோம் பிணி
[அனேகம்
மருவிபின் நிவர்த்தி யாகும் வயதுமே தீர்க்க மென்றேம்.

35. இசற்கு இடையில் ஜாதகருக்கு மாரகம் நேரிடாதோ என்று ஜப முனிவர் கேட்கின்றார். பிருகு மஹாிஷி பதில் சொல்லுகின்றார். ஜாதகருக்கு அநேக நோய்களும் கண்டங்களும் உண்டாகும். இவருக்கு அம்மையா லும் ஜலத்தினாலும் கண்டங்கள் நேரிடும். பெரிய ஜுரமும் உண்டாகும் என்று சொல்லுகின்றோம். இன்னும் அநேக விதமான வியாதிகள் கண்டு அவை நிவிருத்தியாகி விடும். ஆகையால் ஜாதகருக்குத் தீர்க்கமான வயது என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய பின்ஜன்மம்

36. பின் சென்மம் காஞ்சி தன்னில் பிறப்பனும் சவுராஷ்டர [வர்க்கம்
பொன் பொருளுடைய னாகிப் புனிதனாய் வாழ்வா னாகும்
அன்னவன் செனன காலம் அனுடத்தில் கடை [பாதத்தில்
துன்சனி திசை மூன்றாண்டும் திங்களும் ஆறு தாகும்.

36. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் காஞ்சிவரத்தில் சௌராஷ்டிரகுலம் என்ற பட்டு நூல்கார ஜாதியில் பிறப்பார். தனமும் சொத்துக்களும் உடையவராகியும் நல்ல குணங்களையும் நல்லொழுக்கங் களையும் உடையவராகியும் இவர் வாழ்வார். இவர் பிறந்த காலத்தில் அனுடம் என்ற அனுஷ நட்சத்திரத்தில் கடைசியான நான்காவது பாதம் ஆகும். இதற்குச் சனி தசையில் இருப்பு மூன்று வருஷங்களும் ஆறு மாதங்களும் ஆகும். —C. G. R.

# ஜாதகம் 7

## ஜனனகால கிரகநிலை

1. [1]பொன் [2]குசன் [3]அரியில் தங்க புதன் [4]ரவி மிதுன மாக
சந்திரன் [5]பெண்ணில் தங்க சனி [6]தேளில் [7]புகரும் [[8]நந்தி
பந்தமாய் ராகு [9]மானில் பகர் [10]சிகி [11]வண்டியாக ;
வந்தவன் சென்மம் கன்னி வரைகுவீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிக் குருவும் அங்காரகனும் சிம்மத்திலும், புதனும் சூரியனும் மிதுனத்திலும், சந்திரன் கன்னியிலும், சனி விருச்சிகத்திலும், சுக்கிரன் ரிஷபத்திலும், ராகு மகரத்திலும், கேது கடகத்திலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்தால் ஜாதகருடைய பலாபலன்களைச் சொல்லுவீர், முனிவர்களே என்று,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சுக்கிரன் | சூரியன் புதன் |
| | இராசி சக்கரம் | | கேது |
| ராகு | | | குரு அங்காரகன் |
| | சனி | | லக்கினம் சந்திரன் |

அஸ்தம் 4-ஆம் பாதம் சந்திர தசை
ஞ 2—01—16

குறிப்பு:—இந்த ராசிச் சக்கிர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்திற் சூரியனும் புதனும், ரிஷபத்தில் அங்காரகனும், சனியும், ராகுவும், கடகத்திற் சந்திரனும், கன்னியிற் குருவும், விருச்சிகத்திற் கேதுவும், மீனத்திற் சுக்கிரனும் ஆகும். புதன் அஸ்தமனமாகி யிருக்கிறார். சனி வக்கிரம்.

---

1. குரு.
2. அங்காரகன்.
3. சிம்மம்.
4. சூரியன்.
5. கன்னி.
6. விருச்சிகம்,
7. சுக்கிரன்.
8. ரிஷபம்.
9. மகரம்.
10. கேது.
11. கடகம்,

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. சத்தியும் கேழ்க்கும் போது சாற்றுவார் பராசர் தானும்
வித்தகன் ஆண்பால் சென்மம் விளம்புவோம் கீழ்மேல்
[வீதி
உத்திரம் வாடை யாகும் உயரெதி ரில்ல மில்லை
பத்தியாய் மேற்கில் ஆழி பருவதம் வயல்க ளுண்டே.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது, பராசர மகரிஷி பதில் சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆணாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடவண்டை வாடையிலிருக்கும். எதிரில் வீடு கிடையாது. சமுத்திரமும் மலையும் பயிரிடும் நிலங்களும் மேற்கில் உண்டு.

3. வடக்கினில் ஈசன் காளி மாரியும் தங்கு மென்றோம்
அடவுடன் தென்மேல் திக்கில் அங்கரன் மாயோன்
[நிற்பன்
தடம்சோலை மார்க்க மாகும் சத்தி பாஞ்சாலி நிற்கும்
தடமெனும் பேரூர் தன்னில் சாதகன் செனிப்பா
[னுகுமே.

3. சிவபெருமான், கோயிலும், காளியம்மன் கோயிலும், மாரியம்மன் கோயிலும் வடக்குத் திக்கிலிருக்கும் என்று சொல்லுகின்றோம். விநாயக் கடவுளின் கோயிலும் மகாவிஷ்ணுவின் கோயிலும் தென் மேற்குத் திக்கில் இருக்கும். சோலையும், போக்குவரத்து பாட்டையும் துரௌபதியம்மன் கோயிலும் இங்கு இருக்கும். இப்படிப்பட்ட அடையாளங்களை யுடைய ஒரு பெரிய கிராமத்தில் ஜாதகர் பிறப்பார்.

4. இன்னவன் யோகம் தானும் யெழில் பெரும் தந்தை
[யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர
(யோகம்
தன்னிலே முன்பின் சென்மம் சாற்றுவோம் நவக்கோ
[ளாய்ந்து
அன்னையே யாங்கள் சொல்லும் அருள் மொழி குன்று
[தென்றோம்.

4. ஜாதகருடைய யோகம், இவருடைய தகப்பனாரின் யோகம், தாயாருடைய யோகம் புத்திரருடைய யோகம், மனைவியுடைய யோகம் முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றை எல்லாம் ஒன்பது கிரகங்களையும் ஆராய்ச்சி செய்து சொல்லுவோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! உம்முடைய கிருபையால் நாங்கள் சொல்லும் பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும் என்று சொல்லுகின்றோம்.

## தகப்பனுருடைய சகோதரபாவமும் குணாதிசயங்களும்

5, தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றுவோ மிருநான்
[காகும்
வந்திடும் ஆண்பால் ஒன்று வகையுடன் பெண்பா
[லவ்வார்
சந்ததம் தீர்க்க மாகும் சதிருடன் மற்ற தெல்லாம்
நொந்திடும் யென்று சொன்னோம் நுலலுவோம் பிதா
[குணத்தை,

5. ஜாதகரின் தகப்பனுருடைய பந்துக்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருடன் பிறந்தவர்கள் எட்டுப் பேராகும். இவர்களில் ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாவார்கள். மற்றவர்களெல்லோரும் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

6. மாநிற முடைய னவன் மனமது அழுத்த முள்ளான்
தேன்மொழி வார்த்தை கூர்வன் சித்தினி சாதி யாவன்
ஈனரை நேசம் கொள்ளான் யிருவித குணத்த னாகும்
ஆனதோர் வணிபம் செய்வன் அவன் பித்த தேகவானும்.

6. ஜாதகரின் தகப்பனர் மாநிறமுள்ளவராக விருப்பார். இவர் கடினமான மனத்தை யுடையவர். இவர் தேனைப் போல் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் சித்தினி* ஜாதி மனிதராவர். இவர் தாழ்ந்த இழிவான குணங்களை யுடையவர்களுடன் சிநேகஞ் செய்து கொள்ள மாட்டார். இவர் நல்லதும் கெட்டதுமான கலப்புக் குணத்தை யுடையவராவர். இவர் வியாபாரத்தைச் செய்வார். பித்த குணத்தையுடைய தேகத்தை யுடையவராவர். *மூன்ருவது ஜாதகம் 17-ஆவது பாடல் பார்க்க.

7, பூமியும் பரி பாலிப்பன் புண்ணிய மனத்த னாகும்
நேமியோர் மெச்ச வாழ்வன் நிதானமாய் வார்த்தை
[கூறுவன்
சேமமாம் குடும்ப முள்ளான் திருமகள் வாச முள்ளான்
தாமத குணத்தா னாகும் தைரிய முடையா னாமே.

7. ஜாதகருடைய தகப்பனர் நிலங்களை வைத்துக் கொண்டு காப்பாற்றுவார். இவர் நல்ல மனத்தை யுடையவராவர். இவர் பூமியிலுள்ளவர்கள் புகழும்படியாகக் கௌரவத்துடன் வாழ்வார். இவர் சாந்தமாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் சௌக்கியமான குடும்பத்தை யுடையவராவர். இவர் லக்ஷ்மீகடாக்ஷத்தை யுடையவராவர். இவர் சாந்தமான குணத்தை யுடையவராவர். தைரியசாலியாக விருப்பார்,

8. சகலர்க்கும் நண்ப ளுகும் தானிய விருத்தி செய்வன்
இகபரன் அன்பு கூர்வன் இடுக்கமாம் நீக்க முள்ளான்
தகமையாய்க் குடும்ப முள்ளான் தன் மனையாள் மேல் [பட்சன்
புகலுவான் கட்டு வார்த்தை போசனப் பிரிய னுமே.

8. ஜாதகருடைய தகப்பனுர் எல்லோருக்கும் சிநேகிதராக விருப்பார். தானியங்களைப் பயிரிட்டு அதிகமாக்குவார். கடவுளிமேல் ஆசை யுடையவர். கஷ்டங்களை நிவர்த்தி செய்து கொள்ளக் கூடியவர். இவர் நல்ல ஒழுங்கான குடும்பத்தை யுடையவராவர். தன்னுடைய மனைவியின் மேல் ஆசையை யுடையவராவர், இவர் புனைந்த வார்த்தைகளையும், பொய்யையும் பழமொழிகளையுஞ் சொல்லுவார், இவர் சாப்பாட்டில் அதிக ஆசையை யுடையவராவர்.

9. வண்டி வாகனமு முள்ளான் வாணிபங்கள் செய்வா [னுகும்
தண்டமிழ் கல்வி யுள்ளான் தாக்ஷிணியின் கனவா னும்
கண்ட பக்ஷணங்க ளிஷ்டன் கனதன ரேகை யுள்ளான்
குண்டுணி கலகம் செய்வான் கூறுமுன் கோபம் [கொஞ்சம்.

9. ஜாதகருடைய தகப்பனுர் வண்டி, வாகனம் ஆகிய இவற்றை யுடையவராவர். இவர் வியாபாரங்களைச் செய்து ஜீவிப்பார். இவர் தமிழில் படித்தவராவர். பிறருக்கு உபகாரத்தைச் செய்யுங் குணத்தை யுடையவர். மதிப்புடையவராக விருப்பார், இவர் எந்தத் திண்பண்டங்களையுஞ் சாப்பிடு வார், பெரிய தனரேகையைத் தன்னுடைய உள்ளங்கையில் உடையவரா வர். இவர் கோள் சொல்லுவார், கலகங்களை உண்டாக்குவார். இவர் பேசுவதற்கு முன்னே கொஞ்சங் கோபத்தை யுடையவராவர்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

10. இக்குண முடையோ னுக்கு யிவனுமே உதிப்பா [னென்றேம்
மிக்கவே அவன் குணத்தை விளம்புவோ மிரு நிறத்தான்
தொக்கவே வாத தேகி துருசான நடையு முள்ளான்
நக்கன் மேல் பக்தியுள்ளான் நன் மொழி கூறுவோனும்.

10. இப்படிப்பட்ட குணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பாரென்று சொல்லுகின்றேம். இவருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவர் இரண்டு நிறங்கள் கலந்த நிறமாகிய மாநிறத்தை யுடையவராவர். இவர் பெரிய வாத தேகத்தை யுடையவர். இவர் கெட்ட நடவடிக்கையை யுடையவராவர். இவர் சிவபெருமானின்மேல் அன்புள்ள வர், நல்ல வார்த்தைகளைச் சொல்லுவார்.

11. கல்வியு முடைய னுவன் கனத்த தோர் புத்தி புள்ளான்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையு முறவு
[கொள்வன்
சொல்லுமே நெறி யுள்ளோனும் சுத்த னன்மனது
[முள்ளான்
நல்லவர் நேசம் கொள்வன் நாயகி மேலுங் கேளே.

11. ஜாதகர் வித்தையை யுடையவராவர். மேன்மையான அறிவை யுடையவர். இவர் பிறருக்கு இல்லை என்று சொல்ல மாட்டார். எல்லோ ரிடத்திலும் சினேகமாக விருப்பார். தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் நடந்து கொள்ளக் கூடியவர் பரிசுத்தமானதும், நல்லதுமான மனத்தை யுடையவராவர். இவர் நல்லவர்களுடைய சினேகத்தை விரும்பத் தக்கவராவர். பார்வதியம்மையாரே! நாங்கள் இன்னும் சொல்லு கின்றோம், கேட்பீராக.

12. முன்கோபம் பொறுமை யுள்ளான் முயற்சியாய்க் குடும்ப
[முள்ளான்
தன் பந்து மெச்ச வாழ்வன் தைரிய மனத்த னுகும்
பன்னியே உரைக்க வல்லான் பாவையர் மோக வானும்
சொன்ன சொல் தப்பா னுகும் துறவிகள் நேசம்
[கொள்வன்.

12. ஜாதகர் முன் கோபத்தை யுடையவராவர். சாந்தமானவராவர். மேன்மையான குடும்பத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய பந்துக் கள் புகழும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். தைரியமான மனத்தை யுடையவராவர். இவர் சாமர்த்தியமாகவும் விமரிசையாகவும் பேசுஞ் திறமையை யுடையவராவர். பெண்களின்மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவர் தான் சொல்லிய வார்த்தைகளின் பிரகாரம் தவறுமல் நடந்து கொள்ளக் கூடியவராவர். எல்லாவற்றையுந் துறந்து விட்ட வர்களாகிய சந்நியாசிகள், பெரியோர்கள் ஆகிய இவர்களின் சினேகத்தை யுடையவராவர்.

13. பூமியு மதிகம் சேர்ப்பன் பூஷணம் கொள்வா னுகும்
தீமையு மெண்ணு சித்தன் சிறுத்தவர்க் குதவி செய்வன்
நேமியில் வைத்தியம் செய்வன் நிலமதில் கீர்த்தி
[யேற்பன்
தாம்த மன்ன ரிஷ்டன் சத்தியம் தப்பா னென்றோம்.

13. ஜாதகர் நிலங்களை அதிகமாகச் சேர்ப்பார். ஆபரணங்களை உடையவராவர். இவர் யாருக்குங் கெடுதியை நினைக்காத மனத்தை யுடையவராவர். ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்பவராவர். இவர் வைத்தியச் சிகிச்சை செய்வார். இவர் பூமியில் புகழுடையவராவர். அிதான

மான அரசர்களுக்குச் சிநேகிதராக விருப்பார். சத்தியமான வார்த்தைகளைச் சொல்லுபவராவர். சத்தியமாகவும் நடந்து கொள்ளுபவராவர்.

14. ஆள்கார ருடைய னுவன் அனேக பாக்கியமும் சேர்ப்பன்
நாளுக்கு நாளாய் யேற்றம் நற்சித்திர வீடு செய்வன்
வேலனை யொப்ப தாகும் வீண்வார்த்தை பேசா
[னென்றோம்
காளைகள் அதிக மில்லான் காதலி மேலுங் கேளே.

14. ஜாதகர் வேலையாட்களை யுடையவராவர். அனேகமான பொருள்களைச் சேகரிப்பார். இவருடைய செல்வம் நாளுக்கு நாள் விருத்தியாகும். இவர் நல்ல அழகிய வீட்டைக் கட்டுவார். இவர் முருகக் கடவுளுக்குச் சமானமானவராக விருப்பார். இவர் வீணான வார்த்தைகளைச் சொல்ல மாட்டார் என்கின்றோம். ஆடுமாடுகள் அதிகமில்லாதவர். பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய சகோதரபாவம்

15. இவனுட துணைவர் தன்னை யிசைகிறோம் ஆண்பா
[லொன்று
நவமதில் பெண்பால் ரெண்டு நாட்டுவோம் தீர்க்க
[மாகும்
அவனியில் மூன்று நஷ்டம் அறைகிறேன் இவனுக்கே
[தான்
சிவனிட பாகத் தாளே செல்வியே மேலுங் கேளே.

15. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு சகோதரனும் இரண்டு சகோதரிகளும் நீண்ட வயதுடையவர்களாக விருப்பார்கள். இவருக்கு மூன்று சகோதரர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றேன். சிவபெருமானுடைய இடது பாகத்தை யுடைய பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லுவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய விவாகம், மனைவி, புத்திரபாகம்

16. இன்னவன் மணத்தின் காலம் யிசைகிறோம் ஒருபா
[னெட்டில்
கன்னியும் கிழக்குத் திக்கில் காதலி வருவா ளென்றோம்
அன்னையின் வர்க்க மாகும் அறைகிறோ மிவனுக்கே
[தான்
உன்னித புத்திர பாகம் உரைக்குறோம் கேளு மம்மா.

16. ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில்* விவாகம் நடக்கும், மனைவி கிழக்குத் திக்கிலிருந்தும் தாய் வழியிலிருந்தும் வந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்குச் சந்ததிகள் விஷயமாகச் சொல்லு கின்றோம். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

*குறிப்பு:—விவாக காலம்:—ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில் இராகு தசையில் புத புக்தி நடக்கின்றது. களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீட்டை ராகு மூன்றும் பார்வையுடன் பார்க்கின்றார். இவர் சனியினுடைய வீட்டில் இருப்பதால் சனியின் பலனை ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரம் கொடுக்கவேண்டும். களத்திர ஸ்தானாதிபதியாகிய குருவைச் சனி பத்தாம் பார்வையுடன் பார்க்கின்றார். களத்திர காரகனாகிய சுக்கிரனையும் சனி ஏழாம் பார்வையுடன் பார்க்கின்றார். மேலும் ராகு போக காரகன். ஆகையால் ராகுவிற்கு விவாகஞ் செய்து வைக்க அதிகாரம் இருக்கின்றது. புதன் பத்தாவது வீட்டிற்குடையவராக விருப்பதால் ஜாதகபாரி ஜாதகம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஜாதகருக்குப் புதன் தன் புக்தியில் விவாகஞ் செய்து வைக்க அதிகாரம் உடையவராக விருக்கின்றார்.

17. சாதகன் தனக்குப் புத்திரர் சாற்றவே பலத்தைக்
[காணோம்
நீதியாய்ப் பராசர் சொல்ல நேர்முனி கேழ்க்க லுற்றார்
மேதினில் புத்திர தோஷம் விளம்பினீ ரந்தச் சேதி
சோதிபோல் சொல்லு மென்ன செப்புவார் பராசர் தானே.

17. ஜாதகருக்குப் புத்திர பாவத்தைப் பற்றி நல்லதாகச் சொல்ல யாதொரு வலிவும் தென்படவில்லை என்று சாஸ்திரப் பிரகாரம் பராசர மஹரிஷி சொல்லவே, இவருக்கு எதிரிலுள்ள ஒரு முனிவர் கேட்கவாரம்பித்தார். ஜாதகருக்கு நீர் சந்ததி தோஷத்தைப் பற்றிச் சொன்னீரே. இதை விவரமாக நீர், சோதியான விளக்கைப் போலத் தெளிவாகச் சொல்ல வேண்டும் என்று கேட்கவே, பராசர மஹரிஷி சொல்லுகின்றார்.

18. கரும் பாம்பு அஞ்சில் நிற்க காரியம் பார்த்த தாலே
வரும் புத்திர தோஷ மாகும் வியத்தினில் சேயு நிற்க
அருமையாய் முன்னூழ் தன்னால் அறைகுறே மதலை
[தோஷம்
மரும மில்லாமல் ஊழை வரைகுவீர் ரென்று கேட்டார்.

18. கரும்பாம்பு என்ற ராகு (புத்திர ஸ்தானமாகிய) ஐந்தாவது பாவத்தில் இருப்பதாலும், காரி என்ற சனி இந்த வீட்டைப் பார்த்திருப்ப தாலும் வியம் என்ற பன்னிரண்டாவது வீட்டில் சேய் என்ற அங்காரகன்* இருப்பதாலும் புத்திர தோஷம் உண்டு. ஜாதகருடைய முன் ஜன்மத்திய

பாவத்தின் பலனுகப் புத்திர தோஷம் நேரிடும் என்று சொல்லுகின்றேம் என்ருர் பராசரமஹரிஷி. இதற்கு முன் ஜன்மத்திய வினையை ஒளிக்காமல் சொல்லுவீர் என்று எதிரிலுள்ள முனிவர் கேட்டார்.

குறிப்பு;—அங்காரகன் அஷ்டமாதிபதியாகி, பன்னிரண்டில் புத்திரகாரராயும் களத்திர ஸ்தானுதிபதியாயுமுள்ள சனியுடன் கூடியிருப்பதும், புத்திர ஸ்தானுதிபதியாகிய சனியை நான்காவது பார்வையுடன் பார்ப்பதும் புத்திர தோஷமாகும். ராகுவும் அங்காரகனும் ஏழாவது வீட்டைப் பார்ப்பதும் தோஷமாகும். இது விஷயமாய் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் ஐந்நூற்றுத் தொண்ணூருவது (590) பாடலையும், அறுநூற்றி நாற்பத்தொன்பதாவது (649) பாடலையும், அறுநூற்றிருபத்தெட்டாவது (628) பாடலையும் வர்சிக்கவும்.

19. சொல்லுவேன் கேளு மய்யா சுதனுமே முன் சென் [மத்தில்
திில்லைக்கு மேல் பாலாகச் சிற்றூரில் கங்கை சேயாய்
இல்லாளும் மதலை யுண்டாய் யேக போகங்க ளாக
வல்லவன் வாழ்ந்து பின்பு வர்சர்பால் செட்டு செய்து.

19. இதற்குப் பராசர மஹரிஷி, சொல்லுகின்றேன். கேட்பீர் முனிவரே! என்ருர். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சிதம்பரத்திற்கு மேற்குத் திக்கில் ஒரு சிறிய கிராமத்தில் வேளாளர் ஜாதியில் ஆணுகப் பிறந்து, மனைவியையும் மக்களையும் உடையவராகி, யோக போகஸ்தராக எல்லாச் சுகங்களையும் அனுபவித்துக் கொண்டும், இராஜாங்க மூலமாய் வியாபாரஞ் செய்து கொண்டும்;

20. பாக்கியம் அதிகம் பெற்றுப் பந்துவும் புகழ வாழ்ந்து
யோக்கிய ஞகியே தான் உலகினில் வாழு நாளில்
ஊக்கமாய்ப் பணியு மோர்நாள் உறைந்தது மனையிலே [தான்
தீக்குண முடைய பாம்பைச் செல்வனு மடித்து விட்டான்.

20. அதிகமாகத் தனத்தை யடைந்தும், தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவப்படுத்தும்படியாயும் வாழ்ந்து கொண்டும், யோக்கியனுகவும் இருக்கும் காலத்தில் தன்னுடைய வீட்டில் ஒரு நாள் ஒரு நாகப் பாம்பு வந்தது. இந்தக் கெட்ட பாம்பை ஜாதகர் அடித்துக் கொன்று விட்டார்.

21. அந்ததோர் தோஷம் தானும் அணுகிற்று அச்சென் [மத்தில்
மந்தனு மரணமாகி மறைதலை கஞ்சன் தன்னுல்
முந்திய வரையப்பட்டு முயன்றவ னிவனே யம்மா
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழி குன்ருது.

21. இந்தத் தோஷம் ஜாதகரை முன் ஜன்மத்தில் வந்து அடைந்தது. ஜாதகர் முன் ஜன்மத்தில் இறந்து, குறைந்த தலைகளை யுடைய பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர், பார்வதியம்மையாரே! ஆறுமுகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

22. ஆகையால் அந்தத் தோஷம் அணுகிற்று யிச்சென் [மத்தில்
பாகமாய் மதலை தோஷம், பருகாது யென்று சொன்ேறும்
வேகமாய் அதற்குச் சாந்தி விளம்புவோம் அரசின் கீழே
நாகம் செய்து வைத்தால் நல்கிடும் மதலை யென்ேறும்.

22. ஆகையால் அந்த முன்மத்திய தோஷம் இந்த ஜன்மத்தில் வந்து சம்பவித்தது. புத்திர தோஷம் ஏற்பட்டு விட்டது பிள்ளை இல்லை என்று சொன்னேம். இதற்கு ஒரு சாந்தியை உடனே சொல்லுவீர் என்று கேட்கவே, பராசர மஹரிஷி பதில் சொல்லுகின்ருர். ஓர் அரசமரத்தின் அடியில் ஒரு நாகப் பிரதிஷ்டையைச் செய்து வைத்தால் குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லுகின்ேறும்.

23. சாந்தியும் செய்யா ஞகில் தரிக்காது புத்திரர் தானும்
சாந்தியும் செய்வா ஞகில் சந்ததி ஆண்பா லொன்று
சேர்ந்திடும் பெண்பால் ரெண்டு செப்புவோம் தீர்க்க [மாகும்
கூர்ந்திடும் முனிவர் தானும் கூறியமொழி குன்ருது.

23. இந்தச் சாந்தியை ஜாதகர் செய்யாவிட்டால் குழந்தைகள் பிறக்கா. இந்தச் சாந்தியை ஜாதகர் செய்தால் இவருக்கு ஒரு புத்திரனும் இரண்டு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்ேறும். பராசர மஹரிஷி சொல்லிய பாலபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

24. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மம்
தந்தையின் முன் சென்மத்தைச் சாற்றுவோம் காஞ்சி [தன்னில்
சந்ததம் கர்ண வம்சம் தன்னிலே உதித்து மேலும்
முந்திய மாலின் பக்கல் முயற்சியாய்க் கணக்கு வேலை
மந்தனும் பார்த்து வந்து மனைவி மைந்தரு முண்டாகி.

24. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்ேறும். இவர் காஞ்சிபுரத்தில் கருணிகர் குலத்தில் ஆணுகப் பிறந்து ஒரு மகாவிஷ்ணுவின் கோயிலில் கணக்கு எழுதும் வேலையைச் செய்து கொண்டு மனைவி, மக்களை யுடையவராகி;

25. வாழ்கிற நாளிலே தான் வந்ததோர் ஊழி சொல்வேன்
ஆழியில் துயின்ருேன் சொத்தை அனேகமாய் மோசம்
[செய்தும்
தாழ்வான குலத்து மாதைத் தானவன் விரும்பி னத்தால்
தீயின் தன் குலத்திலே தான் செனித்தன னிவ்னே
[யென்ருேம்.

25. வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த ஒரு வினை யைச் சொல்லுகின்றேன். மகாவிஷ்ணுவின் சொத்தை இவர் அதிக மோசஞ் செய்தது மன்றி, ஓர் இழிவான குலத்து ஸ்திரீயின் மேல் மையல் என்ற காம ஆசையை உடையவராக விருந்ததாலும் தீயின் தன் குலத்திலே தான் (நாயகர் ஜாதியில் தான்) இவர் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின் ருர் என்று சொன்னேம்.

குறிப்பு:—தீயின்தன்குலம் என்பது இந்த ஜாதகத்திற்கு மாத்திரம் உபயோ கப்படுத்திக் கொள்ளவும், தீயின் தன் குலத்தில் பிறப்பவர்கள் எல்லாம் இப்படிப்பட்ட பாபக் காரியங்களைச் செய்தவர்கள் என்று பொதுவாய் அர்த்தம் செய்து கொள்ளுவது பொருத்த மல்ல.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மம்

26. மறுசென்மம் பட்சி தன்னில் வளமுள சைவ சேயாய்
திறமையாய் உதித்து மேலும் திங்களை யணிந்தோன்
[பக்கல்
பெருமையா யூழி செய்து பட்சிக்கு அன்ன மீவான்
அறுமறை முதன்மை யான அம்மையே மேலுங் கேளே.

26. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய பின் ஜன்மத்தில் திருக் கழுக் குன்றத்தில் செழுமையான ஓர் சைவ குலப் புருஷனுகப் பிறந்து சந்திரனைத் தன்னுடைய சடையில் தரித்துக் கொண்டுள்ள சிவபெருமான் கோயிலை அடைந்து மேன்மையாகக் கோயில் வேலைகளையும் தொண்டுகளை யும் செய்து கொண்டு அங்கு வரும் தெய்வீகத் தன்மையை பொருந்திய பட்சிகளுக்குச் சாதம் கொடுப்பார். அருமையான வேதங்களுக்கு மூலா தாரப் பொருளாக விளங்குகின்ற பார்வதியம்மையாரே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

27. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிருே யிரு நிறத்தாள்
தீதிலா மனது மில்லாள் செப்புநன் நடக்கை யுள்ளாள்
வேதனை யெண்ணும் நெஞ்சம் வீறுமுன் கோபம்
[கொஞ்சம்
கோதிலா அன்ன மீவள் குடும் பத்தை ஆதரிப்பள்,

27. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவள் இரண்டு நிறங்கள் கலந்த நிறமாகிய மாநிறத்தை யுடையவளாவள். இவள் கெடுதியில்லாத மனத்தை யுடையவளல்லள். இவள் நல்ல நடவடிக்கையை யுடையவள். பிறருக்குத் தீங்கை நினைக்கின்ற நெஞ்சத்தை, யுடையவளாவள். இவள் முன் கோபியாக விருப்பாள். இவள் பிறருக்கு நல்ல சாப்பாட்டைப் போடுவாள். இவள் தன்னுடைய குடும்பத்தைக் காப்பாற்றுவாள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவம்

28. இவளுட துணைவர் தன்னை யியம்புவோ மாண்பால் [ரெண்டு
அவனியில் பெண்பா லவ்வார் அறைகிருேம் தீர்க்க மாக
நவமதில் நான்கு நஷ்டம் நாட்டுவோ மிவளுக்கே தான்
சிவனிட பாகத் தாளே செல்வியே மேலுங் கேளே.

28. ஜாதகரின் தாயாருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். தாயாருடன் பிறந்தவர்களில் நான்கு பேர் சீக்கிரம் இறந்து போய் விடுவார்கள். சிவபெருமானுடைய இடது பாகத்தையுடைய பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய தாயாரின் முன்ஜன்மம்

29. மாதுரு முன்சென் மத்தை வரைகிருேம் வேலங் [காட்டில்
கோதிலா கங்கை வம்சம் கோதையும் பிறந்து மேலும்
மேதினில் மைந்த ரின்றி வித்தகி பேரூர் சென்று
தீதிலா முருகன் பாதம் சேயிழை அர்ச்சித் தேத்தி.

29. ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்ருேம். இவள் திருவாலங்காட்டு க்ஷேத்திரத்தில் வேளாளர் குலத்தில் பெண்ணாகப் பிறந்து சந்ததியில்லாதவளாகி அதனால் ஒரு பெரிய கிராமத்திற்குப் போய் அங்குள்ள முருகர் கோயிலுக்குச் சென்று அவருக்கு அர்ச்சனை முதலியவற்றைச் செய்து அவருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கி;

30. பாலர்கள் யில்லை யென்று பத்தினி புலம்பும் போது
வேலவன் கிருபை யினாலே விளங்கிற்று மதலை தானும்

கோலமாய்ச் சிலநாள் சென்று கோதையும் மரண மாகி
ஞாலமேல் வந்தாள் யென்றேம் நவிலுவோ மிவள்
[பின்சென்மம்.

30. தனக்குப் பிள்ளைகள் இல்லை என்று சொல்லி வருத்தப்பட்டு முருகரை வரம் கேட்டதாலே, முருகருடைய அருளால் குழந்தை இவளுக்குப் பிறந்தது. சில காலங்கழித்து இவள் இறந்து இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் இவளுடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய பின்சென்மம்

31. வடதிசை தணிகை தன்னில் வல்லியும் கவுரி வம்சம்
திடமதாய்க் குடும்பம் பெற்றுச் செல்வியும் வாழ்வா
[ளாகும்
அடவுடன் கர்ம கால மறைகிறோ மிவளுக்கே தான்
தடவரை மகளாய் வந்த சத்தியே மேலுங் கேளே.

31. வடக்குத் திக்கிலுள்ள திருத்தணி க்ஷேத்திரத்தில் ஜாதகருடைய தாயார் வேளாளர் குலத்திற் பெண்ணாகப் பிறந்து கௌரவமான ஒரு பெரிய குடும்பத்தை யுடையவளாகி இவள் வாழ்வாள். இவளுடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். விசாலமான மலையாகிய இமயமலையில் வாசஞ் செய்கின்ற பர்வத ராஜனுக்குப் புத்திரியாகப் பிறந்த பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகரின் தாய்தகப்பனார்களின் மரணகாலம்

32. தந்தையின் மரண காலம் சாற்றுவோ முப்பா னேழில்
வந்த வைகாசி மாதம் மரணமே யாவன் மேலும்
பந்தமாய் மாதுரு வுக்குப் பகருவோ நாற்பா றுறில்
சந்ததம் சூனிய மாதம் தானவன் கர்மம் செய்வன்.

32. ஜாதகரின் தகப்பனாருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில் வைகாசி மாதத்தில்* இறந்து விடுவார். தாயாருக்கு மரண காலத்தைச் சொல்லுகின்றோம், இவள் ஜாதகருக்கு நாற்பத்தாறுவது வயதில் மார்கழி மாதத்தில்* இறந்து விடுவாள்.

*குறிப்பு:—பிதுர் மாரக காலம்:—ஜாதகருக்கு முப்பத்தோழவது வயதில் குரு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷப லக்கினமாகும். ஜாதக சந்திரிகை நாற்பத்தாறுவது சுலோகப் பிரகாரம் குருவும் சுக்கிரனும் மாரக ராகின்றார்கள். ஆகையால் குருதசையில் சுக்கிர புக்தியில் பிதுருக்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது. சுக்கிரன்

ஒன்பதிலேயே இருக்கின்றார். சுக்கிர நாடி பிரகாரம் லக்கினம் தவிர்த்த மற்ற ஒரு பாவாதிபதி தன் தசா புக்தி காலத்தில் தன் பாவத்திற்குரிய மனுஷரின் மரணத்தை யுண்டு பண்ணுவார். ஆகையால் சுக்கிரன் ஒன்பதிற்குடையவராக விருப்பதால் ஒன் பதாவது பாவ மனிதராகிய பிதுரைக் கொன்று விடுவார்.

குறிப்பு:—மாதுர் மாரகம்:—ஜாதகருக்கு நாற்பத்தாறுவது வயதில் சனி தசையில் சனி புக்தி நடக்கின்றது. மாதுரு லக்கினம் நான்கா வது வீடாகிய தனுசாகும். தனுர் லக்கினத்திற்கு இரண்டிற் கும் மூன்றிற்குமுடைய சனி கூட சில கிரந்தங்கள் பிரகாரகம் மாரக ராகின்றார். இவர் மாதுர் லக்கினாதிபதியாகிய குருவைப் பத்தாம் பார்வையுடன் பார்க்கின்றார். துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது, பதினான்காவது, இருபதாவது பாடல்கள் பிரகாரம் சனி மாரகஞ் செய்ய அதிகா ரமுடையவராகின்றார். ஆகையால் சனி தசையில் சனி புக்தி யில் மாதுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. சனி பன்னிரண்டாமிடத்தில் இருந்தால் ஜம்பு ரிஷி வாக்கியப் பிரகா ரம் ஜாதகருக்கு மாரகஞ் செய்து விடுகின்றார். இங்கு சனி தனுசிற்குப் பன்னிரண்டில் இருக்கின்றார். ஜாதக சந்திரிகையில் சனி தனுர் லக்கினத்திற்குக் கொல்லான் என்று சொல்லி யிருந்த போதிலும் சில சமயம் கொன்று விடுவார்.

## ஜாதகருடைய மரணகாலம்

33, இன்னவன் மரண காலம் யியம்புவோம் யெழுபான்
[ரெண்டில்
கன்னியின் மாதம் தன்னில் கனத்ததோர் பருவம்
[தன்னில்
உன்னித மார்பு நோயால் உடலமே வாடு மென்றோம்
அன்னையே யாங்கள் சொல்லும் அருள்மொழி குன்று
[தம்மா.

33. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். எழுபத்திரண்டாவது வயதில் கன்னி மாதம் என்ற புரட்டாசி மாதத்தில் பௌர்ணமி திதியுள்ள தினத்தில் ஜாதகர் மார்நோயால் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும் என்று சொல்லுகின்றோம்*. எங்களு டைய தாயாராகிய பார்வதியம்மையே! நாங்கள் தங்களுடைய கிருபை யால் சொல்லுகின்ற பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

*குறிப்பு:—ஜாதகருடைய மரண காலம்:—இவருக்கு வயது எழுபத்திரண் டில் புரட்டாசி மாதத்தில் புத தசையில் அங்காரகனுடைய புக்தி நடக்கின்றது. இந்த ஜாதகத்தில் புதன் அஸ்தமன மடைந்திருக்கின்றார். புதன் கேந்திராதிபத்திய தோஷத்தை

யுடையவராக விருக்கின்றார். பன்னிரண்டாவது மாரகஸ்தானாதிபதியாகிய சூரியனுடனும் கூடியிருக்கின்றார். புத தசை ஆறாவது தசையாக வருகின்றது. ஆகையால் புதன் மாரகாதிபதியாகின்றார். இங்கு புதன் அஸ்தமனத்தாலும் கேந்திராதிபத்தியத்தாலும் பாபியாகின்றார், ஜாதக சந்திரிகை இருபத்திரண்டாவது இருபத்தாறாவது சுலோகங்களைப் பார்க்கவும். கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் அஷ்டமாதிபதியாகிய அங்காரகன் மாரகராகின்றார். ஆகையால் புத தசையில் அங்காரக புத்தியில் ஜாதகருக்கு மரணம் சொல்லி யிருக்கின்றது. ஒன்பது கிரகங்களினுடைய அமைப்பாலும் லக்கினத்தினாலும் ஒரு ஜாதகருக்கு வயது இவ்வளவு தான் என்று ஏற்பட்டு விடுகின்றது. இந்த வயது காலத்தில் எந்த கிரகத்தின் தசையோ நடக்கின்றதோ புக்தியோ நடக்கின்றதோ அப்போது மரணம் நேரிட்டு விடுகிறது. இந்தக் கிரகம் மாரக லக்ஷணம் வாய்க்காத லக்கினாதியோ அல்லது பஞ்சமாதிபதியோவாக விருக்கலாம். ஆகையால் ஜாதக சந்திரிகையில் இருபத்தாறாவது சுலோகம் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. ஏக காலத்தில் ஒன்பது கிரகங்களை ஆராய்ச்சி செய்வது கஷ்டமாவதால் சில மாரகக் கிரகங்களைக் கொண்டு மாரகம் சொல்லுவது அதிக அனுஷ்டானமுள்ள ஒரு வழியாகும்.

## ஜாதகருடைய மறுஜன்மம்

34. மறுசென்மம் அருணை தென்பால் வளமையாய்ப்
[பேரூர் தன்னில்
பெருமையாய் முத்திரிய வம்சம் பிறந்துமே அரசர் பக்கல்
திறமையாய் வாழ்வா னுகும் செப்புவோ மினி மேலாக
அறுமுகன் தன்னைப் போற்றி அம்மையே மேலுங்
[கேளே;

34. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் மேன்மையான ஒரு முத்திரியருடைய குலத்திற் பிறந்து இராஜாங்கத்தில் வேலை செய்து கொண்டு ஜீவிப்பார். ஆறுமுகக் கடவுளைத் துதித்து இன்னும் அதிகமாகச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! நாங்கள் இனிமேல் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய யோகபாவம்

35. உதித்தவன் யோகச் செய்கை உரைக்கிறோம் விபர மாக
மதித்திட வாழ்வா னுகும் வண்டி வாகனமு முள்ளான்

பதியினில் திருவும் வாசம் பாக்கியம் மிகவே சேரும்
அதிபதி யாக வாழ்வன் அம்மையே மேலுங் கேளே.

35. ஜாதகருடைய யோகத்தைப்பற்றி விவரமாகச் சொல்லுகின்றோம். இவர் பிறர் தன்னை மதிக்கும்படியாகக் கௌரவத்துடன் வாழ்வார். வண்டி வாகனங்களையு முடையவராவர். இவருடைய வீட்டில் லக்ஷ்மி வாசஞ் செய்வாள். செல்வம் அதிகமாக இவருக்கு வந்து சேரும். ஓர் அரசனைப் போல நல்ல அந்தஸ்திலிருந்து வாழ்வார். பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக.

36. தீர்க்கமாம் வயது முள்ளான் செய்நில மதிகம் சேர்ப்பன்
சீக்கிர நடையு முள்ளான் செயம் செய்வ னெடுத்த [வேலை
ஆர்க்கவே பூமி விடு ஆபரணம் யிவைகள் யெல்லாம்
மார்க்கமீ ராருயிரம் பொன் வரைகிறோ மிவனுக்கே [தான்.

36. ஜாதகர் பூர்ணாயுளை யுடையவராவர். இவர் பயிரிடும் நிலங்களை அதிகமாகச் சேர்த்து வைப்பார். இவர் வேகமாக நடப்பவராவர். தான் செய்ய ஆரம்பித்த காரியத்தை நல்லபடியே முடித்து விடுவார். நிலங்கள். வீடு, நகைகள் ஆகிய இவை எல்லாம் பன்னீராயிரம் பொன் பெறக் கூடியவையாகும் என்று சொல்லுகின்றோம்.

37. செனித்தவன் செனன காலம் சந்திரன் யிருப்பு தானும்
குனித்திடும் ஆண்டு ரெண்டு கூறுவோ மாத மொன்று
வனிதை யீரெட்டு ஞளும் வரைகிறோம் பலனை யாங்கள்
கனமுள சாதகர்க்குக் கண்டிடும் ரோகம் தானே.

37. ஜாதகர் பிறந்த காலத்தில் சந்திரனுடைய தசையில் இருப்பு இரண்டு வருஷங்களும், ஒரு மாதமும், பதினெட்டு நாட்களுமாகும். இக் காலத்தில் நடக்கும் பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு வியாதி ஏற்படும்.

38. தந்தைக்குச் திரிச்ச லுண்டு தானிய விருத்தி யாகும்
வந்திடும் தானிய செட்டு வரும் பொருள் செலவ [னேகம்
முந்திய காலி பீடை மொழிகுறோம் மாதுர் வர்க்கம்
பந்தமாய்ச் சூதம் நேரும் பகருவோ மேலுங் கேளே

38. ஜாதகருடைய தகப்பனருக்குத் திரிதலுமுண்டு. தானிய வகையருக்கள் விருத்தியை யடையும். இவர் தானிய வகையராக்களில் வியாபாரஞ் செய்வார். அநேக பொருள்கள் செலவழியும். ஆடுமாடுகளுக்கு நோய் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். தாயாருடைய வழியில் சூதகம் நேரிடும், இன்னம் அதிகம் சொல்லுகின்றோம், கேட்பீராக.

39. ஆரல்தன் திசை யேழாண்டும் அக்கினி பயமு நேரும்
கூறுவோம் ரிணங்கள் காணும் கோல நாற்காலி பீடை
வீரிய விரைய முண்டு விரோதங்க ளதிக மாகும்
மாரியும் பாதை யுண்டு வாகன பயமு முண்டு.

89. ஆரல் என்ற அங்காரகன் தசை ஏழு வருஷத்தில் நெருப்பால் ஆபத்துண்டாகும், ரிணங்கள் உண்டாகும். ஆடுமாடுகளுக்கு வியாதிகள் ஏற்படும். அதிக விரயங்கள் நேரிடும். விரோதங்கள் அதிகமாக ஏற்படும். அம்மை நோயால் கஷ்டங்கள் நேரிடும். வாகனத்தால் ஆபத்து முண்டு

40. இப்படிப் பராசர் சொல்ல யியல் செய முனிவர்
[சொல்வார்
செப்பமாய் சேயி னேடே சிகண்டியும் கூடி நிற்க
மெய்ப்புடன் சேதி தன்னை விளம்புவாய் விபர மாக
அப்பவே கனிஷ்ட தந்தை அவனுக்குச் சுபமே யுண்டு.

40. இவ்விதமாகப் பராசர மஹரிஷி சொல்லவே ஜெப முனிவர் கேட்கின்றார் சேய் என்ற அங்காரகனுடன் சிகண்டி என்ற குரு கூடியிருப்பதால் நேரிடும் பலாப்பலன்களை விபரமாக சொல்லுவீர் என்று ஜெய முனிவர் கேட்டார். இதன்மேல் பராசர் சொல்லுகின்றார். ஜாதகருடைய சிற்றப்பனுக்குச் சுபங்கள் நடக்கும்.

41. சேத்திர முடியு மென்றேம் செய்நிலம் சேரு மென்றேம்
பூர்த்தியாய்த் தானியம் சேரும் பெரிதான ரதமும் சேரும்
நாற்றிசை துணைவர் விருத்தி நற்பசு சேரு மென்றேம்
பார்த்திபர் மெச்ச வாழ்வன் பகைவெல்லும் பாக்கியம்
[சேரும்.

41. விடு கட்டப்பட்டு முடிந்து விடும் என்று சொல்லுகின்றேம். பயிரிடும் நிலங்கள் வந்து சேரும் என்று சொல்லுகின்றேம். ஜாதகருக்குச் சகோதரர்கள் பிறந்து விருத்தியாகும். பசுக்கள் வந்து சேரும் என்று சொல்லுகின்றேம். அரசரும் பூமியிலுள்ளவர்களும் போற்றும்படியாக வாழ்வார். சத்துருக்களை ஜயித்து விடுவார், தனம் வந்து சேரும்.

42. தேகமே சுகமு முண்டாம் சென்றிடம் பெருமை காணும்
பாகமாய்ப் பிறைபோல் யோகம் பலித்திடும் இது
[வல்லால்
வாகையாய் மாதுர் வர்க்கம் வந்திடும் சுபமே யுண்டு
மோகமாய்க் காலி சேரும் மொழிந்தளர் தமிழை
[யாய்ந்தோர்

42. தேகச் சௌகரியங்கள் உண்டாகும். போகின்ற விடங்களில் கௌரவமுண்டாகும். வளர் பிறைச் சந்திரனைப் போல யோகம் அதிகரித்துக் கொண்டே போகும். இவையுமல்லாமல் மாதுரு வர்க்கத்தில் சுபங்கள் நடக்கும். கால் நடைகள் வந்து சேரும். இவ்விதமாகத் தமிழை ஆராய்ச்சி செய்தவர்கள் சொல்லி யிருக்கின்றூர்கள்.

43. செயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென உரைக்க
[லுற்றூர்
வியமதில் சேயும் நிற்க விளம்புவீர் பலனை யென்றேம்
நயமான தாதை கெண்டம் நாட்டுவோ மிது வல்லாமல்
பய முண்டு சாதகர்க்குப் பகருவோம் மேலுங் கேளே.

43. இவ்விதமாகச் சொல்லி வந்ததை ஜயமுனிவர் கேட்டுத் திடுக் கிடும்படியாகக் கேட்கின்றூர். வியம் என்ற பன்னிரண்டில் சேய் என்ற அங்காரகன் இருப்பதால் பலாபலன்களைச் சொல்லுவீரென்று ஜெய முனிவர் கேட்டார். பாட்டனுக்கும் தகப்பனுருக்கும் கெண்டம் ஏற்படும். இவையல்லாமல் ஜாதகருக்கு ஆபத்தும் நேரிடும். இன்னும் அதிமாகச் சொல்லுகின்றேம், கேட்பீராக.

44. களவுகள் நேரு மென்றேம் கண்ணில் ரோகம் வாய்க்கும்
விளைபுலம் வழக்கு நேர்ந்து மேன்மையாய்ச் செயமே
[யாகும்
உளமதில் மகிழ்ச்சி யாகும் உத்தமர் நேசம் கொள்வன்
வளமையாய்த் தெய்வ பக்தி வந்திடு மென்று
[சொன்னேம்.

44. திருடுகள் உண்டாகும். கண்களில் நோயுண்டாகும். பயிரிடு கின்ற நிலங்கள் விஷயமாக வியாஜ்யம் உண்டாகி ஜயம் நேரிடும். உள்ளத்தில் சந்தோஷங்களுண்டாகும், நல்ல மனிதர்களுடைய சினேகம் ஏற்படும். தெய்வங்களின் மேல் அன்பு நேரிடும் என்று சொல்லுகின் றேம்.

—C. G. R.

---

# ஜாதகம் 8

## ஜனனகால கிரகநிலை

1. [1]பொன் [2]தனு [3]மதி [4]மான் வாய் [5]புந்தியும் [6]புகரும் [7]நந்தி
[8]மைந்தனும் சென்மம் தங்க [9]மங்கலன் [10]நரியில் புக்க
[11]செங்கதிர் [12]வீணையாகச் [13]சிகி மேடம் [14]துலை [15]கறுங்
[கோள்
வந்தவன் சென்மம் கன்னி வரைகுவீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிக் குரு தனுசிலும், சந்திரன் மகரத்திலும், புதனும் சுக்கிரனும், ரிஷபத்திலும். சனி கன்னியிலும், அங்காரகன் சிம்மத்திலும், *சூரியன் மிதுனத்திலும், கேது மேஷத்திலும், துலாத்தில் ராகுவும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்திருந்தால் ஜாதகருடைய பலா பலன்களைச் சொல்லுவீர்கள் என்று

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | கேது | சுக்கிரன் புதன் | சூரியன் |
| | இராசி | | |
| சந்திரன் | சக்கரம் | | அங்காரகன் |
| குரு | | ராகு | லக்கினம் சனி |

திருவோணம் 2-ஆம் பாதம் சந்திர தசை
௵ 7—03—00

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும். மேஷத்தில் அங்காரகனும், ரிஷபத்தில் சந்திரனும், சுக்கிரனும், கேதும், மிதுனத்தில் சூரியனும் குருவும், கன்னியில் புதனும் சனியும், விருச்சிகத்தில் ராகுவும் ஆகும். புதனும் குருவும் சனியும் வக்கிரகதியிலிருக்கின்றார்கள்.

---

1. குரு.
2. தனுசு.
3. சந்திரன்.
4. மகரம்.
5. புதன்.
6. சுக்கிரன்.
7. ரிஷபம்.
8. சனி,
9. அங்காரகன்.
10. சிம்மம்.
11. சூரியன்.
12. மிதுனம்.
13. கேது.
14. துலாம்.
15. ராகு.

2. சங்கரி கேழ்க்கும் போது சாற்றுவார் முனிவர் தானும்
பொங்கிய ஆண்பால் சென்மம் பிறந்தயில் கீழ்மேல் வீதி
தங்கிடும் வடக்கு வாடை சாற்றுவோ மெதிரில் சூழி
இங்கிது மாரி தென்பால் யிருப்பனே உத்திரம் காளி.

2. பார்வதியம்மையார் கேட்கும் போது, வசிஷ்டமகரிஷி* சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆணாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடவண்டை வாடையாகும். இந்த வீட்டிற்கு எதிரில் ஒரு குளம் இருக்கும் என்று சொல்லுகின்றோம். மாரியம்மன் கோயில் தெற்குத் திக்கிலும் காளியம்மன் கோயில் வடக்குத் திக்கிலும் இருக்கும்.

*குறிப்பு :—இங்கு குறிக்கப்பட்ட முனிவர் யார் என்று வெளிப்படையாகச் சொல்லாமலிருந்த போதிலும் இருபத்து நான்காவது பாடலிலிருந்து இவர் குரு முனியாகிய வசிஷ்ட மஹரிஷி என்று ஏற்படுகின்றது.

3. மேற்கினில் கணேசன் கன்னி மேருவும் யிரண்டு யுண்டு
தீர்க்கமாம் நதியு முண்டு தீபாஞ்சாலி மடங்கள் காணும்
ஏற்கவே சிற்றூர் தன்னில் இலகிய கூரை வீட்டில்
மார்க்கமா யிந்தப் பாலன் வருகுவன் நாலாம் சென்மம்,

3. மேற்குத் திக்கில் விநாயகர் கோயிலும் கன்னிமார்களின் கோயிலும் இருக்கும். இரண்டு மலைகளுமுண்டு. ஒரு நதியும் இருக்கும். நெருப்பில் பிறந்த பாஞ்சாலியம்மன் என்ற திரௌபதியம்மன் கோயிலு மிருக்கும் ஒரு சிறிய கிராமத்தில் வலிவில்லாத ஒரு சிறிய கூரை வீட்டில் நான்காவது குழந்தையாக ஜாதகர் வந்து பிறப்பார்.

4. இன்னவன் யோகம் தானும் யெழில்பெரும் தந்தை [யோகம்
அன்னையின் யோகம் புத்திரர் அவன்துணை களத்திர [யோகம்
தன்னிலே முன்பின் சென்மம் சாற்றுவோ மின்னூல் [தன்னில்
கன்னென மொழியி னளே காதலி கேளு மம்மா.

4. ஜாதகருடைய யோகத்தையும், தகப்பனுருடைய யோகத்தையும், தாயாருடைய யோகத்தையும், சந்ததிகளின் யோகத்தையும், மனைவியின் யோகத்தையும் முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றை இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம். சர்க்கரையைப் போன்ற இனிப்பான வார்த்தைகளை யுடைய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

5. தந்தையின் துணைவர் தன்னை சாற்றுவோம் நவம
[தாகும்
நொந்திடும் சிலது தானும் நுவலுவோ மாண் பாலுக்கு
வந்திடும் தாரம் ரெண்டாய் வரைகிறோம் துணை வருக்கு
சந்ததம் பிதா குணத்தைச் சாற்றுவோம் கேளு மம்மா.

5. ஜாதகரின் சகோதரர்கள் ஒன்பது பேர் என்று சொல்லுகின்றோம், இவர்களில் சிலர் சீக்கிரம் இறந்து விடுவார்கள். சகோதரனுக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

6. மாநிற முடைய னுவன் வதிகாரன் கீர்த்தி வானும்
ஈனமாம் குணங்க ளில்லான் யாரையும் வசியம்
[செய்வன்
ஆனவர் நேசம் கொள்வன் ஆசாரன் பூமி சேர்ப்பன்
தேன்மொழி வார்த்தை கூர்வன் தீரமாம் யூகை சாலி.

6. ஜாதகருடைய தகப்பனுர் மாநிறமான தேகத்தை யுடையவராவர். அதிகாரத்தை யுடையவராவர். புகழுடையவராவர். இழிவான தாழ்மையான குணங்களை யுடையவரல்ல, இவர் எல்லோரையும் தன் பக்கம் இருக்கும்படியாகச் செய்து கொள்ளுவார். நல்லவர்களுடைய சினேகிதத்தை யுடையவராவர், நல்லொழுக்கமும் சுத்தமும் உடையவராவர், இவர் நிலங்களைச் சேர்த்து வைப்பார். இவர் தேனைப் போன்ற இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவார். தைரியமுடையவர். பகுத்தறியும் தன்மையுள்ள கூர்மையான அறிவை யுடையவராவர்.

7. ஆதியில் வறுமை யுள்ளான் அவன்தேகம் பித்த
[முள்ளான்
நீதியாய் நடக்கை யுள்ளான் நினைத்த காரியம் முடிப்பன்
வேதனை யொருவர்க் கெண்ணுன் மெலிந்திட்ட தேக
[முள்ளான்
கோதிலா சோலை சேர்ப்பன் கொம்பனை யாளே கேளாய்.

7. ஜாதகர் தன்னுடைய முற் காலத்தில் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அனுபவிப்பார், இவர் பித்த குணமுள்ள தேகத்தை யுடையவர். இவர் நன்மார்க்க வழியில் நியாயமாக நடந்து கொள்ளக் கூடியவர். தான் செய்ய எத்தனித்த காரியங்களைச் செய்து முடிப்பார். இவர் யாருக்கும்

நீங்குகளை நினைக்க மாட்டார். இவர் இளைத்த மெல்லிய தேகத்தை யுடைய வராவர். இவர் குற்றமில்லாத நல்ல தோப்புகளைச் சேர்த்து வைப்பார், பார்வதிபம்மையாரே! கேட்பீராக.

8. இக்குண முடையோ னுக்கு யிவனுக்குத் தாரம்
[ரெண்டில்
தொக்கவே யிளையா ளுக்குத் தோன்றினன் யிவனே
[யென்றோம்
மிக்கவே துணைவர் தம்மை விளம்புவோம் நான்க தாகும்
துக்கமாம் இரண்டே யென்றோம் தோல்வியு மிரண்டு
[தீர்க்கம்.

8. இப்படிப்பட்ட குணங்களை யுடைய தகப்பனுருக்கு இரண்டு மனைவிமார்களில் இளைய மனைவிக்கு இந்த ஜாதகர் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இவருக்கு நான்கு சகோதரர்கள் உண்டாகும் என்று சொல்லுகின்றோம். இவர்களில் இருவர் சீக்கிரம் இறந்து போய் விடுவார்கள்*. இருவர் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு:—சகோதர விஷயம்:-சகோதர ஸ்தானமும் மூன்ருவது வீடுமாகிய விருச்சிகத்தைச் சனியும் அங்காரகனும் பார்ப்பது சகோதர தோஷமாகும். புதனும் சுக்கிரனும் பார்ப்பது நல்லதாகும். சனி மூன்றில் இருந்து அல்லது மூன்றைப் பார்த்து மூன்றைச் சுக்கிரன் பார்க்கும் விஷயமாக ஜம்புஹோரா பிரகாசிகையில் சகோதர பாவம் ஐம்பத்தோராவது சுலோகத்தைப் பார்க்கவும்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

9. சாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த
[மேனி
மேதினில் ஒடிசல் தேகி விளம்புவான் கட்டு வார்த்தை
பாதக மனத்த னுகும் பந்துவும் பகையு முள்ளான்
சூதுகள் செய்வா னுகும் சொன்ன சொல் கேட்பா
[னென்றோம்.

9. இனிமேல் நாங்கள் ஜாதகருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவராவர். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் பிணைந்த வார்த்தை களையும் பொய்யான வார்த்தைகளையுஞ் சொல்லுவார். இவர் கெடுதியான மனத்தை யுடையவராவர். இவருக்குப் பந்துக்கள் விரோதிகளாக விருப்பார் கள். இவர் வஞ்சனையான காரியங்களைச் செய்பவராவர். பிறர் இவருக்குச் சொல்லுகின்ற வார்த்தையைக் கேட்டு அவைபிரகாரம் நடந்து கொள்ளக் கூடியவராவர்.

10. மனவர்ம முடைய னவன் மாதுரு பகையு முள்ளான்
கனமுடன் வாழ்வானுகும் கணக்கினில் யூகை சாலி
தனமது செலவு செய்வன் சஞ்சல மனத்த னகும்
சினமுளான் பின்பு சாந்தன் சீலனு மென்று சொல்வாய்.

10. ஜாதகர் கபடமான ரகசியமான மனத்தை யுடையவராவர். இவருக்கு இவருடைய தாயாரே* விரோதியாக விருப்பாள். இவர் மேன்மையாக வாழ்பவராவர். இவர் கணக்கு போடுவதில் மிகவும் அறிவுள்ள கெட்டிக்காரராவர். இவர் பணத்தை வீண் விரையஞ் செய்து விடுவார். இவர் துக்கமான மனத்தை யுடைவவராவர். இவருக்கு முன் கோபம் வரும். அது உடனே தனிந்து விடும். இவர் நல்லொழுக்கங்களும் சுத்தமும் உடையவராவர்.

*குறிப்பு:—தாயார் விரோத விஷயம் :-லக்கினுதிபதியாகிய புதனுக்கும் மாதிரு ஸ்தானுதிபதியாகிய குருவுக்கும் விரோத மிருப்பதால் தாயாருடைய விரோதம் ஏற்பட அமைப்பு இருக்கின்றது. மேலும் இவர்கள் சஷ்டாஷ்டமத்தில் இருப்பது தோஷமாகும்.

11. சுகிபொசிப் புடைய னவன் சுந்தர தேக முள்ளான்
தகமையாய்த் தந்தை யாஸ்தி தானவ னுஸ்தி செய்வன்
இகபர மாலின் பக்தி யெப்போது முடைய னவன்
சுகமுளானலேச்ச லுள்ளான் சொல்லது தவரு
[னென்ருேம்.

11. ஜாதகர் சுகமாக நல்ல வஸ்துக்களைச் சாப்பிடக் கூடியவராவர். இவர் அழகான தேகத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய பிதுரார்ஜித சொத்துக்களை விரையஞ் செய்து விடுவார். இவர் மகாவிஷ்ணுவின் மேல்* எப்போதும் அன்புடையவராவர். இவர் சுகங்களை அனுபவிப்பார், அலேச்சல் திரிச்சலுமுடையவராவர். இவர்தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகாமல் நடந்து கொள்ளுபவராவர்.

*குறிப்பு :—விஷ்ணு பக்தி விஷயம் :-லக்கினுதிபதியாகிய புதன் ஒன்பதாமிடத்திலிருந்து சனி பத்தைப் பார்த்திருப்பது விஷ்ணுபக்திக்கு அனுகூலமானது.

12. பயிர்த்தொழி லுடைய னவன் பாரினில் செட்டுசெய்வன்
கயவரை நேசம் கொள்ளான் கனதனம் பின்னல்
[உள்ளான்
நயமான வார்த்தை கூர்வன் நற்சபை கோழை யாவன்
செயம்செய்வ னெடுத்த வேலே சித்தினி சாதி யாவன்.

12. ஜாதகர் பயிர்த் தொழிலேச் செய்து ஜீவிப்பவராவர், வியாபாரமுஞ் செய்து ஜீவிப்பார். கயவர் என்ற கீழ் மக்களுடன் சினேகஞ் செய்து

கொள்ள மாட்டார். இவர் தன்னுடைய பிற்காலத்தில் அதிகமான செல்வத்தை யுடையவராவர். இவர் இனிமையான வார்த்தைகளை நல்லபடியே சொல்லுவார். இவர் சபையில் இருந்து நல்லவிதமாகப் பேசக் கூடியவரல்லர். தான் செய்யத் தொடங்கிய காரியங்களை இவர் நல்லபடியே செய்து முடிப்பார். இவர் நால்வகையான ஜாதி மனிதர்களுள் ஒருவகையான சித்தினி* ஜாதியைச் சேர்ந்தவர்.

*குறிப்பு :—சித்தினி ஜாதி மனிதர், சங்கீத சாஸ்திரம், சிற்ப சாஸ்திரம் இவற்றை அறிந்தவர். மழமழப்பான அழகிய தேகத்தை யுடையவர். மானைப் போன்ற கண்களையும் தாமரையைப் போன்ற முகத்தையும் யானையைப் போன்ற கம்பீரமான நடையையும் மயிலைப் போன்ற குரலையும் அதிசயமான தொனியையும் உடையவர். வித்தையில் அதிக விருப்பமுடையவர். மகா கவிஞர்களுக்குப் பிரியமானவராவர். சாமுத்திரிகா லட்சணம் என்ற புத்தகத்தில் இரண்டாவது பாகத்தில் எழுபத்தோராவது பக்கம் பார்க்கவும்.

13. ஆள்கார ருடைய னுவன் அன்னங்கள் போட வல்லன்
நீள்புவி சேர்ப்பா னுகும் நிர்மல மனது முள்ளான்
வேலனை ஒப்ப தாகும் விரைவுடன் நடக்க வல்லான்
ஆளியாம் பகைவ ருக்கு அம்மணி மேலுங் கேளே.

13. ஜாதகர் வேலையாட்களை உடையவராவர். இவர் பிறருக்குச் சாப்பாட்டைப் போடுஞ் சக்தியை யுடையவராவர். இவர் நீண்ட பெரிய நிலங்களைச் சேர்த்து வைப்பவராவர். பரிசுத்தமான மனத்தை யுடையவராவர். முருகக்கடவுளுக்குச் சமானமானவராக விருப்பார். சீக்கிரமாகவும் வேகமாகவும் நடக்கக்கூடியவரராவர். இவர் தன்னுடைய விரோதிகளுக்குச், (சிங்கத்திற்கு யாளி என்ற ஒரு மிருகம் மிகவும் விரோதமாக விருப்பதைப் போல) மிகுந்த வைரியாக, சத்துருவாக விருப்பார். பார்வதியம்மையாரே! நாங்கள் இன்னஞ் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணதிசயங்களும்

14. இவனுடைய மணத்தின் காலம் யியம்புவோ மிருபா [னேழில்
அவனியில் உத்திரத்தில் அவன் தந்தை துணைவி [வர்க்கம்
கனமுடன் வருவா ளென்றோம் காதலி நிறங் கருப்பாம்
நவமதில் மூர்க்கம் மர்மி நன்முக வடிவு முள்ளாள்.

14. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இருபத்தேழாவது* வயதில் வடக்கிலிருந்தும் இவருடைய அத்தைச்சாருடைய வம்சத்திலிருந்தும் இவருக்கு மனைவி வந்து வாய்ப்பாள்.

இவள் கறுப்பான நிறமுடையவள். அழகான நல்ல முகத்தை யுடையவள். முக வசீகர முள்ளவள்.

*குறிப்பு :—விவாக கால விஷயம் :-ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் ராகு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. ராகு சுக்கிரனுடைய வீட்டில் இருக்கின்றார். இவர் போக காரகராகும். சுக்கிரன் களத்திர காரகனும் குடும்ப ஸ்தானாதிபதியுமாகி ஒன்பதாவது வீட்டில் இருக்கின்றார். லக்கினாதிபதியாகிய புதனுடன் கூடி இருக்கின்றார். இரண்டிற்குடையவரான சுக்கிரன் இருக்கும் வீட்டிற்கதிபதி சுக்கிரனே ஆகின்றார். ஆகையால் ஜாதக பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் தன் தசாபுக்தி காலங்களில் விவாகஞ் செய்து வைக்க அதிகாரமுடையவராகின்றார். இவர் வீட்டிலுள்ளவராகிய ராகுக்கு ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரம் விவாகஞ் செய்து வைக்க அதிகாரம் இருக்கின்றது. ஆகையால் இராகு தசையில் சுக்கிர புக்தியில் விவாகம் சொல்லப்பட்டிருக்கின்றது என்று அறியவும்.

15. சஞ்சல மனத்த ளாகும் சந்ததி விருத்தி யுள்ளாள்
தஞ்சமாம் மனம்போ லில்லாள் தரளமும் பெரிதாய் [நிற்கும்
மிஞ்சிய வார்த்தை கூர்வள் வித்தகி வாத தேகி
வஞ்சிக்குப் புத்திர பாவம் வரைகிறோம் கேளு மம்மா.

15. ஜாதகருடைய மனைவி துக்ககரமான, கஷ்டங்களை யனுபவிக்கக் கூடிய மனத்தை யுடையவளாவள். இவளுக்குக் குழந்தைகள் பிறந்து வளரும். பெருந்தன்மையான மனத்தைப் போன்ற மனத்தை யுடையவளல்லள். இவளுக்குப் பற்கள் பெரியனவாக விருக்கும். இவள் அதிகமான வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் வாத தேகமாகிய பெருத்த தேகத்தை யுடையவள். இவளுக்குச் சந்தான விஷயத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருடைய புத்திரபாவம்

16. புத்திர விருத்தி தன்னை புகலுவோ மிருநான் காகும்
முத்தமாய் ஆண்பால் ரெண்டு சேயிழை அவ்வா றாகும்
குத்தடர் யிரண்டு தானும் கூறுவோ மிவளுக்கே தான்
அத்திமா முகனைப் பெற்ற அம்மையே மேலுங் கேளே.

16. ஜாதகருக்குக் குழந்தைகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு எட்டுக் குழந்தைகள் பிறக்கும். இவற்றில் இரண்டு ஆண்களும்

இரண்டு பெண்களும் நிலைத்திருக்கும். இவற்றில் இருவர் மேன்மையை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மை யாரே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக.

17. முனிவ ரிவ்வாறுய்க் கூற மொழிகுவா ளம்மன் தானும்
அனையவே தந்தை யாஸ்தி யணுகாது யென்று
[சொன்னீர்
கனமுடன் சேதி தன்னைக் கழறுவீ ரென்று கேழ்க்க
சினமிலா முனிவர் தானும் செப்புவா ரம்மனுக் கே.

17. வசிஷ்ட மகரிஷியானவர் இவ்விதமாகச் சொல்லவே பார்வதி யம்மையார் கேட்கின்றார். ஜாதகருக்குத் தன்னுடைய பிதுரார்ஜித சொத்து விரையமாகிவிடும் என்று சொன்னீரே. இதற்குக் காரணத்தையும் விவரத்தையுஞ் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்கவே, கோபமில்லாத வசிஷ்ட மகரிஷி பார்வதியம்மையாருக்குப் பதில் சொல்லுகின்றார்.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

18. சாதகன் முன் சென்மத்தைச் சாற்றுவோ மாழி மேல்
[பால்
ஆதியாய்ப் பேரூர் தன்னில் அந்தணர் குல முதித்து
நீதியாய் அரசர் பக்கல் நிமலனும் அதிகா ரங்கள்
தீதிலா செய்து வந்து சேயிழை மதலை யுண்டாய்.

18. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சமுத்திரத்திற்கு மேற்கில் ஒரு பெரிய கிராமத்தில் பிராமணருடைய ஜாதியிற் பிறந்து அரசாங்கத்தில் ஓர் உத்தியோகத்திலமர்ந்து தன்னுடைய அதிகாரங்களைக் குற்றமில்லாமல் செலுத்திக் கொண்டு, மனைவி மக்களை யுடையவராகி, வாழ்ந்து கொண்டு;

19. வருவோர்கள் மனதைத் தேற்றி வண்மையாய் தீர்ப்பு
[செய்து
பெருமையாய் வாழு நாளில் பேசுவோ மூழி தானும்
உருமையா யிருவர் தாமும் யிருந்து பின் விரோத முற்று
வறுமையாய் யிவன் பாலுந்தான் வந்தனன் வேளாளன்
[தான்.

19. தன்னிடத்திற்கு நியாயத்திற்காக வருபவர்களுக்கு, அவர்களுடைய மனத்தைத் தைரியப்படுத்தி நல்லபடியே அவர்களுக்குத் தன்னுடைய தீர்மானத்தைத் தெரிவித்துக் கொண்டு கௌரவமாக வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த வினையைச் சொல்லுகின்றோம். இரண்டு வேளாளர்கள் ஒற்றுமையாக முதலில் இருந்து, பிறகு விரோதப்பட்டு, இவரிடம் நியாயத்திற்காக வந்தார்கள்.

20. ஞாதியின் பாகம் வேண்டி நவின்றனன் ஒருவன் [தானும்
பா்தகன் தனை யழைத்துப் பகர்ந்திட்டான் லஞ்சம் [வாங்கி
சூதினுல் தீர்ப்பு செய்தான் தோற்றவன் மன [வெறுப்பால்
மேதினில் சொல்லு கின்ருன் மெல்லியே கேட் டிடாயே.

20. இவர்களில் ஒருவர் தன்னுடைய பங்காளி பாகத்தைப் பற்றிக் கேட்கவே, மற்றொருவனை ஜாதகர் வரவழைத்து அவனிடத்தில் பணத்தை லஞ்சமாகப் பெற்றுக் கொண்டு சூதுமார்க்கமாகக் கெடுதியான தீர்ப்பைச் சொல்லி விட்டார். ஆகையால் தோல்வியை யடைந்த வாதி தன்னுடைய மனத்தில் கஷ்டத்தை அடைந்து வருத்தத்துடன் சாபத்தை ஜாதகருக்குக் கொடுக்கின்ருன். பார்வதியம்மையே! கேட்பீராக.

21. தந்தையி னுஸ்தி போக்கித் தனையர்க ளில்லா னுகிப்
பந்துவும் பகைய தாகிப் பாரினில் நிந்தை யாகித்
தந்தனம் யாவும் போக்கித் தன் தாயார் பகையுமாகிச்
சந்ததம் கிரகம் நீங்கி தாயாதி பகையு மாகி;

21. "நீ உன்னுடைய தகப்பனுருடைய சொத்துக்களைப் போக்கடித்துக் கொண்டும், பிள்ளைகள் இல்லாதவராகியும், உன்னுடைய பந்துக்கள் உனக்கு விரோதிகளாக விருந்து கொண்டும், உலகத்தில் நீ பழியையுடையவராகியும், உன்னுடைய சொத்துக்கள் எல்லாவற்றையும் செலவு செய்து விட்டும், உன்னுடைய தாயார் உனக்கு விரோதியாக மாறியும், நீ உன்னுடைய வீட்டை விட்டு விட்டு வேறிடஞ் சென்றும், உன்னுடைய பங்காளிகள் உனக்கு விரோதிகளாகவும் இருக்கும்படியாக வாழ்ந்து, பின்;

22. செனனமே யெடுப்பா யென்று செப்பினுன் யேழை [தானும்
கனமுடனச் சென்மத்தில் கனத்த தோர் பருவுனுலே
தனிகனும் மரண மாகிச் செனித்தவ னிவனே [யென்ருேம்
அனையவே முன்னூழ் சாபம் அணுகிற்று யிச் [சென்மத்தில்.

22. நீ மறு ஜனனம் எடுக்கக்கடவது" என்று தோல்வி யடைந்த அந்த ஏழையாகிய வேளாளன் சாபம் கொடுத்தான். ஜாதகர் முன் ஜன்மத்தில் ஒரு பெரிய பரு கண்டு அதனுல் இறந்து, இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். ஆகையால் ஜாதகருக்கு முன் ஜன்மத்திய சாபம் இந்த ஜன்மத்தில் வந்தடைந்தது.

23. பிதா நிதியாவும் நீங்கும் பேதையும் பகையி னுண்டாம்
சதா ஞாதி பகையே யாகும் சல்லிய மதிகம் நேறும்
நிதமுமே அலேச்ச லுண்டாம் நிகழ்ந்துவோம் கிரிகை
[தானும்
பதியினில் சாந்தி பண்ண நிவர்த்தி யென்றோம்
[சாபந்தானும்.

23. ஜாதகருக்குத் தன் தகப்பனுருடைய எல்லாச் சொத்துக்களும் அழிந்து போய் விடும். ஸ்திரீகள் இவருக்கு விரோதிகளாவார்கள். இவருக்குப் பங்காளிகள் எப்போதும் விரோதிகளாகவே விருப்பார்கள். இவருக்குக் கடன் அதிகப்படும். எப்போதும் இவருக்கு அலேச்சலும் கஷ்டங்களுமுண்டு. இதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். இந்தச் சாந்தியை இவர் செய்வாராகில் இந்தச் சாபம் இவரை விட்டு விலகிப்போய் விடும்.

24. குருமுனி இவ்வார் சொல்லக் கொம்பனே கேழ்க்க
[லுற்றாள்
சிறுமைகள் ஆகும் காலம் செப்பினீர் கர்மம் சாந்தி
மருமமாய்ச் சொன்னீர் நீங்கள் வகையுட னந்தக் காலம்
உரிமையாய்ச் சொல்லு மென்ன உரைக்கிறார் முனிவர்
[தாமே.

24. குரு முனியாகிய வசிஷ்ட மகரிஷியானவர் இவ்விதமாகச் சொல்லவே, பார்வதியம்மையார் கேட்கவாரம்பித்தார். கஷ்டங்கள் வந்து சம்பவிக்கின்ற காலத்திற் செய்ய வேண்டிய கர்ம சாந்தியைக் கால விவரமில்லாமல் சொன்னீர்களே. அந்தக் காலம் எப்போது நேரிடுமென்பதைச் சொல்லுவீர்களென்று பார்வதியம்மையார் கேட்க, வசிஷ்ட மகரிஷி சொல்லுகின்றார்.

25. மந்திரி திசையிலே தான் வரும் சுயபுத்தி தன்னில்
எந்தக் காரியம் விரோதம் யிடறுக ளதிக முண்டு
தந்தனம் செலவே நேறும் தாயாதி பகைய முண்டு.
இந்தக் காலங்கள் தன்னில் யிவனுமே சாந்தி செய்தால்.

25. மந்திரி என்ற குரு தசையில் சுய புக்தியாகிய குரு புக்தியில் ஜாதகர் எந்தக் காரியத்தைச் செய்த போதிலும் அது தீங்காவேபாகி விடும், கெட்டுப் போய்விடும். அநேக கஷ்டங்கள் நேரிடும். ஜாதகருடைய பணம் விரயமாகி விடும். இவருக்குத் தன்னுடைய பங்காளிகளின் விரோதம் ஏற்படும். இந்தக் காலத்தில் இவர் சாந்தியைச் செய்தால்;

26. வரும்துன்பம் யாவும் நீங்கும் வளர்ந்திடும் செல்வம்
[தானும்
திருமகள் வாச மாகும் தீரமா மணங்க ளுண்டு

திருகது வில்லே சொன்னேம் சித்திர நிவர்த்தி யாகும்
மரும மாய்ச் செய்யா ளுகில் வந்திடும் தரித்திரம் தானே.

26. ஜாதகருக்கு நேரிடப் போகின்ற கஷ்டங்கள் எல்லாம் நிவர்த்தி யாகிப் போய்விடும். தனம் அதிகரித்துக் கொண்டிருக்கும், இவருடைய வீட்டில் லக்ஷ்மி வந்து வாசஞ் செய்வாள். பெரிய கலியாணங்கள் நடை பெறும். வஞ்சனைகளும் நேரிடா என்று சொல்லுகின்றோம். அற்பமானவை நிவர்த்தியாகிவிடும். ஜாதகர் இந்தச் சாந்தியைச் செய்யாமல் சும்மாய் இருந்து விட்டால் இவருக்குத் தரித்திரம் வந்து சம்பவிக்கும்.

27. செயமுனி யெழுந்திருந்து செப்புவார் முனிவ ருக்கு
தயவுடன் மூதல் தாயாருக்குச் சந்ததி யுண்டோ [வென்ன
வியமுடன் கேட்கும் போது விளம்புவார் முனிவர் [தானும்
நயமுடன் மதலே தானும் நான்குமே விருத்தி யாகும்.

27. ஜயமுனிவர் எழுந்து வசிஷ்ட மகரிஷியைக் கேட்கின்றார். ஜாதகரின் மூத்த தாயாருக்குக் குழந்தைகள் உண்டோ யில்லையோ யென்று கேட்கும்போது வசிஷ்ட மஹரிஷி, பதில் சொல்லுகின்றார். மூத்த தாயாருக்கு நான்கு குழந்தைகள் விருத்தியை யடைவார்கள் என்று வசிஷ்டர் சொல்லுகின்றார்.

28. விருத்தியில் யாவும் போக்கி விளம்பினேம் ஒருவன் [தீர்க்கம்
திருத்தமா யவன்குணத்தைச் செப்புவோம் தாரம் [ரெண்டாய்
உரைத்திட்டோம் முதல் மாதுக்கு உதிக்காது மதலே [தானும்.
அருத்தமாய் யிளேயா ளுக்கு அறைந்திட்டோ மாண்பா [லொன்று.

28. இந்த நான்கு குழந்தைகளில் ஒரு பிள்ளை நீண்ட ஆயுளை யுடையவராக விருப்பார். இந்த ஆணின் குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இரண்டு தாரங்கள் நேரிடும். முதல் மனைவிக்குக் குழந்தை பிறக்காது. இரண்டாவது மனைவிக்கு ஒரு ஆண் குழந்தை உண்டென்று சொல்லுகின்றோம்.

29. மதலே முதித்த பின்பு மன்னவன் மாதரவாலே
சதியினல் மரண மாவான் சாற்றுவோ மதற்குப் பின்பு
குதர்க்கம் அனேக முண்டு கூறினே முன்சா பத்தால்
சதமான பூமி வீடு தனதானியம் யாவும் போகும்.

29. இந்தக் குழந்தை பிறந்த பிறகு இக் குழந்தையின் தகப்பனுர் (அஃதாவது ஜாதகரின் பெரிய தாயாருடைய பிள்ளை) ஸ்திரியின் வஞ்சனை யால் இறந்து விடுவார். இதற்குப் பிறகு முன் ஜன்மத்திய சாபத்தின் பயனுக அநேக கோளாறுகளும் கஷ்டங்களும் நேரிடும் என்று சொல்லுகின்றேம். நிலையான வீடு, நிலங்கள், தனம் தானிய வகையருக்கள் எல்லாம் அழிந்து போய்விடும், கைவிட்டுப் போய் விடும்.

30. எந்தக் காலங்கள் தன்னில் யிவனுமே மரண மாவான்
அந்ததோர் நிரியாணத்தை அறிவிப்பீ ரென்று கேட்க
இந்ததோர் சாதகர்க்கு யிருபத்து ஒன்பா ணுண்டில்
முந்தின துணைவன் தானும் மொழிந்திட்டோம் மாரகந்
[தான்.

30. ஜாதகருக்கு எந்த வயதில் இந்த மூத்த சகோதரன் இறந்து போய்விடுவான் என்பதைத் தெரிவிப்பீர்கள் என்று கேட்கவே, ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில்* மூத்த சகோதரர் இறந்து விடுவார் என்று சொல்லுகின்றேம்.

*குறிப்பு:—பெரிய தாயாரின் குமாரனுன மூத்த சகோதரத்தின் மரணம்:— ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில் ராகு தசையில் சுக்கிர புக்தி நடக்கின்றது. தகப்பனுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்கு முதல்தார லக்கினம் ஏழா வது வீடாகிய விருச்சிகம் ஆகும். இதற்குப் புத்திர ஸ்தான மாகிய ஐந்தாவது வீடாகிய மீனம் ஆகும். இந்த மீனம்தான் பெரிய தாயாருடைய புத்திரனுடைய லக்கினமாகும். இதற்கு எட்டிலுள்ள ராகு தன் தசையில் மாரகத்தைச் செய்வார். இதற்கு எட்டிற்குடைய சுக்கிரன் மூன்றிலிருப்பதால் சுக்கிரன் தன் புக்தியில் மாரகஞ் செய்வார்.

31. அதுமுதல் சகல துன்பம் அனுகிடு மிவனுக்கே தான்
விதியினுல் முன்னூழ் சாபம் மேவிற்று யிக் காலத்தில்
இதுதீர சாந்தி சொன்னேம் இவனுமே செய்யா ணுகில்
பதியினில் திருவும் நீங்கி பாரினில் அலைச்ச லுண்டே.

31. இந்தச் சம்பவத்திற்குப் பிறகு ஜாதகருக்குப் பலவித கஷ்டங்கள் வந்து நேரும். இந்தக் காலத்தில் தலை விதியினுல் முன் ஜன்மத்திய சாபம் இவரை வந்தடையும். இந்தச் சாபம் நிவர்த்தியாக ஒரு சாந்தியைச் சொன் னேம். இதை இவர் செய்யா விட்டால் இவருடைய லக்ஷ்மியும் செல்வமும் இவரை விட்டு நீங்கி இவருக்கு அலைச்சல்களும் கஷ்டங்களும் நேரிடும்.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

32. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறேம் சிவந்த மேனி
கோதிலா வாய்வு தேகி கூறுவோ சுல்ப்ப ரோகி

தீதிலா குணத்த ளாகும் செல்வியு மதிட்ட சாலி
மாதவர் தனைத் துதிப்பாள் வரனுக்கு நேய முள்ளாள்.

32. ஜாதகருடைய தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் சிவப்பு நிறமான தேகத்தை யுடையவள். இவளுக்கு வாததேகமான பெரிய தேகமுண்டு. இவளுக்குச் சிறிது வியாதியு முண்டு. இவள் கெட்ட குணத்தை யுடையவளல்லள். இவள் அதிருஷ்ட முடையவளாகும். இவள் முனிவர்களையும் சந்நியாசிகளையும் பெரியோர்களையும் வணங்கிப், போற்றுவாள். இவள் தன்னுடைய புருஷனுக்கு இஷ்டமானவளாவாள்.

## ஜாதகரின் தாயாருடைய (சகோதரபாவம்)

33. புத்திர வாசை யுள்ளாள் புன்னிய மனத்த ளாகும்
விந்தகி அன்ன மீவள் விளம்புவோம் துணைவர் தம்மை
சித்தமாய் யீரா ருகும் செப்புவோம் சில வனேகம்
உத்தமி முன் சென்மத்தை உரைக்கிறோம் கேளு மம்மா.

33. ஜாதகரின் தாயார் தன் புத்திரன் மேல் ஆசையை யுடையவளாவாள். இவள் நல்லதும் தர்மமுமுள்ள மனத்தை யுடையவளாகும். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் போடுவாள். இவளுடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவளுக்குப் பன்னிரண்டு துணைவர்களுண்டு. இவர்களில் அநேகம் பேர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். இனிமேல் இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

34. கொச்சினா டதனிலேதான் கோவைசிய குலமு தித்து
அச்சுதன் மதத்த ளாகி அனேகமாய்ப் பொருளும் [பெற்று
உச்சித மதலை யின்றி உரைந்தனள் தட்சி ணத்தில்
இச்சையாய் வரனின் கூட இவள்பல தீர்த்தம் [தோய்ந்து.

34. ஜாதகருடைய தாயார் தன்னுடைய முன் ஜன்மத்தில் கொச்சி நாட்டில் கோவைசிய ஜாதியில் பிறந்து, சிவபெருமானுடைய சைவ மதத்தை யுடையவளாகியும் அதிகமான சொத்துக்களை யுடையவளுமாகியும் பிள்ளையில்லாமல் தன்னுடைய புருஷனுடன் தெற்கே சென்று அநேக தெய்வீக ஸ்தலங்களிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானங்கள் செய்தும்;

35. சேதுவில் ஸ்னானம் செய்து ஸ்ரீராம லிங்கந் தன்னை
நீதியாய் தோத் தரித்து நிதானமாய் தான மீந்து

வேதியர்க் கன்ன மீந்து விமலியும் உள்ளூர் மீண்டு
தீதிலாச் சுக்கர வாரம் தேவியும் விரதம் கொண்டாள்.

35. சேதுஸ்தலத்தில் ஸ்நானஞ் செய்தும், ஸ்ரீராமலிங்கத்தைப் பூஜை செய்தும், பணிந்தும், தானதர்மங்களைச் சாந்தமாகச் செய்தும், பிராமணர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டும், பிறகு அவ்விடத்தை விட்டு நீங்கி தன் கிராமத்திற்குத் திரும்பி வந்து, இவள் சுக்கிரவார விரதத்தை ஏற்றுக் கொண்டாள்.

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

36. விரதத்தால் மதலை தோன்றி வித்தகி மரண மாகிப்
பிரமனல் வரையப் பட்டுப் பிறந்தனள் யிவளே
[யென்றோம்
உரிமையாய்ப் பின்சென் மத்தை உரைக்கிறோம் சிறு
[பாக்கத்தில்
திறமையாய்க் கங்கை வம்சம் செனிப்பளா மிவளே
[யென்றோம்.

36. இந்த விரதத்தின் பலனாக இவளுக்குப் பிள்ளை பிறந்து பிறகு இவள் மரணமாகிப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். இவளுக்கு மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் சிறு பாக்கம் என்ற ஒரு சிறிய கிராமத்தில் வேள்ாளர் குலத்திற் போய்ப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய மரணகாலம்

37. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிரண்டா
[மாண்டில்
சிந்தையாய் மகர மாதம் செய்குவன் கர்மம் தானும்
பிந்திய அன்னை காலம் பேசுவோம் முப்பான் ரெண்டில்
தந்தனுர் மாதம் தன்னில் சாற்றினோ மாரகம் தான்.

37. ஜாதகரின் தகப்பனாருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் ஜாதகருக்கு இரண்டாவது* வயதில் மகர மாதம் என்ற தை மாதத்தில் இறந்து இவருக்கு ஜாதகர் கர்ம காரியங்களைச் செய்து விடுவார். பிறகு தாயாருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது* வயதில் தனுர் மாதம் என்ற மார்கழி மாதத்தில் மாதாவுக்கு மரணம் நேரிடும்.

*குறிப்பு :—பிதுர்மாரகம் :—ஜாதகருக்கு இரண்டாவது வயதில் சந்திர தசையில் குரு சனி இவர்களுடைய புக்திகள் நடக்கின்றன.

பிதுர்லக்கினம் ரிஷபம் ஆகும். இதற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகப்பிரகாரம் சந்திரனும் குருவும் மாரகாதிபதிகளாகின்றார்கள். ஆகையால் சந்திர தசையில் குரு புக்தியில் பிதுர் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. பிதுர் காரகனாகிய சூரியனைச் சனியும் கேதுவும் பார்த்திருப்பது பிதுர்தோஷமாகும். இங்கு சூரியன், சனி, பாம்பு ஆகிய இவற்றின் சம்மந்த விஷயகமாக மணி கண்ட கேரளம் அரிஷ்ட காண்டம் நான்காவது பாடலைப் பார்க்கவும். இது பிரகாரம் ஜாதகருக்கு ஒன்பது வயதிற்குள் பிதாவுக்கு மரணமுண்டாகும்.

*குறிப்பு:—மாதுருமாரக விஷயம் :—முப்பத்திரண்டாவது வயதில் மார்கழி மாதத்தில் ராகு தசையில் அங்காரக புக்தி நடக்கின்றது. மாதுரு லக்கினம் நான்காவது விடாகிய தனுசு ஆகும். ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் இதற்குச் சுக்கிரன் மாரகாதிபதியாகின்றார். இவர் வீட்டிலுள்ள ராகு ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரம் மாரகராகின்றார். மாதுருஸ்தானமாகிய தனுசையும் மாதுருஸ்தானாதிபதியுமாகிய குருவையும் பார்க்கின்ற சூரியனுடைய வீட்டிலுள்ள அங்காரகனும், மாதுருகாரகனாகிய சந்திரனுக்கு எட்டிலுள்ள அங்காரகனும் மாரக ராகின்றார். ஆகையால் ராகு தசையில் அங்காரக புக்தியில் மாதாவுக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலம்

38. சாதகன் மரண காலம் சாற்றுவோ மறுபா னென்றில்
மேதினில் வைகாசி மாதம் வளர்பிறை தசமி தன்னில்
கோதிலா பகலிலே தான் கூறுவோம் மரணம் தானே
பூதலம் அளந்தேன் தங்கை புகன்றசொல் தப்பா
[தென்றோம்.

38. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம் இவர் அறுபத்தோராம் வயதில் வைகாசி மாதத்தில் வளர்பிறை தசமி திதியில் பகற் காலத்தில் மரணமாவார். பூமியைஅளந்தவராகிய மகாவிஷ்ணுவின் தங்கையாகிய பார்வதியம்மையே ! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—ஜாதகர் மரண கால விஷயம் :—ஜாதகருக்கு அறுபத்தோராவது வயதில் வைகாசி மாதத்தில் சனி தசையில் அங்காரக புக்தி நடக்கின்றது. சனி இங்கு லக்கினத்திற்கு ஆறுக்குடையவராகி லக்கினத்திலேயே இருக்கின்றார். குமார சாமீயம் மகாதிசைப் படலம் நான்காவது பாடல் பிரகாரம் ஆறுக்குடைய சனி மாரகராகின்றார், கேது இருக்கும் வீட்டிற்குடையவராகிய அங்காரனும் மாரகராகின்றார். துய்ய கேரளம் எட்டாம் பாவம் பதி

ஞன்காவது பாடல் பிரகாரம் சனியும் எட்டிற்குடைய அங்கார கனும் மாரகராகின்ருர்கள். ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான் காவது சுலோகம் பிரகாரமும் அங்காரகன் மாரகஞகின்ருர். ஆகையால் சனி தசையில் அங்காரக புக்தியில் ஜாதகருக்கு மரணம் சொல்லப்பட்டிருக்கின்றது என்றறியவும்.

## ஜாதகருடைய யோகபாவம்

39. இவன்பின்ஞல் மனைவி கண்டம் இசைந்திட்டோ
[மிதுவல்லாமல்
நவமதில் யோகச் செய்கை நாட்டுவோ மிவனுக்
[கேதான்
அவனியில் செனனம் தொட்டு ஆறைந்து ஆண்டு
[மட்டும்
பவமுள யோக முண்டு பார்வதி மேலுங் கேளே.

39. ஜாதகர் இறந்த பிறகு இவருடைய மனைவி இறந்து விடுவாள் என்று சொல்லுகின்ருேம். இனிமேல் ஜாதகருக்கு யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். ஜாதகருக்குத் தன்னுடைய ஜனனகாலம் முதற் கொண்டு முப்பது வயது வரையிலும் யோகங்கள் நடைபெறும், பார்வதி யம்மையே! நாங்கள் இன்னம் அதிகமாகச் சொல்லப் போவதைக் கேட் பீராக.

40. அதற்குமேல் ஐந்தாண்டுக்கும் அறைகிருேம் பலனை
[யாங்கள்
விதவித விரையமுண்டு மேவுவன் அன்னிய தேசம்
பதியது நிவர்த்தி யாகிப் பூருதனம் நேருமென்ருேம்
விதியினுல் சல்லிய முண்டு விசனங்க ளதிகம் நேரும்.

40. ஜாதகருக்கு மூப்பது வயதிற்கு மேல் ஐந்து வருஷம் வரையிலும், அஃதாவது முப்பத்தைந்தாவது வயது வரையிலும் நடக்கப் போகின்ற பலா பலன்களை நாங்கள் இனிமேல் சொல்லப் போகின்ருேம். பற்பலவிதமான விரயங்களும் செலவுகளும் ஜாதகருக்குண்டு. இவர் தன்னுடைய வீட்டை விற்றுவிட்டுத் தன்னுடைய கிராமத்தையும் விட்டு விட்டு வெளி தேசத்திற்குப் போய் விடுவார். இவருக்குப் பூர்வீகமான சொத்து வந்து கிடைக்கும் என்று சொல்லுகின்ருேம். இவருக்குத் தலைவிதியின் பயனுகக் கடன் ஏற்படும். அதிகமான துக்கங்களும் துன்பங்களும் உண்டாகும்.

41. ஆறாறு ஆண்டின் மேலே அனேகமாய்ப் பூமி வாய்க்கும்
தீருமே ருணங்கள் தானும் சிறப்பான குடும்ப மாகும்
வேருெரு தீங்கு மில்லை விசேஷமாய்ச் செட்டு செய்வன்
பாரிய வணிபத் தாலே பகருவோம் லாபம் தானே,

41. ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதிற்குப் பிறகு அநேக நிலங்கள் வந்து சேரும். கடன்கள் நீங்கிவிடும்; இவருடைய குடும்பம் மேன்மை யான குடும்பமாகும். வேறே யாதொரு கெடுதிகளும் சம்பவிக்கா. இவர் வியாபாரத்தை அதிகமாகச் செய்வார். பெரிய வியாபாரத்திருலே இவருக்கு லாப முண்டாகும் என்று சொல்லுகின்றோம்.

42. தாயாதி பூமி தன்னைத் தானவன் சேர்ப்பா ஞகும்
தீயது நாச மாகும் சிறப்பான கீர்த்தி யோங்கும்
வாய்ச்சொல்லு மேன்மை யாகும் விருத்தியாம் தானி [யங்கள்
நேயமாம் ரசவர்க் கத்தால் நிகழ்த்துவோ மதிக லாபம்.

42. ஜாதகர் பங்காளியின் நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார். கெடுதிகள் நாசமடைந்து விடும். இவருக்கு நல்ல மேன்மையான புகழ் அதிகரிக்கும். இவர் சொல்லுகின்ற சொற்களும் பெருமை யுடையனவாகும் மதிப்புடையனவாகும். இவருக்குத் தானியவகையருக்கள் விருத்தியாகி அதிகப்படும். இவருக்கு ரசாயன வஸ்துக்களிருல் அதிகமான லாபம் கிடைக்கும் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய மறு ஜன்மம்

43. சாதகன் மறுசென்மம் சாற்றுவோம் தோகை கீழ்பால்
நீதியாய்ப் பேரூர் தன்னில் நிமலனு மிக்கு லத்தில்
மேதினில் உதித்து மேலும் விளைபுல மதிகம் பெற்றுக்
கோதிலா செட்டுச் செய்து குண முடன் வாழ்வா [னென்றோம்.

43. ஜாதகருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் திருத்தணிக்கு மேற்கேயுள்ள ஒரு பெரிய கிராமத்தில் இந்த ஜன்மத் திய ஜாதியிலேயே பிறந்து, பயிரிடும் நிலங்களை அதிகமாக வடைந்தும், குற்றமில்லாத வியாபாரத்தைச் செய்து கொண்டும், நல்ல குணங்களுடனும் நன்மார்க்கத்திலுமிருந்து வாழ்வார் என்று சொல்லுகின்றோம்.

44. பிறத்தசேய செனன காலம் பிறைதிசை ஆண்டு [யேழும்
உறைந்திடும் திங்கள் மூன்றும் உரைக்கிறோம் பலனை [யாங்கள்
சிறந்திடு தந்தை கெண்டம் செப்புவோம் பூமி சேரும்
வரவரச் செல்வ மோங்கும் மங்கலன் திசையைச் [சொல்வோம்.

44. ஜாதகர் பிறந்த காலத்தில் பிறை என்ற சந்திர தசையில் ஏழு வருஷங்களும் மூன்று மாதங்களும் இருப்பு ஆகும். இக்காலத்திய பலா

பலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். ஜாதகருடைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும். ஜாதகருக்கு நிலங்கள் வந்து சேரும். இவருக்கு நாளுக்கு நாள் செல்வமும் சம்பத்தும் அதிகரிக்கும். பிறகு நடக்கின்ற மங்கலன் என்ற அங்காரகனுடைய தசையின் பலாபலன்களைச் சொல்லு வோம்.

45. பலவித நோய்க ளுண்டு பச்சைமால் விரதத் தாலே
விலகிடும் பிணியும் யாவும் மேன்மையாய்க் குடும்ப
[முண்டாம்
உலகுளார் மெச்ச வாழ்வன் உறுந்தந்தை துணைவர்
[கண்டம்
தலமதில் திருவும் சேரும் சத்தியே மேலும் கேளே.

45. ஜாதகருக்குப் பற்பல வியாதிகள் ஏற்படும். மகாவிஷ்ணு விரத்தினுல் எல்லா ரோகங்களும் நிவர்த்தியாகிவிடும். இவருடைய குடும்பம் கௌரவத்தை யடையும். இவர் பூமியிலுள்ளவர்கள் மதிக்கும் படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவருடைய தகப்பனுரின் சகோத ரர்கள் மரண மடைவார்கள். ஜாதகருக்குச் செல்வம் வந்து சேரும். லக்ஷ்மி யும் வந்து வாசஞ் செய்வாள். பார்வதியம்மையே! நாங்கள் இனிமேல் சொல்லப் போவதைக் கேட்பீராக.

(முதல் பாகம் முற்றிற்று)

முதல் பாகம் முடிந்துவிட்டது. இனிமேல் இரண்டாவது பாகத்தைச் சொல்லுகின்றோம்.—

# ஜாதகம் 9.

## ஜனனகால கிரகநிலே

1. [1]மறைராகு [2]மானில் தங்க [3]மதிசனி [4]சாடி யாக
[5]இரவி[6]சேய் புதன் [7]பளிங்கு லக்னம் கேது [8]வண்டி
விரைசென்மம் [9]மாது வாக விளம்புவீர் பலனைத் தானே
நிறைபரா பரியும் கேட்க நிர்மல முனிவர் சொல்வார்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிக் குருவும் ராகுவும் மகரத்திலும், சந்திரனும் சனியும் கும்பத்திலும், சூரியனும் அங்காரகனும் புதனும் சுக்கிரனும் லக்கினத்திலும், கேது கடகத்திலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது, வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்றார்.

கிரகநிலே

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சந்திரன் சனி | இராசி சக்கரம் | | கேது |
| குரு ராகு | | | |
| | | | லக்கினம் புதன் சூரியன் சுக்கிரன் அங்கா |

அவிட்டம் 3-ஆம் பாதம் அங்காரக தசை ஷ 1—09—12

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலே பொருத்த முடையதாகும் :—ரிஷபத்தில் அங்காரகனும் புதனும் சுக்கிரனும், மிதுனத்திற் சனியும், ராகுவும், கடகத்திற் சூரியனும், துலாத்திற் சந்திரனும், தனுசிற் கேதுவும், கும்பத்திற் குருவும் ஆகும்.

---

1. குரு.
2. மகரம்.
3. சந்திரன்.
4. கும்பம்.
5. சூரியன்.
6. அங்காரகன்.
7. சுக்கிரன்.
8. கடகம்.
9. கன்னி.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. செனித்தது ஆணும் சென்மம் தேவியே கீழ்மேல் வீதி
குனித்திடு முத்திர வாசல் குறைதலே மாரி மேற்கில்
வனிதை மாகாளி சந்தி மருவிடு முத்தி ரத்தில்
இனிமையாய்ச் சிற்றூர் தன்னில் யியல் கூரை வீட்டி
[லேதான்

2. பிறந்த குழந்தை ஆணாகும். பார்வதியம்மையே! பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு வாசற்படியை உடையதாகும். சிலையில்லாத மாரியம்மன் கோயில் மேற்கிலும், மாகாளியம்மன் கோயில் வடக்குத் திக்குச் சந்தியிலும் இருக்கும். இவ்வித யடையாளமுள்ள ஒரு சிறிய கிராமத்தில் கூரை வீட்டில்;

3. உதிப்பனு மிந்தப் பாலன் உயர் பிரம்ம வம்சத்தில்
பதியிலா அயலார் வீட்டில் தானவன் செனன மாகும்
மதிநிகர் மாது தந்தை வரும்துணை களத்திர புத்திரர்
விதியினால் முன்பின் சென்மம் விளம்புவோ மிந்நூல்
[தன்னில்.

3. பிராமணர் குலத்தில் இந்தக் குழந்தை பிறக்கும். இவர் அன்னியருடைய வீட்டிற் பிறப்பார். தாயார், தகப்பனார், சகோதரர்கள், மனைவி, சந்ததிகள், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய பாவம்

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றுவோ மெழுவ
[ராகும்
எந்த வார் தந்தை வர்க்கம் யியம்புவீர் முனிவரே நீர்
சொந்ததோர் பிதாவு மில்லை தொடர்ந்ததோர் பிதாதன்
[சேதி
சிந்தையில் கூறொணாது சாதகன் சேதி சொல்வாய்.

4. ஜாதகரின் தகப்பனாருடைய வர்க்கத்தாரைப் பற்றிச் (சகோதரர்களைப் பற்றிச்) சொல்லுகின்றோம். இவர்கள் ஏழு பேராகும் என்று வசிஷ்டர் சொல்லவே, தடுத்து எந்தக் காரணத்தினால் பிதாவின் வர்க்கத்தைப் பற்றி நீர் சொல்லப் போகின்றீர், முனிவரே! ஜாதகருக்குச் சொந்தத் தகப்பனார் கிடையாது. ஆகையால் தகப்பனாருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லச் சாத்தியப் படாது, ஆகையால் நீர் ஜாதகருடைய விஷயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுவீர்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

5. சாதக நிறம் குணத்தைச் சாற்றுவோம் சிவந்த மேனி
நீதியாய் சம தேகத்தன் நிர்மிப்பான் யாவுமே தான்
மேதினில் கல்வி யுள்ளான் வீணப வாத முள்ளான்
தீதிலா குணத்த னாகும் சீக்கிர நடையு முள்ளான்.

5. ஜாதகருடைய நிறத்தைப் பற்றியும் குணாதிசயங்களைப் பற்றியும் சொல்லுகின்றோம். இவர் சிவப்பான நிறமுள்ள தேகத்தை யுடையவராவர். இவர் நடுத்தரமான அளவுள்ள தேகத்தை யுடையவர், எல்லாவற்றையும் இவர் நிர்மிப்பவராவர், நியமிப்பவருமாவர். இவர் கல்வியை யுடையவராவர், வாசித்தவராவர், வீணாகப் பழிகளை ஏற்பவராவர், இவர் கெடுதியில்லா குணங்களை யுடையவராவர், இவர் வேகமாக நடக்கக் கூடியவராவர்.

6. பசிதாப முடைய னவன் பாரினில் யெவர்க்கு நண்பன்
உசிதமாய் வார்த்தை சொல்வன் உத்தமர்க் கினிய
[னவன்
திசையெலாம் குலத்தில் குற்றம் செப்புவார் யிதனையே
[தான்
வசைகளும் பெறுவா னாகும் மனவர்ம மில்லா
[னென்றோம்.

6. ஜாதகர் பசி, தாகம் ஆகிய இவற்றால் உண்டாகக் கூடிய துன்பத்தை யுடையவராவர். இவர் பூமியில் எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். இவர் இனிமையாகவும், அழகாகவும் தகுதியாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் நல்லவர்களுக்கு இஷ்டமானவராகவும் பிரியமானவராகவும் இருப்பார். நாற் திசைகளிலும் ஜனங்கள் இவருடைய குலத்தையும் ஜாதியைப் பற்றியும் குற்றம், குறை சொல்லுவார்கள். இவர் இகழ்ச்சிகளையும் குற்றங்களையும் அடைபவராவர். இவர் தன்னுடைய மனத்தில் மர்மத்தையும் வஞ்சனையையும் வைராக்கியத்தையும் உடையவரல்ல என்று சொல்லுகின்றோம்.

7. சொல்லது தவறு வானும் சொந்தமாய்ப் பூமி சேர்ப்பன்
இல்லையென் றுரைக்க மாட்டான் யிவன் பித்தச் சூடாம்
[தேகம்
நல்லவர் பலர்க ளாலே நாட்டினில் பெருமை பூண்பன்
தொல்லையு மாதிலே தான் தோன்றிடும் வனவாச
[ந்தான்,

7. ஜாதகர் தான் சொல்லுகின்றபடி நடந்து கொள்ளாமல் தவறி நடப்பவராவர். இவர் தானே சொந்தமாகச், சுவார்ஜிதமாக, நிலங்களைச்

சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவர் தன்னிடத்திற்கு உதவிக்காக வருபவர்களுக்கு இல்லை என்று சொல்ல மாட்டார். இவருடைய தேகம் பித்தச் சூட்டு குணத்தை யுடையதாகும். இவர் நல்லவர்களில் அநேகம் பேரால் கௌரவத்தையும் மேன்மையையும் அடைபவராவர். இவருக்குத் தன்னுடைய முற்காலத்தில் கஷ்டங்களும் துன்பங்களும் வனவாசமும் நேரிடும்.

8. இரணியத் தொழிலே செய்வனிவன்யூகி அதிர்ஷ்ட சாலி
திறமையாய் வார்த்தை சொல்வன் சிறுத்தவர் தம்மைக்
[காப்பன்
சிரமுக வடிவு கண்ணும் சேயிழை பிரிய னுவன்
கரம் காலு வலிவு முள்ளான் கட்டுவார்த்தைகளும்
[சொல்வன்.

8. ஜாதகர் பொன் வேலையை தட்டார வேலையைச் செய்பவராவர். இவர் பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவையுடையவவர். அதிருஷ்ட முடையவர். இவர் சாமர்த்தியமாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் ஏழைகளைக் காப்பாற்றுபவராவர். இவர் தன்னுடைய :சிரசிலும் முகத்திலும் வடுக்களையும் அடையாளங்களையும் உடையவராவர். இவருக்கு முகமும் கண்களும் வடிவுள்ளனவாகவும் அழகாகவும் இருக்கும். இவர் மனைவிக்கும் பெண்களுக்கும் பிரியமுள்ளவராகவிருப்பர். இவர்களை இவரும் விரும்புவார். இவர் வலிவான கைகால்களை உடையவராவர். இவர் பிணைந்த வார்த்தைகளையும், பொய்யான வார்த்தைகளையும், பழமொழிகளையும் சொல்லுவார்.

9. தாய் நந்தை கர்மம் செய்யான் சகோதரரொருமை
[யில்லான்
தாய்தந்தை யாஸ்தியில்லான் தனியனுய் வாழ்வா னுகும்
ஆயிலா மனது முள்ளான் ஆள்கள் சேர்ப்பா னுகும்
ஞாயமாய்ப் பேச வல்லான் நாயகி மேலும் கேளே.

9. இவர் தன்னுடைய தயார் தகப்பனுர் ஆகிய இவர்களுக்குக் கர்மத்தைச் செய்யமாட்டார், இவருக்குச் சகோதரர் இவருடன் ஒற்றுமையாக விருக்கமாட்டார். இவர் தன்னுடைய தாயார், தகப்பனுர் ஆகிய இவர்களுடைய சொத்தில்லாதவர். இவர் தனியாக, ஒண்டியாகவிருந்து வாழ்பவராவர். இவர் தயாள குணமுடைய மனத்தையுடையவராவர். இவர் வேலையாட்களைச் சேர்த்து வைப்பார், இவர்களையுடைய்வராவர். இவர் நீதியாகவும் நல்ல மார்க்கமாகவும் பேசுந் திறமையையுடையவராவர். பார்வதியம்மையே! நாங்கள் இனனும் சொல்லுகின்ரேம். கேட்பீராக.

10. அத்திரி முனிவர் சொல்வார் ஆஸ்திகள் அனுகா
[தென்றீர்
வித்தகன் தாய்தந் தைக்குக் கிரிகையும் செய்யா
[னென்றீர்

குத்தங்க ளெவ் வார்த்தை கூறுவீர் முனியே யென்ருர்
சித்தமாய்ச் சொல்லு கின்ருர் செல்வியே கேட் டிடாயே.

10. அத்திரி ரிஷி தடுத்துக் கேட்கின்ருர். ஜாதகருக்குப் பிதுரார்ஜித சொத்துக்கள் கிடையாதென்று சொன்னீரே! இவர் தன்னுடைய தாயாருக்கும் தகப்பனுருக்கும் கர்ம காரியங்களையும் செய்யமாட்டார் என்று சொன்னீரே! இதற்குக் காரணங்களையும் தோஷங்களையும் சொல்லுவீர் முனிவரே! என்று அத்திரி ரிஷி கேட்டார். இதற்கு வசிஷ்டமஹரிஷி பதில் சொல்லுகின்ருர். பார்வதியம்மையே! கேட்பீராக.

11. நவநாலோ ரிருவர் நீச்சம் நல் கினத்தாலே யானும்
அவனியில் சொல்லு கின்ரேம் அதுவின்றி முன்னூழ் [தன்னல்
இவனுக் கணுகா தென்ரேம் யென்ன ஊழ்அதனை [நீங்கள்
கவனமாய்ச் சொல்லு மென்ன கழறுவார் முனிவர் [தானும்

11. நவமாகிய ஒன்பதாவது ஸ்தானத்திற்குரிய சுக்கிரன் கன்னியா ராசியில் நீசமாகவிருக்கின்ருர். நாலோராகிய நான்கிற்குடைய குரு மகரத்தில் நீசமாகவிருக்கின்ருர். இப்படியிருப்பதால் நாங்கள் இவ்விதமாகச் சொன்னேம். இதுவுமன்றி, ஜாதகருக்குத் தன்னுடைய முன் ஜன்மத்திய வினையினுலும் பாவத்தினுலும் தாய் தந்தை சொத்துக்கள் கிடைக்காதென்று சொன்னேம். இதன்மேல் அத்திரி கேட்கின்ருர். ஜாதகர் என்ன பாவங்களைச் செய்தாரென்பதை மறக்காமல் ஞாபகத்துடன் சொல்லுவீரென்று அத்திரிரிஷி கேட்கவே, வசிஷ்டமஹரிஷி பதில் சொல்லுகின்ருர்.

## ஜாதகரின் முன்ஜன்மம்

12. இன்னவன் முன்செனன் மத்தை யியம்புவோம் கொங்கு [ஞட்டில்
அன்னவன் மிலேச்ச சேயாய் அதர்வணம் கற்றுமே [தான்
உன்னிட மாடன் காளி உத்தமன் வசியம் செய்து
இன்னவன் யேது செய்தான் யீஸ்வரி கேளு மம்மா.

12. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம். இவர் கொங்கு நாட்டில் மிலேச்சருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து அதர்வண வேதத்திற் சொல்லியுள்ள சாஸ்திரங்களைப் படித்துவிட்டு, ஒரு பேயையும் (குட்டிச்சாத்தானையும்) காளியம்மனையும் வசியஞ் செய்து கொண்டு, இவர் எந்தெந்த தகாத காரியங்களைச் செய்தார் என்பதைச் சொல்லுகின்ரேம், பார்வதியம்மையாரே! கேட்பீராக.

13. பிரயோகம் பெண்கள் பேரில் பொருந்தவே செய்து
[வந்தும்
திரமையாய் மயக்கத் தாலே செல்வனும் போகம் துய்த்து
சரியிலா பெண்கள் தன்னைச் சாத்தனால் மரணம்
[செய்தும்.
கருவினால் குடும்பம் தன்னைக் கனக்காமல் செய்து
[வந்தும் ;

13. ஜாதகர் ஸ்திரீகளின்மேல் குட்டிச்சாத்தானை ஏவிவிட்டு அவர்களுக்கு அதனால் மயக்கத்தை உண்டாக்கி, அவர்களிடத்தில் சம்போகஞ் செய்து வந்தார். தனக்குப் பவியப்படாத, இணங்காத ஸ்திரீகளின்மேல் குட்டிச்சாத்தானை ஏவிவிட்டு அவர்களைக் கொன்றுவிட்டான். மேலும் கருக்களை வைத்துக் குடும்பங்களை விருத்தியாகாமல் நசிக்கும்படியாகவும் செய்து கொண்டு வந்தார்.

14. வமிசங்கள் தன்னைத் தானும் விளங்காமல் செய்து
[வந்தும்
துன்பங்கள் யெவர்க்கும் செய்வான் சொல்லுவர் சிலது
[பேர்கள்
அம்புலி தன்னிலே தான் அழும்புகள் செய்த பாவி
உம்பர்கோன் யெல்லை யின்றி உரைகுவாய் யெமன்
[பதிக்கு.

14. ஜாதகர் ஜனங்களுடைய வம்மிசங்களும் குடும்பங்களும் விருத்தியாகவிடாமல் நாசமாக்கிக் கொண்டு வந்தார். இவர் எல்லோருக்கும் கெடுதிகளையே செய்து வந்தார். சில ஜனங்கள் இவரைப் பார்த்துப் பின் வருமாறு சொல்லுவார்கள். "இந்தப் பூமியில் கெடுதிகளைச் செய்த பாபியாகிய நீ, தெய்வலோகத்திற்குப் போகாமல் எமலோகத்திற்குப் போகக் கடவது.

15. நரகத்தில் தள்ளி யேதான் நமன் தூதரடியும் பட்டு
உரகனால் கடியு முண்டு உரைந்து பின்சின்னாள் சென்று
உருவுக ளெடுத்த போதும் உலகினில் நிந்தை யாகிப்
பரம்பரை வம்ச மின்றிப் பாரினி லுதிப்பா யென்றார்

15. மேலும், நீ நகரத்தில் தள்ளப்பட்டு, எமதூதர்களுடைய காலடியும் பட்டு, பாம்புகளால் இம்சிக்கப்பட்டும் கடிக்கப்பட்டும் அவ்விடத்தில் சில காலம் தங்கியிருந்து, மறுபடியும் ஜன்மத்தை எடுத்தபோதிலும், பூமியில் அபவாதங்களையடைந்தும், பரம்பரையான வமிசமேயில்லாமலும் பூமியில் பிறந்து இருக்க கடவது என்று சபித்தார்கள்.

16. இவ்வித சாபம் சொன்னோர் யாரென்று அத்திரி கேட்க
ஒவ்விய மறையோன் மாது உத்தமி அவளை யின்னோன்
நவ்விய வருத்தம் செய்ய நாயகி சொல்லி யேதான்
பவ்வமாய் மரண மானாள் பத்தினி சொன்னா ளென்றோம்.

16. இவ்விதமாகச் சாபத்தைக் கொடுத்தவர்கள் யார் என்று அத்திரி ரிஷி கேட்கவே. வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்றார். கற்புடைய ஒரு பிராமண ஸ்திரீயை இவர் இம்சை செய்யவே, இவள் சாபத்தைக் கொடுத்து விட்டு இறந்துவிட்டாள். ஆகையால் இந்தக் கற்புடைய ஸ்திரீ சொன்னாள் என்று சொல்லுகின்றோம்.

17. ஆகையால் அச்சென் மத்தில் அந்திய காலம் தன்னில்
யோகமு மற்றுமே தான் உலகினில் வறுமை பூண்டு
பாகமாய்ப் பித்தம் கொண்டு பாரினில் திரிந்து [இன்னோன்
சோகத்தால் மரண மானான் சுருதியின் சிரசோ னாலே.

17. ஆனபடியால் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் யோகங்கள் கெட்டுப்போய் தரித்திரத்தையடைந்தும், பைத்தியம் பிடித்து பூமியில் திரிந்துகொண்டும், கஷ்டத்தினாலும் களைப்பினாலும் மரணத்தையடைந்து, வேதங்களில் சொல்லப்பட்ட பிரமதேவரால்;

18. வரியவே பாஞ்சால வம்சத்தில் வந்தா னென்றோ
தெரியவே யிச்சென் மத்தில் சேயிழை சாபம் நேர்ந்து
பரம்பரை செனனமே யின்றிப் பாரெலாம் வசைகள் கூற
உருமே யெடுத்தா னென்றோம் உத்தமி மேலுங் கேளே

18. பிரமலிபியுடன் எழுதப்பட்டுப் பாஞ்சலைவமிசம் என்ற கம்மாள ஜாதியில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார் என்று சொல்லுகின்றோம். ஆகையால் இந்த ஜன்மத்தில் ஸ்திரீகளின் சாபம் இவரை வந்தடைந்து, இவர் பரம்பரையான ஜாதியில் பிறக்காமல், பூமியில் எங்கும் இவரை இகழ்ச்சியாகவும் ஜாதி தோஷமுள்ளவராகவும் சொல்லும் படியாகவும் இவர் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

19. இன்னவன் துணைவர் தன்னை பியம்புவோ மிரு [மூன்றுகும்
உன்னித அவர் பலத்தை உரைக்கிறோ மிரண்டி [லேதான்

பன்னிய மாதுர் சேதி பகருவோம் சிவந்த மேனி
கன்னென மொழியு முள்ளாள் காதலி அல்ப புத்தி

19. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றி சொல்லுகின்றோம், இவருக்குச் சகோதரர்கள் ஆறு பேராகும். இவர்களுடைய பலாபலன்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவள் சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவளாவள். இவள் சக்கரையைப் போன்ற இனிப்பான வார்த்தைகளை யுடையவளாவாள். இவள் இழிவான தாழ்ந்த புத்தியை யுடையவளாவள்.

20. பரவச முடையாளாகும் பஞ்சுபோல் ரோம முள்ளாள்
வரனண்டை வாழ்வா ளாகும் மறுமொழி அதிகம்
[கூற்வள்
திறமையாய் அன்ன மீவள் சித்தினி சாதி யாவள்
மருமமு மில்லா நெஞ்சம் வரைகிறோ மிவள் முன்
[சென்மம்.

20. ஜாதகருடைய தாயார் பிறருடைய வசியத்திலிருப்பவளாவள். இவள் பஞ்சைப் போல மிருதுவான மயிரை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷனிடத்தில் இருந்து கொண்டு வாழ்பவளாவள். இவள் பதிலை அதிகமான வார்த்தைகளுடன் சொல்லுவாள். இவள் தன்னிடத்திற்கு வருபவர்களுக்கு நல்லபடியே சாப்பாட்டைப் போடுவாள். இவள் நால்வகைப் பெண்களில் சித்தினி ஜாதிப் பெண்ணைச் சேர்ந்தவளாவள். இவள் கள்ளம் கபடம், வஞ்சனை இவையில்லாத மனத்தை யுடையவளாவள். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—சித்தினி ஜாதிப் பெண் :—இந்தப் பெண் சங்கீத சாஸ்திரமும் சிற்ப சாஸ்திரமும் அறிந்தவள். இவள் மழமழப்பான அழகிய தேகத்தை யுடையவள். மானைப் போன்ற கண்களையும், தாமரையைப் போன்ற முகத்தையும், யானையைப் போன்ற கம்பீரமான நடையையும், மயிலைப் போன்ற குரலையும், அதிசயமான தொனியையும் உடையவள். வித்தையில் அதிக விருப்பமுடையவள். மகா கவிஞர்களுக்குப் பிரியமானவள். சாமுத்திரிகா லட்சணம் என்ற புத்தகத்தில் இரண்டாவது பாகத்தில் எழுபத்தோராவது பக்கம் பார்க்கவும்.

## ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மம்

21. மாதிரு முன்சென் மத்தை வரைகிறோம் சேர நாட்டில்
கோதிலா துளுவ வம்சம் குலத்தினில் உதித்துமே தான்

மேதினில் மதலை யின்றி வித்தகி வரனின் கூட
பூதல தலங்கள் செல்லப் புக்கினு ளிவளே யென்றோம்.

21. ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றோம். இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில் குற்றமில்லாத துளுவ ஜாதியில் பிறந்து, பிள்ளையில்லாமல் தன்னுடைய புருஷனுடன் பூமியி லுள்ள பல தெய்வீகத் தன்மையை யுடைய ஸ்தலங்களுக்குப் போக வாரம் பித்தாள் என்று சொல்லுகின்றோம்.

22. தென்திசை யாவும் சென்று சேதுவை ஸ்தானம் செய்து
நின்றனள் ஓர் மடத்தில் நிமலியும் வரனின் கூட
அன்ற நற்சமயந் தன்னில் அங்கொரு வேசி வந்து
சென்றனள் அவளைக் கண்டு செல்வனேது செய்தான்.

22. ஜாதகருடைய தாயார் தெற்கேயுள்ள எல்லா திவ்ய ஸ்தலங் களுக் கெல்லாம் போய்க் கடைசியாகச் சேது ஸ்தலத்திற்குப் போய் அவ்விடத்திலுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து விட்டுப் பிறகு தன்னு டைய புருஷனுடன் ஒரு மடத்திற்குப் வரவே, அவளைப் புருஷன் (தாயாரின் புருஷன்) பார்த்துவிட்டு இவர் என்ன செய்தார் என்பதைச் சொல்லுகின்றேன்.

23. வேசியி னுடனே தானும் வேடிக்கை யாகப் பேசி
சூதுக ளாடவே தான் சுந்திரன் யெத்த னித்தான்
மாதுவு வரனின் பேரில் வரிபோலே சீரியே தான்
தீதான கோப முற்ருள் தாசியு மேது சொன்னுள்.

23. இந்தப் புருஷன் இந்தத் தாசியுடன் வேடிக்கையாக வார்த்தை களாடிச் சூது மார்க்கமாக நடந்து கொள்ள நினைத்தார். இதைத் தாயார் அறிந்து தன்னுடைய புருஷன்மேல், கடலைப் போலவும் அக்கினியைப் போலவும் (பாம்பைப் போலவும்) பாய்ந்து கோபித்துக் கொண்டாள். இதன் மேல் இந்தத் தாசி என்ன சொன்னுள் என்பதைச் சொல்லுகின்றோம்.

24. இச்சென்மம் தன்னிலே தான் யிலகாது சுதனு மென்று
உச்சித மறு சென்மத்தில் உதாசீன மனேகர் சொல்ல
விச்சைகள் அனந்த மாக நாயகி படுவா யென்று
கச்சணி வேசி சொல்லிக் கடந்தனள் மடத்தை விட்டே.

24. தாயாரைப் பார்த்து "உனக்கு இந்த ஜன்மத்தில் பிள்ளை பிறக்காது. உன்னுடைய பின் ஜன்மத்தில் உன்மேல் அநேகம் பேர் தூஷணமாகச் சொல்லிக் கொள்ளவும், அனேகவிதமாக ஆசைகளை யுடை யவளாகவும் இருந்து கொண்டும் வாழக் கடவாய்" என்று ரவிக்கையை அணிந்து கொண்டிருந்த இந்தத் தாசியானவள் சபித்து விட்டு இந்த மடத் தை விட்டுப் போய் விட்டாள்.

25. ஆகையால் அந்தச் சாபம் அணுகிற்று அச்சென் மத்தில்
தோகையும் வரனின் கூட திரும்பினள் இல்லத் துக்கு
பாகமாய் மரண மட்டும் பாலர்கள் யில்லா ளாகி
மோகமாய் மரண மாகி முயன்றவ ளிவளே யம்மா.

25. ஆகையால் முன் ஜன்மத்திய சாபம் அந்த ஜன்மத்திலேயே அவளை வந்தடைந்தது. அவள் (தாயார்) தன்னுடைய புருஷனுடன் தன் வீட்டிற்குத் திரும்பிப் போய்த் தன்னுடைய மரணகாலம் வரையிலும் தனக்குப் பிள்ளையில்லாமல் இருந்து மரணமாகி இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ருேம்.

26. ஆலயத்தில் பெண் சாபம் அணுகிற்று யிச் செனனம்
வேல் விழியைப் பற்றி மேவினது கோல முடன்
எவ்வாறு சொன் ஞளோ அவ்வாறு நேறு மம்மா
ஒவ்வாது யில்லங்க ளூர்ந்து ஓதுவோம் மேலுங் கேளே!

26. ஆலயத்தின் மடத்தில் கொடுக்கப்பட்ட சாபம் இந்த ஜன்மத்தில் ஜாதகரின் தாயாரை வந்தடைந்தது. அந்தத் தாசிப் பெண் எவ்விதமாகச் சொல்லிச் சாபங் கொடுத்தாளோ அவ்விதமாகவே இந்த ஜன்மத்தில் தாயாருக்கு நடைபெறும், பார்வதியம்மையாரே! வேறுவிதமாக நடக்காது. இன்னும் அதிகமாகச் சொல்லுகின்ருேம், கேட்பீராக.

27. இவ்வித குணத்தா ளுக்கு யிவனுமே உதித் தாலே
ஒவ்வாது யென்று சொன்ஞேம் உரைக்கிருேம்
[மணத்தின் காலம்
நவ்விய யிருபான் ரெண்டில் நாயகி வருவா ளாகும்
திவ்விய மாது கீழ்பால் செனித்தவள் மணமே
[கொள்வள்.

27. இவ்விதமான குணங்களை யுடைய தாயாருக்கு ஜாதகர் வந்து பிறந்ததால் இவருக்குச் சில விஷயங்கள் நடைபெறப் பொருத்தம் அல்லது அமைப்பில்லை என்று சொன்ஞேம். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவருக்கு இருபத்திரண்டாவது† வயதில் மனைவி வந்து நேரிடுவாள். இந்த மனைவி கிழக்குத் திக்கில் பிறந்த வளாவள்.

*குறிப்பு:—விவாக காலம்:—ஜாதகருக்குக் குருதசையில் விவாகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. குரு நான்கிற்கும் ஏழிற்குமுடையவராகி, ஒன்பதாவது ஸ்தானத்தையும், இரண்டுக்கும் ஒன்பதிற்குடையவராகிய களத்திர காரகனுகிய சுக்கிரனையும் பார்த்திருக்கின்ருர். இவர் மேலும் போககாரகராகிய இராகுவுடன் கூடி யிருக்கின்ருர். ஆகையால் குரு தசையில் விவாகம்

சொல்லப்பட்டிருக்கின்றது. ஜாதக பாரி ஜாதகம் பதினுன்கா வது அத்தியாயம் இருபத் தொன்பதாவது சுலோகத்தைப் பார்க்கவும்.

## ஜாதகருடைய மனைவியின் குணுதிசயங்கள்

28. அவளுட குணத்தைக் கேளாய் அழகுளாள் சிவந்த [மேனி
தவசிகட் கன்பு பூண்பள் தயாளமாம் குணத்தா ளாகும்
வியமில்லாள் வறுமை யில்லாள் வித்தகி யதிட்ட சாலி
நயமுள குணத்த ளாகும் நாட்டுவோ மவள்முன் [சென்மம்.

28. ஜாதகரின் மனைவியினுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ரேம். கேட்பீராக. இவள் அழகுள்ளவாளவள், சிவப்பு நிறமான தேகத்தை யுடையவள். இவள் தவங்களைச் செய்கின்ற முனிவர்களிடத்திலும் பெரியோரிடத்திலும் விசுவாசமுள்ளவளாக விருப்பாள். இவள் பிரத்தியாருக்குக் கொடுக்குங் குணத்தை யுடையவளாவள். இவள் சொத்தைச் செலவு செய்துவிட மாட்டாள். நஷ்டங்களையும் தரித்திரத்தையும் அநுபவிக்க மாட்டாள். இவள் அதிர்ஷ்டசாலியாக விருப்பாள். இவள் நல்ல குணத்தை யுடையவளாவள். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம்.

## ஜாதகரின் மனைவியின் முன்ஜன்மம்

29. கச்சிக்குத் தென்பா லாகக் கனமுள பேரூர் தன்னில்
அச்சுதன் மதத்தா ளாக அவள்பிரம்ம குலமு தித்து
உச்சித மதலை யின்றி உத்தமி வாழு நாளில்
துர்ச்சன குணத்தா னின்னேனே கினு னந்த ஊரில்.

29. காஞ்சீபுரத்திற்குத் தெற்கேயுள்ள ஒரு பெரிய கிராமத்தில் ஜாதகருடைய மனைவி பிராமணருடைய ஜாதியில் மகாவிஷ்ணுவின் மதத்தை அநுசரிப்பவளாக (வைஷ்ணவ பிராமண ஜாதியில்) முன் ஜன்மத்திற் பிறந்து, பிள்ளையில்லாமல் வாழ்கின்ற காலத்தில் இந்த ஜாதகர் அந்தக் கிராமத்திற்குப் போனுர்.

30. மந்திர வேடிக்கை செய்ய மங்கையும் கண்டு மேதான்
சங்கையாய் மோகம் கொண்டாள் தன்வர னதனைக் [கண்டு
முந்திய கோபம் கொண்டான் முனிந்ததை யிவனும் [கேட்டு
அந்ததோ ரிடத்தை விட்டு அப்புறம் செல்ல லுற்ருன்.

30. ஜாதகர் மாந்திரிக வேடிக்கைகளைச் செய்து காட்டவே, இவற்றைப் பார்த்து மெச்சிய இந்த மனைவி, மாந்திரிகன் பேரில் மையல் என்ற காம ஆசையை யுடையவளானாள். இதனைத் தெரிந்த கொண்ட இவளுடைய புருஷன் கோபித்துக் கொண்டான். இதை மாந்திரவாதி தெரிந்து கொண்டு அந்த ஊரை விட்டு வெளியூருக்குப் போய் விட்டான்.

31. சென்றதோர் சேதி கேட்டுச் செல்வியும் சலத்தில்
[வீழ்ந்து
அந்தநாள் மரண மானாள் அதன்பின் பிசாசாய்த்
[தோன்றி
நின்றனள் சிலநாள் சென்று நேமியில் மரண மாகி
உந்தியில் உதித்தோன் தன்னால் உத்தமி வரையப் பட்டு;

31. இந்தச் சங்கதியைக் கேள்விப்பட்ட இந்த மனைவி ஜலத்தில் வீழ்ந்து தன்னுடைய உயிரை அதே தினத்தில் மாய்த்துக் கொண்டாள். பிறகு இவள் பிசாசினியாக மாறிச் சில காலம் பூமியில் இருந்து, பிறகு மகாவிஷ்ணுவின் தொப்புளிலிருந்து பிறந்த பிரம தேவரால் இவள் பிரமலிபியுடன் எழுதப்பட்டு;

## ஜாதகருடைய புத்திரபாவம்

32, வந்தவள் யிவளே யென்றோம் வகுக்கிறோம் மதலை
[தானும்
கந்தனைப் போலே ஒன்று காளையும் பெண்பா லல்வாறு
சந்ததம் விருத்தி யாகும் செயமுனி சொல்லுகின்றார்
நேர்ந்திடு மதலை யென்றோம் நிமலியும் கேழ்க்க லுற்றாள்.

32. ஜாதகருடைய மனைவி இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருடைய சந்ததிகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். முருகக் கடவுளைப் போல ஓர் ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்து வளருவார்கள் என்றார். உடனே ஜய முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஆண் குழந்தை சீக்கிரத்தில் இறந்து விடும் என்று ஜயமுனிவர் சொன்னார். இதன் மேல் பார்வதியம்மையார் கேட்கவாரம்பித்தார்.

33. ஏதுகா ரணத்தி னாலே யிலகாது மதலை தானும்
மாதவள் சொல்லு மென்ன மரித்திவர் சொல்லு கின்றார்
வேதியன் அஞ்சில் நீசம் வாசுகி கூடி நிற்கத்
தீதுகள் சுதர்க்கு என்றோம் தீங்கதைச் சொல்லு
[மென்றாள்.

33. எந்தக் காரணத்தினல் பிள்ளை விளங்காது என்று சொன்னீர்? அதைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்கவே, ஜயமுனிவர் மறுபடியுஞ் சொல்லுகின்ருர். வேதியன் என்ற குரு (புத்திர ஸ்தான மாகிய) ஐந்தாவது வீட்டில் இருப்பதாலும், இவருடன் வாசுகி என்ற பாம்பா கிய ராகு கூடி இருப்பதாலும் பிள்ளைக்குக் கெடுதிகள் நேரிடும் என்று சொன்னேம் என்ருர் ஜய முனிவர். இதன் மேல் கெடுதிகளைச் சொல் லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

*குறிப்பு :—ஐந்தில் குருவிருக்கும் புத்திர தோஷ விஷயமாகப் பலதீபிகை பதினைந்தாவது அத்தியாயம் இருபத்தாருவது சுலோகத்தைப் பார்க்கவும். ஐந்தில் குரு ராகுவிருக்கும் புத்திர தோஷ விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் ஐந்நூற்றுத் தொண்ணூருவது (590—ஆவது) பாடலையும் பார்க்கவும்.

34. முன் சென்மம் மிலேச்சனுக முயன்றுமே நாகந் தன்னை
பின்முன் போகாமல் செய்து போட்டுப் பின்னடித்து [விட்டான்
அந்ததோர் தோஷம் தானும் அணுகிற்று இச் [சென் மத்தில்
மைந்தர்க்குத் தோஷ மாச்சு வரைகிருேம் சாந்தி [தானே:

34. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஒரு மிலேச்சராகப் பிறந்து, ஒரு நாகப்பாம்பை முன்னும் பின்னும் போக விடாமல் தகுந்த முயற்சிகளைச் செய்து பிறகு அதை அடித்துக் கொன்று விட்டார். இந்தத் தோஷம் இந்த ஜன்மத்தில் ஜாதகரை வந்தடைந்தது. ஆகையால் பிள்ளை களுக்குத் தோஷம் ஏற்பட்டுவிட்டது. இதற்கு ஒரு சாந்தியைச் சொல்லு கின்ருேம்.

35. மனைவியும் தானு மாக வருணைக்குச் சென்று மேதான்
பணிஒன்று (ர)சிதம் தன்னல் பாலகன் செய்து மேதான்
அனையவே யடக்காய் கெந்தம் ஆதிபலம் தன்னைச் [சேர்த்து
கனமுடன் மனையோர்க் கீந்து காளையு முள்ளூர் மீண்டு;

35. ஜாதகர் தன்னுடைய மனைவியுடன் அருணை என்ற அருணுசல மாகிய திருவண்ணமலைக்குப் போய் வெள்ளியினல் ஒரு நாகப்பாம்பு பிரதி மையைச் செய்து, கடுகு வாசனை திரவியம் ஜாதிக்காய் ஆகிய இவற்றை அத்துடன் சேர்த்து வைத்துக் குடும்பஸ்தர்களுக்குக் கொடுத்துவிட்டு, பிறகு தன் கிராமத்திற்குத் திரும்பிப் போய் ;

36. சஷ்டியின் நோன்பு கொள்ளத் தரித்திட மதலை தீர்க்கம்
கஷ்டமாய்ச் செய்யா னாகில் காளைகள் விருத்தி தோஷம்
இஷ்டமாய்த் தாரம் ஒன்றே யியம்புவோ மிவனுக்
[கேதான்
துஷ்டரை அடக்கு மாதே சொன்ன சொல் தப்பா
[தென்றோம்.

36. சஷ்டி விரதத்தை ஏற்றுக் கொண்டு அதை அநுசரித்து வந்தால் பிள்ளை பிறந்தால் அது பூர்ணாயுளையுடையதாக விருக்கும். இந்தச் சாந்தி கஷ்டமான தென்று நினைத்து இதைச் செய்யாவிட்டால் பிள்ளைகளுக்குத் தோஷ முண்டாகும். ஜாதகருக்கு ஒரே ஒரு மனைவி தான் என்று சொல்லு கின்றோம். கெட்டவரை அடக்கியாளுகின்ற பார்வதியம்மையாரே! நாங்கள் சொல்லுகின்ற பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும் என்று சொல்லு கின்றோம்.

## ஜாதகருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

37. சாதகன் மரண காலம் சாற்றுவோ மன்பா னாலில்
வந்ததோர் கும்ப மாதம் வளர்பிறை துதியை தன்னில்
இந்தவன் உடலம் வாடும் யியம்புவோ மறுசென் மத்தை
முந்திய காசி பக்கல் முயற்சியாய்த் துவாரை தன்னில்;

57. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஐம்பத்தினான்காவது* வயதில் கும்பமாதம் என்ற மாசி மாதத்தில் வளர்பிறையில் துவிதீயை திதியில் ஜாதகர் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய் விடும். இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் மேன்மையான காசிக்குப் பக்கத்திலுள்ள துவாரகா புரி பட்டணத்தில்;

*குறிப்பு:—ஜாதகர் மாரகம்:—ஜாதகருக்கு ஐம்பத்துனான்காவது வயதில் மாசி மாதத்தில் சனி தசையில் குரு புக்தி நடக்கின்றது. கன்னியாலக்கினத்திற்குச் சந்திரனும் குருவும் ஜாதக சந்திரிகை ஐம்பத்தினான்காவது சுலோகப் பிரகாரம் மாரகர்களாகின்றார் இந்தச் சந்திரனுடன் சம்பந்தப்பட்ட சனி ஜாதகர் சந்திரிகை இருபத்தேழாவது சுலோகப் பிரகாரம் அதிக மாரக ராகின்றார். மேலும் கீரனூர் நடராஜருடைய ஜாதகாலங்காரம் தொள்ளாயிரத்து எழுபத்தைந்தாவது (975-ஆவது) பாடல் பிரகாரமும், குமார சாமியம் மகாதசைப் படலம் நான்காவது பாடல் பிரகாரமும் நான்காவது தசையான சனி தசை மாரகமாகும். ஆறாவது வீட்டுக்கார ராகின்றபடியால் குமார சாமியம் இந்தப் பாடல் பிரகாரம் சனி மாரகாகின்றார். ஆகையால் சனி தசையில் குரு புக்தியில் மாரகஞ் சொல்லப் பட்டிருக்கின்றது.

38. மறைகுலம் தன்னி லுதிப்பான் மங்கையும் கேழ்க்க
[லுந்ருள்
திறமையா யிச் சென்மத்தில் செய்த புண்ணியங்க
[ளென்ன
உறன்முறை யில்லா தாகி ஊரெலாம் பொய்ய ஞகி
வருவதால் மறு சென்மத்தில் மறைகுல முதிப்பா
[னென்றீர்.

38. பிராமணர் ஜாதியில் பின் ஜன்மத்தில் ஜாதகர் பிறப்பார். இதற்கு மேல் பார்வதியம்மையார் கேட்கவாரம்பித்தார். இந்த ஜன்மத்தில் ஜாதகர் எவ்விதமான புண்ணியங்களைச் செய்தார்? இவருக்குப் பந்துக்கள் இல் லாமல் இவர் எவ்விடத்திலும் பொய்யஞக விருந்தும் மறு ஜன்மத்தில் பிராமணர் குலத்திற் போய்ப் பிறப்பார் என்று சொன்னீரே!

39. சேதியைச் சொல்லு மென்ன செப்புவார் முனிவர்
[தானும்
நீதியாய் யிச் சென்மத்தில் நிற்மல மன முண்டாகி
சூது நெஞ்சில்லா ஞகிச் செய்குவான் சிலது புண்ணியம்
மேதினில் யிது வல்லாமல் வெள்ளியும் புந்தி சேர்ந்து.

39. இதற்குக் காரணத்தைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்கவே, முனிவர் பதில் சொல்லுகின்ருர். ஜாதகர் இந்த ஜன்மத்தில் குற்றமில்லாத மனத்தை யுடையவராகிக் கள்ளம், கபடு, வஞ்சனை இவற்றை யுடைய மனத்தை யுடையவராகி விராமல் சில புண்ணிய காரியங் களைச் செய்ததாலும், இவையன்றி, வெள்ளி என்ற சுக்கிரனும், புந்தி என்ற புதனும் கூடி;

## ஜாதகருடைய யோகபாவம்

40. இருப்பதால் மறையோன் சென்ம மியம்பினேம் கேளு
[மம்மா
சிறப்புள யிவனின் யோகம் செப்புவோம் பாக்கிய வானும்
தரைப் பெருமன்ன ரிஷ்டன் சகல பாக்கியமு முள்ளான்
இருப்பிடம் சித்திரம் செய்வன் யிவன்பந்து மெச்ச
[வாழ்வன்.

40. இருப்பதாலும் பிராமணர் குலத்திற் பிறப்பார் என்று சொன்னேம் பார்வதியம்மையே! கேட்பீராக. ஜாதகருடைய யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவர் யோக முடையவராவர். எல்லா சம்பத்துக்களையு முடையவர். தான் வசிப்பதற்காக இவர் ஓர் அழகான வீட்டைக் கட்டுவார். அல்லது தான் வசிக்கின்ற வீட்டைச் சித்திரங்களா

டங்கிய ஒரு அழகான வீடாக மாற்றிக் கட்டுவார். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னை மதிக்கக் கூடிய அந்தஸ்திலிருந்து வாழ்வார்.

41. பலவிதத் தொழிலும் தேர்வன் பாருக ளதிகம் சேர்ப்பன்
நிலமையாய் ஆலயங்கள் நிற் மிப்பான் அன்ன மீவன்
சீலமில்லான் தீர்த்தம் தோய்வன் செனங்களுக் குதவி
[செய்வன்
தலமதில் திருவு முள்ளான் சகஸ்திர பொன்னே
[யுள்ளான்.

41. ஜாதகர் பலவிதமான தொழிற்களில் வல்லவராவர். இவர் பயிரிடும் பூமிகளை அதிகமாகச் சேர்த்து வைப்பார். இவர் தேவாலயங்களை நிர்மாணஞ் செய்து கட்டி வைப்பார். பிறருக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் சுத்தமானவரல்லர். தெய்வீக ஸ்தலங்களிலுள்ள நீர் நிலைகளில் ஸ்நானஞ் செய்வார். இவர் ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இவர் தன்னுடைய வீட்டில் செல்வமுடையவராவர், லக்ஷ்மி வாசத்தையுடையவர். இவர் ஆயிரம் பொன்னை உடையவராவர்.

42. எந்தக்காலத்தில் யிப்பலன் சென்னீர் யியம்புவீர்
[யென்றுமே கேழ்க்க
இந்தச் சாதகர்க்கு இருபது ஆண்டுக் கதன்மேலே
[வாய்க்கும்
அந்தக் காலத்தில் யார்தசை நடக்கு மறைகுவா யம்மன்
[கேழ்க்க
மந்திரி தசையில் வந்திடு யோகம் மரணமாம்
[வரைக்குமே நடக்கும்.

42. எந்தக் காலத்தில் இவ்விதமான பலன்கள் நடக்கும் என்று சொன்னீர். அதைச் சொல்லுவீரென்று கேட்கவே, இந்த ஜாதகருக்கு இருபது வயதிற்கு மேலே யோகம் வரும் என்ருர் முனிவர். அந்தக் காலத்தில் யாருடைய தசை நடக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று முனிவரைப் பார்வதியம்மையார் கேட்கவே, மந்திரி என்ற குருவினுடைய தசைக் காலத்தில் யோகம் வந்து ஆரம்பித்து இவருடைய மரண காலம் வரையிலும் நடக்கும் என்று முனிவர் பதில் சொன்ஞர்.

43. இவன் செனன காலமதில் சேயிருப்பு திங்கள்
இருபத் தொன்று நாளதுவு மீருறு மாகும்
அவனியிலே ரோகம்வரும் பிராண பயமாம்
அதுநீங்கிப் பணிதசையில் அதுமிகுத்து பயமாம்
நவமதனி லலைச்ச லுண்டு வனவாச மாகும்
நாடெலாம் நிந்தைவரும் நற்சுகமே யின்றிப்

பவமாதுர் வேறிடத்தில் புரிவன் மனத்துக்கம்
பலபல துன்பங்களுண்டு பணி பயமுமாமே.

43. ஜாதகர் பிறந்த காலத்தில் சேய் என்ற அங்காரகனுடைய தசையில் இருப்பு நின்ற வருஷம் ஒன்றும் மாதங்கள் ஒன்பதும் நாட்கள் பன்னிரண்டும் ஆகும். இக்காலத்தில் ஜாதகருக்கு வியாதி வந்து சம்பவிக்கும். உயிருக்கு ஆபத்தாகத் தோன்றும். இந்த நோய் நீங்கி விடும். ஆனால் இது மறுபடியும் பணி என்ற ராகு தசையில் வந்து, அதிகமான பயத்தையும் ஆபத்தையும் உண்டு பண்ணும். இவருக்குப் பூமியில் அலைச்சல்களும் திரிச்சல்களும் ஏற்படும். வனவாசத்தை யடைவார். இவருக்கு எங்குப் பார்த்தாலும் நிந்தைகளும் அபவாதங்களும் ஏற்படும். இவருக்கு நல்ல சுகமென்பதே கிடையாது. இவர் வேறே ஒரு ஸ்திரீயை அடைவார். இவருக்கு மனத்துக்கம் ஏற்படும். இவருக்குப் பற்பல கஷ்டங்கள் உண்டாகும். பாம்பினால் பயமும் ஏற்படும்.

44. மந்திரியின்தசை காலம் வளவர் நிவர்த்தி மனையாளு
வாய்த்திடுமே வளர்ந்திடு யோகங்கள்
எந்த காரியம் பலிக்கும் யாவரு முறவாவர்
இன்பங்க ளதிக முண்டு யெழில்தீர்த்தம் தோய்வன்
அந்தமுறு மாலடிமை பசுச்சேர்க்கை மதலை
அணுகிடும் சித்திர வீடுமமைப்பன் நிதி சேர்ப்பன்
சொந்தப்பூஷணம் சேரும் பூமிமிக வாய்க்கும்
தொல்லுலகோர் மெச்சவே சுதனுமே வாழ்வன்.

44. மந்திரி என்ற குருவினுடைய தசா காலத்தில் வளவர் நிவர்த்தியாகி விடுவார். இவருக்கு மனைவி வந்து சம்பவிப்பாள். யோகங்கள் ஏற்பட்டு விருத்தியாகும். இவர் எவ்விதமான வேலையைச் செய்த போதிலும் அது நல்ல பலனையே கொடுக்கும். இவருக்கு எல்லோரும் சினேகிதர்களாவார்கள். இவருக்குச் சுகங்கள் அதிகப்படும். இவர் நல்ல தெய்வீக சம்மந்தமான நீர் நிலைகளில் ஸ்நானஞ் செய்வார். இவருக்கு வேலையாட்கள் ஏற்படுவார்கள். பசுக்கள் வந்து சேரும். குழந்தை பிறக்கும். இவர் அழகான சித்திரங்களடங்கிய வீட்டைக் கட்டுவார். தனத்தைச் சேர்த்து வைப்பார். நிலங்களை அதிகமாகச் சேர்த்து வைப்பார், இந்தப் பழைய உலகத்திலுள்ளவர்கள் இவரைப் புகழும்படியாக நல்ல அந்தஸ்திலிருந்து கொண்டு இவர் வாழ்வார்.

45. பராசரும் கேழ்க்க லுற்றுர் பணியுடன் குருவும் கூடி
விரைவுடன் நீச மாகி மேவியே யிருப்ப தாலே
அறைந்திட்டீர் சுபபலத்தை ஆராய்ந்து சொல்லு [மென்னத்
தெரிந்ததோர் முனிவர் சொல்வார் சமயத்தில் பதினைந் [தாகி.

45. இவ்விதமாக முனிவர் சொல்லிவரவே, பராசர முனிவர் தடுத்துக் கேட்கின்றார். பணி என்ற ராகுவுடன் குருவும் கூடி நீசமாக விருப்பதால் எப்படிச் சுபகரமான பலாபலன்களைச் சொன்னீர்? மறுபடியும் ஆராய்ச்சி செய்து பலாபலன்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, விஷயங்களை அறிந்த முனிவர் பதில் சொல்லுகின்றார். குருவானவர் (இருபத்தேழு சமயங்களில்) பதினைந்தாவது சமயத்திலிருந்து கொண்டும் சாடி என்ற கும்ப நவாம்சத்திலிருப்பதாலும்;

46. நர மண்டலத்தில் நின்று நவாம்சம் சாடி யாகக்
குரவிலா யிருப்ப தாலே கூறினேம் சுப பலத்தை
நிறைந்திரு பணியும் செய்வன் நிகர் வேலோன் பத்தி [பூண்பான்
அறுமுகன் தன்னையீன்ற அம்பிகை யாளே கேளாய்.

46. நர மண்டல சமயத்திலிருந்து கொண்டும் நவாம்சச் சக்கரத்தில் சாடி என்ற கும்ப நவாம்சத்திலிருந்து கொண்டும் யாதொரு குறைவையும் அடையாமலிருப்பதால் சுபகரமான பலாபலன்களைச் சொன்னேம். இவர் அழகான ஆபரணங்களை அதிகமாகச் செய்வார். இவர் முருகக் கடவுளின்மேல் அன்புடையவராவர். ஆறுமுகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

47. காரியின் தசையிலே தான் கனத்திடும் யோகம் தானும்
பாரியோ ரிஷ்ட மார்கும் பாக்கிய மதிகம் நேறும்
தேறிய வழியில் செல்வன் சென்றிடம் பெருமை காணும்
ஆறிய முருகனுக்கு அலன் ஊழி யதிகம் செய்வன்.

47. காரி என்ற சனியினுடைய தசையில் யோகம் அதிகப்படும். பூமியிலுள்ளவர்கள் ஜாதகருக்குச் சினேகிதர்களாக விருப்பார்கள். செல்வம் அதிகரிக்கும். இவர் நல்ல மார்க்கத்திலிருந்து வாழ்வார். இவருக்குத் தான் போகின்ற விடங்களிலெல்லாம் புகழும் கீர்த்தியுமுண்டு. இவர் முருகக் கடவுளுக்கு அதிகமான தொண்டுகளையும் வேலைகளையுஞ் செய்வார்.

48. அந்திய சனியிலே தான் அவ னுடலங்கள் வாடும்
இந்தவாறு முனிவர் கூற யீஸ்வரி கேழ்க்க லுற்றாள்
சந்ததம் தந்தை மாதா சுரர்கிரக காலம் தன்னை
விந்தையாய்ச் சொல்லு மென்ன விளம்புவோ [மிரண்டிலே தான்.

48. சனி தசையில் கடைசி காலத்தில் ஜாதகருடைய தேகம் அழிந்து போய் விடும். இவ்விதமாக முனிவர் சொல்லவே, பார்வதியம்மையார் கேட்கவாரம்பித்தார். தகப்பனார் தாயார் இவர்களுடைய மரண

காலங்களைப் பற்றிச் சொல்லுவீரென்று ஆச்சரியப்படும்படியாய்க் கேட்க, இவற்றை இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றோம் என்று முனிவர் பதில் சொன்னார்.

49. திருமகள் குல தெய்வங்கள் செப்புவீ ரென்று கேழ்க்க
அறுமுகன் அடிமை யென்றோம் அதுவலால் காளி [தெய்வம்
இருவித தெய்வம் நேசம் யியம்பினோம் சித்தி யாகும்
பெரு வயிறோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

49. ஜாதகருடைய குல தெய்வங்கள் எவை என்பதைப் பற்றிச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்க, இவர் முருகக் கடவுளின் அடியாராவர், இதுவுமன்றி இவருக்குக் காளியம்மனும் குல தெய்வமாகும். இவருக்கு இவ்விதமான இரண்டு குல தெய்வங்களும் அநுகூலமாக விருப்பார்கள். இவர்களால் இவருக்குக் காரியசித்தி ஏற்படும். பெரிய வயிற்றை யுடைய விநாயக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

50. அதற்கு நேர்சாட்சி கேளாய் அந்தரம் பாப்பான் போலே
மாதமோர் நாளிலே தான் மவன் கன வுண்டாகும்
மேதினி லிரண்டாம் பாகம் விபரமாய்ச் சொல்லு [கின்றோம்
சீதள மலர் முகத்தாய்ச் செப்பின மொழி குன்றாது.

50. இதற்கு நேரிடையான சாட்சியைச் சொல்லுகின்றோம். ஜாதகர் ஒவ்வொரு மாதத்திலும் ஒரு நாளில் ஆகாயத்தையும் கடவுளையும் பார்த்துத் தரிசனஞ் செய்வது போலக் கனவு காண்பார். இரண்டாவது பாகத்தை விவரமாகப் பின்னால் சொல்லுகின்றோம். தாமரைப் பூவைப் போன்ற அழகிய முகத்தை யுடைய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலா பலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.
—C. G. R.

# ஜாதகம் 10

## ஜனனகால கிரக நிலை

1. சந்திரன் [1]பானு [2]மானில் [3]சல்லியன் குருவும் [4]சாடி
[5]மந்திரக் கயிறு [6]நந்தி [7]மங்கலன் கேது [8]தேளில்
[9]புந்தியும் தனுசு வாகப் [10]பங்குமே [11]மாதைப் புக்க
இந்தவாறு கோளு நின்று லக்னம் கன்னி யாக.

1. கன்னி ஜன்மலக்கினமாகிச் சந்திரனும் சூரியனும் மகரத்திலும், சுக்கிரனும் குருவும் கும்பத்திலும், ராகு ரிஷபத்திலும், அங்காரகனும் கேதுவும் விருச்சிகத்திலும், புதன் தனுசிலும், சனி கன்னியிலும் இருந்து இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்தால்;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | |
| குரு சுக்கிரன் | இராசி சக்கரம் | | |
| சூரியன் சந்திரன் | | | |
| புதன் | அங்காரகன் கேது | | லக்கினம் சனி |

உத்திராடம் 3-ஆம் பாதம். சூரிய தசை இ௵ 3—00—00.

குறிப்பு:—இந்த ராசிசக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:— ரிஷபத்தில் சூரியனும், மிதுனத்திற் குருவும், கடகத்திற் கேதுவும், கன்னியில் அங்காரகனும், விருச்சிகத்திற் புதனும், மகரத்தில் ராகுவும் கும்பத்திற் சந்திரனும், மீனத்திற் சுக்கிரனும் சனியும் ஆகும்.

---

1. சூரியன்.
2. மகரம்.
3. சுக்கிரன்.
4. கும்பம்.
5. ராகு.
6. ரிஷபம்.
7. அங்காரகன்.
8. விருச்சிகம்.
9. புதன்.
10. சனி.
11. கன்னி.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பலனதைப் புகலு மென்று பார்வதி கேழ்க்கும் போது
நலமுள வதிஷ்டர் சொல்வார் நாயகன் செனன மாகும்
தலமது வடதென் வீதி சனிவாடை பேரூ ராம்
குலைந்திடு மில்ல மாகும் கூறுவோம் பேரூ ராகுமே.

2. பலாபலன்களைச் சொல்வீரென்று பார்வதியம்மையார் கேட்கும் போது, வசிஷ்ட மகரிஷி சொல்லுகின்றார். ஆண் குழந்தை பிறக்கும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்கு வாடையிலிருக்கும். பிறந்த கிராமம் ஒரு பெரிய கிராமமாகும். வீடு கெட்டுப் போன, இலமான வீடாக விருக்கும். ஊர் பெரிய ஊராகும் என்று சொல்லுகின்றோம்.

3. பலசாதி அவ்வூர் வாசம் பகருவோம் தென்பா லாறு
தலைவனும் யெட்டாம் சென்மம் செனிப்பனும் வேளான் [வம்சம்
நலமுள குடும்பச் சேதி நவிலுவோம் தாயே யாங்கள்
மலைவரை மகளே தந்தை வர்க்கமதைப் புகலக் [கேண்மோ.

3. இந்தக் கிராமத்தில் அநேக ஜாதியைச் சார்ந்த ஜனங்கள் வாசஞ் செய்வார்கள். தெற்குத் திக்கில் ஓர் ஆறு ஓடும். ஜாதகர் எட்டாவது குழந்தையாக வேளாளர் குலத்திற் பிறப்பார். குடும்ப விஷயங்களைப் பற்றி நாங்கள் சொல்லுகின்றோம். பார்வதியம்மையாரே! ஜாதகருடைய தகப்பனாரின் வம்சத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பர்வதராஜன் புத்திரியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்கள்

4. கல்விமான் யூகையாளன் கந்தன்தன் னாமம் கொள்வான்
இல்லையென் றுரைக்க மாட்டான் யீகைவான் யிடர் [செய்யா தான்
எல்லைமேல் திரிவா னாகும் யேவலாள் போலே நின்று
வல்லவன் வாழ்வா னாகு வஞ்சனை மன மில்லாதான்.

4. ஜாதகருடையத் தகப்பனார் வாசித்தவராவர். பகுத்தறியும், நுட்ப மான புத்தியை யுடையவர், முருகருடைய பெயரை யுடையவராவர். இவர் பிறருக்கு இல்லை என்று சொல்ல மாட்டார். பிறருக்குக் கொடுக்கின்ற தயாளமான குணத்தை யுடையவராவர். பிறருக்குக் கெடுதிகளைச் செய்ய மாட்டார். இவர் ஏவற்காரரைப் போல பூமியில் திரிந்து கொண்டே யிருப்பார். இவர் நல்லபடியே யிருந்து வாழ்பவராவர். கபடமான மனத்தை யுடையவரல்ல.

5. தந்தையின் ஆஸ்தி தன்னைத் தானவன் ஞஸ்தி
[செய்வன்
சந்தத முடைய ஞகும் சிவந்தமெய் உணச்சல் தேகி
வந்தவர்க் கன்ன மீவன் வள்ளல் பூசை பூண்பன்
சிந்தையு நல்ல தாகும் சிலசில தலங்கள் செல்வன்.

5. ஜாதகருடைய தகப்பனர் தன் பிதுரார்ஜித சொத்துக்களை நாசஞ் செய்து விடுவார். இவர் எப்பொழுதும் கேழ்விகளைக் கேட்டுக் கொண்டேயிருப்பார். அஃதாவது சந்தேக முடையவராக விருப்பார். இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவர். மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் பிறருக்குக் கொடுப்பவராவர். பூஜைகளைச் செய்பவராவர். இவருடைய மனம் நல்ல மனமாகும். இவர் சில தெய்வீகமான ஸ்தங்களுக்குப் போவார்.

6. சில்லரைகள் திர்ப்பா ஞகும் தீர மில்லாத நெஞ்சம்
விலைமாதர் மோகங் கொள்வன் வீடிலான் தரணி
[யில்லான்
குலவிய துணைஆண் ரெண்டு கோதையர் அவ்வா
[றென்ரேும்
நிலையாது மற்ற தெல்லாம் நுவலுவோ மிவன்முன்
[சென்மம்.

6. ஜாதகருடைய தகப்பனர் பணத்தைச் செலவு செய்பவராவர், இவர் தைரியமில்லாத மனத்தை யுடையவர். இவர் தாசிகளின் பேரில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவருக்கும் வீடு கிடையாது. நிலங்களும் கிடையாது. இவருக்கு இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளுமுண்டு. மற்ற சகோதரர்களெல்லாம் சீக்கிரம் இறந்து போய் விடுவார். இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றி சொல்லுகின்ரேம்.

## தகப்பனருடைய முன்ஜன்மம்

7. முன்சென்மம் காஞ்சி தன்னில் முதித்தனன் சேணியச்
[சேயாய்
பொன் பொருள் உள்ளாஞகிப் புதல்வனும் வாழு
[நாளில்
தன்னுடை நேச னுக்குச் சதி செய்தான் தனமதில்
அன்னவன் மனம் வாடி அறைந்த சாபம் கேண்மோ.

7. ஜாதகருடைய தகப்பனர் தன்னுடைய முன் ஜன்மத்தில் காஞ்சி புரத்தில் சேணியர் குலத்தில் ஆணுகப் பிறந்தார். இவர் தனமும் சொத்

துக்களும் உடையவராகி வாழுகின்ற காலத்தில் தன்னுடைய சினேகித னுக்குப் பணம் விஷயத்தில் வஞ்சனையும் மோசமுஞ் செய்தார். இந்தச் சினேகிதர் அதனால் தன்னுடைய மனம் நொந்து கொடுத்த சாபத்தைக் கேட்பீராக.

8. மற்றொரு சென்மம் தன்னில் வளவின்றி பவுன்சுமின்றி
உற்றோர்கள் மதிப் பில்லாமல் உலகினில் வாழ்வா [யென்ன
பற்றிற்று அந்தக் சாபம் பட்சி வாழ்யில்லம் வாசம்
வித்தகன் அதைக் கிலைத்தான் மேவிற்று அதுஓர் [தோஷம்.

8. நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் விளைகின்ற நிலங்களும் ஐசுவரிய முமில்லாமலும் பந்துக்களுடைய மதிப்பு இல்லாமலும் பூமியில் வாழக்கட வாய் என்று சொன்னார். இந்தச் சாபம் ஜாதகருடைய தகப்பனாரை வந்தடைந்தது. இதுவுமன்றித் தன்னுடைய வீட்டில் ஒரு பட்சி கூண்டு கட்டிக் கொண்டு அதில் வாசஞ் செய்து கொண்டிருந்தது. இந்தக் கூட்டை இவர் கலைத்துப் பிரித்துப் போட்டு விட்டார். இந்தச் சாபமும் வந்து அடைந்தது.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

9. ஆகையால் யிச் சென்மத்தில் அனுகாது யில்ல [மென்றோம்
பாகமாய்க் குடும்பம் காணான் பாண்டவர் போலே [வாழ்வன்
தோகையே பாலன் சேதி செப்புவோம் யூகை சாலி
தாக மென்றோர்க்கு யீவன் செப்புவான் கல்வி ரெண்டு.

9. ஆகையால் இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தகப்பனாருக்கு வீடு கிடையாது என்று சொன்னோம். இவருக்குப் பெரிய குடும்பம் கிடையாது இவர் பாண்டவர்களைப் போல வனவாசங்களைச் செய்து கொண்டு திரிந்து கொண்டிருப்பார். பார்வதியம்மையாரே! இனிமேல் ஜாதகருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியும் நுட்பமான புத்தியை யுடையவராவர். இவர், தாகம் எடுக்கின்றது என்று சொல்லுகின்றவர்களுக்குத் தாகம் தீர நீராகாரம் கொடுப்பார். இவருக்கு இரண்டு விதமான வித்தைகள் உண்டு.

10. ஆதியில் வறுமை யேற்பன் அந்தமான் செல்வா னுகும்
மேதினில் அரசர் மூல வித்தகன் தொழிலும் பெற்றுப்
போதனம் சேர்ப்பா னுகும் புகழது யேற்பா னுகும்
தீதுகள் ஒருவர்க் கெண்ணான் செனித்த னுடதனில் [வாழான்

10. ஜாதகர் தன்னுடைய முற்காலத்தில் தரித்திரத்தையும் கஷ்டங்களை யுமுடையவராவர். இவர் அந்தமான் தீவுக்குப் போவார். இவர் அரசர் கள் மூலமாக வேலையிலிருப்பார். அதனால் அதிக தனத்தைச் சேர்த்து வைப்பார். இவருக்குப் புகழும் பெருமையும் உண்டாகும். இவர் எவருக்கும் கெடுதிகளை நினைக்க மாட்டார். இவர் தான் பிறந்த கிராமத்தி லிருந்து வாழ மாட்டார்.

11. உதித்தனுள் முதலா யாக உரைக்கிறோம் பத்தொன் [பாண்டும்
மதியது அலைச்ச லெய்தும் வனவாசம் அல்ப உண்டி
மதி யீனமான் தனமு மில்லான் மாதுவுக் கிணக்கம் [சொல்ல
அதற்கு மேல் பிறை போல் யோகம் அறைகிறோம் [பாலனுக்கு.

11. ஜாதகர் தான் பிறந்த காலம் முதற் கொண்டு தனக்குப் பத்தொன் பது வயது வரையிலும் நடக்கும் பலனைச் சொல்லுகின்றோம். ஜாதகருக் குப் புத்தி ஒரு நிலையிலில்லாமல் மாறிக் கொண்டே யிருக்கும், இவர் வனவாசஞ் செய்வார். இவருக்குச் சிறிதே உணவு கிடைக்கும். இவர் புத்தியில்லாதவராக விருப்பார். பணமும் இல்லாதவராக விருப்பார். ஸ்திரீகளுக்கு அடங்கி நடப்பார். இதற்கு மேல் ஜாதகருக்கு யோகம் வளர்பிறை சந்திரனைப் போல வளர்ந்து கொண்டே யிருக்கும், அதிகப்பட் டுக் கொண்டே யிருக்கும்.

12. முன் துணை உதவியாலே வித்தகன் சீவிப்பா னும்
மன்னரால் தொழிலு மேற்பன் மலாய் தேசம் செல்வா [னுகும்
பொன் பொருள் தேடுவானும் போசன வறுமை காணன்
தன்துணை யாவும் தீது சத்திமார் அவ்வா றென்றோம்.

12. ஜாதகர் தன்னுடைய மூத்த சகோதரனின் உதவியால் ஜீவனஞ் செய்வார். இவருக்கு அரசாங்கத்தில் வேலை கிடைக்கும். இவர் மலேயா தேசத்திற்குப் போவார். இவர் தனமும் சொத்துக்களும் சேகரித்து வைப் பார். இவருக்குச் சாப்பாடு விஷயத்தில் கஷ்டங் கிடையாது. இவருடைய சகோதரர்களும் சகோதரிகளும் நசித்துப் போய்விடுவார்கள்*

*குறிப்பு:—சகோதர தோஷம்:—சகோதர ஸ்தானமாகிய மூன்றாவது வீட்டில் கேது இருக்கின்றார். இவர் சகோதர ஸ்தானாதிபதியும் காரகருமாகிய அங்காரகனுடன் கூடி இருப்பது சகோதர தோஷமாகும். மூன்றாவது வீட்டைச் சனி பார்ப்பது சகோதர தோஷத்தை உண்டு பண்ணும். பதினோராவது வீட்டை ராகுவும் சூரியனும் பார்ப்பது சகோதர தோஷத்தை உண் டாக்கும்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

13. மனைவிபாகம் விபரம் சொல்வேன் பேசுவோம் மணத்தில் [காலம்
கன்னிகை இருபா றுறில் கலப்பளாம் யென்று [சொல்வோம்
அன்மைபோல் வடிவு மொக்கும் ஆளன்தன் மனதுக் [கேத்தோள்
அன்னமும் அன்பா யீவள் அடிசலுக் கினிய ளாகும்.

13. ஜாதகரின் களத்திர பாவத்தைப் பற்றி விவரங்களைச் சொல்லுகின்றேன். ஜாதகருக்கு விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவருக்கு இருபத்தாறுவது வயதில் மனைவி வந்து நேரிடுவாள் என்று சொல்லுகின்றோம். இவள் அன்னபட்சியைப் போல அழகான தேகத்தையுடையவள். இவள் புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல் நடந்து கொள்ளுவாள். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள். இவள் சமையல் செய்வதில் கெட்டிக்காரியாக விருப்பாள்.

## ஜாதகருடைய புத்திரபாவமும் முன்ஜன்மமும்

14. மாதுவும் யோக சாலி மைந்தர்கள் ஆண்பால் ரெண்டு
காதலி மார்கள் மூன்று கழறுவோம் யிவ னுக்கு
ஓதுவேன் யிவன் முன் சென்மம் உம்பர்வாழ் திருமலை [பேரில்
சூதிலா செங்குந்த சேயாய் செனித்துமே வாழு நாளில்.

14. ஜாதகருடைய மனைவி யோகத்தை யுடையவளாவள். இரண்டு ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் ஜாதகருக்குப் பிறப்பார்கள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். தேவர்கள் வாசஞ் செய்கின்ற திருமலை என்ற திருப்பதி ஸ்தலத்தில் செங்குந்தர் குலத்தில் ஆணாகப் பிறந்து வாழ்கின்ற காலத்தில்;

15. பஞ்சைக்குப் பொருளை யீந்து பதியதைப் பரித்துக் [கொண்டான்
பஞ்சைகள் மனது வாடிப் பகர்ந்தனர் சாபம் கேண்மோ
தஞ்சமாய் மறு சென்மத்தில் தன் துணை ஆணில்லாமல்
துஞ்சிடும் தந்தை யாஸ்தி தூறுவாய் கம்மான் பேரில்.

15. ஜாதகர் ஏழைகளுக்குப் பணத்தைக் கொடுத்துப் பிறகு அவருடைய வீட்டை அபகரித்துக் கொண்டார். அந்த ஏழைகள் தங்களுடைய மனத்தில் துன்பத்தை யடைந்து சாபத்தைக் கொடுத்தார்கள். பார்வதியம்மையே! கேட்பீராக. நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் சகோதரனில்லாமலும், பிதுரார்ஜித சொத்தில்லாமலும், கப்பல் மேலேறி வெளியூருக்குப் போய்.

16. இல்லமு மில்லா தாகி யிப்புவி தன்னில் வாழ்வாய்
சொல்லியே தெருத்தூள் விட்டார் சேர்ந்தது அந்தச் [சாபம்
நல்லதோர் குடும்பம் தாழ்ந்து நாயகன் மரண மாகி
வல்லவன் வரியராகி வருகுவா னிவவே யென்றோம்.

16. வீடு இல்லாதவராகவும் இருந்து கொண்டு இந்தப் பூமியில் வாழக்கடவாய் என்று செல்லித் தெருவிலுள்ள மண் தூளை எடுத்துத் தூவி விட்டார்கள். அந்தச் சாபம் ஜாதகரை வந்தடைந்தது. ஒரு காலத்தில் மேன்மையாக விருந்த குடும்பம் க்ஷீணித்துப் போய்ப் பிறகு ஜாதகர் முன் ஜன்மத்தில் மரணத்தை யடைந்து வல்லவராகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொன்னோம்.

17. முன்சென்மம் யேழை சாபம் மேவிடு மிச் சென்மத்தில்
தன்னில மில்லா னாகும் தனமிலான் தரித்திர னுவான்
தென்காற்று பஞ்சு போலே திரிவனும் யென்று [சொல்வோம்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட் டிடாயே.

17. முன் ஜன்மத்திய ஏழைகளுடைய சாபம் ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் வந்து சம்பவிக்கும். ஆகையால் இவர் நிலங்களை யுடையவரல்லர், பணத்தையு முடையவரல்ல, இவர் வறுமையையும் கஷ்டங்களையும் அநுபவிப்பவராவர். இவர் தென் காற்றில் அகப்பட்டுக் கொண்டு அங்குமிங்கும் அலைந்து கொண்டிருக்கின்ற பஞ்சைப் போல அங்குமிங்கும் திரிந்து கொண்டு கஷ்டத்தை அநுபவிப்பார் என்று சொல்லுகின்றோம். சக்கரைப் போன்ற இனிமையான வார்த்தைகளை உபயோகப்படுத்துகின்ற பார்வதியம்மையாரே! கேட்பீராக.

18. இருபது ஆண்டு மேலே இவனுக்கு யோக மென்றோம்
பிறைபோலே யோகம் வாய்க்கும் பிழையுரு யென்று [சொல்வோம்
வறுமை யில்லாமல் வாழ்வன் மன்னவன் திசை [வரைக்கும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டிடாயே.

18. ஜாதகர் தன்னுடைய இருபது வயதிற்கு மேல் யோகத்தை யுடையவராவர் என்று சொல்லுகின்றேம். இவருக்கு யோகம் வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டிருக்கும். யாதொரு கஷ்டமும் நேரிடா என்று சொல்லுகின்றேம். ஜாதகர் கஷ்டங்களும் தரித்திரமும் இல்லாமல் வாழ்வார். இவ்விதமாக மன்னவன் தசை என்ற குரு தசை வரைக்கும் நடக்கும். கருப்பு மதயானையின் முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்கள்

19. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்த [ளாகும்
அன்னமு மன்பா யீவள் ஆளன் தன் மனதுக் [கேத்தோள்
அன்னவள் யோக மில்லாள் அடிசலுக் கினிய ளாகும்
அன்னியர் குற்றம் சொல்லாள் அரிபோலே கோப [மேற்பள்.

19. ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் பிறர் மேல் பிரியமுள்ள மனத்தை யுடையவளாவள், அஃதாவது பச்சாதாப முள்ளவளாக விருப்பாள். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியமுடன் போடுவாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல நடந்து கொள்ளுவாள். இவள் யோக சாலி யல்ல. இவள் சமையல் செய்வதில் கெட்டிக்காரியாக விருப்பாள். இவள் பிறர் பேரில் குற்றங்களையும் பழிகளையுஞ் சாட்டமாட்டாள். இவளுக்குச் சிங்கத்திற்கு வருவதைப் போலக் கோபம் கொடூரமானதாக வுண்டாகும்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

20. தன் துணை ஆண்பா லொன்று சத்தியு மவ்வாறு தீர்க்கம்
முன்சென்மம் புதுவை தன்னில் முதித்தனள் தீயின் [வம்சம்
பொன்பொரு ளுடையா ளாகிப் பூவையும் வாழ்ந்துமே [தான்
அன்னவள் வினை யில்லாமல் அணுகினள் கால னூடு.

20. ஜாதகரின் தாயாருக்கு ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவள் தன்னுடைய முன் பிறப்பில் புதுவை என்ற புதுச் சேரியில் தீயின் வம்சம் என்ற வன்னியர் குலத்தில் பிறந்தாள். இவள் தனம் சொத்து ஆகிய இவற்றை யுடையவளாக விருந்து கொண்டு வாழ்ந்து வந்தாள். இவள் யாதொரு பாவமுமில்லாமல் இறந்து எம பட்டணத்திற்குச் சென்றுள்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

21. சிரனுன் கோன் வரையப் பட்டுச் செனித்தவ ளென்று [சொல்வோம்
வருஞ் சென்மம் பாண்டி தன்னில் மறைகுல முதிப்பா [ளாகும்
அரிவைக்கு யிச் சென்மத்தில் அணுகின புண்ணிய [மென்ன
பெரிதான தலங்கள் சென்று பின்னோர்க்குத் தான [மீந்தும்.

21. பிறகு நான்குதலைகளை யுடைய பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ஜாதகரின் தாயார் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். இவள் மறுஜன்மத்தில் பாண்டிய தேசத்தில் பிராமணர் குலத்திற் பிறப்பாள். இந்த ஜன்மத்தில் இவள் என்ன புண்ணியங்களைச் செய்தாள் என்று பார்வதியம்மையார் கேட்க, இவள் பெரிய தெய்வீகமான ஸ்தலங்களுக்குச் சென்றும், ஏழைகளுக்குத் தானத்தைக் கொடுத்தும்,

## ஜாதகரின் தகப்பனாரின் மரணகாலம்

22. சேதுவின் பதிக்குச் சென்று தேவதா பத்தி யாயும்
மேதினில் வாழ்வ தாலே விளங்குவாள் மறை குலத்தில்
ஓதுவேன் கரும் காலம் உதித்த சேய்க்கு முப்ப தாண்டில்
சாதகன் தந்தை கண்டம் செப்பின மொழி குன்றாது.

22. சேது ஸ்தலத்திற்குப் போயும், தெய்வங்களின் மேல் அன்புள்ளவளாயும் இருந்து கொண்டு வாழ்வாள். ஆகையால் இவள் மறு ஜன்மத்தில் பிராமணர் குலத்திற் பிறப்பாள். இனிமேல் கர்ம காலங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். ஜாதகருக்கு முப்பதாவது* வயதில் ஜாதகருடைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும். நாங்கள் சொல்லிய பலன் தவறிப் போகாமல் நடக்கும்.

*குறிப்பு :—பிதுர்மாரகம் :—ஜாதகருக்கு முப்பதாவது வயதில் ராகு தசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்குச் சுக்கிரன் ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் மாரகராகின்ருர். ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் இருபத்து மூன்ருவது சுலோகம் இவற்றின் பிரகாரம் சுக்கிரன் வீட்டிலுள்ள ராகு மாரகராகின்ருர்.

## ஜாதகருடைய தகப்பனாரின் மறுஜன்மம் தாயாருடைய மரணம், ஜாதகருடைய மரணம்

23. மறு சென்மம் கழுக்குன் றதனில் வருகுவான் பிரம்ம [சேயாய்த்
திருகிலா முப்பான் யெட்டில் செல்லுவாள் அன்னை [யென்றேம்
உரைக்கிறேம் அறுபா ஹறில் உத்திராயனம் மகர மாதம்
திருமகனுடலம் யேகும் செப்புவோ மிவள்பின் சென்மம்.

23. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய பின் ஜன்மத்தில் திருக்கழுக் குன்றம் என்ற க்ஷேத்திரத்தில் பிராமணர் குலத்திற் போய் ஆணகப் பிறப்பார். ஜாதகருடைய தாயார் ஜாதகருக்கு முப்பத்தொட்டாவது வயதில் இறந்து போய் விடுவாள் என்று சொல்லுகின்றேம். ஜாதகர் தனது அறுபத்தாறுவது வயதில் உத்தராயனத்தில் மகரமாதம் என்ற தை மாதத்தில் இறந்து போய் விடுவார். இனிமேல் இவருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம்.

24. உத்தரம் தணிகை தன்னில் உதிப்பனும் சைவ சேயாய்
மெத்தனைக் குடும்பி யாகி வித்தகன் வாழ்வா னுகும்
சித்தசன் செனன காலம் செங்கதிர் ஆண்டு மூன்று
பத்திய திற முள்ளானும் பகர்ந்தனம் பூர்வ பாகம்.

24. ஜாதகர் வடக்கில் திருத்தணி க்ஷேத்திரத்தில் சைவ குலத்தில் ஆணகப் பிறப்பார். இவர் மேன்மையான குடும்பஸ்தராக விருந்து வாழ்பவராவர். இவர் பிறந்த காலத்தில் சூரியமகா தசையில் இருப்பு நின்றது மூன்று வருஷங்களாகும். ஜாதகர் திறமையுள்ளவராக விருப்பார். இவ்விதமாகப் பூர்வபாகமாகிய முதற்பாகத்தைச் சொல்லி முடித்து விட்டோம்.

25, இல்லமும் யெந்த காலம் யிவனுக்கு நேரும் சொல்வாம்
வல்லியே யிருபா னெட்டில் மருவிடும் செனித்த ஊரில்
புல்கியே பூர்வ பொன்னும் புகழான குடும்பி யாவன்
அல்லலை தாரவார்க்கு மெங்கள் ஆத்தும தாயே கேளாய்.

25. ஜாதகருக்கு எக்காலத்தில் வீடு வந்து சேரும் என்ற விஷயத்தைப் பற்றிச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, முனிவர் பதில் சொல்லுகின்றர். பார்வதியம்மையே! ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் தான் பிறந்த கிராமத்தில் வீடு கிடைக்கும். இவர் பூர்வதனத்தையடைந்து மேன்மையான பெருமையுள்ள குடும்பஸ்தராவார். எங்களுடைய கஷ்டங்களைப் போக்கடிக்கின்ற எங்களுடைய அருமையான தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக. —C. G. R.

## ஜாதகம் 11

### ஜனனகால கிரகநிலை

1. குரு கன்னி சனியும் [1]தேளில் கூறிய ராகு [2]வில்லு
[3]புவி மகன் மீனமாகப் புதனுமே [4]ஆட்டில் தங்க
[5]ரவியுமே [6]குண்டையாக நன் [7]மதி [8]சுங்கன் கேது
வருவது மிதுனமாகச் சென்மம் கன்னி தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிக் குரு கன்னியிலும், சனி விருச்சிகத்திலும், ராகு தனுசிலும், அங்காரகன் மீனத்திலும், புதன் மேஷத்திலும், சூரியன் ரிஷபத்திலும், சந்திரனும், சுக்கிரனும், கேதுவும் மிதுனத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருக்கும்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| அங்காரகன் | புதன் | சூரியன் | சந்திரன் சுக்கிரன் கேது |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| ராகு | சனி | | லக்கினம் குரு |

புனர்பூசம் 2-ஆம் பாதம் குரு தசை ஷ 11—04—00 சுமார்.

குறிப்பு:—இந்த ராசிக் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :--மேஷத்தில் சூரியனும் குருவும் ரிஷபத்திற் சந்திரனும், மிதுனத்திற் கேதுவும், துலாத்திற் புதனும் சனியும், விருச்சிகத்திற் சுக்கிரனும், தனுசில் ராகுவும், மீனத்தில் அங்காரகனும் ஆகும். குருவும் சனியும் வக்கிர கதியிலிருக்கின்றார்கள்.

1. விருச்சிகம்.
2. தனுசு.
3. அங்காரகன்.
4. மேஷம்.
5. சூரியன்.
6. ரிஷபம்.
7. சந்திரன்.
8. சுக்கிரன்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. இப்படிக் கிரகம் நின்ருல் யிதன் பலன் சொல்லு மென
மெய்ப்புடன் பராசர் தானும் விளம்புவார் பெண்பால்
தப்பிலா கீழ்மேல் வீதி சதிருடன் உத்தர நோக்கம்
ஒப்புடன் கெட்டி வீட்டில் உதித்தவள் மிலேச்ச வம்சம்.

2. இவ்விதமாகக் கிரகங்கள் இருந்தால் பாலபலன்களைச் சொல்லுவீரென்று பார்வதி கேட்கும் போது பாராசர மஹரிஷி பெண் குழந்தை பிறக்கும் என்று சொல்லுகின்ருர். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குத் திக்கைப் பார்த்த வாசற்படியை யுடைய ஒரு வலிவான வீடாகும். ஜாதகி மிலேச்ச வம்சம் என்ற மகம்மதியர் குலத்திற் பிறந்தாள்.

3, மா லரன் தந்தியவன் வகையுடன் குடக்கு தன்னில்
சீலமாய் அதற்குக் கீழ்பால் செப்புவோம் புதனும்
[நிற்கும்
ஞால மேல் கோஷ்டத்துக்கு நவிலுவோம் மாரி
[உந்திரம்
கோல மாகாளி உத்திரம் கூறு பாஞ்சாலி மீனம்.

3. மகாவிஷ்ணு, சிவபெருமான், விநாயக் கடவுள் ஆகிய இவர்களுடைய கோயில்கள் மேற்குத் திக்கிலும், இவற்றிற்குக் கிழக்குத் திக்கில் இன்னொரு விஷ்ணு கோயிலும் இருக்கும். இந்தக் கோயிலுக்கு வடக்கில் ஒரு மாரியம்மன் கோயிலிருக்கும். ஒரு பெரிய காளியம்மன் கோயில் இதற்கு வடக்கில் இருக்கும். இதற்கு வடக்கில் ஒரு திரௌபதியம்மன் கோயிலிருக்கும்.

4. இன்னமு முச்சமான கோரி யிலகிடும் மேற்குத் திக்கில்
அன்னமே பலதே வாசம் அருளுவோம் பேருராகும்
தன்னிவள் மாதிர் விட்டில சாதகி செனிப்பா
[ளென்ரேம்
உன்னித தந்தை யில்ல முரைக்குரேம் உத்திர திக்கில்

4. பிறந்த ஊரில் மேற்குத் திக்கில் ஓர் உயரமான மசூதியுமிருக்கும். இந்த ஊரில் அநேக தேசத்தார்கள் வாசஞ் செய்வார்கள். இந்த ஊர் ஒரு பெரிய கிராமமாகும். ஜாதகி தன்னுடைய தாயார் வீட்டிற் பிறப்பாள் என்று சொல்லுகின்ரேம். ஜாதகியின் தகப்பனுருடைய வீட்டைப் பற்றிச் சொல்லுகின்ரேம். இது வடக்குத் திக்கில்;

## ஜாதகியின் தகப்பனுரின் சகோதரபாவம்

5. கடிகையு நான்க தாகும் கழறுவோம் சிற்றூர் தன்னில்
படிதனில் தடித்த வீடு பாகமும் மூன்ற தாகும்

சடிதிய தந்தை வர்க்கம் சாற்றுவோம் பதினொன் ருகும்
முடிதிய ஆண்பாலி ரெண்டு மொழிந்திடு கன்னி மூன்று.

5. நான்கு நாழிகை நடை தூரத்தில் ஒரு சிறிய கிராமத்தில் இருக்கும் என்று சொல்லுகின்றோம். இது வலிவான பெரிய வீடாகும். இது மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும். ஜாதகியின் தகப்பனுருடன், பிறந்தவர் பதினொரு பேராவர். இவர்களில் ஆண் இரண்டும் பெண் மூன்றும்,

6. தீர்க்கமாம் அஞ்சு மாரனும் சேதமு மவ்வா ருகும்
பார்க்கவே பலன் யாவும் பகருவோ மிந்நூல் தன்னில்
எர்க்கவே அன்னை தந்தை இன்பமாய் சகோதர [யோகம்.
ஆர்க்கவே புத்திர யோகம் அறைகிறோம் கேளு மாதே.

6. ஆக ஐந்து பேர்களும் தகப்பனும் ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். ஐந்து சகோதரர்கள் சீக்கிரத்தில் இறந்து போய் விடுவார்கள். இந்தச் சாஸ்திரத்தில் எல்லாப் பலன்களையும் சொல்லுகின்றோம். தாயார், தகப்பனர், சகோதரர்கள், சந்ததிகள், ஆகிய இவர்களுடைய யோகங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகியின் தகப்பனுருடைய குணதிசயங்கள்

7. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் வெகு [பேர்க்கன்பன்
சிந்தையில் கபடு கொஞ்சம் செனங்களுக் குதவி [செய்வன்
சந்ததம் உஷ்ண தேகம் சாற்றுவோம் சிவந்த மேனி
வந்தவர்க் கன்ன மீவன் வகையுடன் செட்டுச் செய்வன்.

7. ஜாதகியின் தகப்பனுருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் அநேகருக்குப் பிரியமானவராக விருப்பார், இவர் தன்னுடைய மனத்தில் சிறிது வஞ்சனை யுடையவராக விருப்பார். இவர் எப்போதும் உஷ்ண குணமுள்ள தேகத்தை யுடையவர். இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவர். இவர் தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் ஒரு நல்ல வியாபாரத்தைச் செய்வார்.

8. பூமியு முடைய னுவன் புகழுமே யுடைய னுவன்
சாமிமேல் பக்தி யுள்ளான் சரீர மொடிச்ச லுள்ளான்
தீமையில் சொல்லு மில்லான் தீர்த்தங்கள் தோய் [வாஞ்சை
ஆர்க்குமே நேய மாகும் ஆண்டவன் தனைத் துதிப்பன்,

8. ஜாதகியினுடைய தகப்பனர் நிலங்களை யுடையவராவர். இவர் கீர்த்தியை யுடையவராவர். இவர் கடவுளின் பேரில் அன்புடையவர். இவர் மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் கெடுதியான வார்த்தைகளை யுடையவரல்லர். தெய்வீக ஸ்தலங்களுக்குப் போய் அங்குள்ள குளம் நதி முதலிய நீர் நிலைகளில் ஸ்நானஞ் செய்ய ஆசையை யுடையவர். இவர் எல்லோருக்கும் சிநேகிதராக விருப்பார். இவர் கடவுளை வணங்குவார்; போற்றுவார்.

9. கண்களும் பெரிதாய்க் காட்டும் கரங்கால்கள் வலுவு
[முள்ளான்
குண்டைகோ விருத்தி யுள்ளான் குஞ்சர நடையு
[முள்ளான்
தண்டமிழ் கல்வி கொஞ்சம் சமர்த்தனும் யீகை கொஞ்சம்
குண்டனி கலக மில்லான் குத்திர வசனம் கூறுவன்.

9. ஜாதகியினுடைய தகப்பனருக்குக் கண்கள் பெரியதாக விருக்கும். இவருக்குக் கை கால்கள் வலிவாக விருக்கும். இவர் சிறிது தமிழ் படித்தவராக விருப்பார். இவர் சாமர்த்திய முள்ளவர். கொஞ்சம் தயாள குணமுடையவர். கோள்களைச் சொல்லிக் கலகங்களை மூட்டி வைப்பவரல்லர். கடுமையான வார்த்தைகளைச் சொல்லுவார்.

10. கரமதில் கமல ரேகை கனத்ததோர் சுழியு முள்ளான்
திறமையில் சீவிப்பா னும் சிக்கெனப் பொருளும்
[சேர்ப்பன்
நிறையவே பெண்டு ரெண்டு நிருபனும் கொள்வா
[னென்றேம்
குறையவே பொருளும் கொஞ்சம் கோதையால் செலவு
[நேரும்.

10. ஜாதகியினுடைய தகப்பனர் தன்னுடைய உள்ளங்கையில் தாமரை ரேகையை யுடையவராவர். இவருக்கு ஒரு பெரிய சுழியும் உண்டு. இவர் தன்னுடைய திறமையால் ஜீவனஞ் செய்வார். இவர் சிக்கினமாக விருந்து பணத்தைச் சேர்த்து வைப்பார். இவருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு என்று சொல்லுகின்றேம். இவர் மனைவியால் கொஞ்சம் பொருளைச் செலவு செய்து அழித்து விடுவார்.

## ஜாதகியின் குணாதிசயங்கள்

11. இப்படிக் கிருக்கும் தந்தை யிவனுக்குத் தாரம் ரெண்டில்
ஒக்கவே யிளையா ளுக்கு உதித்தவள் யிவளே யம்மா
மிக்கவே யிவள் குணத்தை மொழிகிறேன் கோப
[முள்ளாள்
தக்கவே புத்தி யுள்ளாள் தானவ ளதிஷ்ட சாலி.

11. இவ்விதமான குணங்களை யுடைய தகப்பனுருக்கு நேரிட்ட இரண்டு மனைவிகளில் இளைய மனைவிக்கு இந்த ஜாதகி பிறந்திருக்கின்ருள். பார்வதியம்மையே! ஜாதகியினுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவள் கோப முடையவள். இவள் நல்ல அறிவை யுடையவள். இவள் அதிரிஷ்டசாலியாக விருப்பாள்.

## ஜாதகியின் விவாககாலம்

12. சாதகி சிவந்த தேகம் சத்தியம் சம்பன்ன ளாகும்
வேதனை யொருவர்க் கெண்ணுள் வித்தகி கற்பு முள்ளாள்
சீதள முகத்த ளாகும் செப்புவோம் மணத்தின் காலம்
நாதமாய் ஆண்டு பத்தில் நாயகன் உத்தர திக்கில்

12. ஜாதகி சிவப்பு நிறமான தேகத்தை யுடையவள். சத்தியம் நிறைந்த வளாக விருப்பாள். இவள் எவருக்குங்கெடுதியை நினைக்கமாட்டாள். இவள் கற்புடையவளாவள். இவள் தாமரை மலரைப் போல அழகான முகத்தையுடையவள். இவளுடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகின் ரேம். இவளுக்குப் பத்தாவது வயதில் புருஷன் வடக்குத்:திக்கிலிருந்து

13. வருகுவான் சிவந்த தேகன் வகையுள பொறுமை சாலி
திருவெனும் மாது வாலே செல்வங்கள் மிகவுண் டாகும்
பெருமையாய்ப் புத்திர பாக்கியம் பேசுவோ மாண்பா [விரண்டு
அருளுவோ பெண்பா விரண்டு அத்திரி முனிவர் [சொல்வார்.

13. வருவான்.* இவளுடைய புருஷன் சிவப்பு நிறமான தேகத்தை யுடையவர். இவர் பொறுமையுள்ளவர். இவருக்கு லக்ஷ்மியைப் போன்ற மனைவியாலே அதிகமான செல்வமும் சம்பத்தும் உண்டாகும். இவருக்குப் புத்திர சம்பத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம். இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் இவருக்குண்டு. இதன் பிறகு அத்திரிமஹரிஷி கேட்கின்ருர்.

குறிப்பு :—விவாக காலம் :—குரு நாலிற்கும் ஏழிற்கும் உடையவராகி லக்கினத்திலிருந்து கொண்டு ஏழையும் ஒன்பதையும் பார்ப் பதால் குரு தசையில் விவாகம் சொல்லப் பட்டியிருக்கின்றது ஜாதக பாரிஜாதம் பதினென்காவது அத்தியாயம் இருபத்தொன் பதாவது சுலோகத்தைப் பார்க்கவும்.

## ஜாதகியின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

14. தந்தையின் முன் சென்மத்தைச் சாற்றுவீர் யென்று [கேழ்க்க
பந்தமாய்க் காஞ்சி தன்னில் பாலகன் கங்கை வம்சம்

வேந்தர் தன் பக்கல் சென்று வித்தகன் செட்டு செய்து
ஓங்கிய பொரு ளநேகம் உத்தமனே பெற்று வாழ்ந்து,

14. ஜாதகியின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு வீர் என்று அத்திரி ரிஷி கேட்கவே, பராசரரிஷி பதில் சொல்லுகின்றுர். தகப்பனுர் காஞ்சீபுரத்தில் வேளாளர் குலத்தில் ஆணுகப் பிறந்து இராஜாக் களிடம் போய் வியாபாரத்தைச் செய்து கொண்டு அதிகமான பொருளை அடைந்து;

15. வாழ்கிற நாளிலே தான் வந்தஊழ் தன்னைக் கேளாய்
கனிவுட னேழை தன்னைக் கனமுடன் நேசம் செய்து
இனிமையாய்க் குடுக்கல் செய்து யேழைதன் பூமி
[யெல்லாம்
வரவர யிவன் கைகொண்டான் வகையுடன் மேழை
[தானும்.

15. வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த வினையைச் சொல்லுகின்றேன். கேட்பீராக. இவர் ஓர் ஏழை மனிதருடன் சிநேகஞ் செய்து கொண்டு அவருக்கு வேண்டும் போதெல்லாம் பணத்தைக் கொடுத்து அவருடைய எல்லா பூமிகளையும் சிறுகச்சிறுக கைக்கொண்டார். அதன் மேல் இந்த ஏழையானவர்;

16. என்னுடைப் பூமி யெல்லாம் யியலுடன் பரித்த தாலே
இன்ஞெரு சென்மம் தன்னில் யிரண்டுமே மனையா
[ளாகிப்
பின்னமும் முதல் மாதாலே பொருளுமே சேதமாகி
மன்னவன் மிலேச்ச வம்சம் வகையுடன பிறப்பா
[யென்ருன்.

16. "என்னுடைய எல்லா நிலங்களையும் நீ அபரித்துக்கொண்டதால் மறு ஜன்மத்தில் இரண்டு மனைவிமார்களையுடையவராகி, முதல் மனைவியால் பொருள்கள் அழிந்து விடுவதுமன்றி, நீ மிலேச்ச ஜாதியில் பிறக்கக்கடவாய்" என்று சொல்லிச் சாபங் கொடுத்தார்.

ஜாதகியின் தகப்பனுருடைய மறுஜன்மம்

17. பின்சென்மம் தட்சிணத்தில் பேசுவோ மருகில் சிற்றூர்
தன்னிலே அருகர் வம்சம் சாதகன் உதித்து மேலும்
பொன்பொருள் அதிகம் பெற்றுப் புத்திர மனைவி யோடும்
இன்னவன் வாழ்வா னென்று யியம்பினுர் ரிஷிகள்
[தானே.

17. ஜாதகியின் தகப்பனார் தன்னுடைய மறு ஜன்மத்தில் தெற்கே சமீபத்தில் ஒரு சிறிய கிராமத்தில் சமணருடைய ஜாதியிற் பிறந்து தனமும் சொத்துக்களும் அதிகமாக அடைந்து மனைவி புத்திரர் ஆகிய இவர்களுடன் வாழ்வாரென்று ரிஷிகள் சொன்னார்கள்.

## ஜாதகியின் தாயாருடைய குணாதிசயங்கள்

18. அன்னையின் சேதி தன்னை அடவுடன் உரைப்பக்
[கேளாய்
கன்னியு மருளு முள்ளாள் கற்புளாள் சிவந்த மேனி
இன்னமும் போக முள்ளாள் யியல் பத்ம ரேகை
[யுள்ளாள்
பின்னங்க ளில்லா ளாகும் பேசுவோம் மேலும் கேளே.

18. ஜாதகியின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவள் கடவுளுடைய கிருபையையுடையவளாவாள். இவள் கற்புள்ளவளாவள். சிவப்பு நிறமான தேகத்தையுடையவள். இவள் சுக போகங்களை அனுபிக்கின்றவளாவள். இவள் தன்னுடைய உள்ளங் கையில் தாமரை ரேகையை யுடையவளாவள். இவள் யாதொரு அவயவ பங்கங்களும் குறைவுகளுமில்லாதவள். இன்னும் அதிகமாகச் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகியின் தாயாருடைய சகோதரர்களும் முன்ஜன்மமும்

19. இவளுடைய துணைவர் தன்னை யிசைகிறோ மாண்பால்
[மூன்று
அவனியில் கன்னி யொன்று அறைகுவோம் தீர்க்க மாக
நவனியில் யிவள் முன் சென்மம் நாட்டுவோம்
[கழுக் குன்றத்தில்
சிவமதம் செங்குந்த வம்சம் தேவியு முதித்தா ளம்மா.

19. ஜாதிகியின் தாயாருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். மூன்று சகோதரர்களும் ஒரு சகோதரியும் நீண்ட வயதுள்ளவர்களாக விருப்பார்கள். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் திருக்கழுக்குன்றம் என்ற திவ்ய க்ஷேத்திரத்தில் செங்குந்தருடைய ஜாதியில் சைவ மதத்தில் ஒரு பெண்ணாகப் பிறந்தாள், பார்வதியம்மையே!

20. க்ஷேமமாய் வாழ்ந்துமே தான் சேர்ந்தஊழ் தன்னைக்
[கேளாய்
பூமியில் பெண் பாலுக்குப் புகழுடன் குற்றம் சொல்ல

ஆகையா வடுத்த வீட்டோன் அவளையே துரத்தி
[விட்டான்
வேகமாய் மெல்லி தானும் மேதினில் சாபம் சொன்னாள்.

20. ஜாதகருடைய தாயார் சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கின்ற காலத்தில் இவளுக்குச் சம்பவித்த பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக. ஒரு ஸ்திரீயைப் பற்றிக் கௌரவமாகவும் இழிவாகவும் இந்தத் தாயார் சொல்லவே, அண்டை வீட்டுக்காரன் இந்த ஸ்திரீயை விலக்கி ஓட்டி விட்டான். அதன் மேல் இந்த ஸ்திரீ உடனே சாபத்தைக் கொடுத்தாள்.

21. துரோகமே சொன்ன தாலே துணைவர்கள் சுயஊர்
[விட்டு
விரோதமாய் மறுஊர் வந்து வித்தகி வாழ்வா ளம்மா
மறுமனை போவா யென்று வமிசமும் மிலேச்ச சாதி
திருவுடன் போவா யென்று செப்பினாள் மாது தானே.

21. என் பேரில் அபாண்டமாகப் பேசினதால், நீ உன்னுடைய சகோதரங்களையும் சொந்தக் கிராமத்தையும் விட்டுப் பிரிந்து வேறொரு கிராமத்திற்குப் போய் அங்கே வேறொரு வீட்டிலிருக்கக்கடவது, மேலும் மிலேச்சர் ஜாதியில் பிறக்கக்கடவது," என்று சொல்லி அந்த ஸ்திரீ சாபங் கொடுத்தாள்.

## ஜாதகியின் தாயாருடைய மறுஜன்மமும் ஜாதகியின் முன்ஜன்மமும்

22. பின் சென்மம் புதுவை தன்னில் பேசுவோம் கோ
[குலத்தில்
உன்னதப் பொருளும் பெற்று உத்தமி வாழு நாளில்
பத்தினி சாதகிக்குப் பகருவீர் முன் சென்மத்தைப்
சித்தமாய்க் கோணந் தன்னில் செனித்தன ளிக்
[குலத்தில்.

22. ஜாதகியின் தாயாருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் புதுவை என்ற புதுச்சேரியில் கோகுலம் என்ற இடையருடைய ஜாதியில் பிறந்து சொத்துக்களையுடையவளாகி வாழ்வாள். ஜாதகியினுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்டார். முனிவர் பதில் சொல்லுகின்றார். இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில் கோணம் என்ற திரிகோணமலையில் இந்த ஜன்மத்திய குலமாகிய முகம்மதிய ஜாதியில் பிறந்தாள்.

23. மைந்தனும் வரனு முண்டாய் மகிழ்ச்சியாய் வாழ்ந்து
[மேலும்
ஏழையாய் வரு வோருக்கு யியல்புடன் அன்ன மீந்து
காசினில் நாகுலூர்க்குக் கடுமையாய் ஆண்டு ஓர்நாள்
பாசமாய் அவ்விடம் சென்று பத்தியாய்த் தான மீந்து.

23. ஜாதகி புருஷனுடனும் பிள்ளைகளுடனும் சகல சௌகரியங்களுடனும் சுகங்களுடனும் சந்தோஷமாக வாழ்ந்து கொண்டும், தன்னிடத்திற்கு வருகின்ற ஏழைகளுக்குச் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டும், வருஷத்திற்கு ஓர் நாளில் நாகூருக்குப் போய்த் தெய்வ பத்தியுடன் தானஞ் செய்து கொண்டும்;

24. அன்னங்கள் மிக பேர்க் கீந்து ஆண்டவர் பக்தி மானாய்
கொண்டதோர் காலம் சென்று குறைதலைக் கஞ்சன்
[தன்னால்
வரியவே யிக்குலத்தில் வந்தவ ளிவளே யம்மா
தெரியவே பின் சென்மத்தைச் செப்புவோம்
[கேட்டிடாயே.

24. அநேகருக்குச் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டும், கடவுளின் மேல் அன்புடையவளாக வாழ்ந்து கொண்டும், தன்னுடைய காலத்தைக் கழித்து விட்டுப், பிறகு குறைந்த தலைகளையுடையவராகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்தக் குலமாகிய முகம்மதிய ஜாதியில் ஜாதகி வந்து பிறந்திருக்கின்றாள், பார்வதியம்மையே! இனிமேல் இவளுடைய பின் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். கேட்பீராக.

## ஜாதகியினுடைய பின்ஜன்மம்

25. அருணையில் பிரம்ம சேயாய் அவளுமே உதிப்பா
[ளென்றோம்
பெருமையாய் ரிஷிகள் சொல்லப் பேதையும் கேழ்க்க
[லுற்றாள்
வரியவே யிச் சென்மத்தில் மகமதியர் குல முதித்து
திரு வேறு பிரம்ம சேயாய் செனித்த காரணத்தை.

25. ஜாதகி தன்னுடைய மறு ஜன்மத்தில் அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் பிராமணர் குலத்தில் பெண்ணாகப் பிறப்பாள் என்று ரிஷிகள் சொல்லவே, பார்வதியம்மையார் கேட்க ஆரம்பித்தாள். ஜாதகி இந்த ஜன்மத்தில் முகம்மதியர் ஜாதியிற் பிறந்திருந்தும், அடுத்த ஜன்மத்தில் பிராமணர் குலத்தில் பிறப்பதற்குக்காரணங்களை;

26. சொல்லு வீரென்று கேழ்க்க சுத்தமாய் முனிவர் [சொல்வார்
மெல்லவே யிச்சென் மத்தில் மேதினில் தருமம் [செய்வாள்
நல்லவர் வெகு பேருக்கும் நாயகி ஆண்ட வர்க்கும்
இல்லற தருமம் தானும் யேந்திழை நடத்து வாளே.

26. சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்கவே, பராசர மஹ ரிஷி சொல்லுகின்றார். இந்த ஜன்மத்தில் ஜாதகி தர்மகாரியங்களைச் செய்வாள். நல்லவர்கள் அநேகருக்கும், கடவுளுக்கும் ஜாதகி தன்னுடைய இல்லற தர்மங்களைச் செய்வாள்.

27. குரு திசை அந்த மட்டும் கூறுவோம் பல னனேகம்
வருவது பூமி தானும் வந்திடும் செட்டி னாலும்
பெருகிடு செல்வ மெல்லாம் பேசுவோ மின்னூல் தன்னில்
குருவுமே லக்கினத்தில் குண முட னிருப்ப தாலே.

27. குருதசை முடிவு பெருகின்ற காலம் வரையிலும் அநேக நல்ல பலாபலன்களைச் சொல்லுவோம். நிலங்கள் வந்து சேரும். எல்லாச் சம்பத்துக்களும் வியாபாரத்தினால் உண்டாகப்போவதை இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம். குரு லக்கின பாவத்தில் சுப பலத்துடன் இருப்பதால்;

28. யோகமும் குறைவு மில்லை உத்தமி வாழ்வா ளம்மா
ஏகமாய்ப் பூமியும் தான் யிலகிடும் யிவளுக்கே தான்
கோவுமே விருத்தி யுண்டு குளம்கிணறு செய்ய வல்லாள்
நாதனு ராலயத்தை நல முடன் கட்டு வாளே.

28. யோகம் குறைவுபடாமல் ஜாதகி வாழ்வாள் என்று சொல்லுகின்றேன், பார்வதியம்மையாரே! இவளுக்கு நிலங்கள் வந்து சேரும். பசுக்கள் விருத்தியாகும். இவள், குளம் கிணறு ஆகிய இவற்றை வெட்டுவாள். கட்டுவாள். இவள் கடவுளுடைய கோயிலைக் கட்டுவாள்.

## ஜாதகியின் தாய் தகப்பனுருடைய மரணகாலம்

29. தந்தையின் மரண காலம் சாற்றுவோ முப்பா னைந்தில்
வந்திடும் கன்னி மாதம் வளர்பிறைச் சட்டி தன்னில்
எந்தையே அன்னை காலம் யியம்புவோம் நாற்ப [தாண்டில்
சந்ததமானி மாதம் தசமி யாம் பூர்வ பக்ஷம்.

29. ஜாதகியினுடைய தகப்பனாரின் மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஜாதகியின் முப்பத்தைந்தாவது* வயதில் கன்னி

மாதம் என்ற புரட்டாசி மாதத்தில் வளர்பிறையில் ஷஷ்டி திதியில் மரணம் நேரிடும், பார்வதியம்மையே! ஜாதகியின் தாயாருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். தாயார், ஜாதகியின் நாற்பதாவது வயதில் ஆனி மாதத்தில் வளர்பிறையில் தசமி திதியில் மரணமாவாள்.

*குறிப்பு :—தகப்பனார் மரண காலம்:—ஜாதகிக்கு முப்பத்தைந்தாவது வயதில் புத தசை நடக்கின்றது. தகப்பனாருடைய ஜன்ம லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். சில கிரந்தங்களில் ரிஷப லக்கினத்திற்குப் புதன் கூட மாரகாதிபதி என்று சொல்லி யிருக்கின்றது. இங்கு, புதன் பன்னிரண்டாவது மாரக ஸ்தானத்தில் இருக்கின்றார். ஆகையால் புதன் பிதுருக்கு மாரகஞ் செய்கின்றார். மேலும் புதன் கன்னிக்கு எட்டில் இருக்கின்றார். "ஆச்சப்பா பத்தெட்டில் கோள்கள் நிற்க அப்பனே அவரவர்கள் பொசிப்பு நாளில் கூச்சப்பா குழவியுட பிதுரைத் தேடி கொற்றவனே சண்டனுமே வருவான் கூறு" என்ற புலிப்பாணி ஜோதிடம் தொண்ணூற்றைந்தாவது (95) பாடல் பிரகாரம் எட்டிலுள்ள புதன் பிதுருக்கு மாரகராகின்றார். இவர் பத்திற்குடைய கர்மாதிபதியாக இருக்கின்றார்.

*குறிப்பு :—மாதுர் மாரக விஷயம்:—ஜாதகிக்கு நாற்பதாவது வயதில் புத தசை நடக்கின்றது, மாதுரு லக்கினம் தனுசு. இதற்குச் சந்திர காவியம் பிரகாரம் புதன் மாரகாதிபதியாகும். மேலும், புதன் கர்மாதிபதியாகின்றார். ஆகையால் புதன் தசையில் மாதுர் மரணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

30. சாதகி மரண காலம் சாற்றுவோம் யெழுபா னைந்தில்
மேதினில் மேட மாதம் வரும் பூர்ண பருவந் தன்னில்
அன்னமே கடகம் தன்னில் அவளுமே மரண மாவாள்
பின்னங்க ளொன்று மில்லை பேசினோம் செனனம்
[நன்றே.

30. ஜாதகியின் மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் தனக்கு எழுபத்தைந்தாவது வயதில் மேட மாதம் என்ற சித்திரை மாதத்தில் பூர்ணமான பௌர்ணமி திதியில் கடக ராசி வேளையில் மரணமடைவாள். இந்த ஜாதகிக்கு யாதொரு குறைவுகளுமில்லை. இவளுடைய பிறவி நல்ல பிறவியே யாகும்.

(முதற் பாகம் முற்றிற்று)

## இரண்டாம் பாகம்

31. எழுவரும் சொல்லும் போது யீஸ்வரி கேழ்க்க லுற்றாள்
தயவுடன் மூன்றும் பாவம் சாற்றுவா யென்று கேழ்க்க
நயமதாய் முடவன் மூன்றில் நலமுடனிருப்ப தாலே
பழுதுண்டு துணைவ ருக்குப் பதைத்தி யாயிருப்ப தாலே

31. இவ்விதமாகச் சப்த ரிஷிகள் சொல்லும் போது பார்வதியம்மை மையார் கேட்கவாரம்பித்தார். மூன்றும் பாவ விஷயமாகப் பலாபலன் களைத் தயவு செய்து சொல்லுவீர்களே என்று கேட்கவே, முடவன் என்ற சனி மூன்ருவது விட்டிலிருப்பதால், சகோதரர்களுக்குக் கெடுதி உண் டாகும்.

32. பாலகன் பிறக்கில் சாவாம் பரிதியும் பார்த்த தாலே
சீலமா யாண்பா லொன்று செப்பு வோம் தீர்க்க மாக
வேல்விழி கன்னி மூன்று மேதினில் தீர்க்க மாகும்
கோலமாய் ஐந்தாம் பாகம் கூறுவோம் மேலும் கேளே.

32. ஜாதகிக்குச் சகோதரன் பிறந்தால் உடனே அவன் இறந்து விடு வான். ஆனுல் பரிதி என்ற சூரியன் மூன்ருவது வீட்டைப் பார்த்ததால் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூன்று பேர்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள்*. இனிமேல் ஐந்தாவது பாகத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு;—வியாக்கியானம்:—சகோதர ஸ்தானுதிபதியும் சகோதரகரகனு மான அங்காரன் கேந்திரமாகிய ஏழாவது வீட்டில் வலிவுடன் இருந்து கொண்டு குருவால் பார்க்கப்படுவது சகோதர பாவத் திற்கு அநுக்கூலமான அம்சமாகும்.

33. அஞ்சினுக் குடையோன் நொண்டி அவனுமே மூன்றில் [நிற்கத்
தஞ்சமாய் வேந்தன் பார்க்கச் சாற்றுவோம் சனியும் [பார்க்க
மிஞ்சியே ஆண்பால் ரெண்டு மேவிய பெண்பா லவ்வாறு
கொஞ்சிடு மென்று தானும் குணமுடன் ரிஷிகள் கூற.

33. ஐந்திற்குடையவராகிய நொண்டி என்ற சனி மூன்ருவது வீட்டிலி ருப்பதாலும், ஐந்தாவது விட்டை வேந்தன் என்ற குருவும் பார்ப்பதாலும், சனியும் பார்ப்பதாலும் இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் பிறந்து உயிருடன் இருப்பார்கள் என்று முனிவர்கள் சொல்லவே

34. நாலுக்கும் யேழுக் குள்ளார்க் குரு திசையைச் சொல்வீர்
பாலுக்குள் நீர்சேர்ந்தாற் போல் பாக்கியம் மிகவே சேரும்
நூலினுள் பூமி கொஞ்சம் நிருபர்க்குக் கடைக்கு மம்மா.
சீலமாம் கிரகத்துக்குச் சேகரம் செய்வா னென்ருேம்.

34. நான்காம் வீட்டிற்கும் ஏழாவது வீட்டிற்கும் அதிபதியாகிய குரு வினுடைய தசையில் நடக்கும் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார். பாலுடன் ஜலம் கலந்ததைப் போலத் தனமும் சம்பத்துக்களும் வந்து சேரும். ஜாதகிக்குச் சிறிது நிலமும் வந்து சேரும் என்று சொல்லுகின்ருேம்.

35. செட்டினு லாப முண்டு செயமுண்டு யெடுத்த வேலை
நட்டங்களில்லை கண்டாய் நாடெல்லா முதவி யுண்டு
பட்டமாம் பெரியோ ராலே யினிவரு கலகம் தீரும்
துட்டர்கள் விலகி நிற்பார் சொல்லுவோம் கலகம் மேலும்
[கேளே.

35. ஜாதகிக்கு வியாபாரத்தினுல் லாபமுண்டாகும். தான் செய்யத் தொடுத்த காரியம் நல்லபடியே அநுகூலமாக முடிவு பெறும். பெரியோர் களின் உதவியால் இனி நேரிடப் போகின்ற கலகங்களும் கஷ்டங்களும் நிவர்த்தியாகும். கெட்டவர்கள் விலகி தூரத்திலிருப்பார்கள். இன்னும் அதிகமாகச் சொல்லுகின்ருேம், பார்வதியம்மையே ! கேட்பீராக.

36. பூவைக்கு வயதைந் திற்குள் புதுக்காளை கிருகம் நேரும்
தீவுடன் ஸ்தலங்கள் தன்னில் தீர்த்தமும் கிடைக்கு
[மம்மா
ஆவலாய் காரியும் தான் அவர் தசை தன்னிலே தான்
மேவிய தந்தையும் தான் மேதினில் மேவு வானும்.

36. ஜாதகிக்கு ஐந்து வயதிற்குள் புதிய மாடுகளும் வீடும் வரும். தெய்விக ஸ்தலங்களில் ஸ்நானஞ் செய்தல் நேரிடும், பார்வதியம்மையே! மேலும் காரி என்ற சனியினுடைய தசா காலத்தில் ஜாதகியின் தகப்பனுர் பூமியில் விருத்தி யடைவார்.

37. ஓதவே ஐந்து ஆண்டு ஒன்றுமே யுறவு மில்லை
ஏது காரணத்தி னுலே யென்றுமே அம்மன் கேழ்க்க
சூதுகள் தானும் உண்டு துளக்கமாய்ச் செய்வா னுகில்
வாதுகள் வருத்தம் நீங்கி வகையுடன் வாழ்வா ளம்மா.

37. ஐந்து வருஷம் வரையிலும் ஒன்றுமே நல்லதாக நடக்காது. எந்தக் காரணத்தினுல் இவ்வாறு சொன்னீர்கள் என்று பார்வதியம்மை யார் கேட்கவே, முனிவர் பதில் சொல்லுகின்ருர். கஷ்டங்கள் சூது மார்க்கமாக நேரிடும். இதற்குப் பரிகாரம் செய்யப்பட்டால் துன்பங்களும் கெடுதிகளும் நிவர்த்தியாகி ஜாதகியின் தகப்பனுர் நல்லபடியே, சுகமாக வாழ்வார், பார்வதியம்மையே !

38. சாந்தியும் செய்வானுகில் சந்ததி யுண்டு கண்டாய்
பந்தமாய்ச் செய்யா னுகில் பருகாது மதலை தானும்
சிந்தை பால் நினைத்து செய்யில் சென்று வசிய மாகும்
கந்தனைப் பெற்ற மாதே கழறின மொழி குன்ருது.

38. ஜாதகியின் தகப்பனுர் சாந்தியைச் செய்வாராகில் இவருக்குச் சந்ததியுண்டாகும், பார்வதியம்மையே ! சாந்தியைச் செய்யா விட்டால் பிள்ளை பிறக்காது. சிரத்தையுடன் செய்வாராகில் காரியம் தனக்கு அநு

கூலமாகும். ஆறுமுகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

39. லக்கினம் தசமத் தோனும் நாற்றிசைக் கீர்த்தி யோங்கும்
திக்கென பூமியாலும் செட்டினு லதிக லாபம்
பக்குவ மாக வாழ்வள் பாவைக்குக் குறைவுமில்லை
மிக்கவே சுபேக்ஷமாக மேதினில் வாழ்வா ளென்றேம்.

39. லக்கின பாவத்திற்கும் தசமம் என்ற பத்தாவது பாவத்திற்கும் உடையவராகிய புதன் மகா தசை காலத்தில் எவ்விடத்திலும் ஜாதகிக்குப் புகழுண்டாகும், பயிரிடும் நிலங்களாலும் வியாபாரத்தினுலும் ஜாதகிக்கு அதிக லாபம் உண்டாகும். ஜாதகி நல்லபடியே யிருந்து கொண்டு யாதொரு குறைவுமில்லாமல் வாழ்வாள். இவள் அதிகமான சம்பத்துக்களை உடையவளாகிப் பூமியில் வாழ்வாள் என்று சொல்லுகின்றேம்.

40. ஆலயம் வேலை தன்னை அவள் புதிதாகச் செய்வாள்
பாலர் களாலே செல்வம் பரிவுடன் வந்து நேரும்
மேலதாய்க் கீர்த்தி யோங்கும் மேன்மையாய் வாழ்வா
[ளென்றேம்
சீலமாம் ரிஷிகள் தானும் சிறப்பாக உரைத் திட்டாரே.

40. ஜாதகி கோயில் (மசூதி) வேலைகளைப் புதியதாகச் செய்வள். இவளுக்குத் தன்னுடைய பிள்ளைகளால் தனம் சம்பத்து ஆகிய இவை உண்டாகும். இவளுக்குப் பெருமை அதிகமாகிக் கொண்டே யிருக்கும். இவள் கௌரவத்துடனும் நல்ல அந்தஸ்திலிருந்தும் வாழ்வாள் என்று சொல்லுகின்றேம்.

41. எப்போதும் குறைவு மில்லை யின்பமாய் கோவு விருத்தி
செப்புவோம் பொருளும் பூமி சேர்ந்திடு மிவளுக்கே
[தான்
தப்பித மில்லை கண்டாய் சாதகி ஆயுள் மட்டும்
விப்பென விவேகத் தோடே மெல்லியு மிருப்பா
[ளென்றேம்,

41. ஜாதகிக்கு எப்போதும் கஷ்டங்கள் கிடையாது. இவளுக்குப் பசுக்கள் விருத்தியாகும். இவளுக்குச் சொத்துக்களும் நிலங்களும் வந்து சேரும். இவளுக்கு யாதொரு குறையுங் கிடையாது. இவள் தன்னுடைய ஆயுள் முடிவு காலம் வரையிலும் நல்ல அறிவுடனும் புத்தியுடனும் இருப்பாள் என்று சொல்லுகின்றேம.

42. யோகமும் உடைய ளாவள் உறுதியா மொழியு
[முள்ளாள்
போக போக்கியங்க ளுள்ளாள் புண்ணியம் மிகவே
[செய்வள்

நேரதா யுரைக்க மாட்டாள் நுண்ணிய புத்தி யுள்ளாள்
கோவலர் தன்னைச் செயிக்க குணமே அதிகம் சொல்வள்.

42. ஜாதகி யோகத்தை யுடையவளாவள். இவள் கெட்டியான கண்டிப்பான வார்த்தைகளைச் செல்லுவாள். இவள் சுகபோகங்களையும் சம்பத்துக்களையு முடையவளாவள். அதிகமான தானதர்மங்களை இவள் செய்வாள். இவள் எதிரில் நின்று கொண்டு பதில் சொல்ல மாட்டாள். இவள் கூர்மையான அறிவை யுடையவள். இவள் அரசர்களைக்கூட தன் பக்கம் வசப்படுத்திக் கொள்ளக் கூடிய நல்ல குணங்களையும் வார்த்தைகளையும் அதிகமாக வுடையவள்.

43. அலங்கார வார்த்தை சொல்வள் ஆண்கள்மே லிஷ்ட
[முள்ளாள்
கலங்காத மனமு முண்டு கபடுகள் இல்லா ளாகும்
நிலங்கள்மேல் பிரிய முள்ளாள் நெஞ்சமே யிரக்க
[முள்ளாள்
உளங் களிப்பாகவே தான் உறுதியாய்த் தொழுவா
[ளென்றோம்

43. இவள் அழகான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவாள். புருஷர்களிடத்தில் விசுவாச முடையவள். இவள் பயப்படாத மனத்தை யுடையவள். இவள் வஞ்சனை, கள்ளம் முதலியவற்றை யுடையவளல்லள். இவள் பயிரிடும் நிலங்களின் மேல் ஆசையுடையவள், இவள் தயாள குணமான மனத்தை யுடையவள். இவள் தன்னுடைய மனம் சந்தோஷத்தை யடையும்படியாகக் கடவுளைத் திடமாகத் தொழுது வணங்குவாள் என்று சொல்லுகின்றோம்.

44. வியாதியைச் சட்டை பண்ணாள் வரும்காரியம் நினைவில்
[காண்பள்
ஞாயம் பேச வல்லாள் நித்திரை சுகமு முள்ளாள்
தீயதை மனதி லெண்ணாள் திருவுமே யெப்போது
[முள்ளாள்
யீயவு மனமு முள்ளாள் யில்லையென் றுரையா ளாமே.

44. ஜாதிகி நோய்க் கிடங்கொடுக்க மாட்டாள். தான் செய்யப் போகின்ற காரியங்களை முன்னமே தன்னுடைய கனவில் பார்த்து விடுவாள். இவள் நியாயமாகப் பேசுந் திறமையை யுடையவள். இவள் நித்திரை சுகத்தை யுடையவள் அஃதாவது ஆனந்தமாகத் தூங்கக் கூடியவள். இவள் தன்னுடைய மனத்தில் கெடுதியை நினைக்க மாட்டாள். இவள் எப்போதும் செல்வத்தையும் லக்ஷ்மிகடாக்ஷத்தையும் உடையவளாவள். இவள் தயாள குணத்தையு முடையவளாவள். இவள் யாருக்கும் இல்லை என்று சொல்ல மாட்டாள்.

45. இந்திர போக முள்ளாள் யெதிரிக ளில்லா ளாகும்
வந்தவர்க் கன்ன மீவள் வாகனா முடைய ளாவள்
மைந்தர்கள் பிந்தி யுள்ளாள் மறு மொழி கூறுளாகும்
சந்ததம் யெங்கள் வாக்கு தப்பாது கேட் டிடாயே.

45. ஜாதகி இந்திர போகத்திற்குச் சமமான சுகபோகங்களை அநுபவிப்பாள்*. இவளுக்குச் சத்துருக்கள் கிடையாது. இவள் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவாள். இவள் தன்னுடைய பிற்காலத்தில் பிள்ளைகளை யுடையவளாவள். இவள் தடுத்துப் பதில் சொல்ல மாட்டாள். நாங்கள் சொல்லுகின்ற பலாபலன்கள் எப்போதும் தவறிப் போகாமல் நடக்கும். பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—சந்திரனுக்கு நான்காவது கேந்திரத்தில் குரு இருப்பது கேசரி யோகமாகும். குருவும் சுக்கிரனும் சந்திரனுக்குக் கேந்திரத்தில் யிருப்பது இராஜயோகமாகும். "குருசுக்ரௌ சந்திர கேந்திரம் இராஜ வல்லபௌ என்று வசன மிருக்கின்றது. சந்திரனுக்கு நல்ல விடங்களில் சுபக்கிரகங்களாகிய குரு, சுக்கிரன், புதன் ஆகிய இவர்கள் இருப்பது மிகவும் நல்லதாகும். லக்கினத்திற்கு நான்கு கேந்திரங்களிலும் கிரகங்கள் இருக்கின்றன. இவ்விதமே சந்திரனுக்கும் நான்கு கேந்திரங்களில் கிரகங்கள் இருக்கின்றன. இது விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய ஜாதகாலங்காரம் இருநூற்றொண்ணூற்றேழாவது (297-ஆவது) பாடலையும், 276-ஆவது பாடலையும், பார்க்கவும். கிரகங்கள் ஏழு வீட்டில் இருப்பதால் வீணையோக முண்டு. ஜாதகாலங்காரம் 322-ஆவது பாடலைப் பார்க்கவும். 274, 276-ஆவது பாடல்களையும் பார்க்கவும் —C. G. R.

# ஜாதகம் 12

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதி [2]குசன் ராகு மீனம் [3]மால் [4]ரவி [5]வண்டியாக
நிதி [6]புகர் குருவும் [7]வீணை [8]நீலனும் கேது [9]மாதை
இது வித கோளு நின்ருல் லக்கினம் கன்னியாக
கதி தனைச் சொல்லு மென்ன காதலி கேழ்க்க லுற்ருள்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகி, சந்திரனும் அங்காரகனும் ராகுவும் மீனத்திலும், புதனும் சூரியனும் கடகத்திலும் சுக்கிரனும் குருவும் மிதுனத்திலும், சனியும் கேதுவும் கன்னியிலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்க ஆரபித்தார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் அங்கா ராகு | | | சுக்கிரன் குரு |
| | இராசி சக்கரம் | | சூரியன் புதன் |
| | | | |
| | | | லக்கினம் சனி கேது |

உத்திரட்டாதி 1-ஆம் பாதம் சனி தசை ஞ 14—05—00

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—மேஷத்திற் கேதுவும், சிம்மத்திற் சந்திரனும், கன்னியிற் சூரியனும் புதனும் சனியும், துலாத்தில் ராகுவும், விருச்சிகத்திற் குருவும், தனுசிற் சுக்கிரனும், மீனத்தில் அங்காரகனும் ஆகும். புதன் வக்கிர கதியிலிருக்கிருர், அஸ்தமுமடைந்திருக்கின்ருர்.

---

1. சந்திரன்.
2. அங்காரகன்.
3. புதன்.
4. சூரியன்.
5. கடகம்.
6. சுக்கிரன்.
7. மிதுனம்.
8. சனி.
9. கன்னி.

## ஜனனமான நாட்டுச்சிறப்பு

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது செனன மாகும்
வித்தன் உதித்த யில்லம் விளம்புவோம் வடதென் [வீதி
பத்தியாய்க் கிழக்கு வாசல் பகருவோம் வடமேல் மாரி
அத்திமா முகத்தோன் கோஷ்டம் அறைகிறோம் தெற்கி [லேதான்.

2. அத்திரி ரிஷி சொல்லுகின்றார். ஆண் குழந்தை ஜனனமாகும். ஜாதகர் பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றோம். இது வடக்குத் தெற்குத் தெருவில் கிழக்கு வாசலை யுடையதாகும். வடமேற்குத் திக்கில் மாரியம்மன் கோயிலிருக்கும். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளின் கோயில் தென் மேற்கிலிருக்கும் என்று சொல்லுகின்றோம்.

3. பரமனைப் பூசை செய்யும் பச்சையும் கிழக்கில் தங்கும்
அருகினில் காளி தங்கும் அங்ஙனே மாரி நிற்பாள்
குறுகிய சிற்றூர் தன்னில் கூரையின் கிருக மாகும்
திறமையாய்த் தீயின் வம்சம் செனிப்பனும் சேஷ்ட னாகை.

3. சிவபெருமானைப் பூஜை செய்கின்ற பார்வதியம்மன் கோயில் கிழக்கிலிருக்கும். இதற்குச் சமீபத்தில் காளியம்மன் கோயிலிருக்கும். இவ்விடத்திலேயே மாரியம்மன் கோயிலு மிருக்கும். இவ்விதமான அடையாளங்களுள்ள ஒரு சிறிய கிராமத்தில் பிறந்த வீடு கூரை வீடாக விருக்கும். ஜாதகர் வணிகருடைய ஜாதியில் மூத்த குமாரனாகப் பிறப்பார்.

4. அன்னையின் தந்தை யோகம் அவன்துணை களத்திர [புத்திரர்
இன்னவன் செனன யோகம் இவனுட முன்பின் [சென்மம்
தன்னிலே சாந்தி தானும் சாற்றுவோ மின்னூல் [தன்னில்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட் டிடாயே.

4. தாய் தந்தையர்களுடைய யோகமும், ஜாதகருடைய சகோதரரின் யோகமும், மனைவியின் யோகமும், சந்ததிகளின் யோகமும், ஜாதகருடைய யோகமும், இவருடைய முன்ஜன்மமும் பின்ஜன்மமும் சாந்தியும் ஆகிய இவற்றை யெல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம், மேன்மை தங்கிய யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் மால்
[நிறத்தன்
எந்தையே சம தேகத்தன் யாவர்க்கு நல்லோ னுவன்
நொந்திடும் பேரைக் காப்பன் நேமியில் செட்டு
[செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மரும மில்லாத நெஞ்சன்.

5. ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றோம். இவர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒரு விதமான நிறத்தை யுடையவர். இவர் சமமான அளவுள்ள, நடுத்தரமான தேகத்தை யுடையவர். எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். இவர் ஏழைகளைக் காப்பாற்றுவார். வியாபாரத் தொழிலைச் செய்வார். இவர் தன்னிடத்திற்கு வருகின்றவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். கபடு வஞ்சனை கள்ளம் ஆகிய இவற்றை யுடைய மனத்தை யுடையவரல்லர்.

6. வண்டி வாகனமு முள்ளான் வாக்குகள் தவரு னுகும்
அண்டினேர்க் குதவி செய்வன் அற்ப வஸ்துக்களு
[மிஷ்டன்
சந்ததம் ஈகை யுள்ளான் தாம்பூல பிரிய னுவன்
தண்டமிழ்க் கல்வி யில்லான் சமர்த்தாக வார்த்தை
[சொல்வன்.

6. ஜாதகருடைய தகப்பனுர் வண்டியும் வாகனமுடையவராவர். இவர் தான் சொன்ன வார்த்தைகள் பிரகாரம் தவருமல் நடந்து கொள்ளக் கூடியவராவர். இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். அற்பமான வஸ்துக்களாகிய மச்சம் மாமிசம் ஆகிய இவற்றின் மேல் விருப்பமுடையவர். இவர் எப்போதும் கொடுக்குங் குணத்தை யுடையவராவர். வெற்றிலைப் பாக்குகளின் மேல் ஆசையுடையவராவர். இவர் தமிழைப் படித்தவரல்லர். இவர் சாமர்த்தியமாகப் பேசக் கூடியவர்.

7. ஆதியில் வறுமை யுள்ளான் அவன்தந்தை யாஸ்தி
[காணுன்
தீதுகள் ஒருவர்க் கெண்ணுன் சேயிழைப் பிரிய னுவன்
மேதினில் கிருஷி செய்வன் விளங்கிடு மூலச் சூடு
போதவே துணைவர் தன்னைப் போற்றுவோம் கேளும்
[தாயே.

7. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முற்காலத்தில் தரித்திரத்தை யும் கஷ்டங்களையும் அநுபவிப்பார். இவருக்குப் பிதுரார்ஜித சொத்து கிடை யாது. இவர் யாருக்குங் கெடுதிகளை நினைக்கமாட்டார். தன்னுடைய

மனைவிக்கு இஷ்ட மானவராகவிருப்பார். இவர் பயிர்த்தொழிலைச் செய்வார், இவருக்கு மூலச்சூட்டு ரோகம் இருக்கும். இவருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

8. ஆண் மகன் ஒருவன் தீர்க்கம் அம்பிகை நான்க தாகும்
பூணுவோன் துணைவன் வேருய்ப் புகலுமிக் குணத்தா
[னுக்குக்
காணவே தாரம் ரெண்டில் காதலி யிளையா ளுக்குத்
தோணுவா னிவவே யென்றோம் சொல்லுவோ மிவன்
[குணத்தை.

8. ஜாதகருடைய தகப்பனுருக்கு ஒரு சகோதரனும் நான்கு சகோதரிகளும் நீண்ட வயதையுடையவராக விருப்பார்கள். இந்தச் சகோதரன் வேறு குடும்பஸ்தராக விருப்பார். இவ்விதமான குணங்களை யுடைய தகப்பனுருக்குள்ள இரண்டு மனைவிமார்களில்* இளைய மனைவிக்கு இந்த ஜாதகர் பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்குக் களத்திர ஸ்தானுதிபதியாகிய ஏழிற்குடைய அங்காரகன் ரிஷபத்திற் பதினென்றில் இராகுவுடன் கூடி சனியால் பார்க்கப்பட்டிருப்பது களத்திர தோஷமாகும். களத்திரகாரகனுகிய சுக்கிரன் ரிஷபத்திற்கு அஷ்டமலாபாதி பதியாகிய குருவுடன் கூடியிருப்பது களத்திர தோஷமாகும். மேலும் இரண்டாவது களத்திர ஸ்தானம் ரிஷபத்திற்கு ஒன்பதாவது வீடாகிய மகரம். இதற்குரிய சனி ரிஷப லக்கினுதிபதியாகிய சுக்கிரனைப் பார்த்திருப்பது இரண்டு தாரயோகத்தைக் கொடுக்க கூடியதாகும். ஆகையால் பிதுருக்கு இரண்டு தார யோக அமைப்பு இருக்கிறது. இரண்டாவது தார வீட்டதிபதியாகிய சனி லக்கினத்திலேயே இருப்பதால் ஜாதகர் இரண்டாவது தாரத்தின் புத்திரராவர்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

9 மாநிறம் சம தேகத்தன் மருமமில்லாத நெஞ்சன்
தேன் மொழி கூறுவானும் செய்நன்றி மறவா னுகும்
ஆனவர் நேசம் கொள்வன் ஆசாரன் யூகை சாலி
தானமும் தருமம் செய்வன் சகலருக்கு நல்லோ னுவன்.

9. ஜாதகர் மாநிறமுள்ள, சம அளவுள்ள, நடுத்தரமான தேகத்தை யுடையவர். இவர், கள்ளம், கபடு, வஞ்சனை ஆகிய இவையில்லாத

மனத்தை யுடையவராவர். இவர் தேனைப் போல இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் தனக்குப் பிறர் செய்த உபகாரத்தை மறக்கமாட்டார். இவர் நல்லவர்களுடைய சிநேகிதத்தை யுடையவராவர். பகுத்தறியும் அறிவை யுடையவர். இவர் தான தர்மத்தைச் செய்வார். எல்லோருக்கும் நல்லவராக விருப்பார்.

10. கடன்கொள்ளான் யிடுக்க மில்லான் காதலி யிஷ்ட
[முள்ளான்
உடன் படான் பிழைகளுக்கு உறுதியா மனத்த னாகும்
இடமது புதிதாய்ச் செய்வன் யெதிரியை வசியம்
[கொள்வன்
திடமான குடும்பி யாவன் சிறப்பான கல்வி கற்பன்.

10. ஜாதகர் கடன் வாங்க மாட்டார். கஷ்டங்களில்லாதவர். மனைவியின் மேல் விருப்பமுள்ளவர், இவரை இவருடைய மனைவியும் விரும்புவாள், குற்றங்களையும் பாவங்களையுஞ் செய்ய சம்மதிக்க மாட்டார். இவர் நிலையான கெட்டியான திடமான மனத்தை யுடையவர். இவர் வீட்டைப் புதியதாகக் கட்டுவார், தன்னுடைய விரோதியைத் தன் பக்கமாக விருக்கும்படியாய்ச் செய்து கொள்ளுவார் இவர் மேன்மையான குடும்பஸ்தராவார், மேன்மையான வித்தையை யுடையவராவர்.

11. தாதையின் ஆஸ்தி தன்னைத் தானவன் விருத்தி
[செய்வன்
மேதினில் கீர்த்தி யேற்பன் விசேஷ பூமிகளும் சேர்ப்பன்
பாதகம் மொருவர்க் கெண்ணன் பலபல செட்டு
[செய்வன்
மாதவர் தமைத் துதிப்பன் அவன்பந்து மெச்ச வாழ்வன்.

11. ஜாதகர் தன்னுடைய பிதுரார்ஜித சொத்துகளை அதிகப்படுத்துவார். இவர் பூமியில் புகழை அடைவார், அநேக நிலங்களையும் சேர்த்து வைப்பார். இவர் யாருக்கும் கெடுதிகளை நினைக்கமாட்டார், பலவிதமான வியாபாரங்களைச் செய்வார். இவர் முனிவர்களையும் தவங்களைச் செய்கின்ற பெரியோர்களையும் வணங்குவார். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவப்படுத்தும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார்.

12. இன்னவன் செங்கை தன்னில் யிலகிடும் ருத்திர ரேகை
பன்னியே பேசவல்லன் பஞ்சைமே லிரக்க முள்ளான்
சொர்ணமும் பணிகள் சேர்ப்பன் சுகமுளான் ததிநெய்
[யிஷ்டன்
அன்னிய ஸ்திரீகள் மோகன் அம்பிகை யாளே கேளாய்.

12. இவருடைய சிவப்பான உள்ளங்கையில் ருத்திரரேகை என்று ஒரு விதமான ரேகையிருக்கும். இவர் விமரிசையாகவும் சாமர்த்தியமாகவும் பேசுந் திறமையை யுடையவர், ஏழைகளிடத்தில் பரிதாபமுடைவர். இவர் பொன்னையும் தனத்தையும் ஆபரணங்களையும் சேர்த்து வைப்பார், சுக முடையவர், தயிர் நெய் இவற்றின் மேல் விருப்பமுடைவர். இவர் பிறருடைய ஸ்திரீகளின் மேல் மையல் என்ற காம ஆசையையுடையவராவர். பார்வதியம்மையரே! கேட்பீராக.

## ஜாதகருடைய சகோதரபாவம்

13. இவனுடைத் துணைவர் தன்னை யியம்புவோ மைவ ராகும்
அவனியில் ஆண்பா லொன்று அவ்வாறே கன்னி [யாகும்
நவனியில் யிரண்டும் தீர்க்கம் நசித்திடு மூன்று தானும்
தவசியே துணைவன் சேதி சாற்றுவோம் கேளும் தாயே.

13. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர்கள் மொத்தம் ஐந்து பேராவர், இவர்களில் ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் ஆக இரண்டு பேர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாவர், மூன்று சகோதரங்கள் சீக்கிரம் இறந்து விடுவார்கள், தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையாரே! ஜாதகரின் சகோதரருடைய விஷயங்களைச் சொல்லு கின்றோம். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

14. கல்விமான் கிருஷி செய்வன் காலிக ளுடைய னாகும்
இல்லையென் றுரைக்க மாட்டான் யின்பமாய் வார்த்தை [கூறுவன்
சொல்லுமே நெறி யுள்ளோனும் துன்மார்க்கம் கொஞ்ச [முள்ளான்
இல்லறம் செய்வா னாகும் யியலிசை கற்பா னென்றோம்.

14. ஜாதகரின் சகோதரர் வாசித்தவராவர், பயிர்த்தொழிலைச் செய் வார். மாடுகளை யுடையவராவர், இவர் உதவிக்காகத் தன்னிடத்திற்கு வருபவர்களுக்கு இல்லை என்று சொல்ல மாட்டார், இவர் இனிமையாகப் பேசுவார். இவர் தான் சொல்லுகின்றபடியே நடந்து கொள்ளக் கூடியவர். இவர் சிறிது துன்மார்க்கத்தனத்தை யுடையவர், இவர் இல்லற தர்மங் களைச் செய்து வருவார். பாட்டு, சங்கீதம் இவற்றைக் கற்றுக் கொள்ளுவார்.

15. மனைவியு மொன்றே யாகும் மைந்தர்கள் ரெண்டு [யென்றோம்
அனையவே பெண்பா லவ்வார் அறைகிறோம் தீர்க்க [மாகப்
பிணையாகு மற்ற தெல்லாம் பிரியாம லுடனே வாழ்வன்
கனமுட னத்திரி சொல்லக் கௌசிகர் கூறு கின்றார்.

15. ஜாதகருடைய சகோதரர் ஒரே ஒரு மனைவியை யுடையவராவர். இவருக்கு இரண்டு குமாரர்களும் இரண்டு குமாரத்திகளும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகிறோம். மற்றக் குழந்தைகள் எல்லாம் சீக்கிரம் இறந்து விடுவார்கள். ஜாதகருடைய சகோதரர் ஜாதகருடன் கூடியிருந்து வாழ்வார் என்று அத்திரி ரிஷி சொல்லவே, கௌசிக மஹாரிஷி தடுத்துக் கேட்கின்றார்.

16. எப்படித் துணைவன் ஒன்றாய் யிசைகுவான் மூன்றோ
[னோடு
தப்பிதம் ராகு சேரில்:சகோதரன் வேறாய்ச் செல்வன்
முப்பது ஆறு ஆண்டில் மொழிகிறோம் குடும்பம் வேறு
செப்பின மொழி குன்றாது தேவியே கேட்டிடாயே.

16. எவ்விதம் ஜாதகருடன் இவருடைய சகோதரர் குடும்பத்தில் ஒன்றாய்க் கூடியிருந்து வாழ்வார்? மூன்றிற்குடைய அங்காரகனுடன் கெடுதியான ராகு கூடியிருப்பதால், சகோதரர் பிரிந்து வேறு குடும்பஸ்தராகப் போய்விடுவார் என்று சொல்லுகின்றேன் என்றார் கௌசிக மஹாரிஷி. இதற்கு அத்திரி ரிஷி பதில் சொல்லுகின்றார். ஜாதகருக்கு முப்பத்தாறாவது வயதில் குடும்பப் பிரிவினை ஏற்படும். நாங்கள் சொல்லிய பலாபலனகள் தவறிப் போகாமல் நடக்கும், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் பெரிய தாயாருடைய குணாதிசயங்கள்

17. அத்திரி யவ்வாறு சொல்ல அம்பிகை கேழ்க்கலுற்றாள்
சித்தமாய் முதல் தாயார்க்குச் சேயர்கள் சொல்லு
[மென்னக்
சுத்தமாய் மதலை காணாள் தேவியின் குணத்தைச்
[சொல்வேன்
குற்ற மில்லாத நெஞ்சம் கூறுமுன் கோபம் கொஞ்சம்.

17. அத்திரி ரிஷி இவ்விதமாகச் சொல்லவே பார்வதியம்மையார் கேட்க வாரம்பித்தார். ஜாதகருடைய முதலாவது தாயாருக்குப் பிறக்கும் பிள்ளைகளைப் பற்றிச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார். அதற்கு, அவளுக்குப் பிள்ளை கிடையாது*. அவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன், என்று அத்திரி ரிஷி பதில் சொல்லிவிட்டார். முதல் தாயார் கெடுதியில்லாத மனத்தையுடையவள், இவளுக்குப் பேசுவதற்கு முன்னமே சிறிது கோபம் வந்துவிடும்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—பெரிய தாயாருக்குப் பிள்ளையில்லாத விஷயம் :—ஜாதகருக்குத் தகப்பனாருடைய லக்கினம் ஒன்பதாவது விடாகிய ரிஷபம் ஆகும். இதற்கு முதல் தாரத்தின்

லக்கினம் ரிஷபத்திற்கு ஏதாவது வீடாகிய விருச்சிகம் ஆகும். ஆகையால் முதல் தாயாருடைய லக்கினம் விருச்சிகமாகும். இதற்குப் புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது வீடாகிய மீனத்தில் அங்காரகனும் ராகுவும் இருப்பதும் இதைச் சனி பார்ப்பதும் புத்திர தோஷமாகும். மேலும் மீனத்திற்குடையவரும் (அஃதாவது புத்திர ஸ்தானுதிபதியும்) புத்திரகாரகனுமாகிய குரு விருச்சிகத்திற்கு எட்டில் மறைந்து கொண்டு சனியால் பார்க்கப் படுவதும் புத்திர தோஷமாகும். ஆகையால் பெரிய தாயாருக்குப் பிள்ளை கிடையாது என்று இங்கு சொல்லியிருக்கின்றது.

18. மனமது வெகுளி யாகும் மானிலம் நல்லோ ளாவள்
விளைகளை யெண்ணு ளாகும் விளம்புவோம் நாபிச் சூடு
சென உபகாரி யாகும் சிறுத்தவர்க் கன்ன மீவள்
தன் வரன் மனம்போல வாழ்வள் சதா சுல்ப்பரோகி
[யென்றேம்.

18. ஜாதகருடைய பெரிய தாயார் தன்னுடைய மனத்தில் ஒன்றையும் ஒளித்து வைக்காமலிருப்பாள். இவளுக்கு நாபிப் சூட்டுரோக முண்டு. இவள் ஜனங்களுக்கு உதவியைச் செய்பவளாகும். ஏழைகளுக்குச் சாப்பாட்டைப் போடுவாள் இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாகவிருந்து கொண்டு வாழ்வாள். இவள் எப்போதும் சிறிது ரோகத்தை யுடையவள் என்று சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் பெரியதாயாருடைய முன்ஜன்மம்

19. அவளுடைப் பூர்வம் தன்னை யறைகிறேம் வாரி யோரம்
நவனியில் மாபெலியிலே தான் நாயகி கர்ண வம்சம்
இவளுமே உதித்தா ளென்றேம் யின்பங்க ளுள்ளா ளாகி
அவனியில் வாழு நாளில் அறைகிறே மூழி தானே,

19. ஜாதகரின் பெரிய தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவள் சமுத்திரக் கரையோரத்திலுள்ள மஹாபலிபுரத்தில் கருணீகருடைய குலத்தில் பிறந்தாள் என்று சொல்லுகின்றேம். இவள் சுபபோகங்களையனுபவித்துக் கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேம்.

20. பஞ்சையாய் ஸ்திரீயும் ஓர்நாள் பாலகன் தனக்கு அன்னம்
கெஞ்சியே யிவள்பால் செல்லக் கருவமாய் மர்மம்
[கொண்டு
வஞ்சிமேல் வெறுப் புண்டாகி மதலை சோரில்லை
[யென்றாள்
அஞ்சின வேழை தானும் அறைகுவாள் மன
வெறுப்பால்

20. ஏழையான ஒரு ஸ்திரீ ஒரு தினம் தன்னுடைய குழந்தைக்குச் சாதம் தேவை என்று சொல்லி இவளிடம் சென்று கெஞ்சிக் கேட்டாள். இவள் கர்வப்பட்டுக் கொண்டும் வஞ்சனையை யுடையவளாகியும் ஏழையின் மேல் கோபத்தை யுடையவளாகிக் குழந்தைக்குச் சாதம் இல்லையென்று சொல்லி விட்டாள். அதன் பேரில் பயத்தையடைந்த ஏழை ஸ்திரீ தன் மனத்தில் துன்பத்தை யடைந்து சாபத்தைக் கொடுக்கின்றாள்.

21. பாலர்கள் சாதமீயா பாவிக்கே மதலை யின்றி
ஞாலமேல் வாழ்வா யென்று நவின்று வேறில்லம்
[சென்றாள்
வேல்விழி மாது சாபம் மேவிற்று யிது வல்லாமல்
கோலமாய் மறையோன் பெற்ற குழவிக்குப்பா
[லில்லாமல்.

21. குழந்தைக்குச் சாதம் கொடுக்காத பாபியாகிய உனக்குக் குழந்தையில்லாமல் இந்தப் பூமியில் நீ வாழக்கடவாய்" என்று இந்த ஏழை ஸ்திரீ சொல்லிக் கொண்டு இன்னொரு வீட்டிற்குப் போய் விட்டாள். இந்த ஏழை ஸ்திரீயின் சாபம் இந்தப் பெரிய தாயாரை வந்தடைந்தது. இதுவுமல்லாமல் ஒரு பிராமணர் தன்னுடைய குழந்தைக்குப் பாலில்லாமல்

22. அடுத்துமே யிவளைக் கேழ்க்க அதற் கவ ளீயா ளாகித்
தடுத்துமே வார்த்தை கூற சஞ்சல மனத்த னாகி
விடம்போலே சொல்லு கின்றார் வித்தகி மறு
[சென்மத்தில்
அடவுடன் மதலை யின்றி அவனியில் வாழ்வா யென்று.

22. இந்தப் பெரிய தாயாரிடம் சென்று இவளைப் பாலைக் கொடு என்று கேட்க, இவள் அதைக் கொடுக்காமல் மறுத்துச் சொல்லிவிடவே, இந்தப் பிராமணர் துன்ப முற்று விஷத்தைப் போன்ற வார்த்தைகளைச் சொல்லுகின்றார். "நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் குழந்தை யில்லாமல் பூமியில் வாழக்கடவது" என்று

23. மறை குலத் தோர்கள் சொல்லி வந்தனர் இல்லம்
[தன்னில்
அறைந்தது அந்தத் தோஷம் அவளுமே அந்தி யத்தில்
குறையான அன்ன மாகிக் குன்மத்தால் மரண மாகிப்
பிரமனால் வரையப் பட்டு பிறந்தவ ளிவளே யென்றோம்.

23. பிராமணர் சொல்லிவிட்டுத் தன் வீட்டிற்குப் போய்விட்டார். இந்தச் சாபமும் இந்தப் பெரிய தாயாரை வந்தடைந்தது. இவள் தன்னுடைய கடைசிக் காலத்தில் சாப்பாட்டிற்குக் கஷ்டப்பட்டுக் கொண்டு குன்மரோகத்தால் இறந்து பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து இவள் பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம்.

24. இச்சென்மம் தன்னிலே தான் யிலகிடும் முன்னூழ்
[சாபம்
நச்சு போல் சேரு மென்றேம் நல்காது மதலே தானும்
எச்சாந்தி செய்தாலுந் தான் இரு பிறப்பாளர் சாபம்
அச்சுபோல் அடைந்த தென்றேம் அது விலகாது
[அம்மா.

24. இந்தப் பெரிய தாயாருக்கு இந்த ஜன்மத்தில் முன் ஜன்மத்திய சாபங்கள் வந்து சம்பவிக்கும் இந்தச்சாபங்கள் விஷயத்தைப் போலக் கொடியனவாக இவளுக்கு நேரிடும். இதனுல் குழந்தை பிறக்காது என்று சொல்லுகின்றேம். எப்படிப்பட்ட சாந்தியைச் செய்த போதிலும் பிராமண ருடைய சாபம் அச்சுபோலக் கெட்டியாய் இவளைப் பிடித்துக் கொள்ளும், அஃது இவளை விட்டு விலகிப் போகாது. பார்வதியம்மையே!

## ஜாதகரின் பெரிய தாயாருடைய பின்ஜன்மம்

25. இவளுட பின் சென்மத்தை யியம்புவோம் தணிகை
[உத்திரம்
அவனியில் பேரூர் தன்னில் அவள் சத்திரிய குலமுதித்து
நவனியில் பெருமை பூண்டு நாயகி வாழ்வா ளாகும்
தவசி போல் வேடம் கொண்ட சங்கரி மேலும் கேளே.

25. பெரிய தாயாருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். திருத்தணிக்கு வடக்கில் ஒரு பெரிய கிராமத்தில் க்ஷத்திரிய ஜாதயில் பிறந்து கௌரவத்துடன் வாழ்வாள். தவங்களைச் செய்கின்றவர்களைப் போல வேஷம் பூண்ட பார்வதியம்மையாரே! இன்னம் நாங்கள் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

26. பெத்தவள் மாதுர் சேதி பேசுவோ மிரு நிறத்தள்
உத்தம குணத்த ளாகும் உடன் படாள் பிழைகளுக்கு
வித்தகி உயரமில்லாள் விளம்புவோம் துணைவர் தன்னை
சிந்தமாய் ஆண்பா லொன்று செனித்த யில்
[வடகீழாகும்

26. ஜாதகரைப் பெற்ற தாயாருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவள் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறத்தை யுடையவள், இவள் நல்ல குணங்களை யுடையவளாகும், குற்றங்களையும் கெடுதிகளையும் பிறருக்குச் செய்யச் சம்மதிக்க மாட்டாள். இவள் உயரமாக விருக்க மாட்டாள். இவளுடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவளுக்கு ஒரு சகோதரனுண்டு. இவள் பிறந்த வீடு வடகிழக்கில் இருக்கும்.

## ஜாதகரின் தாயாருடைய முன்சென்மம்

27. அன்னையின் பூர்வம் தன்னை அச்சிறு வாக்கம் கீழ்பால்
உன்னத பேரூர் தன்னில் உதித்தவள் யிக் குலத்தில்
பொன்னொடு பணிதி யுண்டாய்ப் புத்திர ருள்ளா ளாகி
அன்னவள் தோகை தன்னில் அறுமுகன் அடிமை
[பூண்டு;

27. ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அச்சிறுவாக்கத்திற்குக் கிழக்கில் மேன்மையாயுள்ள ஒரு பெரிய கிராமத்தில் வணிகர் குலத்திற் பிறந்து, தனமும் ஆபரணங்களும் உடையவளாகியும் புத்திரர்களை யுடையவளாகியும் இவள் பழனியில் ஆறுமுகக் கடவுளுக்கு அடியாளாகித் தொழுது கொண்டு;

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

28. வருவோர்க்கு அன்ன மீந்து மரலியின் பதிக்குச் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளிவளே யென்றோம்
அறைகிறோ மிவள்பின் சென்மம் அக்காஞ்சி தன்னிலே
[தான்
விரைவினில் கங்கை சேயாய் மேவுவா ளென்று
[சொன்னோம்.

28. ஜாதகருடைய தாயார் தன்னிடத்திற்கு வருகின்றவர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டு வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். இவளுடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். காஞ்சீபுரத்தில் வேளாளர் குலத்திற் போய்ப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய முன்ஜன்மம்

29. தந்தையின் முன் சென்மத்தைச் சாற்றுவோம் காஞ்சி
[கீழ்பால்
சந்ததம் பேரூர் தன்னில் செங்குந்த மரபில் தோன்றித்
தந்தன மதிக முண்டாய்ச் சகலர்க்கும் நல்லோ னாகிச்
சொந்தமாய்த் தாகப்பந்தல் சுதனுமே வைத்தா
[னென்றோம்.

29. ஜாதகரின் தகப்பனாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் காஞ்சீபுரத்திற்குக் கிழக்கில் ஒரு பெரிய கிராமத்தில் செங்குந்தருடைய குலத்திற் பிறந்து சுயார்ஜித சொத்துக்களை அதிக

மாகச் சம்பாதித்து, எல்லோருக்கும் நல்லவராக விருந்து கொண்டு, ஒரு தாகப்பந்தலைச் சொந்தமாக ஏற்படுத்தினார் என்று சொல்லுகின்றோம்.

30. பெருமையாய்க் குடும்பி யாகிப் பிரபல செட்டு செய்து
வருமனை மதலை யுண்டாய் வடிவேலர் விடையும் செய்து
திருமகள் விலாசம் பூண்டு சுதனுமே வாழும் நாளில்
மரலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டு;

30. ஜாதகருடைய தகப்பனார் ஒரு கௌரவமுள்ள குடும்பஸ்தராக விருந்து கொண்டும், பெரிய வியாபாரத்தைச் செய்து கொண்டும், லக்ஷ்மி கடாக்ஷத்தைப் பெற்றும் வாழ்கின்ற காலத்தில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு,

## ஜாதகரின் தகப்பனாருடைய பின்ஜன்மம்

31. பிறந்தவ னிவனின் தந்தை பேசுவோ மிவன்பின் [சென்மம்
விரிஞ்சி நாடதற்கு மேல்பால் மேவிய நகரம் தன்னில்
பெருமையாய்ச் சத்திரிய சேயாய்ப் பிறப்பனே யவனே [யென்றோம்
கரி பரி யுடையனாகிக் கனமுடன் வாழ்வா னாமே.

31. இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தகப்பனார் வந்து பிறந்திருக்கின்றார். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் விரிஞ்சிபுரத்திற்கு மேற்கில் ஒரு பட்டணத்தில் கௌரவமான ஒரு க்ஷத்திரிய ஜாதியின் குடும்பத்தில் ஆணாகப் பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இவர் யானை, குதிரை ஆகிய இவற்றை யுடையவராகிப் பெருமையுடன் வாழ்பவராவர்.

32. முனிவர் யிவ்விதமாய்க் கூற மொழிகுவா ளம்மன் தானும்
தனயனு மிச் சென்மத்தில் சனநிந்தை யுடைய னாயும்
வினையது யதிகம் செய்தான் வித்தகன் பின் சென்மத்தில்
கனமுள க்ஷத்திரிய வம்சம் காவல னுதிப்பா னென்றீர்.

32. இவ்விதமாக அத்திரி ரிஷி சொல்லவே, பார்வதியம்மையார் தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருடைய தகப்பனார் இந்த ஜன்மத்தில் ஜனங்களுடைய அபவாதத்தையும் தூஷணத்தையும் உடையவராகியும், அதிகமான பாவங்களையுஞ் செய்து கொண்டும் இருந்த இவர் மறுஜன்மத்தில் மேன்மையான க்ஷத்திரிய குலத்தில் பிறக்க நேரிடும் என்று சொல்லி விட்டீரே!

33. ஏது காரணத்தி னாலே யியம்பினீர் முனியே நீர்தான்
ஓதுவேன் கேளு மம்மா உதித்தவ னிச் சென்மத்தில்

பேதக மில்லா தாயும் பூமியில் நல்லோ ஞயும்
தீதர்ன குணங்க ளின்றி சென உபகார ஞயும்.

33. எவ்வித காரணத்திஞல் இவ்விதமாக நீர் சொன்னீர்? முனிவரே! என்று பார்வதியம்மையார் கேட்க, அத்திரி ரிஷி பதில் சொல்லு கின்ருர். பார்வதியம்மையாரே! ஜாதகருடைய தகப்பஞர் இந்த ஜன்மத்தில் தவறுகளைச் செய்யாதவராயும் வேற்றுமைக ளில்லாதவராயும், பூமியில் நல்லவராகவும், கெட்ட குணங்களையுடையவராக வில்லாமலும், ஜனங்களுக்கு உபகாரங்களைச் செய்பவராயும்.

## ஜாதகரின் முன்ஜன்மம்

34. தேவதா பணியும் கொண்டு தீரனும் வாழ்வ தாலே
ஆவலாய்ப் பின் சென்மத்தில் அணுகுவான் சத்திரிய
[சேயாய்
மேவிய சாதகர்க்கு விளம்புவோ முன் சென் மத்தைச்
சேவலன் கொடியோன் தன்னை செல்வனைப் பெற்ற
[தாயே.

34. தெய்வங்களுக்குத் தொண்டு செய்பவராயும் இருந்து வாழ்வதாலே இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில் க்ஷத்திரிய ஜாதியில் பிறப்பார். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். சேவற் கொடியை யுடைய முருகக் கடவுளைப் பிள்ளையாகப் பெற்றெடுத்த எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

35. சாதகன் முன் சென்மத்தைச் சாற்றுவோம் தவளை
[தென்பால்
மேதினில் அருகிலே தான் வைசிய குல முதித்து
பாதக மன் மில்லாமல் பலவித செட்டு செய்து
மாதவர்க் கன்ப ஞயும் மானிலம் கீர்த்தி பெற்று;

35. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றி சொல்லுகின்ருேம். இவர், தவளை பூஜை செய்து மோக்ஷம் பெற்ற ஸ்தலத்திற்குத் தெற்கில் சமீபத்திலுள்ள ஒரு கிராமத்தில் வைசிய ஜாதியிற் பிறந்து, கெடுதியான மனத்தை யுடையவராக வில்லாமல், அநேக வியாபாரங்களைச் செய்து கொண்டு, முனிவர்களுக்கும் தவங்களைச் செய்கின்ற பெரியோர்களுக்கும் அன்புடையவராக விருந்து கொண்டும், இந்த பூமியில் புகழைப் பெற்றும்;

36. துணைவர்கள் மனைவி புத்திரர் சுகமுடன் வாழ்ந்தா
[னென்ருேம்
பிணையிலா தட்சிணத்தில் பல பல தீர்த்தம் தோய்ந்து

கனமுடன் (சேது) சென்று கடவுளை அர்ச்சித் தேத்தி
அணையவே உள்ளூர் சென்று அவனுமே சிலநாள்
[சென்று;

36. சகோதரர்கள், மனைவி, புத்திரர்கள் ஆகிய இவர்களுடன் சுக மாகவும் வாழ்ந்தார் என்று சொல்லுகின்றோம். இவர் தெற்கிலுள்ள அநேக தெய்வீக ஸ்தலங்களுக்குப் போய் அங்குள்ள குளம் நதி முதலிய நீர் நிலை களில் ஸ்நானஞ் செய்து, பிறகு சேது என்ற க்ஷேத்திரத்திற்குப் போய் கடவுளுக்கு அர்ச்சனை முதலியவற்றைச் செய்து, அவரைத் தொழுது, பிறகு தன் கிராமத்திற்குச் சென்று சில காலம் வாழ்ந்து;

37. பித்தமாம் சுரத்தி னாலே புக்கினன் மரலி பக்கல்
வித்தகன் பிரமன் லக்கம் மேதினில் வரையப் பட்டு
சித்தச னொப்ப தாகச் செனித்தவ னிவனே யென்றோம்
உத்தமன் யோகம் தன்னை உரைக்கிறோம் கேளு தாயே.

37. பித்த ஜுரத்தினால் இறந்து எமனிடத்திற்குப் போய், பிறகு பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, மன்மதனுக்குச் சமமான ரூபத்தை யுடையவராக இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லு கின்றோம். ஜாதகருடைய யோக பாவத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின் றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய யோகபாவம்

38. ஈரேழு ஆண்டு மேலே யிவனுக்கு விசேஷ யோகம்
தீரமாய்ப் பூமி சேர்ப்பன் சித்திர வீடு செய்வன்
பாரெல்லாம் கீர்த்தி யேற்பன் பாக்கியம் சேர்ப்பா னாகும்
வீரியன் உதித்த பின்பு விளங்கிடும் தந்தை யோகம்.

38. ஜாதகருக்குப் பதினான்கு வயதிற்கு மேலே அதிகமான யோகம் ஏற்படும். இவர் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். சித்திரங்க ளுள்ள ஓர் அழகான வீட்டைக் கட்டுவார். இவருக்கு எவ்விடத்திலும் பெருமையும் புகழுமுண்டாகும். இவர் செல்வத்தைச் சேர்த்து வைப்பார். இந்த ஜாதகர் பிறந்த பிறகு இவருடைய தகப்பனாருக்கு யோக முண்டாகும்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

39. இன்னவன் மணத்தின் காலம் யியம்புவோம் பதினே
[ழாண்டில்
கன்னிகை வடகீழ் தன்னில் காதலி மாதுர் வர்க்கம்

அன்னவள் வருவா ளாகும் அவள்குணம் அழகு
[முள்ளாள்
உன்னத மிரு சிவப்பு உத்தமி யோக சாலி.

39. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பதினேழாவது வயதில் மனைவி வடகிழக்குத் திக்கிலிருந்தும், மாதாவின் பந்துக்களிலிருந்தும் வருவாள். இவளுடைய குணங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகாக விருப்பாள். இவள் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறத்தை யுடையவள். இவள் யோகத்தை யுடையவளாவள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—விவாக விஷயம் :—ஜாதகருக்குப் பதினே ழாவது வயதில் புத தசை நடக்கின்றது. இரண்டிற்குடைய வராகிய சுக்கிரன் மிதுனத்தில் புதன் வீட்டில் இருக்கின்றார். மேலும் புதன் பத்திற்குடையவராகவும் இருக்கின்றார். ஜாதக பாரி ஜாதகம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதா வது (29-ஆவது) சுலோகப் பிரகாரம் இரண்டிற்குடையவர் இருக்கின்ற ராசிநாதனுடைய தசையிலும், பத்திற்குடையவரு டைய தசையிலும் விவாகம் நடக்கும். ஆகையால் இங்கு புத தசையில் விவாகம் நடக்கும் என்று சொல்லப்பட்டிருக் கின்றது.

## ஜாதகருடைய புத்திரபாவம்

40. அடக்கமு முடைய ளாகும் அன்னங்கள் போட வல்லாள்
நடக்கையும் நல்ல தாகும் நாயகன் மனம்போல்
[வாழ்வள்
துடுக்கென கூறு ளாகும் சொல்லுவோம் புத்திர பாகம்
திடமுடன் ஆண்பால் ரெண்டு சேயிழை மூன்று
[யென்றோம்

40. ஜாதகருடைய மனைவி பொறுமையும் அமைதியுமுடையவளா வள். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் போடுந் திறமையுள்ளவள். இவள் நல்லொழுக்கங்களை யுடையவள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற் குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருந்து வாழ்வாள். இவள் அவசரப் பட்டு வார்த்தைகளைச் சொல்ல மாட்டாள். ஜாதகருடைய சந்ததிகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். இரண்டு ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் தீர்க்கமாக உண்டு என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாய்தகப்பனார்களின் மரணகாலம்

41. மற்றது யிரண்டு சேதம் வரைகிறோ மிவனுக்கே தான்
உற்றதோர் தாய் தந்தைக்கே உரைக்கிறோம் மரண
[காலம்

சித்தமாய் யிருபா னேழில் சித்திரை மாதம் தன்னில்
வித்தகன் தந்தைக்கே தான் விளம்புவோம் கண்டம்
[தானே.

41. ஜாதகருக்கு இதர இரண்டு குழந்தைகள் சீக்கிரம் இறந்து போய் விடும் என்று சொல்லுகின்றோம். ஜாதகருடைய தாயார் தகப்பனார் ஆகிய இவர்களுக்கு மரண காலத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் சித்திரை மாதத்தில் இவருடைய தகப்பனார் இறந்து போவார் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—பிதுர் மாரக விஷயம். ஜாதகருக்கு இரு பத்தேழாவது வயதில் புதன் தசை நடைக்கின்றது. புதன் பிதுர்காரகராகிய சூரியனுடன் கூடி வக்கிர கதியிலும், அஸ்த மடைந்தும் இருக்கின்றார். இவர் பத்திற்குடையவராகிக் கர்மாதிபதி யாயிருக்கின்றார். ஆகையால் இவருக்குப் பிதுர் மாரகஞ் செய்ய அதிகாரம் ஏற்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய பெரியதாயார், தாயார் இவர்களுடைய மரணகாலம்

42. முதல் மாதா முப்பதாண்டில் முயர் ஆடி மாதம் தன்னில்
சதமுடன் கர்மம் மாகும் சாதகன் தன்னைப் பெற்ற
மதி நுதல் மாதுருக்கு வுரைகிறோம் நாற்ப தாண்டில்
முதிய பங்குனி மாதத்தில் மொழிகிறோம் கர்மம் தானே.

42. ஜாதகருடைய பெரிய தாயாருக்கு, ஜாதகருடைய முப்பதாவது* வயதில் ஆடி மாதத்தில் மரணம் நேரிடும். ஜாதகரைப் பெற்ற, சந்திர பிம் பத்தைப் போல அழகான நெற்றியை யுடைய தாயாருக்கு ஜாதகருடைய நாற்பதாவது வயதில்* பங்குனி மாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லு கின்றோம்.

குறிப்பு :—வியாக்கியானம்:—பெரிய தாயார் மரண கால விஷயம்:—பெரிய தாயார் லக்கினம் ஒன்பதிற்கு ஏழாவது வீடாகிய விருச்சிகம் ஆகும். விருச்சி லக்கினத்திற்குப், புதன், ஜாதக சந்திரிகை ஐம்பத்தெட்டாவது (5,8). சுலோகப் பிரகாரம் மாரகராகின்றார். ஆகையால் புத தசைக் காலத்தில் முப்பதாவது வயதில் பெரிய மாதாவுக்கு மாரகம் சொல்லியிருக்கின்றது.

குறிப்பு :—மாதுர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. மாதுர் லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இந்தத் தனுசு லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகரா கின்றார். இந்தச் சுக்கிரன் மாதுரு லக்கினதிபதியாகிய குரு

வுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது (12, 20) பாடல்கள் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்றார். ஆகையால் மாதாவுக்குச் சுக்கிர தசையில் மாரகம் சொல்லியிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலம்

43. சாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுபா னறில்
மேதினில் துலா மாதத்தில் வளர்ப்பிறை சார்பு தன்னில்
தீதான சுரத்தி னாலே தேகமே வாடு மென்றோம்]
போதக வானைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

43. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு அறுபத்தாறுவது வயதில்* துலா மாதம் என்ற ஐப்பசி மாதத்தில் வளர் பிறையில் கெடுதியான ஜுரத்தினால் இவருக்கு மரணம் சம்பவித்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும் என்று சொல்லுகின்றோம். இளம் யானை முகத்தை யுடைய விநாயகரைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம் :—ஜாதகருடைய மரண கால விஷயம் :—ஜாதகருக்கு அறுபத்தாறுவது வயதில் சந்திர தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது (54) சுலோகப் பிரகாரம் சந்திரன் மாரகராகின்றார். இந்தச் சந்திரன் எட்டிற்குடைய அங்காரகனுடன் கூடியிருக்கின்றார். ஆகையால், துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது :இருபதாவது (12, 20) பாடல்கள் பிரகாரமும் சந்திரன் ஜாதகருக்கு மாரகரான்றார்.

## ஜாதகருடைய மறுஜன்மம்

44. மறுசென்மம் தணிகை தன்னில் மறைகுலம் தன்னி
[லுதித்து
திருமகள் விலாசம் பூண்டு செகராசர் பக்கல் சேர்ந்து
அதிகார முடைய னாகும் அதிக பாக்கியமும் சேர்ப்பன்
பெருவயி றோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

44. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் திருத்தணியில் பிராமணர் குலத்திற் பிறந்து, லக்ஷ்மி கடாக்ஷத்தை அடைந்து அரசரிடத்தில் அதிகார முள்ள வேலையைப் பெறுவார். இவர் அதிகமான செல்வத்தைச் சேர்த்து வைப்பார். பெரிய வயிற்றை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

45. செனித்திடுங் காலம் தன்னில் சனிதிசை பதினு லாண்டும்
குனித்திடுந் திங்க ளைந்தும் கூறுவோம் பலனை யாங்கள்

துணைவர்கள் விருத்தியாகும் சோர்ந்திடும் சிலது
[தானும்
பிணையான பிணியு மெய்தும் பூமியும் சல்லியம் நேரும்.

45. ஜாதகர் பிறக்குங் காலத்தில் சனி மகா தசையில் இருப்பு பதிமூன்கு வருஷங்களும் ஐந்து மாதங்களும் ஆகும். இக்காலத்தில் நடக்கும் பலாபலன்களைச் சொல்லுகின்றோம். ஜாதகருக்குச் சகோதரர்கள் விருத்தியாவார்கள். சில சகோதரர்கள் இறந்து விடுவார்கள். ஜாதகருக்கு நோய் காணும். நிலங்களின் மேல் கடன் உண்டாகும்.

46. அன்னையின் வர்க்கம் சூதம் அணுகிடு மிது வல்லாமல்
தன்தந்தை பலனைச் சொல்வேன் சல்லியம் நேர்ந்த
[பின்பு
பின்னையும் நிவர்த்தி யாகும் பூமியில் செட்டு ஓங்கும்
அன்னையே பின் பாகத்தில் அரைகிறோம் விபர மாக.

46. ஜாதகருக்குத் தாயார் வழியில் சூதகம் ஏற்படும். இவருடைய தகப்பனுருக்குப் பலாபலன்களைச் சொல்லுகின்றேன். இவருக்குக் கடன் சம்பவிததுப் பிறகு அது நிவர்த்தியாகிவிடும். இவருக்கு வியாபாரம் விருத்தியடையும். எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம்.

—C. G. R.

---

# ஜாதகம் 13

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதியது ஒன்பான் நிற்க [2]மைந்தனும் ராகு [3]லாபம்
நிதி[4]புகர் [5]சேயும் சிம்பம் நின்புதன் குருவும் [6]கோலாம்
வதி[7]ரவி கன்னியாக [8]மானில் [9]செம்பாம்பு தங்க
பதியது ஜென்மம் [10]தோகை பகருவீர் பலன்கள் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகி, சந்திரன் ஒன்பதிலும், சனியும் ராகுவும் பதினொன்றிலும், சுக்கிரனும் அங்காரகனும் சிம்மத்திலும், புதனும் குருவும் துலாத்திலும், சூரியன் கன்னியிலும், கேது மகரத்திலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் முனிவர்களைக் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் | |
| | இராசி | | சனி ராகு |
| கேது | சக்கரம் | | அங்காரகன் சுக்கிரன் |
| | | புதன் குரு | லக்கினம் சூரியன் |

ரோகிணி 2-ஆம் பாதம். சந்திர தசை இருப்பு 5—01—00.

*குறிப்பு:—இந்த ராசிச்சக்கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :—மேஷத்தில் அங்காரகனும், ரிஷபத்திற் சந்திரனும், கடகத்திற் சூரியனும், சிம்மத்திற் கேதுவும், விருச்சிகத்திற் சனியும், தனுசிற் சுக்கிரனும், மகரத்திற் புதனும், கும்பத்தில் ராகுவும், மீனத்திற் குருவும் ஆகும். சுக்கிரன் வக்கிர கதியில் இருக்கின்றார்.

1. சந்திரன்.
2. சனி.
3. பதினொன்று.
4. சுக்கிரன்.
5. அங்காரகன்.
6. துலாம்.
7. சூரியன்.
8. மகரம்.
9. கேது.
10. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. வந்தவன் கீழ்மேல் வீதி வாசலில் யெமனின் பார்வை
பந்தியு மீசன் கீழ்பால் சாமுண்டி உத்தர மாகும்
பந்தமாய் மேற்கில் மாயோன் பாஞ்சாலி அதன்மேல் [தங்கும்
சந்ததம் மாரி துர்க்கை தந்தியும் தென்மேல் தானே.

2. பிறந்த ஆண் குழந்தையின் வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்குப் பார்த்த வாயிற்படியை உடையதாகும் என்று முனிவர் சொன்னூர். சிவபெருமானுடைய கோயில் கிழக்கில் இருக்கும். சாமுண்டீஸ்வரியின் கோயில் வடக்கிலிருக்கும். மகாவிஷ்ணுவின் கோயில் மேற்கிலிருக்கும் திரௌபதியம்மன் கோயில் இதற்கு மேற்கே யிருக்கும். மாரியம்மன் கோயிலும், துர்க்கையின் கோயிலும், விநாயக் கடவுளின் கோயிலும் தென் மேற்கிலிருக்கும் என்றுர் முனிவர்.

3. இவ்வித யடையா ளத்துள் யிலகிய சமவூரில் தான்
பவ்வமாய்ப் பிரம்ம சேயாய்ப் பாலகன் ஆண்பால் [சென்மம்
நவ்விய மாதுர் தந்தை நன்துணை களத்திர புத்திரர்
திவ்விய முன்பின் சென்மம் செப்புவோம் கேளு மாதே.

3. இவ்விதமான அடையாளங்களையுடைய ஒரு நடுத்தரமான கிராமத்தில் பிராமணர் குலத்தில் இந்தக் குழந்தை ஆண் குழந்தையாகப் பிறக்கும். தாயார், தகப்பனுர், சகோதரர்கள், மனைவி, சந்ததி முன் பின் ஜன்மங்கள் ஆகிய இவர்களையும் இவற்றையும் பற்றி இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்ருேம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

4. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோ மிரு [சிவப்பன்
சந்ததம் வாயு முண்டு தாட்சண்ணியன் பித்த தேகி
நொந்திடும் பேரைக் காப்பன் நுவலப தேசமுள்ளான்
சிந்தையில் கபடு மில்லான் சீல மாச்சார முள்ளான்.

4. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவராவர். இவர் வாயு குணத்தையுமுள்ள தேகத்தை யுடையவர். தயாள குணமுடையவர். இவர் பித்த குணமுடைய தேகத்தை யுடையவர். இவர் ஏழைகளைக் காப்பாற்றுவார். இவர் பெரியோர்களி

டத்தில் உபதேசத்தைப் பெற்றவராவர். இவர் வஞ்சனே, கள்ளம் ஆகிய இவற்றையுடைய மனத்தை யுடையவரல்லர். சீலமும் சுத்தமும் நல்ல ஒழுக்கங்களையும் உடையவராவர்.

5. அதிகார முடைய னுவன் ஆள்கார ரதிக முள்ளான்
பதியினில் திரியு முள்ளான் பகைவர்கள் வணங்க
[வாழ்வன்
ததிநெய்பா லிஷ்ட முள்ளான் சற்சன ருறவு கொள்வன்
நிதிமிகத் தேட வல்லான் நீள்நில மதிகம் சேர்ப்பன்.

5. ஜாதகருடைய தகப்பனுர் அதிகாரமுள்ளவராவர். இவர் அனேக வேலைக்காரர்களை அதிகாரஞ் செய்வார். தன்னுடைய வேலையில் கெட்டிக்காரராக விருப்பார். இவரை இவருடைய விரோதிகள் வணங்கும்படியாக வாழ்வார். இவர் தயிர், நெய், பால் ஆகிய இவற்றின் மேல் பிரியமுள்ளவராவர். நற்குணமுடையார். இராஜாங்க மனிதர்கள் அரசர்கள், ஆகிய இவர்களுடைய சிநேகிதத்தை யுடையவராவர். இவர் அதிகமான செல்வத்தைச் சம்பாதிக்க கூடியவர். அதிகமான பூமியைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார்.

6. சித்திர வீடு செய்வன் செனங்களை ஆதரிப்ப னிவன்
நித்தியம் சுகி பொசிப்பன் நெஞ்சினில் கபடு மில்லான்
பத்தினி யிரண்டு முள்ளான் பாலர்கள் அவ்வா ருகும்
குற்ற மில்லாத நெஞ்சம் கோவலர் மெச்ச வாழ்வன்.

6. ஜாதகருடைய தகப்பனுர் அழகான சித்திரங்கள் அடங்கிய வீட்டைக் கட்டுவார். ஜனங்களைக் காப்பாற்றுவார். இவர் தினந்தோறும் சுகமான நல்ல சாப்பாட்டைச் சாப்பிடுபவராவர். இவர் தன்னுடைய மனத்தில் வஞ்சனை கள்ளம் ஆகிய இவற்றை யுடையவரல்லர். இவர் இரண்டு மனைவிமார்களை யுடையவராவர். இரண்டு குழந்தைகளை உடையவராவர். இவர் வஞ்சனையில்லாத நல்ல மனத்தை யுடையவர். அரசர்கள் இவரைப் புகழும்படியான நிலைமையிலிருந்து கொண்டு வாழ்வார்.

7. நாட்டினில் யெவர்க்கு நண்பன் நாதனுர் பத்தி
[யுள்ளான்
தாட்டியாய்ப் பேச வல்லான் சதாவுமே அலைச்ச
[லுள்ளான்
மேட்டிடாய் குடும்ப முள்ளான் விளைபுலம் விருத்தி
[செய்வன்
தேட்டையாம் குணத்த னுகும் தீரமா மனத்த
[னென்றேம்.

7. ஜாதகருடைய தகப்பனுர் கிராமத்தில் எல்லோருக்கும் சினேகித ராக விருப்பார். இவர் கடவுளின் மேல் அன்புடையவராவர். இவர் தைரியமாகப் பேசுந் திறமையை யுடையவர். எப்போதும் தொந்தரவு, வருத்தம், நிலையின்மை ஆகிய இவற்றை யுடையவர். இவர் மேன்மையான குடும்பஸ்தராவர். இவர் பயிரிடும் நிலங்களைப் பயிரிட்டுத் தானியவகைய ருக்களை அதிகமாக்குவார். இவர் தெளிவான நல்ல குணத்தை யுடையவ ராவர். தைரியமான மனத்தை யுடையவர் என்று சொல்லுகின்ரேம்,

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

8. இவனுடைய துணைவர் தம்மை யிசைகுவோம்
[பலத்தைக் காணும்
அவனுமே தனிய னுவன் அக்குண முடையோ னுக்கு
நவனியில் யிந்தப் பாலன் நல்கினுன் யிவன் தன் சேதி
கவனமாய்ச் சொல்லுவோம் யாங்கள் காதலி மேலும்
[கேளே.

8. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்களைப் பற்றி சொல்லுகின் ரேம். சகோதர பாவத்திற்கு வலிவு கிடையாது. இந்தத் தகப்பனுர் சகோதரரில்லாமல் ஒருவராகவே விருப்பார். இப்படிப்பட்ட குண குணங் களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறந்திருக்கின்ருர். இவருடைய விஷயங்களைப் பற்றி இனிமேல் நாங்கள் ஜாக்கிரதையாகச் சொல்லுகின் ரேம், பார்வதியம்மையே ! இன்னம் கேட்பீராக.

*குறிப்பு—வியாக்கியானம்:—தகப்பனுருடைய சகோதர விஷயம்:—பிதிரு லக்கினம் ஒன்பதாவது விடாகிய ரிஷபம் ஆகும். இதற்குச் சகோதர பாவமாகிய கடகத்தில் மூன்ருவது வீட்டில்) சனி ராகு இருப்பது சகோதர தோஷமாகும். மேலும் ரிஷபத்திற்கு மூத்த சகோதர ஸ்தானமாகிய மீனத்திற்குடைய குரு, ரிஷபத் திற்கு ஆறிலும் தன் வீட்டிற்கு எட்டிலும் மறைந்திருப்பது சகோதர தோஷமாகும். மீனத்தைச் செவ்வாய் பார்ப்பதும் சகோதர தோஷமாகும். மூன்றில் சனி இருக்கும் விஷயமாகச் சம்பு ஷோராபிரகாசிகா சகஜ பாவம் ஐம்பத்தெட்டாவது (58-ஆவது) சுலோகத்தைப் பார்க்கவும்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

9. சாதகன் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த
[மேனி
மேதினில் ஒடிச்சல் தேகி வித்தகன் யூகை முள்ளான்
ஆதியில் அன்னத் துக்கு அவனுமே தரித்திர முள்ளான்
சீதள குணத்த னுகும் செந்திரு விலாச முள்ளான்.

9. ஜாதகருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சிவப்பு நிறமான தேகத்தை யுடையவர். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் பகுத்தறியுந்தன்மையுள்ள நுட்பமான அறிவை யுடையவர். இவர் தன்னுடைய முற் காலத்தில் சாப்பாட்டிற்குக் கஷ்டப் படுவார். இவர் சீதளமான தேகத்தை யுடையவர். லக்ஷ்மீகடாக்ஷத்தை யுடையவர்.

10. கல்வியு முடைய னுவன் கனத்தவர் நேசம் கொள்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையும் நேசம்
[கொள்வன்
தொல்புவி விருத்தி செய்வன் சோம்பலும் கொஞ்ச
[முள்ளான்
நல்லவர் பலர்க ளாலே நாட்டினில் கீர்த்தி யேற்பன்.

10. ஜாதகர் படித்தவராவர். பெரியோர்களுடைய சினேகத்தை யுடையவராவர். இவர் தன்னிடத்திற்கு வருகின்றவர்களுக்கு உதவியைச் செய்ய தன்னிடத்தில் ஒன்றுமில்லை என்று சொல்ல மாட்டார். இவர் எல்லோரையும் சினேகஞ் செய்து கொள்வார். இவர் புராதனமான நிலங்களைப் பயிரிட்டுத் தானியவகைபருக்களை அதிகப்படுத்துவார். இவர் சிறிது சோம்பலையும் உடையவராவர். நல்லவர்கள் பலரால் இவர் புகழப்படுவார்.

11. வாகன முடைய னுவன் வள்ளல்மேல் பக்தி யுள்ளான்
தோகையர் வார்த்தை கேட்பன் துணைவர்சொல்
[தப்பா னுகும்
மோகமு முடைய னுவன் மொழிவனும் கட்டு வார்த்தை
போகமு முடைய னுகும் புண்ணிய மனத்த னுகும்.

11. ஜாதகர் வாகனத்தை யுடையவராவர். கடவுளின் மேல் அன் புடையவர். இவர் ஸ்திரீகளின் பேச்சைக் கேட்டு அவர்கள் சொல்லு கின்றபடி நடந்து கொள்ளுவார். தன்னுடைய சகோதரர்களுடைய வார்த் தைக்கு விரோதமாக நடந்து கொள்ள மாட்டார். இவர் ஸ்திரீகளின் மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவர் புனைந்த வார்த்தை களையும், பொய் வார்த்தைகளையும், பழ மொழிகளையும் சொல்லுவார். இவர் சுகபோகங்களை அநுபவிக்கக் கூடியவர். இவர் தான தர்மஞ் செய் கின்ற நல்ல மனத்தை யுடையவராவர்.

12. தனமது அதிக முள்ளான் தன்பந்து மெச்ச வாழ்வன்
கனமுள புத்தி யுள்ளான் கைப்பொருள் செலவு
[செய்யான்
சினமது உடைய னுகும் சித்தினி சாதி யாகும்
அனையவே மாதிர் வர்க்கம் அதுவுமே விருத்தி யாகா.

12. ஜாதகர் அதிகமான சொத்தை யுடையவர். இவர் தன்னுடைய பந்துக்கள் இவரைக் கௌரவப் படுத்தும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் மேன்மையான நல்ல புத்தியை யுடையவர். தன்னிடத்திலுள்ள தனத்தை வீணுகச் செலவு செய்ய மாட்டார். இவர் கோபத்தை யுடையவராவர். இவர் நால்வகை ஜாதி மனிதர்களில் ஒருவகையான சித்தினி* ஜாதியைச் சேர்ந்தவராவர். இவருடைய தாயாருடைய பந்துக்கள்* விருத்தியாக மாட்டார்கள்.

* குறிப்பு !—வியாக்கியானம் :—சித்தினி ஜாதி :—சித்தினி ஜாதி மனிதர் சங்கீத சாஸ்திரம் சிற்ப சாஸ்திரம். இவற்றை அறிந்தவர். மழமழப்புடைய அழகிய தேகத்தை யுடையவர், மானைப் போன்ற கண்களையும், தாமரையைப் போன்ற முகத்தையும், யானையைப் போன்ற கம்பீரமான நடையையும், மயிலைப் போன்ற குரலையும், அதிசயமான தொனியையும் உடையவர். வித்தையில் அதிக விருப்ப முடையவர். மகாகவிஞர்களுக்குப் பிரியமானவராவர். சாமுத்திரிகா லட்சணம் என்ற புத்தகம் இரண்டாவது பாகம் எழுபத்தோராவது பக்கத்தைப் பார்க்கவும்.

*குறிப்பு :—மாதுர் வர்க்கம் விருத்தியிராது என்ற விஷயம் :—இந்த ஜாதகர் ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்திருப்பதைக் கவனிக்கவும். மாதுருஸ்தானமாகிய நான்கிற்குடைய குருவும், மாதுருகாரகனுகிய சந்திரனும் ஒருவருக்கொருவர் சஷ்டாஷ்டமம் என்று ஆறு எட்டிலிருப்பது மாதுரு வகையார்களுக்குத் தோஷமாகும். அம்மான் ஸ்தானுதிபதியாகிய ஆறிற்குடைய சனி ஆறிற்கு ஆறில் ராகுவுடன் கூடியிருப்பதும் தோஷமாகும்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

13. இன்னவர் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா [லொன்று
கன்னியு மிவனுக் கில்லை கண்டிடி லரிட்ட மாகும்
அன்னமே துணைவ னுகும் அறைகுவோம் யிவன்முன் [வந்தோன்
முன்னவன் குணத்தை யாங்கள் மொழிகிருேம் கேளு [மம்மா.

13. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவருக்கு ஒரு சகோதரருண்டு. இவருக்குச் சகோதரி கிடையாது. ஒரு சமயம் பிறந்தாலும் உடனே இறந்து விடும். இந்தச் சகோதரர் ஜாதகருடைய தமயனுகும் என்று, பார்வதியம்மையாரே ! சொல்லுகின்ருேம். இவருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். பார்வதியம்மையே ! கேட்பீராக.

14. பொறுமையு முடைய னுவன் புண்ணிய மனத்த னுகும்
கர்வமு மில்லா னுகும் கீர்த்திவான் பலபேர்க் கன்பன்
சிறுமையு மில்லா னுகும் சேயிழை யொருத்தி யென்றேம்
குறைவிலாச் செல்வ முள்ளான் குஞ்சர நடையு மாவன்.

14. ஜாதகருடைய மூத்த சகோதரர் சாந்த குணமுடையவர். தான தர்மங்களைச் செய்கின்ற மனத்தை யுடையவராவர். இவர் கர்வத்தை யுடையவரல்லர். புகழை யுடையவராவர். அனேகருக்குப் பிரியமுள்ளவரா வர். இவர் கஷ்டங்களையும் தரித்திரத்தையும் உடையவரல்லர். இவருக்கு ஒரே மனைவிதான் உண்டு என்று சொல்லுகின்றேம். இவர் குறையாத செல்வத்தையும் சம்பத்தையும் உடையவர். இவர் யானையைப் போலக் கம்பீரமான நடையை யுடையவர்.

15. ஞாயங்கள் பலவும் கேட்பன் நாதனுர் பக்தி மானும்
தீயரை மனதில் யெண்ணுன் செப்பு நன் நடக்கை [யுள்ளான்
ஈயவே குணமு முள்ளான் யெதிரிகள் யில்லா னுகும்
ஆயவே நான்கு கர்மம் அவனுமே செய்வா னம்மா.

15. ஜாதகருடைய தமயனுர் ஞானமார்க்கமான விஷயங்கள் பலவற்றைக் கேட்பவராவர். கடவுளின் மேல் அன்புடையவர். இவர் கெட்ட வர்களைப் பற்றி மனத்தில் நினைக்க மாட்டார். இவர் நல்ல நடவடிக்கையை யும் நல்லொழுக்கத்தையு முடையவராவர். இவர் பிறருக்குக் கொடுக்கின்ற தயாள குணமுடையவர். இவருக்கு விரோதிகள் கிடையாது. இவர் நான்கு கர்மங்களைச் செய்வார் என்று சொல்லுகின்றேம், பார்வதி யம்மையே!

## ஜாதகருடைய விவாக காலம்

16. இப்படி முனிவர் கூற ஈஸ்வரி கேழ்க்க லுற்றுர்
செப்புவீர் சாதகர்க்கு சிறந்த தோர் மணத்தின் காலம்
ஒப்புடன் சொல்வா யென்று உமையவள் கேட்கும் [போது
தப்பிலா முனிவர் தானும் சாற்றுவோம் கேளும் தாயே.

16. இவ்விதமாக முனிவர் சொல்லவே பார்வதியம்மையார் கேட்க வாரம்பித்தார். ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுவீர், முனிவரே! என்று பார்வதியம்மையார் கேட்கும் போது, முனிவர் பதில் சொல்லுகின்றுர். இதை நாங்கள் சொல்லுகின்றேம். எங்கள் தாயாரா கிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய புத்திரபாவம்

17. இவனுடை மணத்தின் காலமியம்புவோம் ஒருபா னறில்
நவமது உத்திர திக்கில் நாயகி வருவா ளென்றேம்
அவனியில் புத்திர பாகம் அறைகுவோ மிவனுக்கே தான்
கவனமாய் ஆண்பா லில்லை காதலி யிரண்டு மாமே.

17. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றி சொல்லுகின்றேம். இவருக்கு பதினறுவது வயதில் வடக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து வாய்ப்பாள் என்கின்றேம். இவருடைய சந்தானத்தைப் பற்றிச் சொல்லு கின்றேம். இவருக்கு ஆண் குழந்தை கிடையாது. இவருக்கு பெண் குழந்தைகள் இரண்டாகும்.

18. புத்திரர் யில்லை யென்று புகன்ற நீர் புசண்டரே நீர்
சித்தமாய்ப் பெண்பால் ரெண்டு செப்பினீ ரந்தச் சேதி
சுத்தமாய்ச் சொல்வீ ரென்று சுந்தரி கேட்கும் போது
வித்தகன் பலனை யாங்கள் விளம்புவோம் கேளு மம்மா.

18. பிள்ளை கிடையாது என்று சொன்னீரே! புசண்டரே! ஆனல் நீர் இரண்டு குமாரிகள் உண்டென்று சொன்னீரே! இதற்குக் காரணங் களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது, ஜாதகருடைய பலன்களைச் சொல்லுகின்றேம், பார்வதியம்மையே! கேட்பீர் ரென்று முனிவர் பதில் சொன்னர்.

19 அஞ்சினில் கேது நிற்க அதற் கைந்துக் குடையோ [னேடே
தஞ்சமாய் அஷ்ட மத்தோன் சார்ந்துமே விரயம் புக்கத்
துஞ்சிடும் ஆண்பாலுந் தான் சுதனுக்கு நாக சாபம்
வஞ்சியே வந்த தாலே மதலைக்குத் தோஷ மாமே.

19. ஐந்தாவது பாவத்தில் கேது இருப்பதாலும், இந்த ஐந்தாவது பாவத்திற்கு ஐந்தாவது வீடாகிய ஒன்பதாவது வீட்டிற்குடையவராகிய சுக்கிரனுடன் அஷ்டமாதிபதியாகிய அங்காரகன் கூடி விரயம் என்ற பன்னிரண்டாவது வீட்டிலிருப்பதாலும் ஆண் குழந்தை இறந்து விடும். ஜாதகருக்கு நாகசாபம் வந்து சம்பவித்திருப்பதாலே பிள்ளைக்குக் தோஷ முண்டாகியிருக்கின்றது.

*குறிப்பு:—வியாக்கியானம்:—புத்திரகாரகனுகிய குரு, புதனுடன் கூடி குடும்பத்தானத்திலிருப்பது புத்திர தோஷமாகும். சந்திரன் ஒன்பதாவது பாவத்திலிருப்பது பெண் குழந்தைகளுக்குத் தான் அநுகூலமே தவிர ஆண் குழந்தைக்கு அநுகூலமல்ல.

20. இவனுட முன்னு லூழி யெடுத்தது நாமுரைக்கக் [கேளாய்
அவனியில் விரிஞ்சி நாட்டில் அவன் கருணீகர் வம்சம்
நவனியில் உதித்துப் பின்னும் நற்பூமி மனைவி யுண்டாய்
தவமுடை யோர்க்கு அன்னம் தானவ னளித்தா னம்மா.

20. ஜாதகருடைய முன் ஜன்மத்திய வினைகளை நாம் எடுத்துச் சொல்லுகின்றோம். கேட்பீராக. இவர் விரிஞ்சிபுரத்தில் கருணீகர் என்ற கணக்குப் பிள்ளை ஜாதியில் ஆணாகப் பிறந்து, நிலங்களும் மனைவியும் உடையவராகித், தவங்களைச் செய்கின்ற பெரியோர்களுக்கும் முனிவர்களுக்கும் சாப்பாட்டைப் போட்டார், பார்வதியம்மையே!

21. அரசர்பால் அணுகியே தான் அவனுமே சீவித்து [வந்தான்
திறமையாய் ஓர்நாளில் தான் சித்திர வீடு தன்னில்
உரகனும் வந்தா னப்போ உத்தமன் அதனைக் கண்டு
குறவுக ளென் றெண்ணாமல் கோலினா லடித்தா ரம்மா.

21. ஜாதகர் அரசர்களிடத்தில் வேலையிலமர்ந்து கொண்டு தன்னுடைய ஜீவனத்தை செய்து வந்தார். ஒரு தினத்தில் சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட இவருடைய அழகான வீட்டில் ஒரு நாகப் பாம்பு வரவே, ஜாதகர் இதைப் பார்த்து இதைக் கொல்லுவது தப்பிதமான காரியம் என்று நினைக்காமல் இதைத் தடியால் அடித்தார்.

22. அடியது பொறுக்கா மல்தான் அம்மனை நாகந் தானும்
துடிதுடித் தலரி வீழ்ந்து சோகத்தால் மரண மாகிப்
படிமிதி வந்த தோடம் பாலகன் தன்னைப் பற்றிக்
கடிவிஷ தோஷத் தாலே காளைகள் யில்லை யென்றோம்.

22. இந்த மனைப் பாம்பாகிய நாகப்பாம்பு அடிகளைத் தாளமுடியாமல் துள்ளி, துள்ளி அலரி, கீழே வீழ்ந்து, ஆயாசத்தாலேயும் களைப்பினாலேயும் இறந்து விட்டது. இப்படியாக ஏற்பட்ட இந்தத் தோஷம் ஜாதகரை வந்து அணுகிற்று. இப்படிப்பட்ட கொடிய விஷப் பாம்பின் தோஷத்தால் பிள்ளைகள் இல்லை என்று நாங்கள் சொன்னோம்.

23. இவ்வித தோஷம் தீர யிசைகிறோம் கிரிகை யொன்று
நவ்விய நதியின் பக்கல் ராசன்தன் விருக்ஷம் செய்து
பவ்வமாய் நாக மொன்று பாலனும் செய்வா னாகில்
திவ்விய மதலை யுண்டாய்த் தேவியே மேலும் கேளே.

23. இந்தத் தோஷம் நிவர்த்தியாக ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். ஓர் ஆற்றின் கரையின் அருகில் ஓர் அரச மரத்தை நட்டு விருத்தி

செய்து அங்கு ஒரு நாகப் பிரதிஷ்டை செய்வாராகில் ஆண் குழந்தை பிறக்கும், பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லப் போவதைக் கேட்பீரம்மா.

24. சாந்தியும் செய்யா ஞகில் சந்ததி விருத் திருது
தீங்குக ளதனு லுண்டு துணைவர்க்கும் புத்திர தோஷம்
சாந்தியும் செய்வா ஞகில் சந்ததி மென்மே லோங்கும்
பாங்குள சகல முந்தான் பலித்திடு மென்று சொன்னேம்.

24. ஜாதகர் இவ்விதமான சாந்தியை செய்யாவிட்டால் பிள்ளைகள் விருத்தி யடைய மாட்டார்கள். இதனுல் பல கெடுதிகள் உண்டாகும். இவருடைய சகோதரர்களுக்கும் சந்ததி தோஷங்கள் ஏற்படும். இவர் சாந்தியைச் செய்வாராகில் சந்தானங்கள் நாளுக்கு நாள் விருத்தியை யடையும். எல்லா விஷயங்களும் ஜாதகருக்கு அநுக் கூலமாகும் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகருடைய தாய்தகப்பனுர் மரணகாலம்

25. இவன் பிதா மரண காலம் யிசைகிருேம் மூன்ருண்
[டுக்குள்
அவனியில் விஷங்க ளாலே அவனும் துர்மரண மாவன்
நவமதில் மாது காலம் நாட்டுவோ மொன் ருண்டுக்குள்
பவமுள கர்மம் செப்புவேரம் பார்வதி மேலும் கேளே.

55. ஜாதகருடைய தகப்பனுரின் மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவருக்கு மூன்று வயதிற்குள்ளே தகப்பனுர் விஷங் களால் மரணத்தை அடைவார். ஜாதகருடைய தாயாருடைய மரண காலத்தைச் சொல்லுகின்ருேம். ஒரு வருடத்திற்குள்ளே மாதா மரண மடைவாள் என்று சொல்லுகின்ருேம், பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக.

26. மாதிரு வினைகள் சொல்வேன் வகுக்கவே பலத்தைக்
[காணேம்
மேதினில் குடக்குத் திக்கில் வீருது மாது வர்க்கம்
ஆதியாய் ஆஸ்தி யெல்லாம் அணுகிடு மிவனுக் கம்மா.
சோதித்து நவக்கோ ளாய்ந்து சொல் மொழி
[குன்றிடாது.

26. ஜாதகரின் தாயாருடைய பாவங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். தாய் வர்க்கம் யாதொரு வலிவையும் உடையதாகத் தோற்றவில்லை. தாயா ருடைய வீடு மேற்குத் திக்கிலிருக்கும். தாயாருடைய வமிசம் விளங்காது. தாயாருடைய 'சொத்துக்களெல்லாம்' ஜாதகருக்கு வந்து சேர்ந்து விடும்,

பார்வதியம்மையாரே! நாங்கள் நவக்கிரகங்களை ஆராய்ச்சி செய்து, பரீட்சை செய்து சொல்லுகின்ற பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகருடைய மரணகாலம்

27. சாதகன் மரண காலம் சாற்றுவோம் அன்பான் [ரெண்டில்
நீதியாய்த் தனுசு மரதம் நிகர் சஷ்டி பிற் பக்கத்தில்
ஆதிமால் பாதம் போற்றி அவனது உடலம் வாடி
சோதித்துப் பிற் சென்மத்தைச் சொல்லுவோம் கேளு [மம்மா.

27. ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஐம்பத்திரண்டாவது வயதில் தனுர் மாதம் என்கின்ற மார்கழி மாதத்தில் தேய்பிறை ஷஷ்டிதிதியில் மகாவிஷ்ணுவின் பாதங்களைத் துதித்தபடியே ஜாதகர் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய் விடும். இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்து சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய மறுஜன்மம்

28. பாண்டிய நாட்டிலே தான் பருகிய பேரூர் தன்னில்
வேண்டியே யிக் குலத்தில் வித்தகன் உதித்துமே தான்
ஆண்ட தோர் அரசர்பக்கல் அதிகார முடைய னாகிப்
பாண்டியன் தன்னைப் போலே பாலகன் சீவிப்பா னும்.

28. பாண்டிய தேசத்தில் ஒரு பெரிய கிராமத்தில் பிராமணர் குலத்தில் ஜாதகர் மறு ஜன்மத்திற் பிறந்து அரசர்களிடத்தில் இராஜாங்கத்தில் அதிகமானதோர் உத்தியோகத்தை அடைந்து, பாண்டிய தேசத்தரசனைப் போலவே தானும் வாழ்வார்.

## தகப்பனுருடைய முன்ஜன்மம்

29. பிதாவின் முன் சென்மத்தைப் பேசுவோம் கொங்கு [நாட்டில்
அதிகார முடையோ னாகி அவன் சத்திரிய குலமுதித்து
புதிதாக மடமும் சோலைபுகல் கூவல் குண்டம் தானும்
அதிபனும் செய்து வந்தான் வந்த ஊழ் தன்னைக் [கேளாய்.

29. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவர் கொங்கு தேசத்தில் க்ஷத்திரிய ஜாதியில் பிறந்து அதிகாரங்களை யுடையவராகிப் புதிய மடம், தோட்டம், கிணறு, குளம்

ஆகிய இவற்றை ஏற்படுத்தி வாழ்ந்து வந்தார். இவரை வந்து சம்பதித்த வினையைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக.

30. மடந்தனில் அகுதி தானும் மனைவியும் ஓர்நாள் அங்கு
இடந்தனில் யிருக்கும் போது யிவனு மவ்விடத்தில் [சென்று
திடமுன் அவள்மேல் மோகம் சென்றதால் வரனும் [கண்டு
கடகட கோப முற்றுக் கழறுவான் சாபம் தானும்.

30. ஒரு தினத்தில் ஒரு திக்கற்ற தரித்திரன் தன்னுடைய மனைவியுடன் இங்கு மடத்தில் வந்து தங்கினான். அப்போது இந்தத் தகப்பனார் அவ்விடத்திற்குப் போய் அவள் மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவராகி அவளிடத்தில் சம்போகம் செய்ததை அவளுடைய புருஷன் பார்த்து விட்டு அதிக கோபத்தை யுடையவனாகி ஒரு சாபத்தைக் கொடுத்தான்.

31. மற்றொரு சென்மம் தன்னில் மங்கையின் தோஷ [முண்டாய்
உற்றதோர் யிரண்டா மாதை உரைந்து பின்சுக [மில்லாமல்
பற்றிய உரக னாலே பாரினில் மாள்வா யென்று
நற்றவர் சாபம் தந்து நடந்தனன் அவ்விடம் விட்டு.

31. "நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் உன் முதல் மனைவி இறந்தும், இரண்டாவது மனைவியை அடைந்தும் சுகமில்லாமல் வாழ்ந்தும் பாம்பால் கடிக்கப்பட்டும் இறந்து போகக்கடவது" என்று சொல்லிச் சாபத்தைக் கொடுத்துவிட்டு அந்த மடத்தை விட்டு அந்தத் திக்கற்ற தரித்திரன் போய் விட்டான்.

32. அகதியின் சாபம் தானும் அணுகிற்று இவனுக் கம்மா
செகமதில் அந்திய காலம் செல்வியு மரண மாவள்
தகமையாய்ச் சிலது காலம் சஞ்சல மனத்த னாகி
இகபரன் பாதம் தன்னை யிவனுமே சேர்ந்தா னப்போ,

32. திக்கற்ற அந்த ஏழையினுடைய சாபம் தகப்பனாரை முன் ஜன்மத்தில் அடைந்தது. இவருடைய கடைசி காலத்தில் இவருடைய மனைவி இறந்து விடவே இவர் சிறிது காலம் மனத்தில் கஷ்டங்களை யுடையவராக, வாழ்ந்து இவர் இறந்து, கடவுளுடைய பாதங்களை அடைந்தார்.

33. மரணமே யாகி பின்பு வந்தவ னிவனின் தந்தை
திறமையாய் முன் சென்மத்தில் செய்திடு புண்ணி [யத்தால்

பெருமையாய் யிக் குலத்தில் பிறந்தவ னிவனே யம்மா
அருமையாய்ப் பின் சென்மத்தை அறைகிறோம் மேலுங்
[கேளே.

33. இவ்விதமாக மரணத்தை யடைந்து இந்தத் தகப்பனார் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். முன் ஜன்மத்தில் தான் செய்த தான தர்மங்களின் பலனாக இந்த ஜன்மத்தில் பிராமணர் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார், பார்வதியம்மையே! இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே / கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனாருடைய மறுஜன்மம்

34. காஞ்சி மாநகரம் தன்னில் கனமுடன் யிக் குலத்தில்
வாஞ்சையாய் வரசர் பக்கல் மைந்தனும் பெருமை
[பூண்டு
வெஞ்சின மில் லானாகி வித்தகன் வாழ்வா னம்மா
கஞ்சன மதிகம் பெற்றுக் காளையு மிருப்பா னென்றோம்.

34. காஞ்சீபுரத்தில் மேன்மையான ஒரு பிராமண ஜாதியில் பிறந்து இராஜாங்கத்தில் பெருமையை யடைந்து கடுங் கோபம் இல்லாமல் இந்தத் தகப்பனார் வாழ்வாரென்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! இவர் திடமானபலத்தையும் வலிவையும் அதிகமாக வடைந்து இருப்பார் என்று சொல்லுகின்றோம். —C. G. R.

---

# ஜாதகம் 14

## ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் கேது [1]தேளில் சனி[2]தனு [3]பொன்னோன் [[4]வண்டி
[5]புந்தியு [6]மழைக்கோள் மீனம் [7]பூமகன் [8]யிரவி மேடம்
பந்தமாய் ராகு [9]நந்தி பகர் சென்மம் கன்னியாக
இந்தவாறு நவக்கோள் நிற்க யிப்பலன் சொல்லு [மென்றாள்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சந்திரனும் கேதுவும் விருச்சிகத்திலும், சனி தனுசிலும், குரு கடகத்திலும், புதனும் சுக்கிரனும் மீனத்திலும், அங்காரகனும் சூரியனும் மேஷத்திலும், ராகு ரிஷபத்திலும் இருந்து, இவ்விதமாகக் கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன் களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| புதன் சுக்கிரன் | சூரியன் அங்காரகன் | ராகு | |
| | இராசி சக்கரம் | | குரு |
| | | | |
| சனி | சந்திரன் கேது | | லக்கினம் |

கேட்டை 2-ஆம் பாதம், புத தசை வரு 11—0—0 சுமார்.

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப்பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மிதுனத்தில் அங்காரகனும், கடகத்திற் குருவும் ராகுவும், சிம்மத்திற் சூரியனும், துலாத்திற் சனியும், தனுசிற் சுக்கிரனும், மகரத்திற் சந்திரனும் கேதுவும், மீனத்திற் புதனும் ஆகும். புதன் வக்கர கதியில் இருக்கின்றார்.

---

1. விருச்சிகம்.
2. தனுசு.
3 குரு.
4. கடகம்.
5. புதன்.
6. சுக்கிரன்.
7. அங்காரகன்.
8. சூரியன்.
9. ரிஷபம்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. குருமுனி கூறுகின்ருர் குறித்தது ஆண்பால் சென்மம்
வருமவன் கீழ்மேல் வீதி வாசலு முத்திர நோக்கம்
திருமாலும் மேற்கில் தங்கும் சிறப்மிலா யருகில்
[குண்டம்
பெரு வயிரப்பன் கீழ்பால் பலமிலா மாரி தங்கும்.

2. குரு முனி என்ற வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்ருர். இக்குழந்தை ஆணுகப் பிறக்கும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு பார்த்த வாயிலே உடையதாகும். மகாவிஷ்ணுவின் கோயில் மேற்கில் இருக்கும். இதற்குச் சமீபத்தில் நல்ல நிலைமையிலிராத ஒரு குளமிருக்கும். பெரிய வயிற்றை யுடைய விநாயக் கடவுளின் கோயில் கிழக்கிலிருக்கும். ஒரு சிறிய வலிவில்லாத மாரியம்மன் கோயிலும் இங்கிருக்கும்.

3 அதின்கீழ் பால்துர்க்கை யீன்ற ணுகிடும் யிது வல்லாமல்
நதிகங்கை வடமேல் தங்கும் நக்கன் தன் க்ஷேத்ர
[முண்டு
பதியது கெட்டியாகும் பகருவோம் சிற்றூர் தன்னில்
விதியினுல் சைவச்சேயாய் விளங்கின னிவனே யம்மா,

3. இதற்குக் கிழக்கில் ஒரு துர்க்கை என்ற பார்வதியம்மன் கோயிலுமிருக்கும். இதுவுமன்றி ஓர் ஆறும் குளமும் வடமேற்கில் இருக்கும். பரமசிவனுடைய கோயிலுமுண்டு. பிறந்த வீடு வலிவான வீடாகும். பிறந்த ஊர் ஒரு சிறிய கிராமமாகும். இந்த ஜாதகர் தன்னுடைய தலை விதிப்பயனுகச் சைவ ஜாதியில் வந்து பிறந்திருக்கின்ருர், பார்வதியம்மையே!

4. இன்னவன் செனன யோகம் யெழிலுறு தந்தை யோகம்
மன்னிய அன்னை யோகம் வரும்புத்திர களத்திர யோகம்
தன்னிலே முன்பின் சென்மம் சகோதிர மாமன் யோகம்
அன்னமே நவக்கோ ளாய்ந்து அறைகிருேம் கேளு
[மம்மா,

4. ஜாதகருடைய ஜனன காலத்திய யோகம், தகப்பனுருடைய யோகம், தாயாருடைய யோகம், சந்ததி யோகம், மனைவி யோகம், முன் ஜன்மம், பின் ஜன்மம், சகோதர யோகம். மாமன் யோகம் ஆகிய இவற்றை எல்லாம், பார்வதியம்மையாரே! நவக்கிரகங்களை ஆராய்ச்சி செய்தும் பரிசீலனை செய்தும் சொல்லுகின்ருேம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த
[மேனி
பந்தமாய் ஒடிசல் தேகி பாரினில் உயர மூள்ளான்

தந்தங்கள் பெரிதாய்க் காட்டும் சகோதிர உறவு
[கொள்வன்
கந்தனைப் பூசை செய்வன் கனத்ததோர் தியாகி யாவன்.

5. ஜாதகருடைய தகப்பனரின் குணாதிசயங்களை நாங்கள் சொல்லுகின்றோம். இவர் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவராவர். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் உயரமாக விருப்பார். இவருடைய பற்கள் பெரியனவாக விருக்கும். இவர் தன்னுடைய சகோதரர்களிடம் சிநேகமாக விருப்பார். இவர் முருகக் கடவுளைப் பூஜை செய்பவராவர். இவர் ஒரு பெரிய வள்ளல் ஆகவிருப்பார்.

6. ஞாயங்கள் பேச வல்லான் ராசர் பூசிதவா னுகும்
தூயநன் மனத்த னுகும் சோம் பிடான் காரியத்தில்
தீயரை மனதி லெண்ணன் திருமகள் விலாச முள்ளான்
தாய்தந்தை கர்மம் செய்வன் சக்தியே மேலுங் கேளே.

6. இவர் நியாயமாகப் பேசுந் திறமையை யுடையவர். அரசர்களால் மதிக்கத் தகுந்தவராவர். இவர் பரிசுத்தமான நல்ல மனத்தை யுடையவர். தான் செய்கின்ற வேலையில் சோம்பலில்லாதவர். இவர் கெட்டவர்களைப் பற்றித் தன்னுடைய மனத்தில் நினைக்க மாட்டார். இவர் லக்ஷ்மியின் கடாக்ஷத்தை யுடையவர். இவர் தாயார் தகப்பனர் ஆகிய இவர்களுக்குக் கொள்ளி போடுவார். ஈமக் கடன்களையும் கிரியைகளையுஞ் செய்வார், பார்வதியம்மையே! இன்னும் சொல்லுகின்றோம், கேட்பீராக.

7. யூகைவான் கல்வி மானும் உதார குணமே யாவன்
ஈகைவான் சுகிபொசிப்பன் யெவர்களும் மெச்ச
[வாழ்வன்
மோகவான் மோச மில்லான் புண்ணிய மனத்த னுகும்
தோகைமார் சிந்தை யில்லான் சுத்தநன் மனத்த னுகும்.

7. ஜாதகருடைய தகப்பனர் பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை யுடையவர், வாசித்தவராவர், பெரிய கொடையாளி. பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவர். சுகமான ஆகாரங்களைச் சாப்பிடக் கூடியராவர். எல்லோரும் இவரைப் புகழும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவர். மோசமான காரியங்களைச் செய்ய மாட்டார். பிறரை ஏமாற்ற மாட்டார். தான தர்மங்களைச் செய்யக் கூடிய நல்ல மனத்தை யுடையவர். இவர் ஸ்திரீகளைப்பற்றிக் கவலையுடையவரல்லர். இவர் பரிசுத்தமான நல்ல மனத்தை யுடையவராவர்.

8. அண்டின பேரைக் காப்பன் ஆள்கார ருடைய னுவன்
தண்டமிழ்க் கல்வி யுள்ளான் தரியவர் செயமே செய்வன்

குண்டணி கலக மில்லான் குறைவிலா செல்வ
[முள்ளான்
வண்டி வாகனமு முள்ளான் வமி சத்தை யாதரிப்பன்.

8. இவர் தன்னிடத்திற்கு உதவிக்காக வந்தவர்களைக் காப்பாற்றுவார். இவர் வேலையாட்களை யுடையவராவர். இவர் தமிழை வாசித்தவராவர். தன்னுடைய பகைவர்களை ஜயித்து விடுவார். இவர் கோள்களைச் சொல்லி கலகத்தை மூட்டிவைப்பவரல்லர். குறையாத செல்வத்தை யுடையவர். இவர் வண்டி வாகனம் ஆகிய இவற்றை யுடையவர். இவர் தன்னுடைய வம்சத்தாரைக் காப்பாற்றுவார்.

## தகப்பனுருடைய சகோதரர்கள்

9. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா
[லொன்று
கன்னியு மவ்வா ருகும் கனத்து பின் நஷ்ட மாகும்
பின்னமாம் துணைவ ருக்குப் பேசுவோம் தாரம்
[ரண்டாம்
அன்னமே யாங்கள் சொல்லுமடை மொழி குன்றிடாது.

9. தகப்பனுருடைய சதோரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் உண்டு. பின் சகோதரர்கள் சீக்கிரம் இறந்து விடுவார்கள். இந்தச் சகோதரனுக்கு மனைவிமார்கள் இருவராகும். பார்வதியம்மையாரே! நாங்கள் சொல்லுகின்ற விசேஷ மொழியும் பலாபலன்களும் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

10. இன்னவன் முன்சென் மத்தை யியம்புவோம் பாண்டி
[தென்பால்
துன்னுநக் கீரர் தீர்த்தம் சேவலன் கொடியோன் பாகம்
அந்நகர் தன்னி லேதான் அவனும்செங் குந்தவர்
[வம்சம்
தன்னிலே உதித்து மேலும் தனதான்ய மதிகம் பெற்று;

10. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பாண்டிய தேசத்தில் தெற்கே நக்கீரர் தீர்த்தத்தை யுடைய சேவற் கொடியை யுடைய ஒரு முருகக் கடவுளின் ஸ்தலத்தில் செங்குந்தர் ஜாதியில் ஆணுகப் பிறந்து, அதிக செல்வத்தையும் தானியங்களையுமுடையவராகி;

11. ஆலய பணிதி வேலை அனேக தர்மங்கள் செய்து
சீலமாய் வருவோர்க் கன்னம் சிறப்புட னளித்து மேலும்

பாலகர் மனைவி யோடு பாரினில் வாழ்ந்து பின்பு
ஆலமுண் டத்தோன் பாதம்அவனுமே அடைந்தா
[ளம்மா.

11. கோயிலில் திருப்பணி வேலைகளைச் செய்து கொண்டு, அநேக தருமங்களை யுடையவராகியும், தன்னிடம் வருகின்றவர்களுக்குச் சாப்பாட்டைப் பெருமையுடன் போட்டுக் கொண்டும், மனைவி மக்களுடன் வாழ்ந்து கொண்டும், பிறகு ஆலகால விஷத்தை யுண்டவராகிய சிவபெருமானுடைய பாதங்களை அடைந்தார், பார்வதியம்மையே!

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

12. பாலகன் மரணமாகிப் பகருவோ மிச்சென் மத்தில்
சீலமாம் சைவச் சேயாய்ச் செனித்த வனிவன் தந்தை
கோலமா யிவன் குணத்தைக் கூறுவோ மொடிச்சல்
[தேகி
ஞாலமேல் சிவந்த மேனி நாட்டுவோம் பித்த தேகி.

12. ஜாதகருடைய தகப்பனார் இறந்து இந்த ஜன்மத்தில் சைவர் குலத்தில் ஆணாகப் பிறந்திருக்கின்றார். இனிமேல் ஜாதகருடைய குணாதிசயங்களைப் பற்றி சொல்லுகின்றோம். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். பித்த குணமுள்ள தேகத்தை யுடையவர்.

13. அடக்கமு மொடுக்க முள்ளா னண்டினோர் தமைக்
[காப்பன்,
துடுக்குகள் செய்யா னாகும் சோம்பிடான் காரியத்தில்
மடக்கொடி ஒருத்தி யாகும் வருமவன் நேத்திரம் சாயல்
படபட நடையு முள்ளான் பக்திமா னென்று
[சொன்னோம்.

13. ஜாதகர் அமைதியும் பொருமையும் உடையவர். இவர் தன்னிடம் உபகாரத்திற்காக [வந்தவர்களைக் காப்பாற்றுவார். இவர் அவசரப்பட்டுக் கெட்ட காரியங்களைச் செய்ய மாட்டார். தான் செய்கின்ற வேலைகளில் சோம்பலை அடையமாட்டார். இவருக்கு ஒரே மனைவியுண்டு. இவருக்குக் கண் சிறிது கோணலாக விருக்கும், அஃதாவது சாட்டைக் கண்ணை யுடையவராக விருப்பார். இவர் வேகமாகவும் அவசரமாகவும் நடக்கக் கூடியவர். கடவுளின் மேல் அன்புடையவர் என்று சொல்லுகின்றோம்.

14. பூமியில் கிருஷி செய்வன் புத்திமான் பொறுமை யுள்ளான்
சேமமு முடைய னவன் திருமகள் விலாச முள்ளான்
தீமையு மெண்ணாச் சித்தன் தெய்வங்கள் பக்தி மானும்
தாமத குணத்த னாகும் சிறிது முன்கோப முள்ளான்;

14. ஜாதகர் நிலங்களைப் பயிரிடுவார். அறிவுள்ளவர். சாந்தகுண முடையவர். இவர் சுகங்களை அநுபவிக்கக் கூடியவர். லக்ஷ்மீ கடாக்ஷத்தை யுடையவர். இவர் கெடுதிகளை நினைக்காத மனத்தை யுடையவர். கடவுள்களின் மேல் அன்புடையவராவர். இவர் நிதானமான குணத்தை யுடையவர், சிறிது முன் கோபத்தை யுடையவர்.

15. இன்னவர் துணைவர் தம்மை யியம்புவோம் ஆண்பா [லிரண்டு
கன்னியு மவ்வா ருகும் கனத்தபெண் ஒன்று தீர்க்கம்
மன்னிய யிரண்டு மேதான் மத்திய வயதில் மாளும்
சொன்னசொல் பிசகி டாது சுந்தரி மேலும் கேளே.

15. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இரண்டு சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும் உண்டு. ஒரு சகோதர் நீண்ட ஆயுளையுடையவளாகும். இருவர் மத்திய வயதில் இறந்து விடுவார்கள். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும், பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய சகோதரர்களின் குணாதிசயங்கள்

16. குருமுனி யிவ்வாறு கூற கொம்பனை கேட்க லுற்றாள்
வருந்துணை ஆண்பால் சேதி வகைதனை யுரைப்பீ [ரென்ன
பெருமலை முனிவர் தாமும் பேசுவார் அந்தச் சங்கை
திருகிலாத் துணைவர் தாமும் செப்புவோ மூத்தோன் [சேதி.

16. இவ்விதமாக வசிஷ்ட மகரிஷி சொல்லவே, பார்வதியம்மையார் கேட்கவாரம்பித்தார். ஜாதகரின் சகோதரர்களுடைய விஷயங்களைப் பற்றி முனிவரே! சொல்லுவீர் என்று கேட்கவே, வசிஷ்ட மகரிஷி சொல்லுகின்றார். மூத்த சகோதருடைய விஷயங்களைச் சொல்லுகின்றோம்.

17. சிவந்திடு மேனி யாகும் செப்புநன் னடக்கை யுள்ளான்
அகந்தனி லூகை கொஞ்ச மவன் சபைதனிலே பேசான்
செகந்தனி லரசு செய்வன் செட்டு வேளாண்மை [யுள்ளான்
பவந்தனில் சிலநாள் ராச யோகமும் பார்த்து நீங்கும்.

17. மூத்த சகோதரர் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவர், நல்ல நடவடிக்கையை யுடையவராவர். இவர் சிறிது பகுத்தறியும் தன்மையுள்ள நுட்பமான அறிவை யுடையவராவர். சபையில் தைரியமாகப் பேச மாட்

டார். இவர் இராஜாங்கத்தில் ஒரு வேலையிலிருந்து அதிகாரத்தைச் செலுத்துவார். வியாபாரமும் பயிர்த் தொழிலுமுடையவராவர். இவர் சிறிது காலம் அரசாங்க வேலையில் இருந்து தன்னுடைய அதிகாரத்தைச் செலுத்திப் பிறகு இந்த வேலையை விட்டு விடுவார்.

18. அவனுடை கனிஷ்டன் சேதி அரைகிறே மொடிசல் தேகி
கவனமு மதிக முள்ளான் காளைகள் ளில்லா னுகும்
நவமதில் கீர்த்தி யேற்பன் நாவுகள் பிறளா னுகும்
சிவனையே துதிப்பா னுகும் தேகமும் வலுவு முள்ளான்.

18. ஜாதகருடைய இளைய சகோதரருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவராவர். இவர் ஞாபக சக்தியை அதிகமாகவுடையவர். இவருக்குப் பிள்ளைகள் கிடையா. இவர் பூமியில் புகழைப் பெறுவார். தான் சொன்ன சொற்கள் பிரகாரம் தவறுமல் நடந்து கொள்ளக் கூடியவர். இவர் சிவபெருமான் மேல் அன்புடையவராவர். வலிவான, திடமான தேகத்தை யுடையவராவர்.

19, சொன்னசொல் தவரு னுகும் தோகையர் பிரிய [முள்ளான்
கன்னென மொழியு முள்ளான் காளைக்கு மனமிராது
அன்னியர் உறவு கொள்வன் அவன்பித்த வாயு தேகி
துன்னிய நெய்பா லிஷ்டன் தோகையே மேலும் கேளே.

19. இளைய சகோதரர், தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகாமல் நடந்து கொள்ளக் கூடியராவர். ஸ்திரீசள் இவரை விரும்புவார்கள். இவர் சர்க்கரையைப் போல இனிப்பான வார்த்தைகளை உபயோகிப்பார். இவருக்கு விவாகம் நடைபெருது. இவர் அயலாருடைய நேசத்தை அடைவார். இவர் பித்த குணமுள்ள தேகத்தை யுடையவராவர். இவர் நெய் பால் ஆகிய இவற்றின் மேல் பிரியமுடையவர். பார்வதியம்மையே ! நாங்கள் இன்னும் சொல்லப் போகின்றோம். கேட்பீராக.

20. இங்கவன் தனக்கு மூத்தோனிவன் பலன் சொல்லக் [கேளாய்
பொங்குநன் மனத்த னுகும் புண்ணியம் செய்வா னுகும்
திங்களை அணிந்தோன் பூசை செய்குவனும் பலபேர் [நேயன்
பங்கய முகத்தைத் தானும் பாலகன் உடைய னுமே.

20. மூத்த சகோதரருடைய பலாபலன்களைச் சொல்லுகின்றோம். கேட்பீராக. இவர் அதிக சந்தோஷமான தாராளமான நல்ல மனத்தை யுடையவர். தானதர்மங்களைச் செய்பவராவர். இவர் சந்திரனைத் தன்னு

டைய சடையில் தரித்துள்ள சிவபெருமானைப் பூஜை செய்வார். இவர் அநேகருக்கு இஷ்டமுள்ளவராவர். இவர் தாமரை பூவைப் போன்ற அழகான முகத்தை யுடையவராக விருப்பார்.

21. குடும்பத்தை யாத ரிப்பன் கூர்சௌக்கிய னும் மேலும்
திடமதா யுரைக்க மாட்டான் சேயிழைக் கன்ப னுகும்
மடையரை நேசம் கொள்ளான் வாகனவிருத்தி யுள்ளான்
இடையூறு செய்யா னுகும் யீகைவா னென்று
[சொன்னேம்.

21. மூத்த சகோதரர் தன்னுடைய குடும்பத்தைக் காப்பாற்றுபவராவர். சுகங்களை யுடையவராவர். இவர் கடுமையாகப் பேச மாட்டார். தன்னுடைய மனைவிக்கு இஷ்டமானவராகி விருப்பார். இவர் புத்தியில்லாதவர்களிடத்தில் சினேகஞ் செய்து கொள்ள மாட்டார். வாகன பலித முடையவராவர். இவர் பிறருக்குக் கெடுதிகளைச் செய்ய மாட்டார், தயாள குணத்தை யுடையவரென்று சொல்லுகின்றேம்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணதிசயங்களும்

22. இன்னவன் மணத்தின் காலம் யியம்புவோ மிருபா
[னுலில்
கன்னியு மேற்குத் திக்கில் கனத்த மாதுலன் வர்க்கத்தில்
அன்னவள் வருவா ளம்மா அவள்குணம் நிறத்தைக்
[கேளாய்
பன்னிய மால் நிறத்தாள் பாரினில் வீர மில்லாள்.

22. ஜாதகருடைய விவாவ காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவருக்கு இருபத்து நான்காவது வயதில்* மேற்குத் திக்கிலிருந்து அம்மானுடைய வம்சத்திலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். பார்வதியம்மையே! இவளுடைய குணதிசயங்களையும் நிறத்தையும் சொல்லுகின்றேம், கேட்பீராக. இவள் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒருவிதமான நிறத்தை யுடையவள். இவள் தைரியத்தையும் பராக்கிரமத்தையும் பலத்தையுமுடையவளல்லள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—விவாக கால விஷயம் :—ஜாதகருக்கு இருபத்து நான்காவது வயதில் விவாகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. இக்காலத்தில் சுக்கிர தசை நடக்கின்றது. சுக்கிரன் இரண்டாவது வீட்டிற்கும் ஒன்பதாவது வீட்டிற்கும் உடையவர். இவர் களத்திரகாரகனுகி, களத்திர ஸ்தானத்திலிருந்து கொண்டு களத்திர ஸ்தானுதிபதியாகிய குருவால் பார்க்கப்பட்டு, லக்கினுதிபதியாகிய புதனுடன் கூடியிருக்கின்ருர். ஆகையால் ஜாதக பாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம்

இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் தன் தசையில் ஜாதகருக்கு விவாகஞ் செய்து வைக்க அதிகார முடையவராக விருக்கின்ருர். லக்கினுதிபதியும் அம்மான்கார கனுமாகிய புதன் களத்திர ஸ்தானத்தில் களத்திரகாரனுகிய சுக்கிரனுடன் கூடியிருப்பதால், மனைவி அம்மான் வர்க்கத்தி லிருந்து வருவாள் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

23. நடையது துருசு முள்ளாள் நாட்டுவோம் சமதே கத்தாள்
அடைமொழி கூறுவள் மேலும் அவளு முன்கோபி [யாவள்
திடமதாய்க் குடும்ப முள்ளாள் செல்வியும் பிறந்த வீடு
விடமன மில்லா ளாகும் மேதினில் கற்பு முள்ளாள்.

23. ஜாதகருடைய மனைவியின் நடத்தை குற்ற முடையதாகும். இவள் நடுத்தரமான, சமமான அளவுள்ள தேகத்தை யுடையவளாவள். இவள் விசேஷமான சிறப்பான வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் முன் கோபத்தை யுடையவளாவள். இவள் மேன்மையான வலிவான தாய்வழிக் குடும்பத்தை யுடையவள். இவள் விஷத்தைப் போன்ற கெட்ட மனத்தை யுடையவளல்லள். இவள் பூமியில் கற்புடையவளாகவிருப்பாள்.

24. அன்னங்கள் போட வல்லாள் ஆளனுக் கினிய ளாவள்
இன்னவள் சுசீல முள்ளாள் யீகையும் கொஞ்ச [முள்ளாள்
துன்னிய புத்திர ருள்ளாள் சுகமுள குடும்ப மாவள்
கன்னென மொழியு முள்ளாள் காதலி மேலும் கேளே.

24. ஜாதகருடைய மனைவி பிறருக்குச் சாப்பாட்டைப் போடுந் திறமையை யுடையவளாவள். தன்னுடைய புருஷனுக்குப் பிரியமுள்ளவ ளாவள். இவள் சுத்தமும் நல்லொழுக்கத்தையும் உடையவளாவள். சிறிது தயாளமான குணத்தை யுடையவளாவள். இவள் அதிக சந்ததிகளை யுடையவள், சுகமான மேன்மையான குடும்பஸ்தளாவள். இவள் சர்க்க ரையைப் போல இனிப்பான வார்த்தைகளை யுடையவளாவள். பார்வதியம் மையே! இன்னம் நாங்கள் அதிகமாகச் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்கள்

25. பால்பாக்கிய முடைய ளாவள் பந்துவுக் கினிய ளாவள்
வேலனு மாதா சேதி விளம்புவோம் சிவந்த மேனி
சீலமு முடைய ளாகும் சிவன்பதம் துதிப்பா ளாகும்
மேலவர் பக்தி யுள்ளாள் மிருதுவாம் வார்த்தை கூறுவள்.

25. ஜாதகருடைய மனைவி பால் பாக்கியத்தை யுடையவளாவள். அஃதாவது இவளுக்குக் கறவை பசுக்கள் உண்டு. இவள் தன்னுடைய

பந்துக்களுக்குப் பிரியமுள்ளவளாக விருப்பாள். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவள். இவள் சுத்தமும் நல்லொழுக்கமும் உடையவளாவள். இவள் சிவபெருமான் மேல் அன்புடையவளாவள். இவள் தேவர்களின் மேலும் தெய்வங்களின் மேலும் அன்புடையவளா வள். இவள் மெதுவான இனிப்பு வார்த்தைகளைச் சொல்லுவாள்.

26. பசிதாக முடைய ளாவள் பாலர்மேல் பிரிய மாவள்
வசைகளைச் சொல்லா ளாகும் வரனுக்கு நேய முள்ளாள்
உசிதமாய் அன்ன மீவள் உண்மையாய் மனத்த ளாகும்
பசித்தோரைக் காப்பா ளாகும் நாயகி யென்று
[சொன்னோம்.

26. ஜாதகருடைய தாயார் பசியையும் தாகத்தையும் அதிகமாகவுடையவளாவள்.: தன்னுடைய குழந்தைகளின் மேல் அன்புடையவளாவள். இவள் பிறர் மேல் குற்றங்களைச் சாட்டாதவளாவள். தன்னுடைய புருஷனிடத்தில் விசுவாசமுள்ளவளாவள். இவள் பிறருக்கு உத்தமமாகவும் பிரியத்துடனும் சாப்பாட்டைப் போடுவாள். உண்மையான நல்ல மனத்தை யுடையவளாவள். இவள் பசியுடையவர்களுக்குச் சாப்பாட்டையும் தின் பண்டங்களையும் கொடுத்து அவர்களைத் திருப்தி செய்வாள். இவ்விதமான குணங்களையுடைய நல்ல மனைவியாக எஜமாட்டியாக இவள் இருப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

27. சாதகன் தனக்குப் புத்திரர் சாற்றுவோ மாண்பா லிரண்டு
மேதினில் கன்னி யவ்வாறு விளங்கிடும் தீர்க்க மென்றோம்
கோதிலா மூன்று நட்டம் குறித்தனர் ரிஷிக ளம்மா.
போதக வானைப் பெற்றப் புண்ணிய சாலி கேளாய்.

27. ஜாதகருக்குச் சந்ததிகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். மூன்று குழந்தைகள் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று ரிஷிகளாகிய நாங்கள் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! இளம் யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## தகப்பனார், தாயார், ஜாதகர் ஆகிய இவர்களின் மரணகாலம்

28. தந்தையின் மரண காலம் சாற்றுவோ மிரு மூன்
[றுண்டில்
பிந்தியு மன்னை காலம் பேசுவோ முப்பா னறில்

எந்தையே யிவனின் காலம் யியம்புவோம் அன்பா
[னெட்டில்
பந்தமாய்த் தேளின் மாதம் பஞ்சமி பிற்பக் கத்தில்.

28. ஜாதகருடைய தகப்பனுருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேும். ஜாதகருக்கு ஆருவது வயதில்* தகப்பனுர் இறந்து விடுவார். பிறகு ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில்* தாயார் இறந்து விடுவாள். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே/ ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேும். இவர் தனக்கு ஐம்பத்தெட்டாவது வயதில்* தேளின் மாதம் என்ற கார்த்திகை மாதத்தில் தேய்பிறையில் பஞ்சமி திதியில்;

*குறிப்பு:—வியாக்கியானம்:—ஜாதகருடைய தகப்பனுரின் மரண விஷயம்:— ஜாதகருக்கு ஆருவது வயதில் புத தசை நடக்கின்றது. பிதுர்லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது (46) சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். இவருடன் சம்மந்தப்பட்ட புதன் ஜாதக சந்திரிகை இருபத்துமூன்ருவது (23) சுலோகப் பிரகாரம் அதிகமாராகின்ருர். மேலும் புதன் கன்னியா லக்கினத்திற்குப் பத்திற்குடையராகிப் பிதிர் கர்மாதிபதியாகின்ருர். மேலும், புதன் பிதிர் லக்ஞதிபதியாகிய சுக்கிரனுடன் கூடியவராகின்ருர். ஆகையால் புத தசையில் பிதிர் மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—மாதா மரணம்:—ஜாதகருக்கு முப்பதாருவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் தனுசு ஆகும். இந்தத் தனுர் லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது (60) சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகாதிபதியாகின்ருர். மேலும் சுக்கிரன் தனுசுலக்கினத்திற்கு ஆறுக்குடையவராகின்ருர். ஆகையால் குமாரசாமியம் மகாதசைப் படலம் நான்காவது (4) பாடல் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். ஆகையால் சுக்கிர தசையில் மாதிரு மாரகம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—ஜாதகர் மரண விஷயம் :—ஜாதகருடைய லக்கினமாகிய கன்னியாலக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது (54) சுலோகப் பிரகாரம் அங்காரகன் மாரகராகின்ருர். ஜாதகருக்கு ஐம்பத்தெட்டாவது வயதில் அங்கார தசை நடக்கின்றது, அங்காரகன் எட்டிற்குடைடையவராகி எட்டிலேயே இருக்கின்ருர். துய்ய கேரளம் பதினன்காவது (14) பாடல் பிரகாரம் கூட அங்காரகன் மாரகம் செய்ய அதிகாரமுடையவராகின்ருர்,

29. பித்த ரோகத்தி னுலே பிரிந்திடு முடலம் தானும்
வெற்றிசேர் மறுசென் மந்தான் வேலங்காட் டதனிலே
[தான்

உற்றதோர் பிரம்ம சேயாய் உதிப்பனே யவனே யம்மா
சித்தசன் தன்னை யெரித்த தேவி நீ கேட்டிடாயே.

29. பித்த வியாதியினுல் இறந்து விடுவார். இவர் தன்னுடைய பின் ஜன்மத்தில் திருவாலங்காடு என்ற க்ஷேத்திரத்தில் பிராமணர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். பார்வதியம்மையே! மன்மதனை எரித்த சிவபெருமானுடைய மனைவியாகிய நீர் கேட்பீராக.

30. சாதகன் செனனம் தொட்டுச் சாற்றிய ஆயுள் மட்டும்
பேதக மில்லா ஞகிப் பெரும்செல்வ மதிக முண்டாய்
மேதினில் கீர்த்தி யுண்டாய் விளைபுலம் அதிக மாகிக்
காதியு முடையோ ஞகிக் கனதன மதிகம் பெற்று;

30. ஜாதகர் தனது ஜனன காலம் முதல் இவருடைய ஆயுள் முடிவு வரையிலும் கஷ்டங்கள் இல்லாமலும், அதிக செல்லம் உடையவராகியும், பெருமையையும் புகழையும் அடைந்து, பயிரிடும் நிலங்களை அதிகமாகச் சம்பாதித்தும், பெருமையை யுடையோராகியும் அதிகமான பணத்தை யுடையவராகியும் இருந்து கொண்டு;

31. குறைவிலா வாழ்வா னம்மா கூறுவோ மிதிலே சங்கை
உறமுள உள்ளூர் தன்னில் உற்ற தோர் ஞாதியாலே
பெருவழக் கெப்போ தும்தான் பேசுவான் குடும் பத்திற்கே.
அரனிட பாகத் தாளே அம்மையே மேலும் கேளே.

31. யாதொரு கஷ்டங்களில்லாமல் வாழ்வார். பார்வதியம்மையே! இங்கு ஒரு விஷயத்தைச் சொல்லுகின்றோம். இவர் பிறந்த கிராமத்திலுள்ள பங்காளி ஒருவரால் இவருடைய குடும்பத்திற்கு எப்போதும் ஒரு பெரிய வழக்கு ஏற்பட்டுக் கொண்டே யிருக்கும். சிவபெருமானுடைய இடது பாகத்தையுடைய பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் அதிகமாகச் சொல்லப் போவதைக் கேட்பீராக.

32. ஞாதிகள் யேது செய்தாலும் நவிலுமிச் சாத கர்க்கு
வேதனை யோன்று மில்லான் வெற்றியே யடைவான் [மேலும்
தோதகம் பதிவே செய்யான் சுந்திர னிவனே யம்மா
மாதவர் போற்று கின்ற மங்கையே மேலுங் கேளே.

32. பங்காளிகள் எந்தக் காரியத்தைச் செய்த போதிலும், இந்த ஜாதகருக்குக் கஷ்டங்கள் ஒன்றும் இரா. இவர் ஜயத்தையே அடைவார், இவர் வஞ்சகமில்லாதவர். வருத்தத்தை உண்டு பண்ண மாட்டார். இவர் நல்லவராவர் பார்வதியம்மையே! முனிவர்கள் போற்றித் துதிக்கின்ற பார்வதியம்மையே! நாங்கள் இன்னம் அதிகமாகச் சொல்லப் போவதைக் கேட்பீராக.
—C. G. R

# ஜாதகம் 15

## ஜனனகால கிரக நிலை

1. [1]மதிசனி [2]தேளி லாக [3]மால்[4]ரவி ராகு [5]மானில்
நிதி[6]புகர் [7]சேலி லாக [8]நிலமகன் [9]நந்தி தன்னில்
வதிகுரு [10]அரியில் புக்க மன்[11]சிகி கடக மாக
பதியது சென்மம் கன்னி பகருவீர் பலன்கள் தாமே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சந்திரனும் சனியும் விருச்சிகத்திலும், புதனும் சூரியனும் ராகுவும் மகரத்திலும், சுக்கிரன்மீனத்திலும், அங்காரகன் ரிஷபத்திலும், குரு சிம்மத்திலும். கேது கடகத்திலும் இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் ரிஷிகளைக் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | | அங்காரகன் | |
| | இராசி சக்கரம் | | கேது |
| சூரியன் புதன் ராகு | | | குரு |
| | சந்திரன் சனி | | லக்கினம் |

அனுஷம் 3-ஆம் பாதம் சனி தசை
ஞு 9—03—00

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—ரிஷபத்திற் சூரியனும், கடகத்தில் அங்காரகனும் சுக்கிரனும், சிம்மத்திற் குருவும் ராகுவும், கன்னியில் சனியும், துலாத்திற் சந்திரனும், கும்பத்திற் புதனும் கேதுவும் ஆகும் புதனும் குருவும் வக்கிர கதியில் இருக்கின்றார்.

---

1. சந்திரன்.
2. விருச்சிகம்.
3. புதன்.
4. சூரியன்.
5. மகரம்.
6. சுக்கிரன்.
7. மீனம்.
8. அங்காரகன்.
9. ரிஷபம்.
10. சிம்மம்.
11. கேது.

2. புயண்டரும் சொல்லு கின்றூர் புகலுவோ மாண்பால்
[சென்மம்
நயமுடன் கீழ்மேல் வீதி நாட்டுவோம் தெற்கு வாசல்
செயமுடன் வடக்குத் திக்கில் சிவன்காளி சந்தி யப்பன்
நயநல குண்ட முண்டு சாற்றுவோம் வடமேல் திக்கில்;

2. புஜண்ட ரிஷி சொல்லுகின்றூர். ஆண் குழந்தை பிறக்கும் என்று சொல்லுகின்றேம். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்குவாயிலை யுடையதாகும். வடக்குத் திக்கில் சிவபெருமானுடைய கோயிலும், காளியம்மன் கோயிலும், சந்தியப்பன் கோயிலும், ஒரு குளமும் உண்டு என்று சொல்லுகின்றேம். வடமேற்குத் திக்கில்,

3. மாவலன் கோஷ்ட முண்டு மாரியும் மேற்கில் வாசம்
கோலமாம் ஆழி யுண்டு குறித்திடும் பேரூர் தன்னில்
பாலகன் பிறப்பா னம்மா பகருவோம் யோகச் செய்கை
ஞாலமேல் முன்பின் சென்மம் நவிலுவோம் கேளு
[மம்மா.

3. மகாவிஷ்ணுவின் கோயிலிருக்கும். மாரியம்மன் கோயில் மேற்கிலிருக்கும். சமுத்திரமும் இருக்கும். இப்படிப்பட்ட அடையாளங்களுள்ள ஒரு பெரிய கிராமத்தில் இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய யோகங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் சொல்லுகின்றேம், பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

4. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் மால்
[நிறத்தான்
பந்தமா யொடிசல் தேகி பாரினில் உயர முள்ளான்
சந்ததம் தியாகி யாவன் சன்மார்க்கன் நிதி
[யுள்ளோனும்
வந்தவர்க் கன்ன மீவன் வாக்குகள் தப்பா னுமே.

4. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் நாங்கள் சொல்லுகின்றேம். இவர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ண நிறம் என்ற ஒருவிதமான நிறத்தை யுடையவர். இவர் நீண்டு மெலிந்துள்ள தேகத்தை யுடையவர். உயரமாக விருப்பார். இவர் எப்போதுங் கொடுக்கின்ற தயாள குணத்தை யுடையவராவர். நல்ல வழியிலிருந்து நடந்து கொள்பவராவர். தனமுடையவராவர். இவர் தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். தான் சொன்ன வார்த்தையின் பிரகாரம் தவருமல் நடந்து கொள்பவராவர்.

5. இருவித குணத்த ளுகும் யின்பமாய் வார்த்தை கூறுவன்
தராதர மறிய வல்லன் தரித்திர முடைய ளுவன்
புராதனம் விருத்தி யுள்ளான் புண்ணிய மனத்த ளுகும்
கருவமும் யில்லா ளுகும் கரங்காலில் வலுவு முள்ளான்.

5. ஜாதகருடைய தகப்பஞர் நல்லதும் கெட்டதும் கலந்துள்ள நடுத்தரமான குணத்தை யுடையவராவர். இனிப்பாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் இது நல்லது இது கெட்டது என்று பகுத்தறியும் சக்தியை யுடையவர். வறுமையையும் கஷ்டங்களையும் உடையவராவர். இவர் பூர்விகமான சொத்தை அதிகப்படுத்துவார். தானதர்மங்களைச் செய்கின்ற மனத்தை யுடையவராவர். இவர் கர்வம் இல்லாதவராக விருப்பார். வலிவான கைகால்களை யுடையவராவர்.

6. தைரிய மனத்த ளுகும் சஞ்சல புத்தி யுள்ளான்
அயலார்பொன் னிச்சை யில்லான் அவன்பூமி பாகம் [நான்கு
பயிர் தொழிலு டையஞவன் பந்துவை வணங்கி [வாழ்வன்
கயம்போலே நடையு முள்ளான் காதலி மேலுங் கேளே.

6. ஜாதகரின் தகப்பஞர் தைரியமான மனத்தை யுடையவர். நிலையில்லாத மனத்தையும் கவலையையும் உடையவராவர். இவர் பிறருடைய தனத்தின் மேல் ஆசையில்லாதவர். இவருடைய நிலங்கள் நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும். இவர் நிலங்களைப் பயிரிடுந் தொழிலை யுடையவர். தன்னுடை பந்துக்களுக்கு அடங்கி வாழ்வார். இவர் யானையைப் போன்ற கம்பீரமான நடையை யுடையவர். பார்வதியம்மையே! இன்னும் நாங்கள் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பஞருடைய சகோதரர்கள்

7. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவேன் ஆண்பால் [ரெண்டு
கன்னியும் நால்வ ராகும் கழறினேம் தீர்க்க மாக
முன்னமே விதிகள் கூற மொழிகுவா ளம்மன் தாமும்
மன்னவன் பாகம் நான்கு வரும்துணை யிரண்டு [யென்றீர்.

7. ஜாதகரின் தகப்பஞருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்ரேம். இவருக்கு இப்போது இரண்டு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். ரிஷி இதற்கு முன்னமே சில ஏற்பாட்டைச் சொல்லி விடவே, பார்வதியம்மையார் இவரைக் கேட்கின்ருர். நான்கு பாகங்கள் உண்டென்று சொல்லி விட்டு இப்போது சகோதரர்கள் இரண்டு பேர் என்றீரே.

8. அந்ததோர் சேதி தன்னை அறைகுவீர் யென்று கேட்கப்
பந்தமாய் முனிவர் சொல்வார் பாலனும் செனிக்கு
[முன்னம்
இந்தவார் தந்தை மூத்தோன் யேகுவான் ஒருவன்
[தானும்
முந்திய பாகத்தோடே மொழிந்தனம் நான்கா மென்றே

8. இந்த விபரத்தைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கவே, புஜண்டரிஷி பதில் சொல்லுகின்றார். இந்த ஜாதகர் பிறப்பதற்கு முன்னே தகப்பனுருடைய மூத்த சகோதரர் ஒருவர் இறந்து விடுவார். இவருடைய பாகத்தையும் சேர்த்து மொத்தம் நான்கு பாகங்கள் என்று சொன்னோம்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

9. இப்படி யிருக்கும் தந்தை யிவனுக்கு உதித்த பாலன்
செப்புவோம் பலன்கள் யாவும் தீரநன் மனத்த னாகும்
ஒப்புடன் யிரு நிறத்தான் உத்தம குணத்த னாகும்
தப்பித மொருவர்க் கெண்ணான் தயாளவான் கல்வி
[யுள்ளான்.

9. இவ்விதமாக இருக்குந் தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறந்திருக்கின்றார். இனிமேல் ஜாதகருடைய பலாபலன்களைச் சொல்லுகின்றோம். இவர் தைரியமான நல்ல மனத்தை யுடையவர், இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமுடையவர். நன்மையான முதன்மையான குணத்தை யுடையவராவர். இவர் யாருக்குங் கெடுதிகளை நினைக்க மாட்டார். பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவர். வாசித்தவராவர்.

10. முன்கோப முடைய னவன் முகமதில் வடிவு முள்ளான்
தன்பந்து மெச்ச வாழ்வன் சத்தியவான் பாக்கிய
[முள்ளான்
பன்னிய பூமி சேர்ப்பன் பாலர்கள் உடைய னவன்
கன்னென மொழியு முள்ளான் கனத்தவர் நேசம்
[கொள்வன்.

10. ஜாதகர் முன்கோபத்தை யுடையவராவர். தன்னுடைய முகத்தில் அடையாளங்களை யுடையவராவர். இவர் தன்னுடைய பந்துக்கள் இவரைப் போற்றும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். உண்மையைப் பேசுகிறவர். செல்வத்தை யுடையவராவர். இவர் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். புத்திரர்களை உடையவராவர். இவர் சர்க்கரையைப் போன்ற இனிப்பான வார்த்தைகளை யுடையவராவர். கௌரவமுள்ளவர்களின் சிநேகிதத்தை யுடையவர்.

11. வண்டிவா கனமு முள்ளான் மறுமாதர் விருப்ப
[முள்ளான்
அண்டின பேரைக் காப்பன் ஆள்காரர் விருத்தி
[யுள்ளான்
குண்டைகோவும் விருத்தி குத்திர வசனமு முள்ளான்
பண்டுபோல் சித்திர வீடு பாலகன் செய்வா னம்மா.

11. ஜாதகர்வண்டியும் வாகனத்தையு முடையவராவர். பிறருடைய ஸ்திரீகளின் மேல் ஆசையை யுடையவராவர். தன்னிடம் உதவிக்காக வருகின்றவர்களைக் காப்பாற்றுவார். வேலையாட்கள் அதிகமாகிக் கொண்டிருப்பார்கள். மாடுகளும் பசுக்களும் இவருக்கு அதிகப்பட்டுக் கொண்டிருக்கும். குரூரமான, வஞ்சகமான, சொற்களையு முடையவராவர். இவர் சித்திரங்களடங்கியுள்ள அழகான வீட்டைக் கட்டுவார், பார்வதியம்மையே!

12. ரோமங்கள் நீட்சி யுள்ளான் நுவலுப தேச முள்ளான்
தாமத குணத்த னாகும் சற்சன ருறவு கொள்வன்
சேமமாம் குடும்பம் பின்னால் செழித்திடு மிவனுக்கே
[தான்
பூமியு மதிகம் சேர்ப்பன் புண்ணிய சென்ம மாமே.

12. ஜாதகர் நீண்ட மயிரை உடையவராவர். பெரியார்களிடத்திலிருந்து உபதேசத்தை தீக்ஷையைப்பெற்றுக் கொள்ளுவார். இவர் நிதானமான, சாந்தமான குணத்தை யுடையவர். நல்ல குணத்தை யுடையவர்களுடைய சிநேகிதத்தை யுடையவராவர். இவர் சுகமான சௌக்கியமான குடும்பத்தைத் தன்னுடைய பிற்காலத்திலுடையவராவர். இந்தக் குடும்பம் ஓங்கி வளரும். இவர் அதிகமான நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார். இவர் தானதர்மங்களைச் செய்து கொண்டு நல்ல பிறவியாக விருப்பார்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

13. இன்னவன் துணைவர் தம்மை யிசைகிறே மாண்பா
[லொன்று
கன்னியு மிருவ ராகும் கழிறினும் தீர்க்க மாகும்
அன்னமே மூன்று நஷ்டம் அவனுமே நாலாம் சென்மம்
தன்னிலே முன்சென் மத்தைச் சாற்றுவோம் மேலும்
[கேளே.

13. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு சகோதரனும் இரண்டு சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மூன்று சகோதரர்கள் சீக்கிரம் இறந்து

விடுவர்கள். பார்வதியம்மையே! ஜாதகர் நான்காவது குழந்தையாவர். இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இன்னும் கேட்பீராக.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

14. காஞ்சியின் நதிக்கு மேல்பால் கனமுள பேரூர் தன்னில்
வாஞ்சையாய்ச் சூத்திர ஞகி வளமுள பூமி பெற்றுப்
பாஞ்சையாய் மனைவி யோடு பாலர்கள் உள்ளோ ஞகி
வெஞ்சின மில்லா தாகி வியாபாரம் அதிகம் செய்து;

14. காஞ்சீபுரத்தின் ஆற்றிற்கு மேற்கேயுள்ள ஒரு பெரிய வளமான கிராமத்தில் ஜாதகர் சூத்திர ஜாதியில் ஆணுகப் பிறந்து, நல்ல செழிப்பான நிலங்களை யடைந்து, மனைவி மக்களை யுடையவராகி, கடுமையான கோப மில்லாமல் வியாபாரத்தை அதிகமாகச் செய்து கொண்டு;

15. வருவோர்க்கு அன்ன மீந்து வள்ளல்மேல் பக்தி யாகிப்
பெருமையாய் சேதுக் கேகிப் புண்ணிய தீர்த்தம் [தோய்ந்து
குறைவிலா வாழ்ந்து பின்பு கூரிய மரண மாகித்
திறமையா யிந்தப் பாலன் செனித்தன னிவனே யம்மா.

15. ஜாதகர் தன்னிடம் வருபவர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டு, கடவுளின் மேல் அன்புடையவராகி, மேன்மை தங்கிய சேது ஸ்தலத்திற்குப் போய் அங்குள்ள தெய்விகத் தன்மையுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து, யாதொரு கஷ்டங்களுமில்லாமல் வாழ்ந்து, பிறகு இறந்து, இந்த ஜன்மத்தில் இந்த ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார், பார்வதியம்மையாரே!

## ஜாதகருடைய விவாககாலமும் மனைவியின் குணதிசயங்களும்

16. இன்னவன் மணத்தின் காலமிசைகுவே மிருபா [னிரண்டில்
கன்னியு முள்ளூர் தன்னில் கனத்ததோர் மாதிர் வம்சம்
அன்னவள் வருவா ளம்மா அவளுமே அதிர்ஷ்ட [முள்ளாள்
பன்னியே வுரைக்க வல்லாள் பந்துவு மெச்ச வாழ்வள்.

16. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இருபத்திரண்டாவது வயதில்* உள்ளூரிலிருந்தும், மேன்மையான மாதிரு வர்க்கத்திலிருந்தும் மனைவி வந்து சம்பவிப்பாள், பார்வதியம்மையே!

இவள் அதிருஷ்டசாலியாகவும், பாக்கியமுள்ளவளாகவுமிருப்பாள். இவள் திறமை யாகப் பேசுஞ் சாமர்த்தியத்தை யுடையவள். தன்னுடைய பந்துக்கள் இவளைப் போற்றும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வாள்.

*குறிப்பு :—விவாக கால விஷயம் :—ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயதில் புத தசை நடைக்கின்றது. புதன் லக்கினத்திற்கும் பத்தாம் விட்டிற்கும் உடையவராகி ஏழாம் வீட்டைப் பார்க்கின்றவரும், போககாரகருமாகிய ராகுவுடன் கூடி யிருக்கின்றார். ஜாதகபாரி ஜாதம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது (29) சுலோகப் பிரகாரம் பத்திற்குடைய புதன் தன் தசையில் ஜாதகருக்கு விவாகஞ் செய்து வைக்க அதிகார முடைய வராகின்றார்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

17. மாதிரு குணத்தை யாங்கள் வரைகிறோ மிருநி றத்தள்
நீதியாய்ச் சமதே கத்தாள் நிகர்கற்பு முடைய ளாகும்
வேதனை யொருவர்க் கெண்ணாள் மேதினில் சௌக்கியம்
[கொஞ்சம்
பாதக மெண்ணா நெஞ்சம் பகருமுன் கோபம் கொஞ்சம்.

17. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறத்தை யுடையவள். இவள் சம அளவுகளுள்ள நடுத்தரமான தேகத்தை யுடையவள். இவள் கற்புடைய ஸ்திரீயாகும். இவள் யாருக்கும் கெடுதிகளை நினைக்க மாட்டாள். இவள் சிறிது சுகங்களை அநுபவிக்கக்கூடியவள். இவள் கெடுதிகளை நினைக்காத மனத்தை யுடையவளாவள். சிறிது முன் கோபத்தை யுடையவளாவள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரர்கள்

18. வந்தவர்க் கன்ன மீவள் வரனுக்கு நேய முள்ளாள்
சந்ததம் பித்த தேதி சஞ்சலமனத்த ளாகும்
பந்தமாய்த் துணைவர் தம்மைப் பகருவோ மாண்பா
[லிரண்டு
எந்தையே கன்னி யவ்வார் யிசைகிறோம் நான்கும்
[தீர்க்கம்.

18. ஜாதகருடைய தாயார் தன்னிடம் வருகின்றவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவாள். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவள். தன்னுடைய புருஷனையும் இவள் விரும்புவாள். இவள் எப்போதும் பித்த குணத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். துன்பங்களை யநுபவிக்கின்ற, கவலையை யுடைய நிலையில்லாத மனத்தை யுடையவளாவள்.

இவளுடைய சகோதரர்களைப் பற்றி சொல்லுகின்றோம். இவளுக்கு இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிகளும் உண்டு. பார்வதியம்மையே! இந்த நான்கு பேர்களும் நீண்ட வயதை யுடையவர் களாக விருப்பார்கள்.

19. மாதுலன் மூத்தோ னுந்தான், மணமிலான் மைந்த [ரில்லான்
தீதான ரோக முள்ளான் சிறப்பிலா னென்று [சொன்னோம்
கோதிலா யிளையோ னுக்குக் கூறுவோம் பலனை [யாங்கள்
மாதவர் தனை துதிப்பன் மனைவி மைந்தரு முள்ளோனே.

19. ஜாதகருடைய பெரிய அம்மான் விவாகமில்லாதவராவர். இவருக்குக் குழந்தைகள் கிடையா. இவர் கெட்ட வியாதியை *யுடையவராவர். இவர் நல்லபடியே இருக்கமாட்டார். ஜாதகருடைய சிறிய அம்மானுடைய பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். இவர் முனிவர்களை வணங்குவார். மனைவிமக்களையுடையவராக விருப்பார்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—பெரிய அம்மானுடைய விஷயம்;—மாதிருலக்கினம் நான்காவது வீடாகிய தனுசாகும். இதற்குச் சகோதர ஸ்தானம் மூன்றாவது வீடாகிய கும்பம் ஆகும். இதுதான் பெரிய அம்மான் லக்கினம். இதற்குடைய சனி, பகை வீடாகிய விருச்சிகத்தில் கும்பத்திற்கு ரோகாதிபதியாகிய சனிக்கு விரோதியாகிய ஆறுக்குடைய சந்திரனுடன் கூடி அங்காரகனால் பார்க்கப்பட்டிருக்கின்றார். ஆகையால் பெரிய அம்மான் நல்லபடியே இருக்கமாட்டார். மேலும் கும்ப லக்கினத்திற்கு ஏழிற்குடைய சூரியன் பன்னிரண்டில் அஷ்டமாதிபதியாகிய புதனுடனும் ராகுவுடன் கூடிப் பன்னிரண்டில் மறைந்திருக்கின்றார். கும்பத்திற்கு ஏழாவது வீடாகிய சிம்மத்தைச் சனியும் அங்காரகனும் பார்க்கின்றார்கள். ஏழிற்குடைய சூரியனையும் சனி பார்க்கின்றார். ஆகையால் பெரிய அம்மானுக்கு மனைவி தோஷம் அதிகமாகவிருக்கின்றது. கும்பத்திற்கு ஐந்திற்குடைய புதனும் ஏழிற்குடைய சூரியனும் பன்னிரண்டில் மறைந்து ராகுவுடன் கூடியிருப்பது அம்மானுக்குப் புத்திர தோஷமாகும். (தமிழ் ஜாதகாலங்காரம் ஐந்நூற்றுத் தொண்ணூற்றைந்தாவது (595-வது) பாடலைப் பார்க்கவும்—ஏழாம் வீட்டைச் சனியும் அங்காரகனும் பார்த்துச் சூரியன் பன்னிரண்டில் இருக்கும் விஷயம்).

20. யோகமும் குறைவு முள்ளான் உத்தம ஞகி வாழ்வன்
பாகமாய் யேழாண்டின் மேல் பகருவோம் மாமன்
[யோகம்
போகமு முடைய ஞகும் பூமியும் சேர்ப்பா ஞகும்
ஆகிய மனைவி தன்னுல் அதிர்ஷ்டங்க ளவனுக் குண்டு.

20. இந்தச் சிறிய அம்மான் சிலகாலம் யோகமும் சிலகாலம் வறுமையும் உடையவராகவிருப்பார். இவர் நல்லவராக விருந்து வாழ்வார். ஜாதகர் பிறந்த ஏழு வருஷங்களுக்குப் பிறகு இந்த மாமனுக்கு யோகம் நேரிடும். இவர் சுகபோகங்களையும் அனுபவிப்பார். நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார். இவருக்குத் தன்னுடைய மனைவியால் அதிருஷ்டங்களும் சம்பத்துக்களும் உண்டாகும்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

21. சாதகன் தனக்கு புத்திரர் சாற்றுவோ மாண்பா
[லொன்று
மேதினில் கன்னி ரண்டு விருத்தியாம் தீர்க்க மாகும்
நீதியாய் நான்கு நஷ்டம் நிகழ்த்துவோ மிவனுக் கம்மா
போதக வானைப் பெற்றப் புண்ணிய சாலி கேளாய்.

21. ஜாதகருக்குச் சந்தான விஷயமாய் இனிமேல் சொல்லுகின்ருேம். இவருக்கு ஓர் ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் விருத்தியடைந்து நீண்ட வயதுடையவர்களாக விருப்பார்கள். நான்கு குழந்தைகள் சீக்கிரம் இறந்துவிடுவார்கள் *என்று சொல்லுகின்ருேம். பார்வதியம்மையே! இளம் யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்யானம்:—புத்திரதோஷ விஷயம்:—லக்கினத்திற்கு ஐந்தாவது வீடாகிய மகரத்தில் ராகுவும் புதனும் இருப்பது புத்திர தோஷமாகும். ஐந்திற்குடைய சனி பகை ராசியிலிருந்து கொண்டு அங்காரகனுல் பார்க்கப்பட்டும், பெண் கிரகமும் விரோதியுமாகிய சந்திரனுல் பார்க்கப்படுவதும் புத்திர தோஷமாகும். குரு பன்னிரண்டில் இருந்துகொண்டு அங்காரகன் சனி இவர்களால் பார்க்கப்படுவது புத்திரதோஷமாகும். இங்கு ஆண் குழந்தை ஒன்றே என்று சொல்லியிருக்கின்றதைக் கவனிக்கவும்.

22. இன்னவன் செனனம் தொட்டு யிரண்டுமே ஆண்டு
[மட்டும்
தன்னிலே தரித்திர மாகும் சல்லிய பாதை யுண்டு

என்ன காரியம் நினைத்தும் யிடறுகள் அதுக்கே யுண்டு
வின்னமாம் ரோகம் வாய்க்கும் பேசுவோ மதன்மேல்
[தானே.

22. ஜாதகருடைய ஜனன காலம் முதற்கொண்டு இரண்டு வயது வரைக்கும் இவருடைய குடும்பத்திற்கு வருமையும் கஷ்டங்களுமுண்டாகும். கடனால் துன்பம் ஏற்படும். எந்தக் காரியங்களையும் குடும்பத்தார் நினைத்துச் செய்தாலும் அது கைகூடி வராமல் கெடுதியாக முடியும். கஷ்டங்களும் வியாதிகளும் உண்டாகும். இதற்குமேல் நடக்கும் பலாபலன்களைச் சொல்லுகின்றோம்.

23. மூன்றுண்டு வரைக்குமே தான் மொழிகிறோம் பலனை
[யாங்கள்
ஈன்றுமே சமபலன் தான் யெழிலுள சல்லியம் நீங்கும்
வான்திசை பிறைபோல் யோகம் வந்திடு மிவனுக்
[கம்மா
சான்றோர்கள் மனதில் வாழும் சக்தியே மேலும் கேளே.

23. பிறகு மூன்று வருஷங்கள் வரையிலும் நாங்கள் பலாபலன்களைச் சொல்லுகின்றோம். சமமான, நடுத்தரமான பலன்கள்தான் நடக்கும். கடன் நிவர்த்தியாகும். ஆகாயத்திலுள்ள வளர்பிறைச் சந்திரனைப்போல யோகம் இவருக்கு நாளுக்குநாள் விருத்தியாகும். பார்வதியம்மையே! நல்லவர்களுடைய மனதில் குடிகொண்டுள்ள பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக.

24. ஆருண்டு முதலா மாக அவனுடை மரண மட்டும்
தாராள யோகம் வாய்க்கும் தனதான்ய மேன்மே
[லோங்கும்
சீரான பூமி சேரும் சித்திர வீடு செய்வன்
நேரான கன்று காலி நிலைத்திடு மிவனுக் கம்மா.

24. ஜாதகருக்கு ஆருவது வயது முதற்கொண்டு இவருடைய ஆயுள் முடிகின்ற காலம் வரையிலும் அதிக யோகம் உண்டாகும். செல்வமும் தான்ய வகையருக்களும் நாளுக்குநாள் அதிகப்பட்டுக்கொண்டே வரும். இவருக்கு நல்ல நிலங்கள் வந்து சேரும். இவர் சித்திரங்களையுடைய அழகான வீட்டைக் கட்டுவார். ஆடுமாடுகளும் இவருக்கு நிலையாக விருக்கும், பார்வதியம்மையே!

25. பால்பசு விருத்தி யுண்டு பந்துவு மெச்ச வாழ்வன்
சீலமாய்த் தீருவும் சேரும் சென்றிடம் சிறப்பு முண்டு

ஞாலமேல் கீர்த்தி யோங்கும் நாடெல்லாம் வசிய மாகும்
கோலமாய்க் குடும்பம் தன்னில் கோதையர் வாசம்
[செய்யும்.

25. ஜாதகருக்குக் கரவை பசுக்களும் பாலும் அதிகப்படும். இவர் தன்னுடைய பந்துக்கள் போற்றும்படியாகவும் மதிக்கும்படியாகவும் இருந்து வாழ்வார். இவருக்குச் செல்வமும் லக்ஷ்மி கடாக்ஷமும் உண்டாகும். இவர் எங்கே போகின்றுரோ அவ்விடங்களிலெல்லாம் இவருக்கு மேன்மை யுண்டு. இவருக்குப் புகழ் அதிகப்படும். கிராமத்திலுள்ளோர்கள் எல்லோரும் இவருக்கு அநுகூலமாகவும் இவர் பக்கமாகவும் இருப்பார்கள். இவருடைய குடும்பத்தில் ஸ்திரீகள் சுகமாக வாழ்வார்கள். லக்ஷ்மியும் வாசஞ் செய்வாள்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

26. இப்படி முனிவர் கூற யீஸ்வரி கேழ்க்க லுற்ருள்
செப்புவாய்த் தந்தை சென்மம் செல்வதி கேட்கும்
[போது
ஒப்புடன் முனிவர் சொல்வார் உரைக்கிருேம்
[தந்தைக்கே தான்
அப்பணி சடையோன் வாழும் ஆலங்காட் டதற்கு
[கீழ்பால்;

26. இவ்விதமாகப் புஜண்டரிஷி சொல்லவே, பார்வதியம்மையார் கேட்க வாரம்பித்தார். இவருடைய தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுவீர், என்று பார்வதியம்மையார் கேட்கும்போது, புஜண்டரிஷி பதில் சொல்லுகின்ருர். ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய ஜடையில் பாம்பைத் தரித்துக்கொண்டிருக்கின்ற சிவபெருமான் எழுந்தருளி யுள்ள திருவாலங்காடு என்ற ஸ்தலத்திற்குக் கிழக்கில்;

27. பேருரில் வன்னியனுகிப் புத்திரர் மனைவி யோடு
சீருடன் கிருஷி செய்து சிறப்பான குடும்பம் பெற்று
ஊரெலாம் கீர்த்தி யாகி உத்தமர் நேசம் கொண்டு
பாரினில் வாழும் நாளில் பத்தின ஊழி கேளே.

27. ஒரு பெரிய கிராமத்தில் வன்னிய ஜாதியில் ஆணுகப் பிறந்து மனைவிமக்களுடன் வாழ்ந்துகொண்டும், மேன்மையான குடும்பத்தை அடைந்தும், தன்னுடைய கிராமம் முழுவதிலும் புகழையுடையவராகியும், நல்லவர்களுடைய சிநேகத்தை அடைந்தும் வாழுகின்ற காலத்தில், இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைக் கேட்பீராக.

28. பஞ்சியும் ஸ்ரீயும் ஓர்ஞள் பாலகன் தனக் கன்னம்
கெஞ்சின ளிவன்பால் சென்று கேட்டிவ னில்லை
[யென்ருன்

வஞ்சியும் மன வெறுப்பால் வரைகின்ருள் சாபந் தானும்
துஞ்சிடும் செல்வ மெல்லாம் துன்பங்கள் மிக
[உண்டாகும்,

28. ஏழையான ஒரு ஸ்திரீ ஒரு தினத்தில் ஜாதகருடைய தகப்பனுரிடம் போய், தன்னுடைய குழந்தைக்காகச் சாதத்தைக் கெஞ்சிக் கேட்டாள். அதற்கு இவர் சாதம் இல்லை என்று சொல்லிவிட்டார். அதன்மேல் ஏழை மாது தன்னுடைய மனத்தில் துன்பத்தையடைந்து சாபத்தைக் கொடுத்தாள். "உன்னுடைய பொருள் எல்லாம் நாசமாகிக் போகக் கடவது. உனக்கு அதிகமாகக் கஷ்டங்கள் நேரிடவேண்டியது";

29. இப்படி சாபம் சொல்லி யேழையும் நீங்கி விட்டாள்
அப்பவே தரித்திர ஞகி அந்திய காலம் தன்னில்
குப்புற செல்வம் நீங்கிக் கூறுவோ மலேச்ச லாகி
விற்பனு மரண மாகி விறைந்தன னிவனே யம்மா.

29. என்று இவ்விதமாக அந்த ஏழை மாது சொல்லிச் சாபத்தைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டாள். உடனே ஜாதகருடைய தகப்பனுர் ஏழையாகித் தன்னுடைய கடைசி காலத்தில் தன்னுடைய பெரிய செல்வத்தை எல்லாம் போக்கடித்துக்கொண்டு அலேச்சலேயுங் கஷ்டங்களேயுமுடையவராகிப் பிறகு இறந்து இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர், பார்வதியம்மையாரே !

30. இச் சென்மந் தன்னிலே தான் யிவன் செல்வ மதிக
[மின்றி
லச்சைக ளதிகம் நேறும் நாட்டுவோம் பலன்கள்
[அல்ப்பம்
முச் சென்ம சாபத்துக்கு முயலுவோம் கிரிசை யொன்று
பச்சை மால்மருக ஞன பரமன் தன் குருவுமாயும்.

30. ஜாதகருடைய தகப்பனுருக்கு இந்த ஜன்மத்தில் செல்வம் அதிகமாக வில்லாமலிருக்கும். இவருக்கு அச்சமும் வெட்கமும் அதிகப்படும். இவருக்கு எல்லா பலாபலன்களும் அற்பமாகவிருக்கும். ஆகையால் முன் ஜன்மத்திய சாபம் நீங்குவதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்ரேம். மகா விஷ்ணுவிற்கு மருமகனும், சிவபெருமானுக்குக் குருவாகவும், தகப்பன் சாமியாயும்;

31. விளங்கிய முருக ருக்கு மேதினில் மாதம் ஓர்நாள்
உளங் களிப்பாகவே தான் உத்தமன் ஒருவ ருக்கு
மனங் களியாக அன்னம் வண்மையால் அளித்து
[வந்தால்
கனம் பெரும் குடும்பம் தானும் காதலி மேலுங் கேளே.

31. இருந்த முருகக் கடவுளுக்குத் தன்னுடைய மனம் சந்தோஷத்தை அடையும்படி ஒவ்வொரு மாதத்திலும் ஒரு தினத்தில் நல்ல குணங்களையுடைய ஒரு பரதேசிக்குச் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டு வந்தால் தகப்பனுருடைய குடும்பம் விருத்தியடையும், பார்வதியம்மையே! நாங்கள் இன்னும் அதிகமாகச் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய தகப்பனாரின் மரணமும் மறுஜன்மமும்

32. முன் செய்த சாபம் நீங்கி முயற்சியாய் குடும்ப மாகும்
தன்பந்து மெச்ச வாழ்வன் சஞ்சல நிவர்த்தி யாகும்
இன்னவன் மரண காலம் யியம்புவோம் முப்பான் [ரெண்டில்
நன்னிய மரண மாகி மறுசென்மம் தவளை யுத்தரம்.

32. தகப்பனுர் தன் முன் ஜன்மத்திலடைந்த சாபம் விலகி, குடும்பம் விருத்தியடையும். இவர் தன்னுடைய பந்துக்கள் போற்றும்படியாயும் மதிக்கும்படியாயுமிருந்து வாழ்வார். மனக்கவலை விலகிவிடும். இனிமேல் இவருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர், ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது* வயதில் இறந்து, பின்ஜன்மத்தில் தவளை பூஜை செய்து மோக்ஷத்தை யடைந்த ஸ்தலத்திற்கு வடக்கில்.

*குறிப்பு ;—வியாக்கியானம் :—பிதுர் மகர விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் கேது தசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது (46) சுலோகப் பிரகாரம் சந்திரன் மாரகராகின்ருர். இவர் வீட்டிலுள்ள கேது ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது, இருபத்து மூன்ருவது (12, 23) சுலோகங்கள் பிரகாரம் பிதுருக்குமாரகஞ் செய்ய அதிகார முடையவராகின்ருர். ஆகையால் தகப்பனுருக்குக் கேது தசையில் மாரகஞ் சொல்லப் பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலமும் ஜாதகருடைய மரணகாலமும்

33, இக்குலம் தன்னிலே தான் யிவனுமே யுதிப்பா னம்மா
தொக்கவே மாதுரு காலம் சொல்லுவோ முப்பா னேழில்
நக்கன்தன் பாதம் சேர்வள் நாயகன் தனக்குமே தான்
முக்கிய மறுபா னைந்தில் முயர் ஆனி மாதம் தன்னில்.

33. இந்த ஜன்மத்தில் பிறந்த ஜாதியிலேயே பிறப்பார், பார்வதியம்மையே! ஜாதகரின் தாயாருடைய மரண காலத்தைப் பற்றி இனிமேல்

சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்தேழாவது* வயதில் இவள் இறந்து சிவபெருமானுடைய பாதங்களை அடைவாள். ஜாதகருக்கு அறுபத்தைந் தாவது* வயதில் ஆனி மாதத்தில்;

*குறிப்பு :—மாதுரு லக்கினம் மரண காலம்:—ஜாதகிக்கு முப்பத்தேழாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. மாதுரு லக்கினம் நான்கா வது வீடாகிய தனுசு ஆகும். இந்த லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது (60) சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்றார். ஆகையால் சுக்கிர தசையில் மாதாவிற்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

*குறிப்பு :—ஜாதகருடைய மரண காலம் :—ஜாதகருக்கு அறுபத்தைந்தாவது வயதில் சந்திர தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது (54) சுலோகம் பிரகா ரம் சந்திரன் மாரகராகின்றார். இந்தச் சந்திரன் எட்டிற்குடையவ ராகிய அங்காரகனைப் பார்த்து இவருடைய சம்மந்தத்தை அடைந்து இருக்கின்றார். சந்திரன் சனியுடன் கூடியும் இவரு டைய சம்மந்தத்தை அடைந்திருக்கின்றார். ஆகையால் துய்ய கேரளம் எட்டாவது பாவம் பன்னிரண்டாவது, இருபதாவது, பதினான்காவது (12, 20, 14) பாடல்கள் பிரகாரமும் சந்திரன் மாரகராகின்றார். ஆகையால் ஜாதகருக்குச் சந்திர தசையில் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது என்று அறியவும்.

## ஜாதகருடைய மறுஜன்மம்

34. *ஆதிரை நாளிலே தான் அடைந்துமே மறு சென்மத்தை*
*நீதியாய்ச் சொல்வோம் நாங்கள் நிகழ் சிறு பாக்கந்*
*[தன்னில்*
*கோதிலா சைவ வம்சம் குணமுடன் உதிப்பா னம்மா*
*தீதிலா முனிவர் யாங்கள் சொலுமொழி குன்றிடாது.*

34. திருவாதிரை நட்சத்திர தினத்தில் ஜாதகர் இறந்து விடுவார். இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றி நாங்கள் சொல்லுகின்றோம். சிறு பாக்கம் என்ற கிராமத்தில் குற்றமில்லாத ஒரு சைவ குலத்தில் நல்ல குணங் குளுடன் இவர் பிறப்பார், பார்வதியம்மையே! முனிவர்களாகிய நாங்கள் சொல்லுகின்ற பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். —C. G. R.

# ஜாதகம் 16

## ஜனனகால கிரகநிலை

1. [1]திங்களும் [2]தேள தாக [3]சேய் [4]தனு [5]காரி [6]மானில்
[7]சுங்கனும் [8]பானு [9]சீயம் [10]சுரர் குரு [11]கோல தாக
[12]மங்கையில் [13]புந்தி கேது மீனத்தில் ராகு தங்க
இங்கிவை கிரகம் நின்று லக்கினம் கன்னி யாக;

1. ஜன்ம லக்கினம் கன்னியாகிச் சந்திரன் விருச்சிகத்திலும், அங்காரகன் தனுசிலும், சனி மகரத்திலும், சுக்கிரனும் சூரியனும் சிம்மத்திலும், குரு துலாத்திலும், கன்னியில் புதனும் கேதுவும், மீனத்தில் ராகுவும் இருந்து இவ்விதமாகக் நவக் கிரகங்கள் அமைந்தால்;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | |
| | இராசி சக்கரம் | | |
| சனி | | | சூரியன் சுக்கிரன் |
| அங்காரகன் | சந்திரன் | குரு | லக்கினம் புதன் கேது |

கேட்டை 3-ஆம் பாதம், புத தசை வரு 5—07—00 சுமார்.

குறிப்பு :—இந்த ராசிசக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :— மேஷத்திற் புதனும், ரிஷபத்திற் கேதுவும், கடகத்திற் சனியும், கன்னியில் அங்காரகனும், சுக்கிரனும் துலாத்திற் சூரியனும், விருச்சிகத்தில் ராகுவும், தனுசிற் குருவும், கும்பத்திற் சந்திரனும் ஆகும். சுக்கிரன் அஸ்தமடைந்து விருக்கின்றார். சனி வக்கிரகதியிலிருக்கின்றார்.

---

1. சந்திரன்.
2. விருச்சிகம்.
3. அங்காரகன்.
4. தனுசு.
5. சனி.
6. மகரம்.
7. சுக்கிரன்.
8. சூரியன்.
9. சிம்மம்.
10. குரு.
11. துலாம்.
12. கன்னி.
13. புதன்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பலனதை சொல்லுமென்று பாரவதி கேட்கும் போது
குலவியே பராசர் சொல்வார் குறித்தது ஆண்பாலாகும்
தலமது வடதென் வீதி சனிவாடை அருகர் உத்திரம்
அலைகடல் துயின்ரோன் தென்கீழ் அதின்கீழ்பால்
[தந்தி காளி.

2. பாலபலன்களைச் சொல்லுவீர்ரென்று பார்வதியம்மையார் கேட்கும் போது, பராசர மகரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை யாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்கு வாடையில் இருக்கும். அருகருடைய கோயில் வடக்கில் இருக்கும். மகாவிஷ்ணுவின் கோயில் தென் கிழக்குத் திக்கிலிருக்கும். இதற்குக் கிழக்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயிலும் காளியம்மன் கோயிலுமிருக்கும்.

3. ஈசனும் வட கீழாகு மிடிபடும் கெடியும் தெற்கில்
பேசின அடையாளத்துள் பேரூரில் கங்கை சேயாய்
வாசமாம் அன்னை தந்தை மனைவி புத்திரர்கள் யோகம்
வீசிய துணைவர் யோகம் விளம்புவோம் முன்பின்
[சென்மம்.

3. சிவபெருமானுடைய கோயில் வடகிழக்குத் திக்கிலிருக்கும். ஓர் இடிந்த கிலமான கோட்டையும் தெற்கிலிருக்கும். இங்கு சொல்லப்பட்ட அடையாளங்களை யுடைய ஒரு பெரிய கிராமத்தில் ஜாதகர் வேளாளர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். தாயார், தகப்பனார், மனைவி, புத்திரர்கள் ஆகிய இவர்களுடைய யோகங்களையும், சகோதரர்களின் யோகமும், முன்ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றைச் சொல்லுகின்றோம்.

4. தாதைக்குத் தாரம் ரெண்டில் தரித்திடு முதல்மா தீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின்
[தந்தை
போதவே துணைவர் தன்னை போற்றவே பல முருது
சாதிப்பேன் தந்தை சேதி தானிரு நிறத்த னுமே.

4. ஜாதகருடைய தகப்பனுருக்கு இரண்டு மனைவிமார்களில் முதல் மனைவிக்கு ஜாதகர் பிறந்திருக்கின்றார். இவருடைய தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குச் சகோதர பாவம் பலமில்லாமல் இருக்கிறது, அஃதாவது சகோதரர்கள் கிடையா* தகப்பனுருடைய விஷயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றேன். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறத்தை யுடையவராவர்,

*குறிப்பு :—வியாக்கியானம் :—தகப்பனுருடைய விஷயம் :—பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்குச் சகோதர ஸ்தானமாகிய மூன்றிற்குடைய சந்திரன் விருச்சிகத்தில் நீச்சமாக விருக்கின்றூர். மூன்ருவது வீடாகிய கடகத்தைச் சனியும் அங்காரகனும் கேதுவும் பார்க்கின்றூர்கள். சகோதரகாரகனுகிய அங்காரகன் பிதுர் லக்கினத்திற்கு எட்டில் மறைந்திருக்கின்றூர். ஆகையால் பிதுருக்குச் சகோதர தோஷம் ஆதிகமாக விருக்கின்றது. ரிஷபத்திற்கு மூத்த சகோதர ஸ்தானமாகிய மீனத்தில் ராகு இருக்கின்றூர். மீனத்தைச் சனியும் அங்காரகனும் பார்க்கின்றூர்கள். மீனத்திற்குடைய குரு ரிஷபத்திற்கு ஆறிலும் மீனத்திற்கு எட்டிலும் மறைந்திருக்கின்றூர். ஆகையால் பிதுருக்கு மூத்த சகோதர தோஷமும் அதிகமாக விருக்கின்றது.

5. ஆதியில் வறுமை யுள்ளான் அவன் தந்தை ஆஸ்தி
[காணுன்.
நீதிமான் நடக்கை நன்மை நிமலிமார் மோக ஞவன்
சூதிலான் முன் கோபத்தன் துருசான கோபி யாவன்
போதனை புரிவா ஞகும் புண்ணிய மனத்த ஞவன்.

5. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முற்காலத்தில் தரித்திரத்தையும் கஷ்டங்களை அநுபவிப்பவராவர். இவருக்குப் பிதுரார்ஜித சொத்து கிடையாது. இவர் நீதியை யுடையவராவர். நல்ல நடவடிக்கை யுடையவராவர். இவரை ஸ்திரீகள் விரும்புவார்கள். இவர் வஞ்சனை, கள்ளம், கபடு ஆகிய இவற்றை யுடையவரல்லர், முன் கோபத்தை யுடையவராவர். கெடுதியான கோபத்தையுமுடையவராக விருப்பார். போதிப்பை அடைபவராவர். தானதர்மங்களைச் செய்கின்ற நல்லமனத்தை யுடையவராவர்.

6. அன்னியவர் பக்கல் சென்று அவனுமே சீவிப்பா ஞம்
தன்கரம் கத்திரி ரேகை தனமது மில்லா ஞகும்
பின்ன மில்லாத தேகி பிறர் பொருளிச்சை யில்லான்
சொன்ன யிக்குணத்தா னுக்குச் சுதனுமே ஐந்தாம்
[சென்மம்

6. ஜாதகருடைய தகப்பனுர் பிறரிடம் சென்று வேலை செய்து ஜீவனஞ் செய்வார். இவருடைய உள்ளங்கையில் கத்திரிரேகை என்ற ஒருவித கெட்ட ரேகை யுண்டு. இவருக்குப் பணம் கிடையாது. இவர் யாதொரு அவயவக் குறைவில்லாத தேகத்தை யுடையவர். அன்னியருடைய சொத்துக்களின் மேல் ஆசையில்லாதவராவர். இங்கு சொல்லப்பட்ட இவ்விதமான குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் ஐந்தாவது குழந்தையாக.

## ஜாதகருடைய சகோதரபாவம்

7. உதிப்பஞ மிவனே யம்மா உரைக்கிறேம் துணைவர்
[தம்மைச்
சதமுடன் ஆண்பால் ரெண்டு சத்தியு மொருத்தி
[யென்றேம்
அதுபலன் சொல்லக் கேண்மோ அடக்கவான்
[பொறுமை சாலி
விதவித செட்டு செய்வன் வீண் பழியேற் காஞமே.

7. பிறப்பார், பார்வதியம்மையே! இனிமேல் ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவருக்கு இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியுமுண்டு. இவர்களுடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம், கேட்பீராக. ஒரு சகோதரர் அடக்க முடையவர். சாந்தமானவர். இவர் பற்பல வியாபாரங்களைச் செய்வார். வீணான அபவாதங்களை அடையமாட்டார்.

8. முந்திஞள் வறுமை யுள்ளான் முயர்வான குடும்பம்
[பின்ஞல்
தந்தையின் ஆஸ்தி காஞன் தன்மனை வந்த பின்பு
வந்திடும் பிறைபோல் யோகம் வடதிசை மனைவி
[வாய்க்கும்
அந்தவன் தனக்குப் புத்திரர் ஆணது யிரண்டு தீர்க்கம்.

8. இவர் தன்னுடைய முற்காலத்தில் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிப்பார். பிற்காலத்தில் குடும்பம் மேன்மையை யடையும். இவருக்கு வளர்பிறைச் சந்திரனைப் போல யோகம் நாளுக்கு நாள் அதிகரிக்கும். இவருக்கு மனைவி வடக்கிலிருந்து வருவாள். இவருக்கு இரண்டு பிள்ளைகள் நீண்ட வயதை யுடையவர்களாக விருப்பார்கள்.

9. கன்னிகை அவ்வா ருகும் காளையும் சுகமாய் வாழ்வன்
பின்துணை தனைக் காப்பாஞம் பூமியும் யில்லம் சேர்ப்பன்
சந்தத மிளையோன் சேதி தன்மனம் கபடு முண்டு
நிந்தையும் கொஞ்ச மேற்பன் நீட்சியாம் உணச்ச
[லுள்ளான்.

9. இரண்டு பெண்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவர் சௌக்கியமாக விருந்து வாழ்வார். தன்னுடைய இளைய சகோதரர்களைக் காப்பாற்றுவார். இவர் நிலங்களையும் வீட்டையும் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவருடைய இளைய சகோதரருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் கள்ளம் வஞ்சனை ஆகிய இவற்றைத் தன்னுடைய மனத்தில் உள்ளவராவர். இவர் சிறிது பழியை அடைபவராவர். நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவராவர்.

10. ஒருவர் கீழ் சிலனுள் வாசம் உறுதிவான் வறுமை
[காணுன்
திருமகள் வாசம் பின்னுல் சிலசில செட்டு செய்வன்
வருமனைக் குடக்கு வென்றேம் மைந்தர்கள் ஆண்பால்
[மூன்று
பிறைநுதல் பெண்பால் ஒன்று பேசுவோம் தீர்க்க மாக.

10. இந்த இளைய சகோதரர் ஒருவரிடம் சிறிது காலம் வேலை செய்து கொண்டு வாசஞ் செய்து வருவார். திடமான மனத்தை யுடையவர். கஷ்டங்களையும் தரித்திரத்தையும் அடைய மாட்டார். இவருக்குத் தன் பிற்காலத்தில் லக்ஷ்மி கடாக்ஷமுண்டு, சம்பத்துமுண்டு. இவர் பற்பல வியாபாரங்களைச் செய்வார். இவருக்கு மனைவி மேற்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லுகின்றேம், இவருக்கு மூன்று பிள்ளைகளும் ஒரு பெண்ணும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றேம்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

11. இன்னமும் சிலது சேதி யியம்புவோம் பின்பாக த்தில்
கன்னிகை சேதி யவ்வாறு கழறுவோ மினி மேலாக
பன்னுவோ மிவன் குணத்தைப் பாரினில் உணச்சல்
[நீட்சி
கன்னென மொழியே சொல்வன் கல்மனம் கபடு
[முண்டு.

11. இன்னும் சில விஷயங்களை இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றேம். சகோதரியினுடைய விஷயங்களையும் இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றேம். ஜாதகருடைய குணுதிசயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றேம்.: இவர். நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவராவர். இவர் சர்க்கரையைப் போல இனிமையாயுள்ள வார்த்தைகளைச் சொல்லுவார். கெட்டியான மனத்தை யுடையவர். வஞ்சம், கள்ளம் ஆகிய இவற்றை யுடையவராவர்.

12. மாநிறம் யூகை வாணும் மங்கைமார் மோக ணுவன்
ஈனமாம் குணங்கள் கொஞ்சம் யிருவித வார்த்தை
[சொல்வான்
ஆனதோர் செட்டும் செய்வன் அண்டினேர் தம்மைக்
[காப்பன்
தேன்மொழி மாதர் நேயன் சிறுபோதில் தரித்திர ணுவன்.

12. ஜாதகர் மாநிறமுள்ள தேகத்தை யுடையவராவர். ஸ்திரீகளிடத்தில் காம ஆசையை யுடையவராவர். இவருக்குச் சிறிது தாழ்மையான இழிவான குணங்களுமுண்டு. உண்மையும் பொய்யும் கலந்துள்ள

இரண்டு விதமான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் நல்ல வியாபாரத்தைச் செய்வார். தன்னிடம் வருகின்றவர்களைக் காப்பாற்றுவார். தேனைப் போல இனிப்பான வார்த்தைகளை யுடைய ஸ்திரீகளிடத்திற் பிரிய முள்ளவராவர். இளம் பிராயத்தில் கஷ்டங்களை அநுபவிப்பவராவர்.

13. வணிபங்கள் செய்வா னுகும் மான்கண்ணன் மாதர்
[நேயன்
துணிவான குணத்த னுகும் சுகிபொசிப் பிச்சை
[யுள்ளான்
கனமுள குடும்பி யாவன் கரமதில் விஷ்ணு ரேகை
சினமுண்டு வெளிக்காட் டாதான் செயம்செய்வ
[னெடுத்த வேலை.

13. ஜாதகர் வியாபாரங்களைச் செய்பவராவர், மானைப் போன்ற அழகான கண்களை யுடையவராவர். ஸ்திரீகளுக்குச் சினேகிதராக விருப்பார். இவர் துணிச்சலான, தைரியமான குணத்தை யுடையவராவர். சுகமான சாப்பாட்டைச் சாப்பிட ஆசையை யுடையவராவர். இவர் மேன்மையான குடும்பஸ்தராக விருப்பார். தன்னுடைய உள்ளங் கையில் விஷ்ணு ரேகையை யுடையவராவர். இவருக்குக் கோபமுண்டு, ஆனால் இதை வெளியே காட்டிக் கொள்ள மாட்டார். தான் செய்ய எடுத்த காரியங்களை நல்லபடியே செய்து முடிக்குந் திறமையை யுடையவராவர்.

## ஜாதகருடைய விவாக காலமும், மனைவியின் குணாதிசயங்களும்

14. இருபது ஆறு ஆண்டில் யிவனுக்குப் பாரி வாய்க்கும்
வரும் கன்னி தன்கீழாகும் மாதிரு தந்தை வர்க்கம்
இருநிற முன் கோபத்தாள் இடுக்கமாம் குணத்தா
[ளாகும்
திருகிலாக் குணத்தா ளாகும் தீங்கான மனமும் கொஞ்சம்

14. ஜாதகருக்கு இருபத்தாறுவது வயதில்* மனைவி வந்து சம்பவிப்பாள், இவள் கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். இவள் தாயார் தகப்பனூர் ஆகிய இவர்களுடைய வம்சத்தைச் சார்ந்தவளாவள். இவள் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமுள்ள தேகத்தை யுடையவளாவள். முன் கோபத்தை யுடையவள். துன்பத்தை அநுபவிக்கின்ற குணங்களையும் கெட்ட குணங்களையு முடையவளாகும். இவள் கள்ளம் வஞ்சனை ஆகிய இவற்றையுடையளல்லள், கொஞ்சங் கெடுதியான மனத்தையும் உடையவளாவள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—விவாக கால விஷயம் :—ஜாதகருக்கு இருபத்தாறுவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. சுக்கிரன்

இரண்டாவது ஒன்பதாவது பாவங்களுக்கு அதிபதியாகியும் களத்திரகாரனுமாகியும் இருக்கின்றார். ஆகையால் ஜாதகபாரிஜாதகம், பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது (29) சுலோகப்பிரகாரம் சுக்கிரன் தன் தசையில் ஜாதகருக்கு விவாகஞ் செய்துவைக்கும் அதிகாரமுடையவராக விருக்கின்றார்.

15. சொல்லது சுகமே யுண்டு தொடுத்ததைச் சாதிப்பா ளாம்
வல்லிக்கு வயது அல்பம் மறுமனை அணுகு மென்றோம்
தல்லியும் கேட்க லுற்றாள் செப்பினீர் தாரம் ரெண்டாய்
புல்குவீர் விபர மாக புயங்கனு மேழில் தங்கப்;

15. ஜாதகருடைய மனைவி இன்பமான வார்த்தைகளை உபயோகப்படுத்துவாள். தான் செய்ய ஆரம்பித்த காரியங்களைச் செய்து முடிப்பவளாவள். இவள் அற்பாயுளை உடையவளாவள். ஜாதகருக்கு இரண்டாவது மனைவி வருவாள் என்று சொல்லுகின்றோம். இவ்விதமாகப் பராசர மஹரிஷி சொல்லவே, பார்வதியம்மையார் இவரைக் கேட்கவாரம்பித்தார். ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு என்று சொன்னீரே. இது விஷயமாக விவரங்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார், கேட்கவே, பராசர மஹரிஷி பதில் சொல்லுகின்றார். புயங்கன் என்ற ராகு களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீட்டிலிருப்பதாலும்;

16. புகருமே விரைய மாகப் புகன்றன மந்தச் சங்கை
தகமையா யேழோன் பொன்னோன் தனத்தினி யிருப்ப [தாலும்
மிகு மைந்தில் காரி நின்று மிக்கயே முதனைப் பார்க்கப்
பகையுறு தாரத் துக்குப் பருகிடும் தீர்க்க மாக.

16. புகர் என்ற சுக்கிரன் விரயம் என்ற பன்னிரண்டாவது வீட்டில் இருப்பதாலும் இரண்டு தாரம் என்று சொன்னோம். இதன் மேல் பார்வதியம்மையார் பதில் சொல்லுகின்றார். ஏழிற்குடையவராகிய பொன்னோன் என்ற குரு தனம் என்ற இரண்டாவது வீட்டிலிருப்பதாலும், ஐந்தாவது வீட்டிலுள்ள காரி என்ற சனி ஏழாவது வீட்டைப் பார்ப்பதாலும் மனைவிக்குக் கெடுதி நேரிடாது, இவள் தீர்க்காயுளை யுடையவளாவள்.

17. சரத்தினில் யேழான் நிற்க சாருமோ மனைவி ரெண்டு
உரையாது தனத்தில் பொன்னோன் ஒன்றியா யிருப்ப [தாலே
திருமகன் தனக்கு முன்னே சேயிழை மரண மெய்தும்
உரைகிறோ மந்தி யத்தில் உரைக்கிறோம் புத்திர பாகம்.

17. இவ்விதமாகப் பார்வதியம்மையார் சொல்லவே, பராசர மஹரிஷி கேட்கின்றார். ஏழிற்குடையவராகிய குரு சர ராசிகளில் * ஒன்றாகிய துலா ராசியில் இருப்பதாலே இரண்டு மனைவிமார்கள் சேர்மாட்டார்

களோ, என்று பராசர மஹரிஷி கேட்டார். இதற்கு பார்வதியம்மையார் பதில் சொல்லுகின்றார். பொன்னேன் என்ற குரு தனம் என்ற இரண்டில் ஒண்டியாக * யாதொரு கிரகமும் சேராமல் இருப்பதாலே இரண்டு மனைவி மார்கள் இல்லை. ஆனால் ஜாதகருக்கு முன்னே, மனைவி இறந்துவிடு வாள். இவள் ஜாதகருக்குக் கடைசி காலத்தில் இறந்துவிடுவாள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் புத்திர பாவத்தைப்பற்றிச் சொல்லு கின்றோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—குரு சர ராசியில் இருக்கும் விஷயம் :— இது விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய ஜாதகாலங் காரம் அறுநூற்று நாற்பத்தெட்டாவது (648—ஆவது) பாடலில் முதல் வரியை வாசிக்கவும். *களத்திர ஸ்தானாதிபதியாகிய குரு தனியாக யிருப்பதைப்பற்றி இதே ஜாதகாலங்காரம், அறுநூற்று நாற்பத்து மூன்றாவது (643—ஆவது) பாடலில் முதல் இரண்டு வரிகளையும் வாசிக்கவும்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

18. சுதர்களு மிருவர் தோன்றும் சோர்ந்திடும் சிலது [யென்றோம்
சதமுடன் ஆண்பால் ரெண்டு தங்கிடும் பெண்பா [லவ்வாறு
இது நான்கும் தீர்க்க மெய்தும் யேகிடும் முதலிலேதான்
அதுவன்றி நான்கு ஆறும் அழிந்திடு மென்று [சொல்வோம்.

18. ஜாதகருக்கு இரண்டு பிள்ளைகள் பிறப்பார்கள். சில குழந்தை கள் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் ஆகமொத்தம் நான்கு குழந்தைகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். முதலில் சில குழந்தை கள் இறந்துவிடும். இதுவுமன்றி நான்காவது, ஆறாவது குழந்தைகளும் சீக்கிரம் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

19. அன்னை மாஞ்சிவப் புடையளாகும் ஆளனுக் கினிய [ளாகும்
பன்னியே பேச வல்லள் பாட்டாளி சமயோ கத்தாள்
பொன்பணி யிச்சை யுள்ளாள் பிறந்தயில் பாழ தாகும்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பா ளென்று [சொல்வோம்.

19. ஜாதக்ருடைய தாயார் மாந்தளிரைப்போன்ற ஒருவிதமான சிவப்பு நிறமுள்ள தேகக்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷ னுக்குப் பிரியமுள்ளவளாவள். இவள் திறமையாகப் பேசுஞ் சாமர்த்தி யத்தை யுடையவள். கஷ்டப்பட்டு வேலையைச் செய்யக்கூடியவள். நடுத் தரமான யோகத்தை யுடையவளாவள். இவள் தனம் ஆபரணம் ஆகிய இவற்றின் மேல் ஆசையை யுடையவள். இவள் பிறந்த வீடு நாசத்தை யடையும், அஃதாவது இவளுடைய தாயார் வீட்டார் க்ஷேமமாக விருக்க மாட்டார்கள்*. இவள் தான் சொல்லுகின்ற வார்த்தைகளே சரியானவை என்று வாதாடி நிலைநாட்டுவாள் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—தாயாருடைய வீடு பாழ் என்ற விஷயம்:— தாயார் லக்கினம் நான்காவது விடாகிய தனுசு ஆகும். இதில் திருதீய அஷ்டமாதிபதியாக அங்காரகன் இருப்பது தோஷ மாகும். மாதிருகாரகராகிய சந்திரன் மூன்றில் நீசமாக விருப்பது தேஷாமாகும்.?அம்மான்காரனுகிய்புதன் கேதுவுடன் கூடி இருப்பது தோஷமாகும். அம்மான் ஸ்தானமாகிய கும் பத்திற்குடைய சனி கும்பத்திற்குப் பன்னிரண்டில் இருப்பதும் தோஷமாகும். அம்மான் ஸ்தானமாகிய ஆருவது வீட்டை விரயாதிபதியாகிய சூரியன் பார்ப்பதும் தோஷமாகும். ஆகையால் தாயார் குடும்பத்தாருக்கு அதிக தோஷம் இருக் கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

20. இல்லமும் துலையில் கோணம் யிவள்துணை ஆண்பால்
[காணும்
வல்லியு மொன்றே யாகும் மங்கையும் நடக்கை நன்மை
அல்லல்கள் மத்தியத்தில் அணுகிடு மிவளுக் கேதான்
சொல்லுவோ மிவள்முன் சென்மம் தோகையின் கிரிக்கு
[மேல்பால்

20. ஜாதகருடைய தாயாரின் வீடு, துலை என்ற துலாராசியின் கோணம் என்ற திரிகோண ராசிகளாகிய துலாம், கும்பம், மிதுனம் ஆகிய இந்த மூன்று ராசிகளின் திக்காகிய மேற்குத் திக்கில் இருக்கும். தாயாருக் குச் சகோதரர்கள் இல்லை. சகோதரி ஒருத்தியே யாகும். தாயார் நல் லொழுக்கமுடையவளாவள். இவளுக்கு மத்தியவயதில் கஷ்டங்களும் துன்பங்களும் உண்டாகும். இவளுடைய முன் ஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பழனியின் மலைக்கு மேற்கே;

21. பிறந்தனள் ரெட்டி வம்சம் புத்திர ருள்ளா ளாகிச்
சிறந்திடு குடும்பி யாகிச் சுதர்களு மதிக முண்டாய்

உறைந்திடு காலம் தன்னில் ஊழதைப் புகலக்
[கேண்மோ
மறபின்பெண் சிகையைக் கட்டும் வடமதைக் களவு
[கொண்டாள்,

21. தாயார் ரெட்டியாருடைய ஜாதியில் பிறந்தாள். இவள் சந்ததி களையுடையவளாகியும், மேன்மையான குடும்பத்தை யுடையவளாகியும், அநேக குழந்தைகளை யுடையவளாகியும் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த வினையைச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக. இவள் தன்னுடைய ஜாதிப்பெண் தன்னுடைய கூந்தலைக்கட்ட உபயோகப்படுத்துகின்ற ஒரு வட்டத்தையும் அதன் கயிற்றையும் திருடிக் கொண்டாள்.

22. வடமதை யிழந்த மாது வரைகிறுர் சாபம் தானும்
அடவுடன் மருசென் மத்தில் ஆளனு மந்தி யத்தில்
கடவுள்தன் பாதம் சேர்வான் கயரது யிழப்பா யென்று
உடன்சொல்லி தெருத்தூள் விட்டாள் உரைந்தது
[அந்தத் தோஷம்.

22. கூந்தல் வட்டத்தையுங் கயிற்றையுமிழந்துவிட்ட பெண் சாபத்தைக் கொடுக்கின்றுள். "உன்னுடைய பின்ஜன்மத்தில் உன்னுடைய கடைசி காலத்தில் புருஷன் இறந்து கடவுளுடைய பாதங்களை அடைவார். அதனுல் நீ கயிற்றை யிழந்து அமங்கலியாகப் போகக்கடவது" என்று சாபங் கொடுத்துவிட்டுத் தெருவிலுள்ள மண் தூளை எடுத்துத் தூவிவிட்டாள். இந்தத் தோஷமானது தாயாரை வந்தடைந்தது.

23. மற்ருெரு குற்றம் காணுள் மாதுவு மந்தி யத்தில்
பர்த்தாவும் மரண மாகிப் பாவையும் தனியாய் வாழ்ந்து
பித்தமாம் பிணியி னுலே புக்கினுள் கால னுடு
வித்தகர் வரையப் பட்டு விளங்கினு ளிந்த மாது.

23. தாயார் வேறே யாதொரு பாவங்களையுஞ் செய்யவில்லை. இவள் தன்னுடைய கடைசி காலத்தில் தன்னுடைய புருஷனை இழந்து பிறகு தனியாய் வாழ்ந்து பித்த வியாதியால் இறந்து எமபட்டணத்திற்குச் சென்ருள். பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

24. கயிறது யிழந்தோள் சொல்போல் கணவனு மந்தி
[யத்தில்
உயிரது விடுவா னுகும் உத்தமி வறுமை பூண்டு

வியமன தாக வாழ்வள் மேவிடும் பித்த வாயு
நயமுடன் யிவள்பின் சென்மம் நாட்டுவோம் கடையூர்
[கீழ்பால்;

24. கூந்தல் கயிற்றை இழந்துவிட்ட பெண் கொடுத்த சாபத்தைப் போலவே தாயாருடைய புருஷன் கடைசிகாலத்தில் இறந்துவிடுவான். பிறகு இவள் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மடைந்து துன்பமுள்ள மனத்தை யுடையவளாக வாழ்வாள். இவளுக்குப் பித்தவாயு ரோகமுண்டாகும். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் கடையூர் என்ற திருக்கடையூர் க்ஷேத்திரத்திற்குக் கிழக்குத் திக்கில்;

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

25. சிறுவூரில் சைவகங்கை சேயாய்ச் செனிப்பாளா மிவளே
[யென்றோம்
வறுமைகள் யில்லா வாழ்வள் வரைகிறோம் தந்தை
[பூர்வம்
அருணைக்கு உத்தி ரத்தில் அருகினில் பேருர் தன்னில்
கருணீக குலமே தோன்றிக் கல்வியை சிலர்க்குச்
[சொல்லி;

25. ஒரு சிறிய கிராமத்தில் சைவ வேளாளர் ஜாதியில் பெண் குழந்தையாகப் பிறப்பாள். இவள் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்காமல் வாழ்வாள். இனிமேல் ஜாதகருடைய தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்திற்கு வடக்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் கருணீகர் ஜாதியிற் பிறந்து சிலருக்கு உபாத்தியாயராகவிருந்து வித்தையைக் கற்றுக் கொடுத்து;

26. சீவித்து வாழும் நாளில் சிலர்க்குப்பொய் சாட்சி
[சொன்னான்
தாவினோர் சிலது காரியம் தானதைக் கெடுத்தா
[னென்றோம்
பூமியில் மனவெ றுப்பால் புகலுவார் சாபம் தானும்
ஓவிய மறுசென் மத்தில் உனைப்பெற்ற தாயும் போக்கி;

26. இவ்விதமாக ஜீவனஞ் செய்துகொண்டு வாழ்கின்ற காலத்தில் தகப்பனார் பொய் சாட்சியைச் சிலருக்காகச் சொன்னார். இவ்விதமாகச் சொல்லித் தோல்வியை யடைந்தவர்களுடைய சில காரியங்களைத் கெடுத்துவிட்டார் என்று சொல்லுகின்றோம். இவர்கள் தங்களுடைய மனத்தில் துன்பத்தை அடைந்து சாபத்தைக் கொடுத்தார்கள்:— "நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் உன்னைப்பெற்றத் தாயாரை இழந்தும்

27. பின் மாதா பக்கல் வாழ்வாய் பலமிலாக் குடும்பியாகித்
தன்தந்தை ஆஸ்தி காணுய் சலிப்புடன் வாழ்வா
[யென்று
அன்னவர் சொல்லிச் சென்ருர் அடைந்தது அந்தத்
[தோஷம்
இன்னவன் அந்தியத்தில் யிடரான வாயு நோயால்;

27. இளைய தாயாரிடம் இருந்தும் வாழக்கடவது, நீ மேன்மையில்லாத குடும்பஸ்தராக விருக்கக்கடவது. உனக்கும் பிதுரார்ஜித சொத்து இருக்கக்கூடாது. நீ கஷ்டத்துடன் வாழக்கடவது" என்று தோல்வியடைந்தவர்கள் சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். இந்தச் சாபம் தகப்பனுரை வந்தடைந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் கெடுதியான வாயு ரோகத்திஞல்;

28. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீல மில்லாத கங்கை குலம் செனிப்பனு மிவனே
[யென்ருேம்
சாலவே முன்னூழ் சாபம் சார்ந்ததால் துணைவர்
[தோஷம்
ஏலவே அன்னை தோஷம் மெய்திடு மென்று
[சொல்வோம்.

28. இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுச் சுத்தமில்லாத ஒரு வேளாளர் ஜாதியில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். இவருக்கு முன் ஜன்மத்திய சாபம் வந்தடைந்ததால் இவருக்குச் சகோதர தோஷம் ஏற்படும். மாதுரு தோஷமும் ஏற்படும் என்று சொல்லுகின்ருேம்.

29, பின்மாதா ஒன்று யென்றீர் பேசுவீர் அவளுக்குப்
[புத்திரர்
சொன்னனே ஆண்பால் நான்கு தோகையு மிருவர்
[தீர்க்கம்
அன்னவர் வேருய்ச் செல்வர் அடைகுவார் தந்தை
[ஆஸ்தி
பின்பாகம் சொல்லு கின்ருேம் பேதையே கேட் டிடாயே;

29. தகப்பனுருக்கு இளைய தாயார் ஒருத்தி யுண்டென்றீரே! இவளுடைய புத்திரர்களைப் பற்றிச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கவே, பராசர மஹரிஷி சொல்லுகின்ருர். இளைய தாயாருக்குத் நான்கு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் தீர்க்காயுளை யுடைவர்களாக விருப்பார்கள். இவர்கள் வேறு குடும்பஸ்தர்களாக விருப்பார்கள். தகப்

பனுருடைய சொத்துக்களை அடைவார்கள். இவர்களுடைய மற்ற விஷ யங்களைப் பின்பாகத்தில் சொல்லுகின்ருேம்.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

30. உதித்தவன் பூர்வம் சொல்வேன் ஓங்கிய தில்லை
[தன்னில்
நிதிமிக உடையோ னுக்கு நேர்ந்தனன் வைசிய சேயாய்
பதியினில் திருவு முண்டாய் பாரினில் செட்டு செய்து
சதமுடன் புகழு முண்டாய் தன்மனை மதலை யாகி;

30. ஜாதகருடைய முன்ஜென்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். வளம்பொருந்தியதில்லை என்ற சிதம்பர க்ஷேத்திரத்தில் அதிகமான செல் வத்தையுடைய ஒரு சைவருக்கு ஆண் குழந்தையாகப் பிறந்து, செல்வத் தையுடையவராகி, வியாபாரத் தொழிலைச் செய்துகொண்டு, எப்போதும் கீர்த்தியை யுடைவராகி, மனைவி மக்களையு முடையவராகி ;

31. அறமதி லிச்சை யின்றி அந்தகன் பக்கல் சென்று
சிற ஞன் கோன் வரையப்பட்டுச் செனித்தவ னிவனே
[யென்ருேம்
உரைகிருேம் யிவனின் சேதி உதித்தனுள் முதலா யாக
வறுமைகள் அனம் குறைச்சல் மனமது சஞ்ச லங்கள்.

31. தர்மஞ் செய்வதில் பிரியமில்லாதவராகி, இறந்து எமனிடத்திற்குப் போய் நான்கு தலைகளையுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறந்திருக்கின்ருர், என்று சொல்லுகின் ருேம். இனிமேல் ஜாதகருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின் ருேம். ஜாதகர் பிறந்த நாள் முதற்கொண்டு தரித்திரமும், கஷ்டங்களும், குறைவான சாப்பாடும், மனத்திற்குக் கஷ்டங்களும் ;

32. ஈரெட்டு ஆண்டு மட்டும் யிடருக ளனேக முண்டு
பாருளோர் நிந்தை சொல்வார் பதிறுண் டதனின்
[மேலாய்
மாறிடும் வறுமை தானும் வளர்பிறை போலே செல்வம்
கூறுவோம் செட்டு ஓங்கும் குலத்துளோர் மதிப்பு
[கொள்வர்.

32. ஜாதகருக்குப் பதினறு வயதுவரையிலும் அநேக கெடுதிகளும் குடும்பத்தாருக்கும் இந்த ஜாதகருக்கும் உண்டாகும். பூமியிலுள்ளோர் இவர்களின்மேல் பழிகளையும் குறைவுகளையும் சொல்லுவார்கள். இங்கு சொல்லப்பட்ட வயதாகிய பதினறு வயதிற்குப் பிறகு தரித்திரம் விலகிப் போய்விடும், வளர்பிறை சந்திரனைப் போல செல்வம் நாளுக்கு நாள்

விருத்தியை யடையும் என்று சொல்லுகின்றோம். வியாபாரம் விருத்தியாகும். இவருடைய குடும்பத்திலுள்ளவர்கள் மேன்மையையும் கௌரவத்தையும் அடைவார்கள்.

33. மாலிகா யோக மொன்று மந்திரி யோக மொன்று
சாலவே யிரண்டு யோகம் தங்கிடு மிவனுக் கென்றோம்
கோலமாய் முப்பாண் டுக்கும் குவலய திரிச்ச லாலே
ஞாலமே லாப மெய்தும் நாடாது பொருள் கைதானே.

33. ஜாதகருக்கு மாலிகா யோகம் என்ற கிரக மாலிகா யோகம்* ஒன்று இருக்கின்றது. மந்திரி* யோகம் என்ற இன்னொரு யோகமும் இருக்கின்றது. இவ்விதமாக இவருக்கு இரண்டு யோகங்கள் இருக்கின்றன வென்று நாங்கள் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பது வயது வரைக்கும் இவர் பூமியில் அங்குமிங்கும் திரிந்துகொண்டிருப்பார், லாபமுண்டாகும், ஆனால் தனம் தன்னுடைய கைக்கு வராது.

*குறிப்பு:—வியாக்கியானம்:—மாலிகா யோகம்:—லக்கினம் முதல் கிரகங் கிரகங்கள் வரிசையாக வீடு விடாமல் இருப்பது மாலிகா யோகமாகும். மந்திரி யோகம் என்பது கோணாதிபதியும் கேந்திராதிபதியும் பார்த்துக்கொள்வது, இங்கு கேந்திராதிபதியாகிய குருவைத் திரிகோணாதிபதியாகிய சனி பார்த்திருக்கின்றார். இவை விஷயமாக கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் இருநூற்றறுபத்தெட்டாவது (268-ஆவது) பாடலையும் முந்நூற்றுத் தொண்ணூற்றாறுவது (396-ஆவது) பாடலையும் பார்க்கவும். இன்னம் ஜாதக பாரிஜாதம், பல தீபிகை முதலிய கிரந்தங்களையும் ஜாதக சிந்தாமணியையும் பார்க்கவும். கிரகங்கள் எல்லாம் ஏழு வீட்டில் அடங்கி இருப்பதால் வல்லகி யோகம் என்ற வீணை யோகமும் இருக்கின்றது. ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் நூற்றெழுபத்து மூன்றாவது (173-ஆவது) சுலோகத்தைப் பார்க்கவும். ஜாதக பாரிஜாதம் ஆறாவது அத்தியாயம் முப்பத்தொன்பதாவது (39-ஆவது) சுலோகத்தையும் வாசிக்கவும்.

34. கைமுதல் அதன்மேல் காணும் கனத்ததோர் செட்டு [ஓங்கும்
ஐயமென் றோரைக் காத்தல் அரசர் பூசிதமு மெய்தல்
பையர வணிந்தோன் பக்தி பாக்கிய வான் மதிப்பு [முள்ளான்
பொய்யுரை நிசமாய்க் கொள்வர் புகழது மேற்பா [னென்றோம்.

34. ஜாதகருக்கு முப்பது வயதிற்குப் பிறகு கைமுதல் பணம் கிடைக்கும். பெரிய வியாபாரம் விருத்தியடையும். ஜாதகர் நாங்கள் கஷ்டத்தை

யடைந்திருக்கின்றோம் என்று சொல்லித் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவார். அரசர்களுடைய மதிப்பும் உண்டாகும். பாம்பைத் தன்னுடைய ஜடையில் அணிந்துள்ள சிவபெருமான் மேல் அன்பு உண்டாகும். செல்வந்தர்களுடைய மதிப்பும் உண்டாகும். ஜாதகர் பொய்யை நிஜமென்று நம்பிவிடுவார். கீர்த்தியை யடைவார் என்று சொல்லுகின்றோம்.

**35.** இல்லமும் யிரண்டு நேரு மெழில் தனம் கொடுக்கல் [வாங்கல்
அல்லல்கள் அணுகா தாகும் அவனியில் தூசு செட்டும்
எல்லையில் பஞ்ச வர்ண மெய்திடு மிவனுக் கென்றோம்
சொல்லு யீருயிரம் பொன் சுதனுமே சேர்ப்பா னுகும்.

35. ஜாதகருக்கு இரண்டு வீடுகள் கிடைக்கும். இவர் தனத்தைப் பிறருக்குக் கொடுப்பதும் மறுபடியும் திருப்பி வாங்கிக்கொள்ளுவதுமான லாவாதேவியை யுடையவராவர். இவருக்கு இனிமேல் கஷ்டங்கள் உண்டாகா. இவருக்குச் சீலை வியாபாரமும் பஞ்சவர்ண வஸ்துக்களின் வியாபாரமும் நடைபெறும் என்று சொல்லுகின்றோம். இவர் இரண்டாயிரம் பொன்மதிப்பிடக் கூடிய தனத்தைச் சேர்த்துவைப்பார்.

## ஜாதகரின் தாய்தகப்பனுர்களின் மரணகாலமும் ஜாதகரின் மரணகாலமும்

**36.** பிறந்ததோர் ஆண்டுக் குள்ளே பிதுர்கண்டம் நேரு [மென்றோம்
சிறந்ததோர் முப்பா னைந்தில் செல்லுவார் அன்னை [தானும்
உறைந்திடு மறுபான் ரெண்டில் உயர் ஆனி மாதம் [தன்னில்
மறலியின் பதிக்குச் செல்வன் மைந்தனு மென்று [சொல்வோம்.

36. ஜாதகர் பிறந்த வருஷத்திலேயே *இவருடைய தகப்பனுர் இறந்து விடுவார் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்தைந்தாவது வயதில்* இவருடைய தாயார் இறந்து விடுவாள். அறுபத்திரண்டாவது* வயதில் ஆனி மாதத்தில் ஜாதகர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்வார் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—பிதுர் மாரகம் விஷயம்:—பிதுர் மாரகம் புத தசையில் சொல்லப்பட்டிருக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். லக்கினுதிபதியாகிய சுக்கிரன் சூரியனுடன் கூடி அஸ்தமடைந்திருப்பது பிதுர் தோஷமாகும். ரிஷபத்திற்கு எட்டில் விரையாதிபதியாகிய அங்காரகன் இருப்பது பிதிர் தோஷமாகும். எட்டிற்குடைய குரு

ஆறுவது பாவத்தில் மறைந்திருப்பது பிதுர் தோஷமாகும். பிதுர் ஸ்தானத்தை ராகு பார்ப்பது தோஷமாகும். ஆகையால் பிதுர் ஜாதகருக்கு நீண்ட காலம் உயிருடனிருக்க மாட்டார். ரிஷப லக்கினத்திற்கு இரண்டிற்குடைய புதன் கூட மாரகர் என்று சில கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தப் புதன் கேதுவுடன் கூடியிருப்பதால் பாபியாகிக் கொல்ல அதிகார முடையவராக விருக்கின்றார். ஆகையால் புதன் தசையில் பிதுர் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—மாதுர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தைந்தாவது வயதில் சூரிய தசை நடக்கின்றது. மாதுர் லக்கினம் தனு சாகும். இதற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது (60-ஆவது) சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்றார். இவருடன் கூடிய சூரியன் ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றுவது (23-ஆவது) சுலோகப் பிரகாரம் அதிக மாரகராகின்றார். ஆகையால் சூரிய தசையில் மாதுருக்கு மரணம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு:—ஜாதகர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது வயதில் மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது. அப்போது ராகு தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது (54-ஆவது) சுலோகம் பிரகாரம் குரு மார கராகின்றார். குரு வீட்டில் இருக்கின்ற ராகு ஜாத சந்திரிகை இருபத்து மூன்றுவது (23-ஆவது) சுலோகம் பன்னிரண்டாவது சுலோகப் பிரகாரம் அதிக மாரகரான்றார். ராகு தசை ஏழாந் தசையாக வருவதால் ஜாதகாலங்காரம் தொள்ளாயிரத்து எழு பத்தைந்தாவது (975-ஆவது) பாடல் பிரகாரமும் குமாமரசாமி யம் மகாதசைப் படலம் நான்காவது பாடல் பிரகாரமும் ஏழாந் தசையாகிய ராகு தசை ஜாதகரை மாரகஞ் செய்ய அதிகார முடையதாகும். ஆகையால் ஜாதகருக்கு இராகு தசையில் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய பின்ஜன்மமும் தகப்பனுருடைய பின்ஜன்மமும்

37. பின்சென்மம் தணிகை தன்னில் பிறப்பனும் சைவ [சேயாய்
மன்னரால் அரசு செய்வன் மவன் தந்தை பின்சென்மம் [கேள்
கன்னியா குமரி தன்னில் கலப்பனும் வைசிய சேயாய்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட் டிடாயே,

27. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் தணிகை என்ற திருத்தணி க்ஷேத்திரத்தில் சைவராகப் பிறந்து இராஜாங்கத்தில் அதிகாரமான வேலையைச் செய்வார். தகப்பனுருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுன்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக. இவர் கன்னியா குமரியில் வைசியராகப் பிறப்பார். மேன்மை தங்கிய யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

38. முப்பது ஒன்ருண்டின் மேல் விளம்புவோம் குடும்பம் [வேறு
செப்புவோம் பின்பால் சேதி செனித்திடு காலம் தன்னில்
ஒப்புடன் புந்தி தன்னில் ஓரைந்து ஆண்டி னேடு
மைப்புடன் திங்க ளேழும் விளம்புவோம் பலனை [யாங்கள்.

38. ஜாதகருக்கு முப்பத்தோராவது வயதிற்குப் பிறகு குடும்பம் வெவ்வேருகப் பிரிந்து போய்விடும். மற்ற விஷயங்களைப் பின்னுல் சொல்லுகின்ரேம். ஜாதகர் பிறந்த காலத்தில் புத மகா தசையில் இருப்பு ஐந்து வருஷங்களும் ஏழு மாதங்களும் ஆகும். இக்காலத்திய பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்ரேம்.

39. பாலகன் பிணியால் வாட்டும் பறப்பனும் தந்தை தானும்
ஞாலமேல் வறுமை உண்டு நல்கிடும் வனவாசங்கள்
கோலமாம் குடும்ப மென்ரேம் கூறுவோம் பின்பால் [சேதி
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தது தப்பா தாமே.

39. ஜாதகருக்கு நோயால் கஷ்டங்கள் ஏற்படும். இவருடைய தகப்பனுர் இறந்து போய் விடுவார். பூமியில் இவருடைய குடும்பத்தாருக்கு தரித்திரமும் கஷ்டங்களும் ஏற்படும். வனவாசங்கள் நேரிடும். குடும்பம் கலகலத்துப் போய்விடும் என்று சொல்லுகின்ரேம். மற்ற விஷயங்களைப் பின்னுல் சொல்லுகின்ரேம். ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானுடைய மனைவியாராகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். —C. G. R.

———

# ஜாதகம் 17

## ஜனனகால கிரகநிலை

1. [1]மந்திரி ராகு [2]மானில் [3]மங்கல [4]னிரவி சிம்மம்
சந்திரன் புதனும் கன்னி சனி மீனம் [5]புகர் [6]செம்பாம்பு
முந்திய கடகம் தங்க முதயமும் மாதையாக
இந்தவார் கோளும் நின்றால் யியம்புவீர் பலனைத் தானே

1. கன்னி ஜன்ம லக்கினமாகிக், குருவும் ராகுவும் மகரத்திலும், அங்காரகனும் சூரியனும் சிம்மத்திலும், சந்திரனும் புதனும் கன்னியிலும், சனி மீனத்திலும், சுக்கிரனும் கேதுவும் கடகத்திலும் இருந்து, இவ்விதமாக நவக் கிரகங்கள் இருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| | இராசி | சக்கரம் | சுக்கிரன் கேது |
| குரு ராகு | | | சூரியன் அங்காரகன் |
| | | | லக்கினம் சந்திரன் புதன் |

அஸ்தம் 4-ஆம் பாதம். சந்திர தசை
இரு 0—06—00.

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப்பின்வரும் அச்ச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:— மிதுனத்தில் ராகுவும், கடகத்திற் சந்திரனும் சனியும், சிம்மத்திற் சூரியனும், துலாத்தில் அங்காரகனும், விருச்சிகத்திற் சனியும், தனுசிற்கேதுவும், மகரத்திற் புதனும், கும்பத்திற் குருவும் மீனத்திற் சுக்கிரனும் ஆகும். அங்காரகன் அஸ்தமடைந்து இருக்கின்றார். குரு வக்கிர கதியிலிருக்கின்றார்.

---

1. குரு.
2. மகரம்.
3. அங்காரகன்.
4. சூரியன்.
5. சுக்கிரன்.
6. கேது.

## ஜனனமான நாட்டுச்சிறப்பு

2. அம்பிகை கேட்கும் போது அத்திரி முனிவர் சொல்வார்
செம்மையாய் ஆண்பால் சென்மம் செனித்த யில்
[கிழக்கு வாடை
தென் உத்தரம் வீதியாகும் தக்ஷிணம் கணேசன்
[கோஷ்டம்
நன்மையாய் மாரி மேற்கில் நவிலுவோம் கேளுந் தாயே.

2. பார்வதியம்மையார் கேட்கும் போது, அத்திரி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆணாகும். பிறந்த வீடு வடக்குத் தெருவில் கீழண்டை வாடையில் இருக்கும். தெற்கில் விநாயகர் கோயில் இருக்கும். மாரியம்மன் கோயில் மேற்கிலிருக்கும் என்று நாங்கள் சொல்லுகின்றோம். பார்வதி யம்மையே ! கேட்பீராக.

3. ஆடுதின்னும் முனிகிழக்கில் ஆத்தாள் நிற்பாள்
அருகினிலே காளியுண்டு மாரிதங்கும்
நாடியே குண்டமுண்டு சோலை காணும்
நவிலுவோம் சித்தூர் இந்தப் பாலன்
தேடியே கங்கைகுல முதிப்பா னாகும்
செனித்தவனின் யோகமுடன் துணைவர்யோகம்
மாடியே களத்திரபுத்திரர் தந்தை தாயார்
முன்பின் சென்ம மெலாம் பகருவோமே.

3. ஆட்டைத்தின்னுகின்ற முனீசுவரன் கிழக்கில் இருக்கும். பார்வதியம்மன் கோயிலும் இங்கே இருக்கும். இவற்றிற்குச் சமீபத்தில் காளியம்மன் கோயிலும் மாரியம்மன் கோயிலு மிருக்கும். ஒரு குளமும் தோப்பும் இருக்கும். இவ்விதமான அடையாளங்கள் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் இவர் ; வேளாளர் ஜாதியிற் பிறப்பார். இவருடைய யோகம், சகோதரர்களின் யோகம், மனைவி, சந்தானம், தகப்பனார், தாயார் ஆகிய இவர்களுடைய பலாபலன்களையும், முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரர்களும், குணாதிசயங்களும்

4. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மறுவ
[ராகும்
எந்தையே பெண்பால் ரெண்டு யிலகிடும் தீர்க்க மாக
நொந்திடும் மற்ற தெல்லாம் நுவலுவோம் பிதா
[குணத்தை
முந்தியே யிருநி றத்தான் மூலநோய் வாயு ரோகி.

4. ஜாதகரின் தகப்பனருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் ஆறு பேராவர். இவர்களில் இரண்டு சகோதரிகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மற்றவரெல்லாம் சீக்கிரம் இறந்து போவார்கள். தகப்பனருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவர். மூலநோயும் வாயு ரோகமு உடையவராவர்.

5. கல்வியு மில்லா னாகும் கனத்தவர் நேசம் கொள்ளான்
தொல்லையு மாதிலே தான் செறிந்திடு மிவனுக்கே தான்
பல்லுகள் குற்ற மில்லான் பாருகள் கிருஷி செய்வன்
வல்லியால் பெருமை யுள்ளான் மறுமொழி கூறு னாகும்.

5. ஜாதகருடைய தகப்பனர் வாசித்தவரல்லர். பெரியோர்களுடைய சிநேகிதத்தை யுடையவரல்லர். இவருக்கு முற்காலத்தில் கஷ்டங்கள் நேரிடும். இவர் குற்றமில்லாத, தோஷ மில்லாத பற்களை யுடையவராவர். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். இவருக்குத் தன்னுடைய மனைவியால் கௌரவ முண்டாகும். இவர் தடுத்துப் பதில் சொல்ல மாட்டார்.

6. புதிதான கிரகம் செய்வன் பூமியை விருத்தி செய்வன்
சதியிலா மனத்த னாகும் தன்மனம் கபடு மில்லான்
முதியோர்கள் உறவு கொள்ளான் முன்கோப முடைய [னாகும்
நதிசடை அணிந்தோன் தேவி நல்கிடும் பித்தச் சூடு.

6. ஜாதகருடைய தகப்பனர் புதிய வீட்டைக் கட்டுவார். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை அதிகப்படுத்துவார். இவர் துரோக மில்லாத மனத்தை யுடையவர். இவர் தன்னுடைய மனத்தில் வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றை யுடையவரல்லர். இவர் பெரியோர்களுடைய சினேகத்தை யடைய மாட்டார். முன் கோபமுடையவராவர். கங்கா நதியைத் தன்னுடைய ஜடையில் தரித்துள்ள சிவபெருமானுடைய மனைவி யாகிய பார்வதியம்மையே! இவருக்குப் பித்த சூட்டு ரோக மிருக்கும்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

7. இக்குண முடையோ னுக்கு இவனுமே சேஷ்ட னாக
மிக்கவே யுதிப்பா னாகும் விளம்புவோ மிவன் குணத்தைச்
சிக்கன மில்லா னாகும் தேகமு மிருநி றத்தான்
நக்கன்மேல் பக்தி யுள்ளான் நாயகன் கல்வி யில்லான்.

7. இப்படிப்பட்ட குணங்களை யுடைய தகப்பனருக்கு இந்த ஜாதகர் மூத்த குமாரனகப் பிறப்பார். இனிமேல் இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், இவர் உலோப குணத்தை யுடையவரல்லர்.

தாரளமாகச் செலவிடக் கூடியவர். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவர். இவர் சிவபெருமான் மேல் அன்புடையவர். இவர் படித்தவரல்லர்.

8. அன்னைசொல் கடவா னாகும் அடாநிந்தை பேசானாகும்
சொன்னசொல் தவறா னாகும் சுத்தமா மனத்த னாகும்
இன்னவன் பித்த தேகி இன்பமாய் வார்த்தை சொல்வன்
உன்னத கிருஷி செய்வன் உத்தமி கேட்டி டாயே.

8. ஜாதகர் தன்னுடைய தாயாருடைய வார்த்தையைக் கடந்து செல்லாதவராவர். தகாத குற்றங்களைச் சாட்ட மாட்டார். இவர் தான் சொன்ன வார்த்தைகள் பிரகாரம் தவறாமல் நடந்து கொள்ளக் கூடியவர். இவர் பரிசுத்தமான நல்ல மனத்தை யுடையவராவர். இவர் பித்த குணமுள்ள தேகத்தை யுடைவர். இவர் இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் மேன்மையான பயிரிடுந் தொழிலைச் செய்வார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

9. பூமியும் பரிபாலிப்பன் பித்தமாம் தேகி யாவன்
தாமத குணத்தா னாகும் சகலர்க்கு நல்லோ னவன்
நேமியோர்க் குதவி செய்வன் நீர்தனில் தோய வல்லன்
கோவுகள் விருத்தி யுள்ளான் கோமளி மேலும் கேளே.

9. ஜாதகர் நிலங்களை வைத்துக் கொண்டு காப்பாற்றுவார். இவர் பித்த குணமுள்ள தேகத்தை யுடையவர். இவர் சாந்தமான நிதானமான குணத்தை யுடையவர். இவர் எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். இவர் பூமியிலுள்ளவர்களுக்கு உதவியைச் செய்வார். இவர் திவ்விய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்யுந் திறமையை யுடையவராவர். இவரிடம் பசுக்கள் விருத்தியாகும். பார்வதியம்மையே ! நாங்கள் இன்னும் சொல்லப் போவதைக் கேட்பீராக.

## ஜாதகருடைய சகோதரபாவம்

10. இவனுடைத் துணைவர் தன்னை யியம்புவோ மறுவ ராகும்
அவனியில் ஆண்பால் ரெண்டு அறைகிறோம் தீர்க்கமாக
இவர்களு மிரண்டு யேழு மிச் சென்மம் விருத்தி யாகும்
நவனியில் மற்ற வெல்லாம் நசித்திடு மென்று
[சொல்வோம்.

10. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றி சொல்லுகின்றோம். இவர்கள் ஆறு பேராகும். இரண்டு சகோதரர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவ்விரண்டு சகோதரர்களும் இரண்டாவது ஏழாவது பிறவிகளாகும். இவ்விருவரும் இந்த ஜன்மத்தில் விருத்தியை யடைவார்கள். மற்ற எல்லாச் சகோதரர்களும் நாசத்தை அடைந்து சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம்.

11. ஆடெனும் சென்மம் தோன்றும் அவனுமே யிவன்பின் [வந்தோன்
பாடுவேன் அவன்கு ணத்தை பயிர்த்தொழி லுடைய [னுகும்
தேடுவான் பூமி தன்னைச் சல்லியம் கொள்ளா னுகும்
நாடுளோர் வசியம் கொள்வன் நாயகன் கல்வி யில்லான்,

11. ஜாதகருடைய இளைய சகோதரர் ஆடு என்ற மேஷ ராசியில் பிறந்தவராவர். இவருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் பயிரிடுந் தொழிலை யுடையவராவர். இவர் நிலங்களைச் சம்பாதிப்பார். இவர் கடன்பட மாட்டார். இவர் தன்னுடைய கிராமத்திலுள்ளவர்களைத் தன் பக்கமாக விருக்கும்படியாகச் செய்து கொள்ளுவார், இவர் படித்தவரல்லர்.

12. உபகாரி யிருநி றத்தான் உரைக்குமுன் கோபி யாவன்
அபவாத மில்லா னுகும் அவன்சிறு தீனி யிட்டன்
தபசிகள் உறவு கொள்ளான் சந்தேக மனத்த னுகும்
செபங்களும் பெறுவா னுகும் சேயிழை விருப்பம் [கொள்வன்.

12. ஜாதகருடைய இளைய சகோதரர் பிறருக்கு உதவியைச் செய்வார். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறத்தை யுடைய தேகத்தை யுடையவர். பேசுவதற்கு முன்னே கோபத்தை யுடையவராவர். குற்றம், நிந்தை ஆகிய இவற்றை அடையாதவராக விருப்பார். இவர் உணவுப் பண்டங்களைச் சிறிது சிறிதாகச் சாப்பிடப் பிரியமுள்ளவர். தபசு செய்கின்றவர்கள், பெரியோர்கள் ஆகிய இவர்களுடைய சினேகிதத்தை யுடையவரல்ல. சந்தேகப் படுகின்ற மனத்தை யுடையவர். இவர் ஜெபங்களைச் செய்பவராவர், ஸ்திரீகளின் மேல் ஆசையை யுடையவராவர். இவரும் பெண்களின் மேல் ஆசையை யுடையவராவர்.

13. மனைவியு மொன்றே யாகும் அவளுமே உத்திர திக்காம்
கனமுடன் புத்திர பாகம் கழறுவோ மாண்பால் ரெண்டு
அனையவே பெண்பால் ஒன்றுஅது மூன்றும் தீர்க்க [மாகும்
பிணையாகு மிரண்டு யென்றும் பேசுவோம் வயது [தீர்க்கம்.

13. ஜாதகருடைய இளைய சகோதரருக்கு ஒரே மனைவிதா னுண்டு. இவள் வடக்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள். சந்தான விஷயத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் உண்டு. இந்த மூன்று குழந்தைகளும் நீண்ட வயதை யுடையவர்களாக விருப்பார். இரண்டு குழந்தைகள் இரட்டைக் குழந்தையாக

விருக்கும் என்று சொல்லுகின்றேம். இந்த இரட்டைக் குழந்தைகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றேம்.

14. துலைசென்மம் கடை யாஞகும் செ்ரால்லுவோ மவன் [குணத்தை
நிலைமையாய் வார்த்தை சொல்வன் நேர்ந்திடும் கல்வி [தானும்
உலகுளோர் வசியம் கொள்வன் உத்தமன் சிவந்த [மேனி
பலபல வணிபம் செய்வன் பாக்கிய முடைய ஞமே,

14. ஜாதகருடைய கடைசி சகோதரர் துலை என்ற துலா ராசியில் பிறந்தவராவர். இவருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின் றேம். இவர் உண்மையைச் சொல்லுவார். உறுதியாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவருக்கு வித்தை யுண்டு. இவர் பூமியிலுள்ளவர்களைத் தன் பக்கமாக விருக்கும்படியாகச் செய்து கொள்ளுவார். இவர் சிவப்பு நிறமான தேகத்தை யுடையவர். இவர் அநேக வியாபாரங்களைச் செய் வார். செல்வத்தை யுடையவராவர்.

15. தந்தை தாய்க் கன்ப ஞகும் தரணி அதிகம் சேர்ப்பன்
சந்ததம் யீகை யுள்ளான் சற்சன ருறவு கொள்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மர்ம வான் தந்திர வாதி
முந்தியே கீர்த்தி யேற்பன் முருகன்மேல் பக்தி [கொள்வன்.

15. ஜாதகருடைய கடைசி சகோதரர் தாய் தகப்பஞருக்குப் பிரிய மானவராவர். நிலங்களை அதிகமாக வாங்கி சேர்த்து வைப்பார். இவர் தன்னிடத்திற்கு வருபவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இரகசிய மான மனத்தை யுடையவர். தந்திரமாகவும் உபாயமாகவும் நடந்து கொள் ளக் கூடியவர். இவர் புகழை அடைபவராவர். முருகக் கடவுளின் மேல் அன்புடையவராவர்.

16. வண்டி வாகனமும் சேர்ப்பன் வாக்குகள் தவரு ஞகும்
குண்டை கோவிருத்தி யுள்ளான் குலத்துளோர் மெச்ச [வாழ்வன்
அண்டிஞேர்க் குதவி செய்வன் அவன்கரம் ருத்திர [ரேகை
பண்டு பண்டாரம் சேர்ப்பன் பார்வதி கேட் டிடாயே.

16. ஜாதசருடைய கடைசி சகோதரர் வண்டியும் வாகனமும் சம்பா தித்துச் சேர்த்து வைப்பார். தான் சொன்ன வார்த்தைகள் பிரகாரம் தவரு மல் நடந்து கொள்ளக் கூடியவராவர். எருதுகளும் பசுக்களும் இவருக்கு விருத்தி யடையும், அதிகமாகும். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைப்

போற்றும் படியான, புகழும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் தன்னிடத்திற்கு உதவிக்காக வருகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இவர் தன்னுடைய உள்ளங் கையில் ருத்திர ரேகை என்ற ஒருவித மான ரேகையை யுடையவராவர். இவர் பழைய காலத்திய பல பண்டங்களையும் பொக்கிஷத்தையும் சிவனடியார்களையும் சேர்த்து வைப்பார். பார்வதியம்மையே! கேட்பீராக.

17. நல்லோர்க்கு நல்லோ னுவன் லண்டர்க்கு மிண்ட
[னுவன்
புல்லர்க்கு விரோதி யாவன் புகர்பூமி தன்னல் செல்வன்
மல்லுறை தமக்கு அஞ்சான் மாற்றுனை யெதிர்த்து
[வெல்லுவன்
அல்லல்கள் அடையா னுகும் அம்பிகை யாளே கேளாய்.

17. ஜாதகருடைய கடைசி சகோதரர் நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். முரடர்களுக்கு வலிவுடைய எதிரியாவர். அற்பர்களுக்கு விரோதியாக விருப்பார். நிலங்களால் செல்வத்தை யடைபவராவர். விரோதமான வார்த்தைகளுக்குப் பயப்பட மாட்டார். விரோதியை எதிர்த்துப் போராடி ஜயித்து விடுவார், இவர் கஷ்டங்களை அடையமாட்டார், பார்வதியம்மையாரே! கேட்பீராக.

18. தாரமு மிரண்டு யென்றேம் சுதர்களும் ஆண்பா
[லொன்று
தீரமாய்ப் பெண்பா லவ்வாறு செப்புவோம் தீர்க்கமாகக்
கூறிய மொழியைக் கேட்டுக் குருமுனி புகலுகின்ருர்
பாரியாள் யிரண்டு யென்றீர் பகருவீர் யெம் மாதுக்கு;

18. ஜாதகருடைய கடைசி சகோதரருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு என்று சொல்லுகின்றேம். இவருக்கு ஒரு பிள்ளையும் ஒரு பெண்ணும் தீர்க்காயுளை உடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றேம். இவ்விதமாக அத்திரி ரிஷி சொல்லவே, குரு முனி என்ற விசிஷ்ட மஹரிஷி கேட்க வாரம்பித்தார். இவருக்கு மனைவிமார்கள் இருவர் என்று சொன்னீரே! எந்த மனைவிக்கு;

19 சுதர்களும் விருத்தி சொல்வீர் சொல்லுவேன் கேளு
[மைய்யா
மதுநிகர் முதல் மாதுக்கு மைந்தர்கள் யில்லா ளாகி
விதியினல் யிரு மனைக்கு மேவிடும் புத்திர பாகம்
வதிபர்க்கும் வயது தீர்க்கம் வரைந்தது தப்பா தாமே.

19. பிள்ளைகள் பிறந்து வளருவார்கள் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்டார். இதற்குச், சொல்லுகின்றேன், கேட்பீரையா என்று அத்திரி ரிஷி

பதில் சொல்லுகின்றார். முதல் மனைவிக்குப் பிள்ளைகளில்லாமல் போய் விடவே, இரண்டாவது மனைவிக்கு இவனுடைய தலைவிதிப்பயனாக புத்திரர் கள் பிறப்பார்கள். இந்தக் கடைசி சகோதரருக்கு வயது நீண்டிருக்கும். அஃதாவது இவர் தீர்க்காயுளை யுடையவராவர். நாங்கள் சொல்லிய பலா பலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் விவாகம்

20. சாதகன் மணத்தின் காலம் சாற்றவே பலமு ருது
மேதினில் மதலை யில்லான் வித்தகர் சொல்லும் போது
போதவே பராசர் தானும் புகலுவார் சாத கர்க்கு
நீதியாய் மனைவி காணு னென்றீர்கள் விபரம்
[சொல்வீர்.

20. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுவதற்கு எந்த வலிவும் கிடையாது. அஃதாவது இவர் விவாகமில்லாமலேயே இருந்து விடுவார். இவருக்குக் குழந்தைகள் கிடையா. இவ்விதமாக அத்திரி ரிஷி சொல்லும் போது, பராசர முனிவர் தடுத்துக் கேட்கின்றார். ஜாதகர் மனைவியை அடைய மாட்டார் என்று சொன்னீரே! இதனுடைய விவரத்தை, காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்டார்.

21. இருபத்து யிரண்டு ஆண்டில் யிவனுக்குப் பித்தம்
[தோன்றி
சரியிலா குணமே யாகும் சாரும் காரணங்க ளென்ன
கரும்பாம்பு தசைக் காலத்தில் கவியெனும் புகுத்தி
[தன்னில்
உரைந்திடும் பிசாசு பில்லி உரைந்திட்டோம் குற்றம்
[தானே.

21. ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயதில் பைத்திய ரோகம் ஏற்பட்டு இவருக்குக் குணம் சரியாக வில்லாமல் கெட்டுப் போய் விடும் என்று அத்திரி ரிஷி சொல்லவே, பராசர ரிஷி காரணங்களைச் சொல்லுவீர், என்று கேட்டார். கறும்பாம்பு என்ற ராகு தசைக் காலத்தில் கவி என்னும் சுக்கிரனுடைய புக்தி நடக்கின்ற காலத்தில், ஜாதகருக்கு பிசாசு, பேய், சூன்னியம் முதலியவற்றால் துன்பங்கள் ஏற்படும். இது விவாகத்திற்குத் தடையை யுண்டு பண்ணும் என்று சொல்லுகின்றோம், என்றார் அத் திரி ரிஷி.

22. குற்றம் சண்டாள ராலே கூறுவோ மந்தச் சங்கை
குற்றத்தால் மனைவி காண்ன் கூறுவீர் சிகிச்சை யொன்று
சுற்றமாய்க் கிரக சாந்தி சுரிதி போல செய்வா னாகில்
பத்திய பித்தம் நீங்கி பாலகன் சுகமா னுவானே.

22. இந்தத் தோஷம் இவருடைய விரோதிகளினால் ஏற்பட்டதாகும் என்று சொல்லுகின்றோம். ஆகையால் இவருக்கு இந்தத் தோஷத்தினால் மனைவி வருவதற்குத் தடையுண்டாகும். இதற்கு ஒரு சாந்தியைச் சொல்லு வீர் என்று கேட்டார். ஜாதகர் சாஸ்திரங்களில் சொல்லியுள்ளதைப் போல கிரக சாந்தியைச் சுத்தமாக விருந்து செய்வாராகில் பைத்தியம், பித்தம் ஆகிய இவை நிவர்த்தியாகி இவர் சௌக்கியத்தை அடைவார்.

23. எவ்விதம் கிரக சாந்தி யியம்புவீர் முனியே நீதான்
பவ்வமாய்ச் சொல்லு கின்றேன் பதியினில் கலசம் [ஒன்பான்
செவ்விய ஆடை சாத்தி சமித்தினால் ஓமம் செய்து
ஒவ்விய மூலம் சொல்வேன் உறுந் தசகாண்டந் [தன்னில்.

23. எந்தவிதமான கிரக சாந்தியைச் செய்ய வேண்டும் என்பதை முனிவரே! நீர் சொல்லுவீர்; என்று கேட்க, அதைச் சொல்லுகின்றேன் என்றார் அத்திரி ரிஷி. ஜாதகர் தன்னுடைய வீட்டில் ஒன்பது கலசங்களை வஸ்திரங்களினால் சுற்றி அலங்கரித்து, அவற்றில் சமித்துக்களைப் போட்டு, ஓமம் செய்து, பத்தாவது காண்டத்தில், கர்ம காண்டத்தில் நான் சொல்லப் படுகின்ற மூலம் மந்திரங்களை;

24. சகஸ்திரம் செபித்து பின்னால் சத்தியம் பூசை செய்து
வகையான தாம்பி ரத்தில் மறுகோண மாகக் கீறி
தகமையாய் மூலம் கேளாய் சரவணபவ வென்றே தான்
பகையிலா அயும் சிலியும் பரிவுடன் சவ்வு மவ்வும்.

24. ஆயிரந்தடவைகள் ஜபித்துப் பிறகுச் சத்தி பூஜை (ஈஸ்வரிபூஜை) யைச் செய்து, நல்ல தாமிரத் தகட்டில் அறுகோணம் வரைய வேணும். மூல மந்திரத்தைச் சொல்லுகின்றேன். கேட்பீராக. சரவணபவ, அயும், கிலியும், சவ்வும், அவ்வும் என்ற பதங்களை

25. இப்படி வருவியே தான் யிச் சென்மம் செபித்துமே தான்
ஒப்புடன் அணிவா னாகில் உறைந்த ஊழ்வினைகள் [போகும்
எப்பவும் சுகமே யாகும் யிதுபோலே செய்யே னாகில்
கப்பிய வினைகள் விருத்தி கழறினே மொழிகுன்றுது.

25. தகட்டில் எழுதி இந்த ஜன்மத்தில் ஜபித்துப் பிறகு இந்தத் தகட்டை ஜாதகர் அணிந்து கொள்வாராகில் நாங்கள் சொல்லிய பாவங்கள் நிவர்த்தியாகி எப்போதுமுள்ள சௌக்கிய முண்டாகும். இவ்விதமாகச் செய்யா விட்டால் இவருக்கு வந்து நேரிட்ட பாவங்களும் தோஷங்களும் அதிகப்படும். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிப் போகாமல் நடக்கும்.

26. சாந்தியும் செய்வா ளுகில் சஞ்சல நிவர்த்தி யாகிக்
கூர்ந்திடு மணத்தின் காலம் கூறுவோ மிருபான்
[மூன்றில்
நேர்ந்திடும் தட்சி ணத்தில் நிலேத்திடும் மனேவி தானும்
சான்ருேர்கள் தம்மை காக்கும் சங்கரி கேட் டிடாயே.

26. ஜாதகர் சாந்தியைச் செய்வாராகில் கஷ்டங்களும் நிவர்த்தியாகி விடும். பிறகு விவாக காலத்தைச் சொல்லுகின்ருேம். இவருக்கு இரு பத்து மூன்ருவது வயதில்* மனேவி தெற்குத் திக்கிலிருந்து வந்து சம்பவித்து நிலேத்திருப்பாள். நல்லவர்களேக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—விவாக காலம் :—ஜாதகருக்கு இருபத்து மூன்ருவது வயதில் ராகு தசை நடக்கின்றது. இந்த ராகு களத்திர ஸ்தானுதிபதியாகிய மீனத்திற்குடைய குருவுடன் கூடி யிருக்கின்ருர். ஆகையால் இவர் ஜாதக பாரி ஜாதம் பதினுன் காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது (29-வது) சுலோகப் பிரகாரம் விவாகஞ் செய்து வைக்க அதிகார முடையவராக விருக்கின்ருர். மேலும் களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீடாகிய மீனத்தில் ஆறுக்குடையவராகிய சனி இருக்கின்ருர். ஏழிற்குடையவராகிய குரு ஐந்தில் நீச மடைந்து இராகுவுடன் கூடியிருக்கின்ருர். ஏழை ராகுவும் அங்காரகனும் பார்க் கின்ருர்கள். அங்காரகன் எட்டிற்குடையவராகின்ருர். சுக்கிர னுடன் கேது கூடியிருக்கின்ருர். ஆகையால் தார தோஷம் அதிகமாக விருக்கின்றது. மேலும் அநுபவத்தில் ஏழை சனி ராகு பார்ப்பதாலும் ஏழில் இவர்கள் இருப்பதாலும் பெரும்பாலும் முப்பது வயதிற்குப் பிறகுதான் விவாகம் நடக்கின்றது. ஒரு சமயம் விவாகம் இளம் பிராயத்தில் நடந்தால் முப்பதிற்குள் இரண்டாவது மனேவி நேரிடுகிறது. மேலும் கிரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரத்தில் அறுநூற்று நாற்பத் தொன்பதாவது (649-வது) பாடலாகிய கீழ்கண்ட பாடலேயும் வாசிக்கவும். இதன் பிரகாரம் மனேவி இல்லே. ஒரு சமயம் மனேவி வந்து சம்பவித்தாலும் பிள்ளே பிறக்காது. 649-ஆவது பாடல் ;—

சொல்லுமேழா மிடத்திந்து சுக்கிரன்
மெல்ல மேவினு மிக்க சனிகுசன்
அல்ல லீரரவுறின் மனேயாளுமே
இல்லே வந்தே லில்லேப் புதல்வரே.

## ஜாதகருடைய புத்திரபாவம்

27. புத்திர விருத்தி தன்னே புகலவே பலத்தைக் காணும்
சித்தமாய் உதித்தாலுந்தான் தீங்காகு மென்று
[சொன்னேம்

அத்திரி முனிவர் கூற அம்பிகை கேட்க லுற்ருள்
சித்தசன் தனக்குப் புத்திரர் தீங்காகு மென்று சொன்ன.

27. ஜாதகருக்குச் சந்ததிகளேப் பற்றிச் சொல்லுவதற்கு யாதொரும் பலமுமில்லே. ஒரு சமயம் குழந்தைகள் பிறந்தாலும் அவை சீக்கிரத்தில் இறந்துவிடும் என்று சொல்லுகின்ருேம். இவ்விதமாக அத்திரி ரிஷி சொல்லவே, பார்வதியம்மை கேட்கவாரம்பித்தார். ஜாதகருக்கு குழந்தைகள் இறந்து விடுவார்கள் என்று சொன்னதற்கு ;

28. காரணம் யாது வென்னக் கழறுவார் அத்திரி தானும்
தீரமாய் ராகு பொன்னேன் சிறப்பிலா அஞ்சில் தங்க
வீரியன் தனக்குப் புத்திரர் விளங்காது குற்ற மாகும்
பாரிய அஞ்சோன் தன்னே பார்மகன் பார்த்த தாலே;

28. காரணம் என்ன? என்று கேட்கவே, அத்திரி ரிஷி சொல்லுகின்ருர். இராகுவும் பொன்னேன் என்ற குருவும் (குரு மாத்திரம் நீசமாகிப் பலமில்லாமல்) ஐந்தில் இருப்பதாலும், ஜாதகருக்குப் பிள்ளேகள் கிடையா. நாசமாகிவிடும். ஐந்திற்குடையவராகிய சனியைப் பார்மகன் என்ற அங்காரகன் (எட்டாம் பார்வையுடன்) பார்த்ததாலும்

29. முன்செய்த வினே யினுலே மொழிகிருேம் புத்திர [தோஷம்
அன்னவன் செய்த ஊழை அறைகுவாய் விபர மாக
இன்னவன் முன் சென்மங்கள் விரிஞ்சி நாட்டதற்குக் [கீழ்பால்
தன்னிலே பேரூர் தன்னில் தானவன் தீயின் வம்சம்.

29. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்திற் செய்த பாவங்களினுலே புத்திரதோஷம் ஏற்பட்டிருக்கின்றது என்று சொல்லுகின்ருேம். இவர் செய்த பாவங்களே விவரமாகச் சொல்லுவீரென்று கேட்டார். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் விரிஞ்சிபுரத்திற்குக் கிழக்குத்திக்கில் ஒரு பெரிய கிராமத்தில் நாயகர் குலத்தில்;

30. உதித்துமே பூமி வுண்டாய் உலகினில் செட்டு செய்து
பதியினில் திருவு மோங்கிப் பாலகன் வாழு நாளில்
விதிக்கிருேம் வந்த ஊழை விளம்புவோம் விபரமாக
நதிசடை அணிந்தோன் தேவி நங்கை கேட் டிடாயே.

30. பிறந்து நிலங்களேயுடையவராகியும், வியாபாரத்தைச் செய்து கொண்டும், செல்வம் வீட்டில் அதிகரித்துக்கொண்டும் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து நேரிட்ட வினேகளே விவரமாகச் சொல்லுகின்ருேம்.

தன்னுடைய ஜடையில் கங்கை நதியை அணிந்துள்ள பரமசிவனுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

31. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவன் வாச மாகும்
மந்திரம் ஓதும் வேத மறையவர் பூசை செய்வார்
இந்தவா றிடத்திலே தான் யிரவினில் யேது செய்தான்.

31. இந்தப் பட்டணத்திலுள்ள ஓர் ஆற்றின்கரையிலுள்ள ஓர் அரச மரத்தின் கீழே விநாயகர் கோயிலும் நாகபிரதிஷ்டையும் இருக்கும். இந்தப் பட்டணத்திலுள்ள, மந்திரங்களை ஓதுகின்றவர்களும் வேதங்களை ஓதுகின்றவர்களுமான பிராமணர்கள் இந்தக் கோயில்களில் பூஜையைச் செய்வார்கள். இந்த இடத்தில் இரவு காலத்தில் ஜாதகர் என்ன செய்தார் என்பதைச் சொல்லுகின்றேன்.

32. விதவையை மரத்தின் கீழே வித்தகன் போகம் செய்தான்
அதனாலே கருவு தங்கி அனேகமாய் அவிழ்த்த மீய
சதியினால் கருவு நீங்கி சக்தியு மாண்டா ளென்றோம்
துரிதமாய் அந்தத் தோஷம் தொடர்ந்தது யிவனுக்கே
[தான்.

32. ஜாதகர் இந்த அரசமரத்தின் கீழே ஒரு விதவை ஸ்திரீயுடன் சம்போகஞ் செய்தார். அதனால் அவளுக்குக் கர்பம் தரித்துவிட்டது. பிறகு இவர் அதிகமான மருந்துகளைக் கொடுக்கவே இந்த கருவும் அழிந்துபோய் விட்டது, ஆனால் இந்த விதவை ஸ்திரீ அதனால், இறந்துவிட்டாள் என்று சொல்லுகின்றோம். இந்தத் தோஷமானது விரைவில் ஜாதகரை வந்து அடைந்தது.

33. இதுவலால் யின்ன மொன்று இயம்புவேன் கேளும்
[தாயே
பதியினில் உரகன் ஒன்று பரவிற்று மகுடத் தாலே
அதிபனும் கழி யினாலே வாட்டினான் நாகம் தன்னை
சதி செய்யும் மரலி பக்கல் சார்ந்தது சர்ப்பம் தானும்.

33. இதுவல்லாமல் இன்னொரு தோஷத்தைச் சொல்லுகின்றேன், பார்வதியம்மையே! கேட்பீராக. ஜாதகர் வாசஞ்செய்து கொண்டிருந்த வீட்டில் ஒரு நாகப்பாம்பு மோடி வாசிப்பதைக்கேட்டு வெளியே வந்தது. அதை இவர் தடியால் அடிக்கவே அஃது எமனிடத்திற்குப் போய்ச் சேர்ந்து விட்டது, அஃதாவது இறந்துவிட்டது.

34. அந்ததோர் யிரண்டு தோஷம் அணுகிற்று இவனுக்கே
[தான்
அந்திய காலம் தன்னில் அவன் சுதர் மரண மாகி

கந்தன் தன் கோஷ்டத்திற்குக் கனதோர் பணியும்
[செய்து
பிந்தியும் காலன் பக்கல் புக்கினு னிவனே யென்றேம்.

34. இவ்விரண்டு தோஷங்களும் ஜாதகரை வந்தடைந்தன. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் தன்னுடைய பிள்ளைகள் இறந்துவிடவே, முருகருடைய கோயிலில் ஒரு நாகப் பிரதிஷ்டையைச் செய்துவைத்துப் பிறகு இறந்து எமனிடம்போய்ச் சேர்ந்துவிட்டார் என்று சொல்லுகின்றேம்.

35. கஞ்சனுல் வரையப் பட்டு கங்கையின் குலத்திலே தான்
மிஞ்சியே உதித்தா னுகும் விளம்புவோம் யிச்சென்
[மத்தில்
துஞ்சிடும் மதலை யென்றேம் சொல்லுவோ மதற்குச்
[சாந்தி
கந்தன் வாழ் தணிகைக் கேதான் காதலன் மனைவி
[யோடு;

35. பிறகு ஜாதகர் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு வேளாளர் குலத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றேம். ஆகையால் இந்த ஜன்மத்தில் இவருக்குப் பிள்ளைகள் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகின்றேம். இதற்குச் சாந்தியைச் சொல்லுகின்றேம். முருகக் கடவுள் எழுந்தருளியுள்ள திருத்தணி என்ற க்ஷேத்திரத்திற்கு ஜாதகர் தன்னுடைய மனைவியோடு;

36. ஒன்பது கார்த்திகைக்கு உறுதியாய் விடாமல் சென்று
அன்புடன் கடைநாள் தன்னில் அறுமுகர்க் கர்ச்சித்
[தேத்தி
பொன்னினுல் நாகம் ஒன்று பிராமணர் தனக்கு யீந்து
இன்பமாய் முன்னூழ் தன்னை யிரு பிறப்பாளர்க் கோதி.

36. விடாமல் ஒன்பது கார்த்திகை தினத்தில் போய்ப் பிறகு கடைசி தினத்தில் ஆறுமுகக் கடவுளுக்கு அர்ச்சனை செய்து, அவரை வணங்கித் துதித்து, பொன்னுல் ஒரு நாகப்பதுமையைச் செய்து ஒரு பிராமணருக்குக் கொடுத்து தன்னுடைய முன் ஜன்மத்திய பாவங்களை இந்த பிராமணருக்குச் சொல்லி;

37. வினையதை பொறுத்தே னென்று விப்பரர் ஆசிர் யேத்தி
சினமிலா யிருப்பத் தேழு சங்கமர்க்கு அன்ன மீந்து
மனைவியும் தானு மாக வளமுடன் நாட்டைச் சேர்ந்து
கனமுடன் சஷ்டி நோன்பு காலையும் கொள்வா னுகில்.

37. பிறகு 'இந்தப் பிராமணர் உன்னுடைய பாவங்களையும் பொருத்துக் கொண்டேன்' என்று சொல்லி ஆசீர்வாதஞ்செய்த பிறகு, இருபத்தேழு பண்டாரங்களுக்குச் சாப்பாட்டைப் போட்டுப் பிறகு, ஜாதகர் தன்னுடைய மனைவியுடன் தன்னுடைய கிராமத்திற்குத் திரும்பிப்போய்ச் சஷ்டி நோன்பு என்ற விரதத்தை ஏற்றுக்கொண்டால்;

38. உதித்திடும் சுதர்கள் தானும் உதித்தசேய் தீர்க்க மாகும்
விதிமுறை செய்யா ளுகில் விளங்காது மதலை யென்ரேம்
இதுபோலச் செய்வா ளுகில் யிலகிடு மாண்பா லொன்று
மதிநுதல் பெண்பால் ரெண்டு வரைகிரே மிவனுக்கே [தான்.

38. ஜாதகருக்குப் பிள்ளைகள் பிறக்கும். பிறக்கின்ற குழந்தைகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். சாஸ்திரத்தில் சொல்லிய வழி பிரகாரம் செய்யாவிட்டால் பிள்ளை பிறக்காது, என்று சொல்லுகின்ரேம். இவ்விதம் செய்வாராகில் ஒரு பிள்ளையும் சந்திரனைப்போல அழகான நெற்றியையுடைய இரண்டு பெண்களும் ஜாதகருக்குப் பிறக்கும் என்று சொல்லுகின்றேன்.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

39. அன்னையும் சிவந்த மேனி அழகுளாள் உயர மில்லாள்
நன்னய வார்த்தை சொல்வள் நாயகன் மனம்போல் [வாழ்வள்
உன்னத கோபம் தன்னை உள்ளவே யிருத்துவா ளாம்
நன்னிய பித்த தேகி நாயகி பொறுமை சாலி.

39. ஜாதகருடைய தாயார் சிவப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள். இவள் அழகாக விருப்பாள், உயரமாகவிருக்கமாட்டாள். இவள் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாக விருந்து வாழ்வாள். இவள் அதிகமான கோபத்தை உள்ளவே அடக்கிக்கொள்ளுவாள், இவள் பித்த குணமுள்ள தேகத்தை யுடையவள், சாந்தமானவள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவம்

40. அவளுடத் துணைவர் தன்னை அறைகிரே மாற தாகும்
நவனியில் ஆண்பால் ரெண்டு நாயகி நான்க தாகும்
பவமுள ஒருவர் தானும் பாதி தன் வயதில் செல்வான்
தவசியே ஒருவர் தீர்க்கம் அவர்பலன் பின்பால் [சொல்வோம்.

40. ஜாதகரின் தாயாருடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர்கள் ஆறுபேர் ஆவார்கள். இவர்கள் இரண்டு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் ஆவார்கள். இவர்களில் ஒரு சகோதரர் தன்னுடைய மத்திய வயதில் இறந்துவிடுவார். இன்னொரு சகோதரர் நீண்ட ஆயுளை யுடையவராவர். இவருடைய பலாபலன்களைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

41. மாதுரு பூர்வம் தன்னை வரைகிறோம் காஞ்சி கீழ்பால்
மேதினில் சிற்றூர் தன்னில் விளங்கினாள் தீயின் வம்சம்
போதவே சுகமுமுண்டாய் புத்திரனுள் ளாளாகித்
தீதிலா அறத்தி லிச்சை செல்வியும் வைத்தா
[ளென்றோம்.

41. ஜாதகரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் காஞ்சிபுரத்திற்குக் கிழக்கில் ஒரு சிறிய கிராமத்தில் தீயின் வம்சம் என்ற நாயகர் ஜாதியில் பிறந்தாள். இவள் சௌக்கியங்களை அடைந்தும், புத்திரர்களையுடையவளாகியும், தான தர்மத்தில் ஆசையை யுடையவளாகியும் இருந்தாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

42. அந்தியக் காலம் தன்னில் அனாயாச மரண மாகி
பிந்தியும் பிரம னாலே பூமியில் வரையப் பட்டு
வந்தவ ளிவளே யென்றோம் வரைகிறோ மிவள்பின்
[சென்மம்
சந்ததம் காஞ்சி தன்னில் செனிப்பாளாம் சைவ சேயாய்.

42. ஜாதகருடைய தாயார் முன் ஜன்மத்தில் தன்னுடைய கடைசி காலத்தில் கொடுமையில்லாத ஒரு சிறிய நோயால் சீக்கிரத்தில் இறந்து பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் காஞ்சிபுரத்தில் சைவ குலத்தில் பெண்ணாகப் பிறப்பாள்.

## ஜாதகரின் தகப்பனாருடைய முன்ஜன்மம்

43. தந்தையின் பூர்வம் தன்னில் சாற்றுவோம் விரிஞ்சி
[தன்னில்
அந்தனன் சங்கம னுக்கு அருமையாய் மகவாய்த்
[தோன்றி

உன்னத மலர்கள் கொய்து உத்தமன் கிரயம் செய்து
அண்ணலைப் பூசை செய்து அறுமுகன் அன்பு பூண்டும்;

43. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் விரிஞ்சிபுரத்தில் ஒரு வீர சைவர் என்ற இலிங்கதாரிக்கு அருமையான பிள்ளையாகப் பிறந்து, சிறந்த மேன்மையான புஷ்பங்களைக் கிள்ளி விற்றும், சிவபெருமானைப் பூஜை செய்துகொண்டும், ஆறுமுகக் கடவுளின்பேரில் பக்தியை யுடையவராகியுமிருந்து;

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

44. அந்தகன் பக்கல் சேர்ந்து அரிமகன் வரையப் பட்டு
வந்தவ னிவனே யென்றோம் வரைகிறோ மிவன் பின் [சென்மம்
சந்ததம் தணிகை தன்னில் செனிப்பனும் வைசிய [சேயாய்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்றாது.

44. பிறகு இறந்து எமனிடத்திற்குப்போய் மகாவிஷ்ணுவின் குமாரராகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். தணிகை என்ற திருத்தணி ஸ்தலத்தில் வைசிய குலத்தில் ஆண் குழந்தையாக ஜாதகருடைய தகப்பனார் பிறப்பார். ஆறுமுகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகருடைய தாயார், தகப்பனார் மரணகாலம்

45. இவன் பிதா மரணகாலம் யியம்புவோம் முப்ப தாண்டில்
அவனியில் தனுசு மாதம் அறைகிறோம் கண்டம் தானே
நவனியில் மாதுர் வுக்கு நாட்டுவோம் முப்பா றுறில்
பவமுள கூனி மாதம் பகருவோம் கண்டம் தானே.

45. ஜாதகரின் தகப்பனுருடைய மரண காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பதாவது* வயதில் தனுர் மாதம் என்ற மார்கழி மாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். ஜாதகருடைய தாயார் இவருக்கு முப்பத்தாறுவது வயதில்† கூனி மாதம் என்ற பங்குனி மாதத்தில் மரண மடைவாள் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—பிதுர்மாரக விஷயம்:—ஜாதகருக்கு முப்பது வயது நடக்கும்போது குருதசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாறுவது சுலோகப் பிரகாரம் குரு

மாரகராகின்ருர். இந்தக் குரு ரிஷப லக்கினுதிபதியாகிய சுக்கிரனைப் பார்க்கின்ருர். துய்ய கேரளம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரங்கூட குரு மாரகராகின்ருர். ஆகையால் இங்கு குரு தசையில் பிதுருக்கு மாரகம் நேரிடும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

†குறிப்பு:—தாயார் மாராக விஷயம்:—தாயார் லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இந்த லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகப் பிரகாரம் சனியும் சுக்கிரனும் மாரகராகின்ருர்கள். சனியினுடைய வீட்டில் குரு இருக்கின்ருர். சுக்கிரனைக் குரு பார்க்கின்ருர். ஆகையால் ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகப் பிரகாரம் குரு மாரகராகின்ருர். மேலும் குரு நான்கிற்குடையவராகி நீசமாகி மாதுர்காரகனுகிய சந்திரனைப் பார்க்கின்ருர். ஆகையால் சுக்கிர நாடி பிரகாரம் மாதுரு ஸ்தானத்திற்குடைய குரு தன் தசையில் மாதுருக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்ருர்.

## ஜாதகருடைய மரணகாலம்

46. சாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுபான் ரெண்டில்
மேதினில் மேட மாதம் வளர்பிறை பருவம் தன்னில்
கோதிலா பித்த நோயால் கூறுவோம் உடலம் வாடும்
நீதியாய் பின் சென்மம் நிகழ்ந்துவோம் கேளும் தாயே.

46. ஜாதகருடைய மரண காலத்தைப்பற்றிச் சொல்லுகின்ரேம். இவருக்கு அறுபத்திரண்டாவது* வயதில் மேட மாதம் என்ற சித்திரை மாதத்தில் வளர்பிறையில் பௌர்ணமி திதியில் பித்த வியாதியால் இறந்து இவருடைய தேகம் அழிந்து போய்விடும், இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம். பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம்:—ஜாதகருடைய மரண கால விஷயம்:—ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது வயதில் புத தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்குச் சந்திர காவியம் முதலிய லக்கிரந்தங்கள் பிரகாரம் புதன் (கேந்திராதிபத்திய தோஷத்தினுல்) மாரகராகின்ருர். மேலும் துய்ய கேரளம் பதினுன்காவது பாடல் பிரகாரம்கூட புதன் மாரகராகின்ருர். ஆகையால் ஜாதகருக்குப் புத தசையில் இங்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது

## ஜாதகருடைய மறுஜன்மம்

47. அருணைக்கு உத்த ரத்தில் அருகினில் சிற்றூர் தன்னில்
வருகுவான் சத்திரிய சேயாய் வணிபங்கள் மிகவே
[செய்து

திருமகள் விலாசம் பூண்டு செல்வனும் வாழ்வா னுகும்
அறுமுகன் தன்னைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

47. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் அருணை என்ற அருணுசலமாகிய திருவண்ணுமலை க்ஷேத்திரத்திற்கு வடக்கில் சமீபத்திலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் க்ஷத்திரிய குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து, வியாபாரங்களை அதிகமாகச் செய்துகொண்டும், லக்ஷ்மியினுடைய கடாக்ஷத்தையடைந்தும் வாழ்வார். ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய குடும்ப விஷயம்

48. சாதகன் குடும்பச் சேதி சாற்றுவோம் நாற்ப தாண்டில்
நீதியாய் துணைவர் வேருய் நீங்குவார் பாகம் மூன்ருய்
தீதிலா வறுமை யில்லான் செய்நிலம் விருத்தி செய்வன்
போதவே பாக்கியம் சேர்ப்பன் பூஷண முடைய னுமே.

48. ஜாதகருடைய குடும்ப விஷயத்தைப்பற்றி இனிமேல் சொல்லுகின்ருேம். இவருக்கு நாற்பதாவது வயதில் குடும்பத்தில் மூன்று பாகப் பிரிவினை ஏற்பட்டுச் சகோதரர்கள் வெவ்வேறு குடும்பஸ்தர்களாகப் பிரிந்து போய்விடுவார்கள். ஜாதகர் தரித்திரங்களையும் கஷ்டங்களையும் அடையமாட்டார். இவர் செய்கால் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை அதிகப் படுத்துவார். பணத்தைச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார், ஆபரணங்களையுமுடையவராவர்.

49. சல்லியம் கொள்ளா னுகும் சதுஷ்பாதம் விருத்தி [செய்வன்
இல்லற மிருபான் ஆண்டில் யிசைகுவான் யின்னும் [வேறு
நல்லதோர் க்ஷேத்திரம் உண்டு நாட்டுவான் முப்பான் [மூன்றில்
அல்லல்கள் யில்லா னுகும் அம்பிகை யாளே கேளாய்.

49. ஜாதகர் கடன்படமாட்டார். இவருக்கு ஆடுமாடுகள் அதிகப்படும். இவர் இருபத்திரண்டாவது வயதில் குடும்பஸ்தராகி இல்லற தர்மத்தைச் செய்வார். இவருக்கு முப்பத்து மூன்ருவது வயதில் இன்னெரு நல்ல வீடு கிடைக்கும். இவர் துன்பங்களும் கஷ்டங்களு மில்லாதவராக விருப்பார், பார்வதியம்மையே! கேட்பீராக.

50. செனித்திடுங் காலம் தன்னில் சந்திரன் தசையிலே [தான்
குனித்திடுந் திங்க ளாறும் கூறுவோம் பலனை யாங்கள்

நயனங்கள் நோய்கள் உண்டு நாற்காலி சேத மாகும்
பயமான மனங்கள் உண்டு பார்வதி கேட் டிடாயே.

50. ஜாதகர் பிறந்த காலத்தில் சந்திரனுடைய தசையில் இருப்பு ஆறு மாதங்கள் ஆகும். இக்காலத்திய பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். ஜாதகருக்குக் கண்நோய்கள் உண்டாகும். ஆடுமாடுகள் இறந்துவிடும். அதிகச் செலவுள்ள விவாகங்கள் நடைபெறும். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

51. இன்னமும் சிலது சேதி யியம்புவோ மிரண்டிலே தான்
அன்னவன் பூமி வீடு அழகிய பணிகள் யாவும்
மன்னிய எண்ணுயிரம் பொன் வரைகிறே மிவனுக்கே [தான்
கன்னென மொழியை யொக்கும் காதலி புகன் [றிட்டோமே.

51. இன்னமும் மேற்கொண்டு சில விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு நிலம், வீடு, ஆபரணங்கள் முதலியவை எட்டாயிரம் பொன் மதிப்புப் பெறக்கூடியனவாக விருக்கும் என்று சொல்லுகின்றோம். சர்க்கரையைப்போன்ற இனிமையான வார்த்தைகளையுடைய பார்வதியம்மையாரே! நாங்கள் இவ்வாறுகச் சொல்லி விட்டோம்.

—C. G. R.

# ஜாதகம் 18

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதி[2]புகர் [3]சாடி யாக [4]மால்குரு [5]பானு மீனம்
வி[6]தி [7]வீணை [8]சேயும் கன்னி மெஞ்[9]ஞானி [10]கோல தாகத்
ததி[11]கயர் மேட மாகச் சென்மமும் [12]பெண்ண தாக
இதுவித கோளும் நின்ரு லியம்புவீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சந்திரனும் சுக்கிரனும் கும்பத்திலும், புதனும் குருவும் சூரியனும் மீனத்திலும், சனி மிதுனத்திலும், அங்காரகன் கன்னியிலும், கேது துலாத்திலும், ராகு மேஷத்திலும் இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று முனிவர்களைப் பார்த்துப்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சூரியன் புதன் குரு | ராகு | | சனி |
| சந்திரன் சுக்கிரன் | இராசி சக்கரம் | | |
| | | | |
| | | கேது | லக்கினம் அங்காரகன் |

பூரட்டாதி 2-ஆம் பாதம். குரு தசை
ஞு 6—03—00.

குறிப்பு :—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப்பின்வரும் அம்சச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:— மேஷத்திற் சுக்கிரனும் ராகுவும், மிதுனத்திற் சந்திரனும் அங்காரகனும், கடகத்திற் குருவும், சிம்மத்திற் புதனும், துலாத்திற் சனியும் கேதுவும், மகரத்திற் சூரியனும் ஆகும். அங்காரகன் வக்கிர கதியிலிருக்கின்ருர்.

---

1. சந்திரன்.
2. சுக்கிரன்.
3. கும்பம்.
4. புதன்.
5. சூரியன்.
6. சனி.
7. மிதுனம்.
8. அங்காரகன்.
9. கேது.
10. துலாம்.
11. ராகு.
12. கன்னி.

2. மங்கையும் கேட்கும் போது மாமுனி புகலு கின்ருர்
இங்கிவை ஆண்பால் சென்மம் யில்லமும் கீழ்மேல் வீதி
தங்கிடும் தெற்கு வாசல் சக்கரத் தோனும் மேற்கில்
சிங்க வாகனத்தாள் உத்திரம் சிவன் கோஷ்டம்
[வடகீழாகும்.

2. பார்வதியம்மையார் கேட்கும் போது மாமுனி என்ற வசிஷ்டமஹரிஷி சொல்லுகின்ருர். ஆண் குழந்தை பிறக்கும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு வாயிலே யுடையதாகும். சக்கரதாரியாகிய மஹாவிஷ்ணுவின் கோயில் மேற்கிலும் சிங்க வாகனத்தை யுடைய காளியம்மன் கோயில் வடக்குத் திக்கிலும் சிவபெருமானுடைய கோவில் வடகிழக்குத் திக்கிலு மிருக்கும்.

3, இத்தகை யடையா ளத்துள் யிலகிய சமவூர் தன்னில்
வித்தகன் பிரம்ம சேயாய் விளங்குவா னிந்தப் பாலன்
பெத்தத்தாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் சென்மம் செப்புவோம் கேளும்
[தாயே.

3. இப்படிப்பட்ட அடையாளங்களை யுடைய ஒரு நடுத்தரமான கிராமத்தில் பிராமணர் குலத்தில் ஜாதகர் ஆண் குழந்தையாகப் பிறப்பார். இவருடைய பெற்ற தாயார், தகப்பனர், ஆகிய இவர்களுடைய யோகம், மனைவி யோகம், புத்திரர் யோகம், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றைச் சொல்லுகின்ரேம், பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனருடைய குணுதிசயங்கள்

4. தந்தையின் குணத்தைக் கோண்மோ சாந்தவான் யிரு
[சிவப்பன்
பந்தமாய் ஒடிசல் தேகி பரமனை பூசை செய்வன்
வந்தவர்க் கன்ன மீவன் மருமத்தை வெளிக்
[காட்டாதான்
சிந்தையும் நல்ல தாகும் தந்தை ஆர்ச்சிதத்தில் வாழான்.

4. ஜாதகருடைய தகப்பனரின் குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ரேம். கேட்பீராக. இவர் சாந்தமான குணத்தை யுடையவர், இரண்டு நிறங்கள் கலந்துள்ள ஒரு நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவராவர். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர், சிவபெருமானைப் பூஜை செய்வார். இவர் தன்னிடத்திற்கு வருகின்றவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். தன் மனத்திலுள்ள ரகசியத்தை வெளியே காட்டிக் கொள்ளாதவராவர். இவருடைய எண்ணங்கள் நல்லதாக விருக்கும். இவர் தன்னுடைய தகப்பனருடைய வீட்டில் வசிக்க மாட்டார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

5. சுகதுக்கம் கலந்து வாழ்வன் துணைவர்கள் ஆண்பா
[லொன்று
கனமுள பெண்பா லவ்வாறு கழறுவோ மத்தில் சேதம்
வினையிலா மனத்த னுகும் வீண்வம்பில் செல்லா னுகும்
தனம் சேர்ப்பன் செலவு செய்வன் சாதமும் குறை
[வுருதான்.

5. ஜாதகருடைய தகப்பனுர் இன்பமும் துன்பமும் கலந்துள்ள வாழ்க்கையை யுடையவராவர். இவருக்கு ஒரு சகோதரரும் ஒரு சகோதரியும் உண்டு. இவர்கள் மத்திய வயதில் இறந்து விடுவார்கள். இவர் கபடம், வஞ்சனை ஆகிய இவையில்லாத மனத்தை உடையவராவர். வீண் சண்டையில் பிரவேசிக்க மாட்டார். இவர் திரவியத்தைச் சேர்த்து வைப்பார், செலவுஞ் செய்வார். இவர் சாப்பாட்டிற்குக் கஷ்டப்படாதவராவர்.

6. பலருக்கும் உப தேசிப்பன் பர உபகாரி யாவன்
நிலையதைக் காப்பா னுகும் நினைத்ததை முடிக்க வல்லன்
கலைகளும் கற்பா னுகும் கருதிடான் கட்டு வார்த்தை
புலவன்போல் மொழிவா னுகும் புண்ணிய தலங்கள்
[செல்வன்.

6. ஜாதகருடைய தகப்பனுர் அநேகருக்கு உபதேசஞ் செய்வார். தீக்ஷை செய்விப்பார். இவர் பிறருக்கு உதவியாக விருப்பார். இவர் தன்னுடைய அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்பவராவர், தான் செய்ய எத்தனித்த காரியங்களைச் செய்து முடிக்கும் சக்தியை யுடையவராவர். இவர் சாஸ்திரங்களைப் படிக்க மாட்டார், வாசித்தவரல்ல. இவர் பொய் வார்த்தைகளையும், பிணைந்த வார்த்தைகளையும் பழமொழிகளையும் உரைக்க மாட்டார் நினைக்க மாட்டார். இவர் பண்டிதரைப் போலப் பேசுபவராவர், நல்ல தெய்விகமான ஸ்தலங்களுக்குப் போவார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

7. பிறந்தயில் விட்டு நீங்கிப் புகுவானும் தென்மேல்
[திக்கில்
நிரந்தர மாக வாழ்வன் நிமலன்மேல் பத்தி பூண்பன்
உறைக்கிறே மிவன் முன் சென்மம் உயர்வான பாண்டி
[நாட்டில்
நிறைசேயும் வைசிய சேயாய் நேர்ந்துமே செட்டு
[செய்து

7. ஜாதகருடைய தகப்பனுர் தான் பிறந்த வீட்டை விட்டுத் தென் மேற்குத் திக்கிலுள்ள ஓரிடத்தில் நிலையாக விருந்து கொண்டு வாழ் வார். இவர் கடவுளின் மேல் அன்புடையவராவர். இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவர் பாண்டிய தேசத்தில் வைசியருடைய குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறந்து வியாபாரத்தைச் செய்து கொண்டு;

8. காதலி மதலை யுண்டாய்க் காவலன் வாழ்ந்துமே தான்
மாதவர் பக்தி கொண்டு வளமுள சேது சென்று
பாதகர்க் கன்ன மீந்து பறந்தனன் கால ஞடு
பூதரன்மகன் வரையப் பட்டுப் பிறந்த னென்று
[சொல்வோம்.

8. மனைவி மக்களை யுடையவராகி, இவர் வாழ்ந்து கொண்டு முனிவர் பெரியோர் ஆகிய இவர்களிடத்தில் அன்புடையவராகிச் சிறப்பான சேது ஸ்தலத்திற்குப் போய்ப் பரதேசிகளுக்குச் சாப்பாட்டைப் போட்டு இறந்து எம பட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார். பிறகு மகாவிஷ்ணுவி னுடைய பிள்ளையாகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம்.

9. முன்சென்மம் வைசிய சேயாய் முதித்தவனிச்
[சென்மத்தில்
முன்குல முதிப்ப தென்ன மொழிகுவீர் முனியே நீதான்
முன்சென்மம் சேதுசென்று முயர்வோர்கள் பக்தி
[யாயும்
அன்னவன் வாழ்வதாலே அருமறை குலமுதித்தான்.

9. ஜாதகருடைய தகப்பனுர் முன் ஜன்மத்தில் வைசிய குலத்திற் பிறந்திருந்தும் இந்த ஜன்மத்திற் பிராமணராகப் பிறந்ததற்குக் காரணத்தை, முனிவரே! நீர் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்க, வசிஷ்ட மஹாரிஷி சொல்லுகின்ருர். தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சேது ஸ்தலத்திற்குப் போய் பெரியோர்களிடத்தில் அன்பு பூண்டு வாழ்ந்ததால் அருமையான மறைகுலம் என்ற பிராமணர் குலத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்திருக்கின்ருர்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

10. சொன்ன யிக்குணத்தா னுக்குச் சுதனுமே யுதிப்பா ஞகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான்
[மாஞ் சிவப்பன்
தன்சொல்லு மடக்க முண்டு சாந்தவான் பொறுமை
[சாலி
கன்னியர் மோக ஞவன் கருதிடான் கட்டு வார்த்தை.

10. இவ்வித குணங்களையுடைய தகப்பனுருக்கு ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைப் பற்றி சொல்லுகின்றேன். இவர் அழகாக விருப்பார், மாந்துளிரின் நிறமாகிய ஒருவித சிவப்பு நிறத்தை யுடையவராவர். இவர் நிதானமாகவும் சாந்தமாகவும் பேசுவார். இவர் சாந்தமான குணத்தை யுடையவர். பொறுமையை யுடையவராவர். இவர் இளம் பெண்களின் மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். பொய் வார்த்தைகள், பிணைந்த வார்த்தைகள், பழமொழிகள் ஆகிய இவற்றை நினைக்க மாட்டார்.

11. வித்தையு மிரண்டு கற்பன் விவேகியா மெவர்க்கு [நண்பன்
புத்திமான் உணச்சல் தேகி போசன வறுமை காணுன்
பத்திமார் அவர்க்கு நேயன் பரமனை பூசை செய்வன்
சுத்தவான் பந்து நேயன் சிறையாக அந்தம் வாழ்வன்.

11. ஜாதகர் இரண்டுவித பாஷையில் படித்தவராவர். புத்திசாலியாக விருப்பார். எல்லோருக்கும் சினேகிதராக விருப்பார். இவர் அறிவுடையவராவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர், சாப்பாட்டிற்குக் கஷ்டப் படமாட்டார். அன்னக் குறைவில்லாதவராவர், கடவுளின் மேல் அன்புடைய அடியார்களுக்கு இவர் பிரியமுள்ளவராக விருப்பார். சிவபெருமானைப் பூஜை செய்வார், இவர் சுத்தமாக விருப்பார், பந்துக்களுக்குப் பிரியமுள்ளவராக விருப்பார். தன்னுடைய கடைசி காலத்தில் அதிகமாக வெளியே நடமாட்டமில்லாமல் மறைவாகச் சிறையில் இருப்பது போல விருந்து வாழ்வார்.

12. மாந்தளிர் மேனி யாவன் மர்ம மில்லாதா னுகும்
தேன் மொழி கூறுவானும் சிரமுக வடிவு காணும்
கூர்ந்துமே வார்த்தை சொல்வன் குணமது யிரண்டு [முண்டு
ஏந்தினேர்க் குதவி செய்வன் யிடர் செய்யான் [யாவருக்கும்.

12. ஜாதகர் மாந்துளிரின் நிறமாகிய ஒருவிதமான சிவப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர். இவர் ரகசியத்தை யுடையவரல்ல. இவர் தேனைப் போன்ற இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவார். இவருக்குத் தலையிலும் முகத்திலும் அடையாளங்கள் இருக்கும். இவர் சிறப்பான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் நல்லதும் கெட்டதும் கலந்த நடுத்தரமான குணத்தை யுடையவராவர். கையை ஏந்தி உதவியைக் கேட்ட ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்வார். இவர் எவருக்கும் கஷ்டத்தையும் துன்பத்தை உண்டாக்க மாட்டார்,

## ஜாதகருடைய சகோதரபாவம்

13. கரமதில் விஷ்ணு ரேகை கனத்தவர் நேசம் கொள்வன்
வரும்துணை தசமே யாகும் ஆணது யிரண்டு யென்றோம்
அரிவையர் அவ்வா றென்றோம் அவைகளில் பாதி சேதம்
வருவிப்போம் பின்ஆண் தீர்க்கம் வரைகிறோ மவன்
[குணத்தை.

13. ஜாதகர் தன்னுடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகை என்ற ஒரு நல்ல ரேகையை யுடையவராவர்; பெரியோர்களுடைய, கனவான் களுடைய சிநேகிதத்தை யுடையவராவர். இவருடன் பிறந்தவர்கள் பத்துப் பேர் ஆகும். இவருக்குச் சகோதரர்கள் இருவரும், சகோதரிகள் இரு வரும் ஆகும் என்று சொல்லுகின்றோம். மொத்தத்தில் சுமார் பாதி சகோத ரர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். ஜாதகருக்கு இளைய சகோதரர் நீண்ட வயதை யுடையவராவர். இந்த இளைய சகோதரருடைய குணாதிச யங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் இளைய சகோதரருடைய குணாதிசயங்கள்

14. குலத்தொழில் புரிவா னாகும் புன்சிரிப் புடைய னாகும்
நிலையதை விட்டு நீங்கான் நிமலனைப் பூசை பூண்பன்
விலைமாதர் மோகம் கொள்ளான் விருந்தினோர் பிரிய
[னாகும்
உலகுளோர் மதிக்க வாழ்வன் உவமையாய் வார்த்தை
[சொல்வன்.

14. ஜாதகருடைய சகோதரர் தன்னுடைய குலத்துத் தொழிலைச் செய் பவராவர், புன்சிறிப்பை யுடையவராவர். இவர் தன்னுடைய வீட்டை விட்டு போக மாட்டார். கடவுளைப் பூஜை செய்வார். தாசிகளின் மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவரல்ல, விருந்தாளிக்கு இவர் பிரியமுள்ளவராக விருப்பார். இவர் பூமியிலுள்ளவர் தன்னைப் போற்றும் படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். உபமானம் உபமேயம் ஆகிய இவற்றை உபயோகப்படுத்தியும் ஒப்புமைப் படுத்தியும் பேசுவார்.

15. செக்கு நாள் கன்னிராசி செனிப்பனும் வறுமை காணான்
பக்குவ மாக வார்த்தை பகருவான் சமமாம் கல்வி
மக்கண்ணி ஒன்றே தீர்க்கம் வருவாளாம் தென்மேல்
[திக்கில்
கைகளி நந்தி போலே கழறின மொழி குன்றாது.

15. ஜாதகருடைய இளைய சகோதரர் செக்கு நாள் என்ற சதய நட்சத்திரத்தில் கன்னியா லக்கினத்தில் பிறந்தவராவர், இவர் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டார். இவர் தந்திரமாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் நடுத்தரமான கல்வியையும் படிப்பையும் உடையவராவர். இவர்க்கு ஒரே மனைவி யுண்டு. நீண்ட வயதை யுடையவள். இவள் தென் மேற்குத் திக்கிலிருந்து வந்து சம்பவிப்பாள். சிவபெருமானைப் போல, நந்தி தேவரைப் போல முனிவர்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் இளைய சகோதரருடைய புத்திரபாவம்

16. சுதர்களும் யெழுவர் தோன்றும் சோர்வுறும் முதலில் [யென்றோம்
சதமுடன் ஆண்பால் ரெண்டு தையலும் அவ்வார் [தீர்க்கம்
இதுநான்கும் தீர்க்க மெய்தும் யியம்புவோம் பின்பால் [சேதி
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

16. ஜாதகருடைய இளைய சகோதரருக்கு ஏழு குழந்தைகள் பிறக்கும், முதலில் பிறக்கின்ற குழந்தை இறந்து போகும். இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இந்த நான்கு பேர்களும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். பின் பாகத்தில் மற்ற விஷயங்களைச் சொல்லுகின்றோம். முனிவர்களைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே / கேட்பீராக.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

17. சாதகன் மணத்தின் காலம் சாற்றுவோம் பதினெட் [டாண்டில்
காதலி வடகீழ் தன்னில் கலப்பளாம் அன்னை வர்க்கம்
ஓதுவேன் அவள் குணத்தை உண்மையா மனத்த [ளாகும்
பாதகமன மில்லா தாள் பர உபகாரி யாகும்.

17. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பதினெட்டாவது* வயதில் வடகிழக்குத் திக்கிலிருந்தும் தாயாருடைய வம்சத்திலிருந்தும் மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றேன். இவள் சத்தியமான, நேர்மையான மனத்தை யுடையவளாவள். இவள் கெட்ட மனத்தை யுடையவளல்லள், பிறருக்கு உதவியைச் செய்பவளாவள்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—விவாக கால விஷயம்:—ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில் சனி மகா தசை நடக்கின்றது. சனி மனைவி ஸ்தானமாகிய ஏழாவது வீடாகிய மீனத்தைப் பத்தாம் பார்வையுடன் பார்க்கின்றார். மேலும் சனி ஏழாவது வீட்டதிபதியாகிய குருவையும் பார்க்கின்றார். மேலும் இந்தச் சனி இரண்டாவது வீட்டிற்குடையவராகிய சுக்கிரன் இருக்கின்ற கும்ப ராசிக்குடையவராக விருக்கின்றார். இரண்டிற்குடையவர் இருக்கும் ராசி அதிபதியின் தசையில் விவாகம் நடக்கும் என்று ஜாதக பாரி ஜாதகம் பதினான்காவது (14) அத்தியாயம் இருபத் தொன்பதாவது சுலோகத்தில் சொல்லி யிருக்கின்றது. ஆகையால் இங்கு சனி தசையில் விவாகம் நடக்கும் என்று சொல்லப்பட்டிருகின்றது.

18. அன்னம்போல் சாய லொக்கும் ஆளன்தன் மனம்போல் [வாழ்வள்
அன்னமு மன்பா யீவள் ஆச்சார முடைய ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அதிதிபோல் வார்த்தை [சொல்வள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அதிகமாய் விரதம் [யேற்பள்.

18. ஜாதகருடைய மனைவி அன்னத்தைப் போல ரூபத்தை யுடையவள், இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்கு இசைந்தாற் போல ஒற்றுமையாக விருந்து வாழ்வாள், இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியமுடன் போடுவாள். இவள் நல்லொழுக்கங்களை யுடையவளாவள், இவள் தன்னைப் பிறர் போற்றும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள். இவள் பரதேசியைப் போல பேசுவாள். இவள் பிறர் பேரில் நிந்தையான அபவாதமான வார்த்தைகளைச் சொல்ல மாட்டாள். அதிகமான விரதங்களை அநுஷ்டிப்பவளாவள்.

19. மாதுக்கு வயது தீர்க்கம் புஜண்டரும் தடுத்துச் [சொல்வார்
ஏது காரணத்தி னாலே யியம்பினீர் வயது தீர்க்கம்
ஆதவன் பொன்னோன் புந்தி அவர்களு மேழில் தங்க
ஓதினேன் வயது திர்க்கம் உரைக்கிறோம் வதிஷ்டர் [தானும்.

19. ஜாதகருடைய மனைவிக்கு வயது தீர்க்கமாகும். உடனே புஜண்டரும் தடுத்துக் கேட்கின்றார். என்ன காரணத்தினால் இவளுக்குத் தீர்க்காயுளுண்டென்று சொன்னீர். இதற்கு வசிஷ்ட மஹரிஷி பதில் சொல்லுகின்றார். ஆதவன் என்ற சூரியனும், பொன்னோன் என்ற குருவும், புந்தி

என்ற புதனும் ஏழாவது வீட்டில் இருப்பதால் மனைவிக்குத் தீர்க்காயுள் உண்டு என்று சொன்னேன் என்றார் வசிஷ்டர், இன்னும் வசிஷ்டர் அதிக மாகச் சொல்லுகின்றார்.

20. காரிசே யேழைப் பார்த்தும் கலேபுகர் ஆறில் தங்க
பாரியு மத்தி யத்தில் பறப்பளாம் காலனுடு
கூறுவீர் காலம் தன்னைக் குழவிக்கு முப்பா னேழில்
தீரமாய் மரண மெய்தும் செல்வதி கேட்டி டாயே.

20. காரி என்ற சனியும், சேய் என்ற அங்காரகனும் ஏழாவது வீட்டைப் பார்ப்பதாலும், கலை என்ற சந்திரனும், புகர் என்ற சுக்கிரனும் ஆருவது வீட்டிலிருப்பதாலும் மனைவி மத்திய காலத்தில் இறந்து எமபட்ட ணத்திற்குப் போய்ச் சேருவாள் என்றார் வசிஷ்டர், இதன் மேல், எந்தக் காலத்தில் மனைவி இறந்து விடுவாள் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது, ஜாதகருக்கு முப்பத்தேழாவது* வயதில் மனைவிக்கு மரணம் நேரிடும், பார்வதியம்மையே! கேட்பீராக என்றார் வசிஷ்ட மஹரிஷி.

*குறிப்பு:—வியாக்கியானம்:—மனைவி மரண காலம்:—ஜாதகருக்கு முப் பத்தேழாவது வயதில் புதன் தசை நடக்கின்றது. மனைவியின் லக்கினம் ஏழாவது வீடாகிய மீனம் ஆகும். மீன லக்கினத் திற்கு ஜாதக சந்திரிகை அறுபத்தேழாவது சுலோகப் பிரகாரம் புதன் மாரகராகின்றார். இவர் ஏழாவது பாவத்திலேயே இருக் கின்றார். புதன் நீசமாக விருக்கின்றார், இவருடைய தசை மூன்றாவது தசையாக வருகின்றது. குமாரசாமீயம் மகா தசைப்படலம் நான்காவது பாடல் பிரகாரம் மூன்றாவது தசை நீசனுடைய தசையானல் மரணம் என்று சொல்லப்பட்டிருக் கின்றது. ஆகையால் இங்குப் புத தசையில் மனைவிக்கு மார கம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய புத்திரபாவம்

21. சுதர்களும் ஐந்து தோன்றும் சோர்வுறும் யாவும் தானே
பதியினுக் கிரண்டாம் மாது பரவு காலங்கள் சொல்வாய்
அதுமனை சேரா தென்றேம் அது விபரங்கள் சொல்வாய்
சதியாக கேது யிரண்டில் சார்கினும் யிரண்டோன்
[ஆறில்;

21. ஜாதகருக்கு ஐந்து குழந்தைகள் பிறக்கும். இவை எல்லாம் சீக்கிரத்தில் இறந்து போய் விடும். ஜாதகருக்கு இரண்டாவது மனைவி ஏற்படும் காலத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, இரண்டாவது மனைவி வந்து சம்பவிக்க மாட்டாள் என்றார் வசிஷ்ட மஹரிஷி. இதன் மேல் இதற்குக் காரணத்தைச் சொல்லுவீரென்று வசிஷ்டரைக் கேட்கவே இவர் பதில் சொல்லுகின்றார். கேது கெட்டவராகி இரண்டாவது வீட்டில் இருப்ப தாலும், இரண்டிற்குடையவராகிய சுக்கிரன் ஆருவது வீட்டில்;

22. இருப்பதால் புகல்வோம் யாங்கள் யிவன் பூர்வ
[வினையனேகம்
திருகாக சேரு மென்றேும் செல்வதி காண ணுகும்
அறிவிப்பீர் அந்தச் சங்கை வரைகிறே முனியே கேளும்
அருணைக்குத் தென் பாலாக அணுகிய சிறுஊர் தன்னில்.

22. இருப்பதாலும் நாங்கள் இவ்விதமாகச் சொன்னேம். இவர் தன்னுடைய முன்ஜன்மத்தில் செய்த அநேக பாபங்கள் இந்த ஜன்மத்தில் கெடுதியாக வந்து சம்பவிக்கும், ஆகையால் இவருக்கு இரண்டாவது மனைவி கிடையாது. இதன் பேரில் அந்தப் பாவங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, சொல்லுகின்றேன், முனிவரே! கேட்பீர் என்றுர் வசிஷ்டர். அருணை என்ற அருணுசலமாகிய திருவண்ணுமலைக்குத் தெற்கிலுள்ள ஒரு சிறு கிராமத்தில்

23. உதித்தனன் கங்கை சேயாய் உயர்வான குடும்பி யாகிப்
பதியினில் திருவு முண்டாய்ப் பாலகன் வாழும் நாளில்
சதியான வந்த ஊழை சாற்றுவோம் முனியே கேளு
விதவையைப் போகம் துய்த்து மெல்லிக்குக் கருவு தங்க;

23. ஜாதகர் வேளாளர் குலத்தில் ஆணுகப் பிறந்து மேன்மையான குடும்பத்தை யுடையவராகித் தன்னுடைய வீட்டில் செல்வ முடையவராகியும் லக்ஷ்மி கடாக்ஷத்தை யுடையவராகியும் வாழுகின்ற காலத்தில் இவருக்குக் கெடுதியாக வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றேம். முனிவரே! கேட்பீராக. இவர் ஒரு விதவை ஸ்திரீயுடன் சம்போகஞ் செய்யவே அதனுல் இவளுக்குக் கற்பம் நேரிடவே.

24. பலவித பண்டி தங்கள் பாவைக்குச் செய்யும் போது
குலவினுள் கருவு நீங்கி கோதையு மரண மானுள்
உலவிற்று அந்தத் தோஷம் உரைக்கிறேம் வேறு
[ஒன்று
நிலையிலார்க் குதவி செய்து நிலத்தைப் பரித்துக்
[கொண்டார்.

24. இவர் இவளுக்கு அநேகவிதமான வைத்தியங்களைச் செய்த போது கருவு அழிந்து இவள் மரணத்தை அடைந்து விட்டாள். இந்தத் தோஷம் இவரை வந்து அடைந்தது. இதுவன்றி இன்னெரு தோஷத்தையுஞ் சொல்லுகின்றேம். நிலையான அந்தஸ்தை யுடையவரல்லாத ஏழைகளுக்கு இவர் உதவி செய்து இவர்களுடைய நிலத்தை அபகரித்துக் கொண்டார்.

25. மனமது வருத்த முற்று வரைகிருர் யேழை யோர்கள்
தனமது கொஞ்சம் யீந்து தரணியைப் பரித்த பாவி

இனிவரும் சென்மந் தன்னில் யீன்றதோர் சுதர்க
[ளின்றி
மனைவியு மரண மெய்தி வளமிலாக் குடும்பி யாகி;

25. தங்களுடைய மனத்தில் துன்பத்தை யடைந்து இந்த ஏழை மனிதர்கள் சாபத்தைக் கொடுக்கின்றார்கள். கொஞ்சம் பணத்தைக் கொடுத்து விட்டு நிலத்தை அபகரித்துக் கொண்ட பாபியாகிய "நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்குப் பிறந்த பிள்ளைகளை இழந்தும் உன்னுடைய மனைவி இறந்தும், செழிப்பிலாத குடும்பஸ்தராகியும்;

26. தனியாக வாழ்வாய் நீயும் சஞ்சல மனம தாகி
இன்னம் சிலது சொன்னார் யெய்திற்று அந்தத் தோஷம்
கனமுள குடும்பம் தாழ்ந்து கடனது அதிகம் உண்டு
வினைதீர்க்கும் சேது சென்று மேலவர் பக்தி யாகி.

26. ஒண்டியாக வாழக் கடவது, மேலும் நீ கஷ்டங்களையும் துன்பங்களையும் அடைந்த மனத்தை யுடையவராகியும் இருக்கக்கடவது" என்று ஏழைகள் சொன்னார்கள். இவர்கள் இன்னும் சில விஷயங்களையும் சொன்னார்கள். இவர்களது சாபமும் ஜாதகரை யடைந்தது, இவருடைய மேன்மையான குடும்பம் அழிந்து, கடனும் அதிகமாக ஏற்பட்டு விட்டது. பிறகு இவர் பாவங்களை ஒழிக்கின்ற சேது ஸ்தலத்திற்குப் போய்க் கடவுளின் மேல் அன்புடையவராகி;

27. அதிதிகட் கன்ன மீந்து அந்தகன் பக்கல் சென்று
முதல்குல முதிப்பா னாகும் முன்வினை சேர்ந்த தாலே
வதிபதி மரண மெய்தி வனவாச மாக வாழ்வன்
நிதியிலார் சாபத் தாலே நேராது மறுமனை தான்.

27. பரதேசிகளுக்குச் சாப்பாட்டைப் போட்டுப் பிறகு இறந்து எமனிடத்திற்குப் போய் இந்த ஜன்மத்தில் முதலாவது குலமாகிய பிராமணர் ஜாதியில் பிறப்பார். ஜாதகருக்குத் தன்னுடைய முன் ஜன்மத்திய பாவங்கள் வந்து சம்பவித்ததால் இவருடைய மனைவி இறந்து இவர் வனவாசமாக வாழ்வார். பணமில்லாத ஏழைகளின் சாபத்தால் இவருக்கு இன்னொரு மனைவி கிடையாது.

28. அத்திரி தடுத்துச் சொல்வார் அவன்முன் சென்மந்
[தன்னில்
சுத்தமாய்ச் சேது சென்றும் துறவோர்க்கு வன்ன
[மீந்தும்
வித்தகன் வாழ்வா னென்றீர் விலகாதோ அந்தத்
[தோஷம்
சத்தி யற்றோர்கள் சாபம் தானது விலகா தாகும்.

28. இவ்விதமாக வசிஷ்ட மஹரிஷி சொல்லிய போது அத்திரி ரிஷி தடுத்துக் கேட்கின்றார். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சேது ஸ்தலத்திற்குப் போய்ச் சன்னியாசிகளுக்கும் எல்லாவற்றையும் துறந்து விட்டப் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போட்டு வாழ்ந்தார் என்று சொன்னீரே! இவற்றால் இந்தத் தோஷம் நிவர்த்தியாகிவிடாதோ என்று அத்திரி ரிஷி கேட்டார். இதற்கு ஏழைகளினுடைய சாபம் நீங்காது.

29, சேதுவின் பலத்தி னாலே சென்மம் மேம்பா டாகும்
தீதான கருவின் தோஷம் தீராது யென்று சொல்வோம்
காதலன் தனக்குக் கருமம் கழறுவீர் விபரம் தன்னை
ஓதுவேன் துணைவர் புத்திரன் உறுமங்கள் செய்வா
[னென்றோம்.

29. ஆனால் சேது ஸ்தலத்திற்குப் போன பலனால் ஜாதகருடைய ஜன்மம் மேன்மையை யடையும், கருவை அழித்த தோஷம் விலகாது என்று சொல்லுகின்றோம், என்றார் வசிஷ்டர். ஜாதகருடைய கர்ம காரியங்களைப் பற்றிய விஷயங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, இவருக்கு இவருடைய சகோதரரின் பிள்ளை ஈமக் கடன்களைச் செய்வார் என்று சொல்லுகின்றோம், என்றார் வசிஷ்ட மஹரிஷி.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

30. பின் பாகம் விபரமாகப் பேசுவோம் முனியே யானும்
அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள்
[சிவந்த மேனி
கன்னென மொழியே சொல்வள் கணவனுக் கினிய
[ளாகும்
தன்சொல்லு மடக்க முண்டு சற்பாத்திரி யோக சாலி.

30. இரண்டாவது பாகத்தில் விஷயங்களை விவரமாக நாம் சொல்லுகின்றோம், முனிவரே! இனிமேல் ஜாதகருடைய தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகாக விருப்பாள், சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவள். இவள் சர்க்கரையைப் போல இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாக விருப்பாள். இவள் சாந்தமாகவும் நிதானமாகவும் பேசக் கூடியவளாளவள், இவள் நல்ல இரட்சகியாவள், நல்லபடியே காப்பாற்றுபவளாவள், போக முடையவளாக விருப்பாள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவமும் முன்ஜன்மமும்

31. அவள்துணை யெழுவர் தோன்றும் ஆணைந்து
[பெண்பால் ரெண்டு
நவனியில் நசிக்கு மென்றோம் நவிலுவோம் பின்
[பாகத்தில்

தவசியே யில்லம் உத்திரம் சாற்றுவோ மன்னே பூர்வம்
பவமது விலக்கு கின்ற பாண்டியில் சைவ சேயாய்;

31. ஜாதகரின் தாயாருடைய சகோதரர்கள் ஏழு பேராவர், ஐந்து சகோதரர்களும் இரண்டு சகோதரிகளுமாகும். இவர்களில் சிலர் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் என்கின்றோம். மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! தாயாருடைய வீடு வடக்கில் இருக்கும். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பாவத்தை நிவர்த்தி செய்கின்ற பாண்டிய நாட்டில் சைவருடைய குலத்தில் பெண்ணாகப்;

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

32 பிறந்துமே வறுமை யின்றி புத்திர ருடையா ளாகி
அறந்தனி லிச்சை யுண்டாய் அந்தகன் பக்கல் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன ளென்று
[சொல்வோம்
வரும் சென்மம் காஞ்சி தன்னில் வருகுவாள் யிக்
[குலத்தில்.

32. பிறந்து தரித்திரமும் கஷ்டங்களுமில்லாமலும், சந்ததிகளை யுடையவளாகியும், தானதர்மங்களில் பிரியமுள்ளவளாகியும் இருந்து, பிறகு இறந்து, எமனிடத்திற்குப் போய்ப் பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். இவள் தன்னுடைய பின் ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்த ஜாதியிலேயே பிறப்பாள்.

## ஜாதகரின் தாய்தகப்பனார்களின் மரணகாலமும் தகப்பனாரின் மறுஜன்மமும்

33. ஆறாறு ஒன்று ஆண்டில் அன்னைக்கு கெண்ட மெய்தும்
தீரமாய் நாற்பாணாண்டில் தந்தைக்குக் கெண்ட மெய்தும்
கூறுவோ மிவன்பின் சென்மம் குத்தால நாட்டிலே
[தான்
பாரிய தன வானுக்குப் பிறப்பனா மிக் குலத்தில்.

33. ஜாதகருக்கு முப்பத்தேழாவது* வயதில் இவருடைய தாயாருக்கு மரணம் நேரிடும், இவருக்கு நாற்பதாவது* வயதில் இவருடைய தகப்பனாருக்கு மரணம் நேரிடும். தகப்பனாருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் குற்றாலத்தில் ஒரு பெரிய பணக்காரருக்கு இந்த ஜன்மத்திய ஜாதியிலேயே போய்ப் பிறப்பார்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—மாதுர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில் புதன் தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குச் சந்திர காவியம் முதலிய சில கிரந்தங்கள் பிரகாரம் புதன் மாரகராகின்ருர். இந்தப் புதன் லக்கினுதிபதியாகிய குருவுடன் கூடி இருக்கின்ருர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் மாரகராகின்ருர். ஆகையால் புதன் தசையில் மாதாவுக்கு மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராக விருக்கின்ருர்.

*குறிப்பு :—பிதிரு மாரக விஷயம் :—ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் புத தசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகப் பிரகாரம் குரு மாரகராகின்ருர். ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகப் பிரகாரம் இவருடன் சம்மந்தப்பட்ட புதன் அதிக மாரகராகின்ருர். மேலும் புதன் கன்னியா லக்கினத்திற்குக் கர்மாதிபதியாகின்ருர். ஆகையால் புத தசையில் இங்கு பிதாவுக்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலமும், மறுஜன்மமும்

34\. அறுபது இரண்டு ஆண்டில் அழகிய சாடி மாதம்
திருமக னுடல மேகும் செப்புவோ மிவன்பின் சென்மம்
மர்மமாய்க் கோகர் ணத்தில் வருவனு மிக்கு லத்தில்
பெருவயி ருேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

34\. ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது* வயதில் சாடி மாதம் என்ற மாசி மாதத்தில் மரணம் சம்பவித்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய் விடும். இவருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவர் ரகசியமாக கோகர்ணம் என்ற ஊரில் இந்த ஜன்மத்திய ஜாதியிலேயே போய்ப் பிறப்பார். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியசாலியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக,

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் சந்திரன் மாரகராகின்ருர். ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகப் பிரகாரம் சந்திரனுடன் சம்பந்தப்பட்ட சுக்கிரன் அதிக மாரகராகின்ருர். ஆகையால் சுக்கிர தசையில் ஜாதகருக்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

35\. வந்தவ னிச்சென் மத்தில் வாக்கது தவறு தலாயும்
பந்தமாய் வேறு மாது பகல்போகம் செய்த தாலும்

விந்தையாய்ச் சிலது கர்மம் விரயமாய்ச் செய்த தாலும்
அந்தவன் வாழ்வ தாலே அறுமறை குலமெவ் வாறு;

35. ஜாதகர் இந்த ஜன்மத்தில் தான் சொல்லிய பிரகாரம் நடந்து கொள்ளாமல் தவறிப் போய் விட்ட படியாலும், இதர ஸ்திரீயிடத்தில் பகலில் சம்போகம் செய்தாலும், சில காரியங்களை ஆச்சரியப்படும்படியாகக் கெட்ட வழியில் செய்து கொண்டு வாழ்வதாலும் இவர் எவ்விதமாக அருமையான வேதங்களை ஓதுகின்றவர்களுடைய குலமாகிய பிராமண ஜாதியில்;

36. உதிக்குங்கா ரணங்கள் சொல்வாயு ரைக்கிறோம் [முனியே கேளு
சதியாக அதிக துன்பம் செய்துமே வந்த போதும்
மதிபிறை அணிந்தோன் பூசை மனமதில் கபடமின்றி
நிதியிலார்க் குதவி செய்து நேமியில் நல்லோ னுயும்;

36. பிறப்பார்? இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, சொல்லுகின்றேன். முனிவரே! என்றார் வசிஷ்ட மஹரிஷி. ஜாதகர் வஞ்சனையாகவும் கபடமாகவும் அநேக கெட்ட காரியங்களைச் செய்து வந்த போதிலும் இவர் தன்னுடைய மனத்தில் வஞ்சனை, கள்ளம் ஆகிய இவை இல்லாமல் சந்திரனைத் தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக்கும் சிவபெருமானைப் பூஜை செய்து வந்ததாலும், தனமில்லாத ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்து கொண்டும், பூமியில் நல்லவராகவும்;

37. மைந்தனும் வாழ்வ தாலே மறைக்குல முதிப்பா னுகும்
சந்ததம் யோகச் சேதி சாதமும் குறைவு றுதான்
எந்திடம் பெருமை யேற்பனி திகாச மடையா னுகும்
வந்தவர்க் கன்ன மீவன் வாக்கதைக் காப்பா னுமே.

37, ஜாதகர் வாழ்ந்து வந்ததாலே இவர் பிராமணர் குலத்திற் போய்ப் பிறப்பார். இவருக்கு யோக பாவ விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சாப்பாட்டு விஷயத்தில் கஷ்டத்தை அனுபவிக்க மாட்டார். இவர் எவ் விடத்திலும் கௌரவத்தை யுடையவராக விருப்பார். கலைஞானத்தை அடைய மாட்டார். இவர் தன்னிடம் வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் நடந்து கொள்ளக் கூடியவரார்.

38. செனித்திடுங் காலம் தன்னில் செம்பொன்னின் திசை [யிருப்பு
குனித்திடு ஆண்டு ஆறும் கூறுவோம் திங்கள் மூன்றும்

துணைவிருத்தி பந்து சூதம் தாய்தந்தை பிணியு
[மெய்தும்
வனிதையே பூர்வம் சொன்னேம் வரைகிறேம் பின்பால்
[சேதி.

38. ஜாதகர் பிறக்கும் போது குருமகா தசையில் இருப்பு ஆறு வருஷங்களும், மூன்று மாதங்களும் ஆகும் என்று சொல்லுகின்றேம். இக்காலத்தில் ஜாதகருக்குச் சகோதரர்கள் பிறப்பர். பந்துக்களில் சூதகம் நேரிடும். தாயார் தகப்பனர் ஆகிய இவர்களுக்கு வியாதி சம்பவிக்கும். பார்வதியம்மையே! முதலாவது பாகத்தைச் சொன்னேம். மற்ற விஷயங்களைப் பின்னல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேம். —C.G.R.

# ஜாதகம் 19

## ஜனனகால கிரக நிலை

1. [1]திங்களும் [2]கோலதாக [3]சிகிபுதன் [4]பானு [5]மாதை
[6]மங்கலன் [7]சீயமாக [8]மழைக் கோளு [9]காரி [10]நண்டில்
பொங்கிய [11]பொன்னேன் மேடம். [12]பேதையும் சென்ம
[மாக
இங்கிவை கிரகம் நின்ருல் யீயம்புவீர் பலத் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சந்திரன் துலாத்திலும், கேதுவும் புதனும் சூரியனும் கன்னியிலும், அங்காரகன் சிம்மத்திலும், சுக்கிரனும் சனியும் கடகத்திலும், குரு க்ஷேமத்திலும் இருந்து, இவ்விதமாக நவக் கிரகங்கள் அமைந்திருந்தால், பலாபலன்களைச் சொல்லுவீர்கள் என்று பார்வதி யம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| ராகு | குரு | | |
| | இராசி சக்கரம் | | சுக்கிரன் சனி |
| | | | அங்காரகன் |
| | | சந்திரன் | லக்கினம் சூரியன் புதன் கேது |

சுவாதி 1-ஆம் பாதம். ராகு தசை
ஞ 17—00—00.

*குறிப்பு;—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—ரிஷபத்தில் அங்காரகனும், கடகத்தில் புதனும், சிம்மத்திற் சனியும் ராகுவும், விருச்சிகத்திற் குருவும், தனுசில் சந்திரனும், கும்பத்தில் சூரியனும் கேதுவும், மீனத்தில் சுக்கிரனும் ஆகும். புதன் வக்கிர கதியில் இருக்கின்ருர்.

1. சந்திரன்
2. துலாம்
3. கேது
4. சூரியன்
5. கன்னி
6. அங்காரகன்
7. சிம்மம்
8. சுக்கிரன்
9. சனி
10. கடகம்
11. குரு
12. கன்னி

2. தானே ஆண்பால் சௌனமுறும் தந்தை யில்லம்
[வடபார்வை
மானே கீழ்மேல் வீதியது மாரிமேற்கில் அருகில் தந்தி
வானோர் புகழும் சத்தியுமே வடகீழ் தங்கும் நதி யருகில்
தேனே பேரூர் பலசாதி சிறப்பாய் விளங்கும்
[செட்டுமிகும்.

2. பிறந்த குழந்தை ஆணாகும். இந்தக் குழந்தையின் தகப்பனாருடைய வீடு வடக்கே பார்த்திருக்கும். தெரு கிழக்கு மேற்குத்திக்காக விருக்கும். மாரியம்மன் கோயில் மேற்குத்திக்கிலிருக்கும், இதனருகில் விநாயகக் கடவுளின் கோயில் இருக்கும். தேவர்கள் புகழ்கின்ற ஈசுவரியம்மன் கோயில் வடகிழக்குத் திக்கிலிருக்கும். இதன் சமீபத்தில் ஓர் ஆறு இருக்கும். பிறந்த கிராமம் ஒரு பெரிய கிராமமாகும். இதில் அநேக ஜாதி ஜனங்கள் மேன்மையுடன் வாழ்வார்கள். வியாபாரங்கள் அதிகமாக நடந்து கொண்டிருக்கும்.

3. மிகுமே வடுகர் வர்க்கத்தில் மேவும் பாலன் யென்று
[ரைப்போம்
தகைவாய்க் குடும்பச் சேதி தன்னைச் சாற்றக்
[கேண்மோ
வகையாய் ஆண்பால் ஒன்றுமே மாது அறுவர்தா
[னுரைத்தோம்
பகையாய் வேருய்ச் சென்றிடுவன் பகர்வோம் தந்தை
[குணமதனை.

3. ஜாதகர் வடுகர் குலத்தில் வந்து பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இவருடைய குடும்பத்தின் விஷயங்களைச் சொல்லுகின்றேன். கேட்பீராக. இவருடைய தகப்பனாருடன் பிறந்தவர்கள் ஓர் ஆணும், ஆறு பெண்களும் ஆகும் என்று சொல்லுகின்றோம். இந்தச் சகோதரர் விரோதியாகி வேறு குடும்பஸ்தராகப் போய் வசிப்பார். இனிமேல் ஜாதகருடைய தக்ப்பனாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்கள்

4. மதன் னைப்பாம் கல்விமிகும் மறிவோர் நேயன் மன
[வெகுளி
இதமாய் வார்த்தை யீகையுள்ள யிட ரென்றோர்க்
[குதவிடுவன்
சுதரால் சுகமும் காணுதான் தூர்ச் தொழிலும்
[செய்திடுவன்
பதருன் வரும் காலம் சொல்வன் பண்போர் நேயன்
[பைங்கொடியே.

4. ஜாதகருடைய தகப்பனர் மன்மதனுக்குச் சமானமானவராவர், அழகுடையவராவர். இவர் அதிக வித்தையை யுடையவராவர். இவர் வாசித்தவர்களுக்குச் சிநேகிதராக விருப்பார். கோபத்தை யுடைய மனத்தை யுடையவராவர். இவர் இன்பமாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் பிறருக்குக் கொடுக்கின்ற தாயாளமான குணத்தை யுடையவர், நாங்கள் கஷ்டத்தை அனுபவிக்கிறோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இவருக்குத் தன்னுடைய பிள்ளைகளால் யாதொரு சுகமும் கிடையாது. இவர் ஜவுளி வியாபாரத் தொழிலைச் செய்திடுவார். இவர் அவசரப்பட்டுப் பேச மாட்டார். இனி நடக்கப்போகும் விஷயங்களை முன்னமே சொல்லுவார், அஃதாவது ஜோதிடராவர். நல்லவர்களுக்குப் பிரியமானவர், சிநேகிதர் ஆவர். பார்வதியம்மையே!

## ஜாதகருடைய சகோதரபாவம்

5. கொடியே குறித்தோனுக்கு யிவன் குதிப்பான்
[துணையாண் காணும்
வடிவாய் பெண்பா லொன்றுருமே மகவு விருத்தி
[வரனுடையாள்
படிமீதினிலே சுகதுக்கம் பாவை கென்றோம் பசு
[நிறத்தாள்
நடை நன்மைகளும் தீமையுமே நவின்றோம் யிவன்தன்
[குணம் கேளாய்.

5. பார்வதியம்மையே! இக்குணங்களையுடைய தகப்பனருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருக்குச் சகோதரன் கிடையாது. ஒரு சகோதரி இருப்பாள். இவள் விருத்தியாவாள். இவள் புருஷனையுடையவளாவள். இவளுக்கு இந்த உலகத்தில் சுகங்களும் துக்கங்களும் கலந்து நடக்கும் என்று சொல்லுகின்றோம். இவள் பொன் நிறமான தேகத்தையுடையவள். இவள் நல்ல நடவடிக்கையும் கெட்ட நடவடிக்கையும் யுள்ளவள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருடைய குணாதிசயங்களையும் பற்றிக் கேட்பீராக.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

6, குணமே யிரண்டு மாஞ்சிவப்பன் கொடிபோல் உடலம்
[செலவாளி
பிணையே யெவர்க்கு மெண்ணுதான் பேதை தன்னல்
[யோகமுறும்
அணைவான் சிலது மாதர்களை அவனி சேர்க்கால்
[அலைச்ச லுண்டு
தணிவாய் மனத்தல் வல்வாயன் சரனூல்
[அறிந்தார்போல் புகல்வன்.

6. ஜாதகர் இரண்டு குணங்களையுடையவர், நல்லதும் கெட்டதும் கலந்துள்ள நடுத்தரமான குணத்தையுடையவர். மாந்தளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடையவராவர், நீண்டு மெலிந்த தேகத்தையுடையவர். இவர் அதிகமாகச் செலவு செய்பவராவர். இவர் யாருக்குந் தீங்குகளை நினைக்கமாட்டார். இவருக்கு ஸ்திரீயால் மனைவியால், போகம் வந்து நேரிடும். இவர் சில ஸ்திரீகளுடன் சம்போகஞ் செய்வார். நிலங்களை வாங்கிச் சேகரிப்பார். இவருக்கு நிலையின்மை, தொந்திரவு வருத்தம் ஆகிய இவை உண்டு. இவர் பேசுவதில் கெட்டிக்காரர். சர சாஸ்திரமாகிய சுவாசக்குறி யறியுமோர் சாத்திரத்தைத் தெரிந்தவர் போலப் பேசுவார்.

7. கல்வி சமமாம் யூகையுளன் கட்டு வார்த்தைதான் [சொல்லுவான்
மல்லில் செல்லான் தரிதொழிலும் மாடு விருத்தி [யில்லாதான்
அல்லல் உடையான் தூசு செட்டு அல்பமாகச் [செய்திடுவன்
வெல்லும் சொல் வீண்பழியும் விளையும் நடையும் [கடிதாமே.

7. ஜாதகர் நடுத்தரமான வித்தையுடையவராவர். நல்லது கெட்டது களைப்பகுத்தறியும்படியான நுட்பமான அறிவையுடையவர், பொய், புனைந்த வார்த்தை பழமொழி ஆகிய இவற்றைச் சொல்லுவார். இவர் சண்டையில் பிரவேசிக்கமாட்டார், தரித்தொழிலைச் செய்வார், இவருக்கு ஆடு மாடுகள் விருத்தியாகா. இவர் கஷ்டங்களை யுடையவராவர். சீலை வியாபாரத்தைக் கொஞ்சமாகச் செய்திடுவார். இவர் சொல்லுகின்ற வார்த்தைகள் செலாவணி யுடையனவாகவிருக்கும், இவருக்கு வீணான அபவாதங்களும் ஏற்படும். கஷ்டமான நடையை யுடையவராவர்.

8. தாமே அடைந்தோர்க் குதவிடுவன் தனமும் சேர்க்கான் [பணிகாணான்
ஆமே மதுவு மருந்துவனும் அல்பகோபி அரிபக்தி
நேமம் கீதம் யிஷ்டமுளன் நினைத்த படியேதான் [செல்வன்
பூமி சேர்ப்பான் காலியிலான் பிதாயில்லத்தை நாஸ்தி [செய்வன்.

8. ஜாதகர் தன்னிடத்திற்கு வந்து சேர்ந்தவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இவர் பணத்தைச் சேர்த்துவைக்கமாட்டார். ஆபரணங்களை உடையவரல்லர். இவர், சாராயம் முதலிய பானங்களை குடிப்பவராவார். சிறிது கோபத்தையுடையவர். விஷ்ணுவின்மேல் அன்புடையவராவர். சீதளமான, குளிர்ந்த வஸ்துக்களின்பேரில் பிரியமுள்ளவர். தான் எண்ணின பிரகாரமே நடந்துகொள்ளுவர். இவர் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து

வைப்பார், கால்நடைகள் இல்லாதவர், தன்னுடைய தகப்பனுருடைய வீட்டைக் கெடுத்துவிடுவார்; விற்றுவிடுவார்.

## ஜாதகருடைய விவாககாலம்

9. செய்வான் சிலர்க்கு உபகாரன் சேரும் பித்த நாபிவினை
ஐயமா மனத்தன் வெளிமயக்கன் அவன் பந்துகளில்
[சிலபகையும்
தையல் அணுகும் காலத்தைச் சாற்றக் கேண்மோ
[பதினெட்டுள்
மைநேர் விழியாள் உள்ளூரில் வருவள் தந்தை
[வர்க்கமதில்.

9. ஜாதகர் சிலருக்கு உபகாரத்தைச் செய்வார், இவருக்கு நாபியில் பித்தரோகம் இருக்கும். இவர் சந்தேகத்தையுடைய மனத்தை யுடையவராவர். இவர் வெளியாரை மயக்கக்கூடிய தன்மையை யுடையவராவர். இவருக்குச் சில பந்துக்கள் விரோதிகளாக விருப்பாகள். இவருக்கு மனைவி வந்து நேரிடக்கூடிய காலத்தைச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவருக்குப் பதினெட்டு வயதிற்குள்ளே *உள்ளூரிலிருந்தும் தகப்பனுருடைய வம்சத்திலிருந்தும் மனைவி வருவாள்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—விவாக்கால விஷயம்:—ஜாதகருக்கு வயது பதினெட்டிற்குள்ள, அஃதாவது வருஷம் பதினேழு, மாதம் ஆறு வரையிலும் ராகுதசை நடக்கின்றது. ராகு களத்திரஸ்தானமாகிய ஏழாவது வீட்டிலிருக்கின்றார். ஜாதக பாரிஜாதம் பதினன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஏழாவது பாவத்திலுள்ள கிரகம் தன் தசையில் விவாகத்தைச் செய்துவைக்க அதிகார முடையதாகும். இங்கு ஏழிலுள்ள கிரகமாகிய ராகு தன் தசையில் விவாகம் செய்துவைப்பார் என்று ஏற்படுகின்றது,

## ஜாதகருடைய மனைவியின் குணாதிசயங்கள்

10. மதிபோல் குணத்தாள் வெளியோர்க்கு மாரன் தனக்குச்
[சொற்பபகை
நிதியும் சேர்ப்பாள் பணியிச்சை நிதமும் மனது
[சஞ்சலத்தாள்
துதி செய்தோர் குதவிடுவள் தோகை யொப்பம்
[பாட்டாளி
பதியு முடையாள் பித்தபிணி படரும் வயது தீர்க்கமுறும்.

10. ஜாதகருடைய மனைவி சந்திரனைப்போல இனிமையான சீதளமான குணத்தை யுடையவளாகும், இவள் அன்னியர்களுக்கும் புருஷனுக்

கும் சிறிது விரோதியாக விருப்பாள். இவள் தனத்தைச் சேர்த்துவைப்பாள். இவள் ஆபரணங்களின்மேல் ஆசையை யுடையவளாவள், எப்போதும் கவலைகளையுடைய மனத்தை யுடையவளாவள். இவளிடம் வந்து வேண்டிக் கேட்டுக் கொள்ளுபவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் மயிலைப்போல நீண்ட உருவத்தை யுடையவளாவள், இவள் கஷ்டப்பட்டு உழைக்கக் கூடியவளாவள். இவள் வீட்டை யுடையவள். இவளுக்குப் பித்த வியாதி அதிகப்பட்டுக்கொண்டே வரும். இவள் தீர்க்காயுளை யுடைவளாவள்.

## வேறு

11. அத்திரி தடுத்துச் சொல்வார் அவனுக்குத் தாரமிரண்டு
சுத்தமாய் நடக்கு மென்றேம் செயமுனி தடுத்துச்
[சொல்வர்
வித்தகன் தனக்குத் தாரம் விளம்பின காரணம் சொல்
சத்தமம் ராகு நிற்கச் சரத்தினில் பொன்னேன் பற்ற;

11. அத்திரி ரிஷி தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் நிச்சயமாக வந்து நேரிடுவார்கள் என்று சொல்லுகின்றேம். இதற்கு ஜய முனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இவ்விதமாக மனைவிமார்களைப் பற்றிச் சொல்லிய காரணங்களைப் பற்றிச் சொல்லுவீர். ஏழாவது பாவத்தில் ராகு இருப்பதாலும், சரராசியாகிய மேஷத்தில் *பொன்னேன் என்ற குரு இருப்பதாலும்;

*குறிப்பு:—வியாக்கியானம்:—ஏழிற்குடையவர் சரராசியில் இருக்கும் விஷயமாகக் கிரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரத்தில் அறுநூற்று நாற்பத்தெட்டாவது (648–ஆவது) பாடலைப் பார்க்கவும். "ஏழ் வீட்டினிற் கதிபன் சரத்தினிற்கில் இருமனைவி" என்ற பாடலை வாசிக்கவும்.

12. புதன்குசன் பானு வேழை பொருந்தியே பார்த்த தாலே
அதிபதி யிரண்டே யென்றேம் வருவித்த மாதர் தானும்
அதமாமோ தீர்க்கமோ சொல் அவ்விரு மனையும் தீர்க்கம்
எதுகாலம் மறுமனை தான் யெய்திடு மென்று சொல்வீர்.

12. புதனும், குஜன் என்ற அங்காரகனும், பானு என்ற சூரியனும் ஏழாவது வீட்டைப் பார்த்ததாலும், ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் என்று சொன்னேம். இதன்மேல் இவ்விரண்டு மனைவிமார்களும் இறந்து விடுவார்களோ அல்லது நீடித்த வயதை உடையவர்களோ என்பதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இந்த இரண்டு மனைவிமார்களும் தீர்க்க வயதை உடையவர்கள் என்று சொல்லுகின்றேம். இதற்குப் பிறகு எந்தக் காலத்தில் இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள் என்பதைச் சொல்லுவீர், என்று ஜயமுனிவர் கேட்டார்,

13. இருபது வெட்டு ஆண்டில் யினபந்து விரோத முற்று
வருகுவாள் தோஷத் தாலே விபரங்கள் பின்பால்
[சொல்வேன்
மருமனை குணம் யெவ்வாறு வரைகுவீர் தந்தை வர்க்கம்
இருசிவப் புடைய ளரகும் இன்பச் சொல் தோஷ
[மேற்பள்.

13. ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் *பந்துக்களுக்குள்ளே விரோதம் ஏற்பட்டு இந்தத் தோஷத்தால் இரண்டாவது மனைவி வந்து சம்பவிப்பாள். இதைப்பற்றிய விவரங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன். இரண்டாவது மனைவியின் குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவள் தகப்பனுருடைய வம்மிசத்திலிருந்து வருவாள் என்றார். இவள் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமான மாநிறத்தை யுடையவள். இவள் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் தோஷத்தையும் குற்றங்களையு முடையவளாவள்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—இரண்டாவது மனைவி விஷயம்:–ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் குருதசையில் சுக்கிரபுத்தி நடக்கின்றது. சுக்கிரன் இரண்டாவது மனைவி ஸ்தானமாகிய ஒன்பதாவது வீட்டிற்குடையவராகி லாபஸ்தானமாகிய கடகத்தில் இருக்கின்றார். ஆகையால் இந்த புக்தி காலத்தில் ஜாதகருக்கு இரண்டாவது மனைவி வருவாள் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

14. வரனுக்குப் பகையு மாகும் மாதுக்கு சுதராண் ஒன்று
தீர மென்றோம் தீர்க்கசீவி செல்வதி வேருய்ச் செல்வள்
அறிவுளாள் பொறுமை கோபம் அறிவிப்போம் பின்பால்
[சேதி
பெரு வயிறோனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

14. இந்த இரண்டாவது மனைவி ஜாதகருக்கு விரோதியாகவிருப்பாள். இவளுக்கு ஓர் ஆண் குழந்தை உண்டு. இந்தக் குழந்தை தீர்க்க வயதை உடையதாகவிருக்கும் என்று சொல்லுகின்றோம். இவள் வேறு குடும்பியாக வாழ்வாள். இவள் புத்திசாலியாக விருப்பாள். சாந்தமான குணத்தையும் கோபத்தையும் உடையவளாவள். மற்ற விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றோம். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

15. சாதகன் தனக்குப் புத்திரர் சாற்றுவோம் விருத்தியாகா
கோதைமுன் சுதர்கள் தோஷம் குறிக்கிறோம் தீதே
[யாகும்

ஏது காரணத்தி ஞலே யியம்பீனீர் அந்தச் சங்கை
நீதியா யேழுக் கைந்தில் நீர்புகர் சனியுங் கூட;

15. ஜாதகருக்குப் புத்திர்பாவ விஷயமாகச் சொல்லுகின்ருேம். இவருக்குப் புத்திரவிருத்தி கிடையாது. முதல் தாரத்திற்குப் புத்திர தோஷமிருக்கின்றது என்று சொல்லுகின்ருேம். எந்தக் காரணத்திஞல் இந்தத் தோஷத்தை நீர் சொன்னீர் என்று கேட்கவே, ஏழாவது பாவத்திற்கு ஐந்தாவது வீட்டில் புகர் என்ற சுக்கிரனும், சனியும் கூடி இருப்பதாலும்;

16. பாரிமுன் சுதர்கள் தோஷம் பராசரும் தடுத்துச்
[சொல்வார்
வீரியன் தனக்குப் புத்திரர் விளங்காது வென்று
[சொல்வோம்
கூறுவீர் அந்தச் சங்கை குருவெட்டில் சனியும் பார்க்கப்
பாரினில் புத்திர தோஷம் பகருவோம் முனியே யாங்கள்.

16. முன் மனைவிக்கு முதலில் புத்திர தோஷமீருக்கின்றது என்ருர் முனிவர். இதன்மேல் பராசர மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்ருர். ஜாதகருக்குப் பிள்ளைகள் விருத்தியாகமாட்டார்கள் என்று சொல்லுகின்ருேம், என்ருர் பராசர மஹரிஷி. இதன்மேல் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, குரு எட்டாவது பாவத்தில் இருப்பதாலும், இவரைச் சனியும் பார்ப்பதாலும் புத்திரதோஷம் இருக்கின்றதென்று நாங்கள் சொல்லுகின்ருேம், முனிவரே!

17. உதித்தவன் தனக்குத் தோஷம் உரைக்கவே மாட்டோம்
[யாங்கள்
பதியதுக் கைந்தோன் லாபம் பளிங்கனும் கூடி நிற்க
அதுதோஷம் சொல்வோம் யாங்கள் ஆதிமா
[தவளால் தோஷம்
சதியுண்டு பூர்வம் தன்னில் தங்கிற்று வினை யனேகம்.

17. ஜாதகருக்குப் புத்திர தோஷத்தை நாங்கள் சொல்லவே மாட்டோம். புத்திரஸ்தானமாகிய ஐந்திற்குடையவராகிய சனி, லாபம் என்ற பதிஞேராவது பாவத்தில் பளிங்கு என்ற சுக்கிரனுடன் கூடியிருப்பதால் தோஷம் இருக்கிறது. ஆனுல் இந்தத்தோஷம் முதல் மனைவியால் ஏற்பட்டதாகுமே தவிர ஜாதகரால் ஏற்பட்டதல்ல. முதல் மனைவிக்கு முன்ஜன்மத்தில் அநேகசதிகளும் வஞ்சனைகளும் பாவங்களும் நேரிட்டுவிட்டன.

## ஜாதகரின் மூத்த மனைவியின் முன்ஜன்மம்

18. பூர்வ வினையைச் சொல்வீர் பிருதிவி கீழ் பாலாக
தேருர் செக்கான் வம்சம் பிறந்துமே மதலை யுண்டாய்

காதலி வாழும் நாளில் கலந்த ஊழ் தன்னைக்
[கேண்மோ
திரு மார்சால மீன்ற சுதர்களைக் காணு னென்ருேம்.

18. ஜாதகரின் முதல் மனைவியினுடைய முன்ஜன்மத்திய பாவங்களைப் பற்றிச் சொல்வீர் என்று கேட்டார். இவள் பிருதிவி ஸ்தலமென்ற காஞ்சீ புரத்திற்குக் கிழக்குத்திக்கில் தேரூர் என்ற கிராமத்தில் எண்ணெய் வாணிபர் குலத்தில் பிறந்து குழந்தைகளை யுடையவளாகி வாழ்கின்ற காலத்தில் இவளுக்குச் சம்பவித்த வினைகளைச் சொல்லுகின்ருேம், கேட்பீராக. ஒரு அழகிய பூனைக்குப் பிறந்த குட்டிகள் காணேம்; அஃதாவது அவை இறந்து போகும்படியாய் இவள் செய்துவிட்டாள் என்று சொல்லுகின்ருேம்

19. இன்னமும் வேறு ஒன்று யேழையோர் மகவு சாதம்
கன்னிபால் கேட்கும் போது கடூர வார்த்தைகளைச்
[சொல்லி
அன்னமு மில்லை யென்ருள் அடைந்தது அந்தத்
[தோஷம்
தன்பந்து வஞ்சனையும் செய்தாள் தங்கிற்று அதுவோர்
[தோஷம்

19. இவள் இன்னெரு பாவத்தையும் செய்தாள். ஓர் ஏழை குழந்தைக்காகச் சாதத்தை இவளைக் கேட்கும்போது கோபமான கடின வார்த்தைகளைச் சொல்லிச் சாதம் இல்லை என்று சொல்லிவிட்டாள். இந்தப் பாவமும் இவளை அடைந்தது. மேலும் இவள் தன்னுடைய பந்துக்களுக்குக் கொடுமையான காரியங்களைச் செய்தாள். இஃது ஒரு தோஷமாக ஏற்பட்டு விட்டது.

20. மாதுவும் அந்தி யத்தில் மைந்தர்கள் மரண மாகித்
தீதான குன்ம நோயால் சென்றனள் கால னூடு
வேதனுல் வரையப் பட்டு விளங்கினுள் கௌரி வம்சம்
ஓதுவேன் முன்னூழ் சாபம் உரைத்தனம் பாவைக்கே
[தான்.

20. இவளுக்குத் தன்னுடைய கடைசி காலத்தில் பிள்ளைகள் இறந்து விட்டார்கள். இவள் கொடுமையான குன்மரோகத்தால் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு வேளாளர் குலத்தில் வந்து பிறந்தாள் என்று சொல்லுகின்றேன். இவளுக்கு முன் ஜன்மத்திய சாபங்கள் வந்து சம்பவித்தன என்று சொல்லுகின்ருேம்.

21. சுதரொன்று தோன்றில் தீதாம் துரைபோல் வாழ்வா
[ளாகும்
அதுவினை தீர வேண்டி அறைகுவீர் கிரிகை யொன்று

எதுசாந்தி செய்தா லுந்தா னிலகாது மிருக தோஷம்
மதலைகள் விருத்தி காணுள் மாமுனி தடுத்துச்
[சொல்வார்.

21. இவளுக்கு ஒரு பிள்ளை பிறந்தால் அது சீக்கிரத்தில் இறந்து விடும். இவள் ஒரு அரசியைப்போல, அதிகாரியைப்போல விருந்து வாழ்வாள். இந்தப் பாவங்கள் நிவர்த்தியாவதற்காக ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்கவே, எவ்விதமான சாந்தியைச் செய்த போதிலும் பூனைக் குட்டிகளைக் கொன்றதனுலுண்டான மிருக தோஷமானது நிவர்த்தி யாகாது. ஆகையால் ஜாதகருக்குப் பிள்ளை விருத்தியை யடையமாட்டான். உடனே மாமுனி என்ற வசிஷ்ட மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்றுர்.

22. பத்தினிக் குடையோன் உச்சம் பஞ்சமன் லாபம் நின்று
சுத்தமாய்ப் பார்த்த தாலே சுதனுலே கன்மம் நேறும்
வித்தகி தனக்கு யென்றேம் விருதர் யோசித்துச்
[சொல்வார்
சத்தி பின்சுதனும் செய்வான் தடுத்தவர் புகலு கின்றுர்;

22. பத்தாம் வீட்டிற்குடையவராகிய புதன் உச்சமாகி இருப்பதாலும், ஐந்திற்குடையவராகிய சனி லாபம் என்ற பதினென்றிலிருந்து கொண்டு புதனை மூன்றும் பார்வையுடன் (ஐந்தை ஏழாம் பார்வையுடன்) பார்த்த தாலும் முதல் மனைவிக்குத் தன்னுடைய பிள்ளையால் கர்மகாரியங்கள், ஈமக் கடன்கள் நடைபெறும் என்று சொல்லுகின்றேம். இதன்மேல் விருதர் என்ற ரிஷி நன்றுய் யோசனை செய்த பிறகு சொல்லுகின்றுர். பின் மனையா ளுடைய பிள்ளை முதல் மனைவிக்குக் கர்மஞ்செய்வார் என்றுர் விருதர்.

23. ஏழுக்கு யிரண்டில் பொன்னேன் யிருப்பதால் முதல்
[மனைக்கு
ஆழியில் சுதர்கள் தோன்றும் அச்சுதர் தன்னுல் கர்மம்
தோழிக்கு நடக்கு மென்றேம் செனிக்கும் காலத்தைச்
[சொல்வீர்
தாழ்விலா நாற்பா னெட்டில் செனித்திடும் தவத்தி
[னுலே.

23. ஏழாவது வீட்டிற்கு இரண்டாவது வீடாகிய எட்டாவது வீட்டில் பொன்னேன் என்ற குரு இருப்பதால் முதலாவது மனைவிக்குப் பிள்ளைகள் பிறக்கும். இந்தப் பிள்ளைகளால் முதல் மனைவிக்குக் கர்மகாரியங்கள் நடை பெறும் என்று சொல்லுகின்றேம். இதன்மேல் இவளுக்குப் பிள்ளை பிறக் குங் காலத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, ஜாதகருக்கு நாற்பத்தெட்டா வது வயதில் தவங்களைச் செய்த பயனுகப் பிள்ளை பிறக்கும்.

24. தவமதைப் புகல்வீ ரையா சக்தியின் பீசம் தன்னை
நவனியில் ரேக்கில் கீரி நற்சக்தி பூசை வைத்து

அவனியில் சகஸ்திர நாமம் அருளுவாய் தியான மூலம்
இவளுமே அணிந்து கொண்டு எழில் சுக்கிரவார
[நோன்பு;

24. இந்தத் தவங்களைப்பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே முனிவர் சொல்லுகின்றார். சக்தியின் பீசத்தை ஒரு தகட்டில் எழுதி சக்தி பூஜையில் வைத்து தியானஞ்செய்து ஆயிரம் நாமங்களைச் சொல்லிப் பிறகு இதை இவள் தரித்துக்கொண்டு சுக்கிரவார நோன்பை;

## ஜாதகரின் முதல் மனைவியின் பிள்ளையும் மறுஜன்மமும்

25. இடைவிடா செய்து ஆண்டும் யிருப்பளே சுதர் விருத்தி
அடைவுடன் ஆண்பா லொன்று அறைந்தனம்
[பாவைக்கே தான்
மடைமையில் பின்சென்மம் கேள் மலைநாட்டில் கங்கை
[சேயாய்
உட னுதிப்பாளாம் சொன்னேம் உதித்தவன் பூர்வம்
[சொல்வோம்.

25. தவறிப்போக விடாமல் ஒரு வருஷம் வரையிலும் செய்வாளாகில் இவளுக்குக் குழந்தை பிறக்கும். ஒரு ஆண் குழந்தை இவளுக்கும் பிறக்கும் என்று சொல்லுகின்றேம். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்றேம், கேட்பீராக. இவள் மலைநாட்டில் வேளாளர் குலத்திற் பிறப்பாள் என்று சொல்லுகின்றேம். ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம்

## ஜாதகருடைய முன்ஜன்மம்

26. கொங்க நாடதனிலே தான் குதித்தனன் சேடர் வமிசம்
தீங்கிலா வாழும் நாளில் தேவியாம் யேழை மாது
தாங்குதல் யாரு மில்லை தரணியில் காப்பாய் யென்ன
அங்கவன் மன மிரங்கி அன்னமும் அணிந்து வந்தவன்.

26. ஜாதகர் கொங்குநாட்டில் சேடர் வம்சம் என்ற ஒரு வேலைக்காரர் ஜாதியில் பிறந்து கஷ்டங்களில்லாமல் வாழ்கின்ற காலத்தில் ஓர் ஏழை ஸ்திரீ, தன்னைக் காப்பாற்றுபவர் யாரும் இல்லையென்று சொல்லி நீ காப்பாற்றக் கடவது என்று ஜாதகரைப்பார்த்துக் கேட்கவே, இவர் இவளிடத்தில் பரிதாபத்தை யுடையவராகி இவளுக்குச் சாப்பாட்டைக் கொடுத்துவந்தார்.

27. தங்கை போல்வாசம் செய்து தனம்கொஞ்சம் பறித்துக்
[கொண்டு
மங்கையும் சென்று ளென்றேம் மாரனும் தேடிச் செல்ல

நங்கையைக் காணு தாகி நாணியே மனது வாடி
அங்கரன் கோஷ்ட முன்பாய் அறைகிருன் சாபம் [தானும்.

27. இந்த ஏழை ஸ்திரீ இளைய சகோதரியைப்போல ஜாதகரிடத்தில் வசித்துக்கொண்டு, கொஞ்சம் பணத்தைத் திருடிக்கொண்டு ஓடிப்போய் மறைந்துவிட்டாள் என்று சொல்லுகின்ரும். ஜாதகர் இவளைத் தேடிக் கொண்டுபோய் இவளைக் கண்டுபிடிக்காமல் தன்னுடைய மனத்தில் கஷ்டத்தை யடைந்து ஒரு விநாயகக் கடவுளின் கோயிலின் முன்பாக நின்று கொண்டு சாபத்தைக் கொடுத்தார்

## வேறு

28. முள் கடனோ பின் கடனோ அறியேன் யானும்
மூலப் பொருள் நீ யறிவாய் யென்று சொல்லி
தன் கரத்தால் தெருத் தூளைத் தூற்றிச் சென்ருர்
சாற்று வோம் யின்ன மொன்று தவசியே கேள்
முன் குலத்து மாது யொருத்தி சிலது பொன்னை
முதல் வனிடம் தான் வைத்துச் சேதுக் கேகி
அந்தகன் தன் நக ரடைந்தாள் பாலன் தானும்
அப் பொருளை யனு பவித்தான் அம்மையே கேள்.

28. முன்ஜன்மத்தில் நான் அவளுக்குக் கடன்பட்டேனு, அல்லது அவள் எனக்குக் கடன்பட்டாளோ, இது எனக்குத் தெரியாது. மூலாதாரப் பொருளாகிய விநாயக கடவுளே ! இது உனக்குத் தெரியும், என்று ஜாதகர் சொல்லிவிட்டுத் தன்னுடைய கைகளால் தெருத்தூளை எடுத்துத் தூற்றிவிட்டுப் போய்விட்டார். தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! இன்னொரு பாவத்தைச் சொல்லுகின்ரும். ஒரு பிராமண ஸ்திரீ தன்னுடைய கொஞ்சம் பணத்தை ஜாதகரிடம் முன் ஜன்மத்தில் கொடுத்துப் பத்திரமாக வைத்துவை என்று சொல்லிச் சேதுஸ்தலத்திற்கு யாத்திரையாகப் போய்விட்டு, பிறகு திரும்பிவராமல் அங்கே இறந்து எமபட்டணத்திற்குப் போய்விட்டாள். அந்தப் பணத்தை ஜாதகர் அனுபவித்துக்கொண்டார், பார்வதியம்மையே! கேட்பீராக.

29. வினையது யில்லா தாகி மேவினன் கால னுடு
கனமுள பிரமன் லக்கம் கௌரியின் குல முதிப்பான்
தனமது பரித்தோள் தானும் சாருவாள் இளைய பாரி
தனமீந்த மாது தானும் தங்குவா ளபிமானப் பெண்.

29. ஜாதகர் வேறுபாவங்களைச் செய்யாமல் இறந்து எமபட்டணத்திற்குப் போய் மேன்மையான பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு வேளாளர் ஜாதியில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர். இவ

ருடைய பணத்தை அபகரித்துக் கொண்டு போய் விட்டவள் இவருக்கு இரண்டாவது மனைவியாக வந்து அமைவாள், இவரிடம் பணத்தைக் கொடுத்து விட்டுச் சேதுக்குப் போய்விட்ட ஸ்திரீ இவருக்கு அபிமான பாரியாளாக வந்து அமைவாள்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

30. அன்னையின் குணத்தைக் கேண்மோ அன்புள மனத்த [ளாகும்
அன்னம் போல் சாய லொக்கும் அறிவுளாள் பாட்டாளி [யாகும்
அன்னமு மன்பா யீவள் ஆளன்தன் மனதுக் [கேத்தோள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அவள் சமபோக வாளே.

30. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். கேட்பீராக. இவள் பிரியமுள்ள மனத்தையுடையவளாவள். இவள் புத்திசாலியாகயிருப்பாள். கஷ்டப்பட்டு வேலையைச் செய்பவளாவள் இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியமுடன் கொடுப்பாள். தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல் ஒற்றுமையாக விருந்து வாழ்வாள். இவள் பிறர்மேல் அபவாதங்களைச் சாட்டமாட்டாள், இவள் நடுத்தரமான யோகத்தை யுடையவளாவள்.

## தாயாருடைய சகோதரர்களும் முன்ஜன்மமும்

31. துணைவராண் காணு ளாகும் தோகையு மொன்றே [யாகும்
கனமிலா குடும்ப நாஸ்தி கழறுவோம் பூர்வம் தன்னை
வினைபோகும் பட்சி தன்னில் மேவினுள் வன்னிய [சேயாய்
அனையவே வரனு முண்டாய் அணுகினுள் வினையைக் [கேண்மோ.

31. ஜாதகரின் தாயாருக்குச் சகோதரர்கள் இடையா, ஒரே ஒரு சகோதரிதான் உண்டு. மேன்மையாயில்லாத இவளுடைய குடும்பம் அழிந்துபோய்விடும். இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். பாவங்களை ஒழித்து விடுகின்ற ஸ்தலமாகிய திருக்கழுக் குன்றத்தில் வன்னியருடைய ஜாதியில் பெண்ணாகப் பிறந்து, புருஷனை அடைந்து வாழ்கின்றகாலத்தில், இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைப் பற்றிக் கேட்பீராக.

32. மைத்துனன் மனைவி பேரில் வரைந்தனள் சிலேடை
[வார்த்தை
பத்தினி மன வெறுப்பால் பகருவாள் சாபம் தானும்
வித்தகி பின்சென் மத்தில் விளங்காது துணைவர் நாஸ்தி
சித்திர நகைக ளின்றிச் செல்வதி வாழ்வா யென்று;

32. ஜாதகரின் தாயார் தன்னுடைய முன் ஜன்மத்தில் தன்னுடைய புருஷனின் சகோதரருடைய மனைவியின் பேரில் இரண்டு அர்த்தங்களை யுடைய (அஃதாவது அபாண்டமான, நிந்தையான) சில வார்த்தைகளைச் சொன்னாள். கற்புடையவளான அவள் தன்னுடைய மனத்தில் துன்பத்தை யடைந்து சாபத்தைக் கொடுக்கின்றாள். "உனக்கு மறு ஜன்மத்தில் சகோதரர்கள் இருக்கக்கூடாது. அழகான ஆபரணங்கள் இருக்கக் கூடாது, இவ்விதமாக நீ வாழக்கடவது" என்று;

33. செப்பினாள் ததாஸ்து யென்று தேவர்கள் சொன்னா
[ரென்றோம்
மைப்படி மாதுக்கே தான் மருவிற்று அந்தத் தோஷம்
தப்பிதம் வேறு காணாள் சண்டன் தன்பதிக்குப் புக்கி
மெய்ப்புடன் வந்தா னென்றோம் விளம்புவோ மிவன்பின்
[சென்மம்.

33. சொன்னாள். அப்போது "அவ்விதமாகவே நடக்கக்கடவது" என்று தேவர்கள் அசரீரியாக வார்த்தைகளைச் சொன்னார்கள் என்று சொல்லுகின்றோம். இந்தச் சாபம் ஜாதகருடைய தாயாருக்கு வந்து சம்பவித்துவிட்டது, இவள் வேறே எந்தப் பாவத்தையும் செய்யவில்லை. இவள் பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கினாள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மமும், தகப்பனாருடைய முன்ஜன்மமும்

34. கொங்கு நாடத னிலேதான் குதிப்பளா மிக் குலத்தில்
தீங்கிலா வாழ்வா ளாமே செப்புவோம் தந்தை பூர்வம்
பாங்கியர் வாசம் செய்யும் பழனியம் பதியிலே தான்
ஓங்கிய தனவா னுக்கு உதித்தனன் வைசிச் சேயாய்.

34. கொங்கு நாட்டில் இந்த ஜன்மத்தில் பிறந்த ஜாதியிலேயே ஜாதகருடைய தாயார் பிறப்பாள். இவள் கஷ்டங்களில்லாமல் வாழ்வாள்; ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் இவருடைய தோழர்கள் வசிக்கின்ற பழனி க்ஷேத்திரத்தில் ஓர் பணக்காரருக்கு வைசிய ஜாதியில் குழந்தையாய்ப் பிறந்தார்,

35. பலவித வணிபம் செய்து பணமது விரைய மாகிக்
கல்கமாம் மனத்த ஞகிக் கடந்தோர்கள் பக்தி கொண்டு
குலவிஞன் கால ஞடு குறைதலே வரையப் பட்டுத்
தலேவனும் உதித்தா னென்ருேம் சாற்றுவோ
[மிவன்பின் சென்மம்.

35. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அநேகவிதமான வியாபாரங்களேச் செய்து, *தனத்தை விரையமாக்கிக் கொண்டு, துன்பத்தையும் கவலேயையும் உடைய மனத்தையுடையவராகி, உலகப்பற்றை விட்டு விட்ட சன்னியாசிகள் பெரியோர்கள் ஆகிய இவர்களின் மேல் அன்புடையவராகி இறந்து, எம பட்டணத்திற்குச் சென்று குறைந்த தலேகளே யுடையவராகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் தகப்பஞருடைய பின்ஜன்மமும் மரணகாலமும்

36. உத்தரம் காளாத்தி தன்னி லுதிப்பனும் பிரம்ம
[சேயாய்
வித்தகன் முப்பா னெட்டில் மேவுவான் கால ஞடு
குத்தங்க ளணுகா தாகும் கூறுவோ முப்பா ஞென்பான்
சுத்தமாய்ச் செல்வா ஞகும் தோகையே கேட்டி டாயே.

36. வடக்குத் திக்கிலுள்ள ஸ்ரீ காளாஸ்தி என்ற க்ஷேத்திரத்தில் பிராமண ஜாதியில் ஆண் குழந்தையாய்ப் பிறப்பார். இவர் ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில் இறந்து எம பட்டணத்திற்குப் போவார். இவருக்கு யாதொரு பாவங்களும் நேரிடா. இது தவறி விட்டால் ஜாதகர் முப்பத்தொன்பதாவது வயதில் நிச்சயமாக இறந்து விடுவார் என்று சொல்லுகின்ருேம். பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தகப்பஞர் மரண விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தெட்டு, முப்பத்தொன்பது வயதுகளில் சனி மகாதசை நடக்கின்றது. பிதிருலக்னம் ஒன்பதாவது விடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷபலக்கினத்திற்கு ஜாதகசந்திரிகை நாற்பத்தாருவது சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். இவருடன் சம்பந்தப்பட்ட சனி ஜாதகசந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகப் பிரகாரம் அதிகமாரகராகின்ருர். ஆகையால் இங்கு சனிதசையில் பிதாவுக்கு மரணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய மரணமும் ஜாதகரின் மரணமும், பின்ஜன்மமும்

37. அன்பது ஆண்டு தன்னில் அன்னையின் கெண்ட
[மெய்தும்
மன்னவன் தனக்குச் சொல்வேன் அறுபது ஒன்ப
[தாண்டில்
கன்னியா மாதம் தன்னில் காலன்தன் நாட்டைச்
[சேர்வன்
பின்சன்மம் அரங்கம் தன்னில் பிறப்பனும் சத்திரிய
[சேயாய்.

37. ஜாதகருக்கு ஐம்பதாவது வயதில் இவருடைய தாயார் இறந்து விடுவாள். ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் அறுபத்தொன்பதாவது *வயதில் கன்னியா மாதம் என்ற புரட்டாசி மாதத்தில் இவர் இறந்து எம பட்டணத்திற்குப் போய் விடுவார். இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில் அரங்கம் என்ற ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் க்ஷத்திரிய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தாயார் மரண விஷயம் :—ஜாதகருக்கு ஐம்பதாவது வயதில் சனி தசை நடக்கின்றது. ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகப் பிரகாரம் மாதுர் லக்கினமாகிய தனுசிற்குச் சனி மார காதிபதியாகின்றார். ஆகையால் சனி தசையில் மாதவிற்கு மரணம் இங்குச் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—ஜாதகர் மரண விஷயம் :— ஜாதகருக்கு அறுபத்தொன்பதாவது வயதில் புத தசை நடக்கின்றது. புதன் அஸ்தமடைந்து பலவீனமாக விருக்கின்றார். இவர் கேதுவுடன்கூடி (இராகுவால் பார்க்கப்பட்டு) இருக்கின்றார். ஜாதக பாரிஜதாம் பதினான்காவது அத்தியாயம் ஐம்பத்தாறுவது சுலோகப் பிரகாரமும், துய்ய கேரளம் எட்டாம் பாவம் பதினான்காவது பாடல் பிரகாரமும் புதன் தன் தசையில் ஜாதகருக்கு மாரகஞ் செய்ய அதிகார முடையவராக விருக்கின்றார். ஆகையால் இங்கு ஜாதகருக்கு மரணம் புத தசையில் சொல்லப்பட்டிருக்கின்றது.

38. அத்திரி தடுத்துச் சொல்வார் அவனுமிச் சென்மந்
[தன்னில்
சுத்தமில் லாதானும் சுருமீன் பொசிப் புடைய னும்

சத்தியம் தவறுத லாயும் தன்மனே பகையு மாயும்
இத்தகை வாழ்வ தாலே யெய்தும்கா ரணங்கள்
[சொல்வீர்.

38. அத்திரி ரிஷி தடுத்துக் கேட்கின்றூர். ஜாதகர் இந்த ஜன்மத்தில் சுத்தமில்லாதவராகவும், சுறு மீன் முதலிய மாமிசத்தைச் சாப்பிடுகின்றவராயும், உண்மையை மீறி நடந்தவராயும், தன்னுடைய மனேவிமார்கள் விரோதிகளாகவும் இருந்து கொண்டும், வாழ்ந்திருந்தும் க்ஷத்திரிய குலத்திற் போய்ப் பிறப்பார் என்று சொன்னீரே! இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்டார்.

## ஜாதகருடைய யோகபாவம்

39. பலவித குற்றம் செய்தும் பகவானின் பக்தி கொஞ்சம்
இளமன துடைய ஞயுமிடர் தீர்க்கும் தலம்
[சென்றத்தால்
குலவுவான் சத்திரிய சேயாய்க் குறிக்கிறேம் யோகச்
[சேதி
கலகமாம் மனமும் கொஞ்சம் கபடுகளில்லா னென்றேம்.

39. ஜாதகர் பலவிதமான குற்றங்களைச் செய்திருந்த போதிலும், இவர் கடவுளின் மேல் சிறிது அன்புடையவராகவும், தயாள குணத்தையுடையவராகவும், பக்ஷாதாபத்தையுடையவராயும் இருந்து கொண்டு, பாவங்களையும் கஷ்டங்களையும் ஒழித்து விடுகின்ற ஸ்தலங்களுக்குப் போனதால், இவர் க்ஷத்திரிய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். இனிமேல் இவருடைய யோக பாவத்தைச் சொல்லுகின்றேம். இவர் சிறிது சஞ்சலமான மனத்தையுடையவராவர். இவர் கள்ளம் வஞ்சனை ஆகிய இவற்றை உடையவரல்லரென்று சொல்லுகின்றேம்.

40, தனமது யிருப்புக் காணுன் தரணியும் சேர்க்கா ஞகும்
இனமது பிணக்கம் சொல்லானிடரதை யொருவர்க்
[கெண்ணுன்
அனமது குறைவு காணுன் அன்பது ஆண்டு மேலாய்ப்
பணையோர்கள் விடுதி சேர்ப்பன் பகருவோம் பின்பால்
[சேதி.

40. ஜாதகர் பணத்தைச் சேர்த்து வைக்க மாட்டார். நிலங்களையும் சேர்த்து வைக்க மாட்டார். இவர் தன்னுடைய பந்துக்களை வெறுத்துக் கொள்ள மாட்டார், அவர்களுடன் சண்டை போட மாட்டார். இவர் யாருக்கும் கெடுதியை நினைக்க மாட்டார். சாப்பாடு விஷயத்தில் கஷ்டத்தை அனுபவிக்க மாட்டார், இவருக்கு ஐம்பது வயதான பிறகு, இவர்

வயல்களையும் மருதநிலங்களையும், ஏர்களையும், தங்குமிடத்தையும், வீட்டையும் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். மற்ற விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம்.

41. சுதனுமே செனிக்கும் காலே சுவாதியின் முதல்பா தத்தில்
ததிகயர் தசையிருப்புச் சாற்றுவோம் பதினே ழாண்டும்
அதனமாய்த் திங்கள் ஆறும் அறைந்தனம் பால னுக்கு
இதுபூர்வ பாகம் சொன்னே மியம்புவோம் விபரம்
[பின்பால்.

41. ஜாதகர் பிறக்கும்போது சுவாதி நட்சத்திரம் முதலாவது பாதத்திற்குரிய கயர் என்ற ராகு தசையில் இருப்புப் பதினேழு வருஷங்களும், ஆறு மாதங்களும் ஆகும் என்று சொன்னோம். இது வரையிலும் முதலாவது பாகத்தைச் சொல்லிவிட்டோம். பின்னால் இரண்டாவது பாகத்தில் மற்ற விஷயங்களைச் சொல்லுகின்றோம். —C.G.R.



# ஜாதகம் 20

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதியும் கடகம் [2]புலிராகு [3]மறையோன் [4]கோலில்
[சனி[5]வீணை
புதனும் [6]பானு [7]மானதனில் [8]புகர்[9]சேய் கேது
[பொற் [10]குடத்தில்
இதுவே கிரகம் தான்நின்று இயல்பாயு யுயிரும்
[கன்னியுற
அதுவெவ் விதங்கள் பலன் சொல்வாய் அறைவோம்
[ஆணுமது சென்மம்.

1. கன்னி ஜன்ம லக்கினமாய்ச், சந்திரன் கடகத்திலும், ராகு சிம்மத்திலும், சனி மிதுனத்திலும், புதனும் சூரியனும் மகரத்திலும், சுக்கிரனும் அங்காரகனும் கேதுவும் கும்பத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் இருந்தால், பலாபன்களைச் சொல்லுவீர், என்று பார்வதியம்மையார் கேட்டபோது, ஆண் குழந்தை ஜனனமாகும் என்றார் முனிவர்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| சுக்கிரன் கேது அங்காரகன் | இராசி சக்கரம் | | சந்திரன் |
| சூரியன் புதன் | | | ராகு |
| | | குரு | லக்கினம் |

பூசம் 4-ஆம் பாதம், சனி தசை ஷ 0—11—15.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:— ரிஷபத்திற் சனியும், மிதுனத்தில் ராகுவும், சிம்மத்திற் சூரியனும், கன்னியிற் புதனும், விருச்சிகத்திற் சந்திரனும், தனுசிற் கேதுவும், மகரத்திற்

1. சந்திரன்.
2. சிம்மம்.
3. குரு.
4. துலாம்.
5. மிதுனம்.
6. சூரியன்.
7. மகரம்.
8. சுக்கிரன்.
9. அங்காரகன்.
10. கும்பம்.

சுக்கிரனும், கும்பத்தில் அங்காரகனும், மீனத்திற் குருவும் ஆகும். சனி வக்கிரகதிலிருக்கின்ருர். புதன் அஸ்தமனமாக விருக்கின்ருர்.

## ஜனனமான நகரச் சிறப்பு

2. செனனம் கீழ்பால் யில்லமது சித்திர மேடை உப்பரிகை
கனமா நகரம் வாடையில்லம் கழறுவோம் கெடியும்
[வாரியுண்டு
இனமே வீர சைவகுலமிருநான் காகத் தோன்றிடுவன்
தனேயன் குடும்பச் சேதிதனே அறையக் கேண்மோ
[சங்கரியே.

2. ஜாதகர் ஜனனமான வீடு கிழக்கில் இருக்கும். இது சித்திரங்கள் அடங்கிய அழகான மெத்தை வீடாகும். பிறந்த ஊர் மேன்மையான ஒரு பட்டணமாகும். இதில் வீடுகள் வாடை வாடையாக விருக்கும். கோட்டையும் சமுத்திரமும் உண்டு என்று சொல்லுகின்ருேம். ஜாதகர் வீர சைவர் ஜாதியில் எட்டாவது குழந்தையாகப் பிறப்பார். இவருடைய குடும்ப விஷயங்களேப் பற்றிச் சொல்லுகின்ருேம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

3. அரியே தந்தை குணம்கேளாய் அற்பக் கல்வி
[அறி உடையன்
நெறியைக் காப்பன் நீலனுமாம் நினேத்த படியே
[தான் முடிப்பன்
உறவோர் மதிப்பு சொண்டிடுவன் உதித்த காலம்
[வாழ்வதிக முளான்
பெரியோர் உறவும் புகழேற்பன் பெற்ற தாயிள்
[சுகமில்லான்.

3. ஜாதகருடைய தகப்பனரின் குணுதிசயங்களேப் பற்றிச் சொல்லுகின்ருேம். கேட்பீராக. இவர் சிறிது வித்தையையுடையவராவர். புத்திசாலியாக விருப்பார். இவர் சன்மார்க்கத்தை நிலேயாக வுடையவராவர், இவர் நீல நிறமுள்ள தேகத்தையுடையவர், அரசனேப் போல வாழ்பவராவர், தான் செய்ய எத்தனித்தக் காரியங்களே நல்லபடியே செய்து முடிப்பார். இவர் தன்னுடைய பந்துக்களால் புகழப்பட்டவராவர். இவர் பிறந்த காலத்தில் அதிகமான மேன்மையான வாழ்வையுடையவராவர், பெரியோர்களுடைய சிநேகிதத்தையும் புகழையும் உடையவராவர், தன்னேப் பெற்ற தாயாரால் சௌக்கியமில்லாதவராவர்; அஃதாவது தாயார் சீக்கிரம் இறந்து விடுவாள்.

4. சுகமாம் பாரி தன்னாலே துணைவர் காணான்
[துயரமில்லான்
செகமீதினில் பண்டிதம் செய்வன் தீர்த்த யாத்திரைதான்
[செல்வன்
தகமை சத்தியந் தவருன் சதுஷ் பாதங்கள் அல்ப
[முறும்
பகை யென்ரோரை உறவுகொள்வன் பந்தைக் காப்பன்
[பாக்கியவான்

4. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய மனைவியால் சௌக்கியத்தை அநுபவிப்பராவர், இவருக்குச் சகோதரங்கள் கிடையா. இவர் துன்பங்களை யுடையவரல்ல. இவர் பூமியில் வைத்திய வேலையைச் செய்வார். இவர் தெய்வீகமான ஸ்தலங்களுக்கு யாத்திரை போவார். இவர் பெருமையான சத்தியச்தைக் கைவிட மாட்டார், உண்மையான வழியில் நடந்து கொள்ளுபவராவர், இவருக்குக் கால் நடைகள் அற்பமாகும் நசித்துப் போய்விடும். இவர் தனக்கு விரோதிகளாக விருக்கின்றவர்களிடம் சினேகஞ் செய்து கொள்ளுவார், தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார், செல்வமுடையவராவர்.

5. வானோர் பூசைதான் கொள்வன் மர்ம மில்லாதான்
[சுகிபொசிப்பன்
ஊன மில்லாதான் தனரேகை உரையும் கரமதில்
[உவமையிலான்
ஈன மிலாதான் மறுதாய் ஒன்றெய்தும் சுதர்கள் அனேக
[முறும்
கோனன் போலே ஒருவனுண்டு கூடா மற்றோர்
[கொம்பனையே.

5. ஜாதகருடைய தகப்பனார் தேவர்களையும் தெய்வங்களையும் கடவுளையும் பூஜை செய்வார், இவர் கபடம், வஞ்சனை ஆகிய இவற்றையுடைய மனத்தையுடையவரல்லர், சுகமான நல்ல போஜனங்களைச் சாப்பிடுபவராவர். இவர் தன்னுடைய தேகத்தில் யாதொரு அவயவக் குறைவு மில்லாதவர், இவர் தன்னுடைய உள்ளங்கையில் தனரேகை என்ற ஒருவித நல்ல ரேகையையுடையவராவர், இவருக்குச் சமானமானவரில்லை. இவர் இழிவான, தாழ்ந்த குணத்தையுடையவரல்ல, குறைவையடைய மாட்டார். இவருக்கு இன்னொரு தாயாருண்டு. இவனுக்கு அநேக குழந்தைகளுண்டு. ஒரு பிள்ளை கோணலாக விருப்பான், அவயவ பங்கத்தையுடையவன். மற்றைப் பிள்ளைகள் விருத்தியடைய மாட்டார்கள், பார்வதியம்மையே!

## தகப்பனாரின் முன்ஜன்மம்

6. அனையே பூர்வம்தான் புகலுவேன் அலையின் ஓரம்
[தேவிநகர்
செனையே தீயின் குல முதித்துச் செட்டு மிகவேதான்
[செய்து
மனைவி மைந்தர் தானுண்டாய் வாழ்நாள் வினையைத்
[தான் புகல்வேன்
ஈனமாம் ஒருபெண் பேரில் சிலர்யிடராய் வார்த்தை
[தான்புகல

6. ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். சமுத்திரக் கரைக்கு அருகில் தேவிநகர் என்ற தேவிப்பட்டணத்தில் தீயின் குலம் என்ற நாயக்கர் ஜாதியில் ஆணாகப் பிறந்து வியாபாரத்தை அதிகமாகச் செய்து கொண்டும், மனைவி, மக்கள் ஆகிய இவர்களையுடையவராகியும் வாழ்கின்ற காலத்தில், இவருக்கு வந்து நேரிட்ட பாவத்தைச் சொல்லுகின்றேன். தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த ஒரு ஸ்திரீயின் பேரில் சிலர் நிந்தையாக வார்த்தைகளைச் சொல்லவே;

7. புகலவின்னோன் அதையறிந்து பூவை தனையே
[தான்விலக்கச்
சினம் கொண் டந்தமாதுவுமே செப்பும் சாபமொழி
[கேளாய்
செகமே லென்னை யலையவிட்டாய் செனிக்கும்
[பின்சென்மம் தனில்
தகையாம் அன்னை சுகமின்றித் தன்னார் துணைவர் தட
[பேதம்;

7. ஜாதகருடைய தகப்பனார் இதைத் தெரிந்துகொண்டு இவளைத் தன்னிடமிருந்து விலக்கிவிட்டார். அதன் மேல் கோபத்தை யடைந்த ஸ்திரீ கொடுத்தச் சாபத்தைக் கேட்பீராக:— "இந்தப் பூமியில் என்னைத் திக்கற்றவளாகத் தவித்துத் திரியும்படியாக விட்டு விட்டாய். அதனால் உன்னுடைய மறு ஜன்மத்தில் நீ உன்னுடைய தாயாருடைய சுகமில்லாதவராகியும் உன்னுடைய சகோதரங்கள் உன்னைவிட்டுப் பிரிந்து வேறிடத்திற்குச் சென்றும் வாழக்கடவது" என்று;

8. பேதை சொல்லித் தூள்தூற்றப் புக்கிற் றந்த சாபமுமே
தீது விலக்கும் சேதுசென்று தேர்ந்தோர்க் கன்னம்
[தானீந்து
சூதாய்க் கால னுடைந்து சிரனன்கோனும் வரிய
[வந்தான்
மாது சாபம் வந்திடுமே மாதுர்பூர்வம் மாண்டிடுமே,

8. இந்த அறிவில்லாத ஸ்திரீ சொல்லிச் சாபத்தைக் கொடுத்து, தெருவிலுள்ள மண்தூளை எடுத்துத் தூற்றினாள். இந்தச் சாபம் இவரை வந்தடைந்தது. இவர் பாவத்தை நிவிருத்தி செய்கின்ற சேதுஸ்தலத்திற்குப் போய்ப் பெரியோர்களுக்கும், பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போட்டு, பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய், நான்கு தலைகளையுடைய பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக் கின்றார். இந்த ஸ்திரீயினுடைய சாபம் இவரை வந்து அடையும். ஆகையால் இவருடைய தாயார் இவருடைய முற்காலத்தில் சீக்கிரம் இறந்து விடுவாள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :— தயார் மரண விஷயம் :—மிதுர்லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்கு மாதிரு ஸ்தானம் நான்காவது வீடாகிய சிம்மம் ஆகும். இதில் ராகு இருப்பதும் இதைச் சனியும் அங்காரகனும் பார்ப்பதும் மாதாவுக்குத் தோஷமாகும். சிம்மத்திற்குடைய சூரியன் சிம்மத் திற்கு ஆறில் மறைந்திருப்பதும் மாதாவுக்குத் தோஷமாகும்.

9. இடுமே துணைவர் தோஷமு மிருதாய் சுதர்தன்பலன் [சொல்லி
கொடுமை யெவர்க்கு மெண்ணுதான் குறையென்றோர்க் [குதவிடுவன்
விடவாபரணன் பூசைசெய்வன் வியாதி சிலர்க்குத்தான் [தீர்ப்பன்
தடையே சொல்லான் பெரியோர்க்குத் தார மூன்றுதான் [வருமே.

9. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்களுக்குத் தோஷம் ஏற்படும். இந்தச் சகோதரர்கள் தகப்பனுருடைய இரண்டு மாற்றாந்தாயார் களுடைய பிள்ளைகள் ஆவார்கள். தகப்பனர் யாருக்குங் கெடுதிகளை நினைக்க மாட்டார். இவர் நாங்கள் கஷ்டப்படுகின்றோம் என்று சொல்லு கின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இவர் நாகாபரணுன சிவ பிரானைப் பூஜை செய்வார். இவர் ஆபரணங்களை வைத்துப் பூஜை செய்வார். இவர் சிலருக்கு வியாதியைச் சொஸ்தப் படுத்தி விலக்கி விடுவார். இவர் தடுத்துச் சொல்ல மாட்டார். இவருடைய தகப்பனுருக்கு மூன்று மனைவிமார்கள் உண்டு.

10. அருமே யிரண்டு தாரமுமே அந்தம் பாரிசுத ராண்பால்
இரண்டு கன்னி ஒன்றுமே எவர்மக்கண்......தோம்
பெரியோர் பின்பால் உறவதனுல் பொன்வெள் ளிகளும் [தான்செய்வன்
திருமா துரையும் மேன்மைபுகழ் சிறப்பாய் வாழ்வன் [தெள்ளமுதே.

10. தகப்பனுருடைய இரண்டு மனைவிமார்களும் இறந்து விடுவார்கள். இரண்டாவது மனைவிக்கு இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் உண்டு. தகப்பனூர் பெரிய மனிதர்களுடைய சிநேகத்தினுல் பொன் நகைகளும் வெள்ளி நகைகளும் செய்வார், அல்லது வாதவித்தையால் பெரியோர் களுடைய உதவியால் பொன்னையும் வெள்ளியையும் உண்டு பண்ணுவார். இவருடைய விட்டில் இலக்ஷ்மி வாசஞ் செய்வாள். இவர் மேன்மை யுடையவராயும், சிறப்பை யுடையவராயும், கீர்த்தியை யுடையவராயும் இருந்து கொண்டு வாழ்வார், பார்வதியம்மையே!

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

### வேறு

11. சொன்ன விந்தக் குணத்தானுக் கந்தப்பாலன் தோன்று [வானும்
குணத் தைச் செப் பக் கேண் மோ
கன்னென மொழி யூகை யுள்ளான் கல்வி யிரண்டு
கழறு வோ மானி றத்தன் வாத தேகி
மன்னர் தம்மால் சீவன மும் மருவு மென்ருேம்
வளமை யாய்க் குடும்ப முறும் வறுமை யில்லான்
தன் னினத்தைக் காத்தி டுவன் சரச வார்த்தை
சகல ருமே புகழ உய்வன் சகடு மேற்பன்.

11. இதுவரையிலும் செல்லப்பட்ட குணுகுணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம், கேட்பீராக. இவர் சர்க்கரையைப் போன்ற இனிமையான வார்த்தைகளை யுடையவர், நல்லது கெட்டது என்ற பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவையுடையவராவர். இவர் இரண்டு பாஷையில் படித்தவராவர். இவர் மானிறமான தேகத்தை யுடையவராவர், இவருக்கு அரசாங்கத்தில் வேலைகிடைத்து ஜீவிப்பார் என்று சொல்லுகின்ருேம்; இவர் மேன்மையான, செழிப்பான, குடும்பத்தையுடையவராவர். இவர் தரித்திரத்தையும் கஷ்டங்களை அநுபவிக்கின்ற தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார். இவர் இன்பமான வார்த்தையை எல்லோரும் மெச்சும் படியாகச் சொல்லி வாழ்வார். இவர் வண்டி வாகனங்களையு முடையவராவார்.

12. ஏற்பவர்க்குத் தானீவன் யெதிரிக் கஞ்சான்
ஏவலாள் உடையவனு மிடர் செய்யா தான்
பார்ப்பவர்க்குப் பஞ்சைபோல் பார்வை யுண்டு
பரமனையே தியானிப்பன் பால்நெய் யிஷ்டன்

ஆர்க்கவே அதிகாரத் தொழிலும் செய்வன்
அரிரேகை பிரம்மவரி அணுகு மென்றோம்
தோற்பிற்செல்லான் சத்துருவும் வணங்க வாழ்வன்
செயமுனி தடுத்துரைப்பார் சிறுவ னுக்கு.

12. ஜாதகர் யாசகஞ் செய்பவர்களுக்குக் கொடுப்பவராவர். இவர் விரோதிக்குப் பயப்பட மாட்டார். இவர் வேலையாட்களை யுடையவராவர், பிறருக்குக் கெடுதிலைச் செய்யமாட்டார். இவர் தன்னைப் பார்க்கின்றவர்களுக்கு ஏழையைப் போலக் காணப்படுவார். இவர் சிவபெருமானையே நினைத்துத் துதிப்பார். பால், நெய், இவற்றின் மேல் பிரிய முள்ளவராவர். இவர் அதிகாரத்தைச் செலுத்தும் படியான வேலையைச் செய்வார். இவருடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகையும் பிரம ரேகையும் இருக்கும் என்று சொல்லுகின்றோம். இவர் தோல்வி யடைகின்ற சண்டையில் பிரவேசிக்க மாட்டார். தன்னுடைய எதிரியும் தன்னை வணங்கும் படியான நிலைமையிலிருந்து வாழ்வார். ஜய முனிவர் தடுத்துக் கேட்கின்றார். ஜாதகருக்கு;

வேறு

13. ராசயோ கங்கள் சொன்னீர் நவிலுவீ ரந்தச் சங்கை
பாசமாய் மதியும் லாபம் பரிதியு புதனு மஞ்சில்
வாசுகி யீரு ருக மன்னனு மிரண்டில் தங்கத்
தாசி தாசானு யோகம் தனபதி யோக மொன்று.

13. ராஜயோகங்களைச் சொன்னீரே! அந்த விஷயங்களைச் சொல்லுவீர். மதி என்ற சந்திரன் லாபம் என்ற பதினோராவது வீட்டிலிருக்கின்றார். பரிதி என்ற சூரியனும் புதனும் ஐந்தாவது வீட்டிலும், வாசுகி என்ற ராகு பன்னிரண்டிலும், பொன் என்ற குரு இரண்டாவது வீட்டிலும் இருப்பதாலும் தாசி தாச யோகம் என்ற ஒரு யோகமும், தனபதி (குபேரன்) யோகம் என்ற ஒரு யோகமும்;

14. மந்தார யோக மொன்று வரைந்தனம் மூன்று யோகம்
செந்திரு விலாச முண்டு செகராசர்க் கிவன்சொல் [மேன்மை
விந்தையாய் வேறு பாஷை வெற்றியாம் யிருபான் [மூன்றில்
அந்த நாள் முதலயாக அழகேசன் போலே யோகம்.

14. மந்தார யோகம் என்ற ஓர் யோகமும் ஆக மூன்று யோகங்கள் இருக்கின்றன வென்று சொன்னேனும். ஆகையால் ஜாதகருக்கு இலக்ஷ்மி கடாக்ஷமுண்டு. பெரிய அரசர்களுக்கு இவருடைய வார்த்தைகள் மதிக்கக் கூடியனவாக விருக்கும். இவருக்கு இருபத்து மூன்றுவது வயதில் இவர்

அன்னிய பாஷையில் பரீட்சையில் தேர்தலேயடைவார். இந்தக் காலம் தொட்டு இவருக்குத் தேவேந்திரனைப் போல யோகம்

## ஜாதகருடைய சகோதரபாவம்

15. நேரிடும் பாலனுக்கு நிலவு போல் தொழிலு மோங்கும்
மாரிடா திந்த வார்த்தை மாரன் முன் துணைஆண்
[ரெண்டு
நேரிடும் தீர்க்கமாக நிருபன் பின் ஆண்பா லொன்று
காரிழை அவ்வாறு தீர்க்கம் கழறின மொழி குன்றுது.

15. உண்டாகும். இவருடைய வேலை வளர் பிறை சந்திரனைப் போல நாளுக்கு நசள் விருத்தியடையும், அதிகப்படும். நாங்கள் சொல்லிய இந்தப் பலன்கள் தவறிப் போகா, ஜாதகருக்கு இரண்டு மூத்த சகோதரர்கள் தீர்க்காயுளை யுடையவர்களா யிருப்பார்கள். ஒரு இளைய சகோதரரும் ஒரு இளைய சகோதரியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள், நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிடாமல் நடக்கும்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

16. மனைவியு மிருபான் ஆண்டில் மருவிடும் தென்மேல் பாரி
கனமுள புத்தி யேற்பள் கட்டுரை பகரா ளாகும்
சினமுண்டு வெளிக்காட் டாதாள் சிவந்தமெய்
[உணச்சல் தேகி
வினைசெய்யாள் யாவ ருக்கும் விரதமே பூண்பா ளாகும்.

16. ஜாதகருக்கு இருபதாவது வயதில் மனைவி வந்து நேரிடுவாள். பொய் புனைந்த வார்த்தை பழமொழி ஆகிய இவற்றைச் சொல்லமாட்டாள். இவளுக்குக் கோபம் இருக்கும். ஆனல் இதை இவள் வெளியே காண்பித்துக் கொள்ளமாட்டாள். இவள் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவள், நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவளாவள். இவள் யாருக்கும் பாவங்களையும் துன்பங்களையும் உண்டு பண்ண மாட்டாள். இவள் விரதங்களையும் நோன்புகளையும் அநுஷ்டிப்பவளாவள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய விவாககால விஷயம் :—ஜாதகருக்கு இருபதாவது வயதில் கேது தசை நடக்கின்றது. கேது சனியினுடைய வீட்டில் இருப்பதால் ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகப் பிரகாரம் சனியினுடைய பலனைக் கேது கொடுக்க வேண்டும். சனி இரண்டாவது வீட்டிற்குடைய சுக்கிரன் இருக்கின்ற வீட்டிற்குடையவரா யிருக்கின்ருர். ஆகையால் ஜாதக பாரிஜாதகம் பதினுன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் சனி தன் தசையில்

விவாகம் செய்து வைக்க அதிகார முடையவராகின்றார். இவ ருடைய பலனைக் கேது கொடுப்பவராகித் தன் தசையில் விவாகம் செய்து வைப்பார்.

17. மங்கையுங் தீர்க்க சீவி மறுத்துமே பராசர் சொல்வார்
இங்கிவன் தனக்குத் தாரமிரண் டென மொழிய லாகுந்
சங்கையைச் சொல்லு மென்னச் சத்தமத்தோன்சரத்தில்
தங்கிடம் யிரண்டே யாகச் சாற்றினேம் தாரமிரண்டு.

17. ஜாதகருடைய மனைவி தீர்க்காயுளை யுடையவளாவள். பராசர மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு மனைவிமார் இரண் டென்று சொல்லக் கூடும். காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, ஏழிற்குடையவராகிய குரு சரராசியாகிய துலாத்தில் இரண்டாவது வீட்டில் இருப்பதால் இரண்டு மனைவிமார்கள் உண்டு என்று சொன்னோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—இரண்டு தார விஷயம் :—ஏழிற்குடைய வர் சரராசியில் இருக்கும் விஷயமாய்க் கிரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் அறுநூற்று நாற்பத் தொட்டாவது (648-ஆவது) பாடலைப் பார்க்கவும்—இது பின்வருமாறு ஆகும். "ஏழ் விட்டினிற் கதிபன் சரத்தினிற்கில் இருமனைவி... சொல்லலாமே".

18. இருமனை தீர்க்க மாமோ யேகுமோ விபரம் சொல்வாய்
திருகாகு முதல்ம னைதான் தீர்க்கமாம் மறு மனைதான்
உரைகுவீர் காலம் தன்னை உயர்முப்பா னிரண்டு
[ஆண்டில்
பிருகுதன் தசைக்கா லத்தில் பூமகன் புத்தி யென்றேம்.

18. ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்களும் நீண்ட வயதை யுடைய வர்களாக விருப்பார்களோ அல்லது சீக்கிரம் இறந்து விடுவார்களோ என் பதை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்க முதல் மனைவி சீக்கிரம் இறந்து விடுவாள். இரண்டாவது மனைவி நீண்ட ஆயுளை யுடையவள் என்றார். முதல் மனைவி இறந்து போகின்ற காலத்தைச் சொல்லுகின்றேம். ஜாதக ருக்கு முப்பத்திரண்டாவது* வயதில் பிருகு என்ற சுக்கிர தசையில் பூமகன் என்ற அங்காரக புக்தி காலத்தில் முதல் மனைவி இறந்து விடுவாள் என்று சொல்லுகின்றேம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—முதல் மனைவி மரண காலம் :—ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது, முதல் மனைவி லக்கினம் ஏழாவது வீடாகிய மீனம் ஆகும். இந்த மீன லக்கினத்திற்குச் சில கிரந்தங்கள் ரீதியாய் மூன்று எட்டிற்குடைய சுக்கிரன் கூட மாரகராகின்றார். மேலும், சுக்கிரன் எட்டிற்குடையவராக விருப்பதால் துய்ய கேரளம்

எட்டாவது பாவம் பதினுன்காவது பாடல் பிரகாரம் மாரகரா கின்ருர். ஆகையால் சுக்கிர தசையில் முதல் தாரத்திற்கு மரணம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்ற தென்றறியவும்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

19. அந்ததோர் ஆண்டி லேதான் அணுகிடு மறுமனை தான்
தென்திசை நேரு மென்ரேம் செப்புவோம் புத்திர பாவம்
வித்தை யாய் ஆண்பா லிரண்டு பெண்பா லவ்வாறு
சந்ததம் தீர்க்க மென்ரேம் சங்கரி கேட்டி டாயே,

19. அதே வருஷத்தில் ஜாதகருக்கு இரண்டாவது மனைவி தெற்குத் திக்கிலிருந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகின்ரேம். இனிமேல் புத்திர பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம். ஜாதகருக்கு இரண்டு பிள்ளை களும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார் கள். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

20. இன்னவன் பூர்வம் சொல்வே னெழில் கொங்கு
[நாட்டிலேதான்
முன்குலம் தனிலு தித்து மேதினி விருத்தி செய்து
தன்மனை மதலை யுண்டாய்த் தான்வாழ்நாள் வினையைக்
[கேண்மோ
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

20. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். அழகிய கொங்கு நாட்டில் பிராமணர் ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறந்து, நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்து கொண்டும், மனைவி மக்களை உடையவராகித் தான் வாழ்கின்ற காலத்தில் வந்து சம்பவித்தப் பாவத்தைக் கேட்பீராக, மேன்மையான யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

21. இல்லத்தில் வேலைக் காரி இவள் வரனின்றித் தானே
வல்லிமேல் மோக முற்று மருவியே கருவு தங்க
தொல்லைக்குப் பண்டி தங்கள் செய்யவும் கருவுநீங்கிப்
புல்கினுள் கால ஞடு புக்கிற்று அந்தத்தோஷம்

21. தன்னுடைய வீட்டில் ஒரு வேலைக்காரி தனக்குப் புருஷனில்லாம லிருந்ததாலே, அவள் மேல் ஜாதகர் மையல் என்ற காம ஆசையை உடை யவராகி அவளிடத்தில் சம்போகஞ் செய்யவே அவளுக்குக் கர்பம் சேர்ட்டு இதற்கு வைத்தியம் செய்யவே, கரு அழிந்து இவள் இறந்து எமபட்டணத் திற்குப் போய் விட்டாள். இந்தத் தோஷம் ஜாதகரை வந்து அடைந்தது.

22. மற்ருெரு வினையும் காணுன் மாரனும் மரண மாகி
வித்தகன் வரையப் பட்டு விளங்குவா னென்று
[சொல்வோம்
குத்தமாம் விதவைத் தோஷம் குலவிடு மிச்சென்
[மத்தில்
பத்தினி யிரண்டு வென்ருேம் பார்வதி கேட்டி டாயே.

22. வேறே பாவங்கள் ஒன்றையும் ஜாதகர் செய்யவில்லை. இவர் முன் ஜன்மத்தில் இறந்து பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். முன் ஜன்மத்தில் ஜாதகருக்கு விதவை ஸ்திரீயால் நேரிட்ட தோஷமானது இந்த ஜன்மத்தில் இவருக்கு வந்து சம்பவிக்கும். அதனுல் இவருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு என்று சொல்லுகின்ருேம். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

### வேறு

23. அன்னைகுணம் கூறுகின்ருேம் மாஞ்சிவப்பள்
பசித்தோரை ஆதரிப்பள் அடக்கமாவள்
தன்துணைகள் காணுளாகும் யோகசாலி
தனபந்தைக் காத்திடுவள் சரசவார்த்தை
முன்கோபி உடன்தாழ்வு சீலியாகும்
முயர்வான பணிசேர்ப்பள் உலகில்நல்லோள்
தன்தேகத்தில் பித்தவாய்வு பொரிந்திடுமே
இவளுடைய பூர்வந்தன்னைப் புகலக்கேணமோ

23. ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவள் மாந்தளிரின் நிறமாகிய ஒருவித சிகப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள். இவள் பசியாயுள்ளவர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டு அவர்களை காப்பாற்றுவாள். இவள் சாந்தமுடையவள். இவளுக்குக் கூடப் பிறந்த சகோதரர்கள் இல்லை. இவள் யோகத்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய பந்துக்களைப் காப்பாற்றுவாள். இனிப்பான வார்த்தைகளை உபயோகிப்பாள், சொல்லுவாள். இவள் முன் கோபத்தை யுடையவள். ஆனுல் இந்தக் கோபம் உடனே தணிந்து விடும், இவள் சுத்தமானவள், நல்லொழுக்கங்களை யுடையவளாவள். மேன்மையான விலையுயர்ந்த ஆபரணங்களைச் சேர்த்து வைப்பாள். உலகத்தில் நல்லவளாக விருப்பாள். இவளுடைய தேகத்தில் பித்த வாயுவு ரோகம் இருந்து கொண்டே யிருக்கும். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம், கேட்பீராக,

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

24. புகலுவேன் தென்பழனி தன்னி லின்னேள்
பிறந்தனள் காண்யாதவர்தன் குலத்திலேதான்
பகைசொல்வே னில்லத்தில் பட்சிவாசம்
கூடில்செய்யுமே அதைக்கலைத்துப் பறக்கவிட்டாள்
தகமையாய் அச்சாபம் சார்ந்ததென்ருேம்
சக்தியுமே அந்தியத்தில் சங்கரர்க்கு
உகமையாய்ப் பால்தந்து விரதமேற்று
ஒதுங்கினுள் மரலிபதி பிரமன்லக்கம்

24. ஜாதகருடைய தாயார் முன் ஜன்மத்தில் தென் பழனியில் யாதவருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறந்தாள் என்று சொல்லுகின்றேன். இவளுக்கு வந்து சம்பவித்த தோஷத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். தன்னுடைய வீட்டில் ஒரு பறவை கூண்டைக் கட்டிக் கொண்டு வாசஞ் செய்து கொண்டிருந்தது. இந்தக் கூண்டைக் கலைத்து அழித்துப் பறவையை துரத்தி விட்டாள். இந்தத் தோஷம் இவளை வந்து அடைந்தது என்று சொல்லுகின்ருேம். இவள் தன்னுடைய கடைசி காலத்தில் சிவபெருமானுக்கு அபிஷேகத்திற்காகப் பாலைக் கொடுத்து நோன்புகளை அநுஷ்டித்துக் கொண்டு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலம்

25. வந்தவளாம்இவளே முன்சென்மம் பட்சிசாபம்
வளவுகெடும் முதலில் சுதர் மறிக்குமென்ருேம்
அந்தவட்கு யோக மெவ்வார் புகல்வீரய்யா
அரனபிஷேகத்துக்குப் பாலீந்த புண்ணியம்
தந்தனமும் உடையவளாம் வறுமைகாணுள்
சாற்றுகிருே மிருபத்தெட்டாண்டுதனில்
தெந்திசையில் மரலிபதி சேர்வாளாகும்
செப்புகிருேம் பின்செனனம் தேவிக்கேதான்

25. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள். இவளுக்குத் தன்னுடைய முன் ஜன்மத்தில் ஏற்பட்ட பறவையின் தோஷத்ினுல் செழுமையும் புத்திர சம்பத்துக்களும் குறைவுபடும். இவளுக்கு முதலில் பிறக்கின்ற குழந்தைகள் இறந்து விடும் என்று சொல்லுகின்ருேம். இவளுக்கு யோகங்களை எவ்விதமாகச் சொன்னீர் ? அதைச் சொல்லுவீராக. சிவபெரு

மானுடைய அபிஷேகத்திற்காகப் பால் கொடுத்தப் புண்ணிய காரியத்தினுல் இவள் சொந்த பணத்தை யுடையவளாவள். தரித்திரத்தையுங் கஷ்டங் களையு மனுபவிக்க மாட்டாள். ஜாதகருக்கு இருபத்தெட்டாவது* வயதில் தெற்கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து விடுவாள். இவளு டைய! மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகரின் தாயாருடைய மரண காலம் :— ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் சுக்கிர தசை நடக்கின் றது. மாதிரு லக்கினம் நான்காவது விடாகிய தனுசு ஆகும். இந்தத் தனுர் லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். மேலும் இந்தச் சுக்கிரன் லக்கினத்திற்குடைய குருவால் பார்க்கப்பட்டு இருக் கின்ருர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது பாடல் பிரகாரம் கூட சுக்கிரன் மாரகஞ் செய்ய அதிகார முடையவராகின்ருர். ஆகையால் மாதாவுக் குச் சுக்கிர தசையில் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மமும் தகப்பனுரின் மரணமும் பின்ஜன்மமும்

26. *தானவளும் பிரிதிவு தன்னிலேதான்*
செனிப்பளா மிக்குலத்தில் தனமுள்ளோளாய்
மேன்மையாய்க் குடும்பியதாய் வாழ்வாளாகும்
விளம்புகிறேம் பதினேழாம் ஆண்டுதன்னில்
பான்மையாய்த் தந்தைகெண்டம் பின்சென்மம்கேள்
பருவதத்தில் விளங்குவேங்கட தான்நாட்டில்
மானமுடன் சத்திரிய குலம் மருவியேதான்
வளமான புகழேற்பள் மங்கையேகேளு

26. ஜாதகருடைய தாயார் பிரிதிவுஸ்தலம் என்ற காஞ்சிபுரத்தில் இந்த ஜன்மத்திற் பிறந்த குலமாகிய வீரசைவர் ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள். செல்வத்தை யுடையவளாவாள். இவள் கௌரவமான குடும் பஸ்தளாக விருந்து வாழ்வாள். ஜாதகருக்குப் பதினேழாவது* வயதில் இவரு டைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றேம். தகப்பனு ருடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம் கேட்பீராக. மலையின் பேரிலுள்ள வேங்கடம் என்ற திருவேங்கடமாகிய திருப்பதி ஸ்தலத்தில் கௌரவமுள்ள ஒரு க்ஷத்திரியருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து அதிக மான கீர்த்தியை படையவார், பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தகப்பனுருடைய மரண விஷயம் :—ஜாதக ருடைய தகப்பனுருக்கு ஜாதகருக்குப் பதினேழாவது வயதில்

புததசை நடக்கின்றது. தகப்பனுருடைய லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷப லக்கினம் ஆகும். சில கிரந்தங்கள் பிரகாரம் ரிஷப லக்கினத்திற்குப் புதன் கூட மாரகாதிபதியாகின்ருர். புதன் பிதுர் காரகராகிய சூரியனுடன் கூடி கர்மாதிபதியாகி (அஃதாவது கன்னிக்குப் பத்திற்குடையவராகி) இருக்கின்ருர். ஆகையால் புதன் தன்னுடைய தசையில் பிதுருக்கு மாரகஞ் செய்ய அதிகார முடையவராகின்ருர்.

## ஜாதகருடைய மரணமும் மறுஜன்மமும்

27. மங்கையரே பாலனுக்கு அறுபானறில்
மாசிதிங்கள் வளர்பக்கம் சஷ்டிதன்னிலே
சங்கையாய் மரலிபதி சார்ந்துமேதான்
சாற்றுகிருேம் முன்சென்மம் செனித்தஊரில்
அங்கவனும் கெந்தர்வர் வர்க்கம் தன்னில்
அருளியே வரசுசெய்வன் அம்மையேகேள்
பொங்கமுடன் யவன்செனன காலம் தன்னில்
பூசனுள்கடை பாதம்பிறப்பா னென்ருேம்

27. பார்வதியம்மையே! ஜாதகர் தன்னுடைய அறுபத்தாருவது* வயதில் மாசி மாதத்தில் வளர்பிறையில் சஷ்டி திதி தினத்தில் இறந்து எமபட்டணத்திற்குச் சென்று, தான் முன் ஜன்மத்தில் பிறந்த கிராமத்திலேயே, அஃதாவது தேவிப் பட்டணத்திலேயே கந்தருவருடைய ஜாதியில் மறு ஜன்மத்திற் பிறந்து அரசாள்வார். பார்வதியம்மையே கேட்பீராக. ஜாதகர் பிறந்த காலத்தில் பூச நாள் என்ற பூச நட்சத்திரத்தின் கடைசி பாதமாகிய நான்காவது பாதத்தில் பிறப்பாரென்று சொல்லுகின்ருேம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய மரண காலம் :—ஜாதகருக்கு அறுபத்தாருவது வயதில் அங்காரக மகா தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் அங்காரகன் தன் தசையில் மாரகஞ் செய்ய அதிகார முடையவராகின்ருர். மேலும் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பதினன்காவது பாடல் பிரகாரமுங் கூட அங்காரகன் மாரகாதிபதி யாகின்ருர்.

28. காரியின்திசை யிருப்புபதினேர் திங்கள்
கழறுவோ மூவைந்து ஞளேயாகும்
சூரியன்தன் திசையதின்மேல் பலனைச்சொல்வேன்
குடிசேர்க்கை கல்விமிகும் துணைவிருத்தி

மாரியுமே திசை அந்தம்தந்தை யென்றோம்
மங்கலங்கள் முன்துணைக்கு மருவுமென்றோம்
வேறுகுறை யில்லாமல் வாழ்வானாகும்
விளம்புகிறோம் பின்பாகம் மெல்லியே கேள்.

28. காரி என்ற சனியினுடைய தசையில் இருப்பு பதினொன்று மாதங்களும் பதினைந்து தினங்களும் ஆகும். சூரியன் என்ற புத மகா தசை இதற்கு மேல் நடக்கும். இதனுடைய பலாபலன்களைச் சொல்லுகின்றேன். வீடு வந்து சேரும், வித்தை அதிகப்படும். சகோதரர்கள் பிறந்து விருத்தியாவார்கள். இந்தத் தசையின் கடைசி காலத்தில் ஜாதகனுடைய தகப்பனார் இறந்துவிடுவார் என்று சொல்லுகின்றோம். மூத்த சகோதரருக்கு விவாகம் முதலிய சுபகாரியங்கள் நடக்கும் என்று சொல்லுகின்றோம். ஜாதகர் யாதொரு கஷ்டமில்லாமல் வாழ்வாராகும், பார்வதியம்மையே! மற்ற விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். கேட்பீராக.

C. G. R.

# ஜாதகம் 21

## ஜனனகால கிரக நிலை

1. சந்திரன் [1]மேரு வாக [2]சிகி [3]மானில் சனியும் மீனம்
[4]புந்தியு [5]புகரு மோடு [7]புரவியோன் மேட மாக
மந்திர [8]கயிறு [9]சேயும் [10]அலவனில் [11]பொன்னோன் [12]சீயம்
இந்தவார் கிரகம் நின்று லக்கினம் கன்னி யாக.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் தனுசிலும், கேது மகரத்திலும், சனி மீனத்திலும், புதனும், சுக்கிரனும் ரிஷபத்திலும், சூரியன் மேஷத்திலும், ராகுவும் அங்காரகனும் கடகத்திலும், குரு சிம்மத்திலும், இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் இருந்தால்

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சனி | சூரியன் | புதன் சுக்கிரன் | |
| | இராசி சக்கரம் | | ராகு அங்காரகன் |
| கேது | | | குரு |
| சந்திரன் | | | லக்கினம் |

உத்திராடம் 1-ஆம் பாதம். சூரிய தசை இரு 5—06—00.

*குறிப்பு :—இந்த ராசி சக்கர கிரக அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—கடகத்தில் அங்காரகனும், கன்னியிற் கேதுவும், துலாத்திற் சூரியனும் குருவும், தனுசிற் சந்திரனும், மகரத்திற் புதனும் சனியும், கும்பத்திற் சுக்கிரனும், மீனத்தில் ராகுவும் ஆகும்.

---

1. தனுசு
2. கேது
3. மகரம்
4. புதன்
5. சுக்கிரன்
6. ரிஷபம்
7. சூரியன்
8. ராகு
9. அங்காரகன்
10. கடகம்
11. குரு
12. சிம்மம்

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பலனதைப் புகலு மென்று பார்வதி கேட்கும் போது
குலகுரு வதிஷ்டர் சொல்வார் குறித்தது ஆண்பால்
[சென்மம்
தலமது வடதென் வீதி சனிவாசல் வடபால் கன்னி
குலவிய வடையா ளத்துள் கூரையின் யில்ல மாகும்.

2. பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது, குலக் குருவாகிய வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்கு வாயிலை உடையதாகும். வடக்கில கன்னி கோயிலிருக்கும். இங்கு சொல்லப்பட்ட அடையாளங்களை யுடைய விடத்தில் கூரை வீட்டில் ஜாதகர் பிறந்தார்.

3. அரிமதம் பிரம்ம சேயாய் அணுகுவா னிந்தப் பாலன்
பெருஅன்னை தந்தை யோகம் பேதையர் புத்திர
[யோகம்
திருமகன் முன்பின் சென்மம் செப்புவோ மின்னுல்
[தன்னில்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

3. ஜாதகர் விஷ்ணு மதத்தில் பிராமணர் குலத்தில் வந்து பிறப்பார், இவரைப் பெற்ற தாயார், தகப்பனார், மனைவி, சந்தானம் ஆகிய இவர்களுடைய யோகங்களையும் ஜாதகருடைய முன்ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம். கறுப்பு நிறமுள்ள மதயானையின் முகத்தை யுடை யவிநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனாருடைய சகோதர பாவமும் குணாதிசயங்களும்

4. தந்தையின் துணை ஆண்நான்கு சத்திமார் மூவராகும்
அந்தவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்
இந்தவன் தந்தை சேதி யியம்புவோ மினி மேலாக
சுந்திர முடைய னாகும் துணைவர் சொல்தட்டா னாகும்.

4. ஜாதகரின் தகப்பனாருக்குக் கூடப் பிறந்தவர்கள் நான்கு சகோதரர்களும் மூன்று சகோதரிகளும் ஆவார்கள். பார்வதியம்மையே! இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின் பாகத்தில் நாங்கள் சொல்லுகின்றோம். தகப்பனாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் இனிமேல் சொல்லுகின்றோம். இவர் அழகுள்ளவராவர், தன்னுடைய சகோதரர்களுடைய

வார்த்தைகளுக்கு மீறி நடக்க மாட்டார், சகோதரர்களுடைய வார்த்தை களை அலக்ஷியஞ் செய்ய மாட்டார்.

5. மால்பக்தி பூண்பா னுகும் மாநிலம் விருத்தி செய்வன்
சீலவான் பொறுமை சாலி சென சகாயங்கள் செய்வன்
காலத்தை அறிந்து வாழ்வன் கட்டுரை பகரு னுகும்.
பால் பாக்கிய முடையனுகும் பத்தினி நேய னுகும்.

5. ஜாதகருடைய தகப்பனுர் மகாவிஷ்ணுவின் பேரில் அன்புடையவ ராவர், பெரிய நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை அதிகப்படுத்துவார். இவர் சுத்தமானவராகவும் நல்லொழுக்கங்களை யுடையவராகவு மிருப்பார். சாந்தமான குணத்தை யுடையவராவர், ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்பவராவர், இவர் காலாகாலத்திற்குத் தகுந்தபடி நடந்து கொள்ளுவார், பொய், பழமொழி, பிணைந்த வார்த்தை ஆகிய இவற்றைச் சொல்ல மாட் டார். இவருக்குப் பசு மாடுகள் விருத்தியாகும். இவர் தன்னுடைய மனைவிக்குப் பிரியமானவராவர், மனைவியும் இவரை விரும்புவாள்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

6. சொன்ன யிக்குண தானுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான்
[சிவந்த மேனி
கன்னென மொழியே சொல்வன் கல்விமான் வாததேகி
உன்னத தலங்கள் செல்வன் உயர்வோர்கள் நேசம்
[கொள்வன்.

6. இங்கு சொல்லப்பட்ட குண குணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களை இனிமேல் சொல் லுகின்றேன். இவர் அழகாகவும், சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவரா கவும் இருப்பார். இவர் சக்கரைப் போன்ற இனிமையான வார்த்தை களைச் சொல்லுவார். இவர் வாசித்தறிந்தவராவர். வாத குணமுள்ள தேகத்தை யுடையவராவர். மேன்மையான சிறந்த தெய்வீக ஸ்தலங்களுக் குப் போவார். பெரியோர்களுடைய, மேன்மையானவர்களுடைய சினே கிதத்தை யுடையவராவர்.

7. சொல்லது பெரிதாய்க் காட்டும் சோர்வுறுன் வார்த்தைக்
[கேதான்
இல்லையென் றுரைக்க மாட்டான் யெய்திடும் தந்த
[னேயும்

வல்லிமார் மோக னுவன் மானிலம் விரையம் செய்வன்
தொல்லேயும் சுகமும் உண்டு துணைவரைப் பிரிதல்
[செய்வன்.

7. ஜாதகர் பெரிய பெரிய உயர்தரமான சிறந்த வார்த்தைகளே உபயோகப்படுத்துவார். வார்த்தைகளே உபயோகப்படுத்திப் பேசுவதில் இளைக்க மாட்டார், சலிக்க மாட்டார். இவர் தன்னிடத்திற்கு உதவிக்காக வருபவர்களுக்கு உபகாரஞ் செய்யச் சாத்தியப்படாது என்று சொல்ல மாட்டார். இவருக்குப் பல் நோயுண்டு. இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். ஸ்திரீகளும் இவர் பேரில் ஆசையையுடையவர்களாக விருப்பார்கள். இவர் பெரிய நிலங்களே விற்று விடுவார், தாரவார்த்து விடுவார். இவர் துன்பங்களேயும் சுகங்களேயும் கலந்தாற் போல் அநுபவிப்பார். தன்னுடைய சகோதரர்களே வேறே போய் வாசஞ் செய்யும்படியாகச் செய்துவிடுவார்.

8. மருவினே நிவர்த்தி செய்வன் மாத்தானே லகுவில்
[வெல்வன்
குருமுனி போலே சொல்லேக் கூறுவான் வைத்தியம்
[செய்வன்
திருகிலா குணத்தா னுகும் சேயிழைப் பிரிய னுகும்
பெரியோர் உறவு முண்டு புகழ்ந் தோரை யாதரிப்பன்.

8. ஜாதகர் தனக்கு வந்து சம்பவித்தப் பாவங்களே உடனே விலக்கிக் கொள்ளுவார். இவர் தன்னுடைய எதிரியைச் சுலபமாக ஜயித்து விடுவார். குரு முனி என்ற வசிஷ்ட மஹரிஷியைப் போல வார்த்தைகளேச் சொல்லுவார். வைத்திய சிகிட்சை செய்வார். கெடுதியில்லாத குற்றமில்லாத குணத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய மனேவியின் பேரில் ஆசையை யுடையவராவர். மனேவியும் இவர் பேரில் ஆசையை யுடையவராவர். பெரியோர்களுடைய சினேகிதத்தை இவர் உடையவராவர். தன்னேப் பற்றிக் கௌரவமாகவும் மேன்மையாகவும் பேசுகின்றவர்களே இவர் காப்பாற்றுவார்.

9. தோத்திரப் பிரிய னுகும் துருசையும் கொஞ்ச முண்டு
நாத்திசை புகழு மேற்பன் நாற்காலி விருத்தி அல்ப்பம்
பாத்திர மறிய வல்லன் பலர் மெச்ச வார்த்தை யுண்டு
காத்திர குடும்ப மில்லான் கடுநடை யுடைய னுமே.

9. ஜாதகர் தன்னேப் பற்றிப் பிறர் புகழ்ந்து பேசுவதில் ஆசையுடையவர், கெட்ட ஆசையையும் சிறிது உடையவராவர். எல்லாத் திக்குகளிலும் இவர் கீர்த்தியை யுடையவராவர். இவருக்கு கால் நடைகள் அற்பமான விருத்தியை யுடையனவாக விருக்கும். இவர் பிறர் நல்லவர், கெட்டவர் என்று தெரிந்து கொள்ளுந் திறமையை யுடையவராவர். இவர் தன்னே

அநேகர் மதிக்கும்படியாக பேசுவார். இவர் பெரியதான குடும்பத்தை யுடையவரல்ல. கஷ்டப்பட்டு அதிகமாக நடக்கக் கூடியவராவர்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

10. அந்தி காலம் தன்னில் அணுகிடு மபகாரந் தானும்
வந்தவர்க் கன்ன மீவன் மருத்திடும் தந்தை யாட்சி
பிந்திடும் பூமி சேர்த்து போயிடும் பால னுக்கு
தந்துணை ஆண்பால் ஒன்று தையலர் மூவர் தீர்க்கம்.

10. ஜாதகருக்குத் தன்னுடைய கடைசி காலத்தில் பொல்லாங்குகளும் தீமைகளும் வந்து சம்பவித்து விடும். இவர் தன்னிடத்திற்கு உதவிக்காக வருபவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். தகப்பனுருடைய அதிகாரத்தைத் தடுத்து விடுவார். இவர் பின் காலத்தில் நிலங்களைச் சம்பாதித்து சேர்த்து வைப்பார். ஆனல் இவை சீக்கிரம் இவரை விட்டு விலகிப் போய் விடும், அஃதாவது இவற்றை இவர் சீக்கிரம் விற்று விடுவார். ஜாதகருக்கு ஒரு சகோதரரும் மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள்.

## ஜாதகருடைய விவாக காலமும், மனைவியின் குணுதிசயங்களும்

11. ஈரெட்டு ஆண்டுக் குள்ளே யிவனுக்குப் பாரி வாய்க்கும்
காரிழை மேல்பால் நேறும் கழறுவோ மவள்
[குணத்தைத்
தேரின புத்தி யுண்டு சீலியாம் பொறுமை சாலி
மாரன் தன் மனதுக் கேத்தோள் மாஞ்சிவப் புடைய
[ளாமே.

11. ஜாதகருக்குப் பதினறு வயதிற்குள்ளே இவருக்கு மனைவி வந்து வாய்ப்பாள். இவள் மேற்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவள் தேர்ச்சியை யடைந்த மேன்மையான அறிவை யுடையவளாவள், சுத்தமானவளாகவும் நல்லொழுக்கத்தை யுடையவளாகவு மிருப்பாள். சாந்தமான குணத்தை யுடையவளாகும். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல் ஒற்றுமையாக விருப்பாள். மாந்துளிரின் நிறமாகிய ஒருவித சிகப்பான நிறத்தை யுடையவளாவள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய விவாக விஷயம் :—ஜாதகருக்கு வயது வருஷம் 15-06 மாதம் வரையிலும் சந்திர தசை நடக்கின்றது. இந்தச் சந்திரன் சுபஸ்தானமாகிய நான்காவது வீட்டில் இருந்து கொண்டு குருவால் பார்க்கப்பட்டிருக்கின்ருர், அஃதாவது குருவின் சம்மந்தத்தை அடைந்திருக்கின்ருர்.

இந்தக் குரு ஏழாவது வீடாகிய களத்திர ஸ்தானத்திற்குடையவராக விருக்கின்றூர். ஜாதக பாரி ஜாதகம் பதினுன்காவது அத்தியாயம் இருபத் ஒன்பதாவது சுலோகம் பிரகாரம் ஏழிற்குடையவருடன் சம்மந்தப்பட்ட கிரகம் தன் தசையில் விவாகஞ் செய்து வைப்பார். ஆகையால் சந்திர தசையில் விவாகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

12. அன்னம் போல் சாய லொக்கும் அடாவடி கூருளாகும்
அன்னமு மன்பா யீவள் ஆபத்தென் றோரைக் காப்பள்
உன்னித வார்த்தை யுண்டு உறுதி யில்லாத நெஞ்சம்
பின்ன மில்லாத தேகி பொய்யது புகலா ளாமே.

12. ஜாதகருடைய மனைவி அன்னத்தைப் போன்ற தேகத்தை யுடையவளாவள். முரட்டுத் தனமாகவும் துன்மார்க்கத் தனமாகவும் பேசமாட்டாள். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியமாய்ப் போடுவாள். கொடுப்பாள். நாங்கள் கஷ்டத்தை அனுபவிக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களைக் காப்பாற்றுவாள். இவள் மேன்மையான, சிறந்த வார்த்தைகளைச் சொல்லுவாள். நிலையான மனத்தை யுடையவளல்லள், இவள் யாதொரு அவயக்குறைவும் பங்கமும் இல்லாத தேகத்தை யுடையவளாவள், பொய்யைச் சொல்ல மாட்டாள்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

13. பித்த தேகத்தா ளாகும் பொய்யது புகலா ளாகும்
புத்திரர் காணு ளாகும் பிறக்கினும் தீதே யாகும்
குத்ததைச் சொல்லு மென்ன கேதுவு மஞ்சில் தங்க
பத்தினுக் குடையோன் பாக்கியம் பொன்னவன்
[விரையம் புக்க.

13. ஜாதகருடைய மனைவி பித்த குணமுள்ள தேகத்தை யுடையவளாவள். பொய்யைச் சொல்ல மாட்டாள். இவளுக்குப் பிள்ளைகள் கிடையா. ஒரு சமயம் பிள்ளை பிறந்தாலும் சீக்கிரத்தில் இறந்துவிடும். இதற்குண்டாகிய தோஷத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, கேது ஐந்தாவது வீட்டில் இருப்பதாலும், பத்தாவது வீட்டிற்குடையவராகிய புதன் பாக்கியம் என்ற ஒன்பதாவது வீட்டிலிருப்பதாலும் பொன்னவன் என்ற குரு விரையம் என்ற பண்ணிரண்டாவது வீட்டிலிருப்பதாலும்

14. ஆகையால் சுதர்கள் தோன்றி அந்தக நாட்டைச் சேரும்
தோகையும் பூர்வம் தன்னில் தோன்றிற்று சிலது
[தோஷம்
பாவத்தைச் சொல்லு மென்ன பரங்குன்ற நகரிலே
[தான்
நாகரீகங்க ளுள்ள நற் சைவ குலமு தித்து.

14. பிள்ளைகள் பிறந்து சீக்கிரத்தில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவார்கள். ஜாதகருடைய மனைவிக்குத் தன்னுடைய முன் ஜன்மத்தில் சில தோஷங்கள் ஏற்பட்டு விட்டன. இந்தச் தோஷங்களைப், பாவங்களைச் சொல்லுவீரென்று கேட்கவே, இவள் திருப்பறங்குன்றம் என்ற க்ஷேத்திரத்தில் நாகரிகங்களை யுடைய ஒரு சைவ ஜாதியிற் பிறந்து,

15. புத்திர ரதிக முண்டாய்ப் புகழான குடும்பி யாகி
வித்தகி வாழு நாளில் மேவின வினையைக் கேண்மோ
சக்தி யில்லாத மாது தன்சுதர் தனக்கு அன்னம்
பத்தினி தருவாய் யென்ன பாவையின்மேல் கோப
[முற்று.

15. அநேக குழந்தைகளை யுடையவளாகியும், மேன்மையான குடும்பஸ்தளாகியும் இவள் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த பாவத்தைக் கேட்பீராக. பண வலிவில்லாத ஒரு ஏழை ஸ்திரீ தன்னுடைய குழந்தைக்காக அன்னத்தைக் கொடு என்று இவளைக் கேட்கவே, இந்த் ஸ்திரீயின் பேரில் கோபத்தை யுடையவளாகி

16. சுகமுள வார்த்தை யின்றி துரத்தினள் யேழை தனை
அகமது வருத்த முற்று அறைந்த சாபத்தைக்
[கேண்மோ
மிகுபசி மதலைக் கன்னம் உதவாத பாவியே நீ
பகையாகும் சுதர்கள் தானும் பிறக்கும் பின்சென்மந்
[தன்னில்

16. சுகமான வார்த்தைகளைச் சொல்லாமல் இந்த ஏழை ஸ்திரீயை அதட்டித் துரத்தி விட்டாள். இந்த ஸ்திரி தன்னுடைய மனத்தில் துன்பத்தையுங் கஷ்டத்தையு முடையவளாகிச் சொல்லிய சாபத்தைக் கேட்பீராக. அதிக பசியாயுள்ள குழந்தைக்குச் சாதத்தைக் கொடுக்காத பாபியாகிய உனக்கு உன் குழந்தைகள் உதவாமல் போகும். உன்னுடைய மறு ஜன்மத்தில்

17. சுதர்கள் தோன்ரு தோன்றில்தீதாம் சுந்தரி தனியாய்
[வாழ்வள்
விதவித வார்த்தை சொல்லி மேவினள் வேறு சாகை
அதுஒரு சாப மாச்சு அம்மாது அந்தி யத்தில்
கதிதரும் சேது சென்று காலன்தன் பதிக்குப் புக்கி.

17. உனக்குப் பிள்ளைகள் பிறக்கா. ஒரு சமயம் பிறந்தாலும் சீக்கிரம் இறந்துவிடக் கடவுது. நீ ஒண்டியாக விருந்து வாழக் கடவது என்று பற்பலவிதமான வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அந்த விடத்தை விட்டு விட்டு வேறு இடத்திற்குப் போய் விட்டாள். இது ஒரு தோஷமாயிற்று

சாபமாயிற்று. இந்த மனைவி தன்னுடைய கடைசி காலத்தில் மோட்க்ஷத்தைக் கொடுக்கின்ற சேது ஸ்தலத்திற்குப் போய் பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்

18. வேதனல் வரையப் பட்டு விளங்குவா ளிந்த மாது
மாதுவும் சாபம் தானும் குலவிடு மிச்சென் மத்தில்
தீதாகும் சுதர்க ளென்றேம் செயமுனி மறுத்துச் [சொல்வார்
காதலி முன்சென் மத்தில் கனமுள சேதுக்கே தான்.

18. பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய இந்த மனைவி வந்து பிறந்திருக்கின்ருள். ஏழை ஸ்திரியினுடைய சாபம் இந்த ஜன்மத்தில் மனைவியை வந்தடையும். ஆகையால் பிள்ளைகள் இறந்து விடும் என்று சொல்லுகின்றேம். இதற்கு ஜயமுனிவர் தடுத்துச் சொல்லுகின்ருர். ஜாதகருடைய மனைவி தன்னுடைய முன் ஜன்மத்தில் மேன்மையான, சிறந்த சேது ஸ்தலத்திற்கு

19. செய்ததால் அந்த சாபம் தீருதோ விபரம் சொல்வாய்
தையலும் பசி நோயாலே செப்பின சாபம் நீங்கா
வையமேல் சேது புண்ணியம் மறைகுல முதிப்பா ளாம்
அய்யமேல் அய்யமாகும் அம்பிகை யாளே கேளாய்.

19. தீர்த்த யாத்திரை செய்த பலத்தால் அந்தச் சாபம் நிவர்த்தியாகி விடாதோ என்பதின் விபரத்தைச் சொல்லுவீர் என்று கேட்க ஏழை ஸ்திரி பசியின் கொடுமையின் நிமித்தமாகச் சொல்லிய சாபம் நிவர்த்தியாகாது. ஆனல் சேது ஸ்தலத்திற்குப் போன புண்ணியத்தினலே ஜாதகருடைய மனைவி பிராமண ஜாதியில் இந்த ஜன்மத்தில் பிறந்திருக்கின்ருள். இவ்விதமாகச் சந்தேகத்தின் பேரில் சந்தேகம் நேரிடும். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

20. மாரன்தன் பூர்வம் தன்னை வரிப்போம் யினி மேலாக
காரண வஸ்து வான காசி நாட தனிலே தான்
தீரமாய் யிக்குலத்தில் செனித்துமே வாழும் நாளில்
கூறுவோம் வினையை நாங்கள் கோதையின் கரு வழித்து.

20. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுவோம். ஒரு காரணமாக உள்ளதைச் சொல்லுகின்றேம். காசிப் பட்டணத்தில் இந்தப் பிறவியின் ஜாதியாகிய பிராமணர் குலத்தில் ஜாதகர் பிறந்து வாழ்கின்ற காலத்தில் வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேம். ஒரு ஸ்திரியினுடைய கர்ப்பத்தை அழித்து.

21. அதர்வண பேதனங்கள் அவனுமே செய்து வந்து
சதிசெய்தான் சிலரை யேதான் தங்கிற்று அதுஓர்
[தோஷம்
இதுநிற்க யிருவர் தானும் யில்லத்தில் விரோத முற்று
அதிபதி அரசர் பக்கல் அணுகியே புகலும் போது.

21. அதர்வண பேதிப்புகளைச் செய்து வந்து சிலபேருக்குக் கெடுதியைச் செய்தார். இது ஒரு தோஷமாக ஏற்பட்டு விட்டது. இதுவுமன்றி இரண்டு பேர் வீட்டில் விரோதத்தை அடைந்து அரசாங்க அதிகாரியிடம் போய்ப் பிராது கொடுக்க,

22. மைந்தனும் ஒருவர் பக்கல் வரைந்தனன் கட்டு
[வார்த்தை
இந்தவன் வார்த்தை யாலே யிடரது அவனுக்
[குண்டாய்
விந்தையாய் வார்த்தை யென்மேல் விளம்பின பாபிக்கே
[தான்
பின்வரும் சென்மம் தன்னில் பற்களும் குறைவு
[நேர்ந்து

22. ஜாதகர் ஒருவர் பக்கமாகப் பொய் சாக்ஷியைச் சொன்னார். இவருடைய பொய்யான வார்த்தையாலே சாட்சியாலே மற்றொருவருக்குத் தீங்குண்டாயிற்று. ஆச்சரியமாக என் பேரில் பொய் சொன்ன பாவியாகிய உனக்கு மறு ஜன்மத்தில் பற்களுக்கு நோய் உண்டாகியும்

23. சுதர்களும் யில்லா தாகித் தொல்புவி தன்னில் வாழ்வாய்
இதுவிதம் சொல்லித் தூளை யிரைத்தன மென்று
[சொல்வோம்
வதிபனு மந்தி யத்தில் மைந்தர்கள் யாவும் போக்கி
நிதமன சஞ்ச லத்தால் நேர்ந் தனம் காலனூடு.

23. பிள்ளைகள் இல்லாமலும் இந்தப் பழைய பூமியில் இருந்து நீ வாழக் கடவது என்று சொல்லித் தெருவிலுள்ள மண்தூளை வாரி இறைத்தார் என்று சொல்லுகின்றோம். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் எல்லாப் பிள்ளைகளையும் இழந்து நித்தியமும் தன்னுடைய மனத்தில் துன்பத்தை அடைந்து இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து

24. சிரனுன் கோன் வரையப் பட்டுச் செனிப்பனு மிவனே
[யென்றோம்
மருவிடும் முன்னூழ் சாபம் மைந்தர்கள் பிறக்கில் தீதாம்

திருகாகும் தந்த மென்றேம் செய்முனி தடுத்துச்
[சொல்வார்
கரும புத்திரனும் தோன்ற கழறுவீர் சாந்தி யொன்று.

24. நான்கு தலைகளை யுடைய பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றேம். முன் ஜன்மத்திய சாபம் இவரை வந்தணுகும். பிள்ளைகள் இவருக்குப் பிறந்தால் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள், இவருடைய பற்களும் கெட்டுப் போய்விடும், குற்றத்தை யுடையனவாக விருக்கும் என்று சொல்லுகின்றேம். ஜப முனிவர் தடுத்துக் கேட்கின்றார், கர்மம் செய்வதற்காகப் பிள்ளை பிறக்க ஓர் பரிகாரத்தைச் சொல்லுவீர்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

25. அதற்குமே சாந்தி தானும் அறையவே மாட்டோம்
[யாங்கள்
இதுநிற்க அன்னை சேதி யிபம்புவோ மினி மேலாக
சதியிலா மனத்த ளாகும் சற்பாத்திரி பொறுமை சாலி
ததிபாக்கிய முடைய ளாகும் தன்வரன் மனதுக்
[கேத்தோள்.

25. அதற்காகப் பரிகாரத்தை நாங்கள் சொல்லவே முடியாது. இது இப்படி யிருக்க, இனி மேல் நாங்கள் ஜாதகரின் தாயாருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவள் கெடுதியில்லாத, துரோகமில்லாத மனத்தை யுடையவளாவள். இவள் நல்லவள், தகுதியானவள், பொறுமையானவள். செல்வத்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக நடந்து கொள்ளக் கூடியவளாவள்.

## தாயாருடைய சகோதரர்களும் முன்ஜன்மமும்

26. தன்துணை ஆண்பால் நான்கு தையலரும் அவ்வா
[ருகும்
பின்னமாம் சிலது பின்னல் பேசுவோ மிவளின் பூர்வம்
தென்திசை ஆழி தன்னில் செனித்தனள் வைசிய
[சேயாய்
பொன்பண்ணி உடைய ளாகிப் பெரிதான குடும்பம் பெற்று,

26. ஜாதகரின் தாயாருடன் பிறந்தவர்கள் நான்கு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் ஆகும். சிலர் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் இவர்களைப்பற்றிப் பின் பாகத்தில் சொல்லுகின்றேம், தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். தெற்குத் திக்கிலுள்ள சீர்காழி

கிராமத்தில் வைசியருடைய ஜாதியில் பெண் குழந்தையாகப் பிறந்து தன மும் ஆபரணங்களும் உடையவளாகிப் பெரிய குடும்பத்தை அடைந்து.

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலம்

27. பலதல வாசம் சென்று பிராமண தொண்டு பூண்டு
குலவினுள் கால னுடு குரைதலை வரையப் பட்டு
தலைவியு முதித்தா ளென்றோம் சாற்றுவோ முப்பா [னொன்றில்
நிலையான கொண்டல் மாதம் சேருவாள் கால னுடு.

27. அநேக ஸ்தலங்களுக்குப் போய்ப் பிராமணர்களுக்குச் வேலையை செய்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்றாள். பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்தோராவது *வயதில் சித்திரை மாதத்தில் இவருடைய தாயார் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள்.

*குறிப்பு:—வியாக்கியானம்;—தாயாருடைய மரண கால விஷயம்:— ஜாதகருக்கு முப்பத்தோராவது வயதில் இராகுதசை நடக்கின்றது மாதுர் லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இந்த லக்கினத்திற்கு எட்டாவது வீடாகிய கடகத்தில் ராகு இருக்கின்றார். எட்டாவது வீடு ஒரு மாரகஸ்தானம் ஆகும். ஆகையால் இதற்குடைய சந்திரன் மாரகாதிபதியாகின்றார். துய்யகேரளம் எட்டாம்பாவம் பதினுன்காவது பாடல் பிரகாரம் கூட சந்திரன் மாரகராகின்றார். மேலும் பலதீபிகை பதினேந்தாவது அத்தியாயம் இருப்பத்தாறுவது சுலோகம் பிரகாரம் நான்காவது வீட்டிலுள்ள சந்திரன் மாதுருக்கு நாசத்தையுண்டு பண்ணக் கூடியவராக விருக்கின்றார். இவர் வீட்டிலுள்ள ராகு ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரம் சந்திரனுடைய பலனையே கொடுப்பார். ஆகையால் ராகு தசையில் மாதுருக்கு இங்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மமும், தகப்பனாருடைய முன்ஜன்மமும்

28. பின்சென்மம் வள்ளூர் தன்னில் பிறப்பளா மிக் குலத்தில்
தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் தில்லை [தன்னில்
வந்தனன் சைவ சேயாய் வளமுள குடும்பி யாகி
பந்தணி மதலை யுண்டாய் பாரினில் சீவித்தே தான்.

28. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மறு ஜன்மத்தில் திருவள்ளூர் க்ஷேத்திரத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய பிராமணர் ஜாதியில் பிறப்பாள். ஜாதகரின் தகப்பனருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சிதம்பர க்ஷேத்திரத்தில் சைவ குலத்தில் ஆணாகப்பிறந்து மேன்மை யான குடும்பஸ்தராகி மனைவி, மக்களை யுடையவராகிப் பூமியில் வாழ்ந்து

29. வினையின்றி மரண மாகி வேதியன் வரையப் பட்டு
சினமிக்க யிக் குலத்தில் செனித்தா னென்று
[சொல்வோம்
கனமுள பத் தாண்டுக்குள் கார்த்திகை திங்கள் தன்னில்
புனைகுவான் கால னூடு புண்ணிய வதியே கேளாய்.

29. யாதொரு பாவமுமில்லாமல் இறந்து பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்திய குலமாகிய பிராமணர் ஜாதியில் பிறந்திருக் கின்றார் என்று சொல்லுகின்றோம். இவர் ஜாதகருக்குப் பத்து *வயதிற்குள் கார்த்திகை மாதத்தில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவார், புண்ணியவதியாகிய பார்வதியம்மையாரே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியனம்:—தகப்பனர் மரண விஷயம்:—ஜாதகருக்குப் பத்தாவது வயதில் சந்திர தசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத் திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் சந்திரன் மாரகாதிபதியாகின்றார். இந்தச் சந்திரன் மாரகஸ்தான மாகிய மூன்ருவது வீட்டிற்குடையவராகி மாரகஸ்தானமாகிய எட்டாவது வீட்டில் இருக்கின்றார். ஆகையால் சந்திர தசையில் பிதுருக்கு மாரகம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தகப்பனருடைய மரணகாலம்

30. மறு சென்மம் வேங்கடத்தில் வருகுவானிக் குலத்தில்
அரசனல் தொழிலும் பெற்று அவனுமே வாழ்வா னாகும்
திருமகன் மரண காலஞ் செப்புவோம் யெழுப தாறில்
அரிமாதம் கண்ணன் பட்சம் அஷ்டமி திதியிலே தான்.

30. ஜாதகருடைய தகப்பனர் தன்னுடைய பின் ஜன்மத்தில் வேங் கடம் என்ற திருப்பதி ஸ்தலத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய பிராமணர் குலத்திலேயே போய் ஆணாகப் பிறப்பார். இவர் இராஜாங்கத்தில் ஒரு வேலையிலிருந்து வாழ்வார். ஜாதகருடைய மரண காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தனக்கு எழுபத்தாருவது * வயதில் அரிமாதம் என்ற சிம்ம மாதமாகிய ஆவணி மாதத்தில் கண்ணன் பட்சமாகிய தேய் பிறையில் அஷ்டமி தினத்தில்

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய மரண கால விஷயம் :—ஜாதகருக்கு எழுபத்தாருவது வயது நடக்கும்போது ஐப்பசி மாதம் வரையில் சனி தசை நடக்கின்றது. ஆகையால் எழுபத்தாருவது வயதில் ஆவணி மாதத்தில் சனி தசையில் குரு புக்தி நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்குக் குருவும் சந்திரனும் ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகம் பிரகாரம் மாரகராகின்ருர்கள், சனி குருவினுடைய வீட்டிலிருந்து கொண்டு சந்திரனையும் பார்க்கின்ருர். ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகம் பிரகாரம் குரு வீட்டிலுள்ள சனி மாரகஞ் செய்ய அதிகமான அதிகாரத்தையுடையவராக விருக்கின்ருர். ஆகையால் சனி தசையில் ஜாதகருக்கு இங்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் குருவே மாரகராக விருப்பதால் குருபுக்தியிலேயே மாரகம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மறுஜன்மம்

31. உடலமே யேகு மென்ருேம் உரைகிருே மிவன்பின் [சென்மம்
தடமதில் உயர்வதான துவாரகை தன்னிலே தான்
அடவுடன் யிக் குலத்தில் அருளுவா னென்று [சொல்வோம்
விடமுண்ட கண்டன் தேவி விளம்பின மொழி குன்ருது.

31. இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும் என்று சொல்லுகின்ருேம். பட்டணங்களில் மிகவும் சிறந்ததான துவாரகாபுரி பட்டணத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய பிராமண ஜாதியிலேயே போய் அடுத்த ஜன்மத்தில் பிறப்பார் என்று சொல்லுகின்ருேம், ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—மனைவி மாரக விஷயம் :—மனைவி லக்கினம் ஏழாவது விடாகிய மீனம் ஆகும். இந்த மீன லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை : அறுபத்தேழாவது சுலோகம் பிரகாரம் சனி மாரகராகின்ருர். ஆகையால் இந்தச் சனி தசையில் எழுபத்தைந்தாவது வயதில் மனைவிக்கு மாரகம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

32. பாரிக்கு யெழுபத் தைந்தில் பங்குனி மாதம் தன்னில்
கூறுவோம் மாரகங்கள் குறிக்கிருே மிவள் பின் சென்மம்
தீரமாய்க் காஞ்சி தன்னில் செனிப்பளா மிக் குலத்தில்
ஆறுமா முகனை யீன்ற அம்பிகை யாளே கேளாய்.

32. ஜாதகருக்கு எழுபத்தைந்தாவது வயதில் பங்குனி மாதத்தில் இவருடைய மனைவிக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம், இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். காஞ்சிபுரத்தில் இந்த ஜன்மத்தில் பிறந்த குலமாகிய பிராமணர் ஜாதியில் பிறப்பாள். ஆறு முகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வையம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—மனைவியின் மாரக விஷயம் :—ஜாதகருக்கு எழுபத்தைந்தாவது வயதில் சனி தசை நடக்கின்றது. மனைவியின் லக்கினம் ஏழாவது வீடாகிய மீனம் ஆகும். மீன லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபத்தேழாவது சுலோகம் பிரகாரம் சனி மாரகராகின்றார். ஆகையால் சனி தசையில் மனைவிக்கு இங்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கிறது.

## ஜாதகருடைய யோகபாவம்

33. இன்னவன் யோகச் சேதி யியம்புவோ மினி மேலாக
துன்ராகு திசை வரைக்கும் சிறப்பான குடும்ப மேன்மை
பொன்பூமி லாப மெய்தும் பெரிதான கருமம் செய்தல்
அன்னியர் மதிப்புக் கொளஎல் அடாத காரியங்கள் [வெற்றி.

33. ஜாதகருடைய யோக சம்பந்தமான விஷயங்களை இனிமேல் சொல்லுகின்றோம். இராகு தசை முடியும் வரைக்கும் மேன்மையான குடும்பம் விருத்தியாகும். தனம், நிலம் ஆகிய இவை அதிகப்படும். ஜாதகர் பெரிய காரியங்களைச் செய்வார். பிறர் இவரைக் கௌவரத்துடன் பாராட்டுவார்கள். இவர் தகாத காரியங்களில் ஜயத்தை அடைவார்.

34. இன்னமும் விசேஷ யோகம் யியம்புவோம் பின்பால் [சேதி
பொன்திசை காலம் தன்னில் பெரிதான வழக்கு நேரல்
தன்னில்ல மலைச்ச லெய்து தனமது செலவு முண்டு
அன்னியர் பகை யனேகம் யாவத்தும் கெடுதி யாகும்.

34. இன்னமும் அதிகமான யோகத்தைப் பற்றிய விஷயங்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். பொன் என்ற குரு தசை காலத்தில் பெரிய வியாஜ்ஜியம் உண்டாகும். இவருக்குத் தொந்தரவு, வருத்தம், நிலையின்மை ஆகிய இவை உண்டாகும். பணச் செலவு ஏற்படும். அசலாருடைய விரோதங்கள் அநேகமாய் உண்டாகும். எல்லா விஷயங்களும் இவருக்குப் பிரதிகூலமாகவிருக்கும்.

35. மனமது சஞ்ச லங்கள் மருவிடும் பலவார் நோயும்
இனமதில் சூத முண்டு யெடுத்த காரியங்க ளாகா
கனமுள பூமி திங்கள் காலிகள் சேத மெய்தும்
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே [கேளாய்.

35. ஜாதகருக்குத் தன்னுடைய மனத்தில் கவலைகளும் துன்பங்களும் ஏற்படும். பலவிதமான வியாதிகள் உண்டாகும். பந்துக்களில் சூதகம் ஏற்படும். தான் செய்ய ஆரம்பித்த காரியங்கள் நல்லபடியாகவும் அல்லது அநுகூலமாகவும் முடிவுபெறு. சிறப்பான நிலங்களும் கால் நடைகளும் நாசமடையும். தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

36. காரியும் காலம் தன்னில் கனமுள தலங்கள் செல்லல்
வேறொரு ஆசானுலே வாதங்கள் பலித மெய்தும்
தீருத வழக்கு வெல்லல் தரணிகள் சேர்த்த லுண்டு
காரிய மெல்லாம் கூடும் கனதிருப் பணியும் செய்தல்.

36. காரி என்ற சனி தசைக் காலத்தில் மேன்மையான சிறந்த தெய்வீக ஸ்தலங்களுக்கு ஜாதகர் போவார். இன்னொரு நியாயாதிபதியினுலே வியாஜ்யங்களும் வழக்குகளும் தனக்கு அநுக்கூலமாகும். முடிவு பெருமலிருந்த வியாஜ்ஜியத்தில் ஜயத்தை அடைவார். நிலங்கள் இவருக்கு வந்து சேரும். எல்லாக் காரியங்களும் தனக்கு அநுக்கூலமாகும். விலையுயர்ந்த, அழகிய ஆபரணங்களையும் இவர் செய்வார்.

37. சஞ்சல நிவர்த்தி யாகும் செய்தொழில் மேன்மை
[யாகும்
கொஞ்சிடு மாது தானும் குவலயம் புகழு மெய்தல்
மிஞ்சிய லாப மெய்தும் விசனமே விலகு மென்ரேம்
தஞ்சமாம் பெரியோ ரெல்லாம் சதுஷ்பாதம் விருத்தி
[யுண்டு.

37. ஜாதகருக்குத் துன்பங்களும் மனக்கவலையும் நிவர்த்தியாகிவிடும். தான் செய்கின்ற வேலையில் விருத்தியையடைவார். தன்னுடைய மனைவி தன்னிடத்தில் விசுவாசமாக விருப்பாள். இவருக்கு பூமியில் கீர்த்தியும் பெருமையு முண்டாகும். இவருக்கு அதிகமான லாப மேற்படும், இவருடைய துன்பங்கள் இவரை விட்டு விலகிப் போய்விடும் என்று சொல்லுகின்ரேம். பெரியோர்கள் எல்லோரும் இவருக்கு அநுகூலமாகவிருந்து இவரைப் பெருமையுடன் பாராட்டுவார்கள். நாற்கால் பிராணிகள் விருத்தியடையும்.

38. அத்திரி புகலுகின்ருர் அவனுக்குக் கருமம் செய்வோர்
சுத்தமாய்ச் சொல்லு மென்ன தோகையின் சுதனும்
மத்தியில் வேறு நேறும் வரைகிரேம் பின்பால் சேதி
வித்தகன் செனன காலம் வெய்யவன் திசை யிருப்பு.

38. அத்திரிரிஷீ கேட்கின்ருர். ஜாதகருக்கு ஈமக்கடன்களைச் செய்பவர் யார் என்பதைச் சொல்வீர் என்று கேட்கவே, ஜாதகருடைய சகோதரியின் பிள்ளை செய்வான். மற்ற இந்த விஷயங்களைப் பின் பாகத்தில் சொல்லு

கின்ரேம் என்று வசிஷ்டமஹரிஷி பதில் சொன்னர். ஜாதகர் பிறந்த காலத்தில் வெய்யவன் என்ற சூரியனுடைய தசை இருப்பு

39. ஐந்தாண்டு திங்க ளாறும் அறைந்தனம் பூர்வ பாகம்
மைந்தனும் பிணியால் வாடும் மாதிரு நலியு மெய்தும்
பிந்தியும் துணைகள் விருத்தி பெற்றதாய் வர்க்கம் சூதம்
தந்தியை வளர்த்த மாதே சகலமும் பின்பால்
[சொல்வேன்.

39. ஐந்து வருஷங்களும் ஆறு மாதங்களும் ஆகும். இந்தக் காலத்தின் முன் பாகத்தில் ஜாதகருக்கு நோய் ஏற்பட்டு இவர் கஷ்டத்தை அநுபவிப்பார். தாயாருக்கும் ரோகங்களுண்டாகும். பின் பாகத்தில் சகோதரர்கள் பிறந்து விருத்தியாவார்கள். தாயாருடைய வம்சத்தில் சூதகங்களுண்டாகும். தும்பிக்கையை யுடைய விநாயகக் கடவுளை வளர்த்த பார்வதியம்மையே! மற்றெல்லா விஷயங்களையும் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன்.

40. பிருகுமே புகலு கின்ருர் புகன்றீரே துணைஆண் ஒன்று
அரைகுவீர் அவர்தன் சேதி உவமையாய்ப் பேசு வானும்
வருமனை ஒன்றே யாகும் மத்தியில் மரிப்பாளாகும்
பெரும் சுதர் கன்னி ஒன்று பேசுவோம் தீர்க்க மாக.

40. பிருகு மஹரிஷி கேட்கின்ருர். ஜாதகருக்கு ஒரு சகோதரர் உண்டு என்று சொன்னீரே! அவருடைய விஷயங்களைச் சொல்லுவீர். இந்தச் சகோதரன் உபமானம் உபமேயம் ஆகிய அலங்காரங்களை உபயோகப்படுத்தியும் ஒப்புமைப்படுத்தியும் அழகாகப் பேசுவார். இவருக்கு மனைவி ஒருத்தியே யாகும். இவள் நடுவயதில் இறந்து விடுவாள். இவருக்கு ஒரு பெண் குழந்தை நீண்ட ஆயுளை யுடையவளாக விருக்கும் என்று சொல்லுகின்ரேம்.

41. சிறையாக அந்தம் வாழ்வன் செல்வனும் வேருய்ச்
[செல்வன்
பொருளது மில்லா னுகும் பூமியால் சீவிப் பானும்
இருவித குணத்தா னுக்கு வியம்புவோம் பின்பால் சேதி
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

41. ஜாதகருடைய சகோதரர் தன்னுடைய கடைசி காலத்தில் அதிகமாக வெளியில் நடமாட்டம் இல்லாமல் ஜெயிலில் இருப்பது போல விருந்து வாழ்வார். இவர் பிரிந்து வேறு குடும்பஸ்தராகித் தனியாய் வாழ்வர். இவருக்குத் தனம் கிடையாது. இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவிப்பார். இவர் நல்லதும் கெட்டதும் கலந்துள்ள குணுதிசயங்களை யுடையவராவர். இப்படிப்பட்டவருக்குப் பின் பாகத்தில் மற்ற விஷயங்களைச் சொல்லுகின்ரேம். கறுப்பு மதம் பிடித்த யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக. C. G. R,

---

# ஜாதகம் 22

## ஜனனகால கிரகநிலை

1 [1]பிறை[2]சாடி [3]காரி கன்னி [4]பொன்[5]பணி மேட மாக
[7]பரிதியும் [8]புந்தி [9]நந்தி [10]பார்மகன் [11]புகரு [12]வீணை
வருவது சென்மம் கன்னி வரைகுவிர் பலனை யென்று
அரன்மனை யாளும் கேட்க அத்திரி புகலு கின்றார்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் கும்பத்திலும், சனி கன்னியி லும், குருவும் ராகுவும் மேஷத்திலும், சூரியன் புதன் ரிஷபத்திலும், அங்காரகன் சுக்கிரன் மிதுனத்திலும் (கேது துலாத்திலும்) இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது அத்திரி ரிஷி சொல்லுகின்றார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | குரு ராகு | சூரியன் புதன் | சுக்கிரன் அங்காரகன் |
| சந்திரன் | இராசி சக்கரம் | | |
| | | | |
| | | கேது | லக்கினம் சனி |

பூரட்டாதி 2-ஆம் பாதம். குரு தசை இருப்பு 11—03—00.

*குறிப்பு :—ரிஷபத்தில் சந்திரனும் அங்காரகனும் ராகுவும், மிதுனத்தில் சனியும், சிம்மத்தில் சூரியனும் புதனும், விருச்சிகத்தில் சுக்கிரனும் கேதுவும், தனுசில் குருவும் ஆகும். புதன் அஸ்தகங்கதம் அடைந்திருக்கின்றார்.

1. சந்திரன்
2. கும்பம்
3. சனி
4. குரு
5. ராகு
6. மேஷம்
7. சூரியன்
8. புதன்
9. ரிஷபம்
10. அங்காரகன்
11. சுக்கிரன்
12. மிதுனம்

2. இந்தசேய் ஆணும் சென்ம மில்லமும் கீழ்மேல் வீதி
தென்வாடை பேரூராகும் செகராசர் வாச மாகும்
முன்னமே செட்டு ஓங்கு முயர்வான தலமே யாகும்
இன்னமும் பலதே வாச யெழில்பல மங்க ளுண்டு.

2. இந்தப் பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்த வீடு ஒரு பெரிய கிராமத்தில் கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு வாடையில் இருக்கும். பெரிய அரசர் இந்த ஊரில் வாசஞ் செய்வார். மேன்மையான வியாபாரங்கள் விருத்தியாகும். இந்த ஊர் ஒருவளமான செழிப்பான முக்கியமான இடமாக விருக்கும். இதில் அநேக தேசத்தார் வசிப்பார்.

3. சொல்லிய அடையாளத்துள் சுதனுமே ஐந்தாம் சென்மம்
புல்குவான் ஐந்தாம் சென்மம் பூமிபா லகனுய்த் [தோன்றும்
தல்லியின் தந்தை சேதி சகோதரர் களத்திர புத்திரர்
வல்லவன் முன்பின் சென்மம் வரைகிறோம் மிந்நூல் [தன்னில்.

3. இங்குச் சொல்லப்பட்ட அடையாளங்கள் உள்ள ஊரில் ஐந்தாவது குழந்தையாக ஜாதகர் பிறப்பார். ஓர் அரசனுக்குச் சமமானவராக ஜாதகர் பிறப்பார். இவருடைய தாயார், தகப்பனுர்களுடைய விஷயங்களையும், இவ்ருடைய சகோதரர்கள், மனைவி, மக்கள் முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவைகளையும் பற்றி இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

4. தந்தைதுணை ஆணிரண்டு சக்தியு மவ்வாறு தீர்க்கம்
நொந்திடு மற்ற வெல்லாம் நுகர்ந்தஆண் வேருய்ச் [செல்வர்
அந்தவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே யாங்கள்
இந்தவன் தந்தை சேதி யியம்புவோம் யினிமே லாக.

4. ஜாதகரின் தகப்பனுடைய சகோதரர்கள் இரண்டு ஆண்களும் இரண்டு பெண்களும் ஆகும். மற்ற சகோதரங்கள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்து விடும். சகோதரர்கள் வேறு குடும்பஸ்தர்களாகப் பிறிந்து போய் ஜீவிப்பார்கள். இவர்கள் விஷயங்களைப் பற்றிப் பின் பாகத்தில் நாங்கள் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணதிசயங்கள்

5. குடம்ராசி பரணி நாளில் குதிப்பனும் மாதி றத்தன்
விடவாக்கன் யூகி சாலி வேந்தர்கள் யிஷ்டம் [கொள்வன்

தடபுடல் செய்கை யுண்டு தாட்சிண்யன் கனத்த புத்தி
அடைமொழி அதிகம் கூறுவன் ஆபத்தைச் சிலர்க்குக்
[காப்பன்.

5. ஜாதகருடைய தகப்பனர் குடம் என்ற கும்ப லக்கினத்திற் பரணி நட்சத்திரத்திற் பிறந்தவராவர். இவர் மாநிறமான தேகத்தை யுடையவர். விஷமான கெட்ட வார்த்தைகளைச் சொல்லக் கூடியவர். அஃதாவது இவர் சொல்லுகின்ற கெட்ட விஷயங்கள் எல்லாம் அப்படியே பலிக்குந் தன்மையை யுடையனவாகும். நல்லது கெட்டதுகளைப் பகுத்தறியும் நுட்பமான புத்தியுடையவராயைவர். இவரிடத்தில் அரசர்கள் பிரியமுள்ளவர்களாக விருப்பார்கள். இவர் டம்பமாகவும் விரைவாகவும் காரியங்களைச் செய்வார். பிறருக்கு உதவியைச் செய்யுந் தயாள குணத்தை யுடையவராவர். இவர் பெருந்தன்மையான புத்தியை யுடையவர். இவர் விசேஷமான மொழிச் சிறப்பு மொழி ஆகிய இவற்றை அதிகமாகச் சொல்லுவார். ஆபத்திலிருக்கின்றோம் என்று சொல்லுகின்ற சிலரைக் காப்பாற்றுவார்.

6. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உரப்பொடு புளிப்பி
[லிச்சை
வண்டிவா கனமு மேற்பன் மாற்றுனை லகுவில்
[வெல்வன்
கண்டித முரைப்பா னுகும் கடன்கொளான் தனமும்
[சேர்ப்பன்
பண்டு நாள்பூமி யில்லான் பார்பின்னுல் சேர்ப்பா னுகும்.

6. ஜாதகனுடைய தகப்பனர் நல்லதாயும் விசேஷமாயுமுள்ள சாப்பாட்டைச் சாப்பிடுவார். நல்ல போஜனத்தை அருந்துபவராவர். காரம், புளிப்பு உள்ள நல்ல :வஸ்துக்களின் மேல் பிரியமுள்ளவர். இவர் வண்டி வாகனம் ஆகிய இவற்றை யுடையவராவர். எதிரியை வெகு சுலபமாக ஜயித்து விடுவார். இவர் கண்டிப்பான வார்த்தைகளைச் சொல்லுவார். கடனை அடைய மாட்டார். பணத்தைச் சேர்த்து வைப்பார். பூர்விகமான நிலங்கள் இவருக்குக் கிடையா. இவர் தன்னுடைய பிற்காலததில் நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார்.

7. வாதநோய் உடைய னுகும் வளைவு நோய் சித்திர னுகும்
காதலி மார்கள் மோகன் கட்டு வார்த்தைகளும்
[சொல்வன்
நீதிவான் ரோமம் நீட்சி நிமிஷத்தில் கோபி யாவன்
சாதிப்பான் சிலது சங்கை தாமரை ரேகை யுண்டு.

7. ஜாதகருடைய தகப்பனர் வாய்வு ரோகத்தை யுடையவராவர். இவருக்கு வளைந்த நோயுண்டாகும். அஃதாவது முதுகு சீக்கிரம் வளைந்து போகக் கூடிய விசித்திரமான நோயுண்டாகும். இவர் ஸ்திரீகளிடத்தில்

மையல் என்ற காம ஆசையையுடைவராவர். இவர் பொய்யான புணைந்த வார்த்தைகளையும் பழமொழிகளையுஞ் சொல்லுவார். இவர் நியாய மார்க்கத்திலிருப்பவராவர். இவருக்கு உடம்பில் மயிர் நீண்டிருக்கும். இவர் சீக்கிரத்தில் கோபத்தை யுடையவராவர். இவர் சில காரியங்களைச் செய்து முடிப்பவராவர். இவருடைய உள்ளங் கையில் தாமரை ரேகை என்ற ஒருவித நல்ல ரேகை யுண்டு.

8. ஒருவர்சொல் விலைக்கு வாங்கி உய்குவான் சிலது
[நாட்கள்
பொருளது பெருக்கம் செய்வன் பிதுராஸ்தி காணு
[ணுகும்
மரு ஊரில் வாசம் செய்வன் மதுதொழில் சிலனாள்
[செய்வன்
அவமதில் யிச்சை யுண்டு ஆவுகள் பலித மென்றேம்.

8. ஜாதகருடைய தகப்பனூர் கொஞ்ச காலம் தரகு வேலை, கமிஷன் வேலையைச் செய்து ஜிவனஞ் செய்வார். இவர் செல்வத்தை அதிகப் படுத்துவார். இவருக்கு பிதுரார்ஜித சொத்து கிடையாது. இவர் வேறு கிராமத்தில் வாசஞ் செய்பவர். இவர் கொஞ்ச காலம் வரையிலும் கள் சாராய முதலிய லாகிரி வஸ்துக்களில் வியாபாரஞ் செய்வார். இவர் பயனில்லாத வீணான காரியங்களைச் செய்யப் பிரியமுள்ளவராவர். இவருக்குப் பசுக்கள் விருத்தியாகி நல்ல பால் காக்கும்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

9. சொன்ன யிக்குணத் தானுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான்
[உணச்சல் நீட்சி
கன்னென மொழியே சொல்வன் கல்வியு மிரண்டு
[கற்பன்
மன்னரால் சீவ னங்கள் மருவிடு மென்று சொல்வோம்.

9, இதுவரையிலுஞ் சொல்லப்பட்ட குணகுணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் அழகான தேகத்தை யுடையவர். நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் சக்கரையைப் போல இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவார். இரண்டுவித பாஷையில் வாசித்தவராவர். இவர் அரசர்களுடைய உதவியால் அஃதாவது இராஜாங்கத்தில் வேலையைச் செய்து ஜீவிப்பவராவர் என்று சொல்லுகின்றேம்.

10. சொல்லது பெருக்க மாகும் துறவிக்கு அன்ன மீவன்
மல்லின் முன்செல் லானுகும் மறுபாஷை கல்வி
[மேன்மை
எல்லேகள் சேர்ப்பா னுகும் யிடரென்றோர்க் குதவி
[செய்வன்
வல்லியர் மோக னுவன் மர்மத்தை வெளிக் காட்டாதான்.

10. ஜாதகர் வார்த்தைகளை அதிகமாக உபயோகப்படுத்துபவராவர். இவர் பரதேசிகளுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் சண்டையில் முன்னே போக மாட்டார். பிரவேசிக்க மாட்டார். இவர் அன்னிய பாஷையில் அதிகமான நல்லபடிப்பை யுடையவராவர். இவர் நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார். நாங்கள் கஷ்டத்தை யனுபவிக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரகத்தைச் செய்பவராவர். இவர் ஸ்திரீகளின் மேல் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். ரகசியத்தை வெளியே தெரிவித்துக் கொள்ள மாட்டார்.

## ஜாதகருடைய சகோதரபாவமும் சகோதரனுடைய குணுதிசயங்களும்

11. தன்துணை ஆண்பா லொன்று சத்திமார் யிருவ ராகும்
பின்துணை காணு னுகும் பேசின ஆண்பால் சேதி
பன்னுவோம் மங்கல ராசி பகர்திரி ஓண நாளாம்
தன்னிலே உதிப்பா னுகும் தைரிய மில்லா னென்றோம்.

11. ஜாதகருடன் பிறந்தவர்கள் ஒரு சகோதரனும், இரண்டு சகோதரிகளுமாவார். இவருக்கு இளைய சகோதரர் கிடையாது. இங்கு சொல்லப்பட்ட சகோதரருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் மங்கலன் என்ற அங்காரகனுடைய ராசிகளாகிய (மேஷம் அல்லது விருச்சிக ராசிகளில்) ஒன்றில்* ஓண நாள் என்ற திருவோண நட்சத்திரத்தில் பிறந்தவராவர். இவர் தைரியத்தை யுடைய மனத்தை யுடையவரல்லர் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—இளைய சகோதர விஷயம் :—இளைய சகோதர ஸ்தானம் மூன்ருவது வீடாகிய விருச்சிகமாகும். இதைச் சனியும் சூரியனும் பார்ப்பது தோஷமாகும். சகோதர ஸ்தானுதிபதியுமாகிய அங்காரகனைச் சனி பத்தாம் பார்வையுடன் பார்ப்பது இளைய சகோதர தோஷமாகும். சனி சூரியன் இவர்கள் மூன்ருவது வீட்டுச் சம்மந்தத்தை அடைந்திருக்கும் விஷயமாக சம்பு ஹோரா பிரகாசிகாவில் சகஜ பாவத்தில் ஐம்பத்தேழாவது (57-ஆவது) ஐம்பத்தெட்டாவது (58-ஆவது) சுலோகங்களைப் பார்க்கவும்.

12. வித்தையு மிரண்டு உண்டு விவேகியாம் யூகை சாலி
பத்தினி நேய ஞகும் பாரபட் சங்கள் பேசான்
குத்தத்தை மனதில் வையான் கொடுமையை யெவர்க்கு
[மெண்ணுன்
வெத்தி சொல்லுடைய ஞகும் வேந்தர் பாலணுகி
[வாழ்வன்.

12. ஜாதகருடைய சகோதருக்கு இரண்டு பாஷையில் வாசிப்புண்டு. இவர் அறிவுடையவராவர். நல்லது கெட்டது என்று பகுத்தறிகின்ற நுட்பமான புத்தியை யுடையவராவர். இவர் தன்னுடைய மனைவிக்கு இஷ்டமானவராகி விருப்பார். இவரும் மனைவியிடம் விசுவாச முடையவராக விருப்பார். இவர் ஒருவர் பக்கமாகவே பேச மாட்டார். இவர் தன்னுடைய மனத்தில் கெடுதியான எண்ணத்தை வைத்துக் கொண்டிருக்க மாட்டார். இவர் யர்ருக்கும் கெடுதியை நினைக்க மாட்டார். இவர் சொல்லுகின்ற வார்த்தை மதிப்பை யுடையனவாக் விருக்கும். இவர் அரசர்களிடத்திலணுகி ஜீவனஞ் செய்வார்.

13. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பால் ரெண்டு
காரிழை மார்கள் அவ்வாறு கழறுவோம் தீர்க்க மாக
மாரனும் வறுமை காணுன் வளர்பிறை போலே யோகம்
கூறுவோம் வயது தீர்க்கம் குஞ்சர நடையு மாவன்

13. ஜாதகருடைய சகோதரருக்கு ஒரே ஒரு மனைவி யுண்டு. இவருக்கு இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். இவர் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டார். இவருக்கு யோகம் வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் விருத்தி யடையும் என்று சொல்லுகின்றோம். இவர் தீர்க்காயுளை யுடையவராவர். இவர் யானையைப் போன்ற கம்பீரமான நடையை யுடையவராவர்.

## ஜாதகருடைய சகோதரிகளின் குணாதிசயங்கள்

14. கன்னிமார் சேதி சொல்வேன் கணவனுக் கினிய ளாகும்
பொன்பணி அதிகம் சேர்ப்பள் பூமியில் வறுமை காணுள்
தன்னுடல் பலஹீ னத்தாள் சாதமு மன்பா யீவள்
முன்கோபி யுடனே தாழ்வு முயர்வான புத்தி யேற்பள்.

14. ஜாதகருடைய சகோதரிகளின் விஷயங்களைச் சொல்லுகின்றேன். ஒருவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாக விருப்பாள். பணத்தையும் ஆபரணங்களையும் அதிகமாகச் சேர்த்து வைப்பாள். இவள் தரித்திரம் கஷ்டம் ஆகிய இவற்றை அநுபவிக்க மாட்டாள். இவளுடைய தேகம் பலஹீனமாக விருக்கும். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியத்

துடன் போடுவாள். இவள் முன் கோபத்தை யுடையவளாவள், ஆனல் இவளுடைய கோபம் உடனே தணிந்து போய் விடும். இவள் மேன்மை யான அறிவை யுடையவளாவள்.

15. பாலர்கள் ஆண்பா லொன்று பகருவோம் தீர்க்க மாக
நீலிமார் ஒன்றே தீர்க்கம் நிலைக்காது மற்ற தெல்லாம்
ஞாலமேல் நல்லோ ளாவள் நடைநன்மை வயது [தீர்க்கம்
ஆலம்போல் பித்தச் சூடு அணுகிடு மென்று சொல்வோம்.

15. ஜாதகருடைய சகோதரிக்கு ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மற்றக் குழந் தைகளெல்லாம் சீக்கிரத்தில் இறந்து போய்விடும். இவள் பூமியில் நல்ல வளாக் விருப்பாள். இவள் நல்ல நடத்தை யுடையவளாவள். இவளுக்குத் தீர்க்காயுளுண்டு. இவளுக்கு விஷத்தைப் போன்ற ஒரு கெட்டபித்தச் சூட்டு ரோகம் வந்து சம்பவிக்கும் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் இரண்டாவது சகோதரியின் குணுதிசயங்கள்

16. பின்துணை கன்னி சேதி பேசுவோம் கல்வி மானும்
தன்னுடல் மெலிவு முண்டு சாந்தவாள் சிவந்த மேனி
கன்னிக்கு வடகீழ் மாரன் காளைகள் ஆண்பால் ரெண்டு
தன்னிலே பெண்பா லவ்வாறு சாற்றுவோம் தீர்க்க மாக,

16. இவளுக்கு இளையவளான சகோதரியின் விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவள் வாசித்தவளாவள். இவளுடைய தேகம் மெலிந்து ஒல்லியாக விருக்கும். இவள் சாந்தமான குணத்தை யுடையவளா வள். இவள் சிவப்பு நிறமுடைய தேகத்தை யுடையவளாவள். இவளுக் குப் புருஷன் வடகிழக்குத் திக்கிலிருந்து வருவான். இவளுக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம்.

17. வறுமை யெப்போதும் காணுள் வன்மையாய் குடும்ப [மேற்பள்
திருமகள் வாச மெய்தும் சீலியாம் நற் குணத்தாள்
குறையென் றோர்க் குதவி செய்வள் கொடுமையை [யெவர்க்கு மெண்ணுள்
அரிவைக்கு வயது தீர்க்கம் அடிசிலுக் கினிய ளாமே.

17. இரண்டாவது சகோதரி எப்போதும் தரித்திரத்தையுங் கஷ்டங் களையும் அநுபவிக்க மாட்டாள். இவள் வலிவான, மேன்மையுள்ள குடும்பி யாக விருப்பாள். இவளுடைய வீட்டில் லக்ஷ்மி வாசஞ் செய்வாள்.

இவள் சுத்தமாகவும் நல்லொழுக்கம் உடையவளாகவு மிருப்பாள். நல்ல குணத்தையு முடையவளாவள். நாங்கள் கஷ்டப்படுகின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் யாருக்கும் தீங்கை நினைக்க மாட்டாள். இவள் தீர்க்காயுளை யுடையவளாவள். இவள் நன்றாகவும் இனிமையாகவும் இருக்கும்படியான சமையலைச் செய்பவளாவள்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

18. இன்னமும் விபரமாக வியம்புவோம் பின்பால் சேதி
அன்னையின் குணத்தைச் சொல்வோம் அல்பமாம்
[கோபம் கொஞ்சம்
பன்னியே பேசு வாளாம் பணிந் தோரை ஆதரிப்பள்
பொன்னிறம் உணச்சல் நீட்சி பொருந்திடும் சரத்தில்
[நோயும்.

18. இரண்டாவது சகோதரியைப் பற்றிய விஷயங்களை இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் அற்பமான விஷயங்களைப் பற்றிச் சிறிது கோபத்தை யுடையவளாவள். இவள் திறமையாகப் பேசக் கூடியவளாவள். இவள் தன்னை வணங்குகின்றவர்களைக் காப்பாற்றுவாள். இவள் பொன்னைப் போன்ற ஒருவிதமான மஞ்சள் நிறத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். இவள் மெலிந்து நீண்டுள்ள தேகத்தை யுடையவள். இவள் சுவாச நோயை யுடையவளாவள்.

19. குணமது யிரண்டு முண்டு கொடுமையை யெவர்க்கு
[மெண்ணாள்
பணம்பணி பிரிய மாவள் வார்த்தையு மதிக முண்டு
வனிதையும் யோக சாலி வருவோரை ஆத ரிப்பள்
துணைவர்கள் ஆண்பால் ரெண்டு தோகையு மவ்வாறு
[தீர்க்கம்

19. ஜாதகருடைய தாயார் நல்லதும் கெட்டதும் கலந்துள்ள குணத்தையுடையவளாவள். இவள் யாருக்குந் தீமையை நினைக்க மாட்டாள். இவள் தனத்தின் பேரிலும் ஆபரணங்களின் பேரிலும் ஆசையை யுடையவளாவள். இவள் அதிகமான வார்த்தைகளை உபயோகப்படுத்துவாள். இவள் யோகத்தை யுடையவளாவள். தன்னிடத்திற்கு உதவிக்காக வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். இவளுக்கு இரண்டு சகோதரர்களும் இரண்டு சகோதரிமார்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள்.

20. வறுமைக ளுடைய ளாவள் மைந்தனு முதித்த பின்பு
திருகிலா மூவைந் தாண்டும் சிறப்பிலா வாழ்வா ளாகும்
பெருமையும் புகழு முண்டு பேசின ஆண்டின் மேலாய்
பிறைபோலே செல்வ மோங்கும் பேசுவோம் பின்பால்
[சேதி.

20. ஜாதகருடைய தாயார், ஜாதகர் பிறந்தது முதற் கொண்டு பதிளைந்து வருஷங்கள் வரையிலும் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிப்பாள், செல்வ மிராது, மேன்மை கிடையாது. இதற்குப் பிறகு மேன்மையும் கீர்த்தியு முண்டாகும். வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் தனமும் சம்பத்துக்களும் அதிகப்படும். மற்ற விஷயங்களைப் பற்றி இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

21. மாதுரு முன் சென்மத்தை வரைகிறோம் தாயே கேளு
சேதுக்கு வட பாலாக தேவியின் நகரம் தன்னில்
ஓதுவார் குல முதித்து உயர்வான குடும்பி யாகி
காதலி வாழ்ந்துமே தான் காலன் தன்நா டடைந்து;

21. ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்; பார்வதியம்மையே! கேட்பீராக சேது ஸ்தலத்திற்கு வடக்கேயுள்ள தேவிப் பட்டணத்தில் வேதங்களை ஓதுகின்ற பிராமண ஜாதியிற் பிறந்து மேன்மையான ஒரு குடும்பத்தை யுடையவளாகி வாழ்ந்து இறந்து எமபட்டணத்திற்குச் சென்று;

22. சிரநான்கோன் வரையப் பட்டுச் செனித்தன ளென்று
[சொல்வோம்
பராசரும் தடுத்துச் சொல்வார் பாவைமுன் சென்மம்
[தன்னில்
மறைகுல முதித்தா ளென்றீர் மாதுயிச் சென்மம்
[தன்னில்
குறைவான குலமு திக்கும் கொடுமையைச் சொல்லு
[மென்ன

22. நான்கு தலைகளையுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தாயார் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். உடனே பராசர மஹரிஷி தடுத்துக் கேட்கின்றார். இவள் முன்ஜன்மத்தில் பிராமண ஜாதியில் பிறந்தாள் என்று சொன்னீரே! இந்த ஜன்மத்தில தாழ்ந்த ஜாதியில் பிறக்கவேண்டிய காரணத்தைச் சொலலுவீர் என்று கேட்கவே;

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

23. முன்சென்மம் விரதம் தன்னை முட்டுகள் செய்த தாலே
அன்னவ ளுதித்தா னென்றோம் அறைகிறோ மிவள்பின் [சென்மம்
துன்னு மாபலியிலே தான் தோன்றுவாள் சைவ [சேயாய்
கன்னிகை யிச்சென் மத்தில் கணவன்சொல் தடுத்த [தொன்று.

23. ஜாதகருடைய தாயார் தன்னுடைய முன் ஜன்மத்தில் விரதங்களை அநுஷ்டித்ததில் சில தவறுதல்களையும் குற்றங்களையுஞ் செய்ததாலே இந்த ஜன்மத்தில் இவ்விதமாகப் பிறந்தாள் என்று சொன்னோம். இனிமேல் இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவள் மஹாபலிபுரத்தில் சைவ ஜாதியில் பெண்ணாகப் பிறப்பாள். இவள் இந்த ஜன்மத்தில் தன்னுடைய புருஷனுடைய வார்த்தைகளைத் தடுத்தது ஒரு தோஷமாகும்.

24. சிலருக்கு நஷ்ட மெய்தும் சைவமாம் குலத்தி லெவ்வாறு
குலவுவாள் காரணம் சொல் கோதையு மிச்சென்மம் [தன்னில்
நிலையிலார்க் கன்ன மீந்து நேமியில் விரதம் பூண்டும்
பலதல வாசம் சென்று பாவையும் வாழ்வ தாலே;

24. ஜாதகருடைய தாயார் சிலருக்கு நஷ்டத்தை யுண்டுபண்ணினாள். ஆகையால் இவள் எவ்விதமாகச் சைவ ஜாதியில் மறு ஜன்மத்தில் பிறப்பாள், இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர். இவள் இந்த ஜன்மத்தில் நிலையில்லாத அந்தஸ்தை யுடையவர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டும், விரதங்களை அநுசரித்தும், அநேக தெய்விகமான ஸ்தலங்களுக்குப் போய் வாழ்ந்ததாலே

## ஜாதகரின் தகப்பனாருடைய முன்ஜன்மம்

25. உதிப்பளா மென்று சொல்வோம் உரைக்கிறோம் தந்தை [பூர்வம்
பதியினில் உயர்வ தான தற்பரம் குன்றி லேதான்
சதிசெய்யும் வைசியச் சேயாய்ச் செனித்துமே வாழும் [நாளில்
மதிபிறை அணிந்தோன் பூசை மலர்களை மெரித்த [லொன்றும்.

25. ஜாதகருடைய தாயார் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஸ்தலங்களுக்குள்ளே சிறந்த ஸ்தலமாகிய திருப்பறங்குன்றம் என்ற க்ஷேத்திரத்தில் சைவ ஜாதியில் ஆணுகப்பிறந்து வாழ்கின்ற காலத்தில் சந்திரனைத் தன்னுடைய ஜடையில் தரித்துக்கொண்டுள்ள சிவபெருமானுக்குப் பூஜைக்காக உபயோகப்படுத்திய புஷ்பங்களை மிதித்த தோஷம் ஒன்றுகும்.

26. அன்னைமே லபவாதங்கள் பேச அம்மாது வறுத்த [முற்றுச்
சொன்ன சாபத்தைக் கேண்மோ தோன்றும் பின் [சென்மம் தன்னில்
உன்தந்தை ஆஸ்தி யின்றி உலகமேல் சஞ்ச ரித்து
தன்னுடல் வாயு பாதை தங்கிடு மதுவல் லாமல்;

26. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய தாயாராரின் பேரில் நிந்தைகளைச் சொல்லவே, இவள் மனத்தில் கஷ்டத்தையடைந்து கொடுத்தச் சாபத்தைச் சொல்லுகின்றோம், கேட்பீராக, "நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் உன்னுடைய பிதிரார்ஜித சொத்தில்லாமல் பூமியில் திரிந்தலைந்தும் உன்னுடைய தேகத்தில் வாய்வு ரோகத்தை யடைந்தும் வாழக்கடவது" இதுவுமன்றி;

27. இன்னமும் பலவார் சொன்னுள் யெய்திற்று அந்தச் [சாபம்
அன்னவன் அந்தியத்தில் அதிதிகட் கன்ன மீந்து
உன்னத தலங்கள் சென்று உறைந்தனன் கால னுடு
பொன்னவன் வரையப்பட்டுப் பிறந்தன னென்று [சொல்வோம்

27. இன்னமும் பலவிதமான சாபங்களையுங் கொடுத்தாள். இந்தச் சாபங்கள் ஜாதகருடைய தகப்பனுருக்கு இந்த ஜன்மத்தில் வந்து சம்பவித்தன. இவர் முன்ஜன்மத்தின் கடைசி காலத்தில் பரதேசிகளுக்குச் சாப்பாட்டைப் போட்டும், மேன்மையான ஸ்தலங்களுக்கும் போய், பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர் என்று சொல்லுகின்றோம்.

28. ஆகையால் யிச்சென் மத்தில் அவன்தந்தை யாஸ்தி [காணுன்
தோகைவேறு சேர்ந்து மத்தில் செல்லுவாள் கால னுடு
பாகமாய் வாயுப் பீடை படருமே யென்று சொல்வோம்
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

28. ஆகையால் ஜாதகருடைய தகப்பனுர் இந்த ஜன்மத்தில் தன்னுடைய பிதாவின் ஆஸ்தியை யடையமாட்டார். இவருக்கு ஒரு ஸ்திரீயின் சம்மந்தம் உண்டாகி இவள் இவருடன் வாழ்ந்து, இவருக்கு மத்திய வயதில் இவள் இறந்து போய் விடுவாள். இவருக்கு வாயு ரோகம் ஏற்பட்டு அதிகப்படும் என்று சொல்லுகின்ருேம். ஆனந்தத்தை விளைவிக்கக் கூடிய கடலையும் நாகலோகத்தையும் உடைய பூமா தேவியைப் பெற்றெடுத்தப் புண்ணிய மாதாவாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

29. தென்முனி புகலு கின்ருர் சேர்மாது ஒன்று வென்றீர்
அன்னவள் தனக்குப் புந்திரர் அறிவிப்பீர் முனியே [நீர்தாம்
மன்மதன் போலே ஆனென்று மருவிடும் தீர்க்க மாக
அன்னவன் தனுசு ராசி அவிட்டனுள் தோன்று வானும்.

29. தென்முனியாகிய அகஸ்திய மஹரிஷியானவர் கேட்கின்ருர். ஜாதகருடைய தகப்பனுருக்கு வைப்பாட்டி, அஃதாவது அபிமான மனைவி ஒருத்தி உண்டு என்று சொன்னீரே! இவளுக்குண்டான குழந்தைகளைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்டார். இவளுக்கு மன்மதனைப்போல் அழகான ஓர் ஆண் குழந்தை உண்டு. இக்குழந்தை நீண்ட ஆயுளையுடையதாக விருக்கும். இந்தக் குழந்தை தனுர் லக்கினத்தில் அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்த குழந்தையாகும்.

## அபிமானபுத்திரருடைய குணுதிசயங்கள்

30. கல்வியு மல்ப மாகும் கபடில்லான் சோம்பல் கொஞ்சம்
புல்லிய புத்தி யுண்டு பூமிபால் சீவிப் பானும்
தல்லியின் சுகமில்லா தான் தந்தையின் உதவி யாலே
வல்லவன் உய்வா ஞகும் மாரனும் சமயோ கத்தான்.

30. அபிமான புத்திரர் சிறிது வாசிப்பை யுடையவராவர். இவர் வஞ்சனை கள்ளம் ஆகிய இவற்றை யுடையவரல்ல. இவர் சிறிது சோம்பலை யுடையவராவர். இவருக்கு இழிவான:தாழ்ந்த புத்தியுண்டு. இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்பவராவர். இவர் தன்னுடைய தாயாருடை சுகத்தை அநுபவிக்காதவராவர், அஃதாவது தன்னுடைய தாயார் சீக்கிரம் இறந்துவிடுவாள். இவர் தன்னுடைய தகப்பனுருடைய சகாயத்தினுல் ஜீவிப்பவராவர். இவர் நடுத்தரமான யோகத்தை யுடையவராவர்.

31. பாரியு மொன்றே யுத்திரம் பகருவோம் சுதராண் ஒன்று
காரிழை மார்கள் ரெண்டு கழறுவோம் தீர்க்க மாக
மாரனும் சிலனுள் சென்று வேருவன் பின்பால் [சொல்வேன்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

31. அபிமான புத்திரருக்கு ஒரே மனைவி யுண்டு, இவள் வடக்கி லிருந்து வருவாள் என்று சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு பிள்ளையும் இரண்டு பெண்களும் நீண்ட வயதை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். இவர் சில காலம் கழித்த பிறகு வேறு குடும் பமாகப் போய் ஜீவிப்பார். இவருடைய மற்ற விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாவத்தில் சொல்லுகின்றேன். ஆறுமுகங்களையுடைய முரு கக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

32. தந்தைபின் சென்மம் சொல்வேன் தாம்பிர பரணி
[தன்னில்
முந்தின குல முதிப்பான் மொழிகுவார் பிருகு தானும்
அந்தவ னிச்சென் மத்தில் அல்ப வஸ்துக்க ளருந்தி
தந்தனம் ஆசை யாயும் தன்சொல்லு மிரண்டு மாயும்.

32. ஜாதகருடைய தகப்பனுரின் பின் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்றேன். இவர் தாம்பரபரணியின் கரையில் பிராமணர் குலத்திற்போய் ஆணுகப் பிறப்பார். உடனே பிருகு மஹரிஷி கேட்கின்ருர். இவர் இந்த ஜன்மத்தில் இழிவான வஸ்துக்களைச் சாப்பிட்டும், பணத்தின்மேல் ஆசை யை யுடைவராயும், உண்மையையும் பொய்யையும் கலந்து பேசுபவராயு மிருந்து;

33. பொய் மெய்யாய்ப் புகல்வன் யிங்கு பிராமணகுல
[மெவ்வாறு
உய்வகை விபரம் சொல்வாய் உத்தம னிச்சென் மத்தில்
அய்யமே லிச்சை யாயும் ஆபத்தைச் சிலர்க்குக் காத்தும்
வையமேல் நல்லோ ஞயும் வருவோரை யாத ரித்தும்.

33. பொய்யை மெய்யென்று சொல்லியும் வாழ்ந்தவருக்கு எவ்விதம் பிராமண ஜாதி கிடைக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்க, இவர் இந்த ஜன்மத்தில் இரப்போருக்குப் பிச்சை கொடுப்பதில் பிரியமுள்ளவரா யும், ஆபத்துக்காலத்தில் சிலருக்கு உதவிசெய்து அவர்களைக் காப்பாற்றியும் பூமியில் இவர் நல்லவராகவுமிருந்துகொண்டு தன்னிடம் உதவிக்காக வரு பவருக்கு உபகாரஞ் செய்துகொண்டும்;

## ஜாதகரின் தாய்தகப்பனுர்களின் மரணகாலம்

34. தேவதா பக்தி யாயும் தீரனும் வாழ்வ தாலே
மேவுவான் மறைக்கு லத்தில் விளம்புவீர் கரும காலம்
ஆவலாய் முப்ப தாண்டில் அறைகுருேம் தந்தை
[கண்டம்
தாவிய முப்பா ஞறில் தாய்க்குமே கெண்டமெய்தும்.

34. தெய்வங்களின்மேல் அன்புடையவராயும் இருந்துவாழ்வதாலே இவர் பிராமணர் ஜாதியில் போய்ப் பிறப்பார், இனிமேல் தாய் தந்தையர்களுடைய கர்ம காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். ஜாதகருக்கு முப்பதாவது வயதில்* இவருடைய தகப்பனர் இறந்துபோய்விடுவார். ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில்* இவருடைய தாயார் இறந்துபோய்விடுவாள்.

*குறிப்பு :—வியாக்கியம் :—தகப்பனருடைய மரணகால விஷயம் :—ஜாதகருக்கு முப்பதாவது வயதில் சனி மகாதசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது (46-ஆவது) சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். இவரைச் சனி பத்தாம் பார்வையுடன் பார்க்கின்ருர். சுக்கிரன் பிதுர் லக்கினுதிபதி யாகின்ருர். ஆகையால் துய்யகேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது; இருபதாவது, பதினுன்காவது பாடல்கள் பிரகாரமும் ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகப் பிரகாரமும் சனி பிதுருக்குத் தன் தசையில் மாரகத்தைச் செய்ய அதிகாரமுடையவராக விருக்கின்ருர். ஆகையால் இங்கு சனி தசையில் பிதுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—மாதுர் மரணவிஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில் புத தசை நடக்கின்றது. மாதுர் லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். தனுசு லக்கினத்திற்கு சந்திர காவியம் பிரகாரமும் சில கிரந்தங்கள் பிரகாரமும், ஏழிற்குடைய புதன் கேந்திராதிபத்திய தோஷத்தால் மாரகராக வாகின்ருர். ஆகையால் இங்குப் புத தசையில் மாதுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் விவாக காலமும் மனைவியின் குணுதிசயங்களும்

35. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் யீரொன் [பாண்டில்
நீலியும் அன்னை வாக்கம் நேருவாள் குணத்தைக் [கேண்மோ
சீலியாம் சிவந்த மேனி தேரின புத்தி யுண்டு
மால்மனை ஒப்ப தாகும் மங்கள வார்த்தை யுண்டு.

35. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவருக்குப் பதினெட்டாவது வயதில் *தாயாருடைய வம்சத்திலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்ருேம், கேட்பீராக. இவள் சுத்தமானவள், நல்லொழுக்க

முள்ளவள். சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவள், இவள் மேன்மையான சிறந்த அறிவை யுடையவளாவள். இவள் மகாவிஷ்ணுவின் மனைவியாகிய லக்ஷிமிக்குச் சமானமானவளாவள், இவள் மங்களகரமான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவாள்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—விவாக விஷயம்:—ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில் சனி தசை நடக்கின்றது. இந்தச் சனி களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீடாகிய மீனத்தைப் பார்க்கின்றார். இரண்டு ஒன்பதிற்குடையவரான சுக்கிரனையும் பார்க்கின்றார். சுக்கிரன் களத்திரகாரகராகின்றார். ஆகையால் ஜாதக பாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம் சனி தன் தசையில் விவாகஞ் செய்து வைக்க அதிகாரமுடையவராகினறார்.

36. அன்னம் போல் சாயலுண்டு அடாவடி கூறு ளாகும்
அன்னமு மன்பா யீவள் அடிசிலுக் கினிய ளாகும்
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆபத்தென் றோரைக் [காப்பள்
கன்னிகை தீர்க்க சீவி கழறின மொழி குன்றாது.

36. ஜாதகருடைய மனைவி அன்னத்தைப் போன்ற அழகான தேகத்தை யுடையவளாவள். இவள் முரட்டுத்தனமாகவும் நியாயமில்லாமலும் பேசமாட்டாள். இவள் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள். இவள் சமையல் செய்வதில் கெட்டிக்காரியாக விருப்பாள், நல்ல இனிமையான கைப்பாகத்தை யுடையவளாக இருப்பாள். இவள் பிறர் மேல் நிந்தையாகப் பேசமாட்டாள். கஷ்டத்தை அநிபவிக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களைக் காப்பாற்றுவாள். இவள் தீர்க்காயுளை யுடையவளாவள். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப்போகாமல் நடக்கும்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

37. சுதர்களும் ஆண்பால் மூன்று தோகையு மிரண்டு [யென்றோம்
இதுநான்கும் தீர்க்க மெய்தும் யிரண்டாறு நஷ்ட [மெய்தும்
எதுசுதர் தோஷ மெய்து மிரண்டாறு நஷ்ட மெய்தும்
அதிதியே யிவன்முன் சென்மம் அறிவிப்போம் தாயே [கேளும்.

37. ஜாதகருக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் உண்டு என்று சொல்லுகின்றோம். இவர்களில் நான்கு பேர் நீண்ட ஆயுளையுடையவர்களாக விருப்பார்கள். இரண்டு குழந்தைகள் சீக்கிரத்தில் இறந்து போய்விடுவார்கள். எந்த குழந்தைகள் தோஷத்தை அடைவார்கள்

என்று கேட்கவே, இரண்டாவது ஆருவது கர்பங்கள் தோஷத்தை அடையும். பார்வதியம்மையே! ஜாதகருடைய முன்ஜனமத்தைப் பற்றிச் சொல்லுகினறோம். எங்கள் தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—மொத்தம் ஆறு கர்பமாகும். இதில் மூன்று ஆண்கள், இரண்டு பெண்கள் ஆகும். ஒனறு ஆண் பெண் என்று தெரியாத கர்ப்பச் சின்னம்போல விருக்கலாம். மொத்தத்தில் நான்கு பேர் தீர்க்காயுளே யுடையவர். இரண்டு பிறவிகள் நஷ்டத்தை அடையும்.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

38. குடதிசை கொங்கு தன்னில் குதித்தனன் செக்கா ஞக
திடமுள குடும்பி யாகித் தேவியு மதலை யுண்டாய்
அடைந் தோரை யாதரித்து அறமதில் யிச்சை யுண்டாய்
கடவுள் பக்தி யாகிக் காலன் தன்நாட டைந்து

38. மேற்குத்திக்கிலுள்ள கொங்கு நாட்டில் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் செக்காட்டும் வாணியராகப் பிறந்தார். வலிவான மேன்மையான குடும்பத்தை யுடையவராகி மனைவி மக்களை யுடையவராகியும், தன்னிடத்திற்கு வந்தவர்களைக் காப்பாற்றிக்கொண்டும், தர்மத்தில் பிரியமுள்ளவராயும், கடவுளின்பேரில் அன்புள்ளவராகவும் வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று,

## ஜாதகருடைய யோகபாவம்

39. மால்மகன் வரையப் பட்டு வருகு வானிக் குலத்தில்
பாலகன் யோகம் சொல்வேன் பாரது அதிகம் சேர்ப்பன்
சாலவே அரசர் மூலம் தானவன் உய்வா ஞகும்
சீலவா னென்று சொல்வோம் செயமுனி தடுத்துச்
[சொல்வார்.

39. மகாவிஷ்ணுவின் பிள்ளையாகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்த ஜாதியில் வந்து பிறந்திருக்கின்ருர் இந்த ஜாதகர். இவருடைய யோகத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் அநேக நிலங்களை வாங்கிச் சேர்த்துவைப்பார். இவர் அரசாங்கத்தில் வேலையிலிருந்து ஜீவிப்பார். இவர் நல்லொழுக்கங்களையும் சுத்தமான குணத்தையும் உடையவராவர் என்று சொல்லுகின்றோம். உடனே ஜய முனிவர் தடுத்துக் கேட்கிருர்.

40. எந்தக் காலத்தில் ராச யோகமு மெய்தும் சொல்வாய்
வந்தவன் யிருபான் யிரண்டு ஆண்டின்மேல் அரசு
[செய்வன்

பிந்தியும் அன்பான் மூன்று ஆண்டுக்கும் ராச யோகம்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்ருது.

40. ஜாதகருக்கு எந்தக் காலத்தில் ராஜயோகமுண்டாகும் என்பதைச் சொல்லுவீர்? ஜாதகர் தனக்கு இருபத்திரண்டாவது வயதிற்குப் பிறகு அரசாங்கத்தில் அதிகாரமான வேலையில் அமர்ந்து அதிகாரத்தைச் செலுத்துவார். பிறகு ஐம்பத்து மூன்ருவது *வயதுவரைக்கும் இவருக்கு ராஜயோகம் நடைபெறும். முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப்போகாமல் நடக்கும்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—யோகவிஷயம்:—ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயது முதல் ஐம்பத்து மூன்ருவது வயது வரையிலும் சனி, புதன், கேது இவர்களுடைய தசைகள் நடக்கின்றன. ஒன்பதிற்குடைய சுக்கிரனும், பத்திற்குடைய புதனும் பரிவர்த்தனை யடைந்து இருக்கின்ருர்கள். அஃதாவது ஒருவர் வீட்டில் மற்ருெருவர் இருக்கின்ருர். ஆகையால் தர்ம கர்மயோகம் ஏற்பட்டிருக்கின்றது. கோணுதிபதியாகிய சனி பாக்கியாதிபதியாகிய சுக்கிரனைப் பார்த்திருக்கின்ருர். இது விசேஷமானதாகும். கேது சுக்கிரனுடைய வீட்டிலிருக்கின்ருர். ஆகையால் சனி, புதன், கேது தசைகள் விசேஷமான தசைகளாகும்.

## ஜாதகருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

41. அறுபது வெட்டு ஆண்டில் ஆவணி மாதம் தன்னில்
குறை பக்கம் யேகாதசி குழவியி னுடலம் யேகும்
வரும்சென்மம் வள்ளூர் தன்னில் வருகுவனும் சைவச்சேயாய்
பெருவயி ேறுனைப் பெற்றப் புண்ணிய சாலி கேளாய்.

41. ஜாதகருக்குத் தனக்கு அறுபத்தெட்டாவது வயதில் ஆவணி மாதத்தில் தேய்பிறையில் ஏகாதசி திதி தினத்தில் மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்து மறைந்துபோய்விடும். இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில் திருவள்ளூரில் சைவகுலத்திற் போய்ப் பிறப்பார். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம்:—ஜாதகருடைய மரண விஷயம்:—ஜாதகருக்கு அறுபத்தெட்டாவது வயதில் சுக்கிரதசை நடக்கின்றது. சுக்கிரன் இரண்டாவது மாரக ஸ்தானத்திற் குடையவராகி அஷ்டமாதிபதியாகிய அங்காரகனுடன் கூடியிருக்கின்ருர். துய்யகேரளம் எட்டாம்பாவம் பன்னிரண்டாவது; இருபதாவது பாடல்கள் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். ஆகையால்

இங்குச் சுக்கிர தசையில (ஜாதகருக்கு) மாரகஞ் சொலலப் பட்டிருக்கின்றது.

42. பிறந்திடு காலம் தன்னில் பூரட்டாதி யிரண்டாம் பாதம்
குருதசை பதினோ ராண்டும் கூடிய திங்கள் மூன்றும்
உரைத்தனம் பூர்வ பாகம் உரைத்ததில் பிழைகள் யாவும்
பொறுத்திட வேணு மம்மா புண்ணிய வதியே கேளாய்,

42. ஜாதகர் பிறக்கும் காலத்தில் பூரட்டாதி நட்சத்திரத்தில் இரண்டாவது பாதம் ஆகும். இதற்குரிய குரு மகா தசை இருப்பு பதினொன்று வருஷங்களும் மூன்று மாதங்களும் ஆகும். இவ்விதமான முதல் பாகத்தைச் சொல்லி முடித்து விட்டோம். நாங்கள் சொல்லியதில் ஏதாவது குற்றங்களோ தவறுதல்களோ பிழைகளோ இருந்தால் அவற்றைப் பொருத்தருள வேண்டும், புண்ணிய சாலியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

C. G. R.



# ஜாதகம் 23

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதிகேது கன்னியாக [2]மால் [3]புகர் [4]பரிதி [5]பொன்னோன்
[6]துதியத்தில் [7]கர்ரி [8]சேயும் சேர்ந்திடம் [9]மான தாக
ததி [10]கயர் மீன மாகச் சென்மமும் கன்னி யாக
இதுபலன் யெவ்வா றென்று யீஸ்வரி கேட்கும் போது.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சந்திரனும் கேதுவும் கன்னியிலும், புதனும் சுக்கிரனும் சூரியனும், குருவும் இரண்டாவது வீடாகிய துலாத்திலும், சனியும் அங்காரகனும் மகரத்திலும், ராகு மீனத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருப்பதால் பலாபலன்களைச் சொல்லுவீரே என்று பார்வதியம்மையார் கேட்கும் போது,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| ராகு | | | |
| | இராசி சக்கரம் | | |
| சனி அங்காரகன் | | | |
| | | சூரியன் புதன் குரு சுக்கிரன் | லக்கினம் சந்திரன் கேது |

அஸ்தம் 2-ஆம் பாதம் சந்திர தசை இரு 6—0—0.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்கும் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—ரிஷபத்தில் சந்திரனும், அங்காரகனும் கேதும் மிதுனத்தில் சனியும், துலாத்தில் புதனும், விருச்சிகத்தில் ராகுவும், தனுசில் சூரியனும், மீனத்தில் குருவும் சுக்கிரனும் ஆகும். சனி வக்கிர கதியிலிருக்கின்றார். புதனும் குருவும் அஸ்தங்கதத்திலிருக்கின்றார்கள்.

---

1. சந்திரன்
2. புதன்
3. சுக்கிரன்
4. சூரியன்
5. குரு
6. இரண்டு, துலாம்
7. சனி
8. அங்காரகன்
9. மகரம்
10. ராகு

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. அத்திரி புகலு கின்ருர் ஆணது செனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேல்வாடை வடதென் வீதி
பத்திர காளி தென்மேல் பரமனும் கீழ்பா லாகும்
அத்தியும் தென்பா லாகும் அரசர்கள் வடபா லாகும்.

2. அத்திரி ரிஷி சொல்லுகின்ருர். ஆண் குழந்தை பிறக்கும். இக் குழந்தை பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேன். இது வடக்குத் தெற்குத் தெருவில் மேலண்டை வாடையிலிருக்கும். பத்திரை காளியம்மன் கோயில் தென் மேற்குத் திக்கிலிருக்கும், சிவபெருமானுடைய கோயில் கிழக்குத் திக்கிலிருக்கும், விநாயகருடைய கோயில் தெற்கிலிருக்கும், அரசர்கள் வடக்குத் திக்கிலிருப்பார்கள்.

3. பலதேசர் அவ்வூர் வாசம் பகுத்ததோர் செட்டு ஓங்கும்
பலமுள ஊரே யாகும் பலசாதி வாச மாகும்
குலவிய அடையா ளங்கள் குறித்தனம் வீர சைவ
தலைவனு முதிப்பா ருகும் சங்கரி கேட்டி டாயே.

3. அநேக தேசத்தார்கள் இந்தப் பட்டணத்தில் வாசஞ் செய்வார்கள். பெரிய பெரிய வியாபாரங்கள் இந்தப் பட்டணத்தில் நடந்து கொண்டிருக்கும். இது ஒரு வலிவான பெரிய ஊராகும் பட்டணமாகும். இதில் அநேக ஜாதி ஜனங்கள் வர்சஞ் செய்வார்கள். இவ்விதமான அடையாளங்களை யுடைய ஒரு பட்டணத்தில் வீரசைவ ஜாதியில் ஜாதகர் பிறப்பார். பார்வதி யம்மையே! கேட்பீராக.

4. இன்னவன் செனன யோகம் யெழில் பெரும் தந்தை [யோகம்
அன்னையின் துணைவர் யோகம் அவன்மனை புத்திர [யோகம்
முன்பின் சென்மங்கள் யாவும் அரைக்கிருே மிந்நூல் [தன்னில்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

4. ஜாதகருடைய ஜனன காலத்திய யோகம், தகப்பனுருடைய யோகம் தாயாருடைய சகோதரர்களின் யோகம், ஜாதகருடைய மனைவி மக்கள் ஆகிய இவர்களுடைய யோகம், முன் ஜன்மம், பின் ஜன்மம், ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் நாங்கள் சொல்லுகின்றோம். சர்க்கரையைப் போன்ற இனிப்பான வார்த்தைகளை உபயோகப்படுத்து கின்ற பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவமும் குணாதிசயங்களும்

5. தாதைக்குத் தார மிரண்டில் தழைத்திடும் முதல்மா
[தீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்து வோமிவனின்
[தந்தை
போதவே துணைவர் காணுன் புகலுவோம் பிதா
[குணத்தை
நீதிவான் கணக்கில் யூகி நிதானமாய் வார்த்தை
[கூறுவன்.

5. ஜாதகருடைய தகப்பனுர், தன்னுடைய தகப்பனுருக்கு இரண்டு மனைவிமார்களில் முதலாவது மனைவி பெற்ற குழந்தையாவர். இவருக்குச் சகோதரர்கள் கிடையா. தகப்பனுருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றேம். இவர் நியாயமாக விருக்கக் கூடியவர். கணக்குப் போடுவதில் நுட்பமான அறிவை யுடையவர். இவர் சாந்தமாகவும் மெதுவாகவும் பேசுபவராவர்.

6. சங்கரன் பூசை பூண்பன் சண்முகன் பக்தி கொள்வன்
மங்கையர் மோக னுவன் வணிபங்கள் செய்வா னுகும்
சிங்காரம் செய்வா னுகும் தேரின புத்தி யுண்டு
சங்கையா மனத்த னுகும் தன் பந்தை யாதரிப்பன்

6. ஜாதகருடைய தகப்பனுர் சிவபெருமானைப் பூஜை செய்வார். இவர் முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். வியாபாரங்களைச் செய்வார். இவர் தன்னை அலங்காரஞ் செய்து கொள்ளுவார். நல்ல முதிர்ந்த அறிவை யுடையவராவர். இவர் சந்தேகமுள்ள மனத்தை யுடையவராவர். தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார்.

7. ஆதியில் ஒருவர் பாலில் அணுகியே உய்வா னுகும்
பாதியின் வயது மேலாய் பலதூசு செட்டு செய்வன்
சூதுகள் சிலர்க்குச் செய்வன் சொல்லதைக் காப்பா
[னுகும்
காதியு முடைய னுகும் கனதனம் பணிகள் சேர்ப்பன்.

7. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முற்காலத்தில் ஒருவரிடத்தில் வேலை செய்து ஜீவிப்பவராவர். இவருக்குப் பாதிவயதிற்குப் பிறகு இவர் பலவிதமான துணி வகையருக்களின் ஜவுளி வியாபாரத்தைச் செய்வார். இவர் சிலரை ஏமாற்றுவார். தன்னுடைய வார்த்தைகள் பிரகாரம்

நடந்து கொள்ளக் கூடியவர். இவர் புகழை யுடையவராவர். அதிகமான பணத்தையும் ஆடையாபரணங்களையும் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார்.

8. இன்னவன் செங்கை தன்னி லிலகிடும் கோதுமை
[ரேகை
பொன்னது கொடுக்கல் வாங்கல் புகழ்சோலை பூமி
[சேர்ப்பன்
அன்னியர் மதிக்க வாழ்வன் அடாபிடி கூறு ணுகும்
தின்மையாய்ப் பித்தச் சூடு தோன்றிடும் வறுமை
[காணுன்.

8. ஜாதகரின் தகப்பனுருடைய சிவப்பு உள்ளங்கையில் கோதுமை ரேகை இருக்கும். இவர் பணத்தைக் கொடுப்பதும் வாங்குவதுமான லாவா தேவியை யுடையவராவர். புகழப்பட்ட சிறந்த தோப்புக்களையும் நிலங்களையும் வாங்கிச் சேர்த்து வைப்பார். இவர் தன்னைப் பிறர் மதிக்கும் படியான கௌரவமான அந்தஸ்தலிருந்து வாழ்வார். இவர் முரட்டுத்தன மாகவும் நியாயமில்லாமலும் பேச மாட்டார். இவருக்குப் பித்தச் சூட்டு நோய் வந்து சம்பவிக்கும். இவர் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அடையமாட்டார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மம்

9. இன்னவன் முன் சென்மத்தை யெடுத்து நாமுரைப்பக்
[கேண்மோ
கன்னியா குமரிதென் பால்கன மிலா சிறுவூர் தன்னில்
துன்மையாய் வடுகர் சேயாய் தோன்றியே செட்டு
[செய்து
தன்மனை மதலை யுண்டாய் தான்வாழ் நாள் வினையைக்
[கேண்மோ.

9. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்ருேம். கேட்பீராக. கன்னியா குமரிக்குத் தெற்கில் மேன்மையாக வில்லாத ஒரு சிறிய கிராமத்தில் வடுகர் ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறந்து வியாபாரத்தைச் செய்து கொண்டு மனைவி மக்களை யுடையவராகி யும் இவர் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்ருேம், கேட்பீராக.

10. தன்துணை பாகம் தன்னைத் தராமலே மோசம் செய்தான்
பின்னவன் மன வெறுப்பால் புகலுவான் சாபம் தானும்
கன்மன முடைய பாவி கலக்கும் பின்சென்மம் தன்னில்
உன் துணை யில்லாதாகி உறுந்தாயின் சுகமு மின்றி;

10. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய சகோதரனுடைய பாகத்தைக் கொடுக்காமல் மோசஞ் செய்து விட்டார். இதன் மேல் சகோதரர் தன்னுடைய மனத்தில் துன்பத்தை யடைந்து சாபத்தைக் கொடுத்தார். "இரக்கமில்லாத கொடிய மனத்தை யுடைய பாபியாகிய நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் சகோதரரில்லாதவராகியும் உன்னைப் பெற்ற தாயாரின் சுகமில்லாதவராகியும்;

11. தரணியில வாழ்வா யென்று தன்கரம் தெருத்தூள் தூத்த
உரைந்தது அந்தச் சாபம் வரைகிறேம் வேறு ஒன்று
குரைவோர்க்குக் கணக்கில் மோசம் குறித்தனம் அதுஓர் [தோஷம்
திருமகன் அந்தி யத்தில் சேதுவின் பதிக்குச் சென்று.

11. பூமியில் நீவாழக் கடவது" என்று சொல்லித் தன்னுடைய கைகளால் தெருவிலுள்ள மண்தூளை வாரி எடுத்துக் காற்றில் தூவினுர். இந்த சாபம் தகப்பனுரை வந்தடைந்தது. இன்னொரு சாபத்தையும் சொல்லுகின்றேம். கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றவர்களுடைய கணக்குகளில் மோசத்தைச் செய்தார். இது ஒரு தோஷமாக நேர்ந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் சேது ஸ்தலத்திற்குப் போய்;

12. காலன் தன் நாடடைந்து கஞ்சனுல் வரையப் பட்டு
சீலமாம் சைவ சேயாய்ச் செனித்தன னென்று [சொல்வோம்
ஆலம்போல் யிரண்டு சாபம் அணுகிடு மிச்சென் மத்தில்
சாலவே துணைவர் தோஷம் தாய்ச்சுக மில்லா ஞகும்.

12. பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவரால் எழுதப்பட்டுச் சுத்தமான நல்லொழுக்கமுள்ள சைவ குலத்தில் ஆணுகப் பிறந்தார் என்று சொல்லுகின்றேம். முன் ஜன்மத்திய இரண்டு சாபங்களும் பாம்பின் விஷத்தைப் போலக் கொடுமையாக வந்து இவருக்கு இந்த ஜன்மத்தில் சம்பவிக்கும். ஆகையால் இவருக்குச் சகோதர தோஷமுண்டாகும். தாய் சுகமும் கிடையாது. அஃதாவது தாயார் சீக்கிரத்தில் இறந்து விடுவாள்.

13. முன் சென்மம் வைசியனுக முதித்து வினையும் [செய்தோன்
தன்குலம் உயர்வாய் வந்த சங்கையைச் சொல்லு [மென்ன
உன்னத சேது தீர்த்தம் வரைந்த தால்குல மேலாச்சு
துன்மைகள் விலகாதோ சொல் துணை சாபம் விடமே [யாகும்.

13. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தில் வைசிய ராகப் பிறந்து பாவங்களைச் செய்தவருக்கு இந்த ஜன்மத்தில் ஜாதி உயர்வு ஏற்பட்டதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவர் மேன்மையான சிறந்த சேது ஸ்தலத்தில் ஸ்நானஞ் செய்த பலனுக இவருக்கு ஜாதி உயர்வு ஏற்பட்டது என்றுர் அத்திரி முனிவர். இதன் பேரில் அந்தத் தோஷங்கள் இவரை விட்டு விலகிப் போகாதா என்று கேட்கவே; சகோதர ருடைய சாபம் விஷத்தைப் போல நிலைத்திருக்கும் என்றுர் அத்திரி ரிஷி.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

14. வந்தது வத்தே தீரும் வரைந்த யிக்குணத்தா னுக்கு
இந்தவ னுதிப்பா ஞகும் யிவன்குணம் புகலக் கேண்மோ
சிந்தையும் நல்ல தாகும் சிறப்பான குடும்பி யாவன்
நொந்த பேர்க்குதவி செய்வன் நேமியில் நல்லோ
[னுவன்.

14. ஏற்பட்டு விட்ட தோஷம் வந்தே சம்பவிக்கும், நிற்காது, தீராது. இங்கு சொல்லப்பட்ட குண குணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறந்தவராவர். இவருடைய குணுதிசயங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றேம், கேட்பீரர்க. இவர் நல்ல மனத்தை யுடையவராவர். இவர் மேன்மையான குடும்பத்தவர். இவர் கெட்டுப் போயிருக்கின்ற, கஷ்டத்தை யனுபவிக்கின்ற ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்பவராவர். இவர் பூமியில் நல்லவராக விருப்பார்.

15. மாநிறம் உண்ச்சல் நீட்சி வணிபங்கள் செய்வா ஞகும்
மான்விழி யார்க்கு நேயன் மாநிலம் வறுமை காணுன்
மான்மழு தரித்தோன் பூசை மாரனும் செய்வா ஞகும்
மாநிலம் சோலை சேர்ப்பன் மஞ்சன மெத்தை யுண்டு.

15. ஜாதகர் மாநிறமான தேகத்தை யுடையவராவர். நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவர். இவர் வியாபாரங்களைச் செய்பவராவர். இவர் மானைப் போன்ற அழகான கண்களையுடைய ஸ்திரீகளுக்குப் பிரியமானவ ராக விருப்பார். இவர் இந்தப் பூமியில் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மநுபவிக்க மாட்டார். மான் கொம்பினுல் செய்யப்பட்ட பரசாயுதம் என்ற ஒருவிதமான ஆயுதத்தைத் தரித்துக் கொண்டுள்ள சிவபெருமானைப் பூஜை செய்வார். இவர் பெரிய நிலங்களையும் சோலை தோப்புகளையும் வாங்கிச் சேர்த்து வைப்பார். இவருக்கு சுக சயன மெத்தையுமுண்டு.

16. வித்தையும் சமம தாகும் விவேகியாம் பொறுமை சாலி
குத்தத்தை மனத்தில் வையான் கோதையால் அவமா
[னத்தன்
சுத்தவா னறத்தி லிச்சை சோம்பலும் கொஞ்ச முண்டு
சத்திய மென்ரு லச்சம் சாந்தமும் கோப முண்டு.

16. ஜாதகர் நடுத்தரமான படிப்பை, வாசிப்பை, யுடையவராவர். இவர் அறிவாளியாக விருப்பார். பொறுமையை யுடையவராவர். இவர் தன்னுடைய மனத்தில் வஞ்சனையை யுடையவரல்லர். இவருக்குத் தன்னுடைய மனைவி, ஸ்திரீ ஆகிய இவர்களால் அவமானம், அவமதிப்பு ஆகிய இவை உண்டாகும். இவர் சுத்தமாக விருப்பார். இவர் தர்மஞ் செய்வதில் பிரியமுள்ளவர். இவர் கொஞ்சம் சோம்பலையு முடையவராவர். இவர் சத்தியம் செய்வதில் பயமுடையவராவர். சாந்தமானவர். கோபத்தையு முடையவராவர்.

17. தந்தையின் ஆஸ்தி தன்னைத் தானவன் விருத்தி [செய்வன்
பந்துவை யாத ரிப்பன் பலரையும் வசியம் கொள்வன்
சுந்திர முடையா ஞகும் தோகை.வாகனத் தோன்பத்தி
எந்திடம் பெருமை யேற்பன் யிவன்கரம் மாலின் [ரேகை:

17. ஜாதகர் தன்னுடைய பிதுரார்ஜிதச் சொத்தை விருத்தி செய்வார். அதிகமாக்குவார். இவர் தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார். எல்லோரையும் தன் பக்கமாக விருக்கும்படியாகச் செய்து கொள்ளுவார். இவர் அழகாகவும் சௌந்தரிய முள்ளவராகவும் இருப்பார். மயில் வாகனத்தை யுடைய முருகக் கடவுளின் மேல் அன்புடையவராக விருப்பார். இவருக்கு எல்லாவிடங்களிலும் கௌரவமும் மதிப்புமுண்டு. இவர் தன்னுடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகையை யுடையவராவர்.

18. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட ஞவன்
புல்லிய புத்தி கொஞ்சம் புண்ணிய தலங்கள் செல்வன்
வல்லியர் மார்க ளாலே மனமது சஞ்ச லங்கள்
தல்லிசொல் கடவா ஞகும் சங்கரி கேட் டிடாயே.

18. ஜாதகர் நல்வர்களுக்கு நல்லவராக நடந்து கொள்ளுவார். முரடர்களுக்கு வலிவுடைய எதிரியாவர். இவருக்குச் சிறிது தாழ்ந்த இழிவான புத்தி யுண்டு. இவர் தெய்விக சம்மந்தமான புண்ணிய க்ஷேத்திரங்களுக்குப் போவார். இவருக்கு ஸ்திரீகளாலே மனத்திற்குக் கஷ்டங்களும் துன்பங்களும் உண்டாகும். இவர் தன்னுடைய தாயாருடைய வார்த்தைகளை மீறி நடந்து கொள்ள மாட்டார். பார்வதியம்மையே! கேட்பீராக.

19. இன்னவன் துணைவர் தன்னை யியம்பவே பல முருது
என்னகா ரணத்தி ஞலே யியம்பினீ ரந்தச் சங்கை
கன்னியும் செனன மாக காரிசேய் அஞ்சில் தங்க
தன் துணை காண ஞகும் செனிக்கினும் தீதே யாகும்.

19. ஜாதகருக்குக் கூடப் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுவதற்கு யாதொரு பலமுங் கிடையாது. எந்தக் காரணத்தினுல் இவ்விதமாகச் சொன்

னீர் என்று கேட்கவே, கன்னியா லக்கினத்தில்;ஜனனமாகி, இதற்கைந்தில் காரி என்ற சனியும், சேய் என்ற அங்காரகனும் இருப்பதால், இவருடன் பிறந்த சகோதரர்கள் கிடையா. ஒரு சமயம் பிறந்தாலும் உடனே அவர்கள் இறந்து விடுவார்கள் என்றூர் முனிவர்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணுதிசயங்களும்

20. சாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மூவைந் [தாண்டுள்
காதலி தென்பா லுள்ளூர் கலப்பளாம் குணத்தைச் [சொல்வேன்
சூதிலாள் யிரு சிவப்பள் சொல்லது போல் நடப்பள்
பாதக மன மில்லாதாள் பாவையும் யோக சாலி.

20. ஜாதகருடைய விவாகத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பதினைந்து வயதிற்குள்ளே மனைவி தெற்குத் திக்கிலிருந்தும் உள்ளூரிலிருந்தும் வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் கள்ளம், கபடம், வஞ்சனை ஆகிய இவற்றை யுடையவளல்லள். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தையுடையவள். இவள் தான் சொல்லிய பிரகாரமே நடந்துகொள்ளக் கூடியவள். இவள் கெட்ட மனத்தையுடையவளல்லள். இவள் யோக சாலியாக விருப்பாள்.

21. அடிசலுக் கினிய ளாகும் அயல் குற்றம் புகலாளாகும்
நடை நன்மை சீலியாகும் நல்கிடும் நாபி சூடு
துடியிடை கோப முன்னம் சீக்கிரம் சாந்த மாகும்
விடஉரை புகலா ளாகும் வித்தகி வயது தீர்க்கம்.

21. ஜாதகருடைய மனைவி சமையல் செய்வதில் கெட்டிக்காரி. இவளுடைய கைப்பாகம் நன்றாகவிருக்கும், இவள் பிறர்பேரில் நிந்தைகளைச் சொல்லமாட்டாள். இவளுடைய நடவடிக்கை நல்லதாகவிருக்கும். இவள் சுத்தமாகவும் நல்லொழுக்கமுடையவளாகவுமிருப்பாள். இவளுக்கு நாபிச் சூட்டு ரோகமுண்டாகும். இவளுக்குக் கோபம் முந்திவரும். அது உடனே தணிந்துவிடும். இவள் விஷமான கெட்ட வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள்.

23. செயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க [லுற்றூர்
வியமாக யேழில் நாகம் மேவியும் காரி பார்க்க
பயமிலா வயது தீர்க்கம் பகர்ந்தகா ரணங்கள் என்னத்
தயவுடன் யிரண் டோன் ஆட்சி சௌமியன் கூடிநிற்க.

22. இவ்விதமாகச் சொல்லியதை ஜயமுனிவர் கேட்டுத் திடீரென்று தடுத்துச் சொல்லுகின்ருர். ஏழாவது வீட்டில் நாகம் என்ற ராகு கெடுதி யாக விருந்துகொண்டும் இந்த ஏழைக்காரி என்ற சனியும் பார்த்துக்கொண் டும் இருக்கும்போது பயமில்லாமல் மனைவிக்கு வயது நீண்டிருக்கும் என்று சொன்ன காரணங்கள் என்னவென்று கேட்கவே, இரண்டிற்குடைய சுக்கிரன் ஆட்சியாகத் தன்னுடைய வீட்டிலேயே யிருப்பதாலும், சௌமியன் என்ற புதன சுக்கிரனுடன் கூடி யிருப்பதாலும்,

## ஜாதகரின் இரண்டாவது மனைவியின் குணாதிசயங்கள்

23. தீர்க்கமாம் வயது யென்ருேம் சனியதை பார்த்ததாலே
ஏற்கவே மரும னைத்தான் யெய்திடும் பால னுக்கு
ஆர்க்கவே அவள் குணத்தை அறிவிப்போம் [முனியே கேளும்
சாக்கிரதை குணமு முண்டு சிவந்த மெய் [உணச்சல்தேகி.

23. ஜாதகருடைய மனைவி நீண்ட ஆயுளையுடையவளென்று சொன்னேம்: ஆனால் ஜாதகருக்கு இன்னெரு மனைவி வந்து சம்பவிப்பாள். இந்த இரண்டாவது மனைவியின் குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்ருேம். முனிவரே! கேட்பீராக. இவள் ஜாக்கிரதையாக விருக்கும்படியான குணத்தையுடையவள். இவள் சிகப்பு நிறமுடைய தேகத்தையுடையவள், நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவளாவள்.

24. புத்திமான் அடக்க முண்டு பொய்யது புகலா ளாகும்
சுத்தமும் அறத்தி லிச்சை சொல்லது சுருக்க மாகும்
பத்தினி துலையின் தென்பால் பகருவோ முப்பா [ஞென்றில்
வித்தகி வருவா ளாகும் மெல்லியும் தீர்க்க சீவி.

24. இரண்டாவது மனைவி அறிவுடையவளாவள், சுந்தரமானவள் மனவமைதியுள்ளவள் பொய்யைச் சொல்லமாட்டாள். இவள் சுத்தமாக விருப்பாள், தர்மத்தில் பிரியமுள்ளவள். இவள் கொஞ்சமாகப் பேசக் கூடியவள். இவள் தெற்குத் திக்கிலிருந்தும் தூரத்திலிருந்தும் வருவாள் என்று சொல்லுகின்ருேம். இவள் ஜாதகருக்கு முப்பத்தோராவது வயதில் வந்து சம்பவிப்பாள். இவள் நீண்ட ஆயுளையுடையவளாவள்.

## இரண்டாவது மனைவிக்குப் புத்திரபாவம்

25. சுதர்களும் ஆண்பால் ரெண்டு தோகையு மவ்வார் [தீர்க்கம்
ஏதுவித மாதுக்கே தான் பியம்பினீ ரந்தச் சங்கை

அதிபதி பின் மனைக்கு வரைகிறோம் புத்திர பாவம்
முதல்மனை தனக்குப் புத்திரர் மேவார்த காரணம் சொல்.

25. ஜாதகருடைய மனைவிக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண் களும் நீண்ட வயதை யுடையவர்களாக விருப்பார்கள். இந்தப் பலனை எந்த மனைவிக்குச் சொல்லினீர்கள் என்று கேட்கவே, இரண்டாவது மனை விக்குப் புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம் என்றார் முனிவர். இதன் பேரில் முதலாவது மனைவிக்குப் பிள்ளைகள் பிறக்காததற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்டார்.

26. மங்கைக்குப் பூர்வம் தன்னில் மருவிற்று வினை அனேகம்
சங்கையாய்ச் சுதர்கள் தோஷம் சாற்றுவீர் பூர்வம் [தன்னை
துங்கமாம் பழனி தன்னில் செனித்தனள் கங்கை [சேயாய்
பொங்கிய குடும்ப மாகிப் பூவையும் வாழு நாளில்.

26. முதல் மனைவிக்குத் தன்னுடைய முன்ஜன்மத்தில் அநேகவித மான பாவங்கள் சம்பவித்தன. புத்திர தோஷம் உண்டாயின விஷயமாய் அறிய முன் ஜன்மத்தைச் சொல்லுவீர். இவள் மேன்மையான, சிறந்த, பழனி க்ஷேத்திரத்தில் வேளாளர் ஜாதியில் பெண்ணாகப் பிறந்து வளமான குடும் பத்தை யுடையவளாகி வாழ்கின்ற காலத்தில்;

27. மறையவர் மதலைக் காக ஆவின் பாலிவளைக் கேட்க
குறையான வார்த்தை சொல்லிக் கொடமலே நின்று [ளென்றோம்
உறைகுவார் சாபம் தானும் உன்சுதர் போல் [யெண்ணமல்
நெறியில்லா வார்த்தை சொன்னய் நேரும்பின் சென்மந் [தன்னில்.

27. ஒரு பிராமணர், தன் குழந்தைக்காகப் பசும் பாலைக்கொடு என்று இவளை (இந்த முதல் மனையை)க் கேட்கும்போது குற்றமுள்ள கெட்ட வார்த் தைகளை உபயோகப்படுத்தி பதில் சொல்லிவிட்டுப் பாலைக் கொடுக்காமல் சும்மாயிருந்து விட்டாள் என்று சொல்லுகின்றோம். இந்தப் பிராமணர் உடனே சாபத்தைக் கொடுத்தார். "இந்தக் குழந்தையை உன்னுடைய குழந்தையைப்போலக் கருதாமல், கெட்ட வார்த்தைகளைச் சொல்லிவிட் டாய். உனக்கு இனி வரப்போகின்ற மறு ஜன்மத்தில்;

28. புத்திர ரில்லா தாகிப் பூமியில் வாழ்வா யென்றார்
பற்றிற்று அந்தத் தோஷம் பகருவோம் வேறு ஒன்று

மைத்துனன் மதலைக் கன்னம் வஞ்சனை செய்தா
[ளென்றோம்
பத்தாவின் சொல்த டுத்துப் பாவையும் நடந்தா
[ளென்றோம்.

28. பிள்ளையில்லாமல் நீ வாழக்கடவது" என்று சொன்னார். இந்தத் தோஷம் இவளை வந்தடைந்தது. இன்னொரு தோஷத்தையுஞ் சொல்லு கின்றோம். இவள் தன்னுடைய மைத்துனருடைய குழந்தைக்குச் சாப்பாட்டைப் போடும் விஷத்தில் வஞ்சனையாகவும் கபடமாகவும் நடந்து கொண்டாள் என்று சொல்லுகின்றோம். மேலும் தன்னுடைய புருஷனுடைய வார்த்தைகளைத் தடுத்து நடந்து கொண்டாள் என்றும் சொல்லுகின்றோம்.

29. ஆகையா லந்தப் பாவம் அணுகிடு மிச்சென் மத்தில்
தோகைக்கு மதலை காணச் செப்புவார் கிரியை யொன்று
பாகமாய்ப் பட்சிக் கேகிப் பாவையோர் திங்கள் தானும்
ஆகம கிரியை சுற்றி அந்தநாள் அரனார்க் கேதான்;

29. ஆகையால் இந்தப் பாவம் இந்த ஜன்மத்தில் இவளை வந்தணுகும். இவளுக்குப் பிள்ளை பிறக்க ஒரு சாந்தியை முனிவர் சொல்லுகின்றார். திருக்கழுக்குன்ற ஸ்தலத்திற்குப் போய் ஒரு மாதம் வரையிலும் தெய்விக் சம்மந்தமான மலையைச் சுற்றிவலம் வந்து கடைசி தினத்தில் சிவபெருமானுக்கு;

30. சகஸ்திர அர்ச்சனையும் செய்து சங்கரர் அடியான்
[முப்பான்
பகையிலா அன்ன மீந்து பார்மகன் வார நோன்பு
தகமையாய் ஆண்டு கொள்ள சந்ததி தோன்று
[மென்றோம்
செகமதி லாண்பா லொன்று செப்புவோம் தீர்க்க மாக.

30. ஆயிரந்தடவை அர்ச்சனையைச் செய்து, சிவபெருமானுடைய அடியார்களாகிய முப்பது பரதேசிகளுக்குச் சாப்பாட்டைப் போட்டுப் பூமி மகன் என்ற அங்காரகன் குறிக்கின்ற முருகக் கடவுளின் வாரமாகிய செவ்வாய்க்கிழமை தோறும் விரதத்தை ஒரு வருஷ காலம் வரையிலும் அநுஷ்டித்து வந்தால் குழந்தை பிறக்கும் என்று சொல்லுகின்றோம். ஓர் ஆண் குழந்தை நீண்ட ஆயுளை யுடையதாக விருக்கும் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய முன் ஜன்மம்

31. சாதகன் முன் சென்மத்தைச் சாற்றுவோம் தோகை
[கீழ்பால்
மேதினில் பேரூர் தன்னில் விளங்கினன் ரெட்டி வமிசம்

காதலி மதலை யுண்டாய்க் கனமுள குடும்பி யாகித்
தீதிலா வாழு நாளில் சேர்ந்ததோர் வினையைக்
[கேண்மோ.

31. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் திருத்தணிகைக்குக் கிழக்குத் திக்கில் ஒரு கிராமத்தில் ரெட்டியாருடைய ஜாதியில் பிறந்து மனைவி மக்களை யுடையவராகிப் பெருமையான குடும்பஸ்தராக விருந்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த ஒரு பாவத்தைச் சொல்லுகின்றோம், கேட்பீராக.

32. அந்நகர் வைசியன் தானு மவன்சில பொருளும்
[வாங்கி
உன்னத செட்டு செய்து உயர்விலா தாழ்வு கொண்டு
துன்மையா மனத்த னாகிச் சுகமிலா வாழு நாளில்
பொன்னதை யிவனும் கேட்கப் பொருள்தாரே னென்று
[சொல்ல;

32. இந்தப் பட்டணத்திலுள்ள ஒரு வைசியர் ஜாதகரிடம் கொஞ்சம் பணத்தைக் கடனாக வாங்கிக் கொண்டு அதை முதலாக வைத்து வியாயாரத்தைச் செய்யவே, இந்த வியாபாரம் விருத்தி யடையாமல் க்ஷீணித்துப் போகவே, துக்கத்தை யடைந்து சுகமில்லாமல் கஷ்டத்துடன் வாழ்கின்ற காலத்தில், ஜாதகர் இந்த வைசியரைப் பணத்தைப் பற்றிக் கேட்கும் போது பணத்தைத் திருப்பிக் கொடுக்கின்றேன் என்று வைசியர் சொல்லவே;

33. செட்டியின் மாது தானும் சிந்தைவேறு விதமாய்க்
[கொண்டு
ரெட்டிபால் அணுகிச் சொல்வாள் நேர்ந்த பொன்
[நஷ்டமாச்சு
துட்டமாய் மொழிகள் வேண்டாம் சிலேடையாய்க்
[காமன் வார்த்தை
குட்டாகச் சொல்லும் போது குமரனும் யிசை யானகி;

33. இந்தச் செட்டியினுடைய மனைவி" தன்னுடைய மனத்தில் வேறு ஓர் எண்ணத்துடன் ரெட்டியாரிடஞ்:சென்று, "நீ கொடுத்தப் பணம் நஷ்டமாகிப் போய் விட்டது. கெட்ட வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம் என்று சொல்லி இவரிடம் மையல் என்ற காம ஆசையை யுடையவளாகிச் சிலேடையான, இரண்டு அர்த்தங்களுள்ள வார்த்தைகளைக் காதல் கொண்டு சொல்லவே, இதற்கு இந்த ரெட்டியார் இஷ்டப்படாமல்

34. மனவர்ம மாக சென்றான் மாதுவும் மனது வெட்கி
தன் வரனைச் சேர தடையாச்சு நிந்தை யாச்சு

விளையதற் கென்ன செய்வேன் வேறொரு சென்மந் [தன்னில்
அனையவே செய்வா யீசா அறைந்துமே சலத்தால் [மாண்டாள்.

34. மௌனமாகப் போய் விட்டார். இதன்பேரில் இவள் வெட்கத்தை யடைந்து, "தன்னுடைய புருஷனுடன் வாழ இது ஒரு இடைஞ்சலாகி விட்டதே, அபவாதமாகி விட்டதே, என்று எண்ணி, நான் இதற்கு என்ன செய்வது! கடவுளே! இன்னொரு ஜன்மத்தில் நான் இந்த ரெட்டியுடன் வாழும்படி செய்யக் கடவது" என்று சொல்லி ஜலத்தில் வீழ்ந்து தற்கொலை செய்து கொண்டாள்.

35. மாரனு மந்தி யத்தில் அருணை மாநகரம் சென்று
தேரினோர் தொண்டு பூண்டு சீக்கிர மரண மாகி
ஆரியன் வரையப் பட்டு அணுகுவா னிவனே [யென்றோம்
காரிழை வைசிய மாது கலப்பளாம் மருமனைத் தான்.

35. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் கடைசி காலத்தில் அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை ஸ்தலத்திற்குப் போய்ப் பெரியோர்களைத் துதித்தும் அவர்களுக்கு பணிவிடைகளைச் செய்தும் பிறகு சீக்கிரத்தில் இறந்து பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந்தார் என்று சொல்லுகின்றோம். வைசிய குலத்திரீ இந்த ஜன்மத்தில் ஜாதகருக்கு இரண்டாவது மனைவியாக வந்து வாய்ப்பாள்.

## ஜாதகருடைய யோகபாவம்

36. சாதகன் யோகச் சேதி சாற்றுவோம் யினி மேலாக
மேதினில் செட்டு செய்வன் விசனம் யெப்போதும் [காணான்
சூதிலான் யிள மனத்தன் தொல்புவி சேர்ப்பா னுகும்
பாதக மன மில்லாதான் பாக்கியம் விருத்தி செய்வன்.

36. ஜாதகருடைய யோக பாவத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவர் வியாபாரத்தைச் செய்வார். இவர் துக்கத்தை எப்போது மடைய மாட்டார். இவர் கள்ளம் கபடு இல்லாதவராவர். இவர் இரக்கமுள்ளவராவர், தயாள குணமுடையவர். பழைய நிலங்களைச் சேர்த்து வைப்பார், இவர் கெடுதியான மனத்தை யுடையவரல்லர். இவர் செல்வத்தை அதிகப்படுத்துவார்.

37. எண்ணான்கு ஆண்டு மேலாய் யிளம்பிறை போலே [செட்டு
வண்ணமாய் நடக்கு மென்றோம் வாக்குசொல் மேன்மை [யாகும்
கண்ணிய குடும்ப மேற்பன் கீதமேல் பிரிய னாகும்.
அண்ணலின் அருளு மோங்கும் அடாபிடி கூறா னாகும்.

37. ஜாதகருக்கு முப்பத்திரண்டு வயதிற்குப் பிறகு வியாபாரம் வளர் பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் விருத்தியடையும் என்று சொல்லு கின்றோம். இவருடைய வார்த்தைகள் மேன்மை யுடையனவாகும், மதிக் கத்தக்கனவுமாகும். இவர் மேன்மையான குடும்பத்தை யுடையவராவர். இவர் சங்கீதத்தின் மேலும் இசைப் பாட்டின் மேலும் ஆசையுடையவரா வர். இவருக்குக் கடவுளின் கிருபை அதிகப்படும். இவர் முரட்டுத்தனமா யும் அநியாயமாயும் பேச மாட்டார்.

38. மந்திரி தசையிலே தான் மாநிலம் செட்டு ஓங்கல்
எந்திடம் பெருமை பூணல் ஏவலாள் பாக்கியம் சேரல்
சந்ததி தோன்று மென்றோம் சகடுகள் தூசு செட்டு
இந்தவாறு ஓங்கு மென்றோம் யியம்புவோம் பின்பால் [சேதி.

38. மந்திரி என்ற குரு தசையில் வியாபாரம் விருத்தி யடையும். சென்ற விடத்திலெல்லாம் இவருக்குக் கௌரவமுண்டாகும். இவருக்கு வேலையாட்களும் செல்வமும் அதிகமாகும், இவருக்குப் பிள்ளை பிறக்கும் என்று சொல்லுகின்றோம். வாகன முண்டாகும், ஜவுளி வியாபாரம் விருத்தி யடையும் என்று சொல்லுகின்றோம். மற்ற விஷயங்களை இரண் டாவது பாகத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

39. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி [யாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உயர்வான புத்தி யேற்பள்
தீதென்றோர்க் குதவி செய்வள் திருமக் ளொப்ப தாகும்
மேதினில் நல்லோ ளாவள் விசன மெப்போதும் [காணாள்.

39. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின் றேன். இவள் மாந்துளிரின் நிறமாகிய ஒருவித சிகப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். இவள் சுகமாகவும் நல்லபடியாகவும் வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் மேன்மையான உயர்ந்த புத்தியை யுடையவளாவள். நாங்கள் கஷ்டத்தை யடைந்திருக்கின்றோம் என்று

சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் லக்ஷிமிக்குச் சமானமானவளாவள். இவள் பூமியில் நல்லவளாக விருப்பாள். இவள் எப்போதும் துக்கத்தை அடைய மாட்டாள்.

## தாயாருடைய சகோதர பாவமும் முன் ஜன்மமும்.

40. தன்துணை ஆண்பால் ரெண்டு தையலர் அவ்வாறு [தீர்க்கம்
பின்னமாம் மற்ற தெல்லாம் பேதையு முள்ளூ ராகும்.
அன்னையின் பூர்வம் சொல்வேன் அருணைக்கு வடபா [லாக
சின்ன ஊர் தன்னிலே தான் செனித்தனள் [சௌராஷ்டிர வமிசம்.

40. தாயாருடன் பிறந்தவர்கள் ஆண் இரண்டும் பெண் இரண்டும் நீண்ட வயதுடையவர்களாக விருப்பார்கள், மற்றச் சகோதரர்களெல்லாம் சீக்கிரம் இறந்து விடுவார்கள், சகோதரிகள் உள்ளூரிலேயே இருப்பார்கள். தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். அருணை என்ற அருணசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திறத்திற்கு வடக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் சௌராஷ்டிர ஜாதியில் இவள் பிறந்தாள்.

41. மங்கையும் வாழு நாளில் மருவின வினையைக் [கேண்மோ
தங்கையும் நாணி ழந்து தன்பக்கல் வாச மாகி
அங்கவள் சுதர்க்குத் துரோகம் அம்மையும் செய்யும் [போது
நங்கையும் வருத்த முற்று நவிலுவாள் சாபம் தானும்.

41. தாயார் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றோம் கேட்பீராக. இவளுடைய இளைய சகோதரி விதவையாகி இவளிடத்திற்கு வந்து வாழ்கின்ற காலத்தில் இவள் சகோதரியின் பிள்ளைக்கு வஞ்சனையைச் செய்யும் போது சகோதரி துன்பத்தை யடைந்து சாபத்தைக் கொடுக்கின்றாள்.

42. என்சுதர் தனக்குத் தீங்கு யெண்ணின பாவியே நீ
பின்வரும் சென்மந் தன்னில் புத்திரி புத்திரனு மின்றி
கன்னிகை வாழ்வா யென்றாள் கலந்தது அந்தச் சாபம்
அன்னவள் அந்தி யத்தில் யானைமுகன் கோஷ்டத் [திற்கு.

42. என்னுடைய பிள்ளைக்குக் கெடுதியை நினைத்தப் பாவியாகிய நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் பிள்ளை பெண் இல்லாமல் வாழக் கடவது என்று சொன்னாள். இந்தச் சாபம் தாயாரை வந்தடைந்தது. இவள் தன்னுடைய கடைசி காலத்தில் ஒரு யானை முகத்தையுடைய விநாயகர் கோயிலில்

53. திருவிளக் கொன்று வைத்துத் தேவியும் மரண மாகிப்
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று
[சொல்வோம்
மருவிடு மாது சாபம் மைந்தர்கள் தோஷ மெய்தும்
பிருகுமே மறுத்துச் சொல்வார் புதல்வனு மெவ்வாறு
[தீர்க்கம்.

43. ஒரு விளக்கை வைத்துப் பிறகு இறந்து பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றோம். சகோதரியினுடைய சாபம் இவளுக்கு வந்து நேரும். பிள்ளைகளுக்கு தோஷமுமுண்டாகும் என்றார் முனிவர். பிருகு மஹரிஷி தடுத்துக் கேட்கின்றார். இந்த ஜாதகர் எவ்விதமாக நீண்ட ஆயுளையுடையவராக விருப்பார்.

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

44. முன் சென்மம் கணேசனுக்கு யேற்றின தீப புண்ணியம்
தன்குல மேன்மை யாச்சு சந்ததி ஒருவன் தீர்க்கம்
பின்சென்மம் காளாத்தி தன்னில் பிறப்பளா மிக்
[குலத்தில்
பொன்பொரு ளுடையா ளாகிப் புண்ணிய வதியும்
[வாழ்வள்.

44. தாயார் முன்ஜன்மத்தில் விநாயகக் கடவுளின் கோயிலில் விளக்கேற்றிய புண்ணியத்தின் பயனாக இவளுடைய குலம் மேன்மையை, விருத்தியை யடையும், ஒரு பிள்ளை தீர்க்காயுளுள்ளவனாக விருப்பான். இவள் தன்னுடைய மறு ஜன்மத்தில் காளா ஸ்திரி க்ஷேத்திரத்தில் இந்த ஜன்மத்திய ஜாதியிலேயே (அஃதாவது வீரசைவ ஜாதியில்) பிறப்பாள். இவள் தனம் சொத்து ஆகிய இவற்றை யுடையவளாகிப் புண்ணியத்தைச் செய்தவளாக விருந்து வாழ்வாள்.

## ஜாதகரின் தகப்பனாருடைய மரணகாலமும் மறு ஜன்மமும்

45. முப்பது நாலு ஆண்டில் விளம்புவோம் தந்தை கண்டம்
அப்போது மறையோன் காலம் அலரியின் மகன் புசிப்பு

ஒப்புடன் நடக்கு மென்றோம் உரைக்கிறோ மிவன்பின்
[சென்மம்
மைப்புடன் காளாத்தி தன்னில் மேவுவான் பிரம்ம
[சேயாய்.

45. ஜாதகருக்கு முப்பத்து நான்காவது வயது காலத்தில் இவருடைய தகப்பனார் இறந்து போய் விடுவார் என்று சொல்லுகின்றோம். அக்காலத்தின் மறையோன் என்ற குரு தசையில் அலரியின் மகன் என்ற சூரியனுடைய பிள்ளையாகிய சனியின் புக்தி நடக்கும் என்று சொல்லுகின்றோம். தகப்பனாருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் காளாஸ்திரியில் பிராமணர் குலத்தில் ஆணாகப் பிறப்பார்.

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலமும் ஜாதகரின் மரணகாலமும்

46. அன்னைக்கு முப்பா றுறுள் அந்தணன் தசையிலே தான்
சந்திரன் மகன் புசிப்புல் சாற்றுவோம் கண்டம் தானே
இன்னவன் தனக்குச் சொல்வேன் யெழுபது ஆண்டின்
[மேலாய்
கன்னியா மாதம் தன்னில் கழறுவோம் மார கங்கள்.

46. ஜாதகருடைய முப்பத்தாறுவது வயதிற்குள் அந்தணன் என்ற குருவினுடைய தசையில் சந்திரன் மகன் என்ற புதனுடைய புக்தியில் இவருடைய தாயாருக்கு மரணத்தைச் சொல்லுகின்றோம். இவருக்கு எழுபது வயதிற்கு மேலே கன்னி மாதம் என்ற புரட்டாசி மாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம்,

## ஜாதகருடைய மறுஜன்மம்

47. மறுசென்மம் காசி பக்கல் வளமுள பேரூர் தன்னில்
உரைகுவான் சத்திரிய சேயாய் உயர்வான புகழு
[மேற்பன்
திருமகன் தனக்குச் செனனகாலம் சந்திரன் தசை
[யிருப்பு
மருவிடும் ஆண்டு ஆறும் வரைந்தனம் பூர்வ பாகம்.

47. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் காசிக்கு அருகிலுள்ள ஒரு செழிப்பான பெரிய கிராமத்தில் க்ஷத்திரிய குலத்தில் ஆணாகப் பிறந்து மேன்மையான குடும்பத்தை யுடையவராவர். இவர் பிறந்த காலத்தில் சந்திர தசையில் இருப்பு நின்ற வருஷங்கள் ஆறு ஆகும். இவ்விதமாக முன்பாகத்தைச் சொன்னோம்.

48. பாலகன் வயது தீர்க்கம் பகர்ந்தது நீர்சகடை தோஷம்
ஏலவே யிருப்ப தாலே யியம்பின காரணம் சொல்
ஆலோனும் கன்னியாக அந்தணன் புகரு மிரண்டில்
மாலவன் கூடி நிற்க வயதுமே தீர்க்க மெய்தும்.

48. ஜாதகருக்கு எந்தக் காரணத்தினுல் தீர்க்காயுளை நீர் சொன்னீர். இந்த ஜாதகத்தில் சகடை யோகத் தோஷ மிருக்கிறது என்ருர் முனிவர். ஆலோன் என்ற சந்திரன் கன்னியிலிருப்பதாலும், அந்தணன் என்ற குருவும் புகர் என்ற சுக்கிரனும் இரண்டாவது வீட்டில் மாலவன் என்ற புதனுடன் கூடியிருப்பதாலும் ஜாதகருக்குத் தீர்க்காயுள் ஏற்படும்.

49. யோக மெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்தச்
[சங்கை
பாகனும் புகரும் கூடி பற்றிடம் யிரண்டே யாக
வேகமாய் பதுமை யோகம் சாமரை யோக மொன்றும்
ஆகையால் யோகம் சொன்ஞேன் அழகேசன் ஒப்பாய்
[வாழ்வன்.

49. ஜாதகருக்கு எவ்விதமாக யோகத்தைச் சொன்னீர்? இதற்குக் காரணத்தைச் சொல்லுவீராக. பாகன் என்ற புதனும் புகர் என்ற சுக்கிரனும் சேர்ந்து இரண்டாமிடத்தில் இருப்பதால் பதுமை யோகம் ஒன்றும், வெண்சாமரை யோகம் ஒன்றும் ஆக யோகங்கள் இருக்கின்றன, ஆகையால் ஜாதகருக்கு யோகத்தைச் சொன்ஞேம். இவர் குபேரனுக்குச் சமமாக விருந்து வாழ்வார்.

## ஜாதகரின் தகப்பஞருடைய மரணமும் மறுஜன்மம்

50. மூவொன்ப தாண்டு தன்னில் விளம்புவோம் தந்தை
[கண்டம்
மேவிய பணியின் காலம் வெள்ளியின் புத்தி யாகும்
நேமியில் நடக்கு மென்ரேம் நேரும்பின் யிருபா
[ஞெட்டில்
தாவுவான் சிவ பதத்தைச் சங்கரி கேட்டி டாயே,

50. ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் இவருடைய தகப்பஞருக்கு கெண்டம் ஏற்படும், அக்காலத்தில் பணி என்ற இராகுவின் தசையில் வெள்ளி என்ற சுக்கிரனுடைய புத்தி நடக்கும் என்று சொல்லுகின்ரேம். பிறகு இருபத்தெட்டாவது வயதில் தகப்பஞர் இறந்து சிவலோகத்திற்குப் போவார். பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—இங்கு நாற்பத்தைந்தாவது பாடலை வாசிக்கவும். இந்தப் பாடலில் தகப்பஞர் முப்பத்து நான்காவது வயதில் இறந்து விடு

வார் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த ஐம்பதாவது பாடலில் சொல்லியிருக்கின்ற மரண காலம் தவறி விட்டால் நாற்பத்தைந்தாவது பாடலில் சொல்லிய பிரகாரம் மரண காலம் நேரிடும் என்று வைத்துக் கொள்ள வேணும்.

51. பின்னிட சென்மம் பேசுவோம் தாயே
துன்னு காளாத்தி சுரர்குல முதித்துப்
பொன்பணி யுண்டாய் பெம்மானின் பூசை
அன்னவன் செய்வான் அம்பிகை யாளே.

51. தகப்பனுருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் காளாஸ்திரியில் பிராமணர் குலத்தில் பிறந்து தனம், ஆடை ஆபரணம் ஆகிய இவற்றை யுடையவராகிச் சிவபெருமானைப் பூஜை செய்வார். பார்வதியம்மையே ! கேட்பீராக.

*குறிப்பு :—இங்கு நாற்பத்தைந்தாவது பாடலை வாசிக்கவும். இந்தப் பாடலில் கூட காளாஸ்திரியில் பிராமணர் குலத்தில் தகப்பனுர் பிறப்பார் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. C. G. R.

# ஜாதகம் 24

## ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் மீனமாகச் சனி சாடி கேது [2]மானில்
[3]புந்தி[4]பான் [5]சேயும் [6]சீயம் [7]புகர்[8]கோலில் [9]பணியும் [[10]நண்டில்
[11]மந்திரி [12]வீணை யாக [13]மாதுவும் சென்ம மாக
இந்தவாறு கோளும் நின்ரு லியம்புவீர் பலனையென்று

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் மீனத்திலும், சனி கும்பத்திலும், கேது மகரத்திலும் புதனும் சூரியனும், அங்காரகனும் சிம்மத்திலும், சுக்கிரன் துலாத்திலும் ராகு கடகத்திலும் குரு மிதுனத்திலும், இருந்து இவ்விதமாக நவக் கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | | | குரு |
| சனி | இராசி சக்கரம் | | ராகு |
| கேது | | | சூரியன் புதன் அங்காரகன் |
| | | சுக்கிரன் | லக்கினம் |

அஸ்தம் 2-ஆம் பாதம் சந்திர தசை ஷ 6—0—0.

*குறிப்பு :—இந்த ராசிக் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் அங்காரகனும், ரிஷபத்திற் கேதுவும், மிதுனத்திற் புதனும், கன்னியிற் சூரியனும், விருச்சிகத்தி சுக்கிரனும், ராகுவும், மகரத்திற் சனியும், கும்பத்திற் குருவும், மீனத்திற் சந்திரனும் ஆகும்.

---

1. கும்பம்
2. மகரம்
3. புதன்
4. சூரியன்
5. அங்காரகன்
6. சிம்மம்
7. சுக்கிரன்
8. துலாம்
9. ராகு
10. கடகம்
11. குரு
12. மிதுனம்
13. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2 சங்கரி கேட்கும் போது செயமுனி கூறு கின்றூர்
இங்கிவை ஆண்பால் சென்மம் யில்லமும் கீழ்மேல்
தங்கிடும் வடக்கு வாசல் சாமுண்டி கணேசன் மேற்கில்
கங்கையு மருகில் தங்கும் கழறின சிறுஊர் தன்னில் ;

2. பார்வதியம்மையார் கேட்கும் போது ஜய் முனிவர் சொல்லுகின்றூர். பிறந்த குழந்தை ஆணுகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு வாயிலை யுடையதாகும். பார்வதியம்மையின் கோயிலும் விநாயகர் கோயிலும் மேற்கிலிருக்கும். ஒரு நீர் நிலை சமீபத்திலிருக்கும். இவ்வித மான அடையாளங்களுள்ள ஒரு சிறிய கிராமத்தில்

3. உதிப்பனும் ஐந்தாம் சென்மம் உறும்தந்தை தாயின் [யோகம்
மதிமுக மனைவி புத்திரர் அவனுடைத் துணைவியோகம்
சதியுள முன்பின் சென்மம் சாற்றுவோ மிந்நூல் [தன்னில்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

3. ஜாதகர் ஐந்தாவது குழந்தையாகப் பிறப்பார். இவருடைய தகப்பனுர், தாயார் ஆகிய இவர்களின் யோகங்களையும், மனைவி, மக்கள், சகோதரர்கள் ஆகிய இவர்களின் யோகங்களையும், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றேம். பரதேசிகளையும் அடியார்களையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

4. தந்தையின் துணைவ ரேழில் ஆணைந்து கன்னி யிரண்டு
இந்தவாறு விருத்தி யென்றே மிவர்களும் வேருய்ச் [செல்வர்
அந்தவர் சேதி பின்னுல் அறிவிப்போம் தாயே யாங்கள்
சொந்ததோர் தந்தை சேதி செப்புவோ யினி மேலாக

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்கள் ஏழு பேராவர். இவர்களில் ஆண்கள் ஐந்து பேரும் பெண்கள் இரண்டு பேரும் ஆயுளுள்ளவர்களாய் விருத்தியை யடைவார்கள் என்று சொல்லுகின்றேம். இவர்கள் வேறு குடும்பஸ்தர்களாகப் போய் வாழ்வார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னுல் இரண்டாவது பாகத்தில் நாங்கள் சொல்லுகின்றேம். பார்வதியம்மையே! ஜாதகருடைய சொந்தத் தகப்பனுருடைய விஷயங்களைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

5. மானிறம் சமதே கத்தான் வடிவினில் குள்ள ஞவன்
ஊனமாம் கால்க ளுண்டாம் உறுதியா மனத்த ஞகும்
தானெனக் கர்வம் கொஞ்சம் சான்ருேர்கள் உறவு [கொள்ளான்
மான்விழி மார்கள் மோகன் மாமிக ளிரண்டே யாகும்.

5. ஜாதகரின் தகப்பனுர் மாநிறமான தேகத்தை யுடையவராவர். நடுத்தரமான அளவுள்ள தேகத்தை யுடையவராவர். இவர் ரூபத்தில் குட்டையாக விருப்பார். இவருக்குக் கால்கள் ஊனமாக விருக்கும், இவர் கெட்டியான, அழுத்தமான மனத்தை யுடையவராவர். இவர் அகங்கார முடையவர். நல்லவர்களுடைய சிநேகிதத்தை விரும்ப மாட்டார், அடைய மாட்டார். மானைப் போன்ற அழகான கண்களை யுடைய ஸ்திரிகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவருக்கு இரண்டு மாமியார்களுண்டு.

### இதுவுமது

6. பலவணி பங்கள் செய்வன் பாருகள் விருத்தி யுண்டு
சொலுமொழி அதிக முண்டு தோகையர் தன்ஞல் [நிந்தை
புலிபோலே மூர்க்கம் கொஞ்சம் புதுயில்லம் செய்வா [ஞகும்
நிலமதில் சல்லிய மேற்பன் நிஷ்டூர வசனம் கூறுவன்.

6. ஜாதகரின் தகப்பனுர் பலவிதமான வியாபாரங்களைச் செய்வார், இவர் நிலங்களைப் பயிரிட்டு தானிய வகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் அதிகமாக வார்த்தைகளை உபயோகப் படுத்திப் பேசுவார். இவருக்கு மனைவிமார்களால் அபவாதம் ஏற்படும். இவருக்குப் புலிக்கு வருவதைப் போலக் கொஞ்சம் கோபம் வரும். இவர் புதிய வீட்டைக் கட்டுவார், இவருக்குக் கடன் ஏற்படும். கடுமையான விரோதமான வார்த்தைகளைச் சொல்லுவார்.

### இதுவுமது

7. துணைவரால் பொறுமை யேற்பன் சுருக்கமாம் வார்த்தை [யுண்டு
விளையாட்க ளுடைய ஞகும் வீண்வம்பில் செல்லா [ஞகும்
சென உபகாரி யாகும் தந்தைக்குத் தாழ்வாய் வாழ்வன்
கனமத வானை பெற்றக் காதலி கேட்டி டாயே.

7. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய சகோதரர்களால் சாந்தத்தை அடைபவராவர். இவர் கொஞ்சமாக வார்த்தைகளை உபயோகப் படுத்துவார், இவர் வேலையாட்களை உடையவராவர். வீண் சண்டையில் பிரவேசிக்க மாட்டார். இவர் ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்பவராவர். இவர் தன்னுடைய தகப்பனாரின் அந்தஸ்திற்குக் குறைவான அந்தஸ்திலிருந்து வாழ்வார். மதயானை முகத்தை யுடைய மேன்மையான விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

8. சொன்ன யிக்குணத்தா னுக்குத் தோகையர் யிருவர் [தம்மில்
பின்மனை யாளுக் கின்னேன் பிறப்பனு மிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் [மதன்போ லொப்பாம்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பான் உனச்சல் [தேகி

8. இங்கு சொல்லப்பட்ட குணகுணங்களை யுடைய தகப்பனாருக்கு உள்ள இரண்டு மனைவிமார்களில் இரண்டாவது மனைவிக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களை இனிமேல் சொல்லுகின்றேன். இவர் அழகாக விருப்பார். மன்மதனுக்குச் சமமானவராக விருப்பார். இவர் தான் சொல்லுகின்ற வார்த்தைகளே மேன்மையானவை என்று உறுதியாகச் சொல்லி ஸ்தாபிப்பார். இவர் மெலிந்த வாடின தேகத்தை யுடையவராவர்.

## இதுவுமது

9. இருவித கல்வி கற்பன் யாவர்க்கும் நல்லோ னவன்
அரசர்க்கு மிவன்சொல் மேன்மை அவன்தந்தை தந்தை [போலே
திருமகன் வாழ்வா னகும் சேவலன் கொடியோன் பத்தி
தன்ரயதை விருத்தி செய்வன் தாட்சண்யன் கனத்த [புத்தி

9. ஜாதகர் இரண்டு பாஷையில் படித்தவராவர். இவர் எல்லோருக்கும் நல்லவராக விருப்பார். இவருடைய வார்த்தைகள் அரசர்களுக்கும் சிரேஷ்டமானவையாக விருக்கும். இவர் தன்னுடைய பாட்டனைப் போல வாழ்வார். இவர் சேவற் கொடியை யுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்ய வகையருக்களை அதிகப்படுத்துவார். இவர் தயாள குண முடையவர். சிறந்த அறிவை யுடையவர்.

## இதுவுமது

10. வண்டிவா கனமு மேற்பன் மாற்ருனை உறவு கொள்வன்
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்
துண்ட மாய்க்கூரு ஞகும் தொடுவழக் கதனில்
[சொல்லான்
எண்டிசைப் புகழு மேற்பன் யெளியோர்மேல்
[பிரிய ஞகும்.

10. ஜாதகர் வண்டியையும் வாகனங்களையுமுடையவராவர். எதிரியையும் சினேகஞ் செய்து கொள்ளுவார். இவர் பூர்விகமான பழைய நிலங்களைப் பயிரிட்டு விருத்தியாக்குவார். இவர் கடினமாகவும் வெட்டியும் பேச மாட்டார். இவர் சீக்கிரம் முடியாமல் நீடித்திருக்கின்ற வியாஜ்ஜியத்தில் பிரவேசிக்க மாட்டார். இவர் எல்லாத் திக்குகளிலும் கீர்த்தியை யுடையவராவர். இவர் ஏழைகளிடத்தில் அன்புள்ளவராக விருப்பார்.

## சகோதர பாவம்

11. தன்துணை முன்னேன் நஷ்டம் தங்கிடும் கன்னி
[யொன்று
அன்னவள் தீர்க்க சீவி அத்திரி மறுத்துச் சொல்வார்
முன்தா யொன்றுண்டு யென்றீர் மொழிகுவீர் அவட்குப்
[புத்திரர்
பின்னமாம் சஷ்டி யென்ரேும் பேதையு மரிப்ப ளாகும்

11. ஜாதகருடைய மூத்த சகோதரர் சீக்கிரம் இறந்து விடுவார். ஒரு மூத்த சகோதரி ஜீவித்திருப்பாள். இவள் தீர்க்காயுளை யுடையவளாவள். உடனே அத்திரி ரிஷி தடுத்துக் கேட்கின்ருர். இவருக்கு முதல் தாயார் உண்டென்று சொன்னீரே! இந்தத் தாயாருடைய பிள்ளைகளைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே, இந்தத் தாயாருக்கு ஆறு குழந்தைகள் பிறந்து சீக்கிரம் இறந்து விடுவாகள். இவளும் இறந்து விடுவாள் என்ருர் முனிவர்.

## ஜாதகரின் மூத்தசகோதரியின் குணுதிசயங்கள்

12 முன்துணை சேதி சொல்வேன் மொழியது சுருக்க மாகும்
அன்னியர்க் கிணக்கம் சொல்லாள் அறிவுளாள் கோபம்
[கொஞ்சம்
பொன்பணி அதிகம் சேர்ப்பள் போசன வறுமை
[காணுள்
தன்வரன் தென்மேல் நேரும் தாய்வர்க்க மென்று
[சொல்வோம்.

12. ஜாதகரின் மூத்த சகோதரியினுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் சிறிதாகவே வார்த்தைகளை உபயோகப்படுத்திப் பேசுவாள். இவள் பிறருக்கு அடங்கிப் பேச மாட்டாள். இவள் புத்திசாலியாக விருப்பாள். இவளுக்குச் சிறிது கோபமுண்டு. இவள் தனம் ஆடை ஆபரணங்கள் இவற்றை அதிகமாகச் சேர்த்து வைப்பாள். இவள் சாப்பாட்டு விஷயத்தில் கஷ்டத்தை அநுபவிக்க மாட்டாள். இவளுக்குப் புருஷன் தென் மேற்குத் திக்கிலிருந்தும் தாயார் பாத்தியத்திலிருந்தும் வந்து சம்பவிப்பார் என்று சொல்லுகின்றோம்.

## இதுவுமது

13. வரன்மனம் போலே வாழ்வள் வயதுமே தீர்க்க மெய்தும்
அரிவையும் யோக சாலி அடாவடி கூறு ளாகும்
திருமக ளொப்பாய் வாழ்வள் சீலியாம் விரத சாலி
பெருமையும் புகழு முண்டு புதல்வர்க ளாண்பால்
[மூன் று.

13. ஜாதகரின் மூத்த சகோதரி, தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருந்து வாழ்வாள். இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள். இவள் யோகத்தை யுடையவளாவள். இவள் முரட்டுத்தனமாகவும் அநியாயமாகவும் பேச மாட்டாள் இவள் லக்ஷ்மிக்கு சமமானவளாக விருந்து வருவாள். நல்லொழுக்கங்களை யுடையவளாவள். விரதங்களை அநுஷ்டிப்பவளாவள். இவள் மேன்மையையும் கீர்த்தியையும் உடையவளாவள். இவளுக்கு மூன்று பிள்ளைகளும்;

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

14. கன்னிகை யிருவர் தீர்க்கம் கழறுவோ மன்னை சேதி
முன்கோபம் மூர்க்கம் கொஞ்சம் மொழியதும் சுத்தமாகும்
பின்னோர்க்கு வுதவி செய்வள் பொருத்த மாய்ப் பேசு
[வாளாம்
பொன்பணி உடைய ளாகும் புகழ்ந்தோரை யாத ரிபபள்

14. இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். ஜாதகரின் தாயாருடைய விஷயங்களை இனிமேல் சொல்லுகின்றோம். இவள் முன் கோபத்தை யுடையவளாவள். முரட்டு குணத்தையும் பிடிவாதமான குணத்தையும் சிறிது உடையவளாவள். சுத்தமான வார்த்தைகளை உபயோகப் படுத்திப் பேசுவாள். ஏழைகளுக்கு இவள் உபகாரத்தைச் செய்வாள். இவள் விஷயங்களுக்குத் தகுந்தாற் போலப் பேசுவாள். இவள் தனம் ஆடையாபரணங்கள் ஆகிய இவற்றை யுடையவளாவள். தன்னைக் கௌரவப் படுத்திப் பேசுகின்றவர்களை இவள் காப்பாற்றுவாள்,

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவம்

15. மங்கையும் துணைவர் காணுள்
மாமுனி தடுத்துச் சொல்வார்
சங்கையைச் சொல்லு மென்னச்
சனி ஆறில் யிருப்ப தாலே
இங்கிவள் துணைவர் தோஷமிவ
ளன்னை செய்குற் றத்தால்
தங்காது வென்று சொன்னேம்
சாற்றுவீர் அவள்குணத்தை.

15. ஜாதகரின் தாயாருக்குச் சகோதரர்கள் கிடையா. உடனே வசிஷ்ட மகரிஷியானவர் தடுத்துக் கேட்கின்ருர். இதற்குக் காரணத்தைச் சொல்வீர் என்று கேட்கவே, சனி ஆருவது வீட்டில் இருப்பதாலே இவளுக்குச் சகோதர தோஷமுண்டு என்ருர் ஜயமுனிவர். இஃது இவளுடைய தாயார் செய்த பாவத்தால் ஏற்பட்டதாகும். ஆகையால் சகோதரர்கள் பிறந்து நிலைத்திருக்காமல் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்ரேம். இவளுடைய தாயாரின் குணுதிசயங்களைச் சொல்லுவீர்?

*குறிப்பு :—ஆருவது வீட்டு விஷயம் :— ஜாதகருடைய மாதிரு ஸ்தானம் அல்லது லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குச் சகோதர ஸ்தானம் மூன்ருவது வீடாகிய கும்பம் ஆகும். இந்தக் குடும்பம் கன்னிக்கு ஆருவது வீடாகும். ஆகையாகும் ஆருவது வீட்டை இங்குச் சொல்லியிருக்கின்ருர். தனுசிற்கு மூன்ருவது வீட்டில் சனி இருப்பது விஷயமாகச் சம்பு ஹோரா பிரகாசிகா சகஜ பாவம் ஐம்பத்தெட்டாவது (58-ஆவது) சுலோகத்தைப் பார்க்கவும். அஃதாவது முன்பின் சகோதர தோஷ முண்டாகும்.

16. அவசர மனத்த ளாகும் அடைந்தோரை யாத ரிப்பள்
தவசிகட் கன்ன மீவள் சிவந்தமெய் உணச்சல் தேகி
நவனியில் பொய்கள் சொல்லாள் நளினமாய் வார்த்தை [சொல்வள்
பவமன மில்லா ளாகும் பரஉப காரி யாகும்.

16. ஜாதகருடைய தாய் பாட்டியார் அவசரமாகக் காரியங்களை நடத்தக் கூடியவள். நிதானமான மனத்தை யுடையவளல்லள். இவள் தன்னிடம் உதவிக்காக வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். இவள் தவங்களைச் செய்கின்றவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவாள். இவள் சிவப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவளாவள். மெலிந்து வாடின தேகத்தை யுடையவளாவள். இவள் பொய் பேச மாட்

டாள். இவள் இனிமையாகவும் பரிகாசமாகவும் வார்த்தைகளைச் சொல்லு வாள். இவள் நல்ல மனத்தை யுடையவளாவள். பிறருக்கு உபகாரத் தைச் செய்பவளாவள்.

17. முன்னவ ளிருந்த சென்மம் மொழிகிறோம் புலியூர்
[தன்னில்
கன்னமாம் குலமுதித்துக் கனமான குடும்பி யாகி
அன்னவள் வாழு நாளில் அணுகின வினையைக்
[கேண்மோ
தன்னகர் விசேஷ நாளில் சங்கரர் பாதம் போற்றி;

17. தாய் பாட்டியாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின் றோம். இவள் புலியூரில் கணக்கருடைய ஜாதியில் பிறந்து பெரிய குடும் பியாக விருந்து வாழ்கின்ற காலத்தில், இவளுக்கு வந்து சம்பவித்த பாவத் தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. தன்னுடைய ஊரில் ஒரு விசேஷ உற்சவ தினத்தில் சிவபெருமானைக் கோயிலில் தரிசித்துப் பூஜை செய்து விட்டு;

18. குங்குமம் மஞ்சள் சீப்புக் கோதையும் வாங்கிக் கொண்டு
தங்கமும் யீயா ளாகிச் சர்வமான் போல்ம றைந்தாள்
அங்கவன் வணிபன் பார்த்து அம்மாதைக் காணு னுகிச்
சங்கையாய் மனத்த னுகிச் சாற்றுவான் சாபம் தானும்.

18. கடைத் தெருவிற்குப் போய், குங்கம், மஞ்சள், சீப்பு ஆகிய இவற்றை இவள் வாங்கிக் கொண்டு இவற்றின் விலையைக் கடைக்காரனுக் குக் கொடுக்காமல் ஒரு மானைப் போலச் சீக்கிரத்தில் ஓடிக் கண்ணிற்குத் தென்படாமல் போய் மறைந்து விட்டாள். கடைக்காரச் செட்டியார் இவளைத் தேடிப் பார்த்தும் இவள் அகப்படாததால், மனத்தில் துன்பத்தை யடைந்து சாபத்தைக் கொடுத்தார்.

## வணிகன் சாபம்

19 இனமது ஆகா முன்ன மேகுவான் வரனுமே தான்
வனிதை பின்சென்மம் தன்னில் மாரனும் மறித்துமே
[தான்
தனியளாய் தாயில் லத்தில் சஞ்சல மனமாய் வாழ்வள்
சினமுடன் சொல்லித் தூளைத் தூற்றினு ரென்று
[சொல்வோம்.

19. நீ வாங்கின வஸ்துக்கள் செலவா காதற்கு முந்தியே உன்னு டைய புருஷன் இறக்கக் கடவது. மேலும் உன்னுடைய மறு ஜன்மத்தில் உன்னுடைய புருஷன் இறந்து போகக் கடவது, பிறகு நீ உன்னுடைய

தாயார் வீட்டில் மனக் கஷ்டத்துடனும் துன்பத்துடனும் வாழக்கடவது என்று கோபத்துடன் வியாபாரி சொல்லித் தெருவிலுள்ள மண் தூளை வாறிக் காற்றில் தூற்றினர் என்று சொல்லுகின்றோம்.

20. ஆகையால் அந்த ஆண்டில் அவள் வரன் மரண மாகி
தோகையும் சஞ்ச லத்தால் சென்றனள் கால நாடு
ஆகமன் வரையப் பட்டு அணுகினு ளந்த மாது
பாகமாய் வணிபன் சாபம் பர்த்தாவு மரித்து மேதான்.

20. ஆகையால் அதே வருஷத்தில் இவளுடைய புருஷன் இறந்து இவள் மனத்துக்கத்துடனும் கஷ்டத்துடனுமிருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு வந்து இந்த ஜன்மத்தில் பிறந்தாள். வியாபாரியான வாணியருடைய சாபம் வந்து சம்பவித்ததால் இவளுடைய புருஷன் இறந்து;

## மறுபிறவி

21. மாதுரு யில்லம் வாழ்வள் மைந்தர்கள் தோஷ மெய்தும்
ஓதுவேன் யிவள்பின் சென்மம் உயர்காஞ்சி தன்னிலே [தான்
மாதவர் குல முதிப்பாள் வதிஷ்டரும் புகலு கின்ருர்
காதலிக் கிச் சென்மத்தில் கலந்த புண்ணியங்க ளென்ன.

21. இவள் தன்னுடைய தாயாருடைய வீட்டிற்குச் சென்று வாழ்வாள். இவளுடைய பிள்ளைகளுக்கும் தோஷ முண்டாகும். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். மேன்மை தங்கிய காஞ்சீபுரத்திலே பிராமணருடைய ஜாதியில் பின் ஜன்மத்தில் பெண்ணுகப் பிறப்பாள். உடனே வசிஷ்ட மஹரிஷி கேட்கின்ருர். இவள் பிராமண ஜாதியில் பிறப்பதற்கு இவள் இந்த ஜன்மத்தில் என்ன புண்ணிய காரியங்களைச் செய்தாள் ?

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

22. அரமதி லிச்சை யாயும் ஆபத்தைச் சிலர்க்குக் காத்தும்
வருவதால் உதிப்பா ளாகும் மாதுரு பூர்வம் சொல்வேன்
திருவணு மலையி லேதான் செனித்தனள் ரெட்டி வம்சம்
பெருமையாய்க் குடும்பி யாகிப் பூவையும் வாழு நாளில் ;

22. இவள் தர்ம காரியங்களைச் செய்வதில் பிரியமுள்ளவளாயுமிருந்து ஆபத்துக் காலத்தில் சிலருக்கு உதவி செய்து வந்ததாலும் பிராமண ஜாதியில் பிறப்பாள். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றேன். இவள் திருவண்ணுமலை க்ஷேத்திரத்தில் ரெட்டியாருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறந்து மேன்மையான் ஒரு குடும்பஸ்தளாகி வாழ்கின்ற காலத்தில்;

23. பஞ்சையா யேழை மாது பாலர்க்கு அன்னம் வேண்டிக்
கெஞ்சினுள் மாது பக்கல் கிளிமொழி வார்த்தை யின்றி
மிஞ்சிய வார்த்தை சொல்லி விரட்டினு ளேழை தன்னை
வஞ்சியும் மன வெறுப்பால் வரைந்த சாபத்தைக்
[கேண்மோ

23. ஒரு ஏழை ஸ்திரீ தன்னுடைய குழந்தைகளுக்குச் சாதம் தேவை யாகி இந்தத் தாயாரிடத்திற்குச் சென்று அன்னத்தைக் கெஞ்சிக் கேட்டாள். இந்தத் தாயார் இனிமையான வார்த்தைகளைச் சொல்லாமல் அதிக துஷ்டத்தனமான கடினமான வார்த்தைகளை உபயோகப்படுத்தி அந்த ஏழை ஸ்திரீயை அதட்டித் துறத்தி விட்டாள். இந்த ஏழை ஸ்திரீ மனக் கஷ்டத்தை அடைந்து கொடுத்த சாபத்தைக் கேட்பீராக.

24. பாலர்க்குச் சோறீயாப் பாவி பருகாது சுதர் தமக்குச்
சாலவே பின் சென்மத்தில் சந்ததி தோஷ மாயும்
ஏலவே துணைவ ரின்றி யிருமனை யாக வாழ்வள்
ஆலம்போல் சொல்லிச் சென்ருள் அணுகிற்று அந்தச்
[சாபம்.

24. பிள்ளைகளுக்குச் சாதத்தைக் கொடுக்காத பாபியாகிய உனக்கு உன்னுடைய மறுஜன்மத்தில் உன்னுடைய குழந்தைகளுக்குத் தோஷமுண்டாகியும், உனக்குச் சகோதரர்கள் இல்லாமலும், இரண்டாவது மனைவி யாக வாய்ந்தும் நீ வாழக் கடவது என்று ஏழை ஸ்திரி விடிவாக்குகளைச் சொல்லிப் போய் விட்டாள். இந்தச் சாபம் இவளை வந்து அடைந்தது.

25. கன்னிகை அந்தியத்தில் காளைகள் தோஷ மாயும்
தன்மன சஞ்சல த்தால் தந்தியின் கோஷ்டத் திற்கு
உன்னத மாரி கோஷ்டம் ஒருதீபம் வைத்து வந்து
துன்மை யாய்க் கால நாடு சென்றுமே பிரமன் லக்கம்.

25. ஜாதகருடைய தாயார் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் தன்னுடைய பிள்ளைகள் இறந்து தன்னுடைய மனத்தில் துக்கத்தையுங் கஷ்டங்களையும் அடைந்து, ஒரு விநாயகருடைய கோயிலுக்கும் சிறந்த ஒரு மாரியம்மன் கோயிலுக்கும் ஒவ்வொரு விளக்கை வைத்து ஏற்றிக் கொண்டிருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு.

26. வந்தவ ளென்று சொல்வோம் மருவிடும் யேழை சாபம்
தன் துணைக் காணு ளாகும் சந்ததி குற்ற மாகும்
தென்முனி புகலு கின்ருர் தேவிக்கு சுதராண் ஒன்று
கன்னிகை ஒன்று யெவ்வாறு கழறினீர் தீர்க்கம்
[சொல்வாய்

26. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ரேம். அந்த ஏழை ஸ்திரீயினுடைய சாபம் இவளை வந்தடையும். இவளுக்குச் சகோதரங்கள் கிடையா, குழந்தைகளும் இறந்து போய் விடும். உடனே அகஸ்திய மஹரிஷி தடுத்துக் கேட்கின்ருர். இவளுக்கு ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று எவ்விதமாகச் சொன்னீர் ?

27. அங்கரன் கோஷ்ட த்திற்கும் அம்மாரி கோஷ்டத் [திற்கும்
நங்கையும் தீபம் தானும் நல்கின புண்ணி யத்தால்
சிங்கம்போல் ஆண்பா லொன்று செல்வியு மொன்று [தீர்க்கம்
பங்கமே அடையா ளாகும் பராசரும் மறுத்துச் [சொல்வார்.

27. ஜாதகருடைய தாயார் விநாயகருடைய கோயிலுக்கும், மாரியம்மனுடைய கோயிலுக்கும் விளக்கேற்றி வைத்தப் புண்ணிய கைங்கரியத்தால் சிங்கத்தைப் போல பலமான ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். அதனுல் இக் குழந்தைகள் சம்மந்தப்பட்டவரையிலும் இவள் குறைவை யடைய மாட்டாள். உடனே பராசர மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்ருர்.

28. மைந்தனுக் காதி காலம் மால்தசை யாகை யாலே
விந்தையாய்ச் சாந்தி யொன்று வேதன்போல் செய்வா [ருகில்
வந்திடும் வினைகள் நீங்கிடும் மாரனும் தீர்க்க சீவி
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்ருது.

28. ஜாதகர் பிறந்த காலத்தில் மால் என்ற புதனுடைய தசை நடப்பதாலே ஜாதகருடைய தாய் தகப்பனுர் ஒரு சாந்தியைச் செய்வாராகில் ஜாதகருக்கு நேரிடும் கெண்டங்களும் கஷ்டங்களும் விலகிவிடும், இவர் நீண்ட ஆயுளை அடைவார். முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

29. அன்னையின் சென்மம் சொல்வேன் அழகர்வாழ் பாண்டி [தன்னில்
உன்னத சைவ சேயாய் உதிப்பளா மென்று [சொல்வோம்
பொன்பணி உடைய ளாகிப் பூவையும் வாழ்வா ள்ாகும்
கன்னன்ன மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

29. ஜாதகருடைய தாயாரின் பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகர் வாழ்கின்ற பாண்டிய தேசத்தில் ஒரு சிறந்த சைவ ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். இவள் தனம் ஆடையாபரணம் ஆகிய இவற்றை யுடையவளாகி வாழ்வாள். சர்க்கரையைப் போல இனிமையான வார்த்தைகளை யுடைய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

30. தந்தையின் பூர்வம் சொல்வேன் தாம்பிர பரணி
[தன்னில்
முந்திய வேளாள குலம் முதித்துமே கிருஷி செய்து
வந்திடும் மனைவி மைந்தர் வளமுள் குடும்பி யாகி
அந்தவன் வாழும் நாளில் அணுகின வினையைக்
[கேண்மோ.

30. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் தாம்பிரபரணி நதி தீரத்தில் மேன்மையான ஒரு வேளாள ஜாதியில் பிறந்து பயிரிடுந் தொழிலைச் செய்து கொண்டு, மனைவி மக்களை யுடைய ஒரு சிறந்த குடும்பஸ்தராக விருந்து வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

31. விதவையை போகம் துய்த்து வித்தகிக்குக் கருவு தங்க
அதம் செய்தான் பண்டிதத்தால் அம்மாது மரித்தா
[ளென்றோம்
இதுஒரு தோஷ மாச்சு யியம்புவோம் வேறு ஒன்று
நிதியிலா யேழை யோர் நிமலன் பாலணுகி யேதான்;

31. ஜாதகருடைய தகப்பனர் ஒரு விதவை ஸ்திரீயிடம் சம்போகஞ் செய்யவே இவளுக்குக் கர்ப்ப முண்டாகவே இதை வைத்தியஞ் செய்து அழிக்க, இந்த ஸ்திரீ இறந்து போய் விட்டாள் என்று சொல்லுகின்றோம். இது ஒரு பாவமாக நேரிட்டது. இன்னொரு தோஷத்தைச் சொல்லுகின்றோம். பணமில்லாத ஏழை ஒருவர் இந்த தகப்பனரிடம் சென்று,

32. என் சுதர் மணங்கள் வேண்டி யீகுவாய் முத்திரை
[யென்ன
அன்னோர்க்குத் தைரியம் சொல்லி ஆசையாய் மற்ற
[தெல்லாம்
பின்னோர்கள் தேடி யேதான் போற்றுவாய் முத்திரை
[யென்ன
தின்மையாய் வார்த்தை சொல்ல செப்புவார் யேழை
[யோர்கள்.

32. என்னுடைய பிள்ளையின் விவாகத்திற்காகத் தேவையான மாங்கல்யத்தைச் செய்து கொடுக்க வேணு மென்று கேட்க, இவரும் இதற்குச் சம்மதப்படவே, இந்த ஏழை சந்தோஷத்துடன் மீதி எல்லாவற்றையுஞ் சேகரித்துக் கொண்டு இவரிடம் சென்று மாங்கல்யத்தைக் கொடு என்று கேட்கவே, இவர் இல்லையென்று சொல்லி விட்டார். இதன் பேரில் இந்த ஏழை சொல்லுகின்றார்.

33. இச்சக வார்த்தை சொல்லி யீயாத பாவி யேநீ
மிச்சமாய் மறு சென்மத்தில் மாதுவு மிரண்டு நேரும்
லச்சைகள் மிக வுண்டாகி நல்காது சுதர் உனக்கு
துச்சமாய்ச் சொல்ல லுற்றார் சேர்ந்தது அந்தச் சாபம்.

33. இனிப்பான வார்த்தைகளைச் சொல்லிப் பிறகு கொடாத பாபியாகிய நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் இரண்டு மனைவிமார்களை அடைந்தும், கஷ்டங்களையும், வெட்கத்தையும் அதிகமாக அடைந்தும், உனக்குப் பிள்ளையில்லாமலும் நீ வாழக் கடவது என்று சாபம் கொடுத்தார். இந்தச் சாபமும் இவரை வந்தடைந்தது.

34. மாரனும் அந்தி யத்தில் வறுமைகள் மிகவே கொண்டு
ஆறுமா முகத்தோன் பக்தி அந்தகன் நகரம் சென்று
தீரமாய்ப் பிரமன் லக்கம் செனித்தவ னென்று
[சொல்வோம்
நேரிடும் கருவின் சாபம் நிதியிலார் யேழை சாபம்.

34. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் அதிகமான தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மநுபவித்தும், ஆறு முகங்களை யுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராகவுமிருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய், பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இவருக்குக் கருவால் ஏற்பட்ட தோஷம் இவருக்கு வந்து சம்பவிக்கும், பணமில்லாத ஏழையின் சாபமும் வந்து சம்பவிக்கும்.

## ஜாதகரின் தகப்பனாருடைய பின்ஜன்மம்

35, பாரினில் யிரண்டு நேரும் பாலர்கள் தோஷ மெய்தும்
காரிய சமர்த்த னாகும் கழறுவோம் யிவன்பின் சென்மம்
போரூரில் யிக் குலத்தில் பிறப்பனா மென்று
[சொல்வோம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே சேளாய்.

35. இந்த இரண்டு சாபங்களும் தகப்பனாரை வந்து அடையும். இதனால் பிள்ளைகளுக்குத் தோஷ முண்டாகும். இவர் காரியங்களைச் செய்வதில் சாமர்த்தியமுள்ளவராவர். இவருடைய மறு ஜன்மத்தைப்

பற்றிச் சொல்லுகின்றோம். இவர் போரூரில் இந்த ஜன்மத்திய குலமாகிய நாயகர் ஜாதியில் பிறப்பார் என்று சொல்லுகின்றோம். ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாய் தகப்பனுருடைய மரணகாலம்

36. ஈரஞ்சு ஆண்டு தன்னி லெய்திடும் தந்தை கண்டம்
மாறிடும் பதினை ந் தாண்டில் மகர மாதத்திலே தான்
கூறுவோம் கர்ம மென்றோம் கோதைக்கு முப்ப தாண்டில்
தீரமாய் கண்ட மெய்தும் செப்பின மொழி குன்றுது.

36. ஜாதகருக்குப் பத்தாவது வயதில் தகப்பனுருக்குக் கண்டம் நேரிடும். இது தவறிப் போய்ப் பதினைந்தாவது வயதில் மகரமாதம் என்ற தைமாதத்தில் தகப்பனுர் இறந்து இவருக்குக் கர்மகாரியங்கள் நடைபெறும் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில் இவருடைய தாயார் இறந்து போய் விடுவாள் என்று சொல்லுகின்றோம். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் பாட்டியார் மரணமும், ஜாதகரின் விவாவகமும்

37. ஒன்பது ஆண்டு தன்னில் உறங்குவா ளன்னைக் கன்னை
இன்னவன் மணத்தின் காலம் யீரொன்ப தாண்டி
[லேதான்
தென்மேல் பால்பாரி வாய்க்கும் சேயிழை குணத்தைச்
[சொல்வேன்
மன்னன் தன்மனதுக் கேத்தோள் வருவோ ரையாத
[ரிப்பள்.

37. ஜாதகருக்கு ஒன்பதாவது வயதில் இவருடைய தாய்ப் பாட்டியார் இறந்து விடுவாள். ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில் விவாகம் நடக்கும். தென் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள். இவளுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருப்பாள். இவள் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள்.

38. பால்பாக்கிய முடைய ளாகும் பகையென்று மனதில்
[வையாள்
ஞாலமேல் நல்லோ ளாவள் நன்நடை பொறுமை சாலி
மால்மனை ஒப்ப தாகும் மாதுவும் யோக சாலி
மேலோர்க்கு அன்ன மீவள் வயதுமே தீர்க்க மெய்தும்;

38. ஜாதகருடைய மனைவி பால் பாக்கியத்தை யுடையவளாவள். இவள் விரோதத்தைத் தன்னுடைய மனத்தில் வைக்காதவளாக விருப்பாள்: இவள் பூமியில் நல்லவளாக விருப்பாள். இவள் நல்லொழுக்கங்களை யுடையவளாவள். சாந்த குணத்தை யுடையவளாவள். இவள் மகாவிஷ்ணுவின் மனைவியாகிய இலக்ஷ்மிக்குச் சமானமானவளாக விருப்பாள். இவள் யோகத்தை யுடையவளாவள். பெரியோர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவாள். இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள்.

39. புத்திர தோஷ மெய்தும் புகலுவீ ரந்தச் சங்கை
குத்தமாய்க் கேது அஞ்சில் குணமிலா காரி ஆறில்
சித்தமா யிருப்ப தாலே செப்பினேர் மந்தச் சங்கை
வித்தகன் முன்சென் மத்தை விளங்குவோம் கேளு மாதே.

39. இந்த மனைவிக்குப் புத்திர தோஷ முண்டாகும். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, கெடுதியான கேது ஐந்தாவது வீட்டில் இருப்பதாலும், நல்லவரல்லாத காரி என்ற சனி ஆருவது வீட்டிலிருப்பதாலும் இவ்விதமான தோஷத்தைச் சொன்னேம். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றேம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

40. கொங்கு நாட்டதனி லேதான் குதித்தனன் செக்கான் [வமிசம்
தீங்குலாக் குடும்பி யாகித் தீரனும் வாழும் நாளில்
ஏங்கினேர்க் கிடைஞ்சல் செய்தா னெய்திற்று [அதுஓர் தோஷம்
ஆங்கவன் துணைக்குப் பாகம் அனுகாமல் மோசம் [செய்தான்.

40. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் கொங்கு தேசத்தில் செக்காட்டுகின்ற வாணியருடைய ஜாதியில் பிறந்து நல்ல குடும்பஸ்தராக விருந்து வாழ்கின்ற காலத்தில் இவர் கஷ்டப்படுகின்ற ஏழைகளுக்குக் கெடுதியைச் செய்தார். இஃது ஒரு தோஷமாயிற்று. இவர் தன்னுடைய சகோதரனுக்கு அவருடைய பாகத்தைக் கொடுக்காமல் மோசஞ் செய்து ஏமாற்றி விட்டார்.

41. பின்துணை வருத்த முற்றுப்
புகன்ற சாபத்தைக் கேண்மோ
பொன்கடன் தாராப் பாவி
பிறக்கும்பின் சென்மம் தன்னில்

அண்ணன்தம் பிகளு மின்றி
அணுகாது சுதர்கள் தாமும்
இன்னமும் பலவாறு சொன்ன
னெய்திற்று அந்தச் சாபம்

41. ஜாதகருடைய இளைய சகோதரர் தன்னுடைய மனத்தில் துன்பத்தை யடைந்து கொடுத்தச் சாபத்தைச் சொல்லுகின்றேன். கேட்பீராக. என் பாகமாகிய பணத்தைக் கொடுக்காத பாபியாகிய நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் முத்த, இளைய சகோதரரில்லாமலும், பிள்ளைகளில்லாமலும் வாழக்கடவது என்றும் இன்னமும் பலவாருகவும் சகோதரர் ஜாதகரைப் பார்த்துச் சொன்னார். இந்தச் சாபமும் ஜாதகரை வந்தடைந்தது.

42. பாலர்கள் அந்தி யத்தில் பகையாகி வறுமப் பட்டுக்
காலன்தன் நாட டைந்து கஞ்சனால் வரையப் பட்டுச்
சாலவே தீயின் வமிசம் செனிப்பனு மிந்தப் பாலன்
ஆலம்போல் துணையின் சாபம் அடைந்திடும்
[துணையாண் தோஷம்.

42. ஜாதகருக்குத் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் இவருடைய பிள்ளைகள் இருவருக்குப் பகைவர்களாகியும், இவர் தரித்திரத்தையும் கஷ்டங்களையு மடைந்தும், பிறகு இறந்து, எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு நாயகர் ஜாதியில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவருடைய சகோதரருடைய சாபம் விஷத்தைப் போல இந்த ஜன்மத்தில் இவரை வந்தடையும். ஆகையால் இவருடைய சகோதரர்களுக்குத் தோஷ முண்டாகும்.

43. சுதர்களும் தோஷ மெய்தும் செப்புவீர் கிரியை யொன்று
அதிபனும் போரூர் சென்று வருமுகர்க் கர்ச்சித் தேத்தி
இதுபோலே ஐந்து கார்த்தி யேகியே மூவேழ்பே ருக்கு
அதிதிகட் கன்ன மீந்து அவனுவே உள்ளூர் சென்று.

43. ஜாதகருடைய சந்ததிகளுக்கும் தோஷம் உண்டாகும் என்றார் முனிவர். இதன் மேல் இதற்கு ஒரு பரிகாரத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, ஜாதகர் திருப்போரூர் க்ஷேத்திரத்திற்குப் போய் ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளுக்கு ஐந்து கிருத்திகை தினங்களில் அபிஷேகஞ் செய்து இவரைத் துதித்துப் பிறகு இருபத்தோரு பரதேசிகளுக்குச் சாப்பாட்டைப் போட்டுப் பிறகு தன் கிராமத்திற்குத் திரும்பி போய்;

## ஜாதகருடைய யோகம்

44. மதயானை கோஷ்ட த்திற்கு மணிவிளக் கொன்று வைக்கச்
சுதர்தோன்று மாண்பா லிரண்டு செல்விமா ரவ்வாறு
[தீர்க்கம்

அதிபன்தன் யோகச் சேதி வரைகிறோம் இனி மேலாக
அதிதிகட் கன்ன மீவன் ஆவுகள் பணையோர் விருத்தி.

44. மதயானையின் முகத்தை யுடைய விநாயகக் கடவுளின் கோயிலில் மணி விளக்கு ஒன்று வைத்து ஏற்றிவர குழந்தைகள் பிறக்கும். இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் தீர்க்காயுளை யுடையவர்களாவர். இனி மேல் ஜாதகருடைய யோக பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சன்னியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவார். இவருக்குப் பசுக்களும் நிலங்களும் ஏர்களும் விருத்தி யடையும்.

45. தந்தைக்கு மேலாய் வாழ்வன் சல்லியம் கொள்ளா னுகும்
முந்திநாள் பூமி விருத்தி யுலகோர்க்கு நல்லோ னுவன்
பந்தினர் மதிக்க வாழ்வன் பகரமாம் குடும்ப மேற்பன்
விந்தையாய் வணிபம் செய்வன் மேன்மக்கள் உறவு
[கொள்வன்.

45. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் கடன்பட மாட்டார். பழைய காலத்திய நிலங்களைப் பயிரிட்டு தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் ஜனங்களுக்கு நல்லவராக விருப்பார். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவப்படுத்தும்படியான நிலைமையிலிருந்து வாழ்வார். இவர் மேன்மையான சிறந்த குடும்பத்தை யுடையவராவர். இவர் பிறர் ஆச்சரியப் படும்படியாய் வியாபாரத்தைச் செய்வார். பெரியோர்களுடைய சிநேகத்தை யுடையவராவர்.

## ஜாதகருடைய மரணகாலம்

46. பந்துவை யாத ரிப்பன் பாரினில் வறுமை காணுன்
கந்தன் மேல்பக்தி பூண்பன் கழறுவோம் அறுபான்
[மூன்றில்
சுந்தரன் மீன மாதம் துவாதசி வளர்பக் கத்தில்
அந்தவன் உடல மேகும் அம்பிகை யாளே கேளாய்.

46. ஜாதகர் தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார். இவர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மனுபவிக்க மாட்டார். இவர் சுப்பிரமணியக் கடவுளின் பேரில் அன்புடையவராக விருப்பார். இவருக்கு அறுபத்து மூன்ருவது வயதில் மீன மாதம் என்ற பங்குனி மாதத்தில் வளர்பிறை துவாதசி திதி தினத்தில் மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும். பார்வதியம்மையாரே! கேட்பீராக.

*குறிப்பு :— வியாக்கியானம் :—ஜாதகருடைய மரண கால விஷயம் :— ஜாதகருக்கு அறுபத்துமூன்ருவது வயதில் ராகு தசை நடக்கின்றது. இந்த ராகு தசை ஏழாவது தசையாகும். ஜாத

காலங்காரம் தொள்ளாயிரத்து எழுபத்தைந்தாவது (975-ஆவது) பாடல் பிரகாரமும் குமாரசரமீயம் மகா தசைப் படலம் நான்காவது பாடல் பிரகாரமும் ராகு தசை ஏழாவது தசையாக வந்தால் இந்தத் தசை ஜாதகருக்கு.மரணத்தை உண்டு பண்ணும். மேலும் ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் சந்திரன் மாரகாதிபதியாகின்றார். இவருடைய பலனை ராகு ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகப் பிரகாரம் கொடுக்க வேணும். ஆகையால் ராகு தசையில் ஜாதகருக்கு மாரகம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மறுஜன்மம்

47. மறுசென்மம் கலிங்க நாட்டில் மறைகுல முதித்து [வின்னோன்
அரசரால் தொழிலும் பெற்று அவனியில் வாழ்வா னாகும்
திருமகன் செனன காலம் ரேவதி கடை பாதத்தில்
உரைக்கிறோம் புதன் மூன்றாண்டும் உரைந்திடும் [பதினோர் திங்கள்.

47. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் கலிங்க தேசத்தில் பிராமணர் குலத்தில் ஆணாகப் பிறந்து அரசாங்கத்தில் ஒரு வேலையில் அமர்ந்து வாழ்வார். இவர் பிறந்த காலத்தில் ரேவதி நட்சத்திரத்தில் நான்காவது பாதம் ஆகும். இதற்குரிய புதமாக தசையில் இருப்பு மூன்று வருஷங்களும் பதினொன்று மாதங்களும் ஆகும்.

48. பலனதைப் புகலக் கேண்மோ பாலகன் பிணி யனேகம்
மருவிடும் சாந்தி செய்யில் விலகிடு மென்று [சொல்வோம்
குலமதில் சூத மெய்தும் கூறுவோம் பின்பால் சேதி
மலையிறை மகளே யாங்கள் வரைந்தது தப்பா தாகும்.

48. இந்தத் தசை யிருப்பின் பலனைச் சொல்லுகின்றோம் கேட்பீராக. ஜாதகருக்கு அநேகவிதமான நோய்கள் உண்டாகும். சாந்தியைச் செய்ய நோய்கள் நிவர்த்தியாகி விடும் என்று சொல்லுகின்றோம். இவருடைய ஜாதியில் சூதகம் நேரிடும் மற்ற விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். மலைகளுக்கு அரசனாகிய பார்வத ராஜனுடைய புத்திரியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். —C.G.R

# ஜாதகம் 25

## ஜனனகால கிரகநிலை

1. [1]ஆலோன் [2]மேடம் [3]சேய்[4]நத்தி
[5]அதிதி [6]வீணை [7]பா [8]னலவன்
[9]மாலோன் [10]சீயம் [11]பொன் [12]புகரும்
[13]மாதை யுறவே [14]பணி [15]மேரு
[16]நீலன் [17]தேளில் [18]உயிர் கன்னி
நுகர்வீர் பலனை யென்றுரைக்க
சால பிருகுதான் புகல்வார்
செனிக்கு மாண்பால் செனனமுறும்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச், சந்திரன் மேஷத்திலும், அங்காரகன் ரிஷபத்திலும், கேது மிதுனத்திலும், சூரியன் கடகத்திலும், புதன் சிம்மத்திலும், குருவும் சுக்கிரனும் கன்னியிலும், ராகு தனுசிலும், சனி விருச்சிகத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால், பலாபலன்களைச் சொல்லுவீரென்று பார்வதியம்மையார் கேட்கப் பிருகு மஹ ரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகப் பிறக்கும்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | அங்காரகன் | கேது |
| | இராசி | | சூரியன் |
| | சக்கரம் | | புதன் |
| ராகு | சனி | | லக்கினம் குரு சுக்கிரன் |

அஸ்வனி 3-ஆம் பாதம் கேது தசை ஷ 2—2—00.

*குறிப்பு :—இந்த ராசிச் சக்கர அமைப்பிற்குப் பின் வரும் அம்சைச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:— மேஷத்தில் கேதுவும், மிதுனத்திற் சந்திரனும் குருவும், கடகத்தில் அங்காரகனும், சிம்மத்தில் புதனும், கன்னியில் சனியும், துலாத்தில் ராகுவும், மகரத்திற் சூரியனும், கும்பத்திற் சுக்கிரனும் ஆகும். சனி வக்கிர கதியிலிருக்கின்றார்.

1. சந்திரன்
2. மேஷம்
3. அங்காரகன்
4. ரிஷபம்
5. கேது
6. மிதுனம்
7, சூரியன்
8. கடகம்
9. புதன்
10. சிம்மம்
11. குரு
12. சுக்கிரன்
13. கன்னி
14. ராகு
15. தனுசு
16. சனி
17. விருச்சிகம்
18. லக்கினம்

---

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. தந்தை யில்லம் கீழ்பார்வை
தென்பால் பாழாம் மாரி உத்தரம்
தந்தி காளில் வடகீழ்ப்பால் சாரும்
சிறுவூர் வடுகர்குலம்
வந்தோன் சேஷ்டனிவன் யோக
மன்னே தந்தைதா யோகம்
பிந்தி துணேவர் களத்திர புத்திரர்
பேசும் முன்பின் செனனமுமே.

2. ஜாதகருடைய தகப்பனுரின் வீடு கிழக்குத் திக்கைப் பார்த்ததாகும். தெற்குத் திக்கில் பாழடைந்த கட்டட மிருக்கும். மாரியம்மன் கோயில் வடக்குத் திக்கிலிருக்கும். விநாயகக் கடவுளின் கோயிலும் காளியம்மன் கோயிலும் வடகிழக்குத் திக்கில் இருக்கும். ஒரு சிறிய கிராமத்தில் தெலுங் கருடைய ஜாதியில் ஜாதகர் மூத்த குமாரராகப் பிறப்பார். இவருடைய யோகம், தாய் தந்தை இவர்களின் யோகம், சகோதரர், மனேவி, மக்கள் ஆகிய இவர்களுடைய யோகங்களேயும், முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணநலங்கள்

3. ஆமே தந்தை துணே யாண்பால்
அணுகும் ஒன்றே பெண் மூன்று
திமை யிலாமல் தீர்க்கமுறும்
செப்பும் பின்னேன் குணமதனே
நேமி விரயம் வேருவன்
நிலேக்கான் தந்தை வில்லத்தில்
பூமிதனிலே செட்டுச் செய்வன்
பின்யோ சனேயு முடையவனே.

3, ஜாதகருடைய தகப்பனுருக்கு ஒரு சகோதரரும் மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இளைய சகோதரரின் குணாதிசயங்களைப் பற்றி சொல்லுகின்றோம். இவர் நிலங்களை விற்றுவிடுவார். இவர் வேறு குடும்பஸ்தராகப் போய் விடுவார். தகப்பனுருடைய வீட்டில் வாசஞ் செய்ய மாட்டார். இவர் வியாபாரத் தொழிலைச் செய்வார். இவர் பின்புத்தியையும் ஆலோசனையையுமுடையவராவர். அஃதாவது ஒரு காரியத்தை முன்னே நன்ருய் யோசிக்காமல் செய்து விட்டு அதைப் பற்றிப் பின்னுல் யோசித்துக் கவலையை யடைபவராவார்.

## வேறு

4. உடையோன் தனக்கு மனைவி யொன்று
உறுமே சுதர் பெண்யொருத்தி தீர்க்கம்
மடைய மதியால் மனை பகையும்
வனவா சங்கள் செய்திடுவன்
துடியும் பின்னுல் சேர்க்கை யிச்சை
சேரும் பின்னுல் படையாகும்
இடையில் வறுமை தானெய்தும்
இன்பம் காணுன் ஏந்திழை யே.

4. ஜாதகருடைய தகப்பனுரின் சகோதரருக்கு மனைவி ஒன்றேயாகும். இவருக்கு ஒரே பெண்தான் உண்டு. இந்தப் பெண் நீண்ட ஆயுளை யுடையவளாவள். இவர் தன்னுடைய புத்தியீனத்தால் முட்டாள்தனமாகத் தன்னுடைய மனைவியைப் பகைத்துக் கொள்ளுவார். இவர் வனவாசம் செய்வதுபோல அலைந்து திரிந்து கொண்டிருப்பார். பிறகு இவரிடம் மனைவி வந்து சேருவாள். இவருக்குப் பிற்காலத்தில் ஜனங்கள் இவரிடம் வந்து சேர்வார்கள். இவருக்கு மத்திய வயதில் தரித்திரமும் கஷ்டங்களும் நேரிடும். பார்வதியம்மையே! இவர் சுகங்களை அடைந்து வாழ மாட்டார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

5. இழையே வயது தீர்க்க முறும்
இயம்பக் கேண்மோ தந்தை குணம்
கடைநாள் அரியின் ராசிதனில்
கலப்பான் சிவந்த மெய்சம மாம்
தடையே சொல்லான் பெரியோர் க்குத்
தந்தை பகையும் வண்டி யுளன்
அடைவாய்க் கிருஷி தொழி லுடையன்
அற்ப கோபி ஆண்மை யுளன்.

5. ஜாதகரின் தகப்பனுருடைய இளைய சகோதரர் நீண்ட ஆயுளை யுடைவராவர். இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்களைப்

பற்றிச் சொல்லுகின்றேன். கேட்பீராக. கடைசி நட்சத்திரமாகிய ரேவதி நட்சத்திரத்தில் அரியின் ராசி என்ற சிம்ம லக்கினத்தில் இவர் பிறந்தவரா வர். இவர் சிவப்பு நிறமான தேகத்தை யுடையவராவர். சமமான அள வுள்ள, அஃதாவது நடுத்தரமான தேகத்தை யுடையவராவர். இவர் பெரி யோர்களிடத்தில் தடுத்துப் பேச மாட்டார். இவர் தன்னுடைய தகப்பனுரை விரோதஞ் செய்து கொள்ளுவார். வண்டி வாகனத்தை யுடையவராவர். இவர் நிலங்களைப் பயிரிடுந் தொழிலை யுடையவராவர். இவர் சிறிது கோபத்தை யுடையவராவர். ஆண் தன்மையை யுடையவராவர்.

## வேறு

6. உளமே மர்ம மில்லான்
உரையும் கடனும் உத்தமனுல்
இளகிய மனத்த னீகையுள
னிதிகாசங்கள் அரியா தான்
குளவி குணமும் கொஞ்சமுண்டு
கோதைக் கடக்கம் குண்டைவிருத்தி
அளகே சன் போல வாவெண்ணம்
அணுகா தென்றே மம்பிகையே.

6. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய மனத்தில் கள்ளம் கபடு வஞ்சனை ரகசியம் ஆகிய இவற்றை யுடையவரல்ல. இவர் கடன் வாங்கு வார். இவர் தயாளமான மனத்தை யுடையவர். இவர் பிறருக்குக் கொடுக் குந் தன்மையை யுடையவராவர். இவர் தர்ம சாஸ்திரங்கள் புராணங்கள் உபநிஷத் துக்கள் சுருதி ஸ்மிருதி ஆகிய இவற்றைப் படித்தவரல்லர். இவ ருக்குக் குளவியைப் போலக் கொட்டுகின்ற அஃதாவது கெட்ட குணம் சிறிதளவுண்டு. இவர் தன்னுடைய மனைவிக்கு அடங்கி நடப்பவராவர். இவருக்கு மாடுகள் விருத்தியாகும். இவருக்குத் தேவேந்திரனைப் போல வாழ்வதற்கு எண்ணமுண்டு. ஆனுல் இந்த எண்ணம் பூர்த்தியாகாது, சித்திக் காது என்று சொல்லுகின்றேம். பார்வதியம்மையே!

7. எய்தும் பின்னும் துணைபூமி யிடறு மத்தில் தானேறும்
ஐய மின்றி விலகாதாம் அறியோர் நேயன் மலருளால்
செய்யும் நினைத்தது முடியுமாம் தீரமனமும் பின்சிறப்பு
பொய்மெய் களுமே புகன்றிடுவன் புதல்வன் சேதி
[தான் கேளாய்.

7. ஜாதகருடைய தகப்பனுருக்குத் தன்னுடைய சகோதருடைய நிலங் கள் பிற்காலத்தில் கிடைக்கும். இவருக்குத் தன்னுடைய மத்திய வயது காலத்தில் கஷ்டங்களுண்டாகும். இது சந்தேக மில்லாமல் நிவிருத்தியா காது. இவர் புத்திசாலிகளுடைய சினேகிதத்தை யுடையவராவர். இவர் தான் செய்கின்ற காரியங்களையும், செய்ய எத்தனித்தக் காரியங்களையுஞ்

செய்து முடிப்பார். இவர் தைரியமான மனத்தை யுடையவராவர். இவருக்குப் பிற்காலத்தில் மேன்மை யுண்டாகும். இவர் பொய் மெய் ஆகிய இவவிரண்டையுங் கலந்து பேசுவோர். இனிமேல் ஜாதகருடைய விஷயங்களைச் சொல்லுகின்றோம். கேட்பீராக.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

### வேறு

8. பாகலகன் குணத்தைப் பகருவோம் தாயே
பசுமஞ்சள் நிறைந்தனு மென்றோம்
கோலமாம் ரூபி குஞ்சர நடையன்
குழவிபோல் பேசிபொன் கொள்வன்
சீலமில் லாதான் சிறுத்தோர் மேல்நேயன்
சிந்தையும் நல்லதே யாகும்
ஞாலத்தால் உய்வன் கல்வியும் சமமாம்
நடையது கடினமா மென்னே.

8. ஜாதகருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம். பார்வதி யம்மையே! இவர் பச்சை நிறமும் மஞ்சள் நிறமும் கலந்துள்ள ஒருவிதமான நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர் என்று சொல்லுகின்றோம். இவர் அழகான ரூபத்தை யுடையவராவர். யானையைப் போன்ற கெம்பீரமான நடையை யுடையவராவர். இவர் குழந்தையைப் போல இனிமையாகப் பேசித் தனத்தைச் சம்பாதிப்பார். இவர் சுத்தமாக விருக்க மாட்டார். நல்லொழுக்கமில்லாதவர். இவர் ஏழைகளிடத்தில் பிரியமாக விருப்பார். இவர் நல்ல எண்ணத்தை யுடையவராவர். இவர் பூமியால் ஜீவனஞ் செய்வார். இவருக்கு நடுத்தரமான படிப்புண்டு. இவர் கஷ்டப்பட்டு நடக்கக் கூடியவர் என்று சொல்ல வேண்டும்.

9. கடினமே யுரைக்கான் சோம்பலும் கொஞ்சம்
காணாத வார்த்தைகள் புகல்வன்
துடியிடை மார்கள் மோகனு மிவனே
தொல்புவி விருத்தியே செய்வன்
தடபுடல் செய்கை சதுஷ்பாதம் விருத்தி
சாமரை ரேகையு முடையன்
விடவாக்கு முடையன் வீண்பழியு மேற்கான்
வெஞ்சினம் கொஞ்சமு முண்டு.

9. ஜாதகர் கடினமாகவும் கண்டிப்பாகவும் பேச மாட்டார். இவர் சிறிது சோம்பலை யுடையவராவர். இவர் தான் பார்க்காத விஷயங்களைப் பற்றிப் பேசுவார். அஃதாவது பொய் கூடப் பேசுவோர். இவர் மெல்லிய இடையை யுடைய ஸ்திரீகளின் பேரில் மையல் என்ற காம

ஆசையை யுடையவராவர். இவர் பழைய நிலங்களைப் பயிரிட்டுத் தானி யவகைபருக்களை அதிகப்படுத்துவார். இவர் அவசரப்பட்டும் விரைவாகவும் டம்பமாகவும் காரியங்களைச் செய்வார். இவருக்குக் கால் நடைகள் விருத்தி யாகும். இவர் தன்னுடைய உள்ளங் கையில் சாமரை ரேகை என்ற ஒரு வித ரேகையை யுடையவராவர். இவர் விஷவாக்கை யுடையவராவர், அஃதாவது இவர் கெடுதியாக எதைச் சொல்லுகின்றாரோ அது நடந்தே தீரும். இவர் வீணாக அபவாதங்களை அடைய மாட்டார். இவர் சிறிதளவு கடுமையான கோபத்தை யுடையவராவர்.

10. தன்துணை ஆண்பா லிரண்டு சத்தியு மொருத்தி
[தீர்க்கம்
பின்துணை சேத மெய்தும் பேசுவீர் விபரம் தன்னைத்
துன்மையாய் மூன்றில் காரி சேயுமே பார்த்த தாலே
சொன்னனே துணைபின் சேதம் திருதியம் விருத்தி
[பென்றோம்.

10. ஜாதகருடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்களும் ஒரு சகோத ரியும் ஆகும். இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவருக்குப் பின்னால் பிறந்தவர் சீக்கிரம் இறந்து விடுவார். இதற்குக் காரணத்தை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, மூன்றாவது வீட்டில்காரி என்ற சனி பாபயோகத்துடன் இருப்பதாலும், இவரைச் சேய் என்ற அங்காரகனும் பார்ப்பதாலும், பின்னால் சகோதரர் நஷ்டமாகும் என்று சொன்னேன். மேல் சொன்ன மூன்று சகோதரர்களும் விருத்தியாகும் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் திருமணக்காலம் : மனைவியின் இயல்பு

11. சங்கையை விபர மாகச் சாற்றுவோம் பின்பா கத்தில்
மங்கள மிருபான் ஒன்றில் மாதுவும் மேல்பால் நேரும்
அங்கவள் குணத்தைத் சொல்வேன் அதிசய வார்த்தை
[சொல்வள்
பங்கய முகத்த ளாகும் பர்த்தாவுக் கினிய ளாகும்.

11. இந்த விஷயத்தைப் பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். ஜாதகருக்கு இருபத்தோராவது வயதில் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குண திசயங்களைச் சொல்லுகின்றேன். இவள் அதிசயிக்கும்படியாக வார்த்தை களைச் சொல்லுவாள். இவள் தாமரைப் பூவைப் போன்ற அழகான முகத்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமான வளாவள்.

12. பால்பாக்கிய முடைய ளாகும் பணிந் தோரை [யாதரிப்பள்
ஞாலமேல் நல்லோ ளாவள் நாயகி வந்த பின்பு
சாலவே யோகம் வாய்க்கும் தடபுடல் செய்கை யுண்டு
மால்பத்தி யுடைய ளாகும் வருவோரை யாத ரிப்பள்

12. ஜாதகருடைய மனைவி பால் பாக்கியத்தை யுடையவளாவள், இவள் தன்னிடத்தில் வணக்கமாயுள்ளவர்களைக் காப்பாற்றுவாள். இவள் பூமியில் நல்லவளாகவிருப்பாள், இவள் தன்னுடைய புருஷனிடம் வந்தபிறகு புருஷனுக்கு யோகம் வந்து சம்பவிக்கும். இவள் காரியங்களை அவசரமாயும், டம்பமாகவும், சீக்கிரமாகவும் செய்யக் கூடியவளாவள். இவள் மகாவிஷ்ணுவின் மேல் அன்புடையவளாவள். தன்னிடம் உதவிக்காக வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

13. வயதுமே தீர்க்க மெய்தும் மைந்தர்கள் பலத்தைச் [சொல்வேன்
சயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென உரைக்க [லுற்றார்
வியமாகு முதல்ம னைத்தான் மேவிடு மிரண்டாம் பாரி
பயமிலாச் சொன்ன சங்கை பகருவீர் விபர மாக.

13. ஜாதகருடைய மனைவி நீண்ட ஆயுளையுடையவளாக விருப்பாள் இனிமேல் புத்திரபாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இதைக் கேட்டதும் ஜயமுனிவர் திடீரென்று தடுத்துச் சொல்ல ஆரம்பித்தார். முதலாவது மனைவி இறந்து விடுவாள். இரண்டாவது மனைவி வந்து சம்பவிப்பாள். இப்படியிருக்க மனைவி தீர்க்காயுளை யுடையவளென்று பயப்படாமல் சொன்னதற்குக் காரணத்தை விவரமாகச் சொல்லுவீர் என்றார் ஜயமுனிவர்.

14. குடும்பத்தோன் நீசமாகக் கோள்பணி நாலி லேறத்
திடமதா யேழோ னேடு சுக்கிரன் கூடி நிற்க
மடமையே யிரண்டு வென்றோம் வதிஷ்டரும் மறுத்துச் [சொல்வார்
உடுபதி தனக்கு நாலில் உதயனும் யிருப்ப தாலும்;.

14. குடும்பாதியாகிய சுக்கிரன் நீசமாக விருப்பதாலும், பணி என்ற ராகு நான்கில் இருப்பதாலும் வலிவுள்ள ஏழாவது வீட்டிற்குடையவராகிய குருவுடன் சுக்கிரனும் சேர்ந்திருப்பதாலும், மனைவிமார்கள் இருவர் என்று சொல்லுகிறோம் என்றார் ஜயமுனிவர். இதற்குமேல் வசிஷ்ட மஹரிஷி தடுத்து எதிரிடையாகச் சொல்லுகின்றார். உடுபதி என்ற சந்திரனுக்கு நான்காவது வீட்டில் உதயன் என்ற சூரியனிருப்பதாலும்;

15. பங்கயன் தனக்கு லாபம் பார்மக னிருப்பதாலும்
செங்கதிர் தனக்கு மூன்றில் சிகண்டியும் யிருப்ப தாலே
நங்கையு மொருத்தி யென்றேம் நாடாது மரும
[ஹேன் தான்
ஐங்கரன் தனைவளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

15. பங்கயன் என்ற சூரியனுக்கு லாபம் என்ற பதினோராவது வீட்டில் பார்மகன் என்ற அங்காரகன் இருப்பதாலும், செங்கதிர் என்ற சூரியனுக்கு மூன்ருவது வீட்டில் சிகண்டி என்ற குருவிருப்பதாலும், மனைவி ஒன்றே என்று சொல்லுகின்றேம். இரண்டாவது மனைவி கிடையாது என்ருர் வசிஷ்ட மஹரிஷி. ஐந்துகைகளையுடைய விநாயகக் கடவுளை வளர்த்த பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகருக்குப் புத்திரபாவம்

16. சுதர்களுமிரு நான்காகத் தோன்றிடும் பால னுக்கு
சதமுடன் ஆண்பால் மூன்று தையலு மிரண்டு மாகும்
இதுஐந்து தீர்க்க மெய்துமியம்புவோம் பின்பால்
[சே சதி
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

16. ஜாதகருக்கு மொத்தத்தில் எட்டு குழந்தைகள் பிறக்கும். இவர்களில் மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் ஆக மொத்தம் ஐந்து பேர்கள் நீண்ட வயதையுடையவர்களாக விருப்பார்கள். மற்ற விஷயங்களைப் பின்னல் இரண்டாவது பாவத்திற் சொல்லுகின்றேம். சந்நியாசிகளையும் பரதேசிகளையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக

## ஜாதகருடைய முன்ஜன்மம்

17. பாலகன் பூர்வம் தன்னைப் பகருவோம் பரங்குன்றத்தில்
ஞாலங்கள் விருத்தி செய்யும் நன் வேளான் குலமுதித்து
சோலைகள் துறவு முண்டாய் சுகமுள குடும்பி யாகிச்
சாலவே அறங்க ளின்றிச் சண்டன் தன்பதிக்குச் சென்று

17. ஜாதகருடைய முன்ஜன்மத்தைச் சொல்லுகின்றேம். இவர் திருப்பறங்குன்றம் என்ற முருகருடைய க்ஷேத்திரத்தில் நிலங்களைப் பயிரிடுகின்ற நல்ல வேளாள ஜாதியில் ஆணுகப் பிறந்து தோப்புகளும் துறவுகளும் உள்ள ஓர் சௌக்கியமுள்ள குடும்பஸ்தராகியும், தர்மங்களைச் செய்யாதவராகியும் வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்,

## ஜதகருடைய யோகபாவம்

18. பிறப்பனு மிந்தப் பாலன் பேசுவோ மிவனின் யோகம்
ஈராறு ஆண்டு மட்டுமிடறுகள் சல்லியப் பாதை

வரவுக்குச் செலவனேகம் மனமது சஞ்ச லங்கள்
குறைவுள குடும்ப மாகும் குலநிந்தை யேற்பா ளுகும்.

18. பிறகு இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறப்பார். இவருடைய யோகங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஜாதகருக்குப் பன்னிரண்டு வயதுவரைக்கும் இவருடைய குடும்பத்தாருக்குக் கஷ்டங்களும் கடன் உபத்திரவமும் வரவிற்கு அதிகமான அநேக செலவுகளும் மனத்திற்குத் துன்பங்களும் உண்டாகிக் குடும்பம் க்ஷீணித்து வரும். ஜாதகர் தன்னுடைய குலத்தரால் தரித்திரவான் என்று பழிக்கப் பட்டவராவர்.

19. சொல்லிய ஆண்டின் மேலாய் சுக்கிரன் திசைபின்
[பாகம்
நல்லதோர் பலன்கள் கூடும் நாற்காலி விருத்தி யாகும்
எல்லைகள் பலித மாகும் யேவலாள் சேர்க்கை யுண்டு
அல்லல்கள் அடையா ளுகும் அம்பிலி பிறைபோல்
[யோகம்.

19. மேலே சொல்லிய பன்னிரண்டு வயதிற்குப் பிறகு சுக்கிரனுடைய தசையின் பின்பாகத்தில் நல்ல பலாபலன்கள் நடக்கும், கால் நடைகள் விருத்தியை யடையும், நிலங்கள் நல்ல பலிதங்களைக் கொடுக்கும், வேலையாட்கள் வந்து சேர்வார்கள். ஜாதகர் கஷ்டங்களை அடையமாட்டார். இவருக்கு வளர்பிறை சந்திரனைப் போல யோகம் நாளுக்கு நாள் அதிகப் படும்.

20. நேரிடும் விபரம் சொல்வாய் நிருபனும் சென்மம் தங்கப்
பாருளோர் நவத்திலேற மஞ்சமன் மூன்றி லாக
காரிக்குப் பத்தில் புந்தி கலந்ததால் சச்கர யோகம்
மாருதி யோக மொன்று வரைந்தன மென்று சொல்லே.

20. ஜாதகருக்கு யோகம் நேரிடுவதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, நிருபன் என்ற குரு லக்கினத்திலிருப்பதாலும், பாருளோர் என்ற பூமி புத்திரராகிய அங்காரகன் ஒன்பதிலிருப்பதாலும், ஐந்திற்குடையவராகிய சனி மூன்றுவது வீட்டிலிருப்பதாலும், காரி என்ற சனிக்குப் பத்தாவது வீட்டில் புந்தி என்ற புதன் இருப்பதாலும், சுக்கிரயோக முண்டு, மாருதியோக முண்டு என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு:—சக்கரயோகம் பலவிதமானது. இதில் ஒன்று பின்வருமாறு ஆகும். லக்கினம் முதல் ஒன்றுவிட்டு ஒன்றுவது வீட்டில் கிரகம் இருப்பது சக்கரயோக மாகும். இதுவிஷயமாக ஜாதக பாரி ஜாதகம் ஏழாவது அத்தியாயம் நூற்றெழுபத்திரண்டாவது (172-ஆவது) சுலோகத்தை வாசிக்கவும். இங்கு சனி அங்காரகன், சூரியன், குரு, சுக்கிரன் இவர்கள் இங்கு சொல்லிய

விதமாக விருக்கின்றுர்கள் சண்ட மாருதியோகம் விஷயமாய் தமிழ் ஜாதகாலங்காரம் முன்னூற்று எழுபத்து மூன்ருவது அல்லது முன்னூற்றி எழுபத்து நான்காவது (373-374-ஆவது) பாடல்களை வாசிக்கவும்.

21. சல்லியப் பாதை காணுன் தனமது பெருக்கம் செய்வான்
வெல்லுவா னெதிரி தன்னை வீண்பழி சொல்லா னுகும்
நல்லவர் பலர்கள் நேசம் நாற்காலி விருத்தி யுண்டு
பொல்லாரை நசிக்க வைப்பான் பூஷணம் சேர்ப்பா
[னுகும்

21. ஜாதகர் கடனுல் உபத்திரவத்தை அடையமாட்டார், இவருக்குச் செல்வம் அதிகப்பட்டுக்கொண்டே யிருக்கும். இவர் தன்னுடைய விரோதிகளை ஜயித்துவிடுவார், வீணுக அபவாதங்களைச் சொல்மாட்டார், இவர் நல்லவர்களாகிய அநேகரிடத்தில் சிநேகிதராக விருப்பார். இவருக்குக் கால்நடைகள் விருத்தியாகும். இவர் கெட்டவர்களை நாசஞ் செய்து அழித்து விடுவார். ஆபரணங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார்.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

22. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அற்புத
[வார்த்தை கூறுவள்
முன்கோபி மூர்க்க முண்டு மொழியது யிரண்டு முண்டு
அன்னம் போல்வடிவு மொக்கும் அதிகமாம் வார்த்தை
[யுண்டு
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பாளுணச்சல்
[தேகி

22. ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் ஆச்சரியமான, விந்தையான, அதிசயமான வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் முன்கோபத்தை யுடையவள். முரட்டுத்தனமாகவும் பிடிவாதமாகவு மிருப்பாள். இவள் உண்மையையும் பொய்யையும் கலந்து சொல்லுவாள். இவள் அன்னப் பறவையைப் போல அழகான தேகத்தையுடையவளாவள், இவள் அதிகமாக வார்த்தைகளை உபயோகப் படுத்துவாள். இவள் தான் சொல்லுகின்ற வார்த்தைகளே மேன்மையானவை, உண்மையானவை என்று சொல்லித் தான் சொல்லியதை ஸ்தாபிப்பாள். உறுதிப்படுத்துவாள். இவள் மெலிந்து வாடிய தேகத்தையுடையவளாவள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரர்களும் முன்ஜன்மமும்

23. இல்லமும் மேல்பா லாகும் யிவள் துணை ஆண்பா
[லிரண்டு
வல்லியும் நான்கு வென்றேம் மடிவுண்டு சிலது
[பின்னல்
சொல்லுவோமுத்திர பாகம் தோகையின் பூர்வம்
[கேளாய்
எல்லையிலுயிர்வதான எழில் கொங்கு நாட்டில் தான்

23, ஜாதகரின் தாயாருடைய (பிறந்த) வீடு மேற்குத் திக்கிலிருக்கும். இவளுக்கு இரண்டு சகோதரர்களும் நான்கு சகோதரிகளும் உண்டென்று சொல்லுகின்றேம். சில சகோதரங்கள் சீக்கிரத்தில் இறந்துபோய்விடுவார்கள். மற்ற விஷயங்களைப் பின்னல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேம். இவளுடைய முன்ஜன்மத்தைச் சொல்லுகின்றேம், கேட்பீராக. நாடுகளில் சிறந்ததான கொங்கு நாட்டில்,

24. வலையர் தன்குல முதித்து வரனுமனைவி மைந்தரு
[முண்டாகி
பெருமையாய்க் குடும்பி யாகிப் பூமியும் விருத்தி செய்து
தலைவியும் வாழ்ந்து மேதான் சண்டதன் பதிக்குச்
[சென்று
தலை நான்கோன் வரையப் பட்டுச் செனித்தவ ளென்று
[சொல்வோம்

24. ஜாதகருடைய தாயார் கடலில் வேலை செய்யும் ஓர் ஜாதியார் (அஃதாவது வலைவீசும் செம்படவர்) குலத்தில் பிறந்து புருஷனும் மக்களும் உடையவளாகி மேன்மையான ஒரு குடும்பமுள்ளவளாகி நிலங்களைப் பயிரிட்டு வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் நான்கு தலைகளையுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுள் என்று சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மமும் தகப்பனுருடைய முன்ஜன்மமும்

25. பின்சென்மம் பட்சி மேல்பால் பேரூரில் வன்னிய
[சேயாய்
அன்னவ னுதிப்பா ளாகும் அறைகிறேம் தந்தை
[பூர்வம்

தென்திசை புதுவை தன்னில் செனித்தனன் வைசியச்
[சேயாய்
அன்னையும் தந்தை மிக்க அல்பமாம் குடும்பி யாகி;

25. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மறுஜன்மத்தில் திருக்கழுக்குன்றத்திற்கு மேற்கே ஒரு பெரிய கிராமத்தில் வன்னிய ஜாதியில் பெண் குழந்தையாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். தெற்குத் திக்கிலுள்ள புதுவை என்ற புதுச்சேரியில் இவர் வைசிய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறந்து இவருடைய தாய்தகப்பனுர்கள் மிகவும் ஏழைக் குடும்பஸ்தர்களாகி;

26. இனமதில் கணக்கம் செய்து யேவலாள் உடையனாகி
சினமான காலனுடு சென்றுமே பிரமன் லக்கம்
கனமுள யிக்குலத்தில் கலந்தன னென்று சொல்வோம்
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

26. இவர் தன்னுடைய பந்துக்களிடத்தில் ஒரு கணக்கெழுதும் வேலையைச் செய்தும், வேலையாட்களை யுடையவராகியும், வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த மேன்மையான குலத்தில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இடைவிடாமல் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

27. இருபதுநாலு ஆண்டில் யிவன் தந்தை கெண்ட
[மெய்தும்
பரிதியின் தசையே யாகும் பகருவோ மிவன்பின்
[சென்மம்
திருவேலங் காடு தன்னில் செனிப்பனு முத்திரிய னுகை
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

27. ஜாதகருக்கு இருபத்து நான்காவது வயதில் இவருடைய தகப்பனுர் இறந்துபோவார். அக்காலத்தில் பரிதி என்ற சூரியனுடைய தசை நடக்கும்*. ஜாதகரின் தகப்பருடைய மறுஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவர் திருவாலங்காடு என்ற க்ஷேத்திரத்தில் முத்திரிய ஜாதியில், ஆண் குழந்தையாகப் பிறப்பார். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் : பிதிரு மாரக விஷயம் : பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது (46-வது) சுலோகம் பிரகாரம் சந்திரன் மாரகாதிபதியாகின்ருர். இவர் வீட்டிலுள்ள சூரியன் ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகப் பிரகாரம் அதிக மாரகராகின்ருர்.

## ஜாதகரின் தாயாருடைய மரணமும் ஜாதகருடைய மரணமும்

28. ஆருறு ஒன்று ஆண்டில் அன்னேக்குக் கண்ட மெய்தும்
மாரனுக் கறுப தாண்டில் மேட மாதத்தி லேதான்
கார்க்கோடன் தசை காலத்தில் கழறுவோம் மாரகங்கள்
பாருனில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

28. ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில் இவருடைய தாயார் இறந்துபோய் விடுவாள். ஜாதகருக்கு அறுபதாவது வயதில் மேட மாதம் என்ற சித்திரை மாதத்தில் கார்கோடன் என்ற ராகு தசையில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்ருேம். பூமியில் தவங்களேச் செய்கின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக.

குறிப்பு :—வியாக்கியானம் : தாயார் மரண விஷயம் : ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில் சந்திரமகாதசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குச் சந்திரன் எட்டாவது வீட்டிற்குடையவராக விருக்கின்ருர். ஆகையால் துய்யகேரளம் எட்டாவது பாவம் 14-ஆவது பாடல் பிரகாரம் சந்திரன் மாரகராகின்ருர். ஆகையால், இங்கு சந்திர தசையில் தாயாருடைய மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

*ஜாதகருடைய மாரக விஷயம் : கன்னியர் லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது (54-வது) சுலோகப் பிரகாரம் குரு மாரகராகின்ருர். இவர் வீட்டிலுள்ள ராகு ஜாதக சந்திரிகை 12-ஆவது சுலோகம் 23-ஆவது சுலோகம்ஆகிய இச்சுலோகங்கள் பிரகாரம் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு ஜாதகருக்கு ராகு தசையில் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது

## ஜாதகருடைய மறுஜன்மம்

29. மைந்தன் பின்சென்மம் சொல்வேன் மாயூர மருகில் [கீழ்பால்
பிந்திய ஊரிலே தான் பிறப்பனும் மிலேச் சனுக
தந்தன முடைய ஞகித் தரணியில் வாழ்வா ஞகும்
இந்திர னிரைஞ்சும் மாதே யிது பூர்வ பாகமாமே

29. ஜாதகருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் மாயவரத்திற்கு அருகில் கிழக்கில் ஒரு சிறிய வளமில்லாத கிராமத்தில் மிலேச்ச ஜாதியில் (முஸ்லிம் ஜாதியில்) பிறப்பார். இவர் சுயார்ஜித சொத்தை யுடையவராகிப் பூமியில் வாழ்வார். தேவேந்திரன் உம்மை வணங்கிப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! இதுவரையிலும் கூறியது முதற்பாகம் ஆகும்.

30. அன்னவன் செனன காலம் அசுபதி மூன்றும் பாதம்
துன்கேது ஆண்டு ரெண்டும் திங்களு மிரண்டே யாகும்
பின்பாகம் விவரம் சொல்வேன் புதல்வனின் குடும்பச்சேதி
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே

30. ஜாதகர் பிறக்குங் காலத்தில் அசுவனி நட்சத்திரத்தில் மூன்றுவது பாதம் ஆகும். துன்மையை விளைவிக்கின்ற கேது தசையில் இருப்பு இரண்டு வருஷங்களும் இரண்டு மாதங்களும் ஆகும். பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் மற்ற விஷயங்களை விபரமாகச் சொல்லுகின்றேன். ஜாதகருடைய குடும்ப விஷயமாகச் சொல்லுகின்றேன். சக்கரையைப் போன்ற இனிமையான வார்த்தைகளை யுடைய பார்வதியம்மையே! கேட்பீராக.

31. புகர்தசை ராகு புத்தி பொருந்திய காலம் தன்னில்
தகமையாய்த் தந்தை சண்டன் தன்பதிக்குச் சேர்வன்
உகமையாய் பதினே ராண்டுளுரைகிரோம் நிரியாணங்கள்
செகமதில் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

31. புகர் என்ற சுக்கிர தசையில் ராகு புக்தி நடக்குங் காலத்தில் தகப்பனுருடைய தகப்பனுர் (அஃதாவது பிதுர் பாட்டனுர்) இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்துவிடுவார். ஜாதகருக்குப் பதினேராவது வயதிற்குள்ளவே இவருடைய பிதுர்பாட்டன் இறந்துவிடுவார் என்று சொல்லுகின்றோம், பூமியில் தவத்தைச் செய்கின்ற பார்வதி யம்மையாரே! கேட்பீராக.

குறிப்பு:—வியாக்கியானம்:—பிதுர்பாட்டன் மரண விஷயம்:—பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்குப் பிதிரு லக்கினம் ரிஷபத்திற்கு ஒன்பதாவது வீடாகிய மகரம் ஆகும். இந்த மகர லக்கினம் பிதிர்பாட்டன் லக்கினமாகும். மகர லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை 63-ஆவது சுலோகப் பிரகாரம் குரு மாரகராகின்றார். இவருடன் சம்பந்தப்பட்ட சுக்கிரன் ஜாதக சந்திரிகை 23-ஆவது சுலோகம் பிரகாரம் அதிக மாரகராகின்றார். ஆகையால் சுக்கிரன் தன் தசையில் மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றார். மேலும் ராகு குருவினுடைய வீட்டிலிருப்பதால் ஜாதக சந்திரிகை

12-ஆவது சுலோகம் பிரகாரம் குருவினுடைய பலனைக் கொடுப்பவராகி மாரகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றார். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் ராகு புக்தியில் பிதிர்பாட்ட னுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது,

32. மதிதிசை காலம் தன்னில் மாரன்தன் துணைவர் வேறும்
பதியது பாகம் மூன்ருய்ப் பகருவோம் தாயே யாங்கள்
சதியிலா மூவே ழாண்டில் க்ஷேத்திரம் வேறு செய்வன்
கதிதர தவங்கள் செய்யும் காதலி கேட்டி டாயே.

32. மதி என்ற சந்திரனுடைய தசாகாலத்தில் ஜாதகருடைய சகோதரர்கள் இவரைவிட்டுப் பங்கிட்டுக் கொண்டு வேறு குடும்பஸ்தர்களாகப் போய்விடுவார்கள். வீட்டை மூன்று பங்காகப் பங்கிட்டுக் கொள்ளுவார்கள் என்று சொல்லுகின்ரேம், பார்வதியம்மையே! ஜாதகர், தனக்கு இருபத்தோராவது வயதில் வேறு வீட்டைக் கட்டுவார். தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக. C. G. R.

———

# ஜாதகம் 26

## ஜனனகால கிரகநிலை

1. கன்னியும் செனன மாகக் [1]கலை ராகு மூன்றி லாகப்
[2]பொன்[3]புகர் [4] காரி நாலில் புதன்[5]பானு அஞ்சி லாக
ஒன்பதில் கேது வாக [6]உலகத்தோனீரா ருக
பன்னுவீர் பலனை யென்று பார்வதி கேட்க லுற்ருர்.

1. கன்னி ஜன்ம லத்கினமாகிம் சந்திரனும் ராகும் மூன்றிலும், குருவும் சுக்கிரனும், சனியும் நான்கிலும், புதனும் சூரியனும் ஐந்திலும், கேது ஒன்பதிலும் அங்காரகன் பன்னிரண்டிலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதிம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| | இராசி சக்கரம் | | |
| சூரியன் புதன் | | | அங்காரகன் |
| குரு சுக்கிரன் சனி | சந்திரன் ராகு | | லக்கினம் |

கேட்டை 1-ஆம்பாதம்
புததசைஇரு16—8—00

குறிப்பு:—இந்த ராசிச்சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரகநிலை பொருத்தமுடையதாகும்:—ரிஷபத்தில் சுக்கிரனும், மிதுனத்திற் குருவும், கடகத்திற் சனியும், சிம்மத்தில் ராகுவும், துலாத்தில் அங்காரகனும், தனுசிற் சந்திரனும், கும்பத்திற் சூரியனும் கேதுவும், மீனத்திற் புதனும் ஆகும். புதன் அஸ்தமன மடைந்திருக்கின்ருர்.

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பிருகுமே புகலு கின்ருர் பிறந்திடு மாண்பால் சென்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலும் மேற்குப் பார்வை

1. சந்துரன்
2. குரு
3. சுக்கிரன்
4. சனி
5. சூரியன்
6. அங்காரகன்.

பெருவயி றப்பன் மேல்பால் பலமிலா கெடியும் தென்பால்
துருவச் சக்கரமும் கீழ்பால் தோன்றிடும் பேரூர்
[தன்னில்;

2. பிருகு மகரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும், பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில்:மேற்கு பார்த்த வாயிலை யுடையதாகும். விநாயகக் கடவுளின் கோயில் மேற்குத் திக்கிலிருக்கும். வலிவில்லாத ஒரு கோட்டையும் தெற்குத் திக்கிலுண்டு. துருவச் சக்கரம் கிழக்குத் திக்கிலிருக்கும். இவ்விதமான அடையாளங்களுள்ள ஒரு பெரிய கிராமத்தில்,

3. பாலகன் நான்காம் சென்மம் பிறப்பனும் கங்கை சேயாய்
சாலவே அன்னை தந்தை தன்துணை களத்திர புத்திரர்
ஏலவே யிவர்கள் யோகமியம்புவோ முன்பின்
[சென்மம்
ஆலத்தை யுண்டோன் தேவி அறிவிப்போ மின்னூல்
[தன்னில்.

3. ஜாதகர் நான்காவது பிறவியாக வேளாளர் ஜாதியில் பிறப்பார். தாயார் தகப்பனார், சகோதரங்கள், மனைவி, மக்கள் ஆகிய இவர்களுடைய யோகங்களையும், முன்ஜன்மம், பின்ஜன்மம் ஆகிய இவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுவோம், ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே!

## ஜாதகரின் தகப்பனாருடைய சகோதர பாவம்

4. தந்தைதுணை ஆணிரண்டு கன்னி மூன்று
சாற்றுகிறோம் வேறுவர் உதிக்கா முன்னம்
முந்தினேன் சேதி சொல்வோம் மால் நிறத்தான்
முயர்வாக அரசரால்செட்டு செய்வன்
சிந்தைநலம் கல்வியுளன் வாததேகி
சீரணமாம் பிதுராஸ்தி ஸ்ரீகள் மோகன்
வந்திடுமே பாரியொன்று அபிமான மொன்று
மைந்தரிலான் கன்னியொன்று மத்தில் யேகும்.

4. ஜாதகரின் தகப்பனாருடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்களும் மூன்று சகோதரிகளும் ஆவர் என்று சொல்லுகின்றோம். இவர்கள் ஜாதகர் பிறப்பதற்கு முன்னமே பிரிந்து வேறாகப் போய் ஜீவிப்பார்கள். முதல் சகோதரனின் விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேகவர்ணம் என்ற ஒருவித நிறமான தேகத்தையுடையவர். இவர் அரசாங்கத்தால் வியாபாரஞ் செய்வார். நல்ல எண்ணத்தை யுடையவர். வாசித்தவர். வாதகுணமுள்ள, பருத்த தேகத்தை யுடையவர்,

பிதிரார்ஜித சொத்து அழிந்துபோய் விடும். ஸ்திரீகளிடத்தில் இவர் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவருக்கு ஒரே ஒரு மனைவி வந்து சம்பவிப்பாள். ஓர் அபிமான ஸ்திரீயும் உண்டு. இவருக்குப் பிள்ளை கிடையாது, ஒரு பெண்ணிருக்கும். இவளும் மத்திய வயதுடையவளாகி இறந்துவிடுவாள்.

5, ஏகுவான் வேறூரில் சுகமாய் வாழ்ந்து
எமன்பதிக்கு மத்தியினில் யெய்துவாளாம்
ஆகமங்கள் துணைவனால் முடியா தென்றோம்
ஆஸ்திகளு மபிமான மாதுக்கே தான்
பாகமாய் பின் துணையோன் சேதி சொல்வேன்
பதர்சொல்லான் யிரு சிகப்பன்பகர் முன்கோபி
தோகைசொல் கடவானாகும் தானிய செட்டு
செய்குவான் வறுமையிலான் துணை விரோதம்.

5. தகப்பனாரின் முதல் சகோர்தரரின் குமாரத்தி வேறொரு கிராமத்தில் சுகமாக வாழ்ந்து தன்னுடைய மத்திய வயதில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்துவிடுவாள். இந்த முதல் சகோதரரால் ஆகம சாஸ்திரத்தைப் படிக்கச் சாத்தியப்படாது என்று சொல்லுகின்றோம். இவர் தம்முடைய சொத்துக்களை அபிமான மனைவிக்கே கொடுத்துவிடுவார். தகப்பனாரின் பின் சகோதரனின் விஷயங்களைச் சொல்லுகின்றேன். இவர் பொய் சொல்ல மாட்டார். அவசரப் பட்டுப் பேசமாட்டார். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவராவர். பேசுவதற்கு முன்னே கோபத்தை :யுடையவராவர். தன்னுடைய மனைவியின் வார்த்தையை மீறி நடக்கமாட்டார். தானிய வியாபாரத்தைச் செய்வார். தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மநுபவிக்க மாட்டார். இவர் சகோதரர்களின் விரோதத்தை யுடையவராவர்.

6. பாரியொன்று சுதராண்பால் யிரண்டுநேறும்
பாவையுமே நான்காகப் பகரலாகும்
வீருதுமற்ற தெல்லாம் வயதுதீர்க்கம்
விரைநோயும் குடியாக விளம்பலாகும்
காரியத்தில் வல்லவனும் கணக்கில்யூகி
காலிவிருத்தி பூமிவிருத்தி கருதலாகும்
மாரிடான் பெரியோர்சொல் யீகைகொஞ்சம்
வளைவுரெண்டு செய்திடுவன் மாரன்தானே.

6. தகப்பனாருடைய பின் சகோதரருக்கு மனைவி ஒன்றே யாகும், இவருக்கு இரண்டு பிள்ளைகளும் நான்கு குமாரத்திகளும் உண்டென்று சொல்லக் கூடும். மற்றக் குழந்தைகளெல்லாம் உயிருடன் நீடித்திருக்க மாட்டார்கள். இவருக்கு விரை நோய் இருந்து கொண்டே யிருக்கும் என்று

சொல்லக் கூடும். இவர் காரியங்களைச் செய்து முடிப்பதில் சாமர்த்திய முடையவராவர். கணக்கு போடுவதில் நுட்பமான அறிவுடையவராவர். இவருக்கு ஆடு மாடுகள் விருத்தியாகும். பயிரிடும் நிலங்கள் விருத்தியாகும். இவர் பெரியோர்களுடைய வார்த்தைகளை மீறி நடக்க மாட்டார். இவர் கொஞ்சம் தயாளமான குணத்தையும் பிறருக்குக் கொடுக்குந் தன்மையையும் உடையவராகும். இவர் இரண்டு வேலைகளையும் தொழில்களையும் செய்வார்.

## ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்கள்

7. தந்தைகுணம் கூறுகின்றோம் மாஞ்சிவப்பன்
தைரியவான் பொறுமையுளன் சரசவார்த்தை
தந்தமது தரளமொக்கும் யீகையாளன்
சாப்பாடு சுகியனென்றோம் தனவானாகும்
தந்தைமொழிக் கிடர்உரையான் யிடுக்கமிலான்
தானியசெட்டு செய்திடுவன் தரணிசேர்ப்பன்
தன்பந்தை ஆதரிப்பன் புகழுமேற்பன்
சாடிசென்மம் யீட்டினாள் செனிப்பானாகும்.

7. ஜாதகரின் தகப்பனுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் மாந்தளிரின் நிறமாகிய ஒருவித சிகப்பு நிறமுள்ள தேகத்தையுடையவராவர். தைரிய முடையவர். சாந்தமான குணத்தை யுடையவர். இனிமையாகப் பேசுபவராவர். இவருடைய பற்கள் முத்தைப் போல வெண்மையாகவும் அழகாகவுமிருக்கும். இவர் பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவர். இவர் சாப்பாடு விஷயத்தில் சுகபோகங்களை அனுபவிப்பவர் என்று சொல்லுகின்றோம். இவர் பணக்காரராக விருப்பார். இவர் தன்னுடைய தகப்பனாருடைய வார்த்தைகளைத் தடுத்துப் பேச மாட்டார். இவர் கஷ்டங்களும் துன்பங்களுமில்லாதவராவர். இவர் தான்ய வகையராக்களில் வியாபாரஞ் செய்திடுவார். நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார். இவர் தன்னுடைய பந்துக்களைக் காப்பாற்றுவார். கீர்த்தியை அடைவார். இவர் ஜாடி என்ற கும்ப ராசியில் பிறந்தவர். ஈட்டி நாள் என்ற கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவராவர்.

8. பலர்கள்பந்து புகழஉய்வான் பதரில் செல்லான்
பகவானின் அடியோர்க்குத் தொண்டுபூண்பன்
சலம்தோய்வன் மணஅலைச்சல் சல்லியம்காணான்
தன்மனையால் யோகமுறும் சகடுமேற்பன்
திலதம்போல் யாவருக்கும் அல்ப்பவாய்வு
செரிந்திடுமே அரமிச்சை சொல்காப்பானும்
நலம்செய்வன் யெவர்களுக்கும் மயிலோன்பத்தி
நற்கரத்தில் மால்ரேகை பத்மரேகை.

8. ஜாதகருடைய தகப்பனுர் பந்துகளில் அனேகர் தன்னை கௌரவப் படுத்தும்படியாக வாழ்வார். உபயோகமில்லாத அற்ப காரியங்களில் பிரவேசிக்க மாட்டார். சிவபெருமானுடைய அடியார்களுக்குத் தொண்டு செய்து அவர்களிடத்தில் அன்புடையவராக விருப்பார். இவர் தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்வார். இவருடைய மனம் ஒரே நிலையிலிராமல் சங்கடப்பட்டுக் கொண்டிருக்கும். இவர் கடன்பட மாட்டார். இவருக்குத் தன்னுடைய மனைவியால் யோகம் வந்து சம்பவிக்கும். இவர் வண்டி வாகனங்களை உடையவராவர். இவர் எல்லோருக்கும் நெற்றியிலுள்ள பொட்டைப் போல முக்கியமானவராக விருப்யார். இவர் சிறிதளவு வாய்வு ரோகத்தை யுடையவராவர். இவர் தர்மஞ் செய்வதில் பிரியமுடையவர். தன்னுடைய வார்த்தைகள் பிரகாரம் நடந்து கொள்ளக் கூடியவர். இவர் எல்லோருக்கும் நல்லதைச் செய்வார். இவர் முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் உள்ளங் கையில் விஷ்ணு ரேகையும் பத்ம ரேகை என்ற கமல ரேகை, தாமரை ரேகையு முடையவராவர்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

9. அரினும முடையவனும் பூர்வம்சொல்வேன்
அழகர்வாழ் நாட்டினிலே விஸ்வசேயாய்
பெரிதான யிரணியங்கள் வேலைசெய்து
பின்னோர்க்கு அன்னமீந்து பேதைபுத்திரர்
மறையோர்க்கு தொண்டுசெய்து தலங்கள்சென்று
மரலிபதி நாடடைந்து பிரமன்லக்கம்
தரைமகன் குலமதினில் சார்ந்தானென்றோம்
சாற்றியயிக் குணத்தானுக்கு யிந்தப்பாலன்.

9. ஜாதகருடைய தகப்பனுர் மஹா விஷ்ணுவினுடைய பெயரை யுடையவராவர். இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். அகழர் வாழ்கின்ற ஊரில் (மதுரையில்) விஸ்வகர்மா (தட்டார) ஜாதியில் ஆணுகப் பிறந்து பெரிய பெரிய பொன் (தட்டார) வேலைகளைச் செய்தும், ஏழைகளுக்குச் சாப்பாட்டைப் போட்டும் மனைவி, மக்களை யுடையவராகியும், வேதங்களை ஓதுகின்றவர்களிடத்தின் அன்புடையவராகியும், தெய்வீகமான ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போயும், பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, வேளாளர் குலத்தில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர் என்று சொல்லுகின்றோம். இங்கு சொல்லப்பட்ட குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர்,

## ஜாதகனின் குணநலங்கள்

10. உதிப்பனுமிவன் குணத்தை உரைப்போம்தாயே
உயர்வான கல்விமிகும் யூகையாளன்

நிதியுடையன் முன்கோபி சிவந்தமெய்யன்
நிலேகாப்பன் யீகையுளன் நிருபர்யிஷ்டம்
அதிகாரத்தொழில் செய்வன் அரசனுலே
ஆவுவிருத்தி சகடுடையன் அடைந்தார்க்கன்பன்
துதிசெய்தோர்க் குதவிடுவன் துணேகாப்பானும்
சோம்பலில்லான் காரியத்தில் சுறுக்கவார்த்தை.

10. பிறப்பார். ஜாதகருடைய குணுதிசயங்களேப் பற்றிச் சொல்லு கின்ரும். பார்வதியம்மையே! இவர் பெரிய சிறந்த படிப்பை அதிகமாக வுடையவராவர். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்ப மான புத்தியை யுடையவராவர். இவர் செல்வத்தை யுடையவர். முன் கோபத்தை யுடையவர். சிவப்பு நிறமான தேகத்தை யுடையவர். தன்னு டைய அந்தஸ்தை வேலேயைக் காப்பாற்றிக் கொள்ளுவார். தயாள குணம் பிறருக்குக் கொடுங் குணத்தையுமுடையவராவர். இவர் அரசர்களுக்குப் பிரியமானவர். அரசாங்கத்தில் அதிகாரத்தை யுடைய வேலேயைச் செய் வார். இவருக்குப் பசுக்கள் விருத்தி யடையும். வண்டிவாகன முடையவர். தன்னிடத்திற்கு வருபவர்களுக்கு இவர் பிரியமுள்ளவராக விருப்பார். இவர் தன்னேப் புகழ்ந்து பேசினவர்களுக்கு உபகாரத்தைச் செய்திடுவார். தன் னுடைய சகோதரர்களேக் காப்பாற்றுவார். வேலேயைச் செய்வதில் சோம்ப லில்லாதவர். இவர் கொஞ்சமாகப் பேசுவார், பெரிய, நீண்ட வார்த்தைகளே உபயோகிக்க மாட்டார்.

11. சொல்லுவான் சுகவசனம் புலவனுவன்
துன்பமது யெவர்க்கெண்ணுன் துறவோர்க்கன்பன்
தல்லிக்கும் தந்தைக்கும் புகழுமுண்டு
சாகைரெண்டு யிருவூரில் தரணிவிருத்தி
அல்லலிலான் பலதலவாசங்கள் செய்வன்
ஆண்மையாய்ப் புகழேற்பன் அரத்திலிச்சை
மல்லில் செல்லான் வல்வாயன்
மடிந்ததொரு ஆலயத்தை வளப்பம்செய்வன்.

11. ஜாதகர் இனிப்பான நல்ல வார்த்தைகளேச் சொல்லுவார். இவர் பாண்டிதராவார். இவர் யாவருக்குங் கெடுதியை நினேக்க மாட்டார். பர தேசிகளுக்குப் பிரியமுள்ளவராக விருப்பார். இவரால் தாயாருக்கும் தகப் பனுருக்கும் கீர்த்தியும் பெருமையுமுண்டு. இரண்டு வீடுகளே யுடையவர். இரண்டு கிராமங்களில் நிலத்தைப் பயிரிடுவார். இவர் கஷ்டங்களில்லாத வராவர். அநேக தெய்வீக ஸ்தலங்களுக்குப் போவார். இவர் திடமான, வலிவான கீர்த்தியை யுடையவர். இவர் தர்மஞ் செய்வதில் பிரியமுள்ளவர், சண்டையில் பிரவேசிக்க மாட்டார். இவர் பேசுவதில் கெட்டிக்காரர், சாமர்த்திய முடையவர். இவர் பாழான கிலமான, ஜீர்ணயித்துப் போன கோயில்களேப் புதுப்பித்து, மராமத்து செய்து, மூர்த்திகரமாக விருக்கும்படி யாய்ச் செய்வார்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

12. தன்துணைகள் முன்கன்னி யிரண்டுயென்றோம்
சண்முகன்போல் ஆணொன்று தீர்க்கமெய்தும்
பின்துணைகள் கன்னிரெண்டு பேசலாகும்
புகலுவோம் முன்துணையான் சேதிதன்னை
கன்னனமொழி யிருசிகப்பன் கல்விரெண்டு
கனத்திடுமே யூகையுளன் காலாள்விருத்தி
மன்னரால் சிலவணிபம் மருவுமென்றோம்
வயதுதீர்க்க மனைவியொன்று வரையலாகும்.

12. ஜாதகருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு மூத்த சகோதரிகள் இரண்டும், முருகக் கடவுளைப் போல ஒரு மூத்த சகோதரரும் நீண்ட ஆயுளை யுடையவராக விருப்பார்கள். இவருக்கு இரண்டு இளைய சகோதரிகள் உண்டு என்று சொல்லக் கூடும், இவருடைய மூத்த சகோதரருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் சக்கரையைப் போல இனிப்பான வார்த்தைகளை யுடையவர். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமாகிய தேகத்தை யுடையவராவர். இவர் இரண்டுவித பாஷையில் படித்தவராவர், இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறிய கூடிய நுட்பமான புத்தியை யுடையவர். இவருக்கு காலால் நடந்து போகக் கூடிய வேலைக்காரர்களுண்டு. இவர் விருத்தியை யடைவார்கள். அரசர்களிடத்தில் சில வியாபாரங்கள் நடைபெறும் என்று சொல்லுகின்றோம். இவர் நீண்ட வயதை யுடையவராவர். இவருக்கு ஓரே ஒரு மனைவியுண்டு என்று சொல்லக் கூடும்.

13. ஆகுமே சுதராண்பால் யிரண்டுதீர்க்கம்
அழகியதோர் கன்னியவ்வார் யனுகும்தாயே
போகுமே மற்ற தெல்லாம்புறம் சொல்லாதான்
புலிராசி உத்திரட்டாதி தனில்பிறப்பா னுகும்
நாகரிகங்களுளன் அல்பஉண்டி நருதிபர்க்கு
சொல்மேன்மை தடையும் நன்மை
பாகமாய்ப்பேசிடுவன் பாக்கிய வானும்
பாருவிருத்தி பலர்க்குஉபகாரி யிவன்தானே.

13. ஜாதகருடைய மூத்த சகோதரருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளையவர்களாக விருப்பார்கள், பார்வதியம்மையே! மற்றக் குழந்தைகளெல்லாம் சீக்கிரம் இறந்து போய்விடும். இவர் பிறர்பேரில் கோள் சொல்லாதவராவர். இவர் புலிராசி என்ற சிம்மராசியிலும் உத்திரட்டாதி நட்சத்திரத்திலும் பிறந்தவராவர். இவர் நாகரிகங்களை யுடையவராவர். கொஞ்சமாகச் சாப்பிடுபவராவர். இவருடைய வார்த்தைகள் அரசர்களுக்கு மேன்மை யுடையனவாகவும் மதிப்பிற்

குரியனவாகவு மிருக்கும். இவருடைய நடவடிக்கையும் நல்லதாகவே யிருக்கும். இவர் பக்குவமாகவும் தந்திரமாகவும் பேசுவார், தனமுள்ளவ ராவார். நிலங்களை விருத்தி செயவார். இவர் அநேகருக்கு உபகாரங்களை செய்பவராக விருப்பார்.

## ஜாதகருடைய விவாக காலமும், மனைவியின் குணாதிசயங்களும்

14. பெண்துணைகள் சேதிதன்னைப் பின்பால்சொல்வேன்
புதல்வனுட மணம்காலம் புகல்வேன்நானும்
திண்ணமாய் யிருபத்தாண்ட தனிலேதான்
தென்திசையில் மனைவாய்க்கும் சேதிசொல்வேன்
கண்ணியதாய் பொருந்தியதாய் சிவந்தமேனி
கிளிமொழியும் நடைநன்மை கடந்தோர்க்கன்பன்
புண்ணியமனம் பால்பாக்கியம் பெருகுமென்றேம்
பொய்புகலாள் புறம்சொல்லாள் பூவைதானே.

14. ஜாதகரின் சகோதரிகளுடைய விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். நிச்சயமாக ஜாதகருக்கு இருபதாவது வயதில் தெற்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் பருமனுன வலிவுள்ள சிவப்பு நிறமான தேகத்தை யுடையவள். இவள் கிளியைப் போல இனிப்பான வார்த்தைகளை யுடையவள். இவள் நல்ல நடவடிக்கை யையுடையவளாவள். துறவிகளுக்கும் பரதேசிகளுக்கும் பிரியமுள்ள வளாவள். இவள் புண்ணியங்கள் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவ ளாவள். பால் பாக்கியத்தை யுடையவள். இதுவும் அதிகமாகும் என்று சொல்லுகின்றேம். இவள் பொய்யைச் சொல்ல மாட்டாள். பிறருடைய பேரில் இவள் கோள் சொல்ல மாட்டாள்.

15. பூவைவந்த பின்புஅதிகம் புருடன்யோகம்
பொன்ரத்தின பணிசேர்ப்பாள் புகழ்ந்தோர்க் கன்பள்
நாவுசுத்தம் மால்மனைபோ வொப்பதாகும்
நாயகிக்கு வயதுதீர்க்கம் வரைந்தோம்தாயே
தேவிக்குச் சுதர்களுமே ஆண்பால் மூன்று
செல்விமார் அவ்விதமாம் செப்பலாகும்
ஏவலாள்அதிக முறுமென்று சொன்னேம்
இனமெச்ச வாழ்ந்திடுவள் யிடறில்லாதாள்.

15. இந்த மனைவி புருஷனுடன் போய்ச் சேர்ந்த பிறகு புருஷனுக்கு அதிக யோக முண்டாகும். இவள் தங்கம் நவரத்தினம் ஆகிய இவற்றால்

செய்யப்பட்ட ஆபரணங்களையும் ஆடைகளையும் வாங்கிச் சேர்த்து வைப்பாள். தன்னைப் பெருமையாகப் பாராட்டினவர்களிடம் பிரியமுள்ளவளாக விருப்பாள். இவள் சுத்தமான வாக்கை யுடையவள், பரிசுத்தமான வார்த்தைகளை உபயோகப் படுத்துவாள். இவள் மகா விஷ்ணுவின் மனைவியான லக்ஷிமிக்குச் சமானமானவளாக விருப்பாள். இவள் நீண்ட வயதை யுடையவளாவள் என்று சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! இவளுக்கு மூன்று பிள்ளைகளும் மூன்று பெண்களும் உண்டென்று சொல்லக் கூடும். இவளுக்கு வேலையாட்கள் அதிகமாகிக் கொண்டு வருவார்கள் என்று சொன்னோம், இவள் தன்னுடைய பந்துக்கள் இவளைப் பெருமை யுடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள். இவளுக்குக் கெடுதிகள் நேரிடா.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

16. பாலகன்தன் பூர்வமதைப் பகர்வோம்தாயே
பரங்குன்றம் கீழ்திசையில் சிறுவூர்தன்னில்
சீலமாமறை குலத்தில்செனித்து யின்னோன்
செட்டுசெய்து மனைமதலை யுடையனாகி
ஞாலங்கள் விருத்தியதாய் வறுமையின்றி
நமன்பதிக்கு ஆளாகிப் பிரமன்லக்கம்
சீலமிலா யிக்குலத்தில் செனிப்பானாகும்
செயமுனியும் தடுத்துரைப்பார் தனையன்தானும்.

16. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! இவர் திருப்பறங்குன்றம் என்ற முருகருடைய க்ஷேத்திரத்திற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் சுத்தமான ஒரு பிராமண ஜாதியில் ஆணாகப் பிறந்து, வியாபாரத்தைச் செய்து கொண்டு, மனைவி மக்களை யுடையவராகியும், நிலங்களைப் பயிரிட்டுக் கொண்டும், தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்காமலும் வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு பிரமதேவரால் பிரமலிபி யுடன் எழுதப்பட்டு, சுத்தமில்லாத இந்த வேளாளர் ஜாதியில் பிறந்திருக்கின்றார். உடனே ஜய முனிவர் தடுத்துக் கேட்கின்றார். ஜாதகர்,

## ஜாதகருடைய யோகபாவம்

17. முன்சென்மம் மறைகுலத்தில் முதித்தானென்றீர்
மேதினியில் யிச்சென்மம் குலம்தாழ்வாக
அன்னவன் உதித்தவண்ணம் புகல்வீரய்யா
அருமறைகள் முன்சென்மம் புகலாதாகி
தன்குலங்கள் தாழ்வாச்சு யோகம்சொல்வேன்
தனவானும் வறுமையிலான் தந்திரவார்த்தை
மன்னரால் தொழிலேற்பன் புகழுமுண்டு.
வன்மையாய் குடும்பமுறும் மாதர்நேயன்.

17. தன்னுடைய முன் ஜன்மத்தில் பிராமணர் ஜாதியில் பிறந்தார் என்று சொன்னீரே, இந்த ஜன்மத்தில் தாழ்ந்த ஜாதியில் பிறந்ததற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவர் முன் ஜன்மத்தில் அருமையான வேதங்களை ஓதாமல் இருந்ததால் ஜாதி குறைவு நேரிட்டது என்றார் முனிவர். இனி மேல் யோக பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் செல்வ முடையவராவர். தரித்திரத்தையுங் கஷ்டங்களை யும் அநுபவிக்க மாட்டார். வார்த்தைகளைச் சாமர்த்தியமாகவும் உபாயமாக வும் உபயோகப்படுத்துவார். இவர் அரசாங்கத்தில் வேலையில் இருப்பார். கீர்த்தியை யடைவார். மேன்மையான வலிவான குடும்பத்தை யுடையவரா வர். ஸ்திரீகளுக்குப் பிரியமானவராவர்.

18. எப்படியோகம் யியம்பினீர் முனியே
எழொன்பான் யிருவரும் நான்கில்
தப்பிதமின்றி ரவிபுத னஞ்சில்
சார்ந்திட சாமரை யோகம்
மைப்புடன் வேசியோக மென்றுரைத்தோம்
வேந்தன்போல் வாழ்ந்திடு வானும்
அப்பணிசடையோன் அடியவர் தொண்டு
அன்னமும் யீகுவா னவனே.

18. முனிவரே! எவ்விதமாக யோகத்தைச் சொன்னீர் என்று கேட்கவே, ஏழிற்குடைய குருவும் ஒன்பதிற்குடைய சுக்கிரனும் ஆகிய இவ்விரு வரும் குற்றமில்லாமல் நான்காவது வீட்டிலிருப்பதாலும் ரவி என்ற சூரிய னும் புதனும் கூடி ஐந்தாவது வீட்டிலிருப்பதாலும் சாமரை யோகம் என்ற ஒருவித யோகம் ஏற்படுகின்றது மேலும் வேசி யோகம் என்ற இன்னொரு யோகமும் ஏற்படுகின்றது. என்று சொல்லுகின்றோம். இதனால் ஜாதகர் அரசனைப் போல் வாழ்வார். தன்னுடைய ஜடையில் நாகத்தை அலங்கார மாகத் தரித்துள்ள சிவபெருமானுடைய அடியார்களுக்குப் பணிவிடைகளைச் செய்து கொண்டு அவர்களிடத்தில் அன்புடையவராகிச் சாப்பாட்டையும் போட்டுக் கொண்டு வருவார்.

*வியாக்கியானம் :—வேசி யோக விஷயம் :—சூரியனுக்குப் பன்னிரண்டில் இரண்டில், கிரகங்கள் இருப்பதற்கு வேசி யோகம், வாசி யோகம், உபயசரி யோகம், என்று சொல்லப்படும். இது விஷயமாக ஜாதக பாரி ஜாதம் ஏழாவது அத்தியாயம் நூற்றிரு பத்தோராவது (121-ஆவது) சுலோகத்தையும், பலதீபிகை ஆறுவது அத்தியாயம் எட்டாவது (8-ஆவது) சுலோகத்தையும் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் இருநூற்றெழு பத்தேழாவது, (227-வது) பாடலையும், ஜாதக சிந்தாமணியில் இரண்டாயிரத்து நாற்பத்தொன்பதாவது இரண்டாயிரத்து ஐம்ப தாவது பாடலையும் (2049-2050-ஆவது பாடலையும்) வாசிக்கவும்.

*சாமரை யோகம் விஷயம் :—ஜாதக பாரி ஜாதகம் ஏழாவது அத்தியாயம் நூற்றிமுப்பத்தாருவது (136-ஆவது) சுலோகத்தை வாசிக்கவும். இரண்டு சுப கிரகங்கள் பத்திலிருப்பது சாமரையோகமாகும் இங்கு குருவும் சுக்கிரனும் பத்தைப் பார்க்கின்றூர்கள். மேலும் இது விஷயமாக ஜாதக பாரி ஜாதம் நாற்பது நாற்பத்தோராவது (40-41 ஆவது) சுலோகங்களையும், ஜாதக சிந்தாமணியில் 2021-2031, 2131-2137 வரையிலுமுள்ள பாடல்களையும் வாசிக்கவும்.

19. அத்திரி தடுத்துச் சொல்வார்
அறைந்தது நீர்ராச யோகம்
பத்திடும் காலம் சொல்வாய்
புகர்திசை காலம் தன்னில்
சுத்தமாய் மூவெட் டாண்டுள்
செப்புவோம் ராச யோகம்
பத்தியே அன்பான் ஞலில்
ஆண்டுக்கும் பிறைபோல் யோகம்.

19. அத்திரி ரிஷி தடுத்துக் கேட்கின்றூர். நீர் சொல்லிய ராஜயோகம் நேரிடும் காலத்தை ச் சொல்லுவீர். புகர் என்ற சுக்கிர தசை காலத்தில் இருபத்தெட்டாவது வயதிற்குள்ளே ராஜயோகம் ஆரம்பிக்கும், இது ஐம்பத்து நான்காவது வயது வரைக்கும் வளர் பிறைச் சந்திரனைப் போல நாளுக்கு நாள் விருத்தியாகிக் கொண்டே போகும்.

20. குறைவுரு தென்று சொன்னேம் கோள்கள் மத்தியில்
[நேருதோ
பிருகு பொன்ஞலில் தங்க பிழையுரு தொழிலுக் கேதான்
அருமுக னருளி ஞலே அணுகாது துன்பம் யாவும்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட் டிடாயே.

20, இந்த யோகம் குறைவை யடையாது என்று சொல்லுகின்றேம். இதன் மத்தியில் தகராறுகள் யோகக் குறைவுகள் நேரிடாதோ என்று கேட்கவே, பிருகு என்ற சுக்கிரனும் பொன் என்ற குருவும் நான்காவது வீட்டிலிருப்பதால் வேலைக்கு யாதொரு இடைஞ்சலும் தகராரும் நேரிடாது. கறுப்பு மதயானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

21. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி
[யாகும்
சூதிலாள் நற்கு ணத்தாள் துறவோர்போல் வார்த்தை
[யுண்டு

*சீதள குணத்த ளாகும் திருமக ளொப்ப தாகும்*
*தீதென்றோர் குதவி செய்வள் சீலம்போல் வெளி*
*[மயக்கம்.*

21, ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் மாந்தளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடையவளாவள். இவள் கள்ளம், கபடு, வஞ்சனை ஆகிய இவற்றை உடையவளல்லள், நல்ல குணத்தை யுடையவளாவள். எல்லாவற்றையும் துறந்து விட்டப் பரதேசிகளைப் போல பேசுவாள். இவள் லக்ஷ்மியைப் போல விருப்பாள். கஷ்டத்தை அநுபவிக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் பரிசுத்தமாகவும் நல்லொழுக்க முடையவளாகவும் இருப்பதைப் போல வெளியாருக்குப் பார்வைக்குக் காட்டிக் கொள்ளுவாள்.

22, *கல்விமான் யூகை சாலி கணவனுக் கினிய ளாகும்*
*இல்லையென் றுரைக்க மாட்டாள் யிடுக்க மில்லாமல்*
*[வாழ்வள்*
*சொல்லதைக் காப்பா ளாகும் தோன்றிடும் பித்த வாயு*
*நல்லதோர் விரத மேற்பள் நாயகி யோக சாலி.*

22. ஜாதகருடைய தாயார் வாசித்தவளாவள். நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமாகவுள்ளவளாவள். இவள் பிரத்தியாருக்கு உதவி செய்ய தன்னிடத்தில் ஒன்றுமில்லை என்று சொல்லிக் கொள்ள மாட்டாள். இவள் கஷ்டங்கள் இல்லாமல் வாழ்பவளாவள். இவள் தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் தவறாமல் நடந்து கொள்ளுவாள். இவளுக்குப் பித்தவாயு ரோகம் ஏற்படும். இவள் நல்ல விரதங்களை அநுஷ்டிப்பாள். இவள் யோகத்தை யுடையவளாவள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரங்களும் முன்ஜன்மமும்

23. *தன்துணை ஆண்பால் ரெண்டு சத்திமார் காணா ளாகும்*
*அன்னையில் தென்பா லாகும் அவளுட பூர்வம் கேளாய்*
*மன்னிய அருணை தன்னில் மறைகுல முதித்து*
*[யின்னேள்*
*பொன்னொடு பணிதி பெற்றுப் புகழ்ச்சியாய் வாழ்ந்து*
*[மேதான்.*

23. ஜாதகரின் தாயாருடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்கள் ஆவார், சகோதரி கிடையாது. இவளுடைய தாயார் வீடு தெற்குத் திக்கிலிருக்கும். தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன்,

கேட்பீராக. அருணை என்ற அருணஜலமாகிய திருவண்ணமலை க்ஷேத்தி ரத்தில். பிராமணர் ஜாதியில் பிறந்து தனத்தையும் ஆடையாபரணங்களை யுமடைந்து கௌரவத்துடனும் கீர்த்தி யுடனும் வாழ்ந்து

24. சண்டன்தன் பதிக்குச் சென்று தலைனுன்கோன் [வரையப் பட்டு
வண்டணி மாது தானும் வந்தவ ளென்று சொல்வோம்
துண்டமாய்ப் பராசர் சொல்வார் சுருதியின் குல [முதித்தோர்
பண்டு பூவைசிய வமிசம் பிறந்த காரணங்கள் [சொல்வாய்

24. பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் நான்குதலைகளை யுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ரேம். உடனே தடுத்துப் பராசர மஹரிஷி கேட்கின்ருர். பிராமணர் ஜாதியிற் பிறந்தவள் பூவைசிய ஜாதியிற் பிறந்ததற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே,

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

25. மாதுமுன் சென்மம் தன்னில் விரதங்கள் தவறுதல் [செய்து
தீதாக யிக்குலத்தில் செனித்தவ ளென்று சொல்வோம்
காதலிபின் சென்மங்கள் கருதிருக் கணுலிலே தான்
ஓதுவார் குல முதிப்பாள் உயர்வான குடும்பம் தன்னில்.

25. ஜாதகருடைய தாயார் தன்னுடைய முன் ஜன்மத்தில் விரதங் களை அநுஷ்டித்ததில் சில குற்றங்களையும் விரத முட்டுக்களையுஞ் செய்ததால் அதன் கெட்ட பயனுக இந்த ஜன்மத்தில் பூவைசிய ஜாதியில் வந்து பிறந்தி ருக்கின்ருள் என்று சொல்லுகின்ரேம். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் திருக்கணுலில் வேதங்களை ஓதுகின்ற பிராமணர் குலத்தில் ஒரு மேன்மையான சிறந்த குடும்பத்தில் பிறப்பாள்.

## ஜாதகரின் தாயார், தகப்பனுர் மாரகங்களும், மறுஜன்மமும்

26. ஆரஞ்சு ஆண்டு தன்னில் அன்னைக் கெண்ட மெய்தும்
தீரமாய் முப்பான் ரெண்டில் செப்புவோம் தந்தை [கெண்டம்

வேறொரு சென்மம் சொல்வேன் விப்பரர் குலத்தி
[லேதான்
கூறுமா பலியிலே தான் குதிப்பனு மென்று சொல்வோம்

26. ஜாதகருக்கு முப்பதாவது* வயதில் இவருடைய தாயார் இறந்து விடுவாள். இவருக்கு முப்பத்திரண்டாவது* வயதில் இவருடைய தகப்பனுர் இறந்து விடுவார். இவருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். பிராமண ஜாதியில் மஹாபலிபுரத்தில் பிறப்பார் என்று சொல்லுகின்ருேம்.

*வியாக்கியானம் :—தாயார் மாரக விஷயம் :—ஜாதகருக்குப் முப்பதாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இந்தத் தனுசு லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். மேலும் இந்தச் சுக்கிரன் லக்கினுதிபதியாகிய குருவுடன் கூடி யிருப்பதால் துய்ய கேரளம் எட்டாவது பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல் பிரகாரம் மாரகம் செய்ய அதிகாரமுடையவராக விருக்கின்ருர். ஆகையால் இங்கு மாதிருக்குச் சுக்கிர தசையில் மாரகம் சொல்லப்பட்டிருக்கிறது.

*தகப்பனுர் மரண விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். இந்தச் சுக்கிரன் எட்டிற்குடைய குருவுடன் கூடி யிருக்கின்ருர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாவது பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் சுக்கிரன் மாரகஞ் செய்ய அதிகார முடையவராகின்ருர். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் பிதிருக்கு மாரகஞ் சொல்லப் பட்டிருக்கின்றது.

27. பலவணி பங்கள் செய்து பணத்தின் மேல்யிச்சை
[வைத்தோன்
நலமுள மறை குலத்தில் நல்கும் காரணங்க ளெவ்வார்
சிலர்க்கு ஆபத்தைக் காத்தும் தேவதா பக்தியாயும்
நிலையிலார்க் குதவி செய்தும் நிகர்தல வாசம் சென்றும்.

27. பலவிதமான வியாபாரங்களைச் செய்து கொண்டும் பணத்தின் பேரில் ஆசை யுடையவராகவு மிருந்தவருக்கு எவ்விதமாகப் பிராமணர் குலத்தில் பிறப்பு நேரிடும் என்று கேட்கவே, ஜாதகருடைய தகப்பனுர் சிலருக்குத் தங்களுடைய கஷ்ட காலங்களில் உதவி செய்து அவர்களைக் காப்பாற்றியதாலும், தெய்வங்களிடத்தில் அன்புடையவராக விருந்ததாலும்,

ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்ததாலும், தெய்வீகமான ஸ்தலங்களுக்குப் போனதாலும்,

## ஜாதகருடைய மரணகாலம்

28. அறமதி லிச்சை யாயும் அவனுமே வாழ்வ தாலே
மறைகுல முதிப்பா னுகும் மைந்தருக்கு அறுபா னேழில்
வருடையின் மாத மாகும் வளர்பிறை தசமி தன்னில்
உரைகுவான் கால னுடு உத்தமி கேட் டிடாயே.

28. (ஜாதகருடைய தகப்பனுர்) தர்மஞ் செய்வதில் பிரியமுள்ளவராயும் இருந்து வாழ்வதாலே பிராமண ஜாதியில் பிறப்பார். ஜாதகர் தனக்கு அறுபத்தேழாவது வயதில் வருடை என்ற மேஷ மாதமாகிய சித்திரை மாதத்தில் வளர்பிறையில் தசமி திதி தினத்தில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்வார், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய மறுஜன்மம்

29. பின்சென்மம் காஞ்சி தன்னில் பிறம்பனும் சைவ சேயாய்
தென்முனி புகலு கின்ருர் செப்பினீர் வயது தீர்க்கம்
பொன்னுக் கீருறு திங்கள் பொருந்தினல் சகடை [தோஷம்
பன்னுவீர் விபர மாகப் பார்க்கவன் குருவு னுலில்.

29. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் சைவ ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார், தென் முனி என்ற அகஸ்திய மஹரிஷி தடுத்துக் கேட்கின்ருர். ஜாதகருக்குத் தீர்க்காயுளைச் சொல்லி விட்டீரே, பொன் என்ற குருவிற்குப் பன்னிரண்டில் சந்திரன் இருப்பதால் சகடை யோகத் தோஷம்* இருக்கின்றதே, காரணங்களை விபரமாகச் சொல்லுவீர் என்ற கேட்கவே, பார்க்கவன் என்ற சுக்கிரனும் குருவும் நான்காவது விட்டில்

*வியாக்கியானம் :—சகடயோக விஷயம் :—இது விஷயமாகக் கிரனுார் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் இருநூற்றறுபத்து மூன்ருவது (263-ஆவது) பாடலையும், ஜாதக பாரிஜாதம், ஏழாவது அத்தியாயம் நூற்றெட்டாவது (108-ஆவது) சுலோகத்தையும், பலதீபிகை ஆருவது அத்தியாயம் பத்தாவது சுலோகத்தையும், பிருஹத் ஜாதகம் பன்னிரண்டாவது அத்தியாயம் நான்காவது சுலோகத்தையும், சாராவளி இருபத்தோராவது அத்தியாயம் பதினைந்தாவது சுலோகத்தையும் வாசிக்கவும்.

30. இருப்பதால் வயது தீர்க்கம் யிடறுகள் வந்து தீரும்
திருமகன் செனன காலம் சௌமியன் திசை யிருப்பு
ஒருபதி ஞறு ஆண்டும் உரைந்திடும் திங்க ளெட்டும்
வரைந்தனம் பூர்வ பாகம் மங்கையே கேட்டி டாயே.

30. இருப்பதால் ஜாதகருக்குத் தீர்க்காயுளுண்டு. ஆனுல் கெண்டங்கள் வந்து நிவர்த்தியாகி விடும். ஜாதகர் பிறந்த காலத்தில் சௌமியன் என்ற புதனுடைய தசையில் இருப்பு பதிஞறு வருஷங்களும் எட்டு மாதங்களும் ஆகும். இவ்விதமாகப் பூர்வபாகமாகிய முதலாவது பாகத்தைச் சொல்லி முடித்து விட்டோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

—C. G. R.

———

# ஜாதகம் 27

## ஜனனகால கிரகநிலை

1. [1]பிறையது [2]தேளதாக [3]பொன் சனி தனுசு வாக
[4]பரிதியும் கடக மாகப் [5]பண்டிதள் [6]வீணை யாக
[7]தரை மகன் கன்னியாகச் [8]சல்லியன் [9]சீயம் புக்க
[10]அரவுமே [11]கோல தாக [12]அம்மாது செனன மாக.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் விருச்சிகத்திலும், குருவும் சனியும் தனுசிலும், சூரியன் கடகத்திலும் புதன் மிதுனத்திலும், அங்காரகன் கன்னியிலும், சுக்கிரன் சிம்மத்திலும், ராகு துலாத்திலும் (கேது மேஷத்திலும்) இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்தால்,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | கேது | | புதன் |
| | இராசி சக்கரம் | | சூரியன் |
| | | | சுக்கிரன் |
| குரு சனி | சந்திரன் | ராகு | லக்கினம் அங்காரகன் |

கேட்டை 2-ஆம் பாதம் புத தசை ஞ 11—9—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கிர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலைபொருத்த முடையதாகும்:—மேஷத்தில் சுக்கிரனும், ரிஷபத்தில் அங்காரகனும், புதனும் ராகுவும், கடகத்தில் குருவும் சனியும், துலாத்தில் சூரியனும், விருச்சிகத்தில் கேதுவும், மகரத்தில் சந்திரனும் ஆகும். குருவும் சனியும் வக்கிர கதியிலிருக்கின்றார்கள்.

1. சந்திரன்
2. விருச்சிகம்
3. குரு
4. சூரியன்
5. புதன்
6. மிதுனம்
7. அங்காரகன்
8. சுக்கிரன்
9. சிம்மம்
10. ராகு
11. துலாம்
12. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பலனதைப் புகலு மென்று பார்வதி கேட்கும் போது
குலகுரு வதிஷ்டர் சொல்வார் குறித்தது ஆண்பால்
[சென்மம
தலமது வடதென் வீதி தனித்ததோர் கூறை யில்லம்
நலமுள மாரி மேற்கில் நரிவாக னத்தாள் மீனம்.

2. பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது குல குருவாகிய வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாம். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் தனிமையான ஒரு குடிசை வீடாகும். மாரியம்மன் கோயில் மேற்குத் திக்கிலிருக்கும், காளியம்மன் கோயில் வடக்குத் திக்கிலிருக்கும்.

3. இந்த நல்லடையா ளத்துள் யிரண்டாவது செனன மாக
அந்தவ னுதிப்பா னுகும் அரிமதம் கர்ண சேயாய்
தந்தை தாய் யோகச்சேதி தன்மனை புத்திர யோகம்
வந்தவன் முன்பின் சென்மம் வரைகிறோ மின்னூல்
[தன்னில்.

3. இப்படிப்பட்ட நல்ல அடையாளங்களுள்ள விடத்தில் இரண்டாவது பிறவியாக ஜாதகர் வைஷ்ணவ மதத்தில் கருணீகர் குலத்தில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். இவருடைய தகப்பனுர், தாயார், ஆகிய இவர்களுடைய யோக விஷயங்களையும், இவருடைய மனைவி மக்கள் ஆகிய இவர்களுடைய யோகங்களையும், இவருடைய முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

4. தந்தைதுணை ஆண்டுஒன்று கன்னிமூன்று
சாற்றுகிறோம் தீர்க்கமதாய் துணையாண் சேதி
சிந்தையின்மர்ம முள்ளான்முன் கோபத்தான்
சேயிழைசொல் தட்டான் தீரநெஞ்சன்
சந்ததமும் கிருஷிசெய்வன் சொல்பசெட்டு
தான்செய்வான் பாரிஒன்று தென்மேல்நேறும்
மைந்தர்களும் ஆண்பாலிரண்டு கன்னியவ்வார்
வரைவிப்போம் வயதுதீர்க்கம் வேறுய்செல்வன்.

4. ஜாதகரின் தகப்பனுருடன் பிறந்தவர்கள் ஒரு சகோதரரும் மூன்று சகோதரிகளும் ஆவர். இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். சகோதரருடைய விஷயங்களைச் சொல்லுகின்றேன். இவர் தன்னுடைய மனத்தில் கபடும் வஞ்சனையும் ரகசியத்தையு முடையவராவர்,

இவர் முன் கோபத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய மனைவியின் வார்த்தையை மீறி நடக்க மாட்டார் தைரியமான மனத்தை யுடையவர். இவர் எப்போதும் பயிர்த் தொழிலைச் செய்வார். இவர் சிறியதான வியாபாரத்தைச் செய்வார். இவருக்கு மனைவி ஒன்றே யாகும். இவள் தென் மேற்குத் திக்கிலிருந்து வருவாள். இவருக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் உண்டு. இவர்கள் தீர்க்காயுளை யுடையவர்களாவார். இவர் வேறு குடும்பஸ்தராக விருப்பார்.

5. எந்த காலத்தில் வேறு யியம்புவீர் முனியே நீதான்
வந்தவ னேழா ண்டுக்குள் மாரனும் வேருய்ச் செல்வன்
தந்தன மில்லானுகும் சர்ப்பம் போல் கோப மேற்பன்
சிந்தையு மிரண்டு மாகும் செப்புவான் தந்திர வார்த்தை.

5. எந்தக் காலத்தில் தகப்பனுருடைய சகோதரர் வேறு குடும்பஸ்தராகப் போய் விடுவார் என்பதைச் சொல்லுவீர், முனிவரே! என்று கேட்க, ஜாதகருக்கு ஏழு வயதிற்குள் இவர் வேறு குடும்பமாகப் பிரிந்து போய் விடுவார். இவருக்குச் சுயார்ஜித சொத்து கிடையாது. இவருக்கு நாகத்திற்குக் கோபம் வருவதைப் போல கோப முண்டாகும். இவர் தன்னுடைய மனத்தில் நல்லதும் கெட்டதுமான எண்ணத்தை உடையவராவர். இவர் உபாயமாகவும் சாமர்த்தியமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

6. பாலகன் தந்தை சேதி பகருவோம் யிரு நிறத்தான்
சீலன்போல் வெளி மயக்கன் சிறப்பான குடும்ப
[மேற்பன்
மால்பக்தி கொள்வா னுகும் மாடுகள் விருத்தி யுண்டு
ஏலவே நடன வித்தை யியம்புவா னென்று
[சொல்வோம்.

6. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறத்தை யுடைய தேகத்தை யுடையவராக விருப்பார். இவர் பரிசுத்தமானவராகவும் நல்லொழுக்கங்களை யுடையவர் போலவும் வெளியாருக்குப் பார்ப்பதற்குக் காட்டிக் கொள்ளுவார். இவர் மேன்மையான குடும்பத்தை யுடையவராவர். இவர் மகா விஷ்ணுவின் பேரில் அன்புடையவராவர். இவருக்கு கால் நடைகள் விருத்தியாகும். இவர் நடன வித்தையை கூத்து வித்தையை அஃதாவது நாட்டியம் ஆடும் வித்தையைப் பிறருக்குக் கற்றுக் கொடுப்பார் என்று சொல்லுகின்றோம்.

7. இருகண்ணுள் கன்னி சென்மம் யெய்துவான் நிலமும்
[சேர்ப்பான்
அரசரால் கணக்கு செய்வன் அழிந்திடு மத்திலே தான்

வறுமை மத்தி லேகும் மைந்தனு முதித்த பின்பு
குறையான குடும்ப மெய்தும் குறை தந்த முடையனுமே

7, ஜாதகருடைய தகப்பனுர் சித்திரை நக்ஷத்திரத்தில் கன்னியாராசியில் பிறந்தவராவர். இவர் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார், இவர் அரசாங்கத்தில் கணக்கு வேலையைச் செய்வார். இதுவும் மத்திய வயதில் போய்விடும் இவருக்கு மத்திய வயதில் தரித்திரமும் கஷ்டங்களும் நேரிடும். ஜாதகர் பிறந்த பிறகு, குடும்பம் குன்றிப் போய் விடும், இளைத்துப் போய்விடும். தகப்பனுர் குறைவான பற்களை யுடையவராவர்.

8. நிந்தைகள் பெருவா னுகும்
நிருபரால் யென்று சொல்வோம்
தந்தைனுள் பூமி தன்னை
தானவன் விருத்தி செய்வன்
விந்தையாய் வணிபம் செய்வன்
விடவாக்கன் பித்த தேகி
தன்கரம் கத்திரி ரேகை
சல்லிய பாதை யேற்பன்.

8. ஜாதகருடைய தகப்பனுர் அரசாங்கத்தாரால் அபவாதங்களையும் பழிகளையும் அடைவார் என்று சொல்லுகின்ரேம். இவர் தன்னுடைய, *பிதுரார்ஜித நிலங்களைப் பயிரிட்டு தான்யவகையராக்களை* அதிகப்படுத்துவார். இவர் ஆச்சரியப்படும்படியாய் வியாபாரத்தையுஞ் செய்வார். இவர் சொல்லுகின்ற கெட்ட விஷயங்கள் நடைபெரும். இவர் பித்த குணமுள்ள தேகத்தை யுடையவராவர். இவருடைய உள்ளங்கையில் கத்திரி ரேகை என்ற ஒருவித கெட்டரேகை இருக்கும். இவர் கடனுல் கஷ்டமடைவார்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

9. இனனெறி யுடையா னுக்கு யிப்பால னுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அரிமக னெப்ப
[தாகும்
பன்னியே பேசு வானும் பஞ்சை மேலிரக்க னுவன்
மன்னனுல் தொழிலு மேற்பன் மருவிடும் கல்வி ரெண்டு.

9. இங்கு சொல்லப்பட்ட குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்றேன். இவர் அரிமகனுகிய மன்மதனுக்குச் சமானமான அழகுடையவராவர். இவர் திறமையாகவும் சாமர்த்தியமாகவும் பேசக் கூடியவர். ஏழைகளிடத்தில் பக்ஷாபாதமும் தயாள குணமுமுடையவராவர். இவர் அரசாங்கத்தில் வேலையைச் செய்வார். இவர் இரண்டு பாஷையில் வாசித்தவராவர்.

10. சித்திர யில்லம் செய்வன் சிறப்பான குடும்ப மேற்பன்
சுத்தவா னரத்தி லிச்சை சோம்பிடான் காரி யத்தில்
புத்தியில் பெரிய ஞவன் பொய் மெய்யாய்ப்
[புகல்வாஞகும்
வெத்தியாம் தொடு வழக்கு வேந்தர் பூசிதமு மாவன்.

10. ஜாதகர் சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள அழகான வீட்டைக் கட்டுவார். இவர் மேன்மையான வளமான குடும்பஸ்தராவர். இவர் சுத்தமாக விருப்பார். தாமஞ் செய்வதில் பிரிய முள்ளவராவர், தான் செய்கின்ற காரியத்தில் சோம்பலை யுடையவரல்ல, இவர் அறிவில் பெரியவ ராகத் தோற்றுவார். பொய்யை மெய்யாக ஸ்தாபிக்குந் திறமையை யுடைய வராவர். இவர் செய்கின்ற நீடித்திருக்கும்படியான வியாஜ்யத்தில் இவ ருக்கு ஜயமுண்டாகும். இவரை அரசர்கள், அரசாங்கத்தார் மதிப்புடன் பாராட்டுவார்கள்.

11. தன்துணை காஞ ஞகும் செனிக்கினும் தீதே யாகும்
என்ன காரணத் திஞலே யியம்பீனி ரந்தச் சங்கை
துன்மையாய் மதியு மூன்றில் சூரியன் லாபம் நிற்க
அன்னவன் தனிய ஞவன் அம்பிகை யாளே கேளாய்.

11. ஜாதகருக்குச் சகோதரர்கள் கிடையா. ஒரு சமயம் சகோதரர் கள் பிறந்தாலும் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். இந்த விஷயத்தை எந்தக் காரணத்திஞல் இப்படிச் சொன்னீர் என்று கேட்கவே, கெடுதியாக மதி என்ற சந்திரன் மூன்றில் (நீசமாகவும்) சூரியன் லாபம் என்ற பதிஞென் றில் இருப்பதாலும் ஜாதகர் சகோதரமில்லாமல் தனியாக விருப்பார், பார்வதி யம்மையே ! கேட்பீராக.

12. பிறந்தஞள் முதலா யாகப் பேசுவோ மெட் டாண்டும்
தரையது சேத மெய்தும் தனமது விரைய மாகும்
குறைவரும் மன்னராலே கொடுமைகள் நேறு
[மென்ரேம்
வறுமை காலி பீடை வரவுக்குச் செலவ னேகம்.

12. ஜாதகர் பிறந்தது முதல் எட்டு வருஷங்கள் வரையிலும் நிலங்கள் கெட்டுப் போய்விடும். பணம் விரையமாகி விடும் செலவாகி விடும், அர சாங்கத்தாரால் கெடுதிகள் நேரிடும், கஷ்டங்களும் துன்பங்களும் உண்டா கும் என்று சொல்லுகின்ரேம். தரித்திர முண்டாகும். நாற்கால் ஜந்துக் களுக்கு நோயுண்டாகும், வரும்படிக்குமேல் அதிகமான செலவுண்டாகும்.

13. அதற்கு மேல்வறுமை காஞன் அம்புலி போலே
[யோகம்
பதியினில் திருவும் சேரும் பாலபாக்கியம் விருத்தி
[யுண்டு

விதவித லாப மெய்தும் விளைபுலன் பலித மாகும்
குறைமன மில்லா வாழ்வன் குவலய மதிப்பு மெய்தும்.

13. ஜாதகருக்கு எட்டு வயதிற்கு மேல் தரித்திரம் கிடையாது, இவருக்கு யோகம் வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் அதிகப் பட்டுக் கொண்டே போகும், தன்னுடைய வீட்டில் லக்ஷ்மிகடாக்ஷ முண் டாகும். இவருக்குப் பால் பாக்கிய மதிக்கப்படும். இவருக்குப் பலவழி யில் லாபமுண்டாகும், பயிரிடும் நிலங்கள் நல்ல பலிதத்தைத் தரும். இவர் தன்னுடைய மனத்தில் யாதொரு குறைவும், கஷ்டமும் இல்லாமல் வாழ் வார், ஜனங்கள் இவரைக் கௌரவத்துடன் பாராட்டுவார்கள்.

14. ஈரொன்ப தாண்டு தன்னில் யெய்திடும் கணக்கு வேலை
நேரிடும் பாலனுக்கு நினைத்த காரியங்க ளோங்கும்
பாரியும் வந்த பின்பு பகருவோம் விசேஷ யோகம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

14. ஜாதகருக்குப் பதினெட்டு வயதில் இவருக்குக் கணக்கு எழுதுந் தொழில் கிடைக்கும், இவர் நினைத்த காரியங்கள் விருத்தி யடையும், கை கூடிவரும். இவருக்கு மனைவி வந்த பிறகு அதிகமான யோகம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

15. மணமது யிருப தாண்டில் மருவிடும் தென்மேல் பாரி
குணமது நல்ல தாகும் கொடுமையை யெவர்க்கு [மெண்ணாள்.
தணிவுளாள் சிவந்த மேனி சாதகன் மனதுக் [கேத்தோள்
கணிகையா ரொத்த மாது கபடில்லாள் யோக சாலி.

15. ஜாதகருக்கு இருபதாவது வயதில் தென் மேற்குத் திக்கிலிருந்து மனைவி வந்து விவாகம் நடைபெறும். இவளுடைய குணம் நல்லதாக விருக்கும். இவள் யாருக்குந் தீங்கை நினைக்க மாட்டாள். இவள் சாந்த மானவளாவள். சிகப்பு நிறமான தேகத்தை யுடையவளாவள். ஜாதகரு டைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருப்பாள். இவள் தகுதியுள்ளவாக விருப்பாள். கபடு வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றை யுடையவளல்லள். இவள் யோகத்தை யுடையவளாக விருப்பாள்.

16. அன்னம் போல்சாய லொக்கும் அடிசலுக் கினிய
[ளாகும்
பின்ன மில்லாத தேகி பிறர்குற்றம் புகலா ளாகும்
தன்சொல்லு மடக்க முண்டு சதுஷ்பாதம் விருத்தி
[யுண்டு
பொன்பணி அதிகம் சேர்ப்பள் புண்ணிய மனத்த ளாகும்

16. ஜாதகருடைய மனைவி அன்னப்பட்சியைப் போல அழகான ருபத்தை யுடையவளாவள். இவள் சமையல் செய்வதில் கெட்டிக்காரி, இவளுடைய கைபாகம் இனிப்பாக விருக்கும். இவள் யாதொரு அவயவக் குறைவு மில்லாத தேகத்தை யுடையவள். அயலார் பேரில் நிந்தைகளைச் சொல்ல மாட்டாள், சாட்ட மாட்டாள். இவள் சாந்தமாகவும் அமைதியாகவும் பேசுவாள். இவளுக்கு நாற்கால் பிராணிகள் விருத்தியாகும். இவள் தனத்தையும் ஆடை ஆபரணங்களையும் அதிகமாகச் சேர்த்து வைப்பாள். இவள் நல்லதான தானதர்மங்களைச் செய்கின்ற மனத்தை யுடையவளாவள்.

## ஜாதகருடைய புத்திரபாவமும் முன்ஜன்மமும்

17. சுதர்களும் ஆண்பா லொன்று தோகையும் நால்வ ராகும்
பதராகு மிரண்டு யென்றேும் பாலகன் பூர்வம் கேளாய்
அதிதிவாழ் பெருமுக்கல் தன்னில் அம்மறை குல
[முதித்து
நிதிமிக பெருக்க மாகி நிமலனும் வாழு ளுளில்.

17. ஜாதகருக்கு ஒரு ஆண் குழந்தையும் நான்கு பெண் குழந்தைகளும் நீடித்திருப்பார்கள். இரண்டு குழந்தைகள் சீக்கிரம் இறந்து விடுவார்கள். ஜாதகருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவர் சந்நியாசிகள் வசிக்கின்ற பெருமுக்கல் கிராமத்தில் பிராமணருடைய ஜாதியிற் பிறந்து செல்வம் அதிகமாகி இவர் வாழ்கின்ற காலத்தில்

18. தன்னிட யிடத்தோர் தானும் சண்டைகள் மிகவே
[கொண்டு
மன்னர்பால் செல்லும் போது மாரனும் ஒருவன்
[தன்பால்
உன்னத வார்த்தை சொல்ல உறைவதால் குறைவு
[நேர
அன்னவன் வருத்த முற்று அறைந்த சாபத்தைக்
[கேண்மோ,

18. இவரிடத்தில் இருப்பவர்கள் சண்டை போட்டுக் கொண்டு அரசாங்க உத்தியோகஸ்தரிடம் நியாயத்திற்காகப் போன போது ஜாதகர் ஒருவர் பக்கமாகச் சாட்சியைச் சொல்லவே, மற்ருெரு பக்கத்தாருக்குக் கெடுதிகள் நேரிடவே கெடுதியை யடைந்த பக்கத்தார் துன்பத்தை யடைந்து கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

19. சூதான வார்த்தை யென்மேல் செப்பின பாவிக்கே தான்
போதனம் செலவு மாகும் பேதையு மரண மாகும்
மேதினில் பின்சென் மத்தில் விளங்காது துணேவர்
[தானும்
சூதுசொல் அதனல் பூமி தானுமே வறுமை யாயும்.

19. வஞ்சகமான, பொய்யான வார்த்தைகளை என் பேரில் சொல்லிய பாபியாகிய உனக்குப் பணம் செலவாகிவிட வேணும், உன்னுடைய மனைவியும் மரணமாகிவிட வேணும். உன்னுடைய பின் ஜன்மத்தில் சகோதரர்கள் இறந்துவிட வேணும். நீ பொய்யை வஞ்சகமாகச் சொன்னதால் நிலங்கள் நன்ருய் விளையாமல் கஷ்டங்களைத் தரவேணும்,

20. உண்டிக்கு வறுமை யுண்டாய் உலகினில் வாழ்வா
[யென்ன
துண்டமாய் அந்தச்சாபம் சேர்ந்தது யிவனுக்கு
வண்டணி வறுமை யுண்டாய் மரலியின் பதிக்குச்
[சென்று
தண்டமிழ் வேதனலே செனிப்பன மிந்தப்பாலன்.

20. உனக்குச் சாப்பாட்டிற்குக் கஷ்டங்கள் ஏற்பட்டு உலகத்தில் நீ வாழக் கடவது என்று ஜாதகரைப் பார்த்துச் சாபங் கொடுத்தார். இந்தச் சாபம் ஜாதகரை வந்தடைந்தது. ஜாதகர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவித்துப் பிறகு இறந்து, எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர்.

21. ஆகையால் முன்னூழ் சாபம் அணுகிடு மிச்சென் மத்தில்
போகிடும் பொருளும் பூமி போசன வறுமை காணும்
பாகமாய் யெட்டாண் டுக்கும் பல விசனங்க ளுண்டு
யேகிடும் கன்று காலி யிடறது அனேக மெய்தும்.

21. ஆகையால் முன் ஜன்மத்திய சாபம் இந்த ஜன்மத்தில் ஜாதகரை வந்தடையும். பணமும் நிலமும் சொத்துக்களும் அழிந்து போய்விடும் சாப்பாட்டிற்குக் கஷ்டங்கள் உண்டாகும். ஜாதகருக்கு எட்டு வயது வரையிலும் பலவித துன்பங்களும் கஷ்டங்களும் நேரிடும், ஆடுமாடுகள் இறந்துவிடும், அநேக இடஞ்சல்களும் உண்டாகும்.

22. சொல்லிய ஆண்டின் மேலாய்ச் சுகமிக பெருகு
[மென்றோம்
நல்லவர் நேச மெய்தும் நற்காலி பலித மாகும்
இல்லமும் பத்தொன் பாண்டில் யெய்திடும் சித்திர மாக
அல்லல்கள் காணு னுகும் அம்பிகை யாளே கேளாய்.

22. மேலே சொல்லப்பட்ட எட்டு வயதிற்குப் பிறகு அதிக சுகங்கள் உண்டாகி அதிகரிக்கும் என்று சொல்லுகின்றோம். நல்லவர்களுடைய சிநேகிதம் ஏற்படும். ஆடு மாடுகள் பலிதத்தைத் தரும் விருத்தியாகும். சித்திரங்களடங்கிய அழகான ஒரு வீடு வந்து சேரும். ஜாதகர் கஷ்டங்களை அடைய மாட்டார், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

23. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள்
[சிவந்த மேனி
தன்சொல்லு மடக்கமுண்டு தன்மனம் கபடு மில்லாள்
மன்னவன் மனதுக் கேத்தோள் வாதநோய் வுடைய
[ளாகும்
பொன்பல மில்லா ளாகும் பெரும் புத்தி யுடையளாமே.

23. ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகாக யிருப்பாள். சிகப்பு நிறமான தேகத்தை யுடையவளாவள். இவள் சாந்தமாகவும் நிதானமாகவும் பேசுவாள். தன்னுடைய மனத்தில் வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றை யுடையவளல்லள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருப்பாள். இவள் வாத ரோகத்தை யுடையவளாவள். இவள் அதிக தனத்தை யுடையவளல்லள். இவள் பெரிய, சிறந்த அறிவை யுடையவளாவள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவம்

24. இல்லமும் மேல்பா லாகும் யிவள்துணை ஆண்பால்
[ரெண்டு
செல்லுவார் வெளிதேசத்தில் சிறுத்திடு மில்லம் தானும்
வல்லிமார் காணு ளாகும் மாதுவும் தனியே யாகும்
சொல்லுவீ ரந்தச் சங்கை சனிநாலில் மதியும் நீச்சம்.

24. ஜாதகரின் தாயாருடைய வீடு மேற்குத் திக்கிலிருக்கும், இவளுக்கு இரண்டு சகோதரர்களுண்டு. இவர்கள் வெளி தேசத்திற்குப் போய் விடுவார்கள். இவர்களுடைய வீடு க்ஷீணித்துப் போய்விடும். இவளுக்குச் சகோதரிகள் கிடையா. இவள் தனியாக விருப்பாள். இதற்குக்

காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, சனி நான்கிலிருப்பதாலும், சந்திரன் நீச்சமாக.

## ஜாதகன் தாயாருடைய முன்ஜன்மம்

25. இருப்பதால் புகன்றோம் யாங்கள்
யிவளிட பூர்வம் கேளாய்
திருப்பரம் குன்றம் தன்னில்
செனித்தனள் வடுக மாது
பொருளது பெருக்க முண்டாய்ப்
பூமியில் வாழும் நாளில்
மருவின வினையைக் கேண்மோ
மைத்துனன் மேலே நிந்தை.

25. இருப்பதாலும் நாங்கள் சொன்னோம் என்றார் முனிவர். ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவள் திருப்பறங் குன்றம் என்ற முருகருடைய க்ஷேத்திரத்தில் வடுகர் ஜாதியில் பெண்ணாகப் பிறந்து அதிகமான சொத்தை யுடையவளாகிப் பூமியில் வாழ்கின்ற காலத்தில் சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீராக. இவள் தன்னுடைய மைத்துனனாகிய புருஷனுடைய இளைய சகோதரர் பேரில் அபவாதத்தைச்

26. சொல்லியே விலக்கி னாளாம்
செப்புவான் வரன்பின் வந்தோன்
அல்லல்கள் சொன்ன பாவி
அணுகாது துணைவர் தானும்
வல்லிபின் சென்மம் தன்னில்
மருவாது துணைவர் தானும்
எல்லைகள் திரித லாகும்
யீன்ற தாய் தந்தைதானும்.

26. சொல்லி இவரைத் துறத்தி விட்டாள். இதன் பேரில் புருஷனுடைய இளைய சகோதரர் சொல்லுகிறார். "என் பேரில் கெடுதியாகச் சொல்லிய பாபியாகிய உனக்குச் சகோதரர்கள் இல்லாமல் இருக்கக் கடவது, உன்னுடைய மறுஜன்மத்தில் கூட உனக்குச் சகோதரர்கள் இல்லாமல் இருக்கடவது, உன்னைப் பெற்ற தாயாரும் தகப்பனாரும் ஊர் ஊராய்த் திரிந்தலையக் கடவது" என்று சொல்லியும்

27. இன்னமும் பலவார் சொன்னார்
யெய்திற்று அந்தச் சாபம்
கன்னிகை யந்தி யத்தில்
கனமிலாக் குடும்பி யாகி

துன்மையாய்க் சால ஞடு
சேர்ந்துமே பிரமன் லக்கம்
அன்னவ ளுதித்தா ளென்ருேம்
அணுகிடு முன்னூழ் சாபம்.

27. இன்னமும் பலவிதமாகச் சொல்லிச் சாபத்தைக் கொடுத்தா மைத்துனர். இந்தச் சாபம் தாயாரை வந்தடைந்தது. இவள் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் மேன்மையில்லாத சிறப்பில்லாத குடும்பஸ்தளாகி வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இவள் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ருேம். முன் ஜன்மத்திய சாபம் இவளை வந்து அடைந்தது.

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

28. இல்லமு மலைச்ச லெய்தும் யீன்ற தாயில்லம் பாழாம்
அல்லலாய்த் துணைவர் தாமும் அவளுடை பின்ஜன்மம் [கேள்
தொல்லையே நிவர்த்தி செய்யும் திருவள்ளூர் தன்னிலே [தான்
புல்குவாள் சைவ சேயாய் புண்ணிய வதியே கேளாய்.

28. ஜாதகருடைய தாயாருடைய வீட்டிலுள்ளவர்கள் கஷ்டங்களை யும் தொந்தரவையும் அநுபவிப்பார்கள். இவளுடைய தாயார் வீடு க்ஷீணித்துப் போய்விடும். இவளுடைய சகோதரர்களும் கஷ்டங்களை அநுபவிப்பார்கள். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. கஷ்டங்களை விலக்கி விடுகின்ற ஸ்தலமாகிய திருவள்ளூர் க்ஷேத்திரத்தில் சைவ ஜாதியில் பெண்ணாகப் பிறப்பாள், புண்ணியசாலியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

29. தந்தையின் பூர்வம் தன்னை
தானெடுத் தியம்பக் கேண்மே
முந்திய அரங்கம் தன்னில்
முதித்தனன் வைணவ சேயாய்
சந்ததம் மலர் தொடுத்துச்
சகலர்க்கும் கிரயம் செய்து
விந்தையாய்ப் பசனை செய்து
வித்தகன் வாழும் நாளில்.

29. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றேன் கேட்பீராக. மேன்மையான அரங்கம் என்ற ஸ்ரீரங்க க்ஷேத்திரத் தில் வைஷ்ணவ ஜாதியில் ஆணுகப் பிறந்து, எப்பொழுதும் புஷ்பங்களைக் கோர்த்து எல்லோருக்கும் விற்றும் ஆச்சரியப்படும்படியாய்ப் பஜனையைச் செய்தும் வாழ்கின்ற காலத்தில்

30. மறைமாது போகம் தூய்த்தான்
பருவிற்று அதுஓர் தோஷம்
குறை செய்தான் ஏழையோர்க்குக்
கூறுவார் சாபம் தானும்
மறுசென்மம் மன்ன ராலே
அவமானம் குடும்பம் தாழ்வு
திருகாக அனந்தம் சொன்னுர்
சேர்ந்தது அந்தத் தோஷம்.

30. ஜாதகருடைய தகப்பனுர் ஒரு பிராமண ஸ்திரியுடன் சம்போகஞ் செய்தார். இது ஒரு தோஷமாக ஏற்பட்டது. ஏழை ஜனங்களுக்கு இவர் கெடுதியை விளைவித்தார், அதனுல் அவர்கள் சாபத்தைக் கொடுத்தார்கள், நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் அரசாங்கத்தாரால் அவமானத்தை யடைய வேண்டியது. உன்னுடைய குடும்பம் நொந்து குறைவை யடைய வேண்டியது என்று சொல்லியும் இன்னம் அதிகமான கெடுதல்களையும் சொன்னுர்கள். இந்தத் தோஷமும் தகப்பனுரை வந்தடைந்தது.

31. அந்திய காலம் தன்னில் அதிகமாய்ப் பிணியு மெய்தி
அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ னென்று சொல்வோம் மருவிடும் யேழை சாபம்
நிந்தைகள் வறுமை நேறும் நிமலியே கேட்டி டாயே.

31. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் அதிகமான வியாதியை யுடையவராகிப் பிறகு இறந்து எமனிடத் திற்குப் போய்ப் பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர் என்று சொல்லுகின்றேம். ஏழைகளி னுடைய சாபம் இவரை வந்தடையும். அதனுல் அபவாதங்களும் தரித்திர மும் கஷ்டங்களும் இவருக்கு உண்டாகும். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

32. பின்சென்மம் கூடல் தன்னில் பிறப்பனும் பிரம்ம சோய்ய
மன்னரால தொழிலும் பெற்று வாழ்குவா னென்று
[சொல்வேன்

அன்னவ னிச்சென் மத்தில் அல்பமாம் புத்தி யாயும்
தன்சொல்லு மிரண்டு மாயும் தானவன் வாழ்வ தாலே.

32: ஜாதகரின் தகப்பனுர் தன்னுடைய மறுஜன்மத்தில் கூடல் என்ற திருமுக் கூடலில் பிராமண ஜாதியில் ஆணுகப் பிறந்து அரசாங்கத்தில் வேலையில் அமர்ந்து வாழ்வார் என்று சொல்லுகின்றேன். இவர் இந்த ஜன் மத்தில் அற்ப புத்தியை யுடையவராகியும், பொய்யையும் மெய்யையும் கலந்து பேசியும் வாழ்வதால்;

33 முதல்குல முதிக்கும் வண்ணம் முரைப்பீர்கள் முனியே [நீதான்
சதியின்றி மாலோன் பக்தி தானவன் கொண்ட தாலே
உதிப்பனு மறை குலத்தில் உரைத்தது தப்பா தாகும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

33. இவர் முதற்குலமாகிய பிராமண குலத்திற் பிறப்பதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் முனிவரே! என்று கேட்கவே, துரோகமில்லாமல் இவர் மகாவிஷ்ணுவின் பேரில் அன்பை யுடையவராகி விருந்ததால் பிராமண குலத்தில் பிறப்பார். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகா. சந்நியாசிகளையும் பரதேசிகளையும் காப்பாற்றுகின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாய் தந்தை பாட்டன் பாட்டி இவர்களின் மரணகாலம்

34. முப்பது ஆறு ஆண்டில் விளம்புவோம் தந்தை கண்டம்
செப்புவோ முப்பான் னேழில் திருமதி அன்னை [கெண்டம்
மைப்புடன் ஆரும் ஆண்டில் விளம்புவோம் தந்தை [அன்னை
ஒப்புடன் பத்தாண்டில் தான் ஒதுங்குவான் பிதாவின் [தந்தை.

34, ஜாதகருக்கு முப்பத்தாருவது* வயதில் இவருடைய தகப்பனுர் இறந்து விடுவார் என்று சொல்லுகின்ரேம். முப்பத்தேழாவது வயதில் தாயார் இறந்து விடுவாள் என்று சொல்லுகின்ரேம். ஆருவது வயதில் தகப்பன் வழி பாட்டி இறந்து விடுவாள் என்று சொல்லுகின்ரேம். பத்தாவது வயதில் தகப்பன்வழி பாட்டன் இறந்து விடுவார்.

*வியாக்கியானம் :—பிதுர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. பிதிருடைய லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத்

திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் பிதிருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*மாதிர் மாரக விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தேழாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் தனுசு ஆகும். இந்தத் தனுசு லக்கினத்திற்குச் சுக்கிரன் ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் மாதிருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*தகப்பன் வழி பாட்டி மரண விஷயம் ;—தகப்பன் லக்கினம் ரிஷபமாகும். இதற்கு மாதிர் லக்கிநம் ரிஷபத்திற்கு நான்காவது வீடாகிய சிம்மமாகும். ஆகையால் பிதிர் வழி பாட்டி லக்கினம் சிம்மம் ஆகும், இந்த சிம்ம லக்கினத்திற்குப் ஜாதக சந்திரிகை ஐம்பத்திரண்டாவது சுலோகம் பிரகாரம் புதன் மாரகராகின்ருர் ஆகையால் இங்கு புத தசையில் பிதுர்வழி பாட்டிக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது;

*பிதிர்பாட்டன் மாரக விஷயம் :—பிதிர் லக்கினம் ரிஷபமாகும். ரிஷபத்திற்குப் பிதுர் லக்கினம் மகரமாகும். மகரத்திற்கு லக்கினுதிபதியாகிய சனியைப் புதன் பார்த்து இவருடன் சம்மந்தமுடையவராகின்ருர். ஆகையால் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் புதன் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு புத தசையில் பிதிர் வழி பாட்டனுக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

## ஜாதகருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

35. அறுபது ஆண்டு தன்னில் ஆனி மாதத்திலே தான்
திருமக னுடல மேகும் செப்புவோ மிவன்பின் சென்மம்
பெருமையாய்க் காஞ்சி தன்னில் பிறப்பனும் சத்திரிய [சேயாய்
குறைவின்றி வாழ்வா னுகும் கோதையே கேட்டி டாயே.

35. ஜாதகர் தனக்கு அறுபதாவது வயதில் ஆனி மாதத்தில் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும். இவருடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்ருேம். இவர் பெருமையாகக் காஞ்சிபுரத்தில் க்ஷத்திரிய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார், யாதொரு கஷ்டங்களில்லாமல் வாழ்வார்; பார்வதியம்மையே! கேட்பீராக.

36. இன்னவன் சென்ன காலம் ஈட்டினுள் ரெண்டாம் பாதம்
மன்னிய புதனி ருப்பு வருடமே பதினென் ருகும்

தன்னுடன் நவமாம் திங்கள் சாற்றுவோம் பலனை
[யாங்கள்
பொன்னது ஆசை யாலே பிதாவுக்குச் சிறையு மெய்தும்

36. ஜாதகருடைய ஜனன காலத்தில் ஈட்டி நாள் என்ற கேட்டை நக்ஷத்திரத்தில் இரண்டாம் பாதம் ஆகும். இதற்குரிய புதமகா தசையில் இருப்பு நின்ற வருஷங்கள் பதினொன்றும் மாதங்கள் ஒன்பதும் ஆகும். இக்காலத்திய பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். பொன்னின் பேரில் ஆசையை வைத்ததால் ஜாதகருடைய தகப்பனுருக்குச் சிறைசாலையில் வசித்தில் நேரிடும். அஃதாவது இவர் ஜெயிலுக்கும் போய்விடுவார்.

37. சகலமும் குறைவ தாகும் சதுஷ்பாதம் சேத மெய்தும்
அகமது அலைச்ச லெய்தும் அஞ்சிடும் பந்துவுக்கே
[தான்
மிகுதனம் செலவு மெய்தும் விசனமே குடியாய்த் தங்கும்
செகமதில் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

37. எல்லாவிதங்களிலும் குறைவான பலனே நடக்கும். கால் நடைகள் இறந்து போய்விடும். வீட்டில் தொந்தரவுகள் ஏற்படும், பந்துக்களுக்குப் பயந்து இருக்க வேண்டியதாக நேரிடும். அதிக பணம் செலவாகி விடும் எப்போதும் துக்கமே வீட்டில் குடி கொண்டிருக்கும், உலகத்தில் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

---

# ஜாதகம் 28

## ஜனனகால கிரகநிலை

1. [1]பிறை [2]புகர் [3]கோலதாக [4]பானு [5]தேள்புதனு [6]மேரு
[7]தரைமகன் [8]மான தாகச் சனிகேது [9]சாடி யாக
குரு [10]நந்தி [11]பணியும் [12]சீயம் [13]கோதையும் செனன
[மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்க லுற்றார்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும் சுக்கிரனும் துலாத்திலும், சூரியன் விருச்சிகத்திலும், புதன் தனுசிலும், அங்காரகன் மகரத்திலும், சனியும் கேதுவும் கும்பத்திலும், குரு ரிஷபத்திலும், ராகு சிம்மத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் முனிவர்களே என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| சனி கேது | இராசி சக்கரம் | | |
| அங்காரகன் | | | ராகு |
| புதன் | சூரியன் | சந்திரன் சுக்கிரன் | லக்கினம் |

சித்திரை 3-ஆம் பாதம் அங்கார தசை ஷ 2—10—00

*குறிப்பு;—இந்த ராசிச் சக்கிர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும்:—மேஷத்திற் புதனும் ராகுவும். ரிஷபத்தில் அங்காரகனும், கன்னியிற் சூரியனும், துலாத்திற் சந்திரனும் கேதுவும் விருச்சிகத்திற் சனியும் மீனத்திற் குருவும் சுக்கிரனும் ஆகும். குரு வக்கிர கதியிலிருக்கின்றார்.

---

1. சந்திரன்
2. சுக்கிரன்
3. துலாம்
4. சூரியன்
5. விருச்சிகம்
6. தனுசு
7. அங்காரகன்
8. மகரம்
9. கும்பம்
10. ரிஷபம்
11. ராகு
12. சிம்மம்
13. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. தென்முனி புகலு கின்ருர் செனித்தது ஆண்பால்
[சென்மம்
வந்தயில் கீழ்மேல் வீதி வாசலு யெமனின் நோக்கம்
அத்திரி மாரி கீழ்பால் ஆளி வாகனத்தாள் உத்திரம்
தந்தியும் வடகீ ழாகும் சிறுவூராம் வடுகர் வர்க்கம்.

2. தென் முனியாகிய அகஸ்திய மஹரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்குத் திக்கைப் பார்த்த வாயிலே யுடையதாகும். ஒரு மலேயும் மாரியம் மன் கோயிலும் கிழக்குத் திக்கிலிருக்கும் காளியம்மன் கோயில் வடகிழக்கு திக்கிலிருக்கும், விநாயகக் கடவுளின் கோயில் வடகிழக்குத் திக்கிலிருக் கும் இவ்வித அடையாளங்கள் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் வடுகர் என்ற தெலுங்கர் ஜாதியில் பிறப்பார்.

3. இன்னவன் செனனமிருப்பிட மதற்கு
ஈரேழு கடிகை தூரத்தில்
மன்னிய தந்தைஊரென மொழிவோம்
வடவாசல் கிழக்குமேல் வீதி
உன்னதயில்லம் உரைத்தன மதன்கீழ்
உதித்தவன் யோகமும் துணேவர்
அன்னையின் தந்தை களத்திர புத்திரர்
அறைகிருேம் முன்பின் சென்மங்கள்

3. ஜாதகர் பிறந்த வீட்டிற்குப் பதினன்கு நாழிகை தூரத்தில் இவரு டைய தகப்பனுடைய கிராமம் உண்டென்று சொல்லுகின்ருேம். தகப்பனு ருடைய வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குவாயிலே யுடையதாகும். இந்த வீடு உயர்ந்த மேன்மையான வீடாகும் என்று சொல்லுகின்ருேம். இந்த ஊருக்குக் கிழக்குத் திக்கில் ஜாதகர் பிறந்த கிராமம் உண்டு. ஜாத கருடைய யோகத்தையும், இவருடைய சகோதரர்கள், தாயார், தகப்பனர், மனேவி, மக்கள் ஆகிய இவர்களுடைய யோகங்களேயும், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் சொல்லுகின்ருேம்.

4. தந்தைதுணே ஆண்ஒன்று கன்னிரெண்டு
சாற்றுகிருேம் தீர்க்கமதாய் துணேஆணுந்தான்
முந்தின்தாய் ஒன்ருக வாழ்வானுகும்
உயர்வான குடும்பமுளன் புகழுமேற்பன்
பந்தினர்மதிக்க உய்வன் யூகைவானும்
பஞ்சைமே லிரக்கமுளன் பதரில்செல்லான்
தன்தந்தை ஆஸ்தியிலான் அன்னேயாலே
தனம்பூமி மிகுதியென்ருேம் சரசவார்த்தை

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்களில் ஒரு சகோதரனும் இரண்டு சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களென்று சொல்லுகின்றோம். இந்தச் சகோதரர் மூத்த சகோதரராவர். இவர் ஜாதகருடைய தகப்பனுரின் குடும்பத்திலிருந்தே வாழ்வார். இவர் சிறந்த மேன்மையான குடும்பத்தை யுடையவர். கீர்த்தியையும் பெருமையையும் அடைவார். இவர் தன்னுடைய பந்துக்கள் மதிக்கும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியக்கூடிய நுட்பமான அறிவை யுடையவராவர், இவர் ஏழைகளிடத்தில் பட்சாதாபமும் அன்புமுடையவரா்வர். இவர் அற்பமான பலனில்லாத காரியங்களில் பிரவேசிக்கமாட்டார். இவருக்குப் பிதுரார்ஜித சொத்து கிடையாது, இவருக்குத் தாபாரால் அதிகமான சொத்துக்களும் நிலங்களும் வந்து சேரும் என்று சொல்லுகின்றோம். இவர் இனிமையான வார்த்தைகளை யுடையவராவர்.

5. வாதபித்த தேகமுளன் பாரியொன்று
வரைகிறோம் தீர்க்கமதாய் சுதராணொன்று
காதலிமார் யிருவர்தீர்க்கம் சுகமாய்வாழ்வன்
கஞ்சமாம் ரேகையுண்டு கரத்திலேதான்
தீதாகஅன்னை துனை புதல்வனாலே
சிலவழக்கு நேர்ந்துதன்பால் செயமேயாகும்
ஓதுவேன் பின்பாகம் விபரமாக
உரைகிறோம் தந்தைகுணம் உமையேகேளாய்

5. ஜாதகரின் தகப்பனுருடைய மூத்த சகோதரர் வாதபித்த குணமுள்ள தேகத்தை யுடையவராவர், இவருக்கு ஒரே ஒரு மனைவி உண்டு. இவள் நீண்ட வயதுடையவளென்று சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு ஆண் குழந்தையும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவர் சுகமாக விருந்துகொண்டு வாழ்வார், இவருடைய உள்ளங்கையில் தாமரை ரேகை என்ற ஒருவித நல்ல ரேகையுண்டு. இவருடைய தாயாரின் சகோதரருடைய பிள்ளையால் சில வியாஜ்ஜியம் நடந்து அது இவருக்கு அநுகூலமாகும். பின் பாகமாகிய இரண்டாவது பாகத்தில் மற்ற விஷயங்களை விவரமாகச் சொல்லுகின்றேன். இனிமேல் ஜாதகரின தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன், பார்வதியம்மையே! கேட்பீராக.

6. மால்னும முடையவனும் கிருஷிசெய்வன்
வண்டிவாகன முடையன் வறுமைகாணுன்
சீலம்போல் வெளிமயக்கன் தந்திரவார்த்தை
சிறப்பான யில்லமுமே செப்பலாகும்
பால்பாக்கியம் ஆளடிமை பண்போர்நேயன்
பலருக்கும் சகாய முள்ளோன் பதரில் செல்லான்
ஞாலத்தைவிருத்தி செய்வன் சுகிபொசிப்பன்
நற்கரத்தில் மாலின்வரி நல்குமென்றோம்

6. ஜாதகருடைய தகப்பனர் மகாவிஷ்ணுவின் பெயரை யுடையவராவர், பயிர்த்தொழிலைச் செய்வார், வண்டி வாகனத்தை யுடையவராவர், இவர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மனுபவிக்கமாட்டார். பரிசுத்தமாகவும், நல்லொழுக்க முடையவராகவும் இருப்பதைப்போல வெளியாருக்குக் காட்டி அவர்களை ஏமாற்றுவார். இவர் உபாயமாகவும் சாமர்த்தியமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் மேன்மையான வீட்டையும் குடும்பத்தையும் உடையவரென்று சொல்லக்கூடும். இவர் பால் பாக்கியத்தை உடையவராவர், வேலையாட்களை யுடையவராவர், நல்லகுணத்தை யுடையவர்களுடைய சினேகிதத்தை யுடையவராவர். இவர் அநேகருக்கு உபகாரத்தைச் செய்வார், இவர் அற்பமான, பலனற்றக் காரியங்களில் பிரவேசிக்கமாட்டார். இவர் நிலங்களைப் பயிரிட்டு தானிய வகைகளைக்களை அதிகப்படுத்துவார், சுகமான ஆகாரத்தைச் சாப்பிடுபவராவர், இவருடைய உள்ளங்கையில் விஷ்ணுரேகை என்ற ஒருவித நல்லரேகையுண்டு என்று சொல்லுகின்றோம்.

7. துணைசொல்லைக் கடவாதான் சொல்முன்கோபம்
துறவோர்மேல் பக்தியாவான் சொகுசனுவன்
குணமுள்ளோர்க்குக் குணவானும் தந்தையாஸ்தி
குலைந்திடுமே அன்னைவழி குடியாமென்றோம்
பிணைசெய்யான் பித்தசூடு டையனுகும்
புயபலத்தன் பேதைவழி பலமுருது
கனமான புகழுடையன் காலிபுத்தி
கட்டுவான் சித்திரயில்லம் காமனெப்பாம்.

7. ஜாதகருடைய தகப்பனர் தன்னுடைய சகோதரருடைய வார்த்தைக்கு மீறி நடந்துகொள்ளமாட்டார். பேசுவதற்கு முன்னமே கோபத்தை யுடையவராவர். இவர் சன்னியாசிகளிடத்திலும் பரதேசிகளிடத்திலும் அன்புடையவராவர், இவர் நேர்த்தியானவர், ஒழுங்குள்ளவராவர். அழகுள்ளவராவர் நாகரிகமுடையவராவர். இவர் நல்ல குணசாலிகளுக்கு நல்ல குணசாலியாக விருப்பார், பிதுரார்ஜித சொத்து அழிந்துபோய்விடும், தன்னுடைய தாயாருடைய வழியால் ஜீவனஞ்செய்வார் என்று சொல்லுகின்றோம். இவர் கட்டுப்பாட்டிற்குள்ளாக மாட்டார்; பித்தச் சூடுடைய தேகத்தை யுடையவராவர், இவர் தோள்வலிவை யுடையவராவர். இவருடைய மனைவி வழி செழிப்பாகவிராது. இவர் மேன்மையான கீர்த்தியை யுடையவராவர், இவருக்கு நல்ல அறிவுகிடையாது. இவர் சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட அழகான வீட்டைக் கட்டுவார். இவர் மன்மதனுக்குச் சமானமான அழகுடையவராக விருப்பார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மம்

8. முன்சென்மம் புகலுகின்றோம் பெண்ணையோரம்
மொழிந்த தொருநகமதில் கங்கைசேயாய்

பொன்பணிக ளதிகமதாய் பூமிலுங்கி
புகழ்உண்டாய் வினையின்றி மரணமாகி
அன்னவனும் தானுதித்தா னென்றுசொல்வோம்
அறைந்தயிந்த குணத்தானுக் கைந்தாம்செனனம்
மன்மதன்போல் தோன்றிடுவ னிந்தப்பாலன்
வரிவிப்போம் யிவன்குணத்தை மங்கையே கேள்.

8. ஜாதகரின் தகப்பனாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம், இவர் பெண்ணை நதிக்கரை யோரமுள்ள நகமம் என்ற கிராமத்தில் வேளாளர் ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறந்து தனமும் ஆடை ஆபரணங்களும் அதிகமாக வுடையவராக விருந்தும் பயிரிடும் நிலங்கள் விருத்தியாகியும், கீர்த்தியை யுடையவராகவுமிருந்தும், யாதொரு பாவமுமில்லாமல் இறந்து இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இங்கு சொல்லப்பட்ட குணகுணங்களை யுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் ஐந்தாவது பிறவியாகவும் மன்மதனைப்போல் அழகான ரூபத்தை யுடையவராகப் பிறப்பார். இனிமேல் இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

9. பாலகன்தன் குணம்சொல்வேன் பலர்க்குநேயன்
பாரதிதம் சேர்ந்திடுவன் பலனூல் ஆய்வன்
சீலவான் மாந்தளிர்போல் நிறத்தனாகும்
சிறுத்தவர்க் குபகாரி தீரநெஞ்சம்
வேல்விழியால் மோகமுளன் விகடம்பேசான்
வேவுகர்கள் அதிகமுளன் வீணனல்ல
ஞாலத்தோர் மதிக்கஉய்வன் பால்மோர்யிஷ்டன்
நற்தந்தை மேலாகநவனி சேர்ப்பன்

9. ஜாதகருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் அநேகருக்குப் பிரியமானவராகவிருப்பர். இவர் நிலங்களை அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். இவர் அநேக சாஸ்திரங்களைப் படிப்பார், இவர் பரிசுத்தமானவர், நல்லொழுக்கமுடையவர். இவர் மாந்தளிரின் நிறத்தைப்போன்ற ஒருவிதமான சிகப்பு நிறத்தை யுடையவராவர். இவர் ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்வார், தைரியமான மனத்தை யுடையவர். வேலைப்போன்ற அழகிய கண்களையுடைய ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர், இவர் வேடிக்கையாகப் பேசமாட்டார். இவர், அதிகமான வேலையாட்களை யுடையவராவர், இவர் வீணாகச் செலவு செய்பவரல்ல. இவர் பூமியிலுள்ளவர்கள் தன்னை கௌரவப் படுத்தும்படியான நிலைமையிலிருந்து வாழ்வார். இவர் பால், மோர் ஆகிய இவற்றின்பேரில் பிரியமுள்ளவராவர்,

10. நெஞ்சிரக்க முடையவனும் தேவபக்தி
நிகர்சேதுபதி செல்வன் நிருபரிஷ்டம்
கஞ்சமாம் ரேகையுண்டு காலிவிருத்தி
கடந்தோர்க் கன்னமீவன் காமனைப்பாம்
செஞ்சாலிஅதிகமுறும் மூன்றூர் பூமிசேர்ப்பன்
பூர்வ பொன்னும் சேருமென்றோம்
அஞ்சிடான் யெதிரிகட்குச் செயமேசெய்வன்
ஆபத்தில் சிலருக்குதவும் அதிகாரத்தன்

10. ஜாதகர் தயாளமான மனத்தை யுடையவராவர். இவர் தெய்வங்களின்பேரில் அன்புடையவராவர், இவர் சேது ஸ்தலத்திற்குப் போவார். இவரிடத்தில் அரசாங்கத்தார் பிரியமுள்ளவர்களாக விருப்பார்கள். இவருடைய உள்ளங்கையில் கமலரேகை என்ற ஒரு நல்ல ரேகை யுண்டு. கால் நடைகள் விருத்தியாகும், இவர் சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்குஞ் சாப்பாட்டைப் போடுவார், இவர் மன்மதனைப்போல அழகாக விருப்பார். செந்நெல் அதிகமாக விளையும், இவர் மூன்று கிராமங்களில் நிலங்களை வாங்கிச் சேர்த்துவைப்பார். இவருக்கு முன்னோர்களுடைய தனமும் வந்து சேரும் என்று சொல்லுகின்றோம். இவர் விரோதிகளுக்குப் பயப்பட மாட்டார்; இவர் எதிரிகளை ஜெயித்துவிடுவார், இவர் சிலருக்குக் கஷ்டமான காலத்தில் உபகாரத்தைச் செய்கின்ற அதிகாரியாக விருப்பார்.

## ஜாதகருடைய சகோதர பாவம்

11. தன்துணை முன்பெண் ரெண்டு சாற்றுவோம் தீர்க்கமாக
மன்னிய யிரண்டு நீரால் மடிஉண்டு பால னுக்கு
பின்துணை ஆண்பா லொன்று பேதையு மவ்வார்
[தீர்க்கம்
அன்னவர் சேதி பின்பால் அறிவிப்போம் தாயே
[யாங்கள்.

11. ஜாதகருடன் பிறந்தவர்களில் இரண்டு மூத்த சகோதரிகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். இரண்டு சகோதரர்கள் ஜலத்தால் இறந்துவிடுவார்கள். இளைய சகோதரர்கள் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் ஆவர். இவர்கள் தீர்க்காயுளை உடையவர்களாவார். இவர்களுடைய விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் நாங்கள் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே!

## ஜாதகருடைய விவாகமும் மனைவியின் குணதிசயங்களும்

12. மங்களம் யீரெட் டாண்டில் மருவிடும் மேல்பால் பாரி
அங்கவள் குணத்தைச் சொல்வேன் அரிவளை யொப்ப
[தாகும்

எங்கள்போல் அதிதி கன்னம் யீகுவாள் நற்
[குணத்தாள்
பங்கைய முகத்தா ளாகும் பர உபகாரி யென்றோம்,

12. ஜாதகருக்கு விவாகம் பதினாருவது வயதில் நேரிடும். இவருடைய மனைவி மேற்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் லக்ஷிமிக்குச் சமானமானவளாக விருப்பாள். எங்களைப்போன்ற முனிவர்களுக்கும் பரதேசிகளுக்கும் சோப்பாட்டைப் போடுவாள். இவள் நல்ல குணத்தை யுடையாள். இவள் தாமரைப் பூவைப்போன்ற அழகான முகத்தையுடையவளாவள். இவள் பிறருக்கு உபகாரத்தைச் செய்வாள் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—விவாக விஷயம்:—ஜாதகருக்குப் பதினாருவது வயதில் ராகுதசை நடக்கின்றது. இவர் சூரியனுடைய வீட்டிவிருப்பதால் சூரியனுடைய பலனை இவர் ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரம் கொடுக்கவேண்டும். சூரியன் ஏழிற்குடையவராகிய குருவைப்பார்த்து இவருடைய சம்மந்தத்தை யடைந்திருப்பதால் ஜாதக பாரிஜாதம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகம் பிரகாரம் விவாகஞ் செய்துவைக்க அதிகாரமுடையவராகின்றார், ஆகையால் இவருடைய வீட்டிலுள்ள ராகுதசையில் விவாகஞ் செய்துவைப்பார் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது!

13. அன்னம்போல் வடிவு மொக்கும் ஆளன்தன் மனதுக்
[கேத்தோள்
அன்னையு மிரண்டு மாகும் அடிசலுக் கினிய ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அடாவடி கூறு ளாகும்
அன்னியர் குற்றம் சொல்வாள் அறிவு உள்ளா ளென்று
[சொல்வோம்.

13. ஜாதகருடைய மனைவி அன்னத்தைப்போல அழகான ரூபத்தை யுடையவளாவள் இவன் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாக விருப்பாள். இவளுக்குத் தாயார் இருவராகும். இவள் சமையல் செய்வதில் கெட்டிக்காரி இவளுடைய கைப்பாகம் இனிமையாகவிருக்கும். இவள் பிறர் தன்னை மதிக்கத்தகுந்த அந்தஸ்திலிருந்து வாழ்வாள். இவள் முரட்டுத்தனமாகவும் அநியாயமாகவும் பேசமாட்டாள். இவள் பிறர் பேரில் நிந்தையாகப் பேசமாட்டாள். இவள் புத்திசாலியாக விருப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய புத்திர பாவம்

14. புத்திர விருத்தி தன்னை புகலுவோ மெழுவர் தோன்றும்
சுத்தமாய் ஆண்பால் ரெண்டு தோகையு மவ்வார்
[தீர்க்கம்

குத்தமா முதலும் நான்கும் கூறுவோ மேழு மென்றேம்
பற்ருத காரணம் சொல் பார்மகன் அஞ்சில் தங்க.

14. ஜாதகருக்குச் சந்ததி விஷயமாகச் சொல்லுகின்றேம். இவருக்கு மொத்தத்தில் ஏழு குழந்தைகள் பிறக்கும். இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். முதலாவது, நான்காவது, ஏழாவது குழந்தைகள் சீக்கிரத்தில் இறந்துவிடு வார்கள் என்று சொல்லுகின்றேம். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, பார்மகன் என்ற அங்காரகன் ஐந்தாவது வீட்டிலிருப் பதாலும்

## ஜாதகருடைய முன் ஜன்மம்

15. அஞ்சவன் ஆறில் நிற்க அறைந்தன மந்தச் சங்கை
மிஞ்சிய சென்மம் சொல்வேன் வேங்கட மலையி
[லேதான்
வஞ்சியர் நடனம் சொல்லும் வாத்தியின் குல முதித்து
பஞ்சை மேல்யிரக்க மாயும் பகவான் மேல்பக்தி
[பூண்டும்.

15. ஐந்திற்குடையவராகிய சனி ஆருவது வீட்டிலிருப்பதாலும் இந் தப் புத்திர தோஷத்தைச் சொன்ஞேம். ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். வேங்கடமலை என்ற திருப்பதி ஸ்தலத்தில் தாசிகளுக்குக் கூத்துவித்தை நாட்டியவித்தை ஆகிய இவற்றைக் கற்றுக் கொடுக்கின்ற நட்டுவர் ஜாதியில் பிறந்து ஏழைகளிடத்தில் தயாள குண முடையவராயும், கடவுளின்பேரில் அன்புடையவராயுமிருந்தும்,

## ஜாதகருடைய யோக பாவம்

16. அறமதில் யிச்சை யுண்டாம் அறிவோர் கள்நேய முண்டு
திருமகன் பவ மில்லாமல் சென்றனன் காலனுடு
பிரமனுல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
உரைகிறேம் யவனின் யோகம் உயர்வான
[புத்தியேற்பன்

16. தானதர்மங்களைச் செய்வதில் ஜாதகர் பிரியமுள்ளவராயும், புத்தி மான்களுடைய சிநேகிதத்தை யுடைவராயுமிருந்தும், யாதொரு பாவங் களைச் செய்யாதவராயு மிருந்துகொண்டு வாழ்ந்து பிறகு இறந்து எமபட்ட ணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரம லிபியிடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார். இவருடைய யோகங்களைப் பற்றிச் சொல்லு கின்றேம். இவர் மேன்மையான சிறந்த புத்தியை யுடைவராவர்,

17. இந்திர போக மேற்பன் யேவலா ளதிக மேற்பன்
சந்திரன் பிறைபோல் யோகம் தங்கிடும் பெருமை
[யோனும்
வந்தவர்க் கன்ன மீவன் மாலவன் தவத்தால் வந்தோன்
சுந்தர முடைய னுகும் சொல்லதைக் காப்பா னுகும்.

17. ஜாதகர் இந்திரலோகத்தை அநுபவிப்பார். இவர் வேலையாட்களை அதிகமாக உடையவராவர். இவருக்கு வளர்பிறை சந்திரனைப்போல யோகம் நாளுக்கு நாள் விருத்தியாகும். இவர் கௌரவத்தை யுடையவராவர். இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் விஷ்ணுவைப் பூஜித்த தவத்தின் பலனுக வந்து பிறந்தவராவர், இவர் அழகையும் சௌந்தரியத்தையு முடையவராவர், தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் நடந்துகொள்ளுபவராவர்.

18. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்தச்
[சங்கை
ஆகமம் நவத்தி லேற அலரிக்கு வியத்தில் வெள்ளி
பாகமாய் ரவிக்கு ரெண்டில் பண்டித னிருப்ப தாலே
தோகையாய் வேசி யோகம் துரகத யோக மொன்று

18. ஜாதகருக்கு யோகங்களை எந்தக் காரணத்தினுல் சொன்னீர்கள் அவற்றைச் சொல்லுவீர் என்று கேட்கவே. ஆகமன் என்ற குரு ஒன்பதிலிருப்பதாலும் அலரி என்ற சூரியனுக்குவியம் என்ற பன்னிரண்டில் வெள்ளி என்ற சுக்கிரன் இருப்பதாலும், ரவி என்ற சூரியனுக்கு இரண்டில் பண்டிதன் என்ற புதன் இருப்பதாலும் வேசி யோகம் என்ற ஒரு யோகமும்; துரகதயோகம் என்ற இன்னெரு யோகமும், உண்டு.

*குறிப்பு:—வியாக்கியானம்:—யோக விஷயம்:—வேசி யோகம், வாசி யோகம், சாமரை யோகம் முதலியவற்றைப் பற்றிக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் 277-ஆவது பாடல், ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 121-ஆவது சுலோகம். பல தீபிகை ஆருவது அத்தியாயம் எட்டாவது சுலோகம், ஜாதக சிந்தாமணி 2049. 2050-ஆவது பாடல்கள் 2021-2031 2132-2137-ஆவது பாடல்கள் ஆகிய இவற்றை வாசிக்கவும்.

19. சாமரை யோக மொன்று சார்ந்திடு முன்று யோகம்
பூமிகள் பெருக்க மாகும் புரவியும் சகடை யுண்டு
நேமியோர் மதிப்புக் கொளல் நிகர்ஞாதி ஞஸ்தி
[செய்தல்
ஆமது ரெண்டு செய்தல் அழகேசன் போல் வாழ்வன்

19. சாமரையோகம் என்ற இன்னொரு யோகமுமுண்டு, ஆகை யால் மொத்தத்தில் மூன்று யோகங்கள் உண்டு. இவற்றால் ஜாதகருக்கு நிலங்கள் அதிகமாகும். குதிரையும் வண்டியுமுண்டு, பூமியிலுள்ளோர் இவரைக் கௌரவத்துடன் பாராட்டுவார்கள். ஜாதகர் பங்காளிகளை நாச மாக்கி விடுவார். இவர் இரண்டு வீடுகளைக் கட்டுவார், இவர் குபேர னைப்போல யோக போகங்களை அநுபவித்துக் கொண்டுவாழ்வார்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

20. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப்பு டைய
[ளாகும்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உவமையாய்ப் பேசுவா
[ளாம்
பாதகமன மில்லா தாள் பணிந் தோரை யாதரிப்பள்
சூதுகள் கொஞ்ச முண்டு சொல்லு முன்கோபம்
[கொஞ்சம்

20. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவள் மாந்தளிரின் நிறமாகிய ஒருவிதமான சிகப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். இவள் இனிமையாக வார்த்தை களைச் சொல்லுவாள், இவள் உபமானம் உபமேயம் ஆகிய இவற்றை உப யோகப்படுத்தி அலங்காரமாகப் பேசுவாள். இவள் கெடுதியான மனத்தை யுடையவளல்லள், தன்னை வணங்கினவர்களைக் காப்பாற்றுவாள், இவள் கொஞ்சம் வஞ்சனை கபடம் ஆகிய இவற்றை யுடையவளாவள். இவளுக் குப் பேசுவதற்கு முந்தியே சிறிது கோபமுண்டாகும்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவம்

21. பால்பாக்கிய முடைய ளாகும் பகையென்று மனதில்
[வையாள்
நீலக்குத் துணை ஆண் தோஷம் நிமலிமார் மூவ
[ரென்றோம்
பாலிமார் சிலது துன்பம் பகருவோம் யில்லம் வாயு
வேலிக்குத் துணை ஆண் தோஷம் மேவும் காரணங்க
[ளெவ்வார்.

21. ஜாதகருடைய தாயார் பால் பாக்கியத்தை யுடையவளாவள், இவள் தன்னுடைய மனத்தில் விரோதத்தை யுடையவளல்லள். இவளுக் குச் சகோதர தோஷமுண்டு. இவளுக்கு மூன்று சகோதரிகள் உண்டு என்று சொல்லுகின்றோம் சில சகோதரிகளும் சீக்கிரத்தில் இறந்து விடுவார்

கள். இவளுடைய வீடு வாயு என்ற வடமேற்குத் திக்கிலிருக்கும் என்று சொல்லுகின்றோம். இவளுக்குச் சகோதர தோஷமுண்டென்று சொன்ன தற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே

## ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மம்

22. ஆறினில் காரி கேது அணுகிட மதுவு மன்றி
பாருளோன் அஞ்சில் தங்க பகர்ந்தனம் துணைஆண்
[தோஷம்
காரிழை பூர்வம் தன்னைக் கழறுவோம் தொண்டை
[நாட்டில்
தீரமாய்க் காஞ்சி உத்திரம் செனித்தனன் பிரம்ம
[சேயாய்.

22. ஆருவது வீட்டில் காரி என்ற சனியும் கேதுவும் இருப்பதாலும், இதுவுமன்றி, பாருளோன் என்ற அங்காரகன் ஐந்திலிருப்பதாலும் தாயாருக்கு ஆண் சகோதர தோஷம் இருக்கின்றதென்று சொன்னோம். இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் தொண்டை நாட்டில் காஞ்சீபுரத்திற்கு வடக்குத் திக்கில் பிராமண ஜாதியில் பெண் குழந்தையாகப் பிறந்தாள்.

*குறிப்பு:—ஆருவது வீடு என்பது மாதிரு லக்கினமாகிய நான்காவது வீட்டிற்குச் சகோதர ஸ்தானமாகிய மூன்ருவது வீடாகும். ஐந்தாவது வீடு என்பது இந்த நான்காவது வீட்டிற்குக் குடும்ப ஸ்தானமாகிய இரண்டாவது வீடாகும்.

23. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி வாழும் நாளில்
பகையதைச் சொல்லக் கேண்மோ பர்த்தாவின்
[துணைவன் பேரில்
உகமையாய் நிந்தை வார்த்தை உரைத்தனள் மனது
[வாடி
மிகுகோபத் தாலே சாபம் விளம்பினன் சொல்லக்
[கேண்மோ.

23. ஜாதகருடைய தாயார் சௌக்கியமுள்ள குடும்பஸ்தளாகி வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு நேர்ந்த பாவத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீராக. இவள் தன்னுடைய புருஷனுடைய சகோதரரின் பேரில் அபவாதத்தைச் சொல்லவே, இந்தச் சகோதரனாகிய மைத்துனர் தன்னுடைய மனத்தில் கஷ்டத்தை யடைந்து அதிக கோபத்தாலே சாபத்தைக் கொடுத்தார், இதைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

24. நிந்தைகள் சொன்ன பாவி நேறும்பின் சென்மம் [தன்னில்
உன்துணை ஆண் யில்லாமல் உலகினில் வாழ்வா [யென்றுன்
அந்தரம் தாதாஸ்து வென்ன அணுகிற்று அந்தச் சாபம்
பிந்திவேர் காணு ளாகும் பூவையு மந்தி யத்தில்

24. அபவாதங்களை என்பேரில் சொல்லிய பாவியாகிய நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் ஆண் சகோதரங்கள் இல்லாமல் பூமியில் வாழக் கடவது என்று தாயாரைப் பார்த்துச் சொன்னார். அப்போது ஆகாயத்தில் "இதே மாதிரி நடக்கக் கடவது" என்று ஒரு அசரீரி வாக்கு கிளம்பியது. இந்தச் சாபம் இந்தத் தாயாரை வந்தடைந்தது இவள் வேறே யாதொரு பாவத்தையும் செய்யவில்லை. இவள் தன்னுடைய முன்ஜன்மத்தில் கடைசி காலத்தில்

25. விரதங்கள் மிகவே கொண்டு வேதியர் தொண்டு பூண்டு
மரலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் [பட்டுத்
திருமகள் உதித்தா ளாகும் சேரும் மைத்துனன் [சாபங்கள்
பருகாது துணை ஆணுந்தான் சங்கரி கேட் டிடாயே.

25. ஜாதகரின் தாயார் அநேக விரதங்களை அநுஷ்டித்துக்கொண்டும், பிராமணர்களுக்குப் பணிவிடைகளைச் செய்துகொண்டும் இருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தாள். இவளுக்கு மைத்துனருடைய சாபம் வந்து சம்பவிக்கும். ஆகையால் இவளுக்கு ஆண் சகோதரம் கிடையாது, பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய மரண காலமும் மறு ஜன்மமும்

26 குருதிசை ரவியின் புத்தி கூடிடு காலம் தன்னில்
ஆரஞ்சு ரெண்டு ஆண்டில் ஆடி மாதத்திலே தான்
மரலியின் நாட்டை அன்னை வாங்குவா ளென்று [சொன்னோம்
திருகிலாப் பின்சென் மத்தைச் செப்புவோம் தாயே [கேளும்.

26. குரு தசையில் ரவி என்ற சூரியனுடைய புக்தி காலத்தில் ஜாதகருக்கு முப்பத்திரண்டாவது வயதில் ஆடி மாதத்தில் இவருடைய தாயார்

இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள் என்று சொல்லுகின்றோம். இவளுடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பார்வதியம் மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய மரண காலம்

27. உத்திரம் காளாத்தி தன்னில்
உதிப்பளாம் வைசிய சேயாய்
மெத்தென குடும்பி யாகி
வித்தகி வாழ்வா ளாகும்
சித்தமாய் யிருபான் மூன்றில்
தைமாதம் தந்தை கெண்டம்
சத்தியே குருவின் காலம்தான்
சுய புத்தி யென்றோம்.

27. ஜாதகருடைய தாயார் வடக்குத் திக்கிலுள்ள காளாஸ்த்திரி என்ற க்ஷேத்திரத்தில் வைசியருடைய ஜாதியில் பெண் குழந்தையாகப் பிறப்பாள். இவள் நல்ல குடும்பஸ்தளாக விருந்து வாழ்வாள். ஜாதகருக்கு இருபத்து மூன்றுவது வயதில் தை மாதத்தில் *இவருடைய தகப்பனுர் இறந்துவிடுவார். அப்போது குரு தசையில் தன்னுடைய புக்தியே நடை பெறும் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—பிதிர் மாரக விஷயம்:—பிதிர் லக்கினம் ஒன் பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாறுவது சுலோகம் பிரகாரம் குரு மாரகராகின்றார். ஆகையால் இங்கு குரு தசையில் குரு புக் தியில் பிதிருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறு ஜன்மம்

28. மரு சென்மம் வேங்கடத்தில்
மறைகுல முதிப்பா னுகும்
திருமகன் யிச்சென் மத்தில்
செய்த புண்ணியங்க ளென்ன
குறையென்றோர்க் குதவி செய்தும்
குணமது நல்ல தாயும்
அறமதில் யிச்சை வைத்தும்
அந்தணர் நேசம் கொண்டும்

28. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய பின் ஜன்மத்தில் வேங் கடம் என்ற திருப்பதி ஸ்தலத்தில் பிராமண ஜாதியில் பிறப்பார். இப்படிப் பிறப்பதற்கு இவர் இந்த ஜன்மத்திற் செய்த புண்ணியங்கள் என்ன என்று

கேட்கவே; இவர் கஷ்டப்படுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்து கொண்டும். நல்ல குணத்தை யுடையவராயும், தானதர்மங்களில் பிரிய முள்ளவராகவும், பிராமணர்களிடத்தில் விசுவாசமுடையவராகவும் இருந்து கொண்டு

## ஜாதகருடைய மரண காலம்

29. தலவாசம் சென்ற புண்ணியம்
செனிப்பனும் பிரம்ம சேயாய்
நலமுள சாத கர்க்கு
நவிலுவோ மன்பான் ஞலில்
துலேமாதம் குறை பக்கத்தில்
துவாதசி திதியிலே தான்
குலவுவான் கால ஞடு
கூறுவார் அத்திரி தானும்

29. தெய்விகமான ஸ்தலங்களுக்குப் போன புண்ணியத்திஞல் ஜாதகருடைய தகப்பனுர் பிராமண ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். ஜாதகருக்கு ஐம்பத்து நான்காவது வயதில் துலே மாதம் என்ற ஐப்பசி மாதத்தில் தேய்பிறையில் துவாதசி திதி தினத்தில் மரணம் நேரிட்டு இவர் எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவார். இவ்விதமாகச் சொல்லவே அத்திரி மாமுனிவர் சொல்லுகின்ருர்.

30. மன்னனுக் காறில் திங்கள் மருவிஞல் சகடை தோஷம்
இன்னவன் மூன்ருண்டுக்குள் யெய்திடு மார கங்கள்
தென்முனி புகலு கின்ருர் தசமத்தோன் நாலில் தங்க
பொன்னவன் நவத்தி லேறி பூமகன் உச்ச மாக

30. மன்னன் என்ற குருவிற்கு ஆருவது வீட்டில் திங்கள் என்ற சந்திரன் இருப்பதால் சகடை தோஷம் *என்ற ஒருவித தோஷம் ஏற்பட்டுவிட்டது. அதஞல் ஜாதகர் தனக்கு மூன்று வயதிற்குள்ளே இறந்துவிடுவார் என்ருர். இதற்குத் தென் முனி என்ற அகஸ்திய மஹரிஷி பதில் சொல்லுகின்ருர். தசமத்தோன் என்ற பத்திற்குடையவராகிய புதன் நான்காவது வீட்டிலிருப்பதாலும், பொன்னவன் என்ற குரு ஒன்பதாவது வீட்டிலிருப்பதாலும் பூமகன் என்ற அங்காரகன் உச்சமாக விருப்பதாலும்

*குறிப்பு:—வியாக்கியானம்:—சகடை தோஷம்:—சந்திரனுக்கு ஆறு எட்டு, பன்னிரண்டாவது வீட்டில் குரு இருப்பதும் குருவிற்கு ஆறு எட்டு பன்னிரண்டாவது வீட்டில் சந்திரன் இருப்பதும் சகடை தோஷமாகும். இந்தச் சகட யோக விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் இருநூற்றறுபத்து மூன்ருவது பாடலேயும், ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் நூற்றெட்டாவது சுலோகத்தையும் பல தீபிகை ஆருவது அத்தியாயம் பத்தாவது சுலோகத்தையும், சாராவளி இருபத்தோராவது அத்தியாயம் பதினேந்தாவது சுலோகத்தையும் வாசிக்கவும்.

*ஆயுள் நிர்ணய விஷயம்:—இது விஷயமாகத் துய்ய கேரளம் எட்டாம் பாவம் ஐந்தாவது பாடலையும், காக்கேயர் நாடி அறுநூற்றறுபத்தைந்தாவது (665-ஆவது) பாடலையும் ஜாதக பாரிஜாதம் பதினன்காவது அத்தியாயம் ஐம்பதாவது சுலோகத்தையும் வாசிக்கவும். மேற்சொல்லிய பாடல் கீழ்க்கண்டபடியாகும்:—

"நிலைவரம் பத்தோன் எட்டோன் லக்கினத்துடையோன்
மிக்கேல்
மலைவிலா தீர்க்கவ்வாயுள் மத்திபமிரண்டு மிக்கேற்
பிலமொன்றேல் எண்ணுன்காகும் பிலவீனர் மூன்றுமாகில்
இலையென்றார் வயதுமெத்த வீராறுக்குள் என்பாரே."

*இதன் பொருள்:—1, 8, 10-க்குடையவர் வலிவாயிருந்தால் பூர்ணயுள். இருவர் வலிவாயிருந்தால் மத்திமாயுள், ஒருவர் வலிவாயிருந்தால் 32-வயது. மூன்று பேரும் பலவீனமானல் வயது பன்னிரண்டிற் குள்ளாகும்.

31. பலபிணி வந்த போதும் பரிதிமுன் பனிபோல் நீங்கும்
குலவிய தாய் தந்தைக்குக் குழவியும் கர்மம் செய்வன்
சொலு மொழி பிசகாதாகும் செப்பின வயது தீர்க்கம்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழி குன்றாது.

31. ஜாதகருக்கு அநேக நோய்கள் வந்து சம்பவித்தபோதிலும் அவை எல்லாம் சூரியனுக்கு முன்னேயுள்ள பனி விலகி மறைந்து போவதைப் போல விலகிப்போய்விடும். மேலும் இந்த ஜாதகர் தன்னுடைய தாய் தந்தையர்களுக்குக் கர்மஞ் செய்யுமமைப்பை யுடையவராக விருக்கின்றார். ஆகையால் நாங்கள் சொல்லிய வார்த்தை தவறிப்போகாது, நாங்கள் முன்பு சொல்லிய பிரகாரமே ஜாதகர் தீர்க்காயுளை யுடையவராவர். பர்வதங்களுக்கு அரசனுகிய பர்வதராஜனுடைய புத்திரியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

32. செனித்திடு காலம் தன்னில் சித்திரை மூன்றும் பாதம்
குனித்த சேய்திசை யிருப்பு கூறுவோ மாண்டு
[ரெண்டும்
கனமுள திங்கள் பத்தும் கழறினேம் பூர்வ பாகம்
சினமிலா தவங்கள் செய்யும் செல்வதி கேட் டிடாது.

32. ஜாதகர் பிறக்குங்காலத்தில் சித்திரை நட்சத்திரத்தில் மூன்றும் பாதம் ஆகும். இதற்குரிய சேய் என்ற அங்காரக மகாதசையில் இருப்பு இரண்டு ஆண்டுகளும் பத்து மாதங்களும் ஆகும். இதுவரையிலும் பூர்வ பாகமாகிய முதல் பாகத்தைச் சொல்லி முடித்துவிட்டோம். கோபமில்லாமல் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக,

## ஜாதகம் 29

### ஜனனகால கிரகநிலை

1. [1]மதியும் கன்னிகுரு[2] கோலாம்[3] மால்[4]சேய் [5]பானு
[[6]மேடமுற
[7]விதியன் [8]வீணை [9]பணி [10]சீயம் [11]வெள்ளி [12]நந்தி
[[13]சிகி[14]சாடி
இதுவே கிரகம் தான் நின்று யியல்பா யுயிரும்
[[15]பெண்ணுக
அதுவே பலன்கள் யெவ்வாறு அறிவிப் பீர்கள்
[தவமுனியே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிப் சந்திரன் கன்னியிலும், குரு துலாத்திலும், புதனும் அங்காரகனும், சூரியனும் மேஷத்திலும், சனி மிதுனத்திலும், ராகு சிம்மத்திலும், சுக்கிரன் ரிஷபத்திலும், கேது கும்பத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்கள் எவ்விதமாக இருக்கும் என்பதைத் தவங்களைச் செய்கின்ற முனிவர்களே! சொல்லுவீர்களாக.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | சூரியன் புதன் அங்காரகன் | சுக்கிரன் | சனி |
| கேது | இராசி சக்கரம் | | |
| | | | ராகு |
| | | குரு | லக்கினம் சந்திரன் |

சித்திரை 1—ஆம் பாதம் அங்காரக தசை
ஷ 6—6—0.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் ராகுவும், ரிஷபத்திற் புதனும், மிதுனத்திற் சனியும், சிம்மத்திற் சந்திரனும், கன்னியிற் சுக்கிரனும், துலாத்திற் சூரியனும், அங்காரகனும், கேதுவும், தனுசிற் குருவும் ஆகும். அங்காரகன் அஸ்தமன மடைந்திருக்கின்றார். குரு வக்கிர கதியிலிருக்கின்றார்.

1. சந்திரன்
2. துலாம்
3. புதன்
4. அங்காரகன்
5. சூரியன்
6. மேஷம்
7. சனி
8. மிதுனம்
9. இராகு
10. சிம்மம்
11. சுக்கிரன்
12. ரிஷபம்
13. கேது
14. கும்பம்
15. கன்னி

---

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. தவத்தால் உதித்த ஆண்செனனம்
தந்தையில்லம் தென் வாசல்
அவனி கார்க்கும் காளிதென்மேல்
அற்ற தலையாள் மேல்பாலில்
பவமாம் சிறுவூர்வடுக குலம்
பிறப்பான் சேஷ்டன்யென உரைப்போம்
நவனில் குடும்பச்சேதி தன்னை
நவனூலாய்ந்து தானுரைப் போம்.

2. பிறந்த குழந்தை தவத்தைச் செய்ததனுல் பிறந்த ஆண் குழந்தை யாகும். தகப்பனுருடைய வீடு தெற்குவாயிலை யுடையதாகும். காளியம் மன் கோயில் தென் மேற்குத் திக்கிலும், சிலையில்லாத மாரியம்மன்கோயில் மேற்குத் திக்கிலும் இருக்கும். இப்படிப்பட்ட அடையாளங்களையுடைய ஒரு சிறிய கிராமத்தில் வடுகர் ஜாதியில் ஜாதகர் பிறப்பார். இவர் மூத்த குமாரன் என்று சொல்லுகின்ருேம். இவருடைய குடும்ப விஷயங்களைச் சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்து சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

3. உரைப்போம் தந்தை துணை
ஆண்பால் ஒன்றேதீர்க்கம் வேர்காணு
குரைப்போம் அவன்தன் சேதிதன்னை
குணவான் யூகிகுல மதிப்பன்
தரைவிருத்தி களும்தான் செய்வன்
சதுஷ்பாதங்கள் விருத்தி யுளான்
இரு சோதிகளும் மாரியினுல்
யிடுக்கம் வாத தேகியுமே.

3. ஜாதகரின் தகப்பனுருடன் பிறந்தவர் ஒரே ஒரு ஆண் சகோதர ராவர், இவர் நீண்ட ஆயுளையுடையவர் என்று சொல்லுகின்ருேம். வேறே சகோதரங்கள் கிடையா. இந்தச் சகோதரத்தின் விஷயங்களைப் பற்றிச்

சொல்லுகின்றோம். இவர் நற்குணமுடையவராவர். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை யுடையவராவர், இவர் தன்னுடைய குலத்தாரால் நன்கு மதிக்கப்பட்டவராவர், இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்ய வகையராக்களை அதிகப்படுத்துவார், இவருக்குக் கால்நடைகள் விருத்தியாகும், இவருக்கு அம்மையால் இரண்டு கண்களும் தோஷமுடையனவாகும். இவர் வாத குணமுள்ள தேகத்தை யுடைய வராவர்.

4. மேகநிறத்தான் வீண்வம்பில் மேவான்
அம்மை வடிவு முறும்
நாகம்போலே முன்கோபம் நல்கும்
பின்பால் சாந்த முறும்
போக பாக்கிய முடையவனும்
புறம் சொல்லாதான் பொய் புகலான்
தாக மென்றோர் தனக்கீவன்
சத்தான வஸ்து யிஷ்டமுளன்

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர் மேகத்தைப்போன்ற ஒருவித நீலமான நிறத்தையுடைய தேகத்தையுடையவர், இவர் வீணன சண்டையில் பிரவேசிக்கமாட்டார். இவருடைய தேகத்தில் அம்மையால் அடையாளங்கள் உண்டு. இவருக்கு நாகப் பாம்பிற்கு வருகின்ற கோபத்தைப் போன்ற முன்கோப முண்டாகும். இது உடனே அடங்கிப் போய் விடும். இவர் போகங்களையும் சம்பத்துக்களையு முடையவராவர், இவர் பிறர் பேரில் கோள் சொல்லமாட்டார். பொய்யைச் சொல்லமாட்டார். தாகம் எடுக்கின்றதென்று சொல்லுகின்றவர்களுக்குத் தாகவிடாய் தீர நீராகாரமும் பானகமும் கொடுப்பார். இவர் சத்துள்ள வஸ்துக்களின்பேரில் (அஃதாவது மாமிச வகையருக்களின் பேரில்) பிரியமுள்ளவராவர்.

5. இஷ்ட ரதிகம் யீகையுளன்
யிடரே செய்யண் செனவசியன்
மாட்டார் குழவி தென்கீழ்பால்
வருவாள் ஒன்றே தீர்க்கமுறும்
வட்டமதி மாமுக மதலைமருவும்
யிரண்டு ஆண் ஒன்று
நட்ட மில்லாமல்தீர்க்க முறும்
நயப்பாய் ஒன்ருய் வாழ்ந்தவனும்.

5. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர் அநேக சிநேகிதர்களையுடையவராவர், இவர் தயாளமான கொடுக்குந் தன்மையுள்ள குணத்தை யுடையவராவர், யாருக்குங் கெடுதியைச் செய்யமாட்டார். ஜனங்களைத் தன் பக்கமாக விருக்கும்படியாய்ச் செய்துகொள்ளுவார். இவருக்கு மனைவி ஒன்றே யாகும். இவள் தென் கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். இவள்

தீர்க்காயுளை யுடையவளாவள். இவருக்குச் சந்திரனைப்போல அழகான முகத்தை யுடைய இரண்டு குழந்தைகள் பிறக்கும். ஒரு பிள்ளையுமுண்டு. இம்மூவரும் தோஷத்தை யடையாமல் தீர்க்காயுளை யுடையவராவர். இவர் இதமாகத் தன்னுடைய சகோதரருடன் ஒன்றாகக் கூடி ஏக குடும்பமாக யிருந்து வாழ்வார். பிறகு

6. வேருய் பணியும் காலத்தில்
விளம்பும் நாலைந்தாண்டு தன்னில்
கூறும்வயது தீர்க்க முறும்
குறைகாணுமல் வாழ்ந் திடுவன்
பரரில்தந்தை குணம் புகல்வேன்
பலனுல் அறிவன் பார்விருத்தி
தீரமனத்தன் மால் நிறத்தான்
திஷ்டி சாயல்கொஞ்ச முறும்.

6. ஜாதகருக்கு இருபதாவது வயதில் பணி என்ற ராகு தசை காலத்தில் வேறு குடும்பஸ்தராகப் பிரிந்து போய் வாழ்வார், இவர் தீர்க்காயுளை யுடையவராவர், இவர் கஷ்டங்களை அனுபவிக்காமல் வாழ்வார்.

இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன் இவர் பல சாஸ்திரங்களைப் படித்து ஆராய்ச்சி செய்வார். நிலங்களைப் பயிரிட்டுத் தான்ய வகையருக்களை அதிகப்படுத்துவார். இவர் தைரியமான மனத்தை யுடையவராவர். இவர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒருவிதமான நிறத்தையுடைய தேகத்தையுடையவராவர், இவருக்குக் கண்பார்வை சிறிதளவு சாயலாகவும் கோணலாகவும் இருக்கும் அஃதாவது இவர் சாட்டைக் கண்ணுவர்.

7. கொஞ்சும் கிளிபோல் வார்த்தையுமே
குலத்தோர் மதிப்பு கொண்டிடுவன்
நஞ்சு மனமும் கொஞ்சம்
நற்ருேர் உறவு கொண்டிடுவன்
கஞ்ச ரேகைதான் உடையன்
கலைராசியுமாம் சோதி சென்மம்
வஞ்சி மோகன் சுகிபொசிப்பன்
மாற்ருன் தனையே நசிக்கவைப்பன்

7. ஜாதகருடைய தகப்பனுர், முத்தமிட்டுச் செல்வமாய்ப் பேசுகின்ற கிளியைப்போல வார்த்தைகளை இனிமையாகச் சொல்லுவார். அவரைத் தன்னுடைய பந்துக்கள் கௌரவத்துடன் பாராட்டுவார்கள், இவர் கொஞ்சம் விஷமான, கெட்ட, மனத்தை யுடையவராவர், நல்லவர்களுடைய சிநேகிதத்தை யுடையவரதவர். இவர் தன்னுடைய உள்ளங்கையில் கமல ரேகை என்ற ஒருவித நல்ல ரேகையை யுடையவராவர், இவர் கலைராசி

என்ற மகர லக்கினத்தில் சோதி என்ற சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவ ராவர். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவ ராவர், சுகமான ஆகாரங்களைச் சாப்பிடக்கூடியவர், தன்னுடைய எதிரியை அழித்துவிடுவார்.

8. ஈகை கொஞ்சம் உடையவனும்
யெய்து மூலசூடெ ன்றேம்
போகவாரி பிரம்மத்தைப் போற்றும்
மனத்தன் பணி செய்வன்
வேக நடையன் சகடுடையன்
வேலைக்காரர் அனேக முறும்
பாக மாகப் பேசிடுவன்
பார்சேர்த் திடுவன்யில் செய்வன்.

8. ஜாதகருடைய தகப்பனுர் பிறருக்குக் கொடுக்குந் தன்மையை கொஞ்சமாக வுடையவர், இவருக்கு மூலச்சூட்டு ரோகமுண்டு என்று சொல்லுகின்றேம். இவர் நாகத்தையும் கங்காதேவியையும் அலங்கார மாக அணிந்துள்ள சிவபெருமானிடத்தில் அன்புள்ள மனத்தை யுடையவ ராவர், இவர் சிவபெருமானுக்குப் பணிவிடைகளையும் தொண்டுகளையும் செய்வார், ஆபரணங்களைச் செய்வார். இவர் வேகமாக நடக்கக் கூடிய வர், வண்டி வாகனத்தை யுடையவர், அநேக வேலையாட்களை யுடையவ ராவர், இவர் பக்குவமாகவும் இனிமையாகவும் சாமர்த்தியமாகவும் பேசு வார், நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார், வீட்டைக் கட்டுவார்.

9. தென்முனி புகலசெய முனிமரித்துச்
செப்புவார் மூலஞே யொன்றும்
கன்னிகை துணையும் காணுதவண்ணம்
கழறுவீர் முனிவரே நீங்கள்
முன்வினை யென்றேம் மொழிகுவீர்
சங்கைமூல மாங்குடியி லின்ஞேன்
துன்மறை யோனுய் செனித்துமே
யிவனும் செய்நிலம் விருத்திசெய்து

9. இவ்விதமாகத் தென்முனி என்ற அகஸ்திய மஹரிஷி சொல்லவே ஜயமுனிவர் தடுத்துக் கேட்கின்றுர். இவருக்கு மூலரோகம் உண்டென்றீர், சகோதரியும் கிடையாது என்றீர், இதற்குக் காரணங்களை முனிவரே! நீங்கள் சொல்லுவீர்கள் என்றுர் ஜயமுனிவர். இதற்கு முன்ஜன்மத்திய பாவங்களே காரணம் என்று சொல்லுகின்றேம் என்றுர் அகஸ்தியர். இதன் பேரில் இந்தப் பாவங்களைச் சொல்லுவீர் என்று ஜயமுனிவர் கேட்கவே, இந்தத் தகப்பனுர் மூலமாங்குடியில் பிராமணராகப் பிறந்து செய்கால் நிலங் களைப் பயிரிட்டுத் தான்யவகையராக்களை அதிகமாக விருத்தி செய்து கொண்டு

10. வருகிறனுளில் அன்னிய மாது
மாரனும் மின்றியே வாழ
மறையவன் காதல் வார்த்தையே
பேச மாதுவுமதற் கிசையாமல்
திருகான நிந்தை செப்பினுன்
அதனுல் தேவியை யெனம்விட்டுநீக்க
அரிவையும் மனது வாடியே
புகல்வான் அடாதவார்த்தை களுமேபுகன்ற.

10. வருகின்ற காலத்தில் ஒரு அன்னிய ஸ்திரீ தன்னுடைய புருஷனில்லாமல் விதவையாக வாழ்கின்ற காலத்தில், இவள்பேரில் இந்தத் தகப்பனுர் மையல் என்ற காம ஆசையை யுடையவராய் இவளிடத்தில் காம வார்த்தைகளைச் சொல்லவே, இவள் இஷ்டப்படாமல் இருந்துவிட்டாள், இதன்பேரில் இந்தத் தகப்பனுர் சூது மார்க்கமாகச் சில அபவாதமான வார்த்தைகளை இந்த ஸ்திரீயின் பேரில் சொல்லினுர். இதனுல் இவளைத் தன்னுடைய பந்துக்களிலிருந்து விலக்கிவிட்டார்கள். இதனுல் இவள் தன்னுடைய மனத்தில் துன்பங்களை அடைந்து சொல்லுகின்ருள், தகாத வார்த்தைகளை என்மேல் அபாண்டமாகச் சொல்லிய

11. பாவிக்கு யெனைப்போல் துணையதுயின்றி
பாலரில் கன்னியு மின்றிப்
பூவினில் வாழ்வா யென்றுமே
புகல புக்கிற்று ஒருசாபம்
மேவியஆதில் தும்பியைப்
பிடித்து வாலினில் நூலதைக்கட்டி
ஆவலாய் விடுத்தான் அதுஒருதோஷம்
அடைந்தது பாலகன் தனக்கு

11. பாவியாகிய உனக்கு என்னைப்போன்ற சகோதரியில்லாமலும், சந்ததிகளில் பெண் குழந்தையில்லாமலும் நீ பூமியில் வாழக்கடவது என்று சாபத்தைக் கொடுத்தாள். இது ஒரு சாபமாக நேரிட்டுவிட்டது. இந்தத் தகப்பனுர் தன்னுடைய சிறிய வயதில் ஒரு தும்பியைப்பிடித்து அதனுடைய வாலில் ஒரு கயிற்றைக் கட்டி இதை ஆசையுடன் விரைவில் பறக்கவிட்டார். இது ஒரு தோஷமாக இந்தத் தகப்பனுரை வந்தடைந்தது.

12. அந்தியகாலம் செபதபம் குறைவாய்
அந்தக நாட்டைச் சேர்ந்து
முந்தினேன் லக்கம்வந்தன னென்றேும்
மேவிடும் விதவையின் சாபம்

தந்துணைகன்னி சந்ததி மகளும்
சாருது அதுவுமே யின்றி
நொந்திடசெய்த பட்சியின் தோஷம்
நேர்ந்திடும் ஆசன ரோகம்

12. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் ஜபமும் தபமும் குறைவாகச் செய்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர் என்று சொல்லுகின்ரேம். இவருக்கு விதவை ஸ்திரீயின் சாபம் வந்து சம்பவிக்கும். அதனுல் இவருக்குச் சகோதரியும் பெண் குழந்தையும் கிடையா. இதுவுமல்லாமல் தொந்தரவை அடைந்த பட்சியாகிய தும்பியின் தோஷமும் இவரை வந்தடையும், அதனுல் இவருக்கு ஆசன ரோகம் உண்டாகும்.

13, எந்த காலத்தில் யெய்திடும் புகல்வாய்
இராகுவின் காலத்தில் நேறும்
வந்ததோர் வினைக்குக்கரும சாந்திகளும்
மறைபோலச் செய்திடு வாரேல்
கந்தனைக்கண்ட அசுரர்போல் விலகும்
காலனைக் காண்கில் ஆருறென்ரேம்
மந்திரிகாலம் மரலியின் நாட்டை
வாங்குவான் யென உரைத்தனமே.

13. இந்த ஆசன ரோகம் எந்தக் காலத்தில் நேரிடுமென்பதைச் சொல்லுவீரென்று கேட்கவே, இராகு தசை காலத்தில் உண்டாகும். சம்பவித்த இந்தத் தோஷத்திற்கு ஒரு பரிகாரத்தைச் சாஸ்திரத்தில் சொல்லியுள்ளதைப் போல் செய்வாராகில் முருகக் கடவுளைப் பார்த்த மாத்திரத்தில் பறந்தோடி விட்ட அசுரர்களைப் போல இந்த ரோகம் பறந்தோடிப் போய் நிவர்த்தியாகிவிடும். தகப்பனுர் ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில் எம தரிசனையை அடைவார். மந்திரி என்ற குருவின் தசை காலத்தில்* இவர் எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவார் என்று சொல்லுகின்ரேம்.

*குறிப்பு:—வியாக்கியானம் :-ஜாதகரின் தகப்பனுருடைய மரண விஷயம்:- பிதிர் லக்கினம் ஒன்பதாவது விடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் குரு மாரகராகின்றுர், இந்தக் குரு ரிஷபத்திற்கு ஆருவது வீட்டில் மாரகஸ்தானங்களாகிய எட்டு பதினென்றிற்குடையவராகி இருக்கின்றுர். ஆகையால் குமாரசாமியம் மகா தசைப் படலம் நான்காவது பாடல் பிரகாரம் ஆருவது வீட்டிலுள்ள குரு மாரகராகின்றுர். ஆகையால் இங்கு குரு தசை காலத்தில் ஜாதகருடைய தகப்பனுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

14. உரைத்ததோர் கருமசாந்தி செய்விதங்கள்
உரைப்பீர்கள் முனிவரே யென்ன
மருமத்தைஅந்தாம் காண்டத்தில் புகல்வோம்
மைந்தரின் குணமதைக் கேண்மோ.
குறைவிலா செல்வம் சமரச கல்வி
குலத்துளோர் மதிக்கவே வாழ்வன்
பெருகிடும் கன்றுகாலி சாலியுமே
பூமியும் விருத்தியே செய்வன்.

14. நீர் சொல்லிய சாந்தியைச் செய்யும் விதத்தைச் சொல்லுவீர் முனிவரே! என்று கேட்கவே இந்த ரகசியமான விஷயத்தை ஐந்தாவது காண்டத்தில் சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவர் குறைவு படாத செல்வத்தை யுடையவராவர். நடுத்தரமான வித்தையை யுடையவராவர். தன்னுடைய பந்துக்கள் தன்னை மதிக்கும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவருக்கு ஆடு மாடுகள் விருத்தி யடையும், நெல்லும் அதிகமாக விளையும். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தானியவகையராக்களை அதிகப்படுத்துவார்.

15. செய்குவான் யேழைதனக் குபகாரி
தீரனு மனத்தனே யாகும்
ஐயமே லிச்சைஆண்டி சேர்க்கை
ஆவுகள் பலிதமே யாகும்
பொய்யுரை யில்லான் பிதாவுக்குச்
சமமாம் புயபலமுடைய னுமாவன்
கைதனில் மாலினரேகையு முடையன்
கனதனம் பெருக்கமே செய்வன்.

15. ஜாதகர் ஏழை ஜனங்களுக்குபகாரத்தைச் செய்வார். தைரியமான மனத்தை யுடையவராவர். இவர் பிச்சை போடுவதில் பிரியமுள்ளவர், பரதேசிகளையும் ஏழைகளையும் சேர்த்து வைப்பார். பசுக்கள் விருத்தியாகும். அதிகமான பாலைக் கறக்கும். இவர் பொய்யைப் பேச மாட்டார். தன்னுடைய தகப்பனுருக்குச் சமமான அந்தஸ்தை யுடையவராவர். தோள் வலிவை யுடையவராவர். இவருடைய உள்ளங் கையில் விஷ்ணு ரேகையை யுடையவராவர். இவர் பெரிய செல்வத்தை அதிகமாக்குவார்.

16. நன்றியை மறவான் கார்நிறமுடையான்
நவின்றிடான் கட்டு வார்த்தைகளை
குன்றிடான்சொல்லில் கடனது கொள்ளான்
குறைந்தோர்க்கு உதவியே செய்வன்

தன்றிதாய்க்கினியன் சுகிபொசிப் புடையன்
தங்கிடும் நாபிநோய் தானும்
சென்றிடம் பெருமை துணைவர்கள் கணுன்
செப்புவீர் அச்சங்கை முனியே.

16. ஜாதகர் பிறர் தனக்குச் செய்த உபகாரத்தை மறக்க மாட்டார். மேகத்தின் நிறம் போன்ற ஒருவிதமான நீல நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர். இவர் பொய்யையும் புணைந்த வார்த்தைகளையும் பழ மொழிகளையுஞ் சொல்ல மாட்டார். இவர் சுறுக்கமாகப் பேச மாட்டார். பேசுவதில் இளைக்க மாட்டார், கடன்பட மாட்டார். ஏழைகளுக்கு உபகா ரத்தைச் செய்வார். இவர் தாய் தகப்பனுருக்குப் பிரியமானவர். சுகபோ ஜனத்தைச் சாப்பிடக் கூடியவர். இவருக்கு நாபி ரோகமுண்டு. இவர் போகின்ற விடங்களிலெல்லாம் இவருக்குக் கௌரவமுண்டு. இவருக்குச் சகோதரர்கள் கிடையா. இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் முனிவரே!

## ஜாதகரின் அம்மானுடைய பெண்ணின் குணாதிசயங்கள்

17. முனிவரே மூன்றோன் யெட்டினில்சேர
முன்னுன்கோன் கூடியே யிருக்க
துணைவர்கள்காணுன் தசமத் தோன்கூட
செப்புவீர் பலனதை நீங்கள்
கனமுள அன்னைபின் துணைமதலை
காளைக்குத் துணைவியாய்த் தோன்றும்
வனிதையின் குணத்தைப் புகல்வீர் நீங்கள்
மானிறம் புத்திமான் யூகி

17. முனிவரே! மூன்ருவது வீட்டிற்குடையவராகிய அங்காரகன் எட்டாவது வீட்டிலிருப்பதாலும், பன்னிரண்டிற்குடையவராகிய சூரியன் இவருடன் கூடியிருப்பதாலும்* ஜாதகருக்குச் சகோதரர்கள் கிடையா. பத்தாவது வீட்டிற்குடைய புதன்* இவர்களுடன் அஃதாவது சூரியன் அங்காரகனுடன் கூடியிருப்பதால் உண்டாகும் பலனைச் சொல்லுவீர்கள் என்று கேட்கவே, இவருடைய தாயின் இளைய சகோதரருடைய குமாரத்தி இவருக்குச் சகோதரியைப் போல வந்து அமைவாள், இவளுடைய குணாதிசயங்களை நீங்கள் சொல்லுவீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—சூரியனும் மூன்றிற்குடையவரும் கூடி யிருக்கும் விஷயம் :—பரிதியு மூன்றோன் கூடிற் பாலன் பின் னில்லை மாதே'' என்ற பாடலை வாசிக்கவும், இந்தப் பாடல் மணிகண்ட கேரளத்தில் சகோதர காண்டத்தில் ஆருவது பாடலாகும். இதன் பொருள் :—சூரியனும் மூன்ருவது வீட் டுக்காரரும் கூடியிருந்தால் பின் சகோதரம் கிடையாது.

மேலும் இந்தச் சூரியன் விரையாதிபத்தியம் பெற்ற சூரியனுன படியால் சகோதரர் பிறந்தாலும் உடனே அவர்களை விரையஞ் செய்து விடுவார். அஃதாவது கொன்று விடுவார்.

*குறிப்பு :—இங்கு சொல்லப்பட்ட புதன் விஷயம் :—மாதிர் லக்கினம் நான் காவது வீடாகிய தனுசாகும். இதற்கு இளைய சகோதர ஸ்தா னம் தனுசிற்கு மூன்ருவது வீடாகிய கும்பம் ஆகும். இதற்குச் சந்ததி ஸ்தானமாகிய ஐந்தாவது வீடாகிய மிதுனம் புதனுடைய வீடாகும். இந்தப் புதன் சகோதர ஸ்தானதிபதியும் காரகனுமா கிய அங்காரகனுடன் கூடி இருப்பதால் தாயாரின் இளைய சகோதரருடைய குமாரத்தி ஜாதகருக்குச் சகோதரியைப் போல வந்தமைவாள் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தப் புதனே லக்கினதிபதியாயும் இருப்பதால் மாமனுடைய புதல்வி ஜாதகருடன் சகோதரியைப் போல இருப்பாள்.

18. சுகமுளவார்த்தை வறுமைகள் காணுள்
துணைவர்கள் ஆணது தோஷம்
தகமையாய்க் கன்னியிரண்டு முன்தீர்க்கம்
தாமத குணமது வுண்டு
செகமதிப் புடையவாழ்ந் திடுவாளாம்
சீலியாம் முகவசீ கரமாம்
மிகுதனமுடையாள் வெஞ்சினம் காட்டாள்
வித்தகன் மேல்திசை நேரும்.

18. ஜாதகரின் அம்மானுடைய குமாரத்தி சுகமான, இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள். தரித்திரங்களையுங் கஷ்டங்களையு மனுப விக்க மாட்டாள். இவளுக்கு ஆண் சகோதர தோஷ முண்டு. இவளுக்கு இரண்டு மூத்த சகோதரிகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார் கள். இவள் தாமதமான, சாந்தமான, குணத்தை யுடையவள். பூமியிலுள்ள வர்கள் இவளை கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள். இவள் பரிசுத்தமானவள். நல்லொழுக்க முடையவள். பிறரை வசியப்படுத்தும்படியான அழகானமுகத்தை யுடையவள். இவள் அதிக மான செல்வத்தை யுடையவள். கடுமையான கொடூரமான கோபத்தை வெளியே காட்டிக் கொள்ள மாட்டாள். இவளுக்குப் புருஷன் மேற்குத் திக்கிலிருந்து வருவார்.

19. நேர்ந்திடும் சுதர்கள்ஆணது ரெண்டு
நிமலியும் ஒன்றென மொழிவோம்
சாந்தவாள் தாய்தந்தையை விட்டுத்
தன்பக்கம் சார்ந்த காரணம்சொல்

ஏந்திழை பூர்வவினையினுல் நேர்ந்தாள்
யியம்புவோ மந்தியம் தன்னில்
காந்தளர்மலரை யொத்திடு மாதே
காவலன் மணமதைப் புகல்வேன்.

19. மாமனுடைய குமாரத்திக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையுமுண்டு. இவள் சாந்தமான குணத்தை யுடையவள். இவள் தன்னுடைய தாய் தந்தையர்களை விட்டுப் பிரிந்து ஜாதகருடைய குடும்பத்தில் வந்திருப்பதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவளுடைய முன் ஜன்மத்திய வினைப்பயனுக இவ்விதமாக நேர்ந்திருக்கின்றது. இது விஷயமாகப் பின்னுல் கடைசியில் சொல்லுகின்ருேம்* தாமரை மலரைப் போன்ற முகத்தை யுடைய பார்வதியம்மையே! ஜாதகருடைய விவாகத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றேன்.

*குறிப்பு :—இங்கு குறிக்கப்பட்டுள்ள முன் ஜன்மத்தியவினை பின்னுல் இருபத்தைந்தாவது பாடல் முதல் இருபத் தொன்பதாவது பாடல் வரையிலுமுள்ள செய்யுள்களில் சொல்லப்பட்டிருப்பதை வாசிக்கவும்.

## ஜாதகனுடைய விவாக காலமும் மனைவியின் குணுதிசயங்களும்

20. மங்கள மூவேழாண்டுக்குள் நேறும்
மாதுவும் குடைதிசை யாகும்
அங்கவள் குணத்தை அறிவிப்போம்தாயே
அன்னம்போல் மானிற முடையாள்
திங்கள்போல்வதனம் திகைத்தோர்க்கு யீவள்
தேவதா பக்தியு முண்டு
எங்கள்அதிதிக் கன்னமு மீவள்
இன்பச் சொல்உடைய ளாமே

20. ஜாதகருக்கு விவாகம் இருபத்தொன்று வயதிற்குள் நடைபெறும். மனைவி மேற்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்ருேம் பார்வதியம்மையே! இவள் அன்னத்தைப் போல அழகான ருபத்தை யுடையவளாவள், மாநிறமான தேகத்தை யுடையவளாவள். இவள் சந்திர பிம்பத்தைப் போன்ற அழகான முகத்தை யுடையவள், கஷ்டப்படுகின்றவர்களுக்குப் பணத்தைக் கொடுத்துதவி செய்வாள். இவள் தெய்வங்களின் பேரில் அன்புடையவளாவள். எங்களைப் போன்ற முனிவர்களுக்கும் பரதேசிகளுக்குஞ் சாப்பாட்டைப் போடுவாள். இவள் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவாள்.

21. மாதுக்கு வயது தீர்க்கமே யாகும்
மரித்துமே பராசரும் புகல்வார்
காதலியிரண்டு காளைக்கு நேறும்
கழறுவீர் சங்கையை விபரம்
மாதவன் யேழோனுகியே யிரண்டில்
மால்குசன் பானுமே பார்க்க
தீதான் சரத்தில் தனியனுயிருக்க
செப்பினேம் தாரமு மிரண்டே.

21. இந்த மனைவி தீர்க்காயுளை உடையவளாவள். உடனே பராசர மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் உண்டு என்றார் பராசர முனிவர். இவரை இதற்குக் காரணத்தை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, மாதவன் என்ற குரு ஏழாம் வீட்டிற்குடையவராகி இரண்டாவது வீட்டில் இருந்து கொண்டு மால் என்ற புதன், குஜன் என்ற அங்காரகன்* பானு என்ற சூரியன்* ஆகிய இவர்களால் பார்க்கப்படுவதாலும் கெடுதியான சரார்சியாகிய துலாராசியில் குருதனியாக விருப்பதாலும் இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்று சொன்னேன் என்றார் பராசர முனிவர்.

*குறிப்பு :—இங்கு அங்காரகன் எட்டிற்குடையவராகிக் கெட்ட ஆதிபத்தியத்தை யுடையவராகின்றார், சூரியன் விரையாதிபதியாகிக் கெட்ட ஆதிபத்தியத்தை யுடையவராகின்றார்.

22. அத்திரி புகல்வார் சத்துருஜயசமயம்
அமரர்தன் மண்டல முமாக
வெத்தியாம் யிரண்டோன் நவத்தினி லாட்சி
மேன்மையாய் யிருப்ப தினலே
பத்தினி ஒன்றேபகரலாம் முனியே
பங்குமே சத்தமம் பார்க்க
வித்தகன் முன்னல் மரிப்பளாமாது
விளம்பின மொழிகள் குன்றுது.

22. அத்திரி மாமுனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். சத்துருஜய சமயத்தில் அமரருடைய (தேவ) மண்டலத்தில் (குரு) இருப்பதாலும், இரண்டிற்குடையவராகிய சுக்கிரன் ஒன்பதாவது வீடாகிய தன்னுடைய வீட்டிலேயே ஆட்சியாகி வலிவாயிருப்பதாலும் மனைவி ஒன்றே என்று சொல்லக்கூடும். முனிவரே! ஆனல் பங்கு என்ற சனி ஏழாவது வீட்டைப் (பத்தாவது பார்வையுடன்) பார்ப்பதால் ஜாதகருக்கு முன்னமே இவருடைய மனைவி இறந்து விடுவாள். நாங்கள் சொல்லிய பலன்கள் தவறிப் போகா.

23. இதற்கு நேரிடையாய் சாதகசுரிதியதிலே
ஏழாம் பாவத்தில் பாரு
அதில்சொலும் விபரம் இரண்டேழோன்
கேந்திரம்மாகிலும் கோணத்தி லிருக்க
வதிபதிஒன்றே தீர்க்கமே யாகும்
மங்கையின் அஷ்ட வர்க்கில்
கதியிலா பரலுமொன்று யிருக்க
சாற்றினேம் விபரமாய்க் காண்பாய்

23. இதற்குச் சாட்சியாக ஜோதிட சாஸ்திரத்தில் ஏழாவது பாவத்தைப் பார்க்கவும். இதில் சொல்லியிருக்கின்ற விவரம் என்னவென்றால், இரண்டிற்குடையவரும். ஏழிற்குடையவரும் கேந்திரம் என்ற ஒன்று, நான் ஏழு, பத்து ஆகிய இவ்வீடுகளிலும், அல்லது கோணம் என்ற ஒன்று, ஐந்து, ஒன்பது ஆகிய இவ்வீடுகளிலும் இருந்தால் மனைவி ஒன்றே யாகும். இவள் தீர்க்காயுளை யுடையவளாவள். மேலும் (சுக்கிரனுடைய) அஷ்ட வர்க்கத்தில் ஏழாவது வீட்டில் ஒரே ஒருபரல் இருப்பதால் இவ்விதமாக ஒரே ஒரு மனைவி என்று விவரமாய்ச் சொல்லியிருக்கின்றோம். இந்த விவரங்களை நீர் பரிசோதனை செய்யலாம்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

24. புத்திர ராண்பால் ரெண்டு பெண்ணது ஒன்று தீர்க்கம்
வித்தகண் பூர்வம் தன்னை விளம்புவோ மினிமேலாக
சித்தர்வாழ் அருணை தன்னில் செனித்தனன் கங்கை
[சேயாய்
பத்தினி மதலை யுண்டாய் பாரினில் சீவத்தே தான்

24. ஜாதகருக்கு இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இனிமேல் இவருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். சித்தர்கள் என்ற சந்நியாசிகள் வாசஞ் செய்கின்ற அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் வேளாளர் குலத்தில் இவர் ஆண் குழந்தையாய்ப்பிறந்து மனைவி மக்களை யுடையவராகிப் பூமியில் வாழ்ந்து

25. சிலசில வணிபம் செய்து செல்வனும் வாழுந் நாளில்
குலவின வினையைக் கேண்மோ கோதையா முதல்
[குலத்தனள்
பொருளது பெருக்க முண்டாய்ப் புனிதன்பால் சிலது
[தந்து
நலமுள சேது சென்று நற்றல வாசம் புக்கி

25. சிற்சில வியாபாரங்களைச் செய்து கொண்டு ஜாதகர் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீராக. ஒரு பிராமண ஜாதி ஸ்திரீ தன்னிடத்தில் அதிகமான திரவியம் உண்டாகியதால் இதில் கொஞ்சம் பணத்தை இவரிடம் பாதுகாப்பிற்காகக் கொடுத்து வைத்து விட்டு நன்மையை விளைவிக்கின்ற சேது ஸ்தலத்திற்குப் போயும், நல்ல ஸ்தலங்களுக்குச் சென்றும்

26. *தன்நகர் அடைந்து சின்னாள் தந்தபொன் கேட்கும் [போது*
*இன்னமும் சிலதுனாள் சென்று யீகுறே னென்று [சொல்ல*
*கன்னிகை வருத்த முற்று கடுஞ் சினமாகக் கேட்க*
*என்னிடம் யில்லை யென்று யியம்பினான் உறுதியாக.*

26. தன்னுடைய ஊருக்குத் திரும்பிவந்து கொஞ்சகாலம் பொறுத்து இவள் ஜாதகரிடம் கொடுத்துவைத்தப் பணத்தைத் திருப்பிக்கொடு என்று கேட்கும்போது இவர் இன்னம் கொஞ்சம் நாட்களுக்குப் பின்னால் கொடுக்கின்றேன் என்று சொல்ல, இவள் துன்பத்தை அடைந்தவளாய் கொடூரமான கோபத்துடன் கேட்கவே, இவர் தன்னிடம் பணம் இல்லை என்று உறுதியாகச் சொல்லிவிட்டார்.

27. *மங்கையும் வருத்த முற்று வரைந்த சாபத்தைக் [கேண்மோ*
*தங்காது துணைவர் தானும் சம்பத்து குறைவு நேறும்*
*சங்கையாய்ப் பின்சென் மத்தில் தன்மக்கள் துணையாய் [நேர்ந்து*
*அங்கது கடனை வாங்கி அருணையில் வாழ்வே [னென்றாள்.*

27. இதன்பேரில் (பணம் கொடுத்து வைத்த) இந்தப் பிராமண ஸ்திரீ மனத்தில் துன்பத்தை யுடையவளாய்க் கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீராக. "உனக்குச் சகோதரங்கள் நீடித்திருக்கக் கூடாது, உனக்குச் செல்வமும் சுகங்களும் குறைவுபடக் கடவது, மேலும் உன்னுடைய மறு ஜன்மத்தில் உன்னுடைய குழந்தைகளுக்கு நான் துணைவியாக அமைந்து நான் உனக்குக் கொடுத்தப்பணத்தை திருப்பி வாங்கிக் கொண்டு திருவண்ணாமலையில் வாழ்வேன்" என்று இந்த ஸ்திரீ இவரைப் பார்த்துச் சொன்னாள்.

28. *அந்தரம் தாதாஸ்து வென்ன அடைந்தது அந்தச் [சாபம்*
*மைந்தனு மந்தியத்தில் வளமிலாக் குடும்பியாகி*

சந்திரன் சடை யணிந்த சங்கரன் தொண்டு பூண்டு
விந்தையாய்க் காலன் பக்கல் மேவியே பிரமன் லக்கம்

28. இவ்விதமாக இந்த பிராமண ஸ்திரீ சாபத்தைக் கொடுக்கும் போது "இதே மாதிரியாக நடக்கக் கடவது" என்ற ஆகாயத்திலிருந்து ஒரு அசரீரி வார்த்தை கிளம்பியது. ஆகையால் இந்தச்சாபம் ஜாதகரை வந்து அடைந்தது. இவர் முன்ஜன்மத்தின் கடைசி காலத்தில் சிறப்பிலாத அஃதாவது நொந்துபோயின. குடும்பஸ்தராகிச் சந்திரனைத் தன்னுடைய ஜடையில் ஆபரணமாக அணிந்துள்ள சிவபெருமானிடத்தில் அன்புடையவராய் இவருக்குப் பணிவிடைகளைச் செய்துகொண்டு, பிறகு இறந்து எமனிடத்திற்குச் சென்று பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு

29. உதிப்பனு மிந்தப் பாலன் உதியாது துணைவர் தானும்
முதல்குல மாது சாபம் மேவிடு மிச்ஜென் மத்தில்
வதிபதி துணையாய்த் தோன்றி வாங்குவாள் கடனை
[யேதான்
அதிதியை ஆதரிக்கும் அம்பிகை யாளே கேளாய்

29. இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறப்பார், இவருக்கு இந்த ஜன்மத்தில் சகோதரங்கள் கிடையா, பிராமண ஸ்திரீயின் சாபம் இந்த ஜன்மத்தில் அவரை வந்தடையும். இவள் துணைவியாக அமைந்து தான் முன்ஜன்மத்தில் இவரிடத்தில் கொடுத்துவைத்தப் பொருளைத் திருப்பி வாங்கிக் கொள்ளுவாள். சந்நியாசிகளையும் பரதேசிகளையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

30. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள்
[சிவந்த மேனி
முன்கோபி வாத தேகி முயர்வான குடும்ப மேற்பள்
தன்சொல்லு மேன்மை யாகும் தனத்தின் மேலிச்சை
[யுண்டு
பன்னியே பேசு வாளாம் பர்த்தாவுக் கினிய ளாகும்

30. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகாகவிருப்பாள். சிகப்பு நிறமுள்ள தேகத்தையுடையவள் இவள் முன்கோபியாயிருப்பாள், வாதகுணமுள்ள தேகத்தை யுடையவள், மேன்மையான் குடும்பத்தை யுடையவளாவள். இவளுடைய வார்த்தைகள் நன்றாக மதிக்கத்தக்கனவாக விருக்கும், இவள் பணத்தின்பேரில் ஆசையுள்ள வளாகவிருப்பாள். தேர்தலாகவும் திறமையாகவும் பேசுபவளாவள், இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாவள்.

31. அரமதி லிச்சை கொஞ்சம் அணுகிடும் பித்தச் சூடு
இருகுண முடையா ளாகும் எப்போதும் வறுமை
[காணுள்
பெருமையாம் குணத்த ளாகும் பேதைக்குத் துணைஆண்
[ஞன்கு
வரிவிழி மார்கள் மூன்று வரைகிறேம் தீர்க்க மாக.

31. ஜாதகருடைய தாயார் தானதர்மங்களைச் செய்வதில் கொஞ்சம் பிரியமுள்ளவளாவாள். இவளுக்குப் பித்தச்சூட்டு ரோகம் உண்டு. இவள் நல்லதும் கெட்டதும் கலந்துள்ள நடுத்தரமான குணத்தை யுடையவளாவள். இவள் எப்போதும் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அடையமாட்டாள். இவள் மேன்மையான குணத்தை யுடையவளாவள். இவளுக்கு நான்கு சகோதரர்கள் உண்டு. மூன்று சகோதரிகள் உண்டு. இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

32. இல்லமும் தென் மேலாகும் யிவள்துணை பெண்பால்
[சொல்வேன்பின்பு
வல்லியும் பூர்வம் கேளாய் மாயூரம் அருகில் கீழ்பால்
நல்லதோர் சிறுவூர் தன்னில் நல்கினுள் வைசிய சேயாய்
தொல்லை யில்லா மலேதான் சுகமுடன் வாழும் நாளில்

32. ஜாதகரின் தாயாருடைய வீடு தென்மேற்குத் திக்கிலிருக்கும். இவளுடைய சகோதரிகளின் விஷயத்தைப் பின்னல் சொல்லுகின்றேன். இவளுடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன் கேட்பீராக. மாயவரத்திற்குச் சமீபத்தில் கிழக்குத்திக்கில் நல்ல ஒரு சிறிய கிராமத்தில் வைசியர் ஜாதியில் பெண்ணுகப் பிறந்து, கஷ்டங்களில்லாமல் சௌக்கிய மாய் வாழ்கின்ற காலத்தில்

33. பஞ்சையாய் யேழை மாது பாலர்க்கு அன்னம் வேண்டி
கெஞ்சினுள் மாது பக்கல் கிளிமொழி வார்த்தை யின்றி
மிஞ்சின வார்த்தை சொல்லி விரட்டினுள் யேழை தன்னை
வஞ்சியும் மன வெறுப்பால் வரைந்த சாபத்தைக்
[கேண்மோ.

33. ஒரு திக்கற்ற ஏழை ஸ்திரீ தன்னுடைய குழந்தைக்குச் சாதத்தைத் தேவை யுள்ளவளாகி, ஜாதகருடைய தாயாரிடத்திற்குப் போய்க் கெஞ்சிக் கேட்கவே, இவள், இனிப்பான வார்த்தைகளைச் சொல்லாமல் துஷ்டத்தனமாகக் கடுமையான வார்த்தைச் சொல்லி இந்த ஏழை ஸ்திரீயை அதட்டித் துறத்திவிட்டாள். இந்த ஸ்திரீ தன்னுடைய மனக்கஷ்டத்தால் கொடுத்தச் சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக,

34. பாலர் சோரியாப் பாவி பருகாது சுதர்கள் தானும்
சாலவே பின்சென் மத்தில் சந்ததி காணு ளாகும்
ஏலவே சொல்லிச் சென்ருள் யெய்திற்று அந்தச் சாபம்
நீலிக்கு அந்தி யத்தில் நேர்ந்த தோர் சுதர்களற்று.

34. குழந்தைக்குச் சாதம் கொடுக்காத பாபியாகிய உனக்குப் பிள்ளைகள் இருக்கக் கூடாது. உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்குக் குழந்தைகள் இருக்கக்கூடாது, என்று இவ்விதமாக இந்த ஸ்திரீ ஜாதகருடைய தாயாரைப் பார்த்துச் சொல்லிவிட்டுப் போய்விட்டாள். இந்தச் சாபம் இவளை வந்து அடைந்தது. இவள் தன்னுடைய முந்திய ஜன்மத்தின் கடைசி காலத்தில் இவளுக்கிருந்த பிள்ளைகளிறந்து,

35. சஞ்சல மனத்த ளாகித் தந்தியின் கோஷ்ட த்திற்குத்
தஞ்சமாய்த் தீபம் ஒன்று சாற்றுவாள் மரண மாகி
கஞ்சனுல் வரையப் பட்டுக் கலந்தன ளென்று
[சொல்வோம்
பஞ்சான யேழை சாபம் பரவிடும் யிச்சென் மத்தில்.

35. ஜாதகருடைய தாயார் துக்கமுள்ள மனத்தை யுடையவளாகி விநாயகக் கடவுளின் கோயிலுக்குப் போய் அவ்விடத்தில் ஓர் விளக்கை ஸ்தாபித்து ஏற்றிவைத்துப் பிறகு இறந்து பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ருேம். திக்கற்ற ஏழை ஸ்திரீயின் சாபம் இவளுக்கு இந்த ஜன்மத்தில் வந்து சம்பவிக்கும்.

36. சுதர்களும் தோஷ மெய்தும்
செயமுனி தடுத்துச் சொல்வார்
இதுசுதர் யெவ்வார் தீர்க்கம்
யியம்புவீர் முனியே நீதான்
வதிபதி முன்சென் மத்தில்
மதயானை கோஷ்ட த்திற்கு
நிதம்தீபம் வைத்த புண்ணியம்
நேர்ந்தது யிந்தப் பாலன்

36. ஜாதகருடைய தாயாருக்குப் புத்திரதோஷம் ஏற்பட்டுவிட்டது. உடனே ஜயமுனிவர் தடுத்துக் கேட்கின்ருர். இந்தப் புத்திரராகிய ஜாதகர் மாத்திரம் எவ்விதமாகத் தீர்க்காயுளை யுடையவராவர், முனிவரே! நீர் சொல்லுவீர் என்ருர். இந்தத் தாயார் தன்னுடைய முன்ஜன்மத்தில் மதம் பிடித்த யானை முகத்தையுடைய விநாயகர் கோயிலுக்குத் தினந்தோறும் தீபத்தை வைத்தப் புண்ணிய காரியத்தினுல் இந்த ஜாதகருக்கு தீர்க்காயுள் உண்டாயிற்று என்ருர் முனிவர்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மமும் மரணமும்

37. மறுசென்மம் புதுவை தன்னில்
வருகுவாள் வன்னிய சேயாய்
பொருளது பெருக்க முண்டாய்ப்
புண்ணிய வதியும் வாழ்வள்
குருதிசை புகர் புகுத்தி
கூறுவோ மன்னே கெண்டம்
ஆரஞ்சு நாலு ஆண்டில்
ஆனிமா தத்தில் நேறும்.

37. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மறு ஜன்மத்தில் புதுவை என்ற புதுச்சேரியில் வணிகர் ஜாதியில் பெண் குழந்தையாகப் பிறப்பாள். இவள் அதிகமான சொத்தை யுடையவளாகி இவள் புண்ணிய சாலியாக விருந்து கொண்டு வாழ்வாள். குரு தசையில் புகர் என்ற சுக்கிரபுக்தி காலத்தில் இவளுக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். இது ஜாதகருக்கு முப்பத்து நான்காவது வயதில் ஆனி மாதத்தில் நேரிடும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய கெண்டங்கள்

38. இருபது ஆண்டு தன்னில்
யியம்புவோம் தந்தை கெண்டம்
கரும சாந்திகளும் செய்து
மரலியைக் காணு னுகும்
அரவுதன் திசையிலே தான்
அசுரர் மந்திரி புகுத்தி
திரமாக நடக்கு மென்றோம்
செயமுனி தடுத்துச் சொல்வார்.

38. ஜாதகருக்கு இருபதாவது வயதில் இவருடைய தகப்பனுருக்குக் கெண்டம் நேரிடும். கர்ம சாந்திகளை இவர் செய்து எமதரிசனத்தை அடைய மாட்டார். அப்போது இராகு தசையில் அசரமந்திரி என்ற சுக்கிர னுடைய புக்தி நடக்கும் என்று உறுதியாகச் சொல்லுகின்றோம். உடனே ஜயமுனிவர் தடுத்துக் கேட்கின்றார்.

39. வந்த நோய்தீர வேண்டி வருவிப்பீர் கரும சாந்தி
அந்தாவது காண்டம் தன்னில் அருளினேம் விபரம் [காண்பாய்
பிந்தியு மிருபா னுறில் பெருந்துலே மாதம் தன்னில்
மந்திரி திசையிலே தான் அவன் சுய புத்திகாலம்.

39. ஜாதகருடைய தகப்பனுருக்கு வந்து சம்பவித்த நோய் நிவர்த்தியா வதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்கவே, ஐந்தாவது காண் டத்தில் இந்தச் சாந்தியின் விவரத்தைச் சொல்லி யிருக்கின்றோம். அதைப் பார்த்து வாசிக்கவும். பிறகு ஜாதகருக்கு இருபத்தாறுவது வயதில் துலேமாதம் என்ற ஐப்பசி மாதத்தில் மந்திரி என்ற குரு தசையில்* தன்னுடைய சுயபுக்தி காலத்தில்

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

40. சிலசில பிணி தந்தைக்குச் செப்பலாம் காரி காலம்
குலவிய கால னுட்டை கொள்ளு வான் தீர்க்க மாக
தலேவன் பின் சென்மம் சொல்வேன் தென்திசை தில்லே
[தன்னில்
நலம்சொலும் பிரம்ம சேயாய் நவிலுவா னென்று
[சொல்வோம்.

40. ஜாதகருடைய தகப்பனுருக்குச் சிற்சில நோய்கள் உண்டாகும் என்று சொல்லக் கூடும். பிறகு காரி என்ற சனி புக்தி காலத்தில் இந்தத் தகப்பனுர் இறந்து எமபட்டணத்திற்குக் கண்டிப்பாய் போய்விடுவார். இவ ருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் தெற்குத் திக்கி லுள்ள தில்லே என்ற சிதம்பர க்ஷேத்திரத்தில் வேதங்களே ஓதுகின்ற பிரா மணர் குலத்தில் ஆணுகப் பிறப்பார் என்று சொல்லுகின்ருேம்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத்திற் ஜாதக சந்திரிகை நாற்பத்தாறுவது சுலோகம் பிரகாரம் குரு மாரகராகின்ருர். இந்தக் குரு மாரக ஸ்தானமாகிய ஆறுவது வீட்டில் இருக்கின்ருர். ஆகையால் குரு தசையில் தகப்பனுருக்கு இங்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணமும் பின்ஜன்மமும்

41. அன்பது யேழு ஆண்டில் அணுகிய கன்னி மாதம்
பின்பக்கம் நவமி தன்னில் புதல்வனி னுடலம் யேகும்
பின்சென்மம் காஞ்சி தன்னில் பிறப்பனும் வைசியச்
[சேயாய்
உன்னத செட்டு செய்து உத்தமன் வாழ்வா னுகும்.

41. ஜாதகருக்கு ஐம்பத்தேழாவது வயதில் கன்னி மாதம் என்ற புரட்டாசி மாதத்தில் தேய்பிறையில் நவமி திதி தினத்தில் இவர் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்துவிடும். இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில்

காஞ்சீபுரத்தில் வைசிய ஜாதியில் ஆணுகப் பிறந்து மேன்மையான வியாபார்த்தைச் செய்துகொண்டு வாழ்வார்.

42. இது மத்தில் சாதகர்க்கு யெய் தாதோ மாரகங்கள்
துதியத்தில் குருவும் தங்க தொக்குமே சிலது நோய்கள்
கதிர்கண்ட யிருள்போல் நீங்கும் கழறின வயது தீர்க்கம்
அதிதியே குடும்பச் சேதி அறிவிப்போம் யினி மேலாக

42. (இந்த ஐம்பத்தேழாவது வயதிற்கு முன்னே) அடையில் ஜாதகருக்கு மரணம் நேரிடாதோ என்று கேட்கவே, இரண்டாவது வீட்டில் குரு இருப்பதாலே சில நோய்கள் ன்வருக்கு உண்டாகும். சூரியனைப் பார்த்த இருளைப்போல இந்த நோய்கள் பறந்தோடிப் போகும். நாங்கள் சொல்லிய பிரகாரமே தீர்க்காயுள் ஏற்படும். பார்வதியம்மையே இனிமேல் குடும்ப விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய குடும்பத்தின் பலாபலன்கள்

43. மதிதனுக் கிரண்டில் பொன்னேன்
வந்திட சுனபா யோகம்
அதின்பலன் விசேஷ பூமி
ஆவுகள் ஆள்கள் சேர்க்கை
நிதி பெருக்கங்கள் உண்டு
நேமியோர் மதிப்புக் கொள்ளல்
பதி வேறு யிருபதாண்டில்
பாகமும் யிரண்டு மாகும்.

43. மதி என்ற சந்திரனுக்கு இரண்டாவது வீட்டில் குரு இருப்பதாலே சுனபா யோகம் என்ற ஒருவித யோகமுண்டாகும். அதன் பலனாக நிலங்கள் அதிகமாக உண்டாகும். பசுக்களும் வேலையாட்களும் அதிகமாக உண்டு. செல்வம் அதிகப்படும், ஜனங்கள் ஜாதகருடைய குடும்பத்தாரை கௌரவத்துடன் பாராட்டுவார்கள். வேறு வீட்டுவாசம் இருபதாவது வயதில் கிடைக்கும், இரண்டு பங்காகப் பாகம் பிரிவினை ஏற்பட்டுவிடும்.

*குறிப்பு;—வியாக்கியானம்:—சுனபா யோக விஷயம்:—சந்திரனுக்கு இரண்டில் சூரியன் தவிர மற்றக் கிரகங்கள் இருப்பது சுனபா யோகம் எனப்படும். இது விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் இருநூற்றெண்பத்திரண்டாவது (282-ஆவது) பாடலையும், ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 72-73 ஆவது சுலோகங்களையும், பல தீபிகை ஆருவது அத்தியாயம் நான்காவது சுலோகத்தையும் வாசிக்கவும்

## ஜாதகரின் மனைவியின் மரணகாலம்

44. அன்பது னைலு ஆண்டில் அவன்பாரி அரிட்ட மெய்தும்
இன்னவன் செனன காலம் யிருகண்ணுள் முதல்
[பாதத்தில்
துன்சேய் திசை ஆருண்டும் திங்களும் ஆற தாகும்
முன்பாகம் விபரம் சொன்னேம் முதல்வியே கேட்டி
[டாயே.

44. ஜாதகருக்கு ஐம்பத்து நான்காவது வயதில் *இவருடைய மனைவி இறந்துவிடுவாள். இவர் பிறந்த காலத்தில் இரு கண்ணுள் என்ற சித்திரை நட்சத்திரத்தில் ஒராவது பாதம் ஆகும். இதற்குரிய அங்கார மகா தசை இருப்பு நின்ற வருஷங்கள் ஆறும், மாதங்கள் ஆறும் ஆகும். இவ்விதமாக முதல் பாகத்தின் விவரங்களைச் சொல்லி முடித்துவிட்டோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம்:—மனைவி மரண விஷயம்;—ஜாதகருக்கு ஐம்பத்தி நான்காவது வயதில் சனி தசை நடக்கின்றது. ஜாதகரின் மனைவியின் லக்கினம் ஏழாவது வீடாகிய மீனம் ஆகும். மீன லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபத்தேழாவது சுலோகப் பிரகாரம் சனி மாரகராகின்ருர். ஆகையால் இங்கு சனி தசையில் மனைவிக்கு மரணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

C. G. R.

# ஜாதகம் 30

## ஜனனகால கிரகநிலை

1. [1]கலை கேது [2]சாடியாக [3]காரியும் மிதுன மாக
[4]புலவனும் [5]புகரு நண்டு [7]புரவியோன் [8]பணியும் [9]சீயம்
[10]நிலமகன் [11]கோல தாக நேர் குரு கன்னியாக
தலமது [12]மாதை யாகச் சாற்றுவீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும் கேதுவும் கும்பத்திலும் சனி மிதுனத்திலும், புதனும் சுக்கிரனும் கடகத்திலும், சூரியனும் ராகுவும் சிம்மத்திலும், அங்காரகன் துலாத்திலும், குரு கன்னியிலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| சந்திரன் கேது | இராசி சக்கரம் | | புதன் சுக்கிரன் |
| | | | சூரியன் ராகு |
| | | அங்காரகன் | லக்கினம் குரு |

சதயம் 3-ஆம் பாதம் ராகு தசை ஷ 4—7—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் சூரியனும், ரிஷபத்திற் குருவும் சனியும், சிம்மத்திற் சுக்கிரனும் ராகுவும், விருச்சிகத்தில் அங்காரகனும், கும்பத்திற் சந்திரனும் புதனும், கேதுவும் ஆகும்.

---

1. சந்திரன்
2. கும்பம்
3. சனி
4. புதன்
5. சுக்கிரன்
6. கடகம்
7. சூரியன்
8. ராகு
9. சிம்மம்
10. அங்காரகன்
11. துலாம்
12. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. அத்திரி புகலு கின்றார் ஆணது செனன மாகும்
வித்தகன் இல்லம் சொல்வேன் வடவாசல் கீழ்மேல் வீதி
சத்தியா மாரி தென்மேல் சலக்கரை மேல்பா லாகும்
சித்தூரும் வடுகர் வர்க்கம் செப்புவோம் தாயே கேளும்.

2. அத்திரி மாமுனிவர் சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை யாகும். ஜாதகர் பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேன், இது கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு வாயிலை யுடையதாகும். மாரியம்மன் கோயில் தென் மேற்குத் திக்கிலும், ஏரிக்கரை மேற்குத் திக்கிலும் இருக்கும். பிறந்த ஊர் ஒரு சிறிய கிரமமாகும். ஜாதகர் வடுகர் ஜாதியில் பிறப்பார் என்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

3. இன்னவன் செனன யோகம்
யெழில்பெரும் தந்தை யோகம்
அன்னை துணைவர் யோகம்
அவன்மனை புத்திர யோகம்
முன்பின் சென்மங்கள் யாவும்
முரைக்கிறோ மின்னூல் தன்னில்
உன்னத வானைப் பெற்ற
உத்தமி கேட்டி டாயே.

3. ஜாதகருடைய ஜனனகால யோகம், தகப்பனுருடைய யோகம், தாயாருடைய யோகம் சகோதரருடைய யோகம், மனைவி மக்கள் ஆகிய இவர்களுடைய யோகம், முன் ஜன்மம், பின் ஜன்மம், ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம். மேன்மையான யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

4. தந்தையின் துணைஆண் ஆறு சத்திமார் மூவ ராகும்
அந்தவர் பின்பால் சேதம் அறைகிறோம் தந்தை சேதி
தந்தமும் குறைவு முண்டு சிவந்தமெய் வாத தேகி
சிந்தையும் நல்ல தாகும் சென உபகாரி யாகும்.

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்கள் ஆறு பேர் ஆவர், சகோதரிகள் மூன்று பேராவர். இவர்கள் பின்னால் இறந்து போய் விடுவார்கள், ஜாதகரின் தகப்பனுருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பற்கள் குறைவாக விருக்கும். இவர் சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவரார்வர். இவர் வாத தேகம் என்ற பருத்த தேகத்தை யுடையவராவர். இவருடைய மனது நல்லமனதாகும். இவர் ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்பவராவர்,

5. ரோமங்கள் அதிக முண்டு நுவலுப தேசம் கொள்ளான்
கா்மனை விருப்பம் கொள்வன் காலிகள் பனையோ்
[விருத்தி
பூமியால் சீவிப் பானும் புகழ்ந் தோரை யாதரிப்பன்
மா்மிகள் நால்வ ராகும் வறுமை யெப்போதும் காணான்.

5. இவர் தன்னுடைய தேகத்தில் அதிகமான ரோமத்தை உடையவ ராவர். இவர் பெரியோர்களிடத்தில் உபதேசத்தைப் பெற்றுக் கொள்ள மாட்டார், தீக்ஷதையைப் பெறாதவராவர். இவர் மையல் என்ற காம ஆசையை உடையவராவர். இவருக்கு ஆடுமாடுகளும் நிலங்களும் ஏர் களும் விருத்தியை யடையும். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். இவர் தன்னைக் கௌரவப் படுத்திப் பெருமையாகப் பாராட்டி னவர்களைக் காப்பாற்றுவார். இவருக்கு நான்கு மாமியார்கள் உண்டு, இவர் எப்போதும் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மடைய மாட்டார்.

6. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உரப்பொடுப்
[பொடுபுளிப்பி லிச்சை
குண்டுணி கூறு னுகும் குலமதிப் புடைய வாழ்வன்
பண்டு நாள் பூமி விருத்தி பந்து பூசிதமு மாவன்
துண்டமாம் வார்த்தை யுண்டு தொடுவழக் கதனில்
[சேரான்.

6. ஜாதகருடைய தகப்பனுர் சுகமான சாப்பாட்டை யுடையவராவர், காரம் புளிப்பு ஆகிய இவற்றை யுடைய திண்பண்டங்களின் பேரில் பிரிய முள்ளவராவர். இவர் பிறர் பேரில் கோட்களைச் சொல்ல மாட்டார். தன்னு டைய குலத்தார் தன்னை கௌரவத்துடன் பாராட்டும்படியான அந்தஸ்தி லிருந்து வாழ்வார். இவர் பழைய காலத்திய நிலங்களைப் பயிரிட்டுத் தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார். இவரைத் தன்னுடைய பந்துக்கள் நல்ல மதிப்புடன் பாராட்டி வருவார்கள். சுறுக்கமான வார்த் தைகளைச் சொல்லுவார். இவர் அதிக காலம் நீடித்திருக்கின்ற வியாஜ்ஜி யத்தில் பிரவேசிக்க மாட்டார்.

7. பித்த தேகத்தா னுகும் பேச்சதைக் காப்பா னுகும்
அத்திபோல் நடையு மாவன் அரிபத்தி கொஞ்ச முண்டு
சத்தியம் கூறு னுகும் சல்லிய மென்று லச்சம்
கத்திரி ரேகை யுண்டு கமல ரேகையு முண்டு.

7. ஜாதகருடைய தகப்பனுர் பித்த குணமுள்ள தேகத்தை யுடையவ வராவர். தன்னுடைய வார்த்தைகள் பிரகாரம் நடந்து கொள்ளக் கூடிய வர். இவர் யானையைப் போல கெம்பீரமான நடையை யுடையவராவர். சிறிதளவு மகாவிஷ்ணுவின் பேரில் அன்புடையவராவர். இவர் சத்தியஞ் செய்ய மாட்டார், கடன் என்றால் இவர் பயப்படுவார். இவருடைய உள்

ளங் கையில் கத்திரி ரேகை என்ற ஒருவித கெட்ட ரேகையும், தாமரை ரேகை என்ற ஒருவித நல்ல ரேகையுமுண்டு,

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

8. சொன்ன யிக்குணத் தானுக்குத் தோகையர் மூவர் [தம்மில்
இன்னவன் கடை மாதுக்கு இறங்குவான் நரன்காம் [சென்மம்
அன்னவன் சேதி சொல்வேன் அவனியை விருத்தி [செய்வன்
முன்கோபம் உடனே தாழ்வு முயர்வான புத்தி யேற்பன்

8. இது வரையிலுஞ் சொல்லப்பட்ட குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்கு ஏற்பட்ட மூன்று மனைவிமார்களில் கடைசி மனைவிக்கு இந்த ஜாதகர் நான்காவது பிறவியாகப் பிறந்தவராவர். இவருடைய விஷ யங்களை இனிமேல் சொல்லுகின்றேன். இவர் நிலங்களைப் பயிரிட்டு தான்ய வகையராக்களை அதிகப்படுத்துவார். இவருக்கு முன் கோபமுண்டு, இது உடனே தணிந்து போய்விடும். இவர் மேன்மையான அறிவை யுடையவர்.

9. சொல்லதைக் காப்பா னுகும் தோகையர் மோக னுவன்
மல்லில் முன்செல்லா னுகும் மர்ம மில்லாத நெஞ்சம்
நல்லதோர் நேசம் செய்வன் நாற்காலி விருத்தி யுண்டு
அல்லல்க ளனுகா னுகும் அரமதி லிச்சை யுண்டு.

9. ஜாதகர் தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் நடந்து கொள் ளக் கூடியவர், ஸ்திரீகளின் பேரில் மையல் என்ற காம ஆசையை யுடைய வராவர். சண்டையில் இவர் முன்னடியாக முதற் காரணவானுகப் போக மாட்டார். ரகசியமான மனத்தை யுடையவரல்ல. இவர் நல்லவர்களிடத் தில் சிநேகஞ் செய்து கொள்ளுவார். இவருக்குக் கால் நடைகள் விருத்தி யாகும். இவர் துன்பங்களை அடைய மாட்டார். தானதர்மங்களில் இவர் பிரிய முடையவராக விருப்பார்.

10. காரிய சமர்த்த னுகும் கட்டுரை கூறு னுகும்
வேருரில் பூமி விருத்தி வீண்பழி யேற்கா னுகும்
தீரமில் லாத நெஞ்சம் சிறுத்தோர்க் குதவி செய்வன்
மாரிடான் பெரியோர் வார்த்தை மாஞ்சிவப் புடைய [னுமே.

10. ஜாதகர் காரியங்களைச் செய்வதில் சாமர்த்திய முடையவராவர், பொய், புணைந்த வார்த்தை, பழமொழி ஆகிய இவற்றைச்சொல்ல மாட்டார்,

இவருக்கு இன்னொரு கிராமத்தில் பயிரிடும் நிலங்களுண்டு, வீணன அபவாதத்தை யடைய மாட்டார், இவர் தைரியமான மனத்தை யுடையவரல்ல ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்வார். பெரியோர்களுடைய வார்த்தைகளுக்கு விரோதமாகவும், மாறுபாடாகவும் நடந்து கொள்ள மாட்டார். மாந்தளிரின் நிறமாகிய ஒருவித சிகப்பான நிறத்தை யுடையவராவர்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

11. தன் துணை ஆண்பா லொன்று
சக்திமார் யிருவ ராகும்
பின்னமாம் மற்ற தெல்லாம்
பராசரும் மறுத்துச் சொல்வார்
முன் தாய்கள் யிரண்டு யென்றீர்
மொழிகுவீர் அவர்க்குப் புத்திரர்
கன்னிகை ஒன்று யென்றோம்
கருதின முதல்தாய் யென்றோம்.

11. ஜாதகருடன் பிறந்தவர்கள் ஒரு சகோதரனும் இரண்டு சகோதரிகளும் ஆவர். மற்ற சகோதரங்களெல்லாம் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். பராசர மஹரிஷி தடுத்துக் கேட்கின்றார். முன் தாயார் இருவர் என்று சொன்னீரே! இவர்களுக்குண்டான சந்ததிகளைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே, முதல் தாயாருக்கு ஒரு புத்திரி உண்டென்று சொல்லுகின்றோம்.

12. மரிப்பளா மந்த மாதா மறுமாதா தனக்குப் புத்திரர்
இருஆண்பால் தீர்க்க மெய்தும் ஏகுவாள் கால னூடு
திருதிய மாது தீர்க்கம் செப்பின துணைவர் சேதி
உரைக்கிறோம் பின்பா கத்தில் உத்தமி கேட்டி டாயே.

12. முதல் தாயார் ஒரு பெண்ணைப் பெற்று பிறகு இறந்து விடுவாள். இரண்டாவது தாயாருக்கு இரண்டு பிள்ளைகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இரண்டு பிள்ளைகள் பிறந்த பிறகு இரண்டாவது தாயார் இறந்து விடுவாள். மூன்றுவது தாயார் தீர்க்காயுளை யுடையவளாவள். இதுவரையிலும் சொல்லப்பட்ட சகோதரர்களின் விஷயங்களைப் பின்னுல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

13. அன்னையு மூன்று மாக அணுகுங் காரணங்க ளென்ன
பன்னுவீ ரந்தச் சங்கை பாலகன் தந்தை முன்னாள்
துன்மைகள் அதிகம் செய்தான் சேர்ந்தது அந்தத்
[தோஷம்
என்ன ஊழ் செய்தானதை யியம்புவீர் முனியே நீதான்.

13. தாயார்கள் மூன்று பேர் நேரிட்டதற்குக் காரணத்தைச் சொல்லு வீர் என்று கேட்கவே, ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத் தில் அதிகமான பாவங்களைச் செய்தார். அந்தத் தோஷங்கள் இவரை வந்தடைந்தன. இவர் என்னென்ன பாவங்களைச் செய்தாரோ அவற்றை யெல்லாஞ் சொல்லுவீர் முனிவரே! நீர் தான்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

14. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிருேம் திருவா
[ரூரில்
துன்மதி மறை யோனுகச் செனித்துமே அரசன் மூலம்
அன்னவன் சீவித்தே தான் அவன்நாள் வினையைக்
[கேண்மோர்
தன்மனை தங்கை தானும் தாயில்லம் வாச மாகி.

14. ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்ரேம். இவர் திருவாரூரில் பிராமணராகப் பிறந்து அரசாங்கத்தில் வேலையிலமர்ந்து ஜீவித்து வருகின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவங்களைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவருடைய மனைவியின் இளைய சகோதரி தன்னுடைய தாயார் வீட்டில் வாசஞ் செய்து கொண்டு,

15. வரனின்றி வாழும் போது மாதுமேல் காதல் கொண்டு
அரிவையைப் போகம் தூய்த்து அவளுக்குக் கருவு தங்கி
திருகுகள் செய்யும் போது தேவியு மரண மானுள்
மருவிற்று அந்தத் தோஷம் வரைகிருேம் வேறு ஒன்று.

15. புருஷனில்லாமல் இவள் வாழ்கின்ற காலத்தில் இவள் பேரில் காம ஆசையை ஜாதகரின் தகப்பனுர் உடையவராகி இவளிடத்தில் சம்போ கஞ் செய்யவே, இவளுக்குக் கர்ப்பம் நேரிடவே, இதைக் கலைக்க வைத்தி யங்கள் செய்ததால் இவள் இறந்து போய் விட்டாள். இந்தத் தோஷம் இவரை வந்தடைந்தது. இன்னொரு தோஷத்தையுஞ் சொல்லுகின்ரேம்.

16. ஏழையோர் மணத் துக்காக யிவனை மாங்கலியம் கேட்க
தாழ்விலா தாரே னென்று தைரிய மிவனுக் கோத
ஆழியில் சேகரித்து அடுத்த நாள் முத்திரை கேட்க
பாழான தொழி லினுலே பணி செய்ய மறந்தே
[னென்ன.

16. ஒரு ஏழை கலியாணத்திற்காக ஜாதகருடைய தகப்பனுரை மாங் கல்யம் கொடு என்று கேட்க இந்த தகப்பனுர் கொடுக்கின்றேன் என்று ஏழைக்குச் சொல்லி ஏழையைத் தைரியப் படுத்தினுர். இந்த ஏழை மற்றச் சாமான்களைச் சேகரித்துக் கொண்டு மறுதினத்தில் மாங்கல்யத்தைக்

கொடு என்று தகப்பனுரைக் கேட்கவே, அதிக வேலையினுலே மாங்கல்ட மான ஆபரணத்தைச் செய்ய மறந்து விட்டேன் என்று பதில் சொல்லவே.

17. வேறொரு முத்திரை வாங்கி வித்தகன் மணமுடித்து
கூறுவார் சாபம் தானும் குறிக்கும் பின்சென்மம்
[தன்னில்
பாரியு மனேக மாகப் பரவிடு மென்று சொன்னுன்
மேவிற்று அந்தச் சாபம் நிமலியே கேட்டி டாயே.

17. இந்த ஏழை இன்னொரு மாங்கல்யத்தை வாங்கி விவாகத்தை முடித்து விட்டுத் தகப்பனுருக்குச் சாபத்தைக் கொடுத்தார். மறுஜன்மத்தில் உனக்கு அநேக மனைவிமார்கள் நேரிடக்கடவது என்று இந்த ஏழை தகப்பனுரைப் பார்த்துச் சொன்னுர், இந்தச் சாபம் இவரை வந்தடைந்தது, பார்வதியம்மையே! கேட்பீராக.

18. தன்னிட இனத்தோர் தானும்
சண்டைகள் மிகவே கொண்டு
மன்னர்பால் செல்லும் போது
மாரனும் ஒருவன் தன்பால்
உன்னத வார்த்தை சொல்ல
உறைவதால் குறைவு நேர
துன்மையாய் வார்த்தை யென்மேல்
செப்பின பாவிக் கேதான்.

18, ஜாதகருடைய தகப்பனுர், தன் ஜாதியார் இருவர் சண்டை அதிகமாகப் போட்டுக் கொண்டு அரசாங்கத்தாரிடம் போகவே, ஒருவன் பக்கமாகச் சிறந்த வார்த்தைகளைச் சொல்லவே, இதனுல் மற்றொருவனுக்குக் கெடுதி நேரிடவே, இந்த மற்றொருவன் தகப்பனுரைப் பார்த்து என் பேரில் விரோதமாக வார்த்தைகளைச் சொன்ன பாவியாகிய உனக்கு;

19. மற்றொரு சென்மந் தன்னில் மனைவிகள் மரண மெய்தும்
பற்களும் குறைவு நேரும் பகர்ந்துமே தெருத்தூள்
[விட்டார்
குற்றங்கள் நேர்ந்த தென்றே குமரனும் மந்தி யத்தில்
பித்துப் போல் மனமுமாகிப் புக்கினன் கால நாடு.

19. மறு ஜன்மத்தில் மனைவிகள் இறந்து போகக் கடவது. பற்களும் குறைவுபடக் கடவது, என்று சாபத்தைக் கொடுத்து விட்டுத் தெருவிலுள்ள மண் தூளை வாரி எடுத்துக் காற்றில் தூவி விட்டார், இதனுல் தகப்பனுருக் குத் தோஷங்கள் நேர்ந்து விட்டன என்று சொல்லுகின்றேம். இவர் முன்

ஜன்மத்தின் கடைசி காலத்தில் பித்தனைப் போல, பைத்தியக்காரனைப் போலக் கலங்கின மனத்தையுடையவராகி இறந்து எமபட்டணத்திற்குப் போய் விட்டார்.

20. நரகத்தில் பன்னாட் மூழ்கி நாற்றலை கஞ்சன் தன்னால்
வரியவே வந்தா னென்றோம் மருவிடு முன்னூழ் சாபம்
திருதியாய்ப் பாரி வாய்க்கும் தந்தமும் பிணியு மெய்தும்
கரிமத வானை பெற்றக் காதலி கேட்டி டாயே.

20. ஜாதகருடைய தகப்பனார் நகரத்தில் அநேக நாள்கள் வரையிலும் மூழ்கிக் கிடந்து பின்னால் நான்குதலைகளை யுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்தார் என்று சொல்லுகின்றோம். இவருக்கு முன் ஜன்மத்திய பாவங்களும் சாபங்களும் வந்தடையும். ஆகையால் இவருக்கு மூன்று மனைவிமார்கள் ஏற்படுவார்கள், பற்களுக்கு நோயால் தொந்தரவு ஏற்படும்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

21. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுண்டு [சிவந்த மேனி
முன்கோப முடைய ளாகும் மொழியதைக் காப்பா [ளாகும்
பின்ன மில்லாத தேகி பிறர்குற்றம் புகலா ளாகும்
தன்வரன் மனதுக் கேத்தோள் தங்கிடும் நாபி சூடு.

21, ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகானவள், சிகப்பு நிறமான தேகத்தை யுடையவள். இவள் முன் கோபத்தை யுடையவளாவள். தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் நடந்து கொள்ளக் கூடியவள். இவள் அவயக் குறைவில்லாத தேகத்தை யுடையவளாவள், பிறர் பேரில் நிந்தைகளைச் சொல்ல மாட்டாள் இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருந்து நடந்து கொள்ளக் கூடியவளாவள்; இவளுக்குச் நாபிச் சூட்டு ரோகம் இருக்கும்.

22. வறுமை யெப்போதும் காணாள்
வரனாலே செல்வ மேன்மை
அரமதி லிச்சை கொஞ்சம்
அவசர மனத்த ளாகும்
குறை யென்றோர்க் குதவி
செய்வள் குலமதிப் புடையவாழ்வள்
இருகுண முடைய ளாகும்
யிடர் செய்யாள் யாவருக்கும்.

22. ஜாதகருடைய தாயார் எப்போதும் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மநுபவிக்க மாட்டாள். இவளுக்குத் தன்னுடைய புருஷனாலே அதிக செல்வமுண்டு. இவள் தானதர்மங்களைச் செய்யச் சிறிதளவு பிரியமுள்ளவளாவள். இவள் அவசரப்பட்டுக் காரியங்களைச் செய்யக் கூடியவளாவள். நாங்கள் கஷ்டப்படுகின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு இவள் உபகாரத்தைச் செய்வாள். இவள் தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவப்படுத்தும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள். இவள் நல்லதும் கெட்டது கலந்த குணத்தை யுடையவளாவள். யாருக்குங் கெடுதிகளைச் செய்ய மாட்டாள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவமும் முன்ஜன்மமும்

23. இல்லமும் கீழ்பா லாகும் யிவள்துணை ஆண்பால் மூன்று
வல்லியு மவ்வா றுகும் வரைகிறோ மிவளின் பூர்வம்
எல்லையில் உயர்வதான யெழில் கொங்கு னட்டிலே [தான்
புல்கினன் வன்னிய சேயாய் புதல்வர்க ளதிக முண்டாய்

23. ஜாதகரின் தாயாருடைய வீடு கிழக்குத் திக்கிலிருக்கும். இவளுக்கு மூன்று சகோதரர்களும் மூன்று சகோதரிகளும் உண்டு. இவளுடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். நாடுகளில் சிறந்த நாடாகிய கொங்கு நாட்டில் வன்னிய ஜாதியில் பெண்ணாகப் பிறந்து அநேக பிள்ளைகளை யுடையவளாகி

## ஜாதகரின் தாயாருடைய பின்ஜன்மம்

24. வினையது யில்லா தாகி மேவினள் கால னூடு
கனமுள பிரமன் லக்கம் கலப்பளா மிக் குலத்தில்
சினமிலா யிவள் பின் சென்மம் செப்புவோம் [வேங்கடத்தில்
அனையவே ரெட்டி வம்சம் அருளுவா ளென்று [சொல்வோம்.

24. யாதொரு பாவமுமில்லாமல் இறந்து எம பட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இக்குலத்தில் (அஃதாவது வடுகர் குலத்தில்) வந்து பிறந்தாள். இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவள் வேங்கடம் என்ற திருப்பதி க்ஷேத்திரத்தில் ரெட்டியாருடைய ஜாதியில் பெண்ணாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணமும் மறுஜன்மமும்

25. இருபது னாலுஆண் டுக்குள் யிடப மாதத்தி லேதான்
கரியவள் திசை காலத்தில் கலந்திடும் சுய புகுத்தி
மருவின தந்தை கெண்டம் மறுசென்மம் வேங்க டத்தில்
உரைகுவான் வைசிய சேயாய் உத்தமி கேட்டி டாயே.

25. ஜாதகருக்கு இருபத்து நான்கு வயதிற்குள்ளே இடப மாதம் என்ற வைகாசி மாதத்தில் கரியவன் என்ற சனி தசையில் சுயபுக்தி காலத்தில் இவருடைய தகப்பனுர் இறந்து விடுவார். இவர் தன்னுடைய பின் ஜன்மத்தில் வேங்கடம் என்ற திருப்பதி க்ஷேத்திரத்தில் வைசிய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார், பார்வதியம்மையே! கேட்பீராக.

26. முன்சென்மம் மறை குலத்தில்
உதித்தவ னிச்சென் மத்தில்
தன்குலம் தாழ்வாய் வந்த
சங்கையைச் சொல்லு மென்ன
அன்னவன் முன்சென் மத்தில்
அருமறை ஓதாக் காலம்
பின்குலம் தன்னி லுதித்தான்
பேதையே கேட்டி டாயே.

26, ஜாதகருடைய தகப்பனுர் முன் ஜன்மத்தில் பிராமணராகப் பிறந்திருந்தும் இந்த ஜன்மத்தில் தாழ்ந்த குலத்தில் பிறந்ததற்குக் காரணத்தைச் சொல்லுவீரென்று கேட்கவே, இவர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அருமையான வேதங்களை ஓதாமலிருந்ததால் தாழ்ந்த குலத்தில் பிறந்தார், பார்வதியம்மையே! கேட்பீராக.

27. அன்னைக் கிருபா னெட்டில் ஆடிமா தத்தி லேதான்
துன்மையாய்க் கால னுடு சேருவா ளென்று
[சொல்வோம்
மன்னிய யிருபா னைந்தில் மருவிடும் கெண்ட மொன்று
நன்மையா மென்று சொல்வோம் நாயகி கேட்டி டாயே.

27. நாதகருக்கு இருபத் தெட்டாவது வயதில்* இவருடைய தாயார் ஆடிமாதத்தில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவாள் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்கு இருபத்தைந்தாவது வயதில் இவருடைய தாயாருக்கு ஒரு கெண்டம் நேரிடும், இது தவறிப் போய்விடும் என்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே/ கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தாயாருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு இருபத் தெட்டாவது வயதில் சனி தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசும் ஆகும். தனுசு லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் சனி மாரகராகின்றார். ஆகையால் இங்கு சனி தசையில் தாயாருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய விவாககாலமும் மனைவியின் குணாதிசயங்களும்

28. இன்னவள் மணத்தின் காலம்
யியம்புவோ மிருபான் ரெண்டில்
கன்னிகை கீழ்பால் நேறும்
கழறுவோ மவள் குணத்தை
பின்ன மில்லாத தேகி
புருடனுக் கினிய ளாகும்
அன்னியர் குற்றம் சொல்லாள்
அல்பமாம் கோபம் கொஞ்சம்.

28. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு இருபத்திரண்டாவது வயதில் கிழக்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள், இவளுடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம். இவள் யாதொரு அவயக் குறைவுமில்லாத தேகத்தை யுடையவள், இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாவாள், இவர் பிறர் பேரில் நிந்தைகளைச் சொல்ல மாட்டாள். இவள் சிறிது கோபத்தை அற்பமான விஷயங்களில் உடையவளாவள்.

29. மாந்தளிர் மேனி யாகும் வருவோரை ஆத ரிப்பள்
எந்திய தனத்த ளாகும் ஏழைமேல் பிரிய மாகும்
சேர்ந்தவர் தம்மைக் காப்பள் தீரமா மனத்த ளாகும்
காந்தம் போல் புத்தி யேற்பள் காதலி தீர்க்க சீவி.

29. ஜாதகருடைய மனைவி மாந்தளிரின் நிறமாகிய ஒருவிதமான சிகப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள், இவள் செல்வ முடையவளாவள், ஏழைகளிடத்தில் பிரிய முள்ளவளாக விருப்பாள். இவள் தன்னிடத்திற்கு வந்து சேர்ந்தவர்களைக் காப்பாற்றுவாள். தைரியமான மனத்தை யுடையவளாவள், இவள் காந்தத்தைப் போல இழுக்கின்ற கிரகிக்கின்ற சூட்சுமான, நுட்பமான புத்தியை யுடையவளாவள். இவள் நீண்ட வயதை யுடையவளாவள்.

## ஜாதகருடைய புத்திரபாவமும் முன்ஜன்மமும்

30. சுதர்களும் யிருனுன் காகும் தோன்றிடும் சிலது சேதம்
சதமுடன் ஆண்பால் ரெண்டு சத்திமார் மூவர் தீர்க்கம்
வதிபன் தன்பூர்வ சேதி வரைகிறோ மினிமே லாக
அதிதிவாழ் அருணை கீழ்பால் அருகினில் சிறுஊர்
[தன்னில்,

30, ஜாதகருக்கு மொத்தம் எட்டு குழந்தைகள் பிறக்கும். இதில் சில குழந்தைகள் சீக்கிரம் இறந்து விடுவார்கள். ஆண்குழந்தைகள் இரண்டும், பெண் குழந்தைகள் மூன்றும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இனிமேல் ஜாதகருடைய முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்றோம். இவர் சந்நியாசிகள் வாழ்கின்ற அருணை என்ற அருணாசல மாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்தின் அருகில் கிழக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில்,

31. பிறந்தனன் வேளாளனாக பேதையும் மதலை யுண்டாய்
தரையது விருத்தி செய்து சகலர்க்கு நல்லோ னாகி
மரலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டு
வருகுவா னிந்தப் பாலன் வரைகிறோ மிவனின் யோகம்.

31. வேளாள ஜாதியில் ஆணாகப் பிறந்தார். மனைவி மக்களையுடைய வராகியும் நிலங்களைப் பயிரிட்டும் எல்லோருக்கும் நல்லவராகியும் இருந்து, பிறகு இறந்து எமபட்டினத்திற்குச் சென்று பிரமதேவரால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவருடைய யோகங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய யோகபாவம்

32. உபயசரி யோக மொன்று கேதார யோக மொன்று
பாசமாய் வேசி யோகம் பகர்ந்தனம் பலனைக் கேண்மோ
போசன வறுமை காணான் புண்ணிய மனத்த னாகும்
பேச்சினில் சோரானாகும் பிதுர்பூமி விருத்தி செய்வன்.

32. உபயசரி யோகம் என்ற ஒரு யோக மிருக்கின்றது. கேதார யோகம் என்ற ஒரு யோகம் இருக்கின்றது வேசியோகம் என்ற ஓர் யோகம் இருக்கிறது என்று சொல்லுகின்றோம். இவற்றின் பலனைச் சொல்லுகின்றோம் கேட்பீராக. ஜாதகர் சாப்பாடு விஷயத்தில் கஷ்டங்களை அடையமாட்டார். தானதர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடைய வராவர். இவர் பேசுவதில் களைப்பை அடையமாட்டார். பிதுரார்ஜித நிலங்களைப் பயிரிட்டுத் தான்ய வகையராக்களை அதிகப்படுத்துவார்,

*வியாக்கியானம் :—உபயசரி யோகம் வேசி யோகம் இவற்றின் விஷயம் : சூரியனுக்குப் பன்னிரண்டில் கிரகம் இருப்பது வேசி யோகம் ஆகும். இரண்டில் இருப்பது வாசி யோகம் ஆகும்.

பன்னிரண்டிலும் இரண்டிலும் இருப்பது உபயசரி யோகமாகும் இவை விஷயமாக ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் நூற்றிருபத்தோராவது (121-வது) சுலோகத்தையும், பல தீபிகை ஆறுவது அத்தியாயம் எட்டாவது சுலோகத்தையும், வாசிக்கவும்.

33. இல்லமும் சித்திரம் செய்வன் யிரவி மகன் காலத்தில்
சொல்லுவோ மிருபான் ஞலில் மேலேதான் செய்வா
[ஞதும்
எல்லேகள் அதன்மேல் சேர்ப்பன் எதிரியை நசிக்க
[வைப்பன்
நல்லவ ஞகி வாழ்வன் நாற்காலி விருத்தி யுண்டு.

33. ஜாதகர் தன்னுடைய வீட்டை சித்திரங்களுடன் அலங்காரஞ் செய்வார். இவ்விதமாக இவர் இரவி மகஞகிய சனியினுடைய தசை காலத்தில் தனக்கு இருபத்திஞன்கு வயதிற்கு மேலே செய்வார். இதற்குப் பிறகு நிலங்களேச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார், தன்னுடைய விரோதிகளே க்ஷீணிக்கும்படியாகச் செய்துவிடுவார். இவர் நல்லவராகவிருந்து வாழ்வார், இவருக்கு ஆடுமாடுகள் விருத்தியாகும்.

34. கடன் கொளான் இடுக்கம்
காணுன் காரிய சமர்த்தனுகும்
விட வாக்கன் பெருமை
யேற்பன் வித்தையு மல்பமாகும்
துடையினில் வடிவு மேற்பன்
துருசான நடையு மாவன்
படை வெல்வன் பால்மோரிஷ்டன்
பகரமாம் குடும்பம் யேற்பன்.

34. ஜாதகர் கடன் வாங்கமாட்டார். கஷ்டங்களே அனுபவிக்க மாட்டார், வேலேகளேச் செய்துமுடிப்பதில் கெட்டிக்காரராவார். இவர் விஷமான வாக்கையுடையவர். அஃதாவது இவர் சொல்லுகின்ற கெட்ட விஷயங்கள் அப்படியே நடைபெறும், புகழையடைவார், இவருக்குப் படிப்பு சுவல்பமாக விருக்கும். இவர் துடையில் அடையாளத்தையுடையவராவர். கெட்ட நடவடிக்கை யுடையவராவர். எதிரிகளே ஜயித்து விடுவார். இவர் பால், மோர் ஆகிய இவற்றின் பேரில் பிரியமுள்ளவர். மேன்மையான குடும்பத்தை யுடையவராவர்.

35. தந்தைபின் குடும்பம் வேறு
சாற்றுவோம் பால னுக்கு
முந்திதாய் புதல்வர் வேருய்
மூலச் குடுடை யனுகும்

முந்திஞள் பூமி பொன்னும்
மேவிடும் முப்ப தாண்டில்
வந்தவர்க் கன்ன மீவன்
வடிமையோ குடி பெருக்கம்.

35. ஜாதகரின் தகப்பஞருடைய குடும்பம் வேறு குடும்பமாக விருக்கும். ஜாதகரின் மூத்த தாயாருடைய பிள்ளைகள் வேறு குடும்பத்தையுடையவராவர். ஜாதகர் மூலச்சூட்டு ரோகத்தை யுடையவராவர். பூர்வீகமான நிலம், தனம் ஆகிய இவை இவருக்கு முப்பதாவது வயதில் வந்து சேரும். இவர் தன்னிடத்திற்கு வருகின்றவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். வேலையாட்கள் அதிகப்படுவார்கள்.

## ஜாதகருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

36. அறுபது ஆறு ஆண்டில் அழகிய கன்னி மாதம்
திருதிகை திதியு மாகும் தேய்பிறை காலம் தன்னில்
மரலியின் நாட்டை யின்ஞேன் வாங்குவான் பின்சென்
[மம்கேள்
பிரிதிவு தலத்திலே தான் பிறப்பஞம் சௌராஷ்டிர
[வம்சம்.

36. ஜாதகர் தனக்கு அறுபத்தாருவது வயதில் கன்னி மாதம் என்ற, புரட்டாசி மாதத்தில் தேய்பிறையில் திரிதிகைதிதி தினத்தில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவார். இவருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. பிரிதிவு ஸ்தலம் என்ற காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர ஜாதி என்ற பட்டுநூல்காரர் ஜாதியில் மறுஜன்மத்தில் பிறப்பார்.

## ஜனனகால தசையும் இருப்பும்

37. செனித்திடு காலம் தன்னில் செக்குஞள் மூன்ரும் பாதம்
கனமுள ராகு தன்னில் கலந்திடு மாண்டு ஞலும்
சினமிலா திங்க ளேழும் செப்புவோம் பூர்வ பாகம்
இனி உத்திர பாகம் தன்னில் யியம்புவோம் விபரமாக.

37. ஜாதகர் பிறக்குங் காலத்தில் செக்குநாள் என்ற சதய நக்ஷத்திரத்தில் மூன்ருவது பாதம் ஆகும். இதற்குரிய ராகு மகா தசையில் இருப்பு நான்கு வருஷங்களும் ஏழு மாதங்களும் ஆகும். இதுவரையிலும் பூர்வபாகம் என்ற முதலாவது பாகம் ஆகும். இனிமேல் விவரமாக உத்திர பாகம் என்ற இரண்டாவது பாகத்தில் மற்ற விஷயங்களைச் சொல்லுகின்ரும்.

# ஜாதகம் 31

## ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் [1]மேருவாக சனிகுரு [2]மான தாக
[3]புந்தியும் [4]வெள்ளி [5]சாடி [6]புரவியோன் [7]சேயு மீனம்
[8]மந்திரக் கயறு [9]கோலதாக [10]மாதையும் செனன மாக
இந்தவார் கிரகம் நின்ருல் யியம்புவீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் தனுசிலும், சனியும் குருவும் மகரத்திலும் புதனும் சுக்கிரனும் கும்பத்திலும் சூரியனும் அங்காரகனும் மீனத்திலும், ராகு துலாத்திலும் (கேது மேஷத்திலும்) இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்வீர் என்று

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சூரியன் அங்காரகன் | கேது | | |
| புதன் சுக்கிரன் | இராசி சக்கரம் | | |
| குரு சனி | | | |
| சந்திரன் | | ராகு | லக்கினம் |

மூலம் 4-ஆம் பாதம் கேது தசை ஷ 1—2—0

*குறிப்பு;—இந்த ராசிச் சக்கிர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும்:—ரிஷபத்தில் புதனும் மிதுனத்திற் குருவும், கடகத்திற் சந்திரனும், சிம்மத்திற் கேதுவும், விருச்சிகத்திற் சுக்கிரனும், தனுசிற் சூரியனும் அங்காரகனும், மகரத்திற் சனியும், கும்பத்திற் ராகுவும் ஆகும். அங்காரகன் அஸ்தங்கதத்திலிருக்கின்ருர்.

---

1. தனுசு
2. மகரம்
3. புதன்
4. சுக்கிரன்
5. கும்பம்
6. சூரியன்
7. அங்காரகன்
8. ராகு
9. துலாம்
10. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. மங்கையும் கேட்கும் போது வதிஷ்டரும் கூறு கின்றார்
இங்கிவை ஆண்பால் ஜென்மம் யில்லமும் தனிய தாகும்
தென்வாடை யெதிரில் பாழாம் தேவியு மேல்பால்
[தங்கும்
சங்கையாய் அயலார் யில்லம் சாற்றுவோம் சிறு
[ஊராகும்.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது வசிஷ்ட மகரிஷி சொல்லு கின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு தனிவீடாகும் தென்னண்டை வாடையிலிருக்கும், எதிர் வீடு பாழான வீடாகும். பார்வதி யம்மையார் கோவில்மேற்குத் திக்கிலிருக்கும். அன்னியருடைய வீடாகும். இந்த ஊர் சிறிய கிராமமாகும்

3. பாலகன் மூன்றும் ஜென்மம் பகருவோம் வடுகர் வர்க்கம்
ஏலவே குடும்பச் சேதி யிவன்அன்னை தந்தை யோகம்
சாலவே துணைவர் யோகம் தன்மனை புத்திர யோகம்
ஏலவே முன்பின் ஜென்மம் யியம்புவோம் மின்னால்
[தன்னில்.

3. ஜாதகர் மூன்றாவது குழந்தையாகப் பிறப்பார் என்று சொல்லு கின்றோம். இவர் வடுகர் ஜாதியிற் பிறந்தார். இவருடைய குடும்ப விஷயம் இவருடைய தாய் தகப்பனார், ஆகிய இவர்களின் யோகம், சகோதரர் யோகம், மனைவி, மக்கள் யோகம், முன்ஜன்மம், பின்ஜன்மம், ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரபாவம்

4. தந்தையின் துணைஆண் ஒன்று
சக்தியு மவ்வார் தீர்க்கம்
அந்த ஆண்யிளை யோனாக
அறைகிறோ மவன் குணத்தைச்
சொந்த யில்லத்தை நீக்கி
துடருவான் வெளியூர் தென்கீழ்
நிந்தை யில்லாமல் வாழ்வன்
நேமியால் சீவிப் பானும்.

4. ஜாதகருடைய தகப்பனாரின் சகோதரங்கள் ஒரு ஆணும், ஒரு பெண்ணும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். :இந்தச் சகோதரர் இளைய சகோதரராவர். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தன்னுடைய சொந்த வீட்டை விட்டுவிட்டுத்

தென்கிழக்கிலுள்ள ஒரு வெளியூருக்குப் போய்விடுவார். இவர் அபவாத மில்லாமல் வாழ்வார். நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார்.

5. கன்னிகை மூலம் செல்வான்
காலிகள் விருத்தி அல்ப்பம்
பின் வயதினிலே யோகம்
பேசுவோம் வறுமை காணுன்
தன்மனை ஒன்று யென்றேம்
சந்ததி ஆண்பால் ரெண்டு
மன்னிய கன்னி ரெண்டு
வரைகிறேம் தீர்க்க மாக.

5. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர் தன்னுடைய மனைவியின் மூலமாக வெளியூருக்குப் போவார். கால்நடைகள் விருத்தி அற்பமாகும். இவருக்கு பின்வயதில் யோகம் உண்டாகும் என்று சொல்லுகின்றேம். இவர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மடையமாட்டார். இவருக்கு மனைவி ஒன்றே என்று சொல்லுகின்றேம், இவருக்குக் குழந்தைகள் இரண்டு ஆண்களும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப் பார்கள்.

6. இருவித குணத்தா னுகும் யெய்திடும் நாபி சூடு
அரிவையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் [சிவந்த மேனி
மர்ம மில்லாதா ளாகும் மைந்தர்கள் ஆண்பா லொன்று
பெருமையாய் குடும்ப மேற்பன் பூமிகள் வறுமை [காணுள்.

6. ஜாதகரின் தகப்பனுருடைய இளைய சகோதரர் நல்ல குணமும் கெட்ட குணமும் கலந்துள்ள நடுத்தரமான குணத்தை யுடையவராவர். இவருக்கு நாபிச்சூட்டு ரோகமுண்டு. இனிமேல் ஜாதகரின் தகப்பனு ருடைய சகோதரியின் குணுதிசயங்களைச் சொல்லுகின்றேன். இவள் அழகாக விருப்பாள். சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவள் இவள் தன்னுடைய மனத்தில் ரகசியத்தை யுடையவளல்லள். இவளுக்கு ஒரு ஆண் குழந்தைதான் உண்டு. இவள் மேன்மையான குடும்பத்தை யுடையவளாவள். இவளுக்கு நிலங்களுமுண்டு, இவற்ருல் கஷ்டங்கள் நேரிடா.

7. வருவோரை ஆதரிப்பள் மறு ஊரில் வாசம் செய்வள்
பொறை சொலாள் யிள மனத்தள் புருடனுக் கினிய [ளாகும்

திருமகளொப்ப தாகும் சீலியாம் தெய்வ பக்தி
அறிவுளாள் அதிதிக் கன்னம் அன்புட னீவா
[ளென்றேம்.

7. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரி தன்னிடத்திற்கு வருகின்றவர்களை ஆதரிப்பாள். இவள் அடுத்த கிராமத்தில் வாசஞ் செய்வாள். இவள் பிறர்பேரில் குற்றங்களைச் சொல்லமாட்டாள். இவள் தயாள குணமுடையவளாவள், தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவள். இவள் லக்ஷ்மிக்குச் சமானமானவளாவள். பரிசுத்தமானவள், நல்லொழுக்க முள்ளவளாவள். தெய்வங்களின் பேரில் அன்புடையவளாவள். இவள் புத்திசாலியாகவிருப்பாள், சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் பிரியமாய்ப் போடுவாள் என்று சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

8. தந்தையின் குணத்தைச் சொல்வேன்
சாந்தவான் சரச வார்த்தை
தந்தமும் பெரிதாய்க் காட்டும்
தரணியால் சீவிப் பானும்
தந்தையின் ஆஸ்தி தன்னைத்
தானவன் விரையம் செய்வன்
தந்தை யில்லம் விட்டுச்
சாறுவான் வேறூர் தன்னில்.

8. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் சாந்தமுடையவராவர். இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவருக்குப் பற்கள் பெரியனவாகத் தோன்றும். இவர் நிலங்களைப் பயிரிட்டுஜீவிப்பார். இவர் பிதிரார்ஜித சொத்துக்களை அழித்துவிடுவார். இவர் தன் தகப்பனுருடைய வீட்டை விட்டுவிட்டு இன்னொரு கிராமத்திற்கும் போய்விடுவார்.

9. அன்னையு மிரண்டு மாகும் அணுகிய முன்தாய்க்
[கின்ஞேன்
சொன்னதைக் காப்பா ஞகும் சஞ்சல மனத்த ஞகும்
பின்னமாம் வாயு பாதை பொய்யது புகலா ஞகும்
தன்துணை பக்கம் பின்னுல் சாறுவான் தென்பால்
[தன்னில்.

9. ஜாதகருடைய தகப்பனுருக்கு இரண்டு தாய்மார்களுண்டு. இவர் மூத்த தாயாருக்குப் பிறந்தவராவர். இவர்தான் சொல்லுகின்றபடியே நடந்துகொள்ளக் கூடியவர், நிலையில்லாத, துன்பத்தையுடைய மனத்தையுடையவராவர். இவர் வாய்வு ரோகத்தால் கஷ்டத்தையடைவார்,

அதனுல் அவயவபங்கத்தையு மடைவார். இவர் பொய்யைச் சொல்ல மாட்டார். இவர் தன்னுடைய பிற்காலத்தில் தெற்குத் திக்கிலுள்ள தன்னுடைய சகோதரரிடத்திற்குப் பக்கத்தில் போய்ச் சேருவார்.

10. கரமதில் பிரம்ம ரேகை கஞ்சமா நிறத்த னுகும்
உறன்முறைக் கிணக்கம் சொல்வள் உறுதி யில்லாத [நெஞ்சம்
திருகுகள் ஒருவர்க் கெண்ணுன் செய்நன்றி மறவா னுகும்
அரிபோலே கோப முண்டு அம்பிகை யாளே கேளாய்.

10. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய உள்ளங்கையில் பிரம ரேகையை யுடையவராவர். இவர் தாமரைப் பூவைப் போன்ற சிகப்பு நிறத்தையுடையவராவர். இவர் தன்னுடைய பந்துக்களுக்கு வணங்கிப் பதில் சொல்லுவார். இவர் திடமான நிலையான மனத்தை யுடையவரல்லர், இவர் எவருக்கும் கெடுதிகளை நினைக்க மாட்டார். இவர் பிறர் தனக்குச் செய்த உபகாரத்தை மறக்கமாட்டார். இவருக்குச் சிங்கத்திற்கு வருவதை போலக் கோபமுண்டாகும். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

11. சொன்ன யிக்குணத்தா னுக்குத் தோகையர் யிருவர் [தம்மில்
பின்மனை யாளுக் கின்னேன் பிறப்பனு மிந்தப் பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அஞ்சிடான் [யெதிரி கட்கு
பின்ன மில்லாத தேகி பொய் மெய்யாய்ப் புகல்வானுகும்.

11. இதுவரையிலுஞ் சொல்லப்பட்ட குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்குரிய இரண்டு மனைவிமார்களில் இரண்டாவது மனைவிக்கு இந்த ஜாதகர் பிறந்தவராவர். இவருடைய குணுதிசயங்களை இனிமேல் சொல்லுகின்றேன். இவர் விரோதிகளுக்குப் பயப்பட மாட்டார். இவர் யாதொரு அவயவக் குறைவில்லாதவர், இவர் பொய்யை மெய் என்று சொல்லமாட்டார்.

12. வித்தையு முடைய னுகும் விவேகியாம் யூகை சாலி
சித்தினி சாதி யாகும் சிலேடை யாய்ப் பேசு வானும்
எத்திசை நல்லோ னுவன் யினமெச்ச வாழ்வா னுகும்
புத்தியில் பெரியோ னுவன் புண்ணிய மனத்த னுகும்.

12. ஜாதகர் வாசித்தவராவர். அறிவாளியாக விருப்பார், நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை யுடையவராவர், இவர் சித்தினி ஜாதி* மனிதரைச் சேர்ந்தவராவர். இவர் தான் சொல்லு

கின்ற பதங்களுக்கு இரண்டு அர்த்தங்கள் ஏற்படும்படியாய் அலங்காரமாக வும் சாமர்த்தியமாகவும், பேசுவார். இவர் எவ்விடத்திலும் நல்லவராவார். தன்னுடைய பந்துக்கள் இவரைக் கௌரவத்துடன் மதிக்கும்படியான அந்தஸ்திலிருந்து வரம்வார். இவர் அறிவில் பெரியவராவர். தானதர்மங் களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவராவர்.

*குறிப்பு :—சித்தினி ஜாதி விஷயம் :—சித்தினி ஜாதி மனிதர் சங்கீத சாஸ் திரம் சிற்ப சாஸ்திரம் இவைகளை அறிந்தவராவர். மழமழப் புடைய அழகிய தேகத்தை யுடையவராவர். மானைப்போன்ற கண்களையும், தாமரையைப்போன்ற முகத்தையும், யானையைப் போன்ற கம்பீரமான நடையையும், மயிலைப் போன்ற குரலை யும், அதிசயமான தொனியையும் உடையவராவர். வித்தை யில் அதிக விருப்பமுள்ளவர். மகா கவிஞர்களுக்குப் பிரிய மானவராவார், சாமுத்திரிகா லக்ஷணம் என்று புத்தகத்தில் இரண்டாவது பாகத்தில் எழுபத்தோருவது பக்கத்தைப் பார்க்கவும்.

13. பூமியும் பெருக்கம் செய்வன் புயபல முடைய னுவன்
தீமையை யொருவர்க் கெண்ணுன் சென உபகாரி யாகும்
மாமிகள் யிரண்டே யாகும் வளைவுமே சித்திரம் செய்வன்
சாமிமேல் பத்தி பூண்பன் சல்லியம் கொள்ளா னுகும்.

13. ஜாதகர் நிலங்களை அதிகமாக்குவார். தோள்வலிவை யுடையவ ராவர். இவர் யாருக்குங் கெடுதிகளை நினைக்க மாட்டார். ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்பவராவர். இவருக்கு இரண்டு மாமியார்களுண்டு. வீட்டைச் சித்திரங்களுடன் அலங்கரிப்பார். இவர் கடவுளின் பேரில் அன்புடையவராவர், இவர் கடன் வாங்கமாட்டார்.

14. ஆதியில் குடும்ப மலேச்சல் அவன்தந்தை யில்லம் [பாழாம்
காதியும் அதிகம் யேற்பன் கட்செவி போலே கோபம்
பாதியின் வயது மேலாய்ப் பலஊர் பூமி சேர்ப்பன்
சாதிப்பான் சிலது சங்கை தைரிய முடைய னுமே.

14. ஜாதகர் தன்னுடைய முற்காலத்தில் குடும்பக் கஷ்டங்களை அநுப விப்பார். இவருடைய தகப்பனுருடைய வீடு நாசமடைந்து விடும். இவர் அதிக புகழையும் பெருமையையு மடைவார். இவருக்குப் பாம்பிற்கு வருவதுபோலக் கோபம் வரும். இவர் தன்னுடைய பாதி வயதிற்குப் பிறகு பல கிராமங்களில் நிலங்களை வாங்கிச் சேர்த்துவைப்பார். இவர் சில காரியங்களைச் செய்து முடிப்பார். தைரியத்தை யுடையவராவர்.

## ஜாதகருடைய யோகபாவம்

15. யோகமெவ் விதமாய்ச் சொன்னீர் உரைப்பீர்க ளந்தச் [சங்கை
பாகனும் புகரும் கூடி பனிமதி நாலிலாக
ஆகமன் சனியு மஞ்சில் அதிதியு மேடமாக
போக காரகனு மேழில் பொருந்தியே யிருப்ப தாலே.

15. ஜாதகருக்கு யோகத்தை எவ்விதமாகச் சொன்னீர்? இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, பாகன் என்று புதனும், புகர் என்ற சுக்கிரனும் கூடி இருப்பதாலும், குளிர்ந்த மதி என்ற சந்திரன் நான்காவது வீட்டி லிருப்பதாலும், ஆகம்ன் என்ற குருவும் சனியும் ஐந்தாவது வீட்டி லிருப்பதாலும், அதிதி என்ற கேது மேஷத்திலிருப்பதாலும், போககாரக னுகிய மூன்ருவது வீட்டிற்குரிய அங்காரகன் ஏழாவது வீட்டிலிருப்பதாலும்,

16. அந் தாண்டு முதலாயாக
அதின்மேல்பால் பிறைபோல் யோகம்
சிந்தையும் கலக்க மேற்கும்
செய்நிலம் சேர்த்த லுண்டு
பந்தினர் மதிக்க வாழ்வன்
பிறப்பினுல் சுகமே யெய்தும்
எந்திடம் பெருமை யேற்பன்
யிடுக்கங்கள் அதின்மேல் காணுன்.

16. ஜாதகருக்கு ஐந்தாவது வயது முதற்கொண்டு இதற்குப் பிறகும் வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் யோகம் அதிகப்பட்டுக் கொண்டே போகும். இவருடைய மனத்திற்குத் துன்பங்கள் நேரிடும். பயிரிடும் நிலங்கள் வாங்கப்பட்டுச் சேர்க்கப்படும். இவர் தன்னுடைய பந்துக்கள் இவரை மதிக்கும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவருக்குத் தன்னுடைய சகோதரங்களினுல் சௌகரியங்கள் ஏற்படும். இவர் எவ்விடத்திலும் கௌரவத்தை யடைவார். இதற்குப் பிறகு இவர் கஷ்டங்களை அடையமாட்டார்.

17. பருவத யோக மொன்று
பகர்ந்தனம் சுனபா யோகம்
அரிவையாம் வேசி யோகம்
அதின்பலன் புகலக் கேண்மோ
இருபது ஆண்டின் மேலாய்
இன்பங்கள் பெருகு மென்ருேம்
குறைவிலா குடும்ப மாகும்
குலமதிப் புடைய வாழ்வன்,

17. பர்வதயோகம்* என்ற ஒரு யோகம் இருக்கின்றது. சுனபா யோகம்* என்ற ஒரு யோகம்கூட யிருக்கின்றது. அரிவை என்ற வேசி யோகம்* கூட இருக்கின்றது. இந்த யோகங்களின் பலன்களைச் சொல்லு கின்றோம், கேட்பீராக. ஜாதகருக்கு இருபது வயதிற்கு மேல் சௌக்கியங் களும் சுகபோகங்களும் அதிகப்படும் என்று சொல்லுகின்றோம். இவர் குடும்பம் கஷ்டத்தை அடையாமல் விருத்தியை யடையும். இவர் தன் னுடைய பந்துக்கள் இவரைக் கௌரவப் படுத்தும்படியான அந்தஸ்தி லிருந்து வாழ்வார்.

*வியாக்கியானம்:—பர்வத யோகம் என்பது லக்கினாதிபதியாகிய புதன் இருக்கின்ற ராசியாகிய கும்பத்தின் அதிபதியாகிய சனி தன் னுடைய சுய க்ஷேத்திரத்தில் ஐந்தாவது வீடாகிய கோணத்தி லிருப்பதால் ஏற்பட்டதாகும். இது விஷயமாகப் பல தீபிகை *ஆருவது அத்தியாயம் முப்பத்தோராவது முப்பத்திரண்டாவது* சுலோகங்களைப் பார்க்கவும். இவை சில பதிப்புகளில் 35-வது 36-வது சுலோகங்களாகும். ஜாதக சிந்தாமணியில் இரண்டா யிரத்தி நூற்றி நாற்பத்தொன்பதாவது (2149–ஆவது) பாடலை யும் வாசிக்கவும். *சுனபா யோகம் விஷயமாய்க் கீரனூர் நடராஜருடைய ஜாதகாலங்காரம் இருநூற்றெண்பத் திரண் டாவது (282–வது) பாடலையும் ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 72–73–வது சுலோகங்களையும், பல தீபிகை ஆருவது அத்தியாயம் 4–5-வது சுலோகங்களை வாசிக்கவும். சந்திரனுக்கு இரண்டாவது வீட்டில் கிரகங்கள் இருப்பது சுனபா யோகமாகும்.

*வேசியோகம் என்பது சூரியனுக்குப் டன்னிரண்டில் கிரகமிருப்பதாகும். இதுவிஷயமாகத் தமிழ் ஜாதகாலங்காரம் இருநூற்றெழுபத் தேழாவது (277-வது) பாடலையும், ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் 121-வது சுலோகத்தையும் ஜாதக சிந்தாமணி 2049-வது பாடலையும் வாசிக்கவும்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

18. *இவனுட துணைவர் தன்னை யியம்புவோ மாண்பால்*
*[தோஷம்*
*நவனியில் கன்னி ரெண்டு நவிலுவோம் தீர்க்க மாக*
*தவமுனி புகலு கின்ருர் செப்பினீர் முன்தாய் ஒன்று*
*அவளுக்குச் சுதர்கள் உண்டோ அறிவிப்பீர் முனியே*
*[நீதான்.*

18. ஜாதகருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குச் சகோதரர் கிடையா*. இரண்டு சகோதரிகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். அகஸ்தியர்

தடுத்துக் கேட்கின்றார், முதல் தாயார் உண்டு என்று சொன்னீரே, இவளுக்குக் குழந்தைகள் உண்டோ இல்லையோ என்பதை தெரிவிப்பீர், முனிவரே! நீர் என்று கேட்க,

*வியாக்கியானம்:—சகோதரதோஷ விஷயம்:—சகோதர ஸ்தானம் மூன்றாவது வீடு. இதற்குரிய அங்காரகன் சூரியனுடன் கூடியிருக்கின்றார். "பரிதியு மூன்றோன் கூடில் பாலன் பின் இல்லை மாதே" என்ற பாடலைப் பார்க்கவும். இந்தப் பாடல் தமிழ் மணி கண்ட கேரளம் சகோதர காண்டம் ஆறுவது பாடலாகும். மூத்த சகோதரகாரகர் குரு. இவர் நீச்சத்தையடைந்து சனியுடன் கூடியிருக்கின்றார். ஆகையால் மூத்த சகோதர தோஷ மிருக்கின்றது. மூத்த சகோதர ஸ்தானமாகிய பதினோராவது வீட்டிற்குடைய சந்திரன் தன் வீட்டிற்கு ஆறுவது வீட்டில் மறைந்திருப்பது மூத்த சகோதர தோஷமாகும். மேலும் இந்தப் பதினோராவது வீட்டைச் சனி பார்ப்பது சகோதர மாகும்,

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

19. *கன்னிகை ஒன்று தீர்க்கம் காதலி மரிப்பா ளாகும்*
*பின்தாயாம் யிவனின் அன்னைப் பேசுவீர் அன்னை [குணத்தை*
*மன்னவன் மனதுக் கேற்றாள் மாஞ்சிவப் புடைய [ளாகும்*
*கன்னென மொழியு முண்டு கடூரமு சாந்த முண்டு.*

19. ஜாதகருடைய முதல் தாயாருக்கு ஒரு பெண் நீண்ட ஆயுளையுடையவளாக விருப்பாள். முதல் தாயார் இறந்துவிடுவாள். ஜாதகருடைய தாயார் பின் தாயாராவள். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுவீர். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாகவிருந்து நடந்துகொள்ளக் கூடியவளாவள். இவள் மாந்தளிரின் சிகப்பைப்போன்ற ஓர் வித சிகப்பு நிறமான தேகத்தை உடையவளாவள். இவள் சர்க்கரையைப் போன்ற இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் குரூரமான குணத்தையும் சாந்தமான குணத்தையும் ஆக இவ்விரண்டு குணங்களையும் உடையவளாவள்.

20. *மனதினில் கபடு கொஞ்சம் வருவோரை ஆதரிப்பள்*
*தனம் பணி அதிகமில்லாள் தாயில்லம் வட கீழாகும்*
*வனிதைக்குத் துணைஆண் ஒன்று மங்கையும் அவ்வார் ]தீர்க்கம்*
*இனத்துக்கு யிணக்கம் சொல்லாள் யிடறது யெவர்க்கு [மென்றாள்;*

20. ஜாதகருடைய தாயார் தன் மனத்தில் சிறிது வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றை யுடையவளாவள். இவள் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். செல்வமும் ஆடை ஆபரணமும் அதிகமாக வுடையவளல்லள். இவளுடைய தாயார் வீடு வடகிழக்குத் திக்கிலிருக்கும். இவளுக்குச் சகோதரர் ஒருவராவர், சகோதரியும் ஒருத்தியாவள். இவ்விருவரும் நீண்ட ஆயுளை யுடையவராவர். இவள் தன் பந்துக்களுக்கு வணங்கி நடக்கமாட்டாள், இவள் யாருக்குங் கெடுதியை நினைக்க மாட்டாள்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

21. மங்கையின் பூர்வம் சொல்வேன் வள்ளுருக்கு
[மேல்பாலாக
தங்கின சிறுஊர் தன்னில் சனித்தனள் ரெட்டி வம்சம்
பொங்கிய குடும்பி யாகிப் பூமியில் வறுமை யின்றீ
சங்கையாய்க் கால ஞடு சென்றுமே பிரமன் லக்கம்.

21. ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் திருவள்ளுருக்கு மேற்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் ரெட்டியாருடைய ஜாதியில் பிறந்து மேன்மையான குடும்பஸ்தளாகித் தரித்திரமும் கஷ்டங்களுமில்லாமல் வாழ்ந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு,

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மமும்

22. வந்தவ னென்று சொல்வோம் மறுசென்மம் விரிஞ்சி
[நாட்டில்
பிந்திய குலமு தித்து பொருளது பெருக்க மாகிச்
சந்ததி யுடைய ளாகித் தரணியில் வாழ்வா ளாகும்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்ருது.

22. இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுவோம். இவள் தன்னுடைய பின் ஜன்மத்தில் விரிஞ்சி நாட்டில் தாழ்ந்த ஜாதியில்பிறந்து அதிகமான சொத்தை யுடையவளாகியும் குழந்தைகளை யுடையவளாகியும் இந்தப் பூமியில் வாழ்வாள். முருகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

23. தந்தையின் பூர்வம் சொல்வேன் தாம்பிர பரணி
[தன்னில்
விந்தைசெய் வைசிய சேயாய் நேர்ந்ததுமே செட்டு
[செய்து

வந்திடு மனைவி மைந்தர் வளமுள குடும்பி யாகி
அந்தவன் வாழும் நாளில் அணுகின வினையைக்
[கேண்மோ.

23. ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவர் தாம்பர பரணி நதி தீரத்தில் வைசிய ஜாதியில் ஆணுகப் பிறந்து, வியாபாரத்தைச் செய்துகொண்டும், மனைவிமக்களை யுடையவராகி யும், செழிப்பான குடும்பியாயும் இருந்து வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

24. இறப்பினி கூடு கட்டி இருக்கிற பட்சி தன்னை
குறிப்பாக அதனைக் கண்டு கூடுவை கலைத்தா
[னென்றோம்
மருவிற்று அதுஓர் தோஷம் மறை குலத்தோர் களுக்கு
குறை செய்தான் கணக்கிலேதான் கூறுவார் மறையோர்
[தானும்.

24. இரவாணத்தில் கூண்டைக் கட்டி வாசஞ்செய்து கொண்டிருந்த ஒரு பட்சியின் (ஊர்க்குருவியின்) கூண்டைக் கலைத்துவிட்டார் ஜாதக ருடைய தகப்பனுர். இது ஒரு தோஷமாக இவரை வந்தடைந்தது. மேலும் பிராமணர்களுக்குக் கணக்கு எழுதுவதில் ஒரு தீங்கை விளைவித்துவிட் டார். இதன்பேரில் பிராமணர்கள் சொல்லுகின்றுர்கள்.

25. வஞ்சனை செய்த பாவி மறுசென்மம் மனைவி மாண்டு
கொஞ்சிய யில்லம் யேகும் கொடியது அலைச்சல்
[சின்னுள்
நஞ்சுண்ட மனம் போல் வாழ்வாய் நமுவிடும் தந்தை
[யாஸ்தி
வெஞ் சினமாகச் சொன்னுர் மேவிற்று அந்தச் சாபம்.

25. வஞ்சனை செய்த பாவியாகிய நீ உன்னுடைய மறு ஜன்மத்தில் மனை வியை மரணத்தால் இழந்தும், உன்னுடையபிறந்த வீடு அழிந்து போயும், சில காலம் நீ கொடிய கஷ்டங்களை அநுபவித்தும், விஷத்தை அருந்தியவரு டைய மனத்தைப் போல வாழக்கடவது, உன்னுடைய பிதுரார்ஜித சொத்தும் அழிந்து போகக் கடவது என்று பிராமணர்கள் ஜாதகருடைய தகப்பனுரைப் பார்த்துக் கடுமையான கோபத்துடன் சொன்னுர்கள், இந்தச் சாபமும் இவரை வந்தடைந்தது.

26. ஆகையால் யிச்சென் மத்தில்
அடைக்கலான் கூடின் தோஷம்
ஏகிடும் யில்லம் தானும்
இரு பிறப்பாளர் சாபம்

தோகையு மிரண்டு நேறும்
தூறுவான் வெளியூர் தன்னில்
பாதமாய் வன வாசங்கள்
பண்ணுவான் சிலது ஞள்கள்.

26. ஆகையால் ஜாதகரின் தகப்பனுருக்கு இந்த ஜன்மத்தில் அடைக்கலான் என்ற ஊர்க் குருவியின் கூண்டைக் கலைத்த தோஷம் வந்து சம்பவிக்கும். இதனுல் இவருடைய வீடு போய் விடும்! பிராமணர்களுடைய சாபத்தால் இவருக்கு இரண்டு மனைவிமார்கள் வாய்ப்பார்கள். இவர் வெளியூருக்குப் போய்விடுவார். இவர் வனவாசங்களைச் சில காலஞ் செய்வார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய பின்ஜன்மம்

27. பின்சென்மம் காளாத்தி கீழ்பால் பேரூரில் யிக் குலத்தில்
அன்னவன் உதித்து மேலும் அழகாகக் குடும் பியாகி
பொன் பணி உடையனுகி பூமியில் வாழ்வா ஞகும்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

27. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய மறுஜன்மத்தில் காளாஸ்திரியின் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் இந்த ஜன்மத்திய வடுகர் ஜாதியிலேயே ஆணுகப் பிறந்து அழகான, சிறந்த குடும்பஸ்தராகிப் பணத்தையும் ஆடை ஆபரணங்களையும் உடையவராகி இந்தப் பூமியில் வாழ்வார். மேன்மையான முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக,

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணகாலம்

28. இருபது ஒன்ப தாண்டில் இடப மாதத்தி லேதான்
மரலியின் நாட்டை தந்தை வாங்குவா னென்று
[சொல்வோம்
பிறைதிசை நடக்கும் காலை பேசுவோ மார கங்கள்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

28. ஜாதகருக்கு இருபத்தொன்பதாவது வயதில் இடப மாதம் என்ற வைகாசி மாதத்தில் இவருடைய தகப்பனுர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேருவார் என்று சொல்லுகின்ருேம். இவருக்குப் பிறை என்ற சந்திர மகா தசை நடக்கும் காலத்தில்* மரணத்தைச் சொல்லுவோம், அருமையான வேதங்களின் முடிவு என்று உபநிஷத்துக்களின் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—பிதுர்மாரக விஷயம் :—பிதுர்லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகப் பிரகாரம்

சந்திரன் மாரகராகின்றுர். ஆகையால் இங்கு சந்திர மகா தசையில் பிதுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலம்

29. நாற்பது யேழு ஆண்டில் நற்றுலா மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் குறித்ததோ ரன்னை தன்னை
ஏற்கவே பித்த பாண்டால் லெய்திடு மென்று
[சொல்வோம்
ஆர்க்கவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

29. ஜாதகருக்கு நாற்பத்தேழாவது* வயதில் துலா மாதம் என்ற ஐப்பசி மாதத்தில் இவருடைய தாயாரை எமதர்மராஜர் அழைப்பார், இவள் இக்காலத்தில் பித்தபாண்டு ரோகத்தால் இறந்து விடுவாள் என்று சொல்லுகின்றோம். தங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே/ கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம்:—மாதிரு மாரக விஷயம்:—ஜாதகருக்கு நாற்பத்தேழாவது வயதில் இராகு தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இந்த தனுசு லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்றுர் இந்தச் சுக்கிரன் வீட்டில் இருக்கின்ற ராகு ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரம் சுக்கிரனுடையபலனைக் கொடுக்க வேண்டியவராகின்றுர். ஆகையால் இவர் தன் தசையில் மாதிருக்கு மாரகத்தைத் தருவார். ஆகையால் இங்கு ராகு தசையில் தாயாருக்கு மரணஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

30. சாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருப தாண்டில்
காதலி வடகீழ் தன்னில் கலப்பளாம் அன்னை வர்க்கம்
ஓதுவேன் அவள் குணத்தை உவமையாய்ப் பேசுவா
[ளாம்.
சீதள குணத்த ளாகும் திருமக ளொப்ப தாகும்.

30. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்: இவருக்கு இருபதாவது* வயதில் வடகிழக்குத் திக்கிலிருந்தும் தாயாருடைய வம்சத்திலிருந்தும் மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் உபமானம் உபமேயம் ஆகிய இவற்றை உபயோகப் படுத்தி அலங்காரமாகப் பேசுவாள். இவள் சீதளமான குணத்தை உடைய தேகத்தை யுடையவளாவள், இவள் லக்ஷ்மிக்குச் சமானமானவளாக விருப்பாள்,

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய விவாக காலம் :—ஜாதகருக்கு இருபதாவது வயதில் சுக்கிர மகா தசை நடக்கின்றது. சுக்கிரன் ஒன்பதிற் குடையவராகின்றார். ஜாதக பாரிஜாதம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது (29-வது) சுலோகப் பிரகாரம் ஒன்பதிற்குடையவர் விவாகஞ் செய்து வைப்பார். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் விவாகம் ஜாதகருக்கு நடக்கும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

31. பால் பாக்கிய முடையளாகும் பசித்தோர்க்குத்
[தாக மீவள்
காலத்தை அறிந்து வாழ்வள் கணவனுக் கினிய ளாகும்
ஞாலமேல் நல்லோ ளாவள் நடைநன்மை முன்கோ
[பத்தாள்
வேலனைப் பயின்ற மாதே வித்தகி தீர்க்க சீவி.

31. ஜாதகருடைய மனைவி பால் பாக்கியத்தை உடையவளாவள். இவள் பசித்திருக்கின்றவர்களுக்கு நீராகாரத்தைக் கொடுப்பாள். இவள் காலத்தை நன்ருய் அறிந்து கொண்டு அதற்குத் தகுந்தபடி வாழ்வாள். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாக விருப்பாள். இவள் பூமியில் நல்லவளாக விருப்பாள். நல்ல நடத்தையுடையவளாவள். முன் கோபத்தை யுடையவளாவள். ஆறுமுகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

32. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோம் அறுவர்
[தோன்றும்
குத்தமாய் ஆண்பால் ரெண்டு தோகையு மொருவர்
[தீர்க்கம்
செத்திடும் முதலும் நான்கும் சஷ்டியு மென்று
[சொல்வோம்
அத்தியை வளர்த்த யெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

32. ஜாதகருக்குச் சந்ததிகளைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு மொத்தத்தில் ஆறு குழந்தைகள் பிறக்கும். பிள்ளைகள் இருவரும் பெண் ஒருத்தியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். முதலாவது நான்காவது ஆருவது குழந்தைகள் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளை வளர்த்த எங்களுடைய ஆத்துமாவைப் போல அருமையான தாயாராகிய பார்வதியம்மையே! கேட்பீராக,

## ஜாதகருடைய முன்ஜன்மம்

33. பாலகன் பூர்வம் தன்னைப் பகருவோம் கொங்கு நாட்டில்
ஏலவே வன்னிய சேயாய் யெய்தியே கிருஷி செய்து
மேலோர்கள் தொண்டு பூண்டு மொழிந் தோர்க்குத்
[தாக மீந்து
சீலமாம் தலங்கள் சென்று சேர் ந்தனன் கால னூடு.

33. ஜாதகருடைய முன்ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவர் கொங்கு நாட்டில் வன்னிய ஜாதி என்ற நாயகர் ஜாதியில் ஆணாகப் பிறந்து பயிர்த் தொழிலை செய்து கொண்டும், பெரியோர்களுக்கும் சந்நியாசிகளுக்கும் பணி விடைகளைச்செய்து கொண்டு அவர்களிடத்தில் அன்புடையவராக விருந்தும், இவர்களுக்கு நீராகாரத்தையும் நீரையும் கொடுத்தும், பரிசுத்தமான தெய்வீகஸ்தலங்களுக்குப் போயும் பிறகு இறந்து எம பட்டணத்தை அடைந்தார்.

## ஜாதகருடைய யோகபாவம்

34. சிரனுன்கோன் வரையப் பட்டுச் செனிப்பனு மிந்தப்
[பாலன்
உரைக்கிறோம் யிவனில் யோகம் உதித்த னுள்
[முதலாயாக
குறையுள்ள குடும்ப மாகும் குணமது அலைச்ச லாகும்
வரவுக்கு செலவனேகம் மாநிலம் பலித மல்பம்.

34. பிறகு ஜாதகர் நான்குதலைகளை யுடைய பிரமதேவரால் பிரமலிபி யுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார். இவருடைய யோக விஷயங்களைச் சொல்லுகின்றோம். இவர் பிறந்த காலம் முதற் கொண்டு இவருடைய குடும்பம் தாழ்ந்த அந்தஸ்தை யுடைய குடும்பமாகும். கஷ்டங்களையும் நிலையின்மையையும் அனுபவிக்கின்ற குடும்பமாகும். வருமானத்திற்குமேல் அதிக செலவு ஏற்படும். பயிரிடும் பெரிய நிலங்கள் பலனைக் கொஞ்சமாகக் கொடுக்கும்,

35. அந்தாண்டு மேலே யோகம் அணுகிடு மனது தீரம்
சந்திரன் பிறைபோல் யோகம் தங்கிடும் யில்லம்
[செய்தல்
பிந்தியும் பத்தாண் டின்மேல் பூமியும் பெருக்க மாகும்
இந்திர போக மேற்பன் யேருகள் பெருக்க முண்டு.

35. ஜாதகருக்கு ஐந்து வயதிற்குமேலே யோகம் உண்டாகும். குடும்பத்தாருக்கு மனத்தில் தைரியமுண்டாகும். வளர்பிறை சந்திரனைப் போல யோகம் நாளுக்கு நாள் அதிகப்படும். வாசஞ் செய்கின்ற வீட்டைக்

கட்டுவார். பிறகு பத்து வருஷங்களுக்குப் பிறகு நிலங்கள் அதிகப்படும், தேவேந்திரனைப் போல யோகத்தை உடையவராவர். பயிரிடும் ஏர்கள் அதிகப்படும்.

36. தர்ம கர்மாதி யோகம் சார்ந்திடும் பால னுக்கு
இரு இல்லம் செய்வா னுகும் யிருவூரில் பூமி சேர்ப்பன்
பெருமையும் புகழு மெய்தும் பூமிபொன் பணிகள் யாவும்
இருரெண் டாயிரம் பொன் சேர்ப்பன் யீசுவரி
[கேட்டி டாயே.

36. ஜாதகருக்குத் தர்மகர்மாதி யோகம்* உண்டாகும். இவர் இரண்டு விடுகளைக் கட்டுவார். இரண்டு கிராமத்தில் நிலங்களை வாங்கிச் சேர்த்து வைப்பார். இவர் கௌரவத்தையும் கீர்த்தியையும் அடைவார். நிலம், தனம். ஆடை ஆபரணங்கள் எல்லாம் மொத்தத்தில் நான்காயிரம் பொன் மதிப்பு தாளக் கூடிய சொத்தைச் சேர்த்து வைப்பார், பார்வதியம் மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தர்மகர்மாதியோக விஷயம் :—தர்மாதிபதி என்ற ஒன்பதிற்குடையவரும், கர்மாதிபதி என்ற பத்திற்குடைய வரும் ஒருவருடன் மற்றொருவர் கூடியிருப்பதும், ஒருவரை யொருவர் பார்ப்பதுவும் ஒருவர் வீட்டில் மற்றொருவர் இருப்பதுவும்: (அஃதாவது பரிவர்த்தனை அடைந்திருப்பதுவும்) தர்மகர்ம யோகமாகும். இங்கு தர்மாதிபதியாகிய ஒன்பதிற் குடைய சுக்கிரனும், கர்மாதிபதியாகிய பத்திற்குடைய புதனும் கூடி இருப்பதால் தர்மகர்ம யோகம் சம்பவித்திருக்கின்றது. (ஆனால் இவர்கள் ஆறுவது வீட்டில் இருப்பது யோகம் சிறித ளவு ஆகும்.) இது விஷயமாகக் கிரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் முன்னூற்றிரண்டாவது (302–ஆவது) பாடலையும் ஜாதக சந்திரிகை பதினான்காவது சுலோகத் தையும் தாண்டவமாலை பதின்மூன்றுவது, பதினான்காவது பாடல்களையும், சந்திர காவியம் பதினெட்டாவது பாடலையும் வாசிக்கவும்,

## ஜாதகருடைய மரணகாலம்

37. பொன்னவன் திசை காலத்தில் புதல்வனு மரண மாகும்
மன்னனுக் கருபான் யெழில் மார்கழி மாதம் தன்னில்
பின் பக்கம் துவாதசி பேசிடும் மார கங்கள்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

37. பொன் என்ற குரு தசை காலத்தில் ஜாதகர் இறந்து விடுவார். இவருக்கு அறுபத்தேழாவது வயதில் மார்கழி மாதத்தில்* தேய் பிறையில்

துவாதசி திதி தினத்தில் மரணம் நேரிடும். சக்கரையைப் போன்ற இனிப்பான வார்த்தைகளை உபாயோகிக்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய மரண கால விஷயம் :— ஜாதக சந்திரிகை ஐம்பத்தி நான்காவது சுலோகப் பிரகாரம் கன்னியா லக்கினத்திற்கு குருமாரகாதிபதியாகின்றார். ஆகையால் இங்கு குரு தசை காலத்தில் ஜாதகருக்கு மரண முண்டாகும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

38. அத்திரி தடுத்துச் சொல்வார்
அந்தணன் தனக்கு யீராறில்
சித்தமாய் மதியும் நிற்க
குறித்தனம் சகடை தோஷம்
பத்துரெண் டாண்டுள் கெண்டம்
பராசரும் தடுத்துச் சொல்வார்
வெத்தியாய் தனுசு திங்கள்
மேவினால் சகடை பங்கம்.

38. அத்திரி மாமுனிவர் தடுத்துச் சொல்லுகின்றார். அந்தணன் என்ற குருவிற்குப் பன்னிரண்டில் மதி என்ற சந்திரன் இருப்பதால் சகடை யோகத் தோஷம் இருக்கின்றது. இதனால் ஜாதகருக்குப் பன்னிரண்டு வயதிற்குள் மரணம் நேரிடும். இதற்குப் பராசர மஹரிஷி தடுத்துப் பதில் சொல்லுகின்றார். தனுசுராசியில்* சந்திரன் இருந்தால் சகட யோகத்திற்குப் பங்கம் (நிவர்த்தி) உண்டாகுகின்றது.

*குறிப்பு :—வியாக்கியானம் :—சகடயோக பங்க விஷயம் :—இது விஷயமாய்க் கீழ்க் கண்ட பாடலை வாசிக்கவும்,

"நன்று கர்கடகத்தி லேயும் நன்னிய விடையி லேயும்
தண்டுவில் (தனுசு) மீனம் கன்னி தன்னி லம்புலியே நிற்க
அண்டருக் கதிபன் பொன்னுக் காறெட்டு பன்னி ரண்டில்
பண்டுசொல் சகட தோஷம் பாபமே யில்லை கண்டாய்"

*இதன் தாத்பர்யம் :—சந்திரன் மிதுனம், தனுசு, மீனம், கன்னி இவற்றில் இருந்தால் சகடயோக தோஷம் நிவர்த்தியாகி விடுகின்றது.

39. மந்திரி ஐந்தில் தங்க மால்புகர் ஆறில் தங்க
தந்தைதாய் தனக்குக் கர்மம் சாதகன் செய்வா னாகும்
எந்தநோய் வந்த போதும் யிரவிமுன் பனிபோ லாகும்
மைந்தனும் தீர்க்க மெய்தும் மங்கையே கேட்டி டாயே.

39. மந்திரி என்ற குரு ஐந்தில் இருப்பதாலும், மால் என்ற புதனும், புகர் என்ற சுக்கிரனும் ஆறில் கூடி யிருப்பதாலும், ஜாதகர் தன்னுடைய தாய் தகப்பனுருக்குக் கர்ம காரியங்களைச் செய்வார். அஃதாவது ஈமக் காரியங்களைச் செய்வார். எப்படிப்பட்ட நோய் வந்த போதிலும் சூரியனைக்

கண்ட பனியைப் போல அது பறந்தோடிப் போகும். ஜாதகர் நீண்ட ஆயுளை யுடையவராவர். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய மறுஜன்மம்

40. பின்சென்மம் காஞ்சி தன்னில்
பிறப்பனும் பிரம்ம சேயாய்
மன்னன் இச்சென்மம் தன்னில்
வடைந்த புண்ணியங்க ளென்ன
உன்னத தலங்கள் சென்றும்
உயர்ந்தோர்க் குதவி யாயும்
இன்னவ னரத்தி லிச்சை
யெய்துவா னென்று சொல்வோம்.

40. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் காஞ்சீபுரத்தில் பிராமணர் ஜாதியில் ஆணாகப் பிறப்பார். இவர் இந்த ஜன்மத்தில் செய்த புண்ணிய காரியங்கள் என்ன? இவர் மேன்மையான ஸ்தலங்களுக்குப் போயும் பெரியோர்களுக்கும் பரதேசிகளுக்கும் உபகாரத்தைச் செய்து கொண்டும், தானதர்மங்களில் பிரியமுள்ளவராகவும் இருந்த படியாலும் இவர் பிராமண குலத்தில் பிறப்பார் என்று சொல்லுகின்றோம்,

## ஜாதகருடைய ஜனன காலத்தில் தசை இருப்பு

41. பாலகன் செனிக்கும் காலே பசுமூலம் கடை பாதத்தில்
ஏல கேது வினில் ஆண்டு ஒன்றுமே திங்கள் ரெண்டும்
சாலவே பூர்வம் சொன்னோம் சாற்றுவோம்
[பின்பால் சேதி
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தன
[மொழி குன்றுது

41. ஜாதகர் பிறக்குங் காலத்தில் மூலநட்சத்திரத்தின் கடைசிபாதமாகிய நான்காவது பாதமாகும். இதற்குரிய கேது மகா தசையில் இருப்பு ஒரு வருஷமும் இரண்டு மாதங்களும் ஆகும். இதுவரையிலும் பூர்வபாகம் என்ற முதலாவது பாகத்தைச் சொல்லி முடித்து விட்டோம், மற்ற விஷயங்களை பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானுடைய தேவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

---

# ஜாதகம் 32

## ஜனன கால கிரக நிலை

1. [1]மதி[2]வீணை [3]புகரும் [4]சீயம் [5]மால்ரவி ராகு கன்னி
[7]விதி[8]மானில் [9]பொன்னேன் [10]சாடி [11]மெஞ்
ஞானி மீனமாக
சதியிலா [12]தேளில் [13]சேயும் சென்மமும் கன்னி யாக
இதுவித கிரகம் நின்ருல் யியம்புவீர் பலனைத் தானே

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் மிதுனத்திலும், சுக்கிரன் சிம்மத்திலும், புதனும் சூரியனும் ராகுவும் கன்னியிலும், சனி மகரத்திலும் குரு கும்பத்திலும், கேது மீனத்திலும், விருச்சிகத்தில் அங்காரகனும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால், பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| கேது | | | சந்திரன் |
| குரு | இராசி சக்கரம் | | |
| சனி | | | சுக்கிரன் |
| | அங்காரகன் | | சூரியன் புதன் ராகு லக்கினம் |

புனர்பூசம் 3—ஆம் பாதம் குரு தசை வ௫ 7—3—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் புதனும் குருவும் ராகுவும், மிதுனத்தில் சந்திரனும், கன்னியிற் சூரியனும், துலாத்திற் கேதுவும், தனுசிற் சுக்கிரனும், கும்பத்தில் அங்காரகனும் சனியும், ஆகும், குருவும் சுக்கிரனும், சனியும் வக்கிர கதியில் இருக்கின்ருர்கள்.

---

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்திரன் | 8. | மகரம் |
| 2. | மிதுனம் | 9. | குரு |
| 3. | சுக்கிரன் | 10. | கும்பம் |
| 4. | சிம்மம் | 11. | கேது |
| 5. | புதன் | 12. | விருச்சிகம் |
| 6. | சூரியன் | 13. | அங்காரகன் |
| 7. | சனி | | |

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. அத்திரி புகலு கின்ருர் ஆணது செனன மாகும்
வித்தகன் யில்லம் சொல்வேன் வடக்கு
[தென்வீதி யாகும்
உத்திரம் யீசன் காளி உரைந்திடும் தென்பால்தன்னில்
மஸ்தானும் சந்தி தங்கும் மாரியு மதற்குத்தென்பால்

2. அத்திரி மாமுனிவர் சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். இந்தக் குழந்தையின் பிறந்த வீட்டைச் சொல்லுகின்றேன். இது வடக்குத் தெற்குத் தெருவிலிருக்கும். சிவபெருமானுடைய கோயில் வடக்கிலும், காளியம்மன் கோயில் தெற்கிலுமிருக்கும். ஒரு மசூதி தெருவின் சந்தியிலிருக்கும். இதற்குத் தெற்கே மாரியம்மன் கோயிலிருக்கும்,

3. இன்னமும் பலதே வாசம் யிலகிய சமஷூர் தன்னில்
அன்னவ னிரண்டாம் சென்மம் அனுகுவான் வன்னிய
[சேயாய்
தன்மனை புத்திர யோகம் தாய்தந்தை துணைவர் யோகம்
முன்பின் சென்மங்கள் யாவும் முரைக்கிருே மின்னூல்
[தன்னில்

3. இந்த ஊரில் அநேக ஜாதியார் வாசஞ் செய்வார்கள், இது நடுத்தரமான கிராமமாகும். ஜாதகர் இரண்டாவது பிறவியாக வன்னியருடைய ஜாதியில் பிறப்பார். இவருடைய மனைவி மக்கள் யோகம், தாய் தந்தையர், சகோதரர் ஆகிய இவர்களின் யோகம், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணதிசயங்கள்

4. தாதைக்குத் தாரம் ரெண்டில் தரித்திடு மினையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின்
[தந்தை
ஓதுவேன் யிவன் குணத்தை உறுதி யில்லா நெஞ்சம்
சாதிப்பான் சிலது சங்கை தன்னுடல் மெலிவு நீட்சி

4. ஜாதகருடைய பாட்டனுருக்கு இரண்டு மனைவிமார்களில் இளைய மனைவியின் பிள்ளை இவருடைய தகப்பனுர் ஆவர். இவருடைய குணதிசயங்களைச் சொல்லுகின்றேம். இவர் நிலையில்லாத மனத்தை யுடையவராவர். சில விஷயங்களைப் பிடிவாதமாகச் சொல்லுவார். இவருடைய உடம்பு நீண்டு மெலிந்து ஒல்லியாக விருக்கும்,

5. மாந்தளிர் மேனி யாவன் மங்கைமார் மோகம் கொள்வன்
கூர்ந்துமே வார்த்தை சொல்வன் குணமது ரெண்டு
[மாகும்
சேர்ந்தவர் தம்மைக் காப்பன் செய்நிலம் விருத்தி
[செய்வன்
சாந்தவான் சுகி பொசிப்பன் சற்றினில் கோபி யாவன்

5. ஜாதகருடைய தகப்பனுர் மாந்தளிரின் நிறம் போன்ற ஒருவித சிகப்பு நிறமான தேகத்தை யுடையவராவர். இவர் ஆராய்ந்து வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் நல்லது கெட்டதுமான இரண்டுவித குணங்களை யுடையவராவர், இவர் தன்னிடத்திற்கு வந்து சேர்ந்தவர்களைக் காப்பாற்றுவார். இவர் செய்கால் நிலங்களைப் பயிரிட்டுத் தானிய வகைபராக்களை அதிகப்படுத்துவார். இவர் சாந்தமான குணத்தை யுடையவராவர் சுகமான ஆகாரத்தை அருந்துபவராவர். சீக்கிரத்தில் கோபத்தை அடையவராவர்.

6. சலதொழில் புரிவா ளுகும் சகடு வாகனமு மேற்பன்
கலகத்தைக் கூரு ளுகும் கருவி யப்பியாசம் செய்வன்
நிலயதைக் காப்பா ளுகும் நினைத்தது முடிக்க வல்லன்
பலதல வாசம் செய்வன் பங்கைய ரேகை யுண்டு

6. ஜாதகருடைய தகப்பனுர் ஜலவஸ்துக்களில், திரவ பதார்த்தங்களில் வியாபாரஞ் செய்வார். இவர் வண்டி வாகனங்களையு முடையவர். இவர் கலகத்தை யுண்டு பண்ணுகின்ற வார்த்தைகளைச் சொல்ல மாட்டார், இவர் வீணை வாசிப்பதில் பழகிக் கொள்ளுவார். இவர் தன்னுடைய அந்தஸ்தையும் தொழிலையும் காப்பாற்றிக் கொள்ளுவார். இவர் தான் செய்ய எத்தனித்த காரியங்களைச் செய்து முடிப்பார்.

7. வித்தையும் சமம தாகும் வீண்வம்பு கொஞ்சம் செய்வன்
பத்தினி நேய ளுகும் பாக்கியம் பின்ளுல் சேர்ப்பன்
பித்த சூடுடைய ளுகும் புகலுவான் கட்டு வார்த்தை
சுத்தம் போல் வெளிமயக்கன் துராசையும் உடைய
[ளுமே

7. ஜாதகருடைய தகப்பனுர் நடுத்தரமான படிப்பை யுடையவராவர். இவர் வீணுன வம்புகளையும் சண்டைகளையும் சிறிதளவு செய்வார். இவர் தன்னுடைய மனைவியின் பேரில் அன்புடையவராவர், இவர் தனத்தைத் தன்னுடைய பிந்திய வயதில் சேர்த்து வைப்பார். இவர் பித்தச் சூட்டு ரோகத்தை யுடையவராவர். பொய், பிணைந்த வார்த்தை, பழமொழி ஆகிய இவற்றை இவர் சொல்லுவார். இவர் பரிசுத்தமாக விருப்பதைப் போலக் காட்டிக் கொண்டு தன்னைப் பார்ப்பவர்களை ஏமாற்றுவார், கெட்ட ஆசையையுமுடையவராவர்,

## ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மம்

8. முன்னவனிருந்த சென்மம் மொழகிறேம் தாயே கேளும்
தென்திசை தோகை மேல்பால் சிறுவூரில் வைசிய
[சேயாய்
அன்னவன் உதித்து மேலும் ஆண்மையாய் குடும்பம்
[பெற்று
தன்மனே மதலை யுண்டாய்த் தரணியில் செட்டு செய்து

8. ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றேம், பார்வதியம்மையே! கேட்பீராக. தெற்குத் திக்கிலுள்ள பழனி ஸ்தலத்திற்கு மேற்கே ஒரு சிறிய கிராமத்தில் இவர் வைசியகுலத்தில் ஆணுகப் பிறந்து மேன்மையான, கௌரவமான குடும்பத்தை யுடைய வராகியும், மனைவி மக்களை யுடையவராயும், வியாபாரத்தைச் செய்து கொண்டும்,

9. தனமது பெருக்க முண்டாய்த் தரணியில் வாழும் நாளில்
கனமுள சைவன் தானும் காதல னுட னேசித்து
சினமிலா வாழு நாளில் தேவிமேல் மோகம் கொண்டு
வினையம் தூசும் தந்து மெல்லியைப் போகம் துய்க்க

9. பணம் அதிகமாக வுண்டாகியும் வாழ்கின்ற காலத்தில் ஒரு சிறந்த சைவர் இவருடன் சினேகஞ் செய்துகொண்டு வாழ்கின்ற காலத்தில், இவர் அவருடைய மனைவியின் பேரில் காம ஆசையை யுடையவராகி அவளுக் கும் புடவையைக் கொடுத்து அவளுடன் சம்போகஞ் செய்ய எத் தனிக்கவே

10. மாதுவும் யிசையா ளாகி மாரனும் பலவந் தத்தால்
தீதான போகம் துய்க்கத் தேவியும் மனது வெட்கி
ஓதுவாள் சாபம் தானும் உதிக்கும் பின்சென்மம்
[தன்னில்
வேதனை மனத்த னுகி மெல்விமார் தன்னுல் ரோகம்

10. அவள் இதற்குச் சம்மதிக்காததால் இவர் பலாத்காரமாக அவ ளிடத்தில் சம்போகஞ் செய்யவே, அவள் நாணத்தையும் அவமானத்தை யடைந்து சாபத்தைக் கொடுத்தாள். நீ இனி பிறக்கின்ற மறு ஜன்மத்தில் துன்பமான மனத்தை யுடையவராகியும், ஸ்திரீகளினுடைய ரோகத்தை யுடையவராயும்.

11. முன்பின்னும் துணைக ளின்றி முயர் தந்தை பகையுமாகி
தன்சுதர் முதலில் பீடை சார்ந்திடு மென்று சொல்லி

அன்னவள் செலத்தால் மாண்டாள் அணுகிற்று அந்தச் [சாபம்
மன்னனு மந்தி யத்தில் வளமுள தலங்கள் சென்று

11. உனக்கு முன்னேயும் பின்னேயும் சகோதரங்களில்லாமலும், உன்னுடைய தகப்பனுர் உனக்கு விரோதியாகியும், உன்னுடைய பிள்ளைகளுக்கு முதலில் ரோகங்கள் ஏற்பட்டும் நீ வாழக்கடவது என்று சொல்லிவிட்டுப் பிறகு அவள் ஜலத்தில் வீழ்ந்து தற்கொலை செய்துகொண்டாள். இந்தத் தோஷம் ஜாதகருடைய தகப்பனுரை வந்தடைந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் சிறப்பான ஸ்தலங்களுக்குப் போய்

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

12. மரலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
வருகுவா னிரண்டாம் சென்மம் மருவிடும் சாபம் [போலே
திருமகன் துணைஆண் ஒன்று சேயிழை மார்கள் மூன்று
பெருகிடும் தீர்க்க மாகப் பிலமிலா மற்ற'தெல்லரம்

12. பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் மகாவிஷ்ணுவின் குமாரராகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இரண்டாவது குழந்தையாக இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர். முன்ஜன்மத்திய சாபத்தைப்போலவே நடக்கும். இவருக்கு ஒரு சகோதரனும் மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாவார்கள், மற்ற சகோதரங்களெல்லாம் வலிவில்லாமல் இருப்பார்கள், அஃதாவது சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

13. இருனன்கு சேத மெய்தும் யிவர்பலன் யிரண்டில் [சொல்வேன்
மருவின குணத்தா னுக்கு மந்தனு முதிப்பா னுகும்
உரைகிறே மிவன் குணத்தை உயர்வான புத்தி [யேற்பன்
நரை மல ரிஷ்டம் கொள்வன் நற்கல்வி யீகை யாளன்

13. ஜாதகருடைய தகப்பனுரின் இரண்டாவது எட்டாவது சகோதரங்கள் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். சகோதரங்களினுடைய பலாபலன்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன். இங்கு சொல்லப்பட்ட குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்றேம். இவர் மேன்மையான, சிறந்த அறிவை யுடையவராவர். இவர் வாசனையை யுடைய புஷ்பங்களின் பேரில்

பிரியமுடையவராவர், இவர் நல்ல வாசிப்பை யுடையவராவர், இவர் தயாள மான, பிறருக்குக் கொடுக்குந் தன்மையுள்ள, மனத்தை யுடையவராவார்.

14. கல்வியு முடைய ஞமே கனத்த புத்திகளு மேற்பன்
நல்லவன் நல்ல வர்க்கு நாயகன் மாஞ் சிவப்பன்
இல்லை யென்றுரைக்க மாட்டான் யாரையு முறவு
[கொள்வன்
அல்லல் யெப்போதும் காணுன் அகசிய வார்த்தை
[கூர்வன்

14. ஜாதகர் படிப்பை யுடையவராவர், பெரிய, சிறந்த, அறிவை யுடையவராவர் இவர் நல்ல மனிதர்களுக்கு நல்லபடியே நடந்துகொள்ளு வார். இவர் மாந்தளிரைப்போன்ற ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடைய தேகத்தை யுடையவராவர். இவர் தன்னிடத்திற்கு உதவிக்காக வருகின்ற வர்களுக்கு உபகாரத்தைச் செய்ய முடியாது என்று சொல்லமாட்டார், இவர் எல்லோரையுஞ் சினேகஞ் செய்து கொள்ளுவார். இவர் கஷ்டங் களையும் துக்கங்களையும் எந்தக் காலத்திலும் அடையமாட்டார். இவர் வேடிக்கையாகவும் விகடமாகவும், ஆனந்தத்தையும் சிரிப்பையும் விளை விக்கக் கூடியனவாகிய வார்த்தைகளையும் சொல்லுவார்.

15. மந்திரம் வைத்தி யங்கள் மானிலம் விருத்தி செய்வன்
முந்தினோர் நேசம் கொள்வன் மூர்க்கரோ டிணக்கம்
[செய்யான்
கந்தன் மேல்பக்தி பூண்பன் காலிகள் பணையோர் விருத்தி
சுந்தர முடைய ஞகும் சோம் பிடான் காரியத்தில்

15. ஜாதகர் மாந்திரிகத் தொழிலையும் வைத்தியத்தொழிலையும் செய் வார். இவர் பெரிய நிலங்களைப் பயிரிட்டுத் தான்ய வகையருக்களை அதி கப் படுத்துவார். இவர் பெரியோர்கள், சந்நியாசிகள் ஆகிய இவர்களு டைய சினேகிதத்தையும் அன்பையும் உடையவராவர், இவர் முரட்டுத்தன மானவர்கள், அறிவீனர்கள் ஆகிய இவர்களுடன் சேரமாட்டார். இவர் ஆறுமுகக் கடவுளின்பேரில் அன்புடையவராவர், இவருக்கு ஆடுமாடுகள், நிலங்கள், ஏர்கள் ஆகிய இவை அதிகமாகும், நல்லபலன்களைத்தரும். இவர் அழகானவர், சௌந்தரியத்தை யுடையவராவர், தான் செய்கின்ற வேலைகளில் சோம்பலில்லாதவராவர்.

16. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தன் பந்தும் மதிக்க
[உய்வன்
விந்தையாய் வார்த்தை சொல்வன் விளம்புவோம் துணை
[வர் தன்னை
பிந்தியம் ஆண்பால் ஒன்று பேசுவோம் கன்னிஞன்கு
இந்தவார்தீர்க்க மென்றேம் யிலகாது மற்ற தெல்லாம்

16. ஜாதகர் தன்னுடைய தகப்பனாருடைய அந்தஸ்திற்கு அதிகப் பட்ட அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் தன்னுடைய பந்துக்கள் இவரைக் கௌரவப்படுத்தும்படியான நிலைமையிலிருந்து வாழ்வார், இவர் ஆச்சரி யப்படத் தக்கதாவும், வேடிக்கையாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார், இவருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு ஆண் இளைய சகோதரரும் நான்கு இளைய சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம், மற்ற சகோ தரங்கள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள்,

## ஜாதகருடைய விவாகமும் மனைவியின் குணாதிசயங்களும்

17. இருபது ஆண்டு தன்னில் யிவனுக்கும் பாரி வாய்க்கும்
வரும்கன்னி வடபால் நேரும் மங்கையின் குணத்தைச் [சொல்வேள்
பெருப்புத்தி அடக்க முண்டு புகலுமுன் கோபம் [கொஞ்சம்
திருமக ளொப்ப தாகும் திகைத் தோர்க்கு அன்னமீவள்

17. ஜாதகருக்கு இருபதாவது வயதில் *மனைவி வந்து சம்பவிப்பாள். இவள் வடக்குத் திக்கிலிருந்து வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதி சயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் பெரிய, சிறந்த அறிவை யுடையவளாவள், இவள் சாந்தமுடையவள், அமைதியை யுடையவளாவள், இவள் பேசுவதற்கு முன்னமே சிறிதளவு கோபத்தை யுடையவளாவள், இவள் லக்ஷிமிக்குச் சமானமானவளாவள், இவள் பசியுடன் கஷ்டப்படுபவர் களுக்குச் சாப்பாட்டைப் போடுபவளாவள்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—விவாக கால விஷயம்:—ஜாதகருக்கு இருப தாவது வயதில் சனி தசை நடக்கின்றது. இந்த சனி ஏழாவது வீடாகிய களத்திர ஸ்தானத்தை மூன்றாவது பார்வையுடன் பார்க்கின்றார், ஆகையால் இவருக்கு ஏழாவது வீட்டின் சம் மந்தம் ஏற்பட்டிருக்கின்றது. ஜாதக பாரிஜாதம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது (29-ஆவது) சுலோகம் பிரகாரம் சனி தன்னுடைய தசையில் ஜாதகருக்கு விவாகத் தைச் செய்துவைக்கும் அதிகாரத்தை யுடையவராக விருக் கின்றார்.

18. மங்கைக்கு வயது தீர்க்கம் மாமுனி தடுத்துச் சொல்வார்
நங்கைமார் யிருவ ரென்று நவிலுவோம் சாத கர்க்கு
சங்கையைச் சொல்லு மென்ன சப்த மத்தோனு மாரில்
சிங்கம்போல் கேது யேழில் சேர்ந்ததால் சொன்னோம் [யாங்கள்

18. ஜாதகருடைய மனைவி தீர்க்காயுளை யுடையவளாவள், வசிஷ்ட மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் ஏற்படுவார்கள் என்று சொல்லுகின்றோம். இதன்பேரில் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, சப்தமத்தோன் என்ற ஏழிற்குடையவராகிய குரு ஆறுவது வீட்டிலிருப்பதாலும், சிங்கத்தைப்போல் வலிவாயுள்ள கேது ஏழாவது வீட்டில் இருப்பதாலும் இவ்விதமாக இரண்டு மனைவிமார்கள் என்று நாங்கள் சொன்னோம் என்றார் வசிஷ்ட மஹரிஷி.

19. இதுவன்றி இரண் டோன் தானும் யீராரில் இருப்ப
[தாலே
வதிபதி யிரண்டு யென்றோம் மாதுவும் மரண மாகி
சதியிலா யிரண்டா மாது சார்ந்திடும் பால னுக்கு
இதுகாறும் அந்த சங்கை யெய்திடும் விபரம் சொல்வாய்

19. இந்தக் காரணங்களும் அல்லாமல் வேறு காரணமுமுண்டு. இரண்டாவது வீட்டிற் குடையவராகிய சுக்கிரன் பன்னிரண்டில் இருப்பதாலும் இரண்டு மனைவிமார்கள் உண்டென்று சொல்லுகின்றோம். முதல் மனைவி இறந்துவிடவே, இரண்டாவது மனைவி ஜாதகருக்கு வந்து சம்பவிப்பாள். இவ்விதமாக எந்தக் காலத்தில் எவ்விதமாக நேரிடுமென்பதை விவரமாகச் சொல்லுவீர் ? என்று கேட்கவே,

*குறிப்பு:—வியாக்கியானம்:—முதல் மனைவி தோஷ விஷயம்:—புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது வீட்டிற்குடைய சனி ஏழாவது வீட்டைப் பார்ப்பதும் முதல் மனைவிக்குத் தோஷமாகும். ஏழிற்குடையவரும் களத்திர ஸ்தானாதிபதியுமாகிய குருவை அஷ்டமாதிபதியாகிய அங்காரகன் பார்ப்பதும் களத்திர தோஷத்தை உண்டுபண்ணக் கூடியதாகும்.

## ஜாதகரின் முதல் மனைவியின் மரண காலமும் இரண்டாவது விவாகமும்

20. இருபது யேழு ஆண்டில்
யேகுவாள் கெற்பத் தால்
மருஆண்டில் குடகு தன்னில்
மறுமனை நேறு மென்றோம்
பெரும்சுதர் பலனை யாங்கள்
பேசுவோம் இனி மேலாக
அருமறை முடிவி லாடும்
அம்பிகை யாளே கேளாய்

20. ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் இவருடைய மனைவி கற்பத்தினால் *இறந்துவிடுவாள். அடுத்த வருஷத்தில் மேற்குத் திக்கிலிருந்து

இரண்டாவது மனைவி வந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகின்றோம். இனி மேல் ஜாதகருக்கு உண்டாகும் சந்தானத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்; அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக!

*குறிப்பு:—வியாக்கியானம்;—புத்திர ஸ்தானாதிபதியாகிய ஐந்திற்குடைய சனி களத்திர ஸ்தானாதிபதியாகிய ஏழிற்குடைய குருவைப் பார்த்ததால் மனைவிக்குக் கற்பத்தால் மரணம் நேரிட அமைப்பு இருக்கின்றது. இருபத்தாறுவது வயது முடிந்து இருபத்தேழாவது வயது ஆரம்பிக்கும்போது ஜாதகருக்குச் சனி தசை நடக்கின்றது. இருபத்தெட்டாவது வயதில் ஜாதகருக்குப் புதன் தசை நடக்கின்றது. இந்தப் புதன் ஏழாவது வீடாகிய களத்திர ஸ்தானத்தைப் பார்ப்பதுமன்றிப் பத்தாவது வீட்டிற்குடையவராகவு மிருக்கின்றார். ஆகையால் ஜாதக பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் புதன் ஜாதகருக்குத் தன்னுடைய தசை புக்தி காலங்களில் விவாகத்தைச் செய்துவைக்கும் அமைப்புடையவராகவிருக்கின்றார். ஆகையால் இங்கு புத தசையில் புத புக்தியில் இருபத்தெட்டாவது வயதில் இரண்டாவது விவாகம் ஜாதகருக்கு நடக்கும் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய புத்திர பாவம்

21. சுதர்களும் ஆண்பால் ரெண்டு
தோகையும் மவ்வார் தீர்க்கம்
பதராகும் மூன்று யென்றோம்
பராசரும் தடுத்து சொல்வார்
எதுவித பாரிக்கே தான்
யியம்பீனீர் புத்திர பாகம்
முதல்மனை தனக்குப் பெண்பால்
மேவிடும் ஒன்று தானே.

21. ஜாதகருக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மூன்று குழந்தைகள் சீக்கிரம் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இந்தப் புத்திர பாவ விஷயம் எந்த மனைவிக்குச் சொன்னீர் என்று பராசர மஹாரிஷி தடுத்துக் கேட்கவே, முதலாவது மனைவிக்கு ஒரே ஒரு பெண் குழந்தைதான் உண்டாகும் என்றார் முனிவர்.

22. மற்றது பின் பாரிக்கு
வரைகிறோம் முனியே கேளும்
குத்தமாய்த் தாரம் ரெண்டு
குலவும் காரணங்க ளென்ன

வித்தகன் பூர்வம் தன்னில்
மேவிற்று வினை அனேகம்
பற்றின வினையை நீங்கள்
பகருவீர் முனியே நீதான்

22. மற்ற குழந்தைகள் இரண்டாவது மனைவிக்கு உண்டாவார்கள் என்று சொல்லுகின்றோம். முனிவரே! நீர் கேட்பீராக. ஜாதகருக்கு 'இரண்டு மனைவிமார்கள் ஏற்படுவதற்கான தோஷத்தையும் காரணத்தையுஞ் சொல்லுவீர் என்று கேட்கவே, ஜாதகருக்குத் தன்னுடைய முன் ஜன்மத்தில் அநேகவிதமான பாவங்கள் நேரிட்டு விட்டன என்று சொல்லவே, இப்படி ஏற்பட்டுவிட்ட பாவங்களை நீங்கள் சொல்லுவீர்கள், முனிவரே! என்றார்.

## ஜாதகருடைய முன் ஜன்மம்

23. முன்னவ னிருந்த சென்மம்
மொழி கிறோம் விபரமாக
கன்னியாக் குமரி தன்னில்
கலந்தன னிக் குலத்தில்
அன்னையும் தந்தை மிக்க
அதிகமாய்ச் செட்டு செய்து
இன்னவன் வாழு நாளில்
யெய்தின வினையைக் கேள்மோ

23. ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றி விவரமாகச் சொல்லுகின்றோம். இவர் கன்னியா குமரியில் இந்த ஜன்மத்திய ஜாதியாகிய வன்னிய ஜாதியில் ஜாதகர் பிறந்து இவருடைய தாய் தகப்பனார்கள் அதிகமாக வியாபாரங்களைச் செய்துகொண்டிருந்து, அதனால் இவர் வாழ்கின்ற காலத்தில்

24. கன்னிகை யொருத்தி பேரில்
காணாத வார்த்தை சொன்னான்
அன்னவள் மன வெறுப்பால்
அறைகுருள் சாபம் தானும்
பின்வரும் சென்மம் தன்னில்
பேதையர் யிருவ ராயும்
துன்மையாம் கன்னி யாலே
தூருகள் அதிகம் யேற்பாய்

24. ஜாதகர் ஒரு இளம் பெண்ணின் பேரில் தான் பார்க்காத விஷயத்தைப் பற்றிப் பொய் வார்த்தைகளைச் சொன்னார், இதன் பேரில் இவள் தன்னுடைய மனத்தில் கஷ்டத்தை யடைந்து சாபத்தைக் கொடுத்தாள். உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்கு இரண்டு மனைவிமார்கள் ஏற்படக்

கடவது, உன்னுடைய பெண்ணாலே உனக்கு அதிகமான நிந்தைகளும் அவமானங்களும் உண்டாகக் கடவது என்று சொன்னது மல்லாமல்

25. இன்னமும் பலவார் சொன்னாள்
யெய்திற்று யதுவோர் தோஷம்
தன்மனை வார்த்தை கேட்டுத்
தாய்க்குமே விரோதம் செய்தான்
அன்னையின் சாபம் தானும்
அணுகிற்று அதுவோர் தோஷம்
மன்னவன் அந்தி யத்தில்
வாய்புண்ணால் மரண மாகி

25. இன்னமும் பலவிதமாகச் சொன்னாள். இது ஒரு தோஷமாக நேரிட்டுவிட்டது. மேலும் ஜாதகர் தன்னுடைய மனைவியின் வார்த்தைகளைக் கேட்டுத் தன்னுடைய தாயாருக்குக் கெடுதிகளைச் செய்தார். அதனால் தாயார் சாபத்தைக் கொடுக்கவே இந்தச் சாபமும் ஜாதகரை வந்தடைந்தது. இதுவும் ஒரு தோஷமாகும். ஜாதகர் தன்னுடைய முன்ஜன்மத்தின் கடைசி காலத்தில் வாயில் ஏற்பட்ட புண் வியாதியினால் மரணத்தை அடைந்து

26. சிரனான் கோன் வரையப் பட்டுச்
செனித்தன னென்று சொல்வோம்
அரிவையின் சாப மொன்று
அன்னையின் சாப மொன்று
மருவிடு மிச் சென்மத்தில்
மனைவிகள் யிருவ ராகும்
உரைகுவீர் அதற்குச் சாந்தி
உரைக்கவே மாட்டோம் யாங்கள்

26. நான்கு தலைகளையுடைய பிரமதேவரால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இளம் பெண்ணின் சாபம் ஒன்று, தாயாருடைய சாபம் ஒன்று ஆக இவ்விரண்டு சாபங்களும் இந்த ஜன்மத்தில் ஜாதகருக்கு வந்து சம்பவிக்கும். இதனால் இவருக்கு இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள். இதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இதற்கு சாந்தியை நாங்கள் சொல்லவே மாட்டோம்,

## ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்கள்

27. வந்தது வந்தே தீரும்
வரைகிறோ மன்னை சேதி
சிந்தையில் மர்மம் கொஞ்சம்
செப்புமுன் கோபம் கொஞ்சம்

தந்தியின் நிறத்த ளாகும்
தன்வரன் மனதுக் கேத்தோள்
அன்னம் போல் வடிவ் மாகும்
அன்புள மனத்த ளாகும்

27. நேரிட்டுவிட்ட தோஷங்கள் சம்பவித்தே தீரும், இவை சாந்தியால் விலகா என்றுர், இனிமேல் ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்ருேம். இவள் தன்னுடைய மனத்தில் சிறிதளவு வஞ்சனை, கபடம் ரகசியம் ஆகிய இவற்றை யுடையவளாவள். பேசுவதற்கு முன்னமே கோபத்தை சிறிதளவு உடையவளாவள். இவள் யானையின் நிறமாகிய கறுப்பு நிறத்தையுடைய தேகத்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாக விருந்து நடந்துகொள்ளக் கூடியவளாவள். இவன் அன்னப்பறவை போல அழகான ரூபத்தை யுடையவளாவள். இவள் பிறரிடத்தில் பிரியமாகவும் விசுவாசத்துடனும் இருக்கின்ற மனத்தை யுடையவளாவள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதர பாவமும் முன் ஜன்மமும்

28. இல்லமு மருகில் மேல்பால்
இவள்துணை ஆண்பால் ஞன்கு
வல்லிமார் யிருவர் தீர்க்கம்
மருவாது நான்கு யென்ருேம்
தல்லியின் பூர்வம் சொல்வேன்
தண்டகா வனத்தி லேதான்
புல்கிஞ ளிக் குலத்தில்
புதல்வர்கள் அதிக முண்டாய்

28. ஜாதகரின் தாயாருடைய வீடு சமீபத்திலும் மேற்குத் திக்கிலுமிருக்கும். இவளுடைய சகோதரங்கள் நான்கு ஆண்களும், இரண்டு பெண்களும் ஆவர், இவர்கள் நீண்ட வயதையுடையவர்களாக விருப்பார்கள். நான்கு சகோதரங்கள் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகின்ருேம். இனிமேல் தாயாருடைய முன்ஜன்மத்தைச் சொல்லுகின்ருேம். இவள் தண்டகாவனத்தில் இந்த ஜன்மத்திய ஜாதியாகிய வன்னியர் ஜாதியில் பெண்ணுகப் பிறந்து அதிகமான புத்திரர்களை யுடையவளாகி

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

29. வினையது யில்லா தாகி
மேவிஞள் கால ஞடு
கனமுடன் பிரமன் லக்கம்
காதலி உதித்தா ளென்ருேம்

சினமிலா யிவள்தன் உத்தரம்
செப்புவோ மலைநா டன்னில்
வனிதையும் சைவ சேயாய்
வருகுவா ளென்று சொல்வோம்

29. யாதொரு பாவமுமில்லாமல் இறந்து எமபட்டணத்திற்குப் போய் விட்டாள் பிறகு மேன்மையான பிரமதேவருடைய பிரமலிபியுடன் இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தாயார் வந்து பிறந்தாள் என்று சொல்லுகின்ரேும். இனிமேல் இவளுடைய மறு ஜன்மத்தைச் சொல்லுகின்ரேும். இவள் மலைநாட்டில் சைவஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள் என்று சொல்லு கின்ரேும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணகாலமும் பின்ஜன்மமும்

30, நாற்பது மூன்று ஆண்டில்
நமன பதி தந்தை சேர்வன்
யேர்க்கவே யிவன் பின் சென்மம்
யியம்புவோம் புதுவை தன்னில்
ஆர்க்கவே பிரம்ம சேயாய்
யருளுவா னிவனே யென்ரேும்
தீர்ப்பாக முனிவர் சொல்வார்
தென்முனி புகலு கின்ருர்

30. ஜாதகருக்கு நாற்பத்து மூன்ருவது *வயதில் இவருடைய தகப் பகனுர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்விடுவார். இவருடைய மறுஜன் மத்தைச் சொல்லுகின்ரேும். இவர் புதுவை என்ற புதுச்சேரியில் மறுஜன் மத்தில் பிராமணர் குலத்தில் ஆணுகப் பிறப்பார். என்று சொல்லுகின்ரேும். இவ்விதமாக ஒரு முடிவாக அத்திரி முனிவர் சொன்னுர். இதன்பேரில் தென் முனிவராகிய அகஸ்திய மஹரிஷி கேட்கின்ருர்.

*குறிப்பு:—வியாக்கியானம்;—தகப்பனுருடைய மரண விஷயம்;—ஜாத கருக்கு நாற்பத்தி மூன்ருவது வயதில் புதன் தசை நடக்கின்றது பிதுர்லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்கு இரண்டாவது வீடாகிய மிதுனம் ஒரு மாரக ஸ்தானமாகும். இந்த வீட்டிற்குடையவர் புதன் ஆவார். இவர் சூரியன் ராகு இவர்களுடன் கூடி பாபத்தை யடைந்திருக்கின்ருர். ஆகை யால் இவர் மாரகாதிபதியாகின்ருர், சில கிரந்தங்களில் ரிஷப லக்கினத்திற்குப் புதன் கொல்லான் என்றும் சில கிரந்தங்களில் புதன் கொல்லுவார் என்றும் சொல்லியிருக்கின்றது. இங்கு இவர் பாபயோகத்தை அடைந்திருப்பதால் கொல்லுவார். சந் திரன் மிதுனத்தில் இருப்பதால் புதனுக்குச் சந்திர லக்கினுதி

பத்யம் வந்திருக்கின்றது. ஆகையால் இந்த விடு சம்பந்தப் பட்ட புதனுடைய தசையில் முற்பாதியில் புதன் கொல்லாமல் மற்சூருரு விடு சம்மந்தப்பட்ட பிற்பாதியில் புதன் மாரகஞ் செய்வார். ஆகையால் நாற்பத்து மூன்றுவது வயதில் பிது ருக்கு மாரகம் இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

31. இந்த தோர் சென்மந்தன்னில்
யிவன்சில கொடுமை செய்தான்
சந்ததம் அல்ப செட்டு
செய்துமே அனேக மாக
விந்தையாய் பட்சி தன்னை
வித்தகன் கொன்ற தொன்று
பந்தமாய் அல்ப மாதை
பாலகன் சேர்ந்த தொன்று

31. இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தகப்பனர் சில பாவங்களைச் செய்திருக்கின்றார். இவர் அனேகமாக இழிவான சிறிய வியாபாரங்களைச் செய்து பாவத்தை அடைந்திருக்கின்றார். மேலும் இவர் பறவையைக் கொன்றுவிட்டிருக்கின்றார். இது ஒரு தோஷமாயிற்று. மேலும் இழிவான தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்த ஒரு ஸ்திரீயுடன் சம்போகஞ் செய்திருக்கின்றார், இது ஒரு தோஷமாயிற்று.

32. இன்னமும் சிலது துன்பம்
யிவனுமே செய்த தாலே
முன்குலம் உதிக்கும் வண்ணம்
முரைப்பீர்கள் முனியே நீதான்
அன்னவன் கொடுமை செய்தும்
ஆபத்தை சிலர்க்குக் காத்தும்
உன்னத கடவுள் பக்தி
உத்தமன் கொண்ட தாலும்

32. ஜாதகருடைய தகப்பனர் இன்னம் சில கெடுதிகளைச் செய் திருக்கின்றார். இவ்விதமாக இவர் பாவங்களைச் செய்திருந்தும் இவர் பிராமண ஜாதியில் பிறப்பதற்குக் காரணங்களை, முனிவரே! நீர் சொல்வீர் என்று கேட்டார். இவர் கெடுதிகளைச் செய்திருந்த போதிலும், இவர் சில ருடைய கஷ்ட காலத்தில் இவர்களுக்கு உபகாரத்தைச் செய்து இவர்களைக் காப்பாற்றியதாலும், கடவுளின் பேரில் மேன்மையான, அதிகமான, அன்பையுடையவராய் இருந்ததாலும்,

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலம்

33, பலதல வாசம் சென்றும்
பணிந் தோரை ஆதரித்தும்
தலைவனும் வாழ்வ தாலே
செனிப்பனு மறை குலத்தில்
நிலைமையாய் நாற்பா ணைந்தில்
நேரிடும் அன்னை கெண்டம்
மலையறை மகளே யாங்கள்
வழுத்தின மொழி குன்றுது

33. ஜாதகருடைய தகப்பனுர் அநேக தெய்வீகமான ஸ்தலங்களுக்கு யாத்திரை போனதாலும், தன்னை வணங்கி நடந்து கொண்டவர்களைக் காப்பாற்றியதாலும், இவ்விதமான நற்காரியங்களைச் செய்துகொண்டு வாழ்ந்ததாலும், இவர் பிராமண ஜாதியில் பிறப்பார். இவளுடைய தாயாருக்கு இவருடைய நாற்பத்தைந்தாவது* வயதில் மரணம் நேரிடும். மலைகளுக்கு அதிபதியாகிய பர்வத ராஜனுடைய புத்திரியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

*வியாக்கியானம் :—மாதிர்மாரக விஷயம் :—ஜாதகருக்கு நாற்பத்தைந்தாவது வயதில் கேதுதசை நடக்கின்றது. இந்தக் கேது குருவினுடைய வீட்டில் இருப்பதால் ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகப் பிரகாரம் குருவினுடைய பலனைக் கொடுக்கவேண்டியவராக இருக்கின்ருர். மாதிர் லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குத் துய்ய கேரளம் எட்டாவது பாவம் பதினுன்காவது பாடல் பிரகாரம் மிகவும் பலவீனமாகிய குரு மாரகராகின்ருர். ஆகையால் கேது குருவினுடைய மாரகத்தைத் தாயாருக்குக் கொடுக்கவேண்டியவராகின்ருர். ஆகையால் இங்கு கேது தசையில் தாயாருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் மரண காலமும் மறுஜன்மமும்

34. பாலகன் மரண காலம் பகருவோ மறுப தாண்டில்
சீலமாம் மகர மாதம் செப்புவோ மார கங்கள்
சாலவே யிவன் பின் சென்மம் சாற்றுவோம் மதுரை
[நாட்டில்
ஏலவே சைவ சேயாய் யிறங்குவா னென்று
[சொல்வோம்

34. ஜாதகருடைய மரணகாலத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவருக்கு அறுபதாவது வயதில் மகரமாதம் என்ற தை மாதத்தில் மரணம்

நேரிடும் என்று சொல்லுகின்றோம். இவருடைய மறுஜன்மத்தைச் சொல்லு கின்றோம். இவர் மதுரை நகரத்தில் சைவருடைய ஜாதியில் ஆணுகப் பிறப்பார் என்று சொல்லுகின்றோம்.

*வியாக்கியானம் :—ஜாதகருடைய மரணகால விஷயம் :—ஜாதகருக்கு அறுபதாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. சுக்கிரன் இரண்டிற்குடையவராகின்ருர். ஆகையால் இவர் ஜாதக சந்திரிகை இருபத்திரண்டாவது சுலோகப் பிரகாரம் மாரகரா கின்ருர். ஆனுல் ஜாதக சந்திரிகை ஐம்பத்தினுன்காவது சுலோகத்தில் சுக்கிரன் இரண்டிற்குடையவராயினும் மாரக ரல்ல வென்று சொல்லப்பட்டிருக்கின்றது. சில கிரந்தங்களில் சுக்கிரன் மாரகஞ் செய்வார் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அநுபவத்திலும் சில சமயங்களில் சுக்கிரன் பாபயோகத்தை அடைந்திருக்கும்போது மாரகஞ் செய்துவிடுகின்ருர். இங்கு சுக்கிரன் சூரியனுடைய வீடாகிய பகை வீட்டில் இருக்கின்ருர். மேலும் பன்னிரண்டாவது வீட்டிலிருப்பதால் இவர் பாப யோகத்தை அடைந்து இருக்கின்ருர். ஆகையால் இவர் மார கத்தைக் கொடுக்க அதிகார முடையவராகின்ருர். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் ஜாதகருக்கு மாரகஞ் சொல்லப்பட் டிருக்கின்றது.

35. பிருகுமே தடுத்துச் சொல்வார் பொன்திசை ஆதி [காலம்
வருவதால் சாதகர்க்கு மாரக மென்று சொல் வோம்
குருமுனி தடுத்துச் சொல்வார் குழவிக்குப் பிணி [அனேகம்
மருவிடும் குடும்ப மலச்சல் மாரனும் மாரகம் [மகிகளுக்கு

35. பிருகு மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்ருர். குபான் என்ற குரு தசை முதல் தசையாக வருவதால் இந்தக் காலத்தில் ஜாதகருக்கு மரணம் நேரிடும் என்று நாங்கள் சொல்லுகின்றோம்.* இதற்குக் குருமுனியாகிய வசிஷ்ட மஹரிஷி தடுத்துப் பதில் சொல்லுகின்ருர். ஜாதகருக்கு இக்காலத் தில் அநேக நோய்கள் உண்டாகும். குடும்பத்தி லுள்ளவர்களுக்குக் கஷ்டங்களும் அலைச்சல் திரிச்சல்களும், ஜாதகருடைய பாட்டன் பாட்டிமார் களுக்கு மரணங்களும் நேரிடும்.

*வியாக்கியானம் :—குரு ஏழாவது வீட்டிற்குடையவராய் மாரகாதிபதியா கின்ருர். ஜாதக சந்திரிகை இருபத்திரெண்டாவது, ஐம்பத்தி நான்காவது சுலோகப் பிரகாரம் குரு மாரகராகின்ருர். இவர் ரோக ஸ்தானமாகிய ஆருவது வீட்டில் இருக்கின்ருர். ஆகை யால் குருதசை காலத்தில் கெண்டங்களும் நோய்களும் ஜாதகருக்கு நேரிடும் என்றும், குடும்பத்தார்களுக்குக் கஷ்டங் கள் நேரிடும் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய யோக பாவம்

36. அன்னையின் வர்க்கத் தார்க்கு
அனேக துன்பங்கள் நேறும்
பொன்பணி செலவு முண்டு
புதல்வனும் தீர்க்கச் சீவி
இன்னவன் யோகம் தன்னை
யியம்புவோ மினி மேலாக
அன்னியர் மதிக்க வாழ்வன்
அவனியில் சல்லியம் காணுன்

36. ஜாதகருடைய தாயாரைச் சார்ந்த பந்துக்களுக்கு* அனேக கஷ்டங்கள் நேரிடும், தனமும் செலவாகி விடும். ஆடையாபரணங்கள் அழிந்து விடும். ஆனுல் ஜாதகர் நீண்ட ஆயுளையுடையவராவர்*. இனி மேல் ஜாதகருடைய யோகபாவத்தைச் சொல்லுகின்றேம். இவர் அயலார் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வார். இவர் பூமியில் கடனை வாங்கமாட்டார்.

*வியாக்கியானம் : குரு நான்கிற்குடையவராய் மாதுர் காரகராகிய சந்திரனைப் பார்த்திருப்பதால் தாய்வழி பந்துக்களுக்கு அனேக துன்பங்களும் கஷ்டங்களும் நேரிடும் என்று இங்கு சொல்லப் பட்டிருக்கின்றது.

*ஜாதகருடைய ஆயுள் விஷயம் : இதுவிஷயமாய்த் துய்ய கேரளம் எட்டாம் பாவம், ஐந்தாவது பாடலையும் தார்க்கேயர் நாடி அறுநூற்றறுபத்தைந்தாவது (665-வது) பாடலையும், ஜாதகபாரிஜாதம் பதினைன்காவது அத்தியாயம் ஐம்பதாவது சுலோகத்தையும் வாசிக்கவும். இவ்விஷயங்கள் கீழ்க்கண்ட பாடலில் அடங்கியிருக்கின்றது. "நிலவரம் பத்தோன் எட்டோன் இலக்கினத்துடையோன் மிக்கேல் மலைவிலாத் தீர்க்க ஆயுள் மத்திமம் இரண்டு மிக்கேல் பிலமொன்றேல் எண்ணுன்காகும். பலவீனர் மூன்றுமாகில் இலை என்றுர் வயதுமெத்த ஈராறுக்குள் என்பாரே."

இதன் பொருள் : 1-8-10க்குடையவர் மூவர்களும் ஏககாலத்தில் வலிவாயிருந்தால் ஜாதகருக்குத் தீர்க்காயுள் உண்டு. இருவர் மாத்திரம் வலிவாயிருந்தால் மத்திமாயுள் ஏற்படும். ஒருவர் மாத்திரம் வலிவாயிருந்தால் வயது முப்பத்திரண்டு ஆகும். மூன்றுபேர்களும் பலவீனமாக விருந்தால் வலது அதிகமாகக் கிடையாது, அது பன்னிரண்டிற்குள்ளாகவே இருக்கும். ஜாதக பாரிஜாதத்தில் இவர்களுடன் சனி சம்பந்தப்பட்டிருக்கக் கூடாது என்று சொல்லியிருக்கின்றது. இந்தப் பாடல் துய்யகேரளத்திலும் சார்க்கேயர் நாடியிலும் கொடுக்கப்பட் டிருக்கின்றது.

37. தந்தை நாள்பூமி தன்னை
தானவன் விருத்தி செய்வன்
தந்தைக்குத் தாழ் வுருதான்
சகல பாக்கியங்கள் சேர்ப்பன்
தந்தனம் கொடுக்கல் வாங்கல்
தான் பலசெட்டு செய்வன்
தந்திமா முகத்தோன் பக்தி
சான்ருேர்க்கு அன்ன மீவன்

37. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய காலத்திலிருந்து இருக்கும் நிலங்களைப் பயிரிட்டுத் தான்ய வகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்குக் குறையாத அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் சகலவிதமான பாக்கியங்களையுஞ் சம்பாதித்து சேர்த்து வைப்பார். சகல சம்பத்துக்களையும் உடையவராவர். இவர் தன்னுடைய பணத்தைப் பிறருக்குக் கொடுப்பதும், திருப்பி வாங்குவதுமான லாவா தேவியை யுடையவராவர். இவர் பலவிதமான வியாபாரங்களைச் செய்வார். இவர் யானைமுகத்தை யுடையவராகிய விநாயகக் கடவுளின்பேரில் அன்புடையவராவார். இவர் நல்லவர்களுக்கும் பெரியோர்களுக்கும் சாப்பாட்டைப் போடுவார்.

38. இன்னமும் விபர மாக வியம்புவோம் பின் பாகத்தில்
அன்னவன் செனன காலம் அந்தணன் திசை யிருப்பு
சொன்னனே ஆண்டு மேழும் திங்களு மூன்று மாகும்
பன்னுவோம் பலனை யாங்கள் பாலகன் பிணி
அனேகம்

38. இன்னமும் மற்ற விஷயங்களை விவரமாகப் பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ருேம். ஜாதகருடைய ஜனன காலத்தில் அந்தணன் என்ற குரு மகாதசையில் இருப்பு ஏழு வருஷங்களும் மூன்று மாதங்களும் ஆகும். இந்தக் காலத்தில் நடைபெறும் பலாபலன்களைச் சொல்லுகின்ருேம். ஜாதகருக்குப் பலவிதமான ரோகங்கள் ஏற்படும்.

39. செலவுகள் அதிக முண்டு தந்தையின் மகிமைகள்
பீடை
நலமுளோர் விரோத மர்கும் நாற்காலி சேத மெய்தும்
தலமது சித்திரம் செய்தல் சலதொழில் மேன்மை யாகும்
குலவிடும் பிணி அனேகம் கோதையால் தந்தைக்
[கென்ருேம்

39. ஜாதகருடைய குடும்பத்தில் அதிகமான செலவு ஏற்படும். தகப்பனுருடைய தாய் தகப்பன்மார்களுக்கு நோய்களும் கஷ்டங்களு முண்டா

கும். நல்லவர்களாக விருப்பவர்கள் விரோதிகளாக மாறிவிடுவார்கள். ஆடுமாடுகள் நாசத்தை அடையும். வீட்டை சித்திரங்களுடன் அலங்கரித்தல் நேரிடும். ஜலவஸ்துக்களால் செய்யப்பட்ட தொழில் விருத்தியடையும். நல்ல பலனைக் கொடுக்கும். ஜாதகருடைய தகப்பனுருக்கு ஸ்திரீகளால் அநேகவிதமான ரோகங்கள் உண்டாகும்.

40. பந்துவின் சூதம் காணும் பாக்கிய தாப முண்டு
சிந்தையும் கலக்க மாகும் சிறப்பிலா குடும்ப மாகும்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபர மாக
இந்திர னிரஞ்சு மாதே இதுபூர்வ பாக மாமே

40. பந்துக்களில் சூதகம் நேரிடும். பாக்கிய துன்பம் நேரிடும். அஃதாவது பணமில்லாமையால் கஷ்டங்கள் நேரிடும். மனம் கலக்கு முற்று துன்பத்தை யடைந்ததாக விருக்கும், குடும்பம் மேன்மையை யடையாமல் இருக்கும். பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் மற்ற விஷயங்களை விவரமாகச் சொல்லுகின்றோம். தேவேந்திரன் வணங்கி உம்மை பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! இதுவரையிலும் நாங்கள் சொல்லியவை பூர்வபாகம் அஃதாவது முதலாவது பாகம் ஆகும். —C.G.R.

———

# ஜாதகம் 33

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதி[2]வீணை கேதுகன்னி [3]மந்தனும் [9]கோல தாக
புதன் [5]புகர் [6]சாடியாகப் [7]பூமகன் [8]மான தாக
[9]உதயன் ராகு [10]கெண்டை உயர்குரு [11]நந்தி யாக
இதுவித கோளும் நின்று லக்னம் கன்னி யாக.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் மிதுனத்திலும், கேது கன்னியிலும் சனி துலாத்திலும், புதனும் சுக்கிரனும் கும்பத்திலும், அங்காரகன் மகரத்திலும், சூரியனும் ராகுவும் மீனத்திலும், குரு ரிஷபத்திலும் இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால்,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சூரியன் ராகு | | குரு | சந்திரன் |
| புதன் சுக்கிரன் | இராசி சக்கரம் | | |
| அங்காரகன் | | | |
| | | சனி | லக்கினம் கேது |

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :—மிதுனத்தில் அங்காரகனும் கேதுவும், துலாத்திற் புதனும் சனியும், தனுசில் சந்திரனும் ராகுவும், கும்பத்தில் சுக்கிரனும், மீனத்தில் சூரியனும் குருவும் ஆகும். சனி வக்கிர கதியிலிருக்கின்ருர்.

1. சந்திரன்
2. மிதுனம்
3. சனி
4. துலாம்
5. சுக்கிரன்
6. கும்பம்
7. அங்காரகன்
8. மகரம்
9. சூரியன்
10. மீனம்
11. ரிஷபம்

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. சொல்லு வீர்பலனே யென்று சுந்தரி கேட்கும் போது
புல்குவார் பராசர் தானும் பிறந்திடு பெண்பால்
[சென்மம்
இல்லமும் கீழ்மேல் வீதி யெமன்வாடை கீழ்பால் தந்தி
வல்லியும் வட பாலாகும் அரன் கோஷ்டம் பாழதாகும்

2. பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது பராசர மஹரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை பெண் குழந்தை யாகும், ஜாதகியினுடைய பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டைவாடையாகும். கிழக்குத் திக்கில் விநாயகருடைய கோயில் இருக்கும், பார்வதியம்மன் கோயில் வடக்குத் திக்கிலிருக்கும், சிவபெருமானுடைய கோயில் பாழடைந்திருக்கும்.

3. நரிவாக னத்தாள் மீனம்
நாட்டிய சிறுவூர் தன்னில்
திருமகள் பாவை சேயாய்
செனிப்பளாம் சேஷ்டி யாக
பெரும்அன்னை துணைவர் யோகம்
புத்திரர் வரனின் யோகம்
அரிவையின் முன்பின் சென்மம்
அறிவிப்போ மின்னூல் தன்னில்

3. காளியம்மன் கோயில் வடக்குத் திக்கிலிருக்கும் ஒரு சிறிய கிராமத்தில் ஜாதகி வேசியினுடைய பெண் குழந்தையாகவும் ஜேஷ்ட குழந்தையாகவும் பிறப்பாள். ஜாதகியின் பெற்ற தாயார் சகோதரர்கள் ஆகிய இவர்களுடைய யோகம், பிள்ளைகளுடைய யோகம், புருஷன் யோகம், ஜாதகியின் முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்ருேம்.

4. தந்தையின் குணத்தை சொல்வேன்
சரசமாய் வார்த்தை யுண்டு
தந்தமும் தரள மொக்கும்
சங்கீத பரதம் கற்பன்
தன்பந்து மதிக்க வாழ்வன்
தரணிகள் சேர்ப்பா னுகும்
தந்தியின் யிளையோன் னுமம்
தரிப்பானும் பொறுமை சாலி

4. ஜாதகியினுடைய தகப்பனுரின் குணுதிசயங்களைச் சொல்லுகின்றேன். இவர் இனிமையாய் வார்த்தைகளைச் சொல்லுவார். இவருடைய

பற்கள் முத்தைப் போல வெண்மையாகவும் அழகாகவும் இருக்கும். சங்கீத வித்தையையும் பரத நாட்டிய வித்தையையும் கற்றுக் கொள்ளுவார், இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவர் யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளின் இளைய சகோதரராகிய முருகக் கடவுளின் பெயரை உடையவராவர், இவர் பொறுமையாகவும் சாந்தமாகவும் இருப்பார்.

5. மாநிறம் உணச்சல் தேகி மர்ம மில்லா தானுகும்
சீலம்போல் வெளி மயக்கன் சீக்கிர நடையு மாவன்
மான் விழி மார்க்குக் கல்வி வரிவிப்பான் மால் மதத்தன்
ஊன மில்லாத தேகி உணருவான் கல்வி ரெண்டு

5. ஜாதகியினுடைய தகப்பனுர் மாநிறமான தேகத்தை யுடையவராவர். நீண்டு மெலிந்து வாடிய தேகத்தை யுடையவர். இவர் வஞ்சனை ரகசியம் ஆகிய இவற்றைத் தன்னுடைய மனத்தில் வைக்காதவராவர், பரிசுத்தமாகவும், நல்லொழுக்கங்களை யுடையவராகவும் இருப்பதைப் போல வெளியாருக்குக் காட்டி அவர்களை ஏமாற்றுவார். இவர் வேகமாக நடக்கக் கூடியவராவர். இவர் மானின் கண்களைப் போல அழகான கண்களை யுடைய ஸ்திரீகளுக்குக் கல்வியைக் கற்றுக் கொடுப்பார். இவர் மகா விஷ்ணுவின் மதத்தை யுடையவராவர். அஃதாவது வைஷ்ணவராவர் யாதொரு அவயவபங்கமும் இல்லாத தேகத்தை யுடையவராவர், இரண்டு பாஷையில் வாசித்தவராவார்.

## ஜாதகியின் குணதிசயங்கள்

6. தன்சுதர் ஆண்பா லொன்று சக்திமார் மூவ ராகும்
பின்னமாம் மற்ற தெல்லாம் பேசின குணத்தா னுக்கு
இன்னவள் உதிப்பா ளாகும் யியம்புவோ மிவள்
[குணத்தை
உன்னத கல்வி யுண்டு உயர்வான பரதம் கற்பள்

6. ஜாதகியின் தகப்பனுருக்கு ஒரு ஆண் குழந்தையும் மூன்று பெண் குழந்தைகளும் உண்டு. மற்றக் குழந்தைகள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். இது வரையிலும் சொல்லப்பட்ட குணகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகி பிறப்பாள். இவளுடைய குணதிசயங்களைப் பற்றிச்சொல்லுகின்ருேம். இவள் உயர்ந்த சிறந்த வித்தையை யுடையவளாவள். இவள் மேன்மையான, சிறந்த பாரத நாட்டிய வித்தையைக் கற்றுக் கொள்ளுவாள்.

7. யூகைவாள் நுணுக்கம் புத்தி உயர்வோர்கள் நேசம்
[கொள்வள்
பாகமாய்ப் பேசுவாளம் பதர்குண மில்லா ளாகும்

தோகை போல்சாய லொக்கும் துறவிகட் கன்னமீவள்
போசு பாக்கியங்க ளேர்ப்பள் புவிதனில் புகழு முள்ளாள்

7. ஜாதகி நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை யுடையவளாகும். கூர்மையான புத்தியை யுடையவளாவள். பெரியோர்களுடைய சினேகத்தை யுடையவளாவள். இவள் பக்குவமாக வும், திறமையாகவும் பேசக் கூடியவள். இவள் அவசரப்பட்டுப் பேச மாட்டாள். பலனற்ற, அற்பமான குணத்தை யுடையவளல்லள். இவள் மயிலைப் போன்ற நீண்ட தேகத்தை யுடையவளாவள். இவள் சந்நியாசிக ளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவாள். இவள் போகங்களை அனுபவிப்பவளாவள். சகல பாக்கியங்களையும் அடைவாள். பூமியில் இவள் கீர்த்தியை யுடையவளாவள்.

8. முன் கோபம் கொஞ்ச முண்டு
மூல சூடுடைய ளாகும்
பொன்பணி அதிகம் சேர்ப்பள்
புகழ்ந் தோரை ஆதரிப்பள்
உன்னத தலங்கள் செல்வள்
உயர்வான புத்தியேற்பள்
அன்னியர் மதிக்க வாழ்வள்
ஆவுகள் பலித முண்டு

8. இவளுக்கு முன் கோபம் கொஞ்சம் உண்டு. இவள் மூலச் சூட்டு ரோகத்தை யுடையவளாவள். இவள் பணத்தையும் ஆடையா பரணங்களையும் அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பாள், தன்னைப் புகழ்ந்து பேசியவர்களைக் காப்பாற்றுவாள். இவள் மேன்மையான, சிறந்த, தெய்விக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போவாள். இவள் மேன்மையான பெரிய புத்தியை யுடையவளாவள், பிறர் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டக் கூடிய அந்தஸ்திலிருந்து வாழ்வாள். இவளுக் குப் பசுக்கள் நன்ருகப் பலிதத்தைத் தரும்.

9. வறுமை யெப்போதும் காணுள்
வளமுள குடும்ப மேற்பள்
அரிமனை யொப்ப தாகும்
அடாபிடி தன்னில் செல்லாள்
குறையென் ருேர்க்குதவி செய்வள்
குவலயம் நல்லோ ளாவள்
மறையவர் நேசம் கொள்வள்
வயதுமே தீர்க்க மென்ருேம்

9. ஜாதகி எப்போதும் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டாள், இவள் செழிப்பான குடும்பத்தை யுடையவளாவள். இவள் மகா விஷ்ணுவின் மனைவியாகிய இலக்ஷிமிக்குச் சமானமானவளாக விருப்பாள். முரட்டுத்தனமாகவும் அநியாயமாகவும் காரியங்களைச் செய்வதில் பிரவேசிக்க மாட்டாள். கஷ்டங்களை அநுபவிக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வாள். இவள் பூமியில் நல்லவள் என்று பெயரெடுப்பாள். இவள் பிராமணர்களிடத்தில் விசுவாசமுடையவளாக விருப்பாள். இவள் நீண்ட ஆயுளை யுடையவள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகியின் சகோதர பாவம்

10. தன்துணை ஆண்பா லொன்று
    செனித்திடும் தீதே யாகும்
என்ன காரணத் தினாலே
    யிவள்துணை தோஷம் சொன்னீர்
பொன்னவன் நவத்தி லேற
    பூமக னஞ்சில் தங்க
கன்னிகை தனியே யாவள்
    கழறுவோ மன்னை சேதி.

10. ஜாதகியின் கூடப் பிறந்தவர் ஒரு சகோதரமாவர். இவர் சீக்கிரத்தில் இறந்து விடுவார். எந்தக் காரணத்தில் இவளுடைய சகோதரத்திற்குத் தோஷத்தைச் சொன்னீர், முனிவரே! அதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, பொன்னவன் என்ற குரு ஒன்பதாவது வீட்டிலிருப்பதாலும், பூமகன் என்ற அங்காரகன் ஐந்தாவது வீட்டில் இருப்பதாலும், ஜாதகி சகோதரங்களில்லாமல் தனியாக விருப்பவளாவள்* இனிமேல் இவளுடைய தாயாருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—சகோதர விஷயம் :—இளைய சகோதர ஸ்தானமாகிய மூன்ருவது வீடாகிய விருச்சிகத்தைக் கேது மூன்ருவது பார்வையுடன் பார்ப்பது சகோதர தோஷமாகும். மூற்ற சகோதர ஸ்தானமாகிய பதினொன்ருவது வீடாகிய கடகத்தைக் கேது பதினோராவது பார்வையுடன் பார்ப்பது சகோதர தோஷமாகும். சகோதரகாரகனுகிய அங்காரகனை ராகு பதினோராவது பார்வையுடன் பார்ப்பது சகோதர தோஷமாகும், இங்கு அங்காரகன் ஐந்தாவது பாவத்தில் உச்சமாக விருக்கின்ருர். குரு பகை வீட்டிலிருந்து கொண்டு அங்காரகனை ஒன்பதாவது பார்வையுடன் பார்க்கின்ருர், இது விஷயமாக ஜாதக பாரிஜாதம் பதினருவது அத்தியாயம் (ஸ்திரீ ஜாதகாத்யாயம்) நாற்பத்தாருவது, நாற்பத்தேழாவது சுலோகங்களை வாசிக்கவும். இவற்றில் ஜாதகிக்கு ஒரு சகோதரர்

உண்டு என்று சொல்லி யிருக்கின்றது, ஆனால் இந்தச் சகோதரரின் வயது விஷயத்தை இந்தச் சுலோகங்களில் சொல்லவில்லை.

## ஜாதகியின் தாயாருடைய குணாதிசயங்கள்

11. கல்விமான் கடவுள் பக்தி
கண்முகம் வசிய முண்டு
இல்லையென் றுரைக்க மாட்டாள்
யிடர் செய்யாள் யாவருக்கும்
நல்லவ ளாகி வாழ்வள்
நடன சங்கீதம் கற்பள்
தொல்லையும் சுகமு மேற்பள் தோழன்
தன் மனதுக் கேத்தோள்

11. ஜாதகியினுடைய தாயார் வாசித்தவளாவாள், இவள் கடவுளின் பேரில் அன்புடையவளாவள். இவளுடைய கண்களும் முகமும் அழகாயிருந்து கொண்டு இவளைப் பார்ப்பவர்களைத் தன் பக்கமாக விருக்கும்படியாகச் செய்து கொள்ளும் சக்தியை யுடையனவாக விருக்கும். இவள் தன்னிடத்திற்கும் உதவிக்காக வருபவர்களுக்கு உபகாரத்தைச் செய்ய தன்னிடத்தில் ஒன்றுமில்லை என்று சொல்ல மாட்டாள். இவர் யாருக்கும் கெடுதியைச் செய்ய மாட்டாள். இவள் நல்லவளாக விருந்து வாழ்வாள். இவள் பரத நாட்டியத்தையும் சங்கீத வித்தையையும் கற்றுக் கொள்ளுவாள். இவள் உபத்திரவங்களையும், சுக துக்கங்களையும் கலந்தாற் போல் அனுபவிப்பாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருப்பாள்.

12. ஊர்காளி அடிமை யாவள் உரப்பொடு புளிப்பி லிச்சை
தீரமில்லாத நெஞ்சம் சீக்கிரம் கோபம் சாந்தம்
காரிய சமர்த்த ளாகும் கஞ்சமா நிறத்த ளாகும்
போரினில் செல்லா ளாகும் புண்ணிய மனத்த ளாகும்

12. ஜாதகியின் தாயார் தன்னுடைய கிராமத்திலுள்ள காளியம்மன் கோயிலைச் சேர்ந்த வேலைக்காரி (தாசி) யாவள். இவள் காரமும் புளிப்புமுள்ள ஆகார வஸ்துக்களின் பேரில் பிரியமுள்ளவள். இவள் தைரியமில்லாத மனத்தை யுடையவளாவள். இவளுக்குச் சீக்கிரத்தில் கோபமுண்டாகும். ஆனால் இந்த கோபம் சீக்கிரத்தில் தணிந்து இவள் சாந்தத்தை அடைவாள். இவள் காரியங்களைச் செய்து முடிப்பதில் திறமையை யுடையவளாவள். இவள் தாமரை மலரைப் போன்ற சிகப்பு நிறமான தேகத்தை யுடையவளாவள், இவள் சண்டையில் பிரவேசிக்க மாட்டாள், இவள் தான தர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவளாவள்.

## ஜாதகியின் தாயாருடைய சகோதர பாவம்

13. தன்துணை ஆண்பா லொன்று சக்தியு மவ்வார் தீர்க்கம்
கன்னியின் சேதி சொல்வேன் காளியின் அடிமை
[யாகும்
தன்சுதர் காணு ளாகும் சாந்தமு கோப மேற்பள்
அன்னியர் சுகமு மேற்பள் அற்புத வார்த்தை
[சொல்வள்

13. ஜாதகியின் தாயாருடைய சகோதரர்கள் ஆண் ஒன்றும் பெண் ஒன்றும் ஆவர். இந்தச் சகோதரியினுடைய விஷயங்களைச் சொல்லுகின்றேன். இவள் காளியம்மன் கோயிலின் அடிமையாளாக (வேலைக்காரியாக, தாசியாக) விருப்பாள். இவளுக்குக் குழந்தைகள் கிடையா. இவள் சாந்தமான குணத்தையும், கோபத்தையும் உடையவளாவள். இவள் அயலார்களுடைய சுகத்தையுமுடையவளாவள். அஃதாவது அயலார்களால் சுகபோகங்களை அநுபவிப்பாள். இவள் ஆச்சரியமான, அலங்காரமான வார்த்தைகளைச் சொல்லுவாள்.

14. சுகதுக்கம் கலந்து வாழ்வள் செயமுனி மரித்துச்
[சொல்வார்
நகைமதி முகத்தாளுக்கு நற்சுதர் காணு வண்ணம்
பகையதைப் புகலு மென்ன பற்றிற்று பூர்வ தோஷம்
உகமையைச் சொல்லு மென்ன ஒதுருதலத்திலேதான்

14. ஜாதகியின் தாயாருடைய சகோதரி சுகத்தையுந் துக்கத்தையும் கலந்து அநுபவிப்பாள். ஜயமுனிவர் தடுத்துக் கேட்கின்றார். சந்திரனைப் போன்ற அழகான முகத்தை யுடைய இவளுக்குப் பிள்ளையில்லாத காரணத்தைப் பற்றிச் சொல்லுவீர் இவள் என்ன பாவத்தைச் செய்தாள், அதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவளுடைய முன்ஜன்மத்திய தோஷம் வந்தடைந்தது என்றார் முனிவர், இதன் விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்க, இவள் ஓதுருஸ்தலத்தில்

15. பிறந்தனள் வன்னிய சேயாய் பெரிதான குடும்பி யாகி
உறைந்த ஊழ் தன்னைச் சொல்வேன் உணவின்றி
[ஏழை யோர்கள்
தருகின்ற சுதர்க் கன்னம் தருகுவா யென்று கேட்க
அரிபோலே கோப முற்று அணுகாது அன்ன மென்ன

15. வன்னியருடைய ஜாதியில் பெண்ணாகத் தன்னுடைய முன்ஜன்மத்திற் பிறந்தாள். இவள் பெரிய குடும்பியாகி வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன். ஏழைகள் ஆகாரமில்லாதவர்களாகித் தங்களுடைய குழந்தைகளுக்கு அன்னத்தைக்

கொடு என்று இவளைக் கேட்கவே, இவள் சிங்கத்தைப் போலக் கோபத்தை அடைந்து சாதம் கிடையாது என்று சொல்ல

16. பஞ்சையு மன வெறுப்பால்
பகர்ந்த சாபத்தைக் கேண்மோ
தஞ்சமாய்ச் சுதர்க்கு அன்னம்
தருத பாவிக்குப் பின்பு
துஞ்சிடும் சுதர்கள் தானும்
தோன்ருது யென்று சொல்ல
நஞ்சுபோல் அந்தச் சாபம்
நல்கிற்று பாவைக் கேதான்

16. ஏழைகள் தங்களுடைய மனத்தில் துன்பத்தை யடைந்து கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக / பிள்ளைகளுக்குச் சாதத்தைக் கொடுக்காத பாபியாகிய உனக்கு மறுஜன்மத்தில் பிள்ளை பிறக்காது என்று சொல்லவே, இந்தச் சாபம் விஷத்தைப் போல, இந்த ஜன்மத்தில் இவளை வந்தடைந்து,

## ஜாதகியின் தாயாருடைய சகோதரியின் பின் ஜன்மம்

17. ஆகையா லிச்சென் மத்தில்
அணுகாது சுதர்கள் தானும்
தோகையும் தனியாய் வாழ்வள்
செப்புவோ மிவள்பின் சென்மம்
பாகமாய்க் காஞ்சி தன்னில்
பிறப்பளாம் கங்கை சேயாய்
போக பாக்கியங்கள் பெற்று
பூவையும் வாழ்வா ளென்றோம்

17. ஆகையால் இந்த ஜன்மத்தில் ஜாதகியின் தாயாருடைய சகோதரிக்குப் பிள்ளைகள் கிடையா. இவள் தனியாக (விவாகமில்லாமல்) விருந்து வாழ்வாள். இவளுடைய மறஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் காஞ்சீபுரத்தில் வேளாளர் ஜாதியில் பெண்ணாகப் பிறந்து போகங்களை அநுபவித்தும் சகல சம்பத்துக்களையும் அடைந்தும் வாழ்வாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகியின் தாயாரின் சகோதரருடைய குணதிசயங்கள்

18. மன்னவன் சேதி சொல்வேன்
மனைவி[illegible] மொன்றே தீர்க்கம்
தன்சுதர் ஆண்பால் மூன்று
தையலர் யிருவர் தீர்க்கம்

பொன்பணி அதிகம் காணுன்
பூமியை விருத்தி செய்வன்
சொன்ன சொல்சுருக்க மாகும்
துணைவரைப் பகையும் செய்வன்

18. ஜாதகியின் தாயாருடைய சகோதரரின் விஷயங்களைச் சொல்லுகின்றேன். இவருக்கு ஒரே மனைவியுண்டு. இவள் நீண்ட வயதையுடையவளாவள். இவருக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் தீர்க்காயுளையுடையவர்களாக விருப்பார்கள். இவர் தனம், ஆடை, ஆபரணம், ஆகிய இவற்றை அதிகமாக உடையவரல்ல. இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யவகையராக்களை அதிகமாக்குவார். இவர் சுறுக்கமாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் தன்னுடைய சகோதரிகளை விரோதித்துக் கொள்ளுவார்.

19. சுகதுக்கம் கலந்து வாழ்வன்
துறவோர்கள் நேசம் கொள்வன்
பகையென்று மனதில் வையான்
பணிந்தோரை ஆதரிப்பன்
அகமதை விட்டு நீங்கான்
ஆவுகள் பணியோர் விருத்தி
மிகுதவம் புரியுமெங்கள் தாயே
வித்தகன் தீர்க்க சீவி

19. ஜாதகியின் தாயாரின் சகோதரர் சுகத்தையும் துக்கத்தையும் கலந்து அநுபவித்துக்கொண்டு வாழ்வார். இவர் சந்நியாசிகள், பரதேசிகள், ஆகிய இவர்களுடைய சினேகிதத்தை யுடையவரல்லர். இவர் தன்னுடைய மனத்தில் எவருக்கும் விரோதத்தை யுடையவரல்லர். இவர் தன்னைவந்து வணங்கினவர்களைக் காப்பாற்றுவார். இவர் வீட்டை விட்டுவிட்டுப் போய் விடமாட்டார். இவருக்கு பசுமாடுகள், நிலங்கள்; ஏர்கள் விருத்தியையடையும். அதிக தவங்களைச் செய்கின்ற எங்களுடைய தாயாராகிய பார்வதியம்மையே! இவர் தீர்க்காயுளை யுடையவராவர்.

## ஜாதகியின் தாயாருடைய முன் ஜன்மம்

20. அன்னையின் பூர்வம் சொல்வேன் அருணையில் பிரம்ம [சேயாய்
உன்னத குடும்பி யாகி உத்தமி வாழும் நாளில்
கன்னிகை ஒருத்தி பேரில் களவான் வார்த்தை சொல்ல
அன்னவள் வரனும் கண்டு அரிபோலே கோப முற்று

20. ஜாதகியின் தாயாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அருணை என்ற அருணுசலமாகிய திருவண்ணாமலையில்

பிராமண ஜாதியில் பெண்ணுகப் பிறந்து, மேன்மையான் குடும்பஸ்தளாகி, வாழ்கின்ற காலத்தில் ஒரு இளம் பிராயமுள்ள ஒரு ஸ்திரீயின் பேரில் திருடு சம்மந்தமான வார்த்தைகளைச் சொல்லவே இந்த ஸ்திரீயின் புருஷன் இதனைத் தெரிந்துகொண்டு சிங்கத்தைப் போலக் கோபத்தை அடைந்து,

21. மங்கைமேல் விகாதம் பேச
மாதுவும் மனம் கலங்கி
சங்கைகள் சொன்ன பாவி
சாறும்பின் சென்மந் தன்னில்
நங்கங்கள் பலர்கள் சொல்ல
நாட்டினில் வாழ்வா யென்ன
அங்கவள் புழுதி தூத்த
அணுகிற்று அந்தச் சாபம்

21. அந்த ஸ்திரீயிடத்தில் விரோதமாகவும் தீங்காகவும் பேசவே அந்த ஸ்திரீ தன்னுடைய மனத்தில் துக்கத்தை யுடையவளாகி இவனைப் பார்த்து "என்பேரில் விரோதமான வார்த்தைகளைச் சொன்ன பாபியாக நீ உன்னுடைய மறுஜன்மத்தில் உன்னைப் பலர்கள் பரிகாசஞ் செய்யும்படியாக நீ பூமியில் வாழக் கடவாய்" என்று சொல்லித் தெருத்தூளைத் தூற்றினுள். இந்தச் சாபம் இவனை வந்தடைந்தது.

22. மாதுரு மந்தியத்தில் வாய் புண்ணுல் மரண மாகி
வேதனுல் வரையப் பட்டு விளங்கினு ளிந்த மாது
காதலி சாபத் தாலே கன்னிக்கு முத்திரை யின்றி
மேதினில் வேசியாக வாழ்குவா ளென்று சொல்வோம்

22. ஜாதகியின் தாயார் தன்னுடைய மத்திய வயதில் வாயில் ஒரு புண் ரோகங் கண்டு அதனுல் இறந்து பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு இந்த ஜன்மத்தில் வந்து இவள் பிறந்திருக்கின்ருள். முன்ஜன்மத்திய ஸ்திரீயின் சாபத்தால் இவளுக்கு விவாகமில்லாமல் பூமியில் தாசியாக விருந்துகொண்டு வாழ்வாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகியினுடைய முன் ஜன்மம்

23. சாதகி பூர்வம் சொல்வேன் தக்கோல நகரிலே தான்
தீதுசெய் வைசிய சேயாய் செனித்துமே சுகமுள் [ளோளாய்
காதலி வாழ்ந்துமே தான் கணமுளோர் தொண்டு [பூண்டு
மேதினில் வாழும் நாளில் மேவின வினையைக் [கேண்மோ

23. ஜாதகியினுடைய முன்ஜத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் தக்கோலம் என்ற பெரிய கிராமத்தில் வைசியருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறந்து, சகல சௌக்கியங்களையு முடையவளாகி வாழ்ந்தும், பெரியோர்களுக்கு வேலையைச் செய்துகொண்டும் அவர்களிடத்தில் அன்புடையவளாகியு மிருந்தும் பூமியில் வாழ்கின்ற காலத்தில், இவளுக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்ருேம், கேட்பீராக.

24. இறப்பினில் கூடு கட்டி
யிருக்கிற பட்சி தன்னை
குறிப்பா லதைக் கலைத்தாள்
குஞ்சுகள் மாண்ட தென்ருேம்
மருவிற்று அந்தத் தோஷம்
வரைகிருேம் வேறு ஒன்று
வரனுட தம்பி பேரில்
வர்ணித்தாள் சிலேடை வார்த்தை

24. ஜாதகி இறவானத்தில் கூண்டைக் கட்டிக்கொண்டு வசித்திருந்த ஓர் பட்சியின் கூண்டைக் கலைத்துவிட்டாள். அதனுல் அதிலிருந்த அப் பட்சியின் குஞ்சுகள் இறந்துவிட்டன என்று சொல்லுகின்ருேம். இந்தத் தோஷம் இவளை வந்தடைந்தது. இன்னொரு தோஷத்தைச் சொல்லுகின் ருேம். இவளுடைய புருஷனுடைய இளைய சகோதரரின் பேரில் இரண்டு அர்த்தங்களையுடைய குற்றமான சிலவார்த்தைகளைச் சொன்னுள்.

25. மைத்துனன் வருத்த முற்று
வரைந்த சாபத்தைக் கேண்மோ
குத்த மில்லாமல் யென்மேல்
குறைகளைச் சொன்ன பாவி
சுத்தமாய்ப் பின்சென் மத்தில்
துணைவரு மில்லா தாகி
முத்திரை அணியாளாகி மேதினில்
வாழ்வா யென்ன

25. ஜாதகியின் மைத்துனன் துன்பத்தை யடைந்தவராய்க் கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக, யாதொரு குற்றமும் செய்யாத என்பேரில் சில குற்றங்களைச் சொன்ன பாவியாகிய நீ, உன்னுடைய பின் ஜன்மத்தில் உனக்குச் சகோதரங்கள். இல்லாமலும் உனக்கு விவாகம் நடக்காமலும் நீ வாழக்கடவது என்று மைத்துனர் ஜாதகியைப் பார்த்துச் சொன்னுர்.

26. பரவச முடைய ளாகிப்
பாரினில் வாழ்வா யென்ன
உரைந்தது அந்தச் சாபம்
உத்தமிக் கந்தி யத்தில்

பெரும் சுதர் யில்லாதாகிப்
புக்கினன் காலனோடு
பிரமனால் வரையப் பட்டுப்
பிறப்பளா மென்று சொல்வேன்

26. மேலும் நீ பிரத்தியாருடைய கைவசத்தில் இருந்துகொண்டு வாழக்கடவது என்று மைத்துனர் சொன்னார். இந்தச் சாபம் ஜாதகியை வந்தடைந்தது. இவள் முன் ஜன்மத்தின் கடைசி காலத்தில் புத்திரர்கள் இல்லாதவளாக விருந்து இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள் என்று சொல்லுகின்றேன்.

## ஜாதகியின் யோக பாவம்

27. குருவியின் தோஷத் தாலே
குதித்தயில் நீங்கு மென்றோம்
திருமகன் சாபத்தாலே துணை
காணாள் முத்திரை காணாள்
அரிவையின் யோகம் சொல்வேன்
அவனியோர் மதிக்க வாழ்வள்
பொருளது பெருக்க மாகும்
பூஷண மதிகம் சேர்ப்பள்

27. ஊர்க்குருவியின் தோஷத்தினால் இவள் பிறந்த வீடு இவளை விட்டுப் போய்விடும் என்று சொல்லுகின்றோம். மைத்துனருடைய சாபத்தினால் இவளுக்குச் சகோதரம் கிடையா, விவாகமுமில்லை. இனிமேல் இவளுடைய யோகத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள், பூமியிலுள்ளவர்கள் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள். இவளுக்குச் சொத்துக்கள் அதிகப்படும், இவள் ஆபரணங்களை அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பாள்.

28. கல்வியால் பெருமை யேற்பள்
கனமுளோர் நேசம் கொள்வள்
புல்லிய புத்தி யில்லாள்
புகழாக வாழ்வா ளென்றோம்
சொல்லினால் பெருமை யேற்பள்
துன்பங்க ளெவர்க்கு மெண்ணாள்
வல்லி மாகாளிக்கே தான்
வடிமைகள் பூண்டா ளாகும்

28. ஜாதகி தன்னுடைய வித்தையால் புகழையும் மேன்மையையு மடைவாள். இவள் பெரிய மனிதர்களுடைய, தனவான்களுடைய சினேகி தத்தையுடையவளாவள். இவள் தாழ்ந்த, இழிவான புத்தியையுடையவ ளல்லள். இவள் கீர்த்தியுடனும் கௌரவத்துடனும் வாழ்பவளாவள் என்று சொல்லுகின்றோம். இவள் தன்னுடைய வார்த்தைகளினாலே கௌரவத்தை அடைவாள். இவள் யாருக்கும் கெடுதிகளை நினைக்கமாட்டாள். இவள் மாகாளியம்மன் கோயிலுக்கேதான் அடிமை (வேலைக்காரி, தாசி) ஆவாள்.

29. சுதர்களு மாண்பால் ரெண்டு
தோகையு மவ்வார் தீர்க்கம்
முதல்சுதர் தோஷ மெய்தும்
மொழிகுவீர் அந்தச் சங்கை
புதல்வர் தானத்தில் சேயும்
பொருந்தின பலத்தால் சொன்னோம்
அதற்குப் பின் விருத்தி யென்றோம்
அம்பிகை யாளே கேளாய்

29. ஜாதகிக்கு இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளை உடையவர்களாக விருப்பார்கள். முதலாவது குழந்தை சீக்கிரத்தில் இறந்துவிடும். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று பராசர முனிவரைக் கேட்கவே, இந்த முனிவர் பதில் சொல்லுகின்றார். புதல்வர் ஸ்தானமாகிய ஐந்தாவது வீட்டில் சேய் என்ற அங்காரகன் இருக்கின்ற பலத்தினாலே இந்த பலனைச் சொன்னோம். * இதற்குப் பிறகு பிறக்கின்ற குழந்தைகள் விருத்தியை அடைவார்கள் என்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே / கேட்பீராக.

குறிப்பு :— வியாக்கியானம் :—புத்திரதோஷ விஷயம் :— ஐந்தாவது வீட்டை அஃதாவது புத்திர ஸ்தானத்தை ராகு பதினோராவது பார்வையுடன் பார்ப்பது புத்திர தோஷமாகும். சந்திரனுக்கு ஐந்தாவது வீடாகிய புத்திர ஸ்தானத்தில் சனி இருப்பதும் புத்திர தோஷமாகும் சந்திரனுக்குப் பன்னிரண்டில் புத்திரகாரகராகிய குரு இருப்பதும் புத்திர தோஷமாகும்.

## ஜாதகியின் தாயாருடைய மரண காலம்

30. ஈரேழு ஆண்டு தன்னில்
யிவளன்னை கெண்ட மெய்தும்
நாரிக்கு சாந்தி செய்யில்
நலன்பெரும் நமனைக் காணாள்

காரக ரோகம் தீரும்
காதலி முப்ப தாண்டில்
தீரமாய்க் கொண்ட மெய்தும்
செப்பின மொழி குன்ருது

30. ஜாதகிக்குப் பதினுன்காவது வயதில் இவளுடைய தாயாருக்குக் கெண்டம் நேரிடும். இவளுக்காக ஓர் சாந்தியைச் செய்தால் இவளுக்கு நன்மை உண்டாகும். எமதரிசனத்தை இவள் அடையமாட்டாள், இவளுக்கு நேரிடும் காரகரோகம் நிவர்த்தியாகிவிடும். பிறகு ஜாதகிக்கு முப்பதாவது * வயதில் இவளுடைய தாயார் கண்டிப்பாய் இறந்துபோவாள். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப்போகாமல் நடக்கும்.

குறிப்பு :--வியாக்கியானம் :—ஜாதகிக்கு முப்பதாவது வயதில் குருதசை நடக்கின்றது. மாதிருலக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்கு துய்யகேரளம் எட்டாம்பாவம் பதினுன்காவது பாடல் பிரகாரம் குருமாரகாதி பதியாகின்ருர், இந்தக் குரு பகை வீட்டில் இருக்கின்ருர். இவர் ராகுவால் பார்க்கப்பட்டிருக்கின்ருர். இவர் ஆருவது வீட்டிலிருக்கின்ருர். ஆகையால் குரு அதிக மாரகராகின்ருர். ஆகையால் குருதசையில் தாயாருக்கு இங்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஜாதக பாரிஜாதம் பதினுன்காவது அத்தியாயம் ஐம்பத்தைந்தாவது (55-ஆவது) சுலோகத்தையும் இங்கு வாசிக்கவும். மேலும் ராகு குருவினுடைய வீட்டில் இருக்கின்ருர். இவர் ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகப்பிரகாரம் குருவினுடைய பலனைக் கொடுக்க வேண்டியவராக விருக்கின்ருர். ஆகையால் இவருடைய தசைகாலத்தில் ஜாதகிக்குப் பதினுன்காவது வயதில் தாயாருக்கு இங்கு கெண்டம் நேரிடும் என்றும் சொல்லி இருக்கின்றது.

## ஜாதகியின் தாயாருடைய பின் ஜன்மம்

31. பின்சென்மம் வேலங் காட்டில்
பிறப்பளாம் பிரம்ம சேயாய்
இன்னதோர் சென்மம் தன்னில்
இவள்செய்த புண்ணிய மென்ன
தன்மனம் கபடு மின்றிச்
சலித்தோர்க் குதவி யாயும்
உன்னத விரத மேற்று
உத்தமி வாழ்வ தாலே

31. ஜாதகியினுடைய தாயார் தன்னுடைய மறுஜன்மத்தில் திருவேலங்காடு க்ஷேத்திரத்தில் பிராமண ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள். இந்த

ஜன்மத்தில் இவள் செய்த புண்ணிய காரியங்கள் என்ன என்பதைச் சொல்லு வீர் என்று கேட்கவே, இவள் தன்னுடைய மனத்தில் வஞ்சனை யில்லாமல் ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்து வந்ததாலும், மேன்மையான, சிறந்த, விரதங்களையும் நோன்புகளையும் அநுஷ்டித்து வந்ததாலும்.

## ஜாதகியினுடைய மரண காலமும் மறு ஜன்மமும்

32. சொல்லினோம் பிரம்ம சேயாய்
தோகைக்கு அன்பா னுலில்
நல்லதோர் மகர மாதம்
நாயகி மரிப்ப ளாகும்
வல்லிபின் சென்மம் சொல்வேன்
மலைநாட்டில் சைவ சேயாய்
புல்குவா ளென்று சொல்வோம்
பூவையே கேட்டி டாயே

32. ஜாதகியின் தாயார் மறுஜன்மத்தில் பிராமணக் குழந்தையாய்ப் பிறப்பாள் என்று சொன்னோம். ஜாதகிக்குத் தன்னுடைய ஐம்பத்து நான் காவது வயதில் மகர மாதம் என்ற தை மாதத்தில் மரணம் நேரிடும். இவளுடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், இவள் மலை நாட்டில் சைவருடைய ஜாதியில் பெண் குழந்தையாய்ப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகியின் மரண விஷயம் :—ஜாதகிக்கு ஐம்பத்தினான்காவது வயதில் புதமகா தசை நடக்கின்றது. புதன் ஆறுவது வீட்டிலிருப்பதால் உச்சமாகவுள்ள அங்கா ரகன் சனி இவர்களைவிட பலவீனமாக விருக்கின்றார் ஆகை யால் துய்ய கேரளம் எட்டாவது பாவம், பதினான்காவது பாடல் பிரகாரம் புதன் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜனன காலதசை விவரம்

33. அன்னவள் செனன காலம்
ஆதிரை முதல் பாதத்தில்
துன்ராகு திசை யிருப்பு
செப்புவோம் பதினான் காண்டும்

மன்னிய திங்கள் ரெண்டும்
வரைந்தனம் பூர்வ பாகம்
உன்னத வானை பெற்ற
உத்தமி கேட்டி டாயே

33. ஜாதகியினுடைய ஜனன காலத்தில் ஆதிரை என்ற திருவாதிரை நட்சத்திரத்தின் முதலாவது பாதம் ஆகும். இதற்குரிய இராகு மகாதசையில் இருப்பு நின்ற வருஷங்கள் பதினொன்கும் மாதங்கள் இரண்டும் ஆகும். இதுவரையிலும் பூர்வ பாகமாகிய முதல் பாகத்தைச் சொல்லி முடித்தோம். மேன்மையான, சிறந்த யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

—C. G. R.

———

# ஜாதகம் 34

## ஜனனகால கிரகநிலை

1, [1]மதியும் [2]பரிதி [3]சீயமுற
[4]மால்[5]சேய் [6]காரி [7]பணி[8]வண்டி
[9]நதிகோள் கன்னி குரு[10]கோலாம்
[11]ஞானிமகரம் [12]மாதை சென்மம்
இதுவே கிரகம் தானின்ருல்
யியம்பும் முனியே பலனதனை
அதிலே ஆண்பால் செனனமுறும்
அறைவோம் தந்தை யில்லமதை

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும் சூரியனும் சிம்மத்திலும், புதனும் அங்காரகனும் சனியும் ராகுவும் கடகத்திலும், சுக்கிரன் கன்னியிலும், குரு துலாத்திலும், கேது மகரத்திலும், இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் முனிவர்களே! என்று பார்வதியம்மையார் கேட்டார். ஆண் குழந்தை பிறக்கும், தகப்பனுருடைய வீட்டைப் பற்றிச் சொல்லுகின்ருேம்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | அங்காரகன் புதன் சனி ராகு |
| கேது | | | சூரியன் சந்திரன் |
| | | குரு | ல லக்கினம் சுக்கிரன் |

உத்திரம் 1-ஆம் பாதம் சூரிய தசை இ 4—7—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் சுக்கிரனும், ரிஷபத்தில் சூரியனும், கடகத்தில் அங்காரகனும், கன்னியில் சனியும் கேதுவும், தனுசில் சந்திரனும் மகரத்தில் புதனும் குருவும், மீனத்தில் இராகுவும் ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்திரன் | 7. | ராகு. |
| 2. | சூரியன் | 8. | கடகம் |
| 3. | சிம்மம் | 9. | சுக்கிரன் |
| 4. | புதன் | 10. | துலாம் |
| 5. | அங்காரகன் | 11. | கேது |
| 6. | சனி | 12. | கன்னி |

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. வடபால் வாசல் கீழ்மேற்கு
வீதி மாரிமேற்கி லுறும்
அடவாய் கீழ்பால் தந்தியுமே
அரன்கோஷ்டங்க ளதின் வடக்காம்
சதிருய்க் காளிதென் பாலில்
அனலிலு தித்தோன் அருகிலுறும்
விடவா பரணன் மாதரசே
விளம்பும் சிறுவூர் கங்கைகுலம்

2. இந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குவாயிலை யுடைய தாகும், மாரியம்மன் கோயில் மேற்குத் திக்கிலிருக்கும். கிழக்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயில் இருக்கும். இதற்கு வடக்குத் திக்கில் சிவ பெருமானுடைய கோயில்கள் இருக்கும். தெற்குத் திக்கில் காளியம்மன் கோயிலிருக்கும். இதற்குச் சமீபத்தில் நெருப்பில் பிறந்தவளாகிய துரௌ பதையம்மன் கோயிலிருக்கும். விஷமுள்ள நாகப்பாம்பை ஆபரணமாக தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய மனைவியும் பெண்களுக்கு அரசியுமாக விருக்கின்ற பார்வதியம்மையே! பிறந்தவூர் சிறிய கிராமமாகும். ஜாதகர் வேளாள ஜாதியில்

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

3. வருவான் இரண்டாம் செனன மும்மாம்
வன்னைதந்தை துணை யோகம்
அரிவை புத்திர யோகமுமே
அறைவோ முன்பின் சென்மங்கள்
பெருமையாக யின் னூலில்
புகல்வோம் தந்தைதுணை ஆண்பால்
ஒருவனென்றேம் கன்னி ஒன்று
உரைப்போம் தீர்க்கம்பின்னேனுய்

3. ஜாதகர் இரண்டாவது பிறவியாக வந்து பிறப்பார். இவருடைய தாயார், தகப்பனுர், சகோதரர்கள் ஆகிய இவர்களுடைய யோகம், ஜாதகருடைய மனைவி, மக்கள் ஆகிய இவர்களுடைய யோகம், முன் ஜன்

மம், பின்ஜன்மம் ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் பெருமையுடன் சொல்லுகின்றோம். ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு சகோதரரும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். இந்தச் சகோதரர் இளைய சகோதரராவார்.

## தகப்பனாரின் இளைய சகோதரருடைய குணாதிசயங்கள்

4. பின்னோன் குணத்தைத் தான்புகல்வேன்
புனர்பூ சங்கள் ளாரிடபம்
அன்னோ னுதிப்பான் மாநிறத்தன்
அவனி விருத்தி செய்திடும்
முன்னோன் வார்த்தை தான்கடவான்
உலகில் வறுமை காணுதான்
பன்னிப் பகர்வன் யூகையுளன்
பாரிலொன்றே தீர்க்க முறும்

4. ஜாதகரின் தகப்பனாரின் இளைய சகோதரருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் புனர் பூச நட்சத்திரம் ரிஷபராசியில் பிறந்தவராவர். இவர் மாநிறமான தேகத்தை யுடையவராவார். இவர் நிலங்களைப் பயிரிட்டு தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் தன்னுடைய மூத்த சகோதரருடைய வார்த்தைக்கு அத்துமீறி நடக்க மாட்டார். இவர் பூமியில் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அடைய மாட்டார். இவர் தேர்தலாகவும் திறமையாகவும் பேசும் சாமர்த்தியத்தை யுடையவராவர். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியும் நுட்பமான அறிவையுடையவராவர். இவருக்கு மனைவி ஒன்றே ஆகும்; இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள்.

5. பின்னால் வேறாய் தான்செல்வன்
புதல்வன் ஒன்றே தீர்க்கமுறும்
கன்னி மூன்றுதான் புகல்வோம்
காலன் பதிக்கு நான்கிலுமே
அன்னோ னிவனை தான் காப்பன்
அறைவோம் பின்னால் சிலசேதி
இன்னோன் தந்தை குணமதனை
யியம்பக் கேண்மோ யீஸ்வரியே

5. ஜாதகரின் தகப்பனாருடைய இளைய சகோதரர் பின்னால் வேறு குடும்பஸ்தராகப் பிரிந்து போய் விடுவார். இவருக்கு ஒரே ஒரு பிள்ளை உண்டு. இந்தப் பிள்ளை நீண்ட ஆயுளை யுடையவராவர். இவருக்கு

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்திரன் | 7. | ராகு. |
| 2. | சூரியன் | 8. | கடகம் |
| 3. | சிம்மம் | 9. | சுக்கிரன் |
| 4. | புதன் | 10. | துலாம் |
| 5. | அங்காரகன் | 11. | கேது |
| 6. | சனி | 12. | கன்னி |

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. வடபால் வாசல் கீழ்மேற்கு
வீதி மாரிமேற்கி லுறும்
அடவாய் கீழ்பால் தந்தியுமே
அரன்கோஷ்டங்க ளதின் வடக்காம்
சதிருய்க் காளிதென் பாலில்
அனலிலு தித்தோன் அருகிலுறும்
விடவா பரணன் மாதரசே
விளம்பும் சிறுவூர் கங்கைகுலம்

2. இந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குவாயிலை யுடைய தாகும். மாரியம்மன் கோயில் மேற்குத் திக்கிலிருக்கும். கிழக்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயில் இருக்கும். இதற்கு வடக்குத் திக்கில் சிவ பெருமானுடைய கோயில்கள் இருக்கும். தெற்குத் திக்கில் காளியம்மன் கோயிலிருக்கும். இதற்குச் சமீபத்தில் நெருப்பில் பிறந்தவளாகிய துரௌ பதையம்மன் கோயிலிருக்கும். விஷமுள்ள நாகப்பாம்பை ஆபரணமாக தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய மனைவியும் பெண்களுக்கு அரசியுமாக விருக்கின்ற பார்வதியம்மையே! பிறந்தவூர் சிறிய கிராமமாகும். ஜாதகர் வேளாள ஜாதியில்

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

3. வருவான் இரண்டாம் செனன முமாம்
வன்னைதந்தை துணை யோகம்
அரிவை புத்திர யோகமுமே
அறைவோ முன்பின் சென்மங்கள்
பெருமையாக யின் னூலில்
புகல்வோம் தந்தைதுணை ஆண்பால்
ஒருவனென்றோம் கன்னி ஒன்று
உரைப்போம் தீர்க்கம்பின்னோனாய்

3. ஜாதகர் இரண்டாவது பிறவியாக வந்து பிறப்பார். இவருடைய தாயார், தகப்பனார், சகோதரர்கள் ஆகிய இவர்களுடைய யோகம், ஜாதகருடைய மனைவி, மக்கள் ஆகிய இவர்களுடைய யோகம், முன் ஜன்

மம், பின்ஜன்மம் ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் பெருமையுடன் சொல்லுகின்றோம். ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு சகோதரரும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். இந்தச் சகோதரர் இளைய சகோதரராவார்.

## தகப்பனுரின் இளைய சகோதரருடைய குணதிசயங்கள்

4. பின்னேன் குணத்தைத் தான்புகல்வேன்
புனர்பூ சங்கள் ளுள்ரிடபம்
அன்னே னுதிப்பான் மாநிறத்தன்
அவனி விருத்தி செய்திடும்
முன்னேன் வார்த்தை தான்கடவான்
உலகில் வறுமை காணுதான்
பன்னிப் பகர்வன் யூகையுளன்
பாரிலொன்றே தீர்க்க முறும்

4. ஜாதகரின் தகப்பனுரின் இளைய சகோதரருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் புனர் பூச நட்சத்திரம் ரிஷபராசியில் பிறந்தவராவர். இவர் மாநிறமான தேகத்தை யுடையவராவார். இவர் நிலங்களைப் பயிரிட்டு தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் தன்னுடைய முத்த சகோதரருடைய வார்த்தைக்கு அத்துமீறி நடக்க மாட்டார். இவர் பூமியில் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அடைய மாட்டார். இவர் தேர்தலாகவும் திறமையாகவும் பேசும் சாமர்த்தியத்தை யுடையவராவர். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியும் நுட்பமான அறிவையுடையவராவர். இவருக்கு மனைவி ஒன்றே ஆகும்; இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள்.

5. பின்னுல் வேருய் தான்செல்வன்
புதல்வன் ஒன்றே தீர்க்கமுறும்
கன்னி மூன்றுதான் புகல்வோம்
காலன் பதிக்கு நான்கிலுமே
அன்னே னிவளை தான் காப்பன்
அறைவோம் பின்னுல் சிலசேதி
இன்னேன் தந்தை குணமதனை
யியம்பக் கேண்மோ யீஸ்வரியே

5. ஜாதகரின் தகப்பனுருடைய இளைய சகோதரர் பின்னுல் வேறு குடும்பஸ்தராகப் பிறிந்து போய் விடுவார். இவருக்கு ஒரே ஒரு பிள்ளை உண்டு. இந்தப் பிள்ளை நீண்ட ஆயுளை யுடையவராவர். இவருக்கு

மூன்று பெண்களும் உண்டு என்று சொல்லுகின்றோம், ஜாதகருக்கு நான்காவது வயதில் இவர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து விடுவார். அதனால் இவருடைய மனைவியை ஜாதகருடைய தகப்பனார் காப்பாற்றுவார். இந்த விஷயங்களைப் பற்றி பின்னால் இரண்டாவது பாகத்தில் சில விஷயங்களைச் சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன், பார்வதியம்மையே! கேட்பீராக,

## ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்கள்

6. கல்வியும் சம மாகும்
கனராசர் பேட்டி கொள்வன்
எல்லையால் சீவிப்பானும் யிவன்
கிராம செட்டு செய்வன்
தொல்லையில் சுகமு முண்டு
தொடர் வழக்கதனில் செல்லான்
நல்லதோர் மகமும் கும்பம்
நல்குவா னென்று சொல்வோம்

6. ஜாதகருடைய தகப்பனார் நடுத்தரமான வித்தையை யுடையவராவர். இவர் பெரிய அரசர்களுடைய தரிசனத்தை அடைபவராவர்; அவர்களைக் காணுவார். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். கிராம வியாபாரத்தையுஞ் செய்வார். இவருக்குக் கஷ்டங்கள் கிடையா. சுகங்களுண்டு. இவர் நீண்ட காலம் வியாபித்திருக்கின்ற வியாஜ்ஜியத்தில் பிரவேசிக்க மாட்டார். இவர் நல்லதான மகநட்சத்திரத்தில் 'கும்பராசி'யில் பிறந்தவர் என்று சொல்லுகின்றோம்.

7. பாரியால் அவமா னங்கள்
பகருவோம் சொல்பரோகி
கூறுமுன் கோபி யாவன்
குணமது நல்ல தாகும்
தீரமில் லாத நெஞ்சன்
செங்கையில் கத்ரி ரேகை
ஆறுமா முகத்தோன் பக்தி
அவனுமே கொள்வா னாகும்

7. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய மனைவியால் அவமானத்தை அடைவார் என்று சொல்லுகின்றோம். இவர் அற்பமான ரோகத்தை யுடையவராவர். இவர் நல்ல குணத்தை யுடையவராவர். இவர் தைரியமான மனத்தை யுடையவரல்ல. இவருடைய சிகப்பு உள்ளங்கையில் கத்தரிரேகை என்ற ஒருவித கெட்ட ரேகையை யுடையவராவர். இவர் ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராவர்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

8. சொன்ன யிக்குணத் தானுக்குத்
தோன்றுவா னிந்தப் பாலன்
இன்னவன் குணத்தைச் சொல்வேன்
யின்பசொல் மாஞ் சிவப்பன்
அன்னியர்க் குதவி செய்வன்
அவன்கரம் தீயால் ஊனம்
மன்னவர் உறவு கொள்வன்
மானிலம் விருத்தி செய்வன்

8. இதுவரையிலும் சொல்லப்பட்ட குணகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இனிமேல் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுவேன். இவர் இனிமையாகப் பேசுவார், இவர் மாந்தளிரின் நிறமாகிய ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடைய தேகத்தை யுடையவராவர். இவர் பிறருக்கு உபகாரத்தைச் செய்வார். இவருடைய கை நெருப்பினால் ஊனத்தை கெடுதியை யடைந்திருக்கும். இவர் அரசர்களுடைய சிநேகிதத்தை அடைபவராவர். இவர் பெரிய நிலங்களைப் பயிரிட்டு தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார்.

9. யூகைவான் கல்வி யுண்டு
உணவுகள் சுகமாய்க் கொள்வன்
வேகமாய் நடக்க வல்லன்
மெல்லியர் இஷ்டம் கொள்வன்
பாகமாய்ப் பேச வல்லன்
பரிந் துபசாரம் செய்வன்
போக பாக்கியங்கள் பின்னால்
பொறுந்திடு மென்று சொல்வோம்

9. ஜாதகர் நல்லது கெட்டது என்று பகுத்தறியும்படியான நுட்பமான அறிவை யுடையவராவர். இவர் வித்தையை யுடையவராவர். இவர் சுகமான நல்ல சாப்பாட்டை சாப்பிடக் கூடியவர். இவர் வேகமாய் நடக்க கூடிய சக்தியை யுடையவர். இவர் ஸ்திரீகளின் பேரில் பிரிய முடையவராவர். ஸ்திரீகளும் இவரிடத்தில் பிரியமுள்ளவர்களாக விருப்பார்கள். இவர் பக்குவமாகவும் சாமர்த்தியமாகவும் பேசுந்திறமையை யுடையவராவர். இவர் முன் வந்து பிறருக்கு உபசரணையைச் செய்யக் கூடியவராவர். இவர் பின்னால் சகல யோகங்களையு மனுபவிப்பார். சகல சம்பத்துக்களையும் பின்னர் அடைவார் என்று சொன்னோம்.

## ஜாதகருடைய சகோதர பாவம்

10. இவனுட துணைவர் தன்னை
யியம்புவோம் முன்ஆண் ஒன்று
அவனுமே தீர்க்க மென்றேம்
அவன்குணம் கூறக் கேண்மோ
தவசிபோல் வாழ்வா னாகும்
சோதிநாள் மிதுன ராசி
நவனியில் உதிப்பா னாகும்
நலிந்த வாயுரோகி

10. ஜாதகருடைய சகோதரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு மூத்த சகோதரருண்டு. இவர் நீண்ட ஆயுளை யுடையவராவர். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சோதி நாள் என்று சுவாதி நட்சத்திரத்தில்* மிதுன ராசியில் பிறந்தவராவர். இவர் வாய்வு ரோகத்தினால் பீடிக்கப்பட்டவராவர்.

*குறிப்பு :—சுவாதி ஒரு மீன் ஜோதியைப் போல விருக்கும், தீபத்தைப் போல விருக்கும்.

11. மணமில்லான் மதலை காணன்
மரித்துரை அதிகம் கூருன்
குணமிலான் யோக சாலி
குரலது பேதம் காட்டும்
துணிவிலான் கரம்கால் தன்னில்
சோர்வுறும் காரணம் சொல்
பிணையாக லாபம் தன்னில்
பணிசனி யிருப்ப தாலே.

11. ஜாதகரின் சகோதரர் விவாகமில்லாமல் இருப்பார். குழந்தைகளில்லாமல் இருப்பார். இவர் தடுத்து அதிகமாகப் பேச மாட்டார். இவர் நல்ல குணத்தை யுடையவரல்ல, இவர் யோகத்தை யுடையவராவர். இவருடைய தொனி கொஞ்சம் வித்தியாசத்தை, குறைவை யுடையதாக விருக்கும், இவர் தைரிய மில்லாதவராவர். இவருக்குக் கைகால்கள் குற்றங்களையும் குறைவுகளையும் உடையனவாக விருக்கும். இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்க, லாபம் என்ற பதினோராவது வீட்டில் பணி என்ற ராகுவும், சனியும் இருப்பதாலே.

## ஜாதகரின் சகோதரருடைய முன் ஜன்மம்

12. செப்பினேம் அந்தத் தோஷம்
சேயன்முன் சென்மந் தன்னில்
தப்பித மதிகம் செய்தான்
சார்ந்தது அந்தத் தோஷம்

அப்பன்செய் வினைக ளென்ன
அறிவிப்பீர் முனியே நீதான்
மைப்பூடன் பூர்வம் சொல்வேன்
விரிஞ்சிக்கு மேல்பாலாக

12. இந்தக் கைகால் தோஷத்தைச் சொன்னோம். ஜாதகரின் சகோதரர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அதிகமான பாவங்களைச் செய்திருக்கின்றார். ஆகையால் இந்தப் பாவங்கள் இவரை இந்த ஜன்மத்தில் வந்தடைந்திருக்கின்றன. இவர் செய்த பாவங்களை விவரமாகச் சொல்லுவீர் முனிவரே! நீர் என்று கேட்கவே, முனிவர் சொல்லுகின்றார். ஜாதகரின் சகோதரருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் விரிஞ்சிபுரத்திற்கு மேற்குத் திக்கிலுள்ள

13. சிறுவூரில் வேடர் வம்சம்
செனித்துமே சிகாரி செய்து
வருநாளில் வினையைச் சொல்வேன்
வலையினில் புள்பிடித்து
இறகுகள் ஒடித்து விட்டு
இவன்சிக்கம் அதனில் போட்டு
மறுநாளில் உயிரைப் போக்க
வரைந்தது அந்தத் தோஷம்

13. ஒரு சிறிய கிராமத்தில் வேடர் ஜாதியில் பிறந்து சிகாரி ஜீவனத்தைச் செய்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவர் செய்த பாப காரியத்தைச் சொல்லுகின்றேன். ஒரு நாள் இவர் தன்னுடைய வலையால் ஒரு பறவையைப் பிடித்து அதனுடைய இறக்கைகளை ஒடித்து விட்டு அதைத் தன்னுடைய (உறியில்) கூண்டில் போட்டுப் பிறகு அதை மறுதினத்தில் கொன்று விட்டார். இந்தச் சாபம் இவரை வந்தடைந்தது.

14. கன்னியால் சிலது பட்சிகளையும்
கொன்றுனென் றோம்
தென் திசை காலனொடு
சேர்ந்தும் பிரமன் லக்கம்
இன்னவ னுதித்தா னென்றோம்
இச்சென்மம் பட்சி தோஷம்
தன்கரம் காலும் ஊனம்
சத்தியே கேட்டி டாயே

14. ஜாதகரின் சகோதரர் தன்னுடைய வலையால் சில பட்சிகளைக் கொன்று விட்டார் என்று சொல்லுகின்றோம். இவர் இறந்து, தெற்குத் திக்

கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து பிறகு பிரமதேவரால் பிரமலி பியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இந்த ஜன்மத்தில் பட்சியின் தோஷத்தால் இவருடைய கைகால்கள் ஊனமாகும், பார்வதியம்மையே! கேட்பீராக.

15. அந்ததோர் தோஷம் தீர அருளுவீர் சாந்தி தானும்
எந்த சாந்திகள் செய்தலும் யிலகாது யென்று
[சொல்வோம்
நொந்திடு வாழு மத்தில் நுகலுவோம் அந்தம் தன்னில்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழி குன்றுது.

15. இந்த தோஷம் நிவர்த்தியாவதற்கு ஓர் சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இந்தத் தோஷமானது எவ்விதமான சாந்திகளைச் செய்த போதிலும் ஜாதகரைவிட்டு நீங்கிப்போகாது என்று சொல்லுகின்றோம். இவர் தன்னுடைய மத்திய வயதில் பலவிதமான கஷ்டங்களை அனுபவிப்பார். இறந்துவிடுவார். பிறகு கடைசியில் சில விஷயங்களைச் சொல்லுகின்றோம், முருகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப்போகாமல் நடக்கும்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

16. மங்களம் பதினே ழாண்டில்
மருவிடும் மேற்கு திக்கில்
அங்கவள் குணத்தைச் சொல்வேன்
அதிகமாம் வார்த்தை யேற்பள்
சிங்கம் போல் கோபம்கொஞ்சம்
செல்வதி சமயோ கத்தாள்
எங்கள் போலதிதிக் கன்னம்
யீகுவாள் பாட்டாளி யாகும்.

16. ஜாதகருக்குத் தன்னுடைய பதினேழாவது வயதில் விவாகம் நடைபெறும். இவருடைய மனைவி மேற்குத் திக்கிலிருந்து வந்து சம்பவிப் பாள். இவளுடைய குணாதிசயங்களைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றேன். இவள் அதிகமான வார்த்தைகளை உபயோகப்படுத்துவாள். இவளுக்குச் சிங்கத்திற்கு வருவதைப்போலக் கோபம் சிறிதளவு உண்டாகும். இவள் நடுத்தரமான யோகத்தை யுடையவளாவள். எங்களைப்போன்ற முனிவர் களுக்கும் சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப்போடுவாள். இவள் கஷ்டப்பட்டு வேலை செய்யக்கூடியவளாவள், உழைப்பாளியாக விருப்பாள்,

17. சந்தேக மனத்த ளாகும் சஞ்சல புத்தி யுண்டு
விந்தையாய் வார்த்தை கூர்வள் வீண்பழி யேற்கா
[ளாகும்
சுந்தர முடைய ளாகும் தோழன்சொல் மிஞ்சு வாளாம்
நொந்த பேர்க் கன்னமீவள் நிமலிக்கு வயது தீர்க்கம்.

17. ஜாதகருடைய மனைவி சந்தேகமான மனத்தையுடையவளாவள், இவளுக்கு நிலையில்லாத புத்தியும், மனக்கவலையும் துன்பமும் உண்டு. இவள் பிறர் ஆச்சரியப்படும்படியாய் அதிசயமான வார்த்தைகளைச் சொல்லு வாள். இவள் வீணான அபவாதங்களை அடையமாட்டாள். இவள் அழகாக வும் சௌந்தரியமாகவும் இருப்பாள். இவள் தன்னுடைய புருஷனுடைய வார்த்தைகளுக்கு மீறி நடப்பவளாவள். இவள் கஷ்டப்பட்டுக் கொண்டிருப் பவர்களுக்கும் ஏழைகளுக்கும் சாப்பாட்டைப் போடுபவளாவள். இவ ளுக்குத் தீர்க்காயுளுண்டு.

18. செயமுனி யெழுந் திருந்து திடுக்கென உரைக்க லுற்றார்
வியமாகு முதல் மனைத்தான் மேவிடு யிரண்டா மாது
பயமிலா சொன்ன சங்கை பகர்வீர் விபரம் தன்னை
நயமிலா யேழோன் ரெண்டில் நற்சர மாகி நிற்க.

18. ஜயமுனிவர் எழுந்திருந்து திடீரென்று சொல்ல வாரம்பித்தார். ஜாதகருக்கு முதல் மனைவி இறந்துவிடுவாள், இரண்டாவது மனைவி வந்து நேரிடுவாள் என்றார் ஜயமுனிவர். பயப்படாமல் இவ்விதமாகச் சொன்ன தற்கு நீர் காரணத்தை விவரமாகச் சொல்லுவீரென்று கேட்கவே, நல்லவராக வில்லாத ஏழாவது வீட்டிற்குடையவராகிய குரு இரண்டாவது வீட்டில் சர ராசியில்* இருப்பதால்,

*குறிப்பு:—வியாக்கியானம்:—குரு சர ராசியில் இருக்கும் விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் அறு நூற்றி நாற்பத்தெட்டாவது பாடலை வாசிக்கவும். இந்தப் பாடலின் முதலிரண்டு வரிகள் கீழ்க்கண்டபடியாகும் "ஏழ் வீட்டினிற் கதிபன் சரத்தினிற்கில் இரு மனைவி திரமதனிலிருக்க நன்றே." களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீடாகிய மீனத்தைக் கேது மூன்றுவது பார்வையுடன் பார்ப்பது களத்திர தோஷமாகும். களத்திர காரகனாகிய சுக்கிரன் கன்னியில் நீச்சமாக விருப்பது களத்திர தோஷமாகும். இந்தச் சுக்கிரனைச் சனியும் ராகுவும் மூன்றுவது பார்வையுடன் பார்ப்பதும் களத்திர தோஷமாகும்.

19. தாரமே யிரண்டு யென்றோம்
சடைமுனி தடுத்துச் சொல்வார்
கூறுமோ தாரம் ரெண்டு
குடும்பத்தில் குருவும் தங்க

பார்மகன் பார்த்த தாலே
பாவையு மொன்று யென்றோம்
காரிழை வயது தீர்க்கம்
கழறுவோம் புத்திர பாகம்.

19. ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்று சொன்னோம். இதற்குச் சடை முனிவர் தடுத்துப் பதில் சொல்லுகின்றார். ஜாதகருக்கு இரண்டு மனைவிகள் என்று சொல்லக்கூடாது, குடும்பஸ்தான மாகிய இரண்டாவது வீட்டில் குரு இருப்பதாலும், பார்மகன் என்ற அங்காரகன் நான்காவது பார்வையுடன் பார்த்ததாலும் ஜாதகருக்கு மனைவி ஒன்றே என்று சொல்லுகின்றோம். இவளுக்கு நீண்ட ஆயுளுண்டு. இனிமேல் சந்தான விஷயத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

குறிப்பு:—வியாக்கியானம்:-அங்காரகன் பார்க்கும் விஷயம்:-மனைவியின் லக்கினம் ஏழாவது வீடாகிய மீனம் ஆகும். இதற்கு ஆயுள் ஸ்தானம் எட்டாவது வீடாகிய துலாம் ஆகும். அங்காரகன் மீன லக்கினத்திற்கு இரண்டாவது ஒன்பதாவது வீட்டிற்குடையவராக இருப்பதால் ஜாதகசந்திரிகை அறுபத்தாறுவது சுலோகம் பிரகாரம் அங்காரகன் சுபர் ஆகின்றார். ஆகையால் அங்காரகன் இரண்டாவது வீட்டைப் பார்ப்பது இங்கு களத்திரத்திற்கு நல்லது என்று கருதப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய புத்திரபாவம்

20. புத்திர விருத்தி தன்னைப்
புகலவே பலத்தைக் காணோம்
சுத்தமாய் யுதித்தா லுந்தான்
தீங்காகு மென்று சொல்வோம்
குத்தத்தைச் சொல்லு மென்ன
குழவியின் தானம் தன்னில்
வித்தகர் கேது தங்க
விளம்பினோ மந்தச் சங்கை.

20. ஜாதகருக்குச் சந்ததி விருத்தியைப் பற்றிச் சொல்லுவதற்கு யாதொரு வலிவும் இல்லை. ஒரு சமயம் குழந்தைகள் பிறந்தாலும் இவை சீக்கிரத்தில் இறந்துவிடும் என்று சொல்லுகின்றோம். இதற்குக் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது வீட்டில் கேது இருப்பதால் இவ்விதமாகச் சொன்னோம் என்றார் முனிவர்.

குறிப்பு:—வியாக்கியானம்:-புத்திரபாவ விஷயம்:—புத்திர ஸ்தானமாகிய ஐந்தாவது வீட்டிற்குடைய சனி இராகு அங்காரகன் ஆகிய இவ்விரண்டு பாபிகளுடன் சேர்ந்திருப்பது புத்திர தோஷமாகும். மேலும் புத்திர ஸ்தானத்தை அங்காரகன் பார்ப்பதும்

புத்திர தோஷமாகும். மேலும் சந்திர லக்கின ரீதியாய் ஐந்திற்குடைய குருவும் (அஃதாவது புத்திர ஸ்தானாதிபதியாகிய குருவும்) புத்திரகாரகனாகிய குருவும் சந்திர லக்கினத்திற்கு மூன்றில் இருப்பதும் புத்திர தோஷமாகும். ஆகையால் இங்கு புத்திரர் கிடையாது என்று சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும் லக்கினத்திற்குக் கர்மாதிபதியாகி புதன் மூன்று பாபிகளுடன் சம்பந்தப்பட்டிருப்பதும் தோஷமாகும். ஒன்பதிற்குடைய சுக்கிரன் நீசமாக விருப்பதும் தோஷமாகும்.

21. இதுவின்றி பூர்வம் தன்னில்
யெய்திற்று வினை யனேகம்
அது விவரங்கள் சொல்வாய்
அவனுட பூர்வம் கேளாய்
கதிதரும் அருணை ஞட்டில்
கலந்தனன் வடுக சேயாய்
பதியினில் திருகு முண்டாய்ப்
பாலகன் வாழு நாளில்.

21. இதுவுமல்லாமல் ஜாதகருக்குத் தன்னுடைய முன் ஜன்மத்தில் அநேக விதமான பாவங்கள் வந்து சம்பவித்திருக்கின்றன. இவற்றின் விவரங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன் கேட்பீராக என்றார் முனிவர், மோக்ஷத்தைக் கொடுக்கின்ற அருணை என்ற அருணாசலமாகிய திருவண்ணாமலை க்ஷேத்திரத்தில் ஜாதகர் வடுகருடைய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறந்து, தன்னுடைய குடும்பத்தில் சில கஷ்டங்கள் ஏற்பட்டு ஜாதகர் வாழ்கின்ற காலத்தில்

22 பந்தியில் வஞ்சனையும் செய்தான்
பகர்வோ மதுவோர் தோஷம்
முந்தி ஞளாக யில்லம்
மேவிற்று நாகம் ஒன்று
பிந்தி யோர்நாள் தன்னில்
பிழையாக மகுடத் தாலே
இந்தவன் முத்தம் தன்னில்
யெய்திற்று தியங்கி யேதான்

22. ஜாதகர் பந்தி போஜனத்தில் சில வஞ்சனைகளையும் கெடுதிகளையும் செய்தார். இது ஓர் தோஷமாயிற்று என்று சொல்லுகின்றோம். வெகு காலமாக தன்னுடைய வீட்டில் ஓர் நாகப்பாம்பு வாசஞ் செய்து கொண்டிருந்தது. இது ஓர் தினத்தில் மோடி வாசிப்பதைக் கேட்டு இது தவறாக தன் வளையைவிட்டு, வெளியே வந்து ஜாதகருடைய உள் வாசலில் மயக்கத்துடன் தென்பட்டது.

23. அரங்கமும் செய்து போக
தடித்தனன் கழியி ஞலே
மரலியின் பதிக்குச் செல்ல
வரைந்தது அதுஓர் தோஷம்
அரிவை வேர் மாதுக்கேதான்
ஆசையாய் வார்த்தை சொல்லி
பொருளது யீயா யின்ஞேன்
போகமே துய்த்தா னென்ருேம்.

23. இந்த நாகப்பாம்பு மோடியைக் கேட்டு, ஆடி, நடனஞ் செய்து விட்டுத் திரும்பிப் போகமலிருக்கும்படியாக அதை ஓர் தடியால் ஜாதகர் அடித்துக் கொன்றுவிட்டார். அது எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து விட்டது. இது ஓர் தோஷமாக ஜாதகருக்கு வந்து சம்பவித்துவிட்டது. ஓர் இதற ஸ்திரீயினிடத்தில் ஜாதகர் காம ஆசையுடன் வார்த்தைகளை மாத்திரம் சொல்லிவிட்டு அவளுக்குப் பணம் கொடுக்காமல் அவளிடத்தில் சம்போகத்தைச் செய்துவிட்டுப் போய்விட்டார் என்று சொல்லுகின்ருேம்.

24. கன்னிகை வருத்த முற்று
கழறுவாள் சாபம் தானும்
பின்வரும் சென்மந் தன்னில்
பெண்துணை காணு தாயும்
அன்னையால் சிலது நிந்தை
அணுகிடும் வமிச தோஷம்
இன்னமும் சிலது சொன்ஞள்
யெய்திற்று அந்தத் தோஷம்.

24. அதன்பேரில் அந்த ஸ்திரீ தன்னுடைய மனத்தில் துக்கத்தை யுடையவளாகிச் சாபத்தைக் கொடுத்தாள். பின்ஞல் நேரிடப்போகின்ற உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்குச் சகோதரியில்லாமலும் உன்னுடைய தாயாரால் உனக்கு சில அபவாதங்களும் அவமானங்களும், வம்மிச தோஷங்களும் ஏற்பட்டு நீ வாழக்கடவது என்று சொல்லியும், இன்ன சில விஷயங்களைச் சொல்லியும் சாபத்தைக் கொடுத்தாள். இந்தச் சாபம் ஜாதகரை வந்தடைந்தது.

25. மாரனு மந்தி யத்தில் மைந்தரும் தோஷ முண்டாய்
பாரினில் மரண மாகிப் பிரமஞல் வரையப் பட்டு
வீரிய னுதிப்பா ஞகும் மேவிடும் முன்னூழ் தோஷம
காரிழை சாபத் தாலே காளையின் துணையால் நிந்தை.

25. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தின் கடைசிகாலத்தில் தன்னுடைய பிள்ளைகள் இறந்து, பிறகு தானும் இறந்து பிரம்மதேவரால் பிரம

லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார். இவருக்குத் தன்னுடைய முன் ஜன்மத்திய பாவங்களும் தோஷங்களும் வந்து சம்பவிக்கும். ஸ்திரீயினுடைய சாபத்தின் பயனாக ஜாதகருக்குத் தன்னுடைய சகோதரரால், அவமானங்கள் நேரிடும்.

26. பிந்தி வஞ்சனையின் தோஷம்
பகருவோம் கரத்தில் குற்றம்
விந்தையாய் நாக சாபம்
விளங்காது புத்திரர் தானும்
முந்திய வினைகள் தீர
முரைப்பீர்கள் சாந்தி தானும்
பந்தியின் தோஷத் திற்கும்
பாவையின் சாபத் திற்கும்.

26. பிறகு பந்தியில் செய்த வஞ்சனையின் தோஷத்தின் பயனாக இவருக்குத் தன்னுடைய கையில் குறைவு நேரிடும். நாகப்பாம்பைக் கொன்ற தோஷத்தின் பயனாக இவருக்குக் குழந்தைகள் பிறக்கா என்றார் முனிவர். முன் ஜன்மத்திய பாவங்களும் தோஷங்களும் நிவர்த்தியாகி விடுவதற்காகச் சில சாந்திகளைச் சொல்லுவீர் முனிவரே! நீர் என்று கேட்கவே, பந்தியில் செய்த வஞ்சனை தோஷத்திற்கும், ஸ்திரீயினுடைய சாபத்திற்கும்

27. புகலவே மாட்டோம் யாங்கள்
பணிசாபம் விலக வேண்டி
தகமையாய்ச் சாந்தி சொல்வேன்
சர்ப்பமும் சிலையில் செய்து
உகமையாய் அரசின் கீழே
அல்லது மாரி கோஷ்டம்
பகையின்றி வைப்பா னாகில்
பணிதோஷம் விலகியே தான்.

27. நாங்கள் எந்தப் பரிகாரத்தையும் சொல்லவேமாட்டோம், நாகப் பாம்பைக் கொன்ற தோஷம் நிவர்த்தியாவதற்காகச் சாந்தியைச் சொல்லுகின்றேன். ஓர் சர்ப்பத்தின் பிரதிமையைக் கல்லினால் செய்து ஓர் அரச மரத்தின் கீழேயாகிலும் அல்லது மாரியம்மன் கோயிலிலாகிலும் தன்னுடைய மனத்தில் விகற்பமில்லாமல் ஜாதகர் வைப்பராகில் இந்த நாகப் பாம்பின் தோஷம் விலகிவிடும், பிறகு

28. சுதர்களும் தோன்று மென்றோம்
சொற்படி செய்யா னாகில்
அதமாகும் சுதர்கள் தானும்
அறைந்த ஊழ்செய் வானாகில்

சதமுடன் ஆண்பா லொன்று
சத்தியு மொருவர் தீர்க்கம்
மதிபணி யணிந்தோன் மாதே
மாதுரு சேதி கேளாய்.

28. ஜாதகருக்குக் குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லுகின்றோம். இவ்விதமாகச் சாந்தியை இவர் செய்யாவிட்டால் குழந்தைகள் இறந்து விடுவார்கள். இங்கு சொல்லப்பட்ட பாவத்திற்குப் பிரீதியைச் செய்வா ராகில் இவருக்கு ஒரு ஆண் குழந்தையும் ஓர் பெண் குழந்தையும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். சந்திரனையும் நாகப்பாம்பையும் ஆபரணங்களாகத் தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! இனிமேல் ஜாதகருடைய தாயாரின் விஷயங்களைச் சொல்லுகின்றோம், கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

29. மாதுரு சிவந்த மேனி மனமது கபடு முண்டு
தீதான குணமும் கொஞ்சம் சீலன்தன் மனம்போல் [வாழாள்
பாதகி வெளியில் செல்வள் பஞ்சம சாதி நேயம்
ஏது காலத்தில் செல்வாள் யீரெட்டு ஆண்டுக் குள்ளே.

29. ஜாதகருடைய தாயார் சிகப்பு நிறமான தேகத்தையுடையவளா வள். இவள் வஞ்சகம், கள்ளம் ஆகிய இவற்றையுடைய மனத்தையுடைய வளாவள். இவளிடத்தில் கொஞ்சம் கெடுதியான குணமும் உண்டு, இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல் ஒற்றுமையாக விருந்து வாழமாட்டாள். அஃதாவது இவள் புருஷனுக்கு விரோதமாக விருப்பாள். இவள் பாவியாகிப் புருஷனைவிட்டு வெளியே ஓடிப் போய்விடுவாள். இவளுக்கு ஹரிஜன் ஜாதியைச் சேர்ந்த ஓர் கள்ள புருஷன்* சினேகிதராக விருப்பார் என்றார் முனிவர். இவள் எந்தக் காலத்தில் இவ்விதமாக ஓடிப்போய்விடுவாள் என்று கேட்கவே இவர் ஜாதகருக்குப் பதினாறு வயதிற்குள்ளவே இவ்விதமாக ஓடிபோய்விடுவாள் என்றார் முனிவர்.

குறிப்பு :—வியாக்கியானம் :-தாயாருடைய விஷயம் :-ஜாதகருக்கு மாதுரு ஸ்தானம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குடைய குரு இரண்டில் குடும்பஸ்தானத்தில் பகை வீட்டில் இருப்பது தாயாருக்குத் தோஷமாகும். இவரைத் திரிதியை அஷ்டமாதிபதியாகிய அங்காரகன் சனி ராகுவுடன் சம்பந்தப்பட்டுப் பார்ப்பதும் தோஷமாகும். மேலும் மாத்ருகாரகனாகிய சந்திரன் சூரியனுடன் சம்பந்தப்பட்டு பன்னிரண்டில் மறைந்திருப்பதும் மாதுருக்குத் தோஷமாகும். பதினாறு வயதிற்குள்ளே அங்காரக தசை நடக்கின்றது. ஆகையால் அங்காரக தசையில் தாயார் வெளியே ஓடிப்போகின்ற அமைப்பு இருக்கிறது.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

30. தன்துணை நாஸ்தி யாகும் சாற்றுவோ மிவள்முன்
[சென்மம்
தென்திசை தோகை தன்னில் செனித்தினள் கோகுல
[த்தில்
தன்வரன் தாய்க்கு மாது சதாகாலம் பகையு மாகி
அன்னவள் சாபம் சொல்வாள் அணுகும் பின்சென்மந்
[தன்னில்.

30. ஜாதகரின் தாயாருடைய சகோதரங்கள் நாசத்தை அடைவார்கள். தாயாருடைய முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். தெற்குத் திக்கிலுள்ள தோகை என்ற பழனி ஸ்தலத்தில் கோகுலமாகிய யாதவருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறந்து, தன்னுடைய புருஷனுடைய தாயாருக்கும் இவளுக்கும் எப்போதும் விரோதம் ஏற்பட்டுக்கொண்டு அதனுல் அவள் இவளுக்குச் சாபத்தைக் கொடுத்தாள். உன்னுடைய மறுஜன்மத்தில்

31. உலகத்தார் வசையும் கூற
உன்பந்து பகையு மாகி
நிலேயது தவிர்த்து வாழ்வாய்
நீவடூர மாகச் சொன்னுள்
குலவிற்று அந்தச் சாபம்
கோதையும் வாய்புண் கண்டு
நலமிலாக் கால னுடு
நல்கியே நரகம் புக்கி.

31. பூமியிலுள்ளவர்கள் உன்மீது அவதூராகவும் அவமானமாகவும் குற்றமாகவும் பேசவும், உன்னுடைய பந்துக்கள் உனக்கு விரோதமாகவும் இருந்துகொண்டும், நீ இருக்கவேண்டிய நிலேயை, இடத்தை விட்டுவிட்டு, வேறிடத்தில் வாழக்கடவது என்று இடையூருகவும் கொடுமையாகவும் சொன்னுள். அந்தச்சாபம் இவளே வந்தடைந்தது. இவள் வாயில் புண் நோய்கண்டு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று, நரகத்தில் மூழ்கி கிடந்து

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

32. சிரனுன் கோன் வரையப்
பட்டுச் செனித்தனள் யிந்தமாது
வரன்மனம் போலே வாழா
மருநகர் வாசி யாகும்

வரும்சென்மம் காஞ்சி கீழ்பால்
மருவிய சிறுஊர் தன்னில்
அரிவை பஞ்சம வாக்கில்
அருளுவா னென்று சொல்வோம்.

32. நான்கு தலைகளையுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல வாழாமல் மற்றொரு ஊரில் வாசஞ் செய்வாள். இவள் தன்னுடைய மறுஜன்மத்தில் காஞ்சிபுரத்திற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஓர் சிறிய கிராமத்தில் பஞ்சம (ஹரிஜன்) ஜாதியில் பெண்ணாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மம்

33. தந்தைமுன் சென்மம் சொல்வேன்
சட்டநா தீசர் வாழும்
முந்திய நகரம் தன்னில்
முதித்தனன் வைசிய சேயாய்
சந்ததம் செட்டு செய்து
தான்வாழும்நாள் வினையைக் கேண்மோ
நிந்தைகள் ஒருபெண் பேரில்
நிர்மித்தா னென்று சொல்வோம்

33. ஜாதகரின் தகப்பனாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவர் சட்டநாதீசர் வாழ்கின்ற முதன்மையான நகரத்தில் வைசியருடைய ஜாதியில் ஆணாகப்பிறந்து எப்போதும் வியாபாரத்தைச் செய்துகொண்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத் தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவர் ஓர் ஸ்திரீயின் பேரில் குற்றங் களைச் சாட்டினார் என்று சொல்லுகின்றோம்.

34 மங்கையும் புகலு கின்றாள்
மறுசென்மம் மகவு மின்றி
வந்திடும் மனைவி யாலே
வர்ணங்கள் அதிக மாக
இந்தவார் சொல்ல லுற்றாள்
யெய்திற்று அந்தத் தோஷம்
பிந்திவே றென்று காணான்
புக்கினன் கால னாடு

34. அந்த ஸ்திரீ சொல்லுகின்றாள். உன்னுடைய மறுஜன்மத்தில் உனக்குப் பெண் இல்லாமலும், உனக்கு உன்னுடைய மனைவியால் பலவித அபகீர்த்திகள் அதிகமாக ஏற்பட்டும் நீ வாழக்கடவது என்று சொன்னாள்.

இந்தச்சாபமும் இவரை வந்தடைந்தது. இவர் வேறே எவ்விதமானப் பாவங்களையுஞ் செய்யவில்லை. இவர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

## ஜாதகரின் தகப்பனாருடைய மறு ஜன்மம்

35. காலன் தன் நாடடைந்து கஞ்சனால் வரையப் பட்டு
சீலமில்லாத கங்கை குலமதி லுதிப்பா னாகும்
பாலிகை சாபம் போலே பரவிடு மிச்சென் மத்தில்
வேலன் பின்சென்மம் சொல்வோம் வேலூரில் யிக்
[குலத்தில்

35. ஜாதகருடைய தகப்பனார் எமபட்டணத்திற்குச் சென்று பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுச் சுத்தமில்லாத வேளாலர் ஜாதியில் ஆணாகப் பிறப்பார். அந்த ஸ்திரீயினுடைய சாபத்தைப்போலவே இவருக்கு இத்த ஜன்மத்தில் பலன்கள் நேரிடும். இவருடைய மறுஜன்மத்தைப் பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவர் வேலூரில் இந்த ஜன்மத்திய ஜாதிபாகிய வேளாளர் ஜாதியில் ஆணாகப்

## ஜாதகரின் தகப்பனாருடைய மரணகாலமும் ஜாதகருடைய மரணகாலமும்

36. பிறப்பனா மென்று சொல்வோம்
பேசுவோ மரண காலம்
இருஎட்டு ஆண்டு தன்னில்
யமபுரம் சேர்வா னாகும்
திருமகன் தனக்குச் சொல்வேன்
சனிதிசை காலம் தன்னில்
அறுபது யேழு ஆண்டில்
ஆவணி மாதம் தன்னில்
மரவியின் பதிக்குச் செல்வன்
வரைகிறோம் பின்சென் மத்தை

36. பிறப்பார் என்று சொல்லுகின்றோம். இவருடைய மரணகாலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். ஜாதகருக்குப் பதினாறுவது * வயதில் இவருடைய தகப்பனார் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்வார். ஜாதகருடைய மரணகாலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். சனி மகாதசை காலத்தில் அறுபத்தேழாவது * வயதில் ஆவணி மாதத்தில் ஜாதகர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச்சேர்வார். இவருடைய மறுஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

குறிப்பு :—வியாக்கியானம் :-பிதுர் மரணவிஷயம் :-ஜாதகருக்குப் பதினாறு வயதில் அங்கார மகாதசை நடக்கின்றது. இக்காலத்தில் இவருடைய பிதிருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. பிதிருடைய லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத்திற்குச் சந்திரகாவியம் ஐம்பத்தோருவது பாடல் பிரகாரம் (ரிஷப லக்கினப் பலன் சொல்லும் பாடல் பிரகாரம்) அங்காரகன் மாரகராகின்றுர். இவர் மாரக ஸ்தான மாகிய ஏழாவது வீட்டிற்குடையவராய் இருப்பதால் ஜாதக சந்திரிகை இருபத்திரண்டாவது சுலோகம் பிரகாரம்கூட மாரக ராகின்றுர். இவர் நீசமாகி இவருடைய தசை மூன்றுவது தசையாய் வருவதால் குமாரசாமியம் மகாதசைப் பாடலம் நான் காவது பாடல் பிரகாரம் அங்காரகன் மாரகராகின்றுர். ஆகை யால் இங்கு அங்காரக தசையில் பிதுருக்கு மாரகஞ் சொல்லப் பட்டிருக்கின்றது.

குறிப்பு :—ஜாதகருடைய மரண காலவிஷயம் :—கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்தினுன்காவது சுலோகம் பிரகாரம் அங்காரகன் மாரகராகின்றுர். இவர் சனிக்கு மிகவும் அருகில் இருக்கின்றுர். சனி ஆறுக்குடையவராயும் கேது இருக்கும் வீட்டிற்குடையவராயும் இருப்பதால் குமாரசாமியம்மகாதசைப் படலம் நான்காவது பாடல் பிரகாரம் சனி மாரகராகின்றுர். ஜாதகசந்திரிகை இருபத்தேழாவது சுலோகப்பிரகாரமும் சனி எல்லோரையுந் தள்ளிவிட்டு தானே மாரகஞ்செய்ய அதிகார முடையவராக விருக்கின்றுர். ஆகையால் சனி தன்தசையில் ஆருவது வீட்டிற்குரிய தன் தசையின் இரண்டாவது பாகத்தில் அறுபத்தேழாவது வயதில் மரரகஞ் செய்வார் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மறுஜன்மமும் யோக பாவமும்

37. பிரிதிவு தலத்திலே தான்
பிறப்பனும் சைவ சேயாய்
பெரும் தந்தை பின் பின்சென்மங்கேள்
புலியூரில் சைவ சேயாய்
வருகுவா னிவனின் யோகம்
வரைகிறேம் தந்தை மேலாய்
பொருளது பெருக்க மாகிப் புகழ்
கிராம செட்டு செய்வன்

37. ஜாதகர் பிரிதிவுஸ்தலமாகிய காஞ்சீபுரத்தில் சைவ ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். ஜாதகரைப்பெற்ற தகப்பனுருடைய மறுஜன் மத்தின் பின்ஜன்மத்தைச் சொல்லுகின்றேன். இந்தத் தகப்பனுர் புலியூரில்

சைவர் ஜாதியில் ஆணுகப் பிறப்பார். ஜாதகருடைய போகபாவத்தைச் சொல்லுகின்ருேம். இவர் தன்னுடைய தகப்பஞருடைய அந்தஸ்திற்கு மேலான அதிகமான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் அதிகமாகச் சொத்துக்களைச் சம்பாதித்து, சிறப்பான கிராம வியாபாரத்தை இவர் செய்வார்.

38, நாலைந்து ஆண்டு மேலாய்
நாயகன் செய்வா ஞகும்
ஞாலங்கள் விருத்தி செய்வான்
நவிலுவோம் செனன காலம்
சாலவே கதி ரிருப்பு
சதுருண்டு திங்க ளேழும்
பாலகன் கெண்ட மெய்தும்
பகைவரும் காத்துக்கேதான்

38. ஜாதகர் தனக்கு இருபது வயதிற்குமேல் வியாபாரத்தைச் செய்வார். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்ய வகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் பிறந்தகாலத்தில் கதிர் என்ற சூரிய மகாதசையில் இருப்பு நின்ற வருஷங்கள் நான்கும், மாதங்கள் ஏழும் ஆகும். இக்காலத்தில் ஜாதகருக்குச் கெண்டங்கள் நேரிடும், விரோதிகள் காற்றில் அகப்பட்டதைப்போல சிதறி ஓடிப்போவார்கள். C. G. R.

———

# ஜாதகம் 35

## ஜனன கால கிரக நிலை

1. [1]மதி [2]சேய் [3]மேடம் [4]பணி [5]மானில்
[6]மாலும் [7]சீயம் [8]புகர்கன்னி
[9]விதியு மீனம் குரு [10]சாடி
[11]வெய்யோன் [12]ஞானி கடகமுற
இதுவே கிரகம் தானென்று
யெழிலாய் கன்னி சென்மமதாய்
அதுவே பலன்கள் யெவ்வார்
அறிவிப்பிர்கள் தவமுனியே

1. கன்னி ஜன்ம லக்கினமாகி சந்திரனும் அங்காரகனும் மேஷத்திலும், ராகு மகரத்திலும், புதன் சிம்மத்திலும், சுக்கிரன் கன்னியிலும், சனி மீனத்திலும் குரு கும்பத்திலும், சூரியனும் கேதுவும் கடகத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் தவத்தைச் செய்கின்ற முனிவர்களே! எவ்விதமான பலாபலன்களைச் சொல்லுவீர்கள் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சனி | சந்திரன் அங்காரகன் | | |
| குரு | இராசி சக்கரம் | | சூரியன் கேது |
| ராகு | | | புதன் |
| | | | லக்கினம் சுக்கிரன் |

பரணி 4-ஆம் பாதம் சுக்கிர தசை
ஞு 1—6—00

*குறிப்பு ;—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும் :—கடகத்தில் கேதுவும், சிம்மத்தில் புதனும், கன்னியில் அங்காரகனும், விருச்சிகத்தில் சந்திரனும், மகரத்தில் ராகுவும், கும்பத்திற் சூரியனும் சனியும் மீனத்திற் குருவும் சுக்கிரனும் ஆகும். குரு வக்கிர கதியில் இருக்கின்ருர்.

1. சந்திரன்
2. அங்காரகன்
3. மேஷம்
4. ராகு
5. மகரம்
6, புதன்
7. சிம்மம்
8. சுக்கிரன்
9. சனி
10. கும்பம்
11. சூரியன்
12. கேது

---

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. தானே ஆண்பால் செனனமுறும்
தந்தை யில்லம் தென்வடக்கு
மானே மேற்கு வாசலுறும்
வடமேல் தந்திமாரி கீழ்பால்
தேனே காளிதென் மேல்பால்
சிறுஊராகும் கர்ண குலம்
ஊனமில்லாத சேஷ்ட னென்றோம்
உரைப்போம் குடும்பச்சேதி தன்னை

2. பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும். இக் குழந்தையின் தகப்பனுர் வீடு வடக்குத் தெற்கு வீதியில் மேற்கு வாசலை யுடையதாகும். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளின் கோயில் வடமேற்குத் திக்கில் இருக்கும் மாரியம்மன் கோயில் கிழக்குத் திக்கிலிருக்கும் காளியம்மன் கோயில் தென்மேற்குத் திக்கிலிருக்கும் பிறந்த கிராமம் சிறிய கிராமமாகும். குழந்தை கருணிகர் ஜாதியாகும். ஜேஷ்ட குழந்தையாகும்* ஜாதகருடைய குடும்ப விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

*குறிப்பு:—வியாக்கியானம் :—மூத்தச் சகோதர ஸ்தானமாகிய பதினோராவது வீட்டில் சூரியனும் கேதுவும் இருப்பது மூத்த சகோதரங்களுக்குத் தோஷமாகும். மூத்த சகோதர ஸ்தானாதிபதியாகிய சந்திரன் எட்டிலிருப்பது மூத்த சகோதர தோஷமாகும். மூத்த ஆண் சகோதர காரகராகிய குரு ஆறுவது வீட்டில் மறைந்திருப்பது மூத்த ஆண் சகோதரர்களுக்குத் தோஷமாகும். அங்காரகன் எட்டில் மறைந்திருப்பது பொதுவாய்ச் சகோதரதோஷமாகும். ஆகையால் இங்கு ஜாதகர் ஜேஷ்டன் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

3. சேதி யுரைப்போம் தந்தைதுணை
செப்பக் கேண்மோ ஆணென்று
மேதில் விருத்தி பின்னேனாய்
விளம்பக்கேண்மோ அவன் குணத்தை

ஓதும் சுகமாய் வார்த்தை தன்னை
உலகில் கிருஷிவறுமை யில்லான்
சாதிப்பானும் சில சங்கை
தரணியை விருத்தி செய்திடுவன்.

3. விஷயங்களைச் சொல்லுகின்றோம். ஜாதகரின் தகப்பனாருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவருக்கு ஒரு சகோதரர் நீண்ட ஆயுளை யுடையவராக விருப்பார். இவர் இளைய சகோதரரானவர். இவருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவர் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் பயிர்த் தொழிலைச் செய்வார். இவர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அடைய மாட்டார். சில வார்த்தைகளைச் சொல்லி அவை சரியானவை, மேன்மையானவை என்று சொல்லி ஸ்தாபிப்பார். இவர் நிலங்களைப் பயிரிட்டு தானியவகையராக்களை அதிகப்படுத்துவார்.

4. இடுவன் யேழைதனக் கன்னம்
யியல்பாய் மனைவிஒன் றுருமே
அடவாய் வடமேல் தானணுகும்
அணுகா சுதர்கள் அம்பிகையே
துடியாய் வேறு மாதுவரில்
சுதர்கள் தோன்ரு தோவிபரம்
தடையாம் வேறு மாதணுகா
சாருததர்க்கும் சந்ததியே

4. ஜாதகரின் தகப்பனாருடைய இளைய சகோதரர் ஏழைகளுக்கு சாப்பாட்டைப் போடுவார். இவருக்கு மனைவி ஒன்றேயாகும். இந்த மனைவி வடமேற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள். இவளுக்குக் குழந்தைகள் கிடையா பார்வதியம்மையே! என்றார் முனிவர்† இதன் பேரில் இரண்டாவது மனைவி வந்து சம்பவித்தால் இந்த இரண்டாவது மனைவிக்கு குழந்தைகள் பிறக்குமோ, பிறக்காதோ என்ற விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இரண்டாவது மனைவி ஏற்பட மாட்டாள் ஒரு சமயம் இவள் வந்து சம்பவித்தாலும் இவளுக்கு குழந்தைகள் பிறக்கா என்றார் முனிவர்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—புத்திர விஷயம்:—ஜாதகருடைய பிதிர் ஸ்தானம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத்திற்கு இளைய சகோதர ஸ்தானம் மூன்ருவது வீடாகிய கடகம் ஆகும். ஆகையால் கடகம் இளைய சகோதரருடைய லக்கினமாகும். இதற்கு எட்டில் புத்திரகாரகராகிய குரு மறைந்திருப்பதால் கர்மத்திற்குப் புத்திரன் கிடையாது. மேலும் சனி ஒன்பதில் இருப்பதால் புத்திர தோஷம் உண்டு. தத்து புத்திர யோகம் இருக்கின்றது. கடகத்திற்கு ஐந்திற்குடைய

அங்காரகன் தன் வீட்டிற்கு ஆறுவது வீட்டில் மறைந்திருப்ப தும் புத்திர தோஷமாகும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

5. ததியே சனிக்கா முன்
வேறுசாரும் குடும்பம் பின்பாலில்
சதிருய் உரைப்போம் தந்தைகுணம்
தரணி விருத்தி செய்திடுவன்
பதியில் செலவு ஆளடுமை
பணையோர் விருத்தி பண்டியுடன்
பொதுவாய் கிராம கணக்குச்
செய்வன் புகழ்ந்தோர்க் கன்பன்

5. ஜாதகர் பிறப்பதற்கு முன்னமே குடும்பத்தில் பாகப்பிரிவினை ஏற்பட்டுத் தகப்பனுருடைய இளைய சகோதரர் வேறே போய் ஜீவிப்பார். இனி மேல் தகப்பனுருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தானிய வகையராக்களை அதிகப்படுத்துவார். குடும்பத்தில் செலவுகள் ஏற்படும், வேலைக்காரர்களுண்டு. செய்கால் நிலங்களும் ஏர்களும் விருத்தி யடையும். வண்டி வாகனமும் உண்டு. இவர் கிராமக் கணக்குப்பிள்ளை வேலையைச் செய்வார், தன்னைப் புகழ்ந்து, மெச்சிப் பேசுகின்றவர்களுக்கு இவர் பிரியமுள்ளவராக விருப்பார் பார்வதி யம்மையே!

6. அரவே போலே முன்கோபம்
அணுகும் பின்பு சாந்தமுறும்
நெறியைக் காப்பான் தெய்வபக்தி
நிதமும் ராசயிஷ்ட முளன்
குறியும் முகமார்பதனிலுறும்
குலத்தோர் மதிப்புகொண் டிடுவன்
வறுமை காணுன் மாநிறத்தன்
வரைந்த நற்குணத் தானுக்குயிவன்

6. ஜாதகருடைய தகப்பனுருக்குச் சர்பத்திற்கு வருவதைப் போல முன் கோபம் வரும். இது உடனே சாந்தத்தை யடைந்து தணிந்துவிடும். இவர் நல்ல மார்க்கத்தை யுடையவராவர். இவர் தினந்தோறும் தெய்வங்களின் பேரில் அன்புடையவராவர். இவர் அரசாங்கத்தாருடைய அபிமானத்தை யுடையவராவர். இவருடைய முகத்திலும் மார்பிலும் அடையாளங்களிருக்கும். இவரைத் தன்னுடைய பந்துக்கள் கௌரவப்படுத்துவார்கள், இவர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டார். இவர் மாநிற மான தேகத்தை யுடையவராவர். இதுவரையிலும் சொல்லப்பட்ட நல்ல குணகுணங்களை யுடைய இந்தத் தகப்பனுருக்கு இந்த ஜாதகர்

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

7. உதிப்பானிவனின் குணம் கேளாய்
உயர்வாம் புத்தி யூகையுளன்
ததிநெய் பிரியன் கல்விமிகும்
தரணி அதிகம்தான் சேர்ப்பன்
வதிபன் சிலர்பால் தானணுகி
வாழ்வன் கணக்கு தானெழுதி
அதுவும் தீதாம் கத்திரியோகம்
அறிவிப் போமே அத்திரியும்

7. பிறப்பார். இவருடைய (ஜாதகருடைய) குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவர் மேன்மையான சிறந்த அறிவை யுடையவராவர். நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான புத்தியை யுடையவராவர். இவர் தயிர் நெய் இவற்றின் பேரில் ஆசையை யுடையவராவர். இவர் அதிக வித்தை யுடையவராவர். இவர் நிலங்களை அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவர் சிலரை அண்டி அவரிடத்தில் கணக்கு எழுதும் வேலையிலிருந்து ஜீவனஞ் செய்வார். இந்த வேலையையும் இவர் விட்டுவிடுவார். இவருக்குக் கத்திரி யோகமுண்டு என்று சொல்லுகின்றோம். பிறகு அத்திரி மாமுனிவர் சொல்லுகின்றார்,

## ஜாதகருடைய சகோதர பாவம்

8. தன் துணை தசமேல் தோன்றும்
தங்காது ஆண்பா லுந்தான்
கன்னிகை அறுவர் தீர்க்கம்
கழறுவோம் பின்பால் சேதி
என்ன காரணத்தினாலே யிவனுக்குத்
துணை ஆண் தோஷம்
முன்னமே சொல்லு மென்ன
மூன்றினுக் குடையோன் யெட்டில்

8. ஜாதகருக்குப் பத்து வயதிற்குப் பிறகு சகோதரர்கள் உண்டாவார்கள். இவருக்குச் சகோதரர் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். ஆறு சகோதரிகள் நீண்ட ஆயுளை யுடையவராக விருப்பார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றோம். எந்தக் காரணத்தினால் ஜாதகருக்குச் சகோதரருடைய தோஷமுண்டு என்பதை உடனே சொல்லுவீர் என்று கேட்கவே, மூன்றிற் குடையவராகிய அங்காரகன் எட்டாவது வீட்டில்

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

9. இருப்பதால் துணைஆண் தோஷம்
யியல்மதி அவரோ டொத்து
வருவதால் பெண்கள் விருத்தி
மத்தியில் சிலது தோஷம்
அறிவிப்போம் உத்திர பாகம்
அன்னையின் சேதி கேளாய்
நறுமலர் யிஷ்டம் கொள்வள்
நற்புத்தி அடக்க மாவாள்

9. இருப்பதால் சகோதரருக்குத் தோஷ முண்டாகும். இந்த அங்காரகனுடன் மதி என்ற சந்திரன் கூடி நட்பாய் இருப்பதால் சகோதரிகள் பிறந்து வளருவார்கள். இவர்களில் சிலர் மத்திய வயதுடையவர்களாய் இறந்து விடுவார்கள். மற்ற விஷயங்களைப் பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவள் வாசனையுள்ள புஷ்பங்களின் பேரில் பிரியமுள்ளவள். நல்ல புத்தியை யுடையவளாவள், சாந்தமும் அமைதியுமுடையவளாவள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—இந்தச் சந்திரன் கூட எட்டிலிருப்பதால் சில சகோதரிகள் மத்திய வயதுடையவராகி இறந்து விடுவார்கள்.

10. வரன்மனம் போலே வாழ்வள்
அன்னம் போல்சாய லொக்கும்
நெறி கார்ப்பாள் சீலமுண்டு
நிலைக்காது துணைவர் வர்க்கம்
அரிவையில் தென்பா லாகும்
அணுகிடும் கன்னி யொன்றே
வருமாறு துணைவர் தோஷம்
மதிக்கு மூன்றோன் வியத்தில்

10. ஜாதகருடைய தாயார் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருந்து வாழ்வாள். இவள் அன்னப்பட்சியைப் போல அழகான ரூபத்தை யுடையவளாவள். இவள் நல்ல மார்க்கத்தை யுடையவளாவள். பரிசுத்தமானவள், நல்லொழுக்கங்களை யுடையவளாவள். இவருக்குச் சகோதரர்கள் உயிருடன் இராமல் சீக்கிரம் இறந்து விடுவார்கள். இவளுடைய வீடு தெற்குத்திக்கிலிருக்கும், இவளுக்கு ஒரு சகோதரிதான் உண்டு. இவளுக்கு சகோதர தோஷம் ஏற்பட்ட விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, மதி என்ற சந்திரனுக்கு மூன்றாவது வீட்டிற்குடையவராகிய புதன் பன்னிரண்டாவது வீட்டில் இருப்பதாலும்,

11. காரியு மேழில் தங்க கழறிேனும் துணைவர் தோஷம்
தீரமாய் யிவள் முன்சென்மம் செப்புவோம் பழனி
[ஞட்டில்
நீரணி கங்கை சேயாய் நேர்ந்துமே வறுமை யின்றி
பாரினில் வாழும் நாளில் பகருவோ மூழி தானே

11. காரி என்ற சனி ஏழாவது வீட்டில் இருப்பதாலும் தாயாருக்கு சகோதர தோஷத்தைச் சொன்னேம். இனிமேல் இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றித் தைரியமாய்ச் சொல்லுகின்ரேம். இவள் பழனி என்ற க்ஷேத்திரத்தில் விபூதியை அணிந்து கொள்ளுகின்ற வேளாளர் குலத்தில் பெண்ணுகப் பிறந்து தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்காமல் பூமியில் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த பாவங்களைச் சொல்லுகின்ரேம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தாயாருடைய சகோதர பாவத்தை அறிய வேணுமானல் சந்திரனை லக்கினமாக வைத்துக் கொண்டு இதற்கு மூன்ருவது பாவத்தையும் பதினேராவது பாவத்தையும் (அஃதாவது சகோதரப் பாவங்களை) ஆராய்ச்சி செய்து பலன் சொல்ல வேண்டும் என்று பல தீபிகை பதினைந்தாவது அத்தியாயம் இருபத்து நான்காவது சுலோகத்திலும் சில இதர கிரந்தங்களிலும் சொல்லி யிருக்கின்றது. இங்கு சந்திரனுக்கு மூன்றிற்குடைய புதனையும் பதினென்றிற் குடைய சனியையும் ஆராய்ச்சி செய்து பலன் சொல்லியிருக்கின்ருர்.

12. மைத்துனன் மனைவி பேரில்
வர்ணித்தாள் சிலேடை வார்த்தை
சுற்றத்தார் அதனைக் கேட்டுத்
தோகையை விலக்க லுற்ருர்
பத்தினி மன வெறுப்பால்
பகருவாள் சாபம் தானும்
குத்த மில்லாமல் யென்மேல்
கொடுமைகள் சொன்ன பாவி

12. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மைத்துனருடைய மனைவியின் பேரில் இரண்டு அர்த்தங்களை யுடைய சில சிலேடையான வார்த்தைகளை நிந்தையாகச் சொல்லினுள். இதைப் பந்துக்கள் கேட்டு இந்த மனைவியை வீட்டிலிருந்து துறத்தி விட்டார்கள். இவள் மனத்தில் துன்பத்தை அடைந்து சாபத்தைக் கொடுத்தாள். யாதொரு குற்றமும் இல்லாத என் பேரில் நிந்தைகளைச் சொல்லிய பாவியாகிய நீ

13, மறுசென்மம் துணைக ளின்றி
மனதுய ரதிக முண்டாய்
உறும் புத்திரரு மின்றி
உலகினில் வாழ்வா யென்று

தெருதூளை தூற்றிச் சென்றூர்
சேர்ந்தது அந்த தோஷம்
அருவையும் மந்தியத்தில் அணு
கிற்று வாய்ப்புண்ணும் தான்

13. உன்னுடைய மறு ஜன்மத்தில் சகோதரர்களில்லாமலும், மனத்தில் அதிகமான துன்பத்தை யுடையவளுமாகியும், புத்திரர்கள் இல்லாமலும் இருந்து நீ உலகினில் வாழக் கடவாய் என்று சாபத்தைக் கொடுத்து விட்டுத் தெருவிலுள்ள மண் தூளை வாரித் தூற்றி விட்டுப் போய் விட்டாள். இந்தத் தோஷமானது, சாபமானது இவளை வந்தடைந்தது. இவளுக்கு முன் ஜன்மத்திய கடைசி காலத்தில் வாயில் புண் நோய் வந்து நேரிட்டது.

14. காலன்தன் பதிக்குச் சென்று
கஞ்சனுல் வரையப் பட்டு
சீலமா மிக் குலத்தில்
செனித்தவ ளென்று சொல்வோம்
ஞாலமேல் துணைவர் தோஷம்
நாயகிக்குக் கர்மத்திற்கு
ஏலாது சுதர்கள் தானும்
யியம்புவோ மிவள்பின் சென்மம்

14. ஜாதகருடைய தாயார் பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுச் சுத்தமுள்ள இந்த ஜன்மத்திய ஜாதியில் பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ரேம். ஆகையால் இந்தப் பூமியில் இவளுக்குச் சகோதர தோஷம் நேரிட்டது. இவளுக்குக் கர்மத்தைச் செய்ய பிள்ளை இருக்காது. இனிமேல் இவளுடைய பின் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம்.

15. உத்திரம் வேங் கடத்தில் உதிப்பளாம் சத்திரிய [சேயாய்
வித்தகர் பராசர் சொல்வார் விளம்பினீர் கர்ம புத்திரன்
குத்தமா மென்று சொன்னீர் குழவியு மொன்று நிற்க
பத்தாத காரண ங்கள் பகர்வீர் முனியே நீதான்

15. வடக்குத் திக்கிலுள்ள வேங்கடம் என்ற திருப்பதி ஸ்தலத்தில் க்ஷத்திரியருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள். பராசர மஹரிஷி கேட்கின்ருர். ஜாதகருடைய தாயாருக்குக் கர்மஞ் செய்ய புத்திரன் இருக்க மாட்டார் என்று சொன்னீரே, ஜாதகராகிய ஓர் புத்திரர் இருக்கினருரே இதற்கு இன்னம் குறைவாயுள்ள காரணங்களைச் சொல்லுவீர், முனிவரே! நீர் தான்.

16. மன்னனுக் கிருபான் யேழில்
ஆண்டில் கெண்ட மொன்று
கன்னிகை போகத் தாலே
கழறுவோம் பிணியே யென்றோம்
என்ன நோயணுகும் சொல்வாய்
யெய்தும் நீரதிக மென்றோம்
சொன்ன நோய் உருபுமாரல்
துன்பங்க ளதிக மெய்தும்

16. ஜாதகருக்கு இருபத்தேழாவது வயதில் ஒரு கண்டம் நேரிடும். ஸ்திரீயிடத்தில் இவர் சம்போகஞ் செய்ததாலே ஒரு வியாதி உண்டாகும் என்று சொல்லுகின்றோம். எவ்விதமாய் ரோகம் உண்டாகும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்கவே நீர் வியாதி உண்டாகும் என்று சொல்லுகின்றோம் என்றார் முனிவர். இங்கு சொல்லப்பட்ட நீர் வியாதியால் ஜாதகருடைய உருவு குலைந்து இவருடைய ரூபம் மாறி விடும் இவருக்கு அதிகமான கஷ்டங்களும் உபத்திரவங்களும் உண்டாகும்.

17. வந்தஊழ் தன்னை வேண்டி
வரைகிறோம் கிரிகை யொன்று
விந்தையாய் கர்ம சாந்தி
வித்தகன் தனக்குச் செய்து
பிந்தியும் ஐந்தின் பக்கம்
புகட்டுவாய் மூவைந்து ளுள்
அந்ததோர் வினைகள் நீங்கி
அவனுமே தீர்க்க சீவி

17. ஜாதகருக்கு ஏற்பட்டுவிட்ட வினையை நிவர்த்தி செய்வதற்காக ஒரு சாந்தியை சொல்லுகின்றோம். ஜாதகர் தனக்காகக் கர்ம சாந்தியைச் செய்து பிறகு ஐந்தாவது பட்சத்திலுள்ள பதினைந்து தினத்திற்குள்ளே இந்த வினை நீங்கி ஜாதகர் நீண்ட ஆயுளை யுடையவராவர்.

## ஜாதகருடைய விவாகமும் மனைவியின் குணாதிசயங்களும்

18. அதற்குப் பின் மணத்தைச் சொல்வேன்
அணுகிடும் தென்கீழ் கன்னி
வதிபதி குணத்தைச் சொல்வேன்
மானிறம் உணச்சல் தேகி
சதியிலா மனத்த ளாகும்
சற்பாத்திரி யோக சாலி
துதிசெய்தோர்க் குதவு வாளாம்
சோம்பிடாள் காரி யத்தில்

18, இதன் பிறகு ஜாதகருடைய விவாகத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவருக்கு மனைவி தென் கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய குணுதிசயங்களை பற்றிச் சொல்லுகின்றேன். இவள் மாநிறமான தேகத்தை யுடையவளாவள். இவள் நீண்டு மெலிந்து வாடிய தேகத்தை யுடையவளாவள். இவள் வஞ்சகம் இல்லாத மனத்தை யுடையவளாவள். இவள் தகுதியானவள். நல்ல குணத்தை உடையவள். நல்ல காரியங்களைச் செய்யக் கூடியவள். யோகத்தை யுடையவளாவாள். இவளை வணங்கினவர்களுக்கு இவள் உபகாரத்தைச் செய்வாள். இவள் காரியங்களைச் செய்து முடிப்பதில் சோம்பலில்லாதவளாவள்.

19. நன்நடை மிருது வார்த்தை நல்லோர்க்கு நல்ல ளாவள்
பொன்பணி அதிகம் சேர்ப்பள் புண்ணிய மனத்த ளாகும்
கன்னிக்குச் சுதர்கள் தோஷம் கழறுவீர் விபரம் தன்னை
துன்ராகு அஞ்சில் தங்க சுரர் குரு ஆறிலேற.

19. ஜாதகருடைய மனைவி நல்ல நடத்தையை யுடையவளாவள். இவள் இனிமையாகப் பேசுவாள். இவள் நல்லவர்களுக்கு நல்லவளாக விருப்பாள். தனத்தையும் ஆடை ஆபரணங்களையும் அதிகமாகச் சம்பாதித்து சேர்த்து வைப்பாள். இவள் தானதர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவளாவள். இவளுக்குப் புத்திர தோஷமுண்டு. இதற்குக் காரணங்களை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, கெடுதியான ராகு ஐந்தாவது வீட்டிலும் சுரர்குரு என்ற தேவ குருவாகிய குரு ஆருவது வீட்டிலிருப்பதாலும்

20. குடும்பத்தோன் நீச்ச மாகக்
கூறினேம் புத்திர தோஷம்
அடவுடன் பூர்வம் தன்னில்
அணுகிற்று வினை யனேகம்
விடம்போல சேர்ந்த தென்றேம்
விளம்புவீ ரந்தச் சங்கை
தடவரை மகளே பூர்வம்
சாற்றுவோம் கேட்டி டாயே

20. குடும்பத்தோன் என்ற இரண்டாவது வீட்டிற்குடைய சுக்கிரன் கன்னியா ராசியில் நீசமாகி இருப்பதாலும் இந்தப் புத்திர தோஷத்தைச் சொன்னேம். ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அனேகப் பாவங்களைச் செய்திருக்கின்றார். இந்தப் பாவங்கள் பாம்பின் விஷத்தைப் போலத் தீமையாக இந்த ஜன்மத்தில் இவரை வந்தடைந்திருக்கின்றன என்று சொல்லுகின்றேம், இந்த விஷயங்களை விவரமாக சொல்லுவீர் என்று கேட்கவே விசாலமான உயர்ந்த மலையின் அரசனாகிய பர்வத ராஜனுடைய புத்திரியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லுகின்றேம் கேட்பீராக என்றார் முனிவர்.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

21. முன்சென்மம் கொங்கு நாட்டில் முதித்தனன் ரெட்டி
[வம்சம்
பொன்பல முடைய னாகிப் பேதையு மதலை யுண்டாய்
அன்னவன் வாழு நாளில் அணுகின வினையைக்
[கேண்மோ
தன்னில்லம் நாக மொன்று சார்ந்தது வெகு நாளாக

21. ஜாதகர் தன்னுடைய முன்ஜன்மத்தில் கொங்கு நாட்டில் ரெட்டியாருடைய ஜாதியில் ஆணாகப் பிறந்து அதிக தனத்தை யுடையவராகியும் மனைவி மக்களையு முடையவராகியும் வாழ்கின்ற காலத்தில் சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவருடைய வீட்டில் ஒரு நாகப்பாம்பு அதிக காலமாக வசித்துக் கொண்டு இருந்தது.

22. மாரனு மதனைக் கண்டு வாட்டினான் கழியினாலே
தீரமாய்க் கால னூடு சேர்ந்தது யென்று சொல்வோம்
பாரினில் அந்தத் தோஷம் பற்றிற் றென்று
[சொல்வோம்
வேறொரு வினைகள் காணான் வித்தகி கேட்டி டாயே

22. ஜாதகர் இந்தப் பாம்பைப் பார்த்து விட்டு இதனை ஒரு தடியால் அடிக்கவே இது தைரியமாய் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து விட்டது என்று சொல்லுகின்றோம். இந்தத் தோஷமானது பூமியில் இவரை வந்து அடைந்தது என்று சொல்லுகின்றோம். இவர் வேறே எந்தப் பாவத்தையுஞ் செய்யவில்லை, பார்வதியம்மையே! கேட்பீராக.

23, அரவதைக் கொன்ற தோஷம்
அணுகிடு மிச்சென் மத்தில்
பெரும்சுதர் தோஷ மெய்தும்
புகலுவோம் கிரிகை யொன்று
அரவுமே சிலையில் செய்து
அரசின்கீழ் வைப்பா னாகில்
குறையது நிவர்த்தி யாகிக்
குழவிகள் விருத்தி தீர்த்தம்

23. இந்த நாகப்பாம்பைக் கொன்று விட்ட தோஷம் ஜாதகரை இந்த ஜன்மத்தில் வந்தடையும், பிறக்கின்ற பிள்ளைகள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். இதற்காக ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். ஒரு பாம்பின் பிரதிமையைக் கல்லில் செய்து அரச மரத்தின் கீழே ஜாதகர் நாகப்பிரதிஷ்டையாக வைப்பாராகில் இந்தத் தோஷம் விலகிப் போய் குழந்தைகள் பிறந்து நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள்.

24. சொற்படி செய்யா ஞகில்
சுதர்கள் தோன்ரு தோன்றில் தீதாம்
சொற்படி செய்வா ஞகில்
துலங்கிடு மாண்பா லொன்று
மைப்படி விழிமார் மூன்று
வரைகிருேம் பால னுக்கு
அப்பணி சடையோன் தேவி
அருளிய மொழி குன்ருது

24. நாங்கள் சொல்லிய பிரகாரம் ஜாதகர் சாந்தியைச் செய்யாராகில் குழந்தைகள் பிறக்கா, ஒரு சமயம் பிறந்தால் இவை சீக்கிரம் இறந்துவிடும். நாங்கள் சொல்லிய பிரகாரம் இவர் செய்வராகில் ஒரு பிள்ளேயும் மூன்று பெண்களும் இவருக்குப் பிறப்பார்கள் என்று சொல்லுகின்ருேம். நாகப் பாம்பைத் தன்னுடைய ஜடையிற் தரித்துக் கொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய மனேவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

25. தந்தையின் பூர்வம் தன்னே சாற்றுவோம் தில்லே
[தன்னில்
வந்தனன் வைசிய சேயாய் வணிபங்கள் பலவாய்ச்
[செய்து
தன்மனே மதலே யுண்டாய்ச் சென உபகாரி யாயும்
வந்தவர்க் கன்ன மீந்து அரமதி லிச்சை யாயும்

25. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவர் தில்லே என்ற சிதம்பர க்ஷேத்திரத்தில் வைசியருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து பலவிதமான வியாபாரங்களேச் செய்து கொண்டும் மனேவி மக்களே யுடையவராகியும் ஜனங்களுக்கு உபகாரத்தை செய்து கொண்டும் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சர்ப்பாட்டைப் போட்டுக் கொண்டும், தானதர்மங்களில் பிரியமுடையவராயும் இருந்து கொண்டும்,

26. முன்வினே யில்லா தாகி மேவினன் கால ஞடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ னிவனே
[யென்ருேம்
பின்சென்மம் வள்ளூர் தன்னில் பிறப்பனும் பிரம்ம
[சேயர்ய்
அன்னேயும் கேட்க லுற்ருர் அவனுமிச் சென்மந்
[தன்னில்

26. முன்ஜன்மத்திய பாவம் ஒன்றும் இல்லாதவராகியும் இருந்து, பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தகப்பனுர் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ரேம். இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில் வள்ளுர் என்ற திருவள்ளுரில் பிராமண ஜாதியில் ஆணுகப் பிறப்பார். இதன் பேரில் பார்வதியம்மன் கேட்கவாரம்பித்தார், இவர் இந்த ஜன்மத்தில்

27. அன்னகர் கிராம கணக்கு
அவனுமே செய்து வந்தோன்
முன்குல முதிக்கும் வண்ணம்
முறைப்பீர்கள் முனியே நீதான்
இன்னவன் சிலரா பத்துக்
கிரங்கியும் மாலின் பக்தி
உன்னத தலங்கள் சென்று
உயர்ந் தோர்கள் பக்தியாயும்

27. இவருடைய கிராமத்தின் சர்க்கார் கணக்கு வேலையைச் செய்து கொண்டு ஜீவனஞ் செய்து வந்த இவருக்கு எவ்விதமாகப் பிராமண ஜாதியில் ஜனனம் நேரிடும், இதனுடைய காரணத்தைச் சொல்லுவீர் முனிவரே! நீர் என்று கேட்கவே இவர் சிலருடைய கஷ்ட காலங்களில் மனமிறங்கி உதவி செய்தாலும் மகாவிஷ்ணுவின் பேரில் அன்புடையவராகி, மேன்மையான சிறந்த தெய்வீக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகச் சென்றும் பெரியோர்களிடத்தில் அன்புடையவராகியும்

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணகாலம்

28. அரமதி லிச்சை யுண்டாய் அவனுமே வாழ்வ தாலே
மறைகுல முதிப்பா ருகும் வரைகுவீர் கர்ம காலம்
திருமக ணற்பா னைந்தில் செம்புவோம் தந்தை [கெண்டம்
கரிமத வானை பெற்றக் காதலி கேட்டி டாயே

28. தானதர்மங்களைச் செய்வதில் பிரியமுடையவராகியும் ஜாதகருடைய தகப்பனுர் வாழ்வதாலே பிராமண ஜாதியில் பிறப்பார். இவருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம். ஜாதகருக்கு நாற்பத்தைந்தாவது வயதில் இவருடைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும். கறுப்பு மத யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியாயனம்:—பிதாமரண கால விஷயம்:—ஜாதகருக்கு நாற்பத்தைந்தாவது வயதில் குருமகா தசை நடக்கின்றது.

பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாறுவது சுலோகம் பிரகாரம் குரு மாரகராகின்றார். இந்தக் குரு அஷ்டமலாபாதி பதியாகின்றார். ஆகையால் இவர் தசையில் இங்கு பிதுருக்கு மரணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலமும் ஜாதகருடைய மரணகாலமும்

29. எண்ணைந்து எட்டு ஆண்டில் ஏகுவாள் அன்னை [தானும்
திண்ணமாய் சாதகர்க்குச் செப்புவோ மறுப தாண்டில்
வண்ணமாய் மேட மாதம் வரைகிறோம் கெண்ட [மென்றோம்
அண்ணிலப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்

29. ஜாதகருடைய தாயார் ஜாதகருக்கு நாற்பத்தெட்டாவது வயதில்* இறந்து விடுவாள். ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தனக்கு அறுபதாவது வயதில்* மேட மாதம் என்ற சித்திரை மாதத்தில் இறந்து விடுவார் என்று சொல்லுகின்றோம். சிவபெருமானைப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம்:—ஜாதகருடைய தாயாருடைய மரண விஷயம் :—மாதிருலக்கினம் நான்காவதுவீடாகிய தனுசாகும். தனசு லக்கினத் திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகப் பிரகாரம் சனி மாரகராகின்றார். இவருடைய வீட்டிலுள்ள குரு ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றுவது சுலோகப் பிரகாரம் அதிக மாரக ராகின்றார். மேலும் துய்ய கேரளம் எட்டாவது பாவம் பதினன்காவது பாடல் பிரகாரமும் சுக்கிர நாடிப் பிரகாரமும் லக்கினதிபதியாகிய குரு மாரகராகின்றார். ஆகையால் ஜாதகருக்கு நாற்பத்தெட்டாவது வயதில் தன்னுடைய தாயாருக்கு மரணம் நேரிடும் என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—ஜாதகருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு அறுபதாவது வயதில் சனி மகாதசை நடக்கின்றது. ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகம் பிரகாரம் குரு மாரகராகின்றார். இவருடைய வீட்டிலுள்ள சனி ஜாதக சந்திரிகை இருபத்து மூன்றுவது சுலோகப் பிரகாரம் அதிக மாரகராகின்றார். மேலும் ஜாதக சந்திரிகை இருபத்தேழாவது சுலோகம் பிரகாரம் சனி ஆறுவது தசாநாதனகிய குருவைத் தள்ளி விட்டுத் தானே மாரகராகின்றார். ஆகையால் ஜாதகருக்கு இங்கு சனி மகாதசையில் அறுபதாவது வயதில் மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது. குரு

தசை ஆருவது தசையாக வந்தால் தமிழ் ஜாதகாலங்காரம் தொள்ளாயிரத்து எழுபத்தைந்தாவது (975-ஆவது) பாடல் பிரகாரமும் குமார சாமியம் மகாதசைப்படலம் நான்காவது பாடல் பிரகாரமும் ஜாதகருக்கு மாரகஞ் செய்து விடுவார். ஆனல் இங்கு சனி குருவைத் தள்ளிவிட்டு, ஜாதக சந்திரிகை இருபத்தேழாவது சுலோகம் பிரகாரம் தானே மாரகத்தைச் செய்ய அதிகாரமுடையவராக விருக்கின்ருர்.

30. இதற்குள்ளே மாரகங்கள் யிலகாதோ விபரம்
[சொல்வாய்
சதிமேக நீர்வியாதி சார்ந் திடும் முன்னல் சொன்னேன்
அதுசாந்தி செய்யில் நீங்கி அறுபது ஆண்டு தீர்க்கம்
குதர்க்கமாய்ச் செய்யா னுகில் குறித்தன மத்திய
[கெண்டம்

30. இந்த அறுபதாவது வயதிற்கு முன்னமே ஜாதகருக்கு மரணம் நேரிடாதோ என்பதைப் பற்றி விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருக்கு மேகரோகம் என்ற நீர் வியாதி நேரிடும் என்று முந்தியே சொல்லி இருக்கின்றேன். இதற்காக இவர் சாந்தியைச் செய்தால் இந்த ரோகம் நீங்கி இவர் அறுபது வயது வரையிலும் நீண்ட ஆயுளை யுடையவ ராவர். இவர் முறை கெட்ட தருக்கமாய் (நம்பிடாமல்) சாந்தியைச் செய்யா விட்டால் இவருக்கு மத்திய வயதில் மரணஞ் சம்பவித்துவிடும்.

## ஜாதகருடைய மறுஜன்மமும் ஜீவன பாவமும்

31. மறுசென்மம் காஞ்சி தன்னில்
வருகுவான் கங்கை சேயாய்
பொருளது பெருக்க மாகிப்
புகழான செட்டு செய்வான்
திருமகன் யிச்சென் மத்தில்
சீவனம் புகல்வீ ரய்யா
தரையினல் உய்வா னுகும்
தந்தைக்குத் தாழ்வுஞ தான்

31. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் வேளாளர் குலத்தில் ஆணுகக் காஞ்சீபுரத்திற் பிறப்பார். இவர் பின் ஜன்மத்தில் சொத்தை அதிகமாகவுடையவராகிப் பெருமையுள்ள வியாபாரத்தைச் செய்வார். இவருடைய இந்த ஜன்மத்தில் இவருக்கு ஜீவனத்தைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவர் இந்த ஜன்மத்தில் நிலங்களைப் பயிரிட்டு ஜிவனஞ் செய்வார். இவர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்குக் குறை படாத அந்தஸ்திலிருப்பார்.

32. தந்தைக்கு மேலாய் வாழ்வன்
தன்கணக் கதுவும் செய்வன்
முந்தின தலங்கள் செல்வன்
முயாவான புத்தி யேற்பன்
வந்தவர்க் கன்ன மீவன்
வள்ளல் மேல்பக்தி பூண்பன்
விந்தையாய்ச் சல்லியம் காணுன்
வித்தகி கேட்டி டாயே.

32. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் தன்னுடைய கணக்கு வேலையையுஞ் செய்வார். இவர் மேன்மையான சிறந்த தெய்வீக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போவார், இவர் சிறந்த புத்தியை யுடையவராவர், தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் சிவபெருமானிடத்தில் அன்புடையவராவர், ஆச்சரியப்படும்படியாகக் கடனை அடைய மாட்டார், பார்வதியம்மையே! கேட்பீராக.

33. பாலகன் செனிக்கும் காலை
பரணியின் கடை பாதத்தில்
சர்லவே புகலி ருப்பு
சாற்றுவோ மாண்டு ஒன்றும்
ஏலவே திங்க ளாறும்
யியம்பிஞேம் பூர்வ பாகம்
ஆலத்தை யுண்டோன் தேவி
அறைந்தது தப்பா தாமே

33. ஜாதகர் பிறந்த காலத்தில் பரணி நட்சத்திரன் நான்கா்வது பாதம் ஆகும். இதற்குரிய சுக்கிரமாக தசையில் இருப்பு ஒரு வருஷமும் ஆறு மாதங்களும் ஆகும். இது வரையிலும் பூர்வபாகமாகிய முதலாவது பாகத்தைச் சொல்லி முடித்து விட்டோம். ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். —C.G.R.

# ஜாதகம் 36

## ஜனனகால கிரகநிலை

1. [1]கலை [2]காரி [3]கலையிலாக [4]கதிர் புதனி [5]ரட்டை யாக
[6]நிலமகன் ராகு கன்னி நீர் [7]புகர் [8]சீய மாக
குலகுரு [9]ஞானி [10]கெண்டை [11]கோதையும் சென்ம மாக
பலன்தனைப் புகலு மென்று பார்வதி கேட்க லுற்றார்

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும் சனியும் மகரத்திலும் சூரியனும் புதனும் மிதுனத்திலும், அங்காரகனும் ராகுவும் கன்னியிலும், சுக்கிரன் சிம்மத்திலும், குருவும் கேதுவும் மீனத்திலும் இருந்து நவக்கிரகங்கள் இவ்விதமாக அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| குரு கேது | | | சூரியன் புதன் |
| | **இராசி சக்கரம்** | | |
| சந்திரன் சனி | | | சுக்கிரன் |
| | | | லக்கினம் அங்காரகன் ராகு |

திருவோணம் 1-ஆம் பாதம் சந்திர தசை ௵ 8—10—0.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :— மேஷத்தில் சந்திரனும், ரிஷபத்தில் சூரியனும், மிதுனத்தில் ராகுவும், கடகத்தில் அங்காரகனும் குருவும் சுக்கிரனும் விருச்சிகத்திற் சனியும், தனுசிற் கேதுவும், மீனத்திற் புதனும் ஆகும். புதன் அஸ்தங்கத மடைந்திருக்கின்றார்.

---

1. சந்திரன்
2. சனி
3. மகரம்
4. சூரியன்
5. மிதுனம்
6. அங்காரகன்
7. சுக்கிரன்
8. சிம்மம்
9. கேது
10. மீனம்
11. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பிருகுமே புகலு கின்ருர்
பிறந்திடு மாண்பால் சென்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி
வாசலும் யெமனின் பார்வை
அருகரும் வடமே லாகும்
ஆனையின் கோஷ்ட முத்திரம்
திருமாலின் கோஷ்டம் தென்மேல்
சிதைந்திடும் அம்மன் கீழ்பால்

2. பிருகு மஹரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு பார்த்த வாயிலை உடையதாகும். அருகருடைய கோயில் வடமேற்குத் திக்கிலிருக்கும், வடக்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயிலும் யானைத் தொழுவமும் இருக்கும் மகா விஷ்ணுவின் கோயில் தென் மேற்குத் திக்கிலிருக்கும், பார்வதியம்மையின் கோயில் கிழக்குத் திக்கில் பாழடைந்திருக்கும்.

3. மாரியும் மருகில்தங்கு
வரைந்த யிவ்வடையா ளத்தூள்
மாரனு மிரண்டாம் சென்மம்
மருகா தன்குலமே தோன்றும்
வீரியின் தந்தை அன்னை
மேவிய மனைவி மைந்தர்
கூறுவோம் முன்பின் சென்மம்
கோதையே கேட்டி டாயே

3. மாரியம்மன் கோயில் அருகில் இருக்கும், சொல்லிய இவ்வடையாளங்கள் உள்ள கிராமத்தில் ஜாதகர் இரண்டாவது கிழவியாக அருகருடைய (சமணருடைய ஜைனருடைய) ஜாதியில் பிறப்பார், இவருடைய தகப்பனுர், தாயார் மனைவி மக்கள் ஆகிய இவர்களுடைய பலாபலன்களையும் முன் ஜன்மம் பின் ஜன்மம் ஆகிய இவற்றையும் சொல்லுகின்றேம், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

4. தந்தைகுணம் கூறுகின்றேம் மாஞ்சிவப்பன்
தரணியதால் சீவிப்பன் சாந்தனுவன்
தந்தைமொழிக் கிடருரையான் சரசவார்த்தை
சதுஷ்பாதம் விருத்தியல்பம் சமதேகத்தன்

தன்பந்துக் கிணக்கமில்லான் தாளதந்தம்
தானரியின் ராசியது புணர்தனுலில்
தன்கரமதில் மால்ரேகை தங்குமென்ருேம்
தரணிதனில் தனம்குறைவாய் தானும் வாழ்வன்.

4. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்ருேம். இவர் மாந்துளிரின் நிறமாகிய ஒரு விதமான சிகப்பு நிறத்தையுடைய தேகத்தையுடைய வராவர். இவர் நிலங்களை வைத்துக்கொண்டு பயிரிட்டு ஜீவிப்பார். இவர் சாந்தமான குணத்தையுடையவராவர். இவர் தன்னுடைய தகப்பனுருடைய வார்த்தைக்கு மாறுபாடாக நடந்துகொள்ளமாட்டார், விரோதமாக விருக்கமாட்டார், இவர் இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார், இவருக்கு ஆடுமாடுகளின் விருத்தி குறைவாகவிருக்கும். இவர் நடுத்தரமான அளவுள்ள தேகத்தையுடையவராவர். இவர் தன்னுடைய பந்துக்களுக்கு இணங்கி யிருக்கமாட்டார். இவருடைய பற்கள் முத்தைப்போல அழகாகவும் வெளுப்பாகவும் இருக்கும், இவர் அரி என்ற சிம்மராசியிலும் புனர்பூச நட்சத்திரத்திலும் பிறந்தவராவர். இவருடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகை என்ற ஒருவித நல்ல ரேகை இருக்கும் என்று சொல்லுகின்ருேம்.

5. குறையென்ருேர்க் குதவிடுவன் கோபம்முன்னுல்
கூடிபின்னுல் சாந்தமுறும் நற்குணவானுவன்
திரமான காரியத்தில் செல்வானுகும்
சினதேவன் பத்தியுளன் தீரமில்லான்
நறைமலர்க ளிஷ்டமுளன் விரதமேற்பன்
நலிந்தோர்மேல் பட்சமுளன் நடை சுருக்கன்
மறைகளுமே அல்பமுறும் யீகையாளன்
மனைவியிஷ்டன் பெரியோர்க்கு மறுத்துக்கூருன்.

5. ஜாதகருடைய தகப்பனுர் கஷ்டத்தை அநுபவிக்கின்ருேம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார், முன் கோபத்தையுடையவராவர், உடனே சாந்தத்தை அடையவராவர், இவர் நல்குணங்களையுடையவராவர், சிறந்த காரியங்களில் பிரவேசிப்பவராவர், அருகரிடத்தில் அன்புடையவராவர், தைரியத்தையுடையவரல்ல. இவர் வாசனையுள்ள புஷ்பங்களின்பேரில் பிரியமுள்ளவராவர், விரோதக்தை அடைபவராவர் இவர் ஏழைகளிடத்தில் பிரியமுள்ளவராவர், மெதுவாக நடக்கக்கூடியவர். இவர் வேத சாஸ்திரங்களைக் கொஞ்சமாகப் படித்தவராவர். இவர் பிறருக்குக் கொடுக்கும் தன்மையை யுடையவராவர். இவர் தன்னுடைய மனைவியிடத்தில் பிரியமுள்ளவராவர், இவர் பெரியோர்களுடைய வார்த்தைகளைத் தடுத்துப் பதில் சொல்லமாட்டார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

6. தன்துணை காணு னுகும் தரிக்கினும் தீதே யாகும்
என்ன காரணத் தினுலே யியம்பினீ ரந்தச் சங்கை

ஒன்பதுக் குடையோன் வெள்ளி உறையிடம் யீராருக
பொன்சனி லாபம் பார்க்க பேசினேம் துணைவர்
[தோஷம்.

6. ஜாதகருடைய தகப்பனுர் சகோதரங்கள் இல்லாதவராவர். ஒரு சமயம் சகோதரங்கள் பிறந்தாலும் இவர்கள் சிக்கிரம் இறந்துவிடுவார்கள், என்ன காரணத்திஞலே இவ்விதமாகச் சொன்னீர் என்று கேட்கவே, ஒன்பதிற்குடையவரான வெள்ளி என்ற சுக்கிரன் பன்னிரண்டாவது வீட்டிலிருப்பதாலும், பொன் என்ற குருவும், சனியும் லாபம் என்ற பதினேராவது வீட்டைப் பார்ப்பதாலும் இவ்விதமாகச் சகோதர தோஷத்தைச் சொன்னேம்.

குறிப்பு :—வியாக்கியானம் :-பதினேராவது வீடு என்பது பிதுர் லக்கினமாகிய ஒன்பதாவது வீட்டிற்கு இளைய சகோதரஸ்தானம் என்ற மூன்ருவது வீடாகும். இதைக் குரு அஷ்டமாதியம் பெற்றுப் பார்ப்பது தோஷமாகும். பதினென்றிற்குடைய சந்திரன் சனியுடன் கூடியிருப்பது சகோதரதோஷமாகும். ஒன்பதிற்கு மூத்த சகோதர ஸ்தானமாகிய பதினேராவது வீடாகிய மீனத்தில் கேது இருப்பது மூத்த சகோதரதோஷமாகும், மீனத்திற்குரிய குரு கேதுவுடன் கூடி இருப்பதும் தோஷமாகும், மீனத்திலிருக்கும் குருவையும் மீனத்தையும் சனி மூன்ரும் பார்வையுடன் பார்ப்பதும் மூத்த சகோதர தோஷமாகும். சனி மூன்றிலிருந்தாலும் மூன்றைப் பார்த்தாலும் முன்னே பிறந்த சகோதரர்களும் பின்னுல் பிறந்த சகோதரர்களும் சம்பு ஹோரா பிரகாசா சகஜ பாவம் 58—ஆவது சுலோகப்பிரகாரம் இறந்து விடுவார்கள். ஒன்பதிற்கு மூன்ருவது வீட்டை ராகுகூட பார்ப்பது தோஷமாகும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

7. இதுவின்றி பூர்வம் தன்னில் இவன்சில கொடுமை
[செய்து
அது விவரங்கள் சொல்வாய் அவனுட பூர்வம் கேளாய்
கதிதரும் பழனி ஞட்டில் கலந்தனன் கங்கை சேயாய்
மதிமுக மனைவி மைந்தர் மானிலம் கிருஷி செய்து.

7. இதுவுமல்லாமல் ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தில் சில பாவகாரியங்களைச் செய்திருக்கின்ருர். இவற்றின் விவரங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. மோக்ஷத்தைக் கொடுக்கின்ற பழனி ஸ்தலத்தில் வேளாளர் குலத்தில் இவர் ஆணுகப் பிறந்து அழகான மனைவியையும் மக்களையும் உடையவராகி நிலங்களைப் பயிரிட்டுக்கொண்டு வாழ்கின்ற காலத்தில்

8. வந்தஊழ் தன்னைச் சொல்வேன் மங்கைமேல் சிலது [நிந்தை
இந்தவன் புகலும் போது யிடிவிழு மாபோல் மாது
தன்மனம் குன்றியே தான் சாற்றுவாள் சாபம் தானும்
நிந்தைகள் சொன்ன பாவி நேர்ந்திடும் வாயு ரோகம்.

8. இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன். ஒரு ஸ்திரீயின் பேரில் சில அபவாதத்தை இவர் சொல்லும்போது இடிவிழுந்த மாமரத்தைப்போல இந்த ஸ்திரீ தன்னுடைய மனத்தில் கலக்கமுற்றுச் சாபத்தைக்கொடுத்தாள். என் பேரில் அபவாதங்களைச் சொன்ன பாவிக்கு வாய்வு நோய் உண்டாகக்கடவது.

9. பின்வரும் சென்மந் தன்னில் பெண்ஆணும் துணைக [ளற்று
மன்னனுக் கந்தியகாலம் வறுமைகள் மிகவு ண்டாகி
தன்னிலே வாழ்வா யென்று சத்தியும் செல்ல லுற்ருள்
அன்னவள் சாபம் தானும் அணுகிற்று யென்று [சொல்வோம்.

9. உன்னுடைய மறுஜன்மத்தில் சகோதரர்களும் சகோதரிகளுமில்லாமலும் உன்னுடைய கடைசி காலத்தில் தரித்திரமும் கஷ்டங்களும் அதிகமாக வுண்டாகி நீ வாழக்கடவது என்று இந்த ஸ்திரீ சொல்லிவிட்டுப் போய்விட்டாள். இவளுடைய சாபம் ஜாதகருடைய தகப்பனுரை வந்தடைந்தது என்று சொல்லுகின்ருேம்.

10. மாரனு மந்தி யத்தில் வருமுகன் தொண்டு பூண்டு
தீரமாய் வாய்புண் கண்டு சென்றனன் கால னுடு
ஆரியன் வரையப் பட்டு அருகர்தன் குலமுதி த்தான்
காரிழை சாபம் தானும் கலந்திற்று யிச்சென் மத்தில்.

10. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய கடைசிகாலத்தில் ஆறு முகங்களையுடைய முருகக்கடவுளின் பேரில் அன்புடையவராகி இவருக்கு வேலைகளைச் செய்துகொண்டும், தனக்கு வாயில் புண் நோய்கண்டு அதனுல் இறந்து எமபட்டணத்திற்குப்போய் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு அருகருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்தார். அந்த ஸ்திரீயினுடைய சாபமானது இவரை இந்த ஜன்மத்தில் வந்து அடைந்தது.

11. அனைசுகம் குறைவ தாயும் அவன்துணை தோஷ மாயும்
சினமுடன் ஆதி தன்னில் திரிச்சலு மனது துக்கம்
இனமதிப் பில்லா வாழ்வன் யியம்பின குணத்தா [னுக்குத்
தனையனு முதிப்பா னுகும் சாற்றுவோ மவன் [குணத்தை.

11. ஜாதகருடைய தகப்பனர் சௌக்கியக் குறைவையடைந்தும், சகோதர தோஷத்தை அடைந்தும், தன்னுடைய முற்காலத்தில் திரிச்சலேயும் அலேச்சலேயும் மனத்துன்பத்தையுமடைந்தும், பந்துக்களுடைய கௌரவ மில்லாமலும் வாழ்வார். இதுவரையிலும் சொல்லப்பட்ட குணகுணங்களே யுடைய தகப்பனருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இனிமேல் இவருடைய குணதிசயங்களேப்பற்றிச் சொல்லுகின்ரேம்.

## ஜாதகருடைய குணதிசயங்கள்

12. வஞ்சக வஞ்ச னுவன் மாஞ்சிவப் புடைய னுகும்
அஞ்சிடான் யாவ ருக்கும் அதிகமாய் கல்வி யேற்பன்
மிஞ்சின வார்த்தை யுண்டு மேதினி தன்ன லுய்வன்
செஞ்சொலி நுணுக்கம் தேர்வன் தேறின புத்தி யாவன்.

12. ஜாதகர் வஞ்சகர்களுக்குள்ளே வஞ்சனேயுடையவுராவர், இவர் மாந்துளிரின் நிறமாகிய ஒருவித சிகப்பு நிறத்தையுடைய தேகத்தையுடைய வராவர். இவர் யாருக்கும் பயப்படமாட்டார். இவர் அதிக வித்தையை யுடையவராவர். இவர் அதிகமான வார்த்தைகளேச் சொல்லுவார், இவர் நிலங்களேப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார், வெளிப்படையான சொல்லின் நுட்பத்தை அறிந்தவராவர். இவர் முதிர்ந்த அறிவையுடையவராவர்.

13. கல்வியால் பெருமை யேற்பன் கடந்தோர்க்கு யிவன் [சொல் மேன்மை
இல்லே யென்று ரைக்க மாட்டான் யீகையில் வறுமை [காணுன்
சொல்லதை காப்பா னுகும் சுந்தர முடைய னுகும்
வல்லிமார் மோக னுவன் மாடுகள் பனேயோர் விருத்தி.

13. ஜாதகர் தன்னுடைய வித்தையால் புகழை அடைவார், பெரி யோர்களுக்கும் உலகப்பற்றை விட்டுவிட்ட பரதேசிகளுக்கும் இவருடைய வார்த்தைகள் மேன்மை யுடையனவாகவும், சிறந்தனவாகவும் இருக் கும். இவர் தன்னிடத்திற்குதவிக்காக வருபவர்களுக்கு உதவி செய்ய தன்னிடத்தில் ஒன்றுமில்லே என்று சொல்லமாட்டார். இவர் பிறருக்குக் கொடுப்பதில் தாராளமுள்ளவராவர், தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் நடந்துகொள்ளும் சக்தியையுடையவராவர் இவர் சௌகர்யமான, அழகான தேகத்தையுடையவராவர். இவர் ஸ்திரீகளின் பேரில் மையல் என்ற காம ஆசையுடையவராவர், இவருக்கு ஆடுமாடுகளும், நிலங்களும், ஏர்களும் விருத்தியாகும்.

14. சீலனும் சுருக்க வார்த்தை சித்திர யில்லம் செய்வன்
காலத்தைப் புகலுமென்ன கலேதிசை தன்னுள் நேறும்

ஞாலங்கள் விருத்தி யுண்டு நாளுக் குளுள் பிறைபோல்
[யோகம்
மால்மனை வாச மெய்தும் மாநிலம் வறுமை காணுன்.

14. ஜாதகர் பரிசுத்தமானவர், நல்லொழுகத்தையுடையவராவர், இவர் வார்த்தைகளைக் கொஞ்சமாகச் சொல்லுவார், இவர் சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட வீட்டைக் கட்டுவார். எப்போது கட்டுவார் என்பதைத் தெரிவிப்பீர் என்று கேட்கவே, கலை என்ற சந்திரனுடைய தசை காலத்திற் குள்ளவே கட்டுவார். இவருக்கு நிலங்கள் விருத்தியடையும், நல்ல பலிதங்களைத்தரும். இவருக்கு வளர்பிறை சந்திரனைப்போல நாளுக்குநாள் யோகம் அதிகரித்துக்கொண்டே போகும், மகாவிஷ்ணுவின் மனைவியாகிய இலஷ்மி இவருடைய வீட்டில் வந்து வாசஞ்செய்வாள். இவர் பூமியில் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்கமாட்டார்.

15, யோகமெவ் விதமாய் சொன்னீர் யுரைப்பீர்க ளந்த
[சங்கை
பாகனும் குருவு மாட்சி பணிமாதை மதியு மஞ்சில்
ஆகமன் சென்மம் பார்க்க அறைந்தனம் கமல யோகம்
போக பாக்கியங்க ளேற்பன் புகழ் உளானென்று
[சொல்வோம்.

15. ஜாதகருக்கு யோகத்தை எந்தக்காரணத்தினுல் சொன்னீர்? அதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, பாகன் என்ற புதனும், குருவும் தங்களுடைய வீட்டிலேயே ஆட்சியாயிருப்பதாலும், பணி என்ற ராகு கன்னியில் இருப்பதாலும், மதி என்ற சந்திரன் ஐந்தாவது வீட்டிலிருப்பதாலும், ஆகமன் என்ற குரு ஜன்மம் என்ற லக்கினத்தைப் பார்ப்பதாலும், கமலயோகம் என்ற ஒருவித நல்ல யோகத்தைச் சொல்லுகின்றோம். ஜாதகர் இதனுல் சகல போகங்களை அநுபவிப்பார், சகல சம்பத்துக்களையும் அடைவார், இவர் கீர்த்தியையும் மேன்மையையும் உடையவர் என்று சொல்லுகின்றோம்.

குறிப்பு :—வியாக்கியானம் :-கமலயோக விஷயம் :-கமலயோகம் என்ற ஒருவகை யோகம் ஏற்படுவதற்குக் கிரகங்கள் ஒன்று நான்கு ஏழு, பத்து ஆகிய இந்த வீடுகளில் இருக்கவேணும். இங்கு கிரகங்கள் ஒன்று, ஏழு, பத்தில் இருக்கின்றன. கமலயோக விஷயமாக ஜாதக பாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் நூற்றறு பத்தொன்பதாவது (169-ஆவது) சுலோகத்தையும், நூற்றெழு பத்தாருவது (176-ஆவது) சுலோகத்தையும் வாசிக்கவும். ஜாதக சிந்தாமணி இரண்டாயிரத்தி நூற்றி நாற்பத்திரண்டாவது (2142-ஆவது) பாடலையும் வாசிக்கவும். மேலும் இராகு கன்னியில் இருக்கும் விஷயமாகவும் கிரகங்கள் கேந்திரங் களில் இருக்கும் விஷயமாகவும் தமிழ் ஜாதகாலங்காரம் இர

நூற்றித் தொண்ணூற்றேழாவது (297–ஆவது) பாடலையும் இங்கு வாசிக்கவும்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

16. தன் துணை அறுவர் தோன்றும் சாற்றுவோம் விபரம் [தன்னை
கன்னிமார் யிருவ ராகும் காளையு மொருவன் தீர்க்கம்
பின் துணையாகச் சொல்வோம் பேசுவோம் ஆண்பால் [சேதி
கன்னென மொழியைக் கூர்வன் கல்விமான் கணக்கில் [யூகி

16. ஜாதகருக்கு மொத்தத்தில் ஆறு சகோதரங்கள் பிறப்பார்கள். இவர்களுடைய விவரங்களைச் சொல்லுகின்றோம். இரண்டு சகோதரிகள் உண்டு, ஓர் சகோதரர் உண்டு. இவர்கள் நீண்ட ஆயுளை உடையவர் களாக விருப்பார்கள். இந்தச் சகோதரர் இளையசகோதரராவர், இவருடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சக்கரையைப்போன்ற இனிமையான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் வாசித்தவராவர், கணக்குபோடுவதில் நுட்பமான புத்தியை யுடையவராவர்.

17. அரசர்கள் உறவு கொள்வன் அண்டினோர்க் குதவி [செய்வன்
தரையது விருத்தி செய்வன் சினதேவர் பக்தி [கொள்வன்
பரைபள்ளு உடைய னாகும் பாரியு மொன்றே யாகும்
பெரும் சுதர் ஆண்பா லொன்று பேதையு மிரண்டு [தீர்க்கம்.

17. இவர் அரசாங்க உத்தியோகஸ்தர்களுடைய சிநேகிதத்தை யுடையவராவர், தன்னிடத்திற்கு உதவிக்காக வந்தவர்களுக்கு உபகாரத் தைச் செய்வார், இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தானியங்களை அதிகப்படுத்து வார், இவர் அருகன்பேரில் அன்புடையவராவர்.

18. சிலதுனாள் ஒன்றாய் வாழ்ந்து செல்லுவான் வேறதாக
பலர்களால் பெருமை யேற்பன் பால்தயிர் பிரிய னாகும்
சொலுமொழி தந்திர மாகும் சாறுவான் தலவா சங்கள்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன் றாது.

18. ஜாதகருடைய இளைய சகோதரர் கொஞ்சகாலம் ஏக குடும்ப மாய் இருந்து பின்னால் வேறு குடும்பஸ்தராகப் பிரிந்துபோய் வாசஞ் செய் வார். இவர் அநேகரால் மேன்மை அடைந்தவராக விருப்பார், இவர்

பால், தயிர் இவற்றின் பேரில் பிரியமுள்ளவராவர். இவர் தந்திரமாகவும் சாமர்த்தியமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார், இவர் தெய்விக ஸ்தலங் களுக்கு யாத்திரையாகப் போவார், மலைகளுக்கு அரசராகிய பர்வதராஜ ருடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன் கள் தவறிப்போகாமல் நடக்கும்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

19. கன்னிமார் சேதி யாவும் கழறுவோம் பின்பா கத்தில்
இன்னவன் மணத்தின் காலம் யியம்புவோ மீரொன் [பானில்
அன்னவன் வடகீழ் நேறும் அவள்குணம் கூறக் [கேண்மோ
நன்னய வார்த்தை யுண்டு நல்லோர்க்கு நல்ல ளுவள்.

19. ஜாதகருடைய சகோதரிகளுடைய விஷயங்கள் எல்லாவற்றை யும் பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதக ருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பதி னெட்டாவது வயதில் மனைவி வடகிழக்குத் திக்கிலிருந்து வந்து சம்பவிப் பாள். இவளுடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். கேட்பீ ராக, இவள் இனிமையான, நயப்பான வார்த்தைகளை யுடையவளாவள், நல்லவர்களுக்கு நல்லவளாக நடந்துகொள்ளுவாள்.

குறிப்பு:—வியாக்கியானம்:-விவாக விஷயம்:-ஜாதகருக்குப் பதினெட்டா வது வயதில் ராகுதசை நடக்கின்றது. ராகு புதனுடைய வீட் டிலிருக்கின்றார், ஏழாவது வீட்டிற்குடையவராகிய குருவைப் பார்த்து குருவினுடைய சம்மந்தத்தை யுடையவராகின்றார். ஜாதக பாரிஜாதம் பதினொன்காவது அத்தியாயம் இருபத்தொன்ப தாவது சுலோகம் பிரகாரம் பத்திற்குடைய புதன் விவாகஞ் செய்ய அதிகாரமுடையவராகின்றார். இவர் வீட்டிலுள்ள ராகு ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகப் பிரகாரம புதனுடைய பலனைக் கொடுக்கவேண்டிய வராகி விவாகஞ் செய்துவைக்க அதிகாரமுடையவராகின்றார். மேலும் இதே சுலோகப்பிரகாரம் ஏழிற்குடைய குருவுடன் சம்மந்தப்பட்ட ராகு விவாகஞ் செய்துவைக்க அதிகாரமுடையவராகின்றார். ஆகையால் இங்கு ராகு தசையில் விவாகஞ் சொல்லப்பட் டிருக்கின்றது.

20. தோகைபோல் சாயலொக்கும் தொல்புவி வறுமை [காணாள்
ஆகம முணர்ந்தோ ருக்கு அன்னமு மன்பா யீவள்

நாகரீகங்க ளுண்டு நவிலுமுன் கோபம் கொஞ்சம்
பாகமாய் வயது தீர்க்கம் பராசரு மறுத்துச் சொல்வார்.

20. ஜாதகருடைய மனைவி மயிலைப்போன்ற ரூபத்தையுடைய தேகத்தை யுடையவளாவள், இவள் இந்தப் பழைய பூமியில் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அடையமாட்டாள், தர்ம சாஸ்திரங்களை வாசித்தறிந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள். இவள் நாகரிகங்களை உடையவளாவள். பேசுவதற்கு முன்னமே சிறிதளவு கோபத்தையுடையவளாவள், இவளுக்குத் தீர்க்காயுளுண்டு. உடனே பராசரமஹரிஷி தடுத்துச் சொல்லுகின்றார்.

21. சத்தமம் கேது நின்று தனத்துளோர் விரயம் புக்க
வித்தகி மார்கள் ரெண்டு விளம்புவோம் பால னுக்கு
அத்திரி தடுத்துச் சொல்வார் அந்தண னேழில் ஆட்சி
பத்தினில் புதனு மாட்சி பஞ்சமம் சனியு மாட்சி.

21. சத்தமம் என்ற ஏழாவது வீட்டில் கேது இருப்பதாலும், தனம் என்ற இரண்டாவது வீட்டிற்குடைய சுக்கிரன் விரையம் என்ற பன்னிரண்டாவது வீட்டில் (மறைந்து) இருப்பதாலும் ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்று சொல்லுகின்றோம். உடனே அத்திரிமா முனிவர் தடுத்துப் பதில் சொல்லுகின்றார். அந்தணன் என்ற குரு ஏழாவது வீட்டில் ஆட்சியாய் இருப்பதாலும், பத்தாவது வீட்டில் புதனும் ஆட்சியாக விருப்பதாலும், பஞ்சமம் என்ற ஐந்தாவது வீட்டில் சனியும் ஆட்சியாக

22. இருப்பதால் தாரம் ஒன்றே யியம்பினேம் முனியே [நானும்
திருகிலா யிதற்கு நேருய் சாதக சுருதி பாரும்
மருவாது வேறு மாது வரும் சிகியேழில் தங்க
அரிவையர் அனேகம் பேரை அணுகுவா னிந்த பாலன்.

22. இருப்பதாலும் ஜாதகருக்கு ஒரே ஒருதாரந்தான் நேரிடும் என்று முனிவரே! நான் சொல்லுகின்றேன் என்றார் அத்திரிமா முனிவர். இதற்கு மாறுபாடாக வில்லாத விஷயத்தைப்பற்றி ருஜுவு செய்ய ஜாதக சாஸ்திரத்தைப் பார்த்து வாசிக்கவும், இன்னொரு மனைவி வந்து சம்பவிக்க மாட்டாள். சிகி என்ற கேது ஏழாவது வீட்டில் இருப்பதால் ஜாதகர் இதர அநேக ஸ்திரீகளுடன் * சம்போகஞ் செய்வார்.

*குறிப்பு :—வியாக்கியானம் :-ஏழாவது வீட்டையும் ஏழிற்குடையவராகிய குருவையும் அங்காரகனும் சனியும்கூட பார்க்கிறார்கள். சனி இரண்டாவது வீட்டையும் பத்தாவது பார்வையுடன் பார்க்கின்றார்.

*குறிப்பு :—இங்கு களத்திர லக்கினாதிபதியாகிய குரு தன் மனையிலேயே (வீட்டிலேயே) இருக்கின்றார். ஆகையால் கிரேனூர் நடராஜ

ருடைய தமிழ் ஜாதகாலங்காரத்தில் அறுநூற்று நாற்பற்றி நான்காவது பாடலுள்ள கீழ்க்கண்ட இரண்டு வரிகளையும் வாசிக்கவும் :—

"களத்திர லக்னுதிலேந்து தம் மனையினிற்கில்
கிளர்த்தியாய்ப் பலரைக் கூடிப் கிடப்பதொன்றே விவாகம்"

## ஜாதகருடைய புத்திரபாவம்

23. மதலைகள் விருத்தி தன்னை வரைகுவோ மினிமே லாக
சதமுடன் ஆண்பால் ரெண்டு தையலு மவ்வார் தீர்க்கம்
முதல்சுதர் தோஷ மெய்தும் முடவனு மஞ்சில் நின்ற
அதுபலன் தோஷ மென்றோம் அம்பிகை யாளே
[கேளாய்.

23. ஜாதகருடைய குழந்தைகளைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவருக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். முதலில் பிறக்கின்ற குழந்தை சீக்கிரத்தில் இறந்துவிடும். முடவன் என்ற சனி ஐந்தாவது வீட்டில் இருப்பதால் இதனுடைய பலனுக இவ்விதமான தோஷம் * ஏற்படும் என்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :-புத்திர தோஷ விஷயம் :-புத்திரகாரகனுகிய குரு கேதுவுடன் கூடி, இருப்பது புத்திர தோஷமாகும். குருவைச் சனி பார்ப்பதும் புத்திர தோஷமாகும். இரண்டாவது வீட்டைச் சனி பத்தாவது பார்வையுடன் பார்ப்பதும் புத்திர தோஷமாகும். ஏழாமிடத்தில் கேது இருந்து இந்த ஏழாமிடத்தைச் சனி அங்காரகன் பார்க்கும் விஷயமாகத் தமிழ் ஜாதாலங்காரம் அறுநூற்றி நாற்பத்தொன்பதாவது (649-வது) பாடலை வாசிக்கவும். ஏழாவது கேந்திரத்திலுள்ள குருவை ஐந்தாவது கோணத்திலுள்ள சனி ஆருவது ஆதிபத்தியம் பெற்றுப் பார்ப்பதைப்பற்றி ஜாதகாலங்காரங் அறுநூற்றிருபத்தெட்டாவது (628-ஆவது) பாடலையும் வாசிக்கவும்.

## ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்கள்

24. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அன்புள மனத்த
[ளாகும்
பின்னமில்லாத தேகி பிறர் குற்றம் புகலா ளாகும்
கன்னிகை யோக சாலி கபடில்லாள் பொய்கள்
[சொல்லாள்
தன்னினம் மெச்ச வாழ்வள் தன்வரன் மனதுக்
[கேத்தோள்.

24. ஜாதகருடைய தாயாரின் குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் ஜன்ங்களிடத்தில் அன்பை உடைய மனத்தையுடையவளாவள். இவள் யாதொரு அவயவக் குறைவையுடைய தேகத்தையுடையவளல்ல. இவள் பிறர் பேரில் குற்றங்களை, நிந்தைகளைச் சொல்லமாட்டாள், இவள் யோகத்தையுடை யவளாவள், இவள் தன்னுடைய மனத்தில் வஞ்சனை யில்லாதவளாவள், இவள் பொய்யைப் பேசமாட்டாள். தன்னுடை குலத்தார்கள் இவளைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாக விருப்பாள்.

25. மாதுவு மடக்க முண்டு வரிபோலே கோப முன்னல்
தீதான குணமில் லாதாள் தேவியில் வருடை கோணம்
மேதினில் பாட்டாளி யாகும் வீண்வம்பு புகலா ளாகும்
சாதிப்பாள் சிலது சங்கை தன்துணை ஆண்பா லொன்று.

25. ஜாதகருடைய தாயார் அடக்கமாக விருப்பவளாவள், இவளுக்குச் சமுத்திரத்தைப்போல பேசுவதற்கு முன்னே கோபமுண்டாகும். இவள் கெட்ட குணத்தையுடை யவளல்லள், இவளுடைய வீடு வருடை என்ற மேஷ ராசியின் கோணங்களாகிய மேஷம், சிம்மம், தனுசு ஆகிய இவற்றின் திக்காகிய கிழக்குத் திக்கில் இருக்கும். இவள் பூமியில் கஷ்டப்பட்டு வேலை செய்பவளாவள், உழைப்பாளியாக விருப்பாள். இவள் வீணுகச் சண்டையை விளைவிக்கக் கூடிய வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். சிலது வார்த்தைகளைச் சொல்லி இவை மேண்மையானவை உண்மையானவை என்று சொல்லி நிருபிப்பாள். இவளுடன் பிறந்தவர் ஒரு சகோதரராவர்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

26. கன்னிமார் மூவருக்கும் கழறுவோம் பின்பால் சேதி
இன்னவள் பூர்வம் சொல்வேன் யிலங்கையில் வன்னிய [சேயாய்
தன்வரன் மதலை யுண்டாய் சம்பத்து பெருக்க மாகும்
உன்னத சேது சென்று உயர்வோர்க்கு அன்ன மீந்து.

26. சகோதரிகள் மூன்றுபேர் ஆவார், இவர்களுடைய விஷயங்களைப்பற்றிப் பின்னல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் இலங்கையில் வன்னியருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறந்து, புருஷனையும் பிள்ளைகளையுடையவளாகியும். அதிகமான சம்பத்துக்களையுடையவளாகியும் வாழ்ந்து மேன்மையான, சிறந்த சேது ஸ்தலத்திற்குப் போய்ப் பெரியோர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப்போட்டு.

27. பேதியால் மரண மாகி பிரமனுல் வரையப் பட்டு
காதலி யிக்கு லத்தில் கலந்தன ளென்று சொல்வோம்
மாதவர் புகலு கின்ருர் மங்கைக்குமுன் சென்மந்
[தன்னில்
தீதான வன்னிய சேயாய் செனித்தன ளிச்சென் மத்தில்

27. பேதியால் இறந்து பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்திய ஜாதியாகிய அருகருடைய ஜாதியில் பிறந்தாள் என்று சொல்லுகின்ருேம். மாதவர் கேட்கின்ருர். இவள் முன் ஜன்மத்தில் வன்னிய ஜாதியில் பெண்ணுகப் பிறந்தவளுக்கு இந்த ஜன்மத்தில்

28. அருகர்தன் குலம் யெவ்வார் அணுகின காரணம் சொல்
திருமகள் முன்சென் மத்தில் சேதுவின் சென்ற
[தொன்று
அருந்தவ முனிக் கன்னமளித்த புண்ணியத் திஞலே
பெருமையா யிக்கு லத்தில் பிறந்தள ளென்று
[சொல்வோம்.

28. அருகர் ஜாதியில் எந்தக் காரணத்திஞல் பிறந்திருக்கின்ருள், அதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவள் அருமையான தவத்தைச் செய்கின்ற முனிவருக்குச் சாப்பாட்டைப் போட்ட புண்ணியத்திஞல் இந்த மேன்மையான அருகர் குலத்தில் பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மமும் மரணமும்

29. பின்சென்மம் வான்மீயூரில் பிறப்பளா மறைகு லத்தில்
பொன்பணி அதிக முண்டாய் புத்திர னுள்ளா ளாகி
அன்னவள் சுகமாய் வாழ்வள் ஆறெட்டு ஆண்டு
[தன்னில்
துன்னிய கால ஞடு சேருவா ளென்று சொல்வேன்.

29. ஜாதகருடைய தாயார் தன்னுடைய பின் ஜன்மத்தில் திருவான் மீயூரில் பிராமண ஜாதியிற் போய்ப் பெண்ணுகப் பிறப்பாள். இவள் தனம், ஆடை ஆபரணங்கள் ஆகிய இவற்றை அதிகமாக வுடையவளாகியும், பிள்ளைகளுடையவளாகியும் இருந்து சுகமாய் வாழ்வாள். ஜாதகருக்கு நாற்பத்தெட்டாவது * வயதில் இவள் இறந்து எமபட்டனத்திற்கும் போய்ச் சேருவாள் என்று சொல்லுகின்ருேம்.

* குறிப்பு :—வியாக்கியானம் :—தாயாருடைய மரணவிஷயம்:—ஜாதகருக்கு நாற்பத்தெட்டாவது வயதில் குருதசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்கு குரு லக்கிஞதிபதியாகின்ருர். ஆகையால் துய்யகேரளம் எட்டா

வது பாவம் பதினுன்காவது பாடல் பிரகாரம் லக்கினுதிபதி குரு மாரகராகின்ருர். மேலும் குமாரசாமியம் மகாதசை படலம் நான்காவது பாடல் பிரகாரம் கேது இருக்கும் வீட்டுக்கார ராகிய குரு மாரகராகின்ருர். ஆகையால் இங்கு குரு தசை யில் தாயாருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

30. பாலகன் பூர்வம் தன்னைப் பகருவோ மினிமே லாக
ஞாலத்தில் உயர்வதான நன்மலை ஞட்டி லேதான்
சீலமா மறைகு லத்தில் செனித்துமே கிருஷி செய்து
நீலியு மதலை யுண்டாய் நீத்தோர்க் கன்ன மீந்து.

30. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றி இனிமேல் சொல்லு கின்றேன். பூமியில் சிறந்ததான நல்லமலை நாட்டிலே சுத்தமான பிராமண ஜாதியில் ஆணுகப் பிறந்து. பயிர்த்தொழிலைச் செய்துகொண்டு, மனைவி மக்களையுடைய வராகியும், உலகப் பற்றுகளை விட்டுவிட்ட சந்நியாசிகளுக் கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப்போட்டு.

## ஜாதகருடைய யோகபாவம்

31. முன்வினை யில்லா தாகி மேவினன் காலனுடு
பொன்னவன் வரையப் பட்டு பிறப்பனு மிந்தப் பாலன்
அன்னவன் யோகச் சேதி அறைகிறே மினிமே லாக
தன்பந்து மதிக்க வாழ்வன் தரணியில் வறுமை காணுன்.

31. முன்ஜன்மத்தில் ஜாதகர் யாதொரு பாவத்தையும் செய்யாதவ ராக விருந்து, இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார். பிறகு பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவர் வந்து பிறந் திருக்கின்ருர். இவருடைய யோக சம்மந்தமான விஷயங்களை இனிமேல் சொல்லுகின்ரேம். இவர் தன்னுடைய பந்துக்கள் கௌரவத்துடன் பாராட் டும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் பூமியில் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்கமாட்டார்.

32. இருனன்கு ஆண்டு மேலாயிரம் பிறை போலே யோகம்
பெருகிடும் காலி விருத்தி பேதையால் லாப மெய்தும்
பொருளது பெருக்க மாகும் போய் விடும் சஞ்ச லங்கள்
தரையது நாட்கு ளாய் தானவன் சேர்ப்பா னுமே.

32. ஜாதகருக்கு எட்டு வயதிற்குப் பிறகும் பால்ய வளர்பிறை சந்திர னைப்போல் யோகம் நாளுக்குநாள் அதிகப்படும், ஆடுமாடுகள் விருத்தி யாகும். இவருக்குத் தன்னுடைய மனைவியால் லாபமுண்டாகும். தனமும்

சொத்துக்களும் அதிகமாகும், கஷ்டங்கள் எல்லாம் துலைந்துபோய்விடும், இவர் நிலங்களை நாளடைவில் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணமும் மறுஜன்மமும்

33. முப்பது ஆண்டு தன்னில் விளம்புவோம் தந்தை
[கெண்டம்
அப்போது பணியின் காலம் அரசர் மந்திரி புகுத்தி
ஒப்புடன் நடக்கு மென்றோம் உரைக் கிறோ மிவன்
[பின்சென்மம்
மைப்புடன் அவ்வூர் தன்னில் மேவுவாள் பௌத்திரனுக.

33. ஜாதகருக்கு முப்பதாவது * வயதில் இவருடைய தகப்பனுர் இறந்துவிடுவார். அந்தக்காலத்தில் பணி என்ற ராகு தசையில் அசுர மந்திரி என்ற சுக்கிரன் புக்தி நடக்கும் என்று சொல்லுகின்றோம். ஜாதகரின் தகப்பனுருடைய பின் ஜன்மத்தைப்பற்றி இனிமேல் சொல்லுகிறோம். இதே ஊரில் பேரப்பிள்ளையாகப் பிறப்பார்.

* குறிப்பு :—வியாக்கியானம் :-பிதிர் மரண விஷயம் ;-பிதிர் லக்கினம் ஒன்பதாவது விடாகிய ரிஷபலக்கினம் ஆகும். ரிஷபலக்கினத்திற்குச் ஜாதகசந்திரிகை நாற்பத்தாருவது சுலோகப்பிரகாரம் சுக்கிரன், சந்திரன், குரு மாரகராகின்றுர்கள். சந்திரகாவியம் ஐம்பத்தோராவது பாடல் பிரகாரம் அங்காரகன்கூட மாராகராகின்றுர். இந்த அங்காரகன்கூட ராகு சம்பந்தப்பட்டிருப்பதால் ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது இருபத்துமூன்ருவது சுலோகப் பிரகாரம் இந்த ராகு மாரகஞ்செய்ய அதிகாரமுடையவராகின்றுர். மேலும் ரிஷபலக்கினத்திற்குச் சுக்கிரன் மாரகாதிபதியாக வருவதால் இங்கு ராகுதசையில் சுக்கிரபுக்தியில் பிதுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

34. உதித்தவன் மரண காலம் உரைக்கிறோ மெழுப
[தாண்டில்
சதியிலா சிம்ம மாதம் சண்டன்தன் பதிக்குச் செல்வன்
வதிபன் பின்சென்மம் சொல்வேன் மலைனுட்டி லிக்
[குலத்தில்
நிதிமிக யுடைய ஞக நேறுவா னென்று சொல்வோம்.

34. ஜாதகருடைய மரணகாலத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு எழுபதாவது வயதில் சிம்மமாசம் என்ற ஆவணி மாதத்தில் இறந்து எமபட்டணத்திற்குப் போய்விடுவார். இவருடைய மறுஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் மலைநாட்டில் இந்த ஜன்மத்தில் பிறந்த ஜாதி

யாகிய அருகர் ஜாதியிலேயே அதிக பணத்தை யுடையவருக்கு ஆண் குழந்தையாகப் பிறந்து அதிகமான செல்வத்தை யுடையவராக விருப்பார் என்று சொல்லுகின்றோம்.

* குறிப்பு :—வியாக்கியானம் :-ஜாதகருடைய மரணவிஷயம் :-ஜாதகருக்கு எழுபதாவது வயதில் புதமகாதெசை நடக்கின்றது. புதன் அஸ்தங்கதம் அடைந்து அங்காரகன், சனி இவர்களைவிட பலவீனமாக விருக்கின்றார், துய்யகேரளம் எட்டாவது பாடல் பிரகாரம் 1-8-10-க்குடையவர்கள் சனி, ஆகிய இந்த நால்வரில் யார் வெகு பலவீனமோ அவருடைய தசையில் மாரகம் ஏற்படும். ஒன்றிற்கும் பத்திற்குமுடைய புதன், எட்டிற்குடைய அங்காரகன், சனி ஆகிய இவர்களில் அஸ்தங்கதம் அடைந்தப் புதன்தான் வெகு பலவீனமாக விருக்கின்றார். ஆகையால் புதன் மாரகராகின்றார் ஆகையால் இங்கு புதன் தசையில் ஜாதகருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

35. அத்திரி தடுத்துச் சொல்வார் ஐந்து ஆண்டில் கெண்ட [மொன்று
சித்தமாய் சொல்லு கின்றேன் செப்புவீ ரந்தச் சங்கை
வித்தகன் செனன காலம் வெண்மதி திசையே யாகி
குத்தமாய் அஞ்சில் தங்க குறித்தனன் பாலன் கெண்டம்.

35. அத்திரிமா முனிவர் அடுத்துச் சொல்லுகின்றார். ஜாதகருக்கு ஐந்தாவது வயதில் மரணம் நேரிடும் என்று நான் சொல்லுகின்றேன் என்றார் அத்திரிமா முனிவர். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, ஜாதகர் பிறந்தகாலத்தில் சந்திரனுடைய தசையாகி இந்தச் சந்திரன் தோஷத்துடன் ஐந்தாவது வீட்டில் இருப்பதால் இவ்விதமாக நான் சொன்னேன் என்றார்.

36. பிருகுமே புகலு கின்றார் பொன்னவன் யேழில் தங்க
வரும்வினை அனேக மாக மரலியைக் காணு னுகும்
பரிதிமுன் பனிபோல் நேறும் பாலகன் தீர்க்க சீவி
அருமறை முடிவிலாடும் அம்பிகை யாளே கேளாய்.

36. பிருகு மஹாரிஷி சொல்லுகின்றார். பொன்னவன் என்ற குரு ஏழாவது வீட்டில் இருப்பதாலும் ஜாதகருக்கு நோய்கள் அதிகமாகச் சந்திர திசையில் உண்டாகும். ஆனால் இவர் எமதரிசனத்தை அடையமாட்டார், இறந்துவிடமாட்டார். சூரியனுக்கு எதிரேயுள்ள பனி பறந்துபோவதுபோல நோய்கள் பறந்தோடிப்போகும், ஜாதகர் நீண்ட ஆயுளை உடையவராவார். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

37. அன்னவன் செனன காலம் அம்புலி திசை யிருப்பு
சொன்னனே ஆண்டு யெட்டும் திங்களும் தசமே யாகும்
பன்னுவோம் பலனை யாங்கள் பாக்கிய தாப முண்டு
பின்துணை விருத்தி யாகும் பூமியு பலித மல்பம்.

37. ஜாதகருடைய ஜனனகாலத்தில் அம்புலி என்ற சந்திரமகாதசையில் இருப்பு எட்டு வருஷங்களும் பத்துமாதங்களும் ஆகும். இந்தக் காலத்தில் நடக்கும் பலாபலன்களை நாங்கள் செயல்லுகின்றோம். தனக் குறைவும் கஷ்டமும் ஏற்படும், ஜாதகருக்கு இளையசகோதரர் பிறப்பார், நிலங்களின் பலிதம் அற்பமாகவிருக்கும்.

38. சுகதுக்கம் கலந்து வாழ்தல் தந்தை தாய் பிணியு [மெய்தும்
பகைவரும் சிலர்களாலே பந்து வால் சூத மெய்தும்
இகபரம் தொண்டு பூணல் யியம்பினேம் பூர்வ பாகம்
செகமதில் தவங்கள் செய்யும் செல்வதி கேட்டி டாயே.

38. ஜாதகருடைய குடும்பத்தில் சுகமும் துக்கமும் கலந்தாற்போல நேரிடும். ஜாதகரின் தகப்பனுருக்கும் தாயாருக்கும் வியாதிகள் உண்டாகும். சிலரால் விரோதங்கள் உண்டாகும், பந்துக்களில் சூதகங்கள் நேரிடும், கடவுளை வணங்கி இவருக்கு வேலைகளைச் செய்து இவரிடத்தில் அன்புடனிருக்க நேரிடும். இதுவரையிலும் பூர்வபாகமாகிய முதலாவது பாகத்தைச் சொல்லி முடித்துவிட்டோம், உலகத்தில் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக. C.G.R.

---

# ஜாதகம் 37

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதியும் கன்னி குரு[2]கோலாம் [3]மந்தன் [4]தேளில் [5]பணி [[6]மேரு
[7]உதயன் புதன் கேதுவும் [8]வீணையுர [9]கன்ஊனன் [[10]நந்தியுற
சதி[11]சேய் [12]சீயம் [13]பெண் சென்மம் சாற்றும் பலன்கள் [தவமுனியே
இதுவே ஆண்பால் செனன முறும் யில்லம் கீழ்மேல் [வீதியதே.

1. கன்னி ஜன்மலக்கினமாகிச் சந்திரன் கன்னியிலும், குரு துலாத்திலும், சனி விருச்சிகத்திலும் ராகு தனுசிலும், சூரியனும் புதனும் கேதுவும் மிதுனத்திலும், சுக்கிரன் ரிஷபத்திலும், அங்காரகன் சிம்மத்திலும், இருந்து, நவக்கிரகங்கள் இவ்விதமாக அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர்கள். தவங்களைச் செய்கின்ற முனிவர்களே! என்று பார்வதியம்மையார் கேட்கவே, பிறந்த இந்தக் குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் இருக்கும்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சுக்கிரன் | சூரியன் புதன் கேது |
| | இராசி | | |
| | சக்கரம் | | அங்காரகன் |
| ராகு | சனி | குரு | லக்கினம் சந்திரன் |

உத்திரம் 2-ஆம் பாதம் சூரிய தசை
ஞ 3—10—00

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும்:—மேஷத்தில் ராகுவும், மிதுனத்தில் அங்காரகனும் துலாத்தில் சூரியனும். விருச்சிகத்தில் கேதுவும், மகரத்தில் சந்திரனும், புதனும், குருவும், சனியும், மீனத்தில் சுக்கிரனும் ஆகும். குருவும் சனியும் வக்கிர கதியில் இருக்கின்றார்கள்.

1. சந்திரன்
2. துலாம்
3. சனி
4. விருச்சிகம்
5. ராகு
6. தனுசு
7. சூரியன்
8. மிதுனம்
9. சுக்கிரன்
10. ரிஷபம்
11. அங்காரகன்
12. சிம்மம்
13. கன்னி

---

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. அதுவே வடபால் நோக்கமுறும்
அரன்கோஷ் டமுமே கீழ்பால்
விதியன் சிறையில் தான்வைத்த
வேலன் தென்பால் கூருனும்
சதிருய் மாலும் தென்கீழ்பால்
தபனனும் நதியும் உத்திரமாம்
பதியும் தந்தை யில்லமறு
பகர்வோம் பேரூர் நகரமதாம்.

2. பிறந்த வீடு வடக்குத் திக்கைப் பார்த்த வாயிலை யுடையதாகும், சிவபெருமானுடைய கோயில் கிழக்குத் திக்கிலும் இருக்கும், பிரமதேவரைச் சிறைச்சாலையில் வைத்த முருகக் கடவுளின் கோயில் தெற்குத் திக்கிலிருக்கும் மகாவிஷ்ணுவின் கோயில் தென் கிழக்குத் திக்கில் இருக்கும் அக்கினி தேவருடைய கோயிலும் ஓர் நதியும் வடக்குத் திக்கிலிருக்கும் பிறந்த வீடு தகப்பனுருடைய வீடாகும். பிறத்த ஊர் ஒரு பெரிய பட்டணமாகும்.

3. அரசர்வாசம் செட்டு மிகும்
யானைமுகத் தோன்தென் மேற்கில்
சுதனு சேஷ்டனுக வுமே
தோன்றுமாயர்கு லந்தனில் மருவும்
மருவும் தந்தை தாயோகம்
மனைவி புத்திரர் துணையோகம்
உரைவோம் முன்பின் சென்மங்கள்
உரைப்பக் கேண்மோ உத்தமியே.

3. இந்தப் பட்டணத்தில் அரசர் வாசஞ் செய்வார்கள், வியாபாரங்கள் அதிகமாகவிருக்கும், வளமாகவும் நடக்கும் யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளின் கோயில் தென்மேற்குத் திக்கிலிருக்கும், ஜாதகர் மூத்த குழந்தையாக யாதவருடைய ஜாதியில் வைஷ்ணவ, மதத்தில் இவருடைய தகப்பனுர், தாயார், மனைவி, மக்கள், சகோதரம், ஆகிய இவர்களின் யோகத்

தைச் சொல்லுவோம், முன் ஜன்மங்கள், பின்ஜன்மங்கள் ஆகிய இவற்றையுஞ் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே ! கேட்பீராக.

4, தமியேன் தந்தை துணையிரண்டு
சாறும் அதிலேஒரு தீதாதம்
அவனியில் பெண்ணொள் தீர்க்கமுறும்
அதுமுன்னாய் அறை கின்றோம்
பவமாம் யிலேயோர் தான்காணான்
பகர்வீ ரந்த விபரமதை
நவனில் அன்னைதான் மாண்டு
நல்கு மறுதாய்யென யுரைப்போம்.

4. ஜாதகரின் தகப்பனாருடன் பிறந்தவர்கள் இருவராவர். இவர்களில் ஒருவர் சீக்கிரத்தில் இறந்துவிடுவார், மற்றொருவர் சகோதரியாகும், இவள் நீண்ட வயதை யுடையவளாவள், இவள் மூத்த சகோதரியாவள் என்று சொல்லுகின்றோம். தகப்பனாருக்கு இளைய சகோதரங்கள் கிடையா இதற்குக் காரணத்தை விவரமாகச் சொல்லுவீர். இவருடைய தாயார் இறந்து விடவே, மற்றொரு தாயார் வந்து ஏற்படுவாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனாருடைய குணாதிசயங்கள்

5. உரைப்போம் அவட்கு சுதருண்பால்
உரையும் யிரண்டுகன்னி ணன்கு
தீரமாம் மற்றோர் சேதமுறும்
செப்பும் பின்பாலவர் சேதி
பெருமை தந்தைகுணம் கேளாய்
பொய்யை வழுத்தான் மாநிறத்தன்
குறை யென்றோர்க் குதவிடுவன்
கொடுமை வெளியே காட்டாதான்.

5. தகப்பனாருடைய இளைய தாயாருக்கு இரண்டு பிள்ளைகளும், நான்கு பெண்களும் நீண்ட ஆயுளையுடையவர்களாய் இருப்பார்கள். மற்ற சகோதரங்கள் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன். இனிமேல் தகப்பனாருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் பொய்யைச் சொல்லமாட்டார், மாநிறமான தேகத்தையுடை யவராவர். இவர் கஷ்டப்படுகின்றோம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார், இவர்தான் செய்யும் கெட்ட காரியங்களை வெளியே பிறருக்குத் தெரிவிக்கமாட்டார்.

6. ஈனமில் லாதான் யின்பசொலன்
எதிரிக் கிணக்கம் சொல்லாதான்
பான்மையாக பேசிடுவன்
பசித்தோர்க் குதவி செய்திடுவன்
தானம் தருமம் யிச்சையுளன்
சாற்ருன் கட்டு வார்த்தைகளே
ஊனமில்லா தான் உணேச்சலுளன்
உயர்வாய் குடும்பியென் றுரைப்போம்.

6. இவர் தாழ்ந்த, இழிவான குணங்களே யுடையவரல்ல, இவர் இனிமையாகப் பேசுவார் இவர் தன்னுடைய விரோதிகளுக்கு வணங்கி வார்த்தைகளேச் சொல்லமாட்டார். இவர் தகுதியாயும் தன்மையாகவும் பேசுபவராவர், பசித்தவர்களுக்கு உபகாரத்தைச் செய்திடுவார். இவர் தானம் தர்மம் ஆகிய இவற்றைச் செய்யப் பிரியமுள்ளவராவர், இவர் பொய், புணேந்த வார்த்தைகள், பழமொழிகள் ஆகிய இவற்றைச் சொல்ல மாட்டார். இவர் யாதொரு அவயவப்பங்கம் இல்லாத தேகத்தையுடையவராவர், மெலிந்த தேகத்தையுடையவர். இவர் மேன்மையான குடும்பஸ்தராக விருப்பார் என்று சொல்கின்ருேம்.

7. ரோமம்நீட்சி யிருகல்வி நுணர்வான்
அல்பம் உபதேச மில்லான்
தீமை யொருவர்க் கெண்ணுதான்
சல்லியம் கொள்ளான் தினம்சீலன்
மாமன்னர்களும் மெச்ச உய்வன்
வணிபம் செய்வான் பூமிவிருத்தி
சேமமுடையோன் தினம் லாபம்
செய்நன்றிகளும் தான் மறவான்

7. ஜாதகருடைய தகப்பனுர் நீண்ட ரோமங்களே யுடையவராவர். இவர் கொஞ்சமாகப் படித்தவராவார். இவர் தீக்ஷையைப் பெற்றவரல்ல. இவர் எவருக்கும் கெடுதிகளே நிணேக்கமாட்டார். இவர் கடன் வாங்கமாட்டார். இவர் எப்போதும் பரிசுத்தமாகவும் நல்லொழுக்கமுடையவராகவுமிருப்பார். பெரிய அரசர்கள் இவரைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலேயிலிருந்து வாழ்வார். இவர் வியாபாரத்தைச் செய்திடுவார், நிலங்களேப் பயிரிடுவார், சௌக்கியங்களே யுடையவராவர் இவருக்குத் தினந்தோறும் செய் தொழில் லாபம் உண்டாகும். இவர் தனக்குப் பிறர் செய்த உபகாரத்தை மறக்கமாட்டார்.

8. இல்ல மதிகம் பலவூரில் எய்தும் பூமியிடர் தீர்ப்பன்
வல்லிமார்கள் மோகமுளன் மவள் தந்தைமேல்
[வந்திடுவன்

செல்லான் அல்ப வார்த்தைக்கு சிறியதாயால் பகை
[மிகுமே
அல்லல் ஆதில் அன்னையினுல் அணுகும் சகடு
[வாகனமும்.

8. ஜாதகருடைய தகப்பனுருக்குப் பல கிராமங்களில் வீடுகள் கிடைக்கும், இவர் நிலங்களின் பேரிலுள்ள அடமானங்களையும் வில்லங்கங்களையும் நிவர்த்தி செய்திடுவார், இவர் ஸ்திரீகளின்பேரில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர், ஸ்திரீகளும் இவரிடத்தில் காம ஆசையை யுடையவர்களாக விருப்பார்கள், இவர் தன்னுடைய தகப்பனுருடைய அந்தஸ்திற்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் அற்பமான வார்த்தைகளைப் பிரமாதமாகக் கவனிக்கமாட்டார். இவருக்குச் சிறிய தாயாருடைய விரோதம் அதிகப்படும். இவருக்கு ஆதிகாலத்தில் தாயாரால் துன்பங்கள் ஏற்படும். இவர் வண்டி வாகனங்களையு முடையவராவர்

9. ஆதிரை மீனராசி அணுகுவா ளிவனே யென்ருேம்.
காதியு மதிகமேற்பன் கடந்தோர் போல் வார்த்தை
[சொல்வான்
சூதிலான் அவசரத்தன் துருசான நடையு மாவன்
போதக வாளைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

9. ஜாதகருடைய தகப்பனுர் திருவாதிரை நட்சத்திரத்தில் மீனராசி லக்கினத்தில் பிறந்தவராவர் என்று சொல்லுகின்ருேம். இவர் புகழை அதிகமாக அடைவார். இவர் எல்லாவற்றையும் துறந்துவிட்ட சந்நியாசியைப் போலவும் பரதேசியைப் போலவும் வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் கள்ளம், கபடு, வஞ்சனை ஆகிய இவற்றை யுடையவரல்ல. அவசரமாகக் காரியங்களைச் செய்வார். கெட்ட நடத்தையும் உடையவராவர். இளம்பருவமுடைய யானையின் முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்தப் புண்ணியவதியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய குணதிசயங்கள்

10. இன்னெறி யுடையா னுக்கு யிவனுமே உதிப்பா னுகும்
அன்னவன் குணத்தை சொல்வேன் அழகுளான் கல்வி
[மேன்மை
மன்னர்கள் யிஷ்டம் கொள்வன் மவன் சொல்லு
[மேன்மை யாகும்
கன்னென மொழியே சொல்வன் கனதனம் சேர்ப்பா
[னுகும்

10. இங்கு சொல்லப்பட்ட குணுகுணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்றேன். இவர் அழகாகவிருப்பார், மேன்மையான வித்தையை யுடையவராவர், இவர் அரசர்களுடைய அபிமானத்தையும் பிரியத்தையுமுடையவராவர், இவருடைய வார்த்தைகள் மதிப்பிற்கு உரியனவாகும். இவர் சர்க்கரையைப்போல இனிப்பாயுள்ள வார்த்தைகளைச் சொல்லுவார், இவர் அதிகமான பணத்தைச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பவராவர்.

11. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உண்மையா மனத்த [னுகும்
பண்டுளள் பூமிதன்னை பாலகன் விருத்தி செய்வன்
குண்டுணி கூருனுகும் குலத்துச்கு மேலாய் வாழ்வன்
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சரசமாய் வார்த்தை [சொல்வன்.

11. ஜாதகர் சுகமான போஜனத்தை யுடையவராவர், இலர் உண்மையையே சொல்லுகின்ற மனத்தை யுடையவராவர், உண்மையாக நடந்துகொள்ளுபவருமாவர், பழைய காலத்திய நிலங்களைப் பயிரிட்டு இவர் தான்ய வகையராக்களை அதிகப்படுத்துவார், இவர் பிறருடையபேரில் கோள்கள் சொல்லமாட்டார். இவர் தன்னுடைய பந்துக்களினுடைய அந்தஸ்திற்கு அதிகமான அந்தஸ்திலிருந்து வாழ்வார். இவர் நல்ல தமிழ் பாஷையினுடைய நுட்பத்தை அறிந்தவராவர், இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவார்,

12. அரசரால் உய்வா னுகும் அவனியில் புகழு மேற்பன்
பரிவண்டி உடைய னுகும் பாவையர் மோகம் கொள்வன்
குறையென் றுேர்க் குதவி செய்வன் குஞ்சர நடையு [மாவன்
மறுஊரில் கல்வியாலும் வரசரால் வாசம் செய்வன்.

12. ஜாதகர் அரசர்களின் உதவியால் ஜீவனஞ் செய்பவராவர் இவர் அரசாங்கத்தில் வேலையிலிருப்பார். இவர் பூமியில் கீர்த்தியை யுடையவராவர். இவர் குதிரை வண்டியை யுடையவராவர், இவர் ஸ்திரீகளின் பேரில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர், ஸ்திரீகளும் இவரிடத்தில் பிரியமாக விருப்பார்கள். இவர், நாங்கள் கஷ்டத்தை அடைந்திருக்கின்றேம் என்று சொல்லுகின்றவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார், இவர் யானையைப் போலக் கெம்பீரமான நடையை யுடையவராவர். இவர் வேறு கிராமத்தில் இவருடைய வித்தையின் மூலமாகவும் அரசர்களின் உதவியாலும் வாசஞ்செய்வார்.

13. எப்படி யோகம் சொன்னீர் யியம்புவீர் முனியே நீதான்
ஒப்புடன் தர்ம கர்மம் உரையிடம் ஆட்சி யாக

செப்பினேன் ராசயோகம் திருதிய மதில் பூமி
ஒப்புடன் சேரு மென்றேம் உயர்சோலை கூவல்
[செய்வன்.

13. ஜாதகருக்கு எந்தக் காரணத்தினுல் யோகத்தைச் சொன்னீர் முனிவரே? இதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, தர்மாதிபதி என்ற ஒன் பதிற்குடைய சுக்கிரன் (தன் வீட்டில்) ஆட்சியாக இருப்பதாலும், கர்மாதி பதி என்ற பத்திற்குடையவராகிய புதன் ஆட்சியாய் (தன் வீட்டில்) இருப் பதாலும் இராஜயோகத்தை ஜாதகருக்குச் சொன்னேன். மூன்று கிராமங் களில் நிலங்கள் வந்து சேரும், நேரிடும், என்று சொல்லுகின்றேம். ஜாதகர் மேன்மையான, சிறந்த சோலைகளையும் தோப்புகளையும் கிணர்களையும் ஏற்படுத்துவார்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தர்மகர்மயோகம் :—ஒன்பதாவது வீட்டிற் குடையவரும், பத்தாவது வீட்டிற் குடையவரும் கூடியிருப்பது வும், ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்ளுவதும் ஒருவர் வீட்டில் ஒருவர் மாறியிருப்பதுவும் தர்மகர்மயோகமாகும். இது விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் முந்நூற்றிரண்டாவது (302-ஆவது] பாடலையும், ஜாதக சந் திரிகையில் பதினுன்காவது சுலோகத்தையும், தாண்டமாலை பதின்மூன்ருவது, பதினுன்காவது பாடல்களையும் சந்திர காவி யம் பதிணைந்தாவது பாடலையும் வாசிக்கவும்.

14. கடன்கொளான் தனமும் சேர்ப்பன் காரிய சமர்த்த
[னுகும்
திடமதாய் யிரண்டு வித்தை செப்புவான் பெருமை
[யேற்பன்
படையினில் செல்லா னுகும் பந்துவை வணக்கம்
[செய்வன்
தடவரை மகளே யாங்கள் சாற்றின் மொழி குன்ருது.

14. ஜாதகர் கடனை வாங்கமாட்டார், பணத்தைச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார், இவர் காரியங்களையும், வேலைகளையும் செய்து முடிப் பதில் சாமர்த்திய முடையவராவர், கெட்டிக்காரராவர். இவர் இரண்டு பாஷைகளில் விசேஷமாகப் படித்தவராவர், இவர் புகழையும் கௌரவத் தையும் உடையவராவர். இவர் சண்டை சச்சரவுகளில் பிரவேசிக்கமாட் டார், பந்துக்களுக்கு வணங்கி நடப்பவராவர், பந்துக்களும் இவருக்கு வணங்கி நடந்துகொள்ளுவார்கள். விசாலமான உயர்ந்த மலைக்கு அரசனு கிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப்போகாமல் நடக்கும்.

15. தந்தையின் ஆஸ்தி தன்னை தனமிலா நசிக்க வைப்பன்
எந்தகா ரணத்தி னுலே யியம்பினீ ரந்த சங்கை

ஒன்பதில் புகரு நிற்க உணவாலும் அரசராலும்
விந்தையாய் தனங்கள் போகும் விரையமே அதிக
[மெய்தும்.

15. ஜாதகர் தன்னுடைய தகப்பனுருடைய சொத்துக்களைப் பணம் இல்லாததால் நாசஞ்செய்து விடுவார். எந்தக் காரணத்தினுல் இவ்வித மாகச் சொன்னீர் என்று கேட்கவே, ஒன்பதாவது வீட்டில் புகர் என்ற சுக்கிரன் இருப்பதால் *சொன்னேம். சாப்பாடு விஷயமாகவும், அரச ராலும் தனம் செலவாகிவிடும், அதிகமான பண விரயங்கள் ஏற்படும்.

*குறிப்பு:—வியாக்கியானம்;—பிதுர்ஸ்தானம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இதற்குடைய சுக்கிரன் இதிலேயே இருக்கின்ருர். இவரை ஆருவது வீட்டிற்குடையவராகிய சனி பார்த்திருப்பது பிதுர் விஷயமாகத் தோஷமாகும். மேலும் பிதுர்காரகராகிய சூரியன் பிதுர் லத்கினத்திற்குத் தன ஸ்தானமாகிய இரண்டா வது வீட்டில் கேதுவுடன் கூடி இருப்பது பிதுர் சொத்துக்குத் தோஷமாகும்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

16. பின்பாகம் விபரமாக பேசுவோ மந்த சங்கை
தன்துணை ஆண்பால் ரெண்டு தையலர் அவ்வார்
[தீர்க்கம்
அன்னவர் சேதி யாவும் அறிவிப்போம் விபரம்
[ரெண்டில்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

16. இந்த விஷயத்தைப்பற்றி விவரமாகப் பின்பாகமாகிய இரண் டாவது பாகத்தில் சொல்லுகின்ருேம், ஜாதகருடன் பிறந்தவர்கள் இரண்டு சகோரர்களும் இரண்டு சகோதரிகளும் ஆவார், இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவராவர். இவர்களுடைய விஷயங்கள் எல்லாவற்றையும் விவரமாக இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ருேம். மேன்மையான சிறந்த யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய விவாகமும் மனைவியின் குணுதிசயங்களும்

17. கங்கண காலம் சொல்வேன் காவலன் பதினே ழாண்டில்
மங்கையும் வருவா ளாகும் மாதுரு வர்க்கம் தன்னில்
சங்கை யில்லாமல் நேறும் சாற்றுவோ மவள் குணத்தை
துங்கமா மனத்த ளாகும் சொல்லது சுகமே யெய்தும்.

17. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவருக்குப் பதினேழாவது* வயதில் இவருடைய மனைவி தாயாருடைய வம்சத்திலிருந்து வந்து சம்பவிப்பாள் சந்தேகமில்லாமல் நடைபெறும். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் மேன்மையான, சிறந்த மனத்தை யுடையவளாவள், இவள் இன்பமாகப் பேசுவாள்.

*குறிப்பு:—வியாக்கியானம்:-விவாக விஷயம்:-ஜாதகருக்குப் பதினேழாவது வயதில் அங்காரக மகாதசை நடக்கின்றது. இந்த அங்காரகன் களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீட்டை எட்டாவது பார்வை யுடன் பார்த்து ஏழாவது வீட்டின் சம்மந்தத்தை அடைந்திருக் கின்றார் ஆகையால் ஜாதக பாரிஜாதம் பதினைன்காவது அத்தி யாயம் இருபத்தொன்பதாவது சுலோகத்தின் கடைசி சரத்து பிரகாரம், அங்காரகன் ஏழாவது வீட்டின் சம்மந்தம் உடைய வராகித் தன்னுடைய தசா காலத்தில் ஜாதகருக்கு விவாகத் தைச் செய்துவைக்கும் அதிகாரத்தை யுடையவராக விருக் கின்றார். ஆகையால் இங்கு இவருடைய தசையில் விவாகம் நடைபெறும் என்று சொல்லியிருக்கின்றது.

18. கல்வியு முடைய ளாகும் கபடில்லாள் பெருமை சாலி
நல்லவளாகி வாழ்வள் நற்புத்தி அடக்க முண்டு
புல்லிய புத்தி யில்லாள் புண்ணிய மனத்த ளாகும்
அல்லல் யெப்போதும் காணாள் அவளுமே யோக சாலி.

18. ஜாதகருடைய மனைவி வித்தையை யுடையவளாவள். கள்ளம், வஞ்சனை ஆகிய இவற்றைத் தன்னுடைய மனத்தில் உடையவளல்ல, இவள் கௌரவத்தையுடையவளாவள். இவள் நல்லவளாக விருந்து வாழ்பவளாவள், இவள் நல்ல அறிவையுடையவளாவள், அடக்கமும் அமைதியு முடையவளாவள், இவள் தாழ்ந்த, இழிவான அறிவை யுடைய வளல்ல, இவள் தான தர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடைய வளாவள், இவள் எப்போதும் கஷ்டங்களையும் துன்பங்களையும் அநுப விக்க மாட்டாள். இவள் யோகத்தை யுடையவளாக விருப்பாள்,

19. வயதுமே தீர்க்க மெய்தும் மாமுனி தடுத்து சொல்வார்
வியமாகும் முதல் மனைத்தான் மேவிடு மிரண்டா மாது
பயமிலா சொன்ன சங்கை பகருவீர் விபர மாக
தயவுடன் யேழோன் ரெண்டில் சரத்தினி லிருப்ப தாலே,

19. ஜாதகருடைய மனைவி நீண்ட ஆயுளை யுடையவளாவள், மாமுனி யாகிய அகஸ்திய மகரிஷி உடனே தடுத்துச் சொல்லுகின்றார். முதலா வது மனைவி சீக்கிரத்தில் இறந்துவிடுவாள், அதனால் இரண்டாவது மனைவி ஜாதகருக்கு ஏற்படுவாள் என்றார். அகஸ்திய மஹரிஷி பயப்படாமல் இவ் விதமாகச் சொன்னதற்குக் காரணத்தை விவரமாகச் சொல்லுவீர் என்று

கேட்கவே, ஏழாவது வீட்டிற்குடையவராகிய குரு இரண்டாவது வீட்டில் சர ராசியில்* இருப்பதாலே

*குறிப்பு:—வியாக்கியானம்:—சரராசி விஷயம்:—ஏழாவது வீட்டிற்குடையவர் சர ராசியிலிருக்கும் விஷயமாகக்கிரேனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் அறுநூற்றி நாற்பத்தெட்டாவது (648-வது) பாடலின் கீழ்க்கண்ட இரண்டு வரிகளை வாசிக்கவும்

"ஏழ் வீட்டினிற் கதிபன் சரத்தினிற்கில்

இருமனைவி, திரமதனிலிருக்கல் நன்றே"

மேலும் களத்திர காரகனும் குடும்பாதிபதியுமாகிய சுக்கிரனைச் சனி ஆருவது வீட்டிற்குடையவராகிப் பார்ப்பதும் களத்திர தோஷமாகும். ஏழாவது வீட்டை அங்காரகன் அஷ்டமாதிபதியாகி எட்டாம் பார்வையுடன் பார்ப்பதும் களத்திர தோஷமாகும்.

20. இருமனை அணுகு மென்றேம் யியம்புவார் வதிஷ்டர்
[தானும்
குருமே யேழோனுகி குடும்பத்தில் புகரா ணுட்சி
மருவியே யிருப்ப தாலே மனைவியு மொன்றே தீர்க்கம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

20. இரண்டு மனைவிமார்கள் ஜாதகருக்குச் சம்பவிப்பார்கள் என்று சொல்லுகின்றேம். உடனே வசிஷ்ட மஹரிஷியானவர் சொல்லுகின்றுர். குரு ஏழாவது வீட்டிற்குடையவரர்கிக் குடும்பம் என்ற இரண்டாவது வீட்டில் இருப்பதாலும், புகர் என்ற சுக்கிரன் ஆட்சியாக (தன்னுடைய வீட்டிலேயே) யிருப்பதாலும் ஜாதகருக்கு ஒரே ஒரு மனைவிதான் உண்டு. இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள். அருமையான வேதங்களின் முடிவு என்று சொல்லப்பட்ட உப நிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய புத்திரபாவம்

21. சுதர்களு மாண்பால் மூன்று தோன்றிடும் பெண்பால்
[ரெண்டு
இதுவைந்தும் தீர்க்க மெய்தும் பதராகு மிரண்டு மாகும்
முதல் ஞன்கும் நஷ்ட மெய்தும் முடவனின்
[தோஷத்தாலே
அதிதியை ஆதரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

21. ஜாதகருக்குப் பிள்ளைகள் மூன்றுபேரும், பெண்கள் இரண்டு பேரும் பிறப்பார்கள். இவ்வைந்து பேர்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இரண்டு குழந்தைகள் சீக்கிரம் இறந்துவிடுவார்கள். முதலாவது குழந்தையும் நான்காவது குழந்தையும் சீக்கிரம் இறந்துவிடு

வார்கள். இது சனியினுடைய தோஷத்தினுல்* உண்டாவதாகும். சந்நியாசிகளையும் பரதேசிகளையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம்:—சனியின் தோஷம்:—சனி ஆருவது வீட்டிற்குடையவராகி ஐந்தாவது பாவத்தைப் பார்க்கின்ருர், இதே சனி ஆருவது வீட்டிற்குடையவராகி இரண்டாவது புத்திர ஸ்தானமாகிய ஒன்பதாவது வீட்டையும் ஒன்பதிற்குடையவராகிய சுக்கிரனையும் பார்ப்பது புத்திரதோஷமாகும்.

## ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்கள்

22. மாதுரு குணத்தை சொல்வேன் வருவோரை
[யாதரிப்பள்
சூதிலாள் கபடுகொஞ்சம் துறவோர்க்கு அன்ன மீவள்
தீதுகள் ஒருவர்க் கெண்ணுள் செல்விநன் நடக்கை
[யுண்டு
காதலி யோகசாலி கல்விமான் மாஞ்சிவப்பன்.

22. ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன், இவள் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள், இவள் கள்ளம், வஞ்சனை ஆகிய இவற்றை யுடையவரல்ல, கபடத்தைச் சிறிதளவு உடையவளாவள். இவள் எல்லாவற்றையும் துறந்துவிட்டுப் போனவர்களாகிய சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவாள். இவள் யாருக்கும் கெடுதிகளை நினைக்கமாட்டாள், இவள் நல்ல நடவடிக்கையை யுடையவளாவள். இவள் யோகத்தை யுடையவளாவள். வாசித்தவளாவாள் இவள் மாந்தளிரின் நிறமாகிய ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடைய தேகத்தையுடையவளாவாள்.

23. மாரன்தன் மனதுக் கேத்தோள் விரதமே பூண்பா
[ளாகும்
காரிழை துணைஆண் ரெண்டு கன்னிகை ஒன்று தீர்க்கம்
கூறுவோம் யில்லம் கீழ்பால் குத்திரம் பேசாளாகும்
போர்செல்லாள் அன்னமீவள் புகழ்ந்தோரை
[ஆதரிப்பள்.

23. ஜாதகருடைய தாயார் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போலவும் ஒற்றுமையாகவுமிருப்பாள். இவள் விரதங்களையும் நோன்புகளையும் அநுஷ்டிப்பவளாவள். இவளுக்கு இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவளுடைய வீடு கிழக்குத் திக்கில் இருக்கும் என்று சொல்லுகின்றோம். இவள் குரூரமான வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். சண்டை சச்சரவுகளில் பிரவேசிக்கமாட்டாள், இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் போடுவாள். இவள் தன்னை மெச்சி கௌரவப்படுத்தினவர்களைக் காப்பாற்றுவாள்.

## ஜாதகியின் தாயாருடைய முன்ஜன்மம்

24. முன்சென்மம் கொங்கு ஞட்டில்
முதித்தனள் முந்திய வமிசம்
தன்வரன் மதலே யுண்டாய்
சான்ருேர்கள் பக்தி பூண்டு
தென்திசை தலங்கள் சென்று
தேறிஞேர்க் கன்ன மீந்து
முன்பவ மில்லா தாகி
மொதுங்கிஞள் கால ஞடு.

24. ஜாதகருடைய தாயார் தன்னுடைய முன்ஜன்மத்தில் கொங்கு நாட்டில் முத்திரிய ஜாதியில் பெண்ணுகப் பிறந்து, புருஷனேயும் புத்திரர்களேயுமுடையவளாகியுப்; நல்லவர்கள் பேரிலும் பரதேசிகளின் பேரிலும் அன்புடையவளாகியும், தெற்குத் திக்கிலுள்ள தெய்விக ஸ்தலங்களுக்குப் போய் முதிர்ந்த வயதுடைய பெரியோர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டும், யாதொரு பாவமும் இல்லாதவளாகி இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

25. ஆயனும் வரையப் பட்டு
அணுகிஞள் இக் குலத்தில்
தோயவே யிவள் பின்சென்மம்
செப்புவோம் காளாத்தி தன்னில்
வேயவே சைவ சேயாய்
விளங்குவா ளென்று சொன்ஞேம்
தீயரை சம்மரிக்கும்
தேவியே கேட் டி டாயே.

25. பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்திய குலமாகிய யாதவருடைய ஜாதியில் பிறந்திருக்கின்ருள். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்ருேம், இவள் காளாஸ்திரியில் சைவ ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள் என்று சொல்லுகின்ருேம். கெட்டவர்களேச் சம்மாரஞ் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

26. தந்தையின் பூர்வம் சொல்வேன்
தக்கோலம் மேல் பாலாக
பிந்திய ஊரிலே தான்
பிறந்தனன் வன்னிய சேயாய்

வந்திடு மனைவி மைந்தர்
வளமுள குடும்பி யாகி
அந்தவன் வாழு ளுளில்
அறைகிறே மூழி தானே.

26. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவர் தக்கோலத்திற்கு மேற்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய சிறப் பில்லாத கிராமத்திலே வன்னியருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து மனைவி மக்களை யுடையவராகியும் மேன்மையான சிறந்த ஒரு குடும்பஸ்தராகியும் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து நேரிட்ட பாவத்தைச் சொல்லுகின்றேம்.

27. முன் குலமாது பேரில் மோகமே கொண்டு யின்னேன்
மன்மத னூடல் செய்த வார்த்தைகள் சொல்லும் போது
அன்னவள் யிசையா ளாகி அவனுமே பலவந்தம் [செய்து
கன்னிகை போகம் துய்த்தான் கழறுவாள் சாபம் தானும்.

27. ஒரு பிராமண ஜாதி ஸ்திரீயின் பேரில் இந்தத் தகப்பனுர் மையல் என்ற காம ஆசையை யுடையவராகி மன்மதன் புணர்ச்சியில் உபயோகப்படுத்திய காதல் வார்த்தைகளைச் சொல்லும் போது, அவள் இதற்குச் சம்மதிக்காமல் இருந்ததால் இவர் பலவந்தமாக இவளிடத்தில் சம் போகஞ் செய்தார். இதன் பேரில் இவள் சாபத்தைக் கொடுக்கின்ருள்.

28. மறுசென்மம் மகவாய் தோன்றி ஆண்துணை யில்லா [தாகி
பெருமன்னை ஆதில் மாண்டு பேணுவார் மறுதாய் பக்கல்
திருகான குடும்பி யாகி தீவினை வாழ்வாய் நீயும்
உரைத்திட்டாள் அந்த மாது உத்தமனந்தி யத்தில்.

28. நீ உன்னுடைய பின் ஜன்மத்தில் ஆணுகப் பிறந்து, உனக்குச் சகோதரரில்லாமலும், உன்னைப் பெற்ற தாயார் உன்னுடைய ஆரம்பக் காலத்தில் இறந்தும், மாற்றுந் தாயின் பக்கத்திலிருந்து வளர்ந்தும், கஷ்டங் களையுடைய குடும்பத்தை யுடையவராகியும், கஷ்டங்களை அநுபவித்துக் கொண்டும் நீ வாழக் கடவது என்று இந்த ஸ்திரீ இந்தத் தகப்பனுரைப் பார்த்துச் சொன்னுள். இவர் தன்னுடைய கடைசி காலத்தில்

29. பலதல வாசம் சென்று பஞ்சை கட்கன்ன மீந்து
விலகினுள் காலனுடு விதியவன் வரையப் பட்டு
குலவுவான் கோகு லத்தில் குலவிடு மாது சாபம்
வரும்துணை ஆண்பால் தோஷம் மாதாவும் ஆதில் [மாள்வள்,

29. அநேக தெய்வீக ஸ்தலங்களுக்குப் போய் ஏழைகளுக்குச் சாப் பாட்டைப் போட்டுப் பிறகு இறந்து ஏமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவ ரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுக் கோகுலம் என்ற யாதவர் ஜாதியில் இந்த ஜன்மத்தில் வந்து இந்தத் தகப்பனுர் பிறந்திருக்கின்ருர். இந்த ஸ்திரீ யினுடைய சாபம் இவரை வந்து அடையும், இவருக்குச் சகோதரர் இருக்க மாட்டார். இவருடைய தாயாரும் இவருடைய ஆரம்ப காலத்திலேயே இறந்து விடுவாள்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

30. சஞ்சல மனத்தனுகி தனியனுய் வாழ்வா ருகும்
மிஞ்சிய சென்மம் சொல்வேன் விதர்ப்ப நாடதனி லேதான்
தஞ்சமாய் பிரம்ம சேயாய் தானவன் உதித்பா ருகும்
வஞ்சனை சிலர்க்கு செய்தும் வருவதால் மறுபிறப்பு.

30. ஜாதகருடைய தகப்பனுர் துன்பத்தை அடைந்துள்ள மனத்தை யுடையவராகித் தனியாகச் சகோதரரில்லாமல் வாழ்வார். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். விதர்ப்ப நாட்டிலே பிராமண ஜாதியில் ஆணுக இவர் பிறப்பார். இவர் சிலருக்குக் கெடுதிகளைச் செய்து கொண்டிருப்பதால் மறு ஜன்மத்தில் பிராமண ஜாதியில்

31. உதிக்கும் காரணங்க ளெவ்வார் உத்தம னிச்சென்
[மத்தில்
நதிதல வாசம் செய்தும் நல்லோர்க்கும் நல்ல ஞயும்
துதிமாலுக் குதவி யாயும் துறவோர்க்கு அன்ன மீந்தும்
வதிபனும வாழ்வ தாலே வருகுவான் மறைகு லத்தில்

31. பிறக்குங் காரணங்களைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இந்தத் தகப்பனுர் இந்த ஜன்மத்தில் நதிகளை யுடைய தெய்வீக ஸ்தலங்களுக்குச் சென்றும், நல்லவர்களுக்கு நல்லவராக விருந்து கொண்டும் மகாவிஷ்ணு விற்கு உதவியாக விருந்தும், சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப் பாட்டைப் போட்டும் வாழ்வதாலே பிராமண ஜாதியில் பிறப்பார்,

32. பாலகன் பூர்வம் சொல்வேன்
பட்சியின் மலைக்குத் தென்பால்
ஞாலமேல் பேரூர் தன்னில்
நல்கினுன் கங்கை சேயாய்
சூலியெண் டோளி தர்மம்
செய்துமே பவமில் லாமல்
மால் பசனைகளும் செய்து
மலர்சோலை வைத்து யின்னேன்.

32. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் பட்சியின் மலை என்ற திருக்கழுக்குன்றத்திற்குத் தெற்குத் திக்கிலுள்ள ஒரு பெரியகிரா மத்தில் வேளாளர் ஜாதியில் ஆணுகப் பிறந்தார். சிவன் காளி, துர்க்கை ஆகிய இவர்களுடைய கோவில்களுக்குத்தர்ம கைங்கரியங் களைச் செய்து யாதொரு பாவமுமில்லாமலும், மகாவிஷ்ணுவின் பஜனை களையும் செய்தும், புஷ்பத் தோட்டங்களை உண்டாக்கியும், ஜாதகர்.

## ஜாதகருடைய யோகபாவம்

33. தென்திசை காலனுடு சேர்ந்துமே பிரமன் லக்கம்
முந்திமால் குலமுதிப்பான் மொழிகிரே மிவனின் [யோகம்
எந்திடம் பெருமை யேற்பன் ராசபூ சிதமு மாவன்
பிந்திய துணையு மெவ்வார் புவிராசர் பேட்டி கொள்வன்.

33. இறந்து தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய் பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு யாதவர் ஜாதியில் வந்து பிறந்தி ருக்கின்ருர், இனிமேல் இவருடைய யோக பாவத்தைப் பற்றிச் சொல்லு கின்ரேம். இவர் எவ்விடத்திலும் கீர்த்தியையும் மேன்மையையும் அடை வார். இவர் அரசாங்க மனிதர்களுடைய அனுசரணையையும் நல்ல மதிப்பையும் உடையவராவர். இவருடைய பின் சகோதரர் எவ்விதமாக விருப்பார் என்று கேட்கவே, இவர் பூமியை ஆள்கின்ற அரசர்களுடைய தரிசனத்தை அடைவார்.

34 மாதுலர் தன்பால் சென்றும் மன்னர்பால் அரசு [செய்வன்
போதனம் சேர்ப்பா ஞகும் பராசரரும் தடுத்துச் [சொல்வார்
காதலன் தனக்கு யோகம் கழறுங்கா லங்கள் சொல்வாய்
தீதிலா யிருபான் மூன்றில் செகராசர் தன்ஞல் உய்வன்.

34. ஜாதகருடைய இளைய சகோதரர் தன்னுடைய அம்மாளிடத்திற்குப் போய் அவ்விடத்தில் அரசாங்கத்தில் உத்தியோகத்தில் அமர்ந்து தன்னு டைய உத்தியோக அதிகாரத்தைச் செலுத்திக் கொண்டிருப்பார். அதிக தனங்களைச் சேர்த்து வைப்பார். இங்கு பராசர மஹரிஷியானவர் தடுத் துக் கேட்கின்ருர். ஜாதகருக்கு யோகங்கள் சம்பவிக்கின்ற காலங்களைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருக்கு இருபத்து மூன்ருவது வயதில் பூமியை அரசாளுகின்ற பெரிய அரசரால் இவர் ஜீவனஞ் செய்வார். அஃதாவது அரசாங்கத்தில் வேலையிலிருப்பார்.

35. அன்பதுனலு ஆண்டும் அரசுமே செய்வா ஞகும்
துன்பங்கள் இதற்குள்ளாக தோன்ருதோ விபரம் [சொல்வாய்

என்ன துன்பங்கள் நேர்ந்தும் யிரவிமுன் பனிபோல்
[நீங்கும்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

35. ஜாதகர் தனக்கு ஐம்பத்து நான்காவது வயது வரையிலும் தன்னுடைய அரசாங்க வேலையின் அதிகாரத்தைச் செலுத்துவார். இதற்கு இடையிலே இவருக்குக் கஷ்டங்கள் நேரிடாதோ என்று கேட்கவே, எவ்விதமான கஷ்டங்கள் உண்டான போதிலும் அவை சூரியனுக்கு முன்னேயுள்ள பனியைப் போலப் பறந்தோடிப் போய்விடும், நீங்கிவிடும். மேன்மையான சிறந்த. யானை முகத்தை யுடைய விநாயக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே! கேட்பிராக.

36. ஆருறு ஆண்டு தன்னில் அவன் தந்தைகெண்ட
[மெய்தும்
தீரமாய் நாற்பான் மூன்றில் செல்லுவாள் அன்னை
[தானும்
பாரினில் சாதகர்க்கு பகருவோ மறுபா னெட்டில்
காரிழை மாதம் தன்னில் கழறுவோம் கெண்டம் தானும்.

36. ஜாதகருக்கு முப்பத்தாருவது* வயதில் இவருடைய தகப்பனர் இறந்து விடுவார். இவருக்கு நாற்பத்து மூன்ருவது* வயதில் இவருடைய தாயார் இறந்து விடுவார். இவருக்கு அறுபத்தெட்டாவது வயதில் புரட்டாசி மாதத்தில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்ரேம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தகப்பனருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில் ராகு தசை நடக்கின்றது. பிதிர் லக்கினம் ஒன்பதாவது விடாகிய ரிஷபம் ஆகும், ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் குருமாரகராகின்ருர். இவருடைய வீட்டில் ராகு இருக்கின்ருர். ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகம் பிரகாரமும் ராகு மாரகராகின்ருர். ஆகையால் இங்கு ராகு தசையில் தகப்பனருக்கு மரணம் சொல்லி யிருக்கின்றது.

*குறிப்பு :—தாயாருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு நாற்பத்து மூன்ருவது வயதில் குரு தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். எட்டிற்குடைய சந்திரன் பத்திற்குடைய புதன், சனி ஆகிய இவர்களை விட லக்கினதிபதியாகிய குருபகை வீட்டிலிருப்பதால் அதிக பலவீனமாக விருக்கின்ருர். ஆகையால் துய்ய கேளரம் எட்டாம் பாவம் பதினன்காவது பாடல் பிரகாரம் குரு மாரகராகின்ருர். ஆகையால் இங்கு குரு தசையில் தாயாருக்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது,

*குறிப்பு :—ஜாதகருடைய மரண விஷயம் :—அறுபத்தெட்டாவது வயதில் சனி தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் அங்காரகன் மாரகராகின்றார். இவர் வீட்டிலுள்ள சனி ஜாதக சந்திரிகை இருபத்து மூன்ருவது சுலோகம் பிரகாரம் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு சனி தசையில் மரணம் சொல்லப்பட்டிருக்கிறது.

37. மறுசென்மம் துவாரை தன்னில் வருகுவான் பிரம்ம [சேயாய்
திருமகள் விலாசம் பெற்று செல்வனும் வாழ்வா ளுகும்
வருமிவன் ஆதியோகம் வரைகிருே மினிமே லாக
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

37. ஜாதகர் தன்னுடைய மறு ஜன்மத்தில் துவாரகா புரியில் பிராமண ஜாதியில் ஆணுகப் பிறந்து லக்ஷ்மியின் கடாக்ஷத்தை அடைந்து வாழ்வார். இவருடைய ஆரம்ப காலத்தின் யோக விஷயங்களை இனிமேல் சொல்லுகின்ருேம். அருமையான வேதங்களின் முடிவாகிய உபநிஷத்துக்களில் ஆனந்தமாய் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

38. செனித்தனுள் முதலாய்க் செப்புவோ மைந்தாண் [டுக்கும்
கனதனம் செலவு முண்டு கலகங்கள் குடும்ப லேச்சல்
விஜனமனம் தொழில் மடக்கம் வியாகூலம் விரோத [முண்டு
நினைவது கூடா தாகும் நிகழ்த்துவோ மதின் பின்ஞக.

38. ஜாதகர் பிறந்த காலம் முதற் கொண்டு ஐந்து வயது வரைக்கும் நடக்கும் பலாபலன்களைச் சொல்லுகின்ருேம். அதிகமான பணம் செலவாகி விடும். குடும்பத்தில் சண்டை சச்சரவுகளும் கஷ்டங்களும் அலேச்சல் களும் உண்டாகும். மனத்திற்குத் துன்பம் நேரிடும், தொழிலில் முடக்கு ஏற்பட்டு இது அடக்கமாகி விடும், குறைவுபடும். மனத்திற்குத் துன்பம் ஏற்படும். விரோதங்களும் நேரிடும், தான் நினைக்கின்ற விஷயங்கள் கை கூடிவரா. இதற்குப் பிறகு நடக்கும் பலாபலன்களைச் சொல்லுகின்ருேம்.

39. நூல்வணி பங்கள் செய்தல் நீடூழி செய்வா ளுகும்
சாலவே பத்தாண் டாண்டும் நேர்ந்திடும் தொழிலு [மென்ருேம்
சாலவே அதின் பின்ஞக தரணியை விருத்தியை [செய்வன்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தது தப்பா தாமே,

39. குடும்பத்தார் நூல் வியாபாரங்களைச் செய்வார்கள். இதை நீண்ட காலம் வரையிலுஞ் செய்வார்கள். இந்தத் தொழில் ஜாதகருக்குப் பத்து வயது வரைக்கும் நடந்து வரும். இதற்குப் பிறகு நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார்கள். ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜனன காலதசை விவரம்

40. பாலகன் செனிக்கும் காலை பரிதியின் திசைமூன்
[ருண்டும்
சாலவே திங்கள் பத்தும் சாற்றுவோம் பலனை யாங்கள்
ஏலவே துணைபின் விருத்தி யில்லமும் வேற தாகும்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தனம் பூர்வ பாகம்

40. ஜாதகர் பிறந்த காலத்தில் பரிதி என்ற சூர்யனுடைய தசை இருப்பு மூன்று வருஷங்களும் பத்து மாதங்களும் ஆகும். இக்காலத்திய பலாபலன்களைச் சொல்லுகின்றோம். ஜாதகருக்குப் பின்னால் சகோதரர்கள் பிறந்து விருத்தியாவார்கள். வேறே ஓரிடத்திற்குச் சென்று குடும்பத்தார் வாசஞ் செய்வார்கள். ஆலகால விஷத்தை அருந்திய சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! இதுவரையிலும் பூர்வபாகம் என்ற முதல் பாகத்தைச் சொல்லி முடித்து விட்டோம். —C. G. R.

# ஜாதகம் 38

## ஜனனகால கிரகநிலை

1. [1]பிறை புதன் [2]சீயமாக [3]புகர்[4]வண்டி [5]சேயு [6]மானில்
[7]கரியவன் [8]பானு கன்னி [9]கனகனும் ராகு [10]மேடம்
[11]அரிவையும் செனன மாக அறைகுவீர் பலனை யென்ன
உறைகுவார் பராசர் தானும் உதித்திடு மாண்பால் [சென்மம்

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும் புதனும் சிம்மத்திலும், சுக்கிரன் கடகத்திலும், அங்காரகன் மகரத்திலும், சனியும் சூரியனும் கன்னியிலும், குருவும் ராகுவும் மேஷத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது, பராசர மஹரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | குரு ராகு | | |
| | இராசி சக்கரம் | | சுக்கிரன் |
| அங்காரகன் | | | சந்திரன் புதன் |
| | | கேது | லக்கினம் சூரியன் சனி |

மகம் 4-ஆம் பாதம் கேது தசை ஷை 1—6—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் குருவும் சனியும், கடகத்தில் சந்திரனும் அங்காரகனும், கன்னியில் புதனும் ராகுவும், தனுசிற் சுக்கிரனும், கும்பத்திற் சூரியனும், மீனத்திற் கேதுவும் ஆகும். குருவக்கிர கதியிலிருக்கின்றார்.

---

1. சந்திரன்
2. சிம்மம்
3. சுக்கிரன்
4. கடகம்
5. அங்காரகன்
6. மகரம்
7. சனி
8. சூரியன்
9. குரு
10. மேஷம்
11. கன்னி

2. தந்தையின் யில்லம் சொல்வேன் தென்வாடை கீழ்மேல் [வீதி
இந்திர நகர மொப்பாம் ராசர்கள் வர்ச மாகும்
முந்திய செட்டு ஓங்கும் முயல்மாலின் கோஷ்டம் [தென்பால்
சந்ததம் ரதமும் நிற்கும் சுஞ்சீவி ராயன் கோஷ்டம்.

2. ஜாதகரின் தகப்பனுருடைய வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேன். இது கிழக்கு மேற்குத் தெருவில் தென்னண்டை வாடையில் இருக்கும். பிறந்த ஊர் தேவேந்திர பட்டணத்திற்குச் சமானமாக விருக்கும். இதில் அரசர்கள் வாசஞ் செய்வார்கள். இந்தப் பட்டணத்தில் வியாபாரங்கள் செழித்திருக்கும். மகாவிஷ்ணுவின் கோயில் தெற்குத் திக்கிலிருக்கும், ஒரு ரதமும் இருக்கும். சஞ்சீவி ராயன் கோயில்

3. அருகினில் குடகு யீசன் அந்தரி காஞ்சி கீழ்பால்
பெருந்தீ குண்ட முண்டு பேசுவோ மிவ்வடையா [ளத்துள்
உரைத்தனம் தந்தை யில்லம் உத்தமன் சேஷ்ட [னென்றோம்
திருமாலின் அடிமை யென்றோம் செப்புவோம் குடும்பச் [சேதி.

3. சமீபத்திலிருக்கும், மேற்குத்திக்கில் சிவபெருமானுடைய கோயிலிருக்கும் பார்வதியம்மன் கோயிலும் காஞ்சீபுரமும் கிழக்குத் திக்கிலிருக்கும், ஒரு பெரிய அக்கினிகுண்டமும் இருக்கும். இவ்விதமான அடையாளங்கள் உள்ள ஊரில் தகப்பனுருடைய வீட்டில் ஜாதகர் பிறந்தார். இவர் மூத்த குமாரராவர் என்று சொல்லுகின்றோம். இவர் வைஷ்ண ஜாதியைச் சேர்ந்தவர் என்று சொல்லுகின்றோம். இவருடைய குடும்ப விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம்,

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சாந்தவான் [மாநிறத்தான்
முந்துமால் பக்தி கொள்வன் மொழியதைக் காப்பா [னுகும்
சிந்தையில் மர்ம மில்லான் சென உபகாரி யாவன்
நொந்தவர்க் குதவி செய்வன் நிதம் சுகி போசனத்தன்.

4. ஜாதகருடைய தகப்பனாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இந்த சாந்தமான குணமுடையவர், மாநிறமான தேகத்தையுடையவராவர். இவர் மகாவிஷ்ணுவின் பேரில் அன்புடையவராவர்

இவர் தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் நடந்து கொள்ளுபவரா வர். இவர் தன்னுடைய மனத்தில் ரகசியத்தையும் வஞ்சனையையும் கப டத்தையும் உடையவரல்லர், இவர் ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்பவ ராவர். இவர் ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்வார், இவர் எப்போதும் சுகமான நல்ல சாப்பாட்டைச் சாப்பிடப்பட்டவராவர்.

5. நாடகப் பணிகள் செய்வன் ஞாதியை நசிக்க வைப்பன்
வாடினோர்க் கன்ன மீவன் வடிவினில் குள்ள னவன்
நீடிய கர்மம் செய்வன் நினைத்தது முடிக்க வல்லன்
மாடமாளி கையும் செய்வன் மருவிடும் பித்த வாயு.

5. ஜாதகருடைய தகப்பனார் நாடகத்திற்கு உபயோகப்படுத்தும்படி யான ஆடை ஆபரணங்களைச் செய்பவராவர், இவர் தன்னுடைய பங்காளி களை க்ஷீணித்துப் போகும்படியாய்ச் செய்வார், அவர்களை நாசப்படுத்தி விடுவார்* பசியால் களைத்து வாடி யிருப்பவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் உருவத்தில் குள்ளமாக* விருப்பார். நீண்ட காலம் வியாபித்திருக்குங் காரியங்களைச் செய்வார். தான் செய்ய எத்தனித்த காரியங்களைச் செய்து முடிக்குஞ் சாமர்த்தியத்தை யுடையவராவர். மெத்தை வீடுகளையும் மாளிகைகளையுங் கட்டுவார், இவருக்கு பித்தவாய்வு ரோக மிருக்கும்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—ஜாதகருடைய தகப்பனார் குள்ளமாய் இருத்தல்:—பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த லக்கினாதிபதியாகிய சுக்கிரனை அங்காரகன் உச்சமாகிப் பார்ப்பதால் தகப்பனார் குள்ளமாக விருப்பார்.

*குறிப்பு:—பங்காளியை நசிக்கவைக்கும் விஷயம்:—பிதிர் லக்கினமாகிய ரிஷபத்திற்கு பங்காளி வீடு ஆறுவது வீடாகிய துலாம் ஆகும். இதைக் குரு பார்ப்பதால் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாத காலங்காரம் அறுநூற்றி முப்பதாவது (630–ஆவது) பாடலில் சொல்லிய பிரகாரம் இந்தத் தகப்பனார் "ஞாதியோரை மெலிய வே பண்ணுவிப்பன்." இந்த ஆறுவது வீட்டில் கேது இருப்ப தால் இந்த ஜாதகாலங்காரத்தில் 631, 632-ஆவது பாடலில் சொல்லிய பிரகாரம் இந்த தகப்பனார் ஞாதிகளையும் சத்துருக் களையும் அதம் செய்து ஜயித்து விடுவார்.

6. பல வணிபங்கள் செய்வன் பற்றற்றோர்க் கன்ன மீவன்
தலவாசம் செய்வா னுகும் சாருள்கள் சேர்ப்பா னுகும்
குலவிடும் வாயு பீடை குண்டை கோவிருத்தி யுள்ளான்
சொலுமொழி யிரண்டு முண்டு தோகையே கேட்டி
[டாயே.

6. ஜாதகருடைய தகப்பனுர் பலவிதமான வியாபாரங்களைச் செய்வார், உலகப்பற்றை விட்டுவிட்டவர்களாகிய முனிவர்களுக்கும் சந்நியாசிகளுக்கும், பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவார். இவர் தெய்விக ஸ்தலங்களுக்கு யாத்திரை போவார். இவர் வேலையாட்களைச் சேகரித்து வைத்திருப்பார். இவருக்கு வாய்வுரோகம் வந்து சம்பவிக்கும் , எருதுகள் பசுக்கள் ஆகிய இவை இவருக்கு விருத்தியாகும், இவர் உண்மையையும் பொய்யையும் கலந்து பேசுவார், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

7. தன்துணை காணு ளுகும் செனிக்கினும் தீதே யாகும்
என்ன காரணத்தி ஞலே யிவன்துணை தோஷம் [சொன்னீர்
சந்திரன் விரையம் புக்க சல்லியன் லாபம் புக்க
இன்னவன் தனியனுக இருப்பனே யென்று [சொல்வோம்.

7. ஜாதகருடைய தகப்பனுர் சகோதரங்கள் இல்லாதவராக விருப்பார், ஒரு சமயம் சகோதரங்கள் பிறந்தாலும் இவர்கள் சீக்கிரம் இறந்துவிடுவார்கள்* எந்தக்காரணத்திஞல் இவருக்குச் சகோதர தோஷத்தைச் சொன்னீர் என்று முனிவரைக் கேட்கவே, சந்திரன் விரையம் என்ற பன்னிரண்டாவது வீட்டில் இருப்பதாலும், சல்லியன் என்ற சுக்கிரன் லாபம் என்ற பதிஞேருவது வீட்டிலிருப்பதாலும், இந்தத் தகப்பனுர் தனியாக, ஒண்டியாகச் சகோதரங்களில்லாமல் இருப்பார் என்று சொல்லுகின்ருேம்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—தகப்பனுருடைய சகோதர விஷயம்:—பிதிர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும், ரிஷப லக்கினத்திற்கு இளைய சகோதர ஸ்தானம் கடகம் ஆகும். இதில் ஆறுக்குடைய சுக்கிரன் இருப்பது இளைய சகோதர தோஷமாகும், இந்த வீட்டையும் இந்த வீட்டிற்குடைய சந்திரனையும் அங்காரகன் பார்ப்பது இளைய சகோதர தோஷமாகும். மேலும் மூத்த சகோதர ஸ்தானம் ரிஷபத்திற்கும் பதிஞேருவது வீடாகி மீனம் ஆகும். இந்த வீட்டைச் சனியும் சூரியனும் பார்ப்பது மூத்த சகோதர தோஷமாகும். இந்த வீட்டிற்குடைய குரு ரிஷபத்திற்குப் பன்னிரண்டில் மறைந்து ராகுவுடன் கூடியிருப்பதும் மூத்த சகோதர தோஷமாகும். இவரை அங்காரகன் பார்ப்பதும் மூத்த சகோதர தோஷம் ஆகும், மேலும் குரு மூத்த ஆண் சகோதரகாரர், இவர் மேற்கண்டபடி இருப்பது மூத்த ஆண் சகோதரத்திற்கும் தோஷமாகும். இளைய ஆண் சகோதர காரகராகிய புதனை அங்காரகன் பார்ப்பது இளைய ஆண் சகோதர தோஷமாகும்,

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

8\. சொன்ன யிக்குணத் தானுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
அன்னவன் குணத்தை சொல்வேன் அழகுளான்
[சிவந்த மெய்யன்
தன்மனம் கபடு மில்லான் சாந்தவான் பொறுமை சாலி
முன்னோர்க்கு அன்ன மீவன் முயர்வான குடும்ப
[மேற்பன்.

8\. இதுவரையிலும் சொல்லப்பட்ட குணகுணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றேன். இவர் அழகாக விருப்பார், சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவராவர், இவர் தன்னுடைய மனத்தில் கள்ளம், வஞ்சனை ஆகிய இவற்றை யுடையவரல்ல, இவர் சாந்தமாக விருப்பார், இவர் அடக்கமுடையவராவர். இவர் பிராமணர்களுக்கும் பெரியோர்களுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவார். இவர் மேன்மையான, சிறந்த குடும்பத்தை யுடையவராவர்.

9\. விந்தையு மிரண்டு கற்பன்
விவேகியா மெவர்க்கு நண்பன்
உத்தம குணத்த னாகும்
உயர்வான செட்டு செய்வன்
சத்தியம் தவரு னாகும்
சகராசர் பேட்டி பூண்பன்
சுற்றத்தார் மதிக்க வாழ்வன்
சோம்பிடான் காரி யத்தில்.

9\. ஜாதகர் இரண்டுவித பாஷைகளில் வாசித்தவராவர், புத்திசாலியாக விருப்பார், எல்லோருக்கும் சினேகிதராக விருப்பார். இவர் நல்ல குணத்தை யுடையவராக விருப்பார். மேன்மையான, சிறந்த வியாபாரத்தைச் செய்வார், இவர் சத்தியத்திற்கு மீறி நடக்கமாட்டார், பூமியை ஆளுகின்ற அரசர்களுடைய தரிசனத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டக்கூடிய நிலைமையிலிருந்து வாழ்வார். காரியங்களைச் செய்வதில் சோம்பலையுடையவராக விருக்கமாட்டார்.

10\. வண்டி வாகனமும் சேர்ப்பன்
வடிமைகள் உடைய னாகும்
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன்
சல்லியம் கொள்ளா னாகும்

துண்டமாய் பேச மாட்டான்
தொடுவழக் கதனில் செல்லான்
பண்டுளள் பூமி யில்லான்
பாரது சேர்ப்பா னுமே.

10. ஜாதகர் வண்டியையும் வாகனங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவர் வேலையாட்களை உடையவராக விருப்பார். இவர் சிறந்த தமிழ் பாஷையின் நுட்பத்தை யறிந்தவராவர். இவர் கடன் வாங்க மாட்டார். இவர் துணிக்கையாயும் வெட்டுண்டு போகும்படியாயும் கண்டிப்பாய் பேச மாட்டார். இவர் நீடித்திருக்கும்படியான வியாஜ்ஜியங்களில் பிரவேசிக்க மாட்டார். இவர் பழைய காலத்திய நிலங்களை யுடையவரல்ல, நிலங்களைப் புதியதாக வாங்கிச் சேர்த்து வைப்பார்,

11. இல்லமும் யிரண்டு செய்வன்
யெதிரியை நசிக்க வைப்பன்
அல்லல் யெப்போதும் காணுன்
அரிபத்தி பூண்பா னுகும்
வல்லிமார் மோக னுவன்
ஆவுகள் பலதி முண்டு
எல்லையை அளந்தோன் தேவி
யியம்பின மொழி குன்ருது.

11. ஜாதகர் இரண்டு வீடுகளைக் கட்டுவார். தன்னுடைய எதிரிகளை நாசஞ் செய்து விடுவார். இவர் எப்போதும் கஷ்டங்களை அடைய மாட்டார். மகாவிஷ்ணுவின் பேரில் அன்புடையவராக விருப்பார். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். ஸ்திரீகளும் இவரிடத்தில் பிரியமுள்ளவர்களாக விருப்பார்கள். இவருக்குப் பசுக்கள் நல்ல பலிதந்தரும், பூமியை அளந்த சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

12. இன்னவன் துணைவர் தன்னை யியம்புவோம் நவமே [தோன்றும்
தன்னிலே ஆண்பால் மூன்று சக்தியு மொன்று [யென்ரும்
பின்னமா மற்ற தெல்லாம் பேசுவோம் பின்பால் சேதி
கண்ணெனை மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

12. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்ரும். மொத்தத்தில் ஒன்பது பேர்கள் உண்டாவார்கள். இவர்களில் மூன்று

பேர் சகோதரர்களும், ஒருவர் சகோதரியு மாவார்கள் என்று சொல்லுகின்றோம். மற்றவர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். சர்க்கரையைப் போல இனிப்பான வார்த்தைகளை யுடைய பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகருடைய விவாகமும் மனைவியின் குணாதிசயங்களும்

13. மணமது பதினெட் டாண்டில் மங்கையும் வடபால்
[நேறும்
குணமது நல்ல தாகும் கொடுமையை வெளிக் காட்டா
[தாள்
பிணையிலா வார்த்தை கூர்வள் பேடை போல் சாய
[லொக்கும்
கனமுள குடும்ப மேற்பள் காரிழை யோக சாலி.

13. ஜாதகருக்கு விவாகம் இவருக்குப் பதினெட்டாவது வயதில் நடக்கும். மனைவி வடக்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய குணம் நல்ல குணமுமாகும். இவள் தன்னுடைய பொல்லாங்கை, தீமையை, பிறருக்குத் தெரியும்படியாய் வெளியே காண்பித்துக் கொள்ள மாட்டாள். பிணைந்த, பொய்யான, வார்த்தைகளைச் சொல்ல மாட்டாள். இவள் பெண் பறவையைப் போல ரூபத்தை யுடையவளாவள். இவள் மேன்மையான சிறந்த குடும்பத்தை யுடையவள்ாவள். இவள் யோகத்தை யுடையவளாவள்.

குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய விவாக விஷயம்:—ஜாதகருக்குப் பதினெட்டாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. இவர் களத்திர காரகராகியும் குடும்பாதிபதியும் ஒன்பதிற்குடையவராகவும் இருக்கின்றார். ஜாதக பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஒன்பதிற்குடையவர் தன் தசையில் விவாகஞ் செய்து வைக்க அதிகாரமுடையவராவார். ஆகையால் இங்கு ஒன்பதிற்குடையவரான சுக்கிர தசையில் விவாகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

14. வய்துமே தீர்க்க மெய்தும் மாமுனி தடுத்துச் சொல்வார்
வியமாகு முதல் மனைத்தான் மேவிடு மிரண்டாம் பாரி
பய்மிலா சொன்ன சங்கை பகருவீர் முனியே நீதான்
நயமிலான் யேழோன் யெட்டில் ராகுவும் கூடி நிற்க.

14. ஜாதகருடைய மனைவி தீர்க்காயுளை யுடையவளாவள். உடனே அகஸ்திய மஹாரிஷி தடுத்துச் சொல்லுகின்றார். முதல் மனைவி இறந்து

விடுவாள். பிறகு இரண்டாவது மனைவி வந்து சம்பவிப்பாள் என்றார். இதன் பேரில் பயப்படாமல் இவ்விதமாகச் சொன்னதற்குக் காரணத்தை நீரே சொல்லுவீர் முனிவரே என்று கேட்கவே, நல்லவிதமாகவில்லாத ஏழாவது வீட்டிற்குடைய குருவானவர் எட்டாவது வீட்டில் ராகுவுடன் சேர்ந்திருப்பதால்

15. சொல்லினேம் தாரம் ரெண்டு செயமுனி தடுத்து [சொல்வார்
வல்லியரிருவ ரென்றீர் மரணமோ தீர்க்கமோ சொல்
செல்லுவாள் முதல் மனைத்தான் சுதர்கற்பம் [தோன்றியே தான்
அல்லலாய் யிரண்டா மாது அணுகிடு மென்று [சொல்வோம்,

15. இவ்விதமாக இரண்டு மனைவிமார்கள் நேரிடுவார்கள் என்று சொன்னேம் என்றார் அகஸ்தியர். இதற்கு ஜயமுனிவர் தடுத்து கேட்கின்றார். நீர் மனைவிமார்கள் இருவர் என்று சொன்னீரே! முதல் மனைவி இறந்து விடுவாளோ அல்லது தீர்க்காயுளை யுடையவளோ என்ற விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே; முதலாவது மனைவி கர்ப்பம் தறித்து அதனால் இறந்து போய் விடுவாள். பிறகு இரண்டாவது மனைவி வந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகின்றோம் என்றார், அகஸ்திய மஹரிஷி யானவர்.

குறிப்பு ;—வியாக்கியானம் :—மனைவி விஷயம் :—களத்திர ஸ்தானாதிபதியாகிய ஏழுக்குடைய குருவை அங்காரகன் அஷ்டமாதிபதியாகிப் பார்ப்பது களத்திர தோஷமாகும். ஏழாவது வீட்டைச் சூரியன் விரையாதிபதியாகியும், சனி ஆறுக்குடையவராகியும் பார்ப்பது களத்திர தோஷமாகும். களத்திரகாரகனாகிய சுக்கிரனை அங்காரகன் அஷ்டமாதிபதியாகிப் பார்ப்பதும் களத்திர தோஷமாகும். குடும்பஸ்தானத்தில் கேது இருப்பதும் களத்திர தோஷமாகும், களத்திர ஸ்தானாதிபதியாகிய குருவைச் சனி புத்திர ஸ்தானாதிபதியாகிப் பார்ப்பதால் கர்ப்பத்தினால் மனைவிக்கு கஷ்டம் நேரிடக் கூடிய அமைப்பு இருக்கின்றது.

16. எந்த காலத்தி லேதான் யேகுவான் விபரம் சொல்வாய்
வந்தவ னிருபா னெட்டில் மனைவியு கெண்ட மெய்தி
அந்த ஆண்டினிலே மாது அணுகிடும் பால னுக்கு
சந்ததம் புத்திர பாகம் சாற்றுவோம் தாயே கேளு.

16. ஜாதகருடைய முதல் மனைவி ஜாதகருக்கு எத்தனை வயதில் இறந்து விடுவாள் என்பதை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருக்கு இருபத்தெட்டாவது வயதில் மனைவி இறந்து விடு

வாள் என்று, பிறகு உடனே அதே வருஷத்தில் இரண்டாவது மனைவி வந்து சம்பவிப்பாள் என்று முனிவர் சொன்னார். இனிமேல் சந்ததிகள் விஷயமாகச் சொல்லுகின்றோம். பார்வதியம்மையே கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம் :—மனைவி மரண கால விஷயம்:—ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் சூரிய மகா தசை நடக்கின்றது. இந்தச் சூரியன் விரையாதிபதியாகி (பன்னிரண்டிற்குடையவ ராகி விரையஞ் செய்பவராகி) களத்திர ஸ்தானமாகிய ஏழா வது வீட்டைப் பார்க்கின்றார். மேலும் களத்திர லக்கினம் ஏழாவது வீடாகிய மீனம் ஆகும். இந்த மீன லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபத்தேழாவது சுலோகம் பிரகாரம் சூரியன் மாரகாதிபதியாகின்றார். இவர் புத்திர ஸ்தானமாகிய ஐந்திற்குடைய சனியுடன் கூடி யிருக்கின்றார். ஆகையால் சூரிய தசை காலத்தில் இருபத்தெட்டாவது வயதில் கர்ப்பத்தி னால் மனைவி இறந்து விடுவாள் என்று இங்கு சொல்லப்பட்டி ருக்கின்றது. உடனே சந்திர தசையில் மறுமனைவி வருவாள். சந்திரன் பதினோராவது வீட்டிற்குடையவராய் ஒரு களத்திர ஸ்தானாதிபதியாவதால் இரண்டாவது மனைவி இவர் தசையில் வருவாள்,

## ஜாதகருடைய புத்திரபாவம்

17. சுதர்களும் யிருனன்காக தோன்றிடும் சிலது சேதம்
சதமுட னண்பால் மூன்று தையலு மிரண்டு யென்றோம்
முதல் னலு யேழும் சேதம் முடிந்தனம் பாலனுக்கு
அதிதியை ஆதரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

17. ஜாதகருக்கு மொத்தத்தில் எட்டு குழந்தைகள் பிறப்பார்கள். இவற்றில் சில குழந்தைகள் சீக்கிரம் இறந்து விடுவார்கள். மூன்று பிள்ளை களும் இரண்டு பெண்களும் ஜாதகருக்கு உயிருடன் நிலைப்பார்கள் என்று சொல்லுகின்றோம். முதலாவது, நான்காவது, ஏழாவது குழந்தைகள் சீக்கிரம் இறந்து விடுவார்கள். சந்நியாசிகளையும் முனிவர்களையும் காப் பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—புத்திர தோஷ விஷயம் :—புத்திர ஸ்தான மாகிய ஐந்தாவது வீட்டில் அங்காரகன் இருந்தால் (பொது வாய் குழந்தைகள் பிறந்து வளர்ந்து பிறகு வளர்ந்த பிள்ளை களாக இறந்து போவார்கள். ஒரு சமயம் இரண்டாவது மனை விக்குப் பிள்ளை பிறக்கும். இது அநுபவத்திற்குச் சரியாக வரு கிறது. மேலும் புத்திரகாரகனாகிய குரு ராகுவுடன் கூடி இருப்பது புத்திர தோஷமாகும்,

## ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்கள்

18. அன்னையும் சிவந்தமேனி அழகுளாள் வாத தேகி
தன் சொலும் தேத்த லுண்டு சாதமு மன்பாயீவள்
கன்னிகை யோக சாலி காதலன் மனம்போல் வாழ்வள்
பொன் பணி யிச்சை யுண்டு புகழ்ந்தோர்க்குதவி
[செய்வள்

18. ஜாதகருடைய தாயார் சிகப்பு நிறமான தேகத்தை யுடையவளாவள். இவள் சௌந்தரிய முடையவளாவாள். வாததேகமாகிய பெரிய தேகத்தை யுடையவளாவள். இவள் நல்லதாயும் அழகாயுமுள்ள வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள், இவள் யோகத்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருந்து வாழ்வாள். இவள் தனம், ஆடை ஆபரணங்கள் ஆகிய இவற்றின் பேரில் பிரியமுள்ளவளாவாள், இவள் தன்னைப் பெருமையாகப் பாராட்டுகின்றவர்களுக்கும் துதிப்பவர்களுக்கும், உபகாரத்தைச் செய்வாள்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

19. இல்லமும் வடபாலாகும் இவன்துணை ஆண்பா
[லொன்று
வல்லிமார் யிருவர் தீர்க்கம் மாதுரு பூர்வம் கேளாய்
நல்லதோர் கொங்கு னாட்டில் நாயகி வன்னிய சேயாய்
புல்கினுள் சுதர்களுண்டாய் புகழ்ச்சியாய் வாழும் னாளில்

19. ஜாதகரின் தாயாருடைய வீடு வடக்குத் திக்கிலிருக்கும், இவளுடன் பிறந்தவர்கள் ஒரு சகோதரரும் இரண்டு சகோதரிகளும் ஆவார், இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாவார்கள். ஜாதகருடைய தாயாரின் முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவள் நல்லதாகவுள்ள கொங்கு நாட்டில் வன்னிய ஜாதியில் பெண்ணாகப் பிறந்து பிள்ளைகளை யுடையவளாகிப் பெருமையுடன் வாழ்கின்ற காலத்தில்

20. வந்து வூழ்தன்னைக் கேண்மோ மைத்துனன்
[மனைவிபேரில்
சந்ததம் விரோதம் கொள்ள சாற்றுவாள் சாபம் தானும்
பிந்திய சென்மம் தன்னில் பேசுங்கால் அவமானங்கள்
வந்திட கருணை செய்வாய் மாரியே நீதான் பாரும்

20. இவளுக்கு (தாயாருக்கு) வந்து சம்பவித்தப் பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவள் தன்னுடைய மைத்துனருடைய மனைவியின் பேரில் எப்போதும் விரோத முடையவளாக விருந்தால்

இந்த ஸ்திரீ சாபத்தைத் தாயாருக்குக் கொடுத்தாள். இவளுடைய மறு ஜன்மத்தில் இவளுக்குப் பேசுவதில் அவமானங்கள் அஃதாவது பேசுவதில் குற்றம் வந்து சம்பவிக்கும்படியாய் நீர் கருணை புரிய வேண்டும், மாரியம் மையே! என்று.

21. இப்படிச் சொல்லியேதான் இரைத்தனள் தெருதூள் [தானும்
தப்பித மந்த தோஷம் சார்ந்தது பாவைக்கே தான்
ஒப்புடன் அந்தியத்தில் உயர் தந்தபிணியும் கண்டு
மைப்புடன் காலனுடு மேவினுளந்த மாது

21. இவ்விதமாக மாரியம்மனைப் பார்த்து வேண்டிக் கொண்டு பிறகு தெருவிலுள்ள மண் தூளை வாரி எடுத்துத் தூவினுள். ஆகையால் குற்றமாக இந்தச் சாபம் தாயாரை வந்து அடைந்தது, இவள் தன்னுடைய் கடைசி காலத்தில் ஒரு பெரிய பல் வியாதி யுண்டாகி இறந்து எமபட்ட ணத்திற்குப் போய் விட்டாள்.

## ஜாதகரின் தாயாருடைய பின் ஜன்மம்

22. சிரனுன் கோன் வரைய்ப்பட்டு செனித்தன னிவளே [யென்றேம்
மருவிடு மாது சாபம் வர்க்கு சொல்வெட்கம் நேறும்
வரும் சென்மமா பலியிலேதான் வருகுவாள் பிரம்ம [சேயாய்
குருமுனி தடுத்து சொல்வார் கோதையிச் சென்மந் [தன்னில்

22. நான்கு தலைகளை யுடையவராகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் இந்தத் தாயார் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்றேம். அந்த ஸ்திரீயினுடைய சாபம் தாயாரை இந்த ஜன்மத்தில் வந்து அடையும். இவளுக்குச் சரியாகப் பேச முடியாது. அஃதாவது பேசுவதில் குற்றங்கள், குறைவுகள் ஏற்படும். இவள் தன்னு டைய மறு ஜன்மத்தில் மஹாபலிபுரத்தில் பிராமண ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள். குரு முனியாகிய வசிஷ்ட மஹரிஷி தடுத்துக் கேட்கின்ருர். இவள் இந்த ஜன்மத்தில்

23. செய்த புண்ணியங்க ளென்ன செப்புவீர் முனியே [நீதான்
வைய மேல் நல்லோரையும் வரன்மனம் போலே [வாழ்ந்தும்

ஐயமேலிச்சை யாயும் அடாபிடி செல்லாதாயும்
துய்யமா மறை குலத்தில் தோன்றுவாளென்று
[சொல்வோம்

23. செய்த புண்ணிய காரியங்கள் என்ன என்பதை முனிவரே! நீர் சொல்லுவீர் என்று கேட்கவே, இவள் பூமியில் நல்லவளாக விருந்தும் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருந்து வாழ்ந்தும், தருமஞ் செய்வதிலும் பிச்சை போடுவதிலும் பிரிய முள்ளவளாக விருந்தும், அடாவடியாக அநியாயமாகப் பேசாதவளாயு மிருந்து வாழ்வதால், பரிசுத்தமான பிராமண ஜாதியிற் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

24. தந்தையின் பூர்வம் சொல்வேன் சட்ட ஞதீசர்வாழும்
முந்திய நகரம் தன்னில் முதித்தன னிக்குலத்தில்
சந்ததம் செட்டுசெய்து தான் வாழுநாள் வினையைக்
[கேண்மோ
பந்துவில் இருவர் தானும் பாகங்கள் செய்யவேண்டி

24. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், இவர் சட்டஞதீசர் வாழ்கின்ற மேன்மையான ஸ்தல மாகிய காழி என்னும் சீர்காழி ஸ்தலத்தில் இந்த ஜன்மத்திற் பிறந்த ஜாதியாகிய வடுகர் ஜாதியில் பிறந்தார். இவர் எப்போதும் வியாபாரத் தைச் செய்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் செய்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்ப வித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன் கேட்பீராக. இவருடைய பந்துக் களில் இரண்டு பேர் பங்குபாகப் பிரிவினையைச் செய்து கொள்ள எண்ணி

25. மாரன்பால் செல்லும்போது மனமது கபடு கொண்டு
ஓரவஞ்சனையாய் செய்தான் உரைக்கிருன் ஒருவன்
[சாபம்
தீரமாய் மறு சென்மத்தில் துணைவர்கள் யில்லாதாகி
பாரினில் தனியாய் வாழ்வாய் பகர்ந்தன னந்தத்
[தோஷம்

26. ஜாதகரிடத்திற்குப் மத்தியஸ்தத்திற்காக போன போது, இவர் தன்னுடைய மனத்தில் வஞ்சனையை யுடையவராகித் தீர்ப்பைக் கபடமாய் ஒருவர் பக்கமாகச் செய்து விட்டார். மற்ருெருவர் சாபத்தைக் கொடுக் கின்ருர். நீ உன்னுடைய மறுஜன்மத்தில் சகோதரர்கள் இல்லாதவராக விருந்து கொண்டு தனியாக வாழக் கடவது என்று சாபங் கொடுத்தார், இந்தச் சாபம்

26. பாலகன் தன்னைச் சேர்த்து பருத்ததோர் குடும்பம்
[தாழ்ந்து
காலன்தன் பதிக்கு புக்கி கஞ்சனால் வரையப்பட்டு
மால்மதம் வடுகர் வமிசம் வந்தன னென்று சொல்வோம்
ஆலம்போல் முன்னூழ் சாபம் அணுகிடும் துணைவர்
[தோஷம்

26: ஜாதகருடைய தகப்பனாரை இந்த ஜன்மத்தில் வந்து அடைந்தது. ஆகையால் இவருடைய மேன்மையான பெரிய குடும்பமானது க்ஷீணித்து, இவர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு பிரமதேவரால் பிரம லிபியுடன் எழுதப்பட்டு மகாவிஷ்ணுவின் குலமாகிய வடுகர் ஜாதியில் ஆணாகப் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். நாகப்பாம்பின் விஷத்தைப் போல முன்ஜன்மத்திய பாவமாகிய இந்தச் சாபம் இவரை வந்தடையும், இவருக்குச் சகோதர தோஷம் ஏற்படும்.

## ஜாதகரின் தகப்பனாருடைய மறு ஜன்மம்

27. மறுசென்மம் அவ்வூர் தன்னில் மாரனும் சவுராஷ்டிர
[வமிசம்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வானாகும்
குறைவிலா குடும்ப மாவன் கூறின மொழிகுன்றாது
அறுமறை முடிவிலாடும் அம்பிகையாளே கேளாய்.

27: ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய மறு ஜன்மத்தில் இதே கிராமத்தில் சௌராஷ்டிர ஜாதி என்ற பட்டு நூல்கார ஜாதியில் ஆணாகப் பிறந்து; லக்ஷ்மி கடாக்ஷத்தைப் பெற்று வாழ்வார். இவர் கஷ்டங்களை அநுப விக்காத குடும்பத்தை யுடையவராவர். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகாமல் பலன்கள் நடக்கும். அருமையான வேதங் களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக.

28. சாதகன் பூர்வம் சொல்வேன் தாம்பிரபரணி தன்னில்
ஓதுவார் குலமுதித்து உலகினில் கிரிஷி செய்து
காதலி மதலை யுண்டாய் காவலன் வாழ்ந்துமே தான்
தீதான் காலனொடு சென்றுமே பிரமன் லக்கம்
[வரையப் பட்டு

28. ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன்: இவர் தாம்பிரபரணி நதி தீரத்தில் ஓதுவார் என்ற வேதங்களை ஓதுகின்ற பிராம்மண ஜாதியில் ஆணாகப் பிறந்து, பூமியில் நிலங்களைப் பயிரிட்டுக் கொண்டும், மனைவி மக்களை யுடையவராகி வாழ்ந்து, இறந்து; எமபட்டணத் திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு

29. இக்குல் முதிப்பானுகும் யியம்புவார் அத்திரி தானும்
முக்கிய மறையோனுக முன்செ்ன்ம முதித்தானென்றீர்
தக்கவே யிச்செ்ன்மத்தில் தன்குலம் தாழ்வ தென்ன
முக்கியம் வேதம் தன்னை முயலாத குற்றத்தாலே

29. இந்த ஜன்மத்தில் ஜாதகர் இந்த குலமாகிய வடுகர் குலத்திற் பிறப்பார். இதன் பேரில் அத்திரி மாமுனிவர் கேட்கின்றூர். இவர் முன் ஜன்மத்தில் முக்கியமான பிராமண ஜாதியில் பிறந்தார் என்று நீர் சொன்னீரே, இப்படி யிருக்க இந்த ஜன்மத்தில் ஏன் தாழ்ந்த குலத்தில் பிறந் தார். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, முக்கியமான வேதத்தைக் கஷ்டபட்டுப் படிக்காத குற்றத்தாலே

## ஜாதகருடைய யோக பாவம்

30. வந்தனனென்று சொல்வோம் வரைகிறே மிவனின் [யோகம்
விந்தையாய் விசேஷ செட்டு மேதினில் செய்வானுகும்
அந்தமான் வஸ்துவாலே அனேகமாய் பெருமை [யேற்பன்
பந்துவை யாதரிப்பன் பாரினுல் பொருளு மேற்பன்

30. இந்த வடுகர் குலத்தில் பிறந்திருக்கின்றூர் என்று சொல்லுகின் றேம். இனிமேல் இவருடைய யோகத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவர் ஆச்சரியமாக அதிகமான, சிறந்த வியாபாரத்தை இந்தப் பூமியில் செய்வார். அந்தமான் தீவில் உண்டாகும் வஸ்துக்களின் வியாபாரத்தால் அதிகமான புகழை அடைவார். இவர் தன்னுடைய பந்துக்களைக் காப் பாற்றுவார். நிலங்களால் தனத்தையும் அடைவார்.

31. சித்திர யில்லம் செய்வன் திருப்பணி செய்வானுகும்
இத்தகை பலன்களெல்லாம் யெந்த காலங்கள் [சொல்வாய்
வித்தகன் யீரொன்பாண்டில் மேவிடு நிதிநிட்சேபம்
சித்தமாய் அதின் பின்னுக சிறப்புள யில்லம் செய்வன்

31. ஜாதகர் சித்திரங்களால் அலங்காரஞ் செய்யப்பட்ட வீட்டைக் கட்டுவார். இவர் அழகிய ஆடை ஆபரணங்களையுஞ் செய்வார். கோயில் வேலைகளையும் திவ்விய தொண்டுகளையுஞ் செய்வார். இவ்விதமான பலன் களெல்லாம் எந்தக் காலத்தில் நடக்கும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருக்குப் பத்தொன்பதாவது வயதில் செல்வமும் புதையலும் கிடைக்கும், இதற்குப் பின்னுல் இவர் சிறந்த வீட்டைக் கட்டுவார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணம்

32. சந்திரன் பிறைபோல் யோகம் தங்கிடு மதின் பின்னாக
இந்திர போக மேற்பன் ராச பூசிதனு மாவன்
தந்தைக்கு முப்ப தாண்டில் சார்ந்திடும் கெண்ட
[மென்றோம்
முந்திய பல்நோய் நேறும் விரைவினில் நிவர்த்தியாகும்

32. வளர்பிறை சந்திரனைப் போல ஜாதகருக்கு போகம் நாளுக்கு நாள் அதிகரிக்கும். இதன் பின்னால் இவர் தேவந்திர போகங்களை அநுபவிப்பார். இவரை ஜாதகருக்கு முப்பதாவது* வயதில் இவருடைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும். ஜாதகருக்குப் பல் நோய் உண்டாகும். இது சீக்கிரத்தில் நீங்கிவிடும்.

*குறிப்பு:-வியாக்கியானம் :—தகப்பனுருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு முப்பதாவது வயதில் சந்திர மகா தசை நடக்கின்றது. பிதிர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் சந்திரன் மாரகராகின்றார். ஆகையால் இங்கு சந்திர தசையில் ஜாதகருடைய தகப்பனுருக்கு மரணம் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய மரணபாவம்

33. சொன்னதோர் முப்ப தாண்டும் சோர்விலா தந்தை
[தீர்க்கம்
அன்னைக்கு முப்பா னெட்டில் அறைந்தனம் கெண்டம்
[தானே
மன்னனும் சாதகர்க்கு வயதுமே அறுபானறில்
கன்னியா மாதம் தன்னில் காலன் தன்பதியைக்
[காண்பான்

33. இங்கு சொல்லப்பட்ட முப்பது வயது வரையிலும் ஜாதகருடைய தகப்பனுர் கஷ்டப்படாமல் ஜீவித்திருப்பார். ஜாதகருடைய தாயாருக்கு முப்பத்தெட்டாவது* வயதில் மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். ஜாதகருக்கு அறுபத்தாருவது வயதில்* கன்னியா மாதம் என்ற புரட்டாசி மாதத்தில் மரணம் நேரிட்டு இவர் எமபட்டணத்திற்குப் போய் அதைப் பார்ப்பார்,

*குறிப்பு :—வியாக்கியானம் :—தாயார் மாரக விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில் சந்திர மகா தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். சந்திரன் மிகவும் தேய் பிறையாகி மிகவும் பலவீனமாக விருக்கின்றார்.

துய்ய கேரளம் எட்டாவது பாவம் பதினுன்காவது பாடல் பிரகாரம் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு சந்திர தசையில் மாதாவிற்கு மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—ஜாதகருடைய மரண விஷயம் ;—ஜாதகருக்கு அறுபத்தாருவது வயதில் குரு மகா தசை நடக்கின்றது. ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் கன்னியா லக்கினத்திற்குக் குரு மாரகராகின்ருர். ஆகையால் இங்கு ஜாதகருக்குக் குரு தசையில் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

34. மருசென்மம் சேரனுட்டில் வருகுவான் வைசவ் சேய்ாய்
பெரும் தனமுடைய ராகிப் பூமிரா சந்தன்பால் சென்று
திருமகன் உய்வாளுகும் செப்பின மொழி குன்ருது
அருமறை முடிவிலாடும் அம்பிகையாளே கேளாய்

34. ஜாதகர் தன்னுடைய பின் ஜன்மத்தில் சேர நாட்டில் வைசியருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து அதிக செல்வத்தை யுடையவராகிப், பூமியை ஆளுகின்ற அரசரிடத்திற்குப் போய் அவரால் ஜீவனஞ் செய்வார். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாய் விளங்குகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

35. செனித்திடு காலம் தன்னில் செம்பாம்பு திசை யிருப்பு
குனித்திடு ஆண்டு ஒன்றும் கூறிய திங்களாறும்
வினைவரும் சாதகர்க்கு மிக்க தாய் பிணியுமாகும்
சினமிலா தவங்கள் செய்யும் செல்வதி கேட்டிடாயே

35. ஜாதகர் பிறந்த காலத்தில் செம்பாம்பு என்ற கேது மகாதசையில் இருப்பு ஒரு வருஷமும் ஆறு மாதங்களும் ஆகும். இக்காலத்தில் ஜாதகருக்குக் கஷ்டங்களுண்டாகும், பெரிய நோய் உண்டாகும். கோபமில்லாமல் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

—C. G. R.

---

# ஜாதகம் 39

## ஜனனகால கிரகநிலை

1. [1]பொன் [2]துலை [3]மதியும் [4]தேளில்புதன் [5]பானு [6]சேயு
[[7]மேடம்
பின் [8]சிகி [9]சாடியாக [10]புகர் சனி மிதுனமாக
கன்னியும் செனனமாகக் கழறுவீர் பலனை யென்ன
தென் முனி புகலுகின்றார் செனித்திடுமாண் பால்
[சென்மம்

1, கன்னி ஜன்ம லக்கினமாகிக் குரு துலாத்திலும், சந்திரன் விருச்சிகத்திலும், புதனும் சூரியனும், அங்காரகனும் மேஷத்திலும், கேது கும்பத்திலும், சுக்கிரனும் சனியும் மிதுனத்திலும் இருந்து நவக்கிரகங்கள் இவ்விதமாக அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர்கள் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது தென்முனி என்ற அகஸ்திய மஹரிஷியானவர் சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சுக்கிரன் | சூரியன் புதன் கேது |
| | இராசி சக்கரம் | | |
| | | | அங்காரகன் |
| ராகு | சனி | குரு | லக்கினம் சந்திரன் |

உத்திரம் 2-ஆம் பாதம் சூரிய தசை
ஞ 3—10—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும்:—மேஷத்தில் ராகுவும், மிதுனத்தில் சனியும், கடகத்தில் புதனும், சிம்மத்தில் சந்திரனும், துலாத்தில் அங்காரகனும் சுக்கிரனும், கேதுவும் விருச்சிகத்தில் சூரியனும், தனுசில் குருவும் ஆகும். அங்காரகன் அஸ்தங்கதமாக விருக்கின்றார், குரு வக்கிர கதியிலிருக்கின்றார்.

---

1. குரு
2. துலாம்
3. சந்திரன்
4. விருச்சிகம்
5. சூரியன்
6. அங்காரகன்
7. மேஷம்
8. கேது
9. கும்பம்
10. சுக்கிரன்

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. வந்தவன் கீழ் மேல் வீதி வாசலும் தெற்கு பார்வை
அந்தரி காளி உத்திரம் அரன் கோஷ்டம் வடகீழ் [தங்கும்
இந்தவாரடை யாளத்துள் இறங்குவான் வடுகர் வர்க்கம்
சந்ததம் குடும்பச் சேதி சாற்றுவோம் தாயே யாங்கள்

2. ஜாதகர் பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்குத் திக்கைப் பார்த்த வாயிலை யுடையதாகும். பார்வதியம்மன் கோயிலும் காளியம்மன் கோயிலும் வடக்குத் திக்கிலிருக்கும். சிவபெருமானுடைய கோயில் வட கிழக்குத் திக்கில் இருக்கும். இப்படிப்பட்ட அடையாளங்கள் உள்ள கிராமத்தில் வடுகர் ஜாதியில் ஜாதகர் பிறப்பார். இவருடைய குடும்ப விஷயங்களைச் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! நாங்கள்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

3. தந்தையின் துணைவர் தன்னை சாற்றவே பலத்தைக் [காணோம்
எந்த காரணத்தினாலே யியம்பினிர் அந்த சங்கை
ஒன்பதுக் குடையோன் பத்தில் உகந்துமே அதற்கு [மூன்றில்
பின்னமாய் ராகு நிற்க பேசொணாத்துணைவர் தானே

3. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரங்கள் விஷயமாய்ச் சொல்ல யாதொரு பலமுமில்லை. இவ்விதமாக எந்த காரணத்தினால் நீர் சொன்னீர், என்று கேட்கவே ஒன்பதற்குடையவராகிய சுக்கிரன் பத்தாவது வீட்டிலிருந்துகொண்டு, இவருக்கு மூன்ருவது வீட்டில் ராகு இருப்பதால் சகோதரங்கள் கிடையா

*குறிப்பு :—வியாக்கியானம்:-சகோதரதோஷ விஷயம்:-பிதிர்லக்கினம் ஒன்பதாவது விடாகிய ரிஷபம் ஆகும். இதற்கு இளைய சகோதர ஸ்தானமான மூன்ருவது வீடாகிய கடகத்திற்குடைய சந்திரன் நீச்சமாகவிருந்து இவரை அங்காரகன் பார்ப்பது இளையசகோதர தோஷமாகும். ரிஷபத்திற்கு மூத்த சகோதர ஸ்தானமாகிய பதினோராவது விட்டிற்குடைய குரு ரிஷபத்திற்கு ஆருவது வீட்டில் மறைந்திருந்து சூரியனாலும் அங்காரகனாலும் பார்க்கப்படுவது மூத்த சகோதர தோஷமாகும். இந்தப் பதினோராவது வீடாகிய மீனத்தைச் சனி பார்ப்பதும் மூத்த சகோதர தோஷமாகும். மூத்த ஆண் சகோதரகாரகராகிய குரு ரிஷபத்திற்கு ஆருவது விட்டில் மறைந்திருந்து சூரியனாலும் அங்காரகனாலும் பார்க்கப்படுவது மூத்த ஆண் சகோதர தோஷமாகும். இளைய ஆண் சகோதர காரகனாகிய புதன் ரிஷபத்திற்குப் பன்னிரண்

டில் மறைந்திருந்து கொண்டு சூரியன் அங்காரகன் இவர்களுடன் கூடி இருப்பது இளைய ஆண் சகோதர தோஷமாகும். சகோதரகாரகனுகிய அங்காரகன் ரிஷபத்திற்குப் பன்னிரண்டில் மறைந்திருந்து சூரியனுடன் கூடி இருப்பது பொதுவாய் ஆண் பெண் சகோதரங்களுக்குத் தோஷமாகும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

4. இவன் பிதா குணத்தைக் கேண்மோ யீகைவான் முன்
[கோபத்தோன்
தவசிகள் உறவு கொள்ளான் சந்தேக மனத்தனுகும்
அவனிகள் கொஞ்ச முண்டு அல்பசெட்டுகளும்
[செய்வன்
உவமையாய் பேசவல்லன் உற்ருேர்கள் பகையு
[மேற்பன்

4. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவர் பிறருக்குக் கொடுக்குந் தயாள குணத்தை யுடையவராவர், முன் கோபத்தையுடையவராவர். இவர் தவங்களைச் செய்கின்ற சந்நியாசிகளின் சிநேகிதத்தை யுடையவரல்ல, சந்தேகமுள்ள மனத்தை யுடையவராவர். இவருக்கு நிலங்கள் கொஞ்சமாக விருக்கும், இவர் சிறிய வியாபாரங்களையுஞ் செய்வார். இவர் உபமானம் உபமேயம் ஆகிய இவற்றை உபயோகப்படுத்தி அலங்காரமாகப் பேசுவதில் கெட்டிக்காரராவர், இவர் தன்னுடைய பந்துக்களின் விரோதத்தையுமுடையவராவர்.

5. பாரியின் மனம் போல் வாழான் பகையுளான் சல்லிய
[முள்ளான்
தேரின புத்தியில்லான் சிலதுனுள் வன வாசங்கள்
காரண மறிந்து பேசான் கலவர புத்தி யேற்பன்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகையாளே கேளாய்

5. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய மனைவியினுடைய இஷ்டத்திற்குத் தகுந்தாற்போல வாழமாட்டார். இவர் மனைவியிடத்தில் விரோதத்தை யுடையவராவர், கடன்படுவார். இவர் தேர்ச்சியை யடைந்த, முதிர்ந்த, அறிவையுடையவரல்ல, இவர் சிலகாலம் வனவாசஞ் செய்வது போல அலைந்து திரிந்து கொண்டிருப்பார். இவர் காரணங்களைத் தெரிந்து கொண்டு அவற்றிற்குத் தகுந்தபடி பேசமாட்டார். இவர் நிலையான தெளிவான புத்தியை யுடையவரல்ல, கலக்கமுள்ள அறிவையுடையவராவர். ஆறுமுகங்களையுடைய முருகக்கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மம்

6. முன் சென்மம் யிலங்கைத் தீவில் முதித்தனன்
[செக்காணுக
மன்னர்பால் கூலிசெய்து மனைவி மைந்தரும்
[முண்டாகி
இன்னவன் வாழுநாளில் யெய்தின வினையைக்
[கேண்மோ
அன்னியமாது தன்னை அனுசரித்தவனின் போகம்

6. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய முன் ஜன்மத்தில் இலங்கைத் தீவில் செக்காட்டும் வாணிய ஜாதியில் ஆணுகப் பிறந்து, அரசாங்கத்தில் கூலி வேலையைச் செய்துகொண்டும், மனைவி மக்களையுடையவராக விருந்துகொண்டும் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து நேரிட்ட பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவர் ஒரு அன்னிய ஸ்திரியிடத்தில் ஆசையுடையவராகி அவனிடத்தில் சம்போகம்.

7. செய்துமே வாழும் நாளில் தேவியு மதை யறிந்து
தையல் மேல் விரோதம் பேச சக்தியும் வரனும் கண்டு
அய்ய மாமனத்தனுகி அவளையே விலக்கும்போது
மைவிழி யிவன்பால் சென்று வரனுமே பகையே யானுன்

7. செய்துகொண்டு வாழ்கின்ற காலத்தில், இதை இவருடைய மனைவி தெரிந்துகொண்டு, அந்த ஸ்திரீயினிடத்தில் விரோதமாகப் பேசவே, இதை இந்த ஸ்திரீயினுடைய புருஷன் தெரிந்துகொண்டு, சந்தேகமுள்ள மனத்தை யுடையவராகி இந்த ஸ்திரீயை இவளுடைய புருஷன் நிவர்த்தி செய்துவிடவே, இவள் இவரிடத்திற்குப் போய் என்னுடைய புருஷன் எனக்கு விரோதியாகிவிட்டார்,

8. உன்னிட மதியால் கெட்டேன் உரெங்கும் வசிய
[மானேன்
என்னை நீ காப்பாயென்ன என் பாரி பொல்லாங்கு
[சொல்வாள்
இந்தவார் செக்கான் சொல்ல யியம்பு வாளந் தமாது
பின்வரும் சென்மந் தன்னில் பேதையும் பகையுமாகும்

8. நான் உன்னுடைய புத்தியைக் கேட்டுக் கெட்டுப் போய்விட்டேன், ஊரிலுள்ள எல்லோரும் நான் உன் கைவசமானேன் என்று தெரிந்துகொண்டார்கள், ஆகையால் நீ என்னைக் காப்பாற்ற வேணும் என்று இந்தத் தகப்பனுரைப் பார்த்துக் கேட்கவே, இவர் என்னுடைய மனைவி என்பேரில் பொல்லாத விஷயங்களைச் சொல்லுவாள் என்று பதில் சொல்லவே, இந்த ஸ்திரீ சொல்லுகின்றுள்.

9. அண்ணன் தம்பிகளுமின்றி அலை துரும்பதுபோல் [வாழ்வாய்
குன்னிய மனத்தளாகி கூறியே சுருக்கால் மாண்டாள்
திண்ணமாயந்த சாபம் சேர்ந்தது யிவனுக்கே தான்
தண்மையாய் சேது சென்று சென்றனன் பேதியாலே

9. நீ, உனக்கு அண்ணனும் தம்பியுமில்லாமல் அலையிலகப்பட்டுக் கொண்டுதவிக்கின்ற துரும்பைப்போல நீ வாழக்கடவது என்று இந்த ஸ்திரீ சொல்லிவிட்டு நொந்து வாடிய மனத்தை யுடையவளாகித் தூக்கு போட்டுக்கொண்டு தற்கொலை செய்துகொண்டாள். இந்த ஸ்திரீயினுடைய சாபம் இந்தத் தகப்பனுரை ஸ்திரமாகவும் உண்மையாகவும் வந்தடைந்தது. இவர் சேது ஸ்தலத்திற்கு நல்லபடியே சென்ற பிறகு பேதியால் இறந்துவிட்டார்.

10. பிரமனுல் வரையப்பட்டு பிறந்தன னென்று சொல்வோம்
உரைந்திடு முன்னூழ்சாபம் உற்றதோர் துணை காணுன்
உறுமைகள் குடியாய் வாழ்வன் வரைந்த யிக்குணத் [தானுக்கு
திருமகன் சேடனுக செனிப்பனு மென்று சொல்வோம்

10. இந்தத் தகப்பனுர் பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். இவருக்கு முன் ஜன்மத்திய சாபம் வந்து சம்பவிக்கும், அதனுல் இவருக்குச் சகோதரங்கள் கிடையா. இவர் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் நிலையாக அடைந்து வாழ்வார். இங்கு சொல்லப்பட்ட, இவ்விதமான குணுகுணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் மூத்த குமாரராகப் பிறப்பார் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

11. பாலகன் குணத்தை யாங்கள் பகருவோ மாஞ்சிவப்பன்
சீலவான் யூகை சாலி சிறப்பிலா குடும்பம் பின்னுல்
சாலவே தந்தை ஆஸ்தி சாருதான் செட்டு செய்வன்
பால் பாக்கிய முடையன் பின்னுல் பஞ்சை மேலிரக்க [னுவன்

11. ஜாதகருடைய குணுதிசயங்களை நாங்கள் சொல்கின்ருேம். இவர் மாந்தளிரின் நிறமாகிய ஒருவிதமான சிகப்பு நிறத்தையுடைய தேகத்தை யுடையவராவர். இவர் பரிசுத்தமானவர், நல்லொழுக்கமுடையவர், நல்லது கெட்டது என்று பகுத்தறியக்கூடிய நுட்பமான அறிவையுடையவராவர், இவருக்கு மேன்மையில்லாத குடும்பம் பிற்காலத்தில் நேரிடும். இவர் தன்னுடைய தகப்பனுருடைய சொத்துக்களை அடையமாட்டார். இவர் வியா

பாரத்தைச் செய்வார். இவர் தன்னுடைய பிற்காலத்தில் பால் பாக்கியத்தையுடையவராக விருப்பார், ஏழைகளிடத்தில் தயாளமுள்ளவராக விருப்பார்.

12. அண்டினோர் தன்னைக் காப்பன் அல்பமாம் கல்வி
[யுள்ளான்
கண்டித மில்லானுகும் கணமுள செட்டு செய்வன்
குண்டுணி கூருனுகும் கொடையாளன் அரத்திலிச்சை
பண்டுளுள் பூமிகொஞ்சம் படை செல்லான் பலர்க்கு
[நேயன்

12. ஜாதகர் தன்னிடத்திற்கு வந்தவர்களைக் காப்பாற்றுவார், இவர் கொஞ்சமாக வாசித்தவராவர். இவர் கண்டிப்பாய் பேசமாட்டார். இவர் பெரிய வியாபாரத்தைச் செய்வார். இவர் பிறர் பேரில் கோள் சொல்ல மாட்டார். இவர் பிறருக்குக் கொடுக்குங் குணத்தையுடையவராவர். இவர் தான தர்மங்களைச் செய்வதில் பிரியமுடையவராவர். இவர் பூர்விகமான பழைய நிலங்களைக் கொஞ்சமாக வுடையவராவர். இவர் சண்டை சச்சரவுகளில் பிரவேசிக்கமாட்டார். இவர் அநேகருக்குச் சினேகிதராக விருப்பார்.

13. அன்னையின் துணைவி பக்கல் அணுகியே உய்வானுகும்
பன்னியே பேசுவானும் பால் தயிர் பிரிய னுவன்
அன்னியர் நேசம் கொள்வன் மறுத்துரை கூருனுகும்
தன் இனத்தவரைக் காப்பன் தைரிய மில்லா நெஞ்சம்

13. ஜாதகர் தன்னுடைய தாயாருடைய தங்கையிடத்திற்குச் சென்று அவளால் ஜீவனஞ் செய்வாராகும். இவர் திறமையாகவும் தேர்தலாகவும் பேசக்கூடியவர், பால், தயிர், ஆகிய இவற்றின் பேரில் ஆசையுள்ளவராவர். அயலாருடைய சினேகிதத்தை யுடையவராவர். இவர் தடுத்துப் பதில் சொல்லமாட்டார். இவர் தன்னுடைய பந்துக்களைக் காப்பாத்துவார். இவர் தைரியமில்லாத மனத்தையுடையவராவர்.

## ஜாதகருடைய சகோதர பாவம்

14. இன்னவன் துணைவர் தன்னை யியம்பவே பலமுருது
என்ன காரணத்தினுலே யியம்பினீர் அந்த ச்ங்கை
துன்னிய மூன்ருேன் யெட்டில் சூரியனுடனே கூட
அன்னவன் துணைவர் காணுன் அம்பிகையாளே
[கேளாய்

14. ஜாதகருடைய சகோதர விஷயமாகச் சொல்லுவதற்கு யாதொரு பலமும் கிடையாது, என்ன காரணத்தினுலே இவ்விதமாகச் சொன்னீர் முனிவரே! என்று கேட்கவே, மூன்ருவது வீட்டிற்குடையவரான அங்கார

கன் எட்டாவது வீட்டில் சூரியனுடனே கூடி இருப்பதாலே ஜாதகருக்குச் சகோதரங்கள் இடையா, பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :-சகோதர தோஷ விஷயம் :-இது விஷயமாய் மணிகண்ட கேரளத்தில் சகோதர கண்டத்தில் ஆறுவது பாடலிலுள்ள கீழ்க்கண்ட வரியை வாசிக்கவும் :—
"பரிதியும் மூன்றோன்கூடிற் பாலன் பின்னில்லை மாதே!"

## ஜாதகருடைய விவாகமும் மனைவியின் குணாதிசயங்களும்

15. மணமது யிருப்பான் ரெண்டில் வந்திடும் குடக்கு [திக்கில்
குணமது நல்ல தாகும் குரூரத்தை வெளிக் காட்டாதாள்
பிணையான வார்த்தை கூறுள் பேதையும் வந்த பின்பு
கனமுள யோகம் வாய்க்கும் கணத்த புத்திகளு [மேற்பன்

15. ஜாதகருக்கு இருபத்திரண்டாவது வயதில் விவாகம் நடைபெறும், மனைவி மேற்குத் திக்கிலிருந்து வருவாள். இவள் நல்ல குணத்தையுடையவளாவள், தன்னுடைய சொரூரத்தைப் பிறர் தெரிந்துகொள்ளும்படியாக வெளியே காண்பித்துக் கொள்ளமாட்டாள். இவள், பொய்யான, பிணைந்த வார்த்தைகளையும் பழமொழிகளையுஞ் சொல்லமாட்டாள். இவள் புருஷனுடன் போய்ச் சேர்ந்த பின்பு புருஷனுக்குப் பெரிய யோகமுண்டாகும். இவள் சிறந்த புத்திரர்களை உடையவளாவள்.

16. பால் பாக்கிய முடையளாகும் பகையென்று மனதில் [வையாள்
சீலியாம் விரதமேற்பள் சென உபகாரியாகும்
காலத்தை அறிந்து வாழ்வள் காதலி வயது தீர்க்கம்
ஞாலமேல் நல்லோளாகும் நலிந்தோரை யாதரிப்பள்

16. ஜாதகருடைய மனைவி பால் பாக்கியத்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய மனத்தில் விரோதத்தை யுடையவளல்லள். இவள் பரிசுத்தமானவள், நல்லொழுக்கமுடையவள், விரதங்களையும் நோன்புகளையும் அனுஷ்டிப்பாள், ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்யக்கூடியவளாவள். இவர் காலத்தை அறிந்துகொண்டு அதற்குத் தகுந்தாற்போல வாழ்வாள். இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள். இவள் பூமியில் நல்லவளாக விருப்பாள், ஏழைகளைக் காப்பாற்றுவாள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :-களத்திர விஷயம் :-களத்திர ஸ்தானமாகிய ஏழாவது வீட்டிற்குடைய குருவை அஷ்டமாதிபதியாகிய அங்காரகன் பார்ப்பது களத்திர தோஷமாகும். ஏழாவது வீட்டைச்

சனி பத்தாவது பார்வையாகப் பார்ப்பது களத்திரதோஷமாகும் களத்திரகாரகராகிய, குடும்பாதிபதியாகிய, சுக்கிரன் சனியுடன் கூடி இருப்பதும் களத்திர தோஷமாகும். ஆகிய மொத்தத்தில் கொஞ்சம் களத்திர தோஷம் இருக்கின்றது ! ஆகையால் பின்னல் முப்பத்தோருவது பாடலிற் சொல்லியுள்ள பிரகாரம் ஜாதகருக்கு முன்னர் இவருடைய மனைவி இறந்துவிடுவாள்.

## ஜாதகருடைய புத்திர பாவம்

17. புத்திர விருத்தியேழில் ஆணது ரெண்டு தீர்க்கம்
சத்தியு மவ்வா ரென்ரேும் தங்காது மூன்று யென்ரேும்
பத்தினி அன்னை சேதி பகருவோ மினி மேலாக
நித்தியம் சஞ்சலத்தாள் நிதானமாய்ப் பேசவல்லள்

17. ஜாதகருக்கு மொத்தத்தில் ஏழு குழந்தைகள் பிறப்பார்கள். இவர்களில் இரண்டு ஆண் குழந்தைகளும், இரண்டு பெண் குழந்தைகளும் நீண்ட வயதையுடையவர்களாவார்கள். மூன்று குழந்தைகள் சீக்கிரம் இறந்துவிடுவார்கள் * என்று சொல்லுகின்ரேும். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்ரேும், இவள் எந்தக் காலத்திலும் தன்னுடைய மனத்தில் துக்கத்தையுடையவளாவள்*. இவள் சாந்தமாகவும் மெதுவாகவும் பேசுந் திறமையையுடையவளாவள்.

*குறிப்பு ;—வியாக்கியானம்:-புத்திர விஷயம்:-புத்திரகாரகராகிய குருவை அங்காரகன் பார்த்திருப்பது புத்திர தோஷமாகும், புத்திரர்கள் வளர்ந்து பிறகு இறந்துபோய்விடுவார்கள். புத்திர ஸ்தானுதிபதியாகிய ஐந்திற்குடைய சனி தன் வீட்டிற்கு ஆருவது வீட்டில் மறைந்திருப்பது புத்திர தோஷமாகும். இரண்டாவது புத்திர ஸ்தானமாகிய ஒன்பதாவது வீட்டிற்குடைய சுக்கிரன் சனியுடன் கூடி இருப்பதும் புத்திர தோஷமாகும்.

*குறிப்பு: —தாயார் விஷயம் :-மாதிரு ஸ்தானமாகிய நான்காவது வீட்டைச் சனி பார்ப்பதால் தாயார் எப்போதும் மனசஞ்சலத்தை யுடையவளாவள். மாதிருகாரகராகிய சந்திரன் மூன்ருவது வீட்டில் நீச்சமடைந்திருப்பது தாயாருக்குத் தோஷத்தை விளைவிக்கும், இந்தச் சந்திரனை அங்காரகன் பார்ப்பதும் தாயாருக்குத் தோஷத்தை உண்டுபண்ணக்கூடியதாகும்.

18. அன்னம் போல் சாயலொக்கும் ஆளனும் பகையு
[மாவன்
தன்துணை ஆண் பாலொன்றுதையலும் ஞன்கு
[யென்ரேும்

அன்னையில் தென் மேலாகும் அலைச்சலாம் குடும்ப
[மென்றோம்
பின்ன மில்லாத தேகி பிறர் வசமுடையளாமே

18. ஜாதகருடைய தாயார் அன்னத்தைப்போல அழகான ரூபத்தை யுடையவளாவள். இவளுக்குப் புருஷன் விரோதியாக விருப்பார்*. இவளுக்குச் சகோதரங்கள் ஒரு ஆணும் நான்கு பெண்களும் ஆவர். இவளுடைய வீடு தென்மேற்குத் திக்கிலிருக்கும், இவளுடைய குடும்பம் கஷ்டத்தை அடைந்திருக்கும் என்று சொல்லுகின்றோம். இவள் யாதொரு அவயவக் குறைவில்லாத தேகத்தையுடையவளாவள். இவள் அன்னியருடைய கைவசத்தில் இருப்பவளாவள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தாயாருடைய புருஷன் விஷயம் :—தாயாருடைய லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்கு ஏழாவது வீட்டில் புருஷஸ்தானத்தில் சனி இருப்பது புருஷ தோஷமாகும். ஏழிற்குடைய புதனும் லக்கினத்திற்குடைய குருவும் ஒருவருக்கொருவர் பகையாகி ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்ளுவதால் புருஷனுக்கும் மனைவிக்கும் விரோதங்கள் ஏற்பட்டு ஒருவருக்கொருவர் விகல்பமுடையவர்களாக விருப்பார்கள்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

19. அவளுட பூர்வம் சொல்வேன் அச்சிறு பாக்கம்
[கீழ்பால்
நவனியில் சிறுவூர் தன்னில் நல்கினள் குலால வம்சம்
பவமுள மனத்தளாகி பாலர்கள் உடை யளாகி
இவளுமே வாழு நாளில் யெய்தின வினையைக்
[கேண்மோ

19. ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். அச்சிறு பாக்கத்திற்குக் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் குயவருடைய ஜாதியில் பெண்ணாகப் பிறந்து, பாப மனத்தையுடையவளாகியும், குழந்தைகளை யுடைவளாகியும் இவள் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

20. அதிதியும் ஒர்னாள் தன்னில் அந்தியில் அன்னம்
[கேட்க
உதவாது வேறு யில்லம் உரைகு வாயென்று
[சொன்னாள்
இது ஒரு தோஷ மாச்சு யியம்புவோம் வேறு ஒன்று
வதிபதி நாத்தி பேரில் வரைந்தனள் சிலேடை
[வார்த்தை

20. ஒரு பரதேசி இவளிடத்திற்கு ஒரு தினத்தின் சாயங்கால சந்தி வேளையில் சென்று சாதத்தைக் கேட்கவே, இங்கு சாதம் கிடையாது, இன்னொரு வீட்டிற்குப் போய்க் கேளும் என்று ஜாதகருடைய தாயார் சொல்லிவிட்டாள். இது ஒரு தோஷமாகிவிட்டது. இன்னொரு தோஷத்தைச் சொல்லுகின்றோம். இவள் தன்னுடைய நாத்தனாரின்பேரில் (புருஷனுடைய சகோதரியின் பேரில்) இரண்டு அர்த்தங்களைக் கொடுக்கக்கூடிய சில வார்த்தைகளை, (நிந்தையாகச்) சொன்னாள்.

21. மாதுவு மனம் கலங்கி வரைகுவாள் சாபம் தானும்
பாதகி யென் மேல் குற்றம் பகர்ந்திட்ட பாவிக்கே தான்
மேதினில் பின் சென்மத்தில் வித்தகன் பகையுமாகி
ஓதுவார் சிலேடை சொல்லு உரையாது யில்லம்
[தானும்

21. இதன்பேரில் நாத்தனார் தன்னுடைய மனத்தில் துன்பத்தை யடைந்து கலக்கமுண்டாகிய மனத்தையுடையவளாகிச் சாபத்தைக் கொடுத்தாள். "என்பேரில் நிந்தையாகச் சொல்லியபாவியாகிய உனக்கு மறுஜன்மத்தில் உன்னுடைய புருஷன் விரோதியாகி உன்பேரில் சில விரோதமுள்ள நிந்தை வார்த்தைகளைச் சொல்லக்கடவது, உனக்கு வீடு இருக்கக் கூடாது,

22. வனவாசமாக வாழ்வாய் மங்கையும் சொல்லிச்
[சென்றாள்
வினையது சேர்ந்த தென்றோம் வித்தகி பிணிவாயில்
[கண்டுமே தான்
புக்கினள் காலனூடு கனமுள பிரமன் லக்கம் வரையப்
[பட்டுக்
கவுரியின் குல முதித்தாள். காதலி என்று சொல்வோம்

22. நீ வனவாசமாக அலைந்து திரிந்து வாழக்கடவது என்று சொல்லி விட்டுப் போய்விட்டாள் இந்த நாத்தனார். இந்தச் சாபமும் இவளை வந்து அடைந்தது என்று சொல்லுகின்றோம். இவள் வாயில் ரோகம் உண்டாகி இறந்து எமபட்டணத்திற்குச் சென்று பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு, வேளாளர் குலத்தில் வடுகப் பெண்ணாகவந்து பிறந்தாள்.

23. மங்கையர் சாபம் தானு மருவிடு மிச் சென்மத்தில்
சங்கையா மனத்த ளாகும் தன்வரன் பகையு மாகும்
பொங்கிய குடும்பம் தாழ்வாய் புகல்வார் சிலேடை
[வார்த்தை
தங்காது யில்லம் தானும் சங்கரி கேட்டிடாயே

23. நாத்தனுருடைய சாபம் ஜாதகரின் தாயாருக்கு இந்த ஜன்மத்தில் வந்தடையும். ஆகையால் இவள் துன்பத்தையும் அச்சத்தையுமுடையவளா வள், இவளுக்குத் தன்னுடைய புருஷன் விரோதியாவார். மேன்மையான இவளுடைய குடும்பம் க்ஷீணித்து நொந்துபோகும். இவளுடைய பேரில் இரண்டு அர்த்தங்களையுடைய, நிந்தையான வார்த்தைகளைச் சொல்லு வார்கள். இவளுக்கு வீடு இருக்காது, பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மமும் ஜாதகருடைய முன் ஜன்மமும்

24. மறு சென்மம் விரிஞ்சிநுட்டில் வருகுவானிக் குலத்தில்
திருமகள் விலாச முற்று செல்வதி வாழ்வாளாகும்
வரும் சுதர் பூர்வம் சொல்வேன் வளமுள
[மலைநுடன்னில்
குறவர் தன் குலமுதித்து குவலயம் செட்டு செய்து

24. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மறுஜன்மத்தில் விரிஞ்சிபுரத்தில் இந்த ஜன்மத்திய ஜாதியாகிய வடுகர் ஜாதியில் பெண்ணுகப் போய்ப் பிறப் பாள். இவள் லக்ஷிமியினுடைய கடாக்ஷத்தை அடைந்து செல்வவதியாக விருந்து வாழ்வாள். இனிமேல் ஜாதகருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் செழிப்பான மலை நாட்டில் குறவருடைய ஜாதி யில் ஆணுகப் பிறந்து பூமியில் வியாபாரத்தைச் செய்துகொண்டு,

25. வந்த ஊழ் தன்னைக் கேண்மோ வள்ளல் தன்
[அடியார்க்கு
நிந்தைகள் சிலது செய்தாள் நுவலுவார் பெரியோர்
[தானும்
பிந்திய சென்மம் தன்னில் பின் துணை யில்லாதாகி
தந்தை ஆர்ச்சிதங் களின்றி தான்வன வாசங்கள்
[செய்வாய்

25. வாழ்கின்ற காலத்தில் ஜாதகருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. சிவபெருமானுடைய அடியாராகிய ஒரு சிவனடியார்க்கு இவர் சில கெடுதிகளைச் செய்தார். அதன்பேரில் இந்தச் சிவனடியார் " உன்னுடைய மறுஜன்மத்தில் உனக்கு இளைய சகோதரங்கள் இல்லாமலும், உன்னுடைய தகப்பனுருடைய சொத்துக்களில்லாமலும், நீ திரிந்தலைந்து வனவாசத்தைச் செய்யக்கடவது ".

26. சுகமிலாக் குடும்பியாகி தொல்புவி வாழ்வாயென்று
பகையாகச் சொல்லிச் சென்ருர் பரவிற்று அந்த
[தோஷம்

தகமையாய் காலுண்டு சென்றுமே பிரமன் லக்கம்
உகமையாய் சல் குலத்தில் உதிப்பனு மிந்த பாலன்

26. "நீ சௌக்கியங்களில்லாத குடும்பஸ்தராக விருந்துகொண்டு இந்தப் பழைய பூமியில் வாழக்கடவது" என்று விரோதமாகச் சொல்லிப் போய்விட்டார். இந்தத் தோஷம் ஜாதகரை வந்தடைந்தது. ஜாதகர் இறந்து, எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவருடைய பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த வேளாளர் குலத்தில் வடுகராகப் பிறப்பார்.

## ஜாதகருடைய யோக பாவம்

27. பெரியவர் சாபம் தானும் புக்கிடு மிச் சென்மத்தில்
உரையாது தந்தை ஆஸ்தி ஒண்டியாய் வாழ்வானுகும்
வரைகிறே மிவனின் யோகம் வந்தனுள் முதலாயாக
குறைவுள் குடும்ப மாகும் குவலயம் வன வாசங்கள்

27. பெரியோராகிய சிவனடியாருடைய சாபமானது ஜாதகருக்கு இந்த ஜன்மத்தில் வந்து சம்பவிக்கும். இவருக்கு இதனால் தகப்பனுருடைய சொத்துக்கள் கிடையா. இவர் சகோதரங்களில்லாமல் தனியாக விருந்து கொண்டு வாழ்வார். இனிமேல் இவருடைய யோக விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேம். இவர் பிறந்தகாலம் முதற்கொண்டு இவருடைய குடும்பம் கஷ்டங்களை அனுபவிக்கின்ற இளைத்தக் குடும்பமாகும். இவர் பூமியில் அலைந்து திரிந்து வனவாசங்களைச் செய்துகொண்டு

28. இருபது ஆண்டுமட்டும் யிடுக்கமாய் வாழ்வானுகும்
மருவிய அதின் மேலாக வளமுள செட்டு செய்வன்
திருமகள் அருளு மோங்கும் செய்நிலம் சேருமென்றேம்
பொருளது பெருக்கமெய்தும் புண்ணிய மனத்தனுமே

28. இருவது வயது வரையிலும் இவர் (ஜாதகர்) கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு வாழ்வார். இதற்குப் பிறகு இவர் செழிப்பான வியாபாரத்தைச் செய்வார். இவருக்கு லக்ஷ்மியினுடைய கடாக்ஷம் உண்டாகி இது அதிகப்படும். இவருக்குப் பயிரிடும் நிலங்கள் வந்து சேரும் என்று சொல்லுகின்றேம். இவருக்குச் சொத்துக்கள் அதிகமாகும், இவர் தான தர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தையுடையவராவர்.

29. அன்னையின் வர்க்கத் தாரால் யாவத்தும் நேறு
[மென்றேம்
மன்னிய யில்ல மொன்று மருவிடு மிருபானைந்தில்
பொன் பொருள் பெருக்கம் செய்வன் புகழ்ந்தோரை
[யாதரிப்பன்
தென் திசை தலங்கள் செய்வன் தேவதா பத்தி
[யேற்பன்

29. ஜாதகருக்குத் தன்னுடைய தாயாருடைய பந்துக்களால் இங்கு சொல்லப்பட்ட எல்லா சௌகரியங்களும் சம்பத்துக்களும் உண்டாகும் என்று சொல்லுகின்றோம். இவருக்கு இருபத்தைந்தாவது வயதில் ஒரு வீடுவந்து கிடைக்கும். இவர் தனத்தையும் சொத்துக்களையும் அதிகப் படுத்துவார், தன்னைக் கௌரவப்படுத்துகின்றவர்களைக் காப்பாற்றுவார். இவர் தெற்குத் திக்கிலுள்ள தெய்வீக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போவார். இவர் தெய்வங்களின் பேரில் அன்டையவராவார்.

30. பகைவரை உறவு கொள்வன் பலசகாயங்கள் [செய்வன்
உவமையாய் கதைகள் சொல்வன் உத்தமர் நேசம் [கொள்வன்
செகமதில் நல்லோனவன் சேயிழை வந்த பின்பு
மிகு தனம் பெருகு மென்றோம் விளங்கிடும் பால் [பாக்கியங்கள்

30. ஜாதகர் தன்னுடைய விரோதிகளிடத்தில் சினேகஞ் செய்து கொள்ளுவர், அநேகவிதமான உபகாரங்களைச் செய்வார். இவர் உபமானம் உபமேயங்களை அலங்காரமாக உபயோகப்படுத்திக் கதைகளைச் சொல்லுவார். இவர் நல்லவர்களுடைய சிநேகிதத்தை அடைவார். இவர் பூமியில் நல்லவராக விருப்பார், நல்லவரென்று பெயரெடுப்பார். இவருக்குத் தன்னுடைய மனைவி தன் வீட்டிற்கு வந்தபிறகு அதிகமான செல்வம் இன்னம் அதிகப்படும் என்று சொல்வோம், இவருக்குப் பால் பாக்கியங்கள் உண்டாகும்.

*குறிப்பு :—வியாக்கியானம் :-மனைவி யோக விஷயம் :-மனைவி ஸ்தானமாகிய ஏழாவது வீட்டிற்குடைய குருவானவர் தனஸ்தானமாகிய இரண்டாவது வீட்டிலிருப்பது நல்லது. ஐந்திற்குடைய சனி தனபாக்கியாதிபதியாகிய, களத்திரகாரகனுகிய, சுக்கிரனுடன் கூடிப் பத்தாவது வீட்யுல் இருப்பதும் நல்லதாகும். ஆகையால் இவருக்கு மனைவி வந்தபிறகு யோகம் அதிகரிக்கும்.

ஜாதகரின் தகப்பனுருடைய, தாயாருடைய மரணமும் ஜாதகருடைய மனைவியின் மரணமும்

31. மூவைந்து ஆண்டுக்குள்ளே விளம்புவோம் தத்தை [கெண்டம்
தாவிய நாற்பான் ஒன்றில் தாய்க்குமே மாரகங்கள்
மேவிய அன்பானறில் விளம்புவோ மனைவி கெண்டம்
சேவலன் கொடியேன் தன்னை சேயனுய் வளர்த்த [தாயே

31. ஜாதகருக்கு பதினைந்தாவது வயதிற்குள்ளே இவருடைய தகப்பனுர் இறந்துவிடுவார். இவருக்கு நாற்பத்தோராவது* வயதில் இவருடைய தாயார் இறந்துவிடுவாள். இவருக்கு ஐம்பத்தாருவது வயதில் இவருடைய மனைவி இறந்துவிடுவாள். சேவற்கொடியையுடைய முருகக் கடவுளைப் பிள்ளையாக வளர்த்த பார்வதியம்மையே!

*குறிப்பு :—வியாக்யானம் :—தகப்பனுர் மரணவிஷயம் :—ஜாதகருக்குப் பதினைந்து* வயதிற்குள்ளே சனிதசை நடக்கின்றது. பிதிர் லக்கினம் ஒன்பதாவது விடாகிய ரிஷபம் ஆகும். இந்த ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகப் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்றுர். இவருடன் சனி சம்மந்தப் பட்டுக் கன்னியா லக்கினத்திற்குக் கர்மத்தானத்திலிருக்கின்றுர். ஆகையால் ஜாதகசந்திரிகை இருபத்துமூன்றுவது சுலோகப்பிரகாரம் சனி பிதுருக்கு மாரகஞ்செய்ய அதிகாரமுடையவராகின்றுர். ஆகையால் இங்கு பிதுருக்குப் பதினைந்து வயதிற்குள்ளே மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—தாயாருடைய மரணவிஷயம் :-ஜாதகருக்கு நாற்பத்தோருவது வயதில் சுக்கிரதசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது விடாகிய தனுசு ஆகும். இந்தத் தனுசு லக்கினத்திற்கு ஜாதகசந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகிறுர். மேலும் இந்தச் சுக்கிரன் கன்னியா லக்கினத்திற்குக் கர்மஸ்தானத்திலிருக்கின்றுர். ஆகையால் சுக்கிரனுக்குத் தாயாரை மாரகஞ்செய்ய அதிகாரமிருக்கின்றது. ஆகையால் இங்கு சுக்கிர தசையில் நாற்பத்தோராவது வயதில் தாயாருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—மனைவி மாரக விஷயம் :-ஜாதகருக்கு ஐம்பத்தாருவது வயதில் சுக்கிரதசை நடக்கின்றது. மனைவியின் லக்கினம் ஏழாவது விடாகிய மீனம் ஆகும். சில கிரந்தங்களில் மீன லக்கினத்திற்குச் சுக்கிரன்கூட மாரகர் என்று சொல்லியிருக்கின்றது. ஜாதக சந்திரிகை அறுபத்தேழாவது சுலோகப் பிரகாரம் சனி மாரகராகின்றுர். இவருடன் சம்மந்தப்பட்ட சுக்கிரன் ஜாதக சந்திரிகை இருபத்துமூன்றுவது சுலோகப் பிரகாரம் அதிக மாரகராகின்றுர். ஆகையால் இங்கு சுக்கிரதசையில் மனைவிக்கு மரணம் சொல்லியிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணமும் பின் ஜன்மமும்

32. அறுபது யிரண்டு ஆண்டில் ஆனி மாதத்திலே தான்
திருமகனுடலம் யேகும் செப்புமிவன் பின் சென்மம்

பெருமலை வேங்கடத்துள் பிறப்பனும் சைவ சேயாய்
அரசனால் பொருளும் பெற்று அவனுமே வாழ்
[வானாகும்

32. ஜாதகருக்குத் தன்னுடைய அறுபத்திரண்டாவது வயதில்* ஆனி மாதத்தில் மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்து மறைந்துபோய் விடும். இவருடைய மறுஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். பெரிய மலையாகிய திருவேங்கிடமலை என்ற திருப்பதி ஸ்தலத்தின் மலையின்பேரில் ஜாதகர் சைவ ஜாதியில் ஆணாகப் பிறப்பார். இவர் அரசாங்கத்தாரால் சொத்தை அடைந்து வாழ்வார்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய மரணவிஷயம் :-ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது வயதில் சூரியதசை நடக்கின்றது. ஜாதகருடைய லக்கினம் கன்னியா லக்கினம். இந்தக் கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்துநான்காவது சுலோகம் பிரகாரம் அங்காரகன் மாரகராகின்றார். இவருடன் சம்மந்தப்பட்ட சூரியன் ஜாதகசந்திரிகை இருபத்துமூன்றாவது சுலோகப்பிரகாரம் அதிக மாரகராகின்றார். மேலும் சூரியன் எட்டிற்குடையவராகிய அங்காரகனுடன் கூடி இருப்பதால் துய்பகேரளம் பன்னிரண்டாவது, இருபதாவது பாடல்கள் பிரகாரம் மாரகராகின்றார், ஆகையால் இங்கு சூரியதசையில் ஜாதகருக்கு அறுபத்திரண்டாவது வயதில் மாரகஞ் சொல்லப் பட்டிருக்கின்றது.

## ஜனன கால தசை இருப்பு

33. அன்னவன் சென்ன காலம் அனுடத்தின் முதல்
[பாதத்தில்
துன்சனி திசை யிருப்பு செப்புவோ மிரே ழாண்டும்
உன்னத திங்களொன்பான் உரைக்கிறோம் பலனை
[யாங்கள்
தந்தையு மந்தம் கெண்டம் தன்தேக நலியு மாமே

33. ஜாதகருடைய ஜனனகாலத்தில் அனுஷநட்சத்திரத்தில் முதலாவது பாதம் ஆகும். இதற்குரிய சனிமகாதசையில் இருப்பு நின்ற வருஷங்கள் பதினான்கும், மாதங்கள் ஒன்பதும் ஆகும். இந்தக் காலத்தில் நடக்கும் பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்றோம். இந்தத் தசையின் கடைசிகாலத்தில் ஜாதகருடைய தகப்பனார் இறந்துபோய்விடுவார், ஜாதகருக்குத் தேகத்தில் நோய்கள் உண்டாகும்.

34. தான பேதங்களெய்தும் சஞ்சல மனமுமாகும்
ஈனமாம் வார்த்தை யெய்தும் யிடர்வரும் அனம் [குறைச்சல்
ஊனமாம் பலித நஷ்டம் உரைத்தனம் பூர்வபாகம்
வானவர் பூசை செய்யும் மங்கையே கேட்டிடாயே

34. ஜாதகருக்கு இடர்விட்டு வேறு இடத்தில் வாசஞ்செய்ய நேரிடும். இவருடைய குடும்பத்தாருக்கு மனத்தில் கஷ்டங்களும் துன்பங்களும் நேரிட்டு மனம் ஒரு நிலையிலில்லாமலிருக்கும். இவருடைய குடும்பத்தாருக்கு இழிவான வார்த்தைகள் சொல்லக்கூடும், கெடுதிகள் நேரிடும், சாப்பாட்டிற்குக் குறைவுகளும் கஷ்டங்களும் ஏற்படும், பலிதங்கள் எல்லாம் நஷ்டமாகிக் குறைந்துபோய்விடும். இதுவரையிலும் முன்பாகமாகிய ஒராவது பாகத்தைச் சொல்லி முடித்துவிட்டோம். தெய்வலோகத்தார்கள் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக. C.G.R.

---

# ஜாதகம் 40

## ஜன்ன காலகிரக நிலை

1\. சந்திரன் கேது மீனம் சனி[1] நந்தி [2]புகரு [3]வீணை
[4]புந்தி [5]பொன் [6]பானு [7]ருண்டில் [8]பூமகன் ராகு கன்னி
இந்தவார் கிரகம் நின்று லக்கினம் [9]மாதையாக
அந்த தோர் பலன்கள் யெவ்வார் அறிவிப்பீர் முனியே
[நீதான்

1\. கன்னி ஜன்மலக்கினமாகிச் சந்திரனும் கேதுவும் மீனத்திலும், சனி ரிஷபத்திலும், சுக்கிரன் மிதுனத்திலும், புதனும் குருவும் சூரியனும் கடகத்திலும், அங்காரகனும் ராகுவும் கன்னியிலும், இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன் எவ்விதமாக விருக்கும் என்பதை முனிவர்களே! நீங்கள் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் கேது | | சனி | சுக்கிரன் |
| | இராசி சக்கரம் | | சூரியன் புதன் குரு |
| | | | |
| | | | லக்கினம் அங்காரகன் ராகு |

ரேவதி 3-ஆம் பாதம் புதன் தசை ஷை 7—6—0.

*குறிப்பு: —இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:— ரிஷபத்தில் சூரியனும், மிதுனத்தில் சுக்கிரனும், சிம்மத்தில் புதனும், கன்னியில் சனியும் ராகுவும், தனுசில் குருவும், மகரத்தில் அங்காரகனும், கும்பத்தில் சந்திரனும், மீனத்தில் கேதுவும் ஆகும். புதன், அஸ்தமனம் அடைந்திருக்கின்றார். சுக்கிரன் வக்கிரகதியிலிருக்கின்றார்.

---

1\. ரிஷபம்
2\. சுக்கிரன்
3\. மிதுனம்
4\. புதன்
5\. குரு
6\. சூரியன்
7\. கடகம்
8\. அங்காரகன்
9\. கன்னி

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. குரு முனி புகலுகின்ருர் குறித்தது ஆண்பால் சென்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி வாசலும் யெமனின் பார்வை
அரன் கோஷ்டம் வடபாலாம் யானையின் கோஷ்டம்
நரி வாகனத்தாள் வாயு நல்கிடுமாரி தென்மேல்

2. குரு முனிவராகிய வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். இந்தத் குழந்தை பிறந்தவீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு பார்த்த வாயிலையுடையதாகும். சிவபெருமானுடைய கோயில் வடக்குத் திக்கிலிருக்கும், விநாயகக் கடவுளின் கோயிலும் கிழக்குத் திக்கில் இருக்கும், காளியம்மனுடைய கோயில் வடமேற்குத் திக்கிலிருக்கும், மாரியம்மன் கோயில் தென்மேற்குத் திக்கிலிருக்கும்.

3. அக்கினி காளி கீழ்பால் அணுகிய சிறுவூர் தன்னில்
தொக்கு வானிரண்டாம் சென்மம் தோன்றிடும் வடுகர் வர்க்கம்
மிக்கவே குடும்பச் சேதி விளம்புவோ மின்னூல் [தன்னில்
நக்கனை பூசை செய்யும் நாயகி கேட்டிடாயே

3. அக்கினி தேவரின் கோயிலும் காளியம்மன் கோயிலும் கிழக்குத் திக்கில் இருக்கும். இப்படிப்பட்ட அடையாளங்களையுடைய ஒரு சிறிய கிராமத்தில் வடுகருடைய ஜாதியில் இரண்டாவது குழந்தையாக ஜாதகர் பிறப்பார். இவருடைய குடும்ப விஷயங்களைப்பற்றி இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்ரேம். சிவபெருமானைப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

4. தந்தையின் துணைவர் யெட்டில் ஆண் ரெண்டு கன்னி [மூன்று
இந்தவார் ஒருத்தி யென்ரேம் யிடராகுமற்ற தெல்லாம்
அந்தவார் வெளியூர் வாசம் அவர் பலன் யிரண்டில் [சொல்வேன்
சந்ததம் பிதா குணத்தைச் சாற்றுவோ மினி மேலாக

4. ஜாதகரின் தகப்பனுருடன் பிறந்தவர்கள் எட்டுபேர்களாவர். இவர்களில் ஆண்கள் இருவரும், பெண்கள் மூன்றுடன் ஒன்றுமாக நான்கு பேர்களும் ஆகும். மற்றக் குழந்தைகள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். இவர்கள் வெளியூரில் வாசஞ் செய்வார்கள். இவருடைய பலா

பலன்களை இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன். இனிமேல் தகப்பனுருடைய குணநிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணநிசயங்கள்

5. தந்தியின் நிறத்தனுகும் தரணியில் விருத்தி செய்வன்
தந்தமும் பிணியு முண்டு சரசமாய்ப் பேசவல்லன்
தன் மனம் கபடு மில்லான் சமதேகம் வறுமை காணுன்
தந்தை சொல் கடவாணுகும் சதுஷ்டி பாதம் விருத்தி
[யுண்டு

5. ஜாதகருடைய தகப்பனுர் யானையின் நிறமாகிய கறுப்பு நிறமான தேகத்தை யுடையவராவர். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். இவருடைய பற்கள் ரோகத்தை யுடையனவாகும். இவர் இன்பமாகப் பேசக் கூடியவராவர். இவர் வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றை யுடையனல்லர், இவர் நடுத்தரமான தேகத்தை யுடையவராவர். இவர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டார். இவர் தன்னுடைய தகப்பனுருடைய வார்த்தைகளை மீறி நடக்க மாட்டார். இவருக்கு ஆடு மாடுகள் விருத்தியாகும்.

6. தோத்திரப் பிரியனுகும் சொல்லதைக் காப்பானுகும்
பாத்திரமறிய வல்லன் படையில் முன் செல்லானுகும்
சூத்திரம் சிலர்க்கு செய்வன் துணைவரை பிரிதல்
[செய்யான்
கோத்திர குடும்பியாவன் கருதிடான் கட்டு வார்த்தை

6. ஜாதகருடைய தகப்பனுர் தன்னைப் பிறர் புகழ்ந்து பேசப் பிரியமுள்ளவராவா. இவர் தன்னுடைய வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகாமல் நடந்து கொள்ளக் கூடியவராவர். இவர் தகுதியானதை அறியக் கூடியவராவர். சண்டை சச்சரவுகளில் முதன்மையாக விருக்க மாட்டார். இவர் சிலருக்குத் தீர்ப்பு செய்வார். இவர் தன்னுடைய சகோதரர்களைப் பிரித்து விடுவார். இவர் பெரிய குடும்பஸ்தராக விருப்பார். இவர் பிணைந்த வார்த்தைகளையும் பொய்யையும் பழமொழிகளையும் சொல்ல மாட்டார்.

7. ரோமங்கள் நீட்சியில்லான் நுவலுபதேசங் கொள்ளான்
காமனை விருப்பம் கொள்வன் காதலி மார்கள் மோகன்
தீமையை யெவர்க்கு மெண்ணுன் திருமாலின் பத்தி
[கொஞ்சம்
தாமத புத்தி யுண்டு சார்ந்திடும் பித்த சூடு

7. ஜாதகருடைய தகப்பனுர் நீண்ட மயிரை யுடையவரல்ல, இவர் தீக்ஷையைப் பெற்றவரல்ல. இவர் மையல் என்ற காம ஆசையை யுடையவ

ராவர். இவர் ஸ்திரீகளின் பேரில் காம ஆசையை யுடையவராவர். இவர் யாருக்குங் கெடுதியை நினைக்க மாட்டார். இவர் மகாவிஷ்ணுவின் பேரில் சிறிதளவு பிரியமுள்ளவராவர். இவர் நிதானமான, மந்தமான அறிவை யுடையவரார்வர், இவருக்குப் பித்தவாய்வு ரோக முண்டு.

8. அன்னிய ஸ்ரீகள் மோகன் அவசர புத்தி கொஞ்சம்
பன்னு முன் கோபம் கொஞ்சம் பனையேர்கள் காலாள் [விருத்தி
மன்னர்கள் உறவு கொள்வன் மருவிடும் காரகங்கள்
இன்னெறி யுடையானுக்கு யிப்பாலனு திப்பானகும்

8. ஜாதகருடைய தகப்பனர் பிறருடைய ஸ்திரீகளின் பேரில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவருக்குச் சிறிதளவு அசரமான புத்தியுண்டு. இவர் பேசுவதற்கு முன்னமே கொஞ்சம் முன் கோபத்தை யுடையவராவர். நிலம், ஏர்கள், வேலையாட்கள் இவருக்கு அதிகப்படுவ துண்டு. இவர் அரசர்களின் சிநேகிதத்தை உடையவராவர். இவருக்குக் காரக ரோகம் ஏற்படும். இங்கு சொல்லப்பட்ட குணகுணங்களை யுடைய தகப்பனருக்கு இந்த ஜாதகர் பிறப்பார்.

## சகோதரருடைய குணதிசயங்கள்

9. பாலகன் நிறம் குணத்தைப் பகருவோ மால் நிறத்தான்
சீலம் போல் வெளிமயக்கன் தேகமு மெலிணச்சலுண்டு
ஞாலங்கள் விருத்தி செய்வன் இராச பூசிதமு மாவன்
பால் தயிர் பிரியனகும் பந்துவ் மதிக்க வாழ்வன்

9. ஜாதகருடைய நிறத்தையும் குணத்தையும் பற்றிச் சொல்லுகின் றேம். இவர் மகா விஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணத்தை யுடைய தேகத்தை யுடையவராவர். இவர் பரிசுத்தமாகவும் நல்லொழுக்கம் உடையவர் போல விருப்பதாகவும் வெளியாருக் காண்பித்துக் கொண்டு இவர்களை ஏமாற்றுவார். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவராவர். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார். இவரை அரசாங்கத்தார் தகுந்த மதிப்புடன் பாராட்டுவார்கள். இவர் பால், தயிர் ஆகிய இவற்றின் பேரில் பிரியமுள்ளவராக விருப்பார். இவர் தன்னு டைய பந்துக்கள் கௌரவத்துடன் பாராட்டக் கூடிய நிலையிலிருந்து கொண்டு வாழ்வார்.

10. கிராமாதி காரம் செய்வன் கௌரவக் குடும்பியாவன்
முராரியின் பக்திகொள்வன் மூல கூடுடையனகும்
கரமதில் விஷ்ணு ரேகை கல்வியு முடையனகும்
அரிவையர் மோகனவன் அடாபிடி தன்னில் [செல்லான்

10. ஜாதகர் கிராம அதிகாரமுள்ள உத்தியோகத்தை யுடையவராவர். இவர் மேன்மையான குடும்பத்தை யுடையவராவர், இவர் திருமாலின் பேரில் அன்புடையவராவர், மூலச் சூட்டு ரோகத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகை என்ற ஒருவித நல்ல ரேகையை யுடையவராவர். இவர் வித்தையை யுடையவராவர். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவர் நியாயமில்லாத தகாத, காரியங்களை முரட்டுத் தனமாகச் செய்ய ஆரம் பிக்க மாட்டார்.

11. வறுமை யெப்போதும் காணான் மானிலம் சல்லியம் [கொள்ளான்
பரைபள்ளு உடையனுகும் பகைத்தோரை நசிக்க [வைப்பன்
விரைவினில் நடக்க வல்லன் வெத்தியம் தொடு [வழக்கு
பொறை சொல்லான் புகழு மேற்பன் புண்ணியம் [மனத்தனுமே

11. ஜாதகர் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் எப்போதும் அநுப விக்க மாட்டார். இவர் இந்தப் பெரிய உலகத்தில் பெரிய நிலங்களின் பேரில் கடன் வாங்க மாட்டார். இவர் வர்த்தியங்களையும் ஆள்படைகளை யும் உடையவராவர். இவர் தன்னை விரோதித்துக் கொண்டவர்களை க்ஷீணித்துப் போகும்படியாய்ச் செய்து விடுவார். இவர் வேகமாக நடக்குஞ் சக்தியை யுடையவர். இவர் நீண்ட காலம் வியாபித்திருக்கும் வியாஜ்ஜியத்தில் ஜயத்தை அடைவார். இவர் பிறர் பேரில் குற்றங்களைச் சொல்ல மாட்டார். இவர் கீர்த்தியை அடைவார். தானதர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவராவர்.

## ஜாதகருடைய சகோதர பாவமும் மூத்த சகோதரியின் குணாதிசயங்களும்

12. இன்னவன் துணைவர் தன்னை யியம்புவோ முன் [பெண்ணொன்று
அன்னவன் தீர்க்க சீவி அவள் குணம் புகலக் [கேண்மோ
பொன்பணி ஆடையுண்டு பொருத்திடு வாத தேகி
அன்னமும் குறைவுருதாள் அடாபிடி கூருளாகும்

12. ஜாதகருடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு மூத்த சகோதரியுண்டு. இவள் நீண்ட ஆயுளை யுடையவளா வள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீ

ராக. இவள் தனம், ஆடை ஆபரணங்களை யுடையவளாவள். இவள் வாத குணமுள்ள பெரிய, தேகத்தை யுடையவளாவள். இவள் சாப்பாடு விஷயத்தில் கஷ்டப்பட மாட்டாள், இவள் அநியாயமாகவும் முரட்டுத்தன மாகவும் பேச மாட்டாள்.

13. புத்திமான் பொறுமை சாலி புருடன்தன் மனதுக்
[கேத்தோள்
சித்தமேல் கரப்பு மில்லாள் தேகமும் மால் நிறத்தாள்
பத்தினி வரனு முள்ளூர் பாலர்கள் தோன்றில் தீதாம்
குத்தத்தைச் சொல்லுமென்ன கோதை செய்வினையாம்
[தாயே

13. ஜாதகருடைய மூத்த சகோதரி அறிவுடையவளாவள். சாந்த மான குணத்தை யுடையவளாவள். தன்னுடைய புருஷனுடைய மனத் திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருப்பாள். இவள் கள்ளம் கபடம் ஆகிய இவற்றையில்லாத மனத்தை யுடையவளாவள். இவள் மகாவிஷ்ணு வின் நிறமாகிய நீல மேக வர்ணம் என்ற ஒருவித நிறத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். இவளுக்குப் புருஷன் உள்ளூரிலிருந்தே வருவார். இவளுக்கு குழந்தைகள் பிறந்தால் சீக்கிரத்தில் இறந்து விடுவார் கள். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவள் செய்த பாவத்தின் பயனாக இவ்விதமாக நடக்கும் பார்வதியம்மையே! என்றார் முனிவர்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—மூத்த சகோதரி ஸ்தானம் பதினோராவது வீடாகிய கடகம் ஆகும். இதற்குப் புத்திர ஸ்தானமாகிய ஐந்தா வது வீட்டிற்குடைய அங்காரகன் கடகத்திற்கு மூன்றில் ராகு வுடன் கூடி யிருப்பது மூத்த சகோதரிக்குப் புத்திர தோஷத்தை விளைவிக்கக் கூடியதாகும். கடகத்திற்கு இரண்டாவது புத்திர ஸ்தானமாகிய மீனத்திற்குடைய குருவும், புத்திர காரகராகிய குருவும் புதனுடன் கூடியிருப்பது மூத்த சகோதரிக்குப் புத்திர தோஷமாகும்.

14. என்ன ஊழ் செய்தாளதை யியம்புவீர் முனியே நீதான்
முன் சென்மம் அரங்கம் தன்னில் முதித்தனள் வைசிய
[சேயாய்
தன்வரன் மதலை யுண்டாய் தனமிக பெருக்க மாகி
கன்னிகை வாழும் நாளில் கலந்த தோர் வினையைக்
[கேண்மோ

14. ஜாதகருடைய மூத்த சகோதரி என்ன பாவத்தைச் செய்தாள். அதை முனிவரே! நீர் சொல்லுவீர் என்று கேட்கவே, இவள் தன்னுடைய முன் ஜன்மத்தில் அரங்கம் என்ற ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் வைசியருடைய

ஜாதியில் பெண்ணாகப் பிறந்து, தன்னுடைய புருஷனையும் புத்திரர்களையும் உடையவளாகியும், அதிகமான செல்வத்தை யுடையவளாகியும் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த ஒரு பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

15. பஞ்சையாய் யேழை மாது பாலர்க்கு அன்னம் வேண்டி
நெஞ்சினுள் மாதுபக்கல் கர்வத்தால் கோபமுற்று
மிஞ்சிய வூர்த்தை சொல்லி விரட்டினுள் யேழை தன்னை
வஞ்சியும் மன வெறுப்பால் வரைந்திட்ட சாபம்
[கேண்மோ

15. பஞ்சியைப் போலப் பறக்கின்ற திக்கற்ற ஒரு ஏழை ஸ்திரீ தன்னுடைய குழந்தைகளுக்குச் சாதம் தேவையாகி, ஜாதகருடைய மூத்த சகோதரியிடத்திற்குச் சென்று சாதத்தைக் கொடு என்று மன்றாடி, வருந்திக் கேட்டாள். இவள் கெர்வத்தை அடைந்து கோபத்தை யுடையவளாகித் தகாத வார்த்தைகளைச் சொல்லி அதட்டி இந்த ஏழை ஸ்திரீயை ஓடிப் போகும்படியாய்ச் செய்தாள். இந்த ஏழை ஸ்திரீ தன்னுடைய மனத்தில் துன்பத்தை அடைந்து கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

16. பாலர் சோறீயாப் பாவி பருகாது சுதர்கள் தானும்
சாலவே மறுசென்மத்தில் தன் சுதர்தோஷ மெய்தும்
ஓலவே சொல்லிச் சென்றாள் யெய்திற்று அந்தத்
[தோஷம்
ஞால மேல் வேறு ஒன்று நவிலுவோ முனியே
[கேளும்

16. "குழந்தைக்குச் சாதத்தைக் கொடுக்காத பாபியாகிய நீ உனக்குப் பிள்ளைகள் விருத்தியாகக் கூடாது, உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்குப் பிள்ளைகள் கிடையா, அல்லது சீக்கிரம் இறந்து போகக் கடவது", என்று இவ்விதமாகச் சொல்லி விட்டு ஓடிப் போய் விட்டான். அந்தத் தோஷமானது இவளை வந்தடைந்தது, மேலும் இந்தப் பூமியில் இவளுக்கு இன்னொரு தோஷம் உண்டாயிற்று. இதைச் சொல்லுகின்றோம், முனிவரே! நீர் கேட்பீராக.

17. தன்னிட கொல்லை தன்னில் தங்கிற்று கருப்பன் சாமி
முன்னோர்கள் தோத்த ரிப்பார் முதல் குல தெய்வ
[மென்று
கன்னிகை தொழாமலே தான் கன்மனமாக நின்றாள்
துன்முனி கோப முற்று செப்பின சாபம் கேண்மோ.

17. ஜாதகரின் மூத்த சகோதரியினுடைய வீட்டின் பிழக்கடையில் ஒரு கருப்பன் சாமி என்ற (ஸ்திரீகளின் கர்ப்பத்தை அழித்துப் பிள்ளை பிறக்கவிடாமல் கர்பப் பிரஷ்டத்தை உண்டாக்குகின்ற கருமுனி என்ற) ஒரு முனியேஸ்வரர் (முனிஸ்வரர்) வாசஞ் செய்து கொண்டிருந்தார். இவரை இவளுடைய முதாதைகள் என்ற பெரியோர்கள் தங்களுடைய முதலாவது குலதெய்வமாகப் பாராட்டிப் பூஜை செய்து வந்தார்கள். இந்த முனிஸ்வரரை இவள் வணங்கிப் பூஜை செய்யாமல் மனத்தை யுடையவளாகி வெறுமையாக விருந்து விட்டாள். இந்தக் கெட்ட முனிஸ்வரர் கோபத்தை அடைந்து சொல்லிய சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

18. என்னையே தொழாத பாவி ஈன்றதோர் சுதரைக் [கொல்வேன்
பின்வரும் சென்மந் தன்னில் புதல்வரை யாவும் [கொல்வேன்
உன்னிடம் வாச மாவேன் உரைத்து வேரில்லம் செல்ல
துன்மையாய் அந்த சாபம் சேர்ந்தது பாவைக் கேதான்.

18. "என்னைப் பூஜை செய்யாத பாபியாகிய நீ, பெற்றப் பிள்ளைகளை நான் கொன்று விடுவேன், உன்னுடைய மறு ஜன்மத்தில் கூட உன்னுடைய எல்லாக் குழந்தைகளையும் நான் கொன்று விடுவேன். நான் உன்னைப் பிடித்துக் கொண்டு உன்னிடத்தில் வாசஞ் செய்து கொண்டிருப்பேன்' என்று முனிஸ்வரர் சொல்லி விட்டு அந்தக் கொல்லையை விட்டு வேறே ஓரிடத்திற்குச் சென்று விட்டது. இந்தச் சாபமானது கெடுதியாக இந்த மூத்த சகோதரியை வந்தடைந்தது.

19. அந்திய காலம் தன்னில் அவள்சுதர் மரணமாகி
அந்தகன் பக்கல் சேர்ந்து அயனுமே வரையப் பட்டு
வந்தவ ளிவளே யென்றேம் மருவிடு முனியின் சாபம்
தன்சுதர் உதிக்கும் தீதாம் சார்ந்திடும் தன்பால் பேயும்.

19. ஜாதகரின் மூத்த சகோதரியின் கடைசி காலத்தில் இவளுடைய பிள்ளைகள் மரணத்தை அடைந்து பிறகு இவள் இறந்து எமனிடத்திற்குச் சென்று பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இவள் வந்து பிறந்திருக்கின்றுள் என்று சொல்லுகின்றேம். முனிஸ்வரருடைய சாபம் இவளுக்கு வந்து சம்பவிக்கும். ஆகையால் இவளுக்குப் பிள்ளைகள் பிறந்தாலுங் கூட இவர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள், இந்தப் பேய், பிசாசு என்ற முனிஸ்வரர் இவளைப் பிடித்துக் கொண்டு இவளிடத்திலேயே தங்கி வாசஞ் செய்து கொண்டிருக்கும்.

20. முனிதோஷம் விலக வேண்டி மொழிகுவீர் கிரிகை [யொன்று
வினைதீர கரும சாந்தி மெல்லிக்குச் செய்து மேதான்

கனமுள தாம்பிர ரேக்கில் காதலி பீசம் தன்னை
சினமில்லா வட்டம் கீரி தேவியின் மூலம் தன்னை.

20. இந்த முனிஸ்வரால் ஏற்பட்ட தோஷம் நிவர்த்தியாவதற்காக ஒரு சாந்தியைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவளுடைய பாபம் ஒழிவதற்காக ஒரு கர்ம சாந்தியைச் செய்து விட்டுப் பிறகு தாம்பரரேக்கில் இவளுடைய பீஜத்தை வட்டமாக வரைந்து, பார்வதியம்மையாருடைய மூல மந்திரத்தையும்

21. அமைத்துமே மர்ம மாக ஆயிரம்தரம் செபித்து
இவளுமே அணிந்து கொண்டு யிடறிலா சுக்கிர வாரம்
கவனமாய் விரதம் கொள்ள காளைகள் விருத்தி தீர்க்கம்
நவனியி லாண்பா லொன்று நல்கிடும் பெண்பா
[லவ்வார்.

21. அதிலே எழுதி ரகசியமாக ஆயிரந்தடவை ஜபித்துப் பிறகு அந்தத் தகட்டைத் தரித்துக் கொண்டு, தவறிப் போகாமல் சுக்கிரவார விரதத்தைச் சிரத்தையுடன் அநுஷ்டித்து வருவாளாகில் பிள்ளைகள் உண்டாகி நீண்ட வயதை யுடையவர்களாக விருப்பார்கள், இவளுக்கு இந்தச் சாந்தியின் பயனாக ஒரு ஆண் குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறப்பார்கள்.

22. செப்பினேம் தீர்க்கமாக சொற்படி செய்யா ளாகில்
தப்பிதம் சுதர்க ளென்றேம் சாற்றின மொழி குன்றாது
ஒப்புடன் யிவன் பின்னாலே உரைந்திடும் மாண்பால்
[ரெண்டும்
தப்பித மில்லா தீர்க்கம் சாற்றுவோம் பின்பால் சேதி.

22. இந்த இரண்டு குழந்தைகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். நாங்கள் சொல்லிய பிரகாரம் இந்த மூத்த சகோதரி சாந்தியைச் செய்யா விட்டால், பிள்ளைகள் பிறக்க மாட்டார்கள். பிறந்தாலும் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றேம். ஜாதகருக்குப் பின்னால் இரண்டு சகோதரிகள் பிறப்பார்கள். இவர்கள் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவர்களுடைய விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேம்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணாதிசயங்களும்

23. மங்களம் பத்தொன் பாண்டில் மருவிடும் கீழ்பால் பாரி
நங்கையு மன்னை வர்க்கம் நவிலுவோம் குணத்தை
[யாங்கள்

பங்கைய முகத்த ளாகும் பரிந்துபசாரம் செய்வள்
எங்கள் போலதிதிக் கன்னம் யீகுவா ளென்று
[சொல்வோம்.

23. ஜாதகருக்கு விவாகம் இவருக்குப் பத்தொன்பதாவது வயதில் நடக்கும். இவருடைய மனைவி கிழக்குத் திக்கிலிருந்தும் தாயாருடைய பந்துக்களிலிருந்தும் வருவாள் என்று சொல்லுகின்றோம். இவளுடைய குணாதிசயங்களை நாங்கள் சொல்லுகின்றோம். இவள் தாமரைப் பூவைப் போன்ற அழகான முகத்தை யுடையவளாவள். இவள் முன் வந்து பிறருக்கு உபசரணையை, உதவியைச் செய்வாள். எங்களைப் போன்ற சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவாள் என்று சொல்லுகின்றோம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய விவாக விஷயம் :—ஜாதகருக்குப் பத்தொன்பதாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. சுக்கிரன் களத்திரகாரகராகியும், குடும்பாதிபதியாயும் ஒன்பதிற்குடையவராயும் இருக்கின்றார். ஜாதக பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஒன்பதிற்குடையவராகிய சுக்கிரன் தன் தசையில் விவாகஞ் செய்து வைக்க அதிகார முடையவராக விருக்கின்றார். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் ஜாதகருக்கு விவாகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

24. அன்னம் போல் சாயலொக்கும் அடாபிடி தன்னில்
[செல்லாள்
அன்னிமு மன்பா யீவள் ஆளன் தன்மனதுக்
[கேத்தோள்
அன்னியர் குற்றம் சொல்லாள் அடிசலுக் கினிய ளாவள்
அன்னியர் மதிக்க வாழ்வள் அல்பமாம் கோப முண்டு.

24. ஜாதகருடைய மனைவி அன்னப் பறவையைப் போல அழகான ரூபத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். இவள் அநியாயமாகவும் முரட்டுத்தனமாகவும் காரியங்களில் பிரவேசிக்க மாட்டாள். இவள் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள், இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருப்பாள். இவள் பிறருடைய பேரில் நிந்தைகளைச் சொல்ல மாட்டாள். இவள் சமையல் செய்வதில் கெட்டிக்காரியாகவும் நல்ல கைப்பாகத்தை யுடையவளாகவு மிருப்பாள். இவள் பிறர் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள். இவள் சிறிதளவு கோபத்தை யுடையவளாவள்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

25. வறுமைக ளடையா ளாகும் வருவோரை யாத ரிப்பள்
அரிவைக்கு வயது தீர்க்கம் அறைகிறோம் புத்திர பாகம்
இருநான்கு தோன்று மென்றோம் யேகிடும் மூன்று
[யென்றோம்
திறமாக ஆண்பால் மூன்று செல்விமார் யிருவர் தீர்க்கம்

25. ஜாதகருடைய மனைவி தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டாள், இவள் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவார். இவள் தீர்க்காயுளை யுடையவளாவள். இனிமேல் ஜாதகருடைய சந்ததியைப் பற்றிச் சொல்லுகின்றோம். மொத்தத்தில் எட்டு குழந்தைகள் பிறப்பார்கள் என்று சொல்லுகின்றோம், மூன்று குழந்தைகள் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம். பிள்ளைகள் மூன்று பேர்களும் பெண்கள் இரண்டு பேர்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள்.

* குறிப்பு:—வியாக்கியானம் :—புத்திரபாவம் :—புத்திர ஸ்தானங்களாகிய ஐந்தாவது வீட்டையும் ஒன்பதாவது வீட்டையும் கேது பார்ப்பது புத்திர தோஷமாகும். சனி ஆருவது வீட்டிற்குடையவராகி ஒன்பதாவது வீட்டிலிருப்பது புத்திர தோஷமாகும். புத்திரகாரனாகிய குரு புதனுடன் கூடியிருப்பது புத்திர தோஷமாகும்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

26. அன்னையின் குணத்தை சொல்வேன் அன்புள மனத்த
[ளாகும்
தன்சொல்லு மடக்க முண்டு சாற்றிடாள் அயலார்
[குற்றம்
கன்னிகை யோக சாலி கணவன் தன் மனதுக்
[கேத்தோள்
பின்ன மில்லாத தேகி பொய்யது புகலா ளாகும்.

26. ஜாதகருடைய தாயாரின் குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் பிரியமுள்ள மனத்தை யுடையவளாவள். இவள் சாந்தமாகவும் அமைதியாகவும் பேசுவாள். பிறர் பேரில் நிந்தைகளைச் சொல்ல மாட்டாள். இவள் யோகத்தை யுடையவளாவள்.* இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருப்பாள், இவள் யாதொரு அவயவக் குறைச்சலும் பங்கமும் இல்லாத தேகத்தை யுடையவளாவள். இவள் பொய்யைச் சொல்ல மாட்டாள்.

*குறிப்பு:—வியாக்கியானம்:—தாயாருடைய யோக விஷயம் :—மாதுர் ஸ்தானம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும், இந்த தனுசு லக்கி

னத்திற்குத் தர்மகர்மாதிபதிகளாகிய (ஒன்பது பத்திற்குடைய) சூரியனும் புதனும் கூடியிருப்பது தர்ம கர்ம யோக மாகும். இவர்கள் தனுசிற்கு எட்டில் இருக்கும் விஷயமாய்க் கீழ்கண் டுள்ள தமிழ் ஜாதகாலங்காரத்தின் இருநூற்று பதிநான்காவது பாடலின் இரண்டு வரிகளை வாசிக்கவும். ஐந்திற்குடைய அங்காரகன் பத்திலிருப்பது நல்லதாகும்.

"விளையும், புதனும் சூரியனும் விரும்பி எட்டில் நான்கு ஒன்றில்
விளையக் கூடில், மன்னவனும் ................"

தனுசு லக்கினத்திற்கு ஏழாவது எட்டாவது வீடுகளில் சுபக்கிரகங்கள் இருப்பதால் லக்கினாதி அதியோகம் என்ற ஓர் யோகமிருக்கின்றது.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவமும் முன்ஜன்மமும்

27. இல்லமும் கீழ்பா லாகும் யிவள்துணை ஆண்பால் [னான்கு
வல்லிமார் மூவருகும் மரித்திடு மற்ற தெல்லாம்
புல்குவோ மிவள்தன் பூர்வம் போரூரில் கர்ண சேயாய்
வல்லியு முதித்து மேலும் வளமுள குடும்பி யாகி.

27. ஜாதகரின் தாயாருடைய வீடு கிழக்குத் திக்கிலிருக்கும், இவளு டன் பிறந்தவர்கள் நான்கு சகோதரர்களும் மூன்று சகோதரிகளும் ஆவார் கள். மற்ற சகோதரர்கள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள்* தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் போரூர் என்ற திருப்போரூரில் கருணீகர் குலத்தில் பெண்ணாகப் பிறந்து, செழிப் பான குடும்பஸ்தளாகியும்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—சகோதர தோஷம் மாதுரு லக்கினம் நான் காவது வீடாகிய தனுசு ஆகும். இதற்குச் சகோதர ஸ்தான மாகிய மூன்றாவது வீட்டிற்குடைய சனி தனுசிற்கு ஆறாவது வீட்டில் மறைந்திருப்பது சகோதர தோஷமாகும். மேலும் இந்த சனியைக் கேது பார்ப்பதும் சகோதர தோஷமாகும். சந்திரனுடன் கேது சம்மந்தப்பட்டிருப்பதும், அங்காரகனுடன் ராகு சம்மந்தப்பட்டிருப்ப்தும் சகோதர தோஷமாகும்.

28, அரமதி லிச்சை யுண்டாய் அச்சென்மம் பவமில் லாமல்
மரலியின் பதிக்குச் சென்று மறையவன் வரையப் பட்டு
பெருமையா யிக்கு லத்தில் பிறந்தன ளென்று [சொல்வோம்
கரி மத வானை பெற்ற காதலி கேட்டிடாயே.

28. தானதர்மங்களில் பிரியமுடையவளாகியும், முன் ஜன்மத்தில் யாதொரு பாவத்தைச் செய்யாதவளாயிருந்தும், பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு மேன்மையாக இந்த ஜன்மத்திய ஜாதியாகிய வடுகர் ஜாதியில் பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ருேம். கருப்பு மதயானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

29. மறுசென்மம் வள்ளுர் தன்னில் வருகுவாள் சைவ [சேயாய்
பெருமையாய் குடும்பம் பெற்று புண்ணியவதியும் [வாழ்வாள்
உரைகிருேம் தந்தை பூர்வம் உயர்தஞ்சை நகரிலே [தான்
குறைவிலா குடும்பம் தன்னில் குதித்தனன் செங்குந்த [வம்சம்.

29. ஜாதகருடைய தாயார் தன்னுடைய மறுஜன்மத்தில் வள்ளுர் என்ற திருவள்ளுரில் சைவ குலத்திற் பெண்ணுகப் பிறந்து மேன்மையான சிறந்த குடும்பத்தை அடைந்து புண்ணிய சாலியாக விருந்து வாழ்வாள். இனிமேல் ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவர் சிறந்த தஞ்சாவூர் பட்டணத்தில் கஷ்டங்களை அநுபவிக்காமல் சௌக்கியத்துடனிருந்த ஒரு செங்குந்தருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்தார்.

30. பலவித தொழிலும் செய்து பரஉபகார னுயும்
நிலையிலார்க் கன்ன மீந்து நேர்ந்தனன் கால னுடு
உலகவன் வரையப் பட்டு உதித்தன னென்று [சொல்வோம்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழி குன்ருது.

30. ஜாதகருடைய தகப்பனுர் அநேக விதமான தொழில்களைச் செய்து கொண்டும், ஏழைகளுக்குச் சாப்பாடு போட்டும், பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார். பிறகு பிரமதேவரால் பிரம்லிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். மலைகளுக்கு அரசனுகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

31. மறுசென்மம் வேங்கடத்தில் மறைகுல முதிப்பா னாகும்
திருமகன் யிச்சென் மத்தில் செய்த புண்ணியங்க
[ளென்ன
வருவோரை யாத ரித்தும் மனமது கபடு மின்றி
குறையோர்க் குதவி செய்து குவலயம் நல்லோ னாயும்
பெருமையாய்ப் புண்ணிய தலங்கள் சென்ற
[புண்ணியத்தா லுதிப்பான்.

31. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய மறுஜன்மத்தில் வேங்கடம் என்ற திருவேங்கிடமாகிய திருப்பதி ஸ்தலத்தில் பிராமணருடைய ஜாதியில் ஆணாகப் பிறப்பார். இந்த ஜன்மத்தில் இவர் செய்த புண்ணிய காரியங்கள் என்ன வென்று கேட்கவே, இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களைக் காப்பாற்றியும், தன்னுடைய மனத்தில் யாதொரு கள்ளமும் வஞ்சனையுமில்லாமல், கஷ்டங்களை அனுபவித்துக் கொண்டிருக்கின்ற ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்து கொண்டும், இந்த பூமியில் நல்லவராகவும் இருந்து கொண்டும் மேன்மையான சிறந்த தெய்விக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போன புண்ணியத்தினாலும் இவர் பிராமணராகப் பிறப்பார்.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

32. பாலகன் முன்சென் மத்தை பகருவோ மினிமே லாக
சீலமாம் தில்லை தன்னில் செனித்தனன் சௌராஷ்டர
[வமிசம்
நீலியு மதலை யுண்டாய் நீத்தோர்க்கு அன்ன மீந்து
சாலைமார்க் கத்தில் யேதான் தாக பந்தலும் வைத்து.

32. இனிமேல் ஜாதகருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். பரிசுத்தமான தில்லை என்ற சிதம்பர க்ஷேத்திரத்தில் இவர் சௌராஷ்டிர ஜாதி என்ற பட்டு நூல்கார ஜாதியில் ஆணாகப் பிறப்பார். இவர் மனைவியையும் மக்களையுமுடையவராகி, உலகப் பற்றை ஒழித்து விட்ட சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போட்டும், மரச் சாலையை யுடைய வழி நடை ரஸ்தாக்களில் தாகப் பந்தலை ஸ்தாபித்தும்,

33. சரியான தலஞ்சென்று புக்கினன் கால னாடு
அரிமகன் வரையப் பட்டு அணுகுவா னிக் குலத்தில்
உறைகிறோ மிவனின் யோகம் உயர்வான குடும்ப
[மேற்பன்
அரசரால் கிராம செட்டு அணுகிடு மென்று சொல்வாய்

33. தகுந்த தெய்வீக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போய்ப் பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போனர். பிறகு மகாவிஷ்ணுவினுடைய பிள்ளையாகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்திய ஜாதியாகிய வடுகர் ஜாதியில் ஜாதகர் பிறப்பார். இவருடைய யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் மேன்மையான சிறந்த குடும்பத்தை அடைவார். இவர் அரசாங்கத்தாருடைய உதவியால் கிராமத்திய வியாபாரத்தைச் செய்வார் என்று சொல்லுகின்றோம்.

34. எந்த காலத்தில் ராசயோகமு மெய்தும் சொல்வாய்
வந்தவ னிருபான் ரெண்டில் மருவிடும் ராச யோகம்
முந்தியு முப்பாறுறு ஆண்டு மட்டுய்வா றுகும்
நிந்தைகள் இதற் குள்ளாக நேருதோ விபரம்
[சொல்வாய்.

34. ஜாதகருக்கு எந்த காலத்தில் ராஜ யோகம் நேரிடும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருக்கு இருபத்திரண்டாவது வயதில் ராஜயோகம் உண்டாகும். இது முப்பத்தாறுவது வயது வரையிலும் இருந்து ஜாதகர் இந்த யோகத்துடன் வாழ்வார். இதற்கிடையில் இந்த ராஜயோகத்திற்குப் பங்கம் ஒன்றும் நேரிடாதோ என்ற விபரத்தைச் சொல்வீர் என்று கேட்க

குறிப்பு:—வியாக்கியானம்:—யோக விஷயம்:—சூரியனும் குருவும் பதினொராவது வீட்டில் இருப்பது ஒரு ராஜயோகமாகும். இது விஷயமாய்த் தமிழ் ஜாதகாலங்காரம் இருநூற்றருபத்து நான்காவது (264-ஆவது) பாடலிலுள்ள கீழ்க்கண்ட ஒரு வரியை வாசிக்கவும்.

"கிளையா ரவி (சூரியன்) பொன் (குரு) பன்னொன்றில் கேடில்
ஜன்மத்து நிலரசே".

மேலும் இந்த ஜாதகத்தில் லக்கினத்தில் அங்காரகனும் ஏழாவது வீட்டில் சந்திரனும் இருப்பது சந்திர மங்கல யோகம் என்ற ஒருவித யோகமும் இருக்கின்றது. இது விஷயமாக ஜாதகாலங்காரத்தில் இருநூற்றெழுபத்து நான்காவது (274-ஆவது) பாட்டில் வாசிக்கவும். அங்காரகன் லக்கினத்திலிருந்து கொண்டு ஏழிலுள்ள சந்திரனைப் பார்ப்பதை சந்திரனும் அங்காரனும் ஏழில் இருப்பதாகப் பாவித்துக் கொள்ளலாம். இங்கு சொல்லப்பட்ட 274-ஆவது பாடல் கீழ்கண்டபடி ஆகும்.

"சந்திரன் செவ்வாய்க் கூடி சத்தமத்திலிருக்கச்
சந்திர மங்கல யோகம் தரணி யரசாள்வன்"

மேலும் ஒன்பதிற்குடைய சுக்கிரன் பத்திலும் பத்திற்குடைய புதன் பதினொன்றிலு மிருப்பது ஒருவித ராஜயோக மாகும்.

35. சிலசில விரோதம் நேறும் செங்கதிர் முன்பனி போல்
விலகிடும் கொடுமை யாவும் வேந்தர்க்கு யிவன்சொல்
[மேன்மை

நலமுள தந்தை மேலாய் நாயகன் வாழ்வா னுகும்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழி குன்ருது.

35. சிற்சில விரோதங்கள் உண்டாகும். ஆனல் இவை சூரிய னுக்கு முன்னேயுள்ள பனியைப் போல பறந்தோடிப் போகும். கெடுதி கள் யாவும் நிவர்த்தியாகி விடும். அரசாங்கத்தாருக்கு ஜாதகருடைய வார்த்தைகள் சிறந்தனவாகவு மிருக்கும். இவர் தன்னுடைய தகப்பனரு டைய அந்தஸ்திற்கு மேலான, அதிகமான, அந்தஸ்திலிருந்து வாழ்வார், மலைகளுக்கு அரசனுகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகரின் தகப்பனருடைய மரணகாலமும் தாயாருடைய மரணமும், மூத்த சகோதரியினுடைய மரணமும்

36. முப்பது னலு ஆண்டில்
விளம்புவோம் தந்தை கெண்டம்
செப்புவோ மதின்மேல் னலு
ஆண்டினில் அன்னை கெண்டம்
ஒப்புடன் முன்துணை தான்
உறங்குவாள் நாற்பா னறில்
மைப்புடன் யிவள்பின் சென்மம்
விளம்புவோம் காஞ்சி தன்னில்.

36. ஜாதகருக்கு முப்பத்து நான்காவது* வயதில் இவருடைய தகப்ப னர் இறந்து விடுவார். இதற்குப் பிறகு நான்காவது வருஷத்தில்* ஜாதக ருடைய தாயார் இறந்து விடுவாள். ஜாதகருக்கு நாற்பத்தாருவது* வயதில் இவருடைய மூத்த சகோதரி இறந்து விடுவாள். இவளுடைய மறு ஜன்மத் தைப் பற்றிச் சொல்லுகின்ரேம். இவள் காஞ்சீபுரத்தில்

*குறிப்பு :—வியாக்கியானம்:—தகப்பனர் மரண விஷயம்:—ஜாதகருக்கு முப் பத்தி நான்காவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. பிதுர் லக்கினம் ஒன்பதாவது வீடாகிய ரிஷப லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை நாற்பத்தாருவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மார கராகின்ருர். சுக்கிரன் கர்ம ஸ்தானமாகிய (கன்னிக்குப்) பத்தாவது விட்டில் இருக்கின்ருர். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் பிதுருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—தாயாருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு முப்பத்தெட்டா வது வயதில் சூரிய தசை நடக்கின்றது. மாதுரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். லக்கினுதிபதியாகிய குருவுடன் சூரியன் சம்மந்தப்பட்டு மாரக ஸ்தானமாகிய எட்டா வது விட்டில் (கன்னியா லக்கினத்திற்குக் கர்மாதிபதியாகிய புதனுடன் கூடி) இருக்கின்ருர், ஆகையால் துய்ய கேரளம்

எட்டாவது பாவம் பன்னிரண்டாவது இருபதாவது பாடல்கள் பிரகாரம் சூரியன் மாரகாதிபதியாகின்றார். ஆகையால் இங்கு ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது (34+4=38) வயதில் மாதுரு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

*குறிப்பு :—ஜாதகருடைய மூத்த சகோதரியினுடைய மாரக விஷயம்:—ஜாதகருக்கு நாற்பத்தாறாவது வயதில் சந்திர தசை நடக்கின்றது. மூத்த சகோதரியின் லக்கினம் பதினோராவது வீடாகிய கடகம் ஆகும். இதற்கு லக்கினாதிபதியானவர் சந்திரன். துய்ய கேரளம் எட்டாம் பாவம். பதினான்காவது பாடல் பிரகாரம் சந்திரன் மாரகராகின்றார். இவர் கேதுவுடன் சம்மந்தப்பட்டதால் பலவீனமானவராக விருக்கின்றார். ஆகையால் இங்கு சந்திர தசையில் மூத்த சகோதரிக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலம்

37. உதிப்பளாம் சௌராஷ்டிர வமிசம் உரைக்கிறோம் [பாலனுக்கு
சதியிலா அருபா னேழில் துலா மாதம் வளர் பக்கத்தில்
குதற்கமாய் துதிகை தன்னில் குழிவியி னுடலம் வாடும்
அதிதியை ஆதரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

37. சௌராஷ்டிர ஜாதி என்ற பட்டு நூல்காரருடைய ஜாதியில் பிறப்பாள். ஜாதகருடைய மரண காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு அறுபத்தேழாவது வயதில் துலா மாதம் என்ற ஐப்பசி மாதத்தில் வளர் பிறையில் துதிகை திதி தினத்தில் இவர் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய் விடும், சந்நியாசிகளையும் முனிவர்களையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய மரண விஷயம்:—ஜாதகருக்கு அறுபத்தேழாவது வயதில் ராகு தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகப் பிரகாரம் அங்காரகன் மாரகராகின்றார். இவருடன் சம்மந்தப்பட்ட ராகு ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது, இருபத்து மூன்றாவது சுலோகங்கள் பிரகாரம் மாரகராகின்றார். மேலும் துய்ய கேரளம் எட்டாம் பாவம் பன்னிரண்டாவது, இருபதாவது பாடல்கள் பிரகாரம் எட்டிற்குடையவராகிய அங்காரகனுடன் சம்மந்தப்பட்ட ராகு மாரகராகின்றார். ஆகையால் இங்கு ராகு தசையில் ஜாதகருக்கு மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மறுஜன்மம்

38. பின்சென்மம் விரிஞ்சி தன்னில் பிறப்பனும் சைவ சேயாய்
பொன்பூமி யுடையா னாகிப் புகழான குடும்பம் பெற்று

அன்னவன் வாழ்வா ருகும் அறைந்தது தப்பா தாகும்
உன்னத வாஃனப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

38. ஜாதகர் தன்னுடைய மறுஜன்மத்தில் விரிஞ்சிபுரத்தில் சைவ ஜாதியில் ஆணுகப் பிறப்பார். தனம், நிலம் ஆகிய இவற்றை இவர் உடையவராகியும், கீர்த்தியை யுடைய குடும்பத்தை யடைந்தும் வாழ்வார். நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும். மேன்மையான, சிறந்த யாஃன முகத்தை யுடைய விநாயகக் கடவுஃளப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

39. அத்திரி தடுத்துச் சொல்வார் அறைந்துனீர் வயது [தீர்க்கம்
குத்தங்கள் இதற்குள்ளாக குருகாதோ விபரம் [சொல்வாய்
சுத்தமா மூன்று யேழில் தசமம் யிருபத்தி ரெண்டு
சத்தியே முப்பான் ரெண்டு ஆண்டினில் பிணியு [மெய்தும்.

39. அத்திரி மாமுனிவர் தடுத்துக் கேட்கின்ருர். ஜாதகருக்கு நீர் தீர்க்காயுஃளச் சொல்லி விட்டீரே! இதன் மத்தியில் இவருக்கு மரணம் நேரிடாதோ, இதனுடைய விபரத்தை நீர் சொல்லுவீர் என்று கேட்கவே, ஜாதகருக்கு தன்னுடைய மூன்ருவது, ஏழாவது, பத்தாவது இருபத்திரண்டாவது வயதுகளில் வியாதிகள் ஏற்படும்.

40. விலகிடு மென்று சொல்வோம் விளம்பின வயது தீர்க்கம்
தஃலவனும் செனன காலம் சௌமியன் திசை [யேழாண்டின்
குலவிடும் திங்களாறும் கூறினேம் பூர்வ பாகம்
அஃலகடல் துயின்ருேன் தங்கை அறிவிப்போம் பின்பால் [சேதி.

40. ஆனுல் இந்த வியாதிகள் நிவர்த்தியாகிவிடும் என்று சொல்லுகின்ருேம். நாங்கள் முந்தி சொல்லிய பிரகாரமே வயது நீடித்திருக்கும். ஜாதகருடைய ஜனன காலத்தில் சௌமியன் என்ற புதனுடைய தசையில் இருப்பு ஏழு வருஷங்களும், ஆறு மாதங்களும் ஆகும். இதுவரையிலும் பூர்வபாகம் என்ற முதலாவது பாகத்தைச் சொல்லி முடித்து விட்டோம். அஃலகஃள யுடைய சமுத்திரத்தில் நித்திரையைச் செய்த மகாவிஷ்ணுவின் தங்கையாகிய பார்வதியம்மையே! மற்ற விஷயங்கஃளப் பின்னுல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ருேம். C.G.R

————

## ஜாதகம் 41

### ஜனன கால கிரக நிலை

1. கன்னியு செனன மாக [1]கனகனும் கேது ஞலில்
[2]புந்தியும் [3]பானுஅந்தில் [4]புகர்[5]குசன் ஆறிலேற
சந்திரன் [6]நவமதாக சனி பதினொன்றி லாக
விந்தையய்ா [7]கயிறுபத்தில் விளம்புவீர் பலனைத் தானே.

1. கன்னி ஜன்மலக்கினமாகிக் குருவும் கேதுவும் நான்காவது வீட்டிலும், சுக்கிரனும் அங்காரகனும் ஆருவது வீட்டிலும், சந்திரன் ஒன்பதாவது வீட்டிலும், சனி பதினோராவது வீட்டிலும் ராகு பத்தாவது வீட்டிலும் இருந்து இவ்விதமாக நவகிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்டார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் | ராகு |
| சுக்கிரன் அங்காரகன் | இராசி சக்கரம் | | சனி |
| சூரியன் புதன் | | | |
| குரு கேது | | | லக்கினம் |

ரோகிணி 4-ஆம் பாதம் சந்திர தசை ஞ 8—10—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் சந்திரனும் புதனும், ரிஷபத்திற் குருவும், மிதுனத்தில் ராகுவும், தனுசில் கேதுவும், மகரத்தில் சூரியனும் அங்காரகனும், கும்பத்தில் சுக்கிரனும், மீனத்தில் சனியும் ஆகும். சனி வக்கிர கதியில் இருக்கின்ருர். புதன் அஸ்தங்கதமாகவிருக்கின்ருர்.

---

1. குரு
2. புதன்
3. சூரியன்
4. சுக்கிரன்
5. அங்காரகன்
6. ஒன்பது
7. ராகு

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. குருமுனி புகலு கின்ருர் குறித்தது ஆண்பால் சென்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலு மிந்திர னேக்கம்
பெருவாரிக் கீழ்பா லாகும் பெருத்ததோர் நகர மாகும்
அரசர்கள் வாச மாகும் அனேக ஆலயங்க ளுண்டு.

2. குருமுனி என்ற வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் கிழக்குப் பார்த்த வாயிலேயுடையதாகும். பெரிய சமுத்திரம் கிழக்குத் திக்கிலிருக்கும். பிறந்த ஊர் ஒரு பெரிய பட்டணமாகும். இந்தப் பட்டணத்தில் அரசர்கள் குடியிருப்பார்கள். இதில் அநேக கோயில்கள் உண்டு.

3. பலசாதி அவ்வூர் வாசம் பகர்ந்த யிவ்வடை யாளத்துள்
குலவுவான் ஆரும் சென்மம் குதித்தயில் வாடை யாகும்
நலமுள் தந்தை அன்னே நற்றுணே களத்திர புத்திரர்
தலேவன் தன் முன்பின் சென்மம் சாற்றுவோ மின்னூல்
[தன்னில்.

3. ஜாதகர் பிறந்த பட்டணத்தில் அநேக ஜாதி ஜனங்கள் வாசஞ் செய்வார்கள். இப்படிப்பட்ட அடையாளங்களேயுடைய விடத்தில் ஆருவது குழந்தையாகப் பிறப்பார். பிறந்த வீடுவாடையாக விருக்கின்ற வீட்டில் ஒரு வீடாகும். ஜாதகருடைய தகப்பனுர், தாயார், சகோதரங்கள் மனேவி, மக்கள் ஆகிய இவர்களுடைய விஷயங்களேயும் ஜாதகருடைய முன்ஜன்மம் பின்ஜ்ன்மம் ஆகிய இவற்றையும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்ரேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவமும் குணுதிசயங்களும்

4. தந்தையின் துணேவ ரைந்தில்
தங்காது யாவும் தானே
தந்தையும் தனியாய் வாழ்வன்
சாற்றுவோ மவன் குணத்தை
தந்தமும் தரள மொக்கும்
தானிய செட்டு செய்வன்
தன்பந்து மேலாய் வாழ்வன்
தனமது பெருக்க முண்டு.

4. ஜாதகரின் தகப்பனுருடன் பிறந்தவர்களில் ஐந்து பேராவர், இவர்கள் எல்லோரும் சீக்கிரத்தில் இறந்துபோய்விடுவார்கள். ஆகையால் இவர் தனியாக, ஒண்டியாக விருந்து வாழ்வார். இந்தத் தகப்பனுருடைய குணு

நியங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருடைய பற்கள் முத்தைப் போல அழகாயும் வெண்மையாயுமிருக்கும். இவர் தானிய வகையராக்களில் வியாபாரத்தைச்செய்வார். இவர் தன்னுடைய பந்துக்களில் அந்தஸ்திற்கு அதிகமான அந்தஸ் திலிருந்து வாழ்வார். இவருக்குச் செல்வம் அதிகரித்துக் கொண்டே போகும்.

5. கல்விமான் கடவுள் பக்தி கண்முகம் வசிய முண்டு
இல்லை யென் றுரைக்க மாட்டான் யிடர் செய்யான் [யாவருக்கும்
சொல்லது சுகமே யாகும் துறவிகட் கன்ன மீவன்
வல்லியர் மோக வானும் மர்ம மில்லாதா னுகும்.

5. ஜாதகருடைய தகப்பனர் வாசித்தவராவர். கடவுளின் பேரில் அன்புடையவராவர், இவருடைய கண்களும் முகமும் அழகாகவிருந்து பார்ப்பவர்களை வசியப்படுத்தக் கூடியனவாகவிருக்கும். இவர் தன்னிடத் திற்கு உதவிக்காக வருகின்றவர்களுக்கு உபகாரத்தைச்செய்யதன்னிடத்தில ஒன்றுமில்லை என்று சொல்லமாட்டார். இவர் யாருக்குங் கெடுதியைச் செய்யமாட்டர். இவர் இனிமையாகப் பேசுபவராவர். இவர் சந்நியாசி களுக்கும் பரதேசிகளுக்குஞ் சாப்பாட்டைப் போடுவார். இவர் ஸ்திரிகளி டத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவர் ரகசியமான மனத்தையுடையவரல்ல.

6. பலசகா யங்கள் செய்வன் பாருகன் விருத்தி யுண்டு
தலமது பின்னு லாகும் தானவன் வாச முண்டு
சொலுமொழி காப்பா னுகும் சுகமது கலந்து வாழ்வன்
நிலையிலார்க் குதவி செய்வன் நிமலியே கேட்டி டாயே.

6. ஜாதகருடைய தகப்பனர் பிறருக்கு அநேக உபகாரங்களைச் செய் வார். இவருக்கு நிலங்கள் நல்ல பலிதங்களைத்தரும். இவருக்குப் பிற் காலத்தில் வீடு உண்டாகும். இதில் இவர் வாசஞ்செய்து கொண்டிருப் பார். இவர் தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகா மல் நடந்துகொள்ளுவார். இவர் சௌக்கியங்களுடன் வாழ்வார். இவர் ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்வார், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

7. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறோம் தாயே [கேளும்
தென்வாரி யோரம் தேவியின் கரம் தன்னில்
வன்னிய குலமு தித்து மனைவி மைந்தரு முண்டாகி
அன்னவன் வாழும் னுளில் அணுகின வினையைக் [கேண்மோ.

7. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்றோம். பார்வதியம்மையே! கேட்பீராக. தெற்குச் சமுத்திரக் கரையோரத்திலுள்ள தேவிப் பட்டணத்தில் வன்னியருடைய ஜாதியில் ஆணாகப்பிறந்து மனைவியையும் மக்களையுமுடையவராகி இவர் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றோம், கேட்பீராக.

8. தன்னுட தம்பி பாகம் தராமலே மோசம் செய்தான்
அன்னவன் மன வெறுப்பால் அறைந்திட்ட சாபம் [கேண்மோ
உன்னிட ஆஸ்தி போகும் உதிக்கும் பின்சென்மந் [தன்னில்
என்னைப் போலே துணைவர் தோன்றி யேகுமே [தனியாய் வாழ்வாய்.

8. ஜாதகருடைய தகப்பனார் தன்னுடைய இளைய சகோதரரின் பாகத்தை இவருக்குக் கொடுக்காமல் ஏமாற்றிவிட்டார். இந்தச் சகோதரர் மனத்தில் துன்பத்தை யுடையவராகிக் கொடுத்த சாபத்தைச் சொல்லுகின் றோம், கேட்பீராக. "உன்னுடைய சொத்துக்கள் அழிந்துபோகக் கடவது, உன்னுடைய மறுஜன்மத்தில் என்னைப்போலச் சகோதரர்கள் பிறந்து சீக் கிரத்தில் இறந்துவிடக் கடவது, நீ தனியாய் ஒண்டியாய் வாழக்கடவது.

9, இதுவன்றி தனமும் யில்லம்
யெளிதினில் தேடியே தான்
உதவாமல் யாவும் போகும்
உரைத்துமே தெருத்தூள் விட்டான்
அதுதோஷம் சேர்ந்து தென்றோம்
மந்தியக் காலம் தன்னில்
நிதியது குறைவு நேர்ந்து
நிமலனு மரண மாகி.

9. இதுவுமல்லாமல் "நீ பணத்தையும் வீட்டையும் கஷ்டப்படாமல் சுலபமாகச் சம்பாதித்துப் பிறகு இவற்றை நீ இழந்துவிடக்கடவது" என்று இளைய சகோதரர் சொல்லித் தெருவிலுள்ள மண்தூளை வாரி எடுத்துத்தூற்றி னார். இந்தத் தோஷம் ஜாதகருடைய தகப்பனாரை வந்து அடைந்தது என்று சொல்லுகின்றோம். ஆகையால் இவருடைய கடைசி காலத்தில் இவரு டைய செல்வத்திற்குக் குறைவு நேரிட்டுப் பிறகு இவர் இறந்து,

10. கஞ்சனுல் வரையப் பட்டு கலப்பனு மிந்த பாலன்
நஞ்சுபோல் துணையின் சாபம் நல்கிடு மிச்சென் மத்தில்

தஞ்சமாய் பூர்வம் யில்லம் தனம் சேர்ந்து விலகு
[மென்ருேம்
கொஞ்சிய துணைவர் நாசம் கூறிய குணத்தா னுக்கு.

10. பிறகு பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர். இவருடைய சகோதரருடைய சாபம் விஷத்தைப்போல இந்த ஜன்மத்தில் இவரை வந்தடைந்து, இவருடை பூர்விக விடும் பணமும் இவருக்கு வந்து சேர்ந்து பிறகு இவரை விட்டுப் போய் விடும் என்று சொல்லுகின்ருேம். இவருக்கு இவருடைய சகோதரர்கள் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். இதுவரையிலும் சொல்லப்பட்ட குண குணங்களையுடைய இந்தத் தகப்பனுருக்கு

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

11. பாலகன் உதிப்பா னுகும் பகருவோ மவன் குணத்தை
சீலம்போல் வெளி மயக்கன் தேக மானிறத்த னுகும்
காலத்தை அறிந்து ரைப்பன் கல்விமான் யூகை சாலி
வேலன்மேல் பக்தி பூண்பன் வெற்றியாம் தொடு
[வழக்கும்.

11. ஜாதகப் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்ருேம். இவர் பரிசுத்தமாகவும் நல்லொழுக்கத்தை யுடையவராகவும் இருப்பதைப்போல வெளியாருக்குக் காண்பித்துக்கொண்டு ஜனங்களை ஏமாற்றுவார். இவர் மாநிறமான தேகத்தையுடையவராவர். இவர் காலத்தை நன்ருகத் தெரிந்துகொண்டு அதற்குத் தகுந்தாற்போல பேசுவார். இவர் படித்தவராவர், நல்லது கெட்டது என்று பகுத்தறியக்கூடிய நுட்பமான அறிவையுடையராவர். இவர் முருகக்கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் நடத்துகின்ற நீண்டகாலம் வியாபித்திருக்கின்ற வியாஜ்ஜியத்தில் ஜயத்தை அடைவார்.

12. அன்னிய பாஷை கற்பன் அல்பமாம் கோபி யாவன்
மன்னரால் சிலனுள் உய்வன் மாத்தனை லகுவில்
[வெல்வன்
தன்னுடல் மெலிவு நீட்சி சந்தேக மனத்த னுகும்
உன்னத யில்லம் செய்வன் உயர்வோர்கள் நேசம்
[கொள்வன்.

12. ஜாதகர் அன்னிய பாஷையாகிய ஆங்கிலபாஷையைப் படிப்பார். இவர் கொஞ்சங் கோபத்தையுடையவராவர். இவர் கொஞ்சகாலம் இராஜாங்கத்தாரால் ஜீவனஞ்செய்வார், எதிரியைச் சீக்கிரத்திலும் சுலபமாகவும் ஜயித்துவிடுவார். இவர் நீண்டு மெலிந்த தேகத்தையுடையவராவர், சந்தேகத்தையுடைய மனத்தை யுடையவராவர். இவர் ஒரு சிறந்த அழகிய

வீட்டைக் கட்டுவார். இவர் பெரிய மனிதர்களுடைய சிநேகிதத்தை யுடையவராவர்.

13. கரமதில் விஷ்ணு ரேகை கமல ரேகையுமே உண்டு
உறன்முறை மதிக்க உய்வன் உண்டியும் சுகமாய்
[கொள்வன்
துரை ராசர் பேட்டி கொள்வன் தோகை சொல் கடவா
[னும்
தரையில்லம் பின்னால் சேர்ப்பன் தன்துணை சொல்
[தட்டாதாம்.

13. ஜாதகா தன்னுடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகையையும் தாமரை ரேகையையும் உடையவராவர். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னை மதிக்கக்கூடிய நிலைமையிலிருந்துகொண்டு வாழ்வார். இவர் சுகமான நல்ல, சாப்பாட்டை யுடையவராவர். இவர் அரசர்களுடைய தரிசனத்தை அடைவார்; தன்னுடைய மனைவியினுடைய வார்த்தைக்கு மீறி நடக்துகொள்ளமாட்டார். இவர் தன்னுடைய பிற்காலத்தில் நிலங்களையும் வீட்டையும் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். இவர் தன்னுடைய சகோதரருடைய பேச்சை தள்ளிவிடமாட்டார்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

14. தன்துணை அறுவர் தோன்றும் தங்காது யாவும் தானே
முன்துணை ஆண்பா லொன்று மொழிகிறோம் தீர்க்க
[மாக
அன்னவன் கேட்டை னாளாம் அணுகுமே கோலாம் ராசி
தன்னிலே உதிப்பா னாகும் சாற்றுவோ மவன்
[குணத்தை.

14. ஜாதகருக்கு ஆறு சகோதரர்கள் (பின்னால்) பிறப்பார்கள். இவர்கள் எல்லோரும் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். இவருக்கு மூத்த சகோதரவர் ஒருவர் நீண்டஆயுளை உடையவர் ஆவர் என்று செல்லுகின்றோம். இவர் கேட்டை நட்சத்திரத்தில் துலாராசியில் பிறப்பார், இவருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் மூத்த சகோதரருடைய குணாதிசயங்கள்

15. மானிறம் சமதேகம் மாரியால் வடிவு முண்டு
ஊன மில்லாத தேகி உறுதி யில்லாத நெஞ்சம்
பான்மையாய் பேசு வானும் படிப்பனும் ரெண்டு கல்வி
ஈனமாம் குணங்க ளில்லான் யிடர் செய்யான்
[யாவர்க்கும்.

15. ஜாதகருடைய மூத்த சகோதரர் மாநிறமான தேகத்தையுடையவ ராவர், நடுத்தரமான தேகத்தையுடையவர். இவர் அம்மையால் தேதத்தில் அடையாளத்தையுடையவராவர். இவர் யாதொரு அவயவக்குறைவுமில் லாத தேகத்தையுடையவரவார். இவர் நிலையாக உள்ள திடமான மனத்தை உடையவரல்லர் இவர் பக்குவமாகவும் சாமார்த்தியமாகவும் பேசுவார். இரண்டு பாஷைகளில் வாசித்தவராவர்.

16. மன்னரால் தொழிலும் வாய்க்கும் மாதுரு தந்தைக் [கிஷ்டம்
அன்னிய ருறவு கொள்வான் அன்புள மனத்த னுகும்
பொன்னதைத் தேடுவானும் புதிதாக யில்லம் செய்வன்
அன்னவன் வயது தீர்க்கம் அறுமுகன் பக்தி கொள்வன்.

16. ஜாதகருடைய மூத்த சகோதரருக்கு அரசாங்கத்தில் வேலை கிடைக்கும். இவர் தாய் தகப்பனுருக்கு இஷ்டமுள்ளவராக விருப்பார். இவர் அயலாருடைய சினேகிதத்தையுடையவராவர். இவர் பிறரிடத்தில் பிரியமுள்ள நல்ல மனத்தையுடையவராவர். இவர் தனத்சைச் சம்பாதிப் பார், புதியதாக வீட்டைக் கட்டுவார். இவர் நீண்ட ஆயுளை யுடையவராவர், முருகக்கடவுளின்பேரில் அன்புடையவராவர்.

17. மனைவியு மொன்றே தீர்க்கம்
மாதுரு வர்க்கம் நேறும்
கன்முள சுதராண் ரெண்டில்
கன்னிமார் ஒன்றே தீர்க்கம்
துணைவனை ஆதரிப்பன்
சொல்லது காப்பா னுகும்
வினைமன மில்லா னுகும்
வித்தகி கேட்டி டாயே.

17. ஜாதகருடைய மூத்த சகோதரருக்கு ஒரே ஒரு மனைவி நீண்ட ஆயுளையுடையவளாக விருப்பாள். இவள் இவருடைய தாயாருடைய பந்துக்களிலிருந்து வந்து சம்பவிப்பாள். இவருக்கு இரண்டு பிள்ளைகளும் ஒரு பெண்ணும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவர் தன் னுடைய சகோதரரைக் காப்பாற்றுவார். இவர்தான் சொல்லிய வார்த்தை கள் பிரகாரம் தவருமல் நடந்துகொள்ளுவார். இவர் கெடுதியான மனத்தை யுடையவரல்லர், பார்வதியம்மையே ! கேட்பீராக.

18. அத்திரி தடுத்துச் சொல்வார் அந்துணை தோஷ [மென்றீர்
குத்தத்தைச் சொல்லு மென்ன குசனுமே மூன்ரே னுகி
பத்தின யிடம் ஆருக பார்க்கவன் கூடி நிற்க
இத்தகை பலத்தினுலே யியம்பினேம் துணைவர் [தோஷம்.

18. அத்திரிமா முனிவர் தடுத்துக் கேட்கின்றார். ஜாதகருக்குச் சகோதர தோஷமுண்டு என்று சொன்னீரே ! இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, குசன் என்ற அங்காரகன் மூன்றாவது வீட்டிற்குடையவராகி ஆறாவது வீட்டில் இருந்துகொண்டு பார்க்கவன் என்ற சுக்கிரனுடன் கூடி இருப்பதால் இவ்விதமான பலத்தால் சகோதர தோஷத்தைச் சொன்னோம்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

19. மாதுரு குணத்தைச் சொல்வேன் மானிறம் வாத தேகி
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உன்மனம் கபடு மில்லாள்
பாதகமன மில்லா தாள் பர்த்தாவின் மனதுக் [கேத்தோள்
சூதிலாள் பொறுமை சாலி தொல்புவி வறுமை காணாள்.

19. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் மாநிறமான தேகத்தையுடையவளாவள், வாத தேகமாகிய பெரிய தேகத்தையுடையவளாவள். இவள் இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவாள், இவள் தன்னுடைய மனத்தில் வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றையுடையவளல்ல. இவள் கெடுதியான மனத்தையுடையவளல்ல, இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாப்போல ஒற்றுமையாகவிருப்பாள். இவள் வஞ்சனையை யுடையவளல்லள், பொறுமையையும், சாந்தத்தையும் உடையவளாவள். இந்தப் பழைய பூமியில் இவள் தரித்திரத்தையும், கஷ்டங்களையும் அநுபவிக்கமாட்டாள்.

20. அன்னையும் வந்த பின்பு அம்புலி போலே யோகம்
தன்துணை ஆண்பா லொன்று சாற்றுவோம் பாவைக் [கேதான்
கன்னிகை காணா தாகும் கழறுவீ ரந்த சங்கை
முன்சென்ம வினையாம் தாயே மொழிகுவீர் பூர்வம் [தன்னை.

20. ஜாதகருடைய தாயார் தன்னுடைய புருஷனுடைய வீட்டிற்குப் போன பிறகு புருஷனுக்கு வளர்பிறை சந்திரனைப்போல யோகம் நாளுக்கு நாள் அதிகரிக்கப்பட்டது. இவளுடைய சகோதரர் ஒருவரே யாவர் என்று சொல்லுகின்றோம். இவளுக்குச் சகோதரி கிடையாது. இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இது முன்ஜன்மத்திய பாவத்தினால் இவ்விதமாக நேர்ந்ததாகும், பார்வதியம்மையே , இதன்பேரில் இவளுடைய முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே,

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

21. கொங்கு நாட தனிலே தான் குதித்தனள் கோகு லத்தில்
தீங்கிலாக் குடும்பி யாகி சுதர்களு மதிக முண்டாய்

அங்கவள் வாழும் ளுளில் அணுகின வினையைக்
[கேண்மோ
பாங்கியாம் நாத்தி பேரில் பகர்ந்தனள் சிலேடை
[வார்த்தை.

21. கொங்கு நாட்டிலே ஜாதகருடைய தாயார் கோகுலம் என்ற யாதவர் ஜாதியில் பிறந்தாள். இவள் கெடுதியில்லாத கஷ்டத்தை அநுபவிக்காத குடும்பஸ்தளாகியும், அநேக பிள்ளைகளை யுடையவளாகியும் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றேம், கேட்பீராக. இவள் தன்னுடைய நாத்தினுருடைய பேரில் இரண்டு அர்த்தங்களையுடைய சில நிந்தையான வார்த்தைகளைச் சொன்னுள்.

22. மாதுவும் மனம்கலங்கி வரைகுருள் சாபம் தானும்
தீதாக வார்த்தை யென்மேல் செப்பிய பாவிக்கே தான்
வேதனை அதிகமுண்டாய் விளங்காது துணைவர் புத்திரர்
காதலி பின்சென் மத்தில் காணுது துணை பெண்ணும்
[தான்.

22. ஜாதகரின் தாயாருடைய நாத்தனுர் தன்னுடைய மனத்தில் துன்பத்தை அடைந்து சாபத்தைக் கொடுக்கின்ருள். என்பேரில் கெடுதியாக வார்த்தைகளைச் சொன்ன பாபியாகிய உனக்குத் துன்பங்கள் அதிகமாக நேரிட்டும், உனக்குச் சகோதரங்களும் புத்திரர்களும் விருத்தியடையக் கூடாது, • உன்னுடைய மறுஜன்மத்தில் உனக்குச் சகோதரி இருக்கக் கூடாது

23. கன்னிகை சுதரு மின்றி காசினி தன்னில் வாழ்வாய்
இன்னமும் பலவார் சொன்ளுள் யெய்திற்று அந்த
[சாபம்
தென்திசை காலனுடு சென்றுமே பிரமன் லக்கம்
அன்னையு முதித்தா ளாகும் அணுகிடு மாது சாபம்.

23. உனக்குப் பெண் குழந்தை இருக்கக்கூடாது, நீ பூமியில் இவ்விதமாக வாழக்கடவது என்று நாத்தனுர் சொல்லியும் இன்னமும் பல வாருகச் சொன்னுள். இந்தச் சாபம் தாயாரை வந்தடைந்தது, இவள் இறந்து தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள், இந்தச் சாபம் இவளை வந்தடைந்தது.

24. துணை பெண்ணு மில்லாதாகி சுதர்:பெண்ணு மில்லாதாகி
கனமுள நாத்தி யின்றி காதலி வாழ்வா ளாகும்

அணையவே யிவள் பின்சென்மம் அருணையில் சைவ
[சேயாய்
சினமிலா உதிப்பா ளாகும் தேவியே கேட்டி டாயே.

24. ஜாதகருடைய தாயார் தனக்குச் சகோதரியில்லாதவளாகவும், பெண் குழந்தை யில்லாதவளாகவும், மேன்மையான நாத்தனூர் இல்லாதவளாகவும் வாழ்வாள், இவள் தன்னுடைய மறு ஜன்மத்தில் அருணை என்ற அருணுசலமாகிய திருவண்ணுமலை க்ஷேத்திரத்தில் சைவ ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணுதிசயங்களும்

25. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பத்தொன்
[பாண்டில்
நீலியுமுள்ளூர் மேற்கில் நேறுவாள் குணத்தைச்
[சொல்வேன்
சீலியாம் புத்திசாலி சிறுத்தோர்க் குதவி செய்வள்
ஞாலமேல் நல்லோ ளாவள் நாயகன் மனதுக்
[கேத்தோள்.

25. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்குப் பத்தொன்பதாவது வயதில் மனைவி உள்ளூரில் மேற்குத் திக்கிலிருந்து வந்து நேரிடுவாள், இவளுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் பரிசுத்தமானவள், நல்லொழுக்கத்தை யுடையவுள், இவள் அறிவுள்ளவள், இவள் ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்பவளாவள், இவர் இந்தப் பூமியில் நல்லவளாக விருப்பாள், இவள் தன்னுடைய புருஷுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாக விருப்பாள்.

26. மாந்தளிர் மேனி யாகும் வளமையாய் குடும்ப மேற்பள்
ஏந்திய தனத்த ளாகும் யிடரான புத்தி யில்லாள்
காந்தம் போல் குணமு முண்டு கசடரை உறவு
[கொள்ளாள்
கூர்ந்துமே வார்த்தை சொல்வள் கோதையும்
[தீர்க்க சீவி.

26. ஜாதகருடைய மனைவி மாந்தளிரைப்போல ஒருவித சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவளாவள், இவள் சிறந்த, மேன்மையான குடும்பத்தை அடைவாள், இவள் செல்வத்தை யுடையவளாவள், இவள் கெடுதியான புத்தியை யுடையவளல்லள். இவள் காந்தம்போல பிறரை வலித்துக் கொள்ளுகின்ற வசியப்படுத்திக் கொள்ளுகின்ற குணத்தை யுடையவளா

வள். இவள் கீழ் மக்களுடன் சிநேகஞ்செய்து கொள்ளமாட்டாள். இவள் சிறப்பான வார்த்தைகளை மிகுதியாகச் சொல்லுவாள். இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள்

27. அன்னம் போல் வடிவு மொக்கும் அடாபிடி கூறு [ளாகும்
அன்னமு மன்பா யிவள் ஆபத் தென்றோரைக் காப்பள்
அன்னவள் வந்த பின்பு அம்புலி போலே யோகம்
அன்னவள் தனக்கு புத்திரர் அறிவிப்போம் தாயே [யாங்கள்.

27. ஜாதகருடைய மனைவி அன்னப்பறவையைப்போல அழகான ரூபத்தையுடைய தேகத்தை யுடையவளாவள். இவள் அநியாயமாகவும் முரட்டுத்தனமாகவும் வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள், நாங்கள் கஷ்டத்தை அநுபவித்துக் கொண்டிருக்கின்றோம் என்று சொல்லுகின்றவர்களை இவள் காப்பாற்றுவாள். இவள் புருஷனுடைய வீட்டுக்குப் போன பிறகு புருஷனுக்கு வளர்பிறை சந்திரனைப்போல யோகம் நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டே போகும். இவளுக்குச் சந்ததி விஷயத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! நாங்கள்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

28. சுதர்களு மிருனன்காக தோன்றிடும் சிலது சேதம்
சுதமுடன் ஆண்பால் மூன்று சக்திமா ரொருவ ராகும்
இதுனன்கும் தீர்க்க மெய்தும் இடர்சுதர் விபரம் [சொல்வாய்
முதல் னன்கோன் ஆறும் யெட்டும் மேகுமே பால [னுக்கு.

28. ஜாதகருக்கு மொத்தம் எட்டு குழந்தைகள் பிறப்பார்கள். இவற்றில் சில குழந்தைகள் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். மூன்று பிள்ளைகளும் ஒரு பெண்ணும் ஆகமொத்தத்தில் நான்கு குழந்தைகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இறந்துபோகும் குழந்தைகளினுடைய விபரத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, ஜாதகருக்கு ஓராவது, நான்காவது, ஆருவது, எட்டாவது குழந்தைகள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள்.

29. என்ன காரணத் தினலே யீன்ற சேய்பாதி நஷ்டம்
முன்னமே கூறு மென்ன முதயனும் விரயோனகி
கன்னிக்கு ஐந்தில் நிற்க காளைகள் தோஷம் சொன்னேம்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

29. என்ன காரணத்தினுல் பிறந்த குழந்தைகளில் பாதிபேர் சீக்கிரத்தில் இறந்துபோவார்கள் இதைச் சீக்கிரத்தில் சொல்லுவீர் என்று கேட்கவே, உதயன் என்ற சூரியன் விரயோனுகி அஃதாவது பன்னிரண்டிற்குடையவுராகி கன்னியா ராசிக்கு ஐந்தாவது வீட்டில் இருப்பதாலே குழந்தைகளுக்குத் தோஷத்தை நாங்கள் சொன்னேம். மேன்மையான சிறந்த யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய முன்ஜன்மம்

30. சாதகன் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் பழனி ஞட்டில்
சூதுசேய் வைசிய சேயாம் தோன்றியே செட்டு செய்து
காதலி சுதர்கள் உண்டாய் கனமுள குடும்பி யாகி
மேதினில் நல்லோ ஞகி வேலன்மேல் பத்தி கொண்டு.

30. ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். இவர் பழனி க்ஷேத்திரத்தில் வைசியகுல ஜாதியில் ஆணுகப் பிறந்து வியாபாரத்தைச் செய்துகொண்டும், மனைவி மக்களை யுடையவராகியுமிருந்தும், மேன்மையான குடும்பஸ்தராகவுமிருந்தும், பூமியில் நல்லவராகவிருந்தும் முருகக் கடவுளின்பேரில் அன்புடையவராகியுமிருந்தும்,

## ஜாதகருடைய யோகபாவம்

31. அதிதிகட் கன்ன மீந்து அந்தகனுட டைந்து
விதியவன் வரையப் பட்டு விளங்குவ னிந்த பாலன்
வதிபன்தன் யோகச் சேதி வரைகிறேம் தாயே கேளும்
சதிசெய்யா மனத்த ஞகும் சல்லியம் கொள்ளா ஞகும்.

31. சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டு மிருந்தும், பிறகு இறந்து, எமபட்டணத்திற்குச் சென்று, பிர்மதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் இந்த ஜாதகர் வந்து பிறந்திருக்கின்ருர். இவருடைய யோக விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேம், பார்வதியம்மையே! கேட்பீராக.

32. இல்லமும் புதிதாய் செய்வன் யேவலாள் உடைய ஞகும்
நல்லதோர் தலங்கள் செல்வன் நாட்டினில் புகழு [மேற்பன்
சொல்லதைக் காப்பா ஞகும் துறவோர்கள் பத்தி [பூண்பன்
மல்லின் முன்செல்லா ஞகும் வரசர்க்கு யிவன்சொல் [மேன்மை

32. ஜாதகர் வீட்டைப் புதியதாகக் கட்டுவார், இவர் வேலையாட்களை யுடையவராவர். இவர் சிறந்த தெய்வீக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போவார், இவர் தன்னுடைய ஊரில் கீர்த்தியை யடைவார். இவர்தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் தவறிடாமல் நடந்துகொள்ளுவார், இவர் சந்நியாசிகளிடத்திலும், பரதேசிகளிடத்திலும் அன்புடையவராக விருப்பர். இவர் சண்டை சச்சரவுகளில் முதன்மையானவராகவும் முன்ன தாகவும் போகமாட்டார் இவருடைய சொல் அரசாங்கத்தாருக்குச் சிறந்த தாகவும் மதிப்பிற்குரியதாகவும் இருக்கும்.

33. யோக மெவ்விதமாய் சொன்னீர் யுரைப்பீர் களந்த [சங்கை
பாகனு பானு மஞ்சில் பார்ப்பானு ஞலிலாக
நாகனு தசமம் தங்க நன்மதி நவத்தி லுச்சம்
ஆகவே காரி லாபம் அணுகின பலத்தால் சொல்வோம்.

33, ஜாதகருக்கு எந்தக்காரணத்திஞல் யோகத்தைச் சொன்னீர்? அந்தக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, பாகன் என்ற புதனும் பானு என்ற சூரியனும், ஐந்தாவது வீட்டிலிருப்பதாலும், பார்ப்பான் என்ற குரு நாலாவது வீட்டிலிருப்பதாலும், நாகன் என்ற ராகு தசமம் என்ற பத்தாவது வீட்டிலிருப்பதாலும், நல்லவராகிய, சுபராகிய சந்திரன் ஒன்பதில் உச்சமாக விருப்பதாலும், காரி என்ற சனி லாபம் என்ற பதிஞேராவது வீட்டிலிருப்பதாலும் உண்டாகின்ற யோக பலத்திஞல் நாங்கள் சொன்ஞேம்.

34. எந்த காலத்தில் யில்லம் யெய்திடும் விபரம் சொல்வாய்
வந்தவ னிருபா ஞண்டு மேலேதான் யில்லம் செய்வன்
தந்தன மதிகம் சேர்ப்பன் சகடு வாகனமு மேற்பன்
முந்திஞள் யோக மில்லா மொழிகுரே மீரெட்டின் மேல்.

34. ஜாதகருக்கு எந்த காலத்தில் வீடு கிடைக்கும், என்ற விவரத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, ஜாதகர் தன்னுடைய இருபது வயதிற்கு மேலே வீட்டைக் கட்டுவார். இவர் சுயார்ஜித பணத்தை அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார், வண்டி வாகனங்களையும் அடைவார். இவருக்கு ஆதிகாலத்தில் யோகமில்லை, இவருக்குப் பதினெட்டாவது வயதிற்குப் பிறகு

35. பிறையது போலே யோகம் பொருந்திடும் பால னுக்கு
பொறுமையும் புகழு மெய்தல் பொற்பணி சேர்ப்பா [ஞகும்
அறுமுகன் அருளு மோங்கும் அரசர்பால் அணுகி [வாழ்வன்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

35. ஜாதகருக்கு வளர்பிறை சந்திரனைப்போல யோகம் நாளுக்கு நாள் அதிகப்பட்டுக்கொண்டே யிருக்கும். ஜாதகர் பொறுமையை யுடைய வராவர், கீர்த்தியை யடைவார், தனம், ஆடை ஆபரணம் ஆகிய இவற்றைச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். இவருக்கு ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின் கிருபையும் கடாட்சமும் அதிகப்படும். இவர் அரசர்களிடத்திற்குச் சென்று அவர்களுடைய உதவியால் ஜிவிப்பார். கறுப்பு மத யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனாருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

36. பிருகுமே புகலுகின்றார் புந்திடு பாலனுக்கு
கரும காலங்கள் தன்னை கழறுவீர் முனியே நீதான்
அருஅந்து ஆண்டு தன்னில் அவன்தந்தை யுடலம் [யேகும்
மறுசென்மம் தில்லை தன்னில் மறைகுல முதிப்பா னாகும்.

36. பிருகு மஹரிஷி கேட்கின்றார். ஜாதகருக்கு எப்போது கர்ம காலங்கள் நேரிடுகின்றன. இவற்றைச் சொல்லுவீர் முனிவரே! நீர், என்று கேட்கவே, ஜாதகருக்கு முப்பதாவது வயதில் இவருடைய தகப்பனார் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்துபோய்விடும். இவருடைய தகப்பனார் இறந்து இவருடைய தேகம் அழிந்துமறைந்து போய்விடும். இவருடைய தகப்பனார் தன்னுடைய மறுஜன்மத்தில் தில்லை என்ற சிதம்பர க்ஷேத்திரத்தில் பிராமண ஜாதியில் ஆணாகப் பிறப்பார்

37. இந்ததோர் சென்மம் தன்னில் இவன் செய்தபுண்ணிய [மென்ன
முந்தவே கூறுமென்ன மொழியதைக் கார்த்த லாலும்
சிந்தையும் நல்லதாயும் சிறுத்தோர்க் குதவி யாயும்
கந்தன்மேல் பக்தியாயும் கடந்தோர்க் கன்ன மீந்தும்.

37. இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தகப்பனார் எவ்விதமான புண்ணியங்களைச் செய்திருக்கின்றார், இவற்றை உடனே சொல்லுவீர் என்று கேட்கவே, இவர் தன்னுடைய வார்த்தைகள் பிரகாரம் தவறாமல் நடந்துகொண்டதாலும், இவர் நல்ல மனத்தை யுடையவராயும், ஏழைகளுக்கு உபகாரத்தைச் செய்துகொண்டும், முருகக் கடவுளின்பேரில் அன்புடையவராயும், சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போட்டுக்கொண்டும்,

## ஜாதகரின் தாயாருடைய மரணகாலம்

38. சிலர்கள் ஆபத்தைக் காத்தும் தீரனும் வாழ்வ தாலே
குலவுவான் மறை குலத்தில் குறித்தது தப்பா தாகும்
நலமுள அன்னைக் கேதான் நாற்பது ஆண்டு தன்னில்
நிலைவிட்டுக் காலனுடு நிமலியும் சேர்வா ளாகும்.

38. சில ஜனங்களை அவர்களுடைய கஷ்ட காலங்களில் காப்பாற்றி கொண்டும் வாழ்வதாலே பிராமண ஜாதியில் பிறப்பார். நாங்கள் சொல்லியது தவறிப்போகாது. ஜாதகருடைய நாற்பதாவது வயதில் இவருடைய தாயாருக்கு மரணம் நேரிட்டு இவள் தன்னுடைய இடத்தைவிட்டு எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்துவிடுவாள்.

## ஜாதகரின் மரண காலமும் மறுஜன்மமும்

39. மந்தனுக் கறுபா னெட்டில் மார்கழி மாதம் தன்னில்
தெந்திசை காலனுடு சேருவா னென்று சொல்வோம்
பிந்திய சென்மம் கேளாய் பிரிதிவு தன்னிலே தான்
தந்தன முடையோ னுக்கு செனிப்பனும் சௌராஷ்டிர
[வமிசம்.

39. ஜாதகருக்குத் தன்னுடைய அறுபத்தெட்டாவது வயதில் மார்கழி மாதத்தில் மரணம் நேரிட்டு இவர் தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்துவிடுவார் என்று சொல்லுகின்றோம். இவருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவர் பிரிதிவுஸ்தலம் என்ற காஞ்சீபுரத்தில் சுயார்ஜித சொத்தை யுடையவருக்கு சௌராஷ்டிர ஜாதி என்ற பட்டு நூல்கார ஜாதியில் பிறப்பார்.

40. உதித்திடு காலம் தன்னில் ரோகிணி முதல் பாதத்தில்
மதிதிசை ஆண்டு யெட்டும் மாதமும் தசமே யாகும்
சதியிலா பூர்வம் சொன்னோம் சாற்றுவோம் பின்பால்
[சேதி
அதிதியை ஆதரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

40. ஜாதகர் பிறந்த காலத்தில் ரோகிணி நட்சத்திரத்தில் முதலாவது பாதம் ஆகும். இதற்குரிய சந்திரமகா தசையில் இருப்பு எட்டு வருஷங்களும் பத்து மாதங்களும் ஆகும். இதுவரையிலும் பூர்வபாகம் என்ற முதலாவது பாகத்தைச் சொல்லி முடித்துவிட்டோம். மற்ற விஷயங்களைப் பின்னுல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். சந்நியாசிகளையும் பரதேசிகளையும் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

(C. G. R.)

# ஜாதகம் 42

## ஜனனகால கிரகநிலை

1. [1]திங்களு[2]வீணையாக [3]சிகி[4]மாதை [5]பொன்ஞேன் [6]தேளில்
[7]பங்கயன் [8]மேருவாக [9]பணி [10]சேயு மீனமாக
துங்கமாம் [11]புந்தி [12]வெள்ளி சனி [13]மானில் கன்னி
[சென்மம்
இங்கிவை கிரகம் நின்ருல் யியம்புவீர் பலனைத் தானே

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் மிதுனத்திலும், கேது கன்னியிலும், குரு விருச்சிகத்திலும் சூரியன் தனுசிலும், ராகுவும் அங்காரகனும் மீனத்திலும், புதனும், சுக்கிரனும், சனியும் மகரத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| அங்காரகன் ராகு | | | சந்திரன் |
| | இராசி சக்கரம் | | |
| புதன் சுக்கிரன் சனி | | | |
| சூரியன் | குரு | | லக்கினம் கேது |

மிருகசீர்ஷம் 4-ஆம் பாதம் அங்காரகதசை ஞு 0—2—0.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் புதனும், கடகத்திற் சுக்கிரனும், சிம்மத்தில் அங்காரகனும், குருவும், சனியும், கன்னியில் ராகுவும், விருச்சிகத்தில் சந்திரனும், தனுசில் சூரியனும், மீனத்தில் கேதுவும் ஆகும்.

1. சந்திரன்
2. மிதுனம்
3. கேது
4. கன்னி
5. குரு
6. விருச்சிகம்
7. சூரியன்
8. தனுசு
9. ராகு
10. அங்காரகன்
11. புதன்
12. சுக்கிரன்
13. மகரம்

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. காதலி கேட்கும் போது கௌசிகர் கூறுகின்றார்
மேதினி ஆண்பால் சென்மம் விளம்புவோம் கண்டம்
[தானும்
நீதியாய் வடதென் வீதி நிகர்வாசல் குடகு வாசல்
போதக வானை யீசன் பொருந்திடு முத்திர திக்கில்.

2. பார்வதியம்மையார் கேட்கும் போது கௌசிக முனிவர் சொல்லு கின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்த நாட்டின் எல்லையைச் சொல்லுகின்றோம். பிறந்த வீடு வடக்குத் தெற்குத் தெருவில் மேற்கு வாயிலை யுடையதாகும். இளம் யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளின் கோயிலும் சிவபெருமானுடைய கோயிலும் வடக்குத் திக்கில் இருக்கும்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

3. தென்திசை அருகர் வாசம் சிறப்பிலா (மால்) தான்
[கீழ்பால்
அந்தரி காளி தென்மேல் அணுகிய சிறுவூ ராகும்
வந்தவன் சின குலத்தில் வரைகிறோம் குடும்பச் சேதி
தந்தையின் துணைவ ரைந்தில் தங்காது சிலது
[யென்றோம்.

3. தெற்குத் திக்கில் அருகருடைய கோயிலிருக்கும். பாழடைந்த மகாவிஷ்ணுவின் கோயில் கிழக்கு திக்கிலிருக்கும். பார்வதியம்மன் கோயிலும் காளியம்மன் கோயிலும் தென் மேற்குத் திக்கிலிருக்கும். பிறந்த ஊர் சிறிய கிராமமாகும். ஜாதகர் அருகருடைய (சமணருடைய) ஜாதியில் பிறந்திருக்கின்றார். இவருடைய குடும்ப விஷயங்களைச் சொல்லுகின்றோம் இவருடைய தகப்பனுருடைய சகோதரர்கள் ஐந்து பேராவர். இவர்களில் சிலர் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம்.

4. கன்னிகை யொன்று தீர்க்கம் காவலவ்வா ருகும்
பின்துணை ஆண்பா லாகும் பேசுவோ மவன் குணத்தை
உன்னத கல்வி மேன்மை உயர்வான புத்தி யேற்பன்
துற்குண மில்லான் நல்லன் துறவிக்கு இவன்சொல்
[மேன்மை.

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர்களில் ஒரு சகோதரியும் ஒரு சகோதரனும் நீண்ட ஆயுளை யுடையவர்களாவார்கள், தகப்பனாரின் சகோதரர் இளைய சகோதரராவர். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் அதிகமான வித்தையைச் சிறப்பாக வாசித்தவராவர்,

சிறந்த அறிவை யுடையவராவர், இவர் கெட்ட குணத்தை யுடையவரல்லா இவர் நல்லவராவர். சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் இவருடைய வார்த்தைகள் சிறப்புடையனவாகும்.

5. ஞான நூலறி வானுகும் நாதனுர் பக்தி பூண்பன்
ஈனரை உறவு கொள்ளான் யெதிரியை வசியம்
[கொள்வன்
கானிறம் பூமிதன்னுல் கர்தலன் உய்வா னுகும்
ஊனமில்லாத தேகி உயர்வான தலங்கள் செல்வன்.

5. ஜாதகரின் சிறிய தகப்பனுர் ஞான நூலை வாசித்தறிந்தவராவர். இவர் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் கீழ் மக்களுடன் சிநேகஞ் செய்து கொள்ள மாட்டார். தன்னுடைய விரோதியை தன் பக்க மாக விருக்கும்படியாய்ச் செய்து கொள்ளுவார். இவர் மேகத்தைப் போன்ற ஒருவிதமான கறுப்பு நிறமான தேகத்தை யுடையவராவர். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். இவர் யாதொரு அவயக் குறைவு மில்லாத தேகத்தை யுடையவராவார். இவர் சிறந்த மேன்மை யான தெய்விக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போவார்.

6. பாரியு மொன்று யென்றேம் பாலர்கள் ஆண்பால்
[காணுன்
நாரியு மொன்று யென்றேம் நவின்றிடான் கட்டு
[வார்த்தை
வீரியன் தனக்கு புத்திரர் விளங்காத காரணம் சொல்
மாரனு முன் வினையாய் தாயே வரைகுவீ ரந்த சங்கை.

6. ஜாதகருடைய சிறிய தகப்பனுர் ஒரே ஒரு மனைவியை யுடையவ ரென்று சொல்லுகின்றேம். இவருக்கு ஆண் குழந்தைகள் கிடையா, ஒரே ஒரு பெண் குழந்தை தான் இருக்கும் என்று சொல்லுகின்றேம், இவர் பொய்யான, பிணைந்த வார்த்தைகளையும் பழமொழிகளையுஞ் சொல்ல மாட் டார். இவருக்குப் புத்திரரில்லாத காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருடைய பூர்வ ஜன்மத்திய பாவத்தின் பயனுகப் பிள்ளைகள் கிடையாது பார்வதியம்மையே! என்று சொல்லவே, இந்தப் பாவத்தைச் சொல்லுவீர் என்று கேட்டார்.

## ஜாதகரின் சிறிய தகப்பனுருடைய முன்ஜன்மம்

7. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறேம் பாண்டி
[னுட்டில்
அன்னவன் மறை குலத்தில் அணிகியே மனைவி
[மைந்தர்

பொன்பல முடைய ஞகிப் பூமியில் சீவித்தே தான்
இன்னவன் வாழுனளில் யியம்புவோ மூழி தானே.

7. ஜாதகருடைய சிறிய தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் பாண்டிய நாட்டில் பிராமணருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து, மனைவி மக்களை யுடையவராகியும், அதிக செல்வ பலத்தை யுடையவராகியும், இந்தப் பூமியில் ஜீவித்துக் கொண்டு வாழ் கின்ற காலத்தில் இவருக்கு வந்து நேரிட்டப் பாவத்தைப் பற்றிச் சொல்லு கின்றோம்.

8. தன் குலம் யிருவர்தானும் சண்டைகள் மிகவே கொண்டு
மன்னர்பால் செல்லும் போது மாரனு மொருவர் பக்கல்
உன்னத கட்டு வார்த்தை உரைத்தனன் மற்றோ னுக்கு
பின்னங்கள் நேர்ந்த தென்றோம் புகலுவான் சாபம்
[தானும்.

8. ஜாதகரின் சிறிய தகப்பனுருடைய பந்துக்களில் இரண்டு பேர் அதிகமான சண்டை சச்சரவுகளைப் போட்டுக் கொண்டு அரசாங்க நியாஸ்தலத்திற்குப் போய் வழக்கை நடத்திய போது, இந்தச் சிறிய தகப்ப னுர் ஒருவருடைய பக்கமாக ஒரு பெரிய பொய்யைச் சொன்னுர். இதனுல் இன்னொரு கட்சிக்காரருக்குக் கெடுதிகள் உண்டாயின என்று சொல்லுகின் றோம், இந்த இன்னொரு கட்சிக்காரர் உடனே சாபத்தைக் கொடுத்தான்.

9. மித்திர பேதமாக விளம்பின பாவிக்கே தான்
புத்திர ரில்லாதாகி பிறக்கும் பின்சென்மந் தன்னில்
நித்திய கர்மத்துக்கு நேருது சுதர்கள் தானும்
இத்தகை சொல்லி சென்றுன் யெய்திற்று அந்ததோஷம்

9. சிநேகிதத் துரோகமாக என் பேரில் பொய்யைச் சொல்லிய பாவி யாகிய உனக்குப் பிள்ளைகள் இல்லாமலும். உன்னுடைய மறு ஜன்மத்தில் கூட உனக்குக் கர்ம காரியங்களைச் செய்வதற்காகப் பிள்ளைகள் இல்லாம லும் இருக்கக் கடவது'' என்று இவ்விதமான வார்த்தைகளைச் சொல்லி விட்டுக் கெடுதியை யடைந்த கட்சிக்காரர் போய் விட்டார், இந்தத் தோஷமானது இந்தச் சிறிய தகப்பனுரை வந்தடைந்தது.

10. மாரனுக் கந்தியத்தில் மைந்தர்கள் யில்லா தாகி
பாரியும் சேது புக்கி பகவானின் தொண்டு பூண்டு
சீரிய காலனுடு சென்றுமே பிரமன் லக்கம்
தீரமாய் யிக் குலத்தில் செனித்தன னென்று
[சொல்வோம்.

10. ஜாதகருடைய சிறிய தகப்பனுருக்குத் தன்னுடைய கடைசி காலத் தில் பிள்ளைகள் இல்லாமல், தானும் தன்னுடைய மனைவியும் சேது ஸ்தலத்

திற்குச் சென்று கடவுளைப் பூஜித்து இவருக்கு பணிவிடைகளைச் செய்து பிறகு இவர் இறந்து எமபட்டணத்திற்குப் போய் பிரமதேவரால் பிரமலிபி யுடன் எழுதப்பட்டு இந்த ஜாதியில் வந்து பிறந்திருக்கின்றுர் என்று சொல்லு கின்ருேம்.

11. ஆகையால் மறையோன் சாபம் அணுகிடு மிச்
[சென்மத்தில்
பாகமாமாய் சுதருண் காணு பராசரும் தடுத்துச்
[சொல்வார்
மோகமாய் சேதுக்கே தான் மேவினு னென்று
[சொன்னீர்
நாகம்போல் வந்த தோஷம் நல்கின காரணம் சொல்.

11. ஆகையால் பிராமண ஜாதியைச் சேர்ந்த மற்ருெரு கட்சிக்கார ருடைய சாபமானது இந்தச் சிறிய தகப்பனுரை வந்தடையும். இதனுல் இவருக்குப் பிள்ளை கிடையாது. உடனே பராசர மஹரிஷியானவர் தடுத்துக் கேட்கின்ருர். இவர் வெகு ஆசையுடன் சேது ஸ்தலத்திற்குப் போனுர் என்று சொன்னீரே! இவ்வித மிருக்கச் சாபமானது நாகப்பாம்பின் விஷத் தைப் போலக் கொடுமையாக வந்து சம்பவித்தக் காரணத்தைச் சொல்லு வீர் என்று பராசர மஹரிஷியானவர் கேட்கவே,

12, எத்தலம் சென்றபோதும் யெத்தீர்த்தம் தோய்ந்த
[போதும்
முத்தின குலத்தோர் சாபம் விலகாதே யென்று
[சொல்வோம்
சித்தசன் தனக்கு காமம் செய்குவார் விபரம் சொல்வாய்
வித்தகன் செய்வானுகும் விளம்புவோமிவன் பின்
[சென்மம்

12. எப்படிப்பட்ட ஸ்தலத்திற்கு யாத்திரையாகப் போன போதிலும், எவ்விதமான தெய்வீகத் தீர்த்தங்களில் ஸ்நானத்தைச் செய்த போதிலும் பிராமணருடைய சாபமானது நிவர்த்தியாகாது என்று சொல்லுகின்ருேம். இதன் பேரில் இந்தச் சிறிய தகப்பனுருக்கு யார் ஈமக் கடன்களைச் செய்வார் என்ற விஷயத்தை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, இந்த ஜாதகர் இவற்றைச் செய்வார். இனிமேல் இந்த சிறிய தகப்பனுருடைய மறுஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் சிறிய தகப்பனுருடைய பின் ஜன்மம்

13. வடதிசை காசி பக்கல் வருகுவானிக்குலத்தில்
உடையுண்டாய் யினத்துக் கெல்லாம் உபதேசியாகி
[வாழ்வன்

அடவுடன் நிரியாணத்தை அருளுவீர் முனியே நீதான்
தடையிலா முப்பானெட்டில் சண்டன் தன்பதிக்கு
[செல்வன்

13. ஜாதகருடைய சிறிய தகப்பனுர் வடக்குத் திக்கிலுள்ள காசிப் பட்டணத்திற்குச் சமீபத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய அருகர் ஜாதியில் பிறந்து தகுந்த ஆடையைத் தரித்துக் கொண்டு இந்த ஜாதியாருடைய மத சம்மந்தமான உபதேசத்தைச் செய்கின்ற குருவாகி வாழ்வார். இவரு டைய மரணத்தைப் பற்றிச் சொல்லுவீர், முனிவரே! என்று கேட்கவே, ஜாதகருக்கு முப்பத்தெட்டாவது வயதில் இவர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்து விடுவார்.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்கள்

14. தந்தையின் குணத்தை சொல்வேன் தந்தியி
நிறத்தனுகும்
தந்தமும் தரள மொக்கும் தாட்சண்பன் கணத்த புத்தி
தன்பந்து மதிக்க வாழ்வன் தரணியை பரிபாலிப்பன்
தன்கரம் கமல ரேகை சகராசர் பேட்டி கொள்வன்

14. ஜாதகரின் தகப்பனுருடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லு கின்றேன். இவர் யானையினுடைய நிறமாகிய கறுப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர். இவருடைய பற்கள் முத்துக்களைப் போல அழகாகவும் வெண்மையாகவும் இருக்கும். இவர் தயாள குணமுடையவ ராவர். சிறந்த அறிவை யுடையவராவர். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டக் கூடிய நிலைமையிலிருந்து வாழ்பவ ராவர். இவர் நிலங்களை வைத்துக் கொண்டு பயிரிட்டுக் கொண்டு வரு வார். இவர் தன்னுடைய உள்ளங்கையில் கமல ரேகை என்ற தாமரை ரேகையான ஒருவித நல்ல ரேகையை யுடையவராவர். பெரிய அரசர் களுடைய தரிசனத்தை யுடையவராவர்.

15. முன் கோபமுடனே சாத்தம் மொழியது யிரண்டுமாகும்
தன்துணை சொல்தட்டாணும் செய்குவான் கிராமசெட்டு
பின்னமாய் சொல்ப ரோகம் பொருந்திடும் துன்பம்
[காணுன்
துன் சனி ஞளே யாகும் தோன்றுமே சிம்ம ராசி

15. ஜாதகருடைய தகப்பனுருக்கு முன் கோபமும் வரும். ஆனுல் உடனே தணிந்து இவர் சாந்தமாகி விடுவார். இவர் மெய்யையும் பொய் யையும் கலந்து பேசுவார். இவர் தன்னுடைய சகோதரர்களுடைய வார்த் தைகளுக்கு மீறி நடக்க மாட்டார். இவர் கிராமத்திய வியாபாரத்தைச் செய்வார். இவருக்குச் சிறிதளவு ரோகம் அவயவ பங்கத்தை உண்டாக்கக்

கூடியதாக இருந்து கொண்டே யிருக்கும். இவர் கஷ்டங்களை அனுபவிக்க மாட்டார். இவர் சனியினுடைய நட்சத்திரமாகிய பூசத்திரத்திலும் சிம்மராசி லக்கினத்திலும் பிறந்தவராவர்.

16. ஆலம்போல் பகைவருக்கு அவனுமே கருடனுவன்
பால் தயிர் யிஷ்டம் கொள்வன் பகவானின் பத்தி
[பூண்பன்
காலத்தை அறிந்து வாழ்வன் கடந்தோர்க்கு அன்ன
[மீவன்
ஞாலங்கள் விருத்தி செய்வன் நற்றிருப்பணியும்
[செய்வன்

16. நாகப்பாம்பின் கொடுமையான விஷத்தைப் போல விருக்கின்ற விரோதிகளுக்கு ஜாதகருடைய தகப்பனுர் கருடனைப் போல பெரிய வைரியாவர். இவர் பால், தயிர், ஆகிய இவற்றின் பேரில் பிரியமுள்ளவராவர், இவர் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் கால மாறுபாடுகளையும் வித்தியாசங்களையும் நன்ருய்த்தெரிந்து கொண்டும் இவற்றிற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாக விருந்து வாழ்வார். இவர் பரதேசிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவார். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் நல்ல ஆபரணங்களையும் ஆடைகளையும் கோயில் வேலைகளையும் செய்வார்.

17. உண்டியும் வறுமை காணுன் உலகினில் சல்வியம்
[கொள்ளான்
குண்டை கோவிருத்தி யுண்டு குஞ்சர நடையுமாவன்
வண்டி வாகனமுமேற்பன் மனைவிமேல் பட்சனுவன்
அண்டர்கள் பூசை செய்வன் அணுகிடும் நாபி சூடு

17. ஜாதகருடைய தகப்பனுர் சாப்பாடு விஷயத்தில் தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மடைய மாட்டார். இவர் பூமியில் கடனை வாங்க மாட்டார். இவருக்கு எருதுகளும் பசுக்களும் விருத்தி யடைந்து நல்ல பலனைக் கொடுக்கும். இவர் யானைப் போல கம்பீரமான நடையை யுடையவராவர். இவர் வண்டி வாகனங்களையு முடையவராவர். இவர் தன்னுடைய மனைவியின் பேரில் பிரியமுள்ளவராவர். இவர் தேவர்களையும் தெய்வங்களையும் பூஜை செய்வார். இவருக்கு நாபிச் சூட்டு ரோகமுமுண்டாகும்.

## ஜாதகருடைய குணதிசயங்கள்

18. சொல்லிய குணத்தானுக்கு சுதனுமே யுதிப்பானுகும்
வல்லவன் குணத்தை சொல்வேன் மருமமில்லா
[தானுகும்

நல்லவனாகி வாழ்வன் நற்கல்வி யூகை சாலி
தல்லிக்கு பகையு மாவன் தந்தை மேல் புகழுமேற்பன்

18. இதுவரையிலும் சொல்லப்பட்ட குணகுணங்களை யுடைய தகப்பனருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் ரகசியத்தை யுடையவரல்ல. இவர் நல்லவராக விருந்து வாழ்வார். இவர் நல்ல வித்தையை யுடையவராவர். நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை யுடையவராவர். இவர் தன்னுடைய தாயாருக்கு* விரோதியாகவுமிருப்பார் இவர் தன்னுடைய தகப்பனரை விட அதிகமான கீர்த்தியை யுடையவராவர்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தாயார் விரோதியாக விருக்கும் விஷயம் :—மாதிரு ஸ்தானாதிபதியாகிய நான்கிற்குடைய குரு மூன்ருவது பாவத்திலிருப்பதாலும் இவருக்கு மூன்ருவது வீட்டில் லக்கினாதிபதியாகிய புதன் இருப்பதாலும், மாதிரு ஸ்தானாதிபதியாகிய குரு மாதிருகாரகராகிய சந்திரனுக்கு ஆருவது வீட்டில் மறைந்திருப்பதாலும் ஜாதகருக்குத் தன்னுடைய தாயார் விரோதியாக விருப்பார்.

19. மால் நிறமுணச்சல் நீட்சி மனைவியில் வாசமெய்தும்
சீலவான் ஞானம் கற்பன் சிறப்புள குடும்ப மேற்பன்
காலிகள் பனையோர் விருத்தி கழறுவோம் கிராம செட்டு
நீலியின் ஆஸ்தி சேரும் நிருபனைப் போலே வாழ்வன்

19. ஜாதகர் மகாவிஷ்ணுவின் நிறமாகிய நீலமேக வர்ணம் என்ற ஒரு விதமான நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர். இவர் நீண்டு மெலிந்த தேகத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய மனைவியினுடைய வீட்டில் வாசஞ் செய்வார். இவர் பரிசுத்தமானவர். நல்லொழுக்க முடையவராவர். இவர் வேதாந்தம் சித்தாந்தம் முதலிய ஞான வித்தைகளை கற்றுக் கொள்ளுவார். மேன்மையான சிறந்த குடும்பத்தை யுடையவராவர். இவருக்கு ஆடுமாடுகளும், நிலங்களும், ஏர்களும் விருத்தியாகி நல்ல பலன்களைக் கொடுக்கும். இவர் தன்னுடைய கிராமத்திய வியாபாரத்தைச் செய்வார். இவருக்கு இவருடைய மனைவியின் சொத்துக்கள் வந்து சேரும். இவர் ஒரு அரசனைப் போல சகல சுகபோகங்களை அநுபவித்துக் கொண்டு வாழ்வார்.

20. தோத்திரப் பிரியனாகும் துருசையு மில்லா னென்ருேம்
பாத்திர மறிவானாகும் பரியுண்டு சகடு முண்டு
யேத்தவர்க் குதவி செய்வன் இருடி மேல் வெறுப்பு [கொள்வன்
நாத்திசை பெருமை யேற்பன் நவதானிய விருத்தி [செய்வன்

20. ஜாதகர் தன்னைப் பிறர் புகழ்ந்து பேசுவதில் ஆசையுடையவராக விருப்பார். இவர் கெட்ட ஆசையையுடையவரல்ல என்று சொல்லுகின்றோம். இவர் தகுதியான விஷயங்களைத் தெரிந்துகொள்ளக்கூடிய சக்தியையுடையவராவர். இவருக்கு குதிரையுண்டு, வண்டியுமுண்டு. இவர் தன்னை வணங்கித் துதித்தவர்களுக்குத் உதவியைச் செய்வார். இவர் ரிஷிகளைப் போல உலகத்திலுள்ள வஸ்துக்களின் பேரில் வெறுப்பை அடைவார். இவர் எவ்விடத்திலும் புகழையும் கௌரவத்தையும் அடைவார், நவதான்ய வகையராக்களைப் பயிரிட்டு அதிகமாக்குவார்.

## ஜாதகருடைய மூத்த சகோதரருடைய குணாதிசயங்கள்

21 இன்னவன் செங்கை தன்னில் யிலக்கிடும் கமல ரேகை
பொன் பணி சேர்ப்பாளாகும் பூமியில் வறுமை காணான்
அன்னவன் துணை ஆணொன்று அருளுவே முன்னோனாக
பன்னுமாயில்ய னுளாம் பகர்சுரு ராசி யாகும்

20. ஜாதகருடைய சிவந்த உள்ளங்கையில் கமல ரேகை என்ற ஒரு வித தாமரை ரேகை என்ற நல்லரேகை யிருக்கும். இவர் தனம், ஆடை ஆபரணங்கள் ஆகிய இவற்றைச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். இவர் இந்த பூமியில் தரித்திரத்தையும் கஷ்டங்களையு மடையமாட்டார். இவருக்கு உடன் பிறந்தவர் ஒரு மூத்த சகோதரராவர் என்று சொல்லுகின்றோம். இந்த மூத்த சகோதரர் ஆயில்ய நட்சத்திரத்தில் மகர ராசி லக்கினத்தில் பிறந்தவராவர்.

22. குணமது புகலக் கேண்மோ கொடுமைகள் யெவர்க்கு
[மெண்ணான்
மணமிலான் மதலை காணான் மறுத்துரை அதிகம்
சொல்லான்
துணிவிலான் யூகையிலான், துறவிபோல் திரிவானாகும்
கணிகையர் மோகம் கொள்ளான் கார் நிறமென்று
[சொல்வோம்

22. ஜாதகருடைய மூத்த சகோதரருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம், கேட்பீராக. இவர் யாருக்கும் தீங்குகளை நினைக்க மாட்டார். இவர் தடுத்துப் பதிலை அதிகமாகச் சொல்லமாட்டார். இவர் தைரியமில்லாதவரர்வர், நல்லது கெட்டது என்று பகுத்தறியக்கூடிய நுட்பமான அறிவையுடையவரல்லர். இவர் சன்னியாசிகளைப் போலவும் பரதேசிகளைப்போலவும் அலைந்தும் திரிந்துகொண்டு மிருப்பார். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற :காம ஆசையை யுடையவரல்லர். இவர் மேகத்தின் நிறமாகிய கறுப்பு நிறமான தேகத்தையுடையவராவர், என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய முன் ஜன்மம்

23. பித்தமும் பிடித்தப் போலே பூமியில் திரிவானுகும்
சுத்தமு மில்லா னென்ருேம் செப்புவோ மிவன் முன்
[சென்மம்
அத்திவாழ் மலேனுடன்னில் அனுகினுன் சத்திரிய
[சேயாய்
பத்தினி மதலேயுண்டாய் பாரினில் செட்டு செய்து

23. ஜாதகருடைய மூத்த சகோதரர் பைத்தியம் பிடித்தவரைப்போல பூமியில் திரிந்துகொண்டிருப்பவராவர். இவர் சுத்தமான தேகத்தையுடையவரல்லர் என்று சொல்லுகின்ருேம். இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். யானேகள் வாசஞ்செய்கின்ற மலே நாட்டில் இவர் தன்னுடையமுன் ஜன்மத்தில் க்ஷத்திரிய ஜாதியில் ஆணுகப் பிறந்து, மனேவி மக்களேயுடையவராகிப் பூமியில் வியாபாரத்தைச் செய்துகொண்டும்

24. அரமதிலிச்சை யின்றி அனேக பட்சிகளேக் கொன்று
பெருமன்னே தந்தைக்கே தான் பிழைகளு மதிகம் செய்து
திருமகனந் தியத்தில் தேறிஞேர்க் குதவி செய்து
உரைந் தனன் சேதுக்கே தான் உறங்கினுன் காலனுடு

24. தானதர்மங்களில் ஜாதகருடைய மூத்த சகோதரர் பிரியமில்லாதவராகவும் இருந்துகொண்டும், அநேக பறவைகளேக் கொன்று கொண்டும், தன்னேப்பெற்றத் தாயாருக்கு அநேக விதமான கெடுதிகளேச் செய்துகொண்டும் இருந்தார். இவர் தன்னுடைய கடைசி காலத்தில் தேர்ச்சியையடைந்த பெரியோர்களுக்கும் சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் உபகாரத்தைச் செய்துகொண்டும், சேது ஸ்தலத்திற்கு யாத்திரையாகச் சென்றும் பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய் அங்கு தூங்கினுர்.

25. கஞ்சனுல் வரையப்பட்டு கலந்தன னிவனே யென்ருேம்
நஞ்சு போல் மூன்னூழ் தானும் நல்கிடும் பாலனுக்கு
கொஞ்சின வார்த்தை காணுன் குணபேதமுடைய னுகும்
வஞ்சனே யெண்ணு நெஞ்சம் வரைகிருே மிவன்
[பின் சென்மம்

25. பிறகு ஜாதகருடைய மூத்த சகோதரர் பிரம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ருேம். நாகப்பாம்பின் விஷத்தைப்போல முன் ஜன்மத்திய பாவம் இவரை இந்த ஜன்மத்தில் வந்து அடையும். இவர் இனிமையான வார்த்தைகளே உடையவரல்ல. இவர் தன்னுடைய குணத்தில் வித்தியாசத்தையும் தோஷத்தையுமுடைவராவர். அஃதாவது புத்தி சபலத்தையுடை

யவராவர், சித்தப் பிரமையையுடையவராவர். இவர் யாருக்கும் கெடுதியை நினைக்கமாட்டார். இவருடைய பின் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்ளேம்.

## ஜாதகரின் மூத்த சகோதரத்தின் மறு ஜன்மமும் ஜாதகருடைய விவாகமும் மனைவியின் குணுதிசயங்களும்

26. பிரிதிவிதலத்திலே தான் பிறப்பனும் வைசிய சேயாய்
திருமகன் மணத்தின் காலம் செப்புவோ மூவெட்
[டாண்டில்
வரும் கன்னி தென் கீழாகும் மாதுருவர்க்கம் தன்னில்
உரைகிறே மவள் குணத்தை உறுதியில்லாத நெஞ்சம்

26. ஜாதகருடைய மூத்த சகோதரர் பிரிதிவிஸ்தலம் என்ற காஞ்சீபுரத்தில் வைசியருடைய ஜாதியில் ஆணுகப் பிறப்பார். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகின்ளேம். இவருக்கு இருபத்தி நான்காவது வயதில் மனைவி வந்து சம்பவிப்பாள். இவர் தென் கிழக்குத் திக்கிலிருந்து தாயாருடைய பந்துக்களிலிருந்தும் வருவாள். இவளுடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்ளேம். இவள் திடமான, நிலையான, மனத்தையுடையவளல்லள்.

27. சீலியாம் விரத சாலி திகைத் தோர்க்கு அன்னமீவள்
பால் பாக்கியமுடையளாகும் பணிதி பாத்திரங்கள்
[சேர்ப்பள்
ஞால மேல் நல்லோளாவள் நாயகன் மனம் போல்
[வாழ்வள்
மால் மனை யொப்ப தாகும்மாதுவின் ஆஸ்தி நேறும்

27. ஜாதகருடைய மனைவி பரிசுத்தமானவளாவள், நல்லொழுக்கமுடையவளாவள், விரதங்களையும் நோன்புகளையும் அநுஷ்டிப்பவளாவள். இவள் பசியினல் வருந்தி திகைத்துக் கிடப்பவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவாள். இவள் பால் பாக்கியத்தை யுடையவளாகவிருப்பாள். இவள் ஆபரணங்களையும் பாத்திரங்களையும் சம்பாதித்துச் சேர்த்துவைப்பாள். இவள் இந்த பூமியில் நல்லவளாகவிருப்பாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்தைபோலவே இஷ்டத்தைப்போலவே ஒற்றுமையாகவிருந்து வாழ்வாள். இவள் மகாவிஷ்ணுவின் மனைவியாகிய லக்ஷ்மிக்குச் சமானமானவளாகவிருந்து கொண்டு வாழ்வாள். இவளுக்குத் தன்னுடைய தாயாருடைய சொத்துக்கள் கிடைக்கும்.

28. இல்லம் விட்டகலாளாகும் யிடருன புத்தியில்லாள்
தல்லி போல் காப்பாளாகும் தன் துணை ஆண்பால்
[தோஷம்

அல்லல் யில்லாமல் வாழ்வள் அவசர புத்தி கொஞ்சம்
புல்கிடும் பித்த சூடு புண்ணியவதியே கேளாய்

28. ஜாதகருடைய மனைவி தன்னுடைய தாய் வீட்டை விட்டுவிட்டுப் போகமாட்டாள் அஃதாவது (புருஷனுடைய வீட்டிற்குப் போகாமல் தன்னுடைய வீட்டிலேயே வாசஞ் செய்பவளாவள்). இவள் கெடுதியான புத்தியை யுடையவளல்லள். இவள் (தன்னுடைய புருஷனைத்) தாயாரைப் போல காப்பாற்றுபவளாவள். இவளுக்குச் சகோதரர்கள் தோஷத்தை அடைவார்கள் அஃதாவது சகோதரரில்லாமல் இருப்பாள். இவள் கஷ்டங்களை அநுபவிக்காமல் சுகமாகவிருந்து கொண்டு வாழ்வாள். இவள் சிறிதளவு அவசரமான புத்தியை யுடையவளாவள். இவளுக்குப் பித்தச்சூட்டு ரோகம் உண்டாகும். புண்ணியசாலியாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய புத்திர பாவம்

29. சுதர்களும் யிருனன்காகத்தோன்றிடும் நாலு சேதம்
சதமாகும் கன்னிரெண்டு சாசன் குணமாம் ரெண்டு
இதுனன்கும் தீர்க்க மெய்தும் யிடறுண்டு முதலில் [ரெண்டு
ஏது காரணத்தால் தோஷம் யியம்புவீர் முனியே நீதான்

29. ஜாதகருக்கு மொத்தத்தில் எட்டு பிள்ளைகள் பிறப்பார்கள். இவர்களில் நான்கு பேர்கள் சீக்கிரத்தில் இறந்து போவார்கள். இரண்டு பெண் குழந்தைகளும் இரண்டு ஆண் குழந்தைகளும் ஆக மொத்தம் நான்கு குழந்தைகள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் முதலில் பிறக்கின்ற இரண்டு குழந்தைகளும் சீக்கிரத்தில் இறந்துபோவார்கள். எந்தக் காரணத்ினல் இந்தப் புத்திர தோஷத்தைச் சொன்னீர், முனிவரே! அதை நீர் சொல்லுவீர் என்று கேட்கவே,

30. அஞ்சினில் காரி புந்தி அந்தக னிருப்பதாலே
துஞ்சிடு முதலில் ரெண்டு சுதரென்றோ மதன் பின் [விருத்தி
தஞ்சமாய் யிவன் முன்சென்மம் சாற்றுவோம் சோழனாட்டில்
வஞ்சனை செய்யும் வைசிய வமிசமுதித் தான் தானே

30. ஐந்தாவது வீட்டில் காரி என்ற சனியும், புந்தி என்ற புதனும், அந்தகன் என்ற குருடராகிய சுக்கிரனும் இருப்பதால் முதலில் பிறக்கின்ற இரண்டு குழந்தைகளும் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இதற்குப் பின்னல் பிறக்கின்றவர்களில் சிலர் இருப்பார்கள். ஜாதகருடைய முன் ஜன்மத்தைச் சொல்லுகின்றோம். இவர் சோழ நாட்டில் வைசியருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து

31. பலவித செட்டு செய்து பாரியு மதலே யுண்டாய
தலைவனும் வாழு ஞளில் சார்ந்த வினையைக் கேண்மோ
குலமதில் மாதொருத்தி குணம் கெட்டு திரியும்போது
கலகத்தை அவள் மேல் சொல்லி காதலன் யிவன்
பால் மேவ

31. பலவிதமான வியாபாரங்களை (ஜாதகர்) செய்துகொண்டும், மனைவி மக்களையுடையவராகியும், இவர் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து நேரிட்டப் பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. இவருடைய ஜாதியில் ஒரு ஸ்திரி தன்னுடைய குணம் கெடுதலையடைந்து இவள் திரிகின்ற காலத்தில் இவள் பேரில் நிந்தைகளை இவர் சொல்லவே, இவள் இவரிடத்திற்குப் போகவே,

32. பெரு தனம் யிவனும் செய்தான் பிணையதை சொல்லும்
[போது
அரிவையை விலக்க லுற்ருன் அறைகுவாள் சாபம்
[தானும்
வரும் சென்மம் துணை பெண்ணின்றி மைந்தர்கள்
[முதலில் பீடை
உரைகுவாய் வேட்டகத்தில் உன்குல ஞஸ்தியாயும்

32. ஜாதகர் பெருதனமாகக் காரியங்களைச் செய்துகொண்டு பொய்யைச் சொல்லும்போது இவளுடைய புருஷன் இவளைத் துரத்திவிட்டான். இதன்பேரில் இவள் ஜாதகருக்குச் சாபத்தைக் கொடுத்தாள். உன்னுடைய மறு ஜன்மத்தில் உனக்குச் சகோதரியில்லாமலும், முதலில் பிறக்கும் குழந்தைகள் சீக்கிரத்தில் இறந்தும், நீ உன்னுடைய மாமியாருடைய வீட்டில் வசிக்கக்கடவது. உன்னுடைய குலம் நாசத்தை அடையக்கடவது என்று சொல்லியும்

33. இன்னமும் பல்வார் சொன்ஞள் யெய்திற்று அந்த
[சாபம்
அந்திய காலம் தன்னில் அதிதிகள் தொண்டு பூண்டு
வந்திடும் மார்க்கம் தன்னில் வனம் சோலே தாகப்பந்தல்
துன்னிய தடாகம் செய்து சேர்ந்தனன் காலனுடு

33. இன்னமும் பலவிதமாகச் சொன்ஞள். இந்த சாபம் ஜாதகரை வந்து அடைந்து. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் பணிவிடைகளைச் செய்துகொண்டும், ஜனங்கள் போக்குவரத்து சாலை வழியில் காட்டையும் சோலைகளையும் தோப்புகளையும் ஏற்படுத்தி தாகப்பந்தலையும் ஏற்படுத்தியும் குளத்தை உண்டாக்கியும் இவ்விதமாகத் தானதர்மங்களைச் செய்துவிட்டுப்பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

34. மால் மகன் வரையப்பட்டு மருகர் தன்குலமுதிப்பாள்
நீலியின் சாபத்தாலே நேராதோ சுதர்கள் தோஷம்
சாலவே தடாகம் சோலை த்தாகபந்தலும் வைத்த
காலத்தால் சுதர்பின் விருத்தி காதலன் வறுமை
[காணுன்

34. ஜாதகர் பிறகு மகாவிஷ்ணுவின் பிள்ளையாகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு அருகருடைய ஜாதியில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர். அந்த ஸ்திரியின் சாபத்தால் ஜாதகருக்குப் புத்திர தோஷமுண்டாகாதோ என்று கேட்கவே, ஜாதகர் குளம், சோலை, தோப்பு, தாகப்பந்தல் ஆகிய இவற்றை ஏற்படுத்தி தான தர்மங்களைச் செய்ததாலே பின்னுல் பிறக்கின்ற குழந்தைகள் விருத்தியையடைவார்கள், ஜாதகர் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்கமாட்டார்.

## ஜாதகருடைய யோக பாவம்

35. இன்னவன் யோகச் சேதி யியம்புவோம் தரணி விருத்தி
பொன்பல முடையனுகும் புவிராசர் வணங்க வாழ்வன்
மன்னர்க்கு யிவன் சொல் மேன்மை மாத்தானைக் காணு
[னென்றேம்
சொன்னதைக் காப்பானுகும் தொல்புவி மூன்று ஊரில்

35. ஜாதகருடைய யோக விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேம், இவர் நிலங்களைப் பயிரிட்டு தான்யவகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் சொற்ப பலத்தையுடையவராவர். இவரைப் பூமியை ஆள்கின்ற அரசர் வணங்கி மதிக்கும்படியான நிலைமையில் இவர் இருந்து வாழ்வார். இவருடைய வார்த்தைகள் அரசருக்கு மேன்மையுடையவனவாகவும் சிறந்தனவாகவும் இருக்கும். இவர் விரோதிகளை யுடையவரல்லர் என்று சொல்லுகின்றேம். இவர் தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகாமல் நடந்துகொள்ளுவார். இவருக்கு மூன்று கிராமங்களில் பழைய நிலங்கள்

36. அணுகிடும் வறுமை காணுன் அழகேச னெப்பதாகும்
பிணையிலா முப்பான் மேலாய் பிரபல பரியும் வண்டி
கனமுள புகழு மேற்பன் காலாள்கள் பனையேர் விருத்தி
சினமிலா தவங்கள் செய்யும் செல்வதி கேட்டிடாயே

36. வந்துசேர்ந்திடும், இவர் (ஜாதகர்) தரித்திரத்தையுங் கஷ்டங்களையு மடையமாட்டார், இவர் குபேரனுக்குச் சமானமாகவிருந்து சகல சுகபோகங்களையும் அநுபவித்துக்கொண்டு வாழ்பவராவர். இவர் தன்னுடைய முப்பது வயதிற்கு மேலே பிரபலமான குதிரை வண்டியையும் கீர்த்தியையும் அடைவார். இவருக்குக் கால்நடை வேலையாட்களும், நிலங்களும், ஏர்களும், அதிகப்படும், கோபமில்லாமல் தவங்களைச் செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :-ஒன்பதிற்குடைய சுக்கிரனும், பத்திற்குடைய புதனும் கூடி ஐந்தாவது வீட்டில் இருப்பதால் தர்ம கர்மயோகம் என்ற ஒரு யோகம் இருக்கின்றது. மேலும் இவர்களுடன் ஐந்தாவது கோணத்திற்குடையவராகிய சனி கூடியிருப்பதால் இந்த தர்ம கர்மயோகம் அதிகப்படும். இது விஷயமாகக் கீரனூர் நடராஜருடைய தமிழ் ஜாதகாலங்காரம் முந்நூற்றிரண்டாவது (302—ஆவது) பாடலையும், சந்திர காவியத்தில் பதினெட்டாவது பத்தொன்பதாவது பாடல்களையும் வாசிக்கவும். பதினெட்டாவது பாடலின் முதல்வரி "ஒன்பது பத்துக்குடையோரெட்டுப் பன்னொன்றதிபர்" என்று ஆகும். பத்தொன்பதாவது பாடலின் முதல் வரி "விண்ட பத்துக் காதிபர்க்குவின் கோணத்தோரிலொன்று" என்று ஆகும்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களும் சகோதர பாவமும்

37. இன்னமும் பின்பாகத்தில் யியம்புவோம் விபரமாக
அன்னையின் குணத்தை சொல்வேன் ஆளனுக்கினிய
[ளாகும்
முன்னமே கோபமுண்டு மொழியது சுகமே யாகும்
தன் மன சஞ்சலத்தாள் தன் துணை ஆண்பால் ரெண்டு

37. மற்ற விஷயங்களைப் பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகனின் தாயாருடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாகவிருப்பாள். இவளுக்கு முன்கோபமுண்டு, இவள் இனிமையாகப் பேசுபவளாகும். இவள் தன்னுடைய மனத்தில் கஷ்டங்களையும் துன்பங்களையுமுடையவளாவள். இவளுடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்களும்

## ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மம்

38. கன்னிகை மூவராகும் கனக்காது மற்றதெல்லாம்
இன்னவள் பூர்வம் சொல்வேன் யெழில் கொங்கு
[ நாட்டிலே தான்
துன்னிய கங்கை சேயாய் செனித்துமே அரத்திலிச்சை
பொன் பணியுடையளாகிப் புகழ்ந்தோரை யாதரித்து

38. மூன்று சகோதரிகளும் ஆவார்கள். மற்ற சகோதரங்களெல்லாம் வலுக்காமல் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகிய கொங்கு நாட்டில் வேளாளர் ஜாதியில் பெண்ணாகப் பிறந்து, தான தர்மங்களில்

பிரியமுடையவளாகியும் தனம் ஆடையாபரணங்கள் ஆகிய இவற்றை யுடையவளாகியும் தன்னைப் புகழ்ந்து பேசினவர்களைக் காப்பாற்றிக் கொண்டும்.

## ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மம்

39. பவமது யில்லாதாகி பற்றினள் காலனுடு
நவனியில் பிரமன் லக்கம் நல்கினு ளிந்தமாது
அவனியில் யிவள் பின் சென்மம் அருளுவோம் துவரை
[பக்கல்
இவளுமே பிரம்ம சேயாய் யெய்து வாளென்று
[சொல்வோம்

39. யாதொரு பாபமும் இல்லாதவளாகியும் வாழ்ந்து, பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்தப் பூமியில் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றாள். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவள் துவாரகாபுரி பட்டணத்திற்குச் சமீபத்திலுள்ள ஒரு கிராமத்தில் பிராமண ஜாதியிற் பெண்ணாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

40. தந்தையின் பூர்வம் சொல்வேன் தக்கோல மருகில்
[கீழ்பால்
விந்தையாய் வணிபம் செய்யும் வைசிய குலமுதித்து
சிந்தையும் நல்லதாயும் சேயிழை மதலை யுண்டாய்
வந்தவர்க் கன்ன மீந்து வள்ளல் மேல் பத்தியாயும்

40. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் தக்கோலத்திற்குச் சமீபத்தில் கிழக்கில் ஒரு கிராமத்தில் ஆச்சர்யப்படும்படியாக வியாபாரத்தைச் செய்யும்படியான ஒரு வைசியருடைய ஜாதியில் ஆணாகப் பிறந்து, இவர் நல்ல மனத்தை யுடையவராகியும், மனைவி மக்களை யுடையவராகியும், தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டும், கடவுளின் பேரில் அன்புடையவராகியும்,

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

41. திருப்பணி செய்து யின்னோன் சண்டன் தன்பதிக்குத்
[தெற்கில்
பிரமனால் வரையப்பட்டுப் பிறந்தவ னிவனே யென்றோம்
வரும் சென்மம் பிரயாகை பக்கல் மருவுவானிக்
[குலத்தில்
அருமறை முடிவிலாடும் அம்பிகை யாளே கேளாய்

41. தொண்டுகளையும் வேலைகளையும் அவருக்குச் செய்து கொண்டும் இருந்து பிறகு இறந்து தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குச் சென்று, பிரமதேவரால் பிரமலிபியுடன் வரையப்பட்டு இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தகப்பனுர் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின்ரும். இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில் பிரயாகு என்ற ஸ்தலத்திற்கு அருகில் ஒரு கிராமத்தில் இந்த ஜன்மத்திய ஜாதியாகிய அருகர் ஜாதியில் ஆணுகப் பிறப்பார். அருமையான வேதங்களின் முடிவு என்கிற உபநிஷத்துக்களில் ஆனந்தமாய் விளங்குகின்ற பார்வதியம்மையாரே! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய மரணமும் தாயாருடைய மரணமும்

42. இருபது யெட்டு ஆண்டில் யிவன் தந்தை கெண்ட [மெய்தும்
குருதிசை புகர் புத்தி கூடிடு மந்த காலம்
திருகிலா முப்பானுறில் செப்புவோ மன்னை கெண்டம்
கரியவன் திசையிலே தான் கழறுவோ மந்த காலம்

42. ஜாதகருக்கு இருபத்தெட்டாவது வயதில் இவருடைய தகப்பனுர் இறந்து விடுவார். அக்காலத்தில் குரு தசையில் புகர் என்ற சுக்கிர புக்தி நடக்கும். ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில் இவருடைய தாயார் இறந்து விடுவாள். அக்காலத்தில் கரியவன் என்ற சனி தசை நடக்கும் என்று சொல்லுகின்ரும்.

## ஜாதகருடைய மரண காலமும் மறுஜன்மமும்

43. அறுபது ஆறு ஆண்டில் அழகிய மகர மாதம்
வரும் கெண்டம் சாதகர்க்கு வகுக்கிருே மிவன் பின் [சென்மம்
திருகிலா மலைனுடன்னில் செனிப்பனும் சத்திரிய [சேயாய்
அரிபரி உடையனுகி காவலன் வாழ்வானுமே

43. ஜாதகருக்குத் தன்னுடைய அறுபத்தாருவது வயதில் மகர மாதம் என்ற தை மாதத்தில் மரண முண்டாகும். இவருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்ரும். இவர் மலை நாட்டில் க்ஷத்திரிய ஜாதியில் ஆணுகப் பிறப்பார். இவர் பொன், நெற் பயிர் விளையும் நிலம், சிங்கம், குதிரை, ஆகிய இவற்றை யுடையவராகி வாழ்வார்.

44. வந்தவன் யோகச்சேதி வரைகுருேம் செனனம் [தொட்டு
இந்தவன் மரணமட்டும் யிளம் பிறை போலே யோகம்

விந்தையாய் கிராம செட்டு மேவிடு மாயுள் மட்டும்
நிந்தைகள் யேற்காணுகும் நிற்மிப்பான் கூவல் சோலை

44. ஜாதகருடைய யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தன்னுடைய ஜனன காலம் முதற் கொண்டு தன்னுடைய மரண காலம் வரையிலும் வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் விருத்தி யுடைந்து கொண்டிருக்கின்ற யோகத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய ஆயுட் காலம் பூராகவும் கிராம வியாபாரத்தைச் செய்து வருவார். இவர் அபவாதங்களை அடைய மாட்டர். இவர் சோலைகளையும் கிணறுகளையும் உண்டாக்குவார்.

45. தேவதாப்பணியும் செய்வன் தேவியால் பூமியில்லம்
மேவிடும் செனனகாலம் மிருகச் சீரிடம் நாற்காலில்
தாவிய சேயிருப்பு சாற்றுவோம் திங்களரெண்டு
ஆவலாய் பூசை செய்யும் அம்பிகை பூர்வம் சொன்னேம்

45. ஜாதகர் தெய்வங்களினுடைய வேலைகளையும் தொண்டுகளையும் செய்வார். இவருக்குத் தன்னுடைய மனைவியால் வீடும் நிலங்களும் கிடைக்கும். இவர் பிறந்த காலத்தில் மிருக சீரஷ நட்சத்திரத்தின் நான்காவது பாதம் ஆகும். இதற்குரிய அங்காரக மகா தசையில் இருப்பு இரண்டு மாதங்கள் என்று சொல்லுகின்றோம். ஆசையுடன் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! பூர்வபாகமாகிய முதல் பாகத்தை இதுவரையிலும் சொல்லி முடித்து விட்டோம், —C. G. R.

# ஜாதகம் 43

## ஜனனகால கிரகநிலை

1. [1]பிறை [2]கோலில் புதனும் [3]தேளில் [4]புரவியோன் [தனுசுவாக
[5]கரியவன் மிதுனமாக [6]கரும்பாம்பு [7]சேயும் [8]சீயம்
குரு கன்னி [9]புகரு [10]மானில் கேதுவும் கும்பமாக
வருவது கன்னி சென்மம் வரைகுவீர் பலனை யென்று

1. கன்னி ஜன்மலக்கினமாகிச் சந்திரன் துலாத்திலும், புதன் விருச்சிகத்திலும், சூரியன் தனுசிலும், சனி மிதுனத்திலும், ராகுவும் அங்காரகனும் சிம்மத்திலும், குரு கன்னியிலும், சுக்கிரன் மகரத்திலும், கேது கும்பத்திலும் இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| கேது | இராசி சக்கரம் | | |
| சுக்கிரன் | | | அங்காரகன் ராகு |
| சூரியன் | புதன் | சந்திரன் | லக்கினம் குரு |

விசாகம் 2-ஆம் பாதம் குரு தசை
ஞ 8—10—00

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் குருவும், ரிஷபத்திற் சந்திரனும், மிதுனத்திற் கேதுவும், கன்னியிற் சூரியனும் சுக்கிரனும், தனுசிற் அங்காரகனும் ராகுவும், மகரத்திற் சனியும் ஆகும். புதனும் சனியும் வக்கிர கதியில் இருக்கின்றார்கள்.

---

1. சந்திரன்
2. துலாத்தில்
3. விருச்சிகம்
4. சூரியன்
5. சனி
6. ராகு
7. அங்காரகன்
8. சிம்மம்
9. சுக்கிரன்
10. மகரம்

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. மங்கையும் கேட்கும்போது மாமுனி புகலுகின்றார்
இங்கிவை ஆண்பால் சென்மம் யில்லமும் கீழ்பால் [நோக்கம்
சங்கரன் மாரியுத்திரம் சாமுண்டி தென் கீழாகும்
அங்கவன் கங்கை சேயாய் ஐந்தாவது செனனமாகும்.

2. பார்வதியம்மையார் கேட்கும் போது வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தை யாகும். பிறந்த வீடு கிழக்குப் பார்த்த வாயிலை உடையதாகும். சிவபெருமானுடைய கோயிலும் மாரியம்மன் கோயிலும் வடக்குத் திக்கிலிருக்கும். பார்வதியம்மன் கோயில் தென் கிழக்குத் திக்கிலிருக்கும். ஜாதகர் வேளாளர் ஜாதியில் ஐந்தாவது குழந்தையாகப் பிறப்பார்,

3. இந்தவன் செனன யோகம் யெழில் பெருந் தந்தை [யோகம்
அன்னை துணைவர் யோகம் அவன் மனை புத்திர யோகம்
முன் பின் சென்மங்கள் யாவு முரைக்கிறோ மின்னூல் [தன்னில்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டிடாயே

3. ஜாதகருடைய ஜனன காலத்திய போகம் தகப்பனுருடைய யோகம், தாயாருடைய யோகம், சகோதரர்களினுடைய யோகம், மனைவி மக்கள் யோகம் முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றை எல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம். மேன்மையான சிறந்த யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

4. தந்தையின் துனை ஆண் ஒன்று சத்தி மார் மூவர் [தீர்க்கம்
நொந்திடும் னான்கு யென்றோம் நுகர்ந்த ஆண் யீனை [யோனுகும்
அந்தவன் குணத்தை சொல்வேன் அவனியை [விருத்தி செய்வன்
சிந்தையு மிரண்டு மாகும் சிலேடையாய் பேசுவானும்

4. ஜாதகரின் தகப்பனுருடன் பிறந்தவர்கள் ஆண் ஒன்றும் பெண்கள் மூன்று பேரும் ஆவார்கள். இந்த நான்கு பேர்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாவார்கள். நான்கு சகோதரர்களும் சீக்கிரத்தில் இறந்து

விடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இங்கு சொல்லப்பட்ட சகோதரர் இளைய சகோதரராவர். இந்த இளைய சகோதரருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் நிலங்களைப் பயிரிட்டு தான்யவகைபராக் களை அதிகப்படுத்துவார். இவர் நல்ல எண்ணத்தையும் கெட்ட எண்ணத் தையும் உடையவராவர். இவர் இரண்டு அர்த்தங்கள் உள்ள வார்த்தை களை அலங்காரமாகவும் சாமர்த்தியமாகவும் பேசுவார்.

## ஜாதகரின் தகப்பனாரின் இளைய சகோதரருடைய குணாதிசயங்கள்

5, பல தொழில் புரிவானுகும் பாரினில் சல்லிய மேற்கான
நிலம் வேரூர் சேர்ப்பானுகும் நிமலியு மொன்றே யாகும்
குலவிடும் சுதருண்ணென்று கூறுவோம் தீர்க்கமாகும்
தலமது வேறூர் வாசம் செய்வன் சாருள்கள்
[யுடையனுகும்

5. ஜாதகரின் தகப்பனாருடைய இளைய சகோதரர் பலவிதமான தொழில்களைச் செய்வார். இவர் பூமியில் கடன் வாங்க மாட்டார். இவர் அயலூரில் நிலங்களை வாங்குவார். இவருக்கு மனைவி ஒருத்தியே யாகும். இவர் ஒரு பிள்ளையை யுடையவராவர். இந்தப் பிள்ளை நீண்ட ஆயுளை யுடையவராவர். இந்தச் சிறிய தகப்பனார் வேறு ஒரு கிராமத்தில் வாசஞ் செய்திடுவார். இவர் வேலையாட்களை உடையவராவர்.

## ஜாதகருடைய தகப்பனாருடைய குணாதிசயங்கள்

6. மத்தியில் மறிப்பானுகும் வரைகிறோம் பின் பால் சேதி
வித்தகன் தந்தை சேதி விளம்புவோ மிருநிறத்தன்
சுத்தவான் யில்லம் செய்வன் சொல்வதை காப்பானுகும்
பத்தினி கிஷ்டனுகும் பற்களும் பெரிதாய்க் காட்டும்

6. ஜாதகருடைய சிறிய தகப்பனார் தன்னுடைய மத்திய வயதில் இறந்து விடுவார், மற்ற விஷயங்களைப் பின்னால் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகருடைய தகப்பனாருடைய விஷயங் களைச் சொல்லுகின்றோம். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறம் என்ற நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர். இவர் சுத்தமாக விருப்பார். இவர் வீட்டைக்கட்டுவார். தான் சொல்லுகின்ற வார்த்தைகள் பிரகாரம் தவறிடாமல் நடந்து கொள்ளக் கூடியவராவர். இவர் தன்னுடைய மனைவிக்குப் பிரியமானவராவர், இவருடைய பற்கள் பெரியனவாகத் தோன்றும்.

7. தரணியை விருத்தி செய்வன் சாருள்களுடைய னுகும்
அரமதி லிச்சை கொஞ்சம் அரினும முடையனுகும்

பொருள்கடன் கொள்ளானுகும் பூமியால் சீவிப்பானும்
நெறியதைக் காப்பானுகும் நினைத்த காரிய முடிப்பன்

7. ஜாதகரின் தகப்பனுர் நிலங்களைப் பயிரிட்டுத் தானியவகையாரக் களை அதிகப்படுத்துவார். இவர் வேலையாட்களை உடையவராவர். இவர் தானதர்மங்களைச் செய்ய கொஞ்சம் பிரியமுடையவராவர். இவர் விஷ்ணு வினுடைய பெயரை யுடையவராவர். இவர் பணத்தைக் கடனுக வாங்க மாட்டார். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார். இவர் சன் மார்க்கத்தையும் நீதிமுறையையும் காப்பாற்றுவார். இவர் தான் செய்ய எண்ணிய காரியங்களைச் செய்தே முடிப்பார்.

8. உண்டியும் வறுமை காணுன் உண்மையை வெளிக்
[காட்டாதான்
துண்டமாய் கூருனுகும் சோம்பிடான் காரியத்தில்
வண்டி வாகன முமேற்பன் மாற்ருனை உறவுகொள்வன்
தண்டமிழ் கொஞ்ச முண்டு தரணியில் வறுமை
[காணுன்

8. ஜாதகருடைய தகப்பனுர் சாப்பாடு விஷயத்தில் தரித்திரத்தையும் கஷ்டங்களையு மடைய மாட்டார். இவர் உண்மையை வெளியே பிறருக்குத் தெரியும்படியாகக் காட்டிக் கொள்ளாமல் ரகசியமாக வைத்துக் கொண்டிருப் பார். இவர் கண்டிப்பாயும் கடூரமாகவும் பேசமாட்டார். இவர் செய்கின்ற காரியங்களில் சோம்பலை அடைய மாட்டார். இவர் வண்டி வாகனங்களை யுடையவராவர். இவர் தன்னுடைய எதிரியைச் சிநேகஞ் செய்து கொள் ளுவார். இவர் இனிய தமிழை சிறிதளவு யுடையவராவர். இவர் பூமியில் தரித்திரங்களையும் கஷ்டங்களையு மடைய மாட்டார்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

9. சொன்ன யிக்குணத்தானுக்கு தோன்று வானிந்த
[பாலன்
அன்னவன் குணத்தை சொல்வேன் அரிபோலே
[கோப மேற்பன்
தன் சொல்லே மேன்மையாக சாதிப்பான் கல்வி
[கொஞ்சம்
பன்னியே பேசுவானும் பாரினுல் உய்வானுகும்

9. இதுவரையிலுஞ் சொல்லப்பட்ட குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இனிமேல் ஜாதகருடைய குணு திசயங்களைச் சொல்லுகின்றேன். இவர் சிங்கத்தைப் போல கொடூரமான கோபத்தை யுடையவராவர். இவர் தான் சொல்லுகின்ற வார்த்தைகளே சிறந்தவை மேன்மையானவை, மெய்யானவை என்று உறுதியாகவும் பிடி

வாதமாகவும் சொல்லி அவற்றை ஸ்தாபிப்பார். இவர் வித்தையைக் கொஞ்சமாக உடையவர். இவர் சாமர்த்தியமாகவும் தேர்தலாகவும் பேசுவார். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்வார்.

10, வறுமை யெப்போதும் காணுன் வித்தையு மிரண்டு
[மாகும்
தரணியதை சேர்ப்பானுகும் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
இருவித குணமு முண்டு யெதிரிக்கு அஞ்சானுகும்
மருமத்தை வெளிக்காட்டா தான் மருவிடும் பித்த சூடு

10. ஜாதகர் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் எந்தக் காலத்திலும் அநுபவிக்க மாட்டார். இவர் இரண்டுவித பாஷைகளில் வாசிப்பை யுடையவராவர், இவர் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவருக்குக் கால் நடைகள் விருத்தி யடையும். இவர் நல்லதும் கெட்டதுமான இரண்டு வகையான குணங்களை யுடையவராவர். இவர் எதிரிக்குப் பயப்படமாட்டார். இவர் தன்னுடைய ரகசியத்தைப் பிறர் தெரிந்து கொள்ளும் படியாக வெளியே காண்பித்துக் கொள்ள மாட்டார். இவருக்குப் பித்தச் சூட்டு ரோகம் உண்டாகும்.

11. கரமதில் மாலின் ரேகை கஞ்சமாம் ரேகை யுண்டு
அருமுகன் பக்தி கொள்வன் அவன் பந்து மதிக்க
[வாழ்வன்
மறு ஊரில் பூமி சேர்ப்பன் வருவோரை ஆதரிப்பன்
பொருள் கடன் கொள்ளானுகும் புகலுவோம் துணைவர்
[தன்னை

11. ஜாதகர் தன்னுடைய உள்ளங் கையில் விஷ்ணு ரேகையையும் தாமரை ரேகையையும் உடையவராவர். இவர் ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராக விருப்பார். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னை கௌரவப் படுத்தும்படியான அந்தஸ்திலிருந்து வாழ்வார் இவர் இன்னொரு கிராமத்தில் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவர் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவார். இவர் பணத்தைக் கடனுக வாங்க மாட்டார். இவருடைய சகோதரர்களை பற்றிச் சொல்லுகின்ரும்.

## ஜாதகருடைய சகோதர பாவம்

12. தன் துணைஆண் பாலொன்று தங்கிடும் கன்னி ரெண்டு
இன்னவார் விருத்தி யென்ரும் யேகிடு மிரண்டு
[தானும்

சொன்ன ஆண் முன்னோனுகும் செப்புவோ மவன் [குணத்தை
அன்னியர் மதிக்க வாழ்வன் அடாபிடி தன்னில் [செல்லான்

12. ஜாதகருடன் பிறந்தவர்கள் ஒரு சகோதரரும், இரண்டு சகோதரிகளுமாவர். இவர்கள் மூன்று பேர்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாவார்கள் என்று சொல்லுகின்றோம். இரண்டு சகோதரர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள், இங்கு சொல்லப்பட்ட ஆண் குழந்தை மூத்த சகோதரராவர். இவருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம். இவர் பிறர் தன்னைக் கௌரவப்படுத்தும்படியான நிலைமையிலிருந்து வாழ்பவராவர். இவர் அநியாயமாகவும் முரட்டுத் தனமாகவும் காரியங்களில் பிரவேசிக்க மாட்டார்,

## ஜாதகருடைய மூத்த சகோதரருடைய குணாதிசயங்கள்

13. சந்தேக மனத்தனுகும் தரணியாலுய் வானுகும்
கந்தன் தன் பக்தி கொள்வன் கருதிடான் கட்டு [வார்த்தை
சிந்தையும் நல்லதாகும் சென உபகாரியாவன்
வந்தவர்க் கன்ன மீவன் வளமுள குடும்பியாவன்

13. ஜாதகருடைய மூத்த சகோதரர் சந்தேகமுள்ள மனத்தை யுடையவராவர். இவர் நிலங்களைப் பயிரிட்டு ஜீவனஞ் செய்பவராவர், இவர் முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் பொய், பிணைந்த வார்த்தை, பழமொழி ஆகிய இவற்றைச் சொல்ல மாட்டார். இவருடைய மனம் நல்ல மனமாகும். இவர் ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்பவராவர். இவர் தன்னிடத்திற்கு வந்தவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவார். இவர் செழிப்பான சிறந்த குடும்பஸ்தராவர்,

14. பாரியு மொன்றே யுள்ளுர் பாலர்கள் ஆண்பால் [ரெண்டு
கூறுவோம் பெண் பாலவ்வார் குறைத்தனன் [தீர்க்கமாக
வீருது மற்ற தெல்லாம் விளம்புவோம் பின்பால் சேதி
ஆறுமாமுகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்

14. ஜாதகருடைய மூத்த சகோதரர் ஒரே ஒரு மனைவியை யுடையவராவர். இந்த மனைவி உள்ளூரிலிருந்தே வந்து சம்பவிப்பாள். இந்த மூத்த சகோதரருக்குக் குழந்தைகள் இரண்டு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண் குழந்தைகளும் இருப்பார்கள். இவர்கள் நான்கு பேர்

களும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மற்றக் குழந்தைகளெல்லாம் விளங்காமல் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். மற்ற விஷயங்களைப் பின்னல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளைப் பெற்றெடுத்தப் பார்வதியம்மையே! கேட்பீராக,

## ஜாதகரின் தாயாருடைய குணதிசயங்கள்

15. கன்னிமார் சேதி யாவும் கழறுவோம் பின் பாகத்தில்
அன்னையின் சேதி சொல்வேன் அடாபிடி கூறுளாகும்
முன்கோபமுடனே தாழ்வு மொழியதைக் காப்பாளாகும்
பன்னியே பேசுவாளாம் பதர்குண மில்லாளாகும்

15. ஜாதகருடைய சகோதரிகளினுடைய விஷயங்கள் எல்லாவற்றையும் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். இனிமேல் இவருடைய தாயாருடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அநியாயமாகவும் முரட்டுத்தனமாகவும் வார்த்தைகளைச் சொல்லமாட்டாள். இவள் முன் கோபத்தையுடையவளாவள். இந்தக் கோபம் உடனே தணிந்து சாந்தமாகிவிடும். இவள் தான் சொன்ன வார்த்தைகள் பிரகாரம் தவறிப்போகாமல் நடந்துகொள்ளக் கூடியவளாவள். இவள் சாமார்த்தியமாகவும் தேர்தலாகவும் பேசுபவளாவள். அற்பமான இழிவான குணத்தை யுடையவளல்லள்.

16. மங்கையும் தீர்க்க சீவி வருவோரை ஆதரிப்பள்
சங்கை யென்றோரைச் சாருள் சாதமு மன்பா யீவள்
அங்கவள் துணை ஆண் ஒன்று அறைகிறோம் தீர்க்கமாக
நங்கை தாயில்லம் உத்திரம் நவிலுவோம் துணைவள் [சேதி

16. ஜாதகருடைய தாயார் நீண்ட ஆயுளை யுடையவளாவள். இவள் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்றுவாள். அச்சமாகவிருக்கின்றது என்று சொல்லுகின்ற பயங்காளிகளுடன் சேரமாட்டாள். இவள் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள். இவளுடன் பிறந்தவர் ஆண் ஒன்றுகும். இந்த ஆண் நீண்ட ஆயுளை யுடையவரென்று சொல்லுகின்றோம். இந்தத் தாயாருடைய வீடு வடக்குத் திக்கிலிருக்கும். இவளுடைய சகோதரரின் விஷயங்களைச் சொல்லுகின்றோம்.

17. பலதொழில் புரிவானுகும் பகர மில்லா தானுகும்
நலமதை யெவர்க்கும் செய்வன் நடை நன்மை சொல் [காப்பானுகும்
விலைமாதர் விருப்பம் கொள்ளான் மெல்விமார் [யிருவராகும்
நிலையதை காப்பானுகும் நீத்தோர் மேல் பிரியனுகும்

17. ஜாதகரின் தாயாருடைய சகோதரர் பலவிதமான வேலைகளைச் செய்பவராவர். இவர் அலங்காரத்தையும் மேன்மையையும் உடையவரல்ல. இவர் எல்லோருக்கும் நன்மையைச் செய்வார். இவர் நல்ல நடவடிக்கையையுடையவராவர். தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் தவறிப்போகாமல் நடந்துகொள்ளக் கூடியவராவர். இவர் தாசிகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவரல்ல. இவருக்கு இரண்டு மனைவிமார்கள் ஏற்படுவார்கள். இவர் தன்னுடைய அந்தஸ்தைக் காப்பாற்றிக் கொள்ளுவார், இவர் சன்னியாசிகளின் பேரிலும் பரதேசிகளின் பேரிலும் அன்புடையவராவர்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

18. சுகதுக்கம் கலந்து வாழ்வள் சுதர்களு மாண்பால்
[ரெண்டு
தகமையாப் பெண்பால் ரெண்டு சாற்றுவோம்
[தீர்க்கமாக
உகமையாய் பேசுவானும் உரைகிறோ மன்னை பூர்வம்
சகமதில் உயர்வதான திருவண்ணு மலையிலே தான்

18. ஜாதகரின் தாயாருடைய சகோதரர் சுகமும் துக்கமும் ஆகிய இவ்விரண்டையும் கலந்தாற்போல அநுபவித்து வாழ்பவராவர். இவருக்குக் குழந்தைகள் இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் ஆவார்கள். இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்கள் என்று சொல்லுவோம். இந்தச் சகோதரர் உபமானங்களையும் உபமேயங்களையும் உபயோகப்படுத்தி அலங்காரமாகப் பேசக்கூடியவராவர். ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மத்தைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவள் உலகத்தில் மேன்மையான திருவண்ணுமலை க்ஷேத்திரத்தில்

19. பிறந்தனன் வன்னிய சேயாய் பெரிதான குடும்பியாகி
அரம் தன்னி லிச்சை யுண்டாய் அச்சென்மம் வினை
[யில்லாமல்
மரலியின் நாடு சென்று மறையவன் வரையப்பட்டு
பிரிதிவு தலத்திலே தான் பிறந்தன னென்று
[சொல்வோம்

19. வன்னிய ஜாதியில் பெண்ணுகப் பிறந்தாள். இவள் பெரிய குடும்பஸ்தளாகியும், தான தர்மங்களைச் செய்வதில் பிரியமுள்ளவளாயுமிருந்தும், இந்த ஜன்மத்தில் யாதொரு பாவமுமில்லாமலுமிருந்தும். இறந்து எமபட்டணத்திற்குப்போய் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுப் பிரிதிவு ஸ்தலம் என்ற காஞ்சீபுரத்தில் பெண்ணுகப் பிறந்தாள் என்ற சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மம்

20. மங்கையும் வறுமை காணாள் வரைகிறோம் யிவள்
பின் சென்மம்
துங்கமாம் காஞ்சி மேற்கில் சிறு ஊரில் யிக்குலத்தில்
அங்கவள் உதிப்பாளாகும் அழகான குடும்பி யாவள்
எங்களை யாதரிக்கும் யீஸ்வரி கேட்டிடாயே

20. ஜாதகருடைய தாயார் தரித்திரத்தையுங் கஷ்டங்களையுமனுபவிக்க மாட்டாள். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். மேன்மையான சிறந்த காஞ்சீபுரத்திற்கு மேற்கிலுள்ள ஒரு சிறிய கிராமத்தில் இந்த ஜன்மத்திய ஜாதியாகிய வேளாளர் ஜாதியில் இவள் போய்ப் பிறப்பாள். இவள் அழகான சிறந்த குடும்பஸ்தளாகவிருப்பாள். எங்களைக் காப்பாற்றுகின்ற பார்வதியம்மையே ! கேட்பீராக.

## ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மம்

21. தத்தையின் முன் சென்மத்தை செப்புவோம் தவளை
[தன்னில்
முந்திய அருகர் வர்க்கம் முதித்துமே கிருஷி செய்து
அந்தவன் வினை யில்லாமல் அணுகினுன் காலனுடு
சந்ததம் பிரமன் லக்கம் செனித்தவ னென்று சொல்
[வோம்

21. ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவள் தவளை பூஜை செய்து மோக்ஷத்தையடைந்த ஸ்தலமாகிய தவளை என்ற ஊரில், மேன்மையான வளம் பொருந்திய ஒரு அருகருடைய ஜாதியில் (சமண ஜாதியில்) ஆணுகப் பிறந்து பயிர் தொழிலைச் செய்துகொண்டும், யாதொரு பாவத்தையும் செய்யாமலும் இருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குச் சென்று, பிறகு பிரம்ம தேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மமும் மரணமும்

22. மறு சென்மம் அருணை தன்னில் வருகுவான் வைசிய
[சேயாய்
பெருமையாய் செட்டு செய்து புனிதனும் வாழ்வானுகும்
கரும காலங்கள் தன்னை கழறுவீர் முனியே நீதான்
திருகாக நாற்பதாண்டில் செப்புவோம் தந்தை
[கெண்டம்

22. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய பின் ஜன்மத்தில் அருணை என்ற அருணுஜலமாகிய திருவண்ணுமலை க்ஷேத்திரத்தில் வைசியருடைய ஜாதியில் ஆண் குழந்தையாகப் போய்ப் பிறப்பார். இவர் மேன்மையாகச் சிறந்த வியாபாரத்தைச் செய்துகொண்டு வாழ்வார். இவருக்கு மரண காலத்தைப்பற்றிச் சொல்லுவீர், முனிவரே! நீர் என்ற கேட்கவே, ஜாதகருக்கு முப்பதாவது வயதில் இவருடைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் தாயாருடைய மரண காலமும் விவாகமும்

23. எண்ணஞ்சு ஆறு ஆண்டில் யியம்புவோ மன்னை
[கெண்டம்
திண்ணமாய் சாதகர்க்கு செப்புவோ மணத்தின் காலம்
வண்ணமா யிருபாஞறில் வடதிசை மனைவி வாய்க்கும்
அண்ணிலை பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்

23. ஜாதகருக்கு நாற்பத்தாருவது வயதில் இவருடைய தாயார் இறந்துவிடுவாள். இனிமேல் ஜாதகருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகின்ருேம். இவருக்கு இருபத்தாருவது வயதில் வடக்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள். சிவபெருமானைப் பூஜை செய்கின்ற பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகியின் மனைவியினுடைய குணுதிசயங்ககள்

24. மாதுவின் குணத்தைச் சொல்லேன் மானிறம் பித்த
[தேகி
ஒதுவாள் சுகமாய் வார்த்தை உலகுக்கு நல்லோளாவள்
பாதக மனமில்லாதாள் பதர்குண மில்லா ளாகும்
சாதிப்பாள் சிலது சங்கை தன்வரன் மனதுக்கேத்
[தோள்

24. ஜாதகரின் மனைவியினுடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் மாநிறமான தேகத்தையுடையவளாவள். பித்தகுணமுள்ள தேகத்தை உடையவளாவள். இவள் இனிமையான வார்த்தைகளைச் சுகமாகச் சொல்லுவாள், இவள் உலகிலுள்ளவர்களுக்கு நல்லவளாக விருப்பாள். இவள் கெட்ட மனத்தையுடையவளல்லள். இவள் அற்பமான, இழிவான குணத்தையுடையவளல்லள். இவள் சில வழக்கமான காரியங்களைச் செய்து முடிப்பாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற்போல ஒற்றுமையாகவிருப்பாள்.

## ஜாதகருடைய புத்திர பாவம்

25. கன்னிகை வந்த பின்பு கலைபிறை போலே யோகம்
தன் சுதர் ஆண்பால் ரெண்டு சத்திமார் மூவருகும்
பின்னமா மிரண்டு யென்றேம் பேசுவோம் பின்பால் [சேதி
முன் சென்மம் புகலுகின் றேமுதல்வியே கேட்டிடாயே

25. ஜாதகருடைய மனைவி புருஷனுடைய வீட்டிற்குப்போன பிறகு புருஷனுக்கு வளர்பிறை சந்திரனைப்போல யோகம் நாளுக்கு நாள் அதிகப் பட்டுக்கொண்டே போகும். ஜாதகருக்குப் குழந்தைகள் இரண்டு ஆண் களும் மூன்று பெண்களும் இருப்பார்கள். இரண்டு குழந்தைகள் சீக் கிரத்தில் இறந்து விடுவார்கள். என்று சொல்லுகின்றேம், இவர்களுடைய விஷயங்களைப் பின்னல் இரண்டாவது பாகத்திற் சொல்லுகிறேம். ஜாத கருடைய முன் ஜன்மத்தைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றேம்; முதன் மையான தெய்வமாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய முன் ஜன்மம்

26. தென்திசை பெண்ணையோரம் செனித்தனன் ரெட்டி [வமிசம்
உன்னத குடும்பியாகி உயர்வோர்கள் தொண்டு பூண்டு
பொன் பொருளுடையனுகி பூமியும் பெருக்க முண்டாய்
அன்னவன் வினையில்லாமல் அணுகினன் காலனுடு

26. ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் தெற்குத் திக்கிலுள்ள பெண்ணை நதிக்கரை ஓரத்தில் ரெட்டியாருடைய ஜாதியில் ஆணுகப் பிறந் தார். இவர் மேன்மையான சிறந்த குடும்பஸ்தராகியும், பெரியோர் களுக்கும் சன்னியாசிகளுக்கும் வேலைகளை அன்புடன் செய்துகொண்டும், செல்வத்தையும் சொத்துக்களையும் உடையவராகியும் இந்தப் பூமியில் வளப்பத்தையும் விருத்தியையுடையவராகியும் இருந்து, இவர் யாதொரு பாவமுமில்லாமலும், இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

## ஜாதகருடைய யோகபாவம்

27. வேதனுல் வரையப் பட்டு
விளங்குவா னிவனே யென்றேம்
ஓதுவேன் யிவனின் யோகம்
உதித்தனுள் முதலா யாக
சீதள பிறைபோல் யோகம்
செப்புவோம் பால னுக்கு
மேதினி விருத்தி செய்வன்
மேன்மையாய் குடும்பி யாவன்.

27. ஜாதகர் பிறகு பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றோம். இனி மேல் இவருடைய யோக விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் பிறந்தகாலம் முதற்கொண்டு குளிர்ந்த வளர்பிறை சந்திரனைப்போல இவருக்கு யோகம் நாளுக்கு நாள் அதிகப்பட்டுக்கொண்டே போகும் என்று சொல்லுகின்றோம். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தானிய வகையராக்களை அதிகப்படுத்துவார். இவர் மேன்மையான செழிப்பான குடும்பஸ்தராக விருப்பார்.

28. தந்தைக்கு மேலாய் வாழ்வன்
சல்லிய பாதை யேற்கான்
எந்த காரணத்தி னாலே
யிவனுக்கு யோகம் சொன்னீர்
சந்திரன் யிரண்டில் தங்க
செம்பொன்னும் சென்மம் தங்க
புந்தியு மூன்றி லாக
புகருமே அஞ்சில் தங்க.

28. ஜாதகர் தன்னுடைய தகப்பனாருடைய அந்தஸ்திற்கு அதிகமான அந்தஸ்திலிருந்து கொண்டு வாழ்வார், இவர் கடனால் ஏற்படுகின்ற தொந்திரவை அடையமாட்டார். எந்தக் காரணங்களால் இவருக்கு யோகங்களைச் சொன்னீர், முனிவரே! என்று கேட்கவே, சந்திரன் இரண்டாவது வீட்டில் இருப்பதாலும், செம்பொன் என்ற குருவும் சென்மம் என்ற லக்கின வீட்டில் இருப்பதாலும், புந்தி என்ற புதனும் மூன்றில் இருப்பதாலும் புகர் என்ற சுக்கிரன் ஐந்தாவது வீட்டிலிருப்பதாலும்.

29. மதிக்கு யிருபுறத்தில் நல்லோர் மருவியே யிருப்ப தாலே
அதுபலன் பூமி விருத்தி அவன் பந்து மதிக்க வாழ்வன்
நிதிமிக உடைய னாகும் நேமியில் சல்லியம் காணான்
புதையலும் வைப்பா னாகும் பூமியில் வறுமை காணான்.

29. மதி என்ற சந்திரனுக்கு இரண்டு பக்கங்களிலும் நல்லவர்களாகிய புதனும், குருவும் இருப்பதாலும் யோகம் ஏற்படுகின்றது. இவற்றின் பலன் என்னவென்றால், நிலங்கள் நல்லபலனைத்தரும், அதிகரிக்கும், ஜாதகர் தன்னுடைய பந்துக்கள் தன்னைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வார். இவர் அதிகமான தனத்தையுடையவராவர். இவர் பூமியில் கடன் வாங்கமாட்டார். இவர் தனத்தைச் சேர்த்துப் புதைத்துவைப்பார். இவர் இந்தப் பூமியில் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்கமாட்டார்.

## ஜாதகருடைய மரணகாலமும் மறுஜன்மமும்

30. அறுபது ஒன்பதாண்டில் அற்பசி மாதம் தன்னில்
குறைபக்கம் தசமி தன்னில் குழவியி னுடல மேகும்
மறுசென்மம் காஞ்சி தன்னில் வந்தவனிக் குலத்தில்
பெருமையாய் செட்டு செய்வான் பேதையே கேட்டி
[டாயே.

30. ஜாதகர் தன்னுடைய அறுபத்தொன்பதாவது வயதில் ஐப்பசி மாதத்தில் தேய்பிறையில் தசமி திதி தினத்தில் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும். இவர் தன்னுடைய மறு ஜன்மத்தில் காஞ்சீ புரத்தில் இந்த ஜன்மத்திய குலமாகிய அருகருடைய (சமணருடைய) ஜாதியில் போய் ஆணுகப் பிறந்து, மேன்மையாகவும், சிறப்பாகவும் வியா பாரத்தைச் செய்வார், பார்வதியம்மையே! கேட்பீராக,

31. புறந்திடு காலம் தன்னில்
பொன்திசை ஆண்டு யெட்டும்
உறைந்திடும் திங்கள் பத்தும்
உரைக்கிறேம் பலனை யாங்கள்
திருமகன் தனக்கு ரோகம்
சேத்திரம் வேரு தாகும்
தரைசேரல் துணை விருத்தி
செப்புவோம் பின்பால் சேதி.

31. ஜாதகர் ஜனனமான காலத்தில் பொன் என்ற குருவினுடைய தசையில் இருப்பு எட்டு வருஷங்களும் பத்து மாதங்களும் ஆகும். இக் காலத்திய பலாபலன்களை நாங்கள் சொல்லுகின்றேம். ஜாதகருக்கு வியாதி உண்டாகும். வாசஞ்செய்கின்ற வீடு வேறு வீடாக நேரிடும், குடும்பத்திற்கு நிலங்கள் வந்து சேரும், ஜாதகருக்குச் சகோதரர்கள் பிறந்து விருத்தியை அடைவார்கள், மற்ற விஷயங்களைப் பின்னுல் இரண் டாவது பாகத்தில் சொல்லுகின்றேம். —C. G. R.

## ஜாதகம் 44

### ஜனனகால கிரகநிலை

1. கன்னியும் செனனமாக [1]கவிமக னதிலே தங்க
[2]பொன் யிரண்டில் கேது ஐந்தில் [3]புறவியோன் யீராருக
துன்சனி [4]மதி[5]சேய் [6]புந்தி தோன்றிடும் [7]லாபமாக
இன்னவார் கோளு நின்ருல் யியம்புவீர் பலனை யென்று.

1. கன்னி ஜன்மலக்கினமாகி இதில் சுக்கிரனும், குரு இரண்டாவது வீட்டிலும், கேது ஐந்தாவது வீட்டிலும், சூரியன் பன்னிரண்டிலும், சனியும் சந்திரனும், அங்காரகனும், புதனும் (ராகுவும்) பதினோராவது வீட்டிலும் இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைச் சொல்லுவீர் என்று.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | சந்திரன் அங்காரகன் புதன் சனி ராகு |
| கேது | | | சூரியன் |
| | | குரு | லக்கினம் சுக்கிரன் |

பூசம் 1-ஆம் பாதம் சனி தசை ஞு 17—4—0.

*குறிப்பு ;—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின் வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :-மேஷத்தில் சூரியனும், கடகத்தில் அங்காரகனும், சிம்மத்திற் சந்திரனும், கன்னியில் சனியும், கேதுவும், விருச்சிகத்தில் புதனும், மகரத்தில் குருவும், மீனத்தில் சுக்கிரனும் ராகுவும் ஆகும்.

1. சுக்கிரன்
2. குரு
3. சூரியன்
4. சந்திரன்
5. அங்காரகன்
6. புதன்
7. பதினொன்று

### ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. சங்கரி கேட்கும் போது சடைமுனி புகலுகின்ருர்
இங்கிவை ஆண்பால் சென்மம் யில்லமும் கீழ்மேல் வீதி

தங்கிடும் தென்பால் வாசல் சக்கரத் தோனும் தென்பால்
கங்கையும் பாரிகீழ்பால் கனராசர் வாச மெய்தும்.

2. பார்வதியம்மையார் கேட்கும்போது ஜடை முனிவர் சொல்லு கின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும், பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்கு வாசலையுடையதாகும். மகாவிஷ்ணுவின் கோயில் தெற்குத் திக்கிலிருக்கும், கங்கையம்மன் கோயில் கிழக்குத் திக்கி லிருக்கும், பெரிய அரசர் வாசஞ் செய்வார்.

3. இந்திர நகர மொப்பாம் யிப்பாலன் சேஷ்டனுக
அந்தவன் கங்கை சேயாய் அருளுவா னிந்த பாலன்
தந்தை தாய் துணைவர் யோகம் தன்மனை புத்திர [யோகம்
வந்தவன் முன்பின் சென்மம் வரைகிறே மின்னூல் [தன்னில்.

3. பிறந்த ஊர் தேவேந்திர பட்டணத்திற்குச் சமானமானதாகவிருக் கும். இந்த ஜாதகர் மூத்த குமாரராக வேளாளர் ஜாதியில் பிறப்பார் ஜாதகர், தகப்பனர், தாயார், சகோதரங்கள் ஆகிய இவர்களினுடைய யோகங்களையும், இவருடைய மனைவி, மக்கள், ஆகிய இவர்களுடைய யோகங்களையும், இவருடைய முன் ஜன்மம், பின் ஜன்மம், ஆகிய இவற்றை யும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தகப்பனருடைய சகோதரபாவமும் குணதிசயங்களும்

4. தந்தையின் துணைவர் ஞன்கில்
தங்காது யாவும் தானே
தந்தையும் தனியாய் வாழ்வன்
சாற்றுவோ மவன் குணத்தை
தந்தமும் குறை வுண்டாகும்
தானிரு நிறத்தா னுகும்
தந்தை சொல்கட வானுகும்
தருமாம் குணமும் கொஞ்சம்.

4. ஜாதகரின் தகப்பனருடைய சகோதரங்கள் நான்கு பேர் ஆவர். இவர்கள் எல்லோரும் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள், தகப்பனர் தனி யாய் ஒன்டியாகவிருந்து வாழ்வார். இவருடைய குணதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேம். இவருக்குப் பற்கள் குறைவாகவிருக்கும், குற்றத்தையு முடையனவாக விருக்கும். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தையுடையவராவர். இவர் தன்னுடைய தகப்பனு

ருடைய வார்த்தைகளுக்கு அத்து மீறி நடந்துகொள்ளமாட்டார். இவர் தான தருமங்களைச் செய்கின்ற குணத்தைச் சிறிதளவு உடையவராவர்.

5. சல்லிய பாதை யேற்கான்
சலித்தோர்க் குதவி செய்வன்
சொல்லதைக் காப்பா னாகும்
துறவோர்கள் நேசம் கொள்வன்
இல்லமும் சித்திரம் செய்வன்
யேவலாள் யுடைய னாகும்
நல்லவர் நேசம் கொள்வன்
நாதனார் பத்தி யுண்டாம்.

5. ஜாதகருடைய தகப்பனார் கடனால் ஏற்படும் உபத்திரவத்தை அடையமாட்டார். இவர் துக்கப்படுகின்றவர்களுக்கும் ஏழைகளுக்கும் உபகாரத்தைச் செய்வார். இவர்தான் சொல்லிய வார்த்தைகள் பிரகாரம் தவறிப் போகாமல் நடந்து கொள்ளக்கூடியவராவர். இவர் சந்நியாசிகள், பரதேசிகள் ஆகிய இவர்களுடைய சினேகிதத்தை யுடையவராவர். இவர் வீட்டைச் சித்திரங்களுடன் அலங்காரஞ் செய்வார். இவர் வேலையாட்களையுடையவராவர். இவர் நல்லவர்களுடைய சினேகிதத்தை யுடையவராவர். கடவுளின் பேரில் அன்புடையவராவர்.

6. அறுமுகன் நாமம் கொண்டேன் அஞ்சின வார்த்தை [யுண்டு
திருகான புத்தி யில்லான் திருமாலின் ரேகை யுண்டு
துரை ராசர் மதிப்புக் கொள்ளல் சோம்பிடான் [காரியத்தில்
மர்ம மில்லாதா னாகும் வஞ்சனை மனமில் லாதான்.

6. ஜாதகருடைய தகப்பனார் ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின் பெயரை யுடையவராவர். இவர் பயப்பட்டு வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் வஞ்சனையான, கெடுதியான கபடமான புத்தியை யுடையவரல்ல. இவர் தன்னுடைய உள்ளங்கையில் விஷ்ணு ரேகையை யுடையவராவர். இவர் அரசாளுகின்ற அரசருடைய கௌரவத்தை அடைவார். தான் செய்கின்ற காரியங்களில் சோம்பலை அடையமாட்டார். இவர் ரகசியத்தையும் கபடத்தையுமுடையவரல்ல. இவர் கள்ளத்தனமான மனத்தை யுடையவரல்லர்.

7. சிலவேளை பறப்பான் போலே
சொப்பனம் காண்பா னாகும்
கலகத்தை கூறு னாகும்
கடுநடை உடைய னாகும்

உலவிடும் பித்த சூடு
உரைத்த யிக்குணத் தானுக்கு
தலவனும் உதிப்பா னாகும்
செப்புவோ மிவன் குணத்தை.

7. ஜாதகருடைய தகப்பனார் சில சமயங்களில் தான் பறந்து போவதைப்போலக் கனவைக் காண்பார். இவர் சண்டையை விளைவிக்கின்ற வார்த்தைகளைச் சொல்லமாட்டார். இவர் வேகமாக நடந்துபேகக் கூடியவராவர். இவருக்குப் பித்தச்சூட்டு ரேகம் ஏற்படும். இதுவரையிலும் சொல்லப்பட்ட குணகுணங்களையுடைய தகப்பனாருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களைச் சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

8. மானிறம் சமதேகம் அறுமுகம் சிரத்தி லேற்பன்
தேன்மொழி கூறுவானும் தீரமில்லாத நெஞ்சம்
ஆனவர் நேசம் கொள்வன் அன்னியர் கல்வி கற்பன்
தானென கொஞ்ச முண்டு சந்தேக மனத்த னாகும்

8. ஜாதகர் மாநிறமான தேகத்தை யுடையவராவர், நடுத்தரமான தேகத்தை யுடையவராவர். இவர் ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளைத் துதித்து இவரிடத்தில் பிரியமுள்ளவராக விருப்பார். இவர் தேனைப் போல இனிப்பான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் தைரியமில்லாத மனத்தை யுடையவராவர். இவர் தனக்கு நல்லவராகத் தோற்றுகின்றவர்களுடைய சிநேகிதத்தை அடைபவராவர். இவர் அந்நிய பாஷையான ஆங்கில பாஷையில் வித்தையை அடைவார். இவர் (தனக்குத் தான் எல்லாம் தெரியும் என்று) கர்வத்தை சிறிதளவுடையவராவர். சந்தேகப்படுகின்ற மனத்தை யுடையவராவர்.

9. கல்விமான் கணக்கில் யூகி கனராசர் பேட்டி கொள்ளல்
சில்லரை புத்தி கொஞ்சம் திருகான குணமும் கொஞ்சம்
நல்லவன் நல்லவர்க்கு லண்டர்க்கு மிண்ட னவன்
வெல்லுவா னெதிரி தன்னை வேந்தனால் உய்வா னாகும்.

9. ஜாதகர் வாசித்தவராவர். கணக்கு போடுவதில் நுட்பமான அறிவை யுடையவராவர், இவர் பெரிய அரசர்களினுடைய தரிசனத்தை அடைபவராவர். இவருக்கு தாழ்ந்த இழிவான புத்தியும் கொஞ்சம் உண்டு. வஞ்சனையான, கபடமான குணமும் சிறிதளவு இவருக்கு உண்டு. இவர் நல்லவர்களுக்கு நல்லவராக விருப்பார். இவர் முரடர்களுக்கு வலியுடைய எதிரியாவர், இவர் தன்னுடைய விரோதியை ஜயித்து விடுவார். இவர் அரசரால் ஜீவிப்பார்.

10. யோக மெவ்விதமாய் சொன்னீர் யுரைப்பீக ளந்த சங்கை
பாகனும் மதியும் பாம்பு பங்குமே சேயும் லாபம்
ஆகம னிரண்டி லாக அற்புத யோக மொன்று
வேகமாய் வாசி யோகம் விளங்கினும் பால னுக்கு

10. ஜாதகருக்கு எந்தக் காரணத்தினல் யோகத்தைச் சொன்னீர் இதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, பாகன் என்ற புதனும் மதி என்ற சந்திரனும், பாம்பு என்ற ராகுவும், பங்கு என்ற சனியும், சேய் என்ற அங்காரகனும் லாபம் என்ற பதினோராவது வீட்டிலிருப்பதாலும், ஆகமன் என்ற குரு இரண்டாவது வீட்டில் இருப்பதாலும் ஜாதகருக்கு அற்புத யோகம் என்ற ஒருவித யோகம் இருக்கின்றது. வாசி யோகம் என்ற ஒருவிதயோகமும் ஜாதகருக்கு இருக்கின்றது.

*குறிப்பு :—வியாக்கியானம் :—அற்புத யோகம் ;—குரு அல்லது சுக்கிரனுக்குப் பத்தாவது வீட்டில் சந்திரன், அங்காரகன் இருப்பது அற்புத யோகமாகும். இது விஷயமாய் சப்தரிஷி நாடி சிம்ம லக்கின வால்யூம் நூற்றிருபத் தோராவது (121-ஆவது) ஜாதகத்தில் பன்னிரண்டாவது பதின் மூன்ருவது செய்யுள்களை வாசிக்கவும்.

*குறிப்பு :—வாசியோகம் :—சூரியனுக்கு இரண்டாவது வீட்டில் கிரகம் இருப்பது வாசி யோகமாகும். இது விஷயமாக ஜாத்கபாரிஜாதம் ஏழாவது அத்தியாயம் நூற்றிருபத்தோருவது (121-வது) சுலோகத்தையும் பலதீபிகை ஆருவது அத்தியாயம் எட்டாவது சுலோகத்தையும் வாசிக்கவும்.

11. ஆதலால் ராச யோதம் அழகேசன் போலே வாழ்வன்
நீதிவான் யெவர்க்கும் நல்லன் நெஞ்சது இரக்க முண்டு
ஓதுமுன் கோபம் கொஞ்சம் ஒருது முகத்தோன் பத்தி
சாதிப்பான் தரித்திர மில்லான் சங்கரி கேட்டி டாயே.

11. ஆகையால் ஜாதகர் இராஜ யோகத்தை யுடையவராவர். இவர் குபேரனைப் போல சகல சுகபோகங்களையு மனுபவித்துக் கொண்டு வாழ்பவராவர். இவர் நியாயத்தை யுடையவர். எல்லோருக்கும் நல்லவராவர், இவர் தயாளமான மனத்தை யுடையவராவர். இவருக்குப் பேசுவதற்கு முன்னே சிறிதளவு கோபமுண்டு. இவர் ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் தான் சொல்லுவதே சரியானவை என்று சொல்லி பிடிவாதஞ் செய்து வெல்லுவார். இவர் கஷ்டங்களையும் வறுமையையும் அநுபவிக்க மாட்டார், பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய சகோதரபாவமும் விவாகமும்

12. தன்துணை ஆண்பால் காணுன் சத்திமார் மூவருகும்
பின்பாகம் அவர்கள் சேதி பேசுவோம் தாயே யாங்கள்

இன்னவன் மணத்தின் காலம் யியம்புவோ மிருப
[தாண்டுள்
கன்னியுமுள்ளூர் நேறும் கழறுவோ மவள் குணத்தை.

12. ஜாதகர் சகோதரர் இல்லாதவராவர். இவருக்கு மூன்று சகோதரிமார்கள் உண்டு, இவர்களுடைய விஷயங்களைப் பின்பாகம் என்ற இரண்டாவது பாகத்தில் நாங்கள் சொல்லுகின்ருேம். எங்களுடைய தாயாராகிய் பார்வதியம்மையே! ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவருடைய இருபது வயதிற்குள்யே உள்ளூரிலிருந்தே மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்ருேம்,

## ஜாதகரின் மனைவியின் குணுதிசயங்கள்

13. சீலமும் விரத மேற்பள் சிந்தையும் நல்ல தாகும்
காலத்தை அறிந்துரைப்பள் கணவனுக் கிவளால்
[யோகம்
ஞாலமேல் நல்லோ ளாவள் நாகம்போல் கோபம்
[கொஞ்சம்
மால்மனை யொப்ப தாகும் வஞ்சனை மனமில் லாதாள்.

13. ஜாதகருடைய மனைவி நல்லொழுக்கங்களையும் நற்குணங்களையுமுடையவளாவள், இவள் நோன்புகளையும் விரதங்களையும் அநுஷ்டிப்பவளாவள். இவள் நல்ல மனத்தை யுடையவளாவள். இவள் காலாகாலத்தின் நோக்கங்களையும் போக்குகளையும் அறிந்து கொண்டு அவற்றிற்குத் தகுந்தாற்போலப் பேசுவாள். இவளால் இவளுடைய புருஷனுக்கு யோகமும் நல்ல காலமும் உண்டாகும், இவள் பூமியின் பேரில் நல்லவளாக விருப்பாள். இவளுக்கு நல்ல பாம்பிற்கு வருவதைப் போல கடூரமான கோபம் சிறிதளவு வரும், இவள் மகாவிஷ்ணுவின் மனைவியாகிய லக்ஷிமிக்குச் சமானமானவளாக இருப்பாள். இவள் கள்ளம், கபடு இல்லாத மனத்தை யுடையவளாவாள்.

14. வயதுமே தீர்க்க மென்ருேம் மாமுனி தடுத்துச்
[சொல்வர்
பயமிலா யிரண்டு தாரம் பாலகன் தனக்கு நேறும்
நயமுடன் தார மிரண்டு நல்கின காரணம் சொல்
தயவுடன் புகலு மென்ன சத்தமத் தோன் சரத்தில்.

14. ஜாதகருடைய மனைவி நீண்ட ஆயுளை யுடையவளென்று சொல்லுகின்ருேம். இதன் பேரில் வசிஷ்ட மஹரிஷி தடுத்துச் சொல்லுகின்ருர். ஜாதகருக்கு இரண்டு மனைவிமார்கள் சந்தேகமில்லாமல் வந்து சம்பவிப்பார்கள் என்று நான் பயமில்லாமல் சொல்லுகின்றேன். இவருக்கு இரண்டு

மனைவிமார்கள் ஏற்படுவதற்குக் காரணத்தைத் தயவு செய்து சொல்லுவீர் என்று கேட்கவே, சத்தமத்தோன் என்ற ஏழாவது வீட்டிற்குடையவராகிய குரு சரராசிகளில் ஒன்றாகிய துலாராசியில்

15. இருப்பதால் தாரம் ரெண்டு
யியம்பினோ முனியே யானும்
பராசரும் தடுத்துச் சொல்வார்
பகரொணு தாரம் ரெண்டு
தெரிவிப்பீ ரந்தச் சங்கை
சந்திரன் பரிதி யாட்சி
குருவுமே ரெண்டில் தங்க
கோதையு மொன்றே தீர்க்கம்.

15. இருப்பதால் ஜாதகருக்கு இரண்டு தாரம் உண்டு என்று முனிவரே! நாங்கள் சொன்னோம். இதன் பேரில் பராசர மஹரிஷியானவர் தடுத்துச் சொல்லுகின்றார். இரண்டு தாரங்களைச் சொல்லக் கூடாது, இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, சந்திரனும் பரிதி என்ற சூரியனும் ஆட்சியாக அஃதாவது தங்களுடைய சொந்த வீடுகளி லேயே இருப்பதாலும், குரு இரண்டாவது வீட்டில் இருப்பதாலும் மனைவி ஒருவளே ஆவள், இவளும் நீண்ட ஆயுளை யுடையவளாவள்.

16. இதற்குநேரிடையாக சாதக ஸ்ருதியிலே
ஏழாம் பாவத்தில் பாரு
அதில்சொல்லும் விபர மிரண்டேழோன்
கேந்திரமாகிலும் கோணத்தி லிருக்க
சதியிலாத தாரம் மொன்றெனு மொழிந்தோன்
சங்கையை விபரமாய்க் காண்பாய்
இதுநிற்க வாக்கில் பரலுமே வொன்று
இருப்பதால் தாரமு மொன்றே.

16. இதற்குச் சாட்சியாக, ஆதாரமாக, ஜாதக சுருதியிலே ஏழாவது பாவத்தைப் பாரும். அதில் சொல்லி யிருக்கின்ற விவரமானது என்ன வென்றால், இரண்டாவது வீட்டிற்குடையவர், ஏழாவது வீட்டிற்குடைய வர் கேந்திரம் என்ற ஒன்று. நான்கு, ஏழு, பத்து என்ற வீடுகளிலும் கோணம் என்ற ஒன்று ஐந்து, ஒன்பது என்ற வீடுகளிலும் இருந்தால் ஒரே ஒரு தாரந்தான் (மனைவி) தான் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த விஷயத்தின் விபரத்தை அறிவீர், மேலும் இதுவல்லாமலும் வர்க்கம் என்ற அஷ்ட வர்க்கில் பரல் ஒன்று தான் இருப்பதாலும் தாரம் என்ற மனைவி ஒன்றே யாகும்,

## ஜாதகருடைய புத்திரபாவம்

17. புத்திர விருத்தி தன்னைப் புகல்வே பலமுருது
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று
[சொல்வோம்
எத்தகை பலத்தினுலே யியம்பீ னிரந்த சங்கை
சுத்தமாய் கேது ஐந்தில் துடர்ந்ததால் சொன்னேம்
[யாங்கள்.

17. ஜாதகருக்குப் புத்திர பாவத்தைப் பற்றிச் சொல்லுவதற்கு யாதொரு பலமும் கிடையாது. புத்திரர்கள் ஒரு சமயம் பிறந்தாலும் அவர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்ருேம். எந்தக் காரணத்தின் பலத்தால் இவ்விதமாகச் சொன்னீர் என்று கேட்கவே, கேது ஐந்தாவது வீட்டில் இருப்பதால் நாங்கள் இவ்விதமாகச் சொன்னேம்.

## ஜாதகரின் இளைய சகோதரியினுடைய புத்திரபாவமும் குணதிசயங்களும்

18. இத்துடன் பின்துணைக்கு யியம்பினேம் புத்திர தோஷம்
பத்தினி குணமெவ்வார் பகர்வீர் முனியே நீதான்
சுத்தமு முடைய ளாகும் சொல்லது சுகமே யாகும்
நத்தினேர்க் குதவி செய்வள் நாயகன் மனதுக்
[கேத்தோள்.

18. மேலும் ஜாதகருடைய இளைய சகோதரிக்குக் கூட புத்திர தோஷம் உண்டு என்று சொல்லுகின்ருேம். இந்தச் சகோதரியினுடைய குணதிசயங்களைப் பற்றிச் சொல்லுவீர், முனிவரே! நீர் என்று கேட்கவே

19. தந்தையால் பெருமை யேற்பள் தாயில்லம் வாச மாகும்
பந்தணி மாதுக் கேதான் பாலர்கள் தோஷ மெய்தும்
எந்த காரணங்க ளாலே யிவளுக்கு புத்திர தோஷம்
முந்தின வினையாம் தாயே மொழிகுவீர் பூர்வம் தன்னே.

19. ஜாதகருடைய இளைய சகோதரி தன்னுடைய தகப்பனுரால் மேன்மையையும் புகழையும் அடைவாள். இவள் தன்னுடைய தாயாருடைய வீட்டிலேயே யிருந்து கொண்டு வாழ்வாள். இவளுக்குப் புத்திர தோஷம் ஏற்படும். எந்தக் காரணங்களால் இவளுக்குப் புத்திர தோஷத்தைச் சொன்னீர் என்று கேட்கவே, இவளுடைய முன் ஜன்மத்தின் பாவத்தின் பயனுக இது நேறும் என்று சொல்லவே, இவளுடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்டார்.

20. மாது முன் சென்மந் தன்னில் விரிஞ்சியில் கர்ண சேயாய்
காதலி ஒருத்தியுமே தான் கௌரவக் குடும்பியாகி
மேதினில் வாழு ளுளில் மேவின வினையைச்
[சொல்வேன்
தீதுகள் விலக்கும் தெய்வம் சேர்ந்தது கொல்லை
[தன்னில்.

20. ஜாதகரின் இளைய சகோதரி தன்னுடைய முன் ஜன்மத்தில் விரிஞ்சிபுரத்தில் கருணீகருடைய ஜாதியில் பெண்ணாகப் பிறந்து, இவள் ஒருவள் மாத்திரம் மேன்மையான சிறந்த குடும்பத்தை யுடையவளாகிப் பூமியில் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்த பாவத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக, கெடுதிகளைப் போக்கடிக்கின்ற தெய்வம் முனியேஸ்வரன் என்ற ஒன்று இவளுடைய பிழக்கடையில் வந்து வாசஞ் செய்தது.

21. குலதெய்வமாக முன்னோர் கோடிப்பர் முன்னோ ரெல்லாம்
தலைவியும் கர்வத்தாலே சல முனிதனைத் தொழாமல்
உலகினில் வாழ்ந்தா ளென்றோம் உரகன்போல்
[முனிசொல் சாபம்
நலமதை செய்யாத பாவி நசிப்பேன் உன்சுதரை
[யாவும்.

21. இவளுடைய மூதாதைகள் எல்லோரும் இவரைக் குலதெய்வமாக எண்ணி பூஜித்து வந்தார்கள். இவள் தன்னுடைய கர்வத்தால், இருமாப்பினால் இந்த முனிஸ்வரரை வணங்கி பூஜை செய்யாமல் இந்தப் பூமியில் வாழ்ந்து வந்தாள் என்று சொல்லுகின்றோம். ஆதிசேஷரைப் போல இந்த முனிஸ்வரர் சாபத்தைச் சொல்லுகின்றார். "எனக்குப் பூஜையைச் செய்து நல்லதைச் செய்யாத பாபியாகிய உன்னுடைய எல்லாக் குழந்தைகளையும் நாசஞ் செய்து விடுவேன்.

22. மறுசென்மம் சுதர் தேர்ன்று வகைதனை செய்து பின்பு
உறைகுவேன் உன்பால் யானும் உரைத்து
[வேறுசாகை செல்ல
அரிவைக்கு முனியின் சாபம் அணுகிற்று சுதரும்
[காணாள்
கருமுனி தன்பால் வாசம் காதலி கேட்டி டாயே.

22. உனக்கு உன்னுடைய மறுஜன்மத்தில் குழந்தை பிறக்காமல் இருக்கும்படியாய்ச் செய்து, பிறகு உன்னைப் பிடித்துக் கொண்டு உன்னிடத்திலேயே வாசஞ் செய்வேன்" என்று இந்த முனீஸ்வரர் சொல்லி விட்டு இவளுடைய புழகக்டையை விட்டு விட்டு வேறு இடத்திற்குப் போய்

விட்டது. இவளுக்கு இந்த முனிஸ்வரரின் சாபம் இந்த ஜன்மத்தில் இவளை வந்தடைந்தது. இதனால் இவளுக்குப் பிள்ளை கிடையா. கர்பத்தை அழித்துப் பிரஷ்டத்தை யுண்டு பண்ணுகின்ற முனியாகிய இந்தக் கருமுனி இவளைப் பிடித்துக் கொண்டு இவளிடத்தில் வாசஞ் செய்து கொண்டு வந்தது, பார்வதியம்மையே! கேட்பீராக.

23. முன்வினை தீரவேண்டி மொழிகிறோம் கிரிகை யொன்று
கன்ம சாந்திகளும் செய்து காதலி பீசம் தன்னில்
பொன் ரேக்கில் வருவியே தான் பேதையு மணிவா
[ளாகில்
துன்முனி சாபம் நீங்கி சுதர்களும் தோன்று மென்றோம்.

23. ஜாதகரின் இளைய சகோதரியினுடைய முன் ஜன்மத்திய பாவம் நிவர்த்தியாவதற்கு ஒரு சாந்தியைச் சொல்லுகின்றோம். அதன் பிரகாரம் கர்ம சாந்திகளைச் செய்து தங்க ரேக்கில் இவளுடைய பீஜத்தை எழுதி அதை இவள் அணிந்து கொள்வாளாகில் கெட்ட முனீஸ்வரருடைய சாபம் விலகிப் போய் இவளுக்குக் குழந்தைகள் பிறக்கும் என்று சொல்லு கின்றோம்.

24. சொற்படி செய்யா ளாகில்
சுதர்தோன்ரு தோன்றில் தீதாம்
சொற்படி செய்வா ளாகில்
தோன்றிடும் ஆண்பால் ரெண்டு
மைப்படி பெண்பா லவ்வார்
வரைகிறோம் தீர்க்க மாக
அப்பணி சடையோன் தேவி
அருளிய மொழி குன்ருது.

24. நாங்கள் சொல்லிய பிரகாரம். இவள் சாந்தியைச் செய்யா விட்டால் குழந்தைகள் இவளுக்குப் பிறக்கா. ஒரு சமயம் பிறந்தாலுங் கூட இக்குழந்தைகள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். நாங்கள் சொல்லிய பிரகாரம் இவள் சாந்தியைச் செய்வாளாகில் இவளுக்கு இரண்டு பிள்ளைகளும் பிறந்து இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றோம். நாகப்பாம்பைத் தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய மனைவியாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப்போகாமல் நடக்கும்,

## ஜாதகருடைய முன்ஜன்மம்

25. பாலகன்முன் சென்மத்தை பகருவோம் பட்சி தென்பால்
சீலமாம் பாலையோரம் சிறுவூரில் யிக்குலத்தில்
[தோன்றியே

ஞாலங்கள் விருத்தி செய்து நயப்பான குடும்பியாகி
வேலனும் வாழு ளுளில் மேவின வினையைக் கேண்மோ.

25. ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவற் பட்சி என்ற பட்சி ஸ்தானமாகிய திருக்கழுக் குன்றத்திற்குத் தெற்கில் சமுத்திரக் கரை ஓரத்தில் இந்த ஜன்மத்திய ஜாதியாகிய வேளாளர் குலத்திற் பிறந்து, நிலங்களைப் பயிரிட்டுக் கொண்டு, நல்ல சிறந்த குடும்பஸ்தராக விருந்து கொண்டு இவர் வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

26. கன்னிகை விதவை போகம் கலந்துமே கருவு தங்க
துன்மைகள் செய்தா னென்றோம் சோர்வுற்றது கருவு [தானும்
இன்னம் வேறென்று சொல்வேன் யில்லத்தில் [வெகுனாளாக
தன்குல தெய்வமாக தங்கிற்று நாகம் தானும்.

26. ஜாதகர் ஒரு இளம் பிராயமுள்ள விதவை ஸ்திரீயிடத்தில் சம்போகஞ் செய்யவே, இவளுக்குக் கர்பந்தரிக்கவே, இவர் கெடுதியான காரியங்களைச் செய்தார் என்று சொல்லுகின்றோம். இதனால் இந்தக் கர்பம் கலைந்து விட்டது. இன்னொரு பாவத்தையுஞ் சொல்லுகின்றேன். ஜாதகருடைய வீட்டில் வெகு காலமாக ஒரு நல்லப் பாம்பு இவருடைய குல தெய்வமாக வாசஞ் செய்து கொண்டிருந்தது.

27. அரவுஓர் மகுடம் கொண்டு அதுமுத்தம் தியங்கும்போது
திருமகள் கழியால் வாட்ட சேர்ந்தது காலனுடு
மருவிற்று அந்த தோஷம் மாரனு மந்தியத்தில்
குறைவுள குடும்பி யாகி கூத்தன் தன்பதிக்குச் சென்று.

27. இந்த நல்லப் பாம்பு மோடி வாசிப்பதைக் கேட்டு வாகில் தியங்கி இருக்கும் போது இந்த ஜாதகர் இதைத் தடியால் அடிக்கவே இது இறந்து எமபட்டணத்திற்குப் போய் சேர்ந்து விட்டது. இந்தத் தோஷமும் ஜாதகரை வந்தடைந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் க்ஷீணித்துப் போன குடும்பத்தை யுடையவராகிப் பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்

28. சிரனுன்கோன் வரையப் பட்டு செனிப்பனு மிந்த பாலன்
மருவிடு முன்னூழ் தோஷம் மைந்தர்கள் தோஷ [மெய்தும்
கர்மபுத்திரனும் தோன்ற கழறுவீர் முனியே நீதான்
திருகிலா வெள்ளியாலே சேடனும் செய்துமே தான்.

28. நான்குதலைகளை யுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு இந்த ஜன்மத்தில் இந்த ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றார். இவருக்கு முன் ஜன்மத்திய பாவமும் தோஷமும் வந்து சம்பவிக்கும். குழந்தைகளுக்கு இதனால் தோஷ முண்டாகும். கர்மஞ் செய்வதற்காகப் பிள்ளை பிறக்க ஒரு சாந்தியைச் சொல்லுவீர், முனிவரே! நீர் என்று கேட்கவே, குற்றமில்லாத வெள்ளியினால் ஒரு ஆதிசேஷருடைய பிரதிமையைச் செய்து,

29. ஆலங்காட்டதற்கு சென்று அரனடி அர்ச்சித் தேத்தி
சீலமா மறையோனுக்கு சேடனை தானம் தந்து
ஞாலமேல் அவர் பாதத்தை நாயகன் பூர்த்தி செய்து
சாலவே உள்ளூர் சென்று சஷ்டியின் விரதம் கொள்ள.

29. ஆலங்காடு என்ற திருவாலங்காடு க்ஷேத்திரத்திற்குப் போய்ச் சிவபெருமானைப் பூஜை செய்து தொண்டு செய்து பிறகு இந்த ஆதி சேஷ பிரிதிமையை ஒரு நற்குணங்களையும் நல்லொழுக்கங்களையு முடைய பிராம ணருக்குத் தானஞ் செய்து, பிறகு அவருடைய பாதத்தில் வீழ்ந்து தொழுது இவ்விதமாக இந்தச் சாந்தியை முடித்து விட்டுப் பிறகு உள்ளூருக்குப் போய் சஷ்டி விரதத்தை ஏற்றுக் கொண்டு அதை அநுஷ்டித்து வந்தால்

30. சந்ததி தோன்று மென்றோம் செப்புவோ மாண்பா [லொன்று
பந்தணி மார்கள் ரெண்டு பகருவோம் பாலனுக்கு
வந்தவன் யோகச் சேதி வரைகிறோ மினிமே லாக
முந்திய துணை பெண்பக்கல் மேவியே சீவிப் பானும்.

30. ஜாதகருக்குக் குழந்தைகள் பிறப்பார்கள் என்று சொல்லுகின் றோம். பிறகு இவருக்கு ஒரு பிள்ளையும் இரண்டு பெண்களும் பிறப்பார்கள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகருடைய யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தன்னுடைய மூத்த சகோதரி இடத்திற் குப் போய் ஜீவனஞ் செய்வார்.

31. குறைவுரு வாழ்வா னாகும் கோதையாம் அன்னை சேதி
பெரும் புத்தி யுடைய ளாகும் பிழையான குணமில் [லாதாள்
வருவோரை யாதரிப்பள் அன்னமு மன்பா யீவள்
தரிபடக் கூறுளாகும் சந்தேக மனத்த ளாகும்.

31. ஜாதகர் யாதொரு கஷ்டங்களுமின்றி வாழ்பவராவர். இவரு டைய தாயாருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் பெரிய, மேன்மையான புத்தியையுடையவளாவள், இவள் கெட்ட குணத்தை யுடையவளல்லள், இவள் தன்னிடத்திற்கு வருகின்றவர்களைக் காப்பாற்று

வார். இவள் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள். இவள் கண்டிப் பாயும் கடூரமாகவும் பேசமாட்டாள். சந்தேகமுள்ள மனத்தை யுடைய வளாவள்.

## ஜாதகரின் தாயாருடைய சகோதரபாவமும் முன்ஜன்மமும்

32. தன்துணை யில்லா ளாகும் செப்புவோ மிவள்
[முன்சென்மம்
பொன்முகர் ஆற்றிஞேரம் பிறந்தனன் வடுகச் சேயாய்
உன்னத குடும்பியாகி உத்தமி வாழு ஞளில்
துன்மைகள் வந்தசேதி செப்புவோ மினிமேலாக.

32. ஜாதகருடைய தாயார் சகோதரங்கள் இல்லாதவளாக விருப் பாள். இவளுடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவள் பொன்முகர் ஆற்றோரத்தில் வடுகருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறந்து மேன்மையான சிறந்த ஒரு குடும்பஸ்தளாகி இவள் வாழ்கின்ற காலத்தில் இவளுக்கு வந்து சம்பவித்தப் பாவங்களைப்பற்றி இனி மேல் சொல்லு கின்றோம்.

33. வான்தந்தை பேரில் நிந்தை வர்ணித்தாள் சிலேடை
[வார்த்தை
குறையுள மனத்தனுகி கூறுவான் சாபம் தானும்
திருகான வார்த்தை யென்மேல் செப்பின
[பாவிக்கே தான்
வரும்சென்மம் துணைவரின்றி மைத்துனன் மூத்தோ
[ரின்றி.

33. இவள் தன்னுடைய புருஷனின் தகப்பனுரின் பேரில் இரண்டு அர்த்தங்களுடைய வார்த்தைகளை நிந்தையாகச் சொன்னுள். இதன்பேரில் இவர் மனத்தில் துன்பத்தை யடைந்து சாபத்தைக் கொடுத்தார். வஞ்சனை யான வார்த்தைகளை என்பேரில் சொல்லிய பாபியாகிய உனக்கு மறு ஜன் மத்தில் சகோதரங்கள் இல்லாமலும், மைத்துனனும் மூத்தவர்களு மில்லாமலும்

34. உலகினில் வாழ்வா யென்று உதறினன் தெருத்தாள்
[தானும்
மருவிற்று அந்த சாபம் மாதுவு மந்தி யத்தில்
நலமுள தலங்கள் சென்று நமன் பதிக்காளா யின்னேள்
தலைனன் கோன் வரையப் பட்டு செனித்தவ ளென்று
[சொல்வோம்.

34. நீ இந்தப் பூமியில் வாழக்கடவது என்று சொல்லித் தெருவி லுள்ள மண் தூளை எடுத்துத் தூற்றினர். இந்தச் சாபம் இவளை வந்து அடைந்தது. இவள் தன்னுடைய கடைசி காலத்தில் நல்ல தெய்வீக ஸ்தலங்களுக்கு யாத்திரையாகப் போய்ப் பிறகு இவள் இறந்து எமபட்டணத் திற்குப் போய் நான்கு தலைகளையுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழு தப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லு கின்ரேம்.

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

35. ஆகையால் யிச் சென்மத்தில் அணுகிடு முன்னூழ்
[சாபம்
தோகைக்கு துணைவர் காணுள் சோர்வுறும் வரனின்
[தோழர்
பாகமாய் யிவள்பின் சென்மம் பகருவோம் தாயே
[யாங்கள்
நாகத்தை அணிந்தோன் வாழும் நலம்பேறு ஊத்து
[காட்டில்

35. ஆகையால் இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தாயாருக்கு முன் ஜன்மத்திய பாவங்கள் வந்து சம்பவிக்கும். இவளுக்குச் சகோதரங்கள் கிடையா, இவளுடைய புருஷனுடைய சகோதரர்களும் இறந்துவிடுவார்கள். இவளுடைய மறு ஜன்மத்தைப்பற்றி நாங்கள் சொல்லுகின்ரேம், பார்வதி யம்மையே! நாகப்பாம்பைத் தன்னுடைய ஜடையில் தரித்துக்கொண்டிருக் கும் சிவபெருமான் வாழ்கின்ற ஸ்தலமாகிய சிறந்த ஊத்துக்காடு என்ற க்ஷேத்திரத்தில்

## ஜாதகரின் தகப்பனுருடைய முன்ஜன்மம்

36. பிறப்பளாம் சைவசேயாய் பெரிதான குடும்பி யாவள்
உறைகிரேம் தந்தை பூர்வம் உம்பர்வாழ் விரிஞ்சி
[தன்னில்
திருகிலா வன்னிய சேயாய் செனித்துமே வாழு ளில்
மருவின வினையைக் கேண்மோ மறைமாது பேரில்
[நிந்தை.

36. சைவருடைய ஜாதியில் பெண்ணுக ஜாதகருடைய தாயார் பிறப் பாள். இவள் பெரிய குடும்பத்தை யுடையவளாவள். ஜாதகருடைய தகப்பனுருடைய முன்ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்ரேம். தேவர்கள் வசிக்கின்ற விரிஞ்சிபுரத்தில் வஞ்சனையில்லாத ஒரு வன்னியருடைய ஜாதி யில் ஆணுகப் பிறந்து வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்ரேம், கேட்பீராக. இவர் ஒரு பிராமண ஜாதி ஸ்திரீயின்பேரில் அபவாதத்தைச்

37. சொல்லவும் மனதுவாடி செப்பின சாபம் கேண்மோ
பொல்லாத வார்த்தை சொன்னுள் பிறக்கும் பின்சென்
[மந்தன்னில்
பல்லுகள் குறைவதாயும் பலிப்புகள் யில்லா தாயும்
நில்லாது துணைவர் தானும் மேதினியில் வாழுவா
[யென்ன.

37. சொல்லவே அவள் தன்னுடைய மனத்தில் துக்கத்தை அடைந்து சொல்லிய சாபத்தைச் சொல்லுகின்ருேம், கேட்பீராக. இவள் கொடுமை யான வார்த்தைகளைச் சொன்னுள். உன்னுடைய மறு ஜன்மத்தில் பற்கள் குறைவாக விருந்தும், செழித்து வளராமலிருந்தும், பலிதங்கள் இல்லாமலும் இருந்துகொண்டும், உன்னுடைய சகோதரங்கள் இல்லாமலும் இந்தப் பூமியில் நீ இருந்து வாழக்கடவது என்று சொல்லும்போது

38. அந்தரம் தாதாஸ்து வென்ன
அணுகிற்று அந்த சாபம்
இந்தவ னந்தி யத்தில்
யிடறுகள னந்த முண்டாய்
முந்தினேர் தொண்டு பூண்டு
மேவினன் கால னுடு
விந்தையாய் பிரமன் லக்கம்
விளங்கின னென்று சொல்வோம்.

38. ஆகாயத்தில் இப்படியே நடக்கக்கடவது என்று ஒரு அசரீரி வாக்கு கிளம்பிற்று. இந்தச் சாபம் ஜாதகருடைய தகப்பனுரை வந்து அடைந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் அநேகவிதமான கஷ்டங்களை அநுபவித்தும், பெரியோர்களுக்கும் சந்நியாசிகளுக்கும் வேலைகளை அன்புடன் செய்துகொண்டும், பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார். பிறகு இவர் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப் பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருர் என்று சொல்லுகின் ருேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

39. முன்வினை யிச்சென் மத்தில் மேவிடும் துணைவர் காணுன்
தந்தமும் குறையுண் டாகும் தந்தை ஆர்சிதமு மில்லான்

பிந்திய சென்மம் சொல்வேன் பெரிதான தணிகை [தன்னில்
முந்தின குலமுதிப்பான் முதல்வியும் கேட்க லுற்றாள்.

39. ஜாதகருடைய தகப்பனாருக்கு முன்ஜன்மத்திய சாபம் இந்த ஜன்மத்தில் வந்து சம்பவிக்கும். இவருக்குச் சகோதரங்கள் கிடையா, இவருடைய பற்கள் குறைவுபடும். குற்றத்தை யுடையனவாக விருக்கும். இவர் தந்தையின் சொத்துக்கள் இல்லாதவராகவிருப்பர். இவருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவர் பெரியதான தணிகை என்ற திருத்தணியில் பிராமணருடைய ஜாதியில் ஆணாகப் பிறப்பார். உடனே பார்வதியம்மையார் கேட்க ஆரம்பித்தார்.

40. இந்ததோர் சென்மந் தன்னில் யிவன்செய்த புண்ணிய [மென்ன
வந்தவர்க் கன்ன மீந்தும் வறுமுகன் பத்தி யாயும்
சந்ததம் அரத்தி லிச்சை சிலர்க்கு ஆபத்தைக் காத்தும்
அந்தவன் வாழ்வ தாலே அருமறை குலமுதிப்பான்.

40. இந்த ஜன்மத்தில் ஜாதகருடைய தகப்பனார் என்ன புண்ணிய காரியங்களைச் செய்தார் என்று கேட்கவே, இவர் தன்னிடத்திற்கு வந்தவர் களுக்குச் சாப்பாட்டைப் போட்டும், ஆறுமுகங்களையுடைய கடவுளாகிய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராகியும், எப்போதும் தானதர்மங் களைச் செய்வதில் பிரியமுள்ளவராகவு மிருந்தும், சிலருக்கு ஆபத்துக் காலத்தில் உதவிசெய்து காப்பாற்றியும், வாழ்வதால் இவர் பிராமணருடைய ஜாதியில் பிறப்பார்.

## ஜாதகருடைய தகப்பனார், தாயார், மனைவி மரணமும் ஜாதகருடைய மரணமும்

41. ஆறுறு ஆண்டு தன்னில் அணிகிடும் தந்தை கெண்டம்
தீரமாய் நாற்ப தாண்டில் செல்லுவா ளன்னை தானும்
பாரியு மன்பா னேழில் பறப்பளாம் காலனாடு
மாரனுக் கருபான் ஞலில் மீன மாதத்திலே தான்.

41. ஜாதகருக்கு முப்பத்தாறுவது வயதில் இவருடைய தகப்பனார் இறந்துவிடுவார். இவருக்கு நாற்பதாவது வயதில் இவருடைய தாயார் இறந்துவிடுவாள். இவருக்கு ஐம்பத்தேழாவது வயதில் இவருடைய மனைவி இறந்து எமபட்டணத்திற்குப் பறந்தோடிப் போவாள். ஜாதகருக் குத் தன்னுடைய அறுபத்து நான்காவது வயதில் மீன மாதம் என்ற பங்குனி மாதத்தில்

## ஜாதகருடைய மறுஜன்மம்

42. உடலமே யேகு மென்றோம் உரைகிறோ மிவன்
[பின்சென்மம்
திடமுள வான்மியூரில் செனிப்பனும் சத்திரிய சேயாய்
அடவுடன் அரசர் மூலம் அதிகாரம் பெற்று வாழ்வன்
தடவரை மகளே யாங்கள் செப்பின மொழி குன்றாது.

42. மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய் விடும், என்று சொல்லுகின்றோம், ஜாதகருடைய மறு ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் செழிப்பான வான்மியூர் என்று திருவான் மியூர் என்ற க்ஷேத்திரத்தில் க்ஷத்திரியருடைய ஜாதியில் ஆணாகப் பிறப்பார். இவர் அரசருடைய மூலமாய் அதிகாரமான வேலையில் அமர்ந்து வாழ்வார். விசாலமான உயர்ந்த மலைக்கு அரசராகிய பர்வதராஜருடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தப்பிப் போகாமல் நடக்கும்.

## ஜனனகால தசை இருப்பு

43. பிறந்திடு காலம் தன்னில் பூசத்தின் முதல் பாதத்தில்
கரியவன் திசை யிருப்பு கழறுவோம் பதினே ழாண்டும்
மருவிடும் திங்கள் நாலும் வரைந்தனம் பூர்வ பாகம்
அரம்தனை வளர்க்கு மெங்கள் ஆத்தும தாயே கேளாய்.

43. ஜாதகர் பிறந்த காலத்தில் பூச நட்சத்திரத்தின் முதலாவது பாதம் ஆகும். அதற்குரிய கரியவன் என்ற சனியினுடைய மகாதசையில் இருப்பு நின்ற வருஷங்கள் பதினேழும், மாதங்கள் நான்கும் என்று சொல்லுகின்றோம். இதுவரையிலும் பூர்வபாகம் என்ற ஓராவது பாகத்தைச் சொன்னோம். அரத்தை வளர்க்கின்ற எங்களுடைய உயிரைப்போல விருக்கின்ற அருமையான தாயாராகிய பார்வதி யம்மையே! கேட்பீராக,

## ஜாதகருடைய யோகபாவம்

44. பாலகன் யோகம் தன்னை பகருவோ மினிமே லாக
ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கெருட னவன்
ஞாலங்கள் சேர்ப்பா னாகும் நல்லதோர் ரெண்டு யில்லம்
சாலவே நேறுமென்றோம் சகராசர் தன்னா லுய்வன்.

44. ஜாதகருடைய யோகத்தைப்பற்றி இனிமேல் சொல்லுகின்றோம். இவர் பாம்பின் கொடுமையான விஷத்தைப்போல யிருக்கின்ற எதிரிகளுக்கு இவர் கருடனைப்போல வலிவான விரோதியாவர். இவர் நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். இவருக்கு நல்ல இரண்டு வீடுகள் வந்து சேரும் என்று சொல்லுகின்றோம். இவர் பூமியை ஆள் கின்ற அரசரால் ஜீவனஞ் செய்வார்.

45. வறுமை யெப்போதும் காணான்
வரசரால் புண்ணிய மேற்பன்
உறன்முறை மதிப்பாய் வாழ்வன்
உலகினில் புகழு மேற்பன்
திருமகன் பணி யில்லங்கள்
செம்பொன்னும் பூமி யாவும்
இருபதாயிரம் பொன் னென்றோம்
யீஸ்வரி கேட்டி டாயே.

45. ஜாதகர் எப்போதும் தரித்திரத்தையும் கஷ்டங்களையுமடைய மாட்டார். இவர் அரசருடைய உதவியால் தான தர்மங்களைச் செய்து புண்ணியத்தை அடைவார். இவர் தன்னுடைய பந்துக்கள் இவரைக் கௌரவத்துடன் பாராட்டும்படியான நிலைமையிலிருந்து வாழ்வார். இவர் இந்தப் பூமியில் கீர்த்தியை அடைவார். இவருடைய ஆடை ஆபரணங்கள், வீடுகள், தனம், நிலங்கள் ஆகிய இவை எல்லாம் இருபதாயிரம் பொன் மதிப்பிடக்கூடியனவாக விருக்கும் என்று சொல்லுகின்றோம், பார்வதியம்மையே! கேட்பீராக. C.G.R.

---

# ஜாதகம் 45

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதி[2]தனு [3]பணியும் [4]சாடி [5]மால் குரு [6]வீணையாக
[7]உதயவர் [8]நந்தியாக [9]ஒரு கண்ணேன் [10]சேயும்
[[11]வண்டி
[12]விதி[13]கோலில் [14]சிகியும் [15]சீயம் மெல்லியும் முயிருமாக
இதுபலன் புகலுமென்று யீசுவரி கேட்கும் போது.

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரன் தனுசிலும், ராகு கும்பத்திலும், புதனும் குருவு மிதுனத்திலும், சூரியன் ரிஷபத்திலும், சுக்கிரனும் அங்காரகனும் கடகத்திலும், சனி துலாத்திலும், கேது சிம்மத்திலும் இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலாபலன்களைக் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும்போது,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சூரியன் | புதன் குரு |
| ராகு | இராசி சக்கரம் | | அங்காரகன் சுக்கிரன் |
| | | | கேது |
| சந்திரன் | | சனி | லக்கினம் |

பூராடம் 2-ஆம் பாதம் சுக்கிர தசை ஷ 11—10—0.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும் :—ரிஷபத்தில் ராகுவும், சிம்மத்தில் சூரியனும் அங்காரகனும், கன்னியில் சந்திரனும் சுக்கிரனும், துலாத்தில் சனியும் கேதுவும், மகரத்தில் புதனும், மீனத்தில் குருவும் ஆகும். சனி வக்கிர கதியில் இருக்கின்ருர்.

1. சந்திரன்
2. தனுசு
3. ராகு
4. கும்பம்
5. புதன்
6. மிதுனம்
7. சூரியன்
8. ரிஷபம்
9. சுக்கிரன்
10. அங்காரகன்
11. கடகம்
12. சனி
13. துலாம்
14. கேது
15. சிம்மம்

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பிருகுமே புகலு கின்ருர் பிறந்திடு மாண்பால் சென்மம்
வருமில்லம் வடதென் வீதி வாசலு மிந்திர ஞேக்கம்
பெருவயிரப்பன் பின்பால் பிறந்தவர் கோஷ்ட முண்டு
அரன் கோஷ்டம் வட பாலாகும் ஆதிமால் மாரி
[மேற்கில்.

2. பிறகு மஹரிஷி சொல்லுகின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும். பிறந்த வீடு வடக்குத் தெற்கு வீதியில் கிழக்குப் பார்த்த வாயிலேயுடையதாகும். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளுக்குப் பின்னல் பிறந்தவராகிய முருகக் கடவுளின், கோயில் கிழக்கிலுண்டு. சிவபெருமானுடைய கோயில் வடக்குத் திக்கில் இருக்கும். மகாவிஷ்ணு வின் கோயிலும் மாரியம்மன் கோயிலும் மேற்குத் திக்கில் இருக்கும்.

3. பலசாதி அவ்வூர் வாசம் பெருத்ததோர் ஊரே யாகும்
கலேதொழில் செய்தும் குலத்தில் கந்தன் தன்னடிமை
[வர்க்கம்
குலவுவா னிரண்டாம் சென்மம் கூறுவோம் குடும்பச்
[சேதி
மலேயிறை மகளே யாங்கள் வழுத்துவோ மின்னூல்
[தன்னில்.

3. ஜாதகர் பிறந்த ஊரில் அநேக ஜாதியார் வாசஞ் செய்வார்கள். இந்த ஊர் ஒரு பெரிய கிராமமாகும். ஜாதகர் உபாத்தியாயர் தொழிலேச் செய்கின்றவருடைய ஜாதியில் முருகக் கடவுளின் அடிமையார்களுடைய வர்க்கத்தில் இரண்டாவது குழந்தையாகப் பிறந்தார். இவருடைய குடும் பத்தின் விஷயங்களேப்பற்றிச் சொல்லுவோம். மலேகளுக்கு அரசராகிய பர்வதராஜருடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் இந்தச் சாஸ் திரத்தில் பலன்களேச் சொல்லுகின்றேம்.

## ஜாதகரின் தகப்பனருடைய குணுதிசயங்கள்

4. தந்தையின் குணத்தை சொல்வேன் சரசமாய் வார்த்தை
[யுண்டு
தந்தமும் தரளமொக்கும் சகுதியில் பிணியால் நீங்கும்
தந்தையி னுஸ்தி யில்லம் தானவ னடையா னுகும்
தன்பந்துக் கிணக்கம் சொல்லான் சகலரை வசியம்
[கொள்வன்.

4. ஜாதகரின் தகப்பனருடைய குணுதிசயங்களேச் சொல்லுகின்றேம். இவர் இனிமையான வார்த்தைகளேச் சொல்லுவார். இவருடைய பற்கள் முத்துக்களேப்போல அழகாகவும் வெண்மையாகவும் இருக்கும். இவை

சீக்கிரத்தில் நோயால் விழுந்துவிடும். இவர் தன்னுடைய தகப்பனுருடைய சொத்துக்களையும் வீட்டையும் அடையமாட்டார். இவர் தன்னுடைய பந்துக்களுக்கு வணங்கி பதில் சொல்லமாட்டார். இவர் எல்லோரையும் தன் பக்கமாக விருக்கும்படியாகச் செய்துகொள்வார்.

5. காந்தம் போல் புத்தியேற்பன் கல்விமான் யீகை யாளன்
சேர்ந்தவர் தம்மைக் காப்பன் செய்நிலம் விருத்தி
[செய்வன்
சாந்தமும் சொல்ப மேற்பன் சந்தேக மனத்த னுகும்
மாந்தளிர் நிறமே தேகம் வல்வாயன் யென்று
[சொல்வோம்.

5. ஸ்காந்தக் கல்லைப்போல ஜாதகருடைய தகப்பனுர் கிரகித்துக் கொள்ளக்கூடிய கூர்மையான, நுட்பமான புத்தியை யுடையவராவர். இவர் வாசித்தவராவர். இவர் பிறருக்குக் கொடுக்குந் தன்மையையுடையவராவர். இவர் தன்னிடத்திற்கு வந்து அடைந்தவர்களைக் காப்பாற்றுவார். இவர் செய்கால் நிலங்களைப் பயிரிட்டு தானிய வகையராக்களை விருத்தி செய்வார். இவர் சாந்தமான குணத்தைச் சிறிதளவு, உடையவராவர், சந்தேகப்படக்கூடிய மனத்தையுடையவராவர். இவர் மாந்தளிரைப் போலச் சிகப்பான நிறத்தையுடைய தேகத்தையுடையவராவர். இவர் பேசுவதில் கெட்டிக்காரர். பேச்சிற் திறமுடையோராவர் என்று சொல்லுகின்றோம்.

6, தந்தையால் சுகமு மில்லான்
தாயினுல் நிந்தை யேற்பன்
அந்தமான் சென்று மீள்வன்
அறிவோர்கள் நேயம் கொள்வன்
பிந்திவேர் ஒருவனுக பூமியில்
புகலு முண்டாம்
கந்தன்மேல் பக்தி பூண்பன்
காலாள் களுடைய னுகும்.

6. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய தகப்பனுரால் சுகத்தை அடைபவரல்லர். இவர் தன்னுடைய தாயாரால் அபவாதத்தை அடையக் கூடியவராவர். இவர் அந்தமான் தீவிற்குப்போய் மறுபடியும் திரும்பி வந்துவிடுவார். இவர் வாசித்தறிந்தவர்களுடைய சிநேகிதத்தை யுடையவராவர் இவர் சகோதரரில்லாமல் ஒருவராகவே ஒண்டியாகவே இருப்பார். இவர் பூமியில் கீர்த்தியை யுடையவராவர். இவர் முருகக்கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் கால் நடை வேலைக்காரர்களை யுடையவராவர்.

7. ரோமங்க ளதிக மில்லான் நுவலுபதேசம் கொள்ளான்
தீமையை யொருவர்க் கெண்ணுன் திருமாலின் நாமம்
[கொண்டோன்
காமனை விருப்பங் கொள்வன் கடன் கொள்வன்
[நிவர்த்தி செய்வன்.
சேமமாம் குடும்பியாவன் தீர்க்கமாம் வயது மேற்பன்.

7. ஜாதகருடைய தகப்பனுர் அதிகமான மயிரை உடையவரல்லர். இவர் தீட்சயைப் பெற்றுக்கொள்ளமாட்டார். இவர் யாருக்குங் கெடுதி களை நினைக்கமாட்டார். இவா மகாவிஷ்ணுவின் பெயரை உடையவராவர். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர், கடன் வாங்குவார். ஆனுல் அதை உடனே திருப்பிக்கொடுத்துவிடுவார். இவர் செழிப்பான குடும்பத்தையுடையவராவர். இவர் நீண்ட ஆயுளை யுடையவராவர்.

8. தன்துணை ஆண்பால் காணுன் தங்கும் பின்கன்னி
[யொன்று
கன்னிக்கு மணமுண்டாகிக் காலன் தன்பதிக்கு செல்வள்
அன்னவன் தனியாய் வாழ்வன் அறிவிப்பீ ரந்த சங்கை
ஒன்பதில் பரிதிதங்க ஒரு கண்ணேன் சேயும் லாபம்.

8. ஜாதகருடைய தகப்பனுர் சகோதரரில்லாதவராவர். இவர் ஒரு இளைய சகோதரியை யுடையவராவர். இவளுக்கு விவாகம் நடந்து பிறகு இவள் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்துவிடுவாள். ஜாதகருடைய தகப்பனுர் பின்னுல் சகோதரங்கள் இல்லாமல் ஒண்டியாயிருந்து வாழ்வார். இதற்குக் காரணத்தைச் சொல்லுவீர் என்று கேட்கவே, ஒன்பதாவது வீட்டில் பரிதி என்ற சூரியன் இருப்பதாலும், ஒரு கண்ணேன் என்ற சுக்கிரனும் சேய் என்ற அங்காரகனும் லாபம் என்ற பதினேராவது வீட்டில்.

## ஜாதகரின் தகப்பனுருடைய் முன்ஜன்மம்

9. இருப்பதால் சொன்னேம் தாயே யிவனுட பூர்வம்
[கேளாய்
பெருகிய நேப்பாளத்தில் பிறந்தனன் வன்னிய சேயாய்
பொருளது பெருக்கமாகிப் பேதையு மதலை யுண்டாய்
திருமகன் வாழுனுளில் செய்ததோர் வினையைக்
[கேண்மோ.

9. இருப்பதாலும் இவ்விதமாக* நாங்கள் சொன்னேம், பார்வதி யம்மையே! ஜாதகரின் தகப்பனுருடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லு கின்ரேும், கேட்பீராக. இவர் நேப்பாளத்தில் வன்னியருடைய ஜாதியில்

ஆணுகப் பிறந்து அதிக செல்வத்தை யுடையவராகியும், மனைவி மக்களை யுடையவராகியும் இருந்துகொண்டு இவர் வாழ்கின்ற காலத்தில் இவர் செய்த ஒரு பாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—தகப்பனுருடைய விஷயம் :—ஒன்பதாவது வீட்டில் சூரியனிருந்தால் தகப்பருக்குத் தோஷமுண்டாகும். இது விஷயமாகத் தமிழ் ஜாதகாலங்காரத்தில் ஐந்நூற்றித் தொண்ணூராவது (590-ஆவது) பாடலை வாசிக்கவும், பல தீபிகையில் பதினைந்தாவது அத்தியாயத்திலுள்ள இருபத்தாருவது சுலோகத்தையும் வாசிக்கவும்.

10. கன்னிகை யொருத்தி பேரில்
கழரொணு வார்த்தை சொல்லி
தன்வரன் தன்னைவிட்டு வேறு
சாகைக்கு அனுப்ப லுற்ருன்
அன்னவள் மன வெறுப்பால்
அறைந்த சாபத்தைக் கேண்மோ
துன்மையாய் வார்த்தை சொல்லி
துரத்தின பாபிக் கேதான்.

10. ஜாதகருடைய தகப்பனுர் ஒரு இளம்பிராயமுள்ள ஸ்திரியின் பேரில் சொல்லக்கூடாத நிந்தையான வார்த்தைகளைச் சொல்லவே, இவளுடைய புருஷன் இவளைத் தன்னிடத்திலிருந்து நிவர்த்தி செய்து வேருெரு விடத்திற்கு இவளை அனுப்பிவிட்டான். இதன்பேரில் இவள் தன்னுடைய மனத்தில் கஷ்டத்தை அடைந்து கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றேன், கேட்பீராக. நிந்தையாக என் பேரில் வார்த்தைகளைச் சொல்லி என்னைத் துரத்திவிடும்படியாய்ச் செய்த பாபியாகிய உனக்கு.

11. மறுசென்மம் தந்தனேயும் மாதுரு தன்னுல் நிந்தை
பிறந்தயி லடையா தாயும் பிதுராஸ்தி யில்லா தாயும்
வரும்துணை நஷ்ட மாயும் மருவுவாய் யெம்மான் பேரில்
உறைந்துமே தெருத்தூள் விட்டாள் உறைந்தது
[அந்த சாபம்.

11. உன்னுடைய மறு ஜன்மத்தில் பல் நோய் ஏற்படும், உன்னுடைய தாயாரால் உனக்குப் அபவாதங்கள் ஏற்பட்டும் நீ பிறந்த வீட்டை யடையாமலும் உனக்கு பிதுரார்ஜித சொத்துக்கள் கிடைக்காமலும், உனக்குச் சகோதரங்கள் இறந்தும் நீ கப்பலின் பேரில் ஏறி வெளி தேசத்திற்குக் போகக்கடவது என்று சொல்லித் தெருவிலுள்ள மண் தூளை வாரி காற்றில் தூற்றிவிட்டாள். இந்தச் சாபம் இவரை வந்தடைந்தது.

12. இதுவன்றி வேறு சொல்வேன் யிவன்துணை பாகம்
[தன்னில்
குறைவாகத் தந்தா னென்றேம் கூறுவான் துணைவர்
[சாபம்

பொதுவாக பாகம் செய்யா பாவிக்கு மறுசென் மத்தில்
பிதுர்மாதுர் சுகமுமின்றி பின்துணை யில்லா தாயும்.

12. இதுவுமில்லாமல் வேருெரு பாவத்தைப்பற்றிச் சொல்லுகின்றேன், ஜாதகருடைய தகப்பனர் தன்னுடைய சகோதரரின் பாகத்தைக் குறைத்துக் கொடுத்தார் என்று சொல்லுகின்ருேம். இதன்பேரில் இவருடைய சகோதரர் சாபத்தைக் கொடுத்தார். சரியாகவும் சமமாகவும் பாகப்பிரிவினையைச் செய்யாத பாபியாகிய உனக்கு உன்னுடைய மறு ஜன்மத்தில் தாய் தகப்பனர் ஆகிய இவர்களின் சுகம் இல்லாமலும் உன்டைய இளைய சகோதரம் இல்லாமலும்,

13. சொந்த யில்லங்க ளின்றி சொங்கின் மேல் செல்வாய் [நீயும்
பிந்திவேறு உதவியாலே பூமியில் வாழ்வாய் நீயும்
அந்தவள் சொல்லும் போது அந்தரம் தாதாஸ்து [வென்ன
வந்தது அந்த சாபம் மங்கையே கேட்டி டாயே.

13. சொந்தமான வீடுகள் இல்லாமலும், கப்பலின் மேல் ஏறி நீ வெளி தேசத்திற்குப் போகக்கடவது. பிறகு நீ வேருெருவருடைய சகாயத்தில் இந்தப் பூமியில் வாழக்கடவது என்று இந்தச் சகோதரர் சொல்லும் போது அவ்விதமாகவே நடக்கக்கடவது என்று. ஆகாயத்திலிருந்து ஒரு அசரீரிவாக்கு கிளம்பியது. இந்தச்சாபம் இவரை வந்து அடைந்தது, பார்வதியம்மையே ! கேட்பீராக.

14. ஆகையா லிச்சென் மத்தில் அணுகிடு மிரண்டு சாபம்
ஏகுவான் வெளிநா டன்னில் யெய்தாது தந்தை யாஸ்தி
பாகத்துத் துணைவர் காணுர் பற்களும் குறைவு நேறும்
போகவாரி தியை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

14. ஆகையால் ஜாதகருடைய தகப்பனுருக்கு இந்த ஜன்மத்தில் இரண்டு சாபங்கள் வந்து சம்பவிக்கும். இவர் வெளி தேசத்திற்குப் போய் விடுவார். இவருக்குத் தன்னுடைய பிதுரார்ஜித சொத்துக்கள் இவருக்குக் கிடைக்கா, பாகப்பிரிவினை செய்துகொள்ள இவருக்குச் சகோதரர் கிடையா, இவருடைய பற்கள் குறைவுபடும். ஆனந்தத்தை விளைவிக்கக்கூடிய கடலையும் நாகலோகத்தையும் உடைய பூமாதேவியைப் பெற்றெடுத்தப் புண்ணியமாதாவாகிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய குணதிசயங்கள்

15. இன்னெறி யுடையானுக்கு யிப்பால னுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தை சொல்வேன் அற்புத வார்த்தை [சொல்வன்

தன்சொல்லே மேன்மையாக சாதிப்பா னிரு நிறத்தன்
பொன்பணி சேர்ப்பா னுகும் பூமியை பரிபா லிப்பன்.

15. இப்படிப்பட்ட குணுகுணங்களையுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணுதிசயங்களைச் சொல்லுகின்றேன். இவர் ஆச்சரியமான வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் தான் சொல்லிய வார்த்தைகளே சரியானவை, மெய்யானவை, மேன்மையானவை என்று உறுதியாகச் சொல்லிப் பிடிவாதஞ் செய்து வெல்லுவார். இவர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவராவர். இவர் தனம், ஆடை ஆபரணங்கள் ஆகிய இவற்றைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார், இவர் பயிரிடும் நிலங்களைப் பயிரிட்டு இவற்றை அநுபவிப்பார்.

16. கல்விமான் கடவுள் பத்தி கண்முகம் வசிய முண்டு
இல்லையென் றுரைக்க மாட்டான் யிருவித வார்த்தை
[யுண்டு
வெல்லும் சொல் லுடைய னுகும் வீண்வம்பு புகலா
[னுகும்
அல்லல் யெப்போதும் காணுன் அறுமுகன் பத்தி
[கொள்வன்.

16. ஜாதகர் வாசித்தவராவர், கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவருடைய கண்களும் முகமும் அழகாக விருக்கும், இவர் பிறருக்கு உதவி செய்ய தன்னிடத்தில் ஒன்றுமில்லையென்று சொல்லமாட்டார். இவர் மெய்யையும் பொய்யையும கலந்து பேசுவார். இவர் ஜயிக்கக்கூடிய வார்த்தைகளை யுடையவராவார், வீணுகச் சண்டை சச்சரவுகளை விளைவிக்கக்கூடிய வார்த்தைகளைச் சொல்லமாட்டார். இவர் எந்தக் காலத்திலும் கஷ்டங்களை அநுபவிக்கமாட்டார். இவர் ஆறுமுகங்களையுடைய முருகக்கடவுளின் பேரில் அன்புடையவராவர்.

17. அன்னமும் குறைவுரு தான் அதிதிக் கன்ன மீவன்
சொர்ணமும் பணிதரை சேர்ப் பானும் யூகை சாலி
தன்குலம் தொழிலும் செய்வன் சல்லிய மென்னு லச்சம்
தன்யினத்த வர்க்கு நல்லன் சற்றினின் கோபி யாவன்.

17. ஜாதகர் சாப்பாடு விஷயத்தில் கஷ்டத்தை அநுபவிக்கமாட்டார். இவர் சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவார். இவர் பொன்னையும் ஆடை ஆபரணங்களையும், நிலங்களையும் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியக்கூடிய நுட்பமான அறிவை யுடையவராவர். இவர் தன்னுடைய ஜாதித் தொழிலைச் செய்வார். இவருக்குக் கடன் என்றுல் பயம் ஏற்படும், இவர் கடன் வாங்கமாட்டார். இவர் தன்னுடைய பந்துக்களுக்கு நல்லவராகவிருப்பார், இவர் சீக்கிரத்தில் கோபத்தை அடைபவராவர்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

18. தன்துணை முன் ஆனென்று சாற்றுவோம் தீர்க்க மாக
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அறிவுளான் [கல்விமானும்
தன் யினத்தவர்க்கு நல்லன் தயாளமாம் குணத்த னாகும்
பன்னுவான் ஞாலநூலை பதர்குண மில்லா னாகும்.

18. ஜாதகருடன் பிறந்தவர் ஒரு மூத்த சகோதரராவர், இவர் நீண்ட ஆயுளையுடையவராவர் என்று சொல்லுகின்றோம். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் புத்திசாலியாக விருப்பார். வாசித்தவராவர். இவர் தன்னுடைய பந்துக்களுக்கு நல்லவராவர். இவர் தயாளமான குணத்தை யுடையவராவர். பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவராவர், இவர் ஞானநூல்களை வாசித்து எழுதுவார். இவர் அற்பமான இழிவான குணத்தை உடையவரல்லர்.

19. வறுமை யெப்போதும் காணான்
வயதுமே தீர்க்க மெய்தும்
பெரும்புத்தி யடக்க வார்த்தை
பேதையு மொன்றே யுள்ளூர்
வரும்சுத ராண்பால் ரெண்டு
மங்கையு மவ்வார் தீர்க்கம்
குறைவுறு மற்ற தெல்லாம்
குவலயம் சல்லியம் காணான்.

19. ஜாதகருடன் பிறந்த மூத்த சகோதரர் எப்போதும் தரித்திரத்தையுங் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டார். இவர் நீண்ட ஆயுளையுடையவராவர். இவர் பெருந்தன்மையான புத்தியை யுடையவராவர். இவர் அடக்கமாகவும் நிதானமாகவும், சாந்தமாகவும் வார்த்தைகளைச் சொல்லுவார். இவருக்கு மனைவி ஒன்றே யாகும். இவள் உள்ளூரிலேயே யிருந்து வந்து சம்பவிப்பாள். இவருக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மற்றக் குழந்தைகளெல்லாம் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள். இவர் இந்தப் பூமியில் கடன் வாங்கமாட்டார்.

20. உடன்கூடி வாழ்வா னாகும்
உயர்செய்வன் தந்தை யாஸ்தி
திடமுள குடும்ப மேற்பன்
தீரன்பின் கன்னி மூன்று

அடவுடன் தீர்க்க மெய்தும்
அவர்பலன் பின்பால் சொல்வேன்
தடவரை மகளே யாங்கள்
சாற்றின மொழி குன்றுது.

20. ஜாதகருடைய மூத்த சகோதரர் ஜாதகருடன் கூட இருந்து ஒரே குடும்பியாக வாசஞ் செய்வார். இவர் தன்னுடைய தகப்பனுருடைய சொத்துக்களை அதிகப் படுத்துவார். இவர் பெரியதான மேன்மையான குடும்பத்தை யுடையவராவர். இவர் தைரியத்தை யுடையவராவர். ஜாதகருக்குப் பின்னுல் பிறந்தவர்கள் மூன்று சகோதரிமார்கள் ஆவர். இவர்கள் நீண்ட ஆயுளை யுடையவராவர். இவர்களுடைய பலா பலன்களைப் பின்னல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றேன். விசால மான உயர்ந்த மலைக்கு அரசனுகிய பர்வதராஜனுடைய மகளாகிய பார்வதி யம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

## ஜாதகருடைய விவாககாலமும் மனைவியின் குணுதிசயங்களும்

21. ச்ாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருப தாண்டுள்
காதலி கீழ்பால் தன்னில் கலப்பளாம் குணத்தைச்
[சொல்வேன்
சூதிலாள் சிவந்த மேனி சொல்லது சுருக்க மாகும்
வேதனை யொருவர்க் கெண்ணுள் வீண்பழி யேற்கா
[ளாகும்.

21. ஜாதகருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்ருேம். இவருக்கு இருபது வயதிற்குள் மனைவி கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். இவளுடைய குணுதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் வஞ்சனை, கள்ளம், கபடு ஆகிய இவற்றை யுடையவ ளல்லள். இவள் சிகப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவளாவள். இவள் சுறுக்கமாகப் பேசுபவளாவள். இவள் யாருக்குங் கெடுதிகளை நினைக்கமாட்டாள். இவள் வீணன அபவாதங்களை அடையமாட்டாள்.

22. பால் பாக்கியமுடைய ளாகும் பகை யென்று மனதில்
[வையாள்
சீலியாம் புத்திமானும் சிறுத் தோர் குதவி செய்வன்
காலத்தை அறிந்துரைப்பள் கணவனுக் கினியளாகும்
ஆலம்போல் கோபம் கொஞ்சம் அவளுக்கு வயது
[தீர்க்கம்

22. ஜாதகருடைய மனைவி பால் பாக்கியத்தை யுடையவ ளாவள். இவள் தன்னுடைய மனத்தில் விரோதத்தை யுடையவளல்லள், இவள் இவள் நல்லொழுக்கங்களையும் நற்குணங்களையும் உடையவள். சுத்தமாக வுமிருப்பாள். இவள் நல்ல அறிவையுடையவ ளாவள். இவள் ஏழை களுக்கு உபகாரத்தைச் செய்பவளாவள். இவள் காலாகாலங்களின் நோக்கத்தை அறிந்துகொண்டு அதற்குத் தகுந்தபடியாகப் பேசுவாள். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாவள். இவளுக்கு நாகப் ப்ாம்பின் விஷத்தைப் போலக் கடுமையான கோபம் சிறிதளவுண்டு. இவள் நீண்ட ஆயுளை யுடையவளாவள்.

## ஜாதகருடைய புத்திர பாவமும் முன் ஜன்மமும்

23. சுதர்களு மாண்பால் மூன்று தோகையா யிருவர் [தீர்க்கம்
பதராகும் நான்கு யென்றோம் பகர்வோம் பின்பால் [சேதி
வதிபின் தன் முன் சென்மத்தை வரைகிறோம் புதுவை ]தன்னில்
நிதிமிக யுடையானுக்கு நேர்ந்தனன் வைசிய சேயாய்

23. ஜாதகருக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். நான்கு குழந்தைகள் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இவர்களுடைய விஷயங் களைப் பின்னால் இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் புதுவை என்ற புதுச் சேரியில் வைசிய ஜாதியில் அதிக செல்வத்தை யுடைய ஒரு வைசியருக்கு ஆணுகப் பிறந்தார்.

## ஜாதகருடைய யோக பாவம்

24. பாரியு மதிலே யுண்டாய் பலவணி பங்கள் செய்து
தேறினோர்க் கன்ன மீந்து தென் காலனுடு சென்று
பாரினி லுதிப்பானுகும் பகருவோ மிவனின் யோகம்
தேறினோ ருறவு கொள்வன் சென வசியங்களுள்ளான்

24. ஜாதகர் தன்னுடைய முன்ஜன்மத்தில் மனைவிமக்களை யுடையவ ராகியும், பலவிதமான வியாபாரங்களைச் செய்து கொண்டும் சந்நியாசிகளுக் கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போட்டுக் கொண்டு, வாழ்ந்து பிறகு இறந்து, தெற்குத் திக்கிலுள்ள எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு இந்த பூமியில் வந்து பிறந்தார். இவருடைய யோகங்களைப் பற்றிச் சொல்லு கின்றோம். இவர் பெரியோர்களுடைய சிநேகிதத்தை அடைவார். ஜனங் களைத் தன் பக்கமாக விருக்கும்படியாக வசமாக்கிக் கொள்ளுவார்,

25. பிறந்தனுள் முதலாயாக பேசுவோம் பதினேழாண்டும்
குறைவுறும் மனது யென்றேம் கோதையால் விரயமாகும்
தரை சேரல் செலவு முண்டு சல்லிய பாதை யுண்டு
பெருங்காற்று பஞ்சு சிந்தை பேசின ஆண்டு மேலாய்

25. ஜாதகர் பிறந்த காலம் முதற்கொண்டு பதினேழு வயது வரைக்கும் பலாபலன்களைச் சொல்லுவோம். குடும்பத்திற்கு மனக்கஷ்டங்கள் நேரிடும் என்று சொல்லுகின்றேம். ஸ்திரீகளால் விரையமும் செலவும் உண்டாகும், நிலங்கள் வந்துசேரும். செலவுகளுமுண்டு. கடனுல் உபத்திரவமும் ஏற்படும். பெரிய காற்றில் அகப்பட்டுக் கொண்டுதவிக்குன்ற பஞ்சைப் போல குடும்பத்தாருடைய மனது கஷ்டத்தை அடையும். இங்கு சொல்லப்பட்ட பதினேழு வயதிற்குப் பிறகு,

26. செய்தொழில் பலித மெய்தும் செட்டுகள் செய்தலுண்டு
கை முதலுடையனுகும் கனத்த தானியங்க ளோங்கல்
வையகத்தோர் மதிப்பு மாடுகள் பனேயோர் விருத்தி
பையர வணிந்தோன் மாதே பகர்ந்தது தப்பாதாகும்

26. குடும்பத்தாரும் ஜாதகரும் செய்கின்ற தொழிலில் பலிதம் உண்டகும், வியாபாரங்களைச் செய்ய நேரிடும். ஜாதகர் கைமுதல் என்ற அசலே யுடையவராவர். பெரிய விலையுயர்ந்த தானிய வகையராக்கள் விருத்தியை யடைந்து பலிதந் தரும். பூமியிலுள்ளோர்களுடைய மதிப்பும் கௌரவமும் உண்டாகும். மாடுகளும், நிலங்களும், ஏர்களும் அதிகப்படும். அதிகமான பலனைத் தரும். நாகப்பாம்பை ஐடையில் அணிந்துள்ள சிவ பெருமானுடைய மனைவியாகிய பார்வதி யம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்,

27. யோக மெவ்விதமாய் சொன்னீர் யுரைப்பீர்களந்த [சங்கை
நாகமு மாறிலேற நற்சனி உச்சமாக
ஆகமம் புதனும் பத்தில் அசுரர் மந்திரியும் லாபம்
பாக மாயிருப்பதாலே பத்ம யோகங்களுண்டு

27. ஜாதகருக்கு எந்தக் காரணத்தினுல் யோகங்களைச் சொன்னீர். இதைப் பற்றிச் சொல்லுவீர் என்று கேட்கவே, நாகம் என்ற ராகு ஆருவது வீட்டிலிருப்பதாலும், சுபகரமான சனி உச்சமாகத் துலா ராசியில் இருப்பதாலும் ஆகமன் என்ற குருவும், புதனும் பத்தாவது பாவத்தில் இருப்பதாலும், அசுரமந்திரி என்ற சுக்கிரன் லாபம் என்ற பதினேராவது வீட்டிலிருப்பதாலும், பத்மயோகம் என்ற ஒருவித யோகம் உண்டாகி யிருக்கின்றது.

28. துரகத யோக மொன்று செப்பினேம் பாலனுக்கு
இருவித யோகத்தாலே யிடரில்லா வாழ்வானுகும்

தரையது பெருக்கமாகும் சல்லிய பாதை காணுன்
பெரும் புகழு மெய்தும் புண்ணிய மனத்தனுகும்

28. துரகத யோகம் என்ற ஒருவித யோகமும் ஜாதகருக்கு உண்டாகி யிருக்கின்றது. இந்த இரண்டு விதமான யோகங்களினுலே ஜாதகர் யாதொரு கஷ்டங்களுமில்லாமல் வாழ்வார். இவருக்கு நிலங்கள் விருத்தியாகும். அதிகமாகும். இவர் கடனுல் ஏற்படும் உபத்திரவத்தை அடையமாட்டார். இவருக்கு அதிகமான கீர்த்தியும் கௌரவமும் உண்டாகும். இவர் தானதர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவராவர்.

## ஜாதகரின் தாயாருடைய குணுதிசயங்கள்

29. மாதுரு குணத்தைச் சொல்வேன் மானிறம் சமதி
[ரேகம்
ஒதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம்கபடு
[மில்லாள்
சூதிலாளடக்க வார்த்தை சுந்தரமுடையளாகும்
காதலி தீர்க்க சீவி கணவனுக் கினியளாகும்

29. ஜாதகரின் தாயாருடைய குணுதியங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவள் மாநிறமான தேகத்தை யுடையவள். நடுத்தரமான தேகத்தை யுடையவளாவள். இவள் இனிமையாக வார்த்தைகளைச் சொல்லுவாள். இவள் வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றை யுடைய மனத்தை யுடையவளல்லள். இவள் கபடம், மர்மம் ஆகிய இவற்றையுடையவளல்லள். இவள் அழாக விருப்பாள், இவள் தீர்க்காயுளை யுடையவளாவள். இவள் தன்னுடைய புருஷனுக்குப் பிரியமானவளாக விருப்பாள்.

## ஜாதகரின் தாயாருடைய முன் ஜன்மம்

30. இல்லமும் உள்ளூராகும் யிவள் துணை ஆண்
[பால் ரெண்டு
வல்லிமார் நால்வராகும் வரைகிருேம் பின் பால்சேதி
தல்லியின் பூர்வம் சொல்வேன் தென்திசை கண்ண
[னூரில்
புல்கினுள் கர்ண சேயாய் புகழான குடும்பியாகி

30. ஜாதகரின் தாயாருடைய வீடு உள்ளூரிலேயே இருக்கும், இவளுடன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரர்களும், நான்கு சகோதரிகளும் ஆகும். இவர்களுடைய விஷயங்களைப் பற்றிப் பின்னுல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ருேம். தாயாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றேன். தெற்குத் திக்கிலுள்ள கண்ணனூரில் கருணீகர் ஜாதியில் பெண்ணுகப் பிறந்து மேன்மையான குடும்பஸ்தளாகி,

## ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மம்

31. அரமதிலிச்சை யுண்டாய் அந்தகனுலகம் சென்று
பிரமனுல் வரையப்பட்டு பிறந்தவளென்று சொல்
[வோம்
வரும் சென்மம் தணிகை யோரம் வளமுள சிறுவூர்
[தன்னில்
உரைகுவார் ரெட்டி வமிசம் உத்தமி கேட்டிடாயே

31. தானதர்மங்களைச் செய்வதில் பிரிய முள்ளவளாகியும், இருந்து பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு ஜாதகருடைய தாயார் இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்ருள் என்று சொல்லுகின்ருேம். இவள் மறுஜன்மத்தில் தணிகை என்ற திருத்தணிகை க்ஷேத்திரத்தின் அருகில் சிறப்பான ஒரு கிராமத்தில் ரெட்டியாருடைய ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயார், தகப்பனுர் மரணம்

32. நாற்பது ஆண்டு தன்னில் நற்றுலா மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் குறித்த தோரன்னே தன்னே
ஏற்கவே முப்பா னேந்தில் யெழிலானி மாதம் தன்னில்
தீர்ப்பாகத் தந்தைக்குச் செப்புவேர மாரகங்கள்

32. ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் நல்ல துலா மாதம் என்ற ஐப்பசி மாதத்தில் இவருடைய தாயாரை எமன் கூப்பிடுவார். அஃதாவது தாயார் இறந்துவிடுவாள். இவருக்கு முப்பத்தைந்தாவது வயதில் ஆனி மாதத்தில் இவருடைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும் என்று திண்ணமாகச் சொல்லுகின்ருேம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறு ஜன்மமும் ஜாதகருடைய மரணமும்

33. பின் சென்மம் நீலனுட்டில் பிறப்பனும் சத்திரிய
[சேயாய்
பொன்னெடு பூமி யுண்டாய் புகழுடன் வாழ்வானுகும்
மன்னனுக் கறுபானுலில் மார்கழி மாதம் தன்னில்
தன்னுடல் யேகுமென்ருேம் சாற்றின மொழி குன்ருது

33. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய மறுஜன்மத்தில் நீல நாட்டில் (சனிபகவானுடைய நாட்டில்) க்ஷத்திரிய ஜாதியில் ஆண் குழந்தையாகப் பிறப்பார். இவர் தனம், நிலம், ஆகிய இவற்றை யுடையவராகி

கௌரவத்துடனும் கீர்த்தியுடனும் வாழ்வார். ஜாதகருக்கு அறுபத்து நான்கா வது மார்கழி மாதத்தில் மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய்விடும் என்று சொல்லுகின்றோம். நாங்கள் சொல்லிய பலா பலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்.

34. மறு சென்மம் கலிங்கு நாட்டில் மறை குல முதிப்
[பானுகும்
அரசரால் தொழிலும் பெற்று அவனுமே வாழ்வானுகும்
திருமகன் மனை பின்னுல் செப்புவோம் மாரகங்கள்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டிடாயே

34. ஜாதகர் தன்னுடைய பின்ஜன்மத்தில் கலிங்கு நாட்டில் பிராமண ருடைய ஜாதியில் ஆணுகப் பிறப்பார். இவர் அரசருடைய உதவியால் உத்தியோகத்தை அடைந்து இவர் வாழ்வார். இவருடைய மனைவிக்கு இவருக்குப் பிறகு மரணம் நேரிடும் என்று சொல்லுகின்றோம். கறுப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே! கேட்பீராக.

35. புரந்திடுகாலம் தன்னில் பூராட மிரண்டாம் பாகம்
பிருகு தன் திசை யிருப்பு பதினொரு ஆண்டு மாகும்
உரைந்திடும் திங்கள் பத்தும் உரைத்தனம் பூர்வ
பாகம்
அருமறை முடிவிலாடும் அம்பிகையாளே கேளாய்

35. ஜாதகர் பிறக்கும் காலத்தில் பூராட நட்சத்திரத்தில் இரண்டாவது பாதம் ஆகும். இதற்குரிய பிருகு என்ற சுக்கிர மகாதசையில் இருப்பு நின்ற வருஷங்கள் பதினொன்றும் மாதகங்கள் பத்துமாகும். இதுவரையிலும் பூர்வ பாகம் என்ற முதலாவது பாகத்தைச் சொல்லி முடித்துவிட்டோம். அருமையான வேதங்களின் முடிவு என்ற உபநிஷத்துக்களில் ஆனந்தமாக விளங்குகின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக. C.G.R.

———

# ஜாதகம் 46

## ஜனன காலகிரக நிலை

கன்னியும் செனன மாக [1]கவி மகனிரண்டில் தங்க
[2]புந்தியு [3]பானு மூன்றில் [4]பூமகன் [5]காரி அஞ்சில்
சந்திரன் யேழிலாக [6]சிகண்டியும் [7]நவத்தில் தங்க
[8]மந்திர கயிறு [9]யீராறில் மருவிஞல் பலன் யெவ்வாறு

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சுக்கிரன் இரண்டாவது வீட்டிலும், புதனும் சூரியனும் மூன்ருவது வீட்டிலும், அங்காரகனும் சனியும் ஐந்தாவது வீட்டிலும், சந்திரன் ஏழாவது வீட்டிலும், குரு ஒன்பதாவது வீட்டிலும், ராகு பன்னிரண்டாவது வீட்டிலும், (கேது ஆருவது வீட்டிலும்) இருந்து இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால் பலா பலன்கள் எவ்விதமாக விருக்கும் என்று,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| ந்திரன் | | குரு | |
| கேது | இராசி சக்கரம் | | |
| அங்கா ரகன் சனி | | | ராகு |
| | சூரியன் புதன் | சுக்கிரன் | லக்கினம் |

த்திரட்டாதி 3-ஆம் பாதம் சனி தசை
ஞ 5—10—00

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சச் சக்கர கிரக நிலை பொருத்த முடையதாகும்:—மேஷத்தில் ராகுவும், மிதுனத்தில் சுக்கிரனும், சிம்மத்தில் அங்காரகனும் கன்னியில் சனியும், துலாத்தில் சந்திரனும் கேதுவும், தனுசில் புதனும், மகரத்தில் சூரியனும், மீனத்தில்ல் குருவும் ஆகும். புதனும் குருவும் வக்கிரகதியில் இருக்கின்ருர்கள்.

---

1. சுக்கிரன்
2. புதன்
3. சூரியன்
4. அங்காரகன்
5. சனி
6. குரு
7. ஒன்பது
8. ராகு
9. பன்னிரண்டு

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. சங்கரி கேட்கும்போது சடை முனி புகலுகின்ருர்
இங்கிவை ஆண்பால் சென்மம் யில்லமும் கீழ் மேல் வீதி
சங்கரன் வடக்கு வாசல் தந்தியும் கோஷ்ட மேற்கில்
சிங்க வாகனத்தாள் மாரி தோன்றிடும் வட கீழ்தன்னில்

2. பார்வதி யம்மையார் கேட்கும் போது ஜடைமுனிவர் சொல்லு கின்ருர். பிறந்த குழந்தை ஆண் குழந்தை ஆகும், பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்கு வாயிலை யுடையதாகும். விநாயகக் கடவுளின் கோயில் மேற்குத் திக்கில் இருக்கும், காளியம்மனுடைய கோயிலும் மாரியம்மனுடைய கோயிலும் வடகிழக்குத் திக்கில் இருக்கும்.

3. வட திசை மாலின் கோஷ்டம் மருவிடும் சிறுவூர் [தன்னில்
அடவுடன் வன்னிய சேயாய் அருளுவானெட்டாம் [சென்மம்
இடமதில் ஐவீடாகும் யியம்புவோம் குடும்பச் சேதி
தடவரை மகளே யாங்கள் சாற்றின மொழி குன்ருது

3. மகாவிஷ்ணுவின் கோயில் வடக்குத் திக்கிலிருக்கும். ஒரு சிறிய கிராமத்தில் வன்னியருடைய ஜாதியில் எட்டாவது பிறவியாக ஜாதகர் பிறப் பார். இந்த இடத்தில் ஐந்து வீடுகள் இருக்கும், ஜாதகருடைய குடும்ப விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்ரேம். விசாலமான உயர்ந்த மலைக்கு அரசனுகிய பர்வதராஜருடைய மகளாகிய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய வார்த்தைகள் தவறிப் போகா.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதர பாவம்

4. தந்தையின் துணை ஆணென்று சாற்றுவோம் தீர்க்கமாக
அந்த ஆண் முன்னேனுகும் அவன் வேறூர் வாசமாகும்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோ மவன்தன் சேதி
இந்தவன் தந்தை சேதியியம்புவோம் யினி மேலாக

4. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரர் ஒருவராவர். இவர் நீண்ட ஆயுளை யுடையவராவர். இவர் மூத்த சகோதரராவர். இவர் வேறு கிராமத்தில் வசிப்பார். இவருடைய விஷயங்களைப் பற்றிப் பின் பாகமாகிய இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ரேம். இனிமேல் ஜாதகரின் தகப்ப னுருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்ரேம்,

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

5. இரு சிகப்புடையனுகும் யீகைவான் கல்விமானும்
தரையதை விருத்தி செய்வன் சல்லிய பாதை
[யேற்பன்
பொறை சொலான் யிளமனத்தன் பூமியும் விரையம்
[செய்வன்
அறுமுகன் பத்தி கொள்வன் ஆள்காரருடைய னுகும்

5. ஜாதகரின் தகப்பனுர் இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறமான தேகத்தை யுடையவராவர். இவர் பிறருக்குக் கொடுக்குந் தன்மையை யுடையவராவர், வாசித்தவராவர். இவர் நிலங்களைப் பயிரிட்டுத் தான்யங்களை அதிகப்படுத்துவார். இவர் கடனுல் ஏற்படும் உபத்திரவத்தை யுடையவராவர். இவர் பிறர் பேரில் குற்றங்களைச் சொல்ல மாட்டார். இவர் இளகிய மனத்தை யுடையவராவர். தாக்ஷண்யமுள்ளவர். தயாள குணமுடையவர், இவர் நிலங்களை விற்றுவிடுவார். இவர் ஆறு முகங்களை யுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவர் வேலையாட்களை யுடையவராவர்.

6. அந்தமான் செல்வானுகும் ஆபத்தென் றுரைக்
[காப்பன்
விந்தையாய் பேசுவானும் மேட முமுத்திராடம்
இந்தவ னுதிப்பானுகும் யீன்ற தாய் தன்னுல் நிந்தை
பிந்தியும் பெருவானுகும் போசன வறுமை காணுன்

6, ஜாதகருடைய தகப்பனுர் அந்தமான் தீவிற்குப் போவார். இவர் கஷ்டங்களை அநுபவிக்கின்றேம் என்று சொல்லுகின்றவர்களைக் காப்பாற்றுவார். இவர் ஆச்சரியப்படும்படியாகவும் அதிசயமாகவும் பேசுவார். இவர் உத்திராட நட்சத்திரத்திலும் மேஷராசியிலும் பிறந்தவராவர். இவருக்குத் தன்னைப் பெற்ற தாயாரால் அபவாதங்கள் பின்னுல் நேரிடும். இவர் சாப்பாடு விஷயத்தில் கஷ்டங்களை அநுபவிக்க மாட்டார்.

7. கரமதில் மாலின் ரேகை கஞ்சமாம் ரேகை யுள்ளான்
மருவிடும் காச ரோகம் மாடுகள் பனையேர் விருத்தி
தரிபடக் கூருனுகும் தாட்சண்யன் கனத்த புத்தி
மருவரை வசித்தே வெல்வன் மங்கையர் மோகனுவன்

7. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய உள்ளங் கையில் விஷ்ணு ரேகையும் தாமரை ரேகை யுமுடையவராவர். இவருக்குக் காச நோய் உண்டாகும். மாடுகளும் நிலங்களும் ஏர்களும் விருத்தியை யடையும், இவர் கண்டிப்பாகவும் கடூரமாகவும் பேச மாட்டார். இவர் தாட்சண்ய குணத்தை யுடையவராவர். பெரிய சிறந்த புத்தியை யுடையவராவர்,

எதிர்புடன் கூடிக் குலாவி அவரை ஜயித்து விடுவார். இவர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர்,

## ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மம்

8. முன்ன வனிருந்த சென்மம் மொழிகிறோம்
[நேபாளத்தில்
துன்மதி வைசிய சேயாய் செனித்துமே செட்டு செய்து
அன்னவன் வாழுநாளில் அணுகின வினையைக்
[கேண்மோ
கன்னிகை யொருத்தி பேரில் கழறொணா வார்த்தை
[சொல்ல

8. ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் நேப்பாளத்தில் வைசிய ஜாதியில் ஆணாகப் பிறந்து வியாபாரத்தைச் செய்து கொண்டு வாழ்கின்ற காலத்தில் இவருக்கு வந்து சம்பவித்தப் பாவத்தைச் சொல்லுகின்றோம், கேட்பிராக. இவர் ஒரு இளம் பிராயமுள்ள ஸ்திரீயின் பேரில் சொல்லக் கூடாத வார்த்தைகளை நிந்தையாகச் சொல்லவே.

9. மாதுவும் மனது வாடி வரைந்த சாபத்தைக் கேண்மோ
பாதக வார்த்தை யென்மேல் பகர்ந்திட்ட பாவிக்கே
[தான்
மேதினில் மறு சென்மத்தில் விளங்காது துணையெனைப்
[போல்
தீதான காச ரோகம் சேர்ந்திடு மதுவு மின்றி

9. இந்த ஸ்திரீ தன்னுடைய மனத்தில் கஷ்டத்தை யடைந்து கொடுத்த சாபத்தைச் சொல்லுகின்றோம், கேட்பிராக. என் பேரில் நிந்தையாக கெட்ட வார்த்தைகளைச் சொன்ன பாவிக்குத் தன்னுடைய மறு ஜன்மத்தில் என்னைப் போன்ற சகோதரம் அதாவது சகோதரி உயிருடன் இருக்காமல் இறந்துவிடக்கடவது. கெடுதியான காச ரோகம் சேரக் கடவது. இவைகளுமன்றி

10. பெற்ற தாய் தன்னால் நிந்தை பெருவானும் வன
[வாசங்கள்
இத்தகை சொல்லும்போது யெதிரிகள் தாதாஸ்து
[வென்ன
பற்றிற்று அந்த சாபம் பாலகனந்தியத்தில்
குற்றமாய் வாய்ப்புன் கண்டு குலவினான் காலனோடு

10. தன்னைப் பெற்ற தாயாரால் இவர் அபவாதங்களை அடையக் கடவது வனவாசங்களை அடையக் கடவது என்று இவ்விதமாகச் சொல்லும் போது இவருடைய விரோதிகள் இவ்விதமாகவே நடக்கக் கடவது என்று சொல்லவே, இந்தச் சாபம் இவரை வந்தடைந்தது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் கெடுதியான வாய்ப்புண் ரோகம் கண்டு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

11. சிரனுன் கோன் வரையப்பட்டு செனித்தவனிவனே
[யென்றேம்
மருவிடு முன்னிவன் சாபம் வரும் துணை கன்னி
[காணுன்
உரைந்திடும் காசரோகம் உலகில் தாய் தன்னுல்
[நிந்தை
பெருவனுமென்று சொல்வோம் பிருகுமே மறுத்து
[சொல்வார்

11. ஜாதகருடைய தகப்பனுர் நான்குதலைகளை யுடைய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இந்த ஜன்மத்தில் வந்து பிறந்திருக்கின்றுர் என்று சொல்லுகின்றேம், இவருடைய முன் ஜன்மத்திய சாபம் இவரை வந்தடையும். இவருக்குச் சகோதரி இருக்க மாட்டாள். இவருக்குக் காச நோய் உண்டாகும். இவருக்குப் பூமியில் தன்னுடைய தாயாரால் அபவாதங்கள் ஏற்படும் என்று சொல்லுகின்றேம். பிருகு மஹரிஷி தடுத்துக் கேட்கின்றுர்.

12. எந்த காலத்தில் ரோகம் யெய்திடும் விபரம் சொல்வாய்
இந்தவ னுதிக்கா முன்னம் யெய்திடு மந்த ரோகம்
வந்தனேய் விலக வேண்டி வரிவிப்பீர் கிரிகை
[யொன்று
எந்த சாந்திகள் செய்தாலும் யெக்கிய நெய் போலாகும்

12. ஜாதகருடைய தகப்பனுருக்கு எந்தக் காலத்தில் காச நோய் உண்டாகும். இதை விவரமாகச் சொல்லுவீர் என்று கேட்கவே, இந்த நோய் இந்த ஜாதகர் பிறப்பதற்கு முன்னமேயே ஏற்பட்டு விடும். இந்த நோய் நிவர்த்தியாகி விடுவதற்கு ஒரு சாந்தியைத் தெரிவிப்பீர் என்று கேட்கவே, எந்தச் சாந்திகளையும் செய்த போதிலும் எக்கியத்தில் விட்ட நெய்யைப் போல பிரயோஜன மற்றதாகப் போய்விடும்.

## ஜாதகருடைய குணுதிசயங்கள்

13. சொன்ன யிக்குணத்தானுக்கு தோகையர் யிருவர்
[தம்மில்
முன் மனையாளுக் கின்னேன் முதிப்பனு மிந்த பாலன்

அன்னவன் குணத்தை சொல்வேன் அழகுளான்
[மாஞ்சிவப்பன்
தன் சொல்லே மேன்மையாக சாதிப்பான் யூகை சாலி

13. இதுவரையிலுஞ் சொல்லப்பட்ட குணாதிசயங்களை யுடைய தகப்பனுருக்கு உள்ள இரண்டு மனைவிமார்களில் முதலாவது மனைவிக்கு இந்த ஜாதகர் பிறப்பார். இவருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் அழகாக விருப்பார். மாந்தளிரின் நிறமாகிய ஒருவிதமான சிகப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய வார்த்தைகளே மெய்யானவை, சிறந்தவை என்று உறுதியாகச் சொல்லிப் பிடிவாதஞ் செய்து வெல்லுவார். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை உடையவராவர்.

14. வித்தையு மிரண்டு கற்பன் விவேகியாம் மெவர்க்கு
[நேயன்
புத்தியில் பெரியோனுகும் பொய்யது புகலானுகும்
வெத்திச் சொல்லுடையனுகும் வேந்தர்கள் யிஷ்டம்
[கொள்வன்
சத்தியம் கூறுனுகும் தரணியை பரி பாலிப்பன்

14. ஜாதகர் இரண்டு பாஷைகளில் படித்தவராவர். இவர் அறிவுடையவராவர். இவர் எல்லோருக்கும் சிநேகிதராகவும் வேண்டியவராகவு மிருப்பார். இவர் அறிவில் பெரியவராக, உயர்ந்தவராக விருப்பார். இவர் பொய்யைச் சொல்ல மாட்டார், இவர் ஜயத்தை அடைகின்ற சொற்களை யுடையவராவர். அஃதாவது இவர் சொல்லுகின்ற வார்த்தைகள் மதிப்பிற்குரியனவாக விருக்கும். இவர் அரசர்களுடைய பிரியத்தையும் நட்பையும் உடையவராவர். இவர் சத்தியம் செய்ய மாட்டார். இவர் நிலங்களைப் பயிரிட்டு தான்யங்களை விருத்திசெய்து கொண்டு நிலங்களை அநுபவித்துக் கொண்டிருப்பார்.

15. மந்திரம் வைத்தியங்கள் மர்மநூல் அறிவானுகும்
தந்தையின் தந்தை போலே தானவன் வாழ்வானுகும்
விந்தையாய் யில்லம் செய்வன் வீண் வம்பு
[புகலானுகும்
சிந்தூர மெழுகு வல்லன் சிலேடையாய்ப் பேசு
[வானும்

15. ஜாதகர் மந்திர வித்தையையும் வைத்திய நூலையும், மர்ம சாஸ்திரத்தையும் அறிந்தவராவர். இவர் தன்னுடைய தகப்பனுரின் தகப்பனுகிய பிதுர் பாட்டனுரைப் போல வாழ்வார். இவர் ஆச்சரியப்படும்படியாக வீட்டைக் கட்டுவார். வீணுன சண்டைச் சச்சரவுகளை விளைவிக்கக் கூடிய வார்த்தைகளைச் சொல்ல மாட்டார். இவர் செந்தூர மருந்துகளையும்

பஸ்பங்களையும், மெழுகுவகையரா மருந்துகளையும் செய்யுந் திறமையை யுடையவராவர். இவர் இரண்டு அர்த்தங்கள் உள்ள பதங்களை அலங்கார மாகப் பேசுவார்.

16. சல்லிய பாதை காணுன் சண்முகன் பத்தி பூண்பன்
இல்லை யென்றுரைக்க மாட்டான் யெதிரியை நாசம்
[செய்வன்
வல்லியர் மோக ஞவன் மாடுகள் பனையேர் விருத்தி
தல்லி சொல் கடவாஞகும் சகடு வாகனமு மேற்பன்

16. ஜாதகர் கடனுல் ஏற்படும் உபத்திரவத்தை அடைய மாட்டார். இவர் ஆறுமுகங்களை யுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவரா வர். இவர் பிறருக்கு உபகாரத்தைச் செய்ய தன்னிடத்தில் ஒன்றுமில்லை என்று சொல்ல மாட்டார். தன்னுடைய விரோதிகளை அழித்து நாசமாக்கி விடுவார். இவர் ஸ்திரீகளின் பேரில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். இவருக்கு மாடுகளும், நிலங்களும், ஏர்களும், விருத்தி யாகும், நல்ல பலனைத் தரும். இவர் தன்னுடைய தாயாருடைய வார்த்தை களுக்கு மீறி நடக்க மாட்டார். இவர் வண்டி வாகனங்களையு முடையவ ராவர்.

## ஜாதகருடைய சகோதர பாவம்

17. தன் துணை முன் ஆண் ஒன்று சத்திமார் மூவர்
[தீர்க்கம்
பின்னமாம் மற்ற தெல்லாம் பேசின ஆண்பால் சேதி
மன்னு பூராடனுளாம் மேட ராசியிலே தோன்றும்
கன்னென மொழியே சொல்வன் கார்க்கோடன்
[போலே கோபம்

17. ஜாதகருடன் பிறந்தவர்களில் ஒரு மூத்த சகோதரரும் மூன்று சகோதரிகளும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். மற்ற சகோதரர்கள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள். இங்கு சொல்லப்பட்ட மூத்த சகோதரருடைய விஷயங்களைச் சொல்லுகின் ளும். இவர் பூராடநட்சத்திரத்தில் மேஷ ராசி லக்கினத்தில் ஜனனமான வராவர். இவர் சக்கரையைப் போன்ற இனிமையான வார்த்தைகளையே சொல்லுவார். இவருக்கு நல்லபாம்பிற்கு வருகின்றது போலக் கடூரமான கோப முண்டாகும்.

18. கல்வியும் சமமதாகும் கண்முகம் வசிய முண்டு
நல்லவன் நல்லவர்க்கு லண்டர்க்கு மிண்டனுவன்
சொல்லது சுருக்கமாகும் துறவிகள் நேசம் கொள்வன்
எல்லையை பரி பாலிப்பன் யேவலா ளுடையனுமே

18. ஜாதகருடைய மூத்த சகோதரர் நடுத்தரமான வித்தையை யுடையவராவர். இவருடைய கண்களும் முகங்களும் அழகாவ விருந்து கொண்டு பார்ப்பவர்களின் கண்களை கைவச படுத்தக் கூடியனவாக விருக்கும் இவர் நல்லவர்களுக்கு நல்லவராகவிருப்பார். முரடர்களுக்கு வலியுள்ள எதிரியாக விருப்பார். இவர் சுறுக்கமாகவும் கொஞ்சமாகவும் பேசுவார். இவர் சந்நியாசிகள், பரதேசிகள், ஆகிய இவர்களின் சிநேகிதத்தை யுடையவராக விருப்பார். இவர் நிலங்களைப் பயிரிட்டுக் கொண்டு அவற்றை அநுபவித்துக் கொண்டு வருவார். வேலைக்காரர்களை யுடையவராவர்.

19. கடன் கொள்வன் நிவர்த்தி செய்வன் கஞ்சமாம் ரேகை [யுள்ளான்
படையில் முன் செல்லானுகும் பணிந்தோரை [ஆதரிப்பன்
நடையது துருசுமாகும் நாதனுர் பத்தி பூண்பன்
விடவிழி பாரி யொன்றே மேவிடும் வடபால் தன்னில்

19. ஜாதகருடைய மூத்த சகோதரர் கடன் வாங்குவார். உடனே இதைத் திருப்பிக் கொடுத்து விடுவார், தன்னுடைய உள்ளங் கையில் தாமரை ரேகையை யுடையவராவர். இவர் சண்டைச் சச்சரவுகளில் முதலாளியாக விருந்து கொண்டு முதலில் பிரவேசிக்க மாட்டார். தன்னை வணங்கினவர்களைக் காப்பாற்றுவார். இவருடைய நடவடிக்கை கெட்டதாகும். இவர் கடவுளின் பேரில் அன்புடையவராவர். இவருக்கு ஒரே ஒரு மனைவி உண்டு. இவள் வடக்குத் திக்கிலிருந்து வருவாள்.

20. சுதர்களு மாண் பால் ரெண்டு தோகையு மூவர் தீர்க்கம்
வதிபனும் வயது தீர்கம் மாரன் தன்னுடனே வாழ்ந்து
சதியாகப் புகரிடையில் சாறுவான் வேறதாக
அது பலன் பின் பால் சொல்வேன் அம்பிகையாளே [கேளாய்

20, ஜாதகருடைய மூத்த சகோதரருக்கு இரண்டு பிள்ளைகளும் மூன்று பெண்களும் நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இவருக்கு தீர்க்காயுளுண்டு. இவர் ஜாதகருடன் கூட ஒரே குடும்பமாக விருந்து கொண்டு வாழ்ந்து சுக்கிர தசையின் இடையில் வேறு குடும்பஸ்தராகப் பிரிந்து போய் விடுவார். இது விஷயமானப் பலனை பின்னுல் இரண்டாவது பாகத்திற் சொல்லுகின்றேன். பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகருடைய விவாகமும் மனைவியினுடைய குணதிசயங்களும்

21. கன்னிமார் சேதியாவும் கழறுவோம் பின் பாகத்தில்
இன்னவன் மணத்தின் காலம் யியம்புவோ மீரொன் [பாண்டில்

அன்னையின் வர்க்கம் நேறும் அவள் குணம்
[கூறக்கேண்மோ
தன் சொல்லு மடக்க முண்டு சற்பாத்திரி யோக சாலி

21. ஜாதகருடைய சகோதரிகளினுடைய விஷயங்கள் எல்லாவற்றை யும் பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்றோம். ஜாதக ருடைய விவாக காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு பதினெட் டாவது வயதில் தாயாருடைய பந்துக்களிலின்று மனைவி வந்து சம்பவிப்பாள். இவளுடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன், கேட்பீராக, இவள் சாந்தமாகவும் அமைதியாகவும் பேசுவாள். இவள் நல்ல தகுதியான, குணத்தை யுடையவளாவள். யோகத்தை யுடையவளாவள்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—விவாக விஷயம் :—ஜாதகருக்கு பதினெட் டாவது வயதில் புதன் தசை நடக்கின்றது. புதன் பத்திற்கு டையவராகிக் களத்திர ஸ்தானாதிபதியாகிய ஏழாவது வீட்டிற் குடைய குருவால் பார்க்கப்பட்டிருப்பதால் ஜாதகப் பாரிஜாதம் பதினான்காவது அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் ஜாதகருக்கு விவாகத்தைச் செய்து வைக்க அதிகார முடையவராக விருக்கின்றார். ஆகையால் இங்கு புதன் தசை யில் விவாகம் நடக்குமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

22. பால் பாக்கிய முடையளாகும் பசித்தோர்க்கு அன்ன
[மீவள்
சீலியாம் புத்திமானும் சினமுண்டு வெளி காட்டாதாள்
ஞாலமேல் நல்லோளாவள் நடை நன்மை சிவந்த
[மேனி
காலத்தை அறிந்துரைப்பள் கணவன் தன் மனதுக்
கேத்தோள்

22. ஜாதகருடைய மனைவி பால் பாக்கியத்தை யுடையவளாவள், இவள் பசியை யுடையவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவாள். இவள் நல்லொழுக்கத்தையும் நல்ல குணங்களையு முடையவளாவள். அறிவுடை யவளாவள். இவள் கோபத்தை யுடையவளாவள். ஆனால் இந்தக் கோபத்தைப் பிறர் தெரிந்து கொள்ளும் படியாக வெளியே காண்பித்துக் கொள்ள மாட்டாள், இவள் இந்தப் பூமியில் நல்லவளாக விருப்பாள். நல்ல நடவடிக்கையை யுடையவளாவள். சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவளாவள். இவள் காலாகாலங்களின் போக்குகளையும் நோக்கங் களையும் தெரிந்து கொண்டு அதற்குத் தகுந்தாற் போல பேசுவாள். தன்னு டைய புருஷனுடைய மனத்திற்கு ஒற்றுமையாக விருந்து வாழ்வாள்.

23. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக்
[காணோம்
சித்தமா யுதித்தாலுந் தான் தீங்காகு மென்று சொல்
[வோம்
எத்தகை பலத்தினாலே யியம்பு வீரந்த சங்கை
குத்தமாய் அஞ்சில் காரி குசனுமே கூடி நிற்க

23. ஜாதகருடைய புத்திர பாவத்தைப் பற்றிச் சொல்லுவதற்கு யாதொரு வலிவும் காணப்படவில்லை. ஒரு சமயம் குழந்தைகள் பிறந்தாலும் இவர்கள் சீக்கிரம் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இவ்விதமான பலனை எந்தக் காரணத்தினால் சொல்லுகின்றீர் என்று கேட்கவே, கெடுதியாக ஐந்தாவது வீட்டில் குசன் என்ற அங்காரகனும் காரி என்ற சனியும் கூடி இருப்பதால்

## ஜாதகரின் முன் ஜன்மம்

24. ஆகையால் சொன்னோம் யானும் அதுவின்றி பூர்வம்
[தன்னில்
ஏகமாய் வினைகள் செய்தான் யெய்திற்று அந்தத்
[தோஷம்
பாகமாய் யிவனின் பூர்வம் பகர்வோம் தாயே கேளு
தோகையின் மலைக்கு மேல் பால் சிறுவூரில் அருகர்
[வர்க்கம்

24. நான் இவ்விதமான பலனைச் சொன்னேன். இதுவுமல்லாமல் ஜாதகர் தன்னுடைய முன் ஜன்மத்தில் அநேகவிதமான பாவங்களைச் செய்திருக்கின்றார். அந்தத் தோஷங்கள் இவரை வந்தடைந்திருக்கின்றன, இவருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேட்பீராக, பார்வதியம்மையே! பழனி ஸ்தலத்திற்கு மேற்குத் திக்கில் ஒரு சிறிய கிராமத்தில் அருகருடைய (சமணருடைய) ஜாதியில் ஆணாக

25. உதித்துமே கிருஷி செய்து உத்தமன் வாழு நாளில்
விதவையை போகம் செய்ய மெல்லிக்கு கருவு தங்க
சதியாகப் பண்டிதங்கள் செய்யவும் கருவு நீங்க
அதுபோல மூன்று அழித்தான் அணுகிற்று அந்த
[தோஷம்

25. பிறந்து, பயிர்த்தொழிலைச் செய்து கொண்டு, ஜாதகர் வாழுகின்ற காலத்தில் இவர் ஒருவிதவை ஸ்திரீயுடன் சம்போகஞ் செய்யவே, இவளுக்குக் கர்பம் நேரிடவே, இதற்குக் கெடுதியாக வைத்தியங்களைச் செய்ததால் இந்தக் கரு அழிந்தது, இவ்விதமாக இவர் மூன்று தடவைகளில் செய்திருக்கின்றார். இந்தத் தோஷம் இவரை வந்தடைந்தது.

26. பலர் செல்லும் மார்க்கம் துய்த்தான் பற்றிற்று அது ஓர்
[தோஷம்
நலமுள ஆவு கன்றுக்கு ஆவின் பாலே நாயகன்
[அரக்கறந்தான்
குல விற்று அது ஓர் தோஷம் குமரனு மந்தியத்தில்
தலே வலிவுளம் குறைச்சல் சண்டன் தன்பதிக்கு
[சென்று

26. ஜாதகர் அநேகர் போக்கு வரத்துள்ள வழியில் சம்போகஞ் செய்தார். இது ஒரு தோஷமாக நேரிட்டது. பசுவினுடைக் கன்றிற்குக் கொஞ்சங் கூட பால்விடாமல் பசுவிலிருந்து பாலேப் பூராகவும் கறந்து விட்டார். இது ஒரு தோஷமாக நேரிட்டது. இவர் தன்னுடைய கடைசி காலத்தில் தலே நோயாலும் மன நோயாலும் இறந்து எமபட்டணத்திற்குப் போய்

27. பிரமனுல் வரையப்பட்டு பிறப்பனு மிந்த பாலன்
மருவிடு முன்னூழ் சாபம் மதலேகள் தோஷ மெய்தும்
உரைந்த ஊழ் தீரவேண்டி யுரைப்பீர்கள் கிரிகை
[யொன்று
திருமகன் யேழு கார்த்தி தணிகைக்குச் சென்றுமே தான்

27. பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு, இந்த ஜாதகர் வந்து பிறந்திருக்கின்றுர். இவருக்கு முன் ஜன்மத்தில் ஏற்பட்ட பாபங்கள் வந்து சம்பவிக்கும். அதனுல் இவருக்குப் புத்திர தோஷ முண்டாகும். இங்கு சொல்லப்பட்டப் பாவங்கள் விலங்கிவிடுவதற்காக ஒரு சாந்தியை சொல்லுவீர் என்று கேட்கவே, ஜாதகர் ஏழு கிருத்திகை தினங்கள் வரையிலும் திருத்தனிகை ஸ்தலத்திற்குப் போய்

28. வேலனுக் கருச்சித்தேத்தி வெறுத் தோர்கள் வேழ்
[பேர்க்கு
சீலமாய் அன்ன மீந்து தாம்பூலம் சொர்ண மீந்து
பாலகன் உள்ளூர் சென்று பெரு வயிரப்பனுக்கு
ஏலவே தீபமொன்று யேற்றவே வினேகள் போக்கி

28. முருகக் கடவுளுக்கு அர்ச்சனேயைச் செய்து இவரைத் துதித்துப் பிறகு ஏழு பரதேசிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் நற்குணங்களுடனும் நல்லொழுக்கத்துடனும் சாப்பாட்டைப் போட்டுத் தாம்பூலம், பணம் ஆகிய இவற்றை இவர்களுக்குத் தானமாகக் கொடுத்து, பிறகு இவர் தன்னுடைய கிராமத்திற்குத் திரும்பிப் போய், விநாயகக் கடவுளுக்கு விளக்கு ஒன்று வைத்து ஏற்றினுல் பாவங்கள் விலகிப் போய் விடும்,

29. மதலைகள் விருத்தி தீர்க்கம் வரைகிறேன் மாண்பா
[லொன்று
மதிமுக பெண்பால் மூன்று வரைந்தனம் தீர்க்கமாக
புதல் வறுமிவன் மேலாக புகழ்வுடன் வாழ்வானாகும்
அதிதியை ஆதரித்த அம்பிகை யாளே கேளாய்

29. இதன் பிறகு குழந்தை பிறந்து நீண்ட ஆயுளை யுடையவர்களாக விருப்பார்கள். ஒரு பிள்ளையும் சந்திரனைப் போல அழகான முகங்களை யுடைய மூன்று பெண்களும் பிறந்து தீர்க்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள் என்று சொல்லுகின்றேம். இவருடைய பிள்ளை இவருடைய அந்தஸ்திற்கு மேலான அந்தஸ்திலிருந்து வாழ்பவராவர். சந்நியாசிகளையும் பரதேசிகளையும் காப்பாற்றிய பார்வதியம்மையே! கேட்பீராக.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

30. அன்னையின் குணத்தை சொல்வேன் அழகுளாள்
[சிவந்த மேனி
அன்னம் போல் வடிவு மொக்கும் அடாபிடி கூறுளாகும்
அன்னமு மன்பா யீவள் அடிசலுக் கினிய ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அரமதி லிச்சை யுண்டு

30. ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன், இவள் அழகை யுடையவளாவள், சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவளாவள். இவள் அன்னப் பட்சியைப் போல அழகான ரூபத்தை யுடையவளாவள். இவள் அநியாயமாகவும் முரட்டுத் தனமாகவும் பேச மாட்டாள். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியமாகப் போடுவாள். இவள் இனிமையாகச் சமையல் செய்பவளாகும், இவள் நல்ல கைப் பாகத்தை யுடையவளாவள். இவள் தன்னைப் பிறர் கௌரவப்படுத்தும்படியான நிலைமையிலிருந்து வாழ்வாள்.

31. சொல்லது சுகமே யாகும் சோர்வோர்க்கு தாக மீவள்
இல்லையென்று ரைக்க மாட்டாள் யிடருன புத்தி
[யுள்ளாள்
தல்லிபோல் ஆதரிப்பள் தன்மனம் கபடு மில்லாள்
தொல்லையும் சுகமுமேற்பள் தோகையே கேட்டிடாயே

31. ஜாதகருடைய தாயார் இனிமையாகப் பேசுவாள். களைத்து இளைத்துப் போனவர்களுக்குத் தாகமும் நீராகாரமும் கொடுப்பாள். இவள் பிரத்தியாருக்கு உதவி செய்ய தன்னிடம் ஒன்றுமில்லை என்று சொல்ல மாட்டாள். இவள் கெட்ட புத்தியை யுடையவளாவள். இவள் தாயாரைப் போலக் காப்பாற்றுவாள். இவள் தன்னுடைய மனத்தில் வஞ்சனை, கள்ளம் ஆகிய இவற்றை யுடையவளல்லள். இவள் கஷ்டங்களையும் சுகங்களையும் கலந்தாற் போல அநுபவிப்பாள், பார்வதியம்மையே! கேட்பீராக,

## ஜாதகரின் தாயாருடைய சகோதர பாவம்

32. தன் துணை ஆண் பாலொன்று சத்திமார் யிருவர்
[தீர்க்கம்
பின்னமா மிரண்டு யென்றேம் பிலமிலாத்தாய்
[குடும்பம்
தென்காற்று பஞ்சுபோலும் சேத்திர மில்லா வாழ்வர்
மன்னவன் சேதி சொல்வேன் மாந்தளிர் மேனியாகும்

32, ஜாதகரின் தாயாருக்கு ஒரு சகோதரரும், இரண்டு சகோதரிகளும் தீர்காயுளை யுடையவர்களாக விருப்பார்கள். இரண்டு சகோதரர்கள் சீக்கிரத்தில் இறந்து விடுவார்கள் என்று சொல்லுகின்றேம் தாயாருடைய குடும்பம் மேன்மையான குடும்பம் அல்ல. இந்தக் குடும்பத்தார்கள் தென்னற் காற்றில் அகப்பட்டுக் கொண்டு இங்குமங்குந்திரிந்தலைகின்ற பஞ்சைப் போல வீடு இல்லாமல் திரிந்தலைந்து வாசஞ் செய்வார்கள், ஜாதகரின் தாயாரின் சகோதரருடைய விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றேன். இவர் மாந்தளிரின் நிறத்தைப் போன்ற ஒருவிதமான சிகப்பு நிறத்தை யுடைய தேகத்தை யுடையவராவர்.

33. சங்கீதப் பிரியனுகும் தைரிய மனத்தனுகும்
எங்கள் போலதிதிக் கன்னம் யீகுவான் நற்குணத்தான்
பொங்கின குடும்பம் பின்னல் பெருவனும் யூகை சாலி
மங்கள வார்த்தை யுண்டு மர்ம மில்லா தானுகும்

33. தாயாருடைய சகோதரர் சங்கீதத்தில் ஆசையை யுடையவராவர். இவர் தைரியமான மனத்தை யுடையவராவர். இவர் எங்களைப் போன்றவர்களுக்கும் சந்நியாசிகளுக்கும், பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவார். இவர் நல்ல குணத்தை யுடையவராவர். இவர் பிற்காலத்தில் மேன்மையான சிறந்த குடும்பத்தை யுடையவராவர். இவர் நல்லது கெட்டது என்று பகுத்தறியக் கூடிய நுட்பமான அறிவை யுடையவராவர். இவர் சுபகரமான நல்ல வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் வஞ்சனை, ரகசியம் ஆகிய இவற்றை யுடையவரல்ல.

34. கன்னியர் மோகனுவன் கல்வி மான் யீகையாளன்
தன் மனை யொன்றே தீர்க்கம் சந்ததி ஆண்பால்
[ரெண்டு
மின்னல் போல் பெண்பால் ரெண்டு மேவிடும்
[தீர்க்கமாக
இன்னவனைத் தாண்டின் மேல்யிளம் பிறை போலே
[யோகம்

34. தாயாரின் சகோதரர் ஸ்திரீகளிடத்தில் மையல் என்ற காம ஆசையை யுடையவராவர். வாசிப்பை யுடையவராவர். பிறருக்கு கொடுக்கும் தன்மையை யுடையவராவர். இவருக்கு ஒரே மனைவி யுண்டு. இவள் நீண்ட வயதை யுடையவளாவள். இவருக்கு இரண்டு பிள்ளைகள் உண்டு. மின்னலைப் போல் அழகுள்ள இரண்டு பெண்களுமுண்டு. இவர்கள் எல்லோரும் நீண்ட ஆயுளை யுடையவர்களாவார்கள். இவருக்குத் தன்னுடைய ஐந்தாவது வயது முதற் கொண்டு யோகம் வளர்பிறை சந்திரனைப் போல நாளுக்கு நாள் விருத்தியாகிக் கொண்டே யிருக்கும்.

## ஜாதகரின் தாயாருடைய முன்ஜன்மம்

35. அதற்கு மேல் வறுமை காணுன் அவன் துணை தன்னுல் [யோகம்
இது நிற்க அன்னை பூர்வம் யியம்புவோம் திருமலை [பேரில்
நிதி மிகயுடையானுக்கு நேர்ந்தனள் செங்குந்த [சேயர்ய்
சுதர்களு மதிக முண்டாய் தோழன் முன் மரணமாகி

35. அதற்கு பிறகு தாயாரின் சகோதரர் தரித்திரத்தையும் கஷ்டங்களையும் அநுபவிக்க மாட்டார். இவருக்குத் தன்னுடைய சகோதரத்தினுல் யோகம் நேரிடும். இது இவ்விதமாக விருக்க, இனிமேல் தாயாருடைய முன் ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். திருமலை என்ற மேல் திருப்பதி ஸ்தலத்தின் பேரிலுள்ள மலையில் அதிக செல்வந்தருக்குச் செங்குந்தர் ஜாதியில் பெண்ணுகப் பிறந்தாள். இவள் அதிக குழந்தைகளை யுடையவளாகித் தன்னுடைய புருஷனுக்கு முன்னே இறந்து

## ஜாதகரின் தாயாருடைய மறு ஜன்மம்

36. வந்தவ ளென்று சொல்வோம் மறு சென்மம் தணிகை [தன்னில்
முந்தின குல முதிப்பாள் மெல்லியிச் சென்மம் [தன்னில்
வந்த புண்ணியங்க ளென்ன வான் மனம்போலே [வாழ்ந்தும்
சிந்தையும் நல்லதாயும் சிறுத்தோர் ஆபத்தைக் [கார்த்தும்

36. இந்த ஜன்மத்தில் வந்து (தாயார்) பிறந்திருக்கின்றுள் என்று சொல்லுகின்றோம். இவளுடைய மறு ஜன்மம் திருத்தணிகை க்ஷேத்திரத்தில் பிராமண ஜாதியில் பெண்ணுகப் பிறப்பாள். இந்த ஜன்மத்தில் இவள் செய்த புண்ணிய காரியங்கள் என்ன? என்று கேட்கவே, இவள் தன்னுடைய புரு

ஷனுடைய மனத்தைப் போலவே ஒற்றுமையாக விருந்து கொண்டு வாழ்ந் தும், நல்ல எண்ணங்களையும் மனத்தை யுடையவளாகியும், ஏழைகளுக்குத் தங்களுடைய கஷ்ட காலங்களில் உபகாரத்தைச் செய்து காப்பாற்றியும்.

## ஜாதகரின் தாயார், தகப்பனுர் ஆகிய இவர்களின் மரணகாலம்

37. வருவதா லுதிப்பாளாகும் ஆருறு ஆண்டு தன்னில்
மரலியின் நாட்டை அன்னை வாங்கு வாளென்று [சொல்வோம்
இருபது ஆண்டு தன்னில் யியம்புவோம் தந்தை [கெண்டம்
பிருகுமே மறுத்து சொல்வார் புதல்வனுக் காரு மாண்டில்

37. வருவதால் பிராமண ஜாதியில் பிறப்பாள். ஜாதகருக்கு முப்பத் தாருவது* வயதில் இவருடைய தாயார் எமதர்ம ராஜருடைய நாட்டை வாங்கி விடுவாள் என்று சொல்லுகின்றேம். அஃதாவது இவள் இறந்து விடுவாள். ஜாதகருக்கு இருபதாவது வயதில் இவருடைய தகப்பனுர் இறந்து விடுவார். உடனே பிருகு மஹரிஷி தடுத்துக் கேட்கின்ருர். ஜாதக ருக்கு ஆருவது வயதில்.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகரின் தாயாருடைய மரண விஷயம் :— ஜாதகருக்கு முப்பத்தாருவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது மாதிரு லக்கினம் நான்காவது வீடாகிய தனுசு ஆகும். இந்தத் தனுசு லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் சுக்கிரன் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு சுக்கிர தசையில் ஜாதகரின் தாயாருக்கு மரணம் சொல்லப்பட்டி ருக்கின்றது.

## ஜாதகருடைய மறுஜன்மம்

38. தந்தைக்குக் கெண்டம் சொல்வோம் சாருது அந்தக் [காலம்
புந்தியின் திசையில் நேறும் பேசுவோ மிவன் பின் [சென்மம்
கந்தன் வாழ் போரூர் தன்னில் கலப்பனும் சைவ [சேயாய்
தந்தியை வளர்க்கு மெங்கள் தயாபரி கேட்டிடாயே

38. இவருடைய தகப்பனுருக்கு மரணம் நேரிடும் என்று சொல்லு கின்றேம் என்ருர் பிருகு மஹரிஷி. இதன் பேரில் இந்தக் காலத்தில் தகப்

னுருக்கு மரணம் நேரிடாது, ஆனல் இது புதமகா தசையில் தான்* நேரிடும் என்ருர் ஐயமுனிவர். இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்ரேம். முருகக் கடவுள் வாசஞ் செய்கின்ற ஸ்தலமாகிய போரூர் என்ற திருப்போரூர் ஸ்தலத்தில் இவர் சைவ ஜாதியில் ஆணுகப் பிறப்பார். யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளைக் காப்பாற்றுகின்ற கிருபையை யுடைய பார்வதியம்மையே! கேட்பீராக.

*குறிப்பு:—வியாக்கியானம்: பிதுர் மாரக விஷயம்:—பிதுர் லக்கினம் ரிஷபம் ஆகும். சில கிரந்தங்களில் ரிஷப லக்கினத்திற்கு புதன் தசை மாரக தசை என்று சொல்லப்பட்டிருக்கின்றது. மேலும் புதன் குருவைப் பார்த்திருப்பதால் குருவினுடைய சம்மந்தத்தை அடைந்திருக்கின்ருர். இங்கு பிதுர் லக்கினமாகிய ஒன்பதாவது வீடாகிய ரிஷப லக்கினத்திற்கு எட்டாவது வீட்டிற்குடையவராகின்ருர், துய்ய கேரளம் எட்டாவது பாவம் பன்னிரண்டாவது பாடல் இருபதாவது பாடல் பிரகாரம் எட்டாவது வீட்டிற்குடையவராகிய குருவுடன் சம்மந்தப்பட்ட புதன் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு புதன்தசையில் மாரகம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஜாதகருக்கு ஆருவது வயது வரையிலும் சனி தசை நடக்கின்றது. ரிஷப லக்கினத்திற்குச் சனியை மாரகாதிபதியாக எடுக்கவில்லை. ஆகையால் ஆருவது வயதில் பிதுருக்கு மாரகம் நேரிடாது என்று இங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணமும் மறுஜன்மமும்

39. *அறுபது ஒன்பதாண்டில் அர்ப்பசி மாதம் தன்னில்*
*திருமகனுடலம் யேகும் செப்புவோ மிவன் பின்*
*சென்மம்*
*விரிஞ்சியில் மறை குலத்தில் மேவுவா னென்று*
*]சொல்வோம்*
*பெருவயிருேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்*

39. ஜாதகருக்கு அறுபத்தொன்பதாவது வயதில் ஐப்பசி மாதத்தில் மரணம் நேரிட்டு இவருடைய தேகம் அழிந்து மறைந்து போய் விடும், ஜாதகருடைய மறு ஜன்மத்தை பற்றிச் சொல்லுகின்ரேம். இவர் விரிஞ்சிபுரத்தில் பிராமண ஜாதியில் ஆணுகப் பிறப்பார் என்று சொல்லுகின்ரேம். பெரிய வயிற்றை யுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த புண்ணியவதியாகிய பார்வதியம்மையே கேட்பீராக.

*குறிப்பு :—வியாக்கியானம் :—ஜாதகருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு அறுபத்தொன்பதாவது வயதில் அங்காரக மகா தசை நடக்கின்றது. கன்னியா லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை, ஐம்பத்து நான்காவது சுலோகம் பிரகாரம் அங்காரகன் மாரகராகின்ருர். ஆகையால் இங்கு ஜாதகருக்கு அங்காரக தசையில் மாரகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

## ஜனனகால தசையும் இருப்பும் பலனும்

40. குதித்திடும் காலம் தன்னில் உத்திரட்டாதி மூன்றில்
விதி சனி திசை ஐந்தாண்டும் மேவிடும் திங்கள் பத்தும்
நிதம் தந்தை ரோகமெய்தும் நிமலமது விரயமாகும்
அதிகமாம் செலவு முண்டு அறைகிறோம் பின்பால்
[சேதி

40. ஜாதகர் பிறந்த காலத்தில் உத்திரட்டாதி நட்சத்திரத்தில் மூன்ருவது பாதம் ஆகும். இதற்குரிய சனி மகாதசையில் இருப்பு ஐந்து வருஷங்களும் பத்து மாதங்களும் ஆகும். இக்காலத்தில் எப்போதும் ஜாதகருடைய தகப்பனுருக்கு வியாதியிருந்து கொண்டே யிருக்கும். நிலங்கள் செலவாகிப் போய்விடும். குடும்பத்தில் அதிகமான செலவு ஏற்படும், மற்ற விஷயங்களைப் பின்னுல் இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ருேம்.

—C. G. R.

———

# ஜாதகம் 47

## ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் குருவும் [1]வண்டி [2]சல்லியன் கன்னியாக
[3]புந்தி [4]சேய் [5]ரவி [6]கோரி புக்கிட [7]கோலதாக
[8]மந்திர கயிறு [9]சாடி [10]அரியினில் கேதுதங்க
இந்தவார் கோளு நின்று லக்கினம் கன்னி

1. கன்னி ஜன்ம லக்கினமாகிச் சந்திரனும் குருவும் கடகத்திலும், சுக்கிரன் கன்னியிலும், புதனும் அங்காரகனும், சூரியனும் சனியும் துலாத்திலும், ராகு கும்பத்திலும், சிம்மத்தில் கேதுவும் இருந்து, இவ்விதமாக நவக்கிரகங்கள் அமைந்திருந்தால்,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | இராசி சக்கரம் | | சந்திரன் குரு |
| | | | கேது |
| | | சூரியன் புதன் சனி அங்காரகன் | லக்கினம் சுக்கிரன் |

பூசம் 3-ஆம் பாதம் சனி தசை ஞு 9—2—00.

*குறிப்பு:—இந்த ராசிச் சக்கர கிரக அமைப்பிற்குப் பின்வரும் அம்சைச் சக்கர கிரக நிலை பொருத்தமுடையதாகும்:—மேஷத்தில் சுக்கிரனும் ரிஷபத்திற் சூரியனும், சிம்மத்திற் கேதுவும், துலாத்திற் சந்திரனும், விருச்சிகத்திற் புதனும், தனுசிற் குருவும், கும்பத்திற் சனியும் ராகுவும் அங்காரகனும் ஆகும். அங்காரகனும் சனியும் அஸ்தங்கதம் அடைந்திருக்கின்றார்கள்.

---

1. கடகம்
2. சுக்கரன்
3. புதன்
4. அங்காரகன்
5. சூரியன்
6. சனி
7. துலாம்
8. ராகு
9. கும்பம்
10. சிம்மம்

## ஜனனமான நாட்டுச் சிறப்பு

2. பலன்தனைச் சொல்லுமென்று பார்வதி கேட்கும்போது
குலவிய வதிஷ்டர் சொல்வார் குறித்தது ஆண்பால்
சென்மம்
தலமது கீழ்மேல் வீதி தென் திசை வாசலாகும்
நலமுள தெற்கில் தந்தி நாட்டுவோம் தென்கீழ்
[தன்னில்

2. பலாபலன்களைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கும் போது வசிஷ்ட மஹரிஷி சொல்லுகின்றார். பிறந்த குழந்தை ஆண் குழந்தையாகும். பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் தெற்குத்திக்கில் வாயிலையுடையதாகும், தெற்குத் திக்கில் விநாயகக் கடவுளின் கோயிலும் தென்கிழக்குத் திக்கில்.

3. காளியு மீசன் கீழ்பால் கனத்ததோர் துருவம் கீழ்பால்
சாலவே மேற்கில் தந்தி சங்கரி வாச மாகும்
சோலைக ளதிக முண்டு சூழ்ந்ததோர் மடமும் காணும்
ஞாலவே பலதே வாசம் யிந்திர நகர மொக்கும்.

3. காளியம்மன் கோயிலும், சிவபெருமானுடைய கோவில் கிழக்குத் திக்கிலும், ஓர் பெரியமலை கிழக்குத் திக்கிலும், மேற்குத் திக்கில் ஒரு விநாயகக் கடவுளின் கோயிலும் பார்வதியம்மன் கோயிலும் இருக்கும். இந்தப் பிறங்க ஊரில் தோப்புகள் அதிகமாகவிருக்கும், சத்திரம் இருக்காது. இந்த ஊரில் அநேக தேசத்தார்கள் வாசஞ்செய்வார்கள். இது தேவேந்திர பட்டணத்திற்குச் சமானமான பட்டணம் ஆகும்.

4. இவ்வித அடையாளத்துள் யிவனுமே மூன்றும் சென்மம்
பவ்வமாய் உதிப்பா னுகும் பாலகன் செனன யோகம்
ஒவ்விய தந்தை மாதா உறும்துணை களத்திர புத்திரர்
திவ்விய முன்பின் சென்மம் செப்புவோ மின்னூல்
[தன்னில்

4. இவ்விதமான அடையாளங்களையுள்ள பட்டணத்தில் ஜாதகர் மூன்றுவது குழந்தையாகப் பிறப்பார். இவருடைய பிறந்தகாலத்திய யோகம், தாயார், தகப்பனார், சகோதரம், மனைவி, மக்கள் ஆகிய இவர்களினுடைய யோகத்தைப்பற்றியும், முன் ஜன்மம், பின் ஜன்மம் ஆகிய இவற்றைப்பற்றியும் இந்தச் சாஸ்திரத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவமும் இளைய சகோதரனுடைய குணாதிசயங்களும்

5. தந்தையின் துணைவர் தன்னைச் சாற்றுவோ மாண்பா
[லொன்று
பிந்திய துணைவனாக பேசுவோ மவன் குணத்தை
சந்ததம் சிவந்த மெய்யன் சன்மார்க்கம் கல்வி யுள்ளான்
சிந்தையு வர்ம மில்லான் சீலனா மென்று சொல்வோம்.

5. ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு ஒரு சகோதரருண்டு, இந்தச் சகோதரர் இளைய சகோதரராவர். இவருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் சிகப்பு நிறமான தேகத்தையுடையவராவர், ஞானமார்க்கங்களையும் நல்லொழுக்கங்களையு முடையவராவர், வித்தையையுடையவராவர். இவர் வஞ்சனையுள்ள ரகசியமான, மனத்தையுடையவரல்லர். இவர் நற்குணங் களையும், நல்லொழுக்கங்களையு முடையவராவர் என்று சொல்லுகின்றோம்.

6. பொறுமையும் பெருமை யுள்ளாள் புண்ணிய மனத்த
[னாகும்
திருகது சொல்லா னாகும் தந்திரவாதி யென்றோம்
விரைவினில் நீடக்க வல்லன் வீணபவாத முள்ளான்
மர்மமும் கொஞ்ச முள்ளான் வாக்குசொல்
[யிரண்டு முள்ளான்.

6. ஜாதகரின் தகப்பனுருடைய இளைய சகோதரர் பொறுமையையும், புகழையும், உடையவராவர். தான தர்மங்களைச் செய்கின்ற நல்ல மனத்தை யுடையவராவர். இவர் கள்ளம், கபடம், வஞ்சனை ஆகிய இவற்றையுடைய வார்த்தைகளைச் சொல்லமாட்டார். இவர் தந்திரமாகவும் சாமர்த்தியமாகவும் பேசக்கூடியவரும் நடந்துகொள்ளக்கூடிய வருமாவர் என்று சொல்லுகின்றோம். இவர் வேகமாக நடக்குஞ் சாமார்த்தியத்தை யுடையவராவர். இவர் வீணாக நிந்தைகளை அடையக்கூடியவராவார். இவர் ரகசியத்தையும் வஞ்சனையையும் சிறிதளவு உடையவராவர். இவர் மெய்யையும் பொய்யையும் கலந்து பேசுபவராவர்.

7. போசன சுகிய னாகும் பதார்த்தங்கள் அதிகம் கொள்வன்
காசு மேலாசை யுள்ளான் காவலன் பித்த தேகி
பேச்சினில் சோரனாகும் பேதையு மொருத்தி தீர்க்கம்
பாசமாய் சுதருண் ரெண்டு பெண்ணது அவ்வா ருகும்.

7. ஜாதகரின் தகப்பனுருடைய இளைய சகோதரர் சுகமான சாப் பாட்டின்பேரில் பிரியமுள்ளவராவர். இவர் பதார்த்தங்களை அதிகமாகச் சாப்பிடக் கூடியவராவர். இவர் பணத்தின்பேரில் ஆசையை யுடையவ ராவர். இவர் பித்த குணமுள்ள தேகத்தையுடையவராவர். இவர் பேசு

வதில் இணக்கமாட்டார். இவருக்கு ஒரே ஒரு மனைவியுண்டு. இவள் தீர்க்காயுளை யுடையவளாவள. இவருக்கு இரண்டு பிள்ளைகளும் இரண்டு பெண்களும் உண்டு.

## ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்கள்

8. இவனுடன் கூடி வாழ்வன் இயம்புவோம் பிதா
[குணத்தை
தவசிகளுறவு கொள்வன் செவந்திடு மேனி யாவன்
நவனியி லுணச்சல் நீட்சி நளினமாம் வார்த்தை
[சொல்வன்
பவமுள கல்வி மானும் பாருகள் யில்லா னென்றோம்.

8. ஜாதகரின் சிறிய தகப்பனுர் தன்னுடைய சகோதரருடன் கூடி ஏக குடும்பஸ்தராக விருந்துவாழ்வார். இனிமேல் ஜாதகரின் தகப்பனுருடைய குணாதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தவங்களைச் செய்கின்றவர்களுடைய, சந்நியாசிகளுடைய, சிநேகிதத்தை யுடையவராவர். இவர் சிகப்பு நிறமுள்ள தேகத்தை யுடையவராவர். இவர் நீண்டு மெலிந்த தேகத்தையுடையவராவர். இவர் இனிமையான வார்த்தைகளையும் பரிகாசமான வார்த்தைகளையும் சொல்லுவார். இவர் வாசித்தவராவர். இவர் நிலங்களை உடையவரல்லர், என்று சொல்லுகின்றோம்.

9. முன்கோபம் பின்பு சாந்தம் மூல சூடுடைய ளுகும்
பின்ன மில்லாத தேகன் புருதன மில்லா ளுகும்
அன்னியர் தென்பால் சென்று அவனுமே சீவிப் பானும்
உன்னத வார்த்தை சொல்வன் உள்மனம் கபடு
[மில்லான்.

9. ஜாதகருடைய தகப்பனுர் முன்கோபத்தை யுடையவராவர், இந்தக் கோபம் உடனே தணிந்துவிடும். இவர் மூலச்சூட்டு ரோகத்தை உடையவராவர். இவர் யாதொரு அவயவக் குறைவும் இல்லாத தேகத்தை உடையவராவர். இவர் பூர்வீக பணத்தை உடையவரல்லர். இவர் அயலாரிடத்திற்கு போய் அவ்விடத்தில் ஜீவனஞ்செய்பவராவர். இவர் மேன்மையான சிறந்த வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் தன்னுடைய மனத்தில் கள்ளம், வஞ்சனை ஆகிய இவற்றையுடையவரல்ல.

10. சொல்லது தவரு ளுகும் துணைவனை யாத ரிப்பன்
இல்லறம் புதிதாய்ச் செய்வன் யாவர்க்கும் நல்லோ
[னுவன்
அல்லல்கள் ஆதிலேதான் அணுகிடு மென்று
[சொல்வோம்
நல்லவர் பலர்களாலே நாயகன் சுகமே யாவன்.

10. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய வார்த்தைகள் பிரகாரம் தவறிப்போகாமல் நடந்துகொள்ளுபவராவர். இவர் தன்னுடைய சகோதரரைக் காப்பாற்றுவார், இவர் வீட்டைப் புதியதாகக் கட்டுவார். இவர் எல்லோருக்கும் நல்லவராகவிருப்பார். இவருக்கு முந்திய வயதில் கஷ்டங்களும் துன்பங்களும் நேரிடும் என்று சொல்லுகின்ருேம். அநேக நல்லவர்களினுடைய சகாயத்தால் இவர் சௌக்கியங்களையடைவார்.

11. கரமதில் கமலரேகை கழறுவோம் சுழியு முண்டு
அரநெறி பூண்பா ளுகும் அறுமுகன் தன்னைத் துதிப்பன்
குறையான குடும்பி யாவன் குணமது நல்ல தாகும்
பெரும் பொருள் பின்னு லுள்ளான் போசன சுகிய
[னென்ருேம்.

11. ஜாதகருடைய தகப்பனுர் தன்னுடைய உள்ளங்கையில் கமல ரேகை என்ற தாமரை ரேகை என்ற ஒருவித நல்ல ரேகையை யுடையவராவர். இவருக்குச் சுழி என்ற சக்கர ரேகையுமுண்டு. இவர் தர்ம மார்க்கத்தை யுடையவராவர். இவர் ஆறுமுகங்களையுடைய முருகக் கடவுளின் பேரில் அன்புடையவராகி இவரைத்தொழுவர். இவர் கஷ்டத்தை அநுபவிக்கின்ற குடும்பத்தை யுடையவராவர். இவர் நல்ல குணங்களையுடையவராவர் இவர் தன்னுடைய பிற்காலத்தில் பெரிய சொத்தையுடையவராவர், இவர் சுகமான சாப்பாட்டைச் சாப்பிட்டு சுகத்தை அடைபவராவர் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகருடைய் குணுதிசயங்கள்

12. இக்குண முடையோ னுக்கு யிவனுமே உதிப்பா ளுகும்
மிக்கவே யிவன் குணத்தை விளம்புவோம் சிவந்த
[மெய்யன்
தக்கவே கல்வி கற்பன் சன்மார்க்கம் செட்டு செய்வன்
சிக்கின மில்லா ளுகும் தீரனு மனத்த னுவன்.

12. இதுவரையிலுஞ் சொல்லப்பட்ட குணுகுணங்களை யுடைய தகப்பனுருக்கு இந்த ஜாதகர் பிறந்தவராவர். இவருடைய குணுதிசயங்களைப்பறிச் செசல்லுகின்ருேம். இவர் சிகப்பு நிறமான தேகத்தையுடையவராவர். இவர் தகுதியான வித்தையைக் கற்றுகொள்ளுவார். இவர் நல்லொழுக்கங்களையும் ஞானமார்க்கத்தையும் உடையவராவர், வியாபாரத்தைச் செய்வார். இவர் உலோப குணத்தையுடையவரல்ல, அதிகமாகச் செலவு செய்பவராவர், இவர் தைரியமான மனத்தை யுடையவராவர்.

13, பால்பாக்கிய முடைய ளுகும் பகைவரை உறவு
[கொள்வன்
சீலமும் கொஞ்ச முள்ளான் சென உபகாரி யாகும்

சாலவே சுகி பொசிப்பன் சமர்த்தாக வார்த்தை
[சொல்வன்
ஆலம்போல் பகைவருக்கு அவனுமே கருட னுவன்.

13. ஜாதகர் பால்பாக்கியத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய விரோதிகளைச் சினேகஞ் செய்துகொள்ளுவார். இவர் நற்குணங்களையும் நல்லொழுக்கங்களையும் சிறிதளவு உடையவராவர். இவர் ஜனங்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இவர் சுகமான ஆகாரங்களைச் சாப்பிட்டுச் சுகத்தை அநுபவிப்பவராவர். இவர் சாமர்த்தியமாக வார்த்தைகளைச் சொல்லுவார். இவர் நாகப்பாம்பைப்போலக் கடூரமான விஷபத்தை யுடைய எதிரிகளுக்குக் கருடனைபோன்ற வலிவான வைரியாவர்.

14. இருவித கல்வி கற்பன் யிராசரால் சீவிப் பானும்
பெரும்புத்தி யுடைய னுகும் புண்ணிய மனத்த னுகும்
வருவோரை யாதரிப்பன் வாக்கு சொல் மேன்மை
[யுள்ளான்
பெருமையாய் குடும்பி யாவன் பந்துவும் புகழ வாழ்வன்.

14. ஜாதகர் இரண்டுவிதமான வித்தையைக் கற்றுகொள்ளுவார். இவர் அரசரால் ஜீவனஞ்செய்வார். இவர் பெரியபுத்தியை, அறிவை, யுடையவராவர். தானதர்மங்களைச் செய்கின்ற மனத்தை யுடையவராவர். இவர் தன்னிடத்திற் வருகின்றவர்களைக் காப்பாற்றுவார். இவர் மேன்மை யான வார்த்தைகளை யுடையவராவர். இவர் மேன்மையான, சிறந்த, குடும்பஸ்தராகவிருப்பார். இவர் தன்னுடைய பந்துக்கள் தன்னைப் பெரு மையுடன் பாராட்டக்கூடிய அந்தஸ்திலிருந்து கொண்டு வாழ்பவராவர்.

15. வண்டி வாகனு முள்ளான்
மன்னர்கள் பேட்டி கொள்வன்
குண்டைகோ விருத்தி யுள்ளான்
குவலய நல்லோ னுவன்
அண்டினேர்க் குதவி செய்வன்
அறுமுகன் பத்தி கொள்வன்
எண்டிசை கீர்த்தி யேற்பன்
யீவன்கரம் ருத்திர ரேகை.

15. ஜாதகர் வண்டி வாகனங்களையு முடையவராவர். இவர் அரசர் களுடைய தரிசனங்களையுமடைவார். இவருக்கு மாடுகளும் பசுக்களும் விருத்தியை யடையும். இவர் இந்தப் பூமியில் நல்லவராகவிருப்பார். இவர் தன்னிடத்திற்கு உதவிக்காக வந்தவர்களுக்கு உபகாரத்தைச் செய்வார். இவர் ஆறுமுகங்களையுடைய முருகக்கடவுளின்பேரில் அன்புடையவராவர். இவர் எல்லிடங்களிலும் புகழையுடையவராவர். இவர் தன்னுடைய உள்ளங்கையில் ருத்திர ரேகையை யுடையவராவர்.

16. சித்திர வீடு செய்வன் செய்நில மதிகம் சேர்ப்பன்
பத்தினி நேய ஞகும் பால்தயிர் பிரிய ஞகும்
வித்தகன் துணைமுன் காணுன் விளம்புவோம்
[யிளையோருக்கு
குத்தமாய் ஆண்பா லொன்று தோகையு மிரண்டு
[யென்றேம்.

16. ஜாதகர் சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட அழகான வீட்டைக் கட்டுவார், பயிரிடும் நிலங்களை அதிகமாகச் சம்பாதித்துச் சேர்த்துவைப்பார். இவர் தன்னுடைய மனைவியின்பேரில் பிரியமுள்ளவராவர். இவருடைய மனைவியும் இவரிடத்தில் ஆசையுள்ளவளாகவிருப்பாள். இவர் பால் தயிர் ஆகிய இவற்றின்பேரில் ஆசையையுடையவராவர். இவருக்கு மூத்த சகோதரர் கிடையாது. இவருடைய இளைய சகோதரங்களைப்பற்றிச் சொல்லுகின்றேம். இவருக்கு ஒரு இளைய சகோதரரும் இரண்டு இளைய சகோதரிகளுமுண்டு என்று சொல்லுகின்றேம்.

*குறிப்பு :—வியாக்கியானம் :-மூத்தசகோதர விஷயம் :- ஜாதகருக்கு மூத்த சகோதரஸ்தானம் பதினேராவது வீடாகிய கடகம் ஆகும். இதில் குருவும் சந்திரனும்கூடி இருப்பது தோஷமாகும். இளைய சகோதரஸ்தானம் மூன்ருவது வீடாகும். இதில் குருவும் சந்திரனும் கூடியிருப்பது மணிகண்ட கேரளம் சகோதர காண்டத்தில் பதினெட்டாவது பாடல் பிரகாரம் இளையசகோதர தோஷமாகும். இதைப்போலவே பதினேராவது வீட்டில் குருவும் சந்திரனும் கூடியிருப்பது மூத்த சகோதரருக்குத் தோஷமுண்டென்று யூகித்துக்கொள்ளவேணும்.

## ஜாதகருடைய விவாக காலமும் மனைவியின் குணுதிசயங்களும்

17. இன்னவன் மணத்தின் காலம்
யியம்புவோ மிருப தாண்டில்
கன்னிகை உள்ளூர் தெற்கில்
கலந்திடு மென்று சொல்வோம்
அன்னவள் குணத்தை சொல்வேன்
அழகுளாள் சிவந்த மேனி
தன்மனம் கபடு மில்லாள்
சாந்தமும் கோப முண்டு.

17. ஜாதகருடைய விவாக காலத்தைப்பற்றிச் சொல்லுகின்றேம். இவருக்கு இருபதாவது வயதில் உள்ளூரிலேயே யிருந்தும் தெற்குத் திக்கிலிருந்து மனைவி வந்து சம்பவிப்பாள் என்று சொல்லுகின்றேம். இவளுடைய குணுதிசயங்களைப்பற்றிச் சொல்லுகின்றேன். இவள் அழகாகவும்

ஸௌந்தரியமுள்ளவளாகவும் இருப்பாள், இவள் சிகப்பு நிறமான தேகத்தை யுடையவளாவள். இவள் தன்னுடைய மனத்தில் வஞ்சனை, கள்ளம், ஆகிய இவற்றையுடையவளல்லள். இவள் சாந்தமான குணத்தை குணத் தையுடையவளாவள், கோபத்தையு முடையவளாவள்.

*குறிப்பு :–வியாக்கியானம் :–விவாக விஷயம் :–ஜாதகப் பாரிஜாதம் பதி னன்கு அத்தியாயம் இருபத்தொன்பதாவது சுலோகப் பிரகாரம் இரண்டாவது வீட்டிற்குடையவராகிய சுக்கிரன் இருக்கின்ற கன்னியா ராசிக்குடையவராகிய புதன் தசையில் விவாகம் நடக்க புதனுக்கு அதிகாரம் இருக்கின்றது. மேலும் இதே சுலோ கப் பிரகாரம்கூட புதன் பத்தாவது வீட்டிற்குடையவராகை யால் இவர் விவாகஞ் செய்துவைக்க அதிகாரமுடையவராகின் றார். ஆகையால் புத தசையில் இருபதாவது வயதில் விவாகஞ் சொல்லப்பட்டிருக்கின்றது.

18. வருவோரை யாதரிப்பள் வரன்மனம் போலே வாழ்வள்
பெரும்புத்தி யேழை பேரில் பிரியமு மன்னம் யீவள்
திருமக ளொப்ப தாகும் தேவிநன் நடக்கை யுள்ளாள்
அரன்தனைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

18. ஜாதகருடைய மனைவி தன்னிபத்திற்கு வருகின்றவர்களைக் காப் பாற்றுவாள். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தாற் போல ஒற்றுமையாகவிருந்து கொண்டு வாழ்பவளாவாள். இவள் பெரிய அறிவையுடைவளாவள். ஏழை ஜனங்களிடத்தில் அன்புள்ளவளாவள். இவர்களுக்குச் சாப்பாட்டைப் போடுவாள். இவள் லக்ஷிமிக்குச் சமான மானவளாவள். இவள் நற்குணங்களையும்] நல்லொழுக்கங்களையுமுடை யவளாவள். சிவபெருமானைப் பூசை செய்துகொண்டிருக்கின்ற பார்வதி யம்மையே! கேட்பீராக.

19. புத்திரர் ஆண்பால் மூன்று பெண்ணது மிரண்டு மர்கும்
சுத்தமாய் ஐந்தும் தீர்க்கம் சீரண மிரண்டு யென்றோம்
பத்தினி மாதுர் சேதி பகருவோம் யினி மேலாக
அத்தியைப் பெற்ற மாதே அம்பிகை யாளே கேளாய்

19. ஜாதகருடைய மனைவிக்குக் குழந்தைகள் மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் ஆகமொத்தம் இந்த ஐந்து குழந்தைகளும் நீண்ட ஆயுளையுடையவர்களாவார்கள். இரண்டு குழந்தைகள் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள் என்று சொல்லுகின்றோம். இனிமேல் ஜாதகரின் தாயாருடைய விஷயங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகரின் தாயாருடைய குணாதிசயங்கள்

20. அன்னையு மிரு சிகப்பள் அன்புள மனத்த லாகும்
கனமுள குடும்பியாவள் கழறுமுன் கோபம் கொஞ்சம்

தன்வரன் மனம்போல் வாழ்வள் சாதமு மன்பா யீவள்
பன்னியே பேச வல்லாள் பாவை நன்னடக்கை
[யுள்ளாள்.

20. ஜாதகருடைய தாயார். இரண்டு நிறங்கள் கலந்துள்ள நிறமாகிய மாநிறம் என்ற நிறத்தையுடைய தேகத்தையுடையவளாவள். இவள் பிரியமுள்ள மனத்தையுடையவளாவள். இவள் மேன்மையான, சிறந்த குடும்பஸ்தளாகவிருப்பாள். இவளுக்குப் பேசுவதற்கு முன்னமே சிறிதளவு கோபம் ஏற்படும். இவள் தன்னுடைய புருஷனுடைய மனத்திற்குத் தகுந்தபடி ஒற்றுமையாகவிருந்து வாழ்வாள். இவள் பிறருக்குச் சாப்பாட்டைப் பிரியத்துடன் போடுவாள். இவள் திறமையாகவும் தேர்தலாகவும் பேசுஞ் சக்தியையுடையவளாவள். இவள் நல்லொழுக்கங்களையும் நற்குணங்களையுமுடையவளாவாள்.

21. அவசர மனத்த ளாகும் அவள் அடாபிடி கூறு ளாகும்
நவனியில் நல்லோ ளாவள் நயம்படக் கூறு வாளாம்
தவசிகட் கன்ன மீவள் சமயோகம் அடக்க முள்ளாள்
இவள் பெரும் புத்தியாகும் யீஸ்வரி கேட்டி டாயே.

21. ஜாதகருடைய தாயார் அவசரமான குணத்தையுடைய மனத்தையுடையவளாவள். இவள் அநியாயமாகவும் முரட்டுத்தனமாகவும் பேசமாட்டாள். இவள் பூமியில் நல்லவளாகவிருப்பாள். இவள் இனிமையாகவும் நயப்பாகவும் பேசுவாள். இவள் தவங்களைச் செய்கின்றவர்களுக்கும் சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் சாப்பாட்டைப் போடுவாள். இவள் நடுத்தரமான யோகத்தையுடையவளாவள். இவள் அமைதியையுடையவளாவள். இவள் பெரிய அறிவையுடையவளாவள், பார்வதியம்மையாரே! கேட்பீராக.

22. துணைவர்க ளாண்பால் ரெண்டு தோகையு மொருத்தி
[தீர்க்கம்
பிணையாகு மற்ற தெல்லாம் பேதையில் தென்மேற்
[காகும்
கனமுடன் அவள்தன் பூர்வம் கழறுவோம் தவளை
[தென்பால்
அணையவே பேரூர் தன்னில் அவளுமே வைசிய சேயாய்.

22. ஜாதகரின் தாயாருடன் பிறந்தவர்களில் இரண்டு சகோதரர்களும் ஒரு சகோதரியும் தீர்க்காயுளையுடையவர்களாக விருப்பார்கள், மற்ற சகோதரங்கள் எல்லாம் சீக்கிரத்தில் இறந்துவிடுவார்கள், தாயாருடைய வீடு தென்மேற்குத் திக்கிலிருக்கும். இவளுடைய முன் ஜன்மத்தைப்பற்றிச் சொல்லுகின்றோம். இவள் தவளை பூஜை செய்து முற்றி பெற்ற ஸ்தலமாகிய தவளை

க்ஷேத்திரத்திற்குத் தெற்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் வைசிய ருடைய ஜாதியிற் பெண்ணாகப்

23. உதித்துமே பெருமை பூண்டு யுலகுக்கு நல்லோ ளாகி
சதியிலா வடமேல் திக்கில் தன்வரன் யில்லம் சேர்ந்து
பதியினில் திருவு முண்டாய் பஞ்சை மேலிறக்க மாகி
நதிபல தீர்த்தம் தோய்ந்து நற்புத்திர ருடைய ளாகி.

23. பிறந்து, கௌரவத்தையுஞ் சிறப்பையு மடைந்தும் பூமியிலுள்ளவர்களுக்கு நல்லவளாக விருந்தும், வடமேற்குத் திக்கிலுள்ள தன்னுடைய புருஷனுடைய வீட்டிற்குப் போய் அவ்விடத்தில் லக்ஷ்மி கடாக்ஷத்தையுடையவளாகியும் ஏழைகளின் பேரில் அன்புடையவளாகி யிருந்துகொண்டும், அநேக தெய்வீக ஸ்தலங்களிலுள்ள ஜலாசனங்களில் ஸ்நானம் செய்துகொண்டும் நல்ல புத்திரர்களை உடையவர்களாக இருந்துகொண்டும் வாழ்ந்து பிறகு,

## ஜாதகரின் தாயாருடைய மறுஜன்மம்

24. மரலியின் பதிக்கு சென்று மால்மகன் வரையப் பட்டு
விரைவினில் ஓதூர் தெற்கில் வித்தகி உதித்தா
[ளென்றோம்
மறுசென்மம் தணிகை தன்னில் மாதுவும் ரெட்டி வமிசம்
உரைகுவாள் சுகமுண்டாகி உத்தமி வாழ்வா ளாமே.

24. இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு மகாவிஷ்ணுவின் பிள்ளையாகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டுச் சீக்கிரத்தில் வேதங்களை ஓதுகின்ற ஸ்தலமாகிய சிதம்பர க்ஷேத்திரத்திற்குத் தெற்கில் ஒரு கிராமத்தில் இவள் (அக்தாவது ஜாதகருடைய தாயார்) பிறந்தாள் என்று சொல்லுகின்றோம். இவள் தன்னுடைய மறுஜன்மத்தில் தணிகை என்ற திருத்தணிகை க்ஷேத்திரத்தில் ரெட்டியாருடைய ஜாதியில் பெண்ணாகப் பிறந்து சுகங்களை அனுபவித்துக்கொண்டு வாழ்பவளாவள்.

## ஜாதகரின் தகப்பனாருடைய முன் ஜன்மம்

25. தந்தையின் முன்சென் மத்தை சாற்றுவோம் தோகை
[கீழ்பால்
முந்திய பேரூர் தன்னில் முதித்தனன் மறையோனாக
சந்ததம் மனைவி யுண்டாய் சடம் பூமியுள் ளோனாகி
எந்தையே மதலையுண்டாய் யிவனுமே வாழ்ந்தா
[னென்றோம்.

25. ஜாதகரின் தகப்பனாருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் தோகை என்ற பழனி க்ஷேத்திரத்திற்குக் கிழக்குத் திக்கிலுள்ள மேன்மையான ஒரு பெரிய கிராமத்தில் பிராமணராகப் பிறந்தார்.

இவர் மனைவியை யுடையவராகியும் ஆற்றுப் பாய்ச்சலுள்ள நிலங்களை யுடையவராகியும், மக்களை யுடையவராகியும் வாழ்ந்தார் என்று சொல்லு கின்றோம்.

26. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனுல் வரையப் பட்டு
ஞாலமேல் கங்கை சேயாய் நாயக னுதித்தா னென்றோம்
சாலவே வதிஷ்டர் சொல்ல சங்கரி கேட்க லுற்றுன்
சீலமாம் மறைகு லத்தில் செனித்தவ னிக்சென் மத்தில்.

26. ஜாதகருடைய தகப்பனுர் இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு பிரமதேவரால் லிபியுடன் எழுதப்பட்டு இந்தப் பூமியில் வேளாளர் ஜாதியில் ஆணுகப் பிறந்தார் என்று சொல்லுகின்றோம். இவ்விதமாக வசிஷ்ட மஹரிஷி சொல்லவே பார்வதி யம்மையார் கேட்கவாரம்பித்தார். நல்லொழுக்கங்களையும் நற்குணங்களையு முடைய பரிசுத்தமான பிராமண ஜாதியில் பிறந்தவராகிய இவர் இந்த ஜன்மத்தில்,

27. கங்கை தன்குல முதித்த காரணம் யாது சொல்வாய்
இங்கிவன் முன்சென் மத்தில் யிகபர னன்பு யின்றித்
துங்கமா சுருதி தன்னை செபிக்காமல் வாழ்ந்த தாலே
சங்கையா யிக் குலத்தில் செனித்தவ னிவனே
[யென்றோம்.

27. வேளாளர் குலத்தில் (தகப்பனுர்) பிறந்ததற்குக் காரணம் எதுவோ அதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவர் தன்னுடைய முன் ஜன்மத்தில் கடவுளின் பேரில் பிரியமில்லாதவராகியும், மேன்மையான சிறந்த சுருதிகளை (வேதங்களை)ச் சொல்லாமல் வாழ்ந்ததாலேயும் இந்த ஜாதியில் (வேளாள குலத்தில்) பிறந்திருக்கின்றுர் என்று சொல்லு கின்றோம்.

## ஜாதகரின் தகப்பனுருடைய மறுஜன்மம்

28. பின்சென்மம் விரிஞ்சி உத்திரம் பேரூரில் சத்திரிய
[சேயாய்
அன்னவன் உதித்து மேலும் அரசனுல் சீவிப்பானும்
பொன்னொடு பணிதி யுண்டாய் புரவிமேன் மாடி
[யுண்டாய்
இன்னவன் வாழ்வா னுகும் யீஸ்வரி கேட்டி டாயே.

28. ஜாதகரின் தகப்பனுர் தன்னுடைய மறுஜன்மத்தில் விரிஞ்சிபுரத் திற்கு வடக்குத் திக்கிலுள்ள ஒரு பெரிய கிராமத்தில் க்ஷத்திரியருடைய ஜாதியில் ஆணுகப் பிறந்து அரசாங்கத்தில் வேலையிலிருந்து கொண்டு ஜீவிப்பார். இவர் தனம், ஆடையாபரணங்கள் ஆகிய இவற்றையுடையவ

ராகியும் குதிரை, மெத்தை வீடு ஆகிய இவற்றை யுடையவராகியும் வாழ்ப வராவர். பார்வதியம்மையரே ! கேட்பீராக.

## ஜாதகருடைய முன் ஜன்மம்

29. சாதகன் பூர்வம் தன்னை சாற்றுவோ மவ்வூர் தன்னில்
தீதிலா சௌராஷ்டிர வமிசம் செனித்துமே பெருமை
[பூண்டு
மாதவர்க் கன்பு பூண்டு மனைவி மைந்தரு முண்டாகி
மேதினில் செட்டு செய்து வித்தகன் வாழ்ந்தா
[னென்றோம்.

29. ஜாதகருடைய முன்ஜன்மத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவர் அதே கிராமத்தில் குற்றமில்லாத சௌராஷ்டிர ஜாதியில் ஆணுகப் பிறந்து, புகழை யடைந்தும், சந்நியாசிகளுக்கும் பரதேசிகளுக்கும் முனிவர்களுக்கும் பிரியமுள்ளவராக விருந்துகொண்டும், மனைவிமக்களை யுடையவராகியும், இந்தப் பூமியில் வியாபாரத்தைச் செய்துகொண்டும், வாழ்ந்தார் என்று சொல்லுகின்றோம்.

30. அரமதி லிச்சை வைத்து அரிபத்தி மிகவே கொண்டும்
மரலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
உரமுடன் கங்கை சேயாய் உதித்தவ னிவனே
[யென்றேன்
திருமகன் யோகச் சேதி செப்புவோம் கேளும் தாயே.

30. ஜாதகர் (தன்னுடைய முன்ஜன்மத்தில்) தானதர்மங்களில் பிரியமுள்ளவராகவும், மகாவிஷ்ணுவின் பேரில் அதிக அன்புடையவராகவும் இருந்துகொண்டும், பிறகு இறந்து எமபட்டணத்திற்குப் போய்ப் பிறகு மகாவிஷ்ணுவின் குமாரராகிய பிரமதேவரால் பிரமலிபியுடன் எழுதப்பட்டு வேளாளர் ஜாதியில் ஒரு வலிவான ஆண் குழந்தையாகப் பிறந்திருக்கின்றார் என்று சொல்லுகின்றேன், இனிமேல் ஜாதகருடைய யோக விஷயங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம், பார்வதி யம்மையே ! கேட்பீராக.

## ஜாதகருடைய யோக பாவம்

31. அந்தணன் நேசம் கொள்வன் அரசர் பூசிதமு மாவன்
நொந்திடும் பேரைக் காப்பன் நேமிகள் அதிகம்
[சேர்ப்பன்
முந்திய கீர்த்தி யேற்பன் முயர்த்தியாய் குடும்பி யாவன்
தந்தனமுடைய னுவன் சகலரை வசியம் கொள்வன்.

31. ஜாதகர் பிராமணருடைய முனிவருடைய சினேகிதத்தையுடையவராவர். இவர் அரசர்களுடைய நல்ல மதிப்பையும் அபிமானத்தையுமுடையவராவர். இவர் ஏழைகளைக் காப்பாற்றுவார். இவர் அநேக நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார். இவர் மேன்மையான, சிறந்த புகழை யுடையவராவர். இவர் சிறப்பான குடும்பத்தை யுடையவராவர். இவர் தன்னுடைய சுயார்ஜித சொத்துக்களை யுடையவராவர். எல்லோரையும் தன்பக்கம் இருக்கும்படியாகச் செய்து கவர்ந்து கொள்ளுவார்.

32. தந்தைனுள் நெசவு செய்தும் செட்டுகள் அல்ப மாயும்
இந்தவன் ராசமூலம் இனிமையாய் சீவிப் பானும்
தந்தனம் பணிகள் பூமி தன்னில்லம் யாவும் தானும்
முந்து யேழாயிரம் பொன் முத்தமன் சேர்ப்பா
[னென்றேும்.

32. ஜாதகர் தன்னுடைய தகப்பனர் காலத்திலிருந்து நெசவுத் தொழிலைச்செய்து கொண்டும், வியாபாரங்கள் அற்பமாக விருந்துகொண்டும், அரசாங்கத்தாருடைய மூலமாகச் சுகமாகச் சிவனஞ் செய்துகொண்டும் வாழ்வார். தன்னுடைய பணம், ஆடையாபரணங்கள், நிலம், வீடு ஆகிய இவை எல்லாம் ஏழாயிரம் பொன் மதிப்பு தாளக்கூடியனவாக விருந்து கொண்டு இவற்றைச் சம்பாதித்து சேர்த்து வைப்பார் என்று சொல்லுகின்றேும்.

33. எந்த காலத்திலே தான் யிவனுக்கு ராச யோகம்
வந்திடும் சொல்லு மென்ன மறுனன்கு ஆண்டு
[கொண்டு
சந்திரன் பிறைபோல் யோகம் சார்ந்திடு மிவனுக்
கேதான்
பிந்தியு முப்ப தாண்டில் பூமியும் விசேஷம் சேர்ப்பன்.

33. ஜாதகருக்கு எந்தக்காலத்தில் இராஜ யோகம் உண்டாகும் என்பதைச் சொல்லுவீர் என்று கேட்கவே, இவருக்கு இருபத்தி னன்காவது வயது முதற்கொண்டு வளர்பிறைச் சந்திரனைப் போல யோகம் நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டே போகும். பிறகு இவருக்கு முப்பதாவது வயதில் இவர் அதிகமான நிலங்களைச் சம்பாதித்துச் சேர்த்து வைப்பார்.

34. எண்ணஞ்சு மூன்று ஆண்டும் யெய்திடும் ராச யோகம்
பின்னமா மதின் மேலாய் பூமியால் சீவனங்கள்
தின்னமாய் செட்டு ஓங்கும் திருப்பணி வேலை செய்வன்
அண்ணல் தன் உபதேசங்கள் அவனுமே பெருவா
[னென்றேும்.

34. ஜாதகருக்கு நாற்பத்தி மூன்ருவது வயது வரையிலும் ராஜயோக முண்டாகும். இதற்குப் பிறகு இந்த யோகம் குறைவு படும். இவருக்கு நிலங்களால் ஜீவனங்கள் உண்டாகும். இவருக்கு வியாபாரம் அதிதப்படும், விருத்தியாகும். இவர் கோயில் வேலேகளைச் செய்வார். இவர் கடவுளி னுடைய உபதேசங்களை அடைவார் என்று சொல்லுகின்ருேம்.

## ஜாதகருடைய தாய் தந்தையரின் மரணகாலம்

35. முப்பது மூன்றுஆண்டில் மூல மாதத்திலே தான்
செப்புவோம் தந்தை கெண்டம் செழிப்புடன் நாற்ப
]தாண்டில்
ஒப்புடன் கூனிமாதம் உரைக்கிருேம் தாய்க்குக்
[கெண்டம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழி குன்ருது.

35. ஜாதகருக்கு முப்பத்து மூன்ருவது *வயதில் வைகாசி மாதத்தில் இவருடைய தகப்பனுர் இறந்து விடுவார். ஜாதகருக்கு நாற்பதாவது* வயதில் பங்குனி மாதத்தில் இவருடைய தாயார் இறந்து விடுவாள். நாகப் பாம்பை ஆபரணமாகத் தன்னுடைய ஜடையில் தரித்துக் கொண்டிருக் கின்ற சிவபெருமானுடைய மனேவியாகிய பார்வதி யம்மையே! நாங்கள் உம்முடைய அருளால், கிருபையால் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும்,

*வியாக்கியானம் :—பிதுர் மாரக விஷயம் : ஜாதகருக்கு முப்பத்தி மூன்ரு வது வயதில் கேது மகாதசை நடக்கின்றது. இவர் சூரிய னுடைய வீட்டில் இருப்பதால் சூரியனுடைய பலனே இவர் கொடுக்க வேணும். இது ஜாதக சந்திரிகை பன்னிரண்டாவது சுலோகப் பிரகாரமாகும். மேலும் ஒரு கிரகம் தன்னுடைய தசையில் தன்னுடைய காரகத்தினல் குறிக்கப்பட்ட நவருக்கு மாரகத்தைத் தரும் என்று சுக்கிர நாடி முதலிய சில கிரந்தங் களில் சொல்லப்பட்டிருக்கின்றது. அக்தாவது பிதுர்காரகனுகிய சூரியன் தன்னுடைய தசையில் பிதுருக்கும் சந்திரன் மாதுருக் கும் அங்காரகன் சகோதரத்திற்கும், புதன் அம்மானுக்கும், குரு புத்திரர்களுக்கும், சுக்கிரன் களத்திரத்திற்கும், ஆயுட்காரக ராகிய சனி ஜாதகருக்கும் தன்னுடைய தசையில் மாரகத்தைத் தருவார்கள். ஆகையால் இங்கு சூரியன் தன்னுடைய தசை யில் பிதுருக்கு மாரகத்தைத் தரக்கூடியவராக விருக்கின்ருர். ஆகையால் இவர் வீட்டிலுள்ள கேது ஜாதக சந்திரிகை பன் னிரண்டாவது இருபத்திமூன்ருவது சுலோகங்கள் பிரகாரம் பிதுருக்கு மாரகத்தைச் செய்ய அதிகார முடையவராகின்ருர்.

*மாதிரு மாரக விஷயம் : ஜாதகருக்கு நாற்பதாவது வயதில் சுக்கிர தசை நடக்கின்றது. மாதிரு லக்கினம் நான்காவது விடாகிய தனுசு ஆகும். தனுசு லக்கினத்திற்கு ஜாதக சந்திரிகை அறுபதாவது சுலோகம் பிரகாரம் சுக்கிர தசை மாரக தசையாகும். ஆகை யால் இங்கு சுக்கிர தசையில் மாதிருக்கு மாரகஞ் சொல்லப் பட்டிருக்கின்றது.

## ஜாதகருடைய மரணகாலம்

36. சாதகன் மரணகாலம் சாற்றுவோ மருபான் மூன்றில்
மேதினில் சாடி மாதம் வளர்பிறை சஷ்டி தன்னில்
தீதான சூலையாலே தேகமே வாடு மென்றோம்
மாதவர் சொல்லும் போது மங்கையும் கேட்க லுற்றாள்.

36. ஜாதகருடைய மரணகாலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். இவருக்கு அறுபத்து மூன்றாவது வயதில் சாடி மாதம் என்ற மாசி மாதத்தில் வளர்பிறையில் சஷ்டி திதி தினத்தில் கெடுதியான சூலை நோயால் ஜாதகர் இறந்து இவருடைய தேகம் அழிந்து மறைந்துபோய் விடும் என்று சொல்லுகின்றோம். இவ்விதமாக முனிவர் சொல்லும்போது பார்வதி யம்மையார் கேட்கவாரம்பித்தார்.

*வியாக்கியானம் : ஜாதகருடைய மரண விஷயம் :—ஜாதகருக்கு அறுபத்து மூன்றாவது வயதில் சந்திரமகா தசை நடக்கின்றது. ஜாதக சந்திரிகை ஐம்பத்து நான்காவது சுலோகம் பிரகாரம் கன்னியா லக்கினத்திற்குச் சந்திரன் மாரகராகின்றார். மேலும் சந்திர தசை ஆறாவது தசையாகவும் வருகின்றது. ஆகையால் இங்கு ஜாதகருக்குச் சந்திர தசையில் மாரகம் சொல்லப்பட்டிருக் கின்றது.

37. இதுமத்தில் சாதகர்க்கு யிலகாதோ மாரகங்கள்
அதுதனை சொல்லுமென்ன ஆண்டுனில் மாந்தை [தோஷம்
சதியான மூன்று யெட்டில் சார்ந்திடு யீரேழு ஆண்டில்
அதிகமாய்ப் பிணியு மெய்தும் அதுவின்றி யிருபான் [மூன்றில்.

37. இதன் இடையில் ஜாதகருக்கு மாரகம் நேரிடாதோ, இதன் விவரத்தைச் சொல்லுவீர் என்று பார்வதியம்மையார் கேட்கவே ஓராவது வயதில் மாந்ததோஷ ரோகமும், மூன்றாவது, எட்டாவது, பதினான்காவது வயதுகளில் அதிகமான வியாதிகளும் சம்பவிக்கும். இவையு மல்லாமல் இருபத்து மூன்றாவது வயதில்,

38. மாதையால் பாதை நேறும் வாயுவால் நாற்பானைந்தில்
தீதான ரோகம் வாய்க்கும் சித்திரன் சென்மம் தங்க
எதுநோய் வந்த போதும் யிரவிமுன் இருள்போல்
[நீங்கும்
போதவே அறுபான் மூன்றும் புகலுவோம் தீர்க்க மாக

38. ஸ்திரீயால் உபத்திரவமும் ரோகமும் உண்டாகும். இதுவுமன்றி நாற்பத்தைந்தாவது வயதில் கொடியதான ஒரு வாய்வு ரோகமும் உண்டாகும். சித்திரன் என்ற சுக்கிரன் ஜன்மம் என்ற லக்கினத்தில் இருப்பதால் எந்த வியாதி வந்து சம்பவித்தப் போதிலும் அது சூரியனுக்கு முன்னேயுள்ள இருளைப் போல விலகிப்போய் நிவர்த்தியாகி விடும். ஆகையால் ஜாதகருக்கு அறுபத்து மூன்ருவது வயது வரையிலுமுள்ள தீர்க்காயுளைச் சொல்லுகின்ருேம்.

39. மறுசென்மம் அவ்வூர் தன்னில் மறைகுல முதிப்பா
[ணுகும்
அரசரால் சீவனங்கள் அதிகார முடைய ணும்
திருமகள் விலாசம் பூண்டு செல்வனும் வாழ்வா ணுகும்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

39. ஜாதகர் தன்னுடைய பின்ஜன்மத்தில் அதே கிராமத்தில் (அக்தாவது இந்த ஜன்மத்தில் பிறந்த பட்டணத்தில்) பிராமணருடைய ஜாதியில் ஆணுகப் பிறப்பார். இவர் அரசாங்கத்தில் அதிகாரமுடைய ஒரு வேலையில் அமர்ந்து சீவனஞ் செய்வார். இவர் லக்ஷிமி கடாக்ஷத்தை அடைந்து வாழ்வார். கறுப்பு மதயானை முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்றெடுத்த பார்வதி யம்மையே ! கேட்பீராக.

40. செனித்திடு காலம் தன்னில் சனிதிசை யிருப்பு ஒன்பான்
குனித்திடு திங்கள் ரெண்டும் கூறுவோம் பலனை
[யாங்கள்
வினையுண்டு சாதகர்க்கு விளங்கிடும் துணைவர் தானும்
தனமது சிலவே யுண்டு சலசெட்டு செய்வா ணுமே.

40. ஜாதகர் பிறந்த காலத்தில் சனி மகாதசையில் இருப்பு நின்ற வருஷங்கள் ஒன்பதும் மாதங்கள் இரண்டும் ஆகும். இக் காலத்தில் நடக்கும் பலாபலன்களைச் சொல்லுகின்ருேம். ஜாதகருக்குக் கஷ்டங்கள் நேரிடும் சகோதரங்கள் பிறப்பார்கள். பணச் செலவு ஏற்படும். ஜாதகருடைய தகப்பனுர் ஜலசம்பந்தமான வஸ்துக்களில் (அக்தாவது ரசாயன வஸ்துக்களில்) வியாபாரத்தைச் செய்வார்.

41. முன்தொழில் நிவர்த்தி யாகும் முயற்சியாய் கீர்த்தி [யோங்கும்
தன்பந்து உதவியாலே சஞ்சல நிவர்த்தி யாகும்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபரமாக
இந்திர னிரஞ்சு மாதே யிம்மொழி தப்பா தாமே.

41. இதற்கு முந்தி ஜாதகருடைய தகப்பனுர் செய்து வந்த தொழில் விலகிப்போய் விடும். இவருக்குத் தன்னுடைய பிரயத்தனத்தால் புகழும் பெருமையும் அதிகரிக்கும். இவருக்குத் தன்னுடைய பந்துவினுல் மனக் கஷ்டங்களும் துன்பங்களும் நீங்கிவிடும். மற்ற விஷயங்களை விவரமாகப் பின்பாகமாகிய இரண்டாவது பாகத்தில் சொல்லுகின்ரேும். தேவேந்திரன் உம்மை வணங்கி உம்மைப் பூஜை செய்யும்படியான பாத்தியதையை யுடைய பார்வதியம்மையே! நாங்கள் சொல்லிய பலாபலன்கள் தவறிப் போகாமல் நடக்கும் என்பதாம். —C.G.R.

(இத்துடன் இப்புத்தகத்தின் முதலாவது பாகம் முற்றிற்று)

---

# ஜாதகம் 48

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதிரவி[2] பொன்னேன்[3] கன்னி [4]மங்கலன் கேது [5]வீணை
புதன் [6]சீயம் [7]புகருந்[8] தூக்கம்[9] பங்குமே[10] தேள தாக
[11]அதிகயர் [12]மேரு வாக [13]அரிவையும் [14]ஜன்ம மாக
இதுவிதக் கோளு நின்றால் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் சூரியன் குரு கன்னியிலும், அங்காரகன் கேது மிதுனத்திலும், புதன் சிம்மத்திலும், சுக்கிரன் துலாத்திலும், சனி விருச்சிகத்திலும், இராகு தனுசிலும் ஆக இவ்விதம் நவக்கிரகங்களும் நிற்க, கன்னியா லக்கினத்தில் தோன்றிய ஜாதகருக்குப் பலன்கள் எவ்விதம் உள்ளன என்று கூறுவீர்களாக.

| | | | |
|---|---|---|---|
| | | | அங்காரகன் கேது |
| | இராசி சக்கரம் | | |
| | | | புதன் |
| ராகு | சனி | சுக்கிரன் | லக்கினம் சந்திரன் சூரியன் குரு |

## ஜாதகன் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னுதித்த வில்லம் விளம்புவோம் கீழ்மேல் வீதி
உத்தரம் வாடை யாகும் ஓடையு மரசர் தெற்கில்
சித்தசன் தனையெ ரித்தோன் தேவனு முத்தர மாகும்.

---

1. சந்திரன்.
2. சூரியன்.
3. குரு.
4. அங்காரகன்.
5. மிதுனம்.
6. சிம்மம்.
7. சுக்கிரன்.
8. துலாம்.
9. சனி.
10. விருச்சிகம்.
11. இராகு.
12. தனுசு.
13. கன்னி.
14. இலக்கினம்.

2. என்று பார்வதிதேவியார், ஏழு முனிவர்களேயும் பார்த்துக் கேட்க, அவர்களில் ஒருவராகிய அத்திரி முனிவர் கூறுகின்ருர். இந்த ஜாதகன் பிறந்த வீட்டைப் பற்றிக் கூறுகின்ருேம். பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு வரிசையில் உள்ளது. தெற்குத் திசையில் நீரோடை யுளது. அரச குடும்பத்தினரும் அத்திசையில் வசிக்கின்றனர். மதன் மதனே எரித்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஆலயம் ஒன்று ஜாதகன் வீட்டுக்கு வடக்கில் இருக்கின்றது.

## இதுவுமது

3. *தந்தியும் காளி கன்னி தங்கிடும் மேற்கி லேதான்*
*இந்திரன் திசையில் யானே யிலகிய கோட்ட முண்டு*
*முந்தின நகர மாகும் முயற்சியாய்ச் செட்டு மோங்கும்*
*சந்தத மைந்தாம் ஜன்மம் ஜனிப்பனும் வைசியச் சேயாய்.*

3. விநாயகர், காளி, துர்க்கை அம்மன் ஆகியோர் கோயில்கள் ஜாதகன் வீட்டுக்கு மேற்குத் திசையில் உள்ளன. கிழக்குத் திசையிலும் ஒரு விநாயகர் ஆலயம் இருக்கின்றது. அது முன்னேற்ற மடைந்ததொரு நகர மாகும். அங்குப் பலரும் தங்கள் சுய முயற்சியால் செய்யும் தொழில் படிப் படியாக முன்னேற்ற மடைந்துளது. இங்ஙனமான இடத்தில் இந்த ஜாதகன் வைசிய மரபில் தன் பெற்ருேருக்கு ஐந்தாம் பிறப்பாகத் தோன்றுவான்.

## தந்தையின் சகோதரபாவம்

4. *தந்தையின் வர்க்கந் தன்னேச் சாற்றுவோ மாண்பா [லொன்று*
*எந்தையே கன்னி யவ்வா றிருவருந் தீர்க்க மென்ருேம்*
*நொந்திடு மற்ற வெல்லாம் நுவலுவோம் பிதாகு [ணத்தைச்*
*சந்தத மிருநி றத்தன் சந்தேக நீட்சி யுள்ளான்.*

4. இந்த ஜாதகனின் தகப்பனுர் வர்க்கத்தைப் பற்றிக் கூறுகிருேம். இவருடன் பிறந்த சகோதரன் ஒருவனும், சகோதரி ஒருத்தியுமுண்டு. இவ் விருவரும் தீர்க்க வயதுடையவர்கள் என்று சொல்லுவோம். மற்றும் பிறந்த வர்கள் நிலேயார். இனி, ஜாதகனுடைய தந்தையின் இயல்பைப் பற்றிக் கூறு வோம். கருநிறமுடையவன். எப்பொழுதும் நீடித்த சந்தேக மனமுள்ளவன்.

## ஜாதகன் பிதாவின் இயல்புகள்

5. பலவித வணிபஞ் செய்வன் பத்தினி நேய னுகும்
நலம்படக் கூறு வானும் நவிலுவோ மாமி ரண்டு
தலமது தீர்த்தந் தோய்வன் சகோதரப் பகையு மாவான்
குலவிடும் வாயுப் பீடை குணமது விரண்டு முள்ளான்.

5. பலவகையான வியாபாரங்களை இந்த ஜாதகனின் தந்தை செய்வார். மனைவியிடம் விருப்பமுள்ளவர். நன்மை ஏற்படும் சொற்களைப் பேசுவார். இவருக்கு (பிதாவுக்கு) மாமியர் இருவர். பல புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை செல்வார். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவார். சகோதரப் பகையும் ஏற்படும். வாயு நோயினால் துன்பம் ஏற்படும். இருவித மான (ஒன்றற்கொன்று மாறுபட்ட) குணங்கள் உடையவர்.

## தந்தையின் இயல்புகள்: தொடர்ச்சி

6. அறமதி லிச்சை யுள்ளான் அவன்தந்தை ஆஸ்தி
[காணான்
பரம்பரைத் தொழிலே செய்வன் பகருவான் கட்டு
[வார்த்தை
திருமகள் வாச முள்ளான் சித்திர வீடு செய்வன்
முருகர்மேல் பத்தி கொள்வன் முன்கோபம் பின்பு
[சாந்தம்.

6. தருமம் செய்வதில் மிக்க விருப்பமுள்ளவன். தன் தந்தையால் தேடி வைக்கப்பட்ட சொத்துக்கள் எவையு மில்லாதவன். தன் மரபுக்குரிய தொழிலையே இவனும் செய்து வருவான். தானாகக் கட்டிப் பேசுவான். இலக்குமி கடாட்ச முள்ளவன். வீட்டை நன்கு அலங்கரிப்பான். முருகப் பெருமான் மீது மிக்க பக்தி கொள்பவன். முன் கோபமுடையவன்; ஆயின், உடனே அஃது ஆறும்நிலை யுள்ளவன்.

## இதுவுமது

7. சல்லியங் கொள்ளா னாகும் சரசமாய்ப் பேச வல்லன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இடருகள் ஒருவர்க்
[கெண்ணான்
தொல்லையு மாதி யில்தான் சேர்ந்திடும் நாபிச் சூடு
சொல்லையுங் காப்பா னாகுஞ் சுந்தரி மேலுங் கேளே.

7. பிறரிடமிருந்து பணக் கடன் வாங்க மாட்டான். சரசப் பேச்சுக்கள் பேசுவதில் வல்லவன். கேட்பவர்களுக்கு இல்லை யென்னாமல் கொடுப்பான். எவருக்குந் துன்பஞ் செய்ய நினையான். இளமையில் துன்பங்கள் பல இவனை யடையும். நாபிச் சூட்டு நோயுள்ளவன். சொன்ன சொற்களைக் காப்பாற்றுவான். அழகுள்ள உமாதேவியே! மேலுங் கூறுவோம். கேட்பாயாக.

## இதுவுமது

8. அவசர மனத்த னாகும் ஆள்கார ருடைய னாகும்
தவசிக ளுறவு கொள்ளான் சந்தேக மனத்த னாகும்

இவன்துணை வேருய்ச் செல்வன் இயம்புவான் தந்திர
[வார்த்தை
நவனியில் நெய்பா லிஷ்டன் நற்சுகி போச னத்தோன்.

8. எதனையும் தீர ஆராய்ந்து முடிவு செய்யாமல் அவசரப்படும் மன முடையவன். ஏவலாளர்கள் பலரை உடையவன். சான்ருேர்கள் தொடர்பு கொள்ளாதவன். சந்தேக மனமுள்ளவன். இவன் சகோதரன் இவனை விட்டுப் பிரிந்து செல்லுவான். தந்திரமாகப் பேசுவான். நெய், பால் இவற்றில் விருப்பமுள்ளவன். அறுசுவையுடன் கூடிய உணவுகளை உட் கொள்ளுவதில் பிரியமுள்ளவன்.

## ஜாதகனது இயல்புகள்

9. இக்குண முடையோ னுக்கு இவனுக்குத் தாரமி ரண்டில்
மிக்கவே யிளையா ளுக்கு வித்தக னுதிப்பா னுகும்
தக்கவே யிவன்கு ணத்தைச் சாற்றுவோங் கல்வி
[யில்லான்
சிக்கன மில்லா னுகுந் தீரமா மனத்த னுகும்.

9. இவ்வாறுன குணங்களை யுடைய தந்தைக்கு இரண்டாம் மனைவி யிடத்தில் இந்த ஜாதகன் பிறப்பான். இனி, ஜாதகன் குணங்களைக் கூறு வோம். கல்வியறிவில்லாதவன். சிக்கனமாக வாழத் தெரியாதவன். தைரிய முள்ள மனத்தைக் கொண்டவன்.

## இதுவுமது

10. தந்தைதாய்க் கருமஞ் செய்யான் சந்ததி மனைவி
[யில்லான்
இந்தவா றத்திரி சொல்ல ஈச்வரி கேட்க லுற்ருள்
மைந்தனுந் தாய்தந் தைக்கே கருமமுஞ் செய்யா
[னென்றீர்
அந்ததோர் சேதி தன்னை யறிவிப்பீர் விபர மாக.

10. தன் பெற்ருேர்கட்கு இறுதிக் கடன்கள் செய்ய மாட்டான். புத்திர பாக்கியம் இல்லாதவன். (மனைவியில்லாதவன்) என்று இவ்வாறு ஜாதகன் இயல்புகளை அத்திரி முனிவர் கூறிக் கொண்டுவர, பார்வதி இடை மறித்து ஒன்று கேட்டாள். இந்த ஜாதகன் தன் தாய் தந்தையர்க்கு இறுதிக் கடன்கள் செய்ய மாட்டான் என்று கூறினீர்கள். ஏன்? என்று, விவரமாகக் கூறுவீராக.

11. பத்தினில் [1]குசனும் கேது பிரிந்துமே [2]வியத்தில் [பத்தோன்
சித்தமா யிருப்ப தாலே ஜனித்தவன் தனக்கு மேதான்
சுத்தமாய்த் தந்தை தானுஞ் செய்வனுங் கர்ம [மென்றேம்
அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்ருள்.

11. பத்தாம் இடத்தில் (இலக்னத்திலிருந்து பத்தாவது இடம்: மிதுனம்) செவ்வாயும் கேதுவும் கூடியும், விரய ஸ்தானத்தில் பத்துக்குடையவனுகிய புதனும் நிச்சயமாய்த் தங்கி யிருப்பதனுல், இந்த ஜாதனுக்குத் தந்தையே இறுதிக் கடன் செய்வான் என்று கூறிஞேம் என அத்திரி முனிவர் கூறும் பொழுது, உமாதேவி பின்வருமாறு கேட்கத் தொடங்கினுள்.

## ஜாதகன் மரணமடையுங் காலம்

12. எந்தக்கா லத்தி லேதான் ஏகுவா னெமப திக்கு
முந்தியே கூறு மென்ன வுதித்தசேய் ஜனன காலம்
சந்திரன் தசையா மென்றேஞ் சாரும்பத் தொன்பதாம் [திங்கள்
அந்தகன் பக்கல் சேர்வன் அம்பிகை யாளே கேளாய்.

12. எந்த வயதில் இந்த ஜாதகன் எம புரஞ் சேருவான்? அதனை முதலில் சொல்லுங்கள் என்று கேட்க, ஜாதகன் பிறப்புக் காலத்தில் சந்திர மஹா தசை நடைபெற்றுக் கொண்டிருந்தது என்று சொன்னேம். தனது பத்தொன்பதாம் வயதில் (பிறந்து பத்தொன்பதாம் மாதத்தில்) மரணம் அடைவான் என்று கூறுவோம். அம்பிகையே! கேள்.

## ஜயமுனிவர் ஐயம்

13. ஜயமுனி யெழுந்தி ருந்து திடுக்கென வுரைக்க லுற்ருர்
நயமுட னிரவி பொன்னே னிலக்கின ந் தனிலி ருக்கப்
பயமது யெவ்வி தத்தால் பகர்ந்தநீ கார ணஞ்சொல்
வியமாகுங் கார ணத்தை விளம்புவோங் கேளுந் தாயே.

13. இவ்விதம் அத்திரி முனிவர் கூறும்போது, அங்கிருந்த ஜய முனிவர் என்பார் எழுந்திருந்து திடீரென ஒன்று கூறத் தொடங்கினர். சூரியனும் குருவும் ஜன்மலக்கினமாகிய கன்னியில் இருக்கும் பொழுது இந்த ஜாதகனுக்கு இளமையிலேயே மரணம் உண்டாகும் என்ற பயம் எதனுல் ஏற்பட்டது? கூறுவீர். ஜாதகனுக்கு மரண மேற்படும் காரணத்தை விவரமாகக் கூறுகின்றேம். தாயே! கேளுங்கள்.

1. செவ்வாய்.
2. வியம்-விரயஸ்தானம்; இலக்கினத்துக்குப் பனிரண்டாமிடம், (ஏண்டுக் கடகம்).

## ஜாதகன் தாயார் செய்தி

14. அன்னையுந் தந்தை யாலே அறைந்தன மந்தத்
[தோஷம்
என்னஊழ் சொல்லு மென்ன இவன்மாதா சேதி
[கேளாய்
உன்னத மிருசி வப்பள் உள்மனம் கபடு மில்லாள்
தன்சொலே மேன்மை யாகச் சாதிப்பா ளென்று
[சொல்வோம்.

14. தாய் தந்தையர் செய்த தீவினையால் இந்த ஜாதகனுக்குத் தோஷ மேற்பட்டது. என்ன தீவினை அது? சொல்லுமென்று பார்வதி கேட்க, முனிவர் கூறுகின்றார். இந்த ஜாதகனின் தாயார் செய்தியைக் கேட்பா யாக. உயரமானவள். மிகுதியாகச் சிவந்த நிறமுடையவள். மனத்தில் கபடம் (வஞ்சனை) இல்லாதவள். தான் கூறிய சொற்களே சிறந்தன என்று சாதிப்பாள்.

## இதுவுமது

15. புத்திர ராசை யுள்ளாள் புண்ணிய மனத்த ளாகும்
வித்தகி துணைவர் தம்மை விளம்புவோ மாண்பா
[லொன்று
சித்தமாய்ப் பெண்பா லவ்வாறு செப்புவோ மிவளுக்
[கேதான்
உத்தமி யில்ல மேற்கில் உரைத்தனங் கேட்டி டாயே.

15. புத்திரர்களிடம் விருப்பமுள்ளவள். (புத்திர பாக்யத்தில் ஆசை யுள்ளவள்.) நல்லதை யெண்ணும் மனமுடையவள். இவளுடைய சகோ தர பாவம் பற்றிக் கூறுவோம். சகோதரன் ஒருவனும், சகோதரி ஒருத்தியும் இவளுக்கு வாய்ப்பர் என்று சொல்லுவோம். ஜாதகன் பிறந்த வீட்டுக்கு மேற்குத் திசையில் இவள் பிறந்த வீடு என்று கூறினோம். கேட்பாயாக.

## தாயாரின் முற்பிறவி பற்றிய விவரம்

16. மாதுல னில்லம் நீங்கி வருவளா மிவன்பா லுந்தான்
மேதினில் சிலநா ளொன்றாய் மேவிப்பின் வேறாய்ச்
[செல்வன்
ஓதுவேன் மாதுர் பூர்வம் உரைக்கிறோம் பெண்ணே
[யுத்தரம்
ஓதவே பேரூர் தன்னில் பிறந்தனள் சேடர் வமிசம்.

16. தனது மாமனார் வீட்டைவிட்டுப் புறப்பட்டுத் தன் சகோதரன் இருப்பிடத்துக்குச் சென்று வசிப்பாள். அவன் சில நாட்கள் தன் சகோதரி

(ஜாதகன் தாயார்) யுடன் ஒற்றுமையுடன் இருந்து பின்பு வேறிடஞ்சென்று வசிப்பான். ஜாதகன் தாயின் முற்பிறப்பைப் பற்றி இனிக் கூறுகிறோம். பெண்ணையாற்றுக்கு வடக்கிலுள்ள ஒரு பெரிய ஊரில் (பேரூர் என்ற ஊரில்) சேடர் குலத்தில் பிறந்தாள்.

## இதுவுமது

17. பிறந்துமே பெருமை பூண்டு புத்திர ருள்ளா ளாகி
வறுமைக ளில்லா ளாகி வாழ்கிற நாளி லேதான்
உறைந்தஊழ் வினையைக் கேளாய் உத்தமி கொல்லை
[தன்னில்
இருந்தது முனிக ருப்பன் இவள்குல தெய்வ
[மென்றேம்.

17. பிறந்து வளர்ந்து பெருமை பல பெற்று, மணமாகிப் புத்திரப் பேறுடையளாய் ஏழ்மைத் துன்பமில்லாமல் வாழ்ந்து வந்தாள். அங்ஙனம் இருக்கின்ற நாட்களில் இவளைப்பற்றிய தீவினையைக் கேட்பாயாக. உத்தமியே! இவள் வீட்டுக் கொல்லையில் இவர்கள் குலதெய்வமாகிய கருப்பு முனி வாசம் செய்து வந்தது.

18. முனிகுணம் பிணியைத் தீர்க்கும் மைசேவல் பலிகள்
[வாங்கும்
சினமுள தேவன் தன்னைச் சிந்தையி லெண்ணு ளாகி
வனிதையு மர்ம மாக வாழ்ந்தனள் கருப்பன் தானும்
அனையவே வேறு இல்லம் அறைந்துபின் புகலக்
[கேளாய்.

18. வீட்டுக் கொல்லையில் வசித்த கருப்பு முனியின் இயல்புகளைக் கேட்பாயாக. இவள் வீட்டாருக்கு வரும் நோய்களைத் தீர்க்கும். ஆடு, கோழி முதலியவற்றைத் தனக்குப் பலியாகப் பெற்றுக்கொள்ளும். மிக்க கோபமுள்ளதாகிய அந்தக் கருப்பு முனியைப் பற்றி இந்த ஜாதகனின் தாயார் தன் மனத்தில் சிறிதும் எண்ணுமல் அலட்சியங்கொண்டவளாய் இருந்தனள். அதனுல் கோபமடைந்த கருப்பு முனியும் வேறு இடத்தை நாடிச் செல்லும்பொழுது கூறிய சாபத்தைக் கேட்பாயாக.

## கருப்புமுனி கொடுத்த சாபம்

19. மறுஜன்மம் தோன்றி யேதான் மைந்தராண் குற்றம்
[செய்வேன்
விரைவினில் இல்லம் நீங்கும் விளம்பிற்று முனியுந்
[தானும்

உறைந்தது அந்தத் தோஷம் உத்தமி தன்னைப் பற்றி
வருஞ்சுதர் யாவும் பெற்று மறலியின் பதிக்குச்
[சென்றாள்.

19. "என்னை அலட்சியம் செய்த உனக்கு, மறு பிறப்பில் ஆண் குழந்தை பிறந்து, இளமையிலேயே அது மரிக்கும்படி செய்வேன்" தந்தை விடு அவனை விட்டு நீங்கும் என்று கூறிவிட்டு முனியும் வேறிடம் சென்றது. ஆகையினால் அந்தத்தோஷம் இந்த ஜாதகனின் தாயை வந்தடைந்தது. அதன் காரணமாக, இவள் மக்கள் பலரைப் பெற்று, இறுதியில் எமனுலகம் சென்றனள்.

20. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தனள் வைசியச் சேயாய்
உறைந்திடு முனியின் சாபம் உத்தமி தன்னைச் சார்ந்து
பெருஞ்சுத ராண்பால் நீங்கும் பெருந்தந்தை யில்லம்
[நீங்கும்
வரும்வினை விலகு தற்கு வரைகிறோம் சாந்தி தானே.

20. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இவ்வுலகில் வைசிய மரபில் ஜனித்தாள். முற்பிறவியில் ஏற்பட்ட கருப்பு முனியின் சாபம் இவளை உறுதியாகப் பற்றியிருக்கும். ஆதலினால், இவளுக்குப் பிறக்கும் ஆண் குழந்தைகள் விரைவில் மரிக்கும். தந்தையின் வீடு, அவனை விட்டுச் செல்லும். இவளுக்கு உண்டான சாபம் நீங்குவதற்குச் சாந்திபரிகாரம் சொல்லுகிறோம்.

## சாந்தி விவரம்

21. கருமசாந் திகளுஞ் செய்து காதலி பீஜந் தன்னை
வருவியே சத்தி பூசை வைத்துமே அணிவா ளாகில்
பெருஞ்சுதர் தீர்க்க மென்றோம் பிழையின்றிச் செய்யா
[ளாகில்
வருஞ்சுதர் ஆண்பால் தோஷம் மங்கையுங் கேட்க
[லுற்றாள்.

21. வினை நீங்குதற்குரிய சாந்திகள் பலவும் செய்து, பீஜாட்சரத்தை ஒரு பொன் தகட்டில் வரைந்து, அதனைச் சக்தி பூஜையில் வைத்துப் பூஜை செய்து, பிறகு இவள் (ஜாதகன் தாயார்) அணிந்துகொள்ளுவாளாகில், பிறக்கும் ஆண் குழந்தைகள் தீர்க்க ஆயுளுடன் இருப்பர் என்று கூறுவோம். குற்றமில்லாமல் மேற் கூறப்பட்ட சாந்தியினைச் செய்யாமல் இருப்பாளாகில், பிறக்கின்ற ஆண் குழந்தைகள் நிலையா. இங்ஙனம் கூறிய முனிவரைப் பார்த்து, பார்வதி தேவி கேட்கத் தொடங்கினாள்.

## சாந்தி செய்யும் முறை

22. சாந்தியெவ் விதமாய்ச் செய்யச் சாற்றுவீர் முனியே
[நீர்தாம்
ஏந்திய கலசந் தானியம் இயல்சமித் துடனே
[யொன்பான்
கூர்ந்துமே ஓமம் செய்து கூறுவோம் மூலம் தன்னைச்
சாந்தமாய் அய்யும் கிலியும் சவ்வுமவ் வென்று மேலும்,

22. சாந்தி பரிகாரம் எப்படிச் செய்வது என்பதனை, முனிவரே! தாங்கள் கூறியருளுங்கள். நவதானியங்களைக் கலசங்களில் நிரப்பி வைத்து ஸமித்துக்களையும் சேகரித்து ஹோமம் செய்தல் வேண்டும். அம்பிகை யைப் பற்றிய மூலமந்திரத்தைக் கூறுவோம். அமைதியான மனத்துடன் ஓம், அய்ம், கிலம், சவ், மவ் என்றும்,

## ஜாதகனின் தந்தையினது முற்பிறவி விவரம்

23. பஞ்சமூ லத்தைத் தானும் பகருவாய் சகத்தி ரந்தான்
துஞ்சிடும் முனியின் சாபம் தந்தையின் பூர்வங் கேளாய்
தஞ்சமாய்க் காஞ்சி கீழ்ப்பால் சார்ந்திடும் பேரூர் தன்னில்
வஞ்சியே [1]வடுக வம்ச மரபினு லுதித்தா னென்றோம்.

23. பஞ்ச மூலமந்திரத்தை ஆயிரம் முறை ஜபித்தால் முனியின் சாபம் நீங்கும். இனி, ஜாதகன் தந்தையின் முற்பிறவி வரலாற்றைக் கேட்பாயாக. காஞ்சிபுரத்துக்குக் கிழக்குத் திசையில் உள்ளதொரு பெரிய ஊரில் யாதவ மரபில் தோன்றினான் என்று கூறினோம்.

## தந்தையின் முற்பிறவிச் செய்தி: தொடர்ச்சி

24. உதித்துமே பெருமை யாகி உலகினில் செட்டுச் செய்து
அதிபனும் வாழு நாளி லறைகிறோம் தோஷம் தானும்
மதிமுக மாது யேழை மகவுசோ றிவனைக் கேட்க
அதிகமாய்க் கோபங் கொண்டு அடித்தனன் மாதைத்
[தானும்.

24. பிறந்து, பெருமையுடன் வியாபாரஞ் செய்து வாழுகின்ற நாட்களில், ஒரு நாள் ஏழைப் பெண்ணொருத்தி, பசியால் வாடும் தன் குழந்தைக்குச் சிறிது சோறளிக்கும்படி இவனை வேண்டினாள். இவன் சோறு அளிக்காததோடு, அவ் வேழைப் பெண்ணை, மிக்க கோபத்துடன் அடித்து விட்டான்.

---

1. தெலுங்கு மொழி பேசுபவர்.

## ஏழை மாதின் சாபம்

25. மாதுவும் மனங்க லங்கி யறைகிருள் சாபந் தானும்
மேதினில் மறுஜன் மத்தில் விளங்கிடும் தார மிரண்டாய்ப்
போதவே சுதராண் காணு பிறக்கினுந் தீதே யாகும்
தீதாகுந் தந்தை யில்லஞ் செப்பிவே றில்லஞ் சென்ருள்.

25. அந்த ஏழைப் பெண் மிகவும் மனம் வருந்திப் பின்வருமாறு ஒரு சாபமிடுகிருள். "மறு பிறவியில் உனக்கு மனைவியர் இருவராவர். ஆண் குழந்தைகள் தோன்ரு. பிறந்தாலும் அவை நஷ்ட மடையும். உன்னுடைய தந்தை வீட்டிலும் கேடுண்டாகும்." இவ்விதம் கூறி விட்டு அவ்வேழைப் பெண் வேறு வீட்டை நாடிச் சென்ருள்.

26. இதுவின்றி மறைமா தின்மே லிவனுமே காதல் [கொண்டு
சதியான வார்த்தை சொல்லச் சங்கையை யவள றிந்து
முதல்குல மாதை யெண்ண மெய்தவே வேண்டா [மென்ருள்
அதிபனும் பலவந் தத்தால் மங்கையைப் போகஞ் [செய்தான்

26. இதுவல்லாமல், ஓர் அந்தணப் பெண்ணின் மீது காதல் கொண்டு, அவளைக் குறித்துக் காதல் மொழிகள் (பிறருக்குக் குற்றமாகப் படும்படி) பல கூறினுன். இவனது (ஜாதகன் பிதா) மயக்கத்தை அந்தணப் பெண் உணர்ந்து, அவனை நோக்கி, அந்தணப் பெண்ணுகிய என்னிடம் இன்பந்துய்க்க மனத்தாலும் நீ நினையாதே என்றனள். அம்மொழியைக் கேளாமல் பலவந்தமாக அப்பெண்ணுடன் சேர்ந்தான்.

## அந்தணப் பெண்ணின் சாபம்

27. கற்புள மறையோன் மாது கழறுவாள் சாபந் தானும்
அற்பமாம் புத்தி யாலே ஆகாத்தியம் செய்த பாவி
பிற்பிறப் பினிலே வம்மிச மிலகாது மறுபி றப்பில்
தப்பித மாண்பா லெல்லாம் சார்ந்திடு மென்று [சொன்னுள்.

27. கற்புடையவளாகிய அந்தணர் குலப் பெண்ணும் மனம் வருந்தி, "அற்ப புத்தியினுலே தகாத செயலைச் செய்த பாவியே! மறுபிறப்பில் உன் வம்சம் விளங்காது. மறுபிறவியில், உனக்குப் பிறக்கின்ற ஆண் குழந்தைகள் எல்லாம் நிலையாமல் போம்," என்று ஜாதகன் பிதாவினை நோக்கி (முற்பிறப்பில்) சாப மிட்டாள்.

28. அதுவொரு தோஷ மாச்சு அந்திய காலந் தன்னில்
உதித்திடு மதலை யின்றி உம்பர்தம் பதிக்குச் சென்று
விதியவன் வரையப் பட்டு விளங்கினுன் செக்கான்
[வமிசம்
நதிசடை யணிந்தோன் தேவி நாயகி மேலுங் கேளே.

28. அந்த அந்தணப் பெண் இட்ட சாபமாகிய ஒரு தோஷம் ஏற்பட்டது இவனுக்கு (ஜாதகனின் தந்தைக்கு). தனது இறுதிக் காலத்தில் தனக்குப் பிறந்த ஆண் குழந்தைகள் இல்லாமல், மேலுலகம் அடைந்து (மரணமடைந்து), மீண்டும் பிரம தேவனுல் லிபி எழுதப்பட்டு (படைக்கப்பட்டு), வாணியர் மரபில் தோன்றினுன். கங்கை நதியினைச் சடையிலணிந்துள்ள சிவபெருமானின் தேவியே! மேலுங் கேட்பாயாக.

## தந்தைக்கு இப்பிறவியில் ஏற்படும் துன்பங்களும் அவற்றிற்குச் சாந்தியும்

29. இருமாது சாபந் தானு மெய்திடு மிச்சென் மத்தில்
வஞ்சுத ராண்பால் தோஷ மவன்தந்தை யில்லம்
[பாழாம்
உரைக்கிரும் சாந்தி தானும் உயர்சக்தி பூசை செய்தும்
வருவிய வெள்ளி தன்னுல் மதலைபோல் செய்து
[மேதான்;

29. அந்தணப் பெண்ணின் சாபமும் ஏழைப் பெண்ணின் சாபமும் இப்பிறப்பில் இவனை வந்தடையும். பிறக்கின்ற ஆண் குழந்தைகள் நஷ்டமாம். இவனது தந்தை வீடும் நாசமடையும். இத்துன்பங்கள் நீங்கச் சாந்தி கூறுகின்ரும். அம்பிகைக்குப் பூஜை செய்து, வெள்ளியினுல் குழந்தை போன்று ஓர் உருவம் அமைத்து;

30. தானமு மீவா னுகில் சந்ததி விருத்தி தீர்க்கம்
ஆனதோர் முனிவர் கூற அம்பிகை கேட்க லுற்ருள்
ஈனமாய்க் கரும சாந்தி யெவர்களால் செய்வார்
[சொல்வீர்
மான்மழு தரித்தோன் தேவி மங்கையே மேலுங் கேளே.

30. தக்க ஒருவருக்குத் தானமாக அளிப்பானுகில், ஆண் சந்ததி பெருகி, தீர்க்க ஆயுளுடன் இருக்கும் என்று முனிவர் விளக்கிக் கூறவே, பார்வதிதேவி பின்வருமாறு கேட்கலானுள். இந்த ஜாதகனுடைய பெற்ரோர்க்குச் சந்ததி விருத்தி ஏற்படுவதற்காகச் செய்ய வேண்டிய கர்ம சாந்திகள் எவரால் செய்யப்பட வேண்டும்? என்று கூறுவீர். மானையும் மழுவாயுதத்தினையும் தரித்த சிவபெருமான் தேவியே! கூறுவோம். மேலுங் கேட்பாயாக.

## சாந்தி செய்தற்கு உரியார்

31. அதர்வணம் கற்ருே ராலே அம்பிகை பூசை செய்து
சதியிலா மனைவிக் கவ்வாறு செய்திடில் தோஷம் நீங்கி
மதலைகள் விருத்தி தீர்க்க மவன்நினைத் தவைகள் கூடும்
விதம்போலே செய்யா ராகில் விளங்காது வம்சம் தானே.

31. அதர்வண வேத முணர்ந்தவரைக் கொண்டு அம்பிகைக்குப் பூஜை முதலியன இயற்றி, இந்த ஜாதகன் தாய்க்கு முன்பு கூறியது போன்று சாந்தி பரிகாரமும் செய்வித்தால், அவன் (தகப்பஞர்) நினைத்த எல்லாம் கைகூடும். சொன்னபடி சாந்தி செய்யாவிட்டால் அவன் வம்சம் விளங்காது. (தோன்றும் புதல்வர் நிலையார்.)

## ஜாதகனது சகோதரபாவம்

32. ஜாதகன் துணைவர் தம்மைச் சாற்றுவோ முன்னே
[னில்லான்
காதலி மார்க எிரண்டு கழறுவோந் தீர்க்க மாகப்
போதவே யிளையோர் மூன்று பொருந்திடு மென்று
[சொன்னோம்
மேதினில் பின்பா கத்தில் விளம்புவோம் விபர மாக.

32. ஜாதகன் உடன் பிறந்தவர்களைப் பற்றிக் கூறுவோம். தனக்கு மூத்த சகோதரன் இல்லாதவன். முன் பிறந்த சகோதரிகள் இருவர் என்று கூறுவோம். அவர்கள் தீர்க்கமுடன் விளங்குவர் என்று கூறுவோம். இவனுக்குப் பின் மூவர் தோன்றுவர் என்று கூறினோம். இன்னும் மற்றச் செய்திகளை இரண்டாம் பாகத்தில் விவரமாகக் கூறுவோம்.

33. பத்தொன்பான் திங்கள் தன்னில் பகர்ந்தகண் டங்கள்
[நீங்கிச்
சித்தமா யறுப தாண்டுஞ் செப்புவோ மிவனுக் கேதான்
..............................................
அத்தியைப் பெற்ற மாதே அறைந்தன மொழிகுன் ருவே.

33. பத்தொன்பதாவது வயதில் (ஜாதகன் பிறந்து பத்தொன்பதாவது மாதத்தில்) ஏற்படும் என்று முன்பு கூறிய கண்டங்கள் எல்லாம் சாந்தி பரிகாரங்கள் முறையாகச் செய்யப் பெற்று நீங்கி விட்டால், இந்த ஜாதகன் அறுபது ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்வான் என்று நிச்சயமாய்ச் சொல்லுவோம். யானை முகக் கடவுளைப் பெற்றெடுத்த தாயே! யாம் கூறிய சொற்கள் தவருதன.

---

# ஜாதகம் 49

## ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் [1]மான தாகச் சனிகேது [2]மேரு வாகப்
[3]புந்தி[4]பொன் னி[5]ரவி ராகு புது[6]மக ளீரில் தங்கப்
பந்தமாய்ப் [7]புகருஞ் சிம்மம் [8]பார்மகன் [9]மாதை புக்க
இந்தவாறு [10]கோளு நின்று இலக்கினங் கன்னி யாக;

1. சந்திரன் மகரத்திலும், சனி கேது தனுசிலும், புதன், குரு, சூரியன் ராகு மிதுனத்திலும், சுக்கிரன் சிம்மத்திலும், செவ்வாய் கன்னியிலும் ஆக இவ்வாறு நவக்கிரகங்களும் நின்று, கன்னியா லக்கினத்தில் பிறந்த ஜாதகனுக்கு,

| | | | |
|---|---|---|---|
| | | | புதன் குரு சூரியன் ராகு |
| | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | சுக்கிரன் |
| சனி கேது | | | லக்கினம் அங்கா ரகன் |

## ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளம்

2. பலன்தனைச் சொல்லு மென்ன பார்வதி கேட்க
[லுற்ருள்
நலமுள வதிஷ்டர் சொல்வார் நாயகன் ஜனன மாகும்

---

1. மகரம்.
2. தனுசு.
3. புதன்.
4. குரு.
5. சூரியன்.
6. மிதுனம்.
7. சுக்கிரன்.
8. செவ்வாய்.
9. கன்னி.
10. கிரகம்.

குலவிய வில்லம் சொல்வேன் குறித்தனம் வடதென் [வீதி
தலைவாசல் மேற்கே யாகுஞ் சாமுண்டி துர்க்கை யீசன்;

2. பலன்களைக் கூறும் என்று பார்வதிதேவி கேட்கவும், நல்லியல் புடைய வசிஷ்ட முனிவர் சொல்லுவார். ஜாதகன் தோன்றும் வீட்டின் அடையாளங்களைக் கூறுவேன். அந்த வீடு வடக்குத் தெற்கான தெருவில் மேற்குத் திசையை நோக்கிய வாயிலை யுடையதாகும். சாமுண்டிதேவி, துர்க்கையம்மன், சிவபெருமான்;

## இதுவுமது

3. உத்தரம் வாச மாகும் உரைக்கிறோம் மேற்கில் தந்தி
சத்திபாஞ் சாலி நிற்கும் சலக்கரை அனுமான் கோட்டம்
சித்தசன் தந்தை கீழ்ப்பால் சிவன்கோட்டம் பாழ தாகும்
இத்தகை யடையா ளத்துள் இலகிய சமவூர் தன்னில்;

3. ஆகியோர் வீட்டுக்கு வடக்கில் கோயில் கொண்டிருப்பர். மேற்குத் திசையில் விநாயகர் ஆலயமும், சக்தி பாஞ்சாலி (துரோபதையம்மன்) இவர்களின் கோயில்களும் உள்ளன. நீர்நிலையின் கரையில் அநுமன் கோயில் உண்டு. மன்மதன் தந்தையாகிய திருமால் கிழக்குத் திக்கில் கோயில் கொண்டுள்ளார். அதற்கருகில் சிவன் கோயிலொன்று பாழடைந்து உளது. இவ்வாறான அடையாளங்களுடன் விளங்கும் ஓர் ஊரில்;

4. உதிப்பனு மிரண்டாம் ஜன்மம் உயர்குல மறையோ னாக
மதிநுதல் மாதுர் தந்தை யவன்துணை களத்திர புத்திரர்
சதியிலா முன்பின் ஜன்மம் சாந்தியும் கூறு கின்றோம்
நதிசடை யணிந்தோன் தேவி நங்கையே கேட்டி டாயே.

4. ஜாதகன் தன் பெற்றோர்க்கு இரண்டாம் பிறப்பாகத் தோன்றுவான். இவன் அந்தணர் மரபில் பிறப்பான். பிறைச் சந்திரன் போன்ற நெற்றியையுடைய இவன் தாய், தகப்பனார், சகோதரர், மனைவி, புதல்வர் ஆகியோர் பற்றிய செய்திகளும், ஜாதகன் முன் பின் பிறவி பற்றிய வரலாறுகள், அவ்வப் பிறப்பில் ஏற்பட்ட தோஷங்கட்குச் சாந்திகள் ஆகிய இவற்றைக் கூறுகின்றோம். கங்கை நதியைச் சடை முடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியாகிய மங்கையே கேட்பாயாக.

## தந்தையின் சகோதரனது இயல்புகள்
### வேறு

5. தந்தைதுணை யீரஞ்சில் ஆண்பா லிரண்டு
சதிருடனே பெண்மூன்று விருத்தி யாகும்
பிந்திதுணை ஆணிரண்டு பேசு வோம்யாம்
பலன்சொல்வேன் நேரிழையே மானிறத்தான்

தந்தனமுஞ் செலவுசெய்வன் ஒருவர்க் கஞ்சான்
தைரியத்தன் பூமியதை விருத்தி செய்வன்
சிந்தையினில் கபடில்லான் பெண்கள் மோகன்
தேகமதில் வடிவுடையன் தேவி யொன்றே.

5. ஜாதகன் தந்தையுடன் பிறந்தவர்கள் பத்துப் பேர். அவர்களில் ஆண்கள் இருவரும், பெண்கள் மூவரும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். சோதரர் இருவர் தந்தைக்குப் பின் தோன்றியவர் என்று யாம் கூறுவோம். இனிப் பலனைக் கூறுவோம். தந்தைக்குப் பின் தோன்றிய சகோதரருள் ஒருவன் கரிய நிறமுடையவன். தன்னிடமுள்ள செல்வத்தைச் செலவு செய்வான். எவருக்கும் பயப்படமாட்டான். தைரியமுள்ளவன். நிலபுலன் களை விருத்தி செய்வான். மனத்தில் சூது இல்லாதவன். பெண்கள் மீது மிக்க மோகமுடையவன். (ஸ்த்ரீலோலன்). உடலில் ஒளியுள்ளவன். (மச்ச முடையவன்.) இவனுக்கு மனைவி ஒருத்தியே.

## இதுவுமது

6. மதலைகளு மாறுதிக்கும் யாவும் தீது
மனைவியுமே சேதமென்றேம் சிறையாய் வாழ்வன்
பதியதுவும் விலகிடுவன் வேசை மோகன்
பாரினிலே நிந்தையுளன் பழிப்பாய் வாழ்வன்
அதன்பிறகு வந்தவன்தன் சேதி கேளாய்
அரசரிஷ்ட னூகவான் அதிகா ரத்தன்
நிதியதனைத் தேடிடுவன் பூமி சேர்ப்பன்
நேமியினில் கிராமச்செட்டு நிகழ்த்து வானும்.

6. இவனுக்குப் குழந்தைகள் அறுவர் தோன்றுவார். பிறந்தவர் எல்லாம் நஷ்டமாவர். இவன் மனைவியும் இடையில் மரிப்பாள் என்று சொன்னேம். சுதந்திரமின்றி வசிப்பான். தன் ஊரை விட்டுச் செல்லுவான். விலைமாதர்களிடம் மோக முள்ளவன். உலகில் இவனைப் பற்றிப் பலரும் நிந்தைச் சொற்கள் கூறும் நிலையில் இருப்பான். பிறர் பழிக்கும்படி வாழ்வான். இவனுக்குப் பின் தோன்றிய சகோதரனின் செய்திகளைக் கேட்பாயாக. அரசியலார்க்கு விருப்பமானவன். எதனையும் ஊகித்து உணரும் திறமைசாலி. அதிகாரம் செய்யும் தகுதி பெற்றவன். செல்வத்தைத் தேடும் முயற்சியில் ஈடுபடுவான். நில புலன்கள் சேர்ப்பான். கிராமத்திலேயே இருந்து பலவிதத் தொழில்களைச் செய்வான்.

## இதுவுமது

7. மானிலத்தோர் வசியமுளன் கோபம் சாந்தம்
வாயுநலி நீரிழிவு வருமே யென்றேம்
மான்விழிபோல் மனையாளு மொன்றே யாகும்
மைந்தர்களு மேழுதிக்கு மாண்பா லொன்று

தேன்மொழிபோல் பெண்மூன்று தீர்க்க மாகும்
சிறப்பான குடும்பியாவன் ஈன புத்தி
அன்னியப்பெண் மோகவானும் ஆனு லுந்தான்
எதிரிகளை நசித்திடுவன் ஈகை கொஞ்சம்.

7. பூமியிலுள்ள மக்களை வசியப்படுத்துவான், கோபமுடையவன். உடனே சாந்த மடையும் இயல்பினன். வாய்வு நோயினால் தளர்ச்சியடைவான். நீரிழிவு வியாதி இவனுக்கு ஏற்படும் என்று கூறினோம். மான் போன்ற கண்களுடைய மனைவியும் ஒருத்தியே யாவள். மக்கள் எழுவர் தோன்றுவர். அவர்களில் ஆண் மகன் ஒருவனும் தேன் போன்று இனிதான மொழியைப் பேசும் பெண்கள் மூவரும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். பெருமை பெற்ற குடும்பமுடையனா யிருப்பான். சிறிது அற்பபுத்தியுடையவன். அயல் மாதரிடம் மோகமுள்ளவன். ஆயினும் எதிர்த்தவனை அழித்து விடுவான். சிறிது அறமும் செய்வான்.

## ஜாதகனின் தந்தையினது இயல்புகள்

8. இன்னவன்தன் தந்தைகுண மியம்பக் கேளு
இருவிதவார்த் தையுடையன் இருநி றத்தன்
அன்னவனு முணச்சலுள்ளான் நீட்சி யாவன்
அடாநிந்தை பேசிடுவான் அறைவான் பொய்யும்
தன்பூமி களைவிருத்தி செய்வா னாகும்
தரணியிலே யீகைகொஞ்சம் கிருஷி செய்வன்
பன்னிபல விதமாகப் பேச வல்லன்
பண்புடையோர் தமைச்சேரான் பாக்கிய மில்லான்.

8. ஜாதகன் தந்தையின் குணங்கள் பற்றிக் கூறக் கேட்பாயாக. முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவான். கரிய நிற முடையவன். சரீரத்தில் அரிப்புள்ளவன். உயரமானவன். தகாத நிந்தைச் சொற்களைப் பேசுவான். பொய்களைப் பேசுவான். தன்னுடைய விளை நிலங்களை விருத்தி செய்வான். சிறிது கொடுக்கும் இயல்புடையவன், விவசாயம் செய்வான். பலவிதமாகக்கட்டிப் பேசுவதில் சாமர்த்தியமுள்ளவன் நல்லியல்பு வாய்ந்த சான்றோர் தொடர்பு கொள்ளாதவன். நல்வினை இல்லாதவன்.

## இதுவுமது

9. இல்லாத வார்த்தைசொல்வன் தந்திர வாதி
இன்பமிலா முன்கோபி பின்பு சாந்தம்
மல்லுக்கு முன்நிற்ப னிவனே யம்மா
வாயுரோ கங்களுமே வருமே பின்னால்

நல்லவசிஷ்ட ரிவ்வாறு கூறும் போது
நாயகியும் புகலுகின்ருள் முனியே நீர்தாம்
சொல்லியதோர் வாயுநலி வெந்தக் காலம்
செப்பிடுவீ ரதையெனக்குத் தெளிவாய்த் தானே.

9, நடக்காத ஒன்றை நடந்ததாகப் பேசுவான். தந்திரசாலி. சுகமில்லாதவன். முன் கோப முள்ளான். உடனே சாந்த மடைவான். வலுச் சண்டைக்கு முதலில் நிற்பான் இவன். பிற்காலத்தில் இவனுக்கு வாய்வு நோய்கள் வரும் என்று இங்ஙனம் வசிஷ்ட முனிவர் சொல்லி வரும் போது, பார்வதிதேவி கூறுகின்ருள். முனிவரே! தாங்கள், ஜாதகன் தந்தைக்கு வாயு ரோகம் வரும் என்று கூறியது எப்பொழுது ஏற்படும்? என்று தெளி வாய்ச் சொல்லுவீர்.

## தந்தைக்கு வாதநோய் வருங்காலமும் காரணமும் வேறு

10. இன்னவன் ஜனித்த நாள்முத லாக
ஈரொன்ப தாண்டுமேல் ரோகம்
வந்திடு மென்ருேம் கால்களில் ஊனம்
வளமுள நேத்திர குற்றம்
உன்னித பலநோ யணுகிடு மிவர்க்கு
உறைந்தகா ரணங்களுஞ் சொல்வீர்
அன்னவன் முன்ஜன் மங்களி லேதான்
அனேகதுன் பங்களைச் செய்தான்.

10. இந்த ஜாதகனின் தந்தை பிறந்து பதினெட்டு வயதுக்கு மேல் வாயுரோகம் வரும் என்று கூறினேம். அதனல் கால்களுக்கு ஊனம் உண்டாகும். கண்களுக்குக் கெடுதி ஏற்படும். இன்னும் பல நோய் களும் இவனை நெருங்கும். "இந்த நோய்கள் ஏற்படக் காரணங்கள் கூறும்." என்று பார்வதிதேவி வினவ முனிவர் சொல்லுவார். இவன் முற்பிறவிகளில் பல துன்பச் செயல்களைச் செய்தான்.

## தந்தையின் முற்பிறவி வரலாறு

11. செய்திடு வினையால் செப்பினேந் தாயே
தீவினை விபரமாய்ச் சொல்வீர்
தையலே கேளாய் சேய்நதி யுத்தரம்
சார்ந்திடும் பெரியமா நகரம்
வையமே லின்னேன் செங்குந்த மரபில்
வந்தனன் நெசவுகள் செய்து
கைப்பொரு ளுண்டாய்ப் பலபலச் செட்டு
காளையுஞ் செய்திடுங் காலை,

11. அங்ஙனம் செய்ததால் இந்த ரோகங்கள் இப்பிறப்பில் இவனைச் சார்ந்தன என்று கூறினோம். என்ன தீவினைகள் செய்தான்? என்று கூறுவீர். அம்பிகையே! கேள். இந்த ஜாதகன் தந்தை முன்பு சேய் நதியென்ற ஆற்றின் வடக்கில் உள்ளதாகிய ஒரு நகரத்தில் செங்குந்த வம்சத்தில் தோன்றினான். நெசவுத் தொழில் செய்து, கையில் பொருள் சேர்த்து, பல விதத் தொழில்களைச் செய்து வந்த காலத்தில்;

## பசுவினை அடித்த தோஷம்

### வேறு

12. வந்ததோர் வினையைச் சொல்வே னவன்கொல்லை தன்னி
[லேதான்
எந்தையே அயலான் கோவும் ஏகிற்று வதனை
[யின்னேன்
முந்திய கல்லெ றிந்தான் பலமாக வதன்கால் பட்டுச்
சந்தத மூன மாச்சு சங்கரி கேட்டிடாயே.

12. இவனை யடைந்த தொரு தீவினையைச் சொல்லுவேன். வீட்டுக் கொல்லையில் வேறொருவரது பசு வந்து மேய்ந்தது. அதன்மேல் இவன் கல்லை விட்டெறிந்தான். அஃது, அப்பசுவின் கால்களில் பலமாகப்பட்டு அதன் கால்கள் ஊனமாயின. பார்வதிதேவியே! கேட்பாயாக.

13. அதுமுத லாகத் தானும் அதுகாலில் ஊன மாகி
விதியது முடியு மட்டும் வினையது தீராத தாலே
வதிபர்க்கு வந்நத் தோஷம் வந்தது யிதுவல் லாமல்
சதிசெய்தா னின்ன மொன்று சாற்றுவேன் கேளுந்
[தாயே.

13. அதுமுதற் கொண்டு அந்தப் பசு கால் ஊனமுடன் தன் முடிவுக் காலம் வரை அவ்வூனம் நீங்காமலே இருந்து உயிர் விட்டது. அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. இதுவல்லாமல் இன்னும் ஒரு குற்றம் செய்தான். அதனையும் சொல்லுவேன் தாயே! கேளுங்கள்.

## பட்சியை வதைத்த குற்றம்

14. இறப்பினில் கூடு கட்டி யிருக்கிற பட்சி தன்னைக்
குறியாக வதைப்பி டித்துக் கொடூரமாய்க் கைகால்
[முறித்து
வருஞ்சுதர் தனக்கு மீந்து அவர்விளை யாட்டுச்
[செய்தான்
உறைந்தது வந்தத் தோஷ முத்தமி கேட்டி டாயே.

14. தன் வீட்டுக் கூரையில் கூடுகட்டிக் கொண்டிருந்த பறவை யைப் பிடித்து, மிக்க கொடூரமாய் அதன் இறகுகளையும் கால்களையும் பிய்த்து, தன் புதல்வர்களிடம் அதனைக் கொடுத்து விளையாடச் செய்தான். அந்தப் பாவம் இவனைச் சார்ந்தது. உத்தமியே! கேள்.

## நல்வினை

15. இன்னமுஞ் சிலவே துன்பம் இயம்பினே மிவனுக் [கேதான்
அன்னவ னந்தியத்தி லயன்பூசை புரியு மீசர்
மன்னகருக் கர்ச்சித் தேத்தி மணிவிளக் கவனு மிட்டான்
உன்னத வானை கோவில் உத்தமன் தீபம் வைத்தான்.

15, இன்னும் சில தீச்செயல்களை இவன் செய்தான் என்று கூறி னோம். ஆயினும், தனது இறுதி நாட்களில், பிரம தேவன் பூசிக்கின்ற சிவபெருமான் ஆலயத்தில் அழகிய விளக்கு வைத்து, இறைவனுக்கு அர்ச்சனை முதலியன செய்து வழி பட்டான். உயர்ந்த விநாயகர் கோயிலில் தீபம் ஏற்றினான்.

16. அந்திய காலந் தன்னில் அவனுமே வாயு நோயால்
அந்தகன் பக்கல் சென்று அருநர கதனில் புக்கு
பிந்திய மலரோ னாலே பூமியில் வரையப் பட்டு
வந்தனன் பிரம்ம சேயாய் மங்கையுங் கேட்க லுற்றாள்.

16. தனது இறுதிக் காலத்தில் வாயு ரோகத்தால் பீடிக்கப்பட்டு மரணம் அடைந்து கொடிய நரகத்தில் சேர்ந்து மீண்டும் பிரம்ம தேவனால் படைக்கப்பட்டு இந்த உலகில் அந்தண மரபில் பிறந்தான். முனிவர் இவ் வாறு சொல்ல பார்வதிதேவி கேட்கின்றாள்.

## உமாதேவியின் ஐயம்

17. ஏதுகா ரணத்தி னாலே இவன்ஜன்மஞ் செங்குந்த னாகித்
தீதுக ளனந்தஞ் செய்து சிலநாட்கள் நரகம் பொன்றிப்
பூதலந் தன்னி லேதான் புண்ணிய குலத்தி லேதான்
மாதவர் வந்த தென்ன வறைகுவீர் விபர மாக.

17. இவன் முற்பிறப்பில் செங்குநதர் மரபில் பிறந்து பல தீச்செயல் களைச் செய்து, மரணமடைந்து, சில காலம் நரகில் உறைந்தான். "மீண்டும் இவ்வுலகில் உயர் குலத்தில் பிறந்ததற்குக் காரணங்கள் யாவை? முனிவரே! கூறுங்கள் விவரமாக," ஆலயத்தில் தீபம் வைத்ததன் பலன்— முனிவர் விடை.

18. வேதத்தோன் புரியும் ஈசர் வித்தகர் ஆல யத்தில்
சோதிக ளனந்தம் வைத்தும் தும்பியின் கோட்டத் துக்கு
நீதியாய் மணிவி ளக்கு நேர்ந்ததால் பிரம்ம சேயாய்ப்
பூதல மதனி லுதித்தான் புண்ணிய சாலி கேளாய்.

18. பிரமதேவன் பூசிக்கும் சிவபெருமான் கோயிலில் விளக்குகள் பல வைத்தும், விநாயகர் கோயிலுக்கு மணி விளக்கு ஏற்றியும் நல்ல செயல்கள் செய்திருப்பதால் இப்பிறப்பில் அந்தணர் மரபில் தோன்றினன். புண்ணிய சாலியே ! கேட்பாயாக.

19. தீபத்தின் பெருமை யாலே ஜன்மமும் மேன்மை யாச்சு
பாபங்கள் விலகா தென்றேம் பட்சியுங் கோவு தோஷம்
ஆபமாய்த் தோஷந் தன்னு லணுகுங்கா ரணங்க
[ளென்ன
துன்பங்க ளதிக முண்டு நேத்திரம் வாயுப் பீடை.

19. *கோயிலில் விளக்கு வைத்த சிறந்த செயலால் இப்பிறவியில்* இவனுக்கு உயர்குலப் பிறப்பு ஏற்பட்டது. முன்பு பறவையின் கூட்டைக் கலைத்தாலும், பசுவின் காலை ஊனமடையச் செய்தாலும் இவனை யடைந்த தோஷங்களால் உண்டாகும் கெடுதிகள் யாவை ? என்று பார்வதி கேட்க, முனிவர் கூறுவார். துன்பங்கள் பல ஏற்படும். கண்களுக்குத் தோஷமும் வாயுப் பீடையும்;

20. அணுகிடு மிவனுக் கேதான் அவ்வினை தீர வேண்டி
கனமுடன் சாந்தி யொன்று கூறுவீர் முனியே நீர்தாம்
தணிவாக வெதுசெய் தாலுந் தானது விலகா
[தென்றேம்
கனமுள கோவின் தோஷம் கழறவே மாட்டோ மம்மா.

20. இவனை அணுகும். அந்தத் தோஷங்கள் நீங்குவதற்குச் சாந்தி ஒன்று கூறுவீராக. எந்த சாந்தி செய்தாலும் தோஷங்கள் விலகா என்று கூறுவோம். மிகக் கொடியதாகிய பசுவின் தோஷத்திற்குப் பரிகாரமே நாங்கள் கூற மாட்டோம். தாயே.

## ஜாதகனின் இயல்புகள்

21. இப்படிக் குணத்தா னுக்கு இவனுமே வுதிப்பா னாகும்
செப்புவோ மிவன்கு ணத்தைத் தேகமு மானி றத்தன்
ஒப்புட னுணச்சல் தேகி உறுதியா மனத்த னாகும்
மைப்படி மனைவி மோகன் வாக்குச்சொல் லிரண்டு
[முள்ளான்.

21. இவ்வித குணங்களுள்ள தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனாகத் தோன்றுவான். இவன் இயல்புகளை இனிக் கூறுவோம். மாநிற முடையவன். அரிப்புள்ள தேகமுடையவன். திட மனமுடையவன். மனைவி யிடத்தில் மிக்க விருப்பமுள்ளவன். இருவிதமாகப் பேசும் இயல் புடையவன்.

## இதுவுமது

22. வித்தையுங் கொஞ்ச முண்டு விவேகியாம் செட்டுச்
[செய்வன்
சுற்றத்தார் மெச்ச வாழ்வன் சுகதுக்கம் கலந்து
[வாழ்வன்
நித்தியஞ் சீல ஞவன் நேர்ந்திடும் பணிதி பாத்திரம்
பத்தினி வர்க்கம்நாசம் பாருகள் சேர்ப்பா னென்ருேம்.

22. சிறிதே கல்வியறிவுள்ளவன். விவேகமுள்ளவன். வியாபாரஞ் செய்வான். உறவினர் பாராட்ட வாழ்வான். சுகதுக்கங்கள் மாறி மாறி வரும் நிலையில் வாழ்வான். நல்ல ஒழுக்கமுள்ளவன். ஆபரணங்கள், பாத்திரங்கள் முதலியன இவனுக்கு எதிர்பாராது கிடைக்கும். தன் மனைவி வழியினர் கேட்டையடைவர். நிலபுலங்களைச் சேர்ப்பான் என்று கூறினோம்.

## இதுவுமது

23 வண்டிவா கனமு முள்ளான் மருமத்தை வெளிக்காட்
[டாதான்
துண்டமுங் கொஞ்சு முள்ளான் தொடுவழக் கதுவுஞ்
[செய்வன்
பண்டிபண் டாரம் பின்ஞல் படைப்பனும் வறுமை
[யில்லான்
அண்டினோர்க் குதவி செய்வன் அவன்கர முருத்திர
[ரேகை.

23. வண்டி முதலான வாகன வசதிகளுள்ளவன். மனத்தில் நினைப்பவற்றை எளிதாக வெளிப்படுத்தாதவன், துண்டமாக (கண்டிப்பாகப்) பேசும் இயல்பு சிறிதேயுள்ளவன். பிறரிடம் வலுச்சண்டைக்குச் சென்று, தானாக அவர்கள் மீது வழக்கைத் தொடுப்பவன். வண்டிகள், தானியங்கள், கொட்டிவைக்கும் களஞ்சியம் முதலியன பிற்காலத்தில் சேர்ப்பான். ஏழைமை இல்லாதவன். தன்னை அடைந்தவர்களுக்கு உதவி செய்வான். அவன் கையில் உருத்திரரேகை யுண்டு.

## ஜாதகன் சகோதரபாவம்

24. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோ மைந்த
[தாகும்
அவனியி லாண்பால் காணுன் அறைகிருேம் பெண்பால்
[மூன்று
நவனியி லவர்கள் சேதி நாட்டுவோம் விபர மிரண்டில்
தவசியை யாத ரிக்குங் சங்கரி மேலுங் கேளே.

24. இந்த ஜாதகனுக்கு உடன்பிறந்தவர்கள்பற்றிச் சொல்லுவோம். ஐவர் இவனுடன் தோன்றியவராவர். ஆண்கள் எவரும் இலர். பெண்கள் மூவர் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். அவர்களைப்பற்றிய செய்திகளை விவரமாக இரண்டாம்பாகத்தில் கூறுவோம். முனிவர்களை ஆதரிக்கும் பார்வதி தேவியே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனின் மனைவி விவரம்

25. இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மீரொன் [பாண்டில்
கன்னிகை மேற்குத் திக்கில் காதலி மாதுர் வர்க்கம்
அன்னவள் வருவா ளாகும் அவளுமே வுணச்ச [லுள்ளாள்
பன்னியே பேச வல்லாள் பகையது மெண்ணு ளாகும்.

25. இவனுக்குத் திருமணம் நடைபெறுங் காலத்தைச் சொல்லுவோம். பதினெட்டு வயதில் திருமணம் நடைபெறும். பெண் இவன் வீட்டுக்கு மேற்குத் திசையிலிருந்து வருவாள். அவள், ஜாதகனுடைய தாயின் வமிசத்தைச் சேர்ந்தவளாக இருப்பாள். அவள் மெலிந்த சரீரமுள்ளவள். பன்னிப் பன்னிப் பேசுதலில் வல்லவள். மனத்தால் பிறருக்கு விரோதம் நினையாதவள்.

*குறிப்பு :—ஜாதகனுக்கு ராகு மகாதசையில் சுக்கிர புக்தியில் திருமணம் நடைபெறும்.

## மனைவியின் இயல்புகள்

26. துணைவர்க ளில்லா ளாகுஞ் சுந்தரி யோக சாலி
பிணையது வெண்ணு ளாகும் பந்துவை யாத ரிப்பள்
கனமுள குடும்பி யாவள் கழறுவோம் புத்திர பாவம்
மனதினில் பூசை செய்யு மங்கையே மேலுங் கேளே.

26. உடன்பிறந்தோர் இல்லாதவள். அழகுள்ளவள். யோகமுடையாள். பிறகுக்குத் தீங்கு நினையாதவள். உறவினரை ஆதரிப்பாள். பெருமையுள்ள குடும்பமுடையவள். இனி, ஜாதகனுக்குப் புத்திர பாவம் பற்றிக்கூறுவோம். பக்தர்கள் மனத்தினில் வைத்துப் பூசிக்கும் அம்பிகையே! மேலுங் கூறுவதைக் கேட்பாயாக.

## ஜாதகனின் புத்திரபாவம்

27. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மிருநான் காகும்
சித்தமா யாண்பா லொன்று தீர்க்கமாம் பெண்பால் மூன்று
சுத்தமாய் நான்கும் விருத்தி சோர்ந்திடும் மற்ற [வெல்லாம்
பத்திய முதலில் பீடை பகருவோ மிவனுக் கேதான்.

27. புத்திர விருத்தியைப்பற்றிக் கூறுவோம். எட்டுப்பேர் தோன்றுவர் அவர்களில் ஆண்மகன் ஒருவனும், பெண்கள் மூவரும் ஆகிய நால்வரும் வளர்ந்து தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். மற்றக் குழந்தைகள் மரண மடையும். இவனுக்கு முதலில் பிறக்கும் குழந்தைகட்குப் பீடை ஏற்படும் என்று சொல்லுவோம்.

## முதல் குழந்தைகள் மரிப்பதற்குரிய கிரகநிலை

28. என்னகா ரணத்தி ஞலே யிவன்சுதர் முதலில் பீடை
பின்னங்கள் வந்த சேதி பேசினீர் முனியே நீர்தாம்
துன்னிய அஞ்சோன் காரி சிகியுடன் கூடி நான்கில்
பன்னுவஷ்ட மத்தோன் செவ்வாய் பார்த்ததால் மதலை
[யீனம்.

28. என்ன காரணத்தினுல் இவனுக்கு முதலில் தோன்றும் மக்கள் நஷ்டமடைவார்கள் என்று கூறினீர்கள் முனிவரே! என்று பார்வதி தேவி கேட்க, முனிவர் கூறுவார். ஐந்தாமிட புத்திரஸ் தானத்துக் குறிய சனி கேதுவுடன் கூடி, நான்காம் இடத்தில் (இலக்கனத்துக்கு நான்காம் இடம்: இங்கு தனுசு.) இருக்க, அவர்களை எட்டாமிடத்துக்கு உரியவனுகிய செவ் வாய் பார்த்ததால் புத்திரதோஷம் ஏற்பட்டது,

29. சங்கைக ளின்னு மொன்று சாற்றுவோந் தசமந் தன்னில்
பங்கமாம் ராகு நிற்கப் பாலகன் முன்ஜன் மத்தில்
இங்கிவன் செய்த ஊழால் இயம்புவோ மந்தத் தோஷம்
துங்கமா மந்த ஊழைச் சொல்லுவோம் விபர மாக.

29. இன்னுமொரு காரணமும் உண்டு என்று சொல்லுவோம். பத்தாமிடத்தில் (அஃதாவது மிதுனம்) ராகு தங்கியிருக்கிறுன். மேலும் முற் பிறப்பில் இந்த ஜாதகன் செய்த தீமையால் புத்திரதோஷம் ஏற்பட்டதென்று சொல்லுவோம். இனி முற்பிறவியில் இவன் செய்த தீவினையை விபர மாகச் சொல்வோம்.

## ஜாதகனின் முற்பிறவி வரலாறு

30. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிறேம் காஞ்சி
[கீழ்பால்
தன்னிலே ஊத்துக் காட்டில் ஜனித்தனன் வடுகர்
[வம்சம்
அன்னவன் செட்டுச் செய்து அவன்மனை மதலை
[யுண்டாய்
இன்னவன் பஜனை செய்து இருந்தன னென்று
[சொன்னேம்.

30. இவன் முற் பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். காஞ்சி புரத்துக்குக் கிழக்கில் ஊத்துக்காடு என்ற ஊரில் தெலுங்குமொழி பேசும் யாதவர் குலத்தில் பிறந்தான். பல தொழில்களைச் செய்து மனைவி மக்களை அடைந்து தெய்வபக்தி மிகுந்து பஜனை முதலிய நற்செயல்களைப் புரிந்து கொண்டு வாழ்ந்திருந்தான் என்று கூறினோம்.

## முற்பிறவித் தீவினை

31. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவர் வாசஞ் செய்வர்
மந்திரம் ஓதும் வேத மறையவர் பூசை செய்வார்
இந்தவாறு மன்னன் தானும் இரவினி லேது
[செய்தான்;

31. அந்த ஊரின் அருகில் ஓடும் ஆற்றோரமாக இருந்ததொரு அரச மரத்தின் கீழ் விநாயகரும் நாகதேவதையும் இருந்தார்கள். இன்னும் பல தேவதைகளும் அங்கு வாசஞ்செய்தார்கள். அவர்களுக்கு வேதங்களை உணர்ந்த அந்தணர்கள் மந்திரம் முதலியன ஓதி பூஜைகள் புரிவார்கள். இவ்வாறான தூய்மையுள்ள இடத்தில் இந்த ஜாதகன் ஒரு நாளிரவில் என்ன செய்தான் என்றால்;

## இதுவுமது

32. விதவையை மரத்தின் கீழே வித்தகன் போகம்
[துய்த்தான்
அதனாலே கருவு தங்கி அநேகபண் டிதங்கள் செய்யச்
சதிசெய்யும் மருந்தி னாலே சத்திக்குக் கருவு நீங்கி
மதிமுக மாது தீர்க்க மறைந்தன ளென்று சொன்னோம்.

32. கணவனை யிழந்த ஒரு பெண்ணுடன் அந்த அரசமரத்தின் கீழே இன்பம் அனுபவித்தான். அதனால் அந்தப் பெண்ணுக்குக் கரு ஏற்பட்டு பல மருத்துவங்கள் செய்தான். கருவை அழிக்கும் மருந்தினால் அப்பெண்ணுக்குக் கரு நீங்கியது. அழகு தீர்க்காயுளும் உள்ள அக்கைம்பெண் உடனே இறந்தாள் என்று கூறினோம்.

33. அந்ததோர் தோஷம் தானு மணுகிற்று இவனுக்
[கேதான்
மைந்தனு மரண மெய்தி மலரயன் வரையப் பட்டு
முந்திய குலத்தி லேதா னுதித்தன னிவனே யம்மா
இந்தவாறு முனிவர் கூற ஈச்வரி சொல்லு கின்றாள்.

33. அந்தத் தோஷம் இந்த ஜாதகனை வந்தடைந்தது. பின்பு, மரண மடைந்து பிரம்மதேவனால் மீண்டும் படைக்கப்பட்டு இப்பிறப்பில் அந்தணர்

குலத்தில் பிறந்தான் இவன் என்று இவ்வாறு முனிவர் சொல்ல, பார்வதி தேவி கூறுகின்ருள்.

## உயர்குலத்தில் தோன்றக் காரணம்

34. வடுகர்தங் குலமு தித்து வந்தவ னிச்சென் மத்தில்
அடைவுடன் பிரம்ம சேயாய் அணுகும்கா ரணங்க
[ளென்ன
திடமுடன் முன்ஜன் மத்தில் செய்தனன் பஜனை தானும்
கடவுள்மேல் பத்தி கொண்டு காவல னிருந்த தாலே;

34. முற்பிறவியில் வடுகர் குலத்தில் பிறந்தவன் இப்பிறவியில் அந்தணர் மரபில் பிறப்பதற்குக் காரணங்கள் என்ன? முற்பிறவியில் திட சித்தத்துடன் கடவுளுக்குப் பஜனை செய்தும் தெய்வபக்தி மிகுந்தும் இருந்த தால்;

35. உதித்தவ னிவனே யம்மா உரைக்கிறே மிச்சென்
[மத்தில்
சுதர்களு முதலில் பீடை தோன்றிடு மிவனுக் கேதான்
அதுதோஷம் தீர வேண்டி அறைகுவீர் சாந்தி தானும்
எதுசாந்தி செய்தா லுந்தான் விலகாது தோஷந்
தானே.

35. இப்பிறவியில் அந்தணனுகப் பிறந்தான் இவன். இந்த ஜன்மத்தில் இவனுக்கு முதலில் பிறக்கும் குழந்தைகளுக்குத் தோஷம் ஏற்படும். அந்தத் தோஷம் தீருவதற்குச் சாந்தி ஒன்று கூறுவீராக. எவ்வித சாந்தி செய்தாலும் புத்திர தோஷம் நீங்காது.

## ஜாதகனுடைய அன்னையின் இயல்புகள்

36. அன்னையு மானி றத்தள் அவளுமே ஒடிச்சல் தேகி
உன்னத அழகில் லாதாள் உறைந்திடும் பித்தச் சூடு
தந்தமும் பெரிதாய்க் காட்டும் தானவ ளீகை கொஞ்சம்
பன்னியே பேச வல்லாள் பாவையும் சமயோ கத்தாள்.

36. இந்த ஜாதகனின் தாயார் மாநிறமுடையவள். ஒல்லியான தேகமுடையவள். சிறப்பாகக் கூறத்தக்க அழகில்லாதவள். அவள் உடம்பில் பித்தச் சூடு உண்டு. பற்கள் பெரியனவாம். ஈகைக் குணம் சிறிதே யுடையவள். பன்னிப் பன்னிப் பேசுதலில் வல்லவள். சமமான யோகமுடையவள். (இன்பதுன்பங்கலந்த வாழ்க்கை யுடையவள்).

## அன்னையின் சகோதர பாவம்

37. அவள்துணை யேழ தாகும் யாவுமே தீதாய்ச் சொல்வோம்
நவனியி லாண்பா லொன்று நாட்டுவோம் வம்ச னுஸ்தி

இவளின்முன் ஜன்மந் தன்னை யியம்புவோ மினிமே
[லாகத்
தவசியை யாத ரிக்கும் சங்கரி மேலும் கேளே.

37. தாயுடன் பிறந்தோர் எழுவர் ஆவர். எல்லோரும் நஷ்டமாவர் என்று கூறுவோம். ஆனால், ஒரு சகோதரன் இருப்பான் என்று கூறலாம். இவள் வம்சம் (பெற்றோர் வழி) நாசமடையும். இவளுடைய முற்பிறவியைப்பற்றி இனிமேல் சொல்லுவோம். தவஞ்செய்யும் முனிவர்களை ஆதரித்துக் காக்கும் உமாதேவியே! மேலுங் கூறுகின்றோம். கேட்பாயாக.

## அன்னையின் முற்பிறவி

38. பிருதிவி தென்மே லாகப் பேசுவோ மருகில் சிற்றூர்
அருகர்தம் வம்சம் தோன்றி அவள்வரன் மதலை
[யுண்டாய்
நிதியது அதிக மின்றி நிமலியும் வாழு நாளில்
விதிக்கிறோம் வந்த ஊழை வித்தகி கேட்டி டாயே.

38. காஞ்சீபுரத்துக்குத் தென்மேற்காக உள்ளதொரு சிற்றூரில் சமணமரபில் பிறந்து, கணவன் மக்கள் ஆகியோரை யடைந்து, செல்வம் அதிகமின்றி, இவள் வாழ்ந்து வருகின்ற நாட்களில் ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம். பார்வதியே! கேட்பாயாக.

## முற்பிறவித் தோஷம்

39. விரதகா லங்கள் தன்னை வித்தகி யனுஷ்டிக் காமல்
மருமமாய் நின்றா ளென்றோ மடைந்தது அந்தத்
[தோஷம்
வருவோரை யாத ரித்து அறமதி லிச்சை கொஞ்சம்
உறைந்துபின் னந்தி யத்தில் உத்தமி பத்தி கொண்டு;

39. விரதங்கள் பலவற்றை ஒழுக்கத்துடன் அநுஷ்டிக்காமல் இவள் இருந்தாள் என்று கூறினோம். அதனால் ஏற்பட்ட தோஷம் இவளை அடைந்தது. தன் வீட்டுக்கு வருபவர்களை ஆதரித்து வந்தாள். தருமஞ் செய்வதில் விருப்பம் சிறிதே இவளுக்கு உண்டு. இறுதிக் காலத்தில், தெய்வ பக்தி கொண்டு;

40. தன்னுடைப் பூமி தன்னைத் தன்குல தெய்வத் துக்கு
அன்னவள் தான மாக அன்புட னீந்தா ளென்றோம்
இன்னவள் காலன் பக்கல் ஏகிப்பின் வேத னாலே
உன்னித வரையப் பட்டு உதித்தவ ளிவளே யென்றோம்.

40. தனக்குரியதான விளைநிலத்தைத் தன்னுடைய குலதெய்வத்துக்குத் தானமாக அன்புடன் அளித்தாள் என்று கூறினோம். (ஜாதகன் தாய்) பின்பு மரண மடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் இம்மரபில் பிறந்தவள் இவள் (ஜாதகன் தாய்) என்று கூறினோம்.

## தாயின் மறுபிறவி

41. மறுஜன்மங் காஞ்சி தன்னில் மாதுவு மிக்கு லத்தில்
உறைகுவா ளென்று சொன்னோம் உதித்தவன் யோகம்
[சொல்வேன்
நிறையவே குடும்பி யாவன் நிகர்தந்தை யாஸ்தி தன்னை
பெருகவே செய்வா னென்றோம் பூமியில் வறுமை
[யில்லான்.

41. மறு பிறப்பில் காஞ்சீபுரத்தில் ஜாதகன் தாய் இப்பிறவியில் பிறந்த மரபிலேயே தோன்றுவாள் என்று கூறினோம். இனி, ஜாதகனின் யோகங்களைப் பற்றிச் சொல்லுவேன். பெருத்த குடும்பியாக இருப்பான். தன் தந்தையால் வைக்கப்பட்ட சொத்துக்களைப் பெருக்குவான் என்று சொன்னோம். தரித்திரமில்லாதவனாக உலகில் வாழ்வான்.

42. இருபது நாலு ஆண்டு யோகம் இளம்பிறை
[போலே
உறைந்திடு மென்று சொன்னோம் உயர்ந்ததோர்
[செட்டுச் செய்வன்
பெருமுனி யிவ்வா றறையப் புண்ணிய வதியுஞ்
[சொல்வாள்
இவர்கள்தன் காலந் தன்னை யியம்புவீர் முனியே
[நீர்தாம்.

42. இருபத்து நான்கு வருஷங்கள் வளர்பிறைச் சந்திரன் போல இவனுக்கு யோகம் பெருகும் என்று சொன்னோம். உயர்ந்ததாகிய வியாபாரம் செய்வான். இங்ஙனம் முனிவர் சொல்ல, பார்வதிதேவி கூறுவாள், பெற்றோர்கள் இறுதிக் காலத்தைப் பற்றி, முனிவரே! தாங்கள் கூறுங்கள்.

## தந்தையின் மரணகாலமும் மறுபிறவியும்

43. முப்பது விரண்டு ஆண்டு ஞயரானி மாதந் தன்னில்
செப்புவோந் தந்தைக் கேதான் சிறந்திடும் பின்ஜன்
[மத்தை
ஒப்புடன் காஞ்சி கீழ்பால் உதிப்பனும் வைசியச் சேயாய்
இப்படி முனிவர் சொல்ல ஈச்வரி கேட்க லுற்றாள்.

43. ஜாதகன் பிறந்து முப்பத்திரண்டாவது ஆண்டில் உயர்ந்தாகிய ஆனி மாதத்தில் தந்தைக்கு மரணம் உண்டாகும் என்று சொல்லுவோம். தந்தைக்கு ஏற்படும் மறுபிறவி பற்றிக் கூறுவோம். காஞ்சீபுரத்துக்குக் கிழக்கில் உள்ளதாகிய ஒரூரில் வைசிய மரபினனாகப் பிறப்பான். இங்ஙனம் ரிஷிகள் கூற பார்வதிதேவி கேட்கத் தொடங்கினாள்.

*குறிப்பு :—ஜாதகனுடைய தந்தை, அவனுக்கு குரு மகாதசையில் சுக்கிர புக்தி நடக்கும்போது இறந்துவிடுவான்.

## வைசிய மரபிற் தோன்றக் காரணங்கள்

44. ஏதுகா ரணத்தி னாலே இவன்வைசிய குலமு தித்தான்
ஓதுவீர் விபர மாக உதித்தவ னிச்சென் மத்தில்
தீதுக ளனந்த மாகச் சிலசில கலகஞ் செய்தும்
வேதத்தின் முறைகள் போலே வித்தகன் நடக்காத
[தாலும்;

44. என்ன காரணத்தினால் இவன் வைசிய குலத்தினனாகத் தோன்றுவான்? விவரமாகக் கூறுங்கள். இப்பிறவியில் பல தீங்குகள் செய்வதோடு சில கலகங்களும் செய்வான். அவையல்லாமல், வேதத்தில் கூறப்பட்டுள்ள முறைப்படி சடங்குகளை நடத்ததாலும்;

## தாயின் மரணகாலம்

45. உதிப்பனா மென்று சொன்னோம் உயர்குல தாழ்வ தாக
மதிநுதல் மாது வுக்கு அறைகிறோ முப்பா னெட்டில்
சதியிலாத் [1]தேளின் மாதஞ் சார்ந்திடுங் கண்டம் தானும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

45. வைசிய குலத்தில் பிறப்பாள் என்று கூறினோம், இனி, ஜாதகனின் தாயாருக்கு இறுதிக்காலம் பற்றிக் கூறுகின்றோம். ஜாதகன் முப்பத்தெட்டாவது வயதில், கார்த்திகை மாதத்தில் முடிவு ஏற்படும். முனிவர்களை ஆதரிக்கும் அம்பிகையே! கேட்பாயாக,

*குறிப்பு :—ஜாதகனுக்கு குரு மகாதசையில் ராகு புக்தியில் தாய்க்கு மரணம் சம்பவிக்கும்

## ஜாதகனின் மரணகாலம்

46. உதித்தவன் மரண காலம் உரைக்கிறோ மன்பா னாறில்
விதிக்கிறோஞ் சிம்ம மாதம் மேவிய பருவந் தன்னில்
சதிசெய்யும் மார்பு நோயால் சடலமே வாடு மென்றோம்
இதுவிதம் முனிவர் சொல்ல ஈச்வரி கேட்க லுற்றாள்.

1. விருச்சிகம், கார்த்திகை மாதம்.

46. இனிமேல், ஜாதகனின் முடிவுக் காலத்தைச் சொல்லுகிறோம். தனது ஐம்பத்தாறும் வயதில் ஆவணி மாதம் பௌர்ணமியன்று மார்பு நோயினால் மரணமேற்படும் என்று சொன்னோம். இவ்வாறு முனிவர் சொல்லவும், பார்வதிதேவி கேட்கத் தொடங்கினாள்.

*குறிப்பு :—ஜாதகனுக்குத் தன் 56-ம் வயதில் சனி மகாதசையில் ராகு புக்தியில் மரணம் சம்பவிக்கும்.

## நீண்ட ஆயுள் கிரகநிலை

47. எப்படி வயது தீர்க்க மிரணியன்[1] தனக்கு வெட்டில்
ஒப்புடன் மதியும் நிற்க உரைத்திட்டோ மெட்டாண்
[டுள்ளே
தப்பிதஞ் ஜாத கர்க்குச் சார்ந்திடு மிதனைக் கேட்டுச்
செப்புவார் பராசர் தாமும் தசமத்தில் குருவே நிற்க;

47, இந்த ஜாதகனுக்கு வயது தீர்க்கமென்று எப்படிக் கூறினீர்? குருவுக்கு எட்டாமிடத்தில் சந்திரன் இருப்பதனால் பிறந்த எட்டு ஆண்டு களுக்குள் ஜாதகனுக்குத் தோஷம் ஏற்படும். உமாதேவி இங்ஙனம் கூறக் கேட்ட பராசர முனிவர் பின்வருமாறு கூறுவார். பத்தாமிடத்தில் குரு இருப்பதனால்,

## ஜாதகன் மறுபிறவி

48. என்னநோய் வந்த போதும் இவனுக்கு வயது தீர்க்கம்
அன்னவன் பின்ஜன் மத்தை அறைகிறோ மினிமே லாக
தன்னிலே தில்லை தன்னில் ஜனிப்பனு மிக்கு லத்தில்
மன்னர்பா லதிகா ரங்கள் மன்னனுஞ் செய்வா னுகும்
[2]இன்னவன் சுகமாய் வாழ்வன் இயம்பிய மொழி
[குன ருவே.

48. என்னவிதமான நோய்கள் வந்தாலும் இவன் தீர்க்க வயதுடன் இருப்பான். இனி ஜாதகனின் மறு பிறவி பற்றிக் கூறுகிறோம். சிதம்பரத்தில் இப்பிறவியைப் போல் அந்தணர் மரபிலேயே தோன்றுவான். அரசாங்கத் தில், அதிகாரமுள்ள பதவிகளை வகிப்பான். சௌக்கியமாக வாழ்க்கை நடத்துவான். யாங்கள் சொல்லும் சொல் தவறாது.

49. அத்திரி சொல்லு கின்றார் அவன்தந்தை யிளையோ
[னுக்குப்
பெத்திடு மதலை காணன் பேதையு மில்லா னென்றீர்

---

1. சுக்கிரன்,
2. இப்பாட்டில் ஒருவரி மிகுந்துளது.

வித்தகன் தனக்குக் கர்மம் மேதினில் யார்தாம் செய்வர்
சுத்தமாய் புகலு மென்ன சொல்லுவேன் பிற்பா கத்தில்.

49. அத்திரி முனிவர் கூறுகின்ருர். இந்த ஜாதகன் தந்தைக்கு இளையவனுகிய சோதரனுக்குப் புதல்வர்ப் பேறு இல்லையென்று கூறினீர்கள். மணமாகாதவன் என்றும் கூறினீர். அவனுக்கு இறுதிக் கடன்கள் செய்பவர் யாவர்? தெளிவாகச் சொல்லுங்கள் என பராசர முனிவர் சொல்லுகிருர். அதுபற்றி இரண்டாம் பாகத்தில் கூறுவேன்.

## ஜனனகால தசை இருப்பு

50. ஜனித்திடு காலந் தன்னில் சேய்தசை தனிலி ருப்பு
குனித்திடு மாண்டு வைந்து கூர்திங்க ளிருநான் காகும்
தினமது விருபான் மூன்றுஞ் செப்புவோம் பலனை
[யாங்கள்
வினையது ஜாத கர்க்கு மேவிடு மென்று சொன்னேம்.

50. ஜாதகன் பிறக்குங் காலத்தில் அங்காரக மஹா தசையில் இருப்பு ஐந்து ஆண்டுகள், எட்டு மாதங்கள், இருபத்து மூன்று நாட்களாம் என்று சொல்லுவோம். அதன் பலனைக் கூறுவோம். ஜாதகனுக்குத் துன்பங்கள் நேரும் என்று சொன்னேம்.

## ஜனனகால தசைப் பலன்கள்

51. குடும்பமுங் கலக மாகும் குறித்திடுஞ் செட்டு நட்டம்
அடைவுடன் பந்து சூதம் அவன்துணை சேத மாகும்
இடமது பேத மாகும் இருக்கும்நாற் காலி சேதம்
தடவரை மகளே பின்பால் சாற்றுவோம் விபர மாக.

51. குடும்பத்தில் கலகங்கள் ஏற்படும். செய்யும் வியாபாரத்தில் நஷ்டம் உண்டாகும். உறவினர்களில் யாருக்காவது தீங்குண்டாகும். துணைவர்கள் நாசமடைவர். இருப்பிடத்தை விட்டு மாறுவான் தன்னிடமுள்ள மாடுகள் முதலிய நாற்கால் பிராணிகள் சேதம் அடையும். மலையரசன் மகளே! மற்றவைகளை விவரமாகப் பின் பாகத்தில் சொல்லுவோம்.

# ஜாதகம் 50

## ஜனனகால கிரக நிலை

1. [1]பிறை[2]தனு கேது [3]கெண்டை புதன்[4]துலை [5]புகருந்
[[6]தேளில்
குருரவி ராகு கன்னி குசன்[7]வண்டி [8]காரி [9]வீணை
[10]அரிவையுஞ் ஜனன மாக அறைகுவீர் பலனை யென்று
திருவுமை கேட்கும் போது ஜயமுனி புகலு கின்றார்.

1. சந்திரன் தனுசிலும், கேது மீனத்திலும், புதன் துலாத்திலும், சுக்கிரன் விருச்சிகத்திலும், குரு சூரியன் ராகு கன்னியிலும், செவ்வாய் கடகத்திலும், சனி மிதுனத்திலும்: ஆக நவக் கிரகங்களும் நிற்க, கன்னியா லக்கினத்தில் பிறந்த ஜாதகனுக்குப் பலன்கள் யாவை? என்று உமாதேவியார் கேட்கும் பொழுது ஐய்முனிவர் கூறுகின்றார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| கேது | | | சனி |
| | இராசி சக்கரம் | | அங்காரகன் |
| | | | |
| சந்திரன் | சுக்கிரன் | புதன் | லக்கினம் சூரியன் குரு ராகு |

2. ஜனித்திடு மாண்பால் ஜன்மம் தென்வட வீதி யாகும்
குனித்திடும் கீழ்பால் வாசல் குகன்வாசம் நாடே யாகும்
அணங்கினைச் சிறையில் வைத்த அரக்கர்வாழ் ஊரே
[யாகும்
கனமுள தந்தை அன்னை காதலி துணைவர் புத்திரர்;

1. சந்திரன்
2. தனுசு
3. மீனம்
4. துலாம்
5. சுக்கிரன்
6. விருச்சிகம்
7. கடகம்
8. சனி
9. மிதுனம்
10. கன்னி

2. ஆண் மகன் பிறப்பான். ரோதன்றும் வீடு, தெற்கு வடக்கான வீதியில் கிழக்கு நோக்கிய வாயிலே யுடையதாகும். சுப்பிரமணியக் கடவுள் எழுந்தரு யிருக்கும் தலமாகும். சீதாப்பிராட்டியைச் சிறையினில் வைத்த அரக்கர்கள் வாழ்ந்திருந்த இலங்கை யாகும் அவ்வூர். பெருமையுள்ள ஜாதகனின் தந்தை தாய், மனைவி, உடன் பிறந்தோர், மக்கள் ஆகியோருடையனவும்;

## ஜாதகனுடைய தந்தையின் வரலாறு

3. ஜாதகன் யோகச் சேதி சாற்றுவோ முன்பின் ஜன்மம்
ஓதுவேன் தந்தை சேதி உணருவான் கல்வி யிரண்டு
நீதியாய்த் தந்தை ஆஸ்தி நீக்குவான் மனைவி பக்கல்
போதவே சேர்ந்து வாழ்ந்து பெண்பொரு ளழிவு
[செய்து;

3. இந்த ஜாதகன் யோகங்கள் ஆகிய அனைத்தைப் பற்றியும், முன் ஜன்ம பின் ஜன்ம விவரங்களையும் கூறுவோம். இனி, இந்த ஜாதகனின் தந்தை செய்திகளைச் சொல்லுவோம். இருவிதக் கல்வி கற்பான். தன் தந்தையால் தேடி வைக்கப்பட்ட சொத்துக்களைப் போக்குவான். மனைவி யோடு சேர்ந்து அவள் வீட்டாருடனே வசித்து, பொன் பொருள் இவற்றை அழித்து;

## இதுவுமது

4. மன்னரால் சிலநாள் உய்வான் மெய்ப்பொருள் தன்னல்
[நீங்கும்
அன்னியில் வணிபம் செய்து அரும்பொருள் நஷ்ட
[மெய்தும்
தன்மனை பக்கல் தன்னில் சார்ந்துமே உய்வா னுகும்
பன்னியே பேச வல்லன் பலபணி விரயம் செய்வன்.

4. அரசாங்கத்தில் சிலகாலம் உத்தியோகம் பார்ப்பான். கைப்பொருள் அழியும். பின்பு அதனை விட்டு நீங்கி வியாபாரம் செய்வான். அதனுலும் பொருள் நஷ்ட மேற்படும். தன் மனைவி வீட்டாரைச் சார்ந்து வசிப்பான் பன்னிப் பன்னிப் பேசுவதில் வல்லவன். பல பொன்நகைகளை நஷ்டமாக் குவான்.

## இதுவுமது

5. இருவித வார்த்தை சொல்வன் இளமன முடைய னுகும்
குறையென்ருேர்க் குதவி செய்வன் புன்சிரிப் புடைய
[னுகும்

மருவிடு மாமி யிரண்டு மறித்துரை யதிகங் கூருன்
முருகர்தம் பத்தி கொள்வன் மூலச்சூ டுடைய ஞமே.

5. இருவிதமாகப் பேசுவான், இளகிய மனமுடையவன் குறை யென்று இவனை நாடி வந்தவர்களுக்கு உபகாரஞ் செய்வான் புன் சிரிப்பு உடையவன். இவனுக்கு மனைவியர் இருவர். கேட்பவர்க்குப் பதில் வார்த்தைகள் அதிகமாகப் பேச மாட்டான். முருகப் பிரான் மீது பக்தி கொள்ளுவான். மூலச் சூட்டுநோயுள்ளவன்.

## இதுவுமது

6. பலவிதத் தலங்கள் செல்வன் பரிதிநாள் கடக ராசி
நிலமதி லுதிப்பா ஞகும் நீர்தோய்வன் பெருமை [யேற்பன்
சொலுமிந்தக் குணத்தா னுக்குச் சுதனுமே வுதிப்பா [ஞகும்
தலைவன்தன் சேதி சொல்வேன் தாட்சண்யன் கனத்த [புத்தி.

6. பல புண்ய ஸ்தலங்களுக்கும் யாத்திரையாகச் சொல்லுவான். ஞாயிற்றுக் கிழமை கடகவிராசியில் இவன் தோன்றியவன். புண்ணிய தீர்த்தங்களில் நீராடும் பெருமை பெறுவான். இவ்விதம் சொல்லப்பட்ட இக் குணங்களை யுடைவனுக்கு ஜாதகன் புதல்வஞகத் தோன்றுவான். இனி, ஜாதகன் செய்திகளைச் சொல்லுவோம். பிறரிடம் தாட்சிண்யங் காட்டும் இயல்புடையவன். பெரும்புத்தி யுடையான்.

## ஜாதகனின் நல்லியல்புகள்

7. வித்தையு மிரண்டு கற்பன் விசேஷமா யுணர்வா ஞகும்
உத்தம குணத்த ஞகும் உயர்வோர்கள் பத்தி பூண்பன்
சுத்தவா னரசர் பேட்டி சுகமுள வார்த்தை சொல்வன்
குத்தத்தைச் சேர்க்கா ஞகும் கோதையால் பெருமை [யேற்பன்.

7. இருவிதக் கல்வி கற்பான். சிறப்பான பொருளை அறிவான். நல்ல குணவான். சான்ருேர்களிடம் பக்தி கொள்ளுவான். தூய்மை யுடைய பவன், அரசர்களைப் பேட்டி காண்பான். சுகமான வார்த்தைகளைப் பேசுவான். குற்றமுள்ள செயல்களைச் செய்ய மாட்டான். குற்ற முடையவர் களையும் தன் பக்கல் சேரவிடான். மனைவியினுல் பெருமை பெறுவான்,

## இதுவுமது

8. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனமிகப் பெருக்கம் [பின்னால்
வந்தவர்க் கன்ன மீவன் மாஞ்சிவப் புடைய னாகும்
கந்தன்தன் பத்தி கொள்வன் கரமதில் விஷ்ணு ரேகை
பந்துவும் புகழ வாழ்வன் பரிந்துப சாரஞ் செய்வன்.

8. தன் தந்தையைவிட மேன்மையாக வாழ்வான். பிற்காலத்தில் இவனுக்குச் செல்வ விருத்தி யுண்டாகும். வீட்டுக்கு வந்தவர்கட்கு உணவு தருவான். கருஞ் சிவப்பு நிறமுடையவன். முருகப்பிரான் மீது பக்தி கொள்ளுவான். இவன் கையில் விஷ்ணு ரேகை யுண்டு. உறவினர் மெச்சும்படி வாழ்வான். வீட்டுக்கு வந்தவர்கட்கு மனம் விரும்பி, உபசாரங் களைச் செய்வான்.

## ஜாதகனின் சகோதரபாவம்

9. அன்னையின் துணைவர் தம்மா லவனுமே பெருமை [யேற்பன்
முன்கோப முகைசாலி முனிவதைக் காட்டா னாகும்
தன்துணை யாண்பால் காணன் தையல ரொருவர் [தீர்க்கம்
பின்துணை யாகச் சொல்வோம் பேசுவோ மவள்கு [ணத்தை.

9. தாயுடன் பிறந்தவர்களால் இவன் பெருமையுடைவான். முன்கோப முள்ளவன். ஊகித்துணரும் இயல்புடையவன். கோபத்தை மிகுதியாக வெளிப்படுத்த மாட்டான். இவனுக்குச் சகோதரன் இல்லை. சகோதரி ஒருத்தி தீர்க்க வய்துடையவள். அவள் ஜாதகனுக்குப் பின் பிறந்தவள் என்று கூறுவோம். அவளது இயல்புகளைச் சொல்லுவோம்.

## சகோதரியின் இயல்புகள்

10. புத்திமா னூக்க யுண்டு புண்ணிய மனத்த ளாகும்
பத்திமா னவர்க்கு அன்னம் படைப்பளாம் மாஞ்சி வப்பள்
சுத்தமு முடையா ளாகும் சிறப்புள குடும்பி யாவள்
உத்தம குணத்தா ளாகும் உரைக்குமுன் கோபி யாவள்.

10. புத்திசாலி. ஊகித்தறியும் இயல்பினள். நல்ல மனமுடையவள், இறைவன் அடியவர்கட்கு அன்னம் அளிப்பாள். கருஞ் சிவப்பு நிறமுள்ள வள். தூய்மை யுடையவள். பெருமை வாய்ந்த குடும்ப முடையவள். நற் குண முண்டவள். ஒருவர் கூறுவதைக் கேட்கு முன் கோபங் கொள்ளும் இயல்பினள்.

## சகோதரியின் செய்திகள்

11. அன்னையின் வம்சம் தன்னிலணுகிடும் வரனு
[மென்றோம்
தன்சுதர் ஆண்பால் மூன்று தையல ரவ்வாறு தீர்க்கம்
கன்னிகை தந்தை யாலே கனக்காது யோக மென்றோம்
பொன்பணி யதிக முண்டு புருடன்தன் னாலே யோகம்.

11. தாயைச் சேர்ந்த உறவினர்களில் இவளுக்குக் கணவன் வாய்ப்பான் என்று சொன்னோம். இவளுக்கு ஆண் மக்கள் மூவர். பெண்களும் மூவர். இவர்கள் தீர்க்க வயதுள்ளவர்கள். இவள் தந்தையாலே நன்மை பெருகாது என்று சொன்னோம். இவளுக்குப் பொன்னாபரணங்கள் மிகுதியாக உண்டு. கணவனாலும் இவளுக்கு யோகம் ஏற்படும்,

## ஜாதகனின் திருமணச் செய்தி

12. உதித்தவன் மணத்தின் கால முரைக்கிறோ மிருபா
[னிரண்டில்
காதலி யன்னை வர்க்கம் கலப்பளாஞ் சிவந்த மேனி
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம் கபடு மில்லாள்
பாதக மனமில் லாதாள் பலகலை யுணர்வா ளாமே.

12. இனி, ஜாதகனின் திருமணக்காலத்தைச் சொல்லுகிறோம். இருபத்திரண்டாம் வயதில், தாய் வர்க்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள். அவள் சிவந்த உடலுடையவள். இனிய சொற்களைப் பேசுவாள். மனத்தில் கபடமில்லாதவள். கெட்ட எண்ணமில்லாதவள். பல கலைகளைக் கற்றவள்.

## மனைவியின் இயல்புகள்

13. அன்னம்போல் சாய லொக்கும் யாவர்க்கும் நல்லோ
[ளாவள்
உன்னத விரதம் பூண்பள் உத்தமி யோக சாலி
பின்னமில் லாத தேகி பிறர்பொரு ளிச்சை வையாள்
இன்னவள் வந்த பின்பு எய்திடும் வரன்யோ கந்தான்.

13. அன்னம்போன்ற நடையுடையவள். எல்லோருக்கும் நல்லவளாக இருப்பாள். சிரேஷ்டமான விரதங்களை மேற்கொள்ளுவாள். இவள் யோகமுடையவள். குற்றமில்லாத சரீரமுள்ளவள். பிறர் பொருளை விரும்ப மாட்டாள். இவள் வந்த பின்பு கணவனுக்கு யோகம் வாய்க்கும்.

## களத்திர தோஷம்—கிரகநிலை

14. வயதுமே தீர்க்க மெய்தும் வதிஷ்டரு மறுத்துச்
[சொல்வார்
வியமுட னேழில் கேது மிகுசனி பார்த்த தாலே
பயமுடன் தாரமி ரண்டு பகருவோம் முனியே யாங்கள்
செயமுனி தடுத்துச் சொல்வார் சீரிய கலையும் நாலில்;

14. தீர்க்க வயதுடன் இருப்பாள். இவ்விதம் ஜயமுனிவர் கூறும் போது, வசிஷ்டர் இடைமறித்துக் கூறுவார். ஏழாம் இடத்திலுள்ள (மீனம்) கேதுவை, மிதுனத்திலுள்ள சனி பார்ப்பதால் இவனுக்கு மனைவியர் இருவர் என்று யாங்கள் கூறுவோம். இதனை ஜயமுனிவர் தடுத்துக் கூறுவார். சந்திரன் நாலாம் இடமாகிய தனுசிலும்;

15. ஏழினுக் குடையோன் தானுமிறைவனும் ஜன்மந் தங்கத்
தாழ்வுரு தாரத் துக்குச் சத்தியு மொன்றே தீர்க்கம்
தோழிக்குச் சுதரா ணிரண்டு தோகையு மொன்றே
[தீர்க்கம்
பாழாகு முன்று வென்றோம் பார்வதி கேட்டி டாயே.

15. களத்திரஸ்தானாதிபதியாகிய ஏழாம் வீட்டுக்குரிய குரு, ஜன்ம லக்னமாகிய கன்னியில் தங்கியிருப்பதால் மனைவிக்குக் கேடு வராது. இந்த ஜாதகனுக்கு மனைவி ஒருத்தியே தீர்க்கமுடன் இருப்பாள். இந்த ஜாதகனுடைய மனைவிக்கு இரண்டு ஆண் மக்களும், பெண் ஒருத்தியும் தீர்க்கமுடன் இருப்பர். மற்றும் பிறப்பவை பாழாம் என்று சொன்னோம். பார்வதியே! கேட்பாயாக.

## ஜாதகனின் அன்னையினுடைய செய்தி

16. அன்னையும் நற்கு ணத்தாள் அன்புள மனத்த ளாகும்
பொன்னிறம் பொறுமை சாலி புகழ்ந்தோரை யாத
[ரிப்பள்
உன்னதத் தலங்கள் செல்வள் உயர்வான புத்தி
[யேற்பள்
தன்துணை யாண்பா லிரண்டு தையலர் ஒன்றே தீர்க்கம்.

16. ஜாதகன் தாயார் நற்குணமுடைவள். எல்லோரிடமும் அன்பு வாய்ந்த மனமுடையவள். பொன்போன்ற நிறமுடையவள். பொறுமைக் குணம் உள்ளவள். தன்னைப் புகழ்பவரை ஆதரிப்பாள். உயர்ந்த தலங்கட்கு யாத்திரையாகச் செல்லுவாள். உயர்ந்த புத்தியுடையவள். இவளுடன் பிறந்தவர்களில் சகோதரர் இருவரும் சகோதரி யொருத்தியும் தீர்க்க வயதுள்ளவர்.

## தாயின் முற்பிறப்பு

17. வரனில்லம் வாழா ளாகும் அவள்பூர்வம் சொல்லக்
[கேளாய்
அரிராமர் பூசை செய்யும் அச்சேது பதியி லேதான்
மறவர்தங் குலமு தித்து வரன்மைந்த ருள்ளா ளாகிப்
பெருமையாய்க் குடும்பம் பெற்றுப் புண்ணிய மனத்த
[ளாகி;

17. *கணவன் வீட்டில் வசிக்கமாட்டாள். இனி ஜாதகன் தாயாரின்* முற்பிறவி பற்றிச் சொல்லுகிறேன். இராமபிரான் பூஜை செய்த சேதுவில் மறவர்கள் குலத்தில் பிறந்து, கணவன் மக்கள் ஆகியோரைப் பெற்றவளாய், பெருமையுள்ள குடும்பத்தை யடைந்து, புண்ணிய மனமுடையவளாய்;

18. பவமது யில்லா ளாகிப் பரவினுள் கால ஞடு
அரிமகன் வரையப் பட்டு அணுகினு ளிலங்கைத் தீவில்
திருமகள் விலாசம் பெற்றுச் சிறப்புள குடும்பந் தன்னில்
மருவினு ளென்று சொல்வோம் வரனுலே யோகம்
[காணுள்.

18. தீவினை எவையுமில்லாதவளாய் வாழ்ந்து இறுதியில் மரண மடைந்தாள். மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு இலங்கைத் தீவில், இலட்சுமி கடாட்சத்தை அடைந்து, சிறப்புடைய குடும்பத்தில் பிறந்தாள் என்று கூறுவோம். கணவனுல் இவளுக்கு யோகம் இல்லை.

## தாயின் மறுபிறவி

19. பின்ஜன்மம் வள்ளூர் தன்னில் பிறப்பளாம் பவித்திர மாக
அன்னையுங் கேட்க லுற்ருள் அவளுமிச் சென்மந்
[தன்னில்
என்னபுண் ணியங்கள் செய்தாள் இனத்தோர்மேல்
[பிரிய மாயும்
உன்னதத் தலங்கள் சென்றும் உத்தமி வாழ்ந்த தாலே;

19. மறுபிறவியில், திருவள்ளூரில் உயர்ந்த குலத்தவளாகத் தோன்று வாள். இங்ஙனம் கூறிய முனிவரைப் பார்த்துப் பார்வதி தேவி கேட்கத் தொடங்கினுள், அவள் இப்பிறவியில் என்ன நல்வினைகள் செய்தாள் ? தன் இனத்தவர் மேல் பிரியமுள்ளவளாகவும், புண்ணியத் தலங்களுக்கு யாத்திரையாகச் சென்றும் வாழ்ந்துவந்ததால்;

## தந்தையின் முற்பிறவி

20. பிறப்பளாம் பவித்திரமாகப் பேசுவோம் தந்தை பூர்வம்
திருக்கணு மலைநா டன்னில் ஜனித்தன னிக்கு லத்தில்
தரையினுல் சீவித் தேதான் தன்மனை மதலை யுண்டாய்க்
குறையென் ருேர்க் குதவி செய்து குடியில்லம் பூமியாவும்;

20. பவித்ரமான (உயர்ந்த அந்தணன்) குலத்தில் பிறப்பாள். இனி, ஜாதகனின் தந்தையின் முற்பிறவியைப் பற்றிக் கூறுவோம். திருவண்ணாமலையில் இம்மரபிலேயே பிறந்தான். பயிர்த்தொழிலால் ஜீவனம் செய்தான். மனைவி மக்கள் ஏற்பட்டு, குறையென்று வந்தவர்கட்கு உதவிகள் செய்து வந்தான். அப்படியிருக்கும் நாட்களில், குடியிருக்கும் வீடு, நிலபுலம் யாவற்றையும்;

## ஏழையரின் சாபம்

21. தனமதுக் கீடாய்க் கொண்டான் சாற்றுவார் ஏழை
[யோர்கள்
சினமிலாப் பொருளைத் தந்து சேயில்லம் கொண்ட பாவி
கனமுடன் பின்ஜன் மத்தில் கனக்காது தந்தை யாஸ்தி
மனைவிபால் வாழ்வா யென்றும் மன்னரால் நிந்தை
[யேற்பாய்,

21. தான் கொடுத்திருந்த பொருளுக்கு ஈடாக ஏழைமக்களிடமிருந்து பறித்துக்கொண்டான். மனம் வருந்திய ஏழைகள் பின்வருமாறு கூறினர்: "பொருளைக் கொடுத்து எங்கள் வீடு, நிலம் முதலியவற்றை அபகரித்த பாவியே! மறு பிறவியில் உனக்குத் தந்தை சொத்து நிலையாது. மனைவி யாதரவில் வாழ்வாய். அரசாங்கத்தால் தொல்லையை யடைவாய்."

22. இன்னமும் பலவாறு சொல்லி இறைத்தனர் தெருத்தூள்
[தானும்
முன்னமே அந்தத் தோஷம் மேவிற்றுப் பால னுக்குக்
கன்னிகை மூத்த மாதைக் கலந்தனன் அதுவோர்
[தோஷம்
பன்னிய பயிரி லேதான் பசுவுங்கன் றுகளும் மேய;

22. என்று மேலும் பல கூறித் தெருமண்ணை வாரி யிறைத்தனர். அந்தத் தோஷம் முதலில் இவனைப்பற்றியது. சகோதரி போன்று வயதில் மூத்த பெண் ஒருத்தியைச் சேர்ந்தான். அந்த ஒரு தோஷம் இவனை யடைந்தது. விளை நிலத்தில் பசுவும் அதன் கன்றுகளும் மேய்ந்துகொண்டிருக்கும்பொழுது;

## பசுவையும் கன்றையும் அடித்த தோஷம்

23. வாட்டினன் கழியி னாலே மருவிற்று முதன்மைத் தோஷம்
பூட்டாக வந்தி யத்தில் பித்தகுன் மத்தி னாலே
தேட்டையாய்க் கால னொடு சேர்ந்துபின் நரகம் புக்கு
ஓட்டினன் பிரமன் தானும் உதித்தன னரக்கர் நாட்டில்.

23. அவற்றைக் கழியினால் நன்கு அடித்துவிட்டான். அந்தத்தோஷம் முதன்மையாக இவனைச் சேர்ந்தது. அந்தியக்காலத்தில் பித்தகுன்மம் ஏற்

பட்டு வருந்தி எமபுரமடைந்து நரகம் புகுந்தான். பின்பு பிரமனால் மீண்டும் படைக்கப்பட்டு இலங்கைத் தீவில் பிறந்தான்.

24. கோவின்தன் பாபந் தானும் குலவிடு மிச்சென் மத்தில்
மேதினி லரசர் தம்மால் நிந்தையும் பெறுவா னாகும்
ஆவலாய் மத்தி யத்தில் அரும்பொருட் செலவு செய்து
ஓவிய வணிபத் தாலே உலகினில் நஷ்ட மெய்தி;

24. பசுவையடித்த பாபம் இப்பிறவியில் இவனைத்தொடரும். அரசாங்கத்தால் நிந்தனை செய்யப்படுவான். மத்திய வயதில் அரிய பொருளைச் செலவு செய்து, பெரிய சித்திர வியாபாரஞ்செய்து நஷ்டமடைந்து;

25. இஞ்சிதின் மந்தி போலே ஏங்கியே வாழ்வா னாகும்
வஞ்சியின் துணைவ னாலே வாழ்வனா னிந்தப் பாலன்
தஞ்சமா யேழை சாபம் தந்தையார் ஜிதங்கள் காணான்
துஞ்சிடு மென்று சொல்வோம் சுதனாலே யந்தத்
[தோஷம்.

25. இஞ்சியைத் தின்ற குரங்கு சொல்லவியலாமல் விழிப்பது போன்று எவரிடமும் தன் நிலையைச் சொல்ல முடியாமல் ஏக்கமுடன் வாழ்வான். மனைவியின் சகோதரன் ஆதரவில் ஜாதகன் வாழ்வான். முற்பிறவியில் ஏற்பட்ட ஏழையர் சாபத்தால் ஜாதகன் தந்தையால் தேடிவைக்கப்பட்ட சொத்துக்கள் இல்லாதவனாவான். இவன் புதல்வனால் (ஜாதகனால்) அந்தத் தோஷம் விலகும் என்று சொல்லுவோம்.

## தந்தையின் மறுபிறவி

26. பின்ஜன்மம் செஞ்சி தன்னில் பிறப்பனா மறையோ னாக
என்னகா ரணத்தி னாலே இயம்பினீர் விபரஞ் சொல்வீர்
சிந்தையும் நல்ல தாயும் தேவதாத் தலங்கள் சென்றும்
கந்தன்மேல் பத்தி கொண்டும் காவலன் வாழ்வ தாலே;

26. மறுபிறவியில் செஞ்சியில் அந்தணனாகப் பிறப்பான். என்ன காரணத்தைக்கொண்டு அப்படிக் கூறினீர்கள்? விவரங் கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் கூறுவார். மனத்தில் நல்ல எண்ணமுடையனாயும், தெய்வத்தலங்கட்கு யாத்திரை சென்றும், முருகப்பெருமான் மீது பக்தியுடையனாயும் ஜாதகன் தந்தை வாழ்வதனால்;

## ஜாதகனுடைய முற்பிறவி

27. ஜனிப்பனா மென்று சொல்வோம் திருமகன் பூர்வம்
[கேளாய்க்
கனமுள தில்லை தன்னில் கருணீக குலமு தித்தும்
மனைவியு மதலை யுண்டாய் மாநிலங் கிருஷி செய்து
வினைதீர்க்கும் சேது சென்று மேலோர்க்கு வன்ன
[மீந்துத்

27. அந்தணர் மரபில் பிறப்பான் என்று சொல்லுவோம். இனி, ஜாதகன் முற்பிறவி பற்றிக் கூறுவோம். சிதம்பரத்தில் கருணீகர் மரபில் தோன்றி, மனைவி மக்களைப்பெற்று, விவசாயம் செய்து, தீமைகளைப் போக்கும் சேதுவுக்குச் சென்று, நீராடி, சான்றோர்க்கு அன்னமளித்து;

## ஜாதகன் யோகங்கள்

28. அறுமுகன் பத்தி கொண்டு அந்தகன் பக்கல் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன னிலங்கைத் தீவில்
திருமகன் யோகச் சேதி செப்புவோ மினிமே லாக
அறுமூன்று ஆண்டு மேலாய் அரசனால் தொழிலு
[மேற்பன்.

28. முருகப்பிரான் மீது பக்தியுடனிருந்து, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இலங்கைத் தீவில் பிறந்தான். இனிமேல் இவனுடைய யோகச் செய்திகளைக் கூறுவோம். பதினெட்டு வயதுக்குமேல் அரசாங்க உத்தியோக மேற்பான்.

## இதுவுமது

29. வித்தையால் புகழு மேற்பன் மேம்பாடாய்த் தொழிலு
[முள்ளான்
உத்தம னாகி வாழ்வன் உண்மையை உணர்வா னாகும்
பத்தினி நேய னாகும் பாருகள் பின்னால் சேர்ப்பன்
இத்தனை யோக மெல்லா மெய்திடு மாம னாலே.

29. கல்விகற்று, அதனால் கீர்த்திபெறுவான். மேன்மையான உத்தி யோகம் வகிப்பான். நல்லவனாக வாழ்வான். உண்மையான செய்தி களையே உணருவான். மனைவியிடம் விருப்பமுள்ளவன். நிலபுலங்களைப் பிற்காலத்தில் சேர்ப்பான். இவ்வளவு நன்மையும் தாய் மாமனால் இவ னுக்கு ஏற்படும்.

## இதுவுமது

30. காரிழை வந்த பின்பு கழறுவோம் விசேஷ யோகம்
பாரிய தொழிலு மேற்பன் பணிதிபொன் சேர்ப்பா னாகும்
வேறொரு தேசந் தன்னில் வேந்தர்பூ சிதமு மாவன்
ஆறுமா முகத்தோன் தன்னா லரசாட்சி செய்வானாமே.

30. மனைவி வந்த பின்பு மேலும் விசேஷமான யோகங்கள் இவ னுக்கு ஏற்படும் என்று கூறுவோம். பெரிய உத்தியோகம் ஏற்பான். ஆப ரணங்கள், பொன் ஆகியவற்றைச் சேர்ப்பான். வேற்று நாட்டு அரசரால் மதிக்கப்படுவான். ஆறுமுகக் கடவுளருளால் அரசினையாளும் யோகமும் பெறுவான்,

## இதுவுமது

31. ஞானங்கள் உணர்வா னுகும் நாதனுர் பத்தி பூண்பன்
தானமும் தரும மிச்சை சேத்திரம் முப்பான் மேலே
ஊனமில் லாமல் செய்வன் ஒன்பதா யிரம்பொன் [சேர்ப்பன்
ஆனதோர் தலங்கள் செல்வன் ஆவுகள் பரியு முள்ளான்

31. மெய்ஞ்ஞானங்களைப் பெரியோர்களிடம் உபதேசம் பெற்று அறிவான். இறைவனிடம் பக்தி கொள்வான். தானதருமங்களைச் செய்வதில் விருப்பமுண்டாகும். முப்பது வயதுக்கு மேல் பெரிய வீடு கட்டுவான். ஒன்பதாயிரம் பொன் சேர்ப்பான். சிறந்த புண்ணியத் தலங்கட்டுச் சொல்லுவான். பசுக்கள், குதிரைகள் உள்ளவன்.

## தந்தை தாயாரின் மரணகாலம்

32. இருபது வைந்து வாண்டில் இவன்பிதா வரிட்ட [மெய்தும்
பரிதியின் தசையே யாகும் பகருவோ மிருபா னேழில்
பெருமையா யன்னை கண்டம் பேசிய மொழிகுன் றுது
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

32. ஜாதகன் இருபத்து ஐந்தாம் வயதில் தந்தை மரணமடைவான். அப்பொழுது சூரிய மஹா தசை ஜாதகனுக்கு நடைபெறும். ஜாதகனின் இருபத்தேழாம் வயதில் தாயாருக்கு மரணம் சூரிய மகாதசையில் சனி புக்தியில் ஏற்படும். கூறிய மொழி தவருது. யானைமுகக் கடவுளைப் பெற்ற தாயே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனின் மரணகாலம்

33. அன்பது ஏழு வாண்டில் ஆடிமா தத்தி லேதான்
இன்னவ னுடல மேகு மியம்புவோ மிவன்பின் [ஜன்மம்
உன்னத கலிங்க நாட்டி லுதிப்பனுஞ் சத்திரயச் [சேயாய்ப்
பொன்பணி யுடைய னுகிப் புவிராசர் பேட்டி கொள்வன்.

33. ஐம்பத்தேழாம் வயதில் ஆடி மாதம் ஜாதகன் ராகு மகா தசையில் புத புக்தியில் மரண மடைவான். இவன் மறுபிறவி பற்றிக் கூறுவோம். கலிங்க நாட்டில் க்ஷத்திரிய மகனுய்ப் பிறந்து, பொன் ஆபரணங்கள் உடையவனுய், அரசரைப் பேட்டி காணும் சிறப்போடு வாழ்வான்.

## ஜாதகனின் தொழில்

34. நாற்பது வேழு வாண்டு மரசர்பா லரசு செய்வன்
ஏற்கவே யதன்மே லாக வெய்திடுஞ் செட்டுத் தானும்
தீர்க்கமாய் மரண மட்டுஞ் ஜகராசர் தம்மா லுய்வன்
ஆர்க்கவே தரித்திர மில்லான் அம்பிகை யாளே கேளாய்.

34. நாற்பத்தேழு வயது வரை ராகு மகாதசை ஆரம்பம் வரையில் அரசாங்க உத்தியோகம் செய்வான். அதற்குப் பின்பு வர்த்தகத் தொழில் செய்வான். மரண மடையும் மட்டும் நிச்சயமாய் அரசாங்க உதவியால் ஜீவனஞ் செய்வான். தரித்திரம் இல்லாதவன். அம்பிகையே! கேட்பாய்.

## பிறந்தகாலத்தசை இருப்பும், பயனும்

35. உதித்திடு காலந் தன்னில் உயர்கேது தனிலி ருப்பு
பதித்திடு ஆண்டு நாலும் பரிவுடன் திங்க ளிரண்டும்
குநர்க்கமாந் தந்தை யென்றேங் குமரனும் பிணியால் [வாடும்
சதியாகும் பொருளுக் கென்றேம் சல்லிய பாதை நேரும்.

35. ஜனன காலத்தில் கேது மஹா தசையில் இருப்பு நான்கு வருஷங்களும் இரண்டு மாதமுமாம். இக்காலத்தில் தந்தையின் நிலையில் தொல்லை ஏற்படும். ஜாதகன் நோயினால் வாடுவான். பொருளுக்குச் சேதம் உண்டாகும். கடன் தொந்தரவும் ஏற்படலாம்.

குறிப்பு:—ஜாதகன் புரட்டாசி மாதம் சுக்ல பட்சம் சப்தமி திதியில் மூல நட்சத்திரத்தில், சூர்யோதயத்துக்குச் சற்று முன்பின்பாகப் பிறந்தவன். —V.R.N.

———

# ஜாதகம் 51*

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதி[2]வீணை கேது [3]வண்டி [4]மறை[5]சாடி [6]பணி [7]சேய்
[[8]மானில்
[9]விதி[10]ரவி மீன மாக [11]வெள்ளியும் புதனு மேடம்
இதுவிதக் கோளும் நின்று இலக்கினம் [8]மானதாக
அதுபலன் சொல்லு மென்று அம்பிகை கேட்க லுற்ருள்.

1. சந்திரன் மிதுனத்திலும், கேது கடகத்திலும், குரு கும்பத்திலும், இராகு அங்காரகன் மகரத்திலும், சனி சூரியன் மீனத்திலும், சுக்கிரன் புதன் மேஷத்திலும் ஆக இவ்விதம் நவக்கிரகங்களும் நிற்க கன்னியாலக்கினத்தில் தோன்றியவருக்குப் பலன்கள் சொல்லுமென்று பார்வதிதேவி கேட்கத் தொடங்கினுள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சூரியன் சனி | சுக்கிரன் புதன் | | சந்திரன் |
| குரு | இராசி சக்கரம் | | கேது |
| ராகு அங்காரகன் லக்கினம் | | | |
| | | | |

குறிப்பு :—சாதகன் பங்குனி மாதத்தில் சுக்ல பட்சம் மிருகசீருஷ நட்சத்திரத்தில் நாலாம் பாதத்தில் சூர்யாஸ்தமன சமயத்தில் மாலையில் சுமார் 6 மணிக்குப் பிறந்தவன்.

## ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளங்கள்

2. அத்திரி புகலு கின்ருர் ஆணது ஜனன மாகும்
வித்தக னுதித்த வில்லம் விளம்புவோம் கீழ்மேல் வீதி

1, சந்திரன்
2. மிதுனம்
3. கடகம்
4. குரு
5. கும்பம்
6. இராகு
7. அங்காரகன்
8. மகரம்
9. சனி
10. சூரியன்
11. சுக்கிரன்

*குறிப்பு :—இந்த ஜாதகம் மகரலக்னத்தைச் சேர்ந்தது. ஆனுல் கன்னியா லக்கின ஏடுகளோடு சேர்க்கப்பட்டு 51-ஆம் ஜாதகமாக மூலப் பிரதியில் தவருக கணக்கிடப்பட்டிருக்கிறது. இருந்தபோதிலும் அதற்கு உரை எழுதப்பட்டு இருக்கிறது.—Ed.

உத்தரம் வாச லாகும் ஓங்காரி வடபா லாகும்
அத்தியு மேல்பா லாகும் அரனுமே மீனதின் திக்கில்.

2. அத்திரி முனிவர் கூறுவார். இந்த ஜாதகர் ஆண் மகன். பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கிய வாசலே யுடையது. காளிதேவி வீட்டுக்கு வடக்குப் பக்கம் கோயில் கொண்டுள்ளாள். மேற்குப் பக்கத்தில் விநாயகர் ஆலயம் ஒன்றுவிது. சிவபெருமான் வடகிழக்குத் திசையில் எழுந்தருளியுள்ளார்.

## இதுவுமது

3. இன்னமும் பலதே வாசம் இலகிய சோலே யுண்டு
சொன்னவிவ் வடையா ளத்துள் தோன்றுவான் [ஜ்யேஷ்ட ளுக
அன்னேயின் தந்தை யோகம் அவன்துணே களத்திர [புத்திரர்
உன்னத முன்பின் ஜன்மம் உரைக்கிரேு மிந்நூல் [தன்னில்

3. இன்னும் பல தெய்வங்கள் அவ்வூரில் வாசம் செய்யும். அழகாக விளங்கும் சோலே யொன்று உண்டு. சொல்லப்பட்ட இவ்வடையாளங் களுள்ள ஊரில் தந்தைக்கு மூத்த புதல்வளுக ஜாதகன் பிறப்பான். இவன் தந்தை தாயர்ரின் யோகங்கள், உடன்பிறந்தார், மனேவி, மக்கள் ஆகியோரின் செய்திகள், முன் பின் பிறவி வரலாறுகள் இவற்றை இந்நூலில் கூறுகின்ரேும்.

## தந்தையின் இயல்பு
### வேறு

4. தந்தைகுணம் கூறுகின்ரேும் மாஞ்சி வப்பன்
ஜகராசர் பேட்டியுளன் சாந்த ளுவன்
வந்தவர்க்கு அன்னமீவன் மர்ம ளுவன்
வறுமையிலான் பூமியுண்டு மாடு விருத்தி
நொந்தபேரை யாதரிப்பன் கபடு கொஞ்சம்
நீர்தோய்வன் முருகர்பத்தி நிதமுஞ் சீலன்
விந்தையா யில்லஞ்செய்வன் மனேவி பட்சன்
மேன்மையாய்க் குடும்பமுளன் விரிந்தோர் நேயன்.

4. இனி, தந்தையின் இயல்புகளேச் சொல்லுகின்ரேும். கருஞ்சிவப்பு நிறமுடையவன். அரசர்களேப் பேட்டி காண்பான். சாந்தகுண முடையவன். வீட்டுக்கு வந்தவர்கட்கு உணவு அளிப்பான். மனத்திலுள்ளவற்றை எளிதில் வெளியிட மாட்டான். தரித்திரமில்லாதவன். நிலபுலம் உள்ளவன். மாடு கன்று விருத்தி யுள்ளவன். கஷ்டப்படுவர்களே ஆதரிப்பான். சிறிதே கபடமுமுடையவன். புண்ணிய நீரில் நீராடுவான். முருக பக்தி யுடையவன்.

நல்லொழுக்க முள்ளவன். புதுமையான வீடு கட்டுவான். மனைவியிடம் பிரியமுள்ளவன். கௌரவமான குடும்ப முள்ளவன். விசால மனமுடைய பேர்க்கு நண்பன்,

## இதுவுமது

5. நேயருண்டு துணைவர் நவமாம் நீங்கும் பாரி
நீத்தோர்மேல் வாஞ்சையுளன் நிருப னுவன்
தாய்வழியில் துக்கமுண்டு கமல ரேகை
சாந்தமும் கோபமுண்டு சத்ரு நேயன்
தாய்போலே வார்த்தையுளன் தனத்தி லிச்சை
சற்சனர்க ளுறவு செய்வன் சமர்த்தாய் வார்த்தை
தூயமனம் தலவாசம் செய்வா னுகும்
சுகபுசிப்பு வெகுவித்தை தோன்றும் பித்தம்.

5. இவனுக்கு நண்பர்கள் உண்டு. உடன் பிறந்தோர் ஒன்பது பேர். மனைவி நீங்குவாள். துறவியர் மேல் விருப்பமுள்ளவன். அரசனைப் போல் மேன்மை யுள்ளவன். தாய் வர்க்கத்தில் துக்கம் ஏற்படும். கையில் கமலரேகை யுண்டு. சாந்தமும் கோபமும் மாறி மாறி வரும். பகைவரிடமும் அன்புடனிருப்பான். தாய் போல் பிறரிடம் அன்பாகப் பேசுவான். செல்வத்தில் விருப்பமுள்ளவன். நல்லவர்கள் சேர்க்கையைக் கொள்ளுவான். சாமர்த்தியமாகப் பேசுவான். தூய்மையான மனமுள்ளவன். புண்ணிய ஸ்தல வாசம் செய்வான். சுக போஜனம் உண்வான். கல்வி யறிவு நிறைய ஏற்படும். பித்தச் சூடு உண்டாகும்.

## ஜாதகனின் இயல்புகள்

### வேறு

6. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே வுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அதிதிபோல் [வார்த்தை சொல்வன்
மன்னிய சிவந்த மேனி மறுதேச வாச முண்டு
கன்னென மொழியே சொல்வன் கல்வியு மிரண்டு [கற்பன்.

6. இத்தன்மையையுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனுகப் பிறப்பான். இவனுடைய *குணங்களைச் சொல்லுகின்றேன்.* பெரியோர் போல கருத்துள்ள சொற்களைப் பேசுவான். நிலை பெற்ற சிவந்த உடலை யுடையவன். வேற்று நாட்டில் சென்று வாழும் சந்தர்ப்பம் இவனுக்கு ஏற்படும். கரும்பு போன்ற இனிய மொழிகளையே உரைப்பான். இரண்டு விதமான கல்வி கற்பான்.

## இதுவுமது

7. துரைராசர் பேட்டி கொள்வன் [1]சோங்கின்மேல் செல்வா
[ருகும்
கரைமனம் சித்திர வேலை கபடில்லான் வறுமை காணுன்
பொறைசொலா னிளம னத்தன் புவிராசர் தன்னு
[லுய்வன்
பெருமையும் புகழு மேற்பன் பேதையர் உறவு
[கொள்வன்

7. பெரிய அதிகாரிகளையும், அரசர்களையும் பேட்டி காணுவான். மரக்கலத்தின் மீது அமர்ந்து கடற் பிரயாணம் செய்வான். பிறர்த்துன்பத்தைக் கண்டு உருகும் மனத்தினனுய் இருப்பான். சித்திரம் எழுதும் தொழில் செய்வான். மனத்தில் வஞ்சனைக் குணம் இல்லாதவன். ஏழ்மைத் துயரை அறிய மாட்டான். கோட் சொல்லாதவன், இளகிய மனங் கொண்டவன். உலகில், அரசரால் (அரசாங்க அலுவலினுல்) உதவி பெற்று ஜீவனம் செய்வான்: மேன்மையும் கீர்த்தியும் பெறுவான். பெண்களின் தொடர்பைக் கொள்ளுவான்.

## இதுவுமது

8. இருபது ஆண்டு மேலாய் ஏகுவான் வெளிதே சத்தில்
அரசர்பூ சிதமு மெய்தும் அடைந்தோரை யாத ரிப்பன்
பெருமையும் புகழு மேற்பன் புண்ணிய மனத்த னுகும்
பரிவண்டி யிருபா னேழில் படைப்பனு மென்று
[சொல்வோம்.

8. தனது இருபதாம் வயதுக்கு மேல் வெளிநாட்டுப் பிரயாணம் செய்வான். அரசரால் மதிக்கப்படும் பேறு இவனை யடையும். தன்னை அண்டி வந்தவர்களை ஆதரிப்பான். உலகத்தில் சிறந்த கௌரவத்தையும் கீர்த்தியையும் அடைவான். இளகிய நல்மனம் உடையவனுவான். தனது இருபத்தேழாம் வயதில் குதிரை வண்டி வைத்துக் கொள்ளுவான் என்று கூறுவோம்.

## ஜாதகனுடைய சகோதரரின் செய்தி

9. இவனுடைத் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா
[விரண்டு
அரிவைய ரொன்றே தீர்க்கம் அவனியி லிளையோ னுக

1. மரக்கலம்.

[1]......... ...............நாட்டுவோ மொருவன் சேதி
தவசிக ளுறவு கொள்ளான் தந்திர மொழியு முள்ளான்.

9. இவனுடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுவோம். ஆண் குழந்தைகள் இருவர் தோன்றுவர். பெண் ஒருத்தியும் பிறப்பாள். இவர்கள் தீர்க்க வயதுடையவர்களாய் விளங்குவர். ஜாதகனுக்கு இளையோனாகப் பிறந்த ஒருவனது வரலாற்றைக் கூறுவோம். பெரியோர்கள் தொடர்பினைக் கொள்ள மாட்டான். தந்திரமாகப் பேசும் இயல்பினையுடையவன்.

## இளைய சகோதரனின் இயல்புகள்

10. இருவிதக் கல்வி கற்ப னின்பமாய் வார்த்தை [சொல்வன்
அறிவோர்கள் நேயங் கொள்வன் அவசர மனத்த னாகும்
குரவரால் சீவிப் பானும் குணமது விரண்டு முண்டு
நெறியதைத் தவிர்த்தல் செய்வன் நீள்நிலம் விருத்தி [செய்வன்.

10, இருவிதமான கல்வியைப் பயிலுவான். கேட்பவர்க்கு இன்பமளிக்கும் சொற்களைப் பேசுவான். அறிவுடைய பெரியோர்களது தொடர்பினைக் கொள்ளுவான். தீர ஆலோசிக்காமல் அவசர மடையும் மனத்தை யுடையவன். தாய் தந்தையர் ஆதரவால் ஜீவனம் செய்வான். ஒன்றற்கொன்று மாறுபட்ட இருவிதக் குணங்கள் இவனுக்கு உண்டு. நீண்ட நாட்களாகப் பழக்கப்பட்டு வந்த சான்றோர் வழியிலிருந்து மாறுபடுவான். நில புலங்களைப் பெருக்குவான்.

## இதுவுமது

11. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பா லிரண்டு
நாரியு மொன்றே யென்றோம் நாற்காலி விருத்தி யுண்டு
தீரவான் சுகபு சிப்பன் செய்ந்நன்றி மறவா னாகும்
ஆறுமா முகத்தோன் பத்தி ஆவுகள் விருத்தி யுண்டு.

11, இவனுக்கு மனைவி ஒருத்தியே யாவாள். குழந்தைகளில் ஆண் குழந்தைகள் இரண்டும், பெண் குழந்தை யொன்றும் இவனுக்குத் தோன்றுவர் என்று சொன்னோம். கால் நடைகளின் பெருக்கம் ஏற்படும். தைரியசாலி. சுகத்தைத் தரும் உணவுகளை உண்பான். பிறர் செய்த உதவியை மறவாமல் போற்றுவான். ஆறு முகங்களை யுடைய முருகப் பெருமான் மீது பக்தி கொள்ளுவான். பசுக்கள் பெருக்கமும் உண்டு.

---

1. இப்பகுதி மூலப் பிரதியில் சிதைந்துளது.

## இதுவுமது

12. தீர்க்கமாம் வயது முண்டு தேசமேல் சிலநாள் வாசம்
ஏற்கவே யிவன்பின் சேதி யிருவிதக் குணத்தா ணுகும்
மார்க்கமாங் குணத்தா ணுகும் மங்கையர் மோக வானும்
போர்க்குமுன் செல்வா ணுகும் புகலுவான் கட்டு
[வார்த்தை.

12. தீர்க்க ஆயுளுடையவன். வேறு நாட்டிற்குச் சென்று சில காலம் வாசஞ் செய்வான். இனி, இவனுக்கு இளைய சகோதரனின் செய்தியைப் பொருத்தமாகச் சொல்லுவோம். ஒன்றற்கொன்று மாறுபட்டுள்ள இரண்டு விதமான குணங்களுடையவன். நல்வழியில் செல்லும் மனமுள்ளவன். பெண்கள் மீது காம விச்சை கொண்டவனுவான். வலுச் சண்டைக்கு முதலில் செல்லுவான். தானுகக் கட்டிப் பேசுவான்.

## இதுவுமது

13. பயிர்த்தொழில் செட்டுச் செய்வன் பணத்தின்மே லாசை
[யுண்டு
நயமான வார்த்தை சொல்வன் நவிலுமுன் கோபி
[யாகும்
அயலார்பொன் னிச்சை யுண்டு அணுகிடும் பாரி
[யொன்று
பயமிலா னெதிரிக் கஞ்சான் பாரினில் சல்லியங்
[கொள்ளான்.

13. விவசாயத் தொழிலும், வியாபாரமும் செய்வான். செல்வத்தைத் தேடுவதில் மிக்க விருப்பமுள்ளவன். இனிதாகிய சொற்களைப் பேசுவான். ஒருவர் ஒன்றைக் கூறுமுன்பாகவே கோபங் கொள்ளுவான். பிறர் செல்வத்தின் மீது இவனுக்கு ஆசையுண்டு. இவனுக்கு மனைவி ஒருத்தியே வாய்ப்பாள். மனத்தில் அச்ச மென்ப தில்லாதவன். தனக்கு விரோதமாக உள்ளவர்கள் பலசாலிகளாயினும் இவன் அவர்கட்குப் பய்ப்பட மாட்டான். கடன் வாங்காமல் உலகினில் வாழ்வான்.

## இதுவுமது

14. சுதர்களு மாண்மா லொன்று தோகையு மவ்வாறு
[தீர்க்கம்
பதியினில் வாழ்வா ணுகும் பணையோர்கள் விருத்தி
[செய்வன்
மருமவான் கடினச் சித்தன் மறுத்துரை கூறு வானும்
வறுமைகள் காணு ணுகு மருவிடும் பித்தச் சூடு.

14. இவனுக்கு ஆண் குழந்தை யொன்று தோன்றும். பெண் குழந்தையும் ஒன்று உண்டாகும். இவ்விரு குழந்தைகளும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். சொந்த ஊரினிலேயே வாழ்ந்திருப்பான். நிலபுலங்கள் ஏர் இவற்றைப் பெருக்குதல் செய்வான். மனத்திலுள்ளவற்றை எளிதில் வெளிவிட மாட்டான். கடினமான மனமுடையவன். தன்னிடம் யாவரேனும் ஒன்று சொன்னால், அதனை மறுத்துப் பேசும் இயல்புடையவன். தரித்திரத்தை அறியாதவனாக இருப்பான். இவனுக்கு உடலில் பித்தச் சூட்டு நோயுண்டாகும்.

## ஜாதகனின் திருமணக் காலமும் மனைவியின் இயல்புகளும்

15. கன்னிகை சேதி பின்பால் கழறுவோந் தாயே கேளும்
இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மிருபா
[றுறில்
கன்னிகை யன்னை வர்க்கங் கலப்பளாங் குணத்தைச்
[சொல்வேன்
தன்சொலு மடக்க முண்டு சாந்தமுங் கோப சாலி.

15. ஜாதகனின் சகோதரியின் செய்தியைப் பின் பாகத்தில் சொல்லுவோம். எல்லாவுயிர்க்குந் தாயாகிய உமாதேவியே! கேளுங்கள். இந்த ஜாதகனின் திருமணக் காலத்தைப் பற்றி கூறுவோம். இவனுக்கு இருபத்தாறும் வயதில், (குருமகா தசையில் சுக்கிர புக்தியில்), தாய் வழியிலிருந்து ஒரு பெண் மனைவியாக வாய்ப்பாள். அவளுடைய குணாதிசயங்களை இனிக் கூறுவோம். அடக்கமான சொற்களைப் பேசுவாள். பொறுமைசாலி. கோபங் கொள்ளும் இயல்புமுள்ளவள்.

## மனைவியின் இயல்புகள் : தொடர்ச்சி

16. தோகைபோல் சாய லுண்டு துறவோர்க்கு அன்ன
[மீவள்
ஆகமம் அறிவா ளாகும் யாவர்க்கும் நல்லோ ளாவள்
நாகரி கங்க ளுண்டு நாயகன் மனம்போல் வாழ்வள்
போகபாக் கியங்க ளேற்பள் பூவைக்கு வயது தீர்த்கம்.

16. ஜாதகனின் மனைவி மயிலைப் போன்ற சாயலை யுடையவள். உலகப் பற்றைத் துறந்த சந்நியாசிகட்கு உணவளித்து உபசரிப்பாள். ஆகமசாஸ்திரங்களை உணருவாள். எல்லோருக்கும் நல்லவளாக இருப்பாள். நாகரிகங்கள் பொருந்தியவள். தன் கணவன் மனங் கோணாமல் குடும்பம் நடத்துவாள். பலவித போக, பாக்கிய விசேஷங்களை அடைவாள், இவளுக்கு தீர்க்க ஆயுளுண்டு.

## ஜாதகனுக்கு இருமனைவியர் ஏற்படுதற்குரிய கிரகநிலை

17. ஜயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென வுரைக்க லுற்றார்
பயமிலா வயது தீர்க்கம் பகர்ந்தீர்கள் கேது வேழில்
வியமாக மதியு மாறில் மேவியே யிருப்ப தாலே
நயமுடன் தார மிரண்டு நவிலுவோம் பால னுக்கு.

17. மேற் கூறியவற்றைக் கேட்டுக் கொண்டு வந்தவராகிய ஜயமுனிவர் என்பார். திடீரென இடை மறித்துப் பேசத் தொடங்கினார். இந்த ஜாதகன் மனைவிக்கு பயமில்லாமல், தீர்க்க வயதுண்டு என்று, கூறினீர்கள். கேது இலக்னத்துக்கு ஏழாமிடமாகிய (களத்திர ஸ்தானம்) மீனத்திலும், சந்திரன் ஆறுமிடமாகிய கும்பத்திலும் தங்கி யிருப்பதால், இந்த ஜாதகனுக்கு மனையர் இருவர் என்று கூறுவோம்.

## அகத்திய முனிவர் ஜாதகனுக்கு மனைவி ஒருத்தியே என்பதனை ஆதாரங்களுடன் விளக்கல்

18. தென்முனி புகலு கின்றார் செம்பொன்னு மிரண்டில் [தங்க
மன்னிய நாளில் வெள்ளி மதிமகன் கூடி நிற்கக்
கன்னிகை யொன்றே தீர்க்கம் காரியும் பொன்னோன் [மாறிப்
பின்னமில் லாமல் நிற்கப் பேசினோம் தார மொன்றே.

18. அகத்திய முனிவர் ஜயமுனிவர் கூறியவற்றை மறுத்துக் கூறுயவற்றை மறுத்துக் கூறுகின்றார். குரு, இலக்கினத்துக்கு இரண்டாமிடமாகிய துலாத்தில் தங்கி யிருத்தலும், நாலாம் இடத்தில் (இங்கு தனுசு) சுக்கிரனும் புதனும் சேர்ந்து இருத்தலும் ஆன கிரக நிலைகளால் மனைவியொருத்தியே தீர்க்க வயதுள்ளவளாக இருப்பாள். இவையல்லாமல் குற்றமில்லாமல் இருப்பதால் ஜாதகனுக்கு மனைவி ஒத்தியே என்று சொன்னோம்.

## ஜாதகனுக்கு ஒருமனைவியே எனல்

### வேறு

19. இதற்குநே ரிடையாய்ச் சாதகச் சுருதியில்
ஏழாம் பாகத்தில் பாரு
அதுவின் றி வர்க்கில் பரலுமே யொன்று
அணுகியே யெடுபடா திருக்கச்

சதியிலாத் தார மொன்றென மொழிவோம்
சங்கைகள் அம்மனை தனக்கு
அதிபனு முத்திரை யிரண்டுமே யணிவான்
விவரிப்பீ ரதுவிப ரங்கள்.

19. இதற்குப் பொருத்தமான ஆதாரமாய்ச் சோதிட சாஸ்திரத்தில் ஏழாம் பாவத்தைப் பார்ப்பீராக. அதுவல்லாது, அஷ்டவர்க்கத்தில் பரல் ஒன்று எடுபடாமல் இருப்பதாலும், குற்றமில்லாதவளாகிய மனைவி ஒருத்தியே இவனுக்கு வாய்ப்பாள் என்று கூறுவோம். அப்படியிருக்க என்ன சந்தேகம் என்றால், தன் மனைவிக்கே இரண்டு முறை இந்த ஜாதகன் மாங்கல்யம் அணிவிப்பான் என்று அகத்தியர் கூறவும், பார்வதிதேவி, இரண்டாம் முறை மாங்கல்யம் அணிவிக்க வேண்டிய காரணத்தைக் விவரமாகக் கூறுவீராக என்று கேட்டனள்.

## ஜாதகரது புத்திரபாவம்
### வேறு

20. சோரரால் முப்பா னெட்டில் கலேந்திடு மந்த முத்திரை
வேறென்று அணிவா னுகும் வல்லியு மொன்றே தீர்க்கம்
காரிழை தனக்குப் புத்திரர் கழறுவோ மினிமே லாக
ஆறுபேர் தோன்று மென்றோம் அவைகளி லாண்பா
[லிரண்டும் ;

20. ஜாதகனின் முப்பத்தெட்டாம் வயதில், அவன் மனைவியின் மாங்கல்யம் கள்ளர்களால் அபகரிக்கப்படும். வேறொரு மாங்கல்யம் தன் மனைவிக்கு அணிவிப்பான். ஆதலின் மனைவி ஒருத்தியே. அவள் தீர்க்க வயதுடன் இருப்பாள். ஜாதகன் மனைவிக்குப் புத்திர பாக்கியம் பற்றி இனிமேல் கூறுவோம். ஆறு குழந்தைகள் தோன்றுவார் என்று சொல்லுவோம் அவற்றில் ஆண் குழந்தைகள் இரண்டும் ;

## இதுவுமது

21. கன்னியு மவ்வா றென்றோம் கழறிய நான்கும் தீர்க்கம்
பின்னமா மிரண்டு தாமும் பிரதமரம் தோன்றும் சேதம்
என்னகா ரணத்தி னலே இயம்புவீர் முதலில் புத்திரர்
மன்னிய நாலில் வெள்ளி மந்தனு மஞ்சைப் பார்க்க;

21. பெண் குழந்தைகள் இரண்டும், ஆக நான்கும் தீர்க்க வயதுடன் விளங்கும் என்று கூறினேம். இரண்டு குழந்தைகள் தோன்றி நஷ்டமடையும் என்று அகத்திய முனிவர் கூற, பார்வதிதேவி கேட்கின்றாள். என்ன காரனத்தினல் முதலில் தோன்றும் புதல்வர்களுக்குத் தோஷம் ஏற்படும்? என்று கூறினீர், அதனை விளக்குங்கள். நிலேயான நான்காம் வீட்டில் சுக்கிரன் தங்கி, சனி ஐந்தாமிடமாகிய புத்திர ஸ்தானத்தைப் பார்ப்பதாலும்;

## ஜாதகனின் தாயாரின் செய்தி

22. செப்பினோம் சுதர்கள் தோஷம் சேயன்தன் அன்னை சேதி
ஒப்புடன் வார்த்தை சொல்வள் உறுதியில் லாத நெஞ்சம்
தப்பித மொருவர்க் கெண்ணாள் தானவள் விரத மேற்பள்
மைப்புள மனத்த ளாகும் விருந்தினர்ப் பிரிய மாவள்.

22. முதலில் பிறக்கும் குழந்தைகட்குத் தோஷம் ஏற்படும் என்று சொன்னோம். இனிமேல், ஜாதகனின் தாயாரைப் பற்றிய செய்திகளைக் கூறுவோம். உவமைகள் காட்டிப் பேசுவாள்; திடமில்லாத மனமுடைய வள். எவருக்குந் தீங்கு செய்ய நினையாதவள். விரதங்கள் பலவற்றை அனுஷ்டிப்பாள். சிறிது கபடமுள்ள மனத்தினள். வீட்டுக்கு வரும் விருந்தி னர்களைப் பிரியத்துடன் உபசரிப்பாள்.

## தாயினுடன் பிறந்தோரின் விவரம்

23. தன்துணை யாண்பா லிரண்டு தையல ரொன்று தீர்க்கம்
கன்னிகை வருவா ளாகும்.................................
அன்னியர் குற்றம் சொல்வாள் ஆளன்தன் மனம் போல்
[வாழ்வள்
இன்னவள் பூர்வந் தன்னை யியம்புவோம் தாயே கேளாய்

23. தன்னுடன் பிறந்தவர்களில் ஆண்கள் இருவரும் பெண் ஒருத்தி யும் தீர்க்கமாக இருப்பார்....அயலார் மீது குற்றம் கூற மாட்டாள். கணவன் மனம் போல் வாழ்க்கை நடத்துவாள். தாயின் முற்பிறவி வரலாற்றினை நாங்கள் இப்பொழுது சொல்லுவோம். எல்லா வுயிர்களுக்குந் தாயான பார்வதிதேவியே! கேட்பாயாக.

## தாயின் முற்பிறவி

24. சோழவ டதனி லேதான் செங்குந்த மரபில் தோன்றித்
தாழ்விலாக் குடும்பி யாகி ஜனவுப காரி யாயும்
ஏழைகட் கன்ன மீந்து மேகினாள் சேது தன்னில்
ஊழ்வினை யில்லா ளாகி உறைந்தனள் கால னூடு.

24. சோழவள நாட்டில் செங்குந்த வம்சத்தில் பிறந்து, குறைவில்லாத குடும்பமுடையவளாகி, ஜனங்களுக்கு உபகாரங்கள் செய்பவளாயும், பசி யால் வாடும் ஏழை மக்களுக்கு அன்னம் அளித்தும் வாழ்ந்து வந்தாள். சேதுவுக்குச் சென்று நீராடினாள். முற்பிறவித் தீவினை யில்லாதவளாய் வாழ்ந்து, முடிவில் மரண மடைந்தாள்.

## தாயின் வரலாறு தொடர்ச்சி

25. சிரநான்கோன் வரையப் பட்டுச் சிங்கள நாட்டி லேதான்
உறைந்தன ளிந்த மாது உம்பர்கள் பத்தி பூண்பள்
பரவிடும் சொல்ப ரோகம் பத்தினி வறுமை காணுள்
அறமதி லிச்சை யுள்ளாள் அம்பிகை யாளே கேளாய்.

25. மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, இப்பிறவியில் சிங்களத் தீவில் பிறந்தாள், இந்த ஜாதகன் தாய். இவள் தெய்வங்களிடம் பக்தி கொள்ளுவாள். சிறிது வியாதி ஏற்படும். தரித்திரம் அறிய மாட்டாள். தருமம் செய்வதில் விருப்பமுள்ளவள். பார்வதியே! மேலுங் கேட்பாயாக.

## தாயின் மறு பிறவி

26. மறுஜன்ம மந்நா டன்னில் வருவளா மறைக்கு
[லத்தில்
திருக்கணு மலையில் தோன்றும் தேவியிச் சென்மந்
[தன்னில்
உறைந்தபுண் ணியங்க ளென்ன உலகுக்கு நல்லோ
[ளாயும்
பெரும்புத்தி தேவ பத்தி பெற்றதா லுதிப்பா ளாகும்.

26. மறு பிறப்பில் இலங்கையில் திரிகோணமலை என்னுமிடத்தில் அந்தணர் மரபில் தோன்றுவாள். மறுபிறப்பு அந்தணர் மரபில் தோன்றுவதற்கு இந்தப் பிறவியில் இவளிடம் தங்கிய நற்செயல்கள் யாவை? என்று பார்வதிதேவி கேட்டனள். "உலகத்தினருக்கு நல்லவளாயும், விசால புத்தியுடையவளாயும், தெய்வ பக்தியுடனும் வாழ்ந்து வந்ததால், மறுபிறவியில் அந்தணர் குலத்திற் பிறப்பாள்."

## தந்தையின் முற்பிறவி

27. தந்தையின் பூர்வஞ் சொல்வேன் தாமிர பரணி தன்னில்
வந்தனன் வைசியச் சேயாய் மாநிலம் செட்டுச் செய்து
கந்தன்றன் பத்தி கொண்டு காதலி மதலை யுண்டாய்
நொந்தவர்க் கன்ன மீந்தும் நீத்தோருக் குதவி
[செய்தும்;

27. இனி, ஜாதகன் தந்தையின் முற்பிறவி பற்றி கூறுவோம். தாமிர பரணி நதிக்கரையிலுள்ளதொரு ஊரில் வைசிய மரபினனுகப் பிறந்தான். (விவசாயத் தொழில் புரிந்து) வியாபாரஞ் செய்து, முருகப் பிரான் மீது பக்தி யுடையவனுகி மனைவி மக்களைப் பெற்று, வருந்தியவர்கட்கு உணவு பற்றற்ற அளித்து, துறவிகளுக்கு உபகாரங்கள் செய்து;

28. காலன்தன் நாட டைந்து கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமில் லாத கங்கைக் குலமதி லுதிப்பா னுகும்
ஞாலமேல் வறுமை காணுன் நற்புக ழேற்பா னுகும்
ஏலவே அரசர் பேட்டி யெய்துவா னிவனே யென்ருேம்.

28. மரண மடைந்து, தாமரை மலர் மேல் உறைகின்ற பிரம தேவனுல் மீண்டும் படைக்கப்பட்டு வேளாளர் மரபில் தோன்றுவான். தன் வாழ்க்கையில் தரித்திரத்தை யறியாதவன். நல்ல கீர்த்தியைப் பெறுவான். பொருத்தமாக அரசர்களைப் பேட்டிகாணும் பாக்கிய மடைவான் இவன் என்று சொன்னேம்.

## தந்தையின் மறுபிறவியும், ஜாதகனின் முற்பிறவியும்

29. பின்ஜன்ம மவ்வூர் தன்னில் பிறப்பனு மிக்கு லத்தில்
பொன்பொரு ளுடைய னுகிப் புகழ்ச்சியாய் வாழ்வா
[னுகும்
இன்னவன் பூர்வஞ் சொல்வே னிருடிகள் வாழுகின்ற
மன்னிய வருணை நாட்டில் மறைக்குல முதித்து
இன்னேன்;

29. மறுபிறப்பு, அவ்வூரிலேயே இக்குலத்தில் தோன்றுவான். பொன்னுபரணங்கள், செல்வம் இவற்றை யுடையவனுய் பலரும் புகழ வாழ்வான். இனி, ஜாதகனின் முற்பிறவி பற்றிக் கூறுவோம். முனிவர்கள் பலரும் எழுந்தருளித் தவமியற்றும் நிலைபெற்ற புகழுடையதாகிய திருவண்ணுமலையில் அந்தணர் மரபில் இவன் தோன்றி;

## ஜாதகனின் முற்பிறவித் தொடர்ச்சி

30. சுகமுள குடும்பி யாகித் தொல்புவி யதிக மூண்டாய்ப்
பகையான கால னுடு பரவியே பிரமன் லக்கம்
தகமையா யிலங்கைத் தீவில் ஜனிப்பனு மிந்தப் பாலன்
உகமையாய்ப் பராசர் சொல்வா ருயர்மறைக் குலமுன்
[ஜன்மம்;

30. நலங்கள் பலவும் பொருந்திய குடும்பத்தை யுடையவனுய், பிதுரார்ஜிதமான நிலபுலங்கள் மிகுந்தவனுய் வாழ்ந்து, எமனுலகஞ் சென்று (மரணமடைந்து), மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, இலங்கைத் தீவில் இந்த ஜாதகன் பிறப்பான். "பராசரர் என்னும் முனிவர் பின்வருமாறு கூறுவார்." முற்பிறவியில் உயர்ந்த வேத மோதும் அந்தணர் மரபில்;

## வேளாளர் மரபில் தோன்றக் காரணங்கள்

31. வந்தவ னிச்சென் மத்தில் வரநதி குலமே தோன்ற
எந்தஊழ் செய்தா னத்தை யியம்புவீர் முனியே
[நீர்தாம்
முந்தின ஜன்மந் தன்னி லுயர்மறை யோதா ளுகித்
தன்குலந் தாழ்வாய் வந்தான் சாற்றுவோ மிவன்தன்
[யோகம்.

31. "பிறந்த இவன் இப்பிறவியில் வேளாளர் குலத்திற் பிறப்பதற்கு என்ன தீவினை செய்தான் ?" அதனை, முனிவரே! நீர் கூறுவீராக. முனிவர் கூறுவார். "முற்பிறப்பில் அந்தணனுகப் பிறந்த இந்த ஜாதகன் வேதங்கள் ஓதாமல் இருந்ததால், இப்பிறப்பில் வேறு மரபில் தோன்றினுன்." இவன் யோகங்களைப் பற்றிக் கூறுவோம்.

## ஜாதகனின் யோகங்கள்

32. அரசர்பூ சிதமு மெய்தும் அடைந்தோரை யாத ரிப்பன்
பரிவண்டி பூமி யாவும் பாக்கிய முடைய ளுவன்
இருகல்வி பந்து மேன்மை யெப்போதும் வறுமை
[காணுன்
தரையினில் பழைய பொன்னுஞ் சார்ந்திடு முப்பா
[ளுன்கும்.

32. அரசர்களால் கௌரவிக்கப்படும் நிலையையும் அடைவான். அடைக்கலமெனத் தன்னை யடைந்தவர்களை ஆதரிப்பான். குதிரைகள், வண்டி, நிலபுலங்கள் முதலான எல்லாப் யோக பாக்கியங்களையும் உடையவனுவான். இரண்டு விதமான கல்விகள் கற்பான். உறவினர்களால் மேன்மை பெறுவான். எந்தக் காலத்திலும் தரித்திரத்தை யறியான். ஜாதகனுடைய முப்பத்தி நான்காம் வயதில் அவனுக்கு பூமியில், பழைய நாளில் புதைத்து வைக்கப் பெற்ற பொன்னும் (புதையல்) கிடைக்கும்.

## இதுவுமது

33. எண்ணஞ்சு ஏழு ஆண்டும் இராசர்பால் குற்ற மின்றித்
திண்ணமாய் வாழ்வா ளுகும் தேவதாத் தலங்கள்
[செல்வன்
கண்ணிய குடும்பி யாவன் கேவல மனுகாச் சித்தன்
விண்ணவர் பத்தி பூண்பன் மெஞ்ஞான முணர்வா
[ளுகும்.

33. நாற்பத்து ஏழு ஆண்டுகள் வரை அரசாங்கத்தில் குற்றமில்லாமல் பணி புரிந்து நிச்சயமாய் வாழ்வான். தெய்வங்கள் கோயில் கொண்டுள்ள தலங்கட்கு யாத்திரையாகச் செல்லுவான். மதிப்புள்ள குடும்பமுடையவனுன். அற்பச் செயல்களில் செலுத்தாத மனமுடையவன். தேவர்களிடம் பக்தி கொள்ளுவான். சான்றோர்களை அடுத்து தத்துவ ஞானங்களை உணருவான்.

## ஜாதகன் இயல்புகள்

34. பந்துவை யாத ரிப்பன் பலருமே வணங்க வாழ்வன்
சிந்துர மெழுத வல்லன் திருப்பணி செய்வா ருகும்
விந்தையாய் வார்த்தை சொல்வன் வீண்வம்பு புகலா
[ருகும்
இந்தவன் தேடும் செம்பொன் எழுமூன்று யிரமென்
றேயாம்.

34. உறவினர்களை ஆதரிப்பான். பலரும் தன்னை மதித்து வணங்கும்படி மேன்மையுடன் வாழ்வான். சித்திரங்கள் எழுதுவதில் வல்லவன் சிறந்த நற்காரியங்கள் பலவற்றைச் செய்வான். (ஆலயத்திற்குப் பணியும் செய்வான்). விநோதமாகப் பேசுவான். பயனில்லாத வம்புச் சொற்களைப் பேச மாட்டான். இந்த ஜாதகன் தேடிச் சேர்க்கும் செல்வத்தினளவு இருபத்தோராயிரம் பொன் என்று யாம் கூறுவோம்.

## தந்தையின் மரண காலம்

35. முப்பது நாலு ஆண்டி லுயர்கும்ப மாதந் தன்னில்
செப்புவோம் தந்தை கண்டம் செம்பொனில் ராகு புத்தி
ஒப்புடன் நடக்கு மென்றேம் உரைத்தது தப்பா தாகும்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

35. ஜாதகனுக்கு முப்பத்து நான்காம் வயதில், உயர்ந்தான மாசி மாதத்தில் இவனது தந்தைக்கு மரணம் நேரும் என்று கூறுவோம். அப்பொழுது, ஜாதகனுக்குக் குரு மகா தசையில் ராகு புக்தி நடக்கும்மென்று சொன்னேம். இப்படிச் சொன்னது தவருனது. கங்கை நதியைச் சடைமுடியில் தரித்த சிவபெருமான் பத்தினியே! நாங்கள் கூறிய மொழிகள் தவரு.

## தாயார், ஜாதகன் ஆகியோரின் மரணகாலங்கள்

36. ஆறஞ்சு மூன்று ஆண்டில் ஆற்றனு மாதந் தன்னில்
கூறுவோ மன்னை கண்டம் குழவிக்கு அறுபா னிரிண்டில்
தீரமாய் மகர மாதம் செப்புவோம் கண்டம் தானும்
வேறொரு ஜன்மம் சொல்வேன் விளங்கிய மலைநா
[டன்னில்;

36. ஜாதகனின் முப்பத்தி மூன்றும் வயதில் குருமகாதசையில் ராகு புக்தியில் மார்கழி மாதம் தாய்க்குக் கண்டம் ஏற்படும் என்று கூறுவோம். ஜாதகனுக்கு அறுபத்திரண்டாம் வயதில் தை மாதத்தில் புத மகாதசையில் அங்காரக புக்தியில் மரணம் ஏற்படும் என்று உறுதியாய்ச் சொல்லுவோம். மறுபிறவி பற்றிக் கூறுவேன். புகழுடன் விளங்கும் மலைநாட்டில்;

## ஜாதகனின் மறுபிறவி

37. உதிப்பனுஞ் சத்திரியச் சேயா யுலகெலா மரசுசெய்வன்
அதிபன்தன் ஜனன காலம் மாந்தளிர் கடைப்பா தத்தில்
சதிசெய்யும் சேயி ருப்புச் சாற்றுவோந் திங்கள் பத்தும்
அதனுடன் நாள்க ளெட்டும் அறைந்தனம் பூர்வ பாகம்.

37. அரசர் மரபில் பிறப்பான். உலகில் அரசாங்கப் பதவி ஏற்பான். ஜாதகன் மிருக சீருஷ நட்சத்திரத்தில் நான்காம் பாதத்தில் ஜனன காலத்தில் பிறந்தவன். அங்காரக மஹா தசையில் இருப்பு, பத்து மாதங்களும் நாட்கள் எட்டும் என்று கூறுவோம். இவ்வாறு முதற் பாகப் பலனைக் கூறினோம்.

———

## ஜாதகம் 52

### ஜனனகால கிரகநிலை

### நேரிசை வெண்பா

1. [1]திங்கள்[2]அரி ராகு[3]வண்டி [4]சேய் புதன்[5]பான் [கேதுவு[6]மான்
பொங்கு குருமேடம் புகர்[7]சாடி சங்கை யிலாக்
[8]காரியுந்[9]தேள் கன்னி[10]ஜன்மங் கழறுவீர் பலனையென்று
பார்வதியுங் கேட்டாள் பலன்.

1. சிம்மத்தில் சந்திரனும், இராகு கடகத்திலும், அங்காரகன் புதன் சூரியன் கேது மகரத்திலும், பெருமை யுடைய குரு மேஷத்திலும், சுக்கிரன் கும்பத்திலும், சந்தேகமில்லாமல் சனி விருச்சிகத்திலும் நிற்க, கன்னியா லக்கினத்தில் பிறந்த இந்த ஜாதகருக்குப் பலன்களைக் கூறுவீராக என்று பார்வதி தேவி கேட்கலானாள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | ராகு |
| அங்காரகன் புதன் சூரியன் கேது | | | சந்திரன் |
| | சனி | | லக்கினம் |

### ஜாதகர் பிறந்தவீட்டின் அடையாளங்கள்

### வேறு

2. காதலி கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் வந்தஇில் வடதென் வீதி

1. சந்திரன்.
2. சிம்மம்.
3. கடகம்.
4. அங்காரகன்.
5. சூரியன்.
6. மகரம்.
7. கும்பம்
8. சனி.
9. விருச்சிகம்.
10. இலக்கினம்.

மாரியும் காளி யுத்ரதம் மால்மக னருகில் தங்கும்
தீரமாய் வைசியச் சேயாய்ச் செப்பலா மிந்தப் பாலன்.

2. இவ்வாறு பார்வதிதேவி கேட்கும் பொழுது, கௌசிக முனிவர் சொல்லுகின்ருர். இவ்வுலகில் பிறந்த ஆண் மகனது ஜாதகம் இது. இவன் பிறந்த வீடு வடக்குத் தெற்கான தெருவில் உள்ளது. மாரியம்மன் கோயிலும், காளிதேவி ஆலயமும் வீட்டுக்கு வடக்கில் உள்ளன. திருமாலின் புதல்வனுகிய மன்மதன் (காமன் கோவில்) கோயிலும் வீட்டுக்கருகில் உள்ளது. இங்ஙனமான அடையாளங்களுள்ள இடத்தில் வைசிய மரபில் இந்த ஜாதகன் தோன்றுவான் என்று தைரியமாகக் கூறுவோம்.

## தந்தையின் செய்தி

3. பாலகன் தந்தைக் கேதான் பகருவோ மாண்பா
[லொன்று
சாலவே பெண்பால் மூன்று சாற்றுவோம் தீர்க்க மாக
ஏலவே பின்பால் சேதி யியம்புவோம் தாயே யாங்கள்
கோலமாம் தந்தை சேதி கூறுவோ மானி றத்தன்.

3. இந்த ஜாதகனின் தந்தைக்கு சகோதரன் ஒருவனும் சகோதரிகள் மூன்றும் உண்டு என்று சொல்லுவோம். அவர்கள் தீர்க்க ஆயுளுடன் விளங்குவார். அவர்களைப் பற்றிய செய்தியைப் பின்பாகத்தில் சொல்லுவோம். இப்பொழுது ஜாதகனின் தந்தையைப் பற்றிய விவரங்களைச் சொல்லுவோம். மாநிற முடையவன்.

## தொடர்ச்சி

4. பாரினில் வணிபம் செய்வன் பகையென்று மனத்தில்
[வையான்
தீரமில் லாத நெஞ்சம் தேவதா பக்தி யுள்ளன்
கூறும்சொல் சுகமே யாகும் குலத்துக்கு நல்லோ னுவன்
ஆறுமா முகத்தோன் பத்தி அணுகிடும் பித்த வாயு.

4. உலகில் வியாபாரங்கள் செய்வான். தன்னிடம் சண்டையிட்டவர்களையும் இவர்கள் நமக்கு விரோதிகள் என்று மனத்தில் கருத மாட்டான். தைரியமில்லாத மனமுடையவன். தெய்வ பக்தி உடையவன். அவன் பேசும் மொழிகள் இன்பம் அளிப்பனவாகவே இருக்கும். தன் குலத்துக்கு நற்பெயரை அளிப்பவனுக இருப்பான். ஆறுமுகங்களுடைய முருகப் பிரான் மீது மிகுந்த பக்தி உடையவன். இவன் உடலில் பித்தவாயு சேரும்.

## தொடர்ச்சி

5. வஞ்சக வஞ்ச னுவன் மர்மமுங் கொஞ்ச முண்டு
பஞ்சுபோல் மனத்த னுகும் பணிந்தோரை யாத ரிப்பன்

மிஞ்சிய பொருள்மே லிச்சை வீண்செல வில்லா னாகும்
கஞ்சமா மிரேகை யுண்டு காணாத வார்த்தை சொல்வன்.

5. வஞ்சகர்களுக்கு வஞ்சகனாக இருப்பான். மனத்திலுள்ளவற்றை எளிதில் வெளிப்படுத்தாத குணமும் சிறிது உண்டு. மென்மையான மனமுடையவன். வணங்கியவர்களுக்கு ஆதரவு அளித்துக் காப்பான். செல்வத்தின் மீது ஆசை உடையவன். வீணான விரயங்கள் செய்ய மாட்டான். இவன் கையில் பத்ம ரேகை உண்டு. தான் அறியாதவற்றை அறிந்ததாகக் கூறுவான்.

## இதுவுமது

6. முகமதில் வடிவு முண்டு வுயர்வான குடும்பி யாவன்
அகமது செய்வா னாகும் அவன்தல வாசம் செய்வன்
உகமையாய் வார்த்தை சொல்வன் ஒண்டொடி தனக்கு [நேயன்
நகைசெய்வ னெதிரி தன்னை நாயகன் சமயோ கத்தன்.

6. முகத்தில் மச்சம் உடையவன் (ஒளியுடையவன்). உயர்வான குடும்ப முடையவனாக இருப்பன். புதிய வீடு கட்டுவான். புண்ணியத் தலங்களுக்கு யாத்திரையாகச் சென்று அங்கு சிலகாலம் வசிப்பன். கேட்பவர்க்கு மகிழ்ச்சி உண்டாக்கும் சொற்களைப் பேசுவான். தன் மனைவிக்கு இஷ்டமானவன். எதிரிகளின் பலத்தைப் பொருட் படுத்தாமல் அற்பமாக எண்ணி நகைப்பான். இந்த ஜாதகனுடைய தந்தை சமமான யோகமுள்ளவன்.

## ஜாதகனின் குணவிசேஷங்களும் யோகமும்

7. மான்ராசிப் பூச நாளில் மருவுவான் குணத்தா னுக்கு
மேன்மையா யிந்தப் பாலன் மேவுவான் குணத்தைச் [சொல்வேன்
ஆனவர் நேசம் கொள்வன் அடைந்தோரை யாத [ரிப்பன்
இன்பமாங் குணங்க ளில்லாள் ஏகுவான் [1]சம்மான் [பேரில்.

7. மகரராசி, பூச நட்சத்திரத்தில் தோன்றிய மேற் கூறப்பட்ட குணங்களை யுடைய தந்தைக்கு மேன்மையுடன் இந்த ஜாதகன் புதல்வனாகப் பிறப்பான். இனி, இவனுடைய குணங்களைச் சொல்லுவோம். நல்லவர்கள் உறவைக் கொள்ளுவான். தன்னை அண்டினவர்களை ஆதரிப்பான். இன்ப மூட்டும் இயல்புகள் இல்லாதவன். மரக்கலமீதில் கடற்பிரயாணம் செய்வான்.

---

1. மரக்கலம்.

## இதுவுமது

8. ஊகவான் கல்வி மானும் உண்மையா மனத்த னாகும்
பாகமாய்ப் பேச வல்லன் பகவானின் பத்தி பூண்பன்
போகபாக் கியங்கள் பின்னால் பொருந்திடு மாநி றத்தான
ஆகம நுணுக்கந் தேர்வன் அன்புள மனத்த னாமே.

8. எந்த விஷயங்களையும் ஊகித்து உணரும் இயல் புடையவன். சிறந்த கல்வி யறிவுடையவன். உண்மையையே கருதும் மனமுடைய வன், பக்குவமாகப் பேசுதலில் வல்லவன். கடவுளிடம் பக்தி கொள்ளு வான். பிற்காலத்தில் போகங்கள் அநுபவிக்கும் பேறுகள் உடையவன். மாநிறம் பொருந்திய உடலுடையவன். ஆகம நூல்களின் நுட்பங்களை ஆராய்வான். அன்போடு கூடிய மனமுடையவனாக இருப்பான்.

## இதுவுமது

9. துணைவரோ டொத்து வாழ்ந்து செல்லுவான் வேறு
[கத்தான்
மனமது சஞ்ச லங்கள் மத்தியில் ரணங்கள் காணும்
வினையதை யொருவர்க் கெண்ணான் விவேகியாம் செலவு
[முள்ளான்
இனமதுக் கிணக்கம் பேசான் இளமன முடைய னாமே.

9. தன் சகோதரர்களுடன் ஒற்றுமையாய்ச் சிலகாலம் வசித்துப் பின்பு வேறிடஞ் செல்லுவான். மனத்தில் சஞ்சலங்கள் ஏற்படும். மத்திய காலத்தில் கடன் தொல்லைகள் உண்டு. எவருக்குந் தீங்கு நினையான். விவேக முள்ளவன். நன்கு செலவு செய்வான். இனத்தாருடன் இணக்க மாகப் பேச மாட்டான். இரக்கம் நிறைந்த மனமுடையவன்.

## இதுவுமது

10. சிலவேநாள் வெளிதே சத்தில் சென்றுபின் வணிபம்
[செய்து
பலம்தாழ்வாய் நிறைவு முண்டு பாரினில் சல்லியங்
[காணான்
விலைமாது மோகம் கொள்ளான் முகமதில் வடிவு காணும்
பலபல உதவி யாலே பலனது பெறுவா னாமே.

10. சில காலம் வெளி நாடு சென்று வியாபாரம் செய்து, பலன்கள் குறைவாயும் மிகுதியாயும் அடைவான். உலகில் கடவுளின்றி வாழ்வான். வேசையர் மீது மையல் கொள்ள மாட்டான். இவன் முகத்தில் மிக்க பிர காசமுள்ளவன். பலவிதங்களில் பலர் செய்யும் உபகாரங்களினால் சிறந்த பயன்களை யடைவான்.

## இதுவுமது

11. ஆதியில் சுகம்குறைச்சல் அவன்தந்தை யாஸ்தி [கொஞ்சம்
பாதியின் வயது மேலாய்ப் பாக்கிய முடைய னுகும்
மேதினில் துணைவ னலே வணிபத்தால் மன நடுக்கல்
தீதிலாப் பின்பால் தீரும் சேயன்தன் னருளி னுலே.

11. இளமைக் காலத்தில் சௌக்கியக் குறைவு ஏற்படும். அவன் தந்தை வைத்த சொத்து சிறிதளவே யாகும். பாதி வயதுக்கு மேல் நல்ல பாக்கியங்கள் உடையவனுய் இருப்பான். வியாபாரத்தில் பங்கு கொண்ட துணைவனுல் மனத்தில் சஞ்சலம் ஏற்படும். ஆனுல், சிறிது காலத்துக்குப் பின்பு கெடுதல்கள் இல்லாமல், (சகோதரனுல்) முருகப்பிரான் அருளினுல் அந்தத் துயர் நீங்கும்.

## சகோதரபாவம்

12. தன்துணை யாண்பால் நான்கு தையல ரிரண்டு [வென்ருேம்
சொன்னதி லாண்பா லிரண்டு தந்தையார் ஜிதங்கள் [காணுர்
அன்னியர் ஆஸ்தி யேதானடைகுவா ரென்று [சொல்வோம்
மன்னியலிருவ ருந்தான் மேவுவார் தந்தை யாஸ்தி.

12. ஜாதகனுடன் பிறந்தவர்களில் ஆண்கள் நால்வர், பெண்கள் இருவர் என்ருேம். மேற் கூறப்பட்டவர்களில் ஆண் மக்கள் இருவர். அவர்கள் தந்தையால் தேடி வைக்கப்பட்ட பொருளை யடையார். வேற்று மனிதர் ஆஸ்திகளை யடைவார்கள் என்று சொல்லுவோம். மற்ற இரு சகோதரர் களும் தந்தையின் ஆஸ்தியை அடைவார்கள்.

## ஜாதகனின் திருமணக் காலமும் மனைவியின் இயல்பும்

13. பின்பாக மிவர்கள் சேதி பேசுவோந் தாயே யாங்கள்
இன்னவன் மன்றல் காலம் இயம்புவோ மிருபா னுலில்
கன்னிகை வருவா ளாகும் காதலி சமயோ கத்தாள்
முன்னமே கோப முண்டு முதல்வியு நடக்கை நன்மை.

13. தாயே! நாங்கள் பின்பாகத்தில் அந்தச் சகோதரர் பற்றிய மற்ற விவரங்களைக் கூறுவோம். இந்த ஜாதகனுக்குத் திருமணம் நடைபெறும்

காலத்தைச் சொல்லுவோம். இருபத்து நான்காம் வயதில் மனைவி வாய்ப்பாள். அவள் சமமான யோக முடையவள். முன் கோபமுடையவள். நன்னடத்தை யுடையவள்.

## மனைவியின் இயல்பு: தொடர்ச்சி

14. பந்துவுக் கினிய ளாகும் பத்தினி வர்க்கம் நேரும்
விந்தையாய் வார்த்தை கூறும் வீண்வம்பில் செல்லா
[ளாகும்
தன்வரன் மனத்துக் கேற்றாள் சந்ததி தோஷ
[மெய்தும்
என்னகா ரணத்தி னாலே இயம்பினீ ரந்தச் சங்கை.

14. உறவினர்கட்கு இனியவளாயிருப்பாள். இவள் வர்க்கத்தினருக்குத் துன்பங்கள் உண்டாம். விரோதமாகப் பேசுவாள். வீணான வம்புச் சொற்களை பேச மாட்டாள். தன் கணவன் மனத்துக்கு உகந்தவள். இவருக்குப் புத்திர தோஷம் ஏற்படும் என்று இவ்வாறு முனிவர் கூறவே, அவரைப் பார்த்து, "என்ன காரணங்களால் புத்திர தோஷம் ஏற்படும் என்று கூறினீர்கள் ?" எனப் பார்வதிதேவி கேட்டனள்.

## இருதாரம் கிரகநிலை

15. அஞ்சினில் புதன் சேய்கேது அலரியுங் கூடி நிற்கத்
துஞ்சிடு மதலை யென்றாேஞ் ஜயமுனி தடுத்துச்
[சொல்வார்
வஞ்சிய ரிரண்டு வென்றாே மறைகுவீ ரந்தச் சங்கை
தஞ்சமா யேழோ னெட்டில் சரத்தினில் இருப்ப தாலே.

15. ஐந்தாம் இடத்தில் (புத்திரஸ்தானம்: லக்கினத்துக்கு ஐந்தாமிடம்; மகரம்) புதன், செவ்வாய், கேது, சூரியன் ஆகியோர் கூடியிருப்பதால் புத்திர தோஷம் ஏற்படும் என்று சொன்னோம். இதனைக்கேட்ட ஜய முனிவர் தடுத்துச் சொல்லுவார்; மனைவியர் இருவர் இந்த ஜாதகனுக்கு என்று சொல்கிறோம். அவ்வாறு வாய்ப்பதற்குக் காரணம் கூறுவீர்! ஏழாம் வீட்டுக்குரிய குரு சரராசியாகிய மேஷத்தில் எட்டாமிடத்தில் இருப்பதால்,

## இதுவுமது

16. தாரமு மிரண்டு வென்றாேம் [1]சௌமியன் தனக் கிரண்டில்
நீர்புகர் இருப்ப தாலே நேராது தாரமி ரண்டு
[2]காரிக்குத் தசமந் தன்னில் கலைமதி யிருப்ப தாலே
கூறுனாேத் தாரமி ரண்டு கோமளி கேட்டி டாயே.

---

1. புதன். 2. சனி.

16. இவனுக்கு மனைவியர் இருவர் என்று கூறினோம். புதனுக்கு இரண்டில் சுக்கிரன் தங்கி யிருப்பதால் மனைவியர் இருவர் நேரார் அதுவுமன்றி, சனிக்குப் பத்தாமிடத்தில் சந்திரன் இருப்பதாலும் இவனுக்கு மனைவியர் இருவர் உண்டுஎனக் கூறமுடியாது. அழகுள்ள உமாதேவியே! கேட்பாயாக.

## ஜாதகன் முற்பிறவி

17. ஒன்பதுக் குடையான் ஆறில் உற்றதால் பூர்வ
[தோஷம்
முன்வினை சொல்லு மென்ன மூலமாங் குடியி லேதான்
இன்னவன் கங்கை சேயாய் எழில்பெறு மனைவி மைந்தர
உன்னத கிருஷி செய்து உத்தமன் ஜீவித் தேதான்

17. ஒன்பதாம் வீட்டுக்குரிய சுக்கிரன் ஆறில் (கும்பத்தில்) தங்கியிருப்பதாலும், முன்வினைப் பயனாலும் இவனுக்குத் தோஷமேற்பட்டது, முற்பிறவியில் என்ன தீச்செயல்கள் செயதான் கூறுங்கள் என்று பார்வதி தேவி கேட்க முனிவர் கூறுவார். மூலமாங்குடி யென்ற ஊரில் இந்த ஜாதகன் வேளாளர் மரபினனாய்ப் பிறந்து, அழகுள்ள மனைவி மக்களைப்பெற்று, உயர்ந்த விவசாயம் செய்து, நற்குணமுடையனாக ஜீவித்துவந்தான்.

## ஜாதகன் முற்பிறவி தோஷம்

18. வாழ்நாளில் வினையைச் சொல்வேன் வடதிசை நதியு
[முண்டு
பாழான மடமு முண்டு பணிசிலை தானுமுண்டு
தாழ்குல மாது போகம் செய்தனன் அதுஓர் தோஷம்
ஊழது இன்ன மொன்று உரைக்கிறோ மாரி கோட்டம்;

18, இங்ஙனம் வாழ்ந்துவரும்பொழுது ஏற்பட்ட தீவினைகளைச் சொல்லுவோம். வீட்டுக்கு வடதிசையில் ஒரு ஆறு ஓடியது, அதன் கரையினில் பாழடைந்த மடம் ஒன்றுண்டு. அவ்விடத்தில் ஒரு நாகத்தின் உருவச்சிலையும் இருந்தது. அங்கு இவன் தாழ்குலத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தியுடன் சேர்ந்தான். அது ஒரு தோஷமாகும். இன்னுமொரு தோஷமும் இவனுக்கு ஏற்பட்டது கூறுகிறோம். மாரியம்மன் கோயிலில் குடிகொண்டு இருந்த,

## இதுவுமது

19. அரவதைக் கொன்று னென்றோம் அணுகிற்று
[அதுவோர் தோஷம்
வருந்துணை தனக்குப் பாகம் வரையாமல் மோசம்
[செய்தான்

கருஆவின் பால்க றந்தான் கலந்தது அதுஓர் தோஷம்
மறலியின் நாட டைந்து மறையவன் வரையப் பட்டு;

19. பாம்பு ஒன்றைக் கொன்றுவிட்டான் என்று சொன்னேம். அந்த் தோஷம் ஒன்று. தன்னுடன் பிறந்தவனுக்குத் தந்தை ஆஸ்தியில் பாகம் பிரித்துப் பத்திரம் எழுதாமல் அவனை மோசம் செய்து எல்லாவறையும் தானே யடைந்தான். சினையுள்ள பசுவின் பாலைக் கறந்தான். அந்தத் தோஷம் ஒன்றும் இவனை யடைந்தது. இறுதியில் மரணமடைந்து மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு;

## இதுவுமது

20. வந்தவ னிவனே யென்ருேம் மா நாகம் கொன்ற
[தோஷம்
விந்தையாய் ஆவின் பாலை வித்தகன் கறந்த தோஷம்
சந்ததம் தோஷ மெய்தும் தாயாதி பாக மீயா
தந்ததோர் பலத்தி னுலே அவன்துணை தன்னுல்
[துன்பம்.

20. இப்பிறப்பில் பிறந்தவன் இவன் என்று கூறினேம். கோயிலில் இருந்த நாகத்தைக் கொன்ற தோஷம், சினையுள்ள பசுவின் பாலைக் கறந்த தோஷம் ஆகிய இந்தத் தோஷங்கள் நிச்சயமா யிவனை யடையும். தாயாதிக்குப் பாகங்கொடுக்காமல் மோசஞ் செய்ததற்குப் பலனுக இவன் சகோதரனுல் துன்பமடைவான்

## முன்வினைத் தோஷங்கள்தீரப் பரிகாரங்கள்

21. நேரிடுமி ரணங்கள் தாமும் நிகர்சுதர் நிலைக்க வேண்டில்
பாரியுந் தானு மாகப் பரங்குன்றந் தன்னில் சென்று
ஆறுமா முகத்தோனுக்கு அபிஷேகித் தருச்சித் தேத்தித்
தேறினேர் நூறு பேர்க்குச் சாதமு மன்பா யீந்து ;

21. கடன் தொல்லைகள் ஏற்படும். இவனுக்குப் பிறக்கும் புதல்வர்கள் நிலைக்கவேண்டுமானுல், மனைவியுந் தானுமாகத் திருப்பரங்குன்றம் சென்று அங்கு எழுந்தருளியுள்ள ஆறுமுகக் கடவுளுக்கு அபிஷேக மர்ச்சனை முதலியன செய்து போற்றி, தகுந்தவர் நூறுபேர்களுக்கு அன்புடன் அன்னம் அளித்து;

## இதுவுமது

22. தன்நக ரடைந்து இன்னேன் சிலையினுல் நாகம் செய்து
அந்நாக ராலயத்தில் அரசின்கீழ் வைப்பா னுகில்

முன்வினை நிவிருத்தி யாகி யுதித்திடுஞ் சுதரா ஞென்று
கன்னிகை யிரண்டு வென்ருேங் கழறின மூன்றுந்
[தீர்க்கம்.

22. தன் நகரத்துக்குத் திரும்பி நாக உருவம் ஒன்று சிலையினுல் செய்து, அந்த நகரத்திலுள்ள கோயிலில் இருக்கும் அரசமரத்தின் கீழே பிரதிஷ்டை செய்விப்பானுகில், முன் ஜன்ம தோஷங்கள் விலகும்; ஆண் குழந்தை ஒன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் பிறக்கும் என்று கூறினேம். சொல்லப்பட்ட மூன்று குழந்தைகளும் தீர்க்க ஆயுளுடன் விளங்கும்.

## தாயின் விவரங்கள்

23. மாதிரு மாநி றத்தாள் வார்த்தையு மடக்க முண்டு
ஒதுவாள் சுகமாய் வார்த்தை உறுதியா மனத்த ளாகும்
காதலி சமயோ கத்தாள் கடந்தோர்க்கு அன்ன மீவள்
பாதக மனமில் லாதாள் பாவையுந் துணையே யொன்று.

23. இந்த ஜாதகனின் தாய் மாநிறமுடையவள். இவளது சொற்களில் அடக்கம் காணப்படும். இனிய சொற்களைப் பேசுவாள், திடமனமுடையவள். சமமான போகமுடையவள். துறவிகளுக்கு அன்னம் அளிப்பாள். மனத்தில் கெட்ட எண்ணம் இல்லாதவள். இவளுக்கு உடன் பிறந்தவள் ஒருத்தி உண்டு.

## தாயின் முற்பிறவி

24. ஆணது விரண்டு வென்ருே மவள்பூர்வம் சொல்லக்
[கேண்மோ
தோணியப்பன் வாழு நாட்டில் தோன்றினுள் தீயின்
[வம்சம்
நாணிய மனத்த ளாகி நாயகி வறுமை யின்றிப்
பூணுவாள் விரதம் மெத்த பூருவ வினைய ல்லாமல்;

24. இவளுக்குச் சகோதரர்கள் இருவர் என்று கூறினேம். இனி, தாயாரின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லக் கேட்பீராக. சிவபெருமான் எழுந்தருளி யுள்ள சீர்காழி ஸ்தலத்தில் அக்னி குலத்தில் தோன்றினுள். பெண்களுக்குள்ள நாணம் மடம் முதலியன நிறைந்த மனத்தை உடையாளாய், தரித்திரமில்லாமல் வாழ்ந்தாள். சிறந்த விரதங்களை அனுஷ்டித்தாள். அதற்கு முன் ஜன்மத்தில் ஏறபட்ட தீவினைகள் இல்லாமல்;

25. மறலியின் பதிக்குப் புக்கு மால்மகன் வரையப் பட்டு
உறைந்தனள் வைசியச் சேயாய் யுறைந்திடும் சொல்ப
[வாயு

வருஞ்ஜன்மம் பிருதிவி தன்னில் மருவுவாள்
[சௌராஷ்டிர வமிசம்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே
[கேளாய்.

25. வாழ்ந்து, மரண மடைந்து, மீண்டும் மகாவிஷ்ணுவின் புதல்வராகிய பிரம்ம தேவனால் படைக்கப்பட்டு, வைசிய குலத்தவளாய் இப்பிறப்பில் பிறந்தாள். இவளுக்கு உடம்பில் சிறிது வாயு உபத்திவம் உண்டு. மறு பிறப்பு காஞ்சிபுரத்தில் சௌராஷ்ட்டிர குலத்தில் தோன்றுவாள். தர்மத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

## தந்தையின் முற்பிறவி

26. பூருவந் தந்தைக் கேதான் புகலுவோ மலைநாடு
[தன்னில்
ஆரியர் குலமு தித்து அவனியில் செட்டுச் செய்து
நாரியு மதலை யுண்டாய் நாட்டினில் வறுமை யின்றித்
தேறினோர் பத்தி பூண்டு சென்றனன் காலன் நாடு.

26. இனி தந்தையின் முற்பிறவி பற்றிக் கூறுவோம். மலை நாட்டில் ஆரியர் வம்சத்தில் பிறந்து, உலகில் பலதொழில்களைச் செய்து, மனைவி மக்களை அடைந்து, தரித்திரம் இல்லாமல், தெளிந்த அறிவுடைய பெரியோர்களிடம் பக்திகொண்டு வாழ்ந்து மரணமடைந்தான்.

## ஜாதகரின் தந்தையின் மறுபிறவி

27. கஞ்சனால் வரையப் பட்டுக் கனதன வணிபம் செய்யும்
மிஞ்சிய குலமு தித்தான் மேவிடும் தந்த நோயும்
தஞ்சமா யிவன்பின் சென்மம் சாற்றுவோம் சேது
[தன்னில்
கொஞ்சுவா ணிக்கு லத்தில் கோமளி கேட்டி டாயே.

27. பிரம்மாவினால் எழுதப்பட்டு பெரியதொரு தன வியாபாரம் செய்யும் குலமாகிய வணிகர் குலத்தில் பிறந்தான். பல்வலி ஏற்பட்டுத் துன்பமுறுவான். ஜாதகருடைய மறுபிறவியைக் கூறுகின்றோம். சேது மகாதலத்தில் இதே (வணிகர்) குலத்தில் வந்து பிறப்பான். அழகான சரீரத்தையுடைய பார்வதி தேவியே! கேளுங்கள்.

## ஜாதகரின் தந்தையின் மரணகாலம்

28. ஆருறு ஆண்டு தன்னி லைப்பசி மாதம் தன்னில்
கூறுவோம் தந்தை கண்டம் குறைமதி தசையி
[லேதான்

காரியின் புத்தி யாகும் கழறின மொழிகுன் றுது
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

28. ஜாதகருக்கு முப்பத்தாறுவது வயதில் ஐப்பசி மாதத்தில் அவருடைய தந்தைக்கு மரணம் சம்பவிக்கும், அக்காலத்தில் சந்திர மகாதசையில் சனி புக்தி நடைபெறும். நாங்கள் கூறிய ஜோசியம் தவறுது. ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே! அம்பிகையே! மேலும் கேட்பீராக.

## ஜாதகரின் தாயின் மரணகாலம்

29. முப்பது ஏழு ஆண்டில் முயர்கும்ப மாதம் தன்னில்
செப்புவோ மன்னை கெண்டம் சந்திரன் திசையி [லேதான்
ஒப்புடன் புந்தி புக்தி உரைந்திடு மந்தக் காலம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

29. ஜாதகருக்கு முப்பத்தேழாம் வயதில் மாசி மாதத்தில் அவருடைய தாய்க்கு மரணம் ஏற்படும். அக்காலத்தில் சந்திர மகாதசையில் புத புக்தி நடைபெறும். (கங்கையைத் திருமுடியில் தரித்தவரும்) பாம்பை சடையில் அணிந்தவருமான சிவபெருமானுடைய தேவியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் பொய்யாகா.

## ஜாதகரின் மரணகாலமும் மறுபிறப்பும்

30. அறுபது யேழு ஆண்டில் ஆவணி மாதம் தன்னில்
திருமக னுடல லேகும் செப்புவோ மிவன்பின் சென்மம்
அருணையில் பிரம்ம சேயாய் அடைகுவா னென்று [சொல்வோம்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

30. ஜாதகர், தனது அறுபத்தேழாம் வயதில் ஆவணி மாதத்தில் இறந்துவிடுவார். அவர் அடுத்த பிறவியில் அருண க்ஷேத்திரமாகிய திருவண்ணாமலையில் அந்தண குலத்தில் வந்து பிறப்பார் என்று சொலலுகிறோம். பெரிய வயிற்றையுடைய விநாயகக் கடவுளைப் பெற்ற தாயே! புண்ணியவதியே! கேளுங்கள்.

*குறிப்பு:—ஜாதகருடைய மரண காலத்தில் குரு மகாதசையில் குரு புக்தி நடைபெறும்.

## வாசியோகமும் கமலயோகமும்

31. சாதகன் பொதுயோ கத்தைச் சாற்றுவோம் வாசி [யோகம்
மேதினில் கமல யோகம் விளம்புவோம் தாயே கேளும்

மாதவர் பத்தி பூண்டும் வள்ளலுக் கடிமை பூண்பன்
மேதினில் நல்லோ னுவன் விருந்தினர் பிரிய னுவன்.

31. ஜாதகருடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம், வாசி யோகம், கமலயோகம் ஆகிய இருவித யோகங்கள் இவருக்கு ஏற்படும். தாயே! கேட்பீராக. மகாவிஷ்ணுவின் மீதும் (மிகுந்த தவம்புரிந்த பெரியோர்கள் மீதும்) பக்தியுடையவர். கொடையாளிகளுக்கு அன்பனுக இருப்பான். உலகில் நல்லவனுக வாழ்ந்துவருவான். விருந்தினர்களை நன்கு உபசரிப்பான்,

32. பின்வய தினிலே யோகம் பொருந்திடும் சல்லியம் [கொள்ளான்
தன்சொல்லு மேன்மை யாகும் தனம் மிகப் பெருக்கம் [செய்வன்
அன்னியர் மதிக்க உய்வன் யாரையும் வசியம் கொள்வன்
உன்னத தலங்கள் செல்வன் உறைந்திடும் திருகு [தானே.

32. ஜாதகருடைய ஆயுளின் பின் பகுதியில் யோகம் ஏற்படும். கடன் முதலிய துன்பங்களை :அடையான். அவருடைய வார்த்தைகட்கு மதிப்பு ஏற்படும். செல்வத்தை அதிகமாக விருத்தியாக்குவார். பிறர் மெச்சும் படியான வாழ்க்கை நடத்துவார். எல்லோரையும் வசீகரிக்கும் இயல்பினன். உயர்ந்த க்ஷேத்திரங்களுக்குச் சென்றுவருவார். சிறிது துன்பமும் ஏற்படும்.

33. என்னகா ரணத்தி னுலே யியம்பினீர் பின்பால் யோகம்
[1]பொன்னவ னெட்டில் நிற்க [2]புகருமே ஆறில் தங்க
கன்னியும் செனன மாக கழறினேம் பின்பால் யோகம்
மன்னிய மூன்றில் [3]காரி மருவின பலன்க ளெவ்வார்.

33. என்ன காரணத்திஞல் இவனுக்கு யோகம், பிற்பகுதியில் ஏற்படும் என்று சொன்னீர்கள்? என்று பார்வதி வினவும்போது, முனிவர் பதில் கூறுகின்றுர். குரு எட்டாம் இடத்தில் இருப்பதாலும், சுக்கிரன் ஆறுமிட மாகிய கும்பத்தில் இருப்பதாலும் பிறந்த லக்கினம் கன்னியானதாலும் யோகம் பிற்பகுதியில் ஏற்படும். மூன்று மிடத்தில் சனி இருப்பதஞல் ஏற்படும் பலன்களைச் சொல்லுங்கள், என்று பார்வதி தேவி வினவினுர்.

34. துணைவனுல் துன்பம் நேரும் செய்தொழில் நஷ்ட [மெய்தும்
குணமாகும் பின்பால் லாபம் கெட்டதோர் வஸ்து பாதி

1. குரு
2. சுக்கிரன்
3. சனி.

சினமுண்டாய் அரசர் தம்மால் சேர்ந்திடும் பால னுக்கு
கனமுடன் வாழ்வா ஞகும் காதலி கேட்டி டாயே.

34. ஜாதகருடைய சகோதரனுல் கஷ்டங்கள் பல ஏற்படும், அவர் செய்துவரும் தொழிலில் நஷ்டம் உண்டாகும். பிறகு அக்கஷ்டங்கள் தீர்ந்து பிற்பகுதியில் லாபம் இடைக்கும். நஷ்டமேற்பட்ட சொத்துக்களில் பாதி அரசரால் திரும்பவும் கிடைக்கும். (வியாச்சியம் முதலிய துன்பங்கள் ஏற்பட்டு நஷ்டமடைந்தாலும் மீண்டும் ஜாதகர் பக்கம் அரசாங்கத்தாரால் தீர்ப்பு சொல்லப்பட்டு திரும்பவும் கிடைக்கும்). பெருமையாக வாழ்ந்துவருவான். தாயே! கேளுங்கள்..

35. செயமுனி யிதனைக் கேட்டுத் திடுக்கென யுரைக்க லுற்ருர்
பயம்வரு மென்று சொன்னீர் பாலகன் வயது என்ன
நயமிலா மதியின் காலம் நடந்திடும் திசைமுன் ஞலே
அயலாஞல் சேத மெய்து மணுகும்பின் தசையி
[லே தான்.

35. ஜய முனி இவ்வார்த்தைகளைக் கேட்டுத் திடீரென்று சொல்லலாஞர், நஷ்டம் வரும் என்று கூறினீர்களே! அஃது எந்தக் காலத்தில்? ஜாதகருடைய எந்த வயதில் அங்ஙனம் நேரும்? என்று வினவிஞர். கஷ்ட காலம் வரும்போது சந்திர மகா தசை நடக்கும். (சந்திரன் விரயஸ்தானமாகிய பன்னிரண்டா மிடமாகிய சிம்மராசிக்கு அதிபஞகிப் பன்னிரண்டாம் இடத்தில் இருப்பதால் கஷ்டங்கள் ஏற்படும்) முன் தசையாகிய சூரிய மகா தசையில் பிறஞல் கஷ்ட நஷ்டங்கள் உண்டாகும். அதறகுப் பின் தசையாகிய;

36: மதிதிசைப் பின்பால் உண்டு வளர்பிறை போலே
[யோகம்
நிதியது பெருகு மென்ரும் நேமியோர் புகழ உய்வன்
சதிசெய்தோர் தம்மால் லாபம் சார்ந்திடும் பால னுக்கு
இதுவின்றி அரசர் தம்மால் யெய்திடும் செட்டால் லாபம்.

36. சந்திர மகா தசையின் பின் பகுதியில் யோகம் ஏற்படும். வளர் பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும். செல்வமும் அதிகமாகும். உலகத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். தீங்கு செய்தவர்களாலும் இவருக்கு லாபம் கிட்டும். இது வல்லாமல் அரசாங்கத்தாரின் உதவியால் நடத்தப்படும் வர்த்தகத்தால் லாபம் இடைக்கும்.

*குறிப்பு:—சகோதரனுலோ அல்லது பிறராலோ வியாச்சியம் முதலியன் ஏற்பட்டு மனத்தாங்கல் உண்டாகிப் பிறகு இவர் பக்கம் ஜயம் கிடைத்து அநுகூலம் உண்டாகும். அரசாங்கத்தில் காண்ட்ராக்ட் முதலியன ஏற்று மிகுந்த லாபத்தை அடைவான்.

## ஜாதகரின் ஜனனகால தசை

37. மாரனு முதிக்கும் காலே மகமது விரண்டாம் பாகம்
கூறுவோம் சிகியிலே தான் கூறிடு மாண்டு நாலும்
தீறமாய்த் திங்கள் நாலும் செப்பினே மிருப்பு மென்றேம்
காரிழை யாளே கேளாய் கழறினேம் பூர்வ பாகம்.

37. ஜாதகர் மகம் நட்சத்திரத்தில் இரண்டாம் பாதத்தில் பிறக்கிறபடியால் ஜனன காலத்தில் கேது மகா தசையில் நான்கு ஆண்டுகளும் நான்கு மாதங்களும் மீதி யிருப்பாகும். தாயே ! முதற் பாகத்தை இதுவரை கூறியுள்ளோம். —V. R. N.

———

# ஜாதகம் 53

## ஜனனகால கிரகநிலே

1. சந்திரன் கேது சிம்மம் சனி[1]வண்டி குருவும் [2]வீணை
[3]புந்தியு [4]மிரவி மேடம் [5]புகர்மீனம் [6]குகனும் [7]நந்தி
பந்தமாய் ராகு கும்பம் பகர்சென்மம் கன்னி யாக
இந்தவாறு நவக்[8]கோ ளுந்தான் இருப்பதால்
[பலன் சொல் வீரே.

1. சந்திரன் கேது சிம்மத்திலும், சனி கடகத்திலும், குரு மிதுனத்திலும்,புதன் சூரியன் மேடத்திலும், சுக்கிரன் [மீனத்திலும், அங்காரகன் விருடபத்திலும், ராகு கும்பத்திலும் பிறந்த லக்கினம் கன்னியாகவுமாக இந்த வித நவக்கிரகங்கள் இருந்தால் ஏற்படும் பலன்களைக் கூறுங்கள்.

கிரகநிலே

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | புதன் சூரியன் | அங்காரகன் | குரு |
| ராகு | இராசி சக்கரம் | | சனி |
| | | | சந்திரன் கேது |
| | | | லக்கினம் |

## ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளம்

2. பார்வதி கேட்கும் போது பராசரும் சொல்லு கின்ருர்
சீர்புகழ் ஆண்பால் சென்மம் செப்புவேன் ஜனித்த
[வில்லம்

1. கடகம்
2. மிதுனம்
3. புதன்
4. சூரியன்
5. சுக்கிரன்
6. அங்காரகன்
7. விருஷபம்
8. கிரகம்

பாரிய ஊரே யாகும் பலசாதிவாச மாகும்
கூரிய கீழ்மேல் வீதி குறித்தனம் வடக்கு வாடை.

2. ஜாதகனின் பிறந்த வீட்டு அடையாளம் (என்னவென) பார்வதி தேவி வினவும் பராசர முனிவர் பதில் கூறுகின்றார். இந்த ஜாதகம் ஓர் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேன். அஃது ஒரு பெரிய ஊர் என்றோம். அவ்வூரில் பல ஜாதிகளைச் சேர்ந்தவர்கள் வசித்து வருவர். அவர் வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்குப் பக்கம் உள்ள வரிசையில் (உள்ளது).

## இதுவுமது

3. வடக்கினில் சந்தி நிற்கும் வன்மையாய் நதியு முண்டு
[1]குடக்கினில் மாரி சாலை கூறுவோம் வடமேல் திக்கில்
மடத்தைக் காளி யுண்டு மருவுவ னீசன் கோஷ்டம்
இடத்துக்கு மேற்கி லேதானிருப்பரே [2]மாயோன் தாமும்

3. வீட்டுக்கு வடக்குப் புறத்தில் ஒரு (நாற்) சந்தி இருக்கும். ஒரு பெரிய ஆறும் வடக்குப் புறம் உள்ளது, மேற்கில் மாரியம்மன் கோவிலும் ஒரு சாலையும் இருக்கும். வடமேற்குத் திக்கில் காளியம்மன் கோவில் ஒன்று உள்ளது. சிவபெருமான் ஆலயம் ஒன்றும் இருக்கும். அவ்வீட்டுக்கு மேற்கில் திருமாலின் ஆலயம் ஒன்று உள்ளது.

4. இவ்வித அடையா ளத்து ளிலகிய கெட்டி வீட்டில்
நவ்விய சைவச் சேயாய் நாயகன் செனிப்பா னம்மா
பவ்விய பலன்கள் யாவும் பகருவோ மிந்நூல் தன்னில்
திவ்விய மாதே யாங்கள் சொலுமொழி குன்றி டாது.

4. இவ்வித அடையாளங்களுள்ள மாடி வீட்டில் சைவ குலத்தவனாக ஜாதகன் பிறப்பான். தாயே! அவனை அடையும் பலன்கள் எல்லாவற்றையும் இந்தச் சாதக நூலில் கூறுகின்றோம். அழகிய தாயே! நாங்கள் சொல்லும் பலன்கள் தவறா.

## ஜாதகனின் தந்தையின் இயல்புகள்

5. தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த [மேனி
பந்தமாய்ச் சமதே கத்தன் பாரினில் கல்வி கொஞ்சம்
வந்தவர்க் கன்ன மீவன் வண்டிவா கனமு முள்ளான்
சிந்தையில் கபடு மில்லான் சித்திர வீடு செய்வன்.

---

1. மேற்குத் திக்கு
2. மகாவிஷ்ணு

5. ஜாதகரின் தந்தையின் குணத்தை நாங்கள் கூறுகின்றோம். சிவந்த நிற முள்ளவன். பொருத்தமாகவும் சமமான சரீர அமைப்பும் உடையவன். உலகில் கல்வியறிவு சிறிதே பெற்றிருப்பான். தன்னையண்டி வந்தவர்கட்கு அன்னமளித்து உபசரிப்பான். வண்டி முதலிய வாகன வசதிகளைப் பெற்றவன். மனத்தில் சூது இல்லாதவன். அழகிய வீடு கட்டுவான்.

## தொடர்ச்சி

6. சிவபத்தி யுடைய னவன் செனங்களுக் குதவி செய்வன்
நவமதில் பூமி சேர்ப்பன் நன்முக வடிவு முள்ளான்
அவனுடை ஞாதி வர்க்கம் அதுவுமே விருத்தியா காது
கரம்காலில் வலிவு முள்ளான் காதலி மேலும் கேளே.

6. சிவபெருமான் மீது பக்தியுள்ளவன். இவனை யண்டி வந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். உலகில் பூமியை விருத்தி செய்வான். (நிலபுலன் வாங்கிச் சேர்ப்பான்.) கணை பொருந்திய அழகான முகத்தை யுடையவன். அவனுக்கு பங்காளிகள் அதிகம் இல்லை. கைகால்களில் வலிவுள்ளவன் (புய பலத்தோன்) தாயே ! மேலும் கேளுங்கள்.

## இதுவுமது

7. பூமியும் விருத்தி செய்வன் புண்ணிய மனத்த னாகும்
மாமிகள் இரண்ட தாகும் வார்த்தையும் தப்பா னாகும்
சேமமாம் குடும்ப முள்ளான் திருமகள் வாச முள்ளான்
தாமத குணத்தா னாகும் சத்தியே மேலும் கேளே.

7. நிலபுலன்களை வாங்கிச் சேர்ப்பான். நல்ல மனமுடைய்வன் (புண்ணியம் செய்யும் இயல்பினன்.) இவனுக்கு இரு மனைவியர் உண்டு. சொன்ன வார்த்தைகளை மீறுதவன். சௌக்கியமான குடும்பத்தை யுடையவன். (இவன் வீட்டில் லட்சுமி யிருப்பாள்.) தாமதமான குணமுடையவன். சக்தியாகிய பார்வதிதேவியே! மேலும் கேளுமின் .

## ஜாதகருடைய சகோதரபாவம்

8. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பால் [மூன்று
கன்னியு மொருத்தி யாகும் கழறுவோ மிதன்மேல் [தோன்றில்
பின்னமா மரிட்ட மாகும் பேசுவோ மாண்பா லுந்தான்
தன்னிய பாக மூன்றும் தானதை யடைவா னம்மா.

8. ஜாதகனுடைய தந்தையின் சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். சகோதரர் மூவரும்சகோதரி ஒருத்தியும் உண்டு. அதற்குப் பிறகு பிறக்கும் குழந்தைகளுக்குத் தோஷமுண்டு. பிறந்தால் தரிக்காது. ஆனல் மூன்று பாகங்களையும் ஜாதகருடைய தந்தையே அடைவான்.

## ஜாதகருடைய தாயின் விவரம்

9. இப்படி யிருக்கும் தந்தை யிவனுக்குத் தார மிரண்டில்
மைப்புடன் இளையா ளுக்கு விளங்கிய புத்திர னென்றேம்
செப்புமாய் முனிவர் கூறத் தேவியும் கேட்க லுற்றுள்
ஒப்புடன் முதல்மா துக்கு உரைப்பீர்கள் மதலை
[யென்றேம்.

9. இவ்வித மிருக்கும் தந்தைக்கு வாழ்க்கைப்பட்ட இருமனைவியரில் இளைய தாரத்துக்குப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று கூறுகின்றேம். இவ்விதமாகப் பராசர முனிவர் சொல்லும் போது, பார்வதிதேவி கேட்க லானுள். ஜாதகனுடைய மூத்த தாயாருக்குக் குழந்தைகள் உண்டோ? கூறுங்கள் என்று வினவினுர்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

10. சத்தியும் கேட்கும் போது சாற்றுவார் புயண்டர் தாமும்
புத்திர ரில்லை யம்மா பெண்பாலும் ஒன்று உண்டு
வித்தகி கற்ப நோயால் விளங்காம லுய்வா ளென்றேம்
பத்தினி யிளையா ளுக்குப் பஞ்சம புத்திர னென்றேம்.

10. என பார்வதிதேவி கேட்கும் போது, புயண்ட முனிவர் பதில் கூறுகின்றுர். தாயே! (ஜாதகனுடைய மூத்த தாயாருக்கு) குழந்தைக ளில்லை, ஆனுல் பெண் குழந்தை யொன்று உண்டு. (அப் பெண் ஜாதகனுடைய மூத்த தாயாரின் பெண் கர்ப்ப நோய் ஏற்பட்டு துன்ப மடைந்து குடும்பம் விருத்தி யில்லாமல் வாழ்ந்து வருவாள்) ஜாதகருடைய ஐந்து மூத்த தாய்கர்ப்ப நோய் ஏற்பட்டு வம்ச விருத்தியில்லாமல் வாழ்ந்து வருவாள். ஜாதகனுடைய தாய்க்கு (தந்தையின் இளைய தாயாருக்கு) சந்ததிகள் உண்டு என்று சொல்லுவோம்.

## ஜாதகருடைய குணங்கள்

11. இன்னவன் நிறம்கு ணத்தை யிசைகிறேம் சிவந்த மேனி
நன்னிய ஒடிசல் தேகி நாயகன் உயர்ந்த மேனி
தன்னிலே அழுத்த நெஞ்சம் சகோதர னுள்ளா னுகும்
பின்னமில் லாமல் தேகம் பேசுவோ மிவனுக் கம்மா.

11. ஜாதகனுடைய நிறம், குணம், இயல்புகள் முதலியவற்றைக் கூறு கின்றேம். சிவந்த நிற முடையவன். மெல்லிய சரீரமுள்ளவன். (ஒல்லியான வன்) நல்ல உயரமானவன். கடினமான மனமுடையவன். (நெஞ்சழுத்த முள்ளவன்) சகோதரர்களைப் பெற்றவன். ஊனமில்லாத தேகத்தைப் பெற்ற வன். என்று சொல்லுகின்றேம், தாயே!

## இதுவுமது

12. அன்னங்கள் போட வல்லான் ஆசார முடைய ஞகும்
பின்னமில் லாத தேகம் பெருநிதி யில்லா ஞகும்
தன்னிலே யீகை கொஞ்சம் தாமத குணத்தா ஞகும்
முன்னமே கிருஷி யுள்ளான் மொழிகுவோம் கேளு
[மம்மா.

12. பிறருக்கு அன்ன மளித்துவர இஷ்ட முடையவன், ஆசாரமுள்ள வன். (குலதர்மத்தை அனுசரித்து நடப்பவன்) ஊன மில்லாத சரீர முள்ள வன். பெரியதொரு செல்வம் இல்லாதவன். சிறிதளவே கொடுக்கும் இயல்பினன். தாமதமான குணமுள்ளவன். பிதிரார்ச்சிதமான நிலபுலன்கள் உள்ளவன், தாயே ! கேட்பீராக.

## இதுவுமது

13. பித்தமே ரோக முள்ளான் பலமிலான் காமி யாவன்
சித்தமே கலக்க முள்ளான் சேயிழை யிருவ ராகும்
புத்திமான் பொறுமை யுள்ளான் புரவலர்க் கினிய ஞகும்
தத்தியு நெய்பா லிஷ்டன் துணையரைச் சொல் வேனம்மா

13. பித்த நோய் உடையவன். பலமில்லாதவன், சிற்றின்பத்தில் அதிக விருப்பமுள்ளவன். மனத்தில் கலக்கமும் (சஞ்சலமும்) உடையவன். இவனுக்கு இரு மனைவியர் உண்டு. பொறுமைசாலி, புத்திசாலி, அரச விசுவாசம் உள்ளவன். அரசாங்கத்தாருக்குப் பிரியமானவன். தயிர், பால், நெய் முதலியவற்றை உண்பதில் பிரியமுள்ளவன், இனி இவனுடைய சகோதர பாவத்தைச் சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய சதோதரபாவம்

14. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா
[லிரண்டு
கன்னியு மூவ ராகும் கழறுவோந் தீர்க்க மாக
அன்னையே யிவர்தன் பாகம் அரைகிறே மிரண்டாம்
[பாகம்
முன்னமே ரிஷிகள் கூற மொழிவளா மம்மன் தாமும்.

14. ஜாதகனுடைய சகோதரரைப்பற்றிச் சொல்லுகின்றோம். இரு சகோதரரும் மூன்று சகோதரிகளும் உண்டு. அவர்கள் நீண்ட ஆயுள் உள்ள வர்கள், தாயே ! இவர்களுடைய விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல் லுகின்றோம் என முனிவர்கள் சொல்லும்போது, பார்வதி தேவி வினவு கிறார்.

15. *துணைகளு மிரண்டு என்றீர் சுந்தர மிரண்டு என்றீர்
அனையவே பாக மூன்றாய் ஆகாத காரணத்தைப்
பனையிலா சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
கனமுடன் பராசர் சொல்வார் காதலி மேலும் கேளே.

15. இவனுக்கு இரு சகோதரர்கள் உண்டு என்று சொன்னீர்கள் இருவரும் ஆண் மக்கள் என்றும் சொன்னீர்கள். ஆகவே இவருடைய தந்தை சொத்து மூன்று பங்காக ஆகாத காரணத்தைக் கூறுங்கள் என்று. பார்வதி தேவி கேட்கும்போது திடமாகப் பராசர முனிவர் பதில் உரைக்கின்றார் தாயே. மேலும் கேளுமின்.

## இளைய சகோதரனுடைய விவரம்

16. *இவனுடைத் துணைவ ரிரண்டி லிளையோனும் வேறாய்
................வயது மத்தில் அடைவனு மெமப திக்கு
நவமதில் புத்திரர் காணோம் நவிலுவோ மவன்தன் [பாகம்
கவனமா யிவன்பால் சேரும் காதலி கேட்டி டாயே

16. ஜாதகனுடைய சகோதரர் இருவரில் இளைய சகோதரன் தனியாகச் சென்றுவிடுவான்......................வயதில் இடையிலேயே இறந்து விடுவான். அவனுக்குப் புத்திரர் இல்லை. அதனால் அவனுடைய பாகம் இவனை (ஜாதகனை) வந்து சேரும்.

## அடுத்த சகோதரனது விவரம்

17. *மற்றொரு பாகத் துக்கு மாரன்தன் சேதி சொல்வேன்
சித்தச னொப்ப தாகும் செட்டுக்கள் செய்வா னாகும்
புத்திமான் பொறுமை யுள்ளான்...........கொள்வன்
பத்தினி யொருத்தி யாகும் பாலர்க ளதிக முள்ளான்.

17. மற்ற பாகத்துக்கு உரிய சகோதரனுக்கான விவரங்கள் கூறி வருகின்றேன். மன்மதனைப்போன்ற அழகிய சரீரமுள்ளவன். வியாபாரம் செய்து ஜீவித்து வருவாள். புத்திசாலி. பொறுமையுடையவன்............... உள்ளவன். ஒரு மனைவியையுடையவனவன். அவன் அதிகமான புத்திர பாக்கிய முள்ளவன்,

18. *இருநிற முடைய னுவ னீகையும் கொஞ்ச முள்ளான்
புரவலர்க் கதிக..........................தமுள்ளான்
பெருநிதி பின்னு லுள்ளான் புகலுவோம் கிராமச் செட்டு
அவனியில் சிலநாள் செய்வன் அறைகுவோ மேலும் [கேளே.

* கோடிட்ட பாகங்கள் ஏட்டில் சிதைந்துள்ளன.

18. இருவிதமான நிறமுள்ளவன். சிறிது கொடுக்கும் குணமும் உள் ளவன். அரசருக்கு.............பெருத்த செல்வம் பிற்காலத்தில் பெற்றிடு வான் சில, நாட்கள் கிராமாதிகாரியாக இருந்துவருவான். மேலும் சொல் லுகின்றோம் கேட்பீராக,

## இருதார விஷயம்

19. *.......................யீச்வரி கேட்க லுற்றுள்
மைப்புடன் சாத கர்கரு விளங்கிடு மனைவி ரெண்டு
செப்பமாய்ச் சொன்னீ ரந்தச் சேதியைச் சொல்லு
[மென்ன
........................உரைக்கிறோம் விபர மாக.

19. .................பார்வதிதேவி கேட்கலானுள். ஜாதகனுக்கு இரு மனைவியர் உண்டு என்று கூறினீர்களே. அதன் விவரங்களைச் சொல்லுங் கள் என்று வினவ...............விவரமாகக் கூறுகின்றோம் என்றார்.

## கிரக நிலை

20. ஏழினுக் குடையோன் தானும் இருந்தகோ ளஷ்ட
[மத்தில்
தாழ்விலா விரயத்தோனும் சார்ந்துமே சனியும் பார்க்க
ஊழியும் பூர்வ மதி லுரைக்கிறோ மிவனுக் கம்மா
ஆழியில் வைசியனாக அவனுமே உதித்துப் பின்னும்;

20. ஏழாம் வீட்டுக் குரிய குரு புதன் வீட்டில் இருந்து கொண்டு, அவ்வீட்டுக்குரிய புதன் எட்டாம் வீட்டில் (மேஷத்தில்) விரயஸ்தானமாகிய ஸிம்மத்துக்குரிய சூரியனுடன் கூடியிருப்பதாலும், அவ்விட்டை சனி பார்ப் பதாலும் (களத்திரதோஷமுண்டு) என்றோம். இது தவிர முற்பிறவித் தீவினையும் சேர்ந்தது அதைச்சொல்லுகின்றோம். தாயே! அவன் முற்பிறவி யில், உலகில், வைசியனாக பிறந்து மேலும்;

## தீவினை

21. செட்டுக்க ளதிகம் செய்து செல்வார்கள் மனைவியோடு
இஷ்ட.................யிவன் செய்தகொடுமை கேளாய்
துஷ்டமாம் புத்தியாலே தொடர்ந்தது வூழிதானும்
குட்டமாய்ச் சொல்லுவோம் யாங்கள் கோதையே மேலும்
[கேளே.

21. வியாபாரம் முதலியன செய்து, புத்திரர்கள் மனைவி இவர் களோடு சுகமாக வாழ்ந்துவந்த காலத்தில் இவன் செய்த தீயவினைகளைக் கேளுங்கள். கெட்ட எண்ணத்தால் இவனுக்கு ஏற்பட்ட கஷ்டத்தைச் சொல் லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

*கோடிட்ட பாகங்கள் ஏட்டில் சிதைந்துள்ளன.

## இதுவுமது (முற்பிறவி வினை)

22. அந்த ஊர் தன்னிலேதான் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தேவரும் வாசம் செய்வர்
மந்திரம் ஓதும்வேத மறையவர் பூசை செய்வர்
மைந்தனும் ஏது செய்தான் மங்கிலிய மின்றி பெண்ணை ;

22. அவ்வூரில் அரசமரத்தின் கீழ் விநாயகரும் நாகமும் சிலையால் செய்துவைக் கப்பட்டிருந்தனர். அங்குத் தெய்வங்கள் வசித்து வந்தனர். அவ்விடத்தில் வேத சாஸ்திரம் பயின்ற அந்தணர் மந்திரங்கள் ஓதிப் பூசை முதலியன செய்துவந்தனர். அந்தவிடத்தில் ஜாதகன் என்ன செய்தான் தெரியுமா? மங்கலிய நாணற்ற பெண்ணிடத்தில் (கைம்பெண்ணை)

## இதுவுமது

23. இன்னவன் போகம் துய்க்க யிவளுக்குக் கருவு தங்கி
மன்னவன் கருவை மாய்க்க மருந்துகள் அனேக
[மீந்தான்
கன்னிதைக் கருவு நீங்கிக் காதலி மரண மானாள்
அன்னமே அந்தப்பாவம் அணுகிற்று யிவனுக் கம்மா.

23. ஜாதகன் சிற்றின்பம் அனுபவித்தான். அதனால் அவளுக்குக் கருப்பம் ஏற்பட்டது. இந்த ஜாதகன் அக்கருவை நீக்கப் பலவிதமான மருந்துகள் கொடுத்துக் கலைத்தான். கருப்பம் கலைந்தது அதனால் அக்கைம் பெண் மரணமடைந்தாள். தாயே! அந்தத் தீவினை இவனைச் சேர்ந்தது. அன்னத்தைப் போன்றவளே!

## முற்பிறப்பு

24. அந்ததோர் சென்மம் தன்னில் அந்தியக் காலம் தன்னில்
.........மனைவி மாண்டு மைந்தனு மரண மானான்
கஞ்சனால் வரையப்பட்டுக் காளையு மிச்சென்மத்தில்
வந்தவ னிவனே யம்மா மங்கையே மேலும் கேளே.

24. அந்தச் சென்மத்தில் இறுதி காலத்தில்.....மனைவி மக்கள் இறந்து இவனும் மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் எழுதப்பட்டு இந் தச் சாதகன் இப்பிறவியில் வந்து பிறந்தான தாயே! மேலும் கேட்பீராக.

## தீவினையகல சாந்தி விபரம்

25. இச்சென்மம் தன்னி லேதா னிலகிற்று முற்பா வங்கள்
கச்சணி மாது வுக்கும் காளைக்கும் தோஷ முண்டாம்

மிச்சமாய்த் தோஷம்தீர முயலுவோம் கிரியை யொன்று
பச்சைமால் பூசை செய்யும் பரன்ராம லிங்கத் துக்கே ;

25. இப்பிறவியில், முற்பிறப்பில் செய்த தீவினைகள் இவனைச் சார்ந்தன. கச்சையணியும் பெண்ணுக்கும் (இவனுடைய மனைவிக்கும்) இவனுக்கும் தோஷமுண்டாகும். இந்தத் தீவினைகள் தீர ஒரு சாந்தி கூறுகின்றோம். பச்சையான திருமேனியை யுடைய ராமபிரான் பூசை செய்து வந்த லிங்கம் இருக்கும் இராமேசுவரத்திற்கு ;

## இதுவுமது

26. சென்றுமே அர்ச்சித் தேத்தி சேதுவில் தீர்த்தம் [தோய்ந்து
.....................................தன் ஈவானுகில்
துன்றியமுன் சென்மத்தில் தோன்றிய தோஷம் தீர்ந்து
குன்றுபோல் புத்திர விருத்தி கூறுவோம் மனைவி [தீர்க்கம்.

26. சென்று அங்குள்ள சிவபெருமானுக்குப் பூசை முதலியன செய்து துதித்து, சேதுவில் (புண்ணிய) ஸ்நானம் செய்து, பெரியோருச்கு ...... கொடுத்து வந்தானுகில், முற்பிறப்பில் செய்த தீவினை விலகி (குன்றுபோல தீரமான) நீண்ட ஆயுளுள்ள புத்திரர் தோன்றுவர். மனைவியும் நீண்ட ஆயுள் உள்ளவளாவாள்.

27. இப்படிச் செய்யானுகில் யிலகாது புத்திரர் தாமும்
செப்பமாய் மனைவி கர்ப்பம் செனித்துப்பின் சேதமாகும்
ஒப்புட னிரண்டா மாது உரைந்திடு மிவனுக் கேதான்
அப்பணி சடையோன் தேவி அருளுவோம் கேளு [மம்மா.

27. இந்தவிதம் செய்துவராவிடில் இவனுக்குப் புத்திர பாக்கியம் இல்லை. மனைவிக்குக் கர்ப்பம் ஏற்பட்டு பிறகு சேதமாகிவிடும். திண்ணமாக முதல் மனைவிக்குத் தீங்கு ஏற்பட்டு இரண்டாம் மனைவி உண்டு என்று சொல்லுகின்றோம். கங்கையைச் சடைமுடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! தாயே! பார்வதியே! நாங்கள் கூறியவற்றைக் கேளுங்கள்.

## முதல் தாரத்தின் புத்திரபாவம்

28. முதல்மாது தனக்குப் புத்திரர் மொழிகுவா யென்று கேட்க
விதியினுல் முன்னுல்............த்தாலே
பதியினில் அஞ்சு விருத்தி பருகாது அதுவும் தீதாம்
மதிநிகர்ப்பெண்பா லொன்று வழுத்துவோம் தீர்க்க மாக.

28. ஜாதகனுடைய முதல்தாரத்துக்குப் புத்திரர்கள் உண்டோ கூறுங்கள் என்று வினவும்போது...........முற்பிறப்புத் தீவினையால் அவளுக்கு ஐந்து புத்திரர்கள் தோன்றுவர். ஆனால் அவர்கள் நிலையார். இறந்துபோம். சந்திரனையொத்த அழகிய முகத்தையுடைய பெண் குழந்தையொன்று நீண்ட ஆயுளுடன் இருப்பாள்.

29. ..............ளென்று வழுத்திய முனிவ ரேகேள்
பெரும்புதல் வரே நீங்கள் பேசுவீ ரென்று கேட்கத்
திருவினை போலே ஆண்பால் செப்பினே......
உருவமாய்ப் பெண்பா லொன்று உரைத்திட்டோ
[மிவனுக் கம்மா.

29. ......என்று கூறிய முனிவரே! கேளுங்கள். பிள்ளைகள் உண்டு என்று நீங்கள் சொன்னீர்களே! அதற்குக் காரணம் என்ன? சொல்லுங்கள் என்று வினவ, லக்குமியைப்போல் அழகுள்ள ஆண் என்று சொன்னேம். அழகிய பெண் ஒருத்தியும் உண்டு என்று கூறுகிறேம்.

மூலம் சிதைந்துள்ளது அதனால் பாட்டு முற்றுப்பெறவில்லை.

30. மற்றது யிரண்டு நஷ்டம் மங்கையே யினிமேலாக
உற்றதோ.........
....................
....................

30. மற்றவர் இரண்டு பேர் இறந்து போவார் தாயே! இனி பிறக்கும் குழந்தைகள்...............

—V. R. N.

# ஜாதகம் 54

## ஜனன கால கிரகநிலை

1. குருமதி கும்பமாகக [1]குசன்ரவி புதனும் [2]வீணை
வரு[3]புகர் [4]கயிறு [5]மொன்பான் [6]மந்தனு[7]மரியில் புக்கத்
தரு[8]சிகி [9]தேளதாகத்தான் சென்மம் கன்னியாக
வருவதால் பலன்கள் யாவும் வருவிப்பீர்தற்கு தானே.

1. குருவும் சந்திரனும் கும்பத்திலும், அங்காரகன் சூரியன் புதன் மிதுனத்திலும், சுக்கிரன் ராகு லக்கினத்துச்கு ஒன்பதாமிடமாகிய ரிஷபத்திலும், சனி சிம்மத்திலும், கேது விருச்சிகத்திலும் இருக்க, பிறந்த லக்கினம் கன்னியானால் ஏற்படும் பலன்களைச் சொல்லுங்கள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | ராகு சுக்கிரன் | அங்காரகன் சூரியன் புதன் |
| குரு சந்திரன் | இராசி சக்கரம் | | |
| | | | சனி |
| | கேது | | லக்கினம் |

குறிப்பு:—ஜாதகன் ஆனி மாதம் கிருஷ்ண பட்சத்தில் பகல் சுமார் 11½ மணிக்குப் பிறந்தவன்.

## ஜாதகன் பிறந்த வீட்டின் விவரம்

2. பார்வதி கேட்கும் போது பராசரும் சொல்ல லுற்றார்
சீர்புகழ் ஆண்பால் சென்மம் சிறப்புள வடதென் வீதி
கூறுவேன் மேற்கு வாசல் குளமது தென்மேல் தங்கும்
மாரியும் காளி தந்தி வடமேல் நிற்குந் தானே.

---

1. அங்காரகன்
2. மிதுனம்.
3. சுக்கிரன்.
4. ராகு.
5. இங்கு ரிஷபம் ஒன்பதாமிடம்.
6. சனி.
7. சிம்மம்.
8. கேது.
9. விருச்சிகம்,

2. எனப்பார்வதிதேவி வினவும்போது, பராசர முனிவர் பதில் கூறு கின்றார். இந்த ஜாதகம் ஒரு புகழ் பெற்ற ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு தெற்கு வடக்கான வீதியில் உள்ளது. மேற்கு நோக்கிய வாயிலை யுடையது. தென் மேற்குத் திக்கில் குளம் ஒன்றிருக்கும். மாரியம்மன் கோயிலும், காளி கோயிலும், விநாயகர் ஆலயம் ஒன்றும் ஆகிய இம் மூன்றும் வடமேற்குப் பாகத்தில் இருக்கும்.

## இதுவுமது — ஜாதகனின் குலம்

3. *அதன்மேல் பால் தடாக முண்டு அணுகிய சிற்றூர்*
*[தன்னில்*
*பதிமுள கௌரி வமிசம் பாலகன் செனிப்பா னம்மா*
*சதமுள தந்தை தாயார் சகோதரர் மாமன் யோகம்*
*இதமுள களத்திர புத்திரர் நிகழ்த்துவோ முன்பின்*
*[சென்மம்.*

3. அதற்கும் மேற்குப் பக்கத்தில் ஒரு நீர் நிலையுள்ளது. இவ்வித அடையாளங்களைக் கொண்ட ஒரு சிற்றூரில் கௌரவமுள்ள வேளாளர் குலத்தில் ஜாதகன் வந்து பிறப்பான். நீண்ட ஆயுள் உள்ள தாய் தந்தையர் சகோதரர், மாமன் முதலியவர்களைப் பற்றியும், யோக வரலாற்றையும், மனத்துக்கு இனிய மனைவி, புத்திர பாக்கியம், முற்பிறவி, மறுபிறவி இவை களைப் பற்றியும் இந்நூலில் கூறுகின்றோம்.

## ஜாதகனுடைய தந்தையின் வரலாறு

4. *தந்தையின் குணத்தை யாங்கள் சாற்றுவோம் சிவந்த*
*[மேனி*
*பந்தமா யொடிச்சல் தேகி பாரினி லூகமுள்ளான்*
*சந்ததம் தியாகி யாவன் சன்மார்க்கன் வெகுபேர்க்*
*[கன்பன்*
*சிந்தையில் கபடு முள்ளான் செட்டுக்க ளதிகம் செய்வன்.*

4. ஜாதகனுடைய தந்தையின் விவரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். அவன் சிவந்த நிற முடையவன். பொருத்தமாகவுள்ள மெல்லிய சரீர முள்ளவன். ஊக முடையவன். தியாக சிந்தையுள்ளவன். (விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை யுடையவன்). நல்லொழுக்கமுள்ளவன். பல பேர்க்கு இனியனாக வாழ்ந்து வருவான். ஆனால் சூதுடைய மனத்தன். பலவித வியாபாரங்களைச் செய்து வருவான்.

## இதுவுமது

5. *வந்தவர்க் கன்ன மீவன் மாலின்மேல் பத்தி யுள்ளான்*
*அந்தணர் நேச முள்ளான் அவன்முக மருவு முள்ளான்*

நிந்தையு முடைய னுவன் நிதானமாய் வார்த்தை
[கூறுவன்
தன்தனம் சேர்ப்பா னுகும் தாட்சிண்யன் தனவா னுமே

5. தன்னை யண்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பவள். திருமாலின். (மகாவிஷ்ணுவின்) மீது பக்தி யுள்ளவன். அந்தணர் மீது பிரியமுடையவன். முகத்தில் ஒரு மரு உள்ளவன். வீண் அபவாதத்தை ஏற்றவன். மெதுவாகப் பேசும் இயல்பினன். சுயார்ச்சிதமான செல்வத்தைப் பெருக்குவான். தாட்சிண்ய குணமுடையவன். செல்வச் சீமான்.

## இதுவுமது

6. அடக்கமு முடைய னுவன் அண்டின பேரைக் காப்பன்
இடுக்கண்க ளெண்ணு சித்தமிவன் பித்த தேக வானும்
நடக்கையு நலம தாகும் நாத்திசைக் கீர்த்தி யேர்ப்பன்
மடக்கொடி யிரண்ட தாகும் மைந்தர்மேல் பத்தி
[யுள்ளான்.

6, அடக்கமாக நடப்பவன். தன்னை யடைந்தவர்களைப் பரிவுடன் காப்பாற்றுவான். பிறருக்குத் துன்பங்கள் எண்ணுத மனத்தன். பித்தரோக முள்ள சரீர முடையவன். நல்ல நடத்தை யுள்ளவன். எல்லாத் திக்குகளிலும் புகழை ஏற்பவன். இவனுக்கு இரு மனைவியர் உளர். தன் குழந்தைகளின் மீது பிரிய முள்ளவன்.

## இதுவுமது

7. கல்வியு மூன்று கற்பன் கணக்கினில் யூக வானும்
இல்லையென் றுரைக்க மாட்டா னெதிரியை நசியம்
[செய்வன்
நல்லவர் பலர்க ளாலே நாட்டினில் கீர்த்தி யேற்பன்
வல்லவ னுகி வாழ்வன் மறுமொழி அதிகம் கூருன்.

7. மூன்றுவிதமான கல்வி கற்றுணர்வான். கணக்கில் ஊகம் அதிகம் உள்ளவன். யாசித்தவர்களுக்கு இல்லை என்று கூருதவன். விரோதிகளை அடியோடு நாசம் செய்பவன். பல நல்லோர்களால் உலகில் புகழ் அடைவான். (பல கலைகளில்) வல்லவனுக வாழ்ந்து வருவான். எதிர் வார்த்தை பேசாதவன்.

## இதுவுமது

8. நினைத்தகா ரியமுடிப்பன் நீள்நில மதிகம் சேர்ப்பன்
அனைத்தையே காக்க வல்லான் அவன்சுகி பொசிப்பா
[னுகும்

கனத்தவர் நேசம் கொள்வன் களத்திரம் தன்னால் லாபம்
இனத்தினில் பிரிய னவன் இச்சையாய் மதுவும்
[கொள்வன்.

8. தான் எண்ணிய காரியங்களை முடித்து வைக்கும் ஆற்றல் பெற்றவன். நீண்ட நிலத்தை அதிகமாக விருத்தி செய்பவன். எல்லாவற்றையும் காக்கும் வல்லமை பெற்றவன். நன்ருக (சுவையுடைய உணவை)ச் சாப்பிடுவதில் பிரிய முள்ளவன். பெரியோர்களின் நட்பை யுடையவன். இவனுடைய (ஜாதகனுடைய தந்தை) பெண்சாதியினுல் லாபம் அடைவான். தன் சுற்றத்தாரான பந்து ஜனங்களிடத்தில் பட்சமுள்ளவன், பிரியத்துடன் மது அருந்துவான்.

## ஜாதகனுடைய தந்தையின் சகோதரபாவம்

9. இன்னவர் துணைவர் தம்மை யியம்புவோ மாண்பா
[விரண்டு
கன்னியு மிவனுக் கில்லை கண்டிடில்லிரண்டு நஷ்டம்
துன்னிய யிவன்க ரத்தில் சொல்லுவேன் பத்ம ரேகை
தன்னிலே சுழியு முள்ளான் சாற்றுவோ மேலும் கேளே.

9. ஜாதகனுடைய தந்தையின் சகோதர பாவத்தைச் சொல்லுகின்ருேம். இரு சகோதரர்கள் மட்டுமே இருப்பர். சகோதரிகள் இல்லை அப்படிப் பிறந்தாலும் இருவர் தோன்றுவர், ஆனுல் மரித்து விடுவார். இவனுடைய கையில் பத்ம ரேகையும் சுழியும் உடையவன். தாயே! மேலும் கேட்பீராக.

## ஜாதகனுடைய விவரங்கள்

10. தந்தைக்கு தாரமிரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
மைந்தனும் சாத கன்தான் மவன் பலன் சொல்லக்
[கேளும்
சந்ததம் சிவந்த மேனி சமதேகன் குள்ள னவன்
நொந்திடும் பேரைக் காப்பன் நுவலுப தேச முள்ளான்.

10. ஜாதகனுடைய தந்தைக்கு ஏற்பட்ட மனைவியர் இருவரில் இளையவளுக்குப் பிறந்தவன் இந்த ஜாதகன். ஜாதகனுடைய குணங்களைச் சொல்லுகின்ருேம். கேளுங்கள் சிவந்த உடல் உடையவன். சமமான சரீர அமைப்புள்ளவன். குள்ளனுக இருப்பவன். துன்பமடைந்தரை ஆதரிப்பவன். உபதேசங்களை ஏற்பவன்.

## இதுவுமது

11. கீர்த்திமான் பெருமை யுள்ளான் கிளைத்திடும் பூமி
[தானும்
பார்த்திபர் நேசம் கொள்வன் பால்பசு விருத்தி
[யுள்ளான்

தீர்த்தங்கள் தோய வல்லான் சித்தினி சாதி யாவன்
ஏத்தவர்க் குதவி செய்வன் இவன்சுகி பொசிப்ப னுமே.

11. கீர்த்தியுள்ளவன், பெருமையுடையவன். இவனுக்குப் பூமி விருத்தியாகும். அரசருடைய (அரசாங்கத்தாருடைய) சிநேகத்தைப் பெறுவான். பால் பாக்கி முள்ளவன். பசுக்கள் அதிகமாகப் பெற்றிருப்பான். புண்ணிய தலங்கள் சென்று நீராடுவதில் விருப்பமுள்ளவன். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன். யாசித்தவர்களுக்கு உபகாரம் செய்பவன். சுகமாக (சுவையான உணவு) அருந்துவதில் பிரிய முள்ளவன்.

## இதுவுமது

12. கல்வியு முடைய னுவன் கணக்கினில் சமர்த்த னுகும்
வெல்லும்சொல் உடைய னுவன் விசேஷமாய்ச் செட்டுச்
[செய்வன்
சொல்லுமே நெறியுள் ளோனும் சுத்தநன் மனத்த னுகும்
மெல்லியர் நேசம் கொள்வன் வீண்வார்த்தை அதிகம்
[பேசான்.

12. கல்வியறிவுள்ளவன். கணக்கில் அதிக சாமர்த்தியம் உள்ளவன். இவனுடைய வார்த்தைக்கு மதிப்புக் கொண்டவன். விதவிதமான வியாபாரங்கள் செய்து வருவான். பேசுவதில் நேர்மை யுள்ளவன். சுத்தமான (தீய எண்ணங்களில்லாத) நல்ல மனமுடையவன். இயல்பிலே மென்மையான மாதரிவிடம் நட்புக் கொள்வான். அனுவசிய வார்த்தைகளைப் பேசாதவன்.

13. அக்கினி வடிவ முள்ளான் அவன்பித்த தேக வானும்
தொக்கவே மிருது ரோமம் துணைவரை யாத ரிப்பன்
பக்குவ சாலி யாவன் பதர்வார்த்தைப் பிரிய மில்லான்
சிக்கன பொருளும் சேர்ப்பன் தேவிமேல் பிரிய னுவன்.

13. தீச்சுடரைப் போன்ற வடிவமுடையவன். பித்த சரீரம் கொண்டவன். சரீரத்தில் மெல்லிய உரோமம் உளளவன். தன்னுடன் பிறந்தவரைப் பரிவுடன் கவனித்து வருவான். பக்குவமாகப் பேசுபவன். அற்ப வார்த்தைகளைப் பேசுவதில் விருப்பமில்லாதவன். சிக்கனமாக விருந்து பொருள் சேர்ப்பதில் நோக்க முடையவன். மனைவியின் மீது அன்பு கொண்டவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவமும் திருமணக்காலமும்

14. இன்னவன் துணைவர் தம்மை இசைகுவோ மாண்பா
[லொன்று
கன்னியு நான்க தாகும் கழறுவோ மிதன்மேல்
[தோன்றில்

பின்னமாம் அரிட்ட மாகும் பேசுவோ மணத்தின் காலம்
அன்னையே யீரே ழாண்டில் அவன்மனை வாய்க்கு
மென்றோம்.

14. ஜாதகனுடைய சகோதர பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் நால்வரும் உள்ளவன். அதற்கு அதிகமாகப் பிறப்பின் அவை நிலையா. சிறுவயதிலேயே இறந்து போவர். ஜாதகனுடைய திருமணக் காலத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். தாயே! ஜாதகனுடைய பதினான்காம் வயதில் அவனுக்குத் திருமணம் நிகழும் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய மனைவியின் விவரங்கள்

15. மாதிவள் வடகீழ் தன்னில் வருவளாம் சிவந்த மேனி
தீதிலா குணத்த ளாகும் செப்புநன் நடக்கை யுள்ளாள்
மேதினில் தீட்ச முள்ளாள் வித்தகி கற்பு முள்ளாள்
கோதிலாப் புத்திர யோகம் கூறுவோம் மேலும் கேளே,

15. ஜாதகனுக்கு வடகிழக்குத் திக்கிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவள் சிவந்த உருக் கொண்டவள். கெட்ட குணம் அற்றவள். நன்னடத்தை யுடையவள். கூரிய அறிவுள்ளவள். தீமையற்ற புத்திர பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். மேலும் கேளுங்கள்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

16. புத்திரர் ஆண்பா லிரண்டு புகலுவோம் கன்னி மூன்று
விருத்தியாம் ஐந்தும் தீர்க்கம் விளம்புவோ மூன்று
[நஷ்டம்
மத்திய சேஷ்ட புத்திரன் தங்காது விரய மாகும்
அத்திமா முகனைப் பெற்ற அம்மையே மேலும் கேளே.

16. ஜாதகருடைய புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். அவனுக்கு இருபுத்திரர்கள் உண்டு என்று கூறுகின்றோம். பெண் குழந்தைகள் மூவர் தோன்றுவார் என்று சொல்லுகின்றோம். இவ்வைந்து பேரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். மூன்று குழந்தைகள் இறந்து விடும். ஜாதகனுடைய மூத்த மகனும் இடையில் தோன்றிய மகனும் நிலையாமல் இறப்பர். யானை முகக் கடவுளைப் பெற்றெடுத்த தாயே! மேலும் கேளுங்கள்.

## ஜாதகனுடைய தாயின் குணங்கள்

17. மாதிரு குணத்தை யாங்கள் வரைகிறோம் சிவந்த மேனி
மேதினில் சமதே கத்தாள் வித்தகி கற்பு மில்லாள்

தீதிலா குணத்த ளாகும் சேர்ந்தவர் தம்மைக் காப்பள்
ஆதியாய்த் தந்தை வீட்டி லவளுமே வாழ்வா
[ளென்றோம்

17. ஜாதகனுடைய தாயின் குண விசேஷங்களைக் கூறுகின்றோம். சிவந்த தேகமும் சமமான உடலமைப்பும் உள்ளவள். ஆனால் கற்பு இல்லாதவள். தீங்கு இல்லாத குண முடையவள். தன்னைச் சேர்ந்தவர்களை (தன்னை அண்டி வந்தவரை) ஆதரித்து வருவாள். ஆனால் ஆரம்ப முதல் தன் தகப்பனார் வீட்டிலேயே அவள் வாழ்ந்து வருவாள் என்று சொன்னோம்.

18. பசிதாக முடைய ளாவள் பந்துவு மெச்ச வாழ்வள்
வசையது கூறு ளாகும் வரனுக்கு நேய முள்ளாள்
ருசிகர வார்த்தை கூறுவள் நுவலுமுன் கோபி யாவள்
இசைகிறோம் துணைவர் தம்மை யியம்புவே பலத்தைக்
[காணோம்.

18. அதிகமான பசியையும் தாகத்தையும் உடையவள். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். கெட்ட வார்த்தைகளைப் பேசாதவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். இன்ப மூட்டும்படியான வார்த்தைகளைப் பேசுவாள் (நல்ல வார்த்தைகளையே பேசுவாள்). ஆனால் அதிகமான முன்கோபமுள்ளவள். இனி அவளுடைய சகோதரரைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஆனால் அவ்விதம் கூறப்பலமில்லை.

## தாயின் குணங்கள்: தொடர்ச்சி

19. தந்தையி னுஸ்தி தன்னைத் தானவளடைவா ளென்றோம்
முந்தவே ரிஷிகள் கூற மொழிவளா மம்மன் தானும்
வந்ததோர் தந்தை சென்மம் வகையுட னுரைப்பீ
[ரென்னப்
பந்தமாய் முனிவர் சொல்வார் பாலகன் தந்தை தானும்;

19. ஜாதகனுடைய தாய், தன் தந்தையின் ஆஸ்தியைப் பெறுவாள். என்று ரிஷிகள் சொன்னவுடன் பார்வதிதேவி வினவலுற்றாள். ஜாதகனுடைய தந்தையின் முற்பிறப்பு வரலாற்றைக் கூறுங்கள் என்று கேட்டார். பொருத்தமாக முனிவர்கள் பதில் சொல்லுகின்றனர். ஜாதகனுடைய தந்தை (முற்பிறவியில்);

20. சோழநாட் டதனி லேதான் தில்லைநாட் டதற்கு
[மேல்பால்
ஏழையாய்ச் சூத்திர னாகி விவனுமே உதித்து மேதான்
வாழ்மனை யாளு முண்டாய் மைந்தரு முள்ளா னாகிச்
சூழ்புவி தன்னி லேதான் சுந்தரன் வாழு நாளில்;

20. சோழ நாட்டில் அஃதாவது தில்லை நடாகிய சிதம்பரத்துக்கு மேற்குப் பக்கத்தில் ஏழையான ஒரு நான்காம் வருணத் தவனுகப் பிறந்தான். அழகிய சரீரத்தைப் பெற்று, அவன் மனைவி மக்கள் முதலியவர்களைப் பெற்று சுகமுடன் வாழ்ந்து வரும் காலத்தில் (உண்டான தீவினையைக் கேளுங்கள்)

## முற்பிறவித் தீவினை

21. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய அரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் வானவர் வம்சம் செய்வார்
மந்திரம் ஓதும் வேத மறையவர் பூசை செய்வார்
சுந்தரன் அன்னிய பெண்டைச் சுகமுடன் போகம்
[துய்த்தான்.

21. அந்த ஊரிலுள்ள ஓர் ஆற்றின் கரையில் இருந்த ஓர் அரசமரத்தின் கீழ் விநாயகக் கடவுள், (சிலையில்) :நாகம் முதலிய பல தெய்வங்கள் வசித்தனர். அத்தெய்வங்களை, வேதங்களை ஓதிய அந்தணர் பூசைகள் முதலியன செய்து வந்தனர். அழகிய சரீரமுடைய இவன் (ஜாதகன் தந்தை) வேற்றுப் பெண் ஒருத்தியுடன் அத்தலத்தில் சிற்றின்பம் அனுபவித்தான்.

## தீவினைப் பலன்

22. போகத்தால் கருவு தங்கிப் புண்ணிய னவிழ்த மீயப்
பாகத்தால் கருவும் வீழ்ந்து பாவையும் மரண மானுள்
ஆகையா லிச்சென் மத்தில் அவன்வெகு தரித்திர னுகி
ஏகமாய் மனைவி மாண்டு வித்தக னலைச்சல் பட்டு.

22. அங்ஙனம் சிற்றின்பம் அனுபவித்தால் அப்பெண்ணுக்குக் கருப்பம் ஏற்பட்டது. அக்கருவை அழிக்க இவன் முயற்சி செய்து பலவித மருந்துகள் கொடுத்ததால் அக்கரு சிதைவுற்றது. அக்கருச் சிதைவினுல் அப்பெண் மரண மடைந்தாள். அதனுல் இப்பிறவியில் அவன் (ஜாதகன் தந்தை) மிகுந்த தரித்திரத்தை யுடையவனுய், மனைவி இறந்து, தனிப்பட்டவனுய் வீண் துன்பங்களை அடைந்து;

23. அரங்கமே சென்ரு னம்மா ஆதிமால் பாதம் போற்றித்
திறமையா யரங்க னுக்குச் சேயனு முழி செய்து
வரவர வுடலம் வாடி மைந்தனு மரண மாகிப்
பெருமையா யிச்சென் மத்தில் பிரமனுல் வரையப்
[பட்டு;

23. ஸ்ரீரங்கம் சென்ருன். தாயே! அங்கு கோயில் கொண்டுள்ள திருமாலாகிய ஸ்ரீரங்கநாதனுக்கு. நல்லெண்ணத்துடனும் பக்தியுடனும் சேவை செய்து வந்தான். முடிவில் சிறிது சிறிதாக உடல் நலம் குன்றி, மரண மடைந்து மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்புட்டுப் பெருமையுள்ள இக்குலத்தில் இப்பிறவியில்;

## ஜாதகனுடைய முற்பிறவித் தீவினை

24. வந்தவ னிவனே யம்மா வன்மையாய் முனிவர் கூற
பந்தமாய் முனிவர் கேட்பார் பாலக னிச்சென் மத்தில்
முந்திய ஊழி தன்னை முயலுவீ ரென்று கேட்கச்
சந்தத முனிவர் சொல்தார் தயாபரி மேலுங் கேளே.

24. பிறந்தவன் இவன் தான். தாயே! என்று முனிவர்கள் திடமாகச் சொல்லும் போது, மற்ற முனிவர் ஒருவர் வினவுகின்றார். ஜாதகனுடைய முற்பிறவித் தீவினையைக் கூறுங்கள் என்று கேட்க, மற்ற முனிவர் ஒருவர் பதில் உரைக்கிறார். தயை யுடைய தாயே! கேளுங்கள். மேலும் சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய களத்திரபாவமும் புத்திரபாவமும்

25. இச்சென்மந் தன்னிலேதா னிவன்முதல் மனையும் [மாண்டு
கச்சணி யிரண்டா மாது காளைக்கு நேரு மம்மா
அச்சுதன் தனக்கு ஊழி அவனுமே செய்த தாலே
மிச்சமாம் புதல்வர் விருத்தி மேதினி லுண்டு கண்டாய்.

25. இப்பிறவியில் இவனுக்கு முதல் மனைவி இறந்து இரண்டாம் மனைவி ஏற்படுவாள். முற்பிறவியில் மகாவிஷ்ணுவாகிய திருப்பதி வெங்கடாசலபதிக்கு பணிவிடைகள் செய்து வந்ததால் ஒரு புத்திரன் திண்ணமாக மீதியாக உலகில் வாழ்ந்து வருவான். தாயே! அறிவீராக.

## ஜாதகனின் முதல்தார விவரம்

26. இதுவலால் மனைவி தன்னா லிணையிலா யோகம் [வாய்க்கும்
மதிநிகர் முதல்மா துக்கு மைந்தரு முண்டோ வென்றால்
சதமுட னேக புத்திரன் சாற்றுவோ மவளுக் கம்மா
விதியினால் முன்னூ ழாலே வித்தகி மரண மாவள்.

26. இவையன்றி ஜாதகனுக்குத் தன் மனைவியால் ஈடில்லாத யோகம் ஏற்படும் என்று கூறுகின்றோம். சந்திரனை யொத்த அழகிய முகத்தை யுடைய முதல் மனைவிக்குப் புத்திர பாக்கியம் ஏற்படுமா என்று வினவினால் :(பதிலை கூறுகிறோம்: கேளுமின்) நீண்ட ஆயுளுடைய ஒரே புத்திரன் அவளுக்கு உண்டு என்று சொல்லுகிறோம். முற் பிறப்புத் தீவினையால் அவள் இடையில் இறந்து விடுவாள். (முழு வயதும் வாழ்ந்திருக்க மாட்டாள்).

## முதல் மனைவியின் மறுபிறப்பும் ஜாதகனுடைய முற்பிறப்பு விவரமும்

27 இன்னவள் பின்சென் மத்தை யியம்புவோம் காஞ்சி
[தன்னில்
அன்னவள் பிரம்ம சேயாய் அவனியி லுதிப்பா ளம்மா
தன்னிலே யிவன்முன் சென்மம் சாற்றுவோம் வேங்க
[டத்தில்
மன்னவன் வன்னிய னுக வந்தவ னிவனே யம்மா.

27. ஜாதகனுடைய முதல் மனைவியின் மறுபிறப்பைப்பற்றிச் சொல்லு கின்றோம். காஞ்சீபுரத்தில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள். தாயே! இனி ஜாதகனுடைய முற் பிறப்பைப்பற்றிச் சொல்லுகின்றோம். திருவேங் கடத்தில் (திருப்பதித் தலத்தில்) வன்னிய குலத்தவனுகப் பிறந்தவன் இவன் என்று கூறுகின்றோம் தாயே!

## முற்பிறப்பில் செய்த நல்வினை

28. ஆலய பத்தி மானுய் அவன் நந்த வனமும் வைத்து
மாலுக்கு அடிமை பூண்டு மனைவிமைந் தருமுண் டாகி
ஞாலமேல் ஊழி யின்றி நாயகன் மரண மாகிச்
சீலமா யிக்கு லத்தில் செனித்தவ னிவனே யம்மா.

28. ஆலயத்தில் உள்ள தெய்வத்தின்மீது பக்தியுடையவனுக வாழ்ந்து, நந்தவனம் (புஷ்பத்தோட்டம்) ஒன்று வைத்துத் திருமாலுக்குப் பல பணிவிடைகள் செய்து, மனைவி மக்களைப் பெற்றிருந்தான். உலகில் வேறு தீவினைகள் ஏதுமின்றி மரணமடைந்து நல்லொழுக்கமுள்ளவனுக இக்குலத் தில் வந்து தோன்றியவன் இவன். அம்மையே!

## ஜாதகனுடைய மறுபிறவி

29. பின்சென்மம் தில்லை தன்னில் பேசுவோம் வைசியச்
[சேயாய்
அன்னவ னுதித்து மேலும் அநேகசெட் டுகளும்
[செய்து
பின்னமில் லாமல் வாழ்வான் பேசுவோ மிதற்கு
[மேலாய்
மன்னிய தந்தை காலம் வரைகிறோம் மேலும் கேளே.

29. ஜாதகனுடைய மறுபிறவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். தில் லைத் தலமாகிய (சிதம்பரத்தில்) வைசிய குலத்தவனுகப் பிறப்பான். பிறந்து பலவிதமான வியாபாரங்கள் செய்து குறைவுகளில்லாமல் வாழ்ந்துவரு

வான். அதற்குப் பிறகு இவனுடைய தந்தையின் இறுதிக்காலத்தைச் சொல்லுகின்றோம் தாயே! கேளுங்கள்.

## ஜாதகன், தாய் தந்தையரின் மரணகாலம்

**30.** *தந்தையின் மரண காலம் சாற்றுவோ முப்பா*
*[னிரண்டில்*
*பிந்திய மன்னை காலம் பேசுவோ மதன்மேல் மூன்றும்*
*எந்தையே யிவனின் கால மியம்புவோ மறுபா னுறும்*
*பந்தமாய்க் கூனி மாதம் பஞ்சமி பிறபக் கத்தில்;*

30. ஜாதகனுடைய தந்தையின் இறுதிக்காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய முப்பத்திரண்டாம் வயதில் அது நேரிடும். பிறகு தாயின் மரணம் மூன்று ஆண்டுகள் கழித்து (முப்பத்தைந்தாம் வயதில்) ஏற்படும். ஜாதகன் தன்னுடைய அறுபத்தாறும் வயதில் பங்குனி மாதம் கிருஷ்ண பஞ்சமி திதியன்று;

## ஜாதகனுடைய இறுதிக்கால தொடர்ச்சியும் யோக விவரமும்

**31.** *மரணமே யாவ னம்மா வரைகிறோம் குடும்பச் செய்கை*
*திரமுள செனனம் தொட்டுச் சேயன்தன் மரண*
*[மட்டும்*
*குறைவிலாச் செல்வ முண்டு கோவுகள் விருத்தி யாகும்*
*நிறையவே பூமி விருத்தி நிகரிலாப் பாக்கியம் சேரும்.*

31. மரணமடைவான் தாயே! மீண்டும் சொல்லுகின்றோம். இனி குடும்ப வரலாற்றைப் பற்றிக் கூறுகின்றோம். இவனுடைய பிறப்பு முதல் இறப்பு வரையில் ஜாதகனுக்குக் குறைவிலாத செல்வம் இருக்கும். பசு முதலிய கால்நடைகள் பெருகும்.. ஏராளமான பூமி விருத்தியாகும். இணை யில்லாத பாக்கியங்கள் இவனை வந்து அடையும்.

## ஜாதகனுக்கு இடையில் ஏற்படும் துன்பங்கள்

**32.** *அதற்குள் சிலது சங்கை அறைகிறோ மிருநான்*
*[காண்டுள்*
*குதற்கமாம் சல்லியப் பாதை கோவுகள் சேத மாகும்*
*விதவித பலிதம் கொஞ்சம் மேதினில் நிந்தை யுண்டாம்*
*சதமுள சஞ்ச லங்கள் தந்தைதாய்க் கணுகு மென்றோம்.*

32. அதற்குள் ஏற்படும் சில துன்பங்களைக் கூறுகின்றோம். ஜாதக னுடைய எட்டாம் வயதுக்குள் கடன் முதலிய உபத்திரவங்கள் ஏற்படும், பசுக்கள் சேதமடையும். பலன்கள் குறையும் (இவனுடைய வார்த்தை

களுக்கு மதிப்புக் குறையும்) உலகில் வீண் அபவாதம் ஏற்படும். நிரந்தர மான மனக்குறைகள் ஜாதகனுடைய தாய் தந்தையருக்கு ஏற்படும் என்று சொல்லுகின்றோம்.

## இதுவுமது

33. *அதற்குமேல் மரண மட்டும் அணுகாது தரித்தி ரங்கள்*
*நிதம்நிதம் லாபம் தானே நீங்கிடும் சல்லியம் தானும்*
*பதியினில் திருவு வாசம் பகையிலாத் தானியம் சேரும்*
*சதியிலாப் பின்பா கத்தில் சாற்றுவோம் சிலது சேதி.*

33. அதற்குப் பிறகு ஜாதகனுடைய இறுதிக்காலம் வரையிலும் இவனுக்குத் தரித்திரம் ஏற்படாது. தினே தினே லாபம் பெருகும். கடன் உபத்திரவங்கள் விலகும். இவனுடைய வீட்டில் இலக்குமி வசித்துவருவாள். விரோதங்கள் ஏற்படாமல் இவனுக்கு தானியங்கள் விருத்தியாகும், பிற்பாகத்தில் சில விவரங்களைக் கூறுகின்றோம். —V.R.N.

## ஜாதகம் 55

### ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் சனியும் [1]சாடி [2]சல்லியன் புதன்[3]சேய் [4]பானு
விந்தையாய்க் கன்னி தங்க [5]வேதியன் ராகு [6]மானில்
பிந்திய [7]ஞானி [8]வண்டி. பேசுவோம் கன்னி சென்மம்
இந்தவாறு கிரகம் நின்று லியம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் சனி கும்பத்திலும், சுக்கிரன், புதன், அங்காரகன், சூரியன் கன்னியிலும், குரு, ராகு மகரத்திலும், கேது கடகத்திலும், பிறந்த லக்கினம் கன்னியுமாக இவ்விதம் நவக்கிரகங்கள் இருந்தால் ஏற்படும் பலனைக் கூறுங்கள் என்று (பார்வதி தேவி வினவும்போது) (ஜன்ம நட்சத்திரம் பூரட்டாதி மூன்றும்பாதம்)

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சந்திரன் சனி | இராசி சக்கரம் | | கேது |
| குரு ராகு | | | |
| | | | சுக்கிரன் புதன் அங்கா. சூரியன் லக்கினம் |

### ஜாதகனுடைய வீட்டுநிலை

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது செனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் [9]வெண்சுடர் [10]குடகு வீதி

---

1. கும்பம்
2. சுக்கிரன்
3. அங்காரகன்
4. சூரியன்
5. குரு
6. மகரம்
7. கேது
8. கடகம்
9. சூரியன்
10. மேற்கு

குத்தமாய்க் [1]காலன் வாசல் கூறுவோ மேற்கில்
[[2]மாயோன்
[3]சித்தகன் தனையெ ரித்த தேவனும் வடகீழ் தன்னில்.

2. அத்திரி முனிவர் பதில் கூறுகின்றார். இந்த ஜாதகம் ஒரு ஆண் மகனுடையது. ஜாதகனுடைய வீட்டைப்பற்றிச் சொல்லுகின்றோம். கிழக்கு மேற்கான ஒரு தெருவில் தெற்குப்புறம் வாயிலையுள்ள ஒரு வீட்டில் பிறந்தவன். மற்ற விவரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். மேற்குப் புறத்தில் மகாவிஷ்ணுவின் ஆலயம் உளது. மன்மதனை எரித்த சிவபெருமான் வடகிழக்குப் பக்கத்தில் கோயில் கொண்டிருப்பார்.

## இதுவுமது

3. அருகினில் காளி தங்கும் அருகரும் தென்கீ ழாகும்
திருவுரை சமவூர் தன்னில் செனிப்பனு மருகர் வர்க்கம்
வரும்தந்தை தாயின் யோகம் அவன்துணை களத்திர
[புத்திரர்
உரைக்கிறோ முன்பின் சென்மம் உத்தமி கேட்டி டாயே.

3. (வடகிழக்குப் பக்கத்தில், சிவன்கோவிலுக்கு) பக்கத்தில் காளி கோவிலும், அருக தேவன் கோவில் தென்கிழக்குப் புறத்திலும் உள்ள ஒரு சம நிலையான ஊரில் ஜாதகன் பிறப்பான். அவ்வூரில் இலக்குமி வசித்து வருவாள் (லட்சுமி கடாட்சம் பெற்ற ஊராகும்) ஜாதகன் சமண வமிசத்தில் தோன்றுவான். அவனுடைய தந்தை தாயரின் யோக விவரம், அவனுடைய சகோதரர், மனைவி, மக்கள், முற்பிறப்பு, மறுபிறப்பு விவரங்கள் ஆகியவற்றை இச்சோதிட நூலில் கூறுகின்றோம். உயர்ந்தவளே! கேளுங்கள்.

## தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணைஆண் நஷ்டம் சத்திமார் நான்கு
[என்றோம்
பிந்தியும் சிலது நாளில் போகுமே சிலவே யென்றோம்
விந்தையாய்த் தந்தை சேதி விளம்புவோ மாநி றத்தான்
வந்ததர்க் கன்ன மீவன் வாக்கது தப்பா தாகும்.

4. ஜாதகனுடைய தந்தையின் சகோதரர் நிலையார் (பிறந்து இறந்து விடுவர்) சகோதரிகள் நால்வர் என்று சொல்லுகின்றோம், அவர்களில் சிலர் சிறிது காலத்திற்குப் பின்னர் இறந்துவிடுவர் என்று சொல்லுகின்றோம்.

1. தெற்கு
2. மன்மதன் (காமன்)
3. மகாவிஷ்ணு

இனி தந்தையின் விவரங்களைப்பற்றிக் கூறுகின்றோம். மாநிற முடையவன். (கருப்பும் சிவப்பும் கலந்த மேனியன்.) யாசித்தவர்கட்கு அன்னமளிப்பான், (நாங்கள் கூறியது தவறாது) சொன்னசொல் தவறாதவர்.

## தந்தையின் விவரம்

5. ஊகவான் பலபேர் நேயன் உள்மனம் கபடு மில்லான்
பாகமாய்ப் பேச வல்லன் பாருகள் விருத்தி செய்வன்
நாகரி கங்க ளுள்ளான் நல்லோர்க்கு நல்ல னவன்
ஆகம நூல்க ளிச்சை அடைந்தோரை ஆதரிப்பன்.

5. ஊகமுடையவன், பல பேருக்கு நண்பனாக விருப்பவன். விளை நிலங்களைப் பெருக்குவான். பொருத்தமாகப் பேசுபவன், மனத்தில் வஞ்சகம் இல்லாதவன். நாகரிகத்துக்கு ஏற்ப வாழ்ந்துவருவான். நல்லவர்கட்கு நல்லவனாகவும், வேத சாஸ்திரங்களைக் கற்றுணர ஆவல் உடையவனாகவும் இருப்பான். தன்னை வந்து அண்டியவரைப் பரிவுடன் கவனித்து வருவார்.

## இதுவுமது

6. குத்தமுன் கோபி யாவன் பிறர்குற்றம் சொல்ல னாகும்
சுத்தவான் வறுமை காணான் சுகதுக்க முடைய னாகும்
பத்தினி நேய னவன் பரவுப காரம் செய்வன்
உத்தமர் நேசம் கொள்வன் உண்மையை வெளிக்காட்
[டாதான்.

6. முன்கோபி, பிறருடைய குற்றத்தைச் சுட்டிக் காட்டாதவன் (அனாவசியமாக பிறர் மீது குற்றம் கூறாதவன்), சுத்தமுடையவன். தரித்திரமில்லாதவன், சுகதுக்கங்கள் சமமாகப் பெற்றவன், மனைவியின்மீது பிரியமுள்ளவன் (மனைவிக்குப் பிரியமானவன்) பிறருக்கு உதவி செய்வதில் விருப்பமுடையவன். உயர்ந்தவருடைய நட்புக்கொண்டவன், உண்மைநிலையை வெளிக்காட்டாதவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

7. இந்நெறி யுடையா னுக்கு யிவனுமே யுதிப்பா னாகும்
அன்னவன் துணையாண் காணான் அழகிய கன்னி
[மூன்று
இன்னவர் தீர்க்க மெய்து மியம்புவோம் பின்பால் சேதி
தன்னிலே இவன்கு ணத்தைச் சாற்றுவோம் தாயே
[கேளும்.

7. இவ்வித குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகன் தோன்றுவான் என்றோம் அவனுக்கு சகோதரர் இல்லை. அழகுள்ள சகோதரிகள் மூவ

ரவர். அவர்கள் நீண்ட ஆயுள் உடையவர் என்று சொல்லுகின்றோம், பிற்பாகத்தில் அவர்களைப்பற்றிக் கூறுவோம். முதலில் ஜாதகனுடைய விவரங்களைப்பற்றி உரைக்கின்றோம் தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய இயல்புகள்

8. மானிறம் சமதி ரேகம் மறுத்துரை அதிகம் கூருன்
பான்மையாய்ப் பேச வல்லன் பாரினுல் சீவிப் பானும்
ஊனமில் லாத தேகி ஊகவான் தெய்வ பக்தி
ஈனரைச் சேரு னுகும் இடர் செய்யான் யாவ ருக்கும்.

8. கருப்பும் சிவப்பும் கலந்த நிறமுடையவன். சமமான சரீர அமைப்பு உள்ளவன், எதிர்வார்த்தை அதிகம் பேசாதவன். பொருத்தமாகப் பேசுபவன், விளை நிலங்களால் ஜீவித்து வருபவன் (விவசாயி). குறைவுகள் இல்லாத தேகமுள்ளவன். ஊக்கமுடையவன் தெய்வபக்தி கொண்டவன் அற்பர்களுடன் சகவாசம் செய்யாதவன். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவன்.

9. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உறைப்பொடு புளிப்பி
[லிச்சை
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சதுஷ்பாதம் விருத்தி
[யுள்ளான்
பண்டுநாள் பூமி விருத்தி பரிந்துப சாரம் செய்வன்
கண்டிதம் உரையா னுகும் கபடுண்டு வெளிக்காட்
[டாதான்.

9. (சுவையான) சுகமாக உணவை அருந்துவதில் பிரியமுள்ளவன். உறப்பு புளிப்பு இவ்விரண்டிலும் விருப்பும் அதிகம் கொண்டவன். குளிர்ந்த தமிழில் உள்ள நுட்பங்களை நன்கு ஆருய்ந்து அறிவான். கால் நடை விருத்தியுடையவன். வெகு காலமாக உள்ள (பிதுரார்ஜிதமான) விளை நிலங்களைப் பெருக்குவான்.) உள்ளன்புடன் உபசரிப்பான். எதையும் கண்டித்துப் பேசாதவன். வஞ்சகமனத்தினன் ஆனுல் பிறர் அதை அறியும்படி நடவாதவன்.

## இதுவுமது—சிம்மரேகை

10. அரிரேகை கரத்தில் தோன்றும் ஆபத்துக் குதவி
[செய்வன்
நரைமல ரிஷ்டம் கொள்வன் நாயகன் வறுமை காணுன்
தரையது துணைவி யாலே சார்ந்திடும் பின்பால்
[சொல்வேன்
பொரைசொலான் யிளம னத்தன் புண்ணிய வதியே
[கேளாய்.

10. கையில் விஷ்ணுரேகை யுள்ளவன் துன்பமடைந்தவர்கட்கு உப காரம் செய்பவன். வெண்மையான புஷ்பங்கள்மீது விருப்பம் கொண்ட வன். சிறிதளவும் தரித்திரமில்லாதவன். ஜாதகனுக்கு மனைவியினால் பூமி வந்து சேரும். அது விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். பொய் சொல்லாதவன். இளகிய மனமுடையவன். புண்ணியமுள்ள வளே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய திருமணக் காலமும் மனைவியின் இயல்புகளும்

11. இருபது விரண்டு வாண்டி லிவனுக்குப் பாரி
[வாய்க்கும்
வரும்கன்னி உள்ளு ராகும் மாதுவின் குணத்தைச்
[சொல்வேன்
திருமக ளொப்ப தாகும் சிறுத்தவர்க் குதவி செய்வள்
கரைமனம் முன்கோ பத்தாள் காதலி நடக்கை நன்மை.

11. ஜாதகனுக்கு இருபத்திரண்டாம் வயதில் திருமணம் நிகழும். அவ னுக்கு வாய்க்கும் மனைவி சொந்த ஊரிலிருந்தே வருவாள். இனி அப் பெண்ணின் குணங்களைச் சொல்லுகின்றோம் கேட்பீராக. அவள் லக்கு மியை யொத்த அழகுடையவள். துன்பமடைந்தவர்கட்குப் பரிவுடன் உப காரம் செய்பவள். இளகிய மனமும் முன்கோபமும் கொண்டவள். நன் னடத்தையுள்ளவள்.

## ஜாதகனுடைய மனைவியின் இயல்புகளும் சகோதரபாவமும்

12. விரதங்கள் பூண்பா ளாகும் மெல்லிநன் னடக்கை யாகும்
வரன்மனம் போலே வாழ்வள் வணங்கினோர்க் குதவி
[செய்வள்
பெருமையாய்க் குடும்பி யாவள் பேசுவோம் துணையா
[ணிரண்டும்
மருவிடும் பெண்பா லொன்று மத்தியில் மரண மாகும்.

12. நோன்புகள் ஏற்பவள். மெல்லிய சரீரமுடையவள். நன்னடத்தை யுள்ளவள். தன் கணவன் மனமறிந்து வாழ்ந்துவருபவள். தன்னை வந்து யாசித்தவர்களுக்கு இல்லையென்று கூறாமல் உபகாரம் செய்பவள். பெரு மையுள்ள குடும்பத்தை நடத்துபவள். அவளுடைய சகோதரரைப்பற்றிச் சொல்லுகின்றோம். இரு சகோதரரும் ஒரு சகோதரியும் மட்டும் இருப்பர். இடைக்காலத்தில் சகோதரி இறந்துவிடுவாள்.

13. வரைகிரே மாண்பால் ரெண்டு வளமுள குடும்பி யாவர்
பொருள்பூமி யுடைய ஞவர் பெருமையும் புகழு மேற்பர்
அரசர்பூ சிதமு மாவர் அநேகருக் குதவி செய்வர்
கிராமாதி கார முண்டு கண்ணியக் குடும்ப மாவர்.

13. அப்பெண்ணுக்கு (ஜாதகனுடைய மனைவிக்கு) இரு சகோதரர் மட்டும் இருப்பர். செல்வம் கொழிக்கும் குடும்பத்தையுடையவர். பூமி விளை நிலங்கள் செல்வம் இவற்றைப் பெற்றவர். கீர்த்தியும் பெருமையும் கொண்டவர். அரசரால் (அரசாங்கத்தாரால்) கொண்டாடப்பட்டவர். பலபேருக்கு உபகாரி. அவர் கிராமாதிகாரியாகப் பதவி ஏற்பர். கௌரவமுள்ள குடும்பமுள்ளவர்.

## ஜாதகனுடைய மனைவியின் விவரம்

14. கன்னிகை தனக்குச் சொல்வேன் காரக தேவி யாவள்
பொன்பணி யுடைய ளாகும் பிறந்தக முதவி யுண்டு
பன்னியே பேச வல்லாள் பதர்வார்த்தை சொல்லா [ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அம்பிகை யாளே கேளாய்.

14. மனைவியின் சரீரத்தில் காரக நோயும் இருக்கும். பொன்னுபரணங்களுள்ளவள். தான் பிறந்த வீட்டிலிருந்து உதவி செய்பவள். பன்னிப் பன்னிப் பேசும் இயல்பினள். அற்பவார்த்தை பேசாதவள். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்துவருவாள். தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

15. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணோம்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று [சொல்வோம்
வித்தகர் பராசர் சொல்வார் விளம்பினீர் புத்திர சங்கை
குத்தத்தைச் சொல்லு மென்ன கூறுவா ரத்திரி தாமும்.

15. ஜாதகனுடைய புத்திர பாக்கியத்தைப் பற்றிச் சொல்லப் பலமில்லை. ஒருக்கால் பிறந்தபோதிலும் திண்ணமாக இறந்துவிடும் என்று சொல்லுவோம். எல்லாம் அறிந்த அத்திரி முனிவர் இவ்விதம் சொல்லும்போது பராசர முனிவர் வினவுகின்றார். "புத்திர தோஷம் உண்டு" என்று சொல்லுகிறீர்களே அதற்குக் காரணமென்ன? (ஜாதகர் செய்த) தீங்கு விவரங்களைச் சொல்லுங்கள் என, அத்திரி முனிவர் பதில் உரைக்கின்றார்.

## புத்திரதோஷம் ஏற்படுதற்குரிய கிரகநிலே

16. அஞ்சினில் ராகு மன்னன் அமர்ந்திட அஞ்சோ ஞறில்
கஞ்சமா யிருப்ப தாலே சாற்றிஞே மந்தச் சங்கை
மிஞ்சிய சென்மம் தன்னில் மேவிற்று விஃனய னேகம்
வஞ்சஃன யென்ன செய்தான் வருவிப்பீர் முனியே
[நீர்தாம்.

16. புத்திரஸ்தானமாகிய ஐந்தில் ராகு, குரு இருப்பதாலும் அந்த ஸ்தானமாகிய, மகரத்துக்கு உரிய சனி ஆறும் இடத்தில் (கும்பத்தில்) இருப்பதாலும் புத்திரதோஷம் உண்டு என்று சொன்ஞேம். இதுவும் தவிர முன் பிறவியில் செய்த பல தீவிஃனகளும் இவஃனத் தொடர்ந்தன என்ன தீவிஃனகள் செய்தான்? அவற்றைக் கூறுங்கள் முனிவரே! தாங்கள்.

## ஜாதகனுடைய முற்பிறப்பு வரலாறு

17. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிருேம் புலியூர்
[தன்னில்
அன்னவன் கங்கை சேயாய் அணுகியே மஃனவி
[மைந்தர்
உன்னதக் குடும்பி யாகி உத்தமன் வாழு நாளில்
பின்னமாய் வந்த வூழைப் பேசுவோம் தாயே கேளும்.

17. ஜாதகன் முற்பிறவியில் புலியூரில் வேளாள குலத்தவஞகப் பிறந்தவன். மஃனவி, மக்கள் இவர்களுடன் உயர்ந்த குடும்பத்தையுடைய வஞக வாழ்ந்துவருங்காலத்தில் துன்பமாக வந்த தீவிஃனயைக் கூறுகின் ருேம் தாயே! கேளுங்கள்.

## தீவிஃனகள், விதவை சம்போகம் முதலியன

18. மறைமாது விதவை போகம் மாரனும் செய்தா
[னென்ருேம்
கருவதை யழித்தா னென்ருேம் கலந்தது வதுவோர்
[தோஷம்
பரம்பரை நாக மில்லம் பற்றிற்று ஓர்நாள் தன்னில்
குறைவாக மகுடம் கொண்டு குலவிற்று முற்றம்
[தன்னில்.

18. கணவஃன யிழந்த அந்தணகுலப் பெண்ஞெருத்தி, அருகில் வாழ்ந்து வந்தாள். இந்த ஜாதகன் அவளுடன் சிற்றின்பம் அனுபவித்துவந் தான். அதஞல் அவளுக்குக் கருப்பம் ஏற்பட்டது. அக்கருவை அழித்துவிட் டான். அக்கருவழித்த தோஷம் ஒன்று தொடர்ந்தது. வெகு காலமாக ஒரு

நல்ல பாம்பு இவனுடைய விட்டில் வசித்து வந்தது. அது ஒருநாள் சிறிய படம் எடுத்து வீட்டு வாசலில் வந்து ஆடியது.

19. அரங்கமே செய்தும் போகா தடித்தனன் கழியி ஞலே
மாலியின் பதிக்குச் செல்ல வடைந்தது அந்தத் தோஷம்
திருமகன் அந்தி யத்தில் சேயர்கள் யிலலா தாகி
உரைந்தனன் கால ஞடு உலகவன் வரையப் பட்டு;

19. அச்சர்ப்பத்தை ஆட்டிவைத்துப் பிறகு வெளியே போகவிடாமல் அதைத் தடியினுல் அடித்துக் கொன்றுவிட்டான். அச்சர்ப்பம் இறந்தது. அந்தத் தோஷமும் இவனைச் சார்ந்தது. ஜாதகன் தன் இறுதிக்காலத்தில் குழந்தைகள் இல்லாதவனுகி மரணமடைந்து, மீண்டும் உலகத்தைப் படைக்கும் பிரமதேவனுல் பிரம்மலிபியுடன் எழுதப்பட்டு;

## இதுவுமது

20. வந்தவ னிவனே யென்ருேம் மறைமாது கருவின் [தோஷம்
சந்தத நாக சாபம் சார்ந்ததால் சுதர்கள் தோஷம்
விந்தையாய் மனைவி யாலே மேவிற்று சிலவே தோஷம்
அந்தஊழ் சொல்லு மென்ன அத்திரி புகலு கின்ருர்.

20. பிறந்தவன் இந்த ஜாதகன் என்று கூறுகின்ருேம். அந்தணப் பெண்ணின் கருவை யழித்ததால் ஏற்பட்ட தோஷம், வெகுகாலமாக வாழ்ந்த சர்ப்பத்தின் சாபமும் இரண்டும் தொடர்ந்ததால் இவனுக்குப் புத்திர தோஷம் ஏற்பட்டது. அதுவும் தவிர இவனுடைய மனைவியினுலும் சில தோஷங்கள் ஏற்பட்டன. அந்தத் தீவினை என்னவென்பதைக் கூறுங்கள் என்று வினவ அத்திரி முனிவர் சொல்லுகின்ருர்.

## ஜாதகனுடைய மனைவியின் முற்பிறவி

21. மாதுமுன் சென்மம் சொல்வேன் மாயூரம் அருகில் [மேற்கில்
கோதிலா சிறுவூர் தன்னில் குதித்தனள் வைசியச் [சேயாய்
மேதினில் சுகமாய் வாழ்ந்து விளங்கிய சுதர்க [ளுண்டாய்க்
காதலி வாழு நாளில் கழறுவோ மூழி தானும்.

21. மனைவியின் முற்பிறவியைப் பற்றிக் கூறுகின்ருேம். மாயவரத்துக்கு அருகில், மேற்குப் பக்கத்தில், தீங்குகளில்லாத ஒரு சிற்றூரில் வைசிய குலத்தவளாகப் பிறந்தவள். உலகில் சௌக்கியமாக வாழ்ந்துவந்தாள்,

குழந்தை குட்டிகளுடன் செழிப்பான குடும்பத்துடன் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம்.

## பூனையை அடித்துக்கொன்ற தோஷம்

22. இல்லத்தில் மார்ச்சா லம்தா னிடறுக ளதிகம் செய்ய
வல்லியும் கோபத் தாலே வாட்டினுள் கழியி னாலே
அல்லலாய்க் கால னாடு அடைந்தது மிருகம் தானும்
புல்கிற்று அந்தத் தோஷம் புகலுவோம் வேறு ஒன்றும்.

22. இவளுடைய வீட்டில் பூனையொன்று உபத்திரவம் அதிகம் செய்துவந்தது. இப்பெண் அதனால் கோபங்கொண்டு ஒரு தடியால் அதை அடித்தாள். அப்பூனை துடிதுடித்து இறந்தது. அந்தத்தோஷம் இவளை வந்தடைந்தது. இதுவும் தவிர வேறு ஒன்றும் சொல்லுகின்றோம்.

## முனிவரின் சாபம்

23. கருமுனி சாப மொன்று கலந்தது இவளுக் கேதான்
திருமக ளந்தி யத்தில் சேயர்கள் தோஷ மாகி
உரைந்தனள் சேதுக் கேதா னுயர்வான தலங்கள் [சென்று
[1]மறலியன் பதிக்குப் புக்கு [2]மால்மகன் வரையப் பட்டு;

23. இது தவிர, முனியின் (கருப்பண்ணசாமி) சாபம் ஒன்றும் இவளுக்கு ஏற்பட்டது. அவள் அதனால் தன் இறுதிக்காலத்தில் புத்திரர்களை இழந்தாள். பிறகு சேது முதலிய உயர்ந்த புண்ணியத் தலங்களுக்குச் சென்று மரணமடைந்தாள். மீண்டும் பிரமதேவனால் பிரமலிபியினால் எழுதப்பட்டு;

## சேதுவில் நீராடியதன் பலன்

24. வந்தவ ளிவளே யென்றோம் மைந்தர்கள் தோஷ [மெய்தும்
முந்திய சென்மம் தன்னி லுதித்தனள் வைசியச் [சேயாய்
இந்ததோர் சென்மம் தன்னி லிக்குல முதிப்ப தென்ன
சந்ததம் சேது தீர்த்தஞ் சென்றதோர் பலத்தி னாலே.

24. பிறந்தவள் இவள் (ஜாதகனின் மனைவி) என்று சொன்னோம். நாங்கள் கூறியபடி புத்திரதோஷம் வந்தடையும். முற்பிறப்பில் வைசிய

1. எமன்
2. திருமாலின் மகன்=பிரமன்.

குலத்தவளாகப் பிறந்தவள் இப்பிறவியில் உயர்ந்த குலத்தில் பிறப்பதற்குக் காரணமென்ன? கூறுங்கள் என்று வினவ, முனிவர் பதில் கூறுகின்றார்.

25. குலமது உயர்வ தாச்சு குலவிய தோஷம் தானும்
இலகாதோ சொல்லு மென்ன மார்ச்சால தோஷந் [தானும்
பலமாகும் நீங்கா தென்றோம் பேசுவோ மதற்கு சாந்தி
குலதெய்வ மருக ருக்குக் [1]கோல்மாதம் அபிஷே கித்து;

25. உயர்ந்த குலத்தில் பிறவி ஏற்பட்டது. இவளுக்கு ஏற்பட்ட தோஷங்கள் விலகாவோ சொல்லுங்கள் என்று கேட்கும்போது முனிவர் பதில் உரைக்கின்றார். பூனையைக் கொன்ற தோஷம் பெரியது. அது விலகாது. ஆனால் அதற்குச் சாந்தியொன்று கூறுகின்றோம். குல தெய்வமாகிய அருகதேவனுக்கு ஐப்பசி மாதத்தில் அபிஷேகம் முதலியன செய்து;

## மனைவிக்குச் சாந்தி விபரம்

26. சதுர்தசி விரதம் கொள்ள சார்ந்த தோர் விடமும் [போக்கி
மதன்போலே சுதர்கள் தோன்றும் ஆணது ஒன்றே [தீர்க்கம்
மதிமுகப் பெண்பாலி ரண்டு வரைகிறோம் தீர்க்க மாக
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

26. சதுர்த்தசி யன்று விரதம் இருந்தாளாகில் இவளைச்சார்ந்த தோஷம் நீங்கப்பெற்று மன்மதன்போல் அழகிய புத்திரர் தோன்றுவர். ஆனால் ஒரு புத்திரனே நீண்ட ஆயுள் உள்ளவனாக வாழ்ந்துவருவான். சந்திரனைப் போல் அழகிய முகங்களுடைய பெண் குழந்தைகள் இருவர் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்களாக வாழ்ந்துவருவார். கதியற்றவரைக் காக்கும் தாயே! அம்பிகையே! கேளுங்கள்.

## ஜாதகருக்குச் சாந்தி செய்யும் முறை

27. சொற்படி செய்யா ளாகில் துலங்காவே மதலை தாமும்
ஒப்புடன் சாத கர்க்கு உரைக்கிறோம் சாந்தி தானும்
மைப்புடன் அஷ்டமி நோன்புவித்தகன் கொள் [வானாகில்
தப்பிதம் நிவர்த்தி யாகிச் சந்ததி விருத்தி யென்றோம்.

27. நாங்கள் கூறியபடி செய்துவராவிட்டால் குழந்தைகள் பிறவா. பிறந்தாலும் நிலையா. இனி சாதகருக்குச் செய்யவேண்டிய சாந்தி விபரங்

1. துலா மாதம் = ஐப்பசி.

களைச் சொல்லுகின்றோம். பக்தியுடன் அஷ்டமி விரதம் ஜாதகன் இருந்து வந்தால் ஏற்பட்டதோஷம் விலகி புத்திரவிருத்தி ஏற்படும் என்று சொல்லு கின்றோம்.

## தாயின் விவரங்கள்

28. *அன்னையும் நற்கு ணத்தாள் அன்புள மனத்த ளாகும்*
*கன்னென மொழியு முண்டு கபடிலாள் முன்கோ [பத்தாள்*
*தன்துணை ஆண்பா லொன்று தாயில்லம் உள்ளு ராகும்*
*சொன்னசொல் காப்பா ளாகும் செறிந்திடும் பித்த வாயு.*

28. ஜாதகனுடைய தாயின் விவரங்களைச் சொல்லுகின்றோம் அவள் நற்குணமுடையவள். அன்புள்ள மனத்தினள். கரும்பைப்போன்ற இனிய வார்த்தைகளைப் பேசுபவள் வஞ்சகமில்லா மனத்தினள். சிறிது முன் கோபங்கெபண்டவள். அவளுக்குச் சகோதரன் ஒருவனே உண்டு. தாயின் வீடு உள்ளுரிலேயே இருக்கும் தான் சொன்ன வார்த்தைகளின்படி நடப் பவள். பித்தவாயு உள்ள சரீரத்தள்.

## தாய்மாமன் விவரங்கள்

29. *மாதுலன் சேதி சொல்வேன் மனமது கபடு மில்லான்*
*மேதினி விருத்தி செய்வன் வீண்வம்பு புகலா னாகும்*
*பாதக மில்லா நெஞ்சம் பாரியு மொன்றே யாகும்*
*நீதியாய்ச் சுதராண் மூன்று நிமலியு மிரண்டே தீர்க்கம்.*

29. இனி தாய் மாமன் விவரங்களைப்பற்றிச் சொல்லுகின்றோம். மனத்தில் கபடமில்லாதவன் விளை நிலங்களைப் பெருக்குவான் வீண்வம் படிக்காதவன். தீதுகள் எண்ணாத மனத்தினன். இவனுக்கு மனைவி ஒருத் தியே வாய்ப்பாள். நேர்மையுள்ள மூன்று புத்திரர்களும் இரு புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்களாக இருப்பர்.

## தாயின் முற்பிறவி

30. *மற்றது சேத மெய்தும் வளமுள குடும்பி யாவன்*
*பெற்றதாய் பூர்வம் சொல்வேன் பெண்ணையி னோரம் [தன்னில்*
*வித்தகி கங்கை சேயாய் விளங்கியே சுகமாய் வாழ்ந்து*
*அத்தியின் கோஷ்டத் துக்கு அனுகினள் தீப மொன்று*

30. மற்ற குழந்தைகள் நிலையாமல் இறந்து போம். ஆனால் செழிப் பான குடும்பமுடையவன். இனி ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகுன்றோம். பெண்ணை யாற்றின் கரையில் வேளாள குலத்

தவளாகப் பிறந்து, சௌக்டயமுடன் வாழ்ந்து வந்து, விநாயகக் கடவுள் கோயில் கொண்டருளும் இடத்தில் (நிலையான) தீபம் ஒன்று (வைத்து வந்தாள்).

## தாயின் மரணகாலம்

31. காலன்தன் நாட டைந்து கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமாய் அருகர் வர்க்கம் செனித்தவ ளவளே
[யென்ருேம்
ஏலவே முப்பான் மூன்றில் ஏகுவாள் கால ஞடு
சாலவே யிவள்பின் சென்மம் சாற்றுவோம் கேளும்
[தாயே.

31. பிறகு மரண மடைந்து, மீண்டும் தாமரைப்பூவின் மத்தியில் வசித்து வரும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமுள்ள செங் குந்த வமிசத்தில் வந்து பிறந்தவள் (ஜாதகனுடைய தாய் என்று கூறுகின் ருேம். ஜாதகனுடைய முப்பத்து மூன்ரும் வயதில் மரணமடைவாள். இனி அவளுடைய மறு பிறப்பைப் பற்றிச் சொல்லுகின்ருேம். தாயே! கேளுங்கள்.

*குறிப்பு :—தாயின் மரணம் சம்பவிக்கும் போது ஜாதகனுக்கு புதமகாதசை யில் சந்திர புக்தி நடைபெறும்.

## தந்தையின் முற்பிறவி

32. அந்நகர் தன்னி லேதான் அணுகுவா ளிக்கு லத்தில்
இன்னவன் தந்தை பூர்வ மியம்புவோ மினிமே லாக
பொன்முக ஞற்றி ஞேரம் பேரூரில் சைவச் சேயாய்
நன்னில மதிக முண்டாய் நாயகன் வாழ்ந்து வந்தான்

32. அவ்வூரிலேயே இதே குலத்தில் (சமணர் வமிசத்தில்) பிறப் பாள். இனி ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். காவிரிக் கரையின் ஓரத்தில் பெரிய ஊரில் சைவகுலத்தவனுகப் பிறந்து விளை நிலங்கள் அதிகம் பெற்றவனுக வாழ்ந்து வந்தான்.

## தந்தையின் முற்பிறவித் தொடர்ச்சியும், மரணகாலமும், மறுபிறப்பும்

33. கடவுளர் பக்திகொண்டு [1]காலன்தன் நாட டைந்து
திடமுள பிரமன் லக்கம் செனித்தவ னிவனே யென்ருேம்
அடைவுட னிருபா னிரண்டில் [2]அந்தகன் பக்கல்
[சேர்வன்
உடன் சென்மம் புகலக் கேண்மோ ஓதூர் தன்னிலே
[தான்

1. எமன். 2. எமன்,

33. இறுதிக் காலத்தில் தெய்வ பக்தியுடனிருந்து மரண மடைந்து மீண்டும் நிரந்தரமாகவுள்ள பிரம தேவனுல் பிரமலிபியால் எழுதப்பட்டுப் பிறந்தவன் ஜாதகனுடைய தந்தை என்று சொல்லுகின்றோம். நிச்சயமாக ஜாதகனுடைய இருபத்திரண்டாம் வயதில் தந்தை மரண மடைவான். உடனே ஏற்படும் மறு பிறவியைச் சொல்லுகின்றோம். கேளுங்கள். ஓதூரில்

*குறிப்பு :—ஜாதகனின் தந்தை மரணம் சம்பவிக்கும் காலத்தில் சனி மகா தசையில் ராகு புக்தி நடைபெறும். பிதுர்காரகனுகிய சனி, தன் வீடாகஇருந்த போதிலும் ஆருமிட மாகிய மறைவு ஸ்தானத்தில் இருப்பதாலும், பிதுர் ஸ்தானத்தை சனி 3-ஆம் பார்வையாகப் பார்ப்பதாலும், சனி தசையில் அவன் வீட்டில் இருக்கும் ராகு (சாயா கிரகம் ஆனபடியால்) புக்தியில் மரணம் சம்பவிக்கும்.

## த்ந்தையின் மறுபிறவியும் ஜாதகரின் மரணகாலமும்

34. *மறைக்குல முதித்து யின்னோன் மன்னர்பா லதிகா [ரங்கள்*
*திருமகள் விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னுகும்*
*அறுபது ஒன்ப தாண்டில் அணுகிய [1]சாடி மாதம்*
*நிறைபக்கம் துவா தசி நீங்குமே உடலம் தானும்.*

34. அந்தண குலத்தில் பிறந்து, அரசாங்க உத்தியோகம் ஏற்று, லட்சுமீ கடாட்சம் பெற்று வாழ்ந்து வருவான் என்றோம். ஜாதகனுடைய அறுபத் தொன்பதாம் வயதில், மாசி மாதத்தில், சுக்கிலபட்சம் துவாதசியன்று அவனுக்கு மரணம் சம்பவிக்கும்.

## ஜாதகருடைய மறுபிறப்பு

35. *பின்சென்மம் சாத கர்க்குப் பேசுவோம் தில்லை மேல் [பால்*
*சின்னவூர் தன்னி லேதான் செனிப்பினே மிக்கு லத்தில்*
*பொன்பூமி அதிக முண்டாய்ப் புகழ்பெற வாழ்வா னுமே*
*உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே*

35. ஜாதகருடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தில்லை நடராசர் தலமாகிய சிதம்பரத்துக்கு மேற்கில் உள்ள ஓர் சிற்றூரில் இதே சமண மரபினனுகத் தோன்றுவான். செல்வம், விளைநிலங்கள் முதலிய வற்றை மிகுதியாகப் பெற்று கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். உயர்ந்த யானை முகக்கடவுளைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

---

1. கும்பம் (மாசி)

## ஜாதகருடைய யோகபாவம்

36. வந்தவன் பொதுயோ கத்தை வரைகிரும்
[பேரி யோகம்
தன்மகன் மாதி யோகம் சாற்றுவோம் பலனை யாங்கள்
இந்திர போக முள்ளான் யாவர்க்கு நல்லோ னுவன்
முந்திய கடவுள் தொண்டு முதல்வனும் செய்வா னுமே

36. ஜாதகனுடைய பொது யோக விவரத்தைக் கூறுகின்ரும். பேரியோகம், மாதியோகம் ஆகிய இருவித யோகங்கள் ஏற்படும். அவற்றின் பலன்களைச் சொல்லுகின்ரும். இந்திரனைப் போன்று, சுகபோக வாழ்வு கிட்டும். எல்லோருக்கும் நல்லவனுக வாழ்ந்து வருவான். மகாவிஷ்ணுவுக்குப் பல தொண்டுகள் செய்து வருவான்.

## தொடர்ச்சி

37. தந்தைக்கு மேலாய் வாழ்வன் தனமிகப் பெருக்க
[முண்டு
விந்தையா யிரண்டு யில்லம் மேவிடும் பால னுக்கு
வந்தவர்க் கன்ன மீவன் மருவரை வசித்தே
[வெல்வன்
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன்ருவே.

37. தன் தந்தைக்கு மேற்பட்டவனுக வாழ்ந்து வருவான். மிகுந்த செல்வம் விருத்தியாகும். அழகிய இரு வீடுகள் கட்டுவான். (இவனுக்கு இரு வீடுகள் கிடைக்கும்). தன்னையன்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பவன் விரோதிகளை (உடனிருந்தே) வஞ்சித்து (ஆட் கொள்ளுவான்) ஜயிப்பான் ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே! தாங்கள் கூறிய வார்த்தைகள் பொய்யாகா.

## ஜாதகருடைய மனைவியின் மரணமும் மறுபிறப்பும்

38. இவன்பின்ஞல் மனைவி கண்ட மியம்புவோம்
[பால னுக்கு
அவளுடைப் பின்சென் மம்கேள் அக்காஞ்சி தன்னி
[லேதான்
தவசியே யிக்கு லத்தில் செனிப்பளாம் பாவை தானும்
நவனியில் செனன காலம் நற்குரு தசையி ருப்பு;

38. ஜாதகனுக்கு மரணம் ஏற்பட்ட பிறகுதான் அவனுடைய மனைவிக்கு மரணம் சம்பவிக்கும். அவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்ரும். காஞ்சிபுரத்தில், தாயே! இதே சமணர் மரபில் பெண்ணுய்ப் பிறப்பாள் என்று கூறுகின்ரும். ஜாதகனுடைய ஜனன காலத்தில் குரு மகாதசையில் (கர்ப்பச் செல்லு போக) மீதி யிருப்பு;

## ஜனனகாலதசையும் அப்போதுள்ள பலன்களும்

39. ஆண்டேழு திங்க ளொன்று அதுபலன் புகலக்
[கேண்மோ
வேண்டிய விளையு முண்டு விளங்கிய காலி நஷ்டம்
தூண்டிய தந்தை ரோகம் செம்பொன்னும் சேதமெய்தும்
வேண்டிய பலன்க ளெல்லாம் விளம்புவோம் விபர
[மிரண்டில்

39. ஏழு வருடங்களும் ஒரு மாதமும் இருக்கும். அக்காலத்திய பலனைக் கேளுங்கள். நிலத்தில் விளைச்சல் அதிகமாக ஏற்படும். ஆனால் கால் நடைகளுக்குச் சிறிது சேதமுண்டு. தந்தைக்கும் வியாதி ஏற்படும். பணச் செலவு அதிகமாக இருக்கும். மற்றும் வேண்டிய பலன்களை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம். —V.R.N.

---

## ஜாதகம் 56

### ஜனனகால கிரகநிலை

1. [1]பொன் ராகு [2]மான தாக புதன் [3]புகர் [4]பரிதி [5]சேயும்
கன்னியில் கேது [6]வண்டி [7]கலைசனி [8]சாடி யாக
சென்மமு [9]மாதை யாக செப்புவீர் பலனை யென்று
அன்னையும் கேட்கும் போதும் அத்திரி சொல்லு கின்றார்

1. குரு, ராகு, மகரத்திலும்; புதன், சுக்கிரன், சூரியன் அங்காரகன், நால்வரும் கன்னியிலும், கேது கடகத்திலும், சந்திரன், சனி கும்பத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து ஜன்ம லக்கினம் கன்னியானால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதிதேவி கேட்கும்போது, அத்திரி முனிவர் பதில் கூறுகின்றார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சனி சந்திரன் | இராசி சக்கரம் | | கேது |
| குரு ராகு | | | |
| | | | லக்கினம் புதன் சுக்கிரன் சூரியன் அங்கா. |

### ஜாதகர் பிறந்த வீட்டின் அடையாளங்கள்

2. இந்தசே யாணும் சென்ம மில்லமும் கீழ்மேல் வீதி
தென்வாசல் மாயோன் மேற்கில் திகீம்பரன் தென்
[ழாகும்
சந்திரன் பிறைய ணிந்தோன் சாமுண்டி வடகீ ழாகும்
சந்ததம் சமவூர் தன்னில் சினகுல மென்று
[சொல்வோம்.

---

1. குரு
2. மகரம்
3. சுக்கிரன்
4. சூரியன்
5. அங்காரகன்
6. கடகம்
7. சந்திரன்
8. கும்பம்
9. கன்னி

2. இந்த ஜாதகம் ஓர் ஆண்மகனுடையது. அவன் பிறந்தது கிழக்கு மேற்கான தெருவில் தெற்குப்புறம் வாயிலையுடைய வீட்டிலாகும். திருமாலின் ஆலயம் மேற்குப்பக்கம் உளது. திகம்பர அருக தேவன் தென்கிழக்கில் கோயில் கொண்டுள்ளார். சந்திரனுடைய கலையணிந்த சிவபெருமான், சாமுண்டீஸ்வரி வடகிழக்கில் உள்ளனர். இவ்விதமான சமநிலையுள்ள ஓர் ஊரில் ஜைனர் குலத்தில் பிறந்தவன் என்று சொல்லுகிறோம்.

## ஜாதகன் தந்தையின் விவரங்கள்

3. இன்னவன் குடும்பச் சேதி யிசைக்கிறோம் நவக்கோ
[ளாலே
அன்னவன் தந்தை சேதி அறைகிறோ மானி றத்தான்
தந்தன முடைய னாகும் தரணியால் சீவிப் பானும்
சொன்னசொல் காப்பா னாகும் துராசையு மில்லா
[னென்றோம்.

3. ஜாதகனுடைய குடும்பச் செய்திகளைக் கூறுகின்றோம். நவக்கிரக நிலையை நன்கு ஆராய்ந்து, ஜாதகனுடைய தந்தையின் விவரங்களைப்பற்றிக் கூறுகின்றோம். அவன் மாநிறமுள்ளவன். சுயார்ச்சிதமான செல்வம் உடையவன். விவசாயம் செய்து ஜீவனம் செய்துவருவான். தான் கூறிய படி நடப்பவன். கெட்ட ஆசைகள் இல்லாதவன்.

## இதுவுமது

4. சீலவான் அருகர் பக்தி செய்நன்றி மறவா னாகும்
மூலச் சூ டுடைய னாகும் முன்கோபம் பின்பு சாந்தம்
காலத்தை யறிந்து ரைப்பன் கபடில்லான் வறுமை
[காணான்
வேல்விழி யார்கள் மோகன் வீண்பழி யேற்பா னாகும்.

4. நல்லொழுக்கமுடையவன். சமணதேவன் மீது பக்தியுள்ளவன். பிறர் செய்த நன்மைகளை மறவாதவன். மூலச்சூட்டு நோயுள்வன். முன் கோபி, ஆனால் உடனேயே சாந்தமடைவான். வருங்காலத்தை முன்கூட்டி அறிந்து சொல்லும் ஆற்றல் உள்ளவன். வஞ்சகம் இல்லாதவன். ஏழைமையை அறியாதவன். வேலைப்போன்ற கூரிய கண்களையுடைய பெண்கள் மீது ஆசையுடையவன், அனாவசியமான நிந்தைகள் உடையவன்.

## ஜாதகனுடைய தந்தையின் சகோதரபாவம்

5. தன்துணை யாண்பால் தோஷம் தையலர் மூன்று
[வென்றோம்
அன்னவர் சிலரே துன்பம் அறைகிறோம் பின்பால்
[சேதி

கன்னென மொழியே சொல்வன் கஞ்சமாம் ரேகை
[யுள்ளான்
வந்தவர்க் கன்ன மீவன் வம்பிகை யாளே கேளாய்.

5. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரர் இல்லை. சகோதரிகள் மூவர் என்று சொல்லுகின்றோம். அவர்களிலும் சிலருக்குத் துன்பம் நேரிடும். அவ்விவரங்களைப் பின்பாகத்தில் விவரிக்கிறோம். கரும்பைப்போன்று இனிக்கும் வார்த்தைகளையே பேசுபவன். கையில் பத்மரேகை உள்ளவன். தன்னை யண்டி வந்தவர்கட்கு உணவு அளிப்பவன். அம்பிகையே! கேளுங்கள்

6. சொன்னயிக் குணத்தா னுக்குச் சுதனுமே உதிப்பா
[னாகும்
அன்னவன் துணையாண் காணுன் அழகிய கன்னி
[மூன்று
இன்னவர் தீர்க்க மெய்து மியம்புவோம் பின்பால் சேதி
மன்னவன் குணத்தைச் சொல்வேன் மாநிறம் யூகை
[சாலி.

6. இவ்விதக் குணங்களையுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். அவனுக்குச் (தந்தைக்கு) சகோதரர் இல்லை. அழகிய சகோதரிகள் மூவராவர். அம்மூவரும் நீண்ட ஆயுள் உள்ளவர் என்றோம். மற்ற விவரங்கள் பிற்பாகத்தில் சொல்லுவோம். இனி, ஜாதகன் குணங்களைக் கூறுகின்றோம். மாநிற முள்ளவன். ஊகமுடையவன்.

## ஜாதகனுடைய இயல்புகள்

7. உண்டியும் சுகமாய்க் கொள்வன் உறுதியில் லாத
[நெஞ்சம்
அண்டினோர்க் குதவி செய்வன் அருகர்தன் பக்தி
[கொள்வன்
தண்டமிழ் உடைய னாகும் தரணியை விருத்தி செய்வன்
துண்டமா யுரைக்க மாட்டான் தொடுத்ததை வெல்வா
[னாகும்.

7. சுகமாக உணவருந்துவதில் விருப்பமுள்ளவன். திடமில்லாத மனத்தினன். தன்னையண்டி வந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். சமண தேவன் மீது பக்தியுள்ளவன். நல்ல தமிழை நன்கு கற்றவனாக விருப்பான். விளை நிலங்களைப் பெருக்குவான். கண்டித்துப் பேசாத இயல்பினன். ஏடுத்த காரியத்தைத் திறமுடன் முடித்துவைக்கும் ஆற்றல் உள்ளவன்.

## தொடர்ச்சி

8. காரக தேக மாகும் காலிகள் பணையேர் விருத்தி
பாரினில் நல்லோ னுவன் பரவுப காரி யென்றேம்
மாரியே உரைக்கா னுகும் வணிபங்கள் பலவாய்ச்
[செய்வன்
போரினில் செல்லா னுகும் புகழது மேற்பா னென்றேம்.

8. காரகநோயுடைய தேகத்தவன். கால்நடைகள், பண்ணை, ஏர் முதலியவைகளின் பெருக்கம் உள்ளவன். உலகத்தவருக்கு நல்லவனுக இருப்பவன். பிறருக்கு உபகாரம் செய்வன், (எதிர்வார்த்தை) சொன்ன சொற்களை மாற்றிச் சொல்லாதவள். பலவிதமான வர்த்தகங்கள் செய்து வருவான். வீண் சண்டைக்குச் செல்லாதன். கீர்த்தியை அடைவான்.

## இதுவுமது

9. இல்லமும் செய்வா னென்றேம் இடரென்றோர்
[தம்மைக் காப்பன்
தல்திதாய்க் கிஷ்ட முள்ளான் சற்பாத்திரன் அன்ன
[மீவன்
தொல்லைகள் கொஞ்சம் நேரும் தொலைந்திடும் சிலவே
[நாளில்
எல்லைகள் விருத்தி செய்வனி தரஊர் லாப முண்டு.

9. வீடு ஒன்று கட்டுவான். துன்பம் வந்தவர்கட்கும் யாசித்தவர்களையும் காத்துவருவான். தாய்க்குப் பிரியமான புத்திரனுவான். நல்லவனுக இருப்பவன். பசித்தவர்கட்கு உணவு அளிப்பவன். ஆயினும் சிறிது கஷ்டங்கள் இவனுக்கு ஏற்படும். ஆனுல் சின்னுட்களில் அவை விலகும். விளை நிலங்களைப் பெருக்குவான். பல ஊர்களில் லாபம் எய்தும்.

## ஜாதகன் திருமணக் காலமும் மனைவியின் இயல்பும்

10. நாலைந்து விரண்டு ஆண்டில் நல்கிடு முள்ளூர் பாரி
கூறுவோ மவள்கு ணத்தைக் குறையென்றோர்க் குதவி
[செய்வள்
மாரன்தன் மனம்போல் வாழ்வள் மயில்சாய லொப்ப
[தாகும்
தேரின புத்தி பின்னுல் தினம் சீலி விரதம் பூண்பள்.

10, ஜாதகனுடைய இருபத்திரண்டாம் வயதில் அவன் பிறந்த ஊரி லிருந்தே மனைவி வாய்ப்பாள். (அக்காலத்தில் அவனுக்கு குரு மகாதசை

யில் ராகுபுத்தி நடைபெறும்). இனி ஜாதகனுடைய மனைவியின் குணத்தைச் சொல்லுகின்றோம். கஷ்டம் என்று வந்து யாசித்தவருக்கு உபகாரம் செய்பவள். கொண்ட புருடனுக்கேற்றபடி நடந்துவருபவள். மயிலைப்போன்ற சாயலுடையவள். பிற்காலத்தில் முதிர்ந்த அறிவாளியாக இருப்பாள். நல்லொழுக்கமுடையவள். விரதம் ஏற்று நடப்பவள்.

## இதுவுமது

11. வறுமைக ளடையா ளாகும் வசனமும் நல்ல தாகும்
திருமக ளொப்ப தாகும் செப்புமுன் கோபம் கொஞ்சம்
மருவிடும் பித்தச் சூடு அவள்துணை யாண்பா லிரண்டு
பெருகிய குடும்ப மென்றோம் பிறவூரில் அதிகா ரங்கள்,

11. ஏழைமையை யடையாதவள். நல்ல வார்த்தைகளையே பேசுபவள். இலக்குமியை யொத்த செல்வமுடைவள். சொல்லுவதற்கு முன் கோபம் கொள்ளுவாள். சிறிது மூலச்சூட்டு நோய் இருந்துவரும். அவளுக்குச் சகோதரரிருவர் உண்டு என்றும் அவர்களின் குடும்பம் பெரியது என்றும், அவர்கள் வேற்று ஊரில் அதிகாரம் வகிப்பவர் என்றும் கூறுகின்றோம்.

## மனைவியின் குடும்ப வரலாறு

12. செய்குவார் முன்னோ ரெல்லாம் சேமமாம் குடும்பி யாவர்
கைமுதல் குறைவு நேரும் கலகங்க ளதிக மாகும்
தையல்தன் மணத்தின் பின்பு தந்தையின் வர்க்கத் [தார்க்கு
ஐயமாம் ரணங்க ளெய்து மறைகிறோம் பின்பால் சேதி

12, செய்துவரும் குடும்பத்தினர் என்றும், ஜாதகனுடைய மனைவியின் முன்னோர்கள் எல்லோரும் சௌக்கியமுள்ள குடும்பத்தினர் என்றும் சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு மணமான பின்பு, மனைவியின் தந்தைக்குள்ள ஆஸ்திகள் சிறிது சிறிதாகக் குறைந்துபோம். வீண் சண்டைகளும் கலசங்களும ஏற்படும். கடன் உபத்திரவம் உண்டாகும். அவ்விவரங்களைப் பற்றிப் பிற்பாகத்தில் விரிவாகச் சொல்லுவோம்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

13. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணோம்
சித்தமா யுதித்தா லுந்தரன் தீங்காகு மென்று [சொல்வோம்

அத்திரி சொல்லும் போது அறைகுவார் பராசர் தாமும்
குத்தத்தைச் சொல்லு மென்னக் கூறுவார் முனிவர்
[தாமும்.

13. ஜாதகனுக்குப் புத்திரவிருத்தி யுண்டு என்று கூற பலமில்லை அப்படித் தோன்றினும் திண்ணமாக இறந்துவிடும் என்று சொல்லுகின்ரேம். இங்ஙனம் அத்திரி முனிவர் கூறும்போது பராசர முனிவர் வினவுகின்ருர். புத்திரதோஷம் ஏற்படக்காரணம் யாது? கூறுங்கள். அத்திரி முனிவர் பதில் சொல்லுகின்ருர்.

## புத்திரதோஷ கிரக நிலை

14. அஞ்சினில் ராகு மன்னன் அமர்ந்திட அஞ்சோ ஞறில்
தஞ்சமா யிருப்ப தாலே சாற்றினே மந்தச் சங்கை
மிஞ்சிய சென்மம் தன்னில் மேவிற்று வினைய னேகம்
வஞ்சனை யென்ன செய்தான் வருவிப்பீர் முனியே
[நீர்தாம்

14. ஐந்தாமிடமாகிய (புத்திரஸ்தானம்) மகரத்தில் ராகு, குரு இருப்பதாலும், அவ்வீட்டுக்குரிய (மகர ராசிக்குரிய) சனி ஆறும் வீட்டில் (கும்பத்தில்) இருப்பதாலும் அந்தத்தோஷம் சொன்னேம். (புத்திர ஸ்தானத்தில் தீய கிரகங்கள் இருந்தாலும், தீய கிரகங்களால் பார்க்கப்பட்டாலும், அந்த வீட்டுக்குரிய கிரகங்கள் கெட்ட கிரகங்களுடன் கூடியிருந்தாலும் புத்திர தோஷமுண்டு. இந்த ஜாதகனுக்கு 5-ஆம் இடத்தில் பாபிகள் இருப்பதுடன் அவ்வீட்டுக்குரிய சனி மறைவு ஸ்தானமாகிய ஆறுமிடத்தில் இருப்பதால் அவ்விதமேற்படும்) இதுவல்லாமல் முற்பிறவியில் செய்த பல தீவினைகளாலும் ஏற்பட்டது. என்ன தீவினை செய்தான்? அதைச் சொல்லுங்கள் முனிவரே! நீர்.

## ஜாதகருடைய முற்பிறவி

15. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிரேம் தாயே கேளு
தென்புலி யூரி லேதான் செனித்தனன் கங்கை சேயாய்
உன்னதக் குடும்பி யாகி உத்தமன் வாழு நாளில்
பின்னமாய் வந்த வூழைப் பேசுவோம் தாயே கேளும்

15. ஜாதகன் முற்பிறவியைப்பற்றிச் சொல்லுகின்ரேம். தாயே! கேளுங்கள், தென்புலியூர் என்னும் ஊரில் வேளாள குலத்தவனுகப் பிறந்தான். உயர்ந்த குடும்பத்தவனுக வாழ்ந்துவரும் காலத்தில் தீமையாக வந்த கேட்டைப்பற்றிச் சொல்லுகின்ரேம் தாயே! கேளுங்கள்.

## ஜாதகன் செய்த தீவினை

16. அன்னகர் மறையோர் நேசம் அவன் தங்கை விதவை [தன்னை
இன்னவன் போகம் துய்த்தா னெய்திற்று கருவு தானும்
கன்னிமுன் கருவைத் தானும் கனத்ததோர் பண்டி [தத்தால்
பின்னமே செய்தா னென்றேம் புக்கிற்று அந்தத் [தோஷம்.

16. அவ்வூரில் உள்ள அந்தணர் ஒருவருடன் நட்புக்கொண்டிருந்தான். அவ்வந்தணன் தங்கை விதவையொருத்தி யிருந்தாள். அவளுடன் இந்த ஜாதகன் சிற்றின்பம் அனுபவித்துவந்தான். அதனுல் அவ்விதவைக்குக் கருவேற்பட்டு அதை அழிக்க இந்த ஜாதகன் முற்பட்டான். கருவை நீக்கப் பலவித மருந்துகள் முயற்சியுடன் கொடுத்தான், அக்கரு நீங்கியது. (கருவையழித்த) தோஷம் இவனைப்பற்றியது.

## நல்லபாம்பை அடித்துக் கொன்ற தோஷம்

17. அரவுமே யில்லம் வாசம் அதுமகு டத்தால் செல்ல
அரங்கமே செய்து போகா தடித்தனன் கழியி னலே
மறலியின் பதிக்குச் செல்ல மருவிற்று அந்தத் தோஷம்
குறுகின யேழை சாபம் குலவிற்று விவனுக் கேதான்.

17. இவனுடைய வீட்டில் வெகுகாலமாக ஒரு சர்ப்பம் வாழ்ந்து வந்தது. அஃது ஒருநாள் படமெடுத்துச் செல்லும்போது ஜாதகன் அதைப் பார்த்து அதை ஆடவைத்து, வெளியே போகவிடாமல் தடுத்துப் பிறகு தடியினுல் அடித்துவிட்டான். ஸர்ப்பம் இறந்தது. அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. இதுவும் தவிர துன்புற்ற ஏழைகளின் சாபமும் இவனுக்குத் தொடர்ந்தது.

18. அந்தியக் காலம் தன்னி லவன்சுத ரில்லா னுகித்
தன்மனச் சஞ்ச லத்தால் சேதுவின் பதிக்கு புக்கு
வந்துமே மறலி நாடு வடைந்துமே பிரமன் லக்கம்
முந்தின அருகர் வர்க்கம் மேவுவா னிவனே யென்றேம்.

18. இவன் தன் இறுதிநாட்களில் புத்திரர்களை இழந்து, அனுதையாகி மனத்தில் சஞ்சலம் கொண்டு, புண்ணியத்தலமாகிய சேதுவுக்குச் சென்று திரும்பி ஊருக்கு வந்து, இறந்து, மீண்டும் பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு சமண குலத்தில் வந்து பிறந்தவன் இந்த ஜாதகன் என்று சொன்னேம்.

## தோஷங்களின் பலன்

19. புயங்கனைக் கொன்ற தோஷம் பேதையின் கருவுத்
[தோஷம்
தயவுள யேழை தோஷம் சார்ந்திடு மிச்சென் மத்தில்
வியமாகும் சுதர்க ளென்றேம் வித்தகன் மனைவி யாலே
நயமாகவேச் சில குற்றம் நாட்டுவோம் கேளும் தாயே,

19. சர்ப்பத்தைக் கொன்ற தோஷம் ஒன்றும், பெண்ணின் கருவழித்த தோஷம் ஒன்றும் தயை செய்ய வேண்டிய ஏழையின் சாபம் ஒன்றும் ஆகிய மூன்று விதத்தோஷங்கள் இப்பிறவியில் ஜாதகனைச் சாரும். அதனுல் பிறக்கும் குழந்தைகள் நிலையாகா என்கிறேம் இவை தவிர ஜாதகனுடைய மனைவியால் சில தோஷங்கள் ஏற்பட்டன. அவற்றில் சில வற்றைக் கூறுகின்றேம் தாயே! கேளுங்கள்.

## ஜாதகன் மனைவியின் முற்பிறவி

20. மாதுமுன் சென்மம் சொல்வேன் மாயூர மருகில்
[மேற்கில்
மேதினில் சிறுவூர் தன்னில் மேவினள் வைசியச் சேயாய்
போதவே குடும்பி யாகி புத்திரர் அதிக முண்டாய்
காதலி வாழு நாளில் கழறுவோ மூழி தானே,

20. ஜாதகரின் மனைவியின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். மாயூரத்துக்கு மேற்கில் உள்ள ஒரு சிற்றூரில் வைசிய குலத்தவளாகப் பிறந்து, பெரிய குடும்பத்தையடைந்து புத்திரர்கள் பலரைம் பெற்று இன்பமாக வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேம் தாயே! கேளுங்சள்.

## பூனையை அடித்துக் கொன்ற தோஷம்

21. இல்லத்தில் மார்ச்சா லம்தா னிடறுக ளதிகம் செய்ய
வல்லியும் கோபத் தாலே வாட்டினுள் கழியினுலே
அல்லலாய்க் கால னுடு அடைந்தது மிருகம் தானும்
புல்கிற்று வந்தத் தோஷம் புகலுவோம் வேறு ஒன்றும்.

21. இந்த ஜாதகனின் மனைவியின் வீட்டில் ஒரு பூனை அதிகத் துன்பம் கொடுத்து வந்தது. இப் பெண்ணும் கோபம் கொண்டு ஒரு தடியினுல் அப் பூனையை அடித்தாள். அந்தப் பூனை துடிதுடித்து இறந்தது. அந்தத் தோஷம் இவளை வந்து அடைந்தது. இது தவிர வேறு ஒன்றும் சொல்லுகின்றேம்.

## கருமுனியின் சாபம்

22, கருமுனி கொல்லை தன்னில் கலந்தது முன்னோ
[ரெல்லாம்
பெருமையாய்த் தோத்த ரிப்பார் பேதையும் வணங்கா
[நின்றாள்
வரும்சுதர் யாவும் கொல்ல மனமது சஞ்ச லத்தால்
உரை ந்தனள் சேதுக் கேதான் உத்தமி வரன் தன்
[னோடு.

22. இவளுடைய வீட்டின் கொல்லையில் (பின் பக்கத்தில்) வெகு காலமாக ஒரு கருப்பண்ணசாமி (முனி) குடி கொண்டிருந்தது. இவளுடைய முன்னோர்கள் எல்லோரும்: அம் முனியை வணங்கி, பெருமையுடன் தோத்தரித்து வந்தனர். ஆனால் இப் பெண் (அகம்பாவத்தால்) அம்முனியை வணங்காது வாளா யிருந்தாள். (அம்முனி கோபங் கொண்டு) இவளுக்குத் தோன்றும் குழந்தைகளைக் கொல்ல இவள் மனம் கலங்கி தன் கணவனுடன் சேதுக்குச் சென்றாள்.

## இதுவுமது

23. பலவிதத் தலங்கள் சென்று பாவையு முள்ளூர் மீண்டு
குலவினாள் கால னோடு குறைதலை வரையப் பட்டு
நலமுள விக்கு லத்தில் நாயகி யுதிப்பா ளாகும்
தலைவிக்குச் சுதர்கள் தோஷம் சார்ந்திடும் மென்று
[சொல்வோம்

23. பலவிதமான புண்ணியத்தலங்கள் சென்று இப்பெண் (ஜாதகனின் மனைவி) மீண்டும் தன் சொந்த ஊருக்கு வந்து பிறகு மாண்டாள். திரும்பவும் பிரமதேவனால் படைக்க பட்டு நல்ல செல்வமுள்ள இந்தக் குலத்தில் வந்து தோன்றினாள், என்றனர். ஆனால் இவளுக்குப் புத்திர தோஷம் தொடரும் என்று கூறுகின்றோம்.

24. காதலி வைசிய வம்சம் கலந்தனள் பூர்வம் தன்னில்
நீதியாய் அருகர் வர்க்கம் நேறும்கா ரணங்க ளெவ்வார்
ஓதுவேன் பூர்வம் சேது உத்தமி சென்ற புண்ணியம்
சாதியு முயர்வ தாச்சு சார்ந்ததோர் வினைதீ ருதோ.

24. ஜாதகரின் மனைவி முற்பிறவியில் வைசிய குலத்தில் பிறந்தவள் இப்பிறவியில் சமண குலத்தில் பிறக்கும் காரணங்கள் என்ன வென்று சொல்லுங்கள். காரணங்கள் சொல்லுகின்றோம். முற்பிறவியில் சேதுவுக்கு சென்று (நீராடியதால்) வந்ததால் ஏற்பட்ட நல்வினையால் இவளுக்கு உயர்ந்த குலத்தில் பிறப்பு ஏற்பட்டது. இவளை வந்தடைந்த தீவினைகள் விலகாவோ என பார்வதி வினவினாள்).

25. தீராது மிருக தோஷம் சடை முனி சாபம் தானும்
மாறிடச் சாந்தி சொல்வே னவள்குல மருக ருக்கு
[1]நிறைமாத மபிடே கித்து நேர் சதுர்த்தசியின் நோன்பு
அரிவையும் விரதம் கொள்ள அணுகிய தோஷம் நீங்கி;

25. பூனையைக் கொன்ற தோஷம் இவனை விட்டு விலகாது. ஆனால் சடை முனி கொடுத்த சாபம் தீரச் சாந்தி யொன்று சொல்லுகின்றோம். அவளுடைய குலதெய்வமாகிய சமண தேவனுக்கு ஐப்பசி மாதம் சதுர்த்தசி யன்று அபிஷேகம் செய்து விரதம் ஏற்று, அப்பெண் அனுஷ்டித்து வருவாளாகில் இவளைப் பற்றிய தோஷம் விலகி;

## புத்திர பாவம்

26. மதலைக ளாண்பர லொன்று மங்கைமா ரிருவர் நேரும்
அதமென்று செய்யா ளாகில் அணுகாது அணுகில் தீதாம்
சதமுடன் வரனு மேதான் சரியா யஷ்டமியின் நோன்பு
உதவினல் முன்னூழ் போக்கி ஓங்கிடும் சுதர்கள் தாமே.

26. ஆண் குழந்தை யொன்றும், பெண் குழந்தைகள் இருவரும் தோன்றுவர். அலட்சியமாகச் செய்யாமல் இருப்பின், புத்திரர்கள் பிறவார் பிறக்கினும் மரித்து விடுவர். இவளுடைய கணவனாகிய ஜாதகன் நிறை மனத்துடன் அஷ்டமியன்று விரதம் இருப்பானாகில் முற்பிறவித் தீவினை விலகி குழந்தை பிறந்து தீர்க்காயுளுடன் இருக்கும்.

## தாயின் வரலாறு

27. அன்னையும் நற்கு ணத்தாள் அன்புள மனத்த ளாகும்
கன்னென மொழயு முண்டு கபடிலாள் முன்கோ [பத்தாள்
தன்துணை யாண்பா லொன்று தன்னில முன்னு ராகும்
சொன்னசொல் காப்பா ளாகும் செறிந்திடும் பித்த வாயு.

27. ஜாதகனுடைய தாயின் குணங்களைக் கூறுகின்றோம். அன்புள்ள மனத்தினள்; கரும்பைப் போன்ற இனிய சுவையுள்ள வார்த்தைகளையே பேசுபவள். வஞ்சமில்லா மனத்தினள். சிறிது முன் கோபமும் உள்ளவள். அவளுக்கு உடன் பிறந்தவரில் சகோதரன் ஒருவன் உள்ளூரிலேயே வாசம் செய்து வருவான். அவள் சொன்ன சொற்படி நடப்பவள். ஆனால் பித்த வாயு உள்ள சரீர முடையவள்.

## தாய் மாமனின் வரலாறு

28. மாதுலன் சேதி கேளாய் மால்நிறம் கபடு மில்லான்
மேதினி விருத்தி செய்வன் வீண்வம்பு புகலா னாகும்

---

1. நிறை = தராசு. (துலாம்), ஐப்பசி மாதம்

பாதக மில்லா நெஞ்சம் பாரினில் சமயோ கத்தான்
வேதனை மத்தி யத்தில் மேவிடும் கால்ஊ னம்தான்.

28. இனி ஜாதகனுடைய மாமனின் விவரங்களைக் கூறுகின்றோம். கரிய நிறமுடையவன். வஞ்சக மில்லாத மனத்தினன். உலகில் பூமியை வாங்கி விருத்தி செய்வான். அனுவசிய வம்புக்குச் சொல்லாதவன். பிறரைப் பற்றி வீண் அபவாதம் கூறாதவன். கேடுகளில்லாத மனத்தினன். உலகில் நன்மை தீமை கலந்து வரும் யோக முடையவன். ஆனால் இடைக் காலத்தில் சிறிது துன்பம் நேரிடும். இவனுக்கு ஒரு கால் ஊனமுள்ளது.

29. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பால் நான்கு
காதலி யிரண்டே யென்றோம் கழறின ஆண்பா லுக்கு
ஓதாது ஒன்று வென்றோம் உறங்கிடு மொன்று தானும்
மேதினில் ஆண்பால் மூன்று விருத்தியாம் கன்னி
[யிரண்டும்.

29. மனைவி ஒருத்தியே என்று சொல்லுவோம், ஆண் குழந்தைகள் நால்வரும் பெண் குழந்தைகள் இரண்டும் தோன்றும். ஆனால் சொன்ன ஆண் குழந்தையில் ஒன்று நிலையாது. இடையில் மரண மடையும். ஆதலால் மூன்று ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்றோம்.

## தாயின் முற்பிறவி

30. மற்றது சேத மெய்தும் வரைகிறோம் பின்பால் சேதி
பெற்றதாய்ப் பூர்வம் சொல்வேன் பெண்ணையி னோரம்
[தன்னில்
வித்தகி கங்கை சேயாய் விளங்கியே சுகமாய் வாழ்ந்து
அத்தியின் கோஷ்டத் திற்கு அணுகினள் தீப மொன்று,

30. மற்ற குழந்தைகள் இறந்துபோம். இதர விஷயங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைக் கூறுகின்றோம். பெண்ணையாற்றின் ஓரத்தில் உள்ள ஊரில் வேளாள குலத்தவளாகப் பிறந்து சௌக்கியத்துடன் வாழ்ந்து வந்து யானை முகத்தை யுடைய விநாயகர் ஆலயத்துக்கு ஒரு தீபம் வைத்து வந்தாள்.

## தாயின் மரணகாலம்

31. காலன்தன் நாட டைந்து கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமா மருகர் வர்க்கம் செனித்துவ ளிவயே யென்றோம்
ஓலவே முப்பான் மூன்றி லேகுவாள் கால னுடு
சாலவே யிவள்பின் சென்மம் சாற்றுவோம் கேட்பீராக,

31. இறந்து, மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு நல்லொழுக்க முள்ள சமண வமிசத்தில் வந்து தோன்றியவள் இவள் (ஜாதகனுடைய தாய்) என்று சொல்லுகின்ருேம். ஜாதகனுடைய முப்பத்து மூன்ரும் வயதில் (புதமகா தசையில் சுக்கிர புக்தியில்) தாய் இறந்து போவாள் இனி அவளுடைய மறு பிறவியைப் பற்றிச் சொல்லுகின்ருேம். கேட்பீராக.

## தாயின் மறுபிறவியும் தந்தையின் முற்பிறவியும்

32. அந்நகர் தன்னி லேதான் அணுகுவா ளிக்கு லத்தில்
இன்னவன் தந்தை பூர்வமியம்புவோ மினிமே லாகப்
பொன்முக ஞற்றி ஞேரம் பேரூரில் சைவச் சேயாய்
மன்னில மதிக முண்டாய் நாயகன் வாழ்ந்து மேதான்.

32. அவ்வூரிலேயே இதே சமண குலத்தில் பிறப்பாள். இனி ஜாதகனு டைய தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்ருேம். காவிரியாற்றங்கரை யில் உள்ள ஒரு பெரிய ஊரில் சைவ குலத்தவனுகப் பிறந்து சுயார்ச்சித மான நிலபுலங்களைப் பெற்று வாழ்ந்து வருவான்.

## தந்தையின் மரண காலமும் மறுபிறவியும்

33. கடவுளின் பக்தி கொண்டு காலன்தன் நாட டைந்து
திடமுள பிரமன் லக்கம் செனித்தவ னிவனே யென்ருேம்
அடைவுட னிருபா னிரண்டி லந்தகன் பக்கல் சேர்வன்
உடன்சென்மம் புகலக் கேண்மோ ஒதூரு தலத்தி
[லேதான்

33. கடவுள் மீது பக்தியுள்ளவனுக வாழ்ந்து மரண மடைந்து நிரந்தரனுன பிரமதேவனுல் மீண்டும் படைக்கப்பட்டுப் பிறதவன் இவன் (ஜாதகனுடைய தந்தை) என்ருேம். ஜாதகனுடைய இருப த்திரண்டாம் வயதில் (சனி மகா தசையில் ராகு புக்தியில்) மரணமடைவான். உடனே மறுபிறவியில் ஒதூர் என்ற ஊரில்;

## ஜாதகனுடைய மரணகாலம்

34. மறைக்குல முதித்து யின்ஞேன் மன்னர்பா லதிகா ரங்கள்
திருமகள் விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா ஞகும்
அறுபது ஆறு ஆண்டில் அணுகிய சாடி மாதம்
நிறைபக்கம் துவா தசி நீங்குமே உடலம் தானும்.

34. அந்தண குலத்தில் பிறந்து இந்த ஜாதகன் அரசாங்க ஊழியம் ஏற்றுப் பற்பல பதவிகளை வகித்து, லட்சுமி கடாசம் பெற்றுச் செல்வச் சீமா ஞக வாழ்ந்து வருவான். அவனுடைய அறுபத்தாரும் வயதில் மாசி மாதம் சுக்கில பட்சம் துவாதசியன்று மரண மடைவான்.

## ஜாதகனுடைய மறுபிறவி

35. பின்சென்மம் சாத கர்க்குப் பேசுவோம் தில்லை மேல்பால்
சின்னஊர் தன்னி லேதான் செனிப்பனு மிக்கு லத்தில்
பொன்பூமி அதிக முண்டாய்ப் புகழ்பெற வாழ்வா னுகும்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

35. மறு பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றேம். தில்லைத் தலமாகிய சிதம்பரத்துக்கு மேற்கில் உள்ள ஒரு சிற்றூரில் இதே குலத்தில் வந்து தோன்றுவான். செல்வம் பூமி இவைகளை அதிகம் பெற்றுக் கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். உயர்ந்த யானை முகக் கடவுளைப்பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய பொது யோகம்

36. வந்தவன் பொதுயோ கத்தை வரைகிறேம் பேரி யோகம்
தன்மகன் ஆதியோக மதன்பலன் பூமி சேர்ப்பன்
இந்திர போக முண்டு யாவர்க்கும் நல்லலோ னுவன்
முந்திய கடவுள் பக்தி முதல்வனும் செய்வா னுமே.

36. ஜாதகனுடைய பொது யோகத்தை இனிக் கூறுகின்றேம். பேரி யோகம், ஆதி யோகம் இரண்டு யோகங்களுளன். அதனுடைய பலனுவன: விளை நிலங்கள்விருத்தியாகும். இந்திரனைப் போன்று சுகபோக வாழ்வு உண்டு.எல்லோருக்கும் நல்லவனுக வாழ்ந்து வருவான். முதற் கடவுளாகிய விஷ்ணுவிடம் பக்தி கொண்டவன்.

37. மத்தியில் சில்வே நாட்கள் வணிபங்கள் சிலவே செய்வன்
வித்தகன் தந்தை மேலாய் விளங்குவா னிந்தப் பாலன்
சித்தமா யிரண்டு இல்லம் தனமது பெருக்க முண்டு
குத்தமாய் மேக ரோகம் குலவிடு மூவெட் டின்மேல்.

37. இடைக் காலத்தில் சின்னுட்கள் வியாபாரங்கள் சிலவற்றைச் செய்து வருவான். அவன் தன் தந்தைக்கு மேம்பட்டவனுக வாழ்ந்திடுவான். திண்ணமாக இரு வீடுகள் கட்டுவான். செல்வப் பெருக்க முள்ளவன். ஆனல் தீய மேக ரோகம் ஜாதகனுக்கு அவனுடைய இருபத்து நான்காம் வயதுக்கு மேல் ஏற்படும். (அக்காலத்தில் சனி மகா தசையில் குருபுக்தி நடைபெறும்)

## கிரகநிலை : மேகரோகமும் அதற்குச் சாந்தியும்

38. காரணம் யாது வென்ன காரியு மாறில் நிற்கக்
கூறினேம் மேக ரோகம் குருவைந்தி லிருப்ப தாலே
வீருது அதிக மாக வெள்வங்கப் பற்ப முண்ண
மாறிடு மென்று சொல்வோ மங்கையே கேட்டி டாயே,

38. காரணம் என்ன வென்று கேட்க, "சனி ஆருமிடத்தில் இருப்ப தால் மேக ரோகம் ஏற்படும் என்று சொன்னோம், ஆனால் குரு ஐந்தாமிட மாகிய மகரத்தில் இருப்பதால் அந்த நோய் வலிவு பெருது என்றும், அதற் குப் பரிகாரமாக (அதிகமாக விடாமல் இருக்க) வெண் வங்கப் பஸ்பத்தைச் சாப்பிடுவானாகில் மேக நோய் விலகிவிடும் என்று கூறுகின்றோம். தாயே ! கேளுங்கள் !

## மனைவியின் மறுபிறப்பும் ஜாதகனின் ஜனன கால தசையும்

39. இவன்பின்னால் மனைவி கண்ட மியம்புவோம் தாயே
[கேளும்
அவளுடைப் பின்சென் மம்கீழக் காஞ்சி தன்னி
[லேதான்
தவசியே யிக்கு லத்தில் செனிப்பளாம் பாவை தானும்
நவனியில் சென்ன காலம் நற்குரு தசை யிருப்பு;

39, ஜாதகனுக்குப் பிறகு அவனுடைய மனைவி இறப்பாள். தாயே! கேளுங்கள். ஜாதகன் மனைவி மறுபிறவியில் கிழக்கேயுள்ள காஞ்சீபுரத் தில், தவம் செய்பவளே!, இதே சமண குலத்தில் வந்து பிறப்பாள். ஜாதகன் பிறக்கும் போது நல்ல பலனைக் கொடுக்கும் குரு மகா தசையில் சொல்லு போக மீதி யிருப்பு:

40. ஆண்டேழு திங்க ளொன்று அதுபலன் புகலக்
[கேண்மோ
வேண்டிய வினையு முண்டு விளங்கிய காலி சேதம்
தூண்டிய தந்தை நோயாம் செம்பொன்னும் சேத
[மெய்தும்
வேண்டிய பலன்க ளெல்லாம் விளம்புவோ மிரண்டி
[லேதான்.

40. ஏழு வருடங்களும் ஒரு மாதமுமாகும். அக்காலத்திய பலனைக் கேட்பீராக. வேண்டிய வரை நிலத்தில் விளைச்சல் உண்டு. ஆனால் விசேஷமாக உள்ள கால் நடைகளுக்குச் சேத முண்டாகும். தந்தைக்கு வியாதி ஏற்படும். சிறிது பொருளும். அழியும் மற்றும் வேண்டிய பலன்களை இரண்டாம் பாகத்தில் கூறுகின்றோம்.

*குறிப்பு:—இந்த ஜாதகமும் 55-ம் ஜாதகமும் ஒரே மாதிரியான கிரகநிலை உள்ளனதாக இருக்கின்றன. சில பாட்டுக்கள் ஒன்றுகவும் பல பாட்டுக்கள் ஒரே அர்த்தத்தைக் கொண்டதாகவும் உள்ளன.

(55-ம் ஜாதகத்தில் 15, 16, 17, 21, 22, 28, 29, 30, 31; 32, 33, 34, 35, 36, 38, 39 பாட்டுக்கள் 56-ஆம் ஜாதகத்தில் 13, 14, 15, 20, 21, 27, 28, 30, 31, 32, 33, 34, 35, 36, 39, 40ம் ஒன்ருகவே இருப்பதைக் கவனிக்கவும். கிரகநிலை யைக் குறிககும் பாட்டுக்கள் இரண்டும் வெவ்வேருக இருந்தும் ஒரே அர்த்ததைக் கொண்டது. தோஷத்தைப்பற்றிய விவரமும் அதற்குச் சாந்தி விவரமும் வெவ்வேருக இருந்த போதிலும் பொருள் ஒன்றே. இரு ஜாதகங்களிலும் தாய் தந்தையரின் மரண காலம், ஜாதகருடைய திருமணக் காலம், ஜனன கால தசையிருப்பு இவைகள் ஒன்ருகவே யுள்ளன. —V. R. N.

## ஜாதகம் 57

### ஜனனகால கிரகநிலை

1. [1]திங்கள் [2]புகர் [3]மால் [4]பரிதி [5]சேல்[6] சிகி[7] சீயமுற
[8]மங்கலன் [9]மான் [10]பொன் [11]மேரு [12]மந்தன் [13]பணி
[ [14]சங்கைகுடம்
கன்னி சென்மம் தோன்றக் கழறுவீர் பலன்தனையே
துன்னு சென்மம் மாண் பாலாய்ச் செப்பு.

1. சந்திரன், சுக்கிரன், புதன், சூரியன் ரிஷபத்திலும், கேது சிம்மத்திலும், அங்காரகன் மகரத்திலும் குரு தனுசிலும், சனி: ராகு கும்பத்திலுமாக நவக்கிரக நிலையிருந்து பிறந்த லக்கினம் கன்னியாக இருப்பின் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் என்று வினவ ரிஷி (பதில் உரைக்கின்றார்) இந்த ஜாதகம் ஓர் ஆண் மகனுடையது.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சந்திரன் சுக்கிரன் புதன் சூரியன் | |
| சனி ராகு | இராசி சக்கரம் | | |
| அங்காரகன் | | | கேது |
| குரு | | | லக்கினம் |

*குறிப்பு:—1. இந்த ஜாதகப் பாட்டுக்கள் 1-4 வெண்பாவாகவும், அந்தாதியாகவும் அமைந்துளது என்பதைக் கவனிக்க

2. இந்த ஜாதகன் வைகாசிமாதத்தில் ரோகிணி நட்சத்திரத்தில் இரண்டாம் பாக இறுதியில் பிறந்தவன்.

1. சந்திரன்
2. சுக்கிரன்
3. புதன்
4. சூரியன்
5. ரிஷபம்
6. கேது
7. சிம்மம்
8. அங்காரகன்
9. மகரம்
10. குரு
11. தனுசு
12. சனி
13. ராகு
14. கும்பம்

## ஜாதகன் பிறந்த வீட்டின் அமைப்பு

2. செப்பு தந்தையில்லம் தென்வாடை கீழ்மேற்கு
ஒப்புமஸ்தான் மாரியுமே உத்திரமாம்—மைப்புடனே
ஈசன் குடிகீழாம் யாளிகன்னி தென்கீழில்
வாசம் அருகர் குடிவாழ்.

2. தந்தையின் வீட்டைப் பற்றிச் சொல்லுகின்ரேம். கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு வாயிலுடைய வீடாகும். மஸ்தான் கோயிலும் (முகம்மதியர் பள்ளிவாசலும்) மாரியம்மன் கோவிலும் வடக்குப் பக்கத்தில் உள்ளன. சிவபெருமான் கிழக்குப் பக்கத்தில் கோயில் கொண்டுள்ளான். காளி கோவிலும் தென் கிழக்குப் பக்கம் உளது. சமண குலத்தில் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று கூறுவோம்.

3. அதன் தென்பால் காளி யானை முகம் தங்கும்
விதி முடிந்த கோட்டையது மேவும்—பதிபெரிது
செட்டு மிக ஒங்கும் செப்புமடை யாளம்
ஒட்டு குலமென்றே நீஒது.

3. அதற்குத் தெற்குப்புறம், காளி கோயிலும், யானை முகத்தையுடைய விநாயகர் ஆலயமும் இருக்கும். இடிந்த கோட்டை யொன்று உளது, ஜாதகன் பிறந்த வீடு பெரிதான ஒன்ருகும். அக்காலத்தில் வர்த்தகம் பெருகும். இவ்வித அடையாளங்களுள்ள ஒரு வீட்டில் வைசிய குலத்தில் பிறந்தவன் என்று சொல்லுகின்ரேம்.

4. ஓது அன்னை தந்தை உரையும் துணை களத்திரம்
போ்து சுதர்கள் போகம் போற்றுவோம்—தீதின்றி
முன்பின் சென்மங்கள் மொழிவோ மின்னூலில்
அன்னை வினவ யறிகுவாய்.

4. தாய், தந்தை, இவர்களுடன் தோன்றும் சகோதரர், மனைவி மக்கள் யோகம் முதலிய விவரங்களையும் கேடில்லா முற்பிறவி, மறுபிறவியைப் பற்றியும் இந்தச் சோதிட நூலில் கூறுகின்ரேம். பார்வதிதேவி வினவ, ரிஷிகள் பதில் உரைக்கின்றனர். தாயே! கேளுங்கள்.

## தந்தையின் சகோதரபாவம்

### வேறு

5. இன்னவன் செனன மிருப்பிடம் அரிக்கு
யேகுவா னண்டின் மேல் தெற்கில்
அந்நகர் தன்னில் தென் வட வீதி
அருக்கனின் வாசலே அமையும்

தந்தையின் துணைவர் மூன்றே யுரைத்தோம்
தங்கிடு மாணது ஒன்று
கன்னிகை அவ்வாறு கழறுவோம் தீர்க்கம்
காளையும் வேறதாய்ச் செல்வன்.

5. ஜாதகனுடைய பிறந்த வீடு தெற்கில் உளது. அது அவ்வூரில் தெற்கு வடக்கான தெருவில் கிழக்கு நோக்கியிள்ள வாயிலை யுடையதாகும். ஜாதகனுடைய தந்தையின் சகோதர பாவத்தைச் சொல்லுகின்றோம். மூன்று சகோதரர் தோன்றுவர். அவர்களில் ஒருவனே நீண்ட ஆயுளை யுடையவன் என்று கூறுகின்றோம். சகோதரி ஒருத்தியே நீண்ட ஆயுள் உடையவளாக இருப்பாள். ஆனால் தந்தையின் சகோதரன் பிரிந்து வேருகச் சென்று விடுவான்.

## தந்தையின் சகோதரனுடைய குணவிசேஷங்கள்

6. அவன் குணம் மர்மன் வறுமைக ளுடையன்
ஆனையி னிறத்தனு மென்றோம்
நவனியில் செட்டு நடத்திடு வானும்
நற்கரம் ஊனமே யுண்டாம்
தவசியைச் சேரான் தந்திர வார்த்தை
சார்ந்திடும் பாரியு மொன்றே
பவமுள சுதரும் ரெண்டென மொழிவோம்
பார்வையு மூன்றெனப் பகர்ந்தோம்.

6. ஜாதகனுடைய தந்தை மர்மமான (இரகசிய) குணம் படைத்தவன், ஏழைமையடைவான். யானையைப் போன்று கரிய நிறமுள்ளவன். உலகில் வியாபாரம் செய்துவருவான் என்று சொன்னோம். ஆனால் வலதுகை ஊன முள்ளது. தவமுடையார் (பெரியோர்கள்) நட்புக்கொள்ளாதவன். தந்திரமாகப் பேசும் இயல்பினன். இவனுக்கு மனைவி ஒருத்தியே வாய்ப்பாள் இவனுக்கு இரு புத்திரர்களும் மூன்று புத்திரிகளும் தோன்றுவார் என்று மொழிகின்றோம்.

## தந்தையின் விவரங்கள்

7. இல்லம் விட்டகலான் வேறதாய்ச் செய்வன்
இளைஞரின் புத்திகளுமுண்டு
அல்லலாய் வாழ்வன் பின்பல சொல்வேன்
அதுவின்றி தந்தை சேதி சொல்வோம்
உணச்சலும் நீட்சி மால் நிறத்தானும்
செட்டுகள் செய்திடு வானும்....
நல்லவனுவன் யிருவிதச் சொல்லன்
நங்கையர் மோகவா னுமே.

7. வீட்டை விட்டுச் செல்லாதவன். ஆனால் அதைப் பிரித்து விடுவான். குழந்தைப் புத்தியுள்ளவன். துன்பமுற்று வாழ்ந்து வருபவன். பிற்பாகத்தில் பல விவரங்களைச் சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய தந்தையைப் பற்றிக் கூறுவோம். ஒல்லியானவன். உயர மானவன் திருமாலைப் போன்று கரிய நிறமுள்ளவன். வர்த்தகத் தொழில் புரிந்து வருபவன். நல்லவனாக இருப்பவன். இருவிதமாகப் பேசும் இயல்பினன். பெண்கள் மீது மையல் கொள்ளுபவன்.

வேறு

8. மரமாட்டும் தொழிலு டையன் மருத்துரைகள்
அதிகமுளன்—மருமமில்லான்
கரங்கால்கள் வலுவுடையன் கசடர் உறவதைக்
கொள்ளான்—கனத்த புத்தி
அரைம னத்தன் புகழேற்பன் அடைந்தோரை
ஆதரிப்பன்—அவனிசேர்ப்பன்
நெறிதவறுன் தாட்சணியன் நினைத்தபடி முடிப்பனென
—நிகழ்த்தினோமே.

8. மரவேலை செய்து வருபவன். சொன்ன வார்த்தைக்கு எதிர் வார்த்தை கூறும் இயல்பினன். இரகசிய மில்லாதவன் கைகால்கள் வலிவுள்ளவன். (புஜபல பராக்கிரமன்.) தீயவருடன் உறவாடாதவன். பெரிய புத்தி (தாராள புத்தி) யுள்ளவன். எக்காரியத்தையும் திண்ணமாக முடிவு செய்யாத அரை மனமுள்ளவன். கீர்த்தி பெறுவான். தன்னை வந்து அடைந்தவரைக் காத்து வருவான். நேர்மை தவறாதவன். தாட்சண்யம் கொள்ளும் இயல்பினன். தான் எண்ணிய காரியங்களை எண்ணியபடியே முடித்து விடும் ஆற்றல் உள்ளவன்.

வேறு

ஜாதகனுடைய குணவிசேஷங்கள்

9. சொன்னவிந்தக் குணத்தனுக் கிவனுதிப்பான்
இவன்குணத்தைச் செப்பக் கேண்மோ
கன்னெனமொழி கபடில்லான் கார்நிறத்தன்
கல்வியுளான் கனத்த புத்தி
அன்னைதந்தை தனக்கினியன்
அணுகும் குலத்தொழில் செய்வன்
[அலைச்சலுள்ளான்
கண்ணியமாம் குடும்ப மென்றோம்
கீதங்களிஷ்டமுளன் கர்வம் கொஞ்சம்.

9. இவ்விதம் சொல்லப்பட்ட குணங்களையுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். இனி அனுடைய குணவிசேஷங்களைக் கூறுகின்றோம். கேட்பீராக, கருப்பைப் போன்று இனிய வார்த்தைகளையே பேசு

வான். வஞ்சக மில்லாத மனத்தினன். மேகத்தைப் போன்ற கரிய நிறமுள்ள வன். கல்வியறிவுடையவன். தாராள மனப்பான்மை யுள்ளவன். தாய்தந்தை யருக்குப் பிரியமானவன். தனது குலத் தொழிலையே செய்து வருவான். ஆனால் வீண் அலைச்சல் உள்ளவன் (துன்பம் உள்ளவன்). கண்ணியமான குடும்பத்தில் தோன்றியவன். சங்கீதத்தில் விருப்பமுள்ளவன். சிறிது கர்வம் கொண்டவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

10. *சிரமுகத்தில் வடிவுடையன் செய்ந் நன்றிமறவாதான்*
*—தெய்வபக்தி*
*கரம்காலும் வடிவுடையன் காதலியும் பகையாகும்*
*—கஞ்ச ரேகை*
*விரைவில் நடை துணைவர் தம்மை விளம்புவோ*
*மாஞென்று—விருத்தியாகும்*
*அரிவைக ளிரண் டென்றோம் அம்மூன்றும் தீர்க்கமுறும்*
*—ஆண்பால் சேதி.*

10. தலையிலும் முகத்திலும் மரு உள்ளவன். பிறர் செய்த உதவிகளை மறவாதவன், தெய்வபக்தி கொண்டவன். கைகால்களிலும் மச்ச முள்ளவன். மனைவியிடம் பிரியமில்லாதவன். கையில் பத்மரேகை யுள்ளவன். வேகமாக நடப்பவன். இனி அவனுடைய சகோதரர்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். ஒரு சகோதரனும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றோம். இனி அந்தச்சகோதரனைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய சகோதரனைப்பற்றிய செய்திகள்

11. *கல்விமான் தந்திரமொழி யீகையாளன்*
*கருநிறத்தன் பலர்நேயன் கடவுள்பக்தி*
*நல்லவன்போல் மொழிகூறுவன் வணிபம்செய்வன்*
*நற்புத்தி சுகபுசிப்பன் வறுமை காணுன்*
*சல்லியங்கள் கொள்ளாஞ மிஷ்டமுள்ளான்*
*தரணிவிருத்தி செய்திடுவன் சனசகாயன்*
*மல்லில்செல்வன் மர்மமுளன் பாரியொன்று*
*மருவிடுமே காளையொன்று மங்கைரண்டே.*

11. கல்வியறிவுள்ளவன். தந்திரமாகப் பேசுவான். கொடுக்கும் குணம் உள்ளவன். கரிய நிறமுடையவன். பலபேருக்குப் பிரியமானவன். தெய்வ பக்தி யுள்ளவன். நல்லவனைப் போல் பேசுவான். வர்த்தகத் தொழில் செய்து வருபவன். நல்ல புத்தியுள்ளவன் சுகமாகச் சாப்பிடுவதில் பிரிய முள்ளவன். தரித்திர மில்லாதவன். கடன் கொள்ளாதவன். எல்லாருக்கும் பிரியமானவன், விளை நிலங்களைப் பெருக்குவான். ஜனங்களுக்கு உபகாரம்

செய்பவன், வீண் சண்டைக்குச் செல்லும் இயல்பினன், ரகசிய முள்ளவன். (ரகசியத்தைக் காப்பவன்) மனைவி ஒருத்தியேயாவள். அவனுக்கு ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் தோன்றுவர் என்கிறோம்.

## வேறு

12. சிலதுநாள் ஒன்ருய் வாழ்ந்து செல்லுவான் வேரு
[கத்தான்
கலகத்தைக் கூறும் நெஞ்சன் கன்னிகை மோக வானும்
தலவாசம் செல்வா ளுகும் தனமது யீகை கொஞ்சம்
மலையறை மகளே யாங்கள் வரைந்தது தப்பா தாமே.

12. சில காலம் ஓரே குடும்பமாக வாழ்ந்து வந்து பிறகு தனியாகச் சென்று விடுவான். சண்டை விளைவிக்கும் (கோட் சொல்லும்) மனமுடைய வன். பெண்கள் மீது மையல் கொள்ளுபவன். புண்ணிய தலங்களுக்குச் சென்று வருவான். (ஏழைகட்கு) செல்வம் கொடுத்து உபகாரம் செய்யும் குணம் சிறிதே உடையவன். மலையரசனுகிய ஹிமவானின் புத்திரியே! பார்வதியே! நாங்கள் கூறியவை தவரு.

## ஜாதகன் திருமணக்காலம்

13. உதித்தவன் மணத்தின் காலம் உறைக்கிறேம் நாலைந்
[தாண்டில்
அதிபதி யுள்ளூர் தன்னில் மாதுலன் மகளைக் கொள்வன்
சதியிலா மனத்த ளாகும் தானிரு நிறத்த ளாகும்
அதிகமாய் வார்த்தை சொல்வ ளறையுமுன் கோபி
[யாவள்.

13. இனி ஜாதகனுடைய திருமணக் காலத்தைப் பற்றிச் சொல்லு கின்றேம். அவனுடைய இருபதாம் வயதில் உள்ளூரிலிருந்தே மனைவி வாய்ப்பாள். அவளும் ஜாதகனுடைய மாமன் மகளே யென்று சொல்லு கின்றேம். அவள் (ஜாதகன் மனைவி) தீங்குகளில்லாத மனத்தினள். கருப்பு கலந்த சிவந்த நிறமுடையவள். தேவைக்கு அதிகமாகப் பேசும் இயல்பினள்; (வாயாடி) பேசுவதற்கு முன் கோபம் கொள்ளுவாள்.

*குறிப்பு:—இந்த ஜாதகனுக்குத் திருமணம் நடக்கும் போது ராகு மகாதசை யில் புத புக்தி நடைபெறும்.

## மனைவியின் விவரங்கள்

14. மத்தியில் சிலது நாட்கள் பகையாகி வாழ்வ ளாகும்
அத்திரி சொல்லு கின்ருர் அந்தணன் புகரு மாட்சி
சுத்தமா யிருப்ப தாலே தேவியும் பகையும் காணுள்
பத்தினி தந்தை யாலே பலபல விரோத மெய்தும்.

14. இடையில் சில காலம் மனத்தாங்கல் கொண்டு தனியாக வாழ்ந்து வருவாள் என்ருர். அத்திரி முனிவர் மறுத்து உரைக்கின்ருர். குரு, சுக்கிரன் ஆட்சி பெற்றிருப்பதால் மனத்தாங்கல் ஏற்படாது என்ருர். மனைவியின் தந்தையால் (மாமனுராகிய தாய்மாமனுல்) பற்பல சண்டைகள் விளையும்.

*குறிப்பு :—களத்திர ஸ்தாஞதிபதி (ஏழாம் வீட்டுக்குரியவன்) யாகிய குரு ஆட்சி பெற்றுத் தன் வீடாகிய தனுசில் இருப்பதாலும் களத்திர காரகனுகிய சுக்கிரனும் ஆட்சி பெற்றுத் தன் வீடாகிய ரிஷபத்தில் இருப்பதாலும் ஜாதகனுக்குத் தன் மனைவியினுடன் மனத்தாங்கல் ஏற்பட இடமில்லை.

15. எந்தகா லத்தில் நேரு மியம்புவீர் முனியே நீர்தாம்
சந்தத மூவெட் டாண்டில் சார்ந்திடும் கலகம் தானும்
பிந்தியு மைந்தின் மேலே பிசகின்றி வாழ்வா ளாகும்
கந்தனை யீன்ற மாதே கழறுவோம் புத்திர பாவம்.

15. எந்தக் காலத்தில் (தாய் மாமனுல்) சண்டைகள் ஏற்படும்? தாங்கள் அவ்விவரங்களைச் சொல்லுங்கள் என்று வினவ, அத்திரி முனிவர் பதில் கூறுகின்ருர். திண்ணமாக ஜாதகனுடைய இருபத்துநான்காம் வயதில் (ராகு மகாதசையில் களத்திரகாரகனுகிய சுக்கிரனுடைய புக்தியில் சண்டை ஏற்படும்.) அந்தக் கலகம் நேரும். பிறகு ஐந்து வருடங்கள் கழித்து மனத்தாங்கல் தீர்ந்து கணவனுடன் வாழ்ந்து வருவாள். கந்தபிரானைப் பெற்று அளித்த தாயே! இனி நாங்கள் ஜாதகனுடைய புத்திர பாவத்தைப் பற்றிச் சொல்லுகின்ரேம்

## ஜாதகருடைய புத்திரபாவம்

16. சுதர்களு மெழுவர் தோன்றும் சீரணஞ் சிலவே [யென்ரேம்
சதமுடன் ஆண்பால் ரெண்டு சத்திமார் அவ்வாறு [தீர்க்கம்
முதல்சுதர் தோஷ மெய்தும் உரைக்கிரேம் பின்பால் [சேதி
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

16. ஜாதகனுக்கு ஏழு குழந்தைகள் தோன்றுவர் என்ரேம். அவர்களில் சில குழந்தைகள் இடையில் இறந்து விடும். நீண்ட ஆயுளுள்ள இரு புத்திரர்களும், தீர்க்காயுளுடைய இரு பெண்களும் இருப்பர். ஜாதகனுக்கு முதலில் தோன்றும் புத்திரனுக்குத் தோஷமுண்டு. அது விவரம் பிற்பாகத்தில் சொல்லுகின்ரேம். பெரியோர்களைக் காக்கும் தாயே! கேளுங்கள்.

## தாயின் குணவிசேஷங்கள்

17. அன்னையு மிருநி றத்தள் அன்புள மனத்த ளாகும்
சொன்ன சொல் காப்பா ளாகும் செனித்தயில் தென்பா
[லாகும்
தன் துணை யாண்பால் மூன்று தையல்மார் அறுவ ராகும்
கன்னிமார் சிலவே துன்ப கழறுவோம் பின்பால் செதி.

17. ஜாதகனுடைய தாய் கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவள். பிரிய மான மனமுடையவள். தான் கூறிய வார்த்தைகளின்படி நடப்பவள். அவள் பிறந்த வீடு தெற்குப் புறம் உள்ளது. அவளுக்குச் சகோதரர் மூவரும் சகோதரிகள் அறுவரும் தோன்றுவர். அவர்களில் சில சகோதரிகள் இடையில் இறந்து விடுவர். அவர்கள் விவரத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

## இதுவுமது

18. ஈகையும் கொஞ்ச முண்டு இடுப்பினில் ரோக முள்ளாள்
தோகையும் யோக சாலி துருசான கோபி யாவள்
நாகரீ கங்க ளுள்ளாள் நவிலுவோ மிவள்தன் பூர்வம்
வேகமா நதியின் பக்கல் விளங்கினுள் தீயின் வம்சம்.

18. சிறிது தானம் செய்யும் மனமுள்ளவள். அவளுடைய இடுப்பில் வியாதி உடையவள். அதிர்ஷ்ட முள்ளவள். விரைவில் கோபங் கொள்ளும் இயல்பினள். நாகரீகமான வாழ்க்கையை மேற் கொள்ளுவாள். இனி இவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். வேகவதி நதிக்குப் பக்கத்தில் வன்னிய குலத்தில் பிறந்து:

## தாயின் முற்பிறவியும், மறுபிறவியும்

19, வரனுண்டாய் மதலை யுண்டாய் மால் பத்தி மிகவே
[கொண்டு
அறமதி லிச்சை யுண்டாய் அந்தகன் பக்கல் சென்று
சிரநான்கோன் வரையப் பட்டு செனித்தனள் வைசியச்
[சேயாய்
மறுசென்மம் காஞ்சி தன்னில் வருவாளே கங்கை சேயாய்

19. மணமாகி, புத்திரர்களைப் பெற்று, திருமால் மீது அதிகமான பக்தி கொண்டு, தருமம் செய்வதில் பிரியப்பட்டவளாக வாழ்ந்து, எமபுரம் சென்று (இறந்து) மீண்டும் நான்கு தலைகளையுடைய பிரமதேவனால் படைக்கப்பட்டு வைசிய குலத்தவளாகப் பிறந்தாள். அடுத்த பிறவியில் காஞ்சீபுரத்தில் வேளாள குலத்தவளாகப் பிறப்பாள்.

## தந்தையின் முற்பிறவி

20. தந்தையின் பூர்வம் தன்னைச் சாற்றுவோம் பழனி
[நாட்டில்
வந்தனன் சேடர் வம்சம் வளமுள குடும்பி யாகி
சந்ததம் நெசவு செய்து சான்றோர்கள் பக்தி பூண்டு
விந்தையாய்ச் சேது புக்கி வினையது யில்லா தாகி;

20. இனி ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகிறோம். பழனி க்ஷேத்திரத்தில் சேடர் வமிசத்தில் பிறந்து, செல்வம் கொழிக்கும் குடும்பத்தையுடையவனாக வாழ்ந்து நெசவுத்தொழில் செய்து வந்து, பெரியோர்களிடம் அன்பும் மரியாதையும் கொண்டு வாழ்ந்து, சேதுவுக்குச் சென்று நீராடி, தீவினைகளைப் போக்கி;

21. காலன்தன் நாட டைந்து கஞ்சனால் வரையப் பட்டு
சீலமில் லாத வைசிய குலமதி லுதிப்பா னாகும்
ஏலவே வறுமை காணான் இனபந்து பகையு மாகும்
சாலவே பின்சென் மத்தைச் சாற்றுவோம் தாயே கேளே.

21. மரணமடைந்து மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு நல்லொழுக்கமில்லாத வைசியகுலத்தில் பிறந்தான் என்று சொல்லுகின்றோம். தரித்திரமில்லாதவன். சுற்றத்தார் விரோதம் உள்ளவன். இனி மறுபிறவியைச் சொல்லுகின்றோம்

## தந்தையின் மறுபிறவி

22. ஆலங்காட் டதற்கு உத்தரம் அணுகிய பேரூர் தன்னில்
பாலனும் சைவச்சேயாய் பிறந்துமே வணிபம் செய்து
சீலமாய் வாழ்வா னாகும் செப்பிய மொழி குன்றாவே.
வேலனைப் பெற்ற மாதே விளம்புவோ மிவனின் பூர்வம்,

22. ஆலங்காட்டுக்கு (திருவாலங்காடு?) வடக்கில் உள்ள ஒருபெரிய ஊரில் சைவ குலத்தவனாகப் பிறந்து, வர்த்தகம் செய்து நல்லொழுக்கமுள்ளவனாக வாழ்ந்துவருவான் தாயே/ நாங்கள் கூறியவை தவறா. வேல் முருகனைப் பெற்றெடுத்த தாயே! இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

## ஜாதகருடைய முற்பிறவி

23. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறோம் தில்லை
[தன்னில்
பன்னுகோ வைசிய னாகப் பிறந்துமே செட்டுச் செய்து
தன்மனை மதலை யுண்டாய் சகலர்க்கு நல்லோ னாகி
துன்னிய மனங்க ளின்றி சோர்வோர்மேல் பட்ச மின்றி.

23. இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தில்லைத் தலமாகிய சிதம்பரத்தில், கோவைசியனாகப் பிறந்து வர்த்தகத் தொழில் புரிந்து, மனைவி மக்களைப்பெற்று வாழ்ந்து, எல்லோருக்கும் நல்லவன் என்ற பெயரெடுத்து தீய எண்ணங்களில்லாத மனத்துடன், துன்புற்றுச் சோர்வடைந்தவர்கள்மீது அனுதாபப்படாதவனாக இருந்து,

24. காசுமேல் ஆசை யாகி காவலன் வாழ்த்து மேதான்
பாசமாங் கயரோன் பக்கல் பரவியே பிரமன் லக்கம்
வாசமாய் வைசியச் சேயாய் வருகுவா னிவனே
[யென்றோம்
பேசுவோ மிவனின் யோகம் பூமியில் வறுமை காணான்.

24. காசு ஒன்றே குறியாக அதன்மீது பாசம் கொண்டு வாழ்ந்து வந்து பாசக்கயிற்றுடன் கூடிய எமனுடைய பட்டணம் சென்று (மரண மடைந்து) மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு வைசிய குலத்தவனாக இப்பிறவியில் பிறந்தவன் ஜாதகன் என்று சொல்லுவோம். இவனுடைய யோகத்தைப் பற்றிக் கூறுவோம். உலகில் தரித்திரமில்லாதவன்.

## பருவதயோகமும் மச்சயோகமும்

25. பருவத மச்ச யோகம் பகருவோம் பால னுக்கு
திருமகள் வாச முண்டு செட்டுகள் செய்த லுண்டு
தரையது சேர்ப்பா னாகும் தானியச் செட்டும் செய்வன்
குறை யென்றோர்க் குதவி செய்வன் குலத்துளோர்
[மதிக்க வாழ்வன்.

25. பருவத யோகமும், மட்சயோகமும் ஜாதகனுக்கு உண்டு என்று சொல்லுகின்றோம். லட்சுமீகடாட்சம் பெற்றவன். வர்த்தகத் தொழில்புரிந்து வருவான். விளைநிலங்களையும் பூமியையும் பெருக்குவான். தானிய வர்த்தகம் செய்து பொருள் ஈட்டுவான். கஷ்டம் அடைந்தவர்கட்கு உபகாரம் செய்வான். தன் பந்துக்கள் கொண்டாடும்படியாக வாழ்ந்து வருவான்

*குறிப்பு:—பர்வதயோகம்:—இதன் விவரத்தை ஜோசியம் அரங்கசாமிப் பிள்ளை அவர்களின் "ஜோதிட அகராதியில்" 54-ஆம் பக்கம் பார்க்க. மட்சயோகம் :—இதன் விவரத்தை அதே புத்தகத்தில் 58-ஆம் பக்கம் பார்க்க.

## இதுவுமது

26. தந்தைக்குத் தாழ்வு றுதான் சல்லியம் கொள்ளா னாகும்
வந்தவர்க் கன்ன மீவன் மனமது தளர்ச்சி யெய்தும்
பந்துவும் பகையு மெய்தும் பாரியை தன்னால் நேரும்
பிந்தியும் நிவர்த்தி யாகும் பேதையால் பொருளும்
[நேரும்.

26. தன் தந்தையின் அந்தஸ்துக்குக் குறைவு இல்லாமல் வாழ்ந்து வருவான். கடன் வாங்காதவன். பசியென்று வந்தவர்கட்குப் பரிவுடன் அன்னமளிப்பவன். சிறிது மனத்தளர்ச்சி கொண்டவன், தன் மனைவியினல் அவளுடைய சுற்றத்தாருடன் விரோதம் ஏற்படும். பிற்காலத்தில் அது தீர்ந்துபோய் அவளால் ஜாதகனுக்குப் பொருள் சேரும்.

27. இருபது வேழு ஆண்டில் எய்திடும் வேறு வில்லம்
தரையது அதன் பின் சேரும் தனதானியம் கொடுக்கல்
[வாங்கல்
பரைபள்ளு முடைய ளுகும் பரவுப காரம் செய்வன்
தருமத்துக் குதவி செய்வன் சந்திரன் பிறைபோல்
[யோகம்.

27, ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் வேறு வீடு இவனுக்குக் கிட்டும். அதற்குப் பிறகு பூமி நிலங்கள் முதலியன சேரும். பொருள் கொடுக்கல் வாங்கல் செய்வதுடன் தானிய வர்த்தகமும் செய்துவருவான். ஆட்கள் (பணிபுரியும் வேலையாட்கள்) அதிகமாக உடையவன். பிறருக்கு உபகாரம் செய்துவருவான். தருமகாரியங்களுக்கு நன்கொடை அளிப்பான். பிறைச்சந்திரன்போல் யோகம் வளரும்.

## தந்தை தாயரின் இறுதிக் காலம்

28. எண்ணைந்து ஆண்டு தன்னி லிவன்துணை வேருய்ச்
[செல்வன்
திண்ணமாய் முப்பா னென்பான் தேள்மாகம் தந்தை
[கண்டம்
வண்ணமாய் முப்பா னென்றில் மார்கழி மாதம் தன்னில்
அன்னையின் கண்ட மென்ரே மம்பிகை யாளே கேளாய்.

28. ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் அவனுடைய சகோதரன் தனியாகச் சென்றுவிடுவான். நிச்சயமாக முப்பத்தொன்பதாம் வயதில் கார்த்திகை மாதத்தில் தந்தை இறந்துவிடுவான். முப்பத்தொன்றும் வயதில் மார்கழி மாதத்தில் தாயாருக்கு மரணம் சம்பவிக்கும் தாயே! கேளுங்கள்!

*குறிப்பு:—குரு மகாதசையில் சுக்ரபுக்தியில் சகோதரன் பிரிவான். குரு மகாதசையில் குரு புக்தியில் தாயார் இறந்துவிடுவான். குரு மகாதசையில் சூரியபுக்தியில் தந்தை இறப்பான்.

## ஜாதகருடைய மரணகாலம்

29. அறுபது நாலு வாண்டி லேப்பசி மாதம் தன்னில்
திருமகன் தனக்குக் கண்டம் செயமுனி தடுத்துச்
[சொல்வார்

குருவுக்கு ஆறில் திங்கள் குலவியே சகடை தோஷம்
ஆருண்டுள் கண்டம் நேரும் அத்திரி தடுத்துச்
[சொல்வார்.

29. ஜாதகனுடைய அறுபத்து நான்காம் வயதில் ஐப்பசி மாதத்தில் அவன் மரணமடைவான். இதைக்கேட்ட ஜபமுனிவர் மறுத்துச் சொல்லு கின்றூர். குருவிருக்குமிடத்துக்கு ஆருமிடத்தில் சந்திரன் இருந்துவருவதால் ஜாதகனுக்குச் சகடைதோஷம் உண்டு என்று சொன்னூர். அதனுல் ஜாதகர் பிறந்து ஆறும் வயதுக்குள்ளாகவே மரணம் சம்பவிக்கும் என்ரூர். அத்திரி முனிவர் மறுத்துக் கூறுகினரூர்.

## சகடைதோஷ நிவர்த்தி

30. சந்திரன் ரிஷபம் தங்கச் சகடைகள் நிவர்த்தி யாகும்
மைந்தனும் வயது தீர்க்கம் மால்புகர் மதிபா
[னுன்பான்
தன்மகன் மாதி யாகிச் சார்ந்ததால் பலனெவ் வாறு
மன்னவன் முப்பானு ண்டில் மேலேதான் யோகம்
[வாய்க்கும்.

30. சந்திரன் ரிஷபத்தில் தங்கியிருப்பதால் சகடைதோஷம் இல்லை தீர்ந்து விடும். ஜாதகனும் நீண்ட ஆயுள் உடையவன். புதன் சுக்கிரன் சந்திரன் சூரியன் இந்த கிரகங்கள் ஒன்பதாமிடத்தில் இருப்பதாலும் பிறந்த லக்னம் கன்னியாகவும் இருப்பதால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள். ஜாதகனுடைய முப்பதாம் வயதுக்கு மேல் யோகம் விருத்தி யடையும்.

31. தென்திசை சேது செல்வன் திருப்பணி யுதவி செய்வன்
அன்னவன் வறுமை காணு னுதிமால் பத்தி
[கொள்வன்
பொன்பணி சேர்ப்பா னுகும் போசன வறுமை காணுன்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

31. தெற்குக் கரையிலுள்ள சேதுவுக்குச் சென்று நீராடுவான். ஆலயத் திருப்பணி தருமங்கள் செய்து வருவான். ஏழைமை அடையாதவன். திருமாலின் மீது பக்தி கொண்டவன். பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான் சாப்பாட்டுக்குத் தரித்திரம் அடையாதவன். உயர்ந்த யானைமுகக் கடவுளைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

## ஜனன கால தசாபலன்

32. செனித்திடு காலம் தன்னில் சந்திரன் தசையி ருப்பு
குனித்திடு மைந்து ஆண்டும் கூறுவோம் திங்க ளாறும்

விணைவரும் சாத கர்க்கு மேவிடும் துணைவர் தாமும்
பீணையாகு மில்லம் தானும் போகுவான் தென்பால்
[தன்னில்.

32. ஜாதகன் பிறக்கும் போது சந்திரமகா தசையில் செல்லுப்போக மீதம் இருப்பாவது ஐந்து ஆண்டுகளும் ஆறு மாதங்களுமாம். அக்காலத்தில் ஜாதகனுக்கு துன்பம் நேரிடும். சகோதரர் தோன்றுவர். வீட்டிற்குக் கேடு ஏற்பட்டுத் தெற்குப் பக்கம் வேறு வீட்டுக்குச் செல்வார்கள்.

## இதுவுமது

33. தந்தையின் வர்க்கம் சூதம் தனமது செலவு முண்டு
விந்தையா யில்லம் செய்தல் மிக்கநாற் காலி வாங்கல்
பிந்திய பாகம் சொல்வேன் பேசுவோம் விபரமாக
இந்திர னிறைஞ்சு மாதே யியம்பிய மொழிகுன் றுவே.

33. தந்தையின் வர்க்கத்தினருக்குச் சூதம் ஏற்படும். பொருட் செலவு உண்டாகும். அழகான புது வீடு கட்ட நேரிடும். அதிகமான கால் நடைகள் வாங்கும்படி ஏற்படும். மற்ற விவரங்களை இரண்டாம் பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்றோம். இந்திரனால் தோத்தரிக்கப்படும் தாயே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறா. —V. R. N.

———

# ஜாதகம் 58.

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதி[2]ரவி [3]புந்தி சிம்மம [5]மங்கலன் [6]மான தாக
[7]விதிகன்னி கேது [8]கோலாம் [9]வெள்ளியும் [10]விணை புக்கப்
[4]பதியது கன்னி யாகப் பணிகுரு மேட மாக
அதிபதி கேட்கும் போது வதிஷ்டரும் கூறு கின்றார்.

1. சந்திரன், சூரியன், புதன் சிம்மத்திலும், அங்காரகன் மகரத்திலும் சனி கன்னியிலும் கேது துலாத்திலும், சுக்கிரன் மிதுனத்திலும் ராகு, குரு மேடத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து பிறந்த லக்கினம் கன்னியானுல் ஏற்படும் பலனைக் கூறுங்கள், என, பார்வதிதேவி வினவும் போது, வசிஷ்ட முனிவர் பதில் உரைக்கின்றார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | ராகு குரு | | சுக்கிரன் |
| | இராசி சக்கரம் | | |
| அங்காரகன் | | | சந்திரன் சூரியன் புதன் |
| | | கேது | சனி லக்கினம் |

*குறிப்பு:—ஜாதகன் ஆவணி மாதத்தில், உத்திர நட்சத்திரத்தில் முதல் பாதத்தில் காலையில் சுமார் எட்டு மணிக்குப் பிறந்தவன். அன்று அமாவாசைத் தினமாக விருக்கும்.

## ஜாதகன் பிறந்த வீட்டின் நிலை

2. இந்தசே யாணும் சென்மமில்லமும் வடதென் வீதி
இந்திரன் வாசலாகி மெய்தாது ஒருபா லில்லம்
அந்தஊர் கீழ்ப் பாலாக ஆலய மிடிந்து காட்டும்
பந்தமாம் காளி யுத்தரம் பருகாது வென்று
[சொல்வோம்.

1. சந்திரன்
2. சூரியன்
3. புதன்
4. ராகு
5. அங்காரகன்
6. மகரம்
7. சனி
8. துலாம்
9. சுக்கிரன்
10. மிதுனம்

2. இந்த ஜாதகம் ஓர் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு வடக்குத் தெற்கான வீதியில் கிழக்கு நோக்கிய வாயிலை யுடையது. ஒரு பக்கத்தில் வீடில்லை. அவ்வூரில் கிழக்குப் பக்கத்தில் ஓர் ஆலயம் இடிந்திருக்கும். வடக்கில் காளி கோயில் உண்டு. ஆனல் அது சரியான நிலையில் இராது என்றோம்.

## ஜாதகனுடைய குலம்

3. சொல்லிய வடையா ளத்துள் சிறுவூரில் இந்தச் சேயும்
புல்குவா னிரண்டாம் சென்மம் போற்றுவோ மருகர்
[வர்க்கம்
தல்லியின் தந்தை யோகம் தன்துணை களத்திர புத்திரர்
வல்லவன் யோகச் சேதி வரைகிறோம் தாயே கேளும்.

3. நாங்கள் கூறிய இவ்வடையாளங்களுள்ள சிற்றூரில் இந்த ஜாதகன் தன் தந்தைக்கு இரண்டாம் மகனைப் பிறப்பான். அவன் சமண குலத்தில் பிறப்பவன் என்று சொல்லுகின்றேன். ஜாதகனுடையவும், தாய் தந்தையர் முதலியவர்களுடையவும் யோகமும் சகோதரர், மனைவி, மக்கள் முதலியவர்களின் யோகம் இவ்விவரங்களைப் பற்றிச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

## ஜாதகரின் தகப்பனுருடைய சகோதரபாவம்

4. தந்தையின் துணைவ ரைந்தில் ஆண்ரெண்டு கன்னி
[மூன்று
நொந்திடும் கன்னிமார்கள் நிருபரும் தீர்க்கமெய்தும்
அந்தவர் வேருய்ச் செல்வர் அவர்களில் ஒருவர் தானும்
விந்தையாய் வடபால் வேறூர் மேவுவா னென்று
[சொல்வோம்.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர் ஐவராவர். அவர்களில் இரு சகோதரரும், மூன்று சகோதரிகளும் தோன்றுவர். அவர்களில் சகோதரிகள் மூவரும் இறந்து விடுவர். சகோதரர் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள். ஆனல் அவர்கள் வேருகப் பிரிந்து சென்று விடுவர். அவர்களில் ஒருவன் வடக்குப் பக்கம் உள்ள வேறு ஊருக்கே சென்று விடுவான் என்று சொல்லுகின்றோம்.

## தந்தையின் குணங்கள்

5. பின்பாகம் விபர மாகப் பேசுவோ மவர்கள் சேதி
தந்தையின் குணத்தைச் சொல்வேன் சஞ்சல மனத்த
[ருகும்

துன்னுமால் நிறத்தனுகும் துருசான நடையு மாவன்
கன்னியர் மோக வானும் கடன்கொள்வன் கிருஷி
[செய்வன்.

5. அவற்றைப் பற்றிய விவரங்கள் பிற்பாகத்தில் விரிவாகச் சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய தந்தையின் குண விசேஷங்களைக் கூறுகின்றோம். அலைபாயும் மனத்தினன். தூய திருமாலின் கரிய நிறமுடையவன். வேகமாக நடக்கும் இயல்பினன். பெண்களின் மீது மையல் கொள்ளுபவன். கடன் வாங்கும் இயல்பினன். விவசாயம் செய்து வருபவன்.

6. இருகுழலோசை யுள்ளா னின்பமாய் வார்த்தை
[சொல்வன்
அருகர்தன் பத்தி கொஞ்சம் அவசர மனத்த னுகும்
மர்மமும் கொஞ்ச முண்டு வளமிலாக் குடும்பி யாவன்
பரைபள்ளு மில்லா னுகும் பலபாவை மோகம் கொள்வன்

6. இருவிதமான குரல்கள் உள்ளவன். பிறருடன் பிரியமாகப் பேசும் இயல்பினன். சமண தேவர் மீது சிறிது பக்தி உள்ளவன். அவசரப்படும் சுபாவம் உள்ளவன். இரகசியத்தை வெளிவிடாமல் தன்னுள் அடக்கி வைப்பவன். செழிப்பில்லாத குடும்பத்தைப் பெற்றவன். பணியாட்கள் இல்லாதவன் என்றேம். பல பெண்களின் மீது காமத்தினுல் இச்சை கொள்ளுபவன்.

## இதுவுமது

7. பித்தசூ டுடையனுகும் பின்புத்தி யல்ப கோபி
பத்தினி வர்க்கம் நாஸ்தி பந்துவுக் கிணக்கம் சொல்வன்
நத்தினேர்க் குதவி செய்வன் நாயகன் சமயோ கத்தான்
சித்தினி மார்க ளாலே சிலநிந்தை யேற்பா னுகும்.

7. பித்தச் சூட்டு நோயுள்ளவன். முன் கோபி, பிறகு உடனே சாந்தமடையும் குணமுள்ளவன் (பின் புத்தி கொண்டவன்) மனைவியின் வம்சத்தினர் இல்லாதவன். சமமான யோகங்கள் உள்ளவன். தன்னை பண்டி வந்து யாசித்தவர்கட்கு உபகாரம் செய்து வருவான். பெண்களால் அவமானம் அடைவான்.

## ஜாதகனுடைய இயல்புகள்

8. இந்நெறி யுடையோனுக்கு யிவனுமே யுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அவனுமால்
[நிறத்த னுகும்

சொன்னதைக் காப்பா னுகும் சுகமான கல்வி கற்பன்
தன்சொல்லு மடக்க முண்டு சஞ்சல மனத்த னுமே.

8. இவ்விதக் குணங்களுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் பிறப்பான் என்றேம். இனி அவனுடைய குண விசேஷங்களைச் சொல்லுகின்றேம். அவனும் திருமாலின் நிறமாகிய கரிய நிறமுடையவன். சொன்ன வார்த்தைகளின்படியே நடப்பவன். நல்லறிவை யூட்டும் கல்வியைக் கற்றுவருவான். அடக்கமாகப் பேசும் இயல்பினன். நிலையில்லாத மனமுள்ளவன்,

9. பயிர்தொழில் செய்வா னுகும் பரஉப காரி யாவன்
தயவுள மனத்த னுகும் சம்பத்து பின்னு லுள்ளான்
அயலார்பொன் னிச்சை யில்லான் ஆதியில் குடும்ப [லேச்சல்
செயம்செய்வ னெடுத்த வேலே செறிந்திடும் [பித்த ரோகம்.

9. விவசாயம் செய்து ஜீவனம் நடத்துவான். பிறருக்கு உபகாரம் செய்யும் குணமுடையவன். (இளகிய) தயாளமுள்ள மனத்தினன். பிற்காலத்தில் செல்வம் சேரும். பிறர் பொருளின் மீது ஆசை வைக்காதவன். குடும்ப ஆரம்பத்தில் துன்பம் நிறைந்தவன். தான் எடுத்த காரியத்தை வெற்றியுடன் செய்து முடிக்கும் வல்லமை யுள்ளவன். பித்த ரோகம் உள்ள சரீர முடையவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

10. இன்னவன் துணை வர் தன்னை யியம்பவோ மூத்தோ [ரொன்று
கன்னிகை யொன்று சொல்வோம் காவலன் பின்னுல் [சேதம்
முன்துணை பெண்பால் சேதி மொழிகிறே மிருநி றத்தாள்
தன்மனம் கபடு மில்லாள் தானிள மனத்த ளாகும்.

10. ஜாதகனுடைய சகோதர பாவத்தைப் பற்றிக் கூறுகின்றேம். அவனுக்கு மூத்த சகோதரன் ஒருவனும் மூத்த சகோதரி யொருத்தியும் உண்டு என்று சொல்லுகின்றேம். சகோதரன் பின்னுல் இறந்து விடுவான். இனி மூத்த சகோதரியைப் பற்றிக் கூறுகின்றேம். கருமை கலந்த சிவந்த நிறமுடையவள். சூதுகளில்லாத மனத்தினள். இளகிய மனமுள்ளவள்.

## சகோதரியின் புத்திரபாவம்

11. வறுமைக ளடையா ளாகும் வரனுமே வடபால் நேரும்
திருமகள் வாச முண்டு செனித்திடும் சுதர்க ளேழு

அரிவையர் மூன்று வென்றேம் ஆண்சுத ரிரண்டு
[தீர்க்கம்
நிறையவே குடும்பி யாவள் நேர்ந்தபின் யோக
[முள்ளாள்.

11. ஏழைமையை யடையாதவள்; அவளிருக்கும் இடத்துக்கு வடக்குப் பக்கத்திலிருந்து கணவன் வாய்ப்பான். இலக்குமிகடாட்சம் பெற்றவள். ஏழு குழந்தைகள் தோன்றுவர். அவர்களில் மூன்று பெண்களும் இரு ஆண் குழந்தைகளும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் (மற்ற இரண்டும் இடையிலேயே இறந்துபோம்) பெரிய (நிறைவுள்ள) குடும்பத்தைப் பெற்றவள். கணவன் வந்த பிறகு யோகம் வாய்க்கும்.

## சகோதரியின் திருமணக் காலமும் ஜாதகனின் திருமணமும்

12. பதினொன்று ஆண்டுக் குள்ளே பாவைக்குச் சுபமும்
[நேரும்
இதுவன்றி சாத கர்க்கு யீரெட்டு ஆண்டுக் குள்ளே.
அதிபதி வருவா ளாகும் மாதுவின் குணத்தை
[சொல்வேன்
சதியிலா மனத்த ளாகும் தோத்திரப் பிரிய ளாமே.

12. அவளுடைய பதினோராம் வயதுக்குள்ளாகவே அவளுக்குத் திருமணம் நிகழும். ஜாதகனுடைய பதினாறும் வயதுக்குள்ளாக விவாஹம் நடைபெறும். இனி மனைவியினுடைய குணத்தைக் கூறுகின்றேம். கேடில்லா மனத்தினள். புகழப்படுவதில் பிரியமுள்ளவள்.

*குறிப்பு :—ஜாதகனுக்கு அங்காரக மகாதசையில் அங்காரக புக்தியிலேயே திருமணம் நிகழும்.

13. வடதிசை நேருமென்றேம் மாஞ்சிவப்புடைய ளாகும்
தடைசொலாள் வரனுக் கேதான் சாதிப்பாள் சிலது
[சங்கை
உடன்பிழை யேற்கா ளாகும் உறுதியா மனத்த ளாகும்
நடையது துருசுமுண்டு நாயகி யோக சாலி.

13. வடக்குத் திக்கிலிருந்து வருவாள் என்று சொல்லுகின்றேம். மாநிற முடையவள். தன் கணவன் வார்த்தைகளுக்கு எதிர் வார்த்தை பேசாதவள். சில விவரங்களை அடாவடியாகச் சாதிப்பாள். தவறு செய்யாதவள் (தன் பிழையை ஒத்துக் கொள்ளாதவள்) திடமான மனதுள்ளவள். வேகமாக நடக்கும் இயல்பினள். அதிர்ஷ்ட முடையவள்.

14. வயதுமே தீர்க்க மெய்தும் மருவிடும் நாபிச் சூடு
செயமுனி யிதனைக் கேட்டு திடுக்கென யுரைக்க லுற்றேர்

வியமாகும் முதல்ம ஊனதான் மேவிடு மிரண்டாம் பாரி
பயமிலா'சொன்ன சங்கை பகருவீர் முனியே நீர்தான்.

14. நீண்ட வயதுள்ளவள். நாபிச் சூட்டு நோயுள்ளவள். ஜயமுனிவர் இதைக் கேட்டு திடீரென்று பதில் கூறுகின்ருர். ஜாதகனுக்கு முதல் மனைவி இறந்து விடுவாள். இரண்டாம் மனைவி ஏற்படுவள் என்ருர். (பார்வதிதேவி வினவலானுள்) சந்தேகப்படாமல் நீர் அவ்விதம் கூறக் காரணங்கள் என்னவென்று சொல்லுங்கள்.

## களத்திர தோஷம் கிரகநிலை

15. சத்தமத் தோனு மெட்டில் சரராசி யாக நிற்க
குத்தமாய் கேது ரெண்டில் குலவியே யிருப்ப தாலே
வித்தகன் தனக்குத் தாரம் மேவிடு மிரண்டே'யாக
அத்திரி சொல்லு கின்ருர் அணுகாது தாரம் ரெண்டு.

15. ஏழாம் வீட்டுக்கு (மீனத்துக்கு) உரிய குரு எட்டாம் வீட்டில் (மேஷத்தில்) சராசரியாக இருப்பதாலும் (குடும்ப ஸ்தானமாகிய) இரண்டாமிடத்தில் (துலாத்தில்) கேது இருப்பதாலும் ஜாதகனுக்கு இருதாரங்கள் ஏற்படும். அத்திரி முனிவர் கூறுகின்ருர் "ஜாதகனுக்கு இருதாரம் ஏற்படக் கூடிய தோஷமில்லை"—

*குறிப்பு :—சாதகாலங்காரம் ஏழாம் பாவம், 679 689-ஆம் பாட்டில் (பக்கம் 232) கூறியபடி லக்னுதிபதியாகிய புதன், பன்னிரண்டாமிடத்தில் இருப்பதாலும், இரண்டாமிடத்தில் பாபியாகிய கேது இருப்பதாலும் 660-ஆவது பாட்டின்படி குரு ஏழாம் வீட்டுக் குரியவனுகி எட்டில் இருப்பதால் இருமனைவியர் ஏற்படக் கூடும்.

## மறுப்பு—கிரகநிலை

16. காரணம் யாது வென்னக் காரியும் சென்மம் தங்கக்
நீர்புகர் தசமம் ஏற நிகர்வர்க்கில் பரலு மொன்று
தீரமா யிருப்ப தாலே தேவிமுன் தீர்க்க மெய்தும்
வாரணி தனத்தா ளுக்கு மருவிடும் மூன்று கண்டம்;

16. அதற்குக் காரணம் என்ன வென்று கேட்கும் போது, சனி லக்கினத்திலும், சுக்கிரன் தசமஸ்தானமாகிய மிதுனத்தில் இருப்பதாலும் வர்க்கத்தில் ஒரு பரல் திண்ணமாக இருப்பதாலும், மனைவி நீண்ட ஆயுள் உள்ளவள் என்றும், ஆனுல் அவளுக்கு மூன்று கண்டங்கள் ஏற்படும் என்றும்;

17. இருபத்தே ழாண்டு தன்னி லெய்தீடும் கர்ப்பப் பீடை
சுரத்தினுல் உஷ்ணத் தாலும் செறிந்திடு முப்ப தாண்டில்

மறுபடி கர்ப்பத்தாலே மருவிடு முப்பான் மூன்றில்
மறலியைக் காணு ளாகும் மடிவளே மன்பா னுறில்.

17. இருபத் தேழாம் வயதில் கர்ப்ப நோயால் துன்பம் ஏற்படும். (அஃது ஒரு கண்டமாகும்) சுரத்தினுலும், உஷ்ணத்தாலும் அல்லது தீயினுல் மறுபடியும் தீங்கு உண்டாகும் அது முப்பதாம் வயதில் ஏற்படும் (அது இரண்டாம் கண்டமாகும்) முப்பத்தி மூன்றும் வயதில் மறுபடியும் கர்ப்ப நோய் ஏற்பட்டு அந்தக் காலத்திலும் சுகமடைவாள் (இது மூன்றும் கண்டமாகும்). ஐம்பத்தாறும் வயதில் மரணமடைவாள்.

## ஜாதகனுடைய புத்திரபாவமும், முற்பிறவியும்

18. புத்திரர் ஆண்பால் ரெண்டும் பெண்ணது அவ்வாறு [தீர்க்கம்
செத்திடு மூன்று வென்றேம் செப்பின நான்கும் தீர்க்கம்
வித்தகன் பூர்வம் சொல்வேன் மேல்கோட்டை நகரி [லேதான்
பத்தினன் வைசியச் சேயாய் பலவித செட்டுச் செய்து.

18. இனி புத்திர பாவத்தைப் பற்றிக் கூறுகின்றோம். இரு புத்திரர் களும் இரு புத்திரிகளும் நீண்ட ஆயுள் உள்ளவர்களாக இருப்பர். மூன்று குழந்தைகள் இறந்து போகும். நாங்கள் கூறிய நான்கு குழந்தைகளும் தீர்க்க ஆயுளுடன் இருக்கும். இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல் லுகின்றேன். மேல் கோட்டை என்றும் நகரத்தில் வைசிய குலத்தவனுகப் பிறந்து பலவிதமான வர்த்தகம் புரிந்து வந்து ;

## சாபம் நேரல்

19. அன்னையின் தந்தை மிக்காய் அவனுமே வாழு னுளில்
பொன்பணி தாரே னென்று பேதையைப் போகம் [துய்த்து
தன்பொரு ளீயா தாகிச் சாகைக்குச் சென்று னென்றேம்
அன்னவள் மனது வெட்கி அறைகிருள் சாபம் தானும்.

19. தாய் தந்தையருக்கு மேலாக வாழ்ந்து வரும் நாளில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேன். "உனக்குப் பொன் ஆபரணம் தருகின் றேன்" என்று கூறி ஒரு பெண்ணுடன் சிற்றின்பம் அனுபவித்தான். ஆனுல் அவளுக்குப் பொருளோ, ஆபரணமோ தராமல் தன் வீட்டுக்குச் சென்று விட்டான். அப்பெண் மனம் வருந்தி, கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

## பெண் சாபம்

20. மாறுபா டான வார்த்தை வசனித்தே போகம் துய்த்தாய்
வேறுசென் மங்கள் தோன்றி விளையாடும் காலம்
[தன்னில்
தீரமாய் அன்னை யேகித் தயங்கியே அலேவா யென்று
கூறியே சென்ருளென்ருேம் குலவிற்று அதுஓர்
[தோஷம்.

20. "ஆசை வார்த்தைகளைக் கூறி என்னிடம் சிற்றின்பம் அனுப வித்தாய் ஆனுல் அதற்குப் பணம் கொடுக்காமல் சென்று விட்டாய். இனி ஏற்படும் ஜன்மத்தில் சிறுவயதிலேயே, விளையாடும் காலத்திலேயே உன் அன்னையை இழந்து தயங்கித் தயங்கி வாழக்கடவாய்" என்று அந்த ஏழைப் பெண் கூறி விட்டுச் சென்ருள். அந்த தோஷம் ஒன்று இவனை வந்த டைந்தது.

## கணக்கில் மோசம் செய்ததன் பலன்

21. மறையவர் தனக்கு மோசம் வரைந்தனன் கணக்கி
[லேதான்
உறைகுவார் சாபம் தானும் உதித்திடு மறுசென் மத்தில்
வரும்துணை ஆண்பா லின்றி ஆதியில் அன்னை மாண்டு
குறையான குடும்பி யாகிக் குலத்துளோர் மதிப்பில்
[லாமல்,

21. அந்தணர்கட்கு கணக்கில் மோசம் செய்து வந்தான். பொய்க் கணக்கு எழுதினுன். மோசம் செய்யப்பட்ட அந்தணர்கள் சாபமிடுகின் றனர். இனி ஏற்படும் அடுத்த பிறவியில் உடன் பிறந்த சகோதரனின்றி, இளவயதிலேயே தாயை இழந்து, குறைவுள்ள குடும்பமாக, தன் குலத்தவர் மதிப்பைப் பெருமல்;

## தாய்க்கு இடைஞ்சல் செய்ததன் பவன்

22. சல்லியப் பாதை யுண்டாய் தரணியில் வாழ்வா யென்று
சொல்லியே மறையோன் சென்ருர் தொடர்ந்தது அந்தத்
[தோஷம்
தல்லிக்கு இடைஞ்சல் செய்தான் சார்ந்தது அதுஓர்
[தோஷம்
வல்லியின் மனங்களின்றி மாரனும் பேதியாலே;

22. துன்பங்களடைந்து உலகில் வாழ்ந்து வருவாய் என்று சாபமிட்டு அந்தணர் சென்று விட்டார். அந்தத் தீவினையும் (இப்பிறவியில்) தொடர்ந்

தது. இதுவுமன்றி தன் தாய்க்கும் சிறிது துன்பம் விளைவித்தான். அத் தோஷமும் இவனைப் பற்றியது, மனைவியினால் சுகங்கள் ஏற்படாமல் (திருமணம் இன்றி) பேதியினால்;

23. காலன் தன் பதிக்கு புக்குக் கஞ்சனால் வரையப் பட்டு
சீலவான் சினகு லத்தில் செனித்தவ னிவனே
[யென்றோம்
சாலவே மறையோர் சாபம் சக்தியின் சாப மொன்று
கோலமா யன்னை சாபம் குலவிடு மிச்சென் மத்தில்.

23. மரண மடைந்து மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு நல்லொழுக்கமுள்ள ஜைன குலத்தில் பிறந்தவன் இந்த ஜாதகன் என்றோம். நல்லவர்களான அந்தணர் சாபமும், பெண்ணின் சாபமும், தாய்க்குத் தீங்கு விளைவித்ததன் பலனும் இப்பிறவியில் தொடர்ந்தது.

## தோஷங்களின் பலன்

24 இல்லமும் அலைச்ச லாகு மீன்றதாய் ஆதி தன்னில்
செல்லுவாள் கால னூடு சிறப்பிலாக் குடும்ப மெய்தும்
சொல்லுவீர் அன்னை சேதி செப்புவோ முனியே
[யாங்கள்
நல்லவ ளாகி வாழ்வள் நாயகி யிருசி வப்பள்.

24. வீட்டினால் துன்பம் ஏற்படும். பெற்ற தாய் இவனுடைய சிறுவயதிலே இறந்து விடுவாள். சிறப்பில்லாத குடும்பத்தை யடைவான். இனி தாயின் விவரங்களைச் சொல்லுங்கள் முனிவரே! நாங்கள் கூறுகின்றோம். அவள் உலகில் நல்லவள் என்ற பெயருடன் வாழ்ந்து வருவாள் கருமை கலந்த சிவப்பினள்.

## தாயின் விவரமும் முற்பிறவியும்

25. வரன்மனம் போலே வாழ்வள் மறுத்துரை அதிகம்
[கூறாள்
அரிவைக்குத் துணையாண் காணாள் அம்பிகை மூன்று
[தீர்க்கம்
உரையில்லம் வடமே லாகும் உத்தமி பூர்வம்
[சொல்வேன்
விரிஞ்சியின் மேல்பா லாக மேவிய சிறுவூர் தன்னில்;

25. தன்னுடைய கணவன் மனமறிந்து வாழ்ந்து வருவாள். அவனுடைய வார்த்தையை எதிர்த்துப் பேசாதவள். அவளுக்கு சகோதரர் இல்லை. சகோதரிகள் மூவர் நீண்ட ஆயுளுடன் இருப்பர். அவள் வசிக்கும்

வீடு வடமேற்குப் பக்கத்தில் உளது. இனி அவளுடைய முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். விரிஞ்சி புரத்துக்கு மேற்கில் உள்ள ஒரு சிற்றூரில்;

26. உதித்தனள் கர்ண சேயாய் உலகுக்கு நல்லோ ளாகி
மதித்திடக் குடும்பி யாகி மதலைகள் வரனு முண்டாய்
அதிபதி வாழ்ந்து மேதான் மகாதலம் சேது புக்தி
சதியான கால ளுடு சேர்ந்தன ளென்று சொல்வோம்.

26. கருணீகர் குலத்தில் பிறந்தாள். இவள் உலகத்தில் நல்லவளாக வாழ்ந்து, பெருமையுள்ள குடும்பத்தை யடைந்து, கணவன் குழந்தைகள் இவர்களைப் பெற்று வாழ்ந்து வந்து, பெரிய புண்ணியத் தலமாகிய சேதுவுக்குச் சென்று (நீராடி), யாவருக்கும் தீங்காகிய எமபுரம் அடைந்து (மரண மடைந்து), இப்பிறவியில் தோன்றினாள் என்று கூறுகின்றோம்.

## தாயின் மரணகாலமும் மறுபிறவியும்

27. விதியவன் வரையப் பட்டு மேவினு ளிக்கு லத்தில்
வதிபதி ஐந்து ஆண்டில் மகரமாதத்தி லேதான்
சதியான காலனுடு சாறுவார் பின்சென் மம் கேள்
முதல்தலம் காஞ்சி தன்னில் மேவுவாள் பிரம்ம சேயாய்.

27. மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தாள் என்று கூறியுள்ளோம். ஜாதகனுடைய ஐந்தாம் வயதில் தைமாதத்தில் இறந்து விடுவாள் (அக்காலத்தில் ஜாதகனுக்கு சந்திர மாக தசை ஆரம்பமாகும்) இவளுடைய மறுபிறவியைக் கேளுங்கள். புண்ணிய தலங்களில் முதன்மையான காஞ்சீபுரத்தில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## தந்தையின் முற்பிறவி

28. மறுமாதா வெந்தக் காலம் வந்திடும் விபரம் சொல்வாய்
உறையாது மறுதாய் தானும் உதிக்கினும் நிந்தை யுண்டு
குறைவரு மனுகா தாகும் கூறுவோம் தந்தை பூர்வம்
அருணைக்கு உத்திரத்தல் அணுகிய பேரூர் தன்னில்;

28. ஜாதகனுக்கு இளைய தாயார் எந்த வயதில் வருவாள் விவரமாகச் சொல்லுங்கள். ஏற்படாது (ஜாதகனுடைய தந்தை இரண்டாம் மணம் செய்து கொள்ள மாட்டான்) அப்படி ஏற்பட்டாலும் நிலையாது. பழியும் அவமானமும் குறைகளும் வந்து சேரும். அதனால் இரண்டாம் தாய் வரமாட்டாள் இனி தந்தையின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலைக்கு வடக்கில் உள்ள ஒரு பெரிய ஊரில்;

## தொடர்ச்சி—தீவினை

29. வந்தனன் வைசியச் சேயாய் வளமையாய்க் குடும்பி யாகி
இந்தவன் வாழு நாளி லியம்புவோ மூழி தானும்
தந்தைபால் சண்டை யிட்டுத் தேசமே துரத்தி விட்டான்,
தந்தையு மனவெ றுப்பால் சாற்றுவார் சாபம் தானும்.

29. வைசியகுலத்தவனுகப் பிறந்தான். செழிப்புள்ள குடும்பத்தை யடைந்து வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். தன் தகப்பனை சண்டையிட்டு தன் ஊரை விட்டு[விரட்டி விட்டான். அவரும் மனத்தில் சங்கடப்பட்டுக் கொண்டு கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

## தந்தையின் சாபம்

30. மெல்லியின் மொழியைக் கேட்டு விரோதமாய்த் துரத்தி [விட்டாய்
அல்லல்க ளந்தி யத்தில் அணுகியும் குறைவு நேர்ந்து
செல்லுவாய் காலனுடு செனித்திடு மறுசென் மத்தில்
வல்லியு மதலை யுண்டாய் மத்தியில் மனைவிழ்மாண்டு;

30. "பெண்டாட்டி பேச்சைக் கேட்டுக் கொண்டு என்னை வெளியில் துரத்தி விட்டாய். அதனுல் இறுதிக் காலத்தில் துன்பம் அடைந்து, குறைவுகள் ஏற்பட்டு, மரண மடைந்து, மீண்டும் ஏற்படும் மறுபிறவியிலும் மனைவி மக்களை யடைந்து, இடைக் காலத்திலேயே மனைவியை இழந்து;

## தந்தையின் சாபம் (தொடர்ச்சி)

31. தொல்லைக ளதிக மாகிச் சுகமின்றி வனவா சங்கள்
சல்லிய பாதை யுண்டாய் சஞ்சல மனமாய் வாழ்வாய்
சொல்லியே சென்ருரென்ருேம் சேர்ந்தது அந்தத் [தோஷம்
வல்லியை விலக்கி வைத்து மருமனை வாழ்க்கை [செய்தான்

31. "துன்பங்கள் பெருகி, சௌக்கியக் குறைவுகள் ஏற்பட்டு வனவாசத்தைப் போன்று தனித்து வாழ்ந்து, துன்பமடைந்து,(கடனு பத்திரவம் ஏற்பட்டு) அலைபாயும் மனத்துடன் இருந்து வருவாய்" என்று கூறிச் சென்ருர். அந்தச் சாபமும் சாதகனை இப்பிறவியில் தொடர்ந்தது தாயே! இன்னுமொன்று கூறுகின்ருேம். மனைவியைத் தள்ளி வைத்து விட்டு வேறு மனைவியை மணந்தான்.

## மனைவியின் சாபம்

32. பாரியு மனவெ றுப்பால் பகருவாள் சாபம் தானும்
வேறொரு சென்மம் தன்னில் வித்தகி மத்தில் மாண்டு
சீறிய குடும் பியாகி சிறப்பிலா வாழ்வா யென்று
கூறியே கயிறு மாட்டிக் கோதையு மாண்டா ளென்றோம்

32. முதல் மனைவி மனவருத்தமுற்று சாபமிடுகிறாள். "இனிவரும் அடுத்த பிறவியில் மனைவியை சீக்கிரத்தில் இழந்து, நேரில்லா குடும்பத்தை யடைந்து சிறப்புகள் இன்றி வாழ்வாய்" என்று கூறி கயிற்றை மாட்டிக் கொண்டு தற்கொலை செய்து கொண்டாள், என்றோம்.

33. மனைவியின் சாப மொன்று மருவிற்று யவனுக் கேதான்
தனையனு மந்தியத்தில் சேதுவின் பதிக்கு புக்கு
வினையான கால னுடு மேவிப்பின் பிரமன் லக்கம்
சினகுலம் தனிலு தித்தான் சேர்ந்தது தந்தை சாபம்.

33, மனைவியின் சாபமும் இவனுக்கு இப் பிறவியில் தொடர்ந்தது. ஜாதகனும் தன் இறுதிக் காலத்தில் சேதுவுக்குச் சென்று (நீராடி) பிறகு மரணமடைந்து மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் ஜைனர்கு லத்தில் பிறந்தான். தந்தையின் சாபம் இவனுக்கு ஏற்பட்டது.

## உயர்ந்தகுலம் ஏற்படக் காரணம்

34. முன்சென்மம் வைசியச் சேயாய் விளங்கியே வினை [யனேகம்
அன்னவன் அறைந்த தாலே அருகர்தன் குலமு திக்கும்
தன்னிலே பலத்தைச் சொல்வாய் சேதுவில் சென்ற [புண்ணியம்
இன்னவ னுதித்தா னென்றோம் இலகாதோ தந்தை [சாபம்.

34. முற்பிறவியில் வைசிய குலத்தவனாகப் பிறந்து, பல தீவினைகளைச் செய்து வந்த போதிலும் சமண குலத்தில் தோன்றுவதற்குக் காரணத்தைக் கூறுங்கள் முனிவரே! "சேதுவுக்குச் சென்று, நீராடி. அங்குள்ள (ராமலிங்க ஸ்வாமியைத் துதி செய்ததால் ஏற்பட்டது" என்றார்: "தந்தையின் சாபம் தீராதோ?

## தந்தையின் மரணகாலம்

35. தந்தையின் சாபம் நீங்கா சாந்தியும் கூறோம் யாங்கள்
வந்தது வந்தே தீரும் வனவாச மாகி வாழ்வான்

பிந்தியு முப்பான் மூன்றில் புரட்டாசி மாதம் தன்னில்
அந்தகன் நகரைச் சேர்வன் அம்பிகையாளே கேளாய்

35. தந்தையின் சாபம் நீங்காது. அதற்குச் சாந்தியும் நாங்கள் கூற முடியாது. வருவது வந்தே தீரும். வனவாசத்தைப் போன்று தனித்து வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய முப்பத்திமூன்றும் வயதில் புரட்டாசி மாதத்தில் தந்தை இறந்து விடுவான். அம்பிகையே கேளுங்கள்.

*குறிப்பு :—ஜாதகனுக்கு ராகு மகா தசையில் சனி புக்தியில் தந்தைக்கு மரணம் சம்பவிக்கும்

## தந்தையின் மறுபிறவி

36. பின்சென்மம் தவளை தென்பால் பேரூரில் வைசியச்
[சேயாய்
அன்னவ னுதிப்பா னுகும் அருகர்தன் குலமு திப்போன்
தன்குலம் தாழ்வ தாகச் சனிக்கும்கா ரணங்க ளென்ன
அன்னிய மாது போகம் அருகர்தன் பத்தி கொஞ்சம்;

36. மறுபிறவியில் தவளேசுவரத்துக்குத் தெற்கில் உள்ள பெரிய ஊரில் வைசிய குலத்தவனுதப் பிறப்பான் என்ருர். சமண குலத்தில் இப் பிறவியில் பிறந்தவன் தாழ்வான வைசிய குலத்தில் தோன்றும் காரணங்கள் என்ன வென்று கூறுங்கள். வேற்றுப் பெண்ணைப் புணர்ந்ததாலும் அருகக் கடவுள் (சமண தேவன்) மீது பக்தியின்றி;

## இதுவுமது

37. நெறியது தவறுத லாலே நேருவான் வைசியச் சேயாய்த்
திருமகன் யோகச் சேதி செப்புவோம் தாயே யாங்கள்
இருவேழு ஆண்டு மட்டு மியம்பொணு யோகம் தானும்
வறுமைகள் சல்லியப் பாதை வனவாச மலைச்சல் நேரும்

37. நேர்மையிலிருந்து வழுவி நடந்ததால் வைசிய குலத்தவனுகப் பிறப்பான். இனி ஜாதகனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்ருேம். தாயே ! கேளுங்கள். ஜாதகனுடைய பதினுன்காம் வயது வரையில் யோகம் சொல்ல முடியாது. துன்பம் நேரும். ஏழ்மையும், கடன் உபத்ரவமும், வனவாசம் போன்று தனித்த வாழ்க்கை, அலைச்சல் முதலியன ஏற்படும்.

## இதுவுமது

38. சிலவுக ளதிக மாகும் செப்புவோ மதன்மே லாக
விலகிடும் சல்லி யங்கள் விளைபுல னதிக மோங்கும்

குலவிடு மாது தானும் குலபந்து மதிப்புண் டாகும்
நலமுளோர் நேச மெய்தும் நாட்குநாள் பிறைபோல்
[யோகம்.

38. அதிகமான சிலவுகள் நேரிடும். அதற்குப் பிறகு சிறிது சிறிதாக துன்பங்கள் விலகும். விளை நிலங்கள் விருத்தி யடையும். திருமணம் நிகழும். தன் சுற்றத்தாரிடம் மதிப்பு உண்டாகும். நல்லவர்கள் நட்புக் கிட்டும் நாளுக்கு நாள் வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தி யடையும்.

39. கடனது நிவர்த்தி எவ்வாறு கழறுவீர் முனியே நீர்தான்
தடமது நிவர்த்தி செய்யான் தானிய பலிதத்தாலே
உடனது நிவர்த்தி யெய்தும் ஒண்டொடி வந்த பின்பு
அடவுடன் யோகம் வாய்க்கு மணுகாது தரித்தி
[ரம்தான்

39. கடன் நிவர்த்தி யடையும். இங்ஙனம் கூறுகிறீர்கள் முனிவரே அது எப்படிச் சொல்லுங்கள். அவன் இருக்கும் வீட்டை விற்க மாட்டான். விளை நிலங்களில் நல்ல விளைச்சல் ஏற்பட்டு செல்வம் பெருகி அதனுல் கடன் நீங்கும். மனைவி வந்த பிறகு தொடர்ந்தாற் போல் யோகம் வளரும். தரித்திரமும் இவனைச் சாராது.

## ஜாதகனின் மரணமும் மறுபிறவியும்

40. இல்லமும் புதிதாய் செய்வன் ஏழஞ்சு ஆண்டு தன்னில்
வல்லவன் அறுபத் தைந்தில் ஆவணி மாதம் தன்னில்
செல்லுவான் காலனுடு செப்புவோம் பின்சென் மத்தை
தல்லியும் செனித்த ஊரில் சாருவா னிக்கு லத்தில்

40. புதியதாக வீடு கட்டுவான். அது ஜாதகனுடைய முப்பத்தைந் தாம் வயதில் நிகழும். ஜாதகன் தன் அறுபத்தைந்தாவது வயதில் ஆவணி மாதத்தில் இறந்துவிடுவான் (அக்காலத்தில் சனி மகா தசையில் சுக்கிர புத்தி நடைபெறும்) இனி அவனுடைய மறு பிறவியைச் சொல்லுகின்றோம். தாயார் பிறந்த ஊரிலேயே இதே குலத்தில் பிறப்பான் என்றோம்.

## ஜனன காலதசை

41. பாலகன் செனிக்கும் காலே பரிதியின் தசை யிருப்பு
சாலவே ஆண்டு ஐந்தும் தங்கிடும் திங்கள் மூன்றும்
கோலமாய்த் துணை விருத்தி குழவியு மன்னை சேதம்
ஓலவே சிலவ னேகம் இடறுண்டு காலி கட்கு

41. ஜாதகன் பிறக்கும்போது சூரிய மகா தசையில் இருப்பு ஐந்து ஆண்டுகளும் மூன்று மாதங்களுமாம். அக்காலத்தில் சகோதர விருத்தி ஏற்படும். ஜாதகனுடைய தாய்க்கு மரணம் சம்பவிக்கும். செலவு பெருகும். துன்பங்கள் அதிகமாகும். கால் நடைகட்கும் சேத முண்டு.

## இதுவுமது

42. தந்தைக்கு சஞ்சலங்கள் சனபந்து சூத மெய்தும்
நிந்தையும் களவு கொஞ்சம் நேர்ந்திடுமிது வல்லாமல்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபரமாக
இந்திரனிரஞ்சு மாதே யியம்பின மொழி குன்றுது.

42. தந்தைக்குச் சஞ்சலங்கள் ஏற்படும். உறவினர்கட்குச் சூதம் ஏற்படும். வீண் பழியும் அவமானமும் நேரும். சிறிது திருட்டு நடக்கும். அவைகளை யெல்லாம் விவரமாகப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். தாயே கேளுங்கள் இந்திரனால் போற்றப்படும் தாயே! நாங்கள் கூறிய வை தவறு.

—V.R.N.

# ஜாதகம் 59

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதிகன்னி ராகு [2]கோலில் [3]மங்கலன் கேது மேடம்
புதன் [4]புகர் [5]காரி [6]பானு புக்கிடம் [7]நந்தி யாக
நிதிகுரு மிதுன மாக நிகர்சென்மம் [8]மாதை யாக
இதுவிதக் [9]கோளு நின்றால் இயம்புவீர் பலனைத்
[தானே.

1. சந்திரன் கன்னியிலும், ராகு துலாத்திலும், அங்காரகன், கேது மேடத்திலும், புதன், சுக்கிரன், சனி சூரியன் விருடபத்திலும், குரு மிதுனத்திலும் நவக்கிர கங்கள் இருந்து பிறந்த லக்கினம் கன்னியாக இருப்பின் ஏற்படும் பலனைக் கூறுங்கள் (என்று பார்வதிதேவி கேட்க ரிஷிகள் பதில் கூறுகின்றனர்.)

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | அங்கா ரகன் கேது | புதன் சுக்கிரன் சனி சூரியன் | குரு |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| | | ராகு | சந்திரன் லக்கினம் |

## ஜாதகன் பிறந்த வீட்டின் விவரம்

2. இந்தசே யாணும் சென்ம மில்லமும் மேல்பால்
[நோக்கம்
தென்வட வீதி யாகும் சிறப்பிலா அருகர் மேற்கு

1. சந்திரன்
2. துலாம்
3. அங்காரகன்
4. சுக்கிரன்
5. சனி
6. சூரியன்
7. ரிஷபம்
8. கன்னி
9. (நவ)கிரகம்.

தந்தியும் தென்பால் தங்கும் சாமுண்டி வடபா லாகும்
முந்துமால் வடகீ ழாகும் மார்க்கமும் மேல்பா லாகும்.

2. இந்த ஜாதகம் ஓர் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு மேற்குப் பக்கம் பார்த்த வாயிலை யுடையது. அவ்வீடு தெற்கு வடக்கான தெருவிலுள்ளது. மேற்குப் பக்கம் அருகதேவர் கோவில் ஒன்று (பூசை முதலிய செய்யப்படாமல்) இடிந்து உள்ளது. தெற்குப் பக்கத்தில் விநாயகர் ஆலயம் உளது. வடக்குப் பக்கத்தில் சாமுண்டி கோவில் இருக்கும். வடக்கில் மகாவிஷ்ணு கோவில் கொண்டிருப்பார். மேற்குப் பக்கத்தில் சாலை யொன்று இருக்கும்.

## ஜாதகரின் குலம்

3. இன்னமும் பலதே வாசம் இலகிய பேரூர் தன்னில்
அன்னவன் கங்கை சேயாய் அருளுவா னைந்தாம்
[சென்மம்
தன்துணை களத்திர புத்திரர் தந்தைதா யோகம் தானும்
முன்பின்சென் மங்கள் யாவு முரைக்கிறே மிந்நூல்
[தன்னில்.

3. இன்னும் பல தெய்வங்கள் வாழ்ந்து வரும் ஒரு பெரிய ஊரில் ஜாதகன் வேளாள குலத்தவனுகப் பிறந்தவன் என்று கூறுகின்றோம். அவன் தன் தந்தைக்கு ஐந்தாம் குழந்தையாகப் பிறந்தவன் என்றோம். இனி அவனுடைய உடன் பிறந்தவர், மனைவி, மக்கள், தாய், தந்தையர்களுடைய யோகம் முற்பிறவி மறுபிறவி முதலிய விவரங்களை இந்த ஜோதிட நூலில் சொல்லுகின்றோம்.

## தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணையா னென்று சாற்றுவோ முன்னே
[னுக
இந்தவ னுதிக்கா முன்னம் ஏகுவா னென்று
[சொன்னோம்
சந்ததி காணு னுகும் சாற்றுவோம் பின்பால் சேதி
கந்தனை யீன்ற மாதே கழறுவோம் பிதாகு ணத்தை.

4. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதரன் ஒருவனுண்டு என்றும் சொல்லுகின்றோம். அவனும் மூத்தவன் என்றும், ஜாதகன் பிறக்கும் முன்பே அவன் இறந்து விடுவான் என்றும் கூறுகின்றோம். அவனுக்குப் புத்திர பாக்கியம் இல்லை. அது விவரத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். கந்தபிரானைப் பெற்ற தேவியே! இனி தந்தையின் குணங்களைச் சொல்லுகின்றோம்.

## தந்தையின் இயல்புகள்

5. மானிறம் உணேச்சல் நீட்சி மருமமில் லாதா ளுகும்
தேன்மொழி கூறு வாளும் செய்நன்றி மறவா ளுகும்
தானமும் தரும மிச்சை தந்தமும் பெரிதாய்க் காட்டும்
ஈனமாங் குணங்க ளில்லான் இடர்செய்யான் யாவ
[ருக்கும்.

5. மாநிறமானவன். மெல்லியதாகவும் உயரமாகவும் உள்ள சரீரத்தைப் பெற்றவன். இரகசிய மில்லாதவன். தேனைப் போன்று இனிய வார்த்தைகளையே பேசுபவன். பிறர் செய்த சிறு உபகாரத்தையும் மறவாதவன். தானம் தருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். பற்கள் பெரியனவாக விருக்கும். அற்ப புத்திகள் இல்லாதவன். ஒருவருக்கும் தீங்கு செய்யாதவன்.

## இதுவுமது

6. தேவதாப் பணியும் செய்வன் செனவுப காரி யாவன்
நாவதைக் காப்பா ளுகும் நற்சித்திர வில்லம் செய்வன்
கோவுகள் விருத்தி யல்பம் குவலயம் விருத்தி செய்வன்
மாமிகள் ரெண்டே யாவர் வருவோரை யாத ரிப்பன்.

6. தெய்வத்துக்குப் பணி செய்வதில் பிரியமுள்ளவன். ஜனங்களுக்கும் உதவி செய்வான். சொல்லடக்க முடையவன். அழகிய வீடுகள் கட்டுவான். பசு பாக்கியமில்லாதவன். அற்பமே யுடையவன். பூமியைப் பெருக்குவான். இரு மனைவியர் உண்டு என்றோம். தன்னை யண்டி வந்தவரை ஆதரித்து விருவான்.

## தந்தைக்குச் சகோதரதோஷம்—கிரகநிலை

7. என்னகா ரணத்தி ளுலே யிவன்துணைத் தோஷம்
[சொன்னீர்
ஒன்பதுக் காறில் ராகு உற்றிடத் துணைவர் தோஷம்
முன்சென்ம வினையும் கொஞ்சம் மேவிய பலத்தால்
[நேரும்
துன்மைகள் வந்த சேதி செப்புவீர் முனியே நீர்தான்,

7. என்ன காரணத்தால் ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது என்று சொல்லுகிறீர்கள்? ஒன்பதாம் இடத்திற்கு (ரிஷபத்துக்கு) ஆறுமிடமாகிய துலாத்தில் ராகுஇருப்பதால் ஜாதகனுடைய தந்தைக்கு சகோதர தோஷம் ஏற்பட்டது என்று கூறுகின்றோம். அது தவிர முற்பிறவியில் செய்த தீவினையும் இவனைச் சேர்ந்ததால் ஏற்பட்டது. முற்பிறவில் ஏற்பட்ட தீவினை விவரங்களைச் சொல்லுங்கள், முனிவரே! நீர்,

## தந்தையின் முற்பிறவி

8. தென்திசைப் பாண்டி கீழ்பால் சிறுவூரில் வன்னியச்
[சேயாய்
தன்மனை மதலை யுண்டாய் தரணியால் சீவித் தேதான்
அன்னவன் வாழு நாளில் அணுகிய வினையைக்
[கேண்மோ
முன்னோர்க்குத் தொண்டு செய்து முதல்வனும் வாழு
[நாளில்;

8. தென்னகத்தில் உள்ள பாண்டிய நாட்டிற்குக் கிழக்கில் உள்ள ஒரு சிற்றூரில் வன்னிய குலத்தவனாகப் பிறந்து மனைவி மக்களைப் பெற்று, விவசாயம் செய்து வந்து வாழ்க்கையை நடத்தி வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். அவன் பெரியோர்களைக்குப் பல தொண்டுகள் செய்து வாழ்ந்து வரும் போது;

## பெண்மீது நிந்தைசொல்லல்

9. கன்னிகை யொருத்தி தானும் கணவனு மின்றி யேதான்
அன்னையில் வாழும் போது அடாதவார்த் தைகளும்
[சொல்லத்
தன்மனச் சஞ்ச லத்தால் சாற்றுவாள் சாபம் தானும்
துன்மையாய் வார்த்தை யென்மேல் செப்பிய பாவிக்
[கேதான்;

9. ஒரு பெண் தன் (கணவனால் கைவிடப்பட்டு) கணவனை யிழந்தவளாகத் தன் தாயின் வீட்டில் வாழ்ந்து வரும்போது, இந்த ஜாதகனுடைய தந்தை அவளைப் பார்த்து தகாத வார்த்தைகள் பேச அந்தப் பெண்ணும் மனம் கலங்கிக் கூறுகின்றாள் "என் மீது அபாண்டமாகப் பழி கூறிய பாவியே உனக்கு;

## பெண் சாபம்

10. மறுசென்மம் துணைவ ரின்றி வந்தவில் அடையா தாகி
உரைகுவா யென்று சொல்ல உறைந்தது அந்தச் சாபம்
திருமக னந்தி யத்தில் சேதுவின் பதிக்குச் சென்று.
மறலியின் பதிக்குப் புக்கு மறையவன் வரையப் பட்டு;

10. ஏற்படும் மறுபிறவியில் உடன் பிறந்தவரில்லாமல் பிறந்துவீட்டை அடையாமல் வாழ்வாய்" என்று கூறினாள். அந்தச் சாபம் தொடர்ந்தது. அவனும் தன் கடைசி காலத்தில் சேதுவுக்குச் சென்று, நீராடி, இறுதியில் மரண மடைந்து, மீண்டும் அந்தப் பிரம தேவனால் இவ்வுலகில் படைக்கப் பட்டு;

11. வந்தவ னென்று சொல்வோம் மங்கையின் சாபம்
[போலே
தன்துணை தோஷ மெய்தும் செயமுனி தடுத்துச்
[சொல்வார்
விந்தையாய்ச் சேதுக் கேதான் மேவிய பலத்தி னாலே
அந்தசாபம் நீங்கிடாதோ அறிவிப்பீர் முனியே நீர் தான்.

11. இப்பிறவியில் பிறந்தவன் என்று சொல்லுகின்றோம், அப் பெண்ணின் சாபத்தைப் போலவே, உடன் பிறந்தவருக்குத் தோஷ மேற்படும். ஜய முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். பக்தியுடன் சேதுவுக்குச் சென்று நீராடி வந்த பலத்தினால் பெண்ணின் சாபம் விலகாதோ சொல்லுங்கள் முனிவரே நீர்.

## ஜாதகனுடைய குணங்கள்

12. மங்கையும் திகில டைந்து வறைந்தசா பங்கள் நீங்கா
இங்கிவை குணத்தா னுக்கு இப்பால னுதிப்பா னாகும்
அங்கவன் குணத்தைச் சொல்வே னரிமக னொப்ப
[தாகும்
திங்கள்போல் வதன மொக்கும் தேவதா பக்தி
[கொள்வன்.

12. பெண் மனம் வருந்திக் கூறிய சாபம் விலகாது. இவ்விதம் கூறப்பட்ட குணங்களை யுடையவனுக்கு, இந்த ஜாதகன் பிறப்பான். இனி அவனுடைய குணங்களைச் சொல்லுகின்றோம். மகாவிஷ்ணுவின் புதல்வனாகிய மன்மதனைப் போன்ற அழகிய சரீர முள்ளவன். முகம் சந்திரனைப் போன்று அழகுள்ளதாக விருக்கும். தெய்வ பக்தி யுடையவன்.

## இதுவுமது

13. கல்விமான் யூகை சாலி கடந்தோர்போல் வார்த்தை
[சொல்வன்
நல்லவ னாகி வாழ்வன் நயம்படக் கூறு வானும்
சொல்லது சுருக்க மாகும் துணைவன்சொல் கடவா
[னாகும்
மல்லுக்கு முன்செல் லாதான் மறுநகர் வாசம் செய்வன்.

13. கல்வி யறிவுடையவன். ஊக முள்ளவன். முற்றும் துறந்த ஞானியர் போல் பேசும் இயல்பினன். உலகில் நல்லவன் என்ற பெயருடன் வாழ்ந்து வருவான். இனிமையாகப் பேசும் இயல்பினன். (அடக்கமாகவும்) சிறிதளவே பேசினாலும் பொருள் செறிந்து இருக்கும்படி பேசுபவன். தன் சகோதரன் வார்த்தையின்படி நடப்பவன். வீண் சண்டைக்குப் போகாதவன் வேற்று ஊரில் வாழ்ந்து வருபவன்.

## இதுவுமது

14. தந்தையி னில்லம் வாழான் தன்பந்து மூல மாக
விந்தையாய்ச் செட்டுச் செய்வன் விகடங்கள் கூரு
[ஞகும்
நிந்தைக ளேற்கா ஞகும் நிமலியும் வந்த பின்பு
சந்திரன் பிறைபோல் யோகம் தங்கிடும் பால னுக்கு.

14. தன் தந்தையின் வீட்டில் வசித்து வராதவன். தன் உறவினர் மூலமாக அற்புதமாக வர்த்தகம் செய்து வாழ்ந்து வருவான். அடாவடியாகப் பேசாதவன். வீண் பழியை அடையாதவன். இந்த ஜாதகனுக்கு, மனைவி வந்த பிறகு பிறைச் சந்திரன் போல் அதிர்ஷடம் வளரும்.

15. கடன்படான் இடுக்க மில்லான் காரியச் சமர்த்த ஞகும்
உடன்படான் பிழைக ளுக்கு உயர்வான புத்தி யேற்பன்
விடவாக்கன் ஸ்திரீகள் மோகன் மேதினில் புகழு
[மேற்பன்
திடமதாய்க் குடும்ப மேற்பன் சிவந்தமெய் யென்று
[சொல்வோம்,

15. கடன் வாங்குதில் விருப்பமில்லாதவன். துன்பங்களற்றவன். காரியத்தைச் சிறப்பாக முடித்து வைக்கும் சாமர்த்தியம் உள்ளவன். தவறுகள் செய்ய மனம் ஒப்பாதவன். உயர்ந்த அபிப்பிராயங்களையே கொள்ளுவான். விஷ வாக்கு உள்ளவன். (கெட்ட வார்த்தைகள் சொன்னல் அவை பலித முறும) பெண்களின் மீது மையல் கொள்ளுபவன். உலகில் கீர்த்தி அடைவான். சௌக்கியமான குடும்பத்தை யுள்ளவன். சிவந்த நிற முடைய உடலமைப்புள்ளவன்.

## யோகமேற்படக் கிரகநிலை

16. எப்படி யோகம் சொன்னீ ரியம்புவீ ரந்தச் சங்கை
மைப்புடன் தர்ம கர்மன் மேவிய நவத்தில் தங்க
ஒப்புடன் குருவும் பத்தில் உணர்ந்ததால் யோகம்
[சொன்ஞேம்
அப்பணி சடையோன் தேவி அருளுவோ மேலுங் கேளே.

16. ஜாதகனுக்கு யோகம் ஏற்படும் என்று சொன்னீர்கள். அதை விரிவாகக் கூறுங்கள் என்று பார்வதிதேவி வினவ மற்றவர் பதில் உரைக்கின்றனர். தர்மகர்மாதிபதியான சுக்கிரன் புதன் இருவரும் ஒன்பதாமிடமாகிய ரிஷபத்தில் தங்கி யிருப்பதாலும் குரு பத்தில் இருப்பதாலும் நாங்கள் யோகம் ஏற்படும் என்று சொன்ஞேம். சர்ப்பத்தைச் சடையில் தரித்த சிவ பெருமான் தேவியே! மேலும் சொல்லுகின்ரேம். கேளுங்கள்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

17. இன்னவன் துணைவர் தன்னை யியம்புவோ மாண்பா
[லொன்று
கன்னிகை தீர்க்க மெய்தும் கருதின ஆண்பா லுந்தான்
முன்னேனாய் மொழிய லாகு முரைக்கிறோம் அவன்கு
[ணத்தை
பின்னமில் லாமல் தேகி பெம்மானின் பக்தி பூண்பன்.

17. ஜாதகனுடைய சகோதரபாவத்தை இனிக் கூறுகின்றோம். சகோதரி............நீண்ட ஆயுள் உள்ளவள். நாங்கள் கூறிய சகோதரனும் ஜாதகனுக்கு முன் பிறந்தவன் என்றோம். அவனுடைய இயல்புகளைச் சொல்லுகின்றோம். ஊனமில்லாத சரீர முடையவன். சிவபெருமானிடம் பக்தி கொண்டவன்.

## இதுவுமது

18. வித்தையும் சமம தாகும் விருந்தினர் பிரிய மாகும்
சுத்தவான் உணவு மிஷ்டன் துறவோர்போல் வாழ்வா
[னுகும்
சத்தியம் தப்பா னுகும் சகராசர் பேட்டி கொள்வன்
நித்தியம் சீல னுகும் நிதமன சஞ்ச லத்தன்.

18. சமமான கல்வியறிவுள்ளவன். விருந்தினரைப் பிரியத்துடன் உபசரிப்பான். சுத்த முள்ளவன். நல்ல உணவைப் புசிப்பதில் விருப்ப முடையவன். முற்றும் துறந்தவர் போல் எதிலும் பற்றில்லாமல் வாழ்ந்து வருவான். சத்தியம் தவருத நேர்மையுள்ளவன். புவியரசரைப் பேட்டி காணும் பேறுள்ளவன். நல்லொழுக்க முடையவன். தினந்தோறும் மனத்தில் கவலை கொண்டவன் (அலைபாயும் மனத்தினன்)

## இதுவுமது

19. சிலதுனாள் கிராமச் செட்டு செய்குவான் சுகிபொ
[சிப்பன்
விலைமாதர் மோகம் கொள்ளான் வெஞ்சினம்
[வெளிக்காட் டாதான்
நிலைகாப்பன் வாத தேகி நெஞ்சினில் இரக்க மாவன்
தலவாசம் செல்வா னுகும் சதுஷ்பாதம் விருத்தி யல்பம்.

19. சின்னாட்கள் கிராமாதிகாரியாக விருப்பான். (கிராமத்தில் வர்த்தகத் தொழில் புரிந்து வருவான்) நன்ருகச் சாப்பிடுவதில் விருப்பமுள்ளவன். வேசையர் உறவு அற்றவன். தன்னுடைய கோபத்தை வெளியில் காண்

பிக்காமல் தன்னுள்ளே அடக்கி வைத்திருப்பவன். தன்னுடைய அந்தஸ் தின்படி நடப்பவன். வாயு ரோக முடையவன். மனத்தில் இரக்க குண முடை யவன். புண்ணியத் தலங்களுக்குச் சென்று வருவான் கால் நடை விருத்தி யில்லாதவன்.

## இதுவுமது

20. தோத்திரப் பிரிய னாகும் தோகையு மொன்றே நேரும்
கூத்தன்தன் பதிக்கு மத்தில் குவவுவாள் சுதர்க ளின்றி
வேத்தொரு பாரி காணான் விளைபுலம் விருத்தி செய்வன்
பாத்திர மறிய வல்லன் பகவானின் தொண்டு பூண்பன்.

20. புகழப்படுவதில் விருப்பமுள்ளவன். மனைவி யொருத்தியே அடைவான். அவள் இடைக் காலத்திலேயே இறந்து விடுவாள். இரண் டாம் மனைவியைக் கொள்ளாதவன். விளை நிலங்களைப் பெருக்குவான். நல்ல வன், தீயவன் என்ற பாகுபாடு செய்யும் திறமையுள்ளவன். பகவானுக்குத் தொண்டு செய்பவன்.

21. இல்லத்தை விட்டு நீங்கி யேகுவா னுத்த ரத்தில்
சொல்லுவீர் காலம் தன்னைச் சுதனுக்கு ஐந்தின் மேல்
நல்லதோர் தலங்கள் சென்று நற்றுணை யோடு
[வொத்து
வல்லவன் வாழ்வா னாகும் வறுமையெப் போதும்
[காணான்.

21. தன் விட்டை விட்டுச் சென்று வடக்குப் புறத்தில் வாழ்ந்து வரு வான். அது எந்தக் காலத்தில் என்று சொல்லுங்கள். ஜாதகனுக்கு ஐந்தாம் வயதுக்கு மேல் தன் சகோதரனுடன் மனமொத்து வாழ்ந்து, பல புண்ணிய தலங்களுக்குச் சென்று வருவான். ஒரு போதும் தரித்திரமடையாதவன்.

## ஜாதகனின் திருமணக்காலம்

22. கன்னிமார் சேதி யாவும் கழறுவோம் பின்பா கத்தில்
இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மிருபான்
[மூன்றில்
கன்னிகை உத்த ரத்தில் கலப்பளாம் குணத்தைச்
[சொல்வேன்
முன்கோபம் கொஞ்ச முண்டு உடன்தாழ்வு இருநி
[றத்தள்.

22. சகோதரிகள் விவரம் பற்றிப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். இனி ஜாதகன் திருமணக் காலம் பற்றிச் சொல்லுவோம். அவனுக்குத் திருமணம் இருபத்தி மூன்றும் வயதில் நடைபெறும். மனைவி வடக்குப் பக்கத்திலிருந்து வருவாள். இனி அவளுடைய விவரங்களைக் கூறுகின்றோம். சிறிதளவே முன்கோபமுள்ளவள். ஆனால் உடனே சமனமாகும் இயல்புடையவள். கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவள்.

*குறிப்பு :—ஜாதகனுக்கு ராகு மகா தசையில் குரு புக்தியில் திருமணம் நிகழும்.

## மனைவியின் குணங்கள்

23. அன்னம்போல் சாய லொக்கும் ஆளன்தன் மனதுக் [கேத்தோள்
அன்னமு மன்பா யீவள் அடாவடி கூறு ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் யாவர்க்கும் நல்லோ ளாவள்
அன்னவள் வந்த பின்பு அம்புலி போலே யோகம்.

23. அன்னத்தைப் போன்ற சாயலுள்ளவள். தன் கணவனுடைய மனமறிந்து நடப்பவள். பசித்தவருக்குப் பரிவுடன் அன்னம் அளிப்பவள். அடாவடியாகப் பேசாதவள். பிறர் இவளை நல்லவள் என்று போற்றும்படி வாழ்ந்து வருவாள். எல்லோருக்கும் நல்லவள். இவளை மணந்த பிறகு வளர் பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும்.

## ஜாதகனுடைய புத்திரபாவமும் முற்பிறவியும்

24. சுதர்களு மாண்பா லிரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
பதராகு மூன்று வென்றோம் பகருவோம் பின்பால் சேதி
அதிபன் தன் பூர்வம் சொல்வேன் மலைநாட்டி லிக்கு [லத்தில்
அதிகமாய்ப் பொருளும் பெற்று ஆண்மையாய்க் குடும்பி [யாகி;

24. ஜாதகனுக்கு இரு புத்திரர்களும் இருபுத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றோம். மூன்று குழந்தைகள் நிலையா. அவ்விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மலை நாட்டில் இதே குலத்தில் பிறந்து, வெகுவாகப் பொருளை அடைந்து, கீர்த்தியுள்ள குடும்பத்தை யடைந்து;

## இதுவுமது

25. அறமதி லிச்சை யுண்டாய் அதிதிகட் கன்ன மீந்து
திருமகன் பவமில் லாமல் சென்றனன் கால னுடு

பிரமனால் வரையப் பட்டு பிறப்பனு மிந்தப் பாலன்
உரைக்கிறோம் யோகச் சேதி உயர்வான செட்டுச்
செய்வன்.

25. தருமத்தில் விருப்பம் கொண்டவனாய் கதியற்றவர்கட்கு அன்ன மளித்து வந்து, தீச் செயல்கள் ஏது மில்லாமல் வாழ்ந்து மரணமடைந்தான். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இந்த ஜாதகன் பிறந்தான் என்றோம். இனி அவனுடைய யோகத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய யோகம்

26. பலசகா யங்கள் செய்வன் பத்தினி நேய னாகும்
தலவாசம் செய்வா னாகும் தங்கிடும் சாகை செய்வன்
தொலைதூரம் வணிபம் செய்வன் துன்பங்க ளெவர்க்கு
[மெண்ணான்
நிலமில்லம் பணிகள் யாவும் நிகழ்த்துமெண் ணாயிரம்
[பொன்.

26. பல பேருக்கு உதவி செய்வான். மனைவிக்குப் பிரியமானவன். பல புண்ணியத் தலங்களுக்குச் செல்லுவான். குடி யிருக்க வீடு ஒன்று கட்டுவான். கடல் கடந்து இருக்கும் இடத்தில் வர்த்தகம் செய்து வருவான். எவருக்கும் தீங்கு செய்ய எண்ணாதவன். அவனுடைய வீடு, ஆபரணங்கள் எல்லாம் சேர்ந்து எண்ணாயிரம் பொன் பெருமானம் உளது.

## ஜாதகனுடைய தாயின் விவரம்

27. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளா
[ளிருநி றத்தாள்
கன்னென மொழியே சொல்வள் கடந்தோர்க்கு அன்ன
[மீவள்
மன்னன்தன் மனம்போல் வாழ்வள் மாதுவும் யோக
[சாலி
பொன்னொடு பணிமே லிச்சை புகழ்ந்தோரை யாத
[ரிப்பள்.

27. இனி ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றோம். அழகுள்ளவள். கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவள். சுவையுள்ள கரும்பைப் போன்று இனிக்கும் வார்த்தையையே பேசுபவள். முற்றும் துறந்த துறவிகட்கு அன்னமளிப்பவள். கணவன் மனமறிந்து வாழ்க்கை நடத்துபவள். அதிர்ஷ்டசாலி. பொன் ஆபரணங்களின் மேல் பிரியமுள்ளவள். தன்னைத் தோத்திரம் செய்பவரைப் பரிவுடன் கவனித்து வருவாள்.

## இதுவுமது

28. சந்தேக மனத்த ளாகும் சாதமு மன்பா யீவள்
பந்தினர் பகையு மெய்தும் பரிந்துப சாரம் செய்வள்
சுந்தர முடைய ளாகும் சோம்பிடாள் காரி யத்தில்
தந்துணை ஆண்பா லிரண்டு சத்தியு மொன்றே
[தீர்க்கம்.

28. சந்தேகம் கொள்ளும் மனமுடையவள். ஏழைகட்கு அன்புடன் அன்னம் அளிப்பாள். சுற்றத்தார் விரோதம் ஏற்படும். விருந்தினரைப் பரிவுடன் உபசாரம் செய்யும் இயல்பினள். அழகுள்ளவள். எக்காரியத்தை யும் சோம்பலில்லாது செய்து முடிப்பவள். சகோதரரிருவரும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள்.

## தாயின் முற்பிறவி

29. இல்லமு முள்ளூ ராகு மிவள்பூர்வம் சொல்லக்
[கேண்மோ
எல்லையில் உயர்வ தான வெழில்கொங்கு நாட்டி
[லேதான்
வல்லியும் சேடர் வமிசம் மருகியே சுகமுள் ளோளாய்
நல்லவர் தொண்டு பூண்டு நமன்பதிக் காளா
[யின்னேள்

29. அவளுடைய வீடு உள்ளூரிலேயே உள்ளது. இனி அவளு டைய முற்பிறவியைச் சொல்லுகிறோம். கேளுங்கள். உலகில் கீர்த்தி பெற்று உயர்ந்த கொங்கு நாட்டில், சேடர் வம்சத்தில் பிறந்து, சௌபாக்கியங்களைப் பெற்று, நல்லவரான அடியோருக்குப் பல தொண்டுகள் செய்து மரண மடைந்து;

## தாயின் மறுபிறவி

30. காலன்தன் நாட டைந்து கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமாம் கங்கை சேயாய்ச் செனித்தன ளென்று
[சொல்வோம்
சாலவே யிவள்பின் சென்மம் சாற்றுவோம் விரிஞ்சி
[தன்னில்
ஏலவே யிக்கு லத்திலி றங்குவா ளென்று சொல்வோம்.

30. எமபுரம் அடைந்து, மீண்டும் தாமரையில் வீற்றிருக்கும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு, நல்லொழுக்கமுள்ள வேளாள குலத்தவளாகப்

பிறந்தவள் என்று சொல்லுகின்றோம். இவள் அடுத்த பிறவியில் விரிஞ்சி நாட்டில் இதே வேளாள குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுவோம்.

## தாய்க்குக் கண்டம் மரணகாலம்; தந்தையின் மரணம், மறுபிறவி முதலியன

31. முப்பது நாலு ஆண்டில் விளம்புவோம் கண்ட மொன்று
தப்பியே முப்பா றுறில் சாற்றுவோ மார கங்கள்
அப்பனும் யீரா றுண்டுள் அந்தக னுட்டைச் சேர்வன்
செப்புவோ மிவன்பின் சென்மம் சீகாழி தன்னி லேதான்;

31. ஜாதகனுடைய முப்பத்து நான்காம் வயதில் தாய்க்கு ஒரு கண்டம் ஏற்படும். ஆனால் அது தவறினால் அவனுடைய முப்பத்தாறும் வயதில் தாய் மரணமடைவாள் என்றோம். ஜாதகனுடைய தகப்பன் பன்னிரண்டரம் வயதிலேயே மரண மடைவான். :தந்தையின் மறுபிறவியைச் சொல்லுகின்றோம். சீர்காழி என்னும் ஊரில்;

*குறிப்பு :—தாய் இறக்கும் போது ஜாதகனுக்கு குரு மகாதசையில் குரு புக்தி நடைபெறும்.

32. உதிப்பனும் பிரம்ம சேயா யுயர்வான் குடும்ப மேற்பன்
வதிஷ்டரும் தடுத்துச் சொல்வார் மாரனிச் சென்மம் [தன்னில்
எதுபுண்ணியம் செய்தான் சொல்வா யீகையு முடைய [னுகும்
சதியிலா மன்த்த னுகும் திருப்பணி செய்த லாலும்;

32. அந்தண குலத்தவனுகப் பிறப்பான். உயர்ந்த குடும்பத்தை அடைவான். வசிஷ்ட முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில் செய்த எந்த காரியங்களின் பயனுல் அடுத்த பிறவியில் அந்தண குலத்தில் பிறப்பான்? சொல்லுவீர்கள், என, இப்பிறவியில் கொடையாளியாகவும்) தீங்குகளில்லாத மனத்தினனுகவும், (ஆலய)த் திருப்பணிகள் செய்து வருவதாலும்;

## ஜாதகனுடைய மரணம்

33. சிலருக்கா பத்தைக் காக்கும் தீரனும் வாழ்வ தாலே
குலவுவான் பிரம்ம சேயாய்க் குழவிக்கு அறுபானேழில்
துலேமாதம் வளர்பக் கத்தில் துவாதசி திதியி லேதான்
தலேவன்தன் னுடல மேகும் சங்கரி கேட்டி டாயே.

33. துன்புற்றவர்கட்கு ஏற்பட்ட கஷ்டங்களை விலக்கி வாழ்ந்து வருவ தால் அந்தண குலத்தின் பிறப்பான். ஜாதகன் தன் அறுபத்தேழாம் வயதில் ஐப்பசி மாதம் சுக்ல பட்சம் துவாதசி திதியன்று மரண மடைவான். சங்கரரின் தேவியே! கேளுங்கள்.

*குறிப்பு:—ஜாதகனுக்கு சனி மகா தசையில் ராகு புக்தியில் மரணம் சம்பவிக்கும்.

## மறுபிறப்பும் யோகமும்

34. பின்சென்ம மவ்வூர் தன்னில் பிறப்பனும் பிரம்ம [சேயாய்
மன்னனு லதிகா ரங்கள் மருவியே வாழ்வா னுகும்
தன்னினத் தவரும் மெச்ச சலிப்பிலா உய்வா னுகும்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

34. ஜாதகன் மறு பிறவியில் அவ்வூரிலேயே அந்தண குலத்தவனு கப் பிறப்பான். அரசாங்கத்தில் உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருவான். தன்னுடைய சுற்றத்தார் கொண்டாடும்படியாகவும் துன்பமில்லாமலும் வாழ்ந்து வருவான். உயர்ந்த யானைமுகக் கடவுளைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

35. உதித்திடு காலம் தன்னில் உத்தரம் மூன்றும் பாதம்
கதிர்தசை ஆண்டு ஒன்று கலந்திடும் திங்க ளேழும்
முதல்பாகம் விபரம் சொன்னேம் மொழிகிறேம் பின்பால் [சேதி
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

35. ஜாதகன் பிறக்கும் பிறக்கும் போது உத்தர நட்சத்திரம் மூன்றும் பாதமாம். ஜனன காலத்தில் சூரிய மகாதசையில் செல்லுபோக மீதி இருப்பு ஒரு வருடமும் ஏழு மாதங்களுமாம் என்று முதல் பாகத்தை விவர மாகச் சொல்லியிருக்கிறேம். மற்றவை பின் பாகத்தில் கூறுவோம். கதி யற்றவரைக் காக்கும் தேவியே! கேளுங்கள். —V.R.N.

———

# ஜாதகம் 60

## ஜனன கால கிரகநிலை

1. [1]பொன்சனி [2]மேரு வாகப் [3]புயங்கனு [4]வில்லுதிப்பச்
சந்திரன் கடகமாகச் [5]சல்லியன் [6]சேயும் கன்னி
[7]புந்தியும் [8]பானு [9]சீயம் [10]பெண்ணது செனன மாக
இந்தவாறு கோளு நின்று லியம்புவீர் பலனை யென்று.

1. குரு, சனி, ராகு தனுசிலும், சந்திரன் கடகத்திலும், சுக்கிரன் அங்காரகன் கன்னியிலும், புதன் சூரியன் சிம்மத்திலும், (கேது மிதுனத்திலும்) இவ்வாறு நவக் கிரகங்கள் இருந்து கன்னி பிறந்த லக்கினமாக இருப்பின் பலனைச் சொல்லுங்கள் என்று வினவ;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | கேது |
| | இராசி சக்கரம் | | சந்திரன் |
| | | | புதன் சூரியன் |
| குரு சனி ராகு | | | சுக்கிரன் அங்காரகன் லக்கினம் |

## ஜாதகன் பிறந்த வீட்டின் வர்ணனை

2. சுந்தரி கேட்கும் போது செயமுனி கூறுகின்றார்
இந்தசே யாளும் சென்ம மில்லமும் தென்பால்
[நோக்கம்

1. குரு
2. தனுசு
3. ராகு
4. தனுசு
5. சுக்கிரன்
6. அங்காரகன்
7. புதன்
8. சூரியன்
9. சிம்மம்
10. கன்னி.

முந்துமால் மேல்பால் பழாம் முக்கண்ணன் தென்கீ
[ழாகும்
அந்தரி கீழ்ப்பாலாகும் அழகிய நதியும் உத்தரம்.

2. பார்வதி தேவி கேட்கும் போது, ஐய முனிவர் பதில் சொல்லு கின்றார். இந்த ஜாதகம் ஓர் ஆண்மகனுடையது. அவன் பிறந்த வீடு தெற்குப் பார்த்திருக்கும். திருமாலின் ஆலயம் ஒன்று மேற்குப்பக்கம் பாழடைந்து இருக்கும். மூன்று திருக்கண்களையுடைய சிவபெருமான் தென்கிழக்கில் கோயில் கொண்டுள்ளார். காளிகோயில் கிழக்குப் பக்கம் உள்ளது. வடக்குப் பக்கம் அழகிய ஆறு ஒன்று ஓடும்.

3. இத்தகை யடையா ளத்துள் யிலகிய சிறுவூர் தன்னில்
முத்தின பிரம்ம சேயா யுதிப்பனு மிந்தப் பாலன்
பெத்ததாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் சென்மம் செப்புவோ மிந்நூல்
[தன்னில்

3. இவ்விதம் கூறப்பட்டுள்ள அடையாளங்களுள்ள ஒரு சிற்றூரில் இந்த ஜாதகன் வேதங்கள் முதலியவற்றினை நன்றாகக் கற்றுணர்ந்த ஓர், அந்தணனுக்குக் குழந்தையாகப் பிறந்தவன். அவனைப் பெற்ற தாய் தந்தை யர், மனைவி, மக்கள் இவர்களின் யோக வரலாற்றையும் அளர்களின் முற் பிறவி மறுபிறவி ஆகியவற்றையும் சரியாகப் பார்த்து இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம்.

## ஜாதகருடைய தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றவே பலமுருது
தந்தையும் தனியாய் வாழ்வன் செப்புவீ ரந்தச் சங்கை
மந்தனு மேழி லாக மாலுடன் பரிதி கூட
எந்தவாறு குற்றத் தாலே யிவன்பிதா தனியா
[மென்றோம்.

4. ஜாதகருடைய தந்தையின் வர்க்கத்தினரைப் பற்றிச் சொல்லப் பல மில்லை. (சகோதரரில்லை). அவன் தனியனாக வாழ்ந்து வருவான். அதற்குக் காரணம் கூறுங்கள் என, முனிவர் பதில் சொல்லுகின்றார். சனி ஏழாமிடத் திலும், புதனும் சூரியனும் சேர்ந்து விரயஸ்தானத்திலும் இருப்பதாகிய இக்குற்றத்தால் ஜாதகனுடைய தந்தை தனியாக இருப்பவனென்றோம்.

## தந்தையின் குணங்கள்

5. குணமதைப் புகலக் கேண்மோ கொடுமையை யெவர்க்கு
[மெண்ணான்
கனிவுள குணத்தா னுகும் தரணியா லுய்வா னுகும்

நினைவதை முடிக்க வல்லன் நிதானமாய் வார்த்தை
[சொல்வன்
கனமுள குடும்பி யாவன் கனத்ததோர் தலங்கள்
[செல்வன்.

5. தந்தையின் குணத்தைச் சொல்லுகிறேன். கேளுங்கள். ஒருவருக்கும் தீங்கு செய்ய நினையாதவன். இரக்கமடையும் குணங்களையுடையவன். விவசாயம் செய்து ஜீவித்து வருவான். எண்ணிய காரியங்களை முடிக்கும் ஆற்றல் உள்ளவன். பொதுவாகப் பேசும் இயல்பினன். பெரிய குடும்பத்தையுடையவன். பல புண்ணியத்தலங்களுக்குச் செல்வான்.

## தந்தையின் முற்பிறவி

6. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறோம் கொங்கு
[நாட்டில்
மன்னர்தன் குலமு தித்து மனைவிமைந் தருமுண்ட ாகி
உனனதச் செட்டுச்செய்து உயர்வான குடும்பி யாகி
அன்னவன் வாழு நாளி லணுகின வினையைக்
[கேண்மோ.

6. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கொங்கு நாட்டில் சத்திரிய குலத்தில் பிறந்து, மனைவி மக்களையடைந்து உயர்ந்த வியாபாரம் செய்து வந்து செழிப்புள்ள குடும்பத்தை யடைந்து வாழ்ந்து வரும் நாளில் ஏற்பட்ட தீவினைகளைக் கேளுங்கள்.

## தந்தையின் தீவினை

7. அன்னிய மாது மேலே அடாதவார்த் தைகளும் சொல்லி
மன்னர்பால் அவமா னங்கள் மாரனும் செய்யும் போது
கன்னிகை வருத்த முற்றுக் கழறின சாபம் கேண்மோ
துன்மைகள் செய்த பாவி தோன்றும்பின் சென்மம்
[தன்னில்

7. வேற்றுப் பெண் மீது தகாதவார்த்தைகளைக் கூறினன். பிறகு அரசரிடம் சொல்லி அவமானப்படுத்தினன். (தகாத வார்த்தைகளைக் கூறிய பிறகு வியாச்சியம் முதலியன செய்து வழக்குத் தொடர்ந்து அவமான படுத்தினன்.) அப்பெண் வருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். "எனக்குப் பல துனபங்களை விளைவித்த பாவியாகிய உனக்கு; அடுத்த பிறவியில்;

## மங்கையின் சாபம்

8. தன்துணை யில்லா தாயும் ஒண்டியாய் வாழ்வாய் நீயும்
மன்னர்பால் நிந்தை யேற்பாய் வரைந்துமே
[தெருத்தூள் விட்டாள்
அன்னவள் சாபம் தானு மணுகிற்று வென்று
[சொல்வோம்
இன்னவ னந்தி யத்தி லெழிலான தலங்கள் சென்று ;

8. சகோதரர் இல்லாமல் தனித்து வாழ்ந்து வருவாய் நீ. அரசாங்கத்தில் பழி ஏற்று அவமானப்படுவாய்'' என்று கூறித் தெருமண்ணை வாரி இறைத்தாள். அந்தப் பெண்ணின் சாபம் இவனுக்கு ஏற்பட்டது. அவன் தன் கடைசிக் காலத்தில் பல புண்ணியத்தலங்களுக்குச் சென்று;

9 பேதியால் மரணமாகி பிரமனுல் வரையப் பட்டு
மாதவர் குலமு திப்பான் மருவிடு மாது சாபம்
தீதாகும் துணைவர் தானும் சொல்லிய குணத்தானுக்கு
சாதக னுதிப்பா னுகும் செப்புவோ மிவன் குணத்தை.

9. பேதியினுல் மரணமடைந்து மீண்டும் பிரமதேவனுல் படைக்கப் பட்டான் அந்தண குலத்தில் பிறப்பான். பெண்ணின் சாபம் தொடரும். அதனுல் சகோதரருக்குத் தோஷம் ஏற்படும். இவ்விதம் சொல்லப்பட்ட குணங்களுள்ளவனுக்கு ஜாதகன் பிறப்பான். இனி அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றேன்.

## ஜாதகனுடைய இயல்புகள்

10. கல்விமா னூக சாலி கண்முகம் வசிய முண்டு
இல்லையென் றுரைக்க மாட்டான் யாவர்க்கும் நல்லோ
[னுவன்
சொல்லதைக் காப்பா னுகும் செலவுக ளதிகம் செய்வன்
நில்லாது தந்தை யாஸ்தி நிமலியே கேட்டி டாயே.

10. கல்வியறிவுள்ளவன். ஊகமுடையவன். கண் முகம் இவை வசீகரம் பொருந்தியனவாக இருக்கும். யாசித்தவருக்கு இல்லை என்று கூறுதவன். எல்லோரிடத்திலும் நன்மையாகவே நடந்து கொள்ளுவான். தான் சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன். அதிகமாகச் செலவு செய்வான். தந்தையின் ஆஸ்தியில்லாதவன். தாயே! மேலும் கேளுங்கள்.

## இதுவுமது

11. தந்தையால் சுகமில் லாதான் தன்துணை பக்கல் சென்று
இந்தவன் சீவிப் பானும் ஏகுவா னுத்திர திக்கில்

புந்தியின் தசையந் தத்தில் போகுவா னென்று
[சொல்வோம்
சந்ததம் முப்பாண் டின்மேல் சாறுவா னென்று
[சொல்வோம்.

11. தன் தந்தையால் சௌக்கியமடையாதவன். இவன் தன் சகோதரனுடன் சென்று வாழ்வான் என்றும் அவன் வடக்குப் பக்கம் செல்லுவான் என்றும் சொல்லுகிறோம். எந்தக் காலத்தில்? செல்வான் சொல்லுங்கள்; புத மகாதசையின் கடைசியில் போவான் என்று உரைக்கின்றோம். அது ஜாதகனுடைய முப்பதாம் வயதுக்கு மேல் நிகழும் என்று கூறுவோம்.

## விஷ்ணுரேகை, பத்மரேகை

12. கரமதில் மாலின் ரேகை கமலரே கையு முண்டு
உரன்முறைக் கிணக்கம் சொல்லா னுதருவான் தந்தை
[யாஸ்தி
விரைவினில் நடக்க வல்லன் வீண்திரிச் சலுமே யுண்டு
திருமாலின் பத்தி பூண்பன் தீர்க்கமாம் வயது
[மேற்பன்.

12. கையில் விஷ்ணு ரேகையும் பத்ம ரேகையும் உள்ளவன். தன் பந்து ஜனங்களுக்கு அடக்கமாக இல்லாதவன். தன் தந்தையின் ஆஸ்தியை சீக்கிரத்தில் அழித்து விடுவான். வேகமாய் நடக்கும் இயல்பினன். அனுவசியமான அலைச்சல் உள்ளவன். மகாவிஷ்ணுமீது பக்தியுள்ளவன். நீண்ட ஆயுளுள்ளவன்.

## ஜாதகருடைய சகோதரபாவம்

13. பலதல வாசம் செய்வன் பஞ்சைமே லிறக்க மாவன்
சொலுமொழி காப்பா னுகும் துணைவர்கள் ஆண்பா
[லிரண்டு
நலமுள கன்னி யவ்வாறு நவிலுவோம் தீர்க்க மாக
விலகிடும் துணைவர் வேருய் வேறூரில் வாசம் செய்வன்.

13. பல புண்ணியத் தலங்களுக்குச் செல்வான். ஏழைகளின் மீது இரக்கமுடையவன். கூறிய வார்த்தைகளின்படி நடப்பவன். சகோதரர்கள் இருவரும் சகோதரிகள் இருவரும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்கள் என்கிறோம். சகோதரர் வேருகச் சென்று வேற்றூரில் வாசம் செய்து வருவார்கள்.

## தாயின் விவரங்கள்

14. பின்பாக மவர்கள் சேதி பேசுவோம் தாயே யாங்கள்
அன்னையின் சேதி சொல்வேன் ஆளனுக் கினிய ளாகும்

உன்னத சீல மேற்பள் உரகன்போல் கோபி யாவள்
துன்மையாய்ப் பித்த வாயு தோன்றிடு மென்று
[சொல்வோம்.

14. அவர்களின் செய்தியைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம். தாயே! இனி ஜாதகனுடைய தாயின் செய்தியைக் கூறுகின்றோம். தன்கணவருக்குப் பிரியமானவள். உயர்ந்த ஆகாரமுடையவள். நல்ல ஒழுக்க முடையவள். ஸர்ப்பம் போல் விரைவில் கோபம் கொள்ளுபவள். தீமைதரும் பித்தவாயு ரோகமுள்ளவள் என்று சொல்லுகின்றோம்.

## தாயின் சகோதரபாவமும் முற்பிறவியும்

15. தன் துணை யாண்பா லிரண்டு தையலு மவ்வாறு தீர்க்கம்
அன்னையின் பூர்வம் சொல்வேன் அப்புவின் தலத்தி
[லேதான்
துன்மதி வைசியச் சேயாய்த் தோன்றியே சுகமாய்
[வாழ்ந்து
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு முன்வினை யில்லா னாகி;

15. ஜாதகனுடைய தாயின் சகோதரரிருவரும் சகோதரிகள் இருவரும் நீண்ட ஆயுளுள்ளவர். தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சீபுரத்தில், கெட்ட புத்தியைக் கொண்ட வைசிய குலத்தவனாகப் பிறந்து; சௌக்கியமாக வாழ்ந்து, பெரியோர்களுக்குப் பல பணிகள் செய்து, தீவினைகள் ஏதும் இல்லாதவனாக;

## தாயின் மறுபிறவி

16. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமா மிக்கு லத்தில் செனித்தவ ளென்று சொல்வோம்
சாலவே பின்சென் மத்தைச் செப்புவோம் காஞ்சி
[தன்னில்
ஏலவே யிக்கு லத்தி லிறங்குவா ளென்று சொல்வோம்.

16. மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் பிரமலிபியினால் எழுதப்பட்டு, நல்லொழுக்கமுள்ள இவ்வந்தண குலத்தில் பிறந்தவளென்று சொல்லுகின்றோம். இனி தாயின் மறுபிறவியைக் கூறுகின்றோம். காஞ்சீபுரத்தில் இதே அந்தணகுலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## தந்தையின் மரணகாலம்

17. கர்மகா லங்கள் தன்னைக் கழறுவீர் முனியே நீர்தாம்
இந்தவன் தனக்கு வொன்ப தாண்டினில் தந்தை
[கண்டம்

மறுசென்மம் வள்ளூர் தன்னில் மால்பூசை புரிவா னாகும்
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்.

17. ஜாதகனுடைய கருமகாலங்களைக் கூறுங்கள் முனிவரே நீர் தாம். எனப்பார்வதி தேவி கூறும்போது முனிவர் பதில் உரைக்கின்றனர். ஜாதகனுடைய ஒன்பதாம் வயதில் (சனி மகா தசையில் சூரியபுக்தி நடைபெறும் சமயத்தில்) தந்தை இறந்து விடுவான். அவன் மறு பிறவியில் திருவள்ளூரில் பிறந்து அவ்வூரில் கோயில் கொண்டுள்ள திருமாலான வீரராகவப் பெருமாலுக்குப் பூசை புரிந்து வருவான். அரிய வேதங்களின் முடிவில் கூறப்படும் தேவியே! கேளுங்கள்.

## தாயின் மரணமும், ஜாதகனின் திருமணக் காலமும், மனைவியின் இயல்புகளும்

18. அன்னைக்கு முப்பான் மூன்றில் அணுகிடு மார கங்கள்
இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மிருபா
[னிரண்டில்
கன்னிகை கீழ்பால் தன்னில் கலப்பளாம் குணத்தைச்
[சொல்வேன்
உன்னத சீலி யாவள் உண்மையா மனத்த ளாகும்.

18. ஜாதகனுக்கு முப்பத்து மூன்றும் வயதில் (புதமகா தசையின் இறுதியில்) தாய் இறந்து விடுவாள். இனி ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். இருபத்திரண்டாம் வயதில் (புதமகா தசையில் சுக்கிர புக்தியில்) திருமணம் நடைபெறும். மணப்பெண் கிழக்குத் திக்கிலிருந்து வருவாள். இனி அவளுடைய குணங்களைக் கூறுவோம். உயர்ந்தவள். நல்லொழுக்க முடையவள். உண்மையையே பேசும் மன முடையவள்.

## மனைவியின் விவரங்கள்

19. தோகைபோல் சாய லொக்கும் சொல்லது சுருக்க மாகும்
பாகமாய்ப் பேசு வாளாம் பதர்குண மில்லா ளாகும்
ஆகம முணர்ந்தோ ருக்கு அன்னமு மன்பா யீவள்
நாகரி கங்க ளுள்ளாள் நாயகன் மனத்துக் கேத்தோள்.

19. மயிலைப் போனற சாயலுற்றவள். அடக்கமாகப் பேசுபவள். பொருத்தமாகப் பேசும் இயல்பினள். அற்ப குணங்களில்லாதவள். வேத சாஸ்திரங்களை யுணர்ந்த அந்தணர்கட்குப் பரிவுடன் அன்னமளிப்பாள். நாகரிகமாக விருப்பவள். தன் கணவன் மனத்துக்குப் பிரியமானவள்.

## புத்திரபாவம்

20. அரவுபோல் கோபம் கொஞ்ச மறைகிறோம் புத்திர
[பாகம்
மருவிடு மாண்பா லிரண்டு மங்கைமார் மூவர் தீர்க்கம்
உரையாது முதலில் புத்திரர் உரைக்கிறோ மிவன்முன்
[சென்மம்
பொறையாற்றில் சத்திரியச் சேயாய்ப் பிறந்துமே வணி
[பம் செய்து;

20. ஸர்ப்பம் போல் விரைவில் கோபம் கொள்ளுவாள். இனி ஜாதகனுடைய புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். இரு புத்திரர்கள் தோன்றுவர். மூன்று புத்திரிகள் பிறப்பார்கள். முதலில் தோன்றும் புத்திரன் இறந்து விடுவான். இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பொறையாற்றில் சத்திரிய குலத்தவனாகப் பிறந்து வர்த்தகம் புரிந்து வந்து;

21. மைந்தனு வாழு நாளில் மருவிய வினையைக் கேண்மோ
நிந்தைகள் யேழை மேலே நிருமித்தா னிந்தப் பாலன்
அந்தவர் வருத்த முற்று அடாமொழி செய்த பாவி
பிந்திய சென்மம் தன்னில் பிதுரில்ல மில்லா தாயும்;

21. ஜாதகன் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். ஏழைப் பெண் மீது அபாண்டமாகக் குறைகள் கூறினான். ஏழைப் பெண் சாபமிடுகிறாள். "தகாத வார்த்தையைக் கூறிய பாபியே! இனி தோன்றும் அடுத்த பிறவியில் உனக்குத் தந்தையின் வீடு கிட்டாமலும்;

22. உந்தன்தன் ஆஸ்தி நீங்கி ஓடுவாய்த் துணைவி பக்கல்
பந்தணி மாதா விந்தை படருமே உந்த னுக்கு
சிந்தையும் கலக்க மாகிச் செலவுக ளனேக முண்டாய்
இந்தவாறு வாழ்வா யென்ன அடைத்தது அந்தச் சாபம்.

22. உன்னுடைய ஆஸ்திகள் யாவற்றையும் இழந்து, உன் மனைவியின் பக்கமாகச் சென்று வாழ்வாய். தாயால்......ஏற்படும் உனக்கு, மனக்கலக்கம் ஏற்பட்டு, அனேகவிதமான செலவுகளும் ஏற்பட்டு வாழ்ந்து வருவாய் என்று சாபமிட்டாள். அந்தச் சாபமும் தொடர்ந்தது.

23. பாலக னந்தி யத்தில் பலதல வாசம் சென்று
சீலவா னவர்க்கு அன்னம் செய்துமே மரண மாகி
மால்மகன் வரையப் பட்டு வருவனு மிவனே யென்றோம்
ஆலம்போ லேழை சாபம் அணுகிடு மிச்சென் மத்தில்.

23. ஜாதகன் தன் இறுதிக் காலத்தில் பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று, நல்லொழுக்கமுள்ள அடியார் பலருக்கு அன்புடன் அன்னம் அளித்து, பிறகு மரண மடைந்து, திருமாலின் புதல்வனுகிய பிரமதேவனுல் மீண்டும் இப்பூவுலகில் படைக்கப்பட்டுப் பிறந்தவன் இந்த ஜாதகன் என் ருேம். கொடிய விஷம் போல் ஏழையினுடைய சாபம் இப்பிறவியில் இவனை வந்து அடைந்தது.

24. செலவுகள் செய்வா ஞகும் தரணிகள் விரயம் செய்வன்
குலவுவான் உத்த ரத்தில் கேதுவின் தசையி லேதான்
பலருமே மதிக்க வாழ்வன் பாக்கியம் பெருக்க முண்டு
நலமுளோர் நேசம் கொள்வா னரசன்போல் வாழ்வா
[ஞகும்.

24. அதிகமாகச் செலவுகள் செய்து வருவான். விளை நிலங்களை விற்று (வீண் செலவு) செய்வான். வடக்குத் திக்கில் சென்று வாழ்வான். கேதுவின் மகாதசையில் எல்லோராலும் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். எல்லாவிதமான சௌபாக்கியங்களும் விருத்தி யடையும். நல்லவர்கள் நட்பைக் கொண்டு அரசனைப் போல் வாழ்ந்து வருவான்.

## தாரயோகம், துரகயோகம்

25. யோகமெவ் விதமாய்ச் சொன்னீ ருரைப்பீர்க ளந்தச்
[சங்கை
[1]ஆகமன் ஆட்சி யாக [4]அதிதியும் பத்தி லாகப்
[2]பாகனும் [3]பரிதி யொன்ருய்ப் பற்றின பலத்தி ஞலே
தோகையே தார யோகம் துரக யோகமு மொன்ரும்;

25. ஜாதகனுக்கு யோகம் ஏற்படும் என்று என்ன காரணங்களால் சொல்லுகின்றீர்கள்? அந்த விவரத்தைக் கூறுங்கள். (சுகஸ்தானுதிபதி நான்காம் வீடான, தனுசுக்குரியவனுமான) குரு ஆட்சியாகிய மீனத்திலும், கேது பத்திலும், சூரியன் புதன் ஒன்ருகவும் இருப்பதாலும், தாரயோகம் துரகயோகம் இவ்விரண்டும் ஏற்படும் என்ருேம்.

26. இருவகை யோகத் தாலே யிப்பாலன் சுகமாய் வாழ்வன்
பிருகுதன் தசையிற் சேஷம் புகலுவோம் போக
[மென்ருேம்
தரைசேரல் பொருள்வி ருத்தி தைரியமு மெய்து
[மென்ருேம்.
திருகிலாப் பின் பாகத்தில் செப்புவோம் விபர மாக.

1. குரு
2. புதன்
3. சூரியன்
4. கேது

26. இருவகையான யோகத்தால் இந்த ஜாதகன் சௌக்கியமாக வாழ்ந்து வருவான். சுக்கிர மகா தசையில் அநேகவிதமான போக பாக்கியங்கள் இவனை வந்தடையும். விளைநிலங்களை வாங்குவான். பொருள் பெருகும். தைரியம் உண்டாகும். தீங்குகளில்லாத அவ்விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய மரணகாலம்

27. அறுபது மூன்று ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
திருமக னுடல மேகும் செப்புவோம் பின்சென் மத்தை
அருணையி லிக்கு லத்தில் அணுகியே அரசு செய்வன்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

27. ஜாதகன் தனது அறுபத்து மூன்றும் வயதில் (சூரிய மகா தசை சனி புக்தியில்) இறப்பான். அவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணாமலையில் இதே அந்தணர் குலத்தில் பிறந்து, அரசனைப் போல் யோகம் பெறுவான். கரிய மதயானையைப் போன்ற முகத்தையுடைய விநாயகக் கடவுளைப் பெற்ற அழகியே! பார்வதியே! கேளுங்கள்.

## ஜனனகால தசை

28. பிறந்திடு காலம் தன்னில் பூசத்தில் முதல் பாதத்தில்
கரியவன் தசை யிருப்பு கழறுவோ மீரெட்டாண்டில்
மருவிடும் திங்க ளேழும் வரைந்தனம் பூர்வ பாகம்
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

28. ஜாதகனது ஜனன காலத்தில் பூச நட்சத்திரம் முதல் பாதம் நடைபெறும். அப்போது அவனுக்கு சனி மகா தசையில் (கர்ப்பச் செல்லுபோக) மீதி இருப்பு பதினாறு ஆண்டுகளும் ஏழு மாதங்களுமாம். இதுவரை முதல் பாகம் சொல்லுகின்றோம். அரிய வேதங்களின் முடிவில் கூறப்படும் தாயே! கேளுங்கள்.

# ஜாதகம் 61

## ஜனனகால கிரக நிலை

1. கன்னியும் செனன மாக [1]கலிபுதன் [2]பொன்னேன் தங்க
[3]மந்தன் [4]சேய் யேழிலாக மதி ராகு நவத்திலாக
துன்கேது மூன்றிலாக சூரியன் [5]விரயம் புக்க
பன்னுவீர் பலனை யென்று பார்வதி கேட்கும் போது;

1. ஜன்ம லக்கினம் கன்னியாகவும், சுக்கிரன், புதன், குரு, இம்மூன்றும் அதில் தங்கியிருக்க, சனி அங்காரகன், ஏழாம் வீடாகிய மீனத்திலும், சந்திரன் ராகு ஒன்பதாமிடமாகிய ரிஷபத்திலும், துன்பம் தரும் கேது மூன்றாமிடமாகிய விருச்சிகத்திலுமாகவும் சூரியன் விரயஸ்தானமாகிய (பன்னிரண்டாமிடம்) சிம்மத்திலுமாக நவக்கிரகங்கள் இருப்பின் பலனைக் கூறுங்கள் என பார்வதி கேட்கும் போது;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சனி அங்காரகன் | | சந்திரன் ராகு | |
| | இராசி சக்கரம் | | |
| | | | சூரியன் |
| | கேது | | லக்கினம் சுக்கிரன் புதன் குரு |

2. சுரர்குரு புகலு கின்ருர் பிறந்திடு மாண்பால் சென்மம்
பெரும்தந்தை யில்லம் சொல்வேன் [6]புலந்திரன் குலவு [வீதி
தெருவாசல் உத்திர மாகும் தீப்பாஞ்சாலி கீழ்பால்
அரன்கோஷ்டம் மேல்பா லாகும் அழகிய நதியும் [தென்பால்.

---

1. சுக்கிரன்
2. குரு
3. சனி
4. அங்காரகன்
5. பன்னிரண்டாமிடம் (சிம்மம்)
6. சூரியன்

2. தேவர்களுக்கெல்லாம் குருவாகிய அத்திரி முனிவர் சொல்லுகின்ருர். இஃது ஆண்மகனுடைய ஜாதகம். ஜாதகனுடைய தந்தையின் வீட்டின் அடையாளங்களைச் சொல்லுகின்றேன். சூரிய பகவான் உலவும் கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கிய வாயிலை யுடையது. தீமிதி நடைபெறும் பாஞ்சாலி (திரௌபதியம்மன்) கோவில் கீழப்புறம் உள்ளது. சிவபெருமான் மேற்குத் திக்கில் கோயில் கொண்டுள்ளார். அழகிய ஆறு தெற்குப் புறம் ஓடும்.

## ஜாதகன் பிறந்த குலம், ஊர் முதலியன

3. சொல்லிய வடையா ளத்துள் திருவா ரூரிலேதான்
[செங்குந்த சேயாய்
புல்குவான் சேஷ்ட ஞகப் புதல்வனின் யோகம் தானும்
தல்லியின் தந்தை யோகம் தன்துணை மனைவி புத்திரர்
வல்லவன் முன்பின் சென்மம் வரைகிறே மிந்நூல்
[தன்னில்.

3. இந்தவிதமாகச் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள வீட்டில், திருவாரூரில், செங்குந்த மரபினனுகப் பிறப்பான். அவன் தன் தந்தைக்கு மூத்த புதல்வன். இனி இந்த சோதாட நூலில், இந்த ஜாதகனுடையவும், தாய், தந்தையர், சகோதரர், மனைவி, மக்கள் ஆகிய இவர்களது முற்பிறவி மறுபிறவி ஆகியவற்றைக் கூறுகின்றோம்.

## ஜாதகனுடைய தந்தையின் விவரம்

4. தந்தையின் வர்க்கம் சொல்வேன் சதுராணு மவ்வாறு
[கன்னி
இந்தவா றுதித்தா ரென்றோம் ஏகிடு மற்ற தெல்லாம்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோ மவர்கள் சேதி
அந்தவர் ஒன்ருய் வாழ்வர் அம்பிகையாளே கேளாய்.

4. ஜாதகனுடைய தந்தையின் விவரங்களைக் கூறுகின்றோம். அவர்கள் சகோதரர் நால்வராவர். அதே போல் நான்கு சகோதரிகளும் உளர். ஆனுல் எல்லா உடன்பிறந்தவரும் பிரிந்து ஜாதகன் தந்தை மட்டும் தனியனுக வாழ்ந்து வருவான். அவர்களுடைய விவரங்களைப் பிற்பாகத்தில் விவரிக்கின்றோம் தாயே! கேளுங்கள்.

## ஜாதகன் தகப்பனருடைய குணதிசயங்கள்

5. மிதுனமும் சதய நாளில் விளங்குவான் சிவந்த மேனி
பதியது சித்திரம் செய்வன் பார்புத்தி யுடைய னுகும்

ததி நெய்பா லிஷ்டம் கொள்வன் தரிதொழில் செய்வ
[ளுகும்
நிதம்சீலன் கல்வி மானும் நேமியில் நல்லோ னுவன்.

5. ஜாதகனுடைய தந்தை சதய நட்சத்திரத்தில் மிதுன லக்னத்தில் தோன்றியவன் என்று சொல்லுகின்ரேும். அவன் சிவந்த நிறமுள்ளவன். விட்டை அழகுபடுத்துவான். தாராள மனப்பான்மை யுடையவன், தயிர், நெய், பால் இவைகளை யருந்துவதில் விருப்ப முடையவன். தரித் தொழில் செய்து வருவான். நல்லொழுக்கமுள்ளவன், கல்வியறிவுள்ளவன். உலகில் நல்லவன் என்ற பெயருடையவன்.

## இதுவுமது

6. உண்டியும் வறுமை காணுன் உயர்வோர்கள் நேசம்
[கொள்வன்
துண்டமா யுரைப்பா னுகும் தொடுவழக் கதனில்
[செல்வன்
பண்டுநாள் பூமி தன்னைப் பாலகன் விருத்தி செய்வன்
தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சண்முகன் பக்தி
[பூண்பன்.

6. சாப்பாட்டுக்கு வருத்தம் ஏற்படாதவன். பெரியோர்களுடைய சிநேகம் உள்ளவன். கண்டித்துப் பேசும் இயல்பினன். அனுவசியமாக வீண் வம்புக்குப் போவான். பிதுரார்ஜிதமான விளை நிலங்களை விருத்தி செய்வான், குளிர்ந்த தமிழில் உள்ள ரகசியார்த்தங்களை நன்கு அறிந்துணர்ந்தவன். ஆறுமுகக் கடவுள் மீது பக்தி யுடையவன்.

7. வறுமையெப் போதும் காணுன் வளமுள தலங்கள்
[செல்வன்
அரிரேகை கோதுமை ரேகை அணுகிடும் கரத்தி
[லேதான்
குறையென்ருேர்க் குதவி செய்வன் குலமதிப் பாக
[வாழ்வன்
பொருள்கடன் கொள்ளா னுகும் புண்ணிய மனமும்
[கொஞ்சம்.

7. ஒருகாலத்திலும் தரித்ர தசையை யடையாதவன். பல புண்ணியத் தலங்களுக்குச் செல்லுவான். கையில் விஷ்ணு ரேகை, கோதுமை ரேகை இரண்டும் உள்ளவன். துன்பமுற்று வந்து உதவி கேட்டவர்கட்கு உபகாரம் செய்பவன், தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். பணம் கடன் வாங்காதவன் புண்ணியும் செய்யும் எண்ணமுள்ள மனத்தினன்.

## தந்தையின் முற்பிறவி

8. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறே மருணை
[தன்னில்
முன்குல முதித்து வின்னேன் மேதினி விருத்தி செய்து
தன்பந்து மதிக்க வாழ்ந்து சாராள்க ளதிக முண்டாய்
அன்னவன் மரண மாகி அயனாலே வரையப் பட்டு;

8. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். அருணசலேச்வரர் எழுந்தருளியுள்ள திருவண்ணமலையில் முதல் குலமாகிய அந்தண குலத்தில் பிறந்து, விளைநிலங்களைப் பெருக்கி, தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வந்து, ஏவலாட்கள் அதிகம் பெற்றவனாக வாழ்ந்து, மரண மடைந்து மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு;

## குலாசாரப்படி நடவாத தோஷம்

9. வந்தவ னென்று சொல்வோம் மறுத்துமே பராசர்
[சொல்வார்
முன்சென்மம் மறைக்கு லத்தி லுதித்தவ-னிச்சென்
[மத்தில்
தன்குலம் தாழ்வாய் வந்த சங்கையைக் கேளு மென்ன
அன்னவன் முன்சென் மத்தில் அருமறை ஓதாத தாலே;

9. பிறந்தவன் என்று சொல்லுகின்றேம். பராசர முனிவர் இடையில் கூறுகின்றார், முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்தவனுக்கு இப்பிறவியில் ஏன் இந்தத் தாழ்ந்த குலத்தில் தோன்ற வேண்டு மென்பதற்குரிய காரணங்களைக் கேளுங்கள். அவன் முற்பிறவியில் வேதங்களை ஓதாமல், (வாழ்ந்து வந்ததால்) ;

## ஜாதகனுடைய குணதிசயங்கள்

10 பிறந்தன னிக்கு லத்தில் பேசின குணத்தா னுக்குத்
திருமக னுதிப்பா னுகும் செப்புவோ மவன்கு ணத்தை
அரிமக னெப்ப தாகும் அழகான கல்வி கற்பன்
இருவித்தை யுடைய னுகும் ஏவலான்க ளுடைய னுகும்.

10. இப்பிறவியில் செங்குந்த மரபில் பிறந்தான். இவ்விதம் சொல்லப் பட்ட குணங்களை யுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான். இனி அவனுடைய குணங்களைக் கூறுகின்றேம். மகாவிஷ்ணுவின் மகனாகிய மன்மதனைப் போன்ற அழகுள்ளவன். அழகிய கல்வியையும் கற்றுணர்வான். இருவிதக் கல்வியைக் கற்பான். பணியாட்கள் உள்ளவன்.

11. சொல்லிடும் வசன மெல்லாம் சுத்தமாம் சொகுச
[ஞவன்
வெல்லுவா னெதிரி தன்னை வீண்வழக் கோரம்
[பேசான்
நல்லவன் நல்ல வர்க்கு ராசபூ சிதமு மாவன்
எல்லையை விருத்தி செய்வ னெழில்நதி தீர்த்தம்
[தோய்வன்.

11. பேசுவதில் சுத்தமானவன். ஆடம்பரத்தில் பிரியமுள்ளவன். விரோதிகளை அடக்குவான். வீண் வழக் காடாதவன். பொய்ச் சாட்சி சொல்லாதவன். நல்லவர்களுக்கு நல்லவனாக நடப்பவன். அரசாங்கத் தால் கௌரவிக்கப்படுவான். பூமியையும் விளை நிலங்களையும் பெருக்கு வான். புண்ணிய நதிகளில் நீராடுவான்.

12. தந்தையின் தந்தை போலே சாதகன் வாழ்வா னுகும்
பந்துவுக் குதவி செய்தல் பால்பசு வுடைய னுகும்
வந்தவர்க் கன்ன மீவன் வள்ளல்மேல் பக்தி பூண்பன்
இந்திரன் போலே வாழ்வ னீசுவரி கேட்டி டாயே.

12. ஜாதகனுடைய பாட்டனைப் போல் வாழ்ந்து வருவான். தன் சுற்றத்தாருக்கு உபகாரி. பால் பாக்கியமுடையவன். பசுக்கள் உள்ளவன். தன்னை யண்டிவந்தவர்கட்குப் பரிவுடன் உணவு அளிப்பவன். தெய்வபக்தி யுள்ளவன். இந்திரன் தேவலோகத்தில் வாழ்ந்து வருவது போல் இப்பூமி யில் வாழ்ந்து வருவான். பார்வதிதேவியே! கேளுங்கள்,

## யோகமேற்படுதற்குரிய கிரகநிலை

13. எப்படி யோகம் சொன்னீ ரியம்புவீ ரந்தச் சங்கை
ஒப்புடன் தர்ம கர்மன் ஒன்ருகச் சென்மம் தங்க
மைப்புடன் கேது புந்தி வெண்மதி உச்ச மாக
இப்படி கிரகத் தாலே இயம்பினேம் யோகம் தானே.

13. ஜாதகனுக்கு யோகம் ஏற்படும் என்று எவ்விதம் கூறுகிறீர்கள்? அதைச் சொல்லுங்கள் (என்று தேவி வினவ, அத்திரி முனிவர் காரணம் சொல்லுகின்ருர்). தர்மகர்மாதிபதிகளான. லக்கினத்திற்கு ஒன்பது, பத்தாம் இடத்திற்குரியவர்களான சுக்கிரன். புதன் இருவரும் லக்கின கேந்திரத்தில் இருப்பதாலும், சேது புதன் சந்திரன் (லக்கினுதிபதியாகிய புதன் லாபஸ்தா னத்திற்குரிய சந்திரன்) இருவரும் உச்ச பலம் பெற்றிருப்பதாலும் நாங்கள் அவ்விதம் கூறிரோம்.

*குறிப்பு :—ஒன்பதுக்குடையவன். பலவானுய், அவன் இருந்த வீட்டுக்கு டையோன் கேந்திரமுற்ருல் பாக்யவானும், தந்தையைவிட கீர்த்திமானும் அரசன் விரும்பி வாழ்பவனும், பிரதாபசாலியு மாக இருப்பான்....சாத காலங்காரம், பாட்டு 804 805,

## இதுவுமது

14. நாவதைக் காப்பா ஞகும் நற்பூமி யிருவூர் சேர்க்கை
கூவல்கள் சோலை செய்வன் குடியது மூன்று செய்வன்
தாவினேர்க் குதவி செய்வன் சத்தான வஸ்து இஷ்டன்
ஆவலாய்த் தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

14. அடக்கமாகப் பேசுபவன். இரு ஊர்களில் விளை நிலங்களைச் சேர்ப்பவன. தோட்டம் துறவு முதலியவைகளைத் தோற்றுவிப்பான். மூன்று குடித்தனம் வைப்பாள். (குடும்பத்தை மூன்று பாகங்களாக பிரிப் பவன்.) தன்னையண்டி வந்தவர்கட்கு உபகாரம் செய்பவன். புஷ்டியான ஆகாரத்தைப் புசிப்பதில் விருப்பமுள்ளவன். பிரியத்துடன் தவங்களைச் செய்த பார்வதிதேவியே! கேட்பீர்.

## புத்திரபாவமும், தாயின்வரலாறும்

15. தன்சுதன் ஆண்பா லிரண்டு சக்திமார் மூவர் தீர்க்கம்
பின்னமா மிரண்டு வென்ரேம் பேசுவோ மன்னை சேதி
மன்னவன் மனத்துக் கேற்ரேள் வருவோரை
[யாத ரிப்பள்
அன்னையு மிரண்டு மாகு மணுகிய முன்தாய்க்
[கின்னேன்;

15. ஜாதகனுடைய புத்திரபாவத்தைக் கூறிடில், இரு புத்திரரும் மூன்று புத்திரிகளும் தோன்றுவர் என்ரேம். அவர்களில் இருவர் இறந்து விடுவர். இனி, தாயின் விவரங்களைச் சொல்லுகின்ரேம். அவள் தன் கணவனுக்குப் பிரியமானவள். அண்டி வந்தவர்களை ஆதரித்து வருவாள். ஜாதகனுக்கு இரு தாய்மார்கள் உண்டு என்று சொல்லுகின்ரேம். அவர் களில் மூத்த தாய்க்கு இந்த ஜாதகன் பிறந்தவன்.

## தாயின் விவரம்

16. தரித்திர மில்லா ளாகும் சாதமும் குறைவு ருதாள்
பொருத்தமாய்ப் பேசு வாளாம் பிறர்குற்றம் புகலா
[ளாகும்
சிறுத்தோர்க்குத் தாக மீவள் சிந்தையு மிரண்டு மாகும்
திருத்தமாய் வார்த்தை யுண்டு தேவிநன் னடக்கை
[யுண்டு.

16. தரித்திர மில்லாதவள். அன்னத்துக்குக் குறைவில்லாதவள். பொருத்தமாகப் பேசுபவள். பிறருடைய குற்றத்தைப் பாராட்டாதவள். துன்புற்றவர்கட்கு வேண்டிய உதவி செய்பவள். இருவிதமான மனமுள்ள வள். திருத்தமாகப் பேசுபவள். நன்னடத்தை யுள்ளவள்.

## தாயின் சகோதரபாவம்

17. தன்துணை ஆண்பால் காணாள் சக்திமார் மூவர் தீர்க்கம்
பின்னமாம் மற்ற வெல்லாம் பேசினீர் மறுதா யொன்று
அன்னவள் தனக்குப் புத்திரர் அணுகாதோ விபரம்
[சொல்வாய்
மன்னன்போல் தோன்றும் தீதாம் மங்கையர் ஒருத்தி
[தீர்க்கம்.

17. சகோதரர்கள் இல்லாதவள். (தாய்க்கு) சகோதரிகள் மூவர் நீண்ட ஆயுளுள்ளவர்கள். மற்றும் தோன்றியவர்கள் நிலையில்லாதவர். ஜாதகனுக்கு மறுதாய் உண்டு என்று சொல்லுகிறீர்களே! அவளுக்குப் புத்திர பாக்கியமில்லையா? என்று பார்வதிதேவி வினவ. ரிஷிகள் விவரமாகச் சொல்லுகின்றார். அரசன் போல் ஒருவன் பிறப்பான். அவன் நிலையில்லாதவனாவன். பெண் ஒருத்தி நீண்ட ஆயுளுள்ளவள் என்றோம்.

## தாயின் முற்பிறவி

18. அன்னையின் முன்சென் மத்தை யறிவிப்போ மாலங்
[காட்டில்
வன்னிய குலமு தித்து வளமையாய்க் குடும்பி யாகித்
தன்சுத ரதிக முண்டாய்த் தருமத்தி லிச்சை யுண்டாய்த்
தன்வரன் முன்னே மாண்டு செகமதில் வரையப் பட்டு ;

18. ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைக் கூறுகின்றோம். திருவாலங்காட்டில் வன்னிய குலத்தில் பிறந்து செழிப்பான குடும்பத்தை ஏற்று. பல புத்திரர்களைப் பெற்று, தருமம் செய்வதில் விருப்பமுள்ளவளாகி, தன் கணவனுக்கு முன்பாகவே மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு;

## தாயின் மறுபிறவி

19. பிறந்தவ ளென்று சொல்வோம் புதல்வனுக் காறெட்
[டாண்டில்
மறலியின் நாட்டை அன்னை வாங்குவா ளென்று
[சொல்வோம்
திருகிலா யிவள்பின் சென்மம் செப்புவோம் பழனி
[தன்னில்
அரிவையும் சைவச் சேயா யருளுவா ளென்று
[சொல்வோம்

19. இப்பிறவியில் பிறந்தவள் என்று சொல்லு கின்றோம் ஜாதக னுடைய நாற்பத்தெட்டாம் வயதில் தாய் மரணமடைவாள். தீமைகளில்லாத மறுபிறவியைச் சொல்லுகின்றோம். பழனி தலத்தில், சைவகுலத்தவளாகப் பிறப்பாள் என்று கூறுகின்றோம்.

## தந்தையின் மரணகாலமும் மறுபிறவியும்

20. ஆரஞ்சு ஒன்று ஆண்டில் அணுகிடும் தந்தை கண்டம்
வேறுசென் மத்தை சொல்வேன் வேலன்வாழ் தணிகை
[தன்னில்
சேருவான் பிரம்ம சேயாய்ச் செப்பின மொழிகுன் றுது
பாரினில் தலங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

20. ஜாதகனுடைய முப்பத்தொன்றும் வயதில் தந்தை மரண மடைவாள். அவனுடைய மறுபிறவியில் முருகப் பெருமான் கோயில் கொண்டிருக்கும் திருத்தணிகையில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான். நாங்கள் கூறியவை தவரு. உலகில் பல தலங்களில் கோயில் கொண்டருளி யிருக்கும் பார்வதி தேவியே! கேளுங்கள்.

21. இந்ததோர் சென்மம் தன்னி லிவன்செய்த புண்ணிய
[மென்ன
முன்னமே கூறு மென்ன மொழியதைக் காத்த லாலும்
உன்னதத் தலங்கள் சென்றும் ஓராறு கடவுள் பக்தி
பின்னேரா பத்தைக் காத்தும் புனிதனும் வாழ்வ தாலே;

21. இப்பிறவியில் ஜாதகனுடைய தந்தை செய்த நற்காரியங்கள் எவை? அவற்றை முதலில் கூறுங்கள் என்று வினவ, பல புண்ணிய தலங்களுக்குச் சென்று வந்ததாலும் ஆறுமுகக் கடவுளுக்குத் தொண்டுகள் பல செய்து வருவதாலும் ஏழைகளிடம் பரிவுகாட்டி அவர்களுடைய துன்பத்தை நீக்கி வருவதாலும்;

## ஜாதகன் திருமணக் காலமும் மனைவியின் குணமும்

22. பிறப்பனும் பிரம்ம சேயாய்ப் புதல்வனு மணத்தின் காலம்
உறைக்கிறே மீரெட் டாண்டி லிந்திர சதனம் போன்ற
அரிவையு முள்ளூர் நேரு மறைகிறே மவள் குணத்தை
தரிபடக் கூரு ளாகும் சாதமும் குறைவு ருதாள்.

22. அந்தண குலத்தவனுகப் பிறப்பான் என்றோம். ஜாதகனுடைய திருமணக்காலத்தைக் கூறுகின்றோம். அவனுடைய பதினாறும் வயதில், உள்ளூரிலிருந்தே இந்திரனுடைய பவனம் போன்ற அழகுள்ள மாளிகை

யிலிருந்து மனைவி வருவாள். இனி அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். கண்டித்துப் பேசாதவள். சாப்பாட்டுக்குக் குறைவில்லாதவள்.

23. மாரன்தன் மனையை யொப்பாள் வருவோரை [யாத ரிப்பள்
கூறும்சொல் சுகமே யாகும் புன்சிரிப் புடைய ளாகும்
தேறினோர்க் கன்ன மீவள் சீலியாம் விரத மேற்பள்
பாரில்நன் நடக்கை யுண்டு பாவையும் தீர்க்க சீவி.

23. ஜாதகனுடைய மனைவி லக்குமியைப் போன்றவள். அண்டி வந்தவரைக் காத்து வருவாள். இவள் பேசுபவை இன்பமுறுவதாகவே இருக்கும் புன்சிரிப்புள்ள முகமுடையவள். எல்லாம கற்றுணர்ந்த பெரியோர்களுக்கு (பரதேசிகட்கு) அன்புடன் அன்னமளிப்பவள். நல்லொழுக்கமுடையவள். விரதங்கள் ஏற்று நடப்பவள். நன்னடத்தையுள்ளவள். நீண்ட ஆயுள் ஜீவித்திருப்பவள்.

24. மதலைக ளிருநான் காக மருவிடும் பாலனுக்குச்
சதமுடன் ஆண்பாலிரண்டு சக்திமார் மூவர் தீர்க்கம்
இதுநிற்க உதித்தோன் பூர்வ மியம்புவோம் தஞ்சை [நாட்டில்
நிதிமிக யுடையோ னுக்கு நேர்ந்தனன் மறவ னாக.

24. ஜாதகனுக்கு எட்டு குழந்தைகள் தோன்றுவர் அவர்களில் மூவர் பெண்கள். ஆண் குழைந்தைகள் இருவர். இவ்வைவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். இஃது இப்படி யிருக்க இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தஞ்சாவூர் (ஜில்லா) வில் செல்வம் மிக்க உள்ள ஒரு தனவந்தனுக்கு மறவ ஜாதியில் தோன்றினன்.

25. அறிமதி லிச்சை யுண்டாய் ஆதிமால் மலைக்குச் சென்று
பிருதிவி தலத்துக் கேகிப் பேதியால் மரண மாகிச்
சிரநான்கோன் வரையப் பட்டுச் செனிப்பனு மிந்தப் [பாலன்
திருமகன் செனனம் தொட்டுச் சேயன்தன் மரண [மட்டும்;

25. தருமம் செய்வதில் பிரியமுள்ளவனாக விருந்து ஆகி ஆதியாக உள்ள திருமலைக்குச் சென்று அங்குள்ள வெங்கடாசலபதியை தரிசனம் செய்து, பிறகு காஞ்சிபுரம் சென்று அங்குள்ள ஈசுவரனுக்கு பூசை முதலியன செய்து, பிறகு பேதியால் மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டு இப்பிறவியில் வந்து தோன்றினன். ஜாதகன் பிறந்தது முதல் மரணம் ஏற்படும் வரையில்;

26. வறுமை யில்லாமல் வாழ்வன் மானிலம் புகழு மெய்தும்
அரசன்போல் வாழ்வானுகும் அதிகமாய் செட்டுச்
[செய்வன்
மறு பாகம் விபரமாக வரைகிருேம் மேலே தானே
கரிமத வானே பெற்ற காதலி கேட்டி டாயே.

26. தரித்திரம் அடையாதவன். உலகில் கீர்த்தி யடைவான். அரச ஃனப் போல் (கீர்த்தியுடன்: செல்வாக்குடன்) வாழ்ந்து வருவான். அதிக மான வர்த்தகம் புரிந்து வருவான். மறு பாகத்தில் விவரமாகச் சொல்லு கின்ருேம். கரிய மதயானேப் போன்ற முகத்தை யுடைய விநாயகனேப் பெற்ற தேவியே கேளுங்கள்.

## ஜாதகனுடைய கண்ட காலங்களும் மரணமும்

27. ஒன்று மூன்ருண்டு யெட்டு ஒருபதி னேந்து ஆண்டில்
இன்னவன் பிணிய னேகம் எய்திப் பின் நிவர்த்தியாகும்
அன்பது ஒன்ப தாண்டில் அணுகிய தனுசு மாதம்
முன் பக்கம் சஷ்டி தன்னி லுதித்தசே யுடல மேகும்.

27. ஜாதகன் முதல் வயது, மூன்ரும் வயது, எட்டாம் வயது, பதினேந்தாம் வயதுகளில் ரோகத்தால் பீடிக்கப்பட்டு வெகுவாகத் துன்ப மடைவான். ஆனல் அவைகள் விலகும். ஐம்பத்தொன்பதாம் வயதில் மார் கழி மாதம் சுகல பட்சம் சஷ்டி திதியில் ஜாதகன் மரண மடைவான்.

## ஜாதகனுடைய மறுபிறவி

28. மறுசென்மம் கலிங்க நாட்டில் மறைக் குல முதித்து
[யின்னேன்
பொருளது பெருக்க மாகி புகழுடன வாழவா னம்மா
திருமகன் செனன காலம் செங்கதிர் தசையி ருப்பு
உரைத்தனம் பதினேர் திங்கள் உமையே நின்னரு
[ளாலே.

28. மறுபிறவியில் கலிங்க நாட்டில் அந்தண குலத்தவனுகப் பிறந்து பொருட் செல்வத்தை படைந்து கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். ஜாதகனு டைய ஜனன காலத்தில் சூரிய மகா தசையில் கர்ப்பச் செல்லுபோக மீதியிருப்பு பதினெரு மாதங்கள் ஆகும். தாயே! உமாதேவியே உன்னு டைய அருளால் நாங்கள கூறியுள்ளோம். —V.R.N.

# ஜாதகம் 62

## ஜனனகால கிரகநிலை

1. [1]பிறைபுதன் [2]புகர்[3]பானு [4]சீயம் [5]பூமகன் கன்னி யாகக்
குருதுலாம் [6]காரி தேளில் [8]கொடுவிஷம் [9]மேரு வாக
[10]அரிவையும் சென்ம மாக அதுபல னெவ்வா றென்னக்
[11]குறுமுனி சொல்லு கின்றார் கோதையே ஆண்பால்
[சென்மம்.

1. சந்திரன் புதன் சுக்கிரன் சூரியன் இவர்கள் சிம்மத்திலும், அங்காரகன் கன்னியிலும், குரு துலாத்திலும், சனி விருச்சிகத்திலும், ராகு தனுசிலும் (கேது மிதுனத்திலுமாக) நவக்கிரக நிலை இருக்க, ஜாதகன் பிறந்தது கன்னியா லக்கினமாக இருந்தால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள், என பார்வதி தேவி வினவ, அகத்திய முனிவர் அருளுகின்றார். அழகியவளே! இஃது ஆண் மகனுடைய ஜாதகம்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | கேது |
| | இராசி சக்கரம் | | |
| | | | சந்திரன் சுக்கிரன் புதன் சூரியன் |
| ராகு | சனி | குரு | அங்காரகன் லக்கினம் |

## ஜாதகன் பிறந்த வீட்டின் வரலாறு

2. தந்தையி னில்லம் சொல்வேன் தென்வட வீதி யாகும்
இந்திர னேக்கம் வாசல் முந்தரன் வடபால் நோக்கம்

1. சந்திரன்
2. சுக்கிரன்
3. சூரியன்
4. சிம்மம்
5. அங்காரகன்
6. சனி
7. விருச்சிகம்
8. ராகு
9. தனுசு
10. கன்னி
11. அகத்திய முனிவர்

முந்துமால் வடபா லாகும் மோடிடும் துருவ முத்தரம்
அந்தவில் வாடை யாகும் அணுகிய சிறுவூ ராகும்.

2. ஜாதகன் பிறந்த விட்டின் வரலாறுகளைச் சொல்லுகின்றோம். வடக்குத் தெற்கான வீதியில் கிழக்கு நோக்கிய வாயிலை யுடையது. வடக்கு திசையில் சிவபெருமான் திருமால் ஆகியோர் எழுந்தருளியுள்ள கோவில்களும், ஒரு பழைய கோட்டையுமுண்டு. இவ்விதம் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள ஊரில்

## ஜாதகனின் குலம்

3. பாலகன் வடுகச் சேயாய்ப் பிறப்பனு மைந்நாஞ் சென்மம்
சாலவே யிவனின் யோகம் தாய்தந்தை துணைவர் [யோகம்
ஞாலவே மனைவி புத்திர ரியம்புவோ மிந்நூல் தன்னில்
ஆலத்தை யுண்டோன் மாதே அறிவிப்போம் பிதாவின் [சேதி.

3. ஜாதகன் வன்னிய குலத்தில் தோன்றியவன் என்றோம். அவன் தன் தந்தைக்கு ஐந்தாம் புத்திரனுவான். இனி ஜாதகனுடையவும், தாய், தந்தையர், சகோதரர், மனைவி, மக்கள் இவர்களுடைய யோக வரலாறுகளை இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம். கொடிய விஷத்தை உலகின் நன்மைக்காக உண்டருளிய சிவபெருமானின் தேவியே! இனி ஜாதகனுடைய தந்தையைப் பற்றிச் சொல்லுகின்றோம்.

## தந்தையின் விவரங்கள்

4. சோதிநாள் கெண்டை ராசி செனிப்பனு மூகை சாலி
நீதிமான் அரசு செய்வான் நிருபர்க ளிஷ்டம் கொள்வன்
மேதினில் புகழு மேற்பன் விடம்போலே கோப முண்டு
சாதிப்பான் சிலது சங்கை சந்தேக மனத்த னாகும்.

4. சுவாதி நட்சத்திரத்தில் மீன ராசியில் பிறந்தவன் ஜாதகனுடைய தந்தை என்று சொல்லுகின்றோம். நேர்மையுள்ளவன். ஊக முடையவன். அரசாங்கத்தில் பணிபுரிபவன். அரசாங்கத்தாருக்குப் பிரியமானவன். உலகில் கீர்த்தி யடைவான். சர்ப்பம் போல் கோபங் கொள்ளுவான். சந்தேகப்படும் மனமுள்ளவன்.

## இதுவுமது

5. அன்னியக் கிராமம் தன்னில் அரசுமே செய்வா னாகும்
பொன்னொடு பணிதி சேர்ப்பன் பொய்மெய்யும் புகல்வா [னாகும்
உன்னத தேகி யாவன் உற்றோர்கள் மதிக்க வாழ்வன்
சொன்னதைக் காப்பா னாகும் சுந்தர முடைய னாகும்

5. வேற்று கிராமத்தில் உத்தியோகம் பார்த்து வருவான். பொன் ஆபரணங்கள் செல்வம் முதலியவற்றைச் சேர்ப்பான். பொய்யையும் மெய்யையும் கலந்து பேசுபவன். உயர்ந்த தேக முள்ளவள். சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். தான் கூறிய வார்த்தைகளின்படி நடப்பவன். அழகுள்ளவன்.

6. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட ஞவன்
தல்லிபோல் ஆத ரிப்பன் சாதமும் குறைவு ருதான்
எல்லேகள் சேர்ப்பா ஞகு மெதிரியை வசியம்
[கொள்வன்
புல்லிய புத்தி யில்லான் புண்ணிய தலங்கள் செல்வன்.

6, நல்லவர்கட்கு நல்லவனுகவும் தீயவருக்கும் (பொல்லாதவருக்கும்) பொல்லாதவனுகவு மிருப்பான். தன்னே யண்டி வந்தவரை, பெற்றத் தாயைப் போல் பரிவுடன் காத்து வருவான். அன்னத்துக்குக் குறைவில் லாதவன். விளே நிலங்களே வாங்கிப் பெருக்குவான். விரோதிகளே ஒழித்து அவர்களேயும் தன் பக்கம் சேர்த்துக் கொள்வன், அற்ப எண்ணங் களில்லாதவன். பல புண்ணிய தலங்களுக்குச் செல்வான்.

7. உண்டிடு முணவின் மீது உரைப்பொடு புளிப்பி லிச்சை
கண்டித முரையா ஞகும் காலாட்கள் விருத்தி யுண்டு
பண்டுநாள் பூமி கொஞ்சம் பாலகன் விருத்தி செய்வன்
எண்டிசை புகழு மேற்ப னரசர்க்கு மிவன்சொல்
[மேன்மை.

7. உரைப்பும் புளிப்பும் அதிகமுள்ள உணவை : விருப்பத்தோடு அதிகமாகப் புசிப்பவன். கண்டித்துப் பேசும் இயல்பில்லாதவன். ஏவ லாட்கள் பலர் உண்டு. பிதிரார்ஜிதமான சொத்துக்களே ஜாதகன் பெருக்குவான். அரசருக்கு (அரசாங்கத்தாருக்கு) இவனுடைய வார்த்தை களில் மதிப்புள்ளவன்.

## தந்தையின் சகோதரர்

8. தன்துணே யாண்பால் நான்கு சாற்றுவோந் தீர்க்க மாய
அன்னவர் வேருய்ச் செல்வர் அவர்பலன் வேருய்க்
[கூறுவோம்
சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
இன்னவன் குணத்தை யாங்க ளியம்புவோ மினிமே
[லாக.

8. ஜாதகனுடைய தந்தைக்கு உடன் பிறந்தவர் நால்வர் என்றேம். அவர்கள் தந்தையை விட்டுப் பிரிந்து செல்லுவார் எனக் கூறுகிறேம். இவ்

விதம் கூறப்பட்ட குணங்களை யுடையவனுக்கு ஜாதகன் பிறப்பான். இனி அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய விவரம்

9. வித்தையு முடைய னாகும் விவேகியா மெவர்க்கும் [நேயன்
புத்தியில் பெரியோ னவன் பொய்யது புகலா னாகும்
சத்தியம் கூறுனாகும் தயாளமாம் குணத்தனாகும்
அத்திபோல் நடையு மாவன ரசர்க ளிஷ்டம் [கொள்வன்.

9. வித்தையைக் கற்றுணர்வான். தீமை நன்மை இவைகளைப் பாகுபாடும் செய்யும் திறமையுள்ளவன். எல்லோருக்கும் பிரியமானவன் அசத்தியம் (பொய்) பேசாதவன். தயாளமான குணம் படைத்தவன். யானையைப் போல் கம்பீர நடையுள்ளவன். அரசாங்கத்தாரின் மதிப்பைப் பெற்றவன்.

10. தந்தையால் சுகமில் லாதான் தரணியை விருத்தி [செய்வன்
சிந்தையும் நல்ல தாகும் சிறப்புடன் வாழ்வான் பின்னால்
எந்திடம் பெருமை யேற்பன் ஏவலா ளுடைய னாகும்
முந்துமால் பத்தி கொள்வன் மொழியதைக் காப்பா [னாகும்

10. தன்னுடைய தந்தையால் சௌக்கிய மில்லாதவன். விளைநிலங்களைப் பெருக்கி வருபவன். நல்ல எண்ணங்களுள்ளவன், பிற்காலத்தில் சிறப்பான வாழ்க்கையை யுள்ளவன். எல்லாவிடத்திலும் பெருமையையும் கீர்த்தியையும் பெறுவான். பணியாட்களுள்ளவன். தெய்வ பக்தி (மகா விஷ்ணுவிடம்) உள்ளவன். சொன்ன வார்த்தைகளின் படி நடப்பவன்.

## இதுவுமது

11. அரசரால் தொழிலு மேற்ப னண்டின பேரைக் காப்பன்
பொருள்பின்னால் சேர்ப்பா னாகும் பெரியவ ருறவு [கொள்வன்
தரிபடக் கூறு னாகும் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
திருமாடி செய்வா னாகும் தீர்க்கமாம் வயது முள்ளோன்.

11. அரசாங்கத் தொழில் ஏற்றுச் செயல் புரிவான். தன்னை யண்டி வந்தவர்களை ஆதரிப்பான். கண்டித்துப் பேசாதவன். பிற்காலத்தில் செல்வத்தைச் சேர்ப்பான். பெரியோர்கள் நட்புள்ளவன். கால் நடைப் பெருக்கம் செய்வான். அழகிய மாடி வீட்டைக் கட்டுவான். நீண்ட வயதுள்ளவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

12. தன்துணை முன்னல் நஷ்டம் தங்கிடும் கன்னி யிரண்டு
பின்துணை சேத மெய்தும் பேசுவீர் அந்தச் சங்கை
துன்மையாய்க் காரி மூன்றில் தொடர்ந்ததால் சொன்
[னேம் யாங்கள்
அன்னையின் குணத்தை யாங்கள றிவிப்போ மினிமே
[லாக.

12. ஜாதகனுக்கு முன்பிறந்த சகோதரர்கள் இறப்பர். இரு சகோதரிகள் மட்டும் நிலையானவர். இவனுக்குப் பின் பிறந்த சகோதரரும் இறப்பர். அதற்குக் காரணம் சொல்லுங்கள் (எனப் பார்வதிதேவி வினவ ரிஷிகள் கூறுகின்றனர்). சகோதர ஸ்தானமாகிய மூன்ருமிடத்தில், (விருச்சிகத்தில்) சனி தங்கியிருப்பால் அவ்விதம் சொல்லுகின்ருேம். இனி தாயின் குணங்களை நாம் கூறுகின்ருேம்.

## தாயின் விவரம்

13. சுகமுள வார்த்தை சொல்வள் சோர்வோர்க்குத் தாக
[மீவள்
பகையென்று மனத்தில் வையாள் பரிந்துப சாரம்
[செய்வள்
செகமதில் நலலோ ளாவள் செல்வியும் யோகசாலி
உகமையாய் வார்த்தை சொல்வளு ரகன்போல கோப
[மேற்பள்.

13. சுகமுள்ள வார்த்தைகளையே பேசுபவள். பசி தாகத்தால் வாடியவர்களை உபசரிப்பாள். யாரிடத்திலும் விரோதம் பாராட்டாதவள். பரிவுடன் உபசாரங்கள் செய்யும் இயல்பினள். உலகில் நல்லவள் என்ற பெயருடையவள். அதிர்ஷ்டமுடையவள். பிறர் உவக்கும்படியான வார்த்தைகளைப் பேசுபவள். ஸர்ப்பம் போல் விரைவில் கோபங் கொள்வாள்.

## தாயின் விவரம் : தொடர்ச்சி

14. மாரன்தன் மனத்துக் கேத்தோள் வருவோரை யாத
[ரிப்பள்
தீரமில் லாத நெஞ்சம் சிலுகான குணமில் லாதாள்
வேருெரு நடக்கை யில்லாள் விசனமே குடியாம்
[பின்னல்
காரிழை வந்த பின்பு கணவனுக் கதிக யோகம்.

14. தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள். தன்னையண்டிவந்தவரைக் காப்பவள். தைரிய மில்லாத மனத்தினள். சிக்கலில்லாத குணமுடையவள். வேற்று நடத்தை யில்லாதவள். பிற்காலத்தில் துன்பம் வெகுவாக விளையும். இவளை மணந்த பின்பு ஜாதகனுடைய தந்தைக்கு யோகம் விருத்தியாகும்.

## தாயின் முற்பிறவி

15. தன்துணை காணு ளாகும் செப்புவோ மிவள்முன் சென்மம்
பெண்ணையி னோரம் தன்னில் பெரும்பனைப் பட்டி
[தன்னில்
வன்னிய குலமு தித்து வளமுள குடும்பி யாகி
இன்னவள் வாழு நாளில் ஏகின வினையைச்
[சொல்வேன்.

15. தாய்க்குச் சகோதரரில்லை. இனி அவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பெண்ணையாற்றின் கரையில் உள்ள பெரும் பனைப் பட்டி என்ற ஊரில் வன்னிய குலத்தில் பிறந்து செல்வமுள்ள குடும்பத்தை யடைந்து வாழ்ந்து வந்தாள். அக்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

## கணவனுடைய சகோதரி மீது பழி கூறல்

16. வரனுடைத் தங்கை மேலே வருணித்தாள் சிலேடை
[வார்த்தை
அரிவையு மனது வாடி அறைந்தசா பத்தைக் கேண்மோ
திருகான வார்த்தை யென்மேல் செப்பின பாவிக்
[கேதான்
மறுசென்மம் துணைவ ரின்றி மகவுகள் முதலில் நஷ்டம்;

16. தன் கணவனுடைய சகோதரியின் மீது ஜாதகனுடைய தாய் இரு பொருள் படும்படியான வார்த்தைகளைப் பேசினாள் அதனால் அப் பெண் மனம் வருந்தி கூறிய சாபத்தைக் கேளுங்கள். "என் மீது தகாத வார்த்தைகளைக் கூறிய பாவியே! இனி ஏற்படும் மறுபிறவியில் உனக்குச் சகோதரர் யாருமின்றி முதலில் தோன்றும் குழந்தைகளையும் இழந்து;

## இதுவுமது

17. நாத்திமா ரில்லா தாயும் நாயகன் மத்தில் மாண்டும்
சூத்திரம் வரன்து ணையாலே துன்பங்க ளடைவாய்
[நீயும்
ஆத்திர மாகச் சொல்ல அந்தரம் தாதஸ்து வென்ன
கூத்தன்போ லந்தச் சாபம் குலவிற்று பாவிக் கேதான்.

17. "நாத்திமார் (கணவனுடைய சகோதரிகள்) இல்லாமல், கணவனும் இடைக்காலத்தில் இறந்து, கணவனுடைய சகோதரனுல் பல துன்பங்களையும் யடையக்கடவாய்" என்று ஆத்திரத்துடன் சொன்னுள். சூக்ஷமமாக உள்ள தேவதைகள் அதற்குத் 'தாஸ்து' என்று ஆமோதித்தன. பெரிய எமன் போல அந்தத் தீவினையின் பலன் தொடர்ந்து.

18. அந்தியக் காலந் தன்னில் அவள்வரன் மாண்டு பின்பு
தன்மனச் சஞ்ச லத்தால் சண்டன்தன் பதிக்கு புக்குப்
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று
[சொல்வோம்
முன்சென்ம மாது சாபம் மேவிடு மிச்சென் மத்தில்.

18. தன்னுடைய கடைசிக் காலத்தில் தன் கணவனுக்கு முன்பாக மரண மடைந்து மனச் சஞ்சலமும் அடைந்து எமதர்ம ராஜன் புறத்துக்குச் சென்று (மரண மடைந்து) மீண்டும் பிரம்மாவினுல் படைக்கப்பட்டுப் பிறந்தவள் இவள் என்று சொல்லுகின்றோம். தாயின் முற்பிறவித் தீவினை இப்பிறவியில் தொடரும்,

19. மாதுவும் துணையைக் காணுள் மத்தியில் விதவை யாவ்ள்
தீதாகு முதலில் புத்திரர் திசைப்பூண்டு மிதித்தாப்
[போலே
காதலி மனமும் நேரும் கணவன்தன் துணைவ ராலே
மேதினில் அனேகச் சித்திரம் மேவிடு மென்று
[சொல்வோம்.

191 தாய் சகோதரனில்லாதவள். இடையில் தன் கணவனை இழந்து விடுவாள். முதலில் தோன்றும் குழந்தைகள் இறந்து விடுவர். விஷப் பூண்டை மிதித்தாற் போல் தாய் மனம் வருந்துவாள். தன் கணவனுடைய சகோதரனுல் பல துன்பங்கள் விளையும் என்று சொல்லுகின்றோம்.

## துன்பம் விளையும் காலம்

20. எந்தக்கா லத்தில் சித்திர மெய்திடும் விபரம் சொல்வாய்
சந்ததம் புகரின் காலம் சிகிபுசிப் பதனில் நேரும்
புந்தியில் புத்தி அந்தம் போகிடும் உத்தரை தானும்
பந்துவின் உதவி யாலே பாவையும் சுகமாய் வாழ்வள்.

20. எந்தக் காலத்தில் துன்பங்கள் நேரும்? சொல்லுங்கள். ஜாதகனுடைய சுக்கிர தசையில் கேது புக்தியில் துன்பம் வரும். புத புக்தி கடைசியில் அத்துன்பம் விலகும். அதுவும் தன்னுடைய பந்துக்களின் உதவியால் தீரும்.

## தாயின் மறுபிறவியும் தந்தையின் முற்பிறவியும்

21. பின்சென்மம் தோகை மேல்பால் பேரூரில் சினகு
[லத்தில்
அன்னவ ளுதித்து மேலும் அழகான குடும்பி யாவள்
மன்னவன் தத்தை பூர்வம் வரைகிறே மினிமே லாகக்
கன்னியா குமரி தன்னில் கலந்தனள் சத்திரிய சேயாய்.

21. ஜாதகனுடைய தாய் மறுபிறவியில் தோகைமலைக்கு மேற்குப் பக்கத்தில் உள்ள ஊரில் ஜைன குலத்தவளாகப் பிறந்து அழகுள்ள குடும்பத்தை அடைவாள். இனி ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். கன்னியா குமரியில் சத்திரிய வம்சத்தவனாகப் பிறந்தவன் என்றோம்.

## இதுவுமது

22. பலவித வணிபம் செய்து பஞ்சைமே லிறக்க மாகி
நலமுளோர் நேசம் கொண்டு வரசர்பால் செட்டுச்
[செய்து
குலவினன் கால னுடு குறைதலை வரையப் பட்டு
உலகினி லுதிப்பா னுகும் உத்தமி கேட்டி டாயே.

22. பலவிதமான வர்த்தகம் புரிந்து வந்து ஏழைகளின்மீது இரக்கம் கொண்டு வாழ்ந்து நல்லவர்களின் நட்புடன் அரசாங்க உத்தியோகம் ஏற்று (அரசாங்கத்தாருடன் தொடர்புள்ள பல வர்த்தகங்களைப் புரிந்து வந்து) உலகில் வாழ்ந்து வந்து இறந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் தோன்றுவான். உயர்ந்தவளே! கேளுங்கள்.

## தந்தையின் மறுபிறவி

23. பின்சென்ம மரங்கம் தன்னில் பிறப்பனும் பிரம்ம
[சேயாய்
அன்னவ னிச்சென் மத்தி லனேகர்க்குத் துன்பம் செய்து
பொன்பொரு ளாசை யாயும் பொய்மெய்யும் புகன்று
[தானும்
முன்குல மெவ்வாறு தோன்றும் முதல்வியே கேட்டி
[டாயே.

23. அடுத்த பிறவியில் ஸ்ரீரங்கத்தில் அந்தணகுலத்தவனாய்ப் பிறப்பான். ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில் பலருக்குத் துன்பமிழைத்தும், பொருள் பொன் இவைகளின் மீதே ஆசை அதிகமாகக்கொண்டும், பொய் பேசியும் வந்தபோதிலும் எங்ஙனம் முதற்குலமாகிய அந்தண குலத்தில் தோன்றுதல் ஏற்படும்? "பார்வதியே! கேளுங்கள்.

## குலம் உயர்வானது

24. சொல்லதைக் காத்த லாலும் சிலர்க்குவா பத்தைத்
[தீர்த்தும்
நல்லதோர் தலங்கள் சென்றும் நலிந்தோர்க்குத் தாக
[மீந்தும்
இல்லற தர்மம் செய்து மிவனுமே வாழ்ந்த தாலே
புல்குவான் மறைக்கு லத்தில் புண்ணிய வதியே கேளாய்.

24. சொன்ன சொற்களின்படி நடந்துவந்ததாலும், சிறுத்தவர் சில ருக்குற்ற துன்பங்தனே நீக்கிவைத்ததாலும், நல்ல புண்ணிய தலங்களுக்குச் சென்றதாலும், பசியென்று வந்தவர்கட்கு உணவு அளித்து வந்ததாலும், இல் லற தர்மத்தைச் சரியாகச் செய்து வாழ்ந்து வந்தாலும். அடுத்த பிறவியில் அந்தணனுக்ப் பிறப்பான், புண்ணியவதியே! கேளுங்கள்"

## தாய்தந்தையரின் இறுதிக்காலம்

25. கர்மகா லங்கள் தம்மைக் கழறுவீர் முனியே நீர்தாம்
திருமகன் பதினே ராண்டில் செல்லுவான் தந்தை
[தானும்
பிறைத் தசை அந்தம் தன்னில் புதல்வனுக் கிருபா
[னேழில்
அரிவையாம் அன்னை கண்டம் அம்பிகை யாளே
[கேளாய்.

25. "ஜாதகனுடைய கரும காலங்களைச் சொல்லுங்கள் முனிவரே! தாங்கள்" என்று பார்வதிதேவி கேட்க ரிஷிகள் மறுமொழி தருகின்றனர். ஜாதகனுடைய பதினேராம் வயதில் தந்தை இறந்துவிடுவார். (அப்போது சுக்கிரமகாதசையின் இறுதி நடைபெறும்) ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் சந்திரமகாதசையின் முடிவில் தாய் மரணமடைவாள். தாயே! கேளுங்கள்,

## ஜாதகனுடைய திருமணக்காலமும் மனைவியின் குணங்களும்

26. சாதகன் மணத்தின் காலம் செப்புவோ மிருப தாண்டில்
காதலி தென்கீழ் நேரும் கழறுவோ மவள்கு ணத்தைச்
சூதிலாள் பொறுமை சாலி சுந்திர முடைய ளாகும்
வேதனை யொருவர்க் கென்னுள் விகடங்கள் காணு
[ளாகும்,

26. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபதாம் வயதில் (சந்திரமகாதசையில் குரு புக்தியில்) திருமணம் நிகழும். மனைவி தென்கிழக்குத் திக்கிலிருந்து வாய்ப்பாள். இனி மனைவியின் குணங்களைக் கூறுகின்றோம். சூதுகளில்லாத மனத்தினள். பொறுமையுடையவள். அழகுள்ளவள். ஒருவருக்கும் தீங்கு செய்யாத மனத்தினள். அடாவடியாகப் பேசாதவள்.

## மனைவியின் குணங்கள் : தொடர்ச்சி

27. மாந்தளிர் மேனி யாவள் மர்மமில் லாதா ளாகும்
சாந்தமும் கோப மேற்பள் தன்வரன் மனத்துக்
[கேத்தோள்
ஏந்திய தனத்த ளாகுமீ டரான புத்தி யில்லாள்
கூர்ந்துமே வார்த்தை சொல்வள் கோதையும் தீர்க்கசீவி.

27. மாந்தளிர்போல், மென்மையான சரீரமுள்ளவள். விரைவில் கோபங்கொள்ளும் இயல்பும், விரைவிலேயே சாந்தமடையும் குணமும் உள்ளவள். தன் கணவன் மனத்துக்குத் தக்கபடி நடப்பவள். மிகுந்த செல்வம் உடையவள். தீங்குள்ள புத்தியில்லாதவள். எக்காரியத்தையும் தீர ஆராய்ந்து பேசும் இயல்பினள். நீண்ட ஆயுள் உள்ளவள்.

## இருதாரம் : கிரகநிலை

28. அத்திரி மறுத்துச்சொல்வார் அவனுக்குத் தார மிரண்டு
சித்தமாய் நேருமென்றோம் செப்புவீ ரந்தச் சங்கை
சத்தமத் தோன் சரத்தில் தனியனாய்ப் புகர்வி யத்தில்
குத்தமா யிருப்பதாலே கூறினோ மந்தச் சங்கை.

28. அத்திரி முனிவர் தடுத்துக் கூறுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் உண்டு. அவ்விதம் நாங்கள் திண்ணமாகக் கூறுவோம் என்றார். அதை விவரமாகக் கூறுங்கள் எனப் பார்வதிதேவி கேட்க, அத்திரி முனிவர் பதில் உரைக்கின்றார். களத்திரஸ்தானமாகிய ஏழாம் வீட்டுக்குரிய குரு சரஸ்தானமாகிய துலாத்தில் தனியனாக, சுக்கிரனுடைய வீட்டிலிருந்து அவ்வீட்டுக்குரிய சுக்கிரன் விரயஸ்தானம் (பன்னிரண்டாம் வீடு) ஆகிய சிம்மத்தில் இருப்பதால் நாங்கள் அவ்விதம் கூறுகிறோம்.

## மறுப்பு

29. இருமனை அணுகா தாகு மிரணிய னிரண்டில் தங்க
அரிவைவே ரபிமா னம்தான் அணுகிடும் பால னுக்குக்
குருதியின் தசைக்கா லத்தில் கோதையும் சேர்வா
[ளாகும்
திருமகள் வேளான் வமிசம் சேருவா ளென்று
[சொல்வோம்.

29. ஜாதகனுக்கு இரு மனைவியர் தோன்றக்காரணமில்லை. குரு இரண்டாமிடத்தில் தங்கியிருப்பதால் ஜாதகனுக்கு இரு திருமணங்கள் நடைபெறு. ஆனால் இரண்டாவதாக அபிமான மனைவி (வைப்பாட்டி) ஒருத்தி அங்காரக குரு மகாதசையில் வந்து சேருவாள். அவள் வேளாள வமிசத்தைச் சேர்ந்தவள் என்று கூறுகின்றோம்.

## புத்திரபாவம்

30. சுதர்களின் பலத்தைச் சொல்வேன் செல்விமார்
[மூவராகும்
மதன்போலே ஆண்பா லிரண்டு மருவிடும் பால னுக்கு
எதுவித மாதுக் கேதா னியம்பினீ ரந்தச் சங்கை
முதல்அனை தனக்குச் சொன்னோம் மேவாது மறு
[மனைக்குச்

30. ஜாதகனுடைய புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். மூன்று புத்திரிகளும், மன்மதன்போல் இரு ஆண் குழந்தைகளும் தோன்றுவர். எந்த மனைவிக்குப் புத்திரர் தோன்றுவர்? அதைச் சொல்லுங்கள் என்று வினவ, முதல் மனைவிக்குப் புத்திரர்கள் உண்டு என்று சொல்லுகின்றோம். இரண்டாம் (அபிமான) மனைவிக்குப் புத்திரபாக்கியமில்லை.

## ஜாதகனுடைய முற்பிறவி

31. மைந்தனின் முன்சென் மத்தை வரைகிறோம் தாயே
[கேளும்
கந்தன்வாழ் தோகை கீழ்பால் கனமுள பேரூர்
[தன்னில்
தந்தன முடையோ னுக்குச் செனித்தனன் ரெட்டி வம்ச
முந்தின குடும்பி யாகி முதல்வனும் வாழுநாளில்;

31. இனி ஜாதகனுடைய முற் பிறவியைச் சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள். முருகக் கடவுள் வாழ்ந்துவரும் தோகை மலைக்குக் கிழக்கில் உள்ள ஓர் பெரிய ஊரில் ரெட்டியார் மரபில் ஒரு செல்வந்தனுக்கு புத்திரனாகப் பிறந்தான். செழிப்புள்ள குடும்பத்துடன் வாழ்ந்துவரும்போது;

## முற்பிறவித் தீவினை

2. தன்னுடைத் துணைவன் பாகம் தராமலே மோசம்
[செய்தான்
அன்னவன் வருத்த முற்று அறைந்தசா பத்தைக்
[கேண்மோ

பொன்கடன் தந்த பாவி பிறக்கும்பின் சென்மம்
[தன்னில்
உன்துணை யாணில் லாமல் உன்ஞாதி பகையு மாயும்;

32. (ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்) தன்னுடன் பிறந்த சகோதரனுக்குரிய பாகத்தைத்தராமல் மோசம் செய்தான். அந்த சகோதரன் வருத்தமுற்று கூறிய சாபத்தைக் கேளுங்கள் "(எனக்குரிய பாகத்தைத் தராமல்) கடனைமட்டும் கொடுத்த பாவியே! உனக்கு ஏற்படும், மறு பிறவியில் உடன்பிறந்த சகோதரனில்லாமல், சுற்றத்தார் பகையும் ஏற்படும்;

## சகோதரனின் சாபம்

**33.** தந்தையின் சுகமு மின்றி தரணியில் வாழ்வா யென்ன
அந்தரம் தாதாஸ்துவென்ன அணுகிற்று அந்தச் சாபம்
பிந்திவேறு சொல்லக் கேண்மோ பேதையு மேழை மாது
இந்தவன் தன்பால் சென்று இல்லத்தில் வேலை
[செய்வேன்.

33. தந்தையினுடைய பராமரிப்பு இல்லாமல் வாழ்ந்துவருவாய் என்றான். அந்தரத்தில் வாழ்ந்துவந்த தேவர்களும் "ததாஸ்து" என்றனர். அந்தச் சாபம் இவனைத்தொடர்ந்தது இது தவிர வேறு ஒன்றும் சொல்லுகின்றோம். ஓர் ஏழைப்பெண் இவனிடம் வந்து உன்னுடைய வீட்டில் வேலை செய்கிறேன்,

**34.** உணவுகள் தருவா யென்ன உத்தம னதற்கி சைந்து
வனிதையை ஆத ரித்து மகவுபோல் காத்து வந்து
வினைகொண்ட மாது ஓர்நாள் வேண்டிய பணிகள்
[கொண்டு
தனியாக விரவில் சென்றாள் சங்கரி கேட்டி டாயே.

34. "எனக்கு உணவு அளிப்பாய்" என்று கேட்டாள். அதற்கு ஜாதன் மனமிசைந்து அப்பெண்ணை ஆதரித்துவந்தான். தன் சொந்தக் குழந்தையைப்போல் பாவித்துக் காத்துவந்தான். தீய எண்ணங்கொண்ட அப்பெண் ஒருநாள் தனக்கு வேண்டிய சில ஆபரணங்களுடன், இரவோடு இரவாகச் சென்றுவிட்டாள். பார்வதிதேவியே! கேளுங்கள்

**35.** மாரனு மறுநாள் பார்த்து மாதுவைக் காணு ளுகிக்
கூறுவான் கணேசன் முன்பாய்க் கோதையை
[ஆத ரித்தேன்
காரிழை களவு கொண்டாள் கணபதி நீயே காண்பாய்
தீரனும் சொல்லிச் சென்றான் சேயனு மந்தி யத்தில்;

35. ஜாதகன் மறுநாள் வந்து பார்த்து அப்பெண்ணைக் காணுமல் மனம் வருந்தி, விநாயகர் ஆலயத்துக்குச்சென்று, அவர் முன்பாக "அநாதைப் பெண்ணை ஆதரித்துவந்தேன். அப்பெண் என்னுடைய சொத்தை அபகரித்தாள். கணபதி தேவனே! நீயே பார்த்து உரியது செய்வாய்" என்று சொல்லிவிட்டுச் சென்றான். அவனும் தன் கடைசிக் காலத்தில்;

36. வறுமைக ளுடையா னுகி மறலியின் பதிக்குச் சென்று
பிரமனுல் வரையப் பட்டு பிறப்பனு மிந்தப் பாலன்
மருவிடு முன்னூழ் சாபம் வரும்துணை ஆண்பால் [தோஷம்
பெரும்தந்தை சுகமில் லாதான் பிதுர்துணை பகையு [மெய்தும்.

36. தரித்திர தசை யடைந்தவனுகி, மரணமடைந்து மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறந்தான். முற்பிறவித் தீவினைத் தொடர்பால் சகோதரருக்குத் தோஷம் ஏற்படும். தந்தையினுல் சுகம் ஏற்படாதவன். தந்தையின் சகோதரருடைய விரோதமும் உண்டாகும்,

37. ஆதியில் குடும்ப லைச்சல் அலரியின் தசைவ ரைக்கும்
ஞாதியும் பகையு மெய்தும் நாயகன் தனியாய் வாழ்வன்
மேதினில் மதியிக் காலம் வேந்தனுல் தொழிலும் [வாய்க்கும்
சீதளபிறை போல் யோகம் செப்புவோம் பால னுக்கு.

37. ஆதிகாலத்தில் குடும்பத்தில் தொந்தரவு ஏற்படும். சூரிய மகா தசை வரையில் சுற்றத்தார் விரோதம் ஏற்படும். அவன் தனியனுக வாழ்ந்துவருவான். பிறகு சந்திர மகாதசையில் அரசனுல் ஓர் உத்தியோகம் வாய்க்கும். குளிர்ந்த வளர்பிறைச் சந்திரனைப்போன்று யோகம் ஏற்படும் என்றேும்.

38. தந்தைபோல் தொழிலும் வாய்க்கும் தரணிகள் சேர்ப்பா [னுகும்
இந்திரன் போலே வாழ்வன் யாவர்க்கும் நல்லோ [னுவன்
வந்தவர் தம்மைக் காப்பன் வஞ்சக வஞ்ச னுவன்
நொந்தபேர்க் குதவி செய்வன் நிருபர்கள் வசியம் [கொள்வன்.

38. தன்னுடைய தந்தையைப்போல் தொழில் செய்வான். பூமிகளைப் பெருக்குவான். தேவேந்திரனைப்போன்று வாழ்ந்துவருவான் எல்லோருக்கும் நல்லவனுக வாழ்வான். தன்னை அண்டி வந்தவரைக்காப்பான். வஞ்சக மனமுள்ளவன். துன்பமடைந்தவர்கட்கு உதவி செய்வான். அரசாங்கத்தாருடைய நட்புக்கொள்ளுவான்.

39. இருபது ஆண்டு மேலா யரசரால் தொழிலும் வாய்க்கும்
திருகிலா வைம்ப தாண்டும் செலுத்துவா ளரசு
[யென்றோம்
அரிவைமுன் பொருள்க வர்ந்தோ ளணுகுவா
[ளபிமா னம்தான்
பெருமையாய் வாழ்வா ளுமே பேதையே கேட்டி டாயே.

39. ஜாதகனுடைய இருபதாம் வயதுக்குமேல் அரசாங்கத்தொழில் ஏற்படும். தீமைகள் யாதும் இன்றி ஐம்பதாம் வயதுவரை உத்தியோகம் செய்வான். முற்பிறவியில் பொருளைக் கவர்ந்தவள் (தன் கடனைத் தீர்க்க) அபிமான மனைவியாக வந்து சேருவாள். பெருமையுடன வாழ்ந்து வருவாள் தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய மரணகாலம்

40. அன்பது ஒன்ப தாண்டில் ஆவணி மாதம் தன்னில்
இன்னவன் உடல மேகு மியம்புவோ மிவன்பின் சென்மம்
தென்திசைக் காரைக் காலில் செனிப்பனும் சத்திரிய
[சேயாய்க்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

40. ஐம்பத்தொன்பதாம் வயதில் ஆவணி மாதத்தில் ஜாதகன் இறப்பான். இனி இவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். தெற்கில் உள்ள காரைக்காலில் க்ஷத்திரிய குலத்தவனாகப் பிறப்பான். கரும்பைப் போன்ற இனிய வார்த்தைகளைப் பேசும் தாயே! கேளுங்கள்.

## ஜனனகால தசை

41. புறந்திடு காலம் தன்னில் பூரத்தின் முதல்பா தத்தில்
சிறந்தசுக் கிரனி ருப்புத் தசத்தின்மேல் ஆண்டு வாறு
மருவிடும் நவமாம் திங்கள் வரைந்தனம் பூர்வபாகம்
பரிதியின் தசையி லில்லம் பண்ணுவான் பாலன் தானும்.

41. ஜாதகன் பிறக்கும்போது பூசத்தின் முதல் பாதமாதலால் சுக்கிர மகாதசை யிருப்பு பதினறு ஆண்டுகளும் ஒன்பது மாதங்களும் மீதமாகும். இதுவரை முதல் பாகம் சொன்னோம். சூரிய மகாதசையில் வீடுகட்டுவான் என்று கூறுகின்றோம். —V. R. N.

# ஜாதகம் 63

## ஜனனகால கிரகநிலை

1. [1]கலைகுரு [2]சாடி யாக [3]காரி[4]மான் கேது [5]கெண்டை
[6]நிலமகன் ராகு கன்னி கன்னி நீர்[7]புகர் வீணை[8] புக்க
[9]புலவனு [10]பானு [11]நந்தி [12]பெண்ணது சென்ன மாக
பலன் தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்க லுற்றாள்.

1. சந்திரன், குரு கும்பத்திலும், சனி மகரத்திலும், கேது மீனத்திலும் அங்காரகன், ராகு கன்னியிலும். சுக்கிரன் மிதுனத்திலும், புதன், சூரியன் விருஷபத்திலுமாக நவக்கிரகங்கள் நின்று பிறந்த இலக்கினம் கன்னியாக இருப்பின் பலனைக் கூறுங்கள் என்று பார்வதி கேட்கலானாள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| கேது | | புதன் சூரியன் | சுக்கிரன் |
| சந்திரன் குரு | இராசி சக்கரம் | | |
| சனி | | | |
| | | | அங்காரகன் லக்கினம் ராகு |

*குறிப்பு:—ஜாதகன் வைகாசி மாதத்தில், கிருஷ்ண பட்சத்தில் சதய நட்சத்திரம் மூன்றும் பாத இறுதியில் பிறந்தவன் என்று சொல்லுகின்றேன்.

## ஜாதகன் பிறந்த வீட்டின் நிலை

2. தென்முனி புகலு கின்றார் செனித்திடு மாண்பால்
[சென்மம்
வந்தயில் கீழ்மேல் வீதி வாசலும் எமனின் பார்வை

1. சந்திரன்
2. கும்பம்
3. சனி
4. மகரம்
5. மீனம்
6. அங்காரகன்
7. சுக்கிரன்
8. மிதுனம்
9. புதன்
10. சூரியன்
11. ரிஷபம்
12. கன்னி

இந்திர நகர மொப்பாம் எதிரினில் பள்ளி வாசல்
விந்தையாய் மடமும் கீழ்பால் விளம்புவோந் தாயே
[கேளும்.

2. அகத்திய முனிவர் பதில் கூறுகின்றார். இந்த ஜாதகம் ஓர் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கிய வாயிலை யுடையது. அவன் பிறந்தது, தேவ லோகத்திலுள்ள இந்திரன் வசிக்கும் ஸ்வர்க்கத்துக்கு ஒப்பான நகரத்திலாகும். அவன் வீட்டுக்கு எதிரில் ஓரு பள்ளி வாசலும் கிழக்கில் அழகிய மடமொன்றும் இருக்கும் தாயே! கேளுங்கள்.

3. இன்னமும் பலதே வாசம் இவ்வித அடையா ளத்துள்
அன்னவன் சேஷ்ட னாக அருளுவான் கோவைச்ய
[வர்க்கம்
தத்தைதாய் துணைவர் யோகம் தன்மனை புத்திர யோகம்
முன்பின்சென் மங்கள் யாவு முரைக்கிறோ மிந்நூல்
[தன்னில்,

3. இன்னும் பல தெய்வங்கள் வாசம் செய்து வரும் மேற்சொன்ன அடையாளங்களுள்ள ஊரில் ஜாதகன் கோவைசியனாகத் தன் தந்தைக்கு மூத்த புத்திரனாகப் பிறந்தவன். இனி, ஜாதகனுடைய தந்தை, தாய், உடன் பிறந்தவர், மனைவி, மக்கள் இவர்களின் யோகத்தையும் இவனுடைய முற் பிறவி, மறுபிறவியையும் சேர்த்து இந்தச் சோதிட நூலில் சொல்லுகின்றோம்.

## தந்தையின் சகோதரபாவம்

### வேறு

4. தந்தைதுணை யீராறில் ஆண்பா லொன்று
சாற்றுகிறோம் பெண்ணிரண்டு தீர்க்க மாகும்
முன்துணையாய் ஆணதுவு மொழிய லாகும்
விளம்புகிறோ மவன்கு ணத்தைச் சிலேடை
[வார்த்தை
வந்தவர்க்கு அன்னமீவன் மர்ம மில்லான்
மானிலங்கள் விருத்திசெய்வன் மானி றத்தன்
முந்துமால் பத்தியுளன் வணிப மோங்கும்
மொழிதவறான் வாயுகொஞ்சம் உலகில் நல்லோன்.

4. ஜாதகனுடைய தந்தையுடன் பிறந்தவரில் சகோதரன் ஒருவனும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றும் கூறுகின்றோம். உடன் பிறந்தவன் ஜாதகனுடைய தந்தைக்கு முன் பிறந்தவன் என்றும், அவனுடைய குண விசேஷங்களையும் சொல்லுகின்றோம். இருவிதமாகப்

பொருள்படும்படி பேசுபவன். பசித்து வந்தவர்கட்கு அன்புடன் அன்ன மளிப்பவன். ரகசியமில்லாதவன். விளை நிலங்களைப் பெருக்கம் செய்வான். மாநிறம் உள்ளவன். முதன்மையான திருமாலின் மீது பக்தியுள்ளவன். வர்த்தகம் பெருகும். சொன்ன வார்த்தைகள் தவறாதவன். சிறிது வாயு ரோக முள்ளவன். உலகத்தில் நல்லவன் என்று பெயரடைவான்.

## தந்தையின் சகோதரரின் விவரம்

5. *நல்லவர்க்கு நல்லவனும் அதிக யூகை*
*நற்சீலன் சுகபுசிப்பன் தலங்கள்செல்வன்*
*வல்லியுமே ஒன்றென்ரேம் சுதரா ணிரண்டு*
*மங்கையுமுமே மூன்றென்ரேம் ஐந்தும் தீர்க்கம்*
*அல்லலிலான் உடன்கூடி வாழ்வா ஞகும்*
*அப்புக்கொளான் தீர்க்கவயது அறைகின் ரேம்நாம்*
*சொல்சுகமாம் தந்தப்பிணி துறவு நேயன்*
*தேவதொண்டு செய்திடுவன் தீர நெஞ்சன்.*

5. நல்லவர்கட்கு நல்வனுகவும் தீயவர்களுக்குத் தீயவனுக நடப்பவன். ஊக முள்ளவன். நல்லொழுக்க முடையவன். சௌக்கியமாகச் சாப்பிடுவதில் விருப்பமுள்ளவன். நல்ல புண்ணியதலங்கள் பலவற்றிற்கும் சென்று வருவான். மனைவி ஒருத்தியே. இரு புத்திரர்களும். மூன்று புத்திரிகளும் தோன்றுவர். அவ்வைவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்களென்ரேம். துன்பங்களில்லாதவன் (ஜாதகனுடைய தந்தையுடன்) சேர்ந்து வாழ்ந்து வருவான். கடன் வாங்காதவன். நீண்ட வயதுள்ளவன் என்று நாங்கள் சொல்லுகின்ரேம். இன்பமாகப் பேசுபவன். பற்களில் வலியும் நோயும் உள்ளவன். துறவி கட்குப் பிரியமானவன். தெய்வத் தொண்டுகள் பல செய்வான். தைரியமுள்ள மனத்தினன்.

## ஜாதகனுடைய தந்தையின் குணங்கள்

6. *சாதகன்தன் தத்தைகுணம் சாற்றக் கேண்மோ*
*தன்கரம்கால் ஊனமுறும் சரச வார்த்தை*
*சோதியொன்று குறைவாகும் தூய்ம னத்தோன்*
*சோம்பிடான் காரியத்தில் தோகை யிஷ்டன்*
*பேதைமன மிருசிவப்பன் புறம்சொல் லாதான்*
*புகழான குடும்பமுள்ளான் வணிபம் செய்வன்*
*சூதுமன மீசைகொஞ்சம் சுகமாய் வார்த்தை*
*துணைவன்பால் வாழ்வானும் துயரம் காணுன்.*

6. ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லக் கேட்பீராக. கைகால்கள் ஊனமுள்ளனவாக விருக்கும். சரச சல்லாபமாகப் பேசுபவன். நேத்திரம் ஒன்று குறையுள்ளதாக விருக்கும். நல்ல மனமுடையவன். காரியங்களைச் செய்வதில் சோம்பல் இல்லாதவன். மனைவிக்குப்

பிரியமானவன். இளகிய மனமுடையவன். (திடமில்லா மனத்தினன்) கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவன். கோட் சொல்லாதவன், கீர்த்தி யுள்ள குடும்பத்தை யுடையவன். வர்த்தகத் தொழில் புரிந்து வருவான். கபட நெஞ்சம் படைத்தவன். கொடுக்கும் குணமும் சிறிது உள்ளவன். இனிமையாகப் பேசுபவன். சகோதரனுடன் சேர்ந்து வாழ்ந்து வருவான். வருத்தம் அடையாதவன்.

## தந்தைக்கு ஊனமேற்படுதற்குரிய கிரகநிலையும் முற்பிறவியும்

7. சோதிகரம் கால்குற்றம் சொன்னீ ரையா
செப்புவீ ரச்சங்கை துறவி யேநீ
ஆதவனும் புதனென்பான் மதிப்பொன் ஆறில்
அணுகியதோர் பலமதனல் அறைந்தேன் பாரு
தீதாகப் பூர்வவினை செறிந்த தென்றோம்
செப்புவீ ரச்சங்கை தென்தே சத்தில்
கோதிலாத் திருவானைக் காவல் நாட்டில்
குதித்தவனும் வன்னியகுலம் குமரன் தானும்.

7. கண், கை, கால் இவைகளில் ஊனம் உண்டு என்று சொன்னீர்களே அதற்குக் காரணம் என்னவென்று சொல்லுங்கள் என பார்வதிதேவி வினவ, (ரிஷிகள் பதில் உரைக்கின்றனர்) சூரியனும், புதனும் (லக்னாதிபதியாகிய புதனும் பிதுர்காரகனாகிய சூரியனும்) சேர்ந்து ஒன்பதாமிடத்தில் (பிதுர்ஸ்தானத்தில்) இருப்பதாலும், சந்திரன், குரு ஆறுமிடத்தில் இருப்பது ஆகிய கிரக நிலையினால் இவ்விதம் நேர்ந்தது என்றோம். அதுவும் தவிர, முற்பிறவித் தீவினையும் சேர்ந்தது என்று கூறுகின்றோம். (பார்வதி மீண்டும் வினவுகின்றாள்) அந்தத் தோஷத்தின் விவரங்களைக் கூறுங்கள். தென் தேசத்தில் திங்குகளற்ற திருவானைக்காவில் வன்னிய குலத்தில் ஜாதகனுடைய தந்தை தோன்றினான்.

## தீவினைகள் தொடர்ச்சி

8. பாரிசுதர் தானுண்டாய்க் கிருஷி செய்து
பாலகனும் வாழுநாளில் வினையைக் கேண்மோ
மாரியின்தன் னாலயத்தில் சென்று வின்னேன்
மலர்மிதித்தரன் விழிமலரை மறைப்பாய்க்
[கொண்டான்
வேறொன்றும் தான்புகல்வேன் கொல்லை தன்னில்
மேய்ந்ததுவே ஆவுமதை விரட்டி டாமல்
தீரமாய்ச் சிலையதனல் ஓங்கி விட்டான்
தீவினையால் காலில் பட்டு சேதமாச்சு,

8. ஜாதகனுடைய தந்தை, மனைவி, மக்கள் இவர்களை யடைந்து விவசாயம் செய்து வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங் கள். மாரியம்மன் கோவிலுக்குச் சென்று, அங்குள்ள புஷ்பங்களை அலட்சிய மாக மிதித்தான். அம்மனுக்குச் சாத்தப்பட்டிருந்த கண் மலரைத் திருடிக் கொண்டான். வேறு ஒரு தீவினையும் சொல்லுகின்றோம். இவனுடைய வீட்டிற்குப் பின் புறத்தில் ஒரு பசு மேய்ந்து கொண்டிருந்தது. அதை (ஜாதகனுடைய தந்தை) அதட்டி ஓட்டி விடாமல், தைரியமாக (கோபத் துடன்) ஒரு கல்லால் அடித்தான். அந்தக் கல் பசுவின் காலில் பட்டு அதன் கால் நொண்டியாகியது.

9. மாரனந்தம் மறையவர்கள் தொண்டு பூண்டு
மறலிபதி நாடடைந்து மலரோன் லக்கம்
கூறுவோ மிக்குலத்தில் வந்தா னம்மா
குலவிடுமே மாரிவழி கரங்கால் நேத்திரம்
சோருமே யென்றுரைப்போம் சாந்தி சொல்லும்
சிரமற்றோர் பதிக்குநிகர் சொல்வோம் யாங்கள்
தீராது யென்றுரைப்போம் மரண மட்டும்
செப்புமிந்தக் குணத்தானுக் கிந்தபாலன்;

9. ஜாதகனுடைய தந்தை தன் இறுதிக் காலத்தில் அந்தணர் கட்குத் தொண்டுகள் பல புரிந்து வாழ்ந்து மரண மடைந்து மீண்டும் தாமரைமலரின் மீது வீற்றிருக்கும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் இக்குலத் தில் பிறந்தான் தாயே! மாரியம்மனுடைய கண் மலர் திருடியதால் அதனு டைய சாபத்தால், கண், கை, கால் முதலியவற்றிக்கு ஊனம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். அந்தத் தீவினைகள் நீங்கச் சாந்தி யொன்று உரைப்பீர்களாக என்று தேவி வினவ, ரிஷிகள் மாரியம்மனுக்குச் செய்த தோஷத்துக்குப் பரிகாரம் சொல்லவே முடியாது, அது தீராது என்று சொல்லுகின்றோம். அவனுடைய இறுதிக் காலம் வரையில் துன்பமடை வான். இவ்விதமாகச் சொல்லப்பட்ட குணங்களை யுடையவனுக்கு, ஜாதகன்;

## ஜாதகருடைய குணாதிசயங்கள்

10. உதிப்பனு மிவன் குணத்தை யுரைக்கக் கேண்மோ
உடல்மெலிவு மாஞ்சிவப்பன் உறுதி வானும்
துதிசெய்தோர் தமக்குதவி யிரண்டு கல்வி
செப்புவான் தீரமனம் செட்டுச் செய்வன்
ததிநெய்பா லிஷ்டமுறு முன்கோ பத்தன்
தரணிவிருத்தி தான்செய்வன் தனவா னுவன்
பதிசெய்வன் பலர்நேயன் பரிந்த சொல்லன்
பால்பாக்கியம் சகடுவண்டி படைப்பன் தானே.

10. பிறப்பான், இவனுடைய குணத்தைக் கூறுகின்றோம். கேளுங்கள் மெல்லிய உடலும், சிவந்த நிறமும் உள்ளவன். திடமான மனத்தன் தன்னைப் புகழ்ந்தவருக்கு உபகாரம் செய்வான். இருவிதமான கல்வி கற்றுணர்வான். தைரியமுள்ள மனமுடையவன். வர்த்தகத் தொழில் புரிந்து வருவான். தயிர், நெய், பால் இவைகளைப் புசிப்பதில் விருப்பமுள்ளவன். முன் கோப முடையவன். விளை நிலங்களைப் பெருக்குவான் செல்வந்தனாக விருப்பவன். புதிய வீடு கட்டுவான். பலபேருக்குப் பிரியமானவன். ஆதரவாகப் பேசும் இயல்பினன், பால் பாக்கியமுள்ளவன். வண்டி வைத்திருப்பவன் என்றோம்.

11. தன்கரத்தில் பத்மவரி தங்கு மென்றோம்
தான்தொடுத்த காரியத்தை முடிப்பா னாகும்
அன்னியர்கள் மதிக்கஉய்வன் சீல னவன்
அடாவடியில் தான்செல்லான் அறிவுள் ளோனும்
பன்னியுரை பலதலங்கள் செல்வா னாகும்
பாலன் துணை யாண்தோஷம் கன்னி யிரண்டு
இன்னவாறு விருத்தியென்றோம் துணைஆண் தோஷம்
எய்தும்கா ரணம்புகல்வீர் மூன்றோன் சேயாய்.

11. ஜாதகனுடைய கையில் பத்ம ரேகையுள்ளவன் என்றோம், தான் எடுத்த காரியத்தை முடித்து வைப்பான். மற்றவர்கள் மதிக்கும்படியான வாழ்க்கை நடத்துவான். நல்லொழுக்க முள்ளவன். வீண் சண்டைகள் செய்யாதவன். அறிவாளியாவன். பன்னிப்பன்னிப் பேசும் இயல்பினன். பல புண்ணிய தலங்களுக்குச் செல்லுவான். ஜாதகனுக்குச் சகோதரன் இல்லை. சகோதரிகள் இருவரும் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்களாக இருப்பர். ஜாதகனுடைய சகோதரனுக்கு என்ன காரணத்தால் தோஷம் உண்டு என்று சொல்லுங்கள்.

## மூன்றும் வீட்டுக்குரிய செவ்வாய், சகோதர தோஷம்—தாயின் விவரம்

### வேறு

12. அரவுமே கூடி சென்மம் ஆகிடில் துணையாண் தோஷம்
பிறவாதோ சொல்லு மென்ன பிறந்திடும் நசிக்கு
[மென்ன
திருமகன் அன்னை சேதி செப்புவோம் சிவந்த மேனி
மர்மமும் முன்கோ பத்தாள் வளவுமே தென்பா
[லென்றோம்.

12, ராகு ஜன்ம லக்கினத்தில் இருந்தால் சகோதரனுக்குத் தோஷம் ஏற்படும். பார்வதி வினவுகிறார் "குழந்தைகளே தோன்றுவோ, சொல்லுங்கள்" முனிவர்கள் பதில் உரைக்கின்றன "குழந்தைகள் தோன்றும், ஆனால்

அவை நிலையாமல் இறந்துபோம். இனி ஜாதகனுடைய தாயின் விவரங்களைக் கூறுகின்றோம். சிவந்த உருவமுள்ளவள். முன் கோபி. அவளுடைய வீடு தென் பக்கத்தில் உள்ளது.

## தாயின் முற்பிறவி

13. அன்னையு மிரண்டு மாகும் அணுகிய பின்தாய்க் [கின்னேள்
தன்துணை பெண்பால் தோஷம் சாற்றுவோ மாண்பால் [மூன்று
இன்னவாறு விருத்தி யென்றேம் இவள்பூர்வம் புகலக் [கேண்மோ
தென்திசைக் கடில மோரம் செனித்தனள் பிரம்ம [சேயாய்.

13. ஜாதகனுடைய தாய்க்கு இருதாய்மார்கள் உண்டு என்றேம். அவர்களில் இரண்டாம் தாய்க்கு (தநதையின் இரண்டாம் மனைவிக்கு)ப் பிறந்தவள் ஜாதகனுடைய தாய் என்று சொல்லுகின்றேம். அவளுக்குச் சகோதரிகள் இல்லை. சகோதரர் மூவர் என்றேம். அவர்கள் மூவரும் நீண்ட ஆயுளுள்ளவர்கள், இனி தாயின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றேம். தெற்கிலுள்ள கடிலத்துக்கருகில் அந்தண குலத்தில் பிறந்தாள்.

14. மாதுக்கு வரனுமுண்டாய் மைந்தர்கள் அதிக மாகி
மேதினில் வாழுநாளில் விரத காலங்கள் தன்னில்
காதலி முட்டுச் செய்தாள் கலந்தது அந்தத் தோஷம்
தீதுகள் வேறு காணுள் செல்வியு மரண மாகி;

14. ஜாதகனுடைய தாய்க்குக் கணவன், புத்திரர்கள் மிகுதியாக ஏற்பட்டு உலகில் வாழ்ந்து வரும் நாளில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேம். விரத காலங்களில் அவள் அனுஷ்டியாமல் வாளாக விருந்தாள். அந்தத் தோஷம் இவளைப் பற்றியது. வேறு தீவினைகள் இல்லாதவள் ஜாதகனுடைய தாய் மரண மடைந்து;

15. சிரநாகோன் வரையப் பட்டு செனித்தவ ளிவளே [யென்றேம்
தரையதில் வறுமை காணுள் சதுர்மறை [குலமுதித்தோள்
திருகாக குலம்தாழ் வாகச் செனித்த காரணங்க ளென்ன
அரிவைமுன் சென்மம் தன்னில் ஆளன்சொல் தடுத்த [தொன்று;

15. பிரமதேவனுல் படைக்கப்பட்டு மீண்டும் இப்பிறவியில் பிறந்தவள் என்றேம். உலகில் தரித்திர மடையாதவள், நான்கு வேதங்களை யுணர்ந்த அந்தண குலத்தில் பிறந்தவள். தாழ்ந்த குலத்தில் பிறக்கும் காரணங்கள் என்ன வென்று கேட்க, ஜாதகனுடைய தாய் முற்பிறவியில் தன் புருஷன் சொல்லைக் கேட்காமல் தடுத்துப் பேசி வந்ததாலும்;

## தாயின் மறுபிறவி

16. விரதங்கள் முட்டுச் செய்தாள் மேவிற்று குலம்தாழ் வாக
வரும்சென்மம் வள்ளூர் தன்னில் வருவளாம் பிரம்ம
[சேயாய்
திருமகள் விலாசம் பெற்று செல்வதி வாழ்வா ளாகும்
அருமறை முடிவிடு லாடு மம்பிகை யாளே கேளாய்.

16. விரதங்களை அநுஷ்டிக்காமல் வாளா விருந்தாள். அதனுல் குலம் தாழ்வாக ஆகியது. தாயின் அடுத்த பிறவியில் திருவள்ளூரில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள் என்றேம். லெட்சுமி விலாசம் பெற்றுச் செல்வவதியாக வாழ்ந்து வருவாள் என்றேம். அரிய வேதங்களின் முடிவில் ஆடும் அம்பிகையே! கேளுங்கள்.

## ஜாதகனின் திருமணக் காலம்

17. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் முவைந்
[தாண்டில்
சீலியும் தென்பால் தன்னில் சேருவான் மாதுர் வர்க்கம்
சாலவே அவள் குணத்தைச் சாற்றுவோம் சிவந்த மேனி
ஞாலமேல் நல்லோ ளாவள் நளினமாய் வார்த்தை
[கூறுவள்.

17. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுறேம். அவனுடைய பதினைந்தாம் வயதில் அவனுக்குத் திருமணம் நிகழும். மனைவி ஜாதகனுடைய தாயின் வர்க்கத்தில், தெற்குப் பக்கத்திலிருந்து வாய்ப்பாள். இனி அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றேம். அவள் சிவந்த உடலுடையவள். உலகில் நல்லவளாக இருப்பாள். நளினமாகப் பேசுபவள்.

18. அன்னம்போல் சாய லொக்கும் அன்புள மனத்த ளாகும்
தன்வரன் மனத்துக் கேத்தோள் சலித்தோர்க்கு அன்ன
[மீவள்
உன்னத விரத மேற்பள் உகமையாய் வார்த்தை
[கூறுவள்
முன்னோர்கள் பக்தி பூண்பள் முதல்விக்கு வயது தீர்க்கம்.

18. அன்னத்தைப் போன்றவள். அன்புடைய மனத்தினள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றபடி நடப்பவள். துன்புற்று (பசித்து) வந்தவர் கட்கு அன்னமளிப்பவள். உயர்ந்த விரதங்கள் ஏற்று நடப்பவள். பிறர் மனம் சந்தோஷப்படும் படியாக நடப்பவள். பெரியோர்களிடம் பக்தியுள்ள வள். நீண்ட ஆயுளுள்ளவள்.

## இரண்டாம் மனைவி ஏற்படக் கிரகநிலை

19. செயமுனி யிதனைக் கேட்டு செப்புவார் சங்கை யொன்று
வியமாகும் முதல் மனைதான் மேவிடு மிரண்டாம் பாரி
பயமில்லாச் சொன்ன சங்கைப் பகருவீர் முனியே நீதான்
நயமிலா கேது யேழில் நல்கின பலத்தி னாலே.

19. ஜயமுனிவர் இதைக் கேட்டு, சந்தேகத்தால் ஒரு கேள்வி கேட்டார். ஜாதகனுக்கு முதல் மனைவி இறந்து விடுவாள். அவனுக்கு இரண்டாம் மனைவி வாய்ப்பாள். பயமில்லாமல் இவ்விதம் சொன்னதற்குத் தகுந்த காரணங்களை கூறுங்கள் என, ஜய முனிவர் "நன்மை செய்யாத கேதுஏழாம் இடத்தில் இருப்பதால் அங்ஙனம் சொன்னோம் என்றார்.

## அகத்திய முனிவரின் மறுப்பும் அதற்குக் காரணங்களும்

20. செப்பினே மந்தச் சங்கை தென்முனி புகலு கின்றார்
ஒப்பாது அந்த வார்த்தை உதயன்தன் மகனு மேழை
மைப்புடன் பார்த்த தொன்று வெள்ளியும் தசமு முண்டு
மைப்படி மாது வொன்று வரைகிறோம் தீர்க்க மாக.

20. இதற்கு அகத்தியமுனிவர் சொல்லுகின்றார். நீங்கள் கூறியது எவ்வாறு. சூரியனுடைய மகனாகிய சனி 3-ஆம் பார்வையாக ஏழாம் இடத்தை (களத்திரஸ்தானத்தை)ப் பார்த்ததாலும், களத்திர காரகனாகிய சுக்கிரன் பத்தாம் இடத்தில் (தசம கேந்திரம்) இருப்பதாலும் அவனுக்கு மனைவி ஒருத்தியே என்றும் அவளும் நீண்ட ஆயுளுள்ளவள் என்றும் கூறு வோம்.

## புத்திர பாவம்

21. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மெழுவர் தோன்றும்
சுத்தமா யாண்பால் மூன்று செல்விமா ருவரெ ன்றோம்
குத்தமாய் ஐந்தும் தீர்க்கம் சிதைந்திடு மிரண்டு தானும்
அத்திரி தடுத்துச் சொல்வார் அனுகாது முதலில்
[புத்திரர்.

21. இனி புத்திர விருத்தியைப்பற்றிச் சொல்லுகின்றோம். அவனுக்கு ஏழு குழந்தைகள் தோன்றுவர். திண்ணமாக மூன்று ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் தீர்க்க ஆயுளுள்ளவர்கள். மற்ற இரண்டும் பிறந்தவுடன் இறந்துவிடும் என்றார். அத்திரி முனிவர் மறுத்துக்கூறுகிறார்-முதலில் தோன்றும் புத்திரர் நிலேயார்.

## ஜாதகனுடைய பிற்பிறவி

22. காரணம் யாது வென்ன காரியு மஞ்சில் தங்க
கூறினேம் முதலில் பீடை குமரன்தன் பூர்வம் கேளாய்
வாரியி னேரம் தன்னில் மாபலி நகரி லேதான்
போர்புரி சத்திரியச் சேயாய் பிறந்துமே வணிபம்
[செய்து

22. அதற்குக்காரணம் என்னவென்று பார்வதிதேவி கேட்க அத்திரி முனிவர் காரணம் சொல்லுகின்றார். சனி ஐந்தாமிடத்தில், புத்திரஸ்தானத்தில், இருப்பதால் முதலில் தோன்றும் குழந்தைக்குப் பீடை அதிகம். இனி ஜாதகனுடைய முற்பிறவியைக் கூறுகின்றோம். சமுத்திரத்துக்கு அருகில் உள்ள மகாபலிபுரத்தில் போர்புரியும் க்ஷத்திரிய குலத்தவனாகப் பிறந்து, வர்த்தகத்தொழில் புரிந்து,

23. பாரியு மதலே யுண்டாய் பண்போர்க்கு அன்ன மீந்து
வேறொரு பவமில் லாமல் வித்தகன் வாழ்ந்து மேதான்
தீரமாய்க் காலனுடு சேர்ந்துமே பிரமன் லக்கம்
மாரனு முதிப்பா னுகும் வரைகிறோம் மிவனின் யோகம்.

23. மனேவியையும் குழந்தை குட்டிகளேயும் பெற்று பண்புபெற்ற, பெரியோர்களுக்குப் பணிவுடன் அன்னமளித்துப் பிறகு வேறு தீவினைகள் ஏதும் இல்லாமல் மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் பிரமலிபியுடன் எழுதப்பட்டு இப்பிறவியில் தோன்றினன். இனி இவனுடைய யோக வரலாற்றைக் கூறுகின்றோம்,

## ஜாதகனுடைய யோகவிவாம்

24. பிறந்தநாள் முதலே யாகப் பிறைபோலே செல்வ
[மோங்கும்
பொருளது பெருக்கம் செய்வன் பிரபலப் புகழு மேற்பன்
தரையது சேர்ப்பா னுகும் சல்லியம் கொள்ளா னுகும்
மரணமட் டுலகி லேதான் வறுமைகள் காணு னென்றோம்

24. ஜாதகன் பிறந்தது முதல் வளர்பிறைச் சந்திரன்போல் போகம் விருத்தியாகும். செல்வம் பெருகும். பொருளே விருத்திசெய்வான். பிர

பலமான கீர்த்தி அடைவான். விளைநிலங்கள் பூமி இவைகளைச் சேர்ப்பான். கடன்வாங்காதவன். தன்னுடைய மரணகாலம் வரையில் உலகில் தரித்திரம் அடையாதவன் என்று கூறினோம்.

## இதுவுமது

25. பலவித வணிப மோங்கும் பரஉப காரம் செய்வன்
நிலையதைக் காப்பா னாகும் நேமியில் நல்லோ னவன்
கலகத்தைக் கூறா னாகும் காரியச் சமர்த்த னவன்
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழி குன்றாவே.

25. பலவிதமான வர்த்தகம் பெருகும். பிறருக்கு உபகாரம் செய்து வருவான். தனனுடைய அந்தஸ்தை (நிலையை)க் காத்துக்கொள்வார். உலகில் நல்லவன் என்ற பெயருடன் உலவுவான். பிறர் மீது அவசியமில் லாத குற்றத்தைச் சொல்லாதவன். சாமர்த்தியமாக எக்காரியத்தையும் முடிப்பவன். மலையரசனின் மகளே! பார்வதிதேவியே! நாங்கள் கூறியவை தவறா.

## பாகம் பிரிந்துவிடும் காலம்

26 இருநான்கு ஆண்டு தன்னில் இல்லமும் கலக மாகும்
உரைக்கிறோம் தொழில்வே றாகும் உணவுகள் ஒன்றாய்ச் [சொன்னோம்
மர்மமாய்ப் பதினோ ராண்டில் வரைகிறோம் பாகம் [வேறாம்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

26. ஜாதகனுடைய எட்டாம் வயதில் குடும்பத்தில் கலகம் (மனத் தாங்கல்) ஏற்படும். அதற்குப் பிறகு தொழில் வேறு செய்ய இடமுண்டு. ஆனால் சாப்பாடுகள் (சகோதரனுடன்) ஒன்றாகவே நடக்கும். ஜாதக னுடைய பதினோராம் வயதில் (ரகசியமாக) குடும்பம் பிரிந்துவிடும் ஜாதக னுடைய பாகம் தனியாகிவிடும். கரிய மதயானையைப் பெற்ற தேவியே! அழ குள்ளவளே! கேளுங்கள்

## தந்தையின் மரணகாலம்

27 முப்பது நாலு ஆண்டில் மேவிடும் தந்தை கண்டம்
செப்புவோ மந்தக் காலம் சனிதசை ராகு புத்தி
ஒப்புடன் நடக்கு மென்றோம் உரைத்தது தப்பா தாகும்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழி குன்றாவே.

27. ஜாதகனுடைய முப்பத்திநான்காம் வயதில் தந்தைக்கு மரணம் சம்பவிக்கும். அக்காலத்தில் சனி மகாதசையில் ராகு புக்தி நடைபெறும்

என்று சொல்லுகின்றேம். நாங்கள் கூறியது தவருகாது. கங்கையைச் சடைமுடியில் தரித்துள்ள சிவபெருமான் தேவியே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவரு.

## தாயின் மரணகாலம்

28. ஆருறுமூன்று ஆண்டில் அன்னைக்கு கண்ட மெய்தும்
தீரமாய் சனியின் காலம் செம்பொன்னின் புத்தி யாகும்
மாறிடா திந்த வார்த்தை வரைகிறே மின்னு மொன்று
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

28. ஜாதகனுடைய முப்பத்தொன்பதாம் வயதில் தாய்க்கு மரணம் ஏற்படும். அக்காலத்தில் சனி மகாதசையில் குரு புக்தி நடைபெறும் என்றேம். நாங்கள் சொன்ன காலம் மாருமல் திண்ணமாக நடக்கும். இது தவிர் வேறு ஒன்றும் சொல்லுகின்றேம். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற அம்பிகையே! தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய பெரிய தாய்தந்தையரின் மரணகாலம்

29. இருபது வெட்டு ஆண்டி லிவன் தந்தை முன்னேன் [கண்டம்
மர்மமாய் அதற்கு முன்னே ஆண்டுக்குள் பெரிய அன்னை
திருகாகு மென்று சொல்வோம் செப்புவோம் பிதாபின் [சென்மம்
அருணையில் பிரம்ம சேயாய் அருளுவா னென்று [சொல்வோம்.

29. ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதில் ஜாதகனுடைய தந்தையின் சகோதரன் (மூத்தவன்) மரணமடைவான். அதற்கு முன்னே ஒருவருடத்தில் அவனுடைய பெரியதாய் (தந்தையின் சகோதரனின் மனைவி) இறந்துவிடுவாள். இனி ஜாதகனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். திருவண்ணுமலையில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான் என்றேம்.

## ஜாதகனுடைய மரணகாலமும் மறுபிறப்பும்

30. அன்பது வொன்ப தாண்டில் அழகிய கும்ப மாதம்
இன்னவ னுடல மேகு மியம்புவோ மிவன்பின் [சென்மம்
கன்னமா புரியி லேதான் கலப்பனும் சத்திரிய சேயாய்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே,

30. ஜாதகனுடைய ஐம்பத்தொன்பதாம் வயதில் மாசி மாதத்தில் அவன் காலம் தீர்ந்து மரணமாவான். இனி அவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். கன்னமாபுரியில் க்ஷத்திரிய குலத்தவனாகத் தோன்றுவான். உயர்ந்த கடவுளைப் பெற்ற தேவியே! கேளுங்கள்,

## இளமையில் மரணம் ஏற்படாததற்கு காரணம்

31. இதுமத்தில் சாத கர்க்கு எய்தாதோ மார கங்கள்
வரும்வினை யிரண்டு மூன்று ஆண்டினில் நேரு
[மென்றோம்
எதுவினை வந்த போது மிரவிமுன் பனிபோ லாகும்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

31. இதற்கிடையில் ஜாதகனுக்கு மரணம் ஏற்படாதோ என்ன, ஜாதகனுடைய இரண்டாம், மூன்றும் வயதுகளில் கண்டங்கள் ஏற்படும். எந்தவிதமான கண்டங்கள் வந்தபோதும் சூரியன்முன் பனி நீங்குவதுபோல் துன்பங்கள் விலகிவிடும். கதியற்றவரைக் காக்கும் தேவியே! அம்பிகையே! கேளுங்கள்.

## ஜனனகால தசை

32. செனித்திடு காலம் தன்னில் சதயநாள் அரவு தன்னில்
குனித்திடு மாண்டு னாலும் கூறுவோம் திங்க ளாறும்
வினைவரும் சாத கர்க்கு மேவிப்பின் நிவர்த்தி யாகும்
துணைவிருத்தி சுபமில் லத்தில் செப்பினோம் பூர்வ பாகம்.

32. ஜாதகன் ஜனன காலம் சதய நட்சத்திரம் மூன்றும் பாதம் இறுதியிலாம். ராகு மகாதசையில் கர்ப்பச் செல்லுபோக மீதி இருப்பு நான்கு ஆண்டுகளும் ஆறு மாதங்களுமாம். அந்தத் தசையில் ஜாதகனுக்குப் பல வித நோய்கள் வந்து நீங்கிவிடும். சகோதர விருத்தியுண்டு. வீட்டில் சுப காரியங்கள் நிகழும். இதுவரை முதல் பாகம் சொன்னோம்.

—V. R. N.

---

# ஜாதகம் 64

## ஜனனகால கிரகநிலை

1. [1]கலைதேளில் [2]பொன்னேன் [3]சாடி [4]கதிர்புதன் [5]காரி
[[6]வெள்ளி
[7]கலைமானில் கேது [8]கெண்டை [9]கரும்பாம்பு [10]சேயும்
[கன்னி
குலவிய சென்மம் கன்னி கூறுவீர் பலனை யென்று
மலையறை மகளும் கேட்க வதிஷ்டரும் கூறு கின்றார்.

1. சந்திரன் விருச்சிகத்திலும், குரு கும்பத்திலும், சூரியன், புதன், சனி, சுக்கிரன், மகரத்திலும், கேது மீனத்திலும் ராகு செவ்வாய் கன்னியிலும் ஜன்ம லக்கினமும் கனனியுமாக இருப்பின் பலனைச் சொல்லுங்கள் என்று மலையரசனின மகளாகிய பார்வதி தேவி வினவும் போது, வதிஷ்ட முனிவர் பதில் உரைக்கினறார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| கேது | | | |
| குரு | இராசி சக்கரம் | | |
| புதன் சூரியன் சனி சுக்கிரன் | | | |
| | சந்திரன் | | அங்காரகன் ராகு லக்கினம் |

## ஜாதகியின் பிறந்த வீட்டு விவரம்

2. இந்தசேய்ப் பெண்ணும் சென்ம மில்லமும் வடதென்
[வீதி
இந்திர னேக்கம் வாச லரசர்கள் வாச மாகும்

| | |
|---|---|
| 1. சந்திரன் | 6. சுக்கிரன் |
| 2. குரு | 7. மகரம் |
| 3. கும்பம் | 8. மீனம் |
| 4. சூரியன் | 9. ராகு |
| 5. சனி | 10. அங்காரகன் |

இந்திர நகர மொப்பாம் இலகிய பேரூ ராகும்
முந்திய வாரி கீழ்ப்பா லுரைத்தயிவ் வடையா ளத்துள்;

2. இந்தஜாதகம் ஒரு பெண்ணுடையது, இவள் பிறந்த வீடு வடக்குத் தெற்கான தெருவில் கிழக்கு நோக்கிய வீடாகும். அவ்வூரில் அரசன் வாழ்ந்துவருவான். இந்திரனுடைய, ஸ்வர்க்கம் போல அழகிய பெரிய ஊர் என்றோம். உயர்ந்த தலமாகிய சமுத்திரம் அருகில் கிழக்குப் பக்கத்தில் இருக்கும். இவ்வித அடையாளங்களுள்ள வீட்டில்;

3. உதிப்பளாம் சேஷ்ட சென்ம முரைக்கிறோம் தந்தை [யோகம்
மதிநுதல் அன்னை யோகம் வரன்யோகம் துணைவர் [யோகம்
சதியிலா முன்பின் சென்மம் சாற்றுவோ மிந்நூல் [தன்னில்
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

3. தன் தந்தைக்கு மூத்த குழந்தையாகப் பிறந்தவள் என்றோம். இனி அவளுடைய தந்தை, அழகிய புருவங்களையுடையதாய், கணவன், சகோதரர் இவர்களுடைய யோகத்தையும், முற்பிறவி, மறுபிறவி ஆகியவற்றையும், இந்தச் சோதிட நூலில் சொல்லுகின்றோம். கதியற்றவரை ஆதரித்து வரும் தாயே! கேளுங்கள்.

## தந்தையின் சகோதரபாவம்

4. தாதைக்குத் தாரம் மூன்றில் தரித்திடுங் கடைமா தீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் [தந்தை
போதவே துணைய னேகம் பிறந்திடும் யாவும் தீது
மேதினில் ஒருவன் தீர்க்கம் விளம்புவோ மவன்கு [ணத்தை.

4. ஜாதகியினுடைய பாட்டனுக்குள்ள மூன்று மனைவியரில் கடைசி மனைவிக்குப் பிறந்தவன் ஜாதகியினுடைய தந்தை என்று சொன்னோம். அவனுக்குப் பல சகோதரர் தோன்றுவர். அவர்கள் எல்லோரும் இறந்துவிடுவர். ஒரு சகோதரன் மட்டும் நீண்ட ஆயுளுடனிருப்பான். அவனுடைய குணத்தை மட்டும் சொல்லுகின்றோம்.

## ஜாதகியின் தந்தையின் சகோதர விஷயம்

5. இருவிதக் கல்வி யுண்டு வின்பச்சொல் தந்திர வார்த்தை
மர்மவான் சிவந்த மேனி மறுத்துரை யதிகம் கூறுவன்

அரிவையர் மோக ஞவன் அடாவடி கொஞ்ச முண்டு
நரைமல ரிஷ்டம் கொள்வன் நடையது துருசு முண்டு.

5. இருவிதமான கல்விகற்பான். இன்பமுறும்படி பேசுபவன். தந்திரமாகப் பேசும் இயல்பினன். உண்மை நிலையை வெளிவிடாதவன். சிவந்த உடலுளன். எவ்வார்த்தைக்கும் எதிர்வார்த்தை பேசுபவன். பெண்களின் மீது மையல்கொள்ளும் இயல்பினன். அடாவடியாகப் பேசும் குணமும் சிறிதுள்ளவன். வெண்மையான வாசனைப் புஷ்பங்களின்மீது விருப்பமுடையவன். வேகமாக நடப்பவன்.

## இதுவுமது

6. அரசரால் தொழிலு மேற்பன் அல்பமாம் கத்திரி யோகம்
சிறுமையும் சுகமு முண்டு செட்டுக்கள் செய்வா ஞகும்
பொருளது அதிகம் சேர்க்கான் பேதையு மொன்றே [யாகும்
வருஞ்சுதர் ஆண்பா லிரண்டு மங்கையும் மவ்வாறு [தீர்க்கம்

6. அரசாங்கத்தொழில் ஏற்றுவருவான். கத்திரியோகம் உள்ளவன். நன்மையும் தீமையும் கலந்துவரும். வர்த்தகம் புரிந்துவருவான். அதிகமாகப் பொருள் ஈட்டாதவன். மனைவி ஒருத்தியே யாவள். அவனுக்கு இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தோன்றித் தீர்க்க ஜீவிகளாயிருப்பர்.

## இதுவுமது

7. மற்றவை மூன்றும் சேதம் வயதுமே தீர்க்க மெய்தும்
குற்றமில் லாமல் வேருய்க் குலவியே வாழ்வா ஞகும்
சுத்தமாய்ச் சிலது சேதி செப்புவோம் பின்பா கத்தில்
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோம் தந்தை சேதி.

7. மற்றும் பிறந்த மூன்று சகோதரர் இறந்துவிடுவார். மேற்கூறிய நால்வரும் தீர்க்க ஜீவிகளாக இருப்பார்கள். தீங்குகளின்றித் தனியாக வாழ்ந்துவருவார்கள். சில விவரங்களைச் சுத்தமாக அடுத்த பகுதியில் சொல்லுகின்றோம். யானைமுகக் கடவுளைப் பெற்ற தாயே! இனி தந்தையின் விவரங்களைக் கூறுகின்றோம்.

## தந்தையின் விவரங்கள்

8. ஊகைவான் நுணுக்கம் தேர்வ னுண்மையா மனத்த [ஞகும்
நாகரி கங்க ளுள்ளான் நாயகன் சிவந்த மேனி

பாகமாய்ப் பேச வல்லன் பலசகா யங்கள் செய்வன்
தோகைய ரிஷ்டம் கொள்வன் துறவோர்க்கு அன்ன
[மீவன்.

8. ஊகமுள்ளவன். (சாஸ்திர) நுட்பங்களில் தேர்ச்சி பெற்றவன். உண்மையான மனத்தினன். நாகரீகமான வாழ்க்கையை நடத்துவான். சிவந்த நிறமுள்ளவன். பொருத்தமாகப் பேசும் இயல்பினன். பல சகாயங்கள் செய்துவருவான். பெண்கள் மீது மையல் கொள்பவன். துறவிகட்கு (பரதேசிகட்கு)ப் பரிவுடன அனனமளிப்பவள்.

9. கல்வியு மிரண்டு கற்பன் கனராசர் பேட்டி கொள்வன்
இல்லையென் றுரைக்க மாட்டா னிதரவூர் தன்னி
[லுய்வன்
சொல்லத்தைக் காப்பா னுகும் தொடுவழக் கதனில்
[செல்லான்
தல்லியைக் காப்பா னுகும் சற்சன ருறவு கொள்வன்!

9. இருவிதமான கல்விகற்றுணர்வான். அரசரைப்பேட்டி காணும் பேறு உடையவன். யாசித்தவருக்கு இல்லை என்று கூருதவன். வேறு ஊருக்குச் சென்று அங்கு வசித்துவருவான். தன்னுடைய வார்த்தைகளின் படியே நடப்பவன். வீண் வழக்கில் செல்லாதவன். அன்னையைப் பரிவுடன் கவனித்துவருவான். நல்லவருறவு கொள்ளுவான்,

10. துருவச்சக் கரம்பால் தன்னில் சுதனுமே உய்வா னுகும்
கருதிடான் கட்டு வார்த்தை கண்முகம் வசிய முண்டு
வருமூலம் தனுசு ராசி மன்னனு முதிப்பா னுகும்
பெரும் பொருள் அரசர் தம்மால் புதல்வனு முய்வா
[னுகும்.

10. ......ஜாதகியின் தந்தை வாழ்ந்துவருவான். பொய் பேச மனத்தாலும் நினையாதவன். முகம் கண்கள் இவை வசீகரமாக உள்ளவன். அவன் மூலநட்சத்திரத்தில் தனுர் லக்கினத்தில் பிறந்தவன் என்று கூறுகின்ருேம். அரசாங்க உத்தியோகம் ஏற்றும், பெரியதான பொருள் பெற்றும் வாழ்ந்து வருவான்.

## தந்தையின் முற்பிறவியும், தன்மைகளும்

11. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிருேம் சோழ
[நாட்டில்
கன்னமாங் குலமு தித்துக் காதலி மதலை யுண்டாய்

அந்நகர் கணக்கு வேலை அவன்செய்து வாழ்ந்து [மேதான்
முன்னோர்க்கு அன்ன மீந்து முயர்வான தலங்கள் [சென்றும்;

11. ஜாதகியின் தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சோழ தேசத்தில் கருணீகர் குலத்தில் பிறந்து, மனைவி மக்களைப்பெற்று, அவ்வூரில் கணக்கன் வேலைபார்த்து வாழ்ந்துவந்தான். வயதானவர்கட்கும் பெரியோர் கட்கும் அன்னமளித்து வந்தும், பல புண்ணியத் தலங்களுக்குச் சென்றும்;

## இதுவுமது

12. தாகப்பந் தலும மைத்துத் தரித்திரர்க் குதவி செய்து
மோகமாய்க் கால ளுடு மேவினன் பேதி யாலே
ஆகமன் வரையப் பட்டு அணுகினன் சத்திரிய சேயாய்ப்
பாகமா யிவனுக் கேதான் பாவையு முதிப்பா ளென்றோம்.

12. தண்ணீர்ப்பந்தல் அமைத்து, ஏழைகட்குப் பலவிதமான உதவி செய்து வாழ்ந்து பேதியால் மரணமடைந்து, மீண்டும் வேதங்களுக்கு எல்லாம் உறைவிடமாகிய பிரமனால் படைக்கப்பட்டு, இப்பிறவியில் க்ஷத்திரிய குலத்தவனாகப் பிறந்தவன் என்றோம். இவ்விதம் சொல்லப்பட்ட தந்தைக்கு ஜாதகி பிறந்தவள் என்றோம்.

## ஜாதகியின் தாயின்விவரம்

13. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் [சிவந்த மேனி
கன்னென மொழியே சொல்வள் கருதிடாள் கட்டு [வார்த்தை
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆளன்தன் மனம் போல் [வாழ்வள்
பின்னமில் லாத தேகி பேதைநன் னடக்கை நன்மை.

13. இனி ஜாதகியினுடைய தாயின் குணங்களைக் கூறுகின்றோம். அழகுள்ளவள். சிவந்த நிறமுடையவள். கரும்பைப்போன்ற இனிய வார்த்தைகளையே பேசுபவள். வீண் வார்த்தைகளைப் புனைந்து பேசாதவள். (பொய் பேசாதவள்) பிறர்மீது குற்றம் கூறாதவள். தன் கணவன் மனத்துக்கு ஏற்றபடி நடப்பவள். குற்றமில்லாத தேகத்தையுடையவள். அவள் நன்னடத்தையுள்ளவள்,

## இதுவுமது

14. வந்துபின் வரன்யோ கம்தான் வருவோரை யாத ரிப்பள்
பந்துவு மதிக்க வாழ்வள் பாவையு விரத மேற்பள்
சிந்தையும் நல்ல தாகும் சாதமு மன்பா யீவள்
முந்தின பணிகள் சேர்ப்பள் முதல்வியே கேட்டி டாயே.

14, ஜாதகியினுடைய தாயை (தந்தை) மணந்துகொண்ட பிறகு யோகம் விருத்தியாகும். தன்னை அண்டி வந்தவரை ஆதரித்துவருவாள். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வர்ழ்ந்துவருவாள். விரதங்கள் முதலியன ஏற்றுநடப்பவள். நல்ல மனமுடையவள். பசித்தவர்கட்கு பரிவுடன அன்னம் அளிப்பவள். விலையுயர்ந்த ஆபரணங்களைச் சேர்ப்பவள். தாயே! கேளுங்கள்.

## தாயின் முற்பிறவி

15. தன்துணை யாண்பா லொன்று தையலு மவ்வா ருகும்
நொந்திடும் மற்ற வெல்லாம் நுவலுவோ மிவள்தன் [பூர்வம்
கந்தன்வாழ் பழனி நாட்டில் கலந்தனள் வைசியச் [சேயாய்
முந்தின குடும்பி யாகி உயர்வோர்க்கு அன்ன மீந்து;

15. ஜாதகியின் தாய்க்குச் சகோதரி ஒருத்தியும் சகோதரன் ஒருவனும் உண்டு. அவ்விருவரும் தீர்க்காயுசுடனிருப்பர். மற்றும் தோன்றுபவர் இறந்துவிடுவர். இனி ஜாதகியின் தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றேம். முருகபிரான வாழ்ந்துவரும் பழனி க்ஷேத்திரத்தில் வைசிய குலத்தவளாகப் பிறந்து உயர்ந்த குடும்பமுடையவராக வாழ்ந்து, வயதானவர்கட்கும் பெரியோர்களுக்கும் அன்புடன் அனனம் அளித்து;

## தாயின் மறுபிறவி

16. மாதுவும் பவமில் லாமல் மாரன்முன் மரண மாகித்
தீதில்லா பிரமன் லக்கம் தேவியு முதித்தா ளென்றேம்
காதலி பின்சென் மத்தைக் கழறுவோம் தணிகை யுத்தரம்
மேதினில் பேரூர் தன்னில் விளங்குவாள் பிரம்ம [சேயாய்.

16. வேறு தீவினைகள் ஏதுமின்றித் தன் கணவனுக்கு முன்பாகவே மரணம் எய்தினள். தீங்குகளில்லாத பிரமதேவனல் மீண்டும் இப்பூவுலகில் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தாள். இனி அவளுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றேம். திருத்தணிகைக்கு வடக்கில் உள்ள பெரியஊரில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள்.

## ஜாதகியின் குணங்கள்

17. சாதகி குணத்தைச் சொல்வேன் சிவந்தமெய் முன்கோ
[பத்தாள்
ஒதுவாள் சுகமாய் வார்த்தை உயர்வான புத்தி யேற்பள்
மாதவர் பத்தி பூண்பள் மானிலம் வறுமை காணுள்
சூதிலாள் வெகுளி யாவள் திருமக ளொப்ப தாகும்.

17. இனி ஜாதகியின் குணங்களைச் சொல்லுகின்றோம். முன் கோபமுடையவள். இனிமையாகப் பேசுபவள். உயர்ந்த புத்தி யுள்ளவள். தாராள மனப்பான்மை யுள்ளவள். (விஷ்ணு பக்தியுள்ளவள்) பெரிய தவமி யற்றும் பெரியவர்களிடத்தில் பக்தியுள்ளவள். உலகில் தரித்திர தசை அடையாதவள். கபட நெஞ்சமில்லாதவள். வெகுளியாக விருப்பவள். இலக்குமியைப் போன்று அழகும் செல்வமும் உடையவள்.

18. அன்னம்போல் சாய லொக்கும் அடிசிலுக் கினிய ளாகும்
அன்னமு மன்பா யீவள் அதிதிகட் கன்ன மீவள்
அன்னியர் மதிக்க வாழ்வள் அதிகபூ தனமு மேற்பள்
முன்னமே விரத மேற்பள் உத்தமி கேட்டி டாயே.

18. அன்னத்தைப் போன்று அழகுள்ளவள். ருசியுடன் சமைப்பதில் வல்லவள். பரிவுடன் அன்னமளிப்பள். கதியற்றவர்கட்கும் விருந்தினருக் கும் அன்புடன் உணவு அளிப்பவள். பிரர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். அதிகமான ஸ்ரீதனம் உள்ளவள். நம்பிக்கையுடன் நோன்புகள் ஏற்பவள். உயர்ந்தவளே! கேளுங்கள்,

## ஜாதகியின் சகோதரபாவம்

19. பால்பாக்கிய முடைய ளாகும் பாவைநற் சீலி யாகும்
சாலவே துணைவர் தம்மைச் சாற்றுவோ மாண்பா
[விரண்டு
வேல்விழி மார்கள் ஒன்று விளங்கும்வோம் தீர்க்க மாக
ஆலத்தை யுண்டோன் தேவி அறைகிறோ மணத்தின்
[காலம்.

19. பால் பாக்கியமுள்ளவள். நல்லொழுக்க முடையவள். இனி அவளுடைய சகோதர பாவத்தைச் சொல்லுகின்றோம். இரு சகோதரர்களும் வேலைப் போன்று கூரிய விழிகளை யுடைய ஒரு சகோதரியும் உள்ளவள். அம் மூவரும் தீர்க்க ஜீவிகள் என்றோம். உலகின் நன்மைக்காக, பாற் கடலில் தோன்றிய விஷத்தை உட்கொண்ட பரமசிவனின் தேவியே! இனி ஜாதகியின் திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம்.

## ஜாதகியின் திருமணக்காலம்

20. மங்களம் பனிரண் டாண்டில் மருவிடு மன்னே வர்க்கம்
அங்கவன் குணத்தைச் சொல்வேன் அரசர்பூ சிதனு [மாவன்
சிங்கம்போல் பகைவ ருக்குச் சென்றிடம் பெருமை [யேற்பன்
துங்கமா மனத்த ணுகும் சொல்லதைக் காப்பா ணுகும்.

20. ஜாதகியின் பனிரண்டாம் வயதில் திருமணம் நிகழும். தன் தாய் பின் வர்க்கத்திலிருந்து கணவன் வாய்ப்பான் என்று சொல்லுகின்றோம். இனி அவனுடைய குணங்களைக் கூறுகின்றோம். அரசாங்கத்தாரின் நன் மதிப்புப் பெற்றவன். பகைவர்கட்குச் சிங்கம் போன்ற பகைவனாக விருப் பான். போன விடங்களெல்லாம் பெருமையை யடைவான். தூய்மையான மனத்தினன். சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன்.

## கணவனின் யோக விவரம்

21. பரிவண்டி யுடைய ணுமே பகருவா னிரண்டு கல்வி
துரைராசர் தன்ணு லுய்வன் சோம்பிடான் காரி யத்தில்
தரையது சேர்ப்பா ணுகும் சக்தியும் போன பின்பு
பிறைபோலே யோகம் வாக்கும் போசன வறுமை [காணுன்.

21. குதிரை வண்டி வைத்திருப்பவன். இருவிதக் கல்வி கற்றவன் (துவி பாஷீ) அரசாங்கத்தில் உத்தியோகம் வகிப்பவன். (துரைமாரிடம் பணி புரிபவன்) காரியங்கள் செய்வதில் சோம்பலில்லாதவன். விளை நிலங்களையும், இதர பூமிகளையும் வாங்கிச் சேர்ப்பான். ஜாதகியை மணந்த பின்பு அவனுக்கு வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் பெருகும். சாப் பாட்டுக்குக் குறைவில்லாதவன்.

22. கன்னிக்கு அன்பா ஞறும் கணவனும் தீர்க்க சீவி
உன்னதக் கிரக நேரும் உதித்தவூர் தன்னி லேதான்
தன்பந்து வணங்க வாழ்வன் தன்துணை அதிகம் [காணுன்
பின்பாகம் விபரம் சொல்வேன் புகலுவோம் புத்திர [பாவம்.

22. ஜாதகிக்கு ஐம்பத்தாறும் வயது வரையில் கணவன் ஜீவித்து வருவான். தான் பிறந்த ஊரிலேயே வீடு ஒன்று கட்டுவான். தன் சுற்றத் தார் தலை வணங்கும்படியாக வாழ்ந்திருப்பான். ஜாதகியின் கணவனுக் குச் சகோதரரில்லை. அவ்விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

## புத்திரபாவம்

23. சுதர்களும் இருநான் காகத் தோன்றிடும் சிலவே சேதம்
சதமுட ஞண்பால் மூன்று தையலும் மவ்வாறு தீர்க்கம்
வதிஷ்டரு மிவ்வாறு சொல்ல மாமுனி தடுத்துச்
[சொல்வார்
புதல்வர்தா னத்தில் கரரி பொருந்தியும் பொன்ஞே
[ஞறில்;

23. ஜாதகிக்கு எட்டுக் குழந்தைகள் பிறக்கும். அவைகளில் சில மதலைகள் இறந்து விடும். மூன்று ஆண் குழந்தைகளும் மூன்று பெண் குழந்தைகளும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். இங்ஙனம் வசிஷ்ட முனிவர் சொல்லும் போது, அத்திரி முனிவர் மறுத்துச் சொல்லுகின்ருர். புத்திர ஸ்தானத்தில் (ஐந்தாமிடமாகிய மகரத்தில்) சனி இருப்பதாலும், குரு ஆரும் வீட்டில்;

## புத்திர விருத்திக்குரிய கிரகநிலை

24. இருப்பதால் சுதர்க ளெவ்வா றியம்பினீர் முனியே
[நீர்தாம்
உரகன்சேய் சென்மம் தங்க உதயனும் புகர்மா லேந்தில்
பிறையுமே மூன்றில் தங்கப் புதல்வர்கள் விருத்தி
[யென்ரேும்
வருஞ்சுதர் முதலில் தோஷம் ஆறுமே தோஷ மெய்தும்.

24. இருப்பதால் புத்திரர்கள் உண்டு என்று எங்ஙனம் கூறுவீர்கள்? முனிவரே! தாங்கள் (என வினவும் போது, வசிஷ்டர் மீண்டும் சொல்லு கின்ருர்.) ராகுவும் செவ்வாயும் ஜன்ம லக்கினமாகிய கன்னியில் இருப்பதாலும், சூரியன் சுக்கிரன் புதன் இம்மூன்றும் புத்திர ஸ்தானத்தில் இருப்பதாலும் சந்திரன் மூன்ருமிடத்தில் இருப்பதாலும், புத்திர விருத்தி யுண்டு என்று சொல்லுகின்ரேம். ஆனல் முதலிய தோன்றும் புத்திரனும் ஆருவது பிறக்கும் குழந்தையும் இறந்துவிடும் என்று வசிஷ்ட முனிவர் உரைத்தார்.

## ஜாதகியின் முற்பிறவி

25. மாதுவின் பூர்வம் சொல்வேன் ஆலங்காட் டதனி
[லேதான்
தீதிலாக் கங்கை சேயாய்ச் செனித்துமே வறுமை யின்றி
ஓதுவார் உணவு தந்து உலகினில் பவமில் லாமல்
பாதிகக் கால ஞேடு பரவியே பிரமன் லக்கம்;

25. ஜாதகியின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவால காட்டில் வேளாள குலத்தவளாகப் பிறந்து வறுமை யடையாதவளாகப் வாழ்ந்து வேத மோதிய அந்தணர்கட்கும், இறைவனைத் தோத்தரிக்கும் ஓதுவார்கட்கும் உணவளித்து, உலகில் வேறு தீச் செயல்களின்றி வாழ்ந்து மரண மடைந்து மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு;

26. *வந்தவ ளிவளே யென்றோம் வரைகிறோ மிவளின்
[யோகம்
சந்திரன் பிறைபோ லோங்கும் சாதமும் குறைவு றுதாள்
பொன்பணி யதிகம் சேர்ப்பள் புகழான குடும்ப மேற்பள்.

26. பிறந்தவள் என்று சொன்னோம். இவளுடைய பொது யோகத் தைச் சொல்லுகின்றோம். வளர்பிறைச் சந்திரன போல் யோகம் வளரும். அன்னத்திற்குக் குறைவில்லாதவள். பொன் ஆபரணங்கள் அதிகம் சேர்ப் பாள். கீர்த்தியுள்ள குடும்பத்தை அடைவாள்.

## தந்தைக்கு ராஜயோகம் கிரகநிலை

27. தந்தையால் பெருமை யேற்பள் செயமுனி தடுத்துச்
[சொல்வார்
எந்தக்கா ரணத்தி னாலே யியம்பினீர் தந்தை யோகம்
புந்தியும் புகரு மைந்தில் பொருந்திய பலத்தி னாலே
விந்தையாய்த் தந்தைக் கேதான் விளம்பினோம் ராச
[யோகம்.

27. ஜாதகி தன் தந்தையால் பெருமை அடைவாள். இதற்கு ஜய முனிவர் மறுத்து வினவுகிறார். "எந்தக் காரணத்தால் தந்தைக்கு யோகம் உண்டு என்றும் அவரால் ஜாதகிக்குப் பெருமை ஏற்படும் என்றும் சொல்லு கிறீர்கள்? வசிஷ்டர் பதில் கூறுகின்றார். புதனும் சுக்கிரனும் ஐந்தாம் இடத்தில் இருக்கும் பலத்தினால் ஜாதகியின் தந்தைக்கு ராஜயோகம் உண்டு என்று நாங்கள் சொல்லுகின்றோம்.

## பருவத யோகம்

28. அரசுமே எதுவ ரைக்கும் அறைகுவீர் விபரம்
[சொல்வாய்த்
திருமகள் செனனம் தொட்டு இருபத்தே ழாண்டு மட்டும்
பருவத யோக மெய்தும் பராசரும் தடுத்துச் சொல்வார்
திருமக ளிதற்குள் ளாகத் தந்தைக்கு நேர தோசொல்;

*ஏட்டில் இப்பாவில் ஓர் அடி குறைவாக உள்ளது.

28. மீண்டும் (முனிவர்) பார்வதி வினவுகிறுர். எந்த காலம் வரையில் ராஜயோகம் உண்டு அதைச் சொல்லுங்கள் விவரமாக. ஜாதகி பிறந்தது முதல் இருபத்தேழாம் வயது வரையில் பர்வத யோகம் உண்டு. பராசர முனிவர் தடுத்துச் சொல்லுகின்றுர். ஜாதகியின் இருபத்தேழாம் வயதுக்குள்ளாகத் தந்தைக்கு மரணம் சம்பவிக்காதா? சொல்லுங்கள் என;

## கிரகநிலை

29. தந்தையின் தானத் துக்குத் தசமத்தில் பொன்னேன் [தங்க
[1]மந்திரி தனக்குப் பத்தில் மதியுமே யிருப்ப தாலே
சிந்தையில் கலக்கம் காணுன் சிலசில தான பேதம்
வந்திடும் குரோதம் காணுன் மன்னர்க்கு விவன்சொல் [மேன்மை.

29. வசிஷ்ட முனிவர் பதில் சொல்லுகின்றுர். பிதிரு ஸ்தானமாகிய (ஒன்பதாமிடம்) ரிஷபத்துக்குப் பத்தாமிடமாகிய கும்பத்தில் குரு இருப்பதாலும், அந்த குரு இருக்குமிடத்துக்குப் பத்தாமிடத்தில் சந்திரன் இருப்பதாலும் தந்தைக்கு ஒருவித தோஷமும் இல்லை. மனத்தில் கலக்கம் இராது. சிற்சில ஸ்தான பேதம் உண்டு. என்றுலும் சண்டையோ மரணமோ வராது. அவனுடைய வார்த்தைகளில் அரசருக்கு மதிப்பு ஏற்படும்.

## தந்தையின் மரணகாலம்

30. இன்னமும் விபர மாக இயம்புவோம் பின்பா கத்தில்
கன்மகா லங்கள் சொல்வேன் காதலிக்கு முப்பா [ஞென்றில்
முன்னமே தந்தை கண்டம் மொழிந்தது தப்பா தாகும்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

30. இன்னும் மற்ற விவரங்களை அடுத்த பாகத்தில் சொல்லுகின்றேம். இனி கரும காலங்களைக் கூறுகின்றேம். ஜாதகிக்கு முப்பத்தோராம் வயதில் தந்தை மரண மடைவான். நாங்கள் கூறியது தவருது. உயர்ந்த யானைமுகக் கடவுளைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்.

*குறிப்பு:—ஜாதகியின் தந்தை, அவளுடைய சுக்கிர மகா தசையில் சந்திர புக்தியில் மரணமடைவான்.

31. ஆருறு மூன்று வாண்டி லன்னைக்குக் கண்ட மெய்தும்
தீரமாய் அன்பா னேழில் செல்வதி வரனின் கண்டம்

1. குரு

நாரிக்கு அறுபான் மூன்றில் நற்றேளின் மாதம் தன்னில்
சேருவாள் கால னூடு செப்புவோ மிவள்பின் சென்மம்.

30. ஜாதககியின் முப்பத்தொன்பதாம் வயதில் தாய்க்கு மரணம் சம்பவிக்கும். ஐம்பத்தேழாம் வயதில் கணவன் மரண மடைவான், அறுபத்து மூன்றும் வயதில் கார்த்திகை மாதத்தில் ஜாதகி மரண மடைவாள்.

*குறிப்பு :—ஜாதகியின் சுக்கிர மகா தசையில் சனி புக்தியில் தாயும் ஜாதகியின் சந்திர மகா தசையில் சனி புக்தியில் கணவனும் ஜாதகியின் அங்காரக மகா தசையில் குரு புக்தியில் தானும் மரண மடைவார்கள்.

## ஜாதகியின் மறுபிறப்பு

32. உத்தரம் வேங்க டத்தில் உதிப்பளாம் பிரம்ம சேயாய்
மெத்தன பொருள்ப டைத்து வித்தகி வாழ்வா ளாகும்
வித்தகன் பிதாபின் சென்மம் விளம்புவோம் துவாரை [தன்னில்
முத்தின குலமு திப்பான் விதுரரும் தடுத்துச் சொல்வார்.

32. வடக்கில் உள்ள திருப்பதியில் அந்தண குலத்தில் தோன்றுவாள். அதிகமாகச் செல்வம் பெற்று வாழ்ந்து வருவாள். இவளுடைய தந்தையின் மறுபிறவியைச் சொல்லுகின்றோம். துவாரகை என்னுமிடத்தில் முதல் குலமாகிய அந்தணக் குலத்தில் பிறப்பான். விதுரர் மறுத்துக் கூறுகின்றார்.

## தந்தையின் மறுபிறவியில் குலவுயர்வு

33. இந்ததோர் சென்மந் தன்னிலிவன் செய்த புண்ணிய [மென்ன
முந்தவே கூறு மென்ன முயர்வோர்கள் பக்தி யாயும்
சிந்தையில் கபடு மின்றிச் செனவுப காரி யாயும்
வந்தவர்க் கன்ன மீந்தும் வளமுள தலங்கள் சென்றும்;

33. ஜாதகியின் தந்தை இந்தப் பிறவியில் செய்த எந்த நற்காரியங்களினால் அடுத்த பிறவியில் உயர்ந்த குலத்தில் தோன்றுதல் ஏற்படும் என்று முதலில் கூறுங்கள் என, உயர்ந்தவர்களின் மீது பக்தி கொண்டும், மனத்தில் வஞ்சனைகளின்றிப் பொது ஜனங்களுக்கு உபகாரம் செய்து வந்தும், பசித்தவர்கட்கு உணவளித்து வந்தும் பல புண்ணியத் தலங்களுக்கும் சென்று வந்தது;

34. சிலருக்குவா பத்தைக் காத்தும் தீரனும் வாழ்ந்த தாலே
குலவுவான் பிரம்ம சேயாய்க் கூறுவோ மாரு மாண்டில்

நலமுள தந்தை யன்னை நமன்பதி செல்வா ளாகும்
மலையறை மகளே யாங்கள் வழுத்திய மொழி குன்று
[துவே.

34. சிலருக்குற்ற ஆபத்துக்களை விலக்கியும் ஜாதகியின் தந்தை வாழ்ந்து வந்ததால் அடுத்த பிறவியில் அந்தண குலத்தில் தோன்றுவான் என்றோம். ஜாதகியின் ஆறும் வயதில் அப்பனைப் பெற்ற பாட்டி இறந்து விடுவாள். மலையரசனின் மகளே! நாங்கள் கூறியவை தவறு.

## ஜனனகால தசை

35. சாதகி செனிக்கும் காலை சனிதசை ஆண்டு வொன்றும்
ஒதுவேன் திங்கள் பத்தும் உதித்தவள் தனக்கு பத்தும்
மேதினில் தான பேதம் மெல்லியாள் தனக்கு ரோகம்
போதனம் செலவு முண்டு புகன்றனம் பூர்வ பாகம்.

35. ஜாதகியின் ஜனன காலத்தில் சனி மகாதசையில் ஒரு வருடமும் பத்து மாதங்களும் மீதியாகும். அந்தக் காலத்தில் ஸ்தான பேதம் (வீடு மாற்றம்) ஏற்படும். ஜாதகிக்கு ரோகம் ஏற்படும். பெரும் பொருள் செலவு உண்டு. இதுவரை முதல் பாகம் சொன்னோம். —V. R. N.

## ஜாதகம் 65

### ஜனன கால கிரகநிலை

1. [1]கலை[2]கலை ராகு மீனம் [3]கனகனும் [4]நந்தி புக்க
[5]நிலமகன் புதன்[6]பான் [7]காரி [8]நீத்தோனும் கன்னியாகச்
[9]சலக்கோளு [10]கோல தாகச் சென்மும் [11]மாதை யாகப்
பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்க லுற்ருள்.

1. சந்திரன் மகரத்திலும், ராகு மீனத்திலும், குரு விருஷபத்திலும், அங்காரகன், புதன், சூரியன், சனி, கேது கன்னியிலும், சுக்கிரன் துலாத்திலும் இலக்கினம் கன்னியாகவு மிருந்தால், ஏற்படக் கூடிய பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதி கேட்கலானுள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| ராகு | | குரு | |
| | இராசி சக்கரம் | | |
| சந்திரன் | | | |
| | | சுக்கிரன் | அங்கா புதன் சூரியன் சனி கேது |

### ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளங்கள்

2. அத்திரி சொல்லு கின்ருர் ஆணது செனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாசல் கீழ்மேல் வீதி

---

1. சந்திரன்
2. மகரம்
3. குரு
4. விருஷபம்
5. அங்காரகன்
6. சூரியன்
7. சனி
8. கேது
9. சுக்கிரன்
10. துலாம்
11. கன்னி

உத்திர மீச னுண்டு உறங்கிடு மந்தக் கோஷ்டம்
சத்தியும் தென்பா லாகும் சாற்றுமிவ் வடையா ளத்துள்;

2. அத்திரி முனிவர் சொல்லுகின்ரூர். இந்த ஜாதகம் ஒரு ஆண் மகனுடையது. அவனுடைய வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேன். கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலே யுடையது. வடக்கில் சிவபெருமான் ஆலயம் ஒன்று இடிந்துளது. தெற்குப் பக்கம் அம்மன் கோவிலுமாக உள்ள இந்த அடையாளங்களுள்ள வீட்டில்;

## ஜாதகனுடைய குலம்

3. உதிப்பனும் சேஷ்ட ஞக உரைக்கின்ரூம் கர்ண [சேயாய்
மதிநுத லன்னே தந்தை வருந்துணே களத்திர புத்திரர்
சதியிலா முன்பின் சென்மம் சாற்றுவோ மிந்நூல் [தன்னில்
அதிதியை யாத ரிக்கு மம்பிகை யாளே கேளாய்.

3. இந்த ஜாதகன் தன் தந்தைக்கு மூத்தவனுகப் பிறப்பான் என்று சொல்லுகின்ரூம். அவன் கருணிகர் குலத்தில் தோன்றியவன். சந்திரனே யொத்த முகத்தை யுடைய தாய் தந்தையர், சகோதரர், மனேவி, மக்கள் முற் பிறவி, மறுபிறவி ஆகியவற்றையும் இந்தச் சோதிட நூலில் கூறுகின்ரூம். கதியற்ற வரைக் காக்கும் அம்பிகையே! கேளுங்கள்.

## தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணேயா ணிரண்டு சாற்றுவோம் தாயே [கேளும்
முந்தியே ஒன்று சேதம் மேவிப்பின் ஒருவர் சேதம்
அந்தவன் தனிய ஞவன் அவர்களும் சுதருண் காணூர்
எந்தையே தந்தை சேதி இயம்புவோ மினிலே லாக.

4. ஜாதகனுடைய தந்தைக்கு இரு சகோதரர்கள் மட்டும் உண்டு என்று கூறுகின்ரூம். தாயே! கேளுங்கள். ஜாதகனின் தந்தைக்கு மூத்த வன் ஒருவன் தோன்றி இறந்து விடுவான். இவனுக்குப் பின் ஒரு சகோத ரன் தோன்றி அவனும் மாண்டு விடுவான். ஜாதகனுடைய தந்தை தன்னந் தனியாக இருப்பவன் என்று சொல்லுகின்ரூம். சகோதரர்களுக்குப் புத்திரபாக்கியமில்லே. இனி தந்தையின் விவரங்களேக் கூறுகின்ரூம்.

## தந்தையின் விவரங்கள்

5. ஊகவான் கல்வி மானும் உன்மனம் கபடு முண்டு
நாகரி கங்க ளுள்ளான் நடையது கடின மாகும்

பாகமாய்ப் பேச வல்லன் பால்தயிர் பிரிய னாகும்
தோகையர் மோக வானும் சொல்லது இரண்டு முண்டு.

5. ஊக முள்ளவன். கல்வியறிவுள்ளவன். வஞ்சகமான நெஞ்சமுடையவன். நாகரிகமாக இருப்பவன். வேகமாக நடப்பவன். பொருத்தமாகப் பேசுபவன். பால் தயிர் இவைகளைப் புசிப்பதில் பிரியமுள்ளவன். பெண்களின் மீது மையல் கொள்ளுவான். இருவிதமாகப் பேசுபவன்.

## இதுவுமது

6. குலத்தொழில் புரிவா னாகும் குறிப்பினில் கொடுமை
[செய்வன்
பலமுள குடும்ப மேற்பன் பிறவூரில் தொழிலு மேற்பன்
நலமதைச் சிலருக்குச் செய்வன் நற்கரம் கத்திரி ரேகை
சலம்தோய்வன் திரிச்ச லுண்டு சண்முகன் பக்தி
[பூண்பன்.

6. தன்னுடைய குலத் தொழிலையே செய்து வருபவன். முகத்தில் கொடுமை தோன்றும்படி இருப்பவன். பெரிய குடும்பத்தை யுடையவன். வேறு ஒரு ஊரில் தொழில் புரிந்து வருவான். சிலருக்கு நன்மை புரிந்து வருவான், கையில் கத்திரி ரேகை யுள்ளவன். புண்ணிய நீரில் ஸ்நானம் செய்வான். அலைச்சல் உள்ளவன். ஆறுமுகக் கடவுள் மீது பக்தி யுள்ளவன்.

## தந்தையின் முற்பிறவி

7. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறோம் கடையூர்
[தன்னில்
வன்னிய மரபில் தோன்றி வளமுள குடும்ப னாகி
முன்னோர்க்கு அன்ன மீந்து முன்பவ மில்லா தாகி
துன்னிய கால னொடு சேர்ந்துமே பிரமன் லக்கம்;

7. இனி தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அவன் திருக்கடையூர் என்னும் ஊரில், வன்னிய குலத்தில் தோன்றி, செழிப்பான குடும்பத்தை யடைந்து, பெரியோர்களுக்கு அன்னமளித்து வந்து, முற்பிறவித் தீவினைகள் ஏதுமின்றி தீமை தரும் எமபுறம் அடைந்து, மீண்டும பிரம தேவனால் படைக்கப்பட்டு;

## ஜாதகனுடைய குணங்கள்

8. வந்தவ னிவனே யென்றோம் வரைந்தயிக் குணத்தா
[னுக்கு
இந்தவ னுறைவா னகு மியம்புவோ மிவன்கு ணத்தை

*தந்தையால் சுகமும் காணுன் சரசமாய் வார்த்தை*
*[சொல்வன்*
*அன்னையின் அன்னை யாலே அவனுமே உய்வா னுகும்.*

8. பிறந்தவன் இந்த ஜாதகன் தந்தை என்றேம். இவ்விதம் சொல்லப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறந்தவன். இனி இவனுடைய குணங்களைக் கூறுகின்றேம். தந்தையர் சுக மேற்படாவன். சரச சல்லாபமாகப் பேசுபவன். தன்னுடைய பாட்டியாரால் (அன்னையின் தாய்) இவன் வளர்க்கப்பட்டு வருவான்.

9. *கல்விமான் கணக்கி லூகி கடந்தோர்போல் வார்த்தை*
*[சொல்வன்*
*இல்லையென் றுரைக்க மாட்டா னரசர்பூ சிதனு மாவன்*
*வல்லியர் மோக னுவன் மாடுகள் விருத்தி யில்லான்*
*சல்லிய முன்னு லுண்டு சாதமும் குறைவு நேரும்.*

9. கல்வியறிவுள்ளவன். கணக்கில் ஊக முடையவன். முற்றும் துறந்தவனைப் போல் பேசுபவன். யாசித்தவருக்கு இல்லை என்று கூருதவன். அரசாங்கத்தாரின் நன்மதிப்புப் பெற்றவன். பெண்கள் மீது மையல் கொள்ளும் இயல்பினன். கால் நடைகள் விருத்தியில்லாதவன். முன்னுல் (தகப்பனுல் கொடுக்கப்பட வேண்டிய) ஏற்பட்ட கடன் இருக்கும். சாப்பாட்டுக்கும் துன்பம் ஏற்படும்.

## இதுவுமது

10. *தந்தைக்கு மேலாய் வாழ்வன் சல்லியம் பின்னு*
*[லில்லான்*
*விந்தையா யில்லம் செய்வன் வீண்வம்பு புகலா னுகும்*
*கந்தன்தன் அருளு மோங்கும் கட்செவி போலே*
*[கோபம்*
*தன்துணை காணு னுகும் சங்கரி கேட்டி டாயே.*

10. தன் தந்தைக்கு மேம்பட்டவனுக வாழ்ந்து வருவான். பிற்காலத்தில் கடன் உபத்திரவம் இல்லாதவன். அழகான வீடு ஒன்று கட்டுவான். வீண் வம்பு பேசாதவன். முருகப் பெருமான் அருள் விருத்தியாகும். ஸர்ப்பத்தைப் போல் கோபம் கொள்ளுவான். சகோதரனில்லாதவன். சங்கரனின் தேவியே! கேளுங்கள்.

## சகோதரதோஷம் : கிரகநிலை

11. *தன்துணை காணு வண்ணம் சாற்றுவீ ரந்தச் சங்கை*
*கன்னியில் சனிசேய் கேது கதிருமே கூடி நிற்க*

அன்னவன் தனக்குத் தோஷம் அணுகாது என்று
[சொல்வோம்
இன்னவன் அன்னை யாலே எய்திடு மந்தச் சங்கை.

11. ஜாதகனுக்குச் சகோதரர் தோன்றுமைக்குக் காரணங்கள் என்ன வென்று கூறுங்கள். கன்னியில் சனி, அங்காரகன், கேது, சூரியன் நால் வரும் சேர்ந்து இருப்பதால் ஜாதகனுக்குச் சகோதர தோஷம் இல்லை என்று சொல்லுகின்றோம். ஆனால் ஜாதகனுடைய தாயினால் அந்தத் தீமை நிகழும் என்று கூறுகின்றோம்.

## தாயின் குணங்கள்

12. மாதிரு குணமெவ் வாறு வருவிப்பீர் முனியே நீர்தாம்
ஓதுவேன் கேளும் தாயே உள்மனம் வெகுளி யாகும்
பாதக மில்லா நெஞ்சம் பஞ்சைகட் கன்ன மீவள்
மேதினில் பாட்டாளி யாகும் விசனமே குடியாய்த்
[தங்கும்.

12. ஜாதகனுடைய தாயின் குணங்களைச் சொல்லுங்கள், முனிவரே! தாங்கள். தாயே! கேளுங்கள். சொல்லுகின்றேன். அவள் வெள்ளை மனத் தினள். சூதும் தீய எண்ணங்களுமில்லாத மனமுடையவள். ஏழை கட்குப் பரிவுடன் அன்னமளிப்பவள். உலகில் உழைத்து வாழ்க்கை நடத்தும்படியான நிலையுள்ளவள். அவள் வீட்டில் விசனம் குடியிருக்கும்.

## தாயின் சகோதரபாவம்

13. தன்துணை யாண்பா லொன்று தங்கிடு மத்தி லேகும்
கன்னிகை சுதரா மொன்று கழறுவோம் தீர்க்க மாக
அன்னையில் பாழ தாகும் அணுகும்கா ரணங்க ளென்ன
முன்சென்ம வினையா மென்றோம் மொழிகுவீ ரந்தச்
[சங்கை.

13. ஜாதகனுடைய தாயின் சகோதரர் ஒருவர் உண்டு. ஆனால் அவர் இடைக் காலத்திலேயே இறந்து விடுவார். சகோதரி ஒருத்தி மட்டும் நீண்ட ஆயுள் உள்ளவள் என்று கூறுகின்றோம். ஜாதகனுடைய தாயின் வீடு பாழாக வேண்டிய காரணங்களென்ன? "அது முற்பிறவியில் செய்த தீவினையால் ஏற்பட்டது" என்று சொல்லுகின்றோம். அவற்றைக் கூறுங்கள், என பார்வதி வினவினாள்.

## தாயின் முற்பிறவி

14. அன்னையின் பூர்வம் சொல்வே னுலங்காட் டதற்குக்
[கீழ்ப்பால்
சின்னனூர் தன்னி லேதான் செனித்தனள் ரெட்டி
[வமிசம்

முன்னமே குடும்பி யாகி முதல்வியும் வாழும் நாளில்
பின்னமாய் வந்த வூழைப் பேசுவோம் தாயே கேளும்.

14. இனி ஜாதகனுடைய தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவாலங்காட்டுக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில் ரெட்டியார் மரபில் தோன்றி, செழிப்புள்ள குடும்பத்தைப் பெற்று வாழ்ந்துவரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கூறுகின்றோம். தாயே! கேளுங்கள்.

## தாயின் தீவினை

15. முருகர்வாழ் தணிகைக் கேதான் முதல்வனும் தானும் [சென்று
அறுமுக னடியைப் போற்றி அவள்கடை வீதி சென்று
உறைமஞ்சள் சிவப்புச் சீப்பு ஒண்டொடி வாங்கிக் [கொண்டு
கவரிமான் போலே சென்றாள் தனமது ஈயா தாகி;

15. முருகப் பெருமான் வாழ்ந்து வரும் திருத்தணிகைத் தலத்துக்குத் தன் கணவனுடன் சென்று, அங்குள்ள ஆறுமுகக் கடவுளைப் பூசித்து திரும்பி வரும் போது, கடை வீதிக்குச் சென்று, மஞ்சள் குங்குமம் சீப்பு இவைகளை வாங்கினாள். ஆனால் அதற்குரிய பணத்தைக் கொடாமல் மான் போல் துள்ளி ஓடி விட்டாள்.

## வணிகனின் சாபம்

16. வணிகனும் பின்பு பார்த்து மாதுவைக் காணா னாகி
வினைமன தாகச் சொல்வான் வாங்கின பொருளா [காமுன்
உன்வரன் மரண மாகும் அதிகசஞ் சலமாய் வாழ்ந்து
பிணையான பின்சென் மத்தில் பிறந்தவில் பாழ தாகும்.

16. கடைக்காரனும் நன்றாகப் பார்த்து, அப்பெண்ணைக் காணாமல் மனம் நொந்துச் சாபமிடுகின்றான். "என்னிடம் மஞ்சள் முதலியன வாங்கிக் கொண்டு பணம் தாராமல் ஓடிவிட்டவளே! நீ வாங்கிச் சென்ற மஞ்சள் தீர்ந்து போவதற்கு முன்பே உன் கணவன் மரண மடைவான். பிறகு அதிக சஞ்சலத்துடன் வாழ்ந்து வருவாய், அடுத்த பிறவியிலும் உன் பிறந்த வீடு பாழடையும்"

17. வரனுமே மத்தில் மாண்டு மங்கிலிய மற்று நீயும்
உறைகுவா யென்று சொல்லி உதறினான் தெருத்தூள் [தானும்
மருவிற்று வந்தத் தோஷம் மங்கைக்கு அந்த ஆண்டில்
திருகாக பேதி யாலே சென்றனன் வரனு மென்றோம்.

17. "இடைக் காலத்தில் கணவனை இழந்து, கைம் பெண்ணாக நீ வாழக் கடவாய்" என்று கூறி, தெரு மண்ணை வாரி இறைத்தான். அந்தத் தோஷம் அவளைப் பற்றியது. அந்த ஆண்டிலேயே தீய பேதி நோயால் கணவன் மரண மடைந்தான்.

## சாபத்தின் பலன்

18. மங்கையும் சஞ்ச லத்தால் மகாதலம் சேது சென்று
சங்கையாய்க் கால னுடு சார்ந்துமே பிரமன் லக்கம்
நங்கையும் வந்தா ளென்றோம் நல்கிடும் வணிகன் சாபம்
பங்கமாய் மார னும்தான் பற்றறு மாரு மாண்டில்.

18. ஜாதகனுடைய தாயும் மனத்தில் சஞ்சலம் கொண்டு, மகா புண்ணியதலமாகிய சேதுவுக்குச் சென்று வாழ்ந்து மரண மடைந்தாள். மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் ஜாதகனுடைய தாயாகப் பிறந்தாள். கடைக்காரனுடைய சாபம் இப்பிறவிலும் தொடர்ந்தது. ஜாதகனுடைய ஆரும் வயதில் தாய் தன் கணவனை இழப்பாள்.

## தீராத சாபம்

19, செயமுனி சொல்லு கின்றார் தேவிமுன் சென்மந் [தன்னில்
நயமுள சேது சென்று நாயகி வந்த தாலே
வியமான வினை நீங் காதோ விளம்புவீர் முனியே நீர்தாம்
பயமிலா மஞ்சள் சாபம் பகரொணுச் சாந்தி தானும்.

19. ஜய முனிவர் இடையில் வினவுகின்றார். ஜாதகனுடைய தாய் முற் பிறவியில் சேதுவுக்குச் சென்று நீராடி வந்ததால் முற்பிறப்புத் தீவினை விலகாதோ? சொல்லுங்கள், முனிவரே! தாங்கள் என்று கேட்க, மற்ற முனிவர் பதில் உரைக்கின்றனர். மஞ்சள் திருடிய சாபம் தீரச் சாந்தி கூற முடியாது. பயமில்லாமல் சொல்லுகின்றோம்.

## தாயின் மறுபிறவி

20. வந்தது வந்தே தீரும் வரும்துணை தோஷ மெய்தும்
தன்னில்லம் பாழ தாகும் சஞ்சல மனமாய் வாழ்வள்
பிந்திய சென்மம் சொல்வேன் பிருதிவி தலத்தி லேதான்
சந்ததம் சைவச் சேயாய்ச் செனிப்பளா மென்று [சொல்வோம்.

20. வந்தது வந்தே திரும். அதனால் அவளுக்குச் சகோதர தோஷமும் ஏற்படும். தான் பிறந்த வீடு பாழடையும். அலைபாயும் மனத்துடன் வாழ்ந்து வருவாள். தாயின் மறுபிறவியைச் சொல்லுகின்றோம். உயர்ந்த தலமாகிய காஞ்சீபுரத்தில் ஒரு நல்ல சைவ குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய திருமணக்காலம்

21. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பதினுருண்டில்
சாலவே மாமன் புத்திரி தங்கிடு மென்று சொல்வோம்
சீலியாம் விரத மேற்பள் செனவுப காரி யாவள்
பால்பாக்ய முடைய ளாகும் பண்போருக் கன்ன மீவள்.

21. ஜாதகனுடைய திருமணக் காலத்தை கூறுகின்ரேம். அவனுடைய பதினுரும் வயதில் தன் மாமனுடைய மகளேயே மணப்பான் என்று கூறுகின்ரேம். ஜாதகனுடைய மனைவி, நல்லொழுக்கமுள்ளவள். நோன்புகளே ஏற்று நடப்பவள். ஜனங்களுக்கு உபகாரம் செய்பவள். அவள் பால் பாக்ய முடையவள். பண்புள்ள பெரியோருக்கு அன்ன மளிப்பவள்.

## மனைவியின் இயல்புகள்

22. சுகமுள வார்த்தை சொல்வள் சுந்தரி யோக சாலி
பகையென்று மனத்தில் வையாள் பாவைக்கு வயது [தீர்க்கம்
தகமையாய்ப் பிருகு சொல்வார் சத்தமம் ராகு [நிற்க
நகைமதி முகத்தா ளிரண்டு நவிலுவோம் பால னுக்கு.

22, சுகமுள்ள வார்த்தைகளைப் பேசுபவள். அதிருஷ்ட முடையவள். அழகுள்ளவள். விரோதத்தைப் பாராட்டாதவள். நீண்ட ஆயுள் உள்ளவள். பொருத்தமாகப் பிருகு முனிவர் கூறுகின்ருர், ஏழாமிடமாகிய மீனத்தில் ராகு இருப்பதால் சந்திரனைப் போன்று அழகிய முகத்தை யுடைய மனைவிகள் இருவருண்டு இந்த ஜாதகனுக்கு என்ருர்.

## அகத்தியரின் மறுப்பு

23. தென்முனி புகலு கின்ருர் செப்பொணு தந்த வார்த்தை
தன்மகன் மாதி கூடி சப்தமம் தன்னைப் பார்க்க
கன்னிகை யொன்றே தீர்க்கம் கழறுெணு வேறு மாது
உன்னதத் தவங்கள் செய்யும் உத்தமி கேட்டி டாயே.

23. அகத்திய முனிவர் கூறுகின்ருர். அவ்விதம் தோஷமுண்டு என்று சொல்லக் கூடாது. புதன் கன்னியில் இருந்து கொண்டு ஏழாமிடத்தைப் பார்ப்பதால் ஜாதகனுக்கு மனைவி ஒருத்தியே என்ரேம். இரண்டாம் மனைவி வர இடமில்லை. உயர்ந்த தவங்களை இயற்றும் தேவியே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

24. புத்திர விருத்தி தன்னைப் புகலுவோ மாண்பா லொன்று
சத்தியு மிரண்டு வென்றோம் சாற்றிய மூன்றும் தீர்க்கம்
குத்தமா மூன்று தானும் கூறுவோம் பால னுக்கு
அத்தியைப் பெற்ற மாதே அறைகிறோ மிவனின்
[பூரவம்.

24. புத்திர விருத்தியைச் சொல்லுகின்றோம். புத்திரன் ஒருவனும் புத்திரிகள் இருவரும் உண்டு என்றும், அவர்கள் தீர்க்கசீவிகளாக இருப்பர் என்றும் சொல்லுகின்றோம். ஆனால் மூன்று குழந்தைகள் ஜாதகனுக்குப் பிறந்து இறந்து போகும். விநாயகனைப் பெற்ற தேவியே! இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம்.

## முற்பிறவித் தீவினை

25. கொங்கு நாடதனி லேதான் குதித்தனன் சேடர் வமிசம்
பாங்கியு மதலை யுண்டாய் பலவித செட்டுச் செய்து
ஆங்கவன் வாழு நாளில் அணுகிய வினையைக்
[கேண்மோ
தீங்காக மறையோ ருக்குச் செப்பினன் கட்டு வார்த்தை.

25. கொங்கு நாட்டில் சேடர் வமிசத்தில் ஜாதகன் முற்பிறவியில் தோன்றி, மனைவி மக்களைப் பெற்றுப் பலவிதமான வர்த்தகம் புரிந்து வந்தான். அங்ஙனம் அவன் வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். அந்தணர் சிலருக்குத் துன்பம் தரும்படியான பொய்யைச் சொல்லி விட்டான். (பொய்ச் சாட்சி சொன்னான்).

## அந்தணர் சாபம்

26. சொல்லினல் துன்ப முண்டாய்ச் செப்புவர் சாபம்
[தானும்
இல்லாத வார்த்தை சொல்லி எனக்கவ மானம் செய்த
புல்லிய பாவிக் கேதான் பின்வருஞ் சென்மந் தன்னில்
நில்லாது துணைவர் தானும் நேமியில் வறுமை யாக;

26. இவனுடைய வார்த்தையினல் துன்புற்ற அந்தணர்கள் சாபமிட்டனர். எங்கள் மீது இல்லாததும் பொல்லாததுமான வார்த்தைகளைக் கூறி எங்களுக்கு அவமானம் ஏற்படும்படி செய்த அற்ப குணமுள்ள பாவிக்கு அடுத்த பிறவியில் சகோதரர் நிலையில்லாமல் இறந்து, உலகில் வறுமையுடன்;

27. உய்குவா யென்று சொல்லி உரைத்தனர் மறையோர்
[தானும்
ஐயமா யந்தத் தோஷ மணுகிற்று பால னுக்கு
தையலு மரண மாகிச் சஞ்சல மனத்த னாகி
மெய்தனில் பிணியும் கண்டு மேவினான் கால னூடு.

27. வாழ்ந்து வருவாய் என்று கூறி விட்டனர் அந்த அந்தணர்கள். சந்தேகமில்லாமல் அந்தத் தோஷம் ஜாதகனைப் பற்றியது. அப்பிறவியில் மனைவியை இழந்து, சஞ்சலமான மனத்துடன் உடலில் நோய் ஏற்பட்டு உலகில் கவனிக்க ஆளின்றி துன்புற்று இறந்தான்.

## அந்தணர் சாபத்தின் பலன்

28. சிரநான்கோன் வரையப் பட்டுச் செனித்தவ னிவனே
[யென்றோம்
உறைந்திடு மறையோர் சாப முடன்துணை காணா
[தாகும்
குறைந்திடும் தனமு மென்றோம் குலமது நசிக்கு
[மென்றோம்
அறம்தனை வளர்க்கு மெங்க ளாத்துமத் தாயே கேளாய்.

28. மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தவன் இந்த ஜாதகன் என்றோம். அந்தணருடைய சாபம் இப்பிறவிலும் தொடரும். அதனால் உடன் பிறந்தவரில்லாதவனாவான். தன்னுடைய செல்வமும் குறைந்து தன் குலமும் அழிந்து போகும். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

## தாயின் மரணமும் ஜாதகனுடைய மரணக்காலமும்

29. ஆருறு வொன்று வாண்டி லன்னைக்குக் கண்ட மெய்தும்
தீரமாய்ச் சாத கர்க்குச் செப்புவோ மன்பா னேழில்
பார்த மாதம் தன்னில் பகருவோம் மார கங்கள்
வேறொரு சென்மம் சொல்வேன் வித்தகி கேட்டி டாயே.

29. ஜாதகனுடைய முப்பத்தேழாம் வயதில் அவனுடைய தாய் மரண மடைவாள். ஐம்பத்தேழாம் வயதில் ஜாதகன் மரண மடைவான் என்றும் கூறுகின்றோம். இனி ஜாதகனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய மறுபிறவி

30. ஆலங்கா டதற்குக் கீழ்பால் அணுகிய சிறுவூர் தன்னில்
சாலவே கங்கை சேயாய் செனிப்பனு மென்று
[சொல்வோம்

சீலவான் பூமி விருத்தி சிறப்புள குடும்ப மேற்பன்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தது தப்பா வாமே.

30. திருவாலங் காட்டிற்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில் வேளாள் குலத்தவனாகப் பிறப்பான் என்று கூறுகின்றோம். நல்லொழுக்கமுள்ளவன், விளைநிலங்களைப் பெருக்கி, சிறப்புள்ள குடும்பத்தை அடைவான். உலகின் நன்மைக்காக பாற் கடலில் உதித்த ஆலகால விஷத்தை யுண்ட நீலகண்டனின் தேவியே! நாங்கள் கூறியவை தவறா.

## பொது விவரம்

31. வந்தவன் யோகச் சேதி வரைகிறோ மினிமே லாகத்
தந்தையின் தொழிலைச் செய்வன் செகராசர் பேட்டி
[கொள்வன்
இந்தவன் ஐந்து கர்மம் எளிதினில் செய்வா னாகும்
சந்ததம் விபரம் சொல்வாய் சங்கரி கேட்டி டாயே.

81. ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றோம். இவன் தன் தந்தையின் தொழிலையே செய்து வருவான். அரசரைப் பேட்டி காணும் வாய்ப்புள்ளவன். ஜாதகன் ஐந்து பேருக்கு இறுதிக் கடன்கள் செய்வான் என்றோம். அந்த விவரத்தைச் சொல்லுங்கள். பார்வதியே! கேளுங்கள்.

## ஜாதகன் செய்யும் கர்மங்கள்

32. தந்தைதாய் சிறியதந்தை தாயவர்க் கிரண்டு பேர்கள்
அன்னையின் தாய்க்குக் கர்மம் செய்வனா னென்று
[சொல்வோம்
எந்தக்கா லத்தில் ராசர் பேட்டியும் தொழிலும் வாய்க்கும்
அந்ததோர் சேதி சொல்வீர் அம்பிகை யாளே கேளாய்.

32. ஜாதகன், தன் தந்தை, தாய், சிறியதந்தை, சிறியதாய் இவர்களுக்கும் தாயின் தாயாருக்கும் (ஆகிய ஐவருக்கும்) இறுதிக் கடன் செய்வான் என்று சொல்லுகின்றோம். அம்பிகை கேட்கலானாள் "எந்தக் காலத்தில் அரசருடைய பேட்டி கிட்டும் உயர்ந்த தொழிலும் வரும்" அந்த விவரத்தைச் சொல்லுகின்றோம் தாயே! கேளுங்கள்.

## பாட்டியாரின் மரணகாலம்

33. ஈரொன்ப தாண்டு தன்னி லெய்திடும் கணக்கு வேலை
மாறிடா திந்த வார்த்தை அன்னைக்கு அன்னை கண்டம்
கூறுவோம் பதினே மூாண்டில் குறித்தது தப்பா தாகும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

33. ஜாதகனுடைய பதினெட்டாம் வயதில் அவனுக்குக் கணக்கன் வேலை கிட்டும். நாங்கள் கூறியவை தவறு, அவனுடைய பதினேழாம் வயதில் பாட்டியார் (அன்னையின் அன்னை) இறந்து விடுவாள். நாங்கள் சொல்லிய வார்த்தைகள் பொய்யாகா. ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே! கேளுங்கள்.

## ஜனனகால தசை

34. உதித்திடு காலந் தன்னி லோணத்தின் கடையாம் [பாதம்
மதிதசை யாண்டி ரண்டு மறைந்தனம் பால னுக்கு
இதுபூர்வ பாகம் சொன்னே மியம்புவோம் பின்பால் [சேதி
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

34. ஜாதகன் ஜனிக்கும் போது திருவோண நட்சத்திரத்தில் நான்காம் பாதம் நடைபெறும். சந்திர மகா தசையில் கர்ப்பச் செல்லுபோக மீதியிருப்பு இரண்டு ஆண்டுகள் என்றோம். இதுவரை முதல் பாகம் கூறியுள்ளோம். பிற்பாகத்தில் மற்ற விவரங்களைச் சொல்லுவோம். கதியற்றவரைக் காத்தருளும் தேவியே! கேட்பீராக. —V. R. N.

---

# ஜாதகம் 66

## ஜனனகால கிரகநிலை

1. *[1]மதியும் ராகு [2]சீய முற*
*[3]மாலும் [4]புகரும் தனுசி லுற*
*[5]விதியன் கேது [6]சேய் [7]சாடி*
*[8]வெய்யோன் [9]மானில் குரு [10]நந்தி*
*[11]பதியும் கன்னி பலனெவ் வாறு*
*பகர்வீர் முனியே விபர மதாய்*
*இதுவே யாண்பால் செனன முறும்*
*இல்லம் வடதென் வீதி யதே.*

1. சந்திரன் ராகு சிம்மத்திலும், புதன் சுக்கிரன் தனுசிலும், சனி கேது, அங்காரகன் கும்பத்திலும், சூரியன் மகரத்திலும், குரு ரிஷபத்திலும் இருக்க, பிறந்த லக்கினம் கன்னியாக இருந்தால் ஏற்படும் பலனைக் கூறுங்கள் விவரமாக, என்று பார்வதிதேவி வினவ, முனிவர் பதில் கூறுகின்றார். அவன் பிறந்த வீடு தெற்கு வடக்கான தெருவில் உள்ளது.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| சனி கேது அங்காரகன் | இராசி சக்கரம் | | |
| சூரியன் | | | சந்திரன் ராகு |
| புதன் சுக்கிரன் | | | லக்கினம் |

---

1. சந்திரன்
2. சிம்மம்
3. புதன்
4. சுக்கிரன்
5. சனி
6. அங்காரகன்
7. கும்பம்
8. சூரியன்
9. மகரம்
10. ரிஷபம்
11. இலக்கினம்

## ஜாதகன் பிறந்த வீட்டின் நிலை

2. அதுவே மேல்பால் நோக்க முறும்
ஆனை முகத்தோன் மால் தென்மேல்
மதியை யணிந்தோன் காளி தென்கீழ்
மாரி வடக்குச் சிறு வூராம்
பதியும் கூரை வடுகர் குலம்
பிறப்பா னிரண்டாஞ் செனன முமாய்
அதிபன் குடும்பச் சேதி தன்னை
அறிவிப்போமே யிந்நூலில்.

2. அவ்வீடு மேற்கு நோக்கிய வாயிலை யுடையது. யானை முகக் கடவுளாகிய விநாயகக் கடவுள், திருமால் ஆகிய இருவரும் தென் மேற்கில் கோயில் கொண்டுள்ளனர். சந்திரனைத் திருமுடியில் அணிந்துள்ள சிவ பெருமானின் ஆலயமும் காளி கோவிலும் தென் கிழக்கில் உள்ளன. வடக்கில் மாரியம்மன் உள்ள ஒரு சிறுவூராகும். அவ்வூரில் ஜாதகன் ஒரு கூரை வீட்டில் வன்னிய குலத்தவனாகப் பிறந்தவன் என்றோம். அவன் தந்தைக்கு இரண்டாம் புத்திரனாகப் பிறந்தவன் என்றோம். இனி ஜாதகனுடைய குடும்பச் செய்தியை இந்தச் சோதிட நூலில் சொல்லுகின்றோம்.

## தந்தையின் சகோதரபாவம்

3. தந்தை துணைகள் நவம தனில்
தங்கு மாண்பால் திருதியமு மாய்
பிந்திய பாக மவர் சேதி
பேசு வோமே பேதை யரே
வந்தோன் தந்தை குணங் கேளாய்
மாலே நிறத்தான் வாத மெய்யன்
சிந்தை மர்ம மில்லா தான்
சேரா தென்றோம் பிது ராஸ்தி.

3. ஜாதகனுடைய தந்தையின் சகோதரர் ஒன்பது பேராவர். அவர்களில் மூவர் மட்டும் நிலையானவர். அவர்களுடைய விவரங்களைப் பிற்பாதியில் சொல்லுகின்றோம். தாயே/ இனி, தந்தையின் குணங்களைக் கூறுகின்றோம். கேளுங்கள். திருமாலைப் போன்ற கரிய நிறமுடையவன். வாயு ரோக முடையவன். மனத்தில் ரகசியமில்லாதவன். தன் தந்தையின் ஆஸ்தியைப் பெறுதவன்.

## தந்தையின் விவரங்கள்

4. தரணி விருத்தி செய் திடுவன்
சாரா ளுடையன் வறுமை யிலான்
பறைபள் ளுக்கு முடைய வனும்
பதரில் செல்லான் பலர்க் கிஷ்டன்

பொறுமை குணமும் பின் பூமி
பெறுவன் வறுமை யில்லா தான்
அரிவைக் கிஷ்டன் ஆவு விருத்தி
அன்னம் குறைவு மில்லா தான்.

4. விளை நிலங்களில் உற்பத்தி செய்து விளைச்சலைப் பெருக்குவான். ஏவலாட்கள் உள்ளவன். தரித்திரம் இல்லாதவன். அற்ப காரியங்கள் செய்யாதவன். பலபேருக்குப் பிரியமானவன். பொறுமைக் குணம் உள்ளவன். பிற்காலத்தில் பூமியைப் பெறுவான். தரித்திரமில்லாதவன். மனைவிக்குப் பிரியமானவன். பசுக்களின்பெருக்கத்தை யுடையவன். சாப்பாட்டுக்கு ஒரு குறையுமில்லாதவன்.

## தந்தையின் முற்பிறவி

5. கல்வி யதிகம் காணுத தான்
கருதான் கட்டு வார்த்தை களை
சொல்வேன் பூர்வம் மலை நாட்டில்
துருக்கர் குலத்தில் தானு தித்து
எல்லை விருத்தி தான் செய்து
எழிலாய்க் குடும்பி தாளுக
வல்லன் வாழ்நாள் வினை சொல்வேன்
மறையோர்க் கிடைஞ்சல் தான் செய்தான்.

5. கல்வியறிவு அதிகமில்லாதவன். வார்த்தைகளைப் புனைந்து பேசாதவன் (பொய் பேசாதவன்). இனி, ஜாதனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்ருேம். மலை நாட்டில் முகம்மதியர் வமிசத்தில் தோன்றி, விளைநிலங்களைப் பெருக்கி செழிப்புள்ள குடும்பத்தை யடைந்து வாழ்ந்து வந்த காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்ருேம். அந்தணர்கட்குத் துன்பம் விளைவித்தான்.

## அந்தணர் சாபம்

### வேறு

6. மறையவர் புகலும் சாபத்தைக் கேண்மோ
வரும்பிது ராஸ்திக ளின்றி
அரிவையாம் துணையு மிலாமலே வாழ்வாய்
அடையாது தந்தையூ ரென்ருேம்
உரைத்ததுமே சென்ருர் உரைந்தது சாபம்
உத்தம னந்தியந் தன்னில்
குறையோர்க்குத் தாகமு மன்னமும் தந்து
கூற்றன்தன் பதிக்குமே சென்று.

6. அந்தணர்கூறிய சாபத்தைக் கேளுங்கள். "இனி ஏற்படும் மறு பிறவியில் தந்தையால் சம்பாதிக்கப்பட்ட பொருள் இல்லாமலும் உடன் பிறந்தவரில்லாமலும் வாழ்ந்துவருவாய். தந்தையின் ஊரில் கூட நீ வாழமாட்டாய், என்று கூறிவிட்டுச் சென்றனர். அந்தச் சாபம் இந்த ஜாதகனுடைய தந்தையைப் பற்றியது. அவனும் தன் இறுதிக் காலத்தில் ஏழைகளுக்கு பசிக்கு உணவும், தாகத்துக்கு நீரும் கொடுத்து, பிறகு இறந்து;

## வேறு

7. வந்தவ னென்று சொல்வோம் மருவிடு முன்னூழ் சாபம்
தன்தந்தை யில்லம் பூமி தங்காது வேறூர் செல்வன்
இந்ததோர் குணத்தா னுக்கு இப்பால னுதிப்பா னும்
அந்தவன் குணத்தைச் சொல்வே னழகுளான் மானி
[றத்தன்

7. இப்பிறவியில் ஜாதகனுடைய தந்தையாகப் பிறந்தவன் என்றோம், முற்பிறவித் தீவினை ஏற்பட்டது. தன்னுடைய தந்தையின் வீடு, நிலங்களை அடையாமல் வேற்று ஊருக்குச் சென்று வாழ்ந்துவருவான். இவ்வித குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். இனி அவனுடைய் குணங்களைக் கூறுகின்றோம். அழகுள்ளவன், மாநிறமுடையவன்.

## ஜாதகனுடைய விபரங்கள்

8. கல்விமா னீகை யாளன் காலாட்க ளுடைய னும்
சொல்லதைக் காப்பா னும் தொல்புவி சேர்ப்பா னும்
வல்லியர் மோக னவன் மர்மமில் லாதா னும்
தொல்லைக ளேற்கா னும் துறவோர்கள் நேசம்
[கொள்ளான்

8. கல்வியறிவுடையவன். கொடுக்கும் குணமுள்ளவன். ஏவலாட்கள் உடையவன். சொன்ன சொற்களின்படி நடப்பவன். விளை நிலங்களைச் சேர்ப்பான். பெண்களின்மீது மையல் கொள்ளுபவன். இரகசியமில்லாதவன், துன்பங்களடையாதவன். துறவிகள், பெரியோர்களுடையவும் நட்புக் கொள்ளாதவன்.

## இதுவுமது

9. அஞ்சிடான் யாவ ருக்கும் அழகான குடும்ப மேற்பன்
வஞ்சனை யொருவர்க் கெண்ணான் மாடுகள் பணையோர்
[விருத்தி
தஞ்சமென் றோரைக் காப்பன் சகடுவா கனமு முள்ளான்
வெஞ்சினம் வெளிக்காட் டாதான் வீண்வம்பு புகலா
[னும்.

9. ஒருவருக்கும் பயப்படாதவன். அழகுள்ள குடும்பத்தை அடைவான். ஒருவருக்கும் தீங்குகளிழைக்க மனமொப்பாதவன். பண்ணையாட்கள் ஏர், மாடுகள் முதலியவற்றின் பெருக்கத்தையுடையவன். அபயம் என்று வந்தவர்கட்கு அன்புடன் ஆதரவு அளிப்பவன். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். தன்னுடைய கோபத்தைப் பிறரிடம் காட்டாத தவன் வீண் வம்பு பேசாதவன்.

## ஜாதகனுடைய சகோதர பாவம்

10. தன்துணை யாண்பா லிரண்டு தங்கிடும் கன்னி யவ்வார்
இந்தவாறு விருத்தி யென்றே மியம்புவோம் பின்பால் [சேதி
அன்னையின் குணத்தைச் சொல்வேன் ஆனையின் [நிறத்த ளாகும்
தன்மனம் கபடு மில்லாள் சாந்தவா ளென்று [சொல்வோம்.

10. ஜாதகனுக்கு இரு சகோதரரும் இரு சகோதரிகளும் தோன்றுவார். அவர்களின் விவரத்தைப் பற்றிப் பின்பாகத்தில் சொல்லுகின்றேம். இனி தாயின் குணத்தைக் கூறுகின்றேம். யானையைப் போன்ற கரியநிறமுடையவள். கபடமில்லாத மனத்தினள். பொறுமைசாலி என்று சொல்லுகின்றேம்,

11. வருவோரை யாத ரிப்பள் வளமுள குடும்பி யாவள்
குறையென்றோர்க் குதவி செய்வள் கொடுமையை [யெவர்க்கு மெண்ணாள்
மர்மத்தை வெளியி டாதாள் மாதுரு லில்லம் கீழ்பால்
பொறைசொலா ளடக்க வார்த்தை பூவையும் தீர்க்க [சீவி.

11. அண்டி வந்தவரை ஆதரிப்பாள். செழிப்பான குடும்பமுள்ளவள், கஷ்டம் என்று வந்து யாசித்தவர்கட்கு உபகாரம் செய்பவள். ஒருவருக்கும் தீங்குகளிழைக்க மனமில்லாதவள் தன்னுடைய ரகசியத்தை வெளியிடாதவள், தாயின் வீடு கிழக்குப்பக்கததில் உள்ளது. கோட் சொல்லாதவள். அடக்கமாகப் பேசுபவள். அவள் நீண்ட ஆயுள் உள்ளவள்.

## தாயின் சகோதர பாவம்

12. அவள்துணை யாண்பா லிரண்டு அரிவையர் மூவ ராகும்
தவசியே சுகமாய் வாழ்வர் சாற்றுவோம் பின்பால் சேதி
இவளுடை முன்சென் மத்தை இயம்புவோம் மிலங்கைத் [தீவில்
பவமிலாக் கங்கை சேயாய் பிறந்துமே வறுமை யின்றி.

12. தாயின் சகோதரபாவத்தைக் கூறுகின்றோம். இரு சகோதரர் களும் மூன்று சகோதரிகளும் உள்ளவள். அவர்கள் சௌக்கியமாக வாழ்ந்துவருவார்கள், அவ்விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். இனி, தாயின் முற்பிறவைச் சொல்லுகின்றோம், இலங்கைத் தீவில் பாவங் களில்லாத வேளாள குலத்தில் பிறந்து, ஏழைமையின்றி;

## தாயின் முற்பிறவி

13. மைந்தர்க ளதிக முண்டாய் மாதுவும் சேது சென்று
நொந்தவர்க் கன்ன மீந்து நிமலியு மரண மாகி
முந்திஞேன் வரையப் பட்டு முதித்தன ளென்று [சொல்வோம்
அந்தவள் சுகமாய் வாழ்வள் அம்பிகை யாளே கேளாய்.

13, புத்திர பாக்கியம் அதிகமாகப் பெற்று, பிறகு சேதுவுக்குச் சென்று அங்கு துன்புற்ற ஏழைகளுக்கு உணவு அளித்து வாழ்ந்து, பிறகு மரண மடைந்து, பிரமதேவனுல் படைக்கப்பட்டுப் பிறந்தவள் (ஜாதகன் தாய்) என்று சொன்னேம், அவள் சௌக்கியமாய் வாழ்ந்துவருவாள், தாயே! கேளுங்கள்,

## தாயின் மறுபிறவி

14. பின்சென்மம் வேங்க டத்தில் பிறப்பளாம் ரெட்டி வம்சம்
பொன்பொரு ளுடைய ளாகிப் பேதையும் வாழ்வா ளாகும்
கன்மகா லங்கள் தன்னைக் கழறுவீர் முனியே நீர்தாம்
அன்னைக்கு முப்பா னெட்டில் ஆனிமா தத்தில் [கெண்டம்.

14. மறுபிறவியில் திருப்பதியில் ரெட்டியார் மரபில் தோன்றி, பொன் செல்வம் இவற்றினைப் பெற்று வாழ்ந்து வருவாள். "அவளுடைய இறுதிக் காலத்தைப்பற்றிக் கூறுங்கள்", முனிவர் கூறுகின்றனர், ஜாதகருடைய முப்பத்தெட்டாம் வயதில் தாய் மரணமடைவாள்.

## தந்தையின் மரண காலம்

15. இருபது வேழு வாண்டி லிடபமா தத்தி லேதான்
மருவிடும் தந்தை கெண்டம் வரும்சென்மம் புகலக் [கேண்மோ
நரசிம்மம் வாழு நாட்டில் நல்குவன் மறைக்கு லத்தில்
திருமக னிச்சென் மத்தில் செய்தபுண் ணியங்க ளென்ன

15. ஜாதகனுடைய இருபத்தேழாம் வயதில் வைகாசி மாதத்தில் தந்தை மரணமடைவார், அடுத்த பிறவியைக் கேளுங்கள், நரசிம்மன்

கோயில் கொண்டுள்ள ஓர் ஊரில் (சோளிங்கபுரம், சிங்கப்பெருமாள் கோவில்) அந்தண குலத்தவனுகப் பிறப்பான். ஜாதகன் தந்தை இப்பிறவியில் (வன்னியகுலத்தில் தோன்றியவன்) அடுத்த பிறவியில் அந்தணனுகத் தோன்றும் காரணங்களென்ன ?

## குலம் உயர்வாகப் பிறக்கக் காரணம்

16. வஞ்சனை யில்லாத் தாலும் வருவோரை யாத ரித்தும்
வெஞ்சினம் வெளிக்காட் டாமல் விகடவார்த் தைகளு
[மின்றி
மிஞ்சின தலங்கள் சென்று வித்தகன் வாழ்வ தாலே
கஞ்சத்தி லுதித்தோன் வம்சம் கலப்பனு மென்று
[சொல்வோம்.

16. ஒருவருக்கும் வஞ்சனை செய்யாமலும் அண்டி வந்தவரை ஆத ரித்தும் ,தன்னுடைய கோபத்தை அனுவசியமாகப் பிறரிடம் காட்டாமலும் அடாவடியாகப் பேசாமலும் வாழ்ந்து வந்து பல புண்ணியத் தலங்களுக் குச் சென்று ஜாதகனுடைய தந்தை வசித்துவருவதால் அவன், தாமரைப் புஷ்பத்தில் வசித்துவரும் பிரும்மதேவனின் வமிசத்தில் பிறப்பான் என்று சொன்னேம்.

## ஜாதகனுடைய திருமணக் காலம்

17. மைந்தனின் மணத்தைச் சொல்வேன் அறுமூன்று
[ஆண்டு தன்னில்
பைந்தொடி யன்னை வர்க்கம் பரவுவாள் கீழ்ப்பால்
[தன்னில்
அந்தவள் குணமெவ் வாறு அழகுளா ளிருநி றத்தாள்
செந்திரு மகளை யொப்பாள் சிறப்பான குடும்பி யாவள்.

17. இனி, ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்ருேம் அவனுடைய பதினெட்டாம் வயதில் அவனுடைய தாயின் வமிசத்தில் பிறந்த பெண்ணை மணப்பான். அவள் வீடு இவனுடைய வீட்டுக்குக் கிழக் கில் உள்ளது. அவளுடைய குணம் எப்படி என்று சொல்லுங்கள். அழ குள்ளவள், இருநிறமுடையவள். அழகில் இலக்குமி போன்று விளங்குவாள். சிறப்புள்ள குடும்பத்தை யுடையவள்.

## மனைவியின் இயல்புகள்

18. பொறுமையும் பெருமை யேற்பள் புண்ணிய மனத்த
[ளாகும்
நரைமல ரிஷ்டம் கொள்வள் நற்புத்தி அடக்க வார்த்தை

மர்மமில் லாதா ளாகும் வஞ்சனை யொருவர்க்

[கெண்ணுள்

வரன்மனம் ஒத்து வாழ்வள் மாதுவும் தீர்க்க சீவி.

18. பொறுமையுடையவள். பெருமை அடைவாள். புண்ணிய மான மனமுள்ளவள். வாசனைப் புஷ்பங்களின்மீது விருப்பம் கொள்ளுவாள். நல்ல புத்தியும் அடக்கமான வார்த்தையும் பேசுபவள். இரகசியமில்லாத வள். ஒருவருக்கும் வஞ்சனை எண்ணுதவள். தன் கணவன் மனம்போல் வாழ்ந்துவருவாள். அவள் நீண்ட ஆயுளுள்ளவள்.

## புத்திர பாவம்

19. சுதர்களு மாண்பா லிரண்டு தோகையு மொன்று தீர்க்கம்
பதராகும் முதலில் புத்திரர் பகருவீ ரந்தச் சங்கை
புதல்வர்தா னத்தில் பானு பொருந்திய ஐந்தோ ணுறில்
குதர்க்கமா யிருப்ப தாலே கூறினே மந்தச் சங்கை.

19. ஜாதகனுக்கு இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் நீண்ட ஆயுளுள் ளவர்கள். முதலில் தோன்றும் புத்திரர் இறந்துவிடுவார். அதற்குக் கார ணம் சொல்லுங்கள். முனிவரே! புத்திரஸ்தானமாகிய ஐந்தாமிடத்தில் மகரத்தில் சூரியன் இருப்பதாலும், அவ்வீட்டுக்குரிய சனி ஆறுமிடத்தி லிருப்பதாலும் நாங்கள் அவ்விதம் சொன்னேம்.

## ஜாதகனுடைய முற்பிறவி

20. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறேம் திருவா ரூரில்
வன்னிய குலமு தித்து மனைவிமைந் தருமுண் டாகி
அன்னவன் கிருஷி செய்து அருமறைத் தொண்டு

[பூண்டு

உன்னத சேது சென்று உரங்கினேர்க் கன்ன மீந்து;

20. இனி, ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றேம். அவன் திருவாரூரில் வன்னியகுலத்தில் பிறந்து, மனைவி மக்களைப்பெற்று விவசாயம் செய்து வந்து, அரிய வேத முணர்ந்தவர்கட்குத் தொண்டுகள் பல செய்து, உயர்ந்த சேதுவுக்குச் சென்று, பசித்தவர்கட்கு உணவு அளித்து;

21. வினையேது மில்லா னுகி மேவினன் கால னுடு
கனமுள பிரமன் லக்கம் கலப்பனு மிக் குலத்தில்
சினமிலா விவனின் யோகம் செப்புவோ முனியே கேளும்
தினகரன் பேர்க்கு டும்பம் சேத்திரம் செய்வா னுகும்.

21. வேறு தீவினைகள் இல்லாமல் மரணமடைந்தான். பிறகு பிரமதேவ னுல் படைக்கப்பட்டு வன்னியகுலத்தில் பிறப்பான். இனி ஜாதகனுடைய

யோக வரலாற்றைக் கூறுகின்றோம். முனிவரே! கேளுங்கள். சூரியன் போல் குடும்பமுள்ளவன். வீடுகட்டுவான்.

## சொத்துக்கள் சேரும் காலங்கள்

22 இரண்டாண்டுள் வெறூர் பூமி ஏகிடும் தனமும் நேரும்
மறுபடி நாலா மாண்டில் மருவிடும் வடபால் பூமி
திருகிலா வைந்தா மாண்டில் சேத்திரம் செய்த லுண்டு
தரையது மூவூர் சேர்ப்பன் தன்பந்து மதிக்க வாழ்வன்.

22. ஜாதகன் பிறந்து இருவருடங்களில் வேற்று ஊரிலிருந்து பூமி, செல்வம் இவை இவனுக்கு வந்துசேரும். மறுபடியும் நான்காம் வயதில் வடக்குப் பக்கத்தில் நிலங்கள் கிட்டும். ஐந்தாம் வயதில் வீடுகட்டும் நிலை ஏற்படும். மூன்று ஊர்களில் பூமியும் கிடைக்கப்பெற்று, தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

23. ஆதவன் தசையி லேதான் அவனில்லம் வேற தாகும்
ஒதுவேன் பாகம் நான்காம் உயர்வான குடும்ப
[மென்றோம்
போதன முடையா னுகும் பூமியில் சல்லியம் காணுன்
சாதகன் தனக்கு யோகம் சார்ந்தகா ரணங்கள்
சொல்வாய்.

23. சூரிய மகாதசையில் அவன் வேறு வீட்டுக்குச் செல்லுதல் நேரும். இவனுடைய வீடு நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்படும். ஆனுல் குடும்பம் உயர்ந்ததாகவே இருக்கும். பெரிய தனம் படைத்தவனுக இருப்பான். உலகில் கடனுபத்ரவமடையாதவன். ஜாதகனுக்கு யோகம் ஏற்படக் காரணங்கள் என்னவெனக் கூறுங்கள்.

## யோகமேற்பட கிரகநிலை

24. தர்மகர் மாதி யொன்ருய்ச் சார்ந்த தால்அது ஓர் யோகம்
இரவிக்கு யீருரில் வெள்ளி யிருப்பதால் வேசி யோகம்
குருவுக்கு நாலில் திங்கள் குலவினுல் கேசரி யோகம்
திருதிய யோகத்தாலே செப்புவோம் பலனைத் தானே.

24. தர்மகர்மாதிபதி ஒன்ருகச் சேர்ந்திருப்பதால் (ஒன்பதாமிடத்துக் குரிய சுக்கிரனும், பத்தாம் வீட்டுக்குரிய புதனும், கேந்திரஸ்தானமாகிய நான்காமிடத்தில் தனுசில் இருப்பதால்) யோகம் ஏற்படும் என்று சொல்லுகின்ரோம். தவிரவும், சூரியன் இருக்குமிடத்திலிருந்து பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் இருப்பதால் வேசி யோகம், குருவிருக்குமிடத்துக்கு நான்காமிடத்தில் சந்திரன் இருப்பதால் கேசரியோகம் ஆக மூன்று யோகங்கள் ஏற்படும் அவைகளின் பலன்களாவன.

## வேறு

25. சொல்லும் விசால நேத்திர மும்
துலங்குன் னதமாய்ச் சொரூ பனுமே
கல்வி யுளனாய்த் தனவா னாய்
கதித்த கீர்த்தி யுடையவனாய்
நல்ல குணமும் தருமனு மாய்
நாடும் கிரய விக்ரய மும்
வல்ல வனுமாய்ப் பலகாலம்
வஞ்சித திருப்பன் வஞ்சகனாய்.

25. இவனுடைய வார்த்தைகள் பெருந்தன்மை யுள்ளவை. கண்கள் பெரியனவாக இருக்கும். உயரமான சரீரத்தையும் கல்வியறிவையுமுடையவன். செல்வவான்,'ஏராளமான:புகழ் அடைவான். நற்குணமுள்ளவன். தருமசிந்தையுடையவன். பூமியை வாங்கி விற்பதில் சமர்த்தன். நீண்ட ஆயுள் கொண்டவன். வஞ்சனையுள்ள மனத்தினன்.

## பாட்டியாரின் மரணகாலம்

26. மானே யைந்தில் பிதா மகிக்கு
மருவும் கண்ட மென வுரைப்போம்
தேன்போல் மொழியும் செயம் செய்வன்
சிறப்பாய் வாழ்வன் தெள்ளமுதே
வானோர் பத்தி கொண்டிடுவன்
அரனின் தொண்டு தான் புரிவன்
ஈன ருறவு கொள்ளா தான்
இதிகா சங்கள் தானறிவான்.

26. மானைப்போன்று அழகிய விழிகளையுடையவளே! ஜாதகனுடைய ஐந்தாம் வயதில் அப்பனைப் பெற்ற பாட்டி இறந்துவிடுவாள் என்றோம். இனிய வார்த்தைகளைப் பேசுபவன். எடுத்த வேலைகளை வெற்றியுடன் முடித்துவைக்கும் ஆற்றல்பெற்றவன். சிறப்பாக வாழ்ந்துவருவான். தெளிந்த அமுதத்தைப் போன்றவளே! தெய்வபக்தி கொண்டவன். சிவபெருமானுக்குத் தொண்டு செய்து வருபவன். அற்பருறவு கொள்ளாதவன். இதிகாசங்களையும் புராணங்களையும் கற்றுணர்வான்,

## யோக பாவம்

## வேறு

27. உதித்தநாள் முதலேயாக உத்தமன் மரண மட்டும்
மதிபிறை போலே யோகம் மானிலம் சேர்த லுண்டு

ததிபாக்கியம் தானிய விருத்தி தனமது பெருக்க முண்டு
பதமுடன் வாழ்வா ருகும் பார்க்க நற்சோலை செய்வன்.

27. ஜாதகன் பிறந்தநாள் முதல் அவனுடைய மரணகாலம் வரையில் வளர்பிறைச் சந்திரன்போல் யோகம் பெருகும். விளைநிலங்கள் விருத்தியாகும். தயிர் பால் பெருகும். தானியங்கள் விளையும். செல்வம் அதிகமாகும். நல்ல பதவியுடன் வாழ்ந்துவருவான். கண்ணுக்கினிய அழகிய தோட்டங்கள் செய்துவருவான்.

## ஜாதகனுடைய மரணகாலம்

28. இன்னமும் விபர மாக வியம்புவோம் பின்பா கத்தில்
அன்பது ஒன்ப தாண்டில் ஆவணி மாதம் தன்னில்
பின்பக்கம் சஷ்டி தன்னில் புதல்வனி னுடலமேகும்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

28. இன்னும் விவரமாக இனி இரண்டாம்பாகத்தில் சொல்லுகின்ரேம்; ஜாதகன் தன் ஐம்பத்தொன்பதாம் வயதில் ஆவணி மாதத்தில் கிருஷ்ணபட்சம் சஷ்டியன்று மரணமடைவான். இனிய கரும்பைப்போன்ற சுவையுள்ள வார்த்தைகளைப் பேசும் தேவியே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய மறுபிறவி

29. மறுசென்மம் வான்மி யூரில் வருகுவான் சத்திரியச் [சேயாய்த்
திருமகன் செனன காலம் சுக்கிரன் தசையெட் [டாண்டும்
உறைந்திடும் திங்கள் நாலும் உரைத்தனம் பூர்வ பாகம்
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்.

29. ஜாதகன் மறுபிறவியில் திருவான்மியூரில் க்ஷத்திரிய குலத்தவனுகப் பிறப்பான். அவனுடைய ஜனன காலத்தில் சுக்கிர மகாதசையில் எட்டு வருடங்களும் நான்கு மாதங்களும் மீதமுள்ளன என்று முதல் பாகத்தில் சொன்னேம். அரிய வேதங்களின் முடிவில் கூறப்படும் தேவியே! கேளுங்கள்.

## ஜாதகம் 67

### ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் குருவும் [1]நந்தி சனிதுலாம் [2]சிகியும் கன்னி
[3]புந்தியு மிராகு மீனம் [4]புகர் [5]மானி [6]லிரவி [7]சாடி
[8]செந்தீயு [9]மேரு வாகச் சென்மமும் கன்னியாக
இந்தவாறு [10]கோளு நின்று லியம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் குரு விருஷபத்திலும், சனி துலாத்திலும் கேது கன்னியிலும், புதன் ராகு மீனத்திலும் சுக்கிரன் மகரத்திலும், சூரியன் கும்பத்திலும், அங்காரகன் தனுசிலுமாக நின்று பிறந்த லக்கினம் கனனியாகில் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| புதன் ராகு | | சந்திரன் குரு | |
| சூரியன் | இராசி சக்கரம் | | |
| சுக்கிரன் | | | |
| அங்காரகன் | | சனி | கேது லக்கினம் |

### ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளங்கள்

2. அம்பிகை கேட்கும் போது அத்திரி சொல்லு கின்றார்
செம்மையா யாண்பால் சென்மம் செனித்தயில் கீழ்மேல்
[வீதி

1. விருஷபம்
2. கேது
3. புதன்
4. சுக்கிரன்
5. மகரம்
6. சூரியன்
7. கும்பம்
8. அங்காரகன்
9. தனுசு
10. நவக்கிரகம்

தென்வாசல் வடபா லாறு தந்தியப் பனுமே மேற்கில்
அம்புலி அடைந்தோன் கோஷ்டம் அணுகிடு மருகி
[லேதான்

2. (என) பார்வதிதேவி கேட்கும்போது அத்திரி முனிவர் பதில் கூறுகின்றார். இந்த ஜாதகம் ஒரு ஆண்மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கியுள்ள வாயிலையுடையது. வடக்குப் பக்கத்தில் ஆறு ஒன்று ஓடும். விநாயகர் ஆலயம் ஒன்று மேற்கிலும் சந்திரனைத் திருமுடியில் அணிந்த சிவபெருமான் ஆலயம் சமீபத்தில் உள்ளது.

## ஜாதகனுடைய வீட்டு விவரம்

3. அக்கினி திக்கில் கன்னி அருகினில் நீர்சுனையு முண்டு
திக்கெலாம் புகழு மாரி சேவலங் கொடியோன் கீழ்பால்
மிக்கவே சிற்றூர் தன்னில் விளம்புமிவ் வடையா
[ளத்துள்
தக்கவே விஷ்ணு வமிசம் சாலியக் குலமு திப்பான்.

3. அக்கினி திக்கில் மாரியம்மன் கோவிலுண்டு. அருகில் நீர் சுனை ஒன்றிருக்கும். கிழக்குப் பக்கத்தில் புகழ் பெற்ற மாரியம்மன் கோவில் ஒன்றும், சேவற் கொடியோனாகிய சுப்பிரமணியக் கடவுளின் ஆலயமொன்றும் விளங்கியுள்ள மிகச் சிறிய ஊரில் நாங்கள் கூறிய அடையாளங்களுள்ள சிற்றூரில் விஷ்ணு வமிசத்தவனாக ஜாதகன் தோன்றுவான். குலத்தில் பிறந்தவன் சாலிய

4. தந்தையி னில்லம் தன்னில் சேஷ்டனா யுதிப்பா னாகும்
அன்னையின் தந்தை யோகம் அவன்துணை களத்திர
[புத்திரர்
வந்தவன் முன்பின் சென்மம் வரைகிறோ மிந்நூல்
[தன்னில்
கந்தனை யீன்ற மாதே கழறுவோம் கேட்டி டாயே.

4. ஜாதகனுடைய தந்தையின் வீட்டில் அவனுக்கு மூத்த புதல்வனாகப் பிறப்பான் என்றோம். இனி, தாய் தந்தையர், அவர்களின் யோகம், உடன் பிறந்தவர், மனைவி, மக்கள் அவர்களின் முற்பிறவி, மறுபிறவி ஆகியவற்றை இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம். கந்தபிரானைப் பெற்ற தாயே! பார்வதியே! கேளுங்கள்.

## தந்தையின் சகோதரபாவம்

5. தந்தையின் துணைவ ரேழில் சக்திமா ரைந்து தீர்க்கம்
நொந்திடு மிரண்டு வென்றோம் நுவலுவோம் பிதாகு
[ணத்தை

எந்தையே இருநி றந்தா னீகைவான் நீட்சி யுள்ளான்
சந்ததம் மெலிந்த தேகி சரசமாய்ப் பேச வல்லன்.

5. ஜாதகனுடைய தந்தைக்குற்ற உடன் பிறந்தவர்கள் எழுவரில் ஐந்து சகோதரர்கள் நீண்ட ஆயுள் உள்ளவர் என்றோம். இருவர் இறந்து விடுவர். இனி ஜாதகனுடைய தந்தையின் குணத்தைக் கூறுகின்றோம். தாயே! அவன் கருமை கலந்த சிவந்த நிறமுடையவன். கொடையாளி. உயரமுடையவன். மெலிந்த சரீர முள்ளவன். சரச சல்லாபமாகப் பேசுபவன்.

## தந்தையின் விவரங்கள்

6. தந்தைநாள் பூமி யில்லான் தரணியில் நெசவு வேலே
பிந்தியும் பூமி சேர்ப்பான் போசனச் சுகிய னாகும்
சிந்தையில் மர்மமில் லாதான் தேசமேல் செட்டுச்
[செய்வன்
தன் தன முடைய னாகும் சித்திர வில்லம் செய்வன்.

6. பிதுரார்ஜிதமான பூமி (சொத்துக்கள்) இல்லாதவன். உலகில் நெசவுத் தொழில் வேலை செய்து வருவான். பிற்காலத்தில் விளைநிலங்களை வாங்கிச் சேர்ப்பான். சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லாதவன் (ருசியாகப் புசிப்பதில் விருப்பமுடையவன்) மனத்தில் கபட மில்லாதவன். வர்த்தகத் தொழில் எல்லா விடங்களிலும் செய்து வருவான். தன்னால் சம்பாதிக்கப் பட்ட பொருள் உடையவன். அழகிய வீடு கட்டுவான்.

## இதுவுமது

7. காமனை விருப்பம் கொள்வன் காலாட்க ளுடைய னாகும்
மாமிகள் மூன்று வென்றோம் மர்மத்தை வெளிக்காட்
[டாதான்
சேமமாம் குடும்பி யாவன் தனந்தேடிச் செலவு செய்வன்
பூமியோர் மெச்ச வாழ்வன் புயண்டரும் கேட்க லுற்றார்.

7. மன்மதனைப் போன்ற அழகுள்ளவன். (காமி) ஏவலாட்கள் உள்ள வன். மூன்று மனைவியரை அடைந்தவன். இரகசியத்தை வெளியிடா தவன். சுகமுள்ள குடும்பத்தை யுடையவன். பொருளைச் சம்பாதித்துச் செலவு செய்பவன். உலகத்தவர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். புயண்ட முனிவர் கேட்கலானார்.

8. எப்படி மாமி மூன்று இயம்புவீர் விபர மாக
செப்புவேன் கேளு மய்யா தேவிமா ரிருவ ராகும்
மெய்ப்படி முதல்மா துக்கு மாதுரு யிரண்டே யாகும்
ஒப்புடன் மாமி மூன்று உரைத்திட்டோம் கேளு மய்யா,

8. ஜாதகனுடைய தந்தைக்கு மூன்று மனைவிகள் என்று எவ்விதம் கூறுவீர். அதற்குக் காரணத்தை விபரமாகச் சொல்லுங்கள். அத்திரி முனிவர் பதில் கூறுகின்றார். கேளுங்கள் முனிவரே.........முதல் தாய்க்கு இரு தாய்மார்கள் உண்டு என்றோம்.

## ஜாதகனுடைய தந்தையின் விவரங்கள்

9. கல்விமா னூகை வானும் கரமதில் விஷ்ணு ரேகை
புல்லிய புத்தி யில்லான் பெற்யதாய் நிந்தை யுள்ளான்
சொல்லது காப்பா னாகும் சுகதுக்க மிரண்டு முள்ளான்
நல்லவ னாகி வாழ்வன் நாயகி கேட்டி டாயே.

9. கல்வியறிவு யுடையவன். ஊக முள்ளவன். கையில் விஷ்ணு ரேகை யுடையவன். அற்ப புத்தியில்லாதவன். பெற்ற தாய் பழிக்காளான வள் என்றோம். சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன். சுகம் துக்கம் இருண்டும் கலந்துள்ளவன். நல்லவனாக வாழ்ந்து வருவான். தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய விவரங்கள்

10. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோகைய ரிருவர் [தம்மில்
முன்னமே மனைவி கட்கு முதித்தன னிவனே யென்றோம்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் [மெலிந்த தேகி
தன்மனம் கபடு மில்லான் தந்தங்கள் விருத்தி யுள்ளான்.

10. இவ்விதம் கூறப்பட்ட குணங்களுள்ளவனுக்கு வாய்த்த மனைவி யர் இருவரில் மூத்த தாரத்துக்குப் பிறந்தவன் ஜாதகன் என்றோம். இனி அவனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம், அழகுள்ளவன் மெலிந்த சரீர முடையவன். சூதுகளில்லா மனத்தினன். பெரிதான பற்களை உடையவன்

11. இருநிறம் கல்வி மானும் ஈகைவா னடக்க முள்ளான்
வறுமைக ளில்லா னாகும் வாக்குகள் சுத்த மில்லான்
பெருமையாய்க் குடும்பி யாவன் பிறந்தபின் பூமி சேரும்
அருமறை யவர்கள் நேசம் அறமதி லிச்சை யுள்ளான்.

11. கருமை கலந்த செம்மை நிற முள்ளவன். கல்வி யறிவுள்ள வன். கொடையாளி. அடக்கமானவன். தரித்திர தசை அடையாதவன். ஆனால் சுத்தமான பேச்சுக்கள் பேசாதவன் (சொன்ன சொற்படி நடவாத வன்) பெருமையுள்ள குடும்பமுள்ளவன். ஜாதகன் பிறந்த பிறகு சொத்து, விளை நிலங்கள் சேரும். வேதங்கள் உணர்ந்த அந்தணரிடம் நட்புக் கொண் டவன். தருமம் செய்வதில் விருப்பமுடையவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

12. தன்துணை யாண்பா லொன்று சாற்றுவோம் தீர்க்க மாக
பிந்திய துணைவ னுகப் பேசுவோ மவன்கு ணத்தை
எந்தையே யிருநி றத்தன் யிடுக்கமாங் குணத்த னுகும்
தன்தன முடைய னுகும் தன்மனம் கபடு முண்டு.

12. ஜாதகனுக்கு ஒரு சகோதரன் நீண்ட ஆயுள் உள்ளவன் என்றும் அவன் ஜாதகனுக்குப் பின் தோன்றியவன் என்று சொல்லுகின்ருேம். இனி அவனுடைய விவரங்களைப் பற்றிச் சொல்லுகின்ருேம். தாயே! அவன் கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவன். துன்பங்களிழைக்கும் குணங்களுடையவன். தன்னுல் தேடப்பட்ட பொருளுடையவன். வஞ்சனை நிறைந்தவன்.

## சகோதரனின் இயல்புகள்

13. தந்திர வாதி யாகும் சமர்த்தாக வார்த்தை சொல்வன்
முந்துமால் பக்தி யுள்ளான் மூலச்சூ டுடைய னுகும்
வந்திடு மனைவி யொன்று வானபுத்தி ஒரு மிரண்டு
சந்திர வதனம் போலே தையலர் ஒன்றே யாகும்.

13. தந்திரமாகப் பேசுவன். சாமர்த்தியமாகப் பேசும் இயல்பினன். முதன்மையான திருமாலின் மீது பக்தி கொண்டவன். மூலச் சூட்டு நோயுள்ளவன். அவனுக்கு வாய்க்கும் மனைவி ஒருத்தியே. தோன்றும் குழந்தைகளில் இருவர் புத்திரர் என்றும் சந்திரனைப் போன்று அழகிய முகமுள்ள ஒரு புத்திரி என்றும் கூறுகின்ருேம்.

## இதுவுமது

14. வயதுமே தீர்க்க மெய்து மவன்குலத் தொழிலால் [மேன்மை
பயமிலா மனத்த னுகும் பந்துவும் புகழ வாழ்வன்
தமயன் சொல் தடுத்துச் சொல்வன் தான்சிறு தீனி [யிஷ்டன்
செயம் செய்வன் தொடுத்த வேலை சித்திர வீடு செய்வன்

14. நீண்ட ஆயுள் உள்ளவன். அவர் தன்னுடைய குலத் தொழிலாகிய நெசவுத் தொழில் செய்து அதிலேயே மேன்மை அடைவான். பயமில்லாதவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். தன் மூத்த சகோதரன் வார்த்தைகளைத் தடுத்துப் பேசும் இயல்பினன். சிற்றுண்டி அருந்துவதில் பிரியமுள்ளவன். எடுத்த காரியத்தை வெற்றியுடன் செய்து முடிப்பவன். அழகிய வீடு கட்டுவான்.

## முதல் தாய்க்குப் புத்திர பாவம்

15. அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்ருள்
வித்தகி யிளைய மாதா மேவும் காரணங்க ளென்ன
உத்தமி முதல் மாதுக்கு உந்தியில் உறுவு கொண்டும்
குத்தமாய் சம்ச யங்கள் குலவியே யிருப்ப தாலே.

15. அத்திரி முனிவர் இங்ஙனம் கூறும் போது பார்வதிதேவி வினவலானுர். ஜாதகனுக்கு இளைய தாயார் ஏற்படும் காரணங்கள் என்ன சொல்லுங்கள். உத்தமியாகிய முதல் தாய்க்கு வயிற்றில் வலி ஏற்பட்டு பல சந்தேகங்கள் இருப்பதால்,

## இரண்டாம் தாய்

16. மறுமனை நோந்த தம்மா வந்தபின் முதல்மா துக்குப்
பரவின ரோகம் நீங்கி பாலர்கள் விருத்தி யாகும்
இருசுதர் தோன்றி யேதான் ஏகுவாள் எமப திக்கு
மர்மமாய் நாலா மாண்டில் மாதுரு மரண மெய்தும்.

16. இரண்டாம் தாயாக ஒருத்தியை தந்தை மணக்க நேரிட்டது. தாயே! இவள் வந்த பின் முதல் தாய்க்கு ஏற்பட்ட நோய் விலகி விட்டது. புத்திர விருத்தியும் உண்டாயிற்று. அவளுக்கு இரு புத்திரர்கள் தோன்றிய பிறகு அவள் இறந்து விடுவாள். ஜாதகனுடைய நான்காம் வயதில் அவனுடைய தாய் மரண மடைவாள்.

## இளைய தாயாரின் குணங்கள்

17. மறுமாது குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடைய
[ளாகும்
உருவினுல் உயர மில்லாள் உள்மனம் கபடு கொஞ்சம்
உரைப்பளா மதிக வார்த்தை உரைக்குமுன் கோபி
[யாவள்
திருகுக ளுடைய ளாகும் சித்திரப் பணிக ளிச்சை.

17. ஜாதகனுடைய இளைய தாயின் குணங்களைக் கூறுகின்ருேம். அவள் மாநிற முடையவள். உயரமில்லாத உருவத்தினள். உள் மனத்தில் சிறிது வஞ்ச முடையவள். அதிகமாகப் பேசும் இயல்பினள். பேசுவதற்கு முன் கோபம் கொள்ளுவாள். சித்திர வேலைகள் செய்வதில் இச்சையுள்ளவள். அழகிய ஆபரணங்களில் விருப்பமுள்ளவள்.

## இதுவுமது

18. அன்னம்போல் சாய லுண்டு அவளுமே துணையாண்
[காளுள்
கன்னிகை யொருத்தி யாகும் காதலி யோக சாலி

தன்வரன் மனம்போல் வாழ்வள் தாயில்லம் கீழ்ப்பால்
[காஞ்சி
அன்னவள் தனக்குப் புத்திரர் அணுகிடு மாண்பால்
]மூன்று

18. அன்னத்தைப் போன்ற சாயலுள்ளவள். சகோதரன் இல்லாதவள். சகோதரி ஒருத்தியே யுள்ளவள். அதிர்ஷ்டமுடையவள். தன் கணவன் மனமறிந்து நடப்பவள், கிழக்கில் உள்ள காஞ்சீபுரத்தில் தாயில்லம் உள்ளது. அவளுக்குப் புத்திரர் மூவர் தோன்றுவர் என்றோம்.

## இளைய தாயின் புத்திரபாவமும் சகோதரபாவமும்

19. மதிமுகப் பெண்பா லொன்று வரைகிறோம் தீர்க்க மாக
வதிபன்தன் துணைவி சேதி வரைகிறோ முணச்சல்
[தேகி
சதியிலா மனத்த ளாகும் தங்கிடும் நாபிச் சூடு
அதிபதி சிவந்த மேனி வரன்தன் மனம்போல் வாழ்வள்.

19. சந்திரனைப் போன்ற அழகிய முகமுடைய பெண் ஒருத்தியும் தோன்றுவாள் என்று சொல்லுகின்றோம். இனி அவளுடைய சகோதரியின் விவரங்களைச் சொல்லுகின்றோம். மெல்லிய சரீர முள்ளவள். தீங்குகள் இல்லாத மனத்தினள். நாபிச் சூட்டு நோயுள்ளவள். சிவந்த நிற முடையவள். தன் கணவன் மனம் போல் வாழ்ந்து வருவாள்.

## இளைய தாயின் முற்பிறவி

20. தன்துணை காணு தாகும் தாயுமே இரண்டு என்றோம்
அந்தவள் பூர்வம் சொல்வேன் அக்காஞ்சி தன்னி
[லேதான்
சிந்தனை மருத்து வம்சம் செல்வதி யுதித்து மேலும்
முந்திய மதலை யுண்டாய் முயற்சியாய் வாழு நாளில்;

20. சகோதரனில்லாதவள். இருதாய்மார்கள் உள்ளவள் என்றோம் இனி அவளுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். காஞ்சீபுரத்தில் சித்த வைத்தியர் வமிசத்தில் பிறந்தாள். மேலும் குழந்தைகளைப் பெற்றுச் சுகமாக வாழ்ந்து வருங்காலத்தில்;

21. நதிமகன் தனக்குத் தீங்கு நாயகி செய்வா ளாகும்
அதிபதி மாரன் ஒன்றாய் மருவவே செய்வா ளாகும்
இதுவித மருந்தி னாலே இப்படிச் செய்வா ளாகும்
அதுவொரு தோஷம் நேர்ந்து அதுவின்றி வேறு
[சொல்வேன்.

21.......வேறு ஒருவனுக்கு இவள் தீங்கு செய்தாள் அவளும்......... ஒன்றாகச் சேர்ந்து சிற்றின்பம் அநுபவிக்க இவள் மருந்தைக் கொடுத்தாள். அது ஒரு தோஷமாக ஏற்பட்டது. அதுவல்லாமல் வேறு ஒன்று சொல்லு கின்றோம்.

22. பண்டிதம் செய்யும் காலை பலவித மருந்தி ருக்க
துண்டமாய்ப் பாஷா ணத்தைத் தோகையும் சிலர்க்குத் [தந்து
சண்டன்தன் பதிக்குச் சேர்த்தாள் சார்ந்தது அந்தத் [தோஷம்
வண்டு குழலாள் தானும் அந்தியக் காலம் தன்னில்;

22. நோயுற்றவர்கட்கு மருந்து கொடுக்கும் போது பலவிதமான மருந்துகள் இருக்க தீங்குதரும் விஷத்தைச் சிலருக்குக் கொடுத்தாள். அந்த விஷத்தை உண்டதால் சிலர் மரண மடைந்தனர். அதுவும் ஒரு தோஷமாயிற்று. வண்டுகள் மொய்க்கும் மலர் சூடிய குழலை யுடைய பெண் தன் இறுதிக் காலத்தில்;

23. குன்மத்தால் மரண மெய்திக் கூத்தன்தன் பதிக்குச் [சென்று
சின்னாட்கள் நரகம் புக்கி சிரநான்கோன் வரையப் பட்டு
உன்னதக் காஞ்சி தன்னில் உதித்தனள் சாலிய வமிசம்
முன்வினை யிச்சென் மத்தில் மேவிற்று யென்று [சொன்னோம்.

23. வயிற்று வலியினால் மரண மடைந்து இறந்து சில நாட்கள் நரகத் தில் இருந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு, உயர்ந்த காஞ்சி புரத்தில் சாலிய வமிசத்தில் பிறந்தாள் முற்பிறவியில் செய்த தீவினை இப்பிறவி யில் தொடர்ந்தது என்று சொன்னோம்.

24. மருந்தினால் கலைத்த தோஷம் வந்திடும் சயரோ [கம்தான்
மருந்தினால் கொன்ற தோஷம் அவள்துணை காணா [ளாகும்
மருந்தினால் கூட்டும் புண்ணியம் வந்திடும் சுதர்க [ளிரண்டு
மருமங்கை அணுகு வாளாம் வரைகிறோ மிவள்பின் [சென்மம்.

24. மருந்தினால் குடும்பத்தைக் கலைத்த தோஷம் ஏற்பட்டு அதனால் காச நோய் வரும். விஷ மருந்தைக் கொடுத்துச் சிலரைக் கொன்றதால்

சகோதர தோஷம் ஏற்படும். சிலருக்குற்ற நோயைத் தீர்க்க மருந்தைக் கொடுத்த நற்செயலால் இரு புத்திரர்கள் தோன்றுவார். ஆனால் இவள் கணவன் இவளை இரண்டாம் மனைவியாக மணப்பான். இனி அடுத்த பிறவி யைச் சொல்லுகின்றோம்.

## மறுபிறவியும் தந்தையின் முற்பிறவியும்

25. செனித்தஊர் தன்னி லேதான் செனிப்பளாம் வைசியச் [சேயாய்
கனமுள குடும்பி யாகிக் காதலி வாழ்வா ளாகும்
சினமிலாத் தந்தை பூர்வம் செப்புவோ மினிமே லாக
வினையிலாத் திருப்பாச் சூரில் வேளாள குல முதித்து;

25. தான் பிறந்த ஊரிலேயே வைசிய குலத்தவளாகப் பிறப்பாள். பெரிய குடும்பத்தைப் பெற்று வாழ்ந்து வருவாள். இனி ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். தீங்குகளில்லாத திருப்பாச் சூரில் வேளாள குலத்தில் பிறந்து;

26. பூமிக ளதிக முண்டாய்ப் புகழ்ச்சியாய்க் குடும்பி யாகி
நேமியில் மதலை யுண்டாய் நிருபனும் வாழு நாளில்
தீமையாய் வந்த வூழைச் செப்புவோம் கேளும் தாயே
காமியாம் வேசி மாதைக் கலந்தனன் சிலநா ளும்தான்.

26. விளைநிலங்களை அதிகமாகப் பெற்று, கீர்த்தியுள்ள குடும்பத்தை யடைந்து, குழந்தை குட்டிகளைப் பெற்று வாழ்ந்து வருங்காலத்தில் தீமை யாக வந்த துன்பத்தைச் சொல்லுகின்றோம் கேளுங்கள். ஜாதகனுடைய தந்தை சிற்றின்பத்தின் அதிக விருப்பம் கொண்டு, விலைமாதரிடம் நட்புக் கொண்டு சிலகாலம் இன்ப மெய்தி வந்தான்,

27. உடலுயிர் போலே வாழ்ந்து உடைமைகள் யாவும் [கொண்டான்
மடமயில் கேட்கும் போது மாரனும் விகாத முற்று
விடமன தாகக் கொண்டு வித்தகன் சென்று [னென்றோம்
அடைவுடன் வேசி மாது அறைகிறுள் சாபம் தானே.

27. அவளுடன் உயிரும் உடலும் போல் அன்யோன்யமாகப் பழகி வந்து, அவளுடைய நகை நட்டு முதலிய எல்லாவற்றையும் அபகரித்துக் கொண்டாள். அந்தத் தாசியும் இவனை அதைப் பற்றித் கேட்குங்கால் ஜாதகனுடைய தந்தை கோபங் கொண்டு கெட்ட எண்ணத்துடன் சரியான பதில் கூறுது சென்று விட்டான். மனம் நொந்த வேசைப் பெண் சாபமிடு கின்றுள்.

## பெண்ணின் சாபம்

28. என்பொருள் பரித்த பாவி இனிவரும் சென்மந்
[தோறும்
அன்னையும் நிந்தை யுண்டாய் ஆண்துணை யில்லா தாகி
கன்னிகை யிரண்டு மாகிக் காசினில் வாழ்வா யென்றும்
பின்வரும் மனையா ளாகப் புக்குவேன் உன்பா
[லுந்தான்;

28. "என்னுடைய பொருளை அபகரித்த பாவியே! இனி ஏற்படும் மறுபிறவியில் உன் தாய்க்கு அவமானம் ஏற்பட்டு சகோதரன் இல்லாமல் மனைவி இருவரை மணந்து வாழ்ந்து வருவாய். இரண்டாம் மனைவியாக நான் உன்னை வந்தடைவேன்".

29. என்றுமே சொல்லித் தூளை யிறைத்தன ளந்தத்
[தோஷம்
அன்னவன் தனக்குச் சேர்ந்து அணுகிற்று அந்தி
[யத்தில்
சந்திரன் சடைய ணிந்த சங்கரன் பூசை செய்து
பின்னமாய்ப் பேதி யாலே புக்கினன் காலன் பக்கல்.

29. என்று கூறித் தெரு மண்ணை வாறி இறைத்தாள். அந்தத் தோஷம் ஜாதகனுடைய தந்தைக்கு ஏற்பட்டது. அவனும் தன் இறுதிக் காலத்தில் சந்திரனைச் சடை முடியில் தரித்த சிவபெருமானுக்குப் பூசைகள் பல செய்து வந்து பேதியால் மரணம் அடைந்தான்.

30. தலைநான்கோன் வரையப் பட்டுச் செனித்தவ னிவனே
[யென்றோம்
குலவிடும் வேசி சாபம் கூறுவோந் துணையா ணில்லான்
பலவிதச் சித்தி ரங்கள் பகருவா ரிவன்தாய் பேரில்
தலைவிமா ரிரண்டு நேரும் சங்கரி கேட்டி டாயே.

30. நான்கு தலைகளை யுடைய பிரமதேவனால் படைக்கப்பட்டுப் பிறந்தவன் (ஜாதகனுடைய தந்தை) என்றோம். வேசையின் சாபத்தால் சகோதர தோஷம் ஏற்பட்டது. இவனுடைய தாயின் மீது பலர் பலவித அவதூறுகள் சொல்வார்கள். இரு மனைவியரை மணக்க நேரிடும். சங்கரனின் தேவியே! கேளுங்கள்.

31. சுகமுடன் வாழ்வ தென்ன சொல்லுவீர் முனியே நீர்தாம்
இகபரன் பூசை செய்த இன்பத்தால் சுகமே யாவன்

பகையான சாபம் சொன்ன பத்தினி வேசி மாது
தகமையா யிரண்டாந் தாரம் தங்கிடு மென்று
சொன்னேம்.

31. ஆனுல் சௌக்கியமாக வாழ்வதற்குரிய காரணங்கள் என்ன வென்று கூறுங்கள், முனிவரே தாம். பரமசிவனைப் பூசை செய்த பலத்தினுல் இப்பிறவியில் சுகமடைவான். தீங்காகச் சாபம் கொடுத்த (வைசிய குலத்துப் பெண்) தாசி ஜாதகனுடைய தந்தைக்கு இரண்டாம் மனைவியாக வாய்ப்பாள், என்று கூறுகின்ருேம்.

## தந்தையின் மறுபிறவி

32. மறுசென்மம் வள்ளுர் தன்னில் வைசிய குலமு தித்து
பெருமையாய்ச் செட்டுச் செய்து பிரபல கீர்த்தி யாகி
திருமகன் வாழ்வா ஞகும் செப்பிய மொழிகுன் ருவே
அருமறை முடிவி லாடும் அம்பிகை யாளே கேளாய்.

32. ஜாதகனுடைய தந்தை மறுபிறவியில் திருவள்ளுரில் வைசிய குலத்தில் தோன்றி பெருமையுடன் வர்த்தகம் புரிந்து வந்து, புகழடைந்து வாழ்ந்து வருவான் நாங்கள் கூறியவை தவரு. அரிய வேதங்களின் முடிவில் கூறப்படும் தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய திருமணக்காலமும் மனைவியின் குணங்களும்

33. சாதகன் மணத்தின் காலம் சாற்றுவோம் பதினு ருண்டில்
காதலி கீழ்பா லாகக் கனதந்தை துணைவி புத்திரி
மாதிவள் வருவா ளாகும் அவள் குணம் சிவந்த மேனி
பாதக மனமில் லாதாள் பந்துவுக் கினிய ளாகும்.

33. ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்ருேம். அவனுடைய பதினுரும் வயதில் தன்னுடைய தந்தையின் சகோதரியின் பெண்ணை மணப்பான். இனி அவளுடைய குணங்களைக் கூறுகின்ருேம். சிவந்த நிற முடையவள். தீய எண்ணங்களில்லாத மனத்தினள். தன் சுற்றத்தாருக்குப் பிரியமானவள்.

34. சுகமுள வார்த்தை சொல்வள் சொல்லுமுன் கோபம் [கொஞ்சம்
பகையென்று மனத்தி லெண்ணுள் பரிந்துப சரரம் [செய்வள்
உவமையாய்க் கதைகள் சொல்வ ளுள்மனம் கபடு [மில்லாள்
இகபர முனிவர் சொல்ல ஈச்வரி கேட்க லுற்ருள்.

34. இன்பமுறும் வார்த்தைகளையே பேசுபவள். முன்கோபி. ஆனல் விரோதத்தைப் பாராட்டாத மனமுள்ளவள். பரிவுடன் எல்லோருக்கும் உபசாரம் செய்வாள். உபமானத்துடன் கதைகள் சொல்லுபவள். உள் மனத்தில் வஞ்சகமில்லாதவள் என்று முனிவர் கூறும் போது பார்வதிதேவி வினவலானுள்.

35. புதன்பணி யேழில் நிற்கப் பொருந்தாத தாரம் [வாய்க்கும்
அதிதியே சொல்லு கின்ருர் அந்தணன் ஏழோ னுகி
தகமையா யிருப்ப தாலே சத்தான மாது வுண்டு
செயமுனி இதனைக் கேட்டு செப்புவார் பராச ருக்கு.

35. புதன், ராகு ஏழாமிடத்தில் இருப்பதால் திருமணம் நடக்காத தாரம் ஏற்படும். இதற்கு அத்திரி முனிவர் கூறுகின்ருர். குரு ஏழாம் வீட்டுக்குரியவனுகி 9-ம் வீட்டில் பலமாக இருப்பதால் திடமான (நேர்மை யுள்ள) மனைவி ஒருத்தியுண்டு. ஜயமுனிவர் இதைக் கேட்டுப் பாரசர முனிவருக்குப் பதில் கூறுகின்ருர்,

## இருதாரம் ஏற்படுதற்குரிய கிரக நிலை

36. இருமனை நேரு மென்ருே மெப்படிச் சொல்லு மென்ன
கருங்கோளும் புதனு மேழில் கனலெனக் குசனும் [பார்க்க
உரைத்திட்டோ முப்பா னுறில் உறங்கிடு முதல்ம [னைதான்
மறுமனை அந்த ஆண்டில் வந்திடு மென்று [சொல்வோம்.

36. இரு மனைவியரை மணக்க நேரிடும் என்ருர். அது எங்ஙனம் கூறுங்கள் என்று வினவ, ரிஷி பதில் சொல்லுகின்ருர். ராகு புதன் இருவரும் களத்திர ஸ்தானமாகிய 7-ம் வீட்டில் இருப்பதாலும் அந்த வீட்டை நெருப்புக் கண்களுடன் அங்காரகன் பார்ப்பதால் ஜாதகனுடைய முப்பத்தாரும் வயதில் மனைவி இறந்து விடுவாள். அதே வருடத்தில் இரண்டாம் மனைவி வாய்ப்பாள்.

## இரண்டாம் மனைவியின் விவரம்

37. அம்மனை யவ்வூர் தன்னில் அணுகிடு மிவனுக் கேதான்
அம்பிகை கேட்க லுற்ருள் ஆதியாய் மாதுக் கேதான்
செம்மையாய்ச் சுதர்க ளுண்டோ செப்புவீர் விபர மாக
நன்மையாம் சுதர்கள் நான்கு அதிலோர் மாது......

37. அவள் ஜாதகனுடைய ஊரிலிருந்தவளாகவே வாய்ப்பாள். பார்வதிதேவி கேட்கலானுள். ஜாதகனுடைய முதல் மனைவிக்குப் புத்திரர்கள் உண்டோ சொல்லுங்கள் அதை விவரமாக. உண்டு, நான்கு குழந்தைகள் தோன்றுவர். அவர்களில் ஒரு பெண்;

38. தீர்க்கமாம் மற்ற தெல்லாம் சண்டன்தன் பதிக்கு
[செல்லும்
ஏற்கவே இளைய தாரம் எய்திடும் சுதராண் ஒன்று
ஆர்க்கவே பெண்பா லொன்று அணுகிடும் தீர்க்க மாக
மார்க்கங்க ளெவ்வி தங்கள் அறிவிப்பீர் விபர மாக.

38. மட்டும் நீண்ட ஆயுள் உள்ளவள். மற்ற குழந்தைகள் எல்லாம் நிலையாமல் இறந்துவிடும். இரண்டாம் மனைவிக்கு ஒரு புத்திரனும் ஒரு புத்திரியும் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்களாக விளங்குவர் என்றோம். அதற்குரிய காரணங்கள் என்னவென்று விரிவாகக் கூறுங்கள்.

## ஜாதகனுடைய முற்பிறவி

39. முன்வினை தோஷத் தாலே யெய்திடும் வினைகள் தானும்
அன்னவன் முன்செய் தோஷம் அறிவிப்பீர் விபர மாக
இன்னவன் முன்சென் மங்கள் இயம்புவோம் விரிஞ்சி
[கீழ்பால்
தன்னிலே சிற்றூர் தன்னில் செனித்தனன் வைசியச்
[சேயாய்.

39. முற்பிறவித் தீவினையால் பல துன்பங்கள் நேரும். அவனுடைய முற்பிறவித் தீவினை என்ன என்பதை விபரமாகக் கூறுங்கள் முனிவரே. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். விரிஞ்சிபுரத்துக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில் வைசிய குலத்தவனாகப் பிறப்பான்.

40, தனமது பெருக்க முண்டாய் தன்மனை மதலை யுண்டாய்
சினமிலா வாழு நாளில் செப்புவோ மூழி தானும்
வினையான வன்னிய மாது விதவையை நேசம் செய்து
மனமது ஒத்துச் சேர்ந்து வாழ்ந்தனன் சிலநாள் சென்று;

40. செல்வம் பெருகி, மனைவி மக்களைப் பெற்று துன்பங்களின்றி வாழ்ந்துவரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். கணவனை இழந்த வன்னிய மாது ஒருத்தி, வசித்து வந்தாள். அவளுடன் ஜாதகன் நட்புக் கொண்டு மனமொத்து வாழ்ந்து வந்தான். சில நாட்கள் சென்றபின்;

## கருவழித்த தோஷம்

41. மாதுவுக்கு கருவு தங்கி மாரன்தன் னுடனே சொல்ல
தீதான பண்டி தங்கள் செய்தனன் மூன்று கர்ப்பம்
மேதினி லழித்தா னென்றேம் மிக்கவே நாலம் கர்ப்பம்
பாதகி பண்டி தத்தால் பறந்தனள் யமலோ கந்தான்.

41. அவ்விதவைப் பெண்ணுக்குக் கர்ப்பம் ஏற்பட்டது. அதை அந்த விதவைப் பெண் இந்த ஜாதகனுடன் சொன்னாள். அந்தக் கருவை நீக்க ஜாதகன் பலவிதமான மருந்து கொடுத்தான். அம்மாதிரியே மூன்று தடவை ஏற்பட்ட கர்ப்பத்தை நீக்க மருந்துகள் கொடுத்தான். ஆனால் நான்காம் தடவை கொடுத்த மருந்தின் பலனால் விதவை மரண மடைந்தாள்.

42. அந்ததோர் தோஷ மொன்று அணுகிற்று இவனுக் [கேதான்
அந்தியக் காலம் தன்னில் அணுகிற்று மேக ரோகம்
அந்தகன் பக்கல் சென்று அருநர கினிலே புக்கு
சந்ததம் வேத னாலே தரணியில் வரையப் பட்டு;

42. அந்தக் கருவழித்த தோஷம் இவனுக்கு ஏற்பட்டது. இந்த ஜாதகன் தன் இறுதிக் காலத்தில் மேக ரோகம், ஏற்பட்டு துன்பமடைந்து, பிறகு மரண மடைந்தான். பெரும் நரகத்துக்குச் சென்று துன்ப மடைந்து, மீண்டும் வேதங்கள் போற்றும் பிரமதேவனால் இப்பூவுலகில் படைக்கப்பட்டு;

43. வந்தவ னிவனே யென்றேம் வளர்கரு வழித்த தோஷம்
முந்திய மனைவி மாள்வ ளுதித்தசேய் நசிக்கு மென்றேம்
சந்ததம் மாது கண்டம் தங்கிடும் வறுமை யுண்டு
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபர மாக.

43. இப்பிறவியில் பிறந்தவன் என்றேம். வளரும் கருவை அழித்த தோஷத்தினால் முதலில் வாய்க்கும் மனைவி இறப்பாள். முதலில் தோன்றும் குழந்தையும் மாண்டு போகும். எப்போதும் மனைவிக்கு கண்டம் நேர்ந்து கொண்டே இருக்கும். தரித்திர நிலை அடைவான். மற்ற விவரங்களைப் பின் பாகத்தில் சொல்லுகின்றேம்.

## தாய்தந்தையரின் நல்வினை

44. அத்திரி சொல்லும் போது அம்பிகை கேட்க லுற்றாள்
வித்தகன் தனக்கு யோகம் விளம்பினீர் கார ணம்சொல்
சித்தமாம் தந்தை தாயார் செய்தபுண் ணியத்தி னாலே
நித்தியம் யோக மென்றேம் நிமலியே கேளும் கேளே.

44. இவ்விதமாக அத்திரி முனிவர் கூறும் போது பார்வதிதேவி, வினவலானார். ஜாதகனுக்கு யோகம் ஏற்படக் காரணங்கள் என்ன சொல்லுங்கள். ஜாதகனுடைய தாய் தந்தையர் செய்த புண்ணியத்தால் தான் இவனுக்கு யோகம் ஏற்பட்டது என்று திண்ணமாகக் கூறுகின்றோம். தாயே! மேலுங்கேள்.

## யோகபாவம்

45. ஒன்பது ஆண்டு தன்னில் உரைந்திடும் சித்திர வீடு
இன்னவன் செனனம் தொட்டு இசைந்திடும் பூமி
[தானும்
உன்னதச் செட்டு ஓங்கும் உணவுகள் குறைவு ருது
நன்னிய பிதாவின் மேலாய் நாயகன் வாழ்வா னுமே.

45. ஜாதகனுடைய ஒன்பதாம் வயதில் அழகிய வீடு கிடைக்கும். ஜாதகன் பிறந்தது முதல் பூமி விருத்தியாகும் (விளைச்சல் பெருகும்). உயர்வாக வர்த்தகம் அதிகமாகும். சாப்பாட்டுக்குக் கஷ்டம் வராது. தன்னுடைய தந்தைக்கு மேலாக ஜாதகன் வாழ்ந்து வருவான்.

46. கைமுதல் பின்னு லுண்டாம் கனத்தசெட் டுகளு
[மோங்கும்
உய்வகை பூமி யாலும் உயர்ந்ததோர் நெசவி னுலும்
வையமேல் செட்டு வாலும் வந்திடும் பொருள்கள்
[தானே
பொய்யிலா வெண்ணு யிரம்பொன் பூமிகள் பணிகள்
[நேரும்.

46. ஜாதகனுடைய பிற்காலத்தில் வர்த்தகம் விருத்தியாகும். பணம் சேரும். விளைநிலங்களாலும் (விவசாயத்திலுைம்) உயர்ந்த நெசவுத் தொழிலாலும், உலகில் செய்து வரும் வியாபாரத்திலுைம் பொருள் சேரும். எண்ணுயிரம் பொன் மதிப்புடைய ஆஸ்தி, பூமிகள் ஆபரணங்கள் முதலியன ஜாதகனுக்குக் கிடைக்கும்.

## தந்தையின் மரணகாலம்

47. முப்பது ஆறு வாண்டில் மேடமா தத்தி லேதான்
செப்புவோம் தந்தை கெண்டம் சென்றுபின் முப்பா
[னேழில்
ஒப்புடன் குடும்பம் வேறு உரைந்திட்டோம் பாக
[மைந்தாய்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழி குன்ருவே.

47. ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் சித்திரை மாதத்தில் தந்தை மரணமடைவான். அதற்குப் பிறகு அவனுடைய முப்பத்தேழாம் வயதில் குடும்பம் வேருகப் பிரிந்து போகும். அது ஐந்து பாகமாகப் பிரியும். கங்கையைச் சடை முடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறியவை தவரு.

## ஜாதகனுடைய மரணகாலம்

48. அறுபது வேழு ஆண்டில் அழகிய தனுசு மாதம்
குறைபக்கம் துதியை தன்னில் கூறுவோம் சாத கர்க்கு
மறுசென்மம் காஞ்சி தன்னில் வைசிய குலமு தித்து
பெருமையாய்ச் செட்டுச் செய்வன் புண்ணிய வதியே
[கேளாய்.

48. ஜாதகனுடைய அறுபத்தேழாம் வயதில் மார்கழி மாதத்தில் கிருஷ்ண பட்சம் துவிதியை திதியன்று அவன் மரண மடைவான். மறுபிறவியில் காஞ்சீபுரத்தில் வைசிய குலத்தில் பிறந்து, பெருமையுடன் வியாபாரம் செய்து வருவான். புண்ணியவதியே! கேளுங்கள்.

## ஜனனகால தசை

49. பாலகன் செனிக்கும் காலம் பரிதியின் தசையி லேதான்
கோலமா மாண்டு மூன்று கூறிய திங்க ளிரண்டும்
பாலகன் தனக்கு ரோகம் பரவிடும் துணேவர் விருத்தி
சாலவே மந்தி சூலம் சாற்றுவோம் விபரம் ரெண்டில்.

49. ஜாதகன் பிறக்கும்போது சூரிய மகா தசையில் கர்ப்பச் செல்லு போக மீதி மூன்று வருடங்களும் இரு மாதங்களுமாம். அக்காலத்தில் ஜாதகனுக்குப் பிணி வரும். சகோதர விருத்தி ஏற்படும். சூல நோயும் அஜீரணமும் உண்டாகும். மற்ற விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ருேம்.
—V.R.N.

———

# ஜாதகம் 68

## ஜனனகால கிரக நிலை

1. கன்னியுஞ் செனன மாகக் [1]கனகனு மிரண்டில் தங்க
சந்திரன் சனியு மூன்றில் [2]சர்ப்பமும் நாலி லாக
[3]புந்தியும் [4]புகரு மெட்டில் [5]புரவியோன் நவத்தி லாக
[6]செந்தியும் லாப மாகச் [7]சிகிபத்தில் கிரகம் நின்ருல்.

1. கன்னி ஜன்ம லக்கினமாகவும், குரு இரண்டாமிடமாகிய துலாத்திலும். சந்திரன் சனி மூன்ரு மிடமாகிய விருச்சிகத்திலும், ராகு நான்காமிடமாகிய தனுசிலும், புதன் சுக்கிரன் எட்டாமிடமாகிய மேஷத்திலும், சூரியன் ஒன்பதாமிடமாகிய ரிஷபத்திலும், செவ்வாய் லாப ஸ்தானமும் பதினேரா மிடமுமாகிய கடகத்திலும் கேது பத்தாமிடமாகிய மிதுனத்திலுமாக நவக்கிரக நிலையிருந்தால்;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | புதன் சுக்கிரன் | சூரியன் | கேது |
| | இராசி சக்கரம் | | அங்காரகன் |
| | | | |
| ராகு | சந்திரன் சனி | குரு | லக்கினம் |

2. இதுபலன் புகலு மென்று ஈச்வரி கேட்கும் போது
வதிஷ்டரும் சொல்லு கின்ருர் ஆணது செனன மாகும்
பதியது மேல்பால் நோக்கம் பரமனு முத்திர மாகும்
துதிக்கையோன் அருகில் மேற்கில் துலங்காது கோஷ்ட
[முண்டு.

---

1. குரு
2. ராகு
3. புதன்
4. சுக்கிரன்
5. சூரியன்
6. அங்காரகன்
7. கேது

2. ஏற்படும் பலனைக் கூறுங்கள் என பார்வதிதேவி கேட்கும் போது வசிஷ்ட முனிவர் பதில் கூறுகின்றார். இது ஆண் மகனுடைய ஜாதகம். அவன் பிறந்த வீடு மேற்குப் பக்கம் நோக்கிய வாயிலை யுடையது. அதற்கு வடக்குப் பக்கத்தில் ஈசுவரன் கோவிலும், சமீபத்தில் விநாயக பிரான் கோவிலும், மேற்குப் பக்கம் இடிந்த கோவிலொன்றும் உள்ளன.

## இதுவுமது

3. தென்திசை ஐயனு ரப்பன் சிரமற்றோள் அதற்குக் [கீழ்பால்
இன்னமும் பலதே வாச மிலகிய பேரூ ராகும்
அன்னையில் தன்னி லாகும் அப்பாலன் சேஷ்ட னாக
மன்னனும் வருவா னாகு மறுமுகன் அடிமை வர்க்கம்.

3. தெற்குப் பக்கத்தில் ஐயனார் கோவில் உள்ளது. மாரியம்மன் கோவில் அதற்குக் கிழக்கில் இருக்கும். இன்னும் பல தெய்வங்கள் குடிகொண்டிருக்கும் பெரிய ஊரில் ஜாதகன் தன் தாயின் வீட்டில் பிறந்தவன். அவன் தன் தந்தைக்கு மூத்த புத்திரனாகவும் ஆறுமுகக் கடவுளின் அடிக ளாகிய செங்குந்த மரபில் தோன்றியவன்.

## தந்தையின் குணங்கள்

### வேறு

4. இன்னவன் செனன மிருப்பிடம் அதற்கு
ஈரஞ்சு கடிகைதூ ரத்தில்
அன்னவன் தந்தை ஊரென உத்திரம்
அறைகிறோம் சிறுதீவுமே யென்றோம்
இன்னவன் தந்தை குணமதைக் கேளாய்
இன்பச்சொல் லுடைய னாகும்
அன்னையு மிரண்டு அனுகிடு முன்னோள்
அவள்சுதன் எனவே மொழிவோம்.

4. இந்த ஜாதகன் பிறந்த வீட்டுக்கு பத்து நாழிகை தூரத்தில் உள்ளது அவன் தந்தையின் ஊர் என்றோம். அதுவும் வடக்குப் பக்கம் இருக்கும் (அது சிறு தீவு என்று கூறுகின்றோம்) இனி அந்த ஜாதகனுடைய தந்தை யின் குணத்தைக் கேளுங்கள், அவன் இனிமையாகப் பேசும் இயல் பினன். அவனுக்குற்ற தாய்மார்கள் இருவரில் மூத்தவளுக்குப் பிறந்தவன் ஜாதகனுடைய தந்தை என்றோம்.

## வேறு

5. வாக்கது சுத்த முண்டு வஸ்திரத் தொழிலும் செய்வான்
போக்குவான் தந்தை யில்லம் பின்வேறு இல்லம்
[செய்வன்
சீக்கிர நடையு மாவன் செம்பொனு மதிக மில்லான்
வேக்கிய மில்லா னுகும் வீண்பழி யேற்கா னென்றேம்.

5. சுத்தமாகப் பேசுபவன். (சொன்ன சொற்களின்படி நடப்பவன்) வஸ்திரம் நெய்யும் தரி வேலை செய்து வருவான். தன்னுடைய தந்தையின் வீட்டை விற்றுவிட்டு வேறு வீடு வாங்குவான். வேகமாக நடக்கும் இயல் பினன். அதிகமான கைமுதல் இல்லாதவன். அனுவசியமாக நிந்தைகளை அடையாதவன் என்றேம்.

## இதுவுமது

6. சுகதுக்கம் கலந்து வாழ்வன் துணைவர்க ளில்லா னுகும்
செகமதில் நல்லோ னுவன் தணிமலை நாமம்
[கொண்டோன்
பகையென்று மனதில் வையான் பசிதாப முடைய னுகும்
தகமையாய்க் குடும்பம் பின்னுல் சௌகரிய முடைய
[னுகும்.

6. சுகமும் துக்கமும் கலந்து வாழ்ந்து வருவான். சகோதரர்கள் இல்லாதவன். உலகில் நல்லவன் என்ற பெயரடைவான். தனியாக இருக்கும் திருத்தணியில் உரையும் முருகப் பெருமான் பெயருடையவன். விரோதம் பாராட்டாத மனமுள்ளவன். அதிகமாகப் பசி ஏற்படும் நிலை யுடையவன். பிற்காலத்தில் பொருத்தமான குடும்பம் ஏற்பட்டுச் சௌக்கியம் அடைவான்.

## தந்தைக்குச் சகோதரதோஷம்

7. என்ன காரணத்தி னுலே இவன்துணை தோஷம்
[சொன்னீர்
மன்னவ னிரண்டில் தங்க மங்களன் நீச்ச மாக
தன்னுமே தனிய னுவன் தங்கிற்று முன்னுத் தோஷம்
அன்னேன்செய் வினையை முற்றும் அறிவிப்பீர் முனியே
[நீர்தான்.

7. என்ன காரணத்தால் ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் உண்டு அதைக் கூறுங்கள். குரு இரண்டாமிடத்தில் தங்கி, அங்காரகன் (சகோதரகாரகன்) நீச்சமாகி கடகத்தில் தங்கி தனியாக இருப்பதால் முற்

பிறவித் தோஷம் இவனை வந்தடைந்தது. அவன் செய்த தீவினையை நீங்கள் முழுவதும் சொல்லுங்கள் முனிவரே!

## தந்தையின் முற்பிறவி

8. சிங்கள நாட்டி லேதான் செனித்தனன் வன்னியச் [சேயாய்
மன்னனுல் தொழிலும் பெற்று வாழ்நாளில் வினையைச் [சொல்வேன்
மங்கள வார்த்தை சொல்லி மாதுவை போகம் செய்து
தங்கமு மீயா ஞகிச் சாகைக்குச் சென்று விட்டான்.

8. சிங்கள நாட்டில் (இலங்கையில்) ஜாதகனுடைய தந்தை வன்னிய குலத்தவனுகப் பிறந்து அரசாங்கத்தில் உத்தியோகம் ஏற்று வாழ்ந்து வருங் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்ேறம். நல்ல வார்த்தைகள் சொல்லி (பணம் தருவதாக கூறி) ஒரு பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித் தான். ஆனல் அவளுக்குப் பணம் தராமல் தன் விட்டுச் சென்று விட்டான்.

## பெண்ணின் சாபம்

9. மாதுவும் மனது வெட்கி வரைந்தசா பத்தைக் [கேண்மோ
சூதான மொழிகள் சொல்லி சுகமனு பவித்து யென்னை
பாதகா ஈயா ஞகி பறந்திட்டா யில்லத் துக்கு
மேதினில் மறுசென் மத்தில் விளங்காது துணைவர் [தானும்;

9. அந்தப்பெண் மனம் நொந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள். வஞ்சகமாக ஆசை வார்த்தைகள் சொல்லி என்னிடம் சிற்றின்பம் அனுப வித்த பாதகனே! நீ எனக்கு வேண்டிய பணத்தைக் கொடுக்காமல் உன் வீட்டிற்கு ஓடிவிட்டாயே! இனி உனக்கு ஏற்படும் மறு பிறவியில் சகோ தரன் இல்லாமல் வாழ்வாய்;

## இதுவுமது

10. தந்தையி னில்ல மின்றி தாய்சுக மில்லா தாயும்
அந்தவன் வாழ்வா யென்ன அணுகிற்று இவனுக் [கேதான்
பிந்தியும் வேறு காணுன் புனிதனுய் சேது சென்று
முந்தின தீர்த்தம் தோய்ந்து மூர்ச்சையாய் மரண மாகி;

10. "தந்தையின் வீடு இல்லாமல் பெற்ற தாயின் சுகம் இல்லாமலும் வாழ்ந்து வருவாய்" என்று சொல்லிவிட்டுச் சென்ருள். அது இவனைத்

தொடர்ந்தது. வேறு ஒன்றும் இல்லை. புனிதமான மனத்துடன் சேதுவுக்குச் சென்று புண்ணியமான கடலில் நீராடி, மூர்ச்சையாகி, மரணமடைந்து;

**11.** *பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று [சொல்வேன்*
*மருவிடும் முன்னூழ் சாபம் வரும்துணை நஷ்ட மெய்தும்*
*இருஅன்னை தந்தை யில்ல மேகிடு மென்று [சொல்வோம்*
*உரைத்த யிக்குணத்தா னுக்கு உதிப்பனு மிந்தப் பாலன்.*

11. பிரமதேவனால் படைக்கப்பட்டுப்பிறந்தவன் இந்த ஜாதகனுடைய தந்தை என்றோம். முன்னால் செய்த தீவினை இப்பிறவியில் தொடர்ந்து, உடன் பிறந்தவருக்குத் தோஷம் ஏற்படும். இரு தாய்மார்கள் வாய்ப்பார்கள். தந்தையின் வீடு போய்விடும் என்று கூறுகின்றோம். இவ்விதம் கூறப்பட்ட குணங்களையுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான்.

## ஜாதகனுடைய குணங்கள்

**12.** *பாலகன் குணத்தைச் சொல்வேன் பசுநிற மூகை சாலி*
*நீலிமார் மோக னுவன் நிந்தைக ளேற்கா னுகும்*
*சீலவான் கல்வி மானும் சிந்தையு நல்ல தாகும்*
*வேலன் மேல் பக்தி கொள்வன் விகடங்கள் கூறானுகும்.*

12. இனி ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். பசுமை நிறமுள்ளவன், பெண்கள் மீது மோகம் கொள்ளுபவன். வீண் அபவாதங்கள் அடையாதவன். நல்லொழுக்கமுள்ளவன். கல்வியறிவுள்ளவன். நல்ல மனமுடையவன். முருகக் கடவுள்மீது பக்தியுள்ளவன். அகடவிகடமாகப் பேசாதவன்.

## இதுவுமது

**13.** *உண்டியும் சுகமாய்க் கொள்வ னுரைப்பொடு புளிப்பி [விச்சை*
*துண்டமாய்க் கூறா னுகும் சொல்லதைக் காப்பா னுகும்*
*தண்டமிழ் நுணுக்கம் தேர்வன் சங்கீதப் பிரிய னுகும்*
*அண்டர்கள் பூசை பூண்பன் ஆசான்தன் னருளு [மோங்கும்.*

13. சௌக்கியமாக உண்பதில் விருப்பமுள்ளவன். உரைப்பு, புளிப்பு கலந்த உணவை உட்கொள்ளுவதில் பிரியமுடையவன், கண்டித்துப் பேசாதவன். தான் சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன். நல்ல தமிழில் உள்ள ரகசியார்த்தங்களைக் கற்றுணர்வான். சங்கீதத்தில் பிரியமுள்ளவன். தெய்வ பூசை செய்துவருவான். குருவின் அருளும் விருத்தியாகும்.

## இதுவுமது

14. கலைவணி பங்கள் செய்வன் கஞ்சமாம் ரேகை யுண்டு
நிலமது சேர்ப்பா னுகும் நினைத்தகா ரியமு டிப்பன்
பலரையும் வசியம் கொள்வன் பசித்தோர்மேல் பிரிய
[னுவன்
விலைமாதர் மோகம் கொள்ளான் வித்தகி கேட்டி டாயே.

14. கலை வர்த்தகம் (சித்திரம் முதலியவைகள்) செய்துவருவான். கையில் பத்மரேகை யுடையவன். விளைநிலங்களைச் சேர்ப்பான், எண்ணிய காரியத்தை முடித்துவைக்கும் ஆற்றல் பெற்றவன், எல்லோரையும் தன் பக்கம் இழுக்கும் சக்தியுள்ளவன். பசியென்று வந்தவரிடம் கருணையுடன் உணவு அளிப்பவன். வேசையர் உறவற்றவன். தாயே! மேலும் கேளுங்கள்.

15. பிறந்தநாள் முதலே யாகப் பன்னிரண்டு ஆண்டு மட்டும்
வரவுக்கு சிலவ னேகம் மனது சஞ்சல முண்டாகும்
இனமதிப் பில்லா வாழ்வன் இயம்பின ஆண்டு மேலாய்
கனதனம் மேன்மே லோங்கும் கலைபிறை போலே
[யோகம்.

15. ஜாதகன் பிறந்தநாள் முதல் பன்னிரண்டு வயதுவரையில் வரவுக்கு மேல் செலவு அதிகம் ஏற்பட்டு மனக்கிலேசம் உண்டாகும். தன் சுற்றத்தார் மதிப்பு இல்லாமல் வாழ நேரிடும். நாங்கள் கூறிய பனிரண்டாம் வயதுக்கு மேல் வரவர செல்வம் விருத்தியாகும். வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் வளரும்.

## யோகம்

16. தரணிகள் சேர்த லுண்டு செட்டுகள் செய்த லுண்டு
இனமதிப் புடைய வாழ்க்கை ஏவலாள் தொழிலும்
[விருத்தி
திருமாளி செய்த லுண்டு சொல்லது மேலாய்த் தங்கும்
பொருளது பெருக்க மாகும் புகழது அதிக மெய்தும்.

16. விளைநிலங்கள் சேரும். வர்த்தகத்தொழில் செய்தல் உண்டு. தன் சுற்றத்தார் மதிப்புடைய வாழ்க்கை அமைதல், பணியாட்கள் சேருதல், தொழில் பெருக்கு, அழகிய வீடு அமைத்தல் முதலியன ஒவ்வொன்றுகக் கிட்டும், இவனுடைய வார்த்தைக்கு கௌரவம் உண்டு. பொருட் செலவம் விருத்தியாகி கீர்த்தி பெருகும்.

17. சாதகன் தனக்கு யோகம் செப்பின விபரம் சொல்வாய்
ஆதவன் தனக்கீ ருரில் அசுரர்மந் திரியும் நிற்க

மால்புகர் ஒன்ருய் நிற்க மன்னனும் புதனைப் பார்க்க
கோதையாம் வேசி யோகம் கொள்தர்ம கர்மன் யோகம்;

17. ஜாதகன் தனக்கு யோகம் உண்டு எனக் கூறக்காரணம் என்ன சொல்லுங்கள். சூரியன் இருக்குமிடத்துக்கு (ரிஷபத்துக்கு) பன்னிரண்டாமிடத்தில் அசுரர் குருவாகிய சுக்கிரன் இருப்பதாலும் (புதன் சுக்கிரனும் தர்மகர்மாதிபதிகள் ஒன்பதாம் இடமாகிய ரிஷபத்துக்குறிய சுக்கிரனும், பத்தாம் இடத்துக்கு, மிதுனத்துக்குரிய புதன் ஒன்ருக 8-ஆம் இடத்தில் இருப்பதால்) குருவும் புதனைப் பார்ப்பதாலும் வேசி யோகம், தர்ம கர்மாதிபதி யோகம்.

## யோகபலன்

18. இருவகை யோகத் தாலே இயம்பினேம் பால னுக்கும்
இருவித வில்லம் செய்தல் ஏவலாள் பெருக்க மாகும்
முருகர்தன் னருளு மோங்கும் முனைந்தது வெற்றி
[யாகும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

18. இருவகையான யோகம் ஜாதகனுக்கு ஏற்படும். அதனுல் இரண்டுவிதமான வீடுகள் கட்டுவான். பணியாட்களின் பெருக்கமுண்டு. முருகப் பெருமான் அருள் கிட்டும், எடுத்த காரியம் வெற்றியுடன் முடியும். கரிய மதயானையைப் போன்ற விநாயகனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

## சகோதரர் மரணம்

19. பாலகன் துணைபின் நஷ்டம் பகருவீ ரந்தச் சங்கை
நீலனு மதியு மூன்றில் நின்றதால் தோஷ மெய்தும்
சாலவே மூன்று சேதம் தங்கும் துணையும் விருத்தி
ஒலவே ஆண்பா லொன்று யெய்திடும் கன்னி யிரண்டு ;

19. ஜாதகனுக்குப் பின்பிறந்த சகோதரன் இறந்துபோவான் என்று கூறியதற்குக் காரணம் உரைப்பீர்கள் என, சனியும் சந்திரனும் (சகோதர ஸ்தானமாகிய) மூன்ருமிடத்தில் இருப்பதால் சகோதர தோஷம் ஏற்பட்டு விடும் மூன்று சகோதரர்கள் நிலையாமல் இறந்துவிடுவார். உடன்பிறந்தவர்களில் மூன்று பேர் நிலையாக இருப்பர் அவர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவரும்,

## ஜாதகன் திருமணக்காலம்

20. இதுகளும் விருத்தி யென்ரே மிவர்பலன் பின்பால்
[சொல்வேன்
அதிபனின் மணத்தின் காலம் வரைகிருே மீரொன்
[பாண்டில்

மதிமுக மனைவி தென்பால் வருவளாம் குணத்தைச் [சொல்வேன்
அதிதி போல் வார்த்தை சொல்வள் அன்புள மனத்த [ளாகும்.

20. இம்மூவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றோம் இந்தச் சகோதரருடைய விவரங்கள் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். பதினெட்டாம் வயதில் ஜாதகனுக்கு அழகிய சந்திரனைப்போன்ற முகமுடைய மனைவி தெற்குப் புறத்திலிருந்து வாய்ப்பாள். இனி அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். பெரியோர்களைப்போல் பேசுபவள், அன்புள்ள மனத்தினள்.

## மனைவியின் குணங்கள்

21. மங்கையும் யோக சாலி வருவோரை யாத ரிப்பள்
பொங்கின குடும்ப மேற்பள் புகழான குடும்ப முண்டு
பங்கய முகத்த ளாகும் பதர்குண மில்லா ளாகும்
எங்கள்போ லதிதிக் கன்னம் ஈகுவா ளென்று [சொன்னோம்.

21. மனைவி அதிர்ஷ்டமுள்ளவள். அண்டி வந்தவரை ஆதரித்துவருவாள். செல்வம் கொழிக்கும் குடும்பத்தை ஏற்று நடத்துவாள். அழகிய தாமரையைப்போன்ற முகமுடையவள். கீர்த்திபெற்ற குடும்பத்தை அடைவாள். அற்பகுணமில்லாதவள் எங்களைப்போன்ற துறவிகட்குப் பரிவுடன் அன்னமளிப்பாள் என்று சொல்லுகின்றோம்.

## இரு மனைவிகள்—கிரக நிலை

22. மாதுவும் தீர்க்க சீவி மாமுனி தடுத்துச் சொல்வார்
காதலி யிரண்டு நேரும் கழறுவீ ரந்தச் சங்கை
ஓதுவேன் ஏழோ னிரண்டி லுற்றிட விரண்டோ [னெட்டில்
தீதாக விருப்ப தாலே செப்பினோம் தார மிரண்டு.

22. மனைவி நீண்ட வயதுள்ளவள். மாமுனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்கு இரு மனைவியர் வாய்ப்பர். அதற்குக்காரணம் சொல்லுங்கள். ஏழாம் வீட்டுக்குரிய களத்திர ஸ்தானத்துக்கு உரிய குரு இரண்டாம் வீட்டில் குடும்பஸ்தானத்தில் இருப்பதாலும் அவ்வீட்டுக்குரிய சுக்கிரனும் எட்டாமிடத்தில் இருப்பதாலும் (மறைவு ஸ்தானத்தில்) நாங்கள் இரு மனைவியர் உண்டு என்று சொல்லுகின்றோம்.

## முதல் மனைவியின் மரணம்

23. இருமனை தீர்க்க மாமோ ஏகுமோ விபரம் சொல்வீர்
வருமனை முதலில் சேதம் மறுமனை நேரு மென்றேம்
திருகாகும் காலம் சொல்வாய் சிகிதசை யந்தம் தன்னில்
கருவினுல் மாள்வா ளாகும் காதலி கேட்டி டாயே,

23. இரு மனைவிகளும் நீண்ட ஆயுள் உள்ளவர்களோ அல்லது இடையில் மாண்டு விடுவாரோ அந்த விவரத்தைக் கூறுங்கள். முதலில் வரும் மனைவி இறந்துவிடுவாள். பிறகு இரண்டாம் தாரத்தை மணக்க நேரிடும். அந்தக் காலத்தைச் சொல்லுங்கள். கேது மகாதசை அந்தியத்தில் (ஜாதகனுடைய இருபத்தெட்டாம் வயதில்) மனைவி மரிப்பாள் தாயே! கேளுங்கள்

## இரண்டாம் திருமணக் காலம்

24. பின்மனை யெந்தக் காலம் பேசுவீர் முனியே நீர்தாம்
மன்னனுக் கிருபா னென்பா னுண்டினில் மருமனைதான்
தென்திசை தன்னில் நேரும் செப்புவீ ரவள்கு ணத்தை
உன்னத வார்த்தை சொல்வளு ரகன் போல் கோபமேற்பள்.

24. ஜாதகனுக்கு இரண்டாம் திருமணம் நேரும் காலம் எப்போது? சொல்லுங்கள், முனிவரே! ஜாதகனுக்கு இருபத்தொன்பதாம் வயதில் (முதல் மனைவி இறந்து ஒருவருடத்தில்) தெற்குப் பக்கத்திலிருந்து மனைவி வருவாள். இனி அவளுடைய குணத்தைக் கூறுங்கள். உயர்ந்த வார்த்தைகளையே பேசுவாள். சர்ப்பம்போல் கோபம் கொள்ளுவாள்.

## இதுவுமது

25. வறுமையில் லாமல் வாழ்வள் வயதுமே தீர்க்க மெய்தும்
பெருஞ்சுதர் தோஷ மெய்தும் பேதைய ரிருவர் தீர்க்கம்
அரிவைய ரெம்மா துக்கு அணுகிடும் சுதர்கள் தாமும்
ஒருஆண்பால் முதன்ம னைக்கு உரைக்கிறேம் தீர்க்கமாக

25. தரித்திரம் இல்லாமல் வாழ்ந்துவருவாள். நீண்ட ஆயுள் உள்ளவள். ஆனால் பிறக்கும் குழந்தைகளில் ஆண் குழந்தைக்குத் தோஷமுண்டாகும். இரு பெண் குழந்தைகள் பிறந்து நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றேம். குழந்தைகள் எந்த மனைவிக்குத் தோன்றுவர். அதைச் சொல்லுங்கள். முதல் மனைவிக்கு ஒரு புத்திரன் பிறப்பான். அவன் நீண்ட ஆயுள் உள்ளவன் என்று சொல்லுவோம்.

## ஜாதகனின் முற்பிறவி

26. பின்பாரி தனக்கு மேதான் பேசுவோ மற்ற வெல்லாம்
இன்னவன் முன்சென் மத்தை இயம்புவோம் திருமயச்
[சூரில்
பொன்வேலை செய்யும் குலத்தில் பிறந்துமே வறுமை
[யின்றி
அன்னவன் வாழு நாளில் அணுகிய வினையைக்
[கேண்மோ.

26. மற்றும் தோன்றும் குழந்தைகள் எல்லாம் இரண்டாம் மனைவிக்குத்தான் என்றோம். இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். அவன் திருமயச்சூர் என்னும் ஊரில் பொன் வேலை செய்யும் பொற்கொல்லர் (தட்டார) வமிசத்தில் பிறந்து தரித்திரத் நிலை இல்லாமல் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக கேளுங்கள்.

## ஜாதகனின் வினை

27. மறையோர்க்கு மங்க ளத்தில் வஞ்சனை செய்தா
[னென்றோம்
அரிவையர் ஏழைக் கேதான் அடாதகா ரியங்கள்
[செய்தான்
பொருளதை மோசம் செய்தான் புக்கிற்று அதுவோர்
[தோஷம்
திருமக னந்தி யத்தில் திருஷ்டியில் குறைவு நேர்ந்து;

27. அந்தணர்கட்கு மங்களத்தில் (திருமண விஷயத்தில்) வஞ்சனை செய்தான் என்றோம். அது தவிர ஏழைகளுக்குச் சில அடாத செயல் புரிந்ததுடன் பொருளையும் மோசம் செய்தான். அந்தத்தோஷம் இவனை வந்தடைந்தது. அதனால் அப்பிறவியிலேயே அவனுக்குக் கண்பார்வை குறைந்து;

28. வேலுடைக் கடவுள் பக்தி விரும்பியே விரதம் பூண்டு
காலன்தன் நாடு சென்று கஞ்சனால் வரையப் பட்டுப்
பாலகன் பிறப்பா னுகும் பகருவோம் முன்னூழ்ச் சாபம்
ஆலம்போல் சேர்ந்த தென்றோம் அணுகிடும் தார
[மிரண்டு.

28. வேலையுடைய முருகக் கடவுள்மீது பக்திகொண்டு உண்மையான மனத்துடன் விரதங்கள் பூண்டு வாழ்ந்து, மரணமடைந்து பிறகு பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் ஜாதகன் பிறந்தான் என்றோம்.

முற்பிறவித் தோஷம் கொடிய விஷம்போல் தொடர்ந்தது. அதனால் இரு மனைவியர் ஏற்பட்டனர் என்றோம்.

## தாயின் குணங்கள்

29. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அரிநிற முண்மை
[நெஞ்சம்
பொன்பணி யதிகம் காணாள் பொய்யது புகலா ளாகும்
மன்னவன் மனதுக் கேத்தோள் மறுத்துரை அதிகம்
[கூறுள்
சொன்னசொல் சுருக்க மாகும் சோம்பிடாள் காரி
[யத்தில்.

29. இனி, தாயின் குணத்தைக் கூறுகின்றோம். அவள் மகாவிஷ்ணுவைப் போன்று கரியநிற முடையவள். உண்மையான மனத்தினள். பொன் ஆபரணங்கள் அதிகம் இல்லாதவள். பொய் பேசாதவள். தன் கணவன் மனத்துக்கேற்றவள். கணவன் வார்த்தைக்கு எதிர் வார்த்தை பேசாதவள். சுருக்கமாகப் பேசுபவள். காரியங்கள் செய்வதில் சோம்ப லில்லாதவள்.

## இதுவுமது

30. மாதுபாட் டாளி யாகும் மருவிடும் பித்தச் சூடு
ஓதுவேன் துணையா னொன்று உத்தமி மார்க ளைந்து
மேதினில் விருத்தி யென்றோம் விளம்புவோம் பின்பால்
[சேதி
போதக வானைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

30. தாய் உழைத்துச் சாப்பிடும் வர்க்கத்தைச் சேர்ந்தவள். பித்தச் சூட்டு நோயுடையவள். சகோதரன் ஒருவனையும் சகோதரிகள் ஐவரையும் பெற்றவள். அவர்கள் தீர்க்க ஜீவிகள். அவர்கள் விவரத்தைப் பின் பாகத்தில் சொல்லுகின்றோம். விநாயகக் கடவுளைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

## தாயின் முற்பிறவி

31. முன்சென்மம் விரிஞ்சி மேல்பால் முதியூரி லிக்கு லத்தில்
அன்னவ ளுதித்து வந்தாள் ஆண்மையாய்க் குடும்பி
[யாகி
தனமதி லிச்சை யின்றிச் சண்டன்தன் பதிக்குச் சென்று
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று
[சொல்வோம்,

31. ஜாதகனுடைய தாய் முற்பிறவியில் விரிஞ்சி நாட்டுக்கு மேற்கில் உள்ள முதியூரில் இதே குலத்தில் பிறந்தவள். பெரிய குடும்பத்தைப் பெற்று, செல்வத்தில் விருப்பமின்றி, துறவி போல் வசித்து எமபுரம் அடைந்து (மரண மெய்தி), மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் ஜாதகனின் தாயாக வந்தவள் என்றோம்.

## தாயின் மறுபிறவியும் தாய்தந்தையரின் மரணகாலமும்

32. மறுசென்மம் காஞ்சி தன்னில் வருவளாம் வைசியச்
[சேயாய்
அறுவெட்டு ஆண்டு தன்னில் அம்புலி தசையந் தத்தில்
உறைகுவாள் கால ஞடு உதயவன் தசையந் தத்தில்
பெரும்தந்தை கண்டம் சொல்வோம் பேசிய முப்பா
[னேழில்.

32. ஜாதகனுடைய தாய் மறுபிறவியில் காஞ்சீபுரத்தில் வைசிய குலத்தவளாகப் பிறப்பாள். அவள் ஜாதகனுடைய நாற்பத்தெட்டாம் வயதில், சந்திர மகா தசையின் அந்தத்தில் இறப்பாள்; ஜாதகனுடைய முப்பத்தோழாம் வயதில், சூரிய மகா தசையின் அந்தத்தில், தந்தை இறப்பான்.

## ஜாதகனுடைய தந்தையின் மறுபிறவியும் ஜாதகன் மரணகாலமும்

33. மறுசென்மம் வான்மி யூரில் வருவனும் வைசியச்
[சேயாய்ப்
பொருளது பெருக்க மாகிப் புகழுடன் வாழ்வா ஞகும்
அறுபது ஆண்டு தன்னில் ஆனிமா தத்தி லேதான்
திருமக னுடல மேகும் செப்பின மொழி குன்ருது.

33. மறுபிறவியில் திருவான்மியூரில் வைசிய குலத்தவனுகத் தந்தை பிறப்பான். பொருட் செல்வம் பெற்று, அதிகக் கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். ஜாதகன் தன் அறுபதாம் வயதில், ஆனி மாதத்தில், மரண மடைவான். நாங்கள் கூறியவை தவரு.

## ஜாதகனுடைய மறுபிறவி

34. பாலன்பின் சென்மம் சொல்வேன் பட்சியின் நகரம்
[கீழ்ப்பால்
சாலவே சிறுவூர் தன்னில் செனிப்பனும் பிரம்ம சேயாய்
ஞாலங்க ளதிக முண்டாய் நாயகன் வாழ்வா ஞகும்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தது தப்பா தாகும்,

34, ஜாதகனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். பட்சியின் நகரம் என்று புகழ் பெற்ற திருக்கழுக்குன்றத்துக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில் அந்தணக் குலத்தவனாகப் பிறந்து, விளைநிலங்களைப் பெற்று வாழ்ந்து வருவான். ஆலகால விஷத்தை யுண்ட நீலகண்டப் பெருமானின் தேவியே! நாங்கள் சொன்னவைகள் தவறாமல் நடக்கும்.

## ஜனனகால தசை

35. செனித்திடு காலந் தன்னில் புததசை யாண்டு நாலும்
குனித்திடு நவமாம் திங்கள் கூடிய நாள்மூ வைந்தாம்
வனிதையே பூர்வம் சொன்னோம் வரைகிறோம் பின்பால் [சேதி
வினையிலாத் தவங்கள் செய்யும் வித்தகி கேட்டி டாயே.

35. ஜாதகன் பிறக்கும் போது புத மகா தசையில் கர்ப்பச் செல்லுபோக மீதி யிருப்பு நான்கு வருடங்களும் ஒன்பது மாதங்களும் நாட்கள் பதினைந்துமாம். தாயே! இதுவரையில் முதல் பாகம் சொன்னோம். பிற்பாகத்தில் மற்ற விவரங்களைச் சொல்லுகின்றோம். தீவினைகளின்றி தவங்களையியற்றும் தேவியே! கேளுங்கள், —V. R. N.

————

## ஜாதகம் 69

### ஜனனகால கிரகநிலை

1. [1]பொன் [2]குசன் கேது [3]கோலாம் புதன் [4]புகர் [5]தேள தாகக
சந்திரன் ராகு மேடம் சனி [6]மானில் [7]பரிதி [8]மேரு
கன்னியும் செனன மாகக் கழறுவீர் பலனை யென்று
அன்னையும் கேட்கும் போது அத்திரி முனிவர்
[சொல்வார்.

1. குரு, அங்காரகன், கேது, துலாத்திலும், புதன், சுக்கிரன், விருச்சிகத்திலும், சந்திரன், ராகு மேடத்திலும், சனி மகரத்திலும், சூரியன் தனுசிலுமாக இருக்க ஜன்ம லக்கினம் கன்னியானால் ஏற்படும் பலனைக் கூறுங்கள், என்று பார்வதி கேட்கும் போது, அத்திரி முனிவர் பதில் உரைக்கின்றார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் ராகு | | |
| | இராசி சக்கரம் | | |
| சனி | | | |
| சூரியன் | புதன் சுக்கிரன் | குரு அங்காரகன் கேது | லக்கினம் |

### ஜாதகன் பிறந்த வீட்டு விவரம்

2. பாலகன் ஆணும் சென்மம் பகருவோ மில்லம் தானும்
[9]காலன்தன் வாடை யாகும் காளியும் தென்மே லாகும்

---

1. குரு
2. அங்காரகன்
3. துலாம்
4. சுக்கிரன்
5. விருச்சிகம்
6. மகரம்
7. சூரியன்
8. தனுசு
9. எமன் - ர்ண்டு தெற்கு

ஆலத்தை யுண்டோன் மேற்கில் அழகிய குண்ட
[முத்தரம்
ஏலயிவ் வடையா ளத்துள் இலகிய சமவூ ராகும்;

2. இந்த ஜாதகம் ஓர் ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு தெற்குப் பக்கம் உள்ள வரிசையில் வடக்கு நோக்கியுள்ள வாயிலை யுடையது. காளிகோயில் தென் மேற்கில் இருக்கும். ஆலகால.விஷத்தை யுண்ட நீலகண்ட பெருமான் மேற்கில் கோயில் கொண்டுள்ளார். வடக்கில் ஓர் அழகிய குளம் உண்டு. இவ்வித அடையாளங்களுள்ள சமநிலையான ஊரில்;

## ஜாதகன் குலம்

3. வடுகர்தம் குலமே யாகும் மாரனும் சேஷ்ட ஞகும்
பெரும்தந்தை தாயின் யோகம் பேதையர் புத்திர யோகம்
திருமகன் முன்பின் சென்மம் செப்புவோ மிந்நூல்
[தன்னில்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

3. வன்னிய குலத்தவஞக ஜாதகன் பிறந்தான். அவன் தன் தந்தைக்கு மூத்த புதல்வன் என்றோம். இனி, ஜாதகனுடைய தாய், தந்தை, மனைவி, மக்கள், முற்பிறவி, மறுபிறவி ஆகியவற்றை இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம், கரிய யானை முகக் கடவுளைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

## ஜாதகன் தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணையா னைந்து சக்திமா ரிருவ ராகும்
நொந்திடு மற்ற வெல்லாம் நுகர்ந்தஆண் ஒன்ருய்
[வாழ்ந்து
பிந்தியும் வேருய்ச் செல்வர் பேசுவோ மந்தம் தன்னில்
இந்தவன் தந்தை சேதி இயம்புவோம் தாயே கேளும்.

4. ஜாதகனுடன் பிறந்தவர்கள் ஐந்து சகோதரர்களும் இரு சகோதரிகளும் ஆவர். ஆனல் அவர்களில் ஒரு சகோதரனைத் தவிர மற்ற எல்லாக் குழந்தைகளும் இறந்துபோம். அந்தச் சகோதரனும் தந்தையுடன் ஒன்ருக வாழ்ந்து பிற்காலத்தில் தனியாகச் சென்று விடுவான். அவ்விவரங்களைக் கடைசியில் சொல்லுகின்ருேம். இனி ஜாதகனுடைய தந்தையின் விவரங்களை மட்டும் சொல்லுகின்ருேம். தாயே! கேட்பீராக,

## தந்தையின் விவரங்கள்

5. கல்வியும் சமம தாகும் கணக்கினி லூக முண்டு
வல்லிமார் மோக ஞவன் மாடுகள் விருத்தி யுண்டு

இல்லறம் செய்வா னுகும் இரணியம் சேர்ப்பா னுகும்
எல்லைக ளதிகம் வாங்கல் இருவிதக் குணமு மென்ருேம்.

5. ஜாதகனுடைய தந்தை சம நிலையான கல்வியறிவு உடையவன். கணக்கில் அதிக ஊக முள்ளவன். பெண்களின் மீது மையல் கொள்ளும் இயல்பினன். கால் நடைப் பெருக்கம் உள்ளவன். இல்லறத்தை அழகாகச் செய்து வருவான். பொன்னை அதிகமாகச் சம்பாதித்து வருவான். விளை நிலங்கள் அதிகமாக வாங்குவான். இருவிதமான குணங்களுள்ளவன்.

## யோகம்

6. பிறைபோலே யோக மெய்தும் புகழ்ந்தோரை யாத
[ரிப்பன்
குறிமுக வடிவு காணும் கொண்டலாம் ராசி யாகும்
கரம்நோய்முன் னுளே யாகும் கட்செவி போலே கோபம்
திருவோங்கும் தைரி யத்தன் செப்புவோ மிவன்முன்
[சென்மம்.

6. வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும். தன்னைப் புகழ்ந்தவரை ஆதரித்து வருவான். முகம் வசிகரமாக விருக்கும் (முகத்தில் வடு இருக்கும்)...... ராசியில் பிறந்தவன் சொல்லுகின்ருேம். ஆதியிலிருந்தே கையில் நோயுள்ளவன். ஸர்ப்பம் போல் கோபம் கொள்ளுபவன். லக்குமிகடாட்சம் உள்ளவன். தைரிய முள்ளவன். இனி, அவனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்ருேம்.

## தந்தையின் முற்பிறவி

7. சேரனு டதனி லேதான் செழிப்புள சேடர் வமிசம்
மாரனு முதித்து மேலும் வளமுளக் குடும்பி யாகிப்
பாரியு மதலை யுண்டாய்ப் பலர்தூசுச் செட்டுச் செய்து
தீரனும் வாழு நாளில் தன்குல மாது தானும்;

7. சேர நாட்டில் செழிப்புள்ள ஓர் ஊரில் சேடர் வமிசத்தில் பிறந்து, செல்வம் கொழிக்கும் குடும்பத்தைப் பெற்று, மனைவி மக்களை யடைந்து, பலவிதமான துணி வியாபாரம் செய்து வாழ்ந்து வருங்காலத்தில் தன்னுடைய குலப் பெண் ஒருத்தி;

8. சிலதுபொன் இவன்பால் வைத்துச் சேதுக்குச் சென்ரு
[ளென்ருேம்
நலனிலா தேகி யாலே நங்கையு மரண மானுள்

தலைவனு மதனைக் கேட்டுத் தையல்பொன் னதனை
[யின்னோன்
அலைகடல் துயின்றே னுக்கு அளித்தன னென்று
[சொல்வோம்.

8. இவனிடம் (ஜாதகனுடைய தந்தையிடம்) சிறிது பொருளை வைத்து விட்டுச் சேதுவுக்குச் சென்றாள். ஆனால் அவள் உடல் நலக் குறைவுள்ள சரீர முள்ளவளாக இருந்தபடியால், அங்கேயே மரண மடைந் தாள். இந்த ஜாதகனுடைய தந்தை அவ்விஷயத்தைப் அறிந்து கொண்டு அப் பெண் கொடுத்த பொருளை அலை கடலில் துயின்று வரும் மகாவிஷ்ணு வின் ஆலயத்துக்கு அளித்து விட்டான் என்று சொன்னோம்.

## அபிமானமனைவி வரக் காரணம்

9. வினையது இல்லா தாகி மேவினன் கால னூடு
கனமுள பிரமன் லக்கம் கலந்தன னிவனே யென்றோம்
தனமது ஈந்த மாது தன்பொருள் வாங்க வேண்டி
அனையவே யிரண்டாம் மாதா அபிமான மாக நேரும்.

9. வேறு தீவினையேதும் இல்லாமல் மரண மடைந்தான். பிறகு பிரம்மதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தவன் என்றோம். பொருளைக் கொடுத்த பெண் தன் பணத்தைத் திருப்பி வாங்க இவனுக்கு இரண்டாந்தாரமாக வாய்ந்தாள். அவளும் அபிமான மனைவியாக வருவாள்.

## புத்திரபாவம்

10. எந்தக்கா லத்தில் நேரு மியம்புவீர் முனியே நீர்தான்
வந்தவ னிருப தாண்டில் வருவளா மென்று
[சொல்வோம்
அந்தவள் தனக்கு புத்திரர் ஆணது ஒன்று தீர்க்கம்
நொந்திடு மற்றவெல்லாம் நிமலியே கேட்டி டாயே.

10. எந்தக் காலத்தில் அவள் வருவாள் சொல்லுங்கள், முனிவரே தாங்கள். ஜாதகனுடைய இருபதாம் வயதில் தந்தைக்கு அபிமான மனைவி வாய்ப்பாள். அவளுக்குப் புத்திரன் ஒருவன் மட்டும் நிலையாக இருப்பான். மற்றும் தோன்றும் குழந்தைகள் நிலையாக இரா என்று சொல்லுகிறோம். அழகியே! கேளுங்கள்.

## ஜாதகரின் குணங்கள்

11. இந்நெறி யுடையா னுக்கு இப்பால னுதிப்பா னுகும்
அன்னவன் குணத்தைச் சொல்வோம் அழகனு மிரு
[சிகப்பன்

முன்னமே குடும்பி யாவன் மொழியதைக் காப்பா னுகும்
உன்னதக் கதைகள் கற்பன் உத்தமி கேட்டி டாயே.

11. இவ்விதம் கூறக்பட்ட குணங்களுடையவனுக்கு இந்த ஜாதகன் தோன்றுவான். இனி அவனுடைய குண விவரங்களைச் சொல்லுகின்ருேம். அழகுள்ளவவன். கருமை கலந்த சிவந்த நிறமுடையவன். பெரிய குடும்பியாக இருப்பான். தான் சொன்ன வார்த்தைகளின்படி நடப்பவன். உயர்ந்த (புராதன) கதைகளைக் கற்பான். உயர்ந்தவனே! கேளுங்கள்.

## யோகம்

12. இந்திர சம்பத் துண்டு இடரென்ருேர்க் குதவு வானும்
பந்தினர் மதிக்க வாழ்வன் பரிவண்டி யுடைய னுகும்
தன்மமாம் குணத்த னுகும் துன்மடம் கூவல் சோலை
அன்னவன் செய்வா னுகும் அதிதிகட் கன்ன மீவன்.

12. இந்திரனைப் போன்று அளவற்ற சம்பத்து உள்ளவன். துன்பமடைந்தவர்கட்கு உபகாரி. தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். குதிரை வண்டி உடையவன். குளிர்ந்த குணங்களுள்ளவன். மடம், கிணறு, தோட்டம் முதலியவைகளைத் தோற்றுவிப்பான். கதியற்றவர்கட்கு உணவு அளிப்பவன்.

## இதுவுமது

13. நிலமது பெருக்கம் செய்வன் நினைத்தகா ரியமு டிப்பன்
விலைமாதர் மோகம் கொள்ளான் வெற்றியாம் தொடு [வழக்கு
தலவாசம் செல்லா னுகும் தன்துணை யிருவர் தோன்றும்
நிலையாது ஒன்று என்ருேம் நிமலியு மொருத்தி தீர்க்கம்.

13. விளைநிலங்களைப் பெருக்குவான். எண்ணிய வேலைகளைச் செய்து முடிக்கும் வல்லமை யுடையவன். வேசையர் மீது மையல் கொள்ளாதவன். எடுத்த காரியத்தை ஜயத்துடன் செய்து முடிப்பான். புண்ணியத் தலங்களுக்குச் செல்வதில் பிரியமில்லாதவன். உடன் பிறந்தவர் இருவர் தோன்றுவர். அவர்களில் ஒருவன் நிலையில்லாதவன். சகோதரி ஒருத்தியே நீண்ட ஆயுளுள்ளவள்.

## ஜாதகனுடைய சகோதரியின் குணங்கள்

14. மங்கையின் குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி [யாவள்
எங்கள்போ லதிதிக் கன்ன மீவளாம் நற்கு ணத்தாள்

அங்கவள் வரனு மேல்பால் அணுகிடும் சுதரா ணிரண்டு
நங்கைமா ரவ்வா ருகும் நசித்திடு மற்ற வெல்லாம்.

14. இனிச் சகோதரியின் குணவிசேஷங்களைக் கூறுகின்றோம். மாந்தளிரைப் போன்ற மென்மையான சரீரமுடையவள். எங்களைப் போல் (கதியற்றவர்கட்கு) பெரியோர்கட்கு அன்னமளித்து ஆதரவு தருவாள், நற்குணமுடையவள். தன் கணவன் மனம் போல் வாழ்ந்து வருவாள். இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் தோன்றுவர். மற்றவரெல் லாம் இறந்துவிடுவர்.

## இதுவுமது

15. வரனில்லம் நீங்கி யேதான் வருகுவாள் தாயில் லத்தில்
திருகது இல்லா தாகிச் செல்வனோ டொத்து வந்து
பெருமையாய்க் குடும்பி யாகி பிரபல முடனே வாழ்வள்
நெறியதைக் காப்பா ளாகும் நிமலியே கேட்டி டாயே.

15. தன் கணவனுடைய வீட்டை விட்டுத் தன் தாயின் வீட்டில் வசித்து வருவாள். வேறு தீவனைகள் இல்லாமல் சகோதரனுடன் ஒத்து வாழ்ந்து, பெருமையுள்ள குடும்பத்தை யடைந்து பிரபலமாக வாழ்ந்து வருவாள். நேர்மையாக நடப்பவள். தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய திருமணக் காலம்

16. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் பத்தொன்ப
[தாண்டுள்
நீலியும் மேல்பால் நேரும் நுவலுவோ மவள்கு ணத்தை
சீலியாம் நல்லோ ளாவள் தேறின புத்தி யேற்பள்
பால் பாக்கிய முடையா ளாகும் பண்போருக் கன்ன
[மீவள்.

16. இனி ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய பத்தொன்பதாம் வயதுக்குள் நிகழும். மனைவி மேற்குப் பக்கத்திலிருந்து வருவாள். இனி அவளுடைய குணத்தைக் கூறுகின்றோம். நல்லொழுக்க முள்ளவளாகவும் நல்லவளாகவும் வாழ்வள். முதிர்ந்த அறிவாளி. பால் பாக்கிய முடையவள். பண்புடைய பெரியோர்களுக்கு உண்ண உணவளிப்பவள்.

## மனைவியின் குணங்கள்

17. அன்னம்போல் வடிவ மொக்கும் ஆளன்தன் மனத்துக்
[கேத்தோள்
தன்மனம் வெகுளி யாகும் தன்பந்து மதிக்க வாழ்வள்

கன்னிகை வந்த பின்பு கலைபிறை போலே செல்வம்
பின்னமில் லாமலே தோன்றும் பெரிதான குடும்ப
[மேற்பள்

17. அன்னத்தைப் போன்ற அழகான வடிவமுள்ளவன். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவள், குதுகளில்லாத மனத்தினள். தன் சுற்றத்தார் மதிக்கும்படி வாழ்ந்து வருவாள். அவள் வந்த பிறகு பிறைச் சந்திரன் போல் போகம் வளரும். செல்வம் விருத்தியாகும். தடையில்லாமல் பெருகும் பெரிய குடும்பத்தை அடைவாள்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

18. சுதர்களும் நவமே தோன்றும் செப்புவோ மாண்பால்
[நான்கு
மதிமுகப் பெண்பா லிரண்டு வரைகிறோம் தீர்க்க மாக
உதவாது மற்ற வெல்லாம் உதித்தசேய் யோக வான்கள்
அதிகமாய் பொருள்ப டைப்பர் அழகேச னொப்பாய்
[வாழ்வர்.

18. ஜாதகனுக்குப் புத்திர பாவத்தைச் சொல்லுகின்றோம். குழந்தைகள் ஒன்பதில் நான்கு புத்திரர்களும் அழகிய முகத்தை யுடைய பெண்களிரண்டும் நீண்ட ஆயுள் உள்ளவைகள். மற்ற குழந்தைகள் நிலையில்லாமல் இறந்துவிடும். பிறக்கும் குழந்தைகள் யோகமுள்ளவைகளாக இருக்கும். அதிகமாக்ப் பொருள்படைத்து அளகாபுரிக் கதிபனாகிய குபேரனைப் போன்ற செல்வவானாக வாழ்ந்து வருவார்கள்.

## தாயின் விவரங்கள்

19. சாதகன் அன்னை சேதி சாற்றுவோம் பொறுமை சாலி
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உறைந்தபின் வரன்யோ
[கம்தான்
பாதக மனமில் லாதாள் பரவுப காரி யாகும்
சோதிபோல் பந்து வுக்கு துயரத்தைக் காப்பா ளாகும்.

19. இனி ஜாதகனுடைய தாயின் விவரங்களைக் கூறுகின்றோம். அவள் பொறுமை யுடையவள், இன்பமுறும்படி பேசுபவள். இவளை மணந்த பின் கணவனுக்கு யோகம் பெருகும். தீங்குகளில்லாத மனத்தினள். பிறருக்கு உபகாரி. இருட்டில் உள்ளவர்கட்கு உதவும் தீபம்போல், தன் சுற்றத்தாருடைய துயரத்தைக் காப்பாள்.

## தாயின் முற்பிறவி

20. இல்லமும் மேல்பா லாகும் இவள்துணை யாண்பால்
[தோஷம்
வல்லியு மொருத்தி யாகும் வரைகிறோ மிவள்தன் பூர்வம்
நல்லதோர் பட்சி தன்னில் நாயகி விசுவச் சேயாய்;
அல்லலில் லாமல் வாழ்ந்து அவள்சுத ரதிக முண்டாய்;

20. அவளுடைய வீடு மேற்குப் பக்கம் உள்ளது. அவளுடைய சகோதரர்களுக்கு தோஷம் உண்டு. ஆனால் சகோதரி ஒருத்தி நீண்ட ஆயுள்ளவள். இனி, தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். உயர்ந்த தலமாகிய திருக்கழுக்குன்றத்தில் விச்வ குலமாகிய (பொற்கொல்லர்) குலத்தில் பிறந்து துன்பங்களில்லாமல் வாழ்ந்து புத்திரர்களை அதிகமாகப் பெற்று;

## தீவினை

21. வாழ்நாளில் வினையைச் சொல்வேன் வரன்தம்பி பேரி
[லின்றோள்
தாழ்வான வார்த்தை சொன்னாள் தன்மனம் திகில
[டைந்து
பாழான வார்த்தை யென்மேல் பகர்ந்திட்ட பாவிக்
[கேதான்
ஆழியில் பின்சென் மத்தில் ஆண்துணை யில்லா தாயும்;

21. வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். அவள் தன்னுடைய கணவனுடைய இளைய சகோதரன் மீது தாழ்வான வார்த்தைகளை (தகாத வார்த்தைகளை)க் கூறினாள். அவனும் தன் மனம் நொந்து கூறிய வார்த்தைகளாவன "என் மீது தகாத வார்த்தைகளைக் கூறிய பாவியே! உனக்கு ஏற்படும் அடுத்த பிறவியில் உடன் பிறந்த சகோதரனில்லாதவளாகவும்;

## மைத்துனனின் சாபம்

22. வரன்பகை யாகி நீயும் வாழ்குவா யென்று சொல்லித்
தெருத்துளைத் தூற்றிச் சென்றான் சேர்ந்தது அந்தத்
[தோஷம்
அரிவையு மந்தி யத்தில் அச்சேது பதிக்குச் சென்று
பெரியோர்கள் தொண்டு பூண்டு புக்கினாள் கால நாடு.

22. தன் கணவனுடன் விரோதம் கொண்டு வாழ்ந்து வருவாய்" என்று தெரு மண்ணை வாறி இறைத்தான். அந்தச் சாபம் இவளை (ஜாதகனுடைய

தாயை) வந்தடைந்தது. அவள் தன் இறுதிக் காலத்தில் சேதுவுக்குச் சென்று, பெரியோர்கட்குத் தொண்டுகள் பல செய்து மரணமடைந்து;

## சகோதரதோஷம்

23. வேதனல் வரையப் பட்டு விளங்கின ளிந்த மாது
தீதாக முன்னூழ் சாபம் சேர்ந்திடு மிச்சென் மத்தில்
காதலி துணையாண் தோஷம் கணவனும் சிலது வேளை
ஒதுவான் விரோத வார்த்தை உரைக்கிறர் பிருகு
[தானும்.

23. வேதமுணர்ந்த பிரமதேவனல் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தாள். முற்பிறவித் தோஷம் இப்பிறவியில் தொடர்ந்தது. அதனல் அவளுக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டது. தன் கணவனும் சில காலம் இவளோடு சண்டை யிடுவான். இனி, பிருகு முனிவர் கூறுகின்றர்.

24. முன்சென்மம் சேது சென்ற வுயர்பலத் தாலே யிப்போ
முன்வினை விலகா தோசொல் மொழிவீர்க ளந்தச் சங்கை
அன்னவன் மனம்க லங்கி அறைந்தசா பங்கள் நீங்கா
வந்தது வந்தே தீரும் வரைகிறே மிவள்பின் சென்மம்.

24. முற்பிறவியில் சேதுவுக்குச் சென்று வந்ததாகிய நற்செய்கை யினல் முற்பிறவித் தீவினை விலகாதோ? சொல்லுங்கள். மைத்துனன் மனங் கலங்கிக் கூறிய சாபங்கள் விலகா. வருவது வந்தே தீரும். இனி, ஜாதக னுடைய தாயின் மறுபிறவியைச் சொல்லுகின்றேம்.

## தாயின் மறுபிறவி

25. தில்லையில் பிரம்ம சேயாய் செனிப்பாளா மென்று
[சொல்வோம்
வல்லிக்கு இச்சென் மத்தில் வந்தபுண் ணியங்க
[ளென்ன
நல்லவ ளாகி வாழ்ந்தும் நலிந்தோரை யாத ரித்தும்
அல்லலென் றேருக் கன்னம் அளித்தபுண் ணியத்தி
[னலே;

25. தில்லைத் தலமாகிய சிதம்பரத்தில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள் என்று சொல்லுகின்றேம். ஜாதகனுடைய தாய் இப்பிறவியில் செய்த நற்செயல்கள் எவை என்று கூறுங்கள். நல்லவளாக வாழ்ந்து வந்ததாலும், துன்புற்றவரைக் காத்ததாலும் ஏழைகளைப் பரிவுடன் காத்து வந்ததாலும், சிலருக்கு அன்னம் அளித்த புண்யம் ஆகிய நற்செயல்களாலும்;

## தாயின் மரணகாலம்

26. மறைக்குலம் தன்னி லேதான் உதிப்பளா மென்று [சொல்வோம்
இருபது னுலு வாண்டில் ஏகுவாள் கால நாடு
பிறைதசை புகர்பு சிப்புபில் புகலுவோ மந்தக் காலம்
உரைக்கிரும் தந்தைக் கேதான் உரகன்தன் தசைக்கா [லத்தில்.
பரசுரன் புத்தி யாகும் பேசுவோம் நாற்பா னைந்தில்.

26. அந்தண குலத்தில் பிறப்பாள் என்று சொல்லுகின்ருேம். ஜாதக னுடைய இருபத்துநான்காம் வயதில் தாய் மரணமடைவாள், அக்காலத்தில் சந்திர மகாதசையில் சுக்கிரபுத்தி நடக்கும். பிறகு தந்தை ராகு மகாதசையில் சுக்கிர புக்தியில், ஜாதகனுடைய நாற்பத்தைந்தாம் வயதில் மரணமடைவான்.

## ஜாதகனுடைய யோகம்

27. பாலகன் யோகச் சேதி பகருவோ மினிமே லாக
ஞாலங்கள் வீருத்தி செய்வன் நற்றந்தை மேலாய் [வாழ்வன்
சாலவே வறுமை காணுன் தருமத்தில் சதாவு மிச்சை
மால்மனை வாச மெய்து மளகேச னெப்ப தாமே.

27. இனி, ஜாதகனுடைய யோகச் செய்திகளைச் சொல்லுகின்ருேம். விளைநிலங்களைப் பெருக்குவான். அவன் தன் தந்தைக்கு மேலாய் வாழ்ந்து வருவான். வறுமை என்பதே இல்லாதவன். சதா தருமம் செய்வதில் விருப்ப முள்ளவன். இவனிடம் லக்ஷ்மி எப்போதும் வசிப்பாள். குபேரனைப் போன்று செல்வந்தனுக விருப்பான்.

## முற்பிறவி

28. இன்னவன் பூர்வம் தன்னை எடுத்துநா முரைப்பக் [கேண்மோ
துங்கமாம் காஞ்சி தன்னில் செனித்தனன் கங்கை [சேயாய்
நங்கையு மதலை யுண்டாய் நலிந்தோரை யாத ரித்துத்
துங்கியக் குடும்பி யாகிப் பெம்மானின் பக்தி கொண்டு;

28. இனி ஜாதகனுடைய முற்பிறவியை எடுத்துச் சொல்லுகின்ருேம். கேளுங்கள். தூய்மையான காஞ்சீபுரத்தில் வேளாள வமிசத்தவனுகப் பிறந்து, மனைவி மக்களையடைந்து, ஏழைகளை ஆதரித்து வந்து, நல்ல குடும் பத்தை யடைந்து, சிவபெருமான்மீது பக்திகொண்டு வாழ்ந்து ;

* இப்பாட்டில் பாதி அடி மிகுந்துளது.

## ஜாதகனுடைய மரணகாலம்

29. முன்வினை யில்லா னாகி மேவினன் கால நாடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறப்பனு மிவனே [யென்றோம்
மன்னன்போல் வாழ்வா னாகும் வளமையாய்க் குடும்ப [மேற்பன்
அன்பது ஐந்து ஆண்டில் அணுகிய தேளின் மாதம்;

29. முற்பிறவித் தீவினை எதுவும் இல்லாமல் இறந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தவன் இவன் என்றோம். அரசன்போல் வாழ்ந்து வருவான். செழிப்புள்ள குடும்பத்தை அடைவான். ஜாதகனுடைய ஐம்பத்தைந்தாம் வயதில் கார்த்திகை மாதத்தில்;

## ஜாதகனுடைய மறுபிறவி

30 இன்னவ னுடல மேகும் இயம்புவோ மிவன்பின் [சென்மம்
தென்திசை யரங்கம் தன்னில் செனிப்பனு மறைக் [குலத்தில்
அன்னவ னிச்சென் மத்தில் அணுகின புண்ணிய [மென்ன
முன்னமே சொல்லு மென்ன வுரைக்கிறார் முனிவர் [தாமே.

30. இறப்பான். இனி அவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம். தென்திசையில் உள்ள ஸ்ரீரங்கத்தில் அந்தண குலத்தவனாகப் பிறப்பான். ஜாதகன் இப்பிறவியில் என்ன நற்காரியங்கள் செய்தான்? அவற்றை முதலில் கூறுங்கள் என்று வினவ, முனிவர் பதில் கூறுகின்றார்,

## நல் வினை

31. மடம்தடம் சோலை செய்து மாபத்தைச் சிலர்க்குக் [காத்தும்
திடமான தலங்கள் சென்றும் தேரினோர்க் கன்ன [மீந்தும்
அடைவுடன் வாழ்வ தாலே அருளுவான் பிரம்ம [சேயாய்
தடவரை மகளே யாங்கள் சாற்றின மொழிகுன் றுவே.

31. மடம், தோட்டம் துறவு முதலியன ஏற்படுத்தி சிலருக்குற்ற ஆபத்தைக் காத்து வந்ததாலும் பெயர்பெற்ற உன்னதத் தலங்களுக்குச் சென்று எல்லாக் கலைகளிலும் தேர்ந்தவர்களான பெரியோர்களுக்கு அன்னமளித்து வாழ்ந்துவருவதால் அந்தணக் குலத்தில் தோன்றுவான். மலையரசின் மகளே; நாங்கள் கூறியவை தவறு.

32. பிறந்திடு காலம் தன்னில் புகர்தசை ஒன்ப தாண்டும்
உரைக்கிறோம் பலனை யாங்க ளுதித்தவன் தனக்கு [யோகம்
திரிந்திடு மதன்பின் விருத்தி புகன்றனம் பூர்வ பாகம்
அறம்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே கேளாய்.

32. ஜாதகன் பிறக்கும்போது சுக்கிர மகாதசையில் கர்ப்பச் செல்லு போக மீதி இருப்பு ஒன்பது வருடங்கள் என்றோம். அதன் பலனைச் சொல்லுகின்றோம். ஜாதகனுக்கு யோகம் தடைபட்டுப் பிறகு விருத்தியாகும். இதுவரை முதல்பாகம் சொல்லியிருக்கிறோம். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள். —V. R. N.



# ஜாதகம் 70

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதிபுதன் [2]பொன்[3]சேய் [4]பானு [5]மாதையில் [6]காரி
[[7]தேளில்
[8]ததிகயர் [9]மான தாகச் [10]சிகி[11]வண்டி [12]புகரும் [13]சீயம்
இதுவிதக் [14]கோளும் நின்று இலக்கினம் கன்னியாக
அதுபலன் புகலு மென்று அம்பிகை கேட்கும் போது;

1. சந்திரன், புதன், குரு, அங்காரகன், சூரியன் இவ்வைந்து கிரகங்கள் கன்னியிலும், சனி விருச்சிகத்திலும் ராகு மகரத்திலும், கேது கடகத்திலும் சுக்கிரன் சிம்மத்திலுமாக நவக்கிரக நிலையிருந்து பிறந்த லக்கினம் கன்னியாக விருந்தால் ஏற்படும் பலன் என்னவென்று கூறுங்கள் எனப் பார்வதிதேவி கேட்கும்போது;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | கேது |
| ராகு | | | சுக்கிரன் |
| | சனி | | லக்கினம் சந்திரன் புதன் அங்கா குரு சூரியன் |

1. சந்திரன்
2. குரு
3. அங்காரகன்
4. சூரியன்
5. கன்னி
6. சனி
7. விருச்சிகம்
8. ராகு
9. மகரம்
10. கேது
11. கடகம்
12. சுக்கிரன்
13. சிம்மம்
14. நவக்கிரகம்

## ஜாதகன் பிறந்த வீட்டு நிலை

2. அத்திரி புகலுகின்றார் ஆண்டு செனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாடை கீழ்மேல் வீதி
உத்தரம் ஈசன் மாரி ஓங்காளி தங்கு மென்றேம்
சித்தூரா மிந்தப் பாலன் செனிப்பனு மென்று
[சொல்வோம்.

2. அத்திரி முனிவர் பதில் உரைக்கின்றார். இந்த ஜாதகம் ஒரு ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்றேம். அது கிழக்கு மேற்கான தெருவில் வடக்குப் பக்கம் உள்ள வரிசையில் இருக்கும். வடக்கில் ஈசுவரன் கோவில், மாரியம்மன் கோவில், காளி கோவில் ஆகிய மூன்றும் உள்ளன. இங்ஙனமுள்ள ஒரு சிற்றூரில் இந்த ஜாதகன் பிறந்தான் என்றேம்.

3. இன்னவன் செனன யோக மெழில்பெரும் தந்தை
[யோகம்
தன்துணை களத்திர புத்திரர் தாயின்தன் யோக மேலும்
முன்பின்செனன் மங்கள் யாவு முரைக்கிறே மிந்நூல்
[தன்னில்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. ஜாதகருடைய பிறப்பு யோகம், தந்தை, தாய், உடன் பிறந்தவர், மனைவி, மக்கள் முதலியவர்களின் யோகமும் முற்பிறவி மறுபிறவி ஆகிய வற்றையும் இந்தச் சோதிட நூலில் கூறுகின்றேம். உயர்ந்த யானை முகத் தோனைப் பெற்ற உத்தமியே கேளுங்கள்.

## தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணையா ளென்று சத்திய மவ்வாறு தீர்க்கம்
அந்தவ னிளையோ னுகு மவன்குணம் சோம்ப
[லுள்ளான்
முந்தின கோப மேற்பன் மொழியது மிரண்டு முண்டு
பிந்திய யோசனை யுண்டு பலவீன முடைய னுகும்.

4. இனி ஜாதகனுடைய தந்தையின் சகோதர பாவத்தைக் கூறுகின் றேம். ஒரு சகோதரனும் ஒரு சகோதரியும் நீண்ட ஆயுள் உள்ளவர் களாக இருப்பர் என்றேம். அந்தச் சகோதரன் ஜாதகனுடைய தந்தைக்கு இளையவன் என்று சொல்லுகின்றேம். தந்தையின் இளைய சகோதரனுடைய குணங்களாவன. திடீரென்று கோபங் கொள்ளும் இயல்பினன். இருவித மாகவும் பேசுபவன். பின்புத்தி யுள்ளவன். (உடல் நலக் குறைவினுல்) பலசாலியல்லாதவன்.

## ஜாதகனுடைய சிறிய தந்தையின் விவ்ரம்

5. மணமிலான் மதலை யில்லான் மறுத்துமே கூறு ஞகும்
துணிவிலா நெஞ்ச ஞகும் தொல்புவி கிருஷி செய்வன்
கனமான புத்தி யில்லான் கலந்திடும் பித்தச் சோகை
வினையுள மனத்த ஞகும் வயதுமே தீர்க்க மெய்தும்.

5. ஜாதகருடைய தந்தையின் இளைய சகோதரன், கலியாணம் செய்து கொள்ளாதவன். அதனுல் புத்திரப் பேறு இல்லாதவன். பேசுவதற்கு எதிர் வார்த்தை பேசாதவன். பயந்த சுபாவமுடையவன். உலகில் விவசாயம் செய்து வருவான். பெரிய (தாராள) புத்தியில்லாதவன். பித்தச் சோகை நோயுடையவன். கெட்ட எண்ணங்களுள்ள மனத்தினன். நீண்ட ஆயுள் உள்ளவன்.

## ஜாதகனுடைய தந்தையின் சகோதரியின் இயல்புகள்

6. கன்னிகை சேதி சொல்வேன் கணவனுக் கினிய ளாகும்
தன்சொல்லு மடக்க முண்டு சலித்தோர்க்குத் தாக [மீவள்
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆளனு முள்ளுர் நேரும்
பொன்பணி யுடைய ளாகும் புகழ்ந்தோருக் குதவி [செய்வள்.

6. ஜாதகனுடைய தந்தையின் சகோதரியின் விவரங்களைச் சொல்லுகின்ருேம். அவள் தன் கணவனுக்குப் பிரியமானவள். அடக்க மாகப் பேசுபவள். ஏழை எளியவர்கட்குப் பசிதாகத்துக்கு உணவும் நீரும் அளிப்பவள். பிறர் மீது குற்றம் கூருதவள். (பிறருடைய குற்றத்தைப் பாராட்டாதவள்.) அவளுக்குக் கணவன், அவள் சொந்த ஊரிலிருந்தே வாய்ப்பான். பொன் ஆபரணங்கள் உடையவள். தன்னைத் தோத்தரித்த வருக்கு உதவி செய்பவள்.

## ஜாதகனுடைய அத்தையின் புத்திரபாவம்

7. சுதர்களில் ஆண்பால் தோஷம் தோகையு மவ்வா ருகும்
அதிபதி யொருத்தி தானும் மணமுண்டாய் மரிப்ப [ளாகும்
சதமாகும் மூவ ருந்தான் சந்ததி விருத்தி யாகும்
அதிதியே வயதும் தீர்க்கம் அம்பிகை யாளே கேளாய்.

7. அவளுக்குப் புத்திர பாக்கியம் கூறுவதற்கு இல்லை. அவளது ஆண் குழந்தைக்கும் பெண் குழந்தைக்கும் தோஷமுண்டு. தந்தையின் சகோ தரிக்கு மணமான பிறகு தன்னந்தனியாக வாழ்ந்து குழந்தைகளின்றி வாழ்ந்து

பிறகு இறப்பாள். ஜாதகனுடைய தந்தை, இளைய சகோதரன் சகோதரி மூவரும் தீர்க்க ஆயுள் உள்ளவர்கள் என்றேம்.

## தந்தையின் குணவிசேஷங்கள்

8. தந்தையின் குணத்தைச் சொல்வேன் தரணியை [விருத்தி செய்வான்
விந்தையாய்ப் பேசு வானும் விகடங்கள் கூறு ஞனும்
வந்தவர்க் கன்ன மீவன் மாநிறம் பணையேர் விருத்தி
சிந்தையு மிரண்டு மாகும் சீக்கிரங் கோபம் சாந்தம்.

8. இனி ஜாதகனுடைய தந்தையின் குணத்தைச் சொல்லுகின்றேம். அவன் விவசாயம் செய்து அதை விருத்தி செய்வான், வேடிக்கையாய்ப் பேசும் இயல்பினன். ஆனால் அடாவடியாகப் பேசாதவன். தன்னை அண்டி வந்தவர்களுக்கு உணவு அளிப்பவன். மாநிறமானவன். பண்ணை ஏர் முதலியவற்றின் பெருக்கமுண்டு. இருவிதமான மனமுள்ளவன். விரைவில் கோபங்கொள்ளும் இயல்பினன். ஆனால் உடனேயே சாந்தமடைவான்.

## இதுவுமது

9. பலசகா யங்கள் செய்வன் பாருகள் விருத்தி யுண்டு
கலவர புத்தி மத்தில் கடனது ஏற்பா ஞகும்
சொலுமொழி காப்பா ஞகும் துணைவரை யாத ரிப்பன்
நலமதை யெவர்க்கும் செய்வன் நங்கையே மேலும் [கேளே.

9. பலபேருக்கு உதவிகள் செய்யும் இயல்பினன். விளைநிலங்களைப் பெருக்குவான். இடைக் காலத்தில் சஞ்சல புத்தி ஏற்பட்டு அதனால் கடன் வாங்கும் நிலை ஏற்படும். தான் சொன்ன சொற்படி நடப்பவன். தன் சகோதரரை ஆதரிப்பான். எல்லோருக்கும் நன்மையையே செய்து வருவான், தாயே! மேலும் கேட்பீராக.

## இதுவுமது

10. மான்ரர்சி கடைநாள் தன்னில் மருவுவா னவச ரத்தன்
ஊனமில் லாத தேகி உயர்வான புத்தி யேற்பன்
தானெனக் கர்வம் கொஞ்சம் தையலர் மோக ஞவன்
பான்மை யாய்ப் பேசு வானும் பதர்குண மில்லா ஞகும்.

10. மகர லக்கினத்தில் ரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவன் என்று சொல்லுகின்றேம். அவசரமான மனமுள்ளவன். ஊனமில்லாத தேகமுண்டவன். உயர்ந்த புத்திசாலி. அகம்பாவ முடையவன். பெண்களின்

மீது மையல் கொள்ளும் இயல்பினன். பொருத்தமாகப் பேசுபவன். அற்ப புத்தியில்லாதவன்.

## ஜாதகனுடைய குணங்கள்

11. இந்நெறி யுடையா னுக்கு இவனுமே செனிப்பா னாகும்
இன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளா
[னிருநி றத்தன்
உன்னத வார்த்தை சொல்வன் உரகன்போல் கோபம்
[கொஞ்சம்
பன்னியே பேசு வானும் பஞ்சை மேலிரக்க னவன்.

11. இவ்விதம் சொல்லப்பட்ட குணங்களை யுடையவனுக்கு இந்த ஜாதகன் பிறப்பான் என்று கூறுகின்றோம். இனி ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். அவன் அழகுள்ளவன், கருமை கலந்தவன். சர்ப்பம் போல் கோபம் கொள்ளுவான். சிறிது பன்னிப் பன்னிப் பேசும் வழக்கமுடையவன். ஏழைகளின் மீது இரக்க முடையவன்.

## இதுவுமது

12. கல்வியு முடைய னாகும் கசடரை உறவு கொள்ளான்
இல்லையென் றுரைக்க மாட்டான் யாரையு முறவு
[கொள்வன்
சல்லியப் பாதை பூர்வம் தந்தையால் நேரு மென்றோம்
நில்லாது தாதை யில்லம் நேருவான் வேறு சாகை.

12. கல்வியறிவுள்ளவன். முட்டாள்களின் உறவற்றவன். யாசித்தவர்கட்கு இல்லை என்று கூறுதவன். எல்லாரிடத்திலும் நட்புக் கொண்டவன். முற்காலத்திய (தகப்பனால் வைக்கப்பட்ட) கடன் சிறிது உள்ளவன். தன் தந்தையின் வீடு இவனுக்குக் கிட்டாமல் வேறு வீட்டுக்குச் சென்று வசித்து வருவான்.

## இதுவுமது

13. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னவன்
சல்லிய மீரே ழாண்டும் தங்கிடு மதன்மேல் காணன்
சொல்லதைக் காப்பா னாகும் சோம்பிடான் காரி யத்தில்
வெல்லுவா னெதிரி தன்னை வீண்வழக் கோரம் பேசான்

13. நல்லவர்கட்கு நல்லவனாகவும் தீயவர்கட்டுத் தீயவனாகவும் இருப்பான். ஜாதகனுடைய பதினான்காம் வயது வரையில் கடன் உபத்திரவமிருக்கும். அதற்குப் பிறகு கடன் தீர்ந்துவிடும். தான் சொன்ன வார்த்தை

யை மீருதவன். சோம்பலில்லாமல் காரியத்தைச் செய்து முடிக்கும் ஆற்றலுள்ளவன். விரோதிகளை ஒழித்து அவர்களை ஜயிப்பான். அனுவசிய மாக வழக்கோரம் சொல்லாதவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

14. தன்துணை யாண்பால் நான்கு சத்திமார் நால்வர் [தீர்க்கம்
முன்துணை கன்னி சேதி மொழிகிரேம் மாஞ்சி வப்பள்
கன்னென மொழியு முண்டு கனமான குடும்பி யாவள்
தன்வரன் மனதுக் கேற்ருள் சாதமும் குறைவு ருதாள்.

14. ஜாதகனுக்கு நான்கு சகோதரரும் நான்கு சகோதரிகளும் உளர். அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர்கள். ஜாதகனுடைய மூத்த சகோதரியின் குணங்களை இனி கூறுகின்ருேம். அவள் மாநிற முள்ளவள். கரும்பைப் போன்று சுவையுள்ள வார்த்தைகளையே பேசுபவள். பெரிய குடும்பத்தை ஏற்று நடத்துவாள். தன் கணவன் மனத்துக்கேற்றபடி நடப்பவள். சாப்பாட்டுக்கு குறைவில்லாதவள்.

## சகோதரியின் விவரங்கள்

15. சுதர்களு மாண்பா லிரண்டு தோகையு மவ்வாறு தீர்க்கம்
அதிபதி வயது தீர்க்கம் மாநிலம் வறுமை காணுள்
அதிதிகட் கன்ன மீவள் அரிமனை யொப்ப தாகும்
சதிசெய்யா மனத்த ளாகும் சந்தேகக் குணமில் [லாதாள்.

15. இருபுத்திரர்களும் இருபுத்திரிகளும் உள்ளவள். அவள் நீண்ட ஆயுள் உள்ளவள். உலகில் தரித்திரம் அடையாதவள். துறவிகட்கு அன்புடன் அன்னமளிப்பவள். இலக்குமியைப்போன்று அழகும் செல்வமும் உடையவள். தீங்குகள் செய்யாத மனத்தினள். சந்தேகப்படும் இயல்பு இல்லாதவள்.

## ஜாதகனுடைய திருமணக் காலம்

16. மற்றவர் சேதி யாவும் வரைகிரேம் பின்பா கத்தில்
வித்தகன் மணத்தின் காலம் விளம்புவோ மிருப [தாண்டில்
பத்தினி தென்பால் நேரும் பகருவோ மவள்கு ணத்தை
சுற்றத்தார் மதிக்க வாழ்வள் சொல்லதைக் காப்ப [ளாகும்.

16. மற்றவருடைய செய்திகளைப் பிற்பாகத்தில் விரிவாகக் கூறுகின்றோம். இனி ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபதாம் வயதில் திருமணம் நிகழும். அவனுக்குத் தெற்குப் பக்கத்திலிருந்து மனைவி வருவாள். இனி அவளுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும் படி வாழ்ந்து வருவாள். சொல்லிய வார்த்தைகளின்படி நடப்பவள்.

## மனைவியின் இயல்புகள்

17. பால்பாக்கியப் பெருக்க முண்டு பசித்தோருக்கு தாக [மீவள்
சீலியாம் விரத சாலி செனவுப காரி யாகும்
காலத்தை யறிந்து வாழ்வள் கண்முகம் வசிய முண்டு
மேலோர்க்குத் தொண்டு பூண்பள் வித்தகி யோக சாலி.

17. பால் பாக்கியமுள்ளவள். பசியென்று வந்தவர்கட்கு உணவு அளிப்பவள். நல்லொழுக்கமுள்ளவள். விரதங்கள் ஏற்பவள். ஜனங்களுக்கு உபகாரம் செய்யும் இயல்பினள். காலத்துக்குத் தக்கபடி தன் வாழ்வைத் திருத்தி அமைத்து வாழ்ந்து வருபவள். கண், முகம் இவை வசீகரமாக விருக்கும். பெரியோர்களுக்குத் தொண்டுகள் செய்வதில் விருப்பமுடையவள். அதிர்ஷ்ட முடையவள்.

## புத்திரபாவம்

18. மங்கையும் தீர்க்க சீவி மைந்தர்கள் பலத்தைச் [சொல்வேன்
தங்காது சுதர்கள் தானும் செப்புவீ ரந்தச் சங்கை
துங்கமாம் ராகு அஞ்சில் சனியுமே பார்த்த தாலே
சங்கைகள் சுதர்க ளென்றோம் செயமுனி மறுத்துச் [சொல்வார்.

18. ஜாதகனுடைய மனைவி நீண்ட ஆயுள் உள்ளவள். இனி புத்திர பாக்கியத்தைப் பற்றிச்சொல்லுகின்றோம். இவனுக்குப் புத்திரர்கள் தோன்றினும் அவை நிலையா. அதற்குரிய காரணத்தைச் சொல்லுங்கள். புத்திர ஸ்தானமாகிய ஐந்தாமிடத்தில் (மகரத்தில்) ராகு தனியாக இருந்து அந்த இடத்தை சனி பார்ப்பதால் கட்டாயம் புத்திரதோஷ முண்டு என்றோம். ஐயமுனிவர் மறுத்துச் சொல்லுகின்றார்.

## புத்திரவிருத்தி கிரகநிலை

19. பொன்னவன் அஞ்சைப் பார்க்க புதனுமே சென்ம [முச்சம்
இன்னவா றிருப்ப தாலே இவனுக்குச் சுதனால் கர்மம்

திண்ணமாய் நேரு மென்றோம் செப்புவா ரத்திரி தானும்
முன்சென்ம வினையி னாலே மேவாது சுதர்கள் தானும்.

19. குரு புத்திர ஸ்தானமாகிய ஐந்தாமிடத்தைப் பார்ப்பதாலும் லக்ன திபதியாகிய புதன் தன் வீட்டிலேயே கன்னியில் உச்சமாகவும் ஆட்சியாக வும் இருப்பதால் ஜாதகனுக்குத் திண்ணமாகப் புத்திரனால் இறுதிக் கடன் செய்யப்பட வேண்டும் என்றார். அத்திரி முனிவர் கூறுகின்றார். முற்பிற வித் தீவினையால் புத்திர பாக்கியமில்லை.

## ஜாதகனின் முற்பிறவி

20. வினையதைப் புகல்வீ ரையா வித்தகன் பூர்வம் கேளாய்
கனமுள சேர நாட்டில் கலந்தனன் சத்தரி யனாக
அனையவே மனைவி மைந்தர் அவனியை விருத்தி செய்து
சினமிலா வாழு நாளில் சேர்ந்ததோர் வினையைச்
[சொல்வேன்.

20. அது எதனால் ஏற்பட்டது? அந்த விவரத்தைச் சொல்லுங்கள் முனிவரே! இனி ஜாதகனுடைய முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின் றேன். சேர நாட்டில் சத்திரிய குலத்தவனாகப் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, விவசாயம் செய்து விளைநிலங்களைப் பெருக்கி, துன்பங்களின்றி வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்,

## நாகத்தையடித்த தோஷம்

21. இல்லத்தில் வெகுநா ளாக இருந்தது நாக மொன்று
அல்லலாய் மகுடம் கொண்டு அதுமுற்றத் தியங்கும்
[போது
வல்லவன் கழியால் வாட்டி மறலியின் பதிக்குச் சேர்க்க
புல்கிற்று அந்தத் தோஷம் புகலுவோம் வேறு ஒன்று.

21. ஜாதகனுடைய வீட்டில் வெகு நாட்களாக ஒரு சர்ப்பம் குடி கொண்டிருந்தது. அது ஒரு நாள் படம் எடுத்து நடுவீட்டு முற்றத்தில் ஆடி மயங்கி இருக்கும்போது ஜாதகன் அப்பாம்பை ஒரு தடியினால் அடித்துக் கொன்று விட்டான். அந்தத் தோஷம் இவனை வந்தடைந்தது. வேறு ஒரு தோஷமும் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

## விதவைக் கருவையழித்த தோஷம்

22. விதவையைப் போகம் செய்து மெல்லிக்கு கருவுத் தங்க
அதம் செய்தான் பண்டி தத்தால் அவ்வித மூன்று
[செய்தான்

இதுவொரு தோஷ மாச்சு இதுவன்றி வேறு காணுன்
அதிதியை ஆத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

22. ஜாதகன் ஒரு கைம் பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்து வந்தான். அதனுல் அவளுக்குக் கர்ப்பம் ஏற்பட்டது. அக்கர்ப்பத்தைக் கலைக்கப் பலவித மருந்துகள் கொடுத்தான். அம்மாதிரியாக மூன்று தடவைகள் கருவழித்தான். அதுவும் ஒரு தோஷமாக ஏற்பட்டது. இவ்விரண்டு வித தோஷங்கள் தவிர வேறு தீவினைகள் இல்லாதவன். பெரியோர்களைக் காக்கும் தேவியே அம்பிகையே! கேளுங்கள்.

23. மாரனு மந்தி யத்தில் மறையவர் தொண்டு பூண்டு
தீரமாய்க் கால னுடு சென்றுமே பிரமன் லக்கம்
பாரினில் உதிப்பா னுகும் பரவிடு மிரண்டு தோஷம்
வீராது சுதர்க ளென்றேம் விளம்புவீ ரதற்குச் சாந்தி.

23. ஜாதகன் தன் இறுதி நாட்களில் அந்தணர்கட்குப் பல பணிவிடைகள் செய்து வந்தான். பிறகு மரண மடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் தோன்றினுன். அவனுக்கு இருவிதத் தோஷம் ஏற்பட்டது. அதனுல் புத்திர பாக்கியமில்லை என்றேம். அந்தத் தோஷம் நீங்கச் சாந்தி யொன்று கூறுங்கள்.

24. அந்நகர் மாரி கோஷ்டம் அரவுபோல் சிலையும் செய்து
மன்னனும் வைத்து மேதான் மணிவிளக் கொன்று
[வைக்க
முன்வினை நிவர்த்தி யாகி உதித்தசேய் தீர்க்க மாகும்
சொன்ன தைச் செய்யா னுகில் சுதர்தோன்றுர்
[தோன்றில் தீதாம்.

24. அவ்வூரில் உள்ள மாரியம்மன் கோவிலில் ஸர்ப்பச் சிலை ஒன்று செய்து, பிரதிஷ்டை செய்து, ஜாதகன் ஒரு அழகான தூங்கா விளக்கு ஒன்று வைத்தால் முற்பிறவித் தீவினை நீங்கி, பிறக்கும் குழந்தைகள் நீண்ட ஆயுளுடன் இருக்கும். நாங்கள் கூறிய சாந்தி செய்யாவிடில் புத்திரபாக்கியமில்லை. புத்திரர் தோன்றினுலும் நிலையாமல் இறப்பர்.

## தாயின் விவரங்கள்

25. சொற்படி செய்வா னுகில் சுதர்களு மாண்பா லொன்று
மைப்படி பெண்பால் மூன்று வரைகிறேம் தீர்க்க மாக
செப்புவே னன்னை சேதி சொல்வது சுருக்க மாகும்
தப்பிதக் குணமில் லாதாள் சாதமு மன்பா யீவள்.

25. நாங்கள் கூறியபடி செய்துவந்தால் புத்திரபாக்கியம் ஏற்பட்டு ஒரு புத்திரனும் மூன்று புத்திரிகளும் பிறந்து நீண்ட ஆயுளுள்ளவர்களாக

விருப்பர் என்று சொல்லுகின்ரேம். இனி தாயின் விவரங்களைச் சொல்லு கின்ரேம். அவள் சுருக்கமாகப் பேசுபவள். தவறுகளியற்ருத குணமுள் ளவள். பசித்தவருக்கு அன்புடன் அன்னமளிப்பவள்.

## இதுவுமது

26. குணமது நல்ல தாகும் கொடுமையை வெளிக்காட்
[டாதாள்
தணிவான குணத்த ளாகும் சார்ந்தோரை யாத ரிப்பள்
வினையிலா மனத்த ளாகும் மேவிடும் பித்த வாயு
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

26. நற்குணமுடையவள். தன்னுடைய கோபத்தைப் பிறரிடம் காண்பிக்காதவள். எக்காலத்திலும் தணிந்துபோகும் இயல்பினள். தன்னைச் சார்ந்தவர்களைப் பரிவுடன் ஆதரித்துவருவள். தீங்குகளில்லாத மனத்தினள். பித்தவாயு ரோகமுடையவள். எப்போதும் தவங்களியற்றிவரும் தாயே! அம்மையே! கேளுங்கள்.

## தாயின் சகோதரபாவம்

27. தன்துணை யாண்பா லிரண்டு சக்திமார் காணு ளாகும்
அன்னவர் சுகமில் லாதார் அலைமீது துரும்பு போலே
பொன்பூமி குறைவு முண்டு புகலுவோம் பின்பால் சேதி
அன்னையின் முன்சென் மத்தை அறிவிப்போ மினிமே
[லாக.

27. அவளுக்குச் சகோதரர் இருவருண்டு; சகோதரி இல்லாதவள். அவ்விரு சகோதரரும் சௌக்கியமாக இல்லாதவர். கடலின் அலையின் மீதுற்ற துரும்புபோல் அலைச்சல் உள்ளவள். பொன், பூமி முதலியவற்றில் குறைந்தவள். இனி பிற்பாகத்தில் விவரங்கள் சொல்லுகின்ரேம். இப்போது தாயின் முற்பிறவியை அறிவிக்கிரேம்.

## தாயின் முற்பிறவி

28. பெண்ணையின் நதிக்குப் பக்கல் பெரும்பனைப் பட்டி
[தன்னில்
வன்னிய குலமு தித்து மறையவர் தொண்டு பூண்டு
பொன்பணி யுடைய தாகிப் பெரியோர்க்குத் தாக மீந்து
முன்வினை யில்லா தாகி ஒதுங்கினுள் கால நாடு.

28. பெண்ணையாற்றின் பக்கத்தில் உள்ள பெரும்பனைப்பட்டி என்ற ஊரில் வன்னிய குலத்தில் பிறந்து அங்குள்ள அந்தணர்கட்குப் பலவிதத்

தொண்டுகள் செய்து, பொன், ஆபரணங்கள் முதலியவற்றினைப் பெற்று பெரியோர்கட்கு உணவு, நீர் முதலியன அளித்து வேறு தீவினைகளின்றி வாழ்ந்து இறுதியில் மரணமெய்தினாள்.

29. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தனள் ரெட்டி வமிசம்
மறுசென்மம் வாரி யோரம் மாபலி நகரி லேதான்
உறைகுவாள் சைவச் சேயா யுயர்வான குடும்பி [யாவள்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே [கேளாய்.

29. பிரமனால் படைக்கப்பட்டு ரெட்டியார் மரபில் தோன்றினாள். மறுபிறவியில் சமுத்திரக்கரைக்குப் பக்கமாக உள்ள மகாபலிபுரத்தில் சைவ குலத்தவளாதப் பிறப்பாள். உயர்ந்த குடும்பத்தை யடைந்து வாழ்வாள். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான தாயே! கேளுங்கள்.

## தந்தையின் முற்பிறவி

30, தந்தையின் முன்சென் மத்தைச் சாற்றுவோம் குடகு [தன்னில்
வந்தனன் சேடர் வமிசம் வணிபங்கள் செய்து [வின்னேன்
முந்தின குடும்பி யாகி மேதினில் வாழு நாளில்
பிந்தின யேழை யோர்க்குப் பொருளது அல்பம் தந்து;

30. இனி, ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். மேற்குப் பக்கம் உள்ள (குடகு நாட்டில்) சேடர் வமிசத்தில் தோன்றி, வர்த்தகங்கள் பல செய்து, உயர்ந்த குடும்பத்தை யடைந்து, உலகில் வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். துன்பமடைந்த சில ஏழை எளியவர்கட்குச் சிறிது பொருள் கொடுத்து;

## தந்தையின் தீவினை

31. இல்லமும் பூமி யாவும் இவனிடம் பெற்றுக் கொண்டான்
சொல்லுவார் ஏழை யோர்கள் தோன்றும்பின் சென்மந் [தன்னில்
அல்லலாய்க் குடும்பம் தானும் அவனியில் சல்லிய [மேற்பாய்
நில்லாது தந்தை யாஸ்தி நிமலியு மிவ்வாறு சொன்னார்.

31. அவர்களுடைய வீடு, பூமி முதலிய எல்லாவற்றையும் அதற்கு ஈடாகப் பெற்றுக்கொண்டான். ஏழைகள் கீழ்க்கண்டவாறு சாபமிட்டனர்,

"இனி ஏற்படும் மறுபிறவியில் உனக்கும் குடும்பத்தில் துன்பங்கள் ஏற்பட்டு, கடனுபத்ரவமடைந்து, தந்தையினுடைய ஆஸ்தியைப் போக்கி வாழ்வாய்." என்று சொல்லிவிட்டுச் சென்றனர்.

32. அச்சாபம் நேர்ந்த தென்றேும் அந்தியக் காலம் தன்னில்
லச்சைகள் மிகவே உண்டு நடந்தனன் கால நாடு
அச்சுதன் மகனும் லக்கம் அவனியி லுதித்தா னுகும்
நச்சுப்போல் ஏழை சாபம் நல்கிடும் சல்லிய மேற்பன்.

32. அந்தச் சாபம் ஜாதகனுடைய தந்தையைத் தொடர்ந்தது. அவன் தன் இறுதிக்காலத்தில் துன்பங்கள் அதிகமாக அடைந்து மரணமடைந்தான். மீண்டும் மகாவிஷ்ணுவின் புதல்வனுகிய பிரம்மாவினுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் பிறந்தான். கொடிய விஷம்போல் ஏழைகளின் சாபம் இப்பிறவியில் தொடர்ந்தது. அதனுல் கடன் உபத்திரவமடைவான்.

## ஏழையின் சாபத்தின் பலன்

33. இல்லமு மேகு மென்றேும் எழில்பூமி சேத மாகும்
சொல்லுவீர் காலம் தன்னைச் சுதனுமே தோன்றிய பின்பு
இல்லறம் விட்டு நீங்கு மிலவம்போல் மனம்ப தைக்கும்
புல்லியோர்க் கிணக்கம் சொல்வன் பெண்துணை உதவி
[யாகும்.

33. ஜாதகனுடைய தந்தையின் வீடு, விற்கும்படியான நிலை ஏற்பட்டு, இவனுடைய வசத்திலிருந்து போய்விடும். விளைநிலங்களும் போய்விடும். அஃது எந்தக்காலத்தில் என்று கூறுங்கள், முனிவரே. ஜாதகன் பிறந்த பிறகு வீட்டைவிட்டு நீங்குதல் நேரும். அதனுல் காற்றில் ஓடும் இலவம் பஞ்சு போல் மனம் பதைபதைத்து வருந்தி அற்பர்களுக்கு அடங்க நேரிடும். அக்காலத்தில் சகோதரியின் உதவி கிட்டும்.

34. எதுமட்டும் வறுமை யுண்டு இயம்புவீர் முனியே நீர்தாம்
அதிபனுக் கீரே ழாண்டும் மருவிடும் சல்லியப் பாதை
அதற்குமேல் வறுமை காணுன் அழகேச னைப்பாய்
[வாழ்வன்
நிதிபூமி பெருக்க மாகும் நினைத்தகா ரியங்க ளோங்கும்.

34. எந்தக்காலம் வரையில் ஏழைமை இருக்கும்? அந்த விவரத்தைக் கூறுங்கள். முனிவரே! ஜாதகனுடைய பதினுன்காம் வயதுவரையில் கடன் உபத்திரவம் இருக்கும். அதற்குப் பிறகு வறுமை தீரும். செல்வம் பெருகி, குபேரன்போல் வாழ்க்கை ஏற்படும். செல்வம், விளைநிலங்கள் இவைகள் பெருகும். எண்ணிய காரியங்களெல்லாம் கைகூடும்.

## ஜாதகனுடைய யோககாலம்

35. சித்திர வில்லம் செய்தல் செனபந்து மதிக்க வாழ்வான்
எத்திசைப் புகழு மேற்பன் ஏவலாட் பணையோர் விருத்தி
முத்திேனார் பூமி வாங்கல் முயன்றகா ரியங்கள் வெற்றி
மெத்தன பலன்கள் யாவும் விளம்புவோம் பின்பா
[கத்தில்.

35. அழகிய வீடுகட்டுவான். தன் சுற்றத்தாரின் மதிப்புடன் வாழ்ந்து வருவான். எல்லாத்திக்குகளிலும் இவனுடைய கீர்த்தி பரவும். பணியாட்கள், பண்ணை, ஏர் முதலியவற்றின் பெருக்கமும் கிட்டும். முன்பு விற்கப்பட்ட பிதுரார்ஜிதமான நிலங்கள், பூமி இவைகளை மீண்டும் திருப்பி வாங்குதல், எடுத்த காரியங்களில் ஜயம் முதலிய யோகங்கள் ஏற்படும். மற்ற பலன்கள் எல்லாவற்றையும் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

## தந்தையரின் மரணமும் மறுபிறப்பும்

36. முப்பது விரண்டு ஆண்டில் விளம்புவோம் தந்தை
[கண்டம்
செப்புவோ மிவன்பின் சென்மம் செந்திமா மலையி
[லேதான்
ஒப்புவான் வேளாள ஞக உயர்வான குடும்ப மேற்பன்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் ருவே.

36. ஜாதகனுடைய முப்பத்திரண்டாம் வயதில் தந்தை மரணமடைவான். அவன் மறுபிறவியில் செந்தில் மலை (திருச்செந்தூரில்) யில் உயர்வான வேளாளனுகப் பிறந்து, செழிப்புள்ள குடும்பத்தை அடைவான். பாம்பைச் சடைமுடியில் தரித்த சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறியவை தவரு.

*குறிப்பு:—ஜாதகனுடைய தந்தை, ஜாதகனுக்கு ராகு மகாதசை சுக்கிரபுத்தி நடக்கும்போது மரணமடைவான்.

## தாய்தந்தையரின் மரணகாலம்

37. ஆருறு மூன்று ஆண்டி லன்னைக்குக் கெண்ட
[மெய்தும்
தீரமாய்ப் பதின்மூன் ருண்டில் செப்புவோம் பிதாவின்
[தந்தை
பாரினில் பதினே ழாண்டும் பகருவோம் பிதாவி னன்னை
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

37. ஜாதகனுடைய முப்பத்தொன்பதாம் வயதில் தாய் மரணமடைவாள். அவனுடைய பதிமூன்றும் வயதில் ஜாதகனுடைய பாட்டனும் (பிதாவின் தந்தை), பதினேழாம் வயதில் பிதாவின் அன்னையும் மரணமடைவார்கள். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற அம்பிகையே! கேளுங்கள்.

*குறிப்பு:—தாய் ஜாதகனுடைய ராகு மகாதசையில் சந்திர புக்தியில் மரண மடைவாள். பிதாவின் தந்தை அங்காரக மகாதசை ஆரம்பத் திலும், பிதாவின் அன்னை அங்காரக மகாதசையில் புத புக்தி லும் மரணமடைவார்கள்.

## ஜாதகருடைய மரணகாலம்

38. அறுபது வேழு ஆண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
குறைபக்கம் தசமி தன்னில் குழவியி னுடல மேகும்
மறுசென்மம் காஞ்சி தன்னில் வைசியக் குலமு தித்துப்
பெரிதான வணிபம் செய்வன் பேதையே கேட்டி டாயே.

38. ஜாதகன் தன் அறுபத்தேழாம் வயதில் ஐப்பசி மாதத்தில் கிருஷ்ண பட்சம் தசமி திதி யன்று மரணம் அடைவான். அவன் மறுபிறவியில் காஞ்சீ புரத்தில் வைசிய குலத்தவனுகப் பிறந்து, பெரிய வர்த்தகம் புரிந்துவருவான். தாயே! கேளுங்கள்.

*குறிப்பு:—ஜாதகன் தன்னுடைய சனி மகாதசையில் அங்காரக புக்தியில் மரணமடைவான்.

39. உதித்திடு காலம் தன்னில் உத்தரம் மூன்ரும் பாதம்
கதிர்தசை ஆண்டி ரண்டும் கலந்திடும் திங்க ளெட்டும்
அதிபனும் பிணியு மாகும் வளைவைவிட் டேகு [மென்ரேம்
அதிகமாம் சல்லியப் பாதை அம்புலி தசைவ ரைக்கும்.

39. ஜாதகன் பிறக்கும் காலத்தில் உத்தர நட்சத்திரம் மூன்ரும்பாதம் நடக்கும். அப்போது அவனுக்குச் சூரிய மகாதசையில் கர்ப்பச் செல்லுப் போக மீதி இருப்பு இரு வருடங்களும் எட்டு:மாதங்களுமாம். அக்காலத்திய பலன்களைச் சொல்லுகின்ரேம். ஜாதகனுக்குநோய் ஏற்படும். அதனுல் வீட்டைவிட்டு விலக நேரிடும். கடன் உபத்திரவம் ஏற்படும். சந்திர மகா தசை முடிய இவ்விதமே இருக்கும்.

40. பிறைதசை மனவ லேச்சல் பெரிதான கலகம் நஷ்டம்
திருகாகும் நேசர் தானும் திரிச்சலும் காலி நஷ்டம்
வரவுக்குச் சிலவ னேகம் வரைகிரேம் பின்பா கத்தில்
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்.

40. சந்திர மகாதசையில் மனச்சஞ்சலமும், பெரிய சண்டை, நஷ்டம் நண்பர்கட்குள் விரோதம் முதலியன ஏற்படும். வீண் அலேச்சல் கால் நடை களுக்கு நஷ்டம் வரவுக்குமேல் செலவு இவை அதிகமாகும். பிற்பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்ரேம். அரிய வேதங்களின் முடிவில் கூறப்படும் தேவியே! கேளுங்கள். V. R. N.

———

# ஜாதகம் 71

## ஜனன கால கிரகநிலை

1. [1]பிறை[2]நந்தி [3]சேயும் [4]சீயம் புதன்[5]புகர் கன்னி யாக
[6]பரிதியும் ராகு [7]கோலில் [8]பங்குமே தனுசு வாக
குரு[9]மானில் கேது மேடம் கன்னியுஞ் செனன மாக
உரைகுவீர் பலனை யென்று உத்தமி கேட்கும் போது;

1. சந்திரன் ரிஷபத்திலும், அங்காரகன் சிம்மத்திலும், புதன், சுக்கிரன் கன்னியிலும், சூரியன், ராகு துலாத்திலும், சனி தனுசிலும், குரு மகரத்திலும், கேது மேஷத்திலுமாக நவக்கிரகங்கள் இருந்து பிறந்த இலக்கினம் கன்னியானால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் என்று உத்தமியாகிய பார்வதி கேட்கும் போது;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | கேது | சந்திரன் | |
| | **இராசி சக்கரம்** | | |
| குரு | | | அங்காரகன் |
| சனி | | சூரியன் ராகு | லக்கினம் புதன் சுக்கிரன் |

## ஜாதகனுடைய குலம்

2. அத்திரி முனிவர் சொல்வார் ஆணது செனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் மேல்வாடை வடதென் [வீதி

1. சந்திரன்
2. ரிஷபம்
3. அங்காரகன்
4. சிம்மம்
5. சுக்கிரன்
6. சூரியன்
7. துலாம்
8. சனி
9. மகரம்

உத்தரம் கணேசன் வாசம் ஓங்காளி வடமேல் தன்னில்
சித்தூரும் மயன்கு லத்தில் செனிப்பனு மிந்தப் பாலன்.

2. அத்திரி முனிவர் பதில் கூறுகின்ருர். இஃது ஆண் மகனுடைய ஜாதகம். அவன் பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுகின்ரேம். அது தெற்கு வடக்கான தெருவில் மேற்குப் பக்கம் உள்ள சாரியில் இருக்கும் வீடு. வீட்டுக்கு வடக்கில் விநாயகர் ஆலயமும், காளி வடமேற்கு திக்கிலும் உள்ள சிற்றூரில் ஜாதகன் பிரும்ம தோன்றியவன் என்ரேம்.

3. பாலகன் செனன யோகம் பெற்றதாய் தந்தை யோகம்
சாலவே மனைவி யோகம் சகோதரர் புத்திர யோகம்
ஏலவே முன்பின் சென்ம மியம்புவோ மிந்நூல் தன்னில்
ஆலத்தை யுண்டோன் தேவி அறிவிப்போம் பிதாகு
[ணத்தை.

3. இதில் ஜாதகனுடைய ஜனன காலத்திய யோகம், அவனைப் பெற்ற தாய் தந்தையரின் யோகம், அவனுக்குற்ற மனைவியின் யோகம், உடன் பிறந்தவர், புத்திரர், முற்பிறவி, மறுபிறவி ஆகியவற்றை இந்தச் சோதிட நூலில் கூறுகின்ரேம். ஆலகால விஷத்தை ஜனங்களின் நன்மைக்காக உண்ட நீலக்கண்டனின் தேவியே ! தந்தையின் குணத்தை இனிச் சொல்லுகின்ரேம்.

## தந்தையின் குணங்கள்

4. மால்நிறம் சமதே கத்தன் வாக்கதைக் காப்பா னுகும்
சீலவான் கல்வி மானும் சிந்தையும் நல்ல தாகும்
பால்தயிர் பிரிய னுகும் பஞ்சைபோல் உணவு கொள்வன்
ஞாலங்கள் அல்ப மாகும் நடையது துருசு முண்டு.

4. திருமாலைப் போன்று கரிய நிறமுள்ளவன். சமமான சரீர அமைப்புள்ளவன். நல்லொழுக்க முள்ளவன். கல்வியறிவுள்ளவன். நல்லமன முடையவன். பால் தயிர் இவைகளைப் புசிப்பதில் பிரியமுள்ளவன். ஏழையைப் போல் ஆவலாய்ச் சாப்பிடுவான். விளைநிலங்களை அற்பமாகவே உடையவன். வேகமான நடையுள்ளவன்.

## இதுவுமது

5. அறுமுகன் பக்தி கொள்வ னனேகர்க்கு இல்லம்
[செய்வன்
வருவோரை யாத ரிப்பன் மரம்வெட்டிச் சீவிப் பானும்
திருகிலாக் குணத்தா னுகும் சித்திர வேலை செய்வன்
அரிபோலே கோபம் சாந்தம் அவன்துணை யில்லா
[னுகும்.

5. ஆறுமுகக் கடவுள் மீது பக்தி கொண்டவன். பலபேருக்கு வீடு கட்டிக் கொடுப்பவன். அண்டிவந்தவரை ஆதரிப்பவன். மரத்தை வெட்டி ஜீவனம் நடத்தி வருவான். தீங்குகளும் சூதும் இல்லாத குணத்த வன். சித்திர வேலையும் செய்பவன். சிங்கம் போல் கோபம் கொள்ளு பவன். பிறகு சாந்தமடைவான். சகோதரனில்லாதவன்.

## இதுவுமது

6. சிலவுக ளதிகம் செய்வன் சேயிழைப் பிரிய னுகும்
நலமதை யெவர்க்கும் செய்வன் நயம்படக் கூறு வானும்
சலம்தோய்வன் சஞ்ச லத்தன் தாமதக் குணமு முண்டு.
சொலுமொழி யிரண்டு மாகும் தோகையே கேட்டி டாயே

6. அதிகமாகச் செலவுகள் செய்து வருவான். மனைவிக்குப் பிரிய மானவன். எல்லோருக்கும் நன்மையையே செய்து வருவான். நியாயமா கப் பேசுபவன். புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான்: அலைபாயும் மனத்தினன் எக்காரியத்தையும் தாமதமாகச் செய்யும் இயல்பினன். இருவித மாகப் பேசுபவன். தாயே! கேளுங்கள்.

## தந்தையின் முற்பிறவி

7. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறேம் காரைக் [காலில்
வன்னிய குலமு தித்து மாநிலம் விருத்தி செய்து
பொன்னொடு பணியு முண்டாய்ப் புகழ்ச்சியாய் வாழும் [நாளில்
தன்துணை பாகம் தன்னைத் தராமலே மோசம் செய்தான்.

7. இனி ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின் றேம். காரைக்காலில் வன்னிய குலத்தில் பிறந்து, விளைநிலங்களைப் பெருக்கி, பொன் ஆபரணங்கள் முதலியவற்றைப் பெற்று கீர்த்தியுடன் வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன் சகோதரனுக்குரிய பாகத்தைத் தராமல் மோசம் செய்தான்.

## சகோதரனுடைய சாபம்

8. பின்துணை வருத்த முற்றுப் புகன்றசா பத்தைக் [கேண்மோ
பொன்கட னீந்த பாவி பிறக்கும்பின் சென்மம் தன்னில்
என்னைப்போல் துணைவ ரின்றி இருபாரி யுடைய னுயும்
பொன்பொரு ளதிக மின்றி பூமியில் வாழ்வா யென்றுன்,

8. இவனுக்கு இளையவனாகிய சகோதரன் மனம் வருந்திக் கூறிய சாபத்தைக் கேளும். "என்னுடைய பாகத்தைத் தராமல் கடனை மட்டும் கொடுத்த பாவியே! இனி பிறக்கும் அடுத்த பிறவியில் என்னைப் போல் சகோதரனில்லாமல் இரு மனைவியரை யடைந்து, பொன், பொருள் முதலிய வற்றை அளவுடன் பெற்று வாழ்ந்து வருவாய்" என்றான்.

9. அந்தரம் தாதாஸ்து வென்ன அணுகிற்று வந்தச் சாபம்
மைந்தனு மந்தி யத்தில் வளமுள சேது சென்று
முன்னோர்க்கு அன்ன மீந்து மொதுங்கினான் கால நாடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறந்தவ னென்று
[சொல்வோம்

9. அப்பொழுது 'ததாஸ்து' என ஆகாயத்தில் சஞ்சரிக்கும் கடவுள் கூறினர். பின்பு அப்படியே அந்தச் சாபம் இவனை யடைந்தது. அவன் கடைசிக் காலத்தில் சிறப்பு வாய்ந்த சேதுவுக்குச் சென்று, கடல் நீராடி பெரியோர்களுக்கு உணவு அளித்து, மரண மடைந்தான். மீண்டும் பிரம்ம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறப்பில் தோன்றியவன் இவன் என்று கூறுவோம்.

## முற்பிறவிச் சாபத்தின் பயன்

10. ஆகையால் முன்னூழ்ச் சாபம் அணுகிடு மிச்சென்
[மத்தில்
தோகைய ரிருவ ராகும் துணைவரும் தோஷ மெய்தும்
போகபாக் கியங்கள் குறைச்சல் பொருள்சேரும்
[செலவு முண்டு
ஆகம வறிவா யாகும் அம்பிகை யாளே கேளாய்.

10. ஆதலால் முற்பிறவியில் ஏற்பட்ட சாபம் இந்தப் பிறப்பில் இந்த ஜாதகன் தந்தையைத் தொடரும். இவனுக்கு மனைவியர் இருவராவர். உடன் பிறந்தவர்களுக்கும் தோஷம் ஏற்படும். சுகமும் மற்ற பாக்கியங் களும் குறையும். செல்வம் சேரும். ஆனால் செலவும் மிகுதியாக உண்டா கும். வேதாகமப் பொருள்களை உணரும் பார்வதிதேவியே! மேலும் கேட்பாயாக.

## ஜாதகன் இயல்புகள்

11. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் மாநி
[றத்தான்.

உன்னத வார்த்தை சொல்வான் ஓராறு முகத்தோன் [பக்தி
பின்னமில் லாத தேகி பொய்யது புகலா னாகும்.

11. மேற்சொல்லப்பட்ட குணங்களைக் கொண்ட தந்தைக்குப் புதல்வனாகப் பிறப்பான் இந்த ஜாதகன். இனி இவனுடைய இயல்புகளைக் கூறுவேன். நல்ல அழகுடையவன், கருமை நிறம் கொண்டவன். உயர்ந்த கருத்துக்கள் கொண்ட சொற்களையே பேசுவான். ஒப்பற்ற ஆறு திருமுகங்களுடைய முருகப் பிரான் மீது பக்தி உடையவன். ஊனமில்லாத அவயவங்களோடு கூடிய உடலைப் பெற்றவன். உண்மை யில்லாத சொற்களைப் பேச மாட்டான்.

## இதுவுமது

12. வித்தையு முடைய னாகும் விவேகியா மெவர்க்கு நல்லன்
புத்தியில் பெரியோ னாகும் புண்ணிய மனத்த னாகும்
வித்துவான் போலே வார்த்தை விசித்திர வேலை [செய்வன்
நத்தினோர்க் குதவி செய்வன் நங்கையர் மோக னவன்.

12. சிறந்த கல்வி அறிவுடையவன். விவேக முள்ளவன். எல்லோருக்கும் நல்லவனாக நடந்து கொள்வான். புத்தியினால் மேம்பட்டவன். நல்ல எண்ணம் பொருந்திய மனமுடையன். நல்ல அறிவுடைய புலவரைப் போல சொற்களைப் பேசுவான். வினோதமான பல செயல்களைச் செய்வான். துன்பமடைந்து யாசிப்பவர்களுக்கு உதவி செய்வான். பெண்களிடம் மையல் உடையவனாயிருப்பான்.

## இதுவுமது

13. குலத்தொழில் சிறப்பாய்ச் செய்வன் குலமதிப் பாக [வாழ்வன்
கலகத்தைக் கூறு னாகும் கஞ்சமாம் ரேகை யுள்ளான்
நலமுளோர் நேசங் கொள்வன் நற்பணி யதிகஞ் [சேர்ப்பன்
உலகுளோர் வசியங் கொள்வன் ஓதுவான் குலத்து [வாத்தி.

13. தன் மரபுக்குரிய தொழில்களை மேன்மையாகச் செய்வான். குலத்திலுள்ளோர் இவனை நன்கு மதிக்கும்படி வாழ்க்கை நடத்துவான். ஒருவர் கூறியவற்றை மற்றொருவரிடம் சொல்ல மாட்டான். கையில் பத்ம ரேகை யுள்ளவன். நற்குணங்களும் நல்ல நிலையையுங் கொண்ட பெரியோர்களிடம் நேசமாக இருப்பான். நல்ல ஆபரணங்கள் பலவற்றைச்

சேர்ப்பான், உலகிலுள்ளவர்களை வசியப்படுத்துவான். குலத் தொழிலாகிய ஆசிரியர் பணியை ஏற்று, சிறுவர்கட்குக் கல்வி கற்பிப்பான்.

## இதுவுமது

14. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னுவன்
தல்லியால் சுகமில் லாதான் தரணிகள் சேர்ப்பா னுகும்
வெல்லுஞ் சொல் லுடைய னுகும் விருந்தோர்மேல் [பிரிய னுகும்
சொல்லது சுருக்க மாகும் தோகையே கேட்டி டாயே.

14. தன்னுடன் நல்ல முறையில் பழகுகிறவர்களிடம் நல்லவனுக நடந்து கொள்ளுவான். சண்டித்தனம் (வலுச்சண்டை செய்தல், வம்புக்கு வலிய அழைத்தல் முதலியன) செய்பவர்களிடம், அவர்களைவிட ஒருபடி மிகுதியான முரட்டுத் தன்மையுடன் நடந்து கொள்ளுவான். தாயினுல் நன்மையெதுவும் அடையாதவனுவான். (அஃதாவது தாய் இளமையிலே மரணமடைவாள்.) நிலபுலங்களை மிகுதியாகச் சேர்ப்பான். பிறரை வெற்றி கொள்ளத்தக்க பேச்சுக்களைப் பேசுவான். வீட்டுக்குப் புதிதாக வருபவர் களிடம் அன்புடையவனுக இருப்பான். சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுவான். மயிலைப் போன்ற சாயலை யுடைய உமா தேவியே! கேட்பாயாக.

## ஜாதகனுக்குச் சகோதரதோஷம்: கிரகநிலை

15. தன் துணை தோஷ மெய்தும் சாற்றுவீ ரந்தச் சங்கை
துன்மையாய்ச் [1]சேய்வி யத்தில்[2] தொடர்ந்ததால் [சொன்னேம் தாயே
[3]மன்னவ னஞ்சில் நீசம் [4]மந்தனும் நாலி லாக
அன்னையு மைந்தா மாண்டில் அந்தக னுலகம் சேர்வள்.

15. ஜாதகன் உடன் பிறந்தோர் மரண மடைவர். இவ்வாறு முனிவர் சொல்ல, பார்வதிதேவி, முனிவரை நோக்கி, அங்ஙனம் ஜாதகனுக்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணங்கள் கூறும் என்று கேட்டாள். முனிவர் கூறுவார். கெடுதியேற்படும் விதத்தில், செவ்வாய், சகோதரகாரன் விரயஸ்தானமாகிய பன்னிரண்டாமிடத்தில் இருப்பதால் சகோதர தோஷம் ஏற்படும் என்று சொன்னேம். (இலக்கினத்துக்கு ஐந்தாமிடத்தில்) குரு நீசனுகியும், சனி நான்காமிடமாகிய தனுசில் இருப்பதாலும் ஜாதகனின் தாய், அவன் பிறந்து ஐந்தாம் ஆண்டில் மரண மடைவாள்.

---

1. அங்காரகன்
2. விரயஸ்தானம் (பன்னிரண்டாமிடம்)
3. குரு
4. சனி

## தாயின் இயல்புகள்

16. ஆகையால் துணைவர் தோஷம் அறிவிப்பீ ரன்னை சேதி
பாகமாய்ப் பேசு வாளாம் பர்த்தாவின் மனத்துக்
[கேத்தோள்
நாகரி கங்க ளுள்ளாள் நற்புத்தி அடக்க வார்த்தை
தாகமென் றோர்க்கு ஈவள் சந்தேக மனத்த ளாகும்.

16. மேற் கூறியவாறு கிரக நிலை இருப்பதால், ஜாதகனுக்கு சகோதர தோஷம் ஏற்படும் என்று சொன்னோம். முனிவரே! இனி, ஜாதகனின் தாயார் செய்திகளைக் கூறுவீர்களாக. இடத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் பொருந்தும் விதத்தில் பேசுவாள். கணவனின் மனத்துக்கு ஏற்றவண்ணம் நடந்து கொள்ளுவாள். நாகரிகங்கள் உள்ளவள். நல்ல புத்தியுடையவள். அடக்கத்துடன் பேசுவாள். பசியென்று வந்தவர்களுக்கு அன்னமளித்து உதவுவாள். எவரிடமும் நம்பிக்கை கொள்ளாத சந்தேக மன முள்ளவள்.

## இதுவுமது

17. அன்னியர் குற்றஞ் சொல்லாள் அடாப்பழி கூறு ளாகும்
அன்னமு மன்மா யீவள் அடிசிலுக் கினிய ளாகும்
அன்னவள் யோக சாலி அவள்துணை யாண்பா லிரண்டு
கன்னிகை யிருவர் தீர்க்கம் கனக்காது மற்ற வெல்லாம்.

17. பிறரைப் பற்றிக் குற்றங் குறைகள் சொல்ல மாட்டாள். மற்றவர் மீது வீண் பழிச் சொற்களைப் பேச மாட்டாள். யாசிப்பவர்கட்கு அன்புடன் உணவு அளிப்பாள். இனிய உணவைச் சமைப்பதில் தேர்ந்தவள். இவள் சிறந்த யோகங்களுள்ளவள். இவளுடன் பிறந்தவர்களில் சகோதரர் இருவரும் சகோதரிகள் இருவரும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். மற்றும் தோன்றுபவர் நிலையார்.

## தாயின் முற்பிறவிச் செய்திகள்

18. இல்லமும் தென்பா லாகும் இவளுடைப் பூர்வஞ்
[சொல்வேன்
எல்லையி லுயர்வ தான வெழில்சேர நாட்டி லேதான்
வல்லியுஞ் சேடர் வமிசம் வளமுளக் குடும்பி யாகி
அல்லலில் லாமல் வாழ்ந்து ஆளன்முன் மரண மாகி;

18. இவளது பிறந்த வீடு, ஜாதகன் வீட்டுக்கு தெற்குப் பக்கத்தில் உள்ளதாகும். இனி இவளுடைய முற்பிறவி பற்றிச் சொல்லுவேன், பூமியில் உயர்ந்ததான சேரவள நாட்டில் சேடர் மரபினளாக

இவள் பிறந்து, செல்வச் செழிப்புள்ள குடும்பமுள்ளவளாகவும், துன்பங்கள் இல்லாமலும் வாழ்க்கை நடத்தி, தன் கணவனுக்கு முன்பாக மரண மடைந்து;

## தாயின் மறுபிறவி

19. வந்தவ ளென்று சொல்வோம் மறுஜன்மந் தணிகை
[தன்னில்
இந்ததோர் குலமு தித்து எழிலான குடும்பி யாகி
முந்தின தலங்கள் செற்று முதல்வியும் வாழ்வா ளாகும்
கந்தனை யீன்ற மாதே! கழறின மொழிகுன் றுவே.

19. பின்பு, இப்பிறவியில் தோன்றியவள் இவள் என்று கூறுவோம். மறுபிறவியில், திருத்தணிகையில் இந்தப் பிறவியில் பிறந்த குலத்திலேயே தோன்றி, சிறந்த குடும்பம் உடையவளாகி, உயர்ந்த புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை சென்று, இவள் வாழ்ந்து வருவாள். முருகக் கடவுளைப் பெற்ற தாயே! நாங்கள் கூறிய மொழிகள் தவறு.

## ஜாதகரின் மாற்றுந்தாயின் குணங்கள்

20. மறுமாதா அந்த வாண்டில் வருகுவாள்குணத்தைச்
[சொல்வேன்
அரிபோலே கோபம் சாந்தம் ஆளனுக் கினிய ளாகும்
பொறைசொலாள் இளம னத்தள் புகழ்ந்தோரை யாத
[ரிப்பள்
பெருமையாய்க் குடும்ப மேற்பள் புண்ணிய மனத்த
[ளாகும்.

20. ஜாதகனுக்குத் தாய் இறந்த ஆண்டிலேயே மாற்றுந்தாய் வாய்ப்பாள். அவள் குணங்களைக் கூறுவேன். சிங்கம் போன்று மிகுந்த சினங் கொள்ளுவாள். உடனே சாந்த மடைவாள். தன் கணவனுக்கு இனியவளாயிருப்பள். பொறுமையோடு கூடிய சொற்களை யுடையவள். கருணை நிறைந்த மனமுடையவள். தன்னைப் புகழ்கிறவர்களுக்கு ஆதரவு அளிப்பாள். மேன்மையான குடும்பத்தை ஏற்று நடத்துவாள். நல்ல எண்ணங்களையே நினைக்கும் மனமுடையவள்.

## இதுவுமது

21. மங்கையும் தீர்க்க சீவி மறுத்துரை யதிகம் கூறுள்
எங்கள்போ லதிதிக் கன்னம் ஈகுவா ளிருகு ணத்தாள்
பங்கய முகத்த ளாகும் பாலர்கள் ஆண்பா லிரண்டு
நங்கைய ரவ்வாறு தீர்க்கம் நாயகி தீர்க்க சீவி.

21. இவள் தீர்க்கமான வயதுடைய்வள். ஒருவர் சொன்னவை தனக்கு ஏற்கா விட்டாலும் அவற்றை மறுத்து அதிகமாகப் பேச மாட்டாள். எங்களைப் போன்ற தவசிகளுக்கு உணவு அளிப்பாள். இருவிதமான குணங்கள் உள்ளவள். தாமரை மலர் போன்று மலர்ந்த முகத்தைக் கொண்டவள். இவளுக்கு ஆண் குழந்தைகள் இருவரும் பெண் குழந்தைகள் இருவர் தோன்றி நீண்ட ஆயுடன் இருப்பார்கள். இவள் நீண்ட காலம் வாழ்ந்திருப்பாள்,

## ஜாதகன் திருமணக்காலமும் மனைவியின் இயல்புகளும்

22. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருப தாண்டுள்
காதலி தென்பால் நேரும் கழறுவோ மன்னை வர்க்கம்
ஒதுவேன் அவள்கு ணத்தை உறுதியா மனத்த ளாகும்
தீதுக ளொருவர்க் கெண்ணாள் சீலியாம் விரத மேற்பள்

22. இனிமேல் இந்த ஜாதகனுக்குத் திருமணம் நடைபெறும் காலத்தைப்பற்றிச் சொல்வோம். இவனது இருபதாம் வயதுக்குள் மணம் நடைபெறும். இவன் ஊருக்குத் தென் திசையிலிருந்து இவனுக்கு மனைவி வாய்ப்பாள். அவள் இந்த ஜாதகனின் தாய் வழியைச் சேர்ந்தவள் என்று கூறுவோம். இப்பொழுது, ஜாதகனின் மனைவியின் குணங்களைச் சொல்லத் தொடங்குகிறேன். அவள் திடமான மனமுடையவள். எவருக்கும் கெடுதல்களைச் செய்ய மனத்தாலும் நினைக்க மாட்டாள். நல்ல ஒழுக்கமுடையவள். நோன்புகளை அனுஷ்டிப்பாள்.

## மனைவியின் இயல்புகள்

23. தோகைபோல் வடிவு மொக்கும் சொல்லதும் சுருக்க
[மாகும்
பாகமாய்ப் பேசு வாளாம் பதர்மன மில்லா ளாகும்
ஆகம முணர்ந்தோ ருக்கு அன்னமு மன்பா யீவள்
போகபாக் கியங்க ளேற்பள் பூவையுந் தீர்க்க சீவி.

23, மயில் போன்ற சாயலுடையவள். சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுவாள். இடத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் பொருத்தமான சொற்களைப் பேசுவாள். அற்பமான எண்ணங்கள் கொண்ட மனம் இல்லாதவள். வேதாகமங்களை யுணர்ந்த பெரியோருக்கு மிகவும் விருப்பத்துடன் உணவு அளிப்பாள். சிறந்த போகங்களை அநுபவிப்பாள் நல்ல பாக்கியங்களை (பொருட் செல்வம் மக்கட் செல்வம் முதலியவற்றை) அடைவாள். இவள் தீர்க்கமான வயதுடையவள்,

## புத்திர பாவம்

24. சுதர்களு மாண்பா லிரெண்டு தோகையு மூவர் தீர்க்கம்
பதராகு முதலி லென்ரேும் பகரு வீரந்தச் சங்கை
நிதிகுரு அஞ்சில் நீசம் [1]நீலனும் நாலில் தங்க
அதுபலன் புகல்வோம் தாயே அவன்பூர்வம் சொல்லக்
[கேளாய்.

24. இவளுக்கு ஆண் மக்கள் இருவரும் பெண்கள் மூவரும் தோன்றித் தீர்க்கமான ஆயுளுடன் விளங்குவர். முதலில் தோன்றும் குழந்தைகள் சேதமாம். ஏன் அங்ஙனம் நேரிடும் என்று விளக்கமாகக் கூறுங்கள். குரு, (புத்திர ஸ்தானத்தில்) இலக்கினத்துக்கு ஐந்தாமிடமாகிய மகரத்தில் நீசமாகியும் அவ்வீட்டுக்குரிய சனி, நான்காமிடத்திலும், புத்திர ஸ்தானத்துக்கு விரயத்தில் இருப்பதால் சொல்லுவோம். எல்லா வுயிர்களுக்கும் தாயே! இனி, ஜாதகன் முற்பிறவி பற்றிக் கூறுவதனைக் கேட்பாயாக.

## ஜாதகன் முற்பிறவித் தீவினை

25. பிருதிவி தலத்தி லேதான் பிறந்தனன் சௌராஷ்டிர
[வமிசம்
பொருளது பெருக்க மாகிப் பேதையு மரண முண்டாய்த்
திருமகன் வாழு நாளில் செய்ததோர் வினையைக் கேளாய்
அரிவைமேல் அடாத வார்த்தை அணுகினு னிந்தப்
[பாலன்.

25. காஞ்சீபுரம் என்னும் ஸ்தலத்தில் சௌராஷ்டிரர் மரபில் தோன்றினன். செல்வம் அதிகமாகி இடைக் காலத்தில் மனைவியும் மரண மடைய இந்த ஜாதகன் வாழ்ந்து வரும் காலத்தில், அவன் செய்த தீச் செயலைக் கேட்பாயாக. வேறு ஒரு பெண்ணின் மீது தகாத வார்த்தைகளை இந்த ஜாதகன் கூறினன்.

## பெண்ணின் சாபம்

26. மாதுவும் மனமே வாடி யறைந்தசா பத்தைக் கேண்மோ
பாதகா யென்மேல் நிந்தை பதரான வார்த்தை
[சொன்னய்
மேதினில் மறுசென் மத்தில் விளங்காரே துணைவர்
[தாமும்
மாதாவின் சுகமு மின்றி மாநிலம் தன்னில் வாழ்வாய்;

1. சனி

26. இவனால் பழி கூறப்பட்ட அந்தப் பெண், மிகவும் மனம் வருந்தி கூறிய சாபச் சொற்களைக் கேளுங்கள். "பாவியே! என் மீது அடாதனவும் அற்பமானவைகளுமான சொற்களைச் சொன்னாய். உனக்கு இவ்வுலகில் ஏற்படும் மறுபிறப்பில், உடன் பிறந்தவர் நிலைக்க மாட்டார்கள். தாயினால் சுகங்களில்லாமல், பெரியதாகிய இந்நிலவுலகில் வாழ்ந்திருப்பாய்" எனவும்;

## முற்பிறவிச் செய்தி: தொடர்ச்சி

27. இன்னமும் பலவாறு சொன்னாள் தேவிகே ளந்தச் சாபம்
மன் னனு மந்தி யத்தில் வறுமைக ளுடைய னாகித்
துன்மையாய்க் கால நாடு சென்றுமே பிரமன் லக்கம்
இந்நிலந் தன்னிலு திப்பான் எய்திடு மாது சாபம்.

27. இன்னும் பலவற்றையும் கூறினாள், அந்தப் பெண், தேவியே! கேட்பாயாக. அந்தப் பெண்ணின் சாபம் இவனை அடைந்தது, இந்த ஜாதகன், தனது கடைசிக் காலத்தில் தரித்திர மடைந்து, எமபுரஞ் சென்று மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு, இவ்வுலகில் தோன்றுவான். முற்பிறவியில் ஏற்பட்ட பெண்ணின் சாபம் தொடரும்.

## சாப பலனும், ஜாதகனின் யோகங்களும்

28. மாதிரு சுகமில் லாதான் வருந்துணை நஷ்ட மெய்தும்
ஓதுவே னிவனின் யோகம் உயர் வுளோர் நேசங் [கொள்வன்
பாதக மனமில் லாதான் பதர்குண மில்லா னாகும்
மேதினி சேர்ப்பா னாகும் வாத்தியத் தொழிலுஞ் [செய்வன்.

28. பெண்ணின் சாபத்தால் இவனுக்குத் தாயினால் ஏற்படும் நன்மை யில்லாது போகும். (தாய் இவனது இளமையிலேயே மரணமடைவாள்.) இனி, இவனடையும் யோகங்களைப் பற்றிச் சொல்லுவேன். நற்பண்புகளும் சிறந்த கல்வி யறிவும் கொண்டுள்ள பெரியோர் தொடர்பைக் கொள்ளுவான். தவறான எண்ணங்களுடைய மனம் இல்லாதவன். அற்பத் தன்மை இல்லாதவன். நிலபுலங்களைச் சேர்ப்பவன் ஆவான், இசைக்கும் தொழிலைச் செய்வான். (புல்லாங்குழல், வீணை முதலியன வாசித்தல். ஆசிரியத் தொழில் செய்வான் என்றும் கூறலாம். அதற்கு வாத்திமை என்ற பாடம் சிறப்புடையது.)

## ஜாதகனின் யோகங்கள் : தொடர்ச்சி

29. கடன்கொளான் இடுக்கங் காணான் கட்டுவான் சிலர்க்கு [இல்லம்
திடமாக இவனினு மில்லஞ் செய்குவான் ஈரு ரின்மேல்
மடையரைச் சேரா னாகும் மாடுகள் சாராள் விருத்தி
தடபுடல் செய்கை யுண்டு தாட்சணியன் கனத்த புத்தி.

29. பிறரிடம் பணம் கடன் வாங்க மாட்டான். தனது வாழ்க்கையில் மிகுதியான துன்பங்களை யறியாதவனாக இருப்பான். சில பேருக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பான். பன்னிரண்டு வருஷங்கட்குமேல் இந்த ஜாதகனும் சொந்தமாகப் புதிய வீடு ஒன்றை நிச்சயமாகக் கட்டுவான். அறிவில்லாதவர்களுடன் தொடர்பு கொள்ள மாட்டான். பசு எருது முதலான மாடுகள், விருத்தியும் தன்னைச் சேர்ந்த பணியாட்கள் பலரையும் உடையவன். ஆடம்பரமான செயல்களுடையவன். பிறரிடம் தாட்சண்யம் கொண்டவன். பெரும் புத்தியுடையவன்.

## யோக மேற்படக் காரணம்: கிரகநிலை தர்மகர்மாதி யோகம்

30. வறுமையெப் போதுங் காணுன் அறுவிரண் டாண்டு [மேலாய்
குறைவிலாச் செல்வ மெய்துங் கூறின யோக மெவ்வாறு
தெரிவிப்பீ ரந்தச் சங்கை சுக்கிரன் புதனு மொன்ருய்
இருப்பதால் தர்ம கர்ம யோகத்தால் சொன்னேந் தாயே.

30. எப்பொழுதும் த்ரித்திரமின்றி இருப்பவன். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேல் நிறைந்த செல்வத்தைப் பெறுவான். இங்ஙனம் முனிவர் கூறிவரும் பொழுது பார்வதிதேவி பின்வருமாறு கேட்டனள். "மேலே சொல்லிய யோகங்களை ஜாதகன் எந்தக் காரணங்களால் பெறுவான். அந்த விவரங்களைக் கூறுங்கள்" என, சுக்கிரனும் புதனும் ஒன்று கூடி இருப்பதாலும், தர்மகர்மாதி யோகம் (இலக்கினத்திற்கு ஒன்பதாமிடமாகிய விருஷபத்திற்குரிய சுக்கிரனும், பத்தாமிடத்திற்குரிய புதனும் ஒன்ருகக்கூடி லக்னத்தில் இருப்பதாலும் புதன் ஆட்சி உச்சம் பெற்றிருப்பதாலும், அவ்விதம் சொன்னேம்.

## தந்தை மரணகாலமும் மறுபிறவியும்

31. ஆருறு வொன்று ஆண்டி லணுகிடுந் தந்தை [கெண்டம்
வேறுள ஜன்மஞ் சொல்வேன் வடமலை வேங்க டத்தில்
சேருவான் சத்திரியச் சேயாய்ச் செட்டுகள் பலவாய்ச் [செய்வன்
பாரினில் தவங்கள் செய்யும் பார்வதி கேட்டி டாயே.

31. ஜாதகனின் முப்பத்தி ஏழாவது வயதில் அவனது தகப்பனுருக்குக் கண்டம் ஏற்படும். தந்தையின் மறுபிறவி பற்றிக் கூறுவேன். வடக்குத் திசையின் கண்ணுள்ளதாகிய திருவேங்கட மலையில் அரச குலத்தில் மகவாய்த் தோன்றுவான். பலவிதமான தொழில்களைச் செய்வான். உலகில் தோன்றி தவங்கள் பல இயற்றிய பார்வதியம்மையே! மேலுங் கூறுவனவற்றைக் கேட்பாயாக,

## தந்தை இப்பிறப்பில் உயர்குலந்தோன்றக் காரணம்

32. வன்னிய குலமுன் ஜன்மம் வந்தவ னிச்சென் மத்தில்
உன்னத மயன்கு லத்தில் உதித்தகா ரணங்கள்
[சொல்வீர்
முன்சேது சென்றுவந்த வுயர்பல முதித்தா னென்ருேம்
கன்னென மொழியே யொக்கும் காதலி கேட்டி டாயே.

32. வன்னியர் மரபில் முற்பிறப்பில் தோன்றிய இந்த ஜாதகன் தந்தை இப்பிறப்பில் அந்தணனுகத் தோன்றியதற்குக் காரணங் கூறுவீர் முனிவரே. முற்பிறப்பில் சேதுவுக்குச் சென்று கடலாடி வந்த பயனுல் இப்பிறப்பில் இம்மரபில் தோன்றினுன் என்று சொன்னேம். கரும்பு போன்று இனிய மொழிகளைப் பேசும் அன்புடைய பார்வதிதேவியே! இனி மேல் யாங்கள் கூறுவனவற்றைக் கேட்பாயாக

## ஜாதகன் மரணகாலமும் மறு பிறப்பும்

33. பாலகன் மரண காலம் பகருவோ மறுபா னேழில்
சாலவே தனுசு மாதம் தன்னுட லேகு மென்ருேம்
ஏலவே யிவன்பின் ஜன்மம் இருடிவாழ் காளத்தி
[தன்னில்
சீலமா மறைக்கு லத்தில் ஜனிப்பனு மென்று
[சொல்வோம்.

33. ஜாதகன் மரண மடையும் காலத்தை நாங்கள் சொல்லுவோம். தனது அறுபத்தேழாம் வயதில், பொருந்திய மார்கழி மாதத்தில் மரணமுறு வான் என்று சொன்னேம். இனி, இவன் மறுபிறவி பற்றிக் கூறுவோம், முனிவர் பலர் தவமியற்றுகின்ற காளஹஸ்தி யென்னும் க்ஷேத்திரத்தில், நல்லொழுக்கமுள்ள அந்தணர் மரபில் தோன்றுவான் என்று கூறுவோம்.

## ஜனனகால தசை விவரம்

34. உதித்திடு காலந் தன்னி லுரோகிணி கடைப்பா தத்தில்
மதிதசை யாண்டு வொன்று மாதமு மிருநான் காகும்
முதல்பாகம் விபரஞ் சொன்னேம் மொழிகிருேம் பின்பால்
[சேதி
அதிதியை யாத ரிக்கும் அம்பிகை யாளே கேளாய்.

34. ஜாதகன் பிறக்கும் காலம் உரோகிணி நட்சத்திரம் நான்காம் பாத மாயிருக்கும். அப்பொழுது சந்திர மஹா தசையில் ஒரு வருஷமும் எட்டு மாதங்களும் நிலுவையாம். இதுவரை, ஜாதகன் முதல் பாக விவரங்கள் கூறினேம். மற்றச் செய்திகளை இரண்டாம் பாகத்தில் கூறுகிருேம். எம்மைப் போன்ற துறவிகளை ஆதரிக்கின்ற பார்வதி தேவியே! கேட்பாயாக.

—V. R. N.

---

## ஜாதகம் 72

### ஜனனகால கிரகநிலை

1. கன்னியுஞ் [1]ஜனன மாகக் [2]கவிமகன் [3]சேயுந் தங்க
[4]புந்தியும் [5]பானு [6]விரண்டில் [7]பொன்ராகு [8]நால தாகச்
சந்திரன் [9]னேழி லாகச் [10]செம்பாம்பு [11]தசம மாக
[12]மந்தனு [13]மீரா ருக வரைகுவீர் பலனை யென்று;

1. கன்னி இலக்கினமாகவும், சுக்கிரன் அங்காரகன் இலக்கினத்திலும். புதன் சூரியன் இரண்டாமிடமாகிய துலாத்திலும், குரு ராகு நான்காமிடமாகிய தனுசிலும், சந்திரன் ஏழாமிடமாகிய மீனத்திலும், கேது பத்தாம் இடமான மிதுனத்திலும், சனி பனிரண்டாம் இடமாகிய சிம்மத்திலும், ஆகிய இவ்வாறன கிரக நிலைகளைக் கொண்டு தோன்றியுள்ள ஜாதகனுக்குப் பலன்கள் எவ்வண்ணம் உள்ளன என்று சொல்லுவீராக என்று;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | | | கேது |
| | இராசி சக்கரம் | | |
| | | | சனி |
| குரு ராகு | | புதன் சூரியன் | லக்கினம் சுக்கிரன் அங்காரகன் |

---

1. இலக்கினம்
2. சுக்கிரன்
3. அங்காரகன்
4. புதன்
5. சூரியன்
6. இலக்கினத்துக்கு இரண்டாமிடம் துலாம்
7. குரு
8. இலக்கினத்துக்கு நான்காமிடம் தனுசு
9. இலக்கினத்துக்கு ஏழாமிடம் மீனம்
10. கேது
11. இலக்கினத்துக்குப் பத்தாமிடம் மிதுனம்
12. சனி
13. இலக்கினத்து பன்னிரண்டாமிடம் சிம்மம்

## ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளங்கள்

2. அந்தரி கேட்கும் போது அத்திரி முனிவர் சொல்வார்
இந்தசே யாணுஞ் ஜன்மம் இல்லமு மேல்பால் நோக்கம்
தென்திசை கணேச னுண்டு சிவன்கோஷ்டம் வடகீ
[ழாகும்
அந்தரி மேற்கில் தங்கும் அணுகிய சமவூர் தன்னில்;

2. ஏழு முனிவர்களையும் நோக்கிப் பார்வதிதேவியார் கேட்க, அவர்களில் ஒருவராகிய அத்திரி முனிவர் கூறத் தொடங்குவார். இந்த ஜாதகத்துக்குடையவன் ஆண் மகன். இவன் பிறந்த வீடு மேற்குத் திசையை நோக்கிய வாயிலை யுடையது. வீட்டுக்குத் தெற்குத் திசையில் விநாயகர் கோயில் கோண்டிருப்பார். சிவபெருமான் எழுந்தருளியுள்ள ஆலயம் வீட்டுக்கு வடகிழக்குத் திசையின்கண் உள்ளது. துர்க்கையம்மன் கோயில் வீட்டுக்கு மேற்குத் திக்கில் இருக்கும். இங்ஙனம் உள்ள கிராமச் சூழ்நிலையும் பட்டண நாகரீகங்களும் கலந்துள்ளதான ஒரு ஊரில்;

## இந்த ஜாதகத்தில் கூறப்போகும் செய்திகள்

3. சொன்னயிவ் வடையா ளத்துள்
சுதனுமே யிரண்டாஞ் ஜன்மம்
அன்னவ னுதிப்பா ருகும்
அறைகிறே மிவனின் யோகம்
தன்துணை களத்திர புத்திரர்
தாய்தந்தை யோகந் தானும்
முன்பின்ஜன் மங்கள் யாவு
முரைக்கிறே மிந்நூல் தன்னில்.

3. மேற்சொல்லப்பட்ட அடையாளங்கள் கொண்டதொரு வீட்டில், இந்த ஜாதகனின் தன் தந்தைக்கு இரண்டாம் புதல்வனுகத் தோன்றுவான். இனி, ஜாதகன் யோகங்கள், அவனுடன் பிறந்தவர்களின் யோகங்கள், மனைவி, மக்கள், தாய், தந்தையர் ஆகியோரின் யோகங்கள், முன் ஜன்ம பின் ஜன்ம விவரங்கள் முதலான அனைத்தையும் பற்றி விவரமாக இந்தச் சோதிட நூலில் கூறுகிறேம்.

## தந்தையின் செய்திகள்

4. தந்தையின் துணைந வத்துள் தங்காது யாவுந் தானே
தந்தையுந் தனிய னுவன் சாற்றுவீ ரந்தச் சங்கை
தந்தைதா னத்தோன் நீசம் சேயுமே கூடி நிற்கத்
தந்தையுந் தனிய னுவன் செப்புவோ மவன்கு ணத்தை.

4. ஜாதகனின் தந்தையுடன் பிறந்த ஒன்பது பேர்களில் ஒருவரும் நிலே யார். தந்தை தனித்து வாழ்வான். ஏன் அப்படி நேர்ந்தது? என்று கூறு வீர்கள். பிதுர் ஸ்தானத்தவனுகிய (ஒன்பதாமிடத்துக்குரியவன்) சுக்கிரன் நீசமாய் இலக்கினத்தில் அங்காரகனுடன் சேர்ந்திருப்பதால் இந்த ஜாதக னின் தந்தை உடன் பிறந்தவர்களே இழந்து தனியனுய் வாழ்வான். இனி இந்த ஜாதகனின் தந்தையது இயல்புகளேச் சொல்லுவோம்.

## இதுவுமது

5. [1]சோதிநாள் [2]தேளா மிராசி ஜனிப்பனும் மானி றத்தான்
நீதிமான் கிருஷி யுள்ளான் நேமியில் செட்டும்
[செய்வன்
[3]கியாதியு முடைய னுகும் கிராமாதி காரஞ் செய்வன்
சூதிலான் மொழிகாப் பானுஞ் சோம்பிடான் காரி யத்தில்.

5. இவன் சுவாதி நட்சத்திரம் விருச்சிக ராசியில் தோன்றியவன். மாநிறமுள்ளவன். நீதிமான் விவசாயத் தொழில் செய்பவன். உலகிலும் வேறு தொழிலும் செய்துவருவான். எங்கும் பரவிய கீர்த்தியுடையவன். கிராமாதிபத்யம் செலுத்துவான். வஞ்சனைகளில்லாதவன். சொன்ன சொல்லேப் பாதுகாப்பான். எந்தச் செயலேயும் செய்வதற்குச் சோம்பல் அடைய மாட்டான்.

## இதுவுமது

6. சல்லியப் பாதை யுண்டு சடுதியில் நிவிருத்தி செய்வன்
இல்லேயென் றுரைக்க மாட்டா னிடரான புத்தி
[யில்லான்
வெல்லுவா னெதிரி தன்னே மேதினி சேர்ப்பா னுகும்
வல்லியூர் சிலநாள் வாசம் மருவிடுந் தந்த நோயும்.

6. கடன் தொந்தரவுகள் இவனுக்கு உண்டு. அவற்றை விரைவில் தீர்த்து விடுவான். தன்னிடம் கேட்பவர்களுக்கு இல்லே யென்று சொல்லாமல் கொடுப்பான். கெடுதியான புத்தியில்லாதவன். தன் எதிரி களே வெற்றி கொள்ளுவான். நிலபுலங்களேச் சேர்ப்பான். தன் மனேவியின் ஊரில் சின்னுட்கள் தங்கியிருப்பான். இவனுக்குப் பல்நோய் ஏற்படும்.

## தந்தையின் குணங்கள்

7. வித்தையு முடைய னுகும் விவேகியா மெவர்க்கு நேயன்
சுத்தவா னறத்தி லிச்சை துன்பங்க ளெவர்க்கு
[மெண்ணுன்

1. சுவாதி
2. விருச்சகம்
3. கீர்த்தி

சத்தியங் கூறு வானும் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
அத்தியை வளர்த்த வெங்கள் ஆத்துமத் தாயே
[கேளாய்.

7. கல்வியறிவுடையவன். விவேகமுடையவன். எல்லோருக்கும் அன்பன். தூய்மையுள்ளவன். தருமச்செயல்களில் விருப்பமுள்ளவன். ஒருவருக்கும் மனத்தால்கூட தீங்கு செய்ய நினைக்கமாட்டான். உண்மையையே கூறுவான். கால்நடைச் செல்வம் விருத்தியாகும். யானைமுகக் கடவுளைப் புதல்வராகப் பெற்று வளர்த்த எங்கள் உயிருக்குயிரான பார்வதியம்மையே! மேலுங் கூறுவோம். கேட்பாயாக.

## ஜாதகனின் குணங்கள்

8. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோகையர் மூவர்
[தம்மில்
இன்னவன் கடைமா துக்கு எய்துவா னென்று
[சொல்வோம்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் ஆனையின் நிறத்த
[னாகும்
உன்னத தேகி யாவன் உண்மையா மனத்த னாகும்.

8. மேற்சொல்லப்பட்ட இயல்புகளைக்கொண்ட தந்தைக்கு மனைவியர் மூவராவர். அவர்களில் மூன்றாவது மனைவிக்கு இந்த ஜாதகன் புதல்வனாகப் பிறந்தவன் என்று சொல்லுவோம். இனி, இவனுடைய குணங்களைக் கூறுவேன். யானை போன்று கரியநிறம் வாய்ந்த உடலுடையவன். குற்றமில்லாமல் சிறந்த அவயவங்களோடு கூடிய தேகமுள்ளவன். உண்மையையே நினைக்கின்ற மனமுள்ளவன்.

## இதுவுமது

9. கல்விமா னீகை யாளன் காதலி மார்கள் மோகன்
சொல்லது சுருக்க மாகும் சுற்றத்தார் மதிக்க வாழ்வன்
அல்லலெப் போதுங் காணன் அரசர்க ளிஷ்டங்
[கொள்வன்
எல்லையைப் பரிபா லிப்பன் ஏவலா ளுடைய னாகும்.

9. சிறந்த கல்வியறிவுள்ளவன். கொடைக்குணமுள்ளவன். பெண்கள் பால் மையலுடையவன். சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுதல் செய்வான். உறவினர்கள் இவனைப் பாராட்டும்படி வாழ்க்கை நடத்துவான். எந்தக் காலத்திலும் துன்பமென்பதனையே அறியாதவன். அரசர்களின் விருப்பத்துக்கு உரியவனாக இருப்பான். நிலபுலங்களைப் பாதுகாப்பான். தான் ஏவுவனவற்றைச் செய்வதற்கு ஆட்கள் பலரை யுடையவன்.

## இதுவுமது

10. தந்தைக்குச் சமமாய் வாழ்வன் தடமது செய்வா னுகும்
தந்தைசொல் கடவா னுகுஞ் சாதமுங் குறைவு ருதான்
தந்தமுந் தரள மொக்குந் தாட்சிண்யன் கனந்த புத்தி
தன்பந்துக் கிணக்கஞ் சொல்லான் தாயாதி நாஸ்தி
[செய்வன்:

10. தன் தகப்பனுருக்கு ஒப்பான பெருமையுடன் வாழ்க்கையை நடத்து வான். பெரியகுளம் வெட்டுவான். (வீடு கட்டுவான்) தன் தகப்பனுர் சொல்லும் வார்த்தைகளை மீறமாட்டான். போஜன ஸௌக்கியம் எப்பொழுதும் குறையாதவன். முத்துப்போன்ற வெண்மை பொருந்திய ஒரே சீரான பற்களை யுடையவன். பிறரிடம் தயைகொண்ட மனமுடையவன். பெரும் புத்தி கொண்டவன். தன் உறவினர் கிலருடன் ஒற்றுமையாக இருக்கமாட்டான். தாயாதிவர்க்கம் இவனுல் நாசமடையும்.

## ஜாதகனின் சகோதரியினுடைய செய்திகள்

11. தன்துணை முன்னுல் நஷ்டம் தங்கும்பின் கன்னி
[யொன்று
அன்னவள் தீர்க்க சீவி அவள்குணம் புகலக் கேண்மோ
முன்கோபம் சொஞ்ச முண்டு மொழியது சுகமே யாகும்
மன்னவன் மனத்துக் கேத்தோள் வருவோரை யாத
[ரிப்பள்.

11. இந்த ஜாதகனுக்கு முன் பிறந்தவர்கள் நிலைக்கமாட்டார்கள். இவனுக்குப் பின் பிறந்த சகோதரி ஒருத்தி இருப்பாள். அவள் தீர்க்க ஆயுளுடன் விளங்குவாள். சகோதரியின் குணத்தைச் சொல்லக் கேட்பாயாக. சிறிது முன்கோப முள்ளவள். இவள் பேசுஞ் சொற்கள், கேட்பதற்கு நலமாக இருக்கும். தன் கணவன் மனத்துக்கு ஏற்றவளாவாள். வீட்டுக்கு வருபவர்களை அன்புடன் ஆதரிப்பாள்.

## இதுவுமது

12. வரனுமே வடபால் நேரும் மதலைகள் ஆண்பா லொன்று
அரிவையர் இருவர் தீர்க்கம் அச்சுதர் தவத்தால்
[தோன்றும்
திருகிலாக் குணத்த ளாகும் செழிப்பான குடும்பி யாவள்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

12. இந்த ஜாதகனின் சகோதரிக்கு வடக்குத் திசையிலிருந்து கணவன் வாய்ப்பான். இவனுக்கு ஆண் குழந்தை ஒன்றும், பெண் குழந்தைகள் இருவரும் தோன்றி, தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். இந்த மக்களும் இவ

ளுக்கு நல்வினையினுல் தோன்றியவராவர். மாறுபாடு இல்லாத குணம் உடையவள். வளமுள்ள குடும்பம் உடையவள், கருமைநிறம் பொருந்திய மதத்தோடு கூடிய யானைமுகக் கடவுளை புதல்வராகப் பெற்ற பார்வதி அம்மையே! கேட்பாயாக.

13. முன்மாதா மூன்று வென்றீர்
மொழிகுவீ ரவட்குப் புத்திரர்
இன்னவ னுதிக்குங் காலை
யிலையென்ருேந் தாயே யாங்கள்
அன்னைமுன் னிரண்டு தீர்க்க
மாகுமோ அற்ப மோசொல்
துன்மையாம் முதல்ம னைதான்
துதீயமா திருவுந் தீர்க்கம்.

13. ஜாதகனுக்கு தாயார் மூவர் என்று கூறினீர்கள். அவர்களுக்குப் புத்திர பாக்யம் பற்றிக் கூறுங்கள். இந்த ஜாதகன் பிறந்தபொழுது மற்ற இரண்டு தாயாருக்கும் புத்திரர் இல்லை என்று,சொல்லுவோம், தாயே! நாங்கள். ஜாதகனின் மூத்த தாயர் இருவரும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவரோ அன்றி அற்பாயுளுடையராய் இருப்பரோ! கூறுங்கள் என்று பார்வதி கேட்க, முனிவர் கூறுவார். தந்தையின் முதல் மனைவி அற்பாயுளுடையவளாய் மடிவாள். இரண்டாம் மனைவி தீர்க்க வயதுடன் இருப்பாள்.

## ஜாதகனின் திருமணக் காலமும் மனைவியின் இயல்பும்

14. பின்பாக மவர்கள் சேதி பேசுவோந் தாயே யாங்கள்
இன்னவன் மணத்தின் காலம் இயம்புவோம் பதினே
[ழாண்டில்
கன்னிகை கீழ்ப்பால் நேருங் கழறுவோ மவள்கு ணத்தை
முன்கோப முடைய ளாகும் மொழியது சுகமே யாகும்.

14. இரண்டாம் பாகத்தில் ஜாதகனின் மூத்த தாயர்களைப்பற்றிய விவரங்களை, தாயே! நாங்கள் சொல்லுவோம். இனி, ஜாதகனின் திருமணக் காலத்தைப் பற்றிச் சொல்லுவோம். இவனது பதினேழாவது வயதில் மணம் நடைபெறும். மனைவி கிழக்குத்திசையிலிருந்து வாய்ப்பாள். அவள் குணங்களைச் சொல்லுவோம். முன்கோபங் கொண்டவள். பேசும் சொற்கள் சுகந்தருவனவாயிருக்கும்.

## ஜாதகனுக்கு நோயுற்ற மனைவி வாய்த்தல்

15. காரக தேகி யாவள் கழறுவீ ரந்தச் சங்கை
தீரமா ய[1]ரவி னேடு [2]சிகண்டியும் கூடி நிற்கக்

1. (அரவு) ராகு 2. குரு

கூறினேம் பிணியாம் தேகம் கோதையும் வருவா ளாகும்
காரிழை யெந்தத் திக்குக் கழறுவீர் முனியே நீர்தாம்.

15. காரக சரீரமுள்ளாள். இவ்வாறு முனிவர் கூற, பார்வதிதேவி கேட்டாள். என்ன காரணத்தினுல் இந்த ஜாதகனின் மனைவி காரக தேக முடையவள் என்று கூறினீர்கள்? அந்தச் சந்தேகத்தை விளக்குங்கள். திடமாய் ராகுவுடன் குருவும் சேர்ந்து நான்காமிடமாகிய தனுசில் இருப்பதனுல் காரக நோயுள்ள தேகத்துடன் இவனுக்கு மனைவி வாய்ப்பாள் என்று சொன்னேம். இவனுக்கு இரண்டாம் மனைவி வருவாள். அவள் எந்தத் திக்கிலிருந்து வருவாள்? முனிவரே! தாங்கள் கூறியருளுவீராக.

## மனைவியின் இயல்புகள்

16. உத்தரம் திசையில் நேருமு ரைக்கிரே மவள்கு ணத்தைச்
சித்தமே கரப்பு முள்ளாள் சிவந்தமெய் யுடைய ளாகும்
புத்திமான் கோபி யாவள் புண்ணிய மனமில் லாதாள்
சுத்தமு முடைய ளாகும் சோம்பலில் லாதா
[ளென்றேம்

16. மனைவி வடக்குத் திசையிலிருந்து வாய்ப்பாள். இனி அவள் குணங்களைச் சொல்லுகிறேம். மனத்தில் வஞ்சனை உடையவள். சிவந்த அழகுடையவளாவாள். புத்திசாலி, மிகுந்த கோபமுடையவள். நல்லெண்ணம் பொருந்திய மனமில்லாதவள். தூய்மை யுடையவள். காரியங்களைச் சோம்பல் இல்லாமல் செய்பவள் என்று சொன்னேம்.

## இதுவுமது

17. பாலிகை வயது தீர்க்கம் பெரியதாம் குடும்பி யாவள்
நீலிக்குச் சுதராணிரண்டு நீலிமார் மூவ ராகும்
காலத்தை அறிந்து ரைப்பள் கணவனுக் கினிய ளாகும்
வேல்விழி யெந்தக் காலம் மேவுவாள் விபரம் சொல்வாய்.

17. இவள் தீர்க்கமான வயதுடையவள். பெரிய குடும்பமுடையவள். இவளுக்கு ஆண் குழந்தைகளிரண்டும் பெண் குழந்தைகள் மூவரும் தோன்றுவர். சமயத்தை அறிந்து பேசுபவள். தன் கணவனுக்கு இனிய வளாகி இருப்பாள். வேல்போன்ற கண்களை உடைய இரண்டாம் மனைவி இந்த ஜாதகனுக்கு எப்பொழுது வருவாள்? அந்த விபரங்களைக் கூறுவீராக.

## இரண்டாம் மனைவி வருங்காலம்

18. மூவேழு ஆண்டு தன்னில் மேவுவா ளென்று
[சொல்வோம்
தாவினேர்க் குதவி செய்வள் சந்தேக மனத்த ளாகும்

காவியக் கண்ணாள் தீர்க்கம் காதலி கேட்டி டாயே
மேவிய விவன்முன் ஜென்மம் விளம்புவோம் தாயே
[கேளும்.

18. ஜாதகனின் இருபத்தோராம் வயதில் இவள் வருவாள் என்று கூறுவோம். தன்னை அண்டினோர்க்கு உதவிசெய்வாள். எவரையும் சந்தேகிக்கும் மனமுடையவள். நீலோத்பல மலரைபொத்த கண்களையுடைய இந்த இரண்டாம் மனைவி, தீர்க்கமான வயதுடையவள். தாயே! கேட்பாயாக. இந்த ஜாதகனின் முற்பிறவி பற்றி இனிமேல் கூறுவோம் கேளுங்கள்.

## ஜாதகனின் முற்பிறவி விவரம்

19. கொங்குநா டதனி லேதான் குதித்தனன் செக்கான்
[வமிசம்
பாங்கியு மதலே யுண்டாய்ப் பகரமாங் குடும்பி யாகி
ஆங்கவன் வாழு நாளில் அணுகின வினையைக்
[கேண்மோ
ஏங்கினோர்க் குதவி செய்து இயல்பெலாம் பறித்துக்
[கொண்டான்.

19. கொங்கு நாட்டில், செக்காடுந்தொழில் செய்யும் வாணியர் மரபில் தோன்றினான். மனைவி மக்களைப் பெற்று, பெரிய குடும்பமுடையவனாகி, இவன் வாழ்ந்திருக்கும் காலத்தில், இவனையடைந்த தீவினையைக் கேட்பாயாக. துன்பத்தால் வருந்தியவர்களுக்கு உபகாரங்கள் செய்து, அவர்களிடமிருந்த பொருளையெல்லாம் அபகரித்துக் கொண்டான்.

## இதுவுமது

20. தனமிலா வேழை யோர்கள் சாற்றுவார் சாபந் தானும்
இனிவருஞ் ஜன்மந் தன்னி லெய்தாது துணையா
[ணுந்தான்
வனிதைமா ரிருவ ராயும் மாநிலந் தன்னில் வாழ்வாய்
வினைமன தாகச் சொல்ல மேவிற்று அந்தச் சாபம்.

20. செல்வத்தை இழந்த ஏழைகள் ஜாதகனுக்குப் பின்வருமாறு சாபமிட்டனர். "இனி, வரப்போகும் பிறவியில் உனக்கு சகோதரர் இரார். இரு மனைவியரைப் பெற்று இவ்வுலகில் வாழ்வாய்" என்று இங்ஙனம் வருந்திய மனத்துடன் ஏழைகள் சாபமிடவே, அஃது இந்த ஜாதகனைப் பற்றியது.

## இதுவுமது

21. நந்திமே லதிக பாரம் நடத்தினன் அதுவோர் தோஷம்
இந்தவ னந்தி யத்தி லிரணிய மில்லா னாகித்

துன்மையாய் வாய்ப்புண் கண்டு சென்றனன் கால நாடு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறப்பனு மென்று
[சொல்வோம்.

21. வண்டியில் சுமக்க முடியாத அளவு பாரம் ஏற்றிக் காளையைப் பூட்டி ஓட்டினுன். அந்த ஒரு தோஷமும் இவனைச் சார்ந்தது. இவன், தனது கடைசிக் காலத்தில் செலவுக்குப் பணமில்லாமல் வருந்தி, வாய்ப்புண்கள் ஏற்பட்டு:எமனுலகஞ் சென்றுன். [மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு இவ்வுலகில் பிறந்தான் என்று கூறுவோம்.

## முன்பிறவிச் சாபபலனும், ஜாதகன் யோகங்களும்

22. ஆகையால் முன்னூழ்ச் சாப மணுகிடு மிச்சென்
[மத்தில்
ஏகனுய் வாழ்வா னுகும் இருதார முடைய னுகும்
பாகமா யிவனின் யோகம் பகருவோம் வறுமை காணுன்
போகபாக் கியங்க ளேற்பன் புண்ணிய மனத்த னுகும்.

22. ஆதலால், முன் ஜன்மத்தில் இந்த ஜாதகனுக்கு ஏற்பட்ட சாபம் இப்பிறப்பில் இவனையடையும். ஆண் துணையின்றித் தனித்து வாழ்வான். இரு மனைவியரை உடையவன் ஆவான். இனிமேல், பொருத்தமான இவனது யோகங்களைப் பற்றிக் கூறுவோம். ஏழைமையை யறியமாட்டான். போகங்களையும் அநேகவித பாக்கியங்களையும் அடைவான். தரும சிந்தை யுள்ளவனுக இருப்பான்.

## இதுவுமது

23. அறமதி லிச்சை யுள்ளான் ஆபத்தைச் சிலர்க்குக்
[காப்பான்
தரையதைச் சேர்ப்பா னுகும் தனங்கடன் கொள்ளா
[னுகும்
பெருமையும் புகழு மேற்பன் பேதையர் மோக னுவன்
அறுமுகன் பத்தி கொள்வ னடைந்தோரை யாத
[ரிப்பன்.

23. தருமங்கள் செய்வதில் விருப்பம் இவனுக்கு உண்டு. சிலருக்கு நேரவிருந்த ஆபத்துக்களைத் தடுத்துக் காப்பாற்றுவான். நிலபுலங்களைச் சேர்ப்பவன் ஆவான். பணம் கடனுகப் பிறரிடமிருந்து வாங்கமாட்டான். மேன்மையையும் கீர்த்தியையும் அடைவான். பெண்கள் பால் மையலுள்ள வனுக விருப்பான். ஆறு திருமுகங்களை யுடைய முருகப்பிரான்மீது பக்தி கொள்ளுவான். தன்னைக் கதியென்று அடைந்தவர்களை ஆதரிப்பான்.

## ஜாதகனின் தாயினது இயல்புகள்

24. மாதிரு குணத்தைச் சொல்வேன் மாந்தளிர் மேனி
[யாவள்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம் கபடு மில்லாள்
பாதக மனமில் லாதாள் பாத்தாவுக் கினிய ளாகும்
காதலி நடக்கை நன்மை கண்முகம் வசிய முண்டு.

24. இனி, ஜாதகனின் தாயாருடைய குணங்களைச் சொல்லுவோம். மாமரத்தின் தளிர்போன்று மென்மை வாய்ந்த சரீர முள்ளவளாவாள் இனிய சொற்களைப் பேசுவாள். மனத்தில் கபடமில்லாதவளாவள். கெட்ட எண்ணமில்லாதவள். தன் கணவனுக்கு இனியவளாக இருப்பாள். நல்ல நடத்தை யுடையவள். பிறரை வசப்படுத்தும் தன்மைகொண்ட கண்களை யும் முகத்தையும் உடையவள்.

## இதுவுமது

25. அன்னையு மிரண்டு மாகும் அணுகிய முன்தாய்க்
[கின்னோள்
தன்துணை யாண்பா லொன்று சத்தியும் மவ்வாறு தீர்க்கம்
பன்னியே பேசு வாளாகும் பால்பாக்கிய முடைய ளாகும்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

25. இவளுக்குத் (ஜாதகனின் தாய்க்கு) தாயார் இருவர் ஆவர். அவர் களில் முதல் தாய்க்குப் பிறந்தவள் இவள். இவளுடன் பிறந்த சகோதரன் ஒருவனும் சகோதரி யொருத்தியும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவார்கள். பன்னிப் பன்னிப் பேசுவாள். பசுக்கள் விருத்தி முதலான பாக்கியங்கள் உடையவள் ஆவாள். உயர்ந்த யானைமுகக் கடவுளைப் புதல்வராக அடைந்த உத்தமியே! யாங்கள் மேலும் கூறுவதைக் கேட்பாயாக.

## தாயின் முற்பிறவி வரலாறு

26. முன்னவ ளிருந்த ஜன்மம் மொழிகிறோம் புதுவை
[தன்னில்
வன்னிய குலமு தித்து வளமுள குடும்பி யாகிப்
பின்னோர்க்குத் தாக மீந்து பிழையது மில்லா தாகித்
துன்மையாய்க் கால நாடு சென்றனள் வரன்முன் னாக.

26. முன்பு, இவள் (தாயார்) முற்பிறவி பற்றிச் சொல்லுகிறோம். புதுச்சேரி என்ற நகரில், வன்னியர் மரபில் தோன்றி, செழிப்பான குடும்ப முள்ளவளாய், ஏழைகளுக்கு உணவு முதலியன அளித்து, தீவினைகள் எவையும் இல்லாதவளாகி, தன் கணவன் இறப்பதற்கு முன்னமேயே மரண மடைந்தனள்.

## தாயின் மறுபிறவி

27. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ ளிவளே
[யென்றோம்
வறுமையெப் போதுங் காணு ளறைகிறோ மிவள்பின்
[ஜன்மம்
பெருமையாய் வேலங் காட்டில் பிறப்பளா மிக்கு லத்தில்
அறந்தனை வளர்க்கு மெங்கள் ஆத்துமத் தாயே
[கேளாய்.

27. மீண்டும் நான்கு முகங்களைக் கொண்ட பிரமதேவனால் படைக்கப்பட்டு, இப்பிறப்பில் ஜாதகன் தாயாகப் பிறந்தவள் இவள் என்று சொன்னோம். இவள் ஏழைமைத் துன்பத்தை எப்பொழுதும் அறியமாட்டாள். இவள் மறுஜன்மத்தைப் பற்றிக் கூறுகின்றோம். மேன்மையுடன், திருவாலங்காட்டில் இப்பிறப்பில் தோன்றிய குலத்திலேயே தோன்றுவாள். தருமத்தினை வளர்க்கும் எங்கள் உயிருக்குயிரான அம்பிகையே! மேலும் கேட்பாயாக.

## தந்தையின் முற்பிறவி

28. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மாழி
[தன்னில்
வந்தனன் வைசியச் சேயாய் மனைவிமைந் தருமுண்
[டாகி
முந்திய செட்டுச் செய்து வித்தகன் வாழு நாளில்
வந்ததோர் வினையை யாங்கள் வழுத்துவோம் கேளுந்
[தாயே.

28. இனி, ஜாதகனின் தந்தையின் முற்பிறவி பற்றிக் கூறுவோம். திருப்பாற்கடல் என்னும் ஊரில் வைசிய மரபினனாகப் பிறந்தான். மனைவி மக்களையடைந்து, முதன்மையான வாணிபம் செய்து இவன் வாழ்ந்து வருகின்ற காலத்தில், இவனைப் பற்றவந்ததொரு தீவினையை நாங்கள் சொல்லுவோம். தாயே! கேட்பீராக.

## தந்தையின் முற்பிறவித் தோஷம்

29. கன்னிகை யொருத்தி பேரில் கழறுனு வார்த்தை
[சொல்லித்
தன்வரன் தன்னை விட்டுத் துரத்தினன் வெளியூர்
[தன்னில்
அன்னவள் வருத்த முற்று அறைந்தசா பத்தைக்
[கேண்மோ
துன்மையாய் வர்த்தை சொல்லித் துரத்தின பாவிக்
[கேதான்;

29. அயற்பெண் ஒருத்தியின்மேல், சொல்லத் தகுதியில்லாத பழிச் சொற்களைச் சொல்லி, அவளை, கணவனிடமிருந்து விலக்கி வெளியூருக்குச் செல்லும்படி துரத்திவிட்டான். அந்தப் பெண் வருத்தமுற்றுக் கூறிய சாபத்தைக் கேளுங்கள் "என்னைப் பற்றித் தகாத வார்த்தைகளை என் கணவனிடம் கூறி, என்னை வெளியூருக்குத் துரத்திய பாவியாகிய உனக்கு ;

## முற்பிறவிச் சாபம்

30. மற்றொரு ஜன்மந் தன்னில் மனைவிமா ரநேக ராயும்
குற்றமாந் தந்தந் தானுங் குலவாரே துணைவர் தாமும்
வெத்தியாய்ச் சிலநாள் தன்னில் வேட்டகந் தன்னில்
[வாழ்வாய்
இத்தகை சொல்லித் தூளை யிறைத்தவள் சென்று
[ளென்றோம்.

30. மறுபிறவியில் பலமனைவியர் ஏற்படுவர். பல்நோய் உண்டாகும். உடன் பிறந்த துணைவர் இல்லாமல் வாழ்வாய். வேலை யெதுவுமில்லாமல், மனைவியின் பிறந்த வீட்டில் சிலநாட்கள் வசிப்பாய்." இவ்வாறு கூறி, தெரு மண்ணை வாரி இறைத்துவிட்டு அவள் சென்றுள் என்று சொன்னோம்.

31. மாரனுக் கந்தி யத்தில் மருவிற்று வந்தச் சாபம்
நாரிமா ரில்லா னாகி நமன்பதிக் காளா யின்னோன்
வீரியன் பக்கம் புக்கு வேதனால் வரையப் பட்டுப்
பார்விருத்தி செய்யும் குலத்தில் பிறந்தவ னென்று
[சொல்வோம்.

31. இந்த ஜாதகன் தந்தையின் கடைசிக் காலத்தில் அந்தப் பெண்ணின் சாபம் சேர்ந்தது. மனைவியை இழந்தவனாய், எமனுலகம் சென்று நரகத் துன்பமநுபவித்து. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு. நிலங்களை விருத்தி செய்யும் (விவசாயம்) வேளாளர் குலத்தவனாக இப்பிறப்பில் தோன்றியவன் இவன் என்று கூறுவோம்.

## முற்பிறவிச் சாப பலன்

32. மங்கைமார் சாபம் போலே மனைவியர் மூவ ராவர்
தங்காரே துணைவர் தாமும் தந்தமும் குறைவு முண்டு
சங்கையாய் வேட்ட கத்தில் தானவன் சிலநாள் வாசம்
ஐங்கரன் தனைவ ளர்த்த அம்பிகை யாளே கேளாய்.

32. அந்தப் பெண்ணின் சாபத்தின் பலனால் இப்பிறப்பில் இவனுக்கு (தந்தைக்கு) மனைவியர் மூவராவர். உடன்பிறந்தோர் நில்லார். பற்களில் ஊனம் உண்டாகும். தன் மாமனார் வீட்டில் சிலகாலம் வசிப்பான். ஐந்து கரங்களையுடைய விநாயகப் பெருமானைப் புதல்வராகப் பெற்று வளர்த்த அம்பிகையே! கேட்பாயாக.

## தந்தையின் மரணகாலமும், மறுபிறவியும்

33. இருபது வொன்ப தாண்டில் இயம்புவோம் தந்தை [கண்டம்
வருஞ்ஜன்மம் தோகை நாட்டில் வருவனு மருகர் [வர்க்கம்
பொருளது பெருக்க முண்டாய்ப் பூமியில் ஜீவிப் பானும்
கரிமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

33. ஜாதகன் இருபத்தொன்பதாம் வயதில் அவனது தந்தைக்கு மரணமேற்படும் என்று சொல்லுவோம். தந்தை மறுபிறவியில் தோகை மலையில் சமண மரபில் தோன்றுவான். செல்வப் பெருக்கம் உண்டாகி உலகில் வாழ்வான். கருமை நிறம் பொருந்திய யானைமுகக் கடவுளைப் பெற்ற பார்வதியம்மையே! கேட்பாயாக.

குறிப்பு:—ஜாதகனுடைய புதமகாதசையில் ராகு புக்தியில் தந்தை மரண மடைவான்),

## தாய், ஜாதகன் ஆகியோர் மரணகாலங்கள்

34. நாற்பது விரண்டு வாண்டில் நமன்பதி யன்னை சேர்வள்
ஏற்கவே வறுபா றுறில் எழில்துலா மாதந் தன்னில்
தீர்ப்பாக ஜாத கர்க்குச் செப்புவோ மார கங்கள்
ஆர்க்கவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்

34. ஜாதகனது நாற்பத்திரண்டாம் வயதில் அவனைப் பெற்ற தாய் மரணமடைவாள். அறுபத்தாறும் வயதில் சிரேஷ்டமான துலா (ஐப்பசி) மாதத்தில் ஜாதகனுக்கு மரணமேற்படு மென்று நிச்சயமாகச் சொல்லுவோம். சிறந்த தவங்களைச் செய்யும் தாயே! நாங்கள் மேலும் கூறுவனவற்றைக் கேட்பாயாக.

குறிப்பு:—ஜாதகனுடைய தாய் அவனுடைய சுக்கிர மகாதசையில் சுக்கிர புக்தியில் மரணமடைவாள். ஜாதகன் அங்காரக மகாதசையின் இறுதியில் மரணமடைவான்.

## ஜாதகனுக்கு மாரகதசை ஏற்படும் காலங்கள்

35. இதுமத்தில் ஜாத கர்க்கு எய்தாவோ மார கங்கள்
விதியவன் தசையந் தத்தில் மேவிடுங் கண்ட மொன்று
புதன்தசை மத்தில் கண்டம் பொருந்திடும் நமனைக் [காணுன்
எதுவிதக் கார ணத்தால் இயம்பினீ ரந்தச் சங்கை

35. இதற்கிடையில் ஜாதகனுக்கு மாரக தசை ஏற்படாதோ? அதனை கூறுங்கள். சனி மகாதசை முடிவில் இவனுக்கு ஒரு கண்டம் ஏற்படும். புதமஹாதசை மத்தியத்திலும், ஜாதகனுக்கு கண்டம் ஒன்று நேரும். ஆயினும் மரணமடைய மாட்டான் என்று, இவ்வாறு முனிவர் சொல்ல, பார்வதி தேவி பின்வருமாறு கேட்டனள். என்ன காரணத்தினுல் ஜாதகனுக்கு இடைக் காலத்தில் கண்டங்கள் ஏற்பட்டும் மரணம் நேராது என்று கூறினீர்கள். அவற்றிற்கு விவரம் கூறுங்கள்.

## ஜாதகனுக்கு இடைக்காலத்தில் மாரகம் நேராமைக்குரிய கிரகநிலை

36. பொன்னவன் நாலி லாகப் புகருமே ஜன்மந் தங்க
என்னநோய் வந்த போது மிரவிமுன் பனிபோல்
[நீங்கும்
மன்னனுந் தீர்க்க ஜீவி மறுஜன்மங் காஞ்சி தன்னில்
பொன்பூமி யுடையா னுக்குப் பிறப்பனு மிந்தப் பாலன்.

36. குரு இலக்கினத்திற்கு நான்காம் இடமாகிய தனுசில் இருப்பதாலும், சுக்கிரன் இலக்கினத்தில் தங்கி யிருப்பதனுலும் எவ்விதமான துன்பங்கள் வந்தபோதிலும் அவையெல்லாம் சூரியனுக்கு முன் பனிபோல மறைந்துவிடும். ஜாதகன் தீர்க்காயுள் உள்ளவனுக இருப்பான். மறுபிறவியில் காஞ்சிபுரத்தில் செல்வம் நிலபுலம் முதலியன மிகுதியாக வுடைய ஒரு தனிகனுக்குப் புதல்வனுகப் பிறப்பான் இந்த ஜாதகன்.

## ஜனனகால தசை இருப்பு விவரம்

37. உதித்திடு காலந் தன்னில் உத்திரட் டாதி தன்னில்
முதல்பாதங் காரி தன்னில் மேவிடும் பதினே ழாண்டும்
அதனுடன் திங்க ளெட்டும் அறைந்தனம் பூர்வ பாகம்
சதியிலாத் தவங்கள் செய்யுஞ் சங்கரி கேட்டி டாயே.

37. ஜாதகன் பிறக்கும் காலத்தில் உத்தரட்டாதி நட்சத்திரம் முதல் பாதமாயிருக்கும். அப்பொழுது சனிமகாதசையில் சென்றது போக பதினேழு வருஷங்களும் எட்டு மாதங்களும் நிலுவையாம் என்று கூறினேம். இவ்விதம் முதல்பாக விவரங்களைச் சொன்னேம். நல்ல தவங்களைச் செய்தருளும் பார்வதியம்மையே! மேலுங் கூறுவோம். கேட்பாயாக.

———

# ஜாதகம் 73

## ஜனனகால கிரக நிலை

1. [1]பொன்குசன்[2] மேரு[3]வாகப் புகர்[4]புதன் பானு[5] மானில்[6]
சந்திரன் அரியில்[7] புக்க சனிதுலாம் ராகு மாதை[8]
கன்னியுஞ் ஜனன [9]மாகக் கழறுவீர் பலனை யென்று
அன்னையுங் கேட்கும் போது அத்திரி புகலு கின்றார்.

1. குரு, அங்காரகன் தனுசிலும், சுக்கிரன், புதன், சூரியன் மகரத்திலும், சந்திரன் சிம்மத்திலும், சனி துலாத்திலும், ராகு கன்னியிலும் (கேது மீனத்திலும்) ஆக இவ்விதம் கிரக நிலைகள் இருக்க, கன்யா லக்னத்தில் பிறந்த ஒருவருக்குப் பலன்களைச் சொல்லுமென்று பார்வதி அம்மையார் கேட்கும் போது, ஏழு முனிவர்களில் ஒருவராகிய அத்திரி என்பவர் கூறுகின்றார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| கேது | | | |
| | இராசி சக்கரம் | | |
| சுக்கிரன் புதன் சூரியன் | | | சந்திரன் |
| குரு அங்காரகன் | | சனி | லக்கினம் ராகு |

## ஜாதகன் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. இந்தேச யாணும் ஜன்மம் இல்லமுங்கீழ்ப்பால் நோக்கம்
தென்வட வீதி யாகும் தீர்த்தமும் வடபா லாகும்
முந்தின வூரே யாகு முயர்வான செட்டு மோங்கும்
வந்தவன் மூன்றும் ஜன்மம் வடுகர்தங் குலமே யாகும்

1. குரு.
2. அங்காரகன்
3. தனுசு
4. சுக்கிரன்
5. சூரியன்
6. மகரம்
7. சிம்மம்
8. கன்னி
9. இலக்கினம்,

2. இந்தக் குழந்தை ஆண்மகனாகப் பிறக்கும். அது பிறந்த வீடு கிழக்கு நோக்கிய வாயிலை உடையது. அந்த வீடு தெற்கு வடக்கான தெருவில் உள்ளது. வீட்டுக்கு வட திசையில் நல்ல நீர்நிலை ஒன்று உள்ளது. இப்படிப்பட்ட அது சிறப்புடைய ஊராகும். உயர்ந்த பல தொழில்கள் அங்கு நடைபெறும். ஊரில் வன்னிய மரபில் இந்த ஜாதகன் தன் தந்தைக்கு மூன்றாவது குழந்தை யாகத் தோன்றுவான்.

## இந்நூலில் கூறப்படுவன

3. இன்னவன் ஜனன யோகம் எழில்பெறுந் தந்தை [யோகம்
அன்னையின் துணைவர் யோகம் அவன்மனை புத்திர [யோகம்
முன்பின்ஜன் மங்கள் யாவு முரைக்கிறோ மிந்நூல் தன்னில்
கன்னென மொழியை யொக்கும் காதலி கேட்டி டாயே.

3. இந்த ஜாதகனின் ஜனனகால யோகங்கள், சிறப்புடைய தந்தையின் யோகங்கள், தாயின் வரலாறு, சகோதரனின் விவரங்கள், முன்பின் ஜன்ம விவரங்கள், ஜாதகனின் மனைவி மக்களின் யோகங்கள் ஆகிய அனைத்தையும் பற்றி இந்தச் சோதிட நூலில் நாங்கள் சொல்லுகின்றோம். கரும்பு போன்று இனிய மொழியைப் பேசுகின்ற பார்வதி தேவியே! கேட்பாயாக.

## தந்தையின் செய்திகள்

4. தாதைக்குத் தார மிரண்டில் தரித்திடு மிளையா ளீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் [தந்தை
ஒதுவேன் துணையா ளொன்று உறைந்திடுந் தீர்க்க மாகக்
காதலி தோன்றும் தீதாம் கழறுவோம் பிதாகு ணத்தை

4. ஜாதகன் பாட்டனாருக்கு மனைவியர் இருவர், அவர்களில் இளைய மனைவிக்குப் புதல்வனாகப் பிறந்தவன், ஜாதகனுடைய தந்தையாவான் என்று கூறுவோம். இவனுக்கு (ஜாதகனின் தந்தைக்கு): உடன்பிறந்த ஆண்துணை ஒருவன் ஆவான். அந்தச் சகோதரன் தீர்க்க ஆயுளுடன் இருப்பான். ஒரு சகோதரியும் தோன்றுவாள். ஆனால் அவள் அற்பாயுளில் மடிவாள். இனி, தந்தையின் குணங்களைக் கூறுவோம்.

## இதுவுமது

5. அரசர் பூஜிதமு முள்ளான் யாவர்க்கும் நல்லோ னவன்
தரையதைச் சேர்ப்பா னாகுஞ் சாதமுங் குறைவு றுதான்

நெறிகாப்பன் வறுமை காணுன் நினைத்ததை முடிப்பா
[ஞகும்
பொருளதைச் சேர்ப்பா ஞகும் புயபல முடைய ஞகும்.

5. அரசர்களால் மதிக்கப்படும் மேன்மையும் உடையவனுவான். எல்லோருக்கும் நல்லவனுக இருப்பான். நிலபுலன்களேச் சேர்ப்பானுவான். போஜனசௌக்கியம் எப்போதும் குறையாதவன். தன்குலத்துப் பெரியோர்கள் வகுத்த வழியிலிருந்து தவருது, அதனைப் பாதுகாத்து வருவான். தரித்திரத்தை எப்போதும் அறியாதவன். நினைத்தவற்றைச் செய்துமுடிக்கும் சக்தி உடையவன். செல்வத்தைச் சேர்ப்பான். புஜபலமுடையவனுவான்.

6. மன்னரால் ஜீவ னங்கள் மருவிடு மென்று சொல்வோம்
கன்னியர் மோக ஞவன் கனமாகப் புகழு மேற்பன்
உன்னத வில்லஞ் செய்வன் உயர்வான புத்தி யேற்பன்
அன்னியர் குற்றஞ் சொல்லான் அடாவடி கூரு ஞகும்

6. இவனுக்கு அரசாங்க உத்தியோகம் செய்து ஜீவனம் செய்யும் நிலையுண்டாகும் என்று கூறுவோம். பெண்கள்பால் மையல் கொண்டவன் ஆவான். அதிகமான கீர்த்தியை ஏற்பான். உயர்ந்த வீடு ஒன்று கட்டுவான். உயர்ந்த புத்தியை அடைவான். பிறர்மீது குற்றங்கூறமாட்டான். பொருந்தாத சொற்களேக் கூறி நினைத்தவைகளேச் சாதிக்க முற்படமாட்டான்.

## ஜாதகனது இயல்புகள்

7. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான்
[மானி றத்தன்
பன்னியே பேசு வானும் பாவையால் பெருமை யேற்பன்
தன்னுடல் வாத தேகி சாயல்நேத் திரமுங் கொஞ்சம்

7. மேற் கூறப்பெற்ற இயல்புகளேக் கொண்ட தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனுகப் பிறப்பான். இனி, ஜாதகன் குணங்களேக் கூறுவேன். நல்ல அழகு பெற்றவன். கரிய நிறமுள்ளவன். திரும்பத்திரும்ப விடாது பேசிக்கொண்டே யிருப்பான், மனேவியால் பெருமை பெறுவான். வாத தேகமுடையவன். சிறிது சாய்ந்த பார்வையுள்ளவன்.

## இதுவுமது

8. இருவிதக் கல்வி கற்பன் யாரையு முறவு கொள்வன்
அரசரால் தொழிலுஞ் சின்னுள் அணுகியே வாழ்வா
[ஞகும்

குறைவுள மனத்த னாகும் குஞ்சர மொத்த தேகன்
பொறுமையும் பெருமை யேற்பன் பிதுர்பாக்ய
[மடையா னாகும்.

8. இரண்டுவிதமான கல்விகளைக் கற்பான். எல்லோரையும் தனக்கு நண்பர்களாகக் கொள்ளுவான். அரசர்களை அடுத்துத் தொழில்செய்து சிலகாலம் ஜீவனம் செய்வான். மனத்தில் குறையுள்ளவன் ஆவான். யானையை யொத்த கரிய நிறமும் பருத்ததுமான உடலுள்ளவன். பொறுமை யுள்ளவன். மேன்மையை அடைபவன் ஆவான். தந்தையின் பாக்கியங் களை (சொத்துக்களை) அடையாதவன் ஆவான்.

## இதுவுமது

9. தந்தையி னாஸ்தி தன்னைத் தானவ னாஸ்தி செய்து
பந்தணி மனைவி யில்லம் பரப்பனும் மத்தி லேதான்
அந்தியம் மரண மட்டு மணுகியே வாழ்வா னாகும்
நந்தியா விருத்தி யற்பம் நாட்டக விலையும் காணான்

9. தன் தகப்பனார் தேடிவைத்த ஆஸ்திகளை இவன் அழித்துவிட்டு, இடைக்காலத்தில் அழகிய தன் மனைவியின் பிறந்த வீட்டுக்கு, ஓடிவிடு வான் என்று சொல்லுவோம். கடைசிக்காலத்தில் மரணமடையும் வரை மனைவியுடன் அவள் பிறந்த வீட்டாரை அண்டியே வாழ்ந்திருப்பான். எருது பசு முதலிய கால்நடைகளின் விருத்தி குறைவு. நாட்டில் நடை பெறும் வியாபாரங்களில் (தனக்குத் தேவையான) ஒரு பொருள் இன்ன விலை விற்கின்றது என்று உணராதவன். (அதாவது, எதிலும் பொறுப்பில் லாமல் வாழ்வான்.)

## கத்திரியோகமும் காகுத்த ரேகையும்

10. கத்திரி யோக மாகும் காகுத்தன் ரேகை யுண்டு
முத்தின கோப மேற்பன் மூலச்சூ டுடைய னாகும்
சுத்தமு மில்லா னாகும் சோம்பலுங் கொஞ்ச முண்டு
பத்தினி தன்னா லுய்வன் பரவிடும் வாயு கொஞ்சம்.

10. கத்திரியோகம் இவனுக்கு உண்டு. கையில் காகுத்த ரேகையும் உண்டு. முன்கோபமடைவான். மூலச்சூட்டு நோயுள்ளவன் ஆவான். தூய்மையில்லாதவன். சிறிது சோம்பலுமுடையவன். மனைவியின் உதவி யால் வாழ்ந்திருப்பவன். இவன் உடலில் சிறிது வாயு சேரும்.

## ஜாதகனின் சகோதரரது செய்தி

11. தன்துணை யாண்பா லிரண்டு சாற்றுவோம் தீர்க்க மாக
அன்னவர் தந்தை யில்லம் அணுகியே வாழ்வா ராகும்

பின்பாகம் மவர்கள் சேதி பேசுவோந் தாயே யாங்கள்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே

11. இவன் கூடப்பிறந்த சகோதரர் இருவர் தீர்க்கமாக வாழ்வார்கள் என்று சொல்லுவோம். அவர்கள் தங்கள் தந்தையின் வீட்டிலேயே சேர்ந்து வசிப்பார்கள். அவர்களைப்பற்றிய விவரங்களைப் பின்பாகத்தில் நாங்கள் கூறுவோம், உயர்ந்தவராகிய விநாயகக் கடவுளைப் பெற்ற தாயே! மேலும் கேட்பாயாக.

## ஜாதகனுடைய திருமணக்காலமும் மனைவியின் குணங்களும்

12. மங்கள மிருபான் மூன்றுள் மருவிடுங் கீழ்பால் பாரி
அங்களள் குணத்தைச் சொல்வேன் அரிநிற முணச்சல் [தேகி
சங்கையா மனத்த ளாகும் சர்ப்பம்போல் கோபம் [கொஞ்சம்
தங்கம்பொன் பணிகள் சேர்ப்பள் சாதமுங் குறைவு [ருதாள்.

12. இவனுக்கு இருபத்து மூன்றும் வயதுக்குள், தன் ஊருக்குக் கிழக்குப் பக்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள். அவள் குணங்களைக் கூறுவேன். திருமால் போன்று கருநிறம் பொருந்தியவள். ஒல்லியான சரீரமுடையவள். சந்தேகமுள்ள மனத்தினள். சாப்பம் போன்று சீறிவரும் முன்கோபமுடையவள். தங்கம் பொன் முதலியவற்றுலான ஆபரணங்களைச் சேர்ப்பாள். போஜன சௌக்கியம் குறைவு படாதவள்.

## புத்திரதோஷ மேற்படக் கிரக நிலை

13. அன்னையி னுஸ்தி தன்னில் அணுகியே வாழ்வா ளாகும்
தன்சுதர் காணு ளாகும் சாற்றுவீ ரதச் சங்கை
துன்மையாய்ப் புகரு மஞ்சில் சூரியன் கூடி நிற்க
கன்னிக்குச் சுதர்கள் தோஷம் காதலி கேட்டி டாயே

13. தன் தாயின் ஆஸ்திகளைப் பெற்று வாழ்பவளாவாள். தனக்கு மக்கட் செல்வம் அறியாதவள் ஆவாள். இங்ஙனம் முனிவர் சொல்ல, பார்வதிதேவி கேட்கின்றுள். புத்திர தோஷம் ஏற்படக் காரணங்கள் கூறுங்கள்; சுக்கிரன் இலக்கினத்துக்கு ஐந்தாமிடமாகிய மகரத்திலும் சூரியன் அவனுடன் சேர்ந்தும் இருப்பதால், இவர்களுக்குப் புத்திரதோஷம் ஏற்படும். தேவியே! கேட்பாயாக.

## ஜாதகன் மனைவி முற்பிறவி விவரம்

14. மாதுவின் பூர்வந் தன்னில் மருவிற்று சிலது தோஷம்
ஓதுவீ ரந்தச் சங்கை உத்தமி பூர்வம் கேளாய்
தீதுகள் விலக்கு கின்ற திருவிடை மருதூர் தன்னில்
காதலி கங்கை சேயாய் கலந்துமே வாழு நாளில்;

14. இந்த ஜாதகனின் மனைவியுடைய முற்பிறவியில் சில தோஷங்கள் நேர்ந்தன; இவ்வாறு முனிவர் சொன்னபோது பார்வதிதேவி பின்வருமாறு கேட்டாள். "இவளது முற்பிறவியில் ஏற்பட்ட தோஷங்கள் யாவை? அவற்றை விபரமாகச் சொல்லுங்கள்." உத்தமியே! இந்த ஜாதகனின் மனைவியின் முற்பிறவி வரலாற்றைக் கேட்பாயாக. தரிசித்தவர்களின் தீமைகளைப் போக்குகின்ற திருவிடைமருதூர் என்னும் தலத்தில் வேளாள மரபில் பிறந்து வாழுகின்ற காலத்தில்;

## மனைவி செய்த தவறுகள்

15. கன்றுக்குப் பால் விடாமல் கறந்தனள் அதுஓர் தோஷம்
முன்னோர்கள் மதலைக் காக மொழிந்தனர் ஆவின் பாலை
துன்மையாய் வார்த்தை சொல்லித் துரத்தினாள் [மறையோர் தன்னை
அன்னவர் மனவெ றுப்பால் அறைந்த சாபத்தைக் [கேண்மோ.

15. பசுவின் கன்றுக்குச் சிறிதும் பால்விடாமல் கறந்துவிட்டாள். அது ஒரு தோஷமாயிற்று. சில அந்தணர்கள் தங்கள் குழந்தைகளுக்கு பசும் பால் வேண்டும் என இவளைக் கேட்டனர். இவள் அவர்களுக்கு பால் தராததுடன், தகாத சொற்களைக் கூறி, திட்டி, அந்த அந்தணர்களைத் துரத்தினாள். அவர்கள் இவளுடைய செயலினால் மனவெறுப்படைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

## மறையோர் சாபம்

16. பாலர்பா லீயாப் பாவி பருகாது சுதரு னக்குச்
சாலவே பின்ஜன் மத்தில் சந்ததி யில்லா தாயும்
ஞாலமேல் துணையு மின்றி நாட்டினில் வாழ்வா யென்ன
ஆலம்போ லந்தச் சாபம் அணுகிய தென்று [சொல்வோம்.

16. "குழந்தைகளுக்குப் பால் கொடுக்காத பாவியே! உனக்குக் குழந்தைகள் தோன்றா. மறு பிறவியில் குழந்தைகள் இல்லாமலும், உடன் பிறந்தவர்கள் இல்லாமலும் உலகில் வாழ்ந்திருப்பாய்" கொடியவிஷம்போல அந்தச் சாபம் இவளை வந்தடைந்தது என்று கூறுவோம்.

## சாப பலன்

17. பாவைக்கு வச்செசன் மத்தில் பாலர்கள் தோஷ மாயும்
தாவினுள் கால நாடு தலை நான்கோன் வரையப் பட்டு
மேவின ளிவளே யென்றோம் விளங்காரே துணைவர்
[தாமும்
ஏவாது சுதர்க ளென்றோம் ஈச்வரி கேட்டி டாயே.

17. அந்தச் சாபத்தின்படியே, ஜாதகன் மனைவிக்குப் பூர்வ ஜன்மத்தில் புத்திரதோஷம் ஏற்பட்டது பின்பு சிலகாலம் சென்று மரணமடைந்தாள். நான்கு தலைகளையுடைய பிரமதேவனால் படைக்கப்பட்டு, இப்பிறவியில் பிறந்தனள் என்று சொல்லுவோம். இவளுக்கு உடன்பிறந்தவர்கள் இரார். இப்பிறவியில் மக்கட் செல்வமும் உண்டாகாது என்று சொன்னோம். பார்வதியே! கேட்பாயாக.

## ஜாதகனின் முற்பிறவி விவரம்

18. பாலகன் பூர்வந் தன்னைப் பகருவோங் காஞ்சி தன்னில்
சீலமில் லாத கங்கை குலமதி லுதித்து இன்னோன்
ஞாலங்கள் விருத்தி செய்து நாயகி மதலை யுண்டாய்
சாலவே வாழு நாளில் தங்கின வினையைக் கேண்மோ.

18. இனி, இந்த ஜாதகனின் முற்பிறவி வரலாற்றைச் சொல்லுவோம். காஞ்சீபுரத்தில் ஒழுக்க மற்ற ஓர் வேளாளர் குடியில் பிறந்து, நிலபுலங்களை விருத்தி செய்து மனைவி மக்களை யடைந்து நன்கு வாழ்ந்திருக்கும் காலத்தில் இவனைச் சேர்ந்த தீவினையைப் பற்றிச் சொல்லுகிறோம், கேளுங்கள்.

## ஜாதகன் செய்த தீவினை

19. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய வரசின் கீழ்
தந்தியும் நாகம் நிற்கும் தானவர் வாச மாகும்
மந்திர மோதும் வேத மறையவர் பூசை பூண்பர்
இந்தவா றிடத்தி லேதான் இரவினி லேது செய்தான்;

19. அந்த நகரின் ஓரமாக ஓடும் ஆற்றங்கரையில் ஒரு அரசமரமும், அதன் கீழே விநாயகப் பெருமான் திருவுருவமும் நாகச்சிலை ஒன்றும் இருக்கும். அவர்கட்கு மந்திரங்களை ஓதுகின்ற வேதங்களை உணர்ந்த அந்தணர்கள். விநாயகப் பெருமானுக்கும் நாகத்துக்கும் அபிஷேகம் பூஜை முதலியன செய்வார்கள். இப்படிப்பட்ட தூய்மையான இடத்தில் ஒரு நாள் இரவில் இந்த ஜாதகன் என்ன செய்தான் என்றால்;

## இதுவுமது

20. விதவையைப் பேர்கம் துய்க்க மேவிற்றுக் கருவு தானும்
அதம் செய்தான் பண்டி தத்தால் அவ்விதம் மூன்று
[செய்தான்
இதுஒரு தோஷ மாச்சு இயம்புவோம் வேறு ஒன்று
நிதியதைத் தாழ்வோர்க் கீந்து சொத்துக்கள் யாவும்
[கொண்டான்.

20. கைம்பெண் ஒருத்தியுடன் இன்பம் அனுபவித்தான், அதனால் அவளுக்குக் கர்ப்பம் ஏற்பட்டது. அந்தக் கருவை வைத்தியங்கள் பல செய்து சிதைத்து விட்டான். இவ்விதம் மூன்று முறை அவளுக்கு கருச் சிதைவு ஏற்படச் செய்தான். இது ஒரு தோஷமாயிற்று. வேறு ஒரு தோஷமும் சொல்வோம். சிறிது பொருளை ஏழைகளுக்குக் கொடுத்து, அவர்களது நிலம் வீடு எல்லாவற்றையும் பறித்துக் கொண்டான்.

## ஏழையோர் சாபம்

21. ஏழையோர் வருத்த முற்று இயம்பின் சாபம் கேண்மோ
தாழ்வான பொருளை யீந்து தரணியைப் பறித்த பாவி
ஆழியில் பின்ஜன் மத்தில் அணுகாது தந்தை யாஸ்தி
தோழியி னில்லம் வாசம் சுதர்களு மில்லா னுகி ;

21. நிலபுலம் வீடு முதலியவற்றை இழந்த ஏழைகள் மனம் வருந்திக் கூறிய சாபச் சொற்களைக் கேளுங்கள். குறைந்த பொருளைக் கொடுத்து எங்களுடைய வீடு, நிலம் இவற்றை அபகரித்துக் கொண்ட பாவியே! இவ் வுலகில் உனக்கு ஏற்படும் மறுபிறவியில் தகப்பனுர் ஆஸ்தி நிலைக்காமல் போகும். மனைவியின் வீட்டில் வசிக்கும் நிலையுண்டாகும். புத்திரர்கள் இல்லாதவனாய் வாழ்ந்து;

22. இன்னமும் பலவாறு சொன்னூர் எய்திற்று வந்தச்
[சாபம்
மன்னனு மந்தி யத்தில் வறுமைகள் மிகவு முண்டாய்த்
தென்திசைக் கால நாடு சென்றுமே பிரமன் லக்கம்
அன்னவ னுதிப்பா னுகும் அணுகிடு முன்னூழ்ச் சாபம்.

22. இன்னும் பலவிதமாக ஏழைகள் கூறினர். அவர்கள் வாக்குப் படி இவனை அந்தத் தோஷம் பற்றியது. ஜாதகன் முற்பிறவியின் கடைசி காலத்தில் மிகுந்த தரித்திர நிலையை யடைந்து, மரணமுற்று மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு இப்பிறப்பில் பிறப்பான். முன் ஜன்ம வினை இப்பிறப்பில் இவனைச் சேரும்.

## முற்பிறவித் தீவினையின் பலன்கள்

23. தந்தையி னுஸ்தி யில்லான் சாருவான் வேட்ட கத்தில்
மைந்தரு மில்லா னாகி வாழ்வனு மிந்தப் பாலன்
முந்தின வினைகள் தீர மொழிகுவீர் கிரியை யொன்று
இந்தவன் செய்வி னைக்கு இயம்பவே மாட்டோஞ் சாந்தி.

23. அதனால், தந்தையினால் தேடி வைக்கப்பட்ட ஆஸ்தியில்லாதவனுவான். மனைவியின் பிறந்த வீட்டைச் சேருவான். புத்திரப் பேறு இல்லாமல் இந்த ஜாதகன் வாழ்வான். இவனுக்கு முன் ஜன்மத்தில் ஏற்பட்ட தோஷங்கள் தீருவதற்குச் சாந்தி முறை பற்றிக் கூறுங்கள் என்று பார்வதியம்மை கேட்டனள். அதற்கு முனிவர், இந்த ஜாதகன் முற்பிறப்பில் செய்த தீவினைகட்குப் பரிகாரமே யாங்கள் சொல்ல மாட்டோம் என்று கூறினர்.

## ஜாதகன் மனைவி இயற்றிய தீவினைக்குச் சாந்தி

24. மங்கைசெய் வினைக ளுக்கு வரைகிறோங் கிரியை [யொன்று
சங்கரி கரும சாந்தி சத்திமுன் பாகச் செய்து
தங்கரேக் கினில்மூ லங்கள் சடாக்ஷர மமைத்து மேதான்
நங்கையு மணிந்து கொண்டு நற்குரு வார நோன்பு.

24. ஆனாலும், இந்த ஜாதகன் மனைவி முற்பிறவியில் செய்த தீவினைகள் தீரச் சாந்தி யொன்று கூறுகிறோம். சக்தியின் சந்நிதி முன்பு முறைப்படி கர்ம சாந்திகள் செய்து, தங்கத்தகடு ஒன்றினில் மூலமந்திரத்தையும் ஷடாக்ஷரங்களையும் அமைத்து அந்தத் தகட்டினைப் பூஜையில் வைத்து, பின்பு எடுத்து இவள் அணிந்து கொண்டு, வியாழக்கிழமை தோறும் நோன்பு;

## புத்திரர் தோன்றுங் காலம்

25. ஆண்டுமே கொள்வா ளாகில் அணுகிடுஞ் சுதரா [ஞென்று
தாண்டுங்கா லங்கள் சொல்வீர் சேய்தசை யந்தஞ் [செய்யில்
வேண்டிய சாந்தி ஐயமே விஷம்தசை சுயபு குத்தி
பாண்டியன் மகளே புத்திர னபிவிருத்தி யென்று [சொல்வோம்.

25. ஒரு வருஷ முடிவு வரை இயற்றுவாளானால், ஆண் குழந்தை யொன்று தோன்றும். இந்தத் தோஷம் நீங்கும் காலம் சொல்வீர் என்று பார்வதிதேவியார் முனிவரைக் கேட்டனள். முனிவர் கூறுவார். அங்காரக

மஹா தசை முடிவில் மேற்கூறிய வண்ணம் சாந்தி செய்தால் பயன் ஏற்படும். பாண்டியராசன் புதல்வியாகிய பார்வதியம்மையே! ராகு தசை ராகு புக்தி நடைபெறும் பொழுது ஜாதகனுக்குப் புத்திர விருத்தி ஏற்படும் என்று கூறுவோம்.

## மனைவியின் மறுபிறவி

26. கன்னிகை யதன்பின் ஒன்று கலந்திடு மென்று [சொல்வோம்
துன்மையாய்ச் செய்யா ளாகில் சுதர்தோன்ரு ரென்று [சொல்வோம்
அன்னவள் பின்ஜன் மத்தை யறிவிப்போம் குடகு [தன்னில்.
மன்னர்தங் குலமு திப்பாள் மங்கையே கேட்டி டாயே.

26. ஆண் குழந்தைக்குப் பிறகு பெண் குழந்தை யொன்றும் தோன்றும் என்று சொல்லுவோம். கூறிய சாந்தி செய்யாமல் இருப்பாளாகில் மக்கள் தோன்ரூர் என்று கூறுவோம். இனி, ஜாதகன் மனைவியின் மறு பிறவி பற்றி உணர்த்துவோம். குடகில் அரசர் குலத்தில் தோன்றுவாள். பார்வதியே! கேட்பாயாக.

## ஜாதகனின் யோகங்கள்

27. வந்தவன் யோகச் சேதி யறைகிரே மினிமே லாக்ச்
சந்திரன் தசைமுற் பாகம் சாமரை யோக மெய்தும்
பிந்திநாள் முதலே யாகப் போகிடுந் தந்தை யாஸ்தி
பந்தணி மாது வில்லம் படருவா னென்று சொல்வோம்.

27. ஜாதகன் யோக விவரங்களை இனிமேல் கூறுகிரேம். சந்திர மஹா தசை முற்பகுதியில் சாமரை யோகம் உண்டாகும். சந்திர மஹா தசையின் பிற்பகுதியில் தந்தையின் ஆஸ்தியை இழப்பான். தன் சொந்த வீட்டை விட்டு மனைவியின் இல்லத்தைச் சேர்ந்து வசிப்பான் என்று கூறுவோம்.

## கத்திரியோகம்

28. கத்திரி யோக மென்ரேம் காசுகள் காணு ஞகும்
குத்தமாய்ச் சிலர்கள் சொல்வார் குலவிடுஞ் சமயோ [கங்கள்
சத்தியந் தவற லாகும் சேய் தசை யவ்வா ருகும்
சித்தமே கலக்க மெய்துஞ் செல்வதி கேட்டி டாயே.

28. கத்திரியோகம் ஏற்படும். பணத்தைக் காண மாட்டாள். சிலர் இவனைப் பற்றிக் குற்றமான சொற்களைச் சொல்லுவார்கள், சமமான யோகங்கள் உண்டாம். (இன்ப துன்பங்கள் மாறி மாறி வரும்) சொன்ன சொல் தவறும் நிலை ஏற்படும். அங்காரக மஹா தசையில் அவ்வாருன நிலைமை யுண்டாகும். மனத்தில் குழப்ப மடைவான். உமாதேவியே கேட்பாயாக.

## இதுவுமது

29. அரவுதன் தசையி லேதான் அற்புத யோகம் வாய்க்கும்
கருமபுத் திரனுந் தோன்றுங் கழறின சாந்தி யாலே
திருமகள் விலாச மெய்துந் தீரமா மனமு மெய்தும்
பெருகிடுஞ்செல்வ மென்றேம் புகழது மேற்பா னுகும்.

29. இராகு மஹா தசை நடைபெறும் பொழுது அற்புதமான பல யோகங்கள் ஜாதகனுக்கு ஏற்படும். கர்மஞ் செய்தற்குரிய புத்திரனும் மேற் கூறியபடி சாந்தி செய்யும் பலத்திஞல் அந்தக் காலத்தில் தோன்றுவான். இலட்சுமி கடாட்சம் உண்டாகும். தைரியமான மனத்தையும் அடைவான். செல்வப் பெருக்கம் ஏற்படும் என்று கூறினேம். கீர்த்தியையும் அக்காலத்தில் பெறுபவன் ஆவான்.

## தாயின் குணங்கள்

30. இன்னமும் விசேஷ மாக இயம்புவோ முத்தர பாகம்
அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள் [பொறுமை சாலி
தன்மனங் கபடு மில்லாள் தரணியில் வறுமை காணுள்
பொன்பணி யதிக மேற்பள் புருடனுக் கிவளால் யோகம்.

30. மேலும் விசேஷமான பலன்களை இந்த ஜாதகனுக்கு, இரண்டாம் பாகத்தில் நாங்கள் சொல்லுவோம், இனி, ஜாதகன் தாயின் இயல்புகளைக் கூறுவேன். மிக்க அழகுள்ளவள். பொறுமைசாலி. தன் மனத்தில் வஞ்சனைக் குணம் இல்லாதவள். உலகில் தரித்திரத்தை அறிய மாட்டாள். பொன்னுபரணங்களை மிகுதியாக அடைவாள். கணவனுக்கு (ஜாதகன் தந்தைக்கு) இவளால் யோகம் உண்டாகும்.

## தாயின் முற்பிறவி வரலாறு

31. இல்லமுங் கீழ்பா லாகும் இவள் துணை யாண்பா லிரண்டு
வல்லியு மவ்வா ருகு மறைகிறேம் பின்பால் சேதி
தல்லியின் பூர்வஞ் சொல்வேன் சடகோபன் வாழு [மூரில்
புல்கினுள் வைசியச் சேயாய்ப் புகழான குடும்பி யாகி;

31. இவள் பிறந்த வீடு, ஜாதகன் வீட்டுக் கிழக்குத் திசையில் உள்ள தாகும். இவளுடன் பிறந்தவர்கள் ஆண்கள் இருவரும் பெண்கள் இருவருமாவர். அவர்கள் செய்திகளைப் பிற்பாகத்தில் சொல்லுகிறோம். இனி, தாயின் முற்பிறவி வரலாறு கூறுவேன். சடகோபர் அவதரித்த தலமாகிய திருக்குருகூரில் வைசியர் குலத்தில் பிறந்து, கீர்த்தி நிறைந்த குடும்பமுடையவளாகி;

## இதுவுமது

32. வினையது மில்லா ளாகி மேவினாள் கால நாடு
கனமுள பிரமன் லக்கம் கலந்தன ளிக்கு லத்தில்
வனிதையின் ஜன்மஞ் சொல்வேன் மருதூரில்
[வேளாண் வமிசம்
சினமிலா துதிப்பா ளாகும் செல்வதி கேட்டி டாயே.

32. தீவினை யெதுவும் பற்றுமல் வாழ்ந்து மரண மடைந்தாள். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இப்பிறவியில் இக்குலத்தவளாகப் பிறந்தனள். இவள் மறுபிறப்பைக் கூறுவேன். மருதூரில் வேளாளர் மரபில் பிறப்பாள். பார்வதியம்மையே! கேட்பாயாக.

## தந்தையின் முற்பிறவி

33. தந்தையின் பூர்வஞ் சொல்வேன் தாமிர பரணி
[தன்னில்
இந்ததோர் குலமு தித்து எழிலான குடும்பி யாகி
வந்தவர்க் கன்ன மீந்து மறலியின் நாடு சேர்ந்து
முந்திநோன் வரையப் பட்டு வுதித்தன னென்று
[சொல்வோம்.

33. தந்தையின் (ஜாதகன் தந்தை) முற்பிறவி பற்றி இனிச் சொல்லுவேன். தாமிரபரணியாற்றங் கரையில் உள்ள ஊரில் இக்குலத்திலேயே தோன்றியவன். சிறப்புடைய குடும்பமுடையவனாய், பசியென்று கூறி வீடு தேடிவந்தவர்களுக்கு உணவு அளித்து வாழ்வான். பின்பு மரணமடைந்து பிரதேவனால் படைக்கப்பட்டு இப்பிறப்பில் ஜாதகன் தந்தையாகப் பிறந்தான் என்று கூறுவோம்.

## தாய்தந்தையரின் மரணமும் தந்தையின் மறுபிறவியும்

34. மதிதசை யந்தி யத்தில் மா துரு தந்தை கண்டம்
அதிபுதி முன்னே மாள்வ ளறைகிறோம் பிதாபின்
[ஜன்மம்

அதிதியாய் விரிஞ்சி தன்னில் அருளுவான் சத்திரியச்
[சேயாய்
நதிசடை யணிந்தோன் தேவி நவின்றது தப்பா தாகும்.

34. சந்திர மகா தசையின் முடிவில் ஜாதகன் தாய்தந்தையர்க்குக் கருமங்கள் ஏற்படும். தகப்பனுருக்கு முன்பாகவே தாயார் மரண மடைவாள். இனி தந்தையின் மறுபிறவி பற்றிச் சொல்லுவோம். விரிஞ்சி புரத்தில் அரசர் குலத்தவனுகப் பிறப்பான். கங்கை நதியைத் தலையிலே அணிந்த சிவபெருமான் தேவியே! நாங்கள் சொல்லியவை தவரு?

## ஜாதகனுடைய மரணகாலமும் மறுபிறவியும்

35. குருதசை பூர்வ பாகம் குழவியி னுடல மேகும்
அறுபது நாலு வாண்டில் ஆவணி மாதம் தன்னில்
மறுஜன்மம் வாரி யோரம் மாபலி நகரி லேதான்
உறைகுவான் சைவச் சேயாய் உத்தமி கேட்டி டாயே.

35. குரு மகா தசையில் முதல் பகுதி நடைபெறும் பொழுது ஜாதகன் மரண மடைவான். மறுபிறவியில் கடலோரம் உள்ள மஹாபலி புரத்தில் சைவ குலத்தில் தோன்றுவான். உத்தமியே! மேலும் கேட்பாயாக.

## கிரகநிலைகட்குப் பலன்

36. புதன்புகர் கூடி அஞ்சில் புக்கின பலனெவ் வாறு
நதிபல தலங்கள் செல்வன் நாற்பது நாலாண் டின்மேல்
நிதிசேரல் மனமே தீரம் நினைத்தகா ரியங்க ளோங்கல்
கதிதரும் சேது செல்லல் கனத்ததோர் புகழு மெய்தும்.

36. புதனும் சுக்கிரனும் சேர்ந்து ஐந்தாமிடமாகிய மகரத்தில் தங்கிருப்பதற்கு என்ன பலன்கள் என்று கூறும் முனிவரே! எனப் பார்வதிதேவி கேட்டனள். அதற்கு முனிவர் கூறுவார். பல புண்ணிய நதிகளில் நீராடுவான். பல க்ஷேத்திரருக்கு யாத்திரையாகச் செல்லுவான். ஜாதகனின் நாற்பத்து நான்காம் வயதுக்கு மேல் செல்வம் சேரும். மனத்தில் தைரியம் உண்டாகும். நினைத்த காரியங்கள் முடிவதற்கான வாய்ப்புக்கள் பெருகும். நற்கதியளிக்கும் சேதுவுக்குச் செல்லுவான். பெரிய கீர்த்தியும் இவனைத் தேடி யடையும்.

## இராகுதசைப் பலன்

37. பணிதசை தேக பாதை பரப்பின் நீங்கு மென்ரேும்
துணிவுள மனமே யாகும் செய்நிலம் பலித மேன்மை

வனிதையு மிவன்பின் கண்டம் மால்மனை வாசு மெய்தும்
அனையவே தவங்கள் செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

37. இராகு தசையில் ஜாதகனுக்கு உடல் நலிவு ஏற்பட்டுப் பிறகு விலகும் என்று சொல்லுவோம். துணிச்சலான மனமுள்ளவனுவான். நிலபுலங்களில் விளைச்சல் மேம்படும். இந்த ஜாதகன் மரண மடைந்த பிறகு மனைவி இறப்பாள்; .இலட்சுமிதேவி இவன் வீட்டில் வசிப்பாள். (செல்வம் சேரும்). மிகுந்த தவங்களை இயற்றும் பார்வதியம்மையே! கேட்பாயாக.

## ஜனனகால தசை

38. மாரனும் ஜனிக்குங் காலே மகமது கடைப்பா தத்தில்
தீரமாய்க் கேது தன்னில் திங்களு மாற தாகும்
கூறினோம் பாகம் [1]குருடன்தன் தசைவி சேஷம்
பாரில்லம் பூர்வஞ் சொன்னோம் பார்வதி கேட்டி டாயே.

38. ஜாதகன் ஜனனமாகும் பொழுது, மக நட்சத்திரம் கடைப்பாதம் அப்பொழுது கேது மஹா தசையில் ஆறு மாதங்கள் நிலுவையாம். இவ்வாறு முதற்பாகம் சொன்னோம். சுக்கிர மஹா தசையில் வீடும் நிலபுலங்களும் சேரும் என்று சொன்னோம். பார்வதியம்மையே! கேட்பாயாக.

———

1. சுக்கிரன்

# ஜாதகம் 74

## ஜனனகால கிரகநிலை

1. கன்னியும் [1]ஜனன மாகக் [2]கலை[3]புகர் [4]காரி யிரண்டில்
[5]பொன்னனும் [6]லாப மாகப் [7]புயங்கனு [8]மாறி லர்க்
[9]புந்தி[10]சேய் [11]பானு [12]மூன்றில் புகலுவீர் பலனை
[யென்று
அந்தரி கேட்கும் போது அத்திரி முனிவர் சொல்வார்.

1. இலக்கினம் கன்னியாகவும், சந்திரன், சுக்கிரன், சனி, இலக்கினத்துக்கு இரண்டாமிடமாகிய துலாத்திலும், குரு லாபஸ்தானமாகிய பதினோராமிடத்திலும் கடகத்திலும், இராகு ஆறுமிடமாகிய கும்பத்திலும் புதன், அங்காரகன், சூரியன் இலக்கினத்துக்கு மூன்றுமிடமாகிய விருச்சிகத்திலும், (கேது பன்னிரண்டாமிடமாகிய சிம்மத்திலும்) ஆக இவ்விதம் கிரகநிலைகள் இருக்கும் நிலையில் தோன்றிய ஜாதகருக்குப் பலன்களைச் சொல்லுங்கள் என்று பார்வதிதேவியார் கேட்கும் பொழுது, ஏழு முனிவர்களில் ஒருவராகிய அத்திரி முனிவர் கூறத் தொடங்குவார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | இராசி சக்கரம் | | குரு |
| | | | கேது |
| | புதன் அங்காரகன் சூரியன் | சந்திரன் சுக்கிரன் சனி | லக்கினம் |

---

1. இலக்கினம்
2. சந்திரன்
3. சுக்கிரன்
4. சனி
5. குரு
6. இலக்கினத்துக்குப் பதினோராமிடம் கடகம்
7. இராகு
8. ஆறுமிடம் கும்பம்
9. புதன்
10. அங்காரகன்
11. சூரியன்
12. மூன்றுமிடம்-விருச்சிகம்
13. இரண்டாமிடம்-துலாம்

## ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளம்

2. பிறந்திடு மாண்பால் சென்மம் பேசுவோ மில்லம்
[தானும்
புரந்தரன் வாச லாகும் பூதவா கனத்தாள் கீழ்பால்
அரன்கோஷ்ட முத்தர மாகும் ஆதிமால் தென்மே லாகும்
குறைதலை மாரி மேற்கு கூறுவோம் சிறுவூ ராகும்.

2. இந்தக் கிரக நிலைகளுடன் கூடியது ஆண் மகன் ஜாதகம். இந்த ஜாதகன் பிறந்த வீட்டைப் பற்றிச் சொல்லுவோம். அதுதெற்கு வடக்கான தெருவில் கிழக்கு நோக்கிய வாயிலை யுடையதாகும். பூதவாகன முடைய காளிதேவி ஜாதகன் பிறந்த வீட்டுக்குக் கிழக்குப் பக்கததில் கோயில் கொண்டிருப்பாள். சிவபெருமான் கோயில் வடக்குத் திசையிலுள்ளது. பழமையான திருமால் ஆலயம் தென்மேற்குத் திசையில் இருக்கின்றது. தலைமட்டுமுள்ள மாரியம்மன் கோயில் வீட்டுக்கு மேற்கிலுள்ளது. சிறிய ஊர் என்று சொல்லுவோம்.

## இந்நூலில் கூறப்படுவன

3. இத்தகை யடையா ளத்துள் இப்பாலன் மூன்ருஞ்
[ஜன்மம்
சுத்தமாங் கங்கை சேயாய்த் தோன்றுவா னென்று
[சொல்வோம்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திரர் யோகம்
வித்தகன் முன்பின் ஜன்மம் விளம்புவோ மிந்நூல்
[தன்னில்.

3. மேற் சொல்லப்பட்ட அடையாளங்கள் கொண்ட இடத்தில் தன் தந்தைக்கு மூன்றும் பிறப்பாக இந்த ஜாதகன் தூய்மையான வேளாளர் மரபில் பிறப்பான் என்று கூறுவோம். இவனுடைய தாய் தந்தையர், மனைவி மக்கள் ஆகியோர் யோகங்கள், முற்பிறவி மறுபிறவி வரலாறுகள் முதலான எல்லாவற்றையும் பற்றி விவரமாக இந்தச் சோதிட நூலில் சொல்லுவோம்.

## தந்தையின் உடன் பிறந்தோர் செய்தி

4. தந்தையின் துணையா ளொன்று சத்தியு மவ்வாறு தீர்க்கம்
முந்தியே யொருத்தி மாள்வள் மேதினி லொருத்தி
[செல்வள்
நிந்தைகள் பெருவா ளென்ருேம் நுகர்ந்ததோ ராண்பா
[லுந்தான்
பந்தணி மனைவி காணுன் பாலர்க னில்லா ஞகும்.

4. தந்தையுடன் பிறந்த ஆண்மகன் ஒருத்தனும், பெண் ஒருத்தியும் தீர்க்க ஆயுள் உள்ளவராவர். தகப்பனுருக்கு முன்னுல் தோன்றிய சோதரி பொருத்தி மரணமடைவாள். உயிருடன் இருப்பவர்களில் ஒருத்தி ஊரை விட்டுச் செல்லுவாள். பல பழிகளை அடைவாள் என்று கூறினேம். சொல்லப்பட்ட சகோதரன் மனைவியும் குழந்தைகளும் இல்லாதவனுவன். (மரண மாகாதவன்.)

## தந்தையின் இயல்புகள்

5, சொல்லது வல்ப மாகுஞ் சுகமிலா வாழ்வா ளுகும்
வல்லவன் பிதாகு ணத்தை யறைகிரேந் தாயே கேளும்
எல்லேக ளுடைய ளுகும் இன்பமாய் வார்த்தை கூறுவன்
நல்லவ ளுகி வாழ்வன் நாயகி யிஷ்டங் கொள்வன்.

5. அந்தச் சகோதரன் அற்பமான சொற்களைப் பேசுபவன் ஆவான். நலம் எவையுமில்லாமல் வாழ்ந்திருப்பான். இனி, ஜாதகன் தந்தையின் குணங்களைச் சொல்லுகிரேம் தாயே! கேளுங்கள். நிலபுலங்கள் உடைய வனுவான். பிறருக்கு இன்பந்தரும் சொற்களைப் பேசுதலில் வல்லவன். எல்லோருக்கும் நல்லவனுக வாழ்ந்திருப்பான். மனைவியின் விருப்பம் எதுவோ அதற்கு உடன்படுவான்.

## இதுவுமது

6. பலவணி பங்கள் செய்வன் பரவுப கார ளுகும்
கலகத்தைக் கூரு ளுகும் கஞ்சமா நிறத்த ளுகும்
விலேமாதர் மோகங் கொள்ளான் வேண்டினேர்க் குதவி [செய்வன்
நலமதை யெவர்க்குஞ் செய்வன் நல்கிடும் பித்த வாயு.

6. பலவகையான வியாபாரங்களைச் செய்வான். எப்பொழுதும் பிறருக்கு உதவி செய்வதில் நோக்கமுடையவன். கலகமான சொற்களைப் பிறரிடம் கூறுன். செந்தாமரை மலர்போன்ற நிறமுடையவன் ஆவான். வேசையர்களிடம் மையல் கொள்ளாதவன். தன்னிடம் உதவி என்று யாசித்தவர்கட்கு இயன்றதைக் கொடுத்து உதவுவான். எல்லோருக்கும் நல்லனவற்றையே செய்வான். இவனுக்கு உடலில் பித்தவாயு நோய் ஏற்படும்.

## இதுவுமது

7. துணேவியா லவமா னத்தன் செய்குவான் மயன்வே [லேதான்
சினமுண்டு வெளிக்காட் டாதான் சிலேடையாய் பேசு [வானும்

விளையதை யொருவர்க் கெண்ணுன் விளைபுலம் விருத்தி
[செய்வன்
அளையவே தவங்கள் செய்யு மம்பிகை யாளே கேளாய்.

7. தன்னுடைய சகோதரியினுல் அவமானம் அடைவான். கட்டிட வேலே, தச்சு வேலே முதலியனவுற்றைச் செய்வான். கோபமுள்ளவன். ஆயின் அதனே வெளிப்படுத்தமாட்டான். இரு பொருள்படும்படி பேசுவான். எவருக்குந் தீங்கு செய்ய நினையான். விளைச்சல் நிலங்களைப் பெருக்குவான். மிகுதியாகத் தவங்களை இயற்றும் பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகன் நிறம் குணங்கள்

8. பாலகன் நிறங்கு ணத்தைப் பகருவோ மிகுசி வப்பன்
ஞாலத்தா லுய்வா ளுகும் நல்லோர்க்கு நல்ல ளுகும்
சீலமுங் கொஞ்ச முண்டு தேவதாப் பத்தி கொள்வன்
வேலனை யீன்ற மாதே வித்தையுஞ் சமம தாகும்.

8. ஜாதகன் நிறத்தையும் குணங்களையும் இனிமேல் சொல்லுவோம். கருமை கலந்த சிவப்பு நிறமுடையவன். நிலபுலன்களால் ஜீவனம் செய்வான். நல்லவர்களுக்கு நல்லவன் ஆவான். நல்லொழுக்கம் சிறிதே உள்ளவன். தெய்வபக்தி கொள்ளுவான். வேலாயுதத்தை ஏந்திய முருகக் கடவுளைப் புதல்வராகப்பெற்ற அம்மையே! சமமான கல்வியறிவுடையவன். (அஃதாவது, அதிகம் படித்தவனும் அல்லன்; கல்வியறிவில்லாதவனும் அல்லன் சுமாராகப் படித்திருப்பவன்)

## ஜாதகன் இயல்புகள் : தொடர்ச்சி

9. சல்லியப் பாதை யேற்கான் தனமது அதிகங் காணுன்
வல்லிமார்க் கிஷ்ட ளுகும் வருவோரை யாத ரிப்பன்
தொல்லையுஞ் சுகமு முள்ளான் துர்வழக் கதனில்
[செல்லான்
சொல்லது பொருத்த மாகும் துறவியே கேட்டி டாயே.

9. கடன்தொந்தரவுகள் அடையமாட்டான். அதிகச் செல்வத்தைக் காணமாட்டான். பெண்களுக்கு விருப்பமானவன். வீடுதேடி வருபவர்களை ஆதரிப்பான். துன்பங்களும் நன்மைகளும் இவனுக்கு மாறிமாறி ஏற்படும். தகாத வழக்கில் தலையிட்மாட்டான். இவன் பேசும் சொற்கள் இடத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் ஏற்றவண்ணம் அமைந்திருக்கும். பற்றற்றவளே கேட்பாயாக.

## இதுவுமது

10 ஏருகள் விருத்தி செய்வன் எடுத்தகா ரியமு டிப்பன்
தீரமுங் கொஞ்ச முண்டு சிந்தையு மிரண்டு மாகும்
காரியச் சமர்த்த ஞகும் கலக்கமா மனத்த ஞகும்
ஆறுமா முகத்தோன் பக்தி அடைந்தோரை யாத
[ரிப்பன்.

10. ஏர்களைப் பெருக்கஞ் செய்வான். தொடங்கிய காரியங்களைச் செய்து முடிப்பான். மனத்தில் சிறிதே தைரியமுடையவன். இருவேறுன சிந்தையுடையவன். காரியஞ் செய்வதில் சாமர்த்திய முள்ளவன். குழப்ப முள்ள மனத்தினன் ஆவான். ஆறு திருமுகங்களையுடைய முருகப்பெரு மான்மீது பக்தியுள்ளவன். தன்னை அண்டினவர்களை ஆதரிப்பான்.

## ஜாதகன் உடன் பிறப்பு விவரம்

11. தன்துணை முன்பெண் ணென்று தங்கும்பின் கன்னி
[மூன்று
இன்னவர் விருத்தி சொன்னேம் இவர்பலன் பின்பால்
[சொல்வேன்
அன்னவன் துணையாண் பாலும் அணுகாத கார
[ணஞ்சொல்
துன்மையாய் ராகு வாறில் தொடர்ந்ததால் சொன்னேந்
[தாயே.

11. ஜாதகனுக்கு முன்னுல் தோன்றிய பெண்ணெருத்தியுண்டு. பின்பு தோன்றிய பெண்கள் மூவராவர். இவர்கள் தீர்க்காயுளுடன் விளங் குவர் என்று சொன்னேம். இவர்கள் பலன்களைப் பிற்பாகத்தில் கூறுவோம். இவனுக்கு ஆண்துணை இல்லாத காரணத்தைக் கூறுவீர், முனிவரே! என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் கூறுகிருர். இராகு இலக்கினத்துக்கு ஆரு மிடமாகிய கும்பத்தில் தங்கியிருப்பதால் அவ்வாறு கூறினேம்.

## தாயின் குணங்கள்

12. மாதுரு குணத்தைச் சொல்வேன் வருவோரை யாத
[ரிப்பள்
காதக மனமில் லாதாள் கட்செவி போலே கோபம்
பாதக புத்தி யில்லாள் பதர்குண மில்லா ளாகும்
சாதிப்பாள் சிலவே சங்கை சாதமு மன்பா யீவள்.

12. இனி தாயின் குணத்தைக் கூறுவோம். விடுதேடி வருபவர்களை ஆதரிப்பாள். கெடுதலான மனமில்லாதவள். பாம்புபோல் சீறி எழும்

கோபமுள்ளவள். யாரையும் கெடுக்கவேண்டும் என்று துர்புத்தி இல்லா தவள். அற்பத்தன்மை இல்லாதவளாவாள். சில சந்தேகங்களை விளக்கு வாள். ஏழைகளுக்கு அன்புடன் உணவு அளிப்பாள்.

## தாயின் உடன் பிறந்தோர் செய்திகள்

13. இல்லமும் தென்கீ ழாகும் இவள்துணை யாண்பா
[விரண்டு
வல்லியு மொருத்தி யென்றோம் வளமிலாக் குடும்ப
[மென்றோம்
அல்லலாய் வாழ்வா ராகும் அவர்களில் ஒருவன்
[வேற்றூர்
செல்லுவா னென்று சொல்வோம் செப்புவோம்
[பின்பால் சேதி

13. தாயின் வீடு ஜாதகன் வீட்டுக்குத் தென்கிழக்குத் திசையில் உள்ளதாகும். இவளுக்குச் சகோதரர் இருவரும் சகோதரி ஒருத்தி என்றும் சொன்னோம். செழுமையில்லாத குடும்பம் என்று கூறினோம். இவளுடன் பிறந்தவர்கள் எப்பொழுதும் துன்பமுடன் வாழ்வார்கள். இவள் சகோதரர் களில் ஒருவன் வேறூர் சென்று வசிப்பான் என்று கூறுவோம். அவர்கள் செய்திகளை எல்லாம் பின்பாகத்தில் சொல்லுவோம்,

## தாயின் முற்பிறவி

14. அன்னையின் முன்ஜன் மத்தை அறைகிறோ மடவேடு
[தன்னில்
கன்னியும் கோகு லத்தில் கலந்துமே சுகமாய் வாழ்ந்து
தன்னினத் தவரைக் காக்கும் தாகமென் றோர்க்கு ஈந்து.
முன்வினை யில்லா தாகி யொதுங்கினாள் கால நாடு.

14. தாயின் முற்பிறவியைச் சொல்லுகிறோம். அடவேடு என்ற ஊரில் யாதவர் குலத்தில் பிறந்து சௌக்கியமாக வாழ்ந்தாள். தன் இனத்தவர்களைக் காப்பாற்றி, பசி என்று வந்தவர்களுக்கு உணவு அளித்து, முன்செய்த தீவினை எவையுமில்லாமல் மரணமடைந்தாள்.

## தாயின் மறுபிறவி

15. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ ளென்று
[சொல்வோம்
அரிவையும் வறுமை காணாள் அதிகபூ ஷணமு மில்லாள்

மறுஜன்மம் பெருமுக்கல் தன்னில் வருவளா மிரட்டி
[வமிசம்
பெருமையாய்க் குடும்பி யாவள் பேதையே கேட்டி
[டாயே.

15. மீண்டும் நான்கு முகங்களையுடைய பிரமனால் படைக்கப்பட்டு இக்குலத்தில் பிறந்தவளென்று சொல்வோம். ஏழைமையை அறியமாட்டாள். அதிகமான ஆபரணங்கள் இல்லாதவள். மறுபிறவியில் பெருமுக்கல் என்னும் ஊரில் ரெட்டியார் மரபில் தோன்றுவாள். மேன்மையான குடும்பமுடையவள் ஆவாள். தாயே! மேலும் கூறுவோம், கேட்பாயாக.

## தந்தையின் முற்பிறவி

16. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோ மருணை
[கீழ்பால்
பிந்திய ஊரி லேதான் பிறந்தனள் வைசியச் சேயாய்
பந்தணி மனைவி மைந்தர் பலவிதச் செட்டு செய்து
அந்தவர் வாழும் நாளில் அணுகின வினையைக்
[கேண்மோ.

16. இனிமேல், தகப்பனாரின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுவோம். திருவண்ணாமலைக்குக் கிழக்கில் சாதாரணமானதொரு ஊரில், வைசிய மரபினனாகப் பிறந்தான். மனைவி மைந்தர்களை யடைந்து, பலவிதமான தொழில்களைச் செய்துகொண்டு அவன் (ஜாதகன் தந்தை) வாழ்ந்துவருங் காலத்தில், அவனைச் சேர்ந்த தீவினையைக் கேளுங்கள்.

## தந்தை இழைத்த தீவினை

17. மாதுவோ ரேழை தானும் மாதுரு வில்லம் வாழக்
காதலன் னவள்மேல் வீணாய்க் கழறினான் சிலேடை
[வார்த்தை
ஒதுவா ளந்த மாது உதாசின மொழியு ரைத்தான்
மேதில்பின் சென்மந் தன்னில் மெல்லியாம் துணைவி
[யாலே;

17. ஏழைப்பெண் ஒருத்தி, தன் கணவனைப் பிரிந்து தாய் வீட்டிலேயே வசிக்க, இவன் (ஜாதகன் தந்தை) அவளைக் குறித்துத் தவறான எண்ணம் பிறருக்கு உண்டாகும்படி இரண்டு அர்த்தங்களைக் கொடுக்கும் சொற்களைக் கூறினான். அதனைக் கேட்ட அந்தப் பெண் என்னைப்பற்றி அலட்சியமாகப் பேசியவனாகிய நீ, பின் ஜன்மத்தில் சகோதரியினால்;

## பெண் சாபம்

18. நிந்தைக ளேற்பாய் நீயும் நொந்திடு மாதா விருவர்
வந்திடும் துணையாண் உன்பால் வார்த்தைக ளில்லா
[தாயும்
தந்தன மதிக மின்றித் தரணியில் வாழ்வா யென்ன
அந்தரம் தாதாஸ்து வென்ன வணுகிற்று வந்தச்
[சாபம்.

18. பழிகள் பல ஏற்று அவமானப்படுவாய். இரு தாயார் உனக்கு ஏற்படுவர். உனக்குச் சகோதரன் ஒருவன் வாய்பேச முடியாத ஊமை யாக இருப்பான். பிதுரார்ஜித சொத்துக்கள் அதிகம் இல்லாமல், உலகில் வாழ்வாய் என்று கூறவும், அப்படியே அந்தச் சாபம் இவனைப்பற்றியது.

## சாப பலன்

19. ஆகையா லிச்சென் மத்தில் அன்னையு மிரண்டு மாகும்
தோகையாம் துணைவி தன்னால் செரிந்துமே நிந்தை
[தானும்
தாகமென் றோர்க்கு ஈவன் தன்மனங் கபடு மில்லான்
நாகரீ கங்கள் கொஞ்சம் நாயகி கேட்டி டாயே.

19. ஆகையினால், இப்பிறவியில் ஜாதகன் தந்தைக்கு தாயார் இருவரா வர். (அஃதாவது. ஜாதகன் பாட்டனுருக்கு இரு மனைவியர் என்பது கருத்து.) மயில்போன்ற சாயலுடையவளான தன் சகோதரியால் பழிகள் பல சேரும். பசியென்று வந்தவர்கட்கு உணவு அளிப்பான். வஞ்சகமில்லாத மனத்தினன். சிறிது நாகரிகமுடையவன். தலைவியே! மேலும் கேட்பாயாக.

## தந்தையின் மறுபிறவியும் காரணமும்

20. பின்ஜன்ம மருணை தன்னில் பிறப்பனும் பிரம்ம சேயாய்
அன்னவ னிச்சென் மத்தில் அல்பமாம் செட்டுச்
[செய்தோன்
முன்குல மெவ்வாறு தோன்று முரைப்பீர்க ளந்தச்
[சங்கை
தன்மனங் கபடு மின்றிச் சலித்தோர்க்குத் தாக மீந்தும்;

20. ஜாதகன் தந்தை மறுபிறவியில் திருவண்ணுமலையில் அந்தணர் மரபில் தோன்றுவான். "அவன் இப்பிறப்பில் அற்பமான தொழிலைச் செய்துகொண்டிருந்தவன்; மறுபிறப்பில் அந்தணனுக எங்ஙனம் தோன்று வான்? கூறுங்கள்" என்று பார்வதி தேவிகேட்க, முனிவர் கூறுகிறுர். தன் மனத்தில் வஞ்சனையில்லாமல், துன்பப்பட்டவர்களுக்கு உணவு முதலியன கொடுத்தும்;

## ஜாதகன் கர்ம காலங்கள்

21. அறமதி லிச்சை யாயும் அவன்மன மிளக லாயும்
வருவதால் மறுபி றப்பு மறைக்குல முதிப்பா னுகும்
கருமகா லங்கள் தன்னைக் கழறுவீர் முனியே நீர்தாம்
திருகிலா மூவைந் தாண்டுள் செப்புவோம் பிதாவின்
[கண்டம்.

21. தருமச் செயல்கள் செய்வதில் விருப்பமுடையவனுயும் இருப்பதால் பின்ஜன்மத்தில் அந்தணர் மரபில் தோன்றுபவன் ஆவான். ஜாதகனுக்குக் கருமதசை எப்பொழுது ? முனிவரே! தாங்கள் கூறுவீர் என்று பார்வதி கேட்க, முனிவர் கூறுகிருர். ஜாதகன் பிறந்து பதினைந் தாண்டுக்குள் தகப்பனுருக்கு மரணம் ஏற்படும் என்று சொல்லுவோம்.

## அன்னையின் மரணகாலம்

22. அன்னைக்கு முப்பத் தெட்டில் அணுகிடும் மார கங்கள்
மன்னவன் மூன்று கர்மம் மாநிலம் தன்னில் செய்வன்
என்னகா ரணங்கள் சொல்வீர் இவன்பிதா பின்னே
[னுக்கும்
அன்னவன் கருமம் செய்வான் அம்பிகை யாளே
[கேளாய்.

22. ஜாதகன் தாய்க்கு, அவனது முப்பத்தெட்டாம் வயதில் மரணம் ஏற்படும். இந்த ஜாதகன், மூன்று பேர்களுக்கு கருமம் செய்வான். என்ன காரணத்திஞல் அவ்விதம் கூறினீர்கள் என்று பார்வதி கேட்க, முனிவர் கூறுவார். பெற்ருேருக்கும், தன் தந்தையுடன் பிறந்த சிறிய தகப்பனுருக்கும் இவன் கருமம் செய்வான்! பார்வதி அம்மையே! மேலும் கேட்பாயாக.

## ஜாதகன் திருமணக் காலமும் மனைவி இயல்பும்

23. பாலகன் மணத்தின் காலம் பகருவோம் மூவே
[ழாண்டுள்
வேல்விழி மாது தென்கீழ் விளங்குவாள் குணத்தைச்
[சொல்வேன்
சீலமு முடைய ளாகும் தேறிஞேர்க்குத் தொண்டு
[பூண்பள்
ஆலம்போல் கோப முண்டு அடாவடி கூரு ளாகும்.

23. இனி ஜாதகனின் திருமண காலத்தைப்பற்றிச் சொல்வோம். இருபத்தோராம் வயதுக்குள் தென் கீழ்த்திசையிலிருந்து இவனுக்கு மனைவி வாய்ப்பாள். அவள் குணங்களைச் சொல்லுவோம். நல்லொழுக்க முள்ள

வள். தெளிந்த அறிவையுடைய ஞானிகளுக்குத் தொண்டு செய்வாள். விஷத்தையுடைய கொடிய நாகம்போன்று சீறி எழும் கோபமுள்ளவள். அடாவடியாகப் பேசமாட்டாள்.

## மனைவியின் இயல்புகள்

24. கன்னிகை தீர்க்க சீவி காதலன் மனத்துக் கேற்ருள்
அன்னியர் மதிக்க வாழ்வள் அற்புத வார்த்தை
[சொல்வள்
பின்ஞேரா பத்தைக் காப்பள் பேடைபோல் சாய
[லொக்கும்
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

24. இவள் தீர்க்காயுளுள்ளவள். கணவன் மனத்துக்கு ஏற்றவண்ணம் நடப்பாள். அயலார் தன்னைப் பாராட்டும்படி வாழ்க்கை நடத்துவாள். கேட்பவர் அற்புதம் என்று எண்ணும்படி பேசுவாள். ஏழைகளுக்கு நேர்ந்த ஆபத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றுவாள். மயில்போன்ற சாயலை உடையவள். உயர்ந்தவராகிய விநாயகக் கடவுளைப்பெற்ற உத்தமியே! மேலும் கேட்பாயாக.

## ஜாதகன் புத்திரபாவமும் முற்பிறவியும்

25. சுதர்களு மாண்பா லிரண்டு தோகையர் மூவர் தீர்க்கம்
இதுநிற்க வுதித்தோன் பூர்வம் இயம்புவோம் பழனி
[நாட்டில்
நிதிமிக வுடையா னுக்கு நேர்ந்தன ளிக்கு லத்தி
லதிசதி மதலை யுண்டாய் வளமான குடும்பி யாகி;

25. ஆண் குழந்தைகள் இரண்டும் பெண் குழந்தைகள் மூவரும் இவனுக்குத் தோன்றி, தீர்க்க ஆயுளுடன் விளங்கும். இனி, ஜாதகன் முற்பிறவிபற்றிச் சொல்லுவோம். பழனியில் இக்குலத்திலேயே மிகுந்த செல்வவான் ஒருவனுக்குப் புதல்வனாகத் தோன்றி, மனைவி மக்களையடைந்து செழிப்பான குடும்பமுடையவனாகி;

## இதுவுமது

26. சிந்தையும் நலல தாயும் திகைத்தோர்க்குத் தாக மீந்தும்
அந்தகன் வினையில் லாமல் அணுகினுன் கால நாடு
முந்தினேன் வரையப் பட்டு உதிப்பனு மிந்தப் பாலன்
கந்தனை யீன்ற மாதே கழறுவோ மிவனின் யோகம்.

26. நல்மனமுடையவனாய், கதியேதுமில்லாமல் கலங்கியவர்களுக்கு உணவு அளித்தும், தீவினையேதுமில்லாமல் மரணமடைந்தான். பின்பு, பிர

மனுல் படைக்கப்பட்டு இப்பிறப்பில் இக்குலத்தில் பிறப்பான் இந்த ஜாதகன். முருகக் கடவுளைப் புதல்வராக அடைந்த தாயே! இந்த ஜாதகனின் யோகத்தைக் இனிமேல் கூறுவோம்.

## ஜாதகன் யோகங்கள்

27. தரணியா லுய்வா னுகும் செட்டுக்கள் சிலவே செய்வன்
உறன்முறைக் கிணக்கம் சொல்லான் உயர்வோர்கள்
[நேசம் கொள்வன்
பொருள்பின்னுல் சேர்ப்பா னுகும் பிதாபூமி விருத்தி
[செய்வன்
முருகர்தம் பக்தி பூண்பன் மொழியதைக் காப்பா னுகும்.

27. நிலபுலங்களால் அடையும் பொருள்மூலம் ஜீவனம் நடந்துவான். சில தொழில்களும் செய்வான். தன் பந்துக்களிடம் இணக்கமாக இருக்க மாட்டான். அறிவினுல் உயர்ந்த பெரியோர்கள் நேசத்தைக் கொள்ளுவான். பிற்காலத்தில் பொருள் சேர்த்துவைப்பான். தகப்பனுர் காலத்து நிலபுலங்களைப் பெருக்குவான். சுப்பிரமணியக் கடவுளிடம் பக்திகொள்ளுவான். சொன்ன சொற்களைக் காப்பான்.

## ஜாதகனுக்கு யோக மேற்படக் கிரகநிலை

28. ஜாதகன் தனக்கு யோகம் செப்பினகா ரணஞ் சொல்வீரே
மாதவன் சனியு முச்சம் மங்களன் புகரு மாட்சி
ஆதிசே டனு மாறில் அணுகின பலத்தி னுலே
ஓதினேன் யோகம் தானும் உயர்குரு தசைவி சேஷம்.

28. எவ்வித காரணத்தால் மேற்கூறிய யோகங்களை ஜாதகன் அடைவான் என்று சொன்னீர்கள். எனப் பார்வதிதேவி கேட்க முனிவர் கூறுவார். குருவும் சனியும் உச்சமாகவும், அங்காரகனும் சுக்கிரனும் ஆட்சியாகவும், இராகு ஆருமிடத்திலும் தங்கியிருக்கும் பலத்தினுல் ஜாதகனுக்கு யோகங்கள் சொன்னேம். மேன்மை பொருந்திய குருமஹாதசை இந்த ஜாதகனுக்கு மிகவும் விசேஷமானதாயிருக்கும்.

## இராகு, குரு மஹா தசைப் பலன்கள்

29. பணிதசை யோக மில்லான் பாக்கியம் சேரா தாகும்
துணிவுள குணமு மெய்தும் சொற்சோரான் குருவின்
[காலம்
கனமுள புகழு மேற்பன் கடனிலான் கதித்த புத்தி
துணைவரால் சுகமு மேற்பன் சனிதசை யிதன்மேல்
[யோகம்.

29. இராகுதசையில் யோகம் எதுவும் இராது. பாக்கியங்கள் எவையும் சேரா. துணிச்சலான மனமுண்டாகும் தான் சொன்ன சொற்களிலிருந்து பின்வாங்கமாட்டான். குரு மஹாதசையில் மென்மையான கீர்த்

தியையும் அடைவான். கடன் தொந்தரவு இல்லாதவனுவான். நல்ல அறிவு மிகும். உடன்பிறந்தோரால் நலமடைவான் சனி மஹாதசையில் இதற்கு மேல் யோகம் அடைவான்.

## சனிமஹாதசைப் பலன்

30. வறுமையில் லாமல் வாழ்வன் மாநிலம் சேர்த லுண்டு
திருப்பணி கொஞ்சம் செய்வன் தேவதாத் தலங்கள்
[செய்வன்
மறுவில்லஞ் சித்திரஞ் செய்வ னறைகிருேம் பின்பால்
[சேதி
அருமறை மூடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்.

30. தரித்திரமில்லாமல் வாழ்க்கை நடத்துவார். விளைநிலம் சேரும், கோயில் திருப்பணி செய்வார். பல புதிய கோயில்களை அமைப்பார். அழகிய வேலைப்பாட்டுடன் கூடிய வீடுகளை அமைப்பார். ஜாதகனது மற்றச் செய்திகளை இரண்டாம் பாகத்தில் சொல்லுகிருேம். வேதாந்தத்தின் உச்சியில் நடனமாடும் அம்பிகையே! இன்னும் கேட்பாயாக.

## ஜாதகன் மரணகாலமும் மறுபிறப்பும்

31. அன்பது நாலு வாண்டில் அணுகிய ரிடப மாதம்
இன்னவ னுடல மேகும் இயம்புவோ மிவன்பின்
[ஜன்மம்
கன்னியா குமரி தன்னில் கலப்பனும் சைவச் சேயாய்
பொன்மிக வுடைய னுகிப் பூமியில் வாழ்வா னுகும்.

31. ஐம்பத்து நான்காம் வயதில் வைகாசி மாதம் ஜாதகன் மரணமடைவான் இவர் மறு ஜன்மத்தைப்பற்றிச் சொல்வோம். கன்னியா குமரியில் சைவ குலத்தவனுக பிறப்பான். செல்வம் மிகவும் உடையவனுகி உலகில் வாழ்ந்திருப்பான்.

## ஜனன காலத் தசை இருப்பு

32. ஜனித்திடு காலந் தன்னில் சித்திரை மூன்ரும் காலில்
சினமுள சேயி ருப்புச் செப்புவோ மாண்டி ரண்டு
கனமுள திங்க ளேழுங் கழறினேம் பூர்வ பாகம்
அனையவே தவங்கள் செய்யு மம்பிகை யாளே கேளாய்.

32. ஜாதகன் பிறக்குங்காலம் சித்திரை நக்ஷத்திரம் மூன்ரும் பாதமாம், அப்பொழுது அங்காரக மகா தசையிலிருப்பு, இரண்டு வருஷங்களும் ஏழு மாதங்களும் மீதமாகும். ஜாதகனுக்கு முதல் பாகம் கூறினேம். பெரிய தவங்களை இயற்றும் பார்வதிதேவியே! மேலும் நாங்கள் சொல்லுவனவற்றைக் கேட்பாயாக.

# ஜாதகம் 75

## ஜனனகால கிரகநிலை

1. பிறைராகு மேட மாகப் புகருமே கடகம் புக்க
குருபுதன் பானு சீயம் கேதுவுங் கோல தாக
கரியவன் தனுச வாகக் குசனுமே தேள தாக
வருவது ஜன்மங் கன்னி யறைகுவீர் பலனை யென்று;

1. சந்திரன், ராகு, மேஷத்திலும், சுக்கிரன், கடகத்திலும், குரு, புதன் சூரியன் சிம்மத்திலும், கேது துலாத்திலும். சனி தனுசிலும், செவ்வாய் விருச்சிகத்திலும் ஆக இவ்விதக் கிரக நிலைகளுடன் கன்னியா லக்னத்தில் பிறந்துள்ளவருக்குப் பலன்களைக் கூறுவீராக.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் ராகு | | |
| | இராசி சக்கரம் | | சுக்கிரன் |
| | | | குரு சூரியன் புதன் |
| சனி | அங்காரகன் | கேது | லக்கினம் |

## ஜாதகன் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. சங்கரி கேட்கும் போது சாற்றுவார் பிருகு தானும்
இங்கிது வாண்பால் ஜன்மம் இல்லமும் கீழ்மேல் வீதி
தங்கிடும் வடக்கு வாசல் சண்முகன் கோஷ்ட மேற்கில்
ஐங்கரன் காளி தென்கீழ் அணுகிடும் தென்பா லிரவி.

2. என்று பார்வதியம்மையார் கேட்கும்பொது, பிருகு முனிவர் சொல்லுவார். இந்த ஜாதகம் ஆண் மகனுடையது. பிறந்த வீடு, கிழக்கு மேற்கானதொரு தெருவில் வடக்கு நோக்கிய வாயிலை யுடையதாகும். வீட்டுக்கு மேற்குத் திசையில் ஆறுமுகன் கோயிலுண்டு. தென்கீழ்த்திசை

யில் ஐந்து கரங்களை யுடையவரான விநாயகப் பெருமானும் காளிதேவியும் கோயில் கொண்டு விளங்குவர். தெற்குத் திசையில் சூரிய பகவானுக்கு ஒரு ஆலயம் உண்டு.

## இந்தச் சொதிட நூலில் எழுதப்படுவன இவை எனல்

3. சொல்லிய வடையா ளத்துள் சுதனுமே மூன்ருஞ் [ஜன்மம்
புல்குவான் கங்கை சேயாய்ப் புதல்வனின் யோகந் [தானும்
தல்லியின் தந்தை யோகம் தன்மனை புத்திர யோகம்
வல்லவன் முன்பின் ஜன்மம் வரைகிரு மிந்நூல் [தன்னில்.

3. மேற் சொல்லப்பட்ட அடையாளங்கள் கொண்டதோர் ஊரில், வேளாளர் மரபில், தன் தந்தைக்கு மூன்ரும் புதல்வனுக இந்த ஜாதகன் தோன்றுவான். இந்த ஜாதகன், இவனது பெற்ருேர், ஜாதகன் மனைவி புத்திரர் முதலானவர் யோகங்கள், இவர்களது முன்பின் ஜன்ம விவரங்கள் ஆகிய அனைத்தையும் பற்றி இந்தச் சோதிட நூலில் யாங்கள் எழுது கின்ருேம்.

## தந்தையின் செய்திகள்

4. தந்தையின் துணைபெண் ணுறும் தங்காவே வென்று [சொல்வேன்
தந்தையின் குணத்தைச் சொல்வேன் தரணியா [லுய்வா னுகும்
தந்தமும் தரள மொக்கும் சண்முகன் பத்தி பூண்பன்
தன்னினத் தவர்க்கு நல்லன் சாராட்க ளுடைய னுமே.

4. ஜாதகன் தகப்பனுருடன் பிறந்த பெண்கள் அறுவரில் ஒருவரும் நிலை யார் என்று சொல்லுவோம். இனி, தந்தையின் குணங்களைக் கூறுவோம், நிலபுலங்களால் ஜீவிப்பான். இவன் பற்கள் முத்துப் போன்று வெண்மையாக இருக்கும். ஆறுமுகக் கடவுளிடம் பக்தி கொள்ளுவான். தன் இனத்தவர் களுக்கு நல்லவனுக இருப்பான். ஏவின பணியைச் செய்வதற்கு ஏவலாட்களுடையவன் ஆவான்.

## இதுவுமது

5. சொன்னதைக் காப்பா னுகும் சோம்பிடான் காரி யத்தில்
பொன்கடன் கொள்வா னுகும் பேதையர் இஷ்டம் [கொள்வன்

அன்னியர்க் கிணக்கம் செய்யான் அடாவடி கூரு
[ளுகும்
பின்னமில் லாத தேகி பராசரும் மறுத்துச் சொல்வார்.

5. சொன்ன சொற்களைக் காப்பான். காரியம் செய்வதில் சோம்பலடைய மாட்டான். பணம் கடன் வாங்குவான். பெண்களுக்குத் தன் பால் விருப்பமேற்படும்படி செய்ய வல்லவன். மாற்ருரிடம் ஒருபோதும் ஒன்றுபட்டிருக்க மாட்டான். அடாவடித்தனமாகப் பேச மாட்டான். குற்றமில்லாத சரீர அமைப்பைப் பெற்றவன். இவ்வாறு பிருகு முனிவர் கூறிக் கொண்டு வர, பராரசர் என்பவர் இடைமறித்துக் கூறுவார்.

## தந்தைக்குச் சகோதரதோஷம் ஏற்படக் காரணம்

6. துணைவர்கள் தோஷம் சொன்னீர் செப்புவீ ரந்தச்
[சங்கை
வினையாகப் புகரும் லாபம் மேவின பலத்தி னுலே
பிணையாகும் துணைவ ரென்ருேம் பேசுவோ மிவன்முன்
[சென்மம்
கனமுள வருணை தன்னில் கலந்தனன் வைசியச்
[சேயாய்.

6. இந்த ஜாதகன் பிதாவினுடன் தோன்றியவர்களுக்குத் தோஷம் ஏற்படும் என்று சொன்னீர்களே, அந்த விவரத்தை விளக்குங்கள். பிருகு முனிவர் கூறுகிருர். சுக்கிரன், லாபஸ்தானமாகிய பதினேராமிடத்தில் (கடகம்) தங்கியிருக்கும் பலத்தினுல் தந்தையின் உடன் பிறந்தோருக்குத் தோஷம் ஏற்படும் என்று சொன்னேம். இனி ஜாதகன் தந்தையினது முற்பிறவிபற்றிச் சொல்லுவோம். மேன்மையுள்ள திருவண்ணுமலையில் வைசிய மரபினனுகப் பிறந்தனன்.

## தந்தையின் முற்பிறவித் தீவினை

7. பெரிதான செட்டுச் செய்து புனிதனும் வாழு நாளில்
மருவின வினையைக் கேண்மோ வரும்துணை பாகம்
[தன்னில்
குறைசெய்து மோசம் செய்யக் கூறுவான் சாபந் தானும்
பொருள்கடன் தந்த பாவி பிறக்கும்பின் ஜன்மம்
[தன்னில்

7. பெரிய வியாபாரஞ் செய்து கொண்டு இவன் (ஜாதகன் பிதா) வாழந்து வரும் காலத்தில் இவனை யடைந்த தீவினை பற்றிக் கேளுங்கள். (தன்னுடன் கூட்டு வியாபாரம் செய்த துணைவனுக்குச் சிறிது பொருள் கடன் கொடுத்து, அவனுக்குச் சேர வேண்டிய பகுதியைக் குறைத்து

மோசம் செய்து விட்டான்.) சகோதரனுக்குரிய பாகத்தைத் தராது குறைத்துக் கொடுத்தான். அந்தத் துணைவன் மனம் வருந்திப் பின்வருமாறு சாபமிட்டான். (சிறிது பொருள் கடன் கொடுத்து) எனக்குச் சேர வேண்டிய பெரும் பகுதியை மோசம் செய்த பாவியே! நீ தோன்றும் மறுபிறவியில்;

## துணைவன் சாபம்

8. என்னைப்போல் துணைவ ரின்றி இரணிய மதிக மின்றி
தன்னிலே வாழ்வா யென்னச் சார்ந்தது வந்தச் சாபம்
மன்னனு மந்தி யத்தில் வறுமைகள் மிகவுண் டாகி
துன்மையாய்க் கால நாடு சென்றுமே பிரமன் லக்கம்;

8. என்னைப் போலவே உடன் பிறந்தவர் இல்லாமலும், செல்வம் அதிகம் இல்லாமலும் உலகில் வாழ்வாய் என்று சாபமிட, அந்தச் சாபம் இவனைச் சார்ந்தது. தனது கடைசிக் காலத்தில் மிகுந்த தரித்திரம் ஏற்பட்டு, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு; ஜாதகன் தந்தை

## சாப பலன்

9. வந்தவ னென்று சொல்வோம் மருவிடு முன்னூழ்ச்
[சாபம்
தன்துணை நஷ்ட மெய்தும் தனமது வதிகம் காணான்
சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளா னிருநி
[றத்தான்.

9. இப்பிறப்பில் பிறந்தவன் இவன் என்று சொல்லுவோம். இவனை முற்பிறவித் தீவினை தொடரும். அதனால் இவன் உடன் பிறந்தோர் நஷ்டமாவர். அதிகமான செல்வத்தை அடைய மாட்டான். மேற் சொல்லப்பட்ட குணங்களை யுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனாகத் தோன்றுவான். இனி, ஜாதகன் குணங்களைச் சொல்லுவோம். அழகுடையவன். கரிய நிற முள்ளவன்.

## ஜாதகரின் குணங்கள்

10. ஈகையு மல்ப மாகும் இருவிதக் குணமு முண்டு
பாகமாய்ப் பேசு வானும் பாரினி லுய்வா னாகும்
தோகைசொல் கடவா னாகும் சேத்திரம் செய்வா னாகும்
ஆகம நுணுக்கந் தேருன் அல்பமாங் கல்வி யென்றேம்.

10. சிறிதே தருமஞ் செய்யும் இயல்புள்ளவன். ஒன்றுக்கொன்று மாறான இருவித குணங்கள் இவனுக்கு உண்டு. இடத்துக்கும் சந்தர்ப்பத்

துக்கு பொருந்தும் வகையில் பேசுவான். நிலபுலங்களின் வருமானத்தால் ஜீவிப்பவனுவான். மனைவியின் சொற்களை மீறமாட்டான். புதிய வீடொன்று கட்டுவான். ஆகம சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள நுட்பமான விஷயங்களைத் தெளிவாக உணராதவன். கல்வியறிவு சொற்பமே இவனுக்கு உண்டு.

## இதுவுமது

11. தந்தைநாள் பூமி தன்னைத் தானவன் விருத்தி செய்வன்
கந்தன்மேல் பக்தி பூண்பன் காலிகள் விருத்தி யல்பம்
நிந்தைகள் பெறுவா னுகும் நேர்ந்திடும் பித்தச் சூடு
நந்தியா பணையே ருண்டு நாட்டினில் சல்லிய மேற்பன்.

11. தன் தகப்பனுர் காலத்து விளைநிலங்களை இவன் விருத்தி செய்வான். முருகப் பிரான் மீது பக்தி கொள்ளுவான். கால் நடைப் பெருக்கம் சொற்பமே. பிறர் கூறும் பழிகளை ஏற்பான். இவனுக்குப் பித்தச் சூட்டு நோய் வரும். எருது, பசு ஏர் இவை உண்டு. உலகில் கடன்காரனுக வாழ்வான்.

## தாயின் குணங்கள்

12. தன்துணை யாண்பால் தோஷம்
தங்கிடும் கன்னி யிரண்டு
முன்பின்னுய் மொழிய லாகும்
மொழிகிருேம் பின்பால் சேதி
அன்னையின் குணத்தைச் சொல்வேன்
அடாவடி கூறு ளாகும்
மன்னவன் மனத்துக் கேற்ருேள்
வருவோரை யாத ரிப்பள்.

12. தன்னுடன் தோன்றிய சகோதரன் ஒருவன் நிலையில்லாதவன். சகோதரியர் இருவர் நிலைப்பார்கள். அந்தச் சகோதரிகளுள் ஒருத்தி ஜாதகனுக்கு முன்பும் மற்றவள் பின்னும் பிறந்தவள். அவர்களுடைய செய்திகளனைத்தையும் விவரமாக பிற்பகுதியில் சொல்லுகிருேம். இனி, ஜாதகன் தாயார் குணங்களைச் சொல்லுவோம். அடாவடித் தனமாகப் (தான் கூறியதே சரியானது என்று பொருத்தமில்லாமல் பிறருடன் சண்டையிட்டுப் பேசுதல்) பேச மாட்டாள். கணவன் மனத்துக்கு உகந்தவள். வீடு தேடி வருபவரை ஆதரிப்பாள்.

## இதுவுமது

13. மாநிறம் முணச்சல் தேகி மர்மமில் லாதா ளாகும்
ஊனமாம் தந்த மென்ருேம் உடன்துணை யாண்பால்
[காணுள்

தேன்மொழி கன்னி யொன்று தீர்க்கமா மென்று
[சொல்வோம்
வானவர் பத்தி கொஞ்சம் மருவிடும் பித்த சூடு.

13. மாநிறமுடையவள், மெலிந்த சரீர முள்ளவள், மனத்தில் மறைவில்லாதவள் ஆவாள். இவளுக்குப் பற்கள் ஊன மடையும் என்று சொன்னோம். உடன் பிறந்த ஆண் துணை இல்லாதவள். தேன் போன்று இனிய சொற்களைப் பேசும் சகோதரி யொருத்தி இவளுக்கு உண்டு. அவள் தீர்க்கமான ஆயுளுள்ளவள் என்று கூறுவோம். தெய்வ பக்தி சிறிது இவளுக்கு (சகோதரிக்கு) உண்டு. இவள் உடலில் பித்தச் சூட்டு நோய் உண்டாகும்.

## தாயின் முற்பிறவி

14. அன்னையின் முன்ஜன் மத்தை அறிவிப்போம் தக்கோ
[லத்தில்
பின்குலம் தனிலு தித்துப் புத்திர ருடைய ளாகிக்
கன்னிகை யொருத்தி பேரில் காணாத வார்த்தை
[சொல்ல
பின்னங்கள் நேர்ந்த தாலே செப்புவாள் சாபந் தானும்.

14. தாயின் முற்பிறவிபற்றி இனிக் கூறுவோம். தக்கோலம் என்ற ஊரில் தாழ்வான குலத்தில் பிறந்து, புத்திர பாக்கியங்களைப் பெற்று வாழ்ந்து வரும் காலத்தில், அயற் பெண்ணொருத்தி மீது தான் காணாத ஒன்றைக் கண்டதாக பழிச் சொற்களைக் கூறினாள். அதனால் அந்தப் பெண்ணுக்கு அவமானங்கள் ஏற்படவே, அவள் மனம் வருந்திச் சாப மிடுவாள்.

## பெண்ணின் சாபம்

15. பெண்பழி சொன்ன பாவி பிறக்கும்பின் ஜன்மந்
[தன்னில்
அண்ணன்தம் பிகளு மற்று அற்றிடும் தந்தம் தானும்
குன்றிய மனத்த ளாகிக் குவலயந் தன்னில் வாழ்வாய்
திண்ணமாய்ந் தாதாஸ்து வென்ன சேர்ந்தது வந்தச்
[சாபம்.

15. "என் மீது வீண் பழி கூறிய பாவியே! நீ, மறுபிறவியில், உடன் பிறந்தோரில்லாமல் வாழ்வாய் (ஆண்களை மட்டும் குறிப்பதாகும்) பற்கள் ஊனமாம். குறையுள்ள மனமுடையவளாய் உலகில் வாழ்வாய்." அந்த வார்த்தையை வானத்திற் செல்லும் தெய்வங்களும் 'அப்படியே நிகழ வேண்டும்' என்றனர். அந்தப்பெண்ணின் சாபம் அங்ஙனமே உறுதியாக இவளை (ஜாதகன் தாய்) அடைந்தது.

## தாயின் மறுபிறவி

16. ஆகையா லிச்சென் மத்தில்
அவள்தந்தம் குறைவு நேரும்
பாகமாந் துணையாண் காணுள்
பகரமாம் குடும்ப மில்லாள்
தோகைபின் ஜன்மஞ் சொல்வேன்
சீகாழி தன்னி லேதான்
போகபாக் கியவா ளுகப்
பிறப்பளா மிக்கு லத்தில்.

16. அந்தச் சாபம் இவளை யணுகியதால், இப்பிறப்பில் ஜாதகன் தாய்க்குப் பற்களில் ஊனம் உண்டாகும். உடன் பிறந்த ஆண் இல்லாதவளாவள். மேன்மையான குடும்பம் இல்லாதவளாவள். இனி, இவளுடைய மறுபிறவி பற்றிச் சொல்லுவோம். சீகாழி யென்னுந்தலத்தில், யோக பாக்கியங்களுடையவளாக இக்குலத்தில் தோன்றுவாள்.

## தந்தை மரணமும் மறுபிறவியும்

17. சஷ்டியாண் டதனி லேதான் தந்தையு மரிப்பா னுகும்
இஷ்டமாய் விரிஞ்சி தன்னி லெய்துவான் மறைக்கு
[லத்தில்
வட்டமாய் அரச ராலே மாரனும் ஜீவிப் பானும்
துஷ்டரைச் சம்க ரிக்கும் துறவியே கேட்டி டாயே.

17. ஜாதகனின் ஆறும் வயதில் தந்தை மரணமடைவான். மறுபிறப்பில், விரிஞ்சி புரத்தில் அந்தணனுகப் பிறப்பான். அரசாங்க உதவியால் மேன்மையுடன் ஜீவிப்பான். துஷ்டர்களை ஸம்ஹாரம் செய்யும் அம்பிகையே! மேலுங் கேட்பாயாக.

## தாயின் மரணமும் ஜாதகன் திருமணக்காலமும்

18. நாற்பது மூன்று வாண்டில் நற்றுலா மாதம் தன்னில்
கூப்பிடு வானுங் காலன் குறித்ததோ ரன்னை தன்னை
ஏற்கவே மணத்தின் கால மியம்புவோ ஐமையந்
[தாண்டில்
தீர்ப்பாகத் தென்பால் தன்னில் தேவியும் வருவா
[ளாகும்.

18. ஜாதகனின் நாற்பத்து மூன்றும் வயதில், ஐப்பசி மாதம் தாய் மரண மடைவாள். இனி ஜாதகன் திருமணக் காலத்தைப் பற்றிக் கூறுவோம். இருபத்தைந்தாம் வயதில் இவனுக்குத் தென் திசையிலிருந்து நிச்சயமாக மனைவி வருவாள்.

## மனைவியின் இயல்புகள்

19. குணமது நல்ல தாகும் குறிப்பினில் கொடுமை காணும்
தணிவுள குணத்த ளாகும் சாதமு மன்பா யீவள்
தன்வரன் மனத்துக் கேத்தோ ளடக்கமாம் [வார்த்தை யுண்டு
மணமது இஷ்டம் கொள்வள் வாதகே கத்தா [ளென்றோம்.

19. நற்குணங்கள் கொண்டவள். அவள் முகக் குறிப்பில் கொடுமைத் தன்மை தோன்றும். அடக்கமான குணமுடையவள். யாசிப்பவர்கட்கு அன்புடன் உணவு அளிப்பாள். கணவன் மனத்துக்குத் தகுதியாக இருப்பவள். பொறுமையாகப் பேசுவாள். மணமுள்ள மலர்களில் விருப்பங் கொள்ளுவாள். வாத நோயுள்ள உடலுடையவள் என்று சொன்னோம்.

## மனைவியின் இயல்புகள்—தொடர்ச்சி

20. தோகைபோல் நிறத்த ளாகும் சொல்லது சுருக்க மாகும்
பாகமாய்ப் பேசு வாளாம் பதர்குண மில்லா ளாகும்
நாகம்போல் கோபங் கொஞ்சம் நல்லோர்க்கு நல்லோ [ளாவள்
தாகமென் றோர்க்கு வீவள் சத்தியுந் தீர்க்க ஜீவி.

20. மயில் போன்ற நிற முடையவள். சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுவாள். இடத்துக்கும் சந்தர்ப்பத்துக்கும் பொருத்தமாகப் பேசுவாள். அற்பமான குணங்கள் இல்லாதவள். பாம்பு போன்று சீறியெழும் கோபம் சிறிதே உடையவள். நல்ல எண்ணத்துடன் பழகுவோர்க்கு நல்லவளாக இருப்பாள். பசி, தாகம் என்று கூறிக் கொண்டு வீடு தேடி வருபவர்க்கு உணவு நீர் முதலியன அளிப்பாள். இவள் தீர்க்க ஆயுளுடையவள்.

## புத்திரதோஷம் : கிரகநிலை

21. சுதனுமே யொன்று தோன்றும் சோர்வுறும் சீக்கி ரத்தில்
அதற்குப்பின் காணு ளாகும் அறிவீப்பீ ரந்தச் சங்கை
புதல்வர்தா னத்தோன் காரி பொருந்திடும் நான்க தாகக்
கதிர்குரு புதன்வி யத்தில் கலந்ததால் சொன்னோம் [யாங்கள்.

21. புத்திரப் பேற்றைச் சொல்லுவோ மென்றால், ஒரு குழந்தை இவளுக்குத் தோன்றி, விரைவில் மரித்துவிடும். அதற்குப் பின்பு புத்திரப் பேறு இல்லாதவளாவாள். இங்ஙனம், முனிவர் கூறிக் கொண்டுவர,

பார்வதிதேவி கேட்கின்றாள்: "ஏன் அப்படி நேரும்? விவரம் கூறுங்கள்;" முனிவர் கூறுகிறார். புத்திர ஸ்தானத்தவனாகிய சனி இலக்கினத்துக்கு நான்காமிடத்திலும் (புத்திரஸ்தானத்துக்கு விரயஸ்தானமான, பன்னிரண்டா மிடத்தில், தனுசில்) சூரியன் குரு புதன் இலக்கினத்துக்குப் பன்னிரண்டா மிடமாகிய சிம்மத்தில், விரய ஸ்தானத்திலும், தங்கியிருப்பதால் புத்திர தோஷம் ஏற்படும் என்று நாங்கள் கூறினோம்.

## மனைவிக்கு முற்பிறவி தோஷம்

22. *இதுவன்றிப் பூர்வந் தன்னில் இவள்சில கொடுமை [செய்தாள்*
*அதனாலே புத்திர தோஷம் அறிவிப்பீ ரந்தச் சங்கை*
*பதியினி லுயர்வ தான பட்சியின் கீழ்பா லாகச்*
*சதிசெய்யும் வன்னியச் சேயாய்த் தனமிக வுடைய ளாகி;*

22. இதுவல்லாமல், முற்பிறவியில் இவள் (ஜாதகன் மனைவி) சில கொடுஞ் செயல்கள் செய்தாள். அவற்றினால் புத்திர தோஷம் ஏற்பட்டது. அந்த விவரங்களைக் கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் கூறுவார். தலங்களில் சிறந்ததான திருக்கழுக்குன்றத்தற்குக் கிழக்கில் உள்ள தோர் ஊரில், வன்னிய குலத்தில் பிறந்து, மிக்க செல்வ முடையவளாய் வாழ்ந்து வரும் காலத்தில்;

## இதுவுமது

23. *பஞ்சையா யேழை மாது பாலர்க்கு அன்னம் வேண்டிக்*
*கெஞ்சினாள் மாது பக்கல் கிளிமொழி வார்த்தை யின்றி*
*மிஞ்சிய வார்த்தை சொல்லி விரட்டினா ளேழை தன்னை*
*வஞ்சியு மனவெ றுப்பா லறைந்தசா பத்தைக் [கேண்மோ.*

23. அநாதையான ஒரு ஏழைப் பெண் தன் குழந்தைகள் பசியினைத் தணிப்பதற்காகச் சிறிது உணவு இவளைக் கெஞ்சிக் கேட்டனள். அதற்கு இவள், சமாதானமாகச் சொல்லாமல், கடுமொழிகள் கூறி அந்த ஏழைப் பெண்ணை விரட்டினாள். அந்த ஏழைப்பெண்ணும் மனவெறுப்படைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

## ஏழைப் பெண் சாபம்

24. *பாலர்சோ றீயாப் பாவி பருகாது சுதரு னக்குச்*
*சாலவே பின்ஜன் மத்தில் சந்ததி யில்லா ளாயும்*
*ஏலவே வாழ்வா யென்று ஏகினள் வேறு சாகை*
*ஆலம்போ லந்தச் சாப மணுகிற்று பாவைக் [கேதான்.*

24. குழந்தைகளுக்குச் சோறு தராது விரட்டிய பாவியே! உனக்குக் குழந்தைகள் நிலையா; மறுபிறப்பிலும் குழந்தைகள் இல்லாமல் வாழ்வாய் என்று சாபமிட்டு வேறு வீடு நாடிச் சென்றாள். விஷம் போன்று அந்தக் கொடிய சாபம் இவளைப் பற்றியது.

## வேறு தோஷம்

25. இன்னமும் வேறு சொல்வேன் இவளுடைக் கொல்லை
[தன்னில்
துன்முனி வாச மெய்தும் தோத்திரம் செய்வார்
[முன்னோர்
கன்னிகை தொழாமல் நின்றாள் கருமுனி புகலும் சாபம்
என்னையே தொழாத பாவி ஈன்றதோர் சுதரைக்
[கொல்வேன்.

25. மேலும் ஒரு தோஷமும் இவளைப் பற்றியது. அதனைக் கூறுவேன். இவளுடைய வீட்டுத் தோட்டத்தில் கொடிய முனி ஒன்று வசித்து வந்தது. அதனை, இவள் முன்னோர்கள் பயபக்தியுடன் தோத்திரம் செய்து வணங்கிவந்தார்கள். இவள் அந்த முனியாண்டவனை வணங்காமல் அலட்சிய மனப்பான்மையுடன் இருந்தாள். இவள் செயலைக் கண்டு கோபமடைந்து கருப்பு முனி இவளுக்குச் சாபம் இட்டது. "என்னை வணங்காத பாவியே! நீ பெற்ற புதல்வர்களைக் கொல்லுவேன்.

## முனிசாபம்

26. மறுஜன்மஞ் சுதரு மின்றி மருவுவே னுன்பால் நானும்
திருகாகச் சொல்லி யேதான் சென்றது வேறு சாகை
அரிவைக்கு வச்சென் மத்தில் அவர்சுதர் யாவு மாண்டு
குறுகின குணத்தா ளாகிக் குஞ்சர முகத்தோன் பக்தி;

26. "மறுபிறவியில் புத்திரர் இல்லாமல் செய்ய நான் உன்னைப் பற்றிக் கொள்ளுவேன்" என்று இவ்விதம் கொடூரமாகக் கூறிவிட்டு அந்த முனி வேறு இடத்தை நாடிச் சென்றது. அந்தப் பிறவியிலேயே முனியின் சாபம் இவளை யடைந்தது. அதனால் இவள் புத்திரர் அனைவரும் இறந்தனர். குறுகிய புத்தி யுடையவள் ஆனாள். யானை முகத்தை யுடைய விநாயகப் பெருமானிடம் பக்தி யுடையவளாகி;

## சாப பலன்

27. தினமொரு தீபம் வைத்துச் சென்றனள் கால நாடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தவ ளென்று
[சொல்வோம்

வனிதைக்கு விச்சென் மத்தில் மைந்தர்கள் தோஷ
[மெய்தும்
கனமத வானை பெற்ற காதலி கேட்டி டாயே.

27. அவரது கோயிலுக்குத் தினந்தோறும் ஒரு விளக்கு ஏற்றி வைத்து வழிபட்டாள். இறுதியில் மரண மடைந்து, மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் இக்குலத்தவளாகப் பிறந்தாள் இந்த ஜாதகன் மனைவி என்று கூறுவோம். முற்பிறப்பில் ஏற்பட்ட தோஷத்தால் பிறக்கும் குழந்தைகளுக்குத் தோஷம் உண்டாகும். பெருமை பொருந்திய யானை முகக் கடவுளைப் பெற்ற தாயே! மேலும் கேட்பாயாக.

## ஜாதகன் முற்பிறவித் தீவினை

28. பாலகன் பூர்வம் தன்னைப் பகருவோம் தவளை தென்பால்
சீலமா மருகர் வர்க்கம் ஜனித்துமே கிருஷி செய்து
சாலவே வாழு நாளில் தங்கின வினையைக் கேண்மோ
ஏலவே விதவை போகம் எய்தியே கருவ ழித்தான்.

28. இனி, ஜாதகன் முற்பிறவி பற்றிச் சொல்லுவோம். தவளைச் சுரத்துக்குத் தெற்கில் உள்ளதொரு ஊரில், நல்ல ஒழுக்கமுள்ள சமண மரபில் தோன்றி, விவசாயம் செய்து, நன்கு வாழ்ந்து வரும் காலத்தில் இவனைப் பற்றிய தீவினையைக் கேளுங்கள். விதவை யொருத்தியுடன் இன்பம் அநுபவித்து, அவளுக்கு ஏற்பட்ட கருவினைச் சிதைத்தான். அது ஒரு தோஷம்.

## இதுவுமது

29. கன்றுக்குப் பால்வி டாமல் கறந்தன ளதுவோர்
[தோஷம்
பொன்னிலா வேழை யோர்க்குப் புகன்றன ளாசை
[வார்த்தை
மன்னனு மந்தி யத்தில் வயறுவேதை யதனல் மாண்டு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்.

29. பசுவின் கன்றுக்குப் பால் விடாமல் கறந்து விட்டான். அந்தத் தோஷம் ஒன்றும் இவனைச் சார்ந்தது. செல்வ மில்லாத ஏழைகளுக்கு ஆசை வார்த்தைகள் சொல்லி ஏமாற்றினுன். இந்த ஜாதகனுக்கு முற்பிறவி யில், வயிற்றுவலி யுண்டாகி அதனல் மரணமுற்றுன். மீண்டும் பிரமதேவ னுல் படைக்கப்பட்டு, இப்பிறவியில் தோன்றினுன் இவன்.

## புத்திரப்பேறு ஏற்படப் பரிகாரம்

30. முன்ஜன்ம வினையி னுலே மேவாது சுதர்கள் தானும்
பன்னுவீ ரதற்குச் சாந்தி பாலக னருணைக் கேகி

நன்னதி தீர்த்தம் தோய்ந்து நற்கிரி வலமாய் வந்து
அன்னவர்க் கருச்சித் தேத்தி ஐயிரு பரத்துக் கன்னம்;

30. ஜாதகனுக்கு, மேற் கூறிய வண்ணம் முற்பிறவியில் நேர்ந்த தீவினைகளால் இப்பிறவியில் புத்திரர் தோன்றார். அதற்குச் சாந்தி கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் கூறுகிறார். இந்த ஜாதகன் திருவண்ணாமலை சென்று நல்ல புண்ணியத் தீர்த்தங்களில் நீராடி, மலையை வலம் வந்து, கோயிலில் எழுந்தருளியுள்ள அருணாசலேசுவரருக்கு அருச்சனை முதலியன செய்து, போற்றி, பத்துப் பரதேசிகட்கு உணவு, தண்ணீர்;

## இதுவுமது

31. தந்துமே வுள்ளூர் சென்று சஷ்டியின் விரதங் கொள்ள
முன்வினை நீங்கு மென்றே முதித்திடும் சுதர்கள் தானே
தன்பாதி செய்வி னைக்குச் சாற்றுவோம் கிரியை
[யொன்று
கன்மசாந் திகளுஞ் செய்து காதலி பீஜந் தன்னை ;

31. முதலியவைகள் அளித்து, உள்ளூருக்குத் திரும்பி, சஷ்டி விரதத்தை மேற்கொண்டால், முற்பிறப்புத் தீவினைகள் நீங்கும் என்று சொன்னோம். புத்திர பாக்கியமும் ஏற்படும் என்று சொன்னோம். மனைவி செய்த தீவினைக்கும் பரிகாரம் ஒன்று சொல்லுவோம். கர்ம சாந்திகள் செய்து, தங்கத்தகட்டொன்றில் அம்பிகையின் பீஜட்சரத்தை ;

## இதுவுமது

32. அறுகோண மதனி லமைத்து ஆயிரம் தரம்ஜ பித்துத்
திருமக ளணிந்து கொண்டு சுக்கிர வார நோன்பு
ஒருஆண்டு கொள்வா ளாகில் ஒதுங்கிடு முனியின்
[சாபம்
பிறந்திடுஞ் சுதர்கள் தாமே பேசின மொழிகுன் றுவே.

32. அறுகோண வடிவான கோடுகளில் அமைத்து ஆயிரம் முறை அம்மந்திரத்தை உச்சரித்து அந்தத் தகட்டினை இந்த ஜாதகனின் மனைவி அணிந்து கொண்டு, வெள்ளிக் கிழமைவிரதம் ஒரு வருஷம் முடிய அநுடிப்பாளாகில் முற்பிறவியில் அவளுக்கு ஏற்பட்ட முனியின் சாபம் விலகும். புத்திரர் தோன்றுவர். நாங்கள் கூறிய சொற்கள் தவறா.

## இதுவுமது

33. சொற்படி செய்யா னாகில் சுதர்தோன்றார் தோன்றில்
[தீதாம்
சொற்படி செய்வா னாகில் தோன்றிடு மாண்பா லொன்று

மைப்படி பெண்பா லொன்று வரைகிறேந் தீர்க்க மாக
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

33. நாங்கள் கூறிய பரிகாரங்களை இந்த ஜாதகன் செய்யா விட்டால், குழந்தைகள் தோன்ரு. தோன்றினுலும் நஷ்டமாம். சொன்ன வண்ணம் செய்வானுகில் ஆண் குழந்தை யொன்றும் பெண் குழந்தை யொன்றும் தோன்றித் தீர்க்காயுளுடன் விளங்கும் என்று கூறுகிறேம். கங்கை நதியைத் தலையில் தரித்த சிவபெருமான் தேவியே! நாங்கள் கூறிய சொற்கள் தவரு.

## ஜாதகன் மரணகாலம்

34. மைந்தனின் மரண கால மறுபது வாண்டு தன்னில்
பந்தணி [1]கன்னி மாதம் பௌர்ணமி நாளி லேதான்
விந்தையாய்க் கால நாடு மேவுவான் சூலை யாலே
கந்தனை யீன்ற மாதே கழறின மொழிகுன் றுது.

34. ஜாதகன் தனது அறுபதாம் வயதில் புரட்டாசி மாதம் பௌர்ணமி யன்று சூலை நோய் ஏற்பட்டு மரண மடைவான். ஆறுமுகக் கடவுளாகிய சுப்பிரமணிய சுவாமியைப் புதல்வராகப் பெற்ற தாயே! நாங்கள் சொன்ன சொற்கள் தவருதனவாம்.

## ஜாதகன், மனைவி மறுபிறப்புக்கள்

35. பின்ஜன்மங் காஞ்சி தன்னில் பிறப்பனும் சௌராஷ்ட்ர [வமிசம்
உன்னதச் செட்டுச் செய்து ஓங்கிய குடும்பி யாவன்
கன்னியு மிவன்பின் ஞலே கலப்பளாங் கால நாடு
அன்னவள் பின்பி றப்பு அழகர்வாழ் பாண்டி தன்னில்.

35. மறுபிறப்பில், காஞ்சிபுரத்தில் சௌராஷ்டிர மரபில் பிறப்பான். உயர்ந்த தொழில்கள் பல செய்து மேன்மையான குடும்பமுள்ளவனுக வாழ்வான். இவன் மனைவியும் இவனுக்குப் பிறகு மரண மடைவாள். இவள் (ஜாதகன் மனைவி) மறுபிறப்பில், அழகர் பெருமான் கோயில் கொண்டுள்ள பாண்டிய நாட்டில்;

## ஜாதகன் யோகங்கள்

36. உதிப்பளா மிக்கு லத்தில் உயர்வான குடும்பி யாவள்
அதிபன்தன் யோகம் தன்னை யறைகிறே மினிமே லாக
மதிதசை வரைக்கும் சல்லியம் மாநிலஞ் சேத மாகும்
அதற்குமேல் பிறைபோல் யோக மவனியில் வறுமை [காணுன்.

---

1. புரட்டாசி மாதம்

36. இக்குலத்திலேயே தோன்றுவாள். உயர்ந்த குடும்ப முடைய வள் ஆவாள். ஜாதகனின் யோகங்களை இனிமேல் கூறுகிறோம். சந்திர மஹா தசை முடிவுவரை கடன் உபத்திரவம் உண்டு. விளைநிலம் விரய மாகும். அதற்குப் பின்பு, வளர்பிறைச் சந்திரன் போன்று யோகங்கள் பெருகும். உலகில் தரித்திரத்தை அறிய மாட்டான்.

## ஜாதகன் ஜனனகால தசை இருப்பு

37. அன்னவன் ஜனன காலம் அசுவினி மூன்றும் பாதம்
துன்கேது தசைமூன் றுண்டுந் திங்களு மொன்றே:
[யாகும்
முன்பாகம் விபரஞ் சொன்னோம் மொழிகிறோம் பின்பால்
[சேதி
உன்னத் வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

37. ஜாதகன், பிறக்குங் காலத்தில் அசுவினி நட்சத்திரம் மூன்றும் பாதமாகும். அப்பொழுது, கேது மகா தசையிலிருப்பு மூன்று வருஷங்களும் மாதமொன்றுமாம். இவ்வாறு, முதல் பாக விவரங்களைச் சொன்னோம். மற்ற விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுகிறோம். உயர்ந்தவராகிய யானைமுகக் கடவுளைப் புதல்வராகப் பெற்ற உத்தமியே! மேலுங் கேட்பாயாக.



# ஜாதகம் 76

## ஜனனகால கிரகநிலை

1. கன்னியுஞ் ஜனன [1]மாகக் கவிமகன்[2] சேயு[3] மூன்றில்[4]
புந்தி[5]யு மஞ்சி[6] லாக புரவியோன்[7] கேது நாலில்[8]
மைந்தனு[9] மேழி [10]லாக மதிகுரு வீரா[11] ருக
முந்தின கயிறு[12] பத்தில்[13] மகமது முதல்பா தத்தில் ;

1. கன்னி ஜன்ம லக்கினமாகவும், சுக்கிரன் அங்காரகன் இலக்கினத்துக்கு மூன்றுமிடமாகிய விருச்சிகத்திலும், புதன் ஐந்தாமிடமாகிய மகரத்திலும் ஏழுபரித்தேரோனாகிய சூரியன் கேது நான்காமிடமாகிய தனுசிலும், சனி ஏழாமிடமாகிய மீனத்திலும், சந்திரன் குரு பனிரண்டாமிடமாகிய சிம்மத்திலும், இராகு மிதுனத்திலும் மக நட்சத்திரம் முதல் பாதத்திலும்

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சனி | | | ராகு |
| | இராசி சக்கரம் | | |
| புதன் | | | சந்திரன் குரு |
| சூரியன் கேது | சுக்கிரன் அங்காரகன் | | லக்கினம் |

## ஜாதகன் வீட்டு அடையாளங்கள்

2. இத்தகை நவக்கோள் நின்று லியம்புவீர் பலனை [யென்று
சத்தியுங் கேட்கும் போது சடைமுனி புகலு கின்றார்

1. இலக்கினம்
2. சுக்கிரன்
3. அங்காரகன்
4. ஈண்டு-விருச்சிகம்
5. புதன்
6. ஈண்டு-மகரம்
7. சூரியன்
8. ஈண்டு-தனுசு
9. சனி
10. ஈண்டு-மீனம்
11. ஈண்டு-சிம்மம்
12. இராகு
13. ஈண்டு - மிதுனம்

வித்தக ஞணுஞ் ஜன்மம் மேல்வாசல் வடதென் வீதி
உத்தரம் சந்து முண்டு உயர்சிவ ணருகில் தங்கும்;

2. இவ்விதம் நவக்கிரகங்களும் நிற்குமானுல், பிறந்த ஜாதகருக்குப் பலன்கள் சொல்லுவீர் என்று பார்வதிதேவியார் கேட்ட பொழுது, சடை முடிதரித்த முனிவர் ஒருவர் சொல்லுகின்ருர். இந்த ஜாதகர் ஆண் பிறப்பு. இவன் பிறந்த வீடு வடக்குத் தெற்கான தெருவில் மேற்குத் திசை நோக்கிய வாயிலை யுடையதாகும். வீட்டுக்கு அருகில் மேன்மை பொருந்திய சிவ பெருமான் கோயில் கொண்டுள்ளார்.

## இதுவுமது

3. மாரியும் காளி தங்கும் மதயானை கோஷ்டம் நிற்கும்
தீரமாய்த் தென்பால் மார்க்கம் தென்மேல் பால் கணேச
[னுண்டு
கூறிய வடையா ளத்துள் குழவியும் நான்காம் ஜன்மம்
பாரியா யுதிப்பா ஞகும் பகருவோம் குடும்பச் சேதி.

3. மாரியம்மன் கோயிலும், காளிதேவியின் ஆலயமும் யானைமுகக் கடவுள் கோயிலும் உண்டு. வீட்டுக்குத் தெற்கே ஒரு சாலை யுண்டு. தென்மேற்குத் திசையில் ஒரு விநாயகர் ஆலயம் உள்ளது. சொல்லப்பட்ட இந்த அடையாளங்கள் கொண்ட இடத்தில் இந்த ஜாதகன் தன் தந்தைக்கு நான்காம் பிறப்பாகப் பெருமையுடன் தோன்றுவான். இவன்து குடும்பச் செய்திகளைக் கூறுவோம்.

## தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணைவ ரைந்தி லாணிரண்டு கன்னி
[யொன்று
இந்தவர் விருத்தி யென்ருேம் இயம்பின ஆண்பால்
[வேருய்
முந்தியே செல்வா ஞகும் மொழிகிருே பின்பால் சேதி
வந்தவன் தந்தை சேதி யறைகிருே மினிமேலாக.

4. ஜாதகனுடைய தந்தையுடன் பிறந்தவர்கள் ஐவரில் ஆண்கள் இருவர்; பெண் ஒருத்தி. இவர்கள் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர் என்று சொன்னேம். மேற் சொல்லப்பட்ட தந்தையின் சகோதரன் ஆதியிலேயே குடும்பத்திலிருந்து பிரிந்து தனியாகச் சொல்லுவான். அவன் செய்திகளைப் பிற்பாகத்தில் சொல்லுகிருேம். இனி, ஜாதகனின் தந்தையின் செய்திகளைச் சொல்லுகிருேம்.

## தந்தையின் செய்திகள்

5. சித்திரை மீன ராசி ஜனிப்பனு மூகை சாலி
பத்தினி நேய னுகும் பதர்குண மில்லா னுகும்
சத்திய மென்ரு லச்சம் சாமள தேகி யாவன்
நத்திேனூர்க் குதவி செய்வன் நயம்படக் கூறு வானும்.

5. சித்திரை (நட்சத்திரத்தில்) மாதம் மீன லக்கினத்தில் பிறப்பான். இந்த ஜாதகனின் தந்தை எந்த விஷயத்தையும் ஊகித்து உணரும் ஆற்றல் பெற்றவன். மனைவிபால் விருப்பமுடையவன். அற்பக் குணங்கள் இல் லாதவன் ஆவான். சத்தியத்துக்குப் பயப்படுவான். ச்யாமள நிறம் பொருந்திய தேகம் உடையவன். துன்பப்பட்டு இவனிடம் வந்து யாசிப்ப வர்களுக்கு உதவி செய்வான். நயமாகப் பேசுவான்.

## இதுவுமது

6. முகமதில் வடிவு முண்டு முண்டக ரேகை யுண்டு
இகபரன் பத்தி பூண்பன் இடர்செய்யான் யாவ ருக்கும்
ஜகமதில் நல்லோ னுவன் தறித்தொழில புரிவா னுகும்
உகமையாய்ப் பேசு வானும் உறுதியில் லாத நெஞ்சம்.

6. இவனது முகத்தில் ஒளியுண்டு. கையில் பத்ம ரேகை இருக்கும். கடவுளிடம் பக்தி கொள்ளுபவன். எவருக்கும் துன்பஞ் செய்ய மாட்டான். உலகில் அனைவரிடமும் நல்லவனுகப் பழகுவான். நெசவுத் தொழில் செய்வான். உவமை காட்டிப் பேசுவான். திடமில்லாத மனமுடையவன்.

## இதுவுமது

7. கடன்கொள்வன் நிவர்த்தி செய்வன் காளைகள் விருத்தி [யல்பம்
உடன்படான் பிழைக ளுக்கு உயர்தந்தம் பிணியும் [கொஞ்சம்
விடவாக்குச் சீல னுவன் வித்தையுஞ் சமம தாகும்
படையில்முன் செல்லா னுகும் பகருவோ மிவன்முன் [ஜன்மம்.

7. கடன் கொள்ளுவான். நிவர்த்திசெய்து விடுவான். காளைமாடு கள் விருத்தி சிறிதே யுண்டு. தவருன செயல்கள் செய்யச் சம்மதிக்கமாட் டான். பல் நோயும் சிறிது ஏற்படும். விஷவாக்குடையவன். (அஃதாவது, ஏதாவது, கெடுதலாகக் கூறினுல் அங்ஙனமே பலித்துவிடும்). நல் லொழுக்கமுள்ளவன். சமமான கல்வியறியுடையவன். சண்டையில் முன் செல்லமாட்டான். இவன் முற்பிறவி பற்றிக் கூறுவோம்.

## தந்தையின் முற்பிறவி

8. தென்திசைப் பெண்ணை யோரம் சேராம்பனைப் பட்டி [தன்னில்
அன்னவன் தீயின் வமிசம் அணுகியே கிருஷி செய்து
பொன்னொடு பணிதி யுண்டாய்ப் புகழுடன் வாழ்ந்து [மேதான்
முன்வினை யில்லா னாகி யொதுங்கினான் கால நாடு.

8. தெற்குத்திசையில், பெண்ணையாற்றின் கரையோரமாக உள்ள சேராம்பனைப்பட்டி என்னுமோர் ஊரில், இந்த ஜாதகன் தந்தை வன்னியர் மரபினனாகப் பிறந்தான். விவசாயத்தொழில் செய்து, செல்வம் ஆபரணம் முதலியன பெற்று, கீர்த்தியுடன் முற்பிறவித் தீவினை இல்லாமல் வாழ்ந்து மரணமடைந்தான்.

## ஜாதகன் இயல்புகள்

9. சிரநான்கோன் வரையப் பட்டு ஜனித்தவ னிவனே [யென்றோம்
உரைத்தவிக் குணத்தா னுக்கு ஜனிப்பனா மிந்தப் பாலன்
திருமகன் நிறங்கு ணத்தைச் செப்புவேன் சிவந்த [மேனி
பெருமையும் புகழு மேற்பன் புயபல முடைய னாகும்.

9. நான்கு திருமுகங்களையுடைய பிரமதேவனால் மீண்டும் படைக்கப் பட்டு இப்பிறப்பில் பிறந்தவன் என்று சொன்னோம். சொல்லப்பட்ட இந்தக் குணங்களை யுடையவனுக்கு இந்த ஜாதகன் புதல்வனாகப் பிறப்பான். இவனுடைய நிறம் குணங்கள் முதலியவற்றைச் சொல்லுவோம். சிவந்த உடலுடையவன். பெருமையும் கீர்த்தியும் அடைவான். தோள்வலி யுடையவன்.

## ஜாதகன் குணநலங்கள்

10. கல்விமான் கடவுள் பக்தி கனத்தவர் நேசம் கொள்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் இடரான புத்தி [யில்லான்.
சொல்லது சுருக்க மாகும் துணைவரை யாத ரிப்பன்
எல்லைகள் சேர்ப்பா னாகும் யாரையும் வசியம் [கொள்வன்.

10. கல்வியறிவுடையவன். கடவுள் பக்தியுடையவன். பெரியோர் நேசம் கொள்ளுவான். கேட்பவர்கட்கு இல்லையென்று சொல்லமாட்டான்.

கெட்டபுத்தி யில்லாதவன். சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுவான். உடன் பிறந்தோரை ஆதரிப்பான். நிலபுலங்களைச் சேர்ப்பான். எத்தகைய இயல்புடையவரையும் வசப்படுத்திவிடுவான்.

## ஜாதகனின் இயல்புகள்

11. *தந்தைநாள் பூமி நாஸ்தி தானமும் தந்திடு வானும்*
*மந்திரப் வைத்தி யங்கள் மர்மநூ லறிவா னுகும்*
*கந்தன்மேல் பக்தி பூண்பன் கலைத்தொழில் செட்டும்*
*[செய்வன்*
*தந்தனம் கொடுக்கல் வாங்கல் சாதமும் குறைவு*
*[ருதான்*

11. தன் தந்தை நாள் சொத்துக்கள் எவையுமில்லாதவன். தான தருமங்கள் செய்வான். (அவைகளை விற்று ஒழித்துவிடுவான்.) மந்திர சாஸ்திரங்கள், வைத்திய சாஸ்திரங்கள், பல இரகசிய நூல்கள் இவைகளை நன்கு உணர்பவனுவான். முருகப்பெருமான்மீது பக்திகொள்ளுவான். சிற்பம் முதலான கலைத்தொழில் வர்த்தகம் செய்வதில் வல்லவன். வியாபாரமும் செய்வான். தன்னிடமுள்ள பணத்தைப் பிறருக்குக் கொடுத்தல் வாங்குதல் செய்வான்...போஜன வசதி குறையாதவன்.

## ஜாதகன் முன்னேன் செய்தி

12. *இவனுடைத் துணைவர் தம்மை யியம்பவோ மாண்பா*
*[லிரண்டு*
*அவர்களும் விருத்தி யென்றே மறிவிப்போம்*
*[முன்னேன் சேதி*
*தவசிகட் கன்ன மீவன் தாட்சணிய னுணச்சல் தேகி*
*சிவபக்தி யுடைய னுகும் சிந்தையும் நல்ல தாகும்.*

12. இவனுடன் பிறந்தவர்கள்பற்றிச் சொல்லுவோம். ஆண்கள் இருவர் தோன்றுவர். அவர்கள் இருவரும் விருத்தியடைவர் என்று கூறினேம். அவர்களில் ஜாதகனுக்கு முன்பிறந்தவன் ஒருவனுவான். அவன் செய்திகளை இனிக் கூறுவோம். தவம் செய்பவர்கட்கு உணவு அளித்து உபசரிப்பான். தாட்சண்யமுடையவன். மெலிந்த சரீரமுடையவன். சிவபெருமானிடம் பக்திகொண்டவன். நல்ல மனமுடையவன் ஆவான்.

## இதுவுமது

13. *வித்தையுஞ் சமம தாகும் வீண்பழி யேற்கா னுகும்*
*சுத்தவா னடக்க வார்த்தை தொல்புவி வறுமை காணுன்*

பத்தினி யொன்றே கீழ்ப்பால் பகருவோம் சுதராண் [மூன்று
வித்தகி பண்பா லிரண்டு விருத்தியாம் பால னுக்கு.

13. சமமான கல்வியறிவுடையவன். வீணான பழிச்சொற்களை ஏற்க மாட்டான். தூய்மையுள்ளவன். பணிவுடன் கூடிய சொற்களைப் பேசுவான். உலகில் தரித்திரத்தை உணரமாட்டான். இவனுக்கு மனைவி ஒருத்தியே. அவள், கிழக்குத் திசையிலிருந்து வருவாள் என்று சொல்லுவோம். இவனுக்கு ஆண் குழந்தைகள் மூவரும் பெண் குழந்தைகள் இருவரும் தோன்றித் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர்.

## இதுவுமது

14. சல்லியப் பாதை காணான் தறித்தொழில் மேன்மை [செய்வன்
நல்லவ னாகி வாழ்வன் நாயகன் தீர்க்க ஜீவி
வெல்லுவா னெதிரி தன்னை விகடங்கள் கூறா னாகும்
அல்லலைத் தவிர்க்கு மெங்க ளாத்துமத் தாயே கேளாய்.

14. கடன் தொந்தரவுகள் அறியாதவன். நெசவுத்தொழிலை மேன்மையாகச் செய்வான். எல்லோருக்கும் நல்லவனாக வாழ்வான். இவன் தீர்க்கமான ஆயுளுடையவன் ஆவான். எதிரிகளை வெற்றிகொள்ளுவான். குதர்க்கமாகப் பேசமாட்டான். துன்பங்களைப் போக்கும் எங்கள் உயிருக்குயிரான பார்வதியம்மையே! மேலும் கூறுவன்வற்றைக் கேட்பாயாக.

## ஜாதகனின் இளைய சகோதரனது செய்தி

15. அதற்குப்பின் துணைவன் சேதி அடாவடி கொஞ்ச முண்டு
குதர்க்கங்கள் கொஞ்ச முண்டு கூறுவா னிரண்டு [வார்த்தை
நிதிசேர்ப்பன் செலவு செய்யான் நினைத்தகா ரியமு [டிப்பன்
புதையலும் வைப்பா னாகும் பூமியும் பரிபா லிப்பன்.

15. ஜாதகனின் இளைய சகோதரன் செய்திகளைக் கூறுவோம். அடாவடியாகப் பேசும் இயல்பு சிறிது உண்டு. குதர்க்கமாகப் பேசுங்குணமும் கொஞ்சம் உண்டு. முன்னுக்குப் பின் விரோதகப் பேசுவான். செல்வத்தைச் சேர்ப்பான். செலவு செய்யமாட்டான். மனத்தில் எண்ணியவற்றைச் செய்துமுடிக்க வல்லவன். பூமியில் பொருளைப் புதையலாக வைப்பான், நிலபுலங்களைப் பரிபாலிப்பான்.

## இதுவுமது

16. பாரியு மொன்றே யுத்ரம் பாலர்க ளாண்பா லொன்று
நாரிகள் நால்வ ராகும் நால்வரும் தீர்க்க ஜீவி
வேறுதீங் கில்லா னாகும் விசனமெப் போதுங் காணன்
தீரவான் வர்ம னவன் தீர்க்கமாம் வயது மேற்பன்.

16. இவனுக்கு மனைவி ஒருத்தியே. ஆண் குழந்தை யொன்றும், பெண் குழந்தைகள் நான்கும் தோன்றும். இவர்கள் அனைவரும் தீர்க்க மான ஆயுளுள்ளவராவர். எவ்விதத் தீவினையும் இல்லாதவன். தன் வாழ்க்கையில் வருத்தப்படும் நிலையையே எப்பொழுதும் அறியாதவன். மனத்தில் தைரியம் உடையவன். பிறருக்கு எளிதில் எதனையும் வெளிப் படையாகக் கூறுமல் மறைக்கும் இயல்பினன். தீர்க்கமான ஆயுளை அடை வான்.

## இளைய சகோதரியின் செய்தி

17. சிலகால மொன்ருய் வாழ்ந்து
சூரியன் தசையில் வேருய்க்
குலவுவா னென்று சொல்வோம்
கூறுவோம் பின்பால் சேதி
தலைவன்பின் கன்னி யொன்று
சாற்றுவோம் தீர்க்கமாக
அலைகடல் துயின்ருேன் தங்காய்
அறைந்தவிம் மொழிகுன்ருவே

17. சிலகாலம் ஜாதகன் தன், இளைய சகோதரனுடனும் சேர்ந்து வாழ்ந்து, சூரியமஹாதசை முடிவுக் காலத்தில் வேருய்ப் பிரிந்து செல் லுவான் என்று சொல்லுவோம். இவனைப்பற்றிய மற்றைய விவரங்களை இரண்டாம்பாகத்தில் சொல்லுவோம். ஜாதகனுக்குப் பின்தோன்றிய பெண் ஒருத்தியுண்டு. அவள் தீர்க்கமான ஆயுளுடையவள். அலைகளையுடைய திருப்பாற்கடலில் அறி துயில் கொண்ட திருமாலின் தங்கையாகிய பார் வதிதேவியே! நாங்கள் கூறியவை தவரு.

## ஜாதகனின் திருமணக்காலம் : மனைவியின் இயல்பு

18. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவேன் இருப [தாண்டில்
காதலி கீழ்ப்பால் நேரும் கழறுவோ மவள்கு ணத்தைச்
சூதிலாள் மாநி றத்தள் சுந்தர முடைய ளாகும்
மேதினில் நல்லோ ளாவள் வெஞ்சினம் வெளிக்காட் [டாதாள்,

18. ஜாதகனின் திருமணக்காலம் பற்றிச் சொல்லுகிறேம். அவனது இருபதாம் வயதில் மனேவி கிழ்த்திசையிலிருந்து வாய்ப்பாள். அவள் குணங்களைப் பற்றிக் கூறுவோம். வஞ்சனே யில்லாதவள். மாநிறமுடைய வள். அழகுடையவளாவள். உலகில் எல்லோரும் நல்லவள் என்று கூறும் நிலேயுள்ளவள். கோபத்தை வெளிப்படுத்தாதவள்.

## இதுவுமது

19. *சீலியாம் விரத மேற்பள் ஜனங்களுக் குதவி செய்வள்*
*பால்பாக்கிய முடைய ளாகும் பதர்குண மில்லா ளாகும்*
*காலத்தை யறிந்து ரைப்பள் கணவனுக் கினிய ளாகும்*
*வேல்விழி தீர்க்க ஜீவி வித்தகி கேட்டி டாயே.*

19. நல்ல ஒழுக்கமுள்ளவளாவாள். விரதங்களே அநுஷ்டிப்பாள். உலக மக்களுக்கு உதவி செய்யும் இயல்பினள். பால் பசு பாக்கியமுள்ள வளாவாள். அற்பகுணம் இல்லாதவள், வருங்காலத்தை யுணர்ந்து பேசு வாள். கணவனுக்கு உகந்தவளாவள். வேல் போன்ற கண்களேயுடைய இவள் தீர்க்கமான ஆயுளுடையவள் ஆவாள். தாயே! கேட்பாயாக.

## புத்திரப் பேறும், ஜாதகனின் முற்பிறவியும்

20. *சுதர்களு மெழுவர் தோன்றும் தீர்க்கமா மாண்பா*
*[விரண்டு*
*மதிமுகப் பெண்பா விரண்டு வறைகிறேம் தீர்க்க மாகப்*
*புதல்வனு முன்ஜன் மத்தைப் புகலுவோம் போரூர்*
*[தன்னில்*
*நிதிமிக வுடையா னுக்கு நேர்ந்தனன் வடுகச் சேயாய்.*

20. குழந்தைகள் ஏழு பேர் தோன்றுவார்கள். அவர்களில் இரு ஆண் குழந்தைகளும், சந்திரன்போன்று ஒளியுள்ள முகத்தையுடைய பெண் குழந்தைகள் இருவரும் தீர்க்கமான ஆயுளுடன் விளங்குவர் என்று சொல் லுகிறேம். இனி, ஜாதகன் முற்பிறவி பற்றிச் சொல்லுவோம். திருப் போரூரில், செல்வம் மிகுதியாகவுடைய வடுகமரபினன் ஒருவனுக்குப் புதல் வனுகப் பிறந்தான்.

## ஜாதகன் யோகங்கள்

21. *பலவிதக் செட்டுச் செய்து பாலகன் மணமில் லாமல்*
*குலவினுன் கால நாடு [1]குறைதலே வரையப் பட்டு*
*நிலமதி லுதிப்பா ளுகும் நுவலுவோ மிவன்தன் யோகம்*
*நலமது சித்திரம் செய்வன் சுக்கிரன் தசையி லேதான்;*

1. பிரமதேவன் ஐந்துமுகங்களில் ஒன்று சிவபெருமானுல் குறைக்கப் பட்டமையின் இங்ஙனம் கூறப்பட்டது.

21. பலவித தொழில்கள் செய்து, மணமாகாமலே வாழ்ந்திருந்து இறுதியில் மரணமடைந்தான். மீண்டும், பிரமதேவனால் படைக்கப்பட்டு இவ்வுலகில் இப் பிறப்பாகப் பிறப்பவனாவான். இவனது யோகங்களைப் பற்றி இனிச் சொல்லுவோம். வீட்டை அழகுபடுத்துவான். சுக்கிரமஹா தசையில்;

## இதுவுமது

22. தரணிகள் சேர்க்கை யுண்டு சாராள்கள் விருத்தி யுண்டு
உறன்முறை மதிப்புக் கொள்ளல் உயர்வான புத்தி
[யுண்டு
பறைபள்ளு சேர்தலுண்டு பொன் பாத்திரம் சேர்த
[லுண்டு
பொருளது பெருக்க முண்டு புண்ணிய சாலி
[கேளாய்.

22. நிலபுலங்கள் சேரும். ஏவலாட்கள் பெருகுவார்கள். இவன் பந்துக்கள் இவனைப் பெரிதும் மதிப்பர். உயர்ந்த புத்தியுடையவன் ஆவான். பள்ளர், பறையர்களைப் பணியாட்களாகச் சேர்ப்பான். பாத்திரங்கள், பொன் ஆபரணங்களைச் சேர்ப்பான். செல்வத்தைப் பெருக்குவான். புண்ணிய சாலியே! மேலுங் கூறுவனவற்றைக் கேட்பாயாக.

## பாஸ்கரயோகமும் வாசியோகமும்

23. யோகமெவ் விதமாய்ச் சொன்னீ ருரைப்பீர்க ளந்தச்
[சங்கை
நாகமும் பத்தி லாக நற்காரி யேழில் தங்கப்
பாகனு மஞ்சி லாகப் பாஸ்கர யோக மொன்று
தோகையே வாசி யோகம் செப்புவோம் பால னுக்கு.

23. மேற்கூறிய யோகங்கள் ஜாதகனுக்கு ஏற்படும் என்று எங்ஙனம் சொன்னீர்கள்? அந்த விவரங்களைக் கூறுங்கள். இராகு பத்தாமிடத்திலும் சனி ஏழாமிடத்திலும், புதன் ஐந்தாமிடத்திலும் இருப்பதால் பாஸ்கரயோகம் ஒன்றும், வாசியோகம் ஒன்றுமாக இரண்டு யோகங்கள் இந்த ஜாதகனுக்கு ஏற்படுமென்று சொல்லுவோம்.

## யோகங்களின் பலன்

24. இருவகை யோகத் தாலே இடரில்லா வாழ்வா னம்மா
குறைவுரு வன்ன மென்றேம் குவலயஞ் சல்லியங்
[காணான்
இருவில்லஞ் செய்வா னுகும் ஏவலா ளுடைய னுகும்
பெருவயி றேனைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

24. மேற் கூறப்பெற்ற இரண்டு வகை யோகங்களாலும் துன்பமில்லாமல் வாழ்வான். போஜன சுகம் குறைவுருதவன் என்று சொன்னேம். கடன் தொந்தரவில்லாதவன். இரண்டு வீடுகள் கட்டுவான். பணியாட்களுடையவன். பெருத்த வயிற்றினையுடைய விநாயகக் கடவுளைப் பெற்ற புண்ணியவதியே! கேட்பாயாக.

## ஜாதகன் தாயின் செய்தி

25. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள்
[மாஞ்சி வப்பள்
அன்னமு மன்பா யீவள் அடிசிலுக் கினிய ளாகும்
அன்னியர் குற்றம் சொல்லாள் ஆளன்தன் மனத்துக்
[கேற்ருேள்
அன்னவள் கோபம் கொஞ்சம் அணுகிடும் பித்தச் சூடு.

25. ஜாதகன் தாயார் செய்திகளைக் கூறுவோம். அழகுடையவள். கருஞ்சிவப்பு நிறமுள்ளவள், பிறருக்கு அன்புடன் உணவு அளிப்பாள். சிறந்த உணவு வகைகள் சமைப்பதில் வல்லவள். பிறர்மீது குற்றங்கூருதவள். கணவன் மனத்துக்குத் தக்கவள், சிறிதே கோபமுடையவள். இவள் தன் உடலில் பித்தச்சூட்டு நோயுள்ளவள்.

## தாயின் உடன் பிறந்தோர் செய்தி

26. காரக தேகி யாவள் கட்டுரை கூரு ளாகும்
நாரிக்குத் துணைஆ ணென்று நங்கைமா ரிருவ ராகும்
கூறுவோந் துணைவன் சேதி குலமதிப் பாக வாழ்வன்
நாரியு மிரண்டு நேரும் நற்சுத ராண்பா லிரண்டு.

26. காரக தேகமுடையவள். கட்டிப்பேசும் இயல்பில்லாதவள். இவளுக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரிகள் இருவரும் தோன்றித் தீர்க்கமாவர். இனி, தாயின் உடன்பிறந்தவனைப் பற்றிக் கூறுவோம். குலத்திலுள்ளார் மதிக்கும்படி வாழ்க்கை நடத்துவான். இவனுக்கு மனைவியர் இருவராவர். இரண்டு ஆண் குழந்தைகள் உண்டு.

## தாயின் சகோதரன் செய்தி

27. கன்னிமா ரறுவ ருகும் கல்விமா னுகை சாலி
தன்மனம் கபடு மில்லான் தனமது அதிகம் காணுன்

சொன்னசொல் காப்பா னுகும் சொல்லது அதிக
[மேற்பன்
அன்னிய ருறவு கொள்வன் யாவர்க்கும் நல்லோ
[னுவன்.

27. பெண்களும் அறுவர் தோன்றுவர். கல்வியறிவுடையவன். ஊகித்து உணரும் சக்தியுடையவன். மனத்தில் கபடம் இல்லாதவன். அதிகச் செல்வம் காணமாட்டான். சொன்ன சொற்களைக் காப்பாற்றுவான். பிறர் தன்னைப்பற்றி அதிகமாகப் புகழ்ந்து கூறும் சொற்களை ஏற்பான். அய லார் என்று கருதாமல் யாவரிடமும் தொடர்பு கொள்ளுவான். எல்லோருக் கும் நல்லவனுக வாழ்வான்.

## தாயின் மறுபிறவி

28. பின்பாகம் விபர மாகப் பேசுவோந் தாயே யாங்கள்
அன்னையின் முன்ஜன் மங்க ளாதியில் வைசியச்
[சேயாய்ப்
பொன்மிக வுடையா னுக்குப் பிறந்துமே வறுமை யின்றி
முன்வினை யில்லா ளாகி ஒதுங்கினுள் கால நாடு.

28. இரண்டாம் பாகத்தில் அவனையைப்பற்றிய மற்றைய விவரங்களை, தாயே! நாங்கள் சொல்லுவோம். இனி, ஜாதகன் தாயின் முற்பிறவி பற்றிச் சொல்லுவோம். வைசிய மரபில், செல்வம் மிகுதியாகவுடைய ஒருவனுக் குப் புதல்வியாகப் பிறந்து, தரித்திரம் இல்லாமல், முற்பிறப்புத் தீவினையும் இல்லாமல் வாழ்ந்து, மரண்முற்ருள்.

## அன்னையின் மறுபிறவி

29. வேதனுல் வரையப் பட்டு விளங்குவா ளிவளே
[யென்ருேம்
ஒதுவே னிவள்பின் ஜன்மம் உயர்மலை தவளை தன்னில்
நீதியா யருகர் வர்க்கம் நேருவா ளென்று சொல்வோம்
போதக வானை பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

29. மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் இக் குலத்தவளாகத் தோன்றுவாள் இவள் என்று சொன்னேம். இவளுடைய (தாயின்) மறுபிறவி பற்றிக் கூறுவேன். உயர்ந்ததாகிய தவளேச்வரத்தில், சமணமரபில் தோன்றுவாள் என்று சொல்லுவோம். ஞானவானுகிய விநாயகக் கடவுளைப புதல்வராகப் பெற்ற புண்ணியவதியே! மேலும் கேட் பாயாக.

## ஜாதகன் தகப்பனார் மரணகாலமும் மறுபிறப்பும்

30. முப்பது ஆண்டு தன்னில் விளம்புவோம் தந்தை கண்டம்
செப்புவோ மிவன்பின் ஜன்மம் திருவிடை மருதூர்
[தன்னில்
ஒப்புவான் வேளாண் வமிசம் உயர்வான குடும்பி யாவன்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

30. ஜாதகனது முப்பதாம் வயதில் தகப்பனுருக்கு மரணம் நேரும் என்று சொல்லுவோம். இவன் மறுபிறப்பில் திருவிடை மருதூரில் வேளாளர் மரபில் தோன்றி உயர்ந்த குடும்பமுடையவனுவான். கங்கையைச் சடைமுடியிலணிந்த சிவபெருமான் மனைவியாகிய பார்வதிதேவியே! நாங்கள் கூறிய சொற்கள் தவறு.

## ஜாதகன் தாய், ஜாதகன் ஆகியோர் மரண காலங்கள்

31. நாற்பது நாலு வாண்டில் நமன்பதி யன்னை சேர்வன்
ஏற்கவே வறுப தாண்டில் எழில்மீன மாதம் தன்னில்
தீர்ப்பாக ஜாத கர்க்குச் செப்புவோ மார கங்கள்
ஆர்க்கவே பராசர் சொல்வார் அந்தகன் (குண)
[கண்டமுண்டே.

31. ஜாதகனது நாற்பத்து நான்காம் வயதில் தாய் மரணம் அடைவாள். தனது அறுபதாம் வயதில் பங்குனி மாதத்தில் ஜாதகனுக்கு மரணம் ஏற்படும். இவ்வாறு முனிவர் கூற, பாரசரர் என்னும் முனிவர் ஒன்று சொல்லுவார், மரண மடையத்தக்க கண்டம் இடையில் ஜாதகனுக்கு ஏற்படும்.

## ஜாதகன் மறுபிறவி

32. வந்ததோர் வினைகள் நீங்கி வயதுமே தீர்க்க மெய்தும்
பிந்திய ஜன்மம் சொல்வேன் பிருதிவி தலத்தி லேதான்
முந்தின குலமு திப்பான் மேதினில் வறுமை காணுன்
இந்திர னிறைஞ்சு மாதே இதுபூர்வ பாக மாமே.

32. சிறிது காலத்தில் தனக்கு வந்த துன்பங்கள் விலகி, தீர்க்க ஆயுளுடையவனுவான். ஜாதகனின் மறுபிறவி பற்றி இனிச் சொல்லுவேன். காஞ்சீபுரத்தில் அந்தணர் மரபில் தோன்றுவான். உலகில் தன் வாழ்நாள் முழுதும் தரித்திரத்தை யறிய மாட்டான். இந்திரன் வணங்குகின்ற பார்வதியம்மையே! இதுவரை யாங்கள் கூறியது முதல் பாகமாம்.

## ஜனனகாலத் தசையிருப்பு

33. ஜனித்திடு காலம் தன்னில் செம்பாம்பு தசையைந்
[தாண்டும்
குனித்திடும் திங்க ளாறுங் கூறுவோம் பலனை யாங்கள்
வினைவரும் ஜாத கர்க்கு விகுதியாய்க் கண்டம் நேரும்
தனமது செலவு முண்டு சாற்றுவோம் பின்பால் சேதி.

33. ஜாதகன் ஜனன காலத்தில் கேது மகா தசையில் இருப்பு ஐந்து ஆண்டுகளும் மாதங்கள் ஆறுமாம். அந்தப் பகுதிக்குப் பலன்களைச் சொல்லுவோம் நாங்கள். ஜாதகனுக்குத் துன்பங்கள் பல வரும். மரண மடையத் தக்க கண்டம் நேரும். பணச் செலவு ஏற்படும். இனி, மற்றவை களைப் பின் பாகத்தில் சொல்லுவோம்.

———

# ஜாதகம் 77

## ஜனனகால கிரகநிலை

1. மதி[1] புகர்[2] அரவு[3] சீயம்[4] மால்[5]ரவி[6] மாதை[7] யாக
விதி[8]கேது சாடி[9] யாக வேந்தனு[10] நந்தி[11] யாக
சதிசேயு[12] மேரு[13] வாக ஜன்மமு[14] கன்னி யாக
இதுவிதக் கோளு[15] நின்ரு லியம்புவீர் பலனை
[யென்று;

1. சந்திரன், சுக்கிரன் இராகு சிம்மத்திலும், புதன் சூரியன் கன்னியிலும், சனி கேது கும்பத்திலும், குரு ரிஷபத்திலும். அங்காரகன் தனுசிலும், ஆக இவ்விதம் நவக்கிரகங்களும் நிற்க கன்னியர் லக்கினத்தில் தோன்றிய ஜாதகருக்குப் பலன்களைக் கூறுங்கள் என்று.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| சனி கேது | இராசி சக்கரம் | | |
| | | | சந்திரன் சுக்கிரன் ராகு |
| அங்காரகன் | | | லக்கினம் புதன் சூரியன் |

1. சந்திரன்
2. சுக்கிரன்
3. இராகு
4. சிம்மம்
5. புதன்
6. சூரியன்
7. கன்னி
8. சனி
9. கும்பம்
10. குரு
11. இடபம்
12. அங்காரகன்
13. தனுசு
14. இலக்கினம்
15. கிரகம்

## ஜாதகன் பிறக்கும் வீட்டு அடையாளங்கள்

2. காதலி கேட்கும் போது கௌசிகர் கூறு கின்றார்
மேதினி லாண்பால் ஜன்மம் விளங்குமில் வடபால்
[நோக்கும்
ஆதிமால் தென்கீ ழாகும் அரசர்கள் கெடியு முத்தரம்
கோதிலா துருவம் கீழ்ப்பால் கொண்டலு மேல்பால்
[தங்கும்

2. பார்வதிதேவி கேட்கவே அங்கிருந்த ஏழு முனிவர்களில் ஒருவராகிய கௌசிக முனிவர் சொல்லுகின்றார், இந்த ஜாதகர் ஆண் பிறப்பு. பிறக்கும் வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்குத் திசையை நோக்கிய வாயிலை யுடையது. முந்தியவராகிய மஹா விஷ்ணு தென் கீழ்த் திசையில் கோயில் கொண்டிருப்பார். அரசர்கள் அரண்மனை வீட்டுக்கு வடக்கில் உண்டு. வீட்டுக் கிழக்கில் பழைய கோட்டை யொன்றுண்டு. நிலமேகம் போன்று திருமேனி யுடைய திருமால் ஆலயம் ஒன்றும் மேற்குத் திசையில் உள்ளது.

## இந்நூலில் கூறப்படுவன இவையெனல்

3. இத்தகை யடையா ளத்துள் இலகிய பேரூர் தன்னில்
வித்தக னேழாஞ் ஜன்மம் விளங்குவான் கௌரி வர்க்கம்
பெற்றதாய் தந்தை யோகம் பேதையர் புத்திர யோகம்
சித்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல்
[தன்னில்

3. இவ்விதம் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள ஒரு பேரூரில் ஜாதகன் தனது தந்தைக்கு ஏழாம் பிறப்பாகக் கௌரிக வம்சத்தில் தோன்றுவான். ஜாதகன் பெற்றோர்கள், மனைவி, புதல்வர் யோகங்கள், முற்பிறவி மறுபிறவி விவரங்கள் ஆகிய இவை யனைத்தையும் பற்றி இந்தச் சோதிட நூலில் நாங்கள் கூறுவோம்.

## தந்தை குணங்கள்

### வேறு

4. தந்தைகுணம் கூறு கின்றோம் சிவந்தமேனி
சரசமொழி யீகைகொஞ்சம் தனவா னாகும்
தந்தைமொழிக் கிடருரையான் இல்லம் செய்வன்
தனதானியச் செட்டு செய்வன் சகடு மேற்பன்

தந்தமது தரளமொக்கும் பொருமை கொஞ்சம்
தாயிரண்டு முன்தாய்க்கு ஜனித்த பாலன்
தன்கரத்தில் ஊனமுள்ளான் சுகபுசிப்புச்
சாராள்க ளுடையவனும் சமர்த்தாய் வார்த்தை.

4. ஜாதகன் தந்தையின் இயல்புகளைச் சொல்லுகின்றோம். சிவந்த உடலுடையவன். சரசமான சொற்கள் பேசுவான். கொடைக் குணம் சிறிதே உள்ளவன். செல்வவான். தன் தகப்பனுர் சொற்களுக்கு மாறு உரையான். புதிய வீடு கட்டுவான். பணங் கொடுக்கல் வாங்கல் தொழிலும், தானிய வியாபாரமும் செய்வான். வண்டி முதலிய வாகன வசதிகளை அடைவான். இவன் பற்கள் முத்துக்களை ஒத்தனவாம். சிறிது பொருமைக் குணம் உள்ளவன். இவனுக்குத் தாயார் இருவர். இவன் முதல் தாய்க்குப் பிறந்தவன். கையில் ஊன முடையவன். சுகமான போஜன வசதியுள்ளவன். ஏவிய தொழில்களைச் செய்யும் பணியாட்களுடையவன். சாமர்த்தியமாகப் பேசுவான்.

## இதுவுமது

5. சொல்தவருன் மார்ச்சாலன் சோதி யாகும்
சேடியினுல் பெருமையுளன் சோரான் வார்த்தை
வெல்லும்சொல் விடராசி வாதிரை தன்னில்
விளம்புவான் மேதினியை விருத்தி செய்வன்
அல்லலென்றோர்க் குதவிடுவன் ஆண்மை யாளன்
அரிபத்தி பலவணிபம் அவனும் செய்வன்
வல்லியின் வர்க்கத்தில் சிலநாள் நேசம்
மருவிப்பின் பகைநேரல் மரண மட்டும்.

5. சொன்ன சொற்கள் தவற மாட்டான். பூனையைப் போன்ற கண்களுடையவன். இவனுக்கு மனைவியினுல் மேன்மை யுண்டாகும். பேச்சாளன். தளர்ச்சி யடைந்த பேச்சுடையவள். வெற்றி தரும் சொல்லுடையவன், இவனுடைய வார்த்தைகள் மதிப்புடையன. விருச்சிக ராசி திருவாதிரை நட்சத்திரத்தில் தோன்றியவன். நிலபுலங்களைப் பெருக்குவான். துன்பமென்று வந்தவர்கட்கு உதவிகள் செய்வான். வீர முடையவன் விஷ்ணு பக்தி யுடையவன். பலவித வியாபாரங்கள் செய்வான். மனைவியைச் சேர்ந்தவர்களிடம் சில நாட்கள் நட்பாக இருந்து பின்பு தன் மரண காலம் வரை பகைவனுக இருப்பான்.

## இதுவுமது

6. பகையதனுல் பொருள்சேரும் மதியின் காலம்
பாரபட்ச வார்த்தையுளன் பதரில் செல்லான்
ஆகமதிகம் செய்திடுவன் அறிவோர் நேயன்
ஆண்துணைக ளில்லாதான் அரிபோல் கோபம்

உகமையாய் வார்த்தை சொல்வன் முன்துணைப்பெண்
[ணென்று தீர்க்கம்
உரைப்பூர்க ளச்சங்கை [1]உரகன் திங்கள்[2]
தகைமையாய் [3]வியத்திலுறச் சனியும் பார்க்கச்
சாராது துணைஆண்பால் சாற்றி னேமே.

6. சந்திர மகா தசையில் பகைவரால் இவனுக்குச் செல்வம் சேரும். பாரபட்சமான பேச்சுக்களுடையவன். அற்பமான செயல்களில் இறங்க மாட்டான். வேதங்களின் கருத்துக்களை உணர்வான். அறிவுடையவர்கள் விருப்பத்துக்குப் பாத்திரமானவன். இவன் சகோதரன் இல்லாதவன். சிங்கம் போன்று மிக்க கோபமுடையவன். உவமைகள் கூறிப் பேசுவான். இவனுக்கு முன்பு தோன்றிய சகோதரி யொருத்தி யுண்டு. அவள் தீர்க்க வயதுள்ளவள். ஆண் துணை இல்லாத காரணத்தைச் சொலலுவீராக, என்று பார்வதிதேவி முனிவரைக் கேட்டாள். அதற்கு முனிவர் கூறுகிறார். இராகுவும் சந்திரனும் பனிரண்டாமிடமாகிய விரயஸ்தானத்தில் இருப்பதாலும், அவர்களைச் சனி பார்ப்பதாலும், இந்த ஜாதகன் தந்தைக்குச் சகோதரன் இல்லை என்று சொன்னோம்.

## தகப்பனார் முற்பிறவித் தீவினைகள்

7. சாற்றினோம் பின்தாய்க்குச் சுதர்கள் தோன்றும்
தங்காது பூர்வவினை சதியைச் சொல்வீர்
நாற்றிசையும் புகழ்விரிஞ்சி நகரம் தன்னில்
நல்கினன் வைசியகுலம் வறுமை யின்றி
ஏற்றவணி பங்கள்செய்து வாழும்நாளில்
இல்லமது துணைக்கீயா இடரே செய்யப்
போற்றுவான் வருத்தமுற்றுத் துணைவன் தானும்
பொன்கடனை முறிதந்த பாவிக் கேதான்;

7. தந்தையின் இளைய தாயாருக்குப் புதல்வர் தோன்றுவர். ஆனால், அவர்கள் நிலையார். தந்தையின் முற்பிறவி வினையைக் கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்டனள். நான்கு திசைகளிலும் புகழ் பரவிய விரிஞ்சி நகரில் வைசிய மரபினனாய்த் தோன்றி தரித்திரம் இல்லாமல், தக்க வியாபாரங்கள் செய்து கொண்டு வாழ்ந்து வரும் நாட்களில், தன் சகோதரனுக்கு, வீட்டில் பாகம் கொடுக்காமலும், கூட்டாகச் சம்பாதித்த சொத்தில் பங்கு தராமலும், பலவித இடையூறுகளைச் செய்தான். அதனால் வருத்த முற்ற துணைவன், பொன் கடனைத் தராது ஏமாற்றிய பாவியே ! உனக்கு;

1. இராகு
2. சந்திரன்
3. பன்னிரண்டாமிடம்-ஈண்டு சிம்மம்,

## இதுவுமது

8. பின்ஜன்மம் துணையுமின்றி சுதர்முன் நஷ்டம்
பேதைதுணை நாஸ்தியுறும் பகைய நேகம்
இன்னமும் பலவாருய்ச் சொல்லித் தூளை
இறைந்தனன்காண் அச்சாப் மெய்து மென்ரோம்
மன்னவனு மந்தியத்தில் வறுமை யுண்டாய்
மறைத்தொண்டு தான்புரிந்து மரித்து இன்னேன்
பொன்னவனும் வரையவந்தோன் சாபம் போல
பூவைவர்க்கம் நாஸ்தியுறும் பகைய நேகம்.

8. "மறுபிறவியில் உடன் பிறந்தோரில்லாமல், பிறக்கும் குழந்தைகளும் முதலில் நஷ்டமாம். மனைவியை இழந்து கஷ்டமடைவாய். பகைவர்கள் பலர் ஏற்படுவர்" என்று இன்னும் பலவிதமாகக் கூறித் தெரு மண்ணை வாரி இறைத்தான். அந்தச் சாபம் இவனைச் சாரும் என்று சொன்னோம். இவனுக்கு (ஜாதகன் தந்தை) அந்தியக் காலத்தில் தரித்திரம் ஏற்பட்டது. வேத முணர்ந்த பெரியோர்களுக்குத் தொண்டு புரிந்து வந்தான். பின்பு மரண மடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இவ்வுலகில் தோன்றியவன் இவன். முற்பிறப்பில், துணைவனிட்ட சாபம் போலவே இவன் மனைவி வர்க்கத்தார் நாசமுறுவர். பகைவர்களும் பலராவர்.

## ஜாதகன் குணங்கள்

9. பகையென்று பொருள்சேரல் துணைஆண் தோஷம்
பகாந்தகுணத் தானுக்குப் பாலன் தோன்றும்
தகமையா யிவன்குணத்தைச் சாற்றக் கேண்மோ
தரணிவிருத்தி புகழேற்பன் டம்ப னுவன்
உகமையாய் வார்த்தையுளன் சிவந்த மேனி
உறுதிவான் பலகல்வி யுணர்வா னுகும்
இகபரன்தன் பத்திகொள்வன் இடுக்க மில்லான்
ஈகைகொஞ்ச மிடுக்கமென்றோர்க் குதவும் நேயன்

9. பகையென்று முதலில் ஏற்பட்டுப் பின்பு அவர்களால் இவனுக்குப் பொருள் சேரும். ஆண் துணை தோஷம் ஏற்படும். சொல்லப்பட்ட இந்தக் குணங்களை யுடையவனுக்கு இந்த ஜாதகன் புதல்வனாகத் தோன்றுவான் இவனது (ஜாதகன்) குணங்களைச் சொல்லுகிறோம் கேளுங்கள். நிலபுலங்களை விருத்தி செய்வான். கீர்த்தியடைவான். ஆடம்பரமான செயல்களுடையவன். உபமானங்களுடன் பேசுவான். சிவந்த உடலுடையவன். உறுதியான மனம்படைத்தவன். பலவிதக் கல்விகளைக் கற்பான். கடவுள் பக்தி யுடையவன். துன்பமில்லாதவன். தருமச் செயல் சிறிதே யுடையவன். துன்பமென்று வந்தவர்கட்கு உதவிகள் செய்வான். ஏழைகட்கு நண்பன்.

## இதுவுமது

10. நேயனென்று தான்புகல்வேன் நிருபர் நேயன்
நினைத்தபடி தான்முடிப்பன் நிமலிக் கிஷ்டன்
மாயன்பணி செய்திடுவன் மருமம் கொஞ்சம்
மாநிலத்தில் செட்டுச்செய்வ னடிமை யுள்ளோன்
தூயகுண முடையோர்க்கு அன்ன மீவன்
சேதுமுதல் பிரயாகைவரை செல்வா னாகும்
தீயரிஷ்டம் கொள்ளாதான் தந்தை மேலாய்
சிறப்பாக வாழ்ந்திடுவன் சேயன் தானே.

10. பலருக்கும் நண்பன் என்று கூறுவோம். அரசர்கட்கு விருப்பமானவன். நினைத்தவற்றைச் செய்து முடிப்பான். மனைவிக்கு விருப்பமானவன். திருமால் கோயிலுக்குத் திருப்பணிச் செய்வான். மனத்தில் சிறிது வஞ்சக முடையவன். உலகில் வியாபாரம் செய்வான். அடிமைகள் பலரை உடையவன். நற்குண முடையவர்களுக்கு உணவு அளிப்பான். சேதுவிலிருந்து பிரயாகைவரை யாத்திரை செல்லுவான். கெட்டவர்கள் நட்பைக் கொள்ளாதவன். தன் தந்தையைவிட மேன்மையுடனும் சிறப்புடனும் வாழ்வான் இவன்.

## ஜாதகனின் சகோதரன் செய்திகள்

11. முன்துணையில் சஷ்டியினி லளவாய் மூன்று
வியர்த்தமா மதன்பின்னால் கன்னி யிரண்டு
மன்மதன்போல் ஆணொன்று மருவும் தீர்க்க
மறைகின்றோ மாண்சேதி வறுமை காணான்
பொன்னிறமாம் பொருள் சேர்ப்ப னூகை சாலி
புவிமீதில் பலசெட்டுப் புரிவா னாகும்
பின்னமிலான் பிறர்பொருள்மே லிச்சை யில்லான்
பேரரசர் மெச்சவுய்வன் புகழு மேற்பன்.

11. தனக்கு முன் பிறந்த அறுவரில் அளவாக முதல் மூவர் நஷ்டமாவர். அவர்களுக்குப் பிறகு தோன்றும் பெண்கள் இருவரும், மன்மதன் போன்று அழகுடைய ஆண் ஒருவனும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். இப்பொழுது, ஜாதகன் சகோதரன் செய்தியைச் சொல்லுகிறோம். தரித்திரத்தை யறியாதவன். பொன் போன்ற நிற முடையவன். பொருளைச் சேர்ப்பான். ஊகித்து உணரும் சக்தி பெற்றவன். உலகில் பலவிதமான வியாபாரங்களைச் செய்பவன் ஆவான். உடலில் ஊன மொன்றும் இல்லாதவன். அயலார் பொருள் மீது ஆசையில்லாதவன். பெருமையுடைய அரசர்களும் பாராட்டுமாறு மதிப்பான தொழில்கள் செய்து ஜீவிப்பான். கீர்த்தியை யேற்பான்.

## இதுவுமது

12. பாரியுமே யொன்றென்றோம் மேல்பால் நேரும்
பாலர்க ளாணிரண்டு கன்னி யவ்வாறு
கூறினோம் தீர்க்கமதாய் முதலி லிரண்டு
குணமின்றிச் சேதமுறும் கொடையா ளன்தான்
தீரமிலான் வீண்செலவு செய்யா னாகும்
ஜனசகா யங்களுள்ளன் சிறப்பாய் வாழ்வன்
போரில்செலான் கல்விமிகும் பெரிதாம் புத்தி
பொய்புகலான் வயதுதீர்க்கம் பேசி னோமே.

12. இவனுக்கு (ஜாதகன் சகோதரன்) மனைவி ஒருத்தியே என்று கூறினோம். அவள், மேல் திசையிலிருந்து வருவாள். இரண்டு ஆண் குழந்தைகளும் பெண் குழந்தைகள் இருவரும் தோன்றுவர் என்று சொன்னோம். தீர்க்க ஆயுளுடன் இவர்கள் விளங்குவர். இவர்களுக்கு முன்பு இரு குழந்தைகள் தோன்றி, சேதமாம். தருமம் செய்யும் இயல்புள்ளவன். மனத்திடம் இல்லாதவன். வீண் செலவுகள் செய்ய மாட்டான். மக்கள் ஆதரவு உடையவன். சிறப்பாக வாழ்ந்திருப்பான். வீண் சண்டைக்குச் செல்ல மாட்டான். மிகுந்த கல்வியறிவு இவனுக்கு ஏற்படும். பெரும் புத்தி யுடையவன்.:பொய சொற்கள் பேசமாட்டான். தீர்க்காயுளுடையவன். இவ்விதம் ஜாதகன் சகோதரன் குணங்களைச் சொன்னோம்.

## ஜாதகன் சகோதரியின் விவரங்கள்

13. பஞ்சமியாம் கன்னிகுணம் பகாவோம் நாங்கள்
பசுமஞ்சள் நிறமொப்பாம் பதரில் செல்லாள்
கஞ்சமுகம் கல்வியுளாள் யூகை சாலி
காமன்மனை யொப்பாகும் தணல்போல் கோபம்
தஞ்சமென்றோர் தமைக்காப்பள் சமர்த்தாய் வார்த்தை
தன்வரன்தன் மனம்போலே வாழ்வா ளாகும்
கொஞ்சுசுதர் ஆணொன்று கன்னி மூன்று
கூறுகிறோம் வறுமையிலாள் வயது தீர்க்கம்.

13. இனி, ஜாதகனுக்கு முன் பிறந்த ஐந்தாம் பிறப்பாகிய பெண்ணின் குணங்களை நாங்கள் சொல்லுவோம். பசு மஞ்சள் போன்று நிறமுடையவள். அற்பமான செயல்களில் செல்லாதவள். தாமரை மலர் போன்று அழகானதும் மலர்ந்ததுமான முகமுடையவள். கல்வியறிவுடையவள். ஊகித்துணரும் தன்மையுடையவள். இரதிதேவி போன்ற அழகுள்ளவள். நெருப்புப் போன்ற பிறரைச் சுடத்தக்க கோப முடையவள். தன்னிடம் அடைக்கலம் என்று வந்தவர்களை ஆதரித்துக் காப்பாள். சாமர்த்தியமாகப் பேசுவாள். தன் கணவனின் மனவிருப்பம் போல் வாழ்ந்திருப்பாள். இவளுக்கு ஆண்

குழந்தை யொன்றும் பெண் குழந்தைகள் மூவரும் உண்டு என்று சொல்லு கிறோம். தரித்திர மில்லாதவள். தீர்க்கமான வயதுடையவள்.

## இதுவுமது

14. வரன் தன்பால் மருவிடுமே முன்னோள் சேதி
மால்மனைபோ லொப்பிடலாம் மாது தீர்க்கம்
ஊறன்முறையார் மதிக்கவுய்வள் ளுவமை வார்த்தை
உயரமிலாள் பிணியதிகம் பித்த தேகி
நெறிகாப்பள் அடக்கமொழி நடையு நன்மை
நீத்தோர்க்கு அனமீவள் வறுமை யில்லாள்
பெருந்தந்தை யுதவியினால் பெருமை யேற்பள்
புதல்வர்களு மாணிரண்டு கன்னி மூன்று.

14. தன் கணவன் இவளுடன் வசிப்பான். இனி, இவளுக்கு முன் பிறந்த பெண்ணின் செய்தியைச் சொல்லுவோம். திருமாலின் தேவியாகிய இலக்குமி போன்றவள் என்று சொல்லலாம். அவள் தீர்க்கமானவள். தன் பந்துக்கள் பாராட்டும்படி வாழ்வாள். உவமைகளுடன் பேசுவாள். உயர மில்லாதவள். நோய் மிகுதியுடையவள். பித்த சரீரம் உடையவள். பெரி யோர் காட்டிய வழியைக் கடைப் பிடித்துக் காப்பாள். பணிவாகப் பேசும், இயல்புடையவள். நன்னடத்தை யுடையவள். துறவிகட்கு உணவளிப் பாள். தரித்திரம் அடையாள். பெற்ற தந்தையின் சகாயத்தால் பெருமை யடைவாள். இவளுக்கு ஆண் குழந்தைகள் இருவரும் பெண்கள் மூவரும் தோன்றுவர்.

## தாயின் குணங்கள்

15. சொல்லினோம் தீர்க்கமதா யிரண்டு சேதம்
செழிப்பான குடும்பியளாய் வாழ்வா ளாகும்
வல்லவன்பின் துணைகாணான் தோன்றில் தீதாம்
மாதுருவின் குணம்புகல்வேன் மர்ம மில்லாள்
நல்லவளாய்ப் புகழேற்பள் நடையும் நன்மை
நாயகன்தன் மனமொத்து நாட்டில் வாழ்வள்
மல்லில்செலாள் வரும்துணைக ளில்லா ளாகும்
மத்தியினி லதிகப்பகை மருவு மென்றோம்.

15. அக்குழந்தைகள் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர் என்று சொன்னோம். இன்னும் இரண்டு குழந்தைகள் தோன்றிச் சேதமாம். செழிப்புள்ள குடும்பமுடையவளாய் வாழ்வாள் என்று சொன்னோம். ஜாதகன் தனக்குப் பின் பிறந்த சகோதரன் இல்லாதவனுவான். தோன்றினாலும் தோஷமா கும். இனி, ஜாதகன் தாயின் குணங்களைச் சொல்லுவோம். மனத்தில் மறைவில்லாதவள். நல்லவளாக இருப்பாள். புகழை யடைவாள். நல்ல

ஒழுக்கமுள்ளவள். கணவன் மனத்துக்கு ஏற்றவளாய் வாழ்வாள். வீண் சண்டைக்குச் செல்ல மாட்டாள். தன்னுடன் பிறந்தவர்கள் இல்லாதவள். இடைக் காலத்தில் இவளுக்குப் பகைவர் அதிகமாவர் என்று சொன்னோம்.

## தாய்க்குத் துணைவர் தோஷம் ஏற்படக் கிரகநிலை

16. மருவியபின் மாதுர்வர்க்கம் மாளு மென்றோம்
அரசரால் நிதியில்லம் வருகும் தாயே
திருமகட்குத் துணைதோஷம் புகர்வீ ரையா
சனிகேது ஆறிலுற புகர்வி யத்தில்
இருப்பதால் துணைகாணு தெனறு சொன்னோம்
இதுவின்றிப் பூர்வவினை யெய்தி யதால்
அரிவையுமே தனியென்றோம் பூர்வம் சொல்வீர்
அலைகடல்மேல் மலாய்நாட்டில் அவளும்
[தோன்றி;

16. பகை ஏற்பட்ட பின், இவள் தாயார் வர்க்கம் நாச மடையும் என்று சொன்னோம். இவளுக்கு அரசாங்க மூலம் செல்வம் விடு இவை கிடைக்கும். பார்வதியம்மையே! என்று முனிவர் கூற, பார்வதிதேவி கேட்கின்ருள். ஜாதகன் தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்படக் காரணம் கூறும். முனிவர் கூறுவார். சனியும் கேதுவும் ஆறுமிடமாகிய கும்பத்திலும் சுக்கிரன் விரய ஸ்தானமாகிய பனிரண்டாமிடத்திலும் இருப்பதால் தாய்க்குத் துணைவர் தோஷம் ஏற்படும். இவை தவிர, ஜாதகன் தாயாருக்கு முற்பிறவித் தோஷமும் ஏற்பட்டதால் துணைவரில்லாமல் தனியவள் ஆவாள் என்று சொன்னோம். இங்ஙனம் முனிவர் சொல்ல, பார்வதிதேவி கேட்கின்ருள். ஜாதகன் தாயின் முற்பிறவிச் செய்தியைச் சொல்லுங்கள், முனிவர் கூறுவார்; அலைகளை யுடைய கடல் கடந்த மலேயா நாட்டில் இவள் தோன்றி;

## முற்பிறவித் தோஷம்

17. தோனறினுள் கர்ணகுலம் சுகமாய் வாழ்ந்து
சுதரதிக முடைவளாய் வாழும் நாளில்
சான்றவில்லம் அடைக்கலான் சேத்திரம் செய்து
சக்தியுமே வதைக்கலைத்து கருவு மாள
நேர்ந்ததாம் அந்தத்தோஷம் ஏழை யோர்கள்
நிமலியன்னம் கேட்கசமா தான மின்றி
ஏன்றமட்டும் தானளியாள் குறையோர் சாபம்
எய்தார்கள் துணைவருமே யென்று சொல்ல;

17. கருணீகர் மரபில் தோன்றினுள். சௌக்கியமுடன் மக்கட் பேறு அதிக முடையவளாய் இவள் வாழ்ந்து வரும் காலத்தில், இவள் வீட்டில் ஒரு குருவி (அடைக்கலான்) கூடு கட்டிக் கொண்டு இருக்கையில் இவள்

அக்கூட்டைக் கலைத்து விட்டாள். அதற்குள்ளிருந்த முட்டைகளும் சிதைந்து போயின. அந்தத் தோஷம் இவளைச் சார்ந்தது. ஏழை மக்கள் சிலர், தங்கள் பசிக்கு இவளிடம் வந்து உணவு அளிக்குமாறு கேட்டனர். இவள் தன்னால் முடிந்தவரை கூட அவர்களுக்கு உணவு அளிக்காமல் வஞ்சனை யுடன் இல்லை யென்றாள், மனவருந்தி, அந்த ஏழைகள், உனக்கு உடன் பிறந்தோர் இரார் என்று இவளுக்குச் சாபமிட;

## சாப பலன்

18. அந்தரங்கள் தாதாஸ்துவென்ன சாபம் நேர்ந்து
அம்மாதுக் கந்தியத்தில் சுதரு மின்றித்
தன்மனமுஞ் சஞ்சலமாய் சேதுக் கேகித்
தானங்கள் செய்துபின்பு பேதி யாகி
[1]தென்னரசன் [2]காலன்பதி சென்று வின்னோள்
சிரநான்கோன் வரையவந்தாள் தேவி தானும்
முந்திபட்சி தோஷத்தால் சுதர் முன்தோஷம்
மேவிடுமே வஞ்சனையாய் துணையும் காணாள்.

18. அந்தச் சாபம் அப்படியே இவளை யடைந்தது. இவளுக்குப் புத்திரர் இல்லாமல், கடைசிக் காலத்தில் மன விசாரம் உண்டாயிற்று. சேதுவுக்குச் சென்று நீராடி, தானங்கள் செய்து; பின்பு ஊர் திரும்பி வயிற்றுப் போக்கு ஏற்பட்டது தெற்குத் திசைக்கு அதிபதியாகிய எமனுடைய பட்டணம் சென்றாள் (மரண மடைந்தாள்) இவள். மீண்டும், நான்கு முகங்களை யுடைய பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் ஜாதகன் தாயாக வந்தவள் இவள். முற்பிறவியில் ஏற்பட்ட பட்சி தோஷத்தால் இவளுக்கு இப்பிறப்பில் முதலில் தோன்றும் புதல்வர் தோஷம் உறுவர். சோறு இருந்தும் வஞ்சனையால் அளிக்காது இருந்த தோஷத்தால் துணைவர்கள் இரார்.

## ஜாதகன் தாய், இப்பிறப்பில் நலமுடன் வாழக் காரணம்

19. இந்தவித தோஷத்தால் இடருண் டாச்சு
இவளசுகமாய் வாழும்விதம் இயம்பு வீர்கள்
முந்தினதோர் சேதுவின்தன் பலத்தால் யோகம்
மொழிகிறோம் பாவையுமே உயர்வாய் வாழ்வள்
அத்ததொரு சேதுவின் பலத்தி னாலே
அப்பாவம் தீராதோ அறிவிப் பீர்கள்
நொந்திடுவர் மனச்சாபம் பட்சி தோஷம்
நீங்காது யெவைசென்றும் நிகழ்த்தி னோமே.

---

1. தெற்குத் திசைக்கு அரசான-எமன்.
2. எமபுரம்.

19. இவ்வண்ணம் மேற்கூறப்பட்ட தோஷங்களால் ஜாதகன் தாய்க்கு முதலில் புத்திர தோஷம், சகோதர தோஷம் ஆகியவை ஏற்பட்டன. இவ்வாறு முனிவர் சொல்லப் பார்வதிதேவி கேட்டனள். முற்பிறவியில் தோஷங்கள் ஏற்பட்டிருந்தும் இவள் சௌக்யமாய் இப்பிறவியில் வாழ்வது எப்படி/ முனிவர் விடை கூறுகிறார். சேதுவுக்குச் சென்று நீராடிய பலத்தினால் இவளுக்கு நல்வாழ்க்கை யோகம் ஏற்பட்டது என்று கூறுகிறோம். இவள் உயர்வாக வாழ்வாள். அவ்வண்ணம் சேதுவுக்குச் சென்று வந்த புண்ணியத்தால், அந்தத் தோஷங்கள் நீங்காவோ? என்று பார்வதிதேவி கேட்க முனிவர் கூறுவார். மனம் நொந்து ஏழைகள் இட்ட சாபமும், பட்சி தோஷமும் எங்குச் சென்று வந்தாலும் நீங்கா வென்று சொன்னோம்.

## தந்தையின் மரணம், மறுபிறவி

20. *நிகழ்த்துவோம் பின்ஜன்மம் தஞ்சை யுத்ரம்
நிகர்திருவை யாற்றினிலே சைவச் சேயாய்
மிகுதியாய்த் தனம்படைத்து வாழ்வா ளாகும்
விளம்புவீர் மரிக்கும்காலம் விமலி கேட்கச்
தகமையா யிவனுக்கா றஞ்சி ரண்டி லேதான்
தந்தையும் யமபதிக்குச் சாரு வானும்
உகமையாய்ப் பின்ஜன்மம் விரிஞ்சி தன்னில்
உறைகுவான் வைசியகுலம் உயர்வாய் தானே.

20. தாயின் மறுபிறவி பற்றிச் சொல்லுவோம். தஞ்சைக்கு வடக்கில் உள்ள திருவையாற்றில் சைவ மரபினளாய்ப் பிறந்து, மிக்க செல்வத்தைப் பெற்று வாழ்வாள். இனி. ஜாதகன் பெற்றோர் மரண காலத்தைக் கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்டாள். ஜாதகனின் முப்பத்திரண்டாம் வயதில் தந்தை மரண மடைவான். மறுபிறவியில் விரிஞ்சிபுரத்தில் வைசிய மரபில் உயர்வாகப் பிறப்பான் என்று முனிவர் கூறினர்.

*இப்பாட்டும் அந்தாதியாக உள்ளது.

## இதுவுமது

21. முப்பதுஆ றுண்டதனில் அன்னை கண்டம்
மொழிகிறோம் தவறில்லை முனியே யானும்
அப்போது 'பணிகாலம் ரவியின் புத்தி
அன்னைக்குத் தான்புகல்வோம் அரவுதன்னில்
ஒப்புடனே புந்திசக்ரம் உறையுங் காலை
உரைத்திட்டோம் பிதாவுக்கு உகமை யாகச்
செப்புமொழி தவறில்லை தாயே யாங்கள்
சேயனுக்கு மணக்காலம் செப்பு வோமே.

21. ஜாதகனுக்கு முப்பத்தாறும் வயதில் தாயார் மரணம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம். யான் முக்கால முணர்ந்த முனிவன். என் வார்த்தை தவறாது. தாயார் மரணம் ஏற்படும் போது ஜாதகனுக்கு இராகு தசை சூரிய புக்தியாகும் என்று சொல்லுவோம். பிதா மரண மடையும் பொழுது ஜாதகனுக்கு ராகு தசையில் புதபுக்தி நடைபெறும் என்று சொன்னோம் தாயே! நாங்கள் சொல்லும் சொற்கள் தவறுவதில்லை இனிமேல், ஜாதகனுக்குத் திருமணக் காலம் பற்றிச் சொல்லுவோம்.

## ஜாதகனுக்கு மனைவி வருங்காலமும் அவளது இயல்புகளும்

22. ஈரெட்டு ஆண்டுதன்னில் உள்ளூர் பாரி
எய்திடுமே குணமதனை யியம்பக் கேளாய்
கூறுவாள் சுகமாகச் சிவந்த மேனி
கோபம்கொஞ்ச முடன்சாந்தம் குலத்தைக் காப்பள்
தேறினோர்க்கு அன்னமீவள் சீலி யாகும்
சித்திரப்பணி சேர்த்திடுவள் சிறப்பாய் வாழ்வள்
மாரன்மன மேற்றவளாம் மறுத்துக் கூறாள்
மங்கைவயது தீர்க்கமென்றோம் மதிமு கத்தாள்.

22. ஜாதகனுக்குப் பதினாறும் வயதில் உள்ளூரிலிருந்தே மனைவி வாய்ப்பாள். அவளது குணங்களைச் சொல்லுவோம். கேட்பாயாக. இனிமையாகப் பேசுவாள். சிவந்த மேனி யுடையவள். சிறிது கோபமுண்டு. ஆயின் அஃது உடனே சாந்தமாம். குலப் பெருமையைக் காப்பாள். அழகிய ஆபரணங்களைச் சேர்ப்பாள். சிறப்புடன் வாழ்வாள். கணவன் மனத்துக் கேற்றவள். கணவன் கூறுவனபற்றை மறுத்துப் பேச மாட்டாள். இவள் தீர்க்கமான வயதுள்ளவள் என்று சொன்னோம். சந்திரன் போன்று ஒளி பொருந்திய முகத்தை யுடையவள்.

## ஜாதகனுக்குப் புத்திரதோஷம்: கிரகநிலை: மறுபிறவி

23. சுதர்களுமே இருநான்காகத் தோன்று மென்றோம்
செப்பியதில் ஆண்மூன்று கன்னி யவ்வாறு
சதமாகு முதலிரண்டு சேத மெய்தும்
சாற்றுவீ ரச்சங்கை சனியும் கேதும்
பதராக ஆறிடத்தி லிருப்ப தாலே
பகர்ந்திட்டோம் பாலனுடைப் பூர்வம் கேளாய்
அதிதிவாழ் பெருமுக்கல் நகரம் தன்னில்
அணுகினன் ரெட்டிகுலம் ஆண்மை யாக.

23. இவளுக்கு எட்டுக் குழந்தைகள் தோன்றும் என்று சொன்னோம். இவற்றில் ஆண் குழந்தைகள் மூன்றும். பெண் குழந்தைகள் மூன்றும் தீர்க்க

மாம் என்று சொல்லுகிறோம். முதலில், இரண்டு குழந்தைகள் நஷ்டமாம். ஏன் அங்ஙனம் கூறினீர்கள்? அந்த சங்கையை நிவர்த்தி செய்யுங்கள் என்று பார்வதிதேவி கேட்டனள். முனிவர் கூறுவார். சனியும் கேதுவும் கெட்ட நிலை ஏற்படும்படி ஆறுமிடத்திலிருப்பதாலே (கும்பம்) புத்திர தோஷம் ஏற்படும் என்று சொன்னோம். இனி, ஜாதகன் முற்பிறப்புத் தீவினையைக் கேட்பாயாக. தவசிகள் பலர் வாழ்கின்ற பெருமுக்கல் என்னும் ஊரில் ரெட்டியார் மரபில் வீரமுடையவனாகப் பிறந்தான்.

## ஜாதகனின் யோகம்

24. மனைவிமைந்தர் தரணிவிருத்தி வறுமை யின்றி
வருவோர்க்கு அனம்தாக மருத்தி யேதான்
கனமான தலம்சென்று வினையில் லாமல்
காலன்தன் பதியடைந்து பிரமன் லக்கம்
சினமின்றித் தானுதிப்பா னிந்தப் பாலன்
செப்புகிறோ மிவன்யோகம் ஜனனந் தொட்டுத்
தனயனுமே மரணமட்டும் வறுமை காணான்.
தந்தைக்குச் சமமாக வாழ்வான் மாதே.

24. மனைவி மக்கள் ஏற்பட்டு, நிலபுலங்கள் விருத்தியாகி, தரித்திரம் இல்லாமல், வீடு தேடிப் பசி யென்று வருபவர்கட்கு உணவும் தண்ணீரும் அளித்து, புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்று, தீவினை யெவையு மில்லாமல் வாழ்ந்து மரண மடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டு, இப்பிறப்பில் இக்குலத்தவனாகப் பிறப்பான் இந்த ஜாதகன். இனி, இந்த ஜாதகன் யோகங்களைச் சொல்லுகிறோம். பிறப்பு முதல் இறப்பு வரை தரித்திரத்தை அறியாதவனாக இருப்பான். தன் தகப்பனாருக்குச் சம மான பெருமையுடன் வாழ்வான்.

## இதுவுமது

25. பானுவுக்குப் பனிரண்டில் புகரும் நிற்கப்
பகர்வேசி யோகமொன்று மதிக்குப் பத்தில்
ஊனமிலா குருவிருக்கச் சிங்க யோகம்
உரைக்கிறோ மதன்விபரம் உயர்வோர் நேயன்
மாநிலங்க ளதிகமுறும் வணிபம் செய்தல்
மாதிருதன் வழியாலே பொருள நேகம்
தேன்குழலேபோல் தான்நேரல் எதிரி நாஸ்தி
செப்பினோம் பிறைத்தசையில் சேரு மென்றோம்.

25. சூரியனுக்குப் பன்னிரண்டாமிடத்தில் (சிம்மத்தில்) சுக்கிரன் இருப் பதால் வேசி யோகம் ஒன்று உண்டு. சந்திரன் இருக்குமிடத்துக்குப் பத்தா

மிடத்தில் (ரிஷபம்) குரு இருப்பதால் சிம்மயோகம் ஒன்று உண்டு. இந்த யோகங்களுக்குப் பயன் கூறுகிறோம். பெரியோர்களிடம் விசுவாசமாக இருப்பான். நிலபுலங்கள் மிகுதியாகச் சேரும். வியாபாரங்கள் செய்வான். தன் தாய் வழியினரால் பொருள் மிகவும் சேரும். எதிரிகள் நாசமடைவர். சந்திர மஹா தசை நடைபெறும் பொழுது இவையெல்லாம் நடைபெறும் என்று சொன்னோம்.

## ஜாதகனின் மரணகாலம்

### வேறு

26. *சனிதசை காலம் சாதகன் மரணம்*
*சாற்றினோம் முனிவரே யாங்கள்*
*வினவரும் காலம் விளம்புவீர் நீங்கள்*
*மேவிடு மறுபது வாண்டில்*
*சினமுடன் கூனி மாதங்கள் தன்னில்*
*சிலேட்டும பாதையால் ஆவி*
*கனமுடன் நீங்கும் காளைபின் ஜன்மம்*
*காஞ்சியில் மறைக்குல முதிப்பான்.*

26. சனி மஹா தசை நடைபெறும் பொழுது ஜாதகனுக்கு மரணம் சம்பவிக்கும் என்று முனிவர்களாகிய நாங்கள் சொன்னோம். இனி, ஜாதகனுக்கு மரண மேற்படும் வயதைக் கூறுங்கள் தாங்கள் என்று பார்வதி தேவி கேட்டனள். அறுபதாம் வயது நடைபெறும் பொழுது, பங்குனி மாதத்தில் சிலேஷ்ம பாதையால் ஜாதகன் உயிர் நீங்கும். ஜாதகன் மறுபிறவியைக் கூறுகிறோம். காஞ்சீபுரத்தில் அந்தணர் மரபில் தோன்றுவான்.

## அத்திரி முனிவர் கூற்று

### வேறு

27. *அத்திரி மறுத்துச் சொல்வா ரலரியின் தசையி லேதான்*
*வித்தகன் தனக்குக் கண்டம் விளம்புவோ முனியாம் [யாமும்*
*மெத்தனப் பிணிய நேகம் மேவிடு மரணம் காணுன்*
*சுத்தமாய்ச் சனியின் காலம் செப்புவோ மார கங்கள்.*

27. இவ்வாறு முனிவர் கூறிக்கொண்டுவர, அத்திரி முனிவர் மறுத்துக் கூறுவார். சூரிய மகா தசையில் ஜாதகனுக்குக் கண்டம் ஏற்படும் என்று முனிவ்ருகிய யாம் சொல்லுவோம். மிகுதியாக நோய்கள் ஏற்படும். ஆனல் மரணம் நேராது. நிச்சயமாகச் சனி மஹா தசையில் ஜாதகனுக்கு மரணம் ஏற்படும் என்று சொல்லுவோம்.

## ஜனனகால தசையிருப்பு

28. உதித்திடு காலந் தன்னில் உத்தரம் முதல்பா தத்தில்
*கதிர்தசை ஆண்டு நாலும் கலந்திடும் திங்க ளொன்பான்*
அதிபனும் பிணிய நேகம் வழக்குகள் மெத்த வுண்டு
இதுவிப ரங்க ளெல்லாம் இயம்புவோம் பின்பா கத்தில்.

28. ஜாதகன் பிறக்குங் காலத்தில் உத்தர நட்சத்திரம் முதல் பாதமாம். அப்பொழுது, சூரிய மகா தசையில் நான்கு வருடங்களும், ஒன்பது மாதங்களும் மீதி இருப்பாகும். அக்காலத்தில் ஜாதகனுக்கு நோய்கள் பல ஏற்படும். வழக்குகள் மிகுதியாகும். இந்த விவரங்களை யெல்லாம் பின் பாகத்தில்சொல்லுவோம்,



## ஜாதகம் 78

### ஜனனகால கிரக நிலை

1. கன்னியு முயிரு[1] மாகக் காரியும்[2] ஜன்மம்[3] தங்கச்
சந்திரன் மூன்றி[4] லாகச் சிகி[5]யிரண்டில்[6] பொன்னோ[7]
[னேழில்[8]
புந்தியும்[9] ராகு வெட்டில்[10] புரவியோன்[11] நவத்தி[12] லாக
மன்னுசுக் கிரனும்பத்தில்[13] வரும்கேட்டை நாலாம் பாதம்;

1. கன்னி இலக்கினமாய், சனி லக்கினத்திலும், சந்திரன் மூன்று மிடமாகிய விருச்சிகத்திலும், கேது இரண்டாமிடமாகிய துலாத்திலும், குரு ஏழாமாகிய மீனத்திலும், புதன் ராகு எட்டாமிடமாகிய மேஷத்திலும் சூரியன் ஒன்பதா மிடமாகிய ரிஷபத்திலும் சுக்கிரன் பத்தா மிடமாகிய மிதுனத்திலும் ஆக இவ்விதம் நவக்கிரகங்களும் நின்றுகேட்டை நட்சத்திரம் முதல் பாதத்தில்;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| குரு | புதன் ராகு | சூரியன் | சுக்கிரன் |
| | இராசி சக்கரம் | | |
| அங்காரகன் | | | |
| | சந்திரன் | கேது | லக்கினம் சனி |

குறிப்பு :— இந்த ஜாதகத்தின் முதல் பாட்டில் நவக்கிரக நிலை கூறப்பட்டு இருந்தபோதிலும், அங்காரகன் இருக்குமிடம் கூறப்படவில்லை. ஆயினும் 16-ம் பாட்டில் "மங்கலன் அஞ்சில் தங்க" என்று கூறப்பட்டிருப்பதால் அங்காரகன் மகரத்தில் இருப்பதாக ஏற்படுகிறது"

---

1. இலக்கினம்
2. சனி
3. இலக்கினம்
4. இலக்கினத்துக்கு மூன்றுமிடம் ஈண்டு விருச்சிகம்
5. கேது
6. இரண்டாமிடம் : துலாம்
7. குரு
8. ஏழாமிடம் - மீனம்
9. புதன்
10. எட்டாமிடம் : மேஷம்
11. சூரியன்
12. ஒன்பதாமிடம் : இடபம்
13. பத்தாமிடம் : மிதுனம்

## ஜாதகனின் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. பலனதைப் புகலு மென்று பத்தினி கேட்கும் போது
நளமுள பிருகு சொல்வார் நாயகன் ஜனன மாகும்
தலமது கீழ்மேல் வீதி சண்டன்தன் வாடை யாகும்
நிலமதை அணிந்தோன் வாயு முந்திடு மாரி மேற்கில்.

2. பிறந்த ஜாதகருக்குப் பலன்களைக் கூறும் என்று பார்வதிதேவி கேட்ட பொழுது, ஏழு முனிவர்களில் ஒருவராகிய பிருகு முனிவர் கூறுவார். இந்த ஜாதகன் பிறக்கும் வீடு கிழக்குமேற்கான தெருவில் தெற்கு நோக்கிய வாயிலை யுடையதாகும். பூமியை யுருண்டையாகச் செய்து, தனது கோட்டி லணிந்த திருமாலின் ஆலயம் வடமேற்குத்திசையில் இருக்கும். மாரியம்மன் கோயில் மேற்குத் திக்கில் உள்ளது.

## இதுவுமது

3. வாரிபோல் தீர்த்த மேற்கில் மார்க்கமும் செப்ப லாகும்
கூறின வடையா ளத்துள் குழவியு மிரண்டாஞ் ஜன்மம்
வீரியன் கங்கை சேயாய் விளங்குவா னென்று [சொல்வோம்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

3. கடலைப் போன்று நீர் நிலை யொன்று மேற்குத் திசையில் உண்டு. அந்தத் திசையிலேயே ஒரு வழி நடைப் பாதையும் உண்டு என்று கூறலாம். இவ்விதம் சொல்லப்பட்ட அடையாளத்துடன் கூடிய இடத்தில் இந்த ஜாதகன் வேளாளர் மரபில் தந்தைக்கு இரண்டாம் புதல்வனுகத் தோன்று வான் என்று சொல்லுவோம். ஆறுதிருமுகங்களை யுடைய சுப்பிரமணியக் கடவுளைப் புதல்வராகப் பெற்ற பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

## தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணையா ணிரண்டு சாற்றுவோந் தீர்க்க மாக
அந்தவர் வேருய்ச் செல்வர் அவர்பலன் பின்பால் [சொல்வேன்
இந்தவன் தந்தை சேதி இயம்புவோம் மால்நி றத்தான்
சுந்தர முடைய னுகும் துலாராசி பூரட்டை நாளில்;

4. ஜாதகனின் தந்தையுடன் பிறந்த சகோதரர்கள் இருவர் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர் என்று சொல்லுவோம். அவர்கள் ஜாதகனின் தந்தையிடமிருந்து பிரிந்து செல்லுவார்கள், அந்தச் சகோதரர்களைப் பற்றி பின்பாகத்

தில் கூறுவோம். இனி, இந்த ஜாதகனின் தந்தையின் செய்திகளைச் சொல்லுவோம். திருமால் போன்ற கரிய நிறமுள்ளவன். அழகுடையவன். பூரட்டாதி நட்சத்திரத்தில் துலா லக்கினத்தில்;

## தந்தையின் செய்திகள்

5. உதிப்பனும் கிருஷி செய்வன் உண்மையா மனத்த னாகும்
ததிநெய்பால் பிரிய முண்டு சங்கரன் பக்தி பூண்பன்
துதிசெய்தோர்க் குதவு வானும் தோகை சொல் கடவா
[னாகும்
பதிபின்னால் வேறு செய்வன் பணிந்தோரை யாத
[ரிப்பன்.

5. பிறப்பான். விவசாயம் செய்வான். உண்மையான எண்ணங்கள் கொண்ட மனத்தினன். தயிர், நெய், பால் இவற்றில் மிக்க விருப்பங் கொண்டவன். சிவபெருமான் மீது பக்தி கொள்ளுவான். தன்னைத் தோத்திரம் செய்பவர்களுக்கு உதவி செய்வான். மனைவியின் சொற்களைக் கடவாதவன். பிற்காலத்தில் வேறு வீடு கட்டுவான், தனக்குப் பணிபவர்களை ஆதரிப்பான்.

## இதுவுமது

6. அன்னமும் குறைவு றாதான் அவனியில் உய்வா னாகும்
பின்பணி யதிகம் காணான் பொய்யது புகலா னாகும்
நன்மையை யெவர்க்கும் செய்வன் நல்லோர்க்கு நல்ல
[னவன்
உன்னதத் தலங்கள் செல்வன் உரகன்போல் கோபம்
[கொஞ்சம்.

6. போஜன வசதிகள் குறையாதவன். உலகில் நன்முறையில் ஜீவனம் செய்து வருபவன். பிற்காலத்திலும் பொன் ஆபரணங்கள் அதிகமாக இவனுக்குச் சேரா. பொய்யுரை கூற மாட்டான். எவருக்கும் நன்மை விளைவிக்கும் செயல்களையே செய்வான். நல்லவர்களுக்கு நல்லவனாக இருப்பான். உயர்ந்த பல புண்ணியத் தலங்களுக்கு யாத்திரையாகச் செல்லுவான். பாம்பு போல் சீறியெழும் கோபம் சிறிதுள்ளவன்.

## இதுவுமது

7. பித்தச்சூ டுடைய னாகும் பின்புத்தி யுடைய னாகும்
சுத்தவான் சமமாம் கல்வி துருசான கோப மேற்பன்
பத்தினி வர்க்கம் நாஸ்தி பதர்குண மில்லா னாகும்
அத்தியை வளர்த்த வெங்க ளாத்துமத் தாயே கேளாய்,

7. உடலில் பித்தச் சூட்டு நோயுள்ளவன். பின் புத்தி யுடையவன். (முதலில் ஆராயாமல் கூறி விட்டுப் பின்னுல் யோசித்துப் பார்த்து தன் செய்கைகட்கு வருந்துபவன்.) தூய்மையுள்ளவன். சமமான கல்வியறி யுள்ளவன். விரைவில் கோபங் கொள்ளுவான். இவன் மனைவி வழி யினர் நாச மடைவர். அற்பக் குணங்கள் இல்லாதவன். யானைமுகக் கடவுளைப் புதல்வராகப் பெற்று வளர்த்த எங்கள் உயிருக்குயிரான தாயே மேலுங் கூறுவோம்; கேட்பாயாக.

## ஜாதகனின் குணநலங்கள்

8. சொல்லிய குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப் [பாலன்
புல்குவோ மிவன்கு ணத்தைப் பூமியை விருத்தி [செய்வன்
நல்லவ னாகி வாழ்வன் நயம்படக் கூறு வானும்
சல்லியங் கொள்ளா னாகும் தந்தைக்குச் சமமாய் [வாழ்வன்.

8. இங்ஙனமாகச் சொல்லப்பட்ட குணங்களை யுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனுகப் பிறப்பான். இவனது குணங்களைச் சொல்லு வோம். நிலபுலங்களை விருத்தி செய்வான். நாட்டில் அனைவரும் இவன் நல்லவன் என்று சொல்லுபடி வாழ்வான். நயமாகப் பேசுவான். பணம் கடன் கொள்ள மாட்டான். தன் தந்தைக்குச் சமமான மேன்மையுடன் வாழ்ந்திருப்பான்.

## இதுவுமது

9. வித்தையும் கொஞ்சமுண்டு விவேகியா முன்கோ பத்தன்
சத்துரு விஷ்டம் கொள்வன் சகடுவா க்னமு மேற்பன்
சுத்தம்போல் வெளிம யக்கன் சுகம்பின்னுல் பெறுவா [னுகும்
பத்தினிக் கிஷ்ட னுகும் பரிந்துப சாரம் சொல்வன்.

9. கல்வியறிவு சிறிதே வுடையவன். விவேக முள்ளவன். முன் கோப முடையவன். பகைவரைத் தன் விருப்பத்துக்கு இணங்குமாறு செய் வான். வண்டி முதலான வாகன வசதிகளை அடைவான். வெளிப் பார்வைக் குத் தூய்மை யுள்ளவன் போல் நடிப்பான். பிற்பாகத்தில் மிக்க நலத்தை யடைவான். மனைவிக்கு விருப்பமானவன். வீடு தேடி வந்தவர்களை விரும்பி உபசரிப்பான்.

## இதுவுமது

10. இருவிதக் குணமு முண்டு ஈகைவான் இனிப்பு இஷ்டன்
பொருள்பின்னுல் சேர்ப்பா னுகும் புண்ணியத் தலங்கள் [செல்வன்

அறுமுகன் பக்தி பூண்பன் ஆபத்தென் ருேர்க்கு வீவன்
நிதியதைத் தவிர்தல் செய்வன் நிமலியே கேட்டி டாயே.

10. ஒன்றற்கொன்று மாறுபட்ட இரண்டு விதமான குணங்கள் உடையவன். இனிப்புப் பண்டங்களை யுண்பதில் விருப்பமுள்ளவன். பிற்காலத்தில் செல்வம் சேர்ப்பான். புண்ணிய ஸ்தலங்கட்கு யாத்திரையாகச் செல்லுவான். ஆறுதிருமுகங்களை யுடைய முருகக் கடவுளிடம் பக்தி கொள்ளுவான். துன்பம் என்று வந்தவர்களுக்கு பொருளீந்து உதவுவான். செல்வத்தை இழப்பான். பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனின் சகோதரியது செய்தி

11. தன்துணை முன்ஞல் நஷ்டம்
தங்கும்பின் கன்னி யொன்று
அன்னவன் தீர்க்க ஜீவி
அவள்குணம் புகலக் கேண்மோ
மன்னவன் மனம்போல் வாழ்வள்
வறுமையில் லாதா ளென்ருேம்
துன்மையை யெவர்க்கு மெண்ணுள்
துர்புத்தி யில்லா ளென்ருேம்.

11. தனக்கு முன் பிறந்த சகோதரன் நஷ்டமாவான். ஜாதகனுக்குப் பின் தோன்றிய பெண்ணெருத்தி தீர்க்க ஆயுளுடையவள். அந்தச் சகோதரியின் இயல்புகளைக் கூறக் கேளுங்கள். கணவனின் மனத்தின்படியே நடப்பவள். தரித்திரமில்லாதவள் என்று கூறினோம். எவருக்கும் தீங்கு நினையாதவள். கெட்ட புத்தியில்லாதவள் என்று சொன்னோம்.

## இதுவுமது

12. வரனுமே-வடபால் நேரும் மைந்தர்க ளாண்பா லிரண்டு
அரிவைமார் மூவர் தீர்க்க மடைந்தோரை யாத ரிப்பள்
சிறியோர்க்கு வுதவி செய்வள் சீலமு முடைய ளாகும்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

12. இந்தச் சகோதரிக்குக் கணவன் வடக்குத் திசையிலிருந்து வாய்ப்பான். இரண்டு ஆண் குழந்தைகளும் பெண் குழந்தைகள் மூவரும் தோன்றித் தீர்க்க முள்ளவராயிருப்பர். தன்னை அண்டினவர்களை ஆதரிப்பாள். பொருளில்லாத சிறியவர்கட்கு உதவி செய்வாள். நல்லொழுக்கமும் உடையவள். கரிய யானை முகத்தவராகிய விநாயகக் கடவுளைப் புதல்வராகப் பெற்ற தாயே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனுடைய திருமணக்காலம் மனைவியின் இயல்புகள்

13. மாரனின் மணத்தின் கால மறைகிறே மிருபா னென்று
காரிழை வடகீழ் நேரும் கௌசிகர் மறுத்துச் சொல்வார்
நாரியும் வடமேல் நேரும் நற்குணம் தயாள முண்டு
போர்செல்லாள் புத்தி மானும் புருடன்தன் மனத்துக்
[கேற்றேள்.

13. இனி, ஜாதகனின் திருமணக் காலத்தைப் பற்றிச் சொல்லுகிறேம். இவனுக்கு இருபத்தோராம் வயதில், வடகிழக்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். இப்படி பிருகு முனிவர் கூறிக் [illegible] கௌசிகர் என்பார் மறுத்து ஒன்று [illegible] ஜாதகனுக்கு மனைவி வடமேற்குத் [illegible] வருவாள். அவள் நற்குண முள்ளவள். இரக்[illegible]ருந்திய மனத்தினள். வலுச் சண்டைக்குச் செல்ல மாட்டாள். புத்திசாலி. கணவன் மனத்துக்குத் தகுந்தவள்.

## இதுவுமது

14. தோகைபோல் சாய லொக்கும் சொல்லதைக் காப்பா
[ளாகும்
நாகரீ கங்க ளுண்டு நாதனுர் பக்தி பூண்பள்
தாகமென் ரேர்க்கு ஈவள் சத்தியும் தீர்க்க ஜீவி
போகவா ரிதியைப் பெற்ற புண்ணிய சாலி கேளாய்.

14. மயில் போன்ற சாயலுடையவள். சொன்ன சொற்களைக் காப்பவள். நாகரீகங்கள் உள்ளவள். கடவுள் பக்தி கொள்ளுவாள். பசியென்று வந்தவர்கட்கு உணவு நீர் ஆகியன அளித்து உதவுவாள். இவள் தீர்க்கமான வயதுள்ளவள். போகக் கடலாகிய சிவபெருமானைக் கணவராகப் பெற்ற புண்ணியவதியே! கேட்பாயாக.

## முதல் புத்திரனுக்கு தோஷம் ஏற்படக் கிரகநிலை

15. சுதர்களு மாண்பால் மூன்று தேகையு மவ்வாறு தீர்க்கம்
முதல்சுதர் தோஷ மெய்தும் மொழிகுவீ ரந்தச் சங்கை
புதல்வர்தா னத்தில் சேயும் பொருந்தின பலத்தால்
[சொன்னேம்
இதுநிற்கத் துணையாண் தோஷ மியம்புவீர் முனியே
[நீர்தாம்.

15. இவளுக்கு ஆண் குழந்தைகள் மூவரும் பெண் குழந்தைகள் மூவரும் தோன்றித் தீர்க்கமாவர். முதலில் தோன்றிய புதல்வர் தோஷமடைவர், இங்ஙனம் முனிவர் கூறிக் கொண்டு வர, பார்வதிதேவி கேட்

இன்ருள். முதலில் தோன்றும் குழந்தைகட்குத் தோஷம் ஏற்படக் காரணம் கூறுவீர். முனிவர் சொல்லுகிருர். புத்திர ஸ்தானத்தில் அங்காரகன் தங்கி யிருக்கும் பலத்திஞல் அங்ஙனம் கூறிஞேம். இது நிற்க, சகோதர தோஷம் ஏற்படக் காரணம் யாது என்று முனிவரே ! தாங்கள் கூறுங்கள்.

## சகோதர தோஷம் எற்படக் காரணம் ஜாதகனின் முற்பிறவி விவரம்

16. *மங்கலன் அஞ்சில் தங்க மருவாது துணையா னுந்தான்
இங்கவன் முன்ஜன் மத்தை இயம்புவோந் தாயே கேளும்
துங்கமா மருணே யுத்தரம் தோன்றிய பேரூர் தன்னில்
சங்கரர் குலமு தித்துச் சைவமாய்ச் செட்டுச் செய்து ;

16. [illegible]கனுகிய செவ்வாய் இலக்கினத்து ஐந்தாமிடமாகிய மகரத்தில் தங்கி யிருப்பதால [illegible]வக்குச் சகோதரன் இரான். இனி, ஜாதகனின் முற்பிறப்புப் பற்றிக் கூறுவோம். தா[illegible]ங்கள். தூய்மையான திருவண்ணுமலேக்கு வடக்கிலுள்ளதொரு பெரிய ஊரில சைவ குலத்தினனுகப் பிறந்து, நன்கு வியாபாரம் செய்து;

*அங்காரகன் இருக்குமிடம் முதல் பாட்டில் சொல்லப்படவில்லே.

## இதுவுமது

17. பொருளது பெருக்க மாகிப் பூசுரர்க் குதவி செய்து
இருவினே யில்லா தாகி ஏகினன் கால நாடு
பிரமனுல் வரையப் பட்டுப் பிறப்பனு மிந்தப் பாலன்
திருமகன் யோகச் சேதி செப்புவோ மினிமே லாக.

17. செல்வப் பெருக்கம் ஏற்பட்டு, அந்தணர்களுக்கு உபகாரங்கள் செய்து, முற்பிறப்புத் தீவினே இல்லாதவனுய் வாழ்ந்து, மரண மடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு இவ்வுலகில் இப்பிறப்பாகப் பிறப்பான் இந்த ஜாதகன். இனிமேல், ஜாதகன் யோகத்தைச் செய்திகளேக் கூறுவோம்.

## ஜாதகன் யோகச் செய்திகள்

18. உதித்தநாள் முதலே யாக ஒன்பது மூன்ருண் டுக்கும்
பதியினில் சுகமும் துக்கம் பாக்கிய மதிக மில்லான்
நிதமன சஞ்ச லங்கள் நேராது நினேத்த வெல்லாம்
ததிபாக்கியம் கத்திரி யுண்டு செப்பின ஆண்டு மேலாய் ;

18. பிறந்தது முதல் இருபத்தேழு ஆண்டுகள் (பன்னிரண்டு ஆண்டு கள்) சுகதுக்கங்களேக் கலந்து அனுபவிப்பான். நன்மைகள் அதிகமில்லாதவனுவான். தினந்தோறும் மனத்தில் சஞ்சலங்கள் ஏற்படும். நினேத்தனவெல்

லாம் செய்து முடிக்க வியலாமற்போம். தயிர் பால் நிறையக் கிடைக்கும் பாக்கிய முடையவனுக இருப்பான். ஆனல் கத்திரியோக முண்டு. சொல்லப்பட்ட ஆண்டுகளுக்கு மேல்;

## இதுவுமது

19. பாலகள் மரண மட்டும் பலவித லாப மெய்தும்
ஞாலங்கள் சேர்த்த லுண்டு நாற்காலி விருத்தி யோங்கல்
மேலான குடும்ப மெய்தும் மேவிடும் பூர்வப் பொன்னும்
காலத்தை யுணர்வீ ரையா கதிர்தசை தன்னில் நேரும்.

19. ஜாதகன் மரண காலம் வரை பலவிதமான இலாபங்கள் அடைவான். நிலபுலங்களை சேர்ப்பான். கால்நடைச் செல்வங்கள் பெருகும். மேன்மையான குடும்பத்தை யுடையவனுவான். முன்னேர் செல்வமும் கிடைக்கும். முக்காலமும் உணர்ந்து கூறும் முனிவரே! முன்னேர் செல்வம், (புதையல்) கிடைக்கும் காலம் எது? சூரிய மஹாதசையில் மேற் கூறிய வண்ணம் நடைபெறும்.

## இதுவுமது

20. பந்துவு மதிப்புக் கொள்ளல் பலருக்கும் சகாயம் செய்தல்
எந்திடம் பெருமை யேற்பன் ஏவலா ளதிகம் சேர்ப்பன்
முந்தின தலங்கள் செல்லல் மேன்மேலாய்ச் செட்டு [வோங்கல்
செந்திரு விலாசம் பெற்றுச் செல்வனும் வாழ்வா னம்மா.

20. உறவினர்களிடம் மதிப்புப் பெறுவான். உலகில் பலருக்கும் உதவிகள் செய்வன். செல்லும் இடங்களிலெல்லாம் பெருமையடைவான். ஏவிய பணிகளைச் செய்ய ஆட்கள் அதிகம் சேர்ப்பான். உயர்வான தலங் கட்டு யாத்திரை செல்லுவான். மேன்மேலும் தான் செய்யும் தொழிலில் உயர்வடைவான். இலட்சுமீ கடாட்சம் பெற்று இந்த ஜாதகன் வாழ்ந்திருப்பான், தாயே!

## ஜாதகனுக்கு யோகமேற்படக் கிரகநிலை

21. பாலகன் தனக்கு யோகம் பகர்ந்தகா ரணங்கள் [சொல்வீர்
மால்குசன் காரி மூவர் மாறியே யிருப்ப தாலும்
[1]ஆலமு மேட மாக [2]அருக்கனுக் கிருபான் நல்லோன்[3]
சால்வே யிருப்ப தாலே சாமரை யோக முண்டு.

21. ஜாதகனுக்கு மேற்கூறிய யோகங்கள் எவ்விதக் காரணங்களால் ஏற்படும்? அந்த விவரங்கள் கூறுங்கள் முனிவரே, என்று பார்வதியம்மை

1. ராகு, 2. சூரியன், 3. புதன்

கேட்க, முனிவர் சொல்லுகின்றார். புதன் அங்காரகன் சனி ஆகிய மூவரும் இடம் மாறி, புதன் வீட்டில் (கன்னியில்) சனியும் சனி வீட்டில் (மகரத்தில்) அங்காரகனும் அங்காரகன் வீட்டில் (மேஷத்தில்) புதனும், பரிவர்த்தனை யாக இருப்பதாலும் இராகு மேஷத்திலும், சூரியனுக்குப் பனிரண்டா மிடத்தில்புதன் இருப்பதாலும் சாமரையோகம் இந்த ஜாதகனுக்கு உண்டு.

## யோக பலன்

22. மாருதி யோக மொன்று மருவிடும் பால னுக்குத்
தேறினோர் தொண்டு பூணல் சேத்திரம் சித்திரம்
[செய்தல்
பாருக ளிருவூர் சேர்க்கை பலவித செட்டுச் செய்தல்
கூறுவோ மிருபா னென்று ஆண்டின்மேல் யோகம்
[சொன்னோம்.

22. மாருதியோகம் ஒன்றும் இந்த ஜாதகனுக்கு ஏற்பம். தெளிந்து முற்றிய ஞானமுடைய பெரியோர்களுக்குத் தொண்டு செய்வான். வீட்டைப் புதுப்பித்து அழகுபடுத்துவான். இரண்டு ஊர்களில் நிலபுலங் கள் சேரும். பலவிதமான தொழில்கள் செய்வான். இருபத்தோராம் வயதுக்கு மேல் இந்த ஜாதகனுக்கு யோகம் மேற்கூறிய வண்ணம் உண் டாகும் என்று கூறினோம்.

## ஜாதகன் யோகம்: தொடர்ச்சி

23. பலருமே வசிய மாகும் பஞ்சைகட் குதவி செய்வன்
குலமதிப் புடனே வாழ்வன் கூடிடும் நினைத்த வெல்லாம்
அலரியின் தசைவி சேஷம் அற்புத யோக மெய்தும்
மலையிறை மகளே பின்பால் வழுத்துவோம் விபர மாக.

23. பலரும் இவனுக்கு வசியமாவார். கதியில்லாதவர்கட்கு உபகாரம் செய்வான். குலத்தவர் மதிக்கும்படியாய் வாழ்வான். நினைத்த காரியங்க ளெல்லாம் கைகூடும். சூரிய மஹா தசையின் விசேஷம் என்னவென்றால், அப்போது, அற்புதமான யோகங்கள் உண்டாகும். மலையரசன் மகளே! மற்றச் செய்திகளைப் பிற்பாகத்தில் விவரமாகச் சொல்லுவோம்.

## தாயின் குணங்கள்

24. மாதிரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடைய
[ளாகும்
குதிலாள் சொல்காப் பாளாம் சோம்பிடாள் கோபம்
[கொஞ்சம்
பாதக புத்தி யில்லாள் பண்போர்க்கு அன்ன மீவள்
வேதனை மனமில் லாதாள் மேவிடும் பித்த வாயு.

24. இனித் தாயின் குணங்களைச் சொல்லுவோம். கருஞ் சிவப்பு நிறமுடையவள். வஞ்சனை யில்லாதவள். சொன்ன சொற்களைக் காப்பாள். காரியங்கள் செய்வதில் சோம்பலடையாதவள். சிறிதே கோபமுடையவள். பிறருக்குப் பாதகம் இயற்றும் புத்தியில்லாதவள். நற்பண்புடையோருக்கு உணவு அளிப்பாள். வேதனை படையும் மனமில்லாதவள் இவளுக்குப் பித்தவாயு நோய் உண்டு.

## இதுவுமது

25. சீலமு முடைய ளாகும்
சிறுத்தோர்க்கு வுதவி செய்வள்
ஞாலமேல் நல்லோ ளாவள்
நாயகன் மனத்துக் கேற்ருள்
சாலவே துணைஆண் தோஷம்
சக்தியு மொருத்தி தீர்க்கம்
வல்லிக்குத் துணைஆண் தோஷம்
விளம்புவீர் முனியே நீர்தாம்.

25. நல்லொழுக்கமுள்ளவ ளாவாள். ஏழைகளுக்கு உபகாரம் செய்வாள். உலகில் அனைவருக்கும் நல்லவளாக இருப்பாள். கணவன் மனத்துக்கு உகந்தவள். இவளுக்குச் சகோதரன் தோஷமடைவான். சகோதரி பொருத்தி தீர்க்க முள்ளவளாக இருப்பாள். இவ்வாறு முனிவர் சொல்ல, பார்வதிதேவி கேட்கின்ருள். ஜாதகனின் தாய்க்கு உடன் பிறந்த ஆண் நிலையாமல் போனதற்குக் காரணம் கூறுவீர், முனிவரே! தாங்கள்.

## தாயின் முற்பிறவி

26. அஞ்சினில் சேயும் தங்க அறைந்தன மந்தச் சங்கை
வஞ்சியின் முன்ஜன் மத்தை யறைகிருேம் தாயே கேளும்
பஞ்சம தலத்தி லேதான் பிறந்தனள் வன்னியச் சேயாய்
மிஞ்சின குடும்பி யாகி வித்தகி வாழும் நாளில்;

26. இலக்கினத்துக்கு ஐந்தாமிடத்தில் செவ்வாய் தங்கியிருப்பதால், தாய்க்குச் சகோதர தோஷம் ஏற்படும் என்று சொன்னேம். இனி, ஜாதகனின் தாயின் முன்பிறவி பற்றிக் கூறுகிருேம். தாயே! கேளுங்கள். பஞ்சபூத ஸ்தலத்திலொன்ருகிய சிதம்பரத்தில் வன்னிய மரபில் பிறந்து, மேன்மையான குடும்பமுடையவளாய் இவள் வாழ்ந்து வரும் காலத்தில்;

## தாயின் முற்பிறவித் தீவினை

27. தனமிலா வேழை மாது தன்சுதர்க் கன்னம் வேண்ட
வினைமன மாகச் சொல்லி விரட்டினு ளேழை தன்னை

வனிதையு மனவெ றுப்பா லறைந்தசா பத்தைக்
[கேண்மோ
சினம்கொண்டுமொழிந்த பாவி சுதர்களும் தோஷ
[மெய்தும்.

27. ஏழைப் பெண்ணொருத்தி தன் குழந்தைக்குச் சிறிது உணவு அளிக்குமாறு இவளை வேண்ட, ஜாதகனின் தாய் கோபமாகச் சில சொற்களைக் கூறி அவ்வேழைப் பெண்ணை விரட்டினாள். அப்பெண் மனம் வெறுப்புற்றுக் கூறிய சாபத்தைக் கேளுங்கள்: "குழந்தைகளுக்கு உணவு அளிக்குமாறு வேண்டிய என்னைக் கோபவார்த்தைகள் சொல்லி விரட்டிய பாவியே! உனக்குப் பிறக்கும் மக்களுக்குத் தோஷம் ஏற்படும்;

## ஏழைப்பெண்ணின் சாபம்

28. மற்றொரு ஜன்மம் தன்னில் மைந்தரும் தோஷ மெய்தும்
உற்றதோர் துணையு மின்றி உலகினில் வாழ்வா
[யென்ன
பத்திற்று வந்தத் தோஷம் பாவைவேறு தோஷம்
[காணாள்
வித்தகிக் கச்சென் மத்தில் விரயமாம் சுதர்கள் யாவும்.

28. "மறுபிறவியில் உனக்குத் தோன்றும் புதல்வரும் தோஷமடைவார்கள். நீ உடன் பிறந்த ஆண் துணை இல்லாமல் உலகில் வாழ்ந்திருப்பாய்" என்று சாபமிட்டாள் ஏழைப்பெண். அந்தத் தோஷம் ஜாதகனின் தாயினைப் பற்றியது. வேறு தீவினை எதுவும் அறியாதவள். அங்ஙனம் ஏற்பட்ட தோஷத்தால் இவளுக்குத் தோன்றிய குழந்தைகள் அனைத்தும் நஷ்டமடைந்து;

## தாயின் நற்செயல்

29. சஞ்சல் மனத்த ளாகித் தந்தியின் கோஷ்டத் திற்கும்
நஞ்சணி மாரிக் கும்தான் நாயகி தீபம் வைத்து
வஞ்சியு மரண மாகி மலரயன் வரையப் பட்டுத்
தஞ்சமா யுதித்தா ளென்றோம் தங்கிடு மேழைச் சாபம்.

29. அதனால், மனம் மிகச் சஞ்சலம் அடைந்து, யானைமுகக் கடவுளின் கோயிலுக்கும், மாரியம்மன் கோயிலுக்கும் ஜாதகனின் தாய் விளக்குகள் ஏற்றிவைத்து வழிபட்டாள். பின்பு மரண மடைந்து, தாமரை மலரின் மீது எழுந்தருளியுள்ள பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் இக்குலத்தில் பிறந்தாள் என்று சொன்னோம். ஏழைப் பெண் சாபம் இவளைச் சாரும்.

## நற்செயலின் பலன்

30, சுதர்களும் தோஷ மெய்தும் துணையாணு மில்லா [ளாகும்
வதிஷ்டரும் மறுத்துச் சொல்வார் மங்கைக்குச் சுதரா [ஞென்று
மதிமுகப் பெண்பா லொன்று மருவின கார ணஞ்சொல்
துதிக்கையோன் கோஷ்டத் திற்கும் சிறமற்ற மாதுக் [கேதான்;

30. தோன்றும் மக்களுக்கு நஷ்டம் ஏற்படும். உடன் பிறந்த சகோதரன் இல்லாதவளாவள். இங்ஙனம் முனிவர் கூற, வசிட்ட முனிவர் இதனை மறுத்து ஒன்று சொல்லுவார். இங்ஙனம், தோஷமேற்பட்டு, இவளுக்கு ஆண்குழந்தை யொன்றும், சந்திரன் போன்று ஒளிபொருந்திய முகமுள்ள பெண்குழந்தை யொன்றும் தோன்றித் தீர்க்கமாயிருக்கும் காரணம் கூறுவீர்", முனிவர் சொல்லுகிறார், துதிக்கையை யுடைய விநாயகப் பெருமான் கோயிலுக்கும், மாரியம்மன் கோயிலுக்கும்;

31. தினம்தீபம் வைத்த புண்ணியம்
தீர்க்கமா மிரண்டு வென்றோம்
வனிதையின் ஜன்மம் சொல்வோம்
விரிஞ்சிமா நகரம் தன்னில்
சினமிலா விக்கு லத்தில்
ஜனிப்பளா மென்று சொல்வோம்
வினையிலாத் தவங்கள் செய்யும்
வித்தகி கேட்டி டாயே.

31. தினந்தோறும் விளக்குகள் ஏற்றி வைத்த புண்ணியப் பலனால் தீர்க்கமாக இரண்டு குழந்தைகளும் விளங்கும் என்று சொன்னோம். இனி, தாயின் மறுபிறவி பற்றிச் சொல்லுவோம். விரிஞ்சி நகரத்தில், இக்குலத்தவளாகப் பிறப்பாள் என்று கூறுவோம். குற்றமற்ற தவங்களைச் செய்யும் பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனின் தந்தையின் முற்பிறவி

32. தந்தையின் முன்ஜன் மத்தைச் சாற்றுவோம் பெண்ணே [தென்பால்
முந்தின பேரூர் தன்னி லுதித்தனன் வடுகச் சேயாய்
பந்தணி மனைவி மைந்தர் பாக்கிய முடைய னுகிச்
சிந்தையு நல்ல தாகி ஜனவுப காரி யாயும்;

32. இனிமேல், ஜாதகன் தகப்பனாரின் முற்பிறவி பற்றிச் சொல்லு வோம். பெண்ணை யாற்றுக்குத் தெற்கில், முன்னேற்ற மடைந்துள்ள தொரு பெரிய ஊரில் வடுக மரபினனாகப் பிறந்தான். மனைவி மக்களை யடைந்து, நற்பாக்கியங்களை யுடையவனாய், நல்மனமுள்ளவனாகி, மக்கள் பலருக்கும் உதவி செய்தும்;

## தந்தையின் மறுபிறவி

33. அறமதி லிச்சை யுண்டாய் அந்தக னுலகம் சென்று
பிரமனால் வரையப் பட்டுப் பிறத்தவ னென்று
[சொல்வோம்
வரும்ஜன்மம் மயில மேற்கில் வளமுள பேரூர் தன்னில்
உறைகுவா னருகர் வர்க்கம் உத்தமி கேட்டி டாயே.

33. தருமச் செயலில் விருப்பம் உண்டாகி வாழ்ந்து, முடிவில் மரணம் அடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இவ்வுலகில் இந்த ஜாதகன் தகப்பனாகப் பிறந்தவன் இவன் என்று கூறுவோம். தந்தை மறுபிறவியில் மயிலம் என்னும் தலத்துக்கு மேற்குத் திசையில் உள்ளதொரு செழிப்பான பெரிய ஊரில், சமண மரபில் தோன்றுவான். உத்தமியே! கேட்பாயாக.

## தாய்தந்தையரின் மரணகாலம்

34. முப்பது நாலு வாண்டில் விளம்புவோம் தந்தை கண்டம்
செப்புவோ முப்பா னைந்தில் சேயனைப் பெற்ற வன்னை
ஒப்புவாள் கால நாடு உரைத்தவிம் மொழிகுன் றுது
தப்பித மிதற்குள் ளாகச் சாராதோ விபரம் சொல்வீர்.

34. ஜாதகனது முப்பத்து நான்காம் வயதில் தந்தைக்கு மரணம் ஏற்படும் என்று சொல்லுவோம். ஜாதகனைப் பெற்ற தாய் அவனது முப்பத்தைந்தாம் வயதில் மரண மடைவாள் என்று கூறுவோம். நாங்கள் கூறிய மொழிகள் தவறா. இதனைக் கேட்ட பார்வதிதேவி கூறுகின்றாள். இதற்குள்ளாகவே ஜாதகனுக்குத் தீங்குகள் எவையும் நேராவோ? விவரங் கள் கூறுவீர்.

## ஜாதகனுடைய மரணகாலம்

35. என்னநோய் வந்த போதும் இரவிமுன் பனிபோல்
[நீங்கும்
மன்னனுக் கறுபா னறில் மார்கழி மாதம் தன்னில்
அன்னவ னுடல மேகும் அறைகிறோ மிவன்பின்
[ஜன்மம்
பொன்முகரி யாற்றி னோரம் பிறப்பனும் பிரம்ம சேயாய்,

35. எந்த வியாதிகள் ஜாதகனுக்கு வந்தாலும் அவை சூரியனைக் கண்ட பனிபோல ஓடிவிடும். ஜாதகனுக்கு அறுபத்தாறும் வயதில் மார்கழி மாதம் மரணம் ஏற்படும். ஜாதகனின் மறுபிறவி பற்றிக் கூறுகிறோம். பொன் முகரியாற்றங்கரையில் உள்ள காளஹஸ்தியில் அந்தணர் குலத்தில் பிறப்பான்.

## ஜனனகால தசை

36. பிறந்திடு காலந் தன்னில் புததசைத் திங்க ளைந்தும்
உறைந்திடும் நாள்கள் பத்தும் உரைத்தனம் பூர்வ பாக
மறிவிப்போம் பின்பா கத்தில் விபரமாய்ப் பலன்கள் [யாவும்
கரிமத வானைப் பெற்ற காதலி கேட்டி டாயே.

36. ஜாதகன் பிறக்குங் காலத்தில் புதமகா தசையில் இறுதியில் மாதங்கள் ஐந்தும் நாட்கள் பத்தும் இருப்பாகும். இதுவரை முதற்பாகம் சொன்னோம். மற்றப் பலன்களை விவரமாய்ப் பிற்பாகத்தில் உணர்த்துவோம். கரிய யானைமுகக் கடவுளைப் புதல்வராகப் பெற்ற தாயே! மேலுங் கேட்பாயாக.

# ஜாதகம் 79

## ஜனனகால கிரகநிலை

1. கலை[1] துலாம் காரி[2] மேரு[3] கனகனும்[4] வண்டி[5] யாக
நிலமகன் ராகு பானு[7] நந்தி[8]யில் கேது தேளில்[9]
புலவனும்[10] புகரு[11] மேடம் பெண்ணது[12] ஜனன[13]மாகப்
பலனெவ்வாறு சொல்லு மென்று பார்வதி கேட்க
[லுற்ருள்.

1. சந்திரன் துலாத்திலும், சனி தனுசிலும், குரு கடகத்திலும் செவ்வாய், ராகு, சூரியன் ரிஷபத்திலும், கேது விருச்சிகத்திலும், புதன், சுக்கிரன் மேஷத்திலும் நிற்க; கன்னியா லக்னத்தில் பிறந்த ஜாதகருக்குப் பலன்கள் எங்ஙனம் என்று சொல்லுங்கள் என்று பார்வதிதேவி கேட்கின்ருள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | புதன் சுக்கிரன் | அங்காரகன் ராகு சூரியன் | |
| | இராசி சக்கரம் | | குரு |
| | | | |
| சனி | கேது | சந்திரன் | லக்கினம் |

---

1. சந்திரன்
2. சனி
3. தனுசு
4. குரு
5. கடகம்
6. அங்காரகன்
7. சூரியன்
8. ரிஷபம்
9. விருச்சிகம்
10. புதன்
11. சுக்கிரன்
12. கன்னி
13. இலக்கனம்

## ஜாதகன் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. அத்திரி சொல்லு கின்ருர் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் விளங்கிடும் கீழ்மேல் வீதி
பத்திய வடக்கு வாசல் பாலகன் கணேசன் தென்மேல்
சுத்தநீ ரருகில் தங்கும் சிம்மவா கனத்தா ளுத்தரம்.

2. ஏழு முனிவர்களில் ஒருவராகிய அத்திரி முனிவர் சொல்லு கின்ருர். இந்தப் பிறப்பு ஆண். ஜாதகன் வீட்டைப் பற்றிச் சொல்லுகிருேம். கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கிய வாயிலையுடையது. முருகப் பெருமான், விநாயகக்கடவுள் ஆகியோர் தென்மேற்குத் திசையில் கோயில் கொண்டிருப்பர். தூய்மையான நீர்நிலை யொன்று வீட்டுக்கு அருகில் உள்ளது. சிங்கவாகனமுடைய துர்க்கையம்மன் ஆலயம் வீட்டுக்கு வடக்கில் இருக்கும்.

## இந்நூலில் சொல்லப்படும் செய்திகள்

3. இந்தநல் லடையா ளத்துள் இறங்கிய சிறுவூர் தன்னில்
சுந்தரன் வடுகன் தானும் சூழ்தவச் சேயா மின்னேன்
வந்தவன் முன்னேர் செய்கை வரும்செய லின்ன [தென்று
விந்தையாய் நவக்கோ ளாய்ந்து விளம்புவோம் தாயே [யாங்கள்.

3. இவ்விதம் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள சிறிய தொரு ஊரிலுள்ள வீட்டில் இந்த ஜாதகன் வடுகர்மரபினனுகப் பறப்பான். இனி, ஜாதகன் முன்னேர்களது செய்திகள், ஜாதகனுக்கு ஏற்படும் இன்பதுன்பங் கள் முதலியவற்றை அதிசயிக்கத்தக்க முறையில் நவக்கிரகங்களும் நிற்கும் நிலையை ஆராய்ந்து நாங்கள் கூறுவோம் தாயே!

## தந்தையின் செய்தி

4. தந்தையின் துணைவ ரிரண்டு தரித்திடும் தங்கா தாகும்
சந்தத மவன்கு ணத்தைச் சாற்றுவோ மிருசி வப்பன்
சிந்தையும் கபடு முள்ளான் தந்தையி னுஸ்தி காணுன்
வந்திடு மனைவி தன்னு லறைந்தனம் யோகம் தானும்.

4. ஜாதகன் தந்தையுடன் பிறந்தவர் இருவராவர். அவர்கள் நிலைத் திரார். இத்தந்தையின் குணங்களைச் சொல்லுவோம். இவன் கருமை கலந்த சிவப்பு நிறமுடையவன். மனத்தில் கபடமுள்ளவன். தனது தந்தையால் தேடிவைக்கப்பட்ட பொருளில்லாதவன். தனக்கு வாய்க்கும் மனைவியால் இவனுக்கு யோகமுண்டாகும் என்று சொன்னேம்.

## இதுவுமது

5. கல்நெஞ்ச மிரவு காலம் காலிகள் வினையாய்ச் செய்வன்
துள்ளிடு குணத்தா ளுகும் துராசையு முடைய ளுகும்
உள்ளதை வுரையா ளுகும் ரோமங்கள் நீட்சி யில்லான்
வள்ளுவர் போலே நியாயம் வருவிப்பான் தாயே கேளு

5. கல்போன்று கடின மனமுடைவன். இராக்காலங்களில் கால் நடைகளைத் திருடுவான். எப்பொழுதும், ஏதாவது செய்யவேண்டு மென்று எண்ணிக் கொண்டு இருககும் துடிதுடிப்புள்ள இயல்புடையவன். தகாத ஆசையும் உடையவன். மனத்திலுள்ள உண்மையைக் கூறமாட்டான். தலைமயிர் நீளமில்லாதவன். திருவள்ளுவர் போல நீதிக்கருத்துக்களை எடுத்துக் கூறுவான். தாயே! கேளுங்கள்.

## இதுவுமது

6. பயிர்த்தொழில் செய்வா ளுகும் பாவை பர் மோக ளுவன்
நயமுள வார்த்தை கூறும் நற்பந்தைப் பேணு ளுகும்
பயமிலா னெதிரிக் கஞ்சான் பஞ்சைமே லிரக்க மில்லான்
அயலார்பொன் னிச்சை யில்லான் அறைகிறோ
[மவன்தன் பூர்வம்.

6. விவசாயத் தொழில் புரிவான். பெண்களிடம் மையல் கொள்ளு வான். நயம்படப் பேசுபவன், தன் உறவினர்களை ஆதரிக்க மாட்டான். பயமில் லாதவன். தன் விரோதிகளைக் கண்டு அஞ்சுதல் இல்லாதவன். கதியற்ற ஏழைமக்களிடம் கருணையில்லாதவன். அயலார் சொத்தில் ஆசையில்லா தவன். இனி, இவனுடைய முற்பிறப்பைப் பற்றிக் கூறுகிறோம்.

## தந்தையின் முற்பிறவி

7. சொக்கர்வாழ் பாண்டி நாட்டில்
ஜனித்தனன் மறவ ளுகத்
தக்கோர்கள் நேசம் கொள்ளான்
ஜனநிந்தை யதிக முண்டாய்
முக்கியம் சோரம் செய்து
வித்தகன் வாழ்ந்து மேதான்
[1] நக்கன்மேல் பக்தி கொண்டு
நமன்பதிக் காளா யின்னேன்;

7. சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியுள்ள பாண்டிய நாட்டிலுள்ள தோர் ஊரில் மறவர் குலத்தவளுகப் பிறந்தான். சிநேகம் செய்யத் தக்கவரு

1. சிவபெருமான்

டன் நட்புக் கொள்ளாதவன். மக்களால் நிந்தைகள் மிகுதியாக ஏற்பட்டது இவனுக்கு. பிறர் பொருளைபபகரித்தலாகிய திருட்டுத் தொழிலை முக்கியத் தொழிலாக மேற்கொண்டு இவன் வாழ்ந்திருந்தான். ஆயினும் சிவபெருமான் மீது பக்தி கொண்டிருந்தான். முடிவில் மரண மடைந்து, இவன்;

## இதுவுமது

8. நரகத்தில் பன்னுள் மூழ்கி [1]நாற்றலை வரையப் பட்டுக்
கருமியாம் வடுகர் வமிசம் கலந்தன னிவனே யென்றேம்
திருமகன் முன்செய் தோஷத் தீவினைத் துணைவர்
[தோஷம்
பெறும்தந்தை யாஸ்தி காணுன் பேதையு மத்தி யத்தில் ;

8. நரகத்தில் பலகாலம் கிடந்து துன்பப்பட்டு, மீண்டும் நான்கு திருமுகங்களை யுடைய பிரமனால் படைக்கப்பட்டு, பிறருக்கு ஒரு பொருளைக் கொடுக்க மனமில்லாத உலோபத் தன்மை யுடைய வடுகர் மரபில், இப்பிறப்பில் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று சொன்னேம். இவனுக்கு நேர்ந்த முற்பிறவித் தீவினையால் உடன் பிறந்தோருக்குத் தோஷம் ஏற்படும் பெற்ற தந்தையின் ஆஸ்தி காணுதவன். இவன் மனைவியும் இடைக் காலத்தில்;

9. ஏகுவா ளந்தி யத்தில் இடுக்கமாய் வாழ்வா னுகும்
பாகமாய் வேறு மாது பற்ருதிக் குணத்தா னுக்கு
மோகமா யிவனு திப்பான் மொழிகிறேம் துணைவர்
[தம்மை
ஆகமம் போலே நான்கு அறைந்தன மதிலா ணிரண்டு;

9. இறந்து, தன் கடைசிக் காலத்தில் துன்ப மடைந்து வாழ்ந்து வருவான். அவனுக்கு இரண்டாம் மனைவி வாய்க்க மாட்டாள். இவ்விதம் கூறப்பட்டவனுக்கு இந்த ஜாதகன் பிறந்தவன் என்றேம். இனி ஜாதகனுடைய உடன் பிறந்தவரைப் பற்றிச் சொல்லுகின்றேம். வேதங்களின் எண்ணிக்கையைப் போல் நான்கு பேர் உடன் பிறந்தவர் என்றேம். அவர்களில் சகோதரர் இருவரும்;

## ஜாதகனுடைய சகோதரனின் விவரம்

10. கன்னிகை யவ்வா ருகும் கழறின ஆண்பா லுந்தான்
பின்னவ னுகச் சொல்வோம் பேசுவோ முன்னேன் சேதி
கன்மனம் பொருள்மே லிச்சை காவல னிருந்தி றத்தான்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பான் கிருஷி
[செய்வன்.

---

1. நான்குதலைகளை யுடைய பிரமன்

10. சகோதரிகள் இருவரும் ஆக நால்வராவர். உடன் பிறந்த சகோதரர்கள் இருவரும் ஜாதகனுக்கு இளையவர்கள் என்று கூறுகின்றோம். அவ்விருவர்களில் மூத்த சகோதரனுடைய விவரங்களைப் பற்றித் தெரிவிக்கிறோம். கல்லைப் போன்று கடினமான மனமுள்ளவன். செல்வம் பொருள் இவைகளின் மீது அதிக ஆசையுள்ளவன். கருமை கலந்த சிவந்த நிறமுடையவன். தன் வார்த்தைகளே உயர்ந்தன வென்று நிலை நாட்டுவான். உலகில் விவசாயம் செய்து ஜீவிப்பான்.

## ஜாதகனுடைய சகோதரருடைய புத்திரபாவம்

11. சமயோகம் மனைவி யொன்று சார்ந்திடுங் கீழ்ப்பா லாக
அமைந்திடுஞ் சுதரா ணிரண்டு அம்பிகை யவ்வா றுகும்
நியமங்க ளேற்கா னுகும் நேமியில் சீல மில்லான்
தவஞ்செய்யும் மாதே பின்னேன் சாற்றுவோ மவன்கு
[ணத்தை

11. அதிகத் தாழ்ந்ததும் அதிக உயர்ந்தது மில்லாததான வாழ்க்கை சமநிலையான யோக முள்ளவன். அவனுக்கு மனைவி ஒருத்தியே வாய்ப்பாள். அவளும் அவனுடைய வீட்டுக்குக் கிழக்கிலிருந்து வருவாள். புத்திரர்கள் இருவரும் புத்திரிகள் இருவரும் தோன்றுவர். அவன் நோன்பு. நியமங்கள் முதலியவற்றை ஏற்று அதன்படி நடவாதவன் என்றோம். உலகில் நல்லொழுக்க மில்லாதவனுக இருப்பான். தவங்களை இயற்றிய தேவியே! இனி அடுத்த சகோதரனுடைய குணங்களைச் சொல்லுவோம்.

## ஜாதகனுடைய இளைய சகோதரனுடைய விவரம்

12. ஊகவான் தந்திர வாதி உறுதியா மனத்த னுகும்
பாகமாய்ப் பேசு வானும் பாதிநாள் ஜீவிப்பா னுகும்
தோகையர் மோக வானும் சொல்லுமுன் கோபி யாவன்
வாகையாய்க் காலி விருத்தி மனைவியு மொன்றே யாகும்.

12. ஊகமுள்ளவன். தந்திரமாகப் பேசுபவன். திடமானமனமுள்ளவன். சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி பேசுவான். ஜீவ தசையில் பாதி காலமே ஜீவிப்பான். பெண்களின் மீது மையல் கொள்ளும் இயல்பினன். பேச ஆரம்பிப்பதற்கு முன் கோபம் கொள்ளும் இயல்பினன். கால் நடைப் பெருக்கம் உள்ளவன். மனைவி ஒருத்தியே வாய்ப்பாள்.

## ஜாதகனுடைய சகோதரியின் விவரம்

13. சுதர்களும் காணு னுகும் தோன்றினும் தீதே யாகும்
அதிபதி வடகீ ழாகும் வந்திடு மென்று சொல்வோம்
பதர்குணம் சமயோ கத்தாள் பகருவோம் பின்பால் சேதி
மதிமுக துணைவி சேதி மாஞ்சிவப் புடைய ளாமே.

13. புத்திர பாக்கிய மில்லாதவன். பிறந்தாலும் நிலையா. வடகிழக்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள் என்று கூறுகின்றோம். அற்ப குணமுள் ளவன். சமநிலையான அதிர்ஷ்ட முள்ளவள். மற்ற விவரங்களைப் பிற்பா கத்தில் சொல்லுகின்றோம். இனி அழகிய முகத்தை யுடைய சகோதரி யின் விவரங்களைச் சொல்லுகின்றோம். மாநிற முடையவள்.

## இதுவுமது

14. வறுமைக ளடைய ளாகும் வரனுமே கீழ்ப்பால்
[தோன்றும்
பெருஞ்சுத ராண்பா லிரண்டு பெண்ணது மவ்வா ருகும்
திருமக ளொப்ப தாகும் சுகமுளக் குடும்பி யாவள்
மறுதுணை சேதி கேளாய் மதிமுக ஒட்டம் காணுள்.

14. அவள் தரித்திர நிலை யடையாதவள். அவளுக்குத் கிழக்குப் பக்கமிருந்து கணவன் வருவான். தோன்றும் குழந்தைகளில் இரு ஆணும் இரு பெண்ணும் இருக்கும். அப்பெண்கள் இலக்குமியைப் போன்று அழகும் செல்வமு முடையவர்கள். சௌக்கியமான குடும்பத்தை ஏற்று நடத்துவாள். மற்ற சகோரியைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேளுங்கள். முகத்தில் அழகில்லாதவள்.

## ஜாதகனுடைய இரண்டாம் சகோதரியின் விவரம்

15. மணமிலாள் மதலை யில்லாள் மத்திய வயதில் மாய்வள்
குணமிலா ளென்று சொல்வோம் குறித்தனம் துணைவர்
[சேதி
கனமுட னுதித்தோன் சேதி கழறுவோ மிருசி வப்பன்
வினையதை யொருவர்க் கெண்ணுன் வீண்வம்பு புகலா
[ருகும்.

15. திருமணம் நடைபெறுதவள். அதனல் புத்திர பாக்கியமும் இல்லாதவள். இடை வயதிலேயே இறந்து விடுவாள். நற்குணமுடைய வள் அல்லவென்று சொல்லுகின்றோம். இதுவரை ஜாதகனுக்கு உடன் பிறந்தவர்களின் செய்தி விவரங்களைக் கூறிக் கொண்டு வந்தோம். இனி இந்த ஜாதகனைப் பற்றிய செய்திகளைக் கூறுவோம். கருமை கலந்த சிவந்த நிறமுள்ளவன். தீங்கை ஒருவருக்கும் செய்ய முற்படாதவன். அனுவசிய மான வம்பு பேசாதவன்

## ஜாதகனது இயல்புகள்

16. இல்லமும் புதிதாய்ச் செய்வன் ஏந்திழை கேட்க
[லுற்ருள்
வல்லவ னெந்தக் கால மமைந்திடு மில்லம் தானும்

சொல்லுவேன் முப்பான் மூன்று ஆண்டின் மேலில்லம்
[செய்வன்
தல்லியின் வர்க்கத் தாரால் பிரிதலா மூவெட் டின்மேல்.

16. புதிய வீடு ஒன்று கட்டுவான். பார்வதிதேவி கேட்கலானாள், ஜாதகனுக்கு எந்தக் காலத்தில் வீடு கிடைக்கும் எனக் கூறுங்கள். முனிவரே! அவனுடைய முப்பத்து மூன்றும் வயதுக்கு மேல் வீடு கட்டு வான். தாயின் வர்க்கத்தாரால் ஜாதகனுடைய இருபத்து நான்காம் வயதுக்குமேல் பாகம் பிரிக்கப்படும்.

## ஜாதகனுடைய திருமணக்காலம்

17. பயிர்த்தொழில் செய்வா னுகும் பரவுப காரம் செய்வன்
நயமுள வார்த்தை கூறுவன் நற்கர முருத்திர ரேகை
தயையுள மனத்த னுகும் சாற்றுவோ மிரண்டு தாரம்
தயையுட னிருபான் மூன்றுள் தன்மனை வாய்க்கு
[மென்றேம்.

17. விவசாயம் செய்து வருவான். பிறருக்கு உபகாரம் செய்யும் இயல்பினன். நன்மையுள்ள வார்த்தைகளையே பேசுபவன். கையில் ருத்திர ரேகை யுள்ளவன். இளகிய மனமும் தயையுள்ள மனமும் உடைய வன். அவனுக்கு இரு மனைவியர் உண்டு என்றேம். ஜாதகனுடைய இரு பத்து மூன்றும் வயதில் அவனுக்குத் திருமணம் நிகழும்.

## மனைவியின் இயல்புகள்

18. அவள்குணம் மாஞ்சி வப்பள் ஆளனுக் கினிய ளாகும்
தவசிக ளுறவு கொள்ளாள் தான்பெரு தனமு முள்ளாள்
நவனியி லடக்க முள்ளாள் நற்சொலு மர்ம மில்லாள்
பவமிலாள் அன்னை யிரண்டு பாவையும் பெண்துணை
]யொன்றே.

18. இனி மனைவியின் குண நலங்களைச் சொல்லுகின்றேம். அவள் மாநிற முடையவள். தன் கணவனுக்குப் பிரியமானவள். தவம் செய்பவர் களின் நட்புக் கொள்ளாதவள். அவளுக்குப் பெருத்த செல்வ மிருக்கும். உலகில் அடக்கமாக நடந்து வருபவள். அவள் கூறும் வார்த்தைகள் நன்மை பயக்குவனவாகவே இருக்கும். இரகசியமில்லாதவள். வேறு தீவினைகள் இல்லாதவள். இருதாய்மார்களைப் பெற்றவள். சகோதரி ஒருத்தியே யுள்ளவள்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

19. சுதர்களு மாண்பா லிரண்டு தோகையு மவ்வா ருகும்
இவைநான்குந் தீர்க்க மெய்தும் எய்திடும் முதலா
[ணென்று

அதுதுலாம் மகநாள் தோன்றும் அணுகிய மூன்றும் [சென்மம்
கதிதரும் பரணி நந்தி கலப்பனு மதலை யோகம்.

19. ஜாதகனுக்கு இரு புத்திரர்களும் இரு புத்திரிகளும் உள்ளனர். இந்த நால்வரும் தீர்க்காயுள் உள்ளவர்கள் என்றேம். முதலில் தோன்றும் குழந்தை துலா லக்னத்திலும் மக நட்சத்திரத்திலும் பிறந்தது என்றும், மூன்றும்குழந்தை, நட்சத்திரங்களில் உயர்ந்ததும், நற்பயனை அளிக்கும் பரணி நட்சத்திரத்திலும் விருஷப லக்னத்திலும் பிறக்கும் என்றும், குழந்தைகள் யோகம் உள்ளன என்று சொல்லுகின்றேம்.

## ஜாதகனின் முற்பிறவி

20. மதலைகள் யோக வான்கள் வரைகிறே மிவன்தன் பூர்வம்
நதிபெண்ணைக் குத்த ரத்தில் நாட்டிய பேரூர் தன்னில்
சதியிலான் கோகு லத்தில் சனித்துமே ஆவு மேஷம்
அதிகமாய் விருத்தி யாகி அறமதி லிச்சை யுண்டாய்;

20. இதுவரை புத்திர யோகத்தைப் பற்றிச் சொல்லி வந்தோம்; இனி ஜாதகனுடைய முற்பிறவியைப் பற்றி கூறுகின்றேம். பெண்ணை நதிக்கு வடக்கில் உள்ள பெரிய ஊரில் சூதுகளில்லாத இடையர் குலத்தில் பிறந்து, பசுக்கள், ஆடுகள் முதலியவற்றின் பெருக்கத்தையும் பெற்று தருமம் செய்வதில் விருப்பமுற்று;

இப்பாட்டு அந்தாதியாக உள்ளதைக் கவனிக்கவும்.

21. மால்பத்தி யதிகம் கொண்டு மறலியின் பதிக்குச் [சென்றும்
சாலவே பிரமன் லக்கம் தரணியில் வரையப் பட்டு
ஏலவே வடுகர் வமிசம் எய்தின னிந்தப் பாலன்
பாலகன் யோகச் சேதி பகருவோம் தாயே கேளும்.

21. திருமாலின் மீது பக்தி யதிகம் கொண்டு, வாழ்ந்திருந்து, பிறகு மரண மடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில், வன்னிய குலத்தில் பிறந்தவன், இந்த ஜாதகன் என்றேம். இனி ஜாதகனுடைய யோகச் செய்திகளைக் கூறுகின்றேம் தாயே ! கேளுங்கள்.

## ஜாதகன் யோகபாவங்கள்

22. முப்பது ஆண்டு மேலாய் மொழிகிறேம் யோகம் தானும்
அப்பன்மேல் பூமி சேர்ப்பன் ஆவுகள் விருத்தி யாகும்
எப்போதும் வறுமை காணுன் எய்திடும் பால்பாக் [கியங்கள்
சொல்பமும் சல்லியம் கொள்ளான் துரவுகள் பூமி [சேர்ப்பன்.

22. ஜாதகனுக்கு முப்பதாம் வயதுக்கு மேல் போகம் விருத்தியாகும். தன் தந்தைக்கு மேலாக பூமியை வாங்கிச் சேர்ப்பான். பசுக்கள் அதிகமாக வளரும். தன் ஆயுளில் எந்தக் காலத்திலும் ஏழைமை காணுதவன். பால் பாக்கியங்கள் விருத்தியாகும். மிகவும் அற்ப மென்றாலும் கடன் வாங்கப் பிரியமில்லாதவன். கிணறு, பூமி, விளைநிலங்களை வாங்கிச் சேர்ப்பான்.

## பாகப் பிரிவினை

23. *துணைவரோ டொத்து வாழ்வன் சொல்லுவோம்*
*[நாற்பா னைந்தில்*
*பிணையாகத் துணைவர் வேருய் பிரிதலா மென்று*
*[சொல்வோம்*
*கனமான குடும்பி யாவன் கழறுவோ முப்ப தாண்டில்*
*விளையாகத் தாய்வர்க் கத்தில் விலகிடும் பிரித லாக.*

23. ஜாதகன் மாமன் தன் சகோதரனுடன் ஒத்து ஒரே குடும்பமாக வாழ்ந்து வருவான். ஜாதகனுடைய நாற்பத்தைந்தாம் வயதில் தன் சகோதரருடன் மனத்தாங்கல் கொண்டு வேருகப் பிரிந்து விடுவான் என்று சொல்லுகின்றோம். பெரிய குடும்பத்தை யுடையவன். ஜாதகனுடைய முப்பதாம் வயதில் தன் தாய் வர்க்கத்தில் பாகப்பிரிவினை ஏற்படும்என்று கூறுகின்றோம்.

## தாயின் குணங்கள்

24. *மாதுரு குணத்தைச் சொல்வேன் மாநிறம் சமதி ரேகம்*
*தீதுகள் வெளிக்காட் டாதாள் தாயில்லம் தன்னில்*
*[வாழ்வள்*
*ஓதுவாள் சுகமாய் வார்த்தை உற்றதோர் துணையாண்*
*[மூன்று*
*மேதினில் பெண்பா விரண்டு விளம்புவோம் தீர்க்க மாக.*

24. இனி ஜாதகனுடைய தாயின் குணத்தைக் கூறுகின்றோம். அவள் மாநிற முடையவள். சமமான உடலமைப்புள்ளவள். தீமையை வெளியில் ஒருவருக்கும் தெரிவிக்காதவள். தன் தாயின் வீட்டில் வசித்து வாள். பிறர் இன்பமுறும்படி பேசுபவள். அவளுக்குச் சகோதரர் மூன்று பேரும் சகோதரிகள் இருவரும் உண்டு என்றும், அவர்கள் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்று சொல்லுகின்றோம்.

## ஜாதகனுடைய மாமனின் விவரங்கள்

25. *மற்றவை சேத மெய்தும் மாதுலர் முன்னேன் தானும்*
*எத்திசைக் கீர்த்தி யேற்பன் எதிரியை நாசம் கொள்வன்*

வித்தகன் சுகமு முள்ளான் விருந்தினர்க் கன்ப ஞகும்
பத்தினி யொன்றே யாகும் பாலர்க ளாண்பால் காணுன்.

25. மற்றும் தோன்றியவர்கள் நிலையில்லாதவர் என்றும், அவர்களில் மூத்த சகோதரன் (ஜாதகனின் மாமன்) எல்லாத் திக்குகளிலும் புகழை யடைவான் என்றும், விரோதிகளை அறவே ஒழிததுவிடுவான் என்றும், அவன் சௌக்கியமான வாழ்க்கை நடத்துவான் என்றும் கூறுகின்ருேம். விருந்தினர்கட்குப் பிரியமானவன். மனைவி யொருத்தியாவள். ஆண் சந்ததிகளில்லாதவன்.

## இதுவுமது— இளையவன் செய்தி

26. பெண்ணது ஒன்றே யாகும் போகுவான் மத்தி யத்தில்
சண்டன்தன் பதிக்குச் செல்வன் தன்பின்னேன் சேதி
[சொல்வேன்
வண்ணமாய் வார்த்தை யில்லான் மணமிலான் மதலை
[காணுன்
கெண்ணிய மில்லா ஞகும் கேவலத் தேக முள்ளான்.

26. பெண் குழந்தை ஒன்றே என்று கூறுகின்ருேம். அவனுடைய இடைக் காலத்திலேயே மரண மடைவான் என்ருேம். இனி இளைய மாமனின் விவரங்களைச் சொல்லுகின்ருேம். நேர்மையான பேச்சுக்கள் பேசாதவன். திருமணமில்லாதவன். அதனுல் புத்திர பாக்கியமில்லாமலும் கௌரவமில்லாதவனுகவும். கேவலமான சரீர அமைப்பும் உள்ளவனுகவும் வாழ்வன் என்றும் சொல்லுகின்ருேம்.

## மூன்ரும் மாமனின் விவரங்கள்

27. மற்ருெரு துணைவன் சேதி மாநிறம் சுக்கிர நேத்திரம்
குற்றத்தை வெளிக்காட் டாதான் கோதையர் வார்த்தை
[யுள்ளான்
வித்தகன் சமயோ கத்தான் விளம்பினேம் பாரி யொன்று
சுத்தமு மில்லா ஞகும் துறவோர்கள் நேசம் கொள்ளான்

27. ஜாதகனுடைய மூன்ரும் மாமனின் விவரங்களைச் சொல்லுகின் ருேம். அவன் மாநிறமுடையவன். கண் பார்வையில் சிறிது குறையுள்ள வன் (ஓரப்பார்வையுள்ளவன்) தன் குற்றத்தைப் பிறர் தெரிந்து கொள்ளும் படி நடக்காதவன். தன் மனைவியின் பேச்சே மேன்மையானது என்ற எண்ணமுள்ளவள், அவன் சமமான யோக முடையவன். மனைவியும் ஒருத்தியே என்றும் கூறுவோம். சுத்தமில்லாதவள். துறவிகளிடம் பக்தி யில்லாதவன்.

## மாமனின் புத்திரபாவம்

28. பொருந்திடும் சுதர்கள் தோன்றும் புத்திர ராண்பா [லொன்று
திருமக ளொப்ப தாகச் செல்வதி யிரண்டு மாகும்
வருத்தங்க ளடையா னாகும் வயதுமே தீர்க்க மெய்தும்
உரைக்கிறோ மன்னை பூர்வம் ஓங்கிய மயிலை தன்னில்.

28. அவனுக்குப் புத்திர பாக்கியம் உண்டு. ஆண் குழந்தை யொன் றும் இலக்குமியை யொத்த செல்வமும் அழகும் பொருந்திய பெண்கள் இருவரும் பிறந்து, மூவரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றோம். வருத்தம் அடையாதவன். நீண்ட ஆயுள் உள்ளவன். இனி தாயின் முற்பிறவி யைப் பற்றிச் சொல்லுகின்றோம். கீர்த்தியும் புகழும் பெற்ற மயிலாப்பூரில்;

## தாயின் முற்பிறவி

29. பிறந்தனள் தீயின் வமிசம் புகழான குடும்பி யாகி
அறமதி லிச்சை யுண்டாய் அவள்வரன் முன்னே [மாண்டு
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தனள் வடுகர் வமிசம்
இருபது ஆண்டுக் குள்ளே இயல்கன்னி மாதம் தன்னில்

29. வன்னிய குலத்தவளாகப் பிறந்தாள். அவள் கீர்த்தி பெற்ற குடும்பத்தை யடைந்து, தருமம் செயவதில் விருப்பம் கொண்டு, தன் கணவ னுக்கு முன்பாகவே மரண மடைந்து; மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டு, வடுகர் குலத்தில் தோன்றியவள். ஜாதகனுடைய இருபதாம் வயதுக் குள்ளாகவே புரட்டாசி மாதத்தில்;

## தாயின் மரணகாலமும், மறுபிறவியும்

30. பறப்பளாம் காலன் பக்கல் பகருவோ மறுசென் மத்தை
திருப்பனங் காடு மேற்கில் செனிப்பளாம் சைவச் [சேயாய்
பெருமையும் புகழு முண்டாய் புண்ணிய வதியும் [வாழ்வள்
அறம்தனை வளர்க்கு மெங்க ளாத்துமத் தாயே கேளாய்.

30. மரணம் அடைவாள். இனி தாயின் மறுபிறவியைக் கூறுகின் றோம். திருப்பனங் காட்டுக்கு மேற்கில் சைவ குலத்தில் தோன்றுவாள் என்று கூறுகின்றோம். பிறந்து, கீர்த்தியும் பெருமையையும் பெற்று, புண்ணியவதியாக வாழ்ந்து வருவாள். தருமத்தை வளர்க்கும் எங்கள் உயி க்குயிரான தாயே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய தந்தையின் மரணகாலமும் மறுபிறப்பும்

31. ஆருறு இரண்டு ஆண்டில் அவிட்டமா தத்தி லேதான்
கூறுவோம் தந்தை கண்டம் கூற்றன் தன் பதிக்குச் [செல்வன்
வேறுசென் மத்தைச் சொல்வேன் வேலங்கா டதனில் [வன்னியன்
தீரமாயு திப்பர் ளுகும் செல்வதி மேலும் கேளே.

31. ஜாதகனுடைய முப்பத் தெட்டாம் வயதில் அவனுடைய தந்தை மரணம் அடைவான். அவனுடைய மறுபிறவியில் வேலங் காட்டில் வன்னிய குலத்தவனுகப் பிறப்பான் என்று கூறுகிறோம். செல்வத்திற்கு உரைவிடமே! மேலும் கேட்பீராக.

## ஜாதகனுடைய மரணமும் மறுபிறவியும்

32. அன்பது மூன்று வாண்டில் அணுகிய ரிடப மாதம்
துன்மையாய்க் காலன் பக்கல் சேருவா னிந்தப் பாலன்
பின்சென்மம் தணிகை தன்னில் பிறப்பனும் கங்கை [சேயாய்
பொன்பொருள் பூமி யுண்டாய்ப் புகழ்பெற வாழ்வா [னுமே.

32. ஜாதகன் தன்னுடைய ஐம்பத்து மூன்றும் வயதில் வைகாசி மாதத்தில் மரணமடைவான். மறுபிறவியில் திருத்தணிகையில் வேளாள குலத்தவனுகப் பிறப்பான். பொன் பொருள், விளைநிலங்கள் முதலிய வற்றைப் பெற்று கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான்.

## ஜாதகன் ஜனனகால தசையிருப்பு

33. செனித்திடு காலம் தன்னில் சேய்தசை யாண்டு ஒன்று
வினையுண்டு சாத கர்க்கு மிக்கநாற் காலி பீடை
பிணையாக நிந்தை யேற்பன் பூமிகள் பலித மாகும்
இனமதில் சூத முண்டு இயம்புவோந் தாயே கேளும்.

33. ஜாதகன் பிறக்கும் காலத்தில் அங்காரக தசையில் செல்லுபோக, ஒருவருடம் மீதமாகும். அக்காலத்தில் ஜாதகனுக்கு நோய் வரும். கால் நடைகட்கு நஷ்டம் ஏற்படும். பழிச் சொல்லுக்கு ஆளாக நேரிடும். விளை நிலங்களில் விளைச்சல் அதிகமாகும். தன் சுற்றத்தாரில் சூதம் ஏற்படும், தாயே மேலும் கேட்பீராக,

## ஜாதகனுடைய யோகம்

34. செனித்தநாள் முதலே யாகச் செப்புவோ முப்பாண்
[டுக்குள்
கனமிலா யோக மெய்தும் கலையது போலே கொஞ்சம்
அனையவே பூமி சேரும் அதற்குமேல் மரண மட்டும்
கனதனம் சேரு மென்றேும் காசினில் வறுமை காணுன்.

34. ஜாதகன் பிறந்த நாள் முதல் முப்பதாம் வயது வரையில் யோகம் சாதாரணமாக இருக்குமே தவிர விருத்தியுருது. அதற்குப் பிறகு வளர்பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தியாகும். விளைநிலங்கள் அதிகமாகச் சேரும். அதற்குப் பிறகு ஜாதகன் மரணமடையும் காலம் வரையும் பெருத்த செல்வம் சேரும். உலகில் தரித்திர தசை யடையதவன்.

V. R. N

———————

# ஜாதகம் 80

## ஜனனகால கிரகநிலை

1. [1]திங்களும் [2]புகரும் [3]காரித் [4]தெருக்காலில் [5]குசனும் [[6]தூக்கம்
[7]மங்கையில் [8]இரவி [9]புந்தி [10]மறை [11]நந்தி [12]புயங்கன் ][13]நண்டில்
[14]பங்கயப் பகையோன் [15]மானில் [16]பாவையும் சென்ம [மாக
இங்கிவை கிரகம் சேரில் இயம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன், சுக்கிரன், சனி விருச்சிகத்திலும், அங்காரகன் துலாத்திலும், சூரியன் புதன் கன்னியிலும், குரு விருஷபத்திலும், ராகு கடகத்திலும், கேது மகரத்திலும் நவக்கிரகங்கள் இருந்து, ஜன்ம லக்கினம் கன்னியாகவும் இருந்தால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் (என்று பார்வதிதேவி கேட்க லனர்).

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| | இராசி சக்கரம் | | ராகு |
| கேது | | | |
| | சந்திரன் சுக்கிரன் சனி | அங்காரகன் | சூரியன் புதன் லக்கினம் |

1. சந்திரன்
2. சுக்கிரன்
3. சனி
4. விருச்சிகம்
5. அங்காரகன்
6. துலாம்
7. கன்னி
8. சூரியன்
9. புதன்
10. குரு
11. விருஷபம்
12. ராகு
13. கடகம்
14. கேது
15. மகரம்
16. கன்னி

## ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளம்

2. குறுமுனி புகலு கின்ருர் குறித்தது ஆண்பால் சென்மம்
வருமில்லம் கீழ்மேல் வீதி வாசலு முத்தர ஞேக்கம்
பெருவயி றப்ப னுத்தரம் பலமிலாக் கோஷ்ட முண்டு
அருகரும் வாயு திக்காம் அந்தரி மாரி மீனம்.

2. அகத்திய முனிவர் பதில் உரைக்கின்ருர். இந்த ஜாதகம் ஒரு ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கியுள்ள வாயிலே யுடையது. பெரிய வயிற்றினை யுடைய கணபதியும் வீட்டுக்கு வடக்கில் கோயில் கொண்டிருப்பர். அக் கோயில் இடிந்திருக்கும். வாயு திக்கில் (வடமேற்கு) அருக தேவன் கோவிலும் வடகிழக்கில் (மீன திக்கில்)மாரியம்மன் கோயிலும் இருக்கும்.

## இந்நூலில் கூறப்படுவன

3. சொல்லிய வடையா ளத்துள் சுந்தர னிரண்டாஞ்
[சென்மம்
புல்வீடு சிறுவூ ராகும் பிறந்தவன் யோகச் சேதி
தல்லியின் தந்தை யோகம் தன்துணை களத்திர புத்திரர்
அல்லல்கள் முன்பின் சென்மம் அறைகிருே மிந்நூல்
[தன்னில்.

3. இவ்விதம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள சிற்றூரில் ஒரு சிறு வீட்டில், ஜாதகன் தன் தந்தைக்கு இரண்டாம் பிறவியாகப் பிறந்தவன் என்று சொல்லுகின்ருேம். இந்த ஜாதகன் தாய் தந்தையர் உடன் பிறந்தவர் மனைவி மக்கள் துன்பங்கள் முற்பிறப்பு மறுபிறப்பு ஆகிய இவற்றினை இந்தச் சோதிட நூலில் கூறுகின்ருேம்.

## தந்தையின் செய்திகள்

4. தந்தையின் துணைவர் மூன்றிலா ஞென்று கன்னியி
[ரண்டு
வந்தவர் சேதி பின்னுல் வரைகிருேம் பிந்தி நாளாம்
விந்தைமான் சென்ம ராசி மேவுவான் மால்நி றத்தான்
தன்தனம் தீர மில்லான் தந்தங்கள் பெரிதாய்க் காட்டும்.

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர் மூவரில் ஒரு சகோதரனும் இரு சகோதரிகளும் உளர். அவர்களின் முழு விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ருேம். ஜாதகனுடைய தந்தை மகர லக்கினத்தில் பிறந்தவன் என்றும், திருமாலைப் போன்ற கரிய நிறமுடையவன் என்றும் சொல்லுகின்ருேம். தைரிய மில்லாத மனத்தினன். பற்கள் பெரியனவாகத் தெரியும்.

## தந்தையின் மனைவிமார் விவரம்

5. பூமியால் சீவ னங்கள் பிறர்பொரு ளிச்சை வையான்
மாமிகள் மூனறே யாகும் மாநிலம் நல்லோ னுவன்
தாமத குணத்த னுகும் சஞ்சல மனத்த னுகும்
தீமையை யொருவருக் கெண்ணுள் தேவிசொல் கடவா
[னுகும்.

5. பூமியில் விவசாயம் செய்து ஜீவித்துவருவான். பிறருடைய பொரு ளின் மீது ஆசையில்லாதவன் அவனுக்கு மூன்று மனைவியர் உளர். உலகத் தில் நல்லவன் என்ற பெயரடைவான். காரியங்களைச் சிறிது தாமதமாக்ச் செய்யும் இயல்பினன். அலைபாயும் மனத்தினன். ஒருவருக்கும் தீங்கு செய்ய மனத்தாலும் நினையாதவன். மனைவியின் பேச்சுக்கு மதிப்புக் கொடுத்து அதன் படி நடப்பவன்.

## தந்தையின் குணங்கள்

6. இருவிதச் சொல்லு முள்ளான் இகபரன் பக்தி பூண்பன்
மருமவா னடக்க முள்ளான் மங்கையர் மோக வானும்
விரைவினில் நடக்க வல்லன் வீண்வம்பில் செல்லா
[னுகும்
துறவோர்கள் பக்தி கொள்வன் சுந்தரி மேலுங் கேளே.

6. இருவிதமாகப் பேசும் இயல்பினன். கடவுள் மீது பக்தியுள்ளவன். தன்னுள் அடக்கியிருக்கும் ரகசியங்களை பிறர் அறிய விடமாட்டான். அடக்க மானவன். பெண்களின் மீது மோகங் கொள்ளுவான். வேகமாக நடக்கும் இயல்பினன். அனுவசியமான வம்புக்குச் செல்லாதவன். துறவிகளிடத்தில் பக்தி யுள்ளவன். அழகியவளே! மேலும் கேளுங்கள்.

## தந்தைக்கு இருதாரம்—கிரகநிலை

7. இந்நெறி யுடையா னுக்கு விருதார மிளையா ளுக்கு
அன்னவ னுதிப்பா னுகும் அவன்துணை காணு னுகும்
என்னகா ரணத்தி னுலே இயம்பினீ ரந்தச் சங்கை
மந்தனு புகரு மூன்றில் மதியுமே கூடி நிற்க;

7. இல்விதம் கூறிப்பட்ட குணங்களுடையவனுக்கு இரு மனைவியர் உண்டு. அவர்களில் இளையதார்ரத்துக்குப் பிறந்தவன் இந்த ஜாதகன் என்று கூறுகின்றோம். அவனுக்குச் சகோதரரில்லை. என்ன காரணத்தால் நீங்கள்

ஜாதகனுடைய தந்தைக்கு இருமனைவியர் உண்டு என்று கூறுகிறர்கள் என்று பார்வதி வினவ, அகத்தியர் கூறுகின்றுர். சனி சுக்கிரன் இருவரும் சந்திரனுடன் கூடி மூன்ருவது ஸ்தானத்தில் விருச்சிகத்தில் இருப்பதால்;

## தந்தையின் இளைய மனைவிக்கு புத்திரபாவம்

8. அன்னைக்கு இரண்டா மாண்டி லந்தகன் பக்கல் சேர்வள்
பின்தாயும் ஒன்று எய்தும் பேசுவோ மவட்குப் புத்திரர்
தன்னிலே சிலது தோன்றும் தங்காது விரண்டு
[யென்ருேம்
மன்னிய ஆண்பா லொன்று வரைகிருேம் கடைசென்
[மங்கள்

8. ஜாதகனுடைய (மூத்த) தாய் மணமான இரண்டு ஆண்டுகளி லேயே இறந்து விடுவாள் என்று சொல்லுகின்ருேம். அவனுடைய தந்தை இரண்டாம மணம் செய்து கொள்ளுவான், இனி அவளுடைய விவரங் களைக் கூறுகின்ருேம். அவளுக்குப் புத்திரபாவம் பார்க்குமளவில், குழந்தை கள் தோன்றும் என்றும், அவைகளில் இரு குழந்தைகள் நிலையா என்று சடைசியில் பிறக்கும் ஆண் குழந்தை மட்டும் நிலையானது என்றும் சொல்லுகின்ருேம்.

## ஜாதகனுடைய சகோதரனது இயல்புகள்

9. சாடியும் கடைநாள் தங்கும் தண்குண மா நிறத்தன்
ஆடவர் மோகம் கொள்வள் அஞ்சிடான் ஒருவ ருக்கும்
தேடுவன் பின்னல் பூமி திருகான வார்த்தை சொல்வன்
பாடுவான் சுபங்கள் தானும் பாரினல் சீவிப் பானும்.

9. அந்தப் புத்திரன் (ஜாகனுடைய தம்பி) கும்பலக்கினத்தில், ரேவதி நட்சத்திரக்தில், பிறந்தவன். குளிர்ந்த மனமுள்ள சுபாவத்தினன். மாநிறமான வன். ஆண் மக்களே இவனைப் பார்த்து பிரமிக்கும் அளவு அழகுள்ளவன். எக்காரியத்தையும் செயல் படுத்துவான். யாரிடத்திலும் பயப்படாதவன். பிற் காலத்தில் பூமி வாங்கிச் சேர்ப்பான். சூதுகளுள்ள வார்த்தைகளைப் பேசுப வன். சங்கீதப் பிரியன். நன்ருகப் பாடுவான். விவசாயத்தால் ஜீவித்து வருவான்.

## இதுவுமது

10. பரம்பொருள் பக்தி கொள்வன் புகலுமுன் கோபி யாவன்
குருநேசம் வறுமை காணுன் குணமது விரண்டு முண்டு
நரைமலர்க் கந்த மிஷ்டன் நல்லோர்க்கு நல்ல னுவன்
தரையது தேடு வானும் சிறப்புடன் வாழ்வா னுமே.

10. பரம் பொருளாகிய தெய்வத்தின் மீது பக்தியுடையவன். கூறுவதற்கு முன் கோபம் வரும். ஆசார்ய பக்தியுள்ளவன். தரித்திரதசையடையாதவன். நன்மை தீமை இவ்விரண்டும் கலந்த குணமுள்ளவன். வாசனைப் புஷ்பங்கள் வாசனைத் திரவியங்கள் இவைகளை உபயோகப்படுத்துவதில் இஷ்டமுள்ளவன். நல்ல எண்ணங்களுள்ளவர்களிடம் நல்லவனாக நடந்து கொள்வான். விளைநிலங்களை வாங்குவான். சிறப்புடன் வாழ்ந்து வருவான்.

## இதுவுமது

11. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பால் காணான்
நாரியில் மூன்று தீர்க்கம் நவிலுவோம் பின்பால் சேதி
காரிழை கேட்க லுற்றாள் கழறினீர் முதல்தா யொன்று
கூறுவீ ரவட்குப் புத்திரர் கூறெனாச் சுதர்கள் தாமே.

11. மனைவி ஒருத்தியே யாகும். ஆண் குழந்தைகள் தோன்றா. பெண் குழந்தைகள் மூவர் தோன்றுவர். அவ்விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். பார்வதிதேவி கேட்கலானாள். ஜாதகனுடைய தந்தைக்கு மூத்த மனைவி ஒருத்தி உண்டு என்று சொன்னீர்களே! அவளுக்குப் புத்திரபாவம் உண்டோ? விவரமாகத் தெரிவியுங்கள் என, (பார்வதிதேவி கேட்க) அகத்திய முனிவர் சொல்லுகின்றார். அவளுக்குப் புத்திர பாக்கியமில்லை.

## ஜாதகன் இயல்புகள்

12. மரணமே யாகி யேதான் வந்தன ளிவனின் தாயார்
உரைக்கின்றோ மிவனின் சேதி உள்மனம் கபடு மில்லான்
இருநிறம் நீட்சி யாவ னிடுக்கமாம் குணமில் லாதான்
மறைகளு மதிக மில்லான் மாநிலம் கிருஷி செய்வன்.

12. அவள் மரண மடைந்த பிறகு தான் ஜாதகனுடைய தாயை மறுமணமாக ஜாதகன் தந்தை கொண்டான். இனி ஜாதகனுடைய குணநலன்களைச் சொல்லுகின்றோம். உள் மனத்தில் வஞ்சனை யற்றவன். கருமை கலந்த சிவந்த நிறமும் உயர்ந்ததுமான உடலமைப்புள்ளவன். துன்பங்களியற்றும் (கெட்ட) குண மில்லாதவன். வேதசாஸ்திர ரகசியங்கள் அதிகம் கற்காதவன். உலகில் விவசாயம் செய்து வருவான்.

## இதுவுமது

13. இல்லமு மிரண்டில் வேறும் இயம்புவோம் பாக [மிரண்டாய்ச்
சொல்லுவோ மதன்பின் னாகத் துணைவனு முதிப்பான் [வேறு

வல்லியால் நேரு மென்றேம் மாநிலம் சல்லிய மில்லான்
தொல்லைக ளதிகம் பட்டுச் சுகமாகும் ஏழஞ் சின்மேல்.

13. ஜாதகன் பிறந்து இரண்டு ஆண்டுகளில் இவன் பிறந்த வீடு இரண்டாகப்பிரிக்கப்படும். அதற்குப் பிறகு ஜாதகன் சகோதரன் வேருகப் பிறந்து செல்லுவான். அது இவனுடைய மனைவியால் கலகம் செய்யப் படும். உலகில் கடன் உபத்திரவமில்லாதவன். சிலகாலம் துன்பங்கள் மிகவே அடைந்து தன் முப்பத்தைந்தாம் வயதுக்கு மேல் சுகப்படுவான்.

## ஜாதகனின் திருமணக் காலம்

14. இருபத்தா ருண்டு தன்னில் எய்திடும் மனைவி தெற்கு
வருங்கன்னி யிருசி வப்பள் மனமது வெகுளி யாவள்
பெருகிடும் கோபந் தானும் பேதையும் சமயோ கத்தாள்
உரன்முறைக் கினிய ளாகும் உறுதியில் லாத நெஞ்சம்.

26. ஜாதகனுடைய இருபத்தாரும் வயதில் அவனுக்குத் திருமணம் நிகழும். மனைவி தெற்குப் பக்கத்திலிருந்து வருவாள். அந்த மனைவி இருநிறமுடையவள். வெள்ளை மனமுடையவள். முன்கோபி. சமமான யோகங்களை அடைவாள். தன் சுற்றத்தாருக்குப் பிரியமானவள். திடமில் லாத மனத்தை யுடையவள்.

## மனைவியின் இயல்புகள்

15. காரக தேகி யாவள் கனபணி யில்லா ளாகும்
பாரிய புத்தி யுண்டு பதர்குண மில்லா ளாகும்
சீரியோர்க் குதவி செய்வள் தேவிபாட் டாளி யாகும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை புகன்றிட் டோமே.

15. காரக நோயுள்ள சரீரமுடையவள். அதிக ஆபரணங்கள் இல்லா தவள். பெரிய (தாராள) புத்தி யுள்ளவள். அற்பகுணமில்லாதவள். நல் லோர்களுக்கு வேண்டிய உபகாரத்தைச் செய்து வருவாள். உழைக்கும் சுபாவமுள்ளவள். ஆறுமுகக் கடவுளைப் பெற்ற தாயே! இங்ஙனம் நாங்கள் கூறியுள்ளோம்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

16. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணும்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மிவனுக் கேதான்
அத்திரி மறுத்துச் சொல்வார் அவனுக்குப் புத்திர [யோகம்
பெற்றகா ரணத்தை நீங்கள் பேசுவீர் விபர மாக.

16. ஜாதகனுடைய புத்திரபாவத்தைப் பற்றிச் சொல்லப் பலமில்லை. ஒருக்கால் குழந்தைகள் தோன்றின் அவைகள் நிலையில்லாது இடையில் இறந்து விடும் என்றோம். அத்திரி முனிவர் மறுத்துச் சொல்லுகின்றார். ஜாதகனுக்குப் புத்திரர் தோன்றாக் காரணத்தை விரிவாகக் கூறுங்கள். முனிவரே!

## புத்திரதோஷம் கிரகநிலை

17. அஞ்சினில் கேது தங்க [1]ஆறலும் சனியும் பார்க்கத்
துஞ்சிடு மதலை யென்றோம் சுதனுமே முன்சென் மத்தில்
மிஞ்சிய தோஷம் செய்தான் மேவிற்று வந்தத் தோஷம்
தஞ்சமாய் வந்த ஊழைச் சாற்றுவோம் விபர மாக.

17. புத்திர ஸ்தானத்தில், ஐந்தாமிடத்தில், மகரத்தில், கேது இருப்பதாலும், சனியும் அங்காரகனும் புத்திர ஸ்தானத்தைப் பார்ப்பதாலும், குழந்தை பிறந்தாலும் தீர்க்கமாயிராமல் உடனே இறந்துபோம் என்றோம். இது தவிர ஜாதகன் தன் முற்பிறவியில், அதிகமான தீவினை செய்து வந்ததால் அந்தத் தோஷமும் இவனைச் சேர்ந்தது, இவனைத் தஞ்சம் என்று வந்தடைந்த தீவினையைக் கூறுங்கள் முனிவரே! விவரமாக.

## ஜாதகன் முற்பிறவி

18. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறோம் பெண்ணை [யோரம்
நன்னிய வடபா லாக நற்கங்கை குலமே தோன்றி
தன்சுதர் மதலை யுண்டாய்த் தரணியால் சீவித் தேதான்
அன்னவன் வாழும் நாளில் அறைகிறோ மூழி தானே.

18. இனி ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். பெண்ணையாற்றின் கரையில் வடக்குப் பக்கத்தில் உள்ள ஒரு சிற்றூரில் வேளாள குலத்தவனாக ஜாதகன் தோன்றி, புத்திர பாக்கியத்தைப் பெற்று, உலகில் விவசாயம் செய்து ஜிவித்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம்.

## பொய்ச் சாக்ஷி சொல்லுதல்

19. மறையவ ரிருவர் தானும் விரோதமாய் அரசில் செல்லப்
பெரியவன் தன்பா லின்றோன் பொய்யுரை பகர்ந்தா [னம்மா
சிறியவன் மனம்க லங்கிச் செப்புவான் சாபம் தானும்
வருஞ்சென்மம் துணைகா ணாமல் மாதுரு சுகமில் லாமல்;

1. அங்காரகன்

19. இரு அந்தணர்கள் ஒருவருக்கொருவர் விரோதத்துடன் அரசாங் கத்தாரிடம் முறையிட்டனர். அவ்விருவர்களில் பெரியவனுக்கு இந்த ஜாதகன், காணுத பொய்யைக் கூறி சாட்சி சொன்னுன். அந்தச் சிறிய அந்தணன் மனம் வெதும்பிச் சாபத்தைக் கூறுகின்றுன். அடுத்த பிறவியில் நீ உடன் பிறந்த சகோதரளில்லாமல், தாயின் சுகமுமில்லாமல் வாழ்ந்து;

20. சுதர்களும் தோஷ மெய்தும் சுகமிலாக் குடும்பி யாகி
வதிபனும் வாழ்வா யென்று வருத்தமா யுறைத்துச்
[சென்றுன்
அதுஒரு தோஷ மாச்சு அதுவின்றி வேறு சொல்வேன்
சதிசெய்தான் சிலரை யேதான் சார்ந்தது வந்தத்
[தோஷம்;

20. தோன்றும் புத்திரர்கட்குத் தோஷம் ஏற்பட்டு சௌக்கியமில்லாத குடும்பத்தை யடைந்து வாழ்ந்து வருவாய் என்று மனம் வருந்திக் கூறி விட்டுச் சென்றுன். அது ஒரு தோஷமாயிற்று. அதுவல்லாமல் வேறு ஒன்றும் கூறுகின்ருேம். சில பேருக்குத் தீங்கு விளைவிக்கச் சதி செய்தான். அந்தத் தோஷமும் இவனைப் பற்றியது.

## மனைவியின் தோஷம்

21, மனைவியால் சிலது தோஷம் மருவிற்று இவனுக்
[கேதான்
வினையதைச் சொல்லு மென்ன வித்தகி பூர்வம் தன்னில்
கனமுள அருணை நாட்டில் கங்கையின் குலமு தித்து
அனையவே குடும்பி யாகி அவளுமே வாழு நாளில்;

21. ஜாதகனுடைய மனைவியாலும் சில தோஷங்கள் ஏற்பட்டன. அதனுல் புத்திர தோஷம் உண்டாயிற்று. அந்தத் தீவினையைக் கூறுங்கள் என, அகஸ்தியர் மறுமொழி தருகின்றுர். ஜாதகனுடைய மனைவி, முற்பிற வியில் புகழ்பெற்ற தலமாகிய திருவண்ணுமலையில், வேளாளர் குலத்தில் தோன்றி, பெரிய குடும்பத்தைப் பெற்று வாழ்ந்து வரும் காலத்தில்;

## குழந்தைக்கு உணவு தராத தோஷம்

22. வறுமைகள் கொண்ட ஏழை மகவுசோ றிவளைக் கேட்க
அரிபோலே சீறி யேதான் அணுகாது சாத மென்னச்
சிறுமையோர் மனவெ றுப்பால் செப்புவார் மறுசென்
[மத்தில்
குறையாகும் குடும்பந் தானும் குழவிகள் சேத மெய்தும்.

22. ஏழைமை அதிகம் கொண்டிருந்த ஒரு ஸ்திரீ தன் குழந்தையின் பசியைப் போக்க இவளிடம் வந்து குழந்தைக்குச் சிறிது உணவு அளிப்

பாய் என்று கேட்கும் போது இவள் சிங்கம் போல் அதிக கோபமடைந்து தன்னிடம் சோறு இல்லை என்று கூறி விரட்டி விட்டாள். அந்த ஏழைப் பெண் மனம் நொந்து வெறுப்புடன் கூறினுள். இனி ஏற்படும் மறுபிறவியில் உன் குடும்பம் குறையுள்ளதாகும். பிறக்கும் குழந்தைகளும் நசித்து விடும்''

23. இன்னமும் பலவாறு சொல்லி ஏகினள் ஏழை மாது
பின்னமா யந்தத் தோஷம் புக்கிற்று இவளுக் கேதான்
கன்னிகை யந்தி யத்தில் கடவுளர் தொண்டு செய்து
அன்னவர் காலன் பக்கல் அடைந்துபின் வந்தா
[ளென்றேம்.

23. என்றும், இன்னும் பலவிதமாகக் கூறிக் கொண்டு அந்த ஏழைப் பெண் சென்று விட்டாள். திங்காக அந்தத் தோஷம் இவளை வந்து அடைந்தது. ஜாதகனுடைய மனைவி தன் முற்பிறவியின் முடிவு காலத்தில், தெய்வ பக்தியுடன், கடவுளுக்குப் பல தொண்டுகள் செய்து, மரணமடைந்து, மீண்டும் இப்பிறவியில் பிறந்து, ஜாதகனுக்கு மனைவியாக வாய்த்தாள்.

24. உதித்தவ னந்தி யத்தில் உயர்சோலை மார்க்கம் கூவல்
பதித்துமே பகவான் பத்தி பறந்தனன் காலன் பக்கல்
விதியவன் வரையப் பட்டு விளங்கினு னிந்தப் பாலன்
சதியிலா மறையோன் சாபம் சார்ந்தது இச்சென்
[மத்தில்.

24. ஜாதகன் தன் முற்பிறவியின் முடிவில் உயர்ந்த தோட்டங்கள் வைத்து, சாலையில் வழி நடப்பவர்கட்கு இளைப்பார மரங்களையும் நட்டு, கிணறு முதலியவைகளைத் தோற்றுவித்து. தெய்வபக்தியுடன் வாழ்ந்து, மரண மடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, இப்பிறவி யில் ஜாதகனுகப் பிறந்தவன். திங்குகளில்லாத அந்தணனுடைய சாபம் இப்பிறவியில் தொடர்ந்தது.

## தோஷம் நீங்க சாந்தி

25. மதலைகள் தோஷ மெய்தும் வரைகிறேம் அதற்குச் சாந்தி
அதிதியா மருக ருக்கு அன்புடன் அபிஷே கித்து
விதிபோலே சகஸ்திர அர்ச்சனை வளர்அஷ் டமியில்
[செய்யு
சதியான தோஷம் நீங்கிச் சந்ததி உதிக்கில் விருத்தி.

25. அதனுல் ஜாதகனுக்குப் பிறக்கும் குழந்தைகட்குத் தோஷம் என்று கூறுகின்றேம். இனி அந்தத் தோஷம் நீங்கச் சாந்தி ஒன்று சொல்லுகின்றேம். அருக தேவனுக்கு உண்மையான மனத்துடன் அபி

ஷேகம் செய்து, சாஸ்திரத்தில் சொல்லியபடி ஆயிரம் தடவை அர்ச்சனை, சுக்கிலபட்ச அஷ்ட மிதிதி யன்று செய்தால், தீங்கு தரும் தோஷம் விலகிப் புத்திர பாக்கியம் ஏற்பட்டு. விருத்தியுமடையும்.

## புத்திரபாவம்

26. சொற்படி செய்யா ஞகில் துலங்கின சுதர்கள் தீதாம்
சொற்படி செய்வா ஞகில் தோன்றின ஆண்பா
[லொன்று
மைப்புடன் பெண்பா விரண்டு விளங்கிடும் தீரக்க மாக
செப்புவேன் மனைவிக் கேதான் சதுர்தசி விரதம்
[கொள்ள;

26. நாங்கள் சொன்ன பிரகாரம் சாந்தி செய்தால் பிறக்கும் குழந்தைகள் தீர்க்கமாகும். ஒரு ஆண் குழந்தையும் இரு பெண் குழந்தைகளும் தோன்றி, தீர்க்க ஆயுளுடன் விளங்கும். அலட்சியமாகச் சாந்தி செய்யத் தவறினால், குழந்தைகள் தோன்றா. அப்படித் தோன்றினும், நிலையா. ஜாதகனுடைய மனைவி சதுர்தசி விரதம் ஏற்று நோன்பு இருப்பாளாகில்,

## தாயின் குணங்கள்

27. முன்வினை நிவர்த்தி யாகும் மொழிகிறோ மன்னை சேதி
பின்னமில் லாத தேகி பொருந்தவே யுரைப்பா ளாகும்
அன்னியர் மதிக்க வாழ்வள் அவள்துணை ஆண்பா
[லொன்று
கன்னிகை யிரண்டு வென்றோம் காதலி பூர்வம் கேளாய்.

27. முற்பிறவித் தீவினை நீங்கும் என்று சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய தாயின் விவரங்களைப் பற்றிக் கூறுகின்றோம். அவள் குறைகளில்லாத சரீர அமைப்பு உள்ளவள். எந்தக் காரியத்துக்கும் பொருத்தமாகவே பேசுபவள். பிறர் கொண்டாடும்படி வாழ்ந்து வருவாள். அவளுக்குச் சகோதரன் ஒருவனும், சகோதரிகள் இருவரும் உண்டு. இனி தாயின் முற்பிறவியைக் கேளுங்கள் சொல்லுகிறோம்.

## தாயின் முற்பிறவி

28. சிறுபாக்க மருகில் தெற்கில் செனித்தனள் மறைக்கு
[லத்தில்
பெருமையாய்க் குடும்பி யாகி பூமியில் நல்லோ ளாகி
வருவோரை யாத ரித்து மதலைக ளுடைய ளாகி
உறைந்தனள் கால நாடு உத்தமன் வரையப் பட்டு.

28. ஜாதகனுடைய தாய் முற்பிறவியில் சிறுபாக்கத்துக்குத் தெற்கில் உள்ள ஒரு ஊரில் அந்தண குலத்தவளாகத் தோன்றி, பெருமையுள்ள குடும்பத்தை யடைந்து, பூமியில் நல்லவள் என்ற பெயருடன் வாழ்ந்து, தன்னை யண்டி வந்தவர்களைப் பரிவுடன் ஆதரித்து, புத்திர பாக்கிய மடைந்து, இறுதியில் மரண மடைந்தாள். மீண்டும் உயர்ந்தவனுன பிரமதேவனுல் படைக்கப்பட்டு;

## தாயின் மரணகாலம்

29. வந்தவ ளிவளே யென்ருேம் மைந்தனு முதித்த பின்பு
முந்தின காசம் போலும் மூலமாம் கனலி னுலே
விந்தையீ ரொண்பான் திங்கள் மேவுவாள் எமப திக்கு
பிந்திய சென்மம் தீர்க்கம் சலமதி லிக்கு லத்தில்.

29. இப்பிறவியில் பிறந்தவள், ஜாதகனுடைய தாய், என்று உரைக்கின்ருேம். ஜாதகன் பிறந்த பிறகு காச நோய் அதிகம் வந்து, மூலச் சூட்டு நோயினுலும் உஷ்ணுதிக்கத்தாலும் அதிகமாக அவதியுற்றுத் திடீரென்று ஜாதகனுடைய பதினெட்டாம் ஆண்டிலேயே மரணமடைவாள். மறுபிறவியில் வேளாள குலத்தவளாகப் பிறந்து நீண்ட ஆயுளுடன்;

## தந்தையின் முற்பிறவி

30. வருகுவா ளென்று சொன்ஞேம் வரைகிருேம் தந்தை [பூர்வம்
திருநக ருகில் தெற்கில் செனித்தனன் மறையோ னுக
உரைக்கிருே மந்த ஊழை ஒண்டொடி பின்ஞேள் [தன்னை
வரனின்றி யில்லம் செல்ல மாதுவைப் பலவந் தத்தால்.

30. தோன்றுவாள் என்று கூறுகின்ருேம். இனி ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவி விவரங்களைத் தருகின்ருேம். திருநகர் என்ற ஊருக்குத் தெற்கில் உள்ள ஒரு ஊரில் அந்தண குலத்தவனுகப் பிறந்தவன் என்ருேம். அவன் அக்காலத்தில் செய்த தீவினையைத் தெரிவிக்கிருேம். அவன் தன் மனைவியின் இளைய சகோதரியின் வீட்டுக்கு அவளுடைய கணவன் இல்லாத சமயத்தில் (கைம் பெண்ணுக இருந்தவளிடத்தில்) சென்று பலாத்காரமாக

31. காதலை நிவர்த்தி செய்தான் கன்னிக்குக் கருவு தங்கி
சூதினுல் பண்டி தங்கள் செய்துமே மரண முற்ருள்
பாதகம் சேர்ந்த தென்ருேம் பணிசெய்தோன் மனைவி [போகம்
கோதிலாச் செய்து வந்து கோயிலுக்கு அவ்வாறு [சென்ருன்.

31. சிற்றின்பம் அனுபவித்தான். அதனுல் அப்பெண்ணுக்கு கர்ப்பம் ஏற்பட்டது. அக்கருவை நீக்கப் பலவித மருந்து கொடுத்தான். அம்மருந் தின் பயனுக அப்பெண் இறந்து விட்டாள். அந்தத் தோஷம் ஜாதகனுடைய தந்தையைச் சார்ந்தது என்ருேம். தன் வீட்டில் வேலை செய்து வந்த பணி யாளின் மனைவியுடன் சிற்றின்பம் அனுபவித்து வந்தான். அவ்வாறே (நீராடாமல்) கோவிலுக்கும் சென்று விட்டான்.

32. இப்படிப் பலவாறு தோஷம் எய்திற்று இவனுக் கேதான்
செப்புவே னந்தி யத்தில் செட்டுகள் குறைவு நேர்ந்து
தப்பிதக் காலன் பக்கல் சார்ந்தனன் நரகம் புக்கி
ஒப்பிலா அருகர் வம்சம் முதித்தன னிவனே யம்மா.

32. இவ்விதமான பல தோஷங்கள் அவனை வந்தடைந்தன. தன் கடைசிக் காலத்தால் வர்த்தகம் புரிவதில் நஷ்டம் ஏற்பட்டுப் பிறகு மரண மடைந்து, நரகத்தில் சிலகாலம் இருந்து வாடி, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, சமண குலத்தில் பிறந்தவன் இவன் (ஜாதகனுடைய தந்தை) என்ருேம் தாயே!

## தந்தையின் மரணகாலம்

33. விதவையின் கருவின் தோஷம் விளங்காது மனைவி [யென்ருேம்
மதிநுதல் போகம் தூய்த்து வாலயம் சென்ற தோஷம்
அதிகமா யோகம் காணுன் அணுகிடும் சல்லி யங்கள்
விதியது முப்பா னெட்டில் விடபமா தத்தி லேதான்;

33. விதவையின் கருவழித்த தோஷத்தால் இருமனைவியர் ஏற்பட்டது என்ருேம். அழகிய புருவத்தை யுடைய மங்கையிடம் சிற்றின்பம் துய்த்து (நீராடாமல், அசுத்தமாக) ஆலயத்துக்குச் சென்றதால் யோகங்கள் இரா. ஆனுல் கடன் உபத்திரவங்கள் ஏற்படும். ஜாதகனுடைய முப்பத்தெட்டாம் வயதில் வைகாசி மாதத்தில்;

## தந்தையின் மறுபிறவி

34. சொல்லினேம் தந்தை கண்டம் சோர்விலாப் பின்சென் [மத்தை
அல்லலை அகற்றும் காஞ்சி அருகினில் உத்தி ரத்தில்
புல்குவான் மறையோ னுகப் பராசரும் கேட்க லுற்ருர்
கொல்லாத விரதம் கொண்ட குலமதில் உதித்து [இன்னேன்;

34. ஜாதகனுடைய தந்தை மரணமடைவான் என்று சொன்னேம். இனி ஜாதகனுடைய தந்தையின் மறுபிறவியைக் கூறுகின்ருேம். துன்பங்

களை நீக்கும் காஞ்சீபுரத்துக்குச் சமீபத்தில், வடக்குப் பக்கத்தில் அந்தண குலத்தவனுகத் தோன்றுவான். இனி பராசர முனிவர் வினவுகின்றார். ஒருவிதமான ஜந்துக்கும் துன்பம் விளைவிக்கக் கூடாது என்று விரதம் கொண்டிருக்கும் சமண குலத்தில் பிறந்த இவன் (ஜாதகன் தந்தை);

## மறைக்குலம் உதிக்கக் காரணம்

35. மறைக்குல முதிக்கும் சேதி வருவிப்பீர் விபர மாக
அருகர்தன் பக்தி கொஞ்சம் அவன்மனம் கபடு [கொஞ்சம்
பொறையான வார்த்தை கொஞ்சம் பொருளது இச்சை [யாயும்
வருவதால் மறைக்கு லத்தில் வருவனு னென்று [சொல்வோம்

35. அடுத்த பிறவியில் அந்தண குலத்தில் தோன்றக் காரணம் யாது, சொல்லுங்கள், முனிவரே! தாங்கள் விரிவாக, என்றவுடன், மற்ற ரிஷிகள் உரைகின்றார். சமண தேவனிடம் பக்தி கொண்டிருந்ததாலும், மனத்தில் சூதுகள் மிகச் சிறிதளவாக இருந்ததாலும், பொய் பேசுதலும் மிகக் குறைவாக இருந்தபடியாலும் பொருளின் மீது அதிக ஆசை வைத்து வந்ததாலும் அடுத்த பிறவி அந்தண குலத்தில் ஏற்படும் என்றோம்.

## ஜாதகனின் மரணக் காலம்

26. அறுபது மூன்று ஆண்டில் ஆனிமா தத்தி லேதான்
மறலியின் பதிக்குச் செல்வன் வருஞ்சென்மம் கொங்கு [நாட்டில்
உறைவனுமிக்கு லத்தில் ஒண்டொடி யிவன்பின் [கண்டம்
அருமறை முடிவி லாடு மம்பிகை புகன்றிட் டோமே.

36. ஜாதகன் தன் அறுபத்து மூன்றும் வயதில் ஆனி மாதத்தில் மரண மடைவான். அடுத்த பிறவியில் கொங்கு நாட்டில் இதே சமண குலத்தில் பிறப்பான். இவனுடைய மனைவி இவன் மரண மடைந்த பின் இறப்பாள். அரிய வேதங்களின் முடிவில் நடனமாடும் அம்பிகையே! நாங்கள் இங்ஙனம் கூறியுள்ளோம்.

## ஜாதகனுடைய பொதுயோகவிவரம்

37. இன்னவன் பொதுயோ கத்தை இயம்புவோஞ் [சென்னம் தொட்டு
அன்னவன் முப்பா ஹறும் அணுகிடும் சமமாம் யோகம்

பொன்பூமி அதிக மில்லான் புகழான குடும்ப மில்லான்
தன்மனச் சஞ்ச லங்கள் சல்லிய முடைய னுமே.

37. ஜாதகனுடைய பொது யோகத்தை இனிக் கூறுகின்றோம். அவன் பிறந்தது முதல் முப்பத்தாறும் வயது வரையில் சமமான யோக நிலை ஏற்படும். பொன் பூமி இவைகள் அதிகமாக இல்லாதவன். கீர்த்தியுள்ள குடும்பமில்லாதவன். மனத்தில் கவலையும் போராட்டமும் உள்ளவன். கடன் தொல்லையும் உள்ளவன்.

## இதுவுமது

38. சொன்னதோ ராண்டின் மேலாய்ச் சுகமுறும் பூமி
[சேர்க்கை
நன்னய பூமி சேரும் நாடாது சல்லி யங்கள்
அன்னியர் சித்திர மில்லம் மாடுகள் விருத்தி யுண்டு
கண்ணிய மாகத் தானே கோமளி மேலுங் கேளே.

38. நாங்கள் கூறிய முப்பத்தாறும் வயதுக்குமேல் சௌக்கியம் ஏற்படும். பூமிகள் வந்து சேரும். விளைநிலங்கள் விருத்தியாகும். கடன் உபத்திரவங்கள் சமீபத்தில் அணுகா. அழகிய வீடு கட்டுவான். மாடுகளின் பெருக்கம் உண்டு. கௌரவமாக வாழ்க்கை நடத்துவான். அழகுள்ள பார்வதிதேவியே! மேலும் கேட்பீராக.

39. பலசகா யங்கள் செய்வன் பந்துவுக் கினிய னுகும்
தலமது தீர்த்தம் தோய்வன் சரீரஉப காரி யாவன்
நலமதாய் சீவ னங்கள் நல்லோர்க்கு நல்ல னுவன்
நிலைமையாம் சொல்லு முள்ளான் நிதானமாய்க் குடும்பி
[யாவன்.

39. பலபேருக்குச் சௌகர்யங்கள் செய்வான். தன் சகோதரனுக்குப் பிரியனுவான். நல்ல புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவான். தன்னுல் ஆன சரீர உபகாரங்களையும் ஒத்தாசைகளையும் பிறருக்குச் செய்வான். இவனுடைய வார்த்தைகள் மதிப்புள்ளனவாக இருக்கும். நிதானமான குடும்பத்தை யுடைவான்.

40. எண்ணஞ்சு ஆண்டு மேலாய் எய்துவோம் விசேஷ
[யோகம்
திண்ணமாய்ச் சல்லியம் நீங்கும் சிறப்புறும் குடும்பம்
[தானும்
பின்மாதா புத்திர சங்கை பொருந்திடும் விபர
[மிரண்டில்
அண்ணலைப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

40, ஜாதகனுடைய நாற்பதாம் வயதுக்குமேல் விசேஷமான யோகம் வாய்க்கும். நிச்சயமாகக் கடன் தொல்லை நீங்கும். கும்டுபம் சிறப்பாக ஆகும் ஜாதகனுடைய இளைய தாயின் புத்திர பாக்கியத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். சிவபெருமானைப் பூசைகள் பல புரிந்து வரும் தேவியே! மேலுங் கேட்பீராக.

## ஜனனகாலத் தசையிருப்பு

41. செனித்திடு காலம் தன்னில் சனிதசை யிருப்புத் தானும்
குனித்திடு மீரு ரண்டும் கூறிய திங்கள் பத்தும்
கனமுள தாய்க்குக் கெண்டம் கனத்ததோர் குடும்பம் [வேருய்
தனயனும் பிணியு மெய்தும் சாற்றுவோம் விபர [மிரண்டில்.

41. ஜாதகன் பிறக்கும் போது சனி மகா தசையில் சர்ப்பச் செல்லு போக மீதி மிருப்பு பன்னிரண்டு வருடங்களும் பத்து மாதங்களுமாம் அக் காலத்தில் தாய்க்கு கண்டம் உண்டு. பெரியதாக இருந்த குடும்பம் பிரியும் ஜாதகனுக்கு நோய் ஏற்படும். மற்ற விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம்.

42 காதலி கேட்க லுற்ருள் கழறினீர் சுதரு ஞென்று
ஓதுவீ ரந்தச் சங்கை உத்திருடம் ரிடபம் சென்மம்
மேதினில் ஆரும் சென்மம் விளம்புவோம் யோக சாலி
சூதிலான் வறுமை காணுன் தன்பந்து புகழ வாழ்வன்.

42. பார்வதிதேவி கேட்கலானுர். ஜாதகனுக்கு ஒரு ஆண் குழந்தை ஒன்றுண்டு என்று கூறினீர்களே அந்த விவரத்தைப் பற்றிச் சொல்லுங்கள் என முனிவர் பதில் உரைக்கின்ருர். அவன் உத்திராட நட்சத்திரத்தில் ரிஷப லக்கினத்தில் பிறந்தவன் என்றும்; ஆருவது குழந்தை என்றும் சொல்லுகின்ரேம். அவன் அதிர்ஷ்ட முடையவன். கபடமில்லாதவன். தரித்திரத்தைக் கண்ணுலும் பாராதவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்திருப்பான்.

43. வறுமைகள் காணு ஞகும் மாநில மதிகம் சேர்ப்பன்
திருமகள் வாச முள்ளான் திருப்பணி வேலை செய்வன்
பெருமையும் புகழு மேற்பன் புண்ணிய மனத்த ஞகும்
அருமறை முடிவி லாடும் அருகர்தன் பக்தி கொள்வன்.

43. தரித்திர தசை யடையாதவன். விளைநிலங்களை அதிகம் வாங்கிச் சேர்ப்பவன். லக்குமிகடாட்சம் பெற்றவன். ஆலயத் திருப்பணிகள் செய்து வருவான். கீர்த்தியும் பெருமையும் அடைவான். நல்ல காரியத்தைச் செய்யும் மனமுள்ளவன். அரிய வேதங்களின் முடிவில் கூறப்படும் அருகதேவன் மீது பக்தி யுள்ளவன். —V. R. N.

# ஜாதகம் 81

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதிகுரு [2]விணையாக [3]மங்கலன் சனியும் [4]நந்தி
புதன் [5]புகர் [6]யிரவி [7]வண்டி [8]பொற் சிகிமேட மாக
ததி [9]கயர் [10]கோலதாக சென்மமு [11]மாதை புக்க
இதுவிதக் [12]கோளு நின்ருல் இயம்புவீர் பலனைத்
[தானே

## ஜாதகன் பிறக்கும் வீட்டு அடையாளங்கள்

1. சந்திரன், குரு, மிதுனத்திலும். அங்காரகன், சனி விருஷபத்திலும், புதன் சுக்கிரன், சூரியன், கடகத்திலும். கேது மேடத்திலும், ராகு துலாத்திலுமாக, நவக்கிரக நிலையிலிருந்து, பிறந்த லக்னம் கன்னியானுல், ஏற்படும் பலனைக் கூறுங்கள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | கேது | அங்காரகன் சனி | சந்திரன் குரு |
| | இராசி சக்கரம் | | புதன் சுக்கிரன் சூரியன் |
| | | | |
| | | ராகு | லக்கினம் |

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும் போது
குலவிய வதிஷ்டர் சொல்வார் குறித்தது ஆண்பால்
[சென்மம்

1. சந்திரன்
2. மிதுனம்
3. அங்காரகன்
4. விருஷபம்
5. சுக்கிரன்
6. சூரியன்
7. கடகம்
8. கேது
9. ராகு
10. துலாம்
11. கன்னி
12. நவக்கிரகம்

தலமது கீழ்மேல் வீதி தென்வாசல் கூரை யாகும்
நிலைமையாய் மாரி காளி நிகழ்த்துவோம் வடகீழ்
[தன்னில்.

2. பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதிதேவி கேட்கும் போது, உடன் இருந்த வசிஷ்ட முனிவர் பதில் சொல்லுகின்றார். இந்த ஜாதகம் ஒரு ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் வடக்குச் சாரியிலுள்ளதும், தெற்கு நோக்கியுள்ள வாயிலை யுடையதுமான, ஒரு கூரை வீடாகும். வடகிழக்கில் வெகு காலமாக உள்ள மாரியம்மன் கோவிலும் காளி கோவிலும் இருக்கும்.

## இதுவுமது

3. புத்தர்தன் [1]கோஷ்டம் [2]வாயு பலமிலாக் கணேச
[னுத்திரம்
குத்தமாம் சண்டி மேற்கில் கூறுமிவ் வடையா ளத்துள்
வித்தக னிரண்டாஞ் சென்மம் விளம்பும்பூ வைசிய னுக
சித்தூரி லிந்தப் பாலன் செப்பினேம் கேளும் தாயே.

3. புத்தபிரான் ஆலயம் ஒன்று வடமேற்குத் திக்கில் இருக்கும். விநாயகர் ஆலயம் ஒன்று வடக்குப் பக்கத்தில் இடிந்து இருக்கும். சண்டி தேவதை மேற்குப் பக்கத்திலுமாக மேற் கூறப்பட்ட அடையாளங்களுள்ள ஊரில் இந்த ஜாதகன் பூவைசியனுகத் தன் தந்தைக்கு இரண்டாம் புத்திரனுகத் தோன்றுவான் என்று கூறுகின்றோம்.

## இந்நூலில் கூறப்படுவன

4. தாய்தந்தை துணைவர் யோகம் தன்மனை புத்திர யோகம்
மாயமாய் முன்பின் சென்மம் மன்னவன் செனன
[யோகம்
ஆயவே குடும்பச் சேதி அறைகிறே மின்னூல் தன்னில்
தீயரை சம்ம ரிக்கும் தேவியே கேட்டி டாயே.

4. ஜாதகனுடைய தாய், தந்தை, உடன் பிறந்தவர், அவனுடைய மனைவி, மக்கள் முதலியவர்களைப் பற்றியும் அவர்களுடைய யோகங்கள் முற்பிறவி, மறுபிறவி, ஜாதகனுடைய யோகம், குடும்பச் செய்திகள், ஆகியவற்றினை இந்தச் சோதிட நூலில் கூறுகின்றோம். தீய எண்ணங்களுள்ளவரை ஒழிக்கும், சிவபெருமானின் தேவியே! கேளுங்கள்.

## தந்தையின் குணநலங்கள்

### வேறு

5. தந்தைகுணம் சொல்லுகின்றேன் கல்வி மானும்
சாந்தவான் சிவந்தமெய்யன் யூகை சாலி

1. கோவில் 2. வடமேற்கு

வந்தவர்க்கு அன்னமிட்டு தேவ பூசை
வாக்குச்சொல் தவருதான் மாஞ்சி வப்பன்
முந்திபிந்தி துணைகாணுன் உதிக்கில் தீதாம்
முகத்தில் அம்மை வடுவுமுளன் முனிவு காட்டான்.

......................

......................

5. இனி ஜாதகனுடைய தந்தையின் குண விசேஷங்களைச் சொல்லுகின்ருேம். அவன் கல்வி யறிவுள்ளவன். பொறுமையே பூஷணமாகக் கொண்டவன். சிவந்த நிறமுள்ள உடலமைப்புள்ளவன். ஊகம் நிறைந்தவன். தன்னையண்டி வந்த யாசகர்களுக்கு அன்புடன் அன்ன மளிப்பவன். தெய்வத்துக்கு பூசை, பணிவிடை முதலியன செய்து வருபவன். சொன்ன சொல் தவருமல் அதன்படி நடப்பவன். மாந்தளிரைப் போன்ற பொன் நிறமுடையவன். இவனுக்கு முன் பிறந்த சகோதரரோ பின் பிறந்த சகோதரரோ இல்லாதவன். பிறந்தவர் நிலையில்லாதவர். முகத்தில் அம்மை வடுக்கள் உள்ளவன். கோபப்படாத இயல்பினன்.

இப்பாட்டில் இறுதி அடி ஏட்டில் சிதைந்துளது.

6. அதிகாரன் கிராமச்செட்டு செய்வா ளுகும்
யாவருக்கும் உபகாரி அரசர் நேயன்
புதிதான கிரகமது செய்வா ளுகும்
பசுபூமி விருத்தியுண்டு சீல ஞவன்
ததிநெய்பா லிஷ்டமுளன் பெருமை பூண்பன்
தன்கரத்தில் சங்குசக்கரன் பித்த தேகன்
நிதியதனைச் செலவுசெய்வன் மத்தி யத்தில
நேர்ந்துவிடும் சல்லியங்கள் நிமலி நேயன்.

6. கிராம அதிகாரம் செய்து வருவான். கிராமத்தில் சிறு வர்த்தகத் தொழிலும் செய்து வருவான். எல்லாருக்கும் உபகாரம் செய்வதே நோக்கமுள்ளவன். அரசாங்கத்தாரின் நட்புக்கு உகந்தவன், புதிய வீடு கட்டுவான். பசு, விளைநிலங்கள் இவைகளின் பெருக்கம் உடையவன். நல்லொழுக்கம் கொண்டவன். தயிர் நெய் பால் இவைகளைப் புசிப்பதில் பிரியமுள்ளவன். பெருமை யுடையவன். தன் கையில் சங்கரோக சக்கர ரேகை யுடையவன். பித்த ரோகமுள்ள சரீர முடையவன், பணத்தை செலவு செய்து வரும் இயல்பினன். இடைக் காலத்தில் சிறிது துன்பங்கள் ஏற்பட்டு கடன் ஏற்படும் தாயே! அவன் தன் மனைவிக்குப் பிரியமானவன்.

## ஜாதகன் குணங்கள்

### வேறு

7. குதிரைநாள் மாடுசென்மம் குதிப்பனும் வறுமை காணுன்
துதிசெய்தார்க் கன்ப ஞகும் சொல்லுமிக் குணத்தானுக்கு

வதிபனு முதிப்பா ளுகும் வரைகிறே மிவன் குணத்தைச்
சதியிலான் மாஞ்சி வப்பன் தன்தேக முணைச்ச
[லுள்ளான்.

7. அச்வதி நட்சத்திரத்திலும் ரிஷப லக்கினத்தில் பிறந்தவன் ஜாதகனுடைய தந்தை என்றேம். தரித்திரம் பாராதவன். தன்னைப் புகழ்ந்தவர்கட்குப் பிரியமானவன். இவ்விதக் குண நலன்கள் உள்ள தந்தைக்கு, இந்த ஜாதகன் பிறப்பான் என்றேம். இனி அவனுடைய குணத்தைப் பற்றிச் சொல்லுகின்றேம். தீங்குகள் செய்ய மளத்தாலும் நினையாதவன். மாநிறமுடையவன். தன் தேகத்தில் சிறிது அரிப்பு உள்ளவன் (உயரமானவன்)

## இதுவுமது

8. கல்விமான் யூகை சாலி கண்முகம் வசிய முள்ளான்
இல்லையென் றுரைக்க மாட்டான் இராசபூ சிதனுமாவன்
மல்லுக்குச் செல்லா ளுகும் மாடுகள் விருத்தி யுள்ளான்
நல்லவர் பலர்க ளாலே நயப்புறும் யோக வானே.

8. கல்வியறிவுள்ளவன். ஊகமுடையவன். முகம், கண்கள் இவை பிறரைத் தன் வசம் இழுக்கும் இயல்புடையனவாக விருக்கும். யாசித்தவர்கட்கு இல்லை என்று கூருதவன். அரசரால் கொண்டாடப்படும் பேறு பெற்றவன். அனுவசியமான சண்டைக்கு முன் செல்லாதவன். பசு எருதுகள் முதலியவற்றின் பெருக்கம் உள்ளவன். நல்லவர்கள் பலரால் இவனுடைய வாழ்க்கை நலமுள்ளது என்றும் அதிர்ஷடம் உள்ளவன் என்றும் கூறுகின்றேம்.

## ஜாதகன் இயல்பு—தொடர்ச்சி

### வேறு

9. தந்தமும் வரிசையிலான் கடவுள் பக்தி
தன்கரத்தில் கோதுமைரேகை முள்ளோ ளுகும்
முந்திபிந்தி துணைசேதம் எதிரிக் கஞ்சான்
மொழிதவருன் ஆளடிமை யுடைய ளுகும்
பந்துவிற்கும் பலபேர்க்கும் பொருந்த வாழ்வன்
பாவையர்தன் மோகமுளன் ஏழைபட்சன்
சிந்தையது மர்மமில்லான் மூலச் சூடன்
சிறப்பான குடும்பியென்று செப்ப லாகும்.

9. ஜாதகனுடைய பற்கள் நேர் வரிசையாக இல்லாமல் முன்பின்னுக இருக்கும். கடவுள் பக்தி யுள்ளவன். அவனுடைய கையில் கோதுமை ரேகை உள்ளவன். தன்னுடைய தகப்பனைப் போல், ஜாதகன் தனக்கு முன்

தோன்றிய சகோதரனும் உடன் பிறந்த சகோதரனும் இல்லாதவன். விரோதிகட்குச் சற்றும் பயப்படாதவன். சொன்ன வார்த்தைகளை எக் காலத்திலும் மீறுதவன். ஏவலாட்களின் பெருக்கத்தை உடையவன். தன் க்ற்றத்தார்கட்கும், நண்பர்கட்கும் மற்றும் உலகத்திருக்கும் நண்பனுகப் பொருத்தமான வாழ்க்கையை நடத்துவான், பெண்களின் மீது மோக முள்ளவன். வறிய ஏழைகளின் மீது பிரிய முள்ளவன். மனத்தில் சூது வஞ்சகம் இவையில்லாதவன். மூலச் சூட்டு நோயுள்ளவன். இவனுடைய குடும்பம் ஒரு சிறப்புள்ளது என்றும் எடுத்துக் கட்டலாம்.

## ஜாதகனுடைய சகோதரபாவம் திருமணம் முதலியன

10. துணையைந்து தோன்றிடுமாம் பெண்பா லிரண்டு
தீர்க்கமுறும் பின்னுகச் சொல்லு வோமே
கனமுடனே ஈரொன்பான் மனைவி நேரும்
கழறுவோம் வடக்கினிலே குணத்தைச் [சொல்வோம்
பிணையில்லா வார்த்தை சொல்வள் சிவந்த மேனி
பெரியதாய் ஒன்றுண்டு புண்ணியத்தள்
வினையிலா மனத்தனென்றேம் பொறுமை சாலி
வீண்வம்பில் செல்லாதாள் விரதம் பூண்பாள்.

10. ஜாதகனுக்கு உடன் பிறந்தவர் ஐவர் என்று சொல்லுகின்றேம். அவர்களில் சகோதரிகள் இருர் மட்டும் தீர்க்காயுளை உள்ளவர்கள் என்றேம். அவர்களுடைய விவரத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின் றேம். ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றேம். அவனு டைய பதினெட்டாம் வயதில் அவனுக்குத் திருமணம் நிகழும். மனைவி வடக்குப் பக்கத்திலிருந்து வருவாள் என்றேம். இனி அவளுடைய குணங் களைச் சொல்லுகின்றேம். பிழைகளில்லாமலும், மறைவு இல்லாமலும் பேசுபவள். சிவந்த நிற முள்ளவள். அவளுக்குப் பெரிய தாய் ஒருத்தி யுண்டு என்று கூறுகின்றேம். அவள் புண்ணியமான மனத்தினள். தீங்கு கள் எண்ணுத மனமுடையவள். பொறுமை யுடையவள். அனுவசிய வம்புக்குச் செல்லாதவள், விரதம் ஏற்று நடப்பவள்.

## மனைவியின் இயல்புகள்

11. பள்ளுப்படை ஆளுடையாள் பணிக ளுள்ளர்ள்
பால்பாக்கியம் விருத்தியுள்ளாள் பஞ்சைக் கன்பள்
உள்ளமொரு துணையாண்பா லொன்றே தீர்க்கம்
உரைக்கின்றேம் பெண்நான்கு தீர்க்கமெய்தும்

கள்ளமிலாள் துலைதூர மில்ல மாகும்
காதலியும் யோகமுடன்வாழ்வா ளாகும்
தெள்ளுமொழி நன்னடையாள் பித்த வாயு
தேகமென்றும் சுதர்பலத்தைச் செப்பக் கேளாய்.

11. பறையர், பள்ளர் முதலிய ஏவலாட்களின் பெருக்கத்தை யுடையவள். ஆபரணங்கள் உள்ளவள். பால் பாக்கியம் பெற்றவள். ஏழைகளுக்குப் பிரியமானவள். உள்ளதை உள்ளபடியே (மாறுபாடின்றி) கூறுபவள். சகோதரன் ஒருவனும் சகோதரிகள் நால்வரும் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்றோம். கபடு சூதுகள் இல்லாத மனத்தினள். அவளுடைய பிறந்த வீடு வெகு தூரத்தில் உள்ளது. அவள் அதிர்ஷ்ட முடையவள். தன் கணவனுடன் இன்பமாக வாழ்ந்து வருவாள். சுத்தமாகப் பேசுபவள். நன்றாக நடப்பவள் (அன்னத்தைப் போன்ற மென்மையான நடயழகி) பித்தவாயு ரோகமுள்ள சரீரத்தைப் பெற்றவள். இனி அவர்களுடைய புத்திர பாக்கியத்தைப் பற்றிச் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

12. செப்புகிறேன் சுதரொன்பான் தோன்று மென்றோம்
தெளிவாக ஆணிரண்டு பெண்பால் மூன்று
மைப்புடனே தீர்க்கமுறும் ஐந்து தானே
விரயமுண்டு மற்றவெல்லாம் விபரம் சொல்வேன்
ஒப்புடனே முதல்நான்கு ஆறும் எட்டும்
உறங்கிடுமே புத்திரர்கள் இவன்மேல் யோகம்
அப்பணியும் சடையணிந்த பாகத் தாளே
அறிவிப்போம் தெளிவாக அவன்தன் பூர்வம்;

12. ஜாதகனுக்கு ஒன்பது குழந்தைகள் தோன்றுவர் என்றோம். அவர்களில் ஆண் குழந்தைகள் இரண்டும், பெண் குழந்தைகள் மூன்றும் நீண்ட ஆயுள் உள்ளவைகள் என்றோம். இவ்வைந்து பேரும் தீர்க்கமாக இருப்பர். மற்ற குழந்தைகள் நிலையா. அதன் விவரத்தைச் சொல்லுகின்றோம். முதல் குழந்தையும், நான்காவது தோன்றும் குழந்தை ஆறுவது, எட்டாவது இந்த நான்கும் பிறந்து இறந்துபோம். மற்ற குழந்தைகள் ஜாதகனுக்கு மேலாக யோக சாலிகளாக இருப்பார். கங்கையைச் சடை முடியில் தரித்த சிவபெருமானை (அர்த்த நாரீசுவரர்) உடலில் பாதியாக்கிக் கொண்டவளே, இயன்றவரை எங்களுக்குத் தெளிவாகக் கூறியுள்ளோம். இனி ஜாதகனுடைய முற்பிறவியை;

## ஜாதகனுடைய முற்பிறவி

13. பூர்வமது அருணைக்கு மேல்பா லாகப்
பேரூரில் வைசியகுலம் பிறந்து மேலும்

சீரான குடும்பியதாய் செட்டுச் செய்து
தென்திசையில் சிவதலங்கள் சென்று வின்னேன்
பாரதனில் அறமதனில் இச்சை யுண்டாய்
பலசகா யங்கள்செய்து வாழும் நாளில்
கூறுவோம் கொல்லேயினில் கருபபு ஒன்று
குலதெய்வ மாகநின்று குறைகள் தீர்ப்பார்

13. ஜாதகனுடைய முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருவண்ணுமலேக்கு மேற்கில் உள்ள ஒரு பெரிய ஊரில் வைசிய குலத்தவனுகப் பிறந்து ஒரே நிலேயாக உள்ள குடும்பத்தை யடைந்து வர்த்தகத் தொழில் செய்து வந்து தெற்குத் திசையில் உள்ள சிவபெருமான் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று, பூசைகள் பல புரிந்து வந்து, உலகில் தருமம் செய்வதில் நாட்டமுற்று, ஜனங்களுக்குப் பல உபகாரங்கள் செய்து, வாழ்ந்து வருங்காலத்தில் ஏற்பட்ட தீவினேயின் விபரத்தைச் சொல்லுகின்றோம். இவனுடைய வீட்டுக் கொல்லேயில், (கருப்பண்ணசாமி) முனி ஒன்று குலதெய்வமாக, வெகுநாட்களாக, இருந்து வந்தது. அத்தெய்வம் அவ வீட்டிலுள்ளவர்களின் குறைகளேத் தீர்த்து வந்தது.

இப்பாட்டும் இதற்கு முன் பாட்டும் இனி அடுத்துவரும் பாட்டுக்களுமி அந்தாதியாக உள்ளதைக் கவனிக்கவும்.

## ஜாதகன் முற்பிறவித் தீவினே

14. மரமதனில் வாசமுறும் விருட்கம் தன்னே
மன்னவனும் தனக்குரிய வேலேக் காக
தரிபட்டு உதவிசெப்தான் முனியும்தானும்
தங்குதற்கு இடமின்றி வேறி டத்தில்
உரைந்துபின்பு ஊறிற்று முனியும் தானும்
உதித்தவில்லம் தனே நீங்கி வேறுவில்லம்
பரந்திடுவாய் மறுசென்மம் துணேமுன்பின் னில்லா
பரவுவாய்ச் சொல்லிற்று பகரக் கேளாய்

14. அந்த முனி குடியிருந்த மரத்தை இந்த ஜாதகன் தன் வீட்டு வேலேக்காக வெட்டி விட்டான். அந்த முனி தான் தங்குவதற்கு வேறு இடமில்லாததால், தவித்துப் பிறகு வேறிடத்துக்குச் சென்று விட்டது. போகும் போது பின்வருமாறு சாபமிட்டது நான் குடியிருந்த வீடாகிய மரத்தை நீ வெட்டி விட்டாய். அதனுல் நீ தங்கியிருக்கும் வீட்டை விட்டு விலகி வேறு வீட்டுக்குச் செல்லக்கடவது. அடுத்த பிறவியில் உனக்கு முன் பிறந்ததும் அடுத்துப் பிறந்ததமான குழந்தைகள் நில்லாமல் இறந்து போய்விடும் என்று சொல்லியது. வேறு ஒன்று சொல்லியது கேளுங்கள்.

## முனியின் சாபம்

15. கேளுமம்மா துணைபின்னோன் தோஷ மெய்தும்
கெடுதியாய் வார்த்தை சொல்லி கிளம்பிற் [றென்றே
வாள்விழியே! அத்தோஷ மிவனைச் சேர்ந்தே
வத்திற்று இவனுக்கு அந்தி யத்தில்
தாளதளிலே வாயுவினால் பாதை கண்டு
சண்டன்தன் பதிக்காளாய்ச் சார்ந்தானம்மா
மால்மகனும் வரையவந்தான் அருகன் வம்சம்
மேவினான் இப்பாலன் விளம்பக் கேளாய்.

15. தாயே! கேளுங்கள் (ஜாதகனுக்குப்) பின் பிறந்த சகோதரனும் இறந்து போவான் என்று கொடுமையுடன் சாபமிட்டுத் தன் புதிய இடத்துக்குச் சென்று விட்டது. வாளைப் போன்ற கூர்மையான விழிகளை யுடைய தேவியே! அந்தத் தோஷங்கள் இவனை வந்தடைந்தது. இவன் தன் கடைசி காலத்தில் வாயு உபத்திரவமடைந்து மரணமடைந்தான். மீண்டும் திருமாலின் புதல்வனாகிய பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் அருகர் குலத்தில் வந்து தோன்றினான். மீண்டும் சொல்லுகின்றோம். கேளுங்கள்.

## முனியின் சாபபலன்

16. விளம்புவோ மிச்சென்மம் பிறந்த வில்லம்
விட்டிடுவான் வேறுவில்லம் மேவு வானும்
வளமையதாய் அவ்வீதி கீழ்பா லக்கினி
அருகினிலே வாசமுறும் ஈரஞ் சாண்டில்
களங்கமிலா சித்திவில்லம் செய்து செல்வான்
கருமுனிசா பம் போல்துணை முன்பின் னில்லான்
உளமதனி லிருநான்கு ஆண்டு மேலாய்
உரைத்திட்டோ மீரஞ்சு ஆண்டுமட்டும்.

16. இப்பிறவியில் தான் பிறந்த வீட்டை விட்டுச் செல்லுவான் என்றும் வேறு வீட்டுக்குச் சென்று வாழ்ந்து வருவாள் என்றும் கூறுகின்றோம். அவன் புதியதாகக் குடிபோகும் வீடு அவ்வீட்டுக்குக் கிழக்கில் உள்ளது. அக்கினி திக்கில் (தென் கிழக்குப் பக்கத்தில்) சமீபத்தில் வசித்து வருவாள். ஜாதகனுடைய பத்தாம் வயதில் குறைகளில்லாத அழகிய வீடு கட்டிக் கொண்டு அங்கு போவான். கருமுனியின் சாபத்தைப்போல் ஜாதகனுக்கு முன்றும் பின்னும் தோன்றிய குழந்தைகள் இறந்து விடுவர். ஜாதகனுக்கு எட்டு வயதுக்கு மேல் பத்து வயது வயதில்,

## யோகம் கிரகநிலை

17. சல்லியங்கள் உண்டாகும் இல்லாத் தாலும்
சத்துருவால காலியால் மோசத் தாலும்
சொல்லுவோ மதன்மேலாய் ரணங்க ளில்லான்
சுகமுடையாள் கையிருப்பு முடைய னுகும்
அல்லல்க ளடையானும் ஆயுள் மட்டும்
அருணன்புகர் இருவரொன்ருய் லாபம் புக்க
எல்லைஅதிகம் சேர்ப்பன் திருப்பணியும் செய்வன்
இடரறியான் பின்பாக மியம்பு வோமே.

17. கடன் உபத்திரவங்கள் அதிகமாக ஏற்படும். அதனுலும், விரோதிகளாலும், கால் நடைகளின் அழிவினுலும், மோசமான நடவடிக்கையாலும் ஜாதகனுக்குத் துன்பம் ஏற்படும். அதற்குப் பிறகு கடன் உபத்திரவமில்லாதவன். சௌக்கியம் உள்ளவன். கையிருப்புப் பணம் உள்ளவனுகும். துன்பங்கள் அடையாதவன். அது அவனுடைய ஆயுள் வரைக்கும் அங்ஙனம் நீடித்து இருக்கும். சூரியன் சுக்கிரன் இருவரும் லாப ஸ்தானத்தில் இருப்பதால் ஜாதகன் விளைநிலங்களை அதிகம் சேர்ப்பான். ஆலயத்திருப்பணியும் செய்வான். துன்பங்கள் எப்படி இருக்கும் என்பதைக் கூட அறியாதவனுவான். பிற்பாகத்தில் விவரமாகச் சொல்லுகின்ருேம்.

## தாயின் குணங்கள்

18. அன்னைகுண மிருநிறத்தாள் சமதே கத்தாள்
ஆளனுக்கு இனியவளாம் அதிருஷ்ட சாலி
இன்மொழியு பொறுமையுண்டு நற்கு ணத்தாள்
கரம்காலில் ஊனமுண்டு கடவுள்பக்தி
தன்துணை ஆணென்றுண்டு பெண்பா லவ்வார
சாற்றுகிருேம் தீர்க்கமதாய் கீழ்பா லில்லம்
சொன்னமொழி குன்ருதாள் ஏழைபட்சம்
செறிந்திடுமே பித்தவாயு முன்சென் மம்கேள்

18. ஜாதகருடைய தாயின் விவரங்களைச் சொல்லுகின்ருேம். அவள் இருநிற முடையவள். சமமான உடலமைப்புள்ளவள். தன் கணவன் மனத்துக்குத் தக்கபடி நடப்பவள். அதிர்ஷ்ட முடையவள். இனிய சுவையுள்ள, கரும்பைப் போன்று பேசுபவள். பொறுமையுள்ளவள். நற்குண முடையவள். கால்கைகளில் ஊனமுடையவள். தெய்வ பக்தியுள்ளவள். உடன் பிறந்தவரில் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் உள்ளவள் என்ருேம். அவர்கள் நீண்ட ஆயுள் உள்ளவர்கள். தாயின் வீடு கிழக்குப் பக்கத்தில் இருக்கும், சொன்ன வார்த்தைகள் தவருதவள். ஏழைகளின் மீது இரக்கம் உள்ளவள். பித்த வாயு உள்ள சரீர முடையவள், இனி தாயின் முற்பிறவியைச் சொல்லுகின்ருேம்.

## தாய் செய்த தீவினைகள்

19. சென்மமது கடையூருக் கருகி லுத்திரம்
செழிப்புடைய பேரூரில் பிரம்ம சேயாய்
அன்னவளும் தானுதித்து மதலை யுண்டாய்
அழகுபணி யுடையவளாய் வாழு நாளில்
தன்பந்து தனக்கன்னம் படைக்கும் நாளில்
சதிசெய்தாள் சிலருக்கு வஞ்ச னையாய்
இன்னமொன்று விடாக்காலம் நதிக டந்தாள்
இதுவன்றி வேறுவினை யில்லைதானே ;

19. முற்பிறவியில் ஜாதகனுடைய தாய் திருக்கடையூருக்கு அருகில் வடக்குப் பக்கத்தில் உள்ள ஒரு செழிப்புள்ள பெரிய ஊரில் அந்தண குலத்தவளாகப் பிறந்து குழந்தைகளைப் பெற்று, அழகிய ஆபரணங்களையடைந்து, வாழ்ந்து வருங்காலத்தில், தன் சுற்றத்தாருக்கு பந்தியில் போஜனம் அளிக்கும் காலத்தில், பந்தி வஞ்சனை செய்தாள். சிலருக்கு அதிகமாகவும் சிலருக்குக் குறைவாகவும் உணவு அளித்தாள். இதுதவிர வேறு ஒன்றும் சொல்லுகின்றோம். தன் மாதவிடாய்க் காலத்தில், நதியைக் கடந்து சென்றாள். இவ்விரண்டும் தவிர வேறு தீவினைகள் இல்லாதவளாக வாழ்ந்து வந்தாள்.

## அசுத்தமாக ஆற்றைக் கடந்த தோஷம்

20. தானவளு மந்தியத்தில் வாயு பாதை
தன்னாலே மறலிபதி தான டைந்து
ஊனமுள சிரநான்கோன் வரையப் பட்டு
உதித்தவளாம் புத்தர்குலம் உமையும் கேட்பாள்
மானமதாய் முன்சென்மம் மறைகு லத்தில்
வந்தவளு மிச்சென்னம் அருகர் வமிசம்
போனவிப ரங்கள் சொல்வாய் பூர்வம் தன்னில்
பொய்கைகடந் தாள்மாத விடாய்கா லத்தில்

20, அவளும் தன் இறுதிக் காலத்தில் வாயு உபத்திரவம் அடைந்து, அதனால் மரண மடைந்து, எமபுரம் சென்று, சிவபெருமானால் கொய்யப்பட்டு நான்கு தலைகளை மட்டுமுடைய பிரமதேவனால் படைக்கப்பட்டு. புத்தர் குலத்தில் பிறந்தவள். சிவபெருமானின் தேவியாகிய உமை கேட்கின்றார். முற்பிறவியில் அந்தண குலத்தில் பிறந்தவள், இக்குலத்தில் அருகர் வமிசத்தில் தோன்றும் காரணங்கள் என்ன வென்று சொல்லுங்கள். முற்பிறவியில் மாதவிடமாய் காலத்தில் ஆற்றைக் கடந்த தோஷத்தால்;

## தாயின் மறுபிறவி

### வேறு

21. ஆகையா லிச்சென் மத்தில் அம்மாது உதித்தா
[ளென்றோம்
தோகைபந் தியிலே தோஷம் செய்ததால் கரம்கா லூனம்
வாகையா யிவள்பின் சென்மம் வருவிப்பேபாம் கொங்கு
[நாட்டில்
போகபாக் கியங்க ளுண்டாய் பிறப்பளே பிரம்ம சேயாய்

21. ஆகையால் இப்பிறவியில் ஜாதகனுடைய தாய் சமண குலத்தில் பிறப்பாள். முற்பிறவியில், பந்தியில் சிலருக்குத் தோஷம் (வஞ்சனை) செய்ததால், கைகால்கள் ஊனமாயின. இனி தாயின் மறுபிறவியைச் சொல்லுகின்றோம். கொங்கு நாட்டில் அந்தண குலத்தவளாகப் பிறப்பாள் என்றும் சகலவிதமான போக பாக்கியங்கள், பெற்று வாழ்வாள் என்றும் சொல்லுகின்றோம்.

## தாயின் மரண காலம்

22. ஆருறு ஆண்டு தன்னில் அர்ப்பசி மாதம் தன்னில்
கூரியன் தசைசுக் கிரனும் குலவிய புத்தி தன்னில்
தீரமா யன்னை கெண்டம் செப்பிய மொழிகுன் றுது
மாரனை யெரித்தேன் தேவி மங்கையே மேலும் கேளாய்.

22. ஜாதகனுடைய முப்பத்தாறும் வயதில் ஐப்பசி மாதத்தில், புதமகா தசையில், சுக்கிர புக்தியில் திண்ணமாக தாய் மரண மடைவாள். நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறு. மன்மதனை யெரித்த சிவபெருமானின் தேவியே! மேலும் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

## தந்தையின் முற்பிறவி

23. தந்தையின் பூர்வம் சொல்வேன் சீகாழி யருகில்
[மேற்கில்
பிந்திய சித்தூர் தன்னில் பிறந்தனன் கங்கை சேயாய்
முந்திய பூமி யுண்டாய் முயர்வான குடும்பி யாகி
தந்தன மதிகமாகித் தரணியில் வாழும் நாளில்

23. இனி ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைக் கூறுகின்றோம். சீர்காழிக் கருகில் மேற்குப் பக்கம் உள்ள சிற்றூரில் வேளாள வமிசத்தவனுகப் பிறந்தான். அதிகமான நிலங்களைப் பெற்று உயர்ந்த குடும்பத்தை

1. புதன்

யடைந்து தன்னால் தேடப்பட்ட பொருள் பெற்று, உலகில் வாழ்ந்து வரும் காலத்தில்;

## சகோதரனுக்குரிய பாகத்தைத் தராதது

24. வந்தஊழ் தன்னைச் சொல்வேன் வரும்துணை பாக மீயா
இந்தவன் தன்னுகக் கொண்டான் இவன் துணை மனவெ
[றுப்பால்
எந்தன்தன் பாக மீயா இடும்புகள் செய்த பாவி
பிந்திய சென்மந் தன்னில் பூமியில் தனியாய் வாழ்ந்து.

24. ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றேம். தன்னுடன் பிறந்த சகோதரனுக்குரிய பாகத்தைக் கொடாமல் அந்த பாகத்தைத் தானே எடுத்துக் கொண்டான். அந்தச் சகோதரனும் மனம் வெதும்பிக் கூறுகின்றான். "எனக்குத் தர வேண்டிய பாகத்தைக் கொடாமல் வீண் துன்பங்கள் விளைவித்த பாவியே! உனக்கு ஏற்படும் மறுபிறவியில், பூமியில் சகோதரனில்லாமல், தனியனாக வாழ்ந்து;

## சகோதரனுடைய சாபம்

25. முதல்சுதர் தோஷ மெய்தும் உதித்தயில் லடையா
[னாகும்
மதிநுத லொருத்தி யாலே மாநிலம் நிந்தை யாயும்
இதுவிதம் பலவாய்ச் சொல்லி ஏகினன் ஞாதிதானும்
வதிபனு மந்தியத்தில் மலர்வனம் செய்து மேதான்;

25. "முதலில் தோன்றும் குழந்தையையும் இழந்து, பிறந்த வீட்டையும் அடையாமல், அழகிய புருவங்களை யுடைய, பெண் ஒருத்தியால் உலகில் அவச் சொற்கள் ஏற்றும் இன்னும் பலவிதமாக அல்லலுற்று வாழ்வாய்" என்று சொல்லி விட்டுச் சென்றான் சகோதரன். ஜாதகனுடைய தந்தை அப்பிறவியில் இடைக் காலத்தில் புஷ்பத் தோட்டம் நந்தவனம் செய்து.

26. அன்னகர் கடவுள் பூசை அரனடி யார்க்குத் தொண்டு
இன்னவன் செய்து மேதான் ஏகினன் எமப திக்கு
தன்னிலே பிரமன் லக்கம் தரணியில் வரையப் பட்டு
நன்னய அருகர் வம்சம் நல்கினு னென்று சொன்னேம்.

26. அவ்வூரில் உள்ள கடவுளுக்கும், சிவபெருமானுடைய தொண்டர்கட்கும், பல பணிவிடைகள் செய்து, வாழ்ந்து, பிறகு மரண மடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இப்பிறவியில் நன்மைமிக்க அருகர் வமிசத்தில், பிறந்தான் என்று கூறுகின்றேம்.

## பார்வதியின் ஐயம்

27. முனிவரிவ் விதமாய்க் கூற மொழிகுவா ரம்மன் தாமும்
சினமிலாக் கங்கை சேயாய் செனித்தவ னிச்சென்
[மத்தில்
கனமுள வருகர் வமிசம் காவலன் உதித்த தென்ன
வினையிலாச் சொல்லு மென்ன விளம்புவார் வசிஷ்டர்
[தானே.

27. முனிவர் இந்தவிதமாகக் கூறும்போது பார்வதிதேவி வினவலானார். தீங்குகளில்லாத வேளாள குலத்தில் பிறந்தவன் இப்பிறவியில் அருகர் வமிசத்தில் தோன்றும் காரணங்கள் என்னவென்று மறைவில்லாமல் கூறுங்கள். வசிஷ்ட முனிவர் விரிவாகச் சொல்லுகின்றார்,

## அரன்தொண்டின் பலன்

28. முன்சென்மம் கடவுள் பூசை முயற்சியாய் செய்த தாலும்
உன்னத வடியார் தொண்டு உத்தமன் செய்த தாலும்
தன்குல மேன்மை யாகச் சார்ந்தன னிவனே யம்மா
முன்சென்மம் துணைசா பம்போல் வீருது துணைவர்
[தானே;

28. முற்பிறவியில் கடவுளுக்கு உண்மை பக்தியுடன் தொண்டுகள் புரிந்து வந்ததாலும், சிவனடியாருக்குப் பல தொண்டுகள் செய்து வாழ்ந்து வந்ததாலும், இப்பிறவியில் பிறக்கும் குலம் உயர்ந்தது. தாயே! முற்பிறப்பில் ஏற்பட்ட சகோதரனுடைய சாபப் படி சகோதரனுக்குத் தோஷம் ஏற்பட்டது.

29 தந்தையில் நீங்கு வானும் சனவுப காரி யாவன்.
மன்னரால் கிராமச் செட்டு வந்திடு மாயுள் மட்டும்
பின்னையு மிருபா னெட்டில் புக்கிடும் கண்ட மொன்று
வந்தநோய் பண்டி தத்தால் விலகிடு மிவனுக் கேதான்;

29. ஜாதகன் தன் தந்தையின் வீட்டை விட்டு விலகுவான். ஜனங்களுக்கும் உபகாரம் செய்யும் இயல்பினன். அரசாங்கத்தாரின் உதவியால் தன் ஆயுள் முடியும் வரை கிராம வர்த்தகம் செய்து வருவான். ஜாதகனுக்கு இருபத்தெட்டாம் வயதில் கண்டம் ஒன்று நேரும். அந்த நோய் மருந்துகள் கொடுத்தால் குணமாகிவிடும்,

30. எண்ணான்கு ஆண்டு தன்னில் எழில்மேட மாதம்
[தன்னில்
[1]பண்டிதன் தசையி லேதான் பகருவோம் சுயபு குத்தி

1. புதன்

திண்ணமாய்க் கொண்ட மென்றோம் செப்பின
[மொழிகுன் றுவே
வண்ணமா யிவன்பின் சென்மம் வரைகிறோம் தாயே
[கேளு.

30. ஜாதகனுடைய முப்பத்திரண்டாம் வயதில் அழகிய சித்திரை மாதத்தில் ஜாதகனுடைய புதமகா தசையில் புதபுக்தியில் மற்றொரு கண்டம் நேரும். அக்கண்டம் தப்பாது திண்ணமாக! சொல்லுவோம். இனி அவனுடைய மறுபிறவியைச் சொல்லுகின்றோம்.

## ஜாதகன் மறுபிறவி

31. வடதிசை காசி பக்கல் மருவுவான் சத்திரிய சேயாய்
சகடமும் பரியு முண்டாய்க் கனத்த தோர் நகர மாள்வன்.
திடமதாய் வதிஷ்டர் சொல்லச் செயமுனி கேட்க லுற்றுர்
அடவுட னிச்சென் மத்தில் அவன்செய்த புண்ணிய
[மென்ன.

31. வடக்குத் திசையிலுள்ள காசி க்ஷேத்திரத்துக்குப் பக்கமாகவுள்ள ஒரு ஊரில், சத்திரிய குலத்தவனுக, ஜாதகன் பிறப்பான் என்றோம். வண்டியும் குதிரையும் வாங்கி, பெரியதோர் நகரத்தை, ஆண்டு வருவான். இவ்வண்ணம் நிச்சயமாக வசிஷ்ட முனிவர் சொல்லும்போது, ஜயமுனிவர் கேட்கலானுர். ஜாதகன் இப்பிறவியில் செய்த நற்செயல்கள் என்னவென்று.

32. சொல்லுவீர் முனியே நீர்தான் சேயனு மிச்சென் மத்தில்
அல்லென் றோரைக் காத்தும் யாவர்க்கும் நல்லோ னுயும்
புல்லிய புத்தி யின்றிப் பெரும்பொருள் பக்தி கொண்டும்
நல்தே வால யத்தில் நற்றிருப் பணியும் செய்தும்;

32. கூறுங்கள் முனிவரே! தாங்கள், ஜாதகன் இப்பிறவியில் துன்பம் அடைந்தவர்கட்கு அத்தீங்கைப் போக்க உதவி செய்ததாலும், எல்லோருக்கும் நல்லவனுக வாழ்ந்து வந்ததாலும், அற்ப புத்தியில்லாமல் வாழ்ந்து, தெய்வபக்தியுடன், தெய்வத்துக்கு கோவிலில், பணியாற்றி வந்ததாலும்;

33. வருவதால் மறுபி றப்பு வரசர்தன் குலமு தித்து
திருமகள் விலாசம் பெற்றுச் சேனைக ளுடைய னுகி
பெருமையாய் வாழ்வா னுகும் பேசின மொழி குன்றுவே
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்.

33. இருந்து வருவதால் மறுபிறவியில் சத்திரிய குலத்தில் பிறந்து லக்குமிகடாட்சம் பெற்று, சேனைகள் (படைகள்) உடையவனாக, மிகுந்த பெருமையுடன், வாழ்ந்து வருவானாகும். நாங்கள் கூறியவைகள் தவறா. அரிய வேதங்களின் முடிவில் நடமாடும் தேவனின் தேவியே! கேளுங்கள்.

34. உதித்தவன் பொதுயோ கத்தை உரைக்கிறோம்
[செனனம் தொட்டு
அதிபன்தன் மரண மட்டும் அம்புலி பிறைபோல் யோகம்
நதிபல தீர்த்தம் தோய்வன் நாதனுர் பூசை பூண்பன்
சதியிலா மனத்த னுகும் திருப்பணி வேலை செய்வன்.

34. இனி ஜாதகனுடைய பொது யோகத்தைக் கூறுகின்றோம். அவனுடைய பிறப்பு முதல் அவனுடைய மரண காலம் வரைக்கும், வளர் பிறைச் சந்திரன் போல் யோகம் வளரும். பல புண்ணிய நதிகளில் நீராடல், சிவபெருமானுக்குப் பூசை முதலியன செய்தல், ஆகியவற்றைச் செய்து, தீதுகள் இல்லாத மனத்தவனாக, ஆலயத் திருப்பணி செய்து வருவான்.

35. அரசர்பூ சிதமு மாவன் அதிகார முடைய னென்றோம்
தரைமிக விருத்தி செய்வன் சல்லியங் கொள்ளா னுகும்
பெருமையும் புகழு மேற்பன் பேதையால் யோகம்
[வாய்க்கும்
பொருள்பூமி பணிகள் யாவும் பொருந்துமீ ரேழா
[யிரம்பொன்

35. அரசரால் நன்கு கொண்டாடப்படுபவன். அதிகாரம் (அரசாங்கப் பதவி) உடையவன் என்றோம். விளைநிலங்கள் விருத்தி செய்வான். கடன் வாங்காதவன். கீர்த்தியையும் பெருமையையும் ஏற்பான். ஜாதகனுடைய மனைவியால் யோகம் வாய்க்கும். அவனுடைய பொருள், பூமி, ஆபரணங்கள், முதலியன பதினான்காயிரம் பொன் பெறுமானம் உள்ளதென்றோம்.

36. அறுபது விரண்டு ஆண்டில் ஆனிமா தத்தி லேதான்
குறைபக்கம் துதியை தன்னில் கூறுவோம் கெண்டம்
[தானே
பராசரும் கேட்க லுற்றார் பகர்ந்திட்டீர் வயது தீர்க்கம்
குறையுண்டு ஐம்ப தாண்டில் குலவிய கேது காலம்.

36. ஜாதகனுடைய அறுபத்திரண்டாம் வயதில் ஆனி மாதத்தில் கிருஷ்ணபட்சம் துதியை திதியில் ஜாதகன் மரண மடைவான். பராசர முனிவர் கேட்கலானுர். எங்ஙனம் வயது தீர்க்கம் என்று சொன்னீர்கள்? அதாவது அவனுக்குத் தோஷமுண்டு. அவனுடைய ஐம்பதாம் வயதில் கேது மகா தசையில் மரணம் சம்பவிக்கும்.

37. எப்படிச் சொல்லு மென்ன எட்டினில் கேது நிற்க
தப்பிதம் நேரு மென்ருேம் தடுத்தவர் சொல்லு கின்ருர்
மைப்புடன் இரண்டோன் வெள்ளி விளங்கிடு காலம் [தன்னில்
ஒப்புடன் சேய்பு குத்தி உரைத்திட்டோ மார கங்கள்.

37. எப்படி என்று சொல்லுங்கள் என, ஆயுள் ஸ்தானமாமிய எட்டாமிடத்தில், மேஷத்தில், கேது இருப்பதால், கட்டாயம் மரணம் நேரும் என்ருர். தடுத்து ரிஷிகள் சொல்லுகின்ருர். இரண்டாமிடத்துக்குரிய சுக்கிர மகா தசையில் அங்காரக புக்தியில், மாரகம் நேரும் என்று சொல்லுகின்ருேம்.

38. குறைவுரு மறுபா னிரண்டும் குவலயந் தன்னில் [வாழ்ந்தும்
மறலியின் பதிக்குச் சென்று மறுசென்மம் துவாரை [தன்னில்
அருகினி லிக்கு லத்தில் அணுகியே வாழ்வா னுகும்
நிறையவே குடும்பி யாகி நிமலனைப் பூசை செய்வான்.

38. ஜாதகனுக்கு அறுபத்திரண்டு வயது வரையில் உலகில் வாழ்க்கை திண்ணமாக நடைபெறும். பிறகு இறந்து அடுத்த பிறவியில் துவாரையின் அருகில், இதே குலத்தில் தோன்றி வாழ்ந்து வருவான். பெரிய குடும்பத்தை யுடையவனுகி சிவபிரானை பூசை செய்வான். தேவியே! கேளுங்கள்.

39. இன்னமும் சிலது சேதி இயம்புவோ மிரண்டி லேதான்
அன்னவன் சென்ன காலம் அந்தணன் தசையி ருப்பு
சொன்னனே ஈரு ருண்டும் சொல்லுவோம் பலனை [யாங்கள்
தன்துணை யொருத்தி சேதம் சல்லியம் நேரு மென்ருேம்.

39. இன்னும் சில விவரங்கள் இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்ருேம். ஜாதகனுடைய ஜனன காலத்தில் குரு மகா தசையில் இருப்பு பன்னிரண்டு வருடங்கள் ஆகும். அக்காலத்தில் பலனைச் சொல்லுகின்ருேம். உடன் பிறந்த சகோதரி ஒருத்திமான்வாள். கடன் தெந்தரவு ஏற்படும் என்ருேம்.

40. இல்லமும் செய்வா னுகும் எதிரிக ளதிக முண்டு
மல்லுகள் செயமே யாகும் அரசர்பூ சிதமு மெய்தும்
தொல்புவி கிருஷி யோங்கும் சுதனுந்தந் தைகளும்
[நோயாம்
அல்லல்க ளதிக முண்டு அறைகிறோம் விபர மிரண்டில்.

40. புதிய வீடு கட்டுவான். விரோதிகள் அதிகம் உள்ளவனுவான். மளஸ்தாபம் (கோர்ட்டு வியாச்சியம் முதலியன) இவன் பக்கம் ஜபத்துடன் தீரும். அரசாங்கத்தாரின் நன்மதிப்புக் கிட்டும். உலகில் விவசாயத்தில் வரும்படி பெருகும். ஜாதகனுக்கும் தாய் தந்தையருக்கும் நோய் ஏற்படும். அதனுல் துன்பங்களும் அதிகம் உண்டு. அவற்றை இரண்டாம் பாகத்தில் சொல்லுகின்றோம். —V. R. N.

———

# ஜாதகம் 82

## ஜனனகால கிரகநிலை

1. மதிதனு ராகு [1]சாடி [2]மால்[3]குசன் [4]காரி [5]கோலாம்
நிதிகுரு கடக மாக [6]நீர்புகர் [7]மாதை புக்க
[8]உதயனும் [9]தேள தாக உரைக்கிறோம் சென்மம் கன்னி
இதுவிதக் [10]கோளு நின்று வியம்புவீர் பலனைத் தானே.

1. சந்திரன் தனுசிலும், ராகு கும்பத்திலும், புதன், அங்காரகன் சனி, துலாத்திலும் குரு கடகத்திலும், சுக்கிரன் கன்னியிலும், சூரியன் விருச்சிகத்திலும், ஜன்ம லக்கினம் கன்னியாகவும், இருப்பின் இந்த கிரக நிலையுள்ள ஜாதகனுக்குப் பலனைக் கூறுங்கள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | இராசி சக்கரம் | | குரு |
| | | | கேது |
| சந்திரன் | சூரியன் | புதன் அங்காரகன் சனி | லக்கினம் சுக்கிரன் |

## ஜாதகன் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. சுந்தரி கேட்கும் போது செயமுனி கூறு கின்றார்
இந்தசே யாணும் சென்மம் இல்லமும் கீழ்மேல் வீதி
தென்வாடை மாரி தந்தி தீர்த்தமும் தென்மே லாகும்
கந்தனை யீன்றோன் கோஷ்டம் கழறுவோம் வடமே
[லாகும்.

1. கும்பம்
2. புதன்
3. அங்காரகன்
4. சனி
5. துலாம்
6. சுக்கிரன்
7. கன்னி
8. சூரியன்
9. விருச்சிகம்
10. நவக்கிரகம்.

2. இவ்விதம் பார்வதிதேவி கேட்கும்போது ஜயமுனிவர் பதில் கூறுகின்ருர். இந்த ஜாதகம் ஒரு ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு வரிசையில் உள்ளது, தென் மேற்கில், மாரியம்மன் கோவில் விநாயகர் ஆலயம் ஒரு நதி முதலியன உள்ளன. முருகப் பெருமானை யீன்ற பரமசிவனுரின் கோவில் வடமேற்கில் உள்ளது என்று கூறுகின்ருேம்.

## இந்நூலில் கூறப்படுவன இவை எனல்

3: உத்திரம் கிரியும் காணும் உரைக்கிருேமிவ் வடையா [ளத்துள்
வித்தகன் தந்தை இல்லம் விளம்புவோ மிரண்டாம் [ஜன்மம்
பத்திய அன்னை தந்தை பாலர்கள் களத்திர யோகம்
சுத்தமாய் முன்பின் ஜன்மம் செப்புவோ மிந்நூல் [தன்னில்.

3. வீட்டுக்கு வடக்கில் ஒரு மலையுள்ளது. இவ்விதம் சொல்லப்பட்ட இவ்வடையாளங்களுள்ள இடத்தில் ஜாதகன் தந்தை வீடு இருக்கும், அங்கு இந்த ஜாதகன், தன் தந்தைக்கு இரண்டாம் பிறப்பாகப் பிறப்பான், இவனுடைய தாய், தகப்பனுர், புதல்வர்கள், மனைவி, முதலானவர் யோகங்கள், முற்பிறவி மறுபிறவி, விவரங்கள் ஆகியவற்றைப் பற்றி இந்தச் சோதிட நூலில் சொல்லுவோம்.

## தந்தையின் சகோதரன் செய்திகள்

4, தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றுவோ மொருவன் [தீர்க்கம்
முந்திடும் நான்கு வென்ருேம் நுவலுவோ மிவன்கு [ணத்தை
நிந்தையு மேற்பா னுகும் நீட்சியா முணைச்ச லுள்ளான்
சிந்தையில் மர்ம னுவன் சிறப்பிலா வார்த்தை கூறும்.

4. தந்தையின் உடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுவோம். ஒரு சகோதரன் தீர்க்க ஆயுளுடன் இருப்பான். முன் பிறந்த நான்கு சகோதரர்கள் நஷ்டமாவர். இனி, தந்தையின் சகோதரன் குணங்களைச் சொல்லுவோம். உலகில் பழியை ஏற்பான். உயர்ந்து மெலிந்த உடலமைப்புள்ளவன். மனத்தில் மறைவுள்ளவன். பெருமை தரத்தக்கனவல்லாத சொற்களைப் பேசுவான்.

## இதுவுமது

5. முன்துணை மனம்போல் வாழான் முனிவுண்டு ஈகை [கொஞ்சம்
மன்னிய பயிரி னாலும் மன்னம் ஜீவிப் பானும்
அன்னிய ருறவு முண்டு அப்போது பகையு மாவன்
பின்னமில் லாத தேகி பாரியு மொன்றே யாகும்

5. இவனது முன்னோன் (ஜாதகன் தந்தையின்) கருத்துக்கு ஏற்ற வகையில் ஒற்றுமையுடன் வாழ மாட்டான். கோபங் கொள்ளும் இயல்பினன். தருமம் செய்யும் இயல்பு சிறிதே யுடையவன். விவசாயத் தொழில் செய்து ஜீவிப்பனுவான். அயலார் நட்பைப் பெறுவான். அப்பொழுதே அவர்களுக்குப் பகைவனுகவும் ஆவான். அவயவங்களில் ஊனமில்லாத உடலமைப்பைப் பெற்றவன். இவனுக்கு மனைவி ஒருத்தியே யாவாள்.

## இதுவுமது

6. குடகினில் நேரு மென்றேம் குலவிடும் சுதரா னொன்று
மடமயி லொப்ப தாக மங்கையு மவ்வாறு தீர்க்கம்
கடன்கொள்ளான் செலவு செய்யான் கன்னியவர் தமக்கு [ஈவன்
விடமன முடைய னாகும் விளம்புவோம் விபர மிரண்டு.

6. இவனுக்கு வாய்க்கும் மனைவி மேற்குத் திசையிலிருந்து வருவாள். ஆண் குழந்தை யொன்றும், இளமையான பெண் மயிலை யொத்த பெண் குழந்தை யொன்றும் தோன்றித் தீர்க்கமாம். இந்தச் சகோதரன் கடன் வாங்க மாட்டான். வீண் செலவு செய்ய மாட்டான். பெண்களிடம் மையல் கொண்டு அவர்களுக்குப் பணம் கொடுப்பான். விஷம் போன்று, தீய எண்ணங்கள் கொண்ட மனத்தினன் ஆவான். இவனைப் பற்றிய மற்றைய விவரங்களை இரண்டாம் பாகத்தில் சொல்லுவோம்,

## தந்தையின் குணங்கள்

7. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சாடியாம் ராசி [யாகும்
பிந்திபூ ராட நாளில் பிறப்பனும் யூகை யாளன்
வந்தபேர்க் கன்ன மீவன் மர்மத்தை வெளிக்காட் [டாதான்
சந்ததம் கிருஷி செய்வன் தானிள மனத்த னாகும்.

7, தகப்பனாரின் குணங்களை இனிக் கூறுவோம். கும்ப லக்கினத்தில் பூராட நட்சத்திரம் (நான்காம் பாதத்தில்) பிறந்தவன். ஊகித்து உணரும்

இயல்புடையவன். வீடு தேடி வந்தவர்கட்கு உணவு அளிப்பான். மனத்தி லுள்ளவற்றை எளிதில் வெளிப்படுத்த மாட்டான். எப்பொழுதும் விவசா யம் செய்வான். இரக்கம் பொருந்திய மனத்தினன்.

## இதுவுமது

8. கடனிலான் வறுமை காணுன் காலாட்க ளுடைய ளுகும்
மடயரை யுறவு கொள்ளான் மறித்துவார்த் தைகளும்
[கூறுன்
இடமது பின்னல் செய்வன் இடரென்ரேர்க் குதவி
[செய்வன்
படையினில் செல்லா ளுகும் பங்கய ரேகை யுள்ளான்,

8. கடன் இல்லாதவன். தரித்திரத்தை யறிய மாட்டான். ஏவின பணிகளைச் செய்யும் பணியாட்களுடையவன். அறிவில்லாதவர்களிடம் உறவு கொள்ள மாட்டான். பெரியோர் கூறுவனவற்றை இடைமறித்து ஒன்றும் சொல்ல மாட்டான், பிற்காலத்தில் புதிய வீடு கட்டுவான். துன்ப மென்று வந்தவர்கட்கு உதவி செய்வான். போருக்குச் செல்ல மாட்டான். தன் கையில் பத்ம ரேகை யுள்ளவன்.

## இதுவுமது

9. வித்தையும் சமம தாகும் விருந்திஞேர் தம்மைப் பேணும்
உத்தம ளுகி வாழ்வன் உறுதியில் லாத நெஞ்சம்
பத்தினி நேய ளுகும் பாருகள் விருத்தி செய்வன்
நத்திஞேர்க் குதவி செய்வன் நாயகன் புகழு மேற்பன்.

9. சமமான கல்வியறிவுடையவன். வீட்டுக்குப் புதிததாக வந்தவர் களைப் போற்றுதல் செய்வான். உலகில் நல்லவனுக வாழ்ந்திருப்பான். திடமில்லாத மனத்தினன். மனைவியிடம் அன்புள்ளவன். நிலபுலங்களை விருத்தி செய்வான். துன்பப்பட்டவர்களுக்கு உதவி செய்வான். கீர்த்தியை அடைவான்.

## இதுவுமது

10. பலச்கா யங்க ளுள்ளான் பந்துவுக் கினிய ளுகும்
கலகத்தில் மனம்வை யாதான் காரியச் சமர்த்த ளுகும்
அலைகடல் துயின்ரேன் பத்தி அல்பனுல் நிந்தை
[யேற்பன்
தலம்தீர்த்தம் தோய்வா ளுகும் சாதிப்பான் சிலவே
[சங்கை.

10. பலரிடமிருந்து, பலவிதமான உதவிகளைப் பெறும் நிலையில் உள்ளவன். தன் உறவினர்களுக்கு இனியனாக இருப்பான். கலகம் உண்டாக்கும் செயலில் மனத்தைச் செலுத்தாதவன். காரியங்கள் செய்வதில் சாமர்த்திய முடையவன். அலைகளை யுடைய திருப்பாற் கடலில் ஆதிசேடன் மீது யோக நித்திரை செய்பவராகிய மஹாவிஷ்ணு மீது பக்தி கொள்ளு வான். அற்பக் குணம் உடையோர் சிலரால் பழியை ஏற்பான். புண்ணி யத் தீர்த்தங்களில் நீராடுவான். புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரையா கச் செல்லுவான். சில சந்தேகங்களைத் துணிவாகத் தீர்ப்பான்.

## ஜாதகனின் இயல்பு

11. சொன்னவிக் குணத்தா னுக்குச் சுந்தர னுதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் [மாஞ்சி வப்பன்
பின்னமில் லாத தேகன் பிறர்குற்றம் சொல்லா னாகும்
பன்னியே பேச வல்லன் பரிந்துப சாரம் செய்வன்.

11. சொல்லப்பட்ட இவ்விதக் குணங்களை யுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனாகத் தோன்றுவான். அவன் இயல்புகளைக் கூறுகின்றேன் நல்ல அழகுள்ளவன். கருமை கலந்து சிவந்த நிறம் பொருந்திய மேனி யுடையவன். அவயவங்கள் ஊனங்கள் எவையுமில்லாத உடலமைப்புப் பெற்றவன். அயலார் குற்றங்களை எடுத்துக் கூற மாட்டான். இடை விடாது தொடர்ந்து பேசிக் கொண்டே இருத்தலில் வல்லவன். வீட்டுக்கு வந்தவர்களை அன்புடன் உபசரிப்பான்.

## இதுவுமது

12. கல்விமான் கடவுள் பத்தி கனராசர் பேட்டி கொள்வன்
நல்லவன் நல்ல வர்க்கு நற்சக டுகளு முள்ளான்
எல்லைக ளதிகம் சேர்ப்பன் இடர்செய்யான் யாவ ருக்கும்
வல்லியர் மோக வானும் மாடுகள் விருத்தி யுள்ளான்.

12. சிறந்த கல்வியறிவுடையவன். கடவுள் மீது பக்தி கொண்டவன் பெரிய அரசர்களைப் பேட்டி காண்பான். தன்னிடம் நல்ல முறையில் பழகு பவர்களுக்கு இவனும் நல்லவனாக இருப்பான். நல்ல வண்டிகள் முத லான வாகன வசதிகள் கொண்டவன். விளைநிலங்கள் அதிகமாகச் சேர்ப் பான். எவருக்கும் தீங்கு செய்ய மாட்டான். பெண்களிடம் மையல் கொள் ளுபவன். கால் நடைச் செல்வங்களைப் பெருக்குவான்.

## இதுவுமது

13. யோசனை பலவும் செய்வன் உறுதியில் லாத நெஞ்சம்
காசுகள் செலவு செய்வன் காலாட்கள் விருத்தி [யுள்ளான்

பேச்சினில் சோரா னாகும் பேதைய ருறவு கொள்வன்
வாசியோ கங்கள் செய்வ னறைகிறோம் துணைவர்
[தம்மை.

13. பலவிதமான யோசனைகள் செய்வான். திடமில்லாத மனத்தினன்; பணம் செலவு செய்ய மாட்டான்; ஏவலாட்கள் மிகுதியுடையவன். பேச்சுக்கள் பேசுவதில் தளர்ச்சி யடையாதவன் ஆவான். பெண்கள் தொடர்பு கொள்ளுவான். வாசியோகம் உள்ளவன். (வாயுஸ்தம்பனம் செய்பவன்.) இவனுடன் பிறந்தவர்கள் பற்றிச் சொல்லுகிறோம்.

## ஜாதகனின் உடன்பிறந்தோர் செய்தி

14. தன்துணை யறுவர் தோன்றும் தங்காது சிலவே
]யென்றோம்
முன்துணை சேத மெய்தும் மொழிகிறோ மாண்பா
[லொன்று
கன்னிகை யவ்வா றுகும் கழறின விரண்டும் தீர்க்கம்
பின்துணை ஆண்பால் சேதி பேசுவோம் தாயே யாங்கள்.

14. இவனுக்கு அறுவர் உடன் பிறப்பாகத் தோன்றுவர். அவர்களில் சிலர் நிலையார் என்று சொன்னோம்...இவனுக்கு முன்னால் தோன்றிய சகோதரன் மரண மடைவான். பின் பிறந்த ஆடவன் ஒருவனும் பெண்ணொருத்தியும் உண்டு என்று சொல்லுகிறோம். கூறப்பட்ட அவ்விருவரும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர். இவனுடைய இளைய சகோதரன் செய்திகளை, தாயே! நாங்கள் இனிமேல் கூறுவோம்.

15. மனவர்ம முடைய னவன் மறித்த வார்த்தைகளும்
[கூறும்
தனயன்சொல் தடுப்பா னாகும் தரணியும் கிருஷி
[செய்வன்
வினையுள மனத்த னாகும் விளம்புவான் கட்டு வார்த்தை
சினமுள னெதிரிக் கஞ்சான் தீரமா மனத்த னாமே.

15. மனத்தில் வர்ம முடையவன் ஆவன். பிறர் கூறும் சொற்களை இடைமறித்துப் பேசுவான். தனது புத்திரன் சொல்லுவனவற்றைத் தடுத்துப் பேசுவான். நிலபுலங்களில் விவசாயம் செய்வான். கெட்ட எண்ண முள்ள மனத்தினன். சொற்களைக் கட்டிச் சொல்லுவான். கோபங் கொள்ளும் இயல்புடையவன். தன் பகைவர்கட்கும் பயப்படாதவன். துணிவுள்ள மனத்தினன் ஆவான்.

## ஜாதகருடைய புத்திரபாவம்

16. பாரியு மொன்றே யாகும் பாலர்கள் ஆண்பா லொன்று
தீரமாய்ப் பெண்பால் மூன்று செப்புவோம் தீர்க்க மாகப்

பாரினில் வறுமை காணுன் பகைத்தோரை நாசம்
[செய்வன்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

16. இவனுக்கு மனைவி ஒருத்தியே யாவாள். இவனுக்கு ஆண் குழந்தை யொன்றும் பெண் குழந்தைகள் மூன்றும் தோன்றும். இக்குழந்தைகள் தீர்க்க முடையனவாய் விளங்கும். உலகினில் தரித்திரத்தையே அறியாதவன். தன்னிடம் விரோதங் கொண்டவரை அழித்து விடுவான். ஆறு திருமுகங்களை யுடைய முருகக் கடவுளைப் புதல்வராகப் பெற்ற பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகன் சகோதரியின் இயல்புகள்

17. கன்னிகை சேதி சொல்வேன் கணவனுக் கினிய ளாகும்
பொன்பணி யதிக முள்ளாள் புண்ணிய மனத்த ளாகும்
அன்னியர்க் குதவி செய்வள் அவனியில் வறுமை
[காணுள்
தன்வரன் மேல்பா லாகும் சங்கரி கேட்டி டாயே.

17. ஜாதகன் சகோதரியின் செய்திகளைப் பற்றி இனிக் கூறுவேன். தன் கணவனுக்கு இனியவளாக இருப்பாள். பொன்னுபரணங்கள் மிகுதியாகப் பெற்றவள். கருணை நிரம்பிய மனத்தினள். அயலவருக்கு உபகாரங்கள் செய்வாள். உலகில் தரித்திரத்தை யறியாதவள். இவள் கணவன் மேற்குத் திசையிலிருந்து வந்தவன், சிவபெருமான் தேவியாகிய பார்வதி தேவியே! மேலுங் கேட்பாயாக.

## சகோதரியின் புத்திரபாவம்

18. சுதர்களும் ஆண்பா லிரண்டு தோகையு மவ்வாறு
[தீர்க்கம்
இதுநான்கும் தீர்க்க மெய்தும் இவளுக்கு வயது தீர்க்க
மதிபன்தன் மணத்தின் கால மறைகிறே மீரொன்
[பானில்
சதியிலாக் குடகு திக்கில் சாருவா ளன்னை வர்க்கம்

18. இரண்டு ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் இவளுக்குத் தோன்றித் தீர்க்க ஆயுளுடன் விளங்கும். இனி, ஜாதகன் திருமணக் காலத்தைப் பற்றிக் கூறுகிறேம். இவனுடைய பதினெட்டாம் வயதில் மேற்குத் திசையிலிருந்து மனைவி வந்து சேருவாள். அவள் ஜாதகனுடைய தாயார் வழியைச் சார்ந்தவள்.

## ஜாதகன் மனைவியின் இயல்புகள்

19. புத்திமான் பொறுமை சாலி பந்துவை யாத ரிப்பள்
குத்தமில் லாதா ளாகும் குணமது நல்ல தாகும்

வித்தகி யோக காலி வீண்வம்பு புசலா ளாகும்
நத்தினோர்க் குதவி செய்வள் நாயகி மேலும் கேளே.

19. புத்திசாலி பொறுமைக் குணமுள்ளவள். உறவினர்களை ஆதரிப்பாள். குற்றமில்லாதவளாவள். இவள் குணம் நல்லதாக இருக்கும், இவள் அதிர்ஷ்ட முள்ளவள். பயனற்ற வம்புச் சொற்களைப்:பேசாதவள். துன்பப் பட்டவர்களுக்கு உதவிகள் செய்வாள். ;தலைவியே! மேலுங் கேட்பாயாக.

## இதுவுமது

20. வயதுமே தீர்க்க மெய்து மங்கையும் சிவந்த மேனி
ஐயமுனி யிவ்வாறு சொல்லச் செப்புவார் பிருகு தாமும்
வியமாகு முதல்ம னைதான் விளங்கிடு மிரண்டா மாது
பயமிலாச் சொன்ன சங்கை பகருவீர் முனியே நீதாம்.

20. இவள் தீர்க்காயுளுள்ளவளாக இருப்பாள். சிவந்த உடலுடையவள் இவ்வாறு ஐயமுனிவர் கூறிவர். பிருகு என்பவர் இடைமறித்து ஒன்று கேட்கின்றார். இந்த ஜாதகனுக்கு முதல் மனைவி இறந்து விடுவாள், இரண்டாம் மனைவி வந்து தீர்க்க ஆயுளுடன் விளங்கு வாள். பிருகு முனிவரை நோக்கிப் பார்வதிதேவி கேட்கின்றாள்; காரணத்தை விவரியுங்கள், முனிவரே! தாங்கள்.

## இருதாரம் கிரகநிலை

21. சத்தமத் தோன்ச ரத்தில் சார்ந்திடக் குடும்போன் நீச்சம்
பெத்ததால் தாரமி ரண்டு பேசினே மிவனுக் கேதான்
இத்தகை முனிவர் கூற இயம்புவா ரத்திரி தாமும்
சுத்தமா யேழோ னுச்சம் சுரர்குரு வேழைப் பார்க்க.

21. ஏழாம் வீட்டுக்கு உடையவனாகிய குரு சரத்தில் (கடகத்தில்) சார்ந்திருப்பதாலும், குடும்பஸ்தானத்துக்கு உரியவனாகிய சுக்கிரன் நீச்சமாகி கன்னியிலிருப்பதாலும் இந்த ஜாதகனுக்கு மனைவியர் இருவர் என்று சொன்னோம். இவ்வாறு பிருகு முனிவர் கூறவே, அத்திரி என்பவர் இதனை மறுத்துச் சொல்லுகிறார். நிச்சயமாய் ஏழாம் வீட்டுக்குடையவனாகிய குரு கடகத்தில் உச்சமாயும், ஏழாமிடத்தைப் பார்ப்பதாலும், (ஏழாமிடம்—களத்திரஸ்தானம்)

22. பாரியு மொன்றே தீர்க்கம் பகருவோம் வர்க்கி லேதான்
கூறுவோம் விந்து வொன்று குறையிலா திருப்ப தாலே
நாரிக்கு வயது தீர்க்கம் நாயகன் முன்னே மாள்வள்
தேறினோர் தம்மைக் காக்கும் தேவியே கேட்டி டாயே,

22. இந்த ஜாதகனுக்கு மனைவி ஒருத்தியே தீர்க்க ஆயுளுடன் விளங்குவாள் என்று சொல்லுவோம். அதுவுமன்றி அஷ்டவர்க்கத்தில் பரல் ஒன்றும் (விந்து ஒன்றும்) குறைவில்லாமல் நிறைந்திருப்பதாலும் மனைவி வயது தீர்க்க முடையவள் என்று சொல்வோம். ஆனால், இவள் தன் நாயகனுக்கு முன்னமேயே மரண மடைவாள். தெளிந்த ஞான முடைய பெரியோர்களைக் காக்கும் தேவியே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகருடைய சகோதரபாவம்

23. புத்திர ரிருநான் காகப் பெறுவனும் சிலவே தோஷம்
சுத்தமா யாண்பா லொன்று தோகையு மிரண்டு
[வென்றோம்
வித்தகன் தனக்கு மேலாய் விளம்புவோம் யோகம்
[தானும்
அத்தியைப் பெற்ற தாயே அறைகிறோம் பின்பால் சேதி

23. குழந்தைகள் எண்மரை யடைவான். அவற்றில் சில நஷ்ட மடையும். நிச்சயமாய் தீர்க்க ஆயுளுடன் விளங்குவன ஓர் ஆண் குழந்தையும் பெண் குழந்தை இரண்டும் என்று சொன்னோம். அக் குழந்தைகள் ஜாதகனுக்கு மேலான யோகங்களைப் பெற்று வாழ்வார்கள் என்று சொன்னோம். யானை முகக் கடவுளைப் புதல்வராக அடைந்த தாயே! அவர்களைப் பற்றிய செய்திகளைப் பின்பாகத்தில் சொல்லுகின்றோம்.

## ஜாதனுடைய தாயின் இயல்புகள்

24. அன்னையின் குணத்தைச் சொல்வே னன்புள மனத்த
[ளாகும்
முன்னமே கோபம் கொஞ்சம் மேவிப்பின் சாந்த முண்டு
சொன்னசொல் சுகமே யாகும் துறவோர்க்கு அன்ன
[மீவள்
இன்னவள் யோக சாலி இல்லமும் குடகு வென்றோம்.

24. இனி, ஜாதகன் தாயின் செய்திகளைச் சொல்லுகின்றோம். யாரிடமும் அன்பு கொண்ட மனத்தினள். முன் கோபம் சிறிதுடையவள். ஆனால் சிறிது நேரமே அக்கோபம் இருந்து, உடனே சாந்த மடையும் இயல்பினள். இவள் கூறும் சொற்கள் நலமுள்ளனவாம். உலகப் பற்றைத் துறந்த சந்நியாசிகட்கு உணவு அளித்து உபசாரம் செய்வாள். இவள் சிறந்த யோகங்களைப் பெறுவாள். இவளுக்குத் தாய் வீடு மேற்குத் திசையில் உள்ளது என்று கூறினோம்.

## தாயின் சகோதரபாவம்

25. அவள்துணை யாண்பால் மூன்று அழகிய கன்னி
[யொன்று
நவனியில் தீர்க்க மெய்தும் நசித்திடு மற்ற வெல்லாம்
இவள்பூர்வம் சொல்லக் கேண்மோ வெழில்பட்சி தன்னி
[லேதான்
பவமிலாக் கங்கை சேயாய்ப் பிறந்தன ளென்று
[சொல்வோம்.

25. தாயுடன் பிறந்தவர்களில் ஆண்கள் மூவரும், அழகிய பெண்ணொருத்தியும் ஆவர். இவர்கள் உலகில் தீர்க்க ஆயுளைப் பெறுவர். மேலும் தோன்றும் துணைவர்கள் நஷ்டமாவர். இனி, தாயின் முற்பிறவி பற்றிக் கூறக் கேளுங்கள். அழகிய திருக்கழுக்குன்றத்தில், குற்றமில்லாத வேளாண் மரபினளாய்த் தோன்றினள் என்று கூறுவோம்.

## தாயின் முற்பிறவி

26. சுதனுண்டாய் வரனு முண்டாய்த் தொல்புவி நல்லோ
[ளாகிப்
பதியினில் வறுமை யின்றிப் பறந்தனள் கால நாடு
விதியவன் வரையப் பட்டு விளங்கினு ளிரட்டி வர்க்கம்
பதியினில் வறுமை காணுள் பகருவோ மிவள்பின்
[ஜன்மம்.

26. கணவன் மக்கள் ஆகியோரை அடைந்து, உலகில் நல்லவள் என்ற பெயரெடுத்து, தரித்திரமில்லாமல் வாழ்ந்து மரணமுற்றாள். மீண்டும் பிரமனால் படைக்கப்பட்டு இப்பிறப்பில் இரட்டியார் மரபில் பிறந்தனள். தன் வாழ்க்கையில் தரித்திரத்தை அறியாதவள். இவள் மறுபிறவியைச் சொல்லுவோம்.

## தாயின் மறுபிறவி

27. அப்புவின் தலத்துக் கீழ்ப்பால் அணுகிய சிறுவூர் தன்னில்
மைப்படி மாது தானும் வருவளாம் வைசியச் சேயாய்
ஒப்புடன் சுகமாய் வாழ்வ ளுரைக்கிறோம் தந்தை
[பூர்வம்
மைப்புடன் தில்லை தன்னில் விளங்கினன் வைசியச்
[சேயாய்.

27. திருவானைக்கா என்ற தலத்துக்குக் கிழக்கில் உள்ளதாகிய ஒரு சிற்றூரில் வைசிய குலத்தவளாக இவள் தோன்றுவாள். சௌக்கியமாக

வாழ்ந்திருப்பாள். இனிமேல், ஜாதகனின் தந்தையின் முற்பிறவி பற்றிச் சொல்லுகிறோம். அவன் சிதம்பரத்தில் வைசிய குலத்தவனாகப் பிறந்தான்.

## தந்தையின் முற்பிறவி

28. பலவிதச் செட்டுச் செய்து பரவுப காரி யாயும்
நலமுளோர் பக்தி கொண்டு நாட்டினில் பவமில் லாமல்
குலவினன் காலன் பக்கல் குறைதலை வரையப் பட்டு
நிலைமையா யிக்கு லத்தில் நேர்ந்தன னிவனே
[யென்றோம்.

28. பலவிதமான தொழில்களைச் செய்து கொண்டு, பிறருக்கு உபகாரங்கள் செய்பவனாகியும், நற்குணமுடைய பெரியோரிடம் புக்தி கொண்டவனாகியும், தீவினை யெவையுமில்லாமலு மிருந்து மரணமடைந்தான். மீண்டும், ஐந்து முகங்களில் ஒன்று குறைக்கப்பட்டவராகிய பிரமதேவனால் படைக்கப் பட்டு, இப்பிறவியில் இக்குலத்தவனாகப் பிறந்தான் இந்த ஜாதகனின் தந்தையென்று சொன்னோம்.

## தந்தையின் மறுபிறவி

29. மறுஜன்மம் காஞ்சி தன்னில் மறைக்குல முதிப்பா னாகும்
குறுமுனி புகலு கின்றார் குமரனு மிச்சென் மத்தில்
அறைந்தபுண் ணியங்க ளென்ன அறைகுவீர் விபர
[மாகத்
திருமக னிச்சென் மத்தில் சிந்தையு மறத்தி லிச்சை;

29. மறுபிறப்பு (தந்தை) காஞ்சீபுரத்தில் வேதங்களோதும் அந்தணர் மரபில் தோன்றுவான். இங்ஙனம் முனிவர் கூறிக் கொண்டுவர, அகத்திய முனிவர் இடைமறித்துக் கூறுகின்றார். இவன் (ஜாதகனின் தகப்பனார்) இப்பிறப்பில் செய்த நல்வினைகள் யாவை? எங்ஙனம் மறுபிறப்பில் அந்தணர் குலத்தில் தோன்றுவான்? அவற்றை விவரமாகக் கூறுங்கள் என, முனிவர் சொல்லுவார். இவன் இப்பிறப்பில் தன் மனத்தில் தருமம் செய்வதில் ஆசையுடையவனாகவும்;

## தந்தை செய்த நற்செயல்களின் பயன்

30. சகலர்க்கு நல்லோ னாயும் சான்றோர்மேல் பக்தி யாயும்
இகபரன் பக்தி பூண்டு மிவனுமே வாழ்வ தாலே
தகமையாய் மறுபி றப்புச் சதுர்வேத குலமு திப்பான்
மிகுதவம் புரியு மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

30. எல்லோருக்கும் நல்லவனாகவும் பெரியோர்களிடம் மரியாதையும் பக்தியும் கொண்டவனாகவும், கடவுள் பக்தி யுடையவனாயும் வாழ்ந்திருப்பதால், தகுதியாக மறுபிறப்பில் நான்கு வேதங்களையுமுணர்ந்த அந்தணர் மரபில் தோன்றுவான். உலகில் தோன்றி மிக்க தவங்களை இயற்றும் எங்கள் தாயே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனின் முற்பிறவி

31. *பாலகன் பூர்வம் சொல்வேன் பாண்டியில் மறவ னாகச்*
*சாலவே வுதித்து வின்னேன் தரணியில் ஜீவித் தேதான்*
*ஏலவே பவமில் லாமல் அதிதிகட் கன்ன மீந்து*
*காலன்தன் நாடு புக்கு கனமுள பிரமன் லக்கம்;*

31. ஜாதகனின் முற்பிறவி பற்றிச் சொல்லுவேன். புதுச்சேரியில் (பாண்டிய நாட்டில்) மறவர் மரபினனாகப் பிறந்து, பூமியில் நல்ல முறையில் வாழ்ந்து, தீவினை எவையுமில்லாமல், வீடு தேடி வந்த விருந்தினர்களுக்கு உணவு அளித்து, மரண மடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டு;

## ஜாதகனுடைய யோகங்கள்

32. *வந்தவ னிவனே யென்றோ மறைகிறோம் யோகச் சேதி*
*தன்தன முடைய னாகும் சல்லியம் கொள்ளா னென்றோம்*
*சந்ததம் பூமி விருத்தி தந்தைக்கு மேலாய் வாழ்வன்*
*முந்திநாள் பொருள்கள் காணா னுயர்வான குடும்பி*
*[யாவன்.*

32. இப்பிறவியில் இக்குலத்தினனாகத் தோன்றியவனே இந்த ஜாதகன் என்று சொன்னோம். இவனுடைய யோகங்களைப் பற்றிக் கூறுகிறோம். தன் சொந்த சம்பாத்தியத்தால் சேர்த்த சொத்துக்களுடையவன். பணம் கடன் வாங்க மாட்டான். எப்பொழுதும் நிலபுலங்களைப் பெருக்குவதில் கருத்தைச் செலுத்துவான். தன் தந்தையை விட மேன்மையாக வாழ்வான், முன்னோர் காலத்திய பொருள்கள் எவையுமில்லாதவன். உயர்ந்த குடும்ப முடையவன்.

## இதுவுமது

33. *இல்லமும் புதிதாய்ச் செய்வன் ஈரஞ்சு ஆண்டு மேலாய்*
*நல்லவர் பலர்க ளாலே நாட்டினில் புகழு மேற்பன்*
*அல்லல்க ளடையா னாகும் அரசர்கள் மெச்ச வாழ்வன்*
*எல்லைகள் மூன்று ஊரில் எய்திடு மிவனுக் கென்றோம்.*

33. புதிய வீடு கட்டுவான், சம்பாதிக்கத் தொடங்கி பத்து ஆண்டு களுக்கு மேல் நல்ல குணமுடையவர் பலரால் உலகில் சிறந்த கீர்த்தியை யடைவான். துன்பங்கள் எவையும் அடைய மாட்டான். அரசர்கள் பாராட்டும்படி வாழ்வான். மூன்று கிராமங்களில் இவனுக்கு நிலபுலங்கள் கிடைக்கும், என்று சொன்னோம்.

## இதுவுமது

34. பொன்னது கொடுக்கல் வாங்கல் பிதிருநாளின் பூமி
[கொஞ்சம்
இன்னவ னதிகம் சேர்ப்பன் இயல்பான குடும்பி யாவன்
அன்னவன் பூமி வீடு ஆபர ணங்க ளெல்லாம்
சொன்னவா றுயி ரம்பொன் சுதனுமே அடைவா னுமே.

34. பணம் கொடுக்கல் வாங்கல் தொழில் செய்வான். தந்தை நாள் நிலம் சிறிதே யுண்டு. இவன் சொந்த முயற்சியால் நிலபுலங்கள் மிகுதி யாகச் சேர்ப்பான். தகுதியான குடும்ப முடையவனுவான். இவன் நிலபுலம், வீடு, ஆபரணங்கள் இவையெல்லாம் சேர்ந்து ஆறுயிரம் பொன் மதிப்புள்ள சொத்தை அடைபவன்.

## தந்தையின் மரணகாலம்

35. முப்பது நாலு ஆண்டில் மிதுன[1]மா தத்தி லேதான்
செப்புவோம் தந்தை கண்டம் சேடன்தன் தசைக்கா
[லத்தில்
ஒப்புடன் கேது புக்தி உலவிடு மந்தக் காலம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுவே.

35. ஜாதகனின் முப்பத்து நான்காம் வயதில் ஆனி மாதம் அவனுடைய தந்தைக்கு மரண மேற்படும் என்று சொல்லுவோம். இராகு தசையில் கேது புக்தி அப்பொழுது நடைபெறும் என்று கூறுவோம். கங்கை நதியைச் சடை முடியில் தரித்துள்ள சிவபெருமானின் தேவியே ! நாங்கள் கூறிய சொற்கள் தவறு.

## தாயின் மரணகாலமும் ஜாதகன் வயதும்

36. ஆறுறு மூன்று வாண்டில் ஐப்பசி மாதம் தன்னில்
கூறுவோ மன்னை கண்டம் குலவிடு மதியின் புக்தி
தீரமாய் ஜாத கர்க்குச் செப்புவோ மறுப தாண்டில்
பாரினில் தனுசு[2] மாதம் பகருவோம் கண்டம் தானே.

---
1. ஆனி
2. மார்கழி

36. ஜாதகனின் முப்பத்தொன்பதாம் வயதில் ஐப்பசி மாதத்தில் தாய்க்கு மரணம் ஏற்படும் என்று கூறுவோம். அப்பொழுது ஜாதகனுக்கு இராகு தசையில் சந்திர புக்தி நடைபெறும். ஜாதகனுக்கு அறுபதாம் வயதில் மார்கழி மாதம் நிச்சயமாய் மரணம் உண்டாகும் என்று சொல்லுவோம்.

## ஜாதகனுடைய மறுபிறவி

37. மறுஜன்மம் ஓதூர் தன்னில் மாரனும் சைவச் சேயாய்
உறைகுவான் அரசர் மூலம் உத்தமன் ஜீவிப் பானும்
பெருமையாய்க் குடும்பி யாவன் புகன்றது தப்பா தாகும்
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேண்மோ.

37. ஜாதகன் மறுப்பிறப்பில் திருவோத்தூர் என்ற தலத்தில் சைவ மரபினனுகப் பிறப்பான். அரசாங்க உத்தியோகத்தால் ஜீவனம் செய்வான், மேன்மையுள்ள குடும்ப முடையவனுவான். நாங்கள் கூறியன தவறு. அரிய வேதாந்தத்தின் உச்சியில் நடமாடும் பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

38. அரவுமே ஆறில் நிற்க அப்பல னெவ்வாறு சொல்வீர்
வரும்பகை வழக்க நேகம் வெல்லுவா னிந்தப் பாலன்
உரைக்கிருே மெட்டாண் டின்மேல் உயர்வாகும் செல்வம் [த்தானும்
குறைவிலா வாழ்வா னுகும் குலவிடு மாது தானே.

38. இராகு இலக்கினத்துக்கு ஆறும் இடத்தில் இருக்க, ஜாதகனுக்கு யோகங்கள் ஏற்படும் என்று எங்ஙனம் கூறுவீர்? என்று பார்வதி தேவி கேட்டனள். அநேக வழக்குகளும் விரோதமும் ஏற்படும், ஆனுல் அவைகளில் இவன் வெற்றி பெருவான். உத்தியோகம் செய்யத் தொடங்கி எட்டு ஆண்டு களுக்கு மேல் செல்வம் உயரும். குறை யெவையுமில்லாமல் வாழ்க்கை நடத்துவான். மனைவி வாய்ப்பாள்.

## ஜனன கால தசை

39. பாலகன் ஜனிக்கும் காலே பரிதியின் தசையி ருப்பு
சாலவெ ஆண்டு ஐந்தும் சார்ந்திடும் திங்க ளெட்டும்
பாலகன் தனக்கு ரோகம் பிறந்திடும் துணைவர் தானே
ஏலவே சுபங்கள கூடும் ஈசவரி கேட்டி டாயே:

39. ஜாதகன் ஜனன காலத்தில் சூரிய மஹா தசையில் இருப்பு, ஐந்து வருஷங்களும் மாதங்கள் எட்டுமாம், இக்காலத்தில், ஜாதகனுக்கு வியாதிகள் ஏற்படும், துணைவர் உண்டாவர். குடும்பத்தில் சுப நிகழ்ச்சிகளும் நடைபெறும். பரமேசுவரியே! கேட்பாயாக.

## ஜனனகாலத் தசையிருப்பு

40. தந்தைக்கு பிணிய லேச்சல் சஞ்சல மனமு மெய்தும்
தந்தனம் செலவு முண்டு தாய்வழி விரோதம் சூதம்
பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபர மாக
இந்திர னிறைஞ்சு மாதே இயம்பின மொழிகுன் றுவே.

40. தந்தைக்கு (ஜாதகனின்) நோய், ஜாதகனுக்கு அலேச்சல், மனச் சஞ்சலங்கள் முதலியன ஏற்படும். சொந்தப் பணச். செலவும் உண்டு. தன் தாய் வர்க்கத்தாரிடம் இவனுக்குப் பகை ஏற்படும். தாய் வழியில் அசுபச் செயல்களும் நடைபெறும். பிற்பாகத்தில் மேலும் பலவற்றை விவர மாகக் கூறுவோம். தேவேந்திரன் வணங்கித் தோத்திரம் செய்யும் பார்வதி யம்மையே! நாங்கள் கூறியன தவறு.

---

# ஜாதகம் 83

## ஜனனகால கிரகநிலை

1. மதி[1]குசன் [2]கோலி லாக [3]மறைபுதன் [4]இரவி கன்னி
நிதி[5]புகர் [6]சீய மாக [7]ஞானியும் [8]வண்டி புக்க
[9]விதி[10]தேளில் ராகு [11]மானில் விளங்கிய கன்னி ஜன்மம்
இதுவிதக் [12]கோளும் நின்ரு லியம்புவீர் பலனைத்
[தானே.

1. சந்திரன், அங்காரகன் துலாத்திலும், குரு, புதன் சூரியன் கன்னியிலும், சுக்கிரன் சிம்மத்திலும் கேது கடகத்திலும், சனி விருச்சிகத்திலும். ராகு மகரத்திலும், பிறந்த இலக்கினம் கன்னியுமாக இருந்து மேற்கூறிய நவக்கிரக நிலையிருப்பின் பலனைச் சொல்லுங்கள் என்று;

*கிரகநிலை*

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசி சக்கரம் | | கேது |
| ராகு | | | சுக்கிரன் |
| | சனி | சந்திரன் அங்காரகன் | லக்கினம் குரு புதன் சூரியன் |

## ஜாதகன் பிறந்த வீட்டின் அடையாளம்

2. காதலி கேட்டும் போது கழறுவார் பராசர் தாமும்
மேதினி லாண்பால் ஜன்மம் விளம்புமில் கீழ்மேல் வீதி

---

1. அங்காரகன்
2. துலாம்
3. குரு
4. சூரியன்
5. சுக்கிரன்
6. சிம்மம்
7. கேது
8. கடகம்
9. சனி
10. விருச்சிகம்
11. மகரம்
12. நவக்கிரகம்

கோதிலாத் தென்பால் வாசல் கோவலன் நகர மாகும்
தீதிலா அனுமான் மேற்கில் தந்தியும் மருகில் தங்கும்.

2. என்று பார்வதிதேவி கேட்கும் போது, பராசர முனிவர் கூறுகின்றார். இஃது ஓர் ஆண் மகனுடைய ஜாதகம். அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்குப் பக்கம் நோக்கிய வாயிலை யுடையது. அவ்வூர் முன்பு கோவலன் வாழ்ந்து வந்த மதுரை நகரமாகும். மேற்குப் பக்கத்தில் தீங்குகளில்லாத ஆஞ்சநேயர் கோவிலும், சமீபத்தில் விநாயகர் ஆலய மொன்றும் உண்டு.

## ஜாதகருடைய குலம்

3. இன்னமும் பலதே வாசம் இலகிய சோலை யுண்டு
பொன்னக ரொப்ப தாகும் புகலுமிவ் வடையா ளத்துள்
அன்னவன்தீயின் வமிசம் அணுகிய மூன்றும் சென்மம்
தன்னிலே யுதிப்பா னாகும் சாற்றுவோம் குடும்பச் சேதி.

3. இன்னும் பல தெய்வங்கள் வசித்து வரும். அழகிய தோட்டம் ஒன்றும் உளது, குபேரனுடைய அளகாபுரியைப் போன்று, செல்வப் பெருக்குள்ள ஊரில் ஜாதகன் வன்னிய குலத்தவனாக பிறந்தவன். அவன், தன் தந்தைக்கு மூன்றும் குழந்தையாகத் தோன்றியவன். இனி, அவனுடைய குடும்பச் செய்தி விவரங்களைக் கூறுகின்றோம்.

## தந்தையின் உடன்பிறந்தவர்

4. தந்தையின் துணைவ ரேழில் தங்காது யாவும் தானே
விந்தையாய்க் கன்னி யொன்று விளங்கிடுந் தீர்க்க மாக
அன்னவள் வறுமை காணாள் அவள்சுத ரிரண்டு
[தோன்றி
பின்னமாம் தனியாய் வாழ்வள் புகலுவா ரதித்தரி
[தாமும்

4. ஜாதகனுடைய தந்தையின் உடன் பிறந்தவர் எழுவரில் ஒரு சகோதரன் கூட நிலையில்லாதவன். அழகிய முகமுள்ள சகோதரி ஒருத்தி மட்டும் தீர்க்காயுள் உள்ளவள். அவள் தரித்திர தசை யடையாதவள். அவளுக்கு இரு குழந்தைகள் தோன்றி இறந்து விடும். அவளும் தனியாக வாழ்ந்து வருவாள். அத்திரி முனிவர் கூறுகின்றார்.

## தந்தையின் சகோதரிக்கு கருமம் செய்பவர்

5. அவளுக்கு உறுமம் செய்வோ ரறிவிப்பீர் முனியே
[நீர்தான்
இவள்வரன் தம்பி புத்திர னெய்துவா னென்று
[சொல்வேன்

பவமுடன் பின்பால் சேதி பகருவோம் தாயே யாங்கள்
நவனியில் தந்தை சேதி நாட்டுவோம் தீர்க்க மாக.

5. அவளுக்கு இறுதிக்கடன் செய்பவர் யார் என்று கூறுங்கள் முனிவரே! தாங்கள். அவளுடைய கணவனுடைய தம்பியின் புத்திரன் அவளுக்கு கருமங்கள் செய்வான். அவ்விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம் தாயே! இனி ஜாதகனுடைய தந்தையின் விவரங்களைப் பற்றி நன்றாக ஆராய்ந்து கூறுகின்றோம்.

## தந்தையின் செய்தி விவரம்

6. மாநிறம் சமதே கத்தன் மருமமில் லாதா னுகும்
தேன்மொழி யீகை யுண்டு செனஉப காரி யாகும்
தானமுந் தரும மிச்சை சற்சன ருறவு கொள்வன்
ஊனமில் லாத தேகி உரன்முறை மெச்ச வாழ்வன்.

6. ஜாதகனுடைய தந்தை மாநிற முள்ளவன். அதிக உயரமும் அதிக குள்ளமுமாக இல்லாத சமநிலையுள்ள சரீரத்தைப் பெற்றவன். எவ்விஷயங்களையும் இரகசியமாக வைத்திராதவன். இனிய சொற்களையே பேசுபவன். கொடுக்கும் குணமுள்ளவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்து வருபவன். தானதருமம் செய்வதில் விருப்பமுள்ளவன். நல்வினைகள் செய்யும் நல்லவரின் நட்புக் கொண்டவன். சரீரத்தில் யாதொரு குறையுமில்லாதவன். தன் பந்து ஜனங்கள் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான்.

## இதுவுமது

7. தானியச் செட்டுச் செய்வன் தரணிகள் சேர்ப்பா னுகும்
மானஙை யார்கள் நேசன் வாதநோ யுடைய னுகும்
ஊணது சுகமே யெய்தும் உறுதியில் லாத நெஞ்சம்
பான்மையாய்ப் பேச வல்லன் பலசெட்டுச் செய்வா
[னுகும்.

7. தானிய வியாபாரம் செய்து வருவான். விளைநிலங்களைச் சேர்ப்பான். மனைவிக்குப் பிரியமானவன். வாயு ரோக முடைய சரீர முள்ளவன். சௌக்கியமாக இருந்து சாப்பிடுவதில் இஷ்டமுள்ளவன். திடமில்லாத மனமுடையவன். பொருத்தமாகப் பேசுவதில் தேர்ந்தவன். பலவித்மான வர்த்தகத் தொழில் செய்து வருவான்.

## இதுவுமது

8. அறுமுகன் பத்தி கொள்வன் அவன்தந்தை யாஸ்தி
காணுன்
நறுமல ரிஷ்ட முண்டு நற்கரம் பதும ரேகை

விரைவினில் நடக்க வல்லன் வீண்பழி யேற்பானும்
குருவுப தேசம் கொள்ளான் கோதையும் பகையு மாவன்

8. ஆறுதிருமுகங்களை யுடைய முருகப் பெருமான் மீது பக்தி கொண்டவன். தன்னுடைய தந்தையின் ஆஸ்திகள் இல்லாதவன். நல்ல வாசனைப் புஷ்பங்களின் மீது பிரிய முடையவன். கையில் பத்ம ரேகை யுள்ளவன். வேகமாக நடக்கும் இயல்பினன். அனுவசியமான நிந்தைகள் சில ஏற்க நேரிடும். குருவிடம் உபதேசம் கொள்ளாதவன். மனைவியிடம் விரோதம் கொண்டவன்.

## வைப்பாட்டி வருதல்

9. அன்னிய மாது ஒன்று அணுகிடு மிவனுக் கேதான்
எந்தக்கா லத்தில் நேரும் இயம்புவீர் முனியே நீர்தாம்
வந்தவ னாறும் ஆண்டில் வருகுவா ளந்த மாது
தந்தனம் சிலவு முண்டாய் தையலும் சோர்வா
[ளென்றேம்

9; ஜாதகனுடைய (தந்தையின் மறுமனைவி) மனைவியல்லாது வேறு ஒரு ஸ்திரீ, இவன் பால் வந்து வசித்து வருவாள். (தந்தை வைப்பாட்டி வைத்திருப்பவன்) அது எந்தக் காலத்தில் நிகழும் சொல்லுங்கள் முனிவரே! தாங்கள் ஜாதகன் பிறந்து ஆறு வருடங்களில் அந்தப் பெண் தந்தையை வந்து சேருவாள். அதனால் தன்னால் சம்பாதிக்கப்பட்ட பொருள் செலவாகும் என்றேம். அவளும் இறந்து போவாள்.

## பொருள்கள் நஷ்டம்

10. தந்தையாயர்ச் சிதம்சே ராத சங்கையைச் சொல்லு
[மென்ன
விந்தையாய் புகர்வி யத்தில் மேவியும் சனியும் பார்க்கப்
பந்தமா யில்லம் விட்டு பரவுவான் வடகீழ் தன்னில்
முந்திசெய் வினையி னாலே மேவிற்று அந்தத் தோஷம்

10. ஜாதகனுடைய தந்தைக்குத் தன் தந்தையால் ஈட்டப்பட்ட பொருள் கிடைக்காததற்குக் காரணம் என்ன வென்று கூறுங்கள். சுக்கிரன் விரயஸ்தானத்தில் (பன்னிரண்டாமிடத்தில்) இருந்து சனி பார்ப்பதால் இவன் வீட்டை விட்டு வடகிழக்குத் திக்கில் சென்று வாழ்ந்து வருவான். அதுவும் தவிர முற்பிறவியில் செய்த தீவினையாலும் அந்தத் தோஷம் ஏற்பட்டது.

## ஜாதகருடைய குணங்கள்

11. அதுபலன் பின்பால் சொல்வேன் அறைகிறே மிவன்கு
[ணத்தைச்
சதியிலா மனத்த னாகும் சர்சனருறவு கொள்வன்

துதிசெய்தோர்க் கன்ப ஞகும் சொல்லது சுகமே எய்தும்
விதவிதக் கல்வி கற்பன் வித்தையால் பெருமை
[யேற்பன்

11. அந்த விவரத்தைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய குணத்தைச் சொல்லுகின்றோம். தீங்குகள் எண்ணுத மனத்தினன். நல்லவர்களின் உறவு கொண்டவன். தன்னைத் தோத்திரம் செய்து புகழ்ந்தவர்கட்குப் பிரியமானவன். இனிமையாகப் பேசும் இயல்பினன். விதவிதமாகக் கல்வி கற்றவன். தான் கற்றுணர்ந்த வித்தையினுல் பெருமையும் கீர்த்தியும் அடைவான்.

## இதுவுமது

12. அரசரால் தொழிலு மேற்பன் அதிகார முடைய ஞகும்
துரைராசர் பேட்டி கொள்வன் செயம்செய்வ னெடுத்த
[வேலே
குறையென்ருேர்க் குதவி செய்வன் குருஉப தேசம்
[பூண்பன்
மர்மமில் லாதாஞகும் மங்கையர் மோக வாஞம்.

12. அரசாங்கத்தில் தொழில் ஏற்றுப் பணி புரிவான். அதிகாரம் வகிப்பான். அரசரைப் பேட்டி காணும் வாய்ப்பு உள்ளவன். தான் எடுத்த வேலையைத் திறமையுடன் செய்து முடிக்கும் இயல்புள்ளவன். துன்பமடைந்துள்ளேம் என்று கூறி இவனைச் சரணடைந்தவர்கட்கு உபகாரம் செய்யும் மனத்தினன். தக்க ஆசானை அனுகி (மந்திர) உபதேசம் பெறுவான். இரகசிய மில்லாதவன். பெண்கள் மீது மையல் கொள்ளும் இயல்பினன்.

## சகோதரபாவம்

13. தன்துணை முன்ஞேன் காணுன் தங்கிடும் பின்வி
[ருத்தி
மன்னிய ஆண்பா லொன்று மருவிடும் கன்னி யவ்வாறு
இன்னவன் தீர்க்க மெய்து மிளையவன் சேதி கேளாய்
முன்கோப முடைய ஞகும் மொழியது இரண்டு முண்டு.

13. ஜாதகன் தனக்கு முன் பிறந்த சகோதரன் இல்லாதவன். அவனுக்குப் பின் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியும் நீண்ட ஆயுள் உள்ளவர் என்ருேம். இவர்கள் நீண்ட ஆயுள் உள்ளவர்கள் என்ருேம். இனி, ஜாதகனுடைய இளைய சகோதரனுடைய விவரங்களைக் கேட்பீராக. முன் கோபம் கொள்ளுபவன். பொய் மெய் இரண்டும் கலந்து இருவிதமாகப் பேசும் இயல்பினன்.

14. வித்தையில் புத்தி மானும் வேந்தர்க ளிஷ்டம் கொள்வன்
சுத்தவான் பெருமை யேற்பன் தொல்புவி சேர்ப்பா
[ஞகும்
நத்தினோர்க் குதவி செய்வன் நாற்காலி விருத்தி
[யுள்ளான்
சித்தினி சாதி யாவன் செட்டுக்கள் பலவாய்ச் செய்வன்.

14. நல்ல கல்வி யறிவுள்ளவன். புத்திமான். அரசர்களை இவன் பால் விருப்பம் கொள்ளுபவர்களாக இருக்கும் வகையில் இவன் நடந்து கொள்வான். சுத்தமும் சீலமும் உள்ளவன். பெருமை யுடையவன். விசேஷமான பூமிநிலங்களை வாங்கிச் சேர்ப்பவன். தன்னை யண்டி யாசித்தவர்கட்கு உபகாரம் செய்பவன். கால் நடைப் பெருக்க முள்ளவன். சித்தினி ஜாதியைச் சேர்ந்தவன். பலவிதமான வர்த்தகத் தொழில் புரிந்து வருபவன்.

## சகோதரனின் மனைவியின் இயல்புகள்

15. பாரியு மொன்றே யாகும் பாலர்க ளாண்பால் மூண்று
நாரியு மிரண்டு வென்றேம் நசித்திடும நான்கு தாமும்
வீரியன் சிலனுள் ஒன்றுய் மேவிப்பின் வேருய்ச்
[செல்வன்
கூறுவோம் பின்பால் சேதி கோதையே மேலும் கேளே.

15. ஜாதகனுடைய இளைய சகோதரனுக்கு மனைவி ஒருத்தியே யாவள். அவளுக்கு மூன்று ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் தோன்றி, தீர்க்க ஆயுளுடன் வாழ்ந்திருக்கும், நான்கு குழந்தைகள் இறந்துவிடும். இவன் ஜாதகனுடன் சின்ருட்கள் ஒன்ருக வாழ்ந்து, பிறகு தனியாகச் சென்று விடுவான். அவ்விஷயங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ருேம். அழகிய குழல் உடையவளே! மேலுங் கேட்பீராக.

## ஜாதகனின் குணம்

16. சல்லியம் கொள்ளா ஞகும் தன்பந்து புகழ வாழ்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் எதிரியை வசியம்
[கொள்வன்
சொல்லதைக் காப்பா ஞகும் துறவோர்க்கு அன்ன
[மீவன்
இல்லமும் இரண்டு சேர்ப்பன் ஈச்வரி கேட்டி டாயே.

16. கடன் படாதவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படியான வாழ்க்கையை நடத்தி வருவான். யாசித்தவருக்கு இல்லையென்று கூருதவன். விரோதிகளை வென்று அவர்களையும் தன்பால் இழுத்துக் கொள்ளும்

வசீகரம் உள்ளவன்; தான் சொன்ன சொற்களின்படி நடப்பவன். துறவி கட்கு அன்புடன் அன்னமளித்து வருபவன். இரு வீடுகள் கட்டுவான். தாயே! ஈசுவரனின் தேவியே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய திருமணக் காலம்

17. கன்னிகை சேதி தன்னைக் கழறுவோம் பின்பா கத்தில்
இன்னவன் மணத்தின் கால மியம்புவோ மீரொன் [பானில்
அன்னவள் தென்பால் நேரும்அவன்தந்தை வர்க்கம் [தன்னில்
தன்னிலே யவள்கு ணத்தைச் சாற்றுவோம் தாயே யாங்கள்

17. ஜாதகனுடன் பிறந்த சகோதரியின் விவரங்களைப் பிற்பாகத்தில் விரிவாகச் சொல்லுகின்றோம். இனி ஜாதகனுடைய திருமணக் காலத்தின் விவரங்களைக் கூறுகின்றோம். அவனுக்குத் தன் பதினெட்டாம் வயதில் திருமணம் நிகழும். மனைவி தெற்குப் பக்கத்திலிருந்து வாய்ப்பாள். தன் தந்தையின் வர்க்கத்தினரிடமிருந்து மனைவி வருவாள், இனி மனைவியின் இயல்புகளைப் பற்றிச் சொல்லுகிறோம்.

## மனைவியின் இயல்புகள்

18. புத்திமான் சிவந்த மேனி பொய்யது வழுத்தா ளாகும்
சுத்தமு முடைய ளாகும் தோகைபோல் சாய லுள்ளாள்
வித்தகி யோக சாலி வீண்வம்பு புகலா ளாகும்
பத்தினி நடக்கை நன்மை பால்பாக்கிய முடையளாகும்.

18. ஜாதகனுடைய மனைவி சிறந்த புத்திமான். சிவந்த நிறமுள்ளவள். பொய் பேசாதவள். சுத்தமும் சீலமும் உடையவள். மயிலைப் போன்ற சாயலுள்ளவள். அதிர்ஷ்ட முள்ளவள். அனுவசியமான வார்த்தைகளும் வெட்டிப் பேச்சும் இல்லாதவள். நன்னடத்தை யுள்ளவள். பால் பாக்கிய முள்ளவள்.

## இதுவுமது—புத்திரபாவம்

19. வரன்மனம் போலே வாழ்வள் விரதங்கள் பூண்பா [ளாகும்
திருமகள் தனக்குப் புத்திரர் ஜனிக்காரே ஜனிக்கில் [தீதாம்
வரும்சுதர் தோஷ மெவ்வா றறிவிப்பீர் சங்கை தன்னைக்
கரும்பாம்பு அஞ்சில் தங்க காரியு மவரைப் பார்க்க

19. தன் கணவன் மனத்துக்குத் தக்கபடி தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுவாள். விரதங்கள், நோன்புகள் இவைகளை ஏற்பாள். ஆனால் இவளுக்குப் புத்திர பாக்கியம் இல்லை என்று சொல்லுகின்றோம். ஒருக்கால் பிறக்கினும் அவை நிலையா. இவளுக்குத் தோன்றும் குழந்தைகளுக்கு தீங்கு உண்டாகும் என்று அறிவித்தீர்களே! முனிவரே! அதற்குத் தக்கபடி காரணத்தைச் சொல்லுங்கள். ராகு புத்திர ஸ்தானத்தில், ஐந்தாமிடத்தில், ஈண்டு மகரத்தில், இருந்து அவ்விடத்தை சனி பார்ப்பதால்;

## ஜாதகனுடைய முற்பிறவி

20. கதர்களும் தோஷ மெய்தும் சூழ்ந்தது முன்னூழ்
[தானும்
விதங்களைச் சொல்லு மென்ன விளம்புவோயி தாயே
[யாங்கள்
அதிதிகள் வாழுகின்ற அருணைக்குத் தென் பாலாக
நதிகுலம் தனிலு தித்து நாயகி மதலை யுண்டாய்

20. புத்திர தோஷம் ஏற்படும். இது நிற்க முற்பிறவித் தீவினையும் சேர்ந்தது. அதன் விவரங்களைக் கூறுங்கள் என, ரிஷிகள் சொல்லுகின்றனர். நாங்கள் உறைப்பதைக் கவனமாகக் கேளுங்கள் தாயே! எம்மைப் போன்ற முனிவர்கள் பலர் வாழ்ந்து வரும் திருவண்ணுமலைக்குத் தெற்கில் வேளாள குலத்தில் பிறந்து மனைவியை யடைந்து, புத்திர பாக்கியம் பெற்று;

21. பூமியும் பரிபா லித்துப் புகழுடன் வாழும் நாளில்
நேமியில் வந்த ஊழை நிகழ்த்துவோ மில்லம் தன்னில்
சேமமாய் வெகுநாளாகச் சேடனும் வாச மெய்தும்
தீமையாய் வெளியில் ஓர்நாள் செரிந்தது மகுடத் தாலே

21. விளைநிலங்களைச் சரியான முறையில் பராமரித்து வந்து கீர்த்தியுடன் வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைச் சொல்லுகின்றோம். இவனுடைய வீட்டில் வெகு நாட்களாக ஒரு சர்ப்பம் வாசம் செய்து வந்தது. அதனுடைய விரோதமான காலத்தினுல் அந்த சர்ப்பம் வீட்டிற்கு வெளியே வந்து படம் எடுத்து;

## ஸர்ப்பத்தை அடித்துக் கொன்ற தோஷம்

22. அரங்கமே செய்தும் போகா தடித்தனன் கழியி னுலே
மறலியின் பதிக்குச் செல்ல மருவிற்று அந்தத் தோஷம்
நெறியுள அகதி சாபம் நேர்ந்தது இவனுக்கே தான்
வரனின்றி மாதுபோகம் மருவியே கருவழித்தான்

22. ஆடிக் கொண்டிருந்தது. இவனும் அப்பாம்பு வெளியில் போகா வண்ணம் தடுத்து ஒரு தடியினுல் அடித்து விட்டான். அந்தப்

பாம்பு இறந்து விட்டது. அதனால் பாம்பைக் கொன்ற தோஷமும் இவனைச் சார்ந்தது. இது தவிர நல்லொழுக்கத்துடன் வாழ்ந்து வந்த பெரியோரிடம் இவன் தவறாக நடந்ததால் அவர் சாபமும் இவனைச் சார்ந்தது. இதுவும் தவிர வும் (திருமணமாகாத பெண்ணிடம்) கணவனை யிழந்த பெண் ஒருத்தியிடம் இவன் நட்புக் கொண்டு, சிற்றின்பம் அனுபவித்து வந்தான். அதனால் கருப்பம் ஏற்பட்டது. அதைக் கலைக்க மருந்துகள் பல கொடுத்து அக்கரு வையழித்தான்.

## தோஷம் நீங்கச் சாந்தி

23. இந்நதோர் தோஷத் தாலே இச்சென்மம் சுதர்கள்
[தோஷம்
வந்திடு வினைகள் தீர வரைகுவீர் கிரியை தானும்
வந்தவன் மனைவி யோடு மாயூரம் நதிக்குச் சென்றும்
அந்திடம் நதியின் ஒரம் ஆனையும் நாகம் நிற்கும்;

23. கருவழித்த தோஷத்தாலும் மற்ற தோஷங்களாலும் இப்பிறவியில் புத்திர தோஷம் ஏற்பட்டது. இவனை யடைந்த தீவினைகள் தீர ஏதாவது சாந்தி யொன்று கூறுங்கள், முனிவரே! ஜாதகன் தன் மனைவியுடன் மாயூரத்துக்கு அருகில் ஓடும் காவிரி நதிக்குச் சென்று (துலாஸ்நானம், ஐப்பசி மாதத்தின் இறுதியில் மாயூரத்தில் காவிரியில் நீராடுவது புனிதம் என்று வெகு நாட்களாக சொல்லப்பட்டு வருகிறது) நீராடி, அவ்விடத்தில் காவிரிக்கரையில் விநாயகர் சிலை யொன்றும் சர்ப்பச் சிலை யொன்றும் இருக்கும் இடத்தில்;

## சாந்தி விபரம்

24. வாரம்பிர தட்சி ணங்கள் மைந்துனு மனைவி செய்து
தீரமாய்க் கடை நாள் தன்னில் சேடன்போல
[ரஜதத்தாலே
பாரிய மறையோர்க் கீந்து பஞ்சைகட் கன்ன மீந்து
மாரனு முள்ளூர் மீண்டு மாதமோர் சஷ்டி நோன்பு;

24. ஒருவாரகாலம் தினந்தோறும் அச்சிலையை (அரச மரத்தின் கீழிருப்பதை) மனைவியுடன் சேர்ந்து இருவருமாக வலம் வந்து, கடைசி தினத்தன்று ஸர்ப்பத்துக்கு அபிஷேகம் அருச்சனை முதலியன செய்து வழி பட்டு, அந்தணருக்கும், பெரியோருக்கும் சந்தர்ப்பணம் செய்து, சர்ப்பத் தைப் போல் வெள்ளியில் ஓர் உரு செய்து, பக்தியுடன் அந்தணர் ஒரு வருக்குக் கொடுத்து, ஏழை எளியவர்கட்கு அன்னமளித்து, மீண்டும், ஊருக் குத் திரும்பி வந்து, மாதத்தில் ஒரு சஷ்டி தினமாவது விரதம்;

25. கொள்ளவும் வினைகள் போக்கிக் குழவிகள் தோன்று
[மென்றோம்
கள்ளமாய்ச் செய்யா ராகில் காளைகள் விருத்தி தோஷம்
சள்ளையை நிவிருத்தி செய்யில் செனித்திடு மாண்பா
[லொன்று
துள்ளிடும் பெண்பா விரண்டு தீர்க்கமா மென்று
சொல்வோம்.

25. இருப்பார்களாகில் முற்பிறவித் தீவினை நீங்கும். புத்திரபாக்கியம் ஏற்படும் என்றோம். தீய எண்ணங்களுடன் செய்யாமல் இருப்பானே யாகில் புத்திர தோஷம் திண்ணமாக உண்டு. தோஷத்தை விலக்கச் சாந்தி கள் செய்து வந்தால் ஒரு புத்திரனும் இரு புத்திரிகளும் தோன்றித் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர் என்று சொல்லுகின்றோம்.

## தாயின் இயல்புகள்

26. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாஞ்சிவப் புடைய
[ளாகும்
பாதக மனமில் லாதாள் பரிந்துப சாரம் செய்வள்
ஓதுமுன் கோபம் கொஞ்சம் உத்தமி துணைகள் காணாள்
மேதினி பெண்பால் மூன்று விளங்கிடு மென்று
சொல்வோம்.

26. இனி தாயின் குணத்தைச் சொல்லுகின்றோம். அவள் மாநிற முடையவள். தீய எண்ணங்களில்லாத மனத்தினள். விருந்தினருக்குப் பரிவுடன் உபசாரம் செய்து வருவாள். நாம் பேசுவதற்கு முன் கோபங் கொள்ளும் இயல்பினள். உடன் பிறந்த சகோதரரில்லாதவள். சகோதரி கள் மட்டும் முவர் உண்டு என்றும் அவர்கள் நீண்ட ஆயுளுள்ளவர் என்றும் கூறுவோம்.

## தாயின் முற்பிறவி

27. அவளுடைப் பூர்வம் சொல்வே னலங்கா டதற்குக்
[கீழ்ப்பால்
நவனியில் சிறுவூர் தன்னில் நல்கினாள் வைசியச் சேயாய்
சிவனடி யார்க்கு வன்னம் சிறுத்தோருக் குதவி செய்து
பவமது மில்லா தாகிப் பரந்தனள் கால நாடு

27. இனி தாயின் முற்பிறவியைப் பற்றிச் சொல்லுகின்றோம். திரு வாலங் காட்டுக்குக் கிழக்கில் உள்ள சிற்றூரில் வைசிய குலத்தவளாகப் பிறந்து சிவனடியாருக்கு அன்னமளித்து வந்து, துன்புற்றவருக்கு உபகாரம் செய்து வந்து, வேறு தீவினை ஏதுமில்லாமல் வாழ்ந்து மரண மடைந்தாள்.

## தாயின் மறுபிறவி

28. பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தனள் தீயின் வர்க்கம்
வருஞ்சென்மம் வான்மி யூரில் மாதுவும் கங்கை சேயாய்
உரைவளாம் சுகமுண் டாகி உத்தமி வாழ்வா ளாகும்
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்

28. மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறவியில் வன்னிய குலத்தில் பிறந்தாள். அடுத்த பிறவியில் திருவான்மியூரில் வேளாள குலத்தவளாகப் பிறந்து, சௌக்கியமாக வாழ்ந்து வருவாள். அரிய வேதங்களின் முடியில் நடமாடும் அம்பிகையே கேட்பீராக.

## தந்தையின் முற்பிறவி

29. தந்தையின் பூர்வம் சொல்வேன் சடகோபன் வாழும் [நாட்டில்
விந்தையாய்ச் செங்குந்த வமிசம் வித்தக னுதித்து [மேதான்
வந்திடு மனைவி மைந்தர் வளமுள குடும்பி யாகி
அந்தவன் வாழு நாளில் அறைகிறோ மூழிதானே.

29. இனி தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். சடகோபன் (நம்மாழ்வார்) பிறந்த திருக்குருகூர் என்னும் ஊரில் செங்குந்த மரபினனாகப் பிறந்து, மனைவி மக்களைப் பெற்று, சீரும் சிறப்புமுள்ள குடும்பத்தவனாக வாழ்ந்து வரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேட்பீராக.

## அந்தணனுடைய பொருளை அபகரித்தது

30. மறையவன் இவன்பால் பொன்னை
வைத்துமே காசி சென்று
விரைவினில் மாண்டா னென்றோம்
வேதியன் மனைவி தானும்
தருகுவாய் பொருளை யென்ன
சாலங்கள் செய்தா னென்றோம்
அரசர்பால் மாது சொல்ல
அசத்தியம் செய்தா னென்றோம்

30. ஓர் அந்தணன் இவனிடம் சென்று தான் சம்பாதித்துச் சேர்த்து ஆஸ்தியை (பொன் செல்வம் முதலியவற்றை)க் கொடுத்து வைத்திருக்கும்படி சொல்லிவிட்டுக் காசிக்குச் சென்றான். சென்ற விடத்தில் அந்தணன் இறந்து விட்டான். அவ்வந்தணனின் மனைவி இவனிடம் வந்து கணவன் கொடுத்திருந்த பொருளைத் திருப்பிக் கேட்டாள். அவற்றைக் கொடுக்கா

மல் இவன் (ஜாதகனின் தந்தை) சாக்குப் போக்குகள் பல சொன்னன். அவ் வந்தணப் பெண் அரசாங்கத்தாரிடம் சென்று முறையிட்டாள். இவன் பொருள் கொடுக்கவேயில்லை என்று சத்தியம் செய்து விட்டான்.

## அந்தணப் பெண்ணின் சாபம்

31. மாதுவு மனங்க லங்கி வறைகிருள் சாபம் தானும்
மேதினில் மறுசென் மத்தில் விளங்காது துணையும் [தானும்
பாதகி வேறு மாதா பத்தினி பகையே யாகும்
நீதியாய் தந்தை யில்லம் நீங்கியே வாழ்வா யென்று;

31. அவ்வந்தணப் பெண்ணும் மனம் கலங்கி சாபமிடுகிருள் "உலகில் ஏற்படும் மறுபிறவியில் உனக்கு சகோதரரில்லாமலும் தாயார் இறந்து, இரண்டாம் தாய் ஏற்பட்டு, அவளும் உனக்கு ஆதரவாக இல்லா தவளாக இருந்து, மனைவியிடம் விரோதம் ஏற்பட்டு, நியாயமாகக் கிடைக்க வேண்டிய தந்தையின் வீடு கிடைக்காமல் போய், சஞ்சலத்துடன் வாழ்ந்து வருவாய்" என்று;

32. சொல்லியே தெருத்தூள் விட்டாள் சேர்ந்தது வந்தத் [தோஷம்
வல்லியும் வடுக மாது வரனின்றி யிவன் பால் சென்று
நல்லதோர் வார்த்தை பேசி நாயகன் அவன்பால் [சென்று
அல்லலில் லாமல் வாழ்ந்து அதிகமாய்ப் பொருள்க [வர்ந்து.

32. சொல்லித் தெரு மண்ணை வாறி இறைத்தாள். அந்தத் தீவினையும் யும் இவனைச் சார்ந்தது. வேறு வன்னிய குலத்துப் பெண் ஒருத்தி, கணவனை யிழந்த கைம் பெண், இவனிடம் சென்று நல்ல வார்த்தைகள் பேசி, மயக்கி அவனைச் சேர்ந்தாள். துன்பமில்லாமல் வாழ்ந்து அதிகமான பொருளைக் கவர்ந்து கொண்டு;

## தந்தையின் சாபம்

33. மான்து பறந்தாப் போலே வல்லியும் சென்ரு [ளென்ரும்
ஆனசெங் குந்தன் பார்த்து அவளையே தேடிச் செல்லத்
தானவள் காணு ளாகி தந்தியின் கோஷ்ட முன்பாய்
ஊனமாம் வார்த்தை சொல்லி உதறினன் தெருத்தூள் [தானும்.

33. புள்ளிமான் ஓடுவது போல் ஓடிவிட்டாள் என்றோம். செங்குந்த ஞன இந்த ஜாதகன் (முற்பிறவியில்) பார்த்து அக்கைம் பெண்ணுன வன்னிய குலத்து மாதைத் தேடிச் சென்றான். அவளைக் காணுமல் மனம் வருந்தி, விநாயகப் பெருமான் கோவிலுக்கு முன்பாய் நின்று, துன்பம் தரத் தக்க வார்த்தைகள் சொல்லி, மண்ணை வாறி யிறைத்தான்.

## அந்தணப் பெண் சாபத்தின் பலன்

34. சஞ்சல மனத்த ஞகிச் சண்டன்தன் பதிக்குச் சென்று
கஞ்சனுல் வரையப் பட்டு காதல னுதித்தா னென்றோம்
தஞ்சமாய் மாது சாபம் தன்துணை காணு தாகி
துஞ்சிடும் தந்தை யாஸ்தி சுதர்களும் முதலில் பீடை;

34. மனத்தில் சஞ்சலம் அடைந்து மரண மடைந்து மீண்டும் தாமரை மலரின் மேல் வீற்றிருக்கும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, ஜாதகன் தந்தை பிறந்தான் என்றோம். அப்பெண்ணின் சாபம் இவனைத் தஞ்சமாக அடைந்தது. அதன் பலனுக ஜாதகனுடைய தந்தைக்குத் துணைவரில் லாமல் போம். தன்னுடைய தந்தையின் ஆஸ்தியில்லாமலும், முதலில் தோன்றும் குழந்தை மரணமடைந்தும்;

## தந்தையின் மறுபிறவி

35. தனமது கவர்ந்தோள் தானும்
சாருவா ளென்று சொல்வோம்
இனமது பகையு மெய்தும்
இடரிலா னென்று சொல்வோம்
கனமுடன் பின்ஜென் மத்தைக்
கழறுவோம் காஞ்சி தன்னில்
அனையவே சௌராஷ்டிர வமிசம்
அருளுவா னென்று சொல்வோம்.

35. முற்பிறவியில் பணத்தை அபகரித்த (கைம்பெண்ணுகிய) வன்னிய குலத்துப் பெண் இவனை வந்தடைவாள் என்று சொல்லுகின்றோம். அதனுல் தன் சுற்றத்தார் விரோதம் ஏற்படும். வேறு துன்பமில்லாதவன் என்றும் சொல்லுகின்றோம். இனி நிச்சயமாக ஜாதகனுடைய தந்தையின் மறுபிறவியைச் சொல்லுகின்றோம். புகழ் பெற்ற காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர வமிசத்தினனுகப் பிறந்து வாழ்வான் என்று கூறுகின்றோம்;

## தாயின் மரணகாலம்

36. நாற்பது ஒன்று ஆண்டில் நற்றுலா மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் குறித்ததோ ரன்னை தன்னை

ஏற்கவே புந்திக் காலம் எழில்கேது புத்தி யாகும்
தீர்க்கமாய் நடக்கு மென்றேம் செப்பின மொழி குன்றுவே

36. ஜாதகனுடைய நாற்பத்தோராம் வயதில் பெருமையுடன் கூடிய ஐப்பசி மாதத்தில் ஜாதகனுடைய தாய் மரணமடைவாள் என்றேம். அந்த சமயம் ஜாதகனுக்கு புத மகா தசையில் கேது புக்தி நடக்கும் என்று நிச்சயமாகக் கூறுகின்றேம். நாங்கள் கூறியவை தவறு.

## தந்தையின் மரணமும் ஜாதகனின் மரணகாலமும்

37. எண்ணஞ்சு விரண்டு ஆண்டில்
ஆவணி மாதம் தன்னில்
திண்ணமாய்த் தந்தை கண்டம்
செனித்தவன் தனக்குச் சொல்வேன்
வண்ணமாய் அன்பா னெட்டில்
வைகாசி மாதம் தன்னில்
அண்ணல்தன் பதத்தைச் சேர்வன்
அம்பிகை யாளே கேளாய்

37. ஜாதகனுடைய நாற்பத்திரண்டாம் வயதில் ஆவணி மாதத்தில் தாய் நிச்சயமாக இறந்து விடுவான் என்று கூறுகின்றேம், இனி ஜாதகன் அவனுடைய ஐம்பத்தெட்டாம் வயதில் வைகாசி மாதத்தில் சிவபதத்தை யடைவான் தாயே! மேலும் சொல்வதைக் கேட்பீர்கள்.

## ஜாதகருடைய மறுபிறவி

38. பின்சென்மம் தணிகை தன்னில்
பிறப்பனும் சைவச் சேயாய்
பொன்பொருள் பூமி யுண்டாய்
புகழ்ச்சியாய் வாழ்வா னுகும்
இன்னவார் பராசர் சொல்ல
இயல்செய முனிவர் சொல்வேன்
அன்னவன் தனக்கு வைந்து
ஆண்டினில் கெண்டம் நேரும்

38. மறுபிறவியில் திருத்தணிகையில் சைவ குலத்தவனுகப் பிறப்பான். பொன், பொருள், பூமி முதலியவற்றைப் பெற்று கீர்த்தியுடன் வாழ்ந்து வருவான். என்றும் இம்மாதிரி பராசர முனிவர் சொல்ல ஜயமுனிவர் கூறுகின்ருர்; ஜாதகனுக்கு ஐந்தாம் ஆண்டிலேயே கண்டம் ஒன்று நேரும்.

39. என்னநோய் வந்த போதும் இரணியன் சென்மம் [தங்க
முன்பனி யிரவி முன்னே போவது போலே யாகும்
அன்னவன் வயது தீர்க்கம் அறைகிறோம் யோகச் சேதி
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

39. என்ன நோய் வந்த போதிலும் குரு லக்கினத்தில் தங்கியிருப்ப தால் அதிகாலையில் உள்ள முன் பனி சூரியனைக் கண்டதும் மறைந்து போவது போல், தீர்ந்து போகும். ஜாதகனுக்கு நீண்ட ஆயுள் என்றும் சொல்லுகின்றோம், இனி ஜாதகனுடைய யோக விவரங்களைக் கூறுகின் றோம். உயர்ந்த யானைமுகக் கடவுளைப் பெற்றெடுத்த உத்தமியே! பார்வ தியே! கேளுங்கள்.

40. கல்வியால் பெருமை பூண்பன் கனதனம் சேர்ப்பா னாகும்
நல்லவ ருறவு கொள்வன் ராசபூ சிதனு மாவன்
சொல்லதைக் காப்பா னாகும் தொடுத்ததை வெல்வா [னாகும்
தல்லிமே லிஷ்ட னவன் சம்பத்து முடைய னாமே.

40. இவன் கற்றுணர்ந்த கல்வியால் பெருமை ஏற்பன். வெகுவாகப் பொருள் சேர்ப்பான். நல்லவருடைய உறவு கொள்வான். அரசாங்கத்தா ரின் நல்மதிப்பும் சன்மானமும் பெறுவான். தான் சொன்ன சொற்களின் படி நடப்பவன். எடுத்த காரியத்தை வெற்றியுடன் முடித்து வைப்பான். தாயின் மீது அதிகப்பிரியமுள்ளவன். மிகுந்த சம்பத்து உடையவன் என்றோம்.

41. அதிகார முடைய னாகும் அவனியில் புகழு மேற்பன்
எதுகாலம் நேரு மென்ன எண்மூன்று ஆண்டில் [நேரும்
சதமுடன் ஐம்ப தாண்டும் சார்ந்திடும் ராச யோகம்
மதியின் போலே யோகம் வரைகிறோம் தாயே கேளும்

41. அரசாங்கப் பதவியும் அதிகாரமும் உள்ளவன். உலகில் கீர்த்தி யடைவான். இது எந்தக் காலத்தில் ஏற்படும் என்று கூறுவீர்கள். ஜாதக னுடைய இருபத்து நான்காம் வயதில் இந்தப் புகழ் இவனுக்குக் கிட்டும் நிலையாக ஐம்பது வயதுவரையில் திண்ணமாக ராஜ யோகம் ஏற்படும் என்கின்றோம் ராஜ யோகம் உண்டு என்று சொல்லுகின்றோம். தாயே! கேளுங்கள்.

42. தந்தைநாள் பூமி மேலாய்த் தானவன் சேர்ப்பா னாகும்
கந்தன்மேல் பக்தி கொள்வன் காலாள்க ளுடைய னாகும்
தன்தனம் பூமி வீடு சாற்றிஏ ழாயிரம்பொன்
இந்தவன் சேர்ப்பா னாகும் ஈச்வரி கேட்டி டாயே.

42. தந்தையின் ஆஸ்திக்கு மேலாக ஜாதகன் சேர்ப்பான். தந்தையை விட செல்வந்தனுகவும் கீர்த்தி யுடனும் வாழ்வான். முருகக் கடவுள் மீது பத்தி கொண்டவன். இவன் ஏவல்களைப் பணிபுரிய ஆட்கள் அதிகமாக உடையவன். தன்னுடைய பூமி வீடு முதலியன ஏழாயிரம் பொன் பெறு மானம் உள்ளதாகும். அத்தகையபொருளை ஜாதகன் சேர்ப்பான். பரமேச் வரனின் தேவியே/ கேளுங்கள்.

## ஜனனகால தசை

43, பாலகன் செனிக்கும் காலை
பணிதசை ஆண்டு மூன்றும்
ஞாலமேல் திங்க ளைந்தும்
நாட்டுவோம் பலனை யாங்கள்
வேலனும் பிணியால் வாடும்
விளங்கிடும் பின்பால் விருத்தி
ஏலவே செலவ நேகம்
இயம்புவோம் பின்பால் சேதி.

43. ஜாதகன் பிறக்கும்போது ராகு மகாதசையில் மூன்று ஆண்டு களும், ஐந்து மாதங்களும் கெர்ப்பச்செல்லு போக மீதமாகும். அக்காலத் திய பலனுவது. ஜாதகனுக்கு நோய் ஏற்படும். பிறகு நிவர்த்தியாகும் அக்காலத்தில் சிலவு அதிகமாகும். மற்ற விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்றேம். —V. R. N.

## ஜாதகம் 84

### ஜனனகால கிரகநிலை

1. [1]மதி[2]வண்டி ராகு [3]சீயம் [4]மங்கலன் [5]கோல தாக
புதன்தனு [6]பானு [7]காரி புக்கிடம் [8]மான தாக
நிதி[9]புகர் கேது [10]சாடி நற்குரு மேட மாக
இதுவிதக் கோளும் நின்று இலக்கினம் கன்னி யாக;

1. சந்திரன் கடகத்திலும் ராகு சிம்மத்திலும், அங்காரகன் துலாத்திலும், புதன் தனுசிலும், சூரியன், சனி மகரத்திலும், சுக்கிரன் கேது கும்பத்திலும், குரு மேஷத்திலுமாக நவக்கிரக நிலை இருந்து பிறந்த இலக்கினம் கன்னியானல்;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| சுக்கிரன் கேது | இராசி சக்கரம் | | சந்திரன் |
| சூரியன் சனி | | | ராகு |
| புதன் | | அங்காரகன் | லக்கினம் |

### ஜாதகன் பிறந்த வீட்டு நிலை

2. பலனதைப் புகலுமென்று பார்வதி கேட்கும் போது
குலகுரு வதிஷ்டர் சொல்வார் குறித்தது ஆண்பால்
[சென்மம்

1. சந்திரன்
2. கடகம்
3. சிம்மம்
4. அங்காரகன்
5. துலாம்
6. சூரியன்
7. சனி
8. மகரம்
9. சுக்கிரன்
10. கும்பம்

தலமது கீழ்மேல் வீதி தென்வாசல் கணேசன் மேற்கில்
நலமுள மாரி யானை நல்கிடும் கீழ்பால் தன்னில்.

2. ஏற்படும் பலனைக் கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்கும் போது குலகுருவாகிய வசிஷ்டர் மறுமொழி தருகின்றார். இந்த ஜாதகம் ஓர் ஆண்மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்கான தெருவாகும், தெற்கு நோக்கிய வாயிலை யுடையதாகும். விநாயகர் ஆலயம் மேற்குப் பக்கத்திலும் நன்மைதரும் மாரியம்மன், கணேசன் ஆலயம் இவ்விரண்டும் வீட்டுக்குக் கிழக்கிலும்;

## ஜாதகனுடைய குலம்

3. இன்னமும் பலதே வாசம் இலகிய பேரு ராகும்
அன்னையி னில்ல மாகும் அறிவித்தோம் சேஷ்ட னாக
துன்னுகோ வைசிய வம்சம் செனிப்பனு மென்று
[சொல்வோம்
உன்னத வானை பெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. இன்னமும் பல தெய்வங்கள் வசித்துவரும் பெரிய ஊர் அது என்று சொல்லுகின்றோம். ஜாதகன் பிறந்தது தன் தாயின் வீட்டிலாகும். ஜாதகன் தன் தந்தைக்கு மூத்த புதல்வனாகப் பிறந்தவன் என்று சொல்லுகின்றோம். நன்மை மிக்க கோவைசிய வம்சத்தில் பிறந்தவன் என்று கூறுகின்கிறோம். உயர்ந்த யானைமுகக் கடவுளைப் பெற்ற உத்தமியே! கேளுங்கள்,

## தந்தையின் வீட்டு விவரம்

### வேறு

4. இன்னவன் செனன மிருப்பிட மதற்கு
இருமூன்று கடிகைதூ ரத்தில்
மன்னிய குடகில் தந்தையின் ஊராம்
வடக்குத்தென் வீதியே யாகும்
அன்னையே மேற்கு வாசலே யாகும்
ஆண்மையாய்ச் செட்டுகள் ஒங்கும்
உன்னத ஊராம் பலசாதி வாசம்
உத்தமி கேட்டிடு வாயே.

4. ஜாதகன் பிறந்த வீட்டிற்கு ஆறுநாழிகை தூரத்தில் மேற்குப் பக்கத்தில் ஜாதகனுடைய தந்தையின் ஊர் என்றும், அவ்வூரில் தந்தையின் வீடு தெற்கு வடக்கான தெருவில் இருக்கும் என்றோம். அது மேற்கு நோக்கிய வாயிலையுடையது. அவனுடைய தந்தைக்கு பெரிய வர்த்தகத்தொழில் ஒன்று நடைபெற்றுவரும். பல ஜாதி ஜனங்கள் வசித்துவரும் பெரிய ஊர் என்று சொல்லுகிறோம். உயர்ந்த குணங்களுள்ளவளே கேளுங்கள்,

## தந்தையின் சகோதரபாவம்.

### வேறு

5. தந்தைக்குத் தார மிரண்டில் தரித்திடு முதல்மா தீன்ற
நீதியாய் மைந்தன் தானும் நிகழ்த்துவோ மிவனின் [தந்தை
ஓதுவேன் துணைஆண் தோஷம் உத்தமி ஒன்றே [தீர்க்கம்
மாதுவு மிளையா ளுக்கு மைந்தர்கள் ஆண்பா லிரண்டு;

5. ஜாதகனுடைய பாட்டனுருக்குற்ற மனைவியர் இருவரில் மூத்த மனைவிக்குப் புத்திரனுகத் தோன்றியவன், இந்த ஜாதகனுடைய தந்தை என்று உரைக்கின்ளும். ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் உண்டு என்றும், உடன் பிறந்த சகோதரி ஒருத்தியே என்றும், இளைய தாய்க்குத் தோன்றும் குழந்தைகளில் ஆண் குழந்தைகள் இரண்டும்,

## தந்தையின் இயல்புகள்

6. கன்னிகை யவ்வா ருகும் கனக்காது மத்தில் ஏகும்
பின்பாகம் விபரம் சொல்வோம் பேசுவோம் தந்தை சேதி
கன்னென மொழியு முண்டு கல்விமான் சிவந்த மெய்யன்
உன்னத தேகி யாவன் உண்மையா மனத்த [னென்ளும்.

6. பெண்கள் இருவரும் உண்டு என்று கூறுகின்ளும். ஆனுல் அவர்களில் சிலர் நிலையாக இராமல் இடையிலேயே இறந்துவிடுவர் என்று கூறுகின்ளும். அவ்விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகின்ளும். இனி தந்தையின் விவரங்களைச் சொல்லுகின்ளும். இனிய வார்த்தை களையே பேசுபவன். கல்வியறிவுடையவன். சிவந்த உடலுடையவன் உயரமானவன், உண்மையே பேசும் மனத்தன் என்ளும்.

7. தந்தநோ யுடைய ளுகும் சல்லியப் பாதை யில்லான்
விந்தையாய்ச் செட்டுச் செய்வன் விகடங்கள் கூருனுகும்
அந்தவன் மிதுன ராசி அஸ்தமுன் ளேே தோன்றும்
கந்தன்மேல் பக்தி கொள்வன் கசடரை உறவு [கொள்ளான்

7. பற்களில் நோயுடையவன். கடன் உபத்திரவங்கள் இல்லாதவன் பிறர் அதிசயிக்கும் வண்ணம் வர்த்தகத்தொழில் செய்துவருவான். வேடிக் கைப் பேச்சுப் பேசாதவன், அவன் மிதுன லக்கினத்திலும், அஸ்த நட்சத் திரத்திலும் (அஸ்தத்துக்கு முன் நக்ஷத்திரமாகிய உத்திரத்தில்) தோன்றிய வள், என்றும் சொல்லுகின்ளும். முருகப்பிரான் மீது பக்தியுடையவன். அற்பர்களுடன் சகவாசம் செய்யாதவன்,

## இதுவுமது

8. யூகைவான் நுணுக்கம் தேர்வன் உறுதியில் லாத [நெஞ்சம்
பாகமாய்ப் பேசு வானும் பதறினில் செல்லா னுகும்
நாகரீ கங்க ளுண்டு நல்லோர்க்கு நல்ல னுவன்
ஆகம மறியா னுகும் அவனியோர்க் குதவி செய்வன்.

8. ஊகமுடையவன். ஆராய்ந்து உணரும் சக்தியுடையவன். திடமில்லாத மனமுள்ளவன். சந்தர்ப்பத்துக்கும் இடத்துக்கும் தக்கபடி பேசுபவன். அற்பகாரியங்களில் செல்லாத மனமுடையவன். நாகரீகமாக இருப்பவன். நல்லதனமாகப் பழக்கமும் எண்ணமும் உள்ளவரிடம் அவ்விதமே பழகுவான். வேத சாஸ்திரங்களைக் கல்லாதவன். உலகத்தவர்கட்கு உபகாரம் செய்வதில் விருப்பமுடைய்வன்.

## தந்தைக்குச் சகோதரதோஷம்

9. துணைவர்கள் தோஷம் சொன்னீர் செப்புவீ ரந்தச் [சங்கை
வினையாக குருவு மெட்டில் மேவின பலத்தால் சொன்னேம்
கனமுள பூர்வம் தன்னில் கலந்தது சிலவே தோஷம்
சினமுண்டு துணையா னும்தான் செப்புவீர் பூர்வம் [தன்னை.

9. ஜாதகனுடைய தந்தைக்குச் சகோதர தோஷம் உண்டு என்று சொன்னீர்களே. அதற்குக் காரணம் என்னவென்று கூறுங்கள். குரு எட்டாமிடத்தில் இருக்கும் பலத்தால் நாங்கள் அவ்விதம் சொல்லுகின்றேம். இது தவிர முற்பிறவியில் செய்த பல தீவினைகளும் அவனைச் சார்ந்தது அதனுல் அவனுக்குச் சகோதர தோஷம் ஏற்பட்டு உடன் பிறந்தவரில்லாதவன் ஆவான். அந்தத் தோஷத்தைக் கூறுங்கள்.

## தந்தையின் முற்பிறவி

10. முன்னவ னிருந்த சென்மம் மொழிகிறேம் கடையூர் [தன்னில்
முன்குலம் தன்னி லுதித்து முயர்வான குடும்பி யாகி
அன்னவன் வாழு நாளில் அணுகின வினையைக் [கேண்மோ
தன்குல மிருவர் தானும் சண்டைகள் மிகவே கொண்டு.

10. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியைச் சொல்லுகின்றோம். திருக்கடையூர் என்ற ஊரில் அந்தண குலத்தவனாகப் பிறந்து உயர்ந்த குடும்பத்தையடைந்து வாழ்ந்துவரும் காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன் குலத்தவர் இருவர் (இரு அந்தணர்கள்) ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கொண்டு ;

## அந்தணன் சாபம்

11. மன்னர்பால் செல்லும் போது
மாரனு மொருவன் தன்பால்
உன்னத வார்த்தை சொல்ல
ஒதுக்கங்கள் அவனைச் சேர
தன்மனம் கலங்கி யேதான்
சாற்றுவான் சாபந் தானும்
துன்மையாய் வார்த்தை யென்மேல்
செப்பிய பாபி யேநீ.

11. அரசர்களிடம் செல்லும்பொழுது, இந்த ஜாதகன் ஒருவனைப் பற்றித் தவறான வார்த்தைகளைச் சொல்ல, அரசனால், அவனைச் சில தாழ்வுகளடைய, அவ்வந்தணன் தனது மனம் கலங்கி ஒரு சாபம் இடுவான். தவறான வார்த்தைகளை என்மீது கூறிய பாவியே! நீ,

## இதுவுமது

12. மற்றொரு ஜன்மம் தன்னில்
அண்ணன் தம்பிகளு மின்றி
பெற்றதாய் சுகமில் லாமல்
பின்றாய்பா லணுகி வாழ்வாய்
குற்றமாம் தந்த மென்று
கூறியே தெருத்தூள் விட்டான்
பற்றிற்று அந்தச் சாபம்
பார்வதி கேட்டி டாயே.

12. மறுபிறவியில், சகோதரர்களில்லாமல், பெற்ற தாயின் அன்பை அடையாமல் (தாய் மரணமடைவாள் என்பது கருத்து.) மாற்றாந்தாயைச் சார்ந்து வாழ்ந்திருப்பாய். உன் பற்கள் ஊனமடையும் என்று இங்ஙனம் கூறித் தெரு மண்ணை வாரி இறைத்தான். அந்தச் சாபம் இவனைப்பற்றியது. பார்வதியே! கேட்பாயாக.

13. அந்தியக் காலம் தன்னில் ஆசாரக் குறைவு முண்டாய்
அந்தகன் பக்கல் சென்று அயனாலே வரையப் பட்டு

வந்தவ னென்று சொல்வோம் மருவிடு முன்னூழ்ச்
[சாபம்
தந்துணை தோஷ மெய்தும் தாயரு மிருவ ரென்றோம்.

13. இவன் (ஜாதகன் தந்தை), தனது கடைசிக்காலத்தில் ஒழுக்கக் குறைவுடன் இருந்து, மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப் பட்டு இப்பிறப்பில் ஜாதகன் தந்தையாக வந்தவன் என்று சொல்லு வோம். இவனுக்கு முற்பிறவித் தீவினை தொடரும். அதனால் இவனுடன் பிறந்தோருக்குத் தோஷமேற்படும். இவனுக்குத் தாயர் இருவர் என்று கூறினோம்.

## ஜாதகனது இயல்புகள்

14. சொன்னவிக் குணத்தா னுக்குத் தோன்றுவா னிந்தப்
[பாலன்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளா னிருநி
[றத்தன்
பன்னியே பேசு வானும் பலகலை யறிவா னாகும்
பின்னமில் லாத தேகி பிதுர்மேலாய் வாழ்வா னாகும்.

14. மேற் சொல்லப்பட்ட குணங்களையுடைய தந்தைக்கு இந்த ஜாத கன் புதல்வனாகத் தோன்றுவான். இனி, அவனுடைய குணங்களைச் சொல்லுவோம். அழகுடையவன், கரியநிறமுடையவன், கேட்போருக்கு அயர்ச்சி ஏற்படும்படி தொடர்ந்து பேசிக்கொண்டே இருப்பான். பல சாஸ் திரங்களை உணர்வான். ஊனம் இல்லாத அவயவங்களோடு கூடிய உட லமைப்பைப் பெற்றவன். தன் தந்தையைவிட மேன்மையாக வாழ்வான்.

15. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னவன்
அல்லலெப் போதும் காணான் ஆவுகள் பலித முண்டு
வெல்லும்சொல் லுடைய னாகும் வணிபங்கள் பலவாய்ச்
[செய்வன்
இல்லமும் வேறு செய்வன் இதிகாச மறிவா னாகும்.

15. தன்னிடம் நன்முறையில் பழகுபவர்களிடம் இவனும் நல்லவனாக நடந்துகொள்ளுவான். தன்னிடம் வீண் வம்புக்கு வருபவர்களிடம் இவனும் சண்டைக்காரனாகவே நடந்துகொள்ளுவான். எப்பொழுதும் துன்பங்க ளறியமாட்டான். பால் பசு பாக்கியமுடையவன். வெற்றிதரும் வகையில் பேசும் திறமையுடையவன் ஆவான். பலவித வியாபாரங்கள் செய்வான். வீடு ஒன்றும் புதியதாய்க் கட்டுவான். இராமாயணம், பாரதம், போன்ற இதிகாச நூல்களைப் படித்துணருவான்.

16. கரமதில் கோதுமை ரேகை காகுத்த னிரண்டு முண்டு
உறன்முறை மதிக்க வாழ்வன் உயர்வான குடும்ப
[மேற்பன்
தரையதை விருத்தி செய்வன் தனமது பெருக்க முண்டு
குறையென்ருேர்க் குதவு வானும் குஞ்சர நடையு
[மாவன்.

16. இவன் கையில் கோதுமை ரேகையும் காகுஸ்தரேகையும் இருக்கும். தன் உறவினர்கள் பாராட்டும்படியாக வாழ்க்கை நடத்துவான். மேன்மையான குடும்பத்தை யடைவான். நிலபுலங்களைப் பெருக்குவான். செல்வப் பெருக்கமும் ஏற்படும். தங்களுக்கு ஒரு குறையுள்ளது என்று இவனிடம் வந்தால் உடனே அவர்கட்கு உதவுவான். ஆண் யானைபோன்று கம்பீர நடையுடையவன்.

## ஜாதகனுடைய சகோதரபாவமும் திருமணமும்

17. தன்துணை ஆண்பா லிரண்டு சத்திமா ரவ்வாறு தீர்க்கம்
பின்பாகம் விபரம் சொல்வேன் பேசுவோம் மணத்தின்
[காலம்
மன்னனுக் கீரெட் டாண்டில் மாதுரு வர்க்கம் தன்னில்
கன்னிகை நேரு மென்ருேம் கழறுவோம் குணத்தை
[யாங்கள்.

17. இந்த ஜாதகனுக்குச் சகோதரர் இருவரும் சகோதரிகள் இருவரும் தோன்றித் தீர்க்காயுளுடன் விளங்குவர். அவர்களைப்பற்றிய செய்திகளைப் பின்பாகத்தில் சொல்லுவோம். இனி, ஜாதகன் திருமணக்காலத்தைச் சொல்லுகிறோம். பதினாறும் வயதில், தன் தாய்வர்க்கத்திலிருந்து மனைவி வாய்ப்பாள் என்று சொன்னோம். அவள் குணங்களைச் சொல்லுவோம்.

## மனைவியின் விவரங்கள்

18. தோகைபோல் சாய லொக்கும் துறவிக்கு அன்ன மீவள்
பாகமாய்ப் பேசு வாளாம் பதரினில் செல்லா ளாகும்
நாகரீ கங்க ளுண்டு நன்னடை மிருது வார்த்தை
ஊகைவான் யோக சாலி உள்மனம் கபடு மில்லாள்.

18. மயில்போன்ற சாயலுடையவள். உலகப் பற்றைத் துறந்த சந்நியாசிகட்கு உணவு அளிப்பாள். பக்குவமாகப் பேசுவாள். அற்பமான செயல்களில் மனத்தைச் செலுத்தாதவள். நாகரீகங்கள் உள்ளவள். நல்லொழுக்கமுள்ளவள். மென்மையான பேச்சுக்களைப் பேசுவாள். ஊகித்து உணரும் ஆற்றலுடையவள். அதிர்ஷ்டமுள்ளவள். மனத்தில் வஞ்சனைக் குணம் இல்லாதவள்.

## களத்திரதோஷம்—கிரகநிலை

19. வரன்மனம் போலே வாழ்வள் மறுத்துரை யதிகம் கூருன்
திருமக ளொப்ப தாகும் தீர்க்கமாம் வயது முண்டு
பராசரும் தடுத்துச் சொல்வார் பத்தினி யிரண்டு
[வென்ருேம்
உரைப்பீர்க ளந்தச் சேதி ஒரேழாண் எட்டில் நின்றும்;

19. தன் கணவன் மனத்துக்கு உகந்தவளாய் இருப்பாள். மறுத்து அதிகமாகப் பேசமாட்டாள். இலட்சுமிதேவி போன்றவள். தீர்க்க ஆயுளுடையவள். இவ்விதம், முனிவர் கூற, பராசரர் என்பவர் இக்கூற்றை மறுத்து ஒன்று கூறுவார். இந்த ஜாதகனுக்கு மனைவியர் இருவர் என்று கூறினேம். அந்த விவரத்தைக் கூறுங்கள் என்று பார்வதியம்மை கேட்க, பராசரர் கூறுகின்ருர். ஏழாம் இடமாகிய களத்திர ஸ்தானத்துக் குரிய குரு எட்டாம் இடத்திலும்,

## வசிஷ்டரின் மறுப்பு—அதற்கு ஆதாரம்

20. தனத்தினில் சேயும் தங்க தாரமு மிரண்டு வென்ருேம்
கனமுள வதிஷ்டர் சொல்வார் காதலி யொன்றே
[தீர்க்கம்
இனமதைப் புகலு மென்ன வெழிலோ னதற்கி ரண்டில்
சினமிலா நாலில் புந்தி சந்திரன் ஆட்சி யாக.

20. தன, குடும்ப ஸ்தானமாகிய இரண்டாமிடத்தில் (துலாத்தில்) அங்காரகனும் தங்கியிருப்பதால் இந்த ஜாதகனுக்கு மனைவியர் இருவர் என்று சொன்னேம். இதனைக்கேட்ட வசிஷ்ட முனிவர் கூறுவார். இவனுக்கு மனைவி யொருத்தியே தீர்க்க ஆயுளுடன் விளங்குவாள். காரணம் கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் விடை கூறுகிருர். ஏழாமிடத்துக் குரியவனுகிய குரு, அந்த ஸ்தானத்துக்கு இரண்டிலும், (மேஷத்திலும்) நான்காம் இடத்தில் புதனும், சந்திரன் ஆட்சியாகவும் இருப்பதனுல்,

## மனைவியின் மரணகாலம்

21. பாரியு மொன்றே தீர்க்கம் பாவையு மிவன்முன் னுலே
சேருவாள் கால நாடு செப்புவீர் காலம் தன்னை
கூறுவோ மன்பா னிரண்டில் கோதையு மரிப்ப ளாகும்
ஆறுமா முகனைப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

21. இவனுக்கு மனைவி ஒருத்தியே தீர்க்கமாவாள். அவள் ஜாதகனுக்கு முன்பே மரணமடைவாள். இவ்வாறு முனிவர் கூற, எந்தக்காலத்தில் ஜாதகன் மனைவி இறப்பாள் என்று கூறுங்கள் என்று பார்வதிதேவி

கேட்டனள். முனிவர் கூறுகின்றார். ஜாதகனது ஐம்பத்திரண்டாம் வயதில் மனைவி மரண முறுவாள் என்று சொல்லுவோம். ஆறு திருமுகங்களை யுடைய சுப்பிரமணியரைப் புதல்வராகப்பெற்ற தாயே! மேலுங் கூறுகிறோம் கேட்பாயாக,

## ஜாதகனுடைய புத்திரபாவம்

22. புத்திர விருந்தி தன்னைப் புகலுவோ மறுவர் தோன்றும்
சுத்தமா யாண்பா லொன்று செல்விமா ரிருவர் தீர்க்கம்
குத்தமாம் முதலி லிரண்டு கூறுவீ ரந்தச் சங்கை
வித்தகர் காரி பானு மேவிட மஞ்சே யாக.

22. ஜாதகனுக்கு புத்திரபாக்யம்பற்றி இனிக் கூறுவோம். ஆறு குழந்தைகள் தோன்றும். நிச்சயமாய் ஆண் குழந்தையொன்று பெண்கள் இருவர் ஆக மூவரும் தீர்க்கமான ஆயுளுள்ளவரா யிருப்பர். முதலில் இரண்டு குழந்தைகள் தோன்றிச் சேதமாம். ஏன் அங்ஙனமாகும் என்று கூறுவீர்கள் எனப் பார்வதிதேவி கேட்க, முனிவர் விடை கூறுகின்றார். சனி, சூரியன் ஆகியோர் இலக்கினத்துக்கு ஐந்தாமிடத்தில் (மகரம்);

## ஜாதகனின் முற்பிறவி

23. இருப்பதால் சுதர்கள் தோஷம்
இயம்புவோ மிவன்முன் ஜன்மம்
திருப்பரங் குன்றந் தன்னில்
ஜனித்தனன் கங்கை சேயாய்
தரையது விருத்தி செய்து
தன்மனை மதலை யுண்டாய்
குறையென்றோர்க் குதவி செய்து
குவலயம் நல்லோ னாகி;

23. இருப்பதனால் இவனுக்குப் புத்திர தோஷம் ஏற்படும். இனி, இந்த ஜாதகனின் முற்பிறப்புப் பற்றிச் சொல்வோம். திருப்பரங்குன்றம் என்னும் தலத்தில், வேளாளர் குலத்தவனாகப் பிறந்தான். நிலபுலன்களை விருத்தி செய்து, மனைவி மக்களை அடைந்து, குறையென்று வந்தவர்களுக்கு உதவிசெய்து, உலகத்தில் நல்லவன் என்று பெயரெடுத்து,

24. சேதுவின் பதிக்குச் சென்று தேரினோர்க் கன்ன மீந்து
சூதான கால நாடு சென்றுமே பிரமன் லக்கம்
மேதினி லுதிப்பா னாகும் விளம்புவோ மிவனின் யோகம்
[1]காதியு மதிக மேற்பன் கனமுள குடும்பி யாவன்.

---

1. கீர்த்தி, புகழ்.

24. சேதுவிற்குச்சென்று நீராடி, முதிர்ந்த ஞானமுடைய பெரியோர்களுக்கு அன்னமளித்து, எமனுலகு அடைவான். மீண்டும் பிரம்ம தேவனால் படைக்கப்பட்டு இவ்வுலகில் இப்பிறப்பில் தோன்றுவான், இவன் யோகங்களைக் கூறுவோம். மிகுந்த கீர்த்தியை அடைவான். பெருமையுள்ள குடும்பமுடையவனாக இருப்பான்.

## யோகபாவம்

25. பலவித வணிபம் செய்வன் பாக்கிய முடைய னாகும்
நலமதை யெவர்க்கும் செய்வன் நாட்டினில் வறுமை
[காணான்
தலவாசம் செய்வா னாகும் சுற்றமும் வணங்க வாழ்வன்
புலவனும் யூகை சாலி புண்ணிய மனத்த னாகும்.

25. பலவிதமான வியாபாரங்கள் செய்வான். போகபாக்கியங்களுடையவனாக இருப்பான். யாவருக்கும் நல்லவற்றையே செய்வான், உலகில் இவன் வாழ்க்கையில் தரித்திரத்தையே அறியமாட்டான். சிறந்த தலங்களுக்குச் சென்று அவ்விடங்களில் சில காலம் வசிப்பான். உறவினரும் தன்னை வணங்கும்படி வாழ்ந்திருப்பான். சிறந்த புலமையுடையவன். ஊகித்து உணரும் சக்தியுடையவன். கருணை நிறைந்த மனத்தினன்.

26. பாருக ளதிகஞ் சேர்ப்பன் பண்போருக் கன்ன மீவன்
நாரியோர் மோக வான மிராசர்க்கு இவன்சொல்
[மேன்மை
காரிய சமர்த்த னாகும் கடவுளோர் பக்தி பூண்பன்
போரினில் செல்லா னாகும் புயபல முடையா னமே.

26. நிலபுலன்கள் அதிகமாகச் சேர்ப்பான். நற்குணமுடைய சான்றோர்க்கு உணவு அளிப்பான். பெண்களிடம் மையல் கொள்ளுவான், அரசர்களுக்கு இவன் சொற்களில் மிகுந்த மதிப்பு ஏற்படும். எந்தச் செயலையும் செய்து முடிக்கும் திறமையுடையவன். தெய்வபக்தி மிகுதியாகக் கொள்ளுவான், வீண் சண்டைக்குச் செல்லமாட்டான், புஜபலமுடையவனுவான்.

## யோகங்கள்—கிரகநிலை

27. யோகமெவ் விதமாய்ச் சொன்னீ ருரைப்பீர்க ளந்தச்
[சங்கை
[1]பாகனும் நாலில் தங்கப் பணி[2]மதி யாட்சி யாக

1. புதன்
2. இராகு

[3]ஆகமன் தனக்குப் பத்தில் [4]ஆதித்த னிருப்ப தாலே
வேகமாய்ப பதும யோகம் வீணையோ கங்க ளொன்று;

27. இந்த ஜாதகனுக்கு யோகங்கள் பலவற்றை எவ்விதம் கூறினீர்கள்? அதற்கு விபரம் கூறுங்கள் (என்று பார்வதி கேட்க) முனிவர் கூறுகிருர் புதன் இலக்கினத்திற்கு நான்காம் இடத்தில் (தனுசு) தங்கி யிருப்பதாலும், இராகு சந்திரன் ஆகியோர் ஆட்சியாகவும் குருவுக்கு பத்தாம் இடத்தில் சூரியன் தங்கி யிருப்பதாலும் மிக விரைவில் பத்ம யோகம் வீணை யோகம்;

## யோகங்களின் பலன்

28. *பாலகன் தனக்கு யோகம் பகரமாம் குடும்ப மேற்பன்*
*சீலவான் பொறுமை சாலி செல்வந்த ஞகி வாழ்வன்*
*ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கருட ஞவன்*
*சாலவே அன்னை சேதி சாற்றுவோ மினிமே லாக.*

28. ஆகிய யோகங்கள் ஜாதகனுக்கு ஏற்படும். பெருமை யுடைய குடும்பத்தை உடையவன் ஆவான். நல்லொழுக்க முடையவஞக இருப்பான். பொறுமைசாலியாக விளங்குவான். மிக்க செல்வ முடையவஞக வாழ்வான். விஷத்தை யுடைய கொடிய பாம்பு போன்ற பகைவர்களுக்கு இவன் கருடஞக விளங்குவான். இனிமேல் இந்த ஜாதகனின் தாயாரின் செய்தியைக் கூறுவோம்.

## தாயின் குணநலன்கள்

29, *அன்னம்போல் சாய லொக்கும் அடாவடி கூரு ளாகும்*
*அன்னமு மன்பா யீவள் அடிசிலுக் கினிய ளாகும்*
*அன்னியர் குற்றம் சொல்லாள் ஆபத்தென் ருேரைக் [காப்பள்*
*அன்னவள் யோக சாலி ஆளன் தன் மனத்துக் [கேற்ருேள்.*

29. அன்னம் போன்ற நடையுடையவள். பொருந்தாத முறையில் பேசி வீண் சண்டைக்கு வராதவள். யாசிப்பவர்கட்கு அன்புடன் உணவு அளிப்பாள். அறுசுவையுடன் உணவு சமைப்பதில் தேர்ந்தவள். அயலார் மீது குற்றங்கள் கூறமாட்டாள். 'ஆபத்து' என்று வந்தவர்களுக்கு ஆதரவு கொடுத்துக் காப்பாற்றுவாள். இவள் யோக முடையவள். கணவன் மனத்துக்குப் பொருந்தியவள்.

---

3. குரு
4. சூரியன்

## இதுவுமது

30. மால்நிறம் வாத தேகி மர்மமில் லாதா ளாகும்
ஊனமில் லாத தேகி உயர்வான புத்தி யுண்டு
ஈனரை யுறவு கொள்ளாள் இடர்செய்யாள் யாவ ருக்கும்
பான்மையாய்ப் பேசு வாளாம் பங்கய முகத்த ளாகும்.

30. திருமால் போன்ற கரிய வண்ண முடையவள். வாத சரீரம் உடையவள். மனத்தில் மறைவில்லாதவள் ஆவாள். அவயவங்களில் ஊனங்கள் எவையுமில்லாத சரீர அமைப்புப் பெற்றவள். உயர்ந்த புத்தி இவளுக்கு உண்டு. தாழ்வானவர்கள் தொடர்பைக் கொள்ள மாட்டாள். எவருக்கும் தீங்கு செயய மாட்டாள். பக்குவமாகப் பேசுவாள். தாமரை போன்று ஒளியுள்ள முகமுடையவளாவள்,

## தாய்மாமனின் இயல்புகள்

31. இல்லமும் கீழ்பா லாகும் இவள் துணை யாண்பா
[லொன்று
சொல்லுவோம் தீர்க்க மாகச் செப்புவோ மவன்கு
[ணத்தை
நல்லவ னாகி வாழ்வன் நயம்படக் கூறு வானும்
சல்லிய மில்லா னாகும் தரணியில் வறுமை காணான்.

31. இவள் வீடு கிழக்குத் திசையிலுள்ளதாகும். இவளுக்குச் சகோதரன் ஒருவன் தீர்க்காயுளுடன் விளங்குவான் என்று கூறுவோம். அவனுடைய குணங்களைச் சொல்லுவோம். எல்லோருக்கும் நல்லவனாக வாழ்ந்திருப்பான். நயமாகப் பேசுவான். கடன் இல்லாதவனாவான். உலகில் தரித்திரத்தை யறிய மாட்டான்.

## தாய்மாமனின் குடும்பச் செய்திகள்

32. அறமதி லிச்சை யுண்டு ஆண்மையாய்க் குடும்ப
[மேற்பன்
இருமனை யுடைய னாகும் எய்திடுஞ் சுதரா ணிரண்டு
வரிவிழிப் பெண்பா லிரண்டு வறைகிறேந் தீர்க்க மாகப்
பெருமையாய் வணிபம் செய்வன் பூமியும் சேர்ப்பா
[னாகும்.

32. தருமஞ் செய்வதில் விருப்பமுள்ளவன். தீர்மானத்துடன் குடும்ப மேற்று நடத்துவான். இவன் இருமனைவியரை உடையவன் ஆவான். இவனுக்கு ஆண் குழந்தைகள் இரண்டும், பெண் குழந்தைகள் இரண்டும்

தோன்றித் தீர்க்கமான ஆயுளுடன் விளங்கும் என்று கூறுகிறோம். பெருமை தரத்தக்க வியாபாரங்கள் செய்வான். நிலபுலங்களையும் சேர்ப்பான்.

## தாயின் முற்பிறவி

33. வயதுமே தீர்க்க மென்றோம் வறுமையெப் போதும்
[காணான்
உரைக்கிறோ மன்னே பூர்வம் ஓதுரு தலத்தி லேதான்
திருகிலாச் செங்குந்த வம்சம் ஜனித்துமே வறுமை
[யின்றி
அறுமுகன் பத்தி பூண்டு அச்சென்மம் வினையில் லாமல்;

33. அந்தச் சகோதரனுக்குத் தீர்க்கமான வயது உண்டு என்று கூறினோம். தரித்திரத்தை எப்பொழுதும் அறிய மாட்டான். இனி, ஜாதகன் தாயின் முற்பிறவி பற்றிச் சொல்லுகிறோம். திருவோத்தூர் என்ற ஸ்தலத்தில் குற்றமில்லாத செங்குந்தர் மரபில் தோன்றி, தரித்திரம் இல்லாமல், ஆறுதிருமுகங்களை யுடையமுருகக் கடவுள் மீது பக்திபூண்டு, அப்பிறப்பில் தீவினை எவையுமின்றி வாழ்ந்து;

## தாயின் மறுபிறவி

34. காலன்தன் நாடு சேர்ந்து கஞ்சனால் வரையப் பட்டுச்
சீலமாம் குலமு தித்தாள் செப்புவோ மிவள்பின் ஜன்மம்
மால்மனை வேங்க டத்தில் வருகுவாள் பிரம்ம சேயாய்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தது தப்பா
[தாகும்.

34. எமபுரமடைந்து, மீண்டும் தாமரை மலரில் எழுந்தருளி யிருப்ப வனாகிய பிரமதேவனால் படைக்கப்பட்டு, நல்ல ஒழுக்கமுள்ள வேளாளர் குலத்தவளாக இப்பிறப்பில் தோன்றினாள். தாயின் மறுபிறவியைச் சொல்லுவோம். திருமால் உறையுமிடமாகிய திருவேங்கடம் என்னும் திவ்வியத் தலத்தில் அந்தணர் குலப் பெண்ணாகப் பிறப்பாள். ஆலகால விஷத்தை யருந்திய சிவபெருமான் தேவியே! நாங்கள் கூறியவை தவறாதனவாம்.

## ஜாதகனுடைய தாய் தந்தையரின் மரணகாலம்

35. எண்ணஞ்சு நாலு வாண்டில்
இயம்புவோ மன்னை கண்டம்
திண்ணமாய் முப்ப தாண்டில்
செப்புவோம் தந்தை கண்டம்

வண்ணமா யிவன்பின் ஜன்மம்
அறிவிப்போம் காஞ்சி தன்னில்
கண்ணிய விக்கு லத்தி
லுதிப்பனு மென்று சொல்வோம்.

35. ஜாதகனுக்கு நாற்பத்து நான்காம் வயதில், அவன் தாய்க்கு மரணம் ஏற்படும் என்று சொல்லுவோம். இவனது முப்பதாம் வயதில் நிச்சயமாய் தந்தையின் மரணத்தை கூறுவோம். தந்தையின் மறுபிறவி பற்றிச் சொல்லுவோம். காஞ்சிபுரத்தில் மதிப்புடைய இக்குலத்திலேயே பிறப்பான் என்று கூறுவோம்.

## ஜாதகனுடைய மரணகாலம்

36. பாலகன் மரண காலம் பகருவோ மறுப தாண்டில்
சாலவே கும்ப மாதம் சதுர்த்தசி வளர்பக் கத்தில்
ஏலவே வுடல மேகும் இயம்புவோ மிவன்பின் ஜன்மம்
சீலமாங் காளாத்தி தன்னில் ஜனிப்பனும் பிரம்ம சேயாய்

36. ஜாதகன், மரணமடையும் காலத்தைச் சொல்லுவோம். தனது அறுபதாம் வயதில் மாசி மாதம், பூர்வபக்ஷம் சதுர்த்தசி யன்றும் மரண மடைவான். இவனது மறுபிறப்புப் பற்றிக் கூறுவோம். தூய ஒழுக்கமுள்ள சான்றோர் வாழும் காளஹஸ்தி என்னும் க்ஷேத்திரத்தில் அந்தணர் மரபில் பிறப்பான்.

## ஜாதகனுடைய கண்டமும் நிவர்த்தியும்

37. அத்திரி மறுத்துச் சொல்வார் ஐந்தாண்டுள் ஜாத [கர்க்குக்
குத்தமாம் கண்ட மென்றோம் குறுமுனி தடுத்துச் [சொல்வார்
பத்தினுக் குடையோ னலில் பதிந்துமே மதிக்குப் [பத்தில்
வித்தகர் குருவும் தங்க வயதுமே தீர்க்க மென்றோம்.

37. அத்திரி முனிவர் மேற் கூறியதனை மறுத்து ஒன்று கூறுவார். பிறந்து ஐந்து வருஷங்களுக்குள் ஜாதகனுக்குக் கெடுதி யுண்டாகத்தக்க கண்டம் ஏற்படும் என்று சொன்னோம். அத்திரி முனிவர் கூற்றை ஏற்காமல் அகத்தியர் பின்வருமாறு கூறுவார். பத்தாவது இடத்துக்குரிய புதன் நாலாம் இடத்திலும், சந்திரனுக்குப் பத்தாம் இடத்தில் குரு தங்கியிருப்பதாலும், ஜாதகனுக்கு வயது தீர்க்கமாம் என்று கூறினோம்.

## ஜாதகன் ஜனனகால தசையிருப்பு

38. என்னநோய் வந்த போதும் இரவிமுன் பனிபோல்
[நீங்கும்
அன்னையும் தந்தைக் கேதான் அவனுமே கருமம்
[செய்வன்
மன்னவன் ஜனன காலம் [1]மந்தன்தன் தசையைந்
[தாண்டும்
பிந்தியும் திங்கள் பத்தும் பேசினோம் பூர்வ பாகம்.

38. ஆதலின், இந்த ஜாதகனுக்கு எந்தக் கொடிய வியாதி வந்தாலும் அது, சூரியனுக்கு முன்பு பனி போல் விலகிவிடும். தனது தாய்க்கும், தகப்பனுக்கும் இவன் இறுதிக் கடன்கள் செய்வான். ஜாதகன் ஜனன காலத்தில் சனி மஹா தசையில் இருப்பு ஐந்து வருஷங்களும் பத்து மாதங் களுமாம். இவ்வாறு முதல் பாகத்தைக் கூறினோம்.

1, சனி

# ஜாதகம் 85

## ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் மீன மாகச் சனிகேது [1]சாடி யாகப்
[2]புந்தி [3]பொன் [4]வெள்ளி மேடம் [5]புரவியோன் [6]நந்தி யாக
[7]மந்தர கயிறு சிங்கம் [8]வக்கிரன் [9]கோல தாக
இந்தவாறு கிரகம் நின்று இலக்கினம் கன்னி யாக;

1. சந்திரன் மீனத்திலும், சனி கேது கும்பத்திலும், புதன், குரு சுக்கிரன் மேஷத்திலும், சூரியன் விருஷபத்திலும் இராகு சிம்மத்திலும், அங்காரகன் துலாத்திலும் ஆக இவ்விதம் கிரகங்கள் நிற்க, கன்னியா லக்கினத்தில் பிறந்த ஒருவருக்குப் பலன்களை ;

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | புதன் குரு சுக்கிரன் | சூரியன் | |
| சனி கேது | இராசி சக்கரம் | | |
| | | | ராகு |
| | | அங்காரகன் | லக்கினம் |

2. சொல்லுவீர் பலனை யென்று சுந்தரி கேட்கும் போது
வல்லவர் வதிஷ்டர் சொல்வார் ஆணது செனன [மாகும்

---

1. கும்பம்
2. புதன்
3. குரு
4. சுக்கிரன்
5. சூரியன்
6. விருஷபம்
7. ராகு
8. அங்காரகன்
9. துலாம்

இல்லமும் கீழ்மேல் வீதி எமன்வாச லெதிரில் பாழாம்
வல்லிமா காளி கீழ்ப்பால் வடதிசை மாரி தந்தி;

2. கூறுவீர் என்று பார்வதிதேவி கேட்கும்பொழுது, சகலகலைகளிலும் வல்லவராகிய வசிஷ்ட முனிவர் கூறுவார். இந்தக் கிரக நிலைக்கு ஆண் பிறப்பு உண்டாகும். அவன் பிறக்கும் வீடு கிழக்கு மேற்கான தெருவில் தெற்கு நோக்கிய வாயிலை யுடையது. வீட்டுக்கு எதிர்ப் பக்கம் பாழ டைந்து இருக்கும். காளிதேவி கோயில் வீட்டுக்குக் கிழக்கில் உள்ளது. வடக்குத் திசையில் மாரியம்மன் விநாயகப் பெருமான் ஆகியோர் ஆலயங் கள் உள்ளன.

## ஜாதகன் பிறக்கும் வீட்டு அடையாளங்கள்

3. தென்திசை தீப்பாஞ் சாலி செப்புமிவ் வடையா ளத்துள்
அன்னவன் சேட்ட னாக அருளுவான் கௌரி வர்க்கம்
இன்னவன் குடும்பச் சேதி யியம்புவோ மினிமே லாக
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

3. வீட்டுக்குத் தெற்குத் திசையில் துரோபதையம்மன் கோயிலுண்டு. சொல்லப்பட்ட இந்த அடையாளங்களுள்ள இடத்தில் இந்த ஜாதகன், தன் தந்தைக்கு மூத்த புதல்வனாக, கௌரீக மரபில் பிறப்பான். இவனுடைய குடும்பச் செய்திகள் பற்றி இனிமேல் சொல்லுவோம். உயர்ந்தவராகிய சிவபெருமானைக் கணவராகப் பெற்ற உத்தமியாம் பார்வதியம்மையே! மேலுங் கூறுவனவற்றைக் கேட்பாயாக.

## தந்தையின் சகோதரபாவம்

4 தந்தையின் துணைஆ ணொன்று சத்தியு மவ்வா றுகும்
அந்தவர் முன்னோ ராக அறைகிறோம் தாயே யாங்கள்
விந்தையா யவர்கள் சேதி விளம்புவோ மினிமே லாகச்
சுந்தர முடைய னாகும் தூருவான் வெளியூர் தன்னில்.

4. இந்த ஜாதகன் தந்தையுடன் பிறந்தவர்களில் சகோதரன் ஒருவனும் சகோதரி ஒருத்தியுமாவர். அவர்கள், தந்தைக்கு முன் பிறந்தோராவர் என்று பார்வதியம்மையே! நாங்கள் கூறுகின்றோம். அவர்களுடைய செய்திகளை இனிமேல் சொல்லுவோம். தந்தைக்கு முன் தோன்றிய சகோதரன் அழகுடையவனாக விருப்பான். வெளியூரை நாடிச் செல்லுவான்.

## தந்தையின் முன் சகோதரன் விவங்கள்

5. இருவிதக் கல்வி யுண்டு யாவர்க்கு நல்லோ னுவன்
அரசரால் தொழிலு மேற்பன் அடாவடி கூறு னாகும்

வரிவிழி மார்கள் மோகன் வெஞ்சினம் வெளிக்காட்
[டாதான்
குறையென்றோர்க் குதவி செய்வன் குணமது நல்ல
[தாகும்.

5. இரண்டுவிதமான கல்வியுடையவன். உலகில் அனைவருக்கும் நல்லவனாக இருப்பான். அரசாங்கத்தில் உத்தியோகம் ஏற்பான். அடாவடியாக ஒன்றும் பேசமாட்டான். செவ்வரி பரந்த கண்களை யுடைய பெண்களிடம் மையல் கொள்ளுவான். கோபத்தை வெயில் தெரியப் படுத்தாதவன். குறையென்று தன்னிடம் வந்தவர்கட்கு உதவிகள் செய்வான். நல்ல குணமுடையவன்.

6. ஊகைவான் நுணுக்கம் தேர்வன்
உறுதியில் லாத நெஞ்சம்
ஆகம மறியவா னுகும்
அல்லபுத் திகளும் கொஞ்சம்
தோகையு மொன்றே யென்றோம்
சுதர்களும் தோன்றும் தீதாம்
போகபாக் கியங்கள் பூர்வம்
பெற்றுப்பின் குறைவு முண்டு.

6. ஊகித்து உணரும் ஆற்றல் பெற்றவன். நுட்பமான செய்திகளையும் தெளிவாக உணருவான். திடமில்லாத மனத்தினன். ஆகம சாஸ்திரங்களை உணருவான். அற்பமான புத்தியையும் சிறிதே யுடையவன். இவனுக்கு மனைவி ஒருத்தியே என்று சொன்னோம். புதல்வர்களும் தோன்றி நஷ்டமாவர். முதலில் சிறந்த யோகங்களை அநுபவிப்பான். பாக்கியங்களை அடைவான். பிற்காலத்தில் மேற் கூறிய பாக்கியங்களில் குறைவும் உண்டாகும்.

## தந்தையின் சகோதரியின் இயல்புகள்

7. வயதுமே தீர்க்க மெய்தும்
மாதுவின் குணத்தைச் சொல்வேன்
நயமுடன் வார்த்தை யுண்டு
நடைநன்மை சீலி யாகும்
அயலார்கள் குற்றம் சொல்லாள்
ஆபத்தைச் சிலர்க்குக் காப்பள்
வியமுள மனத்த ளாகும்
வித்தகி யோக சாலி;

7. அந்தச் சகோதரன் தீர்க்காயுள் உடையவனாக இருப்பான். இனி, தந்தையின் சகோதரி குணங்களைச் சொல்லுவோம். நயமாகப் பேசுந் தன்மை உள்ளவள். நன்னடத்தை யுடையவள். சிறந்த விரதங்களை ஏற்பவள். அயலார் குற்றங்களை எடுத்துச் சொல்லாதவள். சிலருக்கு ஏற் படும் ஆபத்துகளிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவாள். விரயம் செய்யும் எண்ணங் கொண்டவள். இவள் அதிர்ஷ்ட முள்ளவள்.

8. மாரனு மேல்பால் நேரும் மருவுவாள் தாயில் லத்தில்
மாரனோ டொத்து வாழ்வள் மைந்தர்கள் காணா ளாகும்
நாரிக்குச் சுதர்கள் தோஷம் நவின்றகா ரணங்க [ளென்ன
காரிழை பூர்வம் தன்னில் கலந்தது வந்தத் தோஷம்.

8. இவளுக்குக் கணவன் மேல் திசையிலிருந்து வாய்ப்பான். இவள் (தந்தையின் சகோதரி) தன் தாய் வீட்டில் கணவனோடு ஒற்றுமையாய்ச் சில காலம் வசிப்பாள். புத்திர பாக்கியம் அடையாதவள் ஆவாள். இங்ஙனம் முனிவர் சொல்லவே, என்ன காரணத்தால் இவளுக்குப் புத்திர பாக்கியம் இல்லை யென்று கூறினீர்கள்? எனப் பார்வதிதேவி கேட்டாள். முனிவர் கூறுகிறார். இவளுடைய முற்பிறப்பில் ஒரு தீவினை ஏற்பட்டது.

## தந்தையின் சகோதரியின் முற்பிறவி

9. என்னஊழ் செய்யதா ளதனை யியம்புவீர் முனியே [நீர்தாம்
முன்ஜன்மம் தோகை கீழ்பா லுதித்தஊர் தன்னி [லேதரன்
கன்னிகை கங்கை சேயாய்க் கலந்துமே பெருமை [பூண்டு
பொன்பணி வுடைய ளாகிப் பூவையும் வாழு நாளில்;

9. இவள் முற்பிறப்பில் என்ன தீவினை செய்தனள்? அதனை, முனிவரே! தாங்கள் கூறுவீராக என்று பார்வதிதேவி கேட்கவும், முனிவர் சொல்லுகிறார். முற்பிறப்பில் தோகை மலைக்குக் கிழக்கிலுள்ள தொரு ஊரில், இவள் வேளாளர் குலத்தவளாய்ப் பிறந்தாள். பெருமை யடைந்து, பொன், ஆபரணங்கள் இவைகளை யுடையவளாய் இவள் வாழ்ந்து வரு கின்ற காலத்தில்,

10. பஞ்சையா யேழை மாது பாலர்க்கு அன்னம் வேண்டி
கெஞ்சினாள் மாது பக்கல் கிளிமொழி வார்த்தை யின்றி
மிஞ்சிய வார்த்தை சொல்லி விரட்டினா ளேழை தன்னை
வஞ்சியு மனவெ றுப்பா லறைந்தசா பத்தைக் [கேண்மோ.

10. கதியற்ற ஏழைப் பெண் ஒருத்தி, பசியால் வருந்தும் தன் குழந்தைக்குக்கு உணவு வேண்டி இவளிடம் வந்து கெஞ்சிக் கேட்டனள். இவள் (தந்தையின் சகோதரி) அந்த ஏழைப் பெண்ணிடம் நல்வார்த்தைகள் கூறுமல், கொடிய சொற்களைச் சொல்லி வைது, விரட்டி விட்டாள். அதனுல் மனவருத்த மடைந்த ஏழைப் பெண் கூறிய சாபத்தைக் கேளுங்கள்.

## ஏழையின் சாபம்

11. பாலர்சோ றீயாப் பாவி பருகாது சுதர்கள் தானும்
சாலவே பின்ஜன் மத்தில் சந்ததி காணு தாகும்
ஏலவே சொல்லிச் சென்ருள் எய்திற்று வந்தச் சாபம்
ஞாலமேல் வேறு காணுள் நாயகி கேட்டி டாயே.

11. பசியுடனுள்ள குழந்தைகளுக்கு அன்னமளிக்க மறுத்து என்னை விரட்டிய பாவியே! உனக்குக் குழைந்தைகள் நிலையா. மறுபிறப்பிலும் உனக்குச் சந்ததி இராது; என்று கூறிவிட்டு சென்ருள், அந்த ஏழைப் பெண். அந்தச் சாபம் இவளைப் பற்றியது. இது தவிர வேறு தோஷம் எவையுமில்லாதவள். தலைவியே! மேலுங் கேட்பாயாக.

12. அந்தியக் காலம் தன்னில் அவள்சுதர் யாவு மற்று
தன்மன சஞ்ச லத்தால் சண்டன்தன் பதிக்குப் புக்கு
பொன்னவன் வரையப் பட்டுப் பிறப்பளா மந்த மாது
துன்மையா யேழை சாபம் சேர்ந்திடு மிச்சென் மத்தில் ;

12. தனது கடைசிக் காலத்தில் இவள் தன்னுடைய குழந்தைகள் எல்லாவற்றையும் இழந்தவளாய், மனத்தில் மிக்க சஞ்சலம் அடைந்து, மரண மடைந்து. மீண்டும் பிரம தேவனுல் படைக்கப்பட்டு, இக்குலத்தில் ஜாதகன் தந்தைக்குச் சகோதரியாகப் பிறப்பாள் இந்தப் பெண். இப் பிறவியில் ஏழைப்பெண்ணின் சாபம் அவளைச் சேரும்.

13. சுதர்களு காணு ளாகும் செப்புவீ ரதற்குச் சாந்தி
எதுவிதக் கிரியை செய்யில் இலகாது சுதர்கள் தானு
மதிபதி பொறுமை சாலி வருவோரை யாத ரிப்பள்
சதிசெய்யா மனத்த ளாகும் சற்பாத்திரி யென்று
[சொல்வோம்.

13. புத்திர் பாக்கியத்தை இப்பிறவியில் அடையமாட்டாள். அது நீங்கச் சாந்தியொன்று சொல்லுங்கள். எந்த விதமான பரிகாரங்கள் செய்தாலும் இவளுக்குக் குழந்தைகள் தோன்ரு. இவள் பொறுமையுடையவள். வீட்டுக்கு வருபவர்களை ஆதரித்துப் போற்றுவாள். பிறருக்கு குற்றம் செய்ய நினையாத மனத்தினள். நல்ல தன்மையுள்ளவள் என்று சொல்லுவோம்.

## தந்தை சகோதரியின் மறுபிறவி

14. மறுஜன்மம் வள்ளூர் தன்னில்
மறைக்குல முதிப்பா ளாகும்
திருமக ளிச்சென் மத்தில்
செய்தபுண் ணியங்க ளென்ன
பெரும்புத்தி யுடையா ளாயும்
பேச்சதைக் காத்த தாலும்
வருவோரை யாத ரித்தும்
வரன்மனம் போலே வாழ்ந்தும் ;

14. மறுபிறப்பில் திருவெவ்வுளூரில் அந்தணர் மகளாகப் பிறப்பாள். இவள் இப்பிறப்பில் செய்த நல்வினைகள் என்னவென்று கூறுங்கள் ? எனப் பார்வதிதேவியார் கேட்க முனிவர் சொல்லுவார். பெரும்புத்தி யுடைய வளாகவும், சொன்ன சொற்களைக் காப்பாற்றியும், வீடுதேடி வருபவர் களுக்கு ஆதரவு கொடுத்தும், கணவன் மனம்போல் வாழ்ந்தும்,

## ஜாதகன் தந்தையின் இயல்புகள்

15. அறமதி லிச்சை வைத்தும் அவளுமே வாழ்வ தாலே
மறைக்குல முதிப்பா ளாகு மறைகிறேம் தந்தை சேதி
பரதசங் கீதம் கற்பன் பலருக்கு நல்லோ னுவன்
திருகிலாக் குணத்த னுகும் தீரமில் லாத நெஞ்சம்.

15. தருமச் செயல்கள் செய்வதில் விருப்பம் கொண்டும் இவள் வாழ்வதால் மறுபிறப்பில் அந்தணர் மரபில் தோன்றுவாள். இனி, ஜாதகன் தந்தையின் செய்திகளைச் சொல்லுகிறேம். பரத நாட்டியம் சங்கீதம் இவை களைக் கற்பான். பல பேர்களுக்கு நல்லவனுக இருப்பான். குற்றமில்லாத குணங்களை யுடையவனுவான்; தைரியமில்லாத மனத்தினன்.

16, தந்தையி னுஸ்தி தன்னைத் தானவ னுஸ்தி செய்வன்
பிந்தியோ சனையு முண்டு பிறர்குற்றம் புகலா னுகும்
விந்தையா யல்ப வஸ்து நுகருவான் உணைச்ச
[லுள்ளான்
தந்தன மிச்சை யில்லான் தந்திர வார்த்தை யுண்டு.

16. தன் தந்தையால் தேடி வைக்கப்பட்ட பொருளை இவன் அழித்து விடுவான். பின் யோசனையுள்ளவன். அயலார் குற்றங்களை எடுத்துச் சொல்லமாட்டான். பிறர் வியக்கும்படி அற்பப் பொருள்களின்மீது ஆசை வைப்பான். மெல்லிய சரீரமுடையவன். தனக்குப் பணம்வேண்டும் என்ற விருப்பம் இல்லாதவன். தந்திரமாகப் பேசுவான்.

17. சிலவேநாள் வணிபம் செய்வன்
தேறினோர் தொண்டு பூண்பன்
பலஊரில் திரிவா னாகும்
பஞ்சைபோ லுணவு கொள்வன்
கலகத்தைக் கூறு னாகும்
காதலி மாாக வீஷ்டன்
குலவிடும் சூதே யென்றோம்
கோதையே கேட்டி டாயே.

17. சிலகாலம் உலகில் வியாபாரம் செய்வான். தெளிந்த அறிவுடைய பெரியார்கட்குத் தொண்டு செய்வான். பல ஊர்களில் அலைந்து திரிவான். கதியற்ற ஏழைகளைப்போல பரபரப்புடன், உணவு கொள்ளுவான். கலகத்தை யுண்டாக்கும் சொற்களைப் பிறரிடம் பேசமாட்டான். பெண்களுக்கு விருப்பமானவன். இவனிடம் வஞ்சனை நிறைந்திருக்கும் என்று சொன்னோம். பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

## தந்தையின் முற்பிறவி

18. இன்னவன் முன்ஜன் மத்தை
இயம்புவோம் திருவா ரூரில்
கன்னிமார் தமக்குக் கல்வி
கற்பிக்கும் குலமு தித்து
உன்னத பரதம் செய்து
உத்தமன் வாழ்ந்து மேதான்
முன்னோர்க்குத் தொண்டு பூண்டு
மெஞ்ஞானி யுறவு முண்டு ;

18. இவனுடைய தந்தையின் முற்பிறவிபற்றிக் கூறுவோம். திருவாரூரில் பெண்களுக்கு இசைக்கல்வியும் பரத நாட்டியமும் கற்பிக்கும் நட்டுவர் மரபில் தோன்றி, பரத நாட்டியங்களைச் செய்து வாழ்ந்து, பெரியோர்கட்குத் தொண்டு செய்துகொண்டு, மெய்யுணர்வை யுடைய சான்றோர் தொடர்பைப் பெற்று,

19. காலன்தன் நாட டைந்து கஞ்சனால் வரையப் பட்டு
சாலவே வுதித்தா னென்றோம் தவசிபோல் பின்பால்
[வாழ்வன்
ஏலவிக் குணத்தா னுக்கு இறங்குவா னிந்தப் பாலன்
பாலன்தன் குணத்தைச் சொல்வேன் பலருக்கு நல்லோ
[னவன்.

19. மரணமடைந்து, பிரமதேவனால் மீண்டும் படைக்கப்பட்டு, இப் பிறப்பில் ஜாதகன் தந்தையாகப் பிறந்தான் என்று சொன்னோம் தவஞ்செய்

யும் முனிவர்போல் பிற்காலத்தில் வாழ்வான். இவ்விதக் குணங்களை யுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனாகப் பிறப்பான். இவனுடைய குணங்களைக் கூறுவோம். எல்லோருக்கும் நல்லவனாக வாழ்வான்.

## ஜாதகன் குணங்கள்

20. வித்தையு மூன்று கற்பன் விவேகியாம் சிவந்த மேனி
சத்தியம் கூறு வானும் தந்தையார் சிதங்கள் விருத்தி
புத்தியில் பெரிய னவன் போசன வறுமை காணன்
நித்தியம் சீல னவன் நேமியோர் மெச்ச வாழ்வன்.

20. மூன்றுவிதக் கலைகளை யுணருவான். விவேகமுடையவன். சிவந்த உடலுடையவன். உண்மையையே பேசுவான். தந்தையால் தேடிவைக்கப்பட்ட சொத்துக்கள் இவன் காலத்தில் விருத்தியாகும். புத்தியில் பெரியவன். போஜன தரித்திரம் இல்லாதவன், நல்லொழுக்கமுடையவன். உலகினர் பாராட்டும்படி வாழ்க்கை நடத்துவான்.

21. முன்தந்தை பக்க லேகி வித்தையு மதிகம் கற்று
மன்னரால் ஜீவ னங்கள் மருவிடும் பால னுக்குப்
பின்னமில் லாத தேகி புதிதான வில்லம் செய்வன்
கன்னியர் மோக னவன் கட்செவி போலே கோபம்.

21. தனது பெரிய தகப்பனாரிடம் சென்று மிகுதியாகக் கல்விகற்பான். இந்த ஜாதகனுக்கு அரசாங்க அலுவலால் ஜீவனம் செய்யும் நிலையுண்டாகும். அவயவங்களில் ஊனமில்லாத சரீர அமைப்புள்ளவன். புதிய வீடு ஒன்று கட்டுவான். பெண்களிடம் மையலுள்ளவன், பாம்பு போன்று சீறியெழும் கோபமுடையவன்.

22. அவசர மனத்த னாகும் அவன்தாதை போலே வாழ்வன்
தவசிகட் கன்ன மீவன் தனமது பெருக்கம் செய்வன்
நவனிகள் விருத்தி செய்வன் நற்றந்தை குணமில்
[லாதான்
பவமன மில்லான் நல்லன் பார்வதி கேட்டி டாயே.

22. தீர ஆலோசனை செய்யாமல், அவசரப்பட்டு முடிவு செய்யும் மனத்தினன். அவனுடைய பாட்டனார்போல் வாழ்வான். தவம் இயற்றும் பெரியோர்களுக்கு உணவு அளிப்பான். செல்வத்தைப் பெருக்குவான். நில புலங்களை விருத்தி செய்வான். தன் தந்தையைப் போன்ற குணங்களில் லாதவன். தீய எண்ணமில்லாத மனத்தினன். நல்லவன், பார்வதிதேவியே! மேலும் கேட்பாயாக.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

23. இன்னவன் துணைவர் தம்மை யியம்புவோம் பின்பெண்
[ணென்று
அன்னவள் தீர்க்க மென்றோம் அணுகாது துணையா
[ணுந்தான்
என்னகா ரணத்தி னாலே இவன்துணை தோஷம்
[சொன்னீர்
துன்சனி கேது ஆறில் தொடர்ந்ததால் தோஷம்
[சொன்னோம்.

23. இந்த ஜாதகனுடன் பிறந்தவர்களைப் பற்றிச் சொல்லுவோம். இவனுக்குப் பின்பிறந்த பெண்ணொருத்தி யுண்டு. அவள் தீர்க்கமாக இருப்பாள் என்று சொன்னோம். இவனுக்கு உடன்பிறந்த ஆண் இல்லை. என்ன காரணத்தால் அங்ஙனம் கூறினீர்கள் என்று பார்வதிதேவி கேட்டனள். சனி கேது ஆகியோர் ஆறும் இடத்தில் தங்கியிருப்பதால் அவ்வாறு சொன்னோம் என்று முனிவர் விடை கூறினர்.

## ஜாதகனின் திருமணக் காலம்

24. பாலகன் மணத்தின் காலம் பகருவோ மிருப தாண்டில்
நீலியும் வடபால் தன்னில் நேருவா ளன்னை வர்க்கம்
சாலவே யவள்கு ணத்தைச் சாற்றுவோம் சிவந்த மேனி
மால்மனை யொப்ப தாகும் வறுமையெப் போதும்
[காணாள்.

24. ஜாதகன் திருமணக் காலத்தை இனிமேல் சொல்லுவோம். இவனது இருபதாம் வயதில் வடக்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவள் ஜாதகனின் தாய் வர்க்கத்தைச் சேர்ந்தவள். அவள் குணங்களைக் கூறுவோம். சிவந்த உடலுடையவள், மஹாவிஷ்ணுவின் தேவியாகிய இலட்சுமி போன்றவள். தன் வாழ்க்கையில் எப்பொழுதும் தரித்திரத்தை யறியமாட்டாள்.

25. வந்தபின் வரன்யோ கம்தான் மறுத்துரை கூறா ளாகும்
பந்தணி வயது தீர்க்கம் பாலர்கள் பலத்தைச்
[சொல்வேன்
ஐந்துமே தோன்று மென்றோம் அவைகளி லாண்பா
[லிரண்டு
விந்தையாய்க் கன்னி யிரண்டு மேவிடும் தீர்க்க மாக.

25. இவள் வந்த பிறகு கணவனுக்கு அதிர்ஷ்டம் அதிகமாகும். கணவன் சொற்களை மறுத்துக் கூறாதவளாவள், இவள் தீர்க்கமான ஆயுள்

உடையவள். இனி, புத்திர பாக்கியம் பற்றிச் சொல்லுவோம். ஐந்து குழந்தைகள் தோன்றும். அவற்றில் இரண்டு ஆண் குழந்தைகளும் பெண் குழந்தைகள் இரண்டும் தீர்க்க ஆயுளுடன் விளங்கும்.

## ஜாதகனின் முற்பிறவி விவரம்

26. முதல்சுதர் தோஷ மெய்து முரைக்கிறே மிவனின் [பூர்வம்
விதியவன் மலையி லேதான் விளங்கின னிரட்டி வம்சம்
பதியினில் திருவு முண்டாய்ப் பலசகா யங்கள் செய்து
அதிதிகட் கன்ன மீந்து அச்சென்மம் பவமில் லாமல்;

26. முதலில் பிறக்கும் குழந்தை தோஷமாம். இந்த ஜாதகனின் முற்பிறவியைச் சொல்லுகிறோம். திருவண்ணாமலையில் இரட்டியார் மரபில் தோன்றினான். உலகில் செல்வத்தை யடைந்து, பலருக்குப் பல உதவிகள் செய்து, விருந்தினர்கட்கு உணவு அளித்து, அப்பிறவியிலே தீவினைகள் எவையுமில்லாமல்,

27. தென்திசைக் கால நாடு சென்றுமே பிரமன் லக்கம்
அன்னவ னுதிப்பா னாகும் அறைகிறோம் யோகச் சேதி
முன்தந்தை யுதவி யாலே மேவுவா னிந்தப் பாலன்
மன்னரால் ஜீவ னங்கள் மருவிடும் பெருமை யோனும்.

27. மரணமடைந்து, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இப் பிறப்பில். இக்குலத்தவனாகப் பிறப்பான். இவனுடைய யோகச் செய்திகளைக் கூறுகிறோம். தன் பெரிய தகப்பனார் உதவியால் இவனுக்கு அரசாங்க உத்தியோகம் ஏற்பட்டு ஜீவனம் செய்வான். மேன்மை இவனை யடையும்.

## ஜாதகனுடைய யோகவிவரம்

28. எந்தக்கா லத்தில் நேரும் இயம்புவீர் முனியே நீர்தாம்
வந்தவ னிருபா னிரண்டு வாண்டினில் தொழிலும் [வாய்க்கும்
பிந்தியு மன்பான் மூன்று ஆண்டுக்கு மரசு செய்வன்
தந்தியை வளர்த்த யெங்கள் தயாபரி கேட்டி டாயே.

28. எந்தக் காலத்தில் இவனுக்கு மேற்சொன்ன பெருமைகள் ஏற்படும் என்று முனிவரே! கூறியருளுங்கள் என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் சொல்லுகிறார். ஜாதகனுக்கு இருபத்திரண்டாம் வயதில் அவனது உத்தியோகம் உயரும். தனது ஐம்பத்து மூன்றும் வயதுவரை அரசாங்க உத்தியோகத்தில் மேன்மையாக இருப்பான். யானைமுகக் கடவு-

ளைப் புதல்வராகப் பெற்று வளர்த்த கருணை நிறைந்த எங்கள் தாயே! கேட் பாயாக.

29. அதிகாரத் தொழிலும் செய்வன் ஆளடி யதிக முண்டு
நிதியது சேர்ப்பா னுகும் நிருபர்க்கு இவன்சொல் [மேன்மை
அதிபனும் தேடும் செம்பொன் ஆரு யிரமென் றோதும்
பதியது விருபா னைந்தில் படைப்பனு மென்று [சொல்வோம்.

29. பிறரை அதிகாரம் செய்யும் உயர்ந்த பதவியை வகிப்பான். ஆள் பலம் மிகுதியாக இவனுக்கு உண்டு. செல்வத்தைச் சேர்ப்பான், அரசர் கட்கு இவன் கூறும் சொற்களில் மதிப்பு ஏற்படும். இந்த ஜாதகன் சேர்க்கும் மொத்த செல்வம் ஆருயிரம் பொன் என்று சொல்லுவோம். புதிய வீடு ஒன்றைத் தனது இருபத்தைந்தாம் வயதில் கட்டுவான் என்று கூறுவோம்.

## தாயின் குணங்கள்

30. அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுண்டு [பொறுமை சாலி
சொன்னசொல் சுகமே யாகும் சீலியாம் சமயோ [கத்தாள்
தன்துணை யாண்பா லொன்று சாற்றுவோம் தீர்க்க மாக
முன்ஜன்மம் தக்கோ லத்தி லுதித்தனள் வைசியச் [சேயாய்.

30. இனி, ஜாதகன் தாயின் குணங்களைச் சொல்லுவோம். நல்ல அழகுடையவள். பொறுமைக்குணம் படைத்தவள். இவள் கூறும் சொற் கள் சுகந்தருவனவாயிருக்கும். நல்லொழுக்க முடைவள். இன்பதுன்பங் கலந்த சமமான வாழ்க்கை யுடைவள். இவளுக்குச் சகோதரன் ஒருவன் தீர்க்காயுளுடன் விளங்குவான் என்று கூறுவோம். இவள் தனது முற்பிறவி யில் தக்கோலத்தில் வைசியக் குலத்தில் தோன்றினுள்.

## தாய் செய்த தீவினை

31. பாலிகை வாழு நாளில் பதர்வார்த்தை யொருபெண் [பேரில்
ஆலம்போல் சொல்லும் போது அவள்சாபம் புகலக் [கேண்மோ

நீலிக்கு என்னைப்போல் பெண்பால் நேராது துணைபின்
[ஜன்மம்
கோலமாம் தாயில் லங்கள் கொழுநனும் பிணியால்
[வாடும்

31. இவள் வாழ்ந்து வருகின்ற காலத்தில், ஒரு பெண்ணின் மீது கொடிய நஞ்சு போன்று, அற்பமான பழிச்சொற்களைச் சொல்லும்போது, மனம் நொந்து அந்தப்பெண் சாபமிட்டதைக் கேளுங்கள். உனக்கு என்னைப் போன்ற சகோதரி மறுபிறப்பில் இல்லாமல் போவாள். தாய் வீட்டில் துன்பங்கள் ஏற்படும். கணவனும் நோயால் அவதியுறுவான்,

32. இன்னமும் பலவார் சொல்ல எய்திற்று வந்தச் சாபம்
கன்னிகை யந்தி யத்தில் கழறுவாய் பிணியும் கண்டு
தென்திசைக் கால நாடு சென்றுமே வந்தா ளென்றோம்
தன்துணை பெண்பால் காணாள் தாயில்ல மலைச்ச லுண்டு

32. என்றும், இன்னும் பலவிதமாகவும் சாபமிட்டாள். அந்தச் சாபம் இவளை (ஜாதகன் தாய்) அடைந்தது. தனது இறுதிக் காலத்தில் பேசுகின்ற வாயில் புண்கள் ஏற்பட்டு மரணமடைந்தாள். மீண்டும் இப்பிறவியில் தோன்றினாள் என்று சொன்னோம். தன்னுடன் பிறந்த சகோதரி இல்லாதவள். தாய் வீட்டில் பலவித அல்லல்கள் உண்டு.

## தாயின் மறுபிறவி

33. வரனுக்கு வாயு பாதை மருவிடு மென்று சொல்வோம்
அரிவைபின் ஜன்மம் சொல்வேன் ஆலங்கா டதனி
[லேதான்
வருகுவாள் சைவச் சேயாய் ஆருறு விரண்டு வாண்டில்
மறலியின் பதிக்குச் செல்வள் மங்கையே கேட்டி டாயே.

33, தன் கணவனுக்கு (ஜாதகன் தந்தைக்கு) வாயு உபத்திரவம் ஏற்படும் என்று சொல்லுவோம். தாயின் மறுபிறவிபற்றிக் கூறுவேன். திருவாலங்காட்டில் சைவமரபில் தோன்றுவாள். ஜாதகனது முப்பத்தெட்டாம் வயதில் இவள் மரணமடைவாள். பார்வதியம்மையே! கேட்பாயாக.

## ஜாதகனுடைய தந்தை, பெரிய தந்தை, மரண காலங்கள்

34. இருபது வொன்ப தாண்டில்
இயம்புவோம் தந்தை கண்டம்
திருகிலா விருபான் மூன்றில்
செல்லுவான் பிதாவின் மூத்தோன்

*அறுபது வாண்டு தன்னில்*
*அணுகிய துலாமா தத்தில்*
*திருமகன் தனக்குக் கண்டம்*
*செப்புவோம் தாயே கேளாய்.*

34. ஜாதகன் இருபத்தொன்பதாம் வயதில் தந்தை மரணமடைவான். இவனது இருபத்து மூன்றும் வயதில் பெரிய தந்தை மரணமுறுவான். அறு பதாம் வயதில் ஐப்பசி மாதம் ஜாதகனுக்கு மரணம் நேரும் என்று சொல்லு வோம்; தாயே! கேட்பாயாக.

## ஜாதகன் மறுபிறவி

35. *மறுஜன்மம் காஞ்சி தன்னில்*
*வருகுவான் பிரம்ம சேயாய்த்*
*திருகிலாப் பிதாவின் ஜன்மம்*
*செப்புவோம் வான்மி யூரில்*
*உறைகுவான் வைசியச் சேயாய்*
*உரைத்தது தப்பா தாகும்*
*அருமறை முடிவி லாடு*
*மம்பிகை யாளே கேளாய்.*

35. மறுபிறப்பில் காஞ்சீபுரத்தில் இந்த ஜாதகன் அந்தணர் மரபின னுகப் பிறப்பான். இனி, தந்தையின் மறுபிறப்பைப் பற்றிச் சொல்லுவோம். திருவான்மியூரில் வைசிய மரபினனுகப் பிறப்பான். நாங்கள் கூறியன தவரு. அரிதற்கரிய வேதாந்தத்தின் உச்சியில் நடனமாடும் பார்வதியம் மையே! கேட்பாயாக.

## ஜனனகால தசை

36. *உதித்திடு காலந் தன்னில் உத்திரட்டாதி யிரண்டாம்*
*[பாதம்*
*விதியவன் தசையி ருப்பு விளம்புவோ மீரா ருண்டும்*
*அதனுடன் திங்கள் மூன்று அறிவித்தோம் பூர்வ பாகம்*
*நதிசடை யணிந்தோன் தேவி நவின்றது தப்பா தாகும்.*

36. ஜாதகன் பிறப்புக் காலத்தில் உத்திரட்டாதி நட்சத்திரம் இரண் டாம் பாதமாம். அப்பொழுது சனி தசையிலிருப்பு; பனிரண்டு வருஷங் களும் மூன்று மாதங்களுமாம். இங்ஙனம் முதல்பாகத்தைச் சொன்னேம். கங்கை நதியைச் சடையில் அணிந்துள்ள சிவபெருமான் தேவியே! நாங் கள் கூறியன தவருவாம்.

# ஜாதகம் 86

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதிபுதன் [2]புகர்[3]சேய் [4]பானு வந்திட [5]வீணை தன்னில்
நிதிகுரு [6]சால தாக [7]நீலனும் [8]சீய மாக
[9]அதிகயர் [10]நந்தி யாக [11]அவிடத்தில் கேது புக்க
[12]பதியது கன்னி யாகப் பகருவீர் பலனைத் தானே.

1. சந்திரன் புதன் சுக்கிரன் செவ்வாய் சூரியன் மிதுனத்திலும், குரு கும்பத்திலும், சனி சிம்மத்திலும், இராகு விருஷபத்திலும் கேது விருச்சிகத்திலும், தங்கியிருக்க, கன்னியா லக்கினத்தில் பிறந்த ஜாதகருக்குப் பலன்கள் சொல்லுவீர்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | சந்திரன் புதன் சுக்கிரன் அங்கா சூரியன் |
| குரு | **இராசி சக்கரம்** | | |
| | | | சனி |
| | கேது | | லக்கினம் |

## பிறந்த வீட்டின் அடையாளங்கள்

2. பார்வதி கேட்கும் போது பராசரும் கூறு கின்றார்
சீர்புக ழாண்பால் ஜன்மம் செப்புவோ மில்லந் தானும்

---

1. சந்திரன்
2. சுக்கிரன்
3. அங்காரகன்
4. சூரியன்
5. மிதுனம்
6. கும்பம்
7. சனி
8. சிம்மம்
9. ராகு
10. விருஷபம்
11. (விடம்) விருச்சிகம்
12. லக்கினம்

சாரியாய்க் கீழ்மேல் வீதி சண்டன்தன் வாடை யாகும்
கூறுவோ மெதிர்வீ டில்லை குஞ்சர கோஷ்ட மேற்கில்.

2. என்று பார்வதிதேவி கேட்கும் பொழுது, பராசர முனிவர் கூறத் தொடங்குகிறார். இது புகழுடைய ஆண் பிறப்பாகும். இவன் பிறக்கும் வீட்டைப் பற்றிச் சொல்லுவோம். வரிசையாக வீடுகளுள்ள கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு வாடையில் உள்ள வீடாகும் அது. எதிரே வீடு இல்லை என்று சொல்லுவோம். மேற்கில் விநாயகர் கோயில் உண்டு.

3. அருகரும் தென்மே லாகும் அரன்தந்தி கோஷ்டம் [மீனம்
கிரிகையு முத்திர மாகும் கீழ்த்திசை மாலு முண்டு
குறுகிய ஊரே யாகும் கூறிய வடையா ளத்துள்
பெருமையாய்க் கங்கை சேயாய்ப் பேசுவோம் கேளும் [தாயே.

3. அருக தேவன் ஆலயம் வீட்டுக்குத் தென் மேற்குத் திசையில் உள்ளது. சிவபெருமான், விநாயகர் ஆகியோர் ஆலயங்கள் வடகிழக்குத் திசையில் உள்ளன. துர்க்கையம்மன் கோயில் வடக்குத் திக்கில் இருக்கின்றது. கிழக்கில் திருமாலின் ஆலயம் ஒன்றுண்டு சிறிய ஊராகும். கூறப்பட்ட இவ்வடையாளங்கள் கொண்ட இடத்தில் இந்த ஜாதகன் வேளாளர் மரபில் பிறப்பான் என்று சொல்லுவோம் தாயே! கேளுங்கள்.

## இந்தச் சொதிட நூலில் எழுதப்படுவன

4. ஜாதகன் ஜனன யோகம் சாற்றிய வன்னை யோகம்
போதவே தந்தை யோகம் புத்திரர் மனைவி யோகம்
நீதியாய்த் துணைவர் யோகம் நிகழ்த்துவோம் முன்பின் [ஜன்மம்
சோதியா யிந்நூல் தன்னில் சொல்லுவோம் தாயே [கேளும்.

4. ஜாதகனின் ஜனன கால யோகங்கள், தாய் தந்தையர் யோகங்கள் புத்திரர் மனைவி யோகங்கள், உடன் பிறந்தோர் யோகங்கள், முற்பிறவி, மறு பிறவிச் செய்திகள் ஆகிய அனைத்தையும் பற்றி இந்தச் சோதிட நூலில் கூறுவோம். பார்வதியம்மையே! கேளுங்கள்.

## தந்தையின் குணங்கள்

5. தந்தையின் துணைவர் தம்மைச் சாற்றஆண் பலத்தைக் [காணும்
வந்திடும் கன்னி யொன்று வறைந்தனம் தீர்க்க மாக

---

1. வடகிழக்கு

எந்தையே பிதாகு ணத்தை இயம்புவோ மாநி றத்தன்
சந்ததம் கிருஷி செய்வன் சங்கரன் தொண்டு பூண்பன்.

5. ஜாதகன் தந்தையின் செய்திகளைச் சொல்லுவோம். இவனுக்கு ஆண்துணை தோன்றுவதற்குக் கிரக பலம் இல்லை. சகோதரி யொருத்தி தோன்றுவாள். இருவரும் தீர்க்கமாக விளங்குவர் என்று சொன்னோம். இனி, தந்தையின் இயல்புகளைக் கூறுவோம். மாநிறமுடையவன். விவசாயத் தொழிலை எப்பொழுதும் செய்வான். சிவபெருமானுக்குத் தொண்டு செய்வான்.

6. ரோமங்கள் நீட்சி யில்லான் நுவலுப தேசம் கொள்வன்
தாமதக் குணத்தா னுகும் சதுஷ்பாதம் விருத்தி
[யுள்ளான்
தீமையை யொருவர்க் கெண்ணுன் திருப்பணி வேலை
[செய்வன்
நேமங்கள் தவரு னுகும் நிகர்சித்திர வீடு செய்வன்.

6. தலைமயிர் நீளமில்லாதவன். பெரியோர் உபதேச மொழிகளை ஏற்றுக் கொள்ளுவான். எந்தச் செயல்களையும் தாமதமாகச் செய்யும் இயல்பினன். நாற்காலிகள் (கால்நடைகள்) விருத்தி யுடையவன். எவருக்கும் கெடுதி செய்ய நினையாதவன். கோயில் திருப்பணிகள் செய்வான். நியம நிஷ்டைகளைத் தவருது அநுஷ்டிப்பவன். அழகிய வீடு ஒன்று கட்டுவான்.

இதுவுமது

7. மூலச்சூ டுடைய னுகும் முன்கோபம் பின்பு சாந்தம்
ஞாலங்கள் விருத்தி செய்வன் நற்புத்தி மனைவி பட்சன்
சீலவான் அன்ன மீவன் ஜனனசகா யங்கள் செய்வன்
சாலவே கல்வி மானும் சந்தேக மனத்த னுமே.

7. மூலச் சூட்டு நோயுள்ளவன். முன் கோப முள்ளவன். உடனே சாந்த மடைவான். நிலபுலங்களைப் பெருக்குவான், நல்ல புத்தி யுடையவன். மனைவிபால் இஷ்ட முடையவன். ஒழுக்கமுள்ளவன். பிறருக்கு உணவளிப்பாள், ஜனங்களுக்கு உபகாரங்கள் செய்வான். மிகுந்த கல்வி யறிவுடையவன். எந்தச் செய்கையிலும் சந்தேகங் கொண்ட மனமுள்ளவன்.

8. கைமுதல் பின்னு லுள்ளான் கரமதில் ருத்ர ரேகை
பையவே வார்த்தை சொல்லும் பஞ்சைமே லிரக்க
[னுவன்
நையவே கூரு னுகும் நாதனுர் பூசை செய்வன்
பொய்யது அதிகம் பேசான் புகலுவான் கட்டு வார்த்தை.

8. பிற்காலத்தில் செல்வம் சேர்த்து வைப்பவனுவான். இவன் கையில் உருத்திர ரேகை யுள்ளவன். மெதுவாகப் பேசுவான். ஏழைகள் மீது இரக்கம் கொள்ளுவான். பிறர் வருந்துமாறு பேச மாட்டான். இறைவனுக்குப் பூசனைகள் புரிவான், அதிகமாகப் பொய்யுரை புகலான். தானுக்க் கற்பனை செய்து பேசுவான்,

## ஜாதகனுடைய சகோதரபாவம்

9. சொன்னவிக் குணத்தா னுக்குச்
சுதனுமே ஐந்தாம் ஜன்மம்
தன்னிலே வுதிப்பா னுகும்
தன்துணை முன்ஆண் காணுன்
கன்னிகை யொருத்தி தீர்க்கம்
காவலன் பின்னு லொன்று
பின்னையும் பெண்பா லவ்வார்
பேசுவோம் தீர்க்க மாக.

9. சொல்லப்பட்ட இந்தக் குணங்களை யுடைய தந்தைக்கு ஐந்தாம் பிறப்பாக இந்த ஜாதகன் தோன்றுவான். இவனுக்கு முன் தோன்றிய ஆண் துணை இல்லாதவன். சகோதரி யொருத்தி தீர்க்கமாக விளங்குவாள். இவனுக்குப் பின்னுல் சகோதரன் ஒருவனும் சகோதரி மற்றொருத்தியும் தோன்றி தீர்க்கமாக இருப்பார்கள்.

10. துணைவனு மெட்டாம் ஜன்மம்
துரவுநாள் கன்னி ஜன்மம்
அனையவே குணத்தைச் சொல்வேன்
அழகுளான் சிவந்த மேனி
வினையுள மனத்த னுகும்
வித்தையு மிரண்டு கற்பன்
சினமுளான் முரட னுவன்
சொல்லுக்கு வதிகம் சொல்வன்.

10. ஜாதகனுக்கு இளைய சகோதரனொருவன் எட்டாம் பிறப்பினனுன, விசாக நட்சத்திரம் கன்னியா லக்கினத்தில் பிறப்பான்; அவன் குணங்களைச் சொல்லுகின்றேன். அழகுடையவன். சிவந்த உடலுடையவன். தீய எண்ணம் நிறைந்த மனத்தினன். இருவிதக் கல்வி கற்பான். கோபமுடையவன். முரட்டுக் குணமுள்ளவன் ஆவான். சொல்லுக்குச் சொல் அதிகமாகப் பிறரை எதிர்த்துப் பேசுவான்.

# ஜாதகனுடைய இளைய சகோதரருடைய இயல்புகள்

11. குணமுளன் சீல ஞகும் குறிப்பினில் கொர்டுமை
[தோன்றும்
கணக்கினில் யூகை மிக்க காரியச் சமர்த்த ஞகும்
இணக்கமாய் சொல்லா ஞகும் இவன்சுக போஜ னத்தன்
மணக்கமிழ் பிரிய ஞவன் மாநிலம் விருத்தி செய்வன்.

11. குணமும் ஒழுக்கமுள்ளவன். இவனது பார்வையில் கொடுமைத் தன்மை காணப்படும். கணக்கில் யூக மிக்கவன். காரியங்கள் செய்வதில் சாமர்த்தியம் உடையவன். சிலரிடம் இணங்கிப் பேசாதவன். சுகமாகப் போஜனம் செய்வான். மணம் கமழ்கின்ற (உணவில்) விருப்பமுள்ளவன். நிலபுலங்களைப் பெருக்குவான்.

12. வறுமைக ளடையா ஞகும் மாநிலம் கீர்த்தி யேற்பன்
திருவரு ளுடைய ஞகும் ஜயம்செய்வ னெடுத்த வேலை
மருவரை வசித்தே வெல்வன் மனைவியு மொன்றே
[யாகும்
வரும்கன்னி வடகீ ழாகும் மைந்தரா ணிரண்டே யாகும்.

12. தன் வாழ்கையில் தரித்திர மடைய.மாட்டான். உலகில் மிக்க புகழை யடைவான். இறைவன் கருணை இவன் பால் உண்டு. தொடங்கிய செயல்களில் வெற்றி பெறுவான். பகைவர்களை அவர்களுடன் கூடி யிருந்தே வெல்லுவான். இவனுக்கு மனைவி ஒருத்தியே யாவாள். அவள் வடகிழக்குத் திசையிலிருந்து வாய்ப்பாள். இவனுக்கு ஆண் குழந்தைகள் இரண்டு உண்டு.

13. பெண்ணது அவ்வா ருகப் பேசுவோம் வயது தீர்க்கம்
பின்னமா யிவள்பின் ஜனனம் சேதமா மென்று
[சொல்வோம்
வண்ணமா மிரண்டு ஏழு வளமுறும் பெண்பால் தீர்க்கம்
அண்ணலைப் பூசை செய்யு மம்பிகை யாளே கேளாய்.

13. பெண் குழந்தைகளும் இரண்டு தோன்றும் என்று சொல்லுவோம். இக்குழந்தைகள் தீர்க்காயுளுடையனவாய் விளங்கும். பெண்ணுக்குப் பின் தோன்றும் குழந்தைகள் நாசமடையும் என்று சொல்லுவோம். இரண்டாவதும் ஏழாவதுமாகப் பிறந்த குழந்தைகள் நலமுடன் விளங்கும். பெண்ணும் அங்ஙனமே தீர்க்கமாக விளங்குவாள், சிவபெருமானைப் பூசனை புரியும் பார்வதியம்மையே! மேலுங் கூறுவோம்; கேட்பாயாக.

## ஜாதகன் இயல்பு

14. உதித்தவன் குணத்தைச் சொல்வேன் உயர்விலான் [சிவந்த மேனி
சதிசெய்யா மனத்த னாகும் தன்முக வடிவு காணும்
ததிநெய்பால் பிரிய னவன் சகோதர ரொருமை [யுள்ளான்
பொதுமாதர் பிரிய னாகும் புண்ணிய மனத்த னாமே.

14. இனி, ஜாதகனின் குணங்களைச் சொல்லுகிறோம். உயரமில்லாதவன். சிவந்த உடலுள்ளவன். தீங்கிழைக்க நினையாத மனத்தினன் ஆவான். தன் முகத்தில் ஒளியுள்ளவன். தயிர் நெய் பால் இவற்றில் விருப்பமுடையவன். சகோதரருடன் ஒற்றுமையாக இருப்பவன். விலை மாதர் வேசையர் இவர்களின் மீது பிரிய முள்ளவன். கருணை நிறைந்த நல் மனத்தை யுடையவன்.

## இதுவுமது

15. வித்தையு மிரண்டு கற்பன் விவேகியாம் யூகை சாலி
உத்தம னாகி வாழ்வன் உலகுளோர் மதிக்க வாழ்வன்
வெற்றியா யரசர் பக்கல் நிமலியே ஜீவிப் பானும்
நத்தினோர்க் குதவி செய்வன் நாதனார் பத்தி பூண்பன்.

15. இருவிதக் கல்வி பயிலுவான். விவேக முடையவன். எதனையும் ஊகித்து உணரும் இயல்புடையவன். நல்லவனாக வாழ்ந்திருப்பான். உலகத்தார் தன்னைப் பாராட்டும்படி வாழ்க்கை நடத்துவான். அரசர்களை அணுகி அவர்கள் உதவியினால் ஜீவிப்பான். துன்புற்றவர்க்கு உதவி செய்வான். இறைவன் மீது பக்தி கொள்ளுவான்.

## இதுவுமது

16. தன்னுடை நாளில் பூமி தானுண்டு பிதுரீரா ருயிரம்
பொன்னதால் பூமி கொண்டு புகழுடன் செல்வம் பெற்று
பின்னொரு பிறப்பின் பேரில் பிரிவித நேய முண்டு
முன்துணை பக்கம் சென்று மெய்திடும் கல்வி தானே.

16. தனது காலத்தில் சேர்ந்த நிலபுலங்களும் இவனுக்கு உண்டு. தன்னுடைய தகப்பனார் தேடி வைத்துள்ள பனிரண்டாயிரம் பொன்னால், புதிய விளைநிலங்களை வாங்கி, கீர்த்தி, செல்வம் ஆகியவற்றை யடைந்து, தனக்குப் பின் பிறந்தவர் மீது மிகுந்த அன்பு கொள்ளுவான். தன் மூத்த சகோதரனிடம் சென்று, கல்வி கற்பான்,

## இதுவுமது

17. சோலைகள் துரவு செய்வன் திருப்பணி வேலை செய்வன்
சாலவே அன்னிய தேசம் சாருவான் சிலநாள் ராசர்
மூலத்தால் தொழிலும் பெற்று முயற்சியாய் வாழ்வா [னுகும்
ஏலவே பரியும் வண்டி யெய்திடு மென்று சொன்னேம்.

17. சோலைகள் அமைப்பான். கிணறு வெட்டுவிப்பான். கோயில் திருப்பணிகள் பல செய்வான். அயல் நாடுகளுக்குச் சென்று, சிலகாலம் வசிப்பான். அரசாங்க மூலம் உத்தியோகம் பெற்று, தன் முயற்சியால் அத்தொழிலில் மேன்மையுடன் வாழ்வான். குதிரைகள், வண்டிகள் முதலான வாகன வசதிகள் இவனுக்குக் கிடைக்கும் என்று கூறினேம்.

## ஜாதகனுடைய திருமணக்காலம் மனைவியின் இயல்புகள்

18. பாரியு மிருப தாண்டில் பகருவோ மருகில் தெற்கில்
நாரியு மன்னை வர்க்கம் நற்றுணை மகளைக் கொள்வன்
கூறுவோ மவள்கு ணத்தைக் குஞ்சரி முகமு மாகும்
மாரன்தன் மனைவி யொக்கும் வல்லியும் சிவந்த மேனி.

18. இந்த ஜாதகனுக்கு இருபதாம் வயதில் தன் ஊருக்கு அருகில் தெற்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவள் ஜாதகன் தாய் வர்க்கத்தைச் சேர்ந்தவள். தாயின் சகோதரன் மகளை இந்த ஜாதகன் மனைவியாகக் கொள்ளுவான். இனி மனைவியின் குணங்களைச் சொல்லுவோம். அழகிய முகமுடையவள் ஆவாள். மன்மதன் மனைவியாகிய இரதிதேவி போன்று அழகுள்ளவள். இவள் சிவந்த உடலுடையவள்.

## இதுவுமது

19. கன்னலின் சுவைபோல் வார்த்தை கணவனுக் கினிய [ளாகும்
மன்னிய செல்வ முள்ளாள் மங்கைநன் நடக்கை [யுள்ளாள்
அன்னியர்க் கன்ன மீவள் அன்புள மனத்த ளாகும்
தன்பணி யுடைய ளாகும் தயாபரி மேலும் கேளே.

19. கரும்பின் சுவைபோன்ற இனிய சொற்களைப் பேசுவாள். தன் கணவனுக்கு உகந்தவள் ஆவாள். செல்வ முடையவள், நல்ல நடத்தை யுடையவள். அயலாராக இருப்பினும் உணவு அளிப்பாள். எல்லோரிடமும் அன்பு கொண்ட மனத்தினள் ஆவாள். தனக்குச் சொந்தமான ஆபர

ணங்கள் உடையவள். கருணை நிறைந்த அம்பிகையே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

20. அவள்துணை யாண்பா லொன்று
அழகிய கன்னி யொன்று
இவைகளும் விருத்தி யென்றோம்
இயம்புவோம் புத்திர பாகம்
நவனியில் மக்கள் தோன்றி
நசித்திடு மென்று சொன்னோம்
தவசியும் சொல்லும் போது
ஜயமுனி கூறு கின்றார்.

20, ஜாதகன் மனைவிக்கு, சகோதரன் ஒருவனும், அழகிய சகோதரி பொருத்தியும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர் என்று சொன்னோம். இனி, புத்திர பாவம் பற்றிச் சொல்லுவோம். இவளுக்குக் குழந்தைகள் பிறந்து நஷ்டமாம் என்று கூறினோம். இங்ஙனம் முனிவர் கூறிக் கொண்டு வரும் பொழுது, ஜயமுனிவர் என்பார் சொல்லுகின்றார்.

## புத்திரதோஷம் : கிரகநிலை

21. எதுகா ரணத்தி னாலே இயம்பினீ ரந்த வார்த்தை
ஓதுவீர் முனியே நீர்தாம் உற்றஐந் தாமி டத்தோன்
பாதக விரையம் புக்க பார்மக னைந்தைப் பார்க்க
ஆதலால் புத்திர தோஷம் அறைந்தன மிவனுக்
[கேதான்.

21. "என்ன காரணத்தினால் இந்த ஜாதகனுக்குப் புத்திர தோஷம் ஏற்படும் என்று கூறினீர்கள்? அந்த விவரங்களைச் சொல்லுங்கள் முனிவரே! தாங்கள்". ஜயமுனிக்குப் பராசர முனிவர் விடை கூறுகிறார். ஐந்தாமிடத்துக்கு உரிய சனி விரயஸ்தானமாகிய பனிரண்டாம் இடத்தில் தங்கி செவ்வாய் ஐந்தாம் இடத்தைப் பார்ப்பதனாலும் இந்த ஜாதகனுக்குப் புத்திர தோஷம் ஏற்படும் என்று சொன்னோம்.

## ஜாதகன் முற்பிறவிச் செய்தி

22. இதுவன்றிப் பூர்வ தோஷம்
எய்திற்று இவனுக் கேதான்
அதுதனைச் சொல்லு மென்ன
அறைகிறார் பராசர் தாமும்

அதிபனு முன்ஜன் மத்தில்
வளமுள காஞ்சி தன்னில்
சதியுள சௌராஷ்டிர வம்சம்
தோன்றின னிவனே ஐயா.

22. இதுவல்லாமல், முற்பிறவியில் தோஷம் ஏற்பட்டது. இந்த ஜாதகனுக்கு. அது என்ன வென்று சொல்லுங்கள் எனப் பார்வதிதேவியார் கேட்க, பராசர முனிவர் விவரிக்கின்றார். இவன் முற்பிறவியில் செழிப்புள்ள காஞ்சீபுரத்தில், சௌராஷ்டிர மரபில் பிறந்தான்.

## இதுவுமது

23. நெசவுக ளுடைய ஞகி நேமியில் செட்டுச் செய்து
அசைவிலா வாழும் நாளில் அறைகிறே மூழி தானும்
வசையுள வேழை மாது மைந்தர்க்குச் சாதம் வேண்டி
பசியுட னிவனைக் கேட்கப் பாவைமேல் மோகம்
[கொண்டு;

23. நெசவுத் தொழில் செய்து, உலகில் வேறு பல தொழில்களும் செய்து கொண்டு, துன்பமின்றி வாழ்ந்து வரும் காலத்தில், இவனுக்கு ஏற்பட்ட தோஷத்தைக் கூறுகிறோம். ஒரு ஏழைப் பெண் தன் குழந்தைகளுக்கு உணவு அளிக்கும்படி, பசியோடு இவனை வேண்ட, இந்த ஜாதகன் அந்த ஏழைப் பெண் மீது காமவிச்சை கொண்டு;

## முற்பிறவிச் சாபம்

24. தனமது தாரே னென்று சதியான வார்த்தை சொல்லி
அனையவே யவளைச் சேர அக்கன்னி வருத்த முற்று
சினமுடன் சொல்லு கின்றுள் சீலைபொன் தாரே
[னென்று
பிணையாகச் சொன்ன பாவி புத்திரர் தோஷ மாயும்;

24. மிகுந்த பொருளைத் தருகிறேன் என்று ஆசையான வார்த்தை வஞ்சகமாகக் கூறி அவளைச் சேர்ந்தான். இவனால் ஏமாற்றப்பட்ட அந்தப் பெண் மிக்க வருத்த மடைந்து, கோபத்துடன் கூறுகின்றாள். புடவை பொருள் இவைகளைத் தருகிறேன் என்று ஆசை வார்த்தைகள் சொல்லி என்னை ஏமாற்றி என்னைக் கெடுத்த பாவியே! உனக்குப் பிறக்கும் புத்திரருக்குத் தோஷ மேற்பட்டும்,

## இதுவுமது

25. பின்ஜன்மம் தோன்றி யேதான்
பின்முன்து ணைவ ரின்றித்
தன்சுதர் தோஷ மாயும்
தரணியில் வாழ்வா யென்று

அன்னவள் சொல்லிச் சென்ருள்
அடைந்தது அதுவோர் தோஷம்
இன்னமும் வேறு ஒன்று
இயம்புவோம் கேட்டிடாயே.

25. மறுபிறப்பிலும் முன்பும் பின்பும் தோன்றும் உடன் பிறந்தோர் இல்லாமலும், தோன்றும் புதல்வர்களுக்குத் தோஷம் ஏற்பட்டும் நீ உலகில் வாழ்வாய் என்று அந்த ஏழைப் பெண் சொல்லிச் சென்ருள். அந்த ஒரு தோஷம் இவனைச் சார்ந்தது. மற்றும் வேறு ஒரு தோஷத்தைப் பற்றியும் சொல்லுவோம் பார்வதியம்மையே கேட்பாயாக.

## முற்பிறவித் தோஷம்: தொடர்ச்சி

26. மறையவன் சுதனுக் காக
மணம்வேண்டி யிவன்பால் பொன்னைத்
தருகுவா யென்று கேட்கத்
தான்முறி லிகிதம் செய்து
பொருளது தந்து சின்னுள்
பொறுத்துப்பின் பொருளைக் கேட்க
அரும்பொருள் சிலநாள் சென்று
அடைக்கிறே னென்று சொன்னுன்.

26. ஒரு அந்தணன், தன் புதல்வன் திருமணத்துக்காக இவனிடம் வந்து சிறிது பொன் கடனுகத்தருவாய் என்றுகேட்க, இவன் பத்திரம் எழுதி வாங்கிக்கொண்டு பொருளைக் கொடுத்தான். சிலநாட்கள், சென்று அத்னைக் கொடுக்குமாறு மறையவனைக் கேட்க அவன் இன்னுஞ் சிலநாட்களுக்குப் பிறகு உனக்குச் சேரவேண்டிய தொகையைக் கொடுத்து கடனைத் தீர்க்கிறேன் என்று கூறினுன்.

## இதுவுமது

27. தனமுளான் கோப முற்றுச் சாற்றினு னரசர் பக்கல்
மனைபூமி யாவும் கொண்டான் மறையவன் மனவெ [றுப்பால்
சினமுடன் பூமி யில்லம் சீராகக் கொண்ட பாவி
வினையுண்டு வம்சம் தானும் வீருது சுதர்கள் தாமே.

27. இதுகேட்ட செல்வன், (இந்த ஜாதகன்) கோபமடைந்து அரசாங்கத்தில் மறையவன் மீது வழக்குத்தொடர்ந்து, தான் கொடுத்த பொருளுக்கு

ஈடாக, அவனுக்குச் சொந்தமான வீடு, நிலபுலங்கள் எல்லாவற்றையும் பறித்துக்கொண்டான். இவன் செய்கையினுல் மனவெறுப்படைந்த அந்தணன் கோபத்துடன் கூறுகிறுன்; "என் நிலபுலங்கள் வீடு முதலியவற்றைப் பறித்துக்கொண்ட பாவியே! உன் வம்சத்திற்கு நாசம் ஏற்படும். புதல்வர்கள் நிலைக்கமாட்டார்கள்;"

## இதுவுமது

28 மறுஜன்மம் தோன்றி ஞலும்
மைந்தர்கள் தோஷ மெய்தும்
உறைந்தது வந்தச் சாபம்
உதறினுன் மறையோன் தானும்
விரைவினில் சுதரா ணின்றி
மேவினுன் காலன் பக்கல்
சிரநான்கோன் வரையப் பட்டு
ஜனித்தன னிந்தப் பாலன்.

28. "மறு பிறப்பில் உனக்கு குழந்தைகள் தோன்றினுலும் நஷ்டமடையும்". இவ்வாறு மறையோன் கூறிய சாபம் இவனைச் சேர்ந்தது. மறையவன் அவ்விடத்தை விட்டகன்ருன். இவனும், ஆண் குழந்தைகள் இல்லாமல் வாழ்ந்து மரணமடைந்தான். மீண்டும் பிரமதேவனுல் சிருஷ்டிக்கப்பட்டு இப்பிறப்பில் இக்குலத்தவனுகப் பிறந்தான் இந்த ஜாதகன்.

## முற்பிறவித் தோஷத்துக்குச் சாந்தி

29. ஆகையா லிச்சென் மத்தில் அம்மாது மறையோர் சாபம்
வேகமாய்க் கொண்ட தாலே விளங்காது சுதர்கள் [தானே
வாகுட னிதற்கு யாங்கள் விளம்புவோம் சாந்தி தானும்
பாகமாய் மனைவி யோடு [1]பட்சியின் மலைக்குச் சென்று;

29. ஆதலினுல், இப்பிறவியில், அந்த ஏழைப்பெண், அந்தணர் ஆகியோர் சாபங்கள் மிக விரைவாக இந்த ஜாதகனைப் பற்றியதால் இவனுக்குப் பிறக்கும் குழந்தைகள் நிலையா. ஆயினும் இதற்குச் சாந்தியொன்று நாங்கள் கூறுவோம். பொருத்தமாக, இந்த ஜாதகன் தன் மனைவியுடன் திருக்கழுக்குன்றம் சென்று,

[30, 31, 32, 33, 34, 35-ஆம் செய்யுட்கள் மூலச் சுவடியில் மிகவும் சிதைந்து படித்தற்கியலா வண்ணம் இருத்தலின் இங்கு சேர்க்கப் பெறவில்லை.]

## தாயின் மறுபிறவி

36. பின்ஜன்மம் சோழ நாட்டில் பேசுமா யூரம் தன்னில்
இன்னவன் வைசியச் சேயாய் இறங்குவா ளென்று
[சொல்வோம்
முன்னமே தந்தை பூர்வ மறைகுவோ மினிமே லாக
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

36. மறுபிறவியில், சோழவள நாட்டிலுள்ள மாயூரத்தில் இந்த ஜாதகன் தாயார் வைசிய மரபினளாகப் பிறப்பாள் என்று கூறுவோம். இனி, ஜாதகன் தந்தையின் முற்பிறவிபற்றிச் சொல்லுவோம். உயர்ந்தவராகிய சிவபெருமானைக் கணவராக அடைந்த உத்தமியாம் பார்வதியம்மையே! மேலும் கேட்பாயாக.

## தந்தையின் முற்பிறவி

37. மால்பெரு நகரின் கீழ்ப்பால் மருவிடுஞ் சிறுவூ ரில்தான்
சீலமில் லாத கங்கைக் குலத்தினில் ஜனித்தா னம்மா
சாலவே பூமி யாலே ஜீவனம் வினைக ளின்றிப்
பாலகன் கணேசன் பூசை பாரினில் செய்து இன்னோன்;

37. பெருமை பொருந்திய பெருநகர் என்னும் ஊருக்குக் கிழக்கில் உள்ளதொரு சிற்றூரில், ஒழுக்கமற்றவொரு வேளாளர் குடியில் பிறந்தான். விவசாயத்தால் ஜீவனம் செய்து, தீவினையில்லாமல், விநாயகப் பெருமானுக்குப் பூசனை புரிந்துகொண்டு, வாழ்ந்துவந்தான் இவன்.

## இதுவுமது

38. வேலுடைக் கடவுள் பக்தி விரும்பியே மரண மாகி
மால்மகன் வரையப் பட்டு வந்தவ னிவனின் தந்தை
கோலமாய்ப் பின்ஜன் மத்தில் குலவிடு காஞ்சி தன்னில்
நீலகண் டத்தோன் பூசை நிரப்பிக்கும் குலமே
[தோன்றும்.

38. வேலாயுதத்தை ஏந்திய முருகக்கடவுளிடமும் பக்தியுண்டாகி இறுதியில் மரணமடைந்து, மீண்டும் மஹாவிஷ்ணுவின் புதல்வராகிய பிரம தேவனால் படைக்கப்பட்டு இப்பிறப்பில் இக்குலத்தவனாகப் பிறந்தான் இந்த ஜாதகனின் தந்தை மறுபிறப்பில், சிறப்புடன் காஞ்சிபுரத்தில் நீலகண்டராகிய சிவபெருமானுக்குப் பூசனைபுரியும் அர்ச்சகர் மரபில் தோன்றுவான்.

39. காதலி கேட்க லுற்ருள் காதல னிச்சென் மத்தில்
வேதனை சிலர்க்குச் செய்தும் விளங்குமுன் கோப
[முண்டாய்

போதனம் புத்தி யாகிப் பூமியில் வாழ்வ தாலே
நீதியாய் மறைக்கு லத்தில் நேர்ந்தகா ரணங்க ளென்ன?

39. இங்ஙனம் பராசர முனிவர் கூறப் பார்வதிதேவி கேட்கின்றாள். இவன் இப்பிறப்பில் சிலருக்குத் துன்பங்கள் செய்தும், முன்கோபமுடைய வனாகியும், அற்பபுத்தி யுடையவனாகவும் உலகில் வாழ்வதால் மறுபிறப்பில் நியாயமாக அந்தணர் மரபினனாகப் பிறக்கக் காரணங்கள் யாவை? என்று கூறுங்கள் என, முனிவர் விடை கூறுவார்.

## தந்தைக்கு உயர்குலப் பிறவி ஏற்படக் காரணம்

40. பலவித வினைகள் செய்தும்
பரமர்க்குத் தொண்டு பூண்டும்
தலம்திருப் பணியும் செய்தும்
தானவன் வாழ்வ தாலே
குலவுவான் மறையோ னாகக்
கூத்தனை யுதைத்தோன் பூசை
நலமுள செய்து வின்னோன்
நவிலுவான் தேவ ராக.

40. பலவித நற்கருமங்கள் செய்தும், இறைவனுக்குத் தொண்டு புரிந்தும், இறைவன் எழுந்தருளியுள்ள தலங்கள் பலவற்றில் திருப்பணிகள் செய்துகொண்டும் இந்த ஜாதகன் வாழ்வதால் அடுத்த பிறப்பில் அந்தண னாகப் பிறப்பான். மார்க்கண்டேயருக்காக இயமனைக் கால்களால் உதைத்த சிவபெருமானுக்குப் பூசனைகள் நல்லமுறையில் புரிந்து இவன் இறுதியில் தேவர்களில் ஒருவனாவான், முக்தியடைவான்.

## ஜாதகன் தாய்தந்தையரின் மரணகாலம்

41. முப்பது ஐந்து ஆண்டின் மு.........தான்
செப்புவேன் தந்தை கண்டம் சென்றுபின் முப்பா னறில்
ஒப்புடன் மகர மாதம் உரைக்கிறோ மன்னை கண்டம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் றுது.

41. ஜாதகனின் முப்பத்தைந்தாம் வயதில்.........இவன் தந்தைக்கு மரணம் ஏற்படும் என்று சொல்லுவோம். பின்பு, இவனது முப்பத்தாறும் வயதில் தை மாதம் தாயின் மரணத்தைக் கூறுகிறோம். கங்கை நதியைச் சடையில் அணிந்த சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறியன தவறா.

## ஜாதகனுடைய மரணகாலம்

42 ஜாதகன் மரண காலம் சாற்றுவோம் அறுபா னெட்டில்
மேதினில் மகர மாதம் வளர்பிறை துவாதசி தன்னில்

பாதக மாக வப்பால் பகருவோ முடலம் வாடும்
போதவே இவன்பின் ஜன்மம் புகலுவோம் தாயே
[கேளும்.

42. இந்த ஜாதகனின் மரண காலத்தைச் சொல்லுவோம். அறுபத்தெட்டாம் வயதில் தை மாதம் பூர்வபட்சம் துவாதசி திதியில் இவனுடைய மரணம் நேரும். இனி, இவனுடைய மறுபிறப்பைச் சொல்லுவோம், பார்வதி யம்மையே! கேட்பீராக,

## ஜாதகனின் மறுபிறவியும் யோகமும்

43. தில்லையில் சைவ ஞகை ஜனித்துமே குருவாய்த் தோன்றி
வல்லியர் மோக மின்றி வாழ்குவா னிவனே யம்மா
சொல்லுவோம் யோகச் சேதி தொல்புவி கீர்த்தி
[யேற்பன்
அல்லல்க ளடையா ஞகும் அரசர்பூ சிதனு மாகும்.

43. சிதம்பரத்தில் சைவ மரபினஞகப்பிறந்து, குரு பீடத்தில் அமர்ந்து பெண்களிடம் மோகமில்லாமல் இவன் வாழ்ந்திருப்பான் தாயே! இனிமேல், ஜாதகன் யோக விவரங்களைச் சொல்லுவோம். உலகில் புகழை யடைவான். துன்பங்களடையான், அரசர்களால் மதிக்கப்படுபவனும் ஆவான்.

## ஜாதகன் இராசயோகம் எய்தக் காரணமும் பயனும்

44, எப்படி ராச யோக மியம்பினீர் விபரம் சொல்வீர்
செப்புவேன் தர்ம கர்மன் சேர்ந்துமே தசமம் நிற்க
ஒப்புடன் ராச யோகம் உரைந்திடு மிவனுக் கேதான்
மைப்புடன் திருப்பணியும் செய்வன் விசேஷபூ மிகளும்
[சேர்ப்பன்.

44. பார்வதிதேவி கேட்கின்ருர், ஜாதகனுக்கு இராசயோகம் ஏற்படும் என்று எப்படிக் கூறினீர்கள்? அந்த விவரத்தைக் கூறுங்கள். முனிவர் விளக்குகிருர். தர்மகர்மாதிபதிகள் 9, 10-ஆம் இடத்துக்குரிய சுக்கிரனும் புதனும் சேர்ந்து பத்தாமிடத்தில் இருப்பதால் இராசயோகம் இவனுக்கு உண்டாகும் என்று சொல்லுவோம். அந்த யோக பலனுல், திருப்பணிகள் பல செய்வான். விசேஷமாக நிலபுலங்கள் சேர்ப்பான்.

## இராசயோக பலன்

45. நினைத்தது முடிக்க வல்லன் நேர்ந்திடும் வேறு இல்லம்
அனைத்துளோர் வசியம் கொள்வன் அநேகபூ தனமும்
[சேர்ப்பன்

இனத்துக்கு மேம்பா டாக இருப்பன்தாய் தந்தை
[போலே
கனமத வானை பெற்ற காதலி புகன்றிட் டோமே.

45. செய்ய வேண்டுமென்று நினைத்தவற்றைச் செய்து முடிப்பதில் வல்லவன். வேறு புதிய வீடு இவனுக்குக் கிடைக்கும். எல்லோரையும் வசியப்படுத்துவான். நிலபுலங்கள் செல்வம் ஆகியவற்றை மிகுதியாகச் சேர்ப்பான். தன் இனத்தவர்களில் மேன்மையுள்ளவனாக வாழ்வான். தன் பெற்றோரைப்போல் புகழுடன் வாழ்ந்திருப்பான். மதம்பொருந்திய யானைமுகக் கடவுளாகிய விநாயகரைப் புதல்வராக அடைந்த தாயே! நாங்கள் இங்ஙனம் கூறினோம்.

## ஜனன கால தசையிருப்பும் பயனும்

46. காவலன் ஜனிக்கும் காலை கரும்பாம்பு பதின்மூன்
[றுண்டும்
மேவிய திங்க ளைந்தும் விரையமாம் துணைவர் தாமே
ஓவிய இன்னோர் விருத்தி உரைந்திடும் பூமி தானும்
தாவிய துணைசு பங்கள் தாய்வர்க்கம் சூத கங்கள்.

46. ஜாதகன் ஜனன காலத்தில் இராகு மஹாதசையில் இருப்பு பதின் மூன்று வருஷங்களும் ஐந்து மாதங்களுமாம். இக்காலத்தில், உடன்பிறந்தோர் சிலர் தோஷமாவர். சிலர் தீர்க்கமாவர், நிலபுலம் சேரும். உடன் பிறந்தோருக்குச் சுபங்கள் ஏற்படும். தாய் வழியில் அசுபங்கள் நேரும்.

## ஜனனகாலத் தசைப் பலன்

47. வினையுண்டு ஜாத கர்க்கு முன்துணை சலத்தால்
[தோஷம்
கனமுள குடும்ப மாகும் கனத்ததோ ரில்லம் நேரும்
அனையவே பின்பா கத்தில் அறிவிப்போம் விபர மாக
சினமிலாத் தவங்கள் செய்யும் தேவியே கேட்டி டாயே.

47. ஜாதகனுக்கும் துன்பங்கள் உண்டாகும். முன்பிறந்தவருக்கு நீரில் கண்டமுண்டாகும். பெருமையுள்ள குடும்பமாம். பெரிய வீடு ஒன்று புதிதாகக் கிடைக்கும். மற்றவற்றைப் பின்பாகத்தில் விவரமாகக் கூறுவோம். சாந்த சொருபியாய் இவ்வுலகில் தோன்றித் தவங்களைச் செய்யும் பார்வதி யம்மையே! மேலுங் கேட்பாயாக.

---

# ஜாதகம் 87

## ஜனனகால கிரகநிலை

1. சந்திரன் கன்னி யாகச் சனிதேளி[1] லிரவி[2] சாடி[3]
புந்தியும்[4] புகருங்[5] கேது பொருந்திட மானி[6] லேதான்
மந்திரி[7] மீன மாக மங்கலன்[8] ராகு வண்டி[9]
இந்தவாறு கிரகம் நின்று இடமது[10] கன்னி யாக;

1. சந்திரன் கன்னியிலும், சனி விருச்சிகத்திலும், சூரியன் கும்பத்திலும், புதன் சுக்கிரன் கேது மகரத்திலும், குரு மீனத்திலும், அங்காரகன் ராகு கடகத்திலும் ஆக இங்ஙனம் கிரகங்கள் பொருந்தி, இலக்கினம் கன்னியாக இருக்கப் பிறந்தவருக்கு,

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| சூரியன் | இராசி சக்கரம் | | அங்காரகன் ராகு |
| புதன் சுக்கிரன் கேது | | | |
| | சனி | | லக்கினம் சந்திரன் |

## ஜாதகர் பிறந்த வீட்டின் அடையாளம்

2. பலன்தனைச் சொல்லு மென்று பார்வதி கேட்கும்
[போது
நலமுள வதிஷ்டர் சொல்வார் நலமுள பெண்பால்
[ஜன்மம்

---

1. விருச்சிகம்
2. சூரியன்
3. கும்பம்
4. புதன்
5. சுக்கிரன்
6. மகரம்
7. குரு
8. அங்காரகன்
9. கடகம்
10. இலக்கினம்

குலவிடு மில்லஞ் சொல்வேன் குணக்கினில் வாச லாகும்
நலமுள வடதென் வீதி நவிலுவோ மெதிர்வீ டில்லை.

2. பலன்கள் சொல்லுமென்று, பார்வதி தேவியார் கேட்கவே, ஏழு முனிவர்களில் ஒருவராகிய வசிஷ்டமாமுனி கூறுவார். இந்த ஜாதகம் பெண்ணுடையது பிறக்கும் வீடுபற்றிச் சொல்லுவேன். கிழக்குத் திசையை நோக்கிய வாயிலையுடையது. வடக்குத் தெற்கான தெருவாம். எதிரே வீடில்லை.

3. தந்தியும் கீழ்பா லாகும் சாமுண்டி மாரி மீனம்
விந்தையாய் மேற்கில் மாலாம் விளம்பினோம் சிறுவூ [ராகும்
இந்தநல் லடையா ளங்கள் இயம்பினோம் தந்தை [யில்லம்
வந்தவன் நான்காம் சென்ம மறைகிறோம் பலன்கள் [யாவும்.

3. விநாயகப்பெருமான் ஆலயம் ஒன்று வீட்டுக்கிழக்கில் உள்ளது. சாமுண்டீசுவரியும் மாரியம்மனும் வடகிழக்குத் திசையில் கோயில்கொண்டிருப்பர். மேற்குத் திசையில் விநோதமாக திருமாலின் ஆலயமும் உள்ள சிறிய ஊராகும் என்று சொன்னோம். இவ்வித அடையாளங்கள் கொண்ட இடத்தில் ஜாதகியின் தந்தை வீடு உளது என்று கூறினோம். இந்த ஜாதகி தன் தந்தைக்கு நான்காம் பிறப்பாகத் தோன்றுவாள். இனிப் பலன்கள் யாவையும் கூறுகின்றோம்.

## தந்தையின் செய்திகள்

4. தந்தையின் வர்க்கம் தன்னைச் சாற்றுவோ மாண்பா [லைந்து
விந்தையாய்க் கன்னி மூன்று மேவிடு மந்தக் காலம்
அந்தவ ரொன்றாய் வாழ்வர்.........போல்கு டும்பம்
கந்தனை யீன்ற மாதே கழறுவோம் தந்தை சேதி.

4. ஜாதகியின் தந்தை வர்க்கத்தைப் பற்றிச் சொல்லுவோம். தகப்பனுருடன் பிறந்த சகோதரர் ஐவர். சகோதரிகள் மூவர், இவர்கள் அனைவரும் ஒற்றுமையாய் ஒரு குடும்பமாக வாழ்வார்கள்......சுப்பிரமணியரைப் புதல்வராக அடைந்த தாயே! இனி தந்தை பற்றிய செய்திகளைக் கூறுவோம்.

## இதுவுமது

5. ஊகைவான் சிவந்த மெய்யன் உறுதியா மனத்த னாகும்
பாகமாய்ப் பேசு வானும் பால்தயி ரிஷ்டம் கொள்வன்

நாகரீ கங்க ளுள்ளான் நலலோர்க்கு நல்ல னுவன்
ஆகம நுணுக்கம் தேரான் அதிகார முடைய னுமே.

5. எந்த விஷயத்தையும் ஊகித்து உணரும் ஆற்றல் பெற்றவன். திடமுள்ள மனத்தினன். பக்குவமாகப் பேசுவான். பால் தயிர் இவற்றை உண்பதில் விருப்பங் கொள்ளுவான். நாகரிகங்கள் உடையவன். நல்ல முறையில் பழகுபவர்களுக்கு நல்லவனுக இருப்பான். ஆகம சாஸ்திர நுட்பங்களை உணரமாட்டான். பிறரை அதிகாரம் செய்யும் பதவியுடையவன்.

## இதுவுமது

6. ஆதியில் வறுமை யுள்ளான் அவன்தந்தை யாஸ்தி [காணுன்
நீதிவான பூமி சேர்ப்பன் நிருமிப்பான் தடாகம் சோலை
[1]காதியு மதிக மேற்பன் கனத்தவர் நேசங் கொள்வன்
தீதிலாக் குணத்த னுகும் சென்றிடம் பெருமை [யேற்பன்.

6. முதலில் தரித்திரத்தை யுடையவனுவான். அவன் தந்தையால் தேடி வைக்கப்பட்ட சொத்துக்கள் இல்லாதவன். நியாயவழியில் செல்லுபவன். நிலபுலங்களைச் சேர்ப்பான், பெரிய குளம், சோலை முதலியன அமைப்பான். மிக்க புகழை யடைவான், பெரியோர் தொடர்பைக் கொள்ளுவான். பிறருக்குத் தீங்குநினையும் இயல்பு இல்லாதவன். செல்லுமிடங்களிலெல்லாம் மேன்மை பெறுவான்.

## இதுவுமது

7. வண்டிவா கனமு முள்ளான் மாநிலம் கூவல் செய்வன்
அண்டினோர்க் குதவி செய்வன் ஆவுகள் விருத்தி [யுள்ளான்
தண்டமிழ் நுணுக்கம் தேரான் சாப்பாடு சுகிய னுகும்
வண்டணி மார்கள் மோகன் வாததே கத்தா னுமே.

7. வண்டி முதலான வாகன வசதிகள் பெற்றவன். கிணறு தோண்டுவிப்பான். தன்னை யடைந்தவர்களுக்கு உதவிகள் செய்வான். பசுமாடுகள் மிகுதியாக வுடையவன். இனிய தமிழ் நூல்களின் நுட்பங்களை உணரமாட்டான். சுக போஜனம் செய்பவன், வண்டுகள் மொய்க்கும் புஷ்பங்களை அணிந்திருக்கும் பெண்கள்மீது மையல் கொள்ளுவான், வாத சரீரமுடையவன்.

## இதுவுமது

8. நேமியில் வறுமை யில்லான் நுவலுப தேசம் [கொள்ளான்
சேமமாம் குடும்பி யாவன் தாம்பூலப் பிரிய னென்றேும்

1. கியாதி—புகழ்.

நாவுகள் தவரு ஞகும் நற்சித்திர வில்லம் செய்வன்
மேவிய வர்ம ஞவன் வீண்வம்பில் செல்லா னென்ருேம்.

8. உலகில் தரித்திரமின்றி வாழ்வான். பெரியோர் உபதேசங்களைப் பெற மாட்டாதவன். சௌக்கியம் உள்ள குடும்பம் உடையவனுவான். தாம்பூலம் தரித்துக்கொள்வதில் விருப்பமுடைவவன் என்று சொன்னேம். சொன்ன சொற்கள் தவருதவன். அழகிய வேலைப்பாடமைந்த புதிய வீடு கட்டுவான். ஒருவர் தனக்குத் துன்பம் செய்தால், அதனை மறவாது மனத்தில் வைத்திருப்பவனுவான். வீண் சண்டைக்குப் போகமாட்டான்.

## ஜாதகியின் இயல்புகள்

9. இந்நெறி யுடையா னுக்கு இவளுமே ஜனிப்பா ளாகும்
அன்னவள் குணத்தைச் சொல்வோம் அழகுளாள் [சிவந்த மேனி
உன்னத வாத தேகி உள்மனம் கபடு மில்லாள்
தன்சொல்லு மடக்க முள்ளாள் தன்வரன் மனம்போல் [வாழ்வள்.

9. இத்தன்மையுடைய தந்தைக்கு இந்த ஜாதகி தோன்றுவாள். இவள் இயல்புகளைச் சொல்லுவோம். அழகுடையவள், சிவந்த உடலுடையவள். வாயு நோயுடைய சரீரமுடையவள். மனத்தில் கபடம் இல்லாதவள். சொற்களில் பணிவு பொருந்தியவள், தன் கணவன் மனம்போல் வாழ்க்கை நடத்துவாள்.

## இதுவுமது

10. வருவோரை யாத ரிப்பள் மா நிலம் நல்லோ ளாவள்
திருகான குணமில் லாதாள் திருமக ளொப்ப தாகும்
குறையான மனமில் லாதாள் குற்றங்கள் வெளிக்காட் [டாதாள்
பெரும்புத்தி யுடைய ளாகும் புண்ணிய மனத்த [ளென்ருேம்.

10. வீட்டுப் புதிதாக வருபவரை ஆதரித்துப் போற்றுவாள். உலகில் நல்லவளாக இருப்பாள். மாறுபாடான குணங்கள் இல்லாதவள். இலட்சுமிதேவி போன்றவள். மனத்தில் குறையேதும் இல்லாதவள். பிறர் குற்றங் குறைகளைக் கண்டு பலரறிய வெளிப்படுத்தாதவள். விசால புத்தி கொண்டவள். கருணை நிறைந்த மனத்தினள் என்று கூறினேம்.

11. தேவதாப் பக்தி பூண்பள் ஜனசகா யங்கள் செய்வள்
ஆவலாய் வருவோ ருக்கு அன்னமு மன்பா யீவள்

பாவத்துக் கிடம்கொ டாதாள் பணிதிபாத் திரங்க
[ளுள்ளாள்
மேவிடும் பித்த சூடு மேலும் கேள் தேவியரே.

11. தெய்வபக்தி கொள்ளுவாள். துன்பமுற்ற மக்களுக்கு உபகாரங்கள் செய்வாள். பசிக்கு ஏதாவது கிடைக்கும் என்று விருப்பத்தோடு வீடு தேடி வருபவர்க்கு உள்ளன்புடன் உணவு அளிப்பாள். பாவச் செய்கைகட்கு இடங்கொடுக்கமாட்டாள். பொன்னுபரணங்கள் பாத்திரங்கள் இவற்றையுடையவள் இவள் உடலில் பித்தச் சூட்டுநோய் பரவும். தேவியே! மேலும் கேட்பீராக.

## மூத்த சகோதரன் செய்தி

12. தன்துணே ஐந்தே தோன்றும் தங்கிடும் மூன்று
[வென்றேம்
விந்தையா யாண்பா லிரண்டு மேவிய கன்னி யொன்று
இந்தவாறு விருத்தி யென்றேம் இயம்புவோ மூத்தோன்
[சேதி
சந்தத மீகை வாணும் ஜகராசர் பேட்டி பூண்பன்.

12. இவளுக்குத் துணேவர் ஐவர் தோன்றுவர். இவர்களில் மூவர் நிலேப்பர். இரண்டு சகோதரர்கள், சகோதரி யொருத்தி ஆகிய மூவரும் தீர்க்கமான ஆயுளுடன் விளங்குவர் என்று சொன்னேம். இனி, ஜாதகியின் மூத்த சகோதரன் செய்தியைச் சொல்லுவோம். எப்பொழுதும் தருமம் செய்யும் இயல்புடையவன். உலகத்திலுள்ள அரசர்களேப் பேட்டி காண்பான்.

## இதுவுமது

13. வித்தையால் பெருமை யேற்பன் விவேகியா மெவர்க்கு
[நல்லோன்
சத்தியே! சிவந்த மெய்யன் சொல்லுமுன் கோபி யாவன்
அத்திபோல் நடையு மாவன் அயல்நாட்டில் சிலநாள்
[வாசம்
எத்திசை புகழ வாழ்வன் இளமன முடைய ஞமே.

13. கற்ற கல்வியால் மேன்மை பெறுவான். விவேக முடையவன். உலகில் எவருக்கும் நல்லவனுக இருப்பான் பராசக்தியே சிவப்புநிற முடையவன். கூறுவதற்கு முன் கோபங்கொள்ளும் இயல்புடையவன். ஆண் யானே போன்று கம்பீர நடையுடையவன். வேற்று நாட்டிற்குச் சென்று சிலகாலம் வசிப்பான். எல்லாத் திசைகளிலுள்ளவர்களும் (உலகின் பல பகுதிகளிலுள்ளவர்களும்) இவனேப் புகழும்படி வாழ்ந்திருப்பான். இரக்கம் பொருந்திய மனத்தினன்,

## ஜாதகியின் சகோதரனின் மனைவி விவரம்.

14. பாரியு மிரண்டே யாகும் பகருவோம் தென்மேல் திக்கில்
நாரியும் கேட்க லுற்ருள் நவின்றனீர் மனைவி யிரண்டு
[1]................யிருவர் தீர்க்கம்
தீரமாய் முதல்மா துக்குச் செப்புவோம் பெண்பா
[லொன்று.

14. இவனுக்கு மனைவியர் இருவராவர். இவன் முதல் மனைவி தென் மேற்குத் திசையிலிருந்து வருவாள். இங்ஙனம் வசிட்ட முனிவர் சொல்ல பார்வதிதேவி கேட்கின்ருள். இவனுக்கு மனைவியர் இருவர் என்று கூறினீர் கள் எங்ஙனம் இருவரும் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர்? முதல் மனைவிக் குப் பெண் குழந்தையொன்று தோன்றும் என்று நிச்சயமாய்ச் சொல்லு வோம்.

1. மூலப் பிரதியில் இப்பகுதி சிதைந்துளது.

## மூத்தசகோதரன் இளைய மனைவிக்கு புத்திரபாவம்

15. அதுவின்றிக் காணு ளாகும் ஆகையா லிரண்டா மாது
விதியினுல் வருவா ளாகும் வித்தகி தங்கை யாகும்
அதிசதி தனக்குப் புத்திரர் ஆணென்று பெண்பா
[லிரண்டு
சதமுடன் தீர்க்க மெய்தும் செப்புவோம் கேட்டி டாயே.

15. அந்தப் பெண் குழந்தை தவிர வேறொன்றும் முதல் மனைவிக்குத் தோன்ருது. ஆகையினுல், இரண்டாம் மனைவி வாய்ப்பாள். அவள் முதல் மனைவியின் தங்கையாவாள். இரண்டாம் மனைவிக்கு ஆண் குழந்தை யொன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் தோன்றும். அவை நிச்சயமாய்த் தீர்க்க ஆயுளுடன் விளங்கும். பார்வதியம்மையே! மேலுங் கூறுவோம்; கேட்பாயாக.

## இளைய சகோதரன் செய்தி

16. மற்ருெரு துணைவன் சேதி யறைகிருேந் தாயே கேளு
பெற்றதா யில்லம் செல்வன் புகலுவான் கட்டு வார்த்தை
வித்தையும் விவேகி யாகும் வீண்தொழி லுடைய ஞகும்
பத்தினி நேய ஞகும் பரவுப கார ஞகும்.

16. ஜாதகியின் இன்னொரு சகோதரனின் செய்தியைக் கூறுகிருேம். பார்வதியம்மையே! கேளுங்கள் அவன் தன் தாயின் பிறந்த வீடு சென்று வசிப்பான். தானுகக் கற்பனைகள் செய்து பேசுவர்ன். கல்வியறிவுடைய வன். விவேக முடையவனுவான். பயனில்லாத தொழில்கள் பலவற் றைச் செய்பவனுவான். மனைவியிடம் பிரியமுடையவன். பிறருக்கு உப காரம் செய்யும் இயல்பினன்,

இதுவுமது

17. கரமதில் கத்திரி ரேகை கனத்தவர் நேசம் கொள்வன்
உறன்முறைக் கினிய னாகும் உரைக்கிறோம் புத்திர [பாவம்
வருமனை யொன்றே யாகும் மைந்தர்கள் ஆண்பா [லிரண்டு
திருமக ளொப்ப தாகச் செல்வதி யவ்வா றாமே.

17. இவன் கையில் கத்திரி ரேகை இருக்கும். பெரியோர் நட்பைக் கொள்ளுவான். பந்துக்களுக்கு இனியவனாக இருப்பான். இவனுக்குப் புத்திர பாவம் பற்றிக் கூறுகிறோம். இவனுக்கு மனைவி ஒருத்தியே யாவாள். புதல்வர்கள் இருவரும், இலக்குமி போன்று அழகிய பெண்ணொருத்தியும் தோன்றித் தீர்க்காயுளுடன் விளங்குவர்.

இதுவுமது

18. சல்லியம் கொள்ளா னாகும் தந்திர வார்த்தை சொல்வன்
புல்லிய புத்தி கொஞ்சம் போசனச் சுகிய னாகும்
அல்லலென் றோரைக் காப்பன் அன்னையில் லடைவா [னாகும்
வெல்லுஞ்சொல் லுடைய னாகும் வம்மையும் கேட்க [லுற்றாள்.

18. பணம் கடன் வாங்க மாட்டான். தந்திரமான பேச்சுக்கள் பேசுவான். அற்ப புத்தி சிறிதே உடையவன். சுக போஜனம் செய்பவன் ஆவான். துன்பமென்று தன்னிடம் வந்தவர்களைக் காப்பாற்றுவான். தன் தாயின் பிறந்த வீட்டைச் சேர்ந்து வசிப்பான். வெற்றி ஏற்படும் வகையில் பேசும் இயல்பினன். இவ்வாறு வசிட்டர் கூறவே, பார்வதியம்மை கேட்கின்றாள்.

19. தன்னில்லம் கடல்போ லென்றீர்
தடுத்துமே தாயில் லத்தில்
அன்னவன் செல்லும் சேதி
அறிவிப்பீர் முனியே நீர்தாம்
மன்னிய வன்னைக் கேறான்
வரும்துணை காணா தாகித்
தந்திமா முகனைப் போலே
தானவன் சென்றா னென்றோம்.

19. தன்னுடைய வீடு கடல் போலப் பெரியது என்று கூறினீர்கள், அங்ஙனம் இருந்தும், அவன் தன் தாய் வீட்டை நாடிச் சென்ற காரணம் என்ன என்று கூறுங்கள் முனிவரே! தாங்கள். வசிட்டர் கூறுவார். இவனுடைய தாய்க்கு உடன் பிறந்த ஆண் துணை இல்லாததால் (யானை முகத்தை

யுடைய விநாயகனைப் போல்) அவள் பிறந்த வீட்டுச் சொத்துக்கு வாரிசாக இவன் சென்றான் என்று சொன்னோம்.

## தாயின் குணங்கள்

20. மாதுரு குணத்தைச் சொல்வேன் மாநிற முணச்ச [லுள்ளாள்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உள்மனம் கபடு மில்லாள்
சீதள குணத்த ளாகும் ஜனசகாயங்கள் செய்வள்
மாதவர்க் கன்பு பூண்பள் வாக்குமே சுத்த முள்ளாள்.

20. இனி, ஜாதகியின் தாயின் குணங்களைச் சொல்லுவோம். இனி தாகப் பேசுவாள். மனத்தில் கபட மில்லாதவள். குளிர்ந்த தன்மையுடையவள். (நல்ல குண முடையவள்) உலகிலுள்ள மக்களுக்கு உபகாரங்கள் பல செய்வாள். சிறந்த தவங்களைச் செய்பவர்களிடம் அன்பாக இருப்பாள். வாக்கு நாணய முள்ளவள்.

## இதுவுமது

21. பொறுமையும் பெருமை யேற்பள் புண்ணிய மனத்த [ளாகும்
வரன்மனம் போலே வர்ழ்வள் அறம்தி லிச்சை [யுள்ளாள்
குறைவிலா தனமு முள்ளாள் குலதெய்வ பக்தி பூண்பள்
உறைந்தபின் வரன்யோ கம்தான் உரைக்கிறே [மிவள்தன் பூர்வம்.

21. பொறுமைக் குணம் உள்ளவள். மேன்மையுடையவள். கருணை நிறைந்த மனத்தினள் ஆவாள். தன் கணவன் மனம் போல் வாழ்க்கை நடத்துவாள். தருமம் செய்வதில் விருப்பமுடையவள். குறைவில்லாது நிறைந்த செல்வம் உள்ளவள். குல தெய்வத்திடம் பக்தி யுடையவள். இவள் வந்த பிறகு கணவனுக்கு யோகம் உண்டாகும். இனி, இவளுடைய முற்பிறவி பற்றிச் சொல்லுகின்றோம்.

## தாயின் முற்பிறவிச் செய்தி

22. ஆலங்கா டதற்குத் தெற்கில் அணுகிய பேரூர் தன்னில்
சாலவே கோகு லத்தில் ஜனித்தன ளிந்த மாது
பாலர்க ளதிக முண்டாய்ப் பாவையும் வாழு நாளில்
கோலமாய் வந்த ஊழைக் கூறுவோம் கேளுந் தாயே.

22. திருவாலங்காடு என்ற தலத்திற்குத் தெற்குத் திசையில் உள்ள தொரு பெரிய ஊரில், இந்த ஜாதகியின் தாய் இடையர் சேரியில் பிறந்தாள்.

கணவனை யடைந்து மக்களைப் பெற்று இவள் வாழ்ந்து வருகின்ற நாளில், இவளைச் சேர்ந்த தீவினையைச் சொல்லுவோம். கேளுங்கள்; பார்வதியம்மையே !

## தாய் செய்த தீவினை

23. மறையவள் பசிதா கத்தால் மாதுபா லணுகி யேதான்
தருகுவாய் நீர்மோ ரென்ன தனமது பெற்றுக் கொண்டு
திருகாகச் சாதப் பாலைச் சேர்த்துமே தந்தா ளென்றோம்.
விரைவினில் வாங்கிக் கொண்டு விழதன்பால் வந்து [பின்பு

23. ஒரு அந்தணப் பெண் பசி, தாகத்துடன் இவளிடம் வந்து குடிப்பதற்கு நீர் மோர் தருவாயாக என்று கேட்க, இவள் பணம் பெற்றுக் கொண்டு குற்றமாக, சாதத்திலிருந்து வடிக்கப்பட்ட கஞ்சியை கலந்து நீர் மோராகத் தந்தனள் என்று சொன்னோம். அந்தணப் பெண் இந்தச் சூதனை அறியாமல் விரைவாக வாங்கிக் கொண்டு தன் கணவனிடம் வந்து பிறகு,

## இதுவுமது

24. வைத்துமே விருந்த தாலே விளம்புவான் மறையோன் [தானும்
சுத்தமா னவர்க்குத் தாகம் துன்பமா யளித்த தாலே
வித்தகி மறுஜன் மத்தில் விளங்காரே துணைவர் தாமும்
பெத்திடு மதலை தோஷம் புகன்றுமே சென்று [ளென்றோம்.

24. அந்தக் கஞ்சியுடன் கலந்த மோர் நிறைந்த பாத்திரத்தை வைத்தாள். அதனை யுணர்ந்த அந்தணன் கூறுவான். தூய்மை யுடைய அந்தணர்க்குச் சூதாகக் கஞ்சியுடன் கலந்த நீர்மோரை யளித்ததால், இவளுக்கு ஏற்படும் மறுபிறவியில் ஆண் துணைவர் விளங்கார். பிறக்கும் குழந்தை கட்கும் தோஷம் உண்டாகும். இங்ஙனம் கூறிவிட்டு அந்தணன் சென்றான் என்று சொன்னோம்.

## சாப பலன்

25. *மாதுவு மந்திய காலம் வயிறுவேதை தன்னால் மாண்டு
வேதனால் வரையப் பட்டு விளங்கினா ளிக்கு லத்தில்
தீதாகும் துணையா னுந்தான் ஐயமுனி கேட்க லுற்றார்

*இப்பாடலில் ஒருவரி மிகுந்துளது.

மாதவன் சாபம் போலே வரும்துணை தோஷ மாச்சு
நீதியாய்ச் சுதர்களெவ் வாறு நிலைத்தது சொல்லு
[மென்ன ;

25. இவள் (ஜாதகியின் தாய்) தனது இறுதிக் காலத்தில் வயிற்று வலியால் மரணமுற்று, மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இப்பிறப்பில் இக்குலத்தினளாகப் பிறந்தாள். உடன் பிறந்த ஆண் துணை நஷ்டமாம் இங்ஙனம் முனிவர் கூற, ஐய முனிவர் சகோதர தோஷம் ஏற்பட்டபோது, மக்கள் எங்ஙனம் நிலைத்தனர் கூறுங்கள்.

## முற்பிறவியில் செய்த நல்வினை

26. அன்னவள் முன்ஜன் மத்தில் ஆதியாம் கடவு ளர்க்குப்
பொன்காராம் ஆவின் பாலைப் புண்ணிய வதியு மீந்தாள்
அந்ததோர் புண்ணி யத்தால் அச்சுதர் தோன்று
[மென்றேம்
முந்திய குடும்பம் தன்னில் மேவினு ளிந்த மாது.

26. இந்த ஜாதகியின் தாய் முற்பிறப்பில் முதற் கடவுளராகிய திருமால், சிவபெருமான், ஆகியோர்க்கு அழகிய காராம் பசுவின் பாலை அபிடேகத்திற்கும் நிவேதனத்துக்குமாக அளித்தாள். அந்தப் புண்ணியத்தால் இவளுக்குக் குழந்தைகள் தோன்றும் என்று சொன்னேம், இவள் பெரிய குடும்பத்தில் பிறந்தவள் என்றேம்.

## ஜாதகியின் தாய் மரணமும் மறுபிறப்பும்

27. எண்ணான்கு ஆண்டு தன்னில் எழிலுள தனுசு மாதம்
திண்ணமா யன்னை கண்டம் செப்புவோ மிவள்பின்
[ஜன்மம்
வண் ணமாய் வேங்க டத்துள் மறையவர் குலமே
[தோன்றி
கண்ணன்தன் பக்தி கொண்டு காதலி வாழ்வா ளாமே.

27. ஜாதகியின் முப்பத்திரண்டாம் வயதில் அழகிய மார்கழி மாதம் நிச்சயமாய் தாய் மரணத்தைச் சொல்லுவோம். இனி இவள் மறுபிறவி பற்றிக் கூறுவோம். சிறப்புடன் திருவேங்கட மலையில் அந்தணர் மரபில் பிறந்து, திருமாலின் பக்தி கொண்டு வாழ்வாள்.

## ஜாதகியின் திருமணக்காலம் : கணவனின் இயல்பு

28. ஜாதகி மணத்தின் காலம் சாற்றுவோ மினிமே லாக
ஓதுவோம் வடமேல் திக்கில் வித்தகன் வருவா னுகும்

ஓதுவே னவன்கு ணத்தை உறுதியில் லாத நெஞ்சம்
தீதிலாக் குணத்தா னுகும் ஜகராசர் பேட்டி கொள்வன்.

28. இனிமேல், ஜாதகியின் திருமணக் காலத்தைப் பற்றிச் சொல்லு வோம். வடமேற்குத் திசையிலிருந்து இவளுக்குக் கணவன் வருவான். அவன் குணங்களைச் சொல்லுகின்றேன். திடமில்லாத மனத்தினன். எவ ருக்கும் தீங்கு செய்ய வேண்டும் என்ற எண்ணமில்லாத இயல்புடையவன். உலகில் அரசர்களைப் பேட்டி காணும் மேன்மை பெறுவான்.

## கணவனின் இயல்பு

29. செக்குநாள் கோலாம் ராசி ஜனிப்பனும் வறுமை காணுன்
தக்கோர்கள் நேசம் கொள்வன் சஞ்சல மனத்த னுகும்
கிக்கவே துருவ மோடு வித்தகர் தம்பால் மேவி
...........வான் சிலது காலம்

29. சதயநட்சத்திரம் துலா லக்னத்தில் இவன் தோன்றுவான், தன் வாழ்க்கையில் தரித்திரத்தையே யறிய மாட்டான். தகுதி யுடைய பெரியோர் கள்தொடர்பைக் கொள்ளுவான். சஞ்சலங்கள் நிறைந்த மனமுடையவன். .........பெரியோரைச் சார்ந்து சிலகாலம்;

## கணவனுடைய சகோதரபாவம்

30. சிலவேநாள் கத்திரி யோகம் செப்புவோம் விபர
[மிரண்டில்
நலமுள துணைஆ ணொன்று நாயகி மார்கள் மூன்று
குலவிடும் தீர்க்க மென்றேம் கூறின வரனும் நேரும்
நிலைமையாய்ப் புத்திர பாகம் நிகழ்த்துவோம் தாயே
[கேளும்.

30. இவனுக்குச் சிலகாலம் கத்திரியோகம் இருக்கும். அந்த விவரங் களை இரண்டாம் பாகத்தில் சொல்லுவோம். இவனுடன் பிறந்தவர்கள் ஆண் ஒருவனும் பெண்கள் மூவரும் ஆவர். இவர்கள் மூவரும் தீர்க்காயு ளுடன் விளங்குவர் என்றேம். ஜாதகிக்குப் புத்திர பாவம் பற்றி இனிக் கூறுவோம், கேளுங்கள் தாயே!

## புத்திரதோஷம் : கிரகநிலை

31. சுதருமே வொன்று தோன்றிச் சோர்வுறும் காலன்
[பக்கல்
அதுவிதம் நேரு மென்று அறைந்தகா ரணத்தைச்
[சொல்வீர்
மதலையின் தானம் தன்னில் மால்புகர் கேது தங்க
விதியவன் சேயும் பார்க்க விளங்காது சுதர்கள் தாமே.

31. குழந்தை யொன்று பிறந்து மரித்துவிடும். இங்ஙனம் முனிவர் சொல்லப் பார்வதிதேவி கேட்கின்ருள். புத்திர தோஷம் ஏற்படும் என்று எப்படிச் சொன்னீர்கள்? காரணங்கள் கூறுங்கள். முனிவர் விடை கூறுகிருர். புத்திர ஸ்தானமாகிய ஐந்தாமிடத்தில் (ஈண்டு) மகரத்தில் புதன் சுக்கிரன்கேது ஆகியோர் தங்கியிருப்பதாலும், சனியும் செவ்வாயும் புத்திர ஸ்தானத்தை பார்ப்பதாலும் இவளுக்குக் குழந்தைகள் நிலையார்.

## ஜாதகியின் முற்பிறவிச் செய்தி

32. தானவன் முன்ஜன் மத்தில் செய்ததோர் வினையி ஞலே
ஊனமாம் சுதர்க ளென்ருேம் உரைப்பீர்கள் வினையை
[நீங்கள்
மான்விழி பூர்வம் சொல்வேன் மால்மலை வேங்க டத்தில்
ஆனதோர் ரெட்டி வமிசம் அவளுமே வுதித்தா
[ளென்ருேம்.

32, இந்த ஜாதகி முற்பிறப்பில் செய்ததொரு தீவினையால் இப்பிறப்பில் பிறக்கும் குழந்தை நஷ்டமாம் என்று சொன்ஞேம். அந்தத் தீவினை இன்ன தென்று கூறுங்கள் முனிவரே யென்று பார்வதிதேவி கேட்க, ரிஷி கூறுகிருர். மான் போன்று மருண்ட கண்களை யுடைய இந்த ஜாதகியின் முற்பிறவியைச் சொல்லுவேன். திருமால் எழுந்தருளியுள்ள திருவேங்கட மலையில் ரெட்டி யார் மரபில் தோன்றிஞள் என்று சொன்ஞேம்.

## இதுவுமது

33. சுகமுள குடும்பி யாகிச் சுந்தரி வாழும் நாளில்
பகையதைச் சொல்லக் கேளாய் பஞ்சையாய்
[மறையோன் மாது
இகபர னருளி ஞலே எய்திற்றுச் சுதரு மொன்று
தகைமையாய்த் தாய்ப்பா லின்றித் தையல்பா லாவின்
[பாலை.

33. சௌக்கியமுள்ள குடும்பமுடையவளாய் இவள் வாழ்கின்ற காலத்தில் நேர்ந்த தீவினையை நாங்கள் சொல்லக் கேட்பாயாக. ஏழையான ஒரு அந்தண தம்பதிகளுக்கு இறைவனின் அருளால் ஒரு குழந்தையைப் பெற்றனர். அந்தக் குழந்தைக்குத் தாய்ப் பால் கிடைக்காது போகவே, அதன் தாய் பசும்பால் சிறிது கொடுத்து உதவும்படி, ஜாதகியை

## இதுவுமது

34. வினவவும் வைத்துக் கொண்டு வித்தகி யீயா ளாக
சினமதை மனத்தில் கொண்டு செப்புவார் மறையோர்
[தாமும்

வனிதைக்குப் பின்ஜன் மத்தில் மைந்தர்கள் காணு
[தாகித்
தனியாக வாழ்வா ளென்று செப்பியே சென்று
[ரென்றோம்

34. இவனிடம் (ஜாதகியிடம்) கேட்க, தன்னிடம் பசும்பால் வைத்துக் கொண்டே இவள் கொடுக்காமல் இருந்தாள். அதனை யுணர்ந்த அந்த அந்தண தம்பதிகள் கோபத்துடன் பின்வருமாறு கூறுவார்கள். பால் தராத இவளுக்கு மறுபிறப்பில் புத்திர பாக்கியம் இல்லாது போகும். தனித்து வாழ் வாள் என்று கூறிவிட்டுச் சென்றார்.

## மற்றொரு தீவினை

35. அதுவொரு தோஷ மாச்சு
அதுவன்றி வேறு சொல்வேன்
மதிமுக யேழை மாது
மைந்தர்க்குச் சாதம் கேட்க
அதிசய வார்த்தை சொல்லி
அதட்டினு ளேழை தன்னை
கதியிலா வேழை மாது
கழறுவாள் சாபம் தானும்.

35, அந்தத் தோஷம் ஒன்று இவளுக்கு ஏற்பட்டது, இதுவல்லாது வேறு ஒன்றும் கூறுவோம். சந்திரன் போன்று முகமுடைய ஏழைப் பெண் ஒருத்தி தன் புதல்வர்கட்குச் சிறிது சாதம் இவளைக் கேட்க, இந்த ஜாதகி ஏழைப் பெண்ணைக் கொடூர வார்த்தைகள் சொல்லி விரட்டினாள். கதி யற்ற அந்த ஏழைப் பெண் பின்வருமாறு சாப மிட்டாள்.

## ஏழையின் சாபம்

36. பாலர்க்கு அன்ன மீயாப்
பாவியு மறுஜன் மத்தில்
சாலவே சுதர்கள் காணுள்
ஜனிக்கினும் தீதே யாகும்
ஏலவே சொல்லிச் சென்றாள்
எய்திற்று விதுவோர் தோஷம்
வேல்விழி யந்தி யத்தில்
மேவிற்றுக் குன்ம பாதை.

36. "குழந்தைகட்கு உணவு அளிக்காது கடுஞ் சொற்கள் கூறி விரட்டிய பாவியாகிய இவள் மறுபிறப்பில் புத்திர பாக்கியத்தைக் காண மாட்டாள். குழந்தைகள் பிறந்தாலும் நஷ்டமே யாகும்" என்று கூறிச்

சென்ருள். இந்தச் சாபம் ஒன்று இவளை யடைந்தது. வேல் போன்ற விழிகளை யுடைய இவளு (ஜாதகி)க்கு அப்பிறப்பின் இறுதிக் காலத்தில் வயிற்று வலி ஏற்பட்டு,

## முற்பிறவித் தோஷப் பலன்

37. அந்தகன் பக்கல் சென்று அயனுமே வரையப் பட்டு
வந்தவ ளிவளே யென்ரேம் மைந்தர்கள் பசியின் [தோஷம்
சந்ததி குற்ற மெய்தும் ஜயமுனி கேட்க லுற்ருர்
முந்திய தோஷம் தீர மொழிகுவீர் கிரியை யொன்று.

37. மரண மடைந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப்பட்டு, இப்பிறப்பில் பிறந்தவள் என்று சொன்னேம். குழந்தைகள் பசிக்கு உணவு தராத தோஷத்திஞல் இப்பிறவியில் இவளுக்குப் புத்திர தோஷம் ஏற்படும். இங்ஙனம் வசிஷ்டர் கூற, ஜயமுனிவர் என்பார் கேட்கின்ருர். முன் பிறப்பில் ஏற்பட்ட தீவினை நீங்குவதற்குச் சாந்தி யொன்று சொல்லுவீர்.

## தீவினைத் தீரச் சாந்தி

38. சாந்தியு மதற்குச் சொல்வோம்
சதுர்மறை சாபத் துக்குக்
கூர்ந்துமே வேறு சொல்வோம்
கோதையும் வரன்தன் ஞேடு
சாந்தமாய்ச் சேது சென்று
சத்தம பரத்துக் கன்னம்
எந்திழை யுள்ளூர் சென்று
இயல்சுக்கிர வார நோன்பு;

38. முனிவர் கூறுகிருர். இந்த ஜாதகிக்கு முற்பிறவித் தோஷங்கள் தீருவதற்குச் சாந்தி யொன்று கூறுவோம். அந்தணப் பெண் சாபம் நீங்க நன்கு ஆராய்ந்து சாந்தி ஒன்று சொல்லுவோம். இவள் தன் கணவனுடன் அமைதியான மனத்தினளாய்ச் சேதுவுக்குச் சென்று நீராடி, ஏழு பரதேசிகட்கு அன்னமளித்து, உள்ளூர் திரும்பி, வெள்ளிக் கிழமை தோறும் விரதம்,

## தந்தையின் முற்பிறவிச் செய்திகள்

39. கொள்ளவும் வினைகள் போகும்
கூறுவோம் சுதர்கள் விருத்தி
கள்ளமாய்ச் செய்யா ளாகில்
காளைகள் விருத்தி யில்லை

விள்ளுவீர் தந்தை பூர்வம்
விரிஞ்சியில் பிரம்ம சேயாய்
பள்ளுகள் பறைக ளுண்டாய்ப்
பகரமாம் குடும்பி யாகி;

39. ஏற்பாளானுல் முற்பிறவி வினைகள் நீங்கும். புத்திர விருத்தியும் ஏற்படும் என்று சொல்லுவோம். வஞ்சனையாக, கூறிய சாந்தியைச் செய் யாவிட்டால் புத்திர விருத்தி இல்லை. இனி, இவள் தந்தையின் முற்பிறவி யைக் கூறுங்கள் எனப் பார்வதிதேவி கேட்க முனிவர் கூறுகிருர். விரிஞ்சி புரத்தில் அந்தணர் குலத்தவனுகப் பிறந்து பள்ளர் பறையர் முதலான பணி யாட்களை யுடையவனுய், பெருமை யுடைய குடும்பத்தை யடைந்து,

## பராசர முனிவர் கேள்வி

40. மறுவினை யேது மின்றி
மறலியின் பதிக்குச் சென்று
சிரநான்கோன் வரையப் பட்டு
ஜனித்தன னிவளின் தந்தை
பராசரும் கேட்க லுற்ருர்
பாலகன் முன்ஜன் மத்தில்
மறைக்குலம் தன்னிலு தித்து
வடுகர்தங் குலமு திக்க.

40. தன்னைப் பற்றும் தீவினை எவையுமில்லாமல், மரண மடைந்து, மீண்டும் நான்கு முகங்களை யுடைய பிரமதேவனுல் படைக்கப்பட்டு இப் பிறவியில் இக்குலத்தவனுகப் பிறந்தான் இவள் தந்தை. பராசர முனிவர் கேட்கின்ருர். இந்த ஜாதகியின் தந்தை முற்பிறவியில் அந்தணர் மரபில் பிறந்து, இப்பிறப்பில் வடுகர் குலத்தினனுகப் பிறக்க;

## தந்தைக்குக் குலம் தாழ்வாகக் காரணமும் மரணமும்

41. காரணம் யாது வென்ன காவலன் முன்ஜன் மத்தில்
தீரமாம் மறைகள் தன்னை தினமுமே யோதா ததனுல்
பாரினில் குலம்தாழ் வாகப் பிறந்தவ னென்று
[சொல்வோம்
ஆருறு வொன்று வாண்டில் ஆவணி மாதம் தன்னில்;

41. காரணம் என்னவென்று சொல்லுங்கள். இவன் (ஜாதகியின் தந்தை) முற்பிறப்பில் தினந்தோறும் குலமுறைப்படி வேதம் ஓதாமல் இருந்த தால், இப்பிறப்பில் தாழ்வான குலத்தில் பிறந்தான் என்று கூறுவோம். ஜாத கியின் முப்பத்தேழாவது வயதில் ஆவணி மாதம்,

## தந்தையின் மறுபிறவி

42. தந்தைக்குக் கண்ட மென்ருேம் சாற்றுவோ மிவன்பின் [ஜன்மம்
முந்திய வரங்கம் தன்னி லுதிப்பனும் பிரம்ம சேயாய்
இந்ததோர் ஜன்மம் தன்னில் அறைந்ததோர் [புண்ணியம் சொல்வீர்
விந்தையாய் கூவல் சோலே இளமன தாக வேதான்.

42. தந்தைக்கு மரண முண்டாகும் என்று சொன்னேம். இனி, இவனுடைய மறுபிறவி பற்றிச் சொல்லுவோம். பழமையான திருவரங்கம் என்னும் தலத்தில் அந்தணர் மரபினனுகப் பிறப்பான். இவன் இப்பிறப்பில் செய்த நல்விணைகள் யாவை? என்று கூறுவீர் என்று பார்வதி கேட்க முனிவர் கூறுகிருர். அழகிய கிணறு. சோலே முதலியன அமைத்தும், யாவ ரிடமும் கருணை கொண்ட மனத்தினனுயும்,

## ஜாதகி மரணகாலம்

43. தேவதாப் பக்தி கொண்டும் சிறுத்தவர் குதவி செய்தும்
ஆவலாய் முன்கு லத்தி லருளுவா னிந்தப் பாலன்
மேவிய ஜாத கிக்கு விளம்புவோ மன்பா ஞறில்
காவிய மேட மாதம் கழறுவோம் கண்டம் தானே.

43, தெய்வ பக்தி கொண்டும் செல்வ மில்லாத ஏழைகளுக்கு உபகா ரங்கள் செய்தும் வாழ்ந்து வருவதால் இவன் மறுபிறப்பில் அந்தணர் குலத் தில் பிறப்பான். இந்த ஜாதகிக்கு ஐம்பத்தாரும் வயதில் சித்திரை மாதம் மரண மேற்படும் என்று சொல்லுவோம்.

## ஜாதகியின் மறுபிறவியும், கணவன் மரணகாலமும்

44. மறுஜன்மம் காஞ்சி தன்னில் மறைக்குல முதிப்பா [ளாகும்
.........................பேசுவோம் நாற்பா னேழில்
வருமாசி தன்னி லேதான் வரனுமே கண்ட மென்ருேம்
இருபது வெட்டு வாண்டில் இவள்தந்தை யில்லம் வேறு

44. ஜாதகி மறுபிறவியில், காஞ்சிபுரத்தில் அந்தணர் மரபில் தோன்று வாள்...ஜாதகியின் நாபத்தேழாம் வயதில் மாசி மாதம் கணவன் மரணமடை வான் என்று சொன்னேம். இவளது இருபத்தெட்டாம் வயதில் இவள் தந்தை வேறு விடு ஒன்று கட்டுவான். (பிரிந்து போவான்).

## ஜாதகி யோகங்கள்

45. அன்னமும் வேறே யாகி அதன்பின்னுல் முப்பா னலில்
பொன்பூமி பிரித லாகும் பிறந்தவள் யோகம்
[சொல்வேன்
மன்னிய ஜனனம் தொட்டு.......................................
உன்னதப் பிறைபோல் யோகம் உத்தமி வறுமை
[காணுள்.

45. தன் குடும்பத்திலிருந்து பிரிந்து உணவும் வேருகக் கொள்ளு வான். அதற்குப் பிறகு இவளது முப்பத்து நான்காம் வயதில் பொன், நில புலங்கள் இவைகட்கு மாற்றம் ஏற்படும், இனி, ஜாதகியின் யோகங்கள் பற்றிக் கூறுவேன். பிறந்தது முதல் வளர்பிறைச் சந்திரன் போல அதிர்ஷ்டம் வளர்ந்து கொண்டே இருக்கும். இவள் தரித்திரத்தை யறிய மாட்டாள்.

## ஜனனகாலத் தசையிருப்பு

46. இன்னமும் விபரம் கேட்க இயம்புவோ மிரண்டி லேதான்
அன்னவள் ஜனன காலம் அம்புலி தசையி ருப்புச்
சொன்னனே ஆண்டு ஐந்தும் திங்களு மூன்று மாகும்
தன்னிலே பலனைச் சொல்வேன் சங்கரி கேட்டி டாயே.

46. இன்னும் இவளைப் பற்றிய விவரங்களைக் கேட்டால், அவற்றை இரண்டாம் பாகத்தில் சொல்லுவோம். ஜாதகியின் ஜனன காலத்தில் சந்திர மஹா தசையில் இருப்பு ஐந்து வருஷங்களும் மூன்று மாதங்களுமாம் என்று சொன்னேம். அக்கால பலன்களை இனிக் கூறுவோம். சங்கரனர் தேவியே! கேட்பாயாக.

## ஜாதகம் 88

### ஜனனகால கிரகநிலை

1. மதி[1]வீணை[2] யிரவி[3] சீயம்[4] மால்[5]புகர்[6] கன்னியாகத்
துதிசனி பணி[7]சேய்[8] வண்டி[9] துலை[10]குரு கேது மானில்[11]
இதுவிதக் கோளு[12] நின்று இலக்கின மாதை[13] யாக
அதுபலன் சொல்லு மென்ன அறைகுவார் புசண்டர்
[தாமே.

1. சந்திரன் மிதுனத்திலும், சூரியன் சிம்மத்திலும், புதன் சுக்கிரன் கன்னியிலும், சனி ராகு அங்காரகன் கடகத்திலும், குரு துலாத்திலும், கேது மகரத்திலும் ஆகஇவ்விதம் நவக்கிரகங்களும் நிற்க, கன்னியா லக்கினத்தில் பிறந்தவருக்குப் பலன்களைச் சொல்லு மென்று பார்வதிதேவி கேட்கப் புஜண்ட முனிவர் கூறுவார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | | சந்திரன் |
| | இராசி சக்கரம் | | சனி ராகு அங்காரகன் |
| கேது | | | சூரியன் |
| | | குரு | லக்கினம் புதன் சுக்கிரன் |

1. சந்திரன்
2. மிதுனம்
3. சூரியன்
4. சிம்மம்
5. புதன்
6. சுக்கிரன்
7. இராகு
8. அங்காரகன்
9. கடகம்
10. துலாம்
11. மகரம்
12. இரகம்
13. கன்னி

## ஜாதகன் பிறந்தவீட்டு அடையாளங்கள்

2. வந்தசே யாணும் ஜன்மம் வந்தவில் கீழ்மேல் வீதி
சந்ததம் எதிர்வீ டில்லை சண்டன்தன் வாச லாகும்
தந்தியும் தென்மேல் தங்கும் சக்கரத் தோனு முத்திரம்
நொந்திடும் வடகீழ் காளி நிகர்மாரி தென்கீ ழாகும்.

2. இந்தக் கிரக நிலைகளுடன் பிறந்த குழந்தை ஆணாகும். பிறக்கும் வீடு கிழக்கு மேற்கான வீதியில் தெற்கு நோக்கிய வாயிலை யுடையது. எதிரே வீடு இல்லை என்று நிச்சயமாய்க் கூறலாம். வீட்டுக்குத் தெற்கில் விநாயகக் கடவுள் ஆலயம் உண்டு. சக்கராயுதத்தை ஏந்திய திருமால் வீட்டுக்கு வடக்கில் கோயில் கொண்டுள்ளார். வடகிழக்குத் திசையில் காளி கோயில் இருக்கும். மாரியம்மன் ஆலயம் தென் கிழக்குத் திசையி லுள்ளதாகும்.

## இந்நூலில் கூறப்படுவன

3. இவ்வித வடையா ளத்துள் இணங்கிய சிற்றூர் தன்னில்
ஒவ்விய விந்தப் பாலன் உதிப்பனு மன்னை யோகம்
பவ்வமாய் தந்தை யோகம் பாலனும் துணைவர் யோகம்
நவ்விய களத்திர புத்திரர் நாட்டுவோ முன்பின் ஜன்மம்

3. இங்ஙனம் கூறப்பட்ட அடையாளங்கள் பொருந்தியதொரு சிற்றூரிலுள்ள வீட்டில் இந்த ஜாதகன் பிறப்பான். இவனது தாய் தந்தை யர் யோகங்கள், ஜாதகன் அவனது துணைவர் ஆகியோர் யோகங்கள், மனைவி மக்கள் செய்திகள், முற்பிறவி வரலாறுகள் முதலான பலவற்றைப் பற்றி இந்நூலில் நாங்கள் சொல்லுவோம்.

## ஜாதகனுடைய குணாதிசயங்கள்

### வேறு

4. தந்தைகுணம் கூறுகின்றேன் மாநி றத்தான்
சரசமாய் வார்த்தையுளன் கல்வி யில்லான்
நொந்தவரை யாதரிப்பன் கிருஷி செய்வன்
நேமியினில் நல்லவனும் துணைகா ணும்
வந்தவரை யாதரிப்பன் மர்ம மில்லான்
அவனியிலே..............
......செய்வன் பொருளில் லாதான்
புறஞ்சொல்லான் சனபந்து புகழ வாழ்வன்.

4. இனி, ஜாதகன் தந்தையின் குணங்களைச் சொல்லுகின்றேன். மாநிறமுள்ளவன். சரசமாகப் பேசுபவன். கல்வியறிவு இல்லாதவன். நல்ல நிலையிலிருந்து தாழ்ந்து வருந்தியவர்களை ஆதரித்துப் போற்றுவான். விவசாயம் செய்வான். உலகில் அனைவருக்கும் நல்லவனாக இருப்பான்.

உடன் பிறந்தோர் இல்லாதவன்......செய்வான் செல்வம் இல்லாதவன். பிறரைப் பற்றிப் புறங் கூறமாட்டான். உலக மக்களும், உறவினர்களும் பாராட்டும்படி வாழ்வான்.

## இதுவுமது

### வேறு

5. பொய்யது வழுத்தா நெஞ்சம் பேசானச் சுகிய னுகும்
ஐயமே லிச்சை யுள்ளான் அன்புள மனத்த னுகும்
நையவே கூரு னுகும் நாயகி பட்ச னுகும்
சேய்தனில் ருத்ர ரேகை தீரமா நெஞ்சு மில்லான்.

5. பொய்யுரைகள் கூற எண்ணுத மனமுடையவன். சுகபோஜனம் செய்பவன் ஆவான். பிச்சை தா வென்று கேட்டவர்களுக்குக் கொடுப்பதில் விருப்பமுள்ளவன். அன்பு பொருந்திய மனத்தினன். பிறர் மனம் வருந்துமாறு எதனையும் சொல்ல மாட்டான். மனைவி யிடத்தில் பிரியமுள்ளவன். இவன் கையில் உருத்திர ரேகை யுண்டு. துணிவு பொருந்திய மனம் இல்லாதவன்,

## தந்தைக்கு துணைவர் தோஷம் கிரகநிலை

6. ஏதுகா ரணத்தி னுலே இயம்பினீர் துணைவர் தோஷம்
ஓதுவீர் முனியே நீர்தாம் உரகன்சேய் காரி லாபம்
தீதாக விருப்ப தாலே செப்பினே மந்தச் சங்கை
போதவே முன்ஜன் மத்தில் பொருந்திற்றுப் பவங்கள்
[தாமே.

6. என்ன காரத்தினுல் இவனுக்குச் சகோதர தோஷம் உண்டு என்று கூறினீர்கள்? அதனை விவரமாகக் கூறுங்கள் முனிவரே, என்று பார்வதிதேவி கேட்க, முனிவர் சொல்லுகின்றுர். இராகு, செவ்வாய் சனி ஆகியோர் லாப ஸ்தானமாகிய பதினேராம் இடத்தில் கடகத்தில் கேடுண்டாகும் நிலையில் தங்கியிருப்பதால், அவ்வாறு கூறினேம். முற்பிறப்பில் செய்த சில தோஷங்கள் இவனுக்குச் சேர்ந்தன.

## தந்தையின் முற்பிறவித் தீவினை

7. பவமதைச் சொல்லு மென்னப் பகருவார் புயண்டர்
[தாமும்
தவசிறு பாக்கம் தன்னில் ஜனித்தனன் வைசியச்
[சேயாய்
அவனியில் .........
நவனியில் மனைவி மைந்தர் நாயகன் வாழு நாளில்;

7. முற்பிறப்பில் நேர்ந்த தீவினைகளைக் கூறுங்கள் என்று பார்வதி தேவி கேட்கப் புஜண்ட முனிவர் சொல்லுவார். முற்பிறவியில் சிறுபாக்கம் என்ற ஊரில் வைசிய மரபில் இந்த ஜாதகன் தந்தை பிறந்தான் உலகில்......மனைவி மக்களைப் பெறறு வாழ்ந்து வரும் காலத்தில்,

இதுவுமது

8. வந்தஊழ் தன்னைச் சொல்வேன்
வன்னிய விதவை மாது
இந்தவன் தன்பால் சென்று
இல்லத்தில் வேலை செய்தாள்
அந்தவள் தன்மேல் மோகம்
அன்புடன் வார்த்தை பேசிச்
சிந்தையும் களிப்புக் கொள்ளச்
சேலையும் மவளுக் கீந்து ;

8. இவனை நாடி வந்த தீவினையை கூறுவோம். வன்னிய குல விதவைப் பெண் ஒருத்தி இவன் வீட்டுக்குச் சென்று வேலை செய்து கொண்டிருந்தாள். இந்த ஜாதகன் தந்தை அவள் மீது மையல் கொண்டு, அன்பு கலந்த சொற்களை அவளுடன் பேசி, அவள் மனம் மகிழ்ச்சி யடையும்படி புடவை யொன்று கொடுத்து,

இதுவுமது

9. குலவினன் விதவை மாது கோதைக்குக் கருவு தங்கி
பலபல பண்டி தங்கள் பாவைக்குச் செய்ய லுற்றுள்
குலவின கருவு நீங்கிக் கோதையு மரண மானுள்
உலவிற்று அந்தத் தோஷம் உரைக்கிறே மின்னு
[மொன்று ;

9. அக்கைம் பெண்ணுடன் சிற்றின்பம் அநுபவித்தான். அதனுல் அவளுக்குக் கருவேற்பட்டது. அக்கருவை யழிக்கப் பலப்பல மருத்துவங்களை அவளுக்குச் செய்தான். அவற்றுல் அவளது கருவழிந்து பிறகு மரணமடைந்தாள். அந்தத் தோஷம் இவனைச் சார்ந்தது. இன்னும் ஒன்று கூறுகிறேம்.

இதுவுமது

10. ஏழையோன் மணத்துக் காக இவனைமாங் கலியம்
[கேட்கத்
தாழ்விலாத் தாரே மென்று தைரியம் கூற லுற்றுன்

ஆழியில் வந்து கேட்க அவன்பதி லுரைக்க லுற்ருன்
பாழான புத்தி யாலே பண்ணவு மறந்தே னென்ன;

10. ஒரு ஏழை தனக்குக் கல்யாணத்துக்காக திருமங்கலியம் ஒன்று செய்து அளிக்கும்படி இவனைக்கேட்க, இவன் தவருமல் செய்து தருகிறேன் என்று அந்த ஏழைக்குத் தைரிய வார்த்தைகள் சொன்னுன். ஏழை இவனை வந்து கேட்கும் போது (மீண்டும், மணம் நடக்கும் சமயத்தில் அவன் இவனைக் கேட்ட வளவில்) புத்தி கெட்ட தன்மையால் திருமங்கலியம் செய்ய மறந்து விட்டேன் என்று கூறினுன்.

## ஏழையோன் சாபம்

11. வேருெரு முத்திரை வாங்கி விவாகமு முடித்துக்
[கொண்டு
கூறுவா ரேழை சாபம் குறித்திடு மறுஜன் மத்தில்
பாரியு மிருவ ராயும் பகரமாம் குடும்ப மின்றித்
தீரமாய்த் துணைகா ளுமல் தீவினில் வாழ்வா யென்று.

11. வேறு திருமங்கலியம் வாங்கித் திருமணத்தை முடித்து விட்டு வந்து, அந்த ஏழை சாபம் இடுகிருன். தோன்றும் மறுபிறவியில் நீ இரு மனைவியரை அடைந்து, பெருமையான குடும்ப மில்லாமலும், உடன் பிறந்த துணைவர் இல்லாமலும், ஒரு தீவுக்குச் சென்று வாழ்வாய் என்றும்,

## சாப பலன்

12. இன்னமும் பலவாய்ச் சொல்லி
இறைத்தனர் தெருத்தூள் வாரி
முன்னதா யந்தச் சாபம்
மருவிற்று அந்தி யத்தில்
தன்தொழில் குறைவு நேர்ந்து
தன்பாரி யரிட்ட மாகி
துன்னிய காலன் பக்கல்
சென்றன னிவனே யம்மா.

12. இன்னும் பலவிதமாகவும் கூறித் தெரு மண்ணை வாரி இறைத்தனர் அந்த ஏழைகள். உடனே அந்தச் சாபம் இவனைப் பற்றியது. அதனுல் தான் செய்யும் தொழில்களில் குறைவு ஏற்பட்டு, தன் மனைவியை இழந்து, இறுதியில் மரண மடைந்தான் இவன். தாயே!

## தந்தையின் மறுபிறவி

13. பிரமனால் வரையப் பட்டு பிறந்தனன் வடுகர் வமிசம்
உறைந்திடு முன்னூழ்ச் சாபம் உறும்துணை காணு
[ளுகும்
சரியில்லாக் குடும்ப மாகும் சத்தியு மிருவ ராகும்
வருஞ்சென்மம் காஞ்சி தன்னில் வளமுள சைவச்
[சேயாய்;

13. பிரமதேவனால் மீண்டும் படைக்கப்பட்டு இப்பிறப்பில் வடுகர் குலத்தில் பிறந்தான் இந்த ஜாதகன் தந்தை. இப்பிறவியில் முன் ஏற்பட்ட சாபம் இவனைச் சேர்ந்திருக்கும். உடன் பிறந்தோரில்லாதவனுவான். ஒழுங்கில்லாத குடும்பமாக இருக்கும். மனைவியும் இருவராவர். மறு பிறவியில் காஞ்சிபுரத்தில் செழிப்புள்ளதொரு குடியில் சைவ மரபினனுய்,

## தந்தையின் மரணகாலம்

14. உதிப்பனு மிவனே யென்றோம்
முரைக்கிறோ முப்பா றுறில்
விதியவன் தசையி லேதான்
விஷமெனும் ராகு சக்கரம்
அதுகாலன் தந்தை கண்டம்
அறைந்தது தப்பா தாகும்
மதிசடை யணிந்தோன் தேவி
மங்கையே மேலும் கேளே.

14. பிறப்பான் இவன் என்று கூறினோம். ஜாதகன் முப்பத்தாறும் வயதில் சனி மஹா தசையில் கொடிய விஷம் என்று சொல்லத் தக்க இராகு புக்தி நடைபெறுங் காலத்தில் தந்தைக்கு மரணம் உண்டாகும் என்று சொல்லுகிறோம். நாங்கள் கூறியன தவறுதனவாம். சந்திரனைச் சடை முடியில் தரித்துள்ள சிவபிரானின் தேவியே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகனின் குணநலங்கள்

15. ஜாதகன் குணத்தைச் சொல்வோம்
சந்தத மிருசி வப்பன்
நீதிவான் அடக்க முள்ளான்
நேர்ந்திடும் பித்த தேகி
சூதிலான் சமமாம் கல்வி
துருசான கோபி யாவன்
பூதலம் கிருஷி செய்வன்
பிறர்பொரு ளிச்சை யில்லான்,

15. ஜாதகன் குணங்களை கூறுவோம். கருமை கலந்த சிவப்பு நிற முடையவன். நீதி நெறி யுணர்ந்தவன். பணிவுள்ளவன். பித்தம் நிறைந்த உடலுள்ளவன். வஞ்சனை இல்லாதவன். சமமான கல்வி யறிவுடையவன் விரைவில் கோபங் கொள்ளும் இயல்பினன். விவசாயத் தொழில் புரிவான் அயலார் பொருள் மீது ஆசை இல்லாதவன்.

## இதுவுமது

16. உண்டியும் சுகமாய்க் கொள்வன்
உரோமங்க ளதிக மில்லான்
அண்டினேர்க் குதவி செய்வன்
ஆவுகள் விருத்தி யென்றேம்
எண்டிசைப் புகழு மேற்பன்
ஈகைவான் வறுமை காணன்
வண்டிவா கனமு முள்ளான்
வாக்குகள் தப்பா தாமே.

16. சுகபோஜனம் செய்வான். தலைமயிர் நீளமில்லாதவன். தன்னை யடைந்தவர்க்கு உபகாரங்கள் செய்வான். பசு மாடுகள் மிகுதியாக வுடையவன் என்று சொன்னேம். எட்டு திக்கிலும் கீர்த்தி பெறுவான். கொடையாளி. தன் வாழ்க்கையில் தரித்திரத்தை யறிய மாட்டான். வண்டி முதலான வாகன வசதிகள் உள்ளவன். சொன்ன சொற்கள் தவற மாட்டான்.

## இதுவுமது

17. பூமியும் விருத்தி செய்வன் புதிதான கிரகம் செய்வன்
தாமதக் குணத்தா னாகும் தைரிய மனத்த னாகும்
நேமியில் நல்லோ னவன் நீர்தனில் தோய வல்லன்
காமனை விருப்பங் கொள்வன் காதலி கேட்டிட்டாயே.

17. நிலபுலங்களைப் பெருக்குவான். புதிய வீடு கட்டுவான். எந்தக் காரியத்திலும் தாமதமுள்ளவன். துணிவு பொருந்திய மனத்தினன். உலகில் அனைவர்க்கும் நல்லவனாக இருப்பான். புண்ணிய தீர்த்தங்களில் நீராடும் பேறு பெற்றவன். (ஜலஸ்தம்பனம் செய்வதில் வல்லவன்) மன்மதனைப் போன்ற அழகுள்ளவன். தேவியே! கேளுங்கள்

## இதுவுமது

18. கிருஷியும் செய்வா னாகும் கண்ணியக் குடும்ப மாகும்
அரிபத்தி பின்னால் பூண்பன் அனேகரை வசியம்
[கொள்வன்
குறையிலா மனத்த னாகும் குணமது விரண்டு முள்ளான்
விரைவினில் நடக்க வல்லன் விநோதவார்த் தைகளும்
[சொல்வன்,

18. பயிர்த்தொழிலும் செய்வான். மதிப்பான குடும்பமுடையவன். பிற்காலத்தில் திருமாலிடம் பக்திகொள்ளுவான். பலரையும் வசியப்படுத்துவான். குறைகள் எவையுமில்லாத மனத்தையுடையவன் ஆவான். ஒன்றற்கொன்று மாறுபாடான இரண்டு விதமாகிய குணங்களைக் கொண்டவன். விரைவாக நடந்து செல்லுவதில் வல்லவன். கேட்பவர்கட்கு விநோதமாகத் தோன்றும்படி பேச்சுக்களும் பேசுவான்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

19. *இவனுடைத் துணைவர் தம்மை இயம்புவோம் பலமு ருது*
*............ச ஞளில் அந்தகன் பக்கல் சேர்வள்*
*நவனியில் துணைகள் காணுன் நாயகி கேட்க லுற்ருர்*
*தவசியே துணைவர் தோஷம் சாற்றும்கா ரணங்க*
[ளென்ன.

19, இந்த ஜாதகனுக்குச் சகோதரபாவம் பற்றிக் கூறக் கிரகபலம் இல்லை (தாய் சீக்கிரத்தில்) மரண மடைவாள். இவன் உடன்பிறந்தோரில்லாதவன் ஆவான். இங்ஙனம் கூறிய முனிவரை நோக்கிப் பார்வதிதேவி கேட்கத் தொடங்கினுள். முனிவரே! இந்த ஜாதகனுக்குத் துணைவர் தோஷம் ஏற்படும் என்று கூறும் காரணங்கள் என்ன ?

## சகோதரதோஷம்: கிரகநிலை

20. *காரியி னுடனே மூன்ருேன் கலந்துமே நீச்ச ஞகக்*
*கூறிஞேம் துணைகள் தோஷம் குறைமதி பத்தில் நிற்க*
*தீரமாய் ஐந்து ஆண்டில் செப்பலா மன்னை கண்டம்*
*வேறொரு அன்னை வாய்க்கும் வித்தகி கேட்டி டாயே.*

20. சனியுடன் மூன்ருமிடத்தானுகிய அங்காரகன் சேர்ந்து நீசமாய் இருப்பதால் இந்த ஜாதகனுக்குச் சகோதர தோஷம் சொன்ஞேம். சந்திரன் பத்தாம் இடத்தில் இருப்பதால், நிச்சயமாய் ஜாதகனுக்கு ஐந்து வயதில் தாய் மரணம் என்று கூறலாம். இவனுக்கு வேறு தாய் வாய்ப்பாள். (தந்தை மறுமணம் செய்து கொள்ளுவான் என்பது கருத்து) பார்வதியம்மையே கேட்பாயாக.

## ஜாதகன் தாயார் செய்தி

21. *அந்ததோ ரன்னைக் கேதான் அருளுவோம் புத்திர*
[பாகம்
*சந்தத மாண்பா லொன்று தையல ரிரண்டு தீர்க்கம்*
*முந்திய வன்னை சேதி மொழிகுவீர் முனியே நீர்தாம்*
*எந்தையே மாஞ்சி வப்பள் இடரான புத்தி யில்லாள்.*

21. அந்த இரண்டாம் தாய்க்குப் புத்திர பாவம் பற்றிக் கூறுவோம். நிச்சயமாய் ஆண் குழந்தை யொன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் தோன்றித் தீர்க்கமாம். முனிவரே! தாங்கள் இனி, ஜாதகன் தாயின் செய்தியைச் சொல்லுவீராக என்று பார்வதிதேவி கேட்க முனிவர் சொல்லுகின்ருர். ஜாதகன் தாய், கருமை கலந்த சிவப்பு நிறமுடையவள். தீங்கான புத்தி இல்லாதவள்.

22. வரன்மனம் போலே வாழ்வள்
வனிதையில் கீழ்பால் நேரும்
திருமக ளொப்ப தாகும்
செல்விநன் னடக்கை யுள்ளாள்
உரைக்கிருேம் துணைவ ரேழில்
ஒண்டொடி மூன்று தீர்க்கம்
பெருமையா யாண்பா லொன்று
பேசுவோம் தீர்க்க மாக.

22. தன் கணவன் மனப்படியே வாழ்க்கை நடத்துவாள். இவள் வீடு கிழக்குத் திசையில் இருக்கும். இலட்சுமிதேவி போன்ற அழகுடையவள். நல்ல நடத்தையுள்ளவள், இவளுடன் பிறந்த எழுவரில் மூன்று சகோதரிகள், தீர்க்க ஆயுளுடன் விளங்குவர் என்று சொல்லுகிருேம். மேன்மையுடன் ஒரு சகோதரனும் தீர்க்கமாக விளங்குவான் என்று நாங்கள் கூறுவோம்.

## ஜாதகன் தாயின் முற்பிறவிச் செய்தி

23. மற்றது சேத மெய்தும் மாதுரு பூர்வம் சொல்வேன்
அத்தியின் வரதர் வாழும் அந்நகர் சாலிய வமிசம்
மெத்தவே விதித்து இன்னேள் மேன்மையாங் குடும்பி [யாகி
வித்தகி யறத்தி லிச்சை வீண்அப வாத மின்றி ;

23. மற்றத் துணைவர் நஷ்டமாவர். இனி, ஜாதகன் தாயின் முற்பிறவி பற்றிச் சொல்லுவோம். வரதராஜப் பெருமான் எழுந்தருளியுள்ள காஞ்சிபுரத்தில் நெசவுத் தொழில் செய்யும் மரபில் இவள் பிறந்து, மேன்மையுள்ள குடும்பத்தை யடைந்து தருமம் செய்வதில் விருப்பம் கொண்டு, அனுவசியமான பழிகளை ஏற்காமல் வாழ்ந்து;

## தாயின் மறுபிறவி

24. வரன்முன்னே மரண மாகி மறையவன் வரையப் பட்டு
அரிமதம் கௌரி வமிசம் அணுகினு ளிந்த மாது
உறன்முறைக் கினிய ளாகும் உறைந்திடும் நாபிச் சூடு
மறலியின் பதிக்குச் செல்வள் மறுஜன்மம் புகலக் [கேளாய்.

24. தன் கணவனுக்கு முன்பாக மரணமடைந்து, மீண்டும் பிரம தேவனால் படைக்கப்பட்டு, திருமாலை வழிபடும் கௌரீக வமிசத்தில் இப் பிறப்பில் தோன்றினாள் இவன் தாய். பந்துக்களுக்கு இனியளாக விருப் பாள். இவளுக்கு நாபிச் சூட்டுநோய் உண்டு. இதனால் மரணமடை வாள். தாயின் மறுபிறவியைச் சொல்லுகிறோம், கேட்பாயாக.

## இதுவுமது

25. தோகையா மலைக்கு மேற்கில் ஜனிப்பளாம் ரெட்டி [வம்சம்
போகங்கள் பலவும் பெற்றுப் பெரும்பணி யதிக [முண்டாய்
நாகரீ கங்க ளாகி நாயகி வாழ்வா ளாகும்
ஏகமாய்த் தவங்கள் செய்யும் ஈச்வரி மேலுங் கேளே,

25, தோகை மலைக்கு மேற்கில் ரெட்டியார் மரபில் பிறப்பாள். போகங்கள் பலவற்றையுமடைந்து; பெரிய ஆபரணங்கள் பலவும் அடைந்து நாகரிகங்கள் உடையவளாய் இந்த ஜாதகன் தாய் வாழ்பவளாவாள். உலகில் ஒருமையான மனத்துடன் தவமியற்றும் பரமேசுவரியே! மேலுங் கூறுவோம்; கேட்பாயாக.

## ஜாதகன் இளைய தாயார் செய்திகள்

26. மறுமாதா குடகு திக்கில் வருகுவாள் மாநி றத்தள்
உரைக்குமுன் கோபி யாவள் உத்தமி சமயோ கத்தாள்
பரிவுளாள் யாவ ருக்கும் பிழையிலா மனத்த ளாகும்
துருசான நடையு மாவள் சுகதுக்க மிரண்டு முள்ளாள்.

26. இவனுக்கு இளைய தாயார் மேற்குத் திசையிலிருந்து வாய்ப்பாள். கரிய நிறமுள்ளவள். ஒருவர் கூறியதைக் கேட்கு முன்பே கோபங்கொள் ளும் இயல்பினள். இவள் சமமான போகமுள்ளவள்; எல்லோரிடமும் அன்புடையவள். சுறுசுறுப்பான நடையுள்ளவள். இன்பம் துயரம் இரண் டும் கலந்த வாழ்க்கையுடையவள்.

## இதுவுமது

27. அன்னமு மன்பா யிவள் ஆளனுக் கினிய ளாகும்
தன்சொல்லே மேன்மை யாகச் சாதிப்பாள் வறுமை [காணாள்
பன்னியே பேசு வாளாம் பாலர்மே லாசை யுள்ளாள்
கன்னென மொழியே சொல்வள் காதலி மேலும் கேளே.

27. பசியென்று விடுதேடி வருபவர்கட்கு அன்புடன் உணவு அளிப்பாள். கணவனுக்கு இனியவளாக இருப்பாள். தான் கூறும் சொற்களை மேன்மையானவை என்று நிலைநாட்டுவாள். தன் வாழ்க்கையில் தரித்திரத்தை யறியமாட்டாள். விடாது பேசிக்கொண்டே இருப்பவள் ஆவாள். குழந்தைகள்மீது விருப்பமுள்ளவள். கரும்புபோன்று இனிய சொற்களையே பேசுவாள். பார்வதிதேவியே! மேலுங் கேட்பாயாக.

## இளைய தாயாரின் முற்பிறவி

28. அவளுடைப் பூர்வம் சொல்வேன் அச்சிறு பாக்கம்
[மேல்பால்
நவனியில் சிற்றூர் தன்னில் நாயகி வன்னிய வம்சம்
இவளுமே வுதித்து மேலும் ஈன்றதோர் சுதர்க
[ளுண்டாய்
பவமுள குடும்பி யாகிப் பாவையும் வாழு நாளில்;

28. இனி இளைய தாயின் முற்பிறவைச் சொல்லுவோம்; அச்சிறு பாக்கம் என்ற ஊருக்கு மேற்கில் உள்ளதோர் சிறிய ஊரில், வன்னியர் மரபில் இவள் தோன்றி, கணவன், மக்கள் ஆகியோரை யடைந்து, பெருமையுள்ள குடும்பத்தினளாய் வாழ்ந்துவரும் காலத்தில்,

## இளைய தாய்க்கு முற்பிறவித் தீவினை

29, வந்தவூழ் தன்னைச் சொல்வேன் மறையவன் மனைவி
[யோடு
முந்தின வயதோர் தென்பால் மேவின தலங்க ளுக்கு
அந்தவர் தம்மைப் பார்த்து அகசிய வார்த்தை
[சொன்னாள்
பிந்தியும் மறையோன் மாது புகலுவாள் மாதே நீயும்;

29. ஏற்பட்ட தீவினையைக் கூறுவோம். ஒரு வயதான அந்தணனும் அவன் மனைவியும் தெற்குத் திசையிலுள்ள பல தலங்களுக்கும் யாத்திரையாகச் சென்று கடவுளரை வழிபட்டு வந்தனர். அவர்களைப்பார்த்து இவள் (தகாத வார்த்தைகளை) குறும்பான சொற்களைச் சொன்னாள். அவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த அந்த அந்தணன் மனைவி பின்வருமாறு கூறுவாள்; பெண்ணே! நீயும்,

## இதுவுமது

30. மறுஜன்மம் தோன்றி யேதான்
மறுமணம் சூடிக் கொண்டு
..............................ன்று
இயம்பியே சென்றா ளன்றோம்

திருமகள் மாது சொல்போல்
செறிந்திடு மிவளுக் கேதான்
மறலியின் பதிக்குச் சென்று
வந்தவ ளிவளே யென்றேம்.

30. மறுபிறவி யெடுத்து, மறுமணம் (இரண்டாந்தாரமாகி) செய்து கொண்டு வாழ்வாய் என்று கூறிவிட்டுச் சென்றுள் என்று சொன்னேம். இலட்சுமி தேவி போன்ற அந்தப் பெண் சொற்படியே இவளுக்கு ஏற்பட்டது. அப்பிறப்பில் மரணமடைந்து, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு இப்பிறவியில் ஜாதகன் இளைய தாயாக வந்தவள் இவள் என்று சொன்னேம்.

## தீவினைப் பயன்

31. அந்தணர் மாது சொல்போல்
அறைந்தது இரண்டாம் தாரம்
விந்தையா யிரண்டு முத்திரை
மேவிடு மிவளுக் கேதான்
முந்தி ............... ..................
.........பின்பால் சொல்வேன்
இந்திர னிறைஞ்சு மாதே
இம்மொழி தப்பா தாமே.

31. அந்தணப் பெண் கூறியது போன்று இரண்டாம் மனைவியாக ஆவாள். இவளுக்கு ஆச்சரியமாய் இரண்டுமுறை திருமங்கல்யம் அணிய நேரும்———அந்தச் செய்திகளை விவரமாகப் பின்பாகத்தில் சொல்லுவோம். தேவேந்திரன் வணங்கித் தோத்திரம் செய்யும் தலைவியே! இந்தச் சொல் தவருது:

## இளைய தாயின் மரணமும் மறுபிறப்பும்

32. நாற்பது ஆண்டு தன்னில் [1]நாயகி மாதம் தன்னில்
கூப்பிடு வானும் காலன் கூறுவோம் மறுஜன் மத்தை
தீர்ப்பாக வருணை யுத்திரம் செழிப்புள பேருர் தன்னில்
ஏற்கவே கங்கை சேயாய் எய்துவா ளென்று
[சொல்வோம்.

32. ஜாதகனுடைய நாற்பதாம் வயதில் புரட்டாசி மாதம் இவளை இயமன் அழைத்துக் கொள்ளுவான். (மரண முறுவாள்) இவளுடைய மறு பிறப்பைச் சொல்லுவோம்; நிச்சயமாய், திருவண்ணுமலைக்கு வடக்கில் செழிப்பானதொரு பெரிய ஊரில், வேளாளர் மரபினளாய் பிற்பாள் என்று கூறுவோம்.

1. கன்னி—புரட்டாசி.

## ஜாதகனுடைய திருமணக் காலம் மனைவியின் இயல்புகள்

33. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மிருபா
[னிரண்டில்
ஒதுவோ முள்ளூர் தன்னில் உயர்வான வர்க்கம்
[தன்னில்
காதலி வருவா ளாகும் கழறுவோ மவள்கு ணத்தைப்
பாதக மனமில் லாதாள் பஞ்சைமே லிரக்க மாவள்.

33. ஜாதகனின் திருமணம் நடைபெறும் காலத்தைச் சொல்லுவோம்; இவனுடைய இருபத்திரண்டாம் வயதில் உள்ளூரிலிருந்தே உயர் குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணொருத்தி இவனுக்கு மனைவியாக வருவாள். அவள் குணங்களைக் கூறுவோம். கெடுதி எண்ணும் மன மில்லாதவள்; ஏழைகள் மீது இரக்கங்கொள்ளுவாள்.

34. வருவோரை யாத ரிப்பள் மாதுவு மிருநி றத்தாள்
பெரும்பணி யுடைய ளாகும்.........ளாள்
.........பொறுமை யுண்டு நினைத்தது முடிக்க வல்லாள்
குறையிலாக் குடும்பி யாவள் கூறுவோம் புத்திர பாகம்.

34. வீட்டுக்கு வருபவர்களை ஆதரித்துப் போற்றுவாள்; இவள் கருமை நிறத்தினள் ஆவாள். மிக்க ஆபரணங்களுடையவள்; பொறுமைக் குணம் இவளுக்கு உண்டு. செய்ய நினைத்தவற்றைச் செய்து முடிக்கும் ஆற்றல் உள்ளவள்; குறைவில்லாது நிறைந்த குடும்பமுடையவள்; இனி, புத்திர பாவத்தைச் சொல்லுவோம்.

## புத்திரபாவம்

35. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணோம்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று
[சொல்வோம்
அத்திரி கேட்க லுற்றார் அவனுக்குப் புத்திர தோஷம்
பெத்தகா ரணங்க ளென்ன பேசுவீர் விவர மாக.

35. இந்த ஜாதகனுக்குப் புத்திர பாக்யத்தைப் பற்றிச் சொல்லக் கிரகபலமில்லை. அங்ஙனம் குழந்தைகள் தோன்றினாலும் நஷ்டமாம் என்று கூறுவோம்; அத்திரி முனிவர் கேட்கின்றார்: என்ன காரணத்தினால் இந்த ஜாதகனுக்குப் புத்திர தோஷம் ஏற்படும் என்று கூறினீர்கள்? அந்த விவரங்களைக் கூறுவீர்.

## புத்திரதோஷம் : கிரகநிலை

36. அஞ்சினில் கேது தங்க அஞ்சவ னுடனே ராகு
தஞ்சமாய்ச் சேயும் சேர்ந்து சந்ததி தானம் தன்னை
மிஞ்சியே பார்த்த தாலே வீருது சுதர்க ளென்றோம்
நஞ்சுபோல் முன்னூழ்ச் சாபம் நல்கிற்று இவனுக்
[கேதான்,

36. புஜண்டர் கூறுகிறார்: ஐந்தாமிடத்தில், புத்திர ஸ்தானத்தில் கேது தங்கியிருக்க, ஐந்தாமிடத்தவனுகிய சனியுடன் ராகு அங்காரகன் ஆகியோர் சேர்ந்து புத்திர ஸ்தானத்தைப் பார்த்ததால் புத்திரர் தோன்றார் என்று கூறினோம்; கொடிய விஷம்போன்று முற்பிறவிச் சாபமும் இவனுக்கு ஏற்பட்டது.

## ஜாதகன் முற்பிறவிச் செய்தி

37. வினையதைச் சொல்லு மென்ன வித்தகன் பூர்வம்
[சொல்வேன்
கனமுள............................... ......தன்னில்
சினமிலாக் கங்கை சேயாய் ஜனித்துமே கிருஷி செய்து
இனமது மெச்ச வாழ்த்து இடரிலா வாழு நாளில் ;

37. ஜாதகனுக்கு ஏற்பட்ட முற்பிறவித் தீவினையைக் கூறுங்கள் என்று பார்வதி கேட்க, முனிவர் கூறுகிறார். இவனுடைய முற்பிறவியைச் சொல்லுகிறேன்; மேன்மையுள்ள......சாந்தமுள்ள வேளாளர் மரபினனாய்ப் பிறந்து விவசாயத்தொழில் புரிந்து, தன் இனத்தவர் பாராட்டும்படி வாழ்க்கை நடத்தி, துன்பமில்லாமல் வாழுகின்ற நாளில்,

## இதுவுமது

38. அந்நகர் நதியின் பக்கல் அணுகிய வரசின் கீழே
தந்தியும் நாகம் நிற்கும் தானவர் வாசம் கொள்வார்
மந்திர மோதும் வேத மறையவர் பூசை செய்வர்
இந்தவா ரிடத்தி லேதான் இரவினி லேது செய்தான்,

38. அந்த நகரின் அருகாமையில் ஓடும் ஆற்றங்கரையில் உள்ளதொரு அரசமரத்தின் கீழே விநாயகக் கடவுள் எழுந்தருளியிருப்பார்; நாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும்: இன்னும் பல தெய்வங்களும் அங்கு வாசம் செய்வார்கள். மந்திரங்களை ஓதும் அந்தணர்கள் அவவிடத்தில் பூசனை புரிவார்கள். அப்படிப்பட்ட தூய்மையான இடத்தில் ஒருநாள் இரவில் இந்த ஜாதகன் என்ன செய்தான் என்றால்;

39. விதவையைப் போகம் தூய்த்தான்
மேவிற்று அதுஓர் தோஷம்
சதியான மறையோ னுக்காய்ச்
சாதித்தான் கட்டு வார்த்தை
அதிதிபோல் மறையோன் தானும்
அறைகுவான் சாபம் தானும்
சதியாகி மறுஜன் மத்தில்
சுதர்களும் தோன்று ராவர்.

39. கணவனை இழந்த கைம்பெண்ணொருத்தியுடன் இன்பம் அநுபவித்தான். அந்தத் தோஷம் ஒன்று இவனைச் சார்ந்தது; ஒரு அந்தணனுக்கு விரோதமாக நடக்காதவற்றை நடந்ததுபோலக் கற்பனை செய்து பேசினான்; தவஞ்செய்யும் முனிவரைப் போலிருந்த அந்த அந்தணன் சாபமிடுவான். மறு ஜன்மத்தில் தோஷமுண்டாகிப் புதல்வர்கள் தோன்றார்.

40. துணைவர்க ளில்லா னும் சிறுவய தன்னை யேகும்
பிணையாக வாழ்வா யென்று புகன்றனன் மறையோன் [தானும்
அணையவே யில்லம் தன்னில் அரவுமே வெகுநாள் [வாசம்
துணிவுட னோர்நாள் தன்னில் தோன்றிற்று மகுடத் [தாலே.

40. மேலும், உடன்பிறந்தோர் இல்லாதவனாவாய்; இளமையிலேயே தாய் மரணமுறுவாள். துன்பத்துடன் வாழ்வாய் என்று கூறினான் அந்த அந்தணன். இவன் வீட்டில் பாம்பு ஒன்று வெகுகாலமாக வாசம் செய்து வந்தது. ஒருநாள் அது மிக்க துணிவுடன் வெளியில் வந்து படமெடுத்து ஆடிற்று.

## முற்பிறவித் தோஷம்

41. அரவதைக் கழியால் வாட்டி அந்தகன் பக்கல் [சேர்த்தான்
உறைந்தது வந்தத் தோஷம் உத்தம னந்தி யத்தில்
பெருஞ்சுத ரில்லா னாகிப் புக்கனன் காலன் பக்கல்
பிரமனால் வரையப் பட்டுப் பிறந்தன னிந்தப் பாலன்.

41. அந்தப் பாம்பினை இவன் கழியால் அடித்து அதற்கு மரணமுண்டாக்கினான். அந்தத்தோஷம் இவனைச் சார்ந்தது. இவன் இறுதிக் காலத்தில் புதல்வரில்லாமல் மரணமடைந்தான். மீண்டும் பிரம்மதேவனால் படைக்கப்பட்டு, இப்பிறப்பில் பிறந்தான் இந்த ஜாதகன்.

## தோஷம் தீரச் சாந்தி

42. மறையவன் சாப மொன்று வரவுதன் சாப மொன்று
உறைந்தது புத்திர தோஷம் உரைக்கிறே மதற்குச்
[சாந்தி
அரசின்கீழ் நாகம் செய்து அந்தவன் வைத்து மேதான்
..............யேகா தசியி லவனுமே விரதம் கொள்ள;

42. முற்பிறப்பில் அந்தணன் சாபம் ஒன்று, பாம்பைக் கொன்ற தோஷம் ஒன்று, இவற்றினுல் புத்திர தோஷம் ஏற்பட்டது. அந்தத் தோஷம் விலகச் சாந்தி கூறுகிறோம். அரசமரத்தின் கீழ் நாகத்தின் உருவ மொன்று பிரதிஷ்டை செய்து——ஏகாதசி யன்று விரதம் ஏற்ருல்,

## சாந்தியால் ஏற்படும் பயனும், ஜாதகனுக்கு யோகமும்

43. சுதர்களு மாண்பா லொன்று தோகையு மிரண்டு மாகும்
சதமுடன் மூன்றும் தீர்க்கம் செப்புவோ மிவனின்
[யோகம்
பதமாக வீரெட் டாண்டும் பகரொணு யோகம் தானும்
அதிதியே சமமாம் யோகம் அதற்குமேல் விசேஷ
[யோகம்.

43. ஆண் குழந்தையொன்றும் பெண் குழந்தைகள் இரண்டும் தோன்றும். நிச்சயமாய் இந்த மூன்று குழந்தைகளும் தீர்க்க ஆயுளுடன் விளங்கும். இவனுடைய யோகங்கள் பற்றிச் சொல்லுவோம். பதினுறு வயது முடிய இவனுக்கு யோகங்கள் கூற முடியாது. தாயே! அக்காலத்தில் சமமான யோகங்களை அநுபவிப்பான். அதற்குமேல் விசேடமான யோகங்களைப் பெறுவான்.

## ஜாதகன் யோகங்கள்

44. பிறைமதி போலே யோகம் பொருந்திடும் பூமி சேர்ப்பன்
திருமகள் வாச மாகும் சித்திர வில்லம் செய்வன்
இருபது ஆண்டு மேலாய் எய்திடு மில்லம் தானும்
குறைவிலான் வறுமை காணுன் குலத்துளோர் மதிக்க
[வாழ்வன்.

44. வளர்பிறைச் சந்திரன்போல மேன்மேலும் இவனுக்கு யோகங்கள் சேரும். அக்காலத்தில் விளை நிலங்கள் சேர்ப்பான். இலட்சுமிகடாட்சம் ஏற்படும். அழகிய புதிய வீடுகட்டுவான், இருபதாம் வயதுக்குமேல் மேற்சொன்ன புதிய வீடு அமைப்பான் குறைகளில்லாது நிறைந்த வாழ்வுடையனுவான். தன் வாழ்க்கையில் தரித்திரத்தை அறியான். தன் குலத்தவர் பாராட்டும்படி வாழ்வாள்.

45. பந்துவும் புகழ வாழ்வன் பணையேர்கள் விருத்தி யாகும்
........................................கொள்ளா ருகும்
முந்திய குடும்ப மாவன் உறுதியாம் கன்று காலி
இந்திர போக முள்ளான் ஏழையோர்க் குதவி செய்வன்.

45. தன் உறவினர்களும் தன்னைப் புகழும்படி வாழ்வான். பண்ணை, ஏர் இவை பெருகும். முன்னேற்றமான குடும்பமுடையவனுவான், கன்று, மாடுகள் நன்கு வளர்ச்சி பெரும், தேவேந்திரன் போன்று போகமனுபவிப்பான். ஏழைகளுக்கு உதவிகள் செய்வான்.

## ஜாதகனுடைய மரணமும் மறுபிறவியும்

46. திருப்பணி செய்வா ருகும் தர்மகர் மாதி யோகம்
பெருமையும் புகழு மேற்பன் புண்ணிய மனத்த ருகும்
அறுபது நாலு வாண்டில் அவன்யம பதிக்குச் செல்வன்
மறுஜன்மம் காளத்தி தன்னில் வளமுள குடும்பந்
[தன்னில்;

46. கோயில்களில் திருப்பணிகள் செய்வான் தர்மகர்மாதி யோகம்ஏற்படும். மேன்மையும் கீர்த்தியும் பெறுவான். கருணை நிறைந்த நல்மனத்தினன் ஆவான். தனது அறுபத்து நான்காம் வயதில் மரண மடைவான். மறு பிறப்பு காளஹஸ்தி என்ற தலத்தில் செல்வச் செழிப்புள்ள ஒரு குடும்பத்தில்,

## ஜனனகாலத் தசையிருப்பு விவரம்

47. பிறப்பனும் மறையோ ருகப் பேசுவோம் ஜனன காலம்
கரும்பாம்பு தசையி லேதான் கழறுவோ மாண்டு
[ஐந்தும்
வரும்திங்க ளிரண்டே யாகும் வரும்துணை யன்னை
[கண்டம்
உறைந்திடு பிணியும் என்ருேம் உத்தமி கேட்டிடாயே

47. அந்தணனுகப் பிறப்பான் என்று சொல்லுவோம். இந்த ஜாதகன் ஜனன காலத்தில் இராகு மஹாதசையில் இருப்பு ஐந்து வருஷங்களும் இரண்டு மாதங்களுமாம் என்று கூறுவோம். அக்காலத்தில் இவன் உடன் பிறந்தோர் தாய் ஆகியோர்க்குக் கண்டங்கள் ஏற்படும், உடலில் வியாதி உண்டாகும். உயர்ந்தவளே ! கேளுங்கள்.

## ஜனனகாலத் தசைப் பலன்கள்

48\. பலவிதச் செலவே யுண்டு பந்துவில் சூத மெய்தும்
கலவர புத்தி யாகும் காலிகள் சேத மெய்தும்
நிலமையாய்ப் பின்பா கத்தில் நுவலுவோம் விபர மாக
மலையிறை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன் றுது.

48\. பலவிதமான செலவுகள் ஏற்படும். உறவினர்களுக்கு அசுபம் நேரும். கலவரமான புத்தியுண்டாகும் கால்நடைகள் சேதமடையும். இன்னும் மற்றவற்றைப் பின்பாகத்தில் விவரமாகச் சொல்லுவோம். மலையரசன் புத்திரியாம் பார்வதி தேவியே! நாங்கள் கூறிய சொற்கள் தவருதன.

# ஜாதகம் 89

## ஜனனகால கிரகநிலை

1. மதியும் தேளில்[1] குசன்[2]கோலாம்[3]
மாலும்[4] காரி[5] ரவி[9]மீனம்
நதிவெள் ளி[7]யுமே சாடி[8]யுற
ராகும் குருவும்[12] மானதனில்
சதிராம் ஞானி[10] கடகமுற
ஜன்மம் [11]கன்னி பலனெவ்வா
றிதுவே யாண்பால் ஜனனமுறும்
இல்லமுங் கீழ்மேல் வீதியதே.

1. சந்திரன் விருச்சிகத்திலும், அங்காரகன் துலாத்திலும், புதன் சனி சூரியன் மீனத்திலும், சுக்கிரன் கும்பத்திலும் இராகு குரு மகரத்திலும், கேது கடகத்திலும் நிற்க, கன்னியா லக்னத்தில் பிறந்தவருக்குப் பலன்கள் எங்ஙனம் என்று பார்வதிதேவி கேட்க முனிவர் கூறுகிறார் இந்தக் கிரக நிலையில் ஆண் பிறப்பு ஏற்படும். பிறக்கும் வீடு கிழக்கு மேற்கான வீதியில் உள்ளதாகும்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| புதன் சனி சூரியன் | | | |
| சுக்கிரன் | இராசி சக்கரம் | | கேது |
| ராகு குரு | | | |
| | சந்திரன் | அங்காரகன் | லக்கினம் |

1. விருச்சிகம்
2. செவ்வாய்
3. துலாம்
4. புதன்
5. சனி
6. சூரியன்
7. சுக்கிரன்
8. கும்பம்
9. சூரியன்
10. கேது
11. இலக்கினம்
12. மகரம்

## ஜாதகன் பிறந்த வீட்டு அடையாளங்கள் இத்நூலில் கூறப்படுவன இவை எனல்

2 அதுவே தென்பால் வாசலது
ஆனை குதிரை கன்னி தென்மேல்
நதியை யணிந்தோன் குடிதெற்கில்
நசிக்கும் வடகீழ் கன்னியுண்டு
பதியும் சிறுவூர் சினகுலத்தில்
பகர்வோம் தந்தை தாயோக
முதித்த துணைவர் களத்ர புத்திரர்
வரைவிப் போமிந் நூல்தன்னில்.

2. அந்த வீடு தெற்கு நோக்கிய வாயிலை யுடையது. யானைமுகக் கடவுள், ஐயனர், துர்க்கை ஆகியோர் ஆலயங்கள் தென் மேற்குத் திசையில் உள்ளன. கங்கை நதியைச் சடைமுடியில் தரித்துள்ள சிவபெருமான் கோயில் வீட்டுக்குத் தெற்கில் இருக்கின்றது. வட கிழ்த்திசையில் வீடுகள் இல்லாமல் பாழாக விருக்கும். அங்கு ஒரு காளியம்மன் கோயில் உண்டு. சிறிய ஊராகும். இந்த ஜாதகன் சமண குலத்தில் பிறப்பான். இந்தச் சோதிட நூலில் ஜாதகன் பெற்றோர் யோகங்கள், உடன் பிறந்தோர் மனைவி புதல்வர் யோகங்கள் ஆகிய அனைத்தையும்பற்றி விவரமாய் எழுதுவோம்.

## தந்தை செய்தி

3. தந்தை துணைவ ரிருநான்கில்
தங்கு மாண்பா லிரண்டென்றேம்
இந்து நுதலா ரவ்வாறும்
இருந்து சிலநாள் யேகுவராம்
பிந்தி பாக மவர்சேதி
புகல்வோம் தந்தை குணம்கேளாய்
கந்த னெப்பா மிருநிறத்தன்
கல்வி யுடையன் கனத்தபுத்தி.

3. ஜாதகன் தந்தையுடன் பிறந்தோர் எண்மரில் இரண்டு சகோதரர்கள் நிலைப்பர் என்று சொன்னேம்; சந்திரன் போன்று முகமுடைய பெண்களும் அங்ஙனமே இருவர் நிலைப்பர். மற்றவர் சிலநாள் வாழ்ந்து மரணமடைவர். இவர்களனைவருடைய செய்திகளையும் பிற்பாகத்தில் சொல்லுவோம். ஜாதகன் தந்தை குணங்களைக் கேட்பாயாக. முருகப்பிரானை யொத்த வடிவழகுடையவன், கரிய நிறமுடையவன், கல்வியறிவுள்ளவன், பெரும்புத்தி கொண்டவன்.

## இதுவுமது

4. பூமி பலவூர் சென்றிடுமே
புகழு மேற்பன் கிராமச்செட்டு
தீமை யெண்ணு மனமுடையன்
சிரித்தோர் நேயன் தீரமிலான்
சேம முடையன் கடனில்லான்
சகரா சர்களால் செட்டுச்செய்வன்
நேமி நாதன் பத்தியுளன்
நினைத்த படியே தான்முடிப்பன்.

4. பலவூர்களில் இவனுக்கு விளைநிலங்கள் சேரும். கீர்த்திபடைவான் கிராமத்தில் தொழில் செய்வான். எவருக்கும் தீங்கு நினையாத மனமுள்ளவன் தன்னிடம் முகமலர்ந்து பேசுபவர்களிடம் அன்புடையனாக இருப்பான். மனத்துணிவு இல்லாதவன். சௌக்கியமுடையவன், கடனில்லாதவன், அரசர்கள் மூலம் பொருள்பெற்றுத் தொழில் செய்வான். சக்காாயுதத்தை ஏந்திய திருமால்மீது பக்திகொண்டவன். நினைத்த வண்ணம் செய்துமுடிக்கும் ஆற்றல் பெற்றவன்.

## இதுவுமது

5. ஆசை நேசன் சகடுடையன்
அரச ரிஷ்டன் அனமீவன்
நேச ரதிக முடையவனும்
நிலமும் விருத்தி நீர்செய்வன்
கூசான் யெதிரி தனை நசிக்கும்
குழவி வார்த்தை அறமிச்சை
பேசான் கட்டு வார்த்தைகளைப்
பித்த வாயுப் பிணியுடையன்

5. ஆசைகளுடையவன். பலருக்கும் நேயன், வண்டிகள் உடையவன், அரசர்க்குப் பிரியமானவன். ஏழைகட்கு உணவளிப்பான், நண்பர்கள் மிகுதியாக வுடையவன். விளைநிலங்கள் பெருக்கமுண்டு, நீர் நிலைகள் அமைப்பான். தயங்காமல் தனது விரோதிகளை அழிப்பான். குழந்தை போன்று பேசுவான். தருமத்தில் விருப்பமுண்டு. கற்பனைச் சொற்களைப் பேசமாட்டான், பித்தவாயு நோய் உடையவன்.

## இதுவுமது

6. சொல்லில் சுகமாம் சுகபுசிப்பு
துரவோர் நாளாம் சாடி சென்மம்
இல்லம் செய்வன் இடர்நினையான்
எய்தும் பத்ம ரேகையுமே

வல்லி மார்கள் மோகமுளன்
அசுவ முடையான் சீலமுளன்
தல்லி தந்தைக் கிஷ்டமுளன்
சான்ரோர் நேயன் தலம்செல்வன்

6. பேச்சில் இன்பமிருக்கும். சுகபோஜனம் செய்வான், விசாக நட்சத்திரம் கும்பலக்கினத்தில் இவன் தோன்றுவான். புதிய வீடு கட்டுவான், பிறருக்குத் துன்பம் செய்யமாட்டான். கையில் பத்மரேகை பொருந்தியிருக்கும். தன் தாய் தந்தையர்க்கு விருப்பமானவன். பெண்கள்பால் மையலுள்ளவன். குதிரைகள் உடையவன். பெரியோர்கட்கு நேயன். புண்ணியத் தலங்கட்கு யாத்திரையாகச் செல்வான்.

## ஜாதகனுடைய குணங்கள்

### வேறு

7. சொல்லியவிக் குணத்தானுக் கிந்தப் பாலன்
தோன்றுவா னிவன்குணத்தைச் செப்பக்
[கேண்மோ
வல்லியர்கள் மோகமுளன் மறித்துக் கூருன்
மாஞ்சிவப்ப னுணச்சலுளான் மாடு விருத்தி
எல்லேகள் விருத்திசெய்வன் இடருந் தீர்ப்பன்
இவன்வயிற்றில் மச்சமுளன் யூகைவார்த்தை
..................
................

7. மேற்சொல்லப்பட்ட குணங்களையுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் புதல்வனுகத் தோன்றுவான். இவன் குணங்களைச் சொல்லக் கேளுங்கள். பெண்களிடம் மையலுள்ளவன். ஒருவர் ஒன்று சொன்னல் அதனை மறுத்துக் கூறமாட்டான். கருமை கலந்த சிவப்பு நிறமுள்ளவன். மெலிந்த சரீரமுடையவன். மாடுகள் பெருக்கமுள்ளவன். நிலபுலங்களைப் பெருக்குவான், பிறர் துன்பங்கள் தீர்ப்பான். இவன் வயிற்றில் மச்சமொன்றுண்டு. ஊகித்து பேசும் இயல்புடையவன்.

## இதுவுமது

8. மனங்கபடு வெளிக்காட்டான் மர்மி யாவன்
வார்த்தைதப்பான் வறுமையிலான் மருவும் பித்தம்
இனமதிப்புக் கொண்டிடுவன் இடுக்க மில்லான்
இளைத்தோர்மேல் பட்சமுளன் ஈகையாளன்

சினமுடையன் பனையோர்க ளுடைய ளுகும்
தோத்திரம்செய் தோர்க்கினியன் சிறப்பாய்
[வாழ்வன்
வினைசெய்யா னொருவருக்கு மறத்தி லிச்சை
விளம்புகிறோம் கிராமச்செட்டு விரதம் பூண்பன்.

8. மனத்தில் வஞ்சகம் உள்ளவன். மனத்தில் உள்ளவற்றை எளிதில் வெளிவிட மாட்டான். மர்மமுடையவன். சொன்ன சொல் தவறமாட்டான். தரித்திரம் இல்லாதவன். இவனுடலில் பித்தம் சேரும். இனத்தவர் பாராட்டைக் கொள்ளுவான். துன்பமில்லாதவன். தரித்திரர்மீது அன்புடையவன் கொடையாளி. கோபமுள்ளவன். பண்ணை, ஏர் இவையுடையவன். தன்னைத் துதி செய்தவர்க்கு இனியனாக விருப்பான், மேன்மையாக வாழ்வான். எவருக்கும் தீங்கு செய்யமாட்டான். தருமத்தில் விருப்பமுண்டு, கிராமத்தில் பெரிய தொழில் செய்வான் என்று சொல்லுகிறோம். விரதங்களை மேற்கொள்ளுவான்.

## ஜாதகன் இளைய சகோதரன் செய்தி

9. சமகல்வி துணைஆண்பா லொன்றே யாகும்
சக்திமா ரிரண்டுண்டு தனய னுக்கு
நவனியிலே துணைஆண்பா லிளையோ னாக
நவிலுவோ மவன்குணத்தை மானும் ஜன்மம்
தவமுடைய குருநாளாம் மாஞ்சி வப்பன்
சமதேகம் யூகைவான் கல்வி யுள்ளான்
பவமில்லா மனத்தனுகும் கிராமச் செட்டு
பண்ணுவான் கிருஷியுள்ளான் பரியு முள்ளான்.

9. சமமான கல்வியறிவுடையவன். இவனுக்குச் சகோதரன் ஒருவனே யாவான். சகோதரிகள் இருவராவர். சகோதரன் இவனுக்கு இளையவன் ஆவான். அவன் குணங்களைச் சொல்லுவோம். மகர லக்கினம். வியாழக்கிழமை பிறந்தவன். கருமை கலந்து சிவந்த நிறத்தினன்; சமமான உடலமைப்புப் பெற்றவன். ஊகித்துணரும் ஆற்றல் பெற்றவன், கல்வியறிவுடையவன், தீய எண்ணங்கள் படியாத மனத்தினன். கிராமத்தில் தொழில் செய்வான். விவசாயத் தொழிலுமுள்ளவன், குதிரைகளும் உடையவன்.

## இதுவுமது
### வேறு

10. தந்தைக்கு மேலாய் வாழ்வன் சற்சன ருறவு கொள்வன்
வந்தவர்க் கன்ன மீவன் வசனமும் தந்திர னுவன்

தந்தன முடைய னுவன் சாருவா னவ்வூர் தன்னில்
தென்கீழ்பால் செல்வா னுகும் சிறப்பான குடும்பி
[யாவன்.

10. தன் தகப்பனுருக்கு மேலான பெருமையுடன் வாழ்வான். நல்லவர்கள் தொடர்பைக் கொள்ளுவான். வீடு தேடிப் பசியென்று வந்தவர்கட்கு உணவு அளிப்பான். தந்திரமாகப் பேசுவான். தான் தேடிய பொருளையுடையவன், அவ்வூரிலேயே, தென்மேற்குத் திசையில் சென்று வீடு அமைத்துக்கொண்டு வாழ்வான். பெருமையுள்ள குடும்பமுடையவனுவான்.

## இதுவுமது

11. கைமுத லுடைய னுகும் கனத்திடும் பணையேர் விருத்தி
ஐயமே லிச்சை யுள்ளான் யாவர்க்கும் நல்லோ னுவன்
பொய்யுரை யெண்ணு நெஞ்சன் போசன வறுமை
[காணுன்
தையலு மொன்றே தீர்க்கம் தென்பாலில் நேரு
[மென்ருேம்.

11. கையில் ரொக்கம் சேர்த்துவைத்திருப்பவன் ஆவான் பண்ணைகள் ஏர்கள் ஆகியவற்றின் பெருக்கம் மிகும். பிச்சையிடுவதில் விருப்பமுள்ளவன். எல்லோருக்கும் நல்லவனுவான். பொய்ச் சொற்களை நினையாத மனத்தினன். போஜனத்தில் தரித்திரத்தை யறியாதவன், இவனுக்கு மனைவி யொருத்தியே தீர்க்கமாவாள். அவள் தென்மேற்குத் திசையிலிருந்து வாயப்பாள் என்று சொன்னேம்.

## ஜாதகன் சகோதரி செய்தி

12. சுதர்களு மாண்பா லிரண்டு
தோகையு மூன்று வென்ருேம்
மதிப்னு மொன்ருய் வாழ்வன்
அறைகிருேம் பின்பால் சேதி
மதிநுதல் துணைவி சேதி
வகுக்கிருே மிரண்டி லேதான்
அதிதியை ஆத ரிக்கு
மம்பிகை யாளே கேளாய்.

12. இவனுக்கு ஆண் குழந்தைகள் இரண்டும் பெண் குழந்தைகள் மூன்றும் தோன்றும் என்று சொன்னேம், இவன் ஜாதகனுடன் சேர்ந்து வசிப்பான், இவனைப்பற்றிய மற்றைய செய்திகளைப் பின்பாகத்தில் சொல்லுகிருேம், சந்திரன் போன்ற நெற்றியையுடைய சகோதரியின் செய்தியையும் இரண்டாம் பாகத்தில் சொல்லுகிருேம். முனிவர்களை ஆதரிக்கும் பார்வதியம்மையே! கேட்பாயாக.

## ஜாதகன் திருமணக் காலமும் மனைவி இயல்பும்

13. ஜாதகன் மணத்தின் காலம்
சாற்றுவோ மிருபா னிரண்டுள்
காதலி தென்மேல் திக்கில்
கழறுவோ மவள்கு ணத்தை
பாதக மனமில் லாதாள்
பரிந்துப சாரம் செய்வள்
ஓதுவாள் சுகமாய் வார்த்தை
உள்மனம் கபடு நெஞ்சம்.

13, இனி, ஜாதகனின் திருமணக் காலத்தைச் சொல்லுவோம். இவனது இருபத்திரண்டாம் வயதில் தென் மேற்குத் திசையிலிருந்து மனைவி வாய்ப்பாள். அவள் குணங்களைக் கூறுவோம். தீங்கான மன மில்லாதவள். வீட்டுக்கு வருபவர்களை அன்புடன் உபசரிப்பாள். இனிய சொற்களைப் பேசுவாள். மனத்தில் வஞ்சகம் நிறைந்தவள்.

## மனைவியின் இயல்புகள்

14. பால்பாக்கிய முடைய ளாகும் பசித்தோர்க்கு அன்ன [மீவள்
சீலமே மாஞ்சி வப்பள் செல்வியும் யோக சாலி
பாலர்கள் காணு ளாகும் பிறக்கினும் தீதே யாகும்
சாலவே சுதர்கள் தோஷம் சாற்றுவீர் முனியே நீர்தாம்.

14. பால் பசு பாக்கியங்கள் உடையவள். பசி யென்று வந்தவர் களுக்கு உணவு அளிப்பாள். நல்லொழுக்கமுள்ளவள். கருமை கலந்த சிவந்த மேனி யுடையவள். இவள் அதிர்ஷ்டசாலி. புத்திர பாக்கியம் இல்லாத வள் ஆவாள். தோன்றினாலும் நஷ்டமே யாகும். புத்திர தோஷம் ஏற்படக் காரணம் என்ன வென்று முனிவரே கூறுங்கள் எனப் பார்வதிதேவி கேட்டனள்.

## புத்திரதோஷம் : கிரகநிலை : ஜாதகன் முற்பிறவி

15. மறையவன் ராகு அஞ்சில்
மருவியே விருப்ப தாலே
குறையுண்டு சுதர்க ளுக்குக்
குமரன்முன் ஜன்மந் தன்னில்

மருவிற்று அந்தத் தோஷம்
மைந்தன்சேய் வினையைச் சொல்வீர்
திருப்பரங் குன்றின் மேல்பால்
சிறுவூரில் கங்கை சேயாய்.

15. குரு, ராகு ஆகியோர் ஐந்தாமிடமாகிய புத்திர ஸ்தானத்தில் மகரத்தில் இருப்பதால் புத்திர தோஷம் ஏற்படும். இந்த ஜாதகன் முற் பிறப்பில் தோஷம் ஏற்பட்டது. அவன் செய்த தீவினையைச் சொல்வீர் எனப் பார்வதிதேவீ கேட்க, முனிவர் கூறுகிறார். திருப்பரங் குன்றத் துக்கு மேற்கில் உள்ளதொரு சிறிய ஊரில் வேளாண் குலத்தவனாய்.

## முற்பிறவித் தீவினை

16. பிறந்துமே பூமி யுண்டாய்ப் புகழான குடும்பி யாகிக்
குருவுப தேசம் பெற்றுக் குமரனும் வாழு நாளில்
மருவின வினையைச் சொல்வேன் வாத்தியின் மகள்மேல் [மோகம்
பொருளது மகளுக்கீந்து போகமே தூய்த்தா னென்றோம்

16. பிறந்து, நிலபுலங்களை யடைந்து புகழ் பொருந்திய குடும்பமுடைய வனாய், குருவிடம் கல்வி கற்று இவன் வாழ்ந்து வரும் நாளில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன் ஆசிரியரின் மகள் மீது மையல் கொண்டு பொருளை அவளுக்குக் கொடுத்து ஏமாற்றி, அவளுடன் இன்பம் அநுபவித் தான் என்று சொன்னோம்.

## இதுவுமது

17. அதுவொரு தோஷ மாச்சு அதுவன்றி வேறு [சொல்வேன்
பதியினில் நாக மொன்று பரவிற்று அதனைச் கொன்றான்
சதிசெய்தான் மறையோ னுக்காய் சார்ந்தது அந்தத் [தோஷம்
கதிதரும் கடவுள் பத்தி காவலன் கொண்டு மேதான்;

17. அது ஒரு தோஷமாக ஆயிற்று இவனுக்கு. அது வல்லாமல் வேறு ஒன்றும் சொல்லுவோம். இவன் வீட்டில் நாகப் பாம்பு ஒன்று வசித்து வந்தது. அதனை இவன் கொன்று விட்டான் ஒரு அந்தணனுக்கு துரோகம் செய்தான். அந்தத் தோஷமும் இவனை யடைந்தது. இவன் இறுதிக் காலத்தில் நிற்கதியை யளிக்கும் கடவுளிடம் பக்தி கொண்டு,

## இப்பிறவியில் ஜாதகனைத் தொடர்ந்த தோஷங்கள்

18. அந்தகன் பக்கல் சேர்ந்து அயனுமே வரையப் பட்டு
முந்திய அருகர் வர்க்க முதித்தன னிந்தப் பாலன்
சந்ததம் நாக தோஷம் சதுர்மறை தோஷ மொன்று
விந்தையாய்க் கல்வி கற்ற வாத்தியின் மகளின் தோஷம்

18. இந்த ஜாதகன் மரண மடைந்து மீண்டும் பிரமனால் சமண மரபில் படைக்கப்பட்டு பிறந்தான். நிச்சயம் நாகப் பாம்பைக் கொன்ற தோஷம், அந்தணனுக்குத் துரோகம் செய்த பாவம்; கல்வி கற்பித்த ஆசிரியர் மகளுடன் கூடிய தோஷம் ஆகிய இவைகள்;

## தோஷம் நீங்கச் சாந்தி

19. இச் சென்மம் சேர்ந்த தாலே இயம்புவோம் சுதர்கள் [தோஷம்
அச்சங்கை தீர வேண்டி அறைகிறோம் கிரிகை யொன்று
கச்சிக்கு மேல்பா லாகக் கரந்திருப் பனையூர் சென்று
நச்சணி வர்க்க மான நாயகர்க் கபிஷே கித்து;

19. இப்பிறப்பில் இவனைப் பற்றியதால். புத்திர தோஷம் ஏற்படும் என்று கூறுவோம். அந்தத் தோஷம் நீங்குவதற்கு சாந்தி பரிகாரம் ஒன்று சொல்லுகிறோம். காஞ்சிபுரத்துக்கு மேற்குத் திசையிலுள்ளதாகிய திருப்பனையூர் என்ற தலத்துக்குச் சென்று விஷமுடைய பாம்பினை ஆபரணமாகத் தரித்த சிவபெருமானுக்கு அபிடேகம் முதலியன செய்து,

## சாந்தி பலன்

20. சமாரா தனையும் செய்யச்
சார்ந்ததோர் வினைகள் போக்கி
தகைமையாம் சுதர்கள் தோன்றும்
சாற்றுவோ மாண்பா லொன்று
பகையிலாப் பெண்பா லிரண்டு
பருகிடும் தீர்க்க மாக
சகமெதில் இவன்மே லாகச்
சுதனுமே வாழ்வா னுமே.

20. தகுதியுடைய பலருக்குப் போஜனம் செய்வித்தால் நேர்ந்த தோஷங்கள் விலகும். நல்ல தன்மையுடைய புதல்வர் தோன்றுவர். ஆண் குழந்தை யொன்றும் பெண்கள் இருவரும் தோன்றித் தீர்க்க ஆயுளுடன் விளங்குவர் என்று சொல்லுவோம். உலகத்தில் இவனுக்கு மேலாக இவன் புதல்வன் வாழ்வான்.

## ஜாதகன் அன்னையின் செய்தி

21. புத்திரர் தம்மால் யோகம் பொருந்திடும் ஜாத கர்க்கு
சித்தச னன்னை சேதி செப்புவோ மினிமே லாக
குற்றமில் லாதா ளாகும் கூறுஞ்சொல் சுகமே யாகும்
பத்தினி நடக்கை நன்மை பர்த்தாசந் தேக முள்ளான்.

21. புத்திரரால் இந்த ஜாதகனுக்கு யோகங்கள் ஏற்படும். இனிமேல் ஜாதகன் தாயின் செய்தியைக் கூறுவோம். குற்றமில்லாதவள் ஆவாள். பேசுஞ் சொல் இன்பந்தருவதாக இருக்கும். நன்னடத்தையுடையவள். இவள் கணவன் இவள் மீது சந்தேகம் கொண்டவன்,

## இதுவுமது

22. தன் துணை ஆண்பா லிரண்டு
சாற்றுவோம் தீர்க்க மாக
அன்னவ ரில்லம் கீழ்பால்;
அவர்பலன் பின்பால் சொல்வேன்
கன்னிகை வந்த பின்பு
கழறுவோம் வரன்தன் யோகம்
சொன்னசொல் காப்பா ளாகும்
துறவோர்க்கு வன்ன மீவள்.

22. இவளுடன் பிறந்த சகோதரர் இருவர் தீர்க்காயுளுடன் விளங்குவர் என்று சொல்லுவோம். தாயின் வீடு கிழக்குத் திசையிலுள்ளது. அந்தச் சகோதரர் செய்திகளைப் பின் பாகத்தில் சொல்லுவோம். இவள் வந்த பின்பு, ஜாதகன் தந்தைக்கு யோகம் ஏற்படும் என்று கூறுவோம். சொன்ன சொற்களைப் பாதுகாப்பாள். துறவிகட்கு உணவு அளிப்பாள்.

## இதுவுமது

23. அருகர்தம் பக்தி கொள்வள் அன்புள மனத்த ளாகும்
திருமக ளொப்ப தாகும் ஜனவுப காரி யாவள்
பெருமையும் புகழு மேற்பள் பெரிதான விரதம் பூண்பள்
வறுமைக ளில்லா ளாகும் மங்கிலிய முடைய ளாகும்.

23. அருக தேவனிடம் பக்தி கொள்ளுவாள். அன்பு நிறைந்த மனத்தினளாவள். இலட்சுமிதேவி போன்றவள். மக்களுக்கு உதவும் இயல்பினள். மேன்மையும் கீர்த்தியும் பெறுவாள். பெரிய விரதங்களை அநுஷ்டிப்பாள். தரித்திரம் இல்லாதவள். தீர்க்க சுமங்கலியாக இருப்பாள்,

## தாயின் முற்பிறவி

24. பூருவம் புதுவை தன்னில் பிறந்தனள் போசர் வர்க்கம்
நாரிக்கு மதலை யுண்டாய் நாயகன் மனம்போல் வாழ்ந்து
தேறினோர்க் கன்ன மீந்து தேவதாப் பக்தி கொண்டு
மாரன்முன் மரண மெய்தி மலயன் வரையப் பட்டு;

24. ஜாதகனுடைய தாய் முற்பிறவியில் புதுச்சேரியில் போசர் மரபில் தோன்றினாள். குழந்தைகளைப் பெற்று, கணவன் மனம் போல் வாழ்க்கை நடத்தி, தெளிந்த மெய்யுணர்வுடையயுருக்கு உணவு அளித்து, தெய்வ பக்தி கொண்டு வாழ்ந்து மரண மடைந்து மீண்டும் பிரமனால் படைக்கப் பட்டு,

## ஜாதகன் தாய்க்குக் குலம் உயர்வாகக் காரணம் வினவல்

25. சீலமா மருகர் வர்க்கம் ஜனித்தன ளிந்த மாது
சாலவே பராசர் சொல்ல ஐயமுனி கேட்க லுற்றார்
வேல்விழி முன்ஜன் மத்தில் விளங்கினாள் போசர் வம்சம்
ஏலவே சினகு லத்தில் இறங்குங்கா ரணங்க ளெவ்வார்.

25. ஒழுக்கமுடைய ஜைனர் குலத்தில் பிறந்தாள் இந்த ஜாதகன் தாய். இங்ஙனம் பராசரர் சொல்ல ஐயமுனிவர் கேட்கின்றார். வேலைப் போன்ற கூரிய விழிகளையுடைய தாய் முற்பிறப்பில் போசர் வமிசத்தில் பிறந்தவள். இப்பொழுது ஜைன மரபில் தோன்றுங் காரணங்கள் யாவை?

## குலம் உயர்வாகக் காரணம்

26. முன்ஜன்மம் கடவுள் பத்தி
முயலுவோர்க்கு அன்ன மீந்தும்
தன்வரன் மனம்போல் வாழ்ந்து
சதியிலா மனத்த ளாயும்
அன்னவள் வாழ்ந்த தாலே
அருகர்தங் குலமு தித்தாள்
பின்ஜன்மம் காசி பக்கல்
பிறப்பளா மிக்கு லத்தில் ;

26. முற்பிறப்பில் கடவுள் பக்திகொண்டு துறவிகட்கு அன்னமளித்து தன் கணவன் மனம் போல் வாழ்க்கை நடத்தி குற்றமில்லாத மனத்தினளாய் இவள் வாழ்ந்து வந்ததால் இப்பிறப்பில் ஜைன குலத்தில் பிறந்தாள், மறுபிறப்பு காசிக்கு அருகில் இக்குலத்தில் தோன்றுவாள்.

## மறுபிறப்பில் காசிபக்கல் தோன்றக் காரணம்

27. இந்ததோர் ஜன்மம் தன்னில்
இவள்செய்த புண்ணிய மென்ன
தன்வரன் மனம்போல் வாழ்ந்தும்
ஜனவுப காரி யாயும்
சிந்தையும் மர்ம மின்றித்
தேவியும் விரதம் பூண்ட
தன்பலன் காசி பக்கல்
ஜனிப்பளா மிக்கு லத்தில்,

27, இந்தப் பிறப்பில் இந்த ஜாதகன் தாய் செய்த நல்வினைகள் யாவை? தன் கணவன் மனம் போல் வாழ்ந்தும் ஜனங்களுக்கு உபகாரங்கள் செய்து மனத்தில் கபடமில்லாமலும் விரதங்களை அநுஷ்டித்தும் இருந்து வந்ததன் பலனுகக் காசியின் பக்கத்தில் இக்குலத்திலேயே பிறப்பாள்,

## தந்தையின் முற்பிறவி

28. தந்தையின் பூர்வம் தன்னைச்
சாற்றுவோம் குடகு தன்னில்
வந்தனன் மறையோ னுக
வளமுள குடும்பி யாகி
நொந்தவர்க் கன்ன மீந்து
நிருபர்க ளிஷ்டம் கொண்டு
முன்வினை யில்லா னுகி
மேவினன் கால நாடு.

28. ஜாதகன் தந்தையின் முற்பிறப்பைச் சொல்லுவோம். குடகு நாட்டில் அந்தணனுகப் பிறந்தான். செழிப்புள்ள குடும்ப முடையவனுய், பசியால் துன்புற்றவர்கட்கு உணவு அளித்து, அரசர்கள் பிரியத்தை யடைந்து, முற்பிறப்புத் தீவினை இல்லாதவனுய் வாழ்ந்து மரண மடைந்தான்.

## ஜாதனுடைய தந்தையின் இயல்புகள்

29. சிரநான்கோன் வரையப் பட்டு
ஜனித்தனன் சினகு லத்தில்
அரசர்பூ சிதமு மாவன்
அதிகார முடைய னுகும்

பறைபள்ளு வுடைய னாகும்
பாரினில் வறுமை காணான்
பெருமையும் புகழு மேற்பன்
பின்புத்தி யுடைய னாமே.

29. நான்கு திருமுகங்களை யுடைய பிரம தேவனால் மீண்டும் படைக்கப்பட்டு, இப்பிறப்பில் இக்குலத்தவனாகப் பிறந்தான். இந்த ஜாதகன் தந்தை அரசர்களால் மதிக்கப்படுபவன் ஆவான்; அதிகாரஞ் செலுத்தும் பதவி யுடையவன். பறையர் பள்ளர் முதலான பணியாட்களுடையவன். உலகில் தரித்திரத்தை யுணராதவன் ஆவான். மேன்மையும் புகழும் பெறுவான். பின்னால் யோசிக்கும் இயல்புடையவன்.

30. முன்னொரு புதல்வி யாலே மேவிடும் சஞ்ச லங்கள்
அன்னவன் சல்லியம் கொள்ளான் அணுகிடு மில்ல [மூன்று
மன்னவர் நேசம் கொள்வன் வண்டி வாகனமு முண்டு
பின்திருப் பணியும் செய்வன் பெம்மானின் பத்தி [பூண்பன்.

30. இவன் புதல்வியொருத்தியால் மனத்துக்குச் சஞ்சலங்கள் உண்டாகும். பணம் கடன் வாங்க மாட்டான். மூன்று வீடுகள் சேரும். அரசர்கள் தொடர்பு கொள்ளுவான். வண்டி முதலான வாகன வசதிகள் உடையவன். பிற்காலத்தில் கோயில் திருப்பணிகளும் செய்வான். இறைவனிடம் பக்தி கொள்ளுவான்.

## தந்தையின் மறுபிறவி

31. தன்மனம் உதித்தோன் நேரான் தரணிமேல் பிரிய [னாகும்
சொன்னதைக் காப்பா னாகும் சுகதுக்க மிரண்டு [முள்ளான்
பின்ஜன்மம் வடமேல் திக்கில் பெருமட மிக்கு லத்தில்
அன்னவ னுதிப்பா னாகும் அருகரைப் பூசை பூண்பன்.

31. இவன் மனம் போல் இவன் புதல்வன் (இந்த ஜாதகன்) ஒத்துவர மாட்டான். நிலபுலங்களில் விருப்பமுள்ளவன். சொன்ன சொற்களைக் காப்பாற்றுவான். இன்ப துன்பங்கள் இரண்டும் சமமாக உள்ளவன். மறுபிறப்பில் வடமேற்குத் திசையில் உள்ள பெருமடம் என்ற ஊரில் இக்குலத்தில் பிறப்பான். அருக தேவனுக்குப் பூசனை புரிவான்.

## ஜாதகன் யோகங்கள்

32. வந்தவன் பொதுயோ கத்தை
யறைகிரேும் ஜனனம் தொட்டுச்
சந்திரன் பிறைபோல் யோகம்
தங்கிடு மென்று சொல்வோம்
செந்திரு கடாட்ச முண்டு
சிறப்புள குடும்பி யாவன்
நிந்தைக ளேற்கா னுகும்
நேமியோர் மெச்ச வாழ்வன்.

32. இனி, ஜாதகனுக்கு ஏற்படும் பொதுவான யோகங்கள் பற்றிச் சொல்லுகிறேம். பிறப்பு முதல் வளர்பிறைச் சந்திரன் போல யோகம் பெருகும் என்று கூறுவோம். மகா லட்சுமியின் கடைக்கண் நோக்கமும் உண்டாகும். மேன்மையான குடும்ப முடையவன் ஆவான். பழியை ஏற்க மாட்டான். உலகிலுள்ளோர் பாராட்டுமாறு வாழ்வான்.

## ஜாதகனுடைய பொது இயல்புகள்

33. தந்தையின் மனம்போல் வாழான் ஜனவுப காரி யாவன்
மந்தபுத் திகளும் கொஞ்சம் மருவிடும் பித்த சூடு
சிந்தையும் நல்ல தாகும் செட்டுவெள் ளாமை யுண்டு
வந்தவர்க் கன்ன மீவன் மாநிலம் செட்டுச் செய்வன்.

33. தந்தையின் மனம் போல் வாழ்க்கை நடத்த மாட்டான். ஜனங்களுக்கு உபகாரங்கள் செய்பவனுவான். மந்த புத்தி சிறிதுடையவன். இவன் உடலில் பித்தச் சூடு சேரும். நல்ல எண்ண முடையவனுவான். விவசாயத் தொழிலும் செய்வான். விடு தேடி பசி யென்று வந்தவர்கட்கு உணவு அளிப்பான். உலகில் வியாபாரம் செய்வான்.

34. துணைவன்சொல் மிஞ்சிப் பேசான்
துர்வழக் கதனில் செல்லான்
சினமுண்டு பின்பு தாழ்வன்
செய்ந்நன்றி மறவா னுகும்
பிணையான நிந்தை யேற்கான்
பிறர்பொரு ளிச்சை வையான்
கனமுடன் கிராமச் செட்டு
கூறுவோ மெண்ணுன் கின்மேல்.

34. தன் சகோதரன் சொற்களுக்கு எதிர்ப்புப் பேசாதவன். கெட்ட வழக்குகளில் செல்லமாட்டான். கோப மேற்படும். உடனே சாந்தமுள்ளவனுவான். ஒருவர் செய்த உதவியை மறவாதவன். தகாத பழிகளை ஏற்காத

வன். அயலார் பொருளில் ஆசை வையான். அவனுடைய முப்பத்திரண்டாம் வயதுக்கு மேல் பெருமையோடு தன் கிராமத்தில் வியாபாரம் செய்வான்.

## ஜாதகனுடைய தகப்பனுருடைய மரணகாலம்

35. முப்பது ஒன்ப தாண்டில் மிதுனமா தத்தி லேதான்
செப்புவோம் தந்தை கண்டம் சந்திரன் தசையி [லேதான்
ஒப்புடன் ராகு புக்தி உரைந்தது வந்தக் காலம்
அப்பணி சடையோன் தேவி அருளிய மொழிகுன் ருது.

35, ஜாதகனின் முப்பத்தொன்பதாம் வயதில் ஆனி மாதம் தந்தைக்கு மரண மேற்படும் என்று சொன்ளுேம். அப்பொழுது, ஜாதகனுக்கு, சந்திர மஹா தசையில் இராகு புக்தி நடைபெறும் காலமாம். கங்கை நதியைச் சடை முடியிலணிந்த சிவபெருமானின் தேவியே! நாங்கள் கூறிய மொழிகள் தவருவாம்,

## தாயின் மரணகாலம்

36. ஆருறு விாண்டு ஆண்டில் ஆடிமா தத்தி லேதான்
கூறுவோ மன்னே கண்டம் குறைமதி தசை யிலேதான்
தீரமாய்ப் பணிபு குத்தி ஜனிக்குநாள் கண்ட மென்ருேம்
ஆறுமா முகனேப் பெற்ற அம்பிகை யாளே கேளாய்.

36. இவனது முப்பத்தெட்டாவது வயதில் ஆடி மாதம் தாய்க்கு மரணம் ஏற்படும் என்று சொல்லுவோம். ஜாதகனுக்கு சந்திர மகா தசையில் இராகு புக்தி தொடங்கும் நாளில் தாய்க்கு கண்டமாம் என்று சொன்ளுேம். ஆறுதிருமுகங்களே யுடைய சுப்பிரமணியரைப் புதல்வராகப் பெற்ற பார்வதியம்மையே! மேலுங் கேட்பாயாக.

## தந்தை மரணமடைந்த பிறகு குடும்பநிலே

37. தந்தையின் குடும்பம் வேறு
சாற்றுவோம் பாகமி ரண்டாய்
தந்தைமேல் வாழ்வா ஞகும்
தன தானியம் கையி ருப்பு
தன்சொல்லும் பெருமை யாகும்
சதுஷ்பாதம் சகடு முண்டு
தந்தனம் சல்லியம் கொள்ளான்
சாற்றுவோம் பின்பால் சேதி.

37. இந்த ஜாதகனின் தந்தை மரணத்துக்குப் பின்பு குடும்பம் இரண்டு பங்காகப் பிரியும். இவன் தந்தையைவிடச் சிறப்பாக வாழ்வான். பொன், தானியங்கள் இவை கையிருப்பாக வுடையவன். இவன் கூறும் சொல் பவராலும் மதிப்புடையதாகக் கருதப்படும். கால் நடைகள் வண்டிகள் உண்டு. தன் சொந்தப் பணம் உடையவன். கடன் வாங்க மாட்டான். மற்றச் செய்திகளைப் பின் பாகத்தில் கூறுவோம்.

## ஜாதகனுடைய மரணகாலம்

38. உதித்தவன் மரணகாலம் உரைக்கிறேரு மறுபா னிரண்டில்
சதியிலாத் தேளின் மாதம் சாற்றுவோம் கண்டம் [தானே
இதற்குமுன் மரண மென்றேரும் இயம்புவீர் விபர மாக
இதுவித ரோகம் வந்தும் இரணிய னஞ்சில் நிற்க;

38. இனி, ஜாதகன் மரண காலத்தைச் சொல்லுகிறேம். தனது அறுபத்திரண்டாம் வயதில் கார்த்திகை மாதம் மரண மேற்படும் என்று சொல்லுவோம். இதற்கு முன்பாகவே ஜாதகனுக்கு மரண மேற்படலாம் என்று கூறினேம். விவரங்கள் கூறும் என்று கேட்ட ஐயமுனிவருக்கு பராசரர் விடை கூறுகிருர். எந்தவித நோய் வந்தாலும், குரு ஐந்தாம் இடத்தில் நிற்க;

## ஜாதகனுக்கு கண்டம் நேரும் காலங்கள்

39. ஐந்தேழு பதினே ராண்டு அறுமூன்று விருபா னென்று
சந்தத மிருபா னெட்டு சதுவத்து அன்பா னறு
இந்ததோ ராண்டில் கண்டம் இடர்வந்து நிவர்த்தி [யாகும்
பிந்திய ஜன்மம் தன்னைப் பேசுவோம் தாயே யாங்கள்.

39, ஜாதகனுக்கு ஐந்து, ஏழு, பதினொன்று, பதினெட்டு, இருபத்தொன்று, இருபத்தெட்டு, ஐம்பத்தாறு ஆகிய இந்த வயது காலங்களில் கண்டங்கள் ஏற்படும். ஆயின் துன்பங்கள் உண்டாகி நீங்கிவிடும். ஜாதகனின் மறு பிறவி பற்றி நாங்கள் இனிக் கூறுவோம், பார்வதியம்மையே!

## ஜாதகருடைய மறுபிறவி

40. அந்நகர் மேல்பா லாக அணுகிய சிறுவூர் தன்னில்
இந்ததோர் குலமு தித்து இடரில்லா வாழ்வா னுகும்
முந்திய குடும்பி யாகி யுயர்வான கீர்த்தி பெற்று
சந்ததம் வாழ்வா னுகும் சாற்றுவோம் பின்பால் சேதி.

40. அந்த நகரத்துக்கு மேற்குத் திசையில் உள்ளதொரு சிற்றூரில், இப்பிறப்பிலுதித்த குலத்திலேயே மீண்டும் தோன்றி துன்பமில்லாமல் வாழ் பவனுவான். முன்னேற்ற மடைந்த குடும்பத்தை யுடையனுய் உயர்வான புகழை யடைந்து, வாழ்வான். இனி மற்ற விவரங்களைப் பின் பாகத்தில் சொல்லுவோம்.

## ஜனனகால தசை

41. *பிறந்திடு காலம் தன்னில் புததசை யாண்டு மூன்றும்*
*உரைந்திடும் திங்கள் மூன்றும் உரைக்கிறேம் பலனை*
*[யாங்கள்*
*பிறந்திடும் துணைவன் விருத்தி பூமியும் சேர்த்த லுண்டு*
*நிறைந்திடும் தனதா னியங்கள் நேமியோர்க் குதவி*
*[செய்தல்;*

41. ஜாதகன் ஜனன காலத்தில் புதமஹா தசையில் இருப்பு மூன்று வருஷங்களும் மாதங்கள் மூன்றுமாம். அக்கால பலன்களை நாங்கள் சொல்லுகிறேம். சகோதர விருத்தி ஏற்படும். நிலபுலங்கள் சேர்த்தலும் உண்டு. தனதானியப் பெருக்கம் ஏற்படும். உலகினர்க்கு உதவிகள் செய்வான்.

## ஜனனகாலத் தசைப் பலன்கள்

42. *தந்தைதாய்ப் பிணியு மெய்தும் தாய்வர்க்கம் சூத*
*[மெய்தும்*
*பந்துவில் சுபமும் சூதம் பலவிரோ தங்க ளுண்டாம்*
*பிந்திய பாகம் தன்னில் பேசுவோம் விபர மாக*
*இந்திர னிறைஞ்சு மாதே இயம்பின மொழிகுன் ருவே.*

42. தந்தை தாயாருக்கு நோயுண்டாகும். தாய் வர்க்கத்தில் அசுபம் உண்டாகும். உறவினர்கள் வழியில் சுபச் செயல்களும் அசுபச் செயல் களும் நிகழும். பலருடைய விரோதங்களும் ஜாதகனுக்கு உண்டாகும். விவரமாக எல்லாவற்றையும் இரண்டாம் பாகத்தில் கூறுவோம். தேவேந் திரன் வணங்குகின்ற தாயே! நாங்கள் கூறிய மொழிகள் தவரு.

————

# ஜாதகம் 90

## ஜனனகால கிரகநிலை

1. கலை[1]மீனம் பொன்னோன்[2] வீணை[3] கரியவன்[4] கேது [மேடம்
புலவனும்[5] ராகு கோலில்[6] புவிமகன்[7] பானு[8] தேளில்[9]
தலமது[10] கன்னி யாகச் சாபத்தில்[11] புகரும்[12] தங்க
பலனதைப் புகல்வீ ரென்று பார்வதி கேட்க லுற்றாள்.

1. சந்திரன் மீனத்திலும், குரு மிதுனத்திலும், சனி கேது மேஷத்திலும், புதன் ராகு துலாத்திலும், செவ்வாய் சூரியன் விருச்சிகத்திலும், சுக்கிரன் தனுசிலும் ஆக இவ்விதம் ஒன்பது கிரகங்களும் நிற்க, கன்னியா லக்கினத்தில் பிறந்தவருக்கு பலன்கள் சொல்லுவீரென்று பார்வதிதேவி ஏழு முனிவர்களையும் நோக்கி. கேட்டனள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | சனி கேது | | குரு |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| சுக்கிரன் | அங்காரகன் சூரியன் | புதன் ராகு | லக்கினம் |

1. சந்திரன்
2. குரு
3. மிதுனம்
4. சனி
5. புதன்
6. துலாம்
7. அங்காரகன்
8. சூரியன்
9. விருச்சிகம்
10. இலக்கினம்
11. தனுசு
12. சுக்கிரன்

## ஜாதகனின் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. அத்திரி புகலு கின்ரூர் ஆணது செனன மாகும்
வித்தக னுதித்த வில்லம் வடவாடை கீழ்மேல் வீதி
உத்திரம் கன்னி வாச முயர் மேற்கில் தந்தி கோஷ்டம்
சித்தஜன் தனையெ ரித்த தேவனும் கீழ்ப்பா லாகும்.

2. அத்திரி முனிவர் கூறுகின்ரூர். இந்த ஜாதகம் ஒரு ஆண் மகனுடையது. அவன் பிறந்த வீடு கிழக்கு மேற்குத் தெருவில் வடக்குப் பக்கம் உள்ள வரிசையில் உள்ளது. வீட்டுக்கு வடக்கில் அம்மன் கோவிலும், மேற்கில் உயரமான இடத்தில் விநாயகரின் ஆலயமும், திருமாலின் திருமகனுகிய மன்மதனை யெரித்த சிவபெருமான் ஆலயம் கிழக்குத் திக்கிலும் இருக்கும்.

## இந்நூலில் சொல்லப்படும் செய்திகள்

3. சொல்லிய வடையா ளத்துள் சுதனுமே ஐந்தாஞ் [சென்மம்
நல்லதோர் கங்கை சேயாய் நாயக னுதிப்பா ஞகும்
தல்லியின் தந்தை யோகம் தன்துணை களத்திர புத்திரர்
புல்குவோ முன்பின் சென்மம் பேதையே கேட்டி டாயே.

3. இவ்விதம் சொல்லப்பட்ட அடையாளங்களுள்ள வீட்டில் ஜாதகன் தன் தந்தைக்கு ஐந்தாம் குழந்தையாகப் பிறந்தவன் என்ரூம். உயர்ந்ததும் நல்லொழுக்கமுமுள்ளவேளாள குலத்தில் தோன்றியவன். இனி இந்தச் சோதிட நூலில் இந்த ஜாதகனுடைய, தாய், தந்தை இவர்களைப் பற்றியும், உடன் பிறந்தவர் மனைவி, மக்கள் இவர்களின் முற்பிறவி, மறுபிறவி இவைகளைக் கூறுகின்ரூம். தாயே! கேளுங்கள்.

## தந்தையின் சகோதாபாவமும் இயல்புகளும்

4. தந்தையின் துணைவ ராறில் ஆண்மூன்று கன்னியி [ரண்டு
சந்ததம் விருத்தி யென்ரூம் சாற்றுவோம் பின்பால் [சேதி
இந்தவன் பிதாகு ணத்தை இயம்புவோ மாஞ்சி வப்பன்
நிந்தைக ளேற்கா ஞகும் நிருபர்க ளிஷ்டம் கொள்வன்.

4. தந்தையுடன் பிறந்தவர்கள் அறுவரில் மூன்று சகோதரர்களும் இரு சகோதரிகளும் நீண்ட ஆயுள் உள்ளவர் என்ரூம். ஒருவன் இறந்து விடுவான். அந்த விவரங்களைப் பிற்பகுதியில் சொல்லுகின்ரூம். இனி

ஜாதகனுடைய தந்தை குணவியல்புகளைக் கூறுகின்றோம். அவன் மாநிற முடையவன். அனாவசியமான வீண் பழிகளை அடையாதவன். அரசாங்கத்தாரின் நன் மதிப்புப் பெற்றவன்.

5. பூமியும் பரிபா லிப்பன் புகழான குடும்ப மேற்பன்
தாமதக் குணத்தா னாகும் சதுஷ்பாதம் விருத்தி யுண்டு
நேமியில் நல்லோ னவன் நீத்தோர்க்கு அன்ன மீவன்
ஆமதை மூன்று செய்வன் ஆள்கார ருடைய னாமே.

5. பூமியைப் பரிபாலிக்கும் அதிகார முடையவன் (பயிர்த் தொழில் செய்து வருவான்) பரவிய கீர்த்தி யுடையவன். குடும்பத்தை ஏற்று நடத்துபவன். எவ்விஷயங்களையும் நிதானமாகச் செய்யும் இயல்பினன். கால் நடைகளின் பெருக்கமுள்ளவன். உலகில் நல்லவன் என்ற பெயரடைவான். துறவிகட்குப் பரிவுடன் அமுது படைப்பவன். மூன்று வீடுகள் கட்டுபவன். இவன் ஏவும் பணிகளை ஏற்று நடக்கப் பணியாட்கள் உள்ளவன்.

6. கடன்கொள்வன் நிவர்த்தி செய்வன்
கருதிடான் கட்டு வார்த்தை
உடன்படான் பிழைக ளுக்கு
உபதேசம் பெறுவா னாகும்
தடபுடல் செய்கை யுண்டு
தன்துணை வேறாய் செய்வன்
படையில்முன் செல்லா னாகும்
பத்தினி நேய னாகும்.

6. கடன் வாங்குவான். பிறகு அதைக் கொடுத்துத் தீர்ப்பான். பொய் பேசுவதையோ அல்லது வீண் வார்த்தைகளைப் பேசுவதையே மனத்தாலும் நினையாதவன். தவறுகள் செய்வதற்கு இடம் கொடாதவன். குருவிடம் உபதேசம் பெறுவான். ஆடம்பரச் செய்கைகளுள்ளவன். ஆனால் உடன் பிறந்த சகோதரனைத் தனியாகப் போகும்படி செய்வான். சண்டைக்கு இடம் கொடாதவன். சண்டைக்கு முன் செல்லாதவன்; தன் மனைவிக்குப் பிரியமானவன்.

## ஜாதகனுடைய இயல்புகள்

7. இன்னெறி யுடையா னுக்கு இவனுமே உதிப்பா னாகும்
அன்னவன் குணத்தைச் சொல்வேன் அழகுளான் [மாஞ்சி வப்பன்
தன்னினத் தவரைக் காப்பன் சாந்தவான் கல்வியி [ரண்டு
பின்னமில் லாத தேகி பிறர்குற்றம் புகலா னாகும்,

7. இந்த விதமாகக் கூறப்பட்ட இயல்புகளை யுடைய தந்தைக்கு இந்த ஜாதகன் பிறப்பான் என்றேம். இனி ஜாதகனுடைய குண நலன்களைக் கூறுகின்றேம். அழகுள்ளவன். மாநிற முடையவன். தன் உற்ருர் உறவினரையும், தன்னைச் சேர்ந்தவர்களையும் ஆதரித்து வருவான். பொருமையுடையவன். இருவிதமான கல்விகளைக் கற்றுணர்வான். ஒருவிதமான குறையுமில்லாத அங்க அவயங்கள் உள்ளவன். பிறர் மீது குற்றம் கூருதவன்.

8. வித்தையால் பெருமை யேற்பன் விவேகியாம் யூகைசாலி
நத்திஞேர்க் குதவி செய்வன் ராசரால் சீவிப் பானும்
சித்தமே கரப்பு முள்ளான் சீலனும் பெரியோர் நேயன்
முத்தின தலங்கள் செல்வன் மூலச்சூ டுடைய னுமே.

8. தான் கற்றுணர்ந்த கல்வியால் பெருமையும் புகழையும் அடைவான், எது நன்மை எது தீமை என்று பாகுபாடு படுத்தக் கூடிய அறிவுள்ளவன். ஊகித்துணரும் சக்தியுள்ளவன். ஆனல் மனத்தில் சிறிது கெட்ட எண்ணமுள்ளவன். நல்ல ஒழுக்க முடையவன். பெரியோர்களுக்குப் பிரியமானவன். உயர்ந்த பாடல் பெற்ற க்ஷேத்திரங்களுக்கு சென்று வழிபடுவான்- மூலச் சுட்டு நோயுள்ளவன்.

9. இன்னவன் செங்கை தன்னை இலகிடும் கமல ரேகை
பொன்னதைப் புதையல் வைப்பன் பிதுராஸ்தி விருத்தி
[செய்வன்
மன்னவர் பேட்டி கொள்வன் வண்டிவா கனமு முண்டு
பன்னுவான் ஞான நூலை பதரினில் செல்லா னுகும்.

9. ஜாதகனுடைய, கையில் பத்ம ரேகை இருக்கும். இவன் தான் சம்பாதித்த பொருளைப் பூமியில் புதைத்து வைப்பான். தன் தந்தையின் ஆஸ்தியைப் பெருக்குவான். அரசனைப் பேட்டி காணும் வாய்ப்பு உள்ளவன். வண்டி முதலில் வாகன வசதியுள்ளவன். ஞான நூலைத் திருப்பித் திருப்பிப் பிடிப்பான். அற்ப காரியங்களில் இறங்காதவன்.

10. துணைவரை யாத ரிப்பன் சோம்பிடான் காரி யத்தில்
கனமுள புகழு மேற்பன் காலாட்க ளுடைய னுகும்
உணவதைச் சுகமாய்க் கொள்வள் உறுதியில் லாத
[நெஞ்சம்
தணிவுளா னில்லம் செய்வன் சகலர்க்கும் நல்லோ
[னுவன்.

10. தன் சகோதரரை ஆதரித்து வருவான். எந்தக் காரியத்தையும் சோம்பலில்லாது பார்த்துச் செய்து முடிப்பவன். பெரிய கீர்த்தியடைவான் ஏவலாட்களுள்ளவன். சௌக்கியமாகச் சாப்பிடுவதில் பிரிய முள்ளவன். தணிந்து போகும் இயல்பினன். வீட்டைக் கட்டுவான். எல்லோருக்கும் நல்லவனுக வாழ்ந்து வருவான், திடமில்லாத மனத்தினன்.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

11. முகமதில் வடிவு காணும் முருகர்தன் பக்தி பூண்பன்
தகமையாய்க் குடும்ப மேற்பன் தன்துணை யாண்பா
[லிரண்டு
நகைமதி முகத்தாள் மூன்று நவின்றனன் தீர்க்க மாக
அகமது ஒன்றாய் வாழ்வா ரவர்சேதி பின்பால்
[சொல்வேன்.

11. முகத்தில் ஒளி உடையவன். ஆறுதிருமுகங்களையுடைய முருகக் கடவுள் மீது பத்தி யுள்ளவன். பொருத்தமாகக் குடும்பத்தை ஏற்று நடத்துவான். ஜாதகனுக்கு இரு சகோதரர்களும் அழகிய சந்திரனைப் போன்று முகத்தை யுடைய சகோதரிகள் மூவரும் தோன்றி நீண்ட ஆயுளுடையவர் என்று சொல்லுகின்றோம். இவர்கள் எல்லோரும் ஒன்றாக வாழ்ந்து வருவர். அவர்களுடைய விவரங்களைப் பிற்பாகத்தில் சொல்லுகிறோம்.

## தாயின் குண விசேஷங்கள்

12. மாதுரு குணத்தை யாங்கள் வரைகிறோ மினிமே லாக
ஓதுவாள் சுகமாய் வார்த்தை உலகுக்கு நல்லோ ளாவள்
பாதக மனமில் லாதாள் பஞ்சைகட் கன்ன மீவள்
சூதிலாள் சீலி யாவள் சுந்தர முடைய ளாகும்.

12. இனி, தாயின் குணநலன்களைச் சொல்லுகிறோம். அவள் பிறர் ரஸிக்கும்படி பேசுபவள். உலகத்தவருக்கும் நல்லவளாக வாழ்ந்து வருவாள். தீய மனமில்லாதவள். ஏழைகட்குப் பரிவுடன் உணவு அளிப்பவள். கபடமில்லாத மனத்தினள். நல்லொழுக்க முடையவள் அழகி.

13. வரன்மனம் போலே வாழ்வள்
வறுமையெப் போதும் காணாள்
கரைமன முடைய ளாகும்
கஞ்சமா நிறத்தளாகும்
உரையுமுன் கோபம் கொஞ்சம்
உயர்வான தலங்கள் செல்வள்
கரிமத வானை பெற்ற
காதலி கேட்டி டாயே.

13. தன்னுடைய கணவன் மனமறிந்து வாழ்ந்து வருவாள். எக்காலத்திலும் தரித்திர நிலையை யடையாதவள். இரக்க குணமுள்ள மனத்தினள். தாமரை போன்ற நிறமுடையவள். பேசுவதற்கு முன் கோபம் கொள்ளுபவள், உயர்ந்த புண்ணிய தலங்களுக்கு யாத்திரை செல்லுவாள். கரிய மதயானையைப் போன்ற முகமுடைய விநாயகனைப் பெற்ற தேவியே! கேளுங்கள்.

## தாயின் சகோதரபாவம்

14. தன்துணை ஆண்பா லொன்று தையலர் ஒருவ ராகும்
சொன்னஆண் சேத மெய்தும் துணையாண்பால்
[தோஷ மெவ்வார்
மன்னிய ஆறோன் நீச்சம் மங்களனுறைப் பார்க்க
பின்னமாம் துணையா னுந்தான் பேசுவோ மன்னை
[பூர்வம்.

14. ஜாதகனுடைய தாய்க்குச் சகோதரர் ஒருவரும் சகோதரி ஒருத்தியும் தோன்றுவர். ஆனல் சகோதரன் பிறந்ததும் இறந்து விடுவான், என்றதும் பார்வதிதேவி கேட்கலானுர். தாய்க்குச் சகோதர தோஷ மேற்படக் *காரணமென்ன சொல்லுங்கள்? என, ரிஷிகள் கூறுவார்.* ஆறும் வீட்டுக்குரிய சனி நீச்சம் பெற்று மேஷத்தில், எட்டாமிடத்தில் இருப்பதாலும் அவ்வீட்டுக்குரிய அங்காரகன் ஆறுமிடத்தைப் பார்ப்பதாலும் தாய்க்குச் சகோதர தோஷம் உண்டு என்று சொல்லுகின்றோம். இனி தாயின் முற்பிறவி பற்றிக் கூறுகின்றோம்.

## தாயின் முற்பிறவி

15. கொங்குநா டதனி லேதான் குதித்தனள் செங்குந்த
[வம்சம்
தீங்கிலாக் குடும்பி யாகி சேயர்க ளதிக முண்டாய்
பாங்காக வருவோ ருக்கும் பந்துவுக் கன்ன மீந்தும்
தேங்கினோர்க் குதவி செய்து தேவதா பத்தி யாயும்;

15. கொங்கு நாட்டில், செங்குந்த மரபினளாகப் பிறந்து, தீங்குகளில்லாத குடும்பத்தை யடைந்து, அதிகமான குழந்தைகளைப் பெற்று பரிவுடன் தன்னையண்டி வருபவர்கட்கும் சுற்றத்தாருக்கும் அன்னமளித்து வந்து, வறுமை யடைந்தவருக்கும் துன்புற்றவருக்கும் உதவி செய்து தெய்வ பக்தி கொண்டும் வாழ்ந்தாள்.

## தாயின் மறுபிறவி

16. வினையேது மில்லா தாகி மேவினுள் கால நாடு
கனமுள பிரமன் லக்கம் கங்கையின் குலமு தித்தாள்
வனிதைபின் சென்மம் சொல்வேன் வாலங்கா டதனி
[லேதான்
சினமிலாப் பிரம்ம சேயாய் ஜனிப்பளா மென்று சொல்
[வோம்.

16. வேறு தீவினைகள் ஏதுமில்லாதவளாகி இறுதியில் மரண மடைந்தாள். பிறகு எல்லாம் வல்ல பிரமதேவனுல் படைக்கப்பட்டு இந்தப் பிறவியில் வேளாள குலத்தில் பிறந்தவள். இனி தாயின் மறுபிறவி யைக் கூறுகின்றோம். திருவாலங் காட்டில் அந்தண குலத்தவளாக பிறப் பாள் என்று சொல்லுகின்றோம்.

## உயர்பிறவிக்குக் காரணம்

17. கங்கையின் குலமு தித்தோள் காதலிபின் சென்மத்
[தில்தான்
துங்கமா மறைகு லத்தில் தோன்றும்கா ரணங்க
[ளெவ்வார்
சங்கையைச் சொல்லு மென்ன தன்வரன் மனம்போல்
[வாழ்ந்தும்
எங்கள்போ லதிதிக் கன்னம் ஈந்துமே சீலி யாயும்.

17. இப்பிறவியில் வேளாள குலத்தில் பிறந்தவள் அடுத்த பிறவியில் தூய்மையான அந்தண குலத்தில் தோன்றும் காரணங்கள் என்ன வென்று கூறுங்கள். ரிஷிகள் பதில் கூறுகின்றனர். ''அவள் தன் கணவனுடைய மனம் போல் வாழ்ந்து வருவதாலும் எங்களைப் போல் துறவிகட்குப் பரிவு டன் அமுது அளித்து வருவதாலும், நல்லொழுக்க முள்ளவளாகவும்''

18. வருவோரை யாத ரித்தும் மனமது தளர்ச்சி யாயும்
பெரிதான தலங்கள் சென்றும் பிழையின்றி வாழ்வ
[தாலும்
மறைக்குல முதிப்பா ளாகும் வாக்கது தப்பா தாகும்
அருமறை முடிவி லாடு மம்பிகை யாளே கேளாய்.

18. ''தன்னை யண்டி வந்தவரைப் பரிவுடன் காப்பாற்றி வந்தும் இரக்கமுள்ள மனத்துடன் வாழ்ந்து வந்ததாலும், பல பெரிய தலங்களுக்குச் சென்று வருவதாலும், வேறு தவறுகளின்றி வாழ்ந்து வந்ததாலும் அந்தண குலத்தில் தோன்றுதல் ஏற்பட்டது. நாங்கள் கூறிய வார்த்தைகள் தவறு அரிய வேதங்களின் முடிவில் நடமாடும் தேவியே! கேளுங்கள்.''

## தந்தையின் முற்பிறவி

19. தந்தையின் பூர்வம் சொல்வேன் சலகண்டி யீசர்வாழும்
முந்திய பேரூர்தன்னி லுதித்தனன் வன்னிய சேயாய்
சிந்தையும் நல்லதாகி சேயிழை மதலையுண்டாய்
வந்தவர்க் கன்ன மீந்தும் வருமுகர் பத்தி யாயும்;

19. ஜாதகனுடைய தந்தையின் முற்பிறவியை இனிக் கூறுகின்றோம். ஜல கண் டீச்வரர் வாழ்ந்து வரும் (திருவானைக் காவில்?) உயர்ந்த பெரிய ஊரில் வன்னிய குலத்தவனாகத் தோன்றி நல்லமனமுடையவனாக வாழ்ந்து, மனைவி, மக்களைப் பெற்று தன்னை யண்டி வந்தவர்கட்குப் பரிவுடன் உணவு அளித்து வந்து, ஆறு திருமுகங்களை யுடைய சுப்பிரமணியக் கடவுளிடம் பக்தி கொண்டு வாழ்ந்து;

## தந்தையின் மறுபிறவி

20. மறையவர் தொன்டு பூண்டு மாநிலம் நல்லோ னாகி
தரையினால் சீவித் தேதான் சென்றனன் கால நாடு
அரிமகன் வரையப் பட்டு அணுகினா னிக்கு லத்தில்
வருஞ்சென்மம் காளாத்தி தன்னில் மறைக்குல முதிப்பா
[னாகும்.

20. அந்தணர்கட்குத் தொண்டுகள் பல செய்து, உலகில் நல்லவன் என்ற பெயர் பெற்று விளைநிலங்களில் விவசாயம் செய்து ஜீவித்து வந்து இறுதியில் மரண மடைந்தான். மீண்டும் மகாவிஷ்ணுவின் திருமகனாகிய பிரமதேவனால் இப்பூவுலகில் படைக்கப்பட்டு இப்பிறவியில் வேளாள குலத்தவனாகப் பிறந்தவன் என்றோம். தந்தை தன் அடுத்த பிறவியில் திருக்காளாத்தி க்ஷேத்திரத்தில் அந்தண குலத்தில் பிறப்பவன் என்றோம்.

21. இந்ததோர் சென்மம் தன்னில்
இடுக்கங்கள் சிலர்க்குச் செய்தும்
சிந்தையும் கபட மாயும்
தீரனும் வாழ்வ தாலே
முந்தின குலமெவ் வாறு
உதிப்பனா மென்று சொன்னீர்
அந்தவன் சேதி சொல்வாய்
அவனுமிச் சென்மம் தன்னில்;

21. இந்தப் பிறவியில் ஜாதகனுடைய தந்தை, பல துன்பங்களைச் சிலருக்குச் செய்து வந்த போதிலும், மனத்தில் வஞ்சகத்துடன் வாழ்ந்து வந்திருந்தும் முதல் குலமாகிய அந்தண குலத்தில் தோன்றுகை எங்ஙனம் ஏற்பட்டது. அவ்விவரத்தைக் கூறுங்கள் என்றாள் பார்வதிதேவி. ஜாதகனுடைய தந்தை இப்பிறவியில்,

22. தேவதா பத்தி யாயும் சிறுத்தோருக் குதவி செய்தும்
நாவது சுத்த மாயும் நற்நலம் வாசம் சென்றும்
தாவினோர் தம்மைக் காத்தும் தன்பால னுதிப்பா
[னென்றோம்
ஆவலாய்ப் பூசை செய்யும் அம்பிகை யாளே கேளாய்.

22. தெய்வ பக்தியுடன் வாழ்ந்து வருவதாலும், ஏழைகட்கும் துன்புற்றவருக்கும் வேண்டிய உதவி செய்து வந்ததாலும், வாக்குச் சுத்தமாக வந்ததாலும், பல புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை சென்று வந்ததாலும், தன்னை சரணம் என்று வந்தவரைக் காத்து வந்ததாலும் அடுத்த பிறவி அந்தண குலத்தில் தோன்றுவான் என்றோம். முழு மனத்துடன் சிவபெருமானைப் பூசனை புரியும் தாயே! அம்பிகையே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய திருமணக் காலம்

23. உதித்தவன் மணத்தின் காலம்
வரைகிறே மிருபா னிரண்டுள்
வதிபதி வடமேல் திக்கில்
மாதுரு கிளையி லேதான்
மதிமுக மாது நேரும்
வரைகிறே மவள்கு ணத்தைச்
சதியிலா மனத்த ளாகும்
தன்வரன் மனதுக் கேத்தோள்.

23. இனி ஜாதகனுடைய திருமணக் காலத்தைச் சொல்லுகின்றோம். அவனுடைய இருபத்திரண்டாம் வயதுக்குள் வடமேற்குத் திக்கிலிருந்து மனைவி வருவாள் என்றோம். அவளும் ஜாதகனுடைய தாய் வர்க்கத்திலிருந்து வாய்ப்பாள். சந்திரனைப் போன்ற அழகிய முகத்தை யுடைய அவளைப் பற்றிக் கூறுகின்றோம். சதி செய்யாத மனத்தினள். தன் கணவன் மனத்துக் கேற்றபடி நடந்து வருவாள்.

## மனைவியின் இயல்புகள்

24. அன்னம்போல் சாய லொக்கு மதிதிகட் கன்ன மீவள்
பொன்னிற முடைய ளாகும் புகழ்ந்தோரை யாத ரிப்பள்
கன்னிகை வந்த பின்பு கழறுவோம் விசேஷ யோகம்
உன்னதச் சீலி யாவள் உயர்வான புத்தி யேற்பள்.

24. அன்னத்தைப் போன்ற சாயலுடையவள். அதிதிகட்குப் பரிவுடன் அமுது படைப்பவள். பொன்னைப் போன்ற மஞ்சள் நிறமுடையவள். தன்னைத் துதி செய்தவரைக் காத்து வருவாள். மனைவியை மணந்த பிறகு ஜாதகனுக்கு யோகம் விருத்தியாகும். உயர்ந்த நல்லொழுக்கமுள்ளவள். உயர்ந்த புத்தி யுடையவள்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

25. புத்திர விருத்தி தன்னைப் புகலவே பலத்தைக் காணோம்
சித்தமா யுதித்தா லுந்தான் தீங்காகு மென்று
[சொல்வோம்

குத்தத்தைச் சொல்லு மென்ன குழவிதா னத்தோன் [நீச்சம
பெத்துமே எட்டில் தங்க பிழையுண்டு சுதர்க ளுக்கு.

25. இனி ஜாதகனுடைய புத்திர பாவத்தைப் பற்றி சொல்லுகின்றோம். உண்டு என்று கூறப்பலமில்லை. ஒரு சமயம் புத்திரர் தோன்றினாலும் நிலையாமல் போகும் என்று கூறுகின்றோம். புத்திரர் தோன்றாமைக்குரிய குற்றச் சாட்டைச் சொல்லுங்கள் எனப் பார்வதிதேவி கேட்க, ரிஷிகள் கூறுகின்றனர். புத்திர ஸ்தானத்துக்குரிய சனி எட்டாமிடத்தில், மேஷத்தில் நீச்சமாக இருப்பதால் புத்திர தோஷமுண்டு என்று கூறுகின்றோம்.

## புத்திரதோஷம் மறுப்பு—கிரகநிலை

26. [1]பொன்னவன் தசமம் தங்கப் புதல்வரால் கர்மம் நேரும்
மன்னிய அஞ்சோ னோடு [2]மெஞ்ஞானி கூடி நிற்க
கன்மபுத் திரனெவ் வாறு கழறினீர் பூர்வ தோஷம்
பின்னமாய்ச் சேர்ந்த தாலே புத்திர தோஷ மெய்தும்.

26. "குரு பத்தாமிடத்தில் தங்கி யிருப்பதால் திண்ணமாய் புத்திரரால் கருமம் நேரும்" என்றனர். பார்வதிதேவி வினவுகிறார் "ஐந்தாமிடத்துக் குரிய சனியுடன் கேது கூடி இருப்பதால் ஜாதகனுக்கு இறுதிக்கடன் செய்ய புத்திரர் எங்ஙனம் தோன்றுவார் என்று கூறுகிறீர்கள்" ரிஷிகள் சொல்லுகின்றனர். ஜாதகனுக்கு முற்பிறவித் தோஷம் :இப்பிறவியில் தொடர்ந்ததால் புத்திரருக்கு தீங்கு நேரும் என்றனர்.

## ஜாதகனுடைய முற்பிறவித் தீவினை

27. என்னஊழ் செய்தா னதனை
இயம்புவீர் முனியே நீர்தான்
முன்சென்ம மிலங்கைத் தீவில்
முதித்தனன் ரெட்டி வம்சம்
தன்மனை மதலை யுண்டாய்
தான்வாழ்நாள் வினையைக் கேண்மோ
துன்மனை குலத்தோர் பேரில்
செப்பினு நிந்தை வார்த்தை.

27, ஜாதகன் முற்பிறவித் தீவினையைக் கூறுங்கள் முனிவரே! தாங்கள் என, முனிவர்கள் பதில் சொல்லுகின்றனர். ஜாதகன் முற்பிறவி

1. குரு
2. கேது

யில் இலங்கைத் தீவில் ரெட்டியார் மரபில் தோன்றி மனைவி மக்களைப் பெற்று வாழ்ந்துவருங்காலத்தில் ஏற்பட்ட தீவினையைக் கேளுங்கள். தன் இனத்தவர் மீது அடாத வார்த்தைகள் பல கூறினான்.

28. அதுஒரு தோஷ மாச்சு அறைகிறோம் வேறு ஒன்று
பதியில் மார்ச் சாலன் தானும் பண்ணிற்று சிலவே
[துன்பம்
விதியது முதலில் செய்தான் மேவிற்று அதுஓர் தோஷம்
வதிபதி விதவை போகம் மருவியே கருவ ழித்தான்.

28. அது ஒரு தோஷ மாச்சு. மற்றொன்றும் கூறுகின்றோம். ஜாதகனுடைய வீட்டில் பூனை யொன்றும் மிகுதியாகத் தொந்தரவு செய்து வந்தது. அதை ஒழிக்க இந்த ஜாதகன் முற்பட்டு அடித்துக் கொன்றான். அந்தத் தோஷமும் இவனைச் சேர்ந்தது அதுவும் தவிர, விதவைப் பெண்ணுடன் ஜாதகன் சிற்றின்பம் அநுபவித்தான். அதனால் கருப்பம் ஏற்பட்டது அக் கருவை அழித்தான்.

29. காலன்தன் பதிக்குச் சென்று கஞ்சனால் வரையப் பட்டு
சீலமாம் கங்கை சேயாய் செனிப்பனு மிந்தப் பாலன்
ஆலம்போல் முன்னூழ் தோஷ மணுகிடு மிச்சென்
[மத்தில்
ஏலவே சுதர்கள் தோஷ மெய்திடு மென்று சொல்வோம்.

29. இவ்விதம் சொல்லப்பட்ட பல தீவினைகள் செய்து பிறகு எமனுடைய பட்டணம் சென்று (மரண மடைந்து) மீண்டும் தாமரை மலரில் வீற்றியிருக்கும் பிரமதேவனால் படைக்கப்பட்டு நல்லொழுக்கமுள்ள வேளாள குலத்தவனாகப் பிறப்பான் இந்த ஜாதகன் என்றோம். கொடிய விஷம் போல் முற்பிறவித் தீவினை இப்பிறவியிலும் தொடர்ந்தது. அதனால் புத்திர தோஷம் ஏற்படும் என்று சொல்லுகின்றோம்.

## புத்திரதோஷம் நீங்கச் சாந்தி

30. முன்வினை தீரவேண்டி மொழிகிறோம் கிரியை யொன்று
தன்மனை தானு மாகச் சண்முகன் பேரூர் சென்று
நன்னிய தீர்த்தம் தோய்ந்து நாயகர்க் கர்ச்சித் தேத்தி
முன்குலத் தோர்க்கு அன்னம் உதவுவார் மூவேழு
[பேருக்கு.

30. முற்பிறவித் தீவினை நீங்கச் சாந்தி யொன்று கூறுகின்றோம் கேளுங்கள். ஜாதகன் தன்மனைவியுடன் ஆறுமுகக்கடவுள் கோயில் கொண்டி

ருக்கும் பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று, புண்ணிய நதிகளிலும், தீர்த்தங்களிலும் நீராடி, ஆறுமுகங்களை யுடைய கடவுளுக்கு அர்ச்சனை முதலியன செய்து, துதித்து முதல் குலத்தில் தோன்றிய இருபத்தோரு அந்தணர்கட்குப் பரிவுடன் அமுது படைத்து;

31. அதுமுதல் சஷ்டி நோன்பு அப்பாலன் கொள்வா னாகில்
சதியான தோஷம் நீங்கிச் சந்ததி தோன்று மென்றேம்
இதுவிதம் செய்யி லாண்பால் எய்திடு மொன்று தீர்க்கம்
மதிமுகப் பெண்பா லிரண்டு வரைகிறேம் தீர்க்க மாக.

31. அது முதல் ஒவ்வொரு சஷ்டி யன்று அந்த ஜாதகன் நோன்பு ஏற்று விரதம் இருப்பானாகில் தீங்காகச் சேர்த்த தோஷம் நீங்கிப் புத்திர விருத்தி ஏற்படும். இங்ஙனம் கூறியபடி செய்து வந்தால் ஒரு புத்திரனும், அழகிய சந்திரனைப் போன்ற முகத்தை யுடைய பெண்களிருவரும் தோன்றுவார்கள். அம்மூவரும் நீண்ட ஆயுளுடன் விளங்குவர் என்றேம்.

## ஜாதகனுடைய பொதுயோகம்

32. பாலகன் பொதுயோ கத்தைப் பகருவோ மினிமே லாக
சீலவான் ராச னாலே சீவன மென்று சொல் வோம்
சாலவே யிருபான் மேலே சந்திரன் பிறைபோல் யோகம்
ஏலவே அன்பா னிரண்டும் ஏய்திடும் ராச யோகம்.

32. இனி ஜாதகனுடைய பொது யோகத்தைச் சொல்லுகின்றேம். அவன் நல்லொழுக்க முள்ளவன். அரசாங்க உத்தியோகம் வகிப்பான் என்று சொல்லுகின்றேம். அவனுடைய இருபதாம் வயதுக்கு மேல் வளர் பிறைச் சந்திரன் போல் யோகம் விருத்தி யடையும். அவனுடைய ஐம்பத்திரண்டாம் வயது வரையில் அது இருக்கும், ராஜ யோகம் ஏற்படும் என்று கூறுகின்றேம்.

33. அதற்குமேல் அரசன் மூலம் அணுகியே செட்டுச் [செய்வன்
நிதியது பெருக்கஞ் செய்வன் நீத்தோர்க்கு அன்ன [மீவன்
சதமுடன் பூமி விருத்தி தந்தைக்கு மேலாய் வாழ்வன்
அதிதியை யாத ரிக்கு மம்பிகை யாளே கேளாய்.

33. அதற்கு மேல் அரசாங்கத்தாருடைய உதவி பெற்று வர்த்தகத் தொழில் செய்து வருவான். செல்வப் பெருக்கம் செய்வான். துறவிகட்கு அன்னமளிப்பவன். நிலையான பூமி விருத்தி யுண்டு. தன் தந்தைக்கு மேலான வாழ்க்கை நடத்துவான். பெரியோர்களை ஆதரிக்கும் தாயே! அம்பிகையே! கேளுங்கள்.

## ஜாதகனுடைய தாய் தந்தையரின் மரணகாலம் ஜாதகனுடைய வயதும்

34. இருபது மூன்று ஆண்டில் ஏகுவான் தந்தை தானும்
மருவிமுன் னிருப தாண்டில் மாதுரு கெண்ட
[மென்றேம்
அறுபது வாறு வாண்டில் அர்ப்பசி மாதம் தன்னில்
திருமக னுடல மேகும் செப்புவோ மிவன்பின் சென்மம்.

34. ஜாதகனுடைய இருபத்தி மூன்றும் வயதில் தந்தை மரணமடைவான். தாய் ஜாதகனுடைய இருபதாம் வயதில் மரண மெய்துவாள். அவனுடைய அறுபத்தாறும் வயதில் ஐப்பசி மாதத்தில் ஜாதகன் மரண மடைவான். இனி அவனுடைய மறுபிறவியைப் பற்றிச் சொல்லுகின்றேம்.

## ஜாதகன் மறுபிறவியும் ஜனனகால தசையும்

35. உத்திரம் கோகர் ணத்தில் உதிப்பனும் பிரம்ம சேயாய்
வெத்திசே ரரசர் பக்கல் மேவியே சீவிப் பானும்
சித்தசன் சென்ன காலம் சிறப்புள புந்தி தன்னில்
பத்தின வாண்டு வாறில் பட்டுமே திங்க ளொன்றும்.

35. வடக்கில் உள்ள கோகர்ணத்தில் அந்தண குலத்தவனுகப் பிறப்பான் என்றேம். வெற்றியுடன் கூடி அரசாங்கத்தில் பணி ஏற்று அதிகாரத்துடன் பதவி வகித்து ஜீவித்து வருவான். ஜாதகனுடைய ஜனன காலத்தில் சிறப்புள்ள புதமகா தசையில் ஆறு வருடங்களும் ஒரு மாதமும் மீதமாகும்.

## ஜனனகாலத் தசைப் பலன்

36. பலனதைப் புகலக் கேண்மோ பாலகன் தனக்கு ரோகம்
தலமரா மத்து செய்தல் தாய்பிணி பந்து சூதம்
நிலமது பலித மாகும் நுகர்ந்தனம் பூர்வ பாகம்
மலையறை மகளே யாங்கள் வழுத்தின மொழிகுன் ருவே.

36. அக்காலத்திய பலனைச் சொல்லுகிறேம் கேளுங்கள். ஜாதகனுக்கு நோய் ஏற்படும், வீட்டு மராமத்து வேலை நடைபெறும். தாயக்கு வியாதி ஏற்படும். தன் சுற்றத்தாருக்குச் சூதம் ஏற்படும். நிலத்தில் பயிர்கள் நல்ல பலனை அளிக்கும் இதுவரை முற்பாகம் சொன்னேம். மலையரசனின் மகனே! நாங்கள் கூறிய வார்த்தைகள் தவரு. —V. R. N.

# ஜாதகம் 91

## ஜனனகால கிரகநிலை

1. [1]மதிகேது மேட மாக [2]மால்[3]பணி [4]கோல தாக
[5]விதிகுரு [6]புகர்[7]சேய் [8]மேரு [9]வெய்யவன் [10]தேள தாக
இதுவிதக் கோளு நின்று இலக்கினம் கன்னி யாக
அதுபலன் புகலு மென்று அம்பிகை கேட்க லுற்ருள்.

1. சந்திரன்:கேது மேடத்திலும், புதன், ராகு, துலாத்திலும், சனிகுரு, சுக்கிரன் அங்காரகன், தனுசிலும், சூரியன் விருச்சிகத்திலும், நவக்கிரகங்கள் இருந்து பிறந்த இலக்கினம் கன்னியாக விருந்தால் ஏற்படும் பலனைச் சொல்லுங்கள் என்று பார்வதி தேவி கேட்கலானுள்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் கேது | | |
| | இராசி சக்கரம் | | |
| | | | |
| சனி குரு சுக்கிரன் அங்காரகன் | சூரியன் | புதன் ராகு | லக்கினம் |

## ஜாதகன் பிறக்கும் வீட்டு அடையாளங்கள்

2. அத்திரி புகலுகின்ருர் அதுசென்மம் ஆண்பா லாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாசல் கீழ்மேல் வீதி
உத்திரம் காளி வாசம் உருவற்ற மாரி தெற்கில்
சித்தசன் தனையெ ரித்த தேவனும் வடமேல் பாலாம்.

1. சந்திரன்
2. புதன்
3. ராகு
4. துலாம்
5. சனி
6. சுக்கிரன்
7. அங்காரகன்
8. தனுசு
9. சூரியன்
10. விருச்சிகம்

2. அத்திரி முனிவர் கூறுகின்றார். இது ஆண் மகனுடைய ஜாதகம், இவன் பிறந்த வீட்டு விவரங்களைக் கூறுகின்றோம். கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கிய வாயிலையுடையது. வீட்டுக்கு வடக்கில் காளி கோவிலும், சரீர மல்லாது, தலைமட்டும் உள்ள மாரியம்மன் கோவில் மேற்கிலும், மன்மதனை யெரித்த சிவபிரான் கோவில் வடமேற்கிலும் உள்ளன.

## இந்நூலில் கூறப்படுவன இவை எனில்

3. இவ்வித அடையாளத்துள் யிளவலும் நான்காம் [சென்மம்
பவ்வமா யுதிப்பா னாகும் பத்தினி அன்னை தந்தை
நவ்விய துணைவர் புத்திரர் நாயகி யோகச் சேதி
ஒவ்விய முன்பின் சென்மம் உரைக்கிறோ மின்னூல் [தன்னில்.

3. இவ்விதம் கூறப்பட்ட அடையாளங்களுள்ள இடத்தில் இந்த ஜாதகன் நான்காம் பிறவியாகப் பிறப்பான் என்றோம். இவனுடைய மனைவி தாய் தந்தை இவனுடன் பிறந்த சகோதரர் புத்திரர் ஆசை மனைவி முதலியவர்களின் போகச் செய்தியும் முற்பிறவி மறுபிறவி இவைகளை இந்தச் சோதிட நூலில்,

## தந்தையின் குணநலன்கள்

4. தந்தையின் குணத்தைச் சொல்வேன் சரசமாய் [வார்த்தை யுண்டு
வந்தவர்க் கன்ன மீவன் மர்மத்தை வெளிக்காட் [டாதான்
பந்தினர் மதிக்க வாழ்வன் பாருகள் விருத்தி செய்வன்
சுந்தர முடைய னாகும் சோம்பிடான் காரி யத்தில்.

4. ஜாதகனுடைய தந்தையின் குண விசேஷத்தைச் சொல்லுகின்றோம். சரச சல்லாபமாகப் பேசுபவன். தன்னை யண்டி வந்தவர்கட்கு அன்னமளிப்பவன். இரகசியத்தை வெளியிடாதவன். தன் சுற்றத்தார் கொண்டாடும்படி வாழ்ந்து வருவான். விளை நிலங்களைப் பெருக்குவான். அழகுடையவன். காரியங்கள் செய்வதில் சோம்பலில்லாதவன்.

5. கலைராசிக் கடைநாள் தோன்றும்
காதலி மார்கள் மோகன்
புலவன்போல் மொழிவா னாகும்
பூமியில் சல்லியம் காணான்

சலம்தோய்வன் சகடு முண்டு
சாருள்க ளுடைய னுகும்
பலர்களால் பெருமை யேற்பன்
பஞ்சைமே லிரக்க னுவன்.

5. மகர லக்னத்தில் ரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவன். பெண்களின் மீது மையல் கொள்ளும் இயல்பினன். புலவனைப் போல் பேசுபவன் உலகில் கடன் படாதவன். பல புண்ணிய நதிகளில் நீராடுவான். வண்டி முதலிய வாகன வசதிகள் உள்ளவன். ஏவலாட்களின் பெருக்க முடையவன். பலபேரில் உதவியால் பெருமை யடைவான். ஏழைகளின் மீது இரக்க முள்ளவன்.

6. கல்விமான் யூகை யாளன் கனராசர் பேட்டி கொள்வன்
இல்லையென் றுரைக்க மாட்டான் ஈகையும் கொஞ்ச [முண்டு
சொல்லிலே கபடு முண்டு சிலநாள்கள் கிராமச் செட்டு
வல்லிய ரநேக மாக மணமது கொள்வா னுமே.

6. கல்வியறிவு மிக்கவன், ஊகித்து உணரும் ஆற்றல் பெற்றவன். பெரிய அரசர்களைப் பேட்டி காண்பான். தன்னிடம் வந்து யாசிப்பவர்கட்கு இல்லையென்று கூற மாட்டான். ஈகைக் குணமும் சிறிது உண்டு. இவன் பேச்சில் வஞ்சனை கலந்திருக்கும். சில நாட்கள் கிராமத்தில் வியாபாரம் செய்வான். பல பெண்களை மனப்பான்.

இதுவுமது

7. தன்துணை யாண்பா லிரண்டு தையல ரவ்வார் தீர்க்கம்
பின்னமாம் மற்ற வெல்லாம் புதல்வனும் ஜனிக்கு [முன்னம்
அன்னவர் வேருய்ச் செல்வர் அவர்பலன் பின்பால் [சொல்வேன்.
உன்னத வானைப் பெற்ற உத்தமி கேட்டி டாயே.

7. இவனுக்குச் சகோதரர் இருவரும் சகோதரிகள் இருவரும் தோன்றித் தீர்க்க மாவர். மேலும் தோன்றுபவர் நஷ்டமாவர். ஜாதகன் பிறப்பதற்கு முன்பே அந்தச் சகோதரர்கள் வேருகச் சென்று வசிப்பர். அவர்கள் பலன்களைப் பின் பாகத்தில் சொல்லுகிறேன், உயர்ந்தவராகிய சிவபெருமானைக் கணவராகப் பெற்ற பார்வதிதேவியே! மேலுங் கேட்பாயாக.

இதுவுமது

8. கரமதில் கமல ரேகை கருதிடான் கட்டு வார்த்தை
நறைமல ரிஷ்டம் கொள்வன் நாயகன் சிவந்த மேனி
தரையினுல் ஜீவிப் பானும் சதுஷ்பாதம் விருத்தி யற்பம்
விரைவினில் நடக்க வல்லன் விசனமும் காணு னுகும்.

8. இவன் கையில் பத்ம ரேகை பொருந்தி யிருக்கும். கற்பனை செய்து பேச நினையான். மணமுள்ள பூக்களை யணிவதில் விருப்ப கொள்ளுவான். இவன் சிவந்த உடலுடையவன். நிலபுலங்களால் ஜீவனஞ் செய்பவன் ஆவான். கால் நடைகள் பெருக்கம் குறைவு. வேகமாக நடப்பதில் வல்லவன். துன்பத்தை யறிய மாட்டாதவன் ஆவான்.

## ஜாதகன் இயல்புகள்

9. சொன்னவிக் குணத்தா னுக்குத்
தோகையர் நால்வர் தம்மில்
இன்னவன் கடைமா துக்கு
எய்துவா னென்று சொல்வோம்
அன்னவன் குணத்தைச் சொல்வேன்
அழகுளான் சிவந்த மேனி
பன்னியே பேச வல்லன்
பலகலை யுணர்வா னாகும்.

9. சொல்லப்பட்ட இந்தக் குணங்களை யுடைய தந்தைக்கு மனைவியர் நால்வர். அவர்களில் கடைசி மனைவிக்கு இந்த ஜாதகன் புதல்வனாகத் தோன்றுவான் என்று சொல்லுவோம். அவனுடைய குணங்களைக் கூறுவோம். அழகுடையவன். சிவப்பு நிறம் பொருந்தி உடலுடையவன். சொன்னதையே திருப்பித் திருப்பி பேசுபவன். பல கலைகளைக் கற்றவன்.

10. அன்னிய பாஷை மேன்மை ஆவுகள் பணையேர் விருத்தி
மன்னரால் ஜீவிப் பானும் மாற்றானை லகுவில் வெல்வன்
பொன்பொரு ளதிகம் சேர்ப்பன் புரவியும் சகடு மேற்பன்
மன்மத னொப்ப தாகும் மங்கையர் மோக னவன்.

10, அயல் மொழியைக் கற்று மேன்மை பெறுவான். பசுக்கள் பண்ணை ஏர் முதலியன விருத்தி யுடையவன். அரசாங்க அலுவல் ஏற்று அதன் மூலம் ஜீவிப்பவன் ஆவான். எதிரியை எளிதில் வெற்றி கொள்ளுவான், பொன், செல்வம் இவை மிகுதியாகச் சேர்ப்பான். குதிரைகள், வண்டி முதலியவற்றை யடைவான். மன்மதன் போன்ற அழகுடையவன். பெண்ணிடம் மையல் கொள்ளுபவன்.

## இதுவுமது

11. நல்லவன் நல்ல வர்க்கு லண்டர்க்கு மிண்ட னவன்
சொல்லது சுருக்க மாகும் துறவிகட் கன்ன மீவன்
மல்லின்முன் செல்லா னாகும் மாநிலம் விருத்தி செய்வன்
அல்லலெப் போதும் காணன் ஆண்மையாய்க் குடும்ப
[மேற்பன்.

11. தன்னிடம் நல்ல முறையில் பழகுபவர்களிடம் இவனும் நல்லவனுக நடந்து கொள்ளுவான். வீண் சண்டைக்கு இழுப்பவர்களோடு அவர்களுக்கு மேல் முரடனுக இருந்து சண்டை யிடுவான். சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுவான். உலகப் பற்றைத் துறந்த சந்நியாசிகட்கு உணவளிப்பான். மல்யுத்தத்துக்கு முன்னுல் செல்லாதவன் ஆவான். பெரிய விளைநிலங்களைப் பெருக்குவான். எப்பொழுதும் துன்பமென்பதையே அறியாதவன் ஆவான். தீரமுடன் குடும்ப பாரத்தை மேற் கொள்ளுவான்.

## இதுவுமது

12. *சீலவான் சிறுத்தோர் நேயன் ஜனவுப காரி யாகும்*
*ஞாலமேல் நல்லோ னுவன் நராதிபர் மெச்சு வாழ்வன்*
*ஆலம்போல் பகைவ ருக்கு அவனுமே கருட னுவான்*
*பால்தயிர் பிரிய னுகும் பங்கய ரேகை யுண்டு.*

12. ஒழுக்க முள்ளவன். ஏழைகளிடம் பிரிய முள்ளவன். ஜனங்களுக்கு உபகாரம் செய்பவனுக இருப்பான். உலகில் நல்லவனுக இருப்பான். மன்னவர்கள் பாராட்டும்படி வாழ்வான். விஷம் போன்று கொடிய பகைவருக்கு இவன் கருடனுக இருப்பான். பால் தயிர் இவற்றில் விருப்ப முடையவன் ஆவான். இவன் கையில் பத்ம ரேகை உண்டு.

## ஜாதகனுடைய சகோதரபாவம்

13. *முன்துணை தோஷ மெய்தும் மொழிகுவீ ரந்தச் சங்கை*
*பன்னிய மூன்றில் பானு பார்மகன் நாலி லேற*
*பின்னமுன் துணைவ ரென்றேம் புதல்வன்பின்*
*[துணையும் தோன்றும்*
*மன்னிய துணையும் சேதம் மாரனும் தனியாய் வாழ்வன்.*

13. ஜாதகனுக்கு முன்பு தோன்றிய சகோதரன் தோஷ மடைவான். அந்தக் காரணத்தைச் சொல்லுவீராக என்று பார்வதிதேவியார் கேட்க, முனிவர் கூறுகிறுர். மூன்ருமிடத்தில் சூரியன் நிற்க, அவ்விடத்துக்குரிய செவ்வாய் நான்காமிடமாகிய தனுசிலும் தங்கி யிருப்பதால், ஜாதகனுக்கு முன்பிறந்த துணைவர் சேதமாவர் என்று சொன்னேம். இந்த ஜாதகனுக்குப் பின்பும் ஒரு சகோதரன் தோன்றுவான். அவனும் நிலேயான். ஜாதகன் தனியனுய் வாழ்வான்.

## ஜாதகனின் தாய் இயல்புகள்

14 *என்னகா ரணத்தி னுலே இவன்தனி யென்று சொன்னீர்*
*அன்னைசெய் வினையி னுலே அவன்தனி யாக வாழ்வன்*
*என்னஊழ் செய்தா னதனை யியம்புவீர் முனியே நீர்தாம்*
*அன்னையின் குணத்தைச் சொல்வேன் அழகுளாள்*
*[சிவந்த மேனி*

14. இங்ஙனம் முனிவர் கூறிக் கொண்டு வர, பார்வதிதேவியார் கேட்கின்றார் முனிவரே! எந்தக் காரணத்தினால், இந்த ஜாதகன் தனித்து வாழ்வான் என்று கூறினீர்கள்! முனிவர் சொல்லுகிறார். தன் தாய் முற்பிறப்பில் செய்த தீவினைகளினால் இவன் தனியாக வாழ்வான். என்ன தீவினை செய்தாள் என்று கூறுங்கள் எனப் பார்வதிதேவியார் கேட்கவும் விளக்குகிறார் முனிவர். தாயின் குணங்களைச் சொல்லுகிறோம். அழகுடையவள். சிவந்த நிறம் பொருந்திய உடலுடையவள்.

## இதுவுமது

15. அடிசிலுக் கினிய ளாகும்
அன்புள மனத்த ளாகும்
நடைநன்மை சீலி யாவள்
நாயகன் மனத்துக் கேற்றாள்
படிமிசை நல்லோ ளாவள்
பாவைக்குத் துணைஆ ணொன்று
துடியிடைப் பெண்பா லல்வார்
செப்புவோம் தீர்க்க மாக.

15. அறுசுவையுடன் கூடிய உணவு சமைப்பதில் சிறந்தவள். யாவரிடமும் அன்பு கொண்ட மனத்தினள் ஆவாள். நல்ல நடத்தை உடையவள், நல்லொழுக்க முள்ளவள். கணவன் மனத்துக்கு ஏற்றவளாக இருப்பாள். உலகில் நல்லவளாக வாழ்வாள். இவளுக்கு சகோதரன் ஒருவனும், சகோதரி யொருத்தியும் தோன்றித் தீர்க்கமான ஆயுளுடன் விளங்குவர் என்று சொல்லுவோம்.

## தாயின் முற்பிறவி

16. இல்லமும் தென்பா லாகும் இவள்பூர்வம் புகலக் [கேண்மோ
எல்லையில் உயர்வ தான எழில்கொங்கு நாட்டி லேதான்
நல்லதோர் கர்ணசேயாய் நாயகி யுதித்து மேலும்
வல்லிக்கு மதலை யுண்டாய் வாழ்நாளில் வினையைச் [சொல்வேன்.

16. இவள் பிறந்த வீடு ஜாதகன் தந்தை வீட்டுக்குத் தென் திசையில் இருப்பதாகும். இனி, தாயின் முற்பிறவி பற்றிக் கூறக் கேளுங்கள். உலகில் உயர்ந்ததான கொங்கு நாட்டிலுள்ள தொரு ஊரில் நன்மை மிக்கொதொரு கருணீகர் குலத்துப் பெண்ணாய் பிறந்து கணவன், குழந்தைகளை யடைந்து வாழ்ந்து வரும் நாளில் நேர்ந்த தீவினைப் பற்றிச் சொல்லுவோம்.

## இதுவுமது

17. தன்னுடைக் கொல்லை தன்னில்
தங்கிற்றுக் கருப்பன் சாமி
முன்னோர்கள் தோத்தி ரிப்பார்
முதல்குல தெய்வ மென்று
கன்னிகை தொழாமல் நின்றாள்
கன்மன மாக வேதான்
துன்முனி புகலும் சாபம்
தொழமலே நின்ற பாவி.

17. தனது வீட்டுக் கொல்லையில் கருப்பண்ண சுவாமி யென்ற தேவதை வாசம் செய்து வந்தது, அந்தச் சாமியை இவள் மூன்னோர்கள் தங்கள் முதல் தெய்வ மென்று கருதிப் பயபக்தியுடன் தோத்திரம் செய்து வணங்குவார்கள், இந்த ஜாதகன் தாய் அந்தத் தொழாமல் கல் போன்று உறுதியான மனமுடையளாய் இருந்தனள். இதனைக் கண்டு, அந்தக் கொடிய கருப்பு முனி சாபமிடும். என்னை வணங்காம இருந்த பாவியே !

## முனி சாபம்

18. சுதர்களை யாவும் கொல்வேன்
தோன்றும்பின் ஜன்மந் தன்னில்
மதலைகள் உயிர்வ தைப்பேன்
மருவுவே னுன்பால் யானும்
நிதம்பல வீனம் செய்வே
னென்றுமே வேறு சாகை
பதியாக வாழ்ந்த தென்றோம்
பற்றிற்று அந்தச் சாபம்.

18. உன் புதல்வர் அனைவரையும் கொல்லுவேன். உனக்கு ஏற் படும் மறுபிறவியிலும் யான் உன்னை யடைந்து தோன்றும் குழந்தைகளின் உயிர்களைப் போக்குவேன். தினமும் உனக்குப் பல துன்பங்களைச் செய் வேன் என்றும் சரீரத்துக்கும் பலவீனத்தைக் கொடுப்பேன் என்றும் கூறி விட்டு வேறு இடம் நாடிச் சென்று நிலையாக வாழ்ந்தது என்று சொன்னோம்; அந்த முனியின் சாபம் ஜாதகன் தாயைப் பற்றியது.

## ஜாதகரின் தாயாருடைய முற்பிறவித் தோஷம்

19. இதுவன்றி வேறு சொல்வேன் இகபர னடியார் மாது
விதவித வார்த்தை சொல்லி வெங்கத்தைக் கெடுத்தா
[ளென்றோம்

வதிபதி வருத்த முற்று வறைந்தசா பத்தைக் கேண்மோ
சதியான வார்த்தை சொன்ன சண்டாளப் பாவி யேநீ.

19. இதுவல்லாது இன்னுமொன்று சொல்லுவோம் கடவுளிடம் பக்தி கொண்ட அடியவர் ஒருவரின் பெண்ணிடம் விதவிதமான தந்திர வார்த்தைகள் பேசி......அவருக்குத் துன்பமுண்டாக்கினுள். அவர் வருத்தமடைந்து கூறிய சாபத்தைக் கேளுங்கள், என்னைப் பற்றி குற்றமான வார்த்தைகளை சொன்ன கொடிய பாவியே! நீ;

## இதுவுமது

20. பின்வரும் ஜன்மந் தன்னில் புத்திர தோஷ மாயும்
உன்னுடல் பிணியு மாயும் உலகினில் வாழ்வா யென்று
அன்னவள் சொல்லும் போது அந்தரம் தாதாஸ்து
[வென்ன
கன்னிக்கு அந்தத் தோஷம் கலந்தது வென்று
[சொல்வோம்.

20. உனக்கு ஏற்படும் மறுபிறவியில் புத்திரதோஷம் உண்டாகி உன்னுடலில் நோய் பரவி இவ்வுலகில் வாழ்வாய் என்று அவள் சாபமிடும் போது, அப்படியே அந்தத் தோஷம் இந்த ஜாதகன் தாயைப் பற்றியது என்று கூறுவோம்.

## தீவினைப் பயன்

21. அந்திய வயதி லேதான் அவள்சுதர் யாவும் போக்கி
தன்மன சஞ்ச லத்தால் தந்தியின் ஆல யத்தில்
உன்னதத் தீபம் வைத்து உயர்சேது பதிக்குப் புக்கு
துன்னிய கால நாடு சென்றுமே பிரமன் லக்கம்;

21. இவள், தன் இறுதிக் காலத்தில், குழந்தைகள் யாவற்றையும் இழந்து தன் மனத்தில் சஞ்சலங்கள் அடைந்து, யானைமுகக் கடவுள் கோயிலில் உயர்ந்த விளக்குகள் ஏற்றி வைத்து வழிபட்டு, சிறப்புடைய சேதுவுக்குச் சென்று நீராடி மரணமுற்று, மீண்டும் பிரமனுல் படைக்கப்பட்டு;

## இதுவுமது

22. சீலமா மருகர் வர்க்கம் ஜனித்தன ளென்று சொல்வோம்
ஆலம்போல் முனியின் சாப மணுகிடு மிச்சென் மத்தில்
நீலிக்குப் பிணியு மெய்தும் நேர்ந்ததோர் சுதர்கள் பீடை
வேலனை யீன்ற மாதே விளம்பின மொழிகுன் ருது.

22. நல்லொழுக்கமுள்ள ஜைனர் குலத்தவளாக இப்பிறப்பில் பிறந்தவள் என்று சொல்லுவோம். விஷம் போன்று கொடிய முனியின் சாபம்

இப்பிறப்பில் இவளைச் சாரும். இவளுக்கு (ஜாதகன் தாய்க்கு) நோய்கள் உண்டாகும். தோன்றிய குழந்தைகட்குத் தோஷம் ஏற்படும். சுப்பிரமணி யரைப் புதல்வராக அடைந்த பார்வதியம்மையே! நாங்கள் கூறிய மொழி கள் தவறு.

## ஜாதகன் ஆயுர்பாவம் : கிரகநிலை

23. ஜயமுனி யிதனைக் கேட்டுத்
திடுக்கென வுரைக்க லுற்றார்
வியமாகுஞ் சுதர்க ளென்றீர்
வித்தக னெவ்வார் தீர்க்கம்
நயமுடன் கன்னி ஜன்மம்
நாலின்மேல் புகர்பொன் நிற்க
பயமிலாத் தீர்க்க மென்றோம்
பருகாவே மற்ற வெல்லாம்.

23. ஜய முனிவர் என்பார் இதனைக் கேட்டுப் பின்வருமாறு கூறத் தொடங்கினார். இவளுக்குப் பிறக்கும் குழந்தைகள் சேதமாம் என்று கூறி னீர்கள். இந்த ஜாதகன் மாத்திரம் எங்ஙனம் தீர்க்காயுளுடன் விளங்கு வான்? முனிவர் கூறுகிறார். கன்னி இலக்கினமாக, நான்காம் இடத்தில் சுக்கிரன் குரு தங்கி யிருப்பதால் ஜாதகன் தீர்க்கமாக இருப்பான் என்று சொன்னோம். மற்றக் குழந்தைகள் நிலைக்காவாம்.

## முற்பிறவித் தீவினை விலகச் சாந்தி

24. முனிசாபம் விலக வேண்டி மொழிகுவீர் கிரியை [யொன்று
கனமுள கரும சாந்தி காதலி தனக்குச் செய்து
சினமிலாத் தங்க ரேக்கில் திரிகோண மாகக் கீறி
அனையவே சத்தி பீஜம் அறைந்துமே மூலம் தன்னை.

24. கருப்பு முனியின் சாபம் நீங்குவதற்குச் சாந்தி :பரிகாரம் ஒன்று சொல்லுவீராக என்று ஜயமுனிவர் கேட்க, பராசரர் கூறுவார். மேன்மை யுடன் கர்ம சாந்திகள் இவளுக்குச் செய்து, தங்கத்தகடொன்றில் திரி கோணமாகக் கோடுகள் கீறி, சக்தியின் மூலமந்திரத்தை வரைந்து, அம்மந் திரத்தை,

## இதுவுமது

25. சகத்திரம் ஜபித் துமேதான் சத்தியும் ரேக்க ணிந்து
பகையிலாச் சதுர்த்தசி விரதம் பாவையும் கொள்வா [ளாகில்
தகமையாய் முனியின் தோஷம் சாராது வென்று [சொல்வோம்
மிகுதவம் புரியு மெங்கள் வித்தகி கேட்டி டாயே.

25. ஆயிரம் முறைகள் ஜபித்து, பின்பு தகட்டினை யெடுத்து இந்த ஜாதகன் தாய் அணிந்து கொண்டு, சதுர்த்தசி விரதம் அநுஷ்டிப்பாளாகில் கருப்பு முனியின் சாபத்தால் ஏற்பட்ட தோஷம் இவனை யடையாது என்று கூறுவோம் மிக்க தவங்களை இயற்றும் எங்கள் தாயே! மேலும் கூறுவோம் கேட்பாயாக.

## சாந்தி பலன்

26. சொற்படி செய்வா ளாகில் சுதன்பின்னால் கன்னி [யொன்று
தப்பித மின்றித் தீர்க்கம் சத்தியும் சுகமே யாவள்
ஒப்புடன் கர்மசாந்தி யுரைப்பீர்கள் விபர மாக
மைப்புட னைந்தாம் காண்டம் விளம்புவோம் முனியே [கேளு.

26. நாம் கூறியபடி செய்வாளானால், இந்த ஜாதகனுக்குப் பின்பு பெண்ணொருத்தி தோன்றித் தீர்க்கமாக வாழ்வாள். ஜாதகன் தாயும் பிணி நீங்கிச் சௌக்கிய மடைவாள். இங்ஙனம் முனிவர் கூற, கர்ம சாந்தி செய்யும் விவரத்தைக் கூறியருள்வீர் என்று ஜயமுனிவர் கேட்கவும், பராசர முனிவர் சொல்லுவார். ஐந்தாம் காண்டத்தில் அதனைப் பற்றிக் கூறுவோம்; முனிவரே! கேளுங்கள்.

## தந்தையின் முற்பிறவிச் செய்தி

27. தந்யையின் பூர்வம் தன்னைச்
சாற்றுவோம் பழனி நாட்டில்
பிந்தின குலமு தித்துப்
பேதையு மதலை யுண்டாய்ச்
சந்ததம் செட்டுச் செய்து
தான்வாழ்நாள் வினையைக் கேண்மோ
அந்தஊர் சைவன் நேசன்
அவன்மனைவி யின்மேல் மோகம்.

27. இனி தந்தையின் முற்பிறவிபற்றிச் சொல்லுவோம். பழனியில் தாழ்வான குலமொன்றில் தோன்றி, மனைவி மக்களை யடைந்து, வியாபாரம் செய்து கொண்டு வாழ்ந்து வரும் காலத்தில் இவன் செய்த தீவினையைக் கேளுங்கள். அந்த ஊரில் இருந்த இவன் நண்பனான ஆதிசைவன் மனைவி மீது மையல் கொண்டு,

## இதுவுமது

28. கொண்டுமே தனமும் தந்து கோதையைப் புணரும் [போது
கண்டனன் வரனு மேதான் காதலி தன்னை விலக்க

வண்டணி குழலி தானும் மாரன்பா லணுகி யேதான்
எண்டிசை யாரும் காண என்னையே வோட்டி
[விட்டான்.

28. கொண்டு, அவளுக்குப் பொருள் கொடுத்து, அவளுடன் சேரும் பொழுது அவள் கணவன் பார்த்து, அவனை விலக்கி விட்டான். கணவனால் விலக்கப்பட்ட அந்தப் பெண், இவனை (ஜாதகன் தந்தை) யடைந்து, எல்லோரும் காணும்படி என்னை என் கணவன் விலக்கி விட்டான்,

## இதுவுமது

29. உன்னுடை மதியால் கெட்டேன்
உலகினில் வசையு மானேன்
என்னயான் செய்யப் போறேன்
என்னை நீ காப்பா யென்ன
என்பாரி பொல்லாள் மாதே
என்னிடம் வேண்டாம் செல்வாய்
கன்னிகை திகில டைந்து
கழறுவாள் சாபம் தானும்.

29. "நீ கூறிய தகாத புத்திமதிகளைக் கேட்டு கெட்டுப் போனேன். உலகில் பழியேற்பவளாயினேன். இனி மேல் நான் என்ன செய்யப் போகிறேன். என்னை நீ காப்பாற்றுவாய்" என்று முறையிட்டாள். அதனைக் கேட்ட இவன், "என் மனைவி பொல்லாதவள், பெண்ணே, நீ என்னிடம் வர வேண்டாம், வேறிடஞ் செல்லுவாய்" என்று கூறி விட்டான். ஆதி சைவன் மனைவி, பயமுற்று, சாபம் ஒன்று இடுவாள்.

## பெண்ணின் சாபம்

30. மற்றொரு ஜன்மம் தன்னில் வரும்மனை யாளும் மாண்டு
பெற்றதாய் தந்தை நீங்கிப் பிரிதலாய் வாழ்வாய் நீயும்
குற்றமாய்ச் சொல்லிச் சென்றாள் குலவிற்று வந்தச்
[சாபம்
வித்தக னந்தி யத்தில் மெல்லியர் மரண மாகி;

30. மறுபிறவியில் உடன் பிறந்தவர் மாள, தாய் தந்தையரைப் பிரிந்து தனியனாய் வாழ்வாய் என்று தீங்காகச் சொல்லிச் சென்றாள். அந்தச் சாபம் இந்த ஜாதகன் தந்தையைச் சார்ந்தது. இவனது முற்பிறவியின் இறுதிக் காலத்தில் மனைவி மரண மடைய,

## தந்தையின் மறுபிறவி

31. மனமது சஞ்ச லத்தால் மறலியின் பதிக்குச் சென்று
சினகுல மதனி லுதித்தான் சைவராம் மாது சாபம்
வனிதையு நான்கு மாகு மறைகிறோ மிவன்பின் ஜன்மம்
கனமுள காஞ்சி தன்னில் கலப்பனும் சௌராஷ்டர்
[வம்சம்.

31. மனத்தில் சஞ்சலமுடன் வசித்து மரண மடைந்தான். இப்பிறவியில் சமண மரபில் தோன்றினான். ஆதி சைவன் மனைவி சாபம் இவனைத் தொடரும். இவனுக்கு மனைவியர் நால்வராவர். இவனுடைய மறுபிறவி பற்றிக் கூறுகிறோம். சிறப்புடைய காஞ்சீபுரத்தில் சௌராஷ்டிர குலத்தில் பிறப்பான்.

## பிருகு முனிவர் கேள்வி

32. பிருகுமே புகலு கின்றார் புனிதனிச் சென்மம் தன்னில்
அருகர்தம் பத்தி யாயும் அறமதி லிச்சை யாயும்
வருவோரை யாத ரித்தும் வாழ்வதால் மறுபி றப்பு
குறைவுள குலத்தி லேதான் குலவும்கா ரணங்க
[ளெவ்வார்?

32. பிருகுமுனிவர் கூறுகின்றார். இந்த ஜாதகன் தந்தை இப்பிறவியில் முருகக் கடவுளிடத்தில் பக்தி யுடனும், தருமம் செய்வதில் விருப்பமுடனும் வீட்டுக்கு வருபவர்களை அன்புடன் ஆதரித்தும் வாழ்ந்து, வருவதால், மறுபிறப்பில் சௌராஷ்டிரர் குலத்தில் தோன்றக் காரணங்கள் யாவை? பராசர முனிவர் விடை கூறுகிறார்.

## மறுகுலம் தாழ்வாகக் காரணம்

33. இந்ததோர் ஜன்மம் தன்னில் ஈகையும் கொஞ்ச மாயும்
நிந்தையாய் விதவை போகம் நேர்ந்துமே அதுவு
[மின்றிப்
பிந்தினோர்க் கிடைஞ்சல் செய்தான் போகங்கள் விரத
[காலம்
அந்தவன் செய்த தோஷம் அருளுவா னென்று
[சொல்வோம்.

33. இப்பிறப்பில் சிறிதளவே தருமம் செய்தும், பழியுண்டாக்கும் கைம் பெண்ணுடன் கூடியும் வந்தான் இவை யல்லாது ஏழைகள் சிலருக்குத் துன்பங்கள் செய்தான். விரத காலங்களில் இன்ப மனுபவித்தான். இந்தத் தோஷங்களால் மறுபிறப்பில் சௌராஷ்டிரர் மரபில் தோன்றுவான் என்று கூறுவோம்.

## ஜாதகனின் திருமணக் காலம்
## மனைவியின் இயல்புகள்

34. ஜாதகன் மணத்தின் காலம் சாற்றுவோ மீரெட்
[டாண்டில்
காதலி தந்தை வர்க்கம் கலப்பளாம் கீழ்பால் தன்னில்
ஒதுவே னவள்கு ணத்தை உண்மையா மனத்த ளாகும்
பாதக மனமில் லாதாள் பரவுப காரி யாகும்.

34. ஜாதகன் திருமணக் காலத்தைக் கூறுவோம். பதினாறும் வயதில் தந்தை வழியில் கிழக்குக் திசையிலிருந்து இவனுக்கு மனைவி வாய்ப்பாள். அவள் குணங்களைச் சொல்லுவேன். உண்மையே பேச எண்ணும் மனமுடையவள். தீய எண்ணம் கொள்ளாத மனத்தினள். பிறருக்கு உபகாரம் செய்யும் இயல்பினள்.

## இதுவுமது

35. சொல்லது சுகமே யாகும் துறவோர்க்கு அன்ன மீவள்
நல்லவ ளாகி வாழ்வள் நாதனுர் பக்தி பூண்பள்
தல்லிபோல குணத்த ளாகும் சாதமு மன்பா யீவள்
வல்லியு மிருசி வப்பள் மாரன்தன் மனைபோ லொப்பாம்.

35. சுருக்கமாகவும் விளக்கமாகவும் பேசுவாள். உலகப் பற்றைத் துறந்த சந்நியாசி கட்கு உணவு அளிப்பாள். நல்ல குணமுடையவளாக வாழ்க்கை நடத்துவாள். கடவுளிடம் பக்தி கொள்ளுவாள். தன் தாய் போன்ற குண முடையவள். வீடு தேடி வந்தவர்க்கு அன்புடன் உணவளிப்பாள். கருமை கலந்த சிவப்பு நிற முடையவள். மன்மதன் மனைவியாகிய இரதி தேவியைத் யொத்த அழகுடையவள்.

## ஜாதகனுடைய புத்திரபாவம்

36. மங்கைக்கு வயது தீர்க்கம்
மைந்தர்க ளாண்பா லிரண்டு
நங்கைமார் நால்வ ராகும்
நசித்திடு மிரண்டு வென்றேம்
இங்கிவன் பூர்வம் சொல்வேன்
இருஷிவா ழுருணை நாட்டில்
துங்கமாம் மறைக்கு லத்தில்
ஜனித்தன னென்று சொல்வோம்.

36. இவள் தீர்க்கமான வயதுடையவளாக இருப்பாள். புதல்வர் இருவரும் பெண்கள் நால்வரும் தோன்றுவர். இரண்டு குழந்தைகள் நாசமுறும் என்று சொன்னோம். ஜாதகன் முற்பிறவி பற்றிச் சொல்லுவோம். முனிவர் பலர் வசிக்கின்ற திருவண்ணாமலையில், தூய்மையுள்ள அந்தணர் மரபில் தோன்றினான் என்று கூறுவோம்.

## ஜாதகனின் முற்பிறவி விவரம்

37. பெருமையாய்க் குடும்பி யாகிப் பேதையு மதலை
[யுண்டாய்ப்
பொருளது பெருக்க முண்டாய்ப் பெரியோர்க்கு வன்ன
[மீந்து
திருமகன் பவமில் லாமல் சென்றனன் கால நாடு
பிரமனால் வரையப் பட்டுப் பிறப்பனா மென்று
[சொல்வோம்.

37. மேன்மையுடன் கூடிய குடும்ப முடையவனும், மனைவி மக்களை யடைந்து, பொருளை மிகுதியாகப் பெற்றவனும் பெரியோர் பலருக்கு உண வளித்து, தீவினைகளெவையுமில்லாமல் வாழ்ந்து மரண மடைந்தான். மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு, இப்பிறவியில் இக்குலத்தினனாகப் பிறப்பான் என்று கூறுவோம்.

## ஜாதகன் யோகங்கள்

38. வந்தவன் யோகச் சேதி யறைகிறோ மினிமே லாக
இந்திர போக மேற்ப னிராசரால் தொழிலு மேற்பன்
எந்திடம் பெருமை யேற்ப னேவலா ளதிகம் சேர்ப்பன்
சுந்திர கட்டில் மெத்தை சயனங்க ளுடைய னாமே.

38. ஜாதகன் யோகங்கள் பற்றி இனிமேல் சொல்லுகிறோம். இந்திரன் போன்று போகத்தை யடைவான். அரசரால் மதிக்கப்பட்டு பெரிய அதிகாரமுள்ள பதவியை ஏற்பான். செல்லும் எல்லாவிடங்களிலும் மேன்மை பெறுவான். ஏவிய பணிகளைச் செய்யும் ஆட்களை மிகுதியாகச் சேர்ப்பான். அழகிய கட்டில், பஞ்சணை சயனம் முதலான சுகபோகங் களுடையவனாவான்.

## இராச யோகம் வரும் காலம்

39. பரிவண்டி யுடைய னாகும் பகவானின் பக்தி பூண்பன்
தரையது மேன்மேல் சேர்ப்பன் ஜயமுனி தடுத்துச்
[சொல்வார்

அரசுமே யெந்தக் கால மனுகிடும் விபரம் சொல்வீர்
திருகிலா மூவெட் டாண்டில் செப்பினே மிராச யோகம்.

39. குதிரை வண்டி யுடையவன் ஆவான். கடவுள் பக்தி கொள்ளு வான். நிலபுலங்கள் மேன் மேலுஞ் சேர்ப்பான். இவ்வாறு பராசரர் கூறிக் கொண்டு வர, ஐய முனிவர் இடை மறித்து ஒன்று கேட்கின்றார். இவன் எந்தக் காலத்தில் அரச யோகம் அநுபவிக்கும்படி நேரும், அந்த விவரங்களை கூறுங்கள். பராசரர் கூறுவார்' ஜாதகன் இருபத்து நான்காம் வயதில் இராஜ யோகம் எய்துவான் என்று சொன்னோம்.

## இராச யோகப் பலன்

40. அதுமுத லன்பான் மூன்று ஆண்டுக்கு மரசு வோங்கும்
மதிபிறை போலே செல்வம் வந்திடும் பால னுக்கு
பதியது விரண்டே செய்வன் பாருக ளதிகம் சேர்ப்பன்
நதிசடை யணிந்தோண் தேவி நவின்றது தப்பா தாமே.

40. அது முதற் கொண்டு ஐம்பத்து மூன்று ஆண்டு முடிய அரச யோகம் நிலைத்திருக்கும். அக்காலத்தில் வளர்பிறைச் சந்திரன் போல மேன் மேலும் ஜாதகனுக்குச் செல்வம் பெருகும். இரண்டு வீடு கட்டுவான். நிலபுலங்கள் மிகுதியாகச் சேர்ப்பான். கங்கை நதியைச் சடை முடியில் தரித்துள்ள சிவபெருமான் தேவியே! நாங்கள் கூறியன தவறு.

## தந்தை தாயார், ஜாதகன் மரண காலங்கள்

41 இருபது வெட்டு வாண்டில்
இயம்புவோம் தந்தை கண்டம்
திருகிலா நாற்பான் மூன்றில்
செப்புவோ மன்னை கண்டம்
அறுபது வொன்ப தாண்டில்
அத்தேளின் மாதம் தன்னில்
திருமக னுடல மேகும்
செப்புவோ மிவன்பின் ஜன்மம்.

41. இவனது இருபத்தெட்டாம் வயதில் தந்தைக்கு மரணம் உண்டா கும் என்று சொல்லுவோம். ஜாதகனின் நாற்பத்து மூன்றும் வயதில் தாய்க்கு மரணம் ஏற்படும் என்று கூறுவோம். அறுபத்தொன்பதாம் வயதில் கார்த்திகை மாதம் ஜாதகனுக்கு மரண முண்டாகும். இனி, இவன் மறுபிறவி பற்றிச் சொல்லுவோம்.

## ஜாதகன் மறுபிறவியும் ஜனனகால தசை இருப்பும்

42. உத்திரம் வேங்க டத்தி லுதிப்பனும் சத்திரியக் சேயாய்
வித்தகன் ஜனன காலம் மெஞ்ஞானி தசையி ருப்பு
சித்தமாய் ஆண்டி ரண்டு செப்புவோம் பூர்வ பாகம்
அத்தியை வளர்த்த மாதே அறைந்தன மொழிகுன்
[ருது.

42. வடக்குத் திசையிலுள்ள திருவேங்கட மலையில் அரசர் குலத்தவனுகப் பிறப்பான். ஜாதகன் ஜனன காலத்தில் கேது மஹா தசையில் இருப்பு இரண்டு வருஷங்கள் என்று நிச்சயமாய்ச் சொல்லுவோம். இவ்விதம் முதல் பாகம் சொல்லுவோம். யானைமுகக் கடவுளைப் புதல்வராகப் பெற்று வளர்த்த பார்வதியம்மையே! நாங்கள் கூறிய சொற்கள் தவறுதனவாம்.

# ஜாதகம் 92

## ஜனனகால கிரகநிலை

1. கலை[1]சனி [2]கலையி லாகக் கனகனும்[3] புகருஞ்[4] சீயம்[5]
புலவனும்[6] பானு[7] கன்னி பூமகன்[8] மேரு[9] வாக
மலைப்பாம்பு[10] மேட மாக மாதுவும்[11] ஜன்மமாக[12]
பலனதைச் சொல்லு மென்ன பார்வதி கேட்க லுற்றாள்.

1. சந்திரன் சனி மகரத்திலும், குரு சுக்கிரன் சிம்மத்திலும், புதன் சூரியன் கன்னியிலும், அங்காரகன் தனுசிலும், இராகு மேஷத்திலும், கேது துலாத்திலும் ஆக இவ்விதம் நவக்கிரகங்கள் நிற்க, கன்னியா லக்கினத்தில் தோன்றிய ஜாதகருக்குப் பலன்களைக் கூறும் என்று பார்வதிதேவியார் கேட்கத் தொடங்கினார்.

கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | |
| | இராசி சக்கரம் | | |
| சந்திரன் சனி | | | குரு சுக்கிரன் |
| அங்காரகன் | | கேது | லக்கினம் புதன் சூரியன் |

## ஜாதகன் பிறந்த வீட்டு அடையாளங்கள்

2. அத்திரி சொல்லு கின்றார் ஆணது ஜனன மாகும்
வித்தக னில்லம் சொல்வேன் வடவாசல் கீழ்மேல் வீதி
சத்திமா காளி வாயு சங்கரன் மாலும் மேற்கில்
குத்தமாய்க் கெடியு முத்திரம் கூர்பள்ளி வாச லுண்டு.

1. சந்திரன்
2. மகரம்
3. குரு
4. சுக்கிரன்
5. சிம்மம்
6. புதன்
7. சூரியன்
8. அங்காரகன்
9. தனுசு
10. இராகு
11. கன்னி
12. இலக்கினம்

2. அத்திரி முனிவர் கூறுகிறார். இப்பிறப்பு ஆண் மகன். இவன் பிறக்கும் வீடு பற்றிச் சொல்லுவேன். கிழக்கு மேற்கான தெருவில் வடக்கு நோக்கிய வாசல் உடையது. துர்க்கை யம்மன், காளிதேவி ஆகியோர் கோயில் தென் மேற்குத் திசையில் உள்ளன. சிவபெருமான் திருமால் ஆலயங்கள் மேற்குத் திசையில் இருக்கும். அகழியொன்று வீட்டுக்கு வடக்கு திசையிலுண்டு. பள்ளி வாசலும் அத்திசையில் உள்ளது.

## இதுவுமது

3. பலசாதி யவ்வூர் வாசம்
பெருத்ததோர் வணிப மோங்கும்
சொலுமிந்த வடையா ளத்துள்
தோன்றுவான் கங்கை சேயாய்
தலைவன்தன் குடும்பச் சேதி
சாற்றுவோ மிந்நூல் தன்னில்
மலையறை மகளே யாங்கள்
வழுத்துவோம் கேட்டி டாயே.

3. பல சாதிகளைச் சேர்ந்தவர் அந்த ஊரில் வசிப்பர். பெரிய வியாபாரம் ஓங்கி யிருக்கும். சொல்லப்பட்ட இந்த அடையாளங்களுள்ள இடத்தில் இந்த ஜாதகன் வேளாளர் மரபில் தோன்றுவான். இவன் குடும்ப விவரங்களை இந்தச் சோதிட நூலில் சொல்லுவோம். பர்வதராஜன் புதல்வியே! நாங்கள் கூறுவனவற்றைக் கேட்பாயாக.

## தந்தையின் சகோதரபாவம்

4. தந்தையின் துணையா ளொன்று சக்தியு மவ்வார் தீர்க்கம்
நொந்திடு மற்ற தெல்லாம் நுவலுவோம் பிதாகு
[ணத்தைச்
சந்ததம் செட்டுச் செய்வன் சன்மார்க்கன் கல்வி மானும்
சிந்தையும் கபடு முண்டு ஜகராசர் பேட்டி கொள்வன்.

4. ஜாதகன் தந்தைக்குச் சகோதரன் ஒருவனும் சகோதரி யொருத்தியும் தீர்க்கமாக விளங்குவர். மேலும் தோன்றுமவை யெல்லாம் நாச மடையும். இனி, தந்தையின் குணங்களைச் சொல்லுவோம். எப்பொழுதும் தொழில் யாதேனும் செய்து கொண்டிருப்பான். நல்லொழுக்க முடையவன். கல்வியறிவுள்ளவன். மனத்தில் வஞ்சனையும் உண்டு. உலகத்திலுள்ள அரசர்களைப் பேட்டி காணுவான்.

## தந்தையின் இயல்புகள்

5. சிலநாட்கள் அரசர் தம்மால் செய்குவான் செட்டுத்
[தானும்
தலமது புதிதாய்ச் செய்வன் தரணிகள் சேர்ப்பா ளுகும்
புலவன்போல் வார்த்தை சொல்வன் புகழ்தோருக்
[குதவி செய்வான்
பலமுள குடும்ப மேற்பன் பேதைய ருறவு கொள்வன்.

5. சில காலம் அரசரை யணுகித் தொழில் செய்வான். புதிய வீடு கட்டுவான். நிலபுலங்கள் சேர்ப்பான். வித்துவான்போல் பேச்சுகள் பேசுவான். தன்னைப் புகழ்ந்து பேசுபவர்களை ஆதரிப்பான். பலமுள்ள குடும்பத்தை மேற் கொள்ளுவான். பெண்களிடம் தொடர்பு கொள்ளுவான்.

## இதுவுமது

6. உண்டியு மிலகுவா யுண்பன் உறப்பொடு புளிப்பி லிச்சை
துண்டமாய்க் கூரு ளுகும் துணைவனின் பிரிதல்
[செய்வன்
வண்டணி குழலி மார்கள் மருவிடு மிரண்டே யாக
பண்டுநாள் வறுமை யுண்டு பாக்கியம் சேர்ப்பா ளுமே
எண்டிசை நல்லோ ளுவன் இடர் செய்யான் யாவ
[ருக்கும்.

6. எளிய உணவையே உட்கொள்ளுவான். காரம் புளிப்பு இவற்றில் விருப்ப முடையவன், கண்டிப்புடன் பேச மாட்டான். சகோதரனிடமிருந்து பிரிவான், இவனுக்கு வண்டுகள் மொய்க்கும் மணமுள்ள பூக்களணிந்த மனைவியர் இருவர் ஆவர். ஆதி நாளில் தரித்திரம் உடையவன், பொருளைச் சேர்ப்பான், எட்டுத் திசையிலுள்ளவரும் நல்லவன் என்று சொல்லும்படி வாழ்வான். ஒருவருக்கும் துன்பம் செய்ய மாட்டான்.

## தந்தையின் முற்பிறவி

7. முன்னவ னிருந்த ஜன்மம் மொழிகிரோம் புலியூர்
[தன்னில்
நன்னயச் சைவச் சேயாய் நல்கியே பெருமை பூண்டு
அன்னவள் வாழு நாளில் அணுகின வினையைக்
[கேண்மோ
தன்னினம் தாழ்வ தாகத் தையலும் விதவை யாகி;

7. இவனது முற்பிறப்புப் பற்றிச் சொல்லுகிரோம். புலியூரில் வீரச் சைவ மரபினனுய்ப் பிறந்து, மேன்மை பெற்று வாழுகின்ற நாட்களில்

நேர்ந்த தீவினையைக் கேளுங்கள் தாழ்வான மரபில் தோன்றிய விதவைப் பெண்ணொருத்தி,

## தந்தை முற்பிறவிச் செய்தி

8. தன்னுடை யில்லம் சென்று சாற்றிய வேலை செய்து
அன்னவன் வாழு நாளில் அயலானு மவள்மேல் [குற்றம்
சொன்னதால் விலக்க லுற்றான் தோகையு மனம்ப [தைத்து
என்சொலை விசாரியாமல் யேகவே செய்த பாவி.

8. இவன் வீட்டுக்குச் சென்று இவனிட்ட வேலை செய்துகொண்டு வாழ்ந்து வரும் நாளில், அயலானொருவன் அந்த கைம் பெண் மீது குற்றமாகப் படும்படி சில வார்த்தைகளை பணிபுரியும் வீட்டுச் சொந்தக்காரனாகிய ஜாதகன் தந்தையிடம் சொன்னான். அவற்றைக் கேட்டு இவன் கைம் பெண்ணை வேலை செய்வதிலிருந்து விலக்கி விட்டான். வேலை யிழந்த கைம் பெண் மனம் வேதனைப்பட்டு, "என்னைக் கூப்பிட்டு விசாரித்து, நான் கூறுவதைக் கேளாமல் விலகும்படி செய்த பாவியே!

## கைம் பெண் சாபம்

9. மறுஜன்மம் மனைவி யிரண்டாய் மறுமாதா யானும் [சேர்ந்து
திருகாகக் குடும்பம் செய்து திரு......நாட்டைச் [செல்வேன்
வர்மமாய்ச் சொல்லிச் சென்றாள் வானவர் ததாஸ்து [வென்றார்
உறைந்தது வந்தச் சாபம் உத்தம னந்தி யத்தில்;

9. மறுபிறப்பில் இரு மனைவியரை யடைவாய். இரண்டாம் மனையாக யானே வந்து, குடும்பத்தில் குழப்பம் உண்டாகும்படி செய்து நாட்டிற்கு செல்லுவேன் என்று கோபத்துடன் கூறி விட்டுச் சென்றாள். "அங்ஙனமே யாகுக" என்று வானில் தேவர்களும் அப்பொழுது கூறினர். அந்தச் சாபம் இவனைப் பற்றியது அதனால், இவன் தன் இறுதிக் காலத்தில்,

## முற்பிறவிச் சாப பலன்

10. நேத்திரம் ஊன மாயும் நீங்கினன் கால நாடு
சூத்திரம் வரையப் பட்டு ஜனித்தன னிவனே [யென்றோம்

காத்திர குடும்ப மேற்பன் காதலி மார்க ளிரண்டு
கூற்றனை யுதைத்தோன் தேவி கூறிய குணத்தா னுக்கு.

10. கண் பார்வை யிழந்து வருந்தி மரண மடைந்தான். மீண்டும் பிரமலிபி தலையில் எழுதப்பட்டு, இப்பிறப்பில் இக்குலத்தவனுகப் பிறந்தவன் இந்த ஜாதகன் தந்தை என்று கூறினேம். பெரிய குடும்பத்தைப் பெறுவான். இவனுக்கு மனைவியர் இருவ்ரா வர். மார்க்கண்டேயனைக் காப்பதற்கு இயமனைக் கால்களால் உதைத்த சிவபெருமானின் தேவியே! இங்ஙனம் மேற் சொல்லப்பட்ட இயல்புகளுடையவனுக்கு,

## ஜாதகன் செய்திகள்

11. உதிப்பனு மிந்த பாலன் உரைக்கிறேம் துணைஆண்
[காணுன்
மதிமுகப் பெண்பா லிரண்டு வறைகிறேம் தீர்க்க மாக
அதுசேதி பின்பால் சொல்வேன் அருளுவோ மிவன்கு
[ணத்தை
சதியிலா மனத்த னுகும் தானிரு நிறத்த னுமே.

11. இந்த ஜாதகன் புதல்வனுகத் தோன்றுவான். இவன், உடன் பிறந்த சகோதரன் இல்லாதவனுவான். சந்திரன் போன்று ஒளி பொருந்திய முகங்களை யுடைய சகோதரிகள் இருவர் தோன்றித் தீர்க்காயுளுடன் விளங்குவர் என்று சொல்லுகிறேம். அவர்களைப் பற்றிய செய்திகளைப் பின்பாகத்தில் கூறுவோம். இனி, ஜாதகன் குணங்களைச் சொல்லுவோம். தீய எண்ணங்களில்லாத மனத்தினன் ஆவான். கரிய நிற முடையவன்.

## இதுவுமது

12. இருவிதக் கல்வி கற்பன் இன்பச் சொல் லுயர மில்லான்
அரசரா லுய்வா னுகும் அவன் தந்தை யாஸ்தி காணுன்
மறுமாதா சுதர்கள்.........அடைகுவா ரென்று
[சொல்லுவோம்
திருமகன் தனக்கு யில்லம் சேர்ந்திடும் வேறு காணுன்.

12. ஒன்றற் கொன்று மாறுபட்டதான இரண்டுவிதக் குணங்களை யுடையவன். கேட்போருக்கு இன்ப முண்டாகும் வண்ணம் பேசுவான். அரசாங்க அலுவலை ஏற்று, அதனுல் ஜீவனம் செய்பவன் ஆவான். தன் தந்தை தேடி வைத்த சொத்துக்களில்லாதவன். இவனுடைய இரண்டாம் தாயின் புதல்வர் இவனை யடையவர் என்று கூறுவோம். இது தவிர வேறு வீடில்லாதவன். இவனுக்கு வீடு ஒன்று சேரும்.

## இதுவுமது

13. சொந்தமாய்ப் பூமி சேர்ப்பன் சொல்லதைக் காப்பா
[ஞகும்
தந்தனம் பின்னுல் சேர்ப்பன் சல்லியம் காணு ஞகும்
முந்துமால் பக்தி கொஞ்சம் முனியுண்டு வெளிக்காட்
[டாதான்
பிந்திநா ளிந்திர போகம் பெறுவனும் யூகை சாலி.

13. சொந்த முயற்சியால் விளைநிலங்கள் சேர்ப்பான். சொன்ன சொற்களைப் பாதுகாப்பான். தனக்குச் சொந்தமாகப் பிற்காலத்தில் செல்வம் சேர்ப்பான். கடன் வாங்குதலை அறியான். விஷ்ணு பக்தி சிறிது இவனுக்கு உண்டு. கோபமுள்ளவன். ஆயின், அதனை வெளிப்படுத்த மாட்டான். பிற்காலத்தில் இந்திரனைப் போன்று போகங்கள் அடைவான். ஊகித்து உணரும் ஆற்றல் பெற்றவன்.

## இதுவுமது

14. இன்னவன் செங்கை தன்னில் இலகிடும் விஷ்ணு
[ரேகை
தன்னினத் தவரைக் காப்பன் சடுதியில் கோபி யாவன்
பின்புத்தி யுடைய ஞகும் போசன வறுமை காணுன்
கன்னென மொழியே சொல்வன் கட்டுரை கூரு ஞமே.

14. இந்த ஜாதகனது அழகிய கையினில் விஷ்ணு ரேகை பொருந்தி யிருக்கும் தன் இனத்தைச் சேர்ந்தவர்களைப் பாதுகாப்பான். விரைவினில் கோபமுடையவனுவான். முதலில், ஆராயாது கூறிவிட்டு, பின்பு யோசித்துப் பார்க்கும் புத்தி யுடையவன். போஜனத்தில் தரித்திரம் அறியாதவன். கரும்பு போன்று இனிய சொற்களையே பேசுவான். கற்பனைப் பேச்சுக்கள் பேச மாட்டான்.

## இதுவுமது

15. எந்தக்கா ரணத்தி ஞலே இவன் தந்தை யாஸ்தி
[காணுன்
அந்ததோர் சேதி சொல்வீர் அசுரர்மந் திரி[1] வியத்தில்[2]
பிந்திய சிகியும்[3] மிரண்டில் பொருந்தின பலத்தி ஞலே
தந்தையி ஞஸ்தி காணுன் சங்கரி கேட்டி டாயே.

---

1. சுக்கிரன்
2. விரயஸ்தானம்; இலக்கினத்துக்குப் பனிரண்டாமிடம் ஈண்டு சிம்மம்
3. கேது

15. அத்திரி முனிவர் இவ்வாறு கூறிக் கொண்டு வர, பார்வதிதேவி பின்வருமாறு கேட்டனள். எந்தக் காரணத்தினுல், இந்த ஜாதகன் தன் தந்தை தேடி வைத்த ஆஸ்தியில்லாதவனுவான்! அந்தச் செய்தியைக் கூறுங்கள்; முனிவர் கூறுகிருர். பிதுர் ஸ்தானத்துக்குரிய சுக்கிரன் பனிரண்டாமிடமாகிய விரயஸ்தானத்திலும், கேது இரண்டாமிடமாகிய துலாத்திலும் தங்கியுள்ள பலத்தினுல், இந்த ஜாதகன் தன் தந்தை யாஸ்தி யில்லாதவனுவான். சங்கரனுர் தேவியே! மேலுங் கேட்பாயாக.

## இராசயோகம் ஏற்படக் கிரகநிலே

16. அரசரால் தொழிலு மெங்ஙனம் அணுகிடும் விபரம் [சொல்வாய்
பரிதியும் புதனும் சேர்ந்தும் பார்மகன் நாலில் தங்க
உரைத்திட்டோ மிராச யோகம் உறையுங்கா லங்கள் [சொல்வீர்
மர்மமாம் மூவெட் டின்மேல் மருவிடு மிராச யோகம்.

16. அரசர்களால் இவனுக்கு எப்படித் தொழில் கிடைக்கும்? அந்த விவரம் கூறுங்கள் எனப் பார்வதிதேவி கேட்க, அத்திரி முனிவர் கூறுகிருர். சூரியனும் புதனும் கூடி இலக்கினத்திலும், செவ்வாய் நான்காமிடமாகிய தனுசிலும் தங்கி யிருப்பதால் இவனுக்கு இராச யோகம் உண்டு என்று சொன்னேும். எப்பொழுது இராச யோகம் இந்த ஜாதகனுக்கு ஏற்படும் என்று கூறுவீர் என்று பார்வதிதேவி கேட்க முனிவர் கூறுகிருர். ஜாதகனுக்கு இருபத்து நான்காம் வயதுக்கு மேல் இராச யோகம் ஏற்படும்.

## ஜாதகனுடைய திருமணமும் மனேவியின் இயல்பும்

17. இருபது நாலாண் டுக்குள்
இவனுக்குப் பாரி வாய்க்கும்
வரும்கன்னி யுள்ளூர் நேரு
மறைகிறேு மவள்கு ணத்தைப்
பெரும்புத்தி யடக்க மாவள்
பொய்யது வழுத்தா நெஞ்சம்
நறைமல ரிஷ்டம் கொள்வள்
நாயகன் மனம்போல் வாழ்வள்.

17. இருபத்து நான்காம் வயதுக்குள் இந்த ஜாதகனுக்கு மனேவி வாய்ப்பாள். அவள் உள்ளூரிலேயே கிடைப்பாள். அவள் குணங்களேக் கூறுகிறேம். பெரும் புக்தி யுடையவள். அடக்கமுள்ளவள். பொய்யைப் பற்றி நினேயாத மனமுடையவள். தேன் பொருந்திய மலர்களேச் சூடுவதில் விருப்பங் கொள்ளுவாள். தன் கணவனுடன் மனமொத்து வாழ்க்கை நடத்துவாள்.

## இதுவுமது

18. வந்தபி னிராச யோகம் மருவிடும் வரனுக் கேதான்
சிந்தையும் நல்ல தாகும் சீலியாம் நடையும் நன்மை
முந்தின கோப மேற்பள் முயலுவோர்க் கன்ன மீவள்
பந்துவு மதிக்க வாழ்வள் பாரினில் வறுமை கா்ணாள்.

18. மனைவி வந்த பிறகு இந்த ஜாதகனுக்கு இராச யோகம் ஏற்படும் இவள் (ஜாதகன் மனைவி) நல் மனமுடையவள். ஒழுக்கமுள்ளவள். நன்னடத்தை யுடையாள். முன் கோபம் கொள்ளுவாள். தன் முயற்சியுடன் உழைக்கும் ஏழைகளுக்கு உணவு அளிப்பாள். உறவினர்களும் பாராட்டுமாறு வாழ்ந்திருப்பாள். உலகில் தரித்திரத்தை யறிய மாட்டாள்.

## புத்திரபாவம்

19. தன் துணை யாண்பா லாறு
சாற்றுவோம் பாவைக் கேதான்
இந்தவள் தனக்குப் புத்திரர்
இயம்புவோ மாண்பா லிரண்டு
வந்திடும் கன்னி மூன்று
வறைந்தனம் தீர்க்க மாக
நொந்திடு மிரண்டு யென்றோம்
நிமலியே கேட்டி டாயே.

19. இந்த ஜாதகன் மனைவியோடு பிறந்த ஆண்கள் அறுவர் என்று சொல்லுவோம். இனி இவளுக்குப் புத்திரபாவத்தைப்பற்றிக் கூறுவோம். ஆண் குழந்தைகள் இரண்டும், பெண் குழந்தைகள் மூன்றும் தோன்றித் தீர்க்கமான ஆயுளுடன் விளங்கும் என்று சொன்னோம். மற்றும் இரு குழந்தைகள் தோன்றி நஷ்டமாம் என்று கூறினோம். தூய்மை யுள்ளவளே! மேலுங் கேட்பாயாக.

## ஜாதகன் இளையதாய்க்குப் புத்திரபாவம்

20. பின்மாதா வொன்று நேரும் பேசினீர் முனியே நீர்தாம்
அன்னவள் தனக்குப் புத்திரர் அறிவிப்பீர் விபர மாகக்
கன்னிகை காணு ளாகும் காளைகள் மூன்று வெள்ரோம்
பிந்தியு மொன்று சேதம் பிரிதலாய் வேறூர் செல்வர்.

20. முனிவரே! ஜாதகனுக்கு இளைய தாய் ஒருத்தி வருவாள் என்று தாங்கள் கூறினீர்கள். அவளுக்குக் குழந்தைகள் தோன்றும் விவரத்தைத் தாங்கள் தெரிவிப்பீராக என்று அங்கிருந்த ஒரு முனிவர் கேட்டனர். அத்திரி முனிவர் கூறுகின்றார். பெண் குழந்தை இளைய தாய்க்குத் தோன்றாது. ஆண் குழந்தைகள் மூன்று தோன்றும் என்று சொன்னோம்.

பின்னல் ஒன்று தோன்றி நஷ்ட மடையும். அந்தச் சகோதரர் குடும்பத்திலிருந்து பிரிந்து வேற்றூர் செல்லுவார்.

## தாயின் செய்திகள்

21. பின்பாகம் விபரமாகப்
பேசுவோம் முனியே கேளும்
அன்னையின் குணத்தைச் சொல்வேன்
அடைந்தோரை யாத ரிப்பள்
நன்னய மிருது வார்த்தை
நல்லோர்க்கு நல்ல ளாவள்
கன்னிகை யோக சாலி
கணவனுக் கினிய ளாகும்.

21. பிற்பாகத்தில் அவர்களைப் பற்றி விவரமாகப் பேசுவோம் முனிவரே! கேளுங்கள். இனி, ஜாதகன் தாயின் குணங்களைச் சொல்லுவோம், தன்னை யடைந்தவரை ஆதரித்துப் போற்றுவாள். நல்ல நயமுள்ளனவும் மென்மைத் தன்மை வாய்ந்தனவுமான சொற்களைப் பேசுவாள். தன்னிடம் நன்முறையில் பழகுபவர்களுக்கு இவள் (ஜாதகன் தாய்) நல்லவளாக இருப்பாள். இவள் அதிர்ஷ்ட முடையவள். தன் கணவனுக்கு இனியவளாக இருப்பாள்.

## தாயின் முற்பிறவிச் செய்தி

22. மளமது கபடு மில்லாள் வருவோரை யாத ரிப்பள்
இனமதுக் கிணக்கம் சொல்லாள் ஏழைகட் கன்ன மீவள்
கனமுள பூர்வம் சொல்வேன் கடையூருக் கருகி லேதான்
வினையிலாச் சேடர் வம்சம் விளங்கியே மதலை யுண்டாய்;

22. இந்த ஜாதகன் தாய் மனத்தில் கபடம் (வஞ்சனை) இல்லாதவள். வீடு தேடி வருபவருக்கு உணவு முதலியன கொடுத்து ஆதரிப்பாள். தன் இனத்தார்களிடம் ஒற்றுமையாகப் பேச மாட்டாள். இவளுடைய முற்பிறப்பைப் பற்றிச் சொல்லுவோம். திருக்கடையூர் என்ற தலத்துக்குச் சமீபமாக உள்ளதொரு ஊரில், தீவினையில்லாத சேடர் மரபில் தோன்றி. கணவன் மக்களை யடைந்து,

## இதுவுமது

23. சுகமுள குடும்பி யாகித் தொல்புவி பவமில் லாமல்
பகையான கால நாடு பறந்தனள் வரன்முன் ளுக
ஜகபதி வரையப் பட்டு ஜனித்தவ ளிவளே யென்றேம்
அகமதில் வறுமை காணுள் அருளுவோ மிவள்பின்
[ஜன்மம்.

23. சௌக்கியமுள்ள குடும்பமுடையவளாய் பழமையான இவ்வுலகில் முன் தீவினை யெதுவு மில்லாமல் வாழ்ந்து, தீதான எமனுலகத்துக்குக் கணவனுக்கு முன்பே சென்றனள் (மரண மடைந்தாள்) மீண்டும் பிரமதேவனால் படைக்கப்பட்டு இப்பிறப்பில் ஜாதகன் தாயாகப் பிறந்தவள் இவள் என்று சொன்னோம். தன் வீட்டில் தரித்திரத்தை அறியாதவள். இனி, தாயின் மறுபிறவி பற்றிச் சொல்லுவோம்.

## தாயின் மறுபிறவியும் உடன்பிறப்பும்

24. அப்புவின் தலத்தி லேதான்
அணுகுவாள் மறைக்கு லத்தில்
செப்புவார் பராசர் தாமும்
தேவிக்குத் துணைக ளுண்டோ
ஒப்புட னுண்பா லொன்று
உரைத்திட்டோம் பாவைக் கேதான்
அப்பணி சடையோன் தேவி
அருளிய மொழிகுன் றுது.

24. பஞ்ச பூதஸ்தலங்களில் ஒன்றாகிய திருவானைக் காவில் வேதங்களோதும் அந்தணர் குலத்தில் பிறப்பாள். இங்ஙனம் அத்திரி முனிவர் சொல்லவும், பராசரர் என்பவர் கூறுகிறார். இந்த ஜாதகன் தாய்க்கு உடன் பிறந்தோர் உண்டோ? அத்திரி முனிவர் சொல்லுகிறார். சகோதரன் ஒருவன் இவளுக்கு உண்டு என்று சொன்னோம். கங்கை நதியைச் சடைமுடியில் அணிந்துள்ள சிவபெருமான் தேவியாம் பார்வதியம்மையே! நாங்கள் கூறிய சொற்கள் தவறாதனவாம்.

## தந்தையின் முற்பிறவிச் செய்திகள்

25. இவன்பிதா பூர்வந் தன்னை
யெடுத்துநா முரைப்பக் கேண்மோ
தவசிவா ழருணை நாட்டில்
ஜனித்தனன் வைசியச் சேயாய்
அவனியில் செட்டுச் செய்து
நாயகி மதலை யுண்டாய்
அவனுமே வாழு நாளில்
அறைகிறோ மூழி தானும்.

25. இனிமேல், ஜாதகனின் தகப்பனுருடைய முற்பிறப்புச் செய்திகளைத் தொகுத்து நாங்கள் கூறுவதைக் கேளுங்கள். தவம் செய்யும் முனிவாசம் செய்யும் திருவண்ணாமலையில், வைசிய மரபினனாய்ப் பிறந்தான். உலகில் சிறந்த தொழிலைச் செய்து, மனைவி மக்களை யடைந்து, வாழ்ந்து வரும் காலத்தில் இவனைப் பற்றிய தோஷம் ஒன்றைச் சொல்லுகிறோம்.

## இதுவுமது

26. விதவையைப் போகம் துய்த்தான்
மேவிற்றுக் கருவு தானும்
அதம்செய்தான் பண்டி தத்தால்
அம்மாது கருவால் மாண்டாள்
சதியாக வந்தச் சாபம்
சார்ந்தது இவனுக் கேதான்
இதுவன்றி வேறு காணுன்
ஈச்வரி கேட்டி டாயே.

26. ஜாதகன் தந்தை முற்பிறப்பில் கைம்பெண்ணெருத்தியுடன் இன்பம் அநுபவித்தான். அதனுல் அவளுக்குக் கரு ஏற்பட்டது. பல வைத்தியங்கள் செய்து அக்கருவை அழித்தான் இவன். அந்தப் பெண்ணும் கருவழிந்து மாண்டனள். பெரிய குற்றமாக அந்தத் தோஷம் முற்பிறவியில் இவனைச் சார்ந்தது. இது தவிர வேறு தோஷங்கள் எவையும் இந்த ஜாதகன் தந்தை அறிய மாட்டான். பார்வதியம்மையே கேட்பாயாக.

## முதல் மனைவி மரணம் இரண்டாம் மனைவி எய்தல்

27. காலன்தன் நாட டைந்து கஞ்சனுல் வரையப் பட்டுச்
சீலமில் லாத கங்கை குலமதி லுதிப்பா னுகும்
ஏலவே முதல்ம னைதான் ஏகுவாள் கர்ப்ப நோயால்
சாலவே விரண்டா மாது சார்ந்திடு மென்று
[சொல்வேன்.

27. பின்பு (அப்பிறவியில்) மரண முற்று, பிரமதேவனுல் மீண்டும் படைக்கப்பட்டு, இப்பிறப்பில் ஒழுக்க மில்லாததொரு வேளாளர் குடியில் பிறப்பவன் இந்த ஜாதகன் தந்தை யாவான். இவனுடைய முதல் மனைவி கருச்சிதைவால் மரண மடைவாள். பிறகு இவனுக்கு இரண்டாவது மனைவி வாய்ப்பாள் என்று கூறுவோம்.

## தந்தையின் மறுபிறவியும், ஜாதகன் முற்பிறவியும்

28. மறுஜன்மம் காஞ்சி தன்னில்
வருகுவான் வைசியச் சேயாய்
பெருமையாய்ச் செட்டுச் செய்து
புகழுடன் வாழ்வா னுகும்
திருமகன் பூர்வம் சொல்வன்
தென்திசை நவபா ஷாணம்
மருவிய நகரம் தன்னில்
மறவர்தங் குலமு தித்து ;

28. மறுபிறப்பில் காஞ்சீபுரத்தில் வைசிய மரபினனுய்ப் பிறந்து, மேன்மையுடன் வியாபாரம் செய்து, கீர்த்தியுடன் வாழ்பவன் ஆவான். இனி, ஜாதகன் முற்பிறவியைச் சொல்லுவோம். தென் திசையிலுள்ள (ராமநாத புரம் ஜில்லா) நவபாஷாணம் என்ற இடத்தில் மறவர் குலத்தில் பிறந்து,

## இதுவுமது

29. பெரியோர்க ளுறவு கொண்டு புண்ணியத் தலங்கள் [சென்று
திருமாலின் பக்தி யாகிச் சேயிழை மதலை யுண்டாய்
மறலியின் பதிக்குச் சென்று மால்மகன் வரையப் பட்டு
வருகுவா னிந்தப் பாலன் மங்கையே கேட்டி டாயே.

29. பெரியோர் தொடர்பு கொண்டு பல புண்ணியஸ்தலங்களுக்கு யாத்திரையாகச் சென்று மஹா விஷ்ணுவிடம் பக்தி கொண்டு, மனைவி மக்களை யடைந்து, மரண மடைந்து, மீண்டும் பிரமதேவனுல் படைக்கப் பட்டு இப்பிறப்பில் இக்குலத்தவனுய் பிறப்பான். பார்வதியம்மையே! கேட்பாயாக.

## ஜாதகன் யோகங்கள்

30. வந்தவன் பொதுயோ கத்தை யறைகிறே மினிமே லாக
தந்தையின் பூமி மேலாய்த் தானவன் சேர்ப்பா னுகும்
எந்திட மனுகும் சொல்வீர் இரத்தனூர் கீழ்பா லாகத்
தந்தன மின்றிச் சேரும் தனமதால் நிலம்பின் சேரும்.

30, இனி மேல் ஜாதகனின் பொதுவான யோகங்களைச் சொல்லு கிறோம். தகப்பனுர் காலத்தை விட விளைநிலங்கள் மிகுதியாகச் சேர்ப் பான். எவ்விடத்தில் பூமி சேரும் என்று முனிவரே கூறுங்கள் என்று பார்வதிதேவி கேட்க, அத்திரி கூறுகிறுர். இரத்தனூர் என்ற ஊருக்குக் கிழக்கிலுள்ளதோர் ஊரில், தன் சொந்தப் பொருள் செலவழிக்காமல், வேறு வழியில் சேரும். பிற்காலத்தில் சொந்தப் பொருளால் நிலம் வாங்கிச் சேர்ப்பான்.

## இதுவுமது

31. அன்னமும் குறைவு ருதான் அவனியில் புகழு மேற்பன்
மன்னர்பா லரசு மோங்கும் மாரனுக் கன்பா நான்கும்
பின்னமில் லாமல் செய்வன் பிறர்பொரு ளிச்சை [யுள்ளான்
பொன்பெருக்கம் பின்னு லென்று போற்றுவோம் காலம் [சொல்வீர்,

31. போஜன சௌக்யம் குறைவில்லாதவன். உலகில் கீர்த்தியை அடைவான். அரசர்களிடம் சேர்ந்து அதிகார்ரப் பதவி உயரும். ஜாதகன் ஐம்பத்து நான்கு வயது முடிய குறையில்லாமல் அரசாங்கப் பதவி வகிப் பான். பிறர் செல்வத்தில் ஆசை வைப்பவன். செல்வப் பெருக்கம் பிற் காலத்தில் ஏற்படும் என்று சொல்லுவோம். எந்தக் காலத்தில் செல்வப் பெருக்கம் ஏற்படும் என்று கூறுவீர் என்று பார்வதிதேவி கேட்டாள்,

## தாய், தந்தையர் மரணகாலங்கள்

32. ஆருறு வாண்டு மேலாய்
அதிகமாய்ப் பொருளு மெய்தும்
பாரது அதன்பின் சேரும்
பணமதா லென்று சொல்வோம்
தீரமாய்த் தசஆண் டுக்குள்
செல்லுவா ளன்னை தானும்
கூறுவோ மீரொன் பாண்டுள்
குழவியின் தந்தை சாவாம்.

32. ஜர்தகன் முப்பத்தாரும் வயதுக்கு மேல் மிகுதியாகப் பொருள் அடைவான். எதிர்பாராது அந்த வயதுக்கு மேலும் ஜாதகனுச்குப் பணம் கொடுத்து நிலம் வாங்கும் நிலை ஏற்படும். இவன் பிறந்து பத்து ஆண்டு களுக்குள் தாய் மரணமடைவாள். இவனது பதினெட்டாம் வயதுக்குள் தகப்பனர் மரணம் நேரும்.

## ஜாதகன் மரணகாலம்

33. அறுபது மூன்று வாண்டில் ஆவணி மாதம் தன்னில்
திருமக னுடல மேகும் ஜயமுனி தடுத்துச் சொல்வார்
குருவுக்கு ஆறில் காரி குலவியே இருப்ப தாலே
மருவிடும் சகடை தோஷம் மாரனும் கண்ட மென்றேம்.

33. ஜாதகன் தனது :அறுபத்து மூன்றும் வயதில் ஆவணி மாதம் மரண மடைவான். இதனைக் கேட்ட ஜயமுனிவர் தடுத்துச் செல்லுவார். குருவிருக்குமிடத்துக்கு ஆறும் இடத்தில் சனி இருப்பதால் சகடை தோஷம் ஏற்படும். ஜாதகனுக்கு இந்த வயதுக்கு முன்பே கண்டங்கள் உண்டாகும்.

## புத்திரனுல் கர்மம்: கிரகநிலை

34. தென்திசை முனிவர் சொல்வார்
தசமத்தோன் ஜன்ம முச்சம்
வந்ததால் தாய்தந் தைக்கு
மைந்தனும் கர்மம் செய்வன்

சந்ததி யுதிக்கு மென்றோம்
சனிதசை மார கங்கள்
கந்தனை யீன்ற மாதே
கழறின மொழிகுன் றாது.

34. அகஸ்திய முனிவர் இதற்கு விடை கூறுவார். பத்தாம் இடத்துக்கு உரியவனாகிய புதன் இலக்கினத்தில் உச்சமாகவும் ஆட்சி பெற்றும் இருப்பதால், தன் பெற்றோருக்கு இந்த ஜாதகன் இறுதிக் கடன்கள் செய்வான். இளமையிலேயே கண்டம் வந்தாலும் மரண மடையான். இவனுக்குப் புத்திர பாக்யம் ஏற்படும். சனி மஹா தசை நடைபெறும் பொழுது மரணம் சம்பவிக்கும். முருகக் கடவுளைப் பெற்ற தேவியே! நாங்கள் கூறியன தவறா.

## ஜாதகன் மனைவி மரணகாலம் : கிரகநிலை

35. அன்பது வேழு வாண்டில் அவன்பாரி கண்ட மெய்தும்
என்னகா ரணத்தி னாலே இயம்பினீ ரந்தச் சங்கை
பொன்னவ னேழோ னாகிப் புகர்கூடி விரயம் நிற்க
கன்னிகை முன்னால் மாள்வள் கழறின மொழிகுன் றாது.

35. ஜாதகனின் ஐம்பத்தேழாம் வயதில் அவன் மனைவி மரணமடைவாள். இவ்வாறு முனிவர் சொல்ல, பார்வதிதேவி வினவுகின்றனள். என்ன காரணத்தால் அவ்விதம் கூறினீர்கள்? குரு ஏழாம் இடத்தவனாகி, சுக்கிரனுடன் சேர்ந்து பனிரண்டாமிடமாகிய விரயஸ்தானத்தில் இருப்பதால், ஜாதகன் மனைவி; இவனுக்கு முன்பே மரண மடைவாள். நாங்கள் கூறிய மொழிகள் தவறா.

## ஜாதகன் மறுபிறவி

36. பாலகன் பின்ஜன் மத்தைப் பகருவோ மருணை தன்னில்
சீலமாம் சைவச் சேயாய் ஜனிப்பனா மென்று
[சொல்வோம்
ஏலவே அரசு செய்து எழிலுள புகழு மேற்பன்
ஆலத்தை யுண்டோன் தேவி அறைந்தனம் ரிஷிகள்
[அம்மா.

36. இனி, ஜாதகன் மறுபிறவிச் சொல்லுவோம். திருவண்ணாமலையில், நல்லொழுக்க முடைய சைவ குலத்தவனாகப் பிறப்பான் என்று கூறுவோம். மேன்மையாக அரசாங்கத்தில் பதவி வகித்து சிறந்த கீர்த்தியையும் அடைவான். ஆலகால விஷத்தை யருந்திய நீலகண்டப் பெருமானின் தேவியே! இவ்வாறு முனிவர்களாகிய நாங்கள் சொன்னோம்.

## ஜனன கால தசையிருப்பும் பயனும்

37. ஜனித்திடுங் காலந் தன்னில் செங்கதிர் தனிலி ருப்புக்
குனித்திடு வாண்டு வொன்றும் கூறிய திங்க ளைந்தும்
வினைவரும் ஜாத கர்க்கு வித்தகி யன்னை நோயாம்
சினமிலாப் பூர்வம் சொன்னோம் செப்புவோம் பின்பால்
[சேதி

37. ஜாதகன் ஜனனமான காலத்தில், சூரிய மஹா தசையில் இருப்பு ஒரு வருஷமும் ஐந்து மாதங்களுமாம். இந்தக் காலத்தில் ஜாதகனுக்குத் துன்பங்கள் நேரும். இவன் தாய் நோய்வாய்ப்படுவாள். இங்ஙனம் பொறுமையுடன் முதல் பாகம் கூறினோம். மற்றை விவரங்களை பிற்பாகத்தில் சொல்லுவோம்.

## ஸப்தரிஷி நாடி கன்னியாலக்னம் முற்றும்

---